

சிவமயம்.

சிவபக்திசந்திரிகா பிரசுரத்தின்

முதற் பாகமாகிய

# சிவரகஸிய கண்டம்.

இஃது

திருவையாற்றில் விளங்கும்

சிவபக்திசந்திரிகையின் பத்திராதிபரவர்களாகிய

பிரம்மஸ்ரீ அநந்தவைத்தியநாத சிவனவர்களால்

சுலோகம் சுலோகமாய் மொழிபெயர்த்து

பிரசுரிக்கப்பட்டது.



இதின் விலை ரூ 8—8—0.

# அறிவிப்பு.



இப்பிரபந்தத்தி னனேகம் பழய கோசங்களைச் சோதித்து மூலபாடத்தைச் சீர்திருத்துவதிலும், மொழிபெயர்த்தலை மூலத்துக்கொத்திமையாய்ச் சோதிப்பதிலும் பேருதவி செய்துவந்த பிரம்ம ஸ்ரீ க்ஷேத்திரபாலபுரம் நீலகண்ட சாஸ்திரியவர்களைப் பிந்திய பிரசுரத்திற்கும் இதேவிதமாய்ப் பிரதிப்பிரயோஜனத்தை யெதிர்பாராமலே துணைசெய்துவரும்படி வேண்டிக்கொள்ளுகின்றோம்.

இப்புத்தகத்தின் 159-160-வது பக்கங்களை விலக்கியும், 277-வது பக்கத்தினடக்கத்தை 278-லும் 278-ம் பக்கத்தினடக்கத்தை 277-லுமாய் மாற்றியும் படிக்கவேண்டும்.

சிவபக்தி சந்திரிகாசாலையில் விற்பனைக்குத் தயாராயிருக்கும் புஸ்தகங்களும் போஸ்டேஜ் நீங்கலாக அதின் கிரயமும்.

| | |
|---|---|
| சங்கர சமூகிதை (கிரந்தம்) ... ... ... ... ரூ. | 8— 0—0 |
| ஷை தமிழ்மொழி பெயர்த்தல் ... ... ... ... | 8— 8—0 |
| ஆண்டபிள்ளை கிருஹியப்பிரயோகம் (கிரந்தம்) ... ... | 0— 5—0 |
| கமலாலய மாகாத்துமியம் ... ... ... ... ... | 0— 5—0 |
| பகவத் பாதரவர்களாலருளிச் செய்யப்பட்ட அக்ஷரமாலி காஸ்துதி | 0— 0—6 |
| இப்போது பதிப்பிலிருப்பதும் நாளது நந்தனஷு பங்குனிமீ த்திற்குள் முடிவாகி காலிகோபயிண்டு செய்யப்படுவதுமான சிவகீதை (கிரந்தம் ஸவியாகியானம்) | 0—12—0 |
| ஷை தமிழ்மொழி பெயர்த்தல் ... ... ... ... | 0—12—0 |
| அடுத்த பங்குனிமீ த்தில் தொடங்கி வருகிற விஜயஷு தைமீ த்திற்குள் முடிக்கப்படுவதான காளிகா கண்டத்திற்கு முடிவாக முடிவாக 8 ஸஞ்சிகைகளா யப்போதுக் கப்போதா யனுப்புவதாயினும், முடிந்தபின் ஒரே தடவையாயனுப்புவதாயினும் விஜயஷு சித்திரைமீ 30௳க்குள் முன்பணமாயனுப்பு வோர்களுக்கு மூலகிரந்தம் அல்லது தமிழ்மொழி பெயர்த்தல் தனித்தனி | 2— 8—0 |
| ஷை யிரண்டையும் சேர்த்து வாங்கு வோர்களுக்கு ... ... | 4—8—0 |
| ஷை சித்திரைமீ த்திற்குப் பிந்திப்பணமனுப்பு வோர்களுக்கு மூலகிரந்தம் ... ... ... ... ... ... | 3— 0—0 |
| தமிழ்மொழி பெயர்த்தல் ... ... ... ... ... | 3— 4—0 |

அநந்தவைத்தியநாத சிவன்.

எடிடர், சிவபக்தி சந்திரிகை.
திருவாதி, தஞ்சாவூர்.

நந்தனஷு
மாசிமீ 1௳.

உ

ஸ்ரீ

சுபம்.

ஸ்ரீ வேதவியாஸமுனிவரால்
அருளிச் செய்யப்பட்ட
பதினெண் புராணங்களில்
பதிமூன்றாவது புராணமாகிய
ஸ்ரீ ஸ்காந்தமஹாபுராணத்தின்
ஆறு சமுகிதைகளில்
சங்கரசமுகிதையின்

# சிவரகஸியகண்டம்.

ஸ்ரீ சிவசித்பரானந்த சிவஞ்ஞானபோத
ஸ்ரீ ஹரதத்தாசாரியாரவர்களது
6-வது முறைச்சீடனும்
ஸ்ரீ அக்கினீசுவர மகாலிங்க சிவனது
குமாரனும், சீடனுமாகிய
அநந்தவைத்தியநாதசிவன் அவர்களால்
சுலோகந்தோறும் மொழிபெயர்க்கப்பட்டு

திருவாதி
தமது
கீர்வாண வாணீ விலாஸ அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
விகுர்திஸூ சித்திரைமீ



உ

சிவமயம்.

# ஸ்ரீ ஸ்காந்தபுராணம், சங்கரசமுகிதை,
## சிவரகஸிய கண்டத்தில் சம்பவகாண்டம்
## 1-அத்தியாயத்தின் அர்த்தம்.

விநாயகக் கடவுள், ஆறுமுகன், மகேசுவரி, மகேசுவரன் இவர்கள் சுபத்தைக் கொடுக்கட்டும். (1) ஓம்காரமென்கிற பிரணவத்தினுட் குடியிருப்போனும், இயானைமுகத்தோனும், நான்கு புஜங்களையுடையோனுமாகிய பெருந்தொந்திநாயகனை, நானெத்தனிக்கின்ற சுபகாரியங்களில் இடையூறு நேரிடாமற் பாதுகாப் பதற்காக யான் வந்தனம் செய்கின்றேன். (2) சுமுக (ஸந்தோஷமுகத்தையுடையவ)னென்றும், ஏகதந்த (குமாரசுவாமியினால் ஒரு கொம்பு வாங்கப்பட்டுப்போக)னென்றும், கபில (கபிலமென்ற நிறமுடையவ) னென்றும் கஜகர்ணக (இயானைக்காதுடையோ) னென்றும், லம்போதர (பருத்துத்தொங்கும் வயிற்றையுடையோ) னென்றும், விகட (குட்டைய) னென்றும், விக்கினராஜ (இடையூறுகளுக்கதிப) னென்றும், விநாயக (துஷ்டர்களையும் விக்கினங்களையும் கண்டிப்போ) னென்றும், (3) தூமகேது (அக்கினியைப் போன்றவன்) வென்றும், கணாத்தியக்ஷ (கணங்களுக்குராஜ)னென்றும், பாலசந்திர (நெத்தியில் சந்திரனைத் தரித்தவ)னென்றும், கஜானன (யானைமுகத்தோ) னென்றும், வக்கிரதுண்ட (நேர்மையற்றவாய)னென்றும், சூர்ப்பகர்ண (மொரம்போன்ற காதுடையோ) னென்றும், ஹேரம்ப (ருத்திரரிடத்து நிற்கிறவன் அல்லது அடியார்களை யருளுவோ) னென்றும், ஸ்கந்தபூர்வஜ (குமாரக்கடவுளுக்கு மூத்தோ) னென்றும், (4) ஆகிய இப்பதினாறு திருநாமங்களையும், வித்தையைத் தொடங்கும்போதும், கலியாணகாலத்திலும், ஒன்றினுட் பிரவேசிக்கும்போதும், ஒன்றிலிருந்து வெளிப்படும்போதும், உயுத்தகாலத்திலும், அபாயகாலத்திலும், படிப்போனும், படித்துக் கேட்போனும், இடையூறுகளைச் சந்திக்கமாட்டான். (5, 5½) வேண்டிய பொருள்களைக்கைப்பற்றுவதற்காக, எல்லாமறிந்தோனும், எப்போதும் எங்குஞ் செல்வோனுமாகிய ஸ்ரீ சுப்பிரமணியப் பிரானுடைய பதினாறு திருநாமங்களைச் சொல்லுகின்றேன். (6, 6½) ஞானசக்தியென்ற சொரூப முடையோனென்றும், கந்த (சத்துருக்களைச் சோஷிக்கிறவ) னென்றும், (7) அக்கினிபூ (அக்கினியிடத்துப் பிறந்தோன்)

வென்றும், பாகுளேய (கார்த்திகை நக்ஷத்திரங்களின் செல்வனென்றும்) காங்கேய (கங்கையின் செல்வ) னென்றும், சரவணபவ (நாணற்குத்தினிற் சனித்தோ) னென்றும், (8) கார்த்திகேய (கார்த்திகை நக்ஷத்திரங்களின் திருமக) னென்றும், குமார (என்றும் பாலனுயிருப்போன் அல்லது துஷ்டநிக்கிரகம் செய்வோன், அல்லது பூமியில் மன்மதனைப்போல் சுந்திரவடிவுடையோன், அல்லது பூமியில் சம்பத்தைக் கொடுக்கிறவ) னென்றும், ஷண்முக (ஆறுமுகத்தோ) னென்றும், குக்குடத்துவஜ (கோழிக்கொடியோ) னென்றும், (9) சக்திதர (வேலாயுத) னென்றும், குஹ (சத்துருக்களாயுதங்களினின்று தனது படையைக் காக்கிறவ) னென்றும், பிரம்மசாரி (அவ்விருதத்தின் முறையினடப்போன் அல்லது பிரம்மரின் தொழிலாகிய சிருஷ்டியைச் செய்தவன்) யென்றும், ஷாண்மாதுர (ஆறு தாய்களையுடையோ) னென்றும், (10) கிரௌஞ்சபித் (கிரௌஞ்சமென்ற மலையைப் பிளந்தவர்) தென்றும், சிகிவாகன (மையில்வாக) னென்றுமாகிய இப்பதினாறு திருநாமங்களையும் எப்போது மாதரவுடன் நன்றாய் ஜபித்தால், (11) விவாகத்திலும், செல்வதற் குபாயமாகிய மார்க்கத்திலும், அபஜயகாலத்திலும், கவனவித்தை, பெரிய ஆயுதப்பயிர்ச்சியிவைகளில் தேர்ச்சியடைவதிலும் நற்பயனடையலாகும். (12) பெண் பெறவேண்டுவோன் பெண்ணையும், ஜயத்தைவேண்டுவோன் ஜயத்தையும், புத்திரனை வேண்டுவோன் புத்திரனையும், தனததைவேண்டுவோன் தனத்தையுமடைவான். (13) மேலும் தீர்க்காயுசு, தேகசௌக்கியம், எல்லோரிடத்தும் வசியம், தனதானிய சுகங்களிவையெல்லாமடைவான்.

ஆதியில் பிரம்மதேவன், பரமசிவன தருளைக்கொண்டு எல்லாப் பிரஜைகளையும் சிருஷ்டனை செய்வதற்காக காஞ்சிபுரத்தில் முற்றும் கொடிய தவத்தைச்செய்தனர். (14, (14½) அவர் மனதை, முற்றும் மகேசுவரனுடைய பொன்னடிமீது நாடி யூன்றி நிற்குமளவில் (15) பரிசுத்தமு முத்தமுமாகிய கிரஹஸ்தாசிரமத்தைக் கொண்ட சில முனிவர்கள் தவஞ்செய்வதிலேயே முற்றும் மனதை நாடியவர்களாக விகநஸ முனிவரால் ஏற்படுத்தப்பட்ட வானப்பிரஸ்தமென்ற ஆசிரமத்தினின்று தவஞ்சேய்யக்கருதி, (16) தவஞ்செய்தலுக்கு எந்தவிடம் யோக்கியமும் உத்தமமு மாகுமென்று வினவ, அப்பிரம்மனிடத்துச் சென்றனர்கள். பிறகு முனிவர்கள், பிரம்மனைத் தெண்டனிட்டுக்கைகட்டி முன்னின்று (17) "தேவனே யாங்கள் வானப்பிரஸ்த முறையை அனுஷ்டித்துக்கொண்டு எங்கு நின்று தவஞ்செயலாகும் என்றதை யெங்களுக்குக் கூறவேண்டும். முப்பாட்டனே வந்தனம் செய்கின்றோம்." (18) என அவர்களது வசனத்தைக்கேட்டு, மரை மலரை ஆசனமாய்க் கொண்ட பிரம்மன் ஒரு முகூர்த்தநேரம் தியானம் செய்து குசகூர்ச்சத்தை (குசமென்ற புலலின் முடிச்சு)

யெடுத்து அதை யோர் வண்டியாகஅமைத்து (19) அவர்களைநோக்கி "முனிவர்களே இந்தவண்டியானது எந்த நிர்மானுஷியமாகிய அரணியத்தின்கண் சிதருகின்றதோ அவ்விடம்தான் உங்களுக்குத் தவமளிக்க யோக்கியமாகு" மென்று அவர்களை யெச்சரித்து, (20) ஸ்ரீ பரமேசுவரனையும், ஜகதீசுவரியையும் மனதில் தியானித்தபின்னர வ்வண்டியைச் செல்லும்படி விட்டனர். பிறகு அவ்வண்டியானது அம்முனிவர்களுடன் செல்லுகையில் நேர்த்தியும் வழவழப்புமாகிய ஓர் கற்பாறை ஸ்தலத்தில் அதன் நேமி (வண்டியின் விளிம்பு) யானது சிதர, விழுந்தது. (21) அந்த காரணத்தால் அவ்வனம் நைமிசாரணியமென்று குறிக்கப்படலாயிற்று. சந்திரமண்டலத்தினின்று ஹிமயமலையின் வழியாய்ப் பூமியின்கண், அவ்விடத்து விழுந்து, (22) பகீரதராஜனைத் தொடர்ந்து சென்ற, ஸ்ரீ பரமேசுவரனுடைய சடையில் விளங்குகின்றகொன்றைமலரின் பரிமளத்தைப்பொறுந்திய (23) கங்கையினால் அந் நைமிசாரணியமானது, எல்லா உலகையும் முக்கியமாய்ப் பரிசுத்தப்படுத்துவதும், புண்ணியமுள்ளதும், அனேகரிஷிக்கூட்டங்களால் நிறைந்ததும், அனேகவித மிருகங்களால் கூடப்பட்டதும், (24) அனேகம் பறவைக்கூட்டங்கள் பாடுவதால் நிறையப்பட்டிருக்கிற இன்பமான ஓசையைக் கொண்ட பலவிருக்ஷங்களை யுடையதும், அடர்த்தியாயும், நிழலுள்ளதுமான பலவிதமரங்கள், கொடிகள் முதலியவைகளால் மறைக்கப்பட்டிருக்கிற நிலவாரத்தையுடையதும், (25) மிகவும் சுத்தத்தெளிவும், குடிப்பதற்கு அதிமாதுரியமுமுள்ள நீர்க்கால்களை யுடையதும், மிக நெருக்கமாயுள்ள அனேகம் மரங்களைப் பெற்றதுமாய் விளங்கி நிற்கின்றது. அந் நைமிசாரணியமானது அப்போ தவர்களுக் குத்தவத்திற் குரிய தாயிற்று? (26) ஸ்ரீ மங்களாமணவாளனது திருவுளத்தை அருளளிக்கும்படி குளிரச்செய்வதற்காக, முனிவரெல்லாம் அங்கு வெகுகாலம் தவமாடியபின்னர் இம்மகரிஷிகளெல்லாம் ஸ்ரீ பரமேசுவரனுடையப் பிரசாதத்தை நாடியவர்களாக ஆயிரமாண்டளவு செய்யத்தக்க ஓர்இயாகத்தைச்செயயத்துடங்கினர்கள். (27½) முனீசுவர்களால் அங்குஇயாகம் துடங்கப்பட்டதைக் கேள்வியுற்று, (28) சத்தியவதியினருமைத் திருமகனாகிய ஸ்ரீ வேதவியாசமுனிவரது சீடனும், தவத்தையே பொருளாய்க் கொண்டவரும், திருபுரானையெரித்த பரமேசுவரனுடைய பொன்னடியில் காதல்கொண்டவரும், புராணமுரைப்பதில் சிறந்த வல்லமை கொண்டவரும் இலக்ஷ்மீவிலாசம் பொறுந்தியவருமாகிய ஸூதமுனிவர், (29) அங்குள்ளமுனிவர்களின் பாக்கியத்துக்கு பெருமையாகச் சீககிரத்தில்அவ்விடமருளினர். அங்குள்ள முனிசிரேஷ்டர்கள் அவரைக்கண்டதில், அவர்மீதுள்ள நேசத்தினால் உரோமங்கள் சிலுத்தவர்களாகி (30) அவரை அர்க்கியபாத்தியாதி உபசாரங்களினால் பூஜித்தார்கள். (30½) புராணமுறைப்பதில் சிறந்த, இலக்ஷ்மீவிலாச

ம் பொருந்திய ஸூதமுனிவர், புன்னகைப்புடன் கூடிய முகமலருடையவராகி, (31½) முனிவர்களாலளிக்கப்பட்ட ஆசனத்திலுட்கார்ந்து அவர்கள் செய்த பூஜைமுதலிய உபசாரங்களை அங்கீகரித்து முற்றுமானந்தமடைந்தார். (31) வாக்விலாஸ முடையவர்களில் முதன்மையாகிய அச்சூதமுனிவரை, அவர்கள், மிகவும் நேச மொழிகளினுல் (32) திருப்திசெய்வித்தபின்னர், சுபகரமாகிய புராணகதைகளைப்பற்றிப்பிரஸ்தாபித்தார்கள். "யாங்கள் பிரம்மதேவ னெச்சரிக்கையின்படி நைமிசாரணியமடைந்து மிகவும் கிருதார்த்தர்களாகிய (33) படியால், இப்போதெங்களுக்கு ஸ்ரீ சுப்பிரம்மணியப்பிரானுடைய மேன்மைபொருந்திய திவ்விய சரித்திரங்களைச் சொல்லியருளவேண்டும் (33½) ஸ்ரீ பரமேசுவரனுடைய வீரியமானது அக்கினிதேவரால் வகிக்கப்பட்டபின்னர், அத்தேஜோவடிவங்கொண்ட பரமாத்துமா, எங்ஙனம் நாணற்குத்தினின்று ஜனனமாயினரென்றதைக் கூறவேண்டும். அவருடைய சௌரியமெப்படிக்கொத்தது? அப்பார்வதிபாலன் போரின்முன் யாது செய்தனர்? (35) அவ்வீரசிகாமணியாலடிபட்டு மாண்ட அசுரர்கள் யாவர்? சிறந்த ரதங்கள், யானைகள், குதிரைகள் முதலியவைவையைவிட்டு அவர் மையிலை வாகனமாகக் கொண்டது யாது? (36) சக்தியாயுதம், வச்சிராயுதம் முதலியவையிருக்க, மரைமலர்போன்ற கையில், அவர், கோழியை அலங்காரார்த்தமாகக் கொண்டது யாது? பெருமைபொருந்திய இரண்டு மங்கையர்களும் யாவர்கள்? (37) உலகில், இவருடைய சௌரியத்தைப்பற்றி கேட்கின்றவர்கள்யாது மேன்மையைப்பெறுவார்கள்? ஓ! மகானுபாவா! அவருடைய பராக்கிரமத்தைப்பற்றி யெங்களுக்கு ஸவிஸ்தாரமாகச் சொல்லியருளவேணும்" என்றனர்கள். (38) ஸூதர் சொல்லியதாவது:—"ஓ! மகானுபாவர்களாகிய முனிவர்களே! உறுதியான நியமத்துடன் கேளீர்கள்! இதைக்கேட்கலானது, உலகிலுள்ள எல்லாவித மேன்மைகளுக்கும் மிக்க உத்தமமாகிய மேன்மையைப் பெறுவதற்கு முக்கிய ஆகாரமுள்ளதாகும். (39) தருமார்த்த காமமோக்ஷங் (அறம், பொருள், இன்பம், வீடு) களையடைவதற்கு இதேமுக்கிய காரணமாகும். இம்மகாசரித்திரத்தைக் கேட்பதினுல் மலடியும்புத்திரனையடைகின்றாள். (40) பெண்ணைவேண்டுவோர் பெண்ணையும், திரவியத்தை வேண்டுவோர் திரவியத்தையும் பெறுகின்றார்கள். கல்வியைவேண்டுவோர் கல்வியையும், ராஜியத்தைவேண்டுவோர் ராஜியத்தையுமடைகின்றார்கள். (41) இந்த உபாக்கியானத்தை, தம்பதி (புருடனும், பாரியையும்) யாக விருந்து நியமத்துடன் சிரத்தையாகவும், மனதை மற்றவிஷயங்களில் செல்லவிடாமலும், சோர்வு சோம்பல்க ளற்றவர்களாகவும், (42) ஆதியோடந்தமா யொருவாறு கேட்கில் அவர்கள் சகல இஷ்டகாம்மியங்களையும் தடையின்றி யடைகின்றார்க ளென்பதில் சந்தேகமேயில்லை. இம்மேன்மைபொருந்திய புராணத்தை அவசியமாய்ச் சிரத்தையுடன் பூஜித்து, (43) கேளீர்கள் பிராம்மணோத்தமர்களே

புருடனும் மனையாளுமாக, ஸ்ரீ குமாரமூர்த்தியின் பொன்னடிமீது மனதை நாட்டிக்கொண்டு, ஆதியோடந்தமா யிக்கதையை யொருவாறு கேட்கில் (44) அவர்கள், புத்திரப்பிராப்தி யற்றவர்களாயினும் அனேகம் புத்திரர்களையடைவதில் கொஞ்சமேனும் சஞ்சலமில்லையென்று பலமுறையாகச் சத்தியம்செய்கின்றேன். ஆகையால் முனிவர்களே! நீங்களெல்லோர்களும் இப்புராணத்தைப் பூஜித்து பின்னர் மிகவாதரவுடன் கேளுங்கள்? (45) அனேகம் கிளைக்கதைகளுடன் கூடியவும், வேண்டிய பலப்பிராப்தியைப் பெறத்தக்கவுமான இந்தச் சரித்திரத்தை யான் உங்களுக்குச் சொல்லுகின்றேன். ஓ ரிஷிசிரேஷ்டர்களே! விசுவாசமாய்க் கேளீர்கள்". (46) இவ்விதமாய் ஸூதபுத்திரர் சொல்லியதை முனிவர்கள் கேட்டு, செவிக்கு அமிருதமளித்ததுபோல் ஆனந்த சுகத்தை யனுபவித்து, ஸ்ரீபரமேசுவரனது செல்வகுமாரனுடைய திவ்வியசரித்திரத்தைக்கேட்பதில் மிக்க ஆவல்கொண்டவர்களாக அதைப்பற்றிப் பலவாறாய்க் கொண்டாடி மெச்சினார்கள்.

முதல் அத்தியாயம்

(முற்றிற்று.)

## ஸம்பவ காண்டம் ௨—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு ஸ்ரீ சூத முனிவரானவர், ஸ்ரீ மகாதேவன், ஜகதம்பிகை, குமாரமூர்த்தி, ஸத்தியவதி புத்திரனாகிய வேதவியாஸர், இவர்களைத் தியானம் செய்து சுபமாகிய வசனங்களை யுரைக்கின்றார். (1) "தவத்தினால் பாவகோடிகளைத்துலைத்து நிற்கின்ற மஹாத்துமாக்களாகிய சௌனகாதி முனிவர்களே! யான் கூறுகின்ற, சுபகதையாகிய, ஒப்பற்றதும், கேட்பதனால் கலியுகத்திற் கியல்பாகிய பாவங்களைத் தொம்சம் செய்ய வல்லதுமாகிய கந்தன் புகழைக் கேளுங்கள். ஆதிகல்பத்தின் முறை வரிசையிலான துவாப்பரயுகம் வந்தபோது(3) சகல பிரஜைகளுக்கும், நேரிட்ட வோர் புத்திமயக்கத்தினால் கேளீர்கள் பிராம்மணோத்தமர்களே! வேதம் முதலிய எல்லாவித்தைகளும், அவைகளினர்த்தங்களும், சரியானவிதத்தில் தோன்றவில்லை. (4) புத்திமயக்கத்தினால், சிலர்கள், ஜகத்துக்கு அன்னந்தான் முக்கியகாரணமென்றார்கள். சிலர் பிராணம்தான் காரணமென்றார்கள்? சிலர் மனசு என்றார்கள்? சிலர் விஞ்ஞானம், ஆநந்தம், (5) சூரியன், வாயு, அக்கினி, பிரம்மா, இலக்ஷுமீபதியாகிய விஷ்ணு, மாயை, விராட்புருஷன் இங்ஙனமாகப்பலர்களைப் பலர்கள் காரணமாகச் சொல்லினர்கள்? சிலர்கள் ஆத்துமாவினுடைய கருமங்களே யென்றார்கள். (6) பௌத்த, சார்வாக,லாகுளமுதலாகிய பலமதஸ்தர்களில் ஒவ்வொருமதஸ்தரும் ஒவ்வொருவரை அல்லது ஒவ்வொன்றைச் சொல்லுகின்றார்கள்.

முனிவர்களே! வளர்த்தலைநிறுத்தி சொல்லக்கூடியதில் இவ்வாறாய் சத்தியப்பொருளாகிய மகேசுவரன் ஒன்று நீங்கலாக மற்ற எல்லாவற்றிலும்ஒவ்வொன்றையும் ஒவ்வொருவர், ஜகத்துக்குக் காரணமாகக் கொண்டாடினார்கள். (7) அப்போது இவ்வாறு காலவசத்தினால் அவரவர்களுடைய சகல அதிகாரங்களும் தட்டுக் கெடலாயிற்று. அப்போது, கேளீர்கள் பிராம்மணர்களே! விஷ்ணு முதலிய தேவர்களேல்லோர்களும், (8) காலவசத்தின் கூறினாலாகியபுத்தி மயக்கங்களைக்கண்டு, ஸ்ரீ கைலைகிரியில் விளங்கிநிற்கின்றவும், தேவதேவோத்தமனும், சர்வஞ்ஞனும், சகலேசுவரனும், (9) ஸாக்ஷாத் பரபிரம்மசுவரூபியும், சம்சாரமாகிய கொடிய வியாதியைத் துலைப்பிக்கின்ற வைத்தியனும், சிவையென்ற மகாதேவியோடு திவ்விய ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கினறவுமான (10) மகாதேவனிடஞ் சென்றுதண்டனிட்டு முன்னின்று விண்ணப்பம் செய்துகொண்டதாவது:—"சகலகுண சம்பூர்ணாகிய மஹேசுவரா! உலகின்மீதுள்ளப் பிரம்ம க்ஷத்திரிய வைசியர் முதலாகிய சகலப் பிரஜைகளும் (11) அளவிலே புத்திமயக்கங்கொண்டு, தேவர்களைப் பாதுகாக்கின்ற பரமசிவா! வேதங்களோராளமா யிருப்பதால், அறிவீனத்தினால் அவைகளை அத்தியயனம் செய்வதில்லை. (12) அம்மூடர்கள் மற்ற சாஸ்திரங்களைப் படிப்பதுமில்லை. அவர்கள், மதிமயக்கத்தினால், தங்களைத்தவிர மற்றவர்களை ஜகத்துக்குக் காரணமாகச் சொல்லுகின்றார்கள். (13) சிலர் பிரம்மாவையும், சிலர் விஷ்ணுவையும், இந்திரன், சூரியன், வாயு முதலியவர்களைப் பலர்களும் சொலலுகின்றபடியால் தாங்களே பரப்பிரம்மப் பொருளென்பதை மோகத்தினாலறியவேயில்லை. (14) சகல அதிகாரங்களும் தடுமாறி நிற்கின்றவும், தருமமார்க்கங்கள்தவரியும், உலோபமோகங்கள் மேற்கொண்டும், குருசீடக்கிரமங்களின் நெறிவழுவியும், (15) வேதமோதுதலும், யாகம்செய்தலும், முற்றுமற்றுப்போய் நிற்கின்றதுமான ஸ்தாவரஜங்கம ரூபமாகிய இந்த ஜகத்தில் இயாங்களில் செய்யப்படுகிற (ஹோமம் முதலிய) ஆஹுதி பாகங்களைப் புஜித்து ஜீவிக்கிற எங்களுக்குத் தங்களைத் தவிர யாதுதான் கெதியிருக்கின்றது. (16) இவ்விதமாக விஷ்ணுமுதலிய தேவர்கள், பரமேசுவரன்முன்பாகத் தெரியப் படுத்திக்கொண்டு, உலகுக்கு வேண்டிய க்ஷேமங்களைப்பற்றி மிக்க வெகுமானத்துடன் பிரார்த்தித்தார்கள். (17) அப்போது மகாப்பிரபுவாகிய பரமசிவன், கெம்பீரவாக்கினால் சொன்னதாவது:—"வாரீர்கள் விஷ்ணுப் பிரம்மர்களே! நீங்களிருவர்களும், உலகில் துவாபரயுகம்தோறும் (18) வியாசராகவும், மனுவாகவு மவதரித்து, வேதசாஸ்திரங்களிரண்டையும், (18½) கலியுகத்தின்கண் அறிவீனர்களாயுள்ள மானிடர்கள் எளிதாய்க் கற்றறியும்படி (19½) பலவாறாயிருக்கிற அவைகளைச் சுருக்கமாகச் செய்துவிடுவீர்கள். (19) கருமங்களையும், பிரம்மத்தையும் நிர்த்தரிக்கின்ற, சூத்திரங்களால் குறிக்கப்படுகிற சாஸ்திரங்களை, (20) மற்ற ரிஷிகளையும் வைத்துக்கொண்டு தாமதமன்றியில் சீக்கிரத்தில் செய்துவிடுங்கள். தேவர்களும், மற்றமுனிவர்களும், அவிவேகிகளான மானிடர்களி னுபயோ

கார்த்தமாக, (21) சாஸ்திரங்களேயும், புராணங்களேயும், நமது கட்டளை யின்படி, சுருக்கம்செய்துவிடக் கடவர்கள்." இங்ஙனமாகிய மகேசுவ ரனுடைய கட்டளையை, விஷ்ணு பிரம்மர்கள் முதலியதேவர்கள், சிரமீ தில் வகித்து, முனிவர்களே! (22) பூமியில் வியாசர் முதலாகிய நாமதே யங்களுடன் ஜன்மமெடுத்து சகல வேதங்கள், புராணங்கள், தருமசா ஸ்திரங்களிவைகளே பரமேசுவரன்கட்டளையே பெரிதென்று கருதி, ஆதி யோடந்தமாய்ச் சுருக்கமாக விவரித்திருக்கிறார்கள். முனிவர்களே! இ ந்த யுகத்தின் வரிசைக்கிரமத்தில் (24) ஸ்ரீ நாராயணமூர்த்தியானவர், ஸத்தியவதி புத்திரனாகிய, மகாத்துமாவான வேதவியாசராக அவதரி த்து, (பலவாறுயிருந்த வேதங்களே) நான்கு வேதங்களாகச் சுருக்கி, (25) பைலர் முதலாய முனிவர்களிடத்து, ஒன்றேடொன்று சோராமல் (அவ்வேதங்களே) வெவ்வேறுய்ப் பகுந்துவிட்டு, கேளீர்கள் முனிவர் களே! புராணங்களேயும் பதினெட்டாகச் செய்து, (26) குருவாகிய வியாசமுனிவர், தயவுடன் என்னிடத்துக் கொடுத்தருளினர். அப் பதினெண் புராணங்களின் வரிசைக்கிரமம் எப்படி யென்றல்:—"பிரா ம்மம், பாத்துமம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், (27)பவிஷியத், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரம்மகைவர்த்தம், லிங்கம், வாராகம், (28)ஸ்காந்தம், வாமனம், மாத் ஸியம், கௌர்மம், காருடம், பிரம்மாண்டம் ஆகிய 18 புராணங்களாகி யவை. (29)முனிவர்களே! அவற்றுள், சைவம், பவிஷியத், மார்க்கண் டேயம், லிங்கம், வாராகம், ஸ்காந்தம், (30)மாத்ஸியம், கௌர்மம், வா மனம், பிரம்மாண்டம் ஆகிய மூன்று இலக்ஷக்கிரந்தங்களுள்ள பத்து புராணங்களும் சிவபுராணங்கள். (31) இப்புராணங்கள் யாவும் ஸ்ரீ பரமேசுவரனுடைய குணநிச்சயங்களேயே விளக்கியவை. மற்றவர்க்க ஸாத்தியமும், துர்லபமுமாகிய மூர்த்தியையும், பெயரையும் (32) ஈசன் கொண்டிருப்பதாகவும், இன்னும் பலவிதமாய் அவரதுமகிமையையேபி ரகாசிப்பிக்கின்றது. விஷ்ணுவைப்பற்றிய புராணங்களோவென்றல்:— முன்போலவே வைஷ்ணவம், பாகவதம். (33) நாரதீயம், காருடம் இந்நா ன்கு மேயென்று சொல்லப் படுகின்றது. பிராம்மம், பாத்மம் இவ்வி ரண்டும் பிரம்ம புராண மென்றும், ஆக்கினேயம் அக்கினி புராணமெ ன்றும், (34) பிரம்மகைவர்த்தமென்பது சூரிய புராணமென்றும் ஆகிய பதினெண் புராணங்களின் விவர மாகின்றது. விஷ்ணுவுக்குரிய 4 பு புராணங்களில் ஸ்ரீ பரமேசுவரனேயும், மகாவிஷ்ணுவையும் சமமாகவும் (35)ஜகத்பதியாகிய ஸ்ரீ விஷ்ணுவை பிரம்மா முதலியதேவர்களுக்கு மேன்மையுள்ளவராகவும் சொல்லப்படுகிறது. பிரம்மாவுக்குரிய புரா

ணங்களில், பிரம்மா, விஷ்ணு, மகேசுவரர்களைச் சமமாகவும் (36) பிரம்மாவை மற்ற யாவர்க்கும் மேன்மைகொண்ட ஜகத்பதியென்றும் கூறுகின்றது. சூரியன், பிராதக்காலம், மத்தியான்னகாலம், சாயங்காலங்களில் முறையே பிரம்மா, விஷ்ணு, ருந்திர சுவரூபமுடைய வராக சொல்லப்படுகின்றனர். (37,37½)விசுவானரமுனிவரின் தநயராகிய அக்கினிதேவன், ஸாக்ஷாத்மும்மூர்த்தி சுவரூபமுடையோராகவுரைக்கப்படுகின்றனர். (38) ஆக்கினேயப், பிரம்மகைவர்த்த புராணங்களிரண்டும் அக்கினிதேவனையு மாதித்தியனையும், அவர்கள்ஸ்ரீ பரமேசுவரனது (எட்டு மூர்த்திகளில்)இரண்டு மூர்த்தி பாகங்களை வகிக்கின்றபடியால், விசேஷமாய், சிவஸ்வரூபிகளாகிய ஜகதீசுவரர்களென்று விளக்குகின்றது. (39)மேல்கண்ட புராணங்கள் 4 இலக்ஷ கிரந்தங்களுள்ளவை. (ஸ்ரீ பரமேசுவரனை), சகலஜகந்தையு மதிகரித்தவரென்றும்,உமாபதியென்றும், (40)ஸாக்ஷாத் பரம புருடனென்றும், (மாயா)பாசத்தி னின்று விடுவிக்கின்ற பசுபதியென்றும், பரபிரம்மமென்றும், பரந்தாம (ஸகலஜகத்தும் தன்னுள்ளடங்கப்பெற்றவ) ரென்றும், பரஞ்சோதிப் பொருளென்றும், (என்றும்)கவலையற்றவரென்றும், (41)மங்கள (சுப)மாயிருப்பவை யெல்லாவற்றிலும் சிறந்த மங்கள மூர்த்தியென்றும், பாவன (பரிசுத்த)மாயிருப்பவை யெல்லாவற்றிலும் சிறந்த பாவன மூர்த்தியென்றும், சருவ மங்களை யென்ற ஜகதம்பிகையோடு கூடி விளங்கியவ ரென்றும் , உதபப் புருஸ்ஸு மங்கள (திவ்விய மங்கள மூர்த்தியாக விளங்கி நிற்கின்றவ) ரென்று வேதத்தில் கூறப்படுகிறவரென்றும்,(42) வேதாந்த வாக்கியங்களால, நித்தியரென்றும், அமிருத (அழிவில்லாத) ப்பொருளென்றும் முறையிடப்படுகின்றவரென்றும் சாஸ்திரங்களும், வேதங்களும் நன்குவிளக்கியது போலவே, புராணங்களும், முக்கண்ணுடைய, பார்வதிஸமேதரான பரமசிவனை (43) (ஸர்வ) சுவதந்திரமுள்ளோனென்றும், ஏரேபொருளென்றும், அத்துவைத (இரண்டாவதற்ற) ப்பொருளென்றும், தங்குதடையின்றி முறையிடுகின்றது. இவற்றுள் 13-வது புராணமாகிய ஸ்காந்தபுராணத்தைப்பற்றி விளக்குகின்றேன். (44) இப்புராணம், ஒரிலக்ஷக்கிரந்தங்களடங்கிய 6 சமுகிதைகளுள்ளது. மகேசுவரனுக்குரிய 10 புராணங்களும், சாத்துவிகபுராணங்களென்றும், ஸத்பிராம்மணர்களால் நம்பத்தக்கதென்றும் தேவர்கள் சொல்லுகிறார்கள். (45) அச்சாத்துவிக புராணங்களின் தன்மையோ வென்றால்:—சத்துவகுணமுள்ளதும், வெள்ளைநிறமுடையதும், சமாதி (தவம்) யிலிருப்பதும், சுகத்துக்கும் ஞானத்துக்குமிருப்பிடமாயுள்ளதுமான பொருளைவிளக்குதலாகும். (46) அப்பொருளாகிய சிவனேயென்று

ல் யோகிகளுக்குச் சிறந்தவித்தைகளை யுபதேசிப்பவரும், சுத்தமானஸ்படிகத்தைப்போன்றவரும், என்றும் தூக்கமற்றவரும், பிராம்மணர்களுக்கெல்லாமதிபதியுமாகியவரென்றும் பிரசித்தியடைந்திருக்கிறார். (47) இப்புராணங்களில் பிராம்மணர்களுடைய சுபகதைகளே சொல்லப்படுகின்றன. பத்துசிவபுராணங்களும் கெடுதியையும் பாவத்தையும் நாடா. (48) ரிஷீசுவரர்களே! நான்குவிஷ்ணு புராணங்களும் தாமசமென்னப்படும். ஏனென்றால் அவைகளில் க்ஷத்திரியர்களுக்குரிய தருமங்கள் சொல்லப்படுகின்றன. அப்புராணங்களின் முக்கியதேவதை விஷ்ணு. (49) அத்தாமசபுராணங்களின் தன்மையேதென்றால், கறுப்புநிறமுடையதும், உபகாரமற்றதும், வஞ்சகத்திறமையுள்ளதும், நித்திரை, சோம்பல், மிகுந்தமதம் இவைகளையுடையதுமான பொருளை விளக்குதலாகும். (50) அப்பொருளாகிய விஷ்ணுவோ:—கறுப்புநிறமுடையவரும், ஆதிசேஷன்மீது சயனிக்கின்றவரும், அடியார்களை மோகிக்கச்செய்கின்றவருமாக சொல்லப்படுகிறார். விஷ்ணு புராணங்களில், ரிஷிகளால் க்ஷத்திரியர்களுக்குரிய தருமங்கள்விளக்கப்பட்டிருக்கின்றன. (51) பிரம்மாவுக்குரிய மேல்கண்ட 2 புராணங்களும், இராஜஸமென்றும், வைசியர்களால் சேவிக்கப்படத்தக்கதுமாகுமென்பது சருவசம்மதமாயிருக்கின்றது. இரஜோகுணமென்பது துக்கதுக்கிருப்பிடமும், சிகப்புநிறமுள்ளதும், சபலபுத்தியுள்ளதுமாகும். (52) ஆக்கினேயமும், சூரியபுராணமும் மேற்சொல்லிய மூன்றுகுணங்களையும் பொருந்தியவை. ஆகையால் பிராம்மணர்களுக்குத் தகுதியுள்ளவை சைவபுராணங்களேயாகும். (53) ஆகிலும் ஸ்காந்தபுராணம், கேளீர்கள் முனிவீரர்களே! சுகத்தைக்கொடுப்பதும், மேன்மையுள்ளதுமாயிருக்கின்றது. சகலவேதாந்த ஸாரங்களையும் நன்குவிளக்கியது. அதில், ஐம்பதுகண்டங்களுள்ளவை. (54) அது, ஸனத்குமாரசமுகிதையென்றும், ஸூதசமுகிதையென்றும், பிரம்மசமுகிதையென்றும், விஷ்ணுசமுகிதையென்றும், (55) சங்கரசமுகிதை யென்றும், ஸௌரசமுகிதையென்றும் ஆறுசமுகிதைகளையுடையது. இவற்றுள், முதலாவது, சமுகிதை 55000 சுலோகங்களுள்ளது. (56) இரண்டாவதில், பிராம்மணோத்தமர்களே! 6000 சுலோகங்களும், பிரம்மசமுகிதையில் 3000 சுலோகங்களும், விஷ்ணுசமுகிதையில் 5000 சுலோகங்களும், (57) சங்கரசமுகிதையில் 30000 சுலோகங்களடங்கிய 12 கண்டங்களும், 6வதாகிய ஸௌரசமுகிதையில் 1000 சுலோகங்களுமுள்ளவையாகும். (58) ஸ்காந்தமானது ஓரிலக்ஷக்கிரந்தங்களடங்கிய ஐம்பது கண்டங்களையுடையது. ஓ! ரிஷிவரியர்களே! அதைத்தானிப்போது உங்களுக்கு எடுத்துரைக்கப்போகின்றேன். (59) அவற்றுள் சங்கசமுகிதையென்பது, முற்றும் வேதாந்தத்தால் ஆதரிக்கப்பட்டதும், 30000 கிரந்தங்களுள்ளவையாக விஸ்தரிக்கப்பட்டதுமாயிருக்கின்றது. (60) முதலில் சிவரகஸிய கண்டமென்பதை யெடுத்து இப்போதுங்களுக்கு விளக்கு

கின்றேன். அது 13000 கிரந்தங்களுள்ள ஏழுகாண்டங்களால் விளங்கப்படுகிறது. (61) சம்பவகாண்டம் 1. ஆஸுரகாண்டம் 2. மாகேந்திரகாண்டம் 3. உயுத்தகாண்டம் 4. (62) தேவகாண்டம் 5. தக்ஷகாண்டம் 6. முனிவீரர்களே! உபதேசகாண்டம் 7. ஆகிய 7 காண்டங்கள். (63) அவற்றுள் பிராம்மணோத்தமர்களே! வியாஸமுனிவரால், முந்தி ஸ்ரீ சுப்பிரம்மணியப்பிரானுடைய பராக்கிரமங்களும், சரித்திரங்களும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. (64) தேவர்களின் துக்கத்தையும் மோகத்தையும் துலைப்பிக்கிறதும், வீரத்தன்மையை விளக்கிக்காட்டியதும், செவிகளுக்கு அமிருதம் போன்றதுமாகிய இந்த திவ்வியசரித்திரத்தைத் தினம் தோறும் பாராயணம் செய்துவந்து இதைச் சிரத்தையாயாதரிப்போர்கள் பூமியில், பசு, பத்தினீ, புத்திர, மித்திரபந்துவர்க்கங்களுடன் வெகு பாக்கியங்களை யனுபவித்து வாழலாகின்றார்கள். (65)

இரண்டாவது அத்தியாயம்

( முற்றிற்று. )

## ஸம்பவ காண்டம் ௩—வது அத்தியாயத்தினர்த்தம்

பூர்வகாலத்தில் கைலையின் கொடுமுடியில், உலகுக்கெல்லாம் சுகமளிக்கின்ற, தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய ஸ்ரீ சங்கரன் முன்பாக, தக்ஷப்பிரஜாபதியினருமைமகளாகிய மகாதேவி சொன்னதாவது :- (1) "தேவாதிதேவா! யான் தேவரீர் வசனத்தை மறுதளித்து எனது தந்தை வீட்டுக்குச் சென்றதில் அங்கு, சற்றேனும் சகிக்கமுடியாத பேரவமானத்தை அடைந்தேன். (2) அத்தந்தையும், அவன் செய்த யாகத்தோடு, வீரபத்திரால் தண்டிக்கப்பட்டு மாண்டுவிட்டான். அப்படியிருந்தும் சகல ஜனங்களும் யெப்போதும், விலக்கி விடும்படியான பேராகிய தாக்ஷாயணி (தக்ஷன்மகள்) யென்றே என்னைப்பற்றி வியவகரிக்கின்றபடியால் (3) மூவுலகுக்குமதிபதியாகின்ற பரமசிவா! அதை யான் சற்றேனும் சகிக்கவல்லவளில்லை. ஆகையால் யான் வேறெங்காகிலும் ஜநநமாகும்படி வரனளிக்கவேண்டு" (4) மென்று தேவியால் பிரார்த்திக்கப் பட்டபொழுது மகேசுவரன் புன்னகைப்புடன் சொல்லியதாவது:—"எல்லோர்களாலும் பூஜிக்கப்படலுற்ற தக்ஷன் பெண்ணே! உனது மனதிலிப்படி யுருதியான விருப்பமிருக்குமாயில், (5) நமது வாக்கியத்தின்படி இமயகிரி ராஜனைத் தந்தையாக அடையக்கடவாய். அவர் உந்தனைப் பெண்ணாக அடையக்காதலுற்று மிக்கத்தவம் செய்கின்றார். (6) அவருடைய மனைவியாகிய மேனகை யென்றவளும்,பிதுருக்களதுருணத்தைத் தீர்ப்பதற்காக உனதிரண்டடிகளைத் தியானித்துத் தவம்செய்கிறாள். எனது பிரியமுள்ள நாயகி! நீ அந்தம்

பதிகளுக்குப் பெண்ணுகி அவர்களைக்கிருதார்த்தர்களாகச் செய்வாயாக என்றனர். (7) இங்ஙனமாகப் பரதேவதையானவள் ஜனனமாவதற்கு விருப்பமுற்றிருக்கையில் இமையராஜன், தவவேடங்கொண்டவனுகி (8) மலையின் உச்சியில் கொடிகள் சுற்றியிருப்பதுபோல் தலையில் சடைகளை தரித்தும், மெலிந்த முஞ்சிப்புற்கையிற்றை அரைநூலாகவும், மான்தோலை உடையாகவும் தரித்து, (9) தவத்திற்குரிய ஆசிரமத்தில் வசித்துக்கொண்டே திருநீறு, ருத்திராக்ஷங்களினுல் சரீரம் விளங்கப்பெற்றவரும், மனஅடக்கம், இந்திரியநிக்ரகம், கோபத்தை ஜயித்தல் இவைகளைக்கொண்டவருமாக (10) சகல ஜகத்துக்கும் ஈசுவரியாகிய அப்பரதேவதையையே மனதில் தியானித்துக்கொண்டும், பழங்கள் சருகுகள், ஜலம், காற்று இவைகளையே ஆகாரார்த்தமாயேற்படுத்திக்கொண்டும், (11) கிரீஷ்மகாலத்தில் பஞ்சாக்கினி மத்தியில் சூரியனையுற்று நோக்கி நின்றுகொண்டும், மழைக்காலத்தில் கேவலம் ஆகாயத்தையே உடையாகக்கொண்டும், (12) பனிகாலத்தில், இவர்ஹிமவா (பனியையுடையோ) ஞகையால் பனிமுட்டத்தினின்று கொண்டும், சிசிரகாலத்தில் ஜலமத்தியினின்றும், வஸந்தகாலத்தில் சூரியனுக்கு நேர்முகமாய் நின்றும் (13) மற்றவைகளை கெவனியாவல் தேவீஸூக்த (வேதத்தின் ஓர் பாகமந்திரம்) த்தையே யெப்போதும் பாராயணம் செய்துகொண்டும், கொடுமையான தவத்தைச் செய்தனர். அவருடைய பாரியையும், அவருக்கு எப்போதும் வேண்டிய பணிவிடைகளைச்செய்துகொண்டு, யோகாப்பியாஸமுற்றவளாக(14)அவரது நிழல்போல், நாள்தோறும், வெகுகாலம் வரையில், மனக்களிப்புடன் தவஞ் செய்கிற அந்த இமவானருகில் நின்றுவந்தாள். (15) இப்படி வெகுகாலம் சென்றபிறகு தேவியானவள் பிரசாதம் செய்யலுற்ருள். கிரிராஜன், மானஸஸரஸ் என்ற சிறந்த ஓடைகரு ஸ்நாநத்துக்காகச் சென்றபோது (16) தேவியானவள், தனது இச்சையின்படி உத்பல(நெய்தல்) புஷ்பத்தின்மேல், சிறு குழந்தையாக விளங்கியிருந்தனள். இமவானும், ஸ்ரீபரமேசுவரனுடைய இடதுபார்சுவத்தினளும், உலகுக்கெல்லாம் காரணப்பொருளும், (17) நான்கு புஜங்களையும், முக்கண்களையும், சந்திரபிம்பம் போன்ற முகத்தையுமுடையவளும், பாதிசந்திரகலையுடன் விளங்கியவளும், சிறந்த ஜடையலங்காரமுடையவளும், நேர்த்தியான புன்சிரிப்பையுடையவளுமாகிய பரமேசுவரியை, (18) இமராஜன், தரித்திரனுக்குப்புதையல் வாய்த்ததுபோல், ஆனந்தபாவசத்துடன் கண்டு தண்டனிட்டு அக்குழவியை யெடுத்துக்கொண்டு களிப்புடன் தனதரண்மனை சென்றனர். (19) அங்கு, இவரது பட்டமகிஷியாகிய மேனகையும், ஆதரவுடன் அர்க்கியபாத்திமெடுத்துககொண்டு, தவவனத்தினின்று திரும்பிவருகின்ற கணவனுக்கெதிர்கொண்டு சென்றனள். (20) அவள் அவரதுகையில், மூவுலகுக்கும் மாதாவாகிய குழந்தையைக் கண்டு தண்டனிட்டு, பிறகு அக்குழந்தையைத் தனதுகைகளில் வாங்கிக்கொண்டு களிப்புடன் மடிமீதில் வைத்து (21) அ

க்குழந்தையின் மீது மிகவும் ஆசைகொண்டனள். அவளது இரண்டு கொங்கைகளின்மீது பால் நிரம்பச் சுரக்கலுற்றது. அப்போது தேவியும், அவள்முகத்தை உற்றுநோக்கிக் கொண்டு ஸ்தனியத்தைப் பானஞ்செய்தனள். (22) அப்போது அவ்வரண்மனை மீதுள்ள ஸ்திரீகள் உள்ளம் பூரிக்கக்களிப்புற்றார்கள். ஆகாசசாரிகளாகிய ஸித்தசாரணர்கள் மலர்மாரிபொழிந்தார்கள். (23) அப்போது முழக்கிய துந்துபி முதலிய வாத்தியங்களின் கோஷங்கள் திக்குகளைச்செவிடாக்கி விட்டன. அந்தக்ஷணத்தில், முனிவர்களெல்லோரும் கைகளிற்பற்றிய தெண்டங்களை யெறிந்து பிடித்து நடனம்செய்தார்கள். (24) யோகிகளுடைய உள்ளங்கள் மிகவும் ஆநந்தபரவசமாயின. இந்திரன், அக்கினி, இயமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானியன், பிரம்மா, விஷ்ணு முதலிய திக்பாலர்கள், அவரவர்களுடைய பெண்டீர்களோடும், கணங்களோடும் அம்மகோற்சவத்தைக் கொண்டாடினர்கள். (26) மேனையும், ஹிமராஜனும் தாங்களிருவரும் கிருதார்த்தர்களாகிவிட்டதாக மனம்பூரித்தார்கள். பிறந்தவள்போல் தோற்றுகின்ற பிறப்பற்றதங்களது அப்பெண்ணை, அப்போது துதித்தார்கள். (27) இவ்விருவரும் அஞ்சலிசெய்துகொண்டு வினயத்துடன் உலகுக்கெல்லாம் ஆதிகாரணமாகிய இப்பராதேவதையைப்பற்றி அனேகம் துதிகளைச்செய்தார்கள். (28) ஜகத்சிருஷ்டிக்கு முந்தி ஸ்ரீபரமேசுவரனுடைய * வியஷ்டியாகிய பிரஞ்ஞைக்குள் பிரவேசித்து சஞ்சரிக்கின்ற உனக்குவந்தனம் செய்கின்றோம். (29) ஸ்ரீமகாதேவனுடைய சரீரரூபமாகவும், ஜகங்களுக்கு முக்கிய தேவதாரூபமாகவும், ஞானம், இச்சை, கிரியை, மனம் இவைகளின் ரூபமுமான பராசக்தியாகிய உனக்கு வந்தனம் செய்கின்றோம். (30) உந்தனுடைய சருவமங்களத் தன்மையால் ஸ்ரீபரமேசுவரனை மிக்கமங்களமூர்த்தியாகச் செய்யப்பெற்றவும், பிறப்பற்றவும், அடியார்களுக்கு சருவமங்களத்தையும் கொடுக்கின்றவுமான உனக்குவந்தனம். (31) ஸ்ரீயம், லக்ஷ்மீம், ஔபலாம், காம் அம்பிகாம், விஜயாம், ஜயாம், ஷஷ்டீம் ஆகிய இத்திருநாமங்களால் வேதத்தில் துதிக்கப்படுகிற, ஜகங்களால் பூஜிக்கப்படலுற்ற உந்தனடிமீதிலடைக்கலம் சேருகின்றோம். (32) மகாதேவியும் சிவையுமாகிய உந்தனைச்சரணமாக நாடியவர்களே யிச்சகத்தில் மதிக்கத்தக்கவர்களும், தனிகர்களும், புகழுடையோர்களுமாகின்றார்கள். (33) பிரா

---

* சிருஷ்டிகாலத்துக்கு முந்தி சகலப் பிரபஞ்சங்களும் பரப்பிரம்ம சுவரூபியாகிய ஸ்ரீ பரமேசுவர ரூபமாக [அவனைத் தவிர வேறு பொருளே இல்லாது] விளங்கி நிற்கும்போது, அவரதந்தர்விருத்தியா யிருக்கிற ஸமஷ்டியாகிய தோற்றத்துக்கு ஸமஷ்டி பிரஞ்ஞை (மொத்தமாகிய தோற்றம்) யென்று பெயர். அவருடைய திருவுளத்தில், பிரபஞ்சங்களை வெவ்வேறாய் சிருஷ்டி செய்ய வேணுமென்று அருளப்படுகிற தோற்றத்துக்கு வியஷ்டிப்பிரஞ்ஞை (பிரிவினை தோற்றம்) யென்றுபெயர். அப்போது, அவனைக்காட்டிலும் அபேதமாகிய பராசக்தியானவள் அவ்வியஷ்டிப் பிரஞ்ஞைக்குட்புகுந்து சஞ்சாரம் செய்வதுமூலமாகவே பிரபஞ்சங்கள் சிருஷ்டிக்கப்படலாயிற்றென்பது கருத்து.

ணிகளுக்கு பிரம்மனால் குறிக்கப்பட்ட அசுபமான தலையெழுத்தைக் கூட, உந்தனையப்பிராணியானது சரணமடைந்து பெறுகிற உந்தனருளால், சுபமாக மாற்றிக்கொள்வதைப் பெற்ற உந்தன்மீது சரணமடைகின்றோம். (34) உந்தனிரண்டு மரைமலரடிகளில் மனதைநாட்டியமானிடர், எக்காலும் துக்கம்பெறாதனைப் பெற்றவுந்தனடிகளிற் சரணமடைகின்றோம். (35) இங்ஙனமாக ஸ்தோத்திரங்கள் செய்த ஹிமராஜனையும், மேனகையையும் ஜகதம்பிகையாகிய தேவியானவள் பார்த்துச்சொல்லுகின்றாள். "எனதுவசனத்தைக் கேளீர்கள். "நீங்கள் எனக்குத் தாய்தந்தையர்களாகின்றீர்கள். (36) நானேவென்றால்:- ஸ்ரீபரமேசுவரனுடைய இடதுமடிமீதிலிருப்பவளும், ஆதியற்று வெகு காலாயிருப்பவளும், பிரம்மாவினால் பிரார்த்திக்கப்படுகிறவளும், மகேசுவரனுடைய கட்டளைக்குத்தவராமல் நிற்பவளும் பராசக்தியுமாகியவள். (37) அப்படிப்பட்டயான் தக்ஷப்பிரஜாபதிக்குப்பெண்ணாகயிருந்ததால் அவ்விசனிடத்தினின்றுப் பிரிபட்டவள் போலாயினேன். அத்தக்ஷனோ, சிவதுரோக பாதகியாகிவிட்டபடியால் ஈசனால் சமுகரிக்கப்பட்டான். (38) யானுமவனது பெண்ணாயிருந்த தேகத்தைவிட்டு, உங்களால், தவம் தியானம் முதலிய சமாதிகளைச்செய்துப் பிரார்த்திக்கப்பட்டதன்பேரில், உங்களைப் பெற்றோர்களாக அடைந்தேன்." (39) என்று திருவாய்மலர்ந்தருளிய பின்னர் அவர்களுக்குத் தன் மீதிலுள்ள நிஜஅறிவை உடனே மாற்றிவிட்டு, இரண்டு புஜங்களையும் கண்களையுமுடையவளும், நெய்தல் மலர்போன்றகாந்தியையுடையவளும், (40) நெய்தல்மலர்போன்ற கண்களையும், நெய்தல் மலர்போல் மிகுந்தவாசனையையும், கறுநெய்தல் மலர்போன்ற கேசபாசங்களையுமுடையவளாயினள். அப்போது மேனகையும், ஹிமராஜனும் குழந்தையைத் தங்கள் பெண்ணென்றே நினைத்தார்கள். (41) அவர்கள், அவளுடையமாயையினால் நிஜஅறிவையிழந்தவர்களும், அவள்மீது நேசங்கொண்டவர்களுமாகி, மந்திரிபிரதானிகளுடனும், உபாத்தியாயர்களுடனும் அக்குழந்தைக்கு ஜாதகருமம் செய்தார்கள். (42) அம் மகோத்சவமானது அப்பட்டணத்து எல்லாவாக்கிலுமுள்ள ஜனங்களெல்லோர்களும் வெகுகோலாகல முழக்கங்களோடு கொண்டாடி மிக்கசந்தோஷமடைந்து, வெகுமேன்மையாக நடத்தப்பட்டது. (43) கிரிராஜன், குழந்தைக்கு 12-வது நாளில் பெயரிட்டு, 6-வதுமாதத்தில் அன்னப்பிராசனமகோத்சவம் நடத்தி, 7-வது மாதத்தில் நிஷ்கிரமோத்சவம் (குழந்தையை ஆலயதரிசனத்துக் கெடுத்துப்போகுதல்) செய்வித்தனர். (44) தேவியினுடைய திருமேனியானது சாணைபிடித்த இரத்தினம்போல் வெகுமனோக்கியமாக விளங்கி நாளுக்குநாள் சந்திரகலைபோல்விருத்தியாகி வந்தது. (45) அப்போது தந்தைக்கும், அதிகசந்தோஷத்தினால் மேனிபூரித்து விருத்தியாயிற்று. பருவதராஜனுக்குப் பெண்ணாகியதால் பார்வதி யென்ற திருநாமத்தை கொண்டனள். (46)

குழந்தைக்கு ஐந்துவயது நிறைந்தபோது தவவிருப்பமுண்டாகி தனது இஷ்டத்தைப்பெற்றோர்களுக்குச் சொன்னதில் (47) மாதாவினால் வாராயம்மணி கூடாது என்று தடைசெய்யப்பட்டதன் பேரில் தேவிக்குப், பிரணவசுவரூபமாகிய "உமை" யென்ற திருநாமம் கிடைத்தது. இவளுடைய கருத்தை, கிரிராஜன் ஊகத்தினால்தெரிந்து, தவதுக்குரிய வஸ்துக்களைகொடுத்து, (48) தேவியைத்தவம் செய்வதற்காக அனேகம் தோழிகளோடு சந்தோஷமாயனுப்பித்தனர். கௌரியும், அங்கே இமயபருவதத்தின் கொடுமுடிக்குச்சென்று, (49) தோழிகளுடன் மிக்கச்சந்தோஷமாக, பாலை(குழந்தை)யாயினும் மிகவும் ஒப்பற்ற தவத்தைச் செய்தனள். இதே சமயத்தில், மகேசுவரனானவர், வெள்ளிமலையாகிய கைலையில் (50) சனகர்முதலாய மகரிஷிகளுக்கு, பசுவென்றும், பதியென்றும், பாசமென்றுமாகிய 3 பதார்த்தங்களுடைய பொருள்களைப்பற்றிய வேதாந்தசாஸ்திரங்களின் சித்தாந்த நிரூபணங்களையுபதேசித்துக்கொண்டிருந்தார். (51) ஸனகாதிகளோவென்றால் ஸ்ரீபிரம்மதேவருடைய மானஸபுத்திரர்கள்; அவர்கள், தந்தையாகிய பிரம்மாவினால் சிருஷ்டிசெய்யும் விஷயத்தில் எச்சரிக்கப்பட்டபோது அவர்கள் சொல்லியதாவது (52) "பிரம்மதேவரே! ஜகத்தை சிருஷ்டிசெய்யும் விஷயத்தொலைங்களை யேற்படும்படி தாங்கள் எச்சரிப்பதை யாங்கள் ஓர் நல்லபுத்தியாக அங்கிகரிக்கமாட்டோம். யாதெனில், மோக்ஷத்தை விரும்பியவர்களுக்கு ஸ்ரீபரமேசுவரனை யாராதித்தலல்லவோ நல்லமார்க்கம்" (53) என்றுகருதி அவர்கள் யோகத்தை நாடித்தவம் செய்கையில், மகாபிரபுவாகிய பரமசிவன் எதிரில் தோன்றி ஓராலமரத்தினடியிலிருந்து அழிவில்லாத தெக்ஷிணாமூர்த்திரூபராகிவேதமோதுவித்ததில் (54-54½)அவர்கள்ரகஸியத்துடன்பல வேதங்களையும் ஸ்ரீபரமசிவனிடத்தினின்று முறைப்படி அப்பியசித்தும் (55) ஈசனுடைய மாயையினால் அவர்கள் பொருட்பயிர்ச்சி பெறவில்லை. வெகுகாலம் சென்றபிறகு மறுபடியும் அவர்கள் சேர்ந்து ஸ்ரீ பரமேசுவரனைக் கேட்கவேண்டியவர்களாக (56) மிக்கச்சொக்கவெள்ளிப்பாரையாகவுள்ள அடிவாரத்தையுடைய கைலையின் கொடுமுடிக்குச் சென்றார்கள். அங்கு, அளவற்ற ஆநந்தத்தால் நிரம்பிய, ஸ்ரீபரமேசுவரனுடைய போகபுரத்திலுள்ள (57) நினைத்தமாத்திரத்தில் மோக்ஷத்தை அடைவிக்கின்றதும், அதிமனோக்கியமுமாகிய சுபமான மாளிகைக்குச்சென்று ஸ்ரீநந்திகேசுவரனுடைய உத்திரவின்பேரில் ஸ்ரீபகவானிடத்துக்கேகி நமஸ்கரித்து பிரபுவைப்பிரார்த்தித்ததாவது,(58) "சர்வேசுவரா! ஸகலஜகங்களையும் சிருஷ்டித்து, ரக்ஷித்து, பிறகுசமுகரித்து, மறுபடியும் லீலாவினோதமாகவே அனுக்கிரகித்துமறைந்துவிடுகிறீர்கள். ஹே!தயாநிதியே! தங்களையாவர்தானறிவார்கள். (59) யாதாமொரு பிறவியானது, யாதொரு உங்களுடைய மணமலரடிகளை

தூளிகளில் ஒன்றைச் சரணமடைந்த மாத்திரத்தில் அப்பிறவியானது, தாண்டமுடியாத சமுசாரமாகிய சமுத்திரத்தையும், மிருத்தியுவையும், நொடியில் தாண்டிவிடுகிறது. (60) தேவர்கள் முதலாகியவர்கள் உங்களைச் சரணமடைந்து நமஸ்காரம் செய்வதில், அவர்களிடத்து பிரம்மகத்தி முதலாய மகாபாதகங்களும் அணுகாது நீங்கிவிடுகின்றன. (61) ஹே! உமாகாந்தனுகிய பரமசிவா! சமுசாரபயத்தினின்று மிக்கநடுங்கிய, அத்தியயனம் செய்தப் பிராம்மணர்களாகிய யாங்கள், பிராம்மணர்களுக்கெல்லாம் பதியாகிய தங்களிடத்து சரணமடைந்தோம். (62) சமுசாரக்கட்டினின்று விடுவிக்கின்ற பிரபுவும், பிராணிகளுக்கெல்லாம் பதியும், ஈசானரும், பிறப்பற்றவர்களுமாகிய தாங்கள் ஒருவரே என்றதை ஆராய்ந்தவர்களாகிய யாங்கள் ஹே! பிரபுவே! உங்களுக்குள்ளாகிய பசுக்களாகின்றோம்"; (63) என்று பலவாறாய் ஸ்தோத்திரம் செய்து அடியில்கண்டபடி வேண்டுதலைப் பிரார்த்தித்தார்கள். "முந்திதேவரீர், ஆலவிருக்ஷத்தினடியில் எங்களுக்கு சிவாகமங்களையும், சகலவேதங்களையும் உபதேசித்ததில் (64-64½) பூர்ண தயவுடன் தங்களால் உபதேசிக்கப்பட்டதும், வேதத்தினுடைய சித்தாந்தரூபமாக அனுபவத்தில் தங்களுக்குமட்டில் தெரிந்திருப்பவையுமான வேதார்த்தங்கள் மிகவும் ஏராளமாயிருக்கின்றபடியால் அவை யெங்களுக்கு நன்குவிளங்கவில்லை. (66) ஆகையால் ஹே! சகல ஜகங்களையும் காக்கின்ற பரமசிவ! எங்கள்மீது தயவுவைத்து அவைகளை, யிப்போது சுருக்கஞ்செய்து, சொல்லி யருளவேண்டும்". (66½) இவ்விதமாக ஸனகாதிகளால் பிரார்த்திக்கப்பட்டபிறகு, சகல ஜகங்களுக்கும் கர்த்தாவாகியப் பிரபுவானவர் மிகுந்த கருணையுடன் இனி நன்றாய்க் கற்பிப்பதற்காக் கோடிசூரியர்களின் கிரணங்களது தேஜஸ்ஸைக் கொண்ட, சகல குருக்களுக்கெல்லாம் பராபரகுருவாகிய பரமசிவன் நந்திகேசுவரனை நோக்கி ஓர் வசனம் கூறுகின்றார். (67½)

மூன்றுவது அத்தியாயம்

(முற்றிற்று.)

## ஸம்பவ காண்டம் ச—வது அத்தியாயத்தினர்த்தம்

சர்வகுண சம்பன்னராகியவும், சூரியனுடைய கண்ணை குத்துவித்தவரும், சருவஜனகரும், ஜகங்களுக்கு நாயகருமாகிய பரமசிவன், கேளீர்கள்! முனிவீரர்களே! ஸ்ரீசிலாதமஹாரிஷிக்கு தநயராகிய (நந்திகேசுவரனை) நோக்கி யெச்சரித்ததாவது (1) "ஹே! சிலாத குமாரா

யாம், இச்சனகாதிகளுக்கு அதிரகஸியமும், சுகத்தை அடைவிப்பது மாகிய உத்தமக்கியானத்தை உபதேசம் செய்தாகுமளவில் நீர் நமது உத்திரவைக் கொண்டுமேல்வகித்து (2)மன்மதனொருவனைத்தவிர மற்ற யாவரையாயினும் முட்டுதல்லவிடாமல் காக்கவேண்டும்" என்று நந்திகேசுவரனை யெச்சரித்து வாசற்படியில் காவலாய் வைத்துவிட்டு முனிவருடன் உட்சென்றனர். (3) சந்திரகலையை யுச்சியில் கொண்ட உதாரயுக்தியுடைய பரமசிவன், தான் உல்லாஸமாய் வீற்றிருக்கும் மாளிகைக்குச் சென்று, சீக்கிரத்தில் அங்கு விளங்கிய சிங்காசனத்தின்மீது விஜயம் செய்திருந்தனர். (4) தயாநிதியாகிய பரமசிவன் தெக்ஷிணாமூர்த்தியாக வீற்றிருந்து ஆகமங்களது நான்குபாதங்களாகிய சரியை, கிரியை, யோகம், கியானம் இவைகளில் முதல் மூன்றிலும்தேர்ச்சிபெற்ற ஸனகாதிமுனிவர்களுக்கு சின்முத்திரை (பெருவிரல்நுனியை ஆள்காட்டி விரலின் 3-வது கணுவில் பற்றுவோர் குறி)யது மூலமாய் ஞானானுக்கிரகம் செய்தனர். அச்சின்முத்திரையைத்தெரிசித்தவுடன் அவர்களது சந்தேகங்கள் யாவும் தொலைந்துவிட்டன. மேலும் அம்முனிவர்கள், சந்திரசேகரனும், (சந்திரனை உச்சியிற் கொண்டவரும்,) (6) சிங்காதனத்தின் மீதிலான, புலித்தோலினுட்கார்ந்து விளங்கிய பிரபுவும், அக்ஞானமாகிய அபஸ்மாரத்தின்மீது மனைமலர்போன்ற வலதுகாலினடியால்மிதித்துநிற்கின்றவும், (7)அவ்வலதுகாலின்பேரில் வைக்கப்பட்டுவிளங்கிய இடதுகாலையுடையவும், யோகபட்டத்தினால் (முதுகிலிருந்து கால்களின் மடிப்பைவளைத்து கட்டிக்கொள்ளுதல்) மனோக்கியமாக விளங்குகின்றவும், பிரம்மன், இந்திரன், விஷ்ணு, யோகீந்திரர்கள், சகல தேவர்கள் இவர்கள் முதலாகியவர்க் கெட்டாதவும், ஸ்ரீ மங்களமூர்த்தியும், (8) சுத்தமாகிய ஸ்படிக நிறம்போன்றவும், முக்கண்ணுடையவும், சந்திரசேகரனும், தனது காந்தியினால் சூரியன், சந்திரன், அக்கினிமுதலாகிய சகலஜகங்களையும் பிரகாசிக்கச் செய்கின்றவுமான ஸ்ரீ மகாதேவனை விழிகளால் தரிசித்தமாத்திரத்தில் நாடியபயன்கள் யாவையு மடைந்தவர்களாயினர். (9) இதின் மத்தியகாலத்தில் தேவர்கள் இந்திரன்முதலாய திக்பாலர்களுடனும் பிரகஸ்பதியுடனும் சூரபத்மாவென்ற அசுரனிடத்துப் பயந்து நடுங்கியவர்களாகி கைலைக்குச் சென்றனர்கள். (10) ஸ்ரீ பராசக்தியாகிய பரமேசுவரி தவஞ்செய்புமளவும், அவளது மணவாளன் சின்முத்திரை யளித்துக் கொண்டிருக்குமளவும், எல்லாப் பிரபஞ்சத்தினோர்களது மனமும் கொஞ்சமேனும் காமவிகாரம் கொள்ளவேயில்லை. (11) ஆனதுபற்றி தேவர்கள் யாவரும் முற்றும் மனவியப்படைந்தார்கள். அப்போது தேவேந்திரனுடைய மனது கொ

ஞ்சமேனும் இந்திராணியின்மீது மோகம்கொள்ளவில்லை. (12) பிரம்ம னுக்கு ஸரஸ்வதியிடத்தும், ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு இலக்ஷ்மீதேவியி டத்தும இதேவிதமாய் ஸ்தாவரஜங்கம ரூபமாகிய சகல ஜகங்களிலும் நாயகி நாயகர்களுக்குரிய காமலீலையே யில்லாதொழிந்தது. (13)பிர ஜைகள் விருத்தியாகவேயிலலை. அசுரர்களுடைய துன்பங்கள் மிகவு ம் அதிகரித்தன. இத்துன்பங்களை ஸ்ரீ பரமேசுவரனதருளால் தான் விலக்கத்தகுமென்று கருதி (14) ஸ்ரீ சூலபாணியுடைய கைலைமலைக்கு மிக்க ஆவலுடன் சென்றும் அவர்களுக்கு, மிகவும் ஞானநிஷ்டையிலி ருக்கிற சம்புவின் சன்னிதி கிடைக்கவில்லை. (15) அங்கு, தேவேந்தி ரன், அசுரர்களது வதையினின்று மிகவும் பயமடைந்திருக்கிற ஜகங் கள், தன்னு விரக்ஷிக்கபபட விருப்பமுற்றவனுக சகல தேவர்களுட னும் அதிகடோரமாகிய வலியதவத்தைச் செய்தனன். (16) அப்போ து மன்மதனும் தனததிகாரத்தினின்று விலக்கப்படலானதுபற்றிதவ வேடம்பூண்டு இரதிதேவியிடத்தில் கொஞ்சமேனும் மோகமற்றவனுக நூறுவருஷகாலமளவும் சற்றேனும் மனக்கலக்கமற்றவனுய், ஸ்ரீ பரமே சுவரனை அந்தக்கரணத்தில் தியானித்துத் தவஞ்செய்தனன். (17½) அப்போது அளவற்ற மகிமை பொருந்திய பிரபுவாகிய ஸ்ரீ பரமேசு வரன், பிரம்மபுத்திரர்களாகிய ஸனகாதிமுனிவர்களது சந்தேகத்தை மெத்தத்தயவுடன், துலைத்துவிட்டனர். (18½) தேவர்கள், கோரமா னதவத்தைச்செய்தும் பயனடையாமல் வீணில் முயன்றவர்களாகி(19) சாலங்காயனரென்ற சிலாதமுனிவரது தநயராகிய ஸ்ரீ நந்திகேசுவரனத டியில் வணங்கி, தங்களது வரவின்நோக்கத்தைத் தெரிவித்ததில், இப் போது உங்களுக்குச் சமயமல்லவென்றும், (20) இங்கிருக்கத்தகாதெ ன்றும் அவரால் எச்சரிக்கப்பட்டபிறகு தேவர்கள், ஸ்ரீ பிரம்மதேவ ளைப் பார்க்கவிருப்பமுற்றவர்களாக தேவர்களுடைய ஆலயங்களில் மி க்க மேன்மைபொருந்திய, அவரது மாளிகைக்குச் சென்றனர்கள். (21) அங்கு, பிரம்மனுடைய மனேவதியென்ற பட்டணமானது, மிகுந்த மங்களகரமுள்ளதும், அனேகவித உத்தியானவனங்கள், சிங்காரக்கிண றுகள், மலையருவிகள் இவைகளால் விளங்கப்பெற்றதும், (22) ஆறு ருதுக்களிலும் (பருவங்கள்) அப்போதுக்கப்போது மலருகின்ற மலர் களெல்லாம் எப்போதும் மலர்ந்து சோபிக்கலுற்றதும், வெயில் பூமி யில் படாமல் மரங்களின் சோலைகளால் மறைக்கப்பட்ட காட்சியுடை யதும், விளா, அரசு, கூந்தல்பனை, பச்சலை, நெல்லி, ஆசன, (23) வி பீதக, கட்டிமா, அசும, ஆல், அத்தி, புளிமா, நாவல், இரளி, வெள்வெல், அழிஞ்சில், புளி, எலுமிச்சை, எருக்கு, (24) வேம்பு, தும்பை, தாழை,

இலந்தை, ஏழிலம்பாலை, அசோகம், பெருங்குமிழ், பாக்கு, பிலா, பில்வம், (25) சந்தகா, பாதிரி, கல்லொளி, சேரு, அகில், உன்மதம், இவைகள் முதலிய அனேகவிருக்ஷ விசேஷங்களால் அலங்கரிக்கப்பட்டதுமாக விளங்கிநிற்கின்றது. (26) அதில் மிகவும் ஆச்சரியிக்கத்தக்க விசித்திரமான பல அரண்மனைகள் அவைகளிலிழைக்கப்பட்ட அனேக இரத்தினங்களின் காந்திகளினால் ஜ்வலித்து நிற்கின்றன. (27) அவ்விடத்தில் பிராணிகள் நற்கெதியடைவதற்கு சத்துருக்களாகிய காம, குரோத, மோகாதிகளின் பிரசக்தியேயில்லை. அங்கு, சகல நற்குணங்களும் தங்கப்பெற்ற ஸ்ரீ பிரம்மதேவர், தேவகெணங்களால் துதிக்கப்பட்டவராக (28) வேதாக்ஷரங்களாகிய ஆபரணங்களால் மனோக்கியமாய் விளங்கிய ஸ்ரீ ஸரஸ்வதீ தேவியுடன் அதிசுந்தரமாகிய திவ்விய சிம்மாசனத்தில் அருளியிருக்கையில் சகல பிதாமகராகிய அம்பிரம்மதேவனை (29) இந்திரன்முதலாகிய தேவர்கள், மிகவாதரவுடன் வணங்கி அஞ்சலிசெய்துகொண்டு மிகுந்த பக்தியுடன பக்கத்தில்நின்று, (30) நான்கு திக்குகளிலும் முகங்களையுடைய, மரைமலரிற் பிறந்த அப்பிரம்மனை ஸ்தோத்திரம்சேய்தார்கள். பிரகஸ்பதிமுதலாகிய தேவர்கள், ஸரஸ்வதீதேவியின் பதியாகிய தேவனுக்கு வந்தனமளித்து தோத்திரம் செய்ததாவது (31) "ஹே! தேவாதிதேவா! * நீரே தாய் நீரே தந்தை, குரு, பிதாமகன், சகோதரன், சினேகிதர், ஸம்பத்து, எங்களது பிரதானதெய்வம்; (32) சகலப் பிராணிகளின் சேர்க்கையும் நீர்தான், பிரிவினையும் நீர்தான், பிராணிகளுக்கு நாயகரும் நீரே, தத்துவப்பொருள் நீர்தான், தத்துவப்பொருளை யறிந்தவவும் நீரே, அந்தத்துவங்களுக்கெட்டாதவரும், மாயைக்கு மேற்பட்டவருமான பரப்பிரம்மமும் நீர்தான். (33) ஹே! எல்லாவற்றையும் தரிக்கின்ற பிரம்மதேவா! நீரே சிருஷ்டிக்கின்றவர், நாசம்செய்கின்றவர், உண்மையாய் இரக்ஷிக்கின்றவரும் நீர்தான். சிருஷ்டியின் துடக்கத்தில், அகர உகர மகர மென்ற மூன்று எழுத்துகளோடு அல்லது உருக்கு, யஜுஸு, ஸாமம் ஆகிய மூன்று வேதங்களோடு கூடிய ஓமென்ற பிரணவமும், (34) கோபம், க

---

* பிரம்மாவை மேல்கண்டபடி அத்துவைதபாகமாக ஸ்தோத்திரம்செய்யப்பட்டிருப்பதைப் பற்றியோ வென்றால்:— ஸ்ரீ ஸதாசிவமூர்த்தியே அம்சியாகவிருந்து, மூன்றுவிதகுண மூர்த்திகளாகிய பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களாக மூன்று அம்சங்களாய் விளங்கிநிற்கின்றபடியால் ஒவ்வொரு அம்சமூர்த்தியையும் பரமாத்தும சுவரூபமாய்ச் சொல்லப்படுவதும், அவ்வொவ்வொரு மூர்த்திக்கும் அபரவஸ்துவாக ஸ்ரீ ஸதாசிவமூர்த்தி விளங்குகின்றாரென்பதும் வேதத்தின்கருத்து: மேலும் முற்றும் சிறந்த அடியார்களை, ஸ்ரீ பரப்பிரம்ம மூர்த்தியினுடைய ஸாரூப்பியமுள்ளவர்கள் பற்றி அப்பரப்பிரம்மத்தின் அற்புதகுணாதிசயங்களை வகிக்கின்றவர்கள்போல் அனேகபுராணாதிகளில் சொல்வது சருவசாதாரணம். மேலும் ஸ்ரீ நாராயணனுடைய அம்சமூர்த்திகளாகிய இராமகிருஷ்ணர்கள் முதலாகியவர்களை ஸாக்ஷாத் அம்சியாகிய ஸ்ரீநாராயணனுடைய ஸகல அற்புதகுண பாகங்களையும் வகித்தவர்கள்போல் சொல்லப்படுவது சருவசாதாரணம்.

ரூமவியாபாரம், சுவர்க்கம் இவைகளெல்லாம் உம்முடைய முகத்தினின்று தானுண்டாயின. சருஷ்டி, ஸ்திதி, ஸமுகாரங்களுக்கு முக்கியகாரணமாகின்ற மும்மூர்த்தி சுவரூபமாகிய உமக்கு வந்தனம்செய்கின்றோம். (35)ஹே ஈசுவரா! ஸ்தாவரஜங்கம ரூபங்களாகிய ஜகங்களை பிரம்மாவாக நீரே சிருஷ்டிக்கின்றீர். விஷ்ணுவாக இரக்ஷிக்கிறீர். ருத்திரராக நீரே நாசஞ்செய்கின்றீர். (36) ஜகங்களுக்கு நாதனும், ஜகத்சுவரூபனும், ஜகங்களை சிருஷ்டிக்கின்றவரும், ஹே! ஈசுவரா! சகலத்துக்கும் மூலகாரணமுமாகிய வுமக்கு வந்தனம் செய்கின்றோம். (37) உம்மிலும் வேறாகின்ற ஆச்சரியமாகிய விப்பிரபஞ்சம் உமது திருமேனிக்குள்ளே யிருப்புடையதாகின்றது. சகலபிராணிகளும் வசப்பட்டிருக்கின்ற உமக்கு வந்தனம் செய்கின்றோம்". (38) கருணைக்கடலாகிய பிரம்மதேவன் தம்மைநாடிய தேவோத்தமர்களால் ஸ்துதிக்கப்பட்டபோது அவர்களுக்கு அபயமளிப்பதில் தயாராகிச் சொல்லுகின்றார். (39)

நான்காவது அத்தியாயம்

(முற்றிற்று.)

## ஸம்பவகாண்டம் ரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

வாரீர்கள்! நமது மக்களாகிய தேவர்களே! நீங்களெல்லோர்களும் இப்படி ஒன்றுகூடி முகம்வாடியவர்களாக, மிக வாதரவுடன் நம்மைச் சரணமடைவதுயாது? (1) நீங்கள் எல்லோர்களும் சுவயேச்சை யதகரிக்கப்பட்டவர்கள்போல், கேவலம் பரிதாபப்படத்தக்க முகத்தையுடையவர்களாகக் காண்பது யாதென்று கூறுங்கள். முந்தி இந்திரனுனவன், கொம்புமுறிந்த எருதைப்போல் முற்றும் சிறுமைகொண்டவனாக, வச்சிராயுதம் நழுவலுற்றுக்காண்கின்றான். (2½) அக்கினியும், ப்ரகைநிறமுள்ளவனாகி அறிவுகலங்கியவனாக (3)எப்போதும் அசுரவாதையாலுண்டாகிய துன்பத்தைவெளியிடுகின்றான். இயமனானவன், காலதெண்டத்தினால் பூமியைக் கீறிக்கொண்டு(4) தலைதொங்கலுற்று என்றும் மனவருத்தத்தை வெளியிடுகின்றான். மேன்மையானசக்தியைப் பற்றிய நிருருதி ராஜனும், (5) பற்களையிழந்த ஸர்ப்பம்போல், நற்குறிமாறி சிறுமைகொண்டதுயாது? என்றும் பழுது பெறாத பாசத்தைக் கொண்ட வருணனோ (6) கயிற்றினால் கட்டுண்டபசுவைப்போல் சௌரியமிழந்து தைனியங்கொள்ளுகின்றான். வாயுவோவென்றால், சீலையற்ற துவஜத் தடியைப் பற்றியவனாகி (7) ஐயம்புகின்ற பஞ்சயனைப்போல் சஞ்சலமாயஞ்சுகின்றான். தனராஜனாகிய குபோனுமோ அவனது சங்கநிதி, பதுமநிதி முதலியவற்றையிழந்து (8) உயிர்தப்புவதைப் பெரிதாகக் கருதியுற்றவன்போற் காண்கின்றான். ஈசானன், முனைகள் மழுங்கிய சூலாயுதத்தைக்கைப்பற்றி (9) பாம்பாட்டியால்

பிடுங்கப்பட்ட பற்களையுடைய ஸர்ப்பராஜனைப்போல் சோருகின்றான். ஸப்த (ஏழு)மருத்துக்களோ, ஒருவரிடத்தொருவர் கலங்கித்திரியலுற்று (10) பெரியமலையினால் குறுக்காயணைக்கப்பட்ட நதியின்கெதியை வகிக்கின்றார்கள். இதோ இவ்வஷ்ட (எட்டு) வஸுக்களுமோ வென்றால் நிறம் குன்றி மிக நடுங்கி, (11) ஆக்கிரகம் கொண்ட கருடனிடத்துப் பயந்து கலங்கிய கிருஷ்ணசர்ப்பத்தின் தன்மையை அடைகின்றார்கள். ஏகாதச (பதினொன்று) ருத்திரர்களது வாடியமுகக்குறியை நோக்கில் (12) அவர்கள் முற்றும் நெஞ்சத்தில் திடமற்றவர்களாகக் காண்கின்றார்கள். துவாதசா (பனிரண்டு) தித்தியர்கள், மனத்துன்பத்தினொலொளி குறைந்து (13) பகலிலேற்றிய விளக்கினொளிபோல் குன்றுகின்றார்கள். தேவர்களே! நீங்கள் யாதுகாரணத்தால் இருப்பிடத்தைவிட்டுத் துரத்திவிடப்பட்டவர்கள்போலிருக்கின்றீர்கள்; (14) என்பதையெமக்கறிவிப்பீர்களாகில் அதைப்பற்றி யாமாராய்ந்து வுபாயமுறைக்கின்றோம்"; என பிரம்மதேவன் சொல்லியதைத்தேவர்கள் கேட்குமளவில் அவர்களுக்குள் கூச்சல்நேரிட்டதில் (15) இந்திர, னவர்களெல்லோர்களையும் அடக்கி பிரகஸ்பதிபகவானை நோக்கிச் சொல்லுகின்றான்; "வாரீர்கள் தேவகுருவே! இப்போது எல்லா ஜீவராசிகளுக்கும் நேரிட்டிருக்கின்ற அஸுரபயமானது, (16) நம்மையும் சகல மகரிஷிகளையும்கூட வெகுசாகவதைப்பதைப்பற்றி யுரைப்பீர்களாக" என தேவராஜன் பிரம்மனது சன்னிதானத்தில் கூறியதைக்கேட்டு பிகஸ்பதிபகவான் (17) எழுந்து தண்டனிட்டு கைகட்டிமுன்னின்று பிரம்மாவை நோக்கிச் சொல்லுகின்றார் "ஹே பகவானே! தாங்களிப்போது கேட்கலானதைப்பற்றி யாதென்றால் (18) கேளீர் மரைமலரில் ஜனித்த பிரம்மதேவனே! மகாபராக்கிரமசாலியாகிய சூரபத்மாவென்ற அசுரனும், ஸிம்மவக்திரன் என்றவனும், யானைவடிவம்கொண்ட தாரகன் என்றவனும் தேவர்கள் மிகவும் பீடிக்கப்படுகிறார்கள். (19) அச்சூரபத்மனனவன் இரண்டுதம்பிகளுடனும், அனேக அசுரர்களுடனும் பிராணிகளுக்கு தூமகேது (வால்நக்ஷத்திரம்) வைப்போன்ற ஓரவகேட்டுக் குறியாகத்தலைப்பட்டிருக்கிறான். தேவரீர் ஸகல ஆத்துமாக்களுக்கும் பரமாத்துமாவாக விளங்குகையில் இவையெல்லாம் நீரறியாமலிருப்பதுயாது. (20) காசியபமுனிவருக்கும், மாயையென்பவளுக்கும் பிள்ளையாகிய அவ்வசுரன், ஸ்ரீ பரமேசுவரனுடைய வரப்பிரசாதத்தினால், கேளீர்! தந்தையே! இந்திரன்முதலிய சகலதேவர்களையும் போரில் முறியடித்துவிட்டான். (21) அத்தேவர்களும் வேறுகெதியற்றவர்களாக அனேகவிதமா யவனுக்கூழியம் செய்கின்றார்கள். இந்திரனே அசுரனது வீட்டின்கண்ணுள்ள சபாமண்டபம் முதலியவற்றை (22) அப்போதுக்கப்போது மேகங்களால் வேண்டியமட்டில் பொழியப்படுகிற நீரில் பசுவின்சாணத்தைக்கரைத்து நாள்தோறும் மெழுகிவருகின்றான். அக்கினிதேவனும், மிகக்களிப்புற்றவனாகவே நாள்தோறும் கைத்தீவட்டியைப்பற்றி

யவனுகி (23) அவனது 39 பரிவாரதேவர்களுடன் அசுரராஜன்பக்கத்தில் விடாதுநிற்கின்றான். இயமனுமோவென்றால், தனது தூதர்களாகிய க்ஷயரோகம் முதலியவியாதிகளுடனும, தேவவைத்தியர்களாகிய அசுவி தேவர்களுடனும் வைத்தியனுகவிருந்து வைத்தியம் செய்கின்றான். நிருருதிராஜன் தோலுரைக்குட் போட்டகத்தியைப் பிடித்துக்கொண்டு நாள்தோறும் (25) சபையின்கண் வீரத்தலைவனுக நின்றுகொண்டு இம்மட்டில் தான் பாக்கியம்பெற்றவனுக நினைக்கின்றான். வருணராஜன், வியாகுலமற்ற மனமுடையவனுக அச்சூரபத்மனுக்கு ரஞ்சிதமான வார்த்தைகளையுரைத்துகொண்டு (26) அசுரர்களால் நெருக்கமாய்க்கூடப்பட்டிருக்கிற சபையின்மத்தியில் நீங்காமலாதரவுடன் நிற்கின்றான். வாயுபகவானேவென்றால், அசுரர்களது மாளிகைகளில் குப்பைகூட்டும்வேலையில் (27) பிரதானபுருடனுக அவ்வசுரனுல் நியமிக்கப்பட்டிருக்கின்றான். இக்குபேரன், அழகற்ற வடிவமுடையோனதுபற்றி அந்தப்புரத்துக்கு அதிபனுகவேற்படுத்தப்பட்டு (28) இவ்வசுரனது ஸ்திரீகளின் பக்கத்தில் காவலனுகவிடாது நின்று சேவிக்கின்றான். ஈசானனேவென்றால், அசுரன்தேவைப்படாதபோதுகூட அனேகவித இன்பப்பொருள்களால் உபசரித்துக்கொண்டு (29) நாள்தோறு மிடைவிடாமலவனது வாசற்காப்போர்களாகிய தனது கணங்களுடன் சேவைசெய்கின்றான். மரைமலருக்கு நண்பனுகிய சூரியன், (30) தாமரைகளை கையிற் பற்றி அது மலருமளவு வேண்டியமட்டிலுள்ள வெயிலையெரித்துகொண்டு இரவும்பகலுமாக மலரச்செய்து சத்துருவாகிய சூரபதுமனுக்கு கொடுத்துநிற்கின்றான். சந்திரனும், என்றும் பூர்ணகலைகளுடன் சரத்காலத்தில் போலவே நிலவெரிததுக்கொண்டு (31) ஸ்திரீகளுக்கு போகவிருப்பமுண்டாகும்படி ரஞ்சனம்செய்வதில் காமதந்திர மந்திரியாகவீற்றிருக்கின்றான். அஷ்டவசுக்களும் மிகுந்தபக்தி சிரத்தையுடன் (32) ஏராளமான திரவியத்தால் நிறைந்தபொக்குஸத்தை என்றும் காக்கின்றார்கள். ஏகாதசருத்திரர்கள், அசுரனுடைய ஜீவரக்ஷகர்களாகக் காத்துநின்று (33) அவனுடைய அரண்மனைக்குள் இரவில் கூட விழித்து மணியடித்துக் கொண்டிருக்கிறார்கள். துவாதசாதித்தியர்களோ வென்றால், அவனது மனையில் அங்கணம் தோறும் (34) இருளணுகாமல் நாள் தோறும்தீபவரிசைகளைப் போடுகின்றார்கள். இவ்விதமாகவே மற்ற எல்லாத் தேவர்களும், அக்கொடியோனுக்கு அந்தந்த வேலையைச் செய்து கொண்டுவருகிறார்கள். (35) சிலர் பசுக்களுக்குப் புல்லைச் சேகரிப்பதிலுத்தியுக்தர்களாகவும், சிலர் அப்பசுக்களைக் காப்பதில் தொரைகொண்டவர்களாகவும், சிலர் வைக்கோல்கட்டுகளைத் தூக்கிவருவதில் முயன்றவர்களாகவும், சிலர் மாமிசங்களைச் சேகரிப்பதில் முயன்றவர்களாகவும் (36) சிலர் கடலெங்கும் தேடியுலாவி மீன்பிடித்துக் கொண்டு வருகின்றவர்களாகவும் இவ்விதமாக சூரபத்மனுனவன் பல விதத்தில் தேவர்களால் சேவை செய்யப்படுகின்றான். (37) அவன்,வரப்பிரஸாதமடைந்த மதத்தி

ஞல் ஜகங்கள் முழுமையும், முற்றும் கெடுதிசெய்கின்றான். கொடியோன், அபகாரத்தினுல் வசப்பட்டாலொழிய உபகாரங்கள் அனேகம் செய்யப்படினும், வசப்படான்.(38)மாயாவியாகிய இந்த அசுரனுல் அனேக தேவஸ்திரீகள் வெகுகாலமாக சிறைச் சாலையிலடைக் கப்பட்டு பெருமூச்சுவிடுகின்றார்கள். (39)கெந்தர்வர்கள், உரகர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், பிசாசர்கள் இவர்க ளெல்லோர்களும் இவனது சேவக சேவக சேவகர்களது வீட்டுவாசற்படியில் தினம் தோறும் காத்து நிற்கின்றார்கள். (40)ஸர்ப்பராஜனுகிய அநந்தன், தக்ஷகன், மகாபலன், கார்க்கோடகன், மகாநாகன், கம்பளன், அசுவதரன், (41) திருதராஷ்டிரன், சங்கன், குளிகன், மகோரகன், முதலிய இச்சர்ப்பங்க ளெல்லோர்களும் உச்சியில் நாகரத்தினங்களுடன் இவனது சிங்காதனத்தைச் சுமந்துநிற்கின்றார்கள். (42)ஸத்தியலோகம் முதல் பாதாள லோகம் வரையிலான ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் இவ்வசுரன் அதிபனுயிருந்துஎல்லோர்களுக்கும் வாதைசெய்கிறுனென்பது ஒரேபிரசித்தியா யிருக்கின்றது. (43)ஹேபிரும்மதேவரே !அனேகயுக காலமாகப் பலவிதமாய்த் தீங்கு செய்து வருகின்ற இக்கொடியனுக்கு நாசமளிப்பதற்கு வழி சொல்ல வேண்டும்," (44) இவ்வாருக தேவகுருவாகிய பிரகஸ்பதியால் சொல்லப்பட்ட கனமாகியவசனங்களை பிரும்ம தேவன் கேட்டானபோது, இந்திரன் அப்பிரம்மனை நோக்கி பின்னும்சொன்னதாவது (45)"ஹேபிரபுவே! பிரகஸ்பதியால், தாரகாசுரனுக்குமூத்தோனுகிய கொடியோனைப்பற்றி, க்கூறலுற்ற இவ்வளவும் அவன் செய்கின்ற கொடுமைகளின் ஆயிரத்தி லுயிரத்தி லோரமிசமாகும். (46)இவ்வாருகிய அவனது துன்பங்கள் அளவிடக்கூடாமலிருந்தது பற்றி அதற்காக யாங்கள் பலவித பரிகாரங்களைச் செய்து பார்த்தும்(47)அவையெல்லாம், ஸாந்நிபாதிகமென்றவோர்பெரிய ஜ்வரரோகநிவர்த்திக்காகக்கொடுக்கப் பட்ட ஔஷதம்போல் பயன்படவில்லை. அவ்வசுரன்,தனதிரண்டு தம்பிகளில் ஒவ்வொருவனுக்கும் இருநூறுஇருநூறு அண்டங்களாக வெவ்வேருய்ப் பகுத்துக்கொடுத்து(48)தான் அறுநூற்றெட்டு அண்டங்களை ஆண்டு வருகின்றான்.ஸிம்மமுகன் இருநூறு அண்டங்களுக்கு அதிபனுக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றான்(49) தாரகாசுரன், அவனது இருநூறு அண்டங்களைமத்தியினின்று ஆளுகின்றான். ஜகத்திலுள்ள தேவர்கள், மானிடர்கள் முதலிய எல்லோர்களையும் இரவிலும், பகலிலுமிடைவிடாமல் (50)அவனது பரிவாரங்களோடு இப்போது மிகவும் ஹிம்ஸிக்கிறான். ஆகையால் அவனை,யாங்கள் முந்தி வெல்லுவதே போதுமானது. சூரனையும்,மற்றவனையும்வெல்லுவது அவ்வளவசியமில்லை. (51) இவனது துன்பங்களைப் பொறுக்கமாளாத யானும்மற்ற திக்பாலகர்களும் முன்னமே அவனுடன் பலவாருக மும்முறமாயுயுத்தம்சேய்தோம். (52)அப்போது அவன் முன்னில் நிற்கமாட்டாமலெல்லோர்களும் பயந்தோடுகையில, யானிவனைநோக்கிப் பிரயோகித்த எனது வச்சிராயுதமானது, முனைமுறிந்து ஆணிகள் கயண்டு நுணிகுறுக்காகக்கீழேவிழலுற்றது, (53)அக்கினிதேவனு

டைய சக்தியாயுதமும், இயமனுடைய தண்டாயுதமும், நிருருதிராஜனது கத்தியும், வருணனுடைய பாசமும் அவ்வாறே பழுதாகி விழுந்தன.(54) வாயுபகவானுடைய துவஜாயுதமானது உயுத்தத்தில், அதன் தடியை மட்டில் மிச்சமாகக் கொண்டது. குபேரனுடைய கதாயுதமானது, வியாதியினால் குன்றப்பட்ட மேனிபோல், முறிபட்டது. (55) ஈசானியருடைய சூலாயுதமும், இவனது மார்பைப் பிளப்பதற்குச் சற்றேனும் வலியதாக வில்லை. ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய சக்கிராயுதமோ வென்றால், அவனது மார்பினில் பதக்கம் போற்பற்றலாயிற்று.(56)அதன்பிறகு எங்களெல்லோர்களுக்கும் தாரகன்மீது மிகுந்த பீதிஉண்டாயிற்று. இப்போது, யாங்கள் அனேக வித வெகுமதிசாமான்களைக் கைதனிற் கொண்டு பலவித ஸ்தோத்திர வசனங்களால் அவனைக் களிக்கச் செய்கின்றோம். (57) ஹேபிரம்மதேவா! இனி யாங்கள் இவ்வாறு கெதியிலிருக்க வல்லவர்களில்லை. ஆகையால் எங்கள தாதங்கத்தை நீக்குவிக்க வல்லதான வுபாயத்தைக் கூறுவீர்கள். (58) மேருகிரியின் சபையில், இந்திரன் இவ்விதமாய்ப் பலவாறாகப் பெருமூச்சுடன் சொல்லிமுடித்தபோது, சபையினர்க ளெல்லோர்களும், அவனாற் சொல்ல லுற்றதையே அடிக்கடி இரட்டிப்பு மடங்காகத் திரும்பச் சொன்னார்கள். (59)

ஐந்தாவதுஅத்தியாயம்
முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் சு—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு பிரம்மாவானவர், பெருமூச்சுவிட்டு நன்கு ஆலோசித்தபின்னர் தேவர்களுடன் ஸ்ரீவிஷ்ணு லோகமாகிய வைகுண்டத்திற்குச் சென்றனர். (1) அங்கு ஸ்ரீஹரியினுடைய விடுதியானது, அனேக விரத்தினங்களினால் விளங்கலுற்றதும், ஆயிரம்பொற்கட்டு உப்பரிகையுள்ள கோபுரங்களால் சிறப்பு பெற்றதும்,(2) தங்கமயமான பெரிய வாசற் படிகளாலும் கதவுகளாலும் மனோக்கியமாயுள்ளதும், ஸ்ரீபகவானுடைய முக்கியக் குறிகளைப்பெற்ற அனேகம் பக்தகணங்களால் சேவிக்கப்பட்டதும், (3) விசித்திரமான நவரத்தினங்களால் நிறைந்த ராஜவீதியினால் சோபிக்கலுற்றதும், அனேகவித ரத்தினங்களின் காந்திகளால் எல்லாதிக்குகளையும் பலவர்ணமுள்ளவையாகச் செய்விப்பதும்,(4) வாசற்படியின் மேல் முளைகளிற் கட்டப் பட்ட சிறந்த பவழத் தோரணங்களையுடையதும், பார்ப்பதில் ஐப்படையாத காக்ஷியுடையதும், பார்த்தகண்களைப் பக்கத்தில் நோக்க விடாமலிழுக்கலுற்ற பிரம்மாநந்த முள்ளதுமாயிருக்கின்றது. (5) ஸ்ரீபகவானிடத்திலேயே நாடியமனதை யுடைய,

மன அடக்கமுள்ள பகவத்பக்தர்கள் யாதொருவிடத்துக்குச் சென்றும றுபடிபின்திரும்பாமல் அவடத்திலேயே பரமாநந்த சுகத்தையனுபவிக்கின்றார்களோ அப்படிப்பட்டதும்,(6) அதிமனோக்கிய முள்ளதும், அநேகம் பிராகாரங்களால் சுற்றுண்டதும், தேவகணங்களால்காக்கப்பட்டதும்,பயலேசத்தைக்கூட அடைவிக்காததும், நாடியவர்களை நழுவ விடாததுமாகிய ஸ்ரீவிஷ்ணுபதத்தைத் தேவர்கள் பிரம்மதேவன் சகிதர்களாய்த்துரிதத்திலடைந்தார்கள்.(7)அங்கு ஆதிசேஷனுடைய சுந்திரமான உடலின் மீது சயனித்திருப்பவரும், தேவோத்தமனும், கார்மேகம்போன்ற நிறமுடையவரும், (8) மரைமலரடியனும், மரைக்கண்ணனும், மரைவாயனும், மரைபோன்ற பரிசமுடையவனும், ஸ்ரீலக்ஷுமிதேவியினுடைய மிருதுவான மரைக் கைகளின் தொடுகையினால் சிவந்த மரையடிகளை யுடையோனும்,(9)ஸ்ரீபூமிதேவிக்கு நேசனும்,பரமாத்துமனும், ஸ்ரீசச்சிதாநந்த பரமேசுவரனுக் கன்பனும், யோக நித்திரையாகிய ஸமாதியினுவிடைவிடாமல் ஸ்ரீஸாம்ப மூர்த்தியை ஹிருதயத்தில் பாவித்திருப்பவனும், (10) துதிக்கத் தக்கவரும், நாடிய வர்களை நழுவ விடாதவரும், பிறப்பற்றவரும், மகிமையின்ன தென்றறியப்படாதவரும், ஸ்ரீபிரம்மதேவனுக்குத் தந்தையுமாகிய ஸ்ரீவிஷ்ணுவை தேவர்கள் அடிக்கடி தண்டனிட்டு ஸ்தோத்திரம்செய்தார்கள். (11) ''மரைபோன்ற நாபியுடையோனுக்கு வந்தனம் செய்கின்றோம்; ஸ்ரீலக்ஷுமிதேவி, பூமிதேவி யிவர்களின் கணவனுக்கு வந்தனம், சூரிய சந்திரர்களைக் கண்களாக வுடையோனும், பரமாத்துமனும்,(12) மரையோடையிலும், பக்தர்களின் சித்தத்திலும் வசிப்போனும், ஜகங்களுக்கு நாதனும், வேதாந்தங்களாலறிய லுற்றவனுமாகிய ஸ்ரீ மந் நாராயணனுக்கு வந்தனம் செய்கின்றோம்; (13) தியானம் முதலியவற்றா லறியக் கூடிய திருமேனி யுடையோனும், யோகிகளுக்கு மோக்ஷத்தையும், காமிகளுக்கு போகத்தையு மளிப்போனும், ஆதிசேஷன்மீது சயனிப்போனும்,(14) உத்தம கலியாண குணதிகளுக்குக் கடலாகியவனும், வஸுதேவகுமாரனும், அடக்க முடையோனுமாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு வந்தனம் செய்கின்றோம். (15) ஜகமெல்லாம் அசுரர்களால் துன்பமடையும் போதெல்லாம் அவதாரம் செய்து தருமத்துக்கு நேரிட்ட கெடுதிகளை விளக்கு கின்றீர். (16) ஆதலால் ஓ! ஈசுவரா! அசுரர்களால் துன்பமடைந்திருக்கிற எங்களை யென்றும் காத்தருளவேண்டும்'' என்று துதித்து பிரம்மன் முதலிய தேவர்க ளெல்லோரும் பகவானைத்தண்டனிட்டார்கள்.(17)பிறகு தேவனு மித்துதி களாலன்பு கூர்ந்து புன்னகைப்புடன வர்களை நோக்கிச் சொல்லியதாவது:—''ஓ! பிரம்மா! ஓ இந்திரா! இவர்களுடன் நம்மிடத்துக்கு (18) யாதிப்போது வந்தீர்கள்? இப்போது நம்மாலிங்கு செய்யத் தகுவதுயாது? நானே இப்போது கேவலம் ஊமைக் கோட்டானைப் போல் மேருபருவதத்தின் கு

கையைநாடி,(19)நாள் தோறும் பயமின்றி நித்திரை செய்கிறேன். அங்கும் சுவப்பினத்தில் அச்சூரபத்துமனிடத்துப் பயந்து ஜகங்கள் முழுவமையும் ஓடிச்சுற்றி பிறகு விழித்துக் கொண்டதின் பேரில் மேருவென்று தெரிந்து பயமற்றவனுகின்றேன்.(20) சூரனென்ற ஒலிகாதிற் பட்ட மாத்திரத்தில் எனது மனம் நடுக்கமிடுகிறது. மேருவோ நம்மைக் காப்பாத்து வதற்காக பரமேசுவரனுல் அருள் செய்யப் பட்டிருக்கிறது. (21)முநிவர்கள், சூதரை நோக்கி வினவியதாவது "வாரீர் புத்திசாலியாகிய சூதமுனிவரே! மகாமேருவானதுபிரதானஅசுரர்கள்கூடசெல்வதற்கிடமின்றி தேவர்களுக்கு ஆதாரவாக பரமேசுவரனுல் அருள்செய்யப்பட்டவிதம் யாது?"(22) என, சூதர் சொல்லுகிறுர்:—"முந்தியோர் பிரம்மாவின் கல்பத்தில் * ஓர் சந்தர்ப்பத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் காலவசத்தினுல் ஓர் கொடியயுத்தம் நேர்ந்தபோது(23)தேவர்கள் அசுரப்படைகளிடத்து மிகபயந்து ஓடிமேருவினுச்சியிலருளியிருந்த ஸ்ரீசங்கரபாமாத்துமாவைச் சரணமடைந்தார்கள்.(24) அதிக பலத்தினுல் கெர்விஷ்டர்களான அசுரர்கள் அங்கும் தேவர்களை யிம்சிப்பதற்குத் துரத்திவரலுற்றதை ஸ்ரீ மகேசுவரன்பார்த்து கோபங் கொண்டு அசுரர்களைச் சபித்தார். (25) "முற்றும் அயோக்கியர்களாகிய நீங்கள் நம்மிடம் சரணமடைந்த தேவர்களை யிமிசிப்பதற்கு முயன்று வந்தபடியால் நீங்களவர்களாலடிபட்டு தோல்வியடையக் கடவீர்கள். (26) உங்களதொழுக்கத்தினுல் நீங்கள் முற்றும் கொடியர்களாகையால் யாகங்களி லுங்களுக்குப்பாகமில்லாது போகக்கடவது: ஏனென்றுல் நடக்கையினுல் நீங்கள் மேன்மக்களாகிய பிராம்மணர்களால் நிந்திக்கப்பட் டிருக்கிறீர்கள். (27) இம்மேருவானது உங்கள் கண்ணிற் படாமற் போகட்டும்; அதை யொருக்கால் நாம் மன்னித்தாலும் அதன் மேற்பாகமானது உங்கள் பார்வைக்குப் படா திருக்கக் கடவது; அதையும் யாம் மன்னித்த போதிலும் அதன்மீதேரிச் செல்வதி லுங்களுக்கு என்றும் மனவெறுப்புண்டாகக் கடவது. (28) தவிரவும் இப்போது முதல் இம் மேருவுக்கு திதி யென்பவளின் பிள்ளைகளும், தனு வென்பவளின் பிள்ளைகளுமாகிய எல்லா அசுரர்களும், இராக்ஷதர்களும் செல்லக் கூடாதிருக்கக் கடவார்கள். உங்களுக்கோ வென்றுல் இம்மலையின் மேற்பாகம் அடை

---

* கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம், ஆகிய 4 யுகங்களில் 71 சதுர்யுகங்கள் கொண்டது ஓர் மன்வந்திரமெனப்படும். இப்படி 14 மன்வந்திரமானுல் பிரும்மாவுக்கு ஓர்பகல்:இப்படி 2-கொண்டது ஓர் நாள்: இந்நாளில் 365 கொண்டது பிரும்மாவுக்கு ஓர் வருஷம், இப்படி 100 வரு மாயில் ஓர் பிரம்ம கல்பமெனப்படும்.

யப்படாமலிருக்கக் கடவது. இவ்வாறாக யா மபிப்பிராயப் பட்டு மேன்மையான வெச்சரிக்கையைச் செய்கின்றோம். (29) ஜகங்களில் செய்யுப்படுகிற யாகங்களின் பாகங்களுக்குத் தேவர்களே முக்கிய பாத்தியஸ்தர்களாவார்கள். விஷ்ணுமுதலிய தேவர்கள் என்றும் வேதமந்திரங்களால் ஹோமம்செய்துயாகங்களைச் செய்யக்கடவார்கள். (30)தேவர்கள், காயத்திரியென்பதைச் சந்தஸ்ஸாகவுடைய மந்திரங்களைக்கொண்டு கெர்வமற்றவர்களாக பூலோகத்தில் தங்களது பராக்கிரமத்தைச் செலுத்தட்டும். அந்தரிக்ஷமென்ற லோகத்தையோ வென்றால் (31) திருஷ்டுபு என்றதைச் சந்தஸாகவுடைய மந்திரங்களைக்கொண்டு வெற்றிபெற்றவர்களாக ஆளக்கடவார்கள். ஜகதீயென்றதைச் சந்தஸாகவுடைய மந்திரங்களைக்கொண்டு எதிரிகளை வென்றவர்களாக சுவர்க்கலோகத்தை யாளக்கடவார்கள். (32) மேலும் இத்தேவர்கள் நமது எச்சரிக்கையின்படி சத்துருக்களை வென்று எல்லா திக்குகளிலும் சஞ்சரிக்கக்கடவார்கள். அசுரர்களிலும் யாதாமொருவன் நம்மை பக்தியுடனாராதித்தால் மட்டில் (33) அவன் நமதாஞ்ஞையின்படி வெற்றிபெறக் கடவனேஒழிய வேறுவகையிலில்லை." யென்று இவ்வாறாக ஸகல ஜகங்களையும் பாதுகாக்கின்ற பரமசிவன் திருவாய்மலர்ந்தருளினர். ஆகையால்தான் தேவர்களிப்போது, பயம் நேரிடும்காலத்தில் மேருவின் குகையில் வசிக்கின்றார்கள்" (34) என்று சூதமுனிவர் சொல்லலுற்றதை நைமிசாரணிய வாசிகளாகிய முனிவீரர்கள், செவியிற்கொண்டு, இச்சூதமுனிவரை சுகிருதிகளுக் கெல்லாம் மிகச் சிறந்தவரென்று முற்றும் வணக்கத்துடன் வாக்கினாலும், மனதினாலும் மெச்சிக், கொண்டாடித்துதித்தார்கள். (35)

ஆறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் எ—வது அத்தியாயத்தினர்த்தம்.

உலக ரக்ஷகராகிய ஸ்ரீநாராயணன் தேவர்களை நோக்கிச்சொல்லியதாவது "வாரீர் பிரம்மதேவனே! நானிப்போது, நீர் முதலியதேவர்கள் என்னை நோக்கி வரலுற்றதை ஞானதிருஷ்டியா லறிந்து (1) அக்குகையைவிட்டுத் துரிதமா யிவ்வைகுண்டத்திற் கேகினனேன். ஸ்ரீபார்வதீ பதியாகிய பரமசிவனிடத்து வரலாபம்பெற்ற அசுரர்களின் வாதை நமக்கு நேரிடும் போதெல்லாம் (2)நாம்மேருகிரியையே, வசிப்பதற்கு நாடிவருகின்றோம். ஆகையால் தேவர்களாகிய நம்முடனவ்வசுரர்களெதிர்த்து வெல்லமுடியாது. (3) உலகுக்கெல்லாம் சுகமளிக்கின்றவரும், காலகூடவிஷத்தை விழுங்கலுற்றவருமான அச்சகதீசனே பூர்வத்தில் திரிபுரர்களாயிருந்த இம்மூவர்களையும் (4)நம்மிடத்துத்தயவாக ஒரு புன்னகை

ப்பு மாத்திரத்தால் சமுகரித்துத் திரிபுராந்தகரென்று பெயர்கொண்டனர். அவரைத்தவிர, சூரபத்மன், பாவியாகிய சிங்கமுகன், (5) கொடியனாகிய தாரக னிவர்களைக் கொல்வதற்கு இம்மூவுலகிலும் யார்தான் வல்லவராவார். ஸகலப்பிராணிகளுக்கும் முக்கிய ஸமுகார கர்த்தராகிய அப்பரமேசுவரனை (6) கௌீர்கள் தேவர்களே! மிகவும் மேன்மையுள்ள கொடியதவத்தினால் ஆதரவுடன் ஆராதிப்போம்" எனவுரைத்து ஸ்ரீநாராயணன் ஸகலதேவர்களுடனும் பினாகமென்ற வில்லைக்கொண்ட பரமசிவனை (7) மிகவு மசாத்தியமான நியமங்களுடன் தவம் முதலியவைகளாலாராதித்தார். மேலுமவர் சிறந்த மாந்தோலை உத்தரீயமாகத் தரித்தும், மௌஞ்சி யென்ற புல்லின் கயிற்றை யிடையில் கட்டியும்,(8) உருத்திராக்ஷ மாலைகளை யாபரணமாய்ப் பூண்டும், பரிசுத்தமான வடிவமுடைத்தும், திரியம்பகமென்ற வேத மந்திரத்தினால் திருநீற்றில் ஜலம் விட்டுக்குழைத்து (9) ஸ்ரீபஞ்சாக்ஷர மகா மந்திரத்தோடு திரியாயுஷமென்ற மந்திரத்தையும், பிரணவத்தையும் ஜபித்து இடப்பட்டிருக்கிற திரிபுண்டிர (முப்பட்டை) வரிசைகளால் விளங்கியும், சதருத்திரிய (100 மந்திரங்களடங்கிய ஸ்ரீருத்திரப்பிரசினம்) மென்ற மகா மந்திரத்தை ஜபஞ் செய்வதிலேயே மிக ஆவலையுடைத்தும், (10) சருவ ஜனங்களுக்கும் அதிபதியாகிய பரமசிவனை மனதில் சற்றேனும் கலக்கமற தியானித்துத் தவம்செய்தனர். பிரம்மா, இந்திரன், அக்கினி முதலிய திக்பாலர்களும், தேவர்களும்,(11) ரிஷிகளும்அதேவிதமாய்என்றுமழிவற்ற பரமசிவனைத்தியானித்துத்தவஞ்செய்தார்கள். அவர்கள்இவ்விதமாகத் தவஞ்செய்து வந்ததில், வெகுகாலம்சென்றுவிட்டது. (12)பிறகு ஸ்ரீமகாதேவனாகிய பரமசிவன் தானாகவே ஸ்ரீநந்திகேசுவரனுடைய கையைப்பற்றியும், இயானைத் தோலாகிய பரிசுத்தமான உடையை யுடுத்துக்கொண்டும் நேரில் தோன்றினர். (13)ஸ்ரீவிஷ்ணு முதலிய தேவர்கள் சகலப் பிராணிகளுக்கு மதிபதியாகியபரமசிவனைக்கண்டு களிப்பினால் தேகமெங்கு முரோமங்கள் சிலுத்துச் சந்தோஷமனதுடன் துதிசெய்தார்கள். (14) சிவனே (மங்கள மூர்த்தியே) போற்றி போற்றி, தேவனே போற்றி, சிவதரா (இதுவே தவாக்கியம்—மங்களமூர்த்தியிற் சிறந்தவன்) போற்றி, சகலர்களுக்கும் ஈசுவரா போற்றி, மேன்மையாகிய ஈசுவரா போற்றி, சந்திரனை யுச்சியிற் கொண்டவனே போற்றி, (15) நித்தியனே போற்றி, நீலகண்டா (கழுத்தினிற் கருத்தவன்) போற்றி, சத்தியனே போற்றி, சாசுவதனே நின்னடி போற்றி, தருமப் பொருளே போற்றி, பொய்க்கெட்டாதவனே போற்றி, இன்னது சத்தியமென்றும் இன்னது அசத்திய மென்றும் தீர்ப்பவனே போற்றி, (16) எல்லா மறிந்தவனே போற்றி, சிரேஷ்டனே போற்றி, சுகமளிப்பவனே போற்றி, விகாரமற்றவனே போற்றி, சங்கரா போற்றி, விகாரத்தைச் செய்வோனே போற்றி, (17) சூலாயுதனே போற்றி, (பிரம்மனது சிரசை) மாலை பூண்டவனே போற்றி, அனேகம் இரத்தினாபரணங்களைப் பூண்

டவனே போற்றி, கிரீடதாரியே போற்றி, காலனுக்கு (இயமனுடைய பிரதான தளகர்த்தன்) காலனே போற்றி, முக்கால மூர்த்தியே போற்றி, கொடியர்களுக்குக் காலாக்கினி சுவரூபனே போற்றி, (18) அடியார்களைக் காப்பவனே போற்றி, திவ்விய மங்கள மூர்த்தியே போற்றி, மூர்த்தியற்றவனே போற்றி, அஷ்ட மூர்த்தியே (பிருதிவி, அப்பு, அக்கினி, ஆகாயம், வாயு, சூரியன், சந்திரன், இயாகம் செய்யு மெஜமானன் ஆகிய எட்டு மூர்த்திகளைக் கொண்டவன்) போற்றி, தக்ஷப்பிரஜாபதியது யாகத்தை யழித்தவனேபோற்றி, இயம சமுகாரனே போற்றி, (19) உனதடியார்கள் விரும்பியதை யளிப்பவனே போற்றி, மன்மதனை யெறித்தவனே போற்றி, சகல ஜகங்களுக்கு மெட்டாத வரும்பொருளே போற்றி, சருவனே ("பிரளய காலத்தில் பூதங்களைஇமிசிப்பவன்) போற்றி, சருவருக்கும் சாக்ஷியே போற்றி, (20) விசுவாதிகனே போற்றி, உருத்திரனே போற்றி, வேதாந்தப் பொருளே போற்றி, வேதாந்தங்களை யுபதேசிக்கும் குருமூர்த்தி சுவரூபனே போற்றி, (21) வேதாந்தப்பயிர்ச்சியால் அடையப்படுகிற விக்கியானத்தால் சருவமும்சிவசுரூபமென்ற நிச்சய புத்தியுடையவர்களும் சன்னியாசிகளும்(தாரேஷணை, வித்தேஷணை, புத்திரேஷணை, ஆகிய மூன்று ஈஷணைகளை யொழித்தவர்களும்) காமக் குரோதாதிகளி னின்றொழிந்தவர்களுமாகிய பெரியோர்களுக்கு மோக்ஷமளிப்பவனே போற்றி, என்று மழிவற்ற சிரேஷ்டனே போற்றி, நின்னடிபோற்றி, பக்தியால்மட்டில் அறியப்படக்கூடியவனே போற்றி, (22) மாயைக் கெட்டாதவனே போற்றி, தேவனே போற்றி, எங்களை யாதரவுட னாதரிப்பவனே போற்றி, ஜகங்களுக்குத் துன்பமளிக்கும் கொடிய அசுரர்களைச் சமுகரிப்பவனே போற்றி, சகல அண்டங்களையு மிரக்ஷிப்பவனே போற்றி, தந்தையே போற்றி, சகலப் பிரபஞ்சங்களையும் நடத்துவோனே போற்றி, (23) சிவனே போற்றி, தேவர்களுக்குப் பிரபுவே போற்றி, முக்கண்ணா போற்றி, திருபுராந்தகா போற்றி, மகேசுவரா போற்றி, சகலப்பிராணிகளுக்கும் நன்மை யளிப்பவனே போற்றி. (24) ஸ்ரீபரமேசுவரன், ஹரிப்பிரம்மர்கள் முதலிய தேவர்களால் இவ்வாறாகத் துதிசெய்யப்பட்ட பிறகு, புன்சிரிப்பாகிய நிலவினால் நான்கு திக்குகளிலும் மூடி மறைத்திருந்த இருள்கூட்டங்களைத் துரத்தியவராக ஓர் வசனம் சொல்லுகின்றார். (25) "வாரீர்கள் விஷ்ணுப்,பிரம்ம இந்திரன் முதலிய தேவர்களே! நாம் உங்களுக்காகச் செய்யத்தகுவது யாது? ஏனென்றால், இங்குவெகு காலமாய் தேவர்களாகிய உங்களால் மிக ஆதரவுடன் தவமளிக்கப்பட்டது. (26) என்றும், ஜகத்தில் சகலப்பிராணிகளுக்கும் நம்முடைய தெரிசனம் வீண்போவதில்லை யல்லவா? இவ்வாறாகப் பரமேசுவர னுரைத்தருளும்போது தேவரெல்லோர்களும் மெத்தச்சந்தோஷத்துடன் (27) "ஹே ஈசானா! (ஐசுவரியமுடையோர்) ஈசுவரா! ஹர ஹரா! ஜயா! விஜயீபவா!" என்று எல்லோர்களும் கூவிக்கொண் டாடுகையில், ஸ்ரீமகாவிஷ்ணு, எல்லோர்களையு மடக்குவித்து, சகல புவனங்களுக்கு மதிபதியாகிய பிரபு

விடத்தில் தெரியப்படுத்திக் கொண்டதாவது:— (28) "ஓ! தேவர்களுக்கெல்லாந் தேவனே! யாங்களெல்லோர்களும், தங்களிடத்தினின்றடைந்திருக்கிற வராதிக்கங்களையுடைய சூரபத்துமன் முதலிய அசுரர்களால் எப்போது மிகவும் கொடுமையாய் வதைக்கப்படுகின்றோம். (29) ஆகையாலிப்போது யாங்கள், ஓ! பிரபுவே! தங்களைத் தவிர வேறுகெதியற்றவர்களாக அறிகின்றோம். சூரன், சிங்கமுகன், தாரகன் ஆகிய கொடிய அசுரர்கள், (30) மிகுந்த சௌரியத்துனுல் எங்களை முறியடித்து எங்களது நாடுகளையும் கைப்பற்றிக்கொண்டு விட்டார்கள். அந்த பயத்தினுல் சரணமடைந்த எங்களைத்தயவுடனுதரித்துக்காக்கவேண்டும். (31) தங்களைத்தவிர தேவர்களில் யாவராயினுமவனை வெற்றிபெறவல்லவனென்று யாங்கள் நினைக்கவில்லை." இவ்வாறுக விஷ்ணு தேவர்களுக்கனுகூலமாய்க் கூறலுற்றதை ஸ்ரீசம்புவானவர் (32) தனது பல்வரிசையது காந்தியால் உச்சியில் விளங்குகின்ற சந்திரனது ஒளியை அதிகரிப்பித்தவராகச் சொன்னதாவது:— "வாரீர்கள் ஹரிப் பிரம்மர்கள் முதலிய தேவர்களே! இப்போதே நீங்கள் பயத்தை விட்டு விடுங்கள். (33) யாமிப்போது சுப்பிரம்மணியனை யுண்டு செய்து ஓர் நொடிக்குள் அசுரர்களைச் சமுகரிப்பிக்கின்றோம்." என்று வசனமுரைத்து உடனே ஸ்ரீமகேசுவரன் மறைந்தருளினர். (34) பிறகு ஸ்ரீஹரியைத் தலைமையாகவுடைய தேவர்களெல்லோரும், ஸ்ரீபரமேசுவரனை வந்தனித்து திருவுளத்தின் பாக்கிய மென்றுவிட்டு, அசுரர்களிடத்துப் பயந்தவர்களாகச் சீக்கிரத்தில் மேரு கிரியை யடைந்தார்கள். (35) அங்கு பிரம்மன் முதலிய தேவர்களெல்லோர்களும் ஒன்றுகூடி ஸ்ரீநாராயணனை நோக்கிக்கேட்டதாவது:— "ஓ பிரபுவே! இனி காரிய மெப்படி யென்று சொல்லுவீர்கள். (36) நமக்கு ஸ்ரீமங்களமூர்த்தியாகிய பரமசிவன் பிரஸன்னராகியும் யாது தேவர்களின் பாக்கியம் இவ்வாறுயிற்று? இதுவும் நமததிருஷ்டத்தின் கூறுதான். அசுரர்களுக்கோ நினைத்தபடி யெல்லாங் கூடிவருகின்றது. (37) ஓ ஹரியே! அதன் பிறகு எங்களுக்கென்ன வுபாயம் விதிக்கின்றீர்கள்? எந்த உபாயத்தினுல் சீக்கிரத்தில் ஸ்ரீபாமேசுவரனிடத்தினின்று குமாரமூர்த்தி உண்டாகி அசுரர்களை நாசஞ்செய்வார்?" (38) என தேவர்கள் கூறியதை ஸ்ரீவிஷ்ணு செவியுற்று, ஸ்ரீபிரம்மதேவனுடன் கலந்து ஆலோசித்த பின்னர் தேவக் கூட்டத்தை நோக்கிச் சொல்லுகிறுர். (39) "உலகுக்கெல்லாம் மாதாவாகிய சிவையானவள், தக்ஷன் மகளாயிருந்த சரீரத்தை விட்டு இமராஜன் பெண்ணுக அவதரித்தகாலம் முதல், (40) எல்லா மறிந்த ஜகதீசனுகிய பரமசிவன், ஐம்புலன்களை யடக்கி பிரயூத்தினத்துடன் புத்தியை நிலை நிறுத்திக்கொண்டு, (41) யோகத்திற் சிறந்தவர்களாகிய ஸனகாதிமுனிவர்களுக்கு, எளிதிலறியப்படத்தகாத தனது நிஜரூபத்தை யுபதேசிப்பதற்காக கைலையிலால விருக்ஷத்தினடியில், (42) சகலஜீவாத்துமாக்களுக்கும் குருவாகிய எல்லாமறிந்தபரமசிவன் தக்ஷிணுமூர்த்தி வடிவமாகவருள்செய்து, அவர்களுடையசந்தேகங்களைத்தீர்த்தவராக விரல்களால் சின்முத்திரை யளித்து விள

ங்கி நிற்கின்றார். (43) ஜகங்களது சகல ஸ்தாவர ஜங்கமங்களும் எல்லாம் தன்மய (ஸ்ரீசிவரூப) மாகையினால் எல்லாப் பிரபஞ்சங்களும் சகலபோகங்களி னின்றொழிவடைந்து விஷய (சிற்றின்ப) சுகங்களெல்லாம் விஷத்திற்கொப்பாகி விட்டன. (44) சகல ஸ்தாவர ஜங்கம வடிவாயுள்ள எல்லா வுலகும் ஸ்ரீசிவ சுவரூபத்தைத் தவிர வேறில்லாதபடியால் ஒவ்வொரு லோகத்திலுமுள்ள சகலப் பிராணிகளுக்கும் ஆண் பெண்ணென்ற வித்தியாஸத் தோற்றமே அற்றுவிட்டது.

ஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவ காண்டம் அ—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்ரீ மகாவிஷ்ணு சொல்லியதாவது:—இப்போது உங்கள்மனம் கேவலம் காமவிகாரமற்று நிற்கின்றது. திக்பாலகர்களும் அவர்களது ஸ்திரீகளிடத்து நேசமற்று நிற்கின்றது ஆச்சரியம். (1) இவ்விந்திரன் இந்திராணியிடத்து கொஞ்சமேனும் மோகமற்றவனும், இப்பிரம்மாவோ, ஸரஸ்வதியிடத்து மனமொழிவடைந்தவருமாகி விட்டனர்கள். (2) நம்முடையமனதிலும் இலக்ஷுமியானவள் வேண்டாமென்று எப்போதுமவள்மீது வெறுப்பாய்த தோன்றுகின்றது. மனசு என்றவட மொழிச்சொல்லானது நபும்ஸகலிங்கம் (ஒன்றன்பால்) என்றதாக பெரியோர்கள் அபிப்பிராயப்படுவது உண்மைதானென்பதுபோல் இப்போது எல்லா உலகினர்களுடைய மனமும் நபும்சக (அலி) மாகி (3) மன்மதனுடைய அம்புக்கு இலக்ஷியமாகவில்லை. இஸ்தாவரஜங்கமரூபமாகிய ஜகத்தில் ஆண் பெண் சேர்க்கை யில்லாதிருக்கையில், (4) பிரம்மாவுக்கு சிருஷ்டித்தொழில் எப்படி நடக்கும்? இப்போதெனக்கு இரக்ஷணைத் தொழிலின் பிரஸக்தியாது? திக்பாலர்கள் எந்த அதிகாரம் நடத்தக்கூடும். (5) இயாகஞ்செய்கின்றவர்களால், அவர்களுக்கு புத்திரோத்ஸவமாகுங்காலத்தில் செய்யப்பட வேண்டிய வைசுவாநரேஷ்டி (ஓர்வித ஹோமம்செய்தல்) யானது நடத்தப்படுவோாத யிச்சகத்தில் தேவர்களுக்குயாது திருப்தியிருக்கின்றது? (6) பிராணிகளுக்கு தேஜசுயாது? புலன்களின் திருப்திக்குரிய ஊண்முதலியவற்றுக்கு என்னயோக்கியதையிருக்கின்றது? ஆகையால் சகலஜகங்களின் சிருஷ்டி முதலிய வாழ்க்கையும் ஆண் பெண்களின் சேற்கையிற்பொருந்தியதே தவிர வேறில்லை. ஆகையால் இப்போது நாமெல்லோர்களும் சேர்ந்து மன்மதனையழைப்பித்து அவனுக்குத் தக்கபடியுள்ள பற்பல உபாயங்களாலவனைக் களிக்கச்செய்து (8) ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களை யொன்று சேர்ப்பிப்பதற்குரிய தகுந்த முயற்சியைச் செய்வோமென்று தீர்மானித்துக்கொண்டு மற்றதேவர்களோடு ஸ்ரீவிஷ்ணுவானவர் மன்மதனை நினைக்க, (9)

அவனும் அசுரர்களுக்கு ச்சத்துருக்களாகிய தேவர்கள்முன்பாக தனது நாயகியாகிய ரதியுடனும், அன்பனுகிய வஸந்தனுடனும் அம்புடன்கூடியவில்லை கையிற்பற்றியவனுகச் சீக்கிரமாயிங்கு வரலுற்றுன். (10) அவன் தனதுதோழனேடு தேவர்களை வந்தனித்துச் சொல்லியதாவது, "ஓ தேவர்களே! ஜகங்களுக்கெல்லா மீசுவரர்களாகிய உங்களால் யான் நினைக்கப்பட்ட விவரம் யாது? (11) ஓவிஷ்ணுப் பிரம் மேந்திரர்களே! மூன்று ஜகங்களிலுமாகவேண்டிய வேலை யாதாயினுமதைத் தடையன்றி யிலெனக்குச் சொல்லி அதுவிஷயத்திலுங்களது தூதனுகிய என்னை நியமனம் செய்யுங்கள். (12) அவை யெல்லாவற்றையும், ஓ விஷ்ணுவே! உங்கள் தயவினுல் யான் செய்து முடிக்கின்றேன். ($12\frac{1}{2}$) விஷ்ணு சொல்லுகிறுர்:—"ஓ மெத்தவும் புத்திசாலியாகிய மன்மதா! மிகவும் நல்லது! நீ ஒருவனே உலகுக்கெல்லாம் ஸாம்பிராஜிய பதவியைப்பெற்றவனுய் விளங்குகின்றுய்.(13) நீ சென்றகாலத்துக்கும், வருங்காலத்துக்கும், இக்காலத்துக்கும் யுக்தமாயுரியதைச் செய்ய வேண்டும். இச்சகத்தில் ஆண்பெண்களின் சேர்க்கையாகிய தேவகாரியத்தை யிப்போதே முடித்தல்வேண்டும். (14) கிருஷ்ணமாயும், (நீலவர்ணம்) பிங்ளமாயும், (சிவப்புவர்ணம்) உள்ள தம்பதியானது, சேர்க்கையின்றி வெவ்வேறுய்ப் பிரிந்து நிற்குமளவும் ஸ்தாவரஜங்கம ரூபமாகிய இச்சகத்தை யொன்றுசேர்ப்பிப்பது உன்னுல் தகாது. (15) மேற்சொல்லிய இவ்விரண்டு நிறமுள்ளவையும் ஸ்ரீ பார்வதீபதியாகிய பரமாத்துமாவினுடைய வலது பார்சுவமுமிடதுபார்சுவமுமாகிய விரண்டுபாகங்கள். இவ்விரண்டுபாகங்களும் ஜநங்களுக்குத் தாய்தந்தையர்களானவை:(16) அவைகளிலொன்றுகிய தாய்ப்பாகமானது பருவதராஜனுக்குப் பெண்ணுகி அப்பருவதத்தில்தானே ஸ்ரீ பரமேசுவரனுடைய திருப்தியர்த்தமாகத் தவஞ்செய்து நிற்கின்றது. (17) மற்றென்றுகிய தந்தைப்பாகமோவென்றுல், மலைகளிற் சிறந்ததாகிய கைலையில் ஆலமரத்தடியை நாடி சிறந்த யோகநிஷ்டர்களாகிய ஸநகாதிகளுக்கு ஞானத்தையளித்து சுகமாய் நிற்கின்றது. (18) அவ்விரண்டு பாகங்களும் உன்னுல் ஒன்று சேர்க்கப்பட்டால் மூவுலகும் யதாஸ்திதியில் வந்துவிடும். உனக்குமோ உலகுக்கெல்லாம் மேன்மையான சிறந்த வல்லமையிருக்கின்றது.(19) நீ விசேஷ முயற்சியில்லாமலே யிப்போது மெச்சப்படத்தக்கவனுகின்றுய். யாதெனில், உனக்கு மலர்களே ஆயுதமானதுபற்றி, நீ அம்மலர்களாலப்பிரபுவைப் பூஜித்தலானது அவருக்குப் பிரீதியுள்ளதேயாகும். (20) ஆகையாலே எல்லா உலகுக்கும் மேன்மையான புண்ணியவானுவாய்" என்று ஸ்ரீ விஷ்ணுவானவர் சொல்லியதன்பேரில்

மன்மதன் உரைத்ததாவது:—(21) "தங்கள் சன்னிதியில் சொல்லுகிற எனது உண்மையான வசனத்தைக் கேளீர்கள்! விஷ்ணு பிரம்மர்களே! என்னையெங்கும் வெற்றிபெறுவோனாய்த் தயவுடன் நியமித்திருப்பவனிடத்தே (22) யான்வெற்றிபெற முயலுவேனாகில் தடையின்றி யஜமானத்துரோகியாகின்றேன். யஜமானத்துரோகம் செய்வோர்களுக்கு நிச்சயமாய் நரகப்பிராப்தியே யன்றி சுவர்க்கம் கிடைப்பதில்லை. (23) நல்லது எனக்கு இப்போது காலாந்திர நற்கெதியான்து கிடைக்கட்டும், அல்லது கிடைக்காமல்போகட்டும்; ஈசுவரனென்னைகோபத்தினால், குங்கிலியப் பொடியைப்போல், எரித்துவிடுவார். (24) உங்களாலோ, மலரம்பையெய்வதானது புஷ்பார்ச்சனத்திற்கொப்பாய்ச் சொல்லப்படுகிறது. நல்லபாவனை(தோற்றம்)யின்றி சமர்ப்பிக்கப்படுகிற, மிகவுமின்பமளிக்கலுற்றபுஷ்பங்களையாயினும்,பாலையாயினும்,(25) சந்திரனுடைய கலையை யுச்சியிலாபரண மாய்க்கொண்ட மகாதேவர் அங்கீகரிப்பதில்லை. நல்லபாவனையோடு சமர்ப்பிக்கப்படுகிற புற்களானாலும், பூண்டுகளானாலும், கற்கள்முதலியவையானாலும் (26) அடித்தலையானாலும் ஸர்வேசுவரனாகிய பரமசிவன் மிகவும் பிரியமாயங்கீகரிக்கின்றார். முற்காலத்தில் நற்பாவனையின்றி பசுக்களால் ஸ்ரீ பரமேசுவரன் மீது பாலானது நிரம்பச்சமர்ப்பிக்கப்பட்டதானது (27) அப்பரமாத்துமாவுக்குப் பிரியவிரோதமுள்ளதாகியுடனே அப்பசுக்களெரிந்துபோனதற்கு முக்கியகாரணமாயிற்று." ($27\frac{1}{2}$) இங்ஙனமாக மன்மதனால் சொல்லப்பட்டதின்பேரில் (28) கேளீர்கள் பிராம்மணோத்தமர்களே! தேவர்கள் மன்மதனைநோக்கி யிவ்வாலாறு எவ்விதமென்று வினவ, மன்மதன் சொல்லுகின்றான். "முற்காலத்தில் சந்திரசேகரனாகிய ஜகதீசன் தக்ஷகுமாரியாகிய ஜகதீசுவரியுடன் சிறந்த மந்தரபருவதத்தில்,(29) தேவகணங்களால் ஸேவிக்கப்பட்டவரும், நந்தி, பிருங்கி, மகாகாளர், கந்தர், விநாயகர் முதலியவர்களால் சூழப்பட்டும்,(30)நாட்டியோபசாரத்தில் முற்றும் தேர்ச்சிபெற்ற ருத்திர கன்னிகளாலும், தேவதாசிகளாலும் நெருக்கமாய்க்கூடப்பட்டும், விளங்கியிருந்தனர். (31) சித்திரை, வைகாசி மாதங்களாகிய வசந்தபருவத்திய மலர்களால் தேவாதிதேவனும் சருவலோக நாயகனுமாகிய பிரபுவானவர், தனக்கு பிரியபாரியாளும், மற்ற சகல அண்டபிண்டசராசரங்களுக்குத் தாயுமாகிய சிவாதேவியை மெத்த மனக்களிப்புடன் அலங்கரித்து, (32) மேன்மை பொருந்திய சிங்காதனத்தில் வீற்றிருந்தனர். இப்படியிருக்குமளவில் முனிவர்களுக்கெல்லாம் சிறந்தவரும், ஸாக்ஷாத் பிரம்மதேவனுக்குப் புத்திரனும்,(33) காசியபப்பிரஜாபதியானவர், திதியென்று மதியென்

றுமாகிய விரண்டு பாரியைகளால் தங்களுக்கு உரிசிகரமான பசுவின்பால் வேண்டுமென்று (34) அடிக்கடி ஆசையுடன் பிரார்த்திக்கப்பட்டபோது, அவர் வருணனிடத்துச் சென்று, தனது அப்புத்திரனைத்தனக்கு, நிரம்பப்பால்கரக்கின்ற பசுக்களைக் கொடுக்கும்படி கேட்க, (35) அவனால் பாற்குறியுள்ளஅனேகம் சிறந்த பசுக்கள் கொடுக்கப்பட்டன. காசியபரும், பாரியைகளோடு தடியையெடுத்து அவைகளையோட்டிக்கொண்டு, (36) உள்ளங்களித்து ஜநலோகத்துக்குப் போகப் புறப்படுகையில், அப்பசுக்கள் அவரது வசத்திற்செல்லாமல் மனம்போனபடியாகாசமார்க்கத்தில் சென்றன. (37) அவைகள்சென்றவிடங்களிலெல்லாம் பூமியின்மீதுள்ள நதிகள், நதங்கள், தடாகங்கள் முதலியவையெல்லாம் அவைகளது பால்களால் நிரப்பப்பட்டன. (38) அவைகள் இவ்வாறாக ஓடிச்செல்லுமளவில் கன்றுகள் பிரிந்துவிடப்பட்டன. (38½) முனிவரும், தனது இரண்டுபாரியைகளுடன் தடியைக்கொண்டு ஆவலுடன் துரிதமாயவைகளைப் பலவாறு தொடர்ந்தோடுகையில், மிக்கக்களைப்புடன் பெருமூச்சுணர்ந்து, வாய்காய்ந்து, வெகுகாலமோடியு மவைகளைநிறுத்துவதற்குத் திறமைகொள்ளவில்லை. (39½)

எட்டாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## ஸம்பவ காண்டம் கூ—வது அத்தியாயத்தினர்த்தம்.

மன்மதன் விஷ்ணு முதலிய தேவர்களை நோக்கிப் பின்னும் சொல்லியதாவது:— "அப்பசுக்கள் பால்மாரியைப் பொழிந்து கொண்டே சீக்கிரத்தில் மந்தரபருவதத்திற்கு மேலாக வாலுற்றன. (1) அம்மாடுகளின் பால்மாரியானது ஸ்ரீ ஸாம்பமூர்த்தியின்பேரில் விழுகையில் அவர் அவமானங்கொண்டு ஆகாயத்தையுற்று நோக்கியவுடன் (2) அவ்வனேகம் பசுக்களும் ஓர் க்ஷணத்திற்குள் சாம்பலாகிவிட்டன. ஆ! ஆச்சரியம். ஸ்ரீ பரமேசுவரனுக்குக் கொஞ்சத்திற்கொஞ்சமாயினும் பாலையபிஷித்தலானது மிகவும் பிரியமுள்ளதென்றும், அப்படியே பஞ்சக்கவியத்தை (பசுவினது நெய், தயிர், பால், நீர், சாணம் ஆகிய வைந்தின் சேர்க்கை)யபிஷேகித்தலும் பிரியமாகுமென்றும்முனிவர்கள்சொல்லுகின்றார்கள். (3½) அப்படி யிருக்கையில் பிராணிகளை யெல்லாம் பாதுகாக்கின்றவராயினும் அழிவற்ற விச்சகதீசன் யாது இங்ஙனம் எரித்தனர். (4) பசுக்களால் பக்தியின்றி வருஷிக்கப்பட்டபடியால் அத

வருக்குப் பிரியமாயாகவில்லை. அந்தக்காணத்தில் பக்தித்தோற்றத்துடன் அவ்வீசன்மீது சமர்ப்பிக்கப்பட்ட தடியடியும், வில்லடியும் (5) உண்மையாகவே பூஜாமிசத்தைக்கொண்டது. ஆகையால்தான் ஓ! தேவர்களே! யானிவர்மீது பயப்படுகின்றேன். இங்ஙனமாகையில் யானெவ்வாறவரையெனது ஐந்து மலரம்புகளுக்குக் குறியாகச் செய்யத்தகும். (6) யானிவ்வாறறிந்திருக்கையில் அம்பென்ற அறிவோடு ஜகதீசன் மீது சமர்ப்பிப்பேனாகில் தடையின்றியில் பாவிகளுக்கெல்லாம் மகாபாவியாகிவிடுகிறேன். (7) ஆகையால் ஓ! விஷ்ணுவே! உமது வசனத்தை யான் நிறைவேற்றுவோனாகவேமாட்டேன்." இவ்வாறாகவேமன்மதன் கூறலுற்றதைக்கேட்டுபிரம்மதேவன்பின்னும்சொல்லத் தொடங்கினார்:—(8) மன்மதனை, அருகிலழைப்பித்துத் தேறுதல் செய்து சொல்லியதாவது:— "தேவர்களுன்னை மூன்று ஜகங்களுடைய க்ஷேமத்துக்கு முரியதாகிய காரியத்தை நடப்பிக்கும்படி வேண்டுகின்றார்கள். (9) ஜகத்சிருஷ்டியின் விருத்திக்காகவே ஈசன் கட்டளையின்படி யுன் தொழிலிங்ஙனமாக வேற்பட்டிருக்கிறது. ஆகையாலெல்லாமறிந்த ஜகதீசன் உன்மீது கோபங்கொள்ளமாட்டார். (10) ஓ! கோ! இப்போது உனது மனம் இரும்பினும் அதிககடினமாயிருப்பது மிகவுமாச்சரியம்! மிகவும்கஷ்டம்.தேவர்கள்முகத்தினின்றுதேஹி(கொடு)யென்றவசனத்தைச்செவியுற்றுக்கேட்டும், (11)நீசித்தபுவனாக(சித்தத்திலுண்டாகியவன்) இருந்துகூடஉனது மனம் நனையவில்லை;இதுமிகவும் ஆச்சரியம்."இவ்வாறாக பிரம்மதேவன் சொன்னதற்கு மன்மதன் பதிலுரைத்ததாவது. (12) "வாரீர் ஜகத்தையெல்லாம் சிருஷ்டிக்கின்ற பிரம்மதேவா! நீர் சொல்லியதெல்லாம் முற்று முண்மைதான், சந்தேகமேயில்லை. ஈசன் கட்டளையின்படியே யெனக்கெங்கும் புழக்கமேதவிர வேறில்லை. (13) மூவுலகிலும் வெற்றிபெறுவோனாகையாலே யெனக்கு ஜயீ (வெற்றிபெறுவோன்) என்ற பெயர்கிடைத்திருக்கிறது. சகல அண்டங்களிலுமுள்ள அண்டஜம் (முட்டையில் ஜனிக்கிற பக்ஷிகள் முதலியவை) ஸ்வேதஜம் (புழுக்கத்தில் ஜனிக்கிற புழுக்கள் முதலியவை) உத்பிஜம்(பூமியில் முளைக்கிற விருக்ஷங்கள் முதலியவை) ஜராயுஜம் (ஜராயு என்ற பையினின்று ஜனிக்கிற மானிடர் முதலியோர்) தேவாசுரர் முதலியவர்கள் மீதும் என்னாலெய்யப்படுகிற அம்புகள் வெற்றிபெறாமல் பழுதாய்த்திரும்புவதில்லை. (14½) நல்லது! அவையெல்லாம் நிற்கட்டும்; வாரீர் பிரபுவே முந்தி நீர் உமது பெண்மீது மோகம்கொள்ளும்படி யான் செய்வித்ததைமறந்து விட்டீரா? தாருகாவனத்தின்கண் ஸ்ரீ விஷ்ணுவானவர் மாயையாகப் பெண்ணுருவம்கொண்டு வந்தவர்மீது (16) ஆசிரமங்களிலுள்ள முனிவசெல்வோர்களும் மோகம்கொண்டவர்களாகி அம்மாயைப் பெண்காலில் விழும்படியடித்தேனல்லவா? ஸ்ரீ விஷ்ணுவானவர், ஜலந்தராசுரனது மனைவியான பிருந்தையென்பவள்மீது (17) அ

வர் சிறைச்சாலையிலடைபட்டவராயினும் காதல்கொள்ளும்படி யெனதம்
படியால் செய்விக்கப்பட்டார். மேலும் ஸ்ரீ ஹரியானவர் அம்பரீஷ
சக்கிரவர்த்தியது பெண்ணாகிய விதியுன்மதியென்பவளை, நேரில் (18) நா
ரதமுனிவரையும், பருவதமுனிவரையும் மோசஞ்செய்து, மோகத்தின்
பேரிலெடுத்துப் போயினர். ஸ்ரீ கிருஷ்ணன், வஸுதேவரது குமாரனா
யிருந்தும், நந்தனென்ற இடையன் வீட்டில் வசித்துக்கொண்டு (19) எ
னதம்படியின்கூறினால் இடைப்பெண்களோடும் போகஞ்செய்தனரல்
லவோ? இந்திரனும், கௌதமமுனிவரின் தருமபத்தினியாகிய அகலி
யென்றவளை எனதம்படிவசத்தினால், காதல்கொண்டனன். (20) என்
னால் சந்திரனுடைய மனமும், பிரகஸ்பதிதேவனுடைய பாரியையாகிய
தாரையென்றவளுக்கு சுவாதீனப்படலாயிற்று. சூரியனும் ஸமுஞா
தேவியென்ற அறிவோடு சாயாதேவியுடன் நூறுவருடமளவும் போக
ஞ்செய்தனர். (21) வருணன் மனைவியாகிய ஜலத்தோடு அக்கினிதேவ
ன் புணரும்படி என்னாலே செய்யப்பட்டது. நானடித்த அடியிலேயே
ஸ்ரீ நாரதமுனிவர் பெண்மானோடு கலவிதொடுத்தனர். (22) பராசரமு
னிவர், தாசராஜன் கன்னியாகிய ஸத்தியவதியென்றவள்மீது காதல்கொ
ண்டனர். விசுவாமித்திரருடைய கொடியதவத்துக்கு மேனகையென்
ற தேவநாட்டியப்பெண் இடையூறாயினள். (23) உலகத்திலுள்ள தேவ
ர்கள், அசுரர்கள், மனுஷியர்களில் எவ்வளவுபெயர்களோ எனதம்பினது
சம்பிரவத்தால் ஸ்தம்பித்து மோகித்திருக்கிறார்கள். (24) அக்கினியை
ரேதஸ்ஸாக (வீரியமாக) வுடைய, தோலையுடையாகத் தரித்த பரமேசு
வரனொருவரைத்தவிர மற்றெல்லோர்களையும் எனதுமலராயுதங்களால
டிக்கலாகின்றேன். (25) அவர் சகல ஜகங்களையும் நெற்றிக்கண்ணது
நெருப்பினால் எரிக்கின்றவர். ஸகல ஜகங்களையுமவரே படைக்கின்றவர்.
அவரே ரக்ஷிக்கிறவர்: அவரே சம்ஹரிக்கிறவர்: நியமிக்கிறவரு மவரே.
(26) அப்படிப்பட்டவரும், பிறப்பற்றவரும், இறப்பற்றவரும், துக்க
த்தைப்போக்கடிக்கின்றவரும், மிக்கஞ்ஞானமுடையவரும், மேன்மை
தங்கியப் பிரபுவுமாகிய மகேசுவரனை உலகத்தில் எந்த தீரந்தான் மனன
டுக்கமின்றி யெதிர்க்கவல்லவன். (27) யான் யாவரிடத்துமஞ்சேன். இ
ம்மகேசுவரன்மீதுமட்டில் அஞ்சுகின்றேன். ஆகையால் ஓ தேவோ
த்தமர்களே! நீங்களடியேனை ஸ்ரீ பரமேசுவரன் விஷயத்திலேற்படுத்
தாதீர்கள். (28) நமதுகட்டளைக் கிவ னமையவில்லையென்று ஓ பிரம்ம
தேவா! மனவருத்தமடையாமல் எந்தனை மன்னித்தருளவேண்டு"மென்
று மன்மதன் வேண்டிக்கொண்டனன். (29) பிறகு இவ்வாறு தடுத்து
ரைக்கின்ற மன்மதன்மீது மிகக்கோபங்கொண்டவராகப் பிரம்மதேவன்
கூறலுற்றதாவது "சீ! சீ! நீ கெட்டாய்! உலகத்தில் யுக்தமாகிய புத்தி
மதிகளைக் கேளாதவொருவனை, ஜனங்கள் (30) நெஞ்சத்திலிலச்சையற்
றவனென்று சொல்வது சாதாரணவதந்தியல்லவோ? இச்சந்தர்ப்பத்தி
ல் உன்னைப்பற்றிச் சொல்லவேண்டுவது யாது? நீ மானிடர்களுக்குமு

தன்மைபான சத்துருவாகின்றாய்; (31) உதவிசெய்தலையே பிரதான மான ஒழுக்கமாயுடைய பெரியோர்கள், உலகத்தில் பிரளயகாலமளவும் புகழ்ச்சியாகிய தேகத்தையுடையவர்களாக முற்காலத்தில் விளங்கிநிற் கின்றார்கள். (32) கேளாய் மன்மதா! முற்காலத்தில் சியவனமுனிவ ரின் தநயராகிய ததீசமுனிவர், வச்சிராயுதத்திற்காக தேவர்களால் யாசி க்கப்பட்டபோதுதனது தேகத்தினெலும்புகளைக்கூட கொடுத்திருக்கி றார். (33) இரக்கத்தினால் நனைந்த நெஞ்சமுடைய சிபிசக்கிரவர்த்தி யென்ற வோர் மேன்மையுள்ள அரசன், ஓர் மாடப்புறா நிமித்தமாக த னது தேகமாமிசங்களையும், எலும்புகளையும், கேவலம் த்ருடசித்தனாக கண்டித்துக்கொடுத்திருக்கிறார். (34) சூரியபுத்திரனாக ஓர் கன்னியிடத் திற் சனித்த கர்ணனென்றவனும், இந்திரனால் யாசிக்கப்பட்டபோ து அவனிடத்திருந்த சக்தியென்ற ஓராயுதத்தைப் பெற்றுக்கொண்டு தன்னுடன்பிறந்த கவசத்தைமுற்றும் களிப்புடன் கொடுத்திருக்கின்ற னன். (35) உன்னைப்போன்ற கிருபணன் புவனத்தில் இருந்ததுமில் லை; இனி யிருக்கப்போவதுமில்லை. ஓ! கோ! இவனுடைய தன்மை யைப் பாருங்கள்" என்று பிரம்மாவானவர் தனதுதலையை ஆட்டி (36) கைகளைக்கொட்டிச் சிரித்தனர். பிறகு எல்லாதேவர்களும் அவனை அ டிக்கடி வேண்டினர்கள். (37) ஸ்ரீ நாராயணனும் மன்மதனுக்குச் சொ ல்லியதாவது "அடா இது உனக்குத்தகுதியா? எல்லோர்களுக்கும் முன்னிலையில் நிற்கின்றாய்: அடா ரதிக்குநேசனாகிய மன்மதா! நீ பெரி யோர்களுக்கு த்தோழனென்றும் கீழ்மக்களுக்குப் (38) பகைஞனென் ன்றும் எங்கும் பிரசித்தியடைந்திருக்கிறாய். ஆகையால் ஸ்ரீ பரமேசு வரனைப் பார்வதியம்மனோடு சேர்ப்பித்து நீ புண்ணியவானாகிவிடு. (39) அப்பார்வதீபரமேசுவரர்களும் உன்மீது மிகவும் அன்பு கூர்ந்து உனக் கு வேண்டியதை யளிப்பர்கள்." என மன்மதன் சொல்லுகிறான் "யா து கூறினும் யான் ஸ்ரீ பரமேசுவரனருகிற் செல்லேன். (40) வேறு யாதானாலும் உலகங்களுக்கு இப்போதே சித்தமாய்ச்செய்கின்றேன். உங்களுக்கு எப்பொதும் தீங்கு செய்கின்ற சூரபத்மாசுரனைக்கூட (41) அவனுடைய சகோதரர்களுடன் சிற்றின்பப் புணர்ச்சியோடு ஆணிவைத்தறைந்ததுபோல் எனதம்பினால் செய்துவிடுகிறேன். அவ ன் வெகுகாலமளவும் அழகிய விழிகளையுடைய பெண்டீர்களது வசத் தில் எப்பொதுமிருந்துவிடட்டும். (42) புவனங்களுக்கு முக்கிய ஆத ரவாயுள்ளவரும், சர்வர்களுக்கும் குருவும், எல்லாமறிந்தவரும், எல்லா வற்றையும் இரக்ஷிப்பவருமான ஸ்ரீ பரமேசுவரனை யெனதம்பிற்கு ல க்ஷியமாகச் செய்யமாட்டேன்" என்றனன். (43) பிறகு பிரம்மதே வரானவர் மறுபடி யெழுந்து கோபத்தினாலுதடு துடிக்கலுற்று செவி க்குக் கொரேமாயிருக்கும்படி பயங்கரமான வசனத்தைக் கூறியதாவ து (44) அகோ ஸ்ரீ விஷ்ணுவே! அசுரனைத் தன் வசமாக்கிக்கொ ண்டு தேவஸ்திரீகளை யபகரிப்போனான அசுரனையொற்ற இத்தான்

மார்க்கனோடு யாது வீண் வாது? (45) இப்பொழுதே அவன் தேவகாரியத்தைச் செய்யாவிடில் உடனே அவனைச் சபித்துவிடுகிறேன்; துஷ்டன் தடியடியால் வசப்பட்டாலொழிய நல்வார்த்தைகளால் முடியான்" (46) எனப்பிரம்மன் சொன்னபிறகு சுற்றுமுள்ளதேவர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்ட கோலாகலவோசையானது சமுத்திரம், மேகம் இவைகளினொலியை மேற்கொண்டு காதுகளைச்செவிடாக்கித் திசையெங்கும் பரவலாயிற்று. (47) பிரம்மாவினுடைய சாபத்திற்காக மன்மதன் பயந்து நடுங்கி மனக்கலக்கமுற்றுத் தனதன்புள்ள நாயகியாகிய ரதியுடன் யாதுசெய்யத்தகுமென்று வெகுவாய்யோஜித்தான். (48) அதற்கு ரதியும் மன்மதனை நோக்கி "நாதனே! நீர் மகேசுவரன்மாளிகைக்குப்போவது உசிதமல்ல; இவருடையசாபம் உம்மை யென்ன செய்யலாகும்? (49) சாபத்துக்கு விமோசனமுண்டு. சிவத்துரோகத்துக்கோ எப்போது மோரிடத்துமில்லை. ஸ்ரீபரமேசுவரன் ஓர் புன்னகைப்பினது லேசத்தால் மூவுலகையும் ஓர் நொடிக்கு ளெரித்துவிடுவார். (50) உம்மைப்போன்றவர்களுக்குப் பெண்களின் வார்த்தையில் சட்டை யிராது. எனது இவ்வசனமானது அவமானத்தைக்கொடுப்பதேயல்ல; மிகவும் அனுகூலமாகியது. (51) ஸ்ரீபரமேசுவரனை யுமதம்புக்கு லக்ஷியமாக்காமல் அச்சகநீசனைப் பூசிப்பீராக. உலகி லவரை யவமதித்தவர்கள்சீக்கிரத்தில் பாவத்தினால் மாண்டுவிடுகிறார்கள்" (52) இவ்வாறாகிய ரதியின் வார்த்தையைக்கேட்டு மன்மதன் பதிற்கூறியதாவது. "அழகிய புருவங்களையுடையநாயகி! நீ சொல்வதுமுற்றும் உண்மைதான்; சந்தேகமேயில்லை. (53) இயமனுக்கு இயமனாகிய பரமசிவனிடத்தினின்று அடையப்படுகிற மரணமும் மிகவும் மேன்மையுள்ளது. மற்றவரிடத்தினின்று ஓர் கல்பத்தின்முடிவளவும் ஆயுசு கிடைத்தபோதிலும் அது அல்பாயுசுக்குச்சரியானதே! (54) ஜனங்களுக்கெல்லாம் பிரபுக்களாகிய தேவர்கள் என்னை வேண்டிக்கொள்ளுகிறபடியால் வாராய் பெண்ணே! என்பேரிலான சபதத்தின்படி நீ தடுத்துரைக்கவேண்டாம். (55) மன்மதனிவ்விதமாக ரதிதேவியைச் சமாதானம்செய்துவிட்டு, பிறகெழுந்து கைகட்டி விஷ்ணு முதலியதேவர்களை முறைப்படி வந்தனித்துச் சொல்லலாகின்றான். (56)

ஒன்பதாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

ஸம்பவகாண்டம் ௰-வது அத்தியாயத்தினர்த்தம்.

"திருபுரர்களுக்கு மாற்றானாகிய மகாதேவனோடு போர்தொடுப்பதற்குச்சென்று மூவுலகுக்கும் தாயாகிய மகாதேவியோடு அப்பரமசி

வனை ஒன்றுசேர்ப்பிக்கின்றேன், (1) தேவசிரேஷ்டர்களே! உங்களநு
னுக்கிரகத்தால் அடியேனுக்கு சீக்கிரத்தில் வெற்றிகிடைக்கவேண்டும்.
இப்போதே எனக்கு நீங்கள் மேன்மையான தாம்பூலத்தைக் கொடுத்த
ல்வேண்டும். (2) உங்களது காரியமிடையூறின்றி நிறைவேறும்விஷய
த்தில் யான் மாளுமளவு முயலுகின்றேன்." என்று மன்மதனுரைக்க
லானதை பிரம்மதேவன் மனக்களிப்புடன்கேட்டு, (3) தன்மீதணிந்திரு
ந்த (இரத்தின) மாலையை யவனுக்கு வெகுமதியாய்க் கொடுத்து அவ
னைப்புகழ்ந்தனர். ஸ்ரீவிஷ்ணுவும், சிறந்த நவரத்தினங்களால் விளங்க
லுற்ற மேன்மையாகிய பதக்கத்தைக்கொடுத்தனர். (4) இந்திரன், க
ல்பகவிருக்ஷத்தினின்றடையப்பட்டிருக்கிற சிறந்த ஆபரணங்களை மிக
வாதரவுடன் தந்தனன்; மற்றதிக்பாலர்களும் அற்புதங்களாகியபலவித
வெகுமதிசாமான்களையீந்தனர்கள். (5) முனிவர்களும் யோகீந்திரர்களும்
அவனைத்துதித்து வாழ்த்தினார்கள். மன்மதனும்அவ்வெல்லோர்களா
லும் கொடுக்கப்பட்ட வெகுமதிசாமன்களைக் கண்டு முற்றும் களிப்பு
ற்றனன். (6) இரதியோவெனில், மிகவும் துக்கித்தவளாக நடுக்கம்கொ
ண்டுநின்றனள். பிரம்மதேவனும், மகாவிஷ்ணுவும், அவனைவாழ்த்திச்
செல்லும்படி சந்தோஷமாயனுப்பினார்கள். (7) அப்போதுமன்மதனும்
ரதியோடுகூட அப்பிரம்மவிஷ்ணுக்களைவந்தனித்து தேவர்களுக்குப் பி
ரதக்ஷிணம்செய்துஜயா விஜயீபவாஎன்ற மங்களவசனங்கள்கூறப்பட்ட
வனாக உடனேபுறப்பட்டனன். (8) மலயமலைகாற்று சுவரூபமாகியரதம்
அப்போது தயாராகின்றது. பச்சைக்கிளிக்கூட்டங்களாகிய அவனது
தேர்க்குதிரைகளால் திசைகளெல்லாம்ஒரேபச்சையாகவிளங்கிற்று. (9)
ஐந்துமலரம்புகளும் சிறந்தவாசனைகளால் மிகவும் நேர்த்தியாயின: நா
மக்கரும்பாகிய அவனதுவில்லின்மீது வண்டுகளாகிய நாணிஞெசை வி
ருத்தியடைந்தது. (10) குசும்பாச்சாயத்தினால் மிகவும் சிவப்பாகிய க
ச்சையைத்தயாராக இறுக்கிக்கட்டியும், கூந்தலின்கண் சந்தனாதி பரிமள
தைலங்களைத் தடவிச்சீவிமுடிச்சிட்டும், சிறந்தவாசனைபொருந்தியமலர்
மாலைகளைச்சூட்டியும் (11) சிறந்த குசும்பாச்சாயவஸ்திரத்தினால், தலைப்
பாகைகட்டியும், ரத்தினகுண்டலங்கள், கவசம், ஹாரம், இவைகளைய
ணிந்தும், நன்மணம்வீசிய சந்தனத்தைப்பூசியும், (12) கல்பகவிருக்ஷ
த்தினின்றுண்டாகிய சிறந்த தேவாபரணங்களைப்பூண்டும், ஆகிய இ
வைகளால் விளங்கிய சௌந்தரியக்கடலாகிய மன்மதனைநோக்கியதில்,
அப்போது யெல்லோர்களுடைய மனமும், (13) அவனுடைய தேகத
தை ஆலிங்கனம் செய்யக் காதல்கொண்டதனால் ரதிதேவியினுடையச
க்களத்தித்தன்மையை யடைந்தது. பிறகு மன்மதனும், அவ்வாறாகிய
ரதத்திலேறி (14) ஸ்ரீமகேசுவரனை வெல்வதற்குவிருப்பமுற்று வில
லைப்பற்றியவனாகி அவாருகிற் செல்லலுற்றனன். ஸப்த சமுத்திர
ங்களாகிய பேரிவாத்தியங்களின் (15) முழக்கவோசையோடுகூட குயி
ல்களாகிய காகளவாத்தியங்களினின்பமானவோசையும் விருத்தியாயிற்

று, பாதரிமலர்களாகிய நாகஸ்வர மென்றவாத்தியங்களின் நாதத்தோடிசைந்த, (16) வண்டுகளால் சூழப்பட்ட மல்லிகைமலர்களாகிய சங்கவாத்தியவொலியானது அதிகரித்தது. இச்சம்பிரவங்களோடு கிளிக்கூட்டங்கள், ஓர்நொடிக்குள், தேரினுச்சியில் விளங்கியத்துவஜமாகிய மச்சத்தின் முகத்தாக்கௌவப்பட்டமேகங்களது பொழிதனீரினுல் விளங்கலுற்ற கைலையைச்சேர்ப்பித்தன. ($17\frac{1}{2}$) மன்மதனும் தன்மனையாளோடு மேன்மைபொருந்திய வெள்ளிமலையாகிய கைலையைநோக்கி, தேரினின்றிறங்கி, (18) வேண்டியபயனைக்கொடுக்க வல்லதும், சித்தர்கள், சாரணர்கள், கெந்தர்வர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள் இவர்களால் நிறையலுற்றதும், (19) பலவிதமரங்கள், கொடிகளிவைகளால் விளங்கிநிற்பதும், பூமிக்கலங்காரமாகியதும், கண்ணுடியுடனுக் கொப்பாகியதும், தேவர்களுடைய சம்பத்துக்கு முக்கிய பாக்கியஸ்தானமும், (20) ஆறுருதுக்களாலும் (பருவங்கள்) சேவிக்கப்பட்டதும், சிங்கங்கள், புலிகள், மான்கள் இவைகளால் நிறைந்ததுமாகிய வம்மலைக்குப் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்தனன். (21) பிறகு ரதிமணவாளன், முற்றும்வணக்கமுள்ளவனுக, அப்படியே வணக்கமாயுள்ள ரதிதேவியுடன் கால்நடையாக அம்மலைமீ தேறலுற்றுன். அப்போ தவன் வீணைசைகொண்டவனுக வில்லின்கண் மலரம்பைத் தொடுத்து, (22) அங்கு ஆணுடுபெண் சேர்க்கையின்றிப் பிரிந்துநிற்கின்ற மிருகங்களை மோகிப்பிக்கக் கருதியவனுக, மரக்கூட்டங்கள்மீதும், மிருகக் கூட்டங்களின்மீதும், எய்கையில் (23) ஸ்ரீநந்திகேசுவரனுடைய கட்டளையின் வசத்தினுல் அவ்வம்புகள்பயனற்றுஆகாசஞ்சென்றன. மரங்களசையவுமில்லை; வண்டுகளும் ஜங்கார சப்தஞ் செய்யவில்லை. (24) பக்ஷிகளும், அப்போது சித்திரத்தி லெழுதப்பட்டவை போல் கொஞ்சமேனும் சப்திக்கவில்லை. அங்கு சகலப்பிராணிகளும் அன்னந்திகேசுவரனுடைய கட்டளையின்படி விகாரமற்ற மனமுள்ளவைபாகவேயிருந்தன. (25) மன்மதனும், மிகவத்புதமும், என்றும் பழுதற்றதுமான தனது அஸ்திரங்கள் ஸ்ரீநந்திகேசுவரனுடைய மகிமையினுல் வீணுகியதைக்கண்டு, திகிலடைந்து நடுக்கமுற்று மிகவும் பரபரப்போடு (26) சீக்கிரத்தில் நந்திகேசுவரனிடஞ்சென்று தண்டனிட்டு வணக்கத்துடன் விண்ணப்பம் செய்துகொண்டதாவது— "சகலநற்குணங்களும்பொருந்திய நந்திக்கடவுளே! தேவீர்! விஷ்ணுமுதலாகியதேவர்கள், (27) சூரபத்துமனிடத்துப் பயந்து நடுங்கியவர்களாகி, பிரபஞ்சங்களுக்கெல்லாம் சிரேஷ்டனுகிய பரமேசுவரனையுபாசித்ததில், வணங்கியவர்களின் துக்கத்தைத் தொலைப்பிக்கின்ற சுவாமியானவர்கேட்டருளி,அவர்களுக்குச்சொன்னதாவது:—

"கேளீர்கள் தேவர்களே! சூரபத்துமனுனவன், வெகுகாலமளவும் மற்றெங்கும் புத்தியைநாட்டாமல் மிகவும் பக்தியுடனிங்கு நம்மை யாராதிக்கையில், (29) அவனெதிரில் நாம்பிரசன்னராகி யவனுக்கு மேன்மையானவரனை யீந்தனம். யாதெனில்:— "வாராய் அசுரா! நீசகல அசுரர்களுக்கும்முதன்மையாகி, நமதெச்சரிக்கையின்படி ஆயிரத்தெட்டண்டங்களையும் யாதொரு வெதிரியுமின்றி யுனதிரண்டு தம்பிகளுடனுளக்கடவாய். ($30\frac{1}{2}$) இன்னும் உனக்குவேண்டிய மற்றவரனைக் கேட்டுக்கொள்வாய். (31) உனக்குவேண்டிய சகலவரன்களையும் கொடுக்கச்சித்தமாயிருக்கின்றோம்". இவ்வாறு யாம் சொல்லியபின்னர் மறுபடி அவ்வசுரன் நம்மைவந்தனித்து, (32) அந்தக்காணத்தில் நல்லபக்தியோடு வேறுவரனைக்கேட்டனன். ஓ! தேவாதிதேவா! ஓமகாதேவா! கருணைக்கடலே! சுகமளிப்போனே! (33) வானளிப்பதில்முக்கிய திறமையுடையோனே! மகாதேவா! தயாநிதியே! செழித்தலைப்பெருகச்செய்வோனே! தேவர்கள், அசுரர்கள் இவர்களது சகலலோகங்களிலும் யான் செலுத்திய செல்வாக்குகளெல்லாம் (34) ஸ்வாமியவர்களாகிய தேவரீரது தயவின் வசத்தால் அடையப்பட்டதேயின்றி வேறில்லை. ஓ பிரபுவே! தேவரீரைப் பஜிக்கின்றவர்களுக்கும், வணங்குகின்றவர்களுக்கும் அவர்களது வேண்டுதலுக்குமேலாகக்கொடுக்கலாகின்றீர். முந்தியே ஜனித்திருப்பவர்களும், இப்போது ஜனிக்கின்றவர்களும், இனி ஜனிப்பவர்களுமாகிய தேவர்களில் தங்களது சரீரத்தினின்று ஜனிக்கின்றவராலொழிய மற்றயாவராலும் யான் மாணமடையத்தகாமலிருக்கக்கடவேனுக. (36) அவ்வரையான் சுமக்குதல்வேண்டும்; அவருமென்னைச்சுமத்தல்வேண்டும். இவ்வாறுமுதலாகியவரன்களையாம் நன்காராய்ந்து அவனுக்கீந்தனம். (37) வாரீர்கள் தேவர்களே! ஆகையால்யாம் சருவர்களுக்கும் நாதனும், ஜகங்களுக்கு குருவும், சிறந்தவடிவமுள்ள திருமேனியுடையவுமான குமாரமூர்த்தியைஉண்டாக்குவித்து அவ்வசுரநீசனைக் கொல்விக்கின்றோம்" (38) இவ்விதமாகமகாதேவன் கூறலுற்றுமறைந்தருளியபோது அத்தேவோத்தமர்கள் மேருகிரியி லொன்றுசேர்ந்து என்னையழைப்பித்து (39)"இப்போதுஜகங்களுக்கெல்லாம்க்ஷேமமுண்டாவதற்கு ஸ்ரீபரமேசுவரனை சிவையென்ற அம்மணியோடு ஒன்றுசேர்ப்பிப்பாயாக. அவ்வம்மனோ ஸ்ரீபரமேசுவரனது மடிமீதிருக்கக்கருதியவளாக மலையின்கண் தவஞ்செய்கின்றாள்.(40) அம்மகாதேவனோ வெள்ளிமலைமீது தக்ஷிணமூர்த்திபுருவமாடி வேதாந்தங்களி லுள்ள ஆத்துமஞ்ஞானத்தை ச்சனகாதி முனிவிரர்களுக்கு விளக்கிநிற்கின்றார். (41) நீ யெங்களைக்காக்கக்கருதியவனுகஅவ்விருவர்களை யொன்றுசேர்ப்பித்தல் வேண்டு" மென்று தேவர்களாவிவ்வாறுக

திட்டம்செய்யப்பட்டு இவ்விரதிதேவியுடனிப்போ திங்குவரலுற்றேன். (42) நந்திகேசுவரா! நீரேகர்த்தா, நீரே பிதா, நீரே பிதாமகன், நீரேகுரு, ஆ!கருணாமூர்த்தியே! நீரே எந்தனுக்கு இப்போது புத்தியுரைக்கவேண்டும்." (43) சூதமுனிவர் சொல்லுகின்றார்;—கேளீர்கள் முனிஸத்தமர்களே! முற்று மழகிய திருமேனியுடைய மன்மதனால் சொல்லப்பட்டதைக்கேட்டு, உலகங்களால் வந்தனிக்கப்படலுற்ற ஸ்ரீநந்திபகவான், முந்தித்தன்னைப்பிரபுவானவர் வாசற்படியில் காவலாளியாக விருந்திச் செல்லுகையிலெச்சரிக்கலுற்றதைக் கெவனித்து, (44) இரதியோடுகூடிய மன்மதனுக்கு ஆதரவுடனுரைத்ததாவது—: "வாரீர் பாக்கியசாலியான மன்மதா! ஸ்ரீபரமேசுவரனுக்கு நீர்,என்னிலும் மிகப்பிரியமுள்ளவர்; (45) ஆகையால் தடையின்றியுட்சென்று சீக்கிரத்தில் தேவகாரியத்தைமுடிக்கலாவீர். ஆனாலிப்பொழுது துமக்கு ஒருநன்றியைச்சொல்லுகிறேன்:— மிகவும் சாக்கிருதையுள்ளவராகவும், அவசரப்படாமலும் (46) மேற்குவாசற்படிவழியாக ஸ்ரீபிரபுவுடைய சன்னிதிக்குச்சென்று உம்முடைய கோரிக்கையின்படி தேவகாரியத்தை நிறைவேற்றுவித்து பிறகு கவலையைவிட்டுநீங்குவீராக.(47) இவ்வாறாக ஸ்ரீநந்திகேசுவரனால் சொல்லப்பட்டு, பெருந்தன்மையுடைய மன்மதனானவன் இரதியோடுகூட தெற்குவாசலைக்கடந்து மேலவாசற்குசென்றனன். (48) தேவர்களுமவனையொட்டியே தொடர்ந்துவந்து ஆகாயத்தினின்றார்கள். மன்மதனோ தனது மனையாளாகிய ரதியுடன் ஆலயத்தினுட்சென்று (49) நேர்த்தியான சிங்காசனத்தில் சுகமாக வீற்றிருக்கின்றவும் யோகிந்திரர்களாகியசனகாதிகளால் சேவிக்கப்பட்டிருக்கின்றவும், யோகாப்பியாசத்தைநாடியவும்,யோகிந்திரர்களால் வந்தனிக்கப்படுகின்றவும், (50) சுத்தமாகியஸ்படிகம்போன்ற நிறமுடையவும், சிறந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவும், சிங்கத் தோலையுத்தரீயமாய்க்கொண்டு புலித்தோலை யுடுத்திருக்கின்றவும், (51) முக்கண்களது கறுவிழிகளை மூக்குநுனிமீது ஊன்றியிருப்பவும், யோகப்ட்டத்(முதுகிலிருந்து கால்மடிப்பை வளைத்துக்கட்டுண்டது) தினால் விளங்கியிருப்பவும், வேதவசனங்களுக்கு மெட்டாதவும், (52) அலையற்ற கடலது சோபையைக்கொண்டவும், கழுத்தினில் கறுப்புடையவும், ஜகங்களுக்கு முதன்மைப்பிரபுவும், நித்தியங்களுக்கெல்லாம் நித்தியப்பொருளும், ஐசுவரியமுள்ளவரும், சேதனத்(ஞான) துக்கெல்லாம் சேதனப்பொருளும், (53) அக்கினி, சந்திரன்,சூரியன் இவர்களைத்தமது காந்தியால் பிரகாசிக்கச் செய்கின்றவும்,எல்லாவற்றையு மறிந்தவும், சீகலர்களுக்கும் கர்த்தாவும், சுயாதீனமுடையவும், யாதொன்றாலும், யாவராலும் ஜயிக்கப்படாதவும், (54) பெரிதுக்கெல்லாம் பெரியவும், அணுவுக்கும் பரமாணுவாகியவும், சகலத்துக்கும் சாக்ஷிபூதனாகிய தேவனும், மாயைமுதலியதமோகுணங்களுக்கெட்டாதவும், (55) அஷ்ட ஐசுவரியங்களால் நிறைந்தவும், சுகத்தை யுண்டுசெய்கிறவும், சகலத்து

க்குமாதியும், சாசுவதனும், முக்கண்ணனும், மகாபெருமைபொருந்திய வும், மனதினால்கூட எதிர்க்க நினைக்கப்பட முடியாதவும் (56) ஆகிய மகாதேவனைக் காக்ஷிகொண்டான். தேகம் மடியும் காலம் நெருங்கியவனும், பயத்தினால் கைகள் சோர்வடைந்திருப்பவனுமாகிய விம்மன்மதன் தனதுகையினின்று வில்லுமம்பும் நழுவியதைக்கூட உணர்ந்தானில்லை. (57) இவ்விதமான, ஸ்ரீமகாதேவனுடைய பிரபாவங்களைக் கேட்கும்போதுப், பிராணிகள்நடுக்கம்கொள்ளும்படியிருக்கின்றஅப்பரமேசுவரனை ரதிதேவிகண்டு மனக்கலக்கமுற்றனள்.

பத்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கக—வது அத்தியாயத்தினர்த்தம்.

இரதிதேவி யெண்ணமுற்றதுயாதெனில்—: "ஓ! கோ! கோ! உசிதமற்றதொழிலில் முயன்றிருக்கின்ற, நமது இக்கணவன், இம்மகேசுவரனிடத்தினின்று க்ஷேமமா யெவ்வாறு திரும்பிச் செல்லுவனோ? (1) நமது மொழியைக்கடந்து யாதுநிமித்தம், மூடத்தன்மையை யடைந்து செலுற்றனர்? ஒருக்கால்தப்பி க்ஷேமமாய்த்திரும்பிச்செல்வாராயின் இன்னுமொருவாறு தாயினிடத்துச்சனித்தவர்போலவேயாவர். (2) இம்மனுயினும், தேவாதிதேவனாகிய ஸ்ரீமகாதேவனிடத்து, ஊழியத்தன்மையின்றிச்செல்வானாயில் திரும்பமாட்டானென்கில், மற்றவரின் கெதியையாதுரைக்கவேண்டும்". (3) பிறகுமன்மதனுஞ்சிறுபோது கொஞ்சநேரத்தில் மயக்கம் தெளிந்தவனாகி, நடுக்கத்துடன்திரும்ப வில்லம்புகளைக் கையிலெடுத்து,(4) பக்கத்திலான தேவப்புன்னைமரங்களின் வரிசையில் மெல்லவொளிந்துநின்று, வில்லைப்பயமோடு நாணேற்றி, (5) சிறந்த யோகிசுவரர்களுக்குக்கூட மனக்குறிப்புக் கெட்டாதவரிடத்துக் குறிப்பிட்டு, சம்மோகனமென்ற அஸ்திரத்தை நாணில்தொடுத்து, இதைப்போன்ற கெட்டவியாபாரத்தை, பினகமென்றவில்லையுடைய பரமசிவன்மீது, செய்வதற்கு எது தேவர்கள் தன்னை யேவினர்களென்றும், ($6\frac{1}{2}$) ஐயோ! மிகவுமபாயத்திற்கேதுவாக, இடதுகண்ணும், புயமும் துடிக்கின்றதே! ஓ கோ! நமக்கு, திருபுரர்களை யெரித்தபாமாத்துமாவது யுத்தத்தில் எவ்வாறுக்ஷேமமுண்டாகப்போகின்றது? நல்லது அவையெல்லாம்போகட்டும்: யாம் பிழைக்கின்றோமோ சாகின்றோமோ! (8) விழிகளுக்குப்பரமானந்தத்தைத் தருகின்றப் பிரபுவாகிய மகாதேவனைக்கண்ணுற்றுக்கண்டபடியால் பாக்கியவான்களது மத்தியில் யாமே சிறந்த பாக்கியவானாகின்றோ மென்று பலவாறாக வாலோசித்

துக்கொண்டு, ஸம்மோகனமென்ற மகாமந்திரத்தை ஜபிக்குமளவில்,விஷ்ணுமுதலிய தேவர்களெல்லோர்களும், அஞ்சலி கொண்டவர்களாக, (10) சுபத்தைக்கருதிய மன்மதனுக்குச் சுபமுண்டாகக் கடவதென்று மனதினால் ஜபித்தார்கள். அவன் தேவப்புன்னைமரங்களது வரிசை மறைவினின்று கோதண்டத்தை மண்டலமாகச்செய்தும், (11) சருவஞ்ஞ (எல்லாம் தெரிந்தவர்) ராகிய கருணைக்கடலான அம்மகாதேவனது மூன்றாவதுகண்ணின் கடையினின்று அணுவைப்போன்ற வொர் நெருப்புப்பொரியுண்டாகி, (12) குங்குலியப்பொடிக் குவியலைப்போல் அவனைச் சீக்கிரத்திலெரித்துச் சாம்பலாக்கிவிட்டது. அப்போது மதிமயக்கத்தினால் ரதியானவள் தனது கணவன் நாசமடைந்ததை யறியவேயில்லை. (13) பிறகு மாடப்புறாவின் கழுத்து நிறத்தைப்போ லெல்லா வர்ணங்களும் கலந்தநிறமுடையதும், சகிக்கக்கூடாத துர்நாற்ற முள்ளதுமான புகையுண்டானதை ஆகாயத்தில் தேவக்கூட்டங்கள் கண்டபோதே, (14) அவர்களதுவயிற்றில் தீமூட்டியதுபோலெரித்த துற்று, ஈசனை நாவினால் ஜயாவிஜயீபவா வென்று ஆகாயத்திலிருந்தபடியே தமொழிப்பிதற்றினார்கள். (15) ஸம்மோகனாஸ்திரமோவென்றால் தானாகவே வில்லினின்று நழுவலுற்று மகாதேவனிடம்சென்று அவரால் செய்யப்பட்ட ஹூம்காரத்தைச் சகிக்கவல்லதற்று பருவதராஜகன்னியை நோக்கித்திரும்பிச்சென்று (16) ஓர்நொடிக்குள் கைலையினின்று இமயமலைக்குப்போய், அது தேகத்தை இழந்தவனதாயினும், அவ்வம்மனது மார்பினிலுறுதியாய்ப்பற்றியது. (17)மேலும் அது, மலரம்பனாகிய மன்மதனால் பார்வதிபரமேசுவரர்க ளிருவர்களையும்பற்றி விடப்பட்டதாயினும், அவர்களி லொருவரைவிட்டு மற்றவளாகிய, யாதொன்றாலும அணுகப்படாத வப்பரமேசுவரியின்மீது பாய்ந்தது. (18) ஸ்ரீமகாதேவன் இவையெல்லாம் யாதுமறியாதவர்போல் ஸனகாதி முனிவர்களோடுகூட முன்போலவே யாதும் பேசாமல் சின்முத்திரை யளித்திருந்தனர். (19) பிறகு இந்திரன், விஷ்ணுமுதலிய தேவசிரேஷ்டர்கள், கைலையின் கொடுமுடிமீ திறங்கிநின்று (20) சருவவியாபகரும், சருவ கர்த்தாவும், சருவஞ்ஞரும், சருவ காரணரும், காமனை யெரித்தவரும், வேண்டியபொருளை யளிப்பவருமாகிய ஸ்ரீபரமேசுவரனைவந்தனித்து உச்சியின் மீதஞ்சலி செய்துநின்று துதித்ததாவது:— (21) யாதொருவரிடத்தினின்று இப்பிரபஞ்சங்களுண்டாகின்றதோ; யாதொருவனால், உண்டாகிப்பிராணிகள் ஜீவிக்கின்றதோ; யாதொருவனிடத்து லயமடைகின்றதோ; யாதொருவர் நமக்குஞ்ஞானத்தை யளிக்கின்றவரோ; (22) யாதொருவர் அவைகளெல்லாவற்றையும் அனுக்கிரகிக்கின்றவரோ; அப்படிப்பட்டவுமக்கு இவ்வந்தனம். யாதொருவன்மீது வேதவசனங்கள் கூட எட்டாதுதிரும்புகின்றதோ, யாதொருவர் மனம் முதலிய ஞானே

ந்திரியங்களுக்கு மெட்டாதவரோ, (23) யாதொருவருடைய ஆனந்த மானது அளிவிடத்தகாததோ அங்ஙனமாகிய பரமேசுவரனுக்கு இவ் வந்தனமளிக்கின்றோம். மூவுலகிலும் வெற்றிபெறுகின்ற இம்மன்மத னதாயுதங்கள் யாதொருவரிடத்துப் பயனற்றுத் திரும்பியதோ,(24) ம ன்மதனனவன் யாதொருவரால் மனதுக்குமட்டில்விஷயமாகச்செய்யப் பட்டானோ அம்மகேசுவரனுக்கிவ்வந்தனம். ஏராளமாக ஆனந்தத்தை யுடையவராகையால் வேதத்தில் உம்முடைய குணாதிசயங்களைப்பற்றி பிரஸ்தாபிக்கின்ற சந்தர்ப்பங்களிலெல்லாம் அடிக்கடி ஆநந்தமய ஆநந் தமயரென்று சொல்லப்படுகிறவும், (25) ஆநந்தத்தையுடையவரும், ஆ நந்தத்தையறிந்தவரும், பயலேசத்தை யணடயாதவருமாகிய வுமக்கு இ வ்வந்தனம். ருக்கு, இயஜுஸு, ஸாமமென்ற மூன்று வேதங்களுக்கு ஆ திகாரணரும், அம்மூன்று வேதங்களை முகமாகவுடையவரும், அம்மூ ன்றுவேதங்களுக்கு * மத்தியில் விளங்குகின்றவரும், (26) மூன்று வேதங்களின் பிரதானப்பொருளுமாகிய வுமக்கு இவ்வந்தனம். கறுத் த கழுத்துடையோனுக்கு வந்தனம். யாவரிடத்தினின்று மூவுலகுமுண டாகின்றதோ, யாவரின் கண் லயிக்கின்றதோ, யாவரால் ஆனந்தமடை கின்றதோ, (27) அப்படிப்பட்ட சருவப்பிரபஞ்ச ஸ்வரூபராகிய ச ம்பூர்ண ருத்திரருக்கு வந்தனம். 'ஸஏவஸோமியா இதமக்கிரஆஸீத்' (பி ராம்மணர்களே! அவரே எல்லாவற்றிற்கும் முந்தியவர்)என்றும், (28) 'மகஏவேதிதத்பிரம்மா'வென்றும், 'புருஷஸ்ஸன்மஹோநம:' வென்றும், 'ஸத்தியம் ஞானமனந்தம் பிரம்மா' வென்றும், (29) 'ருதம் ஸத்யம்பரம் பிரம்மா' வென்றும், யாவரைப்பற்றி வேத வாக்கியங்கள் முறையிடு கின்றதோ அவ்வுமக்குயாங்கள் வந்தனம்செய்கின்றோம். ஸ்தாவரஜ ங்கம ரூபமாகியபிரபஞ்சங்கள் முழுமையும் யாவருக்குச் சரீரமோ, யா வருடையநியமனத்துக் குள்ளடங்கியதோ, (30) யாவ ரப்பிரபஞ்சங்க ளுக்கு மேன்மையாகிய அதிபதியோ, யாவரச்சகங்கங்களுக்கு முந்திய பிரபுவோ அவ்வுமக்கிவ்வந்தனம். மேன்மையாகிய சுபங்களுக்கு நிலய னும், பரமாத்துமாவும்,(31) சகலப் பிராணிகளுடைய ஹிருதயத்திலும் குடியிருப்போனும், மேன்மைபொருந்திய மகிமை யுடையவருமாகிய வுமக்கு இவ்வந்தனம். ஓ மகாதேவா! சகல தேவர்களும் அசுரர்களு

---

* மேற்சொல்லிய மூன்று வேதங்களிலும் மத்தியிலுள்ளது இயஜுர் வேதம்: இயஜுர் வேதத்திய7-காண்டங்களின் மத்தியிலானது4-வது காண்டம்: 4ம்காண்டத்தின்மத்தி 5-வது பிரசினமாகிய ஸ்ரீருத்திரம்; ஸ்ரீருத்திரத்தின்ம த்தியிலானது "நமச்சோமாயசா"என்ற அனுவாகம்; "நமச்சோமாயசா" என்ற அ னுவாகத்தின் மத்தியோ வென்றால் "நமச்சிவாயசா"என்ற வாக்கியம்; "நமச்சிவா யசா" என்ற வாக்கியத்தின்மத்தியில் விளங்குகின்ற அத்புதமாகிய வரும் பொரு ளோ வென்றால் "சிவ" என்ற இரண்டெழுத்து களடங்கிய, ஸ்ரீ சச்சிதாநந்தமூர் த்தியினுடைய திருநாமம். ஆனது பற்றியே 3-வேதங்களின் மத்தியில் விளங் கு கின்றாரென்பது கருத்து.

மாகிய யாங்கள் தேவரீராகிய கடலினது திவிலேயாகின்றோம். (32) ஓ! மகாப்பிரபுவே! தேவரீர் எங்களை யென்றும் காத்தருளவேண்டும்" இவ்வாறுகத்தேவர்கள் துதிசெய்கையில் அந்தப்புரத்தில் வீற்றிருந்த பரமசிவன், (33) முன்னிலேயில் வந்துநின்ற நந்திகேசுவரனை நோக்கி "இது யாதுகூச்சல்? யாவரால் செய்யப்பட்டது? (34) யாது நிமித்தமாக? என்று வினவுகையில் நந்திகேசுவரன் கைகட்டி முன்னின்று கூறியதாவது—: "சருவகுணங்களும் நிறையப்பெற்ற பரமசிவா! இந்திரன், பிரம்மன், விஷ்ணுமுதலியதேவர்கள் (35) அசுரர்களால் பீடிக்கப்படுவது நிமித்தம் பிரபுசன்னிதானத்தில் சரணமடைவதற்காக துரிதமாயோடிவந்து ஜகதீசனுடைய சேவையைநாட விச்சைகொண்டுவெகுகாலமாய்த் தங்கி நிற்கின்றார்கள்," (36) என, மகாதேவன், தேவர்களை உட்செல்லவிடும்படி நந்திகேசுவரனை யெச்சரிக்கைசெய்தனர். அதுகேட்டு சிலாதமுனிவரின் தனயனுகிய நந்திதேவன், (37) சீக்கிரத்தில்வெளியிற்சென்று தேவர்களை அழைத்துத் துரிதமாய்வந்தனர். தேவர்களெல்லோரும் பக்தி சித்தர்களாக உடனே தலைவணங்கித் தண்டனிட்டார்கள். (38) மகாதேவனும் அவர்களைநோக்கிச் சொல்லியதாவது:— "தேவர்களே! உங்களால்செய்யப்பட்ட துதியினுல் யாம்முற்றும் பிரீதிகொள்ளலாயினேம். உங்களதுமனக் கோரிக்கையைக் கேளீர்கள். (39) உங்களால் செய்யப்பட்ட இத்துதியானது நமக்கு முற்றும் மனக்களிப்புள்ளதாயிற்று. இதை ஒருவாறுயினும் படிக்கின்றவர்களும், கேட்கின்றவர்களுமாகிய மானிடர்கள் பாவங்களினின்று விடுபட்டு (40) கிடைப்பதற் கரிதாகிய மனவிருப்பங்களை யடையக்கடவார்கள். புத்திரனைவேண்டுவோன் புத்திரனையும், பெண்ணைவேண்டுவோன் அழகுள்ளபெண்ணையுமடையட்டும். (41) பசுக்களைவேண்டுவோன் பசுவையும், வித்தையைவேண்டுவோன் வித்தையையும், சுவர்க்கத்தை வேண்டுவோன் சுவர்க்கத்தையும், மோக்ஷத்தை வேண்டுவோன் மோக்ஷத்தையும் அடையக்கடவார்கள். (42) மகாபாவிகளாயினு மவர்கள் புண்ணியவான்களாகின்றார்கள். இதை வளர்த்திச்சொல்வதில் பயனென்ன? அவர்கள் நமக்குமிகவும் பிரியமுள்ளவராகிவிடுகின்றார்கள்". (43) இவ்வாறுக செவிக்கின்பமாய் அளிக்கப்பட்ட, பரமேசுவரனுடைய வசனங்களாகிய புதியவமிருதத்தை விஷ்ணுமுதலிய தேவர்கள் பானித்து மனக்களிப்பினுல் மலரவிக்கப்பட்ட மரைமலர் முகங்களை யுடையவர்களாகி விசுவங்களுக் கீசனுகிய பரமேசுவரனைப் பின்னும் குனிந்து தண்டனிட்டார்கள். (44)

பதினேராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கஉ—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு அத்தேவத்தலைவர்க ளெல்லோர்களும்சேர்ந்து சமுசார பயத்தினின்று விடுவிக்கின்ற ஸ்ரீசங்கரப்பெருமானிடத்து, முற்கூறிய, பீதியைத்துலைக்கலுற்ற ஸ்ரீகுமாரக்கடவுளது பிறப்பைப்பற்றி வந்தனித்து வேண்டினர்கள். (1½) பிறகு தேவனும் புன்னகைப்புக் கொண்டு வெகுமானத்துடன் சொல்லியதாவது:—(2) "உங்கள் கோரிக்கையான துசீக்கிரத்தில், நிறைவேறும். சிலகாலம் பொறுங்கள்" எனவுரைத்து ஜகதீசன் தேவர்களை அனுப்பினர். (3) இதற்குள் புத்திமயக்கங்கொண்ட மன்மதன் மனைவியானவள், தனது கணவன் கண் ணெருப்பினுல்மாண்டதைக் கொஞ்சநேரமளவும் அறியவில்லை. (4) "ஆ நாதனே! உயிருடனிருக்கிறீரா? என்றுசொல்லி திடீரென்று எழுந்த அவ்விரதிதேவியால் சாம்பல்தூளிகள் அணுவணுவாய் ஆகாயத்தில் பார்க்கப்பட்டது. (5) பிறகவள் மிகவியாகூலமுற்றவளாகப் பூமியில் விழுந்து புரண்டு தலைமயிரவிழ்ந்துசிதர, கண்முதலிய புலன்கள் தடுமாறப் புலம்பலுற்றனள். (6) ஆ! அகண்டகண்ணையுடைய எனது பிராணநாதா! ஜகங்களில், சிறந்த வழகர்களுக் கொப்பிடுவதற்கான வுனது மிக வழகிய திருமேனி யெங்கு போகலாயிற்று. (7) ஐயோ! தெய்வமே! குற்றமற்ற, நாதனில்லாத வெந்தனை நீ யறியாயா? ஏதெந்தனைக் கெடுத்துவிட்டாய். இவரேதுன்றூற் கொல்லப்பட்டார் (8) எனக்குத் தாயுமில்லை, தந்தையுமில்லை, சகோதரனுமில்லை, சினேகிதருமில்லை; எனது குடும்பத்திற்கு நீயிருப்பதைத்தவிர எனக்குவேறுகெதியாதென்று நீயேகூறுக. (9) ஐயோ! நாதனே! என்மீதுள்ள வன்பையொழித்து உம்மையே கெதியாக நாடி யுயிர்வைத்திருந்த எநதனையும்விட்டு, நீரானது கரையற்றுத்.தாமரையைவிட்டுப் பிரிந்துசென்றதுபோல், எங்ஙனம் மறைந்தோடிவிட்டீர். (10) உமதுவிஷயத்தில் யான், யாது பிழைசெய்யலுற்றனள்: நீருமென்மீது யாதும்செய்தவரில்லை: புலம்பித்தவிக்கின்ற வெனக்குத் திடீரென்று உமதுகாக்ஷியை யொருவாறு கொடுக்கத்தகாதா? (11) நீரென்னைப் பெயர்தடுமாறி யழைத்ததற்காக யானென்னிடையது ஒட்டியானததினு லும்மைக் கட்டியதை நினைத்தே நீர்பிரிந்திருக்கவேண்டுமென்பது நிச்சயம்: அவையெல்லாமறியாமற்செய்யப்பட்டதாக மன்னிக்கவேண்டும். (12) ஆ! எனதுப்பிராணநாதா! எனது காதிற்பூண்ட நெய்தல் மலரினுல் யானடித்ததையும் மன்னிப்பீர். நானெப்போது முமதுமனதிலே வசிப்பதாக நீர்சொல்லியவசனம் பொய்யே (13) அதுமெய்யாகில் நீரெரிந்துபோகையில் யானேன்சாகவில்லை

இப்போதிவ்வுலகினின்று பரலோகத்துக்குப் புறப்பட்டுச் சென்றவும தூ (14) பதவியை, விதியினு லனியாயமாய் வஞ்சிக்கப்பட்ட யானுமடையலாகின்றேன். யானிப்போதே யும்மோடுடன்கட்டை யேறுகின்றேன்; ஓ! நாதனே! அப்படியல்லாது யானும்மைவிட்டுக்கொஞ்சநேரமாவது தங்கியிருப்பேனுகில் சீ! அதென்ன ஜன்மம்! பழிப்போர்களுக்குப்பாத்திரமாகவேண்டும். ($15\frac{1}{2}$) உமதழகிய திருமேனியுடனெழுந்துகலவித்தொழிலது தூதுவிஷயமாக இன்பமாய்க் கூவுதலில் திறமைகொண்ட குயிலை இன்னுமொருவாறென்னிட மனுப்பீரா? ($16\frac{1}{2}$) என்மீது உம்மால் அந்தந்தப் பருவகாலத்திய மலர்களால் அலங்காரம் செய்யப்பட்டது (17) இன்னும் வாடாமல் காண்கின்றதே! உம்மை யிப்போது காண்கிலேனே! தெய்வமேதிப்படிச்செய்துவிட்டது. இப்போது கொடியர்களாகிய தேவர்களால் ஸ்ரீ பரமேசுவரனருகிற் செல்லும்படி யேவப்படலாயினீர். (18) ஓ! கோ! ஊரார் பிள்ளையைக் கொண்டு ஆழைத்தை அளவிடுவதில் அவர்கள் மிகவும் திறமை பெற்றவர்கள். ஐயோ! என் பிராணநாதா! அப்போதே யான் உம்மைப்பலவாறுகத்தடைசெய்தேனே! (19) பிரம்மனுடைய சாபத்துக்குப்பயந்து எனதுவார்த்தையைக்கேளாமற்போனீரே! ஒருவனுக்குளந்தவிடத்துச்சென்றால்தலைக்குவரும்படி யபாயம் நேரிடுமோ அவ்விடஞ் செல்லுகையில் கால்களெளிதிறசெல்லாது. (20) அப்போது சகுனங்களும் தோன்று? மூடர்கள், மனையாளுடைய வார்த்தைகளைக்கூட விதிவசத்தது வலிமையால் தள்ளிவிடுவார்கள் (21) என்ற, இவ்வாறு உலக வதந்தியானது எனக்கே பிரத்தியக்ஷமாக அனுபவத்துக்கு வரலாயிற்று. அல்லாமலும் ஸ்ரீபரமேசுவரனே சகலப் பிராணிகளையும் அவர்களுடைய அந்தக்கரணத்தினுள் நின்றுகொண்டு ஆட்டிவைக்கின்றார். (22) குப்பைகள் பெருங்காத்தினது வசத்திலேயே செல்லுகின்றவைபோல் அவரது திருவுளத்தினருளின்படியே சகலப்பிராணிகளு மோடியாடுன்றன. (23) யாவரும்நாதாற்றவெனக்குஇப்போது அச்சகதீசனேகதி. அவரே தந்தைகளுக்குத் தந்தை; தாய்களுக்குத் தாய்; பாட்டனுமவரே. (24) அவரதிரண்டு மரையடிகளை யான் எப்போதும் சரணமாக அடைகின்றேன். ஜகங்களுக்கெல்லாம் நாதனுகியவிம்மகாதேவன், மன்மதனுக்குநேரிட்டகெதியிலேயே, (25) அவர் கருணைக்கடலாகிய பிரபுவானவர்பறறி, என்னையும், தயவுடன் அடையச் செய்யவேண்டும். இல்லாவிடிலப்பரமேசுவரன், மன்மதனைமறுபடியுயிர்பிழைக்கச்செய்யவேண்டும். (26) அப்பரமேசுவரனொன்றைச்செய்வதற்கும் செய்யாமலிருப்பதற்கும், ஒன்றையிற்றொன்றுகமாற்றுவதற்கும்வல்லமையுள்ளவர். (27) இவ்வாறுக ரதியா

னவள் நல்ல ஸ்வரத்தோடு புலம்பியழுதுமாரடித்துக்கொண்டனள். தேவேசனும், அவ்வொப்பாரிச்சொற்களைச் செவியுற்று, (28) வமிசத்தையானந்திக்கின்றவரான நந்திப்பிரானை யிதென்னவென்று கேட்க அப்போது நந்திதேவன் வணக்கத்துடன் தெரிவித்ததாவது, (29) "ஓ! ஆண்டவனே! மன்மதனனவன், தேவர்களாலேவப்பட்டவனாக ஜகங்களெல்லாம் சரணமடையப்பெற்ற தேவரீருடனுயுத்தஞ் செய்வதற்காகத் தனது பெண்டீருட னிப்போதிங்கு வரலுற்றான். (30) ஓ! சங்கரா! அவன் பிரபுவைக் கண்டமாத்திரத்தில் தனது வினையால் எரிக்கப்பட்டுமாண்டான். பிறகுஅவனதுபெண்டீரானவளத்துக்கத்தினலழுகின்றாள். (31) கருணைக்கடலே! புலம்புகின்ற விக்காமன் மனையாளைக் காத்தருளவேண்டு" மென்று சொல்லி அவளைப் பிரபுவுக்குக் காண்பித்தனர். (32) அவளுமப்போது ஜகங்களுக் கெல்லாம் பதியும், தந்தையருமாகிய ஈசனை நமஸ்கரித்து, கட்டுதலன்றி விரிந்த கூந்தலையுடையவளும், தேகம் நடுக்கமுற்றவளும், கண்ணீர்பெருகப் பெற்றவளும், (33) பரிதாபப்படத்தக்க முகத்தையுடையவளும், தேகத்தில் புழுதிகள் பற்றியவளுமாக அடிக்கடி விழுந்து புரண்டனள். பிரபுவுமவ்விதமாகிய அவளை நோக்கி மிக விரக்கம் கொண்டவராக, (34) ஸநகாதி முனிவர்கள் நோக்கி நிற்குமளவில், மந்தகாஸத்துடன் சொல்லியதாவது, "வாராய் பெண்ணே குழந்தாய்! நீ விசனப்பட வேண்டாம்; உனது கணவன் நம்மீது துரோகம்செய்தவன (35) யினும், வாராய் நல்லொழுக்கமாதே! உனது கற்பதனில் களிப்புக் கொண்டவராக வுன் கணவனையுயிர் பிழைக்கச் செய்வோம்; சிலகாலம் பொறுத்து நிற்பாயாக" (36) வென்றவளைச் சமாதானஞ்செய்து, பின்னர் சநகாதி முனிவர்களை நோக்கி, "நீங்கள் எப்போதும் நம்மைஇப்பிரகாரமாகத் தியானம் செய்யுங்கள்? நாமிப்போது (37) தேவகாரியார்த்தமாய்ப் போகின்றோம்" என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர். இக்காலமதில் ஜகதம்பிகையும், கிரிராஜன் திருமகளுமாகிய பார்வதிதேவியானவள், (38) அதிகடோரமாகிய தவநிலையைநாடி ஸ்ரீபரமேசுவரனைத் தியானம் செய்தனள். ஜகதீசனுமவளது தவத்தினலிழுக்கப் பட்டவராகி அவளது பக்தியைச் சோதிப்பதற்காக அடியில் கண்டபடிக் குள்ள மாறுவேடம்பூண்டு அவளதாசிரமத்துக்கு முயற்சியின்றி சென்றனர். கிழத்தன்மையுள்ளப் பிராமணவுருவத்தையும், வார்த்திகத்துக்குரிய வெளுப்பை யுடையதும், மிக்கப்பருத்ததுமான சரீரத்தையும், (40) நரம்புகள் சிதறிப் பின்னலுற்ற விரண்டு பாதங்களையும், இடருகின்ற அடிவைத்தலையும், உயர்ந்த கச்சத்துடன் கட்டப்பட்ட வஸ்திரமானது அடித்துடையில் நழுவி விழலுற்ற இடை

யையும்,(41) ஆழமான நாபியாகிய மடு (கிணற்றைப் போலொற்றது) வுடன் விளங்கிய பருத்த தொந்தியிலான மூன்று மடிப்பையும், உன்ன தமாகிய மார்பின்கண் பிரகாசமானது, மசைந்து தொங்கலுற்றதுமான ஸ்தனங்களையும், (42) மலைமீது படர்ந்து தொங்கிய கொடிகள் போன்றதான திருநூற்சரடுகளையும்,வெளுத்த மீசைதாடிகளைக்கொண்டதும், தொங்கியபுருவத்தையும்,நரைத்தஇயமைமயிரையுமுடையதும்(43)சரத் காலமேகங்களால் வளைத்துக்கொள்ளப்பட்ட சந்திரமண்டலம்போன்றதுமான முகத்தையும், அழகிய மூக்கையும், அழகிய காதுகளையும், பற்களற்ற வாயையும், அசையலுற்ற மெலுதடையும், (44) நரையினால் வெளுத்த மயிர்களையுடைய, மிகவும்சிறிய குடுமியையு மாகிய இவைகளையுடைய திருமேனியைத்தரித்தவரும், திருநீற்றால் வெளுத்தசரீரத்தையுடையவரும், (45) முப்பட்டைவரிசைகளால் விளங்கியவரும், ருத்திராக்ஷ மாலைகளை யாபரணமாய்ப் பூண்டவரும், கெட்டியாகிய மூங்கிற்றடியைக் கையிற் பற்றியவரும், நல்லெண்ணங் கொண்டவரும், (46) எப்போதும் வேதத்தை யோதுகின்றவரும், அகண்டு மிக நீண்ட சரீரத்தைக்கொண்டவரும், அதிக வயதுசென்றதனாலாகிய வாதநோயினால் நடுக்கலுற்ற பின்தட்டு, கைகால்களின்சந்திப்பு இவைகளையுடையவருமாக (47) வோர் விருத்தவேடம் பூண்ட ஜகதீசன், மெல்ல நடந்து புன்னகைப்புடன் அமரிக்கையாய் ஆசிரமத்தினுட் பிரவேசித்தனர். அசாத்தியமான கொடிய தவத்தைச் செய்கின்ற அவ்வம்மனை அனேகம் முனிவர்களும், யோகிசுவரர்களும் (48) தரிசித்து வணங்கி யெல்லோர்களும் அதிதிபூஜைகளைப்பெற்று ஆநந்தத்துடன் மெல்லமெல்ல வெளியில்வந்துகொண்டிருக்கையில் ஸ்ரீ பரமேசுவரன் தானும் (49) "ஞானத்திற் சிறந்தோரே பெரியோ" ரென்பதை யெடுத்துக்காட்டிய வேதங்களின்பொருள்களை, யவர்களிடத்து நன்றுயுரைத்துக்கொண்டு பருவத ராஜகுமாரியைப் பார்ப்பதற்குக் காதல்கொண்டவர்போல் மெல்ல ஆசிரமத்தினுட்சென்று, (50) அபர்ணை (சருகுகளைக்கூடபுசிக்காமல் தவம் செய்த) யாகிய உமாதேவியினுடைய தோழிகளை அங்கு கண்டனர். அப்போது அத்தோழிமாரும் பெரியவிருத்தராகிய வம்முனிசிரேஷ்டரை (51) தழைகளாலமைக்கப்பட்ட, வுமையம்மனுடைய அந்தப்புரத்துக்கு அன்புடனழைத்துப்போகையில் தேவியானவள் எதிர்வந்தழைத்து பாத்தியம், அர்க்கியம், ஆசமனீயம், (52) ஆசனம் முதலியவற்றால் பக்தியுடனுபசரித்து விசிரிக்காற்றினால் அக்கிழவனுடைய வியர்வையை விலக்கிவிட்டனள். (53) கிழவனும், கொஞ்சநேரத்துக்கெல்லாம் களைநீங்கியபிறகே யம்மனை நோக்கி யோர் வசனம் செப்பியதாவது:—(54)

"பூசிக்கப்படலுற்ற நற்சரியுள்ள மாதே! நீ அழகிய திருமுகங்களையு டையவர்களிற் சிறந்தவளாகக் காணப்படுகிறாய்? ஓகோ! என்ன ஆச்சரியம்! கிரிராஜனது தவத்தின் பயனே உருவமெடுத்து வந்ததுபோல் முற்றும் அழகிய திருமேனியுடைய அம்மணீ! (55) நீ சௌக்கியமா? உனது தவம் சரியாய் நடந்து வருகின்றதா? சிறந்த முகத்தையுடையோளே! உனது திறமைக்குத் தக்கபடி தவத்தில் முயன்றிருக்கிறாயா? (56) வாராய் கலியாணி! சகலருக்கெல்லாம் முக்கிய வாதாரமாகிய சரீரத்தைக்காப்பாற்றிக்கொள். மங்களகரம்பொருந்தியமாதே! உலகில் சரீரத்தைவிட சுகமளிப்பது யாதுமில்லை. (57) வாராயம்மணி! ஜலங்கள் ஸ்நாந விதிகளுக்குத் தகுதியா யிருக்கின்றனவா? சொல்; நிச்சயமற்றதும், கிடைப்பதற்கரிதுமாகிய விச்சரீரத்தை யடைந்து இப்பிராணியானது யாதொரு வின்பத்தையு மனுபவிக்க முயலாதது என்னவாச்சரியம்! ($58\frac{1}{2}$) நீயோ, புகழத்தக்க திருமேனியுடைய, சிறந்த யௌவனப் பருவத்தை யெட்டிய, இராஜகுமாரியாகியகுழந்தை (59) யாயினும், தவத்தினால் விருத்தையாகின்றாய்; தவத்தினாலின்னது பயனென்று யாவர் சொல்லுகின்றார்? வாராய் ஜகங்களுக்கெல்லாம் தாயாகியகிரிராஜனது செல்வகுமாரியே! நீநிச்சயமாக தருமத்தினால்பெரியவளாகின்றாய்; இது நிச்சயம்.(60) வாராய் பூஜிக்கப்படும்தன்மையுடையமாதே!முனிவர்களும்,தேவர்களும்,யோகிசுவரர்களும்உந்தனைவந்தனம்செய்கின்றார்கள். ஆனால் நீ யாவரோ ஒரு புருடனை மனதில் குறிப்பிட்டுத் தியானம் செய்வதாய், தவத்தினால் சாதகம் செய்யப்பட்ட மனதையுடைய எனக்குத் தோன்றுகிறது. ($61\frac{1}{2}$) சாதுக்கள் உண்மையையேப் பிரதானமா யுடையவர்களாகையால் ஓ! மிகுந்த பாக்கியசாலியாகிய பெண்ணே! நீயுமுண்மையையே சொல்லல்வேண்டும். (62) உன்னைப் பார்ப்பதற்காக இங்கு வரலுற்ற என்னையும் வேறு யாவருமில்லையென்று அறிந்துகொள். ஆகையால் நீ வெட்கத்தை விட்டெல்லாவற்றையும் உள்ளபடி தெளியவுரைத்தல்வேண்டும்.(63) அழகியபுருவங்களுடைய பெண்ணே! கேவலம் கிழத்தன்மையால் நரைக்கலுற்ற எந்தனால் கேட்கப்பட்ட விஷயமானது வுனக்கு ரகஸியமில்லாவிடில் யுக்தமாயிருந்தால் அதை நீ சொல். ($63\frac{1}{2}$) இவ்வாறாக உலகங்களுக்குப்பதியான ஸ்ரீமகேசுவரனுடைய மொழிகளைக்கேட்டு, உமையம்மனவள் முகத்தை வணக்கலுற்று அவனை நோக்கியபின் அவருடைய தேஜஸினால் அடிக்கடி மனநடுக்கமுற்று, அவர் தம்முடைய வாயினும், அவனைக் கொஞ்சநேரமளவுமின்னதொன்றுஅறியவில்லை. இது ஆச்சரியம். ($64\frac{1}{2}$)

பனிரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கந—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸூதர் சொல்லுகின்றார்:— பிறகு பார்வதியானவள் அவர்மீத ன்புள்ளதும், பயங்கொண்டதுமான மனதைத்தெற்றிக்கொண்டு ஜயை விஜயை யென்ற இரண்டுதோழிமார்களைக் களிப்புடன் கண்ஜாடையினால் எச்சரித்ததாவது:—(1) "தோழிகளே! எனது தவத்தின் காரணத்தை உரைப்பீர்கள். இலக்ஷ்மீவிலாஸம் பொருந்திய இப்பிராம்மணோத்தமர் அனேகவிதக் கல்விகளைக் கற்றவராயிருக்கின்றார். (2) ஆகையாலப்பெ ரியோருக்கு எனது விருத்தாந்தத்தைத் தெரியவுரைப்பீர்கள்" என்று தேவியது கண்ஜாடையால் எச்சரிக்கப்பட்ட ஜயை, விஜயை யிருவர்களும் (3) முந்தியே அவருக்கு உபசாராதிகளைச் செய்துவிட்டு, அவரதுமாணக் கர்கள்போல் அருகில் நின்று அவரது முகத்துக்கு முன்பாக விருந்துச ங்கதிகளைத் தெரியப்படுத்தத் துடங்கினார்கள். (4) "கேளீர் பிராம்ம ணோத்தமராகிய பாட்டனாரே! எங்களைத் தங்களுக்குப் பெண்களென் று எவவாறுரைக்கலாகும்; யாங்கள் தங்களது பௌத்திரிகளாகின்றோ ம்; தேவியாலவளது மங்களகரமாகிய இத்திருமேனியானது இளைக்க லாகும்படி செய்யப்பட்ட காரணமின்னதென்று யாங்கள் சொல்வதை த்தயவுடன்கேட்கவேண்டும். (5½) சிறந்த ரூபலாவண்யம் பொருந்திய வளும், நல்ல ஒழுக்கம், ஆசாரம், குணம், இவைகளைக் கொண்டவளு மாகிய இப்பெண், இமயராஜனது செல்வகுமாரியென்று தாங்களறிந் திருக்கலாம். (6½) அவள், முக்கண்ணனும், மூவுலகினர்களும் சரண மடையத்தக்கவரும், சிறந்த பரிமளமுடையவரும், செழிப்பை அதிக ரிக்கச்செய்பவரும், (7) மிருத்தியுவைச் சயித்தவரும், ஆதியந்த மற்ற வரும், சிறந்தமங்கள மூர்த்தியும், ஜனனமற்றவரும், சுபரும், என்றும் யௌவனத்துவமுடையவரும், புருடர்களில் மேன்மைபொருந்தியவ ரும், சகல மங்களத்தையும் கொடுப்பவருமாகிய பரமசிவனை, (8) எங் கள் தோழியானவள் தனக்கும் சருவமங்களமும் வேண்டுமென்று பி ரார்த்திக்கின்றாள். மேலும் அவள், சகலஜகங்களுக்கும் அதிபதியாகி ய அப்பரமசிவனைத்தனக்குக் கணவனாகும்படி வேண்டிக்கொள்ளுகின்றா ள்.(9) வாரீர்பாட்டனே! இப்பெண்ணானவள் தந்தைமனையில் உம்மைப் போன்ற பெரியோரிடத்தினின்று ஆகமபுராணங்களைக்கேட்டு, யாதொ ருபகவானை நினைத்தமாத்திரத்தில் ஜனங்கள் வேண்டியவின்பங்களை ய டைகின்றார்களோ, அப்பரமேசுவரனுடைய மரைமலரடிகளை எப் போதும் தியானித்தும், யாதொருபயனையு மடையவில்லை. (10½) பி ன்னும், அப்பரமசிவனுடைய திருநாமத்தையே வாக்கினால் ஜபிப்பதில் தொரைகொண்டவளும், அவரது திவ்வியகதைகளைக் கேட்பதிலேயே மெத்த ஆவல்கொண்டவளுமாகத்(11) தனது ஞானக்கண்ணால் ஸ்தாவ ரஜங்கம ரூபமாகிய இச்சகத்தை சாக்ஷாத் அப்பிரானாவேநோக்கி, அ ப்பரமேசுவரன்மீது மேலுக்குமேல் மிகுந்த ஆவல்கொண்டனள். (12)

மேலும் இப்பெண் அவர்மீது கொண்டநேசத் தாபத்தினால் பகலில் தாராகிரகத்தின்"(இராஜ கிரகங்களில் ஸ்நாநார்த்தமாக இயந்திரங்களின்மூலமாய் அனேகம் தாரைகளாக நீர்சொரியும்படி யமைக்கப்பட்டவோர்கட்டிடம்) மத்தியில் வசித்தும், இரவினில் துளிர்மெத்தைமீது உட்கார்ந்துகொண்டே விழித்துவந்தனள். (13) இப்பெண்ணானவள், இரவுதோறும் பிற்பொழுதில் ஓர் க்ஷணநேரம் நித்திரை கொண்டபோது, கனவினில் அவளதாசைக்குரிய நாயகனைக்கண்டு, பின்னும் விழித்துப்புலம்பலுற்றனள்:— (14) "ஆ! எனதாசைக்கிசைந்த நேசனே! நீர் என்னைவிட்டு எங்கு செல்லுகின்றீர்" என்று கைகளாலுலாவிப்பற்றப்போயினள். "ஆ! சகலவேதாந்தங்களும், நீர், ஆகாசம்பூமியெங்கும் வியாபித்து நிற்கின்றவரென்று முறையிடுகின்றதே! (15) ஸ்ரீவிஷ்ணு முதலிய புலவர்கள் உம்மை யெங்கும் நிறைந்தவரென்று சொல்லுகின்றார்களே! ஓ! ஜகதீசா! உம்மையே பாவித்துநிற்கின்ற இச்சனத்தை நீ ரெங்ஙனமறியாமல் நிற்கின்றீர்; (16) ஓகோ! கோ! ஜகங்களுக் கெல்லாம் வாழ்வையளிக்கின்ற பரமேசுவரன் எவ்வாறிச்சனத்தின் மீதிரங்கவில்லையோ! இதுமெத்தவிந்தை";(17)என்று இக்கிரிராஜன்பெண் ஸ்ரீபரமேசுவரனுடைய சேர்க்கையை வெகுகாலமளவு யாதனுற்றும் பயன்படாமற் போனதின்பேரில், அவள் தாய் தந்தையர்களுக்கு உள்ளபடியறிவித்து, (18) எங்களுடன்கூட இவ்வாசிரமத்துக்குத் தவஞ்செய்வதற்காகவந்தனள். தவமளிக்கின்ற இப்பெண்ணால் பயிர்செய்யப்பட்ட செடிகளெல்லாம் வளர்ந்து பெரியமரங்களாகி, (19) எப்போதும் மலர்களாலும், கனிகளாலும், குலுங்கநிறையலுற்றுப் பெரிதாகிவிட்டன. இவளால் வளர்க்கப்பட்ட மான்குட்டிகள் மக்களோடுமக்களை யடைந்துவெகுமடங்காய்அதிகரித்துவிட்டன.(20) அவ்வளவுகாலமாகியும், சகல ஜகங்களையு மதிகரித்த பிரபுவும், பரிபூர்ணருமாகிய ஸ்ரீஸதாசிவமூர்த்தி யாதுகாரணத்தால் இவள் முன்னர் விஜயம்செய்ய வில்லையோ? அது மிகவாச்சரியம். (21) ஓ! பாட்டனாகிய பிராம்மணோத்தமா! நீராயிரம் சந்திரனைக்கண்ட விருத்தராகின்றீர்: ஸ்ரீபரமேசுவரனிவளுக்குச்சீக்கிரத்தில் பிரஸாதஞ்செய்யும்படி நீரனுக்கிரகம் செய்யவேண்டும்";(22) என்று ஜயை விஜயையென்ற தோழிகள் கூறி ஓய்ந்த பிறகு, சகலகுண சம்பூர்ணராகிய கிழவனார் கைகளைக்கொட்டிச் சிரித்துக்கொண்டு, (23) உமாதேவியினுடைய திருமுகத்தையுற்றுநோக்கி "வாராய் கிரிராஜன்பெண்ணே! உனது பாங்கிகளால் சொல்லப்பட்டவையெல்லாம் யதார்த்தந்தானோ? அல்லது பரிகாசமாய்ச் சொல்லுகின்றார்களோ? அதைச்சொல்" என்றனர். (24) தேவியானவள், ஜகங்களுக்கெல்லாம் பராபர குருவாகிய இக்கிழவனாரது வசனத்தைக்கேட்டு, ஜகங்களுக்கெல்லாம் தாயும்கிரிராஜனுக்குச் செல்வப் பெண்ணுமாகியவம்மணி அக்கிழப்பிராம்மணனைப் பார்த்துரைக்கின்றாள்.(25) "ஓ! வாரீர் யாவு மறிந்த மகாபுத்திசாலியாகிய விருத்தப்பிராம்மணரே! தேவ

ர்களாலுமடையப்படுவதற்குமுற்று மசாத்தியமாகிய பரமசிவனையே
வேண்டுகின்றேன். (26) வாரீர் பிராம்மணோத்தமா! அவனைக்கணவ
னாக அடைவதற்கு மார்க்கமாக இத்தவத்தை நாடியிருக்கின்றேன். எ
னது கோரிக்கையிதுவே! இதற்கு வழிதான் பிறக்கவில்லை. (27) நா
னோ கேவலம் பேதைமையுள்ள சிறியவள்? அம்மகானுபாவனோ வாசா
மகோசரன்; (நாவுக்கெட்டாதவர்) எனக்கவனெவ்வளவுதூரம். ஆயினும
ப்பரமேசுவரனை அடியார்களுக்கு நேசனென்று தேவர்கள் சொல்லுகி
ன்றார்கள். (28) வாரீர் ஐயரே! ஸ்ரீ பரமேசுவரன் அடியாள்மீதருள்புரியு
ம்படி தேவரீரனுக்கிரகிக்கவேண்டும்?" என, அவ்வம்மனது வசனத்தை
க்கேட்டுக் கிழவனாடிக்கடி சிரக்கம்பனம் செய்தனர். (29) "ஓகோ!
கோ! என்ன கஷ்டம்! இப்பருவதகுமாரியானவள் முற்றும் சிறந்த சுந்
தர வடிவமுள்ளவளாயிருந்தும், பார்ப்பதற்கும், குறிப்பிடுவதற்கும் த
காதவனும், உலகினர்களால் நிந்திக்கப்படலுற்றவனுமாகியவனைக் காமு
றுகின்றாள்! (30) அடி! பெண்ணே! இதையொத்த துர்ப்புத்தி யுந்த
னுக் கெவ்வகையிலுண்டாயிற்று? யாவராலுபதேசிக்கப்பட்டது? இது
விஷயத்தி லனுமதிகொடுப்பதைப்பற்றி மனதினால் நினைப்பதற்குக் கூ
ட யான் சகியேன். (31) முற்றும் தீர்ந்த, சுந்தரவடிவமுள்ள திருமே
னியுடையவளும், அதிலும் சருவ மங்களையாகியவளுமாகிய வுந்தனையும்,
மயானத்திற்குடியிருப்போனும், சர்ப்பங்களை யாபரணமாகப் பூண்டவ
னும், உச்சியிற்சடையைத் தரித்தவனும், (32) தோலெலும்புகளை யலங்
காரமாகத் தரித்தவனும், பயங்கரமுள்ளவனும், என்றும் பூதப்பிரேதங்
களாற் சூழப்பட்டவனுமாகிய ருத்திரனையும் நன்காராய்ந் தூகிக்குமளவி
ல் எனது மனம் மிகவும் நொந்து துயரமடைகின்றது. (33) வாராய்
சுந்தரமேனியாளே! முந்தியொன்றுகேள். தம்பதிகள் (பெண்மாப்பி
ள்ளை) சுந்தரவடிவம் முதலிய எல்லாவித சிறப்பினிலு மொற்றிருத்த
ல்வெண்டும்; இங்ஙனமாயின் சிம்மாசனத்தின்கண் வீற்றிருப்பதற்குரி
யவளாகிய நீ, அவனுடன்கூட அபஸ்மாரத்தின் * கண்ணுட்காருவதற்
கெப்படித் தருவாய். (34) ஓ! கோ! கலியாணசீலமுள்ளவளே! நீ பட்
டுக்கயிறாகிய பிரதிசரத்தைக் (கையிற் கட்டப்படுகிற திருமணக்கயிறு)
கட்டிக்கொள்வதற் குரியவளாயிற்றே! புஸ்ஸென்று சீறுதலுடன் கூ
டிய ஸர்ப்பத்தினது சீதள வுடலினாற் கட்டப்படுவதை யெங்ஙனம் சகி
க்கலாவாய்? (35) ஐயோ! உலகில் பெண்களுக்கெல்லாம் தங்கத்தினா
லமைக்கப்பட்ட மாங்களியச் சரட்டைக் கட்டுவது வழக்கமாயிருக்கை
யில், வாராய் சிறந்த லக்ஷ்மீவிலாஸம் பொருந்திய சுந்தரி! சூலாயுத
த்தைத் தரித்த அச்சிவன் கிருஷ்ணஸர்ப்பமாகிய மங்களசூத்திரத்தையு

---

* ஸ்ரீசாம்பமூர்த்தி யானவர் அபஸ்மாரத்தின் மீது வீற்று நிற்கின்ற
வரலாற்றைப் பற்றிய சரித்திரம் வருகிற தக்ஷகாண்டத்தில் விஸ்தரிக்கப் பட்டி
ருக்கின்றது.

ந்தன் கழுத்தினிற் கட்டலாகுமே! (36) திருமணப்பெண்கள் மாப்பிள்ளைகளாலளிக்கப்பட்ட வெணபட்டுடைகளையுடுப்பது வழக்கம். நீயோ இரத்தம் கசியவுற்ற சிங்கத்தோலையும், புலித்தோலையு மூடுக்கலாகுமே! (37) உலகினில் பெண்மாப்பிள்ளைகள் அக்கினியில் நெற்பொரிகளை ஹோமம் செய்து பிரதக்ஷணம் செய்துவருவது வழக்கம். நீயோ அவனது கையைப் பற்றிக்கொண்டு சுடுகாட்டுத் தீயைச் சுற்றிவரல்வேண்டுமே! (38)

பதிமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கச—வது அத்தியாயத்தினர்த்தம்.

உலகினில் பெண்மாப்பிள்ளைகள் மதயானைமீது வீற்றிருந்து வேதியர்களால் ஸ்வஸ்திவாசனங்கள் (வாழ்தலுக்குரிய வேதமந்திரங்கள்) சொல்லப்படுவதுடனும், அனேகவித மங்கள வாத்திய முழக்கங்களுடனும், கட்டியக்காரர்களது விருதாவளித் துதிகளுடனும் ஊர்கோலமாடுவது வழக்கம். (1) நீங்களோ கிழவெருதின் மீதுட்கார்ந்து பூதவேதாளங்களாற் சேவிக்கப்படலுற்றுச் செல்வதை யூரார் கண்டு நகைக்கலாவார்கள். (2) சிறந்தமேனியாளே! மற்றொன்றுகேள்! குணங்களற்ற உந்தன் திருமணமாப்பிள்ளை யுலகவழக்கம் யாதொன்று மறியாதவன்; உடையற்ற நிர்வாணி; விகார வடிவம்பொருந்தியவன்; (3) பெரும்பானு மிடுகாட்டினிலே குடியிருந்து, தோல், எலும்பு, ஸர்ப்பம் இதுகளையாபரணங்களாகப் பூண்டு, அபஸ்மாரத்தின் மீதேறிச் சடைகளின் கட்டைவிரித்துக் கொண்டு (4) நெருப்பையும், டமரு (உடுக்கு) வாத்தியத்தையும் கையிற் பற்றியவனாக, பிரேத, பூத, பேதாளங்களது கரதாளத்தின் லயத்தை யனுசரித்து இடுகாடுதனிலடிக்கடி கூத்தாடியவன்.(5) நேர்த்தியாகிய முகத்தையுடைய பெண்ணே! இதைப்போன்ற ஆபாஸ கிருத்தியங்களை உலகில் மற்றெங்கும் கண்டதில்லை. இவ்வுலகினில் மாப்பிள்ளைகட்குரிய முக்கிய ஸம்பத்துகள் யாதெனின்:— சுற்றத்தார், நல்ல இலக்ஷணம், நல்லொழுக்கம்,(6) வித்தை, நிறைந்த செல்வம், நல்லமனசு, நற்குலப்பிறப்பு, வியாதியின்மை இவைகளே. ஓ! சுந்தரி! இக்குணங்களில் யாதாமொன்றாவது முக்கண்ணனிடத்திற் காண்பதில்லையார்! (7) யானுந்தனைச் சொல்வதிற்காரியமில்லை; இதைப்போன்ற துர்மார்க்கத்திற் பிரவிருத்திக்கின்ற வுந்தனைத் தடுக்காமல் நின்ற வுனது தாய் தந்தையர்களைச் சொல்லுகின்றேன்.(8) ஆனால் இவ்வுருத்திரன் சகல வித்தைகளிலும் தேர்ச்சி பெற்றவனென்பதை யானறிவேன்.

இவன், இவ்வகை யொத்தவனாயினும், முனிவர்கள் தன்னையே உபாசிக்கும்படி தந்திரஞ்செய்கிறான். (9) அவனது மாயா விநோதத்தினால் நீயும் அவனது கையிலகப்பட்டுக் கொண்டாய். ஆ! பாங்கிப்பெண்களா! நீங்களாயினும் உங்களது தோழியை யிது அகாரியமென்று தடுக்க வொண்ணாதா? (10) ஆனாலுனக்கு அனுகூலமாகியதை யிப்போது யானுரைக்கின்றேன் கேள். யான், வாலிபனாகிய ருத்திரனிலும் மேன்மையுள்ளவனாகின்றேன். ஏனென்றால் கிழவனாயினும், நல்ல குணமும், ஒழுக்கமுமுடையவனும், பெரியோர்களால்மெச்சத்தக்கவனுமாகின்றேன்; (11) இவ்வுலகினில் எந்தனைப்போன்ற, சகல வித்தைகளிலும் சிறந்த புலவர் யாவருமில்லை. என்னைக்காட்டிலும் அஷ்டைசுவரியமும் பொருந்தியவர் யாவரும் பார்மீதில்லை. (12) நீ வீண் பிரமத்தினால் அவனை வேண்டுகின்றாய்; நானோஉன்னைப் பலவாறாய்ப் பிரார்த்திக்கின்றேன். நிர்த்தன புருடனாகிய முக்கண்ணன், குபேரனுக்கு அவனது செல்வத்திற்காகச் சினேகிதனாகின்றான். நானோ,(13) கேளாய்! புகழ்ச்சிபொருந்திய மாதே! எந்தனை யடுத்தவர்களாகிய உலகினர்களெல்லோர்களுக்கும் நேசனாகின்றேன். செல்வமுடையோர்க்கெல்லாம் அதிக செல்வத்தைப்பெற்ற யான், என்றும் வெண்டிய பொருளையெல்லாங் கொடுக்கின்றேன். (14) எனதூழியத்திலே ஆஸக்தியுள்ளவர்களது வீட்டில் பெயர்போன காமதேனுவும், அவர்களது வீட்டைச்சார்ந்த சிங்காரவனத்தில் கல்பகவிருக்ஷ வரிசைகளும் நிலையாயிருக்கின்றன. (15) ஆகையால்,வாராய்! சிறந்த வதனமுடைய மாதே! நீயிங்கு எல்லாவற்றையு மாராய்ந்துஎன்னைக் கணவனாகக்கொள்; யான்,விருத்தனாயினும், எனதுதவபலத்தினால்நித்தியனும், வாலிபனுமாகின்றேன். (16) பழுதற்ற வழகு குழலாய்! என்னைவிட்டு நிர்க்குணனாகிய (சத்துவரஜஸ்தமோகுணங்களுக் கெட்டாதவனென்பது கருத்து) மற்ற ருத்திரனை யுனது நாவினாற்புகழாதே;" என்றிவ்வாறுரைத்துப் பிரபுவானவர் தேவியினுடைய முகத்தைக் கொஞ்சம் புன்னகைப் புடனுற்று நோக்கினார். (17) இவ்வாறாகக் கிழவனார் கூறலுற்றதைப் பரமேசுவரியானவள் செவியுற்றதில் கோபங் கொண்டவளாகச் செவிகளைப் பொத்திக் கொண்டுதுரிதமாக அவர் தனது பின்பக்கத் திலிருக்கும்படி திரும்பினின்று,"அடீ! பாங்கி! யாவனோ வோரசுரன்கிழவனாக இங்கெனது தவ வனத்திற்கு வாலுற்றான்: அல்லது முந்தி என்னால் ஜன்மாந்திரங்களிற் செய்யப்பட்ட பாவமே(19) இவ்வாறாக மூர்த்தீ கரித்து வந்திருக்கவேண்டும்; இல்லையாகிலிது யாவரால் செய்யபட்ட இடையூறோ காண்கிலேன். பின்னும்பேசுவதற்கிச்சைகொண்டெத் தனிக்கின்ற இவ்விருத்த மானிடனைத் தடுத்துவிடு. (20) கிழவாகிய நீர் புத்திதமோறலுற்றுப் பிதற்றுகின்றவராயினும், ஸ்ரீ பரமேசுவரனைப்பற்றி யொன்றுமட்டில்சரியாகவுரைத்திருக்கிறீர்; அதாவது ஈசன், சத்துவரஜஸ்தமோ கு

ணங்களாகிய மூன்றுகளாலும் எட்டப்படாதவரும், தமஸ்ஸென்ற அக்ஞானத்தினின்று வெகுதூரத்தில் நிற்பவரும், (21) சூரியனுடைய நிறத்தைக்கொண்டவருமான பரமேசுவரன் குணங்களற்றவனென்று உம்மால் சொல்லப்பட்டது. நல்லது! ஓய்! பித்தம் தலைமேற்கொண்ட கிழவனுரோ! இப்போதும்மாலுரைக்கப்பட்ட யாவு முமதறிவுமாருட்டத்தின்பேரிற் சொல்லப்பட்டிருக்கிறது. (22) யாதொருஸர்வேசுவரனுடைய பாதத்தையும், சிரசையும் காணவேண்டியவர்களாக பிரம்மாவும், சருவகுணசம்பூர்ணராகிய ஸ்ரீவிஷ்ணுவுமவர்களது திராணிக்கு மேற்பட்ட முயற்சியைச் செய்தும் காணமுடியவில்லையோ அப்பரமேசுவரனுடைய மகிமையதுலேசாலேசத்தைக்கூட யாவர்தானறிந்தவர்? (23) இங்ஙனமாகையில் பிரபஞ்சங்களை விளங்கச்செய்கின்ற ஸ்ரீ சம்புவானவர் கேவலம் விருத்தராகிய வும்மாலெங்ஙன மறியப்படலாவார்? ஆ! அடி! பாங்கி! பின்னுமேதோ பேசுவதற்காக வுதடுகளையசைத்து முணுமுணுக்கின்ற இந்நரைத்தலைக்கிழவனைத் துரத்திவிடு. (24½) யாதுமறியாத இக்கிழப்பிராம்மணனெங்கே! சருவக்ஞமூர்த்தியாகிய ஸ்ரீ பரமேசுவரனெங்கே! (25) இவர், முந்தி ஸ்ரீ கௌதமமுனிவரின் சாபத்திலகப்பட்ட பாஷண்டர்களிலொருவராயிருக் கவேண்டுமென்பது நிச்சயம்; அல்லது ஸ்ரீ ததீசமாமுனிவரின் சாபத்தால் பிரஷ்டர்களாகியவர்களைச் சேர்ந்தவராயாவது இருக்கவேண்டுமென்பதில் சந்தேகமில்லை; (26) இல்லாவிடில் எனது தவத்தின் விக்கினமே (இடையூறு) இங்ஙனமாக மூர்த்திகரித்து வந்திருக்கவேண்டுமென்பது சத்தியமே! இது மிகவுமாச்சரியம்; இப்பித்தரோகம் பிடித்தமானிடன் இவ்வளவு வயது சென்றகிழவனுயினும் இன்னது ஜீவாத்துமா இன்னது பரமாத்துமா அல்லது இன்னதுசேதன மின்னது அசேதனமென்ற பகுத்தறிவில்லாதிருக்கிறுன். (27) தாறுமாருய்ப்பிதற்றுகின்ற விக்கிழவன், பிடித்துத்தள்ளியும் போகாமல் சண்டித்தனமாய் விழுகின்றுன்; இனியானிவர் முன்னிற்பதுதகுதியல்ல; யானிங்குவிட்டுச் செல்லுகின்றேன்; (28) எனவுரைத்துத்தேவியானவள் அதிக கோபத்துடன் பின் திரும்பிச்செல்லத்தீர்மானித்தனள்; (28½) பிறகு ஸ்ரீபகவான் மந்தகாஸத்துடன் கூடிய முகாரவிந்தத்தோடுபிரஸன்னராக (29) தனது நிஜவுருவத்தைக்கொண்டு தேவியின் முன்பாகப் பிரத்தியக்ஷமாயினர். நீலகண்டரும், விருபாக்ஷரும், (நெத்தியிற்கண்ணுடையவர்) நித்தியரும், என்றும் சுந்தரமூர்த்தியாகியவரும், (30) தேவகணங்களால் மலர்மாரி பொழியப்பட்டு விளங்கியவரும், சருவப்பிரபஞ்சத்துக்கும் மூலபுருடராகியவருமான ஜநதீசன் சொன்னதாவது:—"மிகவும் சிறந்த சுந்தர மேனியாளே! யாமுனது தவத்தினுல் (31) விலைக்குவாங்கப்பட்ட வு

ன தடிமையாயினும்; உனக்குவேண்டிய மேன்மையாகிய வரனைக்கொடுப்பதற்குச்சன்னத்தராகின்றோமென்று தேவேசனும்,சுகத்தையளிக்கின்றவரும், சமுசாரமாகிய வியாதிக்குச்சிறந்த வெளஷதமாகிய வருமான பரமேசுவரன் திருவாய் மலர்ந்தருளுகையில் (32) ஸ்ரீ பார்வதியம்மையானவள் சீக்கிரத்தில் தனது தவநியமத்தினால் கொண்ட பரிசிரமங்கள் நீங்கியவளாகி, தேகநடுக்கத்தினாலும், பயத்தினாலும், மயிர்க்கூச்சலினாலும், மிகுந்த பேரானந்தத்தினாலும்வார்த்தைகள் தடுமாறலுற்று, (33) ஸ்ரீ பகவானுடைய விரண்டு பாதாரவிந்தங்களில் தண்டனிட்டு அஞ்சலிகொண்டு துதிசெய்ததாவது:—"புலவர்கள், வேதாந்தங்களில் முக்கிய புருஷனாக யாவனைச் சொல்லுகின்றார்களோ, (34) யாவர் பூமி, அந்தரிக்ஷம், சுவர்க்கம் முதலிய வெங்கும் வியாபித்து நிற்கின்றவரோ அவ்வுமக்கு வந்தனம்செய்கின்றேன். யாவருடைய விரண்டு பாதாரவிந்தங்களைத் தியானம் செய்வதினால் பாவங்களைத் தொலைத்து (35) பயமற்றவர்களாகி மோக்ஷத்தை யடைகின்றார்களோ அவ்வுமக்கு வந்தனம் செய்கின்றேன். யாவருடைய கிருபாதிருஷ்டியால் நோக்கப்பட்டவர்களிடத்து அக்ஞானமும்பாவமுமணுகாமல்(36)அவர்களுலகினர்களால் வந்தனிக்கப்படும்படி யாகின்றார்களோ அவ்வும்மைச் சரணமடைகின்றேன். நித்திரையைவிட்டு, சுவாசத்தையடக்கி, மன அடக்கத்துடன் பக்தி சித்தர்களாக (37) யாவனைத் தேஜோவடிவமாகத் தியானிக்கின்றார்களோ அவ்வும்மைச் சரணமடைகின்றேன். ஓ! தேவேசனாகிய பிரபுவே! எந்தனை யங்கிகரித்துக் காத்தருளவேண்டும். (38) ஓ! மகாதேவா! மூவுலகினிலும், நீரடியார்களுடைய துரிதங்களை நீக்குவோராக வறியப்படுகின்றீர்; ஓ! கருணைக்கடலாகிய பிரபுவே! அடியாளாகிய வெந்தனை யங்கிகரித்தருளவேண்டும்" (39) அழகிய சந்திரகலையை யுச்சியலங்காரமாய்க்கொண்ட பரமசிவன் இவ்வாறாகியதுதிகளால் களிப்படைந்து சொல்லியதாவது:—"வாராய் பார்வதி! யாம், தேவர்கள், சித்தர்கள் முதலியவர்களால் ஸேவிக்கப் பட்டவராக நாளை தினம் நடக்கப்போகின்ற கலியாண மகோற்சவத்துக்கு வந்து உனது பெற்றோர்களி னனுமதியின்பேரி லுந்தனைப் பாணிக்கிரகணம் செய்கின்றோம்" (40½) சம்புவானவ ரிவ்விதமாக வரனளித்துக் கைலைமலையை யடைந்தனர். (41) மன்மதனைத் தண்டித்த பரமசிவனங்கு, மனதினாற்தன்னையே (ஸ்ரீ பரமசிவனையே) பாவனைசெய்து நிற்கின்றவும், முனிவர்களுக்கெல்லாம் வெகு மேன்மைகொண்டவர்களுமாகிய ஸப்தருஷிகளை (அத்திரி,புருகு,குத்ஸர்,வஸிஷ்டர்,கௌதமர்,காசியபர்,அங்கிரர்,முதலியவர்கள்) திருவுளத்தில்நினைத்தருளினர். (42)தேவாதிதேவனாகியபிரபுநினைத்தமாத்திரத்தில் அம்முனிவர்கள், இன்னதுகிருத்தியம் இன்னதுஅகிருத்தியமென்பதுகூடத் தெரியாதிருக்கும்படி, யுள்ளம் பரவசப் பட்டவர்களாகவும், பரப்பிரம்மமாகிய"ஸ்ரீசிவனேஸத்தியம்சிவனேசத்திய"

மென்று எப்பொதும் ஜபித்துக்கொண்டும், அடியிற்கண்டபடி யுரைத்துக்கொண்டு, ஸ்ரீ பரமேசுவரனைத் தரிசிப்பதற்காக முற்றும் பரபரப்புடன் பிரபுவினுடைய சன்னிதானத்துக்கேகினர்கள். (43-44) ஓ! ஜகதீசா! இப்போது கொண்டிருக்கிற வுருவமானது ஜகங்களைச் சிருஷ்டிப்பதற்கானதா? இரக்ஷிப்பதற்கானதா? சமுகரிப்பதற்கானதா? அல்லது அநுக்கிரகிப்பதற்கானதா? வென்பதைச் சொல்லியருளவேண்டும். (45) தேவரீர் சிருஷ்டி ஸ்திதி முதலிய கருமங்களைச் செய்வோராயினும் யாதொரு கருமமுமற்றவராயிருக்கின்றீர்; கல்வியுள்ளோராயினும் யாதொரு கல்வியு மற்றவராகின்றீர். வடிவத்தில் பழுதற்றவராயினும் கழுத்தினிற் கழுத்தவரும், பாவபுண்ணியங்களது பற்றற்றவருமாயிருக்கின்றீர். (46) நித்தியரு, மழுக்கற்றவருமாகியதால் ஸதாசிவ (என்றும் மங்களமூர்த்தி) னென்று பிரசித்திகொண்டிருக்கின்றீர். தேவரீ சொருவர் பரப்பிரம்மமேயின்றி பற்பல வுண்டென்பது இல்லையே. (47) நீரே ருத்திரராகின்றீர், பிரம்மாவும் நீரே, விஷ்ணுவும்நீர்தான், எல்லாப்பிஜைகளுக்கு மதிபதியும்நீரே; சுவாகா, வஷட் இவைகளின் வடிவமும் நீர்தான்; இயாகமும் நீர்தான், அக்கினியும் நீரே. (48) ஓ! பிரபுவே! தேவரீர் முக்காலத்திலுமிருப்பவரொன்பதை யாங்களறிகின்றோம். உலகின்மீதுள்ள மகாத்துமாக்களால் சகலபுவனங்களுக்கும் மேற்கொண்டவரொன்றும், அளவற்ற ஐசுவரியங்களையுடைய மகேசுவரனாகிய வும்மிடத்தினின்றே பிரபஞ்ச மனேகவிதமா யுண்டாகி நிற்கின்றதென்றும் அறியப்படுகின்றீர். ($49\frac{1}{2}$) தேவரீர்மீதினின்று தவறுதபக்தியானது எங்களுக்குண்டாகும்படி யனுக்கிரகிக்க வேண்டுகின்றோம். (50) தேவரீர் எங்களை நினைக்கும்படி நேர்ந்ததானது யாங்களெப்போதும் வேதமோதுகின்றததும், கடுமையான தவத்தைச்செய்தலின துமானமிகுந்த பயனேயின்றி வேறில்லை. (51) கேளீர் பிராம்மணோத்தமர்களே! இம்முனிவர்களிவ்வாறுக வுரைத்துக்கொண்டு மலைகளிற்சிறந்ததாகிய கைலைகிரியிலுள்ள, தேவாதிதேவனாகிய ஸ்ரீ பரமேசுவரனுடைய ஆலயத்திற்கு ஓர் நொடியிற்சென்று, அடியார்களுக் கபயமளிப்பதிலே யெப்போதும் கவலைகொண்டவரும், சகல ஆதிவியாதிகளைத் தீர்ப்பதனுல் ஸ்ரீ ருத்திரரொன்ற பெயரைக் கொண்டவருமான ஸ்ரீ பரமேசுவரனுடைய கட்டளையின்படி கோபுர வாசற்படியின்கண் வீற்று நின்ற ஸ்ரீ நந்திப்பிரானைக், களிப்பினுல் மனம்பூரித்தவர்களாகத் தண்டனிட்டார்கள். (52) ரிஷிசிரோஷ்டர்களா லுரைக்கப்பட்ட, ஸ்ரீ பரமசிவனுக்கு முற்றும் பிரியமாகிய வித்தோத்திரத்தைப் படிக்கின்றவர்களும், கேட்டாநந்திக்கின்றவர்களும் உலகினில் பிள்ளைகள், பெண்டீர், பசுக்கள் முதலான சகல பாக்கியங்களையுமனுபவித்து அந்தத்தில் மறுபிறப்பற்றமோக்ஷத்தை யடைவார்கள். (53)

பதிநான்காவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

சூதர் சொல்லுகிறார்:—கேளீர் பிராம்மணர்களே! ஸ்ரீசம்புவைத் தரிசிப்பதி லாவல்கொண்ட ஸப்தரிஷிகள் வாரீர் தேவனே! சமயம் யாதென்று அந்நந்திப்பிரானை வேண்டினார்கள். (1) சிலாதரின் செல்வனும் தேவனுடைய விடைபெற்று இம்முனிவர்களை ஸ்ரீமகேசுவரன் முன்பாக இட்டுப் போயினர். (2) முனிவர்கள் பிநாகமென்ற வில்லைப் பற்றியவரும், மிக சுந்தரவாலிபரும், முற்றும் மெதுவாகிய திருமேனியால் விளங்கியவரும், திவ்விய ரத்தினாபரணாலங்கிருதரும், பல்வித மலர்களையணிந்தவருமாகிய மகாதேவனை, களிப்பினால் மெய்மறந்தவர்களும், ஆநந்தக்கண்ணீரினால் கண்கள் கலங்கிய வர்களுமாகதூரத்திலிருந்தபடியே கண்டு நமஸ்கரித்தார்கள். (4) அந்நந்திக் கடவுள் முனிவர்களையீசனருகிற் சேர்ப்பித்தபிறகு அவர்கள், மற்றவரின்கண் துர்லபமாகிய விஞ்ஞானத்தைக் கொண்டவரும், பிறப்பற்ற பிரபுவுமாகிய பரமேசுவரனைச் சமீபத்தினின்று கண்டு, (5) உள்ளத்தில் நினைத்துக்கொண்டது யாதெனில்:— இச்சுந்திரமூர்த்தியை மன்மதன் கண்ணுற்றதில் உண்மையாக இலஜ்ஜையடைந்தே தேகத்தை யிழந்திருக்க வேண்டுமேயின்றி நெத்திக்கண் ணெருப்பினால் மாண்டானென்பது பொய்யே. (6) மரைக்கண்ணனாகிய விஷ்ணு * வானவ ரிவரழகைக் கண்டு பெண்ணுருவம் கொண்டிருக்கிறார். இவரைக் கண்டதில்தேவபத்தினிகளும், ரிஷிபத்தினிகளும் மோகித்து விட்டார்களென்பதில் ஆச்சரியமொன்று மில்லை. (7) இச்சுந்திர வடிவுள்ள ஜகதீசனைக் கண்டு புருடர்களது மனமிவ்வாறாக மயங்குகையில் பெண்டீர்கள் விஷயத்தைப் பற்றி யாதுரைக்கவேண்டும். ஸப்தரிஷிகள் இவ்வாறாக நினைத்து இரண்டு வழிகளாலும் மலரைப் பார்த்துப் பார்த்து (8) ஆனந்தித்து சமுசார பயத்தினின்று விடுவிக்கின்ற ஸ்ரீமகேசுவரனை யுள்ளத்தில் தியானித்து வந்தனித்தார்கள். மகாதேவரு மவர்களை நோக்கி அழகிய மொழிகளா லுரைத்ததாவது:—(9) நம்மீதொப்பற்ற பக்தி கொண்டவர்களும், நமது மனதுக் கிசைந்தவர்களும், மகாபெருமைபொருந்தியவர்களுமாகிய நீங்கள் ஆசனங்கள் மீதுட்காருங்கள். (10) இப்படி தேவேசுவரன் சொல்லு கையிலப்போ தெல்லோர்களு மஞ்சலி செய்துகொண்டு அவரவர் வயது முறைவரிசைப்படி யுட்கார்ந்தனர்கள். (11) பிறகவர்களில் வசனமுரைப்பதில்திறமைபெற்ற வஸிஷ்ட முனிவரொ

---

* இக்கதையின் வரலாறுகள் மேல் வருகின்ற தக்ஷகாண்டத்தில் விஸ்ரிக்கப்படுகின்றது.

முந்து அஞ்சலி செய்து கொண்டு தண்டனிட்டு ஸ்ரீ மகேசுவரன் முன்பாகத் தெரியப்படுத்திக் கொண்டதாவது:—(12) "ஓ ஜகதீசா! யாதாமொரு வனுடைய மனமும்மை நினைக்கி லவன் மகாபாக்கியவான்களில் முதன்மை யாகின்றான். இங்ஙனமாயில், தேவரீரது திருவுளத்தால் நினைக்கப்பட்ட எங்களது பாக்கியத்தின் கௌரவ மெவ்வாறுரைக்கப் படலாகும். (13) ஓ! சங்கரா! தேவரீரது கிங்கரர்களாகிய வெங்களுக் கெச்சரிக்கை யிடுவீர்கள்: அல்லது அயலார்களல்லாத எங்களைச் சமுசாரக் கடலினின்று பாதுகாத்தருளுவீர்கள்". (14) பிறகு தேவன் சொல்லியதாவது:— "யாமுங்களை நினைத்தகாரியம் யாதென்றால்:— யாம்நமது எட்டுமூர்த்திகளாலு மெல்லா வுலகினர்களை யுமனுக்கிரகிக்கின்றோம்; (15) கேளீர் முனிவர்களே!, அங்ஙனமாகிய எம்மைச் சத்துருக்களால்துன்பமடைந்த விஷ்ணு முதலிய தேவர்கள் அத்துன்ப நிவர்த்திக்காக வுள்ள மைந்தனை யாமடையும் படி வேண்டினர்கள். (16) முனீந்திரர்களே! யாமும் நல்லது! அப்படியே செய்யலாகுமென்று அத்தேவர்களது சத்துரு நிவர்த்திக்காக ஓர்படைத்தலைமைவீரனை யவர்களுக்கு வாக்குறுதி செய்திருக்கிறோம். (17) தேவசிரேஷ்டர்களெல்லோர்களுமிப்போதுகூட மூன்று அசுரர்களாலும் வதைக்கப்படுகின்றார்கள். யாம் ஸேநானியை (படைத்தலைமை வீரராகிய சுப்பிரமணியன்) யுண்டுசெய்து, யாவராலு மெதிர்க்கப்பட முடியாத சூரபத்மனை (18) யவனது தம்பிகளுடன், முந்தி நாம் திரிபுராசுரர்களைக் *கொன்றதுபோல், தீர்த்துவிடுகின்றோமென்று நம்மாலபயமளிக்கப்பட்டதின்பேரில் விஷ்ணுமுதலிய தேவர்கள் சென்றிருக்கிறார்கள். (19) ஆகையால் யாம் கிரிராஜகுமாரியைப் பாணிக்கிரகணம் செய்யவிரும்புகின்றோம். அவளோவென்றால் நமதுஇச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி ஆகிய மூன்று சக்திசுவரூபமுடையவள். (20) அவள் நம்மைவிட்டுஎன்றும் பிரியாதவளாயினும், சூரியனைவிட்டு அவனது காந்திபிரிபட்டதாகத்தோன்றுவதுபோல், தோன்றுகின்றாள்; அதிலுமவள் நம்மையுத்தேசித்துக் கடுமையான தவத்தைச்செய்தனள். (21) ஆகையால்தான் யாமவளைப் பாணிக்கிரகணம்செய்யவிரும்புகின்றோம். அது நிமித்தமாக, கிரஹஸ்தாசிரமத் (மனையாளொடு கூடிவாழ்தல்) தைக்கொண்டமுனீந்திரர்களாகிய நீங்கள் பெண்டீர்களுடன் சந்தோஷமாக மகாபெருமை கொண்ட இமராஜனிடஞ்சென்று கேட்குதல் வேண்டும். (22½) இனிப்பிராம்மணர்களுக்குள் உலகத்திலிம்முறையின் வழக்கமேயென்றும் செல்லத்தக்கது. (23) கலியாணகுண சீலத்தையுடைய அருந்ததியம்மாள், கிரிராஜனது பட்டஸ்திரீயாகியமேனகையம்மை யிதுவிஷயத்தில்

---

* இக்கதையின் வரலாறுகள் வருகுற உபதேசகாண்டத்தில் விவரிக்கப்படுகின்றன.

மறுதளிக்காதபடி வாக்சாதுரியம் கொள்ளட்டும். (24) இதையொத்த காரியங்களில் குடிஸ்திரீகளுக்கு சாமர்த்தியமிருக்குதல்வேண்டும். யாதுமுயற்சியால் காரியமானது மனமொத்து நிராக்ஷேபனையாய்ச் சித்திக்குமோ, (25) அதற்குத்தகுந்தஉபாயங்களோடு முயற்சியைச்செய்யல்வேண்டும். வேதாந்தப்பயிற்சியாலே நிச்சயிக்கப்படப் பெற்றவராகிய பரமேசுவரன் (26) கலியாணம்செய்துகொள்வதில் விருப்பம்கொள்ளும்போது முனிவர்களும்அதுவிஷயத்திலுள்ள இலஜ்ஜையை விட்டார்கள். பிறகு முனிவர்களெல்லோர்களும் ஜகங்களுக்கெல்லாம் பராபரகுருவாகிய மகாதேவனை(27)ப்பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து இமயகிரியை நோக்கிப் புறப்பட்டு ஆகாய மார்க்கமாய்த் துரிதத்திற்சென்று மலைமீதிறங்கலுற்றார்கள். (28) அங்கு மூவுலகிலும் ஓஷதிப்பிரஸ்தமென்று பெயர்போன இமராஜனுடைய ராஜதானியானது முனிவர்கள் பார்வையிற் பட்டது. (29) அங்குயுகந்தோறுமுள்ள வியாதியாசம், கிழத்தனம், மனவருத்தம், வியாதி, கெர்வம் இவைகளில்லை. யௌவனத்தைத்தவிர வேறு பருவங்களில்லை, இங்ஙனமாகிய ராஜதானிக்கு முனிவர்களேகி(30)அளவிலே அப்பட்டணத்தின் மத்தியிலுள்ள ராஜகிரகத்துக்குச் சென்றனர்கள். இமராஜனும், சூரிய தேஜஸ்ஸைக் கொண்டவர்களாக உலகெல்லாம் பிரகாசிக்கச் செய்கின்ற ஸப்தரிஷிகளை யங்கா காயமார்க்கத்தில் கண்டு, (31½) அவர்கள் பூமியை வந்து சேருவதற் குள்ளாக அர்க்கிய பாத்தியாதிகளைச் சேகரித்துக் கொண்டு மனையாள் சகிதமாக முந்தித்தயாராய்நின்றனன். (32½) இராஜனவர்களைப் பெண்டீர்களுடன் ஆஸனங் களிலுட்காரவித்து(33) பரமானந்தங் கொண்டவனாக அப்போதவர்களை யர்க்கிய பாத்தியாதிகளாற்பூஜித்து,கிருதகிருத்தியாகிருத்தியமென்றபகுத்தறிவுள்ளவனாகவும்சந்தோஷபுத்தியுடையவனாகவும்,பக்தியோடவர்களைத்துதிசெய்தான். (34) முனிவர்களுமிராஜனை நோக்கி "ஓ! ராஜனே! நீர் க்ஷேமமா? உமது பிரஜைகள் சௌக்கியமா? (35) பருவதராஜர்களுக்குள்ளாகவு மதுசெங்கோல் சரிவரச் சென்றுவருகின்றதா? மந்திரிகள், பந்துக்கள், மித்திரர்கள்முதலியவர்கள் உம்மீது நேசத்தை யுறுதியாகக் கொண்டிருக்கிறார்களா? (36) வென்று க்ஷேமச்மாசாரங்களை விசாரித்தனர்கள். "வாரீர்ராஜனே! நீர் உலகினில் தன்னியர்களுக்குட் சிறந்தவரும், பூஜிக்கவும், வந்தனிக்கவும் படலொற்றவரும, மகாதவசியு மாகியதால், நீரெங்களால் மானிக்கத்தக்கவர்பற்றி ஆசனத்தின்மீது உட்காரும்" என்றனர்கள். (37) பிறகு ராஜனும் அவர்களது வார்த்தையைக் கடப்பதிற் பயந்தவனாக உட்கார்ந்து வணக்கமாகவும், மரியாதையாகவும் அஞ்சலிசெய்துகொண்டு ஓர்வசனமுரைத்தனர். (38) முனீந்திரர்களே! உங்களதனுக்கிரகத்தால் எல்லோர்களும் க்ஷேமம்; இப்போதே யான்கிருதார்த்தன்;யான்

கிருதார்த்தன்; உங்களால் புண்ணியவானுயினேன்; (39) இப்பொழுது மகாத்துமர்களாகிய பாரியைகளுடன் கூடிய உங்களையான் தரிசித்ததனுலெனது ஜன்மம் பயனுளதாயிற்று. ஆனுலெனது மனம்பேராசைகொண்டு (40) மனவடக்கமுள்ள உஙகளுக்கு, என்றும் கல்வாழ்வைத்தாவுற்ற பணிவிடைசெய்தலைக்காமுறுகின்றது வாரீர் பிராம்மணுேத்தமர்களேஇப்பொழுது யா னுங்களுக்குத் தாசனுகவேண்டும். (41) நீங்களிப்போது மிகுந்த கருணையுடன் எந்தனைக் கிருதார்த்தனுகச் செய்தல்வேண்டும். தவத்தையே பொருளாக நாடிய அம்முனிவர்கள் அவ்வசனத்தைக்கேட்டு, (42) எல்லோர்களும் வாக் திறமையுள்ள அங்கிரமுனிவரை, இமவானுக்கு உத்தரம் சொல்லும்படி திட்டம்செய்தனர்கள். பிறகு ரிஷிகளுக்குள் மேன்மைபெற்ற, இலக்ஷுமீ விலாஸம் பொருந்திய அங்கிரமுனிவரும் அம்முனிவர்களுக்கு முன்பாக(43) மலைகளுக் கெல்லாமரசனுகியஇமவானைநோக்கிஇன்பமானவசனமுரைத்ததாவது:— "கேளீர்ராஜனே! இந்நாங்களெல்லோர்களும்யாதுநிமித்தமிங்குவாலுற்ரேம் (44) என்பதைப்பெண்டீர்களோடுகூடியவுமக்குச்சொல்லுகின்றேன்; மனையினுள்ளிருந்து உமது மனையாளை ப்பெண், பிள்ளை, பந்துவர்க்கங்களோ டழைப்பிப்பீர். (45) கிரிராஜனே! தவசியாகியவுமதுபெண்ணுக்குக் கலியாணம் நடக்கப்போகின்றது. இவ்வாருகஅம்முனிவர் சொல்லும்போது கிரிராஜன் ஸந்தோஷபுத்தியுடையவனுகி (46) சீக்கிரத்தில், (அந்தப்புரம் காப்போர்களாகிய) தனது அலிச்சேவகர்களைக் கண்ஜாடையாக வெச்சரித்தநாவது :— "நமது செல்வ குமாரியை நன்கு அலங்கரிப்பித்து அவளுடன் அந்தப்புரஸ்திரீகளை (47) இங்கு மகரிஷிகளது ஸன்னிதானத்துக் கழைத்துவாருங்கள்" என்ருன். உடனே அலிச் சேவகர்களும், விரைவில் கிரிராஜனது பெண்டீர்களைக், (48) கலியாணக்கோலமாக அலங்கரிக்கப்பட்ட பார்வதியம்மையோடுகூட அழைத்து வந்தனர்கள். இமயராஜன் பெண்டீர்களெல்லோர்களும் பெண்ணை முன்னிட்டுக்கொண்டு (49) நல்ல சுபவேளையில் மிகவும் மங்களவடிவம்கொண்ட அப்பெண்ணுக்கு நல்ல ஆபாணங்களால் சிங்காரித்தார்கள். உமாதேவியென்ற அப்பெண்ணு மவர்களாலலங்கரிக்கப்பட்டு உலகங்களுக்குத்தாயாகினள். அப்பொழுது சரத்காலத்திய சந்திரகலைபோல் விளங்கலுற்றனள். ($50\frac{1}{2}$)

பதினைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கசு—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஜகங்களுக்கு ஸாக்ஷாத் மாதாவாகிய குழந்தையானவள் தந்தையருகிலுற்றனள். அவ்வேழு முனிவர்களும், அருந்ததியம்மாளும் பார்வதியைக்கண்டு மனோபாவனையாகப் பலமுறையாய் வந்தனித்தார்கள். (1½) அங்கு இமவானும், வெட்கத்தினால் மலர்ந்த திருமுகத்தையுடைய புதல்வியை(2) அன்புடன் மடிமீதுவைத்துப் புன்னகைப்புடன் சொல்லியதாவது:—"ஓ! பரப்பிரம்மத்தை யறிந்த முனீசுவரர்களே! இவளே யெனது பிராணன்; (3) இவளே எனது நேத்திரத்தின் கருவிழி; இவளே யெனது குலத்துக்குப்பூஷணம்; எல்லாமிவள்தா"னென்றனன். அவ்விமவானை நோக்கி அங்கிரமுனிவர் கூறியதாவது:— "இவள், மகிமை பொருந்திய வடிவங்கொண்ட லோகமாதா; (4) யாதுநிமித்தம் யாங்கள் இங்கு வாலுற்றன மென்பதைச் சொல்லுகின்றேன்; கேளீர்! அரசனே! யாவர் ஒரேபொருளும், ஜகங்களைச் சிருஷ்டிப்பவரும், பிரம்மர்களைப் படைப்பவரும், (5) காரணத்துக்கெல்லாம் காரணரும், அதிருஷ்டத்தைத் திட்டம்செய்பவரும், சிருஷ்டிக்கின்றவர்களையெல்லாம் சிருஷ்டிக்கின்றவரும், இரக்ஷிக்கின்றவர்களையெல்லாம் ரக்ஷிக்கின்றவரும், (6) சமுகரிப்பவர்களையெல்லாம் சமுகரிக்கின்றவரும், கேளீர்! கிரிராஜனே! மகாகிராஸரும், (சருவ பிரபஞ்சங்களையுமொரே கபளத்தில் விழுங்கியவர்) பரமாத்துமாவும், பரஞ்சோதியும், பரப்பிரம்மனும், பரத்துக்கெல்லாம் பரவஸ்துவும், (7) பரிசுத்தர்களுக்கெல்லாம் பரிசுத்தமாகியவரும், மங்களங்களுக்கெல்லாம் மங்களமாகியவரும், தனக்கு மேற்பட்டு யாதொரு வஸ்துவையு முடையாதவரும், தன்னைக்காட்டிலும் சிறிய வஸ்துவையாவது அல்லது பெரியவஸ்துவையாவது உடையாதவரும்,(8) துவக்கத்தில் சகலப் பிரபஞ்சங்களையும் சிருஷ்டிப்பவரும், அவைகளை யிரக்ஷிப்பவரும், சமுகரிப்பவரும், அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாம்மியம், ஈசத்துவம், வசித்துவம், ஆகிய அஷ்டைசுவரியங்களோடின்றி மற்றெங்கும் பொருந்திநிற்காத "ஈசுவரன்" (ஐசுவரியங்களையுடையவன்) என்ற பெயருக்கு, உபசாரவகையிலில்லாமல், அதன் பொருள் பொருந்தும்படி வாஸ்தவமாய்த் தகுதியானவரும், (9½) நித்தியப்பொருள்களுக்கெல்லாம் நித்தியரும், சேதனப் (ஞானமுடைய) பொருள்களுக்கெல்லாம் சேதனரும், (10) நடத்துவோர்களையெல்லாம் நடத்துகின்றவரும், காலனுக்குக் (இயமனுடையபுத்தன்மைத்தளகர்த்தன்)காலனும், சந்திரகலையைத்தரித்தவருமாகியவரோ அங்ஙனமாகிய ஜகத்பிதா (உலகங்களுக்குத்தந்தை)வுக்

கு, வாரீர் பாவலேசமற்ற ராஜனே! நீரிப்பேண்ணைப் பெண்டீராகக்கொடுத்தல் தகுதியாகும். (11) முந்தி விஷ்ணுவானவர், வராக (முட்பன்றி) வேஷமெடுத்து, யாவருடைய விநோதகரமான பாதங்களைத் தரிசிப்ப தற்குச் சருவப் பிரயத்தினத் தோடு தேடமுயன்றும் பயன்படவில்லையோ அம்மகானுபாவனுக்கு நீர் பெண்ணைக் கொடுத்தல்வேண்டும். (12) பிரம்மாவானவர் அன்னபக்ஷியுருவ மெடுத்து யாவருடைய சிரசைத் தரிசிப்பதற்குப் பறந்தோடி முயன்றும் முடியவில்லையோ அச்சகதீசனுக்குநீ ரும் பெண்ணைப் பெண்டீராகக் கொடுத்தல்வேண்டும். (13) யாவருடைய பார்வைமாத்திரத்தால் விருத்திராசுரனைக் கொன்ற இந்திரன், தனது வச்சிராயுதம் ஸ்தம்பிக்கலாகிப் பிரமித்து நின்றானோ, யாவரா லோர் துரும்பைக்கொண்டு தேவர்களுடைய வெற்றியின கம்பீரவமானது இழக்கும்படி செய்யப் பட்டதோ, (14) கேளீர் அரசனே! அவருக்கு நீரிக்கலியாண குணசீலமுள்ள பெண்ணைக்கொடுத்து விடும். யாவருடைய புருவத்தினலுக்கத்தினால் ஐசுவரியமானது தேவர்கள், அசுரர்கள், மானிடர்கள் இவர்களிடத்துப் பொங்கி நிற்கின்றதோ, (15) யாவனைவந்தனிப்பதால் பிராணிகள் சமுசார பயத்தினின்று மோக்ஷமடை கின்றார்களோ அவருக்கு, உலகங்களுக்கு சுகத்தைக் கருதியவராக நீருமது மனையாளோடுகூட வும்புதல்வியை மணம் புரிவித்தல் வேண்டும். (16) இவளிடத்துப் பிறப்பவரான உலகினில் அதிசுந்திர வடிவோனும், மகாபுஜ பலபராக்கிரம சாலியுமானமகேசுவா குமாரன், துஷ்டர்களாகிய சூரபத்துமன் முதலியவர்களைக் கொல்வோராவார். (17) ஜகங்களுக் கெல்லாம் பராபரகுருவாகிய சம்புவானவ ருமக்கு மாப்பிள்ளை(மறுமகன்) யாகையில்நீரேதன்னியர்; நீரேகிருதார்த்தர்; நற்குலப் பிறப்போர்களில் நீரேமேன்மை யானவர், நீரேபூஜ்யர். (18) இவ்வாறாக அங்கிரமுனிவர் சொல்லி முடித்தபோது எல்லா முனிவர்களும் மனக்களிப்புற்று இமயகிரி ராஜனைக் கொண்டாடி மெச்சினர்கள். (19) ரிஷிபத்தினிகளும் சந்தோஷ முகத்தை யுடையவர்களாகி அரசன் மனைவிகளை மெச்சினார்கள். மேலுமவர்கள் பட்டஸ்திரீயாகிய மேனகையம்மாளை விசேஷமாய்க் கொண்டாடினார்கள். (20) அவர்களுக்குச் சுவபாவமாகிய ஸ்தாவரவுருவத்தில், மேலெங்கும் முட்களாலே நிறையப் பட்டிருப்பவைபோல், அதிக ஸந்தோஷத்தைக் கொண்டதினால் அவர்களது ஜங்கம வுருவத்திற்குத் தகுதியாகியபடி தேகமெங்கும் மயிர்க்கூச்சல்களைக் கொண்டார்கள். (21) இமவானும் ஆனந்தக் கண்ணீரால் நிரம்பிய கண்ணுடையோனும், தழதழத்த வொலியைக் கொண்ட வார்த்தையை யுடையோனுமாகி அன்பினால் பெண்ணை

யணைந்துகொண்டு இம்முனிவர்களை நோக்கிச் சொல்லியதாவது:—(22) "யானிப்போதுங்களால், ஜகங்களுக்குத்தாயும், மனையிதழ்க் கண்ணுளு மான இச்செல்வகுமாரியின் மூலமாய்க் கிருதார்த்தனுகச் செய்யப்படலாயினேன். (23) பிராம்மணோத்தமர்களே! நீங்கள் தயவாலே யிப்போதெந்தனைக்காத்தருளி, தேவாதிதேவனுக்கறிவித்து எனது கோரிக்கையையீடேற்றல்வெண்டும். (24) ஏனென்றால் "சுபத்தை நினைத்தவுடன் நடத்தல் வேண்டும்" என்பது உலகில் பிரசித்தியான வதந்தியல்லவோ" வென்று சொல்லி இமவானெழுந்து எல்லா முனிவர்களையுமனேகமுறை வந்தனித்தான். (25) முனிவரெல்லோர்களும் மிகநேர்த்தி மிக நேர்த்தியென்று இமாராஜனை மெச்சினர்கள். அங்கிரமுனிவர் மறுபடியும் பருவதராஜன் பெண்டீர்களை நோக்கிச் சொல்லு கின்றார்:—(26) "இராஜ பத்தினிகளாகிய எல்லோர்களுக்கு மிது சம்மதி யாகலாமா? ஏனென்றால் குடும்பிகள் தாய்மார்களின் சம்மதியைக் கொண்டே பெண்களை மணஞ்செய்து கொடுத்தல் வேண்டும்" என்றார். (27) அதற்கு எல்லாஸ்திரீகளும் நல்லதென்றனுமதி கொடுக்கையில், மேனகையம்மாள் சிலவசனமுரைக்கின்றாள். "யாங்களோ அசேதனமாகிய (அறிவற்ற) ஸ்தாவரங்களென்று பெரும்பாலும் எல்லா ஜனங்களின் கொள்கை. (28) மூவுலகினிலும், தேவர்கள், விலங்குகள், மானிடர்கள், நாகர்கள் இவர்களில் விவேகிகளாயுள்ளவர்களுக்கு விசேஷமாக ராகத்துவேஷாதிகளான தோஷங்கள் மேலிட்டிருப்பது நன்றாய்ப் பார்க்கப்படுகிறது. (29) எல்லாப் பிராணிகளுடைய வார்த்தைகளிலும் பற்பல பேதங்களுள்ளன. அதிலும், ஒருவரோடொருவர் சம்மந்தம் செய்துகொள்ளுகிற இருதிறத்தார்க்குள்ளும், இராப்பகலா யொருவருக்கொருவர் சம்பவிக்கின்ற விசேஷமான, வார்த்தைகளின் வித்தியாசத்துக்கு உலகினில் எப்போதும் நிவர்த்தியில்லை. ($30\frac{1}{2}$) ஆகையால் எல்லாவிதத்திலும் சமமானவர்களுக்கே சம்மந்தம் சுகத்தைக் கொடுப்பதாகும். (31) எப்போதும் யானையின் பேரிலுள்ளவனுக்கு யானையின்பேரிலுள்ளோன் சுண்ணம்பு கொடுப்பதே தகுதியாகுமென்பது சருவஜன வதந்தியல்லவோ! (32) இத்தேவனே பிரபஞ்சங்களைச் சிருஷ்டிப்பவரும், மகாதேவனும், மகேசுவரனும், மகாகிராஸனும், ஜகங்களுக்கு மிருத்தியுவும், பவனும் (சகல ஜகங்களு மிவரிடத்து ண்டாகின்றது), மிருத்தியுவை வெற்றிபெற்றவனும், ஸ்ரீஹரனுமாகியவர்.(33) அவையெல்லாமிருக்கட்டும்; பின்னுமோவென்றால் நினைப்பதற்கஸாத்தியமாகிய இவரது சரித்திரத்தை, யிங்கு பிரம்மாதிதேவர் களுமறியார்கள். அநேகதேவர்களும், அசுரர்களும் இவரால்தண்டிக்கப் பட்டிருக்கின்றார்கள்.(34) இவரால், ஒருலீலா விநோதமாகவே, நகத்தினுல் பிரம்மாவினது * சிரசுகிள்ளு

* பிரம்மனது சிரசு கண்டிக்கப் பட்டதும் விஷ்ணுவின் அவதாரங்களெல்லாம் சிக்ஷிக்கப் பட்டவையுமான சரித்திரங்கள் தக்ஷகாண்டத்தில் விஸ்தரிக்கப் படுகின்றது.

படலாயிற்று. ஸ்ரீவிஷ்ணுவினுடைய நரசிங்கம் முதலிய அவதாரங் களெல்லாமிவரால்சிக்ஷிக்கப் பட்டிருக்கின்றன.(35) பிரபுக்களுடைய, அதைப்போன்ற கிருத்தியங்களையாங்கள் விசாரிப்பதற்குக்கூடத் தகுதியல்லவே. பிராம்மணோத்தமனும், யஜமானனும் (யாகம்செய்வதில் தலைமையானவன்), இவருக்கு மாமனாகியவனுமான தக்ஷப்பிரஜாபதியானவன் (36) வார்த்தைகளின் வித்தியாசத்தினாலே திருடன்போல் தலைவெட்டுண்டான். அவனது யாகத்திலுள்ள உருத்துவிக்குகள், சகலமுனிவர்கள், தேவசிரேஷ்டர்கள் முதலிய எல்லாச் சபையோர்கள்,(37) யாகம், அவ்வியாகத்துக்குரிய முக்கியதெய்வம், யாகம்செய்தவன், அவ்வியாக ரக்ஷகரான விஷ்ணு, மானுருவமெடுத்துத் தப்பியோடிய அவ்வியாகம் ஆகிய எல்லோர்களும் வீரபத்திரரால்தண்டிக்கப்பட்டார்கள்.(38) ஆகையால் எங்களது பெண்ணாகிய இக்குழந்தை மூலமாக யாங்கள் துயரமடையாமலிருக்கும்படிக்கும், குழந்தைக்குத் துக்கம் நேரிடில் சகிக்கமாளாத யாங்கள் சுகப்படும்படிக்கும்(39) தக்கபடி நீங்கள் அனேகம்முறையாக யோஜித்து முடிவுசெய்தல் வேண்டும்- மேலுமித் தேவாதிதேவனுக்குத் தாயில்லை, தந்தையில்லை, (40) சகோதரரில்லை, மித்திரனில்லை, சுற்றத்தாரில்லை, வமிசமில்லை, ஒன்றுமில்லை. இவ்வுருத்திர மூர்த்தியானவர் மற்றிரண்டாம் பெயருக்கிடமின்றி ஒண்டியாகவே நிற்கின்றார்; (41) இவ்வாறாகிய பிரபுவையும், அவருடைய அற்புதமான மகிமைகளையும் திரும்பத் திரும்ப யோஜிக்குமளவில், மனதினோர் பக்கத்தில் சந்துஷ்டியும், ஓர்பக்கத்தி லச்சமுமாக விருவகையிலும் மனம் குழம்பித் தடுமாறுகின்றது."(42) இவ்வாறாக அம்மேனையானவளுரைத்தபோது வஸிஷ்டரின் பாரியாகிய, உலகில் பிரசித்திகொண்ட அருந்ததியம்மையானவள், சிலாகிக்கப் படலுற்ற இமாராஜன் மனைவியை நோக்கிச் சொல்லுகின்றான்:—(43)

பதினாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கஎ—வது அத்தியாயத்தினர்த்தம்.

அருந்ததி சொல்லியதாவது:—"கேளாய்! மேனகே! இவருக்குந் தாயுமில்லை; தந்தையுமில்லை; இவரோ ஜகத்பிதா; எல்லோர்களுக்கும் ராஜாதிராஜன்; இவர் குபேரனுக்கு மித்திரர், (1) சகல ஈசுவரர்களுக்கு மீசுவரரென்றுப் பிரசித்திகொண்டவர், சகல ஐசுவரியங்களோடும் கூடியவர், சகல புவனங்களையு மாளுகின்றவர், எல்லாப்புவனங்களு மவர் மீது பயமடைகின்றது. (2) பெருமைபொருந்திய, பாதபக்ஷமற்றவர

சர்களால் தண்டிக்கத்தக்ககுற்றவாளிகள் சரியாய்த் தண்டிக்கப்படாவிட்டால் பலிஷ்டர்கள் குற்றமற்ற ஏழைகளை, மச்சங்களைச் சூலாயுதத்தில் சொருகுவதுபோல், வதைக்கலாவார்கள். (3) ஆகையால் கேளாய் நல்ல மனசுடைய மாதே! அரசர்களிடத்தில் யாவர் துரோகம் செய்கின்றார்களோ அவர்களைப் பூபாலர்கள் புத்திர,பசு, பந்துவர்க்கங்களுடன் தண்டிக்கத்தக்கதல்லவோ. (4) இப்பரமேசுவரனது மாமனாகிய தக்ஷனோ வென்றால், கற்புடைய தனது பெண்ணைக் கண்முன்னிற்கண்டும் கேவலம் மூடத்தன்மையாக, கொஞ்சமேனும் நிந்தைக்கிடமற்ற தேவேசனாகிய ஸ்ரீ பரமேசுவரனை, யாதொரு காரணமுமின்றிப் பலவாறாகத் தூஷித்தான். (5½) இக்குற்றத்துக்காகத் தான் அவன், யாகத்தின் ருத்துவிக்குகளோடு பலவிதமாய்த் தண்டிக்கப்பட்டான். (6) பிரம்மன் முதலிய தேவர்கள் தங்கள் குற்றத்திற்காகவே தண்டனையடைந்தார்கள். ஆகையால் நீ ஸ்ரீ மகேசுவரன்மீது இவ்வாறாக வெண்ணங்கொள்ளாதே. (7) கேளாய்! சுபகுணமங்காய்! எங்களது மொழிகளிற் சந்தேகமடையாதே. மேலும் மகாதேவனும், உலகுக்கெல்லாம் சுகமளிக்கின்ற சங்கரனும், (8) மிருடனும், சுமங்களமூர்த்தியும், சம்புவுமாகிய ஸ்ரீசதாசிவன்மீது வித்தியாசமான சந்தேகத்தையடையாதே. வாராய் சிறந்த மேனியாளே! யானுன்னைச் சிறந்ததவசியாக மதிக்கின்றேன். (9) ஸ்ரீ ருத்திரனுக்குப் பெண்ணைக்கொடுப்பதில் மிகபாக்கியசாலியும், ஜன்மத்துக்கு ஸபலமாகிய நல்வினையைச் செய்தவளுமாகின்றாய். இச்சப்தரிஷிகளோ பிரம்மவாதிகளென்றுப் பிரசித்திகொண்டவர்கள்;(10) அப்பரமேசுவரனையே யென்றும் பக்தியுடன் பாவிப்பவர்கள்; அவனையே சரணமாக அடைந்தவர்கள்; மிகவும் கருணைபொருந்திய அப்படிக்கொத்த இம்மகானுபாவர்களை வந்தனித்து, (11) "எனதிப்பெண்ணைச் சூலபாணியாகிய மகேசுவரனுக்கு யான் கொடுத்தல் வேண்டும்" என்று மூன்றுதடவை யுரைத்துச் சந்தோஷமாக வேண்டிக்கொள்." இவ்வாறாக அருந்ததி யுரைக்கலுற்றதை மேனகை கேட்டுத், தேவர்கள் வந்தனிக்கப்பெற்ற பரமசிவனை (12) யுண்மையிலறிந்து, சந்தேகந்தெளிந்து அத்திரிமுனிவர் முதலாகிய ஸப்தரிஷிகளை வந்தனித்து, "ஓ! முனீசுவரர்களே! உங்களது தங்கையாகிய யான், அறிவீனத்தாலிங்கு கூறலுற்றவைகளை மன்னித்து(13½) எனது குழந்தையை ஸ்ரீமகாதேவன்பாணிக்கிரகணம் செய்துகொள்ளும்படியான உபாயத்தை (14) மகாரிஷிகளாகிய தாங்கள் விளங்கச்செய்யவேண்டு" மென்று வேண்டிக்கொண்டனள். (14½) கிரிராஜன் மனைவியாகிய மேனகை யிவ்வாறாக நமஸ்கரித்துப் பிரார்த்திக்கலுற்றதை முனிவர்கள் கேட்டு, (15) அரசனைப்புகழ்ந்து அமரிக்கையான வார்த்தைகளுடன் கூறியதாவது:— "வாரீர்!பருவதராஜேந்திரனே! பார்வதியானவள் கனிகளைப் பெற்றுக்கொள்ளட்டும். (16) இப்போதிவளை மடிமீதேற்றிக்கொள்ளும்," என்றனர்கள்; அருந்ததியும், மற்ற ரிஷிபத்தினிகளு மங்ஙனமே யுரைத்தனர்கள். (17) பி

றகு கிரிராஜனும் கலியாணியை மடிமீதேற்றியபின்னர் அருந்ததியம்மாள் மற்ற ரிஷிபத்தினிகளோடு (18) இரண்டுகைகளாலும் பார்வதியம்மையுடைய விரண்டுகைகளிலும் கனிகளைக்கொடுத்து அவளுடைய பாதாரவிந்தத்தில் மனதினால் நமஸ்காரஞ் செய்தனள். ஏனென்றால் இவளோ உலகுக்கெல்லாம்தாய்; மகேசுவரனுடைய பாரியாள்; எல்லாச் சுபங்களையும்கொண்டவள்: (19) மற்றவர்க்குத் துர்லபமாகிய ஸ்ரீ சம்புவின் மடிமீது இவளே உட்காரத்தக்கவள்; இவளாலே ஸ்ரீபரமேசுவரனில்லறத்தார்; அவராலே யிவளில்லறத்தாள். (20) இவர்களது விளைந்த கிருத்தியங்களால் தான் பிரபஞ்சம் படைத்துக் காக்கப்படுகின்றது." பிறகு இமவானும் அவர்களெல்லோர்களையும் வந்தனித்து, அஞ்சலிகொண்டு (21) சொன்னதாவது:— "ஓ! முனீசுவரர்களே! எந்த தினம் சுபத்துக்குரியது? முகூர்த்தத்திற்கு எந்த நேரம் சந்திரபலம், தாராபலம் முதலியவை சுபமாயுள்ளது? (22) ஸ்ரீ மகாதேவன், இவள் இவ்விருவர்களுக்கும் இராசி, நக்ஷத்திரம், யோனி முதலாகிய பத்துவிதப் பொருத்தங்களு மிருக்கின்றனவாவென்று நன்காராய்ந்து எங்களுக்குச் சொல்லல்வேண்டும்;" (23) பிறகம்முனிவர்கள் ராஜனைநோக்கிச் சொல்லியதாவது:—– "நாளைதினம் உத்திரநக்ஷத்திரத்தில் மிகவும் சுபமான நல்வேளையிருக்கின்றது. (24) ஏழாமிடம் சுத்தமாயிருக்கிற ராசியில் ஸ்ரீமகாதேவனுக்குப் பார்வதிதேவியை தாராதத்தம்செய்துகொடுத்தல்வேண்டும். சகலப்பிரபஞ்சங்களுக்கு மினத்தோராகிய ஸ்ரீ மகேசுவரனுக்கு எல்லாப்பொருத்தமு மிருக்கின்றது. (25) வாரீர்! பருவதராஜனே! கலியாணமகோற்சவத்தைப் பார்க்க விரும்பி வாலுற்றவர்களை நன்காதரிப்பதற்குப் போதுமானசாமான்களை நிரம்பச் சேகரித்தல்வேண்டும்.(26) உமக்குச் சுபமுண்டாகக்கடவது; யாங்கள் போய்வருகின்றோம்; ஸ்ரீ மகேசுவரனுக்கு நாளைதினம் கலியாணம்" என்று சொல்லிய பின்னர் அம்முனிவர்கள் தேவாதிதேவனுடைய முன்னிலைக்குச் சென்றனர்கள். (27) அம்முனீசுவரர்கள் சென்றவுடன் இமராஜன் தனது பந்துக்கள், பெண்டீர்கள், மக்கள் முதலியவர்களுடன் கூடி ஸ்ரீ மகேசுவரனுக்கு மறுநாள் நடக்கவேண்டிய கலியாண மகோற்சவமானது எவ்வாறாக நிறைவேறுமோ? (28) (ஸ்திரீஜாதியாகிய) மேனகையால் ஸ்ரீ சம்புவுக்கு அவமரியாதை நேரிடாமல் யானெவ்வாறு நிர்வகித்து, அவர் பூஜியதையாய்த் திரும்பிச்செல்லுவாரோ? ஸ்தாவர ஜங்கம சுவரூபமாகிய யாவுமவருடைய திருவருளா லவையவைகளுக்கு வேண்டியவைகளைப்பெற்று சுகிகளாக எவ்வாறு கவலையற்றிருக்குமோ? நாளைக் கலியாணமகோற்சவத்தைப்பார்த்தானந்திக்கவாலுற்றவர்களுக்குப்போதுமானவிடம் எவ்வாறுண்டாகுமோ? தெரிகிலேனென்று பனியடிவாரத்தையுடைய இமராஜன் மனக்கலக்கமுற்றான்.-(29-30) பிறகுஇவனது மைந்தனாகிய மைநாகனென்றவன் அரசனுக்குச்சொல்லியதாவது:— "வாரீர்! தந்தையே! சீக்கிரத்தில் துவஷ்டா (விசுவகருமா வென்ற தேவத்

தச்சன்;) வைத் தருவித்து ஸ்ரீ ஸர்வேசுவரனுக்குத் தகுதியான மகாபெரிதாகிய கலியாண-மண்டப வேலையைத் தவக்கமின்றி முடிப்பித்தல் வேண்டும்." (31½) என்றவன் சொல்லியதைக்கேட்டுப் பருவதராஜனும் ஸந்தோஷசித்தனாகச் (32) சுவர்க்கலோகத்திய சிற்பிகளில் முதன்மையான தச்சனை யழைப்பிக்கத் துவஷ்டாவானவன் கிரிராஜன் முன்னிலையில் கைகட்டி வந்துநின்றான்.(33) அரசனுமவனை மரியாதையுடனழைத்து, ஆசனம், அர்க்கியம் முதலியவற்றா லுபசரித்து அவ்விசுவகர்மனை நோக்கி அன்புடன் சொலலியதாவது:— (34) "நீர் சுவர்க்கலோகத்திய சிற்பிகளுக் கெல்லாம் தலைவரல்லவோ! யான் நாளைதினத்தில் எனது புதல்வியாகிய பார்வதியை ஜகங்களுக்கு நாதனும், சுபத்தையளிப்போனுமாகிய சிவபெருமானுக்குக் கலியாணஞ்செய்துகொடுக்கப்போகின்றேன்.(35) அதற்காக நீர்,மிகவும் அற்புதமானதும், அதிக விஸ்தாரமுள்ளதும் விசித்திரங்களால் நிரம்பியதும், அனேக சித்திரப் பதுமைகளோடு ஏராளமான கட்டிடங்களுடன் கூடயதும், (36) இதற்கொப்பாக மற்றயாவையும் சொல்லத்தகாததுமான கலியாணமண்டபத்தைத் தகுந்தமுயற்சியுடன் சீக்கிரத்தி லமைத்தல்வேண்டும்." என்றுரைத்துச் சந்தனம், புஷ்பம், வஸ்திரம்முதலியவற்றால் அவனுக்கு வெகுமதிசெய்தனன். (37) பிறகு அவ்விசுவகரும் சிற்பியானவன் மனக்களிப்புற்றவனாக, முற்றும் பரபரப்புடன் சீக்கிரமாய் நினைத்தமாத்திரத்தில் இரத்தினங்களாலிழைத் தமைக்கப்பட்ட கலியாணமண்டபத்தைக் கட்டிமுடித்தனன்:— (38) நீளத்திலிலக்ஷம் யோஜனை யகலத்திலிலக்ஷம்யோஜனை விஸ்தாரத்துடன் பிரகாசமாய் விளங்கியதும், அகண்ட வனேக கட்டிடங்களால் சோபிப்பதும், (39) ஆயிரமந்தஸ்துமெத்தைக் கட்டிடங்களடங்கிய பலஉப்பரிகைகளாகாயத்தை யளாவி நிற்கப் பெற்றதும், சிலவிடங்களில், தெண்ணீர் போன்ற நீரோட்டம் பொருந்திய இரத்தினங்களை யிழைத்திருக்கின்ற வேலைத்திறமையால் (40) அலைகள் கரையில் மோதப்பெற்ற கடலை யொற்றதும், சிலவிடங்களில் தரையென்று பிரமிக்கலுற்ற வனேகம் நீர்க்கால்களால் நிறைந்ததும், (41) சிலவிடங்களில் வாசற்படியென்று மதிக்கலுற்ற பலசுவற்றின் மதிகளால் நேர்த்தியானதும், சிலவிடங்களில் சுவறுவைத் திருப்பவை போல்தோன்றிய வனேகம் வாசற்படி வரிசை களாலற்புதமாகியதும்,(42) சிலவிடத்தில்சுவறுக ளிடை வெளிபோல் தோன்றுவதும்,சிலவிடத்திலிடை வெளிகள் சுவறுபோல் தோன்றுவதும், சிலவிடத்தில் கம்பங்கள் போல் தோன்றிய இடைவெளிவரிசைகளால் மாக்ஷிமை பெற்றதும், (43) சிலவிடத்தி லிடைவெளிகள் போல்தோன்றிய பலகம்பங்களால் சுற்றிலும் லங்கரிக்கப் பட்டதும், அனேகவித ரத்தினங்களா லமைக்கப் பட்ட கம்பவரிசைகளைக் கொண்ட பலமண்டபங்களால் சோபிக்கலுற்றதும், (44) முத்துமணிகளா லமைக்கப்பட்ட பல கவாக்ஷங்களைப் (ஜன்னல்) பெற்றதும், வாசற்படிகளில் சிறந்த பலபவழ

த்தோரணங்கள் கட்டப் பெற்றதும், வைரங்களாலிழைக்கப் பெற்றபடிகளை யுடையதும், தெளிவான படிகத்திண்ணைகளையுடையதும், (45) அதிற் கட்டிய மிகவுயர்ந்த துவஜத்தின் நுணியானது சூரியனுடைய மார்க்கத்தை மறைக்கப் பெற்றதும், அநேகம் பெரிய விருக்ஷங்களால் நிறையப்பட்ட சுற்றுமதிலின் நுணியால் சிறப்புற்றதுமான,(46) இங்ஙனமாகிய, அனேகம் விசித்திரங்களால் நிறைந்த கலியாண மகாமண்டபத்தை ஆநந்தத்துடன் மனதினாலமைத்து, விசுவகருமன் மிகவாதரவுடன் கிரிராஜனுக்குக் காண்பித்தனன். (47)

பதினேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம்௰அ—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு அவ்விமவான் தனது குமாரியது திருக் கலியாண மண்டபத்தைப்பார்த்து அப்போது துவஷ்டாவுக்கு மிகவற்புதமாகிய,சிறந்த வெகுமதிகளா லுபசரித்து, (1) அவனை, நாளைக்கு நடக்கிற கலியாண மகோற்சவத்திற்கு வரும்படி வேண்டிச் சந்தோஷமாயனுப்பிய பின்னர் சீக்கிரத்தில் கௌரியம்மாளைத் திவ்வியமாகிய சந்தனம், புஷ்பம் முதலிய வற்றால் (2) மங்கையர்கள் சிங்காரிக்கட்டும் என்றனர். பிறகக் கட்டளைக் கமைந்து மரைமலரை யொற்ற கண்களையுடைய மங்கைமார்க ளெல்லோர்களும் (3) அச்சுமங்களா தேவிக்குச்சிறந்த மங்களாபரணங்களால் சீக்கிரத்தில லங்கரித்து அவ்வம்மனைத் திருமணமனை மீதுட்காரவித்துப்பாடி, (4) சங்கம், சிருங்கம், மிருதங்கம், துந்துபி யிவ்வாத்தியங்களின் முழக்கங் களுடன் கிழக்குமுகமாய் வீற்றிருந்த, நீண்ட கண்களை யுடைய அவ்வம்மனுக்கு அப்பியங்கம் (எண்ணெயிடுதல்) செய்வித்தார்கள். (5) பிறகு அகண்ட விழிகொண்ட அவ்வம்பிகையை வென்னீரால் ஸ்நாநம் செய்வித்து சம்பாவரிசி, வெள்ளலொத்தி, பச்சைப் பயறு இவைகளின் பொடிகளாற் செய்வித்த நேர்த்தியான இரஸங்களினாலும், (6) நல்ல நிர்மல, மங்கள, பரிமள, சீதள ஜலங்களாலும், கங்கை, யமுனை, நான்கு சமுத்திரங்கள் முதலியவைகளின் (7) சகல புண்ணிய தீர்த்தங்களாலும், அழகிய கேசபாசத்தை யுடைய, சந்திர பிம்பம் போன்ற திருமுகத்தையுடைய தேவிக்கு ஸ்நாநஞ் செய்வித்தார்கள். அப்போது பெரியோர்களும் வித்துவான்களுமாகிய மறையோர்கள் தேவீ ஸூக்த மென்ற வேதமந்திரங்களை ஜபித்தார்கள். (8) அப்போது சகல லோக

ங்களிலும் கலியாணவைபவ முழக்கமுண்டாயிற்று. அனேக ரிஷிபத்தி னிகள், தேவபத்தினிகள், (9) அதிதி, திதி, ஸுபர்ணி, ஸுரஸை, ஸ்வாஹா, ஸ்வதா, அநஸூயை, கார்கி ஆகிய இத்தேவிமார்களும், ஸாக்ஷாத் அருந்ததியம்மாளும், மற்றுமுள்ள எல்லோர்களும் (10) ஸர்வலோகங்களுக்குமீசுவரியும், தாயுமாகிய பரதேவதைக்குப்பொற்குடங்களால் மெல்ல மெல்ல ஸ்நானம் செய்வித்து (11) பிறகு மெல்லியதாகிய சுத்த வஸ்திரத்தினால், அழகிய கேசத்தையும், மரைமலர்போன்ற கண்களையுமுடைய வம்பிகைக்கு மெதுவாய்த் துவட்டித் துடைத்துச்சீக்கிரத்தில் முடித்தனர்கள். (12) மேன்மையும், மங்களகரம் பொருந்தியவையுமான விரண்டு பட்டுவஸ்திரங்களில் ஒன்றையிடையிலுடுத்தி மற்றொன்றை மேலாக்கிட்டு, அலங்கரிப்பதில் மிகவும் திறமைபெற்ற மங்கையர்கள் அம்பிகைக்குப்பாதம்முதல் உச்சிவரையில் சிங்காரித்துவிட்டார்கள். (13) தாமரைமலர்போல் கோமளமாகிய தேவியது பாதங்களில் புதியகொம்பரக்குச் செம்பஞ்சுக் குழம்புகளால், திருமணக்கோலத்திற் கேற்றபடியாலஸியமின்றி சாயமிட்டு (14) "அம்மணி! ஸ்ரீ ஜகதீசனுடைய சிரமீது விளங்கிய சந்திரகலையின் பக்கத்தில், தாமரைமலர்போல் கோமளமாகின்ற இப்பாதங்களையும் வைக்கலாவாய்" என்று பூஜிக்கப் படலுற்ற பார்வதியம்மனைப் பரிகாசமாகச் சொன்னார்கள். (15) அப்போது கிரிராஜபுத்திரியு மவர்களெல்லோர்களையும் புன்னகைப்புடனுற்றுநோக்கி யம்மங்கையர்களை மரைமலராலடித்தனள். (16) இரத்தினங்களிழைத்த தண்டைகளையும், மங்களகரமாகிய பொற் பாத சரங்களையும் அவ்வம்மனது காலில்பூட்டினார்கள். இடையாபரணமாகிய அரைநூல்மாலையைப்பூண்ட அழகிய மெலிந்த விடையையுடைய வம்மனது இடையானது(17) ஸ்ரீபரமேசுவரனுடையவிழிகளாகியவலியன்குருவிகளை பிடிக்கவிருப்பமுற்றுவலையைப்பற்றியதுபோல்விளங்கிற்று. பலவித ஆபரணங்களைப்பூண்ட அகண்ட கண்களையுடைய அம்மனது இரண்டுகைகளும் (18) மச்சக்கொடியோனாகிய மன்மதனால் ஸ்ரீமகேசுவரனுடைய கழுத்து மீது கட்டப்படுவதற் கமைக்கப்பட்ட விரண்டு பாசங்கள் (கயிறு) போல் விளங்கின. பலவித ஆபரணங்களால் நேர்த்தியான மெலிந்த திருமேனியுடைய வம்மனது சரீரமானது (19) இந்திரதனு சின் (வானவில்) அனேகம் துணுக்குகளால் நிறையலுற்ற ஆகாயம்போல் விளங்கிற்று. அநேக இரத்தினமாலைகளணியப்பெற்ற, (மலர்பருவத்திலான) தாமரைமொட்டுகள் போன்ற விரண்டு கொங்கைகளும் (20) மத்தியில் நீலரத்தினத்தைக்கொண்ட பெரியமாணிக்க ரத்தினமானது நுனியில் நீல வர்ணத்தைக் கொண்டதுபோல் விளங்கின. அநேகம மோ

ருயாலைகளால் ( தங்கநாணயம் ) மறைக்கப் பட்ட தேவியினுடைய மார்பானது இந்திர தனுசோடுகூடிய, மாரிகாலத்திலான அநேக மேகங்களையுடைய வானம்போல் விளங்கிற்று. தேவியினுடைய உதடானது நன்கு முதிர்ந்த கோவைக்கனிபோல் சிவந்த நிறமுடையதாகவிளங்கிற்று. (22) தேவியினுடைய மூக்கு நுனியில், உயர்ந்த முத்துக்களைத் தங்கத்தோடிசைத்து விசித்திரமாயமைக்கப் பட்ட புல்லாக்கு அல்லது நத்து என்ற ஆபரணத்தை யிட்டிருப்பதானது ஸாயங்காலத்திய மேகத்தின்துணுக்குகளோடு கூடிய சந்திரமண்டலம் போல் பிரகாசித்தது. (23½) காதுகளி லிடப்பட்ட வாளி, ஜம்பஸரம், கம்மல் முதலிய சிறந்த வாபரணங்களின் காந்தியினால் அம்பிகையினுடைய திருமுகமானது (24) அப்போதுமிகவும் ஒப்பற்ற சோபையைக்கொண்டது. அம்பிகையின்கூந்தல் முடிச்சானது புஷ்பஸரங்களால் சுற்றப்பட்டுவிளங்கிற்று. (25) நெத்தியோவென்றால் முன்னெத்திமயிர்க்கடையில் விளங்கியமுத்துஸரத்தினால் சிறக்கலுற்றது. நேர்த்தியாய் மையிடப்பட்ட விரண்டு கண்களின் புருவங்களும் (26) அம்போடுகூடியமன்மதனது இரண்டுதனுசுகள்போல் விளங்கின. இந்தப்பிரகாரமாக அம்பிகையினுடைய சிரசுமுதல்பாதம்வரையில் மதிப்பிலடங்காத பலநவரத்தினாபரணங்களா லலங்கரிக்கப்பட்டது. (27) ஆனால், இயற்கையாகவே மிகசௌந்தரியமுள்ள தேவியினுடைய திருமேனியில் சம்பந்தப்பட்டதால் இவ்வாபரணங்களுக்கு அதிகசோபையுண்டாயிற்றேயன்றி ஆபரணங்கள் அவளுடைய திருமேனியழகை யதிகப்படுத்துவதற்கிடமில்லை. அப்போதுஎல்லோர்களும், அம்பிகையது திருமேனியினெவ்வொரு அவயவத்தினுடைய ரூபலாவண்ணிய சௌந்தரியங்களையு முற்றுநோக்குங்கால் (28) இவளாலேஜகதீசனில்லறத்தாரும், அவ்வீசனால் இவளில் லறத்தாளுமாகியதில் மூவுலகினிலும் இவர்களுக்கிடான தம்பதியிவர்களேயின்றி வேறில்லையென்று மதித்தனர்கள்.(29) பிறகு அம்மங்கையர்களும் அரசனிடத்தில் குழந்தைக்கலங்காரம் செய்துமுடித்ததைத் தெரியப்படுத்தியதின்பேரில் இமராஜன், எட்டுவித விவாகங்களிலுத்தமமான பிராம்மவிவாகத்தில் வரனைவலியஅழைத்துக் கன்னிகையைக்கொடுக்கும்படி விதிக்கப்பட்டிருப்பதால், ஸ்ரீபரமேசுவரனிடத்துச் செல்லஎண்ணமுற்று சூரியன்உத்தராயணகாலத்திலக்கமனம்செய்கிறமார்க்கத்தின்வழியாய்ச்சீக்கிரத்திலாதாவுடன்(30-31) காலகூடவிஷத்தால் கழுத்தினிற்கறுப்புடைய மகேசுவரனது கைலைகிரிக்குச்சென்று, அங்கு இரத்தின மதில்களால் சோபித்து நிற்கின்றவும், (32) ஆயிரம்கட்டு மேல்மெத்தைகளையுடைய உப்பரிகையுள்ள

மண்டபங்களால்விளங்கிநிற்கின்றவும், மிகநேர்த்தியாய்ப்பிரகாசிக்கின்றவுமான போகபுரத்தில், சகலபுவனங்களுக்கும் ராஜாதிராஜனுகிய ஸ்ரீசங்கரப்பெருமான் வீற்றிருக்கின்ற (33) மாளிகையின்முதலாவதுகோபுர வாசற்படியையடைந்து அங்குவீற்றுநின்ற, பிரமத கணங்களுக்கு அதிபரும், சாலங்காயனரென்ற யோகீசுவரருக்குப் பேரப்பிள்ளையுமாகிய ஸ்ரீநந்திகேசுவரப்பிரபுவை(34) வந்தனித்து, அவர்முன்பாகத் தெரியப்படுத்திக் கொண்டதாவது:— "வாரீர்சகலகுணங்களும் பொருந்திய பிரபுவாகிய நந்திகேசுவரா! பிராம்மணப்பிரபுவாகிய ஸ்ரீபரமேசுவரனுக்கு எனதுகுமாரியை பிராம்மவிவாகமுறைப்படி வலியப்பிரார்த்தித்தழைத்துத்திருமணம்செய்து கொடுப்பதாக என்னுடையபிரார்த்தனை. (35-36) ஆகையால்பிரபுவைத் தரிசிக்கவேண்டியவனுக வும்மைச்சரணமடைகின்றேன்" என்றனர். பிறகு நந்திபகவானும் ஸ்ரீமகேசுவரனிடத்துச் சென்றுஉத்திரவுபெற்று (37) கிரிராஜனைநொடிக்குள் ஸ்ரீபரமேசுவரனருகிற் சேர்ப்பித்தனர். (37½) அங்கு, மகாமேருகிரியைவில்லாகக்கொண்டவரும், மூவுலகையும் பாதுகாப்பதில் விழித்திருப்பவரும், முக்கண்ணனும், ஸநகாதிமகா யோகிந்திரர்களாலருகில்சூழப்பெற்றவரும், கனத்தபிரபுவும், அற்புதஸிம்மாசனத்தில் வீற்றிருக்கின்றவருமான ஸ்ரீஸதாசிவனையிமராஜன் (39) மிகுந்தபக்தியுடன் வந்தனித்து, துதிக்கப்படுவதற்குப்பாத்திரராகிய அவ்வீசுவரனைத்துதித்ததாவது:— "ஓ! மகாதேவா; பரமாநந்தமூர்த்தியே! சகலபுவனங்களுக்கு மதிபதியே! (40) சகலசுராசுரேந்திரர்களாலும் பூஜிக்கப்பட்டபாதாரவிந்தங்களையுடையவரே! பரவஸ்துகளுக்கெல்லாம் பரவஸ்துவே! அண்டியவர்களது துக்கமாகியகோடைக்கு முக்கியமான மாரிகாலமாகியவரே! கங்கையைச் சடையிற்தரித்தவரே! ஜயாவிஜயீபவா! (41) இச்சகமதில் தேவர்களுமசுரர்களு மும்மைப்பூஜித்தே மிகுந்தஐசுவரியங்களைப் பெற்றிருக்கின்றார்கள்; உம்முடைய பாதாரவிந்தத்தைப் பூஜைசெய்யாத பேதையர்களே துர்க்கதியையடைந்து துன்பப்படுகிறார்கள். (42) சுமங்களமூர்த்தியாகிய தேவரீரை யசட்டைசெய்கின்ற இம்மடையர்களேயென்றும் மங்களமற்றுநிற்கின்றார்கள். சகலருக்குமீசுவரனுகியவரே! சருவமங்களராகியவும், ஸகலலோகங்களுக்கும் ஸகலஅபீஷ்டங்களையும் கைவிடாது கொடுப்பவருமாகிய, தேவரீரை யான் சரணமடைகின்றேன்; மகாமேன்மைபொருந்தியவரும், என்றுமிறப்பற்றவருமாகியவும்மையிரப்போனுக வுற்றிருக்கின்றேன். (43-44) ஓ! இரப்பதைக் காட்டிலும் மிகுதியாக வீகின்றபிரபுவே! எனதிரக்குதலைச் சீக்கிரத்தில் பூர்த்திசெய்யவேண்டும்" என்றனன். இவ்வாறுக வடிக்கடிவந்தனிக்கின்ற அரசனைநோக்கி (45) பிரபுக்களுக்குரிய தன்மையோடுகூடிய உதா

ரமான வசனங்களா லுரைத்ததாவது:— "இமராஜனே யெழுந்திரு மெழுந்திரும்; உமக்கு மங்களமுண்டாகக்கடவது; உமக்குவேண்டியவ ரனை யீந்தருளுகின்றோம். (46) சீக்கிரத்திலுமக்கிப்போது வேண்டியவரனைக்கேட்பீராக(46½)

பதினெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் கக—வது அத்தியாயத்தினர்த்தம்.

இமராஜன் சொல்லுகின்றான்:—" ஓ! திருபுரர்களை யெரித்தஜகதீசா! உமக்கு எனது பெண்ணை மணம்புரிவிக்கக் காமுறுகின்றேன். தேவரீர், விஷ்ணுப்பிரம்மர்கள் முதலிய தேவர்களுடனும், சகலரிஷீசுவரர்களுடனும் எனது ஓஷதிப்பிரஸ்தமென்ற பட்டணத்துக் கிப்போதே வந்து நாளைதினம் காலமே யவளைப் பாணிக்கிரகணம் செய்துகொள்ளல்வேண்டும். (1-2) இவ்விதமாக இமவான் கேட்டுக்கொண்டதன் பேரில் பிரபுவானவர் நல்லதென்று சம்மதித்துச் சந்தோஷ மனதுடனவனைப் போகும்படி யனுப்பினர். (3) இமராஜன் போனபிறகு முன்னின்ற நந்திகேசுவரனை நோக்கிப் பிரபு வுரைத்ததாவது:—"வாராய் கணங்களுக்கெல்லாம் தலைவனாகிய நந்திகேசுவரா! அண்டங்கள்தோறுமிருக்கின்ற, அளவற்ற காந்தியுடைய, வெகு பராக்கிரமசாலிகளாகிய, நமதேராளமாகிய கணாதிபர்களையும், தேவர்கள், ஸாத்தியர்கள், விசுவேதேவர்கள், சகல ரிஷீசுவர்கள், (4-5) இவர்களையும் சீக்கிரத்தில் நமது கட்டளையின்படி யிப்போதே ஓர் நொடிக்குள் தருவிப்பாய்;" என்ற ஈசன் கட்டளையை, ஸ்ரீ சங்காருக்கு அன்புள்ள நந்திகேசுவரனானவர் சிரமீதிற்கொண்டு, (6) ஒரு முகூர்த்த நேரம் மனதை நிலைநிறுத்தி ஸந்தோஷத்துடன் கணாதிபர்களை நினைத்தனர். மேலும் இந்திரன், வருணன்,திக்பாலர்முதலியதேவர்கள்எல்லாப்பிரஜாபதிகள்(7) ஏகாதச(பதினொன்று)ருத்திரர்கள்துவாதசா(பனிரண்டு)தித்தியர்கள்,அஷ்ட(எட்டு) வஸுக்கள்,விசுவேதேவர்கள்,ஸாத்தியர்கள்,பிதுருக்கள்,(8) உலகுக்காதியாகிய ஸ்ரீநாராயணன், அவரது பத்து அவதாரங்கள், சாக்ஷாத்நான்முகத்தேவனாகிய பிரம்மா,(9) பாதாளலோகவாஸிகளாகிய, தனுவின் பிள்ளைகளான சகல அசுரர்கள், எட்டு மகாநாகங்கள், மகா பலிஷ்டர்களாகிய, கத்துருவின் மக்களான, அசுரர்கள், (10) அநந்தன், வாஸுகி, கார்க்கோடகன், மஹோரகன், கம்பளன், அசுவதரன், நாகங்களின் தலைவனாகிய தக்ஷகன், (11) சங்கபாலன், மகாபத்மன் இவர்களெல்லோர்களையும் கணத்தலைவராகிய நந்திகேசுவரர் நினைத்தனர். பின்னும், வி

ரோசனன், பலி, நமுசி, வலன், (12) மகாஜம்பன், ஜம்பன், ஹயக்கிரீவன், பாதாளலோக வாசிகளாகிய இன்னும்மற்ற, திதியின்மக்கள்களும், தனுவின் மக்கள்களுமாகிய அசுரர்கள், (13) பாதாளலோகத்திலிருக்கின்ற, ஹாடகேசுவரருத்திரருடைய ஆளுகையிலுள்ள மற்ற கணங்கள், கூசுமாண்ட ருத்திரருடைய கணத்தலைவர்கள், டானுகம்பன், மகாபலி, (14) ஜகங்களுக்கு மங்களமாகியவரும்,பத்திரகாளிக்கு நேசனுமாகிய வீரபத்திரன், பூதகணங்கள், பிரமதகணங்கள் முதலிய சகல கணங்களினதிபர்கள், (15) மகாபலன், மகாபாகு, மதுபிங்கன், பிங்களன், சதுர்வக்திரன், பூதகணங்கள், பிரமதகணங்களின் கோடி கோடிகளாகிய தலைவர்கள், (16) கருணன், பூரஹாகன், பஞ்சாக்ஷன், சதமனியு, ஸாகேசன், காஷ்டகூடன், விருஷன், மேகபிருதன், (17) விசுவரூபன், விரூபாக்ஷன், தாலகேது, *சதானனன், இன்னும் மற்றஎண்ணற்ற கணங்களையும் நந்திகேசுவரர் நினைத்தனர். (18) தேவாதிதேவரானவர், கலியாணத்துக்காகத் தருவிக்கும்படி யெச்சரித்ததைச் சிரமீதிற்கொண்டு சிலாத சுதனானவர் கோடி கோடிகளாகிய கலைகள், முகூர்த்தங்கள், காஷ்டைகள், தினங்கள், திதிகள், பக்ஷங்கள், (19) அரைமாதங்கள், மாதங்கள், ருதுக்கள், வருஷங்கள், கங்கை முதலிய சகல நதிகள், சமுத்திரங்கள், ஓடைகள், (20) இச்சகத்திலின்னும் மற்றப்படி பார்க்கப்பட்டவைகள், அனுமானிக்கப்பட்டவைகள், கேட்கப்பட்டவைகள், இவையெல்லாவற்றையும் ஸ்ரீ பரமேசுவரனுடைய கலியாணத்துக்காக (21) மனதினால் நினைத்து, ஜகத்பதியாகிய நந்திக்கடவுளுடனே அழைத்தனர். இதற்கிடையில், பிரபுவைத் தரிசிப்பதற்கு இதுதான் நல்லசமயமென்று தேவர்களுக்கு அறிவிப்பதற்கானதுபோல் சமயக்குறிவாத்தியத்தினுடைய முழக்கத்தின் பேரொலியானது உண்டாயிற்று. (22½) பிறகு விஷ்ணுமுதலிய தேவர்கள் அப்போதவ்வொலியைக் கேட்டு (23) கலியாணமகோற்சவத்தினுடைய பெருங்காக்ஷியைப் பார்ப்பதிலாவல்கொண்டவர்களாக வரலுற்றார்கள். (23½) ஸ்ரீஹரியானவர் சமுத்திரபுத்திரியாகிய இலக்ஷுமிதேவியோடுகூட ஸாக்ஷாத் வேதசுவரூபராகிய மகாபராக்கிரமசாலியான கருடன்பேரிலேறிக்கொண்டு தமது சகல கணங்களுடனும் பிரபஞ்சத்துக்கு ஆதிதம்பதியாகிய ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களைப் பார்ப்பதற்காக மிக வாதரவோடு வந்தருளினர். (25) ஜகத்சுவரூபியானநான்முகப்பிரம்மனும் மான் பேட்டினது விழிகளைப்போன்ற கண்களைக்கொண்ட பெருமைபொருந்திய ஸரஸ்வதியுடன் சிறந்த வன்னத்தின்மீதேறி, (26) மகா பெருமைதங்கிய மற்ற ஒன்பது சிருஷ்

---

* ஸ்ரீபரப்பிரம்ம சுவரூபியாகிய ஸதாசிவ மூர்த்தியானவர் சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரமென்ற மூன்றுவிதத் தொழிலை நடத்துவதற்காக மூன்று குணமூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களாக அவதரித்திருப்பதில் சமுகாரத் தொழிலுக்காக வேற்பட்ட ருத்திரமூர்த்தி யென்பவ ரிக்காலாக்கினி ருத்திரரென்றவர்தான்.

டிகர்த்தர்களுடனும், உருவம்கொண்ட, வேதங்கள், ஆகமங்கள், வித்தைகள், முதலாகிய கணங்களுடனும், (27) ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களுக்குக் கலியாணமென்று ஸ்ரீ சூலபாணியது சன்னிதிக்குற்றனர். இந்திரன், புலோமாவின் பெண்ணாகிய இந்திராணியுடன் நான்கு கொம்புகளையுடைய, நேர்த்தியான வெள்ளையானைமீதேறி தமது மித்திரர்கள், (28½) துவாதசாதித் தியர்கள், அசுவினிதேவர்கள் இவர்களால் விளங்கவுற்றவனாகவும்,(29) முப்பத்துமுக்கோடி தேவர்களால்புகழப்பட்டவனாகவும், விசுவேதேவர்கள், சாத்தியர்கள், எப்போதும் பரப்பிரம்மத்தையே யுணைத்துநிற்கின்ற முனிவர்கள் (30) இவர்களுடனும் ஆயிரம்கண்களையுடையவனாக ஸ்ரீஜகதீசனைத்தம்பதிசஹிதராய்க் காக்ஷிபெறுவதற்காக கைலைக்கு வரலுற்றான். இவ்வாறாகவே அக்கினிதேவன், இயமன், நிருருதி, வருணன், வாயு, (31) குபேரன், ஈசானியன், ஆகிய எல்லா திக்பாலர்களும் ஸ்ரீபரமேசுவர சன்னிதானத்துக் கேகினர்கள்.(31½)

பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உ௰—வது அத்தியாயத்தினர்த்தம்.

சகல ஸ்தாவரஜங்கம சுவரூபிகளாகிய ஜீவாத்துமா, அந்தராத்துமா, பரமாத்துமாவாகிய எல்லாஜீவராசிகளும் வந்தன. (1) மகாபராக்கிரமசாலிகளாகிய ஆறுயிரத்தறுநூறுகோடி அசுரர்களும், பாதாளலோகங்ளிலுள்ள நாகர்களும்,(2) ஸகல ஜகங்களுக்கும் ஆதாரபூதரான, அளவற்ற காந்தியையுடைய * ஸ்ரீ காலாக்கினி ருத்திரபகவானும் தமக்குச் சரியான பராக்கிரமங்களையுடைய அநந்தகோடி கணாதிபர்களுடன் (3) ருத்திராணியென்ற தேவியுடன் கூடியவராக ஸ்ரீ மகாதேவர் ஸன்னிதானத்துக்கு வந்தனர். மகாபலசாலியான ஹாடகேசுவர ருத்திரரானவர் தமக்கொப்பான உருவங்கொண்டவர்களாகிய பத்துலக்ஷங்கொடி கணாதிபர்களோடு வந்தனர். (4½) இலக்ஷ்மீ விலாஸம் பொருந்திய கூசுமாண்டனென்ற ருத்திரகணாதிபதியானவர் தமது கோடி கோடி கணங்களோடு (5) கலியாண மகோற்சவத்தைப் பார்க்க விருப்பமுற்றவராக ஸ்ரீ பரமசிவனுடைய சன்னிதானத்துக்கேகினர். இரக்தவர்ணனென்பவர் பத்துகோடி கோடி கணங்களோடும், (6) கேஸராக்ஷனென்பவர் ஆயிரங்கோடி கோடிகணங்களுடனும் மகோற்சவத்தைப் பார்ப்பதிலாசையுற்றவர்களாகச் சிவசன்னிதியை யடைந்தார்கள். (7) வைத்தியுதனென்றவர் நிர்மலர்களாகியவும் முக்தியடைந்தவர்களுமாகிய எட்டுகோடி கோடி கோடிகணங்களுடன் மகோற்சவத்துக்காகச் சந்தோஷத்துடன்

வந்தார். (8) விசாகனென்பவர் அவித்தை முதலிய சகல கிலேசங்களி னின்றும் விடுபட்டவர்களான இலக்ஷம் கோடி கோடி கோடி கணங் களுடன் சிவசன்னிதிக்கு வந்தார். (9) சகல குணங்களும் பொருந்தி ய பாரியாத்திரனென்பவர் தமது ஆயிரங்கோடிப் பிரமத கணங்களுடன் உள்ளம் குளிர்ந்தவராக ஈசுவர சன்னிதானத்துக்கு வந்தார். (10) ஸர் வஞ்ஞரும், ஸர்வமும் சிவசுவரூபமென்று கருதியவருமான ஸர்வாநகர் என்பவர் தமது கோடி கோடி கோடி கணங்களுடன் சிவனருகில் வந் தார். (11) விகுருதாஸியனென்பவர் இராகதுவேஷங்களற்ற பலவிதங் களாகிய அனேககோடி கணாதிபர்களுடன் ஸ்ரீ சூலபாணியுடைய சன் னிதிக்குவந்தார். (12) லோகாலோக பருவதத்தில் வாசஞ்செய்கிற, ம காபராக்கிரமசாலியாகிய ஜ்வாலாகேசனென்றவர் கைகளிற் சூலங்களை ய யைப்பற்றிய தேவர்களுடன் தேவாதிதேவனுடைய பக்கத்துக் கேகி னர். (13) மஹாமஹிமைபொருந்திய ஸமதனென்பவர் மதத்தோடு கூ டிய தனது சைனியங்களுடன் பாதிச் சந்திரனை யுச்சியிற்பூண்ட பரம சிவ சன்னிதானத்துக்குச் சீக்கிரத்தில் வந்தார். (14) துந்துபிவாத்திய வரிசைகளுடைய ஓசையினால் சமுத்திரத்தினோசையை வெல்லப்பெ ற்ற துந்துபியென்பவர் எண்ணற்ற தமது சைனியங்களுடன் என்று மழிவற்ற ஸ்ரீ மகேசுவரனுடைய சன்னிதிக்கு வந்தனர். (15) மண் டையோட்டுமாலைகளை யாபரணமாய்ப் பூண்ட மிக மகிமைபொருந்திய கபாலீசனென்றவர் தமது ஆயிரம்கோடி கோடி சைனியங்களால் சூழப் பட்டவராக பிரம்மனுடைய மண்டையோட்டைப் பூண்ட ஜகதீசனுடை ய ஸன்னிதியில் தோன்றினர். (16) ஸமுஹ்லாதனென்பவர், பாவங்களி னின்று விடுபட்ட தமது இலக்ஷம்கோடி கோடி கணாதிபர்களுடன் ச ந்திரனைப்பூஷணமாகக் கொண்ட சங்கரனது சன்னிதிக்குச் சென்றனர். (17) ஸ்ரீ ருத்திரமூர்த்திக்குச் சமானமாகிய அண்டகனென்பவர் நூறு கோடி கோடி ருத்திரர்களுடன்சருவ ஜகத்பதியாகிய ஸ்ரீ ருத்திரருடை ய சன்னிதிக்குற்றனர். (18) கும்பகனென்றவர் இந்திரன் துதிக்கப்பெ ற்ற தமது கோடி கோடி கணங்களுடன், மன்மதனைத் தண்டித்த மகா தேவனுடைய சன்னிதிக்கு வந்தனர். (19) மகா மகிமைபெற்ற, மத கனென்ற பிரமதகணத்தலைவராகிய பிரபுவானவர் நூறுகோடி கணங்க ளாற் சூழப்பட்டவராக காமன் மாற்றானருகிலுற்றனர். (20) ஸங்நாத னென்ற கணத்தலைவர் தமது ஆயிரம்கோடி கோடி கணங்களுடன் கௌ ரீ கலியாணவைபவத்தைத் தரிசிப்பதற்காகத் தொணையோடு ஈசனருகி ற் சேர்ந்தனர். (21) சருவகுணங்களும் பொருந்திய ஆவேசனியென் பவர் தமது பத்துகோடி கோடி கணங்களுடன் மிக வாதரவுடன் தோ ன்றினர். (22) அபவக்திரர், மகாகேசர், வீரபருவதகர் இவர்கள் ஆயிர ம் கோடி கணாதிபர்களுடன் ஸ்ரீ கங்காதரனுடைய சமீபத்தைச் சேர்ந் தனர்கள். (23) சந்தானமென்ற கணங்களுக்கு அதிபர்களாகிய பிப்ப ளர், காகபாதர், இவர்கள் கணக்கற்ற கணத்தலைவர்களுடன் ஸ்ரீ ஸர்வே

சுவாஜனச் சேவித்தார்கள். (24) மதுபிங்கன், நீலன், மகாபல கணுக்கிரணி இவர்கள் மகோற்சவத்தைப் பார்க்க விரும்பியவர்களாக மன்மதனைக் கொன்ற மகேசுவானிடத்துக்கேகினர்கள். (25) புவனங்களுக்கு அதிபதிகளாகிய பூர்ணபத்திரன், சதுர்வக்திரன் இவர்கள் தங்கள் தங்கள்பட்டணத்திய சைனியங்களுடன் நான்கு புருடார்த்தங்களையு மடியார்க்களிக்கின்ற திருபுராந்தகாது சன்னிதியையடைந்தார்கள்.(26) இவ்வாருகிய பூதகணங்களும், மகா பெருமைபொருந்திய சகல பிரமதகணங்களும் ஸ்ரீமகேசுவானுடைய சன்னிதிக்குவந்தார்கள். பிரமதகணங்களின் தளகர்த்தனுகிய காணனென்றவன் தனக்குச் சமானமாகிய அனேக சைனியங்களுடன் கருணைக்கடலாகிய ஜகதீசனைச் சரணமடைந்தான். ($27\frac{1}{2}$) மிகுந்த புகழடைந்த பாஹுகனென்றவன் பிரமதகணங்களால் சூழப்பட்டவனுக (28) மன்மதனைச் சிக்ஷித்த தேவாதிதேவருடைய பக்கத்தில் தோன்றினன். பஞ்சாக்ஷனென்றவன் ஐந்நூற்றைம்பது கோடி பிரமதகணங்களுடன் (29) மன்மதனைக் கொன்ற மகாதேவனுடைய அருமையருகிலுற்றனன். இந்திரனுல் பூஜிக்கப்படலுற்ற, எப்போது மகங்காரம் பூண்ட சதமன்னியு வென்றவன் (30) நூறு கோடி கணங்களோடுகூட ஸ்ரீசூலபாணியுடைய சமீபத்தை யடைந்தான். மேகபிருத், காஷ்டகூடன், ஸுகேசன், விருஷபன், பலீ(31) இவர்கள், ஒவ்வொருவரும் கோடிகோடிப் பிரமத கணங்களுடன் ஜகதீசனுடைய சன்னிதிக்கு வந்தார்கள். சதானனன், விசுவரூபன், தாலகேது, ஸுத்தகன், (32) லோகாந்தகன், சைத்திரன், தீப்தாத்துமா, லகுளீசுவான் இவர்களும் அளவற்ற பிரமத கணங்களுடன் ஈசுவானையடைந்தார்கள். (33) உலகரக்ஷகர்களான, தைத்தியாந்தகன், மிருத்தியுஜித்து, காலஜித்து, விஷாதனன், கலிஜித்து, விஷஜித்து இலக்ஷுமீவிலாஸம்பொருந்திய மேன்மைகொண்ட பிருங்கிரிஷி (34) ஸௌரியாவாஸியன், சனிஷ்டன் இவர்கள் முதலாகிய, கணுதிபர்கள் கோடிகோடி கோடி பிரமதகணங்களுடன் ஸ்ரீ ஜகதீசனைச் சாணமடைந்தார்கள். (35)

இருபதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உக—வது அத்தியாயத்தினர்த்தம்.

சூதர்சொல்லுகின்றார்:—* ஆயிரம்யோஜனைதூரத்திலுள்ள குறியை யம்பினுல் தவருமலடிக்க வல்லவர்களான தேவர்களுக் கெல்லாம்

---

* இவ்வத்தியாயத்திற் பிரஸ்தாபிக்கப்படுகிற ருத்திரர்களெல்லாம் வேதத்தில் ஸ்ரீ ருத்திரப் பிரசனத்தில் விளக்கப்பட்டிருக்கிற வேதவாக்கியங்களே சுவல்ப மாறுதலோடு சுலோகம் சுலோகமாக வெழுதி யருளப்பட்டிருப்பதைக் காண்க.

மேன்மைபொருந்திய, பூமியிலுள்ள பத்துலக்ஷம்ருத்திரர்களும் ஸ்ரீமு க்கண்ணப்பிரானைச் சேவைகொண்டார்கள். (1½) இதோகாணப்படுகி ன்ற மகாசமுத்திரங்களிலும், ஆகாயத்திலும், ஸ்வர்க்கத்திலும் வாச ம்செய்கின்ற, கழுத்தினிற்கறுப்புள்ளவர்களும், முக்கண்ணுடைய வர்க ளுமான எண்ணிலடங்காத ருத்திரர்களும் ஸ்ரீஜகதீசனருகிற்சென்றார் கள். (2½) பூமியின்கீழான பாதாளலோகத்தில் சஞ்சரிக்கின்ற, கழு த்தினில் கறுப்புடைய மற்ற எல்லாருத்திரர்களும் (3) பார்வதீபரமே சுவரர்களுடைய கலியாணமகோற்சவத்தைப் பார்க்கவிருப்பமுற்றவர் களாக வந்தனர்கள். விருக்ஷங்களில் வசிக்கின்ற, இளம்புல்லைப் போல் பசுமைநிறமுள்ளவர்களும், சிலர் கறுத்த கழுத்தையுடையவர்களு ம், சிலர் மெத்தச் சிவந்த நிறமுடையவர்களுமான ருத்திரர்களும், (4) சிலர்கேசமற்றவர்களும், சிலர் சடைகளைத்தரித்தவர்களுமான பூத(மானிடர்களுக்குத் தீங்களிப்பவை) ங்களின்தலைவர்களான ருத்தி ரர்களும் ஆயுதபாணிகளாய் ஆயிரக்கணக்கிலு மெண்ணமுடியாதபேர் களாக ஈசுவரனருகிலுற்றனர்கள். (5) மானிடர்கள் உண்கின்றஊண்க ள்மீதும், குடிக்கின்றநீர் முதலியவைமீதும் மறைந்துநின்று அவர்களி ன்தாது (நாடி) முதலியவற்றைப் பிசகச்செய்து மிகுந்த துன்பங்களை யளிக்கின்ற ருத்திரர்களும், வைதிகம், லௌகிகம் முதலிய எல்லா மார்க்கங்களையு மனுசரிக்கின்றவர்களை யிரக்ஷிப்பவர்களும், காசி, பி ரயாகைமுதலியக்ஷேத்திரங்களை யிரக்ஷிப்பவர்களுமான ருத்திரர்களும், (6) திக்குகள்தோறு மெப்பொழுதும் சஞ்சரிக்கின்றவர்களும், இன் னும் பலவிதமாயுள்ள ருத்திரர்களும் கௌரியம்மனுடைய கலியாண கா க்ஷியைப் பார்ப்பதற்காக ஸ்ரீ பரமேசுவரனுடைய சன்னிதானத்துக் கே கினர்கள். (7) மேலும் அதிதி, திதி, விசுவை, தனு, கர்த்துரு, காளி, புலோமை, ஸரமை, ஸிம்ஹிகை, விந்தை, (8) ஸித்தி, மாயை, கிரியை, துர்க்காதேவி, ஸ்வாஹா, ஸ்வதா, ஸாவித்திரி, வேதமாதா, ரஜனீ, தக்ஷி ணை, துயுதி, (9) ரதி, புத்தி, மதி, மேதை, புஷ்டி, துஷ்டி, ஸரஸ்வதி, ராகா, குஹூ, ஸினீவாலி, அனுமதிதேவி, (10) தரணீ, தாரணி, வேலை, பாலை, நாராயணீ, இவர்களும் இன்னுமுள்ள, தேவர்களது தாய்மார்க ளும், பெண்டீர்களும் (11) ஸ்ரீ சங்கரப்பிரானுக்குக் கலியாணமென்று எல்லோர்களும் கோலாகலமாய் வரலுற்றனர்கள். பிரம்மாண்டத்தின் கண்ணுள்ள சமுத்திரத்தில் பாய்கின்ற எல்லாநதிகளும் (12) பெண் ணுருவங்கொண்டு அனேக ரத்தினாபரணங்களால் விளங்கலுற்றவர்க ளாக, நதியுருவத்திலுள்ள தாமரை மலரின்கண் அன்னபக்ஷிகள் நாடுவ தையொத்து, பெண்ணுருவத்திலும் அவர்களுடைய கைகளாகிய தா

மனை மலர்களில் சாமரங்களாகிய அன்னபக்ஷிகள் உற்றதுபோல் சாமர பாணிகளாய் வந்தார்கள். (13) ஸர்ப்பங்கள், கருடர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், கிந்நரர்கள், மானிடர்கள், சமுத்திரங்கள், பருவதங்கள், மேகங்கள், மாதங்கள், வருஷங்கள், கலைகள், (14) வேதங்கள், மந்திரங்கள், யாகங்கள், ஸ்தோமங்கள், தருமங்கள், ஸமியமங்கள், (15) ஹூங்காரங்கள், பிரணவங்கள், பட்காரங்கள், ஹிம்காரங்கள், தேவலோகத்திய கோடி அப்ஸரஸ்திரீகளு மவர்களுடைய ஊழியர்களும் (16) ஆகிய எல்லோர்களும் ஸ்ரீ சுமங்களமூர்த்திக்கும் ஸ்ரீ சருவமங்களா தேவிக்கும் நடக்கப்போகின்ற திருக்கலியாண வைபவத்தைக் காக்ஷிகொள்ள இலக்ஷியங்கொண்ட வர்களாக வுடனே சேர்ந்தனர்கள். (17) பிறகு அவர்களெல்லோர்களு மங்கொன்றுகூடி ஸ்ரீ பரமேசுவரனுடைய வந்தப்புரத்திற் கதிபரும், சிலாதமுனிவரது வமிசத்தை யானந்திக்கச் செய்வோருமாகிய ஸ்ரீ நந்திபிரானை பக்தியுடன் வந்தனித்துத் தெரிவித்துக் கொண்டதாவது:—(18) "சர்வகுண சம்பூர்ணரும், ஞானக்கடலும், எல்லோர்களுக்கும் குருவுமாகிய நந்திகேசுவரக் கடவுளே! இங்குற்ற யாங்க ளெல்லோர்களும் ஸ்ரீ சம்புவைச் சேவிப்பதற்காக விங்குவந்திருப்பதை (19) ஸ்ரீ தேவேசனுக் கறிவித்து ஒன்றுசேர்ந்திருக்கிற எங்களுக்குத் தரிசனஞ் செய்வித்தல் வேண்டும்" என்று அவர்கள் கூறிய வசனத்தைத், தேவர்கள் வணங்கப்பெற்ற (20) ஸ்ரீ நந்திபகவான் கேட்டு ஸ்ரீ சந்திரசேகரனருகிற் சென்று இச்சகல ஆத்துமாக்களும் வந்திருப்பதைப் பற்றி மிகவணக்கத்துடன் தெரிவித்துக் கொண்டனர். (21) ஒன்று, இரண்டு, மூன்றுமுகங்களை யுடையவர்களையும், மற்ற முக்தியடைந்தவர்களான கணசிரேஷ்டர்களையும், அதிகார ஸ்தானங்களிலுள்ள, அளவற்ற வொளிகொண்ட தேவர்களையும், (22) இன்னுமங்கு வரலுற்ற வெல்லோர்களையும் திரிபுர சத்துருவாகிய ஸ்ரீ மகேசுவரனுடைய திரு மாளிகைக்குள், அவரதுகட்டளையைக் கொண்டு அளவிலா மாக்ஷிமை தங்கிய நந்தி பகவான் ஒவ்வொருவராகச் செல்லவிட்டனர். (23) பிறகு ஸர்வேசுவரனும் கருணாமிருதக்கடலும் ஜகங்களுக்கு ஈசுவரேசுவரனுமாகிய ஸ்ரீ மகாதேவன், ஸ்ரீ திவ்விய ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்தவராகக் (24) கலியாணோற்சவத்துக்காகத் தோன்றிநின்ற வெல்லோர்களையும் திருமுகச்சாடையா லழைத்தனர். (24½) சருவகணாதிபதியாகிய ஸ்ரீ நந்திகேசுவரன், அவர்க ளெல்லோர்களையும் மாளிகையினோர் பக்கத்தில் முயற்சியுட னொருவரோடொருவர் தண்டாமல் விலக்காயிருப்பித்து "நமது பிரம்புநுணியை யசைப்பதினால் யாவரழைக்கப்படுகின்றனரோ அவர் வரலாகுமேயின்றி மற்றவ ரொழுந்திருக்குதல்

கூடாது:(25-26) எல்லோர்களு மொருவரோடொருவர் பேசாமலிருத்தல் வேண்டும்” எனவெச்சரித்து சிலாதமுனிவரின் செல்வராகிய ஸ்ரீ நந்திகேசுவரன் பிரபுவின் முன்பாக ஒவ்வொருவராய்க் குறித்துக் காட்டினர். (27) உலகங்களை நடத்துகின்றவரான ஸ்ரீ காலாக்கினி ருத்திர பகவான், முந்தித்தான் பிரம்புநுணி யசைத்தலினுல் குறிக்கப்பட்டதின் பேரில் விரைவுடனெழுந்து (28) ஸ்ரீதேவாதிதேவனை வந்தனித்து கைகட்டிக் கொண்டு தூரத்தில் நின்றனர். அப்போது ஸ்ரீநந்திபகவான் அவனைப் பிரம்பு நுணியால் காட்டி (29) “ஓ! தயாநிதியாகிய மகாதேவா! இவர்தான் தேவரீருடைய மூர்த்தியைக் (உருவத்தை) கொண்டவரும், முடிவில் சகல ஜகங்களையும் சமுகரிக்கின்றவரும், சருவப் பிரபஞ்சங்களுக்கு மாதாரபூதரும், எல்லாத்தேவர்களுக்கும் முதன்மையாகியவருமான காலாக்கினி ருத்திரர்! (30) இவர்தேவரீருடைய கட்டளையின்படி தனக்குச்சமானமாகிய கணங்களுடன் இப்போது இங்கு வரலுற்றனர். குளிர்ந்த பார்வையினுலவனை வெகுமானித் தனுக்கிரகித் தருளவேண்டும்.”(31) என்று நந்தீசன் சொல்லியதைக் கேட்டு இந்துமௌளி (சந்திரனை யுச்சியிற் கொண்டவர்) யாகிய, சகலதேவர்களுக்கு மீசுவரனுன ஸ்ரீஹரன் பிரஸன்னமாகிய பார்வையினுல் அக்காலாக்கினி ருத்திரஹரனை யனுக்கிரகித் தருளினர்.(32) அக்காலாக்கினி ருத்திரனும் ஸ்ரீ ஜகதீசுவரனுடைய இப்பார்வையைக் கொண்டதில் தம தாத்துமா கிருதார்த்த மடைந்துவிட்டதாக நிச்சயித்தனர். பிறகு கணங்களுக்கெல்லாம் முந்தினவரான ஸ்ரீநந்திபிரான் கூசுமாண்டருத்திரன், வீரேசருத்திரன், ஹாடகேசுவரருத்திரன் இவர்களையும், மற்ற கணுதிபர்களையும் ஸ்ரீ பரமேசுவரனுக் கறிவித்தனர். ($33\frac{1}{2}$) உடனே அந்நந்தீசனுடைய கட்டளையின் பேரில் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் தமதெல்லா அவதாரங்களுடனும், (பிரத்தியும்ன, அநிருத்த, ஸங்கர்ஷண, வாசுதேவ) என்ற நான்கு மூர்த்திகளுடனும்கூட தாமுமெழுந்தனர். ($34\frac{1}{2}$) அப்போது நந்திபகவான், அவ்விஷ்ணுவையும் அவருடைய சரித்திரங்களைச் சொல்லி ஸ்ரீபரமேசுவரனுக் கறிவித்தனர். (35) “ஓ! அஷ்டைசுவரிய சம்பன்ன மூர்த்தியே! இவர்தான் தேவரீருடைய இடதுபார்சுவத்திலுண்டான விஷ்ணு: ஓ! ஜகதீசா! இவரோ தேவரீருடைய தயவினுலுலக ரக்ஷணர்த்தமாய் நியமிக்கப் பட்டவர். (36) இவர் மிகநேர்த்தியும், அதிவிசித்திரமும், மோக்ஷமடைவிப் பதுமான இந்திரநீல ரத்தின லிங்கத்தைப் பக்தியுடன் பூஜித்ததினுலிப் பெருமை பொருந்திய பதத்தை யடைந்திருக்கின்றார். (37) ஓ! கருணுமிருத மூர்த்தியே! தேவரீருடைய திருக்கலியாண மகோற்சவகாக்ஷி யமிருதத்தை புண்பதி

னால் தமது விழிகளைப் பயனுள்ளவையாகச் செய்வித்துக் கொள்வதற்காக வாலுற்ற இவரைத் தேவரீருடைய கடைக்கண் பார்வையினால் வெகுமானித்தல் வேண்டும்". (38) என்று நந்தியுரைத்த வசனங்களை மகாப்பிரபுவாகிய பரமேசுவரன் கேட்டருளி தமது கடைக்கண் பார்வை மாத்திரத்தினா லம்மகாவிஷ்ணுவைக் கிருதார்த்தராகச் செய்தருளினர். (39) பிறகு ஸ்ரீநந்திகேசுவரனுடைய பிரம்பு நுனிக் குறியினால் ஸ்ரீ பிரம்மதேவன் பிரஜாபதிகளோ டெழுந்து ஸ்ரீ மகாதேவனைத் தரிசித்து அஞ்சலியுடன் (40) வந்தனித்து மிக வினயத்துடன் தூரத்தில் நின்றனர். அப்போது நந்தியும் தமது ஹஸ்தப்பிரம்பின் நுனியாலவரைச் சுட்டிக்காட்டி ஸ்ரீ சங்கரனுக்குச் சொல்லியதாவது:—(41) "ஓ! சருவேசுவரனாகிய மகாதேவா! இவர்தான் தேவரீரது வலது பார்சுவத்திலுண்டான பிரம்மன்: இவர் தேவரீரால் மூவுலகுக்கும் சிருஷ்டி கர்த்தாவாகநியமிக்கப்பட்டிருக்கிறார். (42) ஓ! என்று மழிவற்ற பகவானே! இவர் மிகவுமுறுதி யுள்ள பக்தியுடன் சிலாலிங்கத்தைப் பூஜித்த மகிமையினாலுமது கட்டளையின்படி பிரம்ம பதத்தை யடைந்திருக்கின்றார். (43) தேவரீருடைய திருவடிக்கமலத் தேனை யுண்பதற்குத் தேனீயாக வாலுற்ற இவரைக் கிருபா திருஷ்டியது கடைப்பார்வையாலனுக்கிரகித் தருளவேண்டும்." (44) ஸ்ரீ மகாதேவன் பிறகவரையும் நோக்கி வெகுமதித்தருளினர்; இவ்வாறாக சருவப்பிரபஞ்ச நாயகராகிய ஸ்ரீ ஜகதீசன் ருத்திரன், விஷ்ணு, பிரம்மா இவர்களை யனுக்கிரகித்தருளிய பின்னர், பிரமத கணாதிபராகிய ஸ்ரீ நந்திகேசுவரன் மற்றவர்களையும் வரிசைக் கிரமப்படி ஸ்ரீ பசுபதியிடத் தறிவித்தனர். ($45\frac{1}{2}$)

இருபத்தொன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உஉ—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு அளவற்ற காந்தியுடைய, தேவேந்திரன் முதலிய திக்பாலர்கள், தேவரிஷிகள், அசுரரிஷிகள், கந்தர்வர்கள், உரகர்கள், அரக்கர்கள், (1) அசுவினிதேவர்கள், ஸப்தமருத்துக்கள், அஷ்டவஸுக்கள், ஏகாதச ருத்திரர்கள், ரிஷிகள், சகல பிதுருக்கள், பக்ஷிகள், பிசாசர்கள், குஹ்யகர்கள், (2) நதிகள், நதங்கள், சமுத்திரங்கள், பருவதங்கள், வனங்கள், கலைகள், முகூர்த்தங்கள், காஷ்டைகள், மாதம், ருது

அயனம், வருஷங்கள் (3) இவர்கள் முதலாகிய அங்கு வாலுற்ற வெல்லோர்களையும் நந்திதேவனுனவர் ஸ்ரீ மகாதேவனுக்கு முறைப்படி ஒவ்வொருவராய்க் காண்பித்ததில் மகாதேவனு மவரவர்களை முறையே கடைக்கண் பார்வையா லனுக்கிரகித் தருளினர். (4) அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற ஸந்தோஷ முகங்களையுடைய வெல்லோர்களும் அவரவர்கள் வரிசைக் கிரமப்படி தகுதியான, தங்கள் தங்கள் வெகுமதி சாமான்களை ஸ்ரீ பரமேசுவரனுக்குச் சமர்ப்பித்தனர்கள். (5) மரைமலரை யாசனமாகக் கொண்ட பிரம்மன் மிகவும் தகுதியான ரத்தின பரணங்களை ஸ்ரீ மகாதேவன் முன்பாக மிக விநயத்துடன் பொற்தட்டுகளின்மீது நிரம்பவைத்து (6) ஸ்ரீ பகவானுகிய மகேசுவரனைத் தண்டனிட்டு வேண்டிக் கொண்டதாவது:— "ஓ! அழகினர்களுக் கெல்லாம் முதன்மையான ஜகதீசா! தேவரீருடைய மிகவற்புதமான சௌந்தரியமானது (7) ஆபரணங்களுக் கெல்லா மாபரணமும், உலகின் மீதுள்ள அழகினர்களுக்கு ஒப்பிடத் தக்கதும், அலங்காரங்களோ டொப்பிடத் தகாத மிகவும் சிறந்த வலங்காரமு மாயினும் இவ்வாபரணங்களால் தேவரீரது திருமேனியை யலங்கரித்துக் கொண்டு ஓ! பிரபுவே! என்னை யனுக்கிரகித் தருளல் வேண்டும்". இங்ஙனமாக பிரம்மன் பிரார்த்தித்தவுடன் ஜகதீசனுனவர் திருமுகக் கமலத்தில் மந்தஹாஸங் கொண்டவராக (9) விரல்நுனியால் அவ்வாபரணங்களைத் தொட்டு தாம் மிக வற்புதமான திவிய சுந்தர லாவணியத்தைக் கொண்டனர். கோடி மன்மதர்களுக்குச் சரியான வடிவத்தையும், பூர்ண சந்திரனைப் போன்ற திருமுகத்தையும், (10) அலர்ந்த மரைமலர் போன்ற விசால நேத்திரங்களையும், கோவைக்கனி போல் நேர்த்தியான வுதட்டையும், வலம்புரி, சங்கம் போன்ற கழுத்தினில் ஹாலாஹல விஷத்தினது கறுப்பையும், மிகவும் நேர்த்தியும் மிருதுவுமான திருமேனியையும், (11) அகண்ட மார்பின்மீது விளங்கலுற்ற திவிய ஹாரங்களையும், நான்கு புயங்களையும், பொருந்தி அமைந்து ஜாஜ்வலிய மானமாய்ப் பிரகாசிக்கின்ற தேகத்தினெல்லா உறுப்புகளையும், அந்தந்த அவயவங்களுக்கேற்ற சகலவித ஆபரணங்களையும், (12) உச்சிமுத லுள்ளங்தாள் வரையில் அததற்கேற்ற நாநாவித அலங்காரங்களையு முடையதாகிய ஜகன்மோகன சுந்தர மூர்த்தி யுருவத்தைத் தயாநிதியாகிய ஸ்ரீமகாதேவன் கொண்டனர். (13) சன்னிதானத்தில் தண்டனிட்டுக் கைகட்டி நின்ற பிரம்மனை நோக்கிச் சொல்லியதாவது "வாரீர் பிரம்மாவே! நம் கட்டளையின்படி அனேகமாகிய இவ்வாபரணங்களைக் கொண்டு கலியாண மகோற்சவத்துக்காக வீங்கு வந்திருக்கின்ற சகல தேவர்களுக்கு மலங்காரம் செய்து விடுக"

வென்றனர். ($13\frac{1}{2}$) ஸ்ரீபரப்பிரம்ம மூர்த்தியை ஞானத்தினு லறிகின்றவர்களில் முதன்மையாகிய பிரம்மனும் பரமேசுவரனுடைய அக்கட்டலைக் கமைந்து (15) இவ்வாபரணங்களைத் தேவக்கூட்டங்களுக்குள் பகிர்ந்து கொடுத்தனர். பிறகு தேவத்தலைவர்க ளவ்வாபரணங்களால லங்காரம் செய்துகொண்டவுடன் (16) சங்கவாத்தியங்கள், கொம்பு, மிகவும் பெரிதாகிய காஹளவாத்தியம், பேரி, முரவம், தூரியம், அனேக துந்துபி வாத்தியங்கள், (17) எங்கும் சமுத்திரங்களி னோசைகளை யதிகரித்த டிண்டிம வாத்தியங்கள் முதலிய பெரிய வாத்தியங்களும், வீணை, வேணு, நாக்சரம் முதலிய வின்ப வாத்தியங்களும், இன்னும் பல மாதிரிகளுள்ள அநேக, வாயில் வைத்து ஊதப்படுகின்ற வாத்தியங்களும் செவிகளுக் கானந்தகரமாக கோஷிக்கப் பட்டன. (19) வெள்ளிமலையாகிய கைலைகிரிமுதல் இமயகிரி வரையில், அப்ஸரஸ்திரீக ளிடைவெளியின்றி நின்றுகொண்டு கைகளிற் பூண்ட பொற் கங்கணங்கள் கிலுகிலுவென்று சப்திக்கப் பெற்றவர்களாக சாமரங்களை வீசி நின்றார்கள். (20) அதேவிதமாக வெங்கும் விசிரிகளைப் பற்றிக்கொண்டு மிகவாதரவுடன் விசிரி நின்றார்கள். மார்க்கமெங்கும் நேர்த்தியான, பரிமளம் வீசிய பனிநீர் தெளித்து நனைத்தும், (21) கஸ்தூரிச் சேற்றினல் மெழுகி பச்சைக் கர்ப்பூரப் பொடிகளை மணல்களாக நிரவியும், நுரைகளால் நிறையலுற்ற ஸமுத்திரம் போன்ற வெள்ளைக் குடைகளால் நிறையப் பட்டும், (22) துவஜங்கள், அசுமானகிரிகள் இவைகளின் வரிசைகளா லலங்கரிக்கப் பட்டும், எங்கும் மிகப்பரிமளம் வீசிய அகிற் கட்டைகளால் புகைக்கப் பட்டுமிருந்தது. (23) பிராம்மணோத்த மர்களாகிய முனீந்திரர்கள் வேதமோதி நின்றார்கள். ஸுமங்கள ஸ்திரீகள் மங்களகரமான கீதங்களைப்பாடி நின்றார்கள். (24) கட்டியக் காரர்கள், ஹரிக்காரர்கள், வந்திகள் இவர்கள் ஜயா விஜயீபவா வென்று கூறி நின்றார்கள். பிரமத கணங்களெல்லாம் பிரம்புகளைக் கைப்பற்றி கூட்டங்களை விலக்கி நின்றார்கள். (25) ஆயிரக் கணக்காகவுள்ள ருத்திர கன்னிகளென்ற ஸ்திரீக ளெல்லோர்களும் அசைவற்றுச் செல்லுகின்ற ரதங்களின்மீது நாட்டியமாடி நின்றார்கள். யோகீசுவரர்கள் அஞ்சலி செய்து நின்றார்கள். (26) இவ்வித வைபவங்களோடு ஸ்ரீ சந்திரசேகரன் நந்திபிரானுடைய கையைப் பற்றியவராக பலவித விரத்தினங்க ளிழைக்கப் பெற்ற பாதுகை களையும், குடையையும் தரித்து (27) வெகு மங்களகரமான சிங்காதனத்தினின்று மெல்ல வெழுந்தருளி, பிராகாரங்களின் வாசற்படிகளி லங்கங்கு ஏழுகணங்களைக் காவலர்களாக விருப்பித் தருளிவிட்டு, (28) முகத்துவாரத்தில் நிற்கின்ற, வெண்மை

யுடையதும், வெள்ளிமலை போன்ற சோபையுடையதும், நாதத்தினால் நான்கு திக்குகளையும் செவிடாக்கலுற்ற பொன்மணிகளைப் பூண்டதும், (29) அனேகசாமரங்கள் கட்டப்பட்டு விளங்கியதும், இரத்தினங்களா லிழைக்கப்பட்ட ஜேணத்தைக் கொண்டதும், முதுகினி லுருண்டு பருத்த கொண்டையினால் வெகுவலங்காரமாக விளங்கியதும், மிகவும் பருத்த கழுத்தை யுடையதும், சிவந்து நீண்ட கண்களை யுடையதும், பருவதத்துக்கு நிகராகியதுமான மகா விருஷபராஜன் மீது, குண்டோதரனுடைய முதுகினிலோர் பொன்மலரடியை வைத்தருளி, சாதுக்களைக் காக்கின்ற ஸ்ரீ மகானுபாவனேறியருளினர். (31) இயதீசுவரர்கள், ஸித்தேசுவரர்கள், ரிஷீசுவரர்கள், தேவேசுவரர்கள் இவரெல்லோர்களும் ஜயாவிஜயீபவா என்றது முதலான மங்களவாக்கிய துவனிகளோடு வேத ஸூக்த மந்திரங்களை யோதினர்கள். (32) அதிதி, திதி, தநு, கத்துரு, அருந்ததீ, துஷ்டி, புஷ்டி, கீர்த்தி, ஸ்வதா, ஸ்வாஹா, மதி, திருதி, (33) ஸரஸ்வதீ, இலக்குமீ முதலாகியவர்களும், சகல லோக மாதாக்களும், தேவபத்தினிகள், ரிஷிபத்தினிகள், முதலாகிய வர்களும் (34) ஸ்ரீ சம்புவினுடைய பிரபாவங்களைப் பற்றிய திவ்விய கீர்த்தனங்களை நல்ல ஸ்வரங்களுடன் பாடினார்கள். கந்தருவர்கள், கின்னரர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், மகோரகர்கள், (35) பெயர்போன ஹா ஹா வென்றவும், ஹூ ஹூ வென்றவுமான தேவ லோகத்திய பாடகர்கள், தும்புரு முனிவர், நாரதமுனிவர் இவர்க ளெல்லோர்களும் வீணா கானத்திற் சிறந்த மாதர்களுடன் ஸ்ரீ பரமேசுவரனுடைய குணாதிசயங்களைப் பற்றிய கீர்த்தனங்களை வீணையென்ற வாத்தியத்தினால் கானம் செய்தார்கள். (36) கணாதிபனாகிய குண்டோதர னென்பவன் ஸ்ரீ சம்புவினுடைய பக்கத்தில் நின்று, நூறு கம்பிகளா லமைக்கப்பட்ட, சந்திர மண்டலத்துக் கொப்பான மிகவும் பெரிதாகிய குடையை (37) நேச வாசையினால் மனம் பூரித்தவனாகப் பிடித்துவந்தான். அக்குடையின் சுற்றிலும் தொங்கலுற்ற முத்துமாலைக் குஞ்சங்களினால் ஸ்ரீ சருவேசுவ ரேசுவரனாகிய பகவான் (38) சந்திர மண்டலத்தினின்று கங்கை யானது உச்சிதனில் விழப்பெற்றவர் போல் விளங்கினார். (38½) மகா மகிமை பொருந்திய விருஷபமானது, சாமரங்கள் கட்டப் பெற்றவையும், நிமிர்ந்து செல்லுகையில் மேகங்கள் கோர்க்கப்பட் டுற்றவையுமான கொம்புகளைத் தரித்துக் கொண்டு ஸ்ரீபரமேசுவரனைச் சுமந்து ஆகாய மார்க்கமாக மிக வுல்லாசத்துடன் சென்று, (39½) ஸ்ரீ கைலை கிரியினின்று ஓர் நொடிக்குள் இமயகிரியை யடைந்தது. (40) இமயகிரி ராஜனும் பந்து வர்க்கங்களாகிய அனேகம் பருவதங்களுடனும், புத்திர

பௌத்திர மித்திரர்களுடனும் அனேக அசுமானகிரிகள், துவஜங்கள் முதலிய வைகளாற் சிறக்க வலங்கரிக்கப்பட்ட தனது ராஜதானியி னின்று எதிர்கொண்டு சென்றனன். (41) அப்போது ஸ்ரீ தேவாதி தேவனுடைய சைனியங்களும், கிரிராஜனுடைய சைனியங்களும் இர ண்டு சமுத்திரங்க ளொன்றோ டொன்று சந்திப்பதுபோல் சேர்ந்து சந்தித்தது. (42) இமராஜன், மைனகன், கிரௌஞ்சனென்ற இரண்டு பிள்ளைகளுடன் ஸ்ரீ தேவாதி தேவனை வந்தனித்து, (43) மிகவுயர்ந்த வனேக கோபுரங்களாற் சிங்காரமானதும், ரத, கஜ, துரக, பதாதிகளா ல் நிறையவுற்றதும், (44) பேரீ, மிருதங்கம், முரவம் இவ்வாத்தியங் களின் கோஷங்களினு லெதிரொலி கொண்டதுமான வோஷதிப்பி ரஸ்தமென்ற தனது நகரத்தினுள் ளழைத்துப் போயினன். (44½) அப்பட்டணத்து ஸ்திரீகள், ஸ்ரீ பரமேசுவரனைத் தரிசிக்கவாவலுற்ற வர்களாக அவரவர்கள துப்பரிகைக் குற்றனர்கள். (45) அவர்களோ வென்றால்:— மிகுந்த பேராநந்தத்தினு லவரவர்கள் கைவேலையை விட்டவர்களும், அரைகுறையான வலங்காரத்தைக் கொண்ட வர்களும், ஒருவள், உடுக்கையி லிடையின் முடிச்சு நழுவவுற்ற வஸ்திரத்தை வலது கையாலும், இளங்குழந்தையை (46) மற்றக்கையினுலு மெ டுத்துக் கொண்டு மிக பரபரப்புடன், பலகணிவாயி னருகிலுற்றவ ளும், மற்றொருவள், மைக்கோலினு லோர்கண்ணுக்கு மட்டில் மையி ட்டு (47) மற்றோர் கண்ணை மறந்தவளாகக்கவாக்ஷியின் (பலகணி) பக்கத்திற் சென்றவளும், ஒருவள், கூந்தலின் முடிச்சவிழ்ந்து ஆடை யாபரணங்க ளலங்கோலமாய் நழுவவுற்று, (48) ஆனந்தத்தினு லோ டிச் செல்லுகையில் வழியெல்லாம் மலர்களுதிர்ந்துவிழப், பலகணியடை ந்தவளும், மற்றவள், கொம்பரக்கு, செம்பஞ்சு இவைகளின் சாயங்க ளினுல் ஓர் பாதத்துக்கு அலங்கரித்த (49) மட்டோடு ஓடிச்செல்லு கையில் வழியெல்லாம் அச்சாயமாக்கிய வளுமாக பட்டணத்திலுள்ள நெய்தல் மலர்போன்ற கண்களையுடைய மங்கையர்க ளெல்லோர்களும் தங்களது மரைமலர் போன்ற முகங்களினுல் அளவற்றதான உப்பரி கைகளையெல்லா மம்மலர் மயமாகச் செய்து விட்டார்கள். (50½) சகல ஜகங்களுக்கும் பர்த்தாவாகிய ஸ்ரீ மகேசுவரன் எல்லா தேவர்களுட னும் இராஜ மார்க்கத்திற் செல்லுகையில் (51) ஸ்திரீக ளெல்லோர் களும் நெற்பொரிகளோடு மலர்களைக் கலந்து மாரியாகப் பொழிந்தார் கள். அஸ்திரீகளுடைய இந்திரியங்கள் (பொறிகள்) எல்லாம் ஸ்ரீதே வ தேவேசுவரனைக் கண்டு, மனதுடன் (52) கூடியவைகளாகி ஒரே மூர்த்தனியமாய்க் கண்களைச் சேரவுற்றது போல் (மற்றப் பொறிக

ளது வசமற்ற வர்களாக ஸ்ரீ பகவானைத் தரிசித்தா னந்தித்தார்கள்.) பட்டணத்தி லொருவருக் கொருவர் சொல்லிக் கொண்டதாவது:— "ஸ்தாவர ஜங்கம சுவரூபமாகிய பிரபஞ்சங்க ளெல்லாம் (53) இவரது திருவருளால்தா னுண்டாகின்ற தென்றும், பிராணிக ளெல்லாம் இவருடைய பிரசாதத்தினல் மோக்ஷ மடைகின்றதே யின்றி வேறில்லை யென்றும் முனிவர்களும், யோகிசுவரர்களும் சொல்லுகின்றார்கள். (54) ஆகையால்தான் கௌரியம்மை இளமைப்பருவமுள்ளவளாயினும் பால சந்திரனை யுச்சியிற்கொண்ட ஸ்ரீ தேவதேவேசுவரனைக்குறித்து, அனுஷ்டிப்பதற்கசாத்தியமான மிக உக்கிரமாகிய தவத்தை வெகுகாலமாகச் செய்தனள். (55) பெரியவைக்கெல்லாம் மிக பெரியவரும், காரணங்களுக்கெல்லாம் காரணரும், தெய்வங்களுக்கெல்லாம் பெரிய தெய்வமும், யோகிசுவர்களால் தியானிக்கப்படலுற்றவரும், பெரியோர்களுக்கு முக்கிய கெதியாகின்றவருமான ஸ்ரீ சிவபிரானைக் காக்ஷி கொண்டதனல் நாமிப்போது கிருதார்த்தர்களாயினோம்" என்றனர்கள். (56½) இவ்வாறகிய, செவிக்கினிமையான வசனங்களை ஸ்ரீ மகாதேவன் கேட்டருளிக்கொண்டு மெல்ல மெல்ல (57) மிக வுன்னதமும், ஒப்பற்றதுமான, கிரிராஜனது பெரிய வரண்மனை வாசலில் விஜயமாயினர். பிறகு ஸ்ரீஜகதீசன் பெருமை தங்கிய வெருதினின்றிறங்கி, * தேவேந்திரனல் கொண்டு வந்துவைக்கப்பட்ட நவரத்தினங்களாலமைத்த பாதுகைகளைப்பூண்டு, மகாப்பிரபுவாகிய ஸ்ரீ ஹரன் ஓர் கையைப் பிரம்மன் கைமீதும், மற்றோர்கையை ஸ்ரீமகாவிஷ்ணுவின் கைமீதும் சுமக்க வைத்தருளி, (59) பட்டணத்திய ஸகலஸ்திரீகளும் இமைக் கொட்டன்றிப் பார்த்திருக்குமளவில் ஸ்ரீ திருபுராரியானவர் பருவதராஜனுடைய பெரிதான முன் கட்டு வாசற்படியினுட் சென்றனர். (60) அப்போது ஸ்ரீ நந்திகே

---

* மூல கிரந்தத்தில் "ஹரி" யென்று சொல்லியிருப்பதற்குச் சிலர் ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் பாதுகையைக் கொண்டு வைத்ததாக அர்த்தம் செய்கிறார்கள். நாமதற்குத் தேவேந்திரன் என்று அர்த்தமுரைப்பதற்குக் காரணம் யாதென்றால்:— ஸ்ரீ பிரபுவானவர் வாகனத்தை விட்டிறங்கும் சமயத்துக்கு முந்தியே, அப்போது அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்வதற்கேற்பட்டவர்களில் அவரவர்கள் தங்கள் தங்களுழியத்தைச் செய்வதற்குச் சித்தமாய்க் காத்திருத்தல்வேண்டும். ஆனல் அடுத்த வாக்கியத்தில் ஸ்ரீ விஷ்ணு கைலாக்குக்கொடுப்பதற்கேற்பட்டதாயிருக்கிறபடியால் அவரே பாதுகையையும் கொண்டுவைத்து உடனே கைலாக்கும் கொடுத்ததாயொன்று சொல்வதற்கு, மேல்கண்ட 2 ஊழியங்களும் அனேகமா யேககாலத்தில் செய்யப்பட்டிருக்க வேண்டியதா யிருப்பதால் ஒரேகாலததில் செய்யப்பட வேண்டிய 2-ஊழியங்களுக்கும் ஒருவரே யேற்பட்டிருப்பது அஸம்பாவிதம். மேலும் ஒரு ஊழியத்தைச் செய்துவிட்டு அவரே மற்றோர் ஊழியத்துக்கு ஸித்தம் செய்துகொள்வதற் கிடையில் பிரபுவுக்குக் கொஞ்சம் காத்திருத்தலுக் கிடமாகும். மேலும் ஹரியென்பதற்கு இந்திரன் என்றும் அர்த்தம் ஏற்பட்டிருக்கின்றது. கையால் பாதுகை கொண்டுவைத்தது இந்திரனே யென்பது எமதுகருத்து.

சுவான் கைதனிற் பிரம்புகொண்டு "ஜயாவிஜயீபவா! வெகுபாக்! ஓ! பரமேசுவரா! அடியார்களின் கிலேசங்களைத் தொலைப்பவரோ! கொஞ்சம் சாவதானமாக வருதல்வேண்டும்; மேடு பள்ளங்களைப்பார்த்து த்திருவடிவைத்து வருதல்வேண்டும்" என்றுரைத்துக்கொண்டு மிக வாதரவுடன் முந்திச்சென்றனர். (61½) கிரிராஜனுடைய பட்டஸ்திரீயாகிய மேனகையம்மையானவள், தயாநிதியான ஸ்ரீஸருவேசுவரனுடைய திருவடிகளைப் பசுவின் பாலினாற் கழுவி,(62½) அஷ்டமங்களங்களைப் பாடலுற்ற மங்கையர்களோடு திருமாளிகையினுள்ளாக (63) விசுவகருமாவினா லனேகவித ரத்தினங்களால் நீளத்திலு மகலத்திலும் வெகு விஸ்தார முள்ளதும், (64) அனேக மிரத்தினக்கம்பங்களாலும், கொடுங்கைகளாலும் விளங்கலுற்று வெகு விசித்திரமா யமைக்கப்பட்டதுமான ஸ்ரீ சம்புவினுடைய திருக்கலியாண மண்டபத்துக்குள் ளழைத்துப் போயினள். (64½) அதன் மத்தியில், அனேக நீலரத்தினங்களாலிழைக்கப்பட்டதும், மிக வுயரமுள்ளதும், (65) நான்கு கம்பங்களோடு மிக நேர்த்தியாயலங்கரிக்கப்பட்டதும், அனேக கோடி சூரியர்களைப் போன்றதும், நோக்கிய கண்களை மற்றெங்கும் செல்லவிடாம லிழுப்பதுமான திவ்விய ஸிம்மாஸனத்தை (66) சூரியனது கண்ணைப் போக்குவித்த ஸ்ரீ பகவான் தமது விஜயத்தினால் சிறக்கச் செய்தனர். அனேக ருத்திர கணங்களோடு ஸ்ரீ காலாக்கினி ருத்திரனும், அனேக கணங்களோடு ஸ்ரீ ஹாடகேசுவர ருத்திரனும், (67) சகல பிரமத கணங்களும், பூதகணங்களும் பக்கத்திற் சுற்றி நின்றார்கள். (67½)

இருபத்தொண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உ௲—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸூதர் சொல்லுகின்றார்:— சகல குணங்களும் நிறையப் பெற்ற ஸ்ரீமகாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன், சூரியன், அஷ்டவசுக்கள், உருத்திரர்கள், துவாதசாதித்தியர்கள், அசுவினிதேவர்கள், (2) வஸிஷ்டர் முதலான பிரம்மரிஷிகள், நாரதர் முதலான தேவரிஷிகள், ஸனகர் முதலான யோகீசுவரர்கள், ஸித்தர்கள், வித்தியாதரர்கள், உரகர்கள், (3) இவர்கள் எல்லோர்களும் தேவாதிதேவனுடைய கட்டளையின்பேரில் சுகமளிப்போனும், சந்திரசேகரனுமாகிய ஸ்ரீஜகதீசனுக்குச் சுற்றிலு மு

ள்ள, மிக விசித்திரமான ஆசனங்களில் உட்கார்ந்தனர்கள்.(1) உலகிலு ள்ள ஸப்தமாதர்கள், மிகுந்த கற்புடைய தேவப் பெண்டீர்கள், சகல ரிஷி பத்தினிகள், எல்லா தேவதாஸிக் கூட்டங்கள் இவர்களும், (4) அதிதி, திதி, தக்ஷப்பிரஜாபதியின் எல்லாப் பெண்கள் இவர்கள் முதலாகியவர்களும்மத்தியில் விளங்கிய ஸ்ரீமகாதேவனுக்குச் சுற்றிலுமுள்ள சிறந்த ஆஸநங்களில் வீற்றிருந்தார்கள். (5) கிரிராஜன் மேனகையோடு கூட மூவுலகுக்கும் மாதாவாகிய ஸுமங்களாதேவிக்குப் பட்டணத்தில் குடும்பிகளாயுள்ள ஸ்திரீகளினால் அலங்காரஞ் செய்வித்தனன்.(6) அம்மங்கையர்களும்ஸ்ரீமகாதேவியைத் திருமணமணேமீது கிழக்கு முகமாய் கையில் பூச்செண்டுடன் உட்காரவித்து மகா பரிமளம் பொருந்திய சிறந்த தைலங்களினால் அப்பியங்கனஞ் செய்வித்தார்கள். (7) மேலுமவர்கள் "கௌரீ கலியாணவைபோகம்" என்றநேர்த்தியான கீதங்களைப் பாடிக்கொண்டு, தருவிக்கப்பட்டிருக்கிற அனேகம் புண்ணிய தீர்த்தங்களால்மங்கள ஸ்நாநஞ் செய்வித்தார்கள். (8) சங்கம், சிருங்கம், பேரீ, முரவம், டிண்டிமம் முதலிய சகல வாத்தியங்களும் விநோதமாக முழங்குகையில் அம்மங்கையர்கள் தேவியை அலங்காரஞ் செய்து ஸ்ரீபரமேசுவரனருகில் அழைத்து வந்தார்கள். (9) ஸ்ரீதேவேசன் அம்மனோடு கூட திவ்விய ஸிம்மாசனத்தில் வீற்றிருக்கையில் சந்திரன் உரோகிணியோடு கூட மேருகிரியின் கொடு முடி மீது வீற்றிருப்பதுபோல் விளங்கினார். (10) அப்போது அங்கு அனேகவித அலங்காரங்கள் செய்யப்பட்டதும், பலவித இரத்தினங்களிழைக்கப் பெற்றதனால் விளங்கியதும், சிறந்த வாசனைகொண்ட மலர்மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும், பொற்சங்கிலிகளில் தொங்கவிடப்பட்டிருப்பதுமான (11) ஊஞ்சலிருப்பதைக்கண்டு ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் ஸ்ரீபரமேசுவரனைப் பிரார்த்தித்ததாவது:— "ஓ! சருவகுண சம்பூர்ணராகிய ஸ்ரீபரமேசுவரா! தேவரீர் தேவியுடன்கூட விநோதமாய்ப் பொன்னூஞ்சலாடி அருளுவதனால் எங்களது மனோரதத்தைத் தீர்க்க வேண்டும்" (12½) என்று விஷ்ணு முதலிய தேவர்களால் பிரார்த்திக்கப்படுகையில் ஸ்ரீமகாதேவன் அப்படியே நல்லதென்று கன்னூஞ்ச லாடினர். (13) இமவானும் தேவியை அவரது பக்கத்தி லேற்றி வைததனன். அப்போது தும்புரு நாரத முனிவர்கள் ஆனந்தத்துடன் பாடினார்கள்.(14) பிறகு உலகவழக்கப்படி மங்கள தீபங்கள் முதலியவைகளால் பூஜித்தார்கள். மேனகை யம்மாளும் சக்களத்திமாருடன் சீக்கிரமா யங்கு வந்து (15) ஸ்ரீதேவி தேவர்களுடைய திருவடிகளைச் சந்தோஷத்துடன் பாலினாற் கழுவினள். பிறகு ஜகதீசனும் திருக்கலியாண மண்டபத்துக்கருளி (16) வேதியர்கள் வேதமந்திரங்க

ளை ஓதுவதுட னிரங்கமண்டபத்திற் கேகினர். பிறகு கிரிராஜன் மேன கையுடனும் புத்திர மித்திர பந்து வர்க்கங்களுடனும் கூடியவனாக (17) மிக பக்தியுடன் ஸ்ரீபிரபுவினுடைய திருவடிகளை முறைப்படி கழுவி அந்நீரைக் கொஞ்சம் குடித்து தங்கள்தங்கள் உச்சிமீது தெளித்துக்கொண்டு(18) மகேசுவரனுக்கு மிகபக்தியுடன் முறைப்படி மதுபர்க்க மளித்து ஸ்ரீமகாதேவிக்குத் திருமணவஸ்திர முடுத்துவதற்கு முந்தி ஸ்ரீபரமேசுவரனுக்கு வஸ்திரம் முதலியவைகளைச் சமர்ப்பித்து (19) அம்மனுடைய கழுத்தினில் மங்களாபரணம் முதலியவைகளைப் பூட்டினர். பிறகு அவ்விமவான் பொற்கெண்டியால் நீரெடுத்து, அத்தேவசபையின் முன்னர் (20) ஸ்ரீதேவதேவேசனுக்கு வஸ்திராபரணங்கள் முதலியவற்றால் பூஜித்த பின்னர் ஸ்ரீபரமேசுவரனுக்குப் பார்வதி தேவியை நீர்த்தாரையுடன் மந்திர முறைத்துத் தானஞ் செய்தனன். (21) அம்மந்திரமோவென்றால்:— "சகலவித நவரத்தினாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்களும் சகல கலியாண வைபவத்தன்மையால் நிறையப்பெற்றவளுமாகிய எனது பொன்னான கன்னியைப் பிறர்களுக்குச் சகல சுகங்களையு மீந்தருளுகின்ற தேவரீருக்கு யான் கொடுக்கின்றதைப் (22) பெற்றருளி ஓ! பரமேசுவரா! எந்தனுக்கு ஸாயுஜ்ய பதவியை யீந்தருளுவீர்". ஸ்ரீமகாதேவனும் அங்ஙனமே அப்பார்வதியைச் சகல வுலகுக்கும் சுகமுண்டாவதற்காகத் தம் கை கீழாகப் பிரதிக்கிரகஞ் செய்தனர். (23) அப்போது "ஜயா விஜயீ பவா" என்றது முதலான மங்கள வசனங்களால் மகோற்சவமானது கொண்டாடப் பட்டது. ஸ்ரீமகேசுவரனும் கௌரியம்மனுடைய கையை மகா ஸந்தோஷத்துடன் பற்றினர். (24) பிறகு சகல ஸ்தாவர ஜங்கமங்கள் முதலான சருவ ஜகங்களும் பேரானந்தங் கொண்டன. தேவர்க ளெல்லோர்களும் பார்வதியையும் பரமேசுவரனையும் மிக பக்தியுடன் வந்தனித்தார்கள். (25) முனிவர்கள், கணாதிபர்கள், ஆத்துமஞ்ஞானத்தையுடைய யோகிசுவரர்கள், இன்னும் மற்ற ஸகலப்பிராணிகளும் அங்ஙனமே செய்தார்கள். பிறகு பூமியானது அதிக பாரங்கொண்டு தென்பக்க முயர்ந்தும், (26) வடபக்கம் முற்றும் தாழ்ந்தது மாகியதில் எல்லா ஜனங்களும் மிகவும் மனநடுக்க முற்றார்கள். (26½) அப்போது தேவர்களும், தவத்தையே தனமாகக் கொண்ட முனிவர்களும் கீழேகவிழ்ந்து விடுவதான பிரமைத்தினால் மிகப்பயந்து பெருமூச் சுணர்ந்து ஸ்ரீசூலபாணிக்குப் பலவந்தனமளித்து முறையிட்டுக் கொண்டதாவது:— ஓ!ஜயஜயா! சம்போ! தயாஸிந்தோ! பூமியானது வடபக்கம் கீழாகக் கவிழலாகின்றது; (28) ஓ!மகாதேவா! இந்நாங்கள் விழாமலிருக்கும்படி சீக்கிரத்திலருள் செய்ய

வேண்டும், ஓ! தேவதேவேசா! தேவரீருடைய கட்டளையினால் இப்பூமியைச் சமமாக்குதல் வேண்டும். (29) இவ்வாறாக வேண்டப் பட்டதன் பேரில் சந்திரனைச் சடையிற் தரித்த பரமசிவன் புன்னகைப்புடன் தமக்குச் சரியான ஸ்ரீ அகஸ்திய முனிவரை யனுப்பி (30) மகாபுத்திசாலியாகிய அம்முனிவரைத் தென்திசைக் கதிபனாகச் செய்தருளி அவருக்குத் திருக்கலியாணக் கோலத்தையும் பிந்தி யவ்விடத்தே காக்ஷிகொடுத்தருளினர். (31) பிறகு அம்முனிவரும் ஸ்ரீ பரமேசுவரனுடைய கட்டளையின் பேரில் வெகு மனவருத்த முற்றவராகப் பெண்டிருடன் ஆகாயமார்க்கமாக மலயகிரிய நடிவாரத்தை யடைந்தனர். (32) எப்போதும் சிவனையேமனதில் பாவிப்பதனால் அச்சிவனுக்குச் சமானமாகியவம் முனிவீரர் மலயகிரி சென்றவுடன் மேடுபள்ளமான பூமியானது சமமாகிவிட்டது. (33) பிறகு பிரம்மாவானவர் ஸ்ரீபரமேசுவரன் முன்னர் கைகட்டி நின்று தெரிவித்துக் கொண்டதாவது:—"ஓ! மகேசுவரா! விவாஹத்துக் குரித்ததாக அக்கினியிற் செய்யலுற்ற சடங்குகளை முடிப்பித்தல் வேண்டும்". (34) ஏனென்றால் உலகுக் கெல்லாம் சிரேஷ்டராகியவரா லாதரவுடன் அனுஷ்டிக்கப் படுகின்ற கருமங்களே யுலகினில் சத்தியமா யனுஷ்டிக்கப்படும். ஓ! பிரபுவே!தேவரீரோ சகல புவனங்களுக்கும் முதன்மை யாகின்றீர். (35) அப்போது ஸ்ரீஜகதீசன் அப்பிரம்மனது வசனத்தைக் கேட்டு அவரையே அக்கருமங்களை முறைப்படி செய்து முடிக்கும்படி மந்தஹாஸ முகாரவிந்தத்துடன் கட்டளையிட்டருளினர். (36) அக்கினிதேவன் சுய உருவத்துடன் பார்வதி பரமேசுவரர்களை வந்தனித்து விவாஹயாக மண்டபத்தில் சாக்ஷியமிசமாக ஜுவலித்து நின்றனன். (37) பிரம்மனும் அக்கினிக்கு நான்கு பக்கங்களிலும் தர்பபங்களைப் பரிஸ்தரணஞ் செய்து (பரத்தி), மூன்று பக்கங்களில் ஸமித்துகளைப் போட்டுக் கிழ்பக்கத்தில் இரண்டு ஸமித்துகளைச் சொருகி, நெய்யை முறைப்படி யுருக்கி ஆஜ்யஸ்தாலி யென்ற பாத்திரத்தில்விட்டு நிரப்பி, (38) அக்கினியினின்று தனியாக வெடுக்கப்பட்ட தணல்களில் அவ்வாஜ்ய பாத்திரத்தைவைத்து அதனுள் இரண்டு தர்ப்பங்களின் நுணிகளைப் போட்டு, ஓர்தர்ப்பத்தை மடித்து அக்கினியிற் கொளுத்தி ஆஜ்யபாத்திரத்தில் காட்டி யதைவடபக்கத்தி லெறிந்து, மற்றோர் தர்ப்பத்தை மடித்து அக்கினியிற் கொளுத்தி அதனால் ஆஜ்யஸ்தாலியை மூன்று தடவை சுற்றி வடக்கிலெறிந்து, (39) அந்நெய்ப்பாத்திரத்தை வடக்கிலிறக்கி, முந்திப்பிரத்தி யேகமாயெடுக்கப்பட்ட தணலை யக்கினியுடன் சேர்த்து, பிறகு அவ்வக்கினியில், வடக்கில் ஸ்தாபிக்கப்பட்ட தர்வி (ஓமபாத்திரம்)யால் பிரம்மன் ஹோமம் செய்

தனர்.(40) மேலுமப்பிரம்மன், தம்பதிகளிலொருவருக் கொருவர் நேசவ சமதிகரிப்பதற்காக ஸமித்து, நெய், ஹவிசு, பொரி யிவைகளா லோமஞ் செய்தனர். பிறகு ஸ்ரீபரமேசுவரனும் தமதிரண்டு கைகளாலும் ஸ்ரீப வானியம்மையுடைய பாதத்தைப் புன்னகைப்புடன் மெல்லப் (41) பி டித்து ஏழுஅடி தூக்கிவைத்து அம்மியின் முனையில் எடுத்துவைத்தனர். தேவாகூஷகரான பரமேசுவரன் "ஏகமிஷேவிஷ்ணுஸ்துவான்வேது" எ ன்ற மந்திரத்தினுல் தம்பதி யிருவர்களும் வெகு சந்தோஷசித்தர்க ளாக அவ்வக்கினியைப் பிரதக்ஷிணம் செய்தனர்கள். உலகுக்கெல்லாம் முக்கிய தம்பதிகளும் முதன்மைப் பிரபுக்களுமாகிய அப்பார்வதீ பரமே சுவரர்கள் பிராம்மணர்களிடத்தி னின்றுசீர்வாதம்பெற்று மிக மனக்களி ப்புடன் ஒரே ஆசனத்தின்மீது வீற்றிருந்து பிறகு எல்லோர்களுக்கும் தரிசனமளித்தனர்கள். முந்தி பிரமதகணுதிபர்கள், காலாக்கினிருத்தி ரர், ஹாடகேசுவாருத்திரர் இவர்களுக்கும் (44) விஷ்ணு, பிரம்மா, இந் திரன், அக்கினி, முதலியவர்களுக்கும், யோகிசுவரர்கள், முனீந்திரர்கள், உரகர்கள், ஸித்தர்கள், ஸகலதேவஸ்திரீகள் ஆகிய இவர்களுக்கும் முறை யே காக்ஷியளித்தனர்கள். (45) அவற்றுள், காலாக்கினி ருத்திரர், ஹா டகேசுவரர், சகல கணுதிபர்கள் இவர்களைத் திருவாக்கினுலும், ஸ்ரீ மகா விஷ்ணுவையோர் புன்நகைப்பினுலும், (46) பிரம்மாவையோர் பார் வையினுலும், மற்றதேவர்களைக் கொஞ்சம் கடைக்கண்பார்வைகளாலும், முனிவர்களைத் தலையசைத்தலினுலும் ஸ்ரீ பிரபுவானவர் வெகுமதி செ ய்தனர். (47) இச்சந்தர்ப்பத்தில் மன்மதன் மனைவியாகிய ரதியானவள் இந்திரன் முதலியவர்களோடுகூட ஸ்ரீ மகேசுவரனைநோக்கித் தனது க ணவன்பிழைத்தலைப் பலவாறு பிரார்த்தித்தனள். (48) அச்சமயத்தில் பார்வதியம்மை பிரபுவையோர் குறுக்குப்பார்வையால் நோக்கினள். ஹரிப்பிரம்மர்களும் தங்கள் தங்கள் போக சுகானுபவத்துக்காக யாசித் தனர்கள். (49) உலககர்த்தாவுமங்கெல்லாவற்றையும் நோக்கி மனக்களி ப்புடன் ரதியை நோக்கித் திருவாய்மலர்ந்தருளியதாவது:—"பெண்ணே! ஸுரதத்துக்காக வுனது கணவனிருக்கக்கடவன்: (50) ஆனுலவன்,மற்ற வர்க்கெல்லா மநங்கனும், (சரீரமற்றவன்) உனக்குமட்டிலுடலுள்ளவனு மாவான். இனிமுதலிம் மூவுலகிலும் யாம் "காமாரி" யென்ற பெயரைக் கொள்வோம். (51) வாராய் சுபகுணமாதே! அவனை யநங்கனுகவே யூர மாதரிப்போம்; மன்மதனுனக்குமட்டில் மெய்யுடையோனுவான்; அவனு ன்னைமட்டிலே மெய்யுடையோனுக வாதரிப்பான்", (52) என்று தே வெசனருளியபின்னர் பிரயாணத்துக்குச்சித்தமாயிருக்கும்போது இமவா னிரண்டு மைந்தர்களுடனும் பிரபு சன்னிதியில் தண்டனிட்டு (53) மது

பர்க்கத்தினுடைய மிச்சத்தை யாது விநியோகம் செய்வதென்று பிரபு முன்பாகத் தெரிவித்துக்கொண்டனன். அப்போது அம்மதுபர்க்க நிர்ம்மால்லியத்தை யிரப்பதற்குக் கவலைகொண்ட விஷ்ணுப் பிரம்மர்கள் முதலாகிய தேவரெல்லோர்களும் ஸ்ரீபிரபுவினுடைய(54) திருமுகத்தைச் சிரமீதஞ்சலிகொண்டு விரைவுடன் நோக்கினர்கள். ஸ்ரீ பரமேசுவரனு மவர்களது நோக்கத்தையறிந்து அந்நிர்மால்லியத்தை யவர்களுக்குட் பங்கிடும்படி கட்டளையிட்டருளினர். (55) தேவரெல்லோர்களும், மெத்தபரிசுத்தமாகியதா லாவல்கொள்ளப்பெற்ற வச்சிவநிர்ம்மால்லியமாகிய மதுபர்க்க மிச்சத்தைஆத்ம பரிசுத்திநிமித்தமாக யான் யானென்று விழுந்துபெற்றுக்கொண்டுமுற்றும் பாவமற்றோராயினர்கள்.(56) பிறகு மகா மேருவை வில்லாகக்கொண்ட பகவான் கிரிராஜனை யனுக்கிரகித்து, ஸ்ரீ பார்வதீசமேதராக பருத்த திமிலையுடைய திருவெருதின்மீதேறிக் கைலைகிரிக்குப் (57) புறப்பட்டு கணநிபர்கள், தேவர்கள், மகரிஷிகள் இவர்களுடன்கூட அரைக்ஷணத்தில் அக்கிரியையடைந்து, அங்குசுபமாகிய போகபுரத்தில் (58) தமது திருமாளிகை வாசலில் விருஷபத்தின்மீதிருந்தபடியே சற்றுநின்றருளி, ஸ்ரீ காலாக்கினிருத்திரர் முதலாகிய சகல தேவர்களையும், (59) வஸிஷ்டர் முதலான ரிஷிகளையும், இன்னும் மற்ற ஸ்தாவர ஜங்கமங்களாகிய சகல பிராணிகளையும், புருவச்சிணுக்கத்தினால் விடைகொடுத்து விட்டு, ஸ்ரீ பூதேசன் ஓர் க்ஷணத்தினுள் விருஷபத்தினின்றிறங்கி, (60) ஸ்ரீ நந்திகேசுவரனது கையைப் பற்றிக்கொண்டு தேவீசமேதரான சந்திரசேகரன் தமதந்தரங்க கணங்களுடன்கூட தமதரண்மனையினுட் சென்றருளினர். (61) இவ்வாறாகிய, ஸ்ரீ பரமேசுவரன் பார்வதிதெவியைக் கலியாணம் செய்து கொண்டதைப்பற்றிய விவ்வத்தியாயத்தை யாவராயினும் தினந்தோறும் பக்தியுடன் படிக்கினும் அல்லது சாவதானமனதுடன் கேட்கினும்,(62) அவர் ஸ்திரீயாகினும், புருடனாகினும், யாவராகினும் கேளீர் பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ பார்வதீபரமேசுவரர்களுடைய விக்கலியாணத்தியாயத்தை, யெடுத்துரைக்கின்ற சிறந்த பண்டிதரை நன்குபசரித்து மிகவாதரவுடன் கேட்கில்($63\frac{1}{2}$) பெண்ணை வேண்டுவோர் பெண்ணையும், கணவனை வேண்டுவோர் தகுந்த சிறந்த கணவனையும்,(64) வித்தையை வேண்டுவோர் வித்தையையும், ஜயத்தை வேண்டுவோர் ஜயத்தையும், புத்திரரை வேண்டுவோர் வெகு புத்திரர்களையும், ஆயுசை வேண்டுவோர் அளவற்ற வயதையும் அடைவார். (65) பூர்வத்தில், விஷ்ணுவானவர் வெகு பக்தியுடனிவ் வத்தியாயத்தைக் கேட்டதினால் அமிருதத்தினின்று ஜனித்த விலக்குமியை மனைவியாகவும், அவளுமப்படியே ஸ்ரீ புருஷோத்தமராகிய விஷ்ணுவை

க்கணவனுகவும் அடைந்தனர்கள். (66) * முந்தி அங்ஙனமே பிரம்மனி னை முறைப்படி கேட்டதனுலே ஸரஸ்வதியை மனையாளாகவும், அவ னுமந்நான்முகனைக் கணவனுகவும், பெருமை பொருந்திய இந்திரன் ஏராளமான தேவஸம்பத்துடன் இந்திராணியை மனைவியாகவும், அடை ந்திருக்கிறுர்கள். (67) இதேவிதமாய் கௌதம முனிவர் அகலியையும், மற்ற முனிவர்களும் தகுந்த சிறந்த பெண்டீர்களையும், இவ்வத்தியா யத்தைப் படித்ததனு லவரவர்கள் தங்கள் தங்களிஷ்டங்களை யடைந்தி ருக்கிறுர்கள். (68) ஆகையா லவரவர்கள் தங்கள் மனதின் கோரிக்கை யைப்பயன் பெறுவதற்காகத் தகுந்த மிகுந்த முயற்சியுடன் உத்தம மாகிய விக்கலியாணுத் தியாயத்தைப் பக்தியுடன் கேட்குதலாவது படி த்தலாவது வேண்டும். (69)

இருபத்திமூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உச—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு ஸ்ரீ பகவானுகிய ஜகதீசன் புதிதாய் மணம்புரிந்த, இமரா ஜன் பெண்ணுகிய உமாதேவியுடன், நவரத்தினங்களால் விளங்கலுற்ற திருமாளிகைக்குள் சென்று பொற் சிங்காஸனத்தை, வீற்றிருந்து விள ங்கச் செய்தனர். ($1\frac{1}{2}$) அப்போது, அச்சிவா தேவியானவள் ஸ்ரீ சிவ னைக்காட்டிலும் வேறில்லாதவளாயினும், உலகப்பெண்களுடைய வழக் கத்தை யனுசரித்தன்ள். (2) அவவம்மனுனவள், பற்பல முகங்களு டைய கணுதிபர்களாலும், ஸப்த மாதுருக்களாலும் செய்யப்படுகிற வி ளையாட்டு நடத்தைகளை நோக்கி நாணத்தினுல், மிகவும் திருமுக வணக் கமுற்றவளாகக் களிப்படைந்தனள். (3) புதிதாய் மணம்புரிந்த வவ்வ ம்மன் நாளளவில் கொஞ்சம் கொஞ்சமாகக் கூச்சத்தை யொழித்தனள்.

---

* ஸ்ரீ பார்வதீ கலியாண காலத்திலே இலக்குமீ ஸரஸ்வதிகளுடன் விஷ்ணுப் பிரம்மர்கள் வரலுற்றனர்க ளென்பதைப்பற்றியும், இதைப்போலொத்த இன்னும் மற்றஅஸம்பாவிதம்போல் தோன்றக்கூடியவைகளைப்பற்றியும் கல்பபே தங்களால் நடந்திருக்கக்கூடியவை யென்றறிக: இது மிகவும் பெரியவிஷய மா கியதால் இதைப்பற்றிய தகுந்த ஆதாரங்களைப் பிரத்தியேகமா யளவிலே விஸ்த ரித்தெழுதிவரப்படும்.

(3½) இவ்வாறாக வெகுகாலம் சென்றபோது பல விசித்திரங்களாயுள்ள சிங்காரத் தோட்டங்களி லங்கங்கு அவ்வம்மையோடு கூட ஸ்ரீ சூலபாணியானவர் விநோதமாய் விளையாடி வருமளவில் (4½) ஸகல ஜகங்களிலும் ஆண்பெண்களுடைய கேளிவிலாஸங்கள் விருத்தியாயிற்று. (5) மன்மதனும் தனது பெண்டீராகிய ரதியோடுகூட விநோத லீலைகளை யனுபவித்துக் கொண்டு முயற்சியோடு மூவுலகுகளையும் தனதைந்து மலரம்புகளுக்கு வசமாக்கினன். (6) பிறகு ஸ்ரீ விஷ்ணுமுதலிய தேவர்களும், தவத்தையே தனமாகநாடிய முனிவர்களும் ஸ்ரீ கலியாணோற்சவம் முடிந்ததன்மேல் ஸ்ரீ பரமசிவனால் விடைகொடுக்கப்பட்டு தங்கள் தங்கள் லோகங்களுக்குச் சென்றார்கள். (7) அப்போது அவர்கள் சூரபத்துமனுடைய பயத்தினால், உபத்திரவத்தைச் சகிக்கத் திராணியற்றவராகி எல்லோர்களும் மகாமேரு குகைக்குத் துரிதமாகச் சென்று ஒன்றுகூடி யோசனை செய்தார்கள். (8) இந்திரன், ஸரஸ்வதிதேவி யிலக்குமிதேவி இவர்களின் கணவர்கள் முன்பாக கைகட்டிநின்று கூறியதாவது:—"வாரீர் சர்வகுண சம்பூர்ணர்களாகிய விஷ்ணுப் பிரம்மர்களே! ஸ்ரீசம்புவானவர், சூரபத்துமனைக்கொல்வோனாகிய ஸ்ரீசுப்பிரம்மணியனென்ற தமதுமைந்தனைப் படைத்துப் பிரபஞ்சங்களை யிரக்ஷிப்பதாக வுறுதிசெய்தருளி வெகுநாளாயிற்று. (10) ஸ்த்தியமூர்த்தியும், ஸத்தியவாக்குடைய வருமாகிய ஸ்ரீ பகவானுடைய வாக்குறுதியும் தாமதிக்கின்றதே; நமது துரதிருஷ்டங்களினால் துன்பங்கள் விருத்தியாவதற்குச் சகதீசன் யாதுசெய்வார்? ஓ! கோ! கோ! இதென்ன கஷ்டம்! அவ்வசுரர்களோ மிக பாக்கியவந்தர்களா யிருக்கின்றார்கள்; ஸ்ரீ பரமேசுவரனையே முக்கியகெதியாக நாடியிருக்கின்றார்கள்; அவரையே மனதினால் பஜிக்கின்றார்கள்" என்றனன். (12) இவ்வாறாகவே திக்பாலர்களும், முனிவர்களும் துன்பங்களை வெளியிட்டுக் கொண்டார்கள். அப்போது பிரம்மன் தேவர்களை நோக்கி வசன முரைத்ததாவது:—(13) "நாம் மறுபடியும் தயாநிதியாகிய ஸ்ரீ பரமேசுவரனை யாராதித்தல் வேண்டும்; யோசிக்குமளவில் அசுரர்களும், தேவர்களும், இன்னும் மற்ற ஸ்தாவரஜங்கமமுமான வுலகெல்லாம் (14) ஸகல பிரபஞ்ச சுவரூபியான ஸ்ரீ மகாதேவனுக்குச்சரியே! (14½) இல்லாவிடில் கேளீர் தேவசிரோஷ்டர்களே! ஸ்ரீ ஜகதீசன் பருவதராஜகுமாரியாகிய ஸ்ரீ மகாதேவியோடு அந்தப்புரத்தில் யாது செய்கின்றாரென்று யாம் விசாரித்தல் வேண்டும். (15½) இப்போது திருபுரமாற்றானிடத்து யாவர்தானனுப்பப்படலாவார். (16) அப்படி யனுப்பப்படுவோர் மூலமாக பாலசந்திரனை யுச்சியலங்காரமாய்க்கொண்ட ஸ்ரீ ஸாம்பமூர்த்தியைப் பற்றிய விருத்தாந்தத்தைத்

தெரிந்துகொண்ட பின்னர் தகுந்த பிரயத்தினத்துடன் கூடியதைச் செய்வது நலமாகும் என்றனர். (17) இப்பிரம்மனது வசனங்களைக்கேட்டு ஸ்ரீ விஷ்ணுவு, மிந்திரனும் உசிதமென்றே யெண்ணினர்கள்: மற்ற தேவர்கள், திக்பாலர்கள் முதலிய எல்லோர்களும் பிரியமாய் மெச்சினர்கள். (18) ஸ்ரீ விஷ்ணு இந்திரன் முதலிய தேவசிரேஷ்டர்களுடைய அனுமதியின்பேரில் பிரம்மனானவர் ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற வாயுபகவானை யழைத்து (19) எல்லோர்களுடைய முன்னிலும் வாக்கினால் பலவிதத்திலுபசரித்து வெகு பராக்கிரமசாலியான ஸ்ரீ ஸரஸ்வதீமணவாளன் வெகுமானத்துடன் பின்வருமாறு கூறினர்:—"கேளீர் வாயுவே! யாமெல்லோர்களுமோ, வலிய அசுரர்களால் நமது சகல சொத்துக்களும் லோகங்களுமபகரிக்கப்பட்டு, வெகுகாலமாய்த் தேகத்தைமட்டில் மிச்சமாக க கொண்டவர்க ளாகிவிட்டோம்.(20-21) அவர்களை யடக்குவதற்கு ஸ்ரீ முருகய்யனைத் தவிர மற்ற யாவரையும் யாம் காண்கிலோமல்லவோ அம்முருகனே ஊர்த்வரேதஸ்ஸாகிய (மேனோக்கிச் செல்லும் வீரியத்தையுடைய) ஸ்ரீ சூலபாணியால் ஸ்ரீ சருவாணியம்மை யிடத்துண்டாக்கப்படத்தக்கவர். (22) இவ்வெல்லாப் பிரபஞ்சங்களுக்கும் பஞ்சகிருத்திய பரனாகிய (சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரம், அனுக்கிரகம், திரோதானம் ஆகிய வைந்து தொழிலை நடத்துவோன்) ஸ்ரீ ஜகதீசன், திவியாந்தப் புரத்தில் வசிக்கலுற்ற மகாதேவியோடு வெகுகாலமாய்(23) யாதுசெய்கின்றாரென்பதை நீர் சென்றறிதல் வேண்டும். வாரீர் ஸதாகதியாகிய (எப்போதும் நிலைமையற்றுச் சஞ்சரிக்கலுற்ற) வாயுவே! நீர் உலகினுள்ளப் பிராணிகளுக் கெல்லா முயிராகின்றீர்: மேலும் நீர் ஸ்ரீமகாதேவனுக்கும் பெருமை பொருந்திய வோர் சரீரமாகின்றீர். (24) வேதத்திலோவென்றால் அக்கிரக (முந்திச் சொல்லுவோ) ரென்று சொல்லப்படுகின்றீர். ஆகையால்'வாரீர் வாயுவே! தேவர்களுக்கும், இம்மூவுலகினுமுளள வெல்லோர்களுக்கும் இதத்தை நீர் சீக்கிரத்திற்போய்ச் செய்தல்வேண்டும் என்றனர். (25) வாயுவுமோவென்றால் அதைக் கேட்டு பரபரப்புடன் பதிலுரைத்ததாவது:—"கேளீர் பிரம்மதேவரே! அந்தப் புரந்தன்னில் ஸ்ரீ உமாதேவியோடு உல்லாசமாய் வீற்றிருக்கின்ற ஸ்ரீ பரமேசுவரனிடஞ் செல்வதற்கு யானும் சக்தரில்லை. (26) மற்ற யாவராலும் மாளாது." பூர்வத்தில் மன்மதன், அமிருதத்தை யன்னமாகக்கொண்ட தேவர்களது சொல்கேட்டு ரதிதேவியுடன் ஸ்ரீ பரமேசுவரனிடஞ் சென்று சாம்பலானது உங்களுக்குத் தெரிந்த விஷயமே" யென்றுரைத்தனர். (27) வாயுவின்மொழியைக் கேட்டு பிரம்மன் திரும்பவும் சொன்னதாவது:— "ஆலமரத்தடியிலிருந்தருளிச் சனகாதிகளுக்கு உப

தேசமளித்திருந்த ஸ்ரீ சம்புவின்மீது (28) மன்மதன் தனது மனைவியுடன் சென்று அம்பெய்தனன். அப்பாவமவனைக் கொல்லலாயிற்று. நீரோ எட்டு மூர்த்திகளைக் கொண்ட ஸ்ரீ பரமசிவனுக்கு, பெரியோர்களால் நன்குபூஜிக்கப்பட்டுற்ற, இஷ்டமானவோர்மூர்த்தியாகின்றீர். (29) மிக பெரிதாகிய வித்தேவகாரியத்துக்காக வும்மையே யாங்கள் கெதியாக நாடியிருக்கின்றோம். நீராக்ஷேபணை சொல்வதாகாது. தாமதமும் செய்யவேண்டாம். (30) வாரீர் வாயுவே! நீர் போய்வாரும்; உமக்கு சுபமான வழியுண்டாகட்டும். இவ்வாறாகவே சகல தேவர்களும், பாவலேசமற்றப் பிரம்மரிஷிகளெனப் பிராம்மணர்களும் பிரார்த்திக்கையில் (31) வாயுதேவன்வெகு மனவருத்தத்தோடேற்றுக்கொண்டு அவர்களிடத்தில் விடை பெற்றுக் கைலைகிரிக்கு பிரயாணப்பட்டனர். (32) அவர் (கைலைகிரிக்குச் செல்வதற்கு) வடமுகமாகச் செல்லத்தக்கவராயினும் கொஞ்சநேரம் மயங்கி கீழ்முகமாயும், தென்முகமாயும், மேல்முகமாயும் சென்று பிறகு வேகத்தில் வெகு சாமார்த்தியவானாயினும் மிக மெதுவாகச் செல்லலுற்று, ஸ்ரீ பரமேசுவரனுடைய பட்டணத்தை யடைந்தனர். (33) அவர், திவ்விய மாணிக்கங்களா லிழைக்கப்பெற்றதும், கண்களைப் பறிக்கலுற்றதும், அனேக சூரியர்களுக் கொப்பானதும், ஆகாயத்தை யளாவி நிற்கின்ற பல வீடுகளா லாச்சரியப் படத்தக்கதுமான அப்பட்டணத்தை கோட்டைவாசல் வழியாக உட் சென்று, ஸ்ரீ சுவாமியினுடைய வாஸஸ்தானமாகிய திருமாளிகையை யடைந்தனர். ($34\frac{1}{2}$) அவர், அங்கங்குள்ள மகாபயங்கரர்களாகிய வாசற்காவலர்களால் பார்க்கப்படாமல் அனேகம் கட்டுகளைக்கடந்து, (35) அந்தப்புரத்துக்கு அதிபராகிய ஸ்ரீநந்திகேசுவரன் வீற்றிருக்குமிடத்துக்கும் வந்துவிட்டனர். அப்போதங்கு வாயுவானவர் உருவமுடையவராகவே அந்நந்திபகவானுக்குப் புலப்பட்டனர். (36) பிறகு நந்திபகவான் கோபமூண்டுரைத்ததாவது:—"அடா வாயுவே! நீ மெத்த ஸாகஸமுள்ளவன்! போ! போ! நீ யாது நிமித்தம் இங்கு நம்முடைய உத்திரவில்லாமல் திருடன்போல் சந்திரசூடனாகிய ஸ்ரீபிரபுவினுடைய ஆலயத்தினுட் பிரவேசிக்கின்றாய்? சொல் என்றனர்." ($37\frac{1}{2}$) ஸ்ரீநந்திகேசுவரனுடைய அவ்வசனத்தைக் கேட்டு வாயுவானவர் திரும்பி அவர் முன்னிலையில் (38) வந்தனித்துக் கைகட்டி நின்று "தேவர்களாலனேகம் முறை கேட்டுக்கொள்ளப்பட்டதின் பேரில் தேவகாரிய நிமித்தமாய் வரலாகினேன்; (39) அதில் பெரிதான அபராதம் நெரிட்டிருக்கின்றது; அதைத் தேவரீர் தயவுசெய்து மன்னித்தல் வேண்டும், மன்னித்தல்வேண்டும்; வாரீர் பிரபுவே! தாங்கள் ஸ்ரீ மகாப் பிரபுவிடத்தி லறிவித்து அடியேனை யுட்செல்லும்ப

டி யருளவேண்டும்" என்று வேண்டினர். (40) அது கேட்டு நந்திபக வான் வெகு கோபத்துட னுரைத்ததாவது:—"அடா வாயுவே! நீ சீக்கி ரத்தில் திரும்பிச் செல்; இதற்குச் சமயமில்லை: மன்மதனைப்போல் மா ண்டு போகாதே" என்றனர். (41) பிறகு வாயுவானவர் ஸ்ரீ நந்திதேவ ன் வசனத்தினுல் மிகவும் கிலேசமடைந்து யாதுசெய்வதென்று சிந் தை கொண்டு "இதை யெப்படியாகிலும் தேவசிரேஷ்டர்களிடத் தறிவி த்துவிடுவோம்; (42) அத்தேவோத்தமர்களே யிப்போது தக்கபடி யா கியதைச் செய்துகொள்ளட்டும்" என்று மனதில் நிச்சயித்துக் கொ ண்டு மனோவேகமாக (43) இரத்தினக் கொடுமுடிகளையுடைய மேருகிரி க்குச் சென்று துரிதத்தில் தேவர்கள் தங்கிய குகையை யடைந்தனர்.

இருவத்தினுலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உரு—வது அத்தியாயத்தினர்த்தம்

அவ்வாயு பகவானைத் தேவரெல்லோர்களும் கண்டு அளவற்ற சந்தோஷமடைந்தார்கள். அந்தக்காணத்தில் வணக்கமுற்றவராக வந் தனித்துப் பக்கத்தில் நின்ற அவ்வாயுவை அத்தேவர்கள் வினவினதா வது:—(1) "வாரீர் மஹா பாக்கியசாலியான வாயுதேவனே! பெரியோ ர்களுக்கு முக்கிய கெதியாகிய ஸ்ரீ மகாதேவன் பார்வதி யம்மையோடு யாது செய்கின்றனரென்பதை யிப்போதுரைப்பீராக. (2) களிப்புற்ற மனதுடன் கூடிய வத்தேவர்களது வசனத்தைக் கேட்டு வாயுதேவன வ்வெல்லோர்களையும் நோக்கித், துரிதமாக வடியில்கண்டபடி யப்போ து கூறலுற்றனர்:—(3) "வாரீர்தேவர்களே! ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர் களது விருத்தாந்தமானது அங்கு எந்தனுலறியப்படவில்லை; ஸ்ரீ நந்தி கேசுவரனுல் கோபத்துடன் "இது உங்களுக்கு ஸமயமில்லை" யென்று ஆஞ்ஞை செய்யப்பட்டதைக் (4) கேட்டு யான் திரும்பிவந்துவிட்டே ன். பிரபுக்களுடைய சமயத்தை யெதிர்பார்ப்பதி லிவ்வாருக சம்ப்வி ப்பது சாதாரணம்தானே! இதற்குமேல் நீங்களிதமாகியதைச் செய்வீர் க்ள். (5) இவ்விதமாக வாயுபகவான் சொல்லும்போது பிரம்மன் முத லிய வித்தேவர்கள் மிக மனவருத்த முற்றவர்களாகி ஸ்ரீ நாராயணனே டுகூட எல்லோர்களும் மறுபடியும் வெகுநேர மாலோசனை செய்து (6)

மேருவின் குகையினின்று புறப்பட்டுச் சிகிரத்தில் கைலைமலைக்குச் சென்று அங்கு ஸ்ரீ சம்புவினுடைய, பரிசுத்தமும், மிக நீண்டுயர்ந்தது மான திருமாளிகையையடைந்தார்கள். (7) அவர்கள் அங்கு ஸ்ரீ தேவாதிதேவனுடைய வெளிவாசலிலிருந்து வெகுகாலமளவில் அனுப்படையாமல் நற்காலத்தை யெதிர் நோக்கிக் காத்திருந்தார்கள். (8) பிறகு ஒருநாள், ஸகலப் பிரமதகணாதிபர்களாலும், சித்தர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள் இவர்களாலும் ஸேவிக்கப்படலுற்ற கணசிரேஷ்டராகிய ஸ்ரீ நந்திகேசுவரன் (9) தற்செயலாக வெளிவாசலுக் கெழுந்தருளிய போது அவரைத் தேவோத்தமர்கள் கண்டு, தரித்திரருக்குப் புதயல் வாய்த்ததுபோல் மிக மனக்களிப்புற்றனர்கள். (10) அப்போது தேவர்களவரை கல்பக விருக்ஷத்திய மலர்களினால் பூஜித்து, மிகுந்த பக்தியுடன் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து,(11) பல தோத்திரங்களாலவரைச் சந்தோஷிப்பித்தும் எதிரில் கைகட்டி நின்று சொல்லியதாவது:— "ஓ! சாலங்காயனர் குலத்துக்குத் திலகமாகிய நந்திகேசுவரா! தேவரீரினால், சருவகுண சம்பூர்ணராகிய சிலாதமுனிவர் உலகினில் பாக்கியவந்தர்களுக்கெல்லாம் மிகுந்தவரும், மூவுலகுக்கும் சாக்ஷாத் குருவாகவும் சொல்லப்படலாகின்றார். ($12\frac{1}{2}$) ஓ! மிதமற்ற காந்தியுடைய தேவனே! மிகவும் கிலேசமடைந்து எதிர்நோக்கி யிருக்கின்ற எங்களைப்பற்றி ஸ்ரீ தேவாதிதேவனுக் கறிவித்துத் தேவரீரிப்போது தேவர்களுக்கு நற்றுணையோ ராகவேண்டும். ($13\frac{1}{2}$) மேலும் துக்கமாகிய பெருங்கடலிலாழ்ந்திருக்கின்ற ஜகங்களைக் கரையேற்றிவிடுதல் வேண்டும்." (14) ஸ்ரீ பரமசிவனுக்கு மிகவன்புளராகிய, இலக்ஷ்மீவிலாஸம் பொருந்திய மிகுந்த புண்ணியசாலியான நந்தி தேவன், இவ்வாறான, தேவர்களுடைய வசனங்களைக் கேட்டதன்மேல் தேஜோமயமாய் ஜ்வலிக்கின்ற பரமேசுவரனருகிற் சந்தோஷத்துடன் சென்று (15) ஜகங்களுக்குத் தாய் தந்தையர்களான தேவதேவிகளை வந்தனித்தபின்னர் ஸ்ரீ மன்மதமாற்றானுடைய மனக்குறியை யவாது முகக்குறியாலறிந்து, பிறகு (16) ஸேவார்த்தமாய் வந்திருக்கின்ற தேவர்களைப் பற்றி மிக வணக்கத்துடன் தெரிவித்துக் கொண்டதன்மேல் திருவுத்திர வடைந்தபின்னர் தேவர்களை ஸ்ரீ மகேசுவரனுடைய திருச்சன்னிதிக்குத் தருவித்தனர். (17) அப்போது ஜகத்பிரபுவாகிய மகாதேவனும் ஸ்ரீ மகாதேவியோடு கூட திவ்விய சிங்காசனத்தில் வீற்றிருந்து மந்தஹாஸத்துடன் அத்தேவர்களுக்குத் திருக்காக்ஷி கொடுத்தருளினர்.(18) பிறகத்தேவர்களு மவரைத்தரிசித்துப் பக்தியினாலு ரோமங்கள் சிலுக்கலுற்றவர்களாகி யுள்ளம் பாவசம் கொண்டவர்களாக எவ்விதத் துதிக்கும் தகுதியான பிரபு

வைத்துதி செய்தார்கள்:— (19) "வணங்கினோர்களின் துக்கத்தைத் தொலைக்கின்றவரும், அசுபங்களை விலக்குவோருமான பரமசிவனாகிய வுமக்கு வந்தனம்: சுபங்களையும், அபீஷ்டங்களையு மீந்தருளுகின்ற தேவரீருக்கு வந்தனம்: (20) மன்மதனையும், திருபுரர்களையும் கொன்றவரும், கலியைத் தீர்க்கின்றவரும், சந்திரன், சூரியன், அக்கினி இம்மூவர்களையும் மூன்றுகண்களாக வுடையவரும், சந்திரகலையை யுச்சியிற் தரித்தவரும், (21) பாவங்களைத் தொலைக்கின்றவரும், தக்ஷனுடைய யாகத்தை யழித்தவரும், அடியார்கள் சுகமடைவதற்கு முக்கிய காரணரும், சங்கரனும். ஸர்வஞ்ஞனும், திருசூலத்தைநப்பற்றியவருமாகிய ஸ்ரீ சம்புவுக்கு வந்தனம்: (22) யமனைக்கொன்றவரும், ஹாலாஹல விஷத்தை விழுங்கியவரும், பெரியோர்களுடைய பகைஞர்களை மடிக்கின்றவரும், எங்களுக்கும் ஸகல வுலகுக்கும் மகா பிரபுவு மாகிய தேவரீருக்கு வந்தனம்: (23) ஓ! சகல ஜீவாசிகளுடைய துக்கங்களையும் போக்கடிக்கின்ற பரமசிவா! சீக்கிரத்தில் சகல தேவசேனைகளுக்கும் தலைவனாகிய வடிவேலனைப் படைத்து, எங்களுக்கு அசுரர்களால் நேரிட்டிருக்கின்ற துன்பமானது பரம தயாளுவாகிய தேவரீரால் விலக்கப்படல் வேண்டும். (24) இவ்வாறாக தேவர்கள் மிகுந்த பக்தியுடன் துதிக்கையில் கருணைக்கடலாகிய பிரபுவானவர் ஆறு திருமுகங்களால் விளங்கலுற்ற திருமேனியைக் கொண்டனர். (25) அளவிடத்தகாத சுவரூபத்தையுடைய, ஸ்ரீ ஜகதம்பிகைக்குக் கணவனாகிய தேவன், தம்முடன் திவிய சிம்மாசனத்தில் வீற்றிருந்த வம்பிகையை ஆறு திருமுகங்களாலும் மனவிருப்பத்துடன் நேசமாய் நோக்கினர். (26) அதே க்ஷணத்தில், மேனோக்கும் வீரியத்தையுடைய தேவாதி தேவனிடமிருந்து ஆறுநெத்திக்கண்களாலும் கோடிசூரிய பிரகாசமுடையதும், மகாபிரளய காலாக்கினிக்குச் சமனாகியதுமான தேஜஸானது வெளிப்பட்டது. (27) ஆறு உருவமானவத் தேஜஸானது அண்டபிண்ட சராசராதி ஸகல ஜகங்களிலும் வியாபித்தது. தேவர்களோ அத்தேஜஸினால் பயந்து திக்கு திக்கா யோடினார்கள். (28) எங்கெங்கெல்லா மோடினும் ஸ்ரீசம்புவினுடையவத் தேஜஸை யவ்விடங்களிற் கண்டு, யாதொன்றுக்கு மஞ்சாதவராகியவத் தேவர்கள் மிகுந்த பயங்காளிகளைப் போல் எல்லோருமோடி யொளிந்தார்கள். (29) அவர்கள், எங்கும் கெதியற்றவர்களாகி திக்குவிதிக்காய்த் திரும்பத்திரும்ப விரைவாக வோடிச் சென்றார்கள். இவ்வாறாக, சரணமடைவதற்கு யாவரையும் காணாமல் மறுபடியும் ஸ்ரீ ஜகதீசனையே சரணமாக வடைந்தார்கள். (30) பயத்தினால் தேகமெங்கும் நடுக்கமுற்று அடிக்கடி பெருமூச் சுற்றவர்களாக சரணம்

சரணமென்று (தேவன்முன்னர் முறையிட்டதாவது):—"ஓ! என்றுமழிவற்ற மகாதேவா! ஓ சருவஞ்ஞா!ஓ சருவலோகேசுவரா! ஓ ஸகலசக்தியுடையோரே! ஓ!சகல புருஷார்த்தங்களையு மடைவதற்கு மூலகாரணமாகியவரே! ஓ சகலப்பிராணிகளிடத்தும் கருணையளிப்பதிற் கவலைகொண்டோரே! (32) இத்தேஜஸினால் கண்ணொளிமழுங்கிய வெங்களைக் காத்தருளல் வேண்டும்". இவ்வாறாகிய, தேவர்களின் துதிகளால்மனக்களிப்படைந்த, சர்வேசுவ ரேசுவரனும், அம்பிகையோடு கூடியவருமான (33) ஸ்ரீ தயாநிதியானவரத் தேஜஸ்ஸை மனதினால் ஸ்மரித்தனர். நினைத்த மாத்திரத்திலத் தேஜஸானது தன்தாய் தந்தையர்களண்டயீ லோர்கொடிக்குள் வந்தது. (34) ஆறு உருவங்கொண்ட அத்தேஜஸானது உடனே சிறியதும் முற்றும் சாந்தமுமாகி தெவன்முன்னர் நின்றபிறகு கிருபா மூர்த்தியாகிய மகாதேவன் தேவர்களை நோக்கி, (35) அக்கினியையும், வாயுவையு மழைத்து பின்வருமாறு திருவாக்குரைத் தருளினர். "வாரீர்! அக்கினிவாயுக்களே! நம்முன்னர் ஆறுருவமாய் மறுபடிவந்து நிற்கின்ற, பெருமை பொருந்தியவித் தேஜஸ்ஸை நீங்கள் (36) கொண்டு மற்ற தேவர்களுடன் சீக்கிரமாய்த் தேவகங்கையில் நாணற்குத்தின் பக்கத்தில் நமது கட்டளையின்படி சேர்ப்பித்துவிடுங்கள்; தாமதம் வேண்டாம். (37)

இருபத்திஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உசு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

நைமிசாரணியத்திய முனிவர்கள் ஸ்ரீ ஸூதரை வினவினதாவது:—"வாரீர் மிகுந்த பாக்கியசாலியான சூதமுனிவரே! அளவற்ற பராக்கிரமங்களையுடைய ஸ்ரீ சம்புவுக்கு மேனோக்கிச் செல்லும் வீரியத்தையுடைய தன்மையிருக்கு மற்புதமானது உலகில் மிகுந்த வாச்சரியம். நெத்திக்கண்ணினின்று வெளிப்பட்ட (1) ஸ்ரீ பரமேசுவரனுடைய வித்தேஜசானது எங்ஙனம் ஸ்ரீ கந்தபிரானாகவாயிற்றோ அவ்வற்புதமாகிய கதையை யுரைத்தல் வேண்டும். (2) வாரீர்! கதையுரைப்பதினால் கேட்போர்களை யுரோமஞ்சிலுப்பிக்கின்ற முனிவரே! இச்சராசர ஜகத்தில் நீரே சருவஞ்ஞர், உம்மாலறியப்படாதது யாது மில்லை; (3) ஸ்ரீ சுப்பிரம்மணியோத்பத்தியைப் பற்றிய வெல்லா விருத்தாந்தங்களையு மு

ரைத்தல்வேண்டும்." இவ்விதமாகப் பிராம்மணர்களால் பிரார்த்திக்கப்பட்டபோது மகா பெருமைபொருந்திய, வியாஸமுனிவரின் சிடனுனசூத முனிவர்(4) சகலத்தையும் நன்காராய்ந்து வுள்ளபடி யெடுத்துரைத்தனர்:—"வாரீர்! சகல முனிவர்களே! முந்தி ஸ்ரீவியாசமுனிவரால்மிகுந்த கருணை கூர்ந்து எங்களுக் கெடுத்துரைக்கப்பட்டதும், சகலபுருஷார்த்தங்களையும் பெறுவதற்கு முக்கிய வாதாரமுள்ளதுமான ஸ்ரீசுப்பிரம்மணியருடைய வுத்பத்திசரித்திரத்தை யானெடுத்துச் சொல்வதைக் கேளுங்கள்.(5-6) ஸ்ரீசிவதேஜஸ்ஸை நாணற்காட்டண்டையில் சீக்கிரத்தில் கொண்டுபோகும்படி ஸ்ரீஜகதீசனுல் கட்டளையிடப்பட்ட, மகா பலிஷ்டர்களான அக்கினிதேவனும், வாயுதேவனும்(7) மிகப்பயந்து ஸ்ரீதேவனை பக்தியுடன் தண்டனிட்டுக்கும்பிட்டுச் சொல்லியதாவது:—"ஓ! மகாதேவா! பரங்களெங்கே! சகலபுவனங்களையு மவமதிக்கலுற்றதேவரீரது தேஜஸ்ஸெங்கே!(8) ஓ! அம்பிகாபதியே! அதைச் சுமப்பதற்குளங்களது திறமை யெம்மாத்திரம்" என்று அவர்கள் கூறியதை ஸ்ரீ சூலபாணிகேட்டு மந்தஹாஸ முகாரவிந்தத்துடன்(9) திருவாக்கருளியதாவது:—"வாரீர்! அக்கினிவாயுக்களே! தேஜஸ்ஸைச் சுமப்பதிலுங்களுக்கு நமதாஞ்ஞையின்படி பலமுண்டாகக்கடவது. இத்தேஜஸு மிலேசாகக்கடவது (10) மற்ற தேவர்களும் விஷ்ணு பிரம்மர்களுடன் உங்களைத் தொடர்ந்து வரட்டும்." என வுரைத்து ஸ்ரீஜகதீசண் மேன்மை தங்கிய வம்பிகையுடன் மறைந்தருளினர்.(11) ஒளியினுல் ஜுவலித்தும், மிககுளிர்ச்சிகொண்டதுமான ஸ்ரீ பரமேசுவரனது வத்தேஜஸினுடைய ஆறு உருக்களையும், அக்கினிதேவனுச்சிதனிலெடுத்துக் கொஞ்சதூரம் செல்லுகையில் களைப்படைந்தபோது (12) வாயுதேவன் மாற்றுதலாக வதைச்சுமந்தும், இவ்வாறுக வொருவருக் கொருவர் அடிக்கடி மாற்றிச் சுமந்தும், மிகுந்த முயற்சியோடு மெத்த வருத்தமுற்று கங்கையினுடைய பாரோரத்தில் நாணற்குத்தின் பக்கத்திலுள்ள தாமரைமலர்க் கூட்டத்தி லவ்விருவர்களும் மங்களகரமானதும் மரைமலருக்குச் சமானமாகியதும், மரைமலர்களின் வாசனையைக்கொண்டது மான வத்தேஜஸ்ஸை வைத்தனர்கள். (13-14) அத்தேஜஸினுல் நீருறிஞ்சப்பட்டு சிறுகிப்போன கங்கையானது, நாணற்காட்டு மடுவின் நடுவிலுள்ள மரைமலரின் மத்தியிலத்தேஜஸ்ஸை யொதுக்கிவிட்டது. (15) அங்கு, ஆயிரம் சூரியபிம்பங்களை யொத்த, ஸ்ரீ மகேசுவரனுடைய வத்தேஜஸானது, ஆறு திருமுகங்களையும், பனிரண்டு புயங்களையும், இரண்டு பாதங்களையுமுடைய, ஸகல ஜகங்களுக்கும் சுபத்தையு மாயுசையும் விருத்திசெய்தருளுவதான வோர் சுந்தரத் திருமேனியைக் கொண்டு (16½) ஓர் க்ஷணத்தினுள் உவ

கிலுள்ள சிறந்த வழகினர்களுக்கெல்லா மொப்பிடப் பெற்ற வோர் குழந்தையாயிற்று. (17) அப்போதங்கு, தேவதுந்துபி முதலிய வாத்தியங்களின் முழக்கத்தோடு மலர்மாரி பொழியப்பட்டது. நாட்டிய வித்தையில் மெத்த தேர்ச்சி பெற்ற வனேக தேவதாசிகள் நர்த்தனம் செய்தார்கள். (18) அப்போது திசைகளெல்லாம் தெளிவடைந்தது. காற்றும் பிராணிகளுக்கு வெகு சுகமாக வீசிற்று. புவனங்களில் தேவகணங்களுக்கு மிகுந்த சோபனத்துக் கிடமாயிற்று. (19) ஸ்ரீ ஜகதீசனுடைய தேஜஸானது மிக சுந்தரமான குமார வடிவமானதைச், சகல தேவர்களும் முதலில் காக்ஷிபெற்றவுடன் தாங்கள் நாடியதைக் கைப்பற்றியவராக வுணர்ந்து, வந்தனித்து (20) தாங்கள் இக்காக்ஷியைப் பெற்ற மகிமையினுல் அசுரேந்திர ரிடத்தினினின்று தங்கள் தங்கள தைசுவரியங்களைத் திரும்பக் கைப்பற்றி முன்போ லனுபவிக்கலாயிற்றென்று கருதி, அதைப் பரபரப்பாய் மிகவாதரவுடன் ஸேவித்தார்கள். (21½) இந்திரன் முதலிய தேவர்கள் குழந்தையைச் சுற்றிலும்நின்று பாதுகாத்தார்கள். (22) தேவர்களிவ்வாருகப் பணிவிடைசெய்து நிற்கையில் அசுரர்களை மடிக்கலுற்ற ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் ஆறு கார்த்திகை நக்ஷத்திரங்களையும் தருவித்து இச்செல்வக் குழந்தையை ஸ்தனியபானம் செய்வித்தனர். (23) "வாரீர்! கார்த்திகை நக்ஷத்திரங்களே! இவ்வாக்கினேயனுக்கு * (அக்கினிகுமாரன்) தினந்தோறும் முலைகொடுத்துத தாய்மாராவீர்கள்" என்று ஸ்ரீவிஷ்ணு வுரைத்தவசனங்களை ஆறு கார்த்திகைமார்களும் கேட்டபின்னர் (24) தம் கொங்கைகளிற் சுரக்கலுற்ற பாலைப் பெருகவிட்டு மிக வன்புடையோர்களாக அக்குழவியை ஸ்தனியபானம் செய்வித்துப் போஷித்து வந்தார்கள். (25) ஸ்ரீவிஷ்ணுவினுடைய கட்டளையின்படி யிக்கார்த்திகைமார்க ளருகிலுற்றபோது அச்சம்பு குமாரனும் அவர்களை யனுக்கிரகிப்பதற்காக ஓர் நொடிக்குள் ஆறு மூர்த்திகளாகவாயினர். (26) அவர்களும் மிக சுந்தரமான வக்குமாரன் மனைமலரின் மீது விளங்கி நிற்பதைக் கண்டு களிப்பினுலுள்ளம் பூரித்தவர்களாகி ஒவ்வொருவரு மொவ்வொரு குழந்தையையெடுத்துக்கொண்டு (27) அவ்வெல்லோர்களும் பால் பெருகலுற்றவர்களாகி குழந்தையைத் தங்களது முகத்தோடு முகமணைத்து முத்த

* ஸ்ரீபார்வதீ பரமேசுவரர்களுக்கு அருமைத் திருமகனுன ஸ்ரீமுருகேசனுக்கு, தேஜஸானது அக்கினியால் சுமக்கப்பட்டதினுல் அக்கினி குமாரனென்றும் அது கங்கையில் விடப்பட்டதனுல் கங்காபுத்திரனென்றும், நாணற் குத்தினில் ஜனித்ததனுல் சரவண பவனென்றும், கார்த்திகை நக்ஷத்திரங்களிடத்து ஸ்தனியபானம் செய்தபடியால் கார்த்திகேயனென்றும் சொல்லப்படும்.

மிட்டார்கள். அக்குழந்தைகளும் இத்தாய்மார்களுடைய முகத்தை நோக்கிக் கொண்டே முலையுண்டார்கள். (28) தாய்மார்கள் குழந்தைகளுக்கு முலைகொடுத்தான பிறகு அளவிலே அக்குழந்தைகளை மலர்மலர்கள்மீது படுக்கவைத்துத் தாலாட்டிக் காத்துவந்தார்கள். (29) பிறகு ஓர் குழந்தை தூங்கிற்று; மற்றொன்று அடிக்கடி சிரித்தது: மற்றொன்று மிகவுமழுதது: பின்னுமொன்றோ உரக்க வதட்டப்பட்டதனால் கதறிற்று. (30) ஓர் குழந்தை சிரித்து உடனே தூக்கக்கலக்கத்தினால் அடிக்கடி அழுதது; மற்றொன்று கையினால் கால்பருவிரலை வாயில் வைத்துக்கொண்டே அழுதது. (31) ஒன்று, இருகைகளையும் சேர்த்துக் கூப்பி வாய்தனில் வைத்துக்கொண்டது. மற்றொன்று அடுத்த க்ஷணத்திலே மார்பினால் நகர்ந்தது. வேறொன்றோ (32) முழந்தாள்களாலும் கைகளாலும் கொஞ்சம் கொஞ்சமாகத் தவிர்ந்தது. ஒன்று கால்களினாலிரண்டு மூன்றடிகள்தூக்கிவைத்து நடந்து விழுந்தது. (33) மற்றொன்று கால்களினால் கொஞ்சதூரம் நடந்து சமபூமிக்குச் சென்றது; மற்று மொன்றோ தாயின் கையைப்பற்றிக்கொண்டு சமபூமிக்குச் சென்றது. (34) ஸ்ரீ பரமசிவனுடைய மற்றொரு குழந்தையானது எழுந்து கீழ்விழுந்து திரிந்தது. பிறகு அடுத்த க்ஷணத்துக்குள்ளே மற்றொன்று அடிக்கடி யோடித்து; (35) பிறகு ஒன்று கால்களால் முழுதும் நடந்தது. மற்றொன்று ஒத்தைக்காலால் குந்துப்பிடித்தது. ஒன்று, மல்லனைப்போலும், ஆட்டைப்போலும், மற்றோர் குழந்தையை முன் நெத்தியினால் முட்டுக்கொடுத்தது. (36) பிறகு இரு குழந்தைகளு மொருவரோடொருவர் கட்டிக் கைச்சண்டையிட்டுக் கொண்டார்கள். ஸ்ரீ பரப்பிரம்மமே குழந்தைத் தன்மை பெற்று இவ்வாறாக வெல்லாம் செய்து (37) ஆறு குழந்தைகளாகப் பிரிபட்டதுபோல் அவ்விளையாட்டு சுகங்களை யனுபவித்தது. அத்தாய்மார்களும் குழந்தைகளுடைய விசித்திரமான லீலாவினோதங்களைப் பார்த்து (38) மிகவாச்சரியமுற்று அவ்வெல்லாக் குழந்தைகளின் பேரிலும் அளவற்ற வன்பைப் பாராட்டினார்கள். விஷ்ணு முதலிய தேவர்களும் அவ்விசித்திரங்களான செய்கைகளைக் கண்ணுற்றுக் களிப்பினால் மயிர்க்கூச்சலுற்று அப்போது, நாடிய பயன்கள் யாவையும் கைப்பற்றியவர்களாக வானார்கள். (39½) "யாமீசனையோர் குமாரனை யாசித்ததற்கு ஐந்து குமாரர்களதிகமாக் வருள் செய்யப்பட்டிருக்கிறார்கள்.(40) உலகத்துக்குக் கண்டகர்களான (முள்) கொடிய வசுரர்கள் இவ்வாறுபேர்களாலும் வேருடன் பிடுங்கப் படலாவார்கள்." இவ்விதமாக, தேவசிரேஷ்டரெல்லோர்களும் மிகுந்த சுந்தர வதனங்களையுடைய ஆறு சிவகுமாரர்களையு

ம் பார்த்து, பலவித அபீஷ்டங்களை மனதில் நினைத்து (41) மோக்ஷ ஸாம்பிராஜிய லக்ஷ்மியென்ற பிரம்மாநந்தத்திலும் மேன்மையுள்ள சுகத்தையடைந்தார்கள். ஸ்ரீஜகதீசன் பிரஸன்னராக விருக்கையில் ஜகமதில் எந்தவித சௌக்கியம் தான் கிடையாமற்போகும்; ($41\frac{1}{2}$)

இருபத்திஆறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உஎ—வது அத்தியாயத்தினர்த்தம்.

தேவர்கள், ஸ்ரீமகாதேவனுடைய கண்களினால் வெளிப்பட்ட தேஜஸ்ஸைக்கண்டு மிகப்பயந்தோடும் போதே ஸ்ரீ பார்வதிதேவியும்(1) மனநடுக்கமுற்று ஸ்ரீபரமேசுவரனதுமடியைவிட்டுமெலாமலரடிகளடிக்கடியிடறலுற்றவளாக அந்தப்புரத்தை நோக்கியோடிச் செல்லுகையில்(2) இடறிய பாதங்களிற் பூண்ட பாதஸரங்களி லிழைக்கப்பட்ட நவ (ஒன்பது) ரத்தினங்களும் ஓர் க்ஷணத்தினுள் சிதறி வழியோரத்தி லுதிர்ந்தன. (3) தேஜஸ்ஸுகள் சிறிய உருவமடைந்து தேவர்களும் பயந்தெளிந்து நிற்கையில், ஸ்ரீதேவியானவள் அச்சங்கதிகளைத் தெரிந்துகொண்டு மிகுந்த கோபத்துடன் அத்தேவர்களைச் சபித்தனள். (4) "வாரீர் தேவர்களே! எனது திருமேனியினின்று மைந்தன் பிறக்குமளவும் நீங்கள் பொறுக்காதபடியால் நீங்கள் பிள்ளையற்றோராகக் கடவீர்கள்". (5) இவ்விதமாகத் தேவர்களைச் சபித்து இமராஜன் பெண்ணாகிய தேவியானவள் மறுபடியும் ஸ்ரீதேவனுடைய மடியண்டைக்குச் சிறந்த மந்தகாஸத்துடன் வருமளவில் (6) வழியினிரண்டு பாரிசங்களிலும் சிதறிவிழுந்த ஒன்பது ரத்தினங்களிலும் அம்மனுடைய திருமேனி பிரதிபலித்து பத்து கௌரியம்மன்களாக விளங்கலுற்றனள். (7) ஸ்ரீசம்புவானவர் அப்பிரதி பிம்பங்களைப் பார்த்து அவ்விரத்தினங்களினின்று சீக்கிரத்தில் வரும்படி யழைத்தனர். ஸ்ரீதேவேசனவ்வா றழைக்கையில் சகல ரத்தினாபரணங்களாலு மலங்கரிக்கப் பட்டவர்களாகவும், (8) அந்தந்த வித ரத்தினங்கள தொளியைக்கொண்டு திருமேனியுடைய வர்களாகவும், அவ்வவ் விரத்தினங்களின் பெயரைக் கொண்டவர்களாகவும் அவர்கள் ஸ்ரீபார்வதீ பரமேசுவரர்கள தருகில்வந்து(9) ஸ்ரீமகாதேவனைமோக வாசை மனதோடு பார்த்தார்கள். தாமரையிதழை யொத்த நேத்திரங்களையும், அழகிய மூக்கையும், நேர்த்தியான ரத்தினகுண்டலங்களையு

முடையதும், (10) களங்கமற்ற சரத்கால் சந்திரனைப்போன்ற சுந்தர மந்தஹாஸத்தினால் சிறந்து விளங்கியதுமான, ஸ்ரீ பரமேசுவரனுடைய திருமுகத்தை காக்ஷிபெற்ற, அந்நவரத்தினங்களது கிரணவொளியைக் கொண்ட அக்காளிகளுக்குஉடனே வயிற்றினிற் கெர்ப்பமுண்டாயிற்று. ஓ! கோ! இதுமிகவும் ஆச்சரியம். (11½) பிறகு தேவியானவள், அவர்களது மனக்குறியை யறிந்தபோது கண்கள் கொஞ்சம் சிவக்கலுற்றும் (12) மறுபடி வயிற்றினது கெர்ப்பத்தை நோக்கையில் கோபத்தினாலுதடு துடிக்கப் பெற்றவளுமாகி யவர்களைச் சபித்ததாவது:—"வாரீர் பெண்களா! நீங்கள் பிரஸவிக்காமல் வெகுநாலம் கெர்ப்பத்தோடிருக்கக் கடவீர்கள்". (13) இவ்விதமாக ஸ்ரீ தேவியால் சபிக்கப்பட்ட வர்களும், மோகவாசையை யுடைத்தவர்களுமான வம்மாதர்களுக்கு அடிக்கடி சரீரத்தில், மிகுந்த வியர்வையுண்டாகி முத்துக்கள்போல் விளங்கிற்று. (14) இப்பெண்கள்மீது இவ்வியர்வைத் திவிலைகளினின்று மகா பராக்கிரமசாலிகளும், கத்தி, கேடயங்களைக்கைகளிற் பற்றியவர்களும், வெகுசூரர்களுமான இலக்ஷம் படைவீரர்க ளுண்டாயினர்கள். (15) சூரியன் கண்ணைக் குத்துவித்த பரமசிவன் அவர்களைத்தமது குமாரர்களாகப் பாவித்தனர். ஸ்ரீகௌரியம்மனது சாபத்தினால் கெர்ப்பத்தினுள்ளே வசிக்கின்ற மகா பராக்கிரமசாலிகளான அப்பிள்ளைகளோ (16) ஸ்ரீ ஜகதீசனை மனதில் தியானம் செய்துகொண்டே கெர்ப்பவாசம் செய்தனர்கள். ஸ்ரீ பரமேசுவரனுடைய திருவுத்திரவின்படி ஸ்ரீ பார்வதி யம்மனுக்குப் பணிவிடை செய்துவந்த வப்பெண்களோ வென்றால் (17) கெர்ப்பத்தினுடைய மிகுந்த பாரத்தினால் நாளுக்குநாள் அதிக துக்கத்தை யனுபவித்து வந்தார்கள். இவ்விதமாக வெகுகாலம் அவ்வொன்பது பெண்களும் மிகுந்த முயற்சியுடன் ஊழியம் செய்து வந்தபோது ஸ்ரீ சங்கரனும் பிரஸன்னமாகி, பார்வதியம்மாளும் அவ்வூழியங்களினால் மனதிரக்கமுற்றுக் களித்திருக்கையில் ஸ்ரீ பரமேசுவரன் (19) அப்பெண்களுக்கு அனுக்கிரக மளிப்பதற்காக ஸ்ரீ ஜகதம்பிகையை வேண்டிக்கொண்டனர். அவ்வாறீசன் கட்டளையைக் கொண்ட சருவாணியம்மன் தானும் மனதிரங்கி அத்தோழிமார்களை•நோக்கி (20) "பிரபஞ்சங்களுக்கு க்ஷேமமுண்டாவதற்காக உங்களது கெர்ப்பங்களினின்று மைந்தர்க ளவதரிக்கக் கடவர்கள்" என்றனுக்கிரகித்தவுடன் மகாபல பராக்கிரமசாலிகளும், உலகினில் வீரர்களுக் கெல்லாம் முதன்மையான வர்களும் அந்தந்தத் தாய்மாரின் திருமேனியது நிறத்தைக் கொண்டவர்களுமான நவவீரர்கள் அப்பெண்களினின் றுண்டாயினர்கள். (21½) சிவப்பு இரத்தினத்தினின் றுண்டான இரத்தவல்லியென்ற மங்கையிடத்தினின்று (22)

வெகு பராக்கிரமமுடைய வீரபாகுவென்ற வீரனுண்டாயினன். முத்து இரத்தினத்தினின்றுண்டான தரளவல்லியென்ற மற்றோர் மங்கையிடத்தினின்று (23) ஸகல வீரர்களுக்கும் முதன்மையானவும், இலக்ஷ்மிவிலாஸம் பொருந்தியவுமான வீரகேஸரியென்ற மைந்தன் பிறந்தனன். புஷ்பராக இரத்தினத்தினின் றுண்டான புஷ்யவல்லி யென்றவளினின்று (24) ஸகல வீரத்தலைவர்களுக்கும் முதன்மையான வீரமகேந்திரன் பிறந்தனன். கோமேதக விரத்தினத்தினின் றுண்டான கோமேததிலகை யென்றவளினின்று (25) ஸாக்ஷாத் வீரமகேசுவரன் அல்லது வீரசந்திரனென்று உலகினிற் பிரஸித்திகொண்ட மைந்தன் பிறந்தனன். வைடூரிய விரத்தினத்தினின் றுண்டான வைடூரியவல்லியிடமிருந்து வீரபுரந்தரனென்ற குமாரன் பிறந்தனன். (26) வைரத்தினின்றுண்டான வஜ்ரவல்லியிடமிருந்து வீரராக்ஷஸனென்ற மைந்தன் பிறந்தான். மரகதவிரத்தினத்தி னுண்டான மரகதவல்லி யிடமிருந்து (27) சத்துருக்களாகிய சேற்றை யுலர்த்துகின்ற வீரமார்த்தாண்டன் (சூரியன்) என்றவன் பிறந்தான். பவழத்தினின் றுண்டான பவழவல்லியிடமிருந்து வீராந்தகனென்ற மைந்தன் பிறந்தனன். (28) இந்திரநீல ரத்தினத்தினின் றுண்டான நீலவல்லியிடமிருந்து வீரதீரனென்ற மைந்தன் பிறந்தனன். இவ்விதமாகிய, மகா பராக்கிரமசாலிகளான நவவீரர்களென்ற (29) அவ்வெல்லோர்களும் அம்மங்கைமார் களுடைய நாபி (தொப்புள்) யின்வழியாய் மெல்ல வெளிப்பட்டு வணங்குவோர்களின் துக்கத்தைப் போக்கடிக்கலுற்ற ஸ்ரீ பவானியம்மை யோடுகூடிய ஸ்ரீ பரமசிவனை நமஸ்கரித்து (30) பெற்றோர்களின் பக்கத்தில் மகாபராக்கிரமசாலிகளாக வணக்கத்துடன் நின்றார்கள். (30½)

இருபத்திஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உஅ—வது அத்தியாயத்தினர்த்தம்

ஸர்வஞ்ஞனும், ஸருவேசுவரனுமான ஸ்ரீஜகதீசன் அந்நவ வீரர்களை நோக்கித் திருவாக்கருளியதாவது:— "வாரீர்! குழந்தைகளா! என்று மழிவற்றவனும், மகாபராக்கிரமசாலியும், தேவர்களது சத்துருக்களைத்துவம்சம் செய்வோனுமாகிய ஸ்ரீபார்வதி குமாரன் உங்களுக்கெஜமானனாவான்."(1½) என்றிவ்விதமாக, ஸ்ரீசங்கரனவர்களுக்குக் கட்டளை

செய்து பெயருமிட்டு (2) உமாதேவியினுடைய புத்திரனது முகாரவிந்தத்தைப் பார்ப்பதில் விருப்பமுற்றனர். பிரணதார்த்திஹர (வணங்குவோரின் துக்கத்தைத் தீர்க்கின்றவர்) ராகிய மகேசுவரன் பருவதராஜபுத்திரியோடு ஸல்லாபம் செய்துகொண்டு தமது மைந்தனைக் காண்பதிற் கொண்ட மிகுந்த ஸந்தோஷத்தினால் மெத்தவாதரவுள்ளவராகத் திருவெருது மீதேறிப் பிரயாணப்பட்டனர். (3-4) அப்போது பிரயாண சன்னகத்தின் குறியாக படஹவாத்தியம்,பேரி,சங்கம், காஹளம் முதலிய வாத்தியங்களின் பேரொலியானது பிரமதகணங்களால் செவிக்கு மிகவும் இனிமையாய் முழக்கப்பட்டது. (5) மகாபலிஷ்டர்களான கணத்தலைவரெல்லாம் பற்பல அஸ்திரசஸ்திரங்களைக் கையிற் பற்றிக்கொண்டும், ரதகஜ துரகங்களில் ஏறிக்கொண்டும், பதாதிகளாகவும் புறப்பட்டார்கள். (6) வெகுரூபலாவண்ய சுந்தரிகளான பதிலக்ஷம் ருத்திர கன்னிமார்களும், அதேவிதமாய் தேவதாஸிக் கூட்டங்களும் ஸ்ரீமகேசுவரனுக்கு முன்வரிசையாகச் சென்றார்கள். (7) சூரியனும், சந்திரனும் ஸ்ரீசம்புவுக்கும், அம்பிகைக்கும் வெவ்வேறாக மிகபக்தியுடன் பக்கங்களில் நின்று வெள்ளைக் குடைகளைப் பிடித்து வந்தார்கள். ஸ்ரீஹாலாஸிய ஸுந்தரரானவர் (ஹாலஹல விஷத்தை வாயினுள் விழுங்கிய ஜகன்மோகன வடிவினர்) பேரன்புடன் தம்மைந்தனருகிலுற்றனர். ($8\frac{1}{2}$) பிரயாண ஸன்னகவாத்தியங்களின் ஒலியைக் கேட்டு வெகுஸந்துஷ்டியடைந்த, ஸ்ரீகுமாரமூர்த்தி யருகினின்ற விஷ்ணுமுதலிய தேவர்கள், ஸ்ரீபிரபுவை த்தரிசிப்பதற்காக பக்தியுடனெதிர்கொண்டு சென்றனர்கள். ($9\frac{1}{2}$) ஸ்ரீ பகவானும் வெகுஸந்தோஷத்துடன் ஓர் க்ஷணத்தினுள் தேவர்களுடன் நாணக்காட்டண்டையில் வந்தனர். (10) அப்போது ஆறு மூர்த்திகளாயுள்ள குமாரனும் தம் தாய் தந்தையர்களைப் பார்ப்பதில் மிகவாவலுற்றவர்களாக மரைமலர்கள் மீதுவிளங்கி நின்றார்கள். அக்கார்த்திகைமார்களும் இக்குழந்தைக்குப் பணிவிடை செய்து நின்றார்கள்.(11) ஸ்ரீ பரமேசுவரன், பவானியம்மையுடனும் ஆகாயத்தில் நின்றபடியே பரபரப்புடன், தாய்மார்களுடன் மைந்தன் விளங்கியதைக் (12) கண்டு குழந்தையின் திருமுகத்தை நோக்குமளவில் தாம்முக்கண்களைக் கொண்டது இன்றுதான் ஸபலமாயிற்றென்று நினைத்தருளி, மிகவாதரவுடன் தேவியைநோக்கிச் சொல்லியதாவது:— பூசிக்கப்படலுற்றமாதே! நம்மைந்தன் ஆறுமூர்த்திகளாக மரைமலராசனங்கள் மீதுவீற்றிருந்து மிகநேர்த்தியாய் விளங்கி யிருப்பதைப்பாராய்! ஜகங்களுடைய துன்பங்களை எல்லாம் வல்லவரான விம்மைந்தனாலே நீவீரமாதா (வீரனைப்பெற்றவள்) வாகின்றாய்" (14) இவ்விதமாகக் கௌரீசன் சொன்னவுடன் தேவியான்

வள் ஓர் க்ஷணத்துக்குள் விருஷபத்தினின்றிறங்கி யவ்வாறு குழந்தை களையும் ஒன்றுயணைத்து உச்சிமுகர்ந்து(15) தம்கொங்கைகளிதிடையில் நெருங்கக் கட்டியணைத்து இவ்வாறு குழந்தை இரண்டு கால்கள், பனிரண்டு புயங்கள், ஆறுதிருமுகங்கள், பதினெட்டுக் கண்கள் இவைகளைக் கொண்ட ஒரே குழந்தையாகச் செய்தருளி (16) கொங்கைகளிற் சுரந்து பெருகிய மிகநேர்த்தியான பாலைப் பொற்கிண்ணியாற் போட்டினள். ($16\frac{1}{2}$) அக்குழந்தையும் தனதன்னையது மடிமீதிருந்து, அவளுடைய திருமுகத்தை, தாமரைமலரது காந்தியையுடைய கடைக்கண்களாலுற்று நோக்கிக்கொண்டு, சுல்விமயமும், ஞாநமயமுமானவத் திருப்பாலை விளையாட்டாக வுண்டனர். (18) இக்குழந்தை அன்னையின் பாலைக் குடிக்கையில் அதினின்று கொஞ்சம் திவலைகள் வழிந்து நீரில் சிந்தியதை, பராசரமுனிவரின் சாபத்தினுல் மீனுருவத்தை யடைந்திருந்த சில ரிஷிபுத்திரர்கள் குடித்தனர்கள். ($19\frac{1}{2}$) அதைக்குடித்த மாத்திரத்தில் அவைகளுக்கும் முன்னுருவம் வந்துவிட்டது. (20) பிறகு தேவியானவள் விருஷபத்தின்பேரில் விளங்கிய ஸ்ரீபரமேசுவானது மடிக்குக் குமாரனை யெடுத்துக்கொண்டு சென்றனள். துந்துபி முதலான வாத்தியங்களுடனும், "ஜயமங்களம்!" என்றது முதலான மங்கள கீதங்களுடனும் (21) அப்போது தாய் தந்தையர்களுடைய சிரமீதில் மலர் மாரி பொழியலுற்றது. தண்டாயுதங்களையும் சடைகளையுமுடைய முனிவர்களும், சித்தர்களும் நர்த்தனமாடினுர்கள். (22) ஸ்ரீபரமேசுவானும் குமாரனையெடுத்துவந்த பார்வதியம்மனை விருஷபத்தின் மீதேற்றுவித்து, கார்த்திமார்களைப் பார்த்து மிகுந்த வன்புடன் வரமளித்ததாவது:— "நீங்கள் வெகுநாளாய் நமது பாலனை முலைகொடுத்து வளர்த்த படியால் உங்களுடைய பெயரால் இவன், உலகினில் "கார்த்திகேயன் (கார்த்திகை நக்ஷத்திரத்தின்மைந்தன்) என்று சொல்லப் படலாவான். (24) மேலும், இவ்வுலகில், இன்றைமுதலாய் உங்களுடைய தினத்தில் (கார்த்திகை நக்ஷத்திரதினத்தில்) யாது மானிடர் இப்பால சுப்பிரமணியனுக்குப் பிரீள்யாக மிகவாதரவுடன் வெகுகாலம் விருதமனுஷ்டிக் கின்றுர்களோ (25) அவர்களுக்கிவன்றுனே ஸகல இஷ்டங்களையும் யாது தடையுமின்றி யளிக்கிறுனென்பதில் ஸந்தேகமேயில்லை. புத்திரனை வேண்டுவோர் மிகுந்த புத்திரர்களையும், மனைவியை வேண்டுவோர் நல்லமனைவிகளையும், (26) தனத்தை வேண்டுவோர் வேண்டிய தனங்களையும், பசுக்களை வேண்டுவோர் மிகுந்த பசுக்களையும், வித்தையை வேண்டுவோர் வித்தைகளையும், யாதொன்றையும் வேண்டாதவர் அழிவற்ற மோக்ஷத்

தையும் விசேஷமா யடைகின்றார்கள்.(27) இக்குமாரப் பிறப்பத்தியாயத்தை யாரொரு ஸ்திரீயானவ ளாதரவாய்க் கேட்கின்றாளோ அவள் பிறவி மலடியாயினியிக் குமாரனைப்போன்ற புத்திரனை நிச்சயமாகவே யடைகின்றாள்." (28) இவ்வாறாக, விஷ்ணுபிரம்மர்கள் முதலிய தேவர்களாலும், யோகிந்திரர்களாலும் பூஜிக்கப்படலுற்ற, திருவடிகளையுடைய ஸ்ரீ தயாநிதியானவர் கார்த்திகை மார்களுக்கு வரமளித்து தேவியோடுகூடத் தானுமிரண்டு கைகளாலும் மைந்தனைத்தழுவி யெடுத்தருளிச் சகல பூதகணங்களோடும், தமதாலயத்துக்குத் திரும்பி யருளினர். (29)

இருபத்திஎட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உகூ—வது அத்தியாயத்தி னார்த்தம்.

சூதர் சொல்லுகின்றார்:— குழந்தை விளையாட்டிலதிக வுற்சாகத்தைக் கொண்ட ஸ்ரீ சிவமைந்தன், விளையாட்டு காட்டுவதில் மிருந்த களிப்புற்ற பார்வதி பரமேசுவரர்கள் முன்னர் சிலகாலத்தைப்போக்கிச் சந்தோஷமாயவர்கள் மடிமீதிருந்து அலங்கரிக்க லுற்றனர். (1) ஸ்ரீ பார்வதி மைந்தன், தமது பாதங்களிற் பூண்ட விரண்டு தண்டைகளாலும், நவரத்தினங்களிழைக்கப் பெற்ற விரண்டு பாதசரச் சதங்கைகளின் ஜல் ஜல் என்ற வொலிகளாலும், அரைஞாணிற் கோர்க்கலுற்ற கிங்கிணி மணிகளது வின்பவோசைகாளாலும், மார்பினிற் பூண்ட மாலைகளாலும் விளங்கினர். (2) கழுத்தினில் வரிசையாய்ப்பூண்ட அற்புதவாபரணங்களான வனேக மோருமாலைகள், சிறந்த பதக்கங்கள் முதலியவைகளால், பெற்றோர் முத்தமிடப்பெற்ற அவரது திருமார்பானது, அனேக நக்ஷத்திரங்களால் நிறைந்த வாகாசம்போல் விளங்கிற்று. (3) செவிக்கலங்காரமாய்ப் பூண்ட நவரத்தின குண்டலங்களி னொளியினால் பிரகாசிக்கின்ற ஆறு முகங்களின் வரிசைகளும் நெத்திஸ்தானங்களில் தொங்கவிடலுற்ற விரத்தினமாலைளால் விளங்கிய தமது நெத்தியோடு வகையுற்ற சந்திரகலையை யுடையதாக விளங்கலுற்றனர். (4) ஆறு கிரீடங்களினு மிழைக்கப்பட்ட சிறந்த நவரத்தினங்களா லெல்லாத் திசைகளையும் பிரகாசப்படுத்துகின்ற, விஸ்தாரமான, சிரசுகளின் வரிசைகள், தேவர்கள் வசிக்கப்பெற்ற மகாமேரு கிரியினது பலஇரத்தின கொடுமுடிக

ளின் வரிசையைப் போன்ற சோபையைக் கொண்டு மிகவாச்சரியமாய் விளங்கலுற்றது. (5) மிகவளவற்றதும், நாவுக்கும், மனதுக்கு மெட்டாததும், அளவற்ற சுகங்களை யருள்வதும் ஸ்ரீ பரமேசுவர புத்திரனுமான அநந்தாநந்த ஸச்சித் பரப்பிரம்மமானது இவ்வாறாக மிக வலங்காரமான வோர் குழந்தைத்தன்மையை வகித்து ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்கள தருகினின்று விளையாடி யலங்கரித்து வந்தது. (6) ஸ்ரீ பாலகுமாரன் தம் பரிவாரங்களுடன் உலகினில் விளையாட விருப்பமுற்று, தாய்தந்தையர்களுக்குப் பல பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து அங்கினின்று வெளிப்பட்டு உலகினர்களுடைய மனதை மிகவும் களிப்பித்தனர். (7) முந்தி அவர் ஸ்ரீ பசுபதியின் முன்னர் விளங்கிய விருஷபத்தினுடைய திமிலே நகங்களினுற் சொரிந்து அதன் தினவயாற்றி யதன்மீது சற்றுநேரம் விழுந்து புரண்டு பிறகு வெளிச்சென்றனர். (8) அம்மிருந்த சுந்தரமைந்தரானவர் தமது கணங்களோடு கூட, பலவித விகாரங்களையுடைய பிரமத கணங்களை நோக்கிச் சிரித்துப் பரிகாஸம் பண்ணி அடிக்கடி யவர்களண்டையிற் சென் றவர்முன்னர் தமதாறு திருமுகங்களையும் விரல்களினுல் மறைத்துக் கொண்டனர். (9) அவர் துரிதமாயொரு வீட்டினுட் புகுந்து பிறகு தம்கணுதிபர்களால் காணப்படாமலே பிழைக்கடைத் தோட்டத்தின் வழியாக வெளிச்சென்றதன்மேல் மற்றொரு வீட்டினுள் தப்புவழியாகப் பிரவேசித்து அங்கினின்று வெளியே வந்தனர். (10) பிறகு அவர், அனேக விருக்ஷங்களா லடர்த்தியான, தேவர்களுக்கு பூஜியமாகிய கல்பக விருக்ஷத் தோப்பினில் ஆகாசமார்க்கமாகச் சடிதியிற் சென்று ஓர் மாத்தின் மீதேறி யதன்பழங்களைக் குலுக்கி யுதறிவிட்டு (11) பிறகு மற்றோர் மாத்துக்குத்தாவி அதன் மலர்களை யெல்லாம் பறித்து பிறகதினின்று மற்றோர் விருக்ஷத்துக்கு, அதன் துளிரிலும் மலரிலும் காதல்கொண்டு தாவி யாறுதிருவாய்களாலு மதன்கனிகளைப் புசித்தனர். (12) பிறகங்கினின்ற படியே பூலோகத்துக்கு வந்து தாமரைமீ தாசை யுற்றவராக நதிகளிலிறங்கிக்கலக்கி யங்கினின்று அவ்விளங்குழந்தை யானவர் ஸப்த (எழு) ஸமுத்திரங்களுக்குச் சென்று அவற்றின் கரைகளை யவரது செந்தாமரைத் திருவடிகளா லுடைத்துவிட்டு (13) மிக சந்தோஷத்துடன் அவ்வேழு சமுத்திரங்களையு மதிசீக்கிரத்தி லொன்றாக்கி அங்குள்ள மகரம், திமிங்கலமென்ற மச்சங்களை யழுந்த நசுக்கியும், குலாசலங்களை யெல்லாம் கையிற்பற்றிய குந்தாயுதத்தினு லனேகம் துணுக்குகளாக வுடைத்து அங்குள்ள ஸிம்மங்களுடன் (14) விளையாடினர்: அநந்தகலியாண குணசீலரும், லோககுருவுமான ஸ்ரீ கந்தபிரான், இரண்டு திருவடி

களால் விருக்ஷங்களையெல்லா முறைத்து முறித்தும், ஓர் மலையினின்று மற்றோர் மலைக்குத்தாவியும், பிறகு தமது கணங்களுடன் அளவிலே கொடி முதலியவைகளிலும், ஸர்ப்பங்கள் குடியிருக்கப் பெற்ற விந்தினத் தாழ்வரைகளிலும் பலவாறாய் விளையாடினர். (15) ஸ்ரீ சந்திரசேகர சுதனும், மிக ஸமர்த்தரும், விளையாட்டினிற் சளையாதவருமாகிய பால சுப்பிரமணியன் யானையுருவம் போன்ற மேகங்கள் நிரம்பிய வாகாயத்தை நோக்கிக் கிளம்பி, அங்கு மேகங்களால் இரண்டு தனுசுகளை யமைத்து இருகைகளில் பற்றிக்கொண்டு (16) அனேக நக்ஷத்திரங்களைப் பதினாயிரம்கோடி வில்லுருண்டைகளாகச் செய்துகொண்டு அவற்றா லனேகம் தேவசிரேஷ்டர்களை யடித்து விழுவித்தனர். பிறகு மிக பலிஷ்டரும், மூவுலகினிலும் விபத்துகளையும், துக்கங்களையும் தொலைப்பிக்கின்றவரு மாகிய வக்குழந்தை மிக ப்ரகாசமான வுருவத்தைக் கொண்ட சூரியனுடைய ஏழு பச்சைக் குதிரைகளைப் பிடித்து அவற்றின் மீதேறிப் பலவித நடைகளால் சவாரி செய்தனர். ($17\frac{1}{2}$) தேவகோடிகளால் துதிக்கப் பெற்ற கார்த்திகையின் திருமகன் பிறகக் குதிரைகளை விரட்டிவிட்டு, சந்திரனது ரதத்தின்மீதேறிக்கொண்டு (18) யானையானது ஓரோடையின்கண்ணீறங்கிச் சுற்றிக் கலக்குவதுபோல், கொஞ்சமேனும் தங்கு தடையின்றிப் பத்துத் திக்குகளிலும் சுற்றிவந்தனர். பிறகதையும் விட்டு இந்திரன், அக்கினி, இயமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன் இவர்களுடைய யானைகள் மீதேறிப் பலவித நடைகளாலும் ஒட்டங்களாலும் சவாரிசெய்தனர்.(19) பெயர்போன மகிமைதங்கிய ஸ்ரீபாலகுமாரன், (பூகோளத்தின் வடக்கிலும் தெற்கிலுமுள்ள) துருவங்களின் கைகளினால் பற்றப்பட்டிருக்கிற காற்றாகிய விசைக் கயிறுகளில் கட்டப்பட்டிருக்கிற நவக்கிரகாதி நக்ஷத்திரங்களின் * சக்கிரத்தைஅறுத்துவிட்டுத் தமது பரிவார கணங்களது கைகளாலும், தாமுமாக எட்டுத் திக்குகளிலும் அச்சக்கிரத்தைத் தூக்கி நின்றும், ஆகாய கங்கையது முதலைகளைப் பிடித்துக் கட்டிப் பிறகு அவைகளை யபிமானித்து ஜலத்தில்விட்டும் விளையாடினர்.(20) பிற்பாடு லீலைகளி லாசைகொண்ட வேலாயுதன், மஹலோகம், ஜனலோகம், தபோலோகம், ஸத்தியலோகம் இவை

---

* பூமிக்குமேலாக, சூரிய சந்திராதி நக்ஷத்திரங்களும், மற்ற நவக்கிரகங்களும் சுற்றிவருகின்ற, ஓர் சிம்சுமார (முதலை) சக்கிரமென்பது வானத்தில் வட்டமாகச்சுற்றி வருவதில் பக்கங்களில் நகராமல் நிலையாகச்சுற்றி வரும்படியச்சக்கிரத்தினிரு பக்கங்களிலுமிரு கயிறுகள் கட்டப்பட்டு அவ்விரு கயிறுகளின் நுனியும், அச்சக்கிரத்துக்கும் மேற்பாகத்தில் வெகு தூரத்திலுள்ள துருவனென்றவனால் கைப்பற்றப்பட்டு அதுமூலமாய்ச் சக்கிரமானது ஓரேயிடத்தில் நிலையாய்ச் சுற்றி வருகின்றது. அச்சக்கிரத்தை யவ்விசைக் கயிற்றினின்றறுத்து விட்டனரென்பது கருத்து.

களிற் சென்று விசுவர்கள், ஸித்தர்கள், அமரேந்திரர்கள், ஒன்பது பிரஜாபதிகள் இவர்களையெல்லாம் நடுநடுங்கச் செய்தும், பூமியைக் கோட்டைபோல் வளைந்து நிற்கின்ற சக்கிரவாள பருவதத்துக்கும் சென்று விளையாடினர். (21) சகல வுலகுகளுக்கும் பர்த்தாவாகிய விப்பால குமாரன் ஸத்தியலோகத்தில் ஸாக்ஷாத் பிரம்மனுடைய திருமுகங்களைத் தமது கைவிரல் நுனிகளா லடிக்கடி தொட்டுணர்ந்தும், அவரது மார்பிலணியப்பட்டு ஒன்றோடொன்று தண்டாமல் சிதறுண்டிருந்த முப்புரிநூல்களை யவரது தலையில் மாட்டிக் கூந்தலில் சுற்றிக்கட்டியும், சருவாதி நாதராகிய வம்மைந்தன் ஸ்ரீ விஷ்ணுபதமாகிய வைகுண்டம் சென்று (22) அங்கவர் முன்னர் விளங்கிய, அழகிய பின் தட்டுகளையுடைய கருடனையும், அவரது ஆதிசேடனென்ற பாம்பையும் பிடித்து அவ்வொன்றோடொன்று சண்டைக்கு விட்டு அவைக ளிரக்கைகளாலும் படத்தினாலு மடித்துக் கொள்வதிற் களிப்படைந்தனர். (23) மற்றோரிடத்தில் அவர் சிறுகுழந்தையாயினும் தான்மட்டி லொருவராக ஓர் யௌவனபுருடன் போலாகி அழகிய விழிகளையுடைய மாதர்களை விடத் தன்மையைக்கொண்டவராக மிகுந்த காமலீலாவினோதத்துடன் மோகிப்பித்தும், சிறந்த வித்துவான்களால் பூஜிக்கப்படலுற்ற திருவடிகளையுடைய வப்பாலன் பிறகு தேவாதிகள துலங்களுக்குச் சென்று அங்கங்கு வெகு வினோதமாக மிகவும் விளையாடினர். ஆ! இது ஆச்சரியம். (24) பிறகவரோர் பெரிய வரணியம் சென்று ஆட்டுக்கிடாவையும், ஸிம்மத்தையும் பிடித்து தமதிரண்டு கைகளா லவைகளி னிருகழுத்துகளிற் பற்றியொன்றோடொன்று சண்டைக்கு விட்டும், இன்னும் விளையாட்டுத்தனமாக வோரொருமைக்கிடாவையும் குதிரையையும் பிடித்து ஒன்றோடொன்று சண்டைக்கு விட்டனர். (25) தேவர்கள் வணங்கப் பெற்ற விம்முருகன் மறுபடியும் குழந்தையாகி யெல்லா வுலகப் பெண்டீர்களாலும் தாய்மார்களாற் போலெடுக்கப்பட்டு அவர் வேதவேதாந்தங்களில் வீற்றிருக்கும் பரப்பிரம்மமாயினும், மிக வாசை கொண்டவர்போ லவர்கள் மடிமீதும் வீற்றிருந்து விளங்கச் செய்தனர். (26) பெரியோர்களுக்கு முக்கிய பந்துவும், உமையம்மன தருமைத் திருமகனுமான விப்பாலகுமாரன், ஓர் பெரிய விருத்தராகி தலையெல்லாம் நரைத்தும், கண் காதுகள் மழுங்கியும், கைதனிலோர் தடியைப் பிடித்தும் (அசுரர்களின் வதையினால்) தேவாற்றிருக்கின்ற லோகங்களை இரக்ஷிப்பதில் கவலையுற்றவராக வங்கு திரிந்தனர். (27) ஸகல தேவர்களுக்கும் சூடாமணி (சிரோரத்தினம்) யும், அடியார்களுக்குச் சருவ விருப்பங்களையும் தருவோருமாகிய ஸ்ரீ சிவ மைந்தன், விசித்திரங்களாகிய மணிகளும், கிண்கிணிகளும்

இன்பமா யொலிக்கப் பெற்ற கழுத்தையுடையதும், மிக வுயர்ந்த கு திரைகளுக்கெல்லா மதிக மகிமை பொருந்தியதுமான வோராட்டுக்கிடா மீதேறி, யோர் சிறந்த ராஜகுமாரனைப் போல் அனேகவித நடைக ளாலும் சவாரிசெய்து விளையாடினர். (28) பிறகு ஓரிடத்தில் ஸ்ரீ பார்வதீ மைந்தன் அதி தீக்ஷிணியமான நகங்களையும், பற்களையு முடையதும், நுனி வெளுத்தடர்ந்த மயிர்ச்சடைகளை யுடையதும், மகி மை பெற்ற வாலினால் நேர்த்தியானதும், மிகவுன்னத மாகியதுமான வோர் சிங்கத்தின் மீதேறி ஆகாயத்திலும், பூமியிலும் திருப்பித் திருப் பி மிகவற்புதமாய்ச் சுற்றிச் சவாரி செய்தனர். (29) ஸ்ரீபரமேசுவரனு கிய திருப்பாற்கடலி னின்றுதித்த பாலசந்திரன், ஓரிடத்தில் கருடன், மற்றோரிடத்தில் அன்னபக்ஷி, மான், சரபராஜன், புலி, அனேகம் பற வைகள் இவைகளின்பேரி லெல்லாமேறிச் சவாரிசெய்து சுற்றி யதில வரது திருமேனியெல்லாமழுக்கடைந்து நிறம்குன்றி விளங்கலுற்றன. (30) விளையாட்டுத் தன்மையுள்ள, மகேசுவர மைந்தன், அனேக நட வாபிகளிலும், தடாகங்களிலும், சகல நதிகளிலும் தானொருவராக நீரா டித்திரிந்து விளையாடித்தனது கணங்களது மனதைக்களிக்கச் செய்த னர். (31) சகல பீடைகளையும் தொலைக்கலுற்ற பாலன், ஓரிடத்தில் நல் ல ஸ்வரத்துடன் வெகுநேரம், வீணையைக் கைப்பற்றிக் கானம்செய்ததா ல் வெகுநாள் முந்தியே காய்ந்து மடித்திருந்த மரங்களைத் துளிர்க்கச்செய் தும், மிருகங்களையெல்லாம் மேய்வதைவிட்டு ஆனந்தத்துடன் இருவி ழிகளையும் மூடச்செய்தும், மெகங்களையெல்லா மாகாசத்தில் சுற்றிவ ளைந்து கொள்ளவும் செய்தனர். (32) அப்பரப்பிரம்ம மூர்த்தியானது, ஓரிடத்தில், துவாரங்களுடைய வோர் பில்லாங்குழாயை யிருகைகளிற் பற்றி விரல்நுனிகளா லத்துவாரங்களில் மூடிமூடித்திறந்து ஸகல விள ங்கொங்கை மங்கையர்களுடைய மனம் காமனதீனமாகும்படி யூதினர். (33) இளமைத் திருமேனியுடைய ஸ்ரீசுப்பிரம்மணியன், அக்ஷராப்பி யாஸம் செய்கின்ற சிறந்த பிராம்மண மைந்தர்களோடு தானும் தமிழ் தெலுங்கு, கன்னடம், நாகரம், கிரந்தம் முதலிய பாஷைகளை யெல்லாம் கற்றனர். (34) மகாத்துமாவாகிய பரப்பிரம்ம மூர்த்தியும், பிரம்ம விஷ் ணுக்களால் கானம் செய்யப்படலுற்ற புகழுடையவருமான ஸ்ரீசம்பு மைந்தன் வேதாத்தியயனம் செய்தப் பிரம்மசாரிகளுடன் தானுமத்திய யனம் செய்ததில் மற்றெல்லோர்களையு மதிகரித்துத் தேர்ச்சி யடைந்த னர். (35) ஸ்ரீ பரமேசுவரனுடைய அக்கினிநேத்திர தேஜஸ்ஸினின் றுண்டான விச்சுந்தர மூர்த்தியானவர் இவ்வண்டத்துக்கு வெளியிலுள்ள

வனேககோடி யண்டங்களுக்கும் சென்று அங்கும் தனது கணங்களு டன் இவ்வாறுகவே வெகுகாலம் விளையாடி, பிறகு மகாமேருகிரிக்கு வந்து அங்குநின்று அதன்கொடுமுடிகளை யெண்ணலுற்றனர். (36)

இருபத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௰—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பாடு ஸ்ரீ ஜகதீசனுகிய மகேசுவர புத்திரன் இரத்தினக் கொடுமுடிகளையுடைய மகாமேருபருவதத்தின்கண் ணின்று விளையாடுமளவில் தேவர்கள் மிக வாச்சரியமுற்றுர்கள். (1) தேவர்களுக்கு வாசஸ்தானமாகிய ஏழு குலபருவதங்களையும் பிளந்தவரான வம்மகானுபாவனைக் கண்டு "இன்னும் பூதலத்தில் யாதுதான் நடக்குமோ" வென்று மிக பயங்தேங்கிய (2) முப்பத்துமுக்கோடி தேவர்கள், ஏகாதச ருத்திரர்கள், துவாதசாதித்தியர்கள், அஷ்டவசுக்கள், ஸப்த மருத்துக்கள், இரண்டவசுவினி தேவர்கள் இவர்களெல்லோர்களும்கூடி (3) எல்லா திக்பால தேவர்களுடனும் இந்திரனிடஞ் சென்று ஸ்ரீ சூலபாணியினுடைய பாலகுமாரனது திருவிளையாடல்களைப் பற்றித் தெரியப்படுத்திக் கொண்டார்கள். (4) அப்போதவர்கள் ஸ்ரீ சுப்பிரம்மணியரது மாயாவசத்திறைலறிவுகெட்டு அவரையறியாமல் இந்திரனை நோக்கிப் பின் வருமாறு கூறலுற்றனர்:— "கேளீர்! தேவேந்திரனே! யாவருடைய மைந்தனேமிகவும் சாமர்த்தியவானுகிய வோரிளைஞன், யானைக்குட்டியானது ஓடையைக் கலக்குவதுபோல் மூவுலகங்களையும் வெகுகாலமாய்க் கலங்கச் செய்து வருகின்றுன். (6) மேலுமச்சிறுவனுல் குலபருவதங்களெல்லாம் சின்னபின்னமாக்கப் பட்டது. ஏழு சமுத்திரங்களும் ஒன்றுக்கப் பட்டன. ஏழு தீவுகளுமழிக்கப்பட்டன. (7) திக்கஜங்களெல்லாம் காலைவாரிப் பற்றி அடிக்கடி சுழட்டி எறியப்பட்டன. இவ்வாறுகத் தீங்களிக்கப்படுகிற வுலகின்கண் ஜெணங்களுக்கு யாது கதி யிருக்கிறதென்பதை யுரைத்தல் வேண்டும்". (8) என்று தேவர்கள் கூறியதை யிந்திரன் கேட்டு அச்சிறுவனுடைய மேன்மையான வல்லமையைப் பார்த்து அவரது மாயையினு லவரை யறியாமல் மனதுக்குள் நினைத்ததாவது:—(9) "மகா அற்புதமான பராக்கிரமங்களையுடைய விச்சிறுவன் யாவனே தெரியவில்லை. இவனது விளையாட்டினுல் சகல ஜகங்களும் சா

ம்பலாகின்றன. (10) இச்சங்கதிகளைப் பிரம்மனுக்குத் தெரியப்படுத்திவேண்டிய பரிகாரங்களைத் தேடிக்கொள்வோ" மென்று தேவர்களுடனும் யோஜித்துக்கொண்டு மேன்மைதங்கிய தனது வெள்ளையானைமீதேறி(11) திக்பாலர் முதலிய சகல தேவர்களுடனு மாயிரம் கண்களையுடைய இந்திரன் மேருகுகையருகாய்ச் செல்லுமளவில்($11\frac{1}{2}$) ஸ்ரீசூலபாணியது குமாரன் அம்மேருகிரியது கொடுமுடிகளைக் கைலாகவத்தினு லொன்றொன்றாய்ப் பிடுங்கிச் சுழட்டி யெறிவதை வழியில்கண்டு வெகுகோபம்கொண்டு தேவர்களுடனச் சிறுவனை யடிப்பதற்குத் துடங்கினன்.(13) ஸ்ரீஸர்வேசுவர மைந்தனும், மஹாபிரபுவுமான அச்சிறுவன் விளையாட்டிலே உற்சாகம் கொண்டவராயினும் தேவர்களோடு தம்மீது கோபமூண்டிருக்கிற விவ்விந்திரனை யடிப்பதற்குத் துடங்கலாயினர். (14) மிகவாக்கிரகங் கொண்ட, இந்திரன்முதலிய தேவர்களா லடிக்கடி வில்விற்பூட்டியவர்மீது தொடுக்கலுற்ற வம்புகளெல்லாம் அவர்மீதும் அதிலும் விசேஷமாயவரது திருவடிகள்மீதும் மலர்மாரியாகப் பொழியலுற்றன. ($15\frac{1}{2}$) அக்குமார மூர்த்தியும் மந்தகாஸ முகாரவிந்தத்தோடு சும்மாவிருந்தனர். (16) பின்னும் இந்திரனதிக வாக்கிரகம் கொண்டு ஐராவதத்தின் மஸ்தகத்திலுட்கார்ந்து அப்பரப்பிரம்மத்தின்மீது மிகஜாஜ்வலியமானமாகிய வஜ்ஜிராயுதத்தை விட்டனன். (17) அவ்வஜ்ஜிராயுதமு, மவர்மீது பட்டமாத்திரத்தில், மறுவஜ்ஜிராயுதத்தினுல் முட்டித்தடுக்கப்பட்டது போல், ஓர் நொடிக்குள், நெருப்புப்பொறிகளைக் கக்கிக்கொண்டு சிதறியொடிந்து பொடிப்பொடி யாகிவிட்டது. பிறகு மன்னரும், தம்மீது வஜ்ஜிரத்தை விட்டதனு லிந்திரன் மீததிக கோபம் கொண்டு ஓரம்பை வில்விற்பூட்டி யைராவதத்தின்மீது விட்டனர். (19) அம்மேன்மை தங்கிய யானையானது அவ்வம்பினுல் மஸ்தகத்திலடிபட்டு, வஜ்ஜிராயுதத்தினுல், மலையடிபட்டுச் சிதறுண்டு விழுவதுபோல் முற்று முயிரற்று விழுந்தது. (20) இந்திரன் மறுபடியும், எழும்பிக் குதித்து வில்லெடுத்து, மேகம் மழைபொழிவதுபோல் சரமாரி பொழிந்தனன்.(21) மகா பராக்கிரமசாலியான குமாரசுவாமியும் ஓரம்பை வில்விற் பூட்டிவிட்டனர். அவ்வம்பானது, அவக்கிரகமானது (நவக்கிரகங்களது மாறுதலினுல் மாரிக்கு நேரிடுகிற வோரவ கேட்டுக்குறி) மழையை யடக்குவதுபோல் அச்சரமாரியை யடங்கச் செய்ததுமின்றி (22) அவ்விந்திரனுடைய வில்லையும் முறித்துவிட்டது மிகவுமாச்சரியம். ($22\frac{1}{2}$) இந்திரனும் மறுபடி வெகுவுரோஷ முற்றவனுகி, அதிதீக்ஷணியமுள்ளதும், பத்துதிக்குகளையும் ஜாஜ்வலியமானமாய் ஜ்வலிப்பிக்கின்றதுமான சக்தியென்ற வாயுதத்தை யப்பிரபுவின்மீது துரிதமா

யெய்தனன். ($23\frac{1}{2}$) அதவர்மீது பட்டமாத்திரத்தி லோர் துரும்பின் கதியையடைந்தது. (24) அதன்பிறகு இந்திரன் மறுசரம் தொடுப்ப தற்குள், பிரபுவானவர் ஓசம்பினுலவனது கிரீடத்தை விழுவித்தனர். (25) அக்கினி புத்திரனுகிய முருகன் ஒரு பாணத்தினு விடிக்கு ஆஸ்பதமாகி ய அவனது துவஜத்தை யறுத்துவிட்டனர். மற்றொரு பாணத்தினல், அதிக சிரேஷ்டமும், மிக பிரகாசமுள்ளதுமான அவனது கவசத்தைப் பிளந்துவிட்டு (26) ஓரம்பை யவனது மார்பினில் நாட்டியவுடன் இந் திரன் மூர்ச்சையடைந்தனன். வலாசுரனைக் கொன்ற விந்திரன் சாய்ந் தபோது தேவரெல்லோர்களும் கோபம் மேற்கொண்டு (27) ஸ்ரீ சம்பு வினுடைய வரும்குழந்தையைச் சூழ்ந்து நின்று சரமாரிகளாகப் பொ ழிந்தார்கள். அப்போது ஸ்ரீ சரவணபவனுமப் பெருமாரியைச் சில பாணங்களாலே தடுத்து உடனே அவர்களி லொவ்வொருவரையும் த னித்தனியாக பாணங்களாலடித்தனர். ($28\frac{1}{2}$) இயமனை யைந்து பாணங் களாலும், அக்கினியை மூன்றினுலும், வருணனை நான்கினுலும், (29) வாயுவை இரண்டாலும், சூரியனை மூன்றினுலும், சந்திரனை யோரம்பா லும் இவ்வாருக வம்புகளைத் தனித் தனியாக வெய்து விளையாட்டாக வி ழுவிந்தனர். (30) இவ்விதமாக திக்பாலர்களையும், மற்ற வனேகம்பெ யர்களையும் ஒவ்வொருவரையு மொவ்வோரம்பினுலும் ஸ்ரீசரவணபவனே ர் கொடிக்குள் சாய்ந்துவிட்டனர். (31) மடிந்தவர்கள்போக மிகுதியான வெல்லாத் தேவர்களும் திக்குதிக்காயோடினுர்கள். ($31\frac{1}{2}$) அப்போ து தேவருஷியாகிய ஸ்ரீ நாரதமுனிவ ரிம்மகா வீரனுடைய சௌரியத் தைப் பார்த்துக் களிப்பினுலடிக்கடி மயிர்க்கூச்சலுற்றுத் துரிதத்தில் ஸ்ரீ பிரகஸ்பதியிடஞ் சென்று இவை யெல்லாவற்றையும் ஸவிஸ்தாரமா யுரைத்தனர். (33) ஸ்ரீ நாரத ருரைத்ததேதோவென்றல்:—"வாரீர்! பிரக ஸ்பதியே! நீர் சகல தேவர்களுக்கு முயிருக்குயிராகியவரும், புரோகித ருமல்லவோ! அத்தேவரெல்லோர்களு மோரரும்குழந்தையினுல் போ ர்முன்னரடிபட்டு மாண்டார்கள். (34) இப்போது இனி நடக்கவேண் டிய வுசிதத்தைத் தாமதமின்றிச் செய்தல் வேண்டும்" என்று நாரதரு ரைத்திட்டதைத் தேவகுருவானவர் கேட்டவுடன் (35) ஜகங்களுக்கு பர்த்தாவும், பெருமைபொருந்திய தேவசேனைகளுக்குத் தலைவரும், மி கசாமர்த்திய முடையவரும், மிகவரும்குழந்தையுமான ஸ்ரீகந்தபிரானுக் குத் தேவர்களால் செய்யப்பட்ட வபசாரங்களைஞ் ஞானதிருஷ்டியாலறி ந்து (36) குகையினுள்ளிருந்து வெளிப்பட்டு, சுயாதீன முள்ளவரும், ஜகங்களுக்கெல்லாம் பிரபுவுமான, ஸ்ரீ மேருகிரியின் நேர்த்தியான கொ

டுமுடியில் வீற்றிருந்த ஸ்ரீ சுப்பிரம்மணியனைச் சரணமடைந்தனர். (37) மேலுமவாங்குவந்து ஸகல பிரபஞ்சேசுவரனைப் பலதடவை நமஸ்கரித் துத்துதி செய்தனர்:— "அளவற்ற மகிமையதுபாரற்ற கடலே! உமத டி சரணம்: (38) சத்துருக்களைச் சோஷிக்கச் செய்கின்றவும், ஸ்ரீ யா னைமுகக் கடவுளுக்குச் சகோதரனும், அடியாருக்கு நேசனுமாகியவும க்கு வந்தனம்: ஆறுமுகனும், ஏகமுகனும், பிநாகமென்ற வில்லைக்கொ ண்ட சாக்ஷாத் பரமசிவனே யாகியவும், (39) பனிரண்டு புயங்களை யுடையவும், சாந்தகுணங்களைப் பெற்றவும், தம்மைப் பூஜிப்பவரது கோரிக்கையை நிறைவேற்றியவும், உமாமகேசுவரர்கள தாசைக்குரிய முக்கிய நேசமூர்த்தியும், (40) என்றுமழிவற்ற மூர்த்தியுடையவும், அ ளவற்ற வற்புதங்களுக்குக் காரணருமானவுமக்கு வந்தனம். அளவற் றவொளி கொண்டவும், என்றுமழிவற்றவுமான வுமக்குவந்தனம். (41) சகலதேவர்களும் யாவருடைய மாயை வசத்தினலவரது பலபராக்கிரம ங்களை யறியவில்லையோ, அங்ஙனமாகியவும், சத்துருக்கள தாயுதங்களி னின்று தமது படையைக் காக்கின்றவும், ஈசுவரனும், மகாபிரபுவுமான வுமக்குயான் வந்தனம் செய்கின்றேன். (42) ஜகங்களை யிரக்ஷிப்பதற் காக விரண்டுமூர்த்தியாக விருக்கின்ற ஜகதீசனைச் சரணமடைகின்றே ன். யாவருடைய மாயையினல் தெவர்களதறி வபகரிக்கப்பட்டு அவர் கள் விபுத (விசேஷமான அறிவுடையோர்) ராயினும் அபுத (அறிவுகெ ட்டவர்) ராகமதிக்கப் பட்டார்களோ: (43) பூஜிப்பதற் கர்காகிய யா தாமொருவரை விரோதத்துட னடைந்து தண்டனை கொண்டார்களோ 'அவ்வும்மை வந்தனம் செய்கின்றேன்" என்றிவ்வாறுகத் துதித்து அ டிக்கடி திருவடிகளில் வந்தனித்த பிரகஸ்பதி தேவனைப்பார்த்து (44) அம்பிகையின் மைந்தனுகிய பகவானவரை யனுக்கிரகித்து மந்தகாஸமு காரவிந்தத்துடன் திருவாக்கருளியதாவது:—"வாரீர்! தேவகுருவே! உம து மனதின் கோரிக்கையை நீராதரவுடன் நம்மிடத்திற் கேட்டுக்கொள் வீர்." (45½) என்றிவ்வாறுக ஸ்ரீ சம்புமைந்தன் சொல்லியதை பிரகஸ் பதி தேவன்கேட்டு (46) நமஸ்கரித்து கைகட்டி முன்னின்று மிகவும் மேன்மைபொருந்திய வரனைக்கேட்டதாவது:—" ஓ! சருவகுணங்களும் பொருந்தியவரே! ஓ! சருவஞ்ஞா! ஓ! சுப்பிரம்மணியா! ஓ! தயாநிதே! (47) தேவர்கள் தேவரீரது மாயைவசத்தின லறிவுமாறித் தேவரீருடன் போர்தொடுக்கத் தலைப்பட்ட படியால் தேவரீராலவர்களது தோஷத் துக் கேற்றபடி தண்டிக்கப் பட்டவர்களாகி (48) சின்னபின்னர்க ளாகவடிபட்டு மாண்டார்கள். மிகுதிப்பட்டவர்க ளோடிவிட்டார்கள்:

ஆகையால் ஓ! பிரபுவே! அறியாமையாற் செய்த வெல்லாவற்றையும் தேவரீர் மன்னித்தல் வேண்டும். (49) தேவர்கள் தேவரீரது கிருபையினால் முன்போ லுயிருடையோராகவேண்டும்: அவர்களது சரீரம் முழுதும் அந்தந்த அவயவங்களுடன் சரிவரச் சேர்ந்து பொருந்திவிடுதல் வேண்டும். (50) ஓ! ஜகதீசா! எங்களை ரக்ஷிப்பதில் அனுக்கிரக திருஷ்டியுடன் திருவுளம் வைத்தருளி ஓ! சருவேசுவரா! தேவரீரெங்களுக்கு பிரசன்னராகி எப்போதும் எங்களைக் காத்தருளல் வேண்டும்.

முப்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௧—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்ரீ கந்தபிரானிவ்வாறுகத் தேவலோக புரோகிதரால் பிரார்த்திக்கப்படுகையில் மிகவும் பிரசன்னராகி யவருடைய வேண்டுதலைப் பரம சந்தோஷத்துடனளித்தனர். (1) பிறகு தேவரெல்லோர்களும் தூங்கியெழுந்திருப்பவர்போ லெழுந்திருந்தார்கள். பிற்பாடு விஷ்ணு முதலிய தேவரெல்லோர்களும் வந்தனித்தார்கள். (2) மிகவும் தயாமூர்த்தியாகிய ஸ்ரீ தேவன் அவர்கள்மீது நின்ற அஞ்ஞானரூபமாகிய மாயையை நீக்கித் தனது திருவடிகள்மீது நிலையான பக்தியை யவர்களுக்கீந்தருளி, (3) பிறகவர்களை நோக்கித் திருவாய்மலர்ந்தருளியதாவது:—"வாரீர்! தேவர்களே! கேவலம் மூடர்கள்போல் நம்மைக் குழந்தையென்று நினையாதீர்கள். இதோ! நமது, சருவசிரேஷ்டமான ஸ்ரீ பரமேசுவர வுருவத்தைப் பாரீர்கள்! (4) நம துருவத்தைக் காண்பதற்குற்ற திவிய நேத்திரங்களை யுங்களுக்குத் தருகின்றோம்;" என்று இவ்விதமாக திருவாக்குரைத்துச் சருவ ஜகங்களுக்கும் பரமகுருவாகிய குருநாதனவர்களுக்குத் தமது விசுவரூபத்தைத் தரிசனமளித்தருளினர். (5) அவ்வுருவமோ வென்றால்:—ஏழுபாதாள லோகங்களை யடியாகவும், ஏழுதீவுகளின் பூமியைக்கணுக்காலாகவும், ஏழுசமுத்திரங்களையும் இடைவஸ்திரமாகவும், திக்குகளைப் புயமாகவும், ஆகாயத்தை நாபியாகவும்,(6) சுவர்க்கலோகத்தைச் சிரஸாகவும், சூரியன், சந்திரன், அக்கினியிவர்களை நேர்த்தியான கண்களாகவும், மேகங்களைச் சிரேஷ்டமான கேசங்களாகவும்,

நக்ஷத்திரங்களை யக்கேசங்களி லலங்கரிக்கலுற்ற மலர்களாகவும், (7) ஸ்ரீ பரமசிவனை ஆத்துமாவாகவும், ஸ்ரீ பராசக்தியைப் புத்தியாகவும், ஸ்ரீ விஷ்ணுவை யிடதுபாரிசமாகவும், பகவானாகிய ஸ்ரீ பிரம்மனை வலது பாரிசமாகவும், ஸரஸ்வதியை வேதவாக்காகவும், (8) இலக்ஷ்மியைச் சம்பத்தாகவும், வாயுவைப்பிராண, அபான, வியான, உதான, ஸமான, நாக, கூர்ம, கிருகர, தேவதத்த, தனஞ்சய ஆகிய பத்துவித வாயுக்களாகவும், காலாக்கினி ருத்திரனைக் கோபமாகவும், அக்கினிதேவனையே ஜாடராக்கினியாகவும், (9) அநந்தன் முதலிய மகா நாகர்களைக் காலிற் பூண்ட தண்டை, பாதசரங்களாகவும், ஸகல வோஷதிகளையு முரோமங்களாகவும், அனேககோடி யண்டங்களையும் அவ்வுரோமங்களிற் பற்றிய பேன்முட்டை (ஈரு) களாகவும், (10) கோடிசூரியர்களுக் கொப்பானதும், கோடிசந்திரர்களின் குளிர்ச்சியுடையதும், கோடி பிரளயகாலாக்கினிய தொளியைப் பெற்றதுமான பரமாற்புதமாகிய திருவுருவத்தை (11) அளவற்ற மகிமைகொண்ட ஸ்ரீ ஹரகுமாரனாகிய சுப்பிரம்மணியன் காக்ஷியளித்தனர். ஓ! கோ! அவ்வுருவத்தின தொளியினால் தேவர்களுடைய கண்கள் குருடாக்கப்பட்டன! (12) உலகின்கண்ணுள்ள பேரொளிக் கெல்லா மதிகப் பெருமை தங்கிய விவ்வொளியைத் தூக்கமும் இயமைக்கொட்டுமற்ற தேவர்களதுகண்கள்கூடப் பார்க்கமுடியாமலிருக்கையி லதைப்பற்றி யாதுரைத்தல் வேண்டும். (13) ஸகல தேவர்களுடைய மனமும் ஐம்புலன்களோடும் சேர்ந்து தேஜோவடிவமான பரப்பிரம்மமாகிய ஸ்ரீ பரமேசுவரன்மீது ஓர் க்ஷணநேர மாழ்ந்திவிட்டது. (14) விஷ்ணு முதலிய தேவர்கள், கொஞ்ச க்ஷணத்தில் அவரவர்களுக்கு நினைவுதெரிந்து, சத்துருக்களை மர்த்திக்கலுற்ற கார்த்திகேய மூர்த்தியை வந்தனித்துக் கைகூப்பி நின்று அவரை வெளிக்கண்ணால் காக்ஷிபெறுவதற்காக அவ்வரவர் கண்களைத் தரும்படி கோரினார்கள். (15½) அப்போது தேவர்கள் துதித்ததோவென்றால்:—"ஓ! தேவதேவா! சகல ஜகங்களுக்கும் நாதனே! சங்கரகுமாரா! ஸர்வர்களுக்கு மீசுவரா! (16) பெருமைபொருந்திய வுமதற்புத வுருவத்தை யாங்கள் பார்ப்பதற்குச் சக்தியற்றிருக்கிறோம்: ஓ! தயாநிதியாகிய பரப்பிரம்மமே! தயவினால் எங்களுக்குக் கண்களை யருள்வீர்." (17) என்ற விப்பிரார்த்தனையினால் சத்துருக்களைக் கொல்லலுற்ற ஸ்ரீ சம்புமைந்தன் களித்தவராகிப் புன்னகைப்புற்று, கேவலம் மாமிசக் கண்களால் தமதுருவத்தைக் காண்பதற்கு முடியாதென்று சொல்லித் தனது சுவரூபத்தைப் பார்க்கத் தகுதியான திவ்விய நேத்திரங்களை யத்தேவர்களுக் களித்தருளினர். (18-19) பிறகு பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய ஸகல தேவோத்தமர்க

ளும், அப்பரமாத்துமாவினுடைய வளவற்ற தேஜஸ்ஸு (ஒளி) களில் ஆயிரத்திலோரமிசத்தை மட்டில் காணலுற்றார்கள். (20) சகல பிரம்மாண்டங்களும் நிரம்பி நின்ற வப்பிரபுவினுடைய முழந்தாள் பாகத்தில் மட்டிலுள்ளவையெம்மாத்திரம்? ஆகையினால் தேவர்கள் மிகவும் மனவருத்தமுற்றார்கள்.(21) அத்தேவரெல்லோர்களும், விசுவரூபமாகிய பெருந்திருமேனியது வத்தேஜஸ்ஸில் அனேக கோடிபிரம்மாண்டங்களுடைய உலகுகளும் அதது அதனைச் சேர்ந்த, இறந்தகால, நிகழ்கால, வருங்காலத்திய புவனங்கள், ஜனங்கள், பிரம்ம விஷ்ணு முதலிய தேவர்களுடனும் அந்தந்த ஆவரணங்களுடனும் இப்பிரபுவினுடைய முழந்தாள்பாகத்திய மட்டிலான உரோமங்களொவ்வொன்றிலும் ஆயிரக்கணக்காக அனேக கோடி பேன் முட்டை (ஈரு) கள் சடைசடையாய்ப் பற்றியிருப்பதைக் கண்டு மிகுந்த பேராச்சரியமுற்று (22-24) மிகவும் பயந்து நடுங்கியவர்களாகி வந்தனித்து, வாக்குகளுக்கு ஈசுவரனும், ஆநந்தங்களால் நிறைந்தவரும், மிக வற்புதமாகியவருமான, ஸ்ரீ சம்புவி னருமைத் திருமகனை, வேதவேதாந்தத் திருவாக்கியங்களா லாகிய துதிகளை மிகுந்த சந்தோஷத்துடன் வெகுமதியாகவைத்துக் களிக்கச் செய்தார்கள். (25½) அத்துதியோவென்றால்:—“சகல புவனங்களும் யாவரிடத்தினின் றுண்டாகின்றனவோ, அப்புவனங்கள் யாவருக்குள் ளிருக்கின்றனவோ,(26) உண்டான புவனங்கள் யாவரால் ஜீவிக்கின்றனவோ, அவைகள் மாண்ட பிறகு எங்கடங்குகின்றனவோ, ஸாக்ஷாத் பரப்பிரம்மமாகிய வச்சுப்பிரம்மணியனைத் தொழுகின்றோம். (27) உலகினர்கள் யாவருடைய மாயையினால் அறிவுகெட்டவர்களாகி ஸ்ரீ பராபர ஸச்சிதானந்த சுவரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் ஞானமற்ற ஜடப்பொருள்களை யுலகுக்குக் கர்த்தராகச் சொல்லுகின்றார்களோ அப்பரமாத்துமாவை வந்தனிக்கின்றோம். (28) யாவர், வேதசுவரூபரும், மிக சிரேஷ்டரும், சூரியமண்டல மத்தியிலிருக்கின்றவரும், மீசை தாடி முதலாக வுச்சிமுதல் கால் நகம்வரையில் பொன்மயமாகியவரும், (29) அலர்ந்த செந்தாமரை மலர் போன்ற விரண்டு கண்களையுடையவரும், எல்லா ஜகங்களுக்கும் நாதனுமாகியவரோ அக்குருமூர்த்தியாகிய வும்மையே வேறு யாது கெதியுமற்ற யாங்கள் சரணம் பெறுகின்றோம். (30) யாவருடைய வாநந்தங்களி லேசாலேசந்தான் பிரம்மன் முதலிய தேவர்களுக் குளதெனப் படுகின்றனவோ அந்த பரிபூர்ணமாகிய ஆனந்தக்கடலானவரும், ஒப்பற்றவருமாகிய வுமாதேவிமைந்தனைத் தொழுகின்றோம். (31) யாவருடைய மாயையாலே மூடர்கள் இந்திரன், உருத்திரன், விஷ்ணு, பிரம்மா, இன்னும் மற்ற தேவர் இவர்களை ஆதிப்பொருளாகச்

சொல்லுகின்றார்களோ அப்பரமேசுவர குமாரனை வந்தனிக்கின்றோம். (32) உலகினில், யாவருடைய தயவைப் பெறாத சிலர், அவரோ புலகு க்காதியென்ற புத்தியைக் கொள்ளாமல் புலன்களைச் சொல்லுகின்றார்க ளோ வப்பரப்பிரம்மத்தை வந்தனிக்கின்றோம். (33) சேதனா சேதன மென் றிருவிதமான சகல ஜகங்களும் யாவருடைய சரீரமெனப்படுகி ன்றதோ, அவையெல்லாவற்றையும் யாவர் நடத்துகின்றவரோ அவ்வு ம்மைத் தொழுகின்றோம்.(34) வாலிபம், யௌவனம், வார்த்தீகமாகிய மூன்றவஸ்தைகளு மற்றவரும், ஜாக்கிரத் (விழித்தல்), ஸ்வப்பின (க னவு), ஸுஷுப்தி (தூக்கம்), ஆகிய மூன்றவஸ்தைகளிலும் சாக்ஷியாகி ன்றவரும், ஜீவகோடிகளை யாட்டிவைக்கின்றவும், அவைகளை விடுவிக்கின் றவுமான வவ்வும்மைத் தொழுகின்றோம்.(35) ஜனங்கள், யாதாமொரு வனையே சகல புருஷார்த்தங்களையும் தாவுற்றவனொன் றறிவதனால் சௌக்கியத்தை யடைகின்றார்களோ அப்பேர்ப்பட்ட, சகல சக்திகளை யும் ஸம்பூர்ணமாய்க் கொண்ட வேலாயுதனைத் தொழுகின்றோம். (36) பிராம்மணர்கள் ஸகல மங்களத்தையு மருளுகின்ற ஸ்ரீ பரமேசுவரனைத் தவிர மற்றதை யொழித்து யாவனைத் தியானிப்பதால் முக்தி யடைகி ன்றார்களோ அப்பரப்பிரம்மமாகிய வும்மைத் தொழுகின்றோம். (37) மானிடர்கள், தோலைவிரித்து உடையாக வுடுப்பதுபோல் கையினாலாகா யத்தைத் தழுவி யுடுத்திக்கொள்வாராகில் மட்டில் ஓ! பரமசிவா! யா தொரு உம்மை யறிந்துகொள்ளாமல் துக்கத்தினின்று கரையேறுவார் களோ வவ்வும்மை வணங்குகின்றோம். (38) ஓ! சகல ஜகங்களுக்கும் நாதராகிய சுப்பிரம்மணியா! பராபரப் பொருளாகிய வும்மைத் தரிசிக் குமளவில், மனதினிடறுகளற்று மெய்ஞ்ஞானம் பெற்று(39) இந்நிலைய ற்ற தேகத்தைவிட்டு யாதாமொரு பரஞ்சோதிப் பொருளை யடைந்து ஸாரூப்பிய பதவியைப் பெறுகின்றார்களோ அவ்வும்மை யாங்கள் வந்த னிக்கின்றோம்.(40) உம்மை யாராதிக்கின்ற ஸஜ்ஜனங்கள், * ஸுஷு ம்னை யென்ற நாடியாலும்மை யடைந்து, தேவரீரதனுக் கிரகதிருஷ்டி யைப் பெற்று, சோதிமண்டலத்தின் வழியாய்ப் பரமபதத்தை யடைந் து, (41) மறுபடியும் சமுசாரத்தினுள் நுழைவதேயில்லை. ஓ! தேவர் களைக் காக்கின்ற பிரபுவே! ஆகையால் சகல அடியார்களையு மில்லறக்க டலினின்று கரையேற்றுவோராகின்றீர். (42) தேவரீரோ யெங்களுக்

---

* தேகத்திலுள்ள அனேக நாடிகளில் (நாடியென்றால் மத்தியில் துவா ரமுடைய நரம்பு) ஸுஷும்னை யென்று ஓர் நாடி; இந்நாடியின் வழியாகவே யோகிகளுக்குப் பிராணவாயு வெளிச்செல்வதாகும். இது விவரங்கள் ஸ்ரீ ஸூதச முகிதையில் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றது.

முக்கதியென்பதைத் தவிர மற்றதை யாங்கள் நாடுகின்றோமா? யாவர் பரப்பிரம்மனும், பரந்ாமனும், பரஞ்சோதியும், மிக மகிமை தங்கிய பரமேசுவரனும், (43) சிரேஷ்டமான வுருவமுடையவரும், காமக்குரோதாதி விகாரங்களற்ற பரமசாந்தி ஸ்வரூபியும், பராபரவஸ்துவுமாகிய வும்மைத் தொழுகின்றோம்;" இவ்வாறாகத் துதித்து விசுவரூபத்துடன் விளங்கி நின்ற மகாப் பிரபுவைத் தேவர்கள் பிரார்த்தித்துக் கொண்டதாவது:—(44) "ஓ! ஜகதீசா! சூரிய னொளியைப் பார்ப்பதிலான ஊமைக்கோட்டான்களைப்போல் யாங்கள் தேவரீரது மிக வுக்கிரமான வுருவத்தைப் பார்க்கத் திறமையற்று மெத்தப் பயந்தவராகின்றோம். (45) ஆகையால்முன்போலுள்ள வுருவத்தைக் கொண்டெங்களை யனுக்கிரகித்தல் வேண்டும். ஓ! சகல புவனங்களுக்கு மீசுவரா! மிகவும் சாந்தமும், ஆறு திருமுகங்களையுடையதும், ஒப்பற்றதும், பனிரண்டு புயங்களா லலங்கரிக்கலுற்றதும், (46) எங்களுக் கெப்போதும் பிரத்தியக்ஷத்தில் ஸம்பத்தை யளிப்பதுமான திருவுருவத்தைக் கொள்ளல்வேண்டும். ஓ! சகல ஆத்துமகோடிகளுக்கு மீசுவரா! யாங்கள் கிருதார்த்தர்களாயினோம். (47) இவ்வாறாகப் பிரம்மன் முதலிய தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டபோது சகல வேதங்களுக் கதிபதியாகிய முருகன் கோடி மன்மதர்களுக் கொப்பான தமதுத்தம வடிவத்தைக் கொண்டனர். (48) ஸ்ரீ ஜகதம்பிகையின் மைந்தனாகிய மகாப் பிரபுவானவ ரத்தேவோத்தமர்களை நோக்கிச் சொல்லியதாவது:—"இம்மேன்மையான துதிகளால் மூவுலகினிலும் நம்மைத் துதிப்போர்களுக்கு (49) அவரவர் வேண்டியதையெல்லாம் யாமருள்வோமென்பதிற் சந்தேகமேயில்லை. நீங்களின்னும், வேண்டிய வரன்களை யெல்லாம் தடையின்றிக் கேட்டுக்கொள்வீர்கள்." (50) பிறகு பிரம்மா விஷ்ணு முதலிய தேவரெல்லோர்களும் ஸ்ரீ கந்தபிரானது வசனத்தைக் கேட்டு ஸாதுக்களுக்கு மித்திரனும், ஸ்ரீ பரமேசுவர புத்திரனுமான பிரபுவை வெகுமானத்துடன் வந்தனித்து யச்சந்தர்ப்பத்துக்கு வேண்டிய வரனைப் பிரார்த்தித்ததாவது:—(51-52) "ஓ! தேவாதிதேவா! பெருமைகொண்ட சைனியங்களை யுடையோரே! ஜகதீசா! யாங்கள் வரத்தைப் பெறுவதற்குரியவர்களும், தேவரீரும் எங்கள்மீது பிரசன்னராகி வரனளிப்பவருமானால் (53) ஓ! ஜகதீசா! தேவரீரெங்களுக்கு ராஜாதிராஜனாக முனீசுவர்களால் முடிசூட்டப்பட்டு அழிவற்ற விச்சருவாதி ராஜபதவியை யடைந்தெங்களை யாண்டருள்வீர். (54) ஓ! என்றுமழிவற்ற பிரபுவே! இந்திரன் படைத்தலைவனாகுதல்வேண்டும்: தேவரீரெங்களுக்கு மகேந்திரராகி தேவசத்துருக்களாகிய சூரபத்துமன் முதலிய அசுரர்களை வெற்றிகொண்டு (55) தேவரீரது ப

ராக்கிரமத்தினால், அசுரனால் சிறையில் வைக்கப்பட்டிருக்கிற தேவர்களை மீட்டு முன்போல் சுகத்தில்வைத்து ஓ! மூவுலகின் பயங்களையும் நாசம் செய்யலுற்ற பிரபுவே! பிறகு திருவுளம்போல் சுகித்திருப்பீர்." (56) இவ்வாறாகிய விப்பிரார்த்தனையினால் ஸந்தோஷமடைந்த, பார்வதீஸுதனாகிய பிரபுவானவர் அருள்புரிவதில் சன்னத்தராகி தேவசிரேஷ்டர்களை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:—(57) "வாரீர்! சுவர்க்கலோகாதிபர்களே! இந்திரனே உங்களுக் கிந்திரனாக விருக்கட்டும்; நாமிவ் விந்திரனுக்குப் படைத்தலைவராகவேயிருந்து மூவுலகுக்கும் கண்டக (சத்துரு) னாகிய சூரபத்துமாசுரனை யவனது பந்துவர்க்கங்களுடன் சீக்கிரத்தில் ஹதம் செய்து, (58½) உலகுக்குத் தீங்களிப்பதையே தொழிலாய்க்கொண்ட அவனது தம்பிகளையும், பிள்ளைகளையும் நான்குவகை சேனைகளுடனும் ஓர் க்ஷணமாத்திரத்தில் யாம் (59½) சமுகரித்துத் தேவர்களதுஸம்பத்தையும் நமது வீரலக்ஷ்மியுடன்கூடக் கொண்டுவருகின்றோம்." (60) என வுரைத்துத் தந்தையண்டைக்குப்போக வோர் தோற்றமுற்று கைலகிரிக்குப் புறப்பட்டனர். பிரம்மன் முதலிய அவ்வெல்லாத் தேவர்களும் பின்றொடர்ந்து (61) கைலகிரிசென்று அங்கோர் கொடுமுடிமீது நிலைகொண்டார்கள். பிறகு அங்கு அச்சுப்பிரம்மணிய தேவனைப் படைத்தலைவராக முடிசூட்டிப் பூஜிப்பதற் (62) கெண்ணமுற்றுச் சடிதியில் விசுவகருமனை நோக்கியுரைத்ததாவது:—"வாரீர்! துவஷ்டாவே! உமாசுதராகிய ஜகதீசனுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதற்காக அதிசீக்கிரத்தில் (63) நவரத்தினப் பிராகாரங்களா லலங்கரிக்கப்பட்டதும், நவரத்தினங்களால் நிறையலுற்றதுமான வோர் பட்டணத்தை யமைத்தல்வேண்டும்" என்றார்கள். பிறகு விசுவகர்ம்மனு மக்கட்டளையின்படி யதிசீக்கிரத்தில், உச்சியினு லாகாயத்தை யளாவப் பெற்ற வுப்பரிகைகள், கோபுரங்கள், கொத்தளங்கள் இவைகளா லலங்கரிக்கப்பட்ட, மிகவும் மேன்மைபொருந்திய வோர் பட்டணத்தை நிர்ம்மாணம் செய்தனன். (64½) இவ்விதமாக ஸ்கந்தகிரியென்ற மலையின்கொடுமுடிமீது, பற்பல விரத்தினங்களது ஒளிகளா லண்டங்கள் முழுமையும் பிரகாசிப்பிக்கலுற்ற விப்பட்டணத்தை, விஷ்ணு, பிரம்மன், இந்திரன் முதலாகிய தேவோத்தமர்கள் நன்குநோக்கி மரியாதைக் கர்ஹனாகிய விசுவகருமனென்ற சில்பியை வெகுசாக மெச்சினார்கள். (65½)

முப்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

## ஸம்பவகாண்டம் ௩௨—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்கந்தபுரமென்ற வபபட்டணமோவென்றால்:— நீளத்திலுமக லத்திலுமனேக யோஜனைகள் கொண்டதும், மிகவும் நேர்த்தியானதும், ஸகல பாக்கியங்களையும் ஸம்பூர்ணமாகவுடைத்ததும், (1) மிகவுன்னத மான வனேக வீட்டுவரிசைகளையுடைய பல வீதிகளாலலங்கரிக்கப்பட் டதும், அண்டபித்தியை (அண்டச்சுவறு) முட்டிநிற்கின்ற, மிகவுயர்ந்த துவஜங்களை யுடையதுமாக விளங்கிற்று. (2) அதன்மத்தியில் குடை வைக்கப்பட்டதும், மிக வழகுபொருந்தியதும், இராஜமன்னர்க்குத் த குதியானதும், கோடிசூரிய பிரகாசமுடையதுமான வோரரண்மனையை யும். (3) அதில், சிறந்த விரத்தினங்களா லிழைக்கப்பட்டதும், கோடிக் கம்பங்களா லலங்கரிக்கப்பட்டதும், நீர்ப்பாகங்கள் தரைபோலும், வாசற் படிகள் சுவறுபோலும், சுவறுகள் வாசற்படிபோலும் பிரமிப்பிக்கலு ற்ற விரத்தினங்களால் விளங்கியதுமான மண்டபத்தையும், ($4\frac{1}{2}$) அதி ல் சகலவித ரத்தினங்களாலும் விளங்கலுற்றதும், கோடிகோடி சூரியர் களதொளியைப் பெற்றதுமான, சிறந்தவோர் சிங்காதனத்தையும் விசு வகரும னமைத்தனன். ($5\frac{1}{2}$) ஸ்ரீ நாராயணன், பிரம்மன் முதலிய தேவ ர்களும், ஸாத்தியர்களும் ஸகல முனிகணங்களுடனும் வேண்டிய வெல் லா ஸாமக்ரிகளையும் சேகரித்து, திருபுரமாற்றுனாகிய ஸ்ரீ மகாதேவமைந் தனை யச்சிங்காதனத்தில் வீற்றிருக்கச் செய்தார்கள். (7) வேதவேதா ந்தங்களின் கரைகண்ட, வஸிஷ்டர்முதலிய, பிரம்மரிஷிகள் பிரம்மாண் டத்து மீதுள்ள புண்ணியக்ஷேத்திர தீர்த்தங்களால் ஜகத்குருவாகிய ஸ்ரீ சுப்பிரம்மணியனுக்கு, பிரம்மாவிஷ்ணுமுதலிய சேனைகளுக்குப் ப டைத்தலைவராக, பற்பல வேதமந்திரங்களை யோதிக்கொண்டு பட்டாபி ஷேகஞ் செய்தார்கள். (8-9) அப்போது தேவதுந்துபிகள் முழங்கி ன. மலர்மாரிபொழிந்தது. நிஸ்ஸாணம், திமிலை, டக்கா, வீராணம் டிண்டிமம், (10) சங்கம், கொம்பு மிருதங்கம், சின்னம், காஹளம் இவ் வாத்தியங்களெல்லாம் கடல்போன்ற வோசையுடன் செவிகளை யடைக் கலுற்று முழக்கப்பட்டது. (11) மேலுமப்போது, கின்னரர்கள் (மானிட முகமும், குதிரையுடலுமுடையவர்கள்) கருடர்கள், ஸித்தர்கள், வித்தி யாதரர்களாகிய இவர்க ளவரவர்களது ஸ்திரீகளுடனும், அதேவிதமா க, மேன்மைகொண்ட கிம்புருடர்களும் (குதிரைமுகமும் மானிடவுடலு முடையவர்கள்) ஹாஹா, ஹூஹூ வென்ற கந்தர்வர்களும், சித்திரஸே னன் முதலியவர்களும் அளவற்றவானந்த முடையவர்களாக இனிமை யான சப்தங்களையுடைய வீணை, புல்லாங்குழாய் முதலிய ஸுகவாத்தி

யங்களால் கானம்செய்தார்கள். (12-13) விஷ்ணுமுதலிய தேவசைனியங்களெல்லோர்களும், ஸ்ரீஹரபுத்திரனுகிய ஜகத்பந்துவுக்கு சேனுதிபதிப் பட்டாபிஷேகஞ்செய்து, வஸ்திரம், ஆசமனம், கந்தம், யஞ்ஞோபவீதம், தூபம், தீபம், நைவேத்தியம் முதலிய சகல வுபசாரங்களாலும் பூஜைசெய்து "எங்களது ஜகத்பதி, (14-15) தேவசேனுதிபதி, ஜகத்குரு"எனவுரைத்துப் பற்பல வெகுமதி சாமான்களை கையிற்கொண்டு ஸ்ரீ தேவனைத் தரிசித்தார்கள். (16) ஒப்பற்ற சோபையுடைய ஸ்ரீ ஹரமைந்தனு மத்தேவர்களுக்குத் தரிசனமளித்துச் சீக்கிரமாயவர்களை விடைகொடுத்தனுப்பி விளையாடினர். (17) இதற்கிடையில், மகாத்துமாவும், மேன்மைபொருந்திய ரிஷியுமான நாரதரென்றவோர் பிராம்மணன் யாகம்செய்ய விருப்பமுற்றனர். (18) இயாகம்நடத்திய அந்நாரதரது மிகுதியான * தக்ஷிணைகொண்ட அவ்வியாகத்தில் பண்டிதராகிய, அத்துவரியுவென்ற உருத்துவிக்கானவர், பசுவுக்கு (ஆடு) முறைப்படி வேண்டிய சடங்குகளைச் செய்வித்து அதனங்கத்தைக்(19) கண்டம்செய்யுமளவி லதினின்றோராட்டுக்கடா யுண்டாயிற்று. அதுவோவென்றால்:— ஸகல அவயவங்களும் மிக நேர்த்தியாகவுளதும், மிகுந்த காந்தியுடன் மிகவுயர்ந்து வளர்ந்த கொம்புகளையுடையதும் சிவந்தவிழிகளையுடையதும், (20) கனைத்துக்கத்துகையில் நீண்ட தாடியுடைய தாடையால் விளங்கியதும், இரண்டு காதுகளும், கழுத்து மூலைகளும் அசைவதனுல் மேகவரிசைகளைத் தள்ளலுற்றதும், (21) நீண்ட முழந்தாட்களையுடைய நான்கு கால்களையுடையதும், குளம்புகளினுல் பூமியைப் பேர்க்கலுற்றதும், சிலுத்துக் கொழுத்த வுடலுடையதும், வாலினுல் நக்ஷத்திரங்களைக் கிறலுற்றதும், (22) மிகபருந்துத் தொங்கலுற்ற விருஷணத்தையுடையதும், மதத்தினுலோர்வகை வாசனையுடையதும், மிகுந்த சுருசுருப்புள்ளதும், மிக பிரகாசமுள்ள பல ரத்தினங்க ளிழைக்கப்பெற்ற கால்களிற்பூண்ட தண்டைகளும், சிலம்புகளும் சப்திக்கலுற்றதும், (23) சிறிய சதங்கைகளாலும், நேர்த்தியான சோழிமாலைகளாலும், அழகிய கழுத்தையுடையதும், பராக்கிரமத்திலும், வேகத்திலும் கருடனை

---

* யாகங்கள் பலவிதம். அதில் ஒவ்வொரு யாகத்திலும் அந்தந்த கருமங்களை நடத்துவதற்காக அத்துவரியூ, பிரம்மா, ஹோதா, ஆக்கினீத்திரன், பிரதிப்பிரஸ்தாதா, உத்காதா, நெஷ்டா, போதா, முதலான இன்னும் பல உருத்துவிக்குகள் என்று வேதம், சிரௌதம் முதலானவைகளை நன்கு கற்றறிந்த சில பண்டிதர்களை யேற்படுத்துவது வழக்கம். அதில் ஒவ்வொரு உருத்துவிக்குக்கும் அந்தந்த யாகத்துக்குத் தக்கபடி ஒன்றுக்கொன்று வித்தியாசமிருக்கும்படி தக்ஷிணைகள் (சம்பளம்) ஏற்படுத்தியிருக்கிறது. அதில் இந்த யாகத்துக்கு ஏற்பட்ட தக்ஷிணை மிகுந்த தொகையுள்ளதென்பது கருத்து.

யும், வாயுதேவனையும் மேற்கொண்டதும், (24) கேவலம் மிகுந்த கொழுப்புடையதும், ஜகத்தில் வேறீடுஜோடி யெதிரியற்றதுமாகத் திரிந்தது. அதன் மதவாசனைக் காற்றினால்டிபட்ட மாத்திரத்தில் திக்கஜங்களெல்லா மோடின. (25) மனோவேகத்தையுடைய வக்கடாவும் அவ்வாறதி வேகமாயோடுகின்ற வக்கஜங்களை யதிசீக்கிரத்தி லெதிர்த்துவந்து தனது தலையினால் சிங்கம்போ லவைகளின் தலையில் வேகமாக முட்டிற்று. (26) அம்முட்டினால் அப்பிரமு * வென்றதின் கணவனாகிய ஐராவதமென்ற திக்கஜமானது கண்கலங்கி மதிமயக்கமுற்றது. புண்டரீகமென்ற மற்ற திக்கஜமானது பயத்தினால் காட்டிற்கோடிற்று. (27) வாமனமென்றது பயத்தினால் நடுக்கமுற்று மிகவும் குன்றிப்போயிற்று. குமுதமென்றதும் மிகவும் துக்கத்தை யடைந்தது. அஞ்சனமென்றதோ கண்ணற்றதாயிற்று. (28) புஷ்பதந்தமென்றது அதன்முன்னாடங்கி நின்றுவிட்டது. ஸார்வபௌமனென்றது சகல பூமியிலுமோடியலைந்ததால்தான் அப்போதுமுத லதற்கப்பெயர் கிடைத்தது. (29) ஸுப்பிரதீகமென்றது மிப்போதெங்களில் உனக்குமுன் நிற்கின்றவன் யார்? என்று ஓடிற்று. இவ்வாறாக வோராட்டினால் திக்கஜங்கள் துக்கத்தை யடைந்தன. (30) அக்கடாவானது தானொண்டியாகவிருந்து திக்கஜங்களை ஜயித்து இரஸாதலத்துக்குச் சென்றது. ($30\frac{1}{2}$) அங்கு, மகா பலசாலியும், மதகர்வமுள்ளதும், மிக வேகமுடையதுமான வவ்வாடானது பலிசக்கிரவர்த்தியது வீட்டினில் விஷத்தை யம்பாகவுடைய நாகங்களைக் கலங்க வடித்தது. ($31\frac{1}{2}$) அதற்கு மேலாகவுள்ள, மற்றநாகலோகங்களையு மிவ்வாறாகவே செய்தது. (32) ஒண்டியாகிய வவ்வாடானது அதல, விதல, சுதல, ரஸாதல, மகாதல, தலாதல, பாதாளமாகிய ஏழு கீழ்லோகங்களையும் சக்கிரவாளபருவதம் வரைக்குமுள்ள பூமியையும், அதிலுள்ள மானிடர்கள், விலங்குகள் முதலியனவகளையும் விளையாட்டாகவே வென்று, (33) பிறகு கடற்குள்ளிருந்த ஜலசரப் பிராணிகளோடு மிக பராக்கிரமத்துடன் போராடிற்று. ($33\frac{1}{2}$) பிறகு இவ்வாடானது அதிசீக்கிரத்தி லாகாயஞ்சென்று மற்றோர் சண்டமாருதம் போல் மேகவரிசைகளை யெல்லாம் வெகு கர்வத்துடன் கால்க்ஷணத்துக்குள் கலைத்துவிட்டது. ($34\frac{1}{2}$) மேலும் ஒளிக்கிறைவோனாகிய சூரியன், சந்திரன் இவர்களுடைய ரதங்களைத் துரத்திவிட்டது. (35) மதத்தினால் யாவையுமசட்டை செயலுற்ற வவ்வாடானது சுவர்க்கலோக

---

* திக்கஜங்களைப் பற்றிய இச் சுலோகங்களில், கிரந்தகர்த்தாவினால், வேறு சாதுரியமான அர்த்தங்கள் துவனிக்கும்படி, மிக நேர்த்தியாகச் செய்யப்பட்டிருப்பதைக் கவனிக்க.

வாஸிகளான தேவர்களேயும், மஹோலோகத்துக்கு நாதர்களாகிய விசுவே தேவர்களேயும், ஜனலோகத்தில் சாத்தியர்களேயும், தபோலோகத்தில் (36) ஸநகர் முதலாகிய யோகிசுவரர்களேயும் துன்பப்படுத்திற்று. பிறகு மிக பலசாலியான வக்கடா ஸத்தியலோகத்தில் கணங்களோடு கூடிய சருவகர்த்தாவான நான்முகனேயும் பயமுறுத்திற்று. (37) மேலும் இயாகத்திலுண்டான வவ்வாடானது விரஜாநதியைத்தாண்டி வைகுண்டலோகஞ் சென்று அங்குள்ள விஷ்ணு பக்தர்களேத் திங்குசெய்யுமளவில் (38) இந்திரன் முதலிய தேவர்களும், அவ்வியாகத்தினது ருத்துவிக்குகளும், அவ்வியாகத்துக் கெஜமானனுன நாரதருடன் விபரீத பயனேயளித்த அவ்வியாகசாலேயைவிட்டு (39) ஹாலாஹல விஷத்தினின்று பயந்து ஸ்ரீ நீலகண்டனுகிய சதாசிவனிடத்திற் கோடியதுபோலோடி, சிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ள கைலேகிரிக்குச் சென்றனர்கள். (40) அங்கு ஸ்ரீ தேவனுடைய மாளிகைவாசலில், விளேயாட்டினுல் பரவசமானவரும், மகாவீரனும், அக்கினிமைந்தனும், தேவசைனியங்களுக்குத் தலேவனும், அகிலேசுவரனுமான ஸ்ரீ குகமூர்த்தியானவர் வீரபாகு முதலியவர்களுடன், இந்திராதி தேவர்களால் காணப்பட்டனர். ($41\frac{1}{2}$) அவர்கள் ஜகன்னுதனும், சகல துக்கங்களேயும் தொலேப்பிப்போரும், என்றுமழிவற்றவருமான முருகனிடம் சென்று (42) மகாஸேனரும், ஸ்ரீ ஹரமைந்தருமான வப்பிரபுவை வந்தனித்து எச்சரிக்கை செய்துகொண்டதாவது:—"ஓ! தேவதேவா! மகாஸேனு! ஸ்ரீ மகாதேவரது திருமேனியினின்றுதித்த (43) எங்களது பிரபுவே! ஓ! சுகத்தையளிப்போரே! தயவுசெய்திவ் விண்ணப்பத்தைக் கேட்குதல் வேண்டும். ஸ்ரீ பரமேசுவரனுடைய திருவடிமீது மிகவும் பக்தியுள்ளவும், (44) தேவமுனிவராகிய ஸ்ரீ நாரதனையொத்த மகாத்துமாவுமாகிய விந்நாரதமுனிவர், இயாகங்களுக்கு அதிபதியும், உமாதேவியுடன் கூடியவரும், சந்திரகலேயை யலங்காரமாகப் பூண்டவருமான ஸ்ரீ பரமேசுவரனுக்குப் பிரீத்தியர்த்தமாக முற்றுமில்லற வாசையற்று யாகஞ்செய்தனர். (45) ஓ! சத்துருக்களே வதைக்கலுற்ற பிரபுவே! அப்பேர்ப்பட்ட இவரது யாகத்தில் பசுவை (ஆடு) முறைப்படிநடத்திக் கண்டம் செய்கையில் தெய்வவசமாகவோர் பெரிய ஆடு உண்டாயிற்று. (46) ஓ! தேவாதிதேவா! யாதுமெதிரற்ற, பெருங் கொரேமுள்ள வவ்வாட்டினுல் இப்போது மூவுலகும், ஹாலாஹல விஷத்தினுல் வியாகூலம் செய்யப்பட்டதைப் பார்க்கிலும், பல மடங்கு அதிகமாகச் செய்யப்பட்டது. (47) தேவரீரதை யடக்கி யிரக்ஷியாவிடில் ஜகமெல்லா மழிந்துவிடும். தேவரீரைத் தவிர மற்ற யாவராயினும், தேவராலும், அசுரனுலும் திறமையுள

ரல்லர். (48) ஆகையினலிக் கொடிய வாட்டினின்று ஸ்தாவர ஜங்கம ரூபமான ஜகங்களைச் சீக்கிரமாய்க் காக்குதல் வேண்டும். ஆட்டை யடக்குதலைப்பற்றி தேவர்களால் பிரார்த்திக்கப் பட்டதன்பேரில் தேவர்களைக் காக்கின்ற விப்பிரபுவானவர் (49) வீரபாகுவது கையைத்தமது கையினற்தட்டிச் சிரித்து சீக்கிரத்திலவ்வாட்டைக் கொண்டுவரும்படி யவ்வீரபாகுவைக் கட்டளையிட்டருளினர். (50) சத்துருக்களை வதைக்கலுற்றவவ் வீரபாகுவுமக் கட்டளைக்கமைந்து, ஆட்டைக் காண்பதற்காக மூவுலகையு மலக்ஷியமாகத்தேடி (51) இரஸாதலமென்ற பாதாளலோகம்முதல் அண்டச்சுவறு வரையில் மிகதொரையுடன் சுற்றித்திரிகையில் அவ்வாடானது ஸ்ரீ விஷ்ணுவினுடைய மாளிகையில் அசாத்தியமாயுபத்திரவம் செய்துகொண்டிருப்பதையும் அதனல் ஜனங்கள் மிறண்டு மிகுந்த கோலாகலம் செய்வதையும் கண்டனர். ($52\frac{1}{2}$) அளவிடத்தகாத பராக்கிரமத்தையுடைய வப்பலவானு மதன் கொம்புகளிலோர் கையினல் தழுவிப்பிடித்து (53) மதங்கொண்ட வவ்வாட்டை யதிசீக்கிரத்தில் பிரபுவண்டைக் கிழுத்துவந்தனர். ஸ்ரீ கந்தபிரான் ஆயிரம் சூரியப்பிரகாசமுள்ளதும், மனேவேகம், வாயுவேகங்களினு மதிக வேகமுள்ளதுமான வவ்வாட்டை (54) திருக்கண்ணுற்று மிகுந்த சந்தோஷத்துடனதன்மீதேறிக்கொண்டு குதிகாலினலும், கசையினலுமதை யடித்து அதன் கொழுப்பை யடக்கினர். (55) சத்துருக்களை வதைக்கலுற்ற, மிகுந்த பராக்கிரமமுடைய ஸ்வாமியானவர் தகுந்த பிரயத்தினத்துடனதைச் சுவாதீனப்படுத்தி குதிரையைப்போல் அதை * ஐந்துவித நடைகளாலும் நடப்பித்து (56) பெருங்காற்றுச் சுழலுவதுபோல் மிக நேர்த்தியாகச் சுற்றுவித்துச் சகல புவனங்களினு மதிசீக்கிரத்திற் சுற்றிவந்தனர். (57) அவ்வாடோவென்றல் மகா கனம்பொருந்திய வல்லோககுருவைச் சுமந்ததில் சந்துஷ்டியற்று, களைப்புற்று, மிகுந்த வியர்வைகொண்டு, வாய்திறந்து மிக நுரைகக்கலுற்று, (58) கர்வத்தினல் கனைப்பதெல்லாம் முற்றுமற்றுப்போய், உடல்முழுமையும் நடுக்கங்கொண்டு, கசையினல் மிகவடிபட்டு, பலக்குறை வுற்றதுமாயிற்று. (59) உலகுக்கெல்லாம் தீங்களித்த இப்பேர்க்கொத்த வாடுகூட மிகுந்த தயவுடைய பிரபுவினருளா லனுக்கிரகிக்கப்பட்டே (60) தத்துவங்களை யறிந்ததாகி யப் பார்வதீமைந்தனைத் துதித்துத் தெளிந்த மனதுடனத் தேவனை நமஸ்கரித்தது. (61) தேவனுமதன்மீது மிகுந்த திருப்

---

* ஆஸ்கந்திதம் (அசைவில்லாத நடை) 1. தோரிதகம் (அதிகமாயும், சதுரமாயுமிருக்கிற நடை) 2. ரேசிதம் (வட்டமிட்ட நடை) 3- வல்கிதம் (முன்னங்காலைத் தூக்கிவருகிற நடை) 4. புலுதம் (விசையுள்ள நடை) 5.

திகொண்டு அதைவாகனமாக்கி யருளினர். ஜகத்கர்த்தாவானவரிவ்வாட்டுக்கே, கிருதார்த்ததையைப் பெறுதவர்க்குக் கிடைப்பதஸாத்தியமான (62) இவ்வாறனுக்கிரகத்தை யருளில் மற்றபக்தர்கள் விஷயத்தில் யாதுரைத்தல் வேண்டும்? அக்கினிகுமாரனுன முருகன் அக்கினியைப்போலே யன்றுமுதல் ஆட்டுக்கடா வாகனராயினர். (63) அப்போது யாகத்தையிழந்த நாரதரும் தேவர்களுடனும், முனிவர்களுடனும் தேவசைனியங்களுக் கதிபதியான ஸ்ரீ சுப்பிரம்மணியனை வந்தனித்து முன் நின்றனர். (64) பிறகு ஆட்டுவாகனரான பிரபுவானவர் தேவர்களுடனும், முனிவர்களுடனும், யாகம் நஷ்டமானதில் கஷ்டமடைந்த வப்பிராம்மணனைப் பின்வருமாறு திருவாக்குரைக்க லுற்றனர். (65)

முப்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௩—வது அத்தியாயத்தினர்த்தம்.

சூதர் சொல்லுகின்றார்:— ஸ்ரீ பரமேசுவரனுடைய அம்சபூதமாகிய, தேவசேனாதிபதியான பிரபுவானவர், நமஸ்கரித்துக் கைகட்டிப் பக்கத்தில் நின்ற நாரதமுனிவரை நோக்கி யுரைத்ததாவது:— (1) "கேளீர்! மகாரிஷியே! உமதுயாகத்தினுல் நமக்கோர் பெரியவாகனம் கிடைத்தது. அதனுலோரிடையூறு மாகமாட்டாது; மறுபடியாகமானது பூர்த்தி யடையட்டும். (2) தேவர்களுடன் சீக்கிரத்தில் போய் முன்போலுருத்துவிக்குகளால் யாகத்தைநடத்திக் கிரமப்படி தக்ஷிணைகளைக்கொடுத்து யாகத்தைமுடித்து அவபிருதஸ்நானம் செயலாவீர். (3) நமக்கு நீர் வாகனதானம் செய்ததால் நூறு யாகங்களின் பயனை யடைவீர்; ஏனெனில் உலகில், எதையாகிலும், கொஞ்சமாயினு மெனக்காகப் பக்தியுடன் கொடுக்கின்ற மனிதர்கள் (4) ஸகல யாகங்களுடையவும், தவங்களுடையவுமான பயன்களினு மதிகபயனை யடைகின்றார்கள்." எனத் தேவன் கட்டளையிட்டு விடைகொடுத்த பிறகு அந்நாரதர் முதலிய தேவர்களும், முனிவர்களும் (5) பிரபுவுத்திரவின்படி யாகத்தை முடித்து அம்முனிவர் சுகமடைந்தனர். ஸ்ரீபகவானும் அங்கு கைலாஸத்திலே மனவின்பத்தின்படி விளையாடினர். (6) இத்தருணத்தில் பிரம்மாவானவர், ஸாத்தியர்களுடனும், தேவகணங்களுடனும் ஸத்தியலோகத்தி

னின்று ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற்காக அவரது ஆலயமாகிய கைலையின் கொடுமுடிக்கு வந்தனர். (7½) அங்கனேக தேவர்கள் ஸ்ரீ மகேசுவரனை யாராதித்ததால் முக்தியடைந்து சுகமாக வீற்றிருந்தார்கள். (8) அப்பிரம்மனும் தேவர்களுடன் மிக விநயமாகவே சென்று மிக வுன்னதமான பதாகைக (துவஜங்கள்) ளாலலங்கரிக்கப்பட்ட பற்பல வீதிகளைக்கடந்து (9) மிக விசித்திரமான ஸ்ரீ பரமேசுவர னதாலயத்துக்கு வந்து அங்கு வாசலில் ஸ்ரீ பார்வதிபரமேசுவரர்களுக்குப் புத்திரனும், அளவிலா மகிமைபெற்றவரும், வார்த்திகமற்றவரும், குழந்தையுமான ஜகங்களுக்கு குருவாகிய ஸ்ரீ குஹமூர்த்தியானவர் தோழர்களோடு விளையாடுவதைக் கண்டனர். (10½) அப்போது சுப்பிரம்மணியர் ஓர் விநோதார்த்தமாய்ப் பிரம்மனுடைய நல்லறிவை (11) யபகரித்து விட்டபடியாலிவர் மிக சிரேஷ்டரான பிரபுவென்பதைக் கெவனியாமலோர் குழந்தையென்று நினைத்துப் பிரம்மனவர் அற்புதமான ஸ்ரீ மகேசுவர சன்னிதானத்துக்குச் சென்றுவிட்டனர். (12) அங்கு ஸ்ரீ மகாதேவனை வெகுநேரம் பக்தியுட னாராதித்து அங்கினின்று விடைபெற்று சாத்தியர்களுடன் சத்தியலோகத்துக்குப் போவதற்காக வெளியே வந்தனர். (13) அப்போதும், மன்மதனிலும் மகா சுந்தரமூர்த்தியான ஸ்ரீ மகாதேவகுமார னங்கு வெளிவாசலில் சமவயதுள்ள சேற்றுளிகளுடன் விளையாடி நின்றனர். (14) தாமரையிற்சனித்தப் பிரம்மனு மிவ்வாறு விளையாடிய ஸ்ரீ குமாரமூர்த்தி யண்டையாக அவரை வந்தனியாமற் செல்லுகையில் கூப்பிட்டு "நீயார்" என்று ஸ்ரீ சுப்பிரம்மணியரால் கோபத்துடன் கேட்கப்பட்டனர். (15) அதன்பிறகு பிரம்மனவரை நமஸ்கரித்து மிக விநயத்துடன் கைகூப்பிநின்று சொல்லியதாவது:—"ஓ! கருணைக்கடலாகிய சுப்பிரம்மணியா! ஓ! ஜகத்குருவே! யான் பிரம்மன்; இச்சாத்தியர்களுடனும் தேவர்களுடனும், ஸ்ரீ பார்வதிபரமேசுவரர்களது ஸேவார்த்தமாய்ச் சத்தியலோகத்தினின்று வந்து ஈசுவரஸேவையுமாகிவிட்டது.(17) யானிப்போது தற்செயலாக வழைக்கப்பட்டுத் தேவரீரது தயவுக்குப் பாத்திரனுகி, கிருதார்த்தனுயினேன். யான் ஸத்தியலோகத்துக்குப் போகின்றேன். என்னைத் தயவுசெய்து விடவேண்டும்" (18) இவ்வாறுரைத்து அடிகளில் வந்தனமும் செய்த பிரம்மனை நோக்கி, ஸ்வாமியானவர் சினேகிதரோடு கொஞ்சம் நகைத்து வேடிக்கையாகத் திருவாக்குரைத்ததாவது:— (19) "வாரீர்! பிரம்மாவே! உமது தொழில் யாது? உமக்கு எந்தவித்தைகளில் பாண்டித்தியமுள்ளது? அதைத் தெரிந்துகொள்ள விருப்பமுற்றுக் கேட்கின்றேனேயின்றி யும்மைப்பரிக்ஷிப்பதற்காக வில்லை. (20) ஓ! பிரம்மாவே! இப்போ

து நீர் கோபம் கொள்ளாமல் சீக்கிரத்திற் சொல்லும்" என்றனர்; காம்பீரியமும், மிக சாதுரியமுமுள்ளவவ் வசனத்தைக் கேட்டு(21) நான்முகத்தேவன் பயமுற்று மனப்பிரீதியுடன் மறுமொழி யுரைத்ததாவது:—"ஓ! ஸகலவுலகாதிபதியே! யான், தேவர்கள், அசுரர்கள், மானிடர்கள் ஆகிய இவர்களுக் கெல்லாம் சிருஷ்டிகர்த்த னாகின்றேன். (22) சராசரங்களைச் சிருஷ்டிசெய்வதி லெனக்குச்சரியான தேர்ச்சியுள்ளவருலகின்மீது யாவருமில்லை. ஓ!தேவாதிதேவா! பதினெட்டு * வித்தைகளிலும் திறமையுள்ளவன் யானே! "வித்" (அறி) என்ற வடமொழிப்பகுதியின் பொருளாகிய வித்தைகளுக்கெல்லாம் யானே யிருப்பிடமாகின்றேன்". (23½) பிரம்மன் இவ்வாறாக வுரைக்கும்போது அக்கினி மைந்தனாகிய பிரபுவானவர் நயமான வார்த்தைகளாலவனை யுற்சாகப்படுத்தி யாதரவுடனோர் வசனத்தைப்பின்னு முரைத்ததாவது:— (24½) "ஓ! கோ! கோ! என்ன கெட்டிக்காரர்! எவ்வளவு கற்றவர்! இப்போது நீர் பெரியோர்க்கெல்லாம் மிகுந்த பெரியவர்; (25) ஆகையால் அப்பதினெட்டு வித்தைகளில் முதலாவது வித்தையான உருக்குவேதத்தில் எவ்வளவு பதங்களுள்ளன; எங்களைப்போன்ற வாலிபர்களுக்குக் கிழவர்கள் சொல்வதைக் கேட்பதில் ஸந்தோஷமல்லவா? (26) ஓ! பிரம்மாவே! அவை யெல்லாவற்றையும் சீக்கிரத்திலெம் முன்னிலையிற் சொல்வீர்; யாம் தோழர்களுடன் கேட்கின்றோம். வாரீர்! தொழர்களே! இவருரைக்கின்ற மொழிகளைக் கேளுங்கள். (27) இவரது வடிவமே யெல்லோர்களுக்கும் மகிமையை நன்கு தெரிவிக்கின்றது." எனவுரைத்ததைக் கேட்டு, பிறகு பிரம்மாவானவர் முந்தினதாகிய உருக்குவேதத்தைச் சொல்லத்தொடங்கி (28) முதலில் பதிமூன்றாவது உயிரெழுத்தாகிய ஓகாரத்தை * பிந்து (ம்) நாத (துவனி) ங்களோடு சேர்த்துரை

---

* 18 வித்தைகளாவன்றால்:— உருக்குவேதம் 1. இயஜுர்வேதம் 2. ஸாமவேதம் 3. அதர்வணவேதம் 4. (ஆகிய வேதங்கள் 4). சிக்ஷை 5. இலக்கணம் 6. சந்தம் 7. நிருக்தம் 8. ஜ்யோதிஷம் 9. கல்பம் 10. (ஆகிய வேதாங்கங்கள் 6). ஆயுர்வேதம் (வைத்தியசாஸ்திரம் 11). தனுர்வேதம் (ஆயுத வித்தை 12). காந்தர்வவேதம் (சங்கீத வித்தை13). மீமாம்ஸா சாஸ்திரம் 14. நியாய சாஸ்திரம் (தர்க்கசாஸ்திரம் 15). புராணங்கள் 16. தருமசாஸ்திரம் 17. அர்த்தசாஸ்திரம் 18. இவை மகா பாரதத்தில் கூறியபடி.

---

* வேதங்களுக்கு முதலெழுத்தாகிய "ஓம்" என்ற பிரணவத்தை முந்தி யுரைத்தனரென்பது கருத்து. இப் பிரணவாக்ஷரத்துக்கு அகர, உகர, மகர, பிந்து, நாத, சக்தி, சாந்தம் ஆகிய வேழு அவயவங்க ளுள்ளவை. இவற்றுள் "ஓ" என்றதால் அதில் அகரமும் உகரமும் அடங்கியதாயிற்று; "பிந்துநாதங்கள்" என்ற பன்மையினால் மற்ற விரண்டவயவங்களாகிய சக்தி சாந்தங்களுடனு மென்பது கருத்து. இவ்விரகஸியங்கள் யாவும் ஸ்ரீ ஸூதசமுகிதையில் விளக்கப்படுகிறது.

த்த மாத்திரத்தில் ஸ்ரீ முருகன் சிரக்கம்பனம் செய்து (29) "நிறுத்தும் நிறுத்தும்" என்று கையசைத்தலினு லுரைத்துப் பின்னும்வரைச் சொல்லியதாவது:— (29½) "இதன்பொருளை, எங்கள் மனதுக்குச் சந்தேகமே யில்லாதபடி யிப்போது சீக்கிரத்தில் மிகவும் ஸரியாகவும், தெளிவாகவு மெடுத்துரைப்பீர்" என்றனர். (30½) அப்போது பிரம்மன் "இதற்குரிய பொருள் யானே" என்றுரைக்கையில் (31) வீரபாகுவானவர் திசையெங்கு மொலிக்கும்படி கைமுட்டியாலவர்மீது சடசடவென வறைந்து கந்தகிரியின்கண்ணுள்ள சிறைச்சாலையி லப்பிரம்மனை யடைத்து விட்டனர். (32) அப்போது ஸ்ரீ கந்ததேவனால், சராசரமாகிய உலகெல்லாம் சிருஷ்டிக்கப்பட்டு வந்தன. (32½) பிறகு சாத்தியர்கள், முனிவர்கள், யோகீசுவரர்க ளிவர்களும், தேவர்களும், தேவேசனும், சந்திரசேகரனுமான பரமசிவனைத் தவத்தினால் வெகுகாலமாராதித்தடைந்து பிரம்மதேவனுடைய விடுதலையைப்பற்றி யாதரவுடன் பிரார்த்தித்தார்கள். (34) ஸ்ரீ மகாதேவனாகிய பிரபுவும் தேவர்களைப் பற்றிய வரலாறுகளை யறிந்து ஸ்ரீ நந்திகேசுவரனை ஸ்ரீ சுப்பிரம்மணியரண்டைக்குப் போகும்படி கட்டளையிட்டருளியதாவது:— (35) "வாரீர் நந்திகேசுவரா! நீரிப்போதே யெமது கட்டளையின்படி நமது குழந்தை முன்பாகப் போய், நமது மொழியாலவனைத் திருப்திப்படுத்தி, (36) உலகசிருஷ்டிக் கிடையூறின்றி அப்பிரம்மனை விடுவிப்பீர்" என்றனர். சிலாதர் மைந்தராகிய நந்திதேவனும் ஸ்ரீ பகவானால் கட்டளையிடப்பட்டபடியே (37) துரிதத்தில் கந்தகிரிசென்று அங்கு ஸ்ரீ கந்த்பிரானை யாராதித்து பற்பல துதிகளாற் களிக்கச்செய்து, (38) அவரை வந்தனித்துக் கைகூப்பி முன்நின்று "ஓ! பகவானே! தேவரீரது தந்தையின் திருவாக்கின்படி, முன்போலுலகசிருஷ்டி நடந்துவரும்படியாகப் பிரம்மன் தேவரீரால் விடுவிக்கப்படல் வேண்டும்" (39) என விண்ணப்பம்செய்து ஸ்ரீ நந்திகேசுவரன் கைகட்டி நிற்குமளவில் மகா ஸேனாதிபதியான ஸ்ரீ குகன் அதனால் கோபமூண்டு நந்தியைப் பலவா றதட்டி (40) "அடா நீவந்த வழியோடே சென்றுவிடு; இல்லாவிடி லுந்தனுக்கு மப்பிரம்மனோடுகூட காராகிரகவாஸம் கிடைக்கும்" என்றனர். (41) ஸ்ரீ கந்தபிரானிவ்வாறாக மிக கோரமா யுரைக்கும்போது சிலாத்மைந்தரானவர் மிக நடுக்கமுற்றுப் பொன்னடிமீதிற் பணிந்து, துரிதத்தில் திருபுராரியாகிய ஸ்ரீ மகாதேவரிடஞ் சென்றனர். (42) கணாதிபதியான நந்திகேசுவரன் அச்சன்னிதானத்தில் ஸ்ரீ ஸுப்பிரம்மணிய ஸ்வாமியினுடைய வரலாறுகளை விண்ணப்பம் செய்ததை ஸ்ரீஜகதீசன் கேட்டு மந்தஹாஸ

த்துடன் சிரக்கம்பம் செய்து மனதில் மிகவுமாச்சரிய முற்றனர். (43)

முப்பத்திமூன்ருவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௪—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு பகவானுனவர் ஸ்ரீ கந்தனுகிய மைந்தனைப்பார்க்கச் சிந்தைகொண்டு அந்தப்புரத்திலிருந்த பார்வதியம்மைக்குச் சொல்லாமல் தானே கந்தகிரிக்கு நேரிற் சென்றனர். (1) அங்கு பல தோழர்களுடன் வெகுநேரமாய் விளையாட்டினில் முயன்றிருந்த செல்வனை, ஸ்ரீ உருத்திரனுனவர் தனது முக்கண்களாலும் பார்த்தும் திருப்தியடையாமல் (2) துரிதத்திலோடிவந்து இரு கைகளாலும் தமதழகிய குழந்தையைத் தழுவி யெடுத்து நெருங்கக் கட்டியணைத்துப் புத்தியைப் பக்கத்திற் செலுத்தாமல் திருமுகத்தை யடிக்கடி முத்தமிட்டனர். (3) தந்தையால் நன்கணைத்துக் கட்டிக்கொள்ளப்பட்ட பிறகு ஸ்ரீ குமாரமூர்த்தியானவர் மிக மனக்களிப்புற்று விநயமான பக்தியுடன் ஸ்ரீ மகாதேவனது தோள்மீதேறி யுட்கார்ந்தனர்.(4) அப்போது ஸ்ரீமகாதேவ னளவற்றவானந்த சுவரூபாராயினும், தமதுத்தம புத்திரனுகிய வானந்த சமுத்திரத்தினது குமாரன் திருமேனியைப் பரிசித்தலாகிய வகாத (அளவிடத்தகாத வாழமுள்ள) மான வமிருத ஜலத்திலாழ்ந்திவிட்டனர். (5) பிறகு ஸ்ரீ பரமசிவன் திவிய விமானத்திலுட்கார்ந்துகொண்டு குழந்தையுடைய மிகுந்த சுந்தரத் திருமேனியை மரைமலர்போன்ற மெதுவான கையினுல் அவயவந்தோறும் தடவிக்கொடுத்து (6) பிறகு புன் நகைப்புடன் குழந்தையது திருமுகத்தைப்பார்த்து நன்கு முத்தமிட்டு முந்தி சில நயமொழிகளால் சமாதானப்படுத்தி ஸ்ரீ ஜகதீசனுரைத்ததாவது:—(7) "வாராய்! புத்திரசிகாமணியாகிய குழந்தாய்! நமது கட்டளையின்படி பிரம்மனை விட்டுவிடு; நம்முடைய ஆதித்தொழிலாகிய ஜகத்சிருஷ்டியானது விக்கினமன்றி நடக்கட்டும்." (8) ஆறுமுகச் செல்வனுனவர் ஸ்ரீ சம்புவினுடைய திருமுகத்தினின்று நேரில் வார்த்தையைக் கேட்டும், பிரம்மனை விடவில்லையே! உடனே ஸ்ரீ பரமேசுவரனுக்குக் கோபமுண்டுகொண்டது. (9) அப்போது ஸ்ரீபரமேசுவரனுடைய திருமனதானது அன்பு, கோபம் இவ்விரண்டுக்கு மிடையிலுள்ளதாயிற்று. அன்பானது முந்தியே யிருந்ததாயினும், புதிதாகவந்தொண்டிய கோப

மானது அதிக பலமுள்ளதாக விருந்தபடியால் அவ்வன்பை (10) யடக்கி ஸ்ரீ ஜநதீசனுகிய மகாதேவனைக்கூடத் தனது கைவசமாக்கிக்கொண்டது. ஸ்ரீ மகாதேவனும் கோபத்தோடு நகைத்துத் தனது மைந்தனை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:—(11) "அடா குழந்தாய்! உனக்குக் கொஞ்சமேனும் தெரியவில்லை; நமது வாக்கின்படி பிரம்மனை விட்டுவிடு; முந்தி, நமது கட்டளையைநிறைவேற்றுகின்ற நந்தியின் மொழியை மறுத்துவிட்டாய். (12) மறுதளியாமல் நீ பிரம்மனை விட்டுவிடல் வேண்டும்." இவ்வாருக வுரைத்த ஸ்ரீ பரமசிவனுடைய திருமுகத்தை ஸ்ரீ குஹமூர்த்தி நோக்கி (13) கணதிபர்களால் பிரம்மனை யெதிரிலழைப்பித்து விடுதலை செய்தனர். பிறகு ஸ்ரீ மகாதேவன் மனக்களிப்புற்று, அன்புடன் மைந்தனைக் கட்டியணைத்து (14) மடிமீது வைத்தருளிப் பிரம்மனிடத்துக் கோபங்கொண்ட முகாந்திரத்தை வினவியதாவது:—"ஜகத்தைச் சிருஷ்டிக்கின்ற பிரம்மனை யாது நிமித்தம் சிறைமீது வைத்தாய்?" என்றனர். (15) ஸ்ரீ கந்தபிரானும் தம் தந்தையை வந்தனித்து விநயத்தோடஞ்சலிகொண்டு மனவன்புடன் வசன முரைத்ததாவது:—(16) "ஓ தந்தையே! யான் தோழரோடிங்கு மனம்போல் விளையாடி நிற்குமளவில், அவன் கர்வத்தினு லெனதனை யசட்டை செய்து உட்சென்று வந்தனன்: (17) பிறகு யானுமவனை "நீயார்? உனது தொழிலென்ன? உனக்கிருப்பிடமெங்கு? என்ன கற்றிருக்கின்றுய்? சொல்" என்று அவமதிப்பாய்க் கேட்டனன். (18) அதன்மேலவனும் தானின்னுனென்பதையும், தனது தொழில் திறமையையும், பதினெட்டு வித்தைகளிலுமுள்ள தனது பாண்டித்தியத்தையும் மெத்த வுரைத்தனன். (19) மறுபடியும் வேதங்களுக்கு ஆதியாகிய வுயிரெழுத்தையும், அதன் பொருளையும் நான் வினவியதற்கு மாருக வெதையோ வொன்றை யுரைத்தனன். (20) அதன்மேல் மகா மந்திரமாகிய ஸ்ரீ பிரணவத்துக்கு விரோதார்த்தத்தை யுரைத்த விப்பிரம்மனை யான் சிறையினுள்ளடைப்பித்தேன்" என்றனர். (21) பிறகு ஸ்ரீசம்புவானவர் மனப்பிரீதியுடன் மைந்தனை யிரு கன்னங்களிலும் முத்தமிட்டுத் தேவர்களுடைய முன்னிலையி லம்மந்திரத்தி னர்த்தத்தை யெடுத்துரைக்கும்படி வினவினர். (22) பின்பு ஸ்ரீ கந்தபிரான் ஜகங்களுக்கு குருவாகிய பரமசிவனைத் தண்டம்பண்ணி "ஓ தந்தையே! மகா ரகசியமாகிய அவ்வர்த்தத்தை யித்தேவர்கள் முன்னிலையில் யானெவ்வாறுணர்ப்பேன்; மேலும் ஸகல ஜகங்களுக்கும் பரமகுருவாகிய தேவரீர்முன்ன ரெங்ஙனமுரைக்கலாவேன். (23½) தவிரவும் புத்திசாலிகள், குருவைப் பகிரங்கமாய் வெளியிடவும், மந்திரங்களைச் சகல முயற்சியுடனும் வெளியிடாம

ல் மறைக்கவும் வேண்டும்;(24) இப்படி யில்லாமல் குருவை யொளித்து மந்திரத்தைப் பகிரங்கப்படுத்துகின்றவன் இரௌரவமென்ற நரகத்தை யடையலாவான். இவ்வாருகிய தேவரீரது கட்டளையானது ஜனங்களாலும், தேவாசுரர்களாலும் கடக்கத் தகாததே." (25) என வுரைத்த வப்புத்திரனை யடிக்கடி யுச்சிமுகர்ந்து மடிமீதுவைத்துக் கட்டியணைத்து "அப்பனே! அம்மந்திரத்தின் பொருளைச் செவிதனி லிரகசியமாகச் சொல்" என்று மிகவாசையுடன் கேட்டருளினர்.(26½) பிறகு மகாஸேநரும் சருவலோக பராபரகுருவாகிய தனது தந்தையை வெகு ஸந்தோஷத்துடன் மனதினுல் வந்தனித்து (27) கேளீர் பிராம்மணோத்தமர்களே! இவருக்குத் தந்தையினு லந்தக்காணத்தி லுதிக்கும்படி யெவ்வா றனுக்கிரகிக்கப்பட்டதோ அதேவிதமாக ஸ்ரீ பிரணவமகாமந்திரத்தினுடைய பொருளை ரகஸியத்திலெடுத் துரைத்தனர். (28) ஸ்ரீ சம்புவு மதுகேட்டு "பிரணவத்தினர்த்த மிவ்வாறுதான், சந்தேகமேயில்லை, வேதத்தில் "ஸுப்பிரமணியோம்" என்று சொல்லியபடி நீயும், "ஸதாசிவோம்" என்று சொல்லியபடி யாமுமே யதன் பொருளாகின்றோம் (29) என்று உலகின்கண் யாவரறிகின்றார்களோ அவர்களெமக்குச் சமானமாகின்றார்கள். மேலுமிது, சகல வேதாந்தங்களுடைய விஞ்ஞானங்களால் நல்ல நிச்சயபுத்தியுடைய பெரியோர்களுக்கும், (30) இரஜோகுண தமோகுணங்களின் கலப்பற்ற சுத்த சத்துவகுணமுடைய இயதிகளுக்கும் பரப்பிரம்மத்தையடைய முக்கிய வாதாரமானது." என மிகவும் பிரசன்ன மனதுடன் பிரீதியாக வுரைத்து, (31) "அடா செல்வமைந்தனே! பிரணவமந்திரத்தினுடைய, மகா மகிமைபொருந்திய விப்பொருளானது உந்தனுல் நன்கெடுத்துரைக்கப்பட்டது; இதை, அதிகாரமாகிய மலத்தினுற் பற்றப்பட்டிருக்கிற நான்முகனெவ்வாறறியலாவான். (32) தியானத்தினுல் பாவங்களைத் தொலைத்திருக்கின்ற யோகிகள்கூட அறியார்களே; அப்பனே! எமதடியார்மட்டில் நம்முடைய அனுக்கிரகத்தால் மாத்திர மறிகின்றார்கள்.(33) குழந்தாய்! நீ நிச்சயமாக நமது ஆத்துமாவாகையால்தா னவ்வற்புதமான பொருளையறிகின்றாய்; யோகீசுவரர்களில் அகஸ்தியமுனிவரைத் தவிர மற்ற யாவரு மிதற்குத் தகுதியல்லர். (34) நீ, நமது கட்டளையின்படி யிவ்வர்த்தத்தை யவ்வகஸ்தியருக்கு நன்றாக உபதேசமளிப்பாய். பிறகு அவ்வித்தையானது, இவ்வாறாகவே பாரம்பரியமாயடையப்பட்டு, விட்டுப்போகாமல் விளங்கும். (35) அடா புதல்வனே! அவருனக்கு முக்கியச் சீடன். அவரைப் புததிரனைப்போல் நீ யாளுவாய்" என்று ஸ்ரீபரமேசுவரன் மைந்தனைக்

கட்டளையிட்டுத் தனதாலயத்துக்குத் திரும்பிச் சென்றருளினர். (36) அங்கந்தப்புரத்தில் ஸ்ரீஜகத்பதியானவர் பார்வதிதேவியை யழைத்து, மிகவு முபசாரணைசெய்த வவ்வம்மனைக் கட்டியணைத்து மடிமீது வைத்து, (37) ஸ்ரீ ஸுப்பிரமண்ணியனையும் பிரம்மனையும் பற்றியதான விருத்தாந்தங்களைத் திருவாக்கருளினர். (37)

முப்பத்துநான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௫—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்ரீதேவியானவள் ஸ்ரீஜகதீசனுடைய திருமுகத்தினின்று குமாரமூர்த்தியினுடைய மஹிமையைக் கேட்டு அடப்பவிருக்ஷம்போல் மயிர்க்கூச்சலுற்ற வவயவங்களுடன் தனது நாயகனை நோக்கி யுரைத்ததாவது:—(1) "ஓ! பிரபுவெ! தேவரீரது மைந்தனுடைய மகிமையானது உலகிலுள்ளவைகளுக்கெல்லாம் மேற்கொண்ட வற்புதமுடையது மிகவு மாச்சரியம். அவனிளமையிலே யுலகங்களை விளையாட்டாகச் சிருஷ்டித்திருக்கிறான். (2) ஓ! எனது பிரபுவே! இவனதுருவ மெவ்விதமாகியது? இவன் பராக்கிரம மெப்படி? இவன் யார்? இவன் மகிமை யெப்படி? ஓ! ஜகதீசா! இவை யெல்லாம் வினவுகின்ற வெந்தனுக் கெடுத்துரைத்தல் வேண்டும்." (3) என்றிவ்வாறுக, மன்மதனையும் இயமனையும் சமுகரித்தவரும், தேவேசனுமாகிய ஸ்ரீசம்புவானவர் கேட்கப்பட்டதின்பேரில் தேவியை நோக்கிக் களிப்புடன் கூறியதோவென்றால்:—(4) "கேளாய்! சுந்திரமேனியாளே! ஓ! கோ! இது மெத்த வாச்சரியம்! அவ்விரகஸியத்தைச் சொல்லுகின்றோம்; நாமோ களங்கமற்ற பரிபூர்ணராகிய பரமசிவன்: நீயோ என்று மழிவற்ற பராசக்தி; (5) நாமிருவருமோ பகுதி விகுதிகளைப்போலும், மொழியு மதன் பொருளுமாகியவை போலு முள்ளவர்களென்று மதிக்கப்படுகின்றோம். வாராய்! கலியாணி! நீ மொழியும் நாம் பொருளுமாகின்றோம்; நீ ஜகமும் நாமதற்குப் பதியுமாகின்றோம். (6) நாம், சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரம், அனுக்கிரகம், திரோதானம் ஆகிய வைந்து தொழில்களுக்கதிபரும், ஐந்து திருமுகங்களை யுடையோருமாகிய ஸதாசிவன்; நீயோ பலவாறுக வேறுபட்டிருக்கினும் ஒரே முகத்தை யுடைய பரமேசுவரி. (7) நமது

மைந்தனுமோ வுனது சுவரூபத்தையு மெமது சுவரூபத்தையும் சேர்த்துக் கொண்டவனுகையால் ஆறுமுகனெனப் படுகின்றான். மேலுமிவனிப்பிரபஞ்சங்களுக்கு விளையாட்டாகவே ஐந்து தொழில்களையும் நடத்த வல்லவனுகின்றான். (8) அழகிய வடிவங்களை யுடைய ஆறு கார்த்திகை நக்ஷத்திரங்களு மிவனுக்கு முலைகொடுத்து உனதிந்த மைந்தனுமவர்களது பாலை யுண்டபடியால் 'கார்த்திகேய' னென்ற பெயரைக் கொண்டனன். (9) மேலும் நீ பருவதராஜனுக்குக் குமாரியாகியதால் பார்வதியெனப்படுகின்றாய்; ஆகையாலுந்தன் புத்திரனையும் உந்தன் பெயரால் "பார்வதீநந்தனன்" (புத்திரன்) என்று உலகினில் வேதமறிந்தவர்கள் சொல்லுகின்றார்கள். (10) பார்வதீ! உந்தன் மைந்தன் மூவுலகினிலும் பராக்கிரமத்தோடு ஆக்கிரமித்து ஸஞ்சரித்தபடியால் 'ஸ்கந்த' னெனப்படுகின்றான். (11) நாமடியார்களை யக்கிரத்தில் (முன்னுக்கு) கொண்டுவருகின்றபடியால் 'அக்கினி' யெனப்படுகின்றோம். உனது பாலன், அவ்வாறக்கினியாகிய நம்மிடத்தினின் றுவிர்ப்பவித்தபடியால் 'அக்கினிபூ' (அக்கினிமைந்தன்) வெனப்படுகின்றான். (12) அல்லது கேளாய் புவனேசுவரி! வீரியம் மேனேக்கிச் செல்லலுற்ற நமது நெத்தியிலான அக்கினி நேத்திரத்தினு லாவிர்ப்பவித்தபடியாலும் 'அக்கினிபூ' வென்று சொல்லப்படலாகும். (13) அல்லாமலும், கேளாய்! நேர்த்தியான புருவத்தையுடைய சுந்தரீ! நமது கட்டளையின்படி தேஜஸ்ஸானது அக்கினிதேவனால் வாயுவுடன்கூட வெடுத்துப்போகப் பட்டபடியாலும் உந்தன் புதல்வன் 'அக்கினிபூ' வென்று வித்துவான்களாலுரைக்கப்படுகின்றான். (14) வேதவேதாந்தங்களில், தகராகாசமானது (ஹிருதயகமலத்திலான வாகாசம்) 'குஹை' யென்று கூறப்படுகின்றதல்லவோ? ஸகல பிராணிகளுடைய ஹிருதயகமலத்திலும் வாசம் பண்ணுகின்ற வடிவேலன் அக்குகையில் விளங்குகின்றபடியால் 'குஹன்' எனப்படுகின்றான். (15) இச்சுப்பிரம்மணியன் பாவங்களைத் தொம்ஸம்பண்ணியவனும், இரஜோகுணமற்றவனும், என்று மழிவில்லாதவனும், சோகமற்றவனும், யாவராலும் சிகிச்சை செய்யப்படத் தகாதவனும், அல்லது சமுசாரமாகிய வியாதிக்குத் தன்னைத்தவிர வேறு வைத்தியரில்லாமையைப் பெற்றவனும், தாகமற்றவனும், அழகிய வாலிபப் பருவமுடையவனும், (16) சத்தியகாமனும், சத்தியசங்கல்பனும், கேளாய் மகேசுவரீ! உருதபுருடனும், சத்தியபுருடனும், விசுவரூபமுடையவனும், விசுவங்களுக் கதிகப்பட்டவனுமாகின்றான். (17) அவன் நாணற்காட்டினிற் பிறந்ததால் 'சரவணபவ'னெனப் படுகின்றான்; அல்லது வனமென்று

ல் ஜலம்; நாணற்காட்டின்நடுவிலுள்ள தடாகமத்தியிலான(18)மரைமலரின்கண்,ஜகன்னுதனாகிய,மரைமலர்ச்சோபைத்திருமுகத்தையுடையபுத்திரன் ஜகங்களைக் காப்பதில் விருப்பமுற்று அவதரித்தபடியாலும் 'சரவணபவ'னெனப்படுகின்றான்.(19) பிராம்மணர்களுக்கு அல்லது வேதங்களுக்கு யாம் முக்கிய தெய்வமாகையால் 'பிரம்மணிய' னெனப்படுகின்றோம். கேளாய்! பிரியநாயகி! நமது மைந்தனேயென்றாலதிலும் விசேஷமானதால் தேவாசுரர்களால் வந்தனிக்கப்படலுற்ற 'ஸ்ரீசுப்பிரம்மணிய' னெனப்படுகின்றான். (20) மகா சேனைகளாகிய ஆத்துமத் திரள்கள் அந்தரங்க புத்தியோடு நமஸ்கரித்து அவனது சுவாதீனத்திலு மிருக்கின்ற காரணத்தால் உனது செல்வன் 'மகாசேன' னெனப்படுகின்றான். (21) கங்கையிற் சனித்தபடியா லுன்பாலன் 'காங்கேய' னெனப்படுகின்றான். உலகினில் விஷ்ணு முதலிய தேவர்க ளவனுக்குச் சேனைகளானபடியாலும், (22) அச்சேனையை யிவன் துக்கங்களினின்று கடத்திவிட்டபடியாலும் 'சேனானி' யெனப்படுகின்றான். பாராய்! பாவமற்ற பார்வதி! உந்தனது புதல்வனுக்கு எண்ணற்ற திருநாமங்க ளுள்ளன. (23) அவற்றுள் ஸகல பிராணிகளுக்கும் மோக்ஷ ஸாம்பிராஜிய பதவியைக் கொடுக்கலுற்ற சில திருநாமங்கள்மட்டி லிப்போது நம்மாலுரைக்கப்பட்டது. யாவராயினும், கந்தனுடைய வோர் திருநாமத்தையாவ துரைத்திடில் (24) அவருக்கிவ்வுலகினிலே தரும காம்மியார்த்த மோக்ஷங்களாகிய நான்குவித புருஷார்த்தங்களும் கைகூடும். அவனைப்பிரம்மஹத்திமுதலிய பாவங்களு மணுகா. (25) பூஜிக்கப்படலுற்ற, கிரிராஜன் பெண்ணே! ஸச்சிதானந்த சுவரூபனும், களங்கமற்றவனுமான விச்செல்வனுடைய வுருவத்தையுரைக்கின்றோம் கேள்; (26) கேளாய்! ஜகதீசுவரீ! அவன், ஒளிப்பொருளுக் கெல்லாம் மிகுந்த வொளிகொண்டவனும், உவமையற்ற பரஞ்சோதிப் பொருளுமாகின்றான். அவனது மிகுந்த காந்தியினால் சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் இவையெல்லாம் சோபிப்பதில்லை. (27) இவ்வாறாகிய வவனதொளிக்கு முன்னில் இம்மின்னல்களும், அக்கினியு மெம்மாத்திரம். சகலமு மவனதருளால் விளங்குவதைத் தவிர வேறு போக்கில்லை. (28) கேளாய்! பூர்ணசந்திரத் திருமுகமுடைய மானே! ஆதியற்ற வுனது புத்திரனால் சரட்டினில் மணிகள்போல், சகல சராசரப் பிரபஞ்சங்களும் கோர்த்துப் பின்னிவைக்கப்பட்டிருக்கின்றது. (29) இவ்வுருவமவனுக்குச் சுபாவத்திலுள்ளது; மற்றென்றோ வென்றால் ஸ்தாவரஜங்கம மயமாகிய புவனங்களி னுருவமாகும்; அதற்குச் சுவர்க்கலோகம் சிரஸாகும்; வானம் நாபியாகும்; (30) ஏழுகீழ்லோகங்களும் பாதங்கள்; அக்கினி, சந்திரன், சூரிய

னிம்மூன்றும் மூன்று நேத்திரங்களாகும்; இவ்வுருவத்துக்குத்திக்குகள் புயங்களாகும்; கேளாய்! மிகுந்த சுபகுணமாதே! ஔஷதிக ளிவ்வுருவத்துக்கு உரோமங்களெனப்படும்;(31) சகலருக்கு மருளளிக்கின்ற விவ்வுருவத்துக்கு பிருதிவி,அப்பு,தேஜசு,வாயு, ஆகாசமாகிய வைந்து மகாபூதங்களும் புலன்கள்; சப்தம், ரூபம், கந்தம், சுவை, பரிசமிவைகள் அவ்வைம்புலன்களின் விஷயங்களெனப்படும். (32) திவிய மந்தகாசத்தையும், நேர்த்தியான விழிகளையு முடைய நாயகி! பரப்பிரம்மமாகிய குமாரனுல், ஆறு திருமுகங்களையும், பனிரண்டு புயங்களையும், பதினெட்டு விழிகளையுமுடைய வழகிய திருமேனியானது லோகானுக்கிரகார்த்தமாக வங்கிகரிக்கப்பட்டது. (33½) கேளாய்! சுந்தரவதன மாதே! குமார மூர்த்தியினுடைய மிக பெருமைபொருந்திய விவ்வுருவத்தை யாவர் தியானிக்கின்றுர்களோ (34) அவர்கள் மிகுந்த பாக்கியசாலிகளும் ஜனங்களால் புகழப்படுவோர்களு மாவார்கள். மேலுமவர்களால் நாடுகளே மிகவும் பரிசுத்தமாகும். பூதலத்தில் இவனது திருவடிகள்மீது யாவர் பக்திபண்ணுகின்றுர்களோ (35) அவர்கள் தேவர்களாலும் வந்தனிக்கப்படத்தக்கவர்களும், எமக்கு முனக்கும்கூட மிகவும் பிரியமுள்ளவர்களுமாவார்கள். கேளாய்! உமையே! மகாத்துமாவாகிய குமாரனுடைய மகிமையை யுரைக்கின்றேம்;(36) அவனுடைய கட்டளைப்படி தான் வாயுதேவன் காற்றடித்து ஆவஹம் * முதலிய தனது ஏழு ஸ்கந்தங்களால் (தோள்) சிம்சுமார சக்கிரமென்ற நவக்கிரக சக்கிரம் முதலியவற்றைச் சுமந்து புவனங்களையும் தாங்கி (37) தனது பிராண, அபான, வியான, உதான, ஸமானமென்ற பற்பல வாயுக்களால் பிராணிகளையும் நடத்துகின்றுன். ஸகல புவனங்களாலும் மறுக்கத் தகாத, இவனது கட்டளைக்குப் பயந்து தான் உலகங்களுக்கு நேத்திரமாகிய சூரியனும் உலகுக் கொளிகொடுக்கின்றுன். (38½) கேளாய்! தேவீ! உனது செ

---

* ஆவஹம், பிரவஹம், ஸம்வஹம், உத்வஹம், விவஹம், பரிவஹம், பராவஹம், ஆகிய எழுவாயு ஸ்கந்தங்களுக்குள்ளன. இவற்றுள் ஆவஹமென்றது மேகம், இடி, மின்னல்கள் இவைகளைச் சலிப்பிக்கின்றது. அதற்குமேலாக பிரவகமென்றது சூரியமண்டலத்தை நடத்துகின்றது. அதற்குமேல் ஸம்வஹமென்றது சந்திரமண்டலத்தையும், அதற்குமேல் உத்வஹமென்றது நக்ஷத்திரமண்டலத்தையும், அதற்குமேல் விவஹமென்றது நவக்கிரக மண்டலத்தையும், அதற்குமேல் பரிவஹமென்றது ஆகாசகங்கை, ஸப்தருஷிமண்டலம் இவைகளையும், அதற்கும் மேல்பராவஹமென்றது துருவமண்டலத்தையும் தாங்கி நடத்தி வருகின்றது. பிரம்மாண்டம் முழுமையும் வாயுபலத்தால் தான் நடத்தப்பட்டு வருகிறதென்பது கருத்து. இவை பிரம்மாண்ட புராணத்திற் கூறியவாறு.

ல்வனுடைய திருவுத்திரவாலே அக்கினிதேவன் தேவர்களுக்காக ஹோமம் செய்யப்படுகிற ஹவியங்களையும், பிதுருக்களுக்காக ஹோமம் செய்யப்படுகிற கவ்வியங்களையு மவரவர்களுக்குக் கொண்டு சேர்ப்பித்தும் சகல பதார்த்தங்களையும் பக்குவப்படுத்தியும்வருகின்றான். (39½) மேலும், விசுவாநரமுனிவரின் தநயனாகிய அவ்வக்கினிதேவன் பிராணிகளின் வயிற்றினுள்ளிருந்து (40) பிராணாபானம் முதலிய வாயுக்களுடன் சேர்ந்து மென்றும், கடித்தும், நக்கியும், குடித்தும் புசிக்கப்படுகிற நான்குவித ஆகாரங்களையும் ஜீர்ணம் பண்ணுகின்றான். இவனது கட்டளையின்படியே யியமன், பாவம் செய்தவர்களை யுயிரோடிருக்கையில் வியாதிகளாலும், இறந்தபிறகு நரக யாதனைகளாலும் தண்டித்துவருகிறான். (41½) இவனதாஞ்ஞையின்படியே நான்முகத்தேவனும் மற்றவொன்பது பிரஜாபதிகளுடன் ஆதரவோடு ஜகங்களைச் சிருஷ்டித்து வருகிறான். (42½) 'நர' என்றால் ஜலம்; ஜலத்தை அதாவது க்ஷீராப்தியை ஸ்தானமாகவுடையவனென்று பொருளடங்கிய, நாராயணனென்று பெயர்கொண்ட மகா யோகியான விஷ்ணுவும், (43) ஆறுமுகனுடைய கட்டளையின்படியே ஜகங்களைப் பாலனம் செய்துவருகின்றார். மேலுமந்நாராயணன் † புருகு முனிவருடைய சாபத்தினால் கட்டுண்டு மீன், ஆமை, பன்றிமுதலிய (44) வவதாரங்களை யடைந்து, இக்குமாரமூர்த்தியினுடைய கட்டளையின்படியே தருமங்களை ஸ்தாபனம் செய்வதில் முயன்றவராகி துஷ்டர்களாகிய அசுரர்களைச் சமுகரித்து வருகின்றார். (45) பிரம்மசுவரூபியான ஸுப்பிரம்மணியனுடைய வாக்கினையின்படியே ஸ்ரீ காலாக்கினி ருத்திரபகவான் * பிரளயகாலத்திலிச்சருவ ஜகங்களையும் சமுகரிக்கின்றார். (46) காலம்தான் பிராணிகளைப் படைக்கின்றது; சமுகரிக்கின்றதும் காலம்தான்; எல்லாம் காலத்தினதீனமே: அக்காலமோ இச்சுப்பிரம்மணியன் கைவசத்தி லகப்பட்டதே. (47) உனது புத்திரனது பெருமைபொருந்திய வரிக்கையின்படியே ஆகாசமானது அசேஷப்பிராணி

---

† ஸ்ரீ விஷ்ணுவுக்கு புருகுமாமுனிவரால் சாபம் கிடைத்த விவரமும் அச்சாப நிவர்த்திமுதலியதும் வரப்போகின்ற வுபதேசகாண்டத்தில் விவரிக்கப்படுகின்றது.

* இதைக்கொண்டு, பிரம்ம விஷ்ணு ருத்திரர்களில் சமுகாரத்தொழிலுக்காக வேற்பட்டிருக்கிற ருத்திரன்தான் இக்காலாக்கினி ருத்திரனென்பதும், ஸ்ரீ ஸாம்பமூர்த்தியாகிய பரமேசுவரன் இம்மும்மூர்த்திகளைத் தவிர வேறாகிய துரீய (நான்காவது) மூர்த்தியென்பதும் நிதர்சனமாய் வெளியாகின்றதைக் காண்க.

களுக்கு மிடவெளி கொடுக்கின்றது.(48) இவனதாக்கினையின்படியே ஜலம் சகலப்பிராணிகளையும் ஜீவிக்கச் செய்கின்றது. யாவராலுமிவனது கனம்பொருந்திய வுத்திரவை மீறிநடக்க முடியாதல்லவோ. (49) இப்பூமி, மலைகள், சமுத்திரங்கள், சூரியன் சந்திரன்முதலிய வொளித்திரள்கள், விஷ்ணுமுதலிய தேவர்கள், ஸகல சராசரமான ஜகங்கள் இவையெல்லாம் சுப்பிரம்மணியனது திருவாக்கின் கட்டளைவசமாகவே யிருக்கின்றன. (50)

முப்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௫—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்ரீ பார்வதிதேவி கேட்கின்றதாவது:— "ஓ! புத்திரவான்களில் மிகுந்த சிரேஷ்டரே! யாதொன்றை யறிந்ததனால் மானிடர்கள் மோக்ஷ ஸாம்பிராஜியத்தை யடைகின்றார்களோ அப்படிப்பட்ட, தேவரீரது புத்திரனுடைய மகிமையை யெடுத்துரைத்தல் வேண்டும்" என ஸ்ரீ பரமேசுவரன் சொல்லுகிறார்:— (1) "ஓ! கோ! கேளாய்! சிறந்த நிறமுடைய மாதே! சரவணபவனுடைய மகிமையைச் சருவலோகோபகாரார்த்தமாக யாமெடுத்துரைக்கின்றதை நீ தெரிந்துகொள். (2) கந்தன் சகலதேவ சுவரூபனும், சகலலோக சுவரூபனும், சகலபிராணி சுவரூபனும் என்றும் நித்தியமாகிய ஸாக்ஷாத் பிரம்மசுவரூபனு மாகின்றான். (3) ஓ! கிரிகுமாரி! உலகினில் யாதாமொரு பொருளல்லது பிராணியானது மகிமை, இலக்ஷ்மீவிலாஸம், தார்டியம் இவைகளையுடையதோ அதில் நமது மைந்தனுடைய மகிமையினுடைய லேசாலேசத்தின் விலாஸந்தானுள்ள தென்பதைப் பெண்ணே! நீ அறி. (4) ஓர்விளக்கினின்று மற்றோர் விளக்கேற்றப் படுவதுபோல் ஒருவனுடைய ஆத்துமாவே அவனுக்குப் புத்திரனாகிறது. ஏற்றிய தீபத்தினுடைய மகிமையினால் மூலதீபத்தினுடைய பெருமை யறியப்படுகின்றதல்லவோ. (5) இவ்விதமாகத்தான், நம்மிடத்தினின் றுண்டான விப்புத்திரன் மிக மகிமையுள்ளவனாகின்றான். கேளாய்! பெண்ணே! இவனது மகிமையினி லேசாலேசந்தா னங்கங்கே கொஞ்சம் கொஞ்சம் தலைகாட்டுகின்றது. (6) ஓ! கிரிகுமாரி! அளவற்ற ருத்திரகோடிகளிலிவனே கா

லாக்கினிருந்திரான். சங்கம், சக்கிரம், கத்தி இவைகளைத்தரித்த அனேக விஷ்ணுக்களிலிவன் மகாவிஷ்ணு. (7) ஸ்ரீ விஷ்ணுவினுடைய நான்கு மூர்த்திகளிலிவன் வாஸுதேவமூர்த்தி. அவருடைய பத்துஅவதாரங்களிலிவனே ஸ்ரீ ராமன். (8) ஆயுதந்தரித்த யாதவர்களிலிவனே வாஸுதேவன். பாண்டவர்களிலிவ னர்ஜுனன். வேதங்கள் அல்லது பிராம்மணர்களுக் கதிபதியாகிய விக்கந்தன், சகல பிரஜாபதிகளுக்குள் பிரம்மாவாகின்றான். (9) எல்லா மனுக்களுக்குள்ளுமிவன் சுவாயம்புவமனு; ஸகலதேவர்களுக்குள்ளுமிவனே யிந்திரன். ஒளிப்பொருள்களிலிவனக்கினி. (10) பிதுருக்களிலிவ னியமன். இவனிராக்ஷஸ்ஸுகளில் நிருருதி. ஓ! பிரியமுள்ள பெண்ணே! ஜலப்பிராணிகளிலிவன் வருணதேவன். பலமுடையோர்களில் வாயுதேவன். (11) கந்தர்வர்களில் சித்திரரதன். திரவியவான்களில் குபேரன். இவன் திக்பாலர்களில் ஸகல சுகங்களையும் கொடுக்கலுற்ற ஈசானியனென்று சொல்லப்படுவான். (12) திக்கஜங்களி லைராவதமாவான். நதிகளில் கங்கை. ஏகாதச ருத்திரர்களில் சங்கரன். கந்தன் அஷ்டவஸுக்களில் பாவகனென்ற வஸுவாகிறான். (13) துவாதசாதித்தியர்களில் விஷ்ணுவென்ற ஆதித்தியன்; வைத்தியர்களில் அசுவினிதேவர்களாவான். அசுரர்களிலிவன் பிரகலாதன். ஸர்ப்பங்களில் வாஸுகி. (14) மிருகங்களிற் சிங்கம். பறவைகளிற் கருடன். பிரம்மருஷிகளிலிவன் வஸிஷ்டர்; தேவருஷிகளில் நாரதர்; (15) ஸகல விருக்ஷங்களிலும் இவனரசமரம்; மானிடர்களிலிவன் பிராம்மணன். இவ்வுலகினில் தேவர்கள், விலங்கினங்கள், மானிடர்கள் முதலியவர்களிலெங்கெங்கு(16) பராக்கிரமம், அதிகஸம்பத்து, காந்தி, கல்வி, அறிவு இவைகளிருக்கின்றனவோ, கேளாய்! பிரியநாயகி! அவையெல்லாம் கந்தனுடைய மஹிமையே யென்பது நிச்சயம். (17) ஓ! புவனேசுவரீ! உந்தன் மைந்தனுடைய மகிமையைச் சுருக்கமாயெடுத்துரைத்தேன். நூறுகோடி வருஷகால மிடைவிடாமலுரைத்த போதிலுமதை வளர்த்திச்சொல்வதற்கு முடியாது. (18) பெண்ணே! இதுதான் உந்தன்மைந்தனுடைய மகிமை. இதைமுந்தியோர் தடவை பிரஸ்தாபத்திலுந்தனுக் குரைத்திருக்கிறேம்; அதை நீ மறந்துவிட்டாய். (19) ஓ! பார்வதி! அல்லது உலகாக்ஷணார்த்தமாகப் பின்னோர்வாறு நீ கேட்டிருக்கலாம்.” என்று ஸ்ரீ மகாதேவன் பிரஸன்னமாக ஸ்ரீ குமாரமூர்த்தியினுடைய வைபவங்களை (20), லோகானுக்கிரக விருப்பத்துடன் ஸ்ரீ பார்வதீ தேவிக்குரைத்தருளி பிறகு தேவியை யோர்வாறு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு அந்தப்புரத்துக்குச் சென்றனர். (21) இவ்விதமாக ஸ்ரீ பரமேசுவரனால் சொல்லப்பட்டதானது உ

லகினில் விசேஷமாகப் பிரஸித்தமாயிற்று. அதிலும் மிகுதியாய்த் தேவசிரேஷ்டர்களுடைய உலகங்களிலங்கங்கு பிரஸித்திப்பட்டிருக்கிறது. (22) வைகுண்டத்தில் ஸ்ரீ விஷ்ணுவினுடைய மாளிகையில் விஷ்ணு பக்தர்களாகிய மங்கையர்களாலிக்கந்தன் புகழ்கள் எப்போதும் விநோதமாக வீணைகளிற் பாடப்பட்டுவருகின்றன. (23)

இத்தருணத்தில் (தேவேந்திரனுக்குத் தம்பியும், ஸ்ரீ விஷ்ணுவினவதாரமுமான) உபேந்திர தேவனது கண்களினின்றுண்டான அமிருதவல்லியென்றும், ஸௌந்தரியவல்லியென்றும் பெயர்கொண்ட, அழகிய கண்களையுடைய விரண்டுபெண்களும், (24) தினந்தோறு மங்கங்கு ஸ்ரீ கந்தபிரானுடைய மஹிமையும், சிறந்த வடிவங்களும் விசேஷமாகப் புகழப்படுவதைக் கேட்டு, (25) மகா துர்லபமாகிய, வப்பகவானுக்குப் பெண்டீர்களாவதை விரும்பி அவரைப் பிரியப்படுத்துவதற்காக மிகுந்த சிரத்தையுடன் தவஞ்செய்வதற் கிச்சித்தார்கள். (26) மிக கலியாண குணசீலர்களும், மிகவும் மிருதுவான திருமேனியுடையவர்களும், வடிவத்தி லீடற்றவர்களுமான வப்பெண்கள் தங்களது சௌந்தரியத்துக்கிடானவர் இஸ்தாவர ஜங்கமமான ஜகத்திலப்பிரபுத்தா னென்றெண்ணினார்கள். (27) அவர்களம்மகிமை பொருந்திய பிரபுவினுடைய சரித்திரங்களை விஞ்ஞானம் செய்கின்றவர்கள் மூலமாயடிக்கடி கேட்டுக் கேட்டு மன்மதவுபத்திரவத்தினால் துளிர்மெத்தைப் படுக்கையிலும் ஸுகமடையவில்லை. (28) அவரது திவ்யசரித்திரங்களைக் கேட்பதிலே மிகுந்த மனப்பூரிப்புகொண்டு தினந்தோறும் தூக்கமேயற்றவர்களாக வெகுராத்திரிகளைப் போக்கினார்கள். (29) அவர்கள் நாணல்வனத்துக்குச்சென்று அங்குள்ள மிகவுமுன்னதமான வோர் தடாகக்கரைமீது நிராஹாரர்களாக முனிவர்களுடைய நியமங்களை யனுஷ்டித்துக்கொண்டும், (30) இடையிற் பூண்டிருந்த நவரத்தின கஜிதமான வொட்டியாணங்களை யெடுத்துவிட்டு முஞ்சமென்ற புல்லின் கயிறுகளை யரைஞாண்களாகக் கொண்டும், மிக மிருதுவும் பரிசுத்தமுமான மான்தோலை யிடையிலுடுத்தியும், (31) சிறந்த வெண்பட்டு வஸ்திரங்களை நீக்கிவிட்டு மிக நேர்த்தியான மரையுரிகளை யுத்தரீயங்களாகத் தரித்தும், திருமேனியெங்கும் திருநீற்றினா லலங்கரிக்கப்பெற்றும், உருத்திராக்ஷங்களை யாபரணங்களாகப் பூண்டும், (32) ஸ்ரீ ஸுப்பிரம்மணிய ஷடக்ஷர மகா மந்திரத்தைப் பக்தியுடன் ஜபித்துக்கொண்டும், அப்பிரபுவையே யெப்போதும் மனதில் தியானித்துக்கொண்டு மிவ்வாறாக வெகுகாலம் சென்றதன்மேல் அனுதியான ஸ்ரீ யகாஸேன மூர்த்தியானவர் நேர்த்தியான மந்தஹாஸத்தினால் விளங்கிய திருமுகத்தோடவர்கள் முன்னர் பிரத்

தியக்ஷமாயினர். ($33\frac{1}{2}$) அப்போது அமிருதவல்லியும், சுந்தரவல்லியும் பிரபுவை யருகிற்கண்டு (34) அங்கமெங்கும மயிர்க்கூச்சலுற்று, பிரமையினால் விழிகள் மலராலுற்றவர்களாகி யவரை வந்தனித்தஞ்சலி கொண்டு அவரதிரண்டு பாரிசங்களிலும் நின்றார்கள். (35) கனவிலும் முந்திக்கண்டிராத அவரை சகலலோகங்களையு மதிகரித்து மகாமேன்மைகொண்ட தானவவரது தேஜஸினால் ஸ்ரீ பரமேசுவர புத்திரனாகிய குமாரமூர்த்தியென்றே யறிந்தார்கள். (36) ஸ்ரீ ஜகன்னாதனுமவர்களைப் பார்த்தருளிப் புன்னகைப்புடன் திருவாய் மலர்ந்தருளியதாவது:— "ஓ! அழகுள்ள பெண்களா! உங்களுக்கு யாமென்ன செய்யவேண்டும்; நீங்கள் மனதில் நாடிய விஷ்டங்களைக் கேளீர்கள். (37) நீங்களிஷ்டப்பட்டுக் கேட்குதலை நிறைவேற்றுகின்றோம்" என, பெண்களுமதுகேட்டு மனம் பூரித்தவர்களாகி வரனைக்கேட்டதாவது:— "ஓ! சகல ஜகங்களும் சரணாகதி யடையப்பெற்ற ஜகன்னாதா! ஓ! எப்போதும் ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களுடைய வந்தக்கரணத்திலுள்ளிருக்கும் பிரபுவே! ஓ! சகல புவனங்களையும் பாதுகாக்கின்ற நாதனே! தேவரீரெங்கள்மீது பிரஸன்னராகி யெங்களைப் பாணிக்கிரகணம் செய்துகொள்வீர். (39) ஓ! பிரபுவே! யாங்கள் வெகுகாலமாய்த் தேவரீருக்குப் பெண்டீர்களாவதற்குக்காமுறுகின்றோம்" என, அப்பிரார்த்தனையினாற் களிப்புற்று மறுபடியும் பிரபுவுரைத்ததாவது:— (40) "சிலகாலம் சென்றபிறகு உங்கள்மனதைப் பூர்ணம் செயவிக்கின்றோம். கேளாய்! அமிருதவல்லி! நீ நமதாக்கினையின்படி தேவலோகத்தில் தேவேந்திரனிடத்துப் போயிரு; (41) வாராய்! பிரியமுள்ள சுந்தரவல்லி! நீ பூலோகம் சென்று சிவமுனியிடத்திலிரு; யாம்ஸமயத்தில்வந்து விவாகம் செய்துகொள்வோம்". (42) என்றிவ்வாறாக பகவான், அகண்ட விழிகளையுடைய பெண்களுக்குரைத்தருளி, தாய்தந்தையர்களுடைய ஸன்னிதானத்தை நினைத்துக்கொண்டு கைலைகிரியில் பெற்றோர்களண்டை சென்றலங்கரித்தனர். (43) கேளீர்! சௌனகாதி முனீசுவரர்களே! ஸ்ரீ சுப்பிரம்மணியன் பெற்றோர்களுடைய திருவடிகள்மீது தண்டனிட்டு அஞ்சலிபந்தம் செய்துகொண்டு அவர்களுடைய திருமுகங்களை நோக்கி நின்றனர். (44) அப்போதவர்கள் குழந்தையை யெடுத்தணைத்து செந்தாமரை மலர்போன்ற முகத்தை முத்தமிட்டார்கள். அவர்களொவ்வொருவரும் வெவ்வேறாக முத்தமிட்டும் திருப்தியடையவில்லை. (45) வெகுகாலமளவு மவர்களொருவருக்கொருவர் மாற்றிமாற்றி மடிமீதுவைத்து லாலனைசெய்து பிறகு குழந்தையை ஜகதீசுவரனும் ஜகதீசுவரியும் வெகுஸந்தோஷத்

துடன் தங்களிருவர்க்கும் மத்தியில் வைத்துக்கொண்டார்கள். (46) அப்போதவ்விருவர்களும் குழந்தையோடு சேர்ந்து விளங்கிய காக்ஷியைக் கணுதிபர்கள் தரிசித்து என்றுமழிவற்ற மோக்ஷஸாம்ராஜ்ய ஸுகத்தைத் தாங்களடைந்துவிட்டதாக நினைத்தார்கள். (47) இப்போதுகூட, உமையோடும் கந்தனோடும்கூடிய ஜகதீசனை (ஸோமாஸ்கந்தமூர்த்தி) ப்பக்தியுடன் தரிசிப்பவர்கள் பூமியில்வெகு பாக்கியவந்தர்களாகித் தேவர்களாலும் வந்தனிக்கத்தக்கவ ராகின்றார்கள். (48) இவ்விதமாக ஸ்ரீ பரமேசுவரன் அம்பிகையோடும், குமாரமூர்த்தியோடும் வீற்றிருந்து விளங்கி நிற்குமளவில், யாதொரு கதியோக்ஷமும் பெறாத தேவர்களிச்சந்தோஷ ஸமயமறிந்து கைலமலைக்குச் சென்று அனுப்பமடையாமல் தன்மீதேறினார்கள். (49½) விஷ்ணுமுதலிய தேவர்கள் சுபிரு ஷம்செய்யாதவர்களா லடைவதற்குமுடியாத, ஸ்ரீ ஸர்வலோகேசுவரனுடைய திருமாளிகை வாசலையடைந்து, (50½) அங்குவாசற்படியில் கணங்களுடன் ஸ்ரீ நந்திகேசுவரன் விளங்கி நிற்பதைக் கண்டார்கள். (51) ஸ்ரீ நாராயணன், இந்திரன், பிரம்மன்முதலிய தேவர்களவாருகில் வந்து அவரது திருவடிகளிலாதரவுடன் மலர்மாலைகளாற் பூஜித்து, (52) இருகைகளையும் தாமரை மொட்டுப்போல் மூடிச்சேர்த்துத் தலைமீது வைத்துக்கொண்டு எழுந்தெழுந்தாய்த் தெளிவாகப் பலதுதிகளாற் துதித்து அங்கம் வணக்கமுற்றவர்களாக விண்ணப்பம் செய்துகொண்டதாவது:— (53) ஓ! ஜகங்களுக் கதிபராகிய நந்திகேசுவரா! யாங்களிங்கு வந்திருப்பதை ஸ்ரீ ஸர்வேசுவரனுக்கு விஞ்ஞாபனம் பண்ணி எங்களது துன்பத்தைக் கேட்பித்துத் தீர்த்துவைத்தல்வேண்டும்." (54) என்றிவ்வாறுகத் தேவர்களால் விண்ணப்பம் செய்துகொள்ளப் பட்டதன்பேரில் சிலாதமுனிவரின் செல்வனும், எப்போதும் ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களுடைய விநோத கிருத்தியங்களை நன்கறிந்தவரும் அந்தப்புரத்துக் கதிபருமான ஸ்ரீ நந்திபகவான் (55) தேவர்களைநோக்கி யடியில்கண்டபடி திருவாக்கருளினர். "வாரீர்! தேவர்களே! உங்களுக்கு ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற்கிது ஸமயமில்லை. (56) இப்போதிவ்விடத்திலே காத்திருங்கள். ஈசுவரதரிசனத்துக்குச் சமயம்கிடைக்கும்" என, தேவர்களும் சிலாததனயரது திருவாக்கின்படி யக்கைலமலையிலே காத்திருந்தார்கள். (57) பிறகு வெகுகாலம் கழிந்ததன்மேல் தேவர்கள் மறுபடியும் கருணைக்கடலும், உமாபதியுமான ஸ்ரீ தேவாதிதேவனுடைய தரிசனத்தைப்பற்றிப் பிரார்த்தித்துக்கொண்டு (58) அச்சாலங்காயன முனிவரின் பௌத்திரனைப்பூஜித்துச் சேவைகொண்டார்கள். பிறகு புலன்களை வசத்திற்கொண்ட நந்திபிரானும் ஸ்ரீ பார்வதீச

னுடைய வந்தப்புரத்துக்குச் சென்று ஸ்ரீமகாதேவனுடைய திருவடிக ளில் வந்தனித்துத் தெரிவித்துக்கொண்டதாவது:— (59½) "ஓ! ஸர் வேசுவரனாகிய மகாதேவா! தேவர்கள் சூரபத்துமனுடைய வதையி னால் பராக்கிரம மிழந்தவர்களாகி (60) இங்குவந்து வெகுகாலமாய னுப்படையாமல் வாசலிற் காத்திருக்கின்றார்கள். ஸ்ரீ விஷ்ணுவுடன் கூட தேவர்கள் தேவாதிதேவனாகிய தேவரீருடைய தரிசனத்தை யபே க்ஷிக்கின்றபடியால் (61) ஸ்ரீ குமாரமூர்த்தியினுடைய சைனியங்களா கியவத் தேவர்களுக்கனுக்கிரகம் செய்தருளவேண்டும்" என்று விண் ணப்பம் செய்யப்பட்டதன்பேரில் ஸகல ஜகங்களுக்கும் நாதராகிய (62) ஸ்ரீ ஸோமாஸ்கந்த மூர்த்தியானவர் தேவசிரேஷ்டர்களையும், முனிசிரே ஷ்டர்களையும், யோகீசுவரர்களையு முள்விடும்படி கண்ஜாடையா லனுமதி கொடுத்தருளினர். (63) பிறகு பாக்கியவந்தர்களில் மிகுந்த சிரேஷ்டரும் புலன்களை வசத்திற்கொண்டவருமான ஸ்ரீ நந்திகேசுவரனு மக்கட்டளை யைக்கொண்டு தேவசிரேஷ்ட ரெல்லோர்களையும் ஸ்ரீ மகாதேவனு டைய வந்தப்புரத்துக் கழைத்துபபோயினர். (64) இவ்விதமாக நந்தி தேவன் வெகு பிரயத்தினத்தின்பேரில் தேவர்களைச் சீக்கிரததில் ஸ்ரீ பரமேசுவர ஸன்னிதானத்திற் கிட்டுப்போனவுடன் அத்தேவர்கள், உ மையோடும் கந்தனோடும் கூடிய, என்றுமழிவற்றவும், ஸர்வஞ்ஞனும், ஸர்வகர்த்தனும், ஸர்வலோகங்களுக்கும் மகேசுவரனும், பிரஸன்னமுக முடையவருமான ஸ்ரீ மகாதேவனை வந்தனித்து நற்பொருளடங்கிய சி ரேஷ்டமான வேத வசனங்களால் துதித்தார்கள். (65-66) நந்திதேவ னனவர், யானைத்தோலை யாடையாக வுடுத்திய ஸ்ரீ பரமேசுவர சன்னிதி க்கு மெல்ல மெல்ல வந்து "ஓ! சுவாமீ! ஸர்வஞ்ஞா! சம்போ! திரிபு ரஹரா! விபோ! தேவாதிதேவா! சூலபாணியே! விஷ்ணு பிரம்மர்கள் முதலிய தேவர்கள் இந்திரனுடனும், ஸாத்தியர்களுடனும், எல்லா மு னிகணங்களுடனும், தேவரீருடைய விருபாதாரவிந்தங்களில் வந்தனித் து இப்போது மிகுந்த தனியர்களும், கிருதார்த்தர்களு மாகிவிட்டார்க ள்" என்றனர். (67)

முப்பத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௧௭—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு தேவர்களும், முனிவர்களும் அம்பிகைக்குப்பதியும், எ
ன்றுமழிவற்றவருமான ஸ்ரீ மகாதேவன் முன்பாக வஞ்சலி செய்துகொ
ண்டு விண்ணப்பம் செய்துகொண்டதாவது:— (1) ஓ! சருவகுணசம்
பூர்ணரும், ஸருவேசுவரனும் அசுரர்களை மர்த்திக்கின்றவும், சூரியன்கண்
ணை விழுவித்தவருமான ஜகதீசா! வெகுகாலமாய்ச் சூரபத்துமன் முத
லிய வசுரர்களால் திங்களிக்கப்படுகிற விவ்வெங்களைத் தேவரீரது கிரு
பையின் வலிமையாலிரக்ஷித் தருளவேண்டும். (2½) தேவரீரது விக்கு
மாரமூர்த்தியாலித் தேவசத்துருக்களை வதைத்திடல் வேண்டும்”. (3) எ
ன்று இவ்வாறாகத் தேவர்கள் விண்ணப்பம்செய்து பிரபுமுன்பாகச் சந்
தோஷமாய் நின்றார்கள். பிறகு ஸ்ரீ மகாதேவனுமச் சகல தேவர்களி
டத்தும் பிரஸன்ன மனசுடையவராகி (4) யுலகைக்காப்பாற்றும் விஷ
யத்தைப்பற்றி வெகுநேர முமையோடாலோசித்து ஸ்ரீ சுப்பிரம்மணி
யனைக் கட்டியணைந்துக்கொண்டு உச்சிமுகர்ந்து (5) “அடா! சுப்பிரம்
மணியா! நீ நமது கட்டளையின்படி தேவர்களுக்குப் பகைஞர்களான
துராத்துமாவாகிய சூரபத்துமன், சிங்கமுகன், தாரகன்ஆகிய இவ்வசுரர்
களைப் புத்திர, மித்திர, சம்பந்தி, பந்துவர்க்கங்கள் முதலிய சகலாசுரர்
களுடனு மிப்போதே சமுகரித்துவிடு; (6½) எல்லாவிடத்துமுனக்கு
வெற்றியுண்டாகக்கடவது: ஓரிடத்தும் அபஜயம் நேரிடாது”. (7) எ
ன ஸ்ரீ உமாகாந்தன் தனது இக்குமாரமூர்த்திக் கரிக்கையளித்துத் தன
து பதினொரு ருத்திராஸ்திரங்களை யமைத்தும், (8) சருவசத்துருக்களை
யும் கொல்விக்கலுற்ற வோர் வேலாயுதத்தையும் ஆகிய பனிரண்டு சூரி
யர்களினொளியைப் பெற்ற பனிரண்டு ஆயுதங்களையும் ஸ்ரீ தேவேசனி
வருக்கு மன்ப்பூர்த்தியாய்க் கொடுத்தருளினர். (9) அவையோவென்
றால்:— எறிவல்லயம், துவஜாயுதம், பெரியகத்தி, சிரேஷ்டமான வஜ்
ராயுதம், அம்பு, அங்குசாயுதம், கண்டாயுதம், கமலாயுதம், கோதண்டம்,
ஈட்டி, பரச்வதாயுதம் (10) ஆகியபதினொரு ருத்திராஸ்திரங்களும், ஒரு
வேலாயுதமும் ஆகியவிப் பனிரண்டுமே. மேலும் ஸ்ரீ மகாதேவன் பிர
ஸன்ன மனசுடன் ஸ்ரீ கந்தபிரானுக்கு ஆயிரம் சூரியர்களுக் கொப்பான
தும், (11) சகல வாயுதங்களால் நிறைந்ததும், இலக்ஷம் குதிரைகள்
பூட்டியதுமான ரதத்தையும், என்றும் யாவராலும் பேதிக்கத்தகாததும்,
பலவித ரத்தினங்களிழைக்கப் பெற்றதுமான பொற்கவசத்தையும்,
(12) என்றும் குறைவுபடாத வம்புகளால் நிறைந்த விரண்டு அம்பறாத்
தூணிகளையும், சகல சத்துருக்களையும் தொம்சம் பண்ணலுற்ற, வோர்

மிகவும் பெரிதான தரவாரி (பட்டாக்கத்தி) யையு மீந்தருளினர். (13) மன்மதனைக்கொன்ற மகாதேவன், இவ்வித அஸ்திரசஸ்திரங்க ளுடன்கூடிய தம்மைந்தனைக் கட்டியணைத்து, இவரது செந்தாமரைத்தி ருமுகத்தை யடிக்கடி முத்தமிட்டு, (14) தேவருக்கெல்லாம் முதன்மை யும், சகலபுவனங்களுக் கதிபதியுமான ஸ்ரீ பரமசிவன் அனேக ஆசிர்வா தமளித்துவிட்டருளினர். ஸர்வலோகமஹேசுவரியும், ஸாக்ஷாத் ஸர்வப் பிரபஞ்சமாதாவுமானவள் வம்மையும் (15) சகலாஸ்திரங்களுடன்கூடி ய தனதுசெல்வனை யுச்சிமுகர்ந்து, சந்தோஷபுத்தியுடன் அனேகாசிர் வாதங்களால் வாழ்த்தி (16), "அப்பனே! தேவசத்துருக்களை வெற்றி கொள்" எனவிட்டனள். சேனுபதியான, ஜகங்களுக்கதிபதியாகிய வச் சுவாமியும் தேவகாரியத்தை முடிப்பதில் முயன்றவராகி (17) சிரத்தை யுடன் பெற்றோர்களுக்குப் பிரதக்ஷிணம், தோத்திரம், நமஸ்காரமிவை களைச்செய்து அஞ்சலிகொண்டு கிட்டத்தில் நின்றனர். (18) அப்போ து ஸ்ரீ ஸாம்பமூர்த்தியும் (ஒன்பதுரத்தின காளிகளின் வியர்வைத்திவி லைகளினின்றுண்டான) இலக்ஷம் கணநிபர்களையும், வீரபாகுமுத லிய நவவீரர்களையும், அஸ்திரசஸ்திரங்களின் ஸம்பத்துகளையுடைய இர ண்டாயிரம் சைனியங்களையும், (19) மகா தீரர்களான நூற்றெட்டு ப டைத்தலைவர்களையும் ஸ்ரீ தேவஸேநானியாகிய பிரபுவுக்கு பிரஸன்னமன சுடன் சேர்த்துவிட்டு, (20) வுஷ்ணு பிரம்மாதி தேவர்களை நோக்கித் திருவாக்கருளியதாவது:— "வாரீர் தேவர்களே! இச்செல்வனுங்களது சத்துருக்களையோர் கால்க்ஷணமாத்திரத்தில் வெற்றிகொள்வான்; (21) இவனது பராக்கிரமத்தைப் பாரீர்கள். பரப்பிரம்மத்தை யறிந்தவர்க ளான (அல்லது வேதங்களையறிந்த) முனிவர்கள், யோகிகள், சித்தர்கள், சாத்தியர்கள் இவர்களுட னஞ்சாமற் செல்லுவீர்கள்." (22) என ஸ்ரீ பரமேசுவரன் அம்பிகைசகிதமாய் வெகு சந்தோஷத்துடன் கட்டளையி ட்டு மறைந்தருளினர். பிறகு விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள், (23) ஸ்ரீ ஆறுமுகனை யனேக தோத்திரங்களாற் களிக்கச்செய்து தண் டனிட்டுச் சுகமாகப் பின்தொடர்ந்தார்கள். பிறகு அளவிடத்தகாத புத்தியுடையவும், அசுரர்களைக் கொல்வோரும், இலக்ஷ்மீபதியுமான ஸ்ரீ நாராயணன் வாயுதேவனையழைத்து ஸ்ரீ ஷண்முகதேவனது மனோ வேகமுடைய, மகாபெரிதான விரதத்தின் இலக்ஷம் குதிரைகளுக் கும் சாரதியாக்கினர். (24-25) அப்போது ஆகாயமெங்கும் தொனிகளால் நிறப்பலுற்ற தேவதுந்துபிகள் முழங்கப்பட்டது. மலர்மாரி பொழிய லுற்றது; மிகுதியான நெற்பொரிக ளிறைக்கப்பட்டன. (26) எல்லா முனிவர்களும் சடைகளோடு தண்டபாணிகளாகக் கூத்தாடினூர்கள்.

கின்னரர்கள், கந்தர்வர்கள், கிம்புருடஸ்திரீகள் இவர்கள் பாடினார்கள். (27) வஸிஷ்டர் முதலிய பிரம்மருஷிகளும், நாரதர்முதலிய தேவருஷிகளும் ஸ்ரீ குமாரமூர்த்தி ஜயமடைவதற்கான ஆசீர்வாதமந்திரங்களை யோதினார்கள். (28) சர்வலோக மாதுருக்களும், ருஷிபத்தினிகளும், முக்கியர்களான நாககன்னிகளும், சுபமான மனதுடன் கானம்செய்தார்கள். (29) சர்வகுண சீலர்களாகிய பிரம்மவிஷ்ணுக்களும், தேவலோகத்தச்சனான விசுவகருமனும், வீரபாகுமுதலிய நவவீரர்களுக்கும், சேனைகளுக்கும் (30) பற்பலவித வாகிருதிகொண்ட ரதங்களையும், அனேகவிதமான், ரதத்தில்பூட்டும் குதிரைமுதலிய வினங்களையும், திவியமான அனேக வாயுதங்களையும், கவசங்களையு மமைத்தனர்கள். (31) சில ரதங்கள் சிங்கங்கள் பூட்டியதும், சிலது யானைகள் பூட்டியதும், புலிகள் பூட்டியதும், சிலது யாளிகள் பூட்டியதும், (32) பூதங்கள் பூட்டியதும், அநேகவிதமாய் வேதாளகணங்கள் பூட்டியதும், சிலது ஸர்ப்பங்கள் பூட்டியதும், மற்றவை சிறந்த குதிரைகள் கட்டியதும், (33) எல்லாம் சகல வித வாயுதங்களாலும் நிறப்பப்பட்டதும், கச்சைகள் கட்டப்பட்டதுமாக பல ரதங்கள் நிர்மாணம் செய்யப்பட்டன. பிறகெல்லோர்களும் மிக சன்னத்தர்களாகிப் பத்துத் திசைகளையு மொலிப்பித்துக்கொண்டு (34) முந்திக் கிழக்குமுகமாகப் புறப்பட்டுப் பிறகு தென்புறமாய்த் திரும்பியதன்பின் பெல்லாத் திசைகளாலும் சென்றார்கள். கணங்கள், அவ்வாறு செல்வதாலும், ரதகஜ துரக பதாதிகள் செல்வதனாலு முண்டாகிய புழுதிகளால் திசையெங்கும் மறைக்கலுற்றவர்களாகவும்,(35½) கடலோசையை யதிகரித்த மிகுந்த சைனிய கோஷங்களைக் கொண்டவர்களாகவும், (36) கந்தமாதனகிரியென்ற குலபருவதத்துக்குச் சீக்கிரத்தில் வந்தனர்கள். ஸ்ரீகந்தபிரானுடைய பராக்கிரமமானது எல்லாவற்றிற்கும் முந்திச்சென்றது. அதன் பிறகே,(37) சைனியங்களால்கோஷிக்கலுற்ற துந்துபி, நிஸ்ஸாணம், திமிலம், ஆனகம், கோமுகம், காகளம், கொம்பு ஆகிய விவ்வாத்தியங்களின் கடலுக்கு மேற்கொண்ட ஸன்னகவோசைகள் தொடர்ந்தன.(38) அதற்கும் பிந்தி, இரதங்களின் வண்டிகளாலும், யானைகளின் பாதங்களாலும், குதிரைகளின் குளம்புகளாலும், காலாட்களினடிகளாலுமுண்டாகிய, சூரியமண்டலத்தைமறைக்கலுற்ற புழுதித்திரள்கள்சென்றன.(39) அதன் பிறகு காலாட்கள், வேகமுள்ள குதிரைகள், மதஜலம் பெருகலுற்ற யானைகள் இவை முறையே சென்றன. பிறகு அநேகவிதமாய் இரத்தினங்களிழைக்கப்பெற்ற சுவர்ணாபரணங்களைப் பூண்ட பிரஸித்திகொண்ட தேர் வீரர்கள் தொடர்ந்தார்கள்.(40) பின்பு, உக்கிர பராக்கிரமங்களை யுடைய நூற்றெட்டு சேனாதிபதிகள் செல்லலுற்று

ர்கள். பிறகு, வெகு சூரர்களும், பலிஷ்டர்களுமான விலக்ஷம் கணதி பர்கள், (41) தேவசேனைகளுக்குப் பதியும், ஜகதீசனுமாகிய ஸ்ரீ சுப்பிரம்மணியப் பிரபுவைச் சூழ்ந்து நின்று சென்றார்கள். அதன் பிறகு மகாரதர்களாகிய வீரபாகு முதலான நவவீரர்கள் பின்தொடர்ந்து சென்றார்கள். (42) அவர்களுக்கும் பின்னால் விஷ்ணு முதலிய தேவர்களும், முனிகணங்களும், பின்பு தேவர்கள் முனீந்திரர்கள் இவர்களுடைய பெண்டீர்களும் தொடர்ந்து சென்றார்கள். (43) எல்லோர்களு மிவ்வாறாகச் சென்று ஓர் க்ஷணத்தினுள் ஏமகூடமென்ற குலாசலத்தை யடைந்தார்கள். அப்போது பிரம்ம விஷ்ணு திக்பாலர்கள் முதலிய தேவர்கள் கிரௌஞ்சமென்ற மலையையும், அங்கு தாரகாசுரனால் பாலனம் செய்யப்பட்ட மாயாபுரியென்ற பட்டணத்தையும் கண்டு பயந்து மன நடுக்கமுற்று (45) ஜகதீசனான ஸ்ரீசுப்பிரம்மணியனைப் பயத்தினால் கிதி கலங்கியவர்களாகச் சூழ்ந்து கொண்டார்கள். பிறகு ஸ்ரீ பிரபுவுக்கு மிக பிரியமுள்ளவரான, விஞ்ஞானம் செய்வதிற் சிறந்த ஸ்ரீ நாரதபகவான் (46) ஸ்ரீ பிரபு முன்பாக வந்தனித்தஞ்சலிகொண்டு விண்ணப்பம் செய்தனர். ($46\frac{1}{2}$)

முப்பத் தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௮—வது அத்தியாயத்தினர்த்தம்.

நாரதர் சொல்லுகின்றார்:—"ஓ! பார்வதீ நந்தநா! ஸ்வாமீ! வணங்கினோரின் துக்கங்களைத் தொலைப்பிப்போரே! ஓ! ஸ்கந்தா! ஸேநாபதே! எங்கள்மீதும் தேவர்கள்மீதும் பிரீதியை விருத்திசெய்யும் பிரபுவே! (1) இக்கிரௌஞ்சமலையானது முந்தி மிகக்கொடிய வோர் பெரிய அசுரனாக விருந்தது. ஸ்ரீ அகஸ்திய பகவானுடைய சாபத்தினால் மலைத்தன்மை யடைந்திருக்கின்றது. (2) ஓ! தேவாதிபா! மகா பெரிய வுருவங்கொண்ட சருவலோகங்களுக்கும் பயத்தை யுண்டுபண்ணுகிற இவ்விதமான துராத்துமாவும், தேவசத்துருவுமாகிய வம்மலையைக் கொல்லுதல்வேண்டும். (3) இம்மலைக்குச் சமீபத்திற் காண்கின்ற, மிகவும் பீதியளிக்கலுற்ற விந்நகரத்தில், துர்ப்புத்திகொண்ட சூரபத்துமாசுரனுக்குத் தம்பியாகிய, மகா கொரேமுடையோனான (4) தாரகனென்ற, யானைமுகத்தையுடைய வோர் பெரிய வசுரன் வசிக்கின்றான்.

அவன் அனேக ரதகஜ துரக பதாதிக ளடங்கிய பெருஞ்சேனைகளுக் கதிபன். (5) மகா கண்டகன், மகாதீரன், தயாலேசமற்றவன். தேவ ர்களுக்கும், பிராம்மணர்களுக்கு மிராப்பகலாய்த் துன்பமளிப்பதைத் தொழிலாக வுடையவன். (6) ஓ! மகா ஸேனாதிபரான பிரபுவே! இயாகங்களுக்கும், கோவில்கட்டுதல் குளம்வெட்டுதல் முதலிய தருமங் களுக்கும்கெடுத்துசெய்வோனும், மிகக்கொடியோனும், துராத்துமாக்களு டைய சேர்க்கையையே கொண்டவனும், ஒருவராலும் நெருங்க முடியா தவனுமான வவ்வசுரனைச் சைனியங்களுடன் சமுகரிக்கவேண்டும்". (7) என்றிவ்வாறாகத் தேவர்களாலும், நாரதராலும் பிரார்த்திக்கப்பட்டதன் பேரில் தேவரக்ஷகரும் தயவுக்கிருப்பிடமுமான பிரபுவானவர்தாரகாசுர னைக் கொன்றுவிடுவதாகத் திருவுளத்திற் கொண்டு (8) மகாவீரனும், சத்துருக்களைத் தொம்ஸம் செய்வோனுமாகிய வீரபாகுவை யனுப்பின ர். (8½) ஸ்ரீ ஹரமைந்தனானவர், வீரபாகுவுடன் செல்லும்படி தம் ப டைகளிற்பாதியையும், படைத்தலைவர்களிற்பாதியான வைம்பத்தினான் கு பெயர்களையும் (9½) மகா பராக்கிரமசாலிகளான இலக்ஷத்தெட்டு கணாதிபர்களையும் போகும்படி கட்டளையிட்டனர். (10) ஸ்ரீ பரமேசுவ ர புத்திரனாகிய கந்தன் மகா பிரதாபமுடைய வீரபாகுவை நோக்கிக்க ட்டளையிட்டதாவது:—"வாராய்! வீரபாகுவே! மகா பெரியதாகியவிச் சைனியங்களுடன் சென்று மாயாபுரியையும், (11) துஷ்டனாகிய கி ரௌஞ்சகிரியையும் சீக்கிரத்தில் முற்றுகைபோட்டு, சூரபத்துமனுக்கு த் தம்பியும், துராத்துமாவும், பிறரால் வெல்ல முடியாத சத்துருவுமா ன தாரகனை, (12) அவனது சைனியங்களுடனும், மந்திரிகளுடனும் போரில் முறியடித்துக் கொன்றுவிடு. கேளீர் சைனியங்களே! நம க்கு சாவற்ற விஷ்ணு முதலிய தேவர்கள் சைனியங்களாக இருந்து (13) நாமுமிருக்கையில் இவ்வுங்களுக்குப் பீதியாது? மேலும் கேளா ய்! சத்துருக்களுடைய பட்டணத்தை ஜயிக்கலுற்ற வீரபாகுவே! நா மோவென்றால், யாவராலாவது நமக்கு அபராதம் செய்யப்படிலதைப் பொறுப்போம்; அதில் நமக்கு யாதொரு பாரமுமில்லை. (14½) ஆனால் நமதிரண்டு பாதாரவிந்தங்களைச் சரணமாக வடைந்த வடியார்களுக்கு யாவராயினும் கேடுகொடிலதைச் சகிக்கவே மாட்டோம். (15) உலகி னில், அது தேவரானாலும், அசுரரானாலுமவர்கள் எப்போதும் நம்மால் தண்டிக்கப்படத்தக்கவர்களே. ஓ! மகா பராக்கிரமசாலியான வீரபா குவே! நமது கட்டளையின்படி சீக்கிரத்தில் சகல சேனாபரிவாரங்களுட னும் நீ முந்திச் சென்று அக் கிரௌஞ்சகிரியோடுகூட மாயாபுரியையு

ம் முற்றுகைபோட்டு (16½) கர்விஷ்டர்களான வவ்வசுரர்களுடன் கொஞ்சமேனும் தயங்காமற் போர்தொடு. (17) நாமும் சைனியங்களோடு தொடரையாகப் பின்றொடர்ந்து வருகின்றோம்." என்றிவ்வாறுக அசுரர்களை யழிப்போரும் தேவர்களுக் கதிபருமாகிய முருகன், மகாவீரனுகிய வீரபாகுவைக் கட்டளையிட்டனுப்பிவிட்டுத் தாம் மெல்லச் சென்றருளினர். (18½) அப்போதே தேவர்களது மனதினின்று பயம் வெளிச்சென்று (19) பெருங்களிப்புண்டாகி யம்மனதைக் கவர்ந்தது. அதன்பிறகு அசுரர்களுடைய பட்டணம்தோறும் (20) சர்வுகுறிக்குத் தகுதியான மகா கோரமாகிய வபசகுனங்களப்போதடிக்கடி யுண்டாயிற்று:—மேகங்கள் வெகு நிபிடாயமானமாகி கழுதை கத்துவதுபோல் கர்ஜித்து இரத்தமாரிபொழிந்தன. (21) அசுரேந்திரர்களுடைய வீட்டி னுப்பரிகைகளினின்று சிகரங்களிடிந்து விழுந்தன. (பூமியைச் சுமக்கின்ற) அநந்தனென்ற பாம்பினது படமாகிய நாட்டியசாலைமீது பூமியானது ஸந்தோஷத்தினால் நர்த்தனம் செய்தது. (பூகம்பமுண்டாயிற்று.) (22) உலகினிலொருவருக்கும் தெரியாமல் சேரிகள், கிராமங்கள், பட்டணங்களிவைகளில் திடீரென்று, காற்றோடுகூடிய மிகுந்த வக்கினிபாதைக ளுண்டாயின. (23) அப்பெரு மக்கினிபாதையால் திசையெல்லாம் சீக்கிரத்திற் பாழாயிற்று. மேகங்கள் காற்றினால் திரட்டப்பட்டு மண்மாரி பொழியலுற்றது. (24) வானத்தில் மேகமே தோன்றுதிருக்கையில் தங்கு தடையின்றி கோரமானமேககர்ஜனங்கள் மேலுக்குமேல் விருத்தியாயிற்று.பெரும் பீதியை யெடுத் துரைக்கலுற்ற, மிக ஜாஜ்வலியமானமாகிய கொள்ளிக்கட்டைகள் விழலுற்றன. (25) எங்கும் நக்ஷத்திரங்கள் விழுந்தன. வானத்தில் மகா பெரிதான வால் நக்ஷத்திரம் தோன்றலாயிற்று. (26) நீர்க்கால்களெல்லாம் கலக்கமுற்றன. எல்லாக் கடல்களும் மிகுந்த நுரைகளால் நிரம்பலுற்றன. அமங்களமானநரிகள் சூரியனைநோக்கிக் கோரமாக வூளையிட்டன. (27) அசுரர்களுடைய தலைகளில் ஓணான்கள்விழுந்தன. அப்போது அசுரர்களுடைய வீடுதோறு மாமைகள் காணப்பட்டன. கண்ணாடிகளிலவரவர்களுடைய பிம்பங்கள் தலையன்றி முண்டமாகக் காணப்பட்டன. அவரவர்களுடைய தேர்வீரர்கள் திடீரென்று தலைகீழாக் விழலுற்றார்கள். (29) அவர்களுடைய குதிரைகளெல்லா மெப்போதும் கண்ணீரைத்தாரைதாரையாய் விட்டன. அசுரராஜர்களுடைய விரதங்களில்கழுகுகளும், பருந்துகளுமுட்கார்ந்தன. (30)அவர்களுடைய யானைகள்காரணமின்றிச் சீக்கிரமாகத் தலை தொங்கவிடப்பெற்றன. அசுரர்கள் சுவ

ர்ணங்களைக் கட்டைகள்போல் காணலானார்கள். (31) அவ்வசுரர்கள் ஜலங்களி லிந்திரதனுவை (வானவில்) க்கண்டார்கள். பிறகு ஸ்ரீ சுப்பிரம்மணிய சுவாமியினுடைய சேனைகள் சிங்கநாதம் செய்வதனால் திசைமுகங்களைச் செவிடாக்கியவர்களாகித் தாரகாசுரனால் பாலனம் செய்யப்பட்டதும், பெரிய சுற்றுமதில்களுடையதும், மாயையென்ற அவனது தாயின் பெயர் முத்திரையைவகித்ததும், அவனைத்தாய்போல் காப்பாற்றியதுமான மாயாபுரியை யோர் க்ஷணத்துக்குள் துரிதமாய்ச் சூழ்ந்து கொண்டன. (33½) "சூரபத்துமாசுரனுக்குத் தம்பியான தாரகாசுரனிவ்வாறாகிய வபசகுனங்களைக்கண்டும் சகலவிருத்தாந்தங்களையும் கேள்வியுற்றுத் தலைவிதியாலேவப்பட்டவனாகிப் போர் செய்ய விருப்பமுற்றுச் சிறந்த குதிரைகள் கட்டப்பட்டதும், சகல அஸ்திரசஸ்திரங்களால் நிரப்பப்பட்டதுமான விரதத்தின்மீதேறி சன்னத்தமாயிருந்த வனேக ரதகஜ துரக பதாதி சைனியங்களோடு புறப்பட்டனன். (34-36) அப்போ தப்பட்டணமெங்கும் 'உயுத்தப்பிரயாணத்தைத் தெரிவிக்கின்ற நிஸ்ஸாண வாத்தியத்தின் த்வனிகள் ஓய்வின்றி கேட்கப்பட்டன. (37) அவர்களிலுயுத்தத்துக்குப்போக விரும்பிய சூரர்களுக்குள் "இராஜாவானவன் தேவச்சிரேஷ்டர்களுடன் போர்தொடுப்பதற்காகவெளிப்புரப்பட்டனன் வெளிப்புரப்பட்டன" னென்றுபெரிய வார்த்தைமேலுக்குமேலுண்டாயிற்று. (38) அப்போது சேனைகள் பட்டணத்தினின்று நான்குபக்கங்களிலும் கோட்டைவாசற்படிகள் வழியாய் வெளிப்பட்டு விளக்கு வெட்டுப்பூச்சிகள் தீயில் விழுவதுபோல் தேவசேனைமீது விழுந்தது. (39) மகாத்துமாவாகிய வீரபாகுவினுடைய வச்சேனையும் துராத்துமாவாகிய தாரகனுடைய வச்சேனைமீது நதிகள் சமுத்திரத்தில் விழுவதுபோ லெதிர்த்து விழுந்தன. (40) அப்போது அசுரனுடைய சேனை, வீரபாகுவினுடைய சேனை இவ்விரண்டும், கீழ் சமுத்திரமும் மேல் சமுத்திரமும் பிரளயகாலத்தில் கரையற்றுச் சேருவதுபோலோர் க்ஷணத்துக்குள் ளொன்றுக்கொன்று கலந்தது. (41) இவ்விதமாக, தேவர்களது துக்கத்தை நிவர்த்திக்கவுற்ற ஸ்ரீஹரமைந்தனுடைய சேனையானது, எப்போதும் தேவசத்துருக்களாகிய வசுரர்களால் தவிக்கலுற்றஜகங்களை யிரக்ஷிப்பதற்காக அது

யிருந்த வல்லமையுள்ளதாயினும் வீரபாகுவால் நடத்தப்பட்டு எதிர்த்துப் போர் கலந்தது.(42)

முப்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௩௯—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு இருதிறத்தாருக்கும் சமமாக, மிகவும் பெரிய யுத்தம் நடந்தது. காலாள் காலாளுடனும், குதிரை வீரன் குதிரை வீரனுடனும், (1) யானைவீரன் யானைவீரனுடனும், வலிமையுடைய தேர்வீரன் தேர் வீரனுடனும், இவ்விதமாக மிகவும் பயங்கரமான பெரிய போரானது இரு திறத்தாருக்கும் சமமாக நடந்தது. (2) அப்போது அசுர கணங்கள் அனேக அஸ்திர சஸ்திரங்கள், ஈட்டி, குண்டாந்தடி, எறிவல்லயம் இவைகளையும் மகா பெரிதாகிய மலைகளையும், விருக்ஷங்களையும் வருஷித்தார்கள். (3) இதே பிரகாரம் இருகக்ஷிக்காரர்களும் உயிருக்குப்பின் வாங்காமல் ஜயத்தை எதிர்பார்த்து ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டார்கள். பிறகு வெகு கோபிஷ்டர்களாகிய கணதிபர்களா லசுரர்களும், அவர்களால் கணதிபர்களும் ஹதமாக்கப்பட்டார்கள். (4) இவ்விதமாகச் சண்டை செய்த இரு கக்ஷிகளில் ஒருகக்ஷியும் ஜயம் பெறவாவது தோல்வி யடையவாவது இல்லை. (5) தேர்க்கால் விளும்புகளால் பெயர்க்கப்பட்டும், குதிரைக் குளம்புகளால் நொறுக்கப்பட்டும், பதாதிகளின் அடிகளாற் சிதறப்பட்டும், யானைக்காதுகளால் விசிரித் தூற்றிவிடப்பட்டும், (6) பூமியினின்றுபுழுதிகளுயாக்கிளம்பிதிசைக்ளில் வியாபித்துசூரியனைமறைத்து விட்டது. இவ்விதமாகமுற்று மந்தகாரத்தினல் வியாபிக்கப்பட்ட வுலகில் படைகள் பராக்கிரமத்துடன் யுத்த கோலாகலம் நடத்தி வருகையில் (7) விற்களது நாணோசையால்தான் சைனியங்களில் ஒருவருக்கொருவர் அறிந்துகொண்டார்கள். விபாடம், பல்லம் இவ்வாயுதங்களா லறுக்கப்பட்ட மகா பலசாலிகளான சூரர்களுடைய (8) தலைகளினின்று வெளிப்பட்டோடிய இரத்தப் பிரவாகத்தினல், புழுதிகளால் துர்த்தினமாக (மேகங்களால் சூரிய வொளி மறைக்கப்பட்ட தினம்) இருந்தது சமனமாயிற்று.மகா பராக்கிரமசாலிகளான பூதகணங்களும், அவர்களுடைய தலைவர்களும் போர் முன்னர் எவ்வளவும் பின்வாங்காமல், மகா கோரங்களும், பிரளயகால சண்டமாருதம் போன்றவையு

மானஅஸ்திரசஸ்திரங்களாலசுரர்களை துவம்ஸஞ்செய்தார்கள்.(9-10)மகா பூதகணங்களால் தனதுசைனியமிவ்விதமா யடியுண்டுச் சிதறிதிக்குவிதிக்காக வோடலுற்றதைக்கண்டு தாரகன் கொஞ்சமேனும்பொறுக்கமாட்டாதவனாய்வெகு கோபங்கொண்டுவெகுபயங்கரனாதத்தினின்றுகுதித்து ($11\frac{1}{2}$) அநேக பாரம்இரும்புகளா லமைக்கப்பட்டதும், முனைகளிற் பொற்பட்டங்கள் கட்டலுற்றதும், மிகுதியான மலர்களால் பூஜிக்கப்பட்டிருப்பதுமான வோர்பெரிய கதையை ($12\frac{1}{2}$) எடுத்துச் சுழட்டி நிமிஷந்தோறு மதைக்கைவிரல் நுணிப்பற்றுகவே சுற்றிப்(13) பற்களை கடகடவென்று கடித்தும், பிரளயகால மேகம்போல் கர்ஜனை செய்தும், கீழுதடை மடித்துக் கடித்துக்கொள்வதனல் பார்ப்பதற்குப் பயங்கரமுற்றவனும், புருவங்களை நெரிப்பதனல் விகாரமுற்ற முகத்தையுடையவனும், (14) மதம்பிடித்த யானை போன்றவனும், மகா பயங்கரமுள்ளவனுமாக ஆயிரம் பூதகணங்களையும்,கணதிபர்களையுமக் கதையாலடித்தும், (15) பெரிய யானைபோன்ற பராக்கிரமமுடையவனுகக் கால்களாலும், கைகளாலும்சைனியங்களை வீசியடித்துத் தொகைத்தான். சைனியங்களிவ்வாறடிபடுவதை இலக்ஷம் பூதகணங்களும் (16) நோக்கியப்போது துரிதமாக எதிர்த்து விழுந்து கிருஷ்ண சர்ப்பங்களுக்கு நிகரான மிகுதியான பாணங்களால் பிரளயகால மேகம்போல் தாரகாசுரன் மீது சரமாரி பொழிந்தார்கள். (17) அக்கஜமுகாசுரனும் தனது கையிற்பற்றிய கதையினலப் பாணங்களைச்சடிதியில் முறித்தெறிந்துமிகவும் கோபமுமுண்டவனாக மகா பளுவான வக்கதையினல் துரிதமாகப் பூமியிலோரடியடித்தனன். (18) அக்கதையடியால் பூமி முழுதும் பாளமாக வெடித்து இரண்டு துண்டாயிற்று. அப்போது அவ்வசுரனற் செய்யப்பட்ட சிங்கநாதத்தால் ஜகம் முழுமையும் செவிடாயிற்று. (19) அக்கணங்க ளெல்லோர்களும் மிக கோபங்கொண்டு மறுபடியு மவ்வசுரனைச்சுற்றி யெல்லாத் திக்குகளிலும் வளைந்துகொண்டு அவ்வசுரன்பேரிலனேக திவ்விய பாணங்களைப் பிரளயகால மேகங்கள் உயர்ந்த பருவதத்தில் மாரி பொழிவதுபோல் தொடுத்து வருஷித்தார்கள். ($20\frac{1}{2}$) எதிரிகள் திகிலடையலுற்ற பராக்கிரமமுடையவனும், மகா புஜபலமுள்ளவனுமானதாரகனும் கதையின லப்பாணங்களை யெல்லாம் வீணக்கி தேர்க்கூட்டங்களை யெல்லாம் அவைகளின் குதிரைகளோடு சிதற்சிதறகளாகப் பெயர்த்து நொறிக்கிவிட்டான். ($21\frac{1}{2}$) மேலுமவன் அக்கணங்களையும் வெகு கோபத்தோடு தண்டாயுதம் போன்ற தனது துதிக்கையினல்வாரிச் சமுத்திரமத்தியிலெறிந்துவிட்டான்.(22) அவ்வெல்லோர்களு மச்சமுத்திரத்தினின்று கிளம்பி யங்கங்கே யொளிந்துகொண்டூ

ர்கள். இச்சமயத்தில் அளவிடப்படாத பராக்கிரமத்தையுடைய நவவீரர்களிலொருவனான சாக்ஷாத் கேஸரி (சிங்கம்) போன்ற (23) வீரகேஸரியென்றவனவ் வியானைமுகனாகிய தாரகனையெதிர்த்து எண்ணற்றபாணங்களால், மாரிகாலத்தில் மேகங்கள் மலைமீதுபொழிவதுபோ லவன்மீது வருஷித்தான். (24)அப்போதவ் விருவர்களுக்கும் விருத்திராசுரனுக்குமிந்திரனுக்கும் நேர்ந்தவுயுத்தம்போல்நடந்தது. (24½) அப்போதுதூளிகளால் படைவீரர்களைமறைக்கலுற்ற அம்மகாயுத்தத்திலவர்கள் சண்டைசெய்ததானது மன்மதனுக்கும், சம்பராசுரனுக்கும் நேர்ந்தவுயுத்தம்போலிருந்தது. (25½) அப்போதுவீரகேஸரி மிககோபமூண்டு அசுரனைப்பாணங்களால் நிரப்பிமறைத்துவிட்டான். (26) பிறகுமகாதீரனும், கைலாகவமுற்றவனும், மிகபிரதாபவானுமாகிய தாரகனும் "அடா! எங்கேதப்பினாய்! நில்நில்" என்றதட்டி க்ஷணந்தோறும் வில்லையசைத்துக் குணத்தொனிசெய்த பேரொலியால்திசைகளெங்கும் செவிடாக்கி (27½) வீரகேஸரியாகிய மேகத்தால்பொழியப்பட்ட சரமாரியையோர் நொடியில்நீக்கிவிட்டு, (28) பொற்பூண்கள்கட்டி, சாணைபிடித்தும், கிருஷ்ணஸர்ப்பம்போன்ற முகமுடையதாக ஜாஜ்வலியமானவைகளும், அவனதுபெயர் முத்திரையைப்பெற்றவைகளுமானவனேகபாணங்களைப்பிரயோகித்து, (29) அடிக்கடியனேக விதமாகச்சிங்கநாதஞ்செய்தான். பிறகு வீரகேஸரியும் கொஞ்சமேனுமஞ்சாம லப்பாணங்களையெல்லாம் பாதிமார்க்கத்திலே பொடிப்பொடியாகத் துண்டித்து (30½) பிறகு மகாகோபங்கொண்டு கண்கள்சிவக்கலுற்று நகைத்து (31) அத்தாரகனுடைய கிரீடத்தைப் பத்துபாணங்களாலுடைத் துவிட்டு, கையோடு கைகொட்டிப் பலதடவைசிரித்தனன். (32) அப்போதுஆகாயத்தினின்று தேவர்கள் மலர்மாரிபொழிந்தார்கள். அம்மலர்களில் மொய்த்தவண்டுகளுடைய ஜங்காரவோசைகளால் திசையெங்கு மோசைகொள்ளலாயிற்று. (33) மிகவும் பலகர்வங்கொண்ட தாரகனும் மிகுந்தகோபத்தினால் கண்கள்சிவக்கலுற்று வீரகேஸரியதுமார்பினில் கதையினால் கோபத்தோடு வேகமாயடித்துவிட்டு(34) இருகைகளையு முயரத்தூக்கிக்கொண்டு கலகலவென்று நகைத்தனன். அவ்வடியால்வீரனும் மிகநொந்து மூர்ச்சையடைந்தனன். (35) அப்போதுஸகலஅசுரர்களையும்கொல்லலுற்ற, அளவிடப்படாத மகிமைகொண்ட வீரபாகு தூராத்துமாவாகிய தாரகனுடைய அப்பராக்கிரமத்தைநோக்கி வீரர்களால் சூழப்பட்டவராகத் தேர்மீதேறியத் தாரகனையெதிர்த்து, (36½) போர்க்களத்திலசுரர்களையெல்லாம், பலவாறுயதட்டி (37) "அடாதுராத்துமாவாகியதுஷ்டா! எங்கேயோடுகிறாய்! நில்நில்! நம்கண்ணிற்பட்டு மிந்நோம் பிழை

த்தி நக்கின்றுயல்லவா! (38) இனிநம்முன்னர் சண்டையில்நேர்ந்தபிற
கு வெங்ஙனமுயிர் தப்பித்திரும்பிப்போவாய்?" என்றுரைத்த வீரபாகு
முன்னர்பார்மீது மகாதீரனான பெரியஅசுரனானவ னதிசீக்கிரத்தில், தே
வேந்திரன் முன்னர்மலையெதிர்த்து நின்றாற்போல் சண்டைக்கெதிர்த்து
நின்றான். (39½) அப்போதவர்கள் செய்துகொண்ட வயுத்தமானது
மதுவென்றவசுரனும்,ஸ்ரீவிஷ்ணுவும்செய்தவயுத்தம்போலிருந்தது (40)
அப்போது அவ்வயுத்தத்தைப்பார்க்க விருப்பமுற்ற, சிரேஷ்டர்களான
யக்ஷர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், அப்ஸரஸ்திரீகள் இவரெல்லோர்க
ளாலுமாகாயத்தில் திக்குவிதிக்குகளெல்லா மெங்கும் மறைக்கப்படலா
யின. (41) மகா பராக்கிரமசாலியான தாரகனும் தேர்மீதேறி வில்லெ
டுத்து நாணேற்றிட்டு குணத்தொனி செய்வதா லுலகெல்லா மொலியால்
நிரப்பி (42) போர்களத்தில் வீரபாகுமீது, புதனும் சுக்கிரனும் சேரு
ம்போது மாரிகாலத்தில் மேகம் பொழிவதுபோல் சரமாரி பொழிந்து
(43) பெரிய மலைமீது மழை சொரிந்து மறைப்பதுபோல் பாணங்க
ளால் மறைத்துவிட்டான். பிறகு பாணங்களெல்லா மொன்றோடொ
ன்று பின்னலுற்று ஆகாயத்தில் கூடாகப் பறவி யெங்கு மிருள் சூழ்ந்
தபோது (44) அளவிலா மகிமைகொண்டவும், புலன்களி னடக்கமுள்
ளவருமான வீரபாகுவும் நகைத்து ஸ்ரீ பரமேசுவரன் மகாமேரு பருவத
த்தை வில்லாகவெடுத்ததுபோல் வில்லெடுத்து (45) நகங்களின் நு
ணியால் நாணை மீட்டி மகா மனோதைரியத்தோடு நிதானித்து அச்சரக்
கூடுகளை யெல்லாம் பதினான்கு பாணங்களால் மிகுந்த கைலாகவத்தினா
ற் சின்னாபின்னமாக அறுத்துவிட்டது மிக வாச்சரியமுள்ளதாயிற்று.
(46½) அச்சரமாரி நீக்கப்பட்டு, சூரியனை மறைத்துக்கொண்டிருந்தது
துறக்கப்பட்டபோது (47) சகல வுலகங்களும், தேவர்களது மனதும்
தெளிந்து பிரகாசிக்கலாயிற்று. பிறகு தாரகனும் வீரபாகுவினுடைய
வவ்வாச்சரிய கிருத்தியத்தைக் கண்டு (48) மிகுந்த கோபமுற்றவனா
கி தினந்தோறும் மலர்களா லர்ச்சிக்கப்பட்டுவந்ததும், மணிகளாலும்,
சாமரங்களாலு மலங்கரிக்கப்பட்டதும், மிக பயங்கரமுமான முச்சூலத்
தை (49) யெடுத்து அதை யோர் கையால் விளையாட்டாகவே கரகர
வென்று சுழட்டினான். பிறகவ்வசுரவரசன் கையிற்பற்றிய ஜாஜ்வலிய
மானமாகிய வம்முச் சூலத்தினால் (50) மிகுந்த ஜ்வாலாமாலையோடு
கூடிய பிரளயகாலாக்கினியைப் போல் விளங்கலுற்றனன். அம்மகா ப
லசாலியான வசுரனச்சூலத்தை வீரபாகுமீது விளையாட்டாக வெறிந்த
னன். (51) அப்போது தடுக்கமுடியாததும், மகா பயங்கரமானதும்

ர்கள். இச்சமயத்தில் அளவிடப்படாத பராக்கிரமத்தையுடைய நவவீ ரர்களி லொருவனான, சாக்ஷாத் கேஸரி (சிங்கம்) போன்ற(23) வீரகே ஸரியென்றவனவ் வியானைமுகனாகிய தாரகனை யெதிர்த்து எண்ணற்ற பாணங்களால், மாரிகாலத்தில் மேகங்கள் மலைமீது பொழிவதுபோ லவன்மீது வருஷித்தான். (24) அப்போ தவ்விருவர்களுக்கும், விருத்தி ராசுரனுக்கு மிந்திரனுக்கும் நேர்ந்த யுயுத்தம்போல நடந்தது. (24½) அப்போது தூளிகளால் படைவீரர்களை மறைக்கலுற்ற அம்மகா யுத்தத்தி லவர்கள் சண்டை செய்ததானது மன்மதனுக்கும், சம்பராசுரனுக்கும் நேர்ந்த யுயுத்தம்போலிருந்தது. (25½) அப்போது வீரகேசரி மிக கோபமூண்டு அசுரனைப் பாணங்களால் நிரப்பி மறைத்துவிட்டான். (26) பிறகு மகா தீரனும், கைலாகவமுற்றவனும், மிக பிரதாபவானுமாகிய தாரகனும் "அடா! எங்கே தப்பினாய்! நில் நில்" என்றதட்டி க்ஷணந்தோறும் வில்லை யசைத்துக் குணத்தொனி செய்த பேரொலியால் திசைகளெங்கும் செவிடாக்கி (27½) வீரகேசரியாகிய மேகத்தால் பொழியப்பட்ட சரமாரியை யோர் நொடியில் நீக்கிவிட்டு(28) பொற்பூண்கள் கட்டி, சாணைபிடித்து கிருஷ்ண சர்ப்பம் போன்ற முகமுடைய தாக ஜாஜ்வலியமானவைகளும், அவனது பெயர் முத்திரையைப் பெற்றவைகளுமான வனேக பாணங்களைப் பிரயோகித்து, (29) அடிக்கடி யனேக விதமாகச் சிங்கநாதஞ் செய்தான். பிறகு வீரகேஸரியும் கொஞ்சமேனு மஞ்சாம லச்சகல பாணங்களையும் (30) துரிதமாக நடுவழியிலே பொடிப்பொடியாகக் கண்டித்து பிறகும் மகா கோபாக்கிராந்தனாகி விழிகள் சிவக்கலுற்றவனாக நகைத்துக்கொண்டு (31) பத்து பாணங்களைப் பிரயோகித்துத் தாரகனுடைய கிரீடத்தை யுடைத்தெறிந்து, கையோடு கைகொட்டி யடிக்கடி ஹாஸியம் செய்தனன். (32) அப்போதவன்மீ தாகாசத்தினின்று தேவகணங்களால், மிகுந்த வண்டுகளுடைய ஜங்கார வோசைகளாற் திசையெங்கும் நிரப்பலுற்ற மலர் மாரி சொரியலுற்றது. (33) பலத்தினால் மகாகர்விஷ்டனும், கோபத்தினாற் கண்கள் சிவக்கலுற்றவனுமான தாரகனும் வீரகேசரியது மார்பினி லாக்கிரகத்தோடு மிக வேகமாகக் கதையினா லடித்துவிட்டு (34) பிறகு கைகளைத் தூக்கிக்கொண்டு கலகலவென்று கொக்கரித்தான். வீரகேசரியோ அவ்வடியால் மிக நொந்து மூர்ச்சைகொண்டான். (35) அப்போது, துராத்துமாவாகிய தாரகனது அப்பராக்கிரமத்தைக் கண்டு அளவிடத் தகாத மகிமைகொண்டவரும், வீரகணங்களால் சூழப்பட்டவரும், சகல அசுரர்களையும் சமுகரிக்கலுற்றவருமான வீரபாகுவானவர் இரதத்தில் வீற்றிருந்தவராகத் தாரகனை யெதிர்த்துக்கொண்டு போர்க்களத்

தின்கண்ணுள்ள வசுரர்களைப் பலவித வார்த்தைகளா லதட்டிக்கொண்டு (37) "அடா! துராத்துமாவாகிய கொடிய துஷ்டா! எங்கோடுகின்றாய், நில் நில்; நமது பார்வையிலகப்பட்டு இந்நேரம் நீ பிழைத்திருக்கின்றாயல்லவோ! (38) இப்போது நம்முன்னர் யுத்தத்தில் நேர்ந்த பிறகெங்கு பிழைத்துச் செல்லப்போகின்றாய்?" என்றிவ்வண்ண முரைத்திட்ட வீரபாகுவோடு பார்மீது மகா வீரனான மகாசுரன், (39) தேவேந்திரன்முன்னர் மலையெதிர்த்து நின்றதுபோல் துரிதத்தி லெதிர்த்து நின்றான். அப்போதவ்விருவர்களுக்கும், மது வென்ற அசுரனுக்கும் ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கும் நேர்ந்ததுபோற் சண்டையுண்டாயிற்று.(40) அப்போது அவ்வுயுந்தத்தைப் பார்க்க விருப்பமுற்ற சிரேஷ்டர்களான, யக்ஷர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், அப்ஸரஸ்திரீகள் இவரொல்லோர்களாலு மாகாயத்தில் திக்குவிதிக்குகளெல்லா மெங்கும் மறைக்கப்படலாயின. (41) மகா பராக்கிரமசாலியான தாரகனும் தேர்மீதேறி வில்லெடுத்து நாணேறிட்டு குணத்தொனி செய்வதாலுலகெல்லா மொலியால் நிரப்பி(42) போர்க்களத்தில் வீரபாகுமீது, புதனும் சுக்கிரனும் சேரும்போது மாரிகாலத்தில் மேகம் பொழிவதுபோல் சரமாரி பொழிந்து (43) பெரிய மலைமீது மழை சொரிந்து மறைப்பதுபோல் பாணங்களால் மறைத்துவிட்டான். பிறகு பாணங்களெல்லா மொன்றோடொன்று பின்னலுற்று ஆகாயத்தில் கூடாகப் பரவி யெங்கு மிருள் சூழ்ந்தபோது (44) அளவிலா மகிமைகொண்டவரும், புலன்களி னடக்கமுள்ளவருமான வீரபாகுவும் நகைத்து ஸ்ரீபரமேசுவரன் மகாமேரு பருவதத்தை வில்லாக வெடுத்ததுபோல் வில்லெடுத்து (45) நகங்களின் நுனியால் நாணை மீட்டி மகா மனோதைரியத்தோடு நிதானித்து அச்சரக்கூடுகளையெல்லாம் பதினான்கு பாணங்களால் மிகுந்த லைாகவத்தினாற் சின்னாபின்னமாக அறுத்துவிட்டது மிகஆச்சரியமுள்ளதாயிற்று.(46½) அச்சரமாரி நீக்கப்பட்டு சூரியனை மறைத்துக்கொண்டிருந்தது துறக்கப்பட்டபோது (47) சகல வுலகுகளும், தேவர்களது மனதும் தெளிந்து பிரகாசிக்கலாயிற்று. பிறகு தாரகனும் வீரபாகுவினுடைய அவ்வாச்சரிய கிருத்தியத்தைக் கண்டு (48) மிகுந்த கோபமுற்றவனாகி தினந்தோறும்மலர்களாலர்ச்சிக்கப்பட்டு வந்ததும், மணிகளாலும், சாமரங்களாலு மலங்கரிக்கப்பட்டதும், மிக பயங்கரமுமான முச்சூலத்தை (49) யெடுத்து அதை யோர் கையால் விளையாட்டாகவே காகரவென்று சுழற்றினான். பிறகவ்வசுரவரசன் கையிற்பற்றிய ஜாஜ்வலியமானமாகிய வம்முச்சூலத்தினால் (50) மிகுந்த ஜ்வாலாமாலையோடுகூடிய பிரளயகா

லாக்கினியைப்போல் விளங்கலுற்றனன். அம்மகா பலசாலியான வசுர னச்சூலத்தை வீரபாகுமீது விளையாட்டாக வெறிந்தனன். (51) அப் போது, தடுக்கமுடியாததும், மகாபயங்கரமானதும், தீக்ஷணியமான மு னைகளைக் கொண்டதுமாகிய வச்சூலம் வீரபாகுவது மார்பினில் விழுந்த தா லவன் கொஞ்சநேரம் மூர்ச்சையடைந்தனன். (52) இதை மற்றவெ ழு வீரர்களும் கண்டு மகா தீரனும், மிககொபேமுள்ளவனுமான தாரகா சுரனை இரதங்களோடும், பலவித வாயுதங்களோடும் சூழ்ந்துகொண்டார் கள். (53) மதங்கொண்ட யானைபோன்ற பராக்கிரமசாலியான வசுர னும் அவ்வேழுபேர்களாலும் வருஷிக்கப்பட்ட வாயுதங்களை யெல்லாம் துதிக்கையிற் பிடித்த வோர் தடியால் மறித்தெறிந்து(54) மறுபடியும் அவ்விரும்புக் கதையினு லவர்களை யடித்து சோகச் செய்தான். அப் போதவர்கள் முறியடிக்கப்பட் டோட்டம்பிடிக்கையில் (55) சத்துரு க்களைத் தொம்சம் செய்யலுற்ற வீரபாகுவும் மூர்ச்சை தெளிந்து அத னுலுண்டாகிய களைப்பையும் தீர்த்துக்கொண்டு கோபத்தினுல் மிக வா க்கிரகம் கொண்டவராகி தாரகன்மீது சரமாரி பொழிந்தனர். (56) அ ப்போதத் தாரகனும் தனது வில்லை நாணேறிட்டு குணத்தொனி செய் வதனுல் பயங்கரனுகி தனது கைலாகவத்தை நன்கு தெரிவித்தவனுக அனேக பாணங்களைப் பிரயோகித்து அச்சரமாரியைப் பாதி வழியிலே துண்டித்துவிட்டு (57) போர் முனையில் வீரபாகுவைப் பாணங்களால் நிரப்பி மறைத்தனன். மகா பராக்கிரமசாலியான வவ்வீரபாகுவு மவற் றையும் பாதிமார்க்கத்திற் துண்டித்துவிட்டு (58) சிங்கம்போலவ் வி யானைமுகனைப் பலகம்பீர வார்த்தைகளாலதட்டி "அடா! துஷ்டா! நி ல் நில்; நீ நம்முன் னின்று பிழைத்துப்போவதில்லை." (59) என்றிவ் வாருக வீரபாகு வுரைக்கையி லசுரன் கடுஞ்சினங்கொண்டு கூறியதாவ து:—"அடா! வீரபாகுவே! நீ நமது சௌரியத்தை யறியாமல் வீணு கப் பிதற்றுகின்ருய். (60) அனேக சூரியர்களுக் கொப்பானதும், சத் துருக்களைத் தொம்சம்பண்ணலுற்றதுமான விஷ்ணு சக்கிரமானது மு ந்தியவனுற் சண்டையிலெம்மீது பிரயோகிக்கப் பட்டபோது அதெனது கையினுற் பிடிக்கப்பட்டது. (61) இந்திரனுடைய வஜ்ஜிராயுதம், அக் கினியுடைய சக்தியாயுதம், யமனுடைய தண்டாயுதம், நிருருதியின் கத் தி, வருணன் பாசம், வாயுவின் துவஜாயுதம், குபேரனது கதை, ஈசா னியாது சூலாயுதம் இவை யெல்லா மென்னுல் முறிக்கப்பட்டன வெ ன்பதை நீ யறி. (62½) மேலும் பிரம்மாஸ்திரம்கூட வெனது புஜபரா க்கிரமத்தினுல் தடுக்கப்பட்டது. (63) அவர்களு மென்னுற் பல தட

வைகளிற் போரில் முறியடிக்கப்பட் டோடிவிட்டார்கள். இப்போது நீ பார்த்துக்கொண்டிருக்கையிலே யுனது பூதசேனைகளும், எட்டுத் தம்பிமார்களும் ஜயிக்கப்பட்டார்கள்.(64) இப்போதுன்னையு மோர் நொடிக்குள் சண்டையிற் சயித்து உனதெஜமானனையும் சகல ஸைனியங்களுடனு மிப்போதே ஜயிக்கின்றேன் பார்" என்றனன். (65)

முப்பத் தோன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௬௰—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு இவ்வாறுகக் கர்ஜனை செய்த, மதத்தினல் மெய்மறந்தவனும், துதிக்கை நுனியால் திசைமண்டலத்தையும், காலசக்கிரமென்ற சிம்சுமார சக்கிரத்தையும் பற்றுகின்றவனும் ஒருவராலு மெதிர்க்கப்படத் தகாதவனுமான தாரகனை (1) அளவிடப்படாத மகிமைகொண்ட வீரபாகுவானவர் தனது பெயரின் முத்திரையைக் கொண்டவையும், அனேகம் பொற்பூண்கள் கட்டப்பெற்ற அடிகளையுடையவையும், ஜுவலிக்கலுற்ற அக்கினியைப் போன்றவையும், இம்மூவுலகினிலும் பழுதுபெறுதவையுமான வனேக நாராசபாணங்களால் வெகு கோபத்தோடு தொடுத்து நிரப்பினர். ($2\frac{1}{2}$) தாரகனு மவரது போர்த் திறமையை மெச்சி யப்பாணங்கள் தனதண்டை வருவதற்கு முந்தியே யவைகளை தன் பெயர் முத்திரைகொண்ட வாயிரம் நாராசபாணங்களால் கண்டதுண்டங்களாக்கி விட்டனன். ($3\frac{1}{2}$) மெத்த கைலாகவம்பெற்ற வீரபாகுவு, மறுபடியும் சாணைபிடித்துத் தீக்ஷணமாயுள்ள வனேக பாணங்களை (4) யெய்தனர். மகா வில்லாளியான தாரகனும் போரின்கண் ணப்பாணங்களை மிகக் கூர்மையும், கொடூரமுமுள்ள பல பாணங்களால் தடுத்துவிட்டது மெத்த வாச்சரியம்போலாயிற்று. (5) மறுபடி யவ்வசுரன் பதினுயிரமம்புகளைப் பொழிந்தனன். வீரபாகுவு மதே மாதிரியுள்ள அவ்வளவே சரங்களாலவைகளை விலக்கிவிட்டனர். (6) பிறகு அம்பெய்வதிலான வவரது அக்கைலாகவத்தைக் கண்டு தாரகன் வெகு கோபமுற்றுச் சடிதியில், மற்றோர் பிரளய காலாக்கினியைப்போல் புகைந் தெறிந்தவனுகி (7) மிக வற்புதமாகிய வாக்கினேயாஸ்திரத்தை வில்லில் தொடுத்துப் பிரயோகம் செய்கையில் (8) அதினின் றக்கினி

யானது ஆயிரம் ஜுவாலாமாலைகளோடு அண்டகடாகம் வரையி னுலக முழுதும் வியாபித்துச் சடசட வென்ற தொனியோடெரிந்தது. (9) இவ்வாறாக ஜக முழுமையும் நெருப்பா யெரிவதைக்கண்டுச் சுவர்க்கலோகத்தில் தேவர்கள் நடுக்கங்கொண்டார்கள். உடனே வீரபாகுவும் புன்னகைப்புற்று கோபாவேசங் கொண்டவராகி (10) யதற்குப பிரதியாக வாக்கினேயாஸ்திரத்தையே பிரயோகம் செய்து அதிசீக்கிரத்திலதை யடக்கிவிட்டனர். இந்தக் காரணத்தால் தான் உலகினி லுஷ்ணமானது உஷ்ணத்தாலே தணிகின்றதென்ப தோராச்சரிய வதந்தி. (11) பிறகு யானைமுகனும் வெகு கோபத்தோடு வாருணாஸ்திரத்தைப் பிரயோகம் செய்கையில் சகல ஜகங்களு மோர்க்ஷணத்துக்குள் மாரிகாலத்திற்போல் மேகங்களால் மூடப்பட்டு (12) அனேக மின்னல்களுடனும் இடி முழக்கங்களுடனும் கீழ்காற்றினால் குவித்துச் சேர்க்கப்பட்ட மேகங்களால் நிறையலாயிற்று. (13) வெகு கோபக் காரரான வீரபாகுவானவர் இவ்வாருணாஸ்திரத்தைக் கண்டு கோபத்தினால் தேகமறியாதவராகியதை வாயவியாஸ்திரத்தாற் தடுத்துவிட்டனர்.(14) அதனால் அரைக்ஷணத்துக்குள் அசாத்தியமாய் மூடியிருந்த மேகத் திரள்கள் கலைந்துபோய் க்ஷணத்துக்குள் அனாவிருஷ்டிகாலம் சம்பவித்ததுபோல் வெட்டவெளியாயிற்று. (15) எல்லாத்திசைகளு மாகாசமும் நிர்மலமாயின. வானத்தினின்று மாரிசொரிவதுபோல் சித்தர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்களிவர்களின் கூட்டத்தினின்று நிர்மலமாகிய (16) மலர்மாரியானது வீரபாகுவினுடைய ரதத்தின்மீது பொழியலுற்றது. மறுபடி தாரகனும் சீக்கிரத்தில் சூரியாஸ்திரத்தைப் பிரயோகம் செய்தனன்.. (17) அப்போது எல்லாத் திசைகளிலும், பிரளயகாலத்திலுலகங்களை யெரிப்பதற்குண்டாவதுபோல் அனேகமாயிரம் சூரியன்க. ளேககாலத்திலுதயமாயின. (18) அது கண்டு வீரபாகு வாருணாஸ்திரத்தைச் சந்தானஞ் செய்ததாலனேக மேகங்களுண்டாகியச் சூரியர்களை மறைத்துவிட்டன. (19) அப்போது தாரகன் சந்திராஸ்திரத்தைத் தொடுக்க அதை அதேயஸ்திரத்தாலே லவரும் தொலைத்துவிட்டனர். இவ்வாறாக க்ஷணத்துக்குள் இந்திராஸ்திரத்தை யிந்திராஸ்திரத்தாலும், யமாஸ்திரத்தை யியமாஸ்திரத்தாலும், (20) நிருருதியஸ்திரத்தை நிருருதியஸ்திரத்தினாலுமே வீரபாகு தடுத்துவிட்டனர். பிறகசுரன் ஓரிடத்தும் பழுதுபெறாத பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்கையில் (21) அது சகல ஜகங்களையு மடியோடு நாசஞ்செய்வதுபோல் வானத்தில் கிளம்பலானதை வீரபாகு வதிசீக்கிரத்தி லதே யஸ்திரத்தினா லமுக்கிவிட்ட

னர். (22) பிறகு மெத்த வஸ்திரப் பயிர்ச்சியுள்ள அசுரனதிக கோப ங்கொண்டு சகல சத்துருக்களேயும் கறுவறுக்கலுற்ற வீரபாகுமீது நாரா யணுஸ்திரத்தை யேவினன். (23) அவரதையு மலக்ஷியமாகவே யதே யஸ்திரத்தினுல் நிவர்த்தித்தனர். பிறகு மிகமாயாவியாகிய வசுரன் வீ ரபாகுவினுடைய மிகுந்த பராக்கிரமத்தைக் கண்டு (24) அதிக ஆக்கி ரகம் கொண்டு தூளிகளால் மிக விருண்டு கண்ணுக்கொன்றும் தெரியா திருக்கையில் மாயாபலத்தினுல் (25) பற்பல வுருவங்களேயெடுத்துப் போர் முனையிற் சண்டைசெய்து ஒவ்வோருருவத்தாலு மனேக திவி யாஸ்திரங்களேப் பிரயோகஞ்செய்தனன். (26) வீரபாகுவு முயுத்தரங் கத்தி லவ்வஸ்திரங்களால் சூழப்பட்டவராகி சகல சத்துருக்களேயும் கொல்லலுற்ற வீரபத்திராஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்தனர்.(27) அ தைக் கண்டமாத்திரத்தில் மாயைத்தன்மையாலுண்டான வவையெல்லா ம் நசித்துவிட்டன. மகாமாயாவியான அசுரனுனவன் மறுபடியு மனேக அஸ்திரங்களேப் பிரயோகித்து (28) மாயையினுல் தானிருந்து சண் டைசெய்வதுபோல் வீரபாகுவைப் பிரமிப்பித்துச் சிக்கிரமா யோர்க்ஷண த்துக்குள், சுண்டெலி பொந்தில் நுழைவதுபோ லோர் குகைக்குள் நு ழைந்துவிட்டான். (29) வீரபாகுவு மதுகண்டு திரும்பி யோடுவோனே க் கொல்வது தகுதியல்லவென்று மனதிற்கருதி பிரயோகித்த வீரபத் திராஸ்திரத்தைத் திரும்ப வாகர்ஷித்துக் கொண்டனர். (30) பிறகு வீரபாகுவானவர், அசுரன் போனவழியோடே பார்ப்பதற்குத் தகாத தும், மகா கோரமும், மகா ரௌரவமென்ற நரகத்துக்குச் சரியானது மான கிரௌஞ்ச பருவதத்தின் குகைக்குள் நுழைந்து சென்றனர்.(31) மகா மாயாவியும், அசுராதமனுமான வக்கிரௌஞ்சன் அசுர வரசனுகிய தாரகனது சொற்படி பலவித மாயைகளால் பிரமைகொள்ளச் செய்தா ன். (32) அப்போது அந்தம் தமசு (குருட்டிருள்) என்ற மகா நரகம் போ லங்கெங்கும் மிக வசாத்தியமான வந்தகாரத்தால் மூடப்பட்டது. முந்தி யம்மலையினுள் பற்பல வழிகள் தோன்றிற்று. (33) அனேகவி தங்களும் மிக பயங்கரமுமாகிய அவ்வழிகளெல்லா மங்கங்கு மறைக்க ப்படலாயின. வீரனு மவ்வெல்லா வழிகளிலும் போய்ப் போய்த் தி ரும்பினர். (34) கேளீர் சௌனகாதி முனிவர்களே! அவர் அக்கிரௌ ஞ்சனுடைய மாயையாலே தாரகனைக் காணக்கூடாமல் வெகுநேரமளவு ம் சித்தத்தில் மிகுந்த சிந்தைகொண்டனர். (35) அத்தருணத்தி லப் போர்க்கொத்த மகா வீரனே யிவ்வாறு மனத்துன்பம் கொண்டிருக்கை யில் உலகினில் மற்ற யாவரானுலும் செத்தே யிருக்கவேண்டு மென்ப

து நிச்சயம். (36) "யாம் வேறோ; அல்லது நமக்குக் கலக்கமோ; இல்லையாகில் கனவோ; இல்லாவிடில் நமக்குப் பிரமமோ; ஓ! இவை நம் கைகளல்ல; இவை வேறு; வில்லும் வேறு, அம்புகளும் நமதல்ல.(37) சுற்றிலு மடைக்கப்பட்டிருக்கிற மார்க்கத்தி லெங்குதான் போவதற்குத் தகும்". என்றிவ்வாறாகக் கலக்கமுற்ற வீரபாகுவுக்கு சித்தம் மிகுதியாகப் பிரமைகொண்டது. (38) இவ்வாறாக வீரபாகு தாமதிக்கையில் வீரகேஸரிமுதலிய மற்ற எட்டுவீரர்களும், இலக்ஷம் பூதகணங்களும் ஐம்பத்தினான்கு கணாதிபர்களும் அவர் போனவழியாகத் தொடர்ந்து, கொஞ்சமேனு மாலோசிக்காமல் பலத்தினால் மதோன்மத்தர்களாக உயிர், சுகம்முதலியவைகளைச் சற்றேனும் பாராட்டாமலக் குகையினுட் புகுந்தனர்கள். (40) அசுராதமனவர்களுடைய மார்க்கத்தையு மடைத்துவிட்டபடியால் அக்குகைக்குள் நுழைந்தமாத்திரத்தி லவர்களும் மோகமடைந்து விட்டார்கள். (41) அவர்களும் மயங்கிப்போனதைக்கண்டு அவன்ஜயம் கைக்கு வந்துவிட்டதாக நினைத்தான். இவ்வாறாக அவ்வீரர்களெல்லோர்களும் கிரௌஞ்சகிரியின் குகைக்குள்ளடைக்கப் பட்டானபொழுது (42) பலசாலியானவக் கொடிய தாரகன் பெரியரதத்தோடு வெளியேவந்து அசுரர்களதுயிரை வாங்கலுற்றவர்களும், மகா பயங்கரர்களுமான கணக்கூட்டங்களை (43) க்கொல்லக்கருதி யதற்காக முற்றும் சன்னத்தமாகி பிறகு நாணோடு வில்லையும், என்றுமக்ஷயமான பாணங்களையுடைய வம்பாரத்தூணிகளையு மெடுத்துக்கொண்டு (44) ரதத்தின்மீதேறிக்கொண்டு வீரபாகுவைத் தொடர்ந்துவந்த ஸ்ரீஸேநானியுடைய சேனைகளைத் தொம்ஸஞ் செய்தனன். (45) அச்சேனைகளும், நடத்துவதற்கான தளகர்த்தனற்றிருந்தும் அனேகவித ஆயுதங்களோடு அவ்வசுரனுடன் வெகுநேரமளவும் வலிமையாக யுத்தம் செய்தது மிகவுமாச்சரியம்போ லாயிற்று. (46) அவர்கள் கற்களாலும், அனேகவிருக்ஷங்களாலும், மகா பெரியவைகளான மலைகளாலும் நூற்றுக்கணக்குகளாயும் ஆயிரக்கணக்குகளாயு மெறிந்து வெகுதைரியத்தோடு போராடினார்கள். (47) உயுத்தத்திற் கைதேர்ந்த தாரக சத்துருவானவன் ஒருவனாயிருந்து அனேகம் சைனியங்களோடு போராடுகையில் மகா கோபமுற்றவனாகி யப்பெரும் சைனியங்களால் வருஷிக்கப்பட்ட அம்புகள், கற்கள், மலைகள் முதலியவைகளைச் செதற்செதலாய்த் தவடுபொடியாக்கினான். (48) மகா மனோதார்டியமுடைய, சகல அசுரர்களுக்கு மதிபனான தாரகன், மதம் மேற்கொண்ட யானையானது கடுஞ்சினத்தோடு அனேகம் கமலமலர்களால் நிறையலுற்ற தடாகத்திலிறங்கிச் சின்னு

பின்னமாக்குவதுபோல் தேவசேனைகட் கதிபாகிய ஸ்ரீ சுப்பிரம்மணிய னுடைய தள்ங்களைக் கலக்கலுற்றனன். (49)

நாற்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவ்காண்டம் சக—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு நாயகனற்ற, வீரபாகுவின் பெருஞ்சேனைகள் முறியடிக் கப்பட்டவர்களாகி பாதுகாப்போரில்லாமல் ஹாஹாவென்று கதறி மிக வாதுரர்களாகவாயினர்கள். (1) அவர்களிவ்வாருக மிகவும் பீடிக்கப்ப ட்டு ஒருவர் போனவழியில் ஒருவர்போகவில்லை. ($1\frac{1}{2}$) அவர்களிலொ வ்வொருவரும் கர்ஜனைசெய்கின்ற தாரகனுல் தீக்ஷணமான பாணங்க ளாலடிபட்டு உயிரைக்காப்பதிற் கவலையுற்றவராகித் திக்குவிதிக்காய்ச் சென்ருேடிவிட்டார்கள். ($2\frac{1}{2}$) விஷ்ணுமுதலிய தேவர்களும் மிகவும் பயந்து நடுக்கமுற்ருர்கள். (3) இவ்வாறு கதறுதலையும் தேவர்களுடை ய பயத்தையும் நாரதமுனிவர்கண்டு சீக்கிரத்தில் தேவசேனுபதியாகிய கந்தபிரான் முன்பாகச் சென்று (4) மகா வித்துவானுகியவச் சுப்பிரம் மணியஸ்வாமியை மிகுந்த பக்தியுடன் வந்தனித்து மனவச்சத்துடன் கைகட்டி வாய்பொத்தி நின்று பின்வருமாறு கூறினர்:— (5) "ஓ! பகவானே! இப்போது நமது வீரபாகுமுதலிய ஸகல கணங்களும் கிரௌ ஞ்சகிரியின் குகைக்குள் புகுந்து பிறகு திரும்பிவரவில்லையே! பிரபு வே! (6) ஓ! ஜகதீசா! அவர்களசுரமாயையால் பிழைத்திருக்கிருர்களோ இல்லையோ தெரியவில்லை. அவ்வீரபாகுவின் சேனைகளெல்லாம் திசை யெங்குமோடி யொளிந்தன. (7) தேவர்களுடைய நெஞ்சத்திலு மசு ரபய மிரட்டித்துவிட்டது. ஓ! தேவாதிதேவா! இவ்வாறு பெரும்பீதி யினின்று எங்களை யெப்போதும் காப்பாற்றிடல் வேண்டும்" (8) என் று நாரதமுனிவர் கூறியதை ஸ்ரீ மகாதேவரது புதல்வன் கேட்டருளி யதக்ஷணத்தி லெரித்துவிடுவதுபோற் கோபத்தினுற் கண்கள் சிவக்க லுற்றுத் திருவாக்குரைத்ததாவது:— (9) "ஓ! கோ! இப்போதேதுரா த்துமர்களாகிய வசுரர்களின் குடியை யடியோடு வேரறுத்துவிடுகின் ருேம்: இப்போதே தேவர்களசுரபீதியை விட்டுவிடட்டும்" (10) உலகி

னிவெலம்மைச் சரணமடைந்தவர்களுக்குப் பயமேது? அழிவுதானேது? இச்சகமதில் நமதடியார்களுக்குப் பகைஞரேது? பிணியேது? (11) யாதாமொரு மானிடப்பதரானவன் அறிவீனத்தாலெம தடியார்களைப் பகைக்கின்றானோ அவன் நம்மையே பகைத்தவனாகின்றான். நமக்கபராதஞ்செய்வோனை மன்னிப்போம்: அத்துராத்துமாவை யொருக்காலு மன்னியோம். (12) இந்திரனாலாதரிக்கப்படினு மவனைத்தொலைத்துவிடுவோம். பார்தனில் நமதடியார்களை யாதரிப்போனையே யாம் காப்பாற்றுவோம். (13) இதோ! ஓர் நொடியில் அசுராதமனாகிய கிரௌஞ்சனைப் பிளந்தெறிந்து அவனது மாயையாற் பிரமை யடைந்திருக்கிற வீரபாகு முதலியவர்களையு மெழுப்பிவிடுகின்றோம். (14) உயுத்தத்தின்கண் முந்தியத் தாரகாசுரனை யோர் நொடியிற் கொல்லுகின்றோம். (14½) அவனே, துராத்துமர்களாகிய அசுரசைனியங்களுக்கும், அவனது சகோதரர்களாகிய சிங்கமுகன், சூரபத்துமனிவ் விருவர்களுக்கும் ஆகியவெல்லோர்களுக்கும் ஸம்யமினியென்ற இயமபட்டணத்தில் சீக்கிரமாக விடந்தேடி வைக்கட்டும். (16) வாரீர்! வாயுதேவனே! நீரிப்போது சீக்கிரத்தில் குதிரைகளை யிரதத்திற் பூட்டி யோட்டுவதி லுமக்குள்ள ஸாரத்தியத் திறமையை யிப்போதே நன்குதெரிவிப்பீர்". (17) என்று வாயுதேவன் ஸ்ரீ சுப்பிரம்மணிய சுவாமியாலாதரவோடு சட்டளையிடப்பட்டவுடன் தேரின்கண்ணில்கூடும் குதிரைகளையும் பூட்டி யோட்டினர். (18) அப்போது தேவதுந்துபிகள், சங்கங்கள், கொம்புகள் ஆகிய வில்வெல்லா வாத்தியங்களும், ஆயிரமாயிரங்களாயுள்ள நிஸ்ஸாணம், முரவம், டிண்டிமமாகிய விவ்வாத்தியங்களும் கோஷிக்கலுற்றன. (19) முனிவர்களோடுகூட தேவர்கள் 'ஜயாவிஜயீபவா' என்றது முதலான மங்களவாக்கியங்களைப் படித்தார்கள். வந்திகள் (பராக்கிரமத்தைத் துதிக்கிறவர்கள்) எல்லோர்களும் கட்டியம்கூறினார்கள்; வைதாளிக கணங்களெல்லாம் (இராஜாக்களை விடியற்காலத்திலெழுப்புவதற்காக துதிக்கின்றபாடகர்கள்) அளவற்ற பராக்கிரமமுடைய வாறுமுகனது பிருதாவளிகீதங்களைப் பாடினார்கள். (20½) எக்காளம் போடுவோர்களும், கெர்ஜனை செய்வோர்களும், கூத்தாடுவோர்களும், தொடர்ந்து கூத்தாடுவோர்களுமான (21) காலாட்களுடைய சப்தங்கள் திசையெங்கும் பரவிமேலுக்குமேல் விருத்தியாயின. குதிரைகளின்கனைத்தல்களும், யானைகளின்பிளிறுதல்களும் (22) தேர்க்கால்களின் க்ரீங்காரவோசைகளும் கடலோசைக்கு மேற்பட்டதாயின. அப்போது ஸேனாபதியாகிய ஸ்ரீகந்தபிரானுடைய ஸேனையானது அசுரப்படைகளைவளைந்துகொண்டது. (23) அப்படைகளும் கடலைக்கடலெ

திர்த்ததுபோலெதிர்த்துக்கொண்டது. பிறகங்கு விரவாதத்தொனியால் மட்டிலெதிரிவீரனைத்தெரிந்துகொள்ளும்படியான புழுதியிருளில்மிகப பயங்கரமும், உரோமங்களைச் சிலிர்ப்பிக்கவுற்றதுமான யுயுத்தம் நடத்தப் பட்டது.(24$\frac{5}{8}$) அப்போது "பிடி, அடி, இப்போதெங்குசெல்லுகின்றாய்? நில் நில்" என்று கோபத்தோடு சூரர்களால் கூவப்பட்ட கெடுபிடி வார்த் தைகள்கேட்கப்பட்டன. முந்தி ஸ்ரீசம்பு புத்திரனுடைய சேனையானது அசுர சேனையை வெற்றிபெற்றது.(26) பிறகு அசுரசேனை யிதையும், இது அதையும், மறுபடி அது இதையும் இவ்வாறாக, கடலின்கண் கீழ் காற்றினாலும் மேல்காற்றினாலு மொன்றோடொன் றடித்து மோதிக் கொள்ளப்பட்ட பேரலைகளைப்போல், ஒன்றோடொன் றடித்துக்கொண் டு,மாற்றி மாற்றி வெற்றி பெற்றது. (27) இதற்கிடையில் தாரகாசு ரன் தன்பக்கத்தில் நின்ற வேோர் ஸாமர்த்தியசாலியான தூதனைப்பார்த் து அவன் கையைப்பற்றிக்கொண்டுரைத்ததாவது:—(28)"வாராய்! தூ தா! அதோ! பற்பல ரத்தினமயமானதும், விசித்திரமான துவஜத்தி னாலலங்கரிக்கப்பட்டதும், சுவர்ணமயமான மற்றோர் மகாமேருபருவதம் போன்றதுமானவிரதமானது இச்சேனைக் கடல்நடுவில் கப்பல்போல் வி ளங்குகின்றதே! அது யாவருடையதென்பதை யிப்போது நீசோல்வாய்; (29$\frac{1}{2}$) அதின்கண்கோடிசூரிய பிரகாசமுள்ளவனும், திசைகளெல்லாமொ ளியால் பிரகாசிப்பிக்கின்றவனும்,(30)உலர்ந்தகாட்டினிற்பற்றியஸாக்ஷா த்பிரளயகாலாக்கினியைப்போல் போர்முன்னர் கண்கொண்டுபார்க்கமுடி யாதவனும்,தேவசைனியங்களால்முற்றும்வந்தனிக்கப்படுவோனும்,எல் லையற்ற வல்லமைகொண்டவனுமாக விளங்கிய இவன் யார்?"(31) என, அசுரப் பிரபுவாகிய தாரகனை நோக்கி யவ்வேவுகார னுத்தரம் கூறியவித மோவென்றால்:—அவன் மகா .வாசாலகனாயினும் அசுரன் முன்னர்வந்த னித்து வாய்பொத்திநின்று விண்ணப்பம் கூறியதாவது:—(32) "வா ரீர் மகா வித்துவானாகிய வரசனே! யான் கூறிய வெனது விண்ணப்பத் தை யாலஸியமன்றியில் கேட்கவேண்டும்: யாவரொருவர் சகல லோகங்க ளையும் நடத்துவோரும், யாவராலு மெதிர்க்கப்பட முடியாதவரும், (33) ஸ்ரீ விஷ்ணுமுதலிய ஸகலதேவர்களையு மிரக்ஷிப்பதில் தொளைகொண்ட வரும் சிவமைந்தனுமான 'கந்தர் கந்தர்' என்ற மகா பிரபுவோ அவர் இவர்தான். இவர் ஸம்பூர்ணமான பலபராக்கிரமங்களை யுடையவர்; இ வர் சரணமடைந்தோரைக் கைவிடாது காப்பாற்றவல்லவர்: (34) இவ ர் பலம், சத்தியம், தைரியம், ஸாமர்த்தியம், வில்வித்தை இவைகளில்

ஜகங்களுக்குக் கர்த்தாவும், ஸர்வஞ்ஞனுமாகிய ஸாக்ஷாத் ஸ்ரீ மகேசுவர னிலும் மேலானவர். (35) இவரது ஸௌந்தரியமோ மன்மதனுடைய கர்வத்தை முற்றுமடக்குவதற்கான பெரிய ஔஷதமாகும்: மன்மதன், இயமன், திரிபுராசுரர்கள், இவர்களையும் ஹாலாஹலவிஷம், தக்ஷன்வே ள்வி இவைகளையும் நாசஞ்செய்த, (36) சந்திரனை யுச்சியலங்காரமாய்க் கொண்ட ஸ்ரீ ஜகதீசன்கூட இவர்முன்னர் சண்டைக்குநிற்கத் திறமைய ற்றவராவார்: இங்ஙனமாயினுலகினில் மற்றெந்த வில்லாளிதானிவர் முன்னர் நிற்பதற்கு வல்லவர்? ஆனதுபற்றி தேவர்களைக் காப்பவரான இப்பேர்க்கொத்தவரைப் புத்திரனாகவடைந்தவச் சிவபிரானேயுலகினி ல் தன்னியர்களுக்கெல்லாம் மிக தன்னியரென்று யான் நினைக்கிறேன். (37½) இவ்லோககுருவானவர், ஸ்ரீ சிவபிரானாகிய தீபத்தினின்றேற் றிய தீவட்டிபோலானவர்" என்றனன். (38) இவ்வாறாகத் தூதனாற் சொல்லப்பட்ட வசனத்தைத் தாரகன்கேட்டு தனது ஸாரதியைப்பார் த்து கெம்பீரத்தொனியுடன் வசனமுரைத்ததாவது:— (39) "வாரா ய்சாரதியே! லோகநாதனும், சூலபாணியுமான ஸ்ரீ ஜகதீசனது யாதொ ரு மைந்தனானவ னிரதத்தின்மீது கோடிசூரிய பிரகாசமாய் விளங்குகி ன்றானோ (40) அப்பேர்க்கொத்த விச்சிறுவனிடத்திப்போது சிலசெ ய்தி யுரைக்கும்படி யிருக்கின்றது. ஆகையால் எதிர்த்தோரளியற்ற அவனது தேர்க்கெதிராக நமது தேரை, (41) கேளாய் மகா புத்திசா லியே! நமது கட்டளையின்படி சீக்கிரத்தில் தாமதமின்றி, யோட்டிநிறு த்து;" என்றரிக்கையிடப்பட்ட வவனது, திறமைபெற்ற சாரதியான வன் மிகவும் வணக்கத்தோடு வாயுவேகம் மனோவேகங்களையுடைய தே ர்க்குதிரைகளை விரட்டி சீக்கிரத்தில் சுப்பிரம்மணியசுவாமி ஸன்னதியிற் சேர்ப்பித்தனன். (43) தாரகனும் ரதத்தின்கண் விளங்கிநின்ற, மன்ம தனிலும் மிக சுந்தரத்திருமேனியுடைய ஸ்ரீ சம்புகுமாரனைக் கண்ணுற் றவுடன் ஓர் க்ஷணநேரம் இதுசெய்யத்தகும், இதுதகாதென்பதை யறி யாதவனாய் மோகித்துநின்றனன். (44) பிறகு கோடிசூரியப்பிரகாசமு ம், கோடிசந்திரக் குளிர்ச்சியும் பொருந்தியவரும், அலர்ந்த கமலமலர் களை யொத்த வாறுதிருமுகங்களையும், பதினெட்டு நேத்திரங்களையுமு டையவரும்,பன்னிரண்டாயுதங்களோடுகூடியபன்னிரண்டுகைகளாலலங் காரமுடையவருமான ஸ்ரீ சுப்பிரம்மணியனை அசுரன்கண்டு எச்சரித்துக் கொண்டதாவது:— (46) "ஓ கோகோ! உலகங்களை நடத்துவோரு ம், உலகங்களுக்குப் பதியுமாகிய விப்பேர்க்கொத்த வும்மைமைந்தனாக வடைந்த, புவனங்களுக்கு பரமேசுவரனாகிய ஸ்ரீ சம்புவே ஸத்புத்திர வான். (47) நல்லது! அதிருக்கட்டும்; கேளீர்! சுவாமியே! நானிப்

போதுரைக்கின்ற வெனஇவ்வசனத்தைச் சற்றுப்பிரீதியுடன் கேட்டுப் பிறகு மனம்போல் நடத்துவீர். (48) கேளீர்! பார்வதிநந்தனு! தேவர்களுக்கு மசுரர்களுக்கும் ஜனனகாலம் முதலாக வொருவருக்கொருவர் பகை யேற்பட்டதென்பது பிரசித்தமாகியதே! அதை விலக்குவதற்கு யாவராலும் முடியா. (49) நாங்களோ அவர்களைத் துவேஷிக்கின்றோம்; அவர்களும் பலிஷ்டர்களாகிய வெங்களைப் பகைக்கின்றார்கள். ஆனால வையெல்லாம் ஸ்ரீசந்திரசேகரனது திருவருளாலேயின்றிவேறில்லை. (50) நீருமச்சிவபிரானுடைய சுவரூபத்தையே கொண்டவராகியதால் அவர் போல் நீருமெங்களால் பூஜிக்கப்படத்தக்கவர். இப்படியிருக்கில் நீரெவ்வாறெங்களோடு போர்தொடுக்க வரலானீரென்பதைச் சொல்வீராக. (51) விஷ்ணுமுதலிய தேவர்களுமெங்களை வதைக்கலாவார்கள். நாங்களுமவர்களை வதைக்கலாவோம். வாரீர் ஸ்ரீ சிவகுமாரா! நீரோவென்றால் எங்களுக்கு ஸாக்ஷாத் பரப்பிரம்மமாகிய பரமசிவனே" என்றனன். (52) அசுரன்கூறிய இவ்வாறு வசனங்களை ஸ்ரீ பிரபுகேட்டு நகைத்து அத்தாரகனைநோக்கி வருத்தமின்றி யுத்தரமுரைத்திட்டதாவது:— (53) "அசுரர்களி விரதத்தின்மீது வீற்றிருக்கின்ற நீயாவன்? நீ யாதுநிமித்தம் நம்மிடத்துவந்து கலக்கின்றாய்? உன்பெயரென்ன? நீ யிங்குவந்த காரியமென்ன?" (54) என, தாரகன் கேட்டு ஸ்ரீ ஹரமைந்தனுக்கு மறுமொழி கூறுகின்றான்:— "ஓ! சுவாமீ! உலகினில், சூரபத்துமாசுரனுக்குத் தம்பியாகிய வெந்தனைத் தாரகனென்று சொல்வார்கள். (55) எங்களுக்குங்களோ டொருக்காலும் கலகமில்லை" என, ஸ்ரீ கந்தமூர்த்தியுரைக்கின்றார்:— "கேளாய்! தாரகா! ஸ்ரீ ஜகதீசனுனவர் இவ்வுலகங்களுக்குக் கர்த்தாவென்றும், தேவாசுரர்கள் முதலிய வெல்லோர்க்கும் பரமகுருவென்றும் பிரஸித்தியல்லவா? (56) அவரிச்சகங்களை மகாவல்லமை பொருந்திய சக்திகளால் செங்கோல்நடத்தித் வருகின்றார். ஈசுவரனவ்வாறு செய்யாவிடி லவரெவ்வாறு உலகங்களுக்கு ஈசுவரனுவார்? (57) இவ்வுலகங்களி லொவ்வொன்றுமோர் வறையறையைவிட்டு நீங்காமலிருப்பதற்காகவிச் சங்கரன் ஓரெல்லையாக விருக்கிறார். ஆகையால்தா னவரோரெல்லைக்கு நிர்வாஹியான 'ஸேது' (அணை) எனப்படுகின்றார். (58) உலகுகளைத் திருமேனியாகக் கொண்டவப் பரமேசுவரனல் ஆதியில் தொழிலானது இருவகையாகப் பிரிக்கப்பட்டது. விதிப்படி செய்யத்தகுவதொன்றும், விலக்கின்படி (59) நீக்கத்தக்கது மற்றொன்றுமே. இவ்விதமாகிய ஸ்ரீ பரமேசுவரனுடைய திருக்கட்டளையானது தேவாசுரர்களாலு மதிக்கிரமிக்கத் தகாததே. அவ்விலக்காகிய தொழி

லைச் செய்வோன் துஷ்டனென்றும், மற்றதைச்செய்வோன் சிஷ்டனெ ன்றும் சொல்லப்படுவான். (60) அத்திருக்கட்டளையை மீறிநடக்கின் றதுஷ்டன் ஸ்ரீபரமேசுவரனுடைய தண்டனைக்குள்ளாகின்றான். அக் கட்டளைக்குட்பட்டு நடக்கின்றவனே அவரதனுக்கிரகத்துக்குப் பாத் திரனாகின்றான். துஷ்டசிஷ்டர்களுடைய வறையிவ்வாறிருக்க (61) நீங்களோ உலகில் யெப்போதும் முற்று மகாரியங்களையே நடத்திவரு கின்றீர்கள். நாள்தோறும் பிராணிகளுக்குத் தீங்களிப்போர்களும், யாகம்செய்தல், ஆலயப்பிரதிஷ்டை, வாபீகூப தடாகாதி நிர்ம்மாணங்க ள்முதலிய ஸத்கிருத்தியங்களுக்குக் கெடுதிசெய்வோர்களுமா யிருக்கின் றீர்கள். (62) புவனங்களனேக விதமாக வுண்டாகியிருக்கின்றன, உண் டாகின்றன, உண்டாகவும் போகின்றன. எல்லாம் ஸ்ரீருத்திரசுவரூப மேயென்றும், அவரோ எல்லாஜகங்களுக்கும் கர்த்தாவென்றும், அச்சக ங்களுக்கு மேன்மைகொண்டவ ரவர்தானென்றும் வேதத்திற் கூறுகி ன்றது. (63) ஸ்தாவர ஜங்கம வடிவமாகவிருக்கிற ஜகமே அவரது திருமேனி; அச்சகத்தாலே ஸ்ரீசங்கரன் சரீரமுடையோராகின்றார். ஆ கையாலிச்சகத்தின் கண்ணுள்ள வெந்தப்பிராணிக்காயினும் அனிஷ் டத்தைச் செய்கின்றவ (64) னச்சிவபிரானுக் கனிஷ்டத்தைச் செய் வோனாகவே யுலகினிலெண்ணப்படுகிறான். விஷ்ணுமுதலிய தேவர்க ளுமோ அவரது செங்கோல்முறை நீதிக்குட்பட்டு நடக்கின்றவர்கள். (65) ஸ்ரீஜகதீசனான வெமதுதந்தை அவர்களையும், முச்சகங்களையும் பாதுகாப்பதற்காகவும், உங்களைத் தொலைப்பதற்காகவுமே நம்மைத்தி ட்டமிட்டிருக்கிறார். (66) ஆகையால்தான் யாமிப்போது பலவித சது ரங்க சேனைகளோடுகூடிய மிகுதியான தளங்களுடன் உங்களோடு யுத் தமாடுவதற்கு நாமே நேரிலிங்கு வானுற்றோம். (67) "அடா! தாரகா! நீ நம்மைப்பாலகனென்றெண்ணி யவமதிக்கவேண்டாம். இப்போதே யுத்தம்செய்; உனதுமூத்த சகோதரர்களுக்கு மிப்போதே யிச்சங்கதி களைச் சொல்லியனுப்பு; தாமதம்செய்யாதே. (68) இன்னமும் சொ ல்லுகின்றோம் கேள்! உனது பிராகாரங்கள், கோட்டைகளிவைகளைத் தளங்களைக்கொண்டரணிப்பாய்க் காத்துக்கொள். நீ நமது பார்வையி லகப்பட்ட பிறகு உயிர்பிழைத்து மீண்டுபோவதில்லை. (69) உங்க ளால் துன்பமளிக்கப்பட்ட விஷ்ணு, பிரம்மன், இந்திரன்முதலிய தேவ ர்கள் ஸ்ரீதேவாதிதேவனுடைய சன்னிதானத்தில் பயத்தினால் கதறி

முறையிட்டார்கள். ஆகையினாலிப்போது உனது துஷ்டக்குடிப்பூண்டை யோர் நொடிக்குள் முடித்துவிடுகின்றோம்" என்றனர். (70)

நாற்பத்தொன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஸம்பவகாண்டம் ௪உ-வது அத்தியாயத்தினர்த்தம்

ஸ்ரீ வடிவேலனுடைய விவ்வண்ணமான வசனங்களைத் தாரகன் கேட்டுச்சினந்தானுதடுகள் துடிக்கலுற்றுப் புருவங்களை நெரிப்பதனாற் கண்கள் வக்கிரமாகி, (1) யடிக்கடி பெருமூச்சுவிட்டு மறுபடி யுரைத்ததாவது:—"நீ யாதுமறியாத குழந்தை; எப்படியிங்கு சண்டைக்கு வானுற்றாய்?(2) நாங்களோ மகாபலசாலிகளான சூரர்கள்: முன்வைத்தகாலைப் பின்வாங்கிப் புறஞ்செல்லாதவர்கள். மேலுமசுரரெல்லோர்களு மியற்கையாகவே நெஞ்சத்திலீரமற்ற கொடியோர்கள். (3) (நீ யுரைத்த) ஸ்ரீ பரமேசுவரனது திருக்கட்டளை யெங்களுக்குரித்ததே. நீ விலக்காகச் சொன்னதே யசுரர்களுக்கு விதிமுறை. அன்னியர்களின் தருமத்தை நன்காசரிப்பதைப் பார்க்கிலும் தனது தர்மம் துர்க்குணமாயினுமதையனுஷ்டித்தலே நல்வாழ்வுக்குரித்ததாகும். (4) எங்களதசுரர்கள் நாள்தோறு மாயிரம் முறையாக எல்லாத் தேவர்களுடைய மிகுந்தவலிமையையு மடக்கியவர்களை வதைக்கின்றார்கள்.(5) இந்திரனும் போர்முனையிலெங்கள தம்புகளால் வஜ்ஜிராயுதத்தை யிழப்பித்து முறியடிக்கப்பட்டனன். மேலும் நம்மால் திக்பதிகளெல்லோரும் ஆசையொழிந்து திக்கற்றவர்களாகச் செய்யப்பட்டார்கள். (6) பிரம்மனுமதிசீக்கிரத்தில் ஜயிக்கப்பட்டான்; அவன் பிரம்மாஸ்திரம் நம்மால் விழுங்கப்படலாயிற்று. ($6\frac{1}{2}$) நல்லது! அவையெல்லாம் நிற்கட்டும்; விஷ்ணுவானவன் ஸ்ரீ பரமேசுவரனுடைய சரணத்தில் தனது கண்ணைப்பிடுங்கி யர்ச்சித்ததனா லம்மகேசுவரன் பிரீதிகொண் டவனுக்கருளிய ஆயிரம் சூரியர்கள் போன்ற பிரகாசமுடையதும், சத்துருக்களாகிய விருளுக்குச் சூரியனாகியதும், பகைஞரிடத்துச் செல்லும் பராக்கிரமத்தை யுடையதுமான ஸுதர்சன (சக்கிரம்) மானது (8) போர்முனையிற் புறங்காட்டிப்பயந்தோடுகின்றவவ் விஷ்ணுவால் சண்டையிற்துரிதமாக நம்மீதுவிடப்பட்டிலது நமது மார்பினில் மோதி (9) ஆரங்கள்மழுங்கிவிழ

பிறகுநாம், இலக்குமிக் கணவனைக் காப்பதான மிகவொளிபொருந்தியவச் சக்கிரத்தை வலிமையாற்பிடித்துப் பதக்கமாகக் கழுத்தினிலணிந்தனம். (10) மேலும் ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், ஸுப்பிரதீகம் ஆகிய வித்திக்கஜங்களெல்லாம் (11) நமது துதிக்கையினடியால் மஸ்தகங்கள் பிளக்கப்பட்டுத் திக்குதிக்காயோடிவிட்டன. நல்லது! இப்போதுவீரபாகுவும், உனது மற்றதம்பிகளுமெங்கே? (12) அவர்களும் உனதிலக்ஷம் கணங்களும் கிரௌஞ்சகிரியின் குகைமத்தியிற் சிக்கிக்கொள்ளப்பட்டார்கள். ($12\frac{1}{2}$) உனதாயிரம் வாகினிசேனைகளு மவர்கள்மகா வீரர்களாயினும் சண்டையிலெனது சரத்தாலடிபட்டுச் சிண்டவிழ்ந்து முண்டமாகி மறுபடி திரும்புவதற்கிடமின்றி தெருத்தெருவாய்த் திசையெங்கும் சிதறினர்கள். (14) இவையெல்லாவற்றையு மிப்போது நானந்தக்காணத்திற் சிந்திக்குமளவில் ஒருவனும் பதினாறுவயதளவு முயுத்தத்தொழிலுக்குத் தகுதியல்லர். (15) மேலும் கேளாய்! ஆக்கினேயனாகிய பாலகா! உங்கள்மீதெங்களுக்கு யாதொருபகையுமில்லை. உலகத்தி 'விளங்கன்று பயமறியா' தென்பது பிரசித்தமான வதந்தி. (16) ஆகையாலுனது தாய்தந்தையரிடத்துத் திரும்பிச்சென்று சுகமாயிரு" என்று தாரகனுரைத்திட்ட வசனங்களை ஸ்ரீமகேசுவர சுதன்கேட்டு (17) கோபத்தினு லுதடு துடிக்கலுற்றவராகி ஏளனமாகக் களித்துச் சிலமொழியளித்ததாவது:—"அடா துஷ்டநடத்தைகொண்ட தாரகா! நெடுநேரம் இவ்வாறாக வீணாய்ப்புகழ்ந்து கொள்ளுகின்றாய்: (18) விஷ்ணு சக்கிரமானது பதக்கம்போலெனது மார்பினிலிருக்கின்றதென்று நீபுன்னகைப்போடு பிதற்றுகின்ற தற்புகழ்ச்சி யெல்லாம் நிற்கட்டும். (19) நமதிஷ்டத்தின்படி நாமிருக்கின்றோம், போகின்றோமல்லது யுத்தம்தான் செய்கின்றோம், நீ பிதற்றிய வீரவாதங்களை யாமிப்போது நினைக்கநினைக்க நீ கேவலமறப்ப பதனொன்று நமக்கு விளங்குகின்றது. நாம் விளக்கிய வுண்மைப்பொருளை நீ கலக்கம் கொள்ளாமற்கேள். ($20\frac{1}{2}$) விஷ்ணுசக்கிரத்தைக் கூட வென்று மிக வெகுமானத்துடன் புகழ்ந்து கொண்டாய். (21) மகா பராக்கிரமமுடைய கவிராயரால் 'கூட' என்றமொழி நன்குபயோகிக்கப்பட்டது. சத்துருக்களால் ஸகிக்கமாளாதவச் சக்கிரத்தினுடைய மகிமையைக்கேள். (22) தக்ஷயாகத்தின் யுத்தமுனையில் ஜயசாலியான விஷ்ணுவால் முந்தி வீரபத்திரன்மீது பிரயோகிக்கப்பட்டவச் சக்கிரமானது, ஓரிடத்தும் பழுதுபெறுததாயினும் (23) அவர் பூண்டிருந்த சிரமுண்டமாலையி னோர்முண்டந்தலையால் விழுங்கப்

படலாயிற்று. (23½) மேலும், பூர்வத்தில் விஷ்ணுவால், தேவர்களு டைய சபையில் ஓர் முக்கிய கணமாகிய பூதத்தின் மார்பின்மீது அச்சக்கிரமானது பிரயோகிக்கப்பட்டபோது, கண்ணுற்றமாத்திரத்தி லது மூனை மழுங்கி ஓர் துரும்பாக மதித்து அப்பூதத்தால் பக்ஷித்துவிடப்பட்டது.(25) இன்னமும், முந்தியோர்தடவையச் சக்கிரமானது, ததீசமுனிவர துடலெலும்பி லடிபட்டமாத்திரத்திலதன் கூர்வாய்கள் சிதறலுற்றதாயிற்று. அவ்விந்தச்சக்கிராயுதமானது உன்னாற் கொண்டாடப்பட்டது. (26) நம்முன்பாகவுனது சௌரியத்தைப்பற்றி யிவ்வாறெல்லாம் புகழ்ந்துகொண்டாயல்லவா? இப்படிப்பிதற்றுகின்றவுன்னை யிப்போதோர்க்ஷணத்துக்குள், சண்டையில் நமது வேலினாற் றுணுக்குத் துணுக்காய்ச் சித்திரவதை செய்வதாக நமது மலரடிமீது சபதம் செய்கின்றோம். (27½)

நாற்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் சங—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஸ்ரீகுமாரமூர்த்தி யிப்படியுரைத்த மாத்திரத்தில் தாரகன் கோபாவேசங்கொண்டவனாகி மிகவும் வலிமைகொண்டதும், பெரிதுமான தனுசையெடுத்து நாணேறிட்டு (1) மிகுந்த நாணோசையினால் பத்துத் திக்குகளையும் நிரப்பி சுவாதிநக்ஷத்திரத்தில் சுக்கிரன் சேரும்போது மேகம் பொழிவதுபோல் பாணங்களைப் பலவாறாகச் சொரிந்தான். (2) அச்சரமாரியா லோர்நொடிக்குள் ளெல்லாத்திக்குகளும், சூரியமண்டலமும் மறைக்கப்பட்டன. அப்போது வானத்தினின்றெங்கும் கொள்ளிக்கட்டைகளும், நக்ஷத்திரங்களும் விழுந்தன. (3) சமுத்திரங்களெல்லாம் கொந்தளித்தன. பூமியும் நடுக்கமுற்றது. ஸ்ரீகந்தபிரானும் பெரிய தனுசையெடுத்து நாணோசையாலெங்கு மொலிக்கச்செய்து (4) பாணங்களால் மிக கொரமானவச் சரமாரியையும் விலக்கிவிட்டனர். (4½) பிறகு தாரகனும் கிருஷ்ணஸர்ப்பங்களுக்கு நிகரான பத்துலக்ஷம் சரங்களை யாக்கிரகத்தோ டாகுமாரன்மீது பிரயோகித்தான். (5½) அம்மகாவீரன்வற்றையு மக்ஷணத்திலே வணக்கமுற்ற கணுக்களையுடைய பத்துலக்ஷம்பாணங்களா லொழித்துவிட்டனர். (6½) பிறகு தாரகனும் புன்னகைப்புற்றவன்போல் தனதுபெயர் முத்திரைகொண்ட பத்

துபாணங்களைச் சுருக்காய்க் கந்தன்மீது சந்தானித்தான். அப்போது பிரபுவும் போர்க்களத்தில் விளையாடியவர்போ லவைகளை நீக்கினர். (8) பிற்பாடஹங்காரங்கொண்ட சூரனான தாரகன்சாரதியை யுரைத்ததாவது:— "அடா! சாரதி! யாமிப்போது போர்க்களத்தில் சண்டைசெய்ய வாசை கொண்ட, சங்கரசுதனோடு சமரலீலை சாதிக்கின்றோம்; நீ அசுவங்களை வலசாரி யிடசாரியாய்ச் செல்வித் துனது சாமர்த்தியத்தை யெமக்குச்சரிகாட்டுவாய்;" (10) என, சாரதியுமப்படியே பாக்கியமென்று அவனது குதிரைகளை யோட்டினன். குதிரைகளும் வலசாரி யிடசாரியாகக் காகரவென்றதிவேகமாகச் சுற்றலுற்றது. (11) யுத்தத்தில் ஜயசீலனான சரவணபவனும் சாரதியாகிய வாயுதேவனை நோக்கியுரைத்ததோ வென்றால்:— "கேளீர்! வாயுதேவனே! நமது ரதத்தையும் நீர் சற்றுநேரம் மண்டலாகாரமாகச் சுற்றுவிப்பீர்" (12) என, மிக புத்திசாலியான வாயுசாரதியு மதிசீக்கிரத்தி லிலக்ஷம் குதிரைகளையும் அசுரனிரத மிடசாரியாகச் சுற்றுகையில் வலசாரியாகவும், அது வலமாகச் சுற்றுகையி லிடமாகவும் மனோவேகமாக வோட்டினர். ($13\frac{1}{2}$) இவ்வாறாகப் பிரபுவினுடைய ரதமும் அசுரன் ரதமு மொன்றோடொன்று சுற்றுகையில் (14) யுத்தத்தைக்காக்ஷிபெறக் காதல்கொண்ட, சித்தர்கள், சாரணர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள் இவரெல்லோர்களும் மிகுதியான மலர்களைக்கையிற் கொண்டவர்களாக வானமெங்கும் மறைத்து நின்றார்கள். (15) பிறகு தேவப்பிரபுவும் அசுரப்பிரபுவும், துரிதமாக வில்லெடுத்து எங்குமொலிப்பிக்கும்படி குணத்தொனி செய்து கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அவன்மீதிவரும், இவர்மீதவனு மொருவரோடொருவர் கைச்சுருக்குள்ளவர்களும், வெற்றியை விரும்பியவர்களுமாய்ச் சரமாரி பொழிந்துகொண்டார்கள். ($16\frac{1}{2}$) சினத்தினாற் கண்கள் சிவக்கலுற்ற தாரகன் தேவர்களுக் கபயமளிக்கலுற்ற பிரவுவையும், பூமியையும் வானத்தையும் பாணங்களா லொரேமுட்டாய்ச் சடிதியில் நிரப்பிமறைத்தனன். ($17\frac{1}{2}$) தர்ப்பப்புல்லின் நுனிபோன்ற தீக்ஷணியமுள்ளபுத்தியுடையவரும், மிகபிரதாபமுடையவரும்,கைச்சுருக்குள்ளவருமான ஹரகுமாரனுமவையெல்லாவற்றையும்விரைவாகப்பறக்கவடித்து, ($18\frac{1}{2}$)பின்னரோர்சரத்தினலர்த்திகளுக்குப்பூரிதாதாவும்,(இரப்போர்களுக்கு மிகுதியாய்க்கொடைகொடுப்போர்)பிரத்தியர்த்திகளுக்கும் பூரிதாதாவு(சத்துருக்களை மிகத் துண்டிப்போர்)மாகிய ஸ்ரீமகாபிரபுவானவரசுரனுடைய வில்லைத்தானம்(கண்டனம்)செய்தனர். ($19\frac{1}{2}$)பிறகத்தாரகன் முறிந்தவில்லையெறிந்துவிட்டுவேறுதிடமான வோர்வில்லை (20) விரைவினிலெடுத்து அ

னேகமாயிரம் பாணங்களைத் தொடுத்தடித்தனன். பிறகு சரவணபவனும் சிலவம்புகளா லவைகளையி லகுவாய்த்தொலைத்துவிட்டு(21) பின்னுமில க்ஷபாணங்களால வனதற்புதமான வித்தனுசையும் சேதித்துத் திரும்ப வும்சில மகிமைபொருந்திய சரங்களால் தாரகனது மர்மஸ்தானங்களிலடி த்து நோகப்பண்ணினர். (22) மேலும் சிங்கக்குட்டிபோன்ற விக்கிரமத் தையுடையவப் பாலகுமாரனிரண்டேபாணங்களா லவனது துதிக்கை யையு மிரண்டு கொம்புகளையும் துணுக்குத்துணுக்குகளாக வறுத்துத் தள்ளினர். (23) அதனால் தாரகன் மிகவாக்கிரகங்கொண்டு கிருஷ்ணசர் ப்பங்கள்போன்ற பலபாணங்களால் பிரபுவினுடைய விரதத்தினின்று அதன் துவஜத்தை வேறாகத்துண்டித்தது மிக வாச்சரியம்போலாயிற் று. (24) ஸ்ரீவடிவேலனு மெட்டுப்பாணங்களாலவனது வில்லைக்கண்டித் து பிறகு ஆயிரம் பாணங்களால் ஸாரதியையும் கொன்றுவிட்டனர். (25) அதன்மேல் மகா பலவானாகிய தாரகனும் தானே குதிரைகளை நடத்திக்கொண்டு பொற்பட்டங்கள் கட்டப்பெற்ற மற்றோர் வில்லை யெடுத்து(26) ஆயிரம் சரங்களைச் சந்தானித்து ஸ்ரீஷண்முகனுடைய சா ரதியாகிய வாயுதேவனை நோகப்பண்ணினான்; அதனாற் கந்தன் சினங் கொண்டு (27) கைச்சுருக்கின்பேரில் தாரகன்மீது நூறுபாணங்களைப் பிரயோகித்துப் பிறகு ஆயிரம் நாராசபாணங்களை வில்லிற்பூட்டி யவனது நெற்றியிலடித்தனர். (28) அவ்வாறாக நெற்றியிலடிபட்ட மாத்திரத்தி லசுரன் மிகவும் மூர்ச்சைகொண்டனன். அதைக்கண்டு மற்றோர்சாரதி வந்து அவனது தேரைப்போர்முனையைவிட் டப்புறமோட்டிப்போயி னன். (29) பிறகு மகாரதர்களாகிய தாரகனுடைய வீரரெல்லோர்களு ம் அனேகங்களான மற்ற சைனியங்கள், யானைகள், குதிரைகள் இவை களோடு வளைந்துகொண்டு (30) பாணங்கள், பல்லாயுதங்கள், விபாடங் கள், கைக்கத்திகள், அனேக சஸ்திரங்கள், ஆகாயத்தையளாவிய மலை கள், மரங்கள் இவைகளைச் சொரிந்தார்கள். (31) ஸ்ரீ தேவாதி தேவனு டைய குமாரன் மிக விளமைத் திருமேனியுடையோராயினு மசுரர்களா கிய மேகங்களினின்று பொழியலுற்ற சரமாரியை விளையாட்டாக வில க்கி (32) யவ்வெல்லோர்களையு மியமனாகிய வில்லறத்தோனுக்கு விரு ந்தினர்களாக்கினர். அதற்குள் மிகமூர்ச்சைகொண்டிருந்த தாரகன் களை தெளிந்தெழுந்து (33) கோபத்தினாற் பரவசங்கொண்டு தனதுசா ரதியை 'சீ! சீ யென்றுதிட்டி சைனியங்கள் யாவுமடிபட்டு மாண்டும் மகாவலிமையாய்ச் சடிதியிலெதிர்த்து (34) நேர்நோக்கிநின்று, சண்டை யில் தன்படைகள் மாண்டுபோனதினாற் சினத்தாற் கண்கள் சிவக்கலு ற்றவனாகி ஸ்ரீ ஹரகுமாரன்மீது பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகம்பண்

ணிவிட்டனன். (35) ஓரிடத்தும் பழுதுபெறாததும், ஊழிகால்க்காற்றுக்குச் சமனாகியதும், மகா பெருமை பொருந்தியதுமானவவ் வஸ்திரமானது தாரகனுடைய வில்லினின்று கிளம்பி, (36) துரிதமாயடிக்கடி கந்தபிரானுக்கு வந்தனம் பண்ணிக்கொண்டே யண்டையிற் சென்றவுடன் ஜகத்குருவாகிய முருகனைத் துதிசெய்தது. (37) பின்னுமசுரனா லேவப்பட்ட ஆக்கினேயாஸ்திரம், யாமியாஸ்திரம், ஐந்திராஸ்திரம், வாருணாஸ்திரம், ஸௌராஸ்திரம், ஆஸுராஸ்திரம், காந்தர்வாஸ்திரம், யாக்ஷாஸ்திரம், மிககடோரமும், சத்துருக்களைக் கொல்லலுற்றதுமான ஸம்மோஹநாஸ்திரம் (38) இவையெல்லாம் போர்முகத்திற் தேவனிடஞ் சென்று மூர்த்திகரித்தஞ்சலி செய்து சிஷ்டர்களாற் பூஜிக்கப்படலுற்ற ஸ்ரீ ஜகதீசனைத் தோத்திரங்கள் செய்தன. (39) பிறகவ்வசுரன் கோபத்தோடவைகளை 'சீ! சீ! யென்று திக்கரித்துரைத்து மகா மகிமை பொருந்திய திவியமான பாசுபதாஸ்திரத்தை மனதினாற்பூஜித்து (40) எல்லாவற்றையு மேககாலத்தில் நாசம் செய்யத்தக்கவவ் வஸ்திரத்தைத் துரிதத்தில் வில்லிற்தொடுத்தனன். புவனங்களுக்கீசுவரனான ஸ்ரீகுமாரசுவாமியோவென்றால் மிகக் கொரோமுள்ளதும், ஓரிடத்தும் பழுதடையாததும், அண்டச்சுவறளவும் புவனங்கள்மீதக்கினி ஜுவாலைகளை வீசலுற்றதுமானவவ் வஸ்திரத்தையும் யுத்தகளத்தில் விளையாட்டாகவே யோர் கையினாற்பற்றினர். (42) பிரம்மாஸ்திரம் முதலிய வெல்லாவஸ்திரங்களும் நிஷ்பலமாகிவிட்டபோது அசுரன் மகா கோபாவேசம் கொண்டவனாகி ஸாரதியை நோக்கி யுரைத்ததேதோவென்றால்:— (43) "அடா எனது சேனைகளது அனீகங்களையெல்லாம் பக்ஷிப்பதற் கேற்பட்ட சமயசத்துருவாகிய ஸாரதியே! போர்க்களத்தி லொருவராலும் ஜயிக்கமுடியாதவிச் சத்துருவை யவமானப்படுத்துவதற்கும், (44) இந்திரன்முதலிய தேவர்களின் கர்வத்தைப் பங்கப்படுத்துவதற்கும் சீக்கிரத்திலெனது ரதத்தை மறுபடியுமடிக்கடி யிடசாரி வலசாரியாய்ச் சுற்றிவிடு. (45) மாயையின் மைந்தனாகிய தாரகனது கட்டளையின்படி ஸாரத்திய விதிகளை நன்கறிந்த ஸாரதியானவன் சீக்கிரத்திற் குதிரைகளை நடத்தி (46) கால்க்ஷணத்துக்குள் ளம்மகாரதத்தைப் பம்பரமாகக் கரகரவென்று சுற்றுவித்தனன். அசுரனிவ்வாறு சுற்றும்போதே பொன்மயமான வடிப்புறங்களை யுடையதும், மனோரம்மியமானதும், (47) கழுகிறகுபூண்டதும், தீக்ஷணியமான முனைகளையுடையதும், மிக தார்ட்டியமுள்ளதும், வணங்கிய கணுக்களையுடையதும், கிருஷ்ணசர்ப்பங்கள் போன்றவையுமானபாணங்களைச் சடிதியிற் கோடிகோடியாக வருஷித்தனன். (48) அவன்பா

ணங்களை யம்பாறாத்தூணியினின் றெடுப்பதும், வில்லிற்றொடுப்பதும், ச டிதியில் விடுவதுமொருவராலும் குறிப்பிடக்கூடவில்லை. (49) தாரகன் கையில்வில்லைப்பற்றிக்கொண்டு ஊழிகாலமேகம்போற் கர்ச்சனைபண்ணி ச்சரமாரி சொரிவதனலெட்டுத் திசைகளையும், ஆகாசமண்டலத்தையும் நிரப்பி மறைத்தனன். (50) ஸ்ரீ குமாரமூர்த்தியுடைய ஸாரதியான வாயு தேவனும், முந்திப்பிரபுவால் கட்டளையிடப்படாதவராயினும் வீட்டினி ல் தீப்பற்றுகையில் மூர்த்தனியமாய்க் கூடுவதுபோல் தானகவே மனே வேகமுண்டய விலக்ஷம் தேர்க்குதிரைகளையும் மண்டலாகாரமாகச் சுற்று வித்தனர். (51½)

நாற்பத்துமூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் சச—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிறகு ஸ்ரீ மகா சேனரானவர் மகாமேரு மலைபோன்ற வில்லை யெடுத்து நாணேற்றிட்டு குணத்தொனியா லெட்டுத் திசைகளையும் சத்திய லோகம் பாதாளலோகம் முதலியவைகளையும் நிரப்பிச் செவிடாக்கி(1½) தாரகாசுரனகிய மேகத்தினல் சொரியப்பட்ட சரமாரியை யடக்கிவிட்டு (2) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! மகா சாமர்த்தியசாலியான ஸேனனியானவர் ரதத்தின்கண் வீற்றிருந்து மிகவும் துரிதமாகக் காகா வென்று சுற்றி யருளினர். கோலாஹலமான விப்போர் முழக்கத்திலா காசத்தின்கண் ணிடைவெளியின்றி போர்க்காக்ஷி கொள்வதற்கு லக்ஷி யங்கொண்ட யக்ஷர்கள், சாரணங்கள், கந்தர்வர்கள், சித்தர்கள் இவர்க ளால் நிரம்பப்பட்டது. (3½) பிறகு ஸ்ரீ குமாரனுக்கும் தாரகனுக்கும் மிக கொரமானதும், இருதிறங்களும் நெருங்கியதாற் பெருங்கூட் டமுள்ளதும், மயிர்க்கூச்ச லடைவிக்கப்பெற்றதும், உவமையற்ற தும், குறிப்பிடத் தகாததுமான வ்யுத்தமுண்டாயிற்று. (4½) குமார னுக்கும், தாரகனுக்கும் நடந்த வ்யுத்தத்திற்கீடு குமாரனுக்கும் தாரக னுக்கும் நடந்த யுத்தமேயாம்.(5) ஒருவருக்கும் வெற்றியாவது தோ ல்வியாவ துண்டாகவில்லை. கந்தன் கெலிக்கும்போதெல்லாம் தேவர்க ள் பளா! பளா! வென்று மெச்சினர்கள். (6) சித்தர்கள், கந்தர்வர்க ள், கின்னரர்கள் இவரெல்லோர்களும் பூமாரி சொரிந்தார்கள். மற்றவ

ன் கெலித்தபோது அசுரர்கள் அவனை மெச்சினார்கள். (7) ஸ்ரீ சிவன் செல்வன் சகல சராசரப் பிரபஞ்சங்களையு மோர் சடிதியிற் சமுகரிக்கச் சத்துவமுடையோராயினும் ஸ்ரீபாலனான வேலன் கேவலம் லீலாவினோ தார்த்தமாக வசுரனுடனப்போதைக் கப்போ தெதிர்க்கெதிராகமட்டி ற்பதில் செய்துகொண்டு (8) விளையாட்டுக்கிடமாக வுலகினிலொப்பில்லா தபடி கலகமாடினர். முந்தி ஸ்ரீ சம்பு புத்திரனாற் துண்டிக்கப்பட்ட து திக்கையும், கொம்புகளு (9) மீசனது வரமகிமையினால் பின்னுமுண் டாயின. அதனால் பிரபு மிக வாக்கிரகங் கொண்டு மறுபடியும் துதிக் கையையும், கொம்புகளையு (10) மறுத்தெறிந்தனர். பின்னுமவைகள் துண்டிக்கத் துண்டிக்க வுடனுக்குடனே யதிசீக்கிரத்தில் முளைத்து விரு த்தியாயின. இவ்வாறாகத் துதிக்கையும் கொம்புகளும் ஸ்ரீ ஸேனானியா ற் பலவாறறுக்கப்பட்டபோது (11) மாயாவியாகிய வம்மகாவசுரன் மா யையால் வெல்வதற்கெண்ணமுற்றுப் பிரபுவானவர் பார்த்துக்கொண்டி ருக்கையிலே அசுரன் விமானினில் தேரோடு கிரௌஞ்சமலைக்குள் மறை ந்துவிட்டனன். (12) மிக துராத்துமாவும், லோககண்டகனும், மாயை யில் மகா தேர்ச்சியுடையவனுமாகியவத் தாரகனக் கிரௌஞ்சனோடு சேர்ந்து பல மாயைகளைச் செய்தனன். (13) உடனே யக்கிரௌஞ்ச ன் எஃகு மயமானதும், வெள்ளிமயமானதும், பொன்மயமானதுமான மூன்று பட்டணங்களாயினன். தாரகனே வித்யுன்மாலீ, தாரகாக்ஷன், கமலாக்ஷனாகிய திரிபுராசுரர்களாயினன். (14) அப்போதே ஸ்ரீ சம்பு மைந்தன் திரிபுரமெரித்த பரமேசுவரனாகி பூமியாகிய தேரில் வீற்றிரு ந்து ஓர் புன்னகைப்பு மாத்திரத்தினா லவ்வெல்லாவற்றையு மெரித்து விட்டது மிகவு மாச்சரியம்போலாயிற்று. (15) பிறகு கிரௌஞ்சன் மேகமாகவும், தாரக னிடியாகவு மாயினர்கள். உடனே ஸ்ரீ ஜகதீசன் சண்டமாருதமாகி யவற்றை நாசமாக்கினர். (16) பிறகம்மலை கடலாக வுருமாறினன். தேவர்களுக்குச் சத்துருவான தாரகனும் வடவாக்கினியா கி யெரிந்தனன். (17) ஸ்ரீ புவனேசனுமவற்றை யுள்ளங்கை நீர்போல் விளையாட்டாக க் குடித்துவிட்டனர். அதன்மேலுடனே கிரௌஞ்சகி ரி(பூமியைச் சுற்றுமுள்ள) சக்கிரவாள பருவதமாகி (18) மற்றத் தாரக னு மிருளுலகாயினன். அவற்றையு முமாமைந்தன் கோடிசூரிய பிரகா சராகி தனது லீலையா லெரித்து நீக்கிவிட்டார். (19½) அதன் பிறகு கிரௌஞ்சன், இமயகிரி, நிஷதகிரி, விந்தியகிரி, மாலியவான், பாரியாத் திரகம், கந்தமாதனம், மகாகிரியான ஏமகூடம் ஆகிய விவ்வேழுகுல பரு வதங்களாயினன். மற்ற வசுரக்கேடனு மவனது மாயையினால் (21) ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம்

ஸார்வபௌமம், ஸுப்பிரதீகம் ஆகிய திக்கஜங்களாயினன். (22) இவ்வாறாகத் தாரகன் ஸ்ரீ குமாரனைப் பலவிதமாக மதிமயங்கச் செய்து மிகுந்த துன்பமளிக்கையில் மகா பராக்கிரமசாலியான ருத்திரகுமாரனும் துரிதத்தில் வச்சிராயுதத்தைப் பிரயோகித்து (23) அவ்வேழுகுல பருவதங்களையும் சேதித்து எட்டு திக்கஜங்களையும் சண்டையி லோடச் செய்தது மிகவு மாச்சரியம்போலாயிற்று. (24) பிறகவ் விருவர்களில் ஒருவன் மிகக்கொடியதான அக்கினியாகவும், மற்றவன் காற்றாகவு முருவமெடுத்தனர்கள். முருக னவற்றையும் மிக வாக்கிரகத்துடன் கால் க்ஷணத்திற் சாந்தமாக்கினர். (25) பிற்பாடு கிரௌஞ்சன், கோடி பிரளயகாலாக்கினியைப்போன்றவனும், தாரகன் ஆயிரம் பிரளயகால சூரியர்களைப் போன்றவனுமாகி யுத்தாங்கத்திற் சிவன் செல்வனை வஞ்சகம் செய்தனர்கள். (26) இவ்விருவர்களதொளிகளும் மூவுலகின்மீ தெல்லாத் திசைகளிலும் பரவின. பூமியெல்லாம் நடுக்கங்கொண்டது. எல்லாச் சமுத்திரங்களும் மிகவும் பொங்கிக் கொந்தளித்தன. (27) சகலதேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், சாரணர்கள், பூதபதிகள் இவரெல்லோர்களும் பயங்காளிகளாக வோடினார்கள். (28) அதன்மேல் சங்கர குமாரனும், வல்லமை யுடையோர்க்கெல்லாம் வல்லவனுமான சரவணபவன், ஸகல சத்துருக்களையும் நாசம் செய்யலுற்றதும், தனது சக்தியே இவ்வுருவங்கொண்டது போன்றதுமான சக்தியை (ஸ்ரீ வேலாயுதத்தை) ப் போர் முனையில், மாயாவியாகிய தாரகனுடையவும், கிரௌஞ்சகிரியினுடையதுமான வுயிர்களை வாங்குவதற்காகத் தமதெல்லா வல்லமையுடனும் பிரயோகித்தருளினர். (29-30) அவ்வேலானது ஓர் க்ஷணத்திற்குள் வானத்திற் சென்று, தன் னொளியினாற் திசையெங்கும் ஜாஜ்வலியமானமாய்ப் பிரகாசிப்பித்து விளங்கலாயிற்று. (31) மூவுலகுகளையும் நக்கி விழுங்கலுற்ற, பிரளயகாலாக்கினியது நாவைப்போல் பொறிகளை க்கக்கலுற்றதும், மணிகளாலும், சாமரங்களாலு மலங்கரிக்கப்பட்டதும், (32) ஊழிகாலத்திய அனேகமாயிரம் மேகங்களினிடி முழக்கம் போன்ற சத்தமுடையதும், பார்க்கலுற்ற சகல தேவர்களுடையமனோபீதியையும் தொலைப்பிக்கலுற்றதுமான (33) அவ்வேலானது அரைநிமிஷத்திற்குள்ளாகத் தாரகனது கற்பாறைபோன்ற மார்பையும், கிரௌஞ்சகிரியையும் பிளந்து, சகல புவனங்களையும் மோகிப்பிக்கலுற்ற வம்மாயைகளையும் சடிதியிற் சமுகரித்து, (34) முந்திக்கொல்லப்பட்டது போக பாக்கி நின்ற அவனது சேனைகளையு மொரோ தடவையி லோர் நொடிக்குள் மடித்துவிட்டது. ($34\frac{1}{2}$) மகா சாமர்த்தியசாலியும் அசுரர்களை யதம்செய்வோருமான கார்த்திகேயன் அசுரனது மாயையினுச்

கிரௌஞ்சபருவதத்தினுள் மோகத்தினால் மயங்கி நின்ற வீரபாகு முத லியோர்களை விரைவாக வெளியிலழைப்பித்தனர். ($35\frac{1}{2}$) அவர்கள் தூங் கி யெழுந்திருப்பொரைப்போல் சுவபாவத்தின்படி தேகச் சந்திகள் சரி வரப் பொருந்தி யோர் க்ஷணத்துக்குள் ளெழுந்தனர்கள். ($36\frac{1}{2}$) தார கக்கிரௌஞ்சர்களின் சமுகாரகதையைப்பற்றிய மிக மங்களகரமான வி வ்வத்தியாயத்தைப் பக்தியுடன் நாள்தோறும் படிக்கின்ற அல்லது கே ட்கின்ற மானிட சிரேஷ்டனைக் கண்டமாத்திரத்திலவனது சத்துருக்கள் பயங்கொண் டோட்டம்பிடிப்பார்கள். (38) ஸ்ரீ விஷ்ணுவானவ ரிவ்வ த்தியாயத்தைச் சிரவணம் பண்ணியதால் மகா பலசாலியான ஹிரணிய கசிபு, ஹிரணியாக்ஷன், மிகவும் கொடியோனாகிய ஸோமகன் இவர்களை யெல்லாம் போரில் முறியடித்தனர். (39) பலராமன் ஜயிக்கமுடியாத பல சத்துருக்களையும், இந்திரன் கொடிய பாதகர்களான பல வசுரர்களை யு முயுத்தத்தில் வெற்றிபெற்றார்கள். (40) ஸ்ரீ பரமசிவ சுவரூபனும் பார்வதீ நந்தனருமாகிய கந்தன் சகல தேவர்கள், முனீசுவரர்கள், மானி டர்கள் இவர்களுடைய க்ஷேமார்த்தமாக அவர்களது கண்முன்னிலே யி வ்வண்ணமாகக் கொடியோனாகிய தாரகாசுரன், வெகு மாயாவியான கி ரௌஞ்சகிரி, இன்னும் மற்ற அசுரர்கள் இவரெல்லோர்களையும் வெகு லீ லாவிலாஸமாகவே யுத்தரங்கத்தில் நாசம் செய்தனர். (41)

நாற்பத்தினான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௪௫—வது அத்தியாயத்தினர்த்தம்

வேலாயுதமானது தாரகனுடைய மார்பினிற் பாய்ந்து கொஞ்ச மேனு மிரத்தப்பற்றுதலின்றி யூடுருவிப்புறம் செல்லுகையில் சமுத்திர த்தையதிகரித்த வோர் சத்தமுண்டாயிற்று. (1) அவ்வேலானது தா ரகனுட்புகுந்து சென்றதோ வில்லையோ வென்றொருவராலு மறியப் படவில்லை. ($1\frac{1}{2}$) ஆனாலவ்வசுரக்கேட னுயரக்கிளம்பிக் கிளம்பிப் பல தடவை துடித்துக் கீழேவிழுந்து உயிரைவிடும்போதுதா னெல்லோர்க ளுக்கும் தெரியலானது மிகவுமாச்சரியம். (3) வேலினால் தாரகன் அ தம்செய்யப்பட்டதைத் தேவர்களும் முனீசுவரர்களும் கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் ஸ்ரீ தேவன்மீது மலர்களைச் சொரிந்தார்கள். (4) சக ல முனிவர்களும் ஜயாவிஜயீபவாவென்று பாடிக்கூத்தாடினார்கள். வீ

ரபாகுமுதலிய நவவீரர்களும், இலக்ஷம் கணாதிபர்களும், (5) ஐம்பத்தி னான்கு தளகர்த்தர்களு மஞ்சலிகொண்டு ஸ்ரீ பிரபுவருகிற் சென்று (6) அவர் முன்னிலையிற் புலன்களும் மனதும் குளிர்ந்தவர்களாகிச் சுற்றிலு ம் நின்றார்கள். ஸ்ரீ சங்கரகுமாரனும் மிக சந்துஷ்டியுள்ளவராகியவ் வெ ல்லோர்களையும் திருக்கண்ணுற்றுந் திருவாக்குரைத்ததாவது:— (7) "வாரீர்! பரமசூரர்களே! நீங்களசுரக் கேடர்களால் மிகவும் துன்பமடை யப் பெற்றீர்கள். இப்போது தெய்வானுகூலத்தினால் மிகவும் பெரிய வச் சங்கடத்தினின்று விடுபட்டீர்கள். (8). வாரீர்! புவனங்களைக்காக்கு ம் வீரர்களே! நீங்கள் நமதருளினால் ஸுகமாயிருங்கள்" என, அவர்கள் உத்தரம் சொல்லியதாவது.— "ஓ! பிரபுவே! ஸாக்ஷாத் ஜகதீசனாகிய தேவரீரிருக்கையி லெங்களுக்கு (9) குறைவேது? துன்பமேது? ஹா னியேது? ஓ! தயாநிதியான ஜகதீசா! தேவரீரது செந்தாமரைத் திரு வடிகளை நாடியோர்களுக் கேது நானஸாத்தியம்"? (10) என்று சொ ல்லியவெல்லோர்களையும் அசுரர்களையடியோடு முடிப்போரான தயாநிதி யானவர் மிகவும் சந்தோஷித்து வீரபாகுவை யருகிலழைத்து (11) துரா த்துமாவாகிய தாரகாசுரனால் முந்தி பிரயோகிக்கப்பட்டுத் தம்கையாற் பிடிக்கப்பட்டிருக்கிற உலகினிற் பழுதடையாத திவ்யமான பாசுபதாஸ் திரத்தை யவருக்கீந்தருளினர். (12½) அப்போது கற்பகவிருக்ஷ மலர்க ளின் மாரியானது பொழியலுற்றது. (13) தேவதுந்துபிகள் முழக்கப் பட்டு வானமெல்லாமொலியால் நிரம்பலுற்றது. முனிவர்களும், சித் தர்களும் நர்த்தனம் செய்தார்கள். கின்னரஸ்திரீகள் கானம்செய்தார் கள். (14) அப்போது இந்திரன்முதலான தேவரெல்லோர்களும், சூர பத்துமனும், சிங்கமுகனும் ஸ்ரீசுப்பிரம்மணியசுவாமியினுடைய வோர் லீலாமாத்திரத்தினால் மாண்டுபோனவர்களாகவேயெண்ணினார்கள். (15) ஸ்ரீஜகதீசனவர்களுடைய களிப்பையும் திருக்கண்ணுற்றுப் போர்க்களத் தைவிட்டு இமயகிரிக் கெழுந்தருளினர். (16) பிறகு சத்துருக்களைத் தொம்சம்செய்கின்ற ஸ்ரீ ஸேநாநியானவர் ஸகல தேவர்கள், கணாதிபர் கள், சேனைகள் இவர்களுடனங்கோஷதிப் பிரஸ்தத்தில் தங்கிப் பாட்டனா கிய பெயர்போனவக் கிரிராஜனை வந்தனித்துச் சீக்கிரத்தில் விடைபெற் றுக்கொண்டு அதன்மேல் தேவகிரிக்குச் சென்றருளினர். (17-18) அ த்தருணத்திலவரது கட்டளையின்படி சூரியனஸ்தமனமாயினன். அப் போது பிரபுவானவரத்தேவகிரிக் கனுக்கிரகமளிக்கத் திருவுளங்கொண்டு (19) தமதுசதுரங்க சைனியங்களையுமங்குநிறுத்திமகாரதனாகிய ஸ்ரீசிவன் செல்வன் மகிமைபொருந்திய ரதத்தினின்றங்கு (20) ஸாயங்காலானு

ஷ்டானங்களை முடித்துக்கொண்டு அத்தேவகிரியா லதிதிபூஜைகள் செய்யப்பட்டவராகி மகா சந்தோஷத்துடன் அவ்விரவி லங்கு வசித்தனர். (21) பிறகு தேவர்கள், அடியார்களுக்குச் சகல ஸித்திகளையு மளிப்போரும், சங்கரனுக்குப் புத்திரனுமாகிய வப்பிரபுவிடத்து வந்து வந்தனித்து விண்ணப்பம் செய்துகொண்டதாவது:—(22) "ஓ! சருவகுண ஸம்பூர்ணராகிய பிரபுவே! தேவேசா! கந்தா! ஸேநாபதியே! தேவரீ ரிவ்விரவி லிங்கு தங்கியருளல் வேண்டும். (23) ஓ! அளவற்ற மகிமைகளுக்கு மிருப்பிடமாகிய பகவானே! நாங்கள் தேவரீரைப் பூஜித்து அதனாலுண்டாகிய மனத்திருப்தியைப் பெறுவதற்குக் காமுருகின்றோம்; அதற்கனுமதி தந்தருளல் வேண்டும். (24) பிறகடியார்களுக் கதீனராகிய முருகனத்தேவர்களுக்குப் பிரசன்னராகி யவர்கள் தம்மைப் பூஜை செய்யும்படி விடைகொடுத்தருளினர். (25) அதன்மேல் விஷ்ணு, பிரம்மன் முதலிய தேவரெல்லோர்களும் ஸ்ரீ ஜகதீசனுக் காலயம் கட்டுவதற்காக மிக நேர்த்தியான சில்பவேலைகளிற் தேற்சிபெற்ற விசுவகருமனை யழைத்து (26) "வாரீர்! விசுவகருமாவே! இத்தேவகிரியிலே ஸ்ரீ சங்கரகுமாரனுக்காக மிக சிரேஷ்டமும், மிகுதியான காந்திகளால் நிறையலுற்றதும், இந்திரத் துவஜங்களால் விளங்கியதுமானவோர்பட்டணத்தையமைத்தல்வேண்டும்.(27)அதில்கணங்களுக்கும்கணத்தலைவர்களுக்கும்வசிப்பதற்குமிகவும்தகுதியான,பருவதத்தின்கொடுமுடிகள்போன்ற வீடுகளையும் ஸ்ரீ ராஜாதிராஜனுடையசெல்வனுக்கும்,வசிப்பதற்குத் தகுதியுள்ளதும், மிக வற்புதமானதும், விசித்திரங்களான பல சித்திரங்களின் சோபைகளால் நிறைந்ததும், பற்பல வாலயங்களோடு கூடியதும், மிக வுயரமுள்ளதுமான வோரரண்மனையையும் (29) நமது கட்டளையின்படி யிப்போதே துரிதத்தில் அமைத்தல் தேவை" என்றனர்கள். பிறகு விசுவகருமனு மிவ்வண்ணமான, தேவச் சிரேஷ்டர்களுடைய கட்டளையைப் பெற்று அரைக்ஷணத்துக்குள் (30) ஸ்ரீ மகாதேவ தனயனுக்கு மிகவும் பிரியமுள்ளதான வோர் நகரத்தை மிக சாமர்த்தியமா யுண்டாக்கினன். விசித்திரமான பொன் மதில்களாலு மிரத்தின கோபுரங்களாலு மலங்கரிக்கப்பட்டதும், (31) ஆயிரம் மேன்மெத்தைகளுள்ள வுப்பரிகைகளையுடையதும், ஸகலவித விரத்தினங்களாலு மலங்கரிக்கப்பட்டதும், இலக்ஷம் வீதிகளால் நிறைந்ததும், பூப்பந்தல்களால் விளங்கியதும், (32) இரத்தினப்படிக்கட்டுகளா லலங்கரிக்கப்பட்டபலவாபிகள், கிணறுகள், குளங்கள் முதலியவற்றாற் சிறந்ததும், செந்தாமரை மலரின் சோபையைக் கொண்டதும், ஆயிரம் சூரியர்களி னொ

ளியுடையதுமான (33) வப்பட்டணத்தில் ஸ்ரீ தேவாதிதேவசுதனுகிய மகா ஸேனையும், வீரபாகு முதலிய சகல வீரர்களையும் தேவதுந்துபி, சங்கம், சிருங்கம் ஆகிய விவ்வாத்தியங்களின் முழக்கத்தோடு ஊர்கோலஞ் செய்வித்தார்கள். கணச் சிரேஷ்டர்க ளவரவர்களுக்குத் தக்கபடியுள்ள வீடுகளுக்குச் சென்றார்கள். (35) மரீசி, காசியபர், அத்திரி, வாக்குசா துரியமுள்ளோர்களில் மேன்மைபெற்ற ஸ்ரீ வஸிஷ்டர் ஆகிய விம்முனிவரெல்லோரும் வேதாகமப் பொருள்களை நன்கறிந்தவும், பூர்ணகும்பங்களைக் கைப்பற்றியோர்களுமான வின்னும் மற்ற பிராம்மணர்களுடன் (36) எல்லோர்களுமானந்த ஸுகத்தோடருகிற் சூழ்ந்துநின்று வேதமோதிக்கொண்டு பிரம்மன் விஷ்ணுமுதலிய தேவச்சிரேஷ்டர்களோடு மாற்றான்களைத் தோற்றுவிக்கலுற்ற பரமேசுவரன் செல்வனையவாது பெருமைக்குத்தக்கதான விரத்தினமாளிகைமீ தெழுந்தருளவித்தார்கள். (37½) தேவாதிதேவனுக்குச்சுதனும் ஜகத்பதியுமான ஸ்ரீ மகாபிரபுவும் வீரபாகுவால் கொண்டுவந்து வைக்கப்பட்ட மிக விசித்திரமான பாதுகைகளைப்பூண்டு உள்ளத்திற் களிப்புற்றவராக திருமாளிகைக்குள் ளெழுந்தருளி யங்கு நவரத்தினங்களால் நிறைந்த மிகவும் மேன்மைபொருந்திய சிங்காதனத்தை யலங்கரிப்பித்தனர். (39½) புவனங்களை யிரக்ஷிக்கின்றவும், சருவஞ்ஞனும், சகல ஜகங்களாலும் பூஜிக்கப்படுகின்றவும், ஸ்ரீ பரமேசுவர புத்திரனுமானவச் சரவணபவன் மிக நேர்த்தியான சிங்காதனத்தில் வீற்றிருக்கையில் தேவர்களுச்சிமீ தஞ்சமிகொண்டவர்களாகப் பற்பல துதிகளாற் களிப்பித்து (41) பிறகு ஸ்ரீ யீசானருடைய செல்வனுக்கு அர்க்கியபாத்தியம் முதலியவற்றாற் பூஜைசெய்தார்கள். மேலுமப்பிரபுவுக்குப் பரிவாரதேவதைகளான வீரபாகுமுதலிய நவவீரர்களையும் (42) தேவச்சிரேஷ்டர்கள் சிறந்த நூல்களிற்கூறிய விதிப்படி வரிசைக்கிரமமாகப் பூஜித்துத்தங்களாத்துமா கிருதார்த்ததைையைப் பெற்றுவிட்டதாக வெண்ணி (43) நிகரற்ற பரமாநந்தம் பெற்றுப் பிரபுவருகிலிருந்தார்கள். சகல ஜகங்களும் சரணமடையப்பெற்றவரும், விநோதகிருத்தியங்களைச் செய்தருளுகின்ற பார்வதீ பரமேசுவரர்களின் திருமகனுமான ஸ்ரீ குமாரசுவாமியும் (44) அப்போது, மிகவும் பெரிதானவத் தேவகிரியை, ஜகங்களுக்காதிப்பொருளான ஸ்ரீ சங்கரன் கைலைகிரியை வைத்துக்கொள்வதுபோ லன்றுமுதல் தமக்கு வாசஸ்தானமாக்கிக்கொண்டனர். (45) மிக விநோத கிருத்தியங்களைச் செய்தருளுகின்ற பார்வதிபரமேசுவரர்களின் புத்திரனும், அடியார்கள திடறுகளைத் தொலைப்பிக்கின்றவருமான வடிவேலன் ஸகல

கணாதிபர்களுடனும், தேவகணங்களுடனுமத் தேவகிரியைப் பிரியத்தோடு வாசஸ்தானமாக்கிக்கொண்டனர். (46)

நாற்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஸம்பவகாண்டம் சகூ—வது அத்தியாயத்தின் அர்த்தம்.

மகா பலசாலியும், தேவர்களால் துதிக்கப்படுவோனும், வஜ்ஜிராயுதத்தைப் பற்றியவனுமான குமாரசுவாமியால் கொடியோனான தாரகன் சகல சைனியங்களோடும் சமுகாரஞ்செய்யப்பட்ட (1) பிறகு ஸாக்ஷாத் ரதிதேவிபோன்றவளான கௌரியென்ற வவனதுமனையாளும், மற்றுமுள்ள வவன்பெண்டீர்களு மப்போர்க்களத்துக்குச் சென்று (2) மிகவும் துக்காக்கிராந்தர்களாக குரரி (அழுகுறலன்றி லென்றவோர் பறவை) யைப்போல் சேர்த்தியான சுவரத்துடனழுதனர்கள்:— 'ஓ! நாதனே! நாதனே! மூவுலகுகளினு மளவிடப்படாத விக்கிரமத்தையுடைய அசுரவாசனே! (3) எங்களெல்லோர்களையும் விட்டிப்போதெங்கு சென்றுவிட்டீர்; ஐயோ! இதென்ன காரணமோ! ஓ! சத்துருக்களை நாசஞ்செயலுற்ற நாதனே! நாங்களிப்போதே சீக்கிரத்திலக்கினி மார்க்கமாக (4) வுமதண்டைக்குவந்து உமதூழியக்காரிகளாகின்றோம். ஓ! கோகோ! இப்போது தேவரெல்லோர்களும் நிர்ப்பயர்களாக விருக்கலாயிற்றே! இப்போது மைத்துனராகிய சூரபத்துமன் செத்தவர்போல்தான்! (5) இப்போது சிம்மமுகனும் ஸகல பந்துவர்க்கங்களுடனும் மாண்டவரே! யென்பது நிச்சயம். உம்முடைய யாதொரு உறுதியான மார்பின்மீது விஷ்ணுசக்கிரம் கூட மோதப்பட்டு விழுந்ததோ அப்பேர்க்கொத்த மார்பை ஓர் வாலிபனுடைய வேலானது எவ்வாறு பிளந்து உயிரையும் வாங்கிற்றோ? யாதொரு மார்பினில் பிரம்மசிராஸ்திரமானது விசைகொண்டு மோதியதால் முனைமுறியலாயிற்றோ! (7) தேவேந்திரனுடைய வஜ்ஜிராயுதமானது மழுங்கலாயிற்றோ! அது ஓர் சிறுவனாலெவ்வாறு பிளக்கப்பட்டதோ!!" என்றிவ்வாறாகப் பெண்டீர்கள் தீனஸ்வரத்துடன் பலவிதமாய்ப் புலம்பியழுது (8) பிரேதசரீரத்தைத் தங்கள் மடிமீதெடுத்துச் சுற்றுமிருந்து வியாகூலமுற்று, துக்காக்கினியாற் கொதிக்கின்ற மார்பின்மீது கண்ணீர்மாரிகளைச் சொரியவிட்டார்கள் (9)

அசுரன் பெண்டீர்கள், மாயாபுரியினின்று வந்திவ்வண்ண மழுதுகொண்டிருக்கையில் 'இத்தாரகனுக்கு மைந்தனுன வசுரேந்திர னென்று பெயருடையசிம்மத்தின்பராக்கிரமத்தைப்போன்றவிக்கிரமத்தையுடையவசுரச்சிரேஷ்டனுனவன்யானை, குதிரை ரதங்கள்முதலிய தளங்களோடுகூடாதத்தின்மீதேறிக்கொண்டுசிங்கமுகன துநகரத்தினின்றுதற்செயலாக வானுற்ருன்(10-11)தந்தையைப்பார்க்கவிருப்பமுற்றுத்தன்னிச்சையாகத்துரிதத்தில் வருகையிலவன் நடுப்பாதையிற் றந்தையது விருத்தாந்தத்தைக் கேட்டு மனமொடிந்தவனுகி (12) ச்சீக்கிரமாய்ப் பட்டணத்துக்குவந்து அடியற்ற மரம்போல் விழுந்து ஒப்பாரி வசனங்களாற் புலம்பிக்கொண்டு வாசலில் விழுந்து (13) ஒரேதுணியோ டானந்தமிழந்து சிண்டவிழ்ந்து தரைதனிலுருண்டு புறண்டனன். அவன் புலம்பியதோவென்ருல்:— "ஐயோ! அண்ணு! ஐயோ! அசுரேந்திரா! ஓ! உலகையெல்லாம் தவிக்கவடிக்கவல்லவரே! யெங்குசென்றுவிட்டீர்? (14) உம்முடைய யாதொரு மார்பானது விஷ்ணுவின் சக்கிரத்தாலும், இந்திரனது வஜ்ஜிராயுதத்தாலு மலங்கரிக்கப்பட்டதோ, அம்மார்பானது இம்மூலையுண்கின்ற பாலகனுடைய வேலாயுதத்தா லெவ்வாறுதான் பிளக்கப்படலாயிற்ரே? இதையொத்த மிகுந்தவிந்தை தாணிமீதில்லையே! ஐயோ இதென்ன கஷ்டம்!" (15½) என்று புலம்பி பெண் கூட்டங்களால் நிறையப்பட்ட போர்க்களத்துக்கு மெல்லச்சென்று(16) அடிபட்டுப் பூமியில் விழுந்துகடக்கின்ற தகப்பனை நோக்கித் தாய்மார்களுக்கெல்லா மதிகதுக்கம் ஜனிக்கும்படி மிகவும் பிரலாபித்தான். (17) "ஐயோ! இப்போது ஸகல தேவர்களிலும் அக்கினிக்கு, உமது சரீரத்தைத் தகிப்பதனுல் வயிறு குளிரலாயிற்றே! இப்போதிந்திரனுக் கிந்திராணி பெண்டீராகவும், மற்றப்படி சுவர்க்கத்தில் வசிப்போர்க்கெல்லாம் அப்ஸரஸ்திரீகள் வாய்த்துவிடவுமாயிற்றே!(18) ஐயோ! இப்போது இந்திரன் முதலிய தேவரெல்லோர்களும் மகா சுகிகளாகிவிட்டார்களே! சுவர்க்கமுமவர்களது நகரமாகிவிடுமே! ஐயோ! இப்போது சிங்கமுகனும், சூரபத்குமாசுரனும் (19) ஆசையற்று நாசமடைந்தவர்கள்போ லானுர்களே! அவர்களது வலதுகை முறிந்துபோயிற்றே!" என்று மிகவும் பரிதாபப்படும்படி பத்துத்திக்குகளையும் நோக்கி நோக்கிப் பலவாறுகப்புலம்பி (20) கையோடு கைபிசைந்து பற்களை நறநறவென்று கடித்து உதடுகளையும் மடித்துக்கடித்துக்கொண்டு கோபத்தினுற் கண்கள் சிவக்கலுற்று அடிக்கடி சிரித்துக்கொண்டும், (21) அடிக்கடி "நல்லதிருக்கட்டும்" எனவுரும்பி மார்தட்டிக்கொண்டும், அகில், தேவதாரு, சந்தனம்முத

விய வாசனைக்கட்டைகளாலமைத்த சிதையிற் தந்தையை யேற்றுவி த்து (22) அதிலுடன்கட்டையேறிய, கணவனையே தெய்வமாகக்கொ ண்ட கௌரீமுதலிய தாய்மார்களையும் தந்தையையும் தகனம்பண்ணிப் பின்னுமுள்ள வவர்களது பிரேதகிருத்தியங்களை (சாவுக்குரிய சடங்கு) முறைப்படி முடித்துவிட்டு (23) நகரத்தினின்று சதுரங்க சேனைகளு டன் துரிதமாகப்புறப்பட்டு, மதிக்கலக்கமுற்றவனாகப் பின்னரும் வீர மாகேந்திரமென்ற நகரத்துக்குத் துரிதத்திற் சென்றான். (24) பிறக ங்கு தந்தைக்கு மூத்தோனாகிய சூரபத்துமன தடிகளிற் சடிதியில் மிக வும் துக்காக்கிராந்தனாக விழுந்து பலவாறாய்ப் பிரலாபித்தழுதான். (25) பரிதாபப்படத்தக்க முகத்தோடு பூமிதனிற் புறண்டழுகின்ற அவ்வசு ரேந்திரனைச் சூரபத்துமன் கைகளால் வாறியெடுத்து (26) மார்போட ணைத்து "அப்பனே; பயப்படாதே! பயப்படாதே!" எனவுரைத்துச் சத்துருக்களைக் கொல்லவுற்றவசுரன் "இதென்னவிதென்ன" வென்ற டிக்கடி யுரைத்துக்கொண்டு (27) கண்ணீர்களைத்துடைத்துவிச் சோகத் திற்குயாது காரணமென்று வினவ, தாரகன்மைந்தன் நடந்ததெல்லாம் அழுதுகொண்டே கூறினன். (28) பிற்பாடு அவ்வசுரேந்திரனுரைத்த தனது தம்பியின் வதையைப்பற்றிய விடிக்கொப்பான வசனங்களைச் சூரபத்துமனெவ்வளவும் கலக்கம்கொள்ளாமலே கேட்டு (29) தாரகன் பராக்கிரமத்தை நினைத்து அதை நம்பவேயில்லை. "நம் புலன்களிற் பட்ட வைகளான வண்டங்களுக் கதிபர்களாகிய வெந்தத்தேவர்களும் (30) உயுத்தத்தில் நம்தம்பிமுன்னர் நிற்பதற்குப் பார்தனில் வல்லவரில்லை. இங்ஙனமாகையில் நம் தம்பியானவன் சம்புபுத்திரனாற் போர்முன்ன ரெவ்வாறு கொல்லப்படலாவான். (31) நல்லது! இங்கு கேட்கவேண் டியது சிலதிருக்கின்றது; அடா குழந்தாய்! உனக்குச் சித்தப்பிரமமோ? எனடா! குழந்தாய்! இல்லையாகிற் கனவுகொண்டாயோ? அடா! எனது மைந்தனே! பயப்படாதே!" (32) என, அசுரேந்திரனுத்தரஞ் சொ ல்லுகின்றான்:— "ஓ! அண்ணா! எனக்குச் சித்தப்பிரமமில்லை; யான்கன வுகொண்டதுமில்லை; அன்னியர் வார்த்தையைக் கேட்டுச்சொல்லவுமி ல்லை; சண்டையில் மாண்ட வெனதுதந்தையை யுடன்கட்டையேறின வென்தாய்மார்களோடு நானே நேரில் தகனம்செய்து (33) பின்னுமு ள்ள சடங்குகளையும் முடித்துவிட்டு நானுங்கள் முன்னிலைக்கு வந்தே ன். அங்கு சம்புமைந்தனுக்குப்பயந்து அரைக்ஷணம்கூட தங்கவில் லை. (34) ஓ! பிரபுவே! இச்சங்கதியிலிப்போது கொஞ்சமேனும் சஞ் சலம் வேண்டாம். கேளீர்! அசுரச்சிரேஷ்டரே! இதைப்பற்றியுமது

மலரடிகளில் சபதம் (ஆணை) வைக்கின்றேன். (35) ஓ! சத்துருக்களை
க்கொல்லுகின்ற தந்தையே! அதிம்மட்டோடு போகாது. அம்ம
கா பராக்கிரமசாலியான குமாரனால் நமக்கும் மிகுந்த கேடு வரலாயிற்
றென்றறிந்துகொள்ளும்". (36) என்று செவிதனிலாணியறைந்தது
போன்ற, தனது மைந்தனதிவ் வசனங்களைக் கேட்டுச்சூரபத்துமனுள்
ளத்திலறிந்து பயத்தினால் மிகவும் நடுங்கியவனாகிச் சிங்கக்கால்களைக்
கொண்ட ரனதாசனத்தினின்று தடேலென்று பூமியில் விழுந்து ஹாஹா
வென்று கதறினான். (37)

நாற்பத்தாறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ௪௭—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகவன் தம்பியாகிய சிங்கமுகனும் வேரறுபட்ட மரம்போல்
கீழ்விழுந்து பலவாறு புரண்டு கேசங்களலங்கோலமாய் விரிபட்டவ
னும், தேகம்முழுதும் புழுதிகள் பற்றலுற்றவனுமாகி (1) யிருகைக
ளாலும் (கீழேவிழுந்துபுரண்டுகொண்டிருந்த) சூரபத்துமனை வாரியெ
டுத்து மிக துக்கத்தோடு மார்போடணைத்துக்கொண்டு "ஐயோ! தெய்
வமே! உன்னால் யாங்களெல்லோர்களும் செத்தோம்" என்று பரிதா
பப்படத்தக்கவனாகப் பலவிதமாய்ப் பிரலாபித்து (2) அடிக்கடி "ஹா
ஹா" வென்று கதறி மிகவும் தைனியமாகவழுதான். பிற்பாடு சகல மந்
திரிகளும், சேனாதிபதிகளும் (3) புரோகிதர்களும், பண்டிதர்களும் ஆ
கியவெல்லோர்களும் துக்கித்தார்கள்; சூரபத்துமன் துக்கத்தினாற் தலை
மீதடித்துக்கொண்டு பூமியில் மிகவும் (4) மூர்ச்சிதனாகி விழுந்து பிற
கெழுந்து புலம்பி மறுபடி தடேலென்று விழுந்து இவ்விதமாகப்பலதட
வை மூர்ச்சையடைந்தனன். பிறகு மந்திரிகளெல்லோர்களுமவனை
யெடுத்து வெகுநேரமாசுவாசப்படுத்தி (5) யனேக சைத்தியோபசா
ரங்கள் முதலியவற்றால் மெல்லமெல்ல மறுபடியுமவனுக்குக்கண் தெ
ளியவைத்தார்கள். அதன்மேல் மகாபத்துமனாகிய (பத்துமமென்றநி
தியைப் பூர்ணமாகவுடைய, அல்லது மகா பத்துமனென்ற கொடியஸர்
ப்பம்போன்ற, அல்லது ஓர் பெரிய கமலமலரைக் கையிற்பற்றிய, அல்
லது பெருந்தீங்கை விளைவிக்கலுற்ற ஸம்பத்தையுடைய, அல்லது அஷ்

டலக்ஷ்மீ விலாசப் பொருந்திய) குரபத்துமன் மூர்ச்சைதெளிந்துமகா கோபாக்கிராந்தனாகி (6) கீழுதட்டையும் மேலுதட்டையும் மடித்து மடித்துப் பற்களாற்கடித்துக்கொண்டு எல்லாத்திசைகளையு முற்றுற்று நோக்கிப் பற்களைக்கடகடவென்று கடித்துக் கைகொட்டி யோர்க்ஷணத் துக்குள் (7) விழிகளாற் சராசரப்பிரபஞ்சங்களையெல்லா மெரித்துவி டுவோன்போற் சிரித்தும் பற்களாலுதடுகளை மடித்துக்கடித்தும் பேரி டிகளுக்கொப்பான வோசையுடன் (8) பூமியைக்கிடுகிடென்று நடுங் கச்செய்வதுபோற் பலதடவை ஹுங்காரம் செய்துகொண்டு சொன்ன தாவது:— "எனதிரண்டடிகள்மீது சபதம்செய்துகொள்ளுகின்ற வெ தன்வசனத்தைககேளீர்கள்! (9) யானுயுத்தத்தி லக்குந்தனை யவனதுபக் துக்களுடன் சமுகரிக்காவிடில் போர்முனையிலவனாலடிபட்டு நிச்சயமாக வோர் க்ஷணத்துக்குள்ளுயிர்களை யிழக்கின்றேன். (10) மகா பெரி தான சதுரங்கசேனையானது திடமான விற்களைப்பிடித்த ஸேனாதிபர் களோடிப்போதே யுத்தத்திற்குச் சன்னத்தமாகிப் பட்டணத்தினின்று வெளிப்புறப்படட்டும். (11) நமது கட்டளையின்படி சகல வாத்தியங் களும் முழங்கட்டும், இப்போது நிஸ்ஸாணம், டிண்டிமம் முதலான வா த்தியங்களுடன் பேரிகள் கோஷிக்கட்டும்." (12) இவ்விதமாக திட் டமிட்டு மறுபடியும் கோபத்தினால் அவயவங்களெல்லாம் வியர்வையா ல் நனையலுற்றவனாகி ரோஷத்தினாற் பயங்கரனாகி வேவுகாரரெல்லோர் களையு மழைப்பித்து (13) "கேளீர் தூதர்களே! நமது கட்டளையின் படி பயத்தைவிட்டு இபபோதே துரிதத்திற் சென்று திரிபுரமாற்று னுடைய வம்மைந்தனைச் சண்டைக்கழையுங்கள். (14) இதோ! கேளீர் கள்! ஒன்றுமறியாத சிறுவனான, எனது தம்பியைப் போர்க்களத்தில் வஞ்சகஞ்செய்து தேவர்களைச்சேர்த்துக்கொண்டு கொன்றுவிட்டாயல் லவா? அம்பிகைக்குக்குமாரனகியு மிப்போதெனக்குச் சத்துருவாகிவிட டாய்; (15) யானெனது தம்பியோடு ஜீவித்திருக்கும்போது நீ யெப்ப டித்தூங்குகின்றாய்? எப்படித்தாணுண்கின்றாய்? என்றிவ்வாறாகிய வெ னது வசனங்களை யிப்போதே தேவர்களிடத்திற் சொல்லுங்கள். (16) இன்றுமுதலுங்களுக்குப்பூர்ணமாக வாகாரத்துக்கு நடப்பிக்கின்றோம். இப்போதென்னிடமிருந்து நீங்கள்சென் றிவ்விதமாக வுரைத்துவிட்டுத் திரும்பி யென்முன்னர் வாரீர்கள்." (17) என்றிவ்விதமாகத் தூதர்க ளுக்கரிக்கையிட்டு மறுபடியும் மிக கோபம்கொண்டு அசுவபரிக்ஷையில் மிக வல்லவனான ஸாரதியை நோக்கிச் சீக்கிரந்திற் கட்டளையிட்டதா வது:— (18) "அடா! ஸாரதியே! ஆயிரம் கோவேறுகழுதைகள் பூட்

டியதும், தங்கத்தாற் செய்து ஸகல விரத்தினங்களாலு மிழைக்கப்பட்டதும், ஸகலவித வாயுதங்கள் வைக்கப்பட்டதுமான விரதத்தைக்கொண்டுவா. (19) பிளப்பதற்கு மாளாத விரும்புக்கவசம், பொற்கவசம், கொம்புகளாலமைத்த விற்கள், இன்னும்மற்ற பெரியவாயுதங்கள், (20) என்றும் குறைவுபெறாத வம்புகளால் நிறைந்த விரண்டு திவியவம்பராத்தூணிகள் இவையெல்லாம் கொண்டுவா." என்றிவ்விதமாக வேலைக்காரர்களை யசுரராஜன் கட்டளையிடுகையில் (21) மந்திராலோசனைகளை நன்கறிந்தவனும், மகா புத்திசாலியும், புலன்களினடக்கம் கொண்டவனும், அமோகனென்று பெயருடையவனும், நீதிநூல்களிற் றிறமையுடையோனுமான மந்திரியானவன் சபையின்கண் ணரசனைநோக்கி (22) பயத்தைவிட்டுக் கூறியதாவது:— "ஓ! சுவாமி! இராஜநீதியென்பது மிகவும் பெரிதானது: அது சாதாரணத்தில் ஜனங்களாலும், இன்னும்பாமரர்களான அமரர்களாலும் (தேவர்கள்) மிகவுமறியமுடியாதது.(23) சகல சுகங்களையுமளிக்கலுற்றதும், மூன்றுவித சக்திகளையுடையதுமான வந்நீதியை யரசர்கள் அவசியம் கைக்கொள்ளல் வேண்டும். அம்மூன்றுசக்தியோவென்றால்:— முதலாவது உற்சாக (தைரிய) சக்தி, இரண்டாவது அதிலும் மகாபெரிதான மந்திர (மந்திராலோசனையாலுண்டாகிய) சக்தி, (24) மூன்றாவது அளவற்ற பிரபுசக்தி (மிகுந்தபொருள்களையும், தளங்களையுமுடைதல்). ஆனாலிவையெல்லாம் தேவரீரிடத்தெக்காலு மெங்குமுள்ளனவே! மேலும், ஸந்தி, (சமாதானப்படுத்தல்) விக்கிரகம், (சண்டைசெய்தல்) யானம், (தண்டெடுத்தெதிர்த்தல்) ஆஸநம், (இருக்குமிடத்தேயிருந்து கோட்டைமுதலான துர்க்கங்களையரணிப்பாகப்பாதுகாத்தல்) துவைதீபாவம், (மித்திரபேதகம்) செய்தல்) சமாசிரயம் (அடுத்துச் சினேகஞ்செய்தல்) ஆகிய ஆறுராஜகுணங்களும் தேவரீருக்குத் தெரிந்தவிஷயமே. ($25\frac{1}{2}$) மேலும், ஓ! சுவாமி! சுவாமி, (இராஜா) அமாத்தியன், (மந்திரி) ஸுகிருத், (சினேகிதன்) கோசம், (பொக்கிஷம்) ராஷ்டிரம், (அரசாக்ஷியின் விஸ்தீரணம்) துர்க்கம், (கோட்டைகொந்தளம் முதலிய பலவிதஆவரணங்கள்) பலம் (தளங்கள்) ஆகியவேழு ராச்சியாங்கங்களும் தேவரீருக்குத் தெரிந்தவைதான் (26) ஆகையால் தேவரீருக்கு யான் சொல்லத்தகுவது யாதுமில்லை. ஆகிலும் கொஞ்சம் நினைவுமூட்டினேன். இதோ! கேளீர்கள்! இச்சிறுவன்திறமையற்றவனென்பதில்லை: அவனோ ஸ்ரீ ருத்திரமூர்த்தியினுடைய திருமேனியினின்றுண்டானவன். (27) அவன் ஒன்றுமறியாத சிறுவன்; ஆனால் மிகுந்த பராக்கிரமமுடையவன், வேலாயுதன், சத்துருக்களைப்

பூண்டோடு வேரறுக்கின்றவன். நமக்கோ வுலகுகளுக்கெல்லாம் சுகத்தை யருளுகின்ற ஸ்ரீ சங்கரன்மீது பகை யாதுமில்லை. (28) கந்தனுமவருக்குப் பிள்ளையாகியதாலவனை ஸாக்ஷாத் சங்கரனென்றே நினைத்தல் வேண்டும். ஏதோ தன்னிச்சையாய்வந்தவச் சிறுவனோடு தேவரீர் தம்பியறியாவண்ணமாகப் போர்தொடுத்துச் சடிதியாகச் சண்டையில் மாண்டான். (29½) இல்லாவிடில் நமக்குச்சத்துருக்களாகிய தேவர்களால் ஸ்ரீ சம்புவானவர் பிரார்த்திக்கப்பட்டு (30) அதன்பேரில்வர் குழந்தையை யனுப்பியிருக்கலாம்; அக்குழந்தையோ நம்முதலியோர்களாற் பூஜிக்கப்படத்தக்கவன். ஆகையால் தேவரீரினியவனுடன் பகைத்தொழிலை நாடுவது தகுதியல்ல." (31) என்றிவ்வாறாகிய, மகாபுத்திசாலியானவ மோகனுடைய பழுதுபெறாத வசனங்களையரசன்கேட்டுஇவைவயெல்லாம் மனதில் நன்காலோசித்து மெல்லமெல்லத் தணிவடைந்தான். (32) பிறகு மறுபடியும் சிம்மாசனத்திலுட்கார்ந்து சும்மாவிருந்தான். அதன்மேல் மகா ஸமர்த்தனும், அசுரேசுவரனுமான சூரபத்துமன் பெரிதும், மிகநேர்த்தியுமான வாசனத்தின்மீதுட்கார்ந்துகொண்டு பகன்(கொக்கு), சாரு (ஓர் பறவை), மயூரன் (மயில்), சியேனன் (பருந்து), சக்கிரவாகன், சுகன் (கிளி) இவர்கள் முதலான வின்னும் சிலர்களை யழைப்பித்து (33-34) அவர்களுக்குத் தகுந்த போஜனம், வஸ்திரம், ஆபரணம் முதலியவற்றால் வெகுமானஞ்செய்து அசுரனவர்களது செவிதனி விரகஸியத்தி லுரைத்ததாவது:—(35) "கேளீ ரசுரர்களே! மகா புத்திசாலிகளும், வேண்டிய வுருவங்களை யெடுக்கக்கூடியவர்களுமாகிய நீங்களெல்லோர்களும் ஓர் க்ஷணத்துக்குள் ளவரவர்கள் பெயர்களைக் கொண்ட பக்ஷிகளினுருவமெடுத்துச் சுப்பிரம்மணியனிடஞ் சென்று (36) ஸ்ரீ ஹரமைந்தனுடைய வுருவம் யாது? வயதென்ன? அவனது புத்தியின் கூர்மை யெவ்வாறு? அவனுக்கினி யென்னவேலை? அவனெங்கு போவதற்கு விருப்பமுற்றிருக்கிறான்? (37) அவனெப்போது மெவ்வளவு தளங்களாற் காக்கப்படுகிறான்? அங்கு வீரர்கள் யாவர்? அவர்களுருவமெப்படி? அங்கு மகாரதர்கள் யாவர்? (38) அங்கு திவியாஸ்தரங்களைத் தரித்திருப்பவர்கள் யாவர்? மந்திராலோசனைகளுக்குரிய வந்தரங்கப் பிரபுக்கள் யாவர்? அவனுக்கு யாவருடைய வசனத்திற்பற்றுதல்? (39) அவனுக்கு ஆறு ராஜகுணங்கள், மூன்று ராஜசக்திகள், மூன்று ராஜவர்க்கங்கள், (க்ஷயம் 1. ஸ்தானம் 2. விருத்தி 3.) ஏழாசாகஷியங்கள் இவைகளி னாராய்தலில் தேர்ச்சி யிருக்கின்றதா? என்று குறிப்பிட்டுப் பிரயாணம்? நீங்களெல்லோர்களு மவனது சேனையென்ற சமுத்

திரத்துக்குச் சென்று அங்கு வெகுநேரம் தங்கி நன்கு விசாரித்து ஓ! சுனவான்களே! பிறகிங்கு வருவீர்கள்" என்றனன்.(40)

நாற்பத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஸம்பவகாண்டம் ௪அ—வது அத்தியாயத்தினர்த்தம்

இவ்விதமாக வேவுகாரர்களுக் கரிக்கையிட்ட பிறகு இந்திரனுக்குச் சத்துருவும், மகா புத்திசாலியுமான சூரபத்துமன் சகல மந்திரிகளோடுகூட வடிபட்டு மாண்ட தம்பியை நினைத்துக்கொண்டே காலந்தள்ளிவந்தனன்.(1)

பிறகு தேவகிரியி லவ்விரவுகழிந்தவுடன் மகா மேதாவியான கந்தன், ஆதித்தியனுதித்த பிறகு விஷ்ணு, பிரம்மன் முதலிய சகல தேவர்கள், முனிவர்கள், யோகிகள் இவர்களுடனும், மிகுதியான சேனைகளுடனும் (2) தமக்கு மிகவும் பிரியமுள்ள தேவகிரியை மனவருத்தத்துடன் விட்டு ஆகாயமார்க்கம் சென்று வாயுவேக மனோவேகமாய்(3) திக்பாலர்களுடன் ஸ்ரீ அகஸ்தியமுனிவர் வசிக்கலுற்ற தென்திசையை நோக்கிச் சென்று சத்துருக்களைச் சமுகரிக்கின்ற வக்கந்தபிரான், அத்தேவகிரியினின்று, ஸ்ரீ மகேசுவரனு லுலோகானுக்கிரக நிமித்தமா யேற்படுத்தப் பட்டிருக்கிற சிவத்தலங்களை (4½) யந்தரங்க பக்தியோடு தரிசனம் செய்தனர். (5) அவற்றுள் முதலில், ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களுக்குச் சுபத்தானமும், யாதாமொரு பிராணியு மங்கோ ருளுந்தளவு நீரைப் பக்தியின்மையாலாயினும் குடிக்கில் பிறகு நிச்சயமாகவே தாய் முலையுண்பதற்குப்பிறப்படையாத மகிமையைப் பெற்றதுமான கேதாரக்ஷேத்திரத்துக்கு விஜயமாகி (6½) அங்கு சகலப்பிரபஞ்சங்களுக்கும் தமக்கும், தந்தையும், ஸாக்ஷாத் ஜகத்குருவுமாகிய லிங்காகாரமான ஸ்ரீ கேதாரேசுவரரென்ற ஸதாசிவனை (7½) மனதினாற் பூஜித்து ஸ்ரீ ஜகதீசனுடைய பிரகாசத்தினாலே பிரகாசம் பொருந்திய காசிக்ஷேத்திரத்துக்கருளி யங்கு ஜகத் பிரபுவான ஸ்ரீ விசுவேசுவரரை ஜகன்மாதாவாகிய விசாலாக்ஷியம்மையோடுகூட மானஸிக பூஜை செய்து பிறகு ஸ்ரீமகாதேவனுக்கு மிகவும் பிரியமாயுள்ள ஸ்ரீ சைலம், மகா மேன்மைபொருந்திய ஸ்ரீ விருபாக்ஷம், (9) ஸுவர்ணமுகியென்ற நதியின் கரைமீதுள்

ள தக்ஷிணகைலாஸமென்ற ஸ்ரீ காளஹஸ்தி, என்றும் தாம் (ஸ்ரீசுப்பிரம்மணியப் பிரபு) ஸான்னித்தியமாக வாசம்செய்வதால் மகா பிரசித்தி கொண்டது மற்புதமுமான ஸ்ரீ வெங்கடாசலமென்ற திருப்பதி ஆகியவி க்ஷேத்திரங்களில் யாத்திரைசெய்து (10) பிறகு சுவாமி புஷ்கரணி யென்ற தடாகக் கரை மீதுள்ள திருவாலங்காட்டுக் கருளி யங்கு விஷ்ணு முதலிய தேவர்களால் பூஜிக்கப்பட்டவும், காலைச் செங்குத்தாகத் தூக்கி நடனஞ் செய்வதால் மிக வலங்காரமாய் விளங்கியவருமான ஸ்ரீவடாடவீசுவரரை (11) மனதிறைற் பூஜித்து பின்பு முறையே ஸ்ரீகாஞ்சிபுரத்துக்கு வந்தருளினர். ஸாக்ஷாத் ஸ்ரீமகாதேவன், நடனத்துக்குத் தக்கபடி ஸ்ரீ மகாவிஷ்ணு மத்தளமடிப்பதினால் மிக நேர்த்தியாய் விளங்கும்படி (12) சகலப் பிராணிகளுக்காவும் ரக்ஷா தாண்டவத்தை (இரக்ஷிப்பதற்கான கூத்து) யென்று மாடியருளிய வ க்ஷேத்திரத்தில் பராகாசகுஹாஸ்வரூபியான தேவியையும், (13) சகல வேதங்களு மொன்று யுருவமெடுத்த மாமரத்தினடியில் விளங்கிய வழிவற்ற வுண்மைப் பொருளும், ஸர்வலோகேசுவரர்களுக்கும் ஸாக்ஷாத் ஈசுவரனுமான ஸ்ரீ ஜகதீசனையும் பூஜித்து (14) பின்பு எல்லாவற்றிலும் மிகுந்தச் சிரேஷ்டமான குமாரகோஷ்டத்துக் கெழுந்தருளி யதையும் தமது முக்கிய வாசஸ்தானமாகச் செய்து மேலுமங்குள்ள, அளவற்ற பராக்கிரமங்களை யுடைய ஸ்ரீ சம்புவினுடைய வெல்லாத் தலங்களிலு முள்ள (15) லிங்கங்களை யுள்ளம் களிப்பினுற் பூரிக்கலாகி பக்தியுடன் பூஜித்துப் பிறகு திருவண்ணமலைக்குச் சென்று அங்கு மிவ்வாறே செய்தருளினர். (16) அதன்பிறகு தயாநிதியாகிய முருகன் பெண்ணையாற்றின் கரையிலுள்ள திருவெண்ணைநல்லூருக்குத் துரிதமாக வந்து அதன்மேல் விருத்தாசலம், சிதம்பரம் ஆகிய க்ஷேத்திரங்களில் ஸ்ரீ பரமேசுவரனைத் தரிசித்து(17) மற்றுமுள்ள பலசிவத்தலங்களை யாகாசமார்க்கத்தி லிருந்தபடியே சேவித்து ஸ்ரீ மாயூரத்துக்கு வந்து பிறகு காவேரியின் சமுத்திர ஸங்கமத்தில் ஸ்நானமாடி (18) காவேரியின் வடபாகத்திலுள்ள மண்ணியாற்றுக் கெழுந்தருளினர். அங்கு சூரியாஸ்தமனமாகித் திசைகளிருளால் நிரம்பப்பட்டது. (19) வானமெங்கு மொளிபொருந்திய நக்ஷத்திரங்களால் நிறையலுற்றது. ஆம்பல் மலர்களுக்கு நண்பனு மிரவுக் கிறையோனுமான சந்திரன் கீழ்த்திசையி லுதயமாகித் தனது கிரணங்களா விருள்களைத் தொலைப்பித்தனன். (20½)அரக்கர்களையிறக்கவடிக்கின்ற மயில்கொடியோனிங்கு மணிநதிக் கரையிலே தேவர்களுட னன்றிரவில் வசிப்பதற் கிச்சைகொண்டனர்.

(21½) இங்கும் விசுவகர்மனானவன் மூவுலகிலும் குமாரபுரமென்று (திருச்செய்ஞல்லூர், இப்போது சேங்கனூர்) பிரசித்தமாய்த் தெரியப்பட்டதும், இவரது திருநாமத்தைக் கொண்டதினால் மங்களகரமாயுள்ளதும் மிக நேர்த்தியுமான வோர் நகரத்தை யுண்டாக்கினன். (22½) அதன் மத்தியில் நவரத்தினங்களாலும் விசித்திரமாயலங்கரிக்கப்பட்ட திருமாளிகையின்கண் ஸ்ரீருத்திரநந்தன னன்றிரவில் வசித்தனர். (23½) மேலும் பிரபுவானவர் தேவரெல்லோர்களையு மவரவர் விடுதிகளுக்குச் செல்லும்படி யனுமதியிட்டருளினர். (24) அவர்களு மவரது கட்டளையின்படி யவரவர்கள் சிபிர (கூடாரம்) த்துக்குச் சென்றார்கள்; இந்திரனானவன் தனது விடுதிக்குச் சென்று படுக்கையில்(25) காஷாபுரம் (சீயாழி) என்ற பட்டணத்திய வனதேவதையானவள், முந்தி யிந்திரனால் (அசுரபயத்தினாலோடி யொளிகையில்) ஒளித்துவைக்கப்பட்ட வாபரணங்களடங்கிய பாண்டத்தை, யன்றிரவில் (26) கொண்டுவந்து தானே நேரிலிரகஸியமாக அவன் முன்னர் வந்து கொடுத்தனள். அப்போதிந்திரனு மத்தேவதையாற் கொடுக்கப்பட்ட வாபரணப் பெட்டியைத் (27) திறந்து பார்க்கையி லதில் முந்தி யிந்திராணி யாபரணத்தைக் கண்டதி லாயிரம் கண்களையுடைய வவ்விந்திர னவளது பிரிவினையாற் புலன்கள் கலக்கமடைந்தவனாகி யவ்விந்திராணியை நினைக்கலாயினன். (28) எல்லோர்களுக்குமே யோர் வஸ்துவோடு சம்பந்தப்பட்ட மற்றொரு பொருளைக் கண்டமாத்திரத்தி லவ்வஸ்துவின் நினைப்புண்டாவது வழக்கம்தான். மன்மதனுமோ வென்று விச்சந்தர்ப்பத்தைக் கைக்கொண்டு இந்திரனைக் கூர்மையுள்ள மலரம்புகளால் நோக வடித்து அவனை மதமிழக்கச் செய்தான். (29-30) காமாதுரனான தேவராஜன் மிகவும் மனவியப்புற்றவனாகி யவ்வாபரணங்களைத் தனது பரிவார மங்கையர்களது கைதனிற் கொடுத்து தனது வேலைக்காரர்கள் மலர்களைக் கொண்டுவந்தமைத்த படுக்கைமீது, இந்திராணியது விரகதாபத்தினாலவ்விரவி னெவ்வோர் க்ஷணத்தையும் கல்பகாலமாகப் போக்கினன். (31)

நாற்பத்தெட்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் சகூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

இந்திரனிந்திராணியது பிரிவினையாலவ்விரவில் வெகுநேரமளவும் சிங்காரத்தோட்டங்களிலும் குளக்கரைகளிலுமுலாத்திப் பார்த்து

மவன் நித்திரையின்சுகத்தைப் பெறவில்லை. (1) அவனவ்விரவுமுழு மையும் மலர்மெத்தைமீதேயோர் சிறியராத்திரியை யாயிரம்யுகங்களாகக்கழித்தான். (2) பிறகு மறுநாட்காலையில் வெகுப்பிரயாசையுடன் மிகவும் திடசித்தமுள்ளவனாக வுள்ளத்தில் தேறுதலைகொண்டு (3) காமனம்படியாலுண்டாகிய தேகவிகாரங்களைப் பச்சைக்கர்ப்பூரம் குங்குமப்பூமுதலியவாசனைத்திரவியங்கள் கலக்கப்பட்டசந்தனத்தாற் பூசிமறைத்துக்கொண்டு (4) பிறகவன்ஸ்ரீ கந்தனது பாதகமலத்தைமறுபடி சேவிக்கமனமுற்றவனாகி மற்றதேவர்களோடுமிகுந்த களிப்புடன்சென்றான்.(5) பிறகு ஸ்ரீகுமாரமூர்த்தியு மதிகாலையிலெழுந்து காலைக்கடன்களைமுடித்துக்கொண்டு தாய்தந்தையர்களது பொன்னடிகளைப்போற்ற மனமுற்று (6) தம் தந்தையாகிய, லிங்கரூபமான ஸ்ரீ சதாசிவனையும், மகாதேவியையும் மிகுந்த மனபக்தியோடு தாமே பூஜித்தனர். (7) விஷ்ணு, பிரம்மன், இந்திரன்முதலிய ஸகல தேவர்களும் ஸாத்தியர்கள், விசுவேதேவர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள் ஆகிய இவர்களுடன் (8) சிவார்ச்சனத்துக்காக மிகுந்த பக்தியுடனும் கவலையுடனும் நூல்முறைப்படி புஷ்பம்முதலிய பூஜாத்திரவியங்களைச் சேகரிப்பதில் முயன்றவர்களாகி யூழியம்செய்தார்கள். (9) ஸ்ரீ குமாரசுவாமியானவர் மிகுந்தவகண்ட விபவங்களோடு பாசுபதமென்றநோன்பெடுத்தங்கு தம்தந்தையைப்பூஜிக்குமளவில் தந்தையான ஸ்ரீ சங்கரனவர் தாயாகிய வுமையம்மையோடு(10) திருவெருதேறித்தமது கணேந்திரர்களுடன் நேரில்தோன்றி ஸ்ரீ ஸேநானிக்குத்தமது சாங்கராஸ்திரத்தையும், மற்றுமுள்ள தம்முடைய ரௌத்திராஸ்திரம், பாசுபதாஸ்திரம் முதலிய மேன்மைபொருந்திய அஸ்திரங்களையுமீந் தனுக்கிரகித்து ($11\frac{1}{2}$) பிறகு ஸ்ரீ சங்கரன் பார்வதியோடங்கே மறைந்தருளினர். (12) அதன்பிறகு தேவசைனியங்களைக் காக்கின்ற ஜகத்பிரபுவானவர் ஸ்ரீ மகாதேவனை வந்தனித்துப் பிரார்த்தித்துக்கொண்டு துரிதமாக விரதமேறிப் பிரம்மன் விஷ்ணுமுதலிய தேவர்களுடனப் பட்டணத்தினின்று புறப்பட்டு ($13\frac{1}{2}$) அவ்வியாத்திரையிலும் மற்றுமுள்ள ஸ்ரீ சிவபிரானுடைய (14) நேர்த்தியான ஸ்தலங்களையும் திருக்கண்களால் தரிசனம் பண்ணிக்கொண்டு செல்லுகையி லிடையிலோர் நீரற்ற மைதானமாகிய பாலைவனத்துக்குற்றனர். (15) காட்டுத்தீக்கொப்பான வக்காடோ யாவராலும் செல்லத்தகாத மகா கடோரமானது. மேலுமதில் சூரியகிரணமு மெரிக்கும்போது சூரியகாந்தக்கல்மீது பட்டாற்போ (16) லதினின்றக்கினி ஜுவாலைகளுண்டாகி யச்சூரியகாந்தக்கல்லினும் மிகுதியான நெருப்புப்பொறிகளைக் கக்கலுற்றன.

ஏமந்த (பனி) காலத்தியவிரவின் கடைப்பாகத்திற் பிரகாசிக்கின்ற சந்திரனுடைய கிரணங்கள்கூட வக்காட்டைக் குளிரச்செய்யத் திறமைபெற்றதில்லையே! இவ்வண்ணமாயினதைப்பற்றி யாதுரைத்தல் வேண்டும்? அங்கு முளைத்திருந்த சதிரக்கள்ளி முதலிய மரங்களெல்லாம் (18) மாரிகாலத்திற் கூட முதுவேனிற்பருவத்தி னவஸ்தைகளை யனுபவித்தன; வேறென்ன கஷ்டம்வேண்டும்? அங்கு வெடித்திருந்த பூமியிலதலமென்றகிழ்லோகத்தில் வசிக்கும் ஸர்ப்பங்களது படங்கள்மீதுள்ள ரத்தினங்களினொளியானது எப்போதும் காணப்பட்டது. (19½) மிருகங்கள், பக்ஷிகள், இவையெல்லாமங்கு தற்செயலாகச் செல்லுமாயின் (20) அவைகள துடற்ச்சந்திக ளோர்க்ஷணத்திற்குள் பொசுங்கலாகி வேறிடங்களுக்குத் திரும்பிச்செல்லும். கொடுமையான பாலைவனம்போன்ற அல்லது விஷத்துக்கொப்பான அப்பேர்க்கொத்த மைதானப் பூமிகூட ஸ்ரீ சங்கரகுமாரன் அங்கு விஜயம்செய்தருளுகையில் ஸகலப்பிராணிகளுக்கு மின்பம் பயக்கலாயிற்று. (21½) ஸ்ரீ சிவன்செல்வனுமப் பாலைவனத்தைக்கடந்து (22) மலைகளுக்கரசனான பாரசல (திருப்பரங்குன்றம்) த்துக்குச்சென்றருளினர். அங்கிந்நேர்த்தியான மலையின்கண், மகாமகிமைபொருந்திய வாறுமுனிவர்களான (23) தப்தர், அநந்தர், நந்தீ, சதுர்முகர், சக்கிரபாணி, மாலி ஆகிய தவசிகளிற் சிறந்தோர்களான விவ்வாறுபெயர்களும் (24) ஜகங்களின் துக்கங்களைத் தொலைப்பிப்போரான ஸாக்ஷாத் ஸ்ரீ ருத்திரபுத்திரனைத் தூரத்திற்கண்டு வெகுமானத்துடனு மாதரவுடனுமவர் முன்னிலையிற் தண்டம் பண்ணினார்கள். (25) இதற்கிடையிலத் தேவராஜனாகிய விந்திரன் ஜகதீசனான தேவனை வந்தனித்தஞ்சலிகொண்டு அம்முனிவர்களுடைய பூர்வீக விருத்தாந்தங்கள் யாவையும் வணங்கிச்சொல்லலாயினன். (26½) "ஓ! பிரபுவே! இவர்கள் பூர்வத்தில் வியாஸமுனிவருக்கு மூத்த சகோதரர்களும், பாராசரமுனிவருக்குப் பிள்ளைகளுமானவர்கள். (27) மதிக்கேட்டினால் மூடத்தன்மைகொண்டு நாணற்காட்டின் மீதுள்ள ஓடையில் மச்சங்களைப்பிடித்துத் துரிதமாயவைகள் வாய்களிற் கயிற்றைக்கோர்த்துக்கொண்டுவந்து (28) விளையாடுகின்றவப் பிள்ளைகளைத் தந்தையர்கண்டுகோபமூண்டு "ஆகா! கா! வீண்கேடர்களான புத்திரர்களே! நீங்கள் மதிதடுமாறி யிங்குமீன்களுக்குத் துன்பமளிக்கின்றபடியால் நீங்கள் மச்சங்களாகக் கடவீர்கள்" என்று சபித்தனர். (29½) முனிவராலிவ்விதமாக நேரில் சாபமடைந்த தப்தர்முதலிய மைந்தர்கள் (30) மிகவும்பயங்கொண்டவர்களாகி முனிச்சி

ரேஷ்டரான நந்தையை வந்தனித்து உச்சிமீது கைகளை யஞ்சலிகொண்டு அச்சாபத்தின் நீங்குதலைப்பற்றி வினவினார்கள். (31) சாபபயத்தினால் வியாகூலமுற்ற புத்திரர்களை நோக்கி முனிவருத்தா மளித்ததாவது:— "வாரீரெயது மைந்தர்களே! எப்போது ஸ்ரீ பார்வதீதேவியுடைய திருமுலைப்பாலானது உங்களால் குடிக்கப்படுகின்றதோ (32) அப்போதுடனே யுங்களுக்குச் சாபம் நீங்கும்" என்றனர். (33) இவ்வாறுகமுனிச்சிரேஷ்டரானபராசரர் மைந்தர்களுக் கனுக்கிரகமளித்துச் சென்றபோதுடனே யவர்கள் பிராம்மணத் திருமேனியை யிழந்து மச்சவுருவத்தைக் கொண்டனர்கள்." (34)

நாற்பத் தொன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் ருய—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு மச்சவுருவமடைந்த முனிபுத்திரரெல்லோர்களும் நாணல் வனத்துக்குள்ளான வோர்குளத்தில் மீன்களுக்குரியபடி விளையாடிச் சஞ்சரித்துவந்தனர்கள். (1) ஓ! குமாரபிரபுவே! இவ்விதமாக வெகுகாலம்சென்றதன்மேல் ஜகத்குருவாகிய தேவரீர் தயாநிதியான ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனிடத்தும், பார்வதியிடத்து மாவிர்ப்பவித்த (2) போது பராக்கிரமசாலியைப்பெற்ற லோகமாதாவான பரமேசுவரியானவள் கேளீர்! ஜகத்குருவே! தம் கொங்கையது பாலைத் தேவரீரைக் குடிப்பித்து, மேன்மைதங்கிய ஸாக்ஷாத் அவ்வமிருதத்தைத்(3) தேவரீர் பானம்பண்ணும்போது, ஓ! தேவேசா! கருணைகொண்ட அவ்வம்மையது முலைப்பாலிற் கொஞ்சமக் குளத்திற் சிந்த, அப்பாலை மச்சவுருவங்கொண்ட முனிபுத்திரர்கள் (4) குடிக்க அதனாலவர்களுடனே மறுபடியும் தங்கள் சுவயவுருவத்தைக் கொண்டனர்கள். அம்முனிபுத்திர ரெல்லோர்களும், தங்கள் நிஜவுருவத்தைக் கொண்டதன்மேல், (5) ஸ்ரீ பார்வதியோடு கூட தேவரீரை மடிமீதுவைத்து வீற்றிருந்த ஸ்ரீ மகாதேவனை சாஷ்டாங்கமாக வந்தனித்து அம்முனிச்சிரேஷ்டர்கள் ஸ்ரீ பரமசிவனையும், என்றுமவரை விட்டுப்பிரிவினையடையாத ஸகலலோக மாதாவான வுமாதேவியையும் துதிகளாற் களிப்பித்தார்கள். (6½) பிறகு இலக்ஷம் கோடி சூரியர்களுக்கொப்பான காந்தியுடையவரும், ஸகலங்களையுமாளுவோ

ரும், யாவராலும் மீறப்படாத கட்டளையுடையோருமான ஸ்ரீ ஸாம்பமூர்த்தியானவர் அம்முனிவர்களை நோக்கித் திருவாக் கருளியதாவது:— (7½) கேளீர்! பராசரமுனிவரின் மைந்தர்களே! நமது கட்டளையின்படி நீங்கள் சாபத்தினின்று விடுபட்டீர்கள்; (8) நீங்கள் பரபருவதத்தி (திருப்பரங்குன்றம்) னுச்சிக்குச்சென்று தவஞ்செய்துகொண்டு, தேவர்களோடு கூடச் சுப்பிரம்மணியதேவன் பாதாரவிந்தத்தி லனுக்கிரகிக்குமளவு மங்கேயிருந்து, அப்போதவனை யாதரவுடன் சரணமடைந்து நீங்கள்மிகுந்த மேன்மையைப் பெறுவீர்கள்." (9-10) என, இவ்விதமான வீசன் கட்டளையைப்பெற்று, மிகக்கொடூரமான தவங்களைச் செய்கின்றவம்முனிவர்களிப்போது தேவரீரைச் சரணமடைந்து ஓ! தேவேசா! அவர்கள் நாடியபயனைக் கைக்கொண்டார்களென்பதிற் சந்தேகமேயில்லை." (11) என்றிவ்விதமாக விந்திரனுரைத்திட்ட வசனங்களைத் தேவர்களுக்கதிபனாகிய ஸ்ரீ ருத்திரபுத்திரன் செவிதனிற்கொண்டு தப்தர்முதலிய வவ்வாறுமுனிவர்களையு மனுக்கிரகித்து (12) 'நல்லது நல்லது' என்றம்முனிவர்களுக்குத் திருவாக்கருளியவர்கள் தம்முடன்கூடத் தொடர்ந்து வரும்படிக்கு மனுமதிகொடுத்தருளினர். (13) பிறகு சத்துருக்களைச் சமுகரிக்கின்றவும், விக்கிரமத்தினு லசுரர்களை யலக்குகின்றவுமான தாரகாரியானவ ரவர்களோடு புறப்பட்டுச் சேந்திபுரமென்ற திருச்செந்தூர் சேர்ந்தனர். (14) அவ்விடத்திலும் விசுவகர்மனால் ஸ்ரீ பிரபுவுக்கு விசித்திரமும் பெரிதுமானதும், மிகவுன்னதமான விரத்தினகோபுரங்களாலலங்கரிக்கப்பட்டதுமான வோர் திருமாளிகை யமைக்கப்பட்டது. (15) பிற்பாடத் திருச்செந்தூர் மத்தியில் விளங்கலுற்ற மகா பெரிதான வாலயத்துக்கு விஜயம்பண்ணி ஸ்ரீ ருத்திரபுத்திரன் மேன்மைபொருந்திய ரத்தினச்சிங்காதனத்தை யடைந்து (16) அவ்வாசனத்தின்கண் ஸாக்ஷாத் ஸ்ரீ மகேசுவரன்போல் விளங்கினர். அப்போதங்கு ஹா ஹா, ஹூ ஹூ, தும்புரு, விசுவாவசு இவர்களும் இன்னும்மற்ற கந்தர்வர்களும் கின்னரர்களும் மிகவுமாதரவோடு ஸ்ரீபிரபுவினுடைய பிறந்ததுமுதல் நடந்த, தேவமானிடர்களது கிருத்தியங்களை யதிகரித்த விநோதக்கரும விருத்தாந்தங்களையெல்லாம் வீணாகானம் செய்தார்கள்; (18) பிரம்மன், விஷ்ணு, இந்திரனிவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள். ஸப்தமருத்துக்களும் ஸ்ரீ சங்கரகுமாரனுக்குச் சாமரம்போட்டார்கள். (19) அக்கினி, வருணன் இவ்விருவர்களும் மிக வற்புதமான குடையைப்பிடித்தார்கள். மற்ற திக்பாலரெல்லோர்களுமங்கு விசித்திரங்களான விசிறிகளைப் பற்றிக்கொண்டு சேவகம் பண்ணினார்கள். சத்துருக்களைச் சமுக

ரிக்கின்ற வீரபாகுவும் (20½) மிகுதியான தங்கத்தினுலு மிரத்தினங்களாலு மமைக்கலுற்றதும், விசித்திரமான விரத்தினங்களாற் செய்த பிடியுடையதுமான கத்தியைத்(21) கைப்பற்றிக்கொண்டு ஆடையாபரணங்கள் முதலியவைகளின் பொக்கிஷத்தைக் காத்தனர். மற்ற எட்டு வீரர்கள், இலக்ஷம் கணுதிபர்கள், நூற்றெட்டு படைத்தலைவர்கள் இவ்வெல்லோர்களு மவரவர்களுக்குத்தக்க பணிகளைச்செய்தார்கள். (22½) அப்போது ஆறு திருமுகங்கள், பனிரண்டு கைகள், கமலமலர்கள்போன்ற பதினெட்டுக்கண்கள் இவைகளையுடையவும், (23) புன்னகைப்புடைய திருமுகங்களுடையவும், காம்பீர்யமுடைய திருமேனியைக்கொண்டவும், விசித்திரமான மகுடங்களால் விளங்கியவும், மிகுதியானவிரத்தினங்களா லமைக்கப்பட்ட மகா மேன்மைபொருந்திய திவ்யஸிம்மாஸனத்தில் விளங்கியிருந்தவுமான (24) வம்மகாபிரபுவை முனிவர்கள் தரிசித்துக் கண்களைக்கொண்டதற் குற்றபயனைக் கைக்கொண்டார்கள். அப்போது தேவதேவேசுவரரான சரவணபவன் பிரஸன்னராகி (25) விஷ்ணு பிரம்மன் முதலிய தேவர்களைப் புன்னகைப்புடன்நோக்கித் திருவாய் மலர்ந்தருளியதாவது:— "வாரீர்! தேவர்களே! அசுரர்கள் யாவர்? அவர்களெவ்வள வாகிருதியுள்ளவர்கள்? அவர்களினுருவமெப்படி? அவர்கள் யாவருடைய பிள்ளைகள்? (26) அவர்களிற் பிரதானமாகியவன் யாவன்? இவைகளை யிப்போதுள்ளபடி யெடுத்துரைப்பீர்கள்." என்றிவ்வகையான, ஸ்ரீ குமாரசுவாமியினுடைய திருவாக்கியங்களைக்கேட்டுத் தேவச்சிரேஷ்டர்கள் (27) ஸ்ரீ விஷ்ணுபிரம்மர்களோடுகூட வொருவரோடொருவர் கலந்தாலோசனை செய்துகொண்டு வாக்குக்கிறை யானுன பிரஹஸ்பதிதேவனைச்சபையில் நோக்கி "தேவனே! நமதிசனும், சரவணபவனுமான ஸ்ரீ குமாரசுவாமி கேட்பதற்குத்தாஞ்சொல்வீர்" என்றிவ்விதமாகத் தேவச்சிரேஷடர்கள் கூறுகையில் தேவகுருவும் பிரபுவை வந்தனித்தஞ்சலிகொண்டு (29) "தேவச்சிரேஷ்டர்களுடைய துக்கங்களைத் தீர்க்கலுற்ற குருநாதனுக்கு வந்தனமளிக்கின்றேன்." என்றுரைத்துக்கொண்டு பிரகஸ்பதியானவரவ் வசுரர்களுடைய ஸகல விருத்தாந்தங்களையும் மகா வினயத்துடன் (30) யோகிசுவரர்களுடைய தகராகாசத்தில் விளங்கி நிற்கும் பிரபுவுக்கு அடுத்த காண்டத்திற் கூறியபடி யாதியோடந்தமாக வெடுத்துரைத்தனர். சூதர் சொல்லுகின்றார்:— "சௌனகாதிமுனீசுவரர்களே! இச்சம்பவகாண்டமோ வென்றால் வேதார்த்தங்களோடு நிறுக்கப்பட்டது; ஆகையாலிது வித்துவான்களுக்கும் பெரியோர்களுக்கும் மேன்மைபெற முக்கிய காரணமெனப்படும். (31½)

ஸம்பவகாண்டம்

முற்றிற்று.

---



௳

சரவணபவன் துணை.

# அசுரகாண்டம்.

## முதலாவது அத்தியாயத்தி னர்த்தம்.

சௌனகாதி முனிவர்கள் சூதனைக் கேட்கின்றார்கள்:— "வாரீர்! சருவகுணங்களும் நிறையப்பெற்ற புராணப்பொருள்களில் மிகத்தேர்ச்சிகொண்ட சருவஞ்ஞான சூதமுனிவரே! சூரபத்துமன், சிங்கமுகன், மகா பராக்கிரமசாலியான தாரகன் இவர்களுடையவும் (1) இன்னும் மற்ற அசுரர்களுடையவுமான பிறப்பு நடப்புகளை நாங்கள் கேட்பதற்கு மிகவுமாவல் கொண்டிருப்பதால் அவற்றை விஸ்தாரமாக வெடுத்துரைத்தல் வேண்டும்." (2) என, சூதர் கூறுகின்றார்:— "வாரீர்! முனிவர்களே! அளவிலா மகிமைகொண்ட வடிவேலனுக்கு முந்தித் தேவகுருவானுரைக்கப்பட்ட விருத்தாந்தங்களை யுங்களுக் காதியோடந்தமாக யானெடுத்துரைப்பதை யெல்லோர்களும் கேளீர்கள். (3) தவங்களையே பொருளாய்க் கொண்டவும், பிரம்மனுக்கு மைந்தனும், கோபத்தை வென்றவும், ஸத்தியவாக்குடையவும், தருமங்களிலே விருப்பமுடையவும் அசுரர்களுக்குத் தந்தையுமான காசியபரென் றோர் முனிவருண்டு. (4) அவர் திதியென்ற மனையாள் மூலமாக மகா வீரிய விக்கிரமங்களையுடைய அறுபத்தாறுகோடி ஸங்கியைகொண்ட பல அசுரர்களைப் பெற்றார். (5) அவர்களில் மகா பலசாலியான ஸம்பத்துகளையுடைய வசுரேந்திரனென்பவன் தலைமையானவன். அவன் மங்களகேசினி யென்பவளோடு புணர்ந்து எல்லா அவயவங்களும் சுந்தரமாய்ப் பொருந்திய வொப்பற்ற ஸுரஸை யென்ற வோர் பெண்ணைப் பெற்றான். ($6\frac{1}{2}$) அப்பெண்ணேவென்றால் அசுரகுருவாகிய சுக்கிரபகவானண்டையிற் பணிவிடை செய்துவந்தாள். (7) அப்போது சுக்கிரபகவானவளுக்குப் பல வித்தைகளையு முபதேசித்து மாயையென்று பெயருமிட்டனர். (8) அப்போதவர் தேவர்களுக்குள்ள பொங்குதலையும், அசுரர்களுக்குள்ள மிகுந்த மங்குதலையும் கண்டு மனதில் நன்காராய்ந்தபோது தக்ஷப்பிரஜாபதி,

யினுடைய வியாகத்தில் ஸ்ரீநந்திகேசுவரனால் (9) தேவர்களை தைசுவரி யங்கள் க்ஷீணிக்கும்படி யிடப்பட்ட சாபத்தையும், இனி நேரிடப்போ கின்ற சங்கதிகளையும் மனதிலாலோசித்து வச்சுக்கிராசாரியன் அப்பெண் ணை நோக்கிப் பின்னு முரைத்ததாவது:— (10) "கேளாய்! மாயே! மகாசுரர்களெல்லா மிப்போது தேவர்களாலும், முனிவர்களாலும் நாச ம் செய்யப்பட்டிருக்கிறார்கள்; உனது தந்தையாகிய வசுரேந்திரனோ கேவலம் மனவேக்கம் கொண்டனன். (11) இப்போதசுரர்க ளுந்தனு ல் நிலைநிறுத்தப்பட்டுக் காப்பாற்றப்படலும் வேண்டும். ஆகையால் நீ காசியபமுனிவரிடஞ் சென்று, பிள்ளைகளைப் பெற்று, பெயரு (12) மி ட்டு, அவர்களது செழித்தலுக்காக வவர்களுக்கு யாகம், விரதம் முத லியவற்றையு முபதேசித்து, நீயும் தேவர்களது மங்குதலை வேண்டித் தவம்புரிவாய்'. (13) என, அப்பெண்ணு மப்படியே பாக்கியமென்று புறப்பட்டுத் தந்தையாகிய வசுரேந்திரனிடஞ் சென்று சங்கதிகளையு ரைத் தவனிடத்து விடைபெற்று மற்றோர் மாயையே பிரத்தியக்ஷமாய்த் தோன்றியதுபோன்ற வப்பெண் வெளிப்புறப்பட்டனள். (14) அவ ள், மார்க்கத்திற் செல்லுகையி லவளைக்கண்ணுற்றவர்களை யெல்லாம் மோகிக்கும்படி செய்துகொண்டு காசியபமுனிவ ரிருக்குமிடஞ் (15) சென்று அங்கு மகா வுன்னதமுள்ளதும், சித்திரங்களா லலங்கரிக்கப்ப ட்டதுமான பல மண்டபங்களையும், வாபிகள், கிணறுகள், விருக்ஷங்கள், மிகுந்த மலர்களிவைகளோடு விளங்கிய சிங்காரத்தோட்டங்கள்,(16)அ னேகவிளையாட்டுக்குன்றுகள், இவைகளையு மோர்க்ஷணத்துக்குள் மாயை யினாற் படைத்தனள். அப்போதிவை யெல்லாவற்றையும் காசியபரெ ன்ற முனிவர் கண்டு (17) "ஓ! கோ! இதோ விநோதமான மண்டபம் முதலியவைகளெல்லா முண்டுபண்ணப்பட்டிருப்பது என்ன வாச்சரிய ம்! இவைகளைப்படைத்தது பிரம்மாவா? அல்லது விஷ்ணுவா? அல்ல து மற்றெந்தத்தேவனுவதா?'! (18) என்று ருஷியானவர் பலவிதமா கச் சிந்தைகொண்டு திசைகளெங்கும் நோக்குகையில் மிக ரூபலாவணி யம் பொருந்திய மெல்லிய தடிபோன்ற மேனியுடையவளும், (19) மோகப்படுத்துவதற்கான மன்மதனுடைய ஸகல சரக்குகளுக்கு மிருப் பிடமுமான வம்மாயையென்றவ ளோர் க்ஷணத்துக்குட் காணப்பட்ட னள். அப்போதம் முனிச்சிரேஷ்டர் அவளருகில் வந்தவளைக்கண்ணு ற்று (20) மிக நேசமும், சிங்கார ரஸங்களாற் சாதுரியமுள்ளதுமான வசனங்களை யுரைத்ததாவது:— "அடி! மாதே! ஒண்டிமங்கையாக நிற் கின்ற நீயாவள்? உன்பெயரென்ன? நீ யாவருக்கேது முறை வேண் டும்? (21) உனக்குத் தேசம் யாது? இப்போதெங்கு வாலுற்றாய்? அ

டி! திருமேனியதெல்லா வவயவங்களும் மிகச் சுந்தரமாக வமைந்த தே னே! நீ யுத்தரமுரைத்தல் வேண்டும்." என, மாயை கூறுகின்றாள்;— "மங்கையாகிய யானொண்டியாக விக்குன்றில் நிற்குமளவில் (22) நீ ரொந்தனோடிவ்வா றுரைப்பது தவசிகளுக்குச் சரியோ? யான் மேருகிரி யருகினின்று கங்காஸ்நாநம் செய்வதற்காக விங்கு வாலுற்றேன். (23) நீரிங்கே நில்லும்; யானெனது மனக்குறிப்பின்படி செல்லுகின்றேன்." என, முனிவர் சொல்லுகின்றார்:— "யானிப்போது கங்கையையும், இன்னும் மகா பெருமை பொருந்திய புண்ணியத் தலங்கள், தீர்த்தங்கள், தேவர்கள் இவையெல்லா மிப்போதே தருவிக்கின்றேன். மேலுமுனக் கற்புதமான விரண்டு சாமரங்கள் போடுவிக்கின்றேன். (24½) மிகுந்த புத்திரர்களையும், பணி செய்வதற்காக வாயிரம் தேவஸ்திரீகளையும் கொடுக்கின்றேன். (25) இந்நேர்த்தியானவிடத்தி லேகாந்தலீலை செய்வதற்கென்னை நீ யாதரித்தல் வேண்டும்." என, கமலமலர் முகத்தின் கண் குறுநகைப்புடைய வவ்வழகு மங்கையானவள் (26) அப்போது திடீலென்று மின்னற்கொடிபோல் மறைந்துவிட்டனள். அப்படியவள் மறைந்தவுடன் தவசிகளில் மேன்மைகொண்ட காசியபமுனிவர் (27) கேவலம் மோகாக்கிராந்த சிந்தையுடன் துரிதமாகத் தரைதனில் விழுந்து மெத்த மதனவெறி கொண்டவன்போலதி துக்காக்கிராந்தராகி யழுதனர். (28) மாயையும் முனிவரிவ்வா றிருப்பதைக்கண்டு ஓர் நொடிக்குள்ளங்கே நேரில் தோன்றினள். அவ்வண்ணம் தோன்றியவச் சிற்றிடையாளைக் கண்டவுடன் முனிவர் மோகம் தெளிவுற்றவராகி (29) தரித்திரனுக்குத் திரவியம் வாய்ந்தா லாநந்தப்படுவதுபோல் புன்னகைப்போடு முகமலர்ச்சி கொண்டவராகிப் பலவிதமாகக் கூத்தாடி (30) பிறகு மிக நேசவிசுவாசத்தோ டம்மாயையின் கால்களில் விழுந்தனர். அப்போது கேவலம் காமவெறிகொண்ட வம்முனிவரைநோக்கியவள் வசனமுரைத்ததாவது:— (31) "கேளீர்! காசியபரோ! இப்போது யான் கொண்டிருக்கின்ற மிக வற்புத வழகுசுந்தரத் திருமேனிக்கொத்த வுருவத்தைக்கொள்வதற்குமக்குத் திறமையிருக்குமாயி னும் முடன் யான் கலவிதொடுக்கின்றேன்!" (32) என, யோகிகளிற் சிறந்த காசியபமுனிவருமவ்வண்ணம் வேண்டிய வுருவத்தைத் தரித்து அவவாறுரைத்த வதிசுந்தரத் திருமேனியாளோடு மிக நேர்த்தியும் நிர்மானுஷியமுமான வம்மண்டபத்திலே கேவலம் காமாதுராகப் பலதடவை கலவிசெய்தனர். (33½) அப்போதவ்விரவின் முதற்சாமத்தில், அசுரர்களுக்கெல்லாம் தலைமையான மகா பெருமைபொருந்திய சூரனென்று

பெயர்கொண்டமைந்தன் பிறந்தனன். அப்போதவ்விருவர்களுக்குமுண்டாகிய வியர்வை ஜலத்தினல் முப்பதினுயிரமசுரசேனைக ளுண்டாயின. (34-35) பிற கிரண்டாம் சாமத்தில் மறுபடியு மவ்விருவர்களும் மற்றொருமண்டபத்துக்குச் சென்று சிங்கவுருவமெடுத்துச்சம்போகம் பண்ணினர்கள். அப்போதாயிரம் முகங்களின் வரிசையையும் யிரண்டாயிரம் கைகளையும் கொண்ட சிங்கமுக னுண்டாயினன். ($36\frac{1}{2}$) அப்போதக்கலவியாலவர்களுக்குண்டான வியர்வைத் திவிலைகளினின்று சிங்கமுகங்களை யுடையமகா கோரர்களான நாற்பதினுயிரம் சேனைகளுண்டாயினர்கள். அதே விதமாக, வினோதமாக வலங்கரிக்கப்பட்ட மற்றோர் மண்டபத்துக்கு (38) அவ்விருவர்களும் மூன்றும் சாமத்திற்சென்று யானையுருவமெடுத் தங்கும்பலமுறையாகக் காமலீலைசெய்தார்கள். அப்போதழகிய யானைமுகத்தையுடைய தாரகனென்ற வசுரராஜன் பிறந்தனன். அங்கும் யானையுருவங்கொண்ட மற்றோர் நாற்பதினுயிரம் சேனைக (40) ளுண்டாயின. பிறகவ்விருவர்களும் நான்காவது ஜாமத்தில் மற்றோர் மண்டபத்துக்குச் சென்றங்காட்டுருவங்கொண்டு பின்னும் புணர்ந்தனர்கள். (41) அப்போதஜமுகி யென்ற வசுரப்பெண் பிறந்ததோடு புணருங்காலுண்டான வியர்வைத் திவிலைகளினின்று ஆட்டுருவங்கொண்ட மகா பயங்கரமான மற்றோர் முப்பதினுயிரம் சேனைகளுண்டாயின. ($42\frac{1}{2}$) பிறகவர்கள் மறுநாள் காலையிலும் மண்டபத்துக்கு மண்டபம் சென்று சிவிங்கி, புலி, குதிரை, மான், பசு, கரடி, பன்றி, காட்டெருமை, செந்நாய், காண்டாமிருகம், கழுதை, ஒட்டை, குரங்கு, நரி இவைமுதலியமிருகங்களி னுருவமெடுத்துக்கொண் டங்கங்கு காமக்கிரீடை பண்ணினர்கள். (45) அப்போதந்தந்த மிருகங்களினுருவத்தோடு அறுபதினுயிரம் சேனைகளுண்டாயின. பிற்பாடு ஆகியவிவ் விரண்டிலக்ஷம் மொத்த ச்சேனைகளையும், அஜாமுகி யென்றபெண்ணோடு சூரன், சிங்கன், தாரகனிவ் வசுரர்களையும் கண்டு ($46\frac{1}{2}$) அவ்விருவர்களும் மிகுந்த வாநந்தத்தினு லந்தக்கரணம் மலர்ந்தவர்களாகி யோர் க்ஷணத்துக்குள் தங்கள் நிஜிவுருவத்தைக் கொண்டனர்கள். (47) அப்போது சூரபத்துமாசுரன் தாய்தந்தையர்களை வணங்கி "ஓ! தந்தையே! யாங்கள் செய்யவேண்டிய காரியங்களையெல்லா முள்ளபடி யெடுத்துரைத்தல் வேண்டும். (48) மேலுமந்த விஷயத்திலம்மையுடைய சம்மதம் யாது?" எனக்கேட்டு உட்கார்ந்தனன். அப்போது முனிவர் கூறியதாவது:— "வாரீர்! மைந்தர்களே! என்மனதிலிருப்பதை யுரைக்கின்றேன் கேளீர்கள்! (49) நீங்கள் புலன்களைக் கைவசத்திற்கொண் டெப்போதும் தவம்புரிவதே கா

ரியமாகும். முந்தித்தேவரெல்லாம் தவத்தினாலே தேவத்தன்மையை யடைந்தார்கள். (50) அப்படித்தவஞ் செய்ததனாலே சில முனிவர்கள் ஜீவன்முக்தி (ஜீவனோடு மோக்ஷம்) யடைந்திருக்கிறார்களல்லவோ. ஆகையால் கேளீர்! மைந்தர்களே! எப்போதும் பாவங்களின் சேர்க்கையற்றுப் பசு, பதி, பாசமென்ற முப்பொருட்களின் விஞ்ஞானத்தைப் பெற்று (51) அதனாலானந்தமயமாகிய சிவபதத்தை யடையலாவதுதான் தகுதி. அப்படியே பாவங்களைத் தொலைப்பதற்காகத் தருமங்களையுமென்று மனுஷ்டித்தல் வேண்டும். (52) பூர்வத்தில் சில முனிவர்கள் தருமத்தாலே சுவர்க்கலோக மடைந்தனர்கள். புத்திமான்கள் சருவப்பிராணிகளிடத்து மென்றும் தயவுள்ளவர்களா யிருந்தல் வேண்டும். (53) நீங்கள் மேலுரைத்த நடவடிக்கைகளோடு பாவமற்றிருப்பீர்களாகில் ஸ்ரீ பரமேசுவரன தருளைக்கொள்வீர்களென்பதிற் சந்தேகமேயில்லை. ஸ்ரீ மகேசுவரனருளா லிகத்திலும் பரத்திலும் சகல ஸித்தியும் கைகூடும். (54)

முதலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பவகாண்டம் உ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

காசியபர் சொல்லுகின்றார்:—"பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலிய தேவச்சிரேஷ்டரெல்லோர்களும் தவத்தினால் தான் சிவனருள் பெற்று அவரவர்கள் தானத்தைப் பெற்றிருக்கிறார்கள். (1) பூர்வத்திற் சில ருஷிகள் கொடூரமான தவங்களைச்செய்தே சிவனருளடைந்து தங்கள் விருப்பங்களைக் கைக்கொண்டது நிச்சயம். (2) ஆகையால் நீங்கள் சகல முயற்சியுடனும் தவத்தினாற் சிவபிரானைக் களிப்பித்து இகத்தில் போகபோக்கியங்களையும், பரத்தில் மோக்ஷ ஸாம்பிராஜியத்தையுமடைதல்வேண்டும். (3) இதோ! ஓர் புண்ணிய கதை யிருக்கின்றது; அதை யுங்களுக்கு யான் கூறுகின்றேன். பூர்வத்தில் குத்ஸமுனிவர் தவத்தின் மகிமையா லிறந்துபோன பெண்ணையும் (4) தூங்கி யெழுந்தவள்போலோர் நொடிக்குட் பிழைத்தெழுந்திருக்கச் செய்தனர். மேலுமவர் மற்றோரிடத்திலோர் யானைக்கும் தேவத்தன்மையை யீந்தனரல்லவோ. (5) அத்தவமகிமையாலே மிருகண்டுமுனிவரை மைந்தனாக

டைந்தனர். அம்மிருகண்டு முனிவரு மப்படியே தவத்தினால், பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலியவர்களாற் பூஜிக்கப்படலுற்ற மார்க்கண்டேயனைப் பரமாநந்தத்தோடு மைந்தனாகவடைந்தனர். (6½) அம்மார்க்கண்டேயரோ தவத்தினாற் பரமேசுவரனை யாராதித்து (7) மிருத்தியுவையும் வென்று நித்தியமான பரமபதத்தைப் பெற்றனரல்லவோ." என்றுரைத்துச் சும்மாவிருந்தனர். (8) பின்பு மாயையானவள் பிள்ளைகளைநோக்கிக் கூறுகின்றாள்:—"கேளீர்! கண்மணிகளே! தவசிகளில் மேன்மைபெற்ற வுங்களது தந்தை வுரைத்ததெல்லாம் (9) பெரியோர்களாகிய யோகிகளுக்கல்லவோ தகுதி. உங்களுக்காகவேண்டியதை யானுரைக்கின்றேன்:—பௌருஷத்துக் கிருப்பிடமான நீங்கள், ஐசுவரியம், சௌரியம், ஆயுசு, பிரஸித்திகொண்ட கீர்த்தி, பிரபுத்தன்மை யிவைகளை யல்லவோ தேடிக்கொள்ளல் வேண்டும். (10½) பூமியின் வடக்கில் பெரிதான வடத்தீவமென்றுப் பிரஸித்திபெற்றிருக்கின்றது. (11) நீங்களங்குசென்று ஸ்ரீ பரமேசுவரனைக் களிப்பிப்பதற்காக வீரயாகம் பண்ணுங்கள்; அதற்காக வேண்டிய திரவியங்களை யானுங்களுக்குத் தருகின்றேன். (12) பிறகு ஸ்ரீ ஜகதீசன் ஸான்னித்தியமாகும்போதெந்தனாற் கூறப்பட்டவைகளையே நீங்கள் கேட்டுப் பெறுவீர்கள்". என்றிவ்விதமாக, மாயையானவள் மைந்தர்களுக்குச் சொல்லிப் பிறகும்(13) அவர்களுக்கனேக மந்திரங்களை யதற்குள்ள தந்திரங்களோ டுபதேசித்தனுப்பினள். அதன்பிறகவளப்போது முனிவரைநோக்கி வசனமுரைத்ததாவது:—(14) "ஓ! சுவாமீ! என்பெயர் மாயையெனப்படும். பிள்ளைகளைப் பெறவேண்டியும் மிடம்வந்தேன். உம்மால் மகா பராக்கிரமசாலிகளான விப்பிள்ளைகள் நன்றாக உண்டாக்கப்பட்டார்கள்.(15) யான் தவஞ்செய்யப்போகின்றேன்" என்று சொல்லி யுடனே சென்றுவிட்டனள். அவள் போனபிறகோவென்றால் காசியபமுனி யவளைக் காணாத்தினால் (16) கேவலம் மூடஜனங்களைப்போல் மிகவுந்துக்கத்தினால் நொந்து புலம்பலுற்றனர். பிறகவ்வாறு புலம்புகின்ற முனிவரைக் கண்டு பிரம்மன் தாமே நேரிலிங்குவந்து (17) "கேளாய் மைந்தனாகிய காசியபா! ஒன்றும் தெரியாத மூடன்போலேன் வீணாக விப்போதிங்கழுகின்றாய்? சொல்: உந்தனுக்கிப்போதழுதல் வேண்டாம். நமது கட்டளையின்படி சுகமுள்ளவனாகவிரு. (18) அப்பாவத்தைத்தொலைப்பதற்காக ஸ்ரீ பரமேசுவரனைக் குறித்து ஸகல பாவத்திரள்களையு மடிக்கலுற்ற, சிரேஷ்டமாகிய வுக்கிரமான தவத்தைச் செய்தலல்லவோ வேண்டும்."(19) என வுரைத்துப் பிரம்மனானவ ரிவரிடத்து வ

ந்ததுபோலுடனே மறைந்துவிட்டனர். அப்போது காசியபரும் தவம்புரிவதற்காகத் தனதாசிரமத்துக்குச் சென்றுவிட்டனர். (20) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்போதங்குண்டாயிருந்த மண்டபங்களெல்லாம் மாயந்திறற் செய்யப்பட்டவைபோல் மறைந்துவிட்டதுமிகவுமாச்சரியம். (21) பெருஞ்சேனைக் கூட்டங்களையுடைய சூரபத்துமனும் தம்பிகளோடுகூட ஸ்ரீ பார்வதீபதிக்குத் திருப்திசெய்வதைக்குறித்துயாகம் பண்ணுவதற்காகப் புறப்பட்டு நடுவழியிற் செல்லுகையிலப்போது அசுர குருவாகிய சுக்கிரபகவானங்கு நற்செயலாக வரலுற்றனர். அப்போதவர்கூட மகா பயங்கரர்களான அவ்வசுரர்களைக் கண்ணுற்றதில் மிகவும் திகிலடைந்தது என்ன ஆச்சரியம்! பிறகவர் அவ்வசுரர்கள் சாந்தத் தன்மையைக் கொள்ளவேண்டி வசிய மந்திரத்தை ஜபித்துக்கொண்டு சூரனருகிற் சென்று "அப்பா! குழந்தாய்! யானுங்களுக்குக் குரு" வென்றனர். (24) அவரிப்படிச் சொன்னவுடன் சூரனவரடிகள்மீது பணிந்து விநயத்தோடு வணக்கமுற்று நின்றனன். (25) அப்போது சுக்கிரன் தானுகவே யாகங்களுக்குரிய விடையூறுகளை விலக்கிக் கொள்வதற்கான ஸ்ரீ சிவபிரானது மந்திரத்தை யப்போதவனுக் குபதேசித்து உடனே சென்றுவிட்டனர். (26) சூரனும் தம்பிகள் சேனைகள் சகிதனுகத் துரிதத்தில் வடத்தீவத்துக்குச் சென்று அங்கு பதினுயிரம் யோஜனை விஸ்தீர்ணமுள்ள வோர் யாகசாலையை யமைத்து அதற்குச் சுற்றிலும் மலைகளைக் கோட்டையாக வளைத்தான். (27½) அதைச் சுற்றிலும் பற்பல வாயுதங்களாற் பயங்கரர்களான பல சேனைகளை (28) நிறுத்தியங்கு மத்தியிலாயிரம் யோஜனைச் சதுரமு மாழமுமுள்ள வோரக்கினிகுண்டத்தையுண்டாக்கி (29) யதறகுச் சுற்றிலுமதேவிதமாக நூற்றெட்டுக் குண்டங்களையும், அவைகளையும் சுற்றி யதேவிதமாக வாயிரத்தெட்டுக் குண்டங்களையு (30) மேற்படுத்தி யவற்றுள் பிரதான குண்டத்தில் தானேமம் செய்ய வெத்தினப்பட்டனன். மகா பயங்கரனுன விச் சூரபத்தும னக்குண்டத்தின்மீது பூமியில் ஜலத்தைப் புரோக்ஷித்து (தெளித்து) (31) அப்படிப் புரோக்ஷித்ததனுல் பாதாளலோகம் வறையிலுள்ள (பூதப்பிரேதாதிகளை) விலக்கிவிட்டனன். அதன் பிறகு மாயையென்பவள் வந்து அடியிற்கண்ட யாகத்துக்குரிய ஸாமான்களைக் கொடுத்தனள்:—(32) எருக்கு, வெள்ளெருக்கு, நாயுருவி, புறசு, வேம்பு, இரளி, புளி, தானி, (33) இவை முதலான விஷவிருக்ஷங்களது சமித்துகள், மிகுதியான பால், நெய், தையிர், எண்ணெய், தேன்,

துவரை, பயறு, உளுந்து, எள், கொள்ளு, கடுகு, அரிசி, நெல் முதலியவை, (35) இலக்ஷம் பசுக்கள், ஆடுகள், எருமைகள் முதலியவை, அளவற்ற இரத்தங்கள், மாமிசங்கள் முதலியவை,(36) பச்சைக் கர்ப்பூரம், சந்தணம், கஸ்தூரி, விசித்திரங்களும் நல்ல வாசனை யுடையவைகளுமான பற்பல புஷ்பங்கள், (37) தர்ப்பங்கள், ஜுஹூ (அத்திமரத்தாற் செய்யப்பட்ட ஹோமபாத்திரம்), பிரஸ்தரம் (தர்ப்பத்தினோர் முட்டி), ஸ்வதிதி (பசுக்களைச் சேதிப்பதற்குள்ள வாயுதம்), அரணி (கடைந்து அக்கினி யெடுப்பதற்கான வோர் கட்டை), இவ்வை முதலிய யாகத்துக்கு வேண்டிய பற்பல சாமான்களையும் (38) மாயையானவள் மூவாயிரம் யோஜனைச் சதுரம் நிரப்பினள். அதற்குமேலிச் சூரபத்துமன் துர்க்கை, பைரவன், (39) பத்திரகாளி, பூதம், பிரேதம், பிசாசம், டாகினிகணங்களின் கூட்டம், சாமுண்டி ஆகிய வித்தேவதைகளைக்கிழக்கு முதலிய வெட்டுத் திக்குகளிலும் பூஜித்தனன். (40) பின்பசுரன ரணியைக் கடைந்து அதிற் கொஞ்சம் நெய்யை விட்டு அக்கினியை விருத்திசெய்து குண்டமத்தியில் மூட்டி வளர்த்து, அக்குண்டமத்தியில் தானே (முனையிற் கூர்மையுடைய) வோர் வச்சிரக்கம்பத்தை நாட்டி யவ்வக்கினியில் துவரை,(41) எள், உளுந்து, மாமிசம், நெய், எண்ணெய் இவைகளை ஸ்ரீ சிவபிரானுடைய மந்திரத்தினாற் பதினாயிர வருஷங்களளவுமோமம்செய்தான். (42) அதேவிதமாக மற்றக் குண்டங்களிலும் மகா வீரபாராக்கிரமங்களையுடைய சிங்கமுகாசுரன், தாரகன் இவ்விருவர்களும் முறையெ நூற்றெட்டுக் குண்டங்களிலும், ஆயிரத்தெட்டுக் குண்டங்களிலு மோமம் பண்ணினார்கள். (43½) அவர்களவ்வாறு செய்திடினும் ஸ்ரீ மகாதேவன் பிரசன்னராகவில்லை. (44) பிறகு சூரன் வெகு கோபமுண்டு ஆகாசத்திற் கிளம்பிக் குதித்து நின்று கொண்டு தனதுடலைக் கண்டம்கண்டமாக நறுக்கி, ஆயிரவருஷமளவும் மனதினால் ஸ்ரீ பரமேசுவரனைத் தியானித்துக்கொண்டு விரத்தங்களாலும், மாமிசங்களாலு மோமம்செய்தான். (45½) இவ்வளவு செய்தும் ஸ்ரீஸாம்பமூர்த்தி யவ்வியாகத்தில் ஸான்னித்தியமாகவில்லை. (46) பிறகப்போது சூரபத்தும னுயரமாக வானததிற் சடிதியாகக்கிளம்பி யவ்வயிரக்கம்பத்தில் விழுந்து (அதன் முனை யாசனந் துவாரத்தின் வழியாகப் பாய்ந்து மூளையைக் கிழிக்கப்பெற்றவனாகி) அதனடிப்புறத்திற் சேருகையில் (47) அப்போது குண்டமத்தியிலவ் வசுரேசுவரனுயிரை மடுத்தான். அப்போதசுரர்களுக்குள் மிகுந்த ஹா ஹா காரமுண்டாயிற்று. (48) தேவர்களுக்கோ வப்போது போராநந்தமுண்டாயிற்று. பிறகு சிங்கமுகனும் துரிதமாகத்தனது சிரசுகளை வெட்டவெட்ட மறுபடியு

மதேவிதமாக முளைத்து முளைத்துண்டானவைகளையும் வெட்டி வெட்டியோமஞ்செய்தான். தாரகாசுரனு மிதேவிதமாகச் செய்தான். மகாபலிஷ்டர்களான மற்ற வசுரர்களும் தீக்குண்டத்திற் பொதுப் பொதென்று குதித்தார்கள். (50) அப்போதுகூட ஸ்ரீ மகாதேவன் பிரத்தியக்ஷமாகாததைக்கண்டு சிங்கமுகனுமவ்வாறே யங்குயிரை யிழப்பதற்கு மனமுற்றனன். (51) அப்போதக்கினியானது பிரம்மாண்டச் சுவறு வரைக்கும் ஜுவலித்தெரிந்தது. உயரத்திலிவ்வாறெரிப்பதுபோல் கிழும் பாதாளலோகமளவு மெரித்தது. (52) அப்போது ஸ்ரீ பரமேசுவரனோர் கிழவனுருவத்துடன் ஸ்ரீ விஷ்ணுவினுடைய *முதுகெலும்பினுலமைத்த வோர்தடியைக் கையிற்கொண்டு தோன்றினர். (53) அவர் வேதமோதிக்கொண்டு இங்குமங்கு மிடறலுற்ற திருவடிகளைக் கொண்டவராகிச்சிங்கமுகனண்டைக்குவந்து திருவாய் மலர்ந்தருளியதாவது:—(54) "அடா! நீங்கள் யாவர்? யாவருடைய புத்திரர்கள்? நீங்களிங்கென்ன செய்கின்றீர்கள்? இவையெல்லா மாதியோடந்தமாக வுள்ளபடி யிப்போதே யுரைத்திடுவீர்." (55)என, சிங்கமுகன் கூறுகின்றான்: கேளீர்! பிரம்மத்தை யறிந்த மேன்மைபொருந்திய பெரியவரோ! ஓ! கோ கோ! தேவரீரைக் கண்டமாத்திரத்தில் ஸ்ரீ பரமேசுவரனை நேரில் தரிசித்ததுபோன்ற மிகுந்த திருப்தி யெங்களுக்காகிவிட்டது.(56) யாங்கள் காசியபமுனிவரது மைந்தர்களான வசுரர்கள்; வீரயாகம் பண்ணுவதால் ஸ்ரீ பரமேசுவரனுக்குத் திருப்திசெய்து அரசாக்ஷியைப் பெறுவதற்காக விங்கு வரலுற்றோம். (57) ஸ்ரீ மகேசுவர னருள்செய்யாததினல் மகா வீரனென வெனது மூத்தோன் வயிரக்கம்பத்தில் விழுந் தக்கினிகுண்டத்தில் மரணமடைந்துவிட்டான். (58) அதனாலே யானுமிப்போது தேகத்தை யிழப்பதாகத் தீர்மானித்திருக்கின்றேன்"; என, விருத்தர் கூறுகின்றார்:—"அடா! வீரா! நீ மரணமடையாதே; உங்களுக்கிப்போது பாக்கியமுண்டாகப்போகின்றது;" என்று திருவாக்கருளிவிருத்தரானவ் ராகாய கங்கையைத் தருவித்தனர். (59) பிறகப்போதுடனே யக்கங்கையானது, ஓர் பந்தானது அடிக்கடி யடிக்கப்பட்டுக் கிளம்புவதுபோல், மலைகள் மீது விழுந்து பெரிய வலைகள் மோதலுற்றவைகளாகக் கிளம்பிக்கிளம்பி விழுந்தங்கு வரலுற்றது.(60) அப்போதங்கெல்லாக் குண்டங்கள்மீதும் ஸமித்துக்களிற் பற்றியிருந்த வக்கினியெ

---

* விஷ்ணுவானவர் கூர்மாவதாரம் செய்யுங்கால் ஸ்ரீ பரமேசுவரன் தேவர்களால் பிரார்த்திக்கப் பட்டதன்பேரி லக்கூர்மத்தை நிக்கிரகம் செய்வதற்காக வதின்முதுகெலும்பைப் பிடுங்கியதைத் தரித்துக்கொண்டனர். —தக்ஷகாண்டம்;

ல்லா மவ்வாகாசகங்கையது நீரினுலணையலாகி, சூரன் முதலியவசுரர்களு மந்நீரினுல் நனைக்கப்பட்டெல்லோர்களும் பிரஞ்ஞைகொண்டார்கள். (61)

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் ௩-வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு பிரபுவாகிய ஸ்ரீ பகவானுனவர், பார்வதி ஸகிதராகவும், பிரகாசம் பொருந்திய கங்கணம், தோள்வளை, முத்துமாலை யிவைகளாலலங்கரிக்கப்பட்டவராகவும், (1) சடைமுடிமீது விளங்கிய சந்திரகலையால் பூஷணமுள்ள சிரசையுடையவராகவும், பிரகாசமான சடைத்தடத்தில் ததும்பி விளங்கிய கங்கையினுல் சோபிக்கலுற்றவராகவும், (2) புன்னகைப்பினுல் வெளியில் பிரகாசிக்கின்ற பல் வரிசைகளால் விளங்கலுற்றவராகவும், நெற்றி முதலியவிடங்களிற் சோபிக்கலுற்ற திருபுண்டிரங்களாற் சுந்தரமாகியவராகவும், (3) திருமேனி முழுதும் திருநீற்றுப் பூச்சினுலலங்கரிக்கப்பட்டவராகவும், அனேக ருத்திராக்ஷ மாலைகளைப் பூண்டவராகவும், ($3\frac{1}{2}$) பல வலங்காரங்களாற் சோபிக்கலுற்றதும், தாமரைத்தண்டு நூல்போன்ற மிக வெண்மையான சாமரங்களால் பிரகாசமுடையதும், ஒலிக்கலுற்ற கிண்கிணிகளி னுசைகளால் திசையெங்கும் செவிடாக்கலுற்றவும், பாம்புடலுக்கு நிகராகிய நேர்த்தியான வாலினுல் விளங்கியதும், கழுத்தினிற் பிரகாசமாகத் தொங்கலுற்ற மணிகளின் நாதத்தினுல் திசையெங்கு மொலியால் நிரப்பலுற்றதும், மிகவும் பருத்துயர்ந்த திமிலுடையதும், வாட்டம்பொருந்திய பருத்த கழுத்தை யுடையதுமான திவ்விய இரிடபத்தின்மீ தேறலுற்றவராகவும், (4-$6\frac{1}{2}$) சுற்றிலு மனேகவித வாத்தியங்கள் கோலாகலமாக கோஷிக்கப்படுகையில் (7) பற்பல கணங்களாலும், இன்னும் மற்ற பிரம்மன், விஷ்ணு முதலியதேவர்களால் சூழப்பட்டவராகவும் எல்லாப்பக்கங்களிலு மனேகமாயிரம் தேவமங்கைத் திரள்களால் நிரம்பப்பெற்றவராகவும் நேரில் பிரஸன்னராயினர். (1-8) அப்படிக்கொத்த ஸ்ரீமகாதேவனைக் கண்டு சூரபத்துமன் கண்கள் மலரலுற்றவனுகித் தம்பிகளுடனும், சகல சேனைகளுடனும் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து (9) வேத வேதாந்தங்களா லிசைக்கப்பட்ட மேன்மைபொருந்திய துதிகளால்

தோத்திரம் செய்தான். பிறகப்போதவனைத் திருக்கண்ணுற்று ஸ்ரீ பரமேசுவரன், அலர்ந்த செந்தாமரைபொன்ற திருமுகத்திற் பெருகிய தேன் போன்ற திருவசனங்களை யளித்ததாவது:—($10\frac{1}{2}$) "வாரீர்! அசுரவல்லபர்களே! உங்களது தவத்தினால் மிகவும் திருப்தியடைந்தோம். (11) ஓ! பாவமற்ற பரிசுத்தர்களே! உங்கள் மனதி லபீஷ்டமுள்ள வெல்லாவற்றையும் நம்மிடத்துரைப்பீர்கள்! அவையெல்லா மிப்போதே நிச்சயமாக வீந்தருளுகின்றோம்." என்று ஸ்ரீ சங்கரனுரைக்க (12) சூரன் சொல்லுகின்றான்:—"ஓ! ஸர்வகுண சம்பூர்ணராகிய ஸ்ரீ மகாதேவா! யான் பக்தியோடாராதித்ததற்காக தேவரீர் பிரசன்னமான துண்மையானால் ஆயிரத்தெட்டண்டங்களையும் யா னொர் குடையின் கீழாண்டு (13) ஆஞ்ஞாசக்கிரம் செலுத்துவதையும், எங்களுக்கென்று மழிவில்லாமையையும், விஷ்ணு முதலிய தேவரெல்லோர்களு மென்முன்னிற் படும்போதே (14) மிகப் பயந்தோட்டம் பிடிக்கத்தக்கதுற்ற வாயுதத்தையு மெந்தனுக் கீந்தருளி, அவ்வெல்லா வண்டங்களுக்கும் யான் போய் வாலுற்ற வல்லமையையு மருளல்வேண்டும்." (15) என ஸர்வேசுவரனவனை நோக்கி மிகுந்த கருணைகொண்டவராகி "கேட்கப்பட்டதெல்லா மப்படியே யாகட்டும்:(16) ஆனால் கேளாய்! பாவமற்ற சூரா! உனக்கு ஆயிரத்தெட்டண்டங்களி னதிபத்தியமானது நூற்றெட்டு யுககாலம் வரைக்கும் மட்டில்தா னிருக்கக்கடவது. (17) மேலும் பற்பல விரத்தினங்களால் சோபிக்கலுற்ற வோரிந்திரவிமானமும், மற்றோர் சிங்கவாகனமும், பாசுபதாஸ்திரம் முதலிய(18) அந்தந்தத் தேவதைகளி னஸ்திரங்களும், வஜ்ஜிராயுதம் போன்ற வலிமையுடைய தேகமும் அக்கினிகுண்டத்தினின் றுண்டான பல வசுரர்களும், (19) பதினையிரங் கோடி ஸங்கியை கொண்ட சதுரங்கபல சைனியங்களும் கேளாய்! சூரபத்துமனே! உந்தனுக்கிங்கே மிகுதியாக உண்டாகக் கடவது.(20) மேலும் மற்ற உனது சகோதரர்களுக்கும் பலவாயுதங்களும், நூற்றெட்டு யுககாலமளவு மாதிபத்தியமுமுண்டாகக்கடவது. (21) மற்ற விஷ்ணு முதலிய ஸகல தேவர்களோடு முனக் குயுத்தம் நேரிடினும் நம்முடைய வழிவற்ற சக்தியினுலொழிய மற்றயாவராலு முந்தனுக்கு நாசமுண்டாகத் தக்கதில்லை. ஆனாலுனக்குச் சாவு நிச்சயமாகவுண்டு." (22) என்று திருவாக்கருளிய வுடன் சருவேசுவரர்களுக்கு மீசுவரனான ஸ்ரீ ஸாம்பமூர்த்தியானவர் மறைந்தருளினர். பிற்பாடு சூரபத்துமன் முதலிய வசுரர்கள் மிகுந்த பேரானந்தங்கொண்டார்கள். (23) மற்றவர்கள் கத்திகளைக் கையிற்கொண்டு மிகுந்த அட்டகாசத்தோடு கூ

த்தாடினார்கள். சிலர் மிகுந்த சந்தோஷக் கூச்சல்களோ டிங்கு மங்கு மோடினார்கள். (24) பிறகு சூரபத்தும னசுரர்களை நோக்கி யுரைத்த தாவது:— "இவ்வளவு காலமளவும் நீங்களிங்கு காததிருந்தீர்களல்ல வோ!" (25) என்றது முதலான பல உபசார வசனங்களை யவர்களுக் குரைத்தனன். அதன்மேலவர்களு மப்போததற்குத் தக்க சமாதான உத்தரங்களை மிக வணக்கத்துடன் சொல்லிக்கொண்டார்கள். (26) அப்போது ஸ்ரீ சம்புவாலருளப்பட்ட சதுரங்க சைனியங்களையும் வகுப்பு வகுப்பாகப் பிரித்து அததற்குத் தக்க சேனாபதிகளை நாதர்களாகத் துரி தத்திலேற்படுத்தி விட்டு,(27) பிறகு தந்தையாகிய காசியபமுனிவரிட த்துக்குத் தம்பிகளுடனும், சைனியங்களுடனும் சென்று அவரைத் த ண்டனிட்டு வணக்கத்தோடு நின்று வசனமுரைத்ததாவது:—(28) "ஓ! சுவாமீ! தேவரீரை விட்டுப் போனபிறகு நான் செய்த வேள்வியால் ச ருவேசுவரனாகிய பரமேசுவரன் மிகவும் பிரீதிகொண்டவராகி மிகுந்த ச ந்தோஷத்துட னெந்தனுக்கு ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மாதிபத்தி யத்தை யீந்தருளினர். (29) தேவரீரினி செய்யத்தக்க புத்திமதிகளை யிப்போதெந்தனுக்குத் தயவுசெய்து உரைத்தல் வேண்டும்" என்றான். பிறகு காசியபரோ வென்றால் அப்போது தேவர்களுக்கு நேரிடும்படி யுள்ள வபாயங்களை மனதிலூகித்துக்கொண்டு (30) "அப்பனே! உங்க ளது குருவாகிய சுக்கிராசாரியிடஞ் சென்று கேட்டுக்கொள்வாய்" என் று தவத்தை விக்கினப்படுத்த மனமற்றவர்போல் துரிதத்திற் சொல்லி முடித்தனர். (31) அதன்மே லசுரச்சிரேஷ்ட ரெல்லோர்களும் சேர்ந் து தங்களுடைய க்ஷேமத்தைக் கோரியவரும், சகல சாஸ்திரப்பொரு ள்களிலும் தேர்ச்சிபெற்றவருமான சுக்கிராசாரியனிடம் சென்று (32) வந்தனித்துக் கைகளை யஞ்சலிகொண்டு சங்கதிகளைத் தெரியப்படுத்தி "ஓ! சுவாமீ! இனியாங்கள் நடக்கவேண்டிய காரியாகாரிய புத்திகளைத் துரிதமாகச் சொல்லியருளல் வேண்டும்" (33) எனவுரைத்து வினயத்தி னால் வணக்கமுற்றவர்களாகி யப்போதவரைச் சுற்றிலும் நின்றார்கள். அதற்குச் சுக்கிரனோவென்றால் சூரபத்துமனொருவனை மட்டில் தனி மையிலழைத்து (34) மிகுந்த பேச்சுக்காரரானவச் சுக்கிரன் உலகினி ல் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்ற நடவடிக்கைகளுக் கொத்ததான வசனங்களைச் சொன்னதாவது:— "கேளீர்! ராஜனே! ஸ்ரீ பரமேசுவர னோவென்றால் கேவலம் மாயையைக்கொண்டே வானம்முதலியவற் றைப் படைத்தனர். (35) அதேவிதமாகக் கேவலம் லீலையைமட்டில் பிரயோஜனமாகக் கொண்டவராகித் தமது பரமாத்துமாவினுடைய அ

ம்சத்தை பிரிவினைசெய்து சரீரத்தோடு மிந்திரியங்களோடும்கூடியவ ராக அவரே ஜீவாத்துமாக்களாக விளங்கிவருகிறார். (36) குடத்துக்கு ளிருக்கு மாகாயமானது அக்குடமுடைந்தவுடன் ஒரே பேராகாயத்தோ டு சேர்ந்துவிடுவதுபோல் ஒருவருடைய தேகத்துக்கு லயம்நேரிட்டவு டனத்தேகத்தைப் பற்றியிருந்த ஜீவாத்துமாவானது ஒரே பரமாத்து மாவாகிய ஸ்ரீ மகேசுவரனோடு சேர்ந்துவிடுவதாகும். (37) ஆகையா லுண்மையில் புண்ணியமென்பதும், பாவமென்பதும் வெறும் பொய் யே! மோக்ஷமென்பது மிவ்வாறுதான். ஆகையால் நீர் செய்யத்தக் கது யாதென்றால்:— உம்முடைய ஆத்துமாவை ஸாக்ஷாத் பரப்பிரம்ம சுவரூபமாகவே (38) நினைத்து மனச்சோகத்தைவிட்டு அதன்மேல் வி ஷ்ணு, பிரம்மன்முதலிய தேவர்களை முற்றும் விலக்கி தஹராகாசமத்தி யில் விளங்கிய ஸ்ரீ பரமசிவனை மனதில் தியானித்து (39) இந்திரன்முத லிய தேவர்களை மிகுந்த பயத்தினால் கதிகலங்க நடுங்கவடித்து அவர்க ளுடைய பதவியில் மகா பராக்கிரமசாலிகளான வசுரர்களை ஸ்தாபிக்க லாவீர். (40) மேலும் சத்துருக்களிடத்துக் கொலை, காதல், புரட்டு, திருட்டு, பகை இதுமுதலியவற்றைச் செய்யலாவீர். (41) இவ்வண் ணம் செய்யாவிடினும்மை யாதொரு மானிடனாவது தேவனாவது மதி யான். உம்முடையதான ஸகல வண்டங்களுக்கு மடிக்கடி நீர் போய் (42) அங்கங்குள்ள நடவடிக்கைகளை ஜாக்கிரதையாக விசாரித்து விசா ரித்து நீருமது தம்பிகளொடும் கணங்களோடுமிம் மத்தியவண்டத்திலே வாசம் பண்ணும்." (43) எனவுரைத்துப்பின்னு மவ்வண்டத்தினுடை ய நீளமகலம், மலைகள், கடல்கள், அனேகம் தீவுகள், பற்பலவுலகங்கள் (44) தேவர்கள், லோகபாலர்கள், திக்கஜங்கள், மனுக்கள், பிராணிகள் இவைமுதலிய வெல்லாவற்றையு மச்சுக்கிரன் விஸ்தாரமாக வெடுத்து ரைத்து. (45) "இவ்வண்டத்திலிருப்பதாக வென்றனாலுரைக்கப்பட்ட துபோலவே மற்றெல்லாவண்டங்களிலு முள்ளவர்கள்." எனவுமுரைத் துப் பின்னுமவர்களுக்குச் சொல்லவேண்டிய ஸகல விஷயங்களையும் சொ ல்லி யவர்களை யனுப்பினர். (46) பிறகு சூரபத்துமனுமச் சுக்கிராசாரி யனை வந்தனித்துக் கோடிசூரியப் பிரகாசம் போன்றதும், பற்பல விர த்தினங்களால் விசித்திரமாக வமைக்கப்பட்டதும், கோடிக்குதிரைகள் பூட்டப்பட்டதும், அழிவற்றதும், குடை துவஜம்முதலியவைகளா ல லங்கரிக்கப்பட்டதும், மிக நேர்த்தியானதுமான விந்திரவிமானத்தின் மீ தேறிக்கொண்டு புறப்பட்டனன். (47-48) மகா பலசாலியான சிங்க

முகநும் பத்தில்கூஷம் யாளிகள், அநேகமெண்கொண்ட குதிரைகள், பெரிய பூதங்களிவைகள் பூட்டப்பட்ட விரதத்தின்மீ தேறிக்கொண்டு பற பறவென்று புறப்பட்டனன். (49-50)

மூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஆசுரகாண்டம் ச—வது அத்தியாயத்தினர்த்தம்.

பின்பு தாரகனே பதினுயிரம் குதிரைகள் பூட்டப்பெற்ற மிக நேர்த்தியான விமானத்தி லேறிக்கொண்டும், (1) மற்றவர்கள் அனேக வித ஆயுதங்களைப் பற்றியதா லலங்கரிக்கப் பட்டவர்களாக ரதங்களிலும், கோல்போன்ற மெல்லிய வுடம்போடு வழகினர்களாகிய மற்றவர்கள் யானைகள்மீதும் குதிரைகள்மீது மேறிக்கொண்டும், (2) மற்றப்படியுள்ள மிகுதியான சேனைகளுடனு மநேகவிதமான கோவேறுகழுதைகளுடனும், ஒட்டைகளுடனும் பிரயாணப்பட்டார்கள். அப்போது காஹளீ, பேரி, படஹம்முதலிய வாத்தியங்கள் மிகுதியாக முழக்கப்பட்டன. (3) மேலும் வாத்தியங்களில் பற்பலவிதமான மட்டு, டிண்டிமம், ஜர்ச்சரம் இவை முதலியவைகளெல்லாம் கடலுக்கு மெற்கொண்ட பேரோசை யுள்ளவைகளாக மிகுதியாயிங்கு முழக்கப்பட்டது. (4) சிலர் கத்திகளைப் பிடித்தவர்களும், சிலர் தடிகளைக் கொண்டதனுல் பயங்கரர்களாகவும், சிலர் கட்வாங்கபாணிகளாகவும், சிலர் உலக்கைகளைக் கர்வத்தோடு வகித்துக்கொண்டும், (5) அனேககோடி சேனைகள் குடைகளைப் பிடித்துக்கொண்டும், பலகோடிப் படைகள் துவஜங்களைக் கைகளிற் கொண்டும், மற்றவர்கள் பட்டாக்கத்திகளைக் கைதனிற் பற்றி இங்குமங்கு மோடிக்கொண்டும், (6) அதேவிதமாய் மற்றவர்களொருவரோடொருவர் கைதட்டி அட்டகாஸம் பண்ணிக்கொண்டும் இவ்விதமாகப் பலவாருய் நான்கு பக்கங்களிலும் திரிந்துகொண்டிருப்பவர்களும், இவ்வளவென்று கணக்கெடுப்பதற்கு மாளாதவர்களும், மகா பராக்கிரமம் கொண்டவர்களுமான, அசுரராஜனுடைய வெண்ணிக்கையற்ற ரதகஜதுரகபதாதிகளான நான்குவகைச்சேனைகளுடையவும், ரதங்களின் சக்கிரங்களாலும், யானை காலாட்களின் கால்களாலும், குதிரைகளின் குளம்புகளாலும் கிளப்பிவிடப்பட்ட (7-8) புழுதிகளப்போது சூரியமண்டலம் வரைக்கு மெழும்பி யெங்கும் பரவலாயிற்று. (7-8½) அப்போதிவ்வி

தமாக நான்கு பக்கங்களிலும் மூன்றுகோடியோஜனை விஸ்தீர்ணத்துக்கு பூமியானது நான்குவகைச் சேனைகளாலும் மிகவும் நெருக்கமாக நிரம்பப்பட்டது. (9½) மகாசுரனுகிய சூரபத்துமனிப் பிரகாரமாகத் தம்பிகளுடனும், சைனியங்களுடனும் சென்று (10) உயர்ந்த கோட்டையால் சூழப்பட்ட அளகாபுரியை முற்றுகை போட்டான். இச்சங்கதியைக் குபேரராஜன் தூதர்கள் முகமாகத் துரிதத்திற் கேள்வியுற்று (11) அப்போதசுரர்கள் பெற்ற வரப்பிரஸாதங்களை நன்காலோசித்து மிகப்பயந்தவனுகி மிகவும் வணக்கத்தோடஞ்சலிகொண்டுப் பலவாறுய் வாழ்த்திக்கொண்டு (12) ஏராளமான தனங்கள், திவியவஸ்திரங்கள், ஆபரணங்கள் இவைகளைக் காணிக்கையாகக் கொடுத்துச் சூரபத்துமனை நோக்கி வசனமுரைத்ததாவது:— (13) "ஓ! சுவாமி! யான் தேவரீரடியனுக விங்கிருந்து காலந்தள்ளுகின்றேன்; என்னைத்தயவுடனிப்போ திரக்ஷித்தல் வேண்டும்." என, அசுரனுல் விடைகொடுக்கப்பட்டதன் பேரில் குபேரன் தனது நகரஞ் சென்றனன். (14) அதற்கு முன்னமே யவனதுபட்டண மசுரர்களால் மிகுதியாகக் கொள்ளையிடப்பட்டது. குபேரனப்போது மிகக்கொடூர துக்கத்தையடைந்தான். (15) பிறகசுரராஜன் ஈசானனைச்சயிக்க விரும்பிப் புறப்பட்டுச் செல்லுகையில் ஓ! கோ! கோ; நடுமார்க்கத்திலே யத்தேவன், ஸ்ரீ மகாதேவனுடைய முக்கண்முதலிய * சின்னங்களால் விளங்கியவனென்பதைக் கேள்வியுற்று சூரபத்தும னுடனே யவனைவிட்டு (16½) இந்திரனை வெற்றிபெற வேண்டிக் கிழக்குத்திசைக்குச் சென்று (17) அவனதற்புதமான பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டான். அங்கெல்லாத்திக்குகளிலுமுள்ள விருக்ஷங்களையெல்லா மனேகமாய் முறித்தெறிந்தான். (18) அப்போதிந்திரனுடனே யாகாயத்துக்குச்சென் றோடிவிட்டான். அப்போதே சூரனும் சேனைகளைக்கொண்டவனது பட்டணத்தைக் கொள்ளையடித்தான். (19) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அனேகம் தேவஸ்திரீகள் சிறைபிடிக்கப்பட்டார்கள். மேலும் சேனைகளிந்திரனுடைய மாளிகையைச் சூழ்ந்துகொண்டு அந்தப்புரத்திலிருக்கின்ற (20) அனேகம் தனங்களையெல்லாம் பூமியை வெகு விஸ்தாரமாக வெட்டி வாரியெடுத்துச்

---

* இவ்வீசானனைப் பற்றியோவென்றுல் பல மடையர்கள் ஸ்ரீ சிவபிரான் கேவலம் ஓர் திக்பாலனைத்தவிர வேறில்லையென்று இகழ்ச்சியாகச் சொல்வதை யாவரும் கேள்வியுற் றிருக்கலாம். இம்மகாப் பிரபந்தமாகிய தகுந்த வாதாரக் கிரந்தத்தில் சொல்லப்படுவதைக் கொண்டு ஈசானதேவன் தகுந்த சிவாராதனங்களைச் செய்து ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய ஸாரூப்பியத்தைக் கொண்டவோர் தொண்டனைத் தவிர வேறில்லை என்பதை யறிக.

சென்றார்கள். இந்தவிதமாக வீடுகள்தோறும் சென்று கொள்ளைகொண்டு ஓர் க்ஷணத்துக்குள் அவன் பட்டணத்துக்கும் தீயிட்டார்கள். (21) அப்போது பலவீனர்களாயுள்ள வனேகம் தேவர்க ளவர்கள் கையிலகப்பட்டுக் கொண்டார்கள். ஓடிச்செல்வதற்குந் திராணியுள்ள பலதேவர்களும் ஓ! கோ! கோ! அஜாக்கிரதையினு லோடுவதற்குந்தவறிச் சுரனுடைய அவ்வரவில் தங்கிவிட நேர்ந்து உடனே சிறைபிடிக்கப் பட்டார்கள். பிறகு கொடியோனாகிய வசுரராஜன் கொள்ளையாடின திரவியங்களை யவர்கள் தலைமேல் சுமத்திக்கொண்டு அக்கினிதேவனுடைய பட்டணத்தைத் துரிதத்தில் தீயிடுவதற்காக முந்திக்கொம்மாளம் போட்டுக் கொண்டோடிச் செல்லுகிற மகா பலிஷ்டர்களும், மகா சூரர்களுமான வசுரப்படைகளுடன் சென்றனன். (24) அப்போதுடனே அக்கினிதேவனுடைய மிகுதியான சேனையு மவர்களோடு துரிதத்தி லெதிர்த்து யுத்தம் பண்ணுவதற்குச் சென்றார்கள். பின்பவ்விருவர்களுடைய படைகளு மொருவரோடொருவர் அனேக சஸ்திரங்களாற் சண்டையிட்டுக்கொண்டார்கள். (25) அக்கினிதேவன் படையானது தாரகாசுரனுடைய படைக்குமுன் நிற்பதற்குந் திறமையற்றவர்களாகிச் சீக்கிரத்திலபஜயங்கொண்டு அக்கினிதேவனண்டைக் கோடினார்கள். (26) உடனே யக்கினியும் கோபத்தினால் மெய்மறந்தவனாகிச் சடிதியிற் சென்று ஜகங்கள் முழுமையு மெரிப்பதற்கான பிரளய காலாக்கினியைப் போல் திகுதிகென்று ஜுவாலைவிட் டெரிந்துகொண்டு (27) அனேக அஸ்திரங்களை யசுரப்படைத் திரள்கள்மீது பிரயோகித்தனன். பிறகு மகா புத்திசாலியும், பற்பல அஸ்திரப்பயிற்சியிற் கைதேர்ந்தவனுமான தாரகன் (28) இடதுகையால் வில்லெடுத்து வலதுகையினு [illegible] ணேற்றிட்டு ஊழிகாலத்திய மேகம் கர்ச்சிப்பதுபோல் நாணையிட்டு ([illegible]) வில்வித்தை முறைப்படி யவன் தீர்மானம் பெற்றிருக்கிற வழ[illegible] சரித்து, அப்போது ஸ்ரீ பரமேசுவரனைத் தியானம் பண்ணிக்கொண்டு மகா பெருமைபொருந்திய பாசுபதாஸ்திரத்தை, (30) ஸாக்ஷாத் மற்றொரு ருத்திரமூர்த்தி போன்றவனாகி, தனுசிற் சந்தானம் செய்தான். அதனாலக்கினி நிலைகுலைந்து மனநடுங்கி (31) ஐயோ! ஸ்ரீ பசுபதியினுடைய இவ்வஸ்திரமானது ஓர் க்ஷணத்துக்குள் உலகுகளை யெரித்துவிடுமே! காலாக்கினியின் முன்னிலையிற் கொசுக்களைப்போ [illegible] தான் சட்டையாகுமா? (32) நாமெங்கே? ஸ்ரீ பரமேசுவரனுடைய அஸ்திரமெங்கே? ஆ! ஹா! ஹா! நாமிப்போதே மாண்டுவிடுவோமென் [illegible] று சிந்தித்து உயிரைக்காப்பாற்றுவதற்காக விப்போது தாரகனையே சர

ணம் பெறுவோ (33) மென நிச்சயித்துத் துரிதமாக வாயுதங்களையெ
ல்லா மெறிந்துவிட்டுச் சரணம் சரணமென்று சொல்லிக்கொண்டே தார
கனண்டைக்கு (34) அஞ்சலிகொண்டு சென்று "யான் தேவரீரடிபணு
கின்றேன்: என்னை மன்னித்துவிடல் வேண்டும்!" என வுரைத்துப் பய
த்தினால் மெய்நடுங்க வங்குநின்றான். (35) அதன்பிறகு அசுர ரக்ஷக
னான தாரகன் பிரீதிகொண்டு குளிர்ந்த வார்த்தைகளா லக்கினியைச்
சமாதானப்படுத்தி (36) "நீ பட்டணத்துக்குச் சென்று முன்போல்
பிரஜைகளைப் பாலனம் செய்வாய்: இது நிச்சயம். என்னுடைய கட்ட
ளையின்படி முற்றும் பயத்தைவிட்டு உன் பட்டணத்திலிருந்துவருவா
யாக." (37) என, பிறகு அக்கினியும் "யானறியாமையால் தானுமாறு
கச்செய்ததை யெல்லாம் மன்னித்தருளல் வேண்டும்." எனவுரைத்து
த் தன் நகரம்சென்றனன்; (38) இதற்குமுன்னமே பலவிதத்திலெங்
கேயென்று காத்துக்கொண்டிருக்கிற குதிரைவீரர்களால் துரிதத்திலவ
னது பட்டணமும் கொள்ளையாடப்பட்டது. (39) பின்பு சூரர்களுக்
கெல்லாம் சூரனும், மகா சாமர்த்தியசாலியுமான சூரபத்துமன் பளிங்க
னென்ற தனது சாரதியை நோக்கி ரதத்தைத் தென்றிசையைக் குறி
த்துச் செலுத்தும்படி யுரைத்தவுடன் (40) அப்பளிங்கன் ரதத்தை யசு
ரனருகிற் கொண்டுவந்து குதிரைகளை விரட்ட அவைகளோர் க்ஷணத்
துக்குள் தருமராஜனுடைய பட்டணம் சேர்ந்தன. (41) சதுரங்க சை
னியங்களும் மற்றோர் சமுத்திரமே கரைபுரண்டதுபோற் சென்றது.
யமபட்டணமு முடனே யசுரர்களால் மிகுதியாகச் சூழ்ந்துகொள்ளப்ப
ட்டது. (42) பட்டணமிவ்வாறு முற்றுகை யிடப்பட்டதை யியமன்
தூதர்முகமாய்க் கேட்டு "ஓ! கோ! இவனால் குபேரன் பட்டணமும் மு
ழுமையும் பறிகொள்ளப்பட்டது. (43) இந்திரன் பட்டணமோ கொ
ளுத்திவிடப்பட்டது; அதேவிதமாக வக்கினியுடைய பட்டணமும் மிக
க் கொள்ளைகொள்ளப்பட்டது." என்றிவ்வாறான சிந்தையாற் பரவசம்
கொண்டு வேகமாக இவனண்டைக் கோடிவந்தான். (44) மேலுமவன்
வருகையில் அனேகம் திரவியங்கள், வஸ்திரங்கள், விநோதமான ஹார
ங்கள், மலைபோல் குவிந்த மெல்லிய அரிசிகள், (45) பயறு, கொள்ளு,
துவரை, உளுந்து இவைமுதலான வின்னும் பலசாமான்களையு மேராள
மாகக் கொண்டுவந்து அவனுக்குக் காணிக்கையாகக் கொடுத்து (46)
"ஓ! சுவாமி! அடியேன் தேவரீரது கட்டளையின்படி தேவரீரடியனுக
விச்சம்யமின்றி பட்டணத்தில் காலந்தள்ளிவருகின்றேன். மகா வீரர்க
ளான அசுரர்களெல்லாம் பட்டணத்தைச் சின்னபின்னம் பண்ணுகிறார்

கள். (47) தேவரீரவர்களைச் சீக்கிரமாகத் தடுத்தழைப்பித்து அடியே னைக் காப்பாற்றல் வேண்டும்." என்றியம னுரைக்கத் தாரகனும் தூதர் கள் மூலமாய்க் கொள்ளைக்காரர்களைத் தடுத்தழைத்து (48) தருமராஜ னையும் பலவிதமாகச் சமாதானப்படுத்தி மரியாதையாகப் பட்டணத்து (49) க்கனுப்பி யுடனே யசுரராஜன் சைனியங்களோடு நிருருதிதிக்குக் குச் சென்று அவனது பட்டணத்தையும் முற்றுகை போட்டனன். (50)

நான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் ரு—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு நிருருதிராஜனும் துரிதமாக நகரத்துக்கு வெளியே புற ப்பட்டுச் சத்துருக்களைக் கண்டிப்போனான தாரகாசுரனண்டைக்கு அஞ்ச லிகொண்டு வந்தப்போதுரைத்ததாவது:— (1) "ஓ! அசுரேந்திர! (இ ராக்ஷஸஜாதியால்) தேவரீரினத்தோனாகிய யான் தேவரீரது கட்டளையி ன்படியிங்கு காலந்தள்ளிவருகின்றேன்; தேவரீரோ இவ்வைசுவரியத்தை யெல்லாம் தங்களினத்தோர்களுடைய போஷணார்த்தமாய்ப் பாதுகாத் திடல் வேண்டும்." (2) என, இவ்வாறுரைத்த நிருருதிராஜனை வெகு மானத்துடன் பட்டணத்துக் கனுப்பிவிட்டுத் தாரகன் சீக்கிரமாக மேற் றிசையை நோக்கிப் புறப்பட்டனன். (3) அதன்மேல் வருணதேவ னவனது வரவைக்கேட்டுச் சமுத்திரம் சென்றுவிட்டனன். உடனே அசுரசைனியமானது மகா பெரிதானவப் பட்டணத்துக்குட் சென்று (4) பட்டணத்துள்ளிருப்பவர்களுடையவும், இங்குமங்கு மோடுகின்ற வர்களுடையவுமான பல வஸ்திராபரணங்களையெல்லாம் பறித்துக்கொ ண்டு (5) பற்பல விரத்தினங்களாற் சோபிக்கலுற்ற வப்பட்டணத்தை யும் கொள்ளைகொண்டு அதேவிதமாக அவன் சேனைகளோடு ஓர் க்ஷண த்துக்குள் வாயுதிக்குக்குச் சென்றனன். (6) ஓ! கேட்டீர்களா! சௌ னகாதி முனிவர்களே! அவ்வாயுதேவனே வென்று லோர் நொடியி லிரு ளுலகு சென்றுவிட்டனன். 'தாரகன் நான்குபக்கங்களிலும் ஜாஜ்வலி யமானமாயுள்ளவப் பட்டணத்தையும் கொள்ளையிட்டான்.(7) இவ்வித மாக அசுரவல்லவ ரெட்டுத் திக்குகளையும் வெற்றிபெற்று நாகர்களையு ம் ஜயிக்கக்கருதி சகல சைனியங்களுடனும் பாதாளலோகஞ்சென்றார்க

ள். (8) அங்குள்ள ஸர்ப்பத்தலைவரெல்லாம் போர் முன்னர் வீரியமிழந்து அசுரனுக்கு விசித்திரங்களான பல விரத்தினங்களைக் கொடுத்தனர்கள். (9) தலைமையரசனான சூரபத்மனங்குள்ள வமுதத்தைப்பானம்பண்ணி யங்குண்டான வசுரர்களால் மிகுந்த பிரீதியுடன் பூஜிக்கப்பட்டு, அங்குள்ள விநோதங்களையும் மிக நேர்த்தியான பிலத்துவாரங்களையும் கண்ணுற்று, அங்கோர் தினம்தங்கி பிறகு சடிதியில் பூதலத்துக்கு மறுபடி வந்தனன். (10-11) பின்பவன் பற்பல சைனியங்களோடும், மகா பலிஷ்டர்களான தம்பிகளோடும் எல்லாத்திக்குகளிலுமுள்ள நேர்த்தியான பற்பலவித தீவுகளுக்குச்சென்று (12) அங்கங்குள்ள பற்பல விநோதங்களையும் கண்டு ஸ்ரீ மகாவிஷ்ணு யோகநித்திரைபண்ணும் திருப்பாற்கடலடைந்தனன். (13) அப்போ தசுரசேனைகளெல்லாம் மதங்கொண்ட யானைகளைப்போலக்கடலிலிறங்கிப் பாலைமிகுதியாகக் குடித்துக் குடித்துக் கடலையும் கலக்கின. (14) அப்போது ஸ்ரீவிஷ்ணுவின் பெண்டீர்களான இலக்குமி தேவியும் பூமிதேவியு மக் கூச்சலைச் செவிகொண்டு பயமுற்றவர்களாகி ஸ்ரீவிஷ்ணுவண்டையிற் சென் றவனை யெழுப்பினர்கள். (15) "ஓ! சுவாமீ! நமக்கின்று பயம் நேர்ந்துவிட்டதே! இப்போதாநாறு ஆதிசேடன்மீது பள்ளிகொண்டு நித்திரை செய்வது? சீக்கிரத்தில் நித்திரையை விட்டெழுந்து பயங்கொண்டு நடுங்கிய வெங்களைக் காப்பீர்," (16) என, அதன்மேல் விஷ்ணுவானவர் தூக்கத்தை விட்டெழுந்தனர். அதற்குள்ளசுர ரெல்லோர்களு மவரதண்டைக்கு வந்தனர்கள்.(17) உடனே மகாசதுரரான ஸ்ரீஹரியானவர் கௌமோதகி யென்கிற கதை, நந்தகமென்ற கத்தி, பாஞ்சஜன்னியமென்ற சங்கம், ஸுதர்சனமென்ற சக்கிரம், சார்ங்கமென்ற தனுசு, இவையெல்லாம் கைக்கொண்டும், கச்சையிறுக்கிக்கட்டிக் கவசமணிந்து, அம்பறாத்தூணியை முதுகில் மாட்டிக்கொண்டும் கருடன்மீதேறிச் சூரன் சேனையருகிலுற்றனர். (18-19) பிறகவர் இடதுகையால் வில்லைப்பற்றி வலதுகையினாற் சடிதியில் நாணேற்றிட்டு வேகத்துடன் (20) தாரகனுடைய சேனையிலஸ்திரங்களை யேராளமாக வருஷித்தனர். அப்போதப் பாணங்கள் விழுந்ததனால் பல சேனைத்திரள்கள் மடிந்தன. (21) மற்றவசுரர்க ளம்படியால் கைகால் முதலிய வவயவங்கள் கண்டிக்கப்பட்டு முண்டமாகவோடி மிகவும் கிலேசத்தினால் நொந்து தாரகனைச் சரணமடைந்தார்கள்.(22) பின்பு தாரகனும் மிகுதியான மகா பெரிய அஸ்திரங்களை யெடுத்துக்கொண்டு ஸ்ரீ நாராயணனோடு போர் தொடுப்பதற்காகப் புறப்பட்டுத் துரிதமாகச் சென்று, (23) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! வில்லை நாணேற்றித் தனுட்டங்காரம் செய்து நாராயணன்மீது அவாது

வாகனமாகிய கருடனுடைய சரீரத்தில் ரத்தம் பெறுகும்படி மிகுதியாகச் சரமாரி பொழிந்தான். (24) அசுராந்தகனாகிய ஸ்ரீ மாதவனும் மிகக்கோபமுள்ளவராகி அதி தீக்ஷணமுடைய பாணங்களை (25) யப்போது தாரகனுடைய சகல அவயவங்கள்மீதும் மிகுதியாகப் பிரயோகித்து, பிறகு வேறஸ்திரங்களைத் தொடுத்து அப்போதேயவனது ரதத்தைப் பொடிப் பொடியாக வுடைத்து, ஸாரதியையும் பூமியில் விழுத்தி (26½) பின்னுமவனது வில்லையும் செதல் செதலாக முறித்தெறிந்துவிட்டனர். (27) பிறகு தாரகன் துரிதத்தில், ஜாஜ்வல்யமானமாகிய மற்றொரு ரதத்திலேறி மறுபடியுமோர் வில்லெடுத்து மிக வுத்தண்டமாக வட்டமாக வளைத்து (28) கோடைமேகம்போலவர் திருமேனிமீது பற்பல பாணங்களை மிகுதியாக வருஷித்து தீக்ஷணியமுள்ள பல சஸ்திரங்களாலங்கு இடைவிடாததாகவே யோர் நொடியில் நிரப்பினன். (29) அப்போதச் சஸ்திரங்கள் விழுந்ததனால் விஷ்ணுவினுடைய திருமேனியினின்று வெகு க்ஷதிபட்டு மெத்த ரத்தங்கள் பெருகலாயிற்று. (30) பிறகு விஷ்ணுவும் பற்றி எரிகின்றவர்போல் மகா கோபங்கொண்டவராகி மர்மஸ்தானங்களைத் துளைக்கவுற்ற சில நாராசபாணங்களா லவனது சரீரத்தை நோகப்பண்ணி(31) சூலங்களாலும் பற்பல வஸ்திரங்களாலுமவனது ரதத்தை யுடைத்துத் தள்ளி மறுபடியவன் வில்லையு மாயிரம் சுக்குகளாக முறித்துவிட்டனர். (32) தாரகனுடனே மேன்மைபொருந்திய மிக வற்புதமான மற்றொரு ரதத்திலேறிக்கொண்டு மிகவும் கெட்டியான மற்றோர் வில்லையுமெடுத்து மகா கோபாக்கிராந்தனாகி (33) அப்போது ஸ்ரீ ஹரிமீது அநேக அஸ்திரங்களைப் பிரயோகித்தனன். பின்பு மகா சஸ்திரப் பயிற்சியுள்ள மாயாவியான ஸ்ரீ விஷ்ணுவானவர் மிக வேகத்தோடு பல வுருவங்களைக் கொண்டு இலக்ஷம் கோடி சஸ்திரங்களை யெடுத்து அங்கங்கு பலவிடங்களிலிருந்து தாரகன்மீது துரிதமாகச் செலுத்தினர். (34-35) அப்போதுடனே தாரகனும் தாயுபதேசித்த மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டு அநேக வுருவங்களாக வேறுபட்டிருக்கிற விஷ்ணுவை யெண்ணற்ற அஸ்திரங்களாலடித்தனன். இவ்விதமாக, யுத்தத்தில் நல்ல மல்லர்களான விஷ்ணு தாரக விருவர்களு மப்போது மிகவும் முனைந்து பனிரண்டு வருஷகாலமொருவரோடொருவர் போர்புரிந்தார்கள். (37) அப்போது, கைடபனென்ற வசுரனைக் கொன்ற ஸ்ரீ விஷ்ணுபிரான் மிகப் பயங்கரமான கௌமோதகி யென்ற கதையைக் கைதனிற் பற்றிக் கரகரவென்று சுற்றி யக்ஷணத்திலவ்வசுரன்மீதெறிய(38) தாரகன் தன்னைக் கொல்ல வெ

த்தணித்த வக்கதையைத் தனது கதையினால் மிக வாக்கிரதத்தோடு தடு த்தடித்தனன். (39) அதனாலப்போதடியுண்ட கதையானது சோகமு ற்றவர்போல் பூமியில் விழுந்தது. விஷ்ணுவினுடைய நந்தகமென்ற கத்தியு மிவ்வாறே பழுதடைந்தது. (40) மேலுமப்போது தாரகன் மகா கோபத்தோடு கேளீர்! சௌனகாதி முனிவர்களே! ஸ்ரீ விஷ்ணு வைக் கொன்றுவிட முயன்று, மிகவும் பருத்த வோர் கதையைக் கரகர வென்று சுழற்றிக்கொண்டுத் துரிதத்தில் ஹரியருகிற் கோடிவந்தனன். (41) தனதண்டைக் கவ்வாறோடிவருகின்ற மகா வீரனை ஸ்ரீ மாதவன் கண்டவுடன் ஊழிகால மேகங்கள் கர்ஜனம் செய்வதுபோ லப்போது சங்கத் துவானம் செய்து சகல சத்துருக்களையு மறுத்துத் தள்ளலுற்ற மகா பயங்கரமான ஸுதர்சனமென்ற சக்கிரத்தைத் (42) துரிதத்தில் வஜ்ஜிரம்போன்ற, அவ்வசுரனுடைய மார்பினிற் பிரயோகிக்கும்போது கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அதவன் மார்பின்மீது விழுந்து பதக்கத்தின் தன்மையை யடைந்துவிட்டது என்னவாச்சரியம்! (41)

ஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் ௬—வது அத்தியாயத்தி னார்த்தம்.

அதன் பிறகப்போது ஸ்ரீ விஷ்ணுவானவர் கௌமோதகி யென்றகதை, நந்தகமென்ற கத்தி, பாஞ்சஜனியமென்ற சங்கம், சார்ங்கமென்ற தனுசு, சுதர்சனமென்ற சக்கிரம் ஆகிய வைந்தாயுதங்களையு மிழந்தவராகிச் சத்துருக்களை மர்த்திப்போனான தாரகனிடத்து சுவயமாகவெ துரிதத்திற்சென்று வசனமுரைத்ததாவது:—“ஓ! கோ! கோ! என்ன பலம்! என்ன தைரியம்! ஸகலாஸ்திரங்களிலு மென்ன தேர்ச்சியுள்ள பயிற்சி! இப்படிக்கொத்தவைகள் முக்கண்ணுடைய ஸ்ரீருத்திரமூர்த்தியிடத்தொழிய மற்றெங்கும் காணப்படவில்லை. (2) ஓ! அசுரோத்தமா! உம்மைப் பிள்ளையாக வடைந்த வுமது தாயே யுலகினில் நல்ல புத்திரவதி! அதிகமாக வளர்த்துவதில் யாதுபயன்? நீர் மிகுந்த சந்தோஷத்துடனெனது பிழைகளை மன்னித்தல்வேண்டும்.”(3) என, அசுரவல்லபனான தாரகனும் மிகச் சந்தோஷமுற்று அவ்விஷ்ணுவைப் பற்பல வசனங்களா லாதரித்தனுப்பிவிட்டு (4) வணக்கத்தோடஞ்சலி கொண்டு சூரனிடஞ்சென்றான். அப்போது சூரனு மத்தாரகனை யன்புடனுச்சி

முகூர்ந்து கட்டி யணைந்துக்கொண்டான். (5) பிறகெல்லா அசுரர்களு ம் சேர்ந்து சக்கிரவாள கிரிக்கு சென்றங்குள்ள விநோதங்களைப் பார்த் துவிட்டுச் சுவர்க்கலோகத்துக்குப் புறப்பட்டனர்கள். (6) அங்குள்ள மகேந்திரனே * அசுரர்களுடைய வரவைக் கேட்டவுடன் மிகப் பயந்து நடுங்கியவனாகி யிந்திராணியோடுகூடக் கிளியுருவமெடுத் துத்துரிதமாக வானத்திற் சென்றனன். (7) அவன் வெளிப்பட்டோடிய மார்க்கத்தி ன் வழியாகவே யசுரர்க ளச்சுவர்க்கத்துக்கு வந்து எல்லாப்பக்கங்களி லும் அதைச் சூழ்ந்துகொண்டு வெளிப்பட்டோடிய தேவர்களைக் கட்டி வைத்து(8) அப்போதே யதை முற்றும் கொள்ளையிட்டுப பிறகு மஹர் லோகத்துக்குச் சென் றங்குள்ள ருஷிகளால் பூஜிக்கப்பட்டு, பின்ப தைவிட்டு (9) ஜனோலோகம், தபோலோக மிவைகளுக்குச் சகல சே னையுடனும் சூரபத்துமன் சென்று நோக்கி, பிறகு பிரம்மனு லலங்கார மாக விளங்கிய ஸத்தியலோகத்திற்குச் சடிதியிற் சென்ற (10) வுட ன் பிரம்மன் மற்றப்பத்துப் பிரம்மர்களுடனு மோர் க்ஷணத்துக்குள் சூரன் முன்பாக வந்து மிகவும் குளிர்ந்த வசனங்களாலுரைத்ததாவ து:—(11) "ஓ! அசுரேந்திரா! உங்களுக்கெல்லாம் பாட்டனாகிய யா னெப்போது மிங்கு வாசம் பண்ணுகின்றேன். எனதிவ்வைசுவரிய மெல்லா மும்முடையதே! (12) நீர் வந்ததனாலிப்போதெனக்கு மிக வும் சந்தோஷமாயிற்று. இதோ! மிகுதியான விவ்வாயுதங்கள், பிரம்மா ஸ்திரம், நேர்த்தியான ரதம் இவைகளெல்லா மும்மது தம்பிகளுக்காக வி ருக்கட்டும்" என்று கூறி யவைகளைப் பிரம்மனீந்தனர். ($13\frac{1}{2}$) பிறகு சூரனு மப்பிரம்மனை மிக 'வாதரித்தனுப்பிவிட்டுச் சடிதியாக (14) மி குதியான சகல சைனியங்களுடனும் விஷ்ணு லோகஞ் சென்றனன். அப்போது பிரபுவாகிய ஸ்ரீ விஷ்ணுபிரானு மவனது வரவைக்கேட்டுச் சீக்கிரமாக வவனது முன்னிலைக்குச் சென்று (15) "ஓ! அசுரேந்திரா! உமது தயவினு லிவ்வெனது லோகத்தில் வாசம் பண்ணிவருகின்றேன். நீ ருமது சைனியங்களோடுகூட வெனது லோகத்தை நன்றாய்ப் பார்த் துப் போகுதல வேண்டும்." (16) என வுரைத்து ஸ்ரீ ஹரியானவர் அ சுரர்களுடன் தன் பட்டணத்துக்குள் வந்து அங்கங்குள்ள விநோதங்க ளையெல்லா மவ்வசுரர்களுக்கு நன்றாகக் காண்பித்து (17) பிறகசுரேந்

* இதனால் முன்சொல்லப்பட்ட, திக்பாலரான இந்திரன் வேறென் றும் சுவர்க்கலோகத்துக் கரசனான தேவராஜனாகிய மகேந்திரன் வேறென்றும் தெளிவாகத் தெரிவதைக் காண்க.

திரனுக்கு மிகுந்த பொருள்களைக் காணிக்கை கொடுத்து அநேக வுபசார வார்த்தைகளையு முரைத்தனர். (18) பின்பு சூரபத்மனும் மிக மனக்களிப்புற்றவனாகி யப்போது ஸ்ரீ விஷ்ணுவை மிக நேர்த்தியான வார்த்தைகளாலாதரித்து உடனே புறப்பட்டுச் சிவலோகஞ் சென்றனன். (19) அநேக ருத்திரர்கள், கணநாதர்கள், தேவர்கள், மகாத்துமாக்களான முனிவர்கள், இவர்களால் நிறைந்ததும், மிகச் சிறப்புடையதும், (20) சுற்றிலுமுள்ள பிராகாரங்கள், கோபுரங்கள், அட்டாலை மண்டபங்கள், கொடிங்கைகள், ஆயிரக்கால் மண்டபங்கள் இவைகளாலலங்கரிக்கப்பட்டதும், (21) பற்பல ரத்தினாபரணங்களைப் பூண்ட வநேகமாயிரம் ருத்திரகன்னிகள், வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலியவை, பேரி, காஹளம், டிண்டிமம், (22) நாட்டியம், வாத்தியம் இவைகளில் குசலர்களும், நல்ல பாடகர்களுமான கின்னரர்கள், கேட்பதற்காகந்தகரமாயுள்ள வேதகோஷங்கள் இவைகளாலெப்போதும் விளங்காநின்றதுமான ஸ்ரீ சிவலோகத்தைப் (23) பார்த்துச் சூரபத்மன் தூரத்திலிருந்தபடியே சேனைகளை யங்குதானே நிறுத்திவிட்டுச் சிங்கமுகன், தாரகன் இவ்விருவர்களோடு கூடப் பயபக்தியோடஞ்சலிகொண்டவனாகி (24) மனதினில் ஸ்ரீ சிவபிரானைத் தியானித்துக்கொண்டே மெல்லமெல்ல நடந்துவந்து மகா விபவம் பொருந்தியதும், (25) விசித்திரங்களான பற்பல ரத்தினங்களால் மிகவும் நேர்த்தியாக வமைக்கப்பட்டதும், சுற்றிலுமுயர்ந்த வுருக்குத்தங்கங்களா லமைக்கப்பட்டதும், மிக ரமணீயமானதும், பொன்னரசிலை முதலியவற்றைத் தொடுத்துக் கட்டப்பட்ட தோரணங்களால் சிங்காரமுள்ளதும், திசைகளெங்கும் வரிசையாகவைக்கப்பட்ட இரிடபங்களா லுல்லாசமுள்ளதுமான பிராகாரங்களால் (மதிள்) விளங்கியதும், (26-27) இங்குமங்குமுள்ள, ஒவ்வொன்று மொவ்வோரண்டம் போன்றதும், முறையே பவழங்களாலும் இந்திரநீலக்கற்களாலு மமைக்கப்பட்ட படிக்கட்டுகளையுடையதுமான பற்பல பொன் மண்டபங்களால் ரமணீயமாகியதுமான ஸ்ரீமகா தேவாலயத்தை யங்கு (28) தரிசித்து அப்போதசுரனனவன் கண்களைக் கொண்டதற்குற்ற நற்பயனைப் பிரத்தியக்ஷமாகக் கைக்கொண்டு, தம்பிகளோடு கூட மௌனமாகத் தண்டாகாரமாய்ச் சாஷ்டாங்கமாகத் தண்டம்பண்ணி (29) திரிபுண்டிரங்களாலும் ருத்திராக்ஷமாலைகளாலும் சோபிக்கலுற்றவரும், சருவாங்கமும் திருநீற்றுப் பூச்சினாலும் ருத்திராக்ஷாபரணங்களாலு மலங்காரமாய் விளங்கியவரும், காதுகளிற்பூண்ட குண்டலங்களால் பிரகாசமுடைய திருமுகத்தையுடையவரும், (29½-31) கைதனிற் பிரம்பை

ப்பற்றியவரும், ஸ்ரீ பரமேசுவரனுடைய திருமாளிகையின் வாசற்படியைக் காப்பதில் மிகவும் முயன்ற தேவனும், மகா பயங்கர்ர்களும், மகா கொடியவர்களும், மகா பிரளயங்களைச் செய்வோர்களும், மஹோன்மத்தர்களும், மகா வீரர்களும், மகா பல பராக்கிரமங்களை யுடையவர்களும், ($31\frac{1}{2}$-33) அனேககோடி பிரம்மாண்டங்களையும் சமுகரிப்பதற்குற்ற வுருவம் கொண்டவர்போன்றவர்களும், ஹூம்காரம் செய்வதனுல் ஸகல சமுத்திரங்களையு முள்ளங்கை நீராகக் குடித்துவிடுவோர் போன்றவர்களும், (34) சில ரழகிய வுருவங்களையும், சிலர் விகார வுருவங்களையும், சிலர் இழிவான வுருவங்களையும், சிலரங்கவீன வுருவங்களையும், சிலரிரண்டு கால்களையும், மூன்று கால்களையும், நான்கு கால்களையும், (35) ஒரு காலையும், ஒரு கையையும், இரு கைகளையும், மூன்று நான்கு கைகளையும், சிலர் சிங்கமுகத்தையும், யானைமுகத்தையும், (36) புலிமுகத்தையும், சிலர் பயங்கரமான சிவிங்கி முகத்தையும், சிலர் மான், கழுதை, பசு, எருமை, (37) நரி, சரடி, முயல், சரபம், இவற்றின் முகத்தைக் கொண்டவர்களும், ஒன்று, இரண்டு, மூன்று, முதலிய பல முகங்களை யுடையவர்களுமான, (38) அனேக கோடி கணுதிபர்களா லிருபாரிசங்களிலும் சூழப்பட்டவரும், (32) முதற்கட்டு வாசற்படியில் வீற்றிருப்பவருமான ஸ்ரீ நந்திகேசுவரனை யப்போது தூரத்திலிருந்தபடியே (30) தரிசித்து மனமலர்ச்சிகொண்டவனுகி மிகவும் வணக்கத்தோடு தண்டனிட்டனன். பிறகு ஸ்ரீ நந்திபிரா னச் சூரபத்துமனை நோக்கித் திருவாக்கருளியதாவது:—(39) "வாரீர்! அசுரேந்திரா! முந்தி நீர் மகா பெரிதான யாகத்தினுல் ஸ்ரீ மகேசுவரனைப் பூஜித்து வேண்டிய பயன்களையும் கைக்கொண்டீரல்லவோ! இப்போது யாது நிமித்தமிங்கு வரலானீர்?." (40) என, சூரன் சொல்லுகின்றுன்:—"ஓ! பிரபுவே! ஸகல ஜகங்களுக்கும் அதிலும் மிகுதியாக வெந்தனுக்கும் நாதனுகிய ஸ்ரீ தேவாதிதேவனைத் தண்டம் பண்ணுவதற்கே யான் வரலானேன்; எந்தனுக்கிதைத் தவிர வேறென்னவேலையுண்டென்பதைச் சொல்வீர். (41) ஆகையால் யான் ஸேவைசெய்வதற்காகத் தேவரீர் சமயம் பார்த்தெந்தனை யிப்போதிட்டுப்போகுதல் வேண்டும்." என, நந்திதேவனு மந்தப்புரஞ் சென்று ஸ்ரீ ஜகதீசன் முன்னர் விண்ணப்பஞ் செய்து (42) ஸ்ரீ சம்புவாலரிக்கை யருளப்பட்டதன்மே லிங்குவந்து பிறகந்நந்தியால் சூரபத்தும னுள்ளழைத்துப்போகப்பட்டனன். (43) அவன் போகும்போதங்கங்கு வாசற்படிகளிலுள்ள கணுதிபர்களைச் சாஷ்டாங்கமாகத் தண்டம் பண்ணிக்கொண்டும், அஞ்சலியோடு பக்தியுடன் தியா

னம் பண்ணிக்கொண்டு மந்தப் புரத்துக்குச் சென்று (44) அஷ்டைசு வரியமுடையோரும், மகாதேவனும், முக்கண்ணுடையவரும், ஸத்தியஞ் ஞானாநந்தஸ்வரூபரும், பிரத்தியக்ஷத்தில் மோக்ஷத்தை யருளி யிரக்ஷிப் பவரும், (45) உருதப்பொருளும், ஸத்தியப்பொருளும், பரப்பிரம்ம புருடரும், கழுத்தினிற் கறுப்பையும் சடைகளிற் சிவப்பையு முடையவரும் அல்லது திருமேனியி லோர் பாதி கறுப்பாகவு மோர்பாதி சிவப்பாகவு முள்ளவரும், மேல்நோக்கி ஜுவலிக்கும் வீரியத்தை யுடையவரும், ஒப்பற்றவரும், பராபரவரும்பொருளும், காமிகம் முதலிய விருபத்தெட்டாகமங்களால் துதிசெய்யப்பட்டவரும், நான்கு வேதங்களாலு மெப்போதும் துதிக்கப்பட்ட சரணாரவிந்தங்களை யுடையவரும், (47) பரதசாஸ்திரங்களை நன்கறிந்தவர்களும், மிகச்சுந்தரமேனி யுடையவர்களும், தாமரைத்தண்டு நூல்போல் விளங்காநின்ற சாமரங்களைக் கைகளிற் பற்றியவர்களும், (48) இடையாபரணங்க ளின்பமாக வொலிக்கும்படியெல்லாத் திக்குகளிலும் நாட்டியம் செய்வோர்களுமானவனேகமாயிரம் ருத்திரகன்னிகளாலும், முக்கண்ணுடையவர்களும், கழுத்தினிற் கறுப் புடையவர்களுமான ஸ்ரீசிவஸாரூப்பியம்பெற்ற வனேக முக்தர்களாலும், (49) கும்பன், நிகும்பன் முதலிய மகாத்துமர்களானபல் கணதிபர்களாலும், மறுபிறப்பற்று ஒரே தடவையாக முக்தியடைந்தவர்களான ருஷிகளாலும் சேவிக்கப்பட்டவருமான ஸ்ரீபரமேசுவரனைத் தரிசித்து (50) ச்சூரபத்தும னிருதம்பிகளுடன் கூட வாதரவுடனும் பக்தியுடனும் நமஸ்காரம்பண்ணினான்:—"ஓ! மகாதேவா! சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரங்களைச் செய்கின்ற வுமக்கிவ்வந்தனம். (51) ஓ! அடியார்களுக்கு நேசனாகிய விசுவேசா! விசுவரூப முடையவரும், லோகத்தை யுண்டுபண்ணுகின்றவரும், மங்களகாரும், பயங்கரமான வுருவமுடையோரும் சாந்தரூபியுமான வுமக்கிவ்வந்தனம்: ஓ! சங்கரா! (52) ஜகதம்பிகையோடு கூடியவரும், சந்திரகலையைத் தரித்தவரும், புத்திரனாகிய கந்தனோடு கூடியவருமாகிய வும்மை வந்தனிக்கின்றேன்: வந்தனிக்கின்றேன்: கங்கையைத் தரித்தவரும், மன்மதன் இயமன் முதலியவர்களைக் கொன்றவரும், ஸாக்ஷாத் மோக்ஷஸ்வரூபியும், (53) சுத்தமான ஸ்படிகம்போன்ற திருமேனியுடையவரும், பரப்பிரம்மமுமாகிய உம்மை வந்தனம் செய்கின்றேன்." எனறிவ்வாறாகத் துதி செய்து சூரன் முதலிய சகோதரர்கள் மிகவும் வணக்கத்தோடடங்கு நின்றார்கள். (54) பிறகு ஸ்ரீ மகேசுவரன் நந்திதேவனை நோக்கித் திருவாக்கருளியதோ வென்றால்:—"கேளீர்! நந்திகேசுவரா! நமதாக்கினையின்ப

டி யிங்குவாலுற்ற நம்தொண்டனாகிய விச்சூரபத்தும லவனதண்டங்களைச் சுற்றிப்பார்த்துக் கொண்டு அங்கங் கதிகாரிகளை நியமித்துவிட்டு (55½) பிறகு திரும்பிவந்து இவ்வண்டத்தின் மத்தியிலவனது தம்பிகளோடு வாசம் பண்ணட்டும்." (56) என்றிவ்வாறாக ஸ்ரீ பகவானாற் கட்டளையிடப்பட்டபிறகு கேளீர்! சௌனகாதி முனிவர்களே! நந்திதேவனச் சூரனை நோக்கி யுரைத்ததாவது:— "கேளீர்! சூரபத்துமா! நீர் போ யுமதண்டங்களையெல்லாம் பார்த்து அங்கங் கதிகாரிகளை (57) நியமித்துவிட்டுப் பிறகிவ்வண்டமதிலே வாஸம்பண்ணுவீர்: இதுதான் ஸ்ரீ பரமேசுவரனுடைய கட்டளை." என, சூரன் உலகங்களுக்குச் சுகத்தை யளிக்கின்ற ஸ்ரீ சங்கரனை (58) நமஸ்கரித்துப் பிறகு தம்பிகளோடுகூட வெளியில் வந்து முதல்வாசற்படியில் வீற்றிருப்போரான நந்திபிரானைவணங்கி (59) யவரிடம் விடைகொண்டு சடிதியில் தனது சேனைகளிருக்குமிடஞ் சென்றனன்.(60)

ஆறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் ஏ—வது அத்தியாயத்தினர்த்தம்

பிறகு சூரனானவன் சேனைகளோடுகூட அண்டங்களைப் பார்த்துவருவதற்காகப் புறப்பட்டு ருத்திரர்களாற் காக்கப்பட்ட பிரம்மாண்டத்தின் சுவற்றுக்கு வந்தவுடன் (1) அவ்வுருத்திரர்களு மவன் சிவாஞ்ஞையின்படி சேனைகளோடு வந்திருப்பதைக் கண்டு தங்களது மார்க்கத்தை யவனுக்கு விட்டார்கள். (2) பின்பு மகா பராக்கிரமசாலிகளான வவ் வெல்லோர்களும் கொண்டானடித்துக்கொண்டு அண்டத்துக்கு வெளியிற்சென்று அந்தந்தவண்டங்களுக்குப் (3) போயிவ்விதமாகவே சத்துருக்களைச் சயித்து அங்கங்கு வேண்டிய வதிகாரிகளை நியமித்துப் பற்பல போகபோக்கியங்களையு மனுபவித்துப் பிறகு அசுரரெல்லோர்களும் துரிதமாகப் புறப்பட்டு (4) ஓர் க்ஷணத்துக்குள் இவ்வண்டத்துக்கு வந்தனர்கள். அண்டத்துக் கதிபர்களான ருத்திரர்களப்போது அவர்கள் வரவை யறிந்து (5) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அவர்களுக்கு வேண்டிய அளவு பிரம்மாண்டச் சுவற்றையிடித்து வழிவி

ட்டார்கள். பிறகு சூரபத்துமன் மிகக்கொடியர்களும், ஒருவரோடொருவர் ஒட்டம்பிடிக்கின்றவர்களுமான பற்பல சைனியங்களுடன் துரிதமாகச் சுவர்க்கலோகஞ் சென்றனன். (6½) அதன்மேல் முந்தித்தேவர்களால் சண்டையில் தோல்வியடைந்து பலங்களற்றுநின்ற, மாதாமகனுன அசுரேந்திரனென்பவன் சுக்கிராசாரியனுடன்கூட விச்சூரபத்துமனண்டைக்கு வந்து (7½) சுக்கிரனேடு தனக்குள்ள நேசத்தையு மவனுக்குச் சாதுரியமாக வுரைத்தனன். (8) பிறகு சூரபத்துமன் அசுரகுருவாகியவச் சுக்கிரனையு மசுரேந்திரனையு மப்போது வந்தனித்து மிகப் பிரீதியுடன் பலவாறுகப் பூஜித்தான். (9) பிறகவன் தான் திக்குவிஜயங்கொண்டதையும், பலவண்டங்களுக்குச் சென்றதையு மவர்களுக்குக் கூறி, பிறகவர்களுடனும், தம்பிகள், சைனியங்களுடனும் மிகவும் ஜுவலிக்கலுற்றவனுகச் சடிதியிற் பூதலஞ்சென்ருன். (10½) பின்பது கேட்டுத் தேவர்களிந்திரனேடு கூட இவன்மீது பயங்கொண்டவர்களாகவும் மிகவும் நோயுற்றவர்களா கவும் துரிதத்தில் விஷ்ணுலோகத்துக்கு வந்து (11½) சத்துருக்களைக் கொல்லலுற்ற விஷ்ணுவைக்கண்டு உரைத்ததாவது:— (12) "ஓ! சுவாமீ! அசுரரிடத்துப் பயந்து மனநடுக்கமுற்றிருக்கிற தேவர்களைத் தேவரீர்ரக்ஷித்தருளல் வேண்டும்" எனவுரைத்து மிக வணக்கத்தோடு நின்ற தேவர்களை நோக்கி மாதவன் கூறியதோவென்ருல்:— (13) "ஓ! மூடர்களான தேவர்களே! முடிவில் என் வீணுக வாதைப்படுகிறீர்கள்? முந்தித்தக்ஷன் வேள்வியில் அத்துவர ராஜாவான (வேள்விக்கிறையோனுன) ஸ்ரீ மகாதேவனை (14) நீக்கிவிட்டு நீங்களெந்தனேடுகூட ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொண்டிருந்நீர்களல்லவோ? அதற்குற்ற பயனை * யாமப்போதே யடைந்துவிட்டபோதிலும் இங்கும் (15) மறுபடியப்பாவத்தின் பயனைப்புசிக்கவேண்டுவது நிச்சயமே! (15½) ஆகையாலசுரோத்தமனுகிய சூரனிடத்துப் போய் வேண்டியபடி யண்டித்தான் பிழைத்தல் வேண்டும்." (16) எனவுரைத்து ஸ்ரீ நாராயணனே யப்போது முப்பத்து முக்கோடி தேவர்களுடன்கூட சூரனிடத்துக்கு நேரில் புறப்பட்டனர். (17) பிரபுவான ஸ்ரீ விஷ்ணுவானவர் சூரனிடஞ்சென்று வசனமுரைத்ததாவது:— (17½) "ஓ! அசுரேசுவரா! அண்டியவரை யாதரிப்போரும், பகைவருக்குப் பயங்கரருமான தாங்களும், தங்கள் தம்பிகளும், இராணுவங்களும் க்ஷேமமா? (18½) யான் தேவரீரது தயவினுலிதுவரை யிருந்துவரு

---

* இக்கதையின் விவரம் தக்ஷகாண்டத்தில் விஸ்தரிக்கப்படும்.

கிறேன்-" (19) என, பிறகு சூரபத்துமனும் ஸ்ரீ ஹரியை யப்போதா தரித்துத் தேவர்களது மத்தியில் நின்ற அளவற்ற வொளிபெற்ற பல ருத்திரர்களைக் கண்டு (20) "வாரீர்! மாதவா! இதோ முக்கண்ணுடைய வர்களாகவும், கழுத்தினிற் கறுத்தவர்களாகவும் ஸ்ரீ ருத்திரமூர்த்தியினு டைய வுருவத்தைக் கொண்டவர்களாக நிற்கின்றார்களே! இவர்கள் யா வர்? யாதுநிமித்தம் தேவருடைய மத்தியில் வரலுற்றனர்கள்?" (21) என, ஸ்ரீ புருஷோத்தமன் அவனது வசனத்தைக் கேட்டு உத்தரமுரை த்ததாவது:— "கேளீர்! அசுரராஜனே! பூர்வத்தில் பிரம்மாவானவர் இர ஜோகுணம் மேலிட்டு வீணஹங்காரத்தினால் கர்வம்கொண்டவராகி(22) 'யாமே சருவஜகங்களையும் படைப்பவர், இரக்ஷிப்பவர், அழிப்பவரும் யா மே',என்று, மிகுந்த மாயையினால் மோஹமுற்றவராகி எல்லாம்ஸ்ரீ பர மசிவனது திருவிளையாடலென்பதை மறந்து மகா மாயையால் மோகம் கொண்டனர். (23) ஆனதுபற்றி ஸ்ரீ சிவாக்கினையால் அவருக்கப்போ து சிருஷ்டித்திறமை யற்றுப்போயிற்று. உடனேயவர் "ஓ! கோ! கோ! மூடபுத்தியால் யாது நாம் தவறி நினைத்துவிட்டோம்; (24) ஸ்ரீ சிவபிரானுடைய மாயையோ தாண்டமுடியாதது; அது சகலப்பிரபஞ் சங்களையும் மோகிப்பிக்கலுற்றது; எம்மைப்படைத்தவரும், அழிவற்ற வருமான ஸ்ரீ சர்வேசுவரனை (25) ச்சகல அண்டங்களுக்கும் சிருஷ்டி முதலிய தொழிலைச் செய்வதற்கு முயன்ற வகிலாண்டகோடிப் பிரம்மா ண்டநாயகனொன் றறியாமல் யாம் மிகுந்த வாண்மைகொண்டதனால் தா ன் யாமிப்பயனை யடைந்தோமென்பது நிச்சயம்." (26) என்று மிகு ந்த சிந்தையினாற் பரவசம் கொண்டவராகி புருவங்களின் மத்தியில் ஸ்ரீ பார்வதீசகிதரான பரமேசுவரனை முக்கண்ணுடையவராகவும், கழுத்தி னிற் கறுத்தவராகவும் அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருமுகங் களை யுடையவராகவும், (27) குருந்துமொட்டுப்போன்ற மந்தஹாஸத் தைக்கொண்ட வதனமுள்ளவராகவும், சிறந்த முத்துமாலைகளால் விள ங்கியவராகவும், கோடிசூரியப்பிரகாச முற்றவராகவும், சிறந்த நவரத்தி ன ஸிம்மாசனத்தில் வீற்றிருப்பவராகவும், (28) ஸுகத்தை யுண்டுபண் ணுகின்ற ஸச்சிதாநந்தத் திருமேனியுடையவராகவும் தியானம் செய்து கொண்டிருந்தனர். அதன்மேல் ஸ்ரீ மகேசுவரனானவர் மனப் பிரீதி கொண்டவராகி யேகாதச ருத்திரர்களை (29) யேவினர். அப்போதவ்

வுருத்திரர்க ளோர்க்ஷணத்துக்குள் பிரம்மனுடைய புருவமத்தியினின் றுவிர்ப்ப வித்தார்கள். உடனே பிரம்மனவர்களை வந்தனித்துப் பக்தி யோடு வசனமுரைத்ததாவது:— (30) "நீங்கள் யாவர்? யாதுநிமித்த மிங்கு வரலானீர்கள்?" என்று பிரம்மன் வினவ, (30½) ருத்திரர்களுத் தரமுரைத்ததாவது:— "கேளீர்! பிரம்மாவே! ஸ்ரீ தேவாதி தேவனாகிய சம்புவா லுமக்காகச் சிருஷ்டிபண்ணுவதற்கு நியமிக்கப்பட்டவர்களாகி யிப்போதும்மிடம் வந்தோம்." (31½) என, அதன்பிறகு ஸ்ரீ ருத்திர னிடத்துப் பக்தியுடைய பிரம்மன் அவ்வுருத்திரர்களை நோக்கி யுரைத்த தோவென்றால்:— (32) "ஓ! ருத்திரர்களே! ஸ்ரீ ஸர்வேசுவர னாக்கினை யின்படியச் சிருஷ்டி யுங்களாலே சிருஷ்டிக்கப்படல் வேண்டும்." என் று பிரம்மனுரைத்திட்ட வசனத்தைக்கேட்டு அவ்வுருத்திரர்களப்போது (33) ஒவ்வொருவரும் கோடிசங்கியைவீதம் ருத்திரசிருஷ்டி பண்ணின ர்கள். அப்போது மகாத்துமர்களான பதினொரு ருத்திரர்களாலும்சிரு ஷ்டிக்கப்படலான வனேக ருத்திரர்களைக் கண்டு (34) ஜகம்முழுதும் கேவலம் ருத்திரர்களாலே நிரம்பப்பட்டபோது பிரம்மனுரைத்ததோ வென்றால்:— "ஓ! ருத்திரர்களே! மகாத்துமர்களான இவ்வுருத்திரர்க ளை யிவ்விதமாகச் சிருஷ்டி செய்தது போதுமானது. (35) இனியுங் களாக்கினையின்பேரில் யானே யிச்சிருஷ்டியைச் செய்கின்றேன்" என வுரைத்துப் பிரம்மனவ ரவ் வேகாதச ருத்திரர்களுடனும்,(36) அவர் களாற் படைக்கப்பட்ட பதினொர்கோடி ருத்திரர்களுடனும் பற்பலவி பவங்களால் நிரம்பிய ஸ்ரீ சிவபிரானுடைய லோகத்துக்குத் துரிதத்திற் சென்றனர். (37) அங்கடைந்தவுடன் பிரம்மன் நந்திகேசுவரன் மூல மாக ஸ்ரீ மகேசுவரனுக்கு விண்ணப்பம் செய்துகொண்டதின்பேரில் நந் தியாற் கூப்பிடப்பட்டு அந்தப்புரத்துக் கேகினர். (38) பிரம்மன், உலகங்களுக் கனுக்கிரக மளிக்கின்ற மகாதேவனை யங்குகண்டு பூமிதனி ல் தண்டம்போல் சாஷ்டாங்கமாக வந்தனித்து, அனேகம் துதிகளால் தோத்திரம்செய்து (39) நிற்கையில் ஸ்ரீ மகாதேவன்சிருஷ்டிகர்த்தானவ ப் பிரம்மனை நோக்கி "யாதுநிமித்தமிங்குவரலானீ" ரெனவினவ,பிரம்மன் தனதறிவீனத்தினாற் சம்பவித்தபாவத்தையும்,சிவாக்கினையின்படிருத்திர ர்கள் வரலானதையும், அப்போது நடந்த ருத்திரசிருஷ்டிமுதலானசக ல சங்கதிகளையும் மிகுந்த பயத்தோடறிவித்துக் கொண்டனர். (40-41) பின்பு ஸ்ரீ மகேசுவர னலர்ந்தசெந்தாமரை மலர்போன்ற கண்களா லவ

னை நோக்கி "கேளீர்! பிரம்மாவே! நீரிப்போது முதல் நமதாக்கினையி ன்படி கர்வத்தைவிட்டு முன்போல் பிராணிகளைச் சிருஷ்டிபண்ணும் எனக்கட்டளையிட்டு (42½) பிறகு ஏகாதசருத்திரர்களை யவர்களதுலோக த்துக்கனுப்பி, (43) பதினோர்கோடி ருத்திரர்களையும் தேவர்களோடு சேர்த்தருளினர். அவர்களைச் சேர்த்துத்தான்தேவர்களுடைய சங்கி யை முப்பத்து முக்கோடி யாகின்றது. (44) பின்பு பிரம்மாவும் ஸ்ரீ ஜ கதீசனைநமஸ்கரித்துத் தமதிருப்பிடம் சென்றனர். கேளீர்! சூரருக்கெ ல்லாம் சூரனாகிய ராஜனே! இப்போது கூறலான அவ்வுருத்திரர்க ளிவர்தான்." (45) என்று விஷ்ணுவாலுரைக்கப்பட்ட வற்புதமான ருத்திரசிருஷ்டியைக் கேட்டுச் சூரபத்துமன் தம்பிகளுடனும், சைனிய யங்களுடனு மொப்பற்ற களிப்பைக்கொண்டனன். (46) அதன் பிற கு சூரன் சுக்கிரனாற் குறிக்கப்பட்டபடி லவணப்தியில் (உப்புக்கடல்) மிக நேர்த்திய மற்புதமுமான வோர் நகரத்தை விசுவகர்மனைக் கொண் டமைத்துக் கொண்டனன். (47) அந்நகரமோவென்றால்:— நீளத்தி லெண்பதினாயிரம் யோஜனையு மகலத்தில் ஆறுயோஜனை விஸ்தீர்ணமு முள்ளதும், (48) (அந்நகரமாகிய மங்கையர்க்கு) ஒட்டியாணங்கள் போன்ற பிராகாரம், அகிழ் இவைகளாற் சூழப்பெற்றதும், நான்கு வா சற்படிகளையுடையதும், அண்டத்திற்கு நான்கு கம்பங்களை முட்டுக் கொடுத்தது போன்ற அண்டச் சுவற்றை யளாவலுற்ற மிக உன்னதமா ன நான்கு கோபுரங்களைக் கொண்டதும், (49½) திசைகள்தோறும் வா பிகள், கிணறுகள், குளங்கள், ஏரிகள் இவைகளாற் சூழப்பட்டதும், (50) நான்கு திசைகளிலுமுள்ள பல சிங்காரத் தோட்டங்கள், ஆரணியங்கள் இவைகளாற் சிறக்கலுற்றதும், தெங்கு, மா, பலா, பாதரி, இலுப்பை (51) அசோகம், கமுகு, கூந்தற்பனை, பனை, நார்த்தை, மாதுளை, நாவ ல், இரளி, ஸுரப்புன்னை, வன்னி, முள்ளிலவு, (52) மலையகத்தி, ஆல், மந்தாரை, மகிழ், அரசு, வேம்பு, எலுமிச்சை, கொய்யா, தானி, வெள்ள லொத்தி, முரள், (53) வாகை, பில்வம், அழிஞ்சி, கறும்தும்பை, சிம் சுபா, சந்தனம், புளி, மாவலிங்கை, கொடிமுந்திரி, மருதை, ஏழிலம்பா லை, பச்சிலை, மஞ்சாடி, (54) முதலிய பற்பல விருக்ஷங்கள், செடிகள், கொடிகள் இவைகளாற் சுற்றிலும் சூழப்பெற்றதும், கொடுங்கைகள், அட்டாள மண்டபங்கள், அரண்மனைகள், படிக்கட்டு வரிசைகள், முத லியவைகளால் விளங்கலுற்றதும், (55) திண்ணைகள், இரேழிகள், எற

வாரங்கள், பலகணிகள் முதலியவற்றாற் சிறக்கலுற்ற, மாணிக்கங்களா லிழைக்கப்பெற்ற நூறு, ஆயிரக்கணக்கிலடங்கியவைகளான பற்பல வீடுகளாற் சோபிக்கலுற்றதுமா யுள்ளது.(56)

ஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஆசாநாண்டம் அ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சூதருரைக்கின்றார்:— கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அதன்மத்தியிலுள்ள சூரபத்துமனுடைய திருமாளிகையோவென்றால்:— மிக நேர்த்தியானதும், மதில், அகிழ்களாற் சூழப்பெற்றதும், (1) நான்குவாசற்படிகளிலும் நான்கு பெரிய கோபுரங்களா லலங்கரிக்கப்பட்டதும், அனேக அங்கணங்களுடையதும், மிக நேர்த்தியான வுப்பரிகைகளைக்கொண்டதும், (2) ஸ்படிகக்கற்களா லமைக்கப்பட்ட வனேகம் திட்டாணிகளாலும், பற்பல திசைகளிற் சாத்திவைக்கப்பட்ட விநோதங்களான பதினாயிரம் ஏணிகளாலும் (3) சுவறுகள் மீதுள்ள பலவித சித்திரங்களாலும் விசித்திரமானதும், திசைகள்தோறுமுள்ள வனேக விளையாட்டுக் குன்றுகளாலும், சுற்றிலுமுள்ள பல வாபிகளாலும், (4) அதேமாதிரியான பல கிணறுகளாலும், பெரியவாடிகளாலும், (மரங்களின் வரிசைமுதலிய பலவிதச் சுற்றுவாணம்) சூழப்பட்டதும், வஸந்தம் முதலிய எல்லா ருதுக்களி (பருவம்) லும் பரிமளிக்கலுற்ற மலர்களை யென்றுமுடைய பல சிங்காரத் தோட்டங்களாலும், பிரமதாவனங்(அந்தப்புரஸ்திரீகள் விளையாடும்தோட்டம்) களாலுமெங்கும் சிங்காரிக்கப்பட்டதும், திசைகள் தோறும் பல யாகசாலைகளால் விளங்கலுற்றதும், (6) அனேகமாயிரம், போகசாலைகள், கானசாலைகள், விசாலமான சமையற் சாலைகள், (7) பல வாபரணசாலைகள், யுத்தசாலைகள், அஸ்திரசாலைகள், நாட்டியசாலைகள், (8) வித்தியாசாலைகள், போஜனசாலைகள், கஜசாலைகள், அசுவசாலைகள், இவைகளாலும், அனேக ஸபாமண்டபங்களின் வரிசைகளாலும் சோபிக்கப்பெற்றதும், (9) அனேகம் தேவமண்டபம், அசுரமண்டபம், வீரமண்டபம், மந்திரிமண்டபம், பற்பல

இரத்தினங்களாற் சிங்காரிக்கப்பட்ட ஏகாந்தமண்டபங்கள், (10) மிக மனோரஞ்சிதமும் முத்துக்களா லமைக்கப்பட்டவையுமான மற்ற மண்டபங்கள், ஜுவலிக்கலுற்ற ஒளிகளை வெளிவிளக்கிய அல்லது பாலசூரியனுடைய காந்திக்கு மேற்கொண்டதான பவழமண்டபங்கள், (11) வைடூரியங்களா லிழைக்கப்பட்ட பல மண்டபங்கள், மங்களகரமான புஷ்பராகங்களாற் கட்டப்பட்டவையும், பிரகாசமாக ஜுவலிக்கலுற்ற (12) வனேக பத்துமராகங்களாலும், மிகுந்த காந்திகளை விசிராலுற்ற மரதகங்களாலும் மிகுந்த காந்திகளால் சிறப்பாக விளங்கலுற்ற (13) இந்திரநீலக் கற்களாலும், திராஸமென்ற பயதோஷமற்ற விலையற்ற வைரக்கற்களாலு மமைக்கப்பட்டவையுமான மற்ற மண்டபங்கள், மிக நேர்த்தியான (14) சிறந்த பல ஸ்படிகங்களாலும் கோமேதகக் கற்களாலும் தளவரிசை செய்யப்பட்டவைகளும், மிக மணம்பொருந்திய பல செஞ்சந்தணக்கட்டைகளால் விநோதமா யமைக்கப்பட்டவைகளும் (15) இங்ஙனமான வின்னும் பலவித முள்ளவைகளுமான மண்டபங்களிவைகளா லிங்குமங்கு மெங்கும் விளங்குவதனால் மிக நேர்த்தியாயலங்கரிக்கப்பட்டதும், (16) அங்கங்கனேககோடி மாணிக்கங்களாற் கட்டப்பட்டும், கேவலம் வானமார்க்கத்தை யெட்டியளாவிய பல துவஜங்களால் (17) ஸவர்க்கலோகத்துக்குப் போட்டியாக வேற்பட்டதுபோலெங்கும் விளங்கியதும், முத்துமாணிக்கங்களா லிழைக்கப்பட்ட வனேகமாயிரம் கதவுகளாலும்,(18) ஜனங்களுடைய மனதைத் திருடாநின்ற நிலைகளது மேற்படி கிழ்ப்படிகளாலும் மிக ரமணீயமாய் விளங்குவதுமாக வமைக்கப்பட்டு அந்நகரத்துக்குச் சூரபத்துமன் மூவுலகினிலும் பிரஸித்திகொண்ட வீரமாகேந்திரபுரமென்று பெயருமிட்டனன். (19½) மேலும் சூரபத்தும னப்போ தந்நகரத்தைச் சுற்றிலும் ஹேமபுரியென்றும், அதேமாதிரியாகத் தேவபுரியென்றும், இலங்காபுரியென்றும், நீலபுரியென்றும், சுவேதபுரியென்றும், அசுரர்களுடைய பெரிய பட்டணமாகிய வாமாபுரியென்றும், அதேவிதமான பத்துமபுரியென்றும் [illegible] வெட்டுப்பட்டணங்களையும் சாமர்த்தியசாலியான சூரபத்துமன [illegible]னன். (20-22) பின்னு மப்போ தீசுர னிதேபிரகாரமான [illegible]ன் வடபாகத்தில் சகல ரத்தினங்களாலும் விசித்திரமாயுள்ள [illegible] யான ஆசுரபுரியென்றதையும், (23) அப்படியே மேருகிரிக்கு [illegible]ல் ஜம்பூத்தீவில் ஹேமகூட பருவதத்திற்கருகில் மாயாபுரியென்ற [illegible]ம் பெரிதான வோர் பட்டணத்தையும், (24) தவிர தீவுக்குத்தீவு கடலுக்குக் கடலெங்கு மனேக நகரங்களையு முண்டுபண்ணியதன்பிறகு மகாசு

ரனாகியவச் சூரபத்துமன் வீரமாகேந்திர பட்டணத்துக்குத் துரிதமாக ச்சென்று, (25½) அங்குள்ள விநோதங்களையெல்லாம் பார்த்து அளவிலே தனதரண்மனைக்குட் சென்றனன். (26) இவ்விதமாக வசுரேந்திரன் விஷ்ணுமுதலிய தேவர்களுடனும், தம்பிகளுடனுமங்கு சென்றவுடன் சிங்காதனத்தி லுட்கார்ந்தனன். (27) அப்போது மகா புத்திசாலியான பிரம்மனவனுக்கு மங்களகரமான கிரீடத்தைத் தமது கையினாலெடுத்துக்கொடுத்துச் சகல தேவர்களுடனும் பட்டாபிஷேகமும் நடப்பித்தனர். (28) பிறகு சகல வசுரேந்திரர்களும் மிகுந்த சந்தோஷத்தை யனுபவித்தார்கள். அப்போது சூரபத்மன் விஷ்ணுவைநோக்கி மிகுந்த சந்தோஷத்துட னுரைத்ததாவது:— "வாரீர்! விஷ்ணுவே! யாமெப்போ தும்மை யழைக்கின்றோமோ அப்போது நீர் வரவேண்டும்: அல்லது! இப்போது நீர் போகலாம்" எனவுரைத்துத் திக்பாலாகிய வீசானனையும், மற்றப்பதினொருகோடி ருத்திரர்களையு மிவ்வாறாக வனுப்பிவிட்டுச் சிங்கமுகனையும் தாரகனையு மப்போது (30½) வீற்றிருக்கச் செய்து பிறகு தேவர்களி லொவ்வொருவருக்கும் பணி யேற்படுத்தினன். (31) வெற்றிலைத்தம்பல முமிழ்கின்ற பாத்திரத்தை யிந்திரன் கையிற்கொடுத்து, அக்கினி, இயமனிவ்விருவர்களுக்கும் குடிநீரொடுக்கும் வேலையையும், (32) நிருருதிக்கு (அவன் தனதினத்தோனாகையால் வைதிகா னுஷ்டானாதிகளுக்குரிய ஜலபாத்திரமாகிய) கெண்டியையும், வருணன் கையில் விசிறியையும், வாயுவின் கையில் சாமரத்தையும், அ[illegible]தவிதமாய்க் குபேரன் கையிற் (33) பாக்குப்பையையும், சந்திர சூரியர்களின் கைகளிற் குடையையும், (முந்தி தேவர்களால் மிகவும் துன்பமடைந்து வந்த) அசுரேந்திரன் கையில் (அவர்களை வேலைவாங்குவதற்குரிய) மிகவும் நேர்த்தியான கத்தியையும் கொடுத்து (34) பற்பல கீதங்களில் மிகுந்த சதுரர் களான ஸித்தர்கள், வித்தியாதரர்கள், கின்னரர்கள், கருடர்கள், இவர்கள் கீதங்கள் பாடவும், (35) இரம்பை, ஊர்வசி, மேனகை யிவர்கள் நாட்டியம்பண்ணிச் சேவிக்கவும், இவ்விதமாகச் சிங்காதனத்தில் வீற்றிருந்து சுற்றிலும் காத்துநிற்கின்ற தேவர்களை (36) நோக்கி யப்போது தேவராஜனாகிய விந்திரனுக் குரைத்ததாவது:— "அடா! இந்திரா! நீ மற்றந்தேவர்களோடு கூட 'நாம்' என் [illegible]றாண்மையை யெல்லாம் தூரத்தில்விட்டு நெஞ்சத்திலச்சங்கொ[illegible] தமது மனிதர்கள் திட்டமிடுகிறபடி பயிர்த்தொழில் வேலையையும் [illegible]தோறும் நடத்திவரலாவாய்" என்றனன். (37) பிறகு சூரனக்கி[illegible]வனை நோக்கி யுரைத்ததாவது:— "கேளாய்! அக்கினியே! அசுர[illegible]ருந்தனைத் தொட்டாலு (38) மவர்கள் சூடுணராமல் ஜாக்கிரதையா

ய் அவர்களுக்குச்சமயல்செய்துகொண்டிப்பட்டணத்திலேயிரு." "அடா! இயமா! நீ அசுரர்களுடைய பார்வைக்குச்சா ந்தவுருவமாக விருந்துகொண்டு (39) தவிர அவர்களுக்குச் சாவுநேரிடச்செய்யாமல் ஜாக்கிரதையா யிவ்விடத்திலேயிரு." "அடா! வருண! நீயோவென்றால் எப்போதும் நம்முடைய விப்பட்டணம் முழுவதும் வெகு ஜாக்கிரதையுடன் மிகுந்த குளிர்ச்சியும் நல்ல வாசனைபொருந்தியதுமான தண்ணீரை யெப்போதும் தெளித்துவருதல் வேண்டும்;" ($40\frac{1}{2}$) "அடா! வாயுவே! நீ இளங்காற்றை வீசிக்கொண்டும், நல்ல வாசனையும் குளிர்ச்சியும் பொருந்திய (41) பனிநீர்த்திவிலைகளை நாள்தோறும் நமதழகிய மங்கையர்களின் கொங்கைகள்மீது வீசியும், மேலும் நீமுற்றும் நெஞ்சத்திலச்சமுற்றவனாக வெங்கும் குப்பைகூட்டி வருதல்வேண்டும்." (42) "அடா! குபேரா! நீ சங்கநிதி பத்துமநிதிகளைத் திறந்து எப்போதும் ஸதாவதானத்துடன் நமது தூதர்களுக்கு வேண்டியமட்டும் திரவியம் கொடுத்துவருதல் வேண்டும்;" (43) "வாராய்! சூரியா! நீ குளிர்காலத்திற்கூட நமது நாயகிகள்மீது உஷ்ணமான வியர்வைத்திவிலைகளா லலங்கரித்துக்கொண்டு கோபுரவாசலிலிருந்து வெயிலிறைத்து வருதல் வேண்டும்." (44) "அடா! சந்திரா! நீ யெப்போதும் பூர்ணகலைகளோடிருந்து நமது மனோகர்வமுள்ள ஸ்திரீகளின் மனதையிளக்கி (அவர்கள் நம்மை வலியவாலிங்கனம் செய்யும்படி) நீ காமத்தூது பண்ணி வருதல் வேண்டும்." (45) "கேளாய்! பிரம்மாவே! நீ யுனது மைந்தர்களாகிய பத்துப்பிரஜாபதிகளுடன் கூட விங்கேயிருந்து தினசுத்திகளைச் (பஞ்சாங்கமுறை) சொல்லிவருவாய்." (46) என, இவ்விதமாக, மகா சதுரனாகிய சூரபத்துமனப்போது பலபல தேவர்களுக்கு அவரவர்க்குரிய வூழியங்களைச் சொல்லிவிட்டு, குருவாகிய சுக்கிராசாரியனால் குசோதகங்களால் புரோக்ஷிக்கப்பட்டவனாகி (குசமென்றபுல் முடிநுனியால் நீர்தெளித்தல்) ச்சிங்காதனத்தின்மீது சுகமாகவீற்றிருந்தனன். (47) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! சிரேஷ்டனாகிய சூரபத்துமனிவ்வாறாக நாள்தோறு மிந்திரன்முதலிய தேவர்களாலும் அசுரத்திரள்களாலும் தனதூழியமெல்லாம் முடித்துவரப் பெற்றவனாகவும், வேறெதிரியற்றவனாகவும், மிகுந்த விலக்ஷ்மீ விலாசத்தைப் பெற்றவனாகவும் தம்பிகளோடுகூட வென்றும் ஸார்வபௌமனாக (ஒருகுடையின்கீழாக) வாசுசெலுத்திவந்தான். (48)

எட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

## ஆசுரகாண்டம் ௯—வது அத்தியாயத்தி னர்த்தம்.

[illegible] மிகவறிவுடையோனான சூரபத்துமன் மனதுக்கிரம்மிய மாக, விசுவகருமன் பெண்ணாகிய பத்துமகோமளையைக் கலியாணம் செய்துகொண்டான். அதன்மேல் (1) லவனுக்கு மிகுந்த பலிஷ்டர்களான பானுகோபன், அக்கினிமுகன், ஹிரணியன், வஜ்ஜிரபாகு என்று பெயர்களையுடைய நான்கு பிள்ளைகள் பிறந்தனர்கள். ($2\frac{1}{2}$) மேலும் சூரனவனி மாகவே அனேகம் தேவகன்னிகள், அசுரகன்னிகள், (3) ராக்ஷஸகன்னிகள், கந்தர்வகன்னிகள், ஸித்தகன்னிகள், வித்தியாதர கன்னிகள், நாககன்னிகள், (4) கிம்புருடகன்னிகள், கருடகன்னிகள், கின்னரகன்னிகள், ஆகிய விவர்களையும் மணம்புரிந்து கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்பெண்டீர்களிடமாக மகா வீரியபராக்கிரமங்களையுடைய மூவாயிரம் ஸங்கியை கொண்ட பிள்ளைகளைச் சீக்கிரமாகப் பெற்றனன். (5) மகா வீரியமுடைய சூரனானவன் உடனே சிங்கமுகன், தாரகன் இருவர்களையும் ஒவ்வொருவருக்கு மிரண்டிரண்டு கோடி சைனியங்களுடன் முறையே ஆஸுரபுரியிலும் (6) பெரிதான மாயாபுரியிலும் வஸிக்கச்செய்தான். பிறகு சிங்கமுக னவ்வாசுரபுரிக்குச் சென்று இயமன் கன்னியாகிய விபூதிகை யென்பவளை (7) மணம்புரிந்து அவளிடமாக மகா சூரனென்ற வோர் மைந்தனை யடைந்தான். இதேவிதமாக வின்னும் பல கன்னிகளைக் கொண்டு நூறு பிள்ளைகளைப் பெற்றனன். (8) அங்ஙனமே தாரகனு மப்போது ஸௌரிகையென்ற திருநாம கன்னிகையை மணந்திற்கொண்டு மிகவும் தருமத்திற் பற்றுதலுள்ள அசுரேந்திரனென்ற வோர் மைந்தனைப் (9) பெற்று அங்கோர்த்தியான மாயாபுரியில் சௌக்கியமாக வசித்துவந்தனன். ($9\frac{1}{2}$) பிறகப்போது சூரபத்துமன் தீவுதோறும் பல வசுரர்களையு மிரண்டுகோடி சைனியங்களையு மனுப்பி ($10\frac{1}{2}$) பாதாளம், பூமி, சுவர்க்கம் இவைகளிலாறுறுகோடி சைனியங்களோடு பற்பல வகுப்பசுரர்களையு மேற்படுத்திவைத்தான். ($11\frac{1}{2}$) பின்பு சூரபத்துமன் வீரமாகேந்திரபுரத்துக்குச் சுற்றுப்புறங்களிலுள்ள வெட்டுப்பட்டணங்களிலும் (12) கஜாநநன் (யானைமுகன்) துரங்காஸியன் (குதிரைமுகன்) யாளிவக்திரன் (யாளிமுகன்) பல்லூகவக்திரன் (கரடிமுகன்) மகா பலவானாகிய வியாக்ரவக்திரன் (புலிமுகன்) (13) வராகமுகன் (பன்றிமுகன்) ஸிம்மவக்திரன் (சிங்கமுகன்) கவயாஸியன் (பசுப்போன்றதான கவயமென்ற மிருகத்தின் முகத்தையுடையவன்) ஆகிய மகா வீரர்களும் மகா பராக்கிரமசாலிகளுமான இவ்வெட்டுப்பெயர்களையும் (14) எண்பதினாயிரம் சைனி

யங்களோடனுப்பினன். மேலும் சூரனப்படியே தன் பட்டணத்திற் குள்ளிலக்ஷம் சைனியங்களையும், (15) அநேகவிதமாகக் கோட்டைவாசல்கள், கோட்டைமதில்கள் முதலிய விடங்களிலும் ஸ்தாபித்தும், மிகுந்த வீரிய பராக்கிரமங்களைக்கொண்ட (16) துர்க்குணன், தருமகோபன், துர்முகன், சங்கபாலன், மர்மங்களை யறிவோனான வஜ்ஜிரபாலன், மஹிஷன் இவர்களை மந்திரிகளாக (17) வைத்துக்கொண்டு அவர்களோடு சூரனரசுமுறை செலுத்திவந்தனன். தேவேந்திரன் முதலிய தேவர்களும் தவத்தையே பொருளாய்க்கொண்ட முனிவர்களும், (18) நாள்தோறும் சூரன், சிங்கமுகன், தாரகன் இவர்களின் பிள்ளைகள், மந்திரிகள் இவர்களைக் கண்டுகொண்டு அவரவர்களாலேவப்பட்டுவந்த ஊழியங்களை (19) ச்செய்துகொண்டு கருடனிடத்துச் சர்ப்பங்கள்போல் பயந்து நடுங்கி யொடுங்கி யிருந்து வந்தார்கள். இப்படியிருக்கையில் ஒருநாள் சூரன் இந்திராதிதேவர்களைப் பார்த்து (20) "ஓ! தேவர்களே! நீங்கள்சீக்கிரத்தில் மிகுதியான மீன்களைப்பிடித்து வர வேண்டும்" என,அப்போது தேவர்கள் மிகவும்மனதில் வியாகுலமுற்று (21) 'நல்லது அப்படியே பாக்கிய' மென்று ரைத்து விட்டு எலலோர்களும் கூடி கடற்கரை சென்று தக்ஷப்பிர ஜாபதியின் யாக காலத்தில் தாங்கள் செய்யலான சிவதுரோக பாவத்தை மனதில் நினைத்து நினைத்து மிகப்பயந்த வராயினர்கள். (22) அப்போ திந்திரன் வருணனை நோக்கி "நீர் சடிதியிற் கடலினின்று திரண்ட மீன்களைப் பிடித்து வருதல் வேண்டும்" என, பிறகு வருணனும் மிகுந்த பயத்தோடு சென்று அனேகம் அயிரை மீன்கள், பெரியமீன்களைவிழுங்குகின்ற திமிங்கில மீன்கள், அந்திமிங் கிலங்களை விழுங்க லுற்ற திமிங்கலகிலமென்றமீன்கள் (24) மகரமென்றசுறுமீன்கள் இவைமுதலான வின்னும் பலவகை மீன்களையும் பிடித்தோர் நொடியில்கடலினின்று கரையேற்றினன். இயமனவைகள துயிரை வாங்கினன்; சூரியனவைகளை யுலர்த்தினன்.(25) பிறகவைகளை நாகபாசத்தினாற் கட்டிச்சீக்கிரமாகக் சூரன் விடுதி சேர்த்தார்கள். அப்போது சூரனவர்களைப் பார்ந்துச் சிரித்து "ஓ!தேவர்களே! நீங்கள் நாள்தோறு மிவ்வாறாகவே திரண்ட மீன்களைக்கொண்டுவரல்வேண்டும்" என்றுரைத்தனன். (26½) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! பூர்வத்திலிந்தப் பிரகாரமாகத் தேவர்கள் மிகுந்த பயத்தோடு நடத்திக்கொண்டு வந்தார்கள். என, முனிவர்கள் சூதனைக் கேட்டதோ வென்றால்:—"ஓ! மகா புத்திசாலியான சூதமுனிவரே! பூர்வத்திலுங்களால் பிரஸ்தாபிக்கப்பட்ட அஜாமுகி யென்பவளைப்பற்றிய (27) சரித்திரத்தை முழுமையு முள்ளபடி யெடுத்துரைத்தல்வேண்டும்." என, சூதர் சொல்லுகின்றார்:—

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யான் கூறுகின்ற அவளது சரித்திரத்தைக் கேளீர்கள்! (28) அவள் மகா கொடூரமுடையவளும் மகா பாவியும், மிகுந்த காமந்துக்குள்ளானவளும், மிகவும் சூதுள்ள நெஞ்சத்தையுடையவளும், எப்போதுமெங்குமலைந்து திரிகின்றவளும், (29) பதினான்கு லோகங்களிலும் தனது மனம்போனபடி சஞ்சரிப்பவளும், அங்கங்குள்ள பிராம்மணர்கள், முனிவர்கள், மற்றத்தேவர்கள், (30) அசுரர்கள், அரக்கர்கள், இவர்களிலழகினரானாலும் அழகில்லாரானாலும் வாலிபரானாலும் வயதுசென்றவரானாலும் யாவரானாலும் வழியில் நேருகின்றவர்களில் (31) தினமொன்றுக்கு இவ்வாறாக வாயிரம் பெயர்களை தருஷித்துவருவது வழக்கம். அதேவிதமாக அவள் மார்க்கத்தில் சந்திக்கக்கூடிய வழகிகளான வாலிபஸ்திரீகள், யௌவனஸ்திரீகள், கன்னிகள் இவர்களை (32) பலவந்தமாகக் கட்டி யவளதண்ணன்மாருக்குக் கொண்டுவிடுவாள். மேலும் அவள் யாகங்கள், தவங்கள் இவைகளுக்கெல்லாம்கெடுதி செய்து கொண்டே வந்தாள். (33) இவ்விதமாக அவள் மிகக்கொடூரமான கிருத்தியங்களைச் செய்துகொண்டிருக்குமளவிலொருக்கால் முனிவர்களிற் சிறந்த துர்வாஸமகாரிஷியிடஞ்சென் றுரைத்ததாவது:— (34) " வாரீர்! தவசிகளிற் சிரேஷ்டரான துர்வாஸமுனிவரே !யான் மக்களைப் பெறுவதற்காக விங்குமிடம் வந்தேன். நீரெந்தனோடுகூட மிகுந்த போக சுகத்தை யனுபவித்தல்வேண்டும்." என (35)முனிவரவ்வசனத்தைக் கேட்டு மிகப்பயமுற்றவராகி " அடி! பேதாய்!யான் தவசியாகியதால தற்குத்திறமையுள னல்லன்; நீ சென்றுவிடு."(36) எனவுரைக்க அவரை யவளதன்மேல் மிகபலவந்தமாகவிழுந்தணைத்து அவருடைய வதரோஷ்டங்களைப் பானம்பண்ணி(37)பிறகவரை மல்லாத்தி மிகுந்த வலிமையுடனவள் ஸுரதம்பண்ணினள். அவர்களுடைய கலவியின் வலிமையாற் சத்துருக்களை வெல்லலுற்ற விரண்டுமைந்தர் பிறந்தனர்கள்.(38) தந்தையைக்கொண்ட இல்வலன், தாயைக்கொண்ட வாதாபி ஆகிய துராத்துமர்களான விவ்விருவர்களுமொருநாள் தந்தையைப் பார்த்து(39) "ஐயா! உமதெல்லாத் தவத்தின் வலிமைகளையு மெங்களுக்கிந்துவிடல் வேண்டும்." என்றுரைக்க அப்போது முனிவர் கோபங்கொண் டவர்களை நோக்கி (40) "அடா! துராத்துமர்களானமூடர்களே! தவத்தின் பயனை யேன் கொடுக்கலாகும்" என்றுரைத்துஅவர்களைப்பாராமல் நிஷ்டையி லிருந்துவிட்டார். (41) பிறகப்பாவிகளப்போதம் முனிவரைக்கொல்ல வெத்தனிக்க, அதுகண்டு முனிசிரேஷ்டரும் கோபத்தினாற் பரவசராகி யப்பேர்க்கொத்த அவர்களை நோக்கி(42) "அடா துரா

த்மர்களே! நீங்களிவ்விதமாகவே ருஷிகளிடத்தி லக்கிருத்தியங்களைச்செய்து நாசமடைவீர்கள்" என்று முனிசிரோஷ்டர் சபித்தனர். (43) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அதன்பிறகு இல்வலன்பிரம்மாவைக்குறித்து மிகவும்நியமத்தோடுகூட வெகுகாலம் யாகஞ்செய்ததில் (44) பிரம்மனுடைய வருளைப் பெறுவதற்காக வில்வலன் வாதாபியை யனேகங் கண்டங்களாகச் சேதித்தக்கினியி லோமஞ்செதனன். (45) அதன்மேற் பிரம்மனும் துரிதத்திலாவிர்ப்பவித்து "ஓ!கோ!வாராய் பாவமற்ற வசுரா! யாமிப்போ துந்தனுக்குப் பிரஸன்னராகி விட்டோம்; உனக்குவேண்டிய அபீஷ்டத்தை (46) யருளுகின்றோம்: அதை யிப்போதே சொல்வாய்' யாமிப்போதுரைத்தது ஸத்தியம்." என, இல்வலன் கேட்டுக்கொண்டதாவது:— "ஓ! சுவாமீ! ஆட்டுருவமாகிநிற்கும் வாதாபியை யான் கொன்று, அப்படி யிறந்தவனை யெப்போது கூப்பிடுகின்றேனோ அப்போதவன் நிஜ வுருவத்தோடு வருதல்வேண்டும்." என, பிரம்மனுமவ்வாறே வரனளித்துப் பிறகுதமதிடம் சென்றனர். (48) பிறகு மகா வீரர்களான அவ்விருவர்களும் சூரபத்துமனிடஞ் சென்று மிக வன்புடன் வந்தனித்துத் தங்கள் விருத்தாந்தங்களை யுரைத்து (49) அங்கு சிலகாலம் வசித்துவிட்டுப் பிறகு குடகுநாட்டுக்குச் சென்று அங்குள்ள நேர்த்தியான வாணியத்தில் மனதுக்கு ரமணீயமான வோராசிரமம் (50) கட்டி யங்கிஷ்டத்தின்படி சுகங்களை யனுபவித்து வசித்துவந்தார்கள். வழிநடையோரத்தில் குடியிருந்துவந்த அவ்வசுரர்கள் வழிப்பிரயாணிகளான பிராமணர்கள், ருஷிகள் இவர்களைக் (51) கண்டவுடன் தாங்களும் ருஷிவேடமெடுத்துச் சென்று அவர்களை வந்தனித்து அர்க்யபாத்தியாதிகளா லுபசரித்துச் சிறந்த வாஸனத்திலும் (52) இருக்கச்செய்து பிறகவர்களா லனுமதி கொடுக்கப்பட்ட பிறகு தாங்களும் தரைமீதுட்கார்ந்து ($52\frac{1}{2}$) "ஓ! தவத்தைத் தனமாகக் கொண்ட பிராம்மணோத்தமர்களே! இன்றைக் கெந்தனது பிதுரு பூஜை (பிதுருக்களுக்குரிய சடங்கு) யெங்ஙனம் நிறைவேறுமென்று சிந்தையினால் பரவசங்கொண்டிருக்கையில் நீங்கள் வந்தது எங்களது பரமபாக்கியமே." யென்பான். (54)

ஒன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## அசுரகாண்டம் ௪0—வது அத்தியாயத்தினர்த்தம்

இல்வலனின்னும் சொல்வதாவது:— "ஓ! பிராம்மணோத்தமர்களே! இப்போதுங்களா லிப்பிரதேசம்கூட நன்கலங்கரிக்கப்படலாயிற்று. ஆகையாலெனது சுகிருதத்தின் மகிமையால் யானே யுலகினில் மிகுந்த பாக்கியசாலி. (1) நீங்களிங்கு போஜனம் செய்வதற் கேற்றுக்கொள்ளல் வேண்டும்." என்றுரைத்துப் பாவம் செய்தலையே தொழிலாகக் கொண்ட அவ்வில்வல னவர்களைச் சாப்பிடும்படி திட்டம் பண்ணி (2) ஆட்டுருவத்தோடு இளம்புல்தரைமீது மேய்ந்துகொண்டிருக்கும் வாதாபியை யழைத்து அப்போதே யவ்வாட்டைக் கொன்று நெருப்பிற் சமைத்து உடனேயப் பிராம்மணரைக் (3) கூப்பிட்டு ஓர் க்ஷணத்துக்குள் ளவருக்குக் கழுத்தளவு நிரம்பச்சாப்பாடிட்டுப் பிறகாசிரமத்துக்கு வெளியே வந்து (4) "அடா! வாதாபீ! வாவா" வென்றுரக்கக் கூப்பிடுவான். ($4\frac{1}{2}$) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! உடனே வாதாபியப் பிராம்மணர் வயிற்றைக்கிழித்து அவரதேழுயிர் நாடிகளையும் பற்றிக்கொண்டு துரிதமாகப் பரபரப்போ டோடிவருவான். ($5\frac{1}{2}$) அப்பிரம்மஹத்தியக்காரத் துராத்துமாவானவ னிவ்வாறாகவே நாள்தோறும் செய்துகொண்டு (6) அங்கிருந்து மனம்கொண்டபடியெல்லாம் செய்யத்தகாத துஷ்கிருத்தியங்களைச் செய்துவந்தான். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அஜாமுகியின் சரித்திரமிவ்விதந்தானென்பதை யுங்களுக் குரைக்கலாயினேன். (7) பிறகு மறுபடியும் சூரன் சரித்திரத்தைச் சொல்லுகின்றேன்.

சூரபத்தும னிந்திரவிமானத்தின் மீதேறிக்கொண்டு நாள்தோறு மண்டங்களுக்குப் போய் வருவதில் (8) ஒருநாள் பாதாளலோகத்துக்குச் சென்று அங்கு பகலிலிருந்துவிட்டுப் பிறகிரவில் வீரமாகேந்திரபட்டணம் வந்துவிடுவான். (9) அவ்வாறாகவே மறுநாள் பூலோகஞ் சென்றங்கும் பகலிலிருந்து பிறகுடனே தனது நகரம் சேருவான். இதேவிதமாக அதற்கு மறுநாள் புவர்லோகம்போய் வருவான். (10) மேலுமப்படியே சந்திரமண்டலம், புதமண்டலம், சுக்கிரமண்டலம், சூரியமண்டலம், (11) செவ்வாய்மண்டலம், குருமண்டலம், சனிமண்டலம், பிரம்மலோகம் அப்படியே(12) விஷ்ணுலோகம் இவைகளுக்குப்போயங்கங்குள்ளவினோதங்களைக் கண்ணுற்று அந்தந்த நாட்களிலங்கங்கு பகலில் (13) தங்கித் தங்கிவிட்டு இரவுதோறு மிவ்வீரமாகேந்திர பட்டணம் வந்துசேருவான். இப்படியிருக்கையி லோர் நாளிச் சூரபத்தும னிந்தி

ராணியோடுபுணருவதற்கு மிகுந்தகாதல்கொண்டவனாகி (14)காமனம்
பினாலடியுண்டு தவித்துச் சேனாபதிக்குக் கட்டளையிட்டதாவதுः—
"வாராய்! வீரா! இந்திரனைக்கட்டியுருட்டி யிந்திராணியை நம்பட்ட
ணத்துக்குச் சீக்கிரமழைத்துவா" வென்றனன். (15) உடனேயப்போ
தொன்பதுகோடி அசுரஸ்திரீகள் புறப்பட்டார்கள். அவர்கள் வருவ
தைக்கேட்டு இந்திரனிந்திராணியோடுகூட (16) மிகப்பயந்துமனநடு
க்கமுற்றவனாகிச்சடிதியிற்பட்டணத்தை விட்டுப்புறப்பட்டோடிச்செ
ன்றனன். பிறகிந்திராணியையேற்றிப்போக வந்தஸாரதியானவ னசுர
ஸ்திரீகளோடு தேவலோகஞ்சென்றனன். (17) பிறகச்சாரதியங்குள்
ளதேவர்களை மிகவடித்துத்துன்பப்படுத்திக் கேட்கையிலவர்களாலி
ந்திரனோடி விட்டதைக் கேட்டுடனே சூரனிடஞ்சென்றனன். (18)
அப்போது மகாபலிஷ்டனான சூரனு மவன்முகமாகச் சங்கதிகளையறி
ந்து கொண்டுடனே ஸகல லோகங்களிலும் சென்று தேடும்படி வே
வுகாரர்களை திட்டமிட்டனன். (19) கேளீர்! சௌனகாதி முனிவர்க
ளே! பின்பப்போது தேவர்க ளிந்திரனுடைய பிரிவினையாலே தேவ
லோகத்தி லைசுவரியங்களை யிழக்கலாகி மிகவும் துக்கமுற்று (20)
விஷ்ணுலோகத்திலிருந்த விந்திரன் மைந்தனான ஜயந்தனுக் கறிவித்
தார்கள். அப்போது சௌனகாதி முனிவர்கள் சூதரை வினவியதா
வதுः— "ஓ! தவசிகளிற்சிறந்த சூத முனிவரே! ஜயந்தனப்போது யா
து நிமித்தம் சுவர்க்கலோகத்தை விட்டு விஷ்ணுலோகத்தி லிருந்தன
னென்பதை யெங்களுக் கெடுத்துரைத்தல் வேண்டும்" (21½) என,
சூதர் கூறுகின்றார்ः-வாரீர் பிராம்மணோத்தமர்களே நீங்களெல்லோர்
களும் ஜாக்கிரதையுடன் கேளீர்கள் (22) பூர்வத்தில் இந்திரன் தம்பி
யானவுபேந்திரன் தேவேந்திரனோடுகூட மற்றெங்கும் அச்சூரனிடத்
துப்பயத்தினால் மிக நடுக்கமுற்றிருப்பதைக்கண்டு தேவேந்திரனிந்தி
ராணியோடு கிளியுருவமெடுத்துச் செல்லுங்கால் தான்விஷ்ணுலோக
த்துக்குச் சென்றான். (23) அக்காலத்தில் ஜயந்தனும் சிற்றப்பனைப்பா
ர்ப்பதற்காக நிர்ப்பயமான விஷ்ணுலோகத்துக்குச்சென்று அன்றுமு
தலங்கிருந்துவந்தான். (24)தேவர்களப்போதவனை யழைத்துக்கொண்
டவனுடன் சுவர்க்கலோகம் வந்தார்கள். ஜயந்தனோ தந்தையைப்பற்
றிய துக்கத்தினால் மெய்மிகவும் மெலியலுற்றவனாகி (25) அப்போது
தேவலோகத்திலேயிருந்துகொண்டு அசுரர்கள தொழியங்களைச்செய்
துவந்தான். இவ்விதமாகச் சிலகாலங்கழிந்தபோது நாரதமுனிவர்வந்
தனர். (26)அப்போதவ னம்முனிச்சிரேஷ்டரைக்கண்டு பக்தியோடு
தண்டனிட் டுரைத்ததாவதுः-"ஓ! மகாரிஷியே! தேவரீருடைய பொ
ன்னடிகளைக் கண்டமாத்திரத்தில் யான் மிகுந்தபாக்கியவானாயினேன்

31

(27) பெற்றோர்களில்லாத்தினாலெந்தனை மிகுந்ததுக்கம்பாதிக்கின்றது எனவுரைத்து விநயத்தினால் வணக்கமுற்றுநின்ற வச்சயந்தனை நோக்கி நாரதர் கூறுகின்றார்:—(28) "வாராய்! ஜயந்தா! இப்போது சோகத்தை விட்டுவிடு:- உங்களதுகோரிக்கை நிறைவேறப்போகின்றது- இன்னும் கொஞ்சகாலத்திற்கெல்லா முந்தனுக்குப் பெற்றோர்களின் சேர்க்கை யுண்டாகும். (29) கேளாய்! தேவச்சிரேஷ்டா! யாவராலெங்கு, என்னகருமம் எவ்வளவு செய்யப்படுகின்றதோ, அவராலங்கே, அவ்வளவே அதின்பய னனுபவிக்கப்பட்டே தீரவேண்டுமென்பது நிச்சயமே. (30) உன் தந்தையான விந்திரனோவென்றா லிந்திராணிதேவியுடன் பூலோகஞ்சென்று அசுரர்கள் நாசமடைவதற்காக ஸ்ரீ சிவபிரானைக்குறித்து தவம் புரிகின்றான். (31) ஆகையால் நீ யிப்போது சகல தேவர்களுடனும் வெகு புத்திசாலித்தன்மையோடு ஜாக்கிரதையாக அசுரர்களுடைய வூழியத்தை யெப்போதும் செய்து கொண்டிரு". (32) என்றுரைத்துவிட்டு ஸ்ரீ நாரதர் துரிதமாகவானம் சென்றுவிட்டார். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! இந்திரனோவென்றால் பூலோகத்தில் சிதம்பரத்துக்குச் சமீபத்திலுள்ள (33) ஸ்ரீகாழியென்ற நேர்த்தியான பட்டணத்தின்கண் ஸ்ரீ மகாதேவனை மிகுதியாகப் பூஜைசெய்துவருகையில் சூரனுடைய வேவுகாரர்கள் தேடித்திரிவதைத் தெரிந்துகொண்டு (34) இந்திராணியோடுகூட தோட்டத்தின்மீதுள்ள மரங்களினிடையில் மூங்கிலுருவமாகக் கபடவேடங்கொண் டிருந்துவந்தான். (35) அனுவிருஷ்டிகாலம் நேரிட்டதனால் மழை பெய்யவில்லை. அங்குள்ள விருக்ஷங்களெல்லாம் மழையில்லாத்தினால் வாடலுற்றன. (36) "ஓகோ! கோ! துஷ்கிருத்தியங்களுடையமகிமையைப் பிரம்மனும் தாண்டமுடியாதல்லவோ! நாமிங்குவந்த மாத்திரத்தில் மரங்களும் மிகக் காயலுற்றதே!" (37) இவ்விதமாக விந்திரன் மிகவும் சிந்தாபரவசனாகி யிருக்குமளவில் துக்கங்களையாற்றலுற்ற சுபமானவோ ரசரீரிவாக்கு தொனிக்கலுற்றதோவென்றால்:-(38) "வாரீர் தேவேந்திரா! நீர்சோகத்தை விட்டுவிடும்; இன்னும் கொஞ்சகாலத்துக்கெல்லாம் ஓர்சிறந்தநதி வரலாகி விருக்ஷங்களெல்லாம் முன்போலவே (39) சிரகுகளெல்லா முதிரலுற்று நன்றாகச் செழிக்கலாகும்." என, இவ்வாறாகிய வசரீரிவாக்கை யிந்திரனப்போது செவியுற்று (40) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! உடனே துக்கத்தைவிட்டு மிகவும் சந்துஷ்டியடைந்தான்.

இச்சமயத்தில் நாரதமுனிவர்துரிதமாக விந்தியபருவதத்துக்கு வந்தனர். (41) அப்போதவ்விந்தியனு முடனேயங்குவரலுற்ற முனிவரைத் தண்டம்பண்ணி யர்க்கியபாத்தியாதிகளையளித்து அவரை ஆஸ

னத்திலிவீற்றிருக்கச்செய்து(42)" ஓ! முனிச்சிரேஷ்டரே! தேவரீரை
த்தரிசித்தமாத்திரத்தில் மிகவும் தன்னியனாயினேன்" எனவுரைத்துநி
ன்ற விந்தியனைநோக்கி நாரதருரைத்ததாவது:-(43)" பெரியோர்களா
ல் வெகுமதிக்கலுற்ற கிரீந்திரா! ஸௌக்கியமா? யாமிப்போது மகா
மேருவண்டையிலிருந் துன்னிடம் வந்தோம். (44) அம்மேருகிரியு
ரைத்த வோர்வார்த்தையைக்கேட் டதிலெந்தனுக்கே ஆச்சரியமாகவி
ருக்கின்றது. அப்பனே! விந்தியா? மிகவுமப்பிரியமான வவ்வசனத்தை
யுந்தன்முன்னர் யானெவ்வாறு கூறுவேன். (45) ஆகிலும் நீ நம்மீது
முயற்சியுடன் குருவிடத்துள்ள மரியாதையை வகிக்கின்றதானது
உந்தனுக்குரைக்கும்படி நம்மைத் தூண்டுகின்றது. (46) அதாவது:-
'தினந்தோறும் சந்திரசூரியர்கள் நக்ஷத்திர ராசிகளுட னெப்போது
மெந்தனையே பிரதக்ஷிணம்பண்ணிக்கொண்டு மனவச்சத்தோடு செல்
லுகின்றன. (47) மேலும் திரிபுரர்களை யெரித்த ஸ்ரீசம்புவுக்கு யா
ன் வில்லாயினேன். ஸகலதேவர்களு மெந்தன்மீதே மிகவாதரவோடு
வசிக்கின்றார்கள். (48) ஆகையால் பெருமையி லெந்தனுக்கீடான
பருவதமுலகின்மீது யாதுமில்லை' என்றும் மேருகிரி யுரைக்கலாயி
ற்று" என, விந்தியனும் கோபத்தினா லுதடு துடிக்கலுற்றவனாகி வச
னமுரைத்ததாவது:—(49) "கேளீர்! முனிவரே! பூர்வத்தில் ஸ்ரீபர
மேசுவரன் தன்னை வில்லாகவளைத்ததை மிகவும் மூடனாகிய வம்மே
ரு வீணாண்மைகொண்டோர் பெருமையாகப் பிதற்றுகின்றான். (50)
மேலும் தேவர்க ளவன்மீதேறி மிகவும் துகைத்துக்கொண்டு நாள்
தோறும் வாசம் செய்கின்றார்கள். தவிரவும் நரஸிம்மத்தை ஹதஞ்செ
ய்த ஸ்ரீ சரபேசுவர மூர்த்தியினுடைய நிகக்கண்ணிலோ ருளுந்தள
ளாகமட்டி லவன்பற்றலான நிலைமையை யறியவில்லையோ! (51½)
மேலு மச்சரபமூர்த்தியினுடைய விரக்கையடியால் மிகவுமவ னடிப
ட்டு நொந்து (52) மின்மினிப்பூச்சிபோ லெங்குமோடித் திரியலான
தையவ்வறிவீன னுணரவில்லையோ!" என, இவ்வாறான விந்திய
ன்வசனத்தைக்கேட்டு நாரதரவனுக் காசிர்வாதமளித்து(53) விட்டுக்
கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்போ தாகாசமார்க்கமாக சு
ரிதத்திற் சென்றுவிட்டனர். பிறகவ்விந்தியனோ! மிகவும் கோபமு
டையவனாகி யண்டத்தளவு வளர்ந்துவிட்டனன். (54) அப்போ தா
காசமார்க்கத்தில் சூரிய சந்திரர்களுடைய சுற்றுத லற்றுப்போனபடி
யால் பூமியினோர்பக்க மிருளால் மூடப்பட்டும் மற்றப்பக்க மெப்போ
தும் சூரியனாற் கொளுத்தப்படவு மாயிற்று. (55) ஸகலஜனங்களு மப்
போது காலக்குறிப்புக்கிடமின்றி யாதொருதொழிலு மற்றழியலான
தைத்தேவர்கள்சிந்தித்து(56)இதுவிந்தியனுடைய காரியந்தானென்று

நிச்சயித்துச் சடிதியில் ஸ்ரீ அகஸ்தியமுனிவரிடஞ்சென்று அம்முனி ச்சிரேஷ்டரை மேருகிரியின் குகைக்குட்கண்டு (57) "ஓ! தவசிகளிற் சிரேஷ்டரான வகஸ்தியபகவானே? தேவரீர் சகல ஸமுத்திரங்களையு முள்ளங்கை நீராகவாக்கினவரல்லவோ! (58) பூர்வத்தில் தேவரீரா லிச்சகங்களனேகமுறை நன்கிரக்ஷிக்கப்பட்டிருக்கின்றது. இப்போ து விந்தியனுடைய கர்வத்தினு லுலகிலோரிடத்துச் சூரியனற்றும் மற்றவிடத்தெப்போதும் சூரியனுள்ளது மாகியபடியா லெங்கும் தொழிலற் றெல்லாமழியலாகின்றது. (59) யாகங்க ளற்றுப்போன தா லெங்களுக்குப் பசி மிகவும் வருத்துகின்றது. ஆகையால் தேவரீ ர் விந்தியன் கர்வத்தைப் போக்கிச்சகங்களையும் அதிலும்விசேஷமாக வெங்களையு மிரக்ஷித் தருளல்வேண்டும்" என்று தேவர்களப்போ து முறையிட்டார்கள். (60)

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் ககவது அத்தியாயத்தினர்த்தம்.

பிறககஸ்தியமுனிவரு மப்படியே நல்லதென்று தேவர்களையனு ப்பிவிட்டு ஹிருதய கமலமத்தியில் விளங்கிநிற்கும் ஸ்ரீ மகாதேவனை த்தியானம்பண்ணி(1) ஸ்ரீஸாம்பமூர்த்தி பிரத்தியக்ஷமானவுடன் மு னிவர் கேட்டுக்கொண்டதாவது:—"ஓ! பகவானே! ஸர்வஞ்ஞா! அடியார்க்கு நேசனே! சங்கரா! (2) பிரபுவே! தேவரீரது கருணை வசத்தினு லிப்போது விந்தியனுடைய கர்வத்தை யடக்குவதற்கு மூல கங்களைக் காப்பதற்குமான வலிமை யெந்தனுக் குண்டாகுதல்வே ண்டும் (3) மேலும் தென்திசைக்குச் செல்லப்போகின்ற வெந்தனு க்கோர் புண்ணியதீர்த்தம் தந்தருளவேண்டும்" எனவுரைத்துப் பக் தியால் வணக்கமுற்றுநின்ற வகஸ்தியரைநோக்கி ஸ்ரீ ஜகதீசன் திரு வாக்கருளியதாவது:—(4)"ஓ! அகஸ்தியமுனிவரே? உமக்கு மிகுந்த வலிமையுண்டாகக்கடவது. மேலும் நதிகளிற் சிறந்த காவேரியை நீர் குடத்தில் வைத்துக்கொண்டு போகவேண்டும்" (5) என்றுரைத் த ஸ்ரீ பகவானைநோக்கி காவேரி கூறியதாவது. "ஓ! பரமசிவா! யா னிப்போ தப்புருடரோ டெவ்வாறு செல்வேன்" (6) என, "கேளா ய்! மாதரசே! முனிவருந்தனை விட்டுவிடுவார், பின்பு நீ தானகவே செல்லலாவாய்"; எனவுரைக்க காவேரியை யகஸ்தியரோடு சேர்த் துவிட்டு அடியார்களுக் கபயமளிக்கின்ற பரமசிவன் துரிதத்தில் ம றைந்தருளினர். (7½) பிறகு தவசிகளிற்சிறந்த முனிவரும் விந்தியகி ரியைநோக்கிப் புறப்பட்டு (8) மாயாபுரியண்டையாக வழியோடுவரு கையில் மகா கொடூரனும், மிகுந்த மதிமயக்கத்தைச் செய்விப்பவனு

ம் (9) பாதாளத்தைப் பூமியாகவும் ஆகாயமாகவும், இவைகளைப் பாதாளமாகவும் மலையை ஜலமாகவும், ஜலத்தை மலையாகவும், நிலத்தை நீராகவும், நீரை நிலமாகவும் பிரத்தியக்ஷத்தில் மாற்றுவோனும், (10½) பற்பலவுருவங்களை கொள்வோனும், மகாபாவியும், மாயையால் மலையுருவத்தோடு (11) வழிநடுவிலிருப்போனும், மிகவும் கொடியோனும், துஷ்டனுமான கிரௌஞ்சாசுரனிடத்து முனிச்சிரேஷ்டர்வந்து வழியென்று பிரமித்து மலையுருவங்கொண்ட அவ்வசுரன்மீதேறிச் சென்றனர். (12) பின் பங்குவழியைக் காணமல் க்ஷணநேரம் கலக்கமுற்று நின்று, பிறகோர் சிறியமார்க்கத்தை கொஞ்சதூரம்வரையில் (13) கண்டதின்வழியாகச் சென்று பின்னும் பிரமமுற்று நின்றனர். மறுபடி யப்போ திங்கு மங்குமுற்று நோக்கியதிற் பாதையொன்றையும் காணமல் (14) அப்போது துரிதமாக வடிக்கடி மிகவு மிடறலுற்றவராக வோடியதி லங்குமற்றோர் வழியைக் கண்டதனோடு சென்றதி (15) லங்கும் மயக்கங்கொண்டு நின்று பிறகு சற்று நிதானித்துநடந்து மிவ்வாறுகப் பலபலதடவை போய்ப் போய்த்திரும்பிவந்ததி (16) லப்போது கொஞ்சம் வழியைக்கண்டு நடுக்காட்டுக்கு வந்துவிட்டனர். அங்கோவென்றல் கேளீர்! சௌனகாதி முனிவர்களே! தூண் தூணுக மிகுந்த மாரி பொழியலுற்றது. (17) பிரளயகாலம்போல் பயங்கரமான மேக கர்ஜனைகளும், க்ஷணத்துக்குக்ஷணம் பளீர் பளீரென்று மின்னல்களுமுண்டாகி (18) யப்போ தக்காடுமுழுதும் காடாந்தகாரத்தினுற் சூழப்பட்டும், பயப்படுத்துவோர்க்கெல்லாம் பயங்கரமானதும், மதிமயங்கச் செய்வோரையெல்லாம் மதி மயக்குவதும், (19) மிருத்தியுவுக்கும் மிருத்தியுவானதும், ஸகலர்களுக்கும் பிரமத்தை யுண்டுபண்ணுவதுமாயிருந்ததை யகஸ்திய முனிவர்பரபரப்போ டிதென்னவென் றுலோசித்ததில் (20) ஞான திருஷ்டியாலுடனே யிதெல்லாம் கிரௌஞ்சாசுரனுடைய மாயையென்றறிந்து நிர்ப்பயராகிக்கைதனிற்பற்றிய கோலினலப்போ தவ்வசுரனை யடித்து (21) "அடா துராத்துமாவே! நீ மலையுருவமாகவிருந்துஞ்சகத்தினல் நம்மை பிரமிக்கச்செய்ததால் நீ சீக்கிரத்தி லிப்போதே மலையாகக்கடவாய். (22) மேலும் ஸ்ரீ ஆறுமுகக்கடவுளுடைய வேலாயுதத்தினு லுந்தன் சரீரமானது பிளக்கப்படக்கடவது" என்று மாமுனிவர்கையினுல் நீரெடுத்தவ்வசுரனை யிவ்வாறுகச் (23) சபித்துவிட்டு பிறகு வழியோடுசென்று காசிப்பட்டணம் சேர்ந்தனர். முனிவரங்குபோய், விசுவநாதனும், ஜகத்குருவும், பிராணிகளின் செவிதனில் தாரகப் பிர்ம்ம மந்திரத்தை யுபதேசித்தருளுவோருமான ஸ்ரீ மகாதேவனை (24½) ப்பூஜைசெய்து பிறகதைவிட்டு விந்தியகிரி

யடைந்து (25)"வாரீர்! முனிவரிடத்து மனப்பிரீதிகொண்ட பருவத ராஜனாகிய விந்தியகிரியே? சகலப்பிராணிகளேயும் தயவோடு நடத்துகிறவரும் நீர்தான்! திருப்புகின்றவரும் நீர்தான்! (26) மகாதைரியசாலியான வுமக்குத்தெனபுறமாகவெமக்குப்போகவேண்டிய வேலைகொஞ்சமிருக்கின்றது. ஆகையாலெமக்கிப்போது சீக்கிரமாக வழிவிடுவீர்" (27) என்று, கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! நயமானவார்த்தைபாகவே விந்தியனை வேண்டிக்கொண்டனர். அப்போ தம்மாமுனிவரைநோக்கி விந்தியனுரைத்ததாவது:—(28) "வாரீர்! முனிவரே! உமக்கு யாதொன்றுந்தெரியவில்லை! இங்கென்னவழி? நீர் கிரமமானவழியோடு செல்லுவீர்" என வுறக்கவுரைத்தனர். (29) பிறககஸ்தியருடனே யப்போது துரிதமாக கையை யுயரத்தூக்கி விந்தியன்மீதுவைத்து வலிமையோ டழுத்தினர். (30) உடனே கிரிராஜனக்கையழுத்தலாற் பூமியிற்குன்றி யிருந்துபோகலுற்றனன். பிறகு விந்தியன் மிகவும் பயங்கொண்டவனாகி முனிவரைநோக்கிக் கூறியதாவது:—(31)"ஓ! தவசிகளிற்சிறந்த ஸ்ரீ சிவபிரானது நேசத்திற்கிசைந்த வகஸ்தியபகவானே? யானறிமையாற்செய்த பெருப்பிழையை மன்னித்தெந்தனை யிப்போது காத்தருள்வீர் காத்தருள்வீர்(32)எந்தனுக்கிவ்வுயரம் மூன்போலெப்போதுண்டாகும்."? எனவுரைத்து விநயத்தால் வணக்கமுற்றவனாகி நின்ற விந்தியகிரியைநோக்கி முனிநாதர் திருவாக்கருளியதாவது:—(33) "கேளாய்! விந்தியா! யாம் மறுபடியெப்போதிங்கு திரும்பிவருவோமோ வப்போது நீ பயமின்றி மிகுந்த வுயரத்தைப்பெறுவாய்" என வுரைத்துடனே புறப்பட்டு (34) மிகுந்த பாபிஷ்டர்களான வில்வலவாதாபிகளிருக்கும் தேசத்திற்கவ்வகஸ்தியமுனிவ ரோர்க்ஷணத்துக்குள் வந்தனர். (35) அப்போதில்வல னம்மாமுனிவரைக்கண்டு முன்சொல்லியவழக்கம்போ லுரைத்து அப்போதவருண்பதற்கானவனுமதியை யவரிடம்பெற்று பிறகு சீக்கிரத்தில் வாதாபியை வழக்கப்போற்செய்து வேண்டியமட்டில் நெய், பால், கனிகள், பணிகாரங்கள், தயிர் இவைகளோடுகூட மிகவும் மிருதுவு முருசையுமான சுத்தான்னம், பாலிற்சமைத்த சர்க்கரான்னம் இவைகளால் மிகமேன்மையான போஜனமளித்து ($37\frac{1}{2}$) பிறகில்வலன் வழக்கப்போல்'அடாவாதாபீ' யென்றுகூப்பிடு(38)கையிலுடனே முனிவரது வயற்றினில் சுழற்றல் நேரிடும்போதே யவர்'அது அசுரனுடைய வஞ்சனையே' யென்றறிந்து (39) தமதுகையினல் வயிறுதனைத்தடவி மேன்மைபொருந்திய வோர்மந்திரத்தைச் சபிக்கவம்மந்திரத்தின்மகிமையால் வயிற்றினில் தீங்களித்த வாதாபியானவன் ஜீர்ணமாயினன். (40)கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்

போதில்வலன், வாதாபி பஸ்பமாகி மாண்டுவிட்டானென் றெண்ணி யுடனே ஸ்ரீ அகஸ்தியரைக் கொன்றுவிட வெண்ணி, யவரண்டைக் கோடி வந்தான். (41) அப்போதம்முனிவ ரவனைப்பார்த்தவுட னவனை யோர்த்தர்ப்பப்புல்லினாற் கொன்றுவிட்டனர். பிறகவ ரக்துடகு நாட்டைவிட்டு கொங்கநாட்டுக்குவந்து (42) இரண்டு பிரம்ம ஹத்தியை தோஷத்தினால் மிகவும் பாதிக்கப்பட்டவராகி யங்கு லிங்கரூபியாகவுள்ள ஸ்ரீ ஸதாசிவனைப் பூஜைசெய்தனர். (43)

கேளீர்! சௌனகாதிமுனிவர்களே ! இதிப்படியிருக்கையில் ஸ்ரீ நாரதமுனிவர் இந்திரனிடத்துக் கோர்நொடிக்குள்வந்தனர். அப்போதிந்திராணியின்கணவனும் வந்தமுனிவரை யர்க்கிய பாத்தியாதிகளால் மிகவும் (44) பூஜித்து, கேவலம் பரிதாபப்படத்தக்க ஸ்திதியைக்கொண்ட அவ்விந்திரன் கெஞ்சியுரைத்ததாவது:-"ஓ! பிரம்மசுவரூபியான முனிநாதா ? பயத்தினால் வாதைப்படுகிற வெந்தனுக்கெப்போது நிவர்த்திகாலமுண்டாகும் ?(45) யானெப்போ தென்னிடம்போய்த் தேவர்களோடுகூட வசித்து வாழ்வேன் ! சூரன் வேவுகாரர்கள் தேடித்திரிவதனா லெப்போது யான் மூங்கிலுருவம் கொண்டேனோ (46) அப்போதே தோட்டம் தோப்புகளிலுள்ள மரங்களெல்லாம் கேளீர் ! சுவாமி! மழையில்லாத்தினால் நீர் சுண்டலாகி வாடலுற்றன. (47) விருக்ஷங்கள் வாடிப்போன தப்போதுமுதலா யெந்தன்மனதை வருத்துகின்றது. ஆகையால் விருக்ஷங்களுடைய போஷணைக்காக வெப்போது மழையுண்டாகும் ? " (48) எனவுரைத்த தேவேந்திரனைநோக்கி நாரதர் வசனமுரைத்ததாவது:— " வாரீர் ! இந்திரா? நீர் துக்கத்தை விட்டுவிடும்: கொஞ்சக்காலம் கிரமித்தபிறகுதான்மறுபடியு முமக்குச் சுவர்க்கலோகப் பிராப்தியுண்டாகும், கேளீர்! தேவோத்தமா ?(49½) அகஸ்தியமுனிவர் ஸ்ரீ கைலாஸத்திலுள்ள ஸகலதீர்த்தங்களின் மத்தியிலிருந்து நதிகளிற் சிரேஷ்டமான காவேரியென்றதை கொண்டுவந்திருக்கிறார். (50½) விருக்ஷங்களின் போஷணைக்காக அந்நதி யிங்கு கொண்டுவரப்படல்வேணடும். (51) அம்முனிவருமிப்போது இதோ கொஞ்சதூரத்திலுள்ள கொங்கநாட்டிலிருக்கிறார். ஓ! இந்திரா ? ஆகையால் நீரிப்போது சீக்கிரமாக ஸ்ரீ விநாயகக்கடவுளைப் பூஜைபண்ணும். (52) அவருமக்குப் பிரஸன்னராகி யுடனே காவேரியைக் கொண்டுவந் தருளுவார் " என்று ஸ்ரீ நாரதருரைத்துவிட்டுச் சடிதியிலாகாயஞ்சென்றனர். (53) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே ! அதன்பிறகு தேவராஜனும் மிகுந்த வமுதத்தைப் பெருக்கலுற்றதும் ஸகலதுக்கங்களையும் தொலைப்பிப்பதுமான முனிநாதருடைய திருவசனத்தைக்கேட்டு அப்போதே துரிதத்தில் ஸ்ரீ யானைமுகத்தோனைப் பூஜைசெய்வதற்கு மதிவைத்தனன். (54) பிறகிந்திரனானவன்

ஆறுமுகனுக்கு மூத்தோனாகிய ஸ்ரீ யானைமுகக்கடவுளுக் கப்போது அப்பம், குழக்கட்டை, பால், நெய், அன்னம் இவைகளோடுகூட மகாபரிசுத்தமானதும், மிகுந்த பாவத்திரள்களை யடியோடுதொலைப்பிக்க வுற்றதுமான பூஜையைச் செய்தனன். (55) அப்போது, அடியார்களின் கிலேசங்களை விலக்குவோரும், அடியார்களின் பாவத்திரள்களைப் போக்கடிக்கின்றவருமான ஸ்ரீ விநாயகமூர்த்தியானவர் வெண்ணிறத்தினுற் சுத்தப் பிரகாசமுடையவராக அவ்விந்திரனுடைய வாயிரம் கண்களுக்கும் காக்ஷியளித்தனர். (56)

பதினோராவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் ௧௨-வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்ரீ பகவானாகிய விக்கினராஜன் பிரஸன்னராகி யப்போது தேவராஜனுக்கு திருவாக்கருளியதாவது:— "ஓ! இந்திரா? யாமுந்தனுக்கிப்போது பிரஸன்னராகிவிட்டோம். உனக்குவேண்டிய வெல்லாவற்றையும் கேட்டுக்கொள்" (1) எனவுரைத்திட்ட ஸ்ரீ விக்கினேசுவரனை நோக்கி யிந்திரன் வசனமுரைத்ததாவது:— "ஓ! அடியார்க்கு நேசனாகியவிக்கினேசுவரா? இம்மரங்களின் போஷணைக்காகத் தேவரீருடைய திருவருளால்மிகுந்த ஜலமுண்டாகுதல்வேண்டும்" (2½)என்றவிந்திரன் வசனத்தைக்கேட்டு ஸ்ரீ ஜகதீச னவனுக்குப் பதிலருளியதாவது:—(3) "வாராய்! இந்திரா? அண்டத்திலு மதற்குவெளியிலுமுள்ள ஜலங்கள், ஆகாயகங்கை, இன்னும்மற்ற பாதாளகெங்கை (4) இவைமுதலிய பல நீர்க்கால்களிவ்வுலகின்மீதுள்ளனவல்லவோ? இவற்றிலானாலும் மற்றெவ்வுலகிலிருந்தாலு முந்தனுக்குத் தருவிக்க வேண்டிய தெந்தஜலம்? சொல்" என்று ஸ்ரீ விநாயகருரைத்த (5) கம்பீரமும் திருத்தமுமான வசனத்தை யிந்திரன்கேட்டு "ஓ! கருணைக்கடலாகிய விக்கினேசா? தவசிகளிற்சிறந்த அகஸ்தியமுனிவர் (6) இப்போது காவேரியென்ற புண்ணியநதியை யிமிதா கிட்டத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்; ஓ! பிரபுவே? தேவரீர்சென்றதை யிப்போதே கொண்டுவருதல்வேண்டும்" என்றனன். (7) எனவுரைத்து விநயத்தோடு வணக்கமாகநின்ற விந்திரனுக்கு நல்லதென் றபயமளித்து ஸ்ரீ பகவானனவர் ஆச்சரியகரமான காக்கையுருவங்கொண்டு முனிவரண்டைசென்று (8) அவருடைய குடத்தின்மீ துட்கார்ந்தனர். பிறகு மாமுனிவர் குடத்தின்பேரி லுட்கார்ந்த காக்கையைக் கண்டு பரபரப்போடு (9) அதைக்கையினலோட்ட, கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்போதக்காக்கையானது துரிதத்திற் கால்களா லக்குடத்தைத் தள்ளிவிட்டு உயரக்கிளம்பிப் (10) பயமுற்றது போ லுடனே கௌஞ்சதூர மோடிற்று. கேளீர்! சௌனகாதிமுனி

வர்களே! முனிவர் குடம் கவிழ்ந்துவிட்டதைக்கண்டு "ஆ! ஹா! பரமசிவா!" என்று கூவிக்கொண்டோடிச் சென்று "யாதுநிமித்த மிப்போதிக்காக்கை யிங்குவரலாயிற்று? இன்னும் முன்னும் பின்னும், இங்குமங்கு மிக்காகம் பலதடவை யோடிநிற்கின்றதே! (11-12) யாமெந்த வுபாயத்தாலாவ திதை வலிமையுடன் கொன்றுவிடவேண்டும்" என்றும் சொல்லிக்கொண்டு மிக கோபத்தோடு அதனருகிற்சென் றதின்மேல் (13) அங்கு காகத்தைக்காணமல் 'இதென்ன'? வென்றாச்சரியமுற்று இங்குமங்கும் முகம்நிமிர்ந்து பார்த்ததி (14) லங்கோர் திருநூலணிந்த வாலிபனிருந்ததை நோக்கி "ஓ! கோ! யாம் காக்கையென்று வீணபிரமம்' கொண்டனம்; குடத்தைக்கவிழ்த்தது இவன்தானென்று" நிச்சயித்து (15) "இப்போ திப்பய்யலை நன்றாகக் குட்டிக்குட்டி யடிக்கவேண்டும்" என்று ஸத்தியவாக்குடைய ஸ்ரீ அகஸ்தியமுனிவ ரவனருகிற்கோடினர். (16) பிறகப் பிரம்மசாரிப்பய்யலானவன் பயமுற்றவன்போல் பரபரப்போடு துரிதமாக கொஞ்சதூரமோடிச்சென்று நின்றனன். முனிவர் மறுபடியு மங் (17) கோடியப்போதப் பிரம்மசாரியைக் குட்டுவதற்காகக் கோபத்தோடு கையைத் துரிதமாக வோங்குவதற் (18) குள்ளாக மறுபடியு மவனோர் நொடிக்குள் கையினுலெட்டிப் பிடிக்கப்படக் கூடியவன்போல் முந்தியோடி யம்முனிச்சிரேஷ்டரை யேமாற்றினன். (19) ஒளிபொருந்திய விக்கினேசுவர னிவ்வாறாகப் பலதடவை யம்முனிவரை யேமாற்றி, பிறகு பற்பலவித கணங்களாலும் சுற்றிலும் ஸேவிக்கப்பட்டவராகித் தனது நிஜவுருவத்தை யம்முனிவருக்குக் காக்ஷிக்கொடுத்தருளினர் (20½) அப்போது மாமுனிவ ரவரைக்கண்டு துதிசெய்ததாவதுः—"யானைமுகத்தோனும், பெரியவயிற்றையுடையவரும், (21) முறம்போன்ற காதுகளைச்கொண்டவரும், நன்கு தொங்கலுற்ற வுதட்டையுடையோரும், சந்திரகலையைத் தரித்தவரும், வேண்டியவுருவத்தைக் கொள்வோரும், ஸகலகணங்களுக்கும் கணபதியுமான வும்மை வந்தனிக்கின்றேன்; கவிகளுக்கெல்லாம் மிகுந்தகவிராயரும், பரப்பிரம்மசுவரூபியும், (22) ஸகலப் பிராம்மணர்களுக்கும் முதன்மை ராஜனுமாகிய மங்களமூர்த்தியை யெப்போதும் வந்தனிக்கின்றேன். ஸகல விடையூறுகளையும் விலக்குவோரும், ஸகல பாவங்களையும் தொலைப்பிப்போரும், (23) ஸ்ரீ கந்தபிரானுக்கு மூத்தோருமான ஸ்ரீ விநாயகக்கடவுளை யவ்வாறே சாஷ்டாங்கமாக வந்தனிக்கின்றேன்" என்றிவ்விதமாக ஸ்ரீ கணநாதனை தோத்திரம்பண்ணி யடிக்கடி நமஸ்கரித்தனர். (24) பிறகு பகவானும் முனிவரைநோக்கித் திருவாய்மலர்ந்தருளியதாவதுः—"வாரீர்! விந்தியகிரியது கர்வத்தை நிவர்த்தித்த,

முனிவரிற்சிறந்த வகஸ்தியரே? உமக்கு யாம் பூர்ணமாகப் பிரஸன்னராயினோம்; இப்போ தமக்குவேண்டியதைக் கேட்கலாவீர்" (25) எனவுரைத்த ஸ்ரீ விக்கினராஜன்முன்பாக வகஸ்தியர் தெரிவித்துக் கொண்டதாவது:—"ஓ! அடியார்களுக்குக் கருணைக்கடலாகிய கணநாதா! என திவ்வபராதத்தை மன்னித்துத் (26) தேவரீரது மலரைய டியிடத்தென்றும் பிரியாதபக்தியை யீந்தருளவேண்டும். காவேரிந தியோவென்றால் ஸ்ரீ பரமேசுவரனுக்குப் பூஜை செய்வதற்காகக் கொண்டுவரப்பட்டது. (27) ஓ! யானைத்திருமுகனே! குடம் கவிழ்ந்துபோனதா லக்காவேரி யோடிப்போய்விட்ட தல்லவோ! ஸ்ரீ பரமேசுவரனைப் பூஜிப்பதற்காக வெந்தனுக்குத் தீர்த்தத்துக்கு வழிசெய் தருளவேண்டும். (28) யான்தேவரீரைக் குட்டுவதற்காக வந்தபடியா லக்குட்டெந்தனுக்கே விழட்டு" மென்று அப்போது தமது தலைமீதே (29) யிருகைகளையும் முட்டி பண்ணிக் குட்டிக்கொண்டனர். ஓ! சௌனகாதிமுனிவர்களே! இது ஆச்சரியம்! இவ்வித முரைத்துநின்ற காரியமறிந்த வகஸ்தியமுனிவரை (30) ச் சமாதானப்படுத்தி யப்போது வசனமுரைத்ததாவது:—"ஓ! கேளீர்! முனிச்சிரேஷ்டரான வகஸ்தியரோ? விருக்ஷங்கள் பட்டுப்போனபடியா லிந்திரனால் வேண்டிக்கொள்ளப் பட்டதன்பேரில் ஜலத்துக்காக யாமிங்கு வந்தோம் (31½) அதேகாரணத்துக்காகத்தான் குடமும் கவிழ்க்கப்பட்டது. (32) உம்மாற்செய்யப்பட்ட இவையெல்லாம் நமக்கு மிகவும் ஸந்தோஷமே! ஸ்ரீ திரிபுராரியைப் பூஜைசெய்வதற்காக இதோ இந்தஜல மிருக்கட்டு" (33) மென்று ஸ்ரீ விக்கினேசுவரன் தமது துதிக்கைமுகத்தினால் காவேரியிலிருந்து நீரொடுத்து அக்குடத்தில் சொரிந்தனர். (34) அக்ஷணமேக் குண்டிகைநிரம்பி வழிந்து எங்கும்பரவியோடிற்று. பிறகப்பிரபுவும் முனிவருக்கிவ்விதமாக வரங்களை யருளிவிட்டு அந்தர்த்தானமடைந்தனர். (35) பிற ககஸ்தியருமோவென்றால் சீக்கிரமாகத் திருக்குத்தாலமென்ற பட்டணத்துக்குப் போயினர். அங்குள்ள வைஷ்ணவரெல்லோர்களும் திருமேனிமுழுதும் திருநீற்றினாற் சிறக்கலுற்றவரும், உருத்திராக்ஷாபரணங்களா லலங்காரமாக விளங்கியவருமான வம்முனிச்சிரேஷ்டரைக் கண்டு (36½) "அடா! பிராம்மணா! சைவனாகிய நீ யிங் கெங்களது பட்டணத்துக்குள் வருதல் கூடாது" (37) என்றுரைக்க முனிவரப்படியே சரியென் றப்பட்டணத்துக்கு வெளியிற்சென்று மாயையினால் துரிதமாக வைஷ்ணவவுருவத்தை யெடுத்துக்கொண் டப்பட்டணத்துக்குள் மறுபடியும் சென்றனர். (38½) அப்போதங்கு வீதிகளிலிருந்த வைஷ்ணவரெல்லோர்களு மவ்வைஷ்ணவரைக் கண்டவரை வெகுமானத்துட

ன் வந்தவித்தாலயத்திற் கிட்டுப்போயினர்கள். அப்போது மாமுனிவர் வைஷ்ணவர்கள் பேசிக்கொள்ளுகிற முறைப்படியே யவர்களோடு பேசினர். (40) பிறகவா வைஷ்ணவர்களைப்பார்த்து "இப்போது யான் விஷ்ணு பூஜை செய்யவேண்டு" மென்றுரைத் தவர்களை வெளியிற் போகும்படி செய்து (41) பிறகங் காலயத்திலிருக்கும் விஷ்ணுபிம்பத்தை, ஸ்ரீ சிவபிரானுகவே மனதில்பாவனைசெய்து கையினுற்தொட்டு வலிமைகொண் டமுத்திப்பிடிக்க, அப்போ தவ்விஷ்ணுபிம்பமானது உடனே சிவலிங்காகார மாகிவிட்டது. (42) அதன்மே லகஸ்தியரும் லிங்காகாரமாயுள்ள ஸ்ரீ பரமேசுவரனை வைஷ்ணவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையிலே மூறைப்படி பூஜைசெய்கையில் (43) அப்போது வைஷ்ணவரெல்லோர்களும் கும்பலாகச்சேர்ந்து முனிவரையடிக்கத் துரிதமாகவந்தனர்கள். பிற ககஸ்தியரு மவர்களைக்கண்டு கோபத்தோடு பார்கக, (44) அவர்க ளவரது கோபாக்கினியால் மிகவும் பொசுக்கப்பட்டவர்களாகி யோட்டம்பிடித்தார்கள். பின்பகஸ்திய ரங்கு சைவர்களைக் குடியேற்றிவிட்டு ஸஹியபருவதம் சென்றபிறகு (45) ததீசமுனிவர், கண்வர், ஸ்ரீ நந்திகேசுவரர், பிருகு, கௌதமர், பிரகஸ்பதி, பிருங்கி, ஸ்ரீ துர்வாஸமுனிவர் இவர்களா லவ்வைஷ்ணவ நிர்ப்பாக்கியர்களுக்கு நேரிட்டிருக்கும் சாபத்தை முனிவரப்போது நினைத்துப்பார்த்து (46) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்போ தப்பேதையரைக்குறித்து மிகவும்பரிதாபப்பட்டனர். (46½)

கேளீர்! முனிவர்களே! காவேரியானது குடத்திலிருந்து புறப்பட்டோடி (47) ஸ்ரீகாழிப்பட்டணத்திய மரங்களுக்குப் பாய்ந்தவுடனப்போதே அம்மரங்கள் சிறகுதிர்ந்து (48) எல்லாம் தளிர்கொண்டு பற்பல மலர்களால் விளங்கப்பெற்றதை வலாசூரனைக்கொன்ற சத்துருக்களை வதைப்போனுன விந்திரன்கண்டு மனக்கவலைநீங்கி(49) யப்போது மிகவும் மகிழ்ச்சிகொண்டவனுகித் தனது நிஜவுருவத்தைக்கொண் டிந்திராணியோடுகூட விசித்திரங்களான பத்திரங்கள், மிகுந் தவாஸனைகொண்ட புஷ்பங்கள் இவைகளை மிகுதியாக வெடுத்தெடுத்துச் சேகரித்து அப்போக்கொத்த சத்துருவினுட்டங்களை யடக்க முயன்றவனுக விசுவேசுவரனுகிய ஸ்ரீ ஸதாசிவனைப் பூஜைசெய்தான். (50-51) இச்சமயத்தில் தேவரெல்லோர்களும் தேவேந்திரனைப் பார்ப்பதற்காக வந்தார்கள். அவ்வெல்லாத்தேவர்களு மிந்திரனை வந்தனித்து வசனமுரைத்ததாவது:—(52) "ஓ! அரசனே! நீரெங்ஙனம் உமது தேவர்களையெல்லாம் விட்டுவிட்டு இந்திராணியோடுகூட ஒண்டியாகக் கபடவேஷங்கொண் டிங்கு வனவாஸஞ் செய்துகொண்டிருக்

கிறீர்? (53) ஓ! தேவேந்திரா! நீரிப்போது சுவர்க்கலோகத்திலிருந்துகொண்டு முன்போ லித்தேவர்களை மிகுந்த தயவோடசுரர்களை துறத்தப்பெற்றவர்களாகக் காப்பாற்றி வரல்வேண்டும்." (54) என்றிவ்விதமாக வுரைத்துநின்ற, மிகவும் பரிதாபப்படத்தக்க தேவர்களை நோக்கி யிந்திரனுரைத்ததாவதுः—"ஓ! கேளீர்! தேவர்களே! இப்போது நம்மாற் செய்யத்தகுவது யாது? (55) முந்திச் சூரபத்துமனுடைய கட்டளைக்கமைந்து திரண்டமீன்கள், இரைச்சிமுதலிய வின்னும்பல பல விகழ்ச்சியான பண்டங்களும் நம்மாற் கொண்டுவரப்பட்டன. (56) இவ்வாறெல்லாஞ்செய்து மச்சூரன் பலவந்தமாக நம்மைச் சிறையிலடைத்துவிட்டு இந்திராணியைத் தருஷிப்பதற்குக் காதல்கொண்டனனல்லவோ! (57) ஆகையால் மானக்குறைவு நேரிடுவதற்குப் பயந்தல்லவா யாமிப்போ திங்கிருந்துகொண்டிருக்கிறோம். அப்படி யிங்கிருப்பதிலு மசுரர்களுடைய விநாசத்துக்காக ஸ்ரீ மகாதேவனைப் (58) பூஜை செய்துகொண்டிருக்கிறோம். இங்ஙனமிருக்கையில் நீங்களுமிங் கேதுநிமித்தம் வந்தீர்கள். நல்லது! நாமெல்லோரு மிப்போது கைலைக்கொடுமுடிக்குப்போவோம். (59) அங்குசென்று ஸ்ரீ மகாதேவனிடத் தெல்லாவற்றையு முள்ளபடி யறிவித்துப் பிறகத்தேவாதிதேவனால் திருவாக்கருளப்பட்ட வசனங்களைக்கேட்டு நாம் (60) எல்லோர்களும் நந்நெறியிலிருந்து வருவோ"மெனவுரைத் தவர்களை யங்கு நிறுத்திவிட்டுப் பிறகவ்விந்திரனிதை யிந்திராணிக்கறிவிப்பதற்காகத் துரிதத்திற் சென்றனன். (61) உடனே யிந்திராணியவனைக் காணும்போதே ஸங்கதிகளை யிங்கி தினலறிந்துகொண்டு மனவருத்தத்துடன் துக்கப்பட்டாள். அப்போதிந் திரனும் "கேளாய்! அன்புள்ளநாயகி! தேவரெல்லோர்களு மிங்கு வந்திருக்கிறார்கள். (62) அவர்களுடன் சிகரத்திற்சென்று கைலாஸவாஸியான ஸ்ரீ மகேசுவரனுக் கிச்சங்கதிகளை யறிவித்துப் பிறகுன்னிடம் திரும்பிவருகின்றேன். (63) இதோ! இச்சாஸ்தாதேவ ருந்தனைக்காப்பவராவார்" என்றப்போ துரைத்தனன். அதற்கிந்திராணியும் "ஓ! சுவாமி! எந்தனைக் காப்பதற்குள்ள வீசுவரனான விச்சாஸ்தாதேவர் யாவர்? என்பதையும், இவருக்கெல்லோர்களையும் காக்கும் தன்மை யெங்ஙன முண்டாயிற்றென்பதையு மெடுத்துரைத்தல்வேண்டும்" என்றனள். (64-65)

பன்னிரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் 13-வது அத்தியாயத்தினர்த்தம்.

இந்திரனுரைக்கின்றான்:— "கேளாய் மாதரசே! பூர்வத்தில் தேவாசுரர்களெல்லோர்களுஞ்சேர்ந்து திருப்பாற்கடலைக் கடைந்தனரல்லவோ? அப்போதங்குண்டான வமுதத்தை யவ்வெல்லோர்களுக்கும் பகுத்துக்கொடுப்பதற்காக ஸ்ரீ அச்சுதரானவர் (1) மோகினியுருவமெடுத்து அசுரர்களைக் காதல்கொள்ளச்செய்து அவ்வமுதத்தைத் தேவர்களுக்குமட்டிற் சடிதியிற்பகிர்ந்து போஜனமளித்தனர். (2) அச்சமயத்திலம்மோகினியைப் பார்ப்பதற்காக ஸ்ரீ ஸர்வேசுவரனங்குதோன்றி மிகலாவணியமுடையவளும், சுழலலுற்ற கடைக்கண் பார்வையுடையவளும், (3) மிகநேர்த்தியாக மின்னியுடனே மறைந்துவிடாமல் நிலையாய் நிற்கலுற்ற மின்னற்கொடிபோன்றவளும், நேர்த்தியான விரத்தின ஹாரங்களாற் பார்த்தவர்மனதைத் திருடலுற்ற பருத்த விருகொங்கைகளது பாரத்தினாற் சற்றுவணக்கமுற்ற மெல்லிய விடையை கொண்டவளு (4) மான வம்மோகினியைக் கண்ணுற்ற மாத்திரத்தில் கலவிகொள்ளக் காதலுற்று அப்பரமேசுவரன் திருவாக்கருளியதாவது:—"அடி! நேசமுற்ற மாதரசே! நீ யிப்போதிங் கெம்முடன்கூடச் சம்போகம் செய்தல்வேண்டுமென்ற வாசை யெனக்கு மெத்தவல்லவோ இருக்கின்றதடி!" (5½) என்றுரைத்துத் தருஷிப்பதற்கு மிகத்துரையாகநின்ற ஸ்ரீ சிவபெருமானைநோக்கி யப்போதம்மோகினி யுரைத்ததாவது:—(6) "ஓ! ஸர்வேசுவரா! யான் நாராயணனல்லவோ இப்போது மோகினியுருவமெடுத்து நிற்கின்றேன் தேவரீரெந்தனோடெவ்வாறு ஸம்போகஞ் செய்யத்தகு" மென்றுரைத்து இலஜ்ஜையோடு தலைகுனிந்துநின்ற வம்மாதரசைநோக்கிச் சங்கரன் பின்னும் சொல்லுகின்றார்:—"ஆ! அடி! தேனே! நீ நமது நான்கு சக்திகளின் மத்தியிலான 'புருஷன்' என்ற (8) சக்தியல்லவோ! * ஆகையால்தான் முந்தியுந்தனோடு புணர்ந்துப் பிரம்மனைப் பிறப்பித்தோம். மேலும் தாருகாவனத்திலிதேமாதிரியாக நீ மோகினியுருவ மெடுத்திருக்கையில் (9) ஆ! எமதாசைக்கிசைந்த பெண்ணரசே! அப்போது நீயல்லவோ வலியவெம்மோடு கலவி கூடுவதற்குக் காதலுற்றாய்! ஏனடி! எமதழகிய குழலாய்! அப்போதங்கு யாமிதோ ஆயிற்றென் றுந்தனுடன் புணர்ந்தனமல்லவோ! (10)

---

* ஸ்ரீ பரமேசுவரனுடைய சக்தியானது பிரபஞ்சங்களி னிரக்ஷணார்த்தமாக:—கோபத்தினாலாகவேண்டியதற்காக 'காளி' என்றும், உயுத்தத்தினாலாகவேண்டியதற்காக 'துர்க்கை' யென்றும், புருடவுருவத்தினாலாகவேண்டியதற்காக 'விஷ்ணு' வென்றும், ஸம்போகத்தினாலுலகங்களை யிரக்ஷிப்பதற்காக 'ஸ்ரீ பார்வதி' யென்றும் நான்குவிதமுள்ளதென்பதை யறிக.

ஆகையால் நீயிப்போ தெமதிச்சையின்படி பலதடவை காமலீலை க ளிப்பது தகுதியாகும்" என்றனர். இவ்வாறுரைத்து மவள்திருமுகத் தைத் திருப்பிக்கொண்டு நிற்குமளவில் ஸ்ரீ ஜகதீசனப்போது விரை வுட(11) னவளை வாரியெடுத்துத் துரிதத்தி லச்சுந்தர மங்கையைச் சம்பூத்தீவிலுள்ள ஸாலவிருக்ஷத்தடியில் மல்லார்த்தி ரமித்த கடு மையான ஸுரதத்தின் வேகத்தைத் தாங்குவதற் கவள் திறமையற்ற வளாகித் திருமேனிமுழுதும் மிகுந்த வியர்வையால் நனையலுற் றப் போது குபீலென்று வாந்திசெய்தனள். (13) கேளாய்! பெண்ணே! இந்திராணீ! அவ்வாந்தித்தண்ணீர்தான் கண்டகையென்ற நதியாக வாயிற்று அந்நதியில் வஜ்ஜிரதந்தமென்ற புழுக்களுற்பத்தியாகின்றன. (14) அப்புழுக்கவெல்லாம் தங்கள் வாய்நீரினா லங்குள்ள இலேசான களிமண்ணைக்கொண்டு கரையடியிற் கூடுகட்டி யக்கூட்டினுள் பே சாமலொண்டியிருக்கும். (15) பிறகந்நதியில் பிரவாகம்வந்து நீரோ டுகையி லவைகள் செத்துப்போக, அப்பிரவாகத்தி லக்கூடுகள் மிதந்தி யாய் மிதந்துபோகும். (16) அப்போதந் நாட்டிலுள்ள சிலமானிடர் க ளந்நீர்க்காலில் வலைகட்டி யக்கூடுகளைப்பிடித் தவற்றிற்குள்ளிருக் கும் தங்கத்தை யெடுத்துக்கொண்டு அக்கூடுகளை விலைக்கு விற்கின் றார்கள். (17) கேளாய்! மாதே! அப்பூச்சிக்கூடுகள்தா னிப்போது ஸாலக்கிராமங்களென்று வழங்குகின்றன. ஆனாலவைகள் ஸ்ரீ விஷ் ணுபிரானது வாந்திநீரின்கண் ணுண்டாகியபடியா லவை விஷ்ணுவு க்குரிய சிலைகளென்றுப் பிரஸித்தி பெறலாயிற்று. (18) அதேகாரண த்தாற் றனிப்போதுகூட வுலகின்கண்ணுள்ள பெரியோர்கள் ஸ்ரீ சிவலிங்கத்திற்குவேண்டிய யோனிபீடமாகிய ஆவுடையாருக்காக வச்சா லக்கிராம சிலையென்றகண்டகீ நதிச்சிலையை விசேஷமாகவாதரிக்கின் றார்கள். (19) இவ்விதப்புணர்ச்சியில்நின்றுதான் ஐயனார் என்ற ஸ்ரீ சாஸ்தாதேவருண்டானது. மேலுமவரவ்விருவர்களுக்கும் பிறந்த படியால் ஹரிஹர புத்திரரெனப் படுகின்றார். (20) பிறகு சாஸ்தா வாகிய வம்மைந்தன் ஸ்ரீ மகாதேவன்முன்பாக "ஓ! தந்தையே! யான் செய்யத்தகுவது யாது"? எனவுரைத்து மிகவணக்கமாக நிற் கையில் ஸ்ரீ ஜகதீசனப்போ தவருக்குப் புவனங்களி னாதிபத்தியத் தைத் தந்தருளினர். (21) "கேளாய்! இந்திராணீ! அப்படிக்கொத்த ஸ்ரீ சம்பு புத்திரராகிய விச்சாஸ்தா தேவருந்தனைக் காத்திரக்ஷிக்கட் டும்" என்றுரைத்தபிறகு இந்திரனப்போது இந்திராணிக்கு முன்னி லையிலே ஜகங்களுக்கு பிரபுவாகிய ஸ்ரீ சாஸ்தாதேவனை யேகாக்கிரசி த்தனாகி நினைக்க (22½) அப்போதே சாஸ்தாவானவர் மிகக்கொடியர் களான பலகணங்களால் சூழப்பட்டவராகப் பிரத்தியக்ஷமாகி 'யாமெ

ன்னசெய்யவேண்டு' மென்று திருவாக்கருள, (23½) இந்திரன் "ஓ! தேவனே! யான் ஸ்ரீ சம்புவினுடைய கைலைகிரிக்குப் போகுதல்வே ண்டும்; யான் திரும்பிவருமளவு மெனது பிராணநாயகியான விந்திரா ணியை யிங்கு தேவரீர் காத்தருளல்வேண்டும்" எனக்கேட்டுக்கொ ண்டு இந்திராணியை யவரதங்கையி (25) லொப்புவித்து அவளிட த்தும் ஸ்ரீ சாஸ்தாதேவரிடத்தும் விடைபெற்றுக்கொண்டு விருத்தி ராஸுரனைக்கொன்ற விந்திரனனவன் தேவர்களோடுகூடத் துரித மாகக் கைலைக்குப் புறப்பட்டனன்.(26)பிறகு சாஸ்தாவானவர் தமது கணநிபராகிய மகாகாளனை யிந்திராணியைப் பாதுகாக்கும்படி யேற் படுத்திவிட்டுத் தமதிருப்பிடஞ்சென்றனர். (27) இந்திரனும் மற்றத் தேவர்களுடன் புறப்பட்டுச் சகலபாவத்திரள்களாகிய மிகுந்த விருள் கூட்டத்துக்குச் சூரியனொளிபோன்றதான கைலைகிரிக்குச் சடிதியிற் சென்று (28) அங்கவன் தேவர்களுடன்கூட ஸ்ரீ நந்திகேசுவரனைக் கண்டு தூரத்திலிருந்தபடியே தண்டனிட்டு நிற்கையில் பிறகத்தே வனலழைக்கப்பட்டதன்மே லவரருகிற்சென்றனர். (29) அப்போது நந்திகேசன் "வாராய்! இந்திரா? யாதுநிமத்தமிப்போ திங்குவரலா று" யென, அப்போதிந்திரனும் பயத்தினல் மெய்நடுக்கங்கொண்ட வனகி (30) "ஓ! சிலாதமுனிவரின் தநயரான ஸ்ரீ நந்திகேசா! யான் ஸகலதேவர்களோடு மிப்போது ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற் காக விங்குவந்தேன்; தேவரீரென்மீது கருணையருளல் வேண்டும்" என்றனன். (31) இவ்விதமுரைத்து வணக்கத்தோடுநின்ற விந்திரனை நோக்கிப் பிரமதகணங்களுக்குத் தலைவரான ஸ்ரீ நந்திபிரானுரைத்த தாவது "ஓ! தேவேந்திரா! இப்போது ஸ்ரீ ஸர்வேசுவரன் ஸநகாதி களுக்கு ஞானோபதேச மருளிக்கொண்டிருப்பதால் நீ ஸேவைபண் ணுவதற்கிப்போ திங்குஸமயமில்லை; நீ போய்விடு" என்றனர்.(32-33) பிறகிந்திரனு மவரதுவசனத்தைக்கேட்டுச் சகலதேவர்களுடனு மப் போதவரைப் பலதடவை வந்தனித்து மற்றோர் கொடுமுடிக்குச்செ ன்று (34) அங்கு ஸ்ரீ மகாதேவனைத் தியானம்பண்ணிக்கொண்டு வ ஸித்துவந்தனன்.

இப்படியிருக்கையில் கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! மிக க்கொடியவளும், பாவஞ்செய்தலையே தொழிலாகக் கொண்டவளும் (35) ஓர்க்ஷணநேரத்தி லண்டத்தினுடைய சந்துபொந்தெல்லாம் சுற் றிவருவோளும், நடுப்பாதையில்நேர்ந்த பலபலபுருடர்களோடும் சுரத மாடுவோளும், (36) அதேவிதமாய் நேரக்கூடிய, இயற்கையாகவே மிகவழகிகளான அன்னியஸ்திரீகளில் நாள்தோறு மிரண்டாயிரம்பெ

யர்களை மிகவும் பலவந்தமாகப்பிடித்துச் சூரனுக்குக் கொண்டுவிடு வோரும், (37) மகாபயங்கரமுள்ளவளுமான அஜாமுகியென்பவள் மகாவியபசாரியான துர்முகியென்ற வோர்தோழியோடுகூட ஸ்ரீகாழிப்பட்டணத்திய மரங்களின் தோப்புக்குவந்து (38) அங்கிருந்த விந்திரனுக்குப் பிராணநாயகியும், மிகச்சௌந்தரிய முடையவளுமான விந்திராணியைக்கண்டதில் மிகுந்த வாநந்தங்கொண் டப்போதவள் வசனமுரைத்ததாவது:—(39) "வாராய்பெண்ணே! இந்திராணி! நீ யாது நிமித்த மிங்குநிற்கின்றாய்? யானுனதுநிமித்தமே யிங்குவரலாகினேன்; ஸகலஜகங்களையு மோர்குடையின்கீழாக வாளுகின்ற வெனதண்ணன் (40) உந்தன்மீது மிகுந்தகாதலைக்கொண் டிருக்கின்றான்; நீ யவனதந்தப்புரத்துக்கு வந்திடி லவ்வசுரேசன் சீக்கிரத்தி (41) லுந்தனையே யவனதெல்லாமங்கையர்களிலும் முக்கியநாயகியாக வைத்துக்கொண் டுந்தனோடே கேளீவிலாஸம் செய்துகொண்டிருப்பான். இந்திரன்முதலிய ஸகலதேவர்களும் கேவலம் பலவீனர்களாகி யவனுக்கூழியக்கார ராகிவிட்டார்கள்: (42) ஆகையால் நீயிப்போதே யிவ்விடத்தைவிட்டுச் சீக்கிரமாகப் புறப்படல்வேண்டும். இல்லாவிடில் கேளாய்! மெச்சத்தக்க பெண்ணரசே! யானுந்தனைப் பலவந்தமாகப் பிடித்திழுத்துப் போவேன்" எனவுரைத் தருகில்வந்த அவ்வஸுரியைக்கண் டப்போதிந்திராணி யுரைத்ததாவது:—"கேளாய்! அசுரீ! பூர்வத்தில் தேவர்கள் மிகுந்த ஐசுவரியத்தோடு செழித்திருந்தார்கள் (44) அப்போ தசுரர்களோ கேவலம் பலவீனர்களா யிருந்தார்கள். அவரவர்கள் கருமத்துக்குத்தக்கபடி தரித்திரனானாலும், செல்வனானாலு மவளவள் பதியே யவளவளுக்குக்கதி. (45) என்றும் தவராதநீதியை மீறுவதற்குத் தகாதல்லவா? என்னைக்காப்பவரான கணங்களுக்கெல்லாம் தலைவராகிய வீசுவரனை யின்னாரென்றறியாமல் "யான் பலவந்தமாகப் பிடித்திழுத்துப்போவே" னென்றுந்தனாற் சொல்லப்பட்டதல்லவோ! (46½) "அடி! துராத்துமாவாகிய மூடமே! உனக்கென்னதெரியும் சீ! நீயிப்போதுபோ! போ" என்றனள். (47) பிறகு கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அவ்வஸுரியானவளிவ்வாறுரைத்த விந்திராணியை, மிகக்கோபத்துடன் "அடி! உந்தனை விடுவிப்போனை இவனதுதிறமையைக் காண்கின்றே" னென்றுரைத்துத் துரிதமாகப்பிடித்துக் கரகரவென்றிழுத்தனள். (48) உடனே யிந்திராணியும் மிசப்பயங்கொண்டு தடிபோன்ற திருமேனி நடுக்கமுற்றுக் கைகளையுதறிக்கொண்டு 'ஹா ஹா' வென்றுறக்கக் கதறினள். (49) அப்போது மகாகாளராலவ நுறத்தகூக் குறலைச்செவியுற்று 'இதென்ன' வென்றாச்சரியப்பட்டு மரத்தடியினின் றெழு

ந்து இந்திராணியைப் பார்த்தவுடன் (50) அப்போது மிகுந்த கோப
ங்கொண்டவராகிச் சடிதியிலவ்வசுரியை “ அடி ! மூடமே ! இந்தி
ராணியை விட்டுவிடு; இல்லையாகி லுனதுகையைக் கத்தியால்துண்டி
த்து விழச்செய்வோ” மென்றுரைத்துக்கொண்டு அக்கணாதிபர் விர
ட்டினர். (51½) அப்போது அஜாமுகியும் மிகக்கோபமுற்று “நீயாவன
டா” வென, (52) மகாகாளர் “ அடி ! பேதாய் ! வெள்யானையைவா
கனமாகக்கொண்டவரும், சந்திரனைச் சிரோரத்தினமாகக்கொண்ட
ஸ்ரீ ஸர்வேசுவரனுக்கு, புருடனென்ற சக்தியான ஸ்ரீ மகாவிஷ்ணு
வினிடத்துச் சனித்தவரும், இவ்வுலகை யாள்வோருமான யாதொரு
ஸ்ரீ சாஸ்தாவுண்டோ ! (53) அவரது சேவகன்யான்; இப்போதுந்த
னால் யாதுசெய்யத்தகும்: சீ ! பூஜிக்கப்படலுற்ற அவ்வம்மையை வி
ட்டுவிடு” என்று கூறியதைக்கேட்டவுடனப்போ தப்பாதகியானவள்
சூலத்தைதொடுத்து வேகமா (54) யவர்மீதெறிய, மகாகாளருமதை
வேகமாய் நூறுதுணுக்குகளாக முறித்தெறிந்தனர். பின்பவளும்கையி
ற்பற்றிய யிந்திராணியைத் துரிதமாகத் துர்முகியின்கைதனிற்பிடிப்பி
த்து அவளதுகையிலிருந்த மற்றோர் சூலத்தைக்கொண்டு (55½) அப்
போதக்கொடூரியானவள் கொடூரமான வச்சூலத்தைக் கூடியவலிமை
யோடவர்மீதெறிந்தனள். (56) உடனேயச்சூலமும் முன்போலவரா
ல் நூறுதுணுக்குகளாக முறியுண்டு பூமியில்விழுந்தது; பிறகவளோர்
மலையைப்பிடுங்கி வேகமா (57) யவர்மீதெறிய வப்போதம்மகாகாள
ரதையுமவ்வாறே யுடைத்துவிட்டனர். அப்போதவரது சத்தியான
து மலையையுடைத்தவேகத்தினால் முறியுண்டது. (58) அக்கத்திமுறி
பட்டதை யவள்கண்டவுடன் கேட்டீர்களோ ! சௌனகாதிமுனிவர்க
ளே ! “ அடா ! ஆயுதமற்ற வுந்தனா லினியாதுசெய்யத்தகும் ?” என்
றுசொல்லிவிட்டு அவ்விந்திராணியை மறுபடியுமல்லவோ பிடித்திழு
த்தனள். (59) அப்போதுடனே பெருந்திருமேனியுடைய வீரனானவம்
மஹாகாளர் மிகக்கோபாவேசங்கொண்டவராகி யருகிற்சென் றவள
துகையைப்பற்றிக்கொண்டு (60) தம் பின்தட்டினிற்கட்டி விளங்கி
யிருந்த கூர்மைபொருந்திய சிறிய கைக்கத்தியினால், மிகப்பயங்கரங்
கொண்டவராகி யவளதுகடினமான கையைச்சேதித்து, (61) துர்
முகியது கையையும்வெட்டிப் பூமியில்விழுத்திவிட்டுச் சீக்கிரத்திலிந்
திராணியை விடுவித்துக்கொண்டு திரும்பி யவ்விருக்ஷத்தோப்புக்கு
வந்திருந்தனர். (62) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பிறகவ்வஜா
முகியோவென்றால் தலைமயிரவிழ்ந் தலங்கோலமாகச் சிதறலுற்றவளா
கவும், தரைதனில்விழுந்து புரண்டதனா லங்கமெங்கும் புழுதிபற்றிய
வளாகவும், தனதுகை யிரண்டுதுண்டமாக்கப்பட்டதைக்கண்டு மிகவு
ம் மனவியாகுலமுற்றவளாகிக் கதறிப்புலம்பினள்:—(63) “ ஆ ! இப்
போது கடலை யுள்ளங்கையிலெடுத்துக் குடித்துவிடுகின்றேன்; ஆகா
யம், அதிலுள்ள சூரியன், சந்திரன், மேகங்கள், நக்ஷத்திரங்கள், பூமி,
அவற்றுள்ள நீர் முதலியவை யிவையெல்லாவற்றையு மவ்வாறேசெய்
துவிடுகின்றேன்”? (64) என்றிவ்வாறுரைத்துக்கொண்டு, கண்டமான
கையின் மற்றோர்துண்டத்தைப் பார்த்துப்பார்த்துப் பூமியிலடிக்கடி

யோக்கியமறைந்துகொண்டுப் புலம்பலான் அவ்வஜாமுகியைநோக்கித் துர்முகியுரைக்கின்றாள்:—(65.)

பதின்மூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் 14-வது அத்தியாயத்தின்ர்த்தம்.

துர்முகி யுரைக்கின்றதாவது:—"வாராய்! சகியே! யாதுநிமித்தம் நீ அழுகின்றாய்? இவ்விதமாகத்துக்கம்பாராட்டுவதை விட்டுவிடு. பூர்வத்தில் தக்ஷப்பிரஜாபதியினுடைய யாககாலத்தில் தேவஸ்திரீகளெல்லாம் ஸ்ரீ வீரபத்திரஸ்வாமியால் மூக்கறுபட்டவர்களும், முலைகளிழந்தவர்களும், காதுகள், கைகள் வெட்டுண்டவர்களுமானார்கள். (1½) எந்தனுக்கு மிவ்விதத் துக்கம் நேரிட்டிருக்கிறதல்லவா? ஆகையால் கேளாய்! எந்தன்சகியே! இவ்விதமாகத் துக்கமடையாதே!(2) நீயுரைத்தபடி கடல்முதலியவற்றை யுள்ளங்கையிற்கொண்டு குடித்துவிடுவதுமுதலான காரியங்களை நடத்திவிட்டால் உலகுமுழுமையும் நமது சூரனதாகையா லதனால்வரும் நஷ்டமெல்லா மவனுக்குத்தான்" (3) என, இவ்விதமாகத் துர்முகியால் சமாதானப்படுத்தப்பட்டதன்பேரில் அஜாமுகியானவ ளுடனே யழுவதைவிட்டு மஹாகாளனைப்பார்த்து "அடா! சேவகா! உனதெஜமானனாகிய இந்திரனுக்கு முந்தனுக்கும் (4)விலங்கு மாட்டும்படி யான் செய்யாவிட்டால்ப்போது இதோ! இந்தமூலைக ளென்னுடையதல்ல" என, (5) வுரைத்துவிட்டுத் துர்முகியோடுகூட அவ்வசுரியானவள் துரிதமாகப் புறப்பட்டுச் சென்றனள்.

கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! இவ்விருத்தாந்தங்களையெல்லாம் ஸ்ரீ நாரதமுனிவ ரப்போதுகைலகிரிக்குச்சென் றிந்திரனிடத்துரைக்க (6½) அதுகேட் டிந்திரனும் மிக வியாகுலமுற்றவனாகி (7) ஸ்ரீ நந்திகேசுவரனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு துரிதத்தி லிந்திராணியிடஞ் சேர்ந்து, பிறகவளாற் சகலசங்கதிகளையு மறிந்துகொண்டதன்பேரில் தனது கருமத்தின்கூறை மனதிலெண்ணிக்கொண்டு (8) மஹாகாளனை நமஸ்காரம்பண்ணித் துதித்துப் பிறகுடனே யவனைவிட்டுப் புறப்பட்டு இந்திராணியோடுகூட மேருகிரிக்குச்சென்று (9) அக்கிரியின் குகைக்குள்ளிருந்து தவஞ்செய்து வந்தனன்.

அஜாமுகியானவ ளவ்விடம்விட்டுப் புறப்பட்டு அடிக்கடி புலம்பிக்கொண்டே சூரன் செங்கோல்நடத்துகின்ற வீரமாகேந்திர பட்டணமடைந்தனள். (10½) அப்போது வீதிகளிலிருந்த அசுர ஸ்திரீகளெல்லாம் மிகவும் துக்கத்தோடவளைப் பார்த்தார்கள். (11) வாலிப

ஜனங்களெல்லாம் கூட்டம் கூட்டமாக மிகுந்த வியாகுலத்தோ டவ
ள்பக்கங்களில் நின்றார்கள். ஆட்டுக்கடாசண்டை, சாவற்சண்டை, ம
ல்லர்சண்டை, யானைப்பந்தயம், குதிரைப்பந்தயம்,(12) இவைகளில்மு
யன்றிருந்த பலபலவசுரர்க ளந்தந்தச்சண்டைகளைநிறுத்திவிட்டு"ஆ!
இதென்னவிந்தை! இவளுக்கு யாவரா லிவ்விதஞ் செய்யப்பட்டது?"
என்றாச்சரியமடைந்தார்கள். (13) சொக்கட்டான்முதலிய சூதாட்ட
ங்களில் முயன்றிருந்த சிலர்களும், தேரேறுவதில் தொளையாயிருந்த
வர்களும், இவைமுதலிய வின்னும் பலபலவிஷயங்களில் முயன்றிரு
ந்தவர்களு மவரவர் வேலையைவிட்டு (14) "ஆ! ஆ! இது ருத்திர
னாற் செய்யப்பட்டிருக்குமா? அல்லது இது நடத்தினது வீரபத்திர
னா? பைரவனா, அல்லது சாஸ்தாவா, துர்க்கையா?" வென்று பலபல
விதமாய்ச் சிந்தித்தார்கள் (15) கை முறிகொண்ட அவ்வஸுரியைக்
கண்டு சிலர் "இவ்விருவரு மொருவருக்கொருவ ரிவ்வாறு செய்து
கொண்டிருப்பார்களோ" வென்று மனேகவிதமாய் நினைத்தார்கள்.
(16) அப்போ தஜாமுகியும் தனது தாய், தகப்பன், ஸஹோதரர்கள்,
பிள்ளைகள், மறுமக்க ளிவர்களைநினைத்து நினைத்துக்கொண்டு, ஆயிர
ம்யோஜனை விஸ்தீர்ணமுள்ளதும், ஆயிரம்கோடிக் கம்பங்களையுடை
யதும், தன்னுடைய வனேகவண்டங்களிலுமுள்ள மிகச்சிறந்தவிரத்தி
னங்களாகிய பலபலபண்டங்களா லுண்டுபண்ணப்பட்டதும், அநேகவி
தமாய் மேலும், கீழும், பக்கவட்டங்களிலும் விசித்திரமான கண்ணா
டிகள், வஸ்திரங்கள், சாமரங்கள் இவைகளா லலங்கரிக்கப்பட்டதுமா
ன சூரனுடைய ஆஸ்தானமண்டபத்துக்குச் சமீபத்திற் சென்றனள்.
(19) அங்கு அயலரசர்கள், இருபக்கங்களிலும் வீற்றிருந்த மகாபயங்
கரர்களான தம்பிகள், (20) பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், மகாவீர
ர்களான ஸ்தானாதிபதிகள், மந்திரிகள், தூதக்கூட்டங்கள் இவர்களா
லும், சிலர் சாமரம் (21) சிலர் விசிறி, காளாஞ்சி, வெற்றிலைப்பெட்டி,
குடை, துவஜம் இவைகளைக் கைகளிற் பற்றியவர்களாலும் (22) பு
டைசூழப்பட்டுச் சிங்காதனத்தில் வீற்றிருப்பவனும், ஊர்வசி, மேன
கை, இரம்பைமுதலிய அப்ஸரஸ்திரீகளால் சுற்றிலும் நாட்டியமாடி
ச் சேவிக்கப்பெற்றவனும், பயங்கரமான வுருவத்தைக்கொண்டவனு
ம், (23) நீராஜநங்களைக் (மங்களாரத்திகை) கைப்பற்றிய வனேக
ம் தேவஸ்திரீகள், தினசுத்திகளை யோதிவருகின்ற பிரம்மனு மவர
துமக்களும், (24) மந்திரவாதிகள், ஜோதிடர்கள், பெயர்போனக
விராயர்கள், ஸாமுத்திரிக நூற்புலவர்கள், வைத்தியர்கள் (25) இவர்
கள்முதலிய வின்னும் பலபல சாஸ்திரப்புலவர்கள் இவர்களாற் சுற்றி
லும் சூழப்பெற்றவனும், பற்பல விரத்தினங்களால் விசித்திரமாயமை
க்கப்பட்ட ஆபரணங்கள், (26) ஹாரம், கங்கணம், தோள்வளைகள்,
கிரீடம், மோதிரங்கள், ஆயிரத் தெட்டுமாற்றுருக்குத் தங்கத்தினால்
விநோதமாயமைக்கப்பட்ட அரைஞாண் இவைமுதலிய பற்பலவாபர
ணங்களைப் பூண்டவனும், மிக நேர்த்தியான வஸ்திரங்களை யுடுத்தி
யவனும், மிக மேன்மைகொண்டவனும், (27½) கானம்பண்ணுகின்ற
கின்னரச்சிரேஷ்டர்கள், ஸித்தர்கள், வித்தியாதரர்கள் இவர் முதலிய

வர்களாலும்(28) கட்டியக்காரர்கள், அரிக்காரர்கள் இவர்களாலும் பற்பல குணதிசயங்களையெடுத்துத் துதிக்கப்பெற்றவனுமான ஸாக்ஷாத் மற்றோரு ருத்திரன்போல் ஸுகமாக வீற்றிருக்கின்ற புருடச்சிங்கமான வச்சூரபத்துமனை யவ்வஜாமுகி கண்டு மெய்மறந்தவளாகிப் பூமியில் விழுந்தனள்:—(29½) "ஓ! சூரா! உந்தன்வலிமை யெங்குபோயிற்று? போர் முன்னர் ஹரியானவ னுந்தனாற் சயிக்கப்பட்டனனல்லவோ! (30) சூரியனுடைய ரணத்தின்முன்னர் கோட்டான்போலிந்திரனுனது பராக்கிரமயாகிய வொளியைக் காண்பதற்குத் திறமையற்றோனாகிச் சீக்கிரத்தில் குகைக்குள் புகுந்துவிட்டனனல்லவோ! (31) ஓ! அண்ணா! அப்பேர்கொத்த விந்திரனுடைய சேவகனை மேவார்கொடியோனு லெந்தனுக்கிவ்வாறு செய்யப்பட்டது. ஓ! சிங்கமுகா! ஆயிரம் சிரசுகளையு மிரண்டாயிரம் கைகளையுமுடைய நீ யிந்திரனோடு கூடிய ஐராவதத்தை வாரிச்சுருட்டிச் சுழற்றி யாகாயத்திலெறிந்தாயல்லவா! அப்பேர்க்கொத்த வுந்தன்வலிமை யிப்போதெங்குபோயிற்று? (32-33) யாதொரு தாரகனுலோ! முந்தியுத்தத்தில் விஷ்ணுவால் பிரயோகிக்கப்பட்ட சுதர்சனமென்ற சக்கிரமானது மார்பின்மீ தோர்விதப்பதக்கம்போ லணியப்படலாயிற்று! அதேவிதயாக விளமயிலே சூரியனுக்குப் பகைஞனான யாதொரு (34½) பானுகோபனால் விளையாட்டுத்தன்மையாகவே சூரியன் தொட்டில்மீது கட்டப்பட்டனன். (35) இவர்களாலும், இதேவிதமான அக்கினிமுகன், ஹிரணியன், வஜ்ஜிரபாகு, மகாபலிஷ்டர்களான துவிசிரஸு, திரிசிரஸு, தசசிரஸு முதலியவர்களுமான வுங்களாலெல்லாம் கிரமமாகவே யிப்போதெந்தனுடைய விப்பேர்கொத்த நிலையானது எவ்வாறுதான் பார்க்கப்படுகின்றதோ! (36½) பூர்வத்தில் மகாவீரர்களான வெந்தன்மைந்தர்க ளிந்திரனால்தான் கொல்லப்பட்டார்கள். (37) மகாபலிஷ்டர்களான நீங்களெல்லாமதையும் கவனியாமலிருந்து விட்டீர்கள். ஐயோ! எந்தனப்பனே! என்னம்மா ஐயையோ! மகாபலிஷ்டர்களான வேந்தன்மக்களா! எங்கு சென்றுவிட்டீர்கள்!" (38) என்றிவ்வாறெல்லாம் பலவிதமாகப்புலம்பிக்கொண் டுரைத்துப் பூமியிற் சுற்றிலும் புறண்டழுகின்ற அவ்வஜாமுகியைச் சூரர்களுக்கெல்லாம் சூரனான சூரபத்துமன் பார்த்துக் கேளீர்! சௌனகாதிமுனிவர்களே துடிக்கலுற்றவுதட்டினாற் கோபாக்கினியை மிகுதியாகக் கக்கலுற்றவனாகி "ஆ! குழந்தாய்! நீ யழுதலைநிறுத்தி யாவராலிக்கொடுமை யளிக்கப்பட்டதென்பதைச் சடிதியிலுரைப்பாய். (40) அப்பகைஞனைப் புத்திரமித்திர பந்துவர்க்கங்களுடனும் சமுகரித்து விடுகின்றேன்" மென்றுரைத்தனன். இவ்வாறுசொலலிய சூரபத்துமனைநோக்கி யஜாமுகி மிகத்துக்கமுற்றுக் கூறுகின்றாள். (41) "ஓ! அண்ணா! ஸ்ரீகாழிநகரத்திய மரத்தோட்டத்தின் கண்ணிருந்த விந்திராணியைக்கண்டு 'அடி சுந்தரீ! சூரனிடத்துக்குவா' வென்றுரைத்தமாத்திரத்தி லப்போதவளைப் பாதுகாத்துக்கொண்டிருந்தவன் சடிதியிற் கைமீது கத்தியெடுத்து எந்தனை யிவ்வாறுகச்செய்துவிட்டான்" என்று மிகவழுதுகொண்டே யுரைத்தஅவளது வசனத்தைக்கேட்டுச் சூரன்மிகக்கோ

யங்கொண்டவனாகி, சூரியன்முதலிய நவக்கிரஹதேவதைகள், (44) ஆறுருத்திரர்கள், இன்னும் மற்றுமுள்ள தேவர்கள் இவர்களையெல்லாமழைத்து அவர்களுக்குக் கட்டையான வில குதிரைகளைமாட்டி யவர்களைக்கொடுமையாகத் திட்டி (45) ஓ! கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அவ்வல்லோர்களையும் சிறைச்சாலையிலடைப்பித்தான. மேலுமப்போது பூலோகத்தில் காவலாளிகளாயிருந்த அசுரர்களையெல்லாம் சிரச்சேதம் செய்வித்தனன். (46) பிறகு சூரபத்மன் பிரம்மனைக் கொண்டவ்வஜாமுகிக்குக் கையைச் சரியாக்குவித்தனன். அப்போது பிரம்மன் ஓ! சூரபத்மா! சூரியன்முதலிய நவக்கிரஹதேவதைகளெல்லா முலகரக்ஷணார்த்தமாக வேற்பட்டிருப்பதால் (47) லவர்களை விடுவிக்கவேண்டியது நல்லதா!' வென்று மிகவுமன்புள்ள பலவார்த்தைகளாற்சொல்லிச் சீக்கிரத்திலவர்களை விடுவித்தனர். (48) அதன்பிறகு இந்திரன்மீது மிகுந்த கோபம்கொண்டிருந்த சூரபத்மனை நோக்கிப் பானுகோபன் வசனமுரைக்கின்றான்.

பதினான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஆசுரகாண்டம் 15-வது அத்தியாயத்தினர்த்தம்.

பானுகோபன் சூரபத்மனை நோக்கி யுரைக்கின்றான்:—“ ஓ! அண்ணா! இந்திரனென்ற அவ்வற்பனைப்பற்றித் தேவரீர் யாதுசெய்யவேண்டும்? யான்போயவனெங்கிருந்தாலும் பிடித்துக்கட்டி (1)யவனை யிந்திராணியோடுகூடத் தேவர்முன்பாக வோர்கொடியிற் கொண்டுவருகிறேன்! எந்தனுக் கிந்திரனகப்படாவிட்டா லவன தமராவதிப்பட்டணத்தை (2) க்கொளுத்திவிட்டு அங்குள்ள தேவர்களையெல்லாம் கட்டித் தேவரீர்முன்னர் கொணடுவருகின்றேன் ” எனவுரைத்துக் கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பானுகோபன் தந்தையிடத் துத்திரவு பெற்றுப் புறப்பட்டனன். (3) பிறகுச் சூரபத்துமனு மங்கிருந்த பிரம்ம விஷ்ணுக்கள்முதலிய தேவர்களை யவரவர்களிடத்துக்குச் செல்லும்படி யநிக்கைவிட்டுத் தானுமந்தப்புரத்துக்குச் சென்றனன். (4) அப்போது பானுகோபனோடுகூட வாயிரம் வாகினிசேனைகளும், மவைகளின் தேர்வரிசைகளும் (5) மிக மதோன்மத்தங்களான யானை குதிரைகள், அனேககோடி குடைகள், பலபலதுவஜங்கள் இவைகளும் பிரயாணப்பட்டன. (6) மிகத் தேஜோவானான பானுகோபனு மிவ்விதமான தளங்களோடு புறப்பட்டு இருபதினாயிரம் குதிரைகள்கட்டப்பெற்ற மிகவுத்தமமான விரதத்தின்மீது தான் துரிதத்தி (7) லேறிக்கொண்டு துர்முகியென்பவனுடன் ஸ்ரீகாழிக்கு வந்து அவளாற்காட்டப்பட்ட வங்குள்ள மரத்தோட்டத்தையுற்று நோக்கி (8) யதி லங்கிந்திரன் காணப்படாத்தினு லம்மரத்தோட்டத்

தை வெட்டிச் சின்னுபின்ன மாக்கினன். கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பிறகவ னங்குவிட்டுப் புறப்பட்டுச் சேனைகளோடுகூடப் பூமியெங்கும் தேடித்திரிந்ததி (9) லங்கிந்திரன் காணப்படாத்தினு லதன்மேல் சுவர்க்கலோகஞ்சென்று அங்குள்ள கற்பகவிருக்ஷங்களை யெல்லாம் வெட்டி யலங்கோலப்படுத்தி யிந்திரனுடைய பட்டணத்தை முற்றுகைபோட்டான். (10) அப்போதங்கிருந்த ஜயந்தனு மதுகேட்டு மிகவு மாலோசித்ததின்மே லவனோடு போர்புரியத்திர்மானித்து அப்பிரமுவென்றதின்கணவனும் மிகச்சிரேஷ்டமுமான வைராவதமென்ற வெள்ளயானைமீ தேறிக்கொண்டு பற்பலவாயுதங்களையும் தரித்தவனுகிச் சாவற்றதேவர்களுடன் பட்டணத்துக்குவெளியில் வந்தனன். (11-12) மிகுந்த பல கர்வங்கொண்ட பானுகோபன் சேனையானது யுத்தத்துக்குச் சன்னத்தமாய்வந்ததேவசேனையைக்கண் டதனோடெதிர்த்தது. (13) அப்போ தவ்விருசேனைகளுக்கும் மிகுந்தவு யுத்தமுண்டாயிற்று. ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! தேவசேனைக ளுடனே கிலேசங்கொண் டோட்டம்பிடித்தன. (14) அப்போ தசுரர்களும் ஓட்டங்கொண்ட தேவசேனைகளைப் பிடித்துக்கட்டிச்சீசடிதியிற் பானுகோபனன்டைக்குக் கொண்டுவந்து அவனுத்திரவின்பேரி லவர்களை யிறுக்கிக்கட்டி யுருட்டினூர்கள். (15) அதுகண்டு வெகு சீர்த்திவந்தனை ஜயந்தனு மப்போது மிகவுமாலோசித்து ஏராளமான பாணங்களை வருஷித்து அசுரசேனைகளில் நூறுவாகினி சேனையைக் கொன்றனன். ($16\frac{1}{2}$) ஓ! கோ! அப்போதைராவதமும் பலவசுரர்களைக் கொன்றது. (17) பிறகு மிகப்பலவானன நீலகேசனென்ற கொடியவசுரன் ஜயநதன்மீது மிகுந்தசஸ்திரங்களைப் பிரயோகித்தனன். (18) பிறகு ஜயந்தனு மவன்மீதனேக சஸ்திரங்களை வருஷித்து ஓர்க்ஷணத்துக்குள் ளவனது மிகுந்த கெட்டியான கவசத்தைச் சேதித்தனன். (19) அப்போது நீலகேசனும் மிகவாக்கிரகம் கொண்டு பல சஸ்திரங்களை வருஷித்து ஜயந்தனது வில்லின் நாணைத் துண்டித்தனன். (20) அதன்மேல் ஜயந்தனும் மாயாமந்திரத்தை ஜபம்பண்ணிப் பற்பலவுருவங்களையெடுத் தவன்மீது மிகுந்தசரங்களைச் சொரிந்தனன். (21) அப்போது நீலகேசன் கொஞ்சம் பலக்குறைவடைய வுடனே ஸோமாஸுரன், வருணன், பத்துமன், (22) மிகப்பலவானன மாயாபலி, மகாசுரனை வாமன், மாகதன், தண்டகன், மாருதபலி, (23) மிகுந்த பல்பராக்கிரமங்களைக்கொண்ட ஸுரகேஸரி ஆகிய இவரெல்லோர்களும் நீலகேசன் வலிமை குறைந்ததைக்கண்டு சடிதியில் (24) மிகுந்த கொடிய வுயுத்தத்தை நடத்துகையிலச்சயந்தனது மாயையைக்கண்டு மயக்கமுற்றவர்களாகி மிக பலிஷ்டர்களான அவ்வெல்லோர்களும் கொஞ்சம் மனவூக்கங்குறைந்து நின்றுவிட, (25) அதுகண்டு மகாபலிஷ்டனை பானுகோபனும் தானே தனதுபராக்கிரமங்களைச் சொல்லிக்கொண்டு ஜயந்தன்முன்னர் வந்து துரிதத்தி லனேக சஸ்திரங்களைப் பிரயோகித்தனன். (26) பிறகு ஜயந்தனும் தனதுபெயரின் புகழை யுணர்த்துக்கொண்டு பலவஸ்திரங்களைப் பிரயோகித்து மறுபடியும் மிகுந்த பெயர்போன

வாயிர மஸ்திரங்களைத் துரிதமாக(27) வருஷித்துப் பானுகோபனது கெட்டியான வில்லைமுறித்தனன். பின்பு பானுகோபனும் மிகக்கோபங்கொண்டவனாகி மற்றோர்வில்லை யெடுத்து (28) அப்போது ஜயந்தனால் விடப்பட்ட அஸ்திரங்களைத் துண்டித்து, கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பின்னு மனேகமாயிர மஸ்திரங்களை யவன்மீதுப் பிரயோகித்தனன். (29) அப்போது ஜயந்தனு மாயிரக்கணக்கான அஸ்திரங்களைச் சந்தானித்து பானுகோபனது ரதத்தையுமுடைத்து யதின் மிகுதியான குதிரைகளையும் கொன்றுவிட்டனன். (30) பிறகு பானுகோபனேவென்றால் துரிதத்தில் மற்றோர் மகாரதத்திலேறிக்கொண்டவன்மீது வேறனேகபாணங்களை மிகுதியாக வருஷித்து (31) அவன தம்பராத்தூணியைச் சீக்கிரமாகச் சேதித்து ஐராவதமென்ற யானையையு மவ்வாறே தீக்ஷணிய முள்ள பலவஸ்திரங்களா லிரத்தம் பெருக வடித்தான். (32) அப்போது ஜயந்தன் மிகவும் மூர்ச்சாக்கிராந்தனாகி விழுந்தான். உடனே மகா வலிமைகொண்ட ஐராவதமானது பானுகோபன்து ரதத்தைக் (33) கொம்புகளால் குறுக்காக வேகமா யிடித்துடைத்துச் சாரதியையும் கொன்று, பானுகோபனையும் கொம்புகளால் குண்டுக்கல்போன்ற கெட்டியான மார்பின்மீது முட்ட (34½) அப்போ தம்முட்டின் வலிமையால் கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அதினிரண்டுகொம்புகளும் முறிந்துபோயின. (35) அப்போது பானுகோபன் கொம்பொடிந்த வக்கஜராஜனைக் கன்னத்தில் நோக வடிக்க அவ்வடிபட்டமாத்திரத்திலவ்வியானை மூர்ச்சையடைந்தது. (36) பிறகஸுரரெல்லோர்களும் மிகுந்த வட்டகாஸம்பண்ணினார்கள். (36½) அப்போது பானுகோப னசுரர்களுடன் பட்டணத்துக்குட் புகுந்து பின்னும் தீயிட்டு மிகுதியிருந்த தேவர்கள், தேவஸ்திரீகள்,மூர்ச்சையடைந்த ஜயந்தன் இவர்களையெல்லாம்கட்டி, அவர்களையும் முந்திக்கட்டிவைத்ததேவர்களையும் கைக்கொண்டுதுரிதமாகச்சூரனிடஞ்சென்று (38½)சகலவிருத்தாந்தங்களையு மாதியோடந்தமாகச்சரிவர வுரைத்தனன். (39) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அதன்மேலச்சூரபத்துமன் மானமிழந்ததேவர்களை யப்போது கண்ணுற்றதில் வெகுகோபமுற்றவனாகி யஜாமுகிக்குமுன்பாக அவர்களை யடித்து (40) மேலு மவ்வசுர வரசனவர்களது கைகால்முதலிய உறுப்புகளைக் கண்டனம்செய்தனன். உடனே யவர்களுக் கவயவங்களுண்டாகிவிட்டதைக் கண்டு அதவர்க ளமிருதபானம் செய்திருப்பதாலென்று கேட்டறிந்து (41) ஓ! கோ கோ! அப்போது ஜயந்தன்முதலிய தேவர்களுக்கு விலங்கிட்டவர்களை யவ்வசுரன் சடிதியிற் சிறைமீ தடைப்பித்தனன். (42) மேலு மச்சூரன் தேவஸ்திரீகளையெல்லா மசுரர்களுக்குப் பணிவிடைசெய்யும்படி திட்டமிட்டுவிட்டு, அப்போது மைந்தனாகிய பானுகோபனைநோக்கி வசனமுரைத்ததாவது:- (43) "அடா! பானுகோபா! ஜயந்தன்முதலிய தேவர்களை யிங்கிப்போது நீ கட்டிக்கொண்டுவந்ததி லுந்தனுக்குப் பிரயாசையாது? (44) அடா! புத்திரா! பூர்வத்தில் நீ குழந்தையாக விருக்கையிற் சிறியதொட்டிலிற் படுத்திருக்கும்போ துந்தன்மீது பலகணிவாயின் வழி

யாகக் கிரணங்களால் தொட்ட சூரியனை (45) யப்போ துடனே நீ பிடித்துக்கொண்டுவந் துனது தொட்டிலின்காலி லிறுக்கிக்கட்டிவிட்ட, அப்போது பிரம்மனெம்மிடத்தில் சூரியனைவிடுவிக்கும்படி கேட்டுக்கொண்டதற்கு (46) யா மவ்வாறுரைத்த பிரம்மனைநோக்கி 'ஓ! பிரம்மாவே! அவனைக்கட்டிவைத்த பானுகோபனே யவனை விடுதல் வேண்டும்' என, (47) பிறகு பிரம்ம னுந்தனிடம்வந் துனக்குப் பிரம்மாஸ்திரம் முதலியவற்றை வெகுமதியாகவீந்துந்தனைப் பிரார்த்திக்கையிற் பிறகு நீ யவனை யவிழ்த்துவிட்டாயல்லவா! (48) ஆ! எம் கண்மணியே! உந்தன் பலமும் பராக்கிரமமு மவ்வாறிருக்க, இப்பேர்க்கொத்த விச்சயந்த னுந்தனுக் கெம்மாத்திரம்" என்றிவ்வாறான பலவார்த்தைகளைச் சூரபத்துமன் தன்மைந்தனுகிய பானுகோபனுக் குரைத்து (49) அவனை யவன் விடுதிக்கனுப்பிவிட்டுத் தானும் தனதந்தப்புரத்துக் குடனே சென்றுவிட்டனன்.

கேளீர்! சௌனகாதிப் பிராம்மணோத்தமர்களே! பின் ஐராவதமென்ற கஜராஜன் மூர்ச்சைதெளிந் தெழுந்து (50) மகா பரிசுத்தமும் மங்களகரமுள்ளதுமான திருவெண்காடென்ற பட்டணத்துக்குச்சென் றங்கு ஸ்ரீ மகாதேவனைப் பூஜித்து மிக நேர்த்தியான சொம்புகளையடைந்து (51) பிறகப்போ திந்திரனிருக்கும் மேருகிரிக்குச்சென்றுவிட்டது. கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! இந்திரன்முதலிய தேவர்க ளெங்ஙனம் சூரபத்துமனால் தீங்களிக்கப்பட்டார்களோ! (52) இதேவிதமாகவே ஸ்ரீ நாராயணன், பிரம்மன், மகாத்துமர்களாகிய ருஷிகள் இவரெல்லோர்களுங்கூட மகா பாதகர்களான சூரபத்துமன், சிங்கமுகன், தாரகன், இவர்களது மைந்தர்கள் இவர்களாலெல்லா மிராப்பகலா யோய்வில்லாமல் வாதையுண்டார்கள். (53-54) ஓ! சௌனகாதிமுனிவர்களே! இவ்விதமாக, தேவர்களால் பூஜிக்கலுற்ற பிரகஸ்பதிதேவனால் ஸகல துர்த்தகளையும் தொலைப்பிக்கலுற்ற ஸ்ரீ ஷண்முக பிரபுவுக்கு அஸுரர்களது வரலாறுகள் ஸவிஸ்தாரமாகவுரைக்கப்பட்டது. அதே வரலாறுகளை, பாவலேசமற்ற வுங்களுக்கிப்போது யா னாதியோடந்தமாகச் சரிவர முறையே யெடுத்துரைத்தேன்.





உ

சரவணபவன் துணை

# வீரமாகேந்திரகாண்டம்.

## முதலாவது அத்தியாயத்தி னர்த்தம்.

ஸூதர் கூறுகின்றார்:— கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தேவகுருவா லுரைக்கப்பட்ட வசனங்களைக்கேட்டு பிறகு ஸ்ரீ கந்தபிரான் அவரைக் கருணாகடாக்ஷத்தினால் நோக்கி "நல்லதுட்காரும்" என்று திருவாக்கருளி (1) பிறகச்சேனானியானவர் பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்களை நோக்கி அனுகூலமான பொருளையுடையதும், செவிக்கினிமையானதுமான திருவசனமுரைத்ததாவது:— (2) "ஓ! கேளீர்! பிரம்மா விஷ்ணு முதலிய ஸகல தேவர்களே! சூரனை யிப்போதவன் பந்துவர்க்கங்களோ டதம்பண்ணி யுங்களை யுங்கள் ஸ்தானத்தில் நிச்சயமாக நிலைநிறுத்துகின்றோம். (3) அதுநிமித்தமாக விப்போதவன் பலாபலம், உயர்வு தாழ்வு முதலியவற்றைச் சென்றறிந்துவருவதற்குற்ற, மர்மங்களை நன்கறிந்தவனும், ஸமர்த்தனுமான தூதனாக யாவரை யனுப்புவது தகும்?" (4) என, அதுகேட்டுத் தேவச்சிரேஷ்டரெல்லோர்களும் மகா பல பராக்கிரமசாலியான வீரபாகுவை யதற்குத்தகுதியாக நிச்சயித்து அதன்படி ஸ்ரீ பிரபுவிடத்து மனுமதிபெற்று, (5) பிறகத்தேவரெல்லோர்களும் மகா பலவானான வீரபாகுவை நோக்கி "ஓ! வீரபாகுவே! தேவர்களின் க்ஷேமத்துக்காகத் தேவரீரிப்போது (6) சூரனது நகரஞ்சென்றவனது விருத்தாந்தங்களைக் கிரமப்படி யுண்மையிலறிந்து துரிதமாகத்திரும்பிவரல் வேண்டும்" என்று வேண்டினர்கள். (7) பின்பு தாரகனை தொலைத்த பிரபுவானவர் வீரபாகுவை நோக்கி நேர்த்தியான வசனமுரைத்ததாவது:— "வாராய்! வீரபாகு! நீ சூரனிடம் சென்று (8) 'அடா! சூரா! நீ 'நான்' என்ற வீணாண்மையை யொழித்தவனாகி ஜயந்தன் முதலிய தேவர்களைவிட் டவ்வெல்லோர்களையும் வெகுமானத்தோடுபாதுகாத்துக்கொண்டுந்தனது பட்டணத்தில் (9) வாசம்பண்ணு; இல்லா

விடில் நாமிப்போது வந்து சீக்கிரத்திலுந்தனை யுந்தன் தம்பிகள், மக்கள் மாருடன் கொன்றுவிடுவோ'மென் றிவ்விதமாகக் கந்தனுலாக்கினை செய் யப்பட்டதென்று (10) அவனுக்கறிவித்து அவனது நோக்கத்தைச் சீ க்கிரமறிந்துவா" வென்றிவ்விதமான ஸ்ரீ முருகன் திருவாக்கைக் கேட் டு அவரை வினயத்துடன் வந்தனித்து, (11) தேவர்களுரைத்த வசனங் களையும் மனதில் வாங்கி நல்லதென்றருளிவிட்டு வீரபாகுவானவர் சூர னால் பாலனம் செய்யப்பட்ட வீரமாகேந்திர பட்டணத்துக்குப் புறப்ப ட்டனர். (12) ஓ! கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பிரயாணப்பட் ட மகா பலசாலியான அவ்வீரபாகுவானவர் உடனே மலைகளிற் சிறந் த கந்தமாதனகிரி சென்றதன்மீதேறி நின்று பிரம்மாண்டச் சுவறுவ ரைக்கும் கோரமான வுருவத்தைக்கொண்டவராகவும் மிகப்பயங்கரராக வும் வளர்ந்துகொண்டு, சூரனுடைய மிக நேர்த்தியானவந் நகரத்தைக் கண்ணுற்றனர். (14) பற்பல வசுரர்களால் நிறைந்ததும், பலபலகோ புரங்களாற் சோபிக்கலுற்றதும், அங்கங்கனேக மண்டபங்களால் அலங் கரிக்கப்பட்டதும், (15) சுற்றிலுமுள்ள வெட்டு உபகரங்களால் சிறக் கலுற்றதுமான வந்நகரத்தையும், பிரபஞ்சத்திலுள்ள ஸகல ஸமுத்திர ங்கள், பருவதங்கள், மிகவும் நேர்த்தியான பலபல தேசங்கள் இவைக ளையெல்லாம் (16) நோக்கி யதன்மேல்"அசுரர்களோடுகூடிய விப்போர்க் கொத்த வம்மகாநகரத்தை யிவ்வாகிருதியோடு யாமுள்ளங்கைக்குளட க்கி, (17) செக்கு எள்ளையரைப்பதுபோற் பிசைந்துவிடுவோமென் று லங்குள்ள ஸகல தேவர்களும்கூட மடிந்துவிடுவார்க" (18) ளென்று பலவிதமாக வாலோசித்து வீரபாகுவானவரப்போ தங்கிருந்தபடியே அட்டகாசங்கள் முதலியவற்றைச் செய்கையிலப்போ தம்மலையானது பூமிக்குள் ளாழ்ந்திவிட்டது. (19) இக்கிரிராஜனவ்வா றாழ்ந்திவிட்டதி லதின்குகைகளிலிருந்த தாரகனுடைய வீரர்களான சிலவசுரர்கள் பூமிக் குள்ளாழ்ந்தி மாண்டுவிட்டார்கள். (20) பிறகு வீரபாகுவானவர் ஸமு த்திரத்தைத் தாண்டுவதற்குத் தக்கவுருவத்தைக்கொண்டு தேவசேனைக ளுக்குப் பதியாகிய ஸ்ரீ குகமூர்த்தியை மனதில் தியானித்துக்கொண்டு (21) கடல்நீரை மிக வேகத்தோடு ஓர் நொடியில் தாண்டினர். அவ ர் கடலைத்தாண்டுவதற்காக அடிகளையுயரவெடுத்தவுடன் (22) அம்ம லையானது முன்போலவே யோர்க்ஷணத்துக்குள் உயரவெழுந்து நின்ற து. வீரபாகுவானவ ரட்டகாசத்துட னாகாயமார்க்கமாகச் செல்லும் போதே (23) மலைகளெல்லாமவரது விசைக்காற்றின லிழுக்கப்பட்டு ப் பெருங்காற்றினிற் பஞ்சுபறப்பதுபோல் அவரது வழிநெடுக வந்த ன. (24) அப்போது சமுத்திரமுமுடனே மிகுந்த வலைகளோடு வெ

ந்தளித்து விளங்கிற்று. அவர்செல்லும் விசைக்காற்றினால் வடவாக்கி னியு மணைந்தது. (25) இவ்வாறாகவே வீரபாகுவினுடைய மார்க்கத்தி ல் நேரக்கூடிய மேகம், சூரியன் முதலியவையெல்லா மவரதுவேகத்தினா ல் மிகுதியாகக் காகரவென்று சுற்றனுற்றன. (26) அப்போதவர் யா ளிமுகாசுரனுடைய வாள்கையிலுள்ள விலங்காபுரிக்கு மேலாகச் செல் லுகையில் அவனது சேனாதிபதியான மிகுந்த பலபராக்கிரமசாலியாகிய வீரசிங்கனென்ற வசுரன் (27) வீரபாகு வாகாயமார்க்கமாகச் செல்வ தை நோக்கி, ஐந்நூறுவாகினி சேனைகளுடன் சடிதியில் வெளிப்புறப்ப ட்டு "அடா! நீ துரிதமாக வெங்கு செல்லுகின்றாய்? (28) நீ யாவன்" என, வீரபாகுவும் "அடா! யாம் வீரபாகுவென்று பிரசித்திகொண்டவர்; யாமிச்சூரனிடத்துக்குச் செல்லுகின்றோம்: உந்தனால் யாதுசெய்யத்த கும்?" (29) என்றுரைத்துவிட்டு வேகமாயோடுவதிற் சன்னத்தங்கொ ண்டிருந்த அவ்வீரன்மீதவ்வசுரன் சரமாரிசொரிந்தனன். அவனதுசே வகர்களான வசுரரெல்லோர்களும் பெரும் கூக்குறலிட்டார்கள். (30) அப்போது வீரபாகுவானவர் நூறுவாகினிசங்கியைகொண்ட அவ்வசு ரர்களையெலலாம் கத்தியெடுத்துச் சேதித்தனர். கேளீர்! சௌனகா திமுனிவர்களே! அப்போதிருந்த மற்ற வசுரர்களெல்லாம் ஓட்டம் பிடித்தார்கள். (31) பிறகு வீரசிங்கன் தானே நேரில்வந்து ஓர் சூ லத்தையும் வஜ்ஜிராயுதத்தையும் வீரபாகுவின் திருமேனியைக் குறி ப்பிட்டுவேகமாயெறிந்தனன். (32) அப்போது மகா பலவானான வீ ரபாகுஅவ்விரண்டையும் கத்தியினால் துரிதமாகத் துண்டித்து அவன து தலையையு மிருகைகளையும் முறையே சேதித்தனர். (33) இவ் விதமாக வாகாயத்திலிருந்தபடியே யனேகமசுரர்களைச் சடிதியிலதம்பண் ணி, மகாபயங்கரான வீரபாகுவிலங்கைமீது வேமாகக்குதிக்க, (34) அக் குதித்தலாலப்பட்டணமானது வேகமாகச் சமுத்திரத்துக்குள் மிகவுமாழ் ந்திவிட்டது. அதனாலனேக மசுரர்களிறந்துவிட்டார்கள். சிலர்கால்கை மு றியுண்டார்கள்(35)சிலவசுரர்களை திமிங்கிலம்முதலியமீன்களிழுத்துப்போ யின. பிறகுயாளிமுகன் பிள்ளையான அதிவீரனென்றவனுடனே (36) 'இ தென்ன' வென்றுகோபமுற்று மிகக்கர்வங்கொண்டவனாக வயுத்தம்பண் ணுவதற்குவெளிப்புறப்பட்டனன். அவனதிராணுவங்களோமிகவும்கோ பாவேசம்கொண்டவர்களாகி யவ்வீரபாகுவையுற்று, (37) க்கோடைமே கங்கள்சிலவிடத்துப்பொழிவதுபோல் சரமாரிசொரிந்தார்கள். அப்போ து வீரபாகுவுமவைகளையெல்லாம் துரிதத்தில்சேதித்து அவர்களிற்சில ரைக்கொன்றும்விட்டனர்(38)பிறகதிவீரனும்துரிதத்திற்சன்னத்தமாகிக் கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! மகாபயங்கரான வீரபாகுமீது சக்தி

யென்றவாயுதத் தைப்பிரயோகிக்க, (39) வீரபாகுவும்தம்மைநோக்கிவரு கின்ற அவ்வாயுதத்தைச் சீக்கிரமாக க்கத்தியெடுத்துச்சேதித்துவிட்டன ர். அதன்மேலவ்வசுரன் மிகத்திடமானவோர்கதையை வீரபாகுவின்திரு மேனிமீதெறிய,(40)அதவாதுமார்பினிற்பட்டுமுறிந்துபோயிற்று.மறுப டியுமவனோர்சூலத்தைஎடுத்தவர்மீதுவேகத்தோடெறிய(41)மகாபயங்க ரமானவச்சூலத்தையுமவர் துரிதமாகக்கையாற் பொடிப்பொடியாக்கினர். அதன்மேலவ்வதிவீரன்பிரம்மனால்கொடுக்கப்பட்ட ஜுவலிக்கலுற்றகை க்கத்தியைக்கையிற்கொண்(42)டதின்பலமகிமைகளைநாவினாலுரைத்துக் கொண்டேயவரருகிலோடியதைஇங்குமங்கும்முன்னிலும்பாரிசங்களிலு ம்சுழற்றி (43) ப்பிறகதைவட்டமாகக்கரகரவென்றுமிகுதியாகச் சிலம்ப ம்சுற்றிக்கொண்டோடிவர,கேளீர்சௌனகாதிமுனிவர்களே! வீரபாகுவு மிவ்வாறாகவே சிலம்பப்பயிர்ச்சியைக்காட்டிச்சுழற்ற, (44) இவ்விதமாக வயுத்தத்தில் நல்லமல்லர்களானவவ் விருவர்களுமுயுத்தம்பண்ணுகையில ப்போது வீரபாகுவானவர் தீக்ஷணியமுள்ளகத் தியாலவனதோர்கையை யும், சிரசையும் (45) பிறகனாயாஸமாகவே மற்றோர்கையையும் வெட்டியு ருட்டினர். வீரபாகுவிவ்வாறாக விலங்காபுரியிலுள்ள வனேகமனேகமசு ரர்களையுமதம்பண்ணிவிட்டு மகாபயங்கரமுள்ள வராகவட்டகாஸம்பண் ணிக்கொண்டு துரிதத்திலாகாயமார்க்கம்சென்றனர். (46)

முதலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

வீரமாகேந்திரகாண்டம் உ—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு வீரபாகுவானவர் ஆயிரம்யோசனை விஸ்தீர்ணமுள்ள வகி ழை வேகமாகத்தாண்டி வீரமாகேந்திர பட்டணத்திய வடக்குக்கோட் டைவாசற்படிக்குச்சென்று அங்குள்ளமகா பயங்கரர்களான கோரன் அதிகோரன்யென்றவிரண்டு வாசற்படி காப்போர்களையும், (1) ஆயிரம் வாகினி ஸங்கியைகொண்ட யானைகள், அவ்வளவிரதங்கள், இரண்டா யிரம் வாகினிஸங்கியைகொண்ட குதிரைகள் தளங்கள் இவைகளையும் கண்டு, (2) "இவ்வழியாக வுட்செல்வோமாகில் பிறகு நாம் வந்திருக் கிற காரியத்துக்கசுரர்களா லிடையூறுக்கிடமாகு" (3) மென்று கருதி, பிறகு கிழக்குவாசற்படிக்குச் சென்று அங்கும் மகா பலிஷ்டர்களான மஹிஷாக்ஷன், வீரபானுவென்ற விரண்டு துவாரபாலகர்களையும் (4) வ

டக்குவாசலி லிருந்தபடியேயுள்ள நான்குவித தளங்களிருப்பதையும் க
ண்டு தெற்குவாசலுக்குச் சென்றனர். (5) அங்காயிரம் முகங்களோடு
மிரண்டாயிரங் கைகளோடு மதேவிதமாக வாயிரம் துதிக்கைகளோடும்
கூடிய மிகப்பயங்காமுள்ளவனுன, ஆகாயத்துக்கும் காவலனுகிய கஜமு
கனென்ற வசுரன் சேனைகளோடும் கூடியிருப்பதை (6½) வீரபாகு பா
ர்க்கையிலக் கஜமுகனுமவரைப்பார்த்து (7) "அடா! நீ யாவன்? உந்த
னை யெந்தத்தேவ னனுப்பினுன்? இங்கெவ்விதமாக வந்தாய்?" என்று
மகா கோபத்தோடவரை வினவிக்கொண்டப்போது மிகவுன்னதமான
வோர்மலையைப்பிடுங்கி (8) அசுரன் மிகவேகம்கொண் டவர்தோள்மீ
தெறிய அம்மலையை யவராகவே வலியத்தம்தோள்மீதேந்தி (9) யதில
ம்மலையங்கு விழுந்தமாத்திரத்தில் நீறுகநொறுங்கலுற்றது. பிறகசுரன்
மிகக்கோபம் கொண்டவனுகிச் சீக்கிரத்திலாயிரம் மலைகளைத் (10) துதி
க்கைகளால் வாரியெடுத்து வேகம்கொண்டெறிய, அவைகளுமவரது தி
ருமேனிமீது பட்டவுடன் முன்போலவே ஆயிற்று. (11) அதன்பிறக
சுரன் ஓர் கதையைக்ககாவென்றுசுற்றி யவர்மீதடிக்க, கேளீர்! முனி
வர்களே! அவரப்போதகதையும் கத்தியினுல் துண்டித்துவிட்டனர். (12)
பிறகுடனே கஜமுகனுயிரம் துதிக்கைகளாலு மாயிரம் ஆலமரங்களைப்
பிடுங்கிக் ககாவென்று சுற்றித்துரிதமாயவர்மீ தெறிந்தனன். (13)
அவரவையெல்லாவற்றையும் கத்தியினுல் வேகத்தோடு பொடிப்பொ
டியாக்கினர். பிறகசுரன் முட்டியுத்தம் செய்வதற்காக வப்போது கை
களையுயரத்தூக்கிக்கொண்டு (14) வேகத்தோ டோடிவருகையில் அவர்
கோபமுற்று அவனதாயிரம் கைகளையும் துண்டித்து அதேவிதமாக அ
வனதாயிரம் துதிக்கைகளையு மடியோடு வெட்டித்தள்ளினர். (15) இ
ன்னுமவன் தன் முண்டக்கைகளால் அவரை வேகமாயடிப்பதற்கு ஓடி
வரும்போது வீரபாகுவவனைக் காலினுலுதைக்க, (16) அப்போதவன்
தள்ளப்பட்டவனுகி உயிரையிழந்து பூமியில் விழுந்தான். வீரபாகுவு
ம் அவனைக்கொன்றதன்மேல் வந்தவேலை தாமதப்படுவதை (17) மன
திலெண்ணி, கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! மிகவும் சிறியவுருவத்
தைக்கொண்டு மேலக்கோட்டை வாசற்படிமீதுள்ள மிகவுன்னதமான
கோபுரத்தின்மீ தேறிக்கொண்டு (18) அங்கிருந்தபடியே மிக நேர்த்தி
யானதும், பற்பல வற்புதங்களோடு கூடியதும், பற்பல வசுரர்களால் நி
றைந்ததும், அனேகம் வீதிகளாற் சிறந்ததும், (19) பிரம்மாண்டத்தி
ன் சுவற்றைப்பிளந்துகொண்டு அதன்வெளியாகாயத்திற் பறக்கலுற்ற
வைபோன்றதான பல துவஜங்களால் அமராவதியென்ற தேவநகரை
வெல்லலுற்றதும், (20) பல மண்டபவரிசைகளா லலங்காமுள்ளதும்,

அனேக கோபுரங்களால் விளங்கலுற்றதும், அனேகம் வாபிகள், கிண றுகள், குளங்கள் பூந்தோட்டங்கள் இவைகளால் நேர்த்தியானதும், (21) இங்குமங்குமுள்ள பலபல மரங்களின் வரிசைகளாற் சோபிக்கலு ற்றதும், நல்ல சுந்தரர்களான பலபல வசுரர்களாற் சூழப்பெற்ற வனே க வேசிவீடுகளையுடையதும், (22) சிறைமீதடைக்கப்பட்ட பல தேவ ஸ்திரீகளைக் கொண்டதும், வீடுகள்தோறும் மகா மங்களகரமான வனே க கற்பகவிருக்ஷ வரிசைகளையுடையதும், (23) வேண்டியபொருளை ய ளிக்கலுற்ற பல காமதேனுக்களால் விளங்கியதும், நவரத்தினங்களாலு மிழைக்கப்பெற்ற பற்பல வீடுகளால் நேர்த்தியானதும், (24) வீடுகள் தோறும் வெளிவாசற்படிகளிற் கட்டப்பெற்ற வாழைமரங்களால் மிக மங்களகரமானதும், நான்குபக்கங்களிலுமுள்ள ரதகஜதுரகபதாதிகளா ற் சோபிக்கப்பெற்றதும், (25) உப்பரிகைகள்மீதேறி யுல்லாசமாயுலா வுகின்ற பல வசுரப்பெண்டீர்களையுடையதும், வாயுதேவனால் மிகப்பய த்தோடு க்ஷணந்தோறும் குப்பைகூட்டிவரப்பெற்றதும், (26) அவர வர்களுக்கிட்டதொழில்களைத் திட்டமாய்ச் செய்துவருகின்ற சந்திரன், சூரியன், அக்கினியிவர்களால் விளங்கப்பெற்றதும், சூரியனுடைய நேர் த்தியான ரதத்தையெடுத்தழுங்குழந்தைகளுக்கு (27) விளையாடக் கொ டுக்கின்ற சிறந்த வசுரமங்கைகளால் விசித்திரமாக விளங்கியதும், பலவியபிசாரஸ்திரீகள் முனிவர்களையும், அதுபோலவே சுந்திரர்களான தேவவாலிபர்களையும் பலவந்தமாகவிழுத்துவந்துவரிசைவரிசையாகவுள் ளவுப்பரிகைகள்மீதுபோட்டுச்சூதம்பண்ணுவதால் விநோதமானதும், (28½) மங்கையர்கள், கலவிக்களையை யாற்றலுற்ற, அமுதத்தை கிரணங் களாகவுடையசந்திரனைச்சடிதியிற்பற்றி,(29)அவன்மீதுள்ள வமுதத்தை ப்பானம்பண்ணிவிட்டு,ஜநங்கள்தேங்காய்நீரைகுடித்து கோம்பையையெ றிவதுபோலு ப்பரிகையின் பலகணிவாயிலெறிந்து விடபெற்றதுமான (30)வப்பேர்க்கொத்தவந்நகரத்தைக்கண்ணுற்று,கேளீர்! சௌனகாதிமு னிவர்களே! வீரபாகுவானவர் "ஓ கோ! கோ! இதென்னபாக்கியம்! இ தென்னபாக்கியம்! இதெல்லாவுலகினிலும் துர்லபமே! (31) இதினில க்ஷ்மீவிலாஸத்தைப் பார்ப்பதற்குப் பலவாயிரம் கண்களும் போதுமான தல்லவே! இந்நகருக்குமுன்னர் பிரம்ம விஷ்ணுக்களுடைய லோகங்கள் கூடவெம்மட்டு?" (32) என்றிவ்வாறெல்லாம் பலவிதமாக வாலோசித்து கோபுரத்தினின்று சீக்கிரமாகவிறங்கிபட்டணத்துக்குட்போயோர்வீதியி லுள்ளவாச்சரியங்களைப்பார்த்து மற்றொரு வீதிக்குச் (33) சென்ற ங்குமுள்ள விசித்திரங்களைக் கண்டுமற்றொன்றுக்குப் போயங்குள்ள பல விநோதங்களையும் பார்த்து (34) இன்னுமிவ்விதமாக மற்றுமுள்ளவ

னேகம் வீதிகளுக்குப் போய் பலபல விசித்திரங்களைக்கண்டு, அளவிலே தேவர்க ளஸுரர்களால் வாதையளிக்கப் படுகின்ற மாளிகைக்கு வந்த னர்.(35) அங்கோவென்றால் குரூரர்களும் மிகத்துஷ்டர்களுமான தண் டன்முதலியவர்கள், சகு, நிச்சங்கு, கண்டகன், மகாபலபராக்கிரமங்களைக் கொண்டமகாபலி முதலியவர்கள் இவர்களெல்லாம் ஜயந்தன்முதலிய தேவர்களை "இந்திரனு மிந்திராணியு மெங்குபோயிருக்கின்றார் களென் பதையிப்போது சீக்கிரமாகச்சொல்லுங்கள்: இல்லாவிடிலுங்களை நிச்சய மாகக் கொன்று விடுவோம்." என்றிவ்வாறான கொடியவார்த்தைகளால தட்டிவிட்டுச்சென்ற மாத்திரத்தில் (37½) ஜயந்தன் முதலியதேவர்க ள் " ஓ! மகாதேவா! யாதுநிமித்த மிப்போதெங்கள் மீது பராமுகமாயி ருக்கின்றீர்? (38) ஓ! சுவாமி! தேவரீரெங்களை முந்தித்திரிபுராஸுரர்க ளுடைய பயத்தினின்று காப்பாற்றவில்லையா? ஓ! காளகண்டா! (கழுத் தினிற்காள கூடவிஷத்தை யுடையோனே) இன்னுமதேவிதமாக ஹா லாஹலவிஷாக்கினியாற் றகிக்கப்பட்ட தேவர்களை, (39) தேவரீரவ்விஷ த்தைப் புஜித்திரக்ஷித்தீரே! அப்படிக்கொத்த நீரிப்போதெங்குசென்று விட்டீர்? மேலும் கஜாசுரன், அந்தகாசுரனிவர்களைச் சமுகரித்துத் தே வர்களைக் காக்கவில்லையோ! (40) தவிரவும் ஸ்ரீ விஷ்ணுவினுடைய ம ச்சம், கூர்மம், வராஹம், நரசிங்கம், திரிவிக்கிரமம்ஆகிய விவ்வவதாரங்க ளை யெல்லாம், மச்சத்தின் கண்களையும், கூர்மத்தின் முறட்டெலும்பை யும், (41) வராஹத்தின் சிங்கப்பற்களையும், நரசிங்கத்தின் மேற்றோலை யும், திரிவிக்கிரமத்தினுடைய முதுகெலும்பையும் தேவரீர் பிடுங்கியே யவைகளைக்கொன்று ஓ! பரமேசுவரா! ஓ சருவேசுவரா! முந்தியெங்க ளைக் காப்பாற்றினீரே! (42½) இன்னும் பண்டாசுரன், ஜலந்தராசுரன் மகாசுரனாகிய பஞ்சமேட்டிரன் (43) இவர்களையெல்லாம் முந்தி ஹதம் பண்ணி ஓ! மகாதேவா! தேவரீர் தேவர்களைக் காத்தருளினீரே! ஓ! சு வாமீ! அசுரவர்க்கங்களாலுண்டான இவைமுதலிய பயங்களினின் றெல் லாம் (44) தேவர்களைக் கரையேற்றி, ஓ! மகாபிரபுவான தேவேசா! கா ப்பாற்றவில்லையோ! மேலும் ஸகல ஜகங்களும் தூக்கமுற்றிருக்கையில் தேவரீர் சோம்பலற்றவராக விழித்திருந்து (45) ஓ! சுவாமீ! துர்மார்க்க த்திற்பற்றுதலுள்ள மனதினில் நன்மார்க்கத்தைக் கொடுக்கின்றீர். ஓ! சம்போ! அதேவிதமாகச் சகல ஜகங்களும் வருத்தமுற்றிருக்கையில் அ வ்வருத்தத்தை விலக்குகின்றீர். (46) ஓ! மகாதேவா! பயமடைந்த போதப் பயத்தினின்று காப்பாற்றுகின்றீர். தேவரீரெப்போதும் ஜக ங்களை ஜாக்கிரதையாகக் காத்துவருகின்றீர். (47) ஓ! சம்போ! தேவ ரீரது திருவாக்கிணையின்படி யெங்களாற் செய்யப்பட்ட கருமத்தினால்

யாங்கள் மிகவும் வருத்தப்படுவதற்குத் தேவரீர் யாதுசெய்யத்தகும்? (48) ஓ! சோ! சத்துருக்களைக் கொல்லலுற்ற விந்திரனிந்திராணியோடுகூட வெங்கு சென்றுரோ! ஸகல சத்துருக்களையும் சமுகரிக்கலுற்ற அப்பிரமுவுக்குப் பதியான ஐராவதம், (49) எல்லாப்பருவங்களுடைய மலர்களையு மென்றும் பெற்றதான தேவர்களது பட்டணமாகிய அமராவதி, நந்தனமென்ற தோட்டம், வைஜயந்தியென்ற வரண்மனை, ஸாரதியான மாதலி, (50) பெரியோர்களாற் கூடப்பட்ட ஸுதர்மாவென்ற தேவசபை யிவையெல்லா மெங்குதான் போயிற்றே? விருத்திராசுரனைக்கொன்ற விந்திரன் யாங்களனுபவிக்கின்ற இவ்விதத்துன்பங்களை யறிகின்றுரோ! இல்லையோ! (51) அல்லது தேவேந்திரனிதை யறிந்து தான் பிரம்மா விஷ்ணுமுதலிய தேவர்களோடுகூடச் சகல பாவங்களையும் தொலைக்கலுற்ற சிவலோகத்துக்குச் சென்று (52) கணங்களுக்கு முக்கிய அதிபரான ஸ்ரீ நந்திகேசுவரனைச்சடிதியிற் கண்டவர் மூலமாய் நீலகண்டனும், பார்வதீபதியுமான ஸ்ரீ பரமேசுவரனிடத்துத் தெரிவித்துக் கொண்டாரோ! (53) அல்லது ஸ்ரீ நந்திகேசுவரனுல் இப்போது சமயமில்லையென்று மறுதளிக்கப்பட்டனரோ! ஐயோ! சூரனுலேவப்பட்ட வேலைகளையெல்லாம் தேவர்கள் நடத்திவந்தார்களே! (54) அப்படியிருந்துமப் பாதகன் மானபங்கம்செய்ய வெண்ணம் கொண்டானே! ஓ! சம்போ! மகேசுவரா! தேவர்களா லென்னபாவம்தான் செய்யப்பட்டதோ? (55) எறும்பு, பேன், கொசுகுமுதலிய வின்னுமற்ற ஜந்துக்களுக்கெல்லாம்கூட நீரிரக்ஷகரல்லவோ! என்றுமின்னும் பலவாறுகவு முரைத்துக்கொண்டே நித்திரைகொண்டுவிட்டார்கள். (56)

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

வீரமாகேந்திரகாண்டம் ௩-வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! சௌனகாதி பிராம்மணர்களே! பிறகு சகலதேவர்களும் நித்திரை கொண்ட போது ஸ்ரீமகாதேவன் மைந்தனுன ஷண்முகப்பிரபு வானவர்தானுகவே யாவிர்ப்ப வித்தனர். (1) எப்படி யென்றுல்:— பற்பலவிரத்தினங்களா லிழைக்கப்பெற்ற பொற்கிரீடத்தைத் தரித்தவரும், மலர்ந்த செந்தாமரைமலர் போன்ற மிகுந்த காந்தியுடையவாறு திருமுகங்களையுடைய வரும், (2) நுகத்தடி போன்ற வுருண்டு திரண்டு கனா

வாக நீண்ட பனிரண்டு புஜங்களையுடையவரும், கதவுபோல் மிகவகண்டு விஸ்தீர்ணமுள்ளதும், மெத்த மிருதுவுமான மார்பினு லலங்காரமாக விளங்கியவரும், ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்தினுலமைத்தபிரம்மஸூத்திர (திருநூற்சரடு)ங்களைக் கொண்டவரும், இடையிற்கட்டி விளங்கிய, தகதகாயமானமாய்ப் பிரகாசிக்கலுற்ற பொன்னரை ஞாணினுற் சுந்தரமாகியவரும், (4) மெத்த விசித்திரங்களான முத்து ஹாரங்களாலலங்கரிக்கப்பட்ட மார்பை யுடையவரும், மிகப்பெரியதான மயில்வாகனத்தின்மீது விற்றிருந்தவருமாய், ஸ்ரீ ஸுப்பிரம்மணியன், தேவர்களை யஸுரர்கள் ஹிம்ஸித்துச் சென்றபிற கவர்க ளயர்ந்தூங்கியவுட (5½) னங்குவிஜயமாகி ஜயந்தன் முதலியவர்களைக் கனவினிற் றிடப்படுத்தியதாவது:— (6) "ஓ! ஜயந்தா! நீ யிப்போது துக்கத்தை விட்டுவிடு; உந்தனுக்கிப்போது க்ஷேமமுண்டாகப்போகின்றது ;இந்திராணியு மிந்திரனுமிப்போது சுகமாயிருக்கிறுர்கள்: (7) இப்போதோர் க்ஷணத்துக்குள் மகாபலவானுகிய நமது தூதனிங்குவரப்போகிறுன்; யாம்சூரனை யவனது தம்பியுடனும் சகலசைனியங்களுடனும் ஹதம்பண்ணி (8) யுங்களையும் முன்போ லவரவர்கள்ஸ்தானங்களில்நிலைநிறுத்துகின்றேம்" மென்றிவ்விதமாக ஸ்ரீ தேவஸேனானியானவர் கனவின்மீது வந்தொவ்வொரு தேவரையும் (9) ஸமாதானப்படுத்திவிட்டு ஸ்ரீமகாதேவன் செல்வனுகிய அக்குகபிரான் துரிதத்தில்மறைந்தருளினர். கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பிறகு தேவரெல்லோர்களும் நித்திரை விட்டெழுந்தவுட (10) னொருவரோடொருவ ரிந்தவாச்சரியத்தைச் சொல்லிக் கொண்டிருக்கையிலப்போது வீரபாகுவானவ ரங்கிருந்து தீங்களிப்போர்களான வஸுரர்களை மயங்கவடித்துச் சடிதியிலங்குதோன்றி (11) தேவர்களாலடிக்கடி வந்தனமளிக்கப்பட்டதன் பேரிலப்போது வசனம் கூறுகின்றுர்:— "கேளாய் ஜயந்தா! உங்களுக்கிப்போது சீக்கிரத்தில் ஜயமுண்டாகவே போகின்றது; (12) உந்தன்தந்தையாகிய விந்திரனே பிரம்மன் விஷ்ணு முதலிய ஸகலதேவர்களுடனும் கைலைகிரிசென் றங்கு ஸ்ரீ மகேசுவரனைத் தரிசித்துத (13) தோத்திரம்பண்ணி நமஸ்கரித்து அத்தேவாதிதேவனிடத்துச் சூரனுலளிக்கப்படும் துன்பங்களை முறையிட்டதன் பேரிலவனுல் பிரார்த்தித்துக்கொள்ளப்பட்ட பகவான்சகலவஸுரர்களையும்தொலைப்பிக்கலுற்றவரும், மிகச்சிரேஷ்டனுமான வோர்மைந்தனை ஸ்ரீ பார்வதீதேவியிடத் துண்டுபண்ணினர். (14½) அக்குமாரனும் ஸ்ரீ பரமேசுவரன தேவுதலின் படிச்சகல தேவர்களுடனும் திருச்செந்தூருக் கருளி, சூரனுடைய விருத்தாந்தங்களையறிந்துவரும்படி யெம்மையிப்போ தரிக்கை

யிட்டதன் பேரில் யாமிங்குவானுற்றேம். (16) உந்தன்தந்தையான விந்திரன் "இந்திராணியானவள்நேர்ந்தியான மேருகிரியில்சுகத்தோடிருந்து வருவ" தாகவுனக்கப் போது செய்தியுரைத்தான். (17) இந்திரனுமிப்போது சுகமாகவிருக்கின்றான். ஸ்ரீ குஹமூர்த்தியானவர்கிரௌஞ்சன் தாரகனென்ற வசுரர்களை ஹதம்செய்து விட்டார். (18) ஓ! ஜயந்தா! எமதெஜமானனாகிய ஸ்ரீ ஷண்முகன் சீக்கிரத்திற் சூரன்முதலிய அசுரர்களை ஹதம்பண்ணி யுந்தனையுனது பெற்றோர்களோடு சுவர்க்கலோகத்தில் ஸ்தாபித்துக்காப்பாற்றப்போகின்றார்" (19) என்றிவ்விதமாகவுரைத்த தன்மேலத் தேவர்களாலவர்கள்கண்டவிக்கனவைச்செவியுற்று மிகசந்தோஷமுள்ள வராகித்தாமிங்கு வருங்கால் நேரிட்டவைகளை முறையே உரைத்திட்டுத்(20) தேவோத்தமரானவீரபாகுவானவர்சீக்கிரமாகத்திரும்பி ப்பிரயாணப்பட்டனர். அஸுரர்களும் முன்போல்மூர்ச்சைதெளிந்தெழுந்தனர்கள்: (21) பிறகவர் பின்னுமுள்ள அந்தந்தவீதிகளின் மிகுந்தவாச்சரியங்களையு மளவிலேகண்ணுற்றுக்கொண்டு, அதேசிறியவுருவத்தைக் கொண்டவராகவே கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! கோபுரவாசற் காப்பவர்களான உக்கிரன், மயூரன் இவர்களுடையவும், இவர்களுடைய தூதர்களான பலவசுரர்களுடையவும் பார்வையிற்படாமலே மிகச்சுந்தரமான சூரனரண்மனைக்குச் சென்று (22-23½) அங்கு சூரனைப்பார்த்தனர். அவனேவென்றால்:—தனதருகினிற் பலவசுரர்களாற் சேவிக்கப்பெற்றவனும், (24) திவியமான சிங்காதனத்தில் வீற்றிருப்பவனும், திவிய வஸ்திரங்களை யுடுத்தியவனும், சிரேஷ்டனும், பிரகாசம்பொருந்திய பொற்கிரீடத்தி லிழைக்கப்பட்ட நவரத்தினங்களதொளித் திரள்களாற் சூழப்பெற்றவனும், (25) காதுகளிற் பூண்ட விருகுண்டலங்களாலலங்கரிக்கப்பட்ட முகமண்டலத்தையுடையவனும், மந்தஹாஸத்தினால்நன்கு சோபிக்கின்ற பல்வரிசைகளால் விளங்கியவனும், (26) பலகைபோன்ற நெத்திதனில் பிரகாசியாநின்ற திருநீற்று முப்பட்டைவரிசைகளாலலங்கரிக்கப்பட்டவனும், மிக நேர்த்தியா யலங்கரிக்கப்பட்ட வாயிரம் யோஜனை விஸ்தீர்ணமுள்ள மண்டபத்தில் (27) நர்த்தனம் செய்யாநின்ற நாட்டிய சங்கீதங்களில் மிகவும் சதுரர்களான வனேக வப்ஸரஸ்திரீகளாலும், ஆரார்த்திகைசுற்றுநின்ற பலதேவஸ்திரீகளாலும் சூழப்பெற்றவனும், (28) பற்பல வலங்காரங்களோடு கூடியவனும், பற்பல பாஷைகளில் தேர்ச்சிபெற்றவனுமாகவிருந்தனன். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வீரபாகுவான்வ ரப்பேர்க்கொத்த சூரபத்துமனைக் கண்ணுற்று (29) "அங்கவன்முன்னர் நமக்காகவோர்சிங்காதனமில்லாமல்நாம் சென்று

லவ ன்மதியா"னென்றுலோசித்துச் சடிதியாக வந்தக்ஷணத்தில் ஸ்ரீகந்த பிரானை த்தியானித்தனர். (30) உடனேயக்கந்தபிரானுடையதிருவருளால் மகாஉன்னதமும், பற்பலவிரத்தினங்களாலலங்கரிக்கப்பட்டதும், அனேககோடிசூரியப் பிரகாசம்பொருந்தியதும், வேறுநிகரற்றதும், மிகுதியாக ஜுவலிக்கலுற்றதும், (31) தனதுமிருந்தவொளியினுலிச் சூரன்சிங்காதனத்தைச் சீ!யென்றவமதிக்கலுற்றதுமான வோர்சிங்காதனத்தையடைந்து பிறகுடனேவீரபாகுதமதுசுயவுருவத்தைக் கொண்டவராகி(32)அச்சிங்காதனத்தைச் சூரனுக்கெதிராகப் போட்டுக்கொண் டுட்கார்ந் தப்போதுமிருந்தமகாப்பிரபாவங்களைக்கொண்டவராகவிளங்கினர். (33) உடனேயங்குள்ள வசுரர்களெல்லா மப்பேர்க்கொத்த வீரனைப்பார்த்துச் சிந்தித்ததாவது:— "மிகவும் ஜுவலிக்கலுற்ற விம்மகாபுருடன் யாவன்? பிரம்மாவா? விஷ்ணுவா, அல்லது ஸ்ரீ சங்கரனேயா? (34) காவலர்களை யெல்லாம் துரிதத்தில் வஞ்சித்திங்கிவனெவ்வா றுண்டியாக வரலுற்றனன்?" என்றிவ்விதமாக வசுரர்களால் சிந்திக்கப்படுகையில்சூரனவரைப்பார்த்துக் கோபங்கொண்டு வசனமுரைத்ததாவது:— (35) "அடா! நீ யாவன்? எவ்விடத்தி லிருப்பவன்? நீ யாவனுக் கெம்முறையோனுகின்றாய்? சீக்கிரம் சொல். அடா! நீ செய்த விம்மகேந்திரஜாலவித்தை நன்றாயிருந்தது. (36) பிரம்மன் முதலிய தேவதேவோத்தமரெல்லாம்கூட நம்முன்னர் நிற்பதற்கு நடுநடுங்குகின்றார்கள். நீயோ முற்றும் ஸாஹஸக்காரனுகக் கொஞ்சமேனு மச்சமற்று மிகச்சிறந்த சிங்காதனத்தின்மீ (37) தேறி ஸகலபூஷணங்களாலு மலங்கரிக்கப்பட்டவனாய் நம்முன்னரே யுட்காருகின்றாய். நம்முன்ன ரிப்போது நீ யிப்பேர்க்கொத்த பெரும்வித்தையை மிகவும் நன்றாய்ச் செய்தபடியா (38) லதற்குவேண்டிய தியாகத்துக்காக (வெகுமதி)நா முந்தனுக்கோர் நொடிக்குள் பிராணத்தியாகத்தைக் (உயிர்வாங்குதல்) கொடுக்கின்றோம்; நல்லது! நீ யிப்போதிங்கு யாதுநிமித்தம் வரலுற்றாயென்பதை நன்றாயாதியோடந்தமாகச் சொல்" லென்றனன். (39) ஓ! சௌனகாதி முனிவர்களே! வீரபாகுவு மிவ்வாறான சூரன் வசனத்தைக்கேட்டு அப்போது புன்னகைப்புற்றவராக வசனம் கூறியதாவது:— (40) "அடா! சூரா! நல்லது! நாமிப்போதுரைப்பதை நீ கொஞ்சமேனும் கர்வம்கொள்ளாமல் ஜாக்கிரதையாகக் கேள்: எப்போது முந்தனுல் துன்பமடைந்து வரப்பட்ட பிரம்மன் விஷ்ணு முதலிய தேவரெல்லோர்களும் (41) ஸ்ரீ கைலகிரியில் விளங்கிநிற்கும் தேவாதிதேவனும், எல்லோர்களுக்குமபயமளிப்போரும், ஸகல ரோகங்களையும் தொலைப்பிப்போரும், மிக

சாந்தமூர்த்தியும், பிரத்தியக்ஷமாக மொக்ஷத்தை யருளுவோருமான ஸ்ரீ ஸர்வேசுவரனிடத்துச் (42) சென்று அங்கவரை நமஸ்கரித்துப் பல துதிகளால் ஸ்தோத்திரம் பண்ணியுந்தனுலளிக்கப்பட்ட துன்பங்களையெல்லா மப்போ துள்ளபடி விண்ணப்பம் செய்ததில் (43) ஸ்ரீ மகாதேவன் முகமலர்ச்சிகொண்டபோது அவர்கள் மிகவும் வணக்கமுற்றவர்களாகி யெச்சரித்துக் கொண்டதாவது:— "ஓ தேவாதிதேவா! மகாதேவா! சூரபத்துமன் தேவர்களை மிகவும் துன்பப்படுத்துகின்றான். (44) ஓ பகவானே! ஆனையால் தேவரீரவனை நாசம்செய்யவேண்டியதற்காகத் தேவர்களுக் கதிபரான மிகுந்த சுந்தரகுமாரனை ஸ்ரீ பார்வதிதேவியிடமாக வுண்டுபண்ணுதல் வேண்டு" மென்றனர்கள். (45) அதன்மேல் பகவானாகிய ஸ்ரீ மகேசுவரனும் தேவர்களுக்கு நல்லதென் றபயமளித்துவிட்டு, சிலகாலம் சென்றபிறகு அசுரப்பூண்டை யடியோடு பிடுங்கலுற்ற ஸ்ரீ குமாரமூர்த்தியை யுண்டாக்கி, (46) அக்குமாரனை நோக்கி யப்போது வசனமுரைத்ததாவது:— "ஓ மைந்தனே! நீ தேவசேனைகளுக் கதிபனாகி நமதாக்கினையின்படி சூரன் முதலிய வசுரர்களைச் சீக்கிரத்தில் ஹதம்பண்ணிப் பயந்தொளிகின்ற தேவர்களை யிரட்சிக்கலாவாய்." ($47\frac{1}{2}$) என்று ஸ்ரீ பகவானால் கட்டளையிடப்பட்டதன்மே லக்குமாரசுவாமியு முடனே பிரயாணப்பட்டு (48) வழிநடுவில் கிரௌஞ்சனென்ற மகா பாதகனான வசுரனையும், மகா கொடியோனாகிய வுனது தம்பியான தாரகனையு மச்சண்முகபிரான் (49) சமுகரித்துவிட்டு இப்போது மகா ரமணீயமான திருச்செந்தூரி லெழுந்தருளியிருக்கின்றார். இன்னுமத்தேவேச னுந்தன்மீ திரக்கமுற்றவராகவே யெந்தனை யுன்னிடமனுப்பி (50) "ஜயந்தன் முதலிய தேவர்களைச் சீக்கிரத்தில் முன்போல் விடுவித்து உந்தன் பட்டணத்தில் நீ சுகமாய் வசித்துக்கொண்டிரு: இல்லையாகி லிப்போதே நாம் வந்து சந்தேகமன்றியி லுந்தனை ஹதம்பண்ணிவிடுவோ" மென்றுந்தனுக்குப் புத்தியருளி யதையுனக்கெடுத்துரைக்கும்படி யெனக்குக் கட்டளையிட்டன" ரென்றுசொன்னார். (51)

மூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

வீரமாகேந்திரகாண்டம் ச—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! சௌனகாதி முனிவர்களே! வீரபாகு சூரனுக்கின்னும்

யிர்களைப் போக்கிவிட்டனர். (13) இவ்விதமாகவச் சூரன்கண்முன்னே யவ ரசுரர்களை யோர்க்ஷணத்துக்குள்ஹதம்பண்ணிவிட்டுப் பிரயாணப்பட்டனர். அப்போதே வீரபாகுவின் சிம்மாசனமும் மறைந்துவிட்டது. (14) பிறகு சூரனும் சீக்கிரமாகச் சதமுகனென்றவனை யேவிவிட, அவனு மவ்வா றேவப்பட்டவுடன் மிகுந்த சைனியங்களுடன் வீரபாகுவோடு யுத்தம்பண்ணச் சென்றனன். (15) ஓ! சௌனகாதிப் பிராம்மணர்களே! உடனே மகா பலவானுன வீரபாகுவும் இருபதினுயிரம் கலசங்களையுடைய வோர் பெரிய கோபுரத்தைப் பிடுங்கி மிகுந்த வலிமை கொண்டவச் சைனியங்கள்மீது மிக வேகத்தோடெறிய, ஓ! கோ! அதுவிழுந்தவுட னச்சைனியமெல்லா மோர்நொடிக்குள் மாண்டுபோயின. (17) அதன்பேரில் சதமுகன் கடுஞ்சினங்கொண்டு மிகுந்த பாணங்களை வருஷித்தனன். அப்பாணங்களெல்லா மவர்திருமேனிமீது விழுந்தவுடன் பொடிப்பொடியாயின. (18) பிறகும் வீரபாகுகோபத்தினுல் மிகவும் பற்றியெரிகின்றவர்போலாகி மற்ருேர் கோபுரத்தைப் பிடுங்கித் துரிதத்திலவனை வேகமாயடித்தனர். (19) அஸ்திர வித்தையில் மிகப்பயின்றவனுன மகா பலிஷ்டனுகியவச் சதமுகனும் வேகத்தோடெறியப்பட்ட கோபுரத்தைச் சடிதியிற் செதல் செதலாகச் சேதித்துவிட்டனன். (20) மேலுமவ்வசுரன் மகா கோபம் கொண்டவனுகித் தோமரம், பட்டாக்கத்தி, வேல், மற்றுமுள்ள வனேகபாணங்கள்இவைகளையெல்லா மவர்மீது பிரயோகித்தனன். (21) உடனே வீரபாகுவோ அவற்றையெல்லாம் முறித்தெறிந்து அவனது வில்லையுமொடித்துவிட்டனர். பிறகசுரனிருநூறு கைகளாலு மவனைக்கட்டுவதற்காக நெருங்கி யோடிவந்ததி (22) லம்மகாசுரனை வீரபாகுவானவர் தம் தோள்முட்டினு லிடித்துத்தள்ளி, அவ்வாறு தள்ளிய மாத்திரத்தி லவன் பூமியில் விழுந்தவுடன், அவனையவர் வேகத்தோடு (23) ஓர் காலினுலவனது மார்பின்மீது மிதித்துக்கொண் டுடனே மற்றக்காலினுல், ஜனங்கள் தேங்காய்களைப் புறங்காலினுலிடறித் தள்ளுவதுபோ லவன்தலைகளை யிடறிவிட்டனர். (24) மகா பலிஷ்டரான வீரபாகுவானவ ரிவ்வாருக் சத்ருகனைச் சமுகரித்துவிட்டு, மறுபடியும் மகாவுன்னதமான வற்புதவுருவத்தை யெடுத்துக்கொண்டு (25) ஓர் காலினுற் பூமியையமிரவுதைத்து நிற்கையிலப்போ தவர்நின்ற பூமியின்பாகமானது மிகவும் தாழ்ந்து தொய்வடைய, (26) ஓ! கோ! அப்போ தத்தாழ்ச்சியால் மிகுந்த ஜலப்பிரவாகம் கொண்டு அப்போதங்கிருந்த வசுரர்களை முதலைகளிழுத்துப் போயின. (27) சிலவசுரர்கள் நடுப்பிரவாகத்தி லகப்பட்

கூறியதாவது;— "கேளாய்! சூரபத்துமனே! ஆகையால் நீ வீண் கெர்வத்தையெல்லாம் விட்டு ஜயந்தன் முதலியவித் தேவர்களை முன்போல் விடுவித்துப் பிறகு கொஞ்சமேனும் தவறுதலின்றி வழக்கம்போலிரு" (1) என்றது முதலான வார்த்தைகளைத் தெளிவாகவும் மிக கெம்பீரமாகவு முரைத்துவிட்டுச் சும்மாவிருந்தனர். (2) பிறகு சூரனும் வீரபாகுவை நோக்கிக் கோபத்தினால் மிகவும் ஜுவலிக்கலுற்றவனாகி "நமது பராக்கிரமத்தைப்பற்றி யவன் யாதறிவான்? அவ்விளைஞனுக் கிச்செய்கைகளெல்லாம் தகுதியல்ல. (3) முன்னமே தாரகனது வதையைக் கேட்டவுட னவனையோர் க்ஷணத்துக்குள் கொன்றுவிடுவதாக வெளியிற் புறப்பட்ட யாம் சற்றுலோசித்ததின்பேரில் 'என்ன! யாமிப்போது கொஞ்சமேனு மிலஜ்ஜையில்லாம லோரிளைஞனைக் கொல்வதற்காகச் செல்லுகின்றே' மென்று யாம் சும்மாவிருந்துவிட்டோம். (4½) நல்லது! நாளைத்தினமே மிககர்வம் கொண்டவச் சிறுவனைச் சயிப்பதற்குச் சேனைகளை யனுப்புகின்றேம். (5) ஜயந்தன் முதலிய தேவர்களையும் யாம் விடுவதில்லை. மேலுமவர்களை யிப்போதே யிங்குதருவித்துக் கட்டியடித் தவர்களை யெமதடிமைகளாக்கி நாம் வாழ்வோ" மென்றது முதலான வார்த்தைகளை யப்போதசூரன் மிக கர்வத்தோ டுரைத்ததன்பேரில் வீரபாகு மிகக்கோபம் கொண்டவராகி பின்னுமவனை நோக்கி யுரைக்கின்றூர்:— (7) "அடா! துர்ப்புத்திகொண்ட சூரா! ஸ்ரீ கந்தபிரானுடைய மகிமையை நீ யறியாமல் 'அவனிளைஞ' னென்றும் 'எம்மையறியமாட்டா' னென்று மின்னும் பலவாறுகவும் நீ யுரைத்திட்டாயல்லவா! (8) அடா! அவர் யாரென்றால்:— தேவாதி தேவனாகிய ஸ்ரீ பரமேசுவரனுடைய 'கந்தன்' என்ற அழிவற்ற மூர்த்தியாகின்றூர். ஸகலவண்டங்களுமவரது திருமேனிமீதே யுற்பத்தியாகிப் பிறகதின்கண்ணே லயமடைகின்றது. நல்லது! நாமிப்போது தூதத்தன்மையில் நியமிக்கப்பட்டு வந்தபடியா லப்பேர்க்கொத்த வெம்மால் துஷ்டனான வுந்தனுக்குத் தக்க வவமானம் ஸத்தியத்துக்காகக் கொஞ்சமேனும் செய்யப்படவில்லை." (10) என்றிவ்வாறுன கடும்வசனங்களால் வீரபாகு அவனை யதட்டிப் பயமுறுத்தியதி லச்சூரன் கடுஞ்சினங்கொண்டவனாகி யசுரர்களை யேவுதல் செய்ய, (11) உடனே ஆயிரம் தலைகளையு மிரண்டாயிரம் கைகளையும் கொண்ட வாயிர மசுரர்கள் சன்னத்தபட்டவர்களாகிச் சண்டைபண்ணுவதற்காக வவ்வீரபாகுவை வளைந்துகொண்டார்கள். (12) அப்போதுடனே வீரபாகுவுமவ் வெல்லோர்களையு மோர்கையினலொரோவாறுகவாரிப்பிடித்துத் துரிதமாகத் தரைமீதடித் தவர்கள து

டு மாண்டார்கள். அதன்பிற கைம்பதுவாகினி யசுரசேனைகள் வீரபா குமீது மிகுந்த சரமாரிகளைச் சோரிந்துகொண்டே மறுபடியும் புறப்ப ட்டன. (28½) அப்போதவர் திருமேனியி லிரத்தம் மிகுதியாகப் பொ ழியலுற்றது. (29) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பிறகு வீர பாகுவு மவ்வசுரர்களையெல்லாம் கைகளாலும் கால்களாலு மறைந் தவ் வெல்லோர்களையு மோர் நொடிக்குள் மடித்துவிட்டனர். (30) மேலுமி தேவிதமாக வந்நகரக்காவலர்களையும் ஹதம்பண்ணிவிட்டு மறுபடியும், இலக்ஷம் பொற்சிகரங்களின்,வரிசைகளால் விளங்கியதும், மிக நேர்த்தி யானதும், சுற்றளவிலு முயரத்திலும் முறையே நூற்றைந்து, ஆயிரம் யோசனைகள் கொண்டதுமான வோர் கோபுரத்தைக் (32) கையாற் பிடு ங்கித் துரிதத்தில் வேகமாயெறிய, அது சூரனுடைய வாஸ்தானமண்ட பத்தின்பேரில் விழுந்தது. (33) அப்போதவ்வாறு விழுந்ததா லம்ம ண்டபமு,மிடிந்து விழலுற்றது. மேலுமவ ரின்னுமுள்ள மற்றமண்டப ங்கள், மதிள்கள், கொடுங்கைகள், (34) கோபுரங்கள், அட்டாளமண் டபங்கள் அரண்மனைகள், கம்பங்கள், குண்டுக்கற்கள் ஆகிய விவைகளை யெல்லா மங்குள்ள விருக்ஷங்களைப் பிடுங்கிப் பிடுங்கி யெறிந்திடித்துத் தள்ளிவிட்டு (35) கைகளை யுயரத்தூக்கிக்கொண்டு விளையாட்டாக வட் டகாசம்பண்ணிக் கூத்தாடினர். மிகுதியிருந்த வசுரர்களு மிங்குமங்கு மவைக ளிடிந்து விழுந்ததனால் மரித்துவிட்டார்கள். (36) சிலர் முடி ய விழ்ந்து உடையிழந்து மிகவுமோட்டம் பிடித்தார்கள். சூரனேவென் றால் ஆஸ்தானமண்டப மிடிந்து பட்டணமுழுது (37) மல்லோலகல் லோலமாய்க் குழம்பலுற்றதை யறிந்து ஐந்நூறு முகங்களையு மாயிரம் கைகளையும் கொண்ட பல வசுரர்களைப் பார்த்துரைத்ததாவது:—(38) "ஓ தூதர்களே! நீங்களிப்போது சென்றவனை வேகமாய்க் கட்டியுருட்டிக் கொண்டு வாருங்கள்" என்றவனுலாக்கினை யிடப்பட்டதன்பேரில் மிகுந் த பராக்கிரமசாலிகளான வவ்வெல்லோர்களும் (39) சடிதியில் தீக்ஷ ணியமுள்ள வனேக வாயுதங்களை மாட்டிக்கொண்டு "ஓ! சுவாமீ! யாங்க ளாயிரம் பெயர்களும் முந்தியே யவனைக்கட்டுவதற் காவல்கொண்டி ருந்தோம். ஆகிலுமதுவிஷயத்திற்காகத் தங்களது கட்டளையை யிப் போதெதிர்பார்த்துக் காத்திருந்தோம்" (40½) என்றுகூறியவனதனுமதி யைப்பெற்று அவ்வஸுரரெல்லோரும் புறப்பட்டுச் சென்று (41) மகாஸுரர்களான வெல்லோர்களு மப்போது வீரபாகுவைச் சூழ்ந்து கொண்டு கூர்மையுள்ள பற்பல வாயுதங்களைத் துரிதமாகப் பிரயோகித் தார்கள். (42) உடனே வீரபாகுவும் மகா கோபங்கொண்டவராகி யப்

போது மிக வுன்னதமான வோர் ஸாலவிருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டவ் வஸ்திரங்களையெல்லாம் மிகவும் பொடிப்பொடியாக்கி (43) யவர்களையு மிம்மரத்தினாலே ஆக்கிரகத்தோடடித்துக் கொன்றுவிட்டனர். அதன்பிறகு சூரன் அவர்களும் மடிந்துவிட்டதைத் தூதர்முகமாய்ச் சீக்கிரத்திலறிந் தம்மகா பலவானாகிய வீரபாகுமீது மிகவும் கோபங்கொண்டனன். (44) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! பிறகு வஜ்ஜிரபாகுவென்ற சூரன் குமாரனானவன் தந்தையாக்கினையின்படி பற்பலவாபரணங்களாலுமலங்கரிக்கப்பட்ட சிறந்த மேனியுடையவனாக, நேர்த்தியான பதினாயிரம் குதிரைகள் கட்டப்பெற்ற சிறந்த விரதத்தின்மீதேறிப் புறப்பட்டனன். (45)

நான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

வீரமாகேந்திரகாண்டம் ரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு சூரன் குமாரனான வஜ்ஜிரபாகுவென்ற மகா சூரன்களினும் மந்திரி, சேனாதிபதிகளின் பிள்ளைகளோடுகூட (1) ஐந்நூறு வாகினிகொண்டயானைகள், இரதங்கள், ஆயிரம் வாகினி சங்கியைகொண்ட வாயுவேகமுடைய குதிரைகள்(2) இரண்டாயிரம் வாகினிசைனியங்கள் இவைகளாற் சூழப்பட்டவனாகி, சமுத்திரத்தின் பேரோசைக்கு மேற்கொண்ட படஹவாத்தியத் துவனியுடனும், (3) குடை, சாமரம், துவஜம் இவைகளைக் கையிற்பற்றிய, வனேகர்களுடனும் மகா பலங்களோடுகூடியவனாக வீரபாகுவை நோக்கி யாக்கிரகத்துடன் புறப்பட்டுச் செல்லுகையில்(4) அவன் பட்டணத்தில் தடீல் தடீலென் றகஸ்மாத்தாகப் பயங்கரமானகொள்ளிக்கட்டைகள் விழலுற்றன. பட்டுப்போன மரங்களி னடிக்கிளைகள்மீது காக்கைகளுட்கார்ந்து கத்தலுற்றன.(5) அவ்வசுரனாலெங்கும்நரிகளூளையிடுவது கேட்கப்பட்டது. மேலுமவன் செல்லும்போது மார்க்கத்தில் தூரஸ்திரீ, கைம்பெண், சிவப்புமாலையையும், சிவப்புவஸ்திரத்தையும் தரித்தவள்,(6)எண்ணெயிட்டுக்கொண்டவன், மூக்கறுபட்டவன், கைநொண்டி, கால்நொண்டி யிவர்க ளெதிர்ப்படலான, தனக்குவரு மபாயத்தை முந்தித்தெரிவிக்கலுற்ற வபசகுனங்களைக்கண்டு(7) மவற்றைச் சட்டைசெய்யாமல்துரிதமாக வீரபா குவண்டைக்கு

ச் சென்றனன். அப்போது வீரபாகுவு மச்சேனைகளி னுடம்பாங்களைக் கண்டு (8) "இதோ! ஓர் நொடிக்குள்ளிச்சேனை முழுதும் ஹதம்பண்ணிவிட்டு யாம் ஸ்ரீ ஷண்முகன் சன்னிதிக்குச் செல்லுகின்றோம்: இல்லாவிடில் யாமவருக்குத் தூதனல்லர்" என்றுசபதம்பண்ணிக்கொண்டு (9) மகா பலவானாக வேகத்தோடெழும்பி யெழும்பிக்கூத்தாடிக் கர்ஜனம் செய்தனர். அப்போது வஜ்ஜிரபாகுவு மக்கர்ஜனையைக்கேட்டு மனக்களிப்புற்றவனாகி (10) விஜயனென்ற தனதுஸாரதியை 'யிதென்ன' வென்று கேட்டறிந்து யுத்தத்துக்குச் சன்னத்தமாயினன். (11) அப்போ ததற்கு முந்தியேயவனது சைனியங்கள் சரமாரிபொழியலாகி வீரபாகுவின் திருமேனிமீ திரத்தவெள்ளம் மிகுதியாகப் பெருகலுற்றது. (12) உடனே வீரபாகு மிககோபம் கொண்டோர் கையினு லவ்வஸுரர்களில னேகம் பெயர்களை வாரியெடுத் தண்டச்சுவறுதண்டச் சடிதியிலெறிந்தனர். (13) மறுபடி சிலர்களை ப்பிடித்துக் காகரவென்று சுழற்றிப்பூமியிலோங்கியடித்தனர். வேறுசில வசுரர்களைக் காலைவாரிப்பிடித்து ச்சுழற்றித் துரிதமாகத் திசையெங்குமெறிந்தனர். (14) சிலரை கன்னம் கன்னமாகவறைந்து கொன்றனர். பலவசுரர்களைச் சிண்டுகளைப் பிடித்துக் காகரவென்று சுழற்றி நடுக்கடலினும், (15) சக்கிரவாளகிரியின் நான்கு பக்கங்களிலும், ஒவ்வொருதீவுகளிலு மெறிந்தனர். சிலரைக்கால்களாலுதைத்தும், சிலரை முட்டியுத்தத்தாலும், (16) அனேக மசுரர்களின் கால்களை யிருகைகளாலும் கூட்டிப்பிடித்துப் பூமியிலடித்து விளையாட்டாக வாகாயத்தில் வீசியெறிந்தும், (17) சிலரை மண்டைகளிலும் மற்றவர்களைவயிறுகளிலும் முட்டியாலிடித்தும், மற்றசிலரை மார்புகளின்மீது ஜுவலிக்கலுற்ற வோர்காலினுல் மிதித்துக்கொண்டு (18) மற்றக்காலினுல் தலைகளை நான்குதிசைகளிலு மிடறியெறிந்தும், மிகக்கொடியர்களான மற்றவனேகம் பெயர்களைக்கையினு லொரோ அறையாகவறைந்து (19) நொறுங்கப்பிசைந்து மம்மகா பலசாலியானவர் சடிதியிலுருண்டையாகத் திரட்டியும் மற்றசிலர்களின் கால்களைவாரி வலிமையோ டுயரவெறிந்து (20) அவர்கள் திரும்பிப்பூமியில் விழுவதற்குமுந்தியே வேறுசிலர்களை வாரியவர்கள்மீது குறிப்பிட்டெறிந்தும், (21) கேளீர் முனிவர்களே! இவ்விதமாக்ச் சகலவசுரர்களையும் மிகவும் நாசம் பண்ணிச் சேனுதிபதிகளின் பிள்ளைகளான மகாசுரர்களையு (22) மோராலமாத்திரு லவர்களது பிராணவாயுவை யிழக்கச்செய்தனர். அதன்பிறகு வஜ்ஜிரபாகுவும் மிகப்பரபரப்போடு துரிதத்தி (23) லிடது கையால் வில்லைப்பற்றி வலக்கையினுல் நாணேடம்புகளைத் தொடுத்து அச்சூரன் குமார னுயிரம் பாணங்களைப் பிரயோகித்தனன். (24) வீரபா

குவோ அவையெல்லாவற்றையு முடனே தூள்தூளாக்கிவிட்டனர். பிற கப்பலவன் மகாதீக்ஷணியமுள்ள பதினுயிரம் நாராசபாணங்களைப் பிரயோகிக்க (25) அவற்றையு மிவர் முஸலாயுதத்தினால் தெள்ளுபொடியாக்கினர். பின் பவனனேகமாயிரம் சரங்களைத் தொடுத்து மாரியாகச் சொரிந்ததை (26) யெல்லாமிவர் கையாலே பழுதாக்கிவிட்டனர்; ஓ! கோ! பிறகுவஜ்ஜிரபாகுவோ வென்று லவர்மீது மிககோபத்துடன் தலை, மார்பு,(27) கை, கால், நெற்றி, கழுத்து, மர்மஸ்தலங்கள் முதலிய விடங்களிலெல்லா மாயிரமாயிரங்களாக மிகக்கூர்மையுள்ள பாணங்களை வருஷிக்க, (28) அவ்வாறுவிடப்பட்ட பாணங்களெல்லாமவரது கெட்டியான முஸலாயுதத்தையு முடைத்தவாதங்கம் முழுதும் மிகவும்பற்றலானதி (29) னுடனே வீரபாகுவோர் நொடிநேரம் களைப்புற்றவர்போலிருந்து பிறகெழுந்து மிககோபம் கொண்டவராகி மிகுந்த சுந்தரமான வவன திரதத்தைக் (30) காலினுலுதைக்க, அதுநூறுதுணுக்குகளாகி விழலுற்றது. உடனே வஜ்ஜிரபாகு சீக்கிரத்தில் மற்றோர் மகாரதத்தி (31) லேறிக்கொண்டு வீரபாகுவின் நெற்றியின்மீ தாயிரமஸ்திரங்களைச்சந்தானிக்க, அவையெல்லாவற்றையு மவர்முனைமுறிந்து விழச்செய்தனர்.(32) பிறகவர் அவ்வசுரனோடுகூட விரதத்தைச் செங்குத்தாகத்தூரிதத்திலெடுத்து வுயரத்திலிலக்ஷம்யோஜனைதூரத்திற் கப்பாலெறிய, பிறகவ்விரதம் பூமியில் விழுந்தோர்க்ஷணத்துக்குள் துண்டுதுண்டாகச் சிதறலுற்றது.(33) அதனோடுவிழுந்த வஜ்ஜிரபாகுவோ தப்பியெழுந்து மிகக்கோபம்கொண்டவனாகித் திரும்பவும் மகாவுன்னதமான வோர்வில்லையெடுத்துயுத்தத்துக் கெத்தனிப்பதற்குள் (34) ளப்போதே யிவரவன தத்தனுசை யிரண்டுதுண்டாக்கிவிட்டனர். அதன்மேலவ னுக்கிரகம்கொண்டவனாகி யோர் கத்தியையெடுத்துக் கிளம்பிக்கிளம்பிக்குதித்துக்கொண்டு சடிதியாக (35) வோடிவருகையில் கத்திப்பிடியைப் பிடித்தபடியுள்ள வக்கையை வெட்டியெறிந்தனர். பின்பவன் கடுஞ்சினங்கொண்டோர் பெரியகதையைக் கரகரவென்று சுற்றி யவர்மார்பின் மீ தடிக்க (36) அதையுமவ்வீரபாகு தனது கைக்கத்தியால் துண்டித்துவிட்டுப் பிறகெழும்பிக் குதித்துக்கொண்டு சீக்கிரமாகக் கத்தியினலவ் வஜ்ஜிரபாகுவது மிகவும் திடமான தலைகளை வெட்டித்தள்ளினர். (37½) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! இவ்விதமாக வீரபாகு ஸகல வசுரர்களையும் நாசம்பண்ணிவிட்டு (38) ஸ்ரீ கந்தபிரானண்டைக்குத் திரும்பிச் செல்ல வெண்ணம்கொண்ட போது சூரியனும் சுருக்காயஸ்தமன கிரியடைந்தனர். (39) அப்போது வீரபாகு "ஆ! ஆ! சூரன் ஸ்ரீகந்தபி

ரானை நிந்தித்ததற்குற்றபயனை யிப்போது கைக்கொண்டானல்லவா" என்று மனதிலெண்ணிப் புறப்படுகையில் (40) மறுபடியுமப்பட்டணத்து வீதிகளிலுள்ள விநோதங்களை யப்போது பார்த்துக்கொண்டு வேகமாயகிழைத் தாண்டி யோர்நொடியிலிலங்காபுரிக்கு வந்தனர். (41) அப்போதங்குள்ள, ஆயிரம் தலைகளின் வரிசைகளையு மிரண்டாயிரம் கைகளையும் கொண்டயாளி முகாஸுரனென்றவ னவர் வரவையறிந்து (42) வெகுகோபத்தோடவரால் தன்மைந்தன் சாவுண்டதைமனதிலெண்ணி மகாபலசாலியான அவ்வசுரன் மிகுந்த வசுரச்சேனைகளோடவரைத்தடை செய்து அவரைநோக்கி கோரமான வசனமுரைத்ததாவது:—"அடா! நீநமதுமைந்தனைக் கொன்றபடியால் நீமிகுந்த ஸாஹஸமிருத்திய முள்ளவனாகின்றாய்; (44) ஆகையாலுந்தனையா மிப்போதே கொன்றுவிடுகின்றோம். நமதுமிகுதியான வீரியத்தை யிப்போது பாரடா" என்றிவ்விதமாக வுரைத்த அவனது கடும்வசனங்களை வீரபாகுகேட்டுக்(45) கொஞ்சம் புன்னகைப்புற்ற வராகி யப்போதவ்வியாளி முகனை நோக்கி வசனமுரைத்ததாவது:—"அடா! நீயோ ஆயிரமுகங்களோடு மிரண்டாயிரம் புயங்களோடும் (46) பயங்கரனாக விருக்கின்றாய். நா மொரேமுகத்தோடு விளங்குகின்றோம். வெகு சௌரியத்தையுடைய நீ செய்யக் கூடுமானதை யெல்லாமிங்கு யுத்தத்தில்செய்"யென்றனர். (47) அப்போதவ் வசுரனுடைய கொடிய சேனைக ளவ்வாறுரைத்த வீரபாகுவைக்குறிப்பிட்டு க்கூர்மைபொருந்திய சஸ்திரங்களைத் துரிதத்தில் மிகுதியாகச் சொரிந்தார்கள். (48) பிற கத்தேஜோவா னவ்வெல்லாவற்றையுமுடனைக் குடனாகவே கத்தியினாற் சேதித்துவிட்டனர். அதன் மேல் யாளிமுகன் வெகுகோப முற்றவனாகி யவரைத்தனதாயிரம் கைகளா (49) லவரது கற்பாறைபோன்ற கெட்டியான மார்பின்மீதறைய, அவரக்ஷணத்திலே யவனதக் கைகளைக் கத்தியால் துண்டித்துவிட்டனர். (50) ஓ! பிராம்மணர்களே! பிறகவன் மிகக்கொரமான மற்றக் கைகளால் மகா வுன்னதமான பல மலைகளைப்பிடுங்கி வீரபாகுவின் திருமேனிமீதெறிந்தான். (51) அவைகளெல்லா மவர்மீது பட்டமாத்திரத்தில் பொடிப்பொடியாகிவிட்டன. அப்போது வீரபாகு அவ்வாயிரம் கைகளையும்சேதித்து (52) இன்னுமவ்வசுரனு லவரைக்கட்டுவதற்காக நீட்டப்பட்ட வாயிரம் துதிக்கைகளையும் கத்தியினாற் கண்டனம்செய்து அவைகளையங்கு பூமிமுழுதும் பரத்தினர். (53) மேலுமக்கணதிபரான வரங்குள்ள வசுரப்பூண்டுகளையெல்லாம் மலைமுதலியவற்று லதம்பண்ணிவிட்டுச் சமுத்திரத்தைத்தாண்டி கந்தமாதனகிரியடைந்து (54) ஸ்ரீ

கந்தபிரான் வாசம்செய்கின்ற ஜாஜுவலியமானமாகிய திருச்செந்தூருக்கு வந்தனர்; நாட்டியக்காரன் வேஷம்மாறுவதுபோ லோர்க்ஷணத்துக்குள் தன்சுவயவுருவத்தைக் கொண்டவராயினர். (55) அப்போதங்குள்ள மகா பராக்கிரமசாலிகளான விலக்ஷத்தெட்டு கணங்களும் பிரம்மன் விஷ்ணுமுதலிய சகலதேவர்களு மிந்திரனோடுகூட அங்குவாலுற்ற மகாத்துமாவான வீரபாகுவைக் கண்டமாத்திரத்திலுடனே ($56\frac{1}{2}$) யவனை நமஸ்காரம்பண்ணி பல துதிகளால் துதித்தஞ்சலிகொண்டவர்களாகி நின்றார்கள். அப்போது (57) வீரபாகுவு மவ்வெல்லோர்களுடனும்ஸம்பாஷணைசெய்தவ்வொவ்வொருவரையும் கட்டியணைத்துக்கொண்டதன்பேரி லவ்வெல்லோர்களுக்கு மதிலும் விசேஷமாயிந்திரனுக்கும் சகல விருத்தாந்தங்களையு முரைத்து (58) அப்போதவ்வெல்லோர்களாலும் பின்தொடரப்பட்டவராகி ஸ்ரீ கந்தபிரான் திருமாளிகைக்குவந்தங்குதேவசைனியங்களுக்கு ரக்ஷகரும், பரமாத்துமாவுமாகிய ஸ்ரீ குகமூர்த்தியைத்தரிசித்து (59) மிகுந்தபக்தியுடனவரை நமஸ்கரித்து அனேகமனேகம் துதிகளால் தோத்திரம்பண்ணி மிகுந்தவணக்கத்துடன் கைகளைக்கட்டிக்கொண்டுசன்னிதியில் நின்றனர். (60) அப்போது ஸ்ரீ கந்தபிரான் கட்டளையிட்டதின்பேரில் வீரபாகு தான் போய்வந்த விருத்தாந்தங்களைச் சன்னிதானத்திலறிவித்துக் கொண்டனர்:— "ஓ! சுவாமீ! தேவரீரால் திருவாக்கருளப்பட்டபடியே அடியேனசுரனுக் கறிவித்து (61) மவனதற்குச் செவிகொடாமல் தேவரீர் கட்டளையை மறுதளித்துவிட்டதோடு ஓ பிரபுவே! அவனெந்தனைக் கொல்வதற்காகவும் சிலவசுரர்களைத்திட்டமிட்டான். (62) அதன்பேரில் யான் தேவரீரது கிருபாவசத்தினு லவ்வசுரர்களை ஹநம்செய்துவிட்டுப் பிறகு திரும்பியிங்கு சன்னிதானத்துக்கு வந்தேன்." என்றிவ்விதமாக வுரைத்து வினயத்தோடு வணக்கமாய் நின்ற அவ்வீரபாகுவை நோக்கி ஸ்ரீ ஷண்முகனப்போது திருவாய்மலர்ந்தருளியதாவது:— (63) "கேளாயெமதன்புள்ள பக்தனே! எம்விஷயத்தில் நீ மிகுந்த பிரயாசையெடுத்துக்கொண்டபடியால் மிகவுமாயாசமுடையவனாக விருக்கின்றாய்" என்றதுமுதலான பலவுபசாரவசனங்களை யருளிவிட்டுப்பிறகு ஸ்ரீ முருகன் பிரம்மா, விஷ்ணு இந்திரன்முதலிய தேவர்களைநோக்கிச் சடிதியிலுரைத்ததாவது;— "கேளீர் விஷ்ணுமுதலிய தேவர்களே! அவ்வசுரன் நமதுகட்டளைக்குட்படாதபடியால் (65) நீங்கள் பார்த்துக்கொண் டிருக்கும்போதே யிச்சூரபத்துமனை யவனது பந்துவர்க்கங்களுடன் நாளைத்தினமே சமுகரித்துவிடுகின்றோம்" என்றனர். (66) ஓ சௌனகாதி முனிவர்களே! இ

வ்விதமாக ஸ்ரீ பிரபுவால் திருவாக்கருளப்பட்ட வசனத்தைஸ்ரீ விஷ்ணு முதலிய தேவச்சிரேஷ்ட ரெல்லோர்களும் கேட்டு மிகுந்த வானந்தமடைந்தார்கள். (67) ஓ! புண்ணியமானது மேலுக்குமேல் விருத்தியடையப்பெற்ற முனீந்திரர்களே! முக்கிய வசுரரெல்லோர்களையும் துவம்சம்பண்ணலுற்ற வீரபாகுவின் சரித்திரம் முழுமையுமிப்போதுங்களுக்கிவ்விதமாக வுரைத்தனம். மேலும் யாம் சொல்லுகின்ற பின்னுமுள்ள விருத்தாந்தங்களையும் மிகுந்த கவனத்துடன் கேட்பீர்களாக. (68)

ஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## வீரமாகேந்திரகாண்டம் சு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு சூரன் தன் புத்திரன் மாணமடைந்ததைக் கேட்டு அஸுரர்களோடும் பத்துமகோமளையென்ற பட்டஸ்திரீயோடும் மற்றுமுள்ள ஸ்திரீகளோடும் மிகவும் துக்கப்பட்டனன். (1) அப்போ தவனது மந்திரியாகிய மகா புத்திசாலியான தருமகோபனென்றவன் மிகவும் துயாமுற்றவச் சூரனிடம்வந்து சில வசனங்களைக்கொண்டு சீக்கிரத்தில் ஸமாதானப்படுத்தினன். (2) "ஓ! மகா பராக்கிரமசாலியான வரசனே! தேவரீர் ஐசுவரியம், கீர்த்தி, புத்தி, தைரியம், சௌரியம், பராக்கிரமம் இவைகளுக்கெல்லா மிருப்பிடமும், ஸகலதந்திரங்களையு மறிந்தவரு மல்லவோ! (3) ஓ! ஸ்வாமீ! கேவலமோர் மூடனைப்போல் யாதுநிமித்தமிப்போது விசனப்படுகின்றீர்? ஓ! பிரபுவே! இப்பேர்க்கொத்த வும்மைப் பிரம்மாதிதேவரெல்லாங்கண்டு (4) நகையார்களா? ஆகையால் இப்போது தேவரீர் சோகத்தைவிட்டுவிடல்வேண்டும். யாவனோ ஓ ரற்பனுடைய தூதனுலிவ்வாறு செய்யப்பட்டதை நினைத்துத் துக்கம்பாராட்டுவது எங்ஙனம் தகும்? (5) இம்மைந்தனுக் கேற்பட்ட வாழ்நாளினளவு இவ்வளவுதானிருந்தது; இல்லையாகில் ஸகல சத்துருக்களையும் சமுகரிக்கலுற்ற விம்மைந்தனோ ரற்பத்தூதனுலெவ்வாறு கொல்லப்படலாவான்?" (6) என்றிவ்வாறெல்லாம் பலவிதமாக வத்தருமகோபனுலுரைக்கப்பட்ட தன்மேல் சூரபத்துமன் துரிதமாகப் பக்கத்திலிருந்தவர்களை நோக்கி "அத்தூதனிப்போதிருக்கின்றுனே அல்லதுசென்றுவிட்டானே" வென, கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்போதவர்கள் 'அவன்போய்விட்டா' னென்றதைக்கேட்டு, பிறகப்பலவாறு

ன சூரனேர் தூதனை நோக்கி "அடா! பிரம்மனை யிங்கழைத்துவா" வென, (8) அத்தூதனெங்கு மோடிச்சென்று பார்த்ததி லப்பிரம்மன் ஸகல தேவர்களுடனும் ஸ்ரீ முருகனருகிலிருப்பதைக்கண்டு, பிறகு திரும்பிவந்து செய்தியை யுள்ளபடியுரைக்க, (9) சூரபத்துமனு மத்தூதன் வசனத்தைச் செவியுற்று, அப்போது மனதில் பிரம்மாதி ஸகல தேவர்களையும் கோபித்துக்கொண்டு (10) உடனே மற்றோரண்டத்துக் கதிபாான பிரம்மனை * யழைப்பித்துத் தூதன்முகமா யவனை நோக்கி "ஓ! பிரம்மனே! நம்நகரத்தை முன்னிருந்ததுபோற் செய்துவி" டென, உடனே யப்பிரம்மன் முன்னிருந்தபடியே ($11\frac{1}{2}$) நகரத்தைச் சடிதியிற் சீர்திருத்திவிட்டுப் பிறகு சூரனிடம் செல்ல, (12) பிறகு சூரனுமவனை வெகுமானத்துடன் தனது தூதர்களோடுகூட அவரது சுய அண்டத்துக்குச் செல்லும்படி யனுப்பினன். அப்போதுடனே (13) அத்தூதர்கள் பிரம்மனை யிப்பிரம்மாண்டத்திற்கு வெளியிற்கொண்டுவிட, பிறகவர் சென்றுவிட்டனர்.

முந்தி (சம்பவகாண்டம்47-வது அத்தியாயத்திற்கூறிய)அனுப்பப்பட்டவேவுகாரரெல்லோர்களு மிப்போதிங்கு வந்துசேர்ந்து (14)சிங்காதனத்தில் வீற்றிருக்கும் சூரனிடத்து விநயத்துட னறிவித்துக்கொண்டதாவது:—"ஓ! நாதனே! தேவரீர் கட்டளையின்படி யாங்கள்சென்றெல்லாவற்றையு மறிந்துகொண் டிங்குவரலானேம். (15) ஸ்ரீ பரமேசுவரனது திருமேனியினின்றுண்டான கந்தபிரான் திருச்செந்தூரின்கண், மகா பலிஷ்டர்களான விரண்டாயிரம் வாகினிபூதசேனைகள், மகா பராக்கிரமசாலிகளான நூற்றெட்டுச் சேனதிபதிகள், அளவற்ற சக்தியுடைய விலக்ஷத்தொன்பது வீரர்கள் இவர்களாற் சூழப்பட்டவராகி நமது தாரகாசுரனையும் கொன்றுவிட்டு, பணிவிடைசெய்வதிலே முயன்ற மனதையுடைய பிரம்மன் விஷ்ணு முதலிய ஸகல தேவர்களாலும் ஸேவிக்கப்பட்டவராகி மிகுந்த பேரொளியால் விளங்கியவராக வெழுந்தருளியிருக்கின்றார். ($18\frac{1}{2}$) அவர் மகா பலவானன வீரபாகுவைத்

---

* இதனல் அனேககோடி பிரம்மாண்டங்களில் ஒவ்வோரண்டத்துக்கும், சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரங்களாகிய 3.வித அதிகாரங்களையும் நடத்திவருவதற்காக வெவ்வேறு பிரம்மன், விஷ்ணு, ருத்திரர்களுண்டென்பதும், ஸச்சிதாநந்த பரப்பிரம்ம மூர்த்தியாகிய ஸ்ரீ பரமேசுவரனே ஸகல பிரம்மாண்டங்களுக்கும் பொதுவான மூலகாரணப் பொருளென்பதும் தெளிவாகின்றதை யறிக.

தேவரீரண்டைக்கனுப்பி, (19) பிறகு திரும்பிவந்த அவ்வீரபாகுவாலி லங்கைக்கதிபரான மகாசுரனுகிய யாளிமுகன் மாண்டுவிட்டதையும், மிகச் சிறப்பான அவ்விலங்கையு மவனுற் கொளுத்திவிடப்பட்டதையும், மற்றுமுள்ள தேவரீர் பலம் விருத்தாந்தம் முதலிய வெல்லாவற்றையும் திருவுளங்கொண்டு சிவன் செல்வரான (21) அக்கந்தபிரான் கடுஞ்சினங் கொண்டு யுத்தம் நடத்தத் தீர்மானித்தவராகிப் பிரம்மன் முதலிய தேவர்களை நோக்கி "ஓ! தேவர்களே! நாளைத்தினமே அசுரனேடு போர் தொடுக்கின்றோம்" (22) என, அதனுல் மிகுந்த சந்தோஷமடைந்த தேவர்களால் மிகவும் சேவிக்கப்பட்டவராகி யங்கு துலங்க விளங்கி நிற்கின்றார்." என்று தூதர்களுரைத்த வசனத்தைக் கேட்டுக் கேளீர்! சௌனகாதி முனிவர்களே! சூரபத்துமன் (23) தன்மைந்தர்கள், சிங்கமுகன், சேனுதிபதிகள், மர்மங்களறிந்த மந்திரிகள் இவர்களையெல்லாம் துரிதத்தி லழைப்பித்து (24) அவர்கள் வந்ததன் மேலவர்களைநோக்கி மிக வாலோசனைகொண்டவனுகி வசனமுரைத்ததாவது:—"ஓ! தம்பி, மைந்தர்கள் முதலிய நீங்களெல்லோர்களும் கவனமாகக் கேளீர்கள்! (25) பிரம்மன் விஷ்ணு முதலிய வெல்லாத் தேவர்களும் ஸ்ரீ மகேசுவரன் சன்னிதிக்குச் சென்று ஓ! ஜகதீசா! சூரபத்தும னித்தேவர்களுக்குக் கடுமையான கொடுமை யளிக்கின்றான்.(26) ஆகையாலிப்போது தேவரீரவ்வெங்களைக் காத்தருளல்வேண்டு" மென் றத்தேவர்கள் முறையிட்டுக்கொண்டார்களாம். பிறகப்பகவானு மவ்வசனத்தைக்கேட் (27) டுடனே குமாரனை யுற்பத்திபண்ணி யவனுக்கு மிகுந்த சேனுவங்களையும்சேர்த்துவிட்டவ் விளைஞனை யனுப்ப,(28) பிறகவனும் நாளைத்தினமே நம்மோடு சண்டைசெய்ய நிச்சயம்கொண்டவனுகிக் கோமுறைப்பதையே தொழிலாகக்கொண்ட பிரம்மன் விஷ்ணு இந்திரன் முதலான தேவர்களுடனிப்போது திருச்செந்தூரில் வந்திருக்கின்றனும்; (29½) அப்பையலானவன் தாரகனைக் கொன்றபோதே (30) யாமவனைக் கொன்றுவிடுவதற்காகச் சைனியங்களுடன் புறப்பட்டனம். ஆனுலுலகின்மீது 'சூரபத்துமன்கூட வோரிளம்பையலைச் சண்டைசெய்து வெளிக்கிளம்பலாயின' னென்ற அவதூறு (31) நேரிடலாகுமென்றெண்ணித் திரும்பிவரலானேம். ஆகிலுமிப்போது நீங்களினி நடத்தவேண்டிய காரியமின்னதென் றெமக்கெடுத் துரைப்பீர்களாக" வென்றுகூறி யவனேய்ந்தவுடன் கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போது மயூரனென்ற மந்திரி யுரைக்கின்றான்:— (32½) "ஓ!

கோ! சுவாமீ! நமது தாரகனைக்கூடக் கொன்றுவிட்டவனைச் சகல முமறிந்த தேவரீர்கூட என்ன! ஓர் பாலனென்றெண்ணினீர்கள். மே லும் ஓ! பிரபுவே! நமது வஜ்ஜிரபாகுவுக்குக் காலாந்தகனுகத் தோன் றலான வவ்வீரபாகுவிடத்துத் தேவரீருக்கு யாது ஓர் தூதனென்ற பு த்தி! (34) தவிரவும் படைகள் நெருங்கி வந்திருக்குமளவில் தேவரீரு க்கேது இப்பேர்க்கொத்தபுத்தி? நல்லது! வளர்த்துவதில் யாதுபயன்? இப்போது யுத்தத்திற்குச் சன்னத்தமாவதுதான் நலமென்றெனது யோ சனை." (35) என்றுரைத்து ஆலோசனையிற் சிறந்தோனுன மயூரனே ய்ந்தனன். அதன்பிறகு துர்க்குணனென்றவன் சூரனைநோக்கிச் சொல்லு கின்றுன்:—(36)"ஓ! பிரபுவே! அப்பையனும் பூதசேனையும் தேவரீரால் சட்டைசெய்யப்படத்தக்கதல்ல. சேனைத்தலைவர்களையனுப்பி யச்சிறு வனைச் சைனியங்களோடு வெற்றிகொள்ளல் வேண்டும்" (37) என, அவனது வசனத்தைக் கேட்டுத் தருமகோபன் துரிதமாகக் கூறியதா வது:— "ஓ சுவாமீ! தேவரீரது மைந்தர்களில் ஹிரணியன், அக்கினிமு கன் இவ்விருவர்களி (38) லொருவருக்குக்கூடவச் சிறுவன் வீரியப ராக்கிரமங்களில் போதுமானவனல்லர். ஆனுல் தாரக னேர் சிறியோ னுகியதால்தா னவனது அஸ்திரங்களுக்குப் பதிலஸ்திரங்களைப் பிரயோ கிக்கமாட்டாம லவனுற் கொல்லப்படலானுனென்பது ஸத்தியம். (39½) கிரௌஞ்சமலையு மகஸ்தியமுனிவரின் சாபக்கூறினுல் தானவனுற் பிளக் கப்படலாயிற்று. (40) வாலிபனுன நமது வஜ்ஜிரபாகுவுக்குச் சமயத் திலிரதம் வில்லம்புகள் கைக்குக்கிட்டாதபடியா லவனதுதூதனுற்கொல் லப்பட்டனன். (41) ஆகையாலிப்போது சேனுபதியைக் கட்டளையிட் டனுப்பி விஷ்ணுமுதலிய தேவர்களோடச் சிறுவனை வெற்றிபெறவே ண்டும்" (42) என்றுரைத் தவனேய்ந்தபோது பிறகு காலஜித்தென்ற வன் சொல்லுகின்றுன்:— "ஓ அசுரோத்தமா! தேவரீர்முந்தி விஷ்ணு பிரம்மன்முதலிய தேவோத்தமரொல்லோர்களையும் வெற்றிகொண்டிருக் கிறீர். (43) அப்போது இவ்வித ஆலோசனைக ளொன்றுமில்லாதிருக் கையி லிப்போதுமட்டிலென்ன வந்தது? ஆ! ஆ! மிகவும் கஷ்டம். ந ல்லது! இப்போது சீக்கிரத்தில் ஜயம்பெறுவதற்காகச் சேனையை யனுப் புங்கள். (44) அல்லது தேவரீர் கட்டளையின்படி யானுகிலும் சீக்கிர மாகப் புறப்படுகின்றேன்!" என்றனன். அவ்வசனத்தைக்கேட்டுச் சு ண்டனென்றவன் அசுரராஜனைநோக்கி யுரைக்கின்றதாவது:— (45) "ஓ சுவாமி! அப்பையலையாவது அல்லதப் பூதசேனைகளையாவது கெலிப் பதற்காகத் தேவரீரைப்போலொத்த மகாசுரர்கள்கூட இப்போது மனங்

கவலைப்படலானது யாதுகாரணம்? (46) இதோ! யானிப்போதே சென்ற வனுக்குத் துணையாக வந்திருப்பவர்களையு மவனோடு ஜயித் தச்சிறுவனை த் தடையின்றி யிங்குகொண்டுவருகின்றே" னென்றான். (47) அப் போதளவற்ற பராக்கிரமத்தையுடைய அனலனென்றவனு மிவ்வாறு ரைக்கின்றான்;— "ஓ சுவாமீ! இப்போதே யான்சென்று தடையின்றி த் தேவரெல்லோர்களையும் முறியடித்து வருகின்றே" னென்றனன். (48) அதன்பிறகு மந்திரிகளில் முந்தினவனான சிங்கனாசனைநோக்கி வசனமு ரைத்ததாவது;— "ஓ அசுரேசுவரா! இந்திரனுக்குத் துணையாகவந்தவிக் குழவியைச் சயிப்பதற்குக்கூட வென்னவிங்கு கவலைப்படுகின்றீர்? அ ண்டத்திலுண்டான வகண்டமானவர்களும் திரண்டண்டிவந்தபோதிலு ம் (50) அவர்களோடவனையும் வெற்றிகொண்டே தேவரீர்முன்னர் தி ரும்பிவருகின்றேன். ஓ பிரபுவே! இப்போதே யெனக்குக் கட்டளைய ருளல் வேண்டும்" என்றனன். (51) அப்போது சேனாதிபதிகளோடு சகலமந்திரிகளு மிதேவிதமாகச் சூரனிடத்துரைத்தார்கள். பிற்பா டதி சாமர்த்தியமுள்ளவனான பானுகோபன் வசனமுரைக்கின்றான்:— (52) "ஓ சுவாமீ! உத்தமர்களான தாரகக்கிரௌஞ்சாசுரர்களிருவரு மெப்போ து கொல்லப்பட்டார்களோ அப்போதே யக்கந்தனெந்தனைக் கிளப்பி விட்டான். இப்போது யான் தேவரீரால் நியமிக்கப்பட வேண்டியதில் லை. (53) பல்முளையாதவப் பாலனிடத்துக்குத் தேவரீர் வேவுகாரரை க் கூடவனுப்பலானீர்; மேலும் தங்களுக்குள்ள வீரியபராக்கிரமங்களை த் தேவரீருண்மையி லறிந்தவராகவில்லை. (54) இங்கதிகமாகச் சொல் வதில் யாதுபயன்? ஓ! தந்தாய்! சீக்கிரத்திலெந்தனை யனுப்பவேண்டு ம்" என, அவனது வசனத்தைக் கேட்டதன்மேல் ஹிரணியனும் வசன ம் கூறுகின்றான்:—(55) "ஓ! தந்தாய்! ஜனங்களெல்லாம் "அஸுரே சுவரனான சூரபத்துமனோர் சிசுவோடு போர்புரிவதற்காக இவ்வளவா லோசித்தா"ரென்று பரிகாசம்பண்ணுவார்கள். (56) மேலுமிவ்வற்ப காரியத்துக்காக பானுகோபன் சென்றபோதிலும் மிகுந்த அபகீர்த்திக் கிடமாகுமென்பதிற் சந்தேகமேயில்லை. ஆகையால் தேவரீராக்கினை யின்படி யானேபோய்ச் சீக்கிரத்திலவனைச் சேனையோடுகூட முறியடித்

துவிட்டு இதோ! திரும்பிவருகின்றேன்" என்முன். ($57\frac{1}{2}$) பிற்பாடு க்கினிமுகன் சூரனைநோக்கிச் சமிதியி லுரைத்ததாவது:— (58) "ஓ! தந்தாய்! பாலர்களாகிய, நம்மிருவர்களுடைய சகோதரர்களுமப்பைய லாலும் தூதனாலும் கொல்லப்பட்டார்களல்லவா! ஆகையால் யான் செ ன்றவ்விருவர்களையு மவர்கள் சேனையோடு சத்தியமாகச் சீக்கிரத்தில் ச ம்கரித்துவிடுகின்றேன். (59) ஓ! அசுரேசுவரா! இல்லாவிடில் யான் தேவரீரண்டைக்குத் திரும்பிவருவதில்லை. யான் முந்திப்பாதாளலோ கத்திலுள்ள வரக்கர்களையெல்லாம் ஜயிக்கவில்லையா? (60) ஓ! கோ! தேவரீரெந்தன் பராக்கிரமத்தை யறியீரா? பிரம்மனுலெந்தனுக்களிக்க ப்பட்ட கவசம், தனுசு, (61) மகா கோரங்களாகிய மிகுந்த பலவாயுத ங்கள் இவையெல்லா மென்னிடத்திலிருக்கின்றன. ஆகையினால் ஓ! அ சுரேசுவரா! எந்தனைய்ப்போதே சண்டைக்காக நியமனம் செய்யலாவீர்" என்முன். (62) அப்போதவர்களெல்லா மொருவருக்கொருவ ரிவ்வாறு கூறிக்கொண்டிருக்கையில் பிறகு ஸகல அர்த்தங்களின் ஸாராமிசங்களையு ம் நன்கறிந்தவனான சிங்கமுகனவர்களது வசனங்களையெல்லாம் நன்று கக்கேட்டு, (63) சூரனைநோக்கி யுள்ளதத்துவங்களை யெடுத்துரைத்த தாவது:—"ஓ! அசுரேசுவரா! ஸ்ரீ சுப்பிரம்மணியரிடத்துமக்கேது சிசு வென்றபுத்தி? (64) தேவரீர் யாதொரு ஸ்ரீ மகேசுவர னிடமிருந்து வரனடைந்தீரோ! அவர்தானிவர். இவரது திருவாக்கினையின்படித் தான் ஸகல வண்டங்களுமுண்டாகி அப்படியே லயமடைகின்றன. (65) தே வரீரவராலருளப்பட்ட வைசுவரியங்களை யாண்டு ஸுகித்திப்போது மிக வும்கர்வம்கொண்டுவிட்டீர். இனிப் பிரம்மன், விஷ்ணு, இந்திரனிவர்களுக் கும் தீங்களித்து, இந்திரன்மைந்தனான ஜயந்தனையும் விட்டுவிடாவிட் டால் தேவரீர் தப்பப்போகின்றதில்லை. ($66\frac{1}{2}$) இவையெல்லாம் கேட் டுத்தான் பகவானாகிய ஸ்ரீ கந்தபிரா னவர்கள்மீதுள்ள கருணைவசத்தினு லிப்போது திருச்செந்தூருக் கெழுந்தருளி யிருக்கின்றார். மேலும் தேவரீரத் தூதனை யோர் பூதமென்று கருதுகின்றீர். ($67\frac{1}{2}$) மகா பலசாலியான அவ்வீரபாகு கணங்களில் ஸ்ரீ நந்திகேசுவரனினும் மேற் பட்டவர். (68) அம்மகாவீரனை நீர் நேரிலே நன்றாய்ப்பார்த்து மவரை

யறியவில்லையல்லவோ! தவிரவும் கேளீர்! அசுரேசுவரா! ஸ்ரீ பரமேசு வரனுலுமக்கருளப்பட்ட நூற்றெட்டியுக காலத்தினுயுளுமிப்போது செ ன்றுவிட்டது. (69½) மேலுமப்போ தவருமக்கு முடிவில் அவருடைய சக் தியினுல் மரணமென்று திருவாக்கருளியிருக்கின்றூர். (70) மிகுந்த சு ந்தரத் திருமேனியுடைய ஸ்ரீ குமாரஸ்வாமியானவர் சக்தியை (வேல்) த்தரித்துக்கொண்டிதோ விஜயமாகி யிருக்கின்றூர். ஓ! கோ! அஸாத் தியமானவையெல்லாம் முடிக்கலுற்ற ஸ்ரீ மகாதேவன் மாயையை யா னறியேன். (71) ஓ! அண்ணு! உமக்கேதிப்போதிப்பேர்கொத்த மிகுந்த கெடுதற்புத்திதோன்றி யிருக்கின்றது. இனிமேலாவது சிறைமீதிருக் கும் தேவர்களைவிட்டு (72) பயமன்றியில் ஸ்ரீ ஷண்முகன்சன்னிதிக்கு ச்சென்றவரைப் பலதடவை வந்தனித்தவரது புத்திமதிகளைக்கேட்டு இங்கோத்தியான வுமது பட்டணத்திலிருந்து வேண்டிய ஸுகங்களை ய னுபவித்து வாழ்வீர்" என்றனன். (73) அவன திவ்வாறு வசனங்களை க் கேட் டஸுரவரசன் மிகக் கோபத்தோ டுதடு துடிக்க விளங்கிய வனுகி யங்கமெல்லாம் வியர்வை பெருகி நனையலுற்று இரத்தவிழி களைச்சுழற்றிக்கொண்டு வசனமுரைத்ததாவது:— (74½) "அடா! மூ டா! நீநம்கிட்ட வெட்கம்கெட் டென்ன வார்த்தையுரைத்திட்டாய்! (75) யாவனே ஓர் வாலிபனையும் பூதங்களையு முயர்த்தி யுயர்த்திப் பேசுகின் றூய்; மேலும் ஓ! கோ! கோ! அடா! துர்புத்திகொண்டவனே! ஜயந்த ன் முதலியவர்களை விடுவித்தவனிடத்துப் போய் கும்பிட்டு நின் றவன் புத்தியையும் கேட்டுப்பிழைக்கச் சொன்னுயல்லவா! (76½) அடா! த விரவும் நூற்றெட்டு யுகங்களின் முடிவில் சீக்கிரமாக நமக்குச் சக்தியி னுல் மரணம் கிடைப்பதான வபாயமும் நேரிடுமென்று பொய்மொழியு ரைத்தாயல்லவா! ஆ! ஆ! மிகவும் கஷ்டம். (77½) அடா! நீ மாயையா லிப்படிப் பிதற்றுகின்றுயா? அல்லது நீ வேறு யாவனுவதா? அல்லது னக்குப் புத்திக்கேடா? (78) இல்லாவிடி லசுரேசுவரனுக்குள்ள வீரிய மிழக்கப்பட்டதா? அல்லது நமக்கு ஸ்ரீபரமேசுவரனுல் கிடைத்த வர ஸ்ரீ நீ யிப்போதறியவில்லையா? (79) நல்லது! இப்போது நீ நம்மண் டையைவிட் டெங்காகிலும் சடிதியிற் சென்றுவிடு" என்று மிகுந்த கர்

வத்தோ டுரைக்கப்பட்ட வச்சூரன் வசனத்தைக் கேட்டப்போது சிங்க முகன் (80) "ஓ! கோ! நம்மாலுரைக்கப்பட்ட வனுகூலவசனங்களை யிம்முட்புத்திக்காரன் கேட்கின்றானில்லை. விநோதமான வார்த்தைகளாவு லெடுத்துக்கொள்ளுகின்றான். ஆகையாலினி யிவனுக்குத்தக்க வசனங்களை யுரைப்போமாக" வென்றுமனமதில் நிச்சயித்துக்கொண்டு கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போதவன் வசனமுரைத்ததாவது:— (81) "ஓ! அசுரேசுவரா! என்னிடந்தனேகவித ஆயுதங்களிருக்கின்றன. தேவரீராக்கினையின்படி யானிப்போதே சென்று அப்பாலனையும் பூதங்களையும் நிச்சயமாக வென்றுவிட்டுத் தேவரீர் சன்னிதிக்குத் திரும்பி வருகின்றேன்." என்று நடுநடுங்கலுற்ற தேவக்கூட்டங்களாகிய யானைக்கூட்டங்களுக்குச் சிங்கம்போன்றவனான பயங்கரனாகிய வச் சிங்கமுக னுரைக்கலானான். (82)

ஆறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

வீரமாகேந்திரகாண்டம் எ—வது அத்தியாயத்தினர்த்தம்.

பின்புசூரபத்துமன் சிங்கமுகனதுவசனத் தைக்கேட்டதன் பேரில்மிகச்சந்தோஷங்கொண்டப்போதவனைநோக்கியுற்சாகத்துடன்வார்த்தையுரைத்ததாவது:— (1) "ஓ! தம்பீ! நீயிங்குண்மையில் நம்மனதைப்பரிசோதிப்பதற்காகவே யிவ்வாறுரைத்திட்டாய். நல்லது! கேவலமோர்வாலிபனைக்குறித்து நீசெல்வதுமிகவுமனுசிதம். (2) அவனொருக்காலிங்குவருவானாகி லப்போதுந்தனைச் சீக்கிரத்திலழைப் பிக்கின்றோம். ஆகையாலிப்போது நீயுனதுவிடுதிக்குச் செல்வாயாக" வெனவுரைத்தவனையனுப்பிவிட்டு (3) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அவ்வெல்லோர் களுடனுமந்தப்புரம்சென்றனன்.

பிறகு ஸ்ரீ ஆறுமுகப்பிரானு மவ்விரவு சென்றதின்மேற் காலையிலெழுந்து (4) பலபல விரத்தினங்களாற் சோபிக்கலுற்ற சிங்காதன

த்தின்மீ தெழுந்தருளி பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலிய ஸகல தேவர்களாலும் சுற்றிலும் ஸேவிக்கப்பட்டவராக (5) இலக்ஷத்தொன்பது பூதஸேனுதிபதிகளாற் சூழப்பட்டவராகி வீரபாகுவை நோக்கித் துரிதத்தில் திருவாக்கருளியதாவது:— (6) "கேளாய்! வீரபாகு! யுத்தத்துக்குச் செல்வதற்காக நீ யிப்போது துரிதத்தி ரதத்தைத் தருவிப்பா" யென, வீரபாகுவு மவரது திருவசனங் கேட்டதன்பேரில் மிகவும் தொரைகொண்டவராகி (7) வாயுதேவனிடத் தங்ஙனமே ஸ்ரீ கந்தபிரானது திருவாக்கின்படி யப்போதுரைக்க, உடனேவாயுவும் மிகவும் ஜுவலிக்கலுற்ற ரதத்தைக் கொண்டுவந்து (8) ஸ்ரீ ஷண்முகன் திருச்சன்னிதியில்நிறுத்த, பிறகுஸ்ரீகுஹபிரானும் இரதம்வந்து நிற்பதை வீரபாகு முகமாய்க் கேட்டதன்பேரில் (9) சிங்காதனத் தினின்றிறங்கி யோர்க்ஷணத்துக்குள் ளிரதத்தின் மீதெழுந்தருளினர். பின்பு தாரகனைவதைத்த அப்பிரபுவானவர் விஷ்ணு, பிரம்மன் முதலியதேவர்களை யவரவர் வாகனத்தின் மீதேறும்படி கட்டளையிட்டருளினர்.($10\frac{1}{2}$) அதன்மேலவ் வெல்லோர்களு மவரது கட்டளையின்படி வாகனங்கள் மீதுட்கார்ந்தனர்கள்.(12) பிரம்மனன்னத்தின்மீதும்,விஷ்ணு கருடன்மீதும், இந்திரன் விமானத்தின்மீதும்,படைத்தலைவரெல்லாம்சுந்தரமானரதங்கள்மீது முட்கார்ந்தனர்கள்.(13) இரண்டாயிரம் வாகினி பூதஸேனைகளும் பிரயாணப்பட்டன.அங்குதேவ துந்துபிகள்மிகுதியாகமுழக்கப்பட்டன. (14)அதேவிதமாக ஜல்லரி, காஹளம், மட்டு, டிண்டிமம், படஹம் முதலிய வாத்தியங்களெல்லா மூழிகாலக்கடலின் மிகுந்த வோசைக்கு மேற்கொண்டதாக முழங்கலாயின; (15) விபஞ்சி, பரிவாதினி, வல்லகி, உருத்திரம்முதலிய பற்பலவிதவீணைவாத்தியங்கள்வாசிக்கப்பட்டன; சங்கம், கொம்பு, சின்னம்இவைமுதலிய வாத்தியங்களெல்லாம் கோஷிக்கப் பட்டன. இனிமையான ஸ்வரங்களையுடைய(16) கின்னரர்கள், கந்தர்வர்கள், ஸித்தர்கள், வித்தியாதரர்கள், உரகர்கள், இவரெல்லாமப்போது ஸ்ரீதேவசேனுபதியாகியதேவனது வீராவளிகளை யெடுத்துப்பாடினூர்கள். (17) அங்கு கற்பகவிருக்ஷமலர்களின் மாரி மிகுதியாகப் பொழியலுற்றது. மேலும் நாரதர் தும்புரு இவ்விருவர்களும் ஸ்ரீபரமேசுவரனுடைய புதல்வனது பக்கங்களில் நின்று அப்பிரபுவினுடைய விருதாவளிகளை ஆர்ப்பாடம்செய்தார்கள். ($18\frac{1}{2}$) அப்போதெல்லோர்களும் புறப்பட்டு மிகுந்த வட்டகாசங்களுடன் கடற்கரைக்குச் சென்றபோது (19) தேர்கள், குதிரைகள், சைனியங்கள் இவைகளது கால்களால் கிளப்பிவிடப்பட்ட புழுதிகளெங்கும் பரவி கடலிற்சேர, பிறகக்கடல் முழுதும் சேறுகி, (20) அதன்மீது சைனியங்கள்

நடந்துசெல்லுகையி லதுகாயலாகி யங்கும் புழுதிகள் கிளம்பலுற்றன. ஸ்ரீ ஷண்முகனிவ்விதமாகச் சேனைகளோடு சமுத்திரத்தைக்கடந்து (21) வீரமாகேந்திரபுரத்தின் வடவாசலை யடுத்தவிடத்தை யடையும்போதே பிரம்மன், விஷ்ணு இருவர்களும் துரிதமாக (22) பிரபுசன்னிதியில் தண்டம்போல் பூமியில் விழுந்து தண்டனிட்டெழுந்து வணக்கத்தோடு நின்று அக்கந்தனுக் கறிவித்துக்கொண்டதாவது:— "ஓ! அடியார்களுக்கபயமளிக்கின்ற தேவாதிதேவா! ஜயாவிஜயீபவா! (23) ஓசுவாமீ! ஓ பிரபுவே! அம்மகா பாதகனுடைய பட்டணத்துக்குள் தேவரீர் விஜயமாவது தகுதியல்ல. இங்கிருந்தே யிவ்விடத்துக்கு வரலாகின்ற வப்பாதகனைக் கொல்வீர்க" (24) என, இவ்வாறாகத் தேவர்களால் வேண்டிக்கொள்ளப்பட்டவத் தேவசேனாபதியானவ ரப்போது விசுவகருமனை நோக்கி "இப்போதோர் நொடிக்குள் நமக்கோர் பட்டணத்தை யமைத்திடுவாயாக" (25) வென, அதுகேட்டு விசுவகருமனும் அனேக மண்டபங்களோடு கூடியதும், மிகுந்த கோபுரங்களால் விளங்கியதும் (26) பலவினோதங்களோடு கூடியதும், மத்தியில் ஸ்ரீ கந்தபிரானது சுந்தரத்திருமாளிகையா லலங்கரிக்கப்பட்டதும் பலபல வீதிகளிலுள்ள தெருக்களின் வரிசைகளாற் சூழப்பட்டதும் மிக நேர்த்தியானதுமான (27) மதிக்கத்தகாத ஹேமத்தினா (தங்கம்) லமைக்கப்பட்டதால் ஹேமகூடமென்று பெயர்கொண்ட வாச்சரியகரமான பட்டணத்தை யமைத்தனன். பிறகவன் தனது மாயாசக்தியினா லப்பட்டண மவ்வாறாக வமைக்கப்படலானதை யப்பிரபுவுக் கறிவிக்க, (28) ஸ்ரீ கந்தபிரானு மந்நகரத்தைத் திருக்கண்ணுற்று அச்சில்பியையும் மெச்சித்தமது திருமாளிகை வாசலுக்கருளி யிரதத்தினின் றிறங்கலுற்றனர். (29) அப்போது நூற்றெட்டு சேனாதிபதிகளிலெலாவ்வொருவருக்கும் தனித்தனியே விடுதி யேற்படுத்தினார். ஓ! சௌனகாதி முனிவர்களே! அவர்களின் பெயர்களை யெடுத்துரைக்கின்றேன் கேட்பீர்களாக; (30) சுப்பிரன், மேகமாலி, சுவேதசீர்ஷகான், பலவானான கபாலி, பெயரில்லாதவன் (31) சித்திராங்கன், ஜுவாலதாலு, வஜ்ஜிரன், பீமன், உக்கிரன், உக்கிரேபன், பிப்பலன், நந்திசேனன், பிரம்மஜன், (32) பிரம்மஸேனன், பத்துமகன், காளன், தண்டன், பத்திரகன், பரிகநேமி, மகானாகிய ஹுதவகன், பலவானான புஷ்பதந்தன், ருத்திரகன், அஹாரன், மதிஜித், கேதுமாலி, வக்திரன், பிரம்மகேசகன், (34) நதீபதி, கலிங்கன், கோரன், அச்சுதன், பலன், சாந்தன், சித்திரசேனன், பூரி, ஸுசீலகன், (35) மாஜயன், மானவான், ஸிம்மன், உத்தரஸிம்மகன், உபதிஷ்டன், ஜயேசன், மத்தகன், மதங்ககன், (36) சண்டி, மகாபலன், சேதன், நீலபத்திரன்,

ஸுபாஹுகன், அண்டாபரணசங்கன், காகபாதன், பிங்களன், (37) ஸுமாயன், மாயன், நிகும்பன், கும்பன், சங்கன், பாலகன், விசீகன், சத்துருதாஹு, (38) புத்திசாலியான ஹயக்கிரீவன், அயுதாக்ஷன், ஸஹஸ்ரபாகு, அநந்தன் (39) வாமன், மங்களகேசன், மகானுகிய சோமன், வஜ்ஜிரமாலி, சண்டன், பலிஷ்டனுன அச்சமுகன், (40) சரபன், கிரந்தன், அந்தகன், கபந்தன், மேகவிஜயன், வித்துருமன், சாலிகன், பிருசன், (41) மகா வீரர்களான தண்டனும் வியாக்கிரனும், கொடியோனுன காலபாசன், தசமுகன், குமுதன், பானு, (42) அத்திரி, அசுரகாலன், ஹரிகேசன், இரிடபவுருவம்கொண்ட தநஞ்சயன், (43) புத்திசாலியான சுசிமுகன், அநலகேசன், சுவக்திரன், மத்தன், உன்மத்தன், நந்தி, மனுேபவன், (44) மிகுந்த பராக்கிரமங்களையுடைய வாயுவேகன், ஸஹஸ்ரபாக், பானுகம்பன், பதங்கன், சுத்தன், அனீகன், (45) சீதன், சுநாதன், சுமாலி, மாலி, ஜுவாலாகேசன் ஆகிய நூற்றெட்டு சேனுதிபதிகளாகின்றுர்கள். (46) பிறகு பிரம்மன், விஷ்ணுமுதலிய சகல தேவர்களாலும் இலக்ஷத்தொன்பது வீரர்களாலும், (முந்தி மீனுருவம்கொண்டிருந்த) சிரேஷ்டர்களான முனிவர்களாலும் (47) சிரேஷ்டமான தோத்திரங்களால் துதிக்கப்பட்டவராகி ஸ்ரீபிரபுவானவர் தமது திருமாளிகைக்கருளி மிக வற்புதவுருவங்கொண்ட சிறந்த சிங்காதனத்தில் விஜயம் செய்தனர். (48)

அச்சமயத்தில் தேவரிஷியான ஸ்ரீ நாரதமுனிவர் துரிதமாகச் சூரனிடம் வந்து "கேளீர்! சூரபத்துமா! உங்களுக்குக் குருவாகிய சுக்கிராசாரிய ரெமக்கு மிகுந்த பிராணசிநேகிதராகின்றுர். (49) ஓ! அசுரேசுவரா! இப்போது கந்தனிங்கு 'யுத்தத்துக்காக வந்திருக்கின்றுர். அதையுமக்குச் சொல்வதற்காகவே யாமிங்கு வந்தோம். ஆகையால் நீர் கொஞ்சமேனு மஞ்சாமல் யுத்தம்செய்பலாவீர். (50) யாமுமக்கு ஜயமுண்டாக வேண்டுமென்று அரும்தவம்செய்கின்றேம்." என்றுரைத்துவிட்டு நாரதர் திரும்பிச் சென்றனர். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! (51) சூரனுமவ்வசனம் கேட்டு மிகுந்த கோபாவேசங்கொண்டவனுகி "இதிலென்னப் பிரயாஸை" யென்று சொல்லி கோரன், அகோரனென்ற இருவர்களையும் நோக்கி (52) "அடா! நீங்களிருவரும் போய்ச் சீக்கிரத்தில் சமுத்திரராஜனை நம்மண்டைக்குக் கொண்டுவாருங்க" ளென, அவர்களங்ஙனமே யோர்க்ஷணத்திலிட்டுவந்ததின் பேரில் (53) சூரன் சமுத்திரராஜனைப்பார்த்து "அடா சமுத்திரா! ஓ! கோகோ! நீ யச்சிறுவனேடுகூட பூதங்களையு மிங்கேன்விடலானுய்?"

(54) என, அதுகேட்டு ஸமுத்திரராஜன் "ஓ! அசுரேசுவரா! அப்பூத சேனைகளின் கால்புழுதிகளால் யான் தூர்ந்து காய்ந்துவிட்டபடியால் தேவதேவேசுவரனாகிய விப்பாலகுமாரனைத் தடைசெய்யத் திறமையற்றோனாயினேன்" என, சூரனுமவ்வசனங்கேட்டு (56) கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ ஷண்முகனைக் குறித்துள்ளத்தில் மிகுந்த கோபங்கொண்டனன். அச்சமயத்தில் தூதர்கள் ஸகல ஸங்கதிகளையு மறிந்தவனண்டைக் கோடிவந்து (57) சிங்காதனத்தில் வீற்றிருந்த சூரபத்துமனை நோக்கி வசனமுரைத்ததாவது:—"ஓ! ராஜனே! யாங்கள்மிகுந்த ஜாக்கிரதையோடு எல்லாஸங் கதிகளையும் பார்த்துவந்தோம். (58) கந்தன் பூதசேனைகளோடுகூடக் கடலையும் கடந்திங்குவந்துவிட்டனர். பார்ப்பதற் கிரமணீயமான விலங்காபுரியானது வீரபாகுவாலழிக்கப்பட்டிருப்பதையும் பார்த்துக்கொண்டு (59) கேளீர்! அசுரேசுவரா! இப்போது தேவரீர் பட்டணத்திய வடபாகத்தில் பலபல வாச்சரியங்களோடுகூடிய சிறந்த மற்றோர் நகரத்தையமைத்துக்கொண்டு (60) அத்தேவேசனான பாலகுமாரன் பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலியவர்களால்ஸேவிக்கப்பெற்றவராகி யிப்போது தேவரீரோடு போர்புரிவதற்குச் சன்னத்தமாயிருக்கின்றார்." (61) என, கேளீர்! முனிவர்களே! சூரபத்துமன், தூதரிவ்வாறாக வுரைத்தவசனத்தைக் கேட்டதில் கோபாக்கினியால் மிகவும் பற்றியெரிகின்றவன்போல் காணப்பட்டவனாகி (62) தூதர்களைக்கொண்டு தனது மைந்தனான பானுகோபனை யழைப்பித்தனன். பானுகோபனும் பல வாலிபர்களாற் சூழப்பட்டவனாகித் துரிதமாக (63) விரதத்தின்மீதேறிக்கொண்டு சூரனதரண்மனை வாசலுக்குவந்து சடிதியிலிரதத்தை விட்டிறங்கிச் சூரன்முன்னிலைக்குவந்து (64) அஸுரேசுவரனும் மகா பலவானுமான தந்தையை வந்தனிக்க, சூரனுமங்கு வந்து நின்ற மைந்தனைநோக்கி ஸங்கதிகளையுரைத்தனன். (65) அது கேட்டு பானுகோபனப்போதுரைத்ததாவது:— "ஓ! தந்தாய்! யானிப்போதேசென்று இவ்வெல்லோர்களையு மோர் நொடியில் வென்று(66) ஸகல ஸேனைகளோடு மச்சிறுவனைக்கட்டித் தேவரீர் முன்பாகக் கொண்டுவருகின்றேன்" என, சூரபத்துமன் மைந்தனாலவ்வா றுரைக்கப்பட்டதில் (67) மிகவும் ஸந்துஷ்டிகொண்டவனாகி யவ்வசுரேசுவர னவனை உயுத்தம் செய்வதற் கனுப்பலாயினன். (68)

வீரமாகேந்திரகாண்டம்


முற்றிற்று.

உ

சரவணபவன் துணை.

# உயுத்தகாண்டம்.

## முதலாவது அத்தியாயத்தி னர்த்தம்.

திருவாறுமுகங்களுந் திரண்டுநீண்ட பன்
னிருகையு மனாமலரேய்ந்த மூவறு
கருணையங்கண்களுங் கலாபமுங்—கதிர்
உருவமுமுடைய நன்குகனை யுள்குவாம்.

பிறகு பானுகோபனதேக்ஷணத்தி லிரதமேறித் தன்விடுதிசென்று வஜ்ஜிரம்போல் வலிமைகொண்ட கவசம்பூண்டு (1) அம்புராத்தூணியால் ரமணீயமான முதுகையுடையவனுகவும், கைதனிற்பற்றிய கத்தியினல் விளங்கியவனுகவும், பதனிட்ட தோலினு லமைத்த விரற்கூடுகளாலழகிய கைவிரல்களைக் கொண்டவனுகவும், (2) மணிக்கட்டுக்கு மேற்பட்ட கைகள்மீதணியப்பட்ட வுடும்புத்தோற் கவசத்தினுல் நேர்த்தியானவனும், ஆயிரத்தெட்டுமாற்றுருக்குத் தங்கஜரிகையால் விளங்கிய பீதாம்பரத்தையுடுத்தியவனுகவும், (3) வீரப்பட்டயத்தாலும் பற்பலவித வாபரணங்களாலு மலங்கரிக்கப்பட்டவனுகவும், தும்பைமலர்மாலை யணிந்ததால் மிகுந்த சுந்தரமுள்ளவனுகவும், (4) மிகுந்த ஸம்மோஹனுஸ்திரங்களைந் தரித்தவனுகவும், இடுப்புதனிற் கட்டிய கைக்கத்தியால் விளங்கியவனுகவும், முப்பதினுயிரம் குதிரைகள் கட்டப்பெற்ற வுன்னதமான விரதத்தின்கண் வீற்றிருந்தவனுகவும், (5) குடைகள் சாமரங்கள், கெண்டிகள், காளாஞ்சிகள் இவைகளைக் கைப்பற்றியவர்களாலும், வெற்றிலைப்பெட்டிகளைக் கைக்கொண்டவர்களாலும், இன்னும் மற்றனேகர்களாலும் ஸேவிக்கப்பட்டவனுகவும், (6) கத்தி கேடயங்களைத் தரித்த கொடியர்களான பலவசுரர்களா லருகினிற் சூழப்பெற்றவனுகவும், நிறைந்து வெளிப்பிதிங்கிய பல வஸ்திரங்களாற் சுமத்தப்பெற்ற கோடி கோடி யிரதங்களாற் பின்றொடரப்பெற்றவனுகவு (7)

முயுத்தத்துக்காகப் புறப்பட்டனன். பெருமைதங்கிய வச்சூரன் மகன் புறப்படும்போதே மிகுந்த பயங்கரமும் பராக்கிரமங்களும் பொருந்திய வனேகம் படைத்தலைவர்களும் வெளிக்கிளம்பினார்கள். (8) அவர்களோவென்றால்:—அன்னியர்களால் ஜயிக்கமாளாத விஜயன், மகாபலிஷ்டர்களான நேமிமாயன், முஸலி, கண்டகன், கரன், மகாபராக்கிரமசாலியான மூர்க்கன், (9) தசமுகன், முனிலாவன், மகாபலன், பிசண்டன், சண்டன், அஜமுகன், மகிஷன், உக்கிரபாகுகன், (10) விஷ்ணுஸேநன், விமோகன், விஜயஸேநன், ஸோமகன், மது, உச்சிஷ்டன், சசிஜித், சுசிவக்திரன், (11) சனி, சூன்னியகேது, அஸுரஸேனன் முதலியவர்களே. அதேவிதமாக இலக்ஷம் வாகினி சங்கியைகொண்ட வசுரர்களும், (12) அதேசங்கியைகொண்ட விரதகஜதுரகங்களும் துரிதமாகப் புறப்பட்டன. அப்போது மட்டு, துந்துபி முதலிய வாத்தியங்களினொலிகளும், (13) குதிரைகளின் கனைத்தல்களும், யானைகளின் பிளிறுதல்களும், இரதசக்கிரங்களின் க்ரீங்காரவோசைகளும், யானைமணிகளது நாதங்களும், (14) குதிரைகளது கழுத்தினிற்கட்டிய சதங்கைகளின் கிலுகிலுவொலிகளும், ஸேனைகளின் கூக்குரல்களும் சமுத்திரத்தின் பேரோசைக்கும் மேற்கொண்டதாயின. அப்போதுண்டான புழுதிகள் சூரியனண்டையிற் சூழ்ந்ததோடு(15) எல்லாத்திசைகளினும் மிகுதியாகச் சூழ்ந்து பரவலாயிற்று. (15½) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போதப்பானுகோபனும் சுவலிக்கலுற்ற பல கட்டியக்காரர்களா லருகினிற் சூழப்பட்டு வீராவளி விருதாவளிகளெல்லாம் கம்பீரத்துவனியோடு முறைகூறப்பெற்றவனாகிப் பிரளயகால சமுத்திரம் கரைபுரண்டு வருவதுபோன்ற சேனைகளோடு செல்லலுற்றனன். (17) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது பிரம்மன் மைந்தரான தேவமுனிவராகிய நாரதரிவற்றையெல்லா மறிந்துகொண்டு ஸூரியனை வெற்றிபெற்ற பராக்கிரமம்கொண்ட பானுகோப னுயுத்தத்திற்காகப் புறப்பட்டு விட்டசெய்தியை யுரைப்பதற்காகத் தேவக்கூட்டங்களாற் சூழப்பெற்ற ஸ்ரீ பார்வதிதேவியி னருமைத்திருமகனான முருகப்பிரானெதிரிற்சென்றனர்.(18)

முதலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் 2—வது அத்தியாயத்தினர்த்தம்.

நாரதமாமுனிவர் வந்தவுடன் ஸ்ரீ சுப்பிரம்மணியனை மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்துச் சிறந்த துதிகளால் தோத்திரம்பண்ணி நின் றப்போது வசனம்கூறியதாவது:—(1) "ஓ! சுவாமீ! தேவேசா! தேவரீரெல்லாவற்றையு மறிந்தவராயினும் ஓர் க்ஷணநேரம் தயவுசெய்து நானிப்போ தறிவித்துக்கொள்வதைக் கேட்டருளவேண்டும். (2) தேவரீரிங்கு விஜயமாகியிருப்பதை வலிமைகொண்ட சூரபத்துமனறிந்தவனாகி யிளமையிலே சூரியனைச் சயித்தோனென்று பெயர்போன பானுகோபனென்ற தனது மைந்தனைத் தேவரீரோடு யுத்தமாடுவதற்கனுப்ப, (3½) மகா மாயாவியும், மிக மயங்கவடிப்போனுமான வம்மைந்தனும் புறப்பட்டுவிட்டான். (4) அவன் பிரம்மன், விஷ்ணு, இயமன், வருணன் இவர்களையெல்லா முயுத்தத்தில்வென்று அவர்களது மற்றவாயுதங்களை விட்டுப் பிரம்மனுடைய பிரம்மாஸ்திரம், விஷ்ணுவின் சக்கிரம், வருணன் பாசம், இயமனது காலதண்டம் இவைகளையெல்லாம் வலிமையாற் பறித்துக் கொண்டனன். (5½) அப்பேர்க்கொத்த பாதகனை ஸ்ரீ பரமேசுவர னாக்கினையின்படி தேவரீரே வெற்றிபெறுவது தகுதியாகு" (6) மென, ஸ்ரீ பிரபுவு மவ்வசனத்தைக்கேட்டு மனாமலர்வதனத்தின்கண் மந்தஹாஸம் கொண்டவராகி "ஓ! முனிவரே! சரபத்தோடு சிங்கமும், சிங்கத்தோடு யானையும், (7) புலியோடு நரியுமெதிர்க்கவருவதுபோலவன்நம்மண்டைக்கு வருகின்றா"னென்றுரைத்துவிட்டுச் சீக்கிரத்திலக்கந்தபிரான் பக்கத்தில் நின்ற மகா பலசாலியான வொப்பற்ற பராக்கிரமம் கொண்ட மிகுந்த காம்பீரியமுடைய வீரபாகுவை நோக்கி "ஓ! வீரபாகுவே! நீ யிப்போதுடனே மகா வீரர்களான விலக்ஷத்தெட்டு வீரர்களுடனுமாயிரம் வாகினி சைனியங்களுடனும் சிறப்புற்றவனாக வித்துர்புத்திக்கார வசுரனுடைய பட்டணத்துக்கே சென் (10) றதை யரணிப்பாக முற்றுகை போட்டுக் கோட்டையைத் துரிதத்திலிடித்துத்தள்ளி மகா பயங்கரமாக வுயுத்தத்தை நடத்தியவ் வசுராதமர்களையும் நமதாக்கினையின்படி வெற்றிகொண்டு நம்மிடம் திரும்பிவருவாயாக" (11½) வென, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வீரபாகுவு மப்போதிவ்வாறுகப் பிரபுவால் திட்டமிடப்பட்டவுடன் (12) புறப்பட்டுச் செல்வதெப்படி யென்றால்:— மகா பயங்கரமுள்ளவரும் ஸகல வீரல

கூஷணங்களும் பொருந்தியமைந்தவரும் காதுகளிற் குண்டலம்பூண்டவரு ம் இடுப்புகளிற் கொண்ட தங்க அரைஞாணினால் விளங்கியவரும், (13) உயர்ந்த பத்துமாராகத்தின் மிகுந்த சோபையா லழகிய மோதிரங்களால் விளங்கிய விரல்களையுடையவரும், ஹாரம், கங்கணம், தோள்வளை, கிரீடம் இவைகளினொளியால் விளங்கலுற்றவரும், (14) இயமன்காலதண்டத்தைக்கொண்டதுபோ லோர் மகா பெரியகதாயுதத்தைக் கைதனிற் பற்றியவரும், மிகுந்த பாணங்களால் நிறைந்த வம்புராத்தூணிகளை யிருபின் பாரிசங்களிலும் கட்டியவரும், (15) ஸ்ரீ சங்கரன் பினாகமென்ற தனுசைப்பற்றியதுபோல் மிகவும் பெரியதான வில்லைத்தரித்தவரும், கத்தி, ஈட்டி, கைக்கத்தி, பட்டாக்கத்தி, தோமரம் முதலிய பல வாயுதங்களால்விளங்கியவரும், (16) மேருகிரி மந்தரகிரி கைலைகிரிகள்போன்ற மகாவுன்னதமான விரதத்தின்மீது வீற்றிருந்தவரும், சங்கம், காகளம், நிஸ்ஸாணம், படகம் முதலிய வாத்தியங்கள் மிக வாடம்பரத்தோ டொலிக்கப்பெற்றவரும், (17) பிரகாசமாக விளங்கிய விசிரப்படலுற்ற வெண்சாமரச் சோபையினு லலங்கரிக்கப் பெற்றவரும், ஓர் மலையானது அடர்ந்து வளர்ந்த மிகுந்த வாழைத்தோட்டத்தோடு விளங்குவதுபோல்மேகங்களைச் சீலைகளாற் றொட்லுற்ற பலதுவஜங்களால் விளங்கியவரும், (18½) பூர்ணிமைச் சந்திரனது மிகுந்த சோபையைக்கொண்ட முத்துக்குடைகள் பிடிக்கப்பெற்றவரும், (19) வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலியவற்றைக் கொண்டவர்களால் சூழப்பட்ட பாரிசபூமியையுடையவரும், தமது நேர்த்தியான பற்பல குணாதிசயங்களை யெடுத்து முறைகூறலுற்ற பல கட்டியக்காரர்களால் சூழப்பட்டவரு மாகப்புறப்பட்டுச் செல்லலுற்றனர். (20) அப்போது மகா பராக்கிரமத்தையுடைய வீரர்களும் படைத்தலைவர்களும் வீரபாகு இவ்வாறுகப் பிரயாணப்படுவதைக் கேட்டுத் தாங்களு மிரதங்கள்மீதேறிப் பிரயாணப்பட்டார்கள். (21) ஆயிரம்வாகினிபூதசேனைக் கூட்டங்களுமப்போது புறப்பட்டன. சேனைகள், குதிரைகள், இரதங்கள், வாத்தியங்கள்முதலியவற்றி னோசைகளும் காலடிப்புழுதிகளும் (22) இவ்வீரபாகு பிரயாணப்படலானதைச் சுருக்கினிலறிவிக்கச்செல்வதுபோல் முந்திப்பட்டணத்தி லெட்டிப்பரவலாயிற்று. படைகளிற் சில ரொருவரோடொருவர் கொம்மாளமிட்டு வட்டமாகச் சூழ்ந்து கிளம்பிக்கிளம்பி குதித்துக்கொண்டு வேக

மாயோடி (23) யிவ்வண்ணம் முந்திச்சென்றப் பட்டணத்திய வாசற் படியில் நிறைந்துநின் றடைத்துக்கொண்டார்கள். (24) பிற்பாடு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இச்சங்கதியைப் பானுகோபன் முந்தியே கேள்வியுற்று "இதோ இவனையோர் கொடியிற் கட்டி யிறுக்கி யசுரர்களாற் சூழப்பட்டவராகிச் சூராஜனண்டைக்கு யாம் சத்தியமாகக் கொண்டு சேர்க்கின்றோ" மென்றுரைத்து மிகுந்த கோபாவேசம் கொண்டவனாகி ($25\frac{1}{2}$) மகா ஆரவாரசத்தங்களோடு கூடிய வசுரர்களுடன் துரிதமாகப் பட்டணத்தினின்று புறப்பட்டனன். (26) பிறகசுரர்கள் பூதசேனையைப் பார்த்தபோது "ஓ! இவர்கள் முந்தி நம்மாற் பார்க்கப்பட்டவர்கள்தான்! இவர்களை வெல்வதிற் கடினம் யாது?" என்றெண்ணி யெக்களித்தார்கள். (27) அதுகேட்டு பூதசேனையும் மகா பயங்கரமாகச் சத்தமிட்டுக்கொண் டப்பாதகர்களை யெதிர்த்து மேலுக்குமேல் விழுந்து சென்றார்கள். (28) அதன்மேல் கொடியர்களான வசுரரெல்லோர்களும் பாணங்களையும் மற்ற வாயுதங்களையும் பூதசேனையின்மீது வருஷித்தார்கள். (29) ஓ! கோ! கேளீர்! முனிவர்களே! அப்போதச்சஸ்திரங்களாலடிபட்ட பூதப்படைகள் கால்கைகள் முறிந்து மிகவும் மூர்ச்சைகொண்டனர். (30) அதன்மேல் பூதங்கள் கோபம்கொண்டு யானைகளால் யானைகளையும் குதிரைகளால் குதிரைகளையு மடித்துக்கொன்று, இரதங்களாலே பலரதங்களை(31)யுமுடைத்துமிகுந்தகோபத்தோடிவ்வாறுகவே யசுரர்களையே பிடித்துச்சுழற்றி யசுரர்கள்மீதடிக்க, அப்போதனேகர் மாண்டார்கள். (32) அதுகண்டு பானுகோபனது சேனைத்தலைவர்களிற் சிறந்தவனான அனலனென்றவ னிரதத்தைத்துரிதமாக விரட்டிக்கொண்டு பூதக்காட்டுக்குட் புகுந்து (33) வில்லை நாணேறிட்டு பாணங்களை வருஷிக்கலாயினன். (34)

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் 3—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு பூதசேனைகள் பயந்து நான்குதிக்குகளிலும் சிதறுண்டோடலுற்றன. அவ்வனலன் பாணங்களாலடியுண்ட சில பூதங்கள்

மூர்ச்சை கொண்டன. (1) அப்போதப் பூதப்படைகளுக்குத் தலைவ னுன பெருமைதங்கிய ஸிம்மனென்பவன் ஊழிகாலத்தில் பிரஜைகளை மடிப்பதற்கியமன் காலதண்டத்தை யெடுப்பதுபோலோர்தண்டத்தை க் கைதனிலெடுத்துக்கொண்டு (2) எதிரியின் தேர்க்குதிரைகளையடித் துக் கொன்றுவிட்டனன். உடனே யனலனும் "நாமிப்போதிவனை ஜ யிக்காவிட்டாலினி போர்முனையில் வில்லெடுப்பதேயில்லை"யென்றுசப தம்பண்ணிக்கொண் டவன்மீது சரங்களைச் சொரிந்தனன். (3½) அப் போது சிம்மனுவென்றால் அச்சரப்பிரவாக மத்தியில் விழுந்தெதிராக நீந்திச்சென் (4) றவன ரதத்தின்மீது'சடிதியிலேறி யவன்வில்லைப் பிடுங்கி யெறிந்துவிட; பிறகனலனும் மகா பயங்கரமான வோர்தண்ட த்தை யெடுத்துக்கொண்டு வெகு தொளையோடுகூட(5) வஜ்ஜிரம்போற் கெட்டியான ஸிம்மனது சரீரத்தின்மீதடிக்க, உடனேயவன் கடும்சினம் கொண்டவனுகி யவ்வனலன் மார்பினில் கைமுட்டியினுல் தடலென்றி டித்துத் (6) தனதோர் கையினுலே யவனதிருகால்களையும் வளைத்துப் பிடித்துக் கரகரவென்றுசுற்றித் தரைமீதடிக்க, அவனப்போது நூறு துணுக்குகளாயினன். (7) பின்பவன் செத்தவுடன் சண்டனென்ற வோரசுரப்படைத்தலைவன் ஆயிரமாயிரங்களாகச் சரங்களை யவன்மீது சொரிந்துகொண்டு யானை சிங்கத்தோடெதிர்த்ததுபோல் துரிதமாகப் போர்முகத்தில் வந்தனன். (8) உடனே ஸிம்மனங்கு கிடக்கலான விற ந்துபோன வனலனது தண்டத்தைத் துரிதமாக வெடுத்துக்கிட்டத்தில் வந்தவச் சண்டன்மீது வேகத்தோடடிக்க, (9) மகா பலவானுன அவ்வ சுரேசனும் தனது தண்டத்தைக் கைப்பற்றி யியமன்போ லாக்கிரக ம் கொண்டவனுகி யச்சிம்மன்மீ தடித்தனன். (10) இவ்விதமாக வொ ருவருக்கொருவர்தண்டங்களா லடித்துக்கொண்டதி லிருவரும் மூர்ச்சை கொண்டு பூமியில் விழுந்தனர்கள். அதுகண்டு அசுரப்படைத்தலைவனுன மாயனும் பூதப்படைத்தலைவனுன நீலனும் துரிதமாகவுயுத்தகளத்தினுள் வந்ததில் நீலன் மாயன்மீது தனது தண்டத்தை யெறிய,(12) வேகத்தோ டடியுண்ட வசுரன் கொஞ்சநேரம் மூர்ச்சையாகிக் கிடந்துவிட்டு, பிறகு தெளிந்தெழுந்து தனது சூலாயுதத்தை நீலன்மீது பிரயோகித்தனன். (13) உடனே பூதசேனுதிபதியான நீலனுமவ்வாறே சற்று மூர்ச்சையா கிக்கிடந்து பிறகு தெளிந்தெழுந்தவுடன் மிக வாக்கிரகத்தோடு ஙகயி னுலவன் மார்பினிலறைந்து, (14) பிறகுடனே தனது கையாலவனதி ருகைகளையும் பின்கட்டுமாருகக் கட்டிப்பிடித்து மிகவும்கெட்டியான தன து பற்களாலவன் கழுத்தினிற் கடித்துப் பெருகிய விரத்தத்தையு முறி ஞ்சியவனைச் சாகச்செய்தான். பின்பு கேளீர்! சௌனகாதிமுனிவ

களே! முந்தி மூர்ச்சையாகி விழுந்த மகாபலசாலிகளான சண்டன், ஸிம்மனிருவர்களு மெழுந்து (16) பிறகு தடிகளையெடுத் தொருவனை யொருவரடித்துச் சண்டையிட்டுக்கொண் டதிலொவ்வொருவனும் மற்றவனடிப்பதைத் தன்தன் கோலினுல் மறுத்து மறுத்துத் தம்தம்மைக் காத்துக்கொண்டார்கள். (17) ஒருவன் மற்றவன் தலைமீதடிக்கக் கருதிக் காலைக்குறிப்பிடுவன் போலே மாற்றுவதை மற்றவன் சூதினை றிந்துகொண்டந்த அடியினின்று தப்பித்துக்கொண்டனன். (18) இங்ஙனமிருக்கையில் மகா பலசாலியான ஸிம்மன் தன் கோலைச் சுழற்றித் துரிதமாக மற்றவன் தடியையடித்துத் தூள்தூளாக்கிவிட்டான். (19) இங்ஙனமாகச் சண்டன் தண்டமிழந்தவனுயினும் தடியைக்கொண்ட ஸிம்மனோடுகூடத் தனது கையாலே யடித்தடித்துச்சண்டையிட்டான்.(20) அப்போது ஸிம்மன் வெகு கோபம் கொண்டவனுகித் தனது தண்டத்தினு லவன் கைமீதடிக்க வக்கையானது மாத்தினின்றோர் பெரியகிளை முறிந்து விழுவதுபோலொடிந்து பூமியில் விழலுற்றது. (21) அதன்மேற் சண்டனும் மகா பயங்கரமான வக்கையை யெடுத்து மிகுந்த கர்ஜனையோடவன் மார்பினிலடிக்க, (22) அவனும் மகா கொடியோனுன வப்போர்க்கொத்த சண்டனைக் காலினுலுதைத்தான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அதுகண்டு ஆகாயத்தில் சஞ்சரிக்கலுற்ற தேவரெல்லோர்களு மப்போது வசனமுரைத்ததாவது:— (23) "ஓ! ஓ! ஸிம்மனே! இவ்வசுரோத்தம னியமனைக்கூட ஜயித்தவனல்லவோ! ஆகையால் மகா பலவானும், மகா பாதகனுமான வித்துராத்துமாவைத் தொலைத்துவிடல் வேண்டும்" (24) என, அப்பூதத்தலைவனும் தேவர்களின் வசனத்தைக் கேட்டவுடன் சிங்கம் யானையை யறைவதுபோ லோங்கியவன் கன்னத்தின்மீ தோரறைவிட, (25) அசுரனவ்வறை தாங்காமல் நிலைவுதப்பி மண்ணில் விழலுற்றனன். ஆ! ஆ! அப்போ தியமதூதர்கள வன் பிராணனைக் கொண்டுபோவதற் கச்சங்கொள்ள (26) பிறகு ஸிம்மன் ஆக்கினைசெய்ததின்பேரில்தான் பிராணனைக் கொண்டுபோனுர்கள். அவனிவ்விதமாக யமலோகம் சென்றபிறகு பெருமைபொருந்திய அஜமுகனென்றவ (27) னப்போது ஸிம்மனைக்குறிப்பிட்டு மகா ஆரவாரத்தோடு வெளிக்கிளம்ப, உடனே மகா பலவானுன மதுயென்றவனவ்வாறு வருகின்றவனை யெதிர்த்துக்கொண்டான். (28) அப்போ தஜமுகனும் துரிதத்திலவன்மீதுமிகுந்தவம்புகளையெய்கையில் மதுவானவனவ்வம்புகளைச் சற்றேனும் பாராட்டாமல் முன்னிலிருந்த வோர்பெரியவாலமரத்தைப் (29) பிடுங்கிக்கொண்டுமிகுந்த சிங்கநாதத்தினுல் பூமியை நடுநடுங்கச் செய்து சடிதியாக வுயரக்கிளம்பிப் படேலென்றவனதி

தத்தின்மீது குதித்தனன். (30) அப்போதவ் வசுரனு மப்பெருஞ்சத் தத்தைக் கேட்டு மிகப்பயந்து கையிலிருந்த வில்லையும் நழுவவிட்டுத் தட்டுக்கெட்டு தடிபோன்றவுடல் வடவடவென்று நடுக்கங்கொண்டான். (31) அப்போது மதுவுமவ்வாறு பீதிகொண்ட வசுரனை நோக்கி "அடா! நீ சூராளியில்லாப் பயங்காளியாகின்றபடியா லிப்போதே திரும்பி யோட்டம்பிடித்துவிடு" (32) என்று கூறியவ னவ்வஜமுகனை யிரதத்தி னின்றிறக்கிவிட்டுத் தானுமாலமரத்தை யெறிந்துவிட்டுத் தன்கூடாரம் போகப்புறப்பட்டனன். (33) அவனிவ்வாறு செல்லுகையில் அசுரன் மிகுந்த துக்கத்தினால் பரவசங்கொண்டு "சீ! சீ! போர் முனையில் வலிமையோடெதிரியை வெல்லமுடியாத வெந்தன் ஜன்மமென்னஜன்மம்! (34) இப்படிக்கொத்தவன் பிழைத்திருப்பதைவிட சாவதே நல" மென்று மனதினில் யோஜித்துச் சண்டைசெய்வதாகவே தீர்மானித்துக் கொண்டு அவ்வசுரன் (35) 'அடா! உன்னைஜயிக்காமல் யானிருப்பதில்லை' யென்ற மிகுந்த கர்ஜனையோடு துரிதமாகமிகுதியான பாணங்களை வருஷித்துக்கொண் டவனை யதிவேகமாக வெதிர்த்தோடிவந்தான். (36) அதன்மேல் மகா வலிமைபொருந்திய மதுவும் திரும்பிவரலுற்ற அவ்வசுரனைக்கண்டு நகைத்து ஆயுதமேயின்றி கையினாலே யப்பாணங்களை யெல்லாம் பழுதாக்கிவிட்டு (37) இன்னுமடிக்கடி விடப்பட்ட பாணங்களையு மவ்வாறே செய்து பிறகப்போது மிகுந்த கோபத்தினால் கையினாலவனதிரதத்தை யவ்வசுரனோடுகூடச் செங்குத்தாக வெடுத்துச் சுழற்றிக் கடல்மீதெறிய, (38½) அசுரனப்போதே துரிதமாகப் பூமியிற் குதித்துக் (39) கைமுட்டியாலவன்மார்பின்மீ தோங்கிக் குத்தினன். பிறகு மதுவும் பரிகாயுதம்போல் விளங்கலுற்ற தன் கையினாலே யவ்வசுரனை, (40) இந்திரன் வஜ்ஜிராயுதத்தினால் மலையையடித்ததுபோலறைய, இவ்விதமாக மகா பலிஷ்டர்களான அவ்விருவருமொருவனையொருவன் மயிரோடு மயிர்பிடித்தும் கையோடு கைகலந்தும் சண்டைசெய்ததில் (41) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அஜவக்திரன் மது இவ்விருவர்களும் மல்லர் முறைப்படி பூமியில் விழுந்து பிறகெழுந்து மிகுதியாக வயுத்தம் செய்தார்கள். (42) இப்படியிருக்கையில் மதுவானவன் சண்டையிற் பூமியில் விழுந்தவன்போல் சூதாகத்தானே விழுந்துகொண்டெதிரியையும் தன்மீதேறவிட்டுத் தன்னிருகால்களாலு மவன் மார்பின்மீது செங்குத்தாக வுதைத்தவனை மேகமண்டலங்கிட்ட வெறி

ந்தனன். (43) பிறகசுரன் கீழே விழுந்தவுடன் துரிதத்திலெழுந்து கிட்டவந்து மிகுந்த கோபத்தோடு மார்புதட்டிப் (44) பிறகுடனே மாயையால் மறைந்தவனாகி ஜுவலிக்கலுற்ற விஷ்ணு சக்கிரத்தைப் பிரயோகிக்க, அச்சக்கிராயுதமு மெதிரியாயுதமற்றிருந்தது கண்டு உடனே திரும்பிவந்து, (45) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! தன்னை யெய்தவன் கழுத்தையேசடிதியிலறுத்துத்தள்ளிச் சென்றுவிட்டது. மகா பல்வானான வஸுரன் தன்னுயுதத்தாலே சாவுண்டபோது (46) அப்போதஸுரப்படைத்தலைவர்களெல்லோர்களு மொன்றுகூடிச் சடிதியில் வந்து பூதப்படைகள்மீது மிகுதியான பாணவருஷங்களைக் கர்ஜனையோடுகூடிய கோடைமேகங்கள் பெரியதாரையாக மாரிபொழிவதுபோல் நான்கு வாக்குகளிலும் கனதியாகப் பொழிந்தார்கள். ($47\frac{1}{2}$) பிறகப்போதசுரப்படைகள் மிகப் பயந்திங்கு மங்குமோடலாகையில் (48) மிகுதியான விலக்ஷம் வீரர்களில் சத்துருக்களைத் தண்டிப்போனன தண்டகனென்றவ னொண்டியாகவே சிறந்த மகாயுதங்களைக்கொண்டவனாகிச் சத்துருக்களையெதிர்த்து (49) வந்திடையன் மாடுகளையோட்டுவது போல்பாணங்களால்விரட்ட,அப்பாணவருஷங்களாலடிபட்டுஅனேகமசுரர்கள் மாண்டார்கள்.(50) சிலர் கால், கை, கவசம், மணிக்கட்டு முதலியவைகளை யிழந்தவர்களாகிச் செத்தவர்கள்போல் பூமியில்விழுந்து கண்களை யிறுக மூடிக்கொண்டு கிடக்கலானார்கள். (51) அதேவிதமாகச் சிலர் காது, தோள், மூக்கு, முதலியவைகளை யிழந்தவர்களாகி யோட்டம்பிடித்தார்கள். மேலுமப்போது கடலோசையொத்த மிகுந்த ஹாஹாகாரமுண்டாயிற்று. (52) அதுகண்டு பானுகோபன் மிகுந்த கோபாக்கினியால் ஜுவலிக்கலுற்றவனாகித் தனதுதடுகளை மடித்து மடித்துக் கடித்துக்கொண்டு வில்லைவளைத்தோர்கொடிக்குள் நாணேறிட்டு அவ்வசுரன் “ஓ! கோ! நாம் வீணி லசட்டையாயிருந்துவிட்ட ($53\frac{1}{2}$) நாலிரண்டாயிரம் வாகினி யசுரர்கள் மாண்டுவிட்டார்கள்.(54) மற்றவர்களு முறுப்புகளிழந்த வுடம்போடு நடுநடுங்கி யோடிவிட்டார்களே! ஆயிரம் வாகினியசுர சேனைகள்தான் மிகுதியிருக்கின்றார்கள். (55) ஆகையால் நாமேசென்றிவனைச் சைனியங்களோடு யுத்தத்தில் நிச்சயமாகச் சயிக்கின்றோம்; இல்லையாகில் யாம் சூரன் குமாரனல்லர்” என,

வுரைத்து, போர் முன்னர் மிகப்பயங்கரனாகிய வப்பானுகோபன் (56) தன் சாரதியைத் தேரைத் துரிதமாயோட்டும்படி யுத்திரவிட்டு வில்வி ன் மத்தியில் முஷ்டியாற்பிடித்து நாணைமீட்டிக் கோடைகாலத்தில் மே கக்கூட்டங்கள் கர்ஜிப்பதுபோல் மிகுதியாகட் டங்காரவோசைபண்ணி யக்கொடியோன் பூதப்படைமீதுச் சரமாரிசொரிந்தான். (58) அப் போதப்படைகளும் மகா ஆரவார சத்தங்களால் பயங்கரர்களாகி மரங் கள், மலைகள், பெரிதான கற்பாறைகள், மிகவும் கொடியதான வாயுதங் கள் இவைகளை (59) யெல்லாம் பானுகோபன் மீது துரிதத்திலெறிந் தார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவற்றையெல்லாம் ம கா பலவானான பானுகோபன் சடிதியில் (60) தீக்ஷணியமுள்ள கோ டி பாணங்களைக் கோபத்தோடுவிட்டுப் பொடிப்பொடியாக்கிப் பின்னு மவன் தனுசை மண்டலாகாரமாக வளைத்ததின்கண் ணனேககோடி பா ணங்களை யப்பூதப்படைமீது மிகவேகத்தோடு சந்தானிக்க ($61\frac{1}{2}$) அ வ்வாறவனால் விடப்பட்ட பாணங்கள் கருடன்களைப்போல் துரிதமாக (62) வெளிக்கிளம்பி பூதங்களின் கைகால் முதலிய வுறுப்புகளை யப் போது கண்டனம்பண்ணி மறுபடியு மட்டகாசம்செய்து நூறு, ஆயி ரக்கணக்குகளாக (63) தீக்ஷணியமுள்ள பாணங்களைக் கோடைகாலத் தில் மேகம் நீர்சொரிவதுபோல் வருஷிக்கையிலப்போது பூதப்படைக ளது தடிபோன்ற வுடல்கள் சின்னபின்னமாகலாகி (64) மிகப் பயந் தவர்களாக இரத்தவெள்ளத்தைப் பெருகவிட்டுக்கொண் டோட்டம்பி டித்தார்கள். அப்போதோடிய பூதங்களுக்கு நேரிட்ட வவமானத்தை ச் சீக்கிரத்திற்கண்டு (65) மகா பலசாலியான உக்கிரனென்பவன் பய ங்கரமான வோர் தண்டத்தைக் கைதனிற் சுழற்றி மிகுந்த சத்தமிட்டு க்கொண்டு மிக வேகத்தோடு யுத்தத்துக்குவந்தான். (69) அப்போதற் புதமான விக்கிரமத்தைக்கொண்ட பானுகோபனதி கர்வத்தோடு கர்ஜ னை பண்ணிக்கொண்டு பாணங்களைக் கோடிகோடிகளாக அவ்வுக்கிரன்மீ து பிரயோகிக்க, (67) உக்கிரனு மவற்றையெல்லாம் தன் தண்டத்தா லடித்துப் பழுதாக்கிவிட்டனன். பிறகசுரராஜனு மோர்தண்டத்தைத் துரிதமாயெடுத்து உக்கிரன்மீதெறிய, (68) அவனதையும் தன்தண்ட த்தாலடித்து வீணாக்கிவிட்டான். பின்னுமோவென்றால்:— மகா பல

வானுன அவ்வுக்கிரன் எதிரியாகிய பானுகோபனது தேர்க்குதிரைகளை யத்தேரோடுகூடத் தன்தண்டத்தினுல் தொம்சம்பண்ணி விட்டனன். (69) அசுரர்களாகிய விருள்திரள்களுக்குச் சூரியன்போன்ற மகா பல சாலியான வுக்கிரனுலிவ்வாருக இரதமானதுடைக்கப்பட்டபோது கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அசுரர்களிற் சிரேஷ்டனுன பானுகோபன் ஜுவலிக்கலுற்ற காந்தியுடைய மற்றோரிரதத்தில் துரிதமாக வேறிக்கொண்டு யுத்தகளத்துக்கு வந்தான். (70)

மூன்ருவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் 4—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பாடு பானுகோபன் மிகுந்த கோபத்தோடு கூர்மையுள்ள பல பாணங்களை விட்டெதிரியின் தண்டத்தைத் தூளாக்கிவிட்டுப் (1) பின்னும் கூர்மையுள்ள வெகுபாணங்களை யவன் மெய்தனில் வருஷித்தான் அவற்றை யெல்லா மவ்வுக்கிரன்கையாலே யடித்து வியர்த்தமாக்கிக்கொண்டு (2) பின்னு மப்பலவான் நதியை மீனெதிர்ப்பது போலச் சரப்பிரவாக வேகத்தை யெதிர்த்துச் சென்று பானுகோபனேடுகூட அவன திரத்தைச் செங்குத்தாகத்தூக்கிப் (3) போர்முன்னர் வெகு பயங்கரனுகவிருந்துகொண்டதைச் சூரியமண்டலம் தண்டவெறிந்ததி லவ்விரதத்தோடு வருகின்ற பானுகோபனைநோக்கிச் சூரியனப்போது மிகுந்த பீதியடைந்தனர். (4) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சூரியன் "ஐயோ! இதோ! பானுகோபன் வருகின்ருனே! யாமேதாகிலு மவனுக்கபாரதம் செய்தனமோ?" வென்று கலங்கிய மனதோடவனைக் கண்டபோதே (5) யவ்வசுரன் இரதமுடையப் பெற்றவனுகிப் பூமியில் விழுந்து மறுபடி சடிதியிலெழுந்து உக்கிரனது மார்பினிலோரறையறைந்து (6) அவன் கால்களை வாரிப்பிடித்தாகாயத்தினிலெறிய, அப்போதுக்கிரன் மிகுந்த வேகத்தோடு ஸத்தியலோக

ம்வரைக்கு மோர் நொடிக்குள் சென்று (7) அங்கு பிரம்மனாலருளப் பட்ட சக்தியும் சேரப்பெற்றவனாகி (புண்ணியலோகமடைந்த) ஸுகிரு திகளவாது ஸுகிருதத்தின் பயனை யனுபவித்தானவுடன் மண்ணுலகுக் குத் திரும்புவதுபோல் (8) திரும்பலாகி யோர் பெரிய மலைபோல் பூமியிற் பொத்தென்று விழுந்து மூர்ச்சையடைந்தனன். பிறகவன் விழுந்தவுடன் மகா வீரனான தண்டியென்பவனோர் பெரிய மலையைப் பிடுங்கி மிகுந்த கர்ஜனைசெய்துகொண்டு பானுகோபன்மீதெறிய, அ தையவ்வசுரனோர் நொடிக்குள்ளாயிரஞ் சரங்களைப்பிரயோகித்து நூறு துணுக்குகளாக்கிவிட்டனன். (10) பிறகத்தண்டியும் முன்னிலிருந்த வோர்பெரிய மாமரத்தைப் பிடுங்கி யிரதத்தின்மீதிருந்த அவனது சார திமீ தடித்தவனைக் கொன்றுவிட்டனன். (11) அதன்மேல் பானுகோப ன் கோபத்தினால் பற்றியெரிகின்றவன்போலாகி யோர்க்ஷணத்துக்கு ள் மேகம்போல் மிகவும் கர்ஜனைசெய்துகொண் டவனது நெற்றியின்மீ து தீக்ஷணியமுடைய பதினாயிரம் பாணங்களையப்போது வருஷிக்க, (12½) அப்பலவானுமச் சரங்களா லடியுண்டு பூமியில்விழுந்து மூர்ச் சைகொண்டான். (13) அவன்சாய்ந்துவிட்டதைப் பினாகியென்றவன றிந்து சீக்கிரமோடிவந்து மிகுந்த வலிமையோடு தன்துடைதட்டிக் கொண்டு கைகளைநீட்டி மலையைப் (14) பானுகோபன்மீ தெறிவதற் கெத்தனிக்கும்போதே கேளீர்! பிராம்மணோத்தமர்களே! போர்முன் னர் பயங்கரனானவவ்வசுரன் அதற்குமுந்தியே ஆயிரமஸ்திரங்களைத் து ரிதத்திலப் பினாகியினுடைய மார்பினிற் பிரயோகிக்க, (15½) அவ்வஸ் திரமெல்லாம் சடிதியிலவனது மார்பைப்பிளந்துகொண்டு வெளிச்செ ன்றன. (16) அப்போதப் பினாகியானவன் இந்திரனாலடியுண்ட மலை சாய்ந்ததுபோல் பூமியில் விழலாக, உடனே சகல பூதங்களும் ஸே னாதிபர்களு (17) மொன்றாகச் சேர்ந்து மலைகள், மரங்கள், குண்டுக் கற்கள், கதைகள் இவைகளையெல்லாம் கடலோசைக்குமேற்கொண்டமி குந்த பேரிரைத்தலோடு (18) வந்துபானுகோபன்மீதப்போது மிகவே கத்தோ டெறிந்தார்கள். உடனே மிகுந்த பலபராக்கிரமங்களைக் கொ ண்ட பானுகோபன் அனேக பாணங்களைத் தொடுத் தவையெ

ல்லாவற்றையும் துரிதமாகத் தறித்துப் பூமிதனிற்பரத்திவிட்டு (19½) மறுபடியும் பல வம்புகளைவிட் டவர்களையெல்லாம் விரட்டினன். (20) அதனால் சகலசைனியங்களு மோட்டமெடுக்கையில் மகாபலன், அகண்டன், உருத்திரன், தண்டாகன், நிரஞ்சனன், கபாலகன், (21) அண்டலோசனன் இவர்கள் முதலிய இலக்ஷம் வீரர்களுமப்போது வந்தனர்கள். மிகவுமழகிய மேனியுடையவர்களும், ஸகல வாபரணங்களாலு மலங்கரிக்கப்பட்டவர்களும், ஸகல லக்ஷணங்களும் பொருந்தியவர்களும், வில்வித்தைதனில் மிகுந்த தேர்ச்சிபெற்றவர்களுமான வவ்வீரர்களெல்லா (22½) மொரேகாலத்தில் விற்களை நாணேடிசைத்து (23) அவர்கள் தேர்ச்சியடைந்த முறைப்படி யெல்லோர்களுடைய துடைகளையும் நேர்வரிசையாகத் தேர்கள்மீது வைத்துக்கொண்டு மீட்டியதால் டங்காரவோசை யொலிக்கலான ஞாண்கள்மீ தம்புகளின் காம்புகளைத் தொடுக்கலுற்றவர்களாகி (24) மிக வட்டகாஸத்தோட்டபோதசுரன்மீது மிகுந்த பாணங்களை வருஷித்தார்கள். அவைகளிற் சில பாணங்க ளவ்வசுரனதுடல்மீது பாய்ந்தூடுருவிச் சென்றன. (25) சிலவற்றை யவன் துரிதத்தில் சிலபாணங்களை விட்டுத் துண்டித்தும் விட்டனன். மேலும் மகா பலவானுன அவ்வசுரன் பின்னும் சினம் கொண்டு ஆயிரக்க ணக்கிலடங்கிய கோடி. கோடி பாணங்களை யவரெல்லோர்கள்மீதும் குறிப்பிட்டுப் பிரயோகிக்க, ஓ! கோ! கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவைகளை யிவர்களவற்றி னேழுமடங்கதிகமான பாணங்களை (27) விட்டவனண்டைக்கே திருப்பிவிட்டார்கள். மறுபடியும் அளவற்ற பராக்கிரமத்தையுடைய வப்பானுகோபன் மயனென்ற வசுரத்தச்சனு லமைக்கப்பட்ட அனேககோடி யெண்கொண்ட பாணங்களை வருஷித்து இவர்களது வில்லஸ்திரங்களைச் சடிதியில் செதல் செதலாக்கிவிட்டனன். (29) பிறகவ்வெல்லா வீரர்களும் மறுபடி வேறுவில்லம்புகளை யெடுத்தப்போதவ் வசுரன்மீது வேகத்தோடெய்து (30) அவனால் விடப்பட்ட பாணங்களையும் சீக்கிரத்திற் சேதித்தனர்கள். பின்னுமவர்கள் மேலுக்குமேல் முயன்றவர்களாகி யவனதிரதத்தின்மீ தாயிரம் சரங்களையும், (31) நூறுபாணங்களைக் குதிரைகள்மீதும், அங்ஙனமே பல வம்புகளைத் துவஜங்கள்மீதும், ஸாரதிமீ தாயிரம் பாண

ங்களையும் விட்டவைகளையெல்லாம் பூமியிற் சாய்த்தார்கள். (32) அதன்மேல் மகா பலசாலியான வப்பானுகோபன் மிகுந்த கோபாக்கினியால் ஜுவலிக்கலுற்ற மனமுடையவனாகி மறுபடியோர் மகா ரதத்திலேறிக்கொண்டு (33) தீக்ஷணியமுள்ள வொப்பற்ற நாராசபாணங்களைப் பதினாயிரம் பத்திலக்ஷங்களாக வருஷித்ததி (44) லவைகளெல்லாமவர்கள் தேகம்முழுது முரோமம் சிலிர்த்ததுபோல் தைத்துப் பொத்துத்தொத்தலாகி யிரத்தம் தாரைதாரையாய்ப் பெருகலுற்று அக்கணங்கள் மிகவுமுற்சாகமிழந்தவரானார்கள். (35) பிறகவர்க ளவ்வாறாகிவிட்டதைக்கண்டு மகா கனம்பொருந்திய வீரசிம்மனென்றவன் சீககிரமாக வுயுத்தத்துக்குரிய கோலாகல சத்தத்துட னனேக மஸ்திரங்களை வருஷித்துக்கொண்டே (36) வீரர்களைத் தண்டிக்கும் பூதலமாகிய வுயுத்தகளத்துக்கு மகா பயங்கரனாகி வேகமாய் வந்தனன். அவனவ்வாறுவிட்டுவந்த சரங்களையெல்லாம் போர்முன்னர் தீரனான பானுகோபன் (37) சடிதியிலிலக்ஷம்கோடி பாணங்களால் தூள்தூளாக்கிவிட்டுப் பின்னுமவன்மீது சினங்கொண்டவனாகி யாயிரம் வஜ்ஜிராஸ்திரங்களையும் பிரயோகித்தனன். (38) பிறகுவீரசிங்கனும் மிக வேகத்தோ டனேகமாயிரம் அம்புகளா லவனதஸ்திரங்களைத் துண்டித்துப்பின்னும் வெகுகோபத்தோடவனது மார்பின்மீதும் நிரப்பினன். (39) அப்போது பானுகோபனுமவனது பாணங்களால் மிகவுமடிபட்டவனாகி முற்றும்நொந்து தேகமெங்கு மிரத்ததாரைகள் பெருகப்பெற்றவனாகி (40) பிறகோர் க்ஷணத்துக்குள், சகல சத்துருக்களையும் நாசம்செய்யலுற்ற நாராயணாஸ்திரத்தை வெகுகோபத்தோடவன்மீது விட்டனன். (41) அவ்வஸ்திரமோவென்றால் பத்துத்திக்குகள் மீதும் திரண்டவொளிகளை விசிரிக்கொண்டு துரிதத்தி லெல்லோர்களையும் பிரமிக்கச்செய்யலுற்றதாகி யனேகமனேக மஸ்திரங்களாகப் பிரிந்து மிக வேகத்தோடு கிளம்பி(42) மிகுந்த வொலியால் மலைகளது குகைகளை நிரப்பிக்கொண்டு வீரசிங்கன் பதிலஸ்திரம் பிரயோகிக்க வெத்தனிப்பதற்கு முந்தியே யவனது மார்பைப்பிளந்தவனைப்பூமியில்விழுவித்தது. அதுகண்டுவீரமார்த்தாண்டன் கோபத்தினால் பரவசங்கொண்டவனாகி (44) வில்நுணியில் நாணையேற்றிக்கொண்டு வருகையிலவனை யசுராதியன் சீக்கிரமாய்ப் பார்த்த (45)

வுடன்சில பாணங்களைப் பிரயோகித்ததனாலவனது நாணையறுத்து வில்லையும் முறித்துக் கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அவனது நெற்றியைப் பற்றியும் சிலவம்புகளை யெய்தான். (46) பிறகு மிகுந்த புத்திசாலியான வீரமார்த்தாண்டனும் திரும்பவும் மகா வுன்னதமான வோர் வில்லையெடுத்ததின்கண்நாணேற்றவெத்தனிப்பதற்குள்ளதையும்மகாபலவானான வப்பானுகோபன் துண்டித்து அவ்வீரமார்த்தாண்டனுடையவிரதத்தையும் குதிரைகளையும் சிலவஸ்திரங்களால் பூமியில் துரிதமாகவிழுவித்து(47-48) பின்னருமவனது மார்பின்மீதெழுநூறஸ்திரங்களைப் பிரயோகித்தான். பிறகு வீரமார்த்தாண்டன் மிகுந்த கோபவசத்தினால் மகா வட்டவாசம் பண்ணிக்கொண்டு (49) தனதிரதத்தினின்றெழுந்து உடனே யவனது மார்பின் மத்தியிலுதைத்தபடி குதித்து அவனது வில்லையும் பிடுங்கி முறித்துப் பூமியிலெறிந்துவிட்டான். (50) உடனே யசுரன் மிகுந்த பரபரப்புள்ளவனாகி யிடையிலிருந்த கைக்கத்தியை யுறையினின்றுடனே யெடுத்தவனது மார்புக்குட் சொருகிப்பிடுங்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இரத்ததாரை பெருகலாகி மிகவும் பயங்கரமாகக் குபீலென்று சொருகினவன் மார்பின்கண்ணே பீலிட்டடிக்கலாயிற்று. (52) அப்போது வீரன் மிகவும் கோபமூண்டவனாகித் தனது கத்தியைக் கையிலெடுத்துச் சீக்கிரத்தி லசுரன்மார்பினிற் குத்த (53) அதனாலவன் பூண்டிருந்த கெட்டியான கவசமானது பிளக்கலுற்றது. பிறகசுரனுமோவென்றால் கடுஞ்சினங்கொண்டவனாகி கத்தியைப் பின்னொர்வா றிழுத்தவனது நெற்றியிற்குத்தி யவனைப் பூமியில் விழுவித்தான். ($54\frac{1}{2}$) உடனே யாவராலும் ஜயிக்கமுடியாதமகாவீரனான வீரராக்ஷஸனென்பவன் சீக்கிரமாகப் புறப்பட்டுவந்து ஆயிரம் பாணங்களைப் பிரயோகித்தனன். ($55\frac{1}{2}$) அவையெல்லா மசுரோசுவரன் கர்ஜனைச் சத்தத்தினால் திசையெல்லாம் நிரப்பிக்கொண்டனேக மம்புகளைவிட்டுக் கண்டனம்செய்து, ($56\frac{1}{2}$) மறுபடியும் நூறுபாணங்களாலவனது ஸாரதியையும் தொலைத்துவிட்டான். (57) உடனே மகா பலவானான வீரராக்ஷஸன் வேறு சாரதியை வைத்துக்கொண்டு தீக்ஷணிய

முள்ள வாயிரம் சஸ்திரங்களால் பிரகாசிக்கலுற்ற அவனது கிரீடத்தை (58) யப்போது பூமியிற் சாய்த்துவிட, பிறகு பானுபன் மிக வெட்கம்கொண்டவனாகி யொளிபொருந்திய வேறுகிரீடத்தைத் (59) தலைமீது வைத்துக்கொண்டு மிகுந்த கோபாக்கினியால் ஜுவலிக்கலுற்றவனாகிக் கூர்மையுள்ள வனேகமாயிரம் சரங்களால் வலிமையோடவனது வில்லைக்கண்டனம் பண்ணினான். (60) மறுபடியப் பலவான் துரிதமாக வேறுவில்லைக்கொள்ள வெத்தனிப்பதற்குள் பானுகோபனனேகபாணங்களை விட்டவனதிரதத்தை (61) யுடைத்துவிட, பிறகோர் க்ஷணத்துக்குள் ளவ்வீரன் மிகுந்த கர்ஜனையால் திசையெல்லா மொலிக்கச்செய்தவனாகி வேறு சுந்தரமான விரதத்திலுட்கார்ந்துகொண்டு (62) மகா கோபத்தோடு வில்லெடுத்து யுத்தத்துக்கு வரும்போதே பானுகோபன் பின்னருமவனுடைய அவ்வில்லைத் துண்டித்துவிட்டனன். (63) பிறகு மகா கோபத்தோ டவ்வீரன் மிகுந்த வாரவார சத்தம்பண்ணிக்கொண்டு தனது வேலைப் பிரயோகிக்க, அதையுமப்பானுகோபன் மகா தீக்ஷணியமுள்ள நூறுபாணங்களா லோர் நொடிக்குள் தூளாக்கிவிட்டனன். (64) அதன்மேல்வீரராக்ஷஸன் துரிதத்தி லிரதத்தைவிட்டிறங்கி யிரதத்தோடுகூட அவ்வசுரனைச் செங்குத்தாகத் தூக்கி யாகாயத்தினில் வீசியெறிய, (65) ஆகாயத்தில் மேல்நோக்கிப் போகையிலே யம்மகாசுர னிரதத்திலிருந்தபடியே மகா அட்டகாசத் தொனியால் திசைகளெங்கும் நிரப்பிக்கொண்டு, (66) தீக்ஷணியமுள்ள தன்வேலையவ்வீரன் மார்பின்மீது கோபத்தோடு பிரயோகிக்க, அப்பெரிய வேல் விழுந்தமாத்திரத்தி லவ்வீரன் மூர்ச்சைகொண்டு பூமியிற் சாய்ந்துவிட்டனன். (67) ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போததுகண்டு மகா பலிஷ்டர்களான வீராந்தகன், வீரமகேசுவரன், வீரபுரந்தரன், வீரதீரன் இவர்களெல்லா முயுத்தத்துக்காகப் புறப்பட்டனர்கள். (68)

நான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

உயுத்தகாண்டம் ரு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போதம் மகா வீரரெல்லோர்களும் விற்களையெடுத்துக்கொண்டு நீருண்ட மேகங்கள் கர்ஜிப்பதுபோல் மிகுந்த சத்தம் செய்வதினலதிக பயங்கரர்களாகிக் கோபத்தோடு பானுகோபன்மீது சரங்களை வருஷித்துக்கொண்டே பிரயாணப்பட்டார்கள். ($1\frac{1}{2}$) பிறகு பானுகோபனும் பற்பல வலங்காரங்களோடுகூடிய (2) வேறு இரதத்திலேறிக்கொண்டு மிகுந்தபாணங்களை வருஷித்தான். அப்போதிப்பிரகாரமாகத் தேவராஜர்களுக்கு மசுரராஜனுக்கும் நான் முன்னே நான் முன்னேயென்று மகா கொடுமையான வயுத்தமுண்டாயிற்று.($3\frac{1}{2}$) அப்போதிரண்டு வீரர்க ளசுரனது பாணங்களா லடிபட்டதனல் பிரக்கினையிழந்து விழுந்தார்கள்.(4) மற்றிருவர்தேரிழந்தார்கள். மற்றுமுள்ள ஒருவன் பயத்தினுல்திகைத்துச்சாய்ந்தான்.அப்போதசுரசேனையானதுஒளியிழந்தபூதர்களுடைய விங்கிலைமையைக்கண்டு (5) மிகுந்த ஆரவார சத்தங்களால் மகா பயங்கரமாகி யதிகவேகத்தோடு வரலுற்றது. சிலர் விற்களைக் கையிற்பிடித்துக்கொண்டு அட்டகாசம் செய்து கூத்தாடினர்கள். (6) சிலர் கத்திகேடயங்களை வைத்துக்கொண்டு நான்கு வாக்குகளினும் கொம்மாளமிட்டோடினர்கள். இவ்விதமாக வசுரர்கள் சத்தமிடுகையில் அப்போதோர் நொடிக்குள்ளாக(7) மகா கைக்காரரான வீரபாகுவானவர் ஸ்ரீ வடிவேலனுடைய துதிகளையே மனதினிற் கருதியவராகி பற்பல வேதவேதாந்தங்களை நாவினுலுரைத்துக்கொண்டும் (8) ஹிருதயகமல குஹைக்குள் விளங்கானின்ற ஸ்ரீ குஹபிரானைத் தியானித்துக்கொண்டும் ஸ்ரீ சங்கரன் பினகமென்ற வில்லைப்பற்றியதுபோலோர்கெட்டியான வில்லையெடுத்துக்கொண்டு வெளிக்கிளம்பலாயினர். (9) அப்போதவர் சரமாரிதொடுப்பதற்காக வில்லினில் நாணையேற்றி, தூங்கலுற்ற பாம்பினுடலையொத்த மகா பயங்கரமான அந்தஞ்ஞாணை மீட்டலுற்றனர்- (10) அப்போது மிகுந்த பயங்கரமான வோசையானது ஸகல திசைகளையும், பிரம்மாண்டம் முழுமையும், மலைகளின் குகைகளையும் நிரப்பிக்கொண்டுண்டானதில் (11) மானிடர்கள் "தடலென் றண்டம்தான் வெடிக்கலாயிற்றோ, அல்லதிது பிரம்மனுக்கும் பெரும்பீதியளிக்கலுற்ற, பிரளயகாலக் கடலினலையோசையோ "வென்று பற்பலவிதமாகச் சொல்லிக்கொண்டார்கள். ($12\frac{1}{2}$) அப்பேர்க்கொத்த பேரோசையைக்கேட்டு, மான்கள் புலியின் சத்தமென்று பயந்தும், (13) புலிகளும் யானைகளும் பயங்கரமான சிங்கநாதமென்று கலங்கியும், சிங்கங்களெல்லா மிது சரபத்தின் கர்ஜனையோவென்று திகைத்தும் (14) மலைப்பொந்துகளை விட்டுத் திசைகளெங்கு மோட்டம்பிடிக்கலாயின.

அப்போது பானுகோபனும் நாணேமீட்டுகைமி (15) லதேமாதிரி யெல்லோர்களாலு மாச்சரியப்படும்படியாக மிகுந்த வோசையுண்டாயிற்று. பின்பு பானுகோபன் மகா பலசாலியான விரபாகுவைநோக்கி "அடா! நீ பிரம்மனல்ல, விஷ்ணுவல்ல, கந்தனல்ல, இந்திரனுமல்ல; நீ யாவனோ வோர் தூதனுகியவன்; உனக்கிப்போர்க்கொத்த கர்வம் யாதடா? (17) நீ முந்திமாயவசத்தினுல் பலவசுரர்களைக் கொன்றுவிட்டுத் தப்பியோடிவிட்டாய். நாமப்போது ஸத்தியமாகவெ 'யோர்தூத' னென்றுந்தனை விட்டுவிட்டோம். (18) அடா! உங்கள் சைனியங்களை யெல்லாம் கொன்று கொன் றிப்போது விரட்டியடித்தோம் பார்த்தாயா? யாமிப்போது சிக்கிரத்தி லுந்தனைப் போர்தனில்வென்று உந்தனைச் சேர்ந்த தேவர்களுக்கெல்லா (19) மிதோ! சந்தேகமின்றிப் பளுவான விலங்குகளை மாட்டுகின்றோ" மென, இவ்வாறுரைத்த அவ்வசுரனை நோக்கி வீரபாகுவுரைத்ததாவது:—(20) "அடா! அசுரா! நீதன்னைத்தானேமேன்மையுள்ளவனுக நினைத்துக்கொண்டியாதுரைத்திட்டாய்? உயுத்தத்துக்குவந்தவனைத்தூதனென்றவ்வாறுரைப்பதுதகுதியல்ல.(21) 'தூதரிடத்துப்பலமும்சௌரியமுமிரா'வென்பது யாவருடையகோட்பு? ஆகையா லிவ்வித வீணுண்மையெல்லாம்விட்டு நீயிப்போது நம்முடனுயுத்தம்செய்யடா"(22) வென் றிவ்வாருக மகா பலவானுகிய தேவேசன்வசனமளிக்கையில்பானுகோபன்பத்துப்பாணங்களைக்கோபத்தோடுதொடுக்க,(23)தேவர்களைக்காக்கவுற்ற வீரபாகுவு மவற்றைப் பத்துப்பாணங்களைவிட்டுத்துண்டித்தெறிந்தனர். பின்பசுரன் சினங்கொண்டு மறுபடி நூறுபாணங்களைத் தொடுக்கையில் (24) அவரவைகளையு மவ்வளவே பாணங்களை ஜுவலிக்கலாகும்படி விட்டு முறித்தெறிந்தனர். அதன்மேலசுரன் மிக வாக்கிரகம் கொண் டாயிரம்பாணங்களைப் பிரயோகிக்க, (25) வீரபாகு வவைகளையும் கோபத்தோடாயிரம் பாணங்களாலே துண்டித்துவிட்டுப் பிறகசுரன்மீது பதினுயிரமஸ்திரங்களைச் சந்தானம்பண்ணினர். (26) பின்பசுரனவைகளைப் பதினுயிரம் பாணங்களால் துண்டித்துவிட் டத்தேவன் மீதிலக்ஷம்பாணங்களைப் பிரயோகித்தனன்.(27) அப்போதப் பாணங்களை வீரபாகுவிலக்ஷமம்புகளால் வீணுக்கிப்பின்னரும்மிகுந்தசத்தத்தோடுகூடியபத்திலக்ஷம்பாணங்களையசுரன்மீதெய்ய,(28) பானுகோபனவைகளையவ்வளவேயம்புகளை விட்டுப்பழுதாக்கிப் பிறகவர்மீது வெகுகோபத்தோடு கோடிபாணங்களை வருஷித்தான். (29) தேவநாயகரு மதனையவ்வளவே சரங்களாற் கண்டனம் பண்ணிப் பின்னருமவனைக் குறிப்பிட் டிலக்ஷம்கோடியம்புகளை நாண்மீது பூட்டினர். (30) தேவாக்ஷகரால்

விடப்பட்டவப் பாணங்களையுமசுரனவ் வளவுகொண்ட சரங்களாற் கண்டித்து மறுபடியவர்மீ தூழிகாலமேகங்கள் பொழிவதுபோல் மிகுதியானசரங்களை வருஷித்தான். (31) அதன்மேல் வீரபாகுவும் மிகுந்தகோபத்தோடு மகாஅட்டகாஸம்பண்ணிக்கொண்டு மகாப்பிரளயகாலமேகம் போல் பெரும்சரமாரி பொழியலாயினர். (32) அப்போ திவ்விதமாக வவ் விருவர்களுமுயுத்தம் நடத்துகையில் போராச்சரியத்துக் குரிய துர்த்தின (கொஞ்சமேனும் சூரியனொளிக்கிடமின்றி மேகங்களால் மறைக்கப்பட்டதின) முண்டாயிற்று. அதோவென்றால்:— ஒலிக்கலுற்ற நாணின் டங்காரவோசைகளாகிய மேக கர்ஜனங்களால் மகா பயங்கரமானதும், (33) பாணக்கூட்டங்களது ஒளித்திரள்களாகிய தக்தகாயமானமான மின்னல்களாற் சூழப்பெற்றதும், எல்லாத்திசைகளையும் சூரியமண்டலத்தையும் மறைக்கலுற்ற வம்புத்திரள்களாகிய பெருமாரியுடையதும், (34) அம்புக் குவியல்களாகிய வாறுகளினிடையில் வட்டமாகச் சுற்றலுற்ற அவர்கள திரதங்களாகிய மலைகளால் விளங்கியதும், வெளிப்படலுற்ற பாணங்களினொளிகளைக் கொண்டே யொருவர்முகத்தை யொருவர் நிதானிக்கப பெற்றதும், (35) காம்பொடிந்து கிடக்கலுற்ற வெள்ளைக்குடைகளாகிய நுரை வரிசைகளால் விளங்கியதும், இமைக்கொட்டற்ற தேவர்களாற்கூட கண்ணிமைத்தலோடு பார்க்கப் பெற்றதுமாக விளங்கலாயிற்று. (36) இவ்விதமாகத் துர்த்தினம் நேரிட்டபோது பானுகோபன் வீரபாகுவால் விடப்பட்ட வனேக மம்புகளையும் பல சரங்களாற் சேதித்து, (37) பிறகு சடிதியில் பத்துப் பாணங்களைவிட் டவரது வில்லையொடித்தெறிந்து கோடையிடி யிடித்தது போல் மிகுந்த கர்ஜனம் பண்ணினன். (38) பிறகு வீரபாகு மகாவுன்னதமான மற்றோர் வில்லைக் கைக்கொண்டு துரிதத்திற் சில சரங்களைப் பிரயோகித்து அவனது வில்லைமுறித்துவிட்டனர். (39) பின்பவனும் மற்றோர்பெரிய வில்லை வேகமாயெடுத்துப் பேரொலியால் பத்துத்திசைகளையும் நிரப்பி (40) யவர்மார்பின்மீது மிகத் தீக்ஷணியமுள்ள வாயிரமம்புகளைச் சொரிந்தான். அதன்மேல் வீரருக்கெல்லாம் வீரனான வீரபாகுவும் மிக வாங்காரத்தினால் பற்றியெரிகின்றவர்போலாகி (41) யேழுபாணங்களாலவ் வசுரனது கிரீடத்தைச் சிதறுண்டு விழச் செய்தனர். உடனே யசுரன் வேறு கிரீடத்தினாற் சிரசை யலங்கரித்துக் கொள்வதற்குள்ளாக (42) அவர் பின்னும் சில பாணங்களா லவனது கவசத்தைப் பிளந்தெறிந்தனர். அப்போ தப்போர்க்கொத்த நிலைமையிலிருந்த பானுகோபனைப் பார்த்துச் சூரியன் நகைக்கலாயினன்.

(43) பிறகசுரனும் வெகு கோபமுண்டவனுகிக்கெட்டியானவில்லைக்கு ணத்தொனிபண்ணி வீரனுடைய நெற்றிதனி லாயிரம் நாராசங்களைப்பி ரயோகித்ததி (44) லங்குனைத்துக் கோர்க்கலானவந் நாராசங்களை வீ ரன்கையினுற் பிடுங்கி யெறிந்து மிகுந்த சிங்கநாதத்தோ டட்டகசாம் பண்ணிக்கொண்டு பிரளயகாலாக்கினிபோல் ஜுவலிக்கலுற்றவராகி நா ணைமீட்டி யவனது மார்பு, முகம், இருதோட்கள், கைகள் இவற்றினுெவ் வொரு தானத்தையு மாயிரமாயிரம் சரங்களாலடித்தனர். (46½) அப் போதசுரன் அக்கினிக்கு நிகரானவப் பாணங்களா லெரிக்கப்பட்டவனு கி (47) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! வில்லின் நுனியை யிரு கைகளாலும் பற்றிக்கொண்டு மூர்ச்சையடைந்து சாய்ந்தான். துராத் துமனும் கொடிய பாதகனுமாகிய பானுகோபன் மூர்ச்சைகொண்டு சா ய்ந்தபோ (48) தவனணிந்திருந்த விருபக்கங்களிலுமுள்ள மலர்மாலை க ளிரத்தங்களாற் புறசம்பூவின் நிறத்தோடு விளங்கலாயிற்று. பிற்பா டசுரரெல்லோர்களும் பரபரப்போ டொன்றாகக் கூடி யவரைச் சூழ்ந்து கொண் (49) டெல்லோரு மேககாலத்தில் கோடைமேகம்போற் சர மாரி சொரிந்தார்கள். பிறகு வீரபாகுவும் கர்வத்தோடு கர்ஜிப்பதால் திசையெங்கு மொலிப்பித்தவராகி (50) யசுரர்களைச் சமுகாரம் செய் யலுற்றஸ்ரீ குகபிரானை மனதில் நோகத்தியானித்துக்கொண்டோர்நொ டிக்குள்ளாயிரம்கோடி பாணங்களை யெய்தெய்து (51) சூரியன் கிரண ங்களால் பனிமூட்டங்களைத் தொலைப்பதுபோ லசுரர்களது சரங்களை யெல்லாம் தொம்சம் செய்துவிடடுப் பின்னருமனேக கோடி பாணங்க ளாற் சகல வசுரர்களையும் (52) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ ருத்திரன் முப்புரத்தை யெரித்ததுபோல் விளையாட்டாக மடித்துவிட்ட னர். அப்போ தசுரர்களது தலைகளெல்லா மம்புகளோடு பற்றிக்கொ ண்டு சிலது (53) கடல்மீதும், சிலது மலைகள்மீதும், மற்றவை நதிகளி லும் சடிதியில் விழலுற்றன. மேலும் சிலவை தீவுதீவாந்திரம் வறை யிலு மண்டச்சுவர்வறையிலும் சென்றுவிழலுற்றன- (54) இன்னும் மற்ற சில தலைக ளவரவரது பெண்டீர்கள் முன்னில்தானே போய்விழ லாயின. (55)

ஐந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் சு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போது மிகுந்த கபந்தங்(தலையற்றமுண்டம்)களெழுந்து ப யங்கரமாகக் கூத்தாடின. மேலுமவர்கள் இரத்தங்களா லோர் பெரிய

ந்தியுண்டாயிற்று. (1) அதோ வென்றால்:— மாமிசங்களாகிய சேற்றினால் நிறைந்தும், கேசங்களாகிய பாசிக்கொத்துகளால் மிகவும் நிரம்பியும், காம்பொடிந்து மிதந்த வெண்குடைகளாகிய நுரை வரிசைகளா லலங்கரிக்கப்பட்டும், (2) உருண்டு பிறழ்கின்ற தலைகளாகிய பெரும் கல் திரள்களால் மிகுந்ததும், மிகுந்த வெலும்புகளாகிய வேராளமான பெரிய கிளிஞ்சில் முட்டைகளால் நிறைந்ததும், (3) பருந்து, காக்கை, கழுகு முதலியவை மேலாக வட்டமிடுவதால் பயங்கரமுள்ளதும், மாமிசவாசையினால் நாய் நரிகள் சூழப்பெறறதும், (4) சுற்றிலும் பேய் பிசாசங்களாற் கூடப்பெற்றதுமாயிருந்தது. இவ்விதமாக வசுரசேனையெல்லாம் வீரபாகுவின் பாணக்கினியால் (5) மடிந்தபிறகு ஸகல பூதர்களும், பூதப்படைத்தலைவர்களும் இன்னும்மூர்ச்சையடைந்துகிடந்தமற்றவர்களு மெழுந் தெல்லோர்களு மொன்றுசேர்ந்து கூத்தாடிப்பாட்டுப்பாடிக்கொண்டும், ஒருவரோடொருவர்கொம்மாளமிட்டுச்சிரித்துக் கொண்டு மிருக்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது பானுகோபன் சடிதியில் மூர்ச்சைவிட்டெழுந்து (7) தன்படைகளெல்லாம் பலவிதமாக மாண்டுகிடப்பதையும், கொஞ்சமேனும் மிச்சமின்றித் தேவப்படைகள் முழுமையும் பிழைத்தெழுந்து (8) கூத்தாடிப் பாடி யெக்களிப்பதையும் பார்த்து மனதினில் நினைத்ததாவது:—“ஓ! கோ! இவரெல்லோர்களு மெம்மோடெதிர்த்துப் போராடியோட்டம் பிடித்தவர்கள். (9) இவர்களி லிவனொருவனே சூராதிசூரன். இவனுக்கீடுமற்றொருவருமில்லை. யாமப்பேர்க்கொத்த விச்சூரனை யோர் நாழிகையளவுக்குள் ஸத்தியமாகக் கொன்றுவிடுகின்றோம். (10) இல்லையாகி லவ்வாறவனைக் கொல்லாத வில்லாளியாகிய யாமிங்குதானே யக்கினிப்பிரவேசம் செய்துவிடுவோ” மென்று அசுரப்படைத்தலைவனாகிய பானுகோபன் கோபத்தோ டுறுதிபண்ணிக்கொண் (11) டப்போதுடனே மகா வுன்னதமான சிங்கம்போற் சடிதியினுறக்கக் கர்ஜித்துத் தேவவீரன்மீ தாயிரம் மூவிலையம்புகளைச் சொரிந்தனன். (12) பிறகு தேவரக்ஷகரு மதேமாதிரியான அவ்வளவம்புகளா லவனதம்புகளை முறித்தெறிந்து மறுபடியு மவ்வசுரன்மீ தாயிரமம்புகளையெய்தனர். (13) அதன்மேல் மகா பலபராக்கிரமங்களையுடைய அவ்வசுரனே வென்றுலவ் வெல்லாவற்றையும் மகா கோபாவேசங்கொண்டவனாகி யதிகூர்மையுள்ள வாயிர மம்புகளாற் சடிதியிற் கண்டனம்பண்ணிவிட்டுப் (14) பின்னரு மக்கொடியோன் பதினாயிரம் சஸ்திரங்களைச் சந்தானித் தவாதிரதமதிற்பூட்டிய குதிரைகளையும், ஸாரதியையும் கொன்றனன். (15)

உடனே பூதசேனாதிபரும் மகா வாக்கிரகம்கொண்டப்போதே நூரிதத்தில் வேறிரதத்தின்மீதுட்கார்ந்து கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! கூர்மைகொண்ட விருநூறிருநூறு பாணங்களைப் பிரயோகித்து (16) அசுரனது தேர், குதிரைகள், ஸாரதி, தனுசு இவற்றையெல்லாம் கொன்று பூமியில் விழுத்தினர். (17) பிறகு பானுகோபன் மறுபடி வேறிரத்தையு முயர்ந்த தனுசையும் கொண்டு வீரன்மீ தெழுநூறு வஜ்ஜிராஸ்திரங்களைப் பிரயோகிக்க, (18) அதனா லவர் கொஞ்சம் துன்பமடைந்து பிறகு மிகக் கோபமூண்டவராகி யவனது கடினமான வில்லைப் பதினான்கு பாணங்களாற் றூரிதத்தில் துண்டித்து மிகுந்த சிங்கநாதஞ்செய்வதனா லவ்வசுரயானையை நடுநடுங்கச்செய்து மறுபடியு மாயிரம்சரங்களாலவனது தேர்ப்பாகன், தேர், (20) குதிரைகள் இவைகளையெல்லாம் செதல் செதலாக்கிக் கீழே தள்ளிப் பின்னும் கூர்மையுள்ள நூறுபாணங்களை விட்டவனது மார்புதனைப் பிளந்தனர். பிற்பாடசுரன் மகா வுன்னதமான வேறிரதத்தின்கண்ணுட்காருகையி லப்போது வீரபாகு அவன்மீ தாயிரமம்புகளைச் சந்தானிக்க, அவைகளவனது மார்பின் விலாப்புறத்தைச் சிதைத்துக்கொண் டவன் முதுகினிற் பூட்டியிருந்த வம்புராதூணியைச் சேதித்துவிட்டன. (22½) பிறகசுரன் பரபரப்புக்கொண்டவனாகி "போர்க்களமத்தியிலிருக்குமிவ்வீரனைவில்லினால்வெல்வதசாத்திய" மென்றப்போது தீரவாலோசித்துக்கொண்டு (23½) எல்லோர்களையும் முற்றும் மயங்க வடிக்கவுற்ற மோஹனாஸ்திரத்தைக் கைமீதெடுத்து (24) மகாபயங்கரமான அவ்வஸ்திரத்துக்குரிய மந்திரத்தைமனதினில் ஜபித் ததனைப் பிரயோகித்தனன். கன்னங்கரேலென்ற குருட்டிருட்போற் கறுப்பானதும், (25) ஜனங்களுடைய கண்களைக் குருடாக்கவுற்றதும், ஸகல திசைகளிலும் பறவிச்சூழவுற்றதும், பெரும்பீதியைக்கொடாநின்றதும், அதிகோரமானதும், மிகுந்த மாயையை யளிக்காநின்றதும், (26) மோகப்படுத்துவதை யெல்லாம் மிகவும் மோகிக்கச் செய்வதும், பயப்படுத்துவதையெல்லாம் மிகவும் பயப்படச் செய்வதுமான அவ்வஸ்திரம் வெளியிற் புறப்படும்போதே பூதர்கள், படைத்தலைவர்கள் முதலிய வெல்லோர்களு (27) மவரவர்கள் தங்கள் தங்கள் வசத்திலுள்ள மிகவும் கோரமான வாயுதங்களையெல்லாம் ஜடிதியிலவ்வஸ்திரத்தின்மீதுவிட்டு மவற்றையதுகொஞ்சமேனும்சட்டைபண்ணம லதிவேகத்தோடு வரலாயிற்று. தேவரக்ஷகரான அவ்வீரனதைக் கண்ணுற்று (28) "ஆ! ஆ! இதென்ன! மகா பயங்கரமும், கோரமுமாகிச் சகல வஸ்திரங்களையும் தூரிதத்தி லடக்கி மேற்கொண்டு சீக்கிரமாய் வருகின்றதே! இதனை யெதனால் தடுக்கலாகும்" (29) என்றத

னைப் பரபரப்புடன் பார்த்தத்தேவனுயகன் மன வியாகுலமுற்றிருக்கை யில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வஸ்திரமானது வீரபாகு வோடுகூட வெல்லாப்படைகளையும் விழுந்து மதிமயக்கம் கொள்ளச் செய்தது. (30½) ஓ! கோ! பூதப்படைத்தலைவரெல்லோர்களு மப் போது கம்பம்போல் நின்றுவிட்டார்கள். (31) அதுபோலவே தே ராளிகள் தேரிலும், மற்றவர்கள் நிலத்திலும் கேளீர்! பிராம்மணோத்த மர்களே! அவரவராயுதங்களைக் கைகளிற்பிடித்துக்கொண்டே நித்தி ரைகொண்டு விட்டார்கள். (32) அப்போதவர்கள் கேவலமோர் சிறு வனாற்கூட முற்றுமெளிதினில் முறியடிக்கப்படுவோர்போ லிருந்தனர்க ள். அச்சமயத்திற் பானுகோபன் வெகு சந்தோஷத்தோடவர்கள்மீ து பல சரங்களைத் (33) துரிதத்தில் வருஷித்து அத்தேவத்தலைவரெ ல்லோர்களையு மிரத்தம்பெருகவிடச் செய்தனன். இப்படி யிருக்கை யில் ஸகலப் பிராணிகளுடைய ஹிருதய கமலத்திலும் விளங்கியிரானின் றவரும், கருணைக்கடலானவரும், மிகவும் மெதுவான வழகிய திருமேனி யுடையவரும்,ஸச்சிதாநந்தமங்களமூர்த்தியுமாகியஸ்ரீகுமரேசனிதுவிஷய ங்களைத்திருவுளத்திற்கொண்டு(34½)தேவகணங்களாற்சுற்றிலும்பக்கங்க ளிற்சேவிக்கப்பெற்றவராகஏமகூடமென்றபட்டணத்தில்திவியநவரத்தி னஸிம்மாசனத்தின்கண் வீற்றிருந்தபடியே ஸகலமோகங்களையும்தொம்ச ம்பண்ணவுற்றப் பிரபுவாகிய வஸ்வாமியானவ ரவ்வஸ்திரத்திஞட்டவா ட்டங்களை யடக்குவதற்காகத் (36) தகதகாயமானமாய் ஜுவலிக்கவுற் ற மகா கோரமான அமோஹாஸ்திரத்தைப் பிரயோகித்தனர். அதோ வென்றால் சகல திசைகளையும் தனதொளித்திரள்களால் சூரியகிரணங்க ள்போல் மிகவும் பிரகாசிப்பிக்கவுற்றதாகி யம்மோகனுஸ்திரத்தைத்து ரிதமாகத் தொலைத்துவிட்டது. (37½) கேளீர்! பிராம்மணோத்தமர்க ளே! உடனே வீரபாகுமுதலிய தேவர்களும் ஸகல பூதப்படைத்தலைவ களு மோர் நொடிக்குள் மோகம்தெளிந்து தூங்கியெழுந்தவர்போ லெழுந்தார்கள். (38½) பிறகவ்வமோகாஸ்திரமோவென்று லம்மோகனு ஸ்திரத்தைப் போக்கிவிட்டு ஸ்ரீ குகபிரானண்டைக்கு (39) உவமைய ற்ற வோசையோடு மிகத்துரிதமாகத் திரும்பிவந்துவிட்டது. பிறகு டனே வீரரெல்லோர்களு மெழுந்து மனவெட்கம் கொண்டவர்களாகி (40) "சீ! சீ! பதிலஸ்திரம் பிரயோகிக்கத் திறமையற்ற நமக்கிங்கெ ன்ன சௌரியமிருக்கின்றது? ஸ்ரீ ஆறுமுகப்பிரானது கருணையாலல்ல வோவிந் நாமெல்லோர்களு மோர்நொடிக்குள் ளிரக்ஷிக்கப்பட்டோ" மென்றெல்லோர்களும் ஸ்ரீ முருகேசனை வேதவேதாந்தங்களா லிசைக்க

ப்பட்ட துதிகளாற் றேத்திரம்பண்ணிப்பிறகு ரோஷம்கொண்டவர்களாகி யசுரசிகாமணியோ டியுத்தம் தொடுக்கத் தொடங்கினார்கள். (42) தேவனுதனுன வீரபாகுவுமப்போதவ் வசுரனைச் சுருக்கினிற் கொன்றுவிட விருப்பமுற்றவராகி வெகத்தோடு பாசுபதாஸ்திரத்தைக் கைக்கொண்டனர். (43) அதுகண்டசுரவீரனும் மிகுந்த மனவச்சம்கொண்டு, "ஓ! நாமிவ்வஸ்திரத்திற்குற்ற பதிலஸ்திரத்தை யெடுத்துவரவில்லையல்லவோ! (44) ஆகையால் நாம் நகரம்சென்று மேன்மைபொருந்திய பாசுபதாஸ்திரத்தைச் சீக்கிரமெடுத்துக்கொண் டிம்மகாபலவானோ டியுத்தம்புரிய வரலாவோ"(45) மென்றுமனநிச்சயம் கொண்டவனாகித் துரிதத்திலேசான வ்ருவத்தைக்கொண் டிரதத்தைவிட்டுப் பற்பலவசுரர்களால் நிறைந்ததனது நகரத்துக்குத் திரும்பிச்சென் (46) றங்கு தெருத்திண்ணையி லுட்கார்ந்து பாட்டுப்பாடுவோர்களும், சூதுசொக்கட்டாடுவோர்களுமான பல வசுரோத்தமர்களைக் கண்ணோக்கிக்கொண்டே பற்பல விரத்தினங்களா லலங்கரிக்கப்பட்டதும், மனதைத்திருடலுற்ற கொடிபோன்ற வுடல்களைக்கொண்ட பல சுந்தரமாதர்களாற் சூழப்பெற்றதுமான தனதாண்மனைக்குட் சென் (47½) றங்குபலபல வுபசாரங்களா லாதரிக்கப்பட்டும் மிகுந்த மனவேட்கம் கொண்டவனாசி (48) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அவனிங் குயுத்தத்தைப் பற்றிச் சிந்தையடைந்து மிகவும் நொந்திருந்தனன்.

பூதர்களும் படைத்தலைவர்களும் கோலாகல சத்தத்தோடுகொண்டாணடித்தார்கள். (49) அப்போ தாகாயத்திலிருந்த தேவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள். அதுபோல் தேவதுந்துபிக ளடிக்கப்பட்டு மிகவுமொலி முழங்கலாயிற்று. (50) மகா பலவானாகிய வீரபாகுவை நோக்கி யப்போது பூதர்களுணர்த்திட்ட தென்னவென்றால் "ஓ! தேவரக்ஷகரான வீரனே! இப்போதவ் வசுரவீரனைப் பட்டணத்திலிருந்திங்கு கட்டிக்கொண்டு வரல்வேண்டு" (51) மென்றிவ்விதமாகப் பூதர்களுரைக்கையி லப்போது வீரபாகு வசனமுரைத்ததாவது:— "ஓ! கேளீர்! வீரர்களே! இவன் யாவரானாலும் 'போரினின்று புறம்காட்டியோடுவோனைத் திரும்பவும் படைகளைக்கொண் (52) டவமதித்தல் தகா' தென்று தத்துவப்பொருட்களை யறிந்தபெரியோர்கள் கூறுகின்றார்கள். ஆகையாலவன் தானாகவேவந்தா லவ்வனைச்சந்தேகமின்றிச் சமுகரித்துவிடுகின்றேன்" (53) மெனப், பூதப்படைத்தலைவர்களு மப்போ திவ்வாறு முதலிய வசனத்தைக் கேட்டு மனக்களிப்படைந் தெல்லோர்களும் தங்க ளேமகூடபுரத்துக்குப் புறப்பட்டுவிட்டார்கள். (54) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பானுகோபனுக் கிப்போர்க்கொத்த அவமானம்நே

ரிட்டதுகண்டு சூரியன் பீதிகொண்டவன்போல் கிரணங்களை யொடுக்கி க்கொண்டு மேற்கடலிலாழ்ந்தனன். ஸகலவீரர்களு மப்போ தெல்லா வசுரர்களையும் கொன்றுவிட்டு மகா மகிமைபொருந்திய ஸ்ரீ சுப்பிர ம்மணியன் வாஸஸ்தானமாகிய ஹேமகூடபுரத்தைச் சீக்கிரமடைந்தார் கள். (55)

ஆறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் எ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போது வீரபாகுமுதலியவர்களும் மற்றுமுள்ள வெல்லா ப்பூதப்படைத்தலைவர்களும் ஸ்ரீ குமரேசன் சன்னிதிக்குச் சீக்கிரமாகச் சென்று பூமியில்விழுந்து வந்தனம்பண்ணி (1) சிறந்ததுதிகளால் தோத்திரம்செய்து சங்கதிகளை யறிவித்தனர்கள். பிறகு பிரபுவானவர் அவர்களெல்லோரையும் பரிபூர்ணகிருபையோடு திருக்கண்ணுற் றப்போ தவர்களைத்தம்தம் விடுதிகளுக்குச்செல்லும்படி யனுமதியருளினர். பி ன்பவரெல்லோர்களும் மகாசந்தோஷத்தோ டத்தேவாதிதேவனை வந்த னித்துவிட்டு வீடுசென்றார்கள். (3)

அப்போதுபவவானுனசூரபத்துமன்தன்மைந்தனடைந்தஅவமா னத்தைத் தூதர்முகமாய்க் கேட்டு "ஓ! நாளைத்தினமே யாம்சென்றவ் (4) விளைஞனை கந்தன் முதலிய வெல்லோர்களையும் சடிதியிற் சந்தே கமின்றி ஜயித்து விடுகின்றோ" மென்று கூறித்தனதத்தூதர்களை யவர்க ள்விட்டுக் கனுப்பிவிட்டு (5) அவ்வசுரேச னவ்விரவுமுழுதும் சிந்தாக் கிராந்தனுக விருந்து பிறகு காலையிலெழுந்து காலைக்கடன்கள்முழுமை யும் முடித்துக்கொண்டு பற்பலவித இரத்தினங்களால் விளங்கப்பெற்ற சிங்காதனத்திலிருந்து தனதாயிரம்கோடிதூதர்களையு மங்கங்கு பலபல விடங்களிலுள்ள தனது சைனியங்களை யழைத்துவரும்படி யனுப்பின ன். ($7\frac{1}{2}$) உடனே யத்தூதச்சிரேஷ்டர்கள் புறப்பட்டுச் சென்று அந் தந்தத் தீவுமுதலியவைகளது பூஸந்திகளி (8) லுள்ள வயுத்த வீரர்க ளையும் அவர்களது தலைவர்களையும் சடிதியி லழைத்துவந்தார்கள். அப் போது சூரபத்தும னவர்களைப் பார்ப்பதற்காகக் கோபுரத்தின்மீ தே றி (9) யதனுச்சியி லிருந்துகொண்டு தன ததீனர்களான விலக்ஷம் வாகினி சங்கியைகொண்ட வசுரப் படைவீரர்களைக் கண்டு (10) வெகு

சந்தோஷங்கொண்டு சீக்கிரமா யிறங்கி யவ்வசுரேசன் பற்பல வித விர
த்தினங்களா லிழைக்கப்பெற்ற வோ ருன்னதமான மகாதனுசைக் கை
யிற்கொண்ட (11) போது இந்திரதனுசைக் (வானவில்) கொண்ட
மேகக் கூட்டங்கள் போல் விளங்கலுற்றவனும், புடம்போட்ட தங்கம
யமான பாணங்களால் நிறைந்த வம்புராத்தூணிகளைக் கொண்டவனாக
வும், (12) மறைந்துவிடாமல் நிலையாகவே மின்னிக்கொண்டிருக்கி
ன்ற மின்னற் கொடிகளி னொளித்திரள்களால் விளங்கலுற்ற கார்மேகம்
போன்ற வுருவ முடையோனும், தரிக்கலுற்ற தும்பை மலர் மாலைகளா
ல் மிகுந்த சோபையைக் கொண்டவனும், (13) அதனால் கொக்கு மு
தலிய வெண் பறவைகள் மாலை கோர்த்ததுபோ லருகினிற் பறக்கப்
பெற்ற நீருண்டமேகங்களது காந்தியைக் கொண்டவனும், தண்டாயுத
ம், பட்டாக்கத்தி, கைக்கத்தி வாள் கத்தி கண்டாக்கோடாலி முதலிய
பல வாயுதங்களால் விளங்கியவனுமான வசுரராஜன் (14) மந்தரகிரி,
கைலைகிரி, மகாமேருகிரி முதலியவைகளை மேற்கொண்டதும்பற்பல விர
த்தினங்களால் விளங்காநின்றதும், விசித்திரமும் சிரேஷ்டமுமானதும்,
ஆகாய கங்கையின் ஜலத்தை யளைகின்ற குடையினாலு மாலவட்டத்
தாலு மலங்கரிக்கப்பட்டதுமான விந்திரலோகத்தேரின்மீ ($15\frac{1}{2}$) தேறி
கார்ந்துகொண்டு சிறந்த மந்திரிமார்களுடனும், மகா வீரர்களும் மகாப
லசாலிகளுமான மற்றச் சேனாதிபதிகளுடனும், சகல வாயுதங்களாலும்
நிரப்பப்படலுற்ற மற்ற பல தேர்களுடனும் புறப்பட்டு (17) இராஜ
வீதியைக்கடந்து கோபுரவாசலுக்கு வந்தபிறகு சிங்கமுகன் சுதனான
வதிசூரனையும் தாரகன்செல்வனான வசுரேசனையும் (18) படைத்தலைவ
ர்களாகப்பட்டங்கட்டி முந்திச்செல்லும்படி யனுப்பிவிட்டுக் காஹளி,
பேரி, படஹம், மட்டு, டிண்டிமம், ஜர்ச்சரம் முதலியவாத்தியங்க (19)
ளமக்களமாய் முழக்கப்பட்ட வோசைகளாலும், சங்கம், புல்லாங்குழல்,
வீணைமுதலிய விர்பவாத்தியங்கள் வாசிக்கப்படுமோசைகளாலும், குதிரைகளி
ன்கனைத்தல்களாலும், மதயானைகளது பிளிறுதல்களாலும், (20) சுற்றி
யோடுகின்ற தேர்களது பெரும்சக்கிரங்களின் விளும்போசைகளாலும்,
சேனைகளின்கோலாஹலச்சத்தங்களாலும், கட்டியக்காரர்களுடைய துதி
பாடல்களாலும் (21) ஊழிகாலக்கடலின் பெரியவலைகள தோசை
யை மேற்கொள்ளப்பெற்றவனும்,சிறந்தபலபலவிரத்தினங்களாலிழைக்
கப்பெற்ற குடைகளின் வரிசையால் மறைக்கப்பட்ட முகத்தையுடைய
வனும், (22) சேனைகளின் [illegible] கிளப்பிவிடப்பட்ட புழுதித்திர
ளினால் சூரியமண்டலம், [illegible] திசையிடைவெளி, திசைமுகங்கள் முத
லியவைகளெல்லாம் பறவிமறைக்கப்படப்பெற்றவனுமாகவச் சூரபத்து

மன் துரிதமாகச்சேனைகளோடுமகாபெரியதான போர்க்களத்தை யடைந்தான். ($23\frac{1}{2}$) அதுகண் டிந்திரனுமவன் வரவைப்பற்றி ஸ்ரீகுமரேசன் சன்னிதியி லறிவித்து(24)அத்தேவேசனை வந்தனித்துப் பிரார்த்தித்துக் கொண்டதாவது:—"ஓ! அடியார்களுக்கு நேசனே! சகலபுவனங்களையும் காப்பவனே!ஓ!மகா பிரபுவே! இப்போதுயுத்தத்துக்கு நேர்ந்திருக்கின்ற ஸகலவசுரர்களுக்கும் அதிபதியான துராத்துமனாகிய விச்சூரனைச்சுருக்கினில் ஜயிக்க வேண்டும்" ($25\frac{1}{2}$) என, ஸ்ரீமுருகனுமிவ்வாறுக ப்பிரார்த்திக்கப்பட்டதன் பேரில் 'நல்லதைப்படியே ஆகட்டு' மென்றிந்திரனுக்குத் திருவாக்கருளி, (26) பிறகுச் சகலவசுரர்களையும் தொலைப்போரானப் பிரபுவானவர் சிங்காதனத்தினின்றிறங்கித்தமது ஸாரதியான வாயுதேவனைத் துரிதத்தி லிரதத்தைக் கொண்டுவரும்படி (27) கட்டளையிட, பிறகம் மகாரதம் கொண்டுவரப்பட்டவுடன் பிரபுவானவர் பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலியவர்களால் துதிகூறப்பட்ட மணையடிகளைக் கொண்டவராகவும், (28) வீணைவாசிப்பதில்முயன்றுநின்றஸ்ரீநாரதர்முதலியவர்களாற் சேவிக்கப்பெற்றவராகவும், இதேவிதமாய் (முந்திமீனுருவமடைந்திருந்த) ஆறுமுனிவர்களும் நடிகளோடு கூத்தாடப் பெற்றவராகவும், (29) பேரீ, காஹளம், நிஸ்ஸாணம், ஜர்ச்சரீ, மட்டு, மத்தளம், சங்கம், புல்லாங்குழல், வீணைமுதலிய வாத்தியமுழக்கங்களால் கடலோசையை வெல்லப்பெற்றவராகவும், (30) கீதங்கள்பாடலுற்ற கின்னாச் சிரேஷ்டர்களாலும், தமது சிறந்த குணங்களை யெடுத்துக்கூறிய கட்டியக்காரர்களாலும் குடை சாமரங்கள் முதலியவற்றைக் கைதனிற்பற்றிய தேவச்சிரேஷ்டர்களாலும், (31) இன்னும் பலபல வுபசாரங்களைச் செய்துவாலுற்ற மற்றவர்களாலு மருகினிற் சூழப்பெற்றவராகவும் கேளீர்! சௌனகாதி முனிவர்களே! ஸ்ரீசுப்பிரம்மணியன் தமதிரதத்தின்கண் ணெழுந்தருளித் துரிதமாகப் பிரயாணப்பட்டனர். (32) அப்போது அவ்வீரர்களும்ஸகல படைத்தலைவர்களோடுகூட சகலாபரணங்களாலு மலங்கரித்துக்கொண் டிரதங்கள்மீ துட்கார்ந்து துரிதமாகப்புறப்பட்டனர்கள். (33) பூதப்படைகள் யாவும் கோலாஹல சத்தம்பண்ணிக்கொண்டு பிரயாணப்பட்டுச் செல்லுகையில் புழுதித்திரள்கள் கிளம்பிச் சூரியனை மறைக்கலாயிற்று. (34) இவ்விதமாக வெல்லோர்களும் சன்னத்தப்பட்டு மிகுந்த சந்தோஷத்தோ டியுத்தகளத்துக்கு வந்தனர்கள். உடனே பூதப்படைகள், வடவாக்கினியானது கடல்நீரால் சூழப்பட்டதுபோல் மகா பலவான்களான வசுரர்களால் மிகுதியாகச் சூழ்ந்துகொள்ளப்பட்டன. அப்போது ($35\frac{1}{2}$) பூதர்கள் மரங்களையும் மலைகளையும் பிடுங்கி (36) பெரிதான கற்பாறைகளையு மெடுத்துத் துரா

த்துமர்களான வசுரர்கள்மீதெறிய, (36½) அவ்வசுரர்களு மப்போது வெகுகோபம்கொண்டு மிகுந்த கூச்சல் செய்தவர்களாகி மகா கோரங் களான தங்களதாயுதங்களைத் துரிதமாகவப் பூதர்கள்மீ தெய்தார்கள். (37½) பிறகு பூதர்கள் மகா வாக்கிரகம் கொண்டவர்களாகி நூறசுரர்க ளை வாரிவாரி யெடுத்துச் சுழற்றியடிப்பதா லசுரர்களையும், (38) பதி னாயிரம் குதிரைகளால் மிகுந்த குதிரைகளையும், ஆயிரம் பெரிய யானை களால் மதம்கொண்ட யானைகளையும், (39) மேலுமிரதங்களாலும் யா னைகளாலும் மற்றுமுள்ள வசுரர்களையும் பரபரவென்று வாரிவாரி யடித் தடித்து மிகுதியான வசுரர்களையும் யானைகளையும் குதிரைகளையும் கொ ன்றார்கள். (40) தவிரவு மவர்கள் சிலவசுரர்களையும் குதிரைகளையும் கா ல்களை வாரிப்பிடித்துக் கரகரவென்று சுழற்றிப் பூமியிலோங்கி யடித்து மடித்தார்கள். (41) பிறகசுரர்களும் பெரும்கூச்சல் செய்வதனால் ம கா பயங்கரர்களாகிப் பூதர்களால் விட்டெறியப்பட்ட விருக்ஷங்களையும் மலைகளையு மாயுதங்களாற் கண்டித்து (42) ஓ! கோ! மறுபடியுமவர் கள்மீது பலபல வாயுதங்களை விட்டுக்கைகால்களை முறித்துத் துறத்தி னார்கள். (43) பின்புடனே பூதப்படைத்தலைவர்கள் கோபமூண்டவர்க ளாகி மிகுந்த சத்தமிட்டுக்கொண்டு முன்னோக்கிவந்து தண்டாயுதம், க த்தி, பாணம்முதலியவின்னும் பலவாயுதங்களால் பலவசுரர்களைக்கொன் று மற்றவர்களை விறட்டினார்கள். அப்போ தசுரர்களி லனேகம் தலைய ற்றமுண்டங்களுண்டாகி, (45) மிகுந்த விரத்தப்பிரவாகமுடைய வாறு பெருகலாயிற்று. இப்படியிருக்கையி லசுரர்களுக்குள் மிகுந்த பலிஷ் டனான, சிங்கமுகன் மைந்தனான மகா சூரனென்ற அதிசூரனிதைக்கண் டு (46) மிகுந்த கர்வத்தோடு சிங்கநாதம் செய்வதினால் திசைமுகங்க ளொலிக்கலாகப்புறப்பட்டு, ஏறியதேரொடிந்திடில்மறுபடியேறுவதற்கா க வேண்டிய, (47) வேறிரண்டாயிரம் தேர்களால் பின்தொடரப்பட்ட வனாகி மகா வுன்னதங்களான பதினாயிரம் குதிரைகளா லிழுக்கப்பட்ட விரதத்தின்கண் ணுட்கார்ந்துகொண்டு (48) மேகம்போல் மிகுதியா கக் கர்ஜனைசெய்து சரமாரியைச் சொரியலாயினான். அப்போது மகா பெருமைபொருந்திய உக்கிரனென்றவோர் வீரச்சிரேஷ்டன் அப்பேர்க் கொத்த மகா சூரனை, (49) வேகத்தோடு தண்டாயுதத்தை யெடுத்து மார்பின்கண் ணோங்கியடிக்க,அப்போதவடியினா லவன் மார்பினிலிருந்த கவசம் பிளக்கப்பட்டது. (50) அதன்மே லதிசூரன் வெகுகோபம்கொ ண் டிலக்ஷம்அம்புகளைத் தொடுத்து அவனது தேகத்தை யிரத்தக்குமிழி கொள்ளவடித்தான். (51) பிறகப்பூதநாதன் பரபரப்போடோ ருயர்ந் த மலையைப்பிடுங்கி மகா வேகத்தோடவன் தேர்மீதெறிய, (52) அது

விழுந்ததா லத்தேரனேகம் துணுக்குகளாகிப் பூமியில் விழுந்தது. உடனே யவ்வசுர னோர் நொடிக்குள் ஜுவலிக்கலுற்ற மற்றோரிரதத்தின் மீ தேறிக்கொண்டனன். (53)

ஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் அ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

மற்றோரிரதத்தி லவன்வேகத்தோடேறும்போதேதேவர்களைக் காக்கின்ற அவ்வுக்கிரன் வாயுவேகமுடைய அவனது குதிரைகளைக் காலினாலோருதை விட்டுக் கிழேசாய்த்தான். (1) அதன்மே லசுரனத்தேவேசன் மீது நூறம்புகளைப் பிரயோகிக்க, அவற்றையவன் தன்தண்டத்தினால் தட்டிவிட் டட்டகாஸம் செய்தான் (2) பிறகசுரனும் மகாவுன்னதமான வேறிரதத்திலிருந்து கொண்டு பிரளயகாலாக்கினிக் கொப்பான வொளியைக் கொண்ட மகாகோரமான ஆக்கினேயாஸ்திரத்தைப் (3) பிரயோகித்து ஊழிகாலமேகம்போலதிபயங்கரமாகக்கர்ஜனம்பண்ணினன். அப்போதவ்வஸ்திரமோவென்றால் நூறு கிளைகளாகப்பிரிந்து நெருப்புப் பொரிகளைக் கக்கிக்கொண்டு மிகுந்த சத்தத்தோ டதிபயங்கரமாகப் பத்துத் திசைகளையும் பிரகாசிப்பித்துக்கொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மகாவேகத்தோ டுக்கிரனருகிற்சென்றது. (5) அதன் பிறகுபூதவீரன் ஹிருதய கமலத்தில் ஸ்ரீ குகபிரானைத் தியானித்துக் கொண்டோர் நொடிக்கு ளதனைப் பிடித்து அபக்கென்று விழுங்கிவிட்டான்.(6) அது விழுங்கப்பட்டவுடன் மகா பலவானான அவ்வசுரன் மகா கோபங்கொண்டு நீர்மயமான வாருணாஸ்திரத்தைப் பிரயோகிக்க,அதுவும் மிகுந்த சத்தத்தோடு பயங்கரமாகி (7) அலைகளோடு கடல்பிறண்டு வந்தது போற் கிளம்பி வருகையில் மகாபயங்கரமான அவ்வஸ்திரத்தையு மத்தேவேசன் பக்ஷித்து விட்டான். (8) அசுரன் திரும்பவும் கோபங்கொண்டு மகா பயங்கரமான சத்தத்தோடுகூடிய பிரம்மாஸ்திரத்தைவிட, அவ்வஸ்திரம் திசைகளை யெல்லா மொலியால் நிரப்பிக் கொண்டு(9) நான்கு நான்கு முகங்களோ டனேகம் கிளைகளாகப் பிரிந்து கிளம்பி வாய்

களை 'ஹா' வென்று பிளந்துகொண்டு மகாவேகத்தொடவனருகிற்சென்றது.(10) அப்போதுக்கிரன் ஸ்ரீ வடிவேலனை மனதில் தியானித்துக்கொண்டப்பேர்க்கொத்த மகா கோரமான வப்பிரம்மாஸ்திரத்தையுங்கோபத்தோடுமுன்போலவேவாய்க்கிரையாகக்கொண்டுவிட்டனன்.(11) இவ்வாறாக வெல்லாவஸ்திரங்களு மிரைகொள்ளப் பட்டவுடனம்மகாவீரன்சகலங்களையும் சமுகாரம் செய்யலுற்றதும், ஒலியினால் சகலஆசை (திக்கு) களையும் பூர்ணம்செய்யலுற்றதும், போர்முன்னர் சத்துருக்களை நிராசர் (ஆசையொழித்தவர்) களாகச் செய்விக்கலுற்றதும், சண்டை முன்னேரிடத்தும் பழுது பெறாததுமான நாராயணாஸ்திரத்தை முறைப்படியத்தேவெசன்மீது பிரயோகித்தனன். (12-13) அப்போதவ் வஸ்திரமோவென்றால்பத்துதிக்குகளையும்மிகுதியாகப்பிரகாசிப்பிததுக்கொண்டும்,பிரளயகால மேகம்போல்மிகுந்தசத்தம்செய்து கொண்டும்பலவுருவமடைந்து(14)மகாவேகத்தோடுதேவேச னண்டையில்வரும்போ தவன்கோபத்தினாற்சிங்கம்போற்கர்ஜனம்பண்ணி, தேவாதிதேவனாகிய ஸ்ரீமுருகேசனையந்தக்காணத்தில்தியானம்பண்ணிக்கொண்டம் மகாபலவானதனைநாவினாலேநக்கியுட்கொண்டுவிட்டனன். ($15\frac{1}{2}$)அப்போ தவ்வசுரனவனதப்பேர்க்கொத்த பராக்கிரமத்தைக் கண்டு (16) "ஆ! ஆ! இவன்யாவன்? பிரம்மாவா? விஷ்ணுவா? அல்லது பகவானாகிய ஸ்ரீ ருத்திரனா? ஓ! கோ! எந்த மகா பலவான்தா னிப்பேர்க்கொத்த திவியாஸ்திரங்களுக்கு முன்னின்று சமாளிக்கலாகும்? (17) இவனேவென்றா லவற்றையெல்லாம் பக்ஷித்துவிட்டானே! இவனுக்கென்ன வீரியம்! என்னதைரியம்!" என்றிவ்விதமாக வாச்சரியமடைந்து பயத்தினால் மெய்நடுக்கம் கொண்டவனானன். (18) பிறகு சண்டைக்காக வந்த வசுரரெல்லோர்களும் பயத்தினால் நடுக்கம்கொண்டார்கள். ஆகாயத்திலிருந்த தேவர்களெல்லோர்களு மவனது மகா வற்புதமான வலிமையைக்கண்டு(19) மிகுந்த வாச்சரியத்தோடு கொண்டாடித் துரிதத்தில் பிரம்மனை நோக்கி யுரைத்ததாவது, "ஓ! பிரபுவே! இவனுக்கிவ்வளவு வலிமையும் வீரியமும்தைரியமு மெவ்வாறுண்டாயிற் றென்பதை யெடுத்துரைத்தல் வேண்டு" மென, (20) பிரம்ம னிவ்விதமாகச் சந்தேகம்கொண்ட தேவர்களையுரைத்ததோவென்றால்:— "கேளீர்! தேவர்களே! ஸ்ரீ சிவபிரானை யடுத்திருக்கின்ற வனேகர்களி லிவன் முதன்மையான சிவநேசன். (21) அளவற்ற மகிமைகொண்ட ஸ்ரீ பரமேசுவரனுடைய வருளை யிவன் பூர்ணமா யடைந்தவன். இப்பலவான் சகல வண்டங்களையு மோர் நொடிக்குள் நாசம்செய்ய வல்லவன். (22) பூர்வத்தில் போர்முன்னர் விடப்பு

ட்ட விஷ்ணுசக்கிரத்தை விழுங்கலான மகா பலவானுகிய கணத்தைக்கா ட்டிலுமிவன் மிக மேன்மைகொண்டவன். ஆகையாலிவனுக்கவ் வசுரர்க ளெம்மாத்திரம்? (23) மேலும் ஸ்ரீ மகாதேவன் புதல்வனுன சரவண பவனிடத்துப் பற்றுதலுள்ள மனதை யுடையவர்களும், உலகமெல் லாம் பரிசுத்தம் பண்ணுவோர்களும், சகல தேவாசுரர்களாலும் பூஜிக்க ப்படலுற்றவர்களுமானவர்க் கெதுதானசாத்தியம்." (25) என்றிவ்வி தமாகப் பிரம்மனுல் மிகவாதரவோ டுரைக்கப்பட்டதின் பேரில் தேவர் கள் மறைமலர் மாலையணிந்த ஸ்ரீ குமரேசனை ஹிருதய கமலத்தினில் தியானம்பண்ணிக்கொண் (25) டெல்லோர்களு மாநந்தக் கண்ணீர்பெ ருகித் தளும்பிய கண்களையு முரோமங்கள் சிலிர்க்கப்பெற்றவுடல்களையு ம் கொண்டவர்களாகி "ஓ! ஓ! இவனுக்குக் கந்தனருளாலிதிலும் அதி கவலிமையுண்டாகக்கடவ" (26) தென்று வாழ்த்திவிட் டிச்சண்டை யைக் காக்ஷிகொள்வதற்காக வாகாயமார்க்கஞ் சென் றங்கு நிலைகொண் டார்கள்.

பிறகசுரனேவென்றால் "ஓ! கோ! இவனை யெந்தவுபாயத்தினு ல் சடிதியில் வெல்லலாகும்? (27) போர்முன்னர் மகா பயங்கரனுகிய பெருமைபொருந்திய பலவானுன வித்தேவாக்ஷகனை யெந்த மகாஸ்திர ம்தான் வென்றுவிறட்டலாகு' (28) மென்றுலோசித்ததி லுடனே மகி மைகொண்ட பாசுபதாஸ்திரத்தை நினைவிற்கொண் டவ்வசுரவீரன் அச் சிவாஸ்திரத்தை மனதினுற் பூஜைசெய்து (29) மிகக்கொரேமுள்ளது ம், மகா சமுகாரஞ் செய்யலுற்றதுமான அவ்வஸ்திரத்தைப் பிரயோக ஞ் செய்ய, அது வெளிக்கிளம்பி எல்லா வுலகங்களையும் சமுகாரம் செய் ய முயன்ற ஸ்ரீ காலாக்கினிருத்திர னட்டகாசம் செய்வதுபோல் பிரம்மா ண்டம் முழுதும் பேரொலியால் நிரப்பலாகி ($30\frac{1}{2}$) பலபல விஷங்க ள்,சர்ப்பங்கள், அக்கினி, இயமதூதகணங்கள், இவைகளையும் (31) இ ன்னும் ஜுவலிக்கலுற்ற மகா கொரேமுடைய பற்பல வாயுதங்களையும் கக்கிக்கொண்டு சகல வுலகங்களையும், பூதத்தலைவர்களையும் நடுநடுங்கச் செய்துகொண்டும் (32) மகா விரைவாகத் துரிதத்திற் பூதசைனியங்க ளை விறட்டலாயிற்று. அதுகண் டுக்கிரனும் பெரும்பீதி கொண்டவனு கித் தண்டத்தை யெறிந்துவிட்டுத் தன துச்சிமீ தஞ்சலிகொண்டு ஸ்ரீ சி வபிரானை ஹிருதயகமலத்தில் தியானித் ($33\frac{1}{2}$) துடனே ஸ்ரீ பஞ்சாக்ஷ ரமகா மந்திரத்தை மனதினிலுச்சரித்துக் (34) கண்ணையிறுக மூடிக் கொண்டு "ஓ! ஹர ஹர, பவ, சம்போ, மகாதேவா சிவா, சங்கரா வெங்

தனைக் காத்தருளவேண்டும்" என்று ஜபித்துக்கொண்டே (35) யம்ம கா பலவானுனவ னப்போதுடல் முழுதும் வடவடவென்று நடுக்கம் கொண்டவனுகி நின்றனன். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! உடனே மகா கோரமான அவ்வஸ்திரமோ வென்றுல் ஸ்ரீ சிவாக்கினையின் படி யவனையணுகாம லப்போதச் சிவபிரானண்டைக்கே யேகிவிட்டது என, (36½) அப்போதம் முனிவர்கள் சூதமுனிவரை நோக்கிக் கேட்டதோவென்றுல்:— "ஓ! பகவானுகிய சூதமுனிவரோ! ஓரிடத்தும் பழுதுபெறுத வெல்லாத் தெய்வங்களுடைய அஸ்திரங்களுக்கும் ராஜாதி ராஜனுன மகா கோரமாகிய வப்பாசுபதாஸ்திரமானது அசைக்கமுடியாத இவ்வுக்கிரவீரனை யணுகாமலே யெவ்வாறுக, (38) ஓ! யாவுமறிந்த முனிவரோ! ஆக்கினையின்படி ஸ்ரீ சர்வேசுவானண்டைக் கேகிவிட்டதென்பதை யெடுத்துரைத்தல் வேண்டு" மென, எல்லாப்பொருட்களின் சாராமிசங்களையும் நன்கறிந்தவரான சூதமுனிவரவ்வாறு கேட்கலான முனிவர்களை நோக்கி யுரைக்கின்றுர்:— (39) கேளீர்! முனிவர்களே! மகிமைபொருந்திய பாசுபதாஸ்திரமானது முந்தி ஸ்ரீ மகாதேவனு லிவ்வசுரனுக் கருளப்படும்போதே யப்பகவானவனுக்குத் திருவாக்கருளியதோவென்றுல்:— (40) "கேளாய்! அசுரா! நீ யெப்போது யாவராலுனு மாயுதம் வைத்திராதவன்மீ திவ்வஸ்திரத்தை விடுகின்றுயோ அதப்போதுடனேநம்மிடம் வந்துவிடலாகும்" (41) என்றருளப்பட்டிருப்பதா லதிப்போது ஸ்ரீமகேசுவானிடம் சென்றுவிடலாயிற்று. (42) பிறகு மகாசூரனென்ற வதிநூன்முதலிய வசுரர்களெல்லா மப்பாசுபதாஸ்திரமும் விணுகிவிட்டதைக்கண் டெல்லோர்களும் 'கஷ்டம் கஷ்ட' மென்று மனமொடிந்து பயத்தினு லுடல்நடுக்கம் கொண்டவர்களாகி மிகவும் கதிகலங்கலானுர்கள். (43) அப்போதுடனே பூதர்களெல்லாம் கோலாஹலங்கொள்ளவும்,தேவர்களுயா மலர்மாரிபொழியவுமாகையி லதிசூரன் தேரைவிட்டிறங்கிக் கைமீது தண்டாயுதமெடுத்துப் புறப்படலாயினன். (44)

எட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் கூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிறகதிசூரன் கோபத்தினுல் பற்றி யெரிகின்றவன்போலாகி விரைவோடு கரத்தினுல் தண்டத்தைக் கரகரவென்று சுற்றிக்கொண்டே இங்குமங்கு மெழும்பி யெழும்பிக் குதித்தோடிவந்து தனதாயுதங்

கலெல்லாம் தவிடுபொடியாக வினுக்கிவிட்டதை நினைத்து நினைத்துருகி
பவனாகி யவ்வசுரராஜன் (2) பூதர்களின் தலைவனான வுக்கிரனைப்பெரு
ம் சத்தத்தோடதட்டிப் பயமுறுத்திக்கொண்டே துரிதமாய்வ னருகில்
வந் தவனது மார்பின்மீதடித்தனன். (3) அதன்மேலவனும் வெகுகோ
பம்கொண் டவ் வசுரன்தண்டத்தையே பிடுங்கிக்கொண்டு கேளீர்! பிரா
ம்மணோத்தமர்களே! விரைவோடவனை யடித்துப் பிணம்புறட்டிவிட்
டனன். (4) அப்போதவன் மாண்டுவிட்டதைப் பூதசைனியங்கள் க
ண்டு கடலிரைவதுபோ லெல்லோர்களும் மகா பயங்கரமாகப் பெரும்
கூச்சலிட்டார்கள். (5) அதன்பிறகு தாரகன் மைந்தனான வசுரேந்திர
னென்பவன் புறப்பட்டுக் கார்மேகம் நீர் சொரிவதுபோல் மிகுந்த சத்
தத்தோ டம்புகளை யோர் நொடிக்குள் மாரிமாரியாகப் பொழிந்துகொ
ண்டே கிளம்பினான். (6) மகா வேகத்தோடு வரலுற்ற அவ்வசுரனைக்க
ண்டு பூதர்களோட்டம் பிடித்தார்கள். உடனே பெருமைகொண்ட கன
கனென்றவ னவ்வசுரேந்திரனுடைய வலிமையை யறியாமல் மிகுந்த ச
த்தம்செய்துகொண் டவனுக்கெதிர்முகமாகப் புறப்பட்டனன். (7½)
அப்போதசுர னவன் மெய்தனிலோ ரம்பை யெய்தனன். (8) கனகனத
னை யோர் கையினால் தட்டிவிட் டவன ரதத்தின்மீ தேறி யவன் ஸாரதி
யை யடித்து மடித்து அவனுடைய வில்லின் நாணையும் பற்களால் கடித்
து (9) சினங்கொண்டு துண்டுதுண்டாக்கிவிட்டனன். பிறகப்போ
து கனகன் திரும்பிச்சென்று துரிதமாக வோர் மலையைக் கைமீதெடுத்
துக் (10) கரகரவென்று சுழற்றி விரைவாக வசுரன்மீ தெறிந்தனன்.
பிறகசுரனோவென்றால் மகா வுன்னதமான மற்றோர் வில்லைக் கைமீதெ
டுத்துக் (11) கூர்மையுள்ள எட்டுப்பாணங்களா லம்மலையைத் தூளா
க்கிவிட்டுத் திரும்பியும்மகா வலிமையோ டாயிரமம்புகளைவிட் (12) டவ்
வசுரவீரன் கனகனைமண்மீது சாய்த்துவிட்டான். அப்போதவன் சாய்
ந்தவுட னசுரன் மற்றோர் பாகனை வைத்துக்கொண்டு (13) பூதசேனை
களை நான்குபக்கங்களிலும் விரட்டிக்கொண்டே சீக்கிரமாய் வருகையில்
தேவரக்ஷகனான மலைக்கு நிகராகிய உன்மத்தனென்பவன் கையினாலோ
ர் பெரியமலையைப்பிடுங்கிக்கொண்டு அதிகோரமாக வருகின்ற அவ்வசு
ரனை (14½) மிகுந்த கர்ஜனங்களால் அதட்டி சிங்கத்தை யானையெதிர்
த்ததுபோ லவனோடெதிர்த்து (15) மகா வலிமையோ டவனது தே
ர்க்குதிரைகளைக் கொன்றான். பிறகசுரன் மிகுந்த கோபாக்கினியோ
டவனைப்பார்த் (16) தவன்மீதனேக பாணங்களைவிட்டுத் துளைத்து இ
ரத்தம் தாரைதாரையாய்ப் பெருகச்செய் தோர் நொடிக்குள்ளத் தேவ
வீரனை மூர்ச்சையடைவித்தான். (17) அப்போது மதம்தலைமேற்கொ

ண்டு அவ்வசுரனை நோக்கி மத்தனென்றவன் சீக்கிரமாகப் புறப்பட்டுக் கண்களில் நெருப்புப்பொறிகள் பறக்கலுற்றவனாகி யோர் பெரிய மலையை யெடுத்துக்கொண் (18) டோடிவருகையி லவனைப்பார்த்து அசுரன் கோபத்தினாற் கண்கள் கலங்கப்பெற்றவனாகி யவன்மீது மகா வோசைகொண்ட பத்துப்பாணங்களைப் பிரயோகிக்க, (19) தேவவீரனவைகளா லடிபட்டிரத்தம் தாரைதாரையாய்ப் பெருகி யோடியதால் மகாபயங்கரனாகித் தான் வைத்திருந்த வுன்னதமான மலையை மிகுந்த கோபத்தோ டவன்மீ தெறிந்தான். (20) அவ்வாறு வருகின்ற மலையை யசுரன் தானாகவே மார்பினிலேந்த, அம்மலையானது மிகுந்த கெட்டியும் விஸ்தாரமுமுள்ள அவனது மார்பினிடையில் விழுந்தவுடன் (21) தூள்தூள்களாகச் சிதறிச் சோகத்தினால்பட்டேனென்று கீழே விழுவதுபோல் பூமியில் விழுந்துவிட்டது. மலைவந்து விழவே யசுரன் கோபாக்கினியானது ஜுவாலைகொண்டெரியப் பெற்றவனாகி (22) யதிதீக்ஷண்மான வாயிரம் பாணங்களை யத்தேவாசுரன்மீ தெய்தவுட னவ்வீரனும்வனது சரங்களா லுடலறுபட்டு மூர்ச்சையடைந்தான். (23) அதன்மேல் சிம்மனென்பவன் மிகுந்த கர்ஜனைசெய்துகொண் டதிவேகத்தோடு கிளம்பி யசுரனுக்கு நேராக வோர் பெரியமலையை யெறிந்தான். (24) பிறகசுரனதனைக் கூர்மையுள்ள வோரம்பினாற் பொடிப்பொடியாக்கிவிட்டான். மேலுமவ் வசுரவீரன் மறுபடியவனால் விடப்பட்ட மகா பயங்கரமான தண்டாயுதத்தையு (25) மதிகூர்மையுள்ள பல பாணங்களாற் சேதித் தவனையும் மூர்ச்சைகொள்ளச் செய்தான். அதன்பிற கவ்வசுரேந்திரன் மற்றெல்லாப் பூதசேனாதிபர்களையு (26) மிடையன் காட்டினில் மாட்டுமந்தையை விரட்டுவதுபோல் துறத்துகையில் இரத்தினகாளிகனுடைய வியர்வைத்திவலைகளினின் றுண்டான இலக்ஷம் வீரர்களிலொருவனான் தண்டகனென்பவன் (27) சடிதியில் வெளிக்கிளம்பிச்சினங்கொண்டு சிங்கநாதஞ் செய்வதனால் மகா பயங்கரனாகி யவ்வசுரவீரன்மீ தாயிரம் சரங்களைப் பிரயோகித்தனன். (28) அப்போ தசுரன் கடுஞ்சினங்கொண்டவனாகி யவனது நெற்றிதனிற் கூர்மையுள்ள பலவம்புகளை யெய்து கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யவனையும் மூர்ச்சையடைவித்தனன். (29) பின்புடனே ஸோமகனென்பவன் தேவர்சேனைகளுக்குத் தலைவனாகத் துரிதமாய் வரவேயவன்மீது மசுரராஜன் பலவம்புகளைத் தொடுத்தான். (30) அப்போதவ்வீரன் கர்வத்தோடு சிங்கநாதம் செய்வதால் திசைமுகங்களை நிரப்பிக்கொண்டு தீக்ஷண்முள்ள வாயிரம்பாணங்களை விட்டவனது சாரதியையு மிரதத்தையும் (31) சடிதியிற் செதல்செதலாக்கிப் பூமியில் வீழ்த்திவிட்டான். உடனே ய

சுரன் மகாவுன்னதமான வேறிரதத்தி லுட்கார்ந்து (32) நிகரற்றவோர் வேலை யதிகோபத்தோ டத்தேவன்மீது பிரயோகிக்க, அதுவிழுந்ததாலவனுமுடனே மூர்ச்சைகொண்டுவிட்டான். (33) பின்பு மகா பராக்கிரமசாலியான வசுரேந்திரனைச் சயிப்பதற்காக விஜயனென்பவன் அரிதமாய்வந் தாயிரம் சரங்களால் மகா பலவானாகியவத் தேவப்படைத்தலைவ னவனது சாரதியையும், கெட்டியான வில்லையும் பூமியில் வீழ்த்தினன். பிறகசுரேசுவரன் மகா கோபாக்கினியால் கண்களில் நெருப்புப் பறக்கலாகி (35) யோர் தண்டத்தைக் காகாவென்று சுற்றியத்தேவவீரன்மீ தெறிந்ததினு லப்போததனைக் கண்டிப்பதற்காக வதன்மீதவனனேக பாணங்களைவிட்டு (36) மவைகளையது கொஞ்சமேனும் சட்டைசெய்யாமல்வந் தவன்மீது விழுந்தவனைச் சாய்த்துவிட்டது. அம்மகாவீரன்சாய்ந்தவுட னெல்லாவீரர்களும் வந்து (37) கலகலவென்ற சத்தத்தினுல் திசைமுகங்களைச் செவிடாக்கலுற்றவர்களாகி கோபாவேசம்கொண்டு பற்பலவித அஸ்திரங்களை வருஷித்தார்கள். (38) பிறகசுரனு மவர்களை யானைகளைச் சிங்கம் விறட்டுவதுபோல் பாணங்களால்விறட்டும்போது மகா பலசாலியான வீரபாகு அவனது நிகரற்ற பராக்கிரமத்தைக்கண்டு (39) விரைவோடு வில்லைவளைத்து நாணேற்றி டவன்முன்னில்வந் தவன்மீ தனேக மம்புகளையெய்தவனது மெய்தனில் நிரப்பினர். (40) அசுரனும் கடுஞ்சினங்கொண் டாயிரம் தீக்ஷணமான பாணங்களா லவ்வீரனை நிரப்பி யிரத்தம் வடியச் (41) செய்து பின்னரு மேழுபாணங்களா லவரது சிறந்த வில்லைக் கண்டனம் செய்தனன். பின்பு வீரபாகுவோவென்றால் மிருந்த கெட்டியான வேறு வில்லைக் கைக்கொண்டு (42) கோபத்தினுல் பிரளயகாலமேகம்போல் கர்ஜனம்செய்து ஆயிரம் பாணங்களா லவனது சாரதி,வில், குதிரை இவைகளைக் கண்டித்தனர். (43) பிறகசுரன் பரபரப்போடு மற்ருேர் தேர்மீ துட்கார்ந்து கோரமான வில்லைக் கொண்டு சிங்கநாதஞ்செய்தவனுகி நூறுபாணங்களா லத்தேவேசனது ஸுந்தர சிரதத்தையுடைத்துவிட்டான். (44½) உடனே வீரபாகு மிகக்கோபமுண்டவராகி யாகாயத்திற்கிளம்பி நிலைகொண்டு (45) ஸ்ரீகுகபிரானைத் தியானம்பண்ணிப் பிறகம்மகாவீரன் மிகுந்த கோலாகல சத்தங்களா லசுரசேனையை நடுநடுங்கச்செய்து பளபளவென்று மின்னுகின்ற கத்தியைக் கைமீதெடுத்துச் (46) சடிதியிலவன திரதத்திற்குதித் தோர்கையைத்துண்டித்தனர். பிறகசுரன் மற்ருேர் கையினுல் கெட்டியான தண்டாயுதத்தையெடுத்து (47) விரைவுடன் வீரபாகுவை மார்பினிலடிக்க, அப்போதத்தேவேசன் காலினுலவன் தலைமீ தோங்கி யோருதைவிட்டு மிகுந்தகர

ஜையுடன் துரிதத்தி லாகாயம் சென்றனர். (48½) அப்போதசுரனும் கைக்கத்தியை யெடுத்துக்கொண்டு பின்தொடர்ந்தோடினான். (49) பிறகு வீரபாகுவும் திரும்பி, தொடர்ந்து வெறுற்ற, மகா கொடியோனை அவ்வசுரேந்திரனை யோர்கொடிக்குட் சிரச்சேதம் பண்ணி யியமன்வீட்டிற்கு விருந்தினனாக வனுப்பினர். (50)

ஒன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௧0-வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போது தேவர்க ளவ்வசுரேந்திரன்மாண்டதைக்கண்டு மிகுந்தகோலாஹலம் செய்தார்கள். முறியடிக்கப்பட்ட வசுரரெல்லோர்களும் பெரும்பீதிகொண் டோட்டம் பிடித்தார்கள், (1) பிறகு மகாபெருமை பொருந்திய சூரர்களுக்கெல்லாம் சிரேஷ்டனான சூரபத்துமன் தன்தம்பிகள தருமை மைந்தர்களான வதிசூரனு மசுரேந்திரனும் மாண்டு விட்டதையும், அசுரர்களெல்லாம் பத்துத்திக்குகளிலும் சிதறுண்டோடலானதையும் கண்டு புறப்பட்டு (2½) இரதத்தைச் சீக்கிரமாயோட்டச் சொல்லி யோர்கெட்டியானவில்லையெடுத் (3) ததின்நுனியில்நாணைப்பூட்டி முட்டியாலதன் மத்தியைப்பிடித்துக்கொண்டு (3½) மற்றோர்கையினு லஞ்ஞாணை மீட்ட, அது “அடா! அசுராதமா! யானெனது நிலைமையில் தவறுதிருக்கையில் நீ யாது நிமித்த மெந்தனை யடிக்கின்றாய்? இப்போ துடனே யுந்தனுக் கிவ்வித அடிபடல் நேரிடக்கடவது; ஆம், இது ஸத்தியம்” என் றவ்வசுரராஜனுக் குரைத்ததுபோல்ப்போதுசத்தமிட்டது. (5½) இஞ்ஞாணோசையைச் செவிகொண்டு ஸகலவுலகங்களும் நடுநடுங்கின. (6) பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலிய தேவரெல்லோர்களு மப்போது பொறிகலங்க லுற்றார்கள். மேலுமதைக் கேட்கலான பூதர்களெல்லா மவர்களை யிரக்ஷித்தருளுகின்ற ஸ்ரீமுருகேசனிடம் சரணம்பெற வோட்டம்பிடித்தார்கள். (7) இவ்விதமாக விச்சத்தமானது ஜனங்களால் பனிரண்டுவருஷகாலம் வரையில் கேட்கப்படலாயிற்று. இப்படி யிருக்கையில் மகா பராக்கிரமங்களையுடைய சேனுதிபர்களெல்லா மப்போது (8) மரங்களாலும் மலைகளாலு மஸ்திரங்களாலு மின்னும் மற்ற பற்பல வாயுதங்களாலும் மகாவேகத்தோடு சூர

பத்துமனம் தெறிந்தெறிந்து யுத்தம்செய்கையில் (9) அவ்வசுரேசன வைகளையெல்லாம் தீக்ஷணமுள்ள பத்தம்புகளால் தூள்தூளாக்கிவிட் டின்னும் நூறு, ஆயிரம், கோடிகளாகப் (10) பலசரங்களைமேலுக்கு மேல் வருஷித் தவர்களை யுடல்களைத்துளைத்தான். சிலர் பாணங்களா லடிபட்டு மிகவும் துயரமடைந் திருந்துவிட்டார்கள். (11) சிலர்மனன் தடுமாறிப் பூமியில்விழுந்து புரண்டார்கள். கேளீர்! பிராம்மணோத்தம ர்களே! மற்றச்சேனாதிபர்கள் பெருமூச்சுவிட் டோட்டமெடுத்தார்கள். (12) இவ்வாறாகப் பலவிதத்தி லவ்வெல்லோர்களு மவமானம்கொண் டார்கள். அதன்மேல் விபர்வைத்திவிலேகளா லுண்டான விலக்ஷம் வீர ர்களும் போர்க்களத்துக்கு வந்து (13) மிகவலிமையோடசுரேசன்மீ து கூர்மையான சரங்களைச் சொரிந்தார்கள். பிறகம்மகாசுரனு மவர்க ளது தேர்களுக் கெதிரிலிருந்தாயிரங்கோடி பாணங்களா லவர்கள் விட் ட பாணங்களையும் கண்டித் தவர்களது வில்லிரதங்களையும் தூள்தூளாக் கிப்பின்னு மதிகக்கோபம் கொண்டவனாகி யவர்களது மார்புகளைக்குறி ப்பிட் டிலக்ஷம் சங்கியை கொண்ட கூரம்புகளை வருஷித்தனன். (15½) அதனா லவ்வெல்லோர்களும் மார்பு பிளக்கலுற் றுடனேமூர்ச்சை கொ ண்டார்கள். (16) பின்பு நவவீரர்களி லொருவனான விலக்ஷமீவிலாஸ ம் பொருந்திய வீரமார்த்தாண்டன் கிளம்பலாகி யவ்வசுரேசன்மீ தேரா ளமான வம்புகளைத் தொடுத்தான். (17) அசுரனும் சிங்கநாதம்செய் த வற்றையெல்லா மனேகபாணங்களாற் கண்டித்துப் பின்னரு மவனது நெற்றியைப்பற்றி யாயிரமம்புகளைத் தொடுக்க, (18) அத்தேவேசன வ்வம்புகளை யாயிர மம்புகளாலே துரிதமாகத் துண்டித்தனன். பிற்பா டு சூரபத்தும னாயிரம் பாணங்களா (19) லவனதம்புகள், வில், அம்பு றாத்தூணி யிவைகளைத் துரிதமாகக்கண்டித்து விழச்செய்து மறுபடியா யிர மம்புகளைத்தொடுத் தவனையும் கீழ் வீழ்த்தினன். (20) அதன்மே ல் மகாவீரனான வீராக்ஷஸ னென்பவன் தோன்றி யம்மகாசுரன்மீ தா யிரம் சஸ்திரங்களைப் பிரயோகிக்க, (21) உடனே யச்சூரனு மாயிரமம் புகளா லவ்வகளைத் துண்டித் தவனது வில்லையும் முறித்துவிட்டான். பின் பம்மகாவீரன் மிகக் கோபம் கொண்டவனாகி யவ்வசுரன் தேர்தனி ற்குதித்துத் (22) தனது கத்தியா லவன்வில்லை வெட்டியதி லக்கத்தி யே முறியலாக, பிறகவ னச்சூரனை முட்டியாற்குத்த வெத்தனிக்கையி (23) லவனாயுதமற் றிருப்பது கண்டு சூரன் வெகு கோபத்தோ டவன து காலை வளைத்துப்பிடித் தண்டக்கோடி முட்ட வுயர வெறிந்தனன். (24) அப்போ தத்தேவேச னண்டச்சுவரி லடிபட்டுப் பூமியில் விழு ந்து மெய் நொறுங்கி மூர்ச்சை கொள்ளலாயினன். (25) உடனே வீர

மகேந்திரன் கிளம்பிப் பெருங்கூச்சலோ டசுரன்மீ தனேக பாணங்களை
ப்பிரயோகிக்க, (26) அசுரராஜ னவைகளை யனேக மம்புகளாற் கண்டி
த்தனன். அப்போ திருவரு மொருவரோடொருவர் தேரை யிடசாரிவ
லச்சாரிப்ரகச் சுற்றவிட்டுக்கொண் டம்புகளா லுயுத்தம் செய்கையிற் (27)
சூரனுக்கிரகம் கொண்டவனாகி யவனது கால்களில் முப்பது சஸ்திரங்க
ளையும், மார்பின்மத்தியில் நாற்பதும், இரண்டுபுயங்கள்மீதும் முப்பதஸ்
திரங்களையும் சடிதியில் தொடுக்க, அவனும் மூர்ச்சைகொண்டு மோதி
விழுந்தான். (28½) அதன்மேல் வீரதீர னேர்நொடிக்குட் புறப்பட்ட
னேக சரங்களைச் சொரிந்து கொண்டே வந்தது (29) லசுரமன்
னனாயிர மம்புகளா லச்சரங்களோ டவனது வில்லையும் துண்டி
த்து அவன்தேரையு மேழுசஸ்திரங்களா லுடைத்துப் பூமியில்
தள்ளினன். (30) பிறகத் தேவ னவனை யடிப்பதற்காகத் தண்டத்தை
யெடுத்துவருகையிலப்போ தசுரனத்த ண்டத்தையும் நான்கஸ்திரங்களா
லிருதுண்டாக்கிவிட்டு (31) மறுபடி கோபங்கொண்டு பதினான்குசஸ்
திரங்களை யவன்புயங்களிலு மவைகளது மத்தியிலும் பிரயோகித்துஇந்
திரன் மலையைச்சாய்த்ததுபோ லவனைப் பூமியிற் சாய்த்தனன். (32)
அதன்மேல் வீரமகேசுவரனென்றவன் தோன்றி 'இவனை வில்லினால்
வெல்லமுடியா' தென்று கருதி, வேலாயுதத்தைப் பிரயோகித்தனன்.
(33) அப்போதுடனே சூரனவ்வேல்மீ தாயிரமம்புகளைச் சொரிந்து ம
வற்றையெல்லா மது சேதம்பண்ணி யச்சூரனது கற்பாறைபோன்ற
மார்பின்நடுவில் (34) விழுந்து கல்மீதடிபட்ட மண்கட்டியைப்போல்
தூள்தூளாகிவிட்டன. பிறகவ்வீரன் தண்டத்தையெடுப்பதற்குமுந்தி
யே யேழம்புகளா லசுரனவனைச் சாய்த்துவிட்டான். (35) பிற்பாடு க
ணாதிபனான வீரகேசரியென்பவன் வரலாகி மகா கோபத்தோடவ் வசுர
ன்மீ தனேகபாணங்களை யதிசீக்கிரத்தில் வருஷித்தான். (36) பிறகசுர
னேழம்புகளா லவனது வில்லையும், நூறம்புகளாலவன் தேரையும் சேதி
த்து அந்தேவேசன் நெற்றிமீதாயிரம் பாணங்களைப பிரயோகித்தான்.
பிறகு வீரன் கடுஞ்சினங்கொண்டவனாகி யோர் மலையைப்பிடுங்கி சூரன்
மீதெறிய, அசுரனுடனே யதனை யோரம்பினால் தூளாக்கிப் பூமியிலுதி
ர்த்தனன். (38) பின்பு வீரன் மிகக்கோபமூண் டசுரன் தேரிற்பாய்ந்
து அசுரனது கெட்டியான மார்பின்மீது கையினாலோங்கியறைந்தமாத்
திரத்தில் (39) லக்கையொடிந்து சிதறலாகி யக்கணாதிப னசுரன் முன்
னிலையிலத்தேர்மீதே விழுந்தனன். சூரனுடனே யவ்வீரனைத் துரித

த்தில்வாரி வேகத்தோடுபாற்கடல்மீதெறிந்தனன். (40) அவனங்கு மூர்ச்சைதெளிந்த பிறகவ்விடம்விட்டுச் சேனையோடு சேர்ந்தான். பிறகோர் க்ஷணத்துக்கெல்லாம் வீரபுரந்தரனிங்கு வந்து மகா பலவானானவவ் வசுரன்மீது கன்னங்கரேலென்று மகா கோரமான காலாஸ்திரத்தைப் பிரயோகிக்க, (41½) அதவ்வசுரன் மார்பினிடையிற் பட்டுச் சுக்குநூறாயிற்று. (42) அதுகண்டு தேவரக்ஷகன் பிரம்மாஸ்திரத்தை யெடுக்கையில்தானே யசுரனவன்மார்புமீது நூறஸ்திரங்களைவிட் (43) டப்போதேயவனை மண்மீது மல்லாத்தினான். பிறகு வயசுமுறைப்படிக்கவன்முத்தோனான மகா வீரனாகிய வீராந்தகனென்பவன் மிகுந்த சிங்கநாதமிட்டுக்கொண்டு வீரர்களைக் கண்டிக்கும் தலமாகிய போர்க்களத்துக்குவந்து (44½) "இவ்வசுரனால் நமது சைனியங்களுக்குக்கூட விவ்வாறவமானமெவ்வாறுதகு" (45) மென்று சொல்லி வெகுகோபத்தோடு துரிதமாய் மிகுந்த கொடிய வஸ்திரங்களை யசுரமன்னன்மீது வருஷித்துஅசுரப்படைகளைப் பயமுறுத்தி அடிக்கடி சிங்கம்போன்ற கர்ஜனம்செய்தான். (46) அப்போதசுரனுமவ் வஸ்திரங்களைக் கண்டித்து விட்டு மேனுமத்தேவன்மீ தாயிரம் சஸ்திரங்களைப் பிரயோகிக்க, அவனும் மேகம் போற் கர்ஜனம்செய்தவைகளை யாயிரம் சஸ்திரங்களாலே சேதித்துவிட்டான். (47) அப்போது சூரன் வெகு கோபமூண்டு வஜ்ஜிரமயங்களான வாயிரம் கூரம்புகளாலவனது வில், தேர், சஸ்திரங்கள் இவைகளைக்கண்டனம்பண்ணி (48) யுடனே யவன் மார்பையும் பிளந்து நொடிக்குள்ளவனை மூர்ச்சை யடைவித்தான். அவ்வாறவன் மோகித்துவிட்டது கண்டு வீரபாகு தோன்றலானதில் (49) உயுத்தமதிற் பின்வாங்காமல் நிற்கலுற்ற சூரபத்தும னம்மகா பலவானை நோக்கி யுரைத்ததாவது:—
"அடா! நீ முந்தித் தூதவுருவத்துடன் வந்தனேக மசுரர்களையும் (50) நமது மைந்தனையும் கொன்றுவிட்டு மாயாவடிவமெடுத் தோடிவிட்டாயல்லவா? ஆகையால் நமதாக்கினையின்படி யிப்போதும் வில்லையெறிந்துவிட்டுத் தூதனாகிவிடு; (51) இல்லாவிடிலிப்போதே போர் நொடிக்குள்ளுந்தனைப் பிளந்து ஸத்தியமாகக் கொன்றுவிடுவோ"மென, வீரனும் போர்க்களமதி லவ்வா றுரைத்த சூரனை நோக்கி வசனம்ஸித்ததாவது; (52) "அடா! அசுரா! யாம் ஸ்ரீ முருகேசன் திருவாக்கினையின்படி முந்தித் தூதராக வந்தோம்; இப்போது படைவீரராகவும் வந்துற்றோம்! அதனாலுனக் காகுவதென்னடா? நீ வீணாகப் பிதற்றுவதைவிட்டு நம்மோடு யுத்தம்செய்யடா" (53) வென்றிவ்வாறுக மகா வீரனான வீரபாகு வுரைக்கவதி லசுரனுக்கிரகம்கொண்டு சிங்கநாதமிட் டாயிரம்கோடி சஸ்திரங்களை யவர்மீது வருஷித்தான். (54) வீரனுமவ்வளவேவிட்

டவைகளை யோர் நொடிக்குள் நிஷ்பலமாக்கினர். மறுபடியவனால் விடப்பட்ட விலக்ஷம் சஸ்திரங்களையும் தேவன் கோடிசஸ்திரங்களால் கண்டித்துவிட்டுப் பின்னுமவனால் விடப்பட்டகோடிசஸ்திரங்களையும்கோடிசஸ்திரங்களாலேகண்டித்துமறுபடிசுருக்கினிலவன்மீது நூறம்புகளைத்தொடுக்கஅவையவன்மீதுபட்டுக் (56)கற்பாறைமீதுகுத்திய ஊசிபோல் தெறிபடலாயின.அதுகண்டவர் "ஓ! கோ! இவன் ஸ்ரீ வடிவேலனது திருவேலினாலின்றிபிங்குநம்மால்கொல்லப்படலாகான்; (57) ஆகிலுமிவனைப் பலசாங்களா லடித்து நிச்சயத்தில்நோகச்செய்யலாவோ" மென்று மனதினில்தீர்மானித் தவர்பலசாங்களை வருஷித்தனர். (58) அப்போதசுரனச்சரங்களைச்சேதித்துவிட்டுப்பிறகெட்டுப்பாணங்களைவெகுகோபத்தோடக்கணுதிபாது மார்பினிலும் புயங்களிலுமெய்து (59) பின்னுமவன் கோடி சாங்களா லோர் நொடியினிலவர் ஸாரதியைக்கொன்று மறுபடியைம்பது சாங்களால் துரிதத்திலவன திரதத்தையுமுடைத் தெறிந்தனர். (60)

பத்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௧௧—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு வீரபாகு வேறிரதமேறிக் கொண்டு வாயவியம், ஆக்கினேயமிவ் விரண்டஸ்திரங்களையும் சேர்ததுப் பிரயோகித்தனர். (1) மிகுந்த பலவானான சூரனைதக்கண்டு 'இவன் திறமையாலாகியதை யெல்லாம் பார்ப்போமென்று பதிலஸ்திரம் பிரயோகிக்காமல் சும்மாவிருந்து விட்டான். அவ்விரண்டஸ்திரங்களும் கற்பாறையினு மதிககெட்டியான அவன் மார்பின் நடுவில் வேகமாய் விழுந்து (2) உடனே தூள்தூளாகிப் பூமியில்சிதறி விட்டது. பின்பு வீரன் சினங்கொண்டு இயமாஸ்திரம் சூரியாஸ்திரம் இவ்விரண்டையும் சேர்த்தவன்மீது விட்ட (3) வுடனவைகளு மவன்மீதுபட்டு முனைமுறிந்துவிழுந்து விட்டது. அதன்மேல் வீரபாகு பற்றியெரிகின்றவர்போல் கோபம்கொண்டவராகிச் (4)சீக்கிரத்தி லிரண்டு சஸ்திரங்களை வாருணாஸ்திரம் ஐந்திராஸ்திரங்களுக்குரிய மந்திரங்களால் ஜபித்துத் தொடுத்துப் பிரயோகிக்கையில்,

கேளீர்! பிராம்மணோத்தமர்களே !அவைகளு மவ்வாறேயங்குபூமியில்வி ழுந்துவிட்டன. (5)அதன்மேல் தேவன் மிகுந்த கோபத்தோடு நாராய ணாஸ்திரத்துடன்பிரம்மாஸ்திரத்தையுஞ்சேர்த்துச்சந்தானிக்கையில் மகா பயங்கரமுள்ளவையும், சகலங்களையும் சமுகாரம் செய்யலுற்ற வையு மான (7) அவ்விரண்டும் நெருப்புப் பொரிகளைக் கக்கிக்கொண் டவன து நெஞ்சினில் விழுந்து மோதியெதிர்த்து விழலாயிற்று. அப்போ தெல்லோர்களு மவனதிப்பேர்க்கொத்த பலபராக்கிரமங்களைக்கண்டு மி குந்தவாச்சரியங் கொண்டார்கள். (8)அச்சமயத்தில் சூரபத்துமன் வீர பாகுவை நோக்கி உறத்தசத்தத்தோடுரைத்ததோவென்றால்:— "அடா வீரா !உனது திவ்வியாஸ்திரங்களெல்லாம் கூட வடவா முகாக்கினியில் விழுந்த ஈக்கள்போல் பதிலஸ்திரம்கூடவு பயோகிக்காமலிருந்த நம்மீது பட்டு வீணாயினவல்லவோ! (9½) நாமுந்தனை முந்தியே கொன்றிருப் போம்; உந்தன்வீரியபராக்கிரமங்களையு (10) முந்தனஸ்திரங்களதுவை பவங்களையும் பார்ப்போமென்றே யிருக்கலாயினம். ஆகையாலுந்தனை ச் சந்தேகமின்றி யிப்போ தோர் நொடிக்குள் கொன்றுவிடுகின்றோம்" (11) என் றவன் சொன்னமாத்திரத்தி லப்போது வீரபாகு கோபத்தி னால் ஜுவலிக்கலுற்றவராகி மகா கோரமான பாசுபதாஸ்திரத்தை யசுர மன்னன்மீது பிரயோகித்தனர். (12) அப்போதவ்வஸதிரமானது ஸர்ப் பம் முதலியவைகளைக் கக்கிக்கொண்டு வெளிப்பட்டு வேகமாய்வருவ தைக் கண்டு சூரபத்துமனு மப்போ ததே யஸ்திரத்தைப் பிரயோகித்த னன். (13) கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போதவ்விரண் டு மொன்றோடொன்று மகா பயங்கரமாகப் பெரும்சத்தத்தோடு சண் டைபோட்டுக்கொண்டு பிறகு திரும்பியெய்தவரிடமேயோர்நொடிக்கு ள் சென்றுவிட்டன. (14) பிறகுசூரன் "அடா! வீரா! உனதுவலிமை யெல்லா மிவ்வளவுதானே! இப்போது நமது பராக்கிரமத்தைக் காட்டு கின்றோம் பாரடா" வென்று பல சரங்களை (15) வருஷிக்க, வீரபாகுவு ம் மகா வாக்கிரகத்தோ டனேக சஸ்திரங்களை யவ்வசுரன்மீ தெய்தனர். அப்போதசுரனும் கடுஞ்சினங்கொண்டு பதினைந்து சஸ்திரங்களா லவர து வில்லைத் துண்டித்தனன். (16) உடனேயத் தேவகணாதிபர் நிகரற் ற வோர் வேலை யசுரன்மீது பிரயோகிக்க, அதவன் கடினமான மார்பி னில் விழுந்து பொடிப்பொடியாகிவிட்டது. (17) பிறகசுரனும் தேவ ன்மீது தண்டாயுதத்தைப் பிரயோகிக்கையி லப்போதே தேவனுமவன் மீது தம் தண்டாயுதத்தை யெறிய, (18) அசுரனுடையதண்டமதனை

த்தூள் தூளாக்கிவிட்டு மிக வேகத்தோடவரது மார்பின்மத்தியில் விழுந்தவனை மூர்ச்சாக்கிராந்தராக்கி விட்டது. (19) அப்போதவர் மூர்ச்சையானதைக்கண்டு சாரதியானவிசாலனென்றவனவருக்குமூர்ச்சைதெளிவிப்பதற்காகஜுவலிக்கலுற்றதேரையொதிக்கியப்புறமோட்டிப் போயினன்.(20)இப்படியிருக்கையில்சூரனும் பீதிகொண்டபூதர்கள்மீ தனேகபாணங்களை வருஷிக்கலாகையிலப் பூதர்களெல்லாமப்போது பத்துத்திக்குகளிலும் சிதறுண்டோடத் தலைப்பட்டார்கள். (21)அதன்மேலொப்பற்ற பராக்கிரமமுடைய ஸ்ரீ பகவானன குமரேசன் பூதர்களோடுவதையும், அவர்களது தலைவர்களெல்லாம் மூர்ச்சைகொண்டு கிடப்பதையு மறிந்தவுட னனேககோடி சூரியப்பிரகாசம் கொண்ட சிரேஷ்டமான தமதிரதத்தை யோட்டச்சொல்லிப் பிரயாணப்பட்டு வந்தனர். (22½) அப்போதவரைநோக்கிச் சூரன் வசனமுரைத்ததாவது:— "கேளாய்! சிறுவனே! மகா பராக்கிரமசாலிகளான உனது படைத்தலைவரெல்லோர்களும் 'இவர் சகல வசுரர்களையும் சமுகாரம்செய்யலுற்ற சகல ஈசுவரர்களுக்கு மீசுவரரான கந்தபிரா' னென்றெண்ணிவந்து விழுந்துமாண்டதைக்கண்டாயோ! (24) ஆகையால் நீ யிப்போதே திரும்பியோடிவிடு. ஓ! தேவர்களுக் கிசேனே! கேவலமிளம்பிள்ளை விளையாட்டுடைய நீ நம்மைப்பலவீனர்களான தாரகனையும் கிரௌஞ்சனையும் போல் நினைத்துக்கொண் (25) டிங்கு வரலாகின்றாய். நீ யோர் மிகவும் சிறுபையலாகையால் நம் பலத்தை யறியவில்லை. விஷ்ணுமுதலிய தேவர்களுக்கெல்லாம் மிகுந்த பீதியுண்டாகும்படி. (26) இபபோது சண்டைகடுவில் வந்தவுந்தனை வெல்லுகின்றேம்" என, ஸ்ரீ வடிவேலன் முகாரவிந்தமதில்மந்தகாசம் கொண்டவராகியச் சூரனை நோக்கி யுரைத்ததோவென்றால்:— (27) "அடா! துராத்துமாவாகிய அறிவில்லாதவசுராதமா! நீ கேவலம்மடப்புத்தியால் நம்மைச் சிறுவனென்றாயல்லவா! யாமிப்போதே யுனது வலிமையை வாங்குகின்றேம்: (28) அடா! ஸ்ரீ சர்வேசுவரனது நெற்றிக்கண்ணெருப்பி னோர் பொரியே யண்டங்கள் முழுமையும் சாம்பலாக்கப் போதுமானதடா!" என்று ஸ்ரீ கந்தனருளியதிருவசனத்தைக் கேட்டதில் சூரன் வெகு கோபங்கொண்டவனாகி (29) யப்போதோர் மிகுந்த வுன்னதமான தனுசைக்கைக்கொண்டான். அத்தனுசோவென்றால்,— ஸ்ரீ மகா விஷ்ணுவினுடைய திரிவிக்கிரமாவதாரத் திருமேனிபோல் விளங்கலாயிற்று. (30) அப்போதவனவ்வில்லை நாணேறிட்டு குணத்தொனிபண்ணுகையி லேழு சமுத்திரங்களும் கரைபுரண்டொன்றுகூடி யொலித்ததுபோ லோசையுண்டாயிற்று. (31) அ

ப்போது தேவப்படைத்தலைவரான ஸ்ரீ குமரேசனும் பிரளயகாலத்திலூ
ர்த்துவ தாண்டவமருளிய ஸகல சமுகார காரணரான ஸ்ரீ காலாக்கினி
ருத்திரமூர்த்திபோல் விளங்கலுற்றமிகச்சிரேஷ்டமும்,மகா வுன்னதமு
மான தனுசைக்கைதனிலெடுத்துச் சகலவண்டங்களு மேககாலத்தி
ல் படேலென்று வெடிக்கலுற்ற சத்தம்போல் மிகுந்த குணத்தொனி
செய்தனர். (32-33) பிறகு கொரேமுடைய சூரனனேக பாணங்களா
லவரது திருமேனி,தேர் இவைகளையுமிச் சகலவுலகங்களையும் சடிதியில்
நிரப்பினன். (34) தேவராக்ஷகருமவன் விட்டபாணங்களைச் சின்னபின்
னம்பண்ணி யவன்மீதனேக சரங்களைக் கோடைகால மாரிபோல் வரு
ஷித் தாகாயமத்தியை மறைத்தனர். (35) பிறகு சூரன் சினங்கொண்
டவர் விட்ட பாணங்களையெல்லாம்கண்டனம்பண்ணி யத்தேவேசன்மீது
பதினாயிரம் பாணங்களை வருஷித்தான். (36) ஸ்ரீகுகனுமவனது பாண
ங்களைத் தமதம்புகளாற்றூட்ளோக்கிவிட்டவனதிருபுயங்களிலும்பதினா
ன்கு சிறந்தபாணங்களைப் பிரயோகிக்க, (37) அவையங்குபட்டு மழு
ங்கிவிழலாயிற்றன்றோ! அதுகண்டு பார்வதீமைந்தன் கூர்மையுள்ள
வாயிரம் சரங்களால் (38)இந்திரன் வஜ்ஜிராயுதத்தினால் மலையைப் பிளந்
ததுபோலவன் வில்லைக்கண்டித்தனர். பிறகு சூரன்பிரம்ம விஷ்ணுக்களு
க்கும்மகாபயங்கரமான தனது வேலைப்பிரயோகிக்க,(39) அதையும்ஸ்ரீமு
ருகன்சினங்கொண்டுபதினான்குபாணங்களாற்சேதித்துவிட்டனர்.அதன்
மேற்சூரன்பரபரப்போடுமிகவுன்னதமான வேறுவில்லைக்(40) கைக்கொ
ள்ள, பிறகிருவருமொருவரோடொருவரனேகமனேகபாணங்களை வருஷி
த்துக் கொண்டு யுத்தம் பண்ணினார்கள். அப்போது சண்டைதனில்
தேர்ச்சிபெற்ற சூரன் ஸ்ரீதேவன் புயத்தி லேழம்புகளை யெய்துவிட்டு
ச்சிங்கம்போல் மகாபயங்கரமாகக் கர்ஜனம் பண்ணினன். ($41\frac{1}{2}$) அ
வ்வம்புகளோ அவர் புயமதில் விழுந்தமாத்திரத்தில் உடனே தூள்தூ
ளாயின. (42)பிறகுமகாமகிமைகொண்டஸ்ரீஷண்முகன் கடும்சினத்தினா
லுக்கிரமூர்த்தியாகியதிக்ஷணமானபதினான் கஸ்திரங்களாலவனதுசிறந்
தவில்லையும்வேறாயிரத்தாலவனேறியதேரையும், அதுபோலவேவெறுப
தினான்கிலக்ஷம்சஸ்திரங்களாலுறைபோட்டுமூடுவிக்கப்பட்டமற்றெல்லா
விரதங்களையும் முறையேசெதல்செதலாக்கினர். (43-44)பிறகு சூரன் மி
குந்த சிங்கநாதம் செய்துகூர்மையுள்ளதனதுசூலத்தைவிடவே தேவே
சனதனை நான்குபாணங்களாற்பிளந்தெறிந்துபின்னுமேழம்புகளா (45)
லவனது வெண்குடையையும் துண்டித்து, ஒரம்பினா லவனது கிரீடத்
தையு முடைத்துத்தள்ளி, அதுபோலவே பலசரங்களா (46) லவன்

பூண்ட வாபரணங்களையெல்லாம் சடிதியில் மண்மீது சிதறவடித்தனர். கேளீர் !பிராம்மணோத்தமர்களே !பிறகுசூரனவ்வாறிலச்சைச் சுமையைச்சுமக்க மாட்டாதவனாகித் தலைகுனியலுற்றுக் கைவலிமை யிழந்து பொருளற்ற தரித்திரன்போல் வறியனாக நிற்கலானான். கேளீர் ! பிராம்மணோத்தமர்களே ! (47) இவ்வாறு நின்ற வசுரமன்னனை யசுரரெல்லோர்களும் கண்டவுடனே போர்க்களத்தி லொன்றுகூடி மிகுந்த கர்ஜனை யொலியாலண்டத்தின் வெளிகளையெல்லாம் நிரப்பியவர்களாகி யதிக வீணைசைகொண்டு பூஜிக்கப்படலுற்ற வடிவேலனோடு கூர்மையுள்ள வம்புகளாலும் பலபல வாயுதங்களாலும் போராடினார்கள்.(48)

பதினோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உ யுத்தகாண்டம் கஉ—வது அத்தியாயத்தினர்த்தம்.

அதன்மே லம் பிகையின்செல்வனானவர்கோபமுற்றவராகிச் சகலவுலகங்களையும் சுமுகாரம்செய்யலுற்ற சக்கிராயுதத்தைக்கிறுகிறென்று சுற்றி யசுரப்படைகள்மீதுபிரயோகிக்க, (1) அது கோடி சூரியர்களுதித்ததுபோன்ற தனதுகாந்தியினால் சைனியக்கூட்டங்கள்மீது பிரகாசித்துக்கொண் டவ்வசுரப்படைதனிற்சடிதியிற் சென்றுடனேபலவாறுகக்கொன்றது.(2)அப்போதுசிலர் காதுகைகளிழந்தவர்களும், சிலர்கால்கழுத்து முறிந்தவர்களும், மூக்கு, கண், பாதங்களறுபட்டவர்களும், கூந்தலாடை பறிபட்டவர்களுமாகி(3) யங்குகூடலானவெல்லோர்களும் சாவுண்டார்கள். அதனாலுன்னதமான பலதேர்களுமவ்வாறே பொடிப்பொடியாக்கப்பட்டன.(4)அங்குள்ளயானை குதிரைகளெல்லா மோர்நொடிக்குள் நாசமடைந்தது. அவ்வசுரர்களை யியமன்புஜிப்பதற் குரியவெள்ளிப்பாத்திரங்களைப் பரத்தியதுபோலெல்லா வெண்குடைகளையும் சேதித் தப்போதங்கு தரைமீது பரத்தலாயிற்று. ($5\frac{1}{2}$) தோமரங்கள், துவஜங்கள், சஸ்திரங்களி லிவையெல்லாம் நான்குதிக்குகளிலும் கிடந்து சிதறலுற்றன. (6) அங்கெல்லாம் தலையற்ற முண்டங்கள் நெருக்கமாயெழுந்து கூத்தாடவும், பிசாசக்கூட்டங்களால் நிரம்பவுமாயிற்று மேலும் கழுகு, காக்கை, பருந்துஇவைகளால் நிறைந்து வட்டமிடப் பு

டவுமாயிற்று. (7) அப்போதவ்வுயுத்தரங்கம் முழுது மோர்நொடிக்குள் ளிவ்வாறு சம்பிரவமுள்ளதாயிற்று. அப்படிக்கொத்த வம்மகா சக்கிரத்தை ஸ்ரீ விஷ்ணுவினுடைய சுதர்சனமென்ற சக்கிரமானது கண்டு மெய்நடுக்கங் கொள்ளலாகி மிகச்சிரேஷ்டமான துதிகளால் தோத்திரம் செய்தது. கேளீர் ! சௌனகாதி முனிவர்களே! அம்மகா சக்கிர மிவ்விதமாக வசுரர்களையெல்லாம் நாசம்செய்து ஸ்ரீ பகவானிடம் சென்றுவிட்டது. (9) பிறகு சூரபத்தும னிவ்வாறாக வசுரர்களெல்லாமோர்நொடிக்குள் மடிந்து விடலானது கண்டு "ஓகோ ! இதென்ன !பாசுபதாஸ்திரமோ ? இவன்வேலாயுதமோ ? அல்லதுயாதாமொருவர் சாபமோ? (10) மகா பராக்கிரமசாலிகளான வசுரரெல்லோர்களு மோர்நொடிக்குள் மடிந்து விட்டார்களே!" யென்றிவ்வாறெல்லா மாச்சரியப்பட்டுக் கொண்டவன் தனிமையாகவே நின்றான். (11) பிறகுடனே யவ்வசுரமன்னன்பரபரப்புற்றவனாகி யதிகொடூரமும், மிகுந்த சத்தமுடையதுமானப் பிரம்மாஸ்திரத்தை யத்தேவேசுவரன் மீதெய்ய, (12) அவ்வஸ்திரமானது பிரம்மனது உருவங்கொண்டுபலவாறாகக்கிளம்பலாகிப் பயமுறுத்திக்கொண்டு துரிதத்தில் ஸ்ரீ முருகேசன் திருச்சன்னிதியில் வரவே (13) யப்பகவான் கைதனில்விளங்கிய வேலான ததனை யபக்கென்று பக்ஷித்தல்லவோ விட்டது. ! பின்பசுரன் வெகுகோபங் கொண்டவர்மீது வைஷ்ணவாஸ்திரத்தைவிட, அது பெருங்கூச்சலோடு சகல ஜகங்களையும் பயமுறுத்திக் கொண்டனேக விஷ்ணுக்களாக உருவமெடுத் ததுவுமவர் சன்னிதிக்கோர் நொடிக்குள் வரலாக, (15) உடனே யத்திருவே லசுரனுடைய இவ்வஸ்திரத்தையு மவ்விதமாகவே யாதரித்து விட்டது. அதன்மே லசுரன் மகா ஆக்கிரகம்கொண்டவனாகிக் கோடையிடி யிடித்தது போற் கர்ஜனம்பண்ணி (16) யஸ்திரமெடுப்பவர்களில் மெத்தச்சிரேஷ்டரான வப்பிரபுவின்பேரில் பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகம்செய்ததி லவ்வஸ்திரமெல்லாத் திசைகளையு மொளிப்பித்துக்கொண்டு பலவுருவத்தோடு வெளிப்பட் (17) டனேகங்களான ஸர்ப்பங்கள், இயமன்கள், பிசாசங்கள், பூதங்கள், இராக்ஷஸர்களிவைகளையெல்லாம்கக்கிக்கொண்டு மகா பயங்கரமாகி யப்போது ஸ்ரீ குஹன் ஸன்னிதிக்கு வந்தவுடன் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யப்பகவான் கையை நீட்டி யதனைப் பிடிக்கலாயினர். இவ்விதமாக வம்மகாஸ்திரமெல்லாம் வீணாகிவிட்டதி லசுரன் பல விசாரமுற்ற நெஞ்சமுடையவனாகி (18) "ஓ! இச்சிறுவனிப்போதெம்முடனும் கூடவெதிர்த்து நிகரற்ற யுத்தம்பண்ணத் திறமையுளனே" யென்றவ னற்புதமான பராக்கிரமத்தைச் சிந்தித்து நிற்கு

மளவில் ஸ்ரீ பகவானவனைநோக்கி மகா கம்பீரத் துவனியோ டுரைத்த தாவது:— "அடா! கேடுகெட்ட வசுரா! தேவர்களை விட்டுவிடென் று நம்மாற் கூறப்பட்டதை நீ முந்திக் கேட்கவில்லையல்லவா? (19) இ ப்போதோர் க்ஷணத்துக்குள் ளூனதிலக்ஷம் வாகினி யசுரப்படையெல் லாம் மாண்டுவிட்டதையும்,உன்முடி முதலியவையெல்லாம் தொலைந்து விட்டதையும் கண்டாயோடா! இனிமேலாயினும் தேவர்களை விட்டுவி டென்று யாமுந்தனுக்குப் புத்தி யுரைக்கின்றோம்; ஓ! அசுரர்களுக்கெ ல்லாம் கேடுகெட்டவனே! இல்லையாகி லுந்தனுக்கிங்கு தோன்றலாகின் ற புத்தியை யிப்போ தோர் நொடிக்குட் கூறலாவாய். (20) கேளாய்! அசுரா! யாம் முந்தியுந்தனது தம்பியான தாரகனை யெவ்வாறோர் நொடி க்குட் கொன்றனமோ வவ்வாறே யிப்போர்க்கொத்த வுந்தனையும் கொல் வதற்கிங்கு வரலானோம். இப்போது யாமுன்மீதிரக்கத்தினால் தான் நமது திருவேலைப் பிரயோகிக்கவில்லை. ஆயினுமினி போர்மூன்னருந் தன்மீ ததனை யவசியம் பிரயோகிக்கலாவோ" (21) மென, சூரபத்தும னிவ்வாறு முதலிய கந்தன் திருவசனங்களைச் செவிகொண்டதன்மேல் மிக மதிக்கத்தக்க அந்தப்பிரிய வசனங்களை மனதினிலாலோசித்து (22) "ஓ! கோ! இச்சிறுவன் நமது வலிமையை யறியாமையாலே ந மது சேனைகள் மாண்டதையும், ஆயுதங்களற்றதையும கண் டென்று ம ழிவற்ற விப்போர்க்கொத்த நம்மைப்பார்த்து (23) 'அடா! வோர்நொ டிக்குள் தேவர்களை விட்டுவி'டென்றுஎமக்குச்சில புத்திகூறவும் 'யாமு ன்மீது தயவினலல்லவோ வேலைப்பிரயோகிக்கவில்லை' யென்றுரைக்கவு மாயினன். (24) ஆயினும் நமது மகா வற்புதமான வலிமையைப்பற் றி யிவனுக்கு யாது தெரியலாகும். என்றுலு மிப்போர்க்கொத்தவர்கள், யாமொருவராகவிருந்து மெம்மைப் போரினில் வெல்லமுடியாது; (25) ஆனல் பகுத்தறிவில்லாத விப்பையலுக் கிப்போர்க்கொத்த நடவடிக்கை யுரித்ததுதான். ஆகையால் நாமிப்போது நகரம் சென்று நமக்குள்ள சைனியங்கள் யாவையு (26) மழைத்துவந்து போராடி யிவ்வாறு து ள்ளிவிழுகின்ற விளைஞனை வெல்லுகின்றோ" மென்று மனதினில் நன் காலொசித்துக்கொண்டு சூரபத்தும னப்போதே யோர் நொடிக்குள் (27) மாயத்தினால் நகரத்திலுள்ள தனது சிறந்த வரண்மனைக்குச் செ ன்றனன். இவ்விதமாகச் சென்ற வச்சூரனை யப்போதே தமது திரு வேலினால் தொலைத்துவிட அவர் திறமைகொண்டவராயினும் (28) கே ளீர்! முனிவர்களே! யவனது புத்திநோக்கத்தைச் சோதிப்பதற்காகவே சும்மாவிருந்து விட்டனர்.

பிறகு விஷ்ணுமுதலிய தேவர்கள்தேவாதிதேவனாகிய ஸ்ரீ சுப்பி ரமணியரிடமாகவுச்சிமீ தஞ்சலிகொண்டு சென்று மிகுந்தமனக்களிப் போடு தண்டம்பண்ணி(29½)ஸாக்ஷாத்பரப்பிரம்மசுவரூபியானவக்கடவு ளையனேகம் துதிகளால் தோத்திரம் பண்ணி (30)"ஓ! சுவாமீ!மனதுக்கு மெட்டாத தேவரீரது வலிமையெங்கே! தேவரீர் முன்ன ரவ்வசுர னெ ம்மாத்திரம்? ஆகையால் துராத்துமனாகிய விவ்வசுரனைக் கொல்வதிலுங் களுக்குக் கொஞ்சமேனு மிலக்ஷியமில்லை. ஓ! ஜகதீசா! ஓர் விளையாட் டாகவே யவனைவிட்டுச் சும்மாவிருந்து விட்டீர்களேயின்றி வேறில்லை" யென்றிவ்வித முரைத்து மிகுந்த வணக்கத்தோ டருகினில் நின்ற வத் தேவர்களை நோக்கிப் பகவான் திருவாக்கருளியதாவது;—(32) "ஓ! தே வர்களே! அந்த மகாசுர னிங்கு மறுபடி திரும்பி வரும்போ தத்துராத் துமனைச் சந்தேகமின்றி கொன்றுவிடுகின்றோ" (33) மென்றருளிய மாத்திரத்தில் தேவர்களப்போது கொம்மாளமிட்டார்கள். (33½) மே லுமப்போது மூர்ச்சைதெளிந்த இலக்ஷத்தொன்பது வீரர்களும் சகல பூதர்களும் படைத்தலைவர்கள் முதலிய சைனியங்களோடுகூட வெல் லோர்களும் ஸ்ரீ கார்த்திகேயன் சன்னிதியி லொன்றுகூடி (35) யதன் பேரில் ஸ்ரீ முருகனுக்கிணையின்படி சகல படைத்தலைவர்களும் பூதர்க ளோடுகூட வசுரன் பட்டணத்தைக் கொள்ளையிடுவதற்காகக் கிளம்பி (36) மிகுந்த கோலாகல வொலியாற் றிசைமுகங்களைச் செவிடாக்கி க்கொண்டு சடிதியில் கோட்டை வாசற்படி சென்றம்மகா பலிஷ்ட(37) ரெல்லோர்களு மொன்றுகூடி மிகுந்த கர்வத்தினு லட்டகாசம் செய்து கொண்டு கோட்டைவாசற் கதவைப் பிளக்கலானார்கள். அப்பெருங்கூ ச்சலைக்கேட்டு வாசற்காப்பொனாகிய வதிகோரனென்று பெயர்போன மகாசுரன் சதுரங்கபலத்துடன் புறப்படலாகி யப்போது பூதர்களுக்கு மசுரர்களுக்கும் மிகுந்த பயங்கரமான வுயுத்தம் நடக்கலாயிற்று. (39) அதிலங்குகூடிய வசுர ரெல்லோர்களும் தோல்வி யடைந்தார்கள். அப்போதவ் வதிகோரன் மகா கோரமான வோரிரும் புலக்கையை யெடுத்ததனைக் (40) கோபத்தொடுகையினாற்கறகறவென்று சுழற்றிக் கொண்டே பூதர்களைத்துறத்தினான். அதுகண்டு மகாபலவானான மோக னென்பவன் துரிதமாய்க்கிளம்பி (41) யோர் பெரிய மலையைப்பிடுங் கி மிகவாக்கிரகத்தோடவன்மீதேறிய, அதனைமகாவலிமைகொண்ட அவ் வசுரன் உலக்கையினால் தூள்தூளாக்கிவிட்டான். (42) பின்பு தேவ னவ்வசுரனைக் கையாலவனது நெஞ்சினி லறைந்தவுட னவ்வசுரன் மகா ரோஷமுற்றுத்தன துதடைமடித்துக்கடித்துக்கொண்டுமறுபடியு (43)

மவ்வுலக்கையாலே போர்முன்ன ரவன் மார்பினிடையிலடித்தான். அத ன்பேரில் மோகன் கோபத்தினால் கண்கள்மீது நெருப்புப்பொரிகள் கு பீல் குபீலென்று பறக்கலுற்றவனாகி யுயரக்கிளம்பிக்குதித்துக்கொண்ட வனை யோர்கையினாலிழுத்துப்பிடித்து மற்றக்கையினா லவன்கன்னத்தி லோங்கி யறைந்தனன். (44½) மேலும் பூதரெல்லோர்களு முயரத்தில் ஆயிரம்யோஜனை கொண்ட நகரத்துக் கலங்காரமான கோபுரத்தைப் பெ ருங்கூச்சலிட்டுப்பிடுங்கி, தேவர்கள் மந்தரகிரியைக் கடலிற்போட்டது போ லதனை நடுக்கடலிலெறிந்தார்கள். (46) முந்தியே கோபுரத்தின் மீதிருந்த பலவசுரர்களப்போ தக்கடல் நடுவிலாழ்ந்தினார்கள். அப்போ தக்கடலானது அலைகளா லன்னகரத்தைத் தழுவலாயிற்று. (47) பின் னுமப்பூதர்கள், அந்நகரத்திற்குக் கவசம்போன்றதான வடமதிலை யிடி த்து வீழ்த்திவிட்டு (48) யாதொரு தடையுமற் றுட்புகுந்து, ஓடலுற் ற பலவசுரர்களையும் கொன்று, பலபலவீடுகளை யிடித்துப்பாத்தி மனம் கொண்டபடி கொள்ளையடித்தும் (49) பிற கங்குவிட்டுத் திரும்பித் துரிதமாகத் தேவாதிதேவனான ஸ்ரீ கந்தன் சன்னிதி வந்தார்கள். அதன் பிறகு பகவான் மகா கோலாஹல சத்தம்செய்யாநின்றதமது சகலசை னியங்களுடனும் ஹேமகூடபுரத்துக்குப் பிரயாணப்பட்டனர். (50½) தேவர்கள் மகா சந்தோஷத்தோடு புஷ்பங்களை வருஷித்தார்கள். (51) கடலோசையை யதிகரித்துத் தேவதுந்துபிகள் பேரொலியோடு முழங் கலுற்றன- அப்போது சகலமங்களவாத்தியங்களும் மிகுதியாகக் கோ ஷிக்கலுற்றன. (52) கட்டியக்காரரெல்லாம் குணகணங்களை யுதாரவா க்குடன் கூறினர்கள்- இவ்வாறு சம்பிரவங்களோடு ஸ்ரீ குமரேச னடி யார்களது கூட்டங்களால் தமதுசிறந்த துதிகள்படிக்கப்பெற்றவராகி யோர்நொடிதனி (53) ஹேமகூடபுரத்திலுள்ள சுந்தரமான தமதுதிரு மாளிகைக்கு விஜயமாகி மிகச்சிரேஷ்டமும் கீர்த்தியுமான சிங்காதனத் தில் வீற்றருளி (54) அதன்மேற் சேனைகளையெல்லா மவரவர் விடுதிக ளுக்கனுப்பிவிட்டு மகா சந்தோஷமுடையவராகவும், தமது பாதாரவிந் தங்களைப் பற்றிப் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களாற் றுதிகூற ப் பெற்றவராகவும் (55) பல பல வுபசாரங்களெல்லாம் செய்யப்பெ ற்றவராகி யச்சிறந்த வாசனமதி லருளியிருந்தனர். பிற்பாடு வானமதி ல் விளங்கிய சூரியனு மப்பகவானுடைய வெற்றியைக் கண்ணுற் (56) றதிலதனைத் தனதாகவே மதித்து மிகவும் பயம் தெளிந்து சுவப்புநிறத் தினால் விளங்கிய மேனியுடையவனாகிமேற்றிசைக்கோடியடைந்தவுடன்

பிராம்மணோத்தமர்களே! கடற்குள்ளாழ்ந்தலானன். ($57\frac{1}{2}$) * பிறகு சூரபத்தும னன்றிரவு முழுதும் தூக்கமேயின்றி சண்டையைப்பற்றி பத்துமகோமளை யென்றதன் மனையாளுடன் மிகுந்த சிந்தைகொண்டிருந்தனன். ($58\frac{1}{2}$) அப்போது பானுகோபன் தந்தை வந்துவிட்டதைக் கேள்வியுற்றவுடன் (59) சண்டையில் வெற்றிபெருவதற்காகத் தான் செய்துகொண்டிருந்த மந்திரத்தின் புரச்சரணை, (அந்தந்த மந்திரத்துக்குரிய ஜபம் ஹோமம் தர்ப்பணம் முதலியவை) சண்டைப்பயிர்ச்சி, மாயை இவைகளையெல்லாம் விட்டுவிட்டுப் போர்மீது மனக்கவலைகொண்டேங்கியிருந்த சூரனிடமவ்விரவினில் வந்து முந்தியதினத்தில் நடந்த தனது விருத்தாந்தத்தை யப்போதறியப்படுத்தினன். (61)

பனிரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் கஙு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பானுகோபனுரைத்ததாவது:— ஓ! தந்தாய்! யான் சகலசேனைகளுடனு மாயுதங்களுடனும் சென்று ஜயிப்பதற்காகப் புறப்படச் சன்னத்தமாயிருக்கையி லடியேனுக் கறிவிக்காமல் தேவரீர் செல்லலானீர். (1) ஓரிளம்பிள்ளையோ டியுத்தமாடுவதனால் ஜயம் அல்லது தோல்வி இவைகளின் பயனை யாதடையப் போகின்றீர்? ஜயம்பெறினும் புகழில்லை; ஜயமடைந்தாலும் தோல்வியடைந்தாலு மபகீர்த்தியே யுண்டாகுமென்பதி லாக்ஷேபணையேயில்லை:இது நிச்சயம். (2)அடியேன் தேவரீராக்கினையின்படி காலையிலே சென்றவனைக் கொன்றுவிடுகின்றேன். ஓ! அப்பா! நீரதனைத் தூதர்முகமாய்ப் பிறகு கேட்டாநந்திக்கலாவீர். (3) ஆனல் யான் சண்டையிலெதிரியை வெல்லாவிட்டா லப்பேர்க்கொத்த வெந்தனுக் கும்மோடு கூடிவாழ்தல் வேண்டாம். ஓ! அசுரோசுவரா!

---

* (57-$57\frac{1}{2}$) இச்சுலோகத்தின் சிலேடைப் பொருளோவென்றால்:— பிரகாசிக்கலுற்ற தேகத்தையுடைய சூரியன் கொஞ்சமேனு மச்சமற்றவனாகி மிகவும்காதல்கொண்டு தனதிடைவஸ்திரம் நழுவலாகி மேற்றிசைமங்கையணைப்புணர்ந் தானந்தக்கடலி லாழ்ந்தினன். சூரிய னஸ்தமனமாயினனென்பது கருத்து.

எந்தனுச்கும்முடைய வரசாகஷியும் வேண்டுவதில்லை. இது ஸத்திய மேயின்றி வேறில்லை" யென்று மைந்தனு லுரைக்கப்பட்ட வசனங்களை க் கேட்டுச்சூரனும் "கேளாய்! மைந்தா! இப்பாலனைச் சண்டையில் வெ ல்வதற் கெம்மாலின்றி வேறொருவராலும் மாளாது; ஆகையால் நீ நமது தாக்கினையின்படி சென்றிங்குவந்த தூதனையும் (வீரபாகு) (5) அவன் சேனைகளையும் சிக்கிரம் வெற்றிகொண்டிங்கு வாலாவா" யென்று தன்பி ள்ளைக்குச் சொல்லியனுப்பிவிட்டு (6) மனதினிற் களிப்படைந்து த் னதாண்மனையில் வசித்திருந்தனன். பானுகோபனங்கிருந்து வெளியில் வந்தவுடன் சில தூதர்கள் விரைவாயோடிவந்து பூதசேனைகளால் நகரம் கொள்ளைகொண்டதையும், கோபுரம் சமுத்திரத்தி லெறியப்பட்டதையு ம், வீடுகளிடிபட்டதையும் அதிகோரன் மரணமடைந்ததையும், மதிளிடி த்துப் பாத்தப்பட்டதையும் சொன்னார்கள். $(8\frac{1}{2})$ கேளீர்! சௌனகாதி முனிவர்களே! சூரன் போர்க்களமிருந்து வந்தமாத்திரத்தி லிவ்வாறெல் லாம் நடத்தப்படலானதைப் (9) பானுகோபன் தூதர்முகமாய்க்கேட் டுக் கோபத்தினால் ஜுவலிக்கலாகி, பிறகுமயனென்ற வசுரசில்பனை யி வையெல்லாம் முன்னிருந்ததுபோல் சீர்திருத்தும்படி யுத்திரவிட்டு,(10). அத்திசையைக் காப்பதற்காக மகாகாயனென்றவனைப் பதினாயிரம் வா கினி சேனைகளோடுகூட வனுப்பிச் சடிதியில் (11) பற்பல விரத்தினங் களா லலங்கரிக்கப்பட்ட தனதாண்மனை சென்றான். அப்போதவ்வசுர த்தச்சனு மந்தந்த வேலைகளையெல்லாம் முன்னிருந்ததுபோல் முடித்து விட் (12) டவ்விரவினிலே தன் வீடு சேர்ந்தான். மகா பலவானான மகாகாயனும் சேனைகளோ டங்குசென்று (13) அனேக தீவட்டிவெ ளிச்சங்களா லிருளைவிலக்கப்பெற்றவனாக விருந்தனன். பிறகு சூரிய னுதயமானவுடன் பானுகோபன் சிக்கிர (14) மெழுந்து துரிதத்தி ல ன்றனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு தவம்செய்துகொண்டிருக்கின் ற தன் பிதாமகியாகிய மாயை யென்பவளை நினைக்க, (15) அவளங் குவந்தவுட னவளைப்பார்த்து வந்தனித்துப் பல துதிகளால் தோத்திரம் பண்ணி வீரபாகுவால் தனக்குக் கிடைத்த அவமானத்தைச் சொ ல்லி வேண்டிய வுயுத்தி புத்திகளை வினவினன். (16) அப்போதவ் வசு ரியும் விநயத்தினால் வணக்கமுற்று நின்ற அவ்வசுரேசனை நோக்கிச்சொ ல்லியதாவது:— "அடா! பானுகோபா! பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல்லா முங்களால் மிகவும் துன்பமளிக்கப் பட்டனர்களல்ல வோ! அப்படியிருக்கையி லிப்போதுங்களுக் கெவ்வாறு வெற்றிகிடை க்கும்?" என்றுபலவாறாகவுரைத்தஅம்மாயையைநோக்கி யப்போதசுரன் கூறியதாவது:— (18) ஓ! பேரனுக்குச் சுகத்தைக் கருதிய பாட்டி!

இனி நேரிடுவ தெப்படியாகிலு மாகட்டும்: ஆனாலவ் வீரபாகுவை வெல்வதற்காக வெந்தனுக் கிப்போதோ ராயுதத்தை யீந்தருளவேண்டு" மென்று மகா புத்திசாலியான பானுகோபனால் கேட்டுக்கொள்ளப்பட்டபோ தவள் "அடா! அசுரா! இதோ! இந்த அஸ்திரமானது போர்தனில் சத்துருக்களுக்கு மிகுந்த மூர்ச்சையைக் கொடுக்கலாகும். (20) சத்தியமாக வுந்தனுக கின்றைதினம் வெற்றியு முண்டாகு" மென் றுரைத் தவ் வாயுதத்தையு மவனுக்குக் கொடுத்துவிட்டு மாயையென்ற அவ்வசுரி வெளிச்சென்றுவிட்டாள். (21) பானுகோபனும் மாயையால் தரப்பட்ட நிகரற்ற அஸ்திரத்தை மகா சந்தோஷத்துடனடைந்து பிறகு சடிதியில் தனுசை யெடுத்துக்கொண்டு பாணங்களால் நிறைந்த வம்புராத்தூணியை மாட்டியும், (22) வஜ்ஜிரத்துக்கு நிகரான கவசத்தைத் தனதுடலில் தரித்தும் மேலு மம்மகா பலவான் வாயவியாஸ்திரம், ஆக்கினேயாஸ்திரம், இயமாஸ்திரம், சந்திராஸ்திரம், சூரியாஸ்திரம், பிரம்மாஸ்திரம், வைஷ்ணவாஸ்திரம் முதலிய சிறந்த அஸ்திரங்களையும் (23) சிறந்த வத்திரங்களுக்கெல்லாம் மேற்பட்டவைகளுக்கும் மிகுந்த மேன்மைகொண்ட அஸ்திரராஜாவான ஸ்ரீ பாசுபதாஸ்திரத்தையுமெடுத்துக்கொண்டும், ஒவ்வொன்றிலும் பதினாயிரம் வாகினிகொண்டசிறந்த மிக வுன்னதங்களான தேர், குதிரை, யானைகளுடனும், ($24\frac{1}{2}$) இருபதினாயிரம் வாகினிகொண்ட சைனியங்களுடனும், (25) மிகுந்த பேரொலிகொண்டபேரிகை முதலியவாத்தியமுழக்கங்களோடும், சூரியனைச் சூழ்ந்து மறைக்கலுற்ற புழுதிகளுண்டாகப் போர்செய்வதில் மிக வுற்சாகம்கொண்ட பானுகோபன் பிரயாணப்பட்டனன். (26) அப்போது யானைகளெல்லாம் மேகமார்க்கத்தி லடிவைத்துக்கொண்டு மேகஜலத்தைக்குடித் தந்நீர்த்திவிலைகளைத் துதிக்கைகளால் மலைமீது சொரிந்தன. மகா வேகமுடைய குதிரைகளோ முற்றும் சூரியமார்க்கத்தி லடிவைத்துச் செல்லலாயின. ($27\frac{1}{2}$) மிக உன்னதமான தேர்களின் சக்கிரங்களது க்ரீங்கார வோசைக ளப்போதங்ஙனமே மிகுதியாக வுண்டாயின. (28) நெருப்புக் கண்களையும், கறுப்பு மேனிகளையும், செம்பட்டை மயிர்களையும் கொண்ட பலதிரண்ட வசுரர்களும் மிகுந்தகோலாகல சத்தங்களோடு புறப்பட்டனர்கள். (29) இரதகஜதுரகபதாதிகளும், நிழலிடலுற்ற ஆலவட்டங்களும், மிகுந்த விரத்தின வொளித்திரள்களாற் பிரகாசிக்கலுற்ற குடைகளும் சாமரங்களு (30) மடர்ந்து செல்வதினால் கனதியாகச் சூழலுற்ற விருள்திரளானது ஆயுதங்களினு மாபாணங்களினு மிழைக்கப்பட்ட சிறந்த விரத்தினங்களின் காந்திகளால் விலக்கப்படலாயிற்று. (31) இவ்விதமான பலவித ஸம்பிரவங்க

ளோடு பானுகோபன் வெளிப்புறப்பட் டோர் நொடிக்குள் சைனியங் களுடன் கோட்டைவாசற்படி வந்து (32) ஆயிரம் குதிரை முகங்களை க்கொண்ட வோர் தூதனை நோக்கி வசனமுரைத்ததாவது:— “அடா! தூதா! நீ வீரபாகுவென்ற தூதனிடம் சென்று ‘நாமுந்தனைப் போர்த னில் வெல்வதற்காக வோர் நொடியினில் வருகின்றோம்; ஆகையால் நீ சீக்கிரமாகச் சேனைகளோடு சன்னத்தமாகி வெளிப்புறப்படலாவா’ யெ ன்று நாமுரைத்ததாக அவனிடம்சொல்லிவருவா” (33-34) யெண, அ த்தூதனு மிவ்வாறசுரனு னுரைத்தனுப்பப்பட்டதின்பேரில் சடிதியி ல வ்வீரனிடம் சென்றவ்விதமே யறிவித்தனன். (35) அதுகேட்டு வீர பாகுவும் ‘நல்லதப்படியே ஆகட்டு’ மென் றத்தூதனை யனுப்பிவிட்டுப் பிறகப் பலவானுனவர் தம்பிகளோடு சீக்கிரமாய் ஸ்ரீகுமரேசனிடம் செ ன்று மிகுந்த பக்தியுடன் வந்தனித்துக் கைகளை யஞ்சலிகொண்டு நின் றனர். அப்போது சகலப் பிராணிகளுடையஅந்தக்கரணங்களிலும் வ சித்தருளாநின்ற ஸ்ரீ கந்தபிரா னவணாத் திருக்கண்ணுற் றுரைத்தருளி யதாவது:—(37) “ஓ! வீரபாகுவே! இப்போதத் துராத்துமன் மிக வாக்கிரகத்தோ டுன்னுடன் போர் தொடுக்க வருகின்றான். ஆயிரம் வா கினி பூதர்களுடனும், சேனுதிபர்களுடனும், இலக்ஷத்தெட்டு வீரர்க ளுடனும் நீ நமதாக்கினையின்படி சென் றுயுத்தம் நடத்தலாவாய். ($38\frac{1}{2}$) ஆனாலவன் போர்தனிலுங்களை மாயாஸ்திரத்தைப் பிரயோகித்து மூர்ச் சையடைவிக்கப்போகின்றான். (39) என்றாலும் மிகச் சிரேஷ்டமான அழிவற்ற நமது திருவேலானது அவ்வஸ்திரத்தைக் கண்டித்துப் போ க்கிவிடலாகு” மென்றிவ்விதமாகத் திருவாக்கருளி ஸ்ரீ மகாஸேனரப்பல வானை யனுப்ப, (40) வீரபாகுவுமக்கந்தனை வந்தனித்துவிட்டுத் தே ர்மீதேறிப் பூதர்களுடையவும், படஹம் முதலிய வாத்தியங்களுடையவு மான பேரொலிகளுடன் புறப்பட்டனர். (41) பின்பு மகாபலவான்க ளான வெல்லோர்களு முயுத்தரங்கம் சேர்ந்தார்கள். அதன்பேரி லசுர ர்களும் மிகுந்த பெருங் கூச்சல் செய்வதனுல் பயங்கரர்களாகித் தேவர் கள்மீதும் அதுபோலவே பூதப்படைகள்மீதும் தங்களாயுதங்களைப் பிர யோகித்தார்கள். ($42\frac{1}{2}$) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போ தனேகம் பூதர்கள், கை முறிந்தவர்களும், காலொடிந்தவர்களும், இரு தோட்களிழந்தவர்களும், நுனிக்காலற்றவர்களுமாகி மிகுதியாய்ப் பூமி யிற் சாய்ந்தனர்கள். ($43\frac{1}{2}$) அதன்பிற கெல்லாப் பூதர்களு மொன்று கூடிச் சில வசுரர்களை யுச்சந்தலையிலோங்கி யறைந் திமிசித்தும், இன்னு ம் சிரேஷ்டர்களான பல சூரர்களை வாரி யெடுத்துப் பிண்டங்களாகப் பி

டித்தும், அப்படியே சிலர்களைக் (45) கையினால் கால்களை வாரிப்பிடித்துத் தரைதனிலடித்தும், மற்றவர்களைக் கறகறவென்று சுழற்றிக் கடல்தனிலெறிந்தும் பலவிதமாய்க் கொல்லலானார்கள். (46) மாயாபுர நகரினோர்களான சத்துருக்கள திச்சிறந்த சேனைகளையெல்லாம், ஸ்ரீ பரமேசுவரன் திரிபுராசுரர்களைச் செய்ததுபோலோர் நொடிமாத்திரத்தில் வீணாக்கிவிட்டார்கள். (47) மேலும், கறுத்த நிறமுள்ளவர்களும், பஞ்சா (விஸ்தீர்ணமுள்ள) யுதங்களைப் பற்றியவர்களும், பத்தும (ஓர் சங்கியை) நேத்திரங்களை யுடையவர்களும், அசுரமாற்றான்களுமான சில பூதர்க ளப்போ தசுரர்களைக் கொன்று சங்கத்துவானம் செய்ததனால் பல விஷ்ணுக்கள்போல் விளங்கலானார்கள். ($48\frac{1}{2}$) சில பூதர்கள் யானைகளது கொம்புகளைச் சடிதியினிற் பிடுங்கிச் சுழற்றியதால் (49) ஆதிவராஹமூர்த்தியின் சிங்கப்பல்லைப் பிடுங்கலான பல சுப்பிரம்மணியர்கள்போல் விளங்கினார்கள். யானைமுகங்களைக்கொண்ட பல வசுரர்கள் மலைபோன்ற சத்துருக் கூட்டத்தினுள் (50) புகுந்து புகுந்து புறப்படுவதால் கிரௌஞ்சகிரிக்குள் புகுந்து புறப்படலுற்ற (யானைமுகம்கொண்ட) தாரகாசுரன்போல் விளங்கலானார்கள். ($50\frac{1}{2}$) மகா பயங்கரர்களான சில வசுரர்கள், முந்தி விஷ்ணு முதலிய தேவர்களை வென்று பிறகு பூதசக்கிர (உண்டுபண்ணப்பட்ட சக்கிராயுதம்) த்தினால் மடியலான ஜலந்தராசுரன் * போல் பூதசக்கிர (பூதர் கூட்டம்) ங்களால் வதைசெய்யப்பட்டார்கள். ($51\frac{1}{2}$) மற்ற சில வசுரர்கள், ஸ்ரீ பைரவமூர்த்தியா லந்தகாசுரன் கோர்க்கப்பட்டதுபோல் சூலங்களிற் கோர்க்கப்பட்டார்கள். (52) இவ்வாறு பலபல விதமாக வனேகமசுரர்கள் பூதர்களால் வதைக்கப்பட்டார்கள். தவிரவும் மற்றுள்ள வீரர்களிற் சிலரும் தீக்ஷணமுள்ள பல சரங்களைச் சொரிந்தார்கள். (53) பிற்பாடு பானுகோபனிவையெல்லாம்கண் டோர் நொடிக்குள் தேர்க்குதிரைகளை விரைவாய்ப் பூதப்படைகளுக்கெதிராகக் கோபத்தோடு விறட்டிக்கொண் டேறிட்ட நாணை ஜம்மென்றொலிக்கும்படி குணத்தொனி செய்து வெளிக்கிளம்புகையில் ($54\frac{1}{2}$) மகா ரணதீரரான வீரபாகுவும் துரிதமாய்ப் புறப்படலானார். (55) சண்டைப்புலிகளான அவ்விருவர்களு மொருவரோ டொருவர் வெற்றியை வேண்டியவராகி மகா கோபத்தோ டனேகம் கூரம்புகளை வருஷித்துக்கொண்டார்கள். (56) அவ்விருவராலு மெய்யப்பட்ட பாணங்கள் ஸர்ப்பங்கள்போ லொன்றோடொ

---

* இவ்வற்புதக் கதையானது அடுத்த தக்ஷகாண்டத்தில் சிறப்பாய் விஸ்தரிக்கப்படும்.

ன் றடித்துச் சண்டையிட்டுக்கொண் டோர்நொடிக்குள் மடியலாயின. (57) அத்தேவாசுரரிருவரும் சீக்கிரமாகத் தேவலோகஞ் சென்றும், உடனே யோர் நொடிதனில் பிரம்மலோகம் போயும், பிறகு விஷ்ணுலோகம் சேர்ந்தும், பிறகு (58) சமுத்திரங்கள், திசைகள், அதுபோலவே சக்கிரவாளகிரி யிவ்விடங்களெல்லாம் சென்று தேர்மீதிருந்தபடியே மகா கோலாஹல சத்தத்தோ டியுத்தம் செய்தார்கள்.(59)

பதின்மூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் கசு—வது அத்தியாயத்தினர்த்தம்.

பின்பு பானுகோப னுக்கிரகங்கொண்டவனுகி வீரனுடைய கெட்டியான மார்பின்மீது கூர்மையுள்ள வாயிரம் கணைகளைத் தொடுக்க, (1) வீரபாகுவோ கோபாக்கினியானது ஜுவாலைவிட் டேரிவதனுல் மிகப்பயங்கராகி தீக்ஷணமான வாயிரமம்புகளா லவனது ஸாரதி, குதிரைகள், தேர் இவைகளைத் துரிதமதிற் கண்டித்தனர். (2) பிறகசுரன் மறுதேரேறி யிவர்மீது சினத்தோடு கணைகளைத் தொடுப்பதற் கிச்சிப்பதற் (3) குள்ளவ ரவனது புயங்களினிடைதனி லாயிரமம்புகளைத் தொடுத்ததுகண்டு பூதர்களுயுத்தரங்கத்தில் மிகுந்த சத்தமிட்டார்கள். (4) அதன்மே லசுரனும் வெகு கோபமுற்று வாருணாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். அவ்வஸ்திரமோவென்றுல் சகல திசைகள், உலகங்கள், ஸப்த ஸமுத்திரங்களெல்லாம் வியாபித்துப் பயங்கரமாகிப் (5) பெரும் சத்தமிட்டுக்கொண்டு பூதர்களை மிகவும் துறத்தவும், பூதசேனுபதிகளைப் பயமுறுத்தவுமாகி யோர்நொடிக்குள் கிளம்பிவருகையி (6) லதனை வீரபாகு கண்டு மகிமைபொருந்திய வாக்கினேயாஸ்திரத்தைச் சந்தானம்பண்ண, அதுவுமோர் பக்கத்தில் மிகுந்த நெருப்புப்பொரிகளாலும் மற்றோர் பக்கத்தில் மிகுந்த ஜுவாலைகளாலும் (7) மற்றோர்பக்கத்தில் புகைகளாலும் பேரொலிகள்ளாலும் மற்றோர்பக்கத்தி லொளிகளாலும் வியாபிக்கப்பட்டதும், பிரம்மாண்டம் முழுதும் வேடிக்கலாகவும், (8) நக்ஷத்திரக் கிரகங்களெல்லா மாட்டம்கொள்ளும்படியும், கங்கைமுதலிய நதிகள் சமுத்திரங்களெல்லாம் வற்றலாகும்படியும், சகல

பருவதங்களும் தூள்தூளாக நொறுங்கலாகும்படியும், பூமண்டலம் ப டேலென்று வெடிகொள்ளும்படியு மெங்கும் பறவலாகி (9) யவ்வாரு ஞஸ்திரத்தை நாவினல் நக்கிக்கொண் டசுரனிடம் நெருங்கலானதைய வன்கண் டப்போது வாயவியாஸ்திரத்தைத் தொடுத்தான். (10) அ தோவென்றல் மிகுந்த வூழிகாலப்பெருங் காற்றோடு பார்ககமுடியாத தாகிக் கடல்களை யல்லோலகல்லோலப்படுத்தியும், மலைகளைக் கிடுகிடெ ன்று மிகவுமாட்டங்கொள்ளச் செய்தும், மிகுந்த பேரிரைத்தலோடு ம கா பயங்கரமாகி (11) யவ்வாக்கினேயாஸ்திரத்தைத் தணித்துவிட்டு த்தேவன் சன்னிதானத்தில்வரலாகையி லம்மகா பலவானன வீரபாகு சி னங்கொண்டு ஸர்ப்பாஸ்திரத்தைச் சந்தானிக்க, (12) அவ்வஸ்திரமோ வனேக மாதிசேடர்களாற் சூழப்பட்டதாகி மகா வேகத்தோடு கிளம்பி மிகுந்த பெருமூச்சினலும், கக்கலுற்ற விஷங்களாலும் நெருப்புப்பொ றிகளாலு மிப்புவனங்களைச் சாம்பலாக்கிக்கொண்டும், அனேக படங்க ளா லலங்கரிக்கப்பட்டதாகிச் (13½) சூரியனையும் வானத்தையும் சூழ் ந்துகொண்டு மசுரன்விட்ட வாயவியாஸ்திரத்தை யிரைகொண்டுவிட் (14) டசுரனருகினிற் சடிதியாகச் சென்றது. பிறகு பானுகோபன் ஸகல வுலகங்களையும் நடுநடுங்கச் செய்யலுற்ற அவ்வஸ்திரத்தைக்கண் டு காருடாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். (15) அதுடனே யனேக ம் கருடவுருவத்தோடு கிளம்பிப் பெருங்காற்றனது பஞ்சுகளை யிறை ப்பதுபோ லிரக்கைக் காற்றினல் மலைகளையெல்லாம் வானமதில் மிகவு ம் வாரியிறைத்துக்கொண்டும், (16) சமுத்திரங்களையெல்லாம் கரைபு றளச்செய்தும், மூக்குநுனியா லச்சர்ப்பங்களைக் கொத்திவிழுங்கிவிட் டுத் தமதருகினில் வரலானதை யத்தேவேசன் கண்டு (17) வெகு கோபம்கொண்டு மிகுந்த வலிமையும், பராக்கிரமும் கொண்டதும், ஸக லர்களையும் நடுங்கவடிக்கலுற்றதும் மகா கொரேமுமான விருடபாத்திர த்தைப் (18) பலவான்களுக்கெல்லாம் மகா பலவானன முறைகளறி ந்த அவ்வீரன் முறைப்படி யவ்வசுரன்மீது பிரயோகிக்க, அவ்வஸ்திரமு ம் கறகறவென்றொலிக்கலுற்ற சதங்கை மாலையதிடையிற் கட்டியமணி யின் மிகுந்த நாதத்தையுடையதும், (19) ஒலிக்கலுற்ற சிறுமணிகளி ன் பேரோசையால் திசைமுகங்களைச் செவிடாக்கலுற்றதும், சிறந்த மி குந்த மகா கிரிகளையெல்லாம் கொந்தி வாரியெறியலுற்ற கொம்புகளா ல்விளங்கானின்றதும்,(20)தனதுகால்களின்குளம்புநுனிகளால்பூமியை மிகவுமிடறிப்பேர்க்கலுற்றதும், விசிரலுற்ற பெரிய வாலின் காற்றினு ல் ஸப்த ஸமுத்திரங்களையும் கொந்தளிக்கச் செய்யலுற்றதும், (21) க ம்பீரமாய்க் கர்ஜிக்கின்ற முக்காரவோசையா லண்டத்தின் பேரிடைவெ

ளிகளை நிரப்பலுற்றதுமாகக் கிளம்பி யக்காருடாஸ்திரத்தை யோர் மூச்சுக்காற்றுமாத்திரத்தா லுட்கொண்டுவிட்டு மகா பயங்கரமாகிச் (22) சகலவசுரர்களையும் நதிகலங்கச்செய்துகொண்டும்ஸகலஜநங்களையு மலக்கிக்கொண்டுமப்பானுகோபனைப்பயப்படுத்தலாகிச்சடிதியிலவனருகினில்வரலாயிற்று. (23) அதன்மேலசுரன் வெகு பரபரப்போ டியமாஸ்திரம்,பிரம்மாஸ்திரமிவ்விரண்டையுஞ்சந்தானித்தான். அவ்விரண்டுமோவென்று லனேகங்களாகக்கிளம்பி யதததற்குரிய மகா பயங்கரமானவுருவங்களோடு (24) பேரோசையுள்ளவையும் மகா கோரங்களுமாகி கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யவ்விருடபாஸ்திரத்தைக் கண்டவுடன் பயத்தினால்நடுக்கங்கொண்டதனை யப்போது வந்தனித்துவிட்டுவந்த வழிபார்த்துச்சென்றுவிட்டது. (25) பிற்பா டசுரன் மகாகோரமான நாராயணாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அதனேக நாராயணவுருவங்களோ டதிவேகமாய வெளிக்கிளம்பி (26) சங்கம், சக்கிரம், கதை, சார்ங்கம், கத்திஆகிய வைந்தாயுதங்களையும் கொண்டதாகி யவ்விடபாத்திரத்தோடு மகாபயங்கரமாகச் சண்டையிட்டது. அதுகண்டு வீரபாகுவும் வீரபத்திராஸ்திரத்தை வெகுவினாவோடு (27) விட்டனர். மகா கோரமும், மகா பயங்கரமும், மகா வலிமைகொண்டதுமான அவ்வஸ்திரமானது அனேககோடி வீரபத்திரர்களாற் சூழப்பெற்றதாகி (28) யந்நாராயணாஸ்திரத்தைப் பிளந்தெரிந்துவிட்டுத் தன்னை நோக்கி வரலானதை யசுரமன்னன் கண்டு மகா பீதிகொண்டவனாகி யெல்லா வஸ்திரங்களுக்கு மிராஜாவான பாசுபதாஸ்திரத்தை (29) முறைப்படி பூஜை நைவேத்தியம் முதலியவைகளா லுபசரித் தத்தேவன்மீது பிரயோகிக்க, அப்போதே மகா பலவானான வீரபாகுவு மதே யஸ்திரத்தைப் பிரயோகித்தனர். (30) மேன்மையுள்ள வஸ்திரங்களுக்கெல்லாம் மிகுந்த மேன்மைகொண்ட வப்பாசுபதாஸ்திரம் புறப்படலான தெப்படியென்றால்:— அதிவேகமும் மகா பயங்கரமுமான ஊழிகாலச்சண்டமாருதத்தைக் கொண்டதும்,(31) எல்லாத்திசைமுகங்களிலும் பறவிச்சூழலுற்ற வடர்ந்த புகைகளால் நிறைந்ததும், ஓரிடத்துப் பற்றலுற்ற வூழிகாலப்பெரும் தீக்களால் ஜுவலிக்கலுற்றதும், (32) ஹாலாஹலம் முதலிய நஞ்சுகளின் கோலாஹலத்தினால் பயங்கரமானதும், கரைபுறண்ட பிரளயகாலக்கடல்களைக் கக்காநின்றதும், (33) அதேவிதமாய்ப் பிரளயகாலததி லுண்டாகாநின்ற 'புஷ்கலாவர்த்த' மென்ற மேகத்தை யோரிடத்தும், எல்லோர்களையும் நடுங்கவடிக்கலுற்ற அநந்தன் முதலிய வெட்டு நாகேந்திரர்களையும், (34) மற்றோரிடத்துப் பூதப்பிரேத பிசாசங்களையும், அதேவிதமாக வேறிடத்து எல்லா வுலகங்களிலும் பறவிச்சூழலுற்ற கன்னங்கரேலெ

ன்ற குருட்டிருளையும் சத்திவெளிவிடாநின்றதும், (35) மகா மாயைகளால் மிகுந்த மதிமயக்கங்களைச் செய்யாநின்றதும், சிங்கப்பற்களோடு பயங்கரமான முகங்களையுடைய மகா மிருத்யு கணங்களாற் சூழப்பெற்றதும், (36) வெகு பயங்கரமான திரண்ட மகா சஸ்திரங்களால் பாரிசங்களிற் சூழப்பெற்றதும், சிறந்த மூன்றாறு வாகனங்கள்மீதேறலுற்ற பல கணராஜக் கூட்டங்களால் நிறையப்பெற்றதும், (37) ஓரிடத்துப் பெரிய மலைகள்போன்ற மிகுந்த நரசிங்கக் கூட்டங்களாலும், மற்றோரிடத்து மகா கோரமும், மிகுந்த கர்ஜனையிடுவதுமான திரண்ட சர்பக்கூட்டங்களாலும், (38) நாய்கள்மீதேறியவர்களும், மகா பயங்கரர்களும், மிகுந்த வலிமைகொண்டவர்களும், மைமலைக்கு நிகரான வுருவமுடைய பிசாசக்கூட்டங்கள்மீ தேறியவர்களும், (39) எல்லாவுலகங்களையும் பயப்படுத்தலுற்ற பெரும் பூதங்கள்மீ தேறியவர்களும், சிறந்த வியாளிகள்மீது மிருடபங்கள்மீது மேறியவர்களும, (40) மிகுந்த விரைவுடைய குதிரைகள்மீ தேறியவர்களும், மகா பலிஷ்டர்களும், மிகுந்த கோபமுகத்தையுடைய மகா பயங்கரமான பல புலிக்கூட்டங்கள்மீ தேறியவர்களும், (41) அனேக சிங்கங்கள், சிறந்த யானைகள், மிகவும் பெரியதான பர்வதங்களுக்கு நிகராகிய தேர்கள், (42) பலபல விரத்தினங்களி னொளித்திரளால் விளங்கிய விமானங்கள் இவைகள்மீ தேறியவர்களு மின்னும்மற் றனேகவித முள்ளவர்களுமான வுருத்திர கணங்களால் சூழப்பட்டதும், (43) பிரம்மன் விஷ்ணு, வாயு, இந்திரன், வருணன், இயமன் ஆகிய அவரவர்கள துருவங்களைக்கொண்ட அந்தந்த தெய்வங்களின் பற் பல அஸ்திரங்களாற் சுற்றிலும் சூழப்பெற்றதும், (44) சத்தி, கட்வாங்கம், உலக்கை, திருகுதடி, குண்டாந்தடி, இரும்புக்கட்டித்தடி, எறிவல்லயம், சக்கிரம், இரும்புலக்கை, பீரங்கி(45) ஈட்டி முதலியவை, பாணங்கள், கல்லுளி, அங்குசம், வேல், வில், கதை, பாசம், கண்டனக்கோடாலி, சூலம், (46) பெருங்கத்தி, கைக்கத்தி, வஜ்ஜிராயுதம் முதலிய பயங்கரமான மற்ற வத்திரங்களாலு மெங்கும் நிறையப்பெற்றதால் மிகவும் பயங்கரமாகவு மிருக்கலாயிற்று. (47) இவ்வாறு வெளிப்படலான அவ்விரண்டஸ்திரங்களுக்கும் மிகுந்த கோரமான வுயுத்தமுண்டாயிற்று. எப்படியென்றால்:— பெரிய சுனைகள், சமுத்திரங்கள், இயமுனை, கங்கை முதலிய நதிகள் இவைகளெல்லாம் வற்றலாகவும், (48) ஆகாயம் பூமியெல்லாம் பற்றியெரியவும் பெருஞ்சத்தத்தோடு மேருகிரி இடிந்துவிழலாகவும், நவக்கிரகங்கள் நக்ஷத்திரமண்டலம் முதலியவையெல்லாம் மிகவும் தவிக்கலாகவும், பிரம்மாண்டச்சுவர்

வெடிக்கலாகவும், (49) மலைக்கு நிகரான சூரியன் தேர் தூள்தூளாகு ம்படியும், பெரும் பீதியால் திக்கஜங்கள் பூமியில் விழுந்து கொம்பு முறி யலாகவும், (50) வாயு வக்கினிகளது ஆட்டவோட்டங்களற்றுப்போக வும், பாதாளம் நடுக்கங்கொள்ளவும், ஸகல புவனங்களையும் காக்கலுற்ற வாதிகூர்மம் புறண்டு தடுமாறவும்,(51) சகல ஜீவராசிகளும் மிகத்தவி த்து 'ஹா ஹா'வென்று கதறுவதால் மிகப்பயங்கரமாகவும், மிகுந்த பீதி யோ டிலக்குமியால் தழுவப்பட்டு ஸ்ரீ விஷ்ணுபிரான் திகிலடையவும், (51) இரதிதேவி மன்மதனைக் கட்டிக்கொண்டு கதறியழவும், மற்றுமு ள்ள விருஷிபத்தினிகளவரவர் கணவனைத்தழுவிக்கொள்ளவு (52) மி வ்வாறெல்லா மாகும்படியவ்விரு பாசுபதாஸ்திரங்களுக்கும் சண்டைசே ர்ந்தபோது பிரளயகாலம்போ லனேகம் சேனைகள் மாண்டன. (53) அ ப்போது மிகுந்த மோகத்தை யுண்டுபண்ணலுற்றதும், பயங்கரமான வைக்கெல்லாம் மிகப் பயங்கரமானதும், மயங்கச்செய்வதையெல்லாம் மிக மயங்கச்செய்வதும், மிருத்தியுவுக்கும் மிருத்தியுவை யளிப்பதும், மகா கோரமுள்ளதும் சகலப் பிராணிகளுக்கும் மிகுந்த பயத்தை யளி ப்பதுமான அவ்விரண்டஸ்திரங்களின் பெருங்கூச்சலைக் கேட் டச்(54½) சூரன் பட்டணத்திலுள்ள பாதகர்களான வசுரரெல்லாம் மிகவும் பயம் கொண்டார்கள். (55) சூரனுமிதென்னவென் றுலோசித் தாலோசித் துச் சீக்கிரமாயோடலுற்ற தூதர்களை யதையறிந்துவர வனுப்பினன். (56) அப்போதே சில தூதர்களவற்றையெல்லா மறிந்து சீக்கிரம்வந் து உள்ளபடிசொன்னார்கள். (57) அப்போது சூரனத்தூதர்களை நோ க்கி "ஓ! கோ! யாமவ்விரபாகுவை யோர் வீரனென்றறியாமல் கேவல மோர் தூதனென்றே யெண்ணியிருந்தோம். ஓ! கோ! அவனோர் த குந்த வீரன்தா" னென்றுரைத்தனன். (58) அவ்விருபாசுபதாஸ்திரங் களு மிவ்விதமாக மிகப்பயங்கரமான வியுத்தஞ்செய்து "ஓ! நாமிருவரு ம் சண்டையிட்டுக்கொள்வதா லுலகங்களே யழியலாகு" (59) மென் றறிந் திரண்டு மததனை யெய்தவரிடமே திரும்பிச் சென்றுவிட்டன. அப்போததுக்கண்டு தேவரெல்லோர்களும் மிகவும் சந்தோஷங்கொண் டார்கள். (60) ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போது துர்ப்புத்திகொண்ட பானுகோபனும் சேனைகளையெல்லாம் சாகக்கொடு த்துவிட்டு மாயையினு லுருமறைந்தவனாகி வானமார்க்கம் சென் றங்கு நிலைகொண்டான். (61) அதன்பிறகு சகல பூதர்களும், வீரர்களும் சேனாதிபர்களு மவனோடிவிட்டானென்றுநிச்சயித்து மிகுந்த அட்டகா

ஸம் செய்தார்கள். (62) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சூரியனு மஸ்தகிரியினுச்சிமீதிருந் தாகாயமார்க்கத்தில் மறைந்துகொண்டிருந்த பானுகோபனைக் கண்டு பயங்கொண்டவன்போல் ஆகாயத்தைவிட்டு(வ ஸ்திரம் நழுவலாகி) கிரணமிழந்தவனாகி (நைநடுக்கங்கொண்டு) கடலின் கண் ணாழ்ந்தினன். (63)

பதினைந்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் கரு—வது அத்தியாயதித்னார்த்தம்.

பின்பவ்வீரரெல்லாம் ஸகல பூதர்களுடனும் ஸேநாதிபர்களுட னும்கூட "விடுதிசென் றழிவற்ற வடிவேலனை வந்தனித்துவிட்டு மறு நாள் வருவோ" (1) மென்று நிச்சயித்துப் பிரயாணத்துக்குச் சன்ன த்தப்பட்டு மிகவும் சிந்தையற்றிருக்குமளவி லசுரனும் 'இஸ்திதியில் தா ன்போய்விட்டா லபகீர்த்திக்கிடமாகு' மென்றுகருதி (2) யெல்லாவற் றையும் மிகவும் மதிமயங்கச் செய்யலுற்றதும், ஊழிகாலத்திய வடர்ந் தமேகத்தோடுகூடிய பெருங்காற்றையும் பெரும் சத்தத்தையுமுடைய தான மாயாத்திரத்தைக் கொண் (3) டிங்கு வந் ததனைப் பிரயோகித்துப் பூதர்களையும் மகா பலிஷ்டர்களான சேனாதிபர்கள் முதலான வீரர்க ளோடுகூடிய ஸகலதேவரக்ஷகர்களையுமடி மயக்கி யேழாவதாகிய சுத்தநீர் க்கடலின் நடு ஆழத்தி லவர்களையெல்லாம் கட்டியெறிந்து, (4½) பிறக ப்பானுகோபனோர் நொடிக்குள் தந்தையிடம் சென்று (5) 'ஓ! தந் தாய்! யான் சத்துருக்களைச் சிக்கிரத்திற் சயித்தெல்லோர்களையும் கடலி லெறிந்துவிட்டிங்கு வரலானேன்; மேலும் நாளைக்கே சென்றப்பையலை யும் வென்றுப் பிரம்மன் முதலிய தேவர்களையெல்லாம் சந்தேகமின்றிச் சிறையிலடைக்கின்றே' (6½) னென, சூரனும் தன் மைந்தன் வசனத் தைக்கேட்டு மிகுந்த மகிழ்ச்சிகொண்டவனாகி (7) யப்போதச்செல்வ னைக் கட்டியணைத் துச்சிமுகர்ந் தருகினிலுட்கார்த்திக் கிரீடம்முதலிய சி றந்தவாபரணங்களையவனுக்கீந்து (8) மேலும்சிலவன்புவசனங்களையுரை த்து "ஓ! கண்மணியே! நமதாக்கினையின்படி நீ நாளைத்தினத்தில் முறி

யடிக்கப்பட்ட தேவர்களையெல்லா மவ்வாறோ செய்யலாவா" யென, (9) உடனே பானுகோபனும் தந்தையிடத் துத்திரவுபெற்று விடுதிசென்றனன்.

பிறகு தேவர்கள் வீரர்களுக் கப்போது நேரிட்ட அவ்வுபாயத்தைக் கண்டு (10) மிகவும் மனம் நொந்தவர்களாகி ஸ்ரீ குஹனிட மறிவிக்கச் சென்றார்கள்; அதற்கும் முந்தியே ஸ்ரீ நாரதமுனிவரிவற்றைஸ்ரீ முருகேசனுக் கறிவித்ததன்பேரி (11) லப்பகவா னுடனே திருவேலையெடுத்து 'ஓ! வேலே! அம்மகா வீரர்களை யம்மாயாத்திரத்தினின்று விடுவித் திங்கழைத்துவரலாவா' யென்று திருவாக்கருளி யதனைப் பிரயோகித்தனர். (12) "அது புறப்படலானதோவென்றால்:— ஆயிரம் கோடி சூரியப் பிரகாசம்பொருந்தியதும், காடாந்தகாரத்தினால் வியாபிக்கப்பட்ட அவ்விரவினில் விஷத்தீப் பொறிகளைக் கக்கிக்கொண்டு செல்வதால் மிக பயங்கரமுள்ளதும், (13) திரண்ட மகா கிரிகளையெல்லாம் பம்பரமாகச் சுற்றுவிக்காநின்ற பெருங்காற்றி னோசையால் பயமளிக்கலுற்றதும், புருவநெரியால் கொடூரமான மிகுந்த இயமன்களுடைய கூட்டங்களால் நிரம்பப்பெற்றதும், (14) ஓரிடத்துப் பிரளயகால மேகங்களின் நிறத்தையொத்த புகைகளின் வரிசையால் சூழப்பெற்றதும், மின்னற்கொடிகளையொத்தஜுவாலாமாலைகளது நெருப்புப்பொறிகளால் நிரம்பலுற்றதும், (15) மற்றோரிடத்து இடி முழக்கங்களோடு கூடிய பெரிய மேகங்களால் நிறையப்பெற்றதும், அக்கினி, சூரியன், இயமன், வாயு, இந்திரன், சந்திரன், வருணன், பிரம்மன், விஷ்ணு ஆகிய இவர்களதத்திரங்களாலும், இவையொத்த வின்னும் மற்ற வத்திரங்களாலும் பின்றொடர்ந்து துதிகூறப்பெற்றதுமாகவாநின்ற (16-17) அளவற்ற பராக்கிரமமுடைய ஸ்ரீ கந்தபிரானுடைய வப்பேர்க்கொத்த நிகரற்றவேலைக்கண்டவுடன் சமுத்திரராஜன் பயத்தினால் மெய்நடுக்கங்கொண்டவனாகி யெதிர்கொண்டு புறப்பட்டு வந்து (18) "ஓ! திருவேலரசே! எந்தனாலிப்பேர்க்கொத்த வபராதமொன்றும் செய்யப்படவில்லையே! ஆகையாலெந்தனைக் காத்தருளல்வேண்டு" மென்றனேகஞ் சிறந்த துதிகளால் தோத்திரம்பண்ணி யடிக்கடி தண்டம்பண்ண, (19) அத்திருவேலவனைத் தைரியப்படுத்திவிட்டு மிக வேகத்தோடந் நடுக்கடற்குச் சென்றவுடனப்போதே யத்தேவத்தலைவர்களெல்லோர்களும் மூர்ச்சைதெளிந்தவர்களாகி (20) ஸ்ரீ வடிவேலனுடைய வப்பேர்க்கொத்த திருவேலைத்தரிசித்துமிகுந்த பரமானந்தத்தோடு 'சக்தித்துதி' யென்ற ஸகல உலகங்களையும் பரிசுத்தஞ் செய்யலுற்ற சிறந்த துதியால் தோத்திரம்ப

ன்னி (21) ஓ! ஸ்ரீ வேலாயுதமே! முந்தி யாங்கள் தாரகனுடையமா
யையினி னுந்தனாற் காக்கப்பட்டன மல்லவோ! இப்போது மெங்க
ளை யிரக்ஷித்தருளிய வுந்தனுக்கு யாங்கள் யாது பதி லுபகாரம் செய்
யப்போகின்றோம்"(22) மென்றவர்களுரைக்கலானதைக் கேட்டப்போ
து வேல் கூறியதாவது:—"ஓ! வீரர்களே! ஸ்ரீ குஹபிரானெந்தனை 'நீ
சென்று மாயாத்திரத்தைத் தொலைத்துவிட்டு வீரர்களை நம்மிடமழைத்
துவா' (23) வென்று கட்டளையிட் டெந்தனை யனுப்பலாயினர். ஆ
கையால் நீங்களச்சகதீசன் சன்னிதிக்குச் சீக்கிரம் வருவீராக; யானச்ச
ன்னிதிக்குத் திரும்பிச் செல்லுகின்றேன்" னெனவுரைத்தது ஸ்ரீதேவனி
டம் சேர்ந்தது. (24) பிறகு புறப்பட்டுச் செல்லுகையில் வீரபாகு ம
ற்றவீரர்களையும் சேனைகளோடுகூடிய மற்ற படைத்தலைவர்களையும் நோ
க்கி யுரைத்ததாவது:—"கேளீர்! வீரர்களே! இதோ! எதிரிலோர் கூப்
பிடுதூரத்தி லசுரன் நகரந்தெரிகின்றதல்லவா! (25) இதில்தான் மா
யையால் நம்மெல்லோர்களையும் மதிமயங்கச் செய்த பானுகோபாசுரனி
ருக்கின்றான். ஆகையாலவனைக் கொல்வதற்காக, நாம் சீக்கிரத்தி லந்ந
கரம் சென்று (26) கொள்ளையடித்துக் கொளுத்திவிட்டா லவ்வசுரன்
தானாகவே வரலாவான். அப்போது யாமவனைச் சண்டைமுன்னர் சமுக
ரித்துவிடுகின்றோம். (27) இல்லாவிடில்வில்பிடித்தபடியே தீதனிற் குதி
த்து நிச்சயமாக மரித்துவிடுகின்றோம்" மென்றிவ்வாறாகச் சொல்ல, அ
துகேட்டு மற்ற வீரர்களு மவ்வாறே யுறுதிசெய்துகொண்டு வீரபாகு
வோடுகூட (28) மகா கோலாகல சத்தத்தோ டந்நகரத்தின்மேற் புற
ம்சென்றார்கள். அப்போது அக்கோட்டைவாசற் காப்பவர்களில் தலைவ
னான மாயையென்பவளின்மைந்தனாகியவியாக்கிரமுகனென்ற சிரேஷ்ட
னான மகாசுரன், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அங்கு மிகுந்த தீ
வட்டிவரிசைகளால் வெளிச்சமிட்டுக்கொண்டு திரண்ட சைனியங்களா
ற் சூழப்பட்டவனாகிச் சிறந்த சிங்காதனத்தின்மீது வீற்றிருக்குமளவி
(29½) லக்கூச்சலைக் கேட்டுத் தனது சகல சைனியங்களுடனும் புறப்
பட்டனன். (30) பிறகு பூதர்களா லசுரரிடத்து மிகவும் பெரிய உயுத்
தம் நடத்தப்பட்டது. அப்போதனேக மசுரர்கள் மலைகளாலும், மரங்
களாலு மந்திரங்களாலும் கெட்டியான கற்பாறைகளாலு மடிபட்டு இர
த்தம் தாரைதாரையாய்ப் பெருகலாகிச் செத்தார்கள்.(31½) அதன்மே
ல் வியாக்கிரமுக னுக்கிரகம்கொண்டு சடிதியிலோர் சூலத்தையெடுத்து
ப் (32) புறப்பட்டு அம்மலைகளையும் மரங்களையும் கண்டித்துச் சிங்கநா
தம்செய்தான். அதன்மேல் பூதப்படைத் தலைவனான பெருமைபொரு
ந்திய ஸிம்மனென்பவன் ஊழிகாலத்திய மேககர்ஜனைபோன்ற சிங்கநாத

த்தினாற் பயங்கரனாகிக் கிளம்புகையி (33½) லத்துராத்துமனாகிய வசுரனவனையிச் சூலத்தாலே யடிக்க, (34)பிறகு தேவனும் தன் சூலத்தை யசுரன்மீது பிரயோகித்தான். இவ்விதமாக அவ்விருவர்களுடைய சூலங்களு மொன்றோடொன்றடித்துக்கொண்டு முறியலுற்றன. (35) பிறகு தேவனதிகோரமாக மல்லயுத்தம் செய்தசுரனைக் கொன்றுவிட்டான். அவனிறந்தவுடன் தேவர்கள் மிகவும் மலர்மாரிபொழிந்தார்கள். (36) மகா பலவானான வீரபாகுவுமப்போது மிகவும் களிப்புற்றனர். பிறகு பூதர்களெல்லாம் மிகவு முயரமுள்ள கோட்டைச் சுவரை யிடித்துவிட்டு (37) மிக நேர்த்தியான கோபுரத்தைப் பிடுங்கி யந்நகரமத்தியில் விசைகொண்டெறிந்தார்கள். அவ்வாறது விழுந்ததா லங்குள்ளவனேகர் மடிந்தார்கள். (38) அதன்மேல் வீரர்கள் பூதகணங்களோடு வீதிக்குள் நுழைந் தப்போதனேக மசுரர்களையும், கோபுரங்கள் விமானங்கள், பல பல வீடுகள் இவைகளையும் வெகுகோபத்தோடு ஹதம்பண்ணிவிட்டு மிகுந்த வட்டகாசம் செய்தார்கள். (39½) மேலுமம் மகா பராக்கிரமசாலிகளெல்லா மத்திரங்களாற் சதுரங்க சைனியங்களை நொறுக்கினார்கள். (40) பிறகு வீரபாகுவு மந்நகரத்தைக் கொளுத்த ஆவல்கொண்டவராகி வெகு கோபத்தோடு ஆக்கினேயாத்திரம், வாயவியாத்திரம் இவ்விரண்டையு மொன்றாகச் சேர்த்துப் பிரயோகித்தனர். (41) அப்போதக்கினிதேவ னவ்வசுரபட்டணத்தைக் கொளுத்துவதற்குப் பயத்தினாற் கொஞ்ச மாலோசனைகொண்டுப் பிற 'கெம்மையெய்தவரிருக்கயாமென்னசெய்யலாகு'மென்று தேறுதலைக்கொண் டதனை யோர்பக்கமதிற்பற்றிக்கொண்டு (42) மிகுந்த ஜுவாலாமாலைகளாற் சூழப்பட்டவனாகவும், வானமதிற் சுற்றுனின்ற திரளான கிரஹங்கள், நக்ஷத்திரங்கள் இவையெல்லாம் மிகுந்த தாபமடையப்பெற்றவனாகவும், இங்குமங்குமோடலுற்ற வசுரர்களால் மிகுந்த துயரத்துடன் பார்க்கப்பெற்றவனாகவும், மிகுந்த பேரோசையோ டெரிந்தனன். (43½) அப்போதிதுகண்டு தூதர்களோர் நொடிக்குட் சூரனிடஞ்சென்று (44) "கேளீர்! அசுரச் சிரேஷ்டரான சுவாமீ! பானுகோபனுயுத்தத்தினின்றிங்கு திரும்பிவருகையில் தேவரெல்லோர்களும் மயக்கிக்கடலினிற் போடப்பட்டார்கள். (45) பிறகவர்கள், கந்தன்வேலினால் மோகத்தினின்று விடுவிக்கப்பட்டவர்களாகி தேவரீரது நகரத்தினுட் புகுந்தோர் நொடிக்குள் வியாக்கிரமுகன் முதலிய பல வசுரர்களையும் கொன்று (46) நேர்த்தியான நகரத்தில் பதினாயிரம் யோஜனை விஸ்தாரத்திற்குத் தீயிட்டுவிட்டார்கள். ஓ! அசுரர்களைக் காக்கின்ற ராஜனே! இப்போதுகூட வின்னும் நெருப்பணையாம லெரிந்துகொண்டிருக்கின்ற" (47) தென, மகாசுரனான சூர

பத்துமனதனை கேட்டு மிகுந்த கோபங்கொள்ளலாயினன். (48)

பதினைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் கசு—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகசுரன் மகா கோபத்தோடு மிக வுன்னதங்களான தலைமை மேகங்களை யழைப்பித் தவைகளையத் தீயைச் சடிதியி லணைக்கும்படி யனுப்ப, (1) அவைகளு மப்படியே பாக்கியமென் றாகாயமார்க்கமாய் மகா பிரளயகாலத்துக்குரிய வுருவத்தைக் கொண்டு புறப்படலாகி "யாமிதனைத் தணித்துவிட்டால் வீரபாகு நம்மைக் கொன்றுவிடுவார்: (2) இல்லாவிடில் சூரன் நம்மைச் சந்தேகமின்றிச் சிறைமீதடைத்துவிடுவான்; ஆயினும் நமக்கிதைக்காட்டிலும் வீரபாகுவால் சாவடைவது நலமாகு" மென்று நிச்சயித்துக்கொண் டம்மேகங்களெல்லாம் மிகுந்த சத்தத்தோடு கர்ஜனைசெய்துகொண் டோர்க்ஷணத்துக்குள் ளத்தீயை நீர்த்தாரைகளால் தணித்துவிட்டன. (4) வீரபாகு அவைகளைப்பார்த்து "ஓ! கோ! இதென்ன? அசுரனுலேவப்பட்ட மாயையா? அல்லது பிரளயகாலமேகங்களா?" வென்று மனக்கலக்கமுற்றவராயினர். (5) இப்படி யிருக்கையிலங்கு முனிவர்களிற் சிரேஷ்டரான ஸ்ரீநாரதமுனிவருடனே தோன்றி "ஓ! வீரனே! இவ்வேழு மகா மேகங்களும் சூரனால் தூண்டிவிடப்பட்டவைகளாகி யூழிகால முழக்கங்களோ டிடைவிடாமல் நீரைப்பொழியலாகின்றன. (6½) ஆகையால் நீர் வடவாக்கினியத்திரத்தைச் சந்தானிக்கலாவீ" ரென்றுரைத்துச் சென்றுவிட்டனர். (7) பிறகு வீரபாகுவும் மனதினிலங்ஙனமேநிச்சயித்துக்கொண் டப்போது வடவாத்திரத்தைச் சந்தானிகக, அவ்வத்திரமானது மிகுந்த ஜுவாலாமாலைகளாற் சூழப்பட்டதாகி யவைகளது நீர்களைக் குடித்துவிட்டது. (8) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதம் மேகங்கள் ஸாரமற்றுப் பூமியில் விழலாகிப் பிறகு ஸ்ரீமுருகேசனது திருநாமத்துதிகளால் வலிமையடைந்து சமுத்திரம் சென்றன. (9) பின்பு தேவரெல்லாம் வீரன்மீது பூமாரிசொரிந் தப்போது மிகுந்த சந்தோஷத்தோடு பெருங்கூச்சலிட்டுக் கூத்தாடினார்கள். (10) பிறகிச்சங்கதிகளை யெல்லாம் சூரன் தூதர்முகமாய்க் கேட்டறிந்து கோபம்கொண்டவனாகி யப்போதத்

தூதனையே நோக்கி 'ஓ! தூதா! உயுத்தத்துக்குப் போவதற்காக விரதத்தைக் கொண்டுவா' (11) வென்று மகா கோபத்தாலுரைக்கப்பட்ட வச்சூரன் வசனத்தைக் கேட்டு மிகுந்த மாயாவியும், மகா வலிமைகொண்டவனும், பாதாளவல்லமை யாள்வோனும், மூன்று சிரசுகளையுடையவனும், மகா கூர்மையுள்ள புத்தியுடையவனுமான அவன் மைந்தனாகிய ஹிரணியனென்பவ (12½) னெழுந்து தந்தையை வந்தனித்து வணங்கத்தோ டுரைத்ததாவது:--- (13) "ஓ! தந்தாய்! தேவர்களுக்குத் திங்களிப்பதனால் ஐசுவரியத்துக்கு மாயுளுக்கும் நாசம் நேரிடலாகும்: இதோ! இப்போதவர்கள்மீது மிகுந்த கருணையோடு ஸ்ரீஸர்வேசுவரனது செல்வகுமார னெழுந்தருளியிருக்கின்றார்- (14) பிரம்ம விஷ்ணுக்கள்மீது நீர்பெற்ற வெற்றியெல்லாம் ஸத்தியமாகவே யவரது வரத்தாலடையப்பட்டதேயின்றி வேறில்லை; கேளீர்! அசுரவேந்தனாகிய தந்தாய்! அப்படிக்கொத்த வலிமையை யுமக் கீந்தருளிய ஸ்ரீ மகேசுவரனுக்குத் தம் வலிமையைத் தாம் மீட்டுக்கொள்வதில் யாது மிகுந்த பாரமிருக்கின்றதென்பதைச் சொல்வீர்: (15½) மேலும் சுகத்தை வேண்டுவோர்களால் ஸ்ரீ பரமேசுவரனுடைய சிரேஷ்டமான திருக்கட்டளை மீறத் தகாதல்லவோ! (16) ஓ! அசுரேசா! ஸ்ரீ சிவாக்கினையை மீறி நடந்தவரெல்லா மதோகதி யடைந்துவிட்டார்களென்பதை யறியீரா? மகா பராக்கிரமசாலிகளானத் திரிபுராசுரர்கள், (17) கஜாசுரன், அந்தகாசுரன், ஜலந்தராசுரன், பண்டாசுரன், வியாக்கிரன் முதலிய வசுரர்கள், மன்மதன், இயமன், (18) ஸ்ரீ விஷ்ணுவின் திரு அவதாரங்களான மச்சம், கூர்மம், வாராஹம், மகா பராக்கிரமமுடைய நரசிங்கம், வாமனம், அதுபோலவே தக்ஷப்பிரஜாபதி, (19)இந்திராவணர்கள்முதலியவரக்கர்கள் இவர்களெல்லாம் முந்தி ஸ்ரீ சிவாக்கினையை மீறிநடந்ததாலல்லவோ மகா கோரமாக மரணமடைந்தார்கள். (20) மேலுமம் மகா தேவனால் கங்கையின் கர்வத்தை யடக்குதல், ஹாலாஹல விஷத்தைப் புஜித்தல், இந்திரனுடைய கைகளைப் பங்கஞ்செய்தல், பிரம்மன் சிரசையறுத்தல், (21) விஷ்ணுவின் இரத்தத்தை யுறிஞ்சுதல் அனேக கோடி பிரம்மர்களுடைய மண்டையோடுகளை மாலையாகப் பூண்டல், திடவுருவம் கொண்ட அபஸ்மாரத்தைப் பொன்னடியால் மிதித்தல் (22) இவை முதலிய திருவிளையாடல்களெல்லாம் செய்தருளப்பட்டன வல்லவோ! ஆகையால் ஓ! அப்பா! அப்பேர்க்கொத்த ஸ்ரீபரமாத்துமாவின் செல்வகுமாரனோடு நீர் சண்டைக்குநிற்பது சரியல்ல; (23) மேலும் ஸாக்ஷாத் ஸ்ரீ மகாதேவ சுவரூபியான விப்பரமாத்துமாவைக் கேவலமோர்பிள்ளைனென்று நினைக்கலானீர். தவிரவும் கேளீர்! அப்பா! இவரோர் திரு

விளையாட்டாகவே விசுவரூபம் கொண்டதையும் (அல்லது இவர் சகல அண்டபிண்ட சராசரங்களின் சுவரூபமுடையவரென்பதையும்) பிரம்ம னைச் சிறையிலடைப்பித்ததையும், உலகங்களைச் சிருஷ்டிக்கலானதையு ம் நீரறியவில்லை. (24½) மேலுமிக்கந்தன் மகா மகிமைபொருந்திய ஆ திவராகமூர்த்தியினுடைய சிங்கத்தைப் பிடுங்கி ஸ்ரீ பரமேசுவரனிடம் கொடுத்தனரல்லவோ! (25) கிரௌஞ்சனையும் உமது தம்பியான தாரகனையும் கொன்று போட்டனரல்லவோ! ஆகையா லுமக் கிவர்மீ தோரினை ஞரென்ற கொள்கை வேண்டாம். (26) இன்னும் கேளீர்! தந்தாய்! சகல ஜகங்களையும் நாசம்செய்வ தற்கு ஸ்ரீ மகேசுவரனுடைய வோர் புன்னகைப்பு மட்டிலே போதுமா னதல்லவோ! சாங்கேயன் கார்த்திகேயன் முதலிய திருநாமங்களுக்கெ ல்லாம் ஸ்ரீ பரமேசுவரன்தான் பொருளென்பதே (27) சிறந்த மாமு னிவர்களுடைய கொள்கையேயின்றி வேறில்லை. கேவலம் மூடர்கள் தான் வித்தியாசமாகச் சொல்வார்கள். முந்தி யவரா லேழாவதான தெளிநீர்க்கடலுக் கனுப்பி யருளப்பட்ட திரிவேலான (28) திங்குப்பி ரயோகிக்கப்பட்டா லெந்த அசுரன்தான் பிழைக்கலாவான். மேலும்ம காவீரனான வீரபாகுவிடத்துமக் கோர் தூதனென்ற கொள்கை வேண் டாம். (29) அவருக்கோ மரணபயமில்லை; ஸகல தெய்வங்களுடைய அத்திரங்களின் பயமுமவ்வாறே. அவராலனேக மசுரர்கள் கொல்லப்பட் டு நமது பானுகோபன்கூட துறத்தியடிக்கப்பட்டிருக்கிறான். (30) அ வரால் நமதிந்நகரமானது இதோ!கொளுத்துகொளுத்தென்று கொளுத் தப்படுகின்றது. அப்பேர்க்கொத்தவரோடு சண்டையிடுவதற் கெவ ரால்தான் முடியும். தவிரவும் ஸ்ரீகந்தனே கொல்லவேண்டுமென்ற நி னைவைக் கொண்டுவிட்டா லவர் முன்னரெந்த அசுரன்தான் நிற்கவல்ல வனாவான். (31) அப்பகவானு முண்மையில் மிகுந்த தயவினால்தா ன் "நீ தேவர்களை முன்போல்விட்டுவிட்டுச் சுகமகாயிரு" என்று தம் தூ தர்மூலமா யுமக் கறிவித்துமிருக்கிறார். (32) ஆகையா லவருக்குக்கோ பமுண்டாவதற்கு முந்தியே யிப்போது தேவர்களை விட்டுவிட் டவரது திருவடியில் வணங்கலாவீர். அப்படிச் செய்வீராகில் அவர் மிகவும் பி ரசன்னராகி யுமக்கு வேண்டிய வரனையுமளித்துவிட்டுச் (33) சகல்சே னைகளுடனும் வந்ததுபோற் சென் றருளிவிடுவார்" என, இவைமுத லிய தன்மைந்தனான இரணியனது வசனங்களைக் கேட்டுச் (34) சூர பத்துமன் கடுஞ்சினங்கொண் டுதடு படபடவென்று துடிக்கலுற்றவ னாகி "அடா! மூடா! தன்னையே மகா பண்டிதனாக வெண்ணலுற்ற நீ

யாரடா வுரைத்திட்டாய்? (45) நம்முன்னர்கூட சத்துருவான வப்பை யலே யுயர்த்திச் சொன்னுயல்லவா! யாவனுந்தனுக் கிவ்வாறு போதித் தானென்பதை யுரைப்பாயாகி லவனை யிப்போதே கொன்றுவிடுகின் றோம். (36) நம்முடையசாசுவதமானஐசுவரியம், பலம், பராக்கிரமம், என் றும் சாகாமைஇவைகளையும், விஷ்ணுவானவன்போர்முன்னர் நம்தம்பிமு ன்பாகச் சக்கிரத்தை யிழந்துவிட் டோட்டம் பிடித்ததையும், (37) நாள் தோறும் நமக்குப் பிரம்மன் தனதொன்பது மைந்தர்களோடும்கூட பஞ் சாங்கம்சொல்லிவருவதையும், இந்திரன்முதலிய தேவரெல்லோர்களும் நமக்கு மீன் சுமந்து வ்ரவேற்பட்டதையும், (38) அசுரர்களின் குலநீதி யையும் நீ கொஞ்சமெனு மறியாமலுரைக்கலானுய். இனியிவ்வாறு ரைப்பாயாகிற் சந்தேகமின்றி யுந்தனைக்கொன்றுபோடுவோ" (39) மெ ன்று சூரனுரைத்திட்ட வசனங்களைக் கேட்டு ஹிரணியன் மனவியாகுல ம் கொண்டவனுகி "ஆ! ஆ! இவனுக்கு வினுசகாலம் நெருங்கிவிட்டப டியால் நமது வசனங்களைக் கேட்கின்றுனில்லை· (40) ஆகையாலிவன் மனநோக்கத்தின்படி கூறுவதே நல" மென்று தீர்மானித்துக்கொண் ட வ் விரணியன் "ஓ! அப்பா! மனதைச் சோதிப்பதற்காக வெந்தனுலு ரைக்கப்பட்ட வசனங்களைத் தேவரீர் மன்னித்தல் வேண்டும். (41) இதோ! யான்சென் றுயுத்தத்துக்காக வந்திருக்கின்ற வச்சிறுவனைச் ச கல சேனைகளோடும் ஜயித்துத் தேவரீர் முன்பாக வருகின்றென். அ வனை வெல்வதில் பிரயாசை யாதென்று கூறுவீர். ஆகையால் ஓ! தந்தாய்! இப்போதே எந்தனைச் சண்டைக்கனுப்பலாவீ" றென்றுரைத் தம் மைந்தன் சூரனை வந்தனித்தனன். ஓ! முனிவர்களே! சூரனுமவ்வ சனங்களை வெகு நேசத்துடன் கேட் டவனையனுப்பலானுன். (43) பி றகு ஜுவலிக்கலுற்ற காந்தியுடைய ஹிரணியனென்ற அவ்வசுரோத்த மன் தனதரண்மனைசென்று சண்டைசெய்வதாகவே மனதினில் தீர்மா னித்துக்கொண்டு தனதாயிரம் தம்பிமார்களுடனும் துரிதமாய்ப் புறப்ப ட்டனன். (44)

பதினுறுவது அத்தியாயம்

முற்றிற்று.

## உயுத்தகாண்டம் கஎ—வது அத்தியாயத்தினர்த்தம்.

மகாசுரனானஹிரண்யனானவன் தும்பைமலர்மாலைகளா லலங்கரித்துக்கொண்டாயிரம்சிங்கங்கள்கட்டப்பெற்றமகாவுன்னதமானதேரிலுட்கார்ந்து பட்டணத்துமாதர்களெல்லாம் கண்டிச்சைகொள்ளப்பெற்றவனாகி ஆயிரம் படைத்தலைவர்களோடுகூடியசதுரங்க சைனியங்களோடும் புறப்படலாகையில் (1-2) எண்ணூறு வாகினிகள் கொண்ட தேர்கள், மிகவும் பெரியதான மலைகள்போன்ற அதே எண்கொண்ட யானைகள், (3) இரண்டிலக்ஷம் குதிரைகள், அதே யெண்கொண்ட அசுரவீரர்கள் முதலிய வெல்லா மவனோடுடனே புறப்பட்டனர்கள். (4) அப்போது கடலின் பேரோசையை யதிகரித்து இரணபேரிகள் கோஷித்தன. மேலுமிவ்விதமாகவே பலபல வாத்தியங்களெல்லா மடர்த்தியாக நிறைந்து முழக்கப்பட்டன. (5) இவ்விதமாக அவ்வசுரனோர் க்ஷணத்துக்குள்வீரபாகுவினண்டைகருவங் தந்நிசியில் தனது பட்டணத்தி னலங்கோலத்தைக் கண்ணுற்று மிகுந்த கோபத்தினால் பற்றியெரிகின்றவன்போலாகி (6) யம்மகாசுரன் தனது சைனியங்களி லாயிரமாயிரம் வாகினிகளாக வெவ்வேறாய் நான்கணிகளாக வகுத்து (7) நான்குதிசைகளிலுமேற்படுத்திவிட்டு மிகுந்த தனது மற்றப் படைகளோடுகூட கோபத்தோடு மிகுந்த சிங்கநாதம் செய்துகொண்டு வீரபாகுவை யெதிர்த்துவந்தான். (8) அவனைப்பார்த்த தன்மேல் வீரபாகுவு 'மிவன்யாவ' னென்று கொஞ்சம் கலக்கமுற்றனர். பிறகப்போது பிரம்மகுமாரரான ஸ்ரீ நாரதமுனிவரா (9) லவனது பராக்கிரமங்க ளறிவிக்கப் பட்டதின்பேரி லப்புத்திமானானவர் தமது சைனியங்களையும் நான்கணிகளாகப்பகுத் தங்கங்கேற்படுத்திவிட்டு மிகப் பயங்கரமாகச் சிங்கநாதம் செய்துகொண்டு மகா பராக்கிரமசாலிகளான தனது மற்ற சைனியங்களோடுகூட(10) அவ்விரணியனுடனுயுத்தம் பண்ணினர். அப்போது பூதர்களுக் கசுரர்களோடு மிகுந்த சண்டையுண்டாயிற்று. (11) அதுபோலவே யசுரப்படைத்தலைவர்களுக்குப் பூதப்படைத்தலைவர்களோடும், வீரபாகுவின்தம்பிமார்களுக் கசுரனுடைய ஆயிரம் தம்பிகளுடனு முயுத்தம் நேரிட்டது. (12) அப்போது உலக்கை, இரும்புலக்கை, சக்கிரம், திருகுதடி, எறிவல்லயம், கத்தி, பெருங்கத்தி, அம்பு, சூலம், வஜ்ஜிரம், வேல், கோடாலி, இவைகளாலும், (13) மரங்கள், கற்கள், மலைகள், குண்டாந்தடிகள், மண்கட்டிகள் இவைகளாலும் கைகள், விரல்கள், கால்கள், முறிந்தவர்களும், முழங்கைகள், மூக்குகள் மூளியானவர்களும், (14) அடித்

துடைகள், மணிக்கட்டுகளறுப்பட்டவர்களும், பற்களுடைபட்டவர்களும், விருஷணம், சிசினம் துண்டிக்கப்பட்டவர்களும், நுனிக்கால்களிழந்தவர்களும், (15) கணுக்கால்கள், துடைகள், இடுப்பு, அடிவயிறு, நெஞ்சு, மார்பு, காதுகள், கண்கள் சேதிக்கபபட்டவர்களுமாகிக் குபீல் குபீலென்றிரத்தம் மிகுதியாகப் பீலிட்டடிப்பதனு லதிகப்பயங்கரமுள்ளவர்களுமா (16) யனேகமசுரப் படைகளிறந்தும் மூர்ச்சையடைந்தும் சாய்ந்தன. தவிரவும் வீரபாகுவும் வந்து மகா கோபத்தோடு குணத்தொனிசெய்வதா லதிக பயங்கரராகி யனேகம் கணைகளைத் தொடுத்துப் பல வசுரர்களை மடித்தனர். (17½) அப்போது மிகுந்த இரத்தப்பிரவாகத்தினு லதிக வேகமுடைய வோர் பெரிய நதியோடலாயிற்று. (18) மேலு மங்கனேகம்தலையற்ற முண்டங்களெழுந்து கூத்தாடியதா லத்தலம் மிகுந்த பயங்கரமுளதாயிற்று. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதிரணியன் மகா வாக்கிரகம் கொண்டவனுகி ஆயிரம், பதினுயிரம், (19) இலக்ஷம், கோடிபாணங்களாற் சில பூதர்களைப் பிளந்தும், சிலர்களை மூர்ச்சையடைவித்தும், சிலர்களைத் துறத்தவுமானுன். (20) அதன்மேல் பூதசேனுதிபர்களில் சிரேஷ்டனுன நீலனென்றவன் மகா கோலாஹல சத்தத்தினுல் திசைவெளிகளை நிரப்பிக்கொண்டு புறப்பட்டுவருகையி (21) லப்போதிரணியன் மிகக் கோபங்கொண்டவனுகி யவன்மீது மிக வொளிபொருந்திய தனது வேலைப் பிரயோகிக்க, அது விழுந்ததனுல் நீலன் க்ஷணநேரம் மூர்ச்சைகொண்டு ப் பிற (22) கெழுந்தோர் ஸாலவிருக்ஷத்தை யெடுத் தசுரன் தேரை யுடைத்தனன். பிறகசுரன் சினத்தோடு வேறு தேர்மீதுட்கார்ந்து (23) கூர்மையுள்ள சரங்களைத் துரிதமாயவன் மார்பினிற் பிரயோகித்தனன். அப்போது நீலன் மகா கோபங்கொண்டு மிகுந்த சிங்கநாதத்தினுல் பயமுறுத்தியவனுகி யோர் பெரிய மலையைப் பிடுங்கியவ்வசுரன்மீதெறிகையி (24½) லம்மலையை யவ்வசுர னப்போதுமூன்றம்புகளாலே பொடிப்பொடியாக்கிவிட்டான். (25) பின்புதேவனெதிர்த்தோடிவந்தவ்வசுரனுடைய மலைபோன்ற தேரைச் செங்குத்தாகத் தூக்கி மகாவேகத்தோடுயரவெறிந்தான். (26) அப்போதசுர னத்தேரிலிருந்தபடி யாகாயம் சென்று பிறகு திரும்பிவிழுந்து விரைவுடன் வேறிரதத்தி லேறப்போவதற்குள் நீலனவனிடஞ் சென் றவன் நெஞ்சினிலோரறைவிட, அப்போதசுரன் சினங்கொண் டவனைக் கையினுற் பிடித்துத் தள்ளிவிட்டான். (28) பின்பு பெருமைபொருந்திய பூதத்தலைவன் பரபரப்போடுநெருங்கிவந் தவனைக்காலினுலோருதைவிட் டுயரவெறிந்து மிகுந்த சிங்கநாதம் செயதான். (29) பிறகவ்வசுரேசுவர னுகாயத்திலிருந்து பூமியில்

விழலானதைக் கண்டவுடன் நீலன் மகா கோலாகல சத்தத்தோடவன் மீது வேகமாகப் பொத்தென்றுவிழுந்தது (30) லவனிரத்தத்தைக் கக்கிக்கொண்டு மூர்ச்சையாகி விழுந்தான். பிறகு மாயாவியான அவ்வசுர வேந்தன் சீக்கிரத்தில் கொஞ்சம் மூர்ச்சைதெளிந்து கேளீர்! பிராம்மணோத்தமர்களே! நீலனோடியுத்தஞ்செய்வதற்காகத் தன்னைப்போன்ற வோர் மாயாவுருவத்தை நினைக்க, அப்போதுடனே அவ்விரணியன்வடிவத்தையேகொண்ட வோர் பொய்யசுரன் வெளிக்கிளம்பி (32) பெருஞ் சத்தமிடுவதாற் பயங்கரனாகியத் தேவனோடியுத்தம் பண்ணினான். அப்போது நீலனு மப்பொய்யசுரனை யோர் பெரிய தண்டத்தினால் மகா கோபத்தோடுச்சிமீதோங்கி யடிக்க, (33½) அவன் மூர்ச்சைகொண்டவன்போல் பூமியில் விழுந்து பிறகோர் க்ஷணத்துக்கெல்லாம் நடுவானம்சென்று சிங்கம்போற் கர்ஜனைசெய்தான். (34½) பிறகு நீலனங்கும் தொடர்ந்து செல்லுகையி லசுரனவனோடு பயங்கரமாக உயுத்தம்பண்ணி (35) பிறகோர் நொடிக்குள் பூமிக்குவந்து கோலாஹல சத்தம்பண்ணினான். நீலனங்கு மவனைத்தொடர்ந்து சினத்தோ டியுத்தந்தொடுக்கையி (36) லப்பொய்யசுரனும் சண்டைசெய்பவன்போ லிருந்து தேவனைச் சமுத்திரத்துக் கிழுத்துப் போயும், பிறகு தீவுக்குத்தீவும், மகா பயங்கரமான வனத்துக்கு வனமும், (37) மலைக்குமலையும், குகைக்குக் குகையும்,உலகத்துக்குலகமுமாக, மகாபலவானனவந்நீலனையிழுத்துக்கொண்டுபோய்த்(38)திரும்பத்திரும்பச்சுற்றுவித்துமனத்துன்பம் கொள்ளச் செய்தான். அப்போது சூரன்மைந்தனான விரணியாசுரன் நன்றாய்க் களைதீர்ந்து (39) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வேறு தேரிலுட்கார்ந்துகொண்டு தானுமம்மாயாசுரனோடு சேர்ந்து தேவனோடியுத்தம் கலக்கையில் மகா பலபராக்கிரமசாலியான வந்நீலன்மீது மகா வாக்கிரகத்தோ டாக்கினேயாத்திரத்தைப் பிரயோகிக்க, (40½) அவனுடனே யிரத்தத்தைத்தாரைதாரையாய்ப்பெருகவிட்டுமூர்ச்சையடைந்தான். (41) அப்போது வீரபாகுவானவரவன் மூர்ச்சைகொண்டதை யறிந்து மகா கோபங்கொண்டவராகி யசுரனுடைய மாயையைத் தெரிந்துகொண் டப்போது விஞ்ஞானாத்திரத்தைப் பிரயோகிக்க, (42) அப்போதசுர னம்மாயாசுரனை யிழந்து தனிமையாக நின்றான். பின்பவ்வசுரனும் மேகம்போற் கர்ஜனைபண்ணி யவ்வீரபாகுமீது துரிதமாக வாயிரம் கணைகளைத் தொடுக்க (43½) அவைகளவ்வீரன்மார்பு மத்தியில் விழுந்து முனைமழுங்கி விழலாயின. (44) அதன்மேல் வீரபாகு மகா

வாக்கிரகம்கொண்டவராகிச் சில கூறம்புகளைத் தொடுத் தவனது கவசம், துவஜம், தனுசு இவைகளையோர் நொடிக்குள் சேதல் சேதலாக்கினர். (45) பிறகசுரன் மற்றோர் வில்லைச் சடிதியாகக் கைப்பற்றுகையில்தானே மகா பலிஷ்டரான அவவீர ருயிரம் பாணங்களா லவனுடைய அவ்வில், அம்புராத்தூணி, பாணங்கள், ஸாரதிஸகிதமான தேர் இவைகளையெல்லாம் சேதித்துப்பூமியில்பரத்திவிட்டு($46\frac{1}{2}$) மறுபடிகோபத்தோடு சிலவம்புகளைத்தொடுத் தவனது விசாலமான மார்பினைப்பிளந்தனர்.(47) அதன்மேல் அவ்வசுரன் வேறு தேர்மீதுட்கார வெத்தனிக்கையில் தேவனத் தேரையும் பல வம்புகளா லுடைத்தெறிந்து (48) பின்னுமங்கங்குள்ள அவன தெல்லாத் தேர்களையும் சின்னுபின்னப்படுத்தியவுட னவ்விரணியன்மட்டில் தனிமையாகமிஞ்சினவனுகி யப்போது மிகுந்த சிந்தைகொண்டதோவென்றுல்:— (46) "ஓ! கோ! நமதெல்லா வாயுதங்களும் சைனியங்களும் தொலைக்கப்படலாயின; இக்கந்தபிரான் சூரன்முதலிய வெல்லா வசுரப்பூண்டுகளையும் சமுகரிக்கவே போகின்றூர், (50) நமது தந்தையாகிய சூரபத்துமனே வனேகம் பிள்ளைகளைப்பெற்றிருக்கையி லவர்களில் யாவனுவதொருவ னவனுக்குப் பிண்டம்போடுவதற்காக (பிதுருகிருத்தியம் செய்தல்) மிஞ்சியிருந்தா (51) லப்போதிவ் வுலகினிற் புகழுள்ளதேயின்றி யில்லாவிடில் மிகுந்த வபகீர்த்திக்கிடமாகும்; ஆகையாலவனுக்குப்பிண்டம் கொடுப்பதற்காக நாமிருந்தே தீரவேண்டு" மென்று மனதினில் நிச்சயித்துக்கொண் டோர் மாயா வுருவம்கொண்டு துரிதமாகச் சமுத்திரம் சென்றங்கு மீனுருவமெடுத்து நிலைத்திருந்தான். (53) மற்றுள்ள மூவகைச் சேனைகளு மவரவர்களால் மடிக்கப்படலானுர்கள். பிறகு பூதர்களும் சேனுதிபர்களுமவனோட்டம்பிடித்ததுகண்டுமிகவும் பூரித்துக் கோலாஹலம் செய்தார்கள்.($54\frac{1}{2}$) அப்போது வீரபாகுவும் மிகுந்த தொனியோடு சங்கத்துவானம் செய்யலானுர். (55) தேவர்களவ் வீரன்மீது மகா பரிமளம் பொருந்திய மலர்களை வாரிச்சொரிந்தார்கள். பிற்பாடு சூரபத்தும னிச் சங்கதியெல்லாம் தூதர்முகமாய்க்கேட்டு (56) கோபத்தினுல்பற்றியெரிவோனுகித் தலைகுனியலாகை யிலவ்விரணியன் தம்பியான வக்கினிமுகாசுரன் வந்தான். (57) மகா பலவானுன அவ்வசுரனேவென்றுல் திக்கஜங்கள், சூரியனுடைய விரதம், மகா வேகமுடைய அவ்வனது குதிரைகள் இவைகளையெல்லாம் பிடித்துவந்து சதுரங்கங்களாகக் கொண்டு விளையாடலானவன். மேலுமவன் கர்ப்பத்தில் வசிக்கும்போதே தாய்க்கு மிகுந்த தாபத்தை யளித்தபடியா லவனை யவனது பிதாமகியான மாயை'யக்கினிமுக'னென் றழைக்கலானுள். (59) தவிரவுமம்

மகா பலவான் வாலிபத்திலே விளையாட்டாகவே ஸ்ரீ விஷ்ணுவின் கருடன், பிரம்மாவி னன்னமிவைகளைக் கயிற்றினாற் கட்டிக்கொண்டுவந்துவிளையாடினான். (60) மேலும் மகா பாதகத்தொழிலைச் செய்யலுற்ற வத்துராத்துமன் 'தன் மூத்தோனாகிய் பானுகோபன் சூரியனைப்பிடித்துக் கட்டலானா' னென்றுகருதிசந்திரனைப்பிடித்து வந்திமிசித்தவன்.(61) அவன் சகல தேவர்களுடைய அத்திரங்களையும் பூர்ணமாய்க் கொண்டவன்; மகா மாயாவி; மகா பலவான். அப்பேர்க்கொத்த வக்கினிமுகாசுரன்வந்து தந்தையை வந்தனித்து வசனம் கூறியதாவது:— (62) "ஓ! அப்பா! ஓ! கோ! கோ! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய சகல தேவர்களையும் வென்ற தேவரீர்கூட யாது தலைகுனியலாகி யாலோசிக்கின்றீர்" என்று மைந்தனால் வினவப்படுகையி லசுரவேந்தன் கூறியதோவென்றால;— "அடா! செல்வனே! தேவசேனைகளுக் கிறையோனான கந்தனதுதூதனாகிய் வீரபாகுவென்றவ னிப்போது (64) தன்கூட்டத்தார்களுடன் வந்துஎமதுசுந்தரமானநகரத்தைக்கொளுத்தி 'வாவா' வென்றழைக்கின்றான். அத்தீதனைத் தணிப்பதற்காக யாமனுப்பிய விராஜமேகங்களெல்லா (65) மவனாற் சண்டைமுகத்தில் கண்டிக்கப்பட்டுத்தோல்வியடைந்தான். உந்தன் சகோதரனானபலிஷ்டனாகிய விரணியன்கூட அவனோடு பொராடித் (66) தோல்வியுண்டு கடல்சேர்ந் தங்குமாறுருவஞ்தோடுவசிக்கின்றான். அவனால் மகா பலசாலிகளான வனேக மசுரர்களெல்லாம் மரணமடைந்துவிட்டார்கள்." (67) என, அக்கினிமுகனவ்வாறு தந்தைவசனங்களைக்கேட்டு உத்தரம்சொல்லுகின்றான்; "ஓ! தந்தாய்! அத்தூதனைச் சயிப்பதிலுமக்கு யாது கவலையென்பதைச் சொல்வீர். (68) யான் தேவரீர் கட்டளையைச் சிரமேற்கொண்டு போ யவனைப் போர்தனில் வென் றும்முன்னர் வருகின்றேன். ஆகையால் ஓ! பிரபுவே! எந்தனுக்கு விடையருள்வீர்." என, (69) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்படியே சூரன்வாக்கினா லனுப்பப்பட்ட வக்கினிமுக னப்போதே நேர்த்தியான தனதாண்மனைசென்று (70) தனக்குப் பாட்டியாகிய மாயையா லருளப்பட்ட வற்புதமான வில்லையெடுத்துக்கொண்டும், ஸகல தெய்வங்களுடைய வஸ்திரங்களையும் தரித்துக்கொண்டும், ஸகல வாயுதங்களையும் மாட்டிக்கொண்டும் பெருமைபொருந்திய அவ்வக்கினிமுகன் (71) ஆயிரம் வாகினி யானைகள், அநேசங்கியைகொண்ட தேர்கள், வாயுவேகமுடைய விரண்டாயிரம் வாகினி குதிரைகள், (72) அனேக வாகினி யசுரர்கள் முதலிய சைனியங்களாலும்,ஸோமகண்டகன், ஸோமன், சூரியசத்துரு, மேகன், பிங்களகன், முதலிய வின்னும் மற்றனேக சேனாதிபர்களாலும் சுற்றிலும் சூழப்பெற்

றவனுகி(73½)அனேகம்ஒட்டைகள், துவஜங்கள், மிகநேர்த்தியானகுடைகள்இவைகளுடனும்,(74) மிகுந்த வாத்தியகோஷங்களுடனும் பெரும்புழுதிகளா லெங்கும் வியாபிக்கப்பெற்றவனுக மறுநாள் சூரியோதய நேரத்தில வீரர்களெல்லாம் மிகுந்த பிரதாபங்களோடு விளங்கியிரா னின்ற போர்க்களத்திற்கு வந்தான். (75)

பதினேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் கஅ—வது அத்தியாயதித்னர்த்தம்.

அப்போ தவ்விருதிறத்தார்களு மொருவரோடொருவர் மகாவாங்காரத்தோடு மிகுந்த மரங்களாலும் மலைகளாலும் மிகக்கொடுமையாக யுத்தம்செய்தார்கள். (1) அதன்மேல்மகாபலசாலிகளும், சாமர்த்தியமுடையவர்களுமான விலக்ஷம்வீரர்களும் மகாவாக்கிரகத்தோடு கிளம்பி யவ்வசுரர்களை யம்புகளால் விறட்டினுர்கள். (2) பிற்பாடு ஸோமகண்டகன், மேகன், ஸோமன்ஆகியபடைத்தலைவர்கள்மிகுந்த கர்ஜனையோடோர் நொடிக்குள் கிளம்பி (3) யம்புகளாலும் மற்றுமுள்ள பெரியஆயுதங்களாலு மவ்விலக்ஷம்வீரர்களோ டெதிர்த்துப் போராடினுர்கள்.பிறகுமகா மகிமைகொண்ட வீரபுரந்தரனென்ற பூதசேனுதிபன் (4) துரிதமாய்க் கிளம்பி சிலகணைகளைத் தொடுத் தவ்வசுரவீரர்களுடைய தேர்களை யுடைத்துச் சிலவம்புகளாலுடனே ஸோமகண்டகனென்பவனையும் கொன்றுவிட்டான். (5) பிறகசுரவீரரெல்லோர்களும் துரிதமாக மறுதேரேறி மிகுந்த சத்தத்தோடு மகா பயங்கரமாயிருக்கும்படி கொடியவுயுத்தம் செய்தார்கள். (6) பிறகம் மகாவீர னதிக கோபாக்கிராந்தனுகி மிகுந்த கூர்மையுள்ள சில கணைகளை யெய்தவர்களது தேர்களையும் விற்களையும் தூள்தூளாக்கி யவர்களுடைய நெற்றி, இருபுயங்கள், மார்பு இவைகளையும் துளைத்து மிகுந்த சிங்கநாதம் செய்தான். (7½) அதன்மே லசுரவீரனுன மேக னதிக வேகத்தோ டோ ருன்னதமான தண்டமதை யெடுத்துக் கறகறவென்று சுழற்றி யவனது சாரதியை யடித்து மடித்தான். (8½) அதுகண்டு மகா பலிஷ்டனுன அவ்வீரபுரந்தரன் கடுஞ்சினம்கொண்டவனுகி (9) வேலாயுதத்தினு லோர் நொடிக்குள் ளவ

னது மார்பினைப் பிளந் தவனைக் கொன்றுவிட்டான். உடனே யவ்வசுர ப்படைத்தலைவரெல்லோர்களு மோட்டம்பிடிக்கலானார்கள். (10) அதன் பிறகு மகா பெருமைபொருந்திய வக்கினிமுகாசுரன் தன் படைகளோ ட்டமெடுப்பதை நோக்கிச் சினங்கொண் டனேக சரங்களைச் சொரிந்து பூதப்படைகளைத் துறத்தினன். (11) அப்போது மகா வீரனான வீரபு ரந்தரன் வந்து மிகுந்த வட்டகாசத் தொனியோடனேக மம்புகளை யவ் வக்கினிமுகன்மீ தெய்த (12) வுடனசுரவீரன் பலகணைகளா லவனதம் புராத்தூணியையு மவனது திடமான வில்லையும் கண்டித்துப் பிறகு தன் வேலினா லவனையு மோர் நொடிக்குள் மூர்ச்சையடைவித்தான்.(13) அ ப்போது மற்றேழு வீரர்களும் வீரபுரந்தரன் மூர்ச்சையடைந்ததைக் க ண்டு மகா வாக்கிரகம் கொண்டவர்களாகி (14) யாயிர மம்புகளை யவ ன் முகத்திலு மப்படியே யவன் கைதனிலு மிரு தோட்களிலு மெய்து பின்னும் சில பாணங்களா லவனது மகா வுன்னதமான தேரையு முடை த்துவிட்டார்கள். (15) பிறகசுரனவர்களை நோக்கி வசனமுரைத்ததாவ து:—"ஓ! வீரர்களே! யாமிப்போதுங்களையும் வென்று பிறகோர் நொ டிக்கெல்லா மவ்வீரபாகுவையும் ஜயித்துவிடுகின்றோ" (16) மென்ற அவனது வசனத்தைக் கேட்டதன்பேரில் மகா பலிஷ்டர்களான அவ் வீரர்கள் மகா கோபாவேசங் கொண்டவர்களாகிச்சில கணைகளாலவனது தேரையும் குதிரைகளையும் துண்டித்து (17) பெரும் கற்பாறைபோ ன்ற கெட்டியான அவனது மார்பையும் பிளந்தார்கள். பின்பவ்வசுரன் கண்களில் நெருப்புப் பறக்கப்பெற்றவனாகி யோர் நொடிநேரத்துக்கு ள் (18) வேறு தேர்மீதுட்கார்ந்து மகிமைபொருந்திய பாசுபதாஸ்திர த்தைச் சடிதியிற் பிரயோகிக்க, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அ வ்வீரர்கள், அக்கினி ஜுவாலைகளைக் கக்கிக்கொண்டு வாலுற்ற அவ்வத் திரத்தை ஆக்கினேயாத்திரமென்றெண்ணி யப்போது மிகவும் மனம் க லங்கியவர்களாகி யெல்லோர்களும் வாருணாத்திரத்தைப் பிரயோகித்தா ர்கள். (20) அம்மகா பாசுபதாஸ்திரமோ வென்றா லவர்கள் விட்ட அ த்திரங்களை விழுங்கிவிட்டு, ஓ! கேர்! கெளீர்! முனிவர்களே! அவ்வீரர்க ளையு மோர் நொடிக்குள் கொன்றுபோட்டன. (21) அப்போதக்கினி முக னவர்களைக்கண் டட்டகாசம் பண்ணினான். பூதர்களெல்லாம் பய ங்கொண்டோட்டம்பிடித்தார்கள். படைத்தலைவர்கள் மிகவும் வியாகு லம் கொண்டார்கள். (22) அப்போ ததுகண்டு வீரபாகுவும் மகா கர் வத்தோடுறக்கக் கர்ஜனைசெய்து சிங்கம் கஜராஜனை யெதிர்க்கவந்தது

போல் சடிதியில் வந்தார். (23) அவ்வாறு வாலான வீரனைப் பார்த்தவ்வசுர னுரைத்ததோவென்றால்:—"ஓ! தூதா! நீ முந்திப் போர்முகத்தில் பல வசுரர்களைக் கொன்றாயல்லவா? (24) ஆகையாலிங்கு வாலான வுந்தனை யாமோர் நொடிக்குள்ளாக முறியடிக்கின்றோம். உந்தனைப் போரினில் வெல்லமாட்டாதவன் பெண்டிரோடு புணர்வதிலு மங்கன மேயாவான்" (25) என்றுரைத்திட்ட அவ்வசுரனை நோக்கி வீரபாகு வெகு கோபத்தோ டுரைத்ததாவது:—"கேளாய்! அசுரா! மகா மாயாவியான ஹிரணியனென்ற மகாசுர னிப்போது சூரியன் முன்னர் நிற்கத் தகுதியற்ற கோட்டான்போல் நம்முன்னர் நிற்பதற்குத் திறமையற்றோனாகி யோட்டம்பிடித்தான். ($26\frac{1}{2}$) மகா பாதகனான பானுகோபனுமோ மாயையைச் செய்துவிட் டோடிப்போனானல்லவோ! (27) ஆகிலுமவ னடுத்தடவை நம்முன்ன ருயுத்தத்தில் நேர்ந்தவுட னவனைத் தீர்த்துவிடுகின்றோம். நீயுமிப்போது சண்டைசெய்கின்றாயா? அல்லதோட்டம்பிடிக்கின்றாயா? (28) நீ யாவனாற் காக்கப்பட்டபோதிலு முந்தனைச் சண்டையில் தொலைத்துவிடுகின்றோ' மென்றுரைத்து வில்லெடுத்து நாணேறிட்டு (29) மகா கோபத்துடன் மிகப் பயங்கரமாகக்குணத்தொனி செய்தனர். அசுரனு மவ்வாறே பயங்கரமாய்க்குணத்தொனி பண்ணினான். (30) அப்போதங்குள்ள வெல்லோர்களு மந்நாணோசைகளைக் கண்டு மிகவும் பயங்கொண்டார்கள். பிறகசுரன்கோபத்தினால் மிகுந்த தீயெரியப்பெற்றவனாகித் (31) தீக்ஷணமுள்ள பதினான்கம்புகளைத் தேவனைக்குறித் தெய்தனன். பிறகு வீரபாகுவு மவைகளை யவ்வளவே பாணங்களா லோர் நொடிக்குள் கண்டித்துவிட்டுப் (32) பிரம்மாண்டம் முழுமையும் சத்தத்தினால் நிரப்புவோர்போல் மிகுந்த வட்டகாசம் பண்ணினார். அப்போ தக்கினிமுகனும் சினங்கொண்டவனாகி மிகுந்த சத்தத்தோடு கொடிய வார்த்தைகளா லதட்டிக்கொண் டவர்மீ திருபதம்புகளைச் சந்தானித்தான். ($33\frac{1}{2}$) பிறகு பூதசேனாதிபரு மவைகளையெல்லா மவ்வளவே சரங்களாற் கண்டித்தனர். (34) அதன்மேலசுரன் பின்னருமாயிரம் கணைகளைத் தொடுத்துவிட்டுச் சங்கத்துவானம் பண்ணினான். அதனால் 'தேவன் மெய்தனிலடியுண்டதி னுதடு துடிக்கப்பெற்றவராகி (35) மகா கோபத்தோ டவ்வளவே சரங்களைப் பிரயோகித்து அவனது தேர், குதிரைகள், வில் இவைகளைச்சேதித்துவிட்டனர். உடனே யசுரன் மிக வுன்னதமான வேறிரதமேறிக்கொண் (36) டோர் பெரிய தண்டத்தை யெடுத்து வீரன் திருமேனியிற் பிரயோகிக்க, அத்தேவாக்ஷகர் மகா கோரமாக வாலுற்ற வத்தண்டத்

றைதயு மத்திரத்தாற் கண்டித்துவிட்டனர். (37) பிறகசுரவீரனுடனே மற்றோரற்புதமான வில்லைக்கொண்டு கோபத்தோடு வாயு, சூரியன், இயமன் ஆகியவித் தேவதாத்திரங்களைப் பிரயோகிக்க, (38) வீரபாகுவு மதே யத்திரங்களை யாக்கிரகத்தோடு விட்டவைகளைக் கண்டித்துப் பிறகு தீக்ஷணமான வோர் சரத்தை யவ்வக்கினிமுகனாகிய மகாசுரன்மீது தொடுக்க, (39) அசுரனதனாலடியுண்டு தனது தேரின் கண்ணே மூர்ச்சையாகிச் சாய்ந்தனன். பிறகவனோர் நொடிக்கெல்லாம் மூர்ச்சைதெளிந்தவனாகித் தன்னாலாராதிக்து வரப்பட்ட காளியம்மனை நினைக்கலானான். (40) உடனே யப்பத்திரகாளியும் வில், சூலம், கண்டனைக்கோடாலி முதலிய சிரேஷ்டமான வாயுதங்களைக் கைப்பற்றியவளாகிச் சிங்கவாகனத்தின்மீ தேறிக்கொண்டும், தனது பரிவாரங்களானஅனேககோடி காளிகளால் சூழப்பட்டும், மிகுந்த வாத்தியமுழக்கங்களால் திசைவெளிகளை நிரப்பிக்கொண்டும் தோன்றலாயினள். (41-42) அப்போக்கொத்த அப்பத்திரகாளியைப் பார்த் தசுரன் பிரார்த்தித்துக் கொண்டதாவது:— "ஓ! தனதடியார்களுச்கு ஜயத்தோடு சுபத்தையும், சத்துருக்களுக்கு மரணத்தையு மருளனுற்ற பத்திரகாளீ! இப்போது மகா கொடியோனாகிய வீரபாகுவைக் கொல்லல் வேண்டு" ($43\frac{1}{2}$) மென்று கேட்டுக்கொண்ட அவ்வசுரனைப் பார்த்துத் தேவியுமப்படியே ஆகட்டுமென்று கூறி (44) யுடனே மகா கோரமுடையவளாகவும் அதிக சத்தம்செய்வதால் மகா பயங்கரமுள்ளவளாகவும் புறப்பட்டு வருகையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவளைப்பார்த்து வீரர்களெல்லாம் பீதியடைந்தார்கள். (45) பிறகப்போது கொடியவளான வக்காளியானவள் சூலத்தை யெடுத்து வீரபாகுமீது பிரயோகிக்க, அதனையவருடனே பதினான்கம்புகளாலே பொடிப்பொடியாக்கினர். (46) பின்பு கொடியவளான வத்தேவேசுவரியானவள் மறுபடியும் கொடிய வார்த்தைகளா லதட்டிக்கொண்டே மகா கோரமும் கூர்மையுமான மற்றோர் சூலத்தைப் பிரயோகிக்க, (47) அதனையுமம் மகா பலவான் மிகுந்த கோபத்தோ டாயிரமம்புகளால் துண்டித்துவிட்டனர். உடனே யவள் மகா கோபம்கொண்டு மிகுந்த பரபரப்போடு வாகனத்தினின் (48) றிறங்கி மகா பயங்கரமான வோர் கத்தியைக் கைக்கொண் டவ் வீரபாகுவைக் கொல்லக்கருதியவளாக மகா வேகத்தோடு வருகையில் (49) வீரபாகு வப்போதவள் கிட்டநெருங்கி வரலானதைக் கண்டு "பெண்களை வதைப்பது மகா பாதக" மென்று மனதினிற் கருதித் (50) தமதோர் கையினாலதட்

வளை நெட்டுப் புயங்களையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு மற்றொருகை
யினா லவள் மார்பின்கண் ணோங்கி யறைந்தவுட (51) னவள் வாயினா
லிரத்தத்தைக் கக்கிக்கொண்டு வலிமை குறைந்தவளாகி யழுதுகொண்
டே பூமியில் விழுந்து பிறகெழுந்து நின்று "ஓ! கோ! கந்தன் தம்பி
யோ டியுத்தம்செய்வதில் நமக்கு வெற்றிகிடைக்கா" தென்று மனமதி
ற் கருதியவளாகி மகா பலவானாகிய வவ்வீரபாகுவை நோக்கி (53) "ஓ!
மகாபலவானானவீரனே! இவ்வசுரனுக்கு எந்தன்மீதுள்ளபக்திவசத்தினா
ல்யா னுமதுவலிமையையறியாம லிங்குவந்துவிட்டேன். நீரோ இவ்வக்கி
னிமுகனையும்மற்றுமுள்ளபானுகோபன்முதலியவெல்லாவசுரர்களையும்ச
முகரித்துப் பரிபூர்ணமான கந்தனருளைக் கொள்ளலாவீர்" (54½) என்
றிவ்வாறு வார்த்தைகளை யுரைத்தவளைத் தோத்திரம்பண்ணி கேளீர்!
பிராம்மணோத்தமர்களே! பிறகவரது கட்டளையின்படி சிங்கமேறி வி
ரைவோடு தனதிருப்பிடம் சென்றனள். பிற்பாடு மகாசுரனாகிய வக்கி
னிமுகன் பத்திரகாளி சென்றுவிட்டதை யறிந்து (56) "ஓ! யாமிவ
ளால்தானா வியுத்தத்தில் நேர்ந்த சத்துருக்களையெல்லா மிதுவரைக்கும்
வென்றுவந்தோம். யாமவளது பராக்கிரமத்தைச் சோதிப்பதற்கல்ல
வோ அவளை நினைக்கலாயினம். (57) நமக்கிம் மூவுலகினிலு முயுத்தம்
நடத்துவதற்காக வேறு சகாயம் வேண்டுவதில்லை. நாமே யிப்போ
தோர் நொடிக்குள் சகலசத்துருக்களையும் கொன்றுவிடுகின்றோம். (58)
இல்லையாகில் யாம் சத்தியமாகவே தந்தையாகிய சூரனிடம் திரும்புவ
தில்லை" யென்றிவ்விதமாகச் சபதம் செய்துகொண்டு மகா பலவானாகி
ய அவ்வசுரச்சிரேஷ்டன் விரைவோடு கிளம்பி மிகுந்த சிங்கநாதத்தால் தி
சைமுகங்களை நிரப்பியவனாகி (59½) மகா கோபத்தோடு வீரபாகுமீது
நூறு சரங்களைச் சொரிந்தான். (60) பிறகு வீரனு மவைகளை நூறம்
புகளாலே கண்டித்துப்பின்னு மவ்வசுரன்மீது கோபத்தோடு மகா வே
கமுடைய பல சரங்களை வருஷித்தார். (61) பின்பு பராக்கிரமமுடை
யோனான அவ்வசுரவேந்த னவைகளை நூறுபாணங்களால் துண்டித்து
உடனே மகாப் பிரளயகாலமேகம் கர்ஜிப்பதுபோல் சங்கத்துவானம்
செய்தான். (62) பிற்பாடு வீரன் மகா பரபரப்புக்கொண்டு பதினான்க
ம்புகளாலவனது மகா வுன்னதமான வில்லை முறித்தெறிந்து கோலாஹ
ல சத்தம் பண்ணினார். (63) அதுகேட் டக்கினிமுகன் மகா கோபம்
கொண்டவனாகிச் சகல சத்துருக்களையும் சமுகாரஞ் செய்யவுற்ற பிரம்
மாத்திரத்தைச் சந்தானம் பண்ணினான். (64) அவ்வத்திரமனேகப் பி
ரம்மரூவங்களோடு வேகமாய் வெளிக்கிளம்புகையி லப்போதே வீர

பாகுவும் வீரபத்திராஸ்திரத்தைப் பிரயோகிக்க, (65) கேளீர்! பிரம்மஞேத்தமர்களே! மகா கோரமும் மகா பயங்கரமுமான அவ்வத்திரமப் பிரம்மாத்திரத்தைத் துரிதமதி லொரேவாயாக விழுங்கிவிட்டுப் பிறகு மகா வேகத்தோ டவனது மகா பெரியதான தலையையும் துண்டித்துப் பூமியில் விழச்செய் தவனைக் கொன்றுவிட்டது. (66)

பதினெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௧௯—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பாடங்குள்ள சிரேஷ்டர்களான இருபத்திநான்காயிர மசுரப்படைத்தலைவர்களு மவன் செத்ததை யறிந்து தங்களது சிறந்த சேனைகளோடுகூட (1) வொன்றுசேர்ந் தெல்லோர்களுமாக ஊழிகால மேகம்போல் மிக முழக்கங்கொண்டவர்களாகி மிகக் கூர்மையுள்ள பல சரங்களைச் சொரிந்தார்கள். (2) பின்பவ்வீரபாகுவு மவ்வசுரர்கள்மீது நூறுகோடி பாணங்களைவருஷித்துப் பலசாலிகளான சிலரைத் துறத்தியடித்தும், (3) மற்ற சிலர்க ளாயுதங்களைச் சேதித்தும், காப்பாத்தும்படி காலில் விழுந்த சிலரை மன்னித்துவிட்டும், கேளீர்! பிராம்மஞேத்தமர்களே! அப்பலவானவர் மற்றவர்களைக் கொன்றும் விட்டனர். (4) அப்போது சில வசுரர்கள் தங்கள்மீது சில வசுரப்பிணங்களை வாரிச் சுமத்திக்கொண்டு கிடக்கையி லவர்க ளதிக பாரத்தைச் சுமந்ததினால் விதிவசத்தின்படிமாண்டார்கள். (5) மற்றவர்களும்பிரமத்தினு லெங்கும்வீரபாகுவேநிற்பதுபோல்திகிலடைந்துமிகவும்மூர்ச்சை யடைந்தார்கள். சிலவசுரர்க ளங்குண்டான விரத்தநதியில் விழலாகிச் (6) சமுத்திரம் சேர்ந்ததில்பலர்கள் மாண்டார்கள். ஓ! கோ! இது மிகவும் கஷ்டம்; மேலுமங்கு பல தலையற்ற வுடல்களெழுந்து கூத்தாடின. (7) மாமிசவாசையா லங்கனேகம் காக்கை கழுகுகள் முதலிய பல பறவைகள் வட்டமிட்டன. அப்போதங்ககாத்தினிலங்கங்குகிலி கிலி யென்ற கூச்சல்களும், (8) நான்கு பக்கங்களிலும் ஜனங்களி னழுகைக் குறல்களு முண்டாயின.

அப்போ தெல்லாத் தேவர்களு மோராளமான மலர்களை வாரிச் சொரிந்து (9) தங்கள் தங்களதுடைகளைச் சுருட்டி யெறிந்தெறிந்து பிடித்து மனமகிழ்ச்சிகொண்டவர்களாகி மிகுந்த கூச்சலோடு கூத்தாடினுர்கள். (10) மேலும் ஸகல பூதர்களு மவர்களின் தலைவர்களும் மூர்ச்சைதெளிந் தெழுந்தார்கள். இப்படி யிருக்கையி லப்போது மகா வீரனுன உக்கிரனென்ற புத்திசாலியாகிய தேவச்சிரேஷ்டன் வீரபாகுவை நோக்கியுரைத்ததாவது:—"ஓ! சுவாமி! இங்கிருந்து நூறுயோஜனை தூரத்தி லோர் பெரியதான வாலமரமிருக்கின்றது. (12) அங் கம் மரத்தடியி லுமது தம்பிகளெல்லா முயிரிழந்து கிடக்கின்றுர்கள். இயமனு மவர்களதுயிரைக் கொண்டுத் தனது பட்டணம் சேர்ந்துவிட்டா" (13) னென, வீரபாகுவு மவனது வசனம் கேட்டு மகா துக்கிதராகி தடுமாற லுற்றநடையோடங்குதுரிதமாய்ச்சென்றுகட்டைபோற்கிடக்கலான தமது தம்பிமார்களைக் கண்டவுட னவர்கள்மீது விழுந்து மூர்ச்சைகொண்டனர். (14½) பிறகோர் க்ஷணத்துக்குள் மூர்ச்சை தெளிந்தெழுந்து பலவாறு புலம்பி (15) "ஓ! கோ! ஸ்ரீ பரமேசுவரனுடைய வத்திரத்தாலடியுண்டவரிடத்தியமனுக்கென்ன அதிகாரம்வந்தது? நல்லது! இவர்கள் ஸ்ரீ சுப்பிரம்மணியரது தம்பிகளென்பதையம்மூடனறியானு? (16) மேலும் மார்க்கண்டேயர்விஷயத்தைப் பற்றி முந்தியவன் தண்டனை யடைந்ததையும், ஓர் நொடி நேரம்மட்டில் 'ஹர' வென்றேதியோர் மலரைச் சிவார்ப்பணம் செய்த வொருவர் (17) விஷயமா யவன் முந்தி யிடது காலாலுதைபட்டதையும், மேலுமவ்விதமாகவே 'துச்சகன், துர்மதி யிவர்கள் விஷயத்தைப்பற்றியும், (18) சுவேதகேதுவென்றவனைப்பற்றியும் முந்தியவனடிபட்டதையு மெல்லாம் அஜாக்கிரதையுள்ள அவ்வியமன்மறந்துவிட்டானே?" வென்றுரைத்து (19) "அடா! இயமா! திருநீறு உருத்திராக்ஷங்களைத் தரிப்பவர்களின் மார்க்கத்திற்கூட செல்லாத உந்தனுக் கிப்பேர்க்கொத்த மதம் யாது நேரிட்ட"தென்றவரோ ரம்பினி (20) லெழுதி யதனை மகா கோபத்தோடியமலோகத்திற்கனுப்ப, உடனே யவ்வத்திரமும் சீக்கிரமாக இயமலோகம் சென்று எல்லாத்திசைகளையுமொளிப்பித்துக்கொண் டதிவேகமாயவனருகினில்விழலானவுடன்இயமனதனையெடுத்து 'இதென்ன' வென் றுச்சரியம் கொண்டவனுகி (22) யதனைத் துரிதமாய்ப் படித்தறிந்து பெரும் பயமடைந்தனன். பிறகவ்வியம

ன் ஞானதிருஷ்டியா லூகித்ததி லவர்கள் மலைகளிற் சிறந்த ஸ்ரீகைலகிரி தனில் ஸ்ரீ மகேசுவரன்போ லாநந்தமடைந்து கொண்டிருப்பதாக வறிந் (23½) துடனே பயங்கரமான பெரிய வெருமைக்கடாவின்மீ தேறிக் கொண்டும் பல பல வுருவங்களைக் கொண்டவர்களும் மகா பயங்கரர்களு மான தனது ஸகல சேனைகளுடனும் சென் (24½) றங் கம் மகா வீரர் களைக் கண்டதிலவர்கள் உத்தியானவனத்தில் வசித்துக்கொண்டு (25) அசுரர்களால் கொல்லப்பட்ட பல பூதர்களாற் சூழப்பெற்றவர்களாகவு ம், திவியவுருவம் கொண்டவர்களாகவும், வித்தியாதரர்கள் ஸங்கிதம் பா டவும், அப்ஸரஸ்திரீகள் நாட்டியமாடவும் முதலான பல சம்பிரவங்களா ற் சிறப்புற்றவர்களாகவும், (26) மிகுந்த பிரம்மாநந்தம் கொண்டவர் களாகவும், அனேக மாபரணங்களா லலங்கரிக்கப் பெற்றவர்களாகவும் வி ளங்கியிருப்பதைக் கண்ணுற் றவர்களை வந்தனித் தஞ்சலிகொண்டு அவ் வியமன் கூறியதாவது:— (27) "ஓ! வீரர்களே! யானுங்களைக்கொ ண்டுபோய் விட்டதாக நினைத்து வீரபாகுவானவர் மகா கோபம்கொண் டிருக்கின்றார். (28) ஆகையால் மகா பராக்கிரமசாலிகளான நீங்களெல் லோர்களு மென்மீது தயவுசெய்து அங்கு மறுபடி வரவேண்டு" மென் றவர்களை வேண்டிக்கொண்டு அவ்வியம (29)னத் தேவச்சிரேஷ்டர்களை வீரபாகு முன்னிலைக் கனுப்ப, அப்போது மகா பராக்கிரமசாலிகளான அவ்வீரர்கள் தூங்கியெழுந்ததுபோ லெழுந்தார்கள். (30) உடனே வீரபாகு அவர்களைக்கண் டணைத்து அடிக்கடி உச்சி முகர்ந்துமி குந்த சந்தோஷமடைந்தனர். (31) அப்போது தருமராஜனும் மிகு ந்த தொரைகொண் டங்கு வரலாகி யம்மகா வீரனை வந்தனித்து மிகுந்த வணக்கத்தோடு வசனமுரைத்ததாவது:— (32) "ஓ! சுவாமீ! திருநீ று, உருத்திராக்ஷங்களைத் தரிப்பவர்களின் வழியின் கூப்பிடுதொலையிற் கூட யான் மிகுந்த பயத்தோடு செல்லுகின்றேன்? (33) ஓ! தேவே சா! தேவரீருடைய தம்பிமார்களான இவ்வீரர்கள் ஸ்ரீ கைலகிரியில் ம கா வானந்தத்தோடு வீற்றிருந்தார்கள். யான் மிகப் பயங்கொண்டவ னுகி யவர்களைத் தேவரீர் முன்பாக அழைத்துவந்தேன். (34) ஓ! க ருணைக்கடலே! எந்தன்மீது தயவுவைத்துக் கோபத்தைத் தணித்திடல் வேண்டும்" என, இவ்வாறுரைத்த அவ்வியமனை நோக்கி வீரபாகு வப் போதுரைத்ததாவது:— (35) "ஓ! தருமராஜனே! நீ ஸ்ரீ சிவபிரானி டத்தும் சிவனடியாரிடத்தும் மிகவும் நேசமுள்ளவன்; அப்பேர்க்கொ த்த நீ யிவ்வண்ணம் செய்திருப்பாயா? ஆகையால் நம்மிடம்கொண்ட பயத்தை விட்டுவிடு. (36) யாமிவர்கள் மரணமடைந்ததை யறிந்தவு

டன் மிகவும் துக்கப்பட்டுக்கொண்டிருக்கையி லுண்மையில் புத்திமாறு தலாலே நீ செய்திருப்பாயென்று பிரமித்தோம். (37) ஆகையால் நீஸ்ரீ சிவாக்ஞையின்படி யிப்போது சீக்கிரமாய் முன்போலுனது பட்டணம் சென்றுவிடு" என, இவ்விதமாக வீரபாகு கட்டளையிட்டதின்பேரி வி யம னுடனே (38) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தனது சைனிய ங்களோடு ஓர் நொடியில் தனது பட்டணம் சேர்ந்தான். அப்போது தேவர்கள் தேவேசரான வீரபாகுமீது மலர்களைச் சொரிந்தார்கள். (39) பூதர்கள் படைத்தலைவர்களோடு கூட அட்டகாசம் செய்தார்கள். ஓ! பிராம்மணோத்தமர்களே! வீரபாகு இவ்விதமாக மற்ற வீரர்களால் பு டைசூழப்பெற் றிருக்கையில் (40) தூதர்களச் சங்கதிகளையெல்லாம் சூரனிடம் சொல்ல, அவன் தூதர்முகமா யறிந்தவுடன் தனது மைந்தனு ன வக்கினிமுக னிறந்ததைப்பற்றி மிகவும் கதறியழுதனன். ($41\frac{1}{2}$) அப்போதவன் பெண்டீர்களும் 'ஹாஹா' வென்று மிகவும் கதறினார்க ள். (42) அப்பட்டணத்தில் வசித்த அசுரரெல்லோர்களும் துக்கம டைந்தார்கள். அப்போதச் சூரன்மக்களான மூவாயிரம் பெயர்கள் வ ந்து (43) அவ்வெல்லோர்களும் மிகவும் துக்கப்பட்டவர்களாகிச் சூ ரனை நோக்கி வசனமுரைத்ததாவது:— "ஓ! சுவாமீ! மகா பலசாலிக ளாகிய விலக்ஷத்தெட்டு வீரர்களும் பூதர்களுமான (44) விப்போர்க் கொத்த மிகுந்த பலிஷ்டர்களோ டியுத்தம்செய்வதற்காக அவனொருவ னைமட்டி லெவ்வாறனுப்பலானீர்? மேலுமவ னிறந்துபோனதைப்பற் றி யேன் வீணில் துயரமடைகின்றீர்? ஓ! கோ! மிகவும் கஷ்டம்; (45) தவிரவும் மகா பலசாலிகளான நாங்களெல்லோர்களும், மகா பல பராக் கிரமசாலிகளான ஹிரணியனும் பானுகோபனு முயிரோடிருக்கையில் (46) சேனைகள் மடிந்துவிட்டனவென்று தேவரீ ரேனாலோசிக்கவே ண்டும்; ஒருக்கால் கடல்வற்றினாலும் வற்றும்; எங்களது பராக்கிரமமோ என்றும் குறைவு பெறா! (47) மேலும் யாங்கள் மகா மேருவைக்கூ ட விருப்பிடம் விட்டுப் புறட்டிவிடுவோம்; அப்படி யிருக்கையில் கிரி ராஜனான விமயகிரி முதலியதைப்பற்றி யாதுரைத்தல்வேண்டும்? வட வாக்கினியையு மணைத்துவிடுவோம்; ஆகையாலெங்களை யிஷ்டப்படி ய னுப்பிவிடுவீராகில் (48) யாங்களப்பூதர்களையும், வீரர்களையும், இளை ஞனான வச்சுப்பிரம்மணியனையும் கூட வெற்றிபெற்றுத் தேவரீர் முன் னர் திரும்பி வருகின்றோ" மென, இவ்வாறுரைக்கப்பட்ட வச் சூரபத்து மனு மப்புதல்வர்களைப் போர் புரிவதற் கனுப்பலானான். (49) பிறகு மகா பராக்கிரமசாலிகளான அவ்வெல்லோர்களும் தந்தையுத்திரவைப்

பெற்றவர்களாகிச் சன்னத்தப்பட்டும், சேர்த்தியான தும்பைமலர்மாலைகளையணிந்துகொண்டும், மிகவுன்னத மான தேர்கள்மீ தேறிக்கொண்டு (50) மகா சூரர்களான வனேக சதுரங்கபலங்களுடனும், கடலோசையை யதிகரித்த வாத்திய கோஷங்களுடனும், குடைகள் துவஜங்களுடனும், (51) யௌவனப் பருவமுடைய வச்சூரன் மைந்தர்கள் திடமான விற்களை யெடுத்துப் புறப்படலானகையி லப்போது கேளீர்! பூமிதேவர்களே! பூமியானது "ஓ! இவர்களுக்குச் சீக்கிரம் மரணம் நேரிடுவதால் நமக்கு நிச்சயமாகப் பாரம் குறையலாகு" மென்று நர்த்தனம செய்ததுபோல் பூகம்பமுண்டாயிற்று. (52½) மேலு மவர்களுக்கு மேலாகக் கழுகுகளும் காக்கைகளும் பயங்கரமாக வட்டமிட்டன. (53) கொள்ளிக்கட்டைக ளப்போது பூமியிலெங்கும் மகா பயங்கரமாக விழலுற்றன. கோர வுருவம்கொண்ட பருந்துகள் குடைகளின்பேரிலுட்கார்ந்தன. (54) சாவு சம்பவிக்கப்போவதை நன்கறிவிக்கலுற்ற விப்போர்க்கொத்த வபசகுனங்கள் நேரிடலானதை யவர்கள் கொஞ்சமேனும் பாராட்டாம லுயுத்தரங்கமடைந்தனர்கள். (55) உடனே யவ்விருதிறத்தார்களுக்கும், மரங்கள், மலைகள், கற்பாறைகள் இவைகளை யொருவர்மீதொருவர் வருஷித்துக்கொண்டு மிகுந்த வமக்களமான வுயுத்தமுண்டாயிற்று. (56) இச்சண்டையினி லசுரர்கள் மகா வீரர்களான பூதசைனியங்களால் முறியடிக்கப்பட்டு நிற்கத் திராணியற்றவராகி யிங்கு மங்குமாக நான்கு பக்கங்களிலு மோட்டம்பிடித்தார்கள். (57) அவர்களைப் பார்த்துச் சூரபத்துமனது செல்வகுமாரர்களெல்லாம் மிகுந்த திடம்கொண்ட விற்களில் ஞாண்களை யேறிட் (58) டவைகளை மிகுந்த சத்தத்தினுற் பயங்கரமாகுப்படி டங்காரம்பண்ணி மிகுந்தகொரேமும், கெட்டியும், தீக்ஷணமுமான வனேக பாணங்களை வருஷிக்க, (59) அப்போ தப்பூதர்களும் நான்கு பக்கங்களிலு மோட்டம்பிடிக்கத தலைப்பட்டார்கள். பிறகுடனே மகா பலிஷ்டர்களான வச்சேனைத்தலைவர்கள் (60) பயங்கரர்களாக மிகுந்த சிங்கநாதஞ் செய்துகொண்டு துரிதமாய்ப்புறப்பட் டோர் நொடிக்குள் மரங்களாலும், மலைகளாலும், தண்டங்களாலும் குதிரைகளையும் தேர்களையும் நொறுக்கி (61) ஸாரதிகளையும டித்து மற்றத் தேர்களைக கால்களா லுயர வாரிவிட்டு இருப்புலக்கைகளா லவர்களது விஸ்தாரமான மார்புகளின்மீ தடித்து(62) மவ்வாறே கண்டைக் கோடரிகளாற் சிலர் தலைகளைக் கண்டித்தும், கோபத்தோடு

பெரிய மலைகளை வாரி யெறிந்தெறிந்து (63) மற்றவர்களின் விற்களைத் துண்டித்து மிவ்விதமாக மிகுந்த வுயுத்தம் செய்தார்கள். இதே விதமாக வசுரப்படைகளு மம்மகா வீரர்களோ டியுத்தம் செய்தார்கள். (64) பிறகு சூரன் பிள்ளைக ளெல்லோர்களு மவ்வுயுத்தத்தைப் பார்த்து மிகக் கோபங்கொண்டவர்களாகி மிகவும் ஜுவலிக்கலுற்றவைகளும், மகா மகிமைகொண்டவைகளுமான வாக்கினேயாத்திரங்களைப் பிரயோகிக்க, (65) அவைகளா லச்சேனுபதிக ளடிபட்டுச் சற்று நோகலானார்கள். அதன்மேல் தேவேசர்களான விலக்ஷம் வீரர்களில் விஜயன், ஜயப்பிரதன், (66) மதி, கோரன், அசலன், காவீரவிருஷன், அநந்தவாமனன், அநந்த வாருணன், மஹானுன அந்தகன், (67) அகளங்கன், நிர்க்குணகன், மாருதன், சசிகண்டகன், சதவலி இவர்கள் முதலான வாயிரம்பெயர்கள் கிளம்பலாகி (68) யவரெல்லோர்களும் சடிதியிலொன்றுகூடி யத் துராத்துமர்களைக் கொல்ல வாலோசித்துக்கொண்டு வீரபாகுவிடம் விண்ணப்பம் செய்துகொள்ள, (69) அப்படியே அவரதாக்கினையைக் கொண்டம் மகா வீரர்க ளோர் நொடிக்குள் வந்து மிகுந்த கோபத்தோடு பயங்கரர்களாகி யச்சத்துருக்கள்மீது கூர்மையான பல கணைகளைத் தொடுத்தனர்கள். (70) பிற கொருவருக்கொருவர் மிகுந்த வுயுத்தமுண்டாயிற்று. அப்போ தசுரர்க ளவ்வாயிரம் பெயர்களுடைய தேர்களையு முடைத்துவிட்டார்கள். (71) உடனே யவ்வாயிரம் வீரர்களு மவ் வசுரர்களது தேர்களையும் விற்களையும் நொறுக்கிவிட்டுப் பின்னு முறைபோட்டு மூடிவைத் திருந்த மலைகளையொத்த வெல்லாத் தேர்களையும் செதல் செதல்களாக வுடைத்தெறிந்தார்கள். (72) பிறகசுரர்கள் பூமியில் நின்றுகொண்டுமகாஅட்டகாசத் தொனியோடு மரங்களையும் மலைகளையும் பிடுங்கி யத்தேவ வீரர்கள்மீதெறிந்தார்கள்.(73) அதன்மே லவ் வாயிரம் வீரர்களுமோ அவைகளைக் கூர்மையான பாணங்களாற் சேதித்தும் பின்னு மவ்வசுரர்கள்மீது மகா கோரங்களான வாக்கினேயாத்திரங்களைப் பிரயோகித்தார்கள். (74) அவைகளாற் சில வசுரர்கள் மெய் பிளக்கப்பட் டிரத்தத்தைத்தாரைதாரையாகப் பெருகவிட்டுக்கொண்டு மூர்ச்சையடைந்தார்கள். ஆனல் மற்றவர்க ளெதிரிகளோடு நின் றுயுத்தம்பண்ணி (75) சில வீரர்களுடைய தேர்களை வாரிக் கடலிலெறிந்தார்கள். உடனே ஓ! கோ! உயுத்தமதிற் கர்வம்கொண்ட மகா பலிஷ்டர்களான அவ்வீரர்கள் துரிதமாகப் பொத்தென்று பூமியிற் குதித்து (76) வேறிரதங்களேறி மறுபடியு மனேக பாணங்களை வருஷித்தார்கள். பின்பசுரர்க ளச்சரங்களால் மிகவும் நொந்து மகா

கோபம்கொண்டவர்களாகி மறுபடியும் சன்னத்தர்களாகி ஜடிதியி லவர்களது விற்களை முறித்துவிட்டார்கள். (77)

பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் உ௦—வது அத்தியாயத்தினர்த்தம்.

திரும்பவு மவர்களுக் கொருவரோடொருவர் மிதமற்ற வுயுத்தமுண்டாயிற்று. அப்போது தேவர்க ளசுரர்களால் மிகவு மடிக்கப்பட்டவர்களாகித் துயரமடைந்தார்கள். (1) பிறகு ஸ்ரீ மகேசுவரனிடமிருந் தோர் வில்லையும், பாணங்களால் நிறைந்தவோ ரம்புறாத்தூணியையும் வரம்பெற்றவனான அவர்களி லோர் மகா பலசாலியாகிய வீரனான விலக்ஷ்மீவிலாசம் பொருந்திய விஜயனென்றவன் (2) மகா கோபத்தோடவ் வசுரர்கள்மீ தம்புகளைத் தொடுத்தான். அவ்வா றவனு லெய்யப்பட்ட வம்புகள் சடிதியி லவர்களது தலைகளைக்கொத்திக்கொண் (3) டத் தலைகளுடனே கடல்மீது நான்கு வாக்குகளிலு மிங்குமங்குமாய்ப் பறவி விழுந்தன. உடனே யோர் நொடிக்கெல்லா மவ்வசுரர்கள் பின்னும் தலைகள் முளைக்கப்பெற்றவர்களாகி யப்போது (4) மிகுந்த கர்வத்தோடு கூச்சலிட்டுக்கொண்டு தங்கள தாயுதங்களா லத் தேவனோடுயுத்தம் செய்தார்கள். பிறகவ்வீரன் கடுஞ்சினங்கொண்டவனாகி மிகுந்த சிங்கநாதத்தா லவர்களை யதட்டிக்கொண்டு பயங்கரமான கணைகளா லவர்களது கை, கால் தலைமுதலிய வுருப்புகளைத் திரும்பவும் கண்டித்தெறிந்தான். (5½) பிறகதேவிதமா யவ்வெல்லா வுருப்புகளும் மறுபடிமுளைக்கலாகிப் பாதகர்களான அவ்வசுரர்கள் (6) சத்துருக்களால் ஜயிக்கமாளாத அவ்விஜயன்மீது கொடுமையான சரங்களைப் பிரயோகித்தார்கள். இவ்வாறு பலவிதமாகத்துண்டிக்கப்பட்டதலைகளெல்லாம் மறுபடி முளைக்கக் கொண்டவர்களான அவ்வசுரர்களைப் (7) பார்த்து விஜயனவ னந்தகாரணத்தினு லப்போது மனதினி லாலோசித்துககொண்டு "ஓ! மகா புயங்களைக் கொண்டவரும், ஸகல வசுரர்களையும் தொம்சம் செய்யலுற்றவருமான ஸ்ரீ குஹபிரானே! ஓ! சுவாமீ! (8) யான் கை, கால்,தலைமுதலியவுருப்புகளைக்கண்டிக்கக்கண்டிக்கவிம் மாயாவிகளானஅ

சுரர்களவைகளைமறுபடிமூளைக்கக்கொண்டவர்களாகித்திரும்பவுமவ் வெல்லோர்களு மேககாலத்தி லொரோமுட்டாயேகோபித்துக் கொஞ்சமேனும் மனம்சலியாம லெந்தனுடன் சண்டையிடுகின்றார்களே! இதற்கு யானென்னசெய்வே" (9½) னென்றுமனத்துயரப் பட்டுக்கொண்டுஹிருதயத்தில் ஸ்ரீ வடிவேலனைத் துதிக்கையில் (10) பார்வதீமைந்தனை அப்பகவானுடனே யவன்முன் ஸான்னித்தியராகி "ஓ! விஜயா! இதோ உந்தனுக்கிப்போதே யெமதாக்கினையின்படி வெற்றியுண்டாகும். (11) கொடிய நடக்கையையுடைய விப்பாதகர்கள் பிரம்மனிடமிருந்து வரன் பெற்றவர்கள். யாதாமொரு பலவா னொரோ பாணத்தினு லிவ்வெல்லோர்களுடைய தலைகளையு மொரோகாலத்தில் சடிதியாகக் கண்டிக்கின்றானோ! அப்போதுதா னவர்களுக்குச் சாவுண்டாகும். (12½) இவர்களில் யாவனொருவனுயினும் விடுபட்டா லப்போ தவர்களுக்குச் சாவு தெரிடாது. (13) ஆகையால் கேளாய்! வீரா! நீ யொரோ யம்பினுற் சடிதியிலவ் வெல்லோர்களுடைய தலைகளையும் கண்டித் திவர்களைக் கொல்லாவாய்; ஓ! எமதாக்கினை மிகவும் வலியதல்லவோ!" (14) என்று திருவாக்கருளி, யாதொன்றினுல் பிரம்மனுடைய தலை கண்டிக்கப்பட்டதோஅப்பேர்க்கொத்ததும் சத்துருக்கூட்டங்களுக்குமகா பயங்கரமுமானபைரவாத்திரத்தையவனுக்கீந்தருளிவிட்டு (15)பார்வதியின்செல்வனை வப்பகவானுடனே மறைந்தருளினர். பிறகு, ஸ்ரீ கந்தனிடமிருந்தத்திரம்பெற்ற அவ்விஜயன் மிகுந்த வட்டகாஸம் பண்ணிக்கொண்டு (16) ஸகல சத்துருக்களையும் சமுகரிக்கலுற்ற மகா பயங்கரமான அவ்வத்திரத்தைப் பிரயோகஞ்செய்தான். உடனே யவ்வத்திரமானது அனேக பைரவமூர்த்தி யுருவங்களாகிப் பல கிளைகளாக வேறுபட்டு (17) ஸகல சத்துருக்களையும் நடுநடுங்கச் செய்துகொண்டு துரிதமாய்ப் புறப்படுகையி லதுகண்டு மகா கைக்காரனை வசுரச்சிரேஷ்டனுகிய மத்தனென்பவன் (18) அதைத் தடுப்பதற்காக மகா கோபத்தோடு துரிதமதில் மாயாத்திரத்தைப் பிரயோகிக்க, அதனை யவ்வத்திரம் கொஞ்சமேனும் சட்டைபண்ணுமல் கண்டித்துவிட்டு மகா வேகத்தோ டொரோ தடவையி லவ்வெல்லோர்களுடைய தலைகளையும் கண்டித் தவ் வசுரர்களைக் கொன்றுபோட்டது. (19½) ஓ! பிராம்மணோத்தமர்களே! அம் மூவாயிர மசுரர்களும் மடிந்தவுட (20) னவ்விஜயன் மிகுந்த மனமகிழ்ச்சிகொண்டவனுகி ஸ்ரீ முருகேசன் அாஞ்ஞையை ஜபித்தான். சகல பூதர்களும் பயங்கரமாகப் பெருங்கூச்சலிட்டார்கள். (21) அப்போது தேவர்கள் மிகுதியாக மலர்மாரி சொரிந்தார்கள். அவையெல்லாம் கண்டு தூதர்கள் சூரனிடமோடிச் சொன்னார்கள். (22) அதுகேட்டுச் சூரன்

துக்கக்கடலி லாழ்ந்தினான். அப்போது மந்திரிகளிற் சிரேஷ்டனான பெருமைபொருந்திய தருமகோபனென்பவ னச்சூரபத்துமனை நோக்கி (23) "ஓ! சுவாமீ! தன்பிள்ளை, தந்தை, ஸகோதரன்முதலிய பந்துவர்க்கங்க ளிறந்தபோதினும் மகா வீரிய பராக்கிரமங்களுடையவர்க ளிவ்வாறு துயரப்படுதல் தகாதல்லவோ! (24) அதிலும் ஓ! எக்காலத்து மெல்லாவற்றையும் கொடை கொடுக்கலுற்ற பிரபுவே! தேவரீரோ அசுரச்சிரேஷ்டனும், மகா புத்திசாலியும், ஸகலர்களுக்கும் வேந்தனும், மகா மகிமைகொண்டவருமானவர்! ஆகையா லிவ்வாறு துயரப்படுதல் தேவரீருக்குத் தகுதியல்ல. (25) ஸகலர்களுடைய உயிர்களையு மபகரிக்கின்ற வியமன் நமது கைவசத்திலிருக்கின்றான். போன வுயிரைக்கூடச் சிருஷ்டிப்பதற்குப் பிரம்மனுமிருக்கின்றான். (26) தவிரவும் ஐசுவரியம், வீரியம், இந்திரவிமானம், சேனைகள், மகா வீரர்களான மந்திரிகள் முதலிய வெல்லாமிருக்கையில் ஓ! பிரபுவே! தேவரீருககு யாதுகுறைவிருக்கின்ற" (27) தென்று, மகா புத்திசாலியான தருமகோபன் துக்கமடைந்த மகாசுரனாகிய சூரபத்துமனை யிவ்வாறு வசனங்களால் சமாதானப் படுத்தினான். (28) அவ்வசனம் கேட் டசுரவேந்தன் துக்கத்தை விலக்கியவனாகி "யாமேசென் றவ் வெல்லோர்களையும் சீக்கிரத்தில் ஜயித்துத் திரும்பி வரலாவோ" மென்று பெருமைபொருந்திய தருமகோபனை நோக்கி யுரைத்துப் புறப்படுகையில் மகா புத்திசாலியான வத் தருமகோபன் வசனமுரைத்ததாவது:— (30) "ஓ! பிரபுவே! தேவரீ ரடியர்களாகிய யாங்களெல்லா மிருக்கையி லிவ்வற்பர்களைப் பாராட்டித் தேவரீர் சொல்வது தகுதியல்ல. (31) ஓ! அசுரேசா! தேவரீர் கட்டளையைச்சிரசினிற்கொண்டு யான் சென்றிங்கு வந்திருக்கலுற்ற வெல்லாச் சத்துருக்களையும் ஜயித்துவிடுகின்றே" (32) னென, சூரனு மவ்வசனங் கேட்டதில்மிக வானந்தங்கொண் டப்படியே நல்லதென்றவனை யனுப்பிவிட்டுத் திரும்பவும் சிங்காதனமேறினன். (33) பிறகு தருமகோபன் பல பல சிறந்தவத்திரங்களையெடுத்துக்கொண்டு புண்டரீகமென்ற திக்கஜத்தின்மீ தேறியவனாகிவேறுநிகரற்றவனாகவும், துவஜங்கள், குடைகள், ஆலவட்டங்கள் இவைகளால்வெயிலை மறைக்கப்பெற்றவனாகி வெளிக்கிளம்பினான். ($34\frac{1}{2}$) மேலுமப்போ தனேக மந்திரிமார்களும், சதுரங்க சைனியங்களும் புறப்படலானார்கள். (35) ஊழிகாலமேக கர்ஜனைகளை யொத்த வாத்தியகோஷங்கள் முழக்கப்பட்டன. அவ்வசுர னிவ்விதமாகப் புறப்பட் டங்குள்ள வனேக வீதிகளையும் தாண்டித் துரிதமாக (36) மகா பலசாலிகளான சைனியங்களுடன் கோரமான வயுத்தகளத்துக்குவந்தான். அப்போ தவ்வாறு வருகின்ற அவ்வ

சுரனைக் கண்டு பூதர்களெல்லாம் வேகத்தோடு கிளம்பிக் கிளம்பிக் குதித்துக்கொண்டு ஸமுத்திரம்போல் மகா பயங்கரமாகக் கோலாஹல சத்தம்செய்தார்கள். (37½) பிறகு பயங்கரனான அவ்வசுர னச்சத்தங்களைக் கேட்டு மனதினில் மிக வாலோசனைகொண்டவனாகி (38) ஜடிதியில் வில்லை நாணேற்றிக் குணத்தொனிசெய்து கூர்மையுள்ள பல வம்புகளை வெகு கோபத்தோடு பூதர்கள்மீது சொரிந்தான். (39) அசுரப்படைகளோடு பூதப்படைகளுக்கும், மந்திரிகளோ டிலக்ஷம் வீரர்களுக்குமாக விருதிறத்தார்களு (40) மொருவர்மே லொருவ ரனேகம் தேவதைகளுடைய வத்திரங்களை யதின் பெயர்களையும் மகிமைகளையும் கூறிக் கொண்டாடி வருஷிக்கலாகி மிக வமக்களமும், பயங்கரமுமான கொடிய வியுத்தம் நேரலாயிற்று. (41) அப்போதவ்வெல்லா வீரர்களு மதிசீக்கிரத்தில் வசனுற்ற இயமதூதர்கள்போற் சடிதியில் வந் தவர்களுடைய வுயிரைவாங்கிச் சென்றுவிட்டார்கள். (42) சில வசுரர்க ளவர்களைக் கண்டவுடனேட்டமெடுத்துவிட்டார்கள். அப்போது தருமகோபனும் மகா கோபத்தோடு சிங்கநாதத்தால் பயமுறுத்திக்கொண்டு பூதசைனியங்கள்மீ தனேகம் கொடிய கணைகளைச் சொரிந்தான். (43½) ஓ! கோ! புண்டரீகமென்ற யானையும்கூட மற்றசத்துருக்களைக் கொல்லலாயிற்று. (44) அதன்மேல் வீரர்க ளவ்வியானைமீ தனேகம் கணைகளைத் தொடுக்க, அத்திக்கஜ முடல்முழுது மிரததம் பெருகப் பெற்றதாகி மிகுந்த கோபத்தோ (45) டோர் கோரமான விரும்புலக்கையை யெடுத்துக்கொண் டதனுல் மகா வேகத்தோ டெல்லாப் பூதர்களையு மடிக்க,(46) அவர்களிற் சிலர் மூர்ச்சைகொண்டார்கள். சில ரோட்டம்பிடித்தார்கள். அதுகண்டுவீரர்களுக்கதிபானவீரபாகுவானவர்கோபம்கொண் (47) டவ்வியானைமீது ஜடிதியி லனேகம் சரங்களைத் தொடுக்க, அப்பாணங்களா லடிபட்டமாத்திரத்தி லவ்வியானை கொஞ்சம் பலவீனம் கொள்ளலாயிற்று. (48) ஓ! பூதேவர்களே! அதுகண்டு தருமகோப னக்கஜராஜனை யடக்கிவிட் டவ்வீரன்மீது கோபத்தோடு பத்திலக்ஷம் பாணங்களை வருஷிக்க, (49) அப்போ தத்தேவச் சிரேஷ்டர் சத்துருவின் பாணங்களா லடிபட்டு மேனியெங்கு மிரத்தம் பெருகலுற்றவராகி யோர் நொடிநேரம் தேரின்கண்ணேய்ந்திருந்தனர். (50) மறுபடியும் மகா திறமையுடைய அவ்வசுரச் சண்டாள னவர்மனம்நொந்திருப்பதையறிந்து மிகுந்தவோசையால் பயங்கரமான வோர் வேலைப் பிரயோகித்தான்.(51)

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிற்பாடு வீரபாகு துரிதமாகவெழுந்து சமீபத்தில் வரலான அவ்வேலையோரம்பாலே தூள்தூளாக்கிவிட்டுப் (52) பின்னும் சில சரங்களால் மகா கெட்டியான அவனது கவசத்தைப் பிளந்தெறிந்தனர். அப்போ தசுரமன்னன் மந்திரியான வத்தருமகோபன் கவசமிழந்தவுடன் கோபங்கொண்டு (53) இயமன் தண்டாயுதத்தைப் பற்றியதுபோ லோர் பெரும் தண்டத்தை யெடுத்தவர்மீ தெறிய, அவ்வீர னதுவிழுந்தவுட னோர் நொடிநேரம் துயரங்கொண்டனர். (54) தவிரவு மம் மகாசுரன் தனது வீராவளி, பலம், சௌரிய மிவைகளைக்கூறிக்கொண்டத் தேவமன்னன்மீது மகா தீக்ஷணமான வனேக நாராசங்களை வருஷித்தான்- (55) வீரனுமுடனே யவன்மீது கோபத்தோடனேக மத்திரங்களைப் பிரயோகித்துப் பிறகவனது மாறுதலான கொடுந்தன்மையை யாலோசித்து நிகரற்ற தனது வேலைப் பிரயோகிக்க, (56) அதனை யத்துராத்துமனாகிய வசுரன் கண்டித்துவிட்டனன்; ஓ! கோ! இது மிகவும் கஷ்டம்! அதுகண்டு வீரபாகு கடுஞ்சினங் கொண்டவராகி மறுபடியோர் நொடிநேரத்துக்குள்ளாக (57) கற்பாரையினிலு மதிக கெட்டியான அவனது மார்பை யத்திரத்தினாற் பிளக்கலானார். அப்போதே யவ்வசுர னவ் வியானையின் கழுத்தின்பேரிலே மூர்ச்சையடைந்தான். (58) உடனே யம் மகாகஜமானது கோபாவேசம் கொண்டதாகி யோர் திடமான வுலக்கையை யெடுத் ததனாலவ் வீரபாகுவின் ஸாரதியை யடித்துக் கொன்றுவிட்டது. (59) பின்பு தேவ னக்கிரகவசத்தினால் தேரினின்று துரிதமாயிறங்கி யவ்வியானையைக் கன்னத்தினிலோரறை யறைந்ததனை யுபர வெறிந்தனர். (60) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது தருமகோபனுடைய அக்கஜராஜனானது ஸ்ரீபரமேசுவர னடியுண்ட கஜாசுரன்போல் பூமியில் விழுந்தோர் நொடிக்குள் மூர்ச்சையடைந்தது. (61) அதன்மேல் மகா பாதகனாகிய அவ்வசுரன் திரும்பவும் துரிதமாக வெழுந்து மிகப் பெரியதானவோர் தண்டத்தை யெடுத்தவரது நெஞ்சினிலடிக்க, (62) அதனையவர் மகா கோபாவேசம்கொண்டவராகிக் கையினாற்பற்றிமுறித்தெறிகையி லதனை யசுரச்சிரேஷ்டன் கண்டு பெரியதான வஜ்ஜிராயுதத்தைப் பிரயோகம் பண்ணினான். (63) அப்போதத் தேவனதற் கெதிராகவே யோடி யதனைக் கைதனிற்பற்றிக்கொண்டு மகா கோபத்தோ டவ் வசுரப்பாதகனை யடித்துப் (64) பிறகவன் பூமியில் விழுந்தவுட னவர் காலினால் துகைக்க, அவ்வசுரன் வாயினா லிரத்தத்தைக் கக்கிக்கொண்டு மடிந்தான்.(65) பிறகு மற்ற வசுரர்க ளவ்வசுரமந்திரி மாணமடைந்துவிட்டதுகண் டவ்வீரபாகு முன்னிலையில் நிற்பதற்கு முற்றும் திறமையற்றவர்களாகி அ

யுதங்களை நான்கு பக்கங்களிலு மெறிந்துவிட்டு மிகுந்த மனவியாகுல முற்றுக் கூந்தல் முடியவிழலாகி வேகத்தோடு துரிதமா யோட்டம்பிடித்தார்கள். (66)

இருபதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் உக—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பாடு புண்டரீகமென்ற திக்கஜமானது மூர்ச்சைதெளிந்தெழுந்து வீரபாகுவண்டை வந்து வந்தனித்து மிக வினயத்தோடவனை நோக்கி யுரைத்ததாவது:— (1) "ஓ! மகா பலவானாகிய தேவனே! அடியேன் திக்கஜங்களில் தலைவனென்றதை விண்ணப்பம் செய்துகொள்ளுகின்றேன். அப்பேர்க்கொத்த வென்னை யிந்துராத்துமன் பிடித்து வந்து விலங்கிட்டுவைத் (2) தவனுக்கு வேண்டியபோது தறித்துவிட் டெந்தன்மீ தேறிக்கொணடுவேண்டிய விடங்களுக்குச் செல்வான். அப்படியவன துத்திரவுக் கமையாவிடி லப்போதவ னெந்தனைக் கொடுமைசெய்வான். (3) ஓ! தேவேசா! அப்பேர்க்கொத்த வப்பாதகனைக் கொன்று தேவரீரிப்போ தெந்தனைச் சுயேச்சையாக விடுவித்தீர். ஓ! கருணைக்கடலான தேவரக்ஷகரே! தேவரீர் மகிமையை யறியாமல் மூடபுத்தியுடைய எந்தனாலளிக்கப்பட்ட பெரும்பிழையை மன்னித்தருள வேண்டும். யானிப்போது தேவரீராக்கினையின்பேரில் முன்போலெந் தனிருப்பிடம் சென்று வசித்துவருகின்றே" (5) னென்று மிகவேழ்மை வார்த்தைகளா லுரைத்தடிக்கடி வந்தனம் செய்தது. பிறகு வீர பாகு வப்படியெ நல்லதென் றக் கஜேந்திரனை யனுப்ப, (6) கேளீர்! தரணிதேவர்களே! அக்கஜம் விடைபெற்றுத் தனதிருப்பிடத்துக்குச் சிக்கிரம் சென்றது. அப்போது தேவரெல்லா மானந்தமடைந்து வீரன்மீது மலர்களைச் சொரிந்தார்கள். (7) சைனியங்களும் மிகவுற்சாகம் கொண்டவைகளாசி யெம்பி யெம்பிக் குதித்து மிகுந்த வட்டகாசம் செய்தார்கள். சூரபத்தும னிச் சங்கதியெல்லாம் தூதர்முகமாய்க் கேட் (8) டதிக துக்கமடைந்து மிகவு மாலோசனை கொண்டான். ஓ! பிராம்மணோத்தமர்களே! அவ்விரவானது, (மாயாத்திரதனின்று வீர

பாகு முதலியவர்கள் திருவேலினால் விடுவிக்கப்பட்டது முதற்கொண் டு) அனேக மசுரர்களை யியமலோகத்திற்கொண்டு நிலைநிறுத்திவிட்டுத் தானு மப்போதுநான் முடிவடைந்தது. (9½) பிற்பாடு பானுகோபன் சென்றதினத்தில் மாயாத்திரத்தைப் (10) பிரயோகம் செய்துவிட்டு த் துரிதமாய்த் தன் விடுதிசேர்ந்ததுமுதலா யம் மகாசுரன் தன்தூதர் முகமாய்த் தருமகோபன் மரணமடைந்ததையும், இங்கு வந்திருக்கலுற் றதேவச்சிரேஷ்டர்களால் நகரங்கொள்ளைகொண்டதுமுதலான ஸகல வி ருத்தாந்தங்களையும் கேள்வியுற்று (11½) உள்ளமதிற் பெரும் துக்க த்தினால் மிகவும்பற்றியெரிவோனாகித் (12) தன்வீட்டைவிட்டு வெளி க்கிளம்பியோர்நொடிக்குள் தன்தந்தைமனையடைந்து தகப்பனாகிய சூர பத்துமனை வந்தனித்தப்போது வசனமுரைத்ததாவது: (13) "கேளீர்! அப்பா! நம்மாலிம் மகாபலவான்களைப் போர்தனில்வெல்ல முடியா து. மகாபராக் கிரமசாலியானதேவரீர்கூடவம் மிகுந்தபலவான்களா லவ மானம்செய்யப்பட்டீரல்லவோ! (14) மேலும்யாம்தேவர்களை யிமிசித் ததுபற்றி யக்கந்தனாலே நமது சைனிய மெல்லாம் கொல்லப்பட்டன வென்று யானுரைக்கக்கூடவில்லை! ஆனாலோ! பலவசுரர்கள் கேவலம்ப யத்தினாலேமடிந்துவிட் டார்கள். (15) ஓ! அசுரவேந்தனே! யாம் பி ழைத்துத் தப்புவதற்குற்ற கால மெப்போதென்றால்:— யாம்கட்டி வைத்திருக்கிறதேவர்களையிப்போதாயினும்விட் டவ்வடிவேலனை வந்தனி த்ததின்பேரி (16) லப்பகவானும் பிரஸன்னனானா லப்போதுதான் நமக்கி ங்குநிலையுண்டாகுமென்று மைந்தனாலுரைக் கப்பட் டஅவ்வசனங்களைக் கேட் டதிலப்போதசுரன் (17)வெகுகோபம்கொண்டதினால்மிகவும் ஜு வலிக்கலுற்றவனாகி வசனமுரைத்ததாவது:— "அடா! பையலே! பிர ம்மன் விஷ்ணுமுதலிய ஸகலதேவர்களாலும் வணங்கித் துதிகூறப் பெ ற்ற யாம் (18) தொண்டைக்குழியி லுயிர்வந்தாலும் பிடித்தகாரியத் தைக் கைவிடோம். அவ்வாறு கைவிடில் மிகுந்த அபகீர்த்தியுண்டா கும். அடா! மூடா! நீ யிங்கு மிகுந்த பயங்காளியாகின்றதா லிப்போ தெங்காகிலும் தொலைந்து தூங்கலாவாய். யாமே நேரிற் சென்று போர் முகத்தில் வருமச் சத்துருக்களையெல்லாம் ஜயித்துவருகின்றோ" (20) மென்ற சூரன்வசனங்களை யவன் மைந்தனான பானுகோபன் கேட்டு "ஓ! அப்பா! யான் வஞ்சகமா யவ்வாறுரைத்தேனேயின்றி வேறில்லை. ஆகையா லெந்தனை மன்னிக்கவேண்டும். (21) ஓ! தந்தாய்! யான் தே வரீர் பலத்தைக்கொண் டிப்போதே ஸகல சத்துருக்களையும் ஜயித்துவி டுகின்றே" னென, அசுரமன்ன னவ்வாறு வசனங்களால் மிகவும் களிப் புற்றவனாகிச் (22) சத்துருக்களைக் கொல்லலுற்ற பானுகோபனை உயு

த்தம் பண்ணுவதற்காக வனுப்பினான். பிறகு மகா பலவானான பானு கோபன் தன் விடுதிசென் (23) றனேக தேவதாஸ்திரங்களையும் உ ளை போடப்பட்ட பற்பல விரதங்களையும் சேகரித்துக்கொண்டு தான் மகா வுன்னதமான வோர் தேர்மீதேறிக்கொண்டு (24) மிகுந்த வாத் தியங்களின் முழக்கங்கள், நேர்த்தியான துவஜங்கள், குடைகள், அனேக மசுரப்படைகள் இவைகளால் நன்கு சிறப்புற்றவனாகித் (25) தன் ச கோதரன்மீதுள்ள நேசவாசையால் துக்கப்பட்டுக்கொண்டே தனக்கும் மரணத்தையே நிச்சயித்தவனாகி வீதிகளைக்கடந் தயுத்தரங்கத்துக்கு வ ந்தவுட (26) னங்கு மரித்துக்கிடக்கின்ற தன் தம்பிகளான மூவாயிர ம் வீரர்களையு மின்னும் சுற்றுப்பக்கங்களில்விழுந்து கிடந்த மற்ற பல வசுரர்களையும் கண்டு (27) மிகுந்த துக்கபாரத்தினு லாக்கிரமிக்கப்பட் டவனாகி மிகுந்த கோபத்தினால் ஜுவலித்துக்கொண்டு "ஓ! அப்போர் க்கொத்த விச் சத்துருக்களைப் போர்முனையிற் சடிதியிற் சமுகரித்துவி டுகின்றேன்; (28) இல்லாவிடி லெந்தனை யிங்கெல்லா ஜனங்களும் கா மவிகாரம்கொண்ட தரித்திரன் விலைமகளுடைய காசைப்படுவதை நிந்திப்ப துபோலெந்தனையிகழ்வார்கள்" (29) ளென் றசுரன் மனதுக்குள் ளுரைத் துக்கொண்டு சத்துருக்கூட்ட மடைந்தான். பிறகு பூதர்களெல்லா மி ம் மகாசுரனைக் கண்ணுற்று (30) "ஆ! ஆ! அனேகம் கொடியசேனைக ளுடனிதோ வேகத்தோடு மகா பயங்கரமாய் வருகின்றானே! இப்பாதக ன் யாவன்?" என்று மனக்கவலைகொண்டவர்களாகி (31) மகா கோபத் தோடவ் வசுரப்படையை யெதிர்த்து நின்றார்கள். ஓ பிராம்மணோத் தமர்களே! அப்போது மரங்கள், மலைகள், கற்பாறைகள், கதைகள், இரு ம்புலக்கைகள் இவைகளை யொருவர்மீதொருவர் வருஷித்துக்கொண் டிரு திறத்தார்களுக்கும் மிகுந்த வுயுத்தம் கலக்கலாயிற்று. ($32\frac{1}{2}$) அவற் றில் மிகுந்த பலபராக்கிரமங்களையுடைய வனேகம் சூரர்கள் மடிந்தார்க ள். (33) அனேகம் தலையற்ற முண்டங்கள் மகா பயங்கரமா யெழுந் து கூத்தாடின. மாமிச வாசையா லனேகம் நரிகள், காக்கைகள், கழு குகள் இவையெல்லா மங்கு வந்து கூடின. (34) இவ்வாறு பயங்கரமா ன வுயுத்தம் நேரிடலாகையில் பூதர்கள் அசுரர்களுக்கெதிரில் நிற்கத்தி றமையற்றவர்களாகி நான்கு பக்கங்களிலுமோட்டம்பிடித்தார்கள். (35) பிறகப்போதே பூதசேனாதிபர்கள் வந்து கோபத்தோடவ் வசுரப்பாதக ர்களை யத்திரங்களால் மர்மத்தலங்களைப் பிளந்து மிகுதியா யுயுத்தம் செ ய்தார்கள். (36) அப்போ தசுரர்க ளுடலறுபட்டவர்களாகி யோடத்த லைப்பட்டார்கள். அவர்களைக் கண்டு மகா பாவியான பானுகோபமகாசு ர (37) னனேக மகாத்திரங்களைவிட்டு யெதிரிகளா லெறியப்பட்ட ம

ரங்களையும் மலைகளையும் தூள்தூளாக்கி யதிக கோபத்தோடு மிருந்த சி ங்கநாதத்தாற் பயமுறுத்திக்கொண் (38) டப் படைத்தலைவர்கள்மீ தனேகமர்க்கினேயாத்திரங்களைப் பிரயோகித்தா ன். அப்போதப் படைத்தலைவர்கள்போரினிலவ்வத்திரங்களைச் சகிக்கமு டியாம (39) விரத்தங்களைத் தாரைதாரையாய்ப் பெருகவிட்டுக்கொ ண்டு தெறிபட் டோடினார்கள். அதுகண்டு வீரபாகு தம் தேரையோ ட்டச்சொல்லி (40) வேகத்தோ டெதிர்த்துவந்து வில்லை வளைத்த னேகம் கணைகளைத் தொடுத்து அசுரனால் விடப்பட்ட வேராளமானவா யுதங்களையெல்லாம் கண்டித்தெறிந்து (41) பின்னுமம் மகா பலவான ங்கு சண்டைபோடலான பல வசுரர்களையும் கொன்றுபோட்டனர். அதன்மேல் பானுகோப னவ்வீரனை நோக்கிக் கோபத்தோ டுரைத்ததா வது:— (42) "அடா! தூதா! நீ முந்தி பல வசுரர்களைக் கொன்றுவி ட் டோடிப்போனாயல்லவா? மறுபடி யிப்போது கூட நீ நம்முன்னர்நே ர்ந்தபிற கெங்கோடப் போகின்றாய்? (43) அப்படி யெங்காகிலும் தப் பியோடினு முந்தனை நிச்சயமாகச் சமுகரித்துவிடுகின்றே" மென்றிவ் வாறாக வக் கேடுகெட்ட வசுரன் தனது வீரத்தன்மையைக் கொஞ்சமு ரைக்கலாயினன். (44) அப்போது பலவானான வீரபாகுவானவர் வ சனமுரைத்திட்டதாவது.— "அடா! அசுரா! நாமிருவருமிப்போ தங்கு பயங்கரமாக வுயுத்தம் செய்வோம்; (45) வெற்றியையும் தோல்வி யையும் ஸகல தேவர்களும் பார்க்கட்டும்; அடா! துராத்துமாவே! வீ ண்வாதினாலென்னபயன்? நம்மோடு நின் றுயுத்தம்பண்ணடா" (46) வென்றுரைத்தமாத்திரத்தில் பானுகோபன் மகா கோபம்கொண்டவனா கி யப்போது வீரன்மார்புதனி லாயிரம் சரங்களைப் பிரயோகித்தான். (47) அதன்மே லுயுத்தமதிற் கர்வம்கொண்ட வீரபாகுவும் கடுஞ்சின ம்கொண்டவராகி யவனது புயங்கள்மீ தாயிரம் கணைகளைத்தொடுக்க, (48) அவைகளையும் அவரம்புராத்தூணியையும் அசுரன் நூறம்புகளா ற் சேதித்துவிட்டனன். பிறகு வீரன் மிக வாக்கிரகத்தோடு கோலா ஹல சத்தம்பண்ணிக்கொண் டவ்வசுரனது நெற்றிதனில் ஜுவலிக்கலு ற்ற தனது வேலைச் சடிதியிற் பிரயோகிக்க, (49½) அது விழுந்ததா லசுரன் கொஞ்சநேரம் களைப்படைந்தான். (50) பின்னு மப்போது தேவராஜனான வீரபாகு வாயவியாத்திரத்தைச்சந்தானிக்க, மகா பலவா னான அவ்வசுரனு மதே யத்திரத்தை விட் டதனைக் கண்டித்தான். (51) பின்பு தேவன் துரிதமா யாக்கினேயாத்திரத்தை யவ்வசுரனைக் குறித் துப் பிரயோகிக்க, அதனையு மவனதே யத்திரத்தினால் துண்டித்துப் பி ன்னும் கோபத்தோடு சூரியாத்திரத்தை விட்டனன். (52) பிறகு வீர

பாகுவு மதனை யதே யந்திரத்தினால் வீண்செய்ய, பிற்பாடகா னத்தே வேசனை யாக்கிரகத்தோடு பயமுறுத்திச் (53) சகலர்களையும் சமுகாரம் செய்யலுற்ற பிரம்மாத்திரத்தைப் பிரயோகித்தான். அதன்மேல் மகா பலவானான வீரபாகு வதனையு மதே யந்திரத்தினாற் பழுதாக்கினர். (54) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்விதமாக வத்திரங்களெல்லாம் வீணானபொழு தசுரமன்னன் மகா கொடியதும் மகா பயங்கரமுமான நாராயணாத்திரத்தை (55) வீரபாகுமீது வெகு கோபத்தோடு துரிதமாய்ப் பிரயோகிக்க, அவ்வத்திரம் மகா கோரமாய்ச் சகல திக்குகளையு மொளிப்பித்துக்கொண்டு வெளிப்பட்டு வரலானதை (56) வீரபாகு கண்டு கோபத்தோ டதே யந்திரத்தைச் சடிதியிற் சந்தானித்தவுட னவ் விரண்டத்திரங்களு மொன்றோடொன் றடித்துக்கொண்டு சும்மா விருந்தன. (51) அதற்குமேல் பானுகோபன் மிகுந்த கோபத்தினால் பற்றி யெரிவோனாகி 'ஓ! யாம் சகல சத்துருக்களையும் சமுகாரம் செய்யலுற்ற ஸ்ரீ பாசுபதாத்திரத்தைப் பிரயோகித்தா லவனுமதேயத்திரத்தைப் பிரயோகிக்கலாவா' னென்று மிகவுமாலோசனை கொள்ளலானான். (58)

இருபத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் உ௨—வது அத்தியாயத்தினர்த்தம்.

### பானுகோபன் வதை.

அம்மாயாவியானவன் அவ்வாறுலோசித்தபிற கோர் க்ஷணத்துக்குள் மாயையினால்மறைந்துகொண்டத் தேவேசனுக் கவ்வண்டை யிவ்வண்டையிலும், முன்னிலும் பின்னிலும் வட்டமிட்டுக்கொண்டே யவர் திருமேனியி லனேக மத்திரங்களை வருஷித்தான். (1) அப்போது வீரபாகு மிகுந்த விரத்தங்கள் பெருந்தாரைகளாகப் பெருகக்கொண்டவராகி "ஓ! கோ! அத்துராத்தும னிப்போ தெங்கிருந்துகொண்டுநம்மீது பாணங்களைத் தொடுக்கின்றான்? (2) பாணங்கள் விழுவதுமட்டில் தெரிகின்றதேயன்றி யவன் காணப்படுகிறானில்லை" யென்று திக்குவிதிக்குகளி லங்கு மிங்கும் பார்த்து மனக்கவலைகொண்டு நின்றனர். (3) அப்போது தேவர்களும், பூதர்களும், சேனாதிபர்களும் மிகவும் பயம

டைந்தார்கள். பிறகு வீரன்சற்று நேரத்திற்குள்ளத்தூாத்துமனுடைய மாயையை யறிந்து (4) ஸகல மாயைகளையும் தொலைக்கவுற்ற விஞ்ஞானாத்திரத்தைப் பிரயோகிக்க, அவ்வஸ்திரத்தின் மகிமையாலவன் வானமார்க்கத்தில் தேர்மீது வீற்றிருப்பதைக் கண்டு வீரன் மகா வாக்கிரகம் கொண்டவராகித் தேரோ டங்கு சென்றவுட னப்போ தவ் விருவர்களுக்கும் மகா பயங்கரமான கொடிய வ்யுத்தம் நேரலாயிற்று. (6) அவரவர் தேரை நான்குபக்கங்களிலு மிங்குமங்குமாக இடசாரி வலசாரியாய்ச் சுற்றவிட்டுக்கொண்டும், கோடையிடிபோன்ற சத்தங்களோ டிருவரும் சரமாரிபொழிந்துகொண்டும், (7) "அடா! உன்னுற்கூடிய பாணங்களைவிடு; நம்முன்னர் நீ யெம்மாத்திரம்? உந்தனைக் கொன்றுபோடுகின்றேன்" மென்றொருவருக்கொருவ ருரைத்துக்கொண்டே பலசரங்களைச் சொரிந்துகொண்டும், (8) பிறகு மிகுந்த கோபத்தோடு சடிதியிற் சபதம் செய்துகொண்டும், ஒருவருக்கொருவர் தம் தம் பெயர்களை யெடுத்துச்சொல்லி விராவளிகூறியும், (9) ஒருவர் மற்றவ ரத்திரங்களைக் கண்டித்தொருவருக் கொருவ ரதட்டியவர்களும், ஒருவரத்திரங்களை யொருவர் பழுதாக்கிவிட் டொருவரையொருவ ரேசியும், (10) சந்தோஷத்தினு லெக்களித்தும், மற்றவர்பெயரைக் கூப்பிட்டும், மகாகோலாகலத்தினுல் மிகுந்த சத்தத்தோடு சங்கத்துவானம் செய்தும், (11) பொருமையாற் கொடிய வார்த்தைகளா லொருவரையொருவ ரதட்டியுமிவ்வாறாக வத்தேவேசாசுரேச ரிருவர்களுக்கு மப்போது கொடிய வ்யுத்த முண்டாயிற்று. (12) அப்போது விழலான பாணங்களால் பூமியெல்லாம் மறைக்கப்படலாயிற்று. மேலுமப்போது பராக்கிரமசாலிகளான பலபூதர்களு மசுரர்களும் மாண்டார்கள். (13) ஆதித்தியன் முதலிய கிரகங்களெல்லா மச்சண்டையை நோக்கிப் பயமடைந்தார்கள். வேகத்தில் வாயுவையும், கொல்வதி லியமனையும், (14) போர்தனிற்சத்துருக்களை மிகவுமெரிப்பதில் பிரளயகாலாக்கினியையும், பிரகாசிப்பதிற் சூரியனையும், மிகுந்த சத்தத்தி லிடிகளையும், (15) சத்துருக்களைக் கோரமாய்ப் பரிதவிக்கச் செய்வதில் ஸ்ரீ திரிபுரமாற்றானுடைய சரங்களையும் போன்றவைகளான இவ்வித சஸ்திரங்களை யடிக்கடிப் பிரயோகித்துக்கொண் (16) டப்போ தவ்விரு போர்வீரர்களும் மிகுதியாக வ்யுத்தம் செய்தார்கள். அப்போது மலைகளெல்லா மிச்சரங்களால் மிகுதியாய் நிரம்பலாயின. (17) மேலுமச் சரங்களாலோ மேகங்களடிபட்டுத் துணுக்குத்துணுக்குகளாயின. மேலும்திக்குவிதிக்குகள், சூரியசந்திரர்கள், (18) பிரம்மாண்டம், ஆகாசபாதாளங்கள், சமுத்திரங்கள் இவையெல்லாம் நிறையப்பட்டன. திக்கஜங்கள், பருவதங்கள், மேகங்கள்

இவையெல்லா மங்ஙங்கு கொளுத்தப்படலாயின. (19) அப்போது பூமியானது அச்சரங்களால் மிகவும் தகிக்கப்பட்டு வெடிக்கலாயிற்று. ஸகல சமுத்திரங்களும் வற்றலாயின; ஸகல நக்ஷத்திரங்களு மெரியலாயின. (20) பிரம்மாண்டத்தினிடை வெளியெல்லாம் புகைத்திரள்களால் சூழ்ந்துகொள்ளப்பட்டது. அப்போதவ்விருவரு மொருவருக்கொருவ ரனேக மந்திரங்களைச் சேதித்துவிட்டார்கள். (21) தேவர்களும் தவசிகளு மவர்களது சண்டையி னுச்சரியங்களைப்பார்த்து "ஓ! கோ! இவ்விருவருக்கும் நிகரான வில்லாளிக ளிவ்வுலகின்மீ தில்லையே! (22) ஓ! கோ! என்னவீரியம்? என்னசௌரியம்? என்னகாம்பீரியம்? என்று மிகவு மாச்சரியப்பட்டார்கள். பிற்பாடுமகாசுரனுன பானுகோப னதிக கோபத்தோ (23) டாயிரமம்புகளால் வீரபாகுவின் தேரைத் தூள்தூளாக்கிவிட்டுப் பெண்சிங்கத்தோடு கூடிய வாண்சிங்கம் காம வெறிகொண்டுகர்ஜனையிடுவதுபோற் கர்ஜனைசெய்தான். (24) உடனே யம் மகாவீரன் பரபரப்புற்றவராகி யத்துராத்துமனுடைய தேரை யாயிரம் சரங்களாற் பொடிப்பொடியாக்கிப் பூமியில் வீழ்த்தினர். (25) மறுபடி யசுரனும் மகா கோபம்கொண்டவனுகி யிருபது சத்திரங்களை யவர் மார்பினிற் பிரயோகித்து கேளீர்! தாணிதேவர்களே! அவரைப் பயமுறுத்துவதுபோல் கைகளா லிருதோட்களிலும் தட்டிக்கொண்டு சிங்கநாதமிட்டான். (26½) ஓ! கோ! கோ! அப்போதவ் வீரன் மகா கோபாக்கிராந்தராகிப் பதினுன்கு பாணங்களா (27) லவனது பெரியதான கிரீடத்தை யுடைத்துப் பூமியில் வீழ்த்தினர். பிறகு மிகுந்த வலிமைகொண்ட பாதகனுன அவ்வசுரனு மவ்வளவே பாணங்களா லவரது கெட்டியான கவசத்தை நூறுதுணுக்குகளாகப் பிளந்தெறிந்தான். (28½) அப்போது வீரபாகு மகா வாக்கிரகம்கொண்டு மிகுந்தவட்டகாசம் செய்தவராகித்தீக்ஷணமான வேழம்புகளா லவனது சிறந்த வில்லைக் கண்டித்துவிட்டனர். (29½) அவ்விதமாக வில் முறிபட்டவுட னவ் வசுரன் புருவநெரியால் கோணலுற்ற கண்களையுடையவனுகி (30) யத்தேவேசன்மீது நிகரற்றதான பிரம்மவேலைப் பிரயோகித்தான். பின்பத் தேவோத்தம னவ்வேலின்மீது தீக்ஷணமான நூறு கோடி யம்புகளைப் (31) பிரயோகிக்க, அவைகளை யது சடிதியிற் சேதித்துவிட் டவரதருகினில் வாலாயிற்று. அப்போதத் தேவவேந்த னவ்வே லருகினில் வந்துவிட்டது கண்டவுடன் (32) ஹிருதயத்தினுள் விளங்கிய வெண்தாமரை மலரின்கண் ஸ்ரீ முருகேசனைத் தியானம்பண்ணிக்கொண்டு உரையிலிருந்த ஸ்ரீமகேசுவரக் கத்தியைக் கைமீதெடுத்து மகா வலிமையோ டதனைவெட்ட, (33) அவ்வேலிருதுண்டுகளானது க

ண்டு தேவர்கள் சந்தோஷம் கொண்டார்கள். தேவேச னுட னே யக்கத்தியை யுறைக்குள் போட்டு நிற்குமளவில் (34) மகா பா வியாகிய பானுகோபனு மற்புதமானவோர் கத்தியை யெடுத்துக் கோ லாஹல சத்தம்பண்ணிக் கையினு லதனைச் சுழற்றிக்கொண்டே நெருங் கி வருமளவி (35) லப்போது வீரன்கடுஞ்சினங்கொண்டவராகி யனே கம் சிறந்த பாணங்களா லப் பாதகனுடைய வஜ்ஜிரத்திலும் கெட்டியா ன நெஞ்சைச் சடிதியாய்ப் பிளந்து (36) மதனை யசுரன் கொஞ்சமே னும் பாராட்டாம லிரத்தம் தாரைதாரையாய்ப் பெருகப்பெற்றவனுகி மகா கோபாவேசம் கொண்டவரருகினில் வந்து அக்கத்தியா லவரது தனுசைத் துண்டித்துவிட்டு (37) மறுப்டியும் மிகுந்த சிங்கநாதம்செ ய்து அங்குமிங்கு முலாவுகையி லப்போதத் தேவமன்னனும் தனது சி ரேஷ்டமான கத்தியைக் கைக்கொண்டனர். (38) அப்போ தக்கினிதே வனையு மியமதேவனையும் போன்றவர்களான கொடியர்களாகிய அவ்விரு வீரர்களுக்கும் மகா கோரமாகவும் மகா பயங்கரமாகவும் கத்திச்சண் டை நேரிடலாயிற்று. (39) அவற்றிலவ் வசுரப்பாதகன் துரிதமா யத் தேவேசன் புயத்தினி லக் கத்தியை நாட்டலாகையி லத்தேவேசுவா ன தனை யோர் நொடிக்குள் தட்டிவிட்டு வீணுக்கி (40) யவனது வலது தோளை வெட்டிப் பூமியில் வீழ்த்தினுர். பிற்பா டசுரன் ரோஷத்தோ டிடதுகையா லக்கத்தியை மறுபடி யெடுத்துக்கொண் (41) டவரை வெட்ட முயலுகையில் கேளீர்! பிராம்மணேத்தமர்களே! அவரக் கை யையும் துண்டித்துவிட்டனர், அதன்மே லவ்வசுரப்பாதகன் கோபா வேசம்கொண்டவனுகி யச் சண்டையில் மகா கோரமான மாயாத்திரத் தை யத் தேவேசன்மீது பிரயோகிக்க நினைப்பதற்குள் ($42\frac{1}{2}$) ளாகவே கேளீர்! சௌனகாதி முனிவர்களே!, அத்தருமமூர்த்தியானவர் பருவத ம் போன்ற பெரியதான அவனது தலையை வெட்டிப் பூமியிற் சாய்த்த னர். ($43\frac{1}{2}$) அவ்வசுரப்பாதக னியமன் கைவசத்தி லகப்படலானதுக ண்டு தேவர்கள் (44) மிகுந்த சந்தோஷத்தோடு நன்மணம்பொருந்தி ய மலர்களைச் சொரிந்தார்கள். அப்போது பூதர்களும் சேனுதிபர்களு டன் மிகவு மட்டகாசம் செய்தார்கள். (45) சூரியன் தன் பகைஞன் மாண்டுவிட்டது கண்டு மிகுந்த வானந்தமடைந்தான். அப்போதே வீரபாகு வாகாயத்தைவிட்டுப் பூமியி (46) லிறங்கித் தம்பிகளாகிய வீ ரர்களாலும், பூதர்களாலும் சிறப்பிக்கலுற்றவராகி 'ஓ! இப்போ தப்பா தகன் சமுகரிக்கப்பட்டபடியால்நம் சபதம் நிறைவேறலாயிற்று. (47) நாம் நேற்றுதினம் கூட தேவதேவோத்தமனுன ஸ்ரீசுப்பிரம்மணியனை வந்தனிக்கவில்லை" யென்றெல்லோர்களையும் நோக்கியுரைத்து வீரபாகு

அவர்களோடுகூட (48) மிகுந்த வாத்தியமுழக்கங்களோடு சிறந்தஹேமகூடபுரம் சேர்ந்து ஸ்ரீகந்தபிரானது திருமாளிகைவாசலில் தமது தேரினின்றிறங்கி (49) மாளிகைக்குள் சென்று திவ்வியமங்கள மூர்த்தியான ஸ்ரீமுருகேசனைத் தரிசித்து மிகுந்த வானந்தத்தோடும் விநயத்தோடு மனேகம் தடவை வந்தனித்தார். (50) பின்பு பகவானுனவர்வீரபாகுவைத் தம் திருக்கைகளால் தழுவியெடுத்து "ஓ! அப்பனே! நீ மிகுந்த பிரயாசையெடுத்துக்கொண் டம் மகா பாதகனைக் கொன்றுயல்லவோ! (51) நீ யிப்போது மிகவும் களைப்படைந் திருக்கின்றுய்; இப்போது நமக்கு மிகுந்த சந்தோஷ முண்டாகியபடியால் ஓ! மகா பலவானுகிய தம்பியான வீரா! உந்தனுக்கு வேண்டியமட்டிலுள்ள வரன்களைக் கேட்டுக் கொள்வாய்" என்று திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீமுருகேசனை நோக்கி வீரபாகு கைகளைக் கட்டிக்கொண்டு வசனமறிவித்துக்கொண்டதாவது:— "ஓ! பிரபுவே! யான் தேவரீரது திருவாக்கினையின்படி யவ்வசுரனைக் கொல்லலானதில் தேவரீரொந்தனுக்குப் பிரசன்னமான துண்மையானு லெந்தனுக்குத் தேவரீர் பாதாரவிந்தத்தின்மீது மாறாத பக்தி விருத்தியாகும்படி யருள்செய்யவேண்டும். (53) ஓ! பிரபுவே! பிரம்மன் விஷ்ணு முதலிய தேவர்களின் பதம் வேண்டுவதில்லை. தேவரீர திருபொன்மலைத் திருவடிகள்மீதுள்ள மகா பரிசுத்தமான பக்தியே போதுமானது" (54) என்று வேண்டிக்கொள்ளப்படலான அத்தேவேசன் மகா வினயத்தோடு நின்ற வீரனை நோக்கி "ஓ! தம்பி! நம்மீதுநிவற்றதான பரிசுத்த பக்தியானது தேவோத்தமர்களாலு மடையத்தகாதது. (55) ஆனுலப்பேர்க்கொத்த பக்தியானது நம் கருணைவசத்தினு லுந்தனுக்கே யுண்டாகக்கடவ" தென்று திருவாக்கருளிவிட் டத்தேவேச னவனையும் மற்றெல்லோர்களையு மவரவர் விடுதிகளுக்குச் செல்லும்படி யனுப்ப, (56) அவ்வீரரெல்லோர்களும் ஸ்ரீவடிவேலனை வந்தனித்துவிட் டவரவர் விடுதிகளுக்குச் சென்றுர்கள்.

யாதாமொருவனிவ்வத்தியாயத்தை த்தினம்தோறும் பக்திச்சிரத்தைகளுடன் படிக்கின்றுனே! எந்த மானிடோத்தமர்கள் வீரபாகுவால் செய்யப்பட்ட, மற்றொருவராலும் முடியாததும், மகா கோரமுமான பானுகோபப் பாதகனது வதையைப்பற்றியதுமான இவ்வத்தியாயத்தின் கதையைக் கேட்கின்றுர்களோ! (58) அவர்களுக்குச் சகல சத்துருக்களிடத்தும் ஜயமுண்டாவதோடு ஸகலவேண்டுதல்களும் ஸகக்கூடலாகும். என்றும் தருமமார்க்கத்தையே அனுசரித்துவந்த பாண்டவர்க ளிவ்வத்தியாயத்தின் கதையைக் கேட்டுத்தான் சத்துருக்களாகிய

மிகுந்த மதங்கொண்ட துரியோதனன் முதலியவரிடத்துப் போரினில் வெற்றிபெற்றார்கள். (59½) இவ்விதமாகவே பரசுராமனும் கார்த்தவீரியார்ஜுனன்முதலிய (60) மகா பல பராக்கிரமசாலிகளான சத்துருக்களைச் சண்டைமுகத்தில் வெல்லலானார். இதை முனிவர் முகமாய்க் கேட்டே வாலியும், அஞ்சனாதேவிக்கு மைந்தனான ஹனுமாரும் மற்றவர்களால் ஜயிக்கமாளாத சத்துருக்களை வெற்றிகொண்டார்கள். (61)

இருபத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தக்காண்டம் உ௩—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பாடு சூரபத்மன் மைந்தனான பானுகோப னிறந்ததைத் தூதர்முகமா யறிந்ததன்மேல் மிகவும் துக்கப்பட்டுப் பூமியில் மூர்ச்சையாகி விழுந்தான். (1) பிறகு ஸகல அசுரர்க்கு பதியான அச்சூரனுடனே மூர்ச்சை தெளிந்து புலம்பியதாவென்றால்:— "ஆ! ஆ! எந்தனருமை மகனான பானுகோபா! ஆ! சூரியனை ஜயித்தவனே! மிகுந்த பலமுடையோனே! உன்னனுக்கும் சாவு வந்துவிட்டபடியா லிப்போது தேவரெல்லாம் சுகமடையலாயிற்றே! (2½) இப்போது குகைகள்மீதொளிந்து கிடக்கின்ற விஷ்ணுகூட அவைகளைவிட்டுப் பூமிதேவியுடன் லக்ஷ்மிதேவியும் கால்பிடிக்கலாகித் திருப்பாற்கடலிற் கவலையற்றுத் தூங்கலாயிற்றே! (3½) இந்திரனு மிந்திராணியோடு கூட மறுபடி சுவர்க்கலோகத்தில் சுகித்துவாழலாயிற்றே! (4) இன்னும் மற்ற வெல்லாத் திக்பாலர்களும் சுகமடைந்து விடுவார்களல்லவோ!" என்றிவ்விதமாக அவன் புலம்பித் தவிக்குமளவி லப்போது சிலவசுரர்கள் (5) பானுகோபனுடைய தலை, உடல், கைகள் இவைகளை யெடுத்துவந்தார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சூரனப்போது தன்மைந்தனுடைய அவ்வுருப்புகளைப் பார்த்து மறுபடி (6) யவைகளை முன்போல் சரிவரச் சேர்த்துவைத்து மிகுந்த துக்கத்தோடு பரிதாபமாய்ப் புலம்பினான். அப்போதவன் மனைவியான பத்துமகோமளையும் தன் சக்களத்திமார்களுடன் வந்து (7) செல்வனுடைய அவயவங்களை யடிக்கடி பார்த்துத் த

டவிழுகர்ந்து மிகுந்த துக்கத்தினாற் பரிதவித்துக் கூந்தல் முடியவிழலா
கிச் சற்றுநேரம் பூமியில் விழுந்து புறண்டு புலம்பியதோமென்றால்:—
(8½) "ஆ! எனதருமை மகனே! இலக்குமிதேவி கைதனிற்பற்றிய
தாமரை மலரைக்கொண்டு வரும்படி முந்தி யான் கேட்டதற்கு நீ
யுடனே யதனைக் கொண்டுவந் தெந்தனுக்குக் கொடுத்த பலவானல்ல
வோ! (9½) இத்தேவர்க ளிப்போ தெந்தனுக் கிப்பேர்க்கொத்த துக்
கமதை யளித்தபடியா (10) லவர்களது பெண்டீர்களும் சீக்கிரத்தி லிப்
பேர்க்கொத்த நிலைமையை யனுபவிக்கக் கடவார்கள்" என்றிவ்விதமெ
ல்லாம் சூரனும்மற்றெல்லா வசுரர்களு மவரவர்கள் பெண்டீர்களுமிறந்
துபோன மைந்தனைப் (11) பார்த்தங்கு மிகவும் பிரலாபித்துக்கொண்
டிருக்கையில் கேளீர்! தரணிதேவர்களே! சூரனெழுந்து மிகுந்த கோ
பத்தினால் பற்றியெரிவோனாகி (12) ஓ! கோ! யாமிப்போதோர்நொ
டிக்குள்ளாக விச் சத்துருக்களை ஹதம்பண்ணி யவர்கள திரத்தங்களைக்
கொண்டிங்கு வீரயாகம் முடித்து இறந்துபோன பானுகோபனையும் பி
ழைப்பிக்கின்றோ" (13) மென்றுரைத்துச் சிலவசுரர்களைப் பிணத்
தைப் பாதுகாக்கும்படி யேற்படுத்திவிட்டு, பதுமகோமளைமுதலிய
பெண்டிர்களையு மந்தப்புரத்துக் (14) கனுப்பிய பிறகப்போது தூதர்க
ளை நோக்கி யுரைத்ததாவது:— "ஓ! தூதர்களே! நீங்களெல்லோர்களு
மிப்போதே சிங்கமுகனிடஞ் சென்று நமது பானுகோபன்முதலியவர்க
ளிறந்துபோன சங்கதிகளைச் சொல்லிவிட்டுச் சீக்கிரமிங்கு வருவீர்க"
(15½) ளென்று கட்டளையிடப்பட்டவர்களாகி யவர்களுடனே பற்பல
விரத்தினங்களால் விளங்காநின்ற ஆசுரபுரியென்ற சிங்கமுகன் பட்ட
ணத்துக்கு விரைவாகச் சென்று (16½) அங்கு மகா பலவானாகிய வ
சுரச் சிரேஷ்டனான சிங்கமுகனைக் கண்டு (17) வந்தனித் தஞ்சலிகொ
ண்டவர்களாகி யவர்கள் வினயத்தோடு வசனமுரைத்ததாவது:— "ஓ!
சுவாமீ! தேவரீர் மூத்தோராகிய வசுரச்சிரேஷ்டர் தங்களைச் சீக்கிரம
ழைத்துவரும்படி யிவ் (18) வெங்களை யனுப்பினர். ஆகையால் தே
வரீர் தாமதமின்றிப் புறப்படல் வேண்டு" மென்று சொல்லிய மாத்திர
த்தி லப்போ தவனால் விவரம் வினவப்பட்டதின்பேரில் கேளீர்! பிராம்
மணோத்தமர்களே! அவர்களச் சிங்கமுகனுக்குப் பானுகோபன் வதை
யை யுரைக்கையி (19½) லதுகேட்டவுட னவ்வசுரன்மிகுந்த துக்கம்கொ
ண்டு (20) அடிக்கடி கோபத்தினால் ஜுவலிக்கலுற்றவனும், நாணத்தி
னால் தலைகுனியலுற்றவனுமாகி யுடனே யெழுந்து தேர்மீதேறிக்கொ

ண்டு சதுரங்க சைனியங்களுடனும், (21) அனேகம் துவஜங்கள் குடைகளுடனும், பற்பல வாத்தியங்களின் மிகுந்த வோசைகளுடனு மாகாய மார்க்கமாகச் சென்று சூரனரசாளும் பட்டணம் சேர்ந்து (22) துரிதமாகத் தேரினின்றிறங்கி மூத்தோன் மாளிகைக்குட் சென்றங்கு அசுரவேந்தனுகிய தமையனுன சூரனைக்கண்டு வந்தனிக்க, (23) அப்போது பலவானுன சூரன் தன் தம்பியைக் கைகளால் தழுவித் தன்னருகினி லவனை யுட்காரவித்தவுடன் சிங்கமுகன் "ஓ! அசுரேசுவரா! தேவரீர் யாது நிமித்தம் துக்கமுற்றவர்போ லிருக்கின்றீ" ரென, (24½) சூரபத்துமன் நடந்த வரலாறுகளை யாதியோடந்தமா யுரைத்துவிட்டு "நல்லது! ஓ! சிரேஷ்டனுன தம்பி! நீ சென்றச் சத்துருக்களையெல்லா மிப்போதே போரினில் வென்று பிறகு நம்மண்டைக்குத் திரும்பிவா; (25½) இப்போ திதற்காகவே யுந்தனை யாமிங் கனழப்பித்தன" (26) மென, சிங்கமுகனவ்வாறு சூரன்வசனங்களைக் கேட் டுத்தரமுரைத்ததாவது:—
"ஓ! அண்ணு! முந்தியே யானுரைத்திட்ட வசனங்களைக் கேளாமற் சகல வசுரர்களையும் கொன்றுகொண்டீரல்லவோ! (27) கேவலம் ஸத்திய ஞானனந்த சுவரூபியான விப்பரமசிவனை நீரோரிளைஞனென் றுரைத்தபடியா லதற்குத் தக்க பயனை யனுபவிக்கலானீர். (28) ஓ! கோ! விதியை வெல்வதற்கு யாவராலும் முடியாது! அப்போது யானுரைத்த தெல்லா முமக்கு மிகவும் தகிக்கவுற்ற விஷமாகத் தோன்றலாயிற்றல்லவோ! (29) ஓ! நல்லது! இனி யிப்படி யுரைப்பதிற் பயன்யாது? ஓ! அண்ணு! யானிப்போதே சென்றச் சத்துருக்களையெல்லா மோர் நொடியினில் வென்றுவிட் டுமது முகத்தைப் பார்க்கின்றேன்: அவ்வாறு வெல்லாவிடி லும்மையான் பார்ப்பதில்லை" (30) யென, சூரனவ் வசனம் கேட்டு 'நல்லதப்படியே யாகட்டு' மென்று மகா பலசாலியான வத்தம்பியை யனுப்ப, (31) பிறகு சிங்கமுக னங்நகரி லவனுக்காகவேற்பட்டதான தனது மாளிகை சென்று ஏழுசமுத்திரங்களி னளவுகொண்ட மாமிசம், பலவகை யிரத்தம், தேன், பால், தயிர், கள் இவைகளை (32) யுண்டு மிகுந்த வாசனைத் திரவியங்களைப் பூசிச்சிறந்த மாலைகளையு மணிந்து (33) புதியதான வஸ்திரங்களையு மாபரணங்களையும் தரித்துக்கொண்டு ஸ்ரீ பரமேசுவரனு லருளப்பட்ட தண்டம், சக்கிரம் வஜ்ஜிராயுதம், (34) சூலம் இவைகளையும் மிகுந்த மகிமைகொண்டவைகளான மற்றத் தெய்வங்களி னத்திரங்களையும் மிகக் கொரேமான மாயா பாசத்தையும் சீக்கிரமா யெடுத்துக்கொண்டு அப்பலவான் (35) பத்தி

லக்ஷம் குதிரைகள் கட்டப்பெற்றதும் மிக சேர்த்தியுமான தேர்மீதுட்கார்ந்து மகா வீரர்களான ஸேனாதிபர்களுடனும், மகா பலவான்களான தன் பிள்ளைகளுடனும், (36) மகா [illegible]வர்களும், மிகுந்த சக்தமி[illegible]கின்றவர்களும், பர்பவாயுக்களைத் தரிக்கவர்களு மிலக்ஷம்வாகினி ஸங்கியை கொண்டவர்களுமான (37) சதுரங்க சைனியங்களுடனும் சீக்ரமாய் வெளிக்கிளம்பினான். ஓ! பூமிதேவர்களே! அப்போது யானைகளுடைய மதஜலங்களும் குதிரைகளுடைய வாய்நுரைகளும் சமுத்திரம் போல் மகா பயங்கரமாகவாயிற்று. (38) கடலின்பேரோசைக்கு மேற்கொண்ட வாத்தியகோஷங்கள் முழக்கப்பட்டன. (39) மேலு மப்போதம் மார்க்கமானது அநேககோடி சங்கியைகொண்ட குடைகளாலும் [illegible]வெண்ணிறங்களான த்வஜங்களாலும் ஸகலதிசைகளிலும் பறவிச் சூழ்ந்து மிகவும் நெருக்கமுளதாயிற்று. (40) அப்போது கழுகுகள்குடைகளின்மேலிலும் பருந்துகள் தேர்களின்பேரிலுமுட்கார்ந்தன. எங்கும் கொள்ளிக்கட்டைகள் பயங்கரமாக விழலுற்றன. (41) அப்போது காக்கைகள் பட்டமரங்கள்மீதுட்கார்ந்து கோரமாய்க் கத்தலாயின. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்வாறநேகவித வபசகுனங்களைப் போது தோன்றின. (42) இவ்விதமாகச் சிங்கமுகன் தனது சைனியக்கூட்டங்களுடன் வருவதைக்கண்டு பிரம்மன், விஷ்ணு முதலிய தேவரெல்லோர்களும் மிகப் பயங்கொண்டவர்களாகி ஸ்ரீ கந்தபிரானிடஞ்சென்று அந்தேவாதிதேவனை வந்தனித் தஞ்சலிகொண்டு பக்தியினால் வணக்கமுற்றவர்களாகி "ஓ! தேவாதிதேவா! கருணைக்கடலே! சிங்கமுகனென்று பெயர்பெற்ற மகாசுரனிதோ! வருகின்றானே! இவன் சூரபத்துமனுக்கு மற்றொரு தம்பி; இவனுயிரம் தலைகளைக்கொண்டவன்; மகா பலவான்; மிகவும் பெரியதான விரண்டாயிரம் கைகளையுடையவன். (45) இவனுயிரம் யோஜனை விஸ்தீர்ணமுடைய மிகவும் கெட்டியான மார்பைக்கொண்டவன்; மேலுமவன் சத்துருக்களைப் பலவந்தமாகச் சயித்தாயிர மண்டலங்களையாண்டுவருகின்றான். (46) ஒருநாள், எட்டுக்குலபருவதங்களாலு மெட்டுத்திக்கஜங்களாலு மெட்டுநாகங்களாலு மாதிகூர்மத்தாலும் சுமந்து தாங்கப்படாநின்ற விப்பூமியை (47) மகா பலவானும் மாயாவியும், மிகுந்த பாதகனும், மகா துஷ்டனுமான இவ்வசுரனெடுத்துத் தூக்கலானான். மேலுமித்திடவான் பிரம்மாண்டத்தோடுகூட விச்சகல உலகங்களையு மொரோ ருருண்டையாக விழுங்கக் கருதி (48) யொருக்கால் மகாமேருகிரியைப் பிடுங்கி யண்டகுண்டத்தி லடித்ததி லதுஸா

சமுராதில்லையென் றதனைமுன்போலிருந்தவிடத்திற் போட்டுவிட்டான். (49) இவன் ஸ்ரீ பரமேசுவரனு லருளப்பட்ட விருபாங்களிலும் மிழலாடப்பெற்ற வோர் சூலத்தைப் பிடித்திருக்கின்றான். இவன் மூக்தோனுகிலும்ஸ்ரீஹரி, பதினொருகோடி ருத்திரர்கள், (50) ஈசானன் இவர்களைமட்டி லிம்சிக்காமல் வழியோடு காத்துவருகின்றான். மகா பாதகனான வித் துபாத்துமனே யென்று மிவர்களைக்கூடத் தொழில் செய்யும்படி தொந்திரவுசெய்கின்றான். (51) ஆகையால் மகா பயங்கரனும், கொடியோனும், மிகுந்த பல பராக்கிரமசாலியுமான வப்போர்க்கொத்த இவ்வசுரனைச்சமுகரித்து ஓ! தேவாதி தேவரான கருணைக்கடலே! இத்தேவர்களைக் காப்பாற்றிடவேண்டு" (52) மென, ஸ்ரீ வடிவேலனவர்களது வசனங்களைக் கேட்டருளி மிகுந்த தயவோடு 'நல்லதப்படியே செய்வோ' மென்று திருவாக்கருளி, அருகினில் நின்ற வின்பமான ஸாரதியாகிய வாயுதேவனை நோக்கி (53) "ஓ! வாயுதேவா! மகா பெரியதான நமது தேரைச் சீக்கிரம் கொண்டுவாரு" மென அவ்வசனம் கேட்டுப் பக்கத்தில் நின்ற வீரபாகுவானவர் (54) ஸாக்ஷாத் ஸச்சிதாநந்த பரமாத்துமரூபியாகிய ஸ்ரீ குஹபிரானை வந்தனித்து "ஓ! தேவாதி தேவரான பிரபுவே! இவனுள்பட போர்முனையில் நேர்ந்த வெல்லோர்களையும் யானே (55) சமுகரிக்கின்றேன்; ஆகையால் தேவரீர் தம்பியான இவ்வெந்தனையனுப்பியருளல் வேண்டு" மென, அவ்வசனங்களை மனதினில் வைத்துக்கொண்டு திருமுகமலரில் மந்தஹாஸங்கொண்டவராகி (56) யத் தேவாதிதேவரானவர் வீரபாகுவை யுத்தத்திற் கனுப்ப, அவ்வீரனும் மற்ற இலக்ஷத்தெட்டு வீரர்களுடனும், சேனாதிபர்களுடனும் புறப்பட்டுத் துரிதமாகத் தமது விடுதிசேர்ந்து பிறகப்பலவான் ($57\frac{1}{2}$) நேர்த்தியான வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டு தும்பைப்பூமாலைகளா லலங்கரிக்கப்பட்டவராகிப் (58) பற்பல வாயுதங்களையுமெடுத்துக்கொண்டு மிகுந்த சுந்தரமான தேர்மீதுட்கார்ந்து அதேவிதமாய்த் தேர்கள்மீதுட்காரலான மகா பலிஷ்டர்களாகிய மற்ற வீரர்களுடனும், மகிமைகொண்ட வாயுதங்களைத் தரித்த வாயிரம் வாஹினி ஸங்கியைகொண்ட பூதர்களுடனும் புறப்படலாயினர். ($59\frac{1}{2}$) அப்போது திரண்ட புழுதிகள் கிளம்பலாகிச் சூரியனை மறைக்கலுற்றன. (60) அம்மகா சைனியங்களா லனேகவித வாத்தியங்கள் நான்குபக்கங்களிலும் முழக்கப்பட்டன. அப்போதவருக்கு முன்னிலையில் மேகங்களை யளாவிய துவஜங்களும் பற்பல விரத்தினங்களின் காந்திகளால் விளங்கிய வோராளமான குடைகளும் பிடிக்கப்பட்டன. ($61\frac{1}{2}$) இவ்விதமாக வம்

மகாபலசாலிகளெல்லா மோர் நொடிநேரத்துக்குள் ளுயுத்தரங்கம் சே
ர்ந்தார்கள். (62) அப்போது மிகுந்த கொடிய வாத்தியமுழக்கச்சத்தத்
தினால் காதுகளைச் செவிடாக்கப் பெற்றவைகளும், (63) சுழன்றோட
லுற்ற பெரியதான தேர்ச்சக்கிரங்களது விளும்புகளின் பயங்கரமான
மிகுந்த வோசைகளைக்கொண்டவைகளும், இயானைகளின் மணிகள் கு
திரைகளின் சதங்கைகள் இவைகளுடைய மிகுந்த வோசைகளால் பயங்
கரமாகியவைவயும், (64) குதிரைகளின் கனைத்தல், சிறந்த வியானைகளி
ன் பிளிறுதல் இவைகளது சத்தத்தைப் பெற்றவையுமான அவ்விருதி
றச் சைனியங்களுக்கும், மரம், மலை, கற்பாறை, கட்டை, சூலம், அ
த்திரங்கள், இவைகளை வருஷிக்கலுற்ற பூதர்களுக்கும், அனேகபாணங்
கள், சூலம், பெரியகத்தி, பட்டாக்கத்தி, சிறந்த எறிவல்லயம் இவை
களை வருஷிக்கலுற்ற வசுரர்களுக்கும், மிகுந்த கொடிய வயுத்தம் நேரி
டலாயிற்று. (65-66) இவ்விதமாகக்காலாட்களின் மிகுந்தவிரைத்தல்
களோ டொருவருக்கொருவர் கொடூரமாய்ப் பேசிக்கொண்டு சண்டை
யிடுகின்ற அவ்விருதிறத்தார்களுக்கும் மிகுந்த போர்க்கூட்டமுள்ளது
ம், உலகுக்கெல்லாம் மிகப் பயங்கரமுமான வயுத்தம் நடக்குமளவி(67)
லப்போது போர்தனில் தேர்சிகொண்டவர்களான வசுரரெல்லோர்க
ளு மொன்றுகூடி யவர்களா லெறியப்பட்ட மலைகளையும், மரங்களையும்,
இன்னுமுள்ள மற்றவைகளையும் துரிதமாகக் கண்டித்தெறிந்து (68) அ
ம்மகாசுரர்களெல்லா மச்சகல பூதர்களையும் துறத்தத் தலைப்பட்டார்க
ள். அப்படி யிருக்கையில் பூதசேனாபதியான பெருமைபொருந்தியஸி
ம்மனென்பவன் துரிதமாய்ப் புறப்பட்டு (69) மகா கோபத்தோடோ
ர் பெரிய தண்டத்தினா லவ் வசுரரெல்லோர்களையு மடித்தடித்துச் சிங்க
ம் யானைகளைக் கொல்வதுபோ லனேகம் கொடியர்களைத் தொலைத்துவி
ட்டான். (70) அதன்பிறகு அசுரப்படைத்தலைவர்களி லொருவனும்,
மகா பலவானும், சண்டையில் ஸ்ரீ விஷ்ணுவைப்போன்றவனும், மகாப
யங்கரனும், மகா பாவியும், பத்துத் தலைகளையுடையவனுமான யுதிட்டிர
னென்றவன் துரிதமாய்ப் புறப்பட்டுக் கூர்மையுள்ள பல பாணங்களை
வருஷிக்கையில் (71½) தேவச்சிரேஷ்டனான ஸிம்ம னோர்பெரியதண்
டத்தினா லவைகளையெல்லாம் துண்டித்து மறுபடியும் (72) மகா கோ
பத்தோ டவன்மீதெதிர்த்துச் சென் றவ்வசுரனது திடங்கொண்ட மா
ர்புகளிலடிக்க, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வடியினா லவன்
கவசம் சடிதியிற் பிளக்கப்பட்டது. (73) பிறகு கொடியோனான அசுர
னும் கடுஞ்சினம் கொண்டவனாகி யோர் பெரிய தண்டத்தைச் சுழற்றி

யவன் மார்பினிலடிக்க, (74) அத்தண்ட மத்தேவனது கடின மார்பினிற் பட்டமாத்திரத்திற் பொடிப்பொடியாகிவிட்டது. மறுபடி யவ்வசுரப்பாதக னத்தேவனை யதட்டிக்கொண் டோர் கண்டனக்கோடாலியை (75) யவன்மீது மிகுந்த வேகத்தோடெறியும்போ ததனையு மத்தேவோத்தமன் தண்டத்தினால் தூள்தூளாக்கிவிட்டுப் பிறகதிசீக்கிரமா யவனது சிறந்த வில்லையும் முறித்தெறிந்தனன். (76) பிறகவ்வசுர னத்தேவவல்லபன்மீது தனது வேலைப் பிரயோகிக்க, மகா வேகத்தோடு வருலுற்ற அவ்வேலாயுதத்தை யத்தேவன் மிகுந்த வாக்கிரகத்தோடு தன் சக்கிராயுதத்தினால் துண்டித்தெறிந்தான். (77)

இருபத்திமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் உச—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு மகா பாதகத்தொழிலுடைய அவ்வசுரவீரன் தன் வேல் முறியுண்டதுகண்டுமகா கோபத்தினால் பற்றியெரிவோன்போலாகிக்காலதண்டத்தைக் கையிற்பற்றிய இயமன்போல் மகா பயங்கரமான வோர் தண்டத்தை யெடுத்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அத்தேவச் சிரேஷ்டன்மீதெறிய, (1½) தேவனவ்வடியுண்டதினா லிரத்தம் பெருகலாவதால் மேனி குலையலாகிச் (2) சற்றோய்ந்திருந்து பிறகு வேகமாயோடிவந்து அம்மகாசுரனது விசாலமான மார்பினில் தண்டம்போன்ற தன் கைகளா லோங்கி யறைந்தவுட (3) னத்துராத்துமன் முகத்தினின்றிரத்தங்களை மிகுதியாகக் கக்கிக்கொண் டப்போதே யங்கு தரைதனில் மலைபோல் விழுந்து மரணமடைந்தான். (4) அதன்மே லசுரரெல்லோர்களு மொன்றுசேர்ந்து கோபத்தோ டவனுடன் சண்டை செய்தார்கள். அதுகண்டிலக்ஷம் வீரர்களி லொருவனான மகா பலசாலியும், இலக்ஷ்மீவிலாஸம் பொருந்தியவனும், தங்கம்போன்ற மேனியுடையோனும், மஹா வீரனுமான கனகனென்பவன் மிக விரைவாயோடிவந்து (5½) மகா கோபத்தோ டெல்லோர்களையு மம்புகளைக்கொண்டு துறத்தலானான். (6) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அசுரர்க ள

ப்போ தவன் முன்னிலையில் நிற்கத் திறமையற்றவர்களாகி யோட்டம் பிடித்தார்கள். அதன்மே லசுர சேனாதிபனான துர்முகனென்ற வோர் பாதகன் (7) மிகுந்த வலிமைகொண்டவனாகிப் பயந்தோடிய வப் படைகளைந் தேக்கிக்கொண்டுக் கோடையிடிபோல் மிகுந்த கர்ஜனம்ப ண்ணி மகா பயங்கரமான பாணங்களை வருஷித்தான். (8) அப்போது பூதர்களு மொன்று சேர்ந்துகொண்டு மிகுந்த சிங்கநாதங்க ளோடப் பாதகன்மீ தனேகம் மலைகள், மரங்கள், கற்பாறைகள் முதலியவைக ளை யெறிந்தார்கள். (9) பிறகு வஞ்சகயுத்தம் செய்யலுற்றவனான வ த்துர்முகனும் கடுஞ்சினம் கொண்டவனாகி நூறுருவங்களாக வேறுப ட்டுக்கொண் டத் தேவசைனியங்களோ டியுத்தம் செய்தான். (10) அப்போது பூதர்களுக்குத் தலைவனான வீரமார்த்தாண்டனப் பாதகனு டைய சூதையறிந்து புறப்படலாகி மகா கோபத்தோடு விஞ்ஞானத்தி ரத்தைப் பிரயோகஞ்செய்கையி (11) லப்போதசுரன் சூதிழந்து தா ன் மட்டில் தனிமையாக நிற்கலாகி மிகப் பரபரப்போடு துரிதமாய்க் கூர்மையுள்ள வாயிர மம்புகளைச் சொரிந்தனன். (12) பிறகு மகா ப லவானான வத்தேவனு மாயிரம் கணைகளா லவைகளைக் கண்டித்துவிட் டுப் பின்னு மேழம்புகளா லவனது திடமான வில்லையு மோரம்பினா ல வன் கவசத்தையும் பிளந்தெறிந்து (13) இன்னு மனேகம் கணைகளா லவனுடம்பையுந் நிரப்பியவுடன் கொடும்பாவியான அவ்வசுரன் சற்று மூர்ச்சையாய்க் கிடந்து பிறகு மாயையால் மறைந்துகொண்டு தேக மெங்கு மிரத்தம் பெருகி யோடலுற்றவனாகி யோட்டம்பிடித்தான். ($14\frac{1}{2}$) பிறகு பூதர்களெல்லா மப் பாவத் தொழிற்காரனான துர்முக னோடிவிட்டதை யறிந்து (15) 'உயுத்தத்தினின்றோடியவனைத் தொ டர்ந்து துரத்துவது நீதியல்ல' வென்று கருதி மிகுந்த வட்டகாசத் தோடு திரும்பிவிட்டார்கள். (16) இங்கு யுத்தத்துக்காகவந்த அசுர ரெல்லோர்களு மோட்டம்பிடித்தார்கள். அவ்வோட்டத்தைக் கண்ணு ற்று அசுரமன்னனும், (17) மகா பல பராக்கிரமசாலியுமான சிங்கமுக ன் துரிதமாக வெளிக்கிளம்புகையில் கேளீர்! தரணிதேவர்களே! மலை போன்ற வுருவமுடையவனும், மகா பயங்கரனுமாகிய அவ்வசுரன் மிகுந்த சிங்கநாதஞ் செய்துகொண்டு வருவதைக் கண்டு (18) பூத ர்களெல்லா மேகோபித்து மலைகளையும் மரங்களையும் வாரி வாரி வருஷி க்க, அவ்வாறு விடப்பட்ட மலைகளும் மரங்களும் அசுரனுடைய நெரு ப்புக்காற்றினால் பொசுக்கப்பட்டுத் திரும்பிவிழுந்தன. ($19\frac{1}{2}$) அவைக

ளிற் சிலது தூள் தூளாகிப் பூமியில் நான்கு பக்கங்களிலும் சிதறுண்டன. (20) மேலு மங்குள்ள சிங்கம் முதலிய மிருகங்களெல்லாம் சீக்கிரம் விழுந்தோடின. அப்போ தவன் முன்னிலையில் விழலான மலைகளாலும் மரங்களாலும் கிரஹ நக்ஷத்திரங்களுடைய மார்க்கம்கூடத் தடுக்கப்படலாயிற்று. (21) அப்போ தநுகண் டசுரன் மகா கோபம் கொண்டவனாகித் தேரினின்று குதித்து அதே மலை மரங்களை வாரியெறிந்து சில பூதர்களைக் கொன்றுபோட்டான். (22½) மேலு மம்மகாசுரன் சிலரை வாரித் தரைமீது வேகமாயடித்தும், (23) மற்ற சில பூதர்களை மலையின்பேரிலும், சூரியன் தேரின்பேரிலும், சிலரைக் கடல்களிலும், தீவுகளிலும் வலிமையோடு வாரிவாரி யடித்தெறிந்தும்,(24) சிலரை வாரி யெடுத்து முட்டியாற்குட்டிப் பற்களால் கடித்து அண்டச்சுவர்மீ தெறிந்தும், சிலரை வாரிச்சுழற்றி யடித்து (25) பிரம்மன் விஷ்ணு முதலியவர்களுடைய லோகங்களிலும், இந்திரன் முதலிய திக்பாலர்களுடைய மிகவகண்டவைகளான ஸ்தானங்களிலும் தூக்கித் தூக்கி யெறிந்தும், (26) சிலரை வடவாக்கினியிலும், மற்றவர்களைப் பாதாளத்திலும், சிலரைப் பூமியிலும் வாரியெறிந்து நிரப்பி யம் மகா பலவான்(27) இவ்விதமாகச் சகல வுலகங்களிலு மெல்லாத் திக்குகளிலும் வாரியிறைக்கலானான். தவிரவு மவன் சில பூதர்களைக் காலினா லுதைத்தும், சிலரைக் கால்களால் துகைத்தும், (28) காலினால் தலைகளை யிடறி முறித்தும், மற்றவர்களைக்கொடிய பார்வைகளால் பார்த்து ஹூம்காரம்செய்தும், (29) சிலரைக் கைகளாற் பிசைந்து கோபத்தோடு புஜித்தும், தவிரவு மம்மகா பாதகன் உலக்கை, குண்டாந்தடி, அம்பு, (30) கலப்பை, கண்டகோடாலி, சூலம், மரம், மலை, இவைகளாலு மின்னுமுள்ள மற்ற வாயுதங்களாலு மடித் தவயவங்களை யெல்லாம் சின்னபின்னமாக்கி யப் பூதர்களை மடிக்கலானான். (31) கேளீர்! பிராம்மணச்சிரேஷ்டர்களே! இவ்விதமாகப் பலபூதர்கள்மடியும்போது பிரம்மன், விஷ்ணு, இந்திரன், முதலியவர்களெல்லா மோட்டம்பிடிக்கத் தலைப்பட்டார்கள். (32) அதன்மே லப்பாதகன் வெகு சுந்தரமான தேர்மீதேறியவுடன் அக்கினிகோபனனென்ற வோர்பூதசேனாபதியானவன்மிகக் கோபம்கொண்டவனாகி யோர் நொடிக்குள் கிளம்பிவந்து (33) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சிங்கமுகனுக் கெதிராகத் தனது பராக்கிரமத்தைச் சொல்லிக்கொண் டம் மகாசுரன்மீது மகா கொரேமான வோர் பெரிய சூலத்தைப் பிரயோகிக்க, (34) அது மிகவும் கெட்டியான அவனது மார்பினிற் பட்டவுடன் முறிந்து விழலாயிற்று. பிறகத்தேவரக்ஷகன் மிகுந்த கோபாக்கினியோ டோர் தண்டத்தை யெடுத்

துக் (35) கற கற வென்று வேகமாகச் சுழற்றி யட்டகாசம் பண்ணி க்கொண்டு அவ்வசுரன் ஸாரதியையடித்து இயமனுடைய இராஜதானி யாகிய ஸம்யமினீ பட்டணத்துக் கனுப்பிவிட்டான். (36) கேளீர்! பி ராம்மணோத்தமர்களே! அது கண்டு சிங்கமுகனும் மிகப் பயங்கரமான வோர் தண்டத்தை யெடுத் தவன்மீ தெய்து அவனை மூர்ச்சைகொள் வித்தான். (37) பிறகவ் வசுரச்சிரேஷ்டன் ஸுமாலியென்ற மற்றோ ர் சாரதியை வைத்துக்கொள்ள, அப்போ தப்பூதசேனாபதி மிகக் கோ பத்தோடு வந்து (38) பெரிய மலைக்கு நிகரான அவ்வசுரச்சிரேஷ்ட ன்மீ தோருயரமான மலையைப் பிடுங்கி மசா கோபத்தோ டடிக்க, (39) மகா பல பராக்கிரமசாலியான அவ்வசுர னதனையே கையினாற் பற்றிக் கொண்டு சிறுவர் பந்தடிப்பதுபோ லத் தேவச்சிரேஷ்டன்மீ தடித்தா ன். (40) அதவன் மார்பினில் விழுந்ததா லப்போதே யவன் மூர்ச்சை யடைந்துவிட்டான். அவனவ்வாறு விழுந்தது கண்டு தேவர்களைக் கா ப்பவனான தண்டியென்பவ னோர் தண்டமதை யெடுத்து (41) வஜ்ஜி ரம்போன்ற கெட்டியான அவனது மார்பு நடுவினிலடிக்க, அதங்கு பட் டமாத்திரத்தில் பொடிப்பொடியாகி விட்டதன்பேரி (42) லத்தேவநா யகன் மகா கோபங்கொண்டு சிங்கத்தை யோர் மதங்கொண்ட வியானை யறைவதுபோல் மறுபடியு மவ்வசுரவேந்தனைக் கையா லறைந்தவுட (43) னக்கொடியோ னத் தேவனைக் காலினா லுதைத்துப் பூமியில் த ள்ளி யக்காலாலே யாகாயத்தில் வாரிவிட்டான். (44) உடனே யத்தே வச்சிரேஷ்டனோ வென்றால் மகா வேகமாக அவ்வசுரன்பேரிலே குதித் துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஓர் குரங்கானது மரங்களிற் கிளைக்குக் கிளை தாண்டுவதுபோல் விஸ்தாரமான அவனதெல்லாக் கை களிலும் (45) தாவித்தாவிக் குதித்து கோபத்தோ டடிக்கடி துகைத்து ம், கொடிகள்மீது வண்டுகள் சஞ்சரிப்பது போல் கைக்குக் கைஇலாகவ மாகத் தொத்தித் தொத்திப் பத்தியுலாவினன். (46) இவ்வா றுலாவலா ன அத்தண்டியையசுரன் மானிடர்க ளீக்களையடிப்பதுபோல் கையினாற் கோபத்தோடறைந்து பிண்டமாகப் பிடித்தெறிந்தனன். (47) பிறகத் தேவேசனோ வென்றால் தூரத்தில் விழலாகி மூர்ச்சைகொண்டனன். தவிரவும் சகல சேனாபதிகளு மவனு லோர் நொடிக்குள்ளாகச் சயிக்க ப் பட்டார்கள். (48) அதன்மேல் வீரரெல்லோர்களு மம்புகளைச் சொ ரிந்துகொண்டே துரிதமாகக் கிளம்பி வருகையி லவ்வம்புக ளவனது தேகம் முழுதும் மலர்மாரி சொரிவதுபோல் விழலுற்றன. (49) பிற் பாடசுரன் சிரேஷ்டமான தனதிரதத்தினின்றிறங்கி மிகுந்த வட்டகாஸ ம் செய்துகொண்டு சிங்கமியானைகளைப் பிடிப்பதுபோல் சத்துருக்களை

க் (50) கைகளாற் பிடித்துக் கோபத்தா லொருவரோடொருவனை ய டித்தும், சிலரைக் கால்வாரி யடித்தும், சிலரை யிரதத்தோடு தூக்கி யுயர வெறிந்தும், (51) மற்றவரை மிக வலிமைகொண்டவனுகி வேறுவிதமா யொருவரை யொருவரா லடித்துக் கொன்றும், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இப்படி யனேகவிதமாக அவ்வீரர்களையெல்லாம் ஜயிக்கலானுன். (52) அப்போ தெல்லோர்களும் மிகவும் பயங்கொண்ட மான்க ளோடுவதுபோ லோட்டம் பிடித்தார்கள். அதன்மேல் மகா வீரரான வீரபாகுவானவ ரவர்களோடுவதைக் கண்டு (53) திடமான வில்லை யெடுத்துக்கொண்டு கொடும் பாவிகளான அசுரர்கள்மீது கோடைகால மேகங்கள் போல் கணைகளை வருஷித்தார். (54) அப்போது மிகுந்த பாதகத் தொழிலைச் செய்யலுற்ற பல வசுரர்கள் மடியலானுர்கள். மேலுமோர் நொடிநேரத்துக்குள் நான்குவகைச் சேனைகளும் நாசமடைந்தன. (55) அங்குண்டான விரத்தப்பிரவாகத்தி லனேகம் தலையற்றவுடல்கள் கூத்தாடின. தவிரவு மப்போதங்கனேகம்கழுகு பருந்து முதலியவைகளும் பிசாசங்களும் சுற்றி வட்டமிட்டன. (56) அதுகண்டு ஒருவராலு மெதிர்க்க முடியாதவர்களான, சிங்கமுகனது நூறு பிள்ளைகளும் தேவேசரான வீரபாகுமீ தனேக பாணங்களைச் சொரிந்தார்கள். (57) அவரும் மகா வாக்கிரகம் கொண்டவராகி யவர்கள்மீ தனேகம் கணைகளைச் சொரிந்தனர். மகா பலிஷ்டர்களான அவ்வசுரர்களு மனேகம்கோடி யெண்கொண்ட பாணங்களை வருஷித்தார்கள். (58) அப்போதவரு மவைகளை யவ்வளவே பாணங்களால் கண்டித்துவிட் டவர்களது விற்களையும் தேர்களையும் மகா கோபத்தோடு சேதித்து மிகுந்த சிங்கநாதம்செய்தார். (59) பிறகவ்வசுரரெல்லோர்களுமொன்றுகச் சேர்ந்து "மஹா பலவானுகிய இவ்வீரனேடு வில்லெடுத்து யுத்தம்செய்யத்தக்கவ னெருவருமில்லை" (60) யென்று தீர்மானித்துக் கைதனிற் கத்தியைப் பற்றிய அவ்வீரனேடு தாங்களும் கத்திகளை யெடுத்துக்கொண்டு மிகுந்த சிங்கநாதம் செய்தவர்களாகிப் பற்பலவிதப் பயிர்ச்சி முறைப்படி சண்டைசெய்தார்கள். (61) பிறகு மகா துஷ்டர்களான அவ்வசுரர்க ளத் தேவோத்தமனைக் கத்தியாலும் வெல்லத் திறமையற்றவர்களாகி யவனைக் கொல்வதற்கெண்ணங்கொண்டு சுற்றிலும் சூழ்ந்துகொண்டார்கள். (62) கேளீர்! தரணிதேவோத்தமர்களே! மகா பலவானுன வீரபாகுவு மப்போது சிங்கமுகன் மைந்தர்களான அவ்வசுரப் பாதகர்களைத் தனது கூர்மையுள்ள கத்தியாகியவோர் ஆயுதத்தால் வீசிக் கொன்றுவிட்டு ($63\frac{1}{2}$) மிகுந்த மங்களகரமான

தனது தேர்மீது சடிதியிலேறிக்கொண்டனர். (64) அப்போது தேவர்கள் மிகுந்த சந்தோஷத்தோடு மலர்மாரி சொரிந்தார்கள். அதுகண்டு சிங்கமுகன் மிகவும் மனம் நொந்தவனாகி (65) "ஓ! கோ! இவனொருவனா யிருந்தே இவ்வெல்லா மைந்தர்களையும் கொன்றுபோட்டானல்லவா" வென்றோர்பக்கத்தி லிலஜ்ஜைகொண்டவனு மோர்பக்கத்தில் கோபத்தினால் ஜுவலிக்கலுற்றவனுமாகி யவன் மனதினிற் சிந்தித்ததாவது:—(66) "ஓ! இவ்வெல்லோர்களையும் மகா பலவானாகிய இவ்வீரனோடுகூடச் சாப்பிட்டுவிட்டு மேலும் கோபம் தீருவதற்காகச் சகல லோகங்களையும் நாசம்பண்ணிவிடுகின்றோ" (67) மென,அவ்வசுரன் தேரோடுகூட வீரபாகுவண்டைக்கு வந்தவுடன் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வாறு வரலான வசுரனை வீரபாகு வெதிர்த்துக் கொள்ளுகையி(68) லவனை நோக்கி யசுரனுரைத்ததாவது:—"அடா! நீ சுப்பிரம்மணிய னல்லனென்பது நிச்சயம்; ஆனால் நீ யிலக்ஷம் வீரர்களி லொருவனா? (69) அல்லது ஒன்பது வீரர்களி லொருவனா! இல்லாவிடில் நீ யோர் தூதனா? வென்பதைச் சத்தியமாகச் சொல்" என்று வினவப்பட்ட, பலவானாகிய வத் தரும மூர்த்தியானவ ரவன் முன்னிலையி லுத்தரஞ் சொல்லியதாவது:—(70) "ஓ! கேளாய்! அசுரா! எம்மை, நிகரற்ற பராக்கிரமமுடைய தேவாதி தேவரான ஸ்ரீ வடிவேலனது தாஸனென்றும், முந்தித் தூதத்தன்மையோடிங்குவந் தசுரரெல்லோர்களையும் நாசம் பண்ணலானவரென்றும் கவனத்திற்கொள்; (71) மேலு மெம்மைத் தேவோத்தமர்களெல்லாம் 'வீரபாகு' வென்று சொல்வார்கள். ஓ! அசுரா! நல்லது! யாம் யாவரானாலு மதனாலுந்தனுக்காகுவது யாது?" (72) என்று கம்பீர வாக்கினா லுரைத்த வத்தேவேசனை நோக்கி யசுரன் "ஓ! தூதா! பலவீனர்களான வசுரர்களைக் கொன்றதினா லுந்தனுக் கென்ன வலிமை? (73) மிகவு மிளைஞர்களான வெந்தன் மைந்தர்களை நீ யிப்போதிங்கு கொன்றிருக்கின்றாயல்லவா! ஆகையா லுந்தனை யோர் நொடிக்குள் கொன்று பருந்து முதலியவைகளுக்குத் திருப்தி செய்விக்கின்றோம்; (74) மேலுமதிசீக்கிரத்தி லுந்தன்கந்தன், பூதர்கள், தேவர்கள் மற்றவீரர்கள் இவர்களதாண்மையைப்போர்முனையில்தொலைத்துவிடுகிறோம்" என்றது முதலிய, தன்னைப்பற்றிய வின்னும் பல பராக்கிரமங்களை யப்போது கூறலானான்.(75) ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! சிங்கமுகனா லிவ்வாறுரைக்க

ப்பட்ட வசனங்களெல்லாம் மிகக் கொரோமா யிருந்தபடியா லவைகளை வீரபாகுத் தொன்னைகளை யொத்த நேர்த்தியான தமதிரு செவிகளாலும் மெல்ல மெல்ல வுட்கொண்டுத் தமதிருவிழிகளாகிய குழைறகளினின்று கோபாக்கினியைக் கக்கவிட்டுக்கொண் டிருக்கலாயினர். (76)

இருபத்திநான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் உரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பா டத்தேவேசனுன வீரபாகுவானவர் தீக்ஷணமான பத்தத்திரங்களை யத்துராத்துமனுடைய கெட்டியான மார்பின் மத்தியில் பிரயோகிக்க, (1) அவை யங்கு பட்டமாத்திரத்தில் முறிந்து பூமியில் விழுந்தவுட னப்போ தசுரசிகாமணியானவன் ஜுவலிக்கலுற்ற மகாபயங்கரமான வோர் தண்டத்தை யவர்மீ (2) தெறிந்தனன். அப்போது வீரனு மதனை நான்கம்புகளாற் கண்டித்துவிட்டு மறுபடியும் மகா கோபத்தோடவன் சிரசினி லாயிரம் கணைகளைத் தொடுக்க, (3) கேளீர்! தாணிதேவர்களே! அவைகளு மங்கு விழுந்த மாத்திரத்திற் பொடிப்பொடியாயின. பிறகு சிங்கனும் மிக வாக்கிரகம் கொண்டு மகா பயங்கரமான வோர் சூலத்தைப பிரயோகிக்கையி (4) லதனைக் கண்டிப்பதற்காக வீரனல் விடப்பட்ட வாயிரம் பாணங்களையும் துண்டித்துவிட்டுச் சடிதியி லவரண்டைக்கு வரலாயிற்று. அப்போ (5) துடனே வீரனதனைக் குறிப்பிட்டு மறுபடி யாயிர மம்புகளை யெய்தும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவைகளையு மது துரிதமாய்க் கண்டித்துவிட் டவரருகினில் வந்துவிட்டது. (6) அப்போது வீரபாகு மகா பரபரப்போடு கத்தியை யெடுத்து மகா கொரோமான வச்சூலத்தை முறித்தெறிந்தவுட (7) னப்போது தேவரெல்லா மவாது மிகுந்த பராக்கிரமத்தைக் கண்டு களிப்படைந்தார்கள். மறுபடியும் மிகுந்த பலசாலியான வீரபாகு மிக வாக்கிரகம் கொண்டு எல்லாவற்றையும் சமுகரிக்கலுற்ற மகா பெருமைதங்கிய ஸ்ரீ பாசுபதாத்திரத்தைப் பிரயோகிக்க, (8½) அப்போதசுரனும் மகா பயங்கரமான வதே யத்திரத்தைச் சடிதியிற் சந்தானிக்கலாகையி (9) லப்போ தவ் விரண்டத்திரங்களுமொன்றோடொன்று சண்டையிட்டுக்கொண்டு வந்தவழியோடு திரும்பி

ச் சென்றன. அப்போது வீரபாகு திருவுளமதி லவ்வசுரனைப்பற்றி மிக வாச்சரியப்பட்டுக்கொண்டு "ஓ! கோ! இவ (10) னுயுத்தமதில் ஸ்ரீ வடிவேலனா லொழிய வெம்மால் கொல்லப்பட முடியான்; ஆயினு மவனது சேனைகளைச் சமுகரித்துவிடுவோ" மென்றுகருதிக் கோபத்தினால் மிகவும் ஜுவலிக்கலுற்றவராகிப் (11) பதினான்கு பாணங்களை விட்டவனது ஸாரதியைக் கொன்றனர். பிற்பா டசுரனும் மகா கோபங்கொண்டு மிகப் பயங்கரமான வோர் கதையைப் பிரயோகிக்க,(12) அது வீரனது திருமேனியிற் பட்டமாத்திரத்தி லாயிரம் துணுக்குகளாக முறியலுற்றது. அதன்மே லத்தேவன் சினங்கொண் டாயிரமம்புகளா லவனது தேரை யுடைத்துவிட்டார். (13) தவிரவும் ஸகல பூதர்களும் மலைகள், மரங்கள், குண்டாந்தடிகள், கற்பாறைகள் இவைகளை வருஷித்துக்கொண்டே யம் மகாசுரனை வளைந்து கொண்டார்கள். (14) அதன்பிறகு சிங்கமுகன் வேறிரதமேறிக்கொண்டு மகா கோபத்தோ டாயிரம் விற்களையெடுத்துச் சடிதியில் நாணேறிட்டு (15) மகா பயங்கரமாய்க் குணத்தொனிசெய்து மிகுந்த கோலாஹல சத்தம் செய்தவனாகி யப்பூதர்கள்மீ தனேககோடி சரங்களை வருஷிக்கையில் (16) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதனேக பூதர்க ளுயிரிழந் தவ் வுயுத்தரங்கத் தினின்று மலைகள், நதிகள், (17) அரணியங்கள், தீவுகள், திசைகள், ஆகாயம், சிம்சுமாரசக்கிரம், சூரியனுடைய தேர், பிரம்மாண்டம், பாதாளம், (18) சக்கிரவாளகிரி இவ்வெல்லா விடங்களிலும் கேளீர்! முனிவர்களே! கொஞ்சமேனு மிடைவெளியின்றி விழுந்து நிரம்பலாயின. மூவுலகங்களிலு மிப்பாணங்களா லடிபடாத பிராணியே யில்லை. (19) அப்போது வீரபாகுவும் வெகு கோபங்கொண் டோர் நொடிநேரத்துக்குள்ளாக வனேகம் கூர்மையான பாணங்களா லனேக மசுரப்படைகளைக் கொன்றுபோட்டனர். (20) மேலு மவனதம்புகள் மகா வேகத்தோ டெங்கெங்கு செல்லுகின்றனவோ தேவனு மங்கங்கெல்லா மனேக மத்திரங்களைவிட்டவைகளைத் துண்டித்துவிட்டனர். (21) அதைத் தேவரெல்லாம் கண்டு மிகுந்த வாச்சரியம் கொண்டார்கள். பிறகு சிங்கமுகன் சினம்கொண் டவரிடத்துத் தன் விருதாவளிகளைக் கூறிக்கொண்டான். (22) அப்போது வீரனு மம்மகாசுரனை நோக்கிக் கொடிய வசனங்களை யுரைத்தனர். பிறகசுர னட்டகாஸம் செய்து பயமுறுத்திக்கொண்டு மகா கொரமுடைய பதினாயிர மம்புகளை யத்தேவேசன்மீ தெய்ய, ($23\frac{1}{2}$) தேவனு மவைகளை யோராச்சரியம்போ லோர் நொடிக்குள் (24) கண்டித்துவிட்டு மிகுந்த சிங்கநாதம் செய்தவராகி யப்பாதகன்மீது கோடை

கால மேகங்கள்போ லாயிரக்கணக்குகளாக வனேக பாணங்களை வருஷி க்குமளவி (25) லவ்வசுர னுக்கிரகம் கொண்டு பத்திலக்ஷம் பேரம்புக ளா லவர் விட்ட பாணங்களைத் துண்டித்துப் பின்னரு மனேககோடி ச ரங்களை வருஷித்தான். (26) பின்பு தேவனு மவைகளை யாயிரம் கோ டி யம்புகளைவிட்டு முறித்துத் தள்ளினர். பிறகசுரன் மிகுந்த பரபரப் புக்கொண்டு இரண்டாயிரம் சிறந்த வம்புகளால் (27) மிகுந்த தொ ரையோ டவ்வீரனுடைய திடங்கொண்ட வில்லை முறித்தெறிந்து மறுப டியவர் வேறு வில்லை யெடுப்பதற்கு முந்தியே யவரை யனேககோடி பாணங்களால் (28) திருமேனி முழுது மிரத்தம் தாரை தாரையாகப் பெருகும்படி யடித்தான். அங்ஙனமாயினும் வீரன் மறுபடியும் மிகவு ம் திடங்கொண்ட வோர் சிறந்த வில்லை யெடுத்து வளைத்து (29) அ வ்வசுரவேந்தன்மீது நூறுயிர மம்புகளைத் தொடுக்க, அவனு மவைகளை மகா கோபத்தோ டிலக்ஷ மம்புகளாற் கண்டித்துப் (30) பிறகு மவ் வசுரமன்னன் மிகுந்த சத்தத்தோடவர்மீ தனேகம் கணைகளைச் சொரிந் தான். அதன்மேல் மகாபலசாலியான வத்தேவசக்ஷகருமவைகளையெல் லாம் துரிதமாய்க் கண்டித்து (31) மறுபடியு மோரிலக்ஷம் சத்திரங்க ளைப் பிரயோகித்து மகா வுன்னதமான அவனது சுந்தரரதத்தை யுடை த்தெறிந்தனர். (32) பிற்பாடு சிங்கமுகன் சினங்கொண்டு நேர்த்தியா ன மற்றோ ரிரதத்தின்மீது பூமியை நடுங்கச் செய்வோன்போல் மகா வேகத்தோ டேறப்போகையி (33) லப்போதே யத் தேவோத்தமன் தீக்ஷணமான பல கணைகளைத் தொடுத்துக் கேளீர்! பிராம்மணோத்தம ர்களே! அவன் கைகளிற் பற்றிய மகா கொடியவைகளான வாயிரம் விற்களையும் மகா கோபத்தோடு துரிதமதி லிரண்டிரண்டு துண்டுகளாக க் கண்டித்து விட்டனர். ($34\frac{1}{2}$) அப்போ தெல்லாப் பூதர்களும் மிகுந்த வட்டகாசம் செய்தார்கள். (35) அதுகண்டப் பாதகனும் மிகுந்த கோ பாக்கினியால் பற்றியெரிவோனுகி மனதினி லாலோசித்துக்கொண்டு மிகுந்த வலிமையையுடைய மகா கொரமான மாயா பாசத்தைத் (36) துரி தமா யெடுத்துச் 'சகல சத்துருக்களையு முதயகிரிதனிற் கொண்டு போ ட்டுவிடு' என் றதற்கு மந்திரம்பண்ணி யதனைப் பிரயோகித்தவுடன் கே ளீர்! முனிவர்களே! (37) மகா கொரமும், கன்னம்கரேலென்ற கு ருட்டிருளாற் சூழப்பெற்றதுமான வப்பாசமானது சகல சத்துருக்களை யும் பயமுறுத்திக்கொண்டு மிகுந்த சத்தத்தோடு மகா வேகமாய் வெ ளிப்புறப்படுகையி (38) லதைக்கண்டு தேவர்களையும் பூதர்களையும் கா ப்பவர்களான வீரர்கள் 'இது மாயை' யென்றே யெண்ணினர்கள். அ ப்போதே யப்பாசமானது பூதர்களையும், சேனுதிபர்களையும், வீரபாகு

முதலிய வீரர்களேயும் (39) கட்டி யவ்வுதயகிரிதனிற் கொண்டவ் வெல்லோர்களேயும் போட்டுவிட்டது. ஓ! கோ! இது துன்பம்! பிற்பாடச்சிங்கமுகப் பாவியானவ னட்டகாசத் தொனிகளேச் செய்துகொண்டு (40) "ஓ! கோ! இப்போ தச்சிறுவனெங்கிருக்கின்றான்? அவன் மிகவும் பயங்கொண்டவனுகி யோட்டமெடுத்துவிட்டானே?" வென்று தன் தூதர்களே வினவியதில் 'மிகுந்த வலிமைகொண்ட அவ்வாறுமுகன் நேர்த்தியான வேமகூடபுரமதி லாயிரம் வாஹினி பூதகணங்களாற் றமது திருவடிக் கமலங்கள் போற்றப்பெற்றவராகி விளங்கிநிற்பதை' யவர்கள் மூலமா யறிந்துகொண்டு (42) ,, ,, ஓ!அவனங்கு மிகவும் பயங்கொண்டிருக்கின்றான்: நல்லது! யாமங்கு சென்றவனே யோர்நொடிக்குள் ஜயித்துவிட்டிங்கு திரும்பி வருகின்றோ" மென்றவ் வசுரப்பாதகன் (43) சகல வசுரர்களுக்கும் சொல்லிவிட்டுத்தான் துரிதமாகப் புறப்பட்டனன். அப்போது வாயுதேவ னவ்வெல்லாவற்றையும் சீக்கிரந்தெரிந்துகொண்டு ஸ்ரீவடிவேலனிடத் தறிவித்துக்கொண்டதாவது:—(44) "ஓ! பிரபுவாகிய ஸ்வாமீ! வீரபாகு முதலிய வெல்லோர்களு மிவ்வசுரனுலே மாயாபாசத்தினுற் கட்டப்பட்டு சூரியனது உதயகிரிதனிற் கொண்டு போடப்பட்டிருகிறார்க" ளென்று ஸாரதியான வாயுதேவ னறிவிக்க, (45½) அதையவன் முகமாய்க் கேட்டருளி ஸ்ரீ தேவஸேனுபதியானவ ருடனே (46) திவிய ஸிம்மாஸனத்தினின் றிறங்கி 'ஓ! அவ்வசுரனெங்கிருக்கின்றா' னென்று வினவ, வாயுதேவன் 'ஓ! சுவாமீ! அவனிதோ வருகின்றா' னென்றான். (47) பிற்பாடு ஸ்ரீ பகவானுனவ ருயுத்தம் செய்வதாகத் திருவுளம் கொண்டு பிரம்மனுல் கொண்டு வைக்கப்பட்ட பற்பல விரத்தினங்களாற் சிங்காரிக்கப் பெற்ற பாதுகைகளேத் திருவடிக் கமலங்களிற் பூண்டு புறப்பட்டுத் திருமாளிகையின் வாசற்படிகளேத் தாண்டி (48½) வாயுவாற் கொண்டு வரப்பட்ட மிகவும் ஜுவலிக்கலுற்ற திவிய ரதத்தின்மீ தேறிக்கொண்டு (49) பிரம்ம விஷ்ணுக்களால் மலர்களே வாரிச் சொரிய பெற்றவராகியும், தாமரைத்தண்டு நூற்களுக்கு நிகரானசாமரத்தைப்பற்றிய(50) விந்திரனுலும், விசித்திரமான விசிறிகளேக்கைகளிற்ப் பற்றிய மற்றத்தேவர்களாலும், இருபாரிசங்களிலு மொளிபொருந்திய முத்துக்குடைகளேப் பற்றிய சூரிய சந்திரர்களாலும், (51) பகலின்கண் பெரிய தீவட்டி பிடிக்கலுற்ற அக்கினிதேவனுலும், பிரகாசம் பொருந்திய நேர்த்தியான கத்தியைக் கையிற்கொண்டு தொடர்ந்துச் செல்லலுற்ற இயமனுலும், (52) சிறந்த காஹளவாத்தியத்தை முழக்கிக்கொண்டு முந்திச் செல்லலுற்ற நிருருதியாலும், காளாஞ்சியைக் கைமீது கொண்டு தொண்டூழியம் செய்யாநின்ற வ

ருணனும், (53) அநேகவிதமாய்த் தங்க வெற்றிலைப் பெட்டியைப் பற்றிச் செல்லாநின்ற குபேரனும், பெரியதான சூலத்தைக் கைமீது கொண்ட விசான தேவராலு மின்னும் பற்பல வுபசாரங்களைச் செய்ய லுற்றமற்றத்தேவர்களாலும் இவ்கூடுமீவிலாஸம்பொருந்தப்பெற்றவரா கி (54) ஸ்ரீ முருகேசன் புறப்பட்டுச் செல்லுகையி லப்போ தொரோகால த்தில் மிகுந்த பலவாத்திய முழக்கச் சத்தங்க ளுண்டாயின. (55) அ ப்போ தேராளமான வெண்குடைகளும் துவஜங்களின் வரிசைகளும் பு றப்பட்டன. மிகுந்த மங்களகரம் பொருந்திய சில துவஜங்கள் பிறபக் கங்களிலும் பிடிக்கப் பட்டன. (56) அப்போது முனிவர்கள் தோத்தி ரம் பண்ணினார்கள். நாரதர் முதலியவர்கள் சங்கீதம் பாடினார்கள். ம துரமான கண்டநாதத்தையுடைய கட்டியக்காரர்கள் ஸ்ரீ பகவானுடைய விருதாவளிகளைப் படித்தார்கள். (57) அனேக பூதர்கள் மகா கொடோ ங்களான வாயுதங்களைக் கைநுனியாற் கறகற வென்று சுழற்றிக் கொ ண் டங்கு மிங்கு மோடினார்கள்; மேலு மப்போது காஹளி வாத்தியங் களுடைய மிகுவும் நேர்த்தியும் மதுரமுமான சத்தங்கள் கேட்கப்பட்ட ன. தவிரவும் "ஓ! ஜயா விஜயீபவா! தேவாதி தேவேசா! அடியார்க் கு நேசனே! ஸகல புவனங்களையும் காப்பவனே! (59) தேவரீர் திரு வடிகள்மீது பக்தி செய்வதிலே முயன்றிருக்கின்ற வித்தேவர்களை யெ ல்லாம்காத்தருளவேண்டும்" என்றும், "ஆ! ஆ! அசுரகுலத்தை அடியோ டுதொலைக்கின்றபகவானிதோவருகின்றார்; வருகின்றார்; (60)தேவசைனி யங்களைக் காத்தருளுநேவோரிதோ!வருகின்றார்; சகல லோகேசுவானிதோ வருகின்றார்; ஸ்ரீபார்வதிமைந்தனிதோவருகின்றார்: சத்துருக் கூட்டத்துக்குச் சிங்கமாகியவ ரிதோ வருகின்றார்: (61) அசுரர்களுக்கி யமனான மகா தேவ குமாரனிதோ! வருகின்றார்; திருவேலைப் பற்றியதால் பிரகாசமாய் விளங்கலுற்ற கைதனைக் கொ ண்ட ஸ்ரீ கந்தபிரா னிதோ! வருகின்றார்; (62) அடியார்களைக் காப்ப தையே கடமையாய்க் கொண்ட ஜகதீசனிதோ! வருகின்றார்; லீலாமாத் திரத்தால் ஸகல வுலகங்களையும் திருவிளையாட லருளலுற்றவரும், ஸகல லோகங்களாலும் வந்தனிக்கப படுவோரும், ஸகலப் பிரா ணிகளுடைய ஹிருதய குஹைகளிலும் விளங்கி யிரானின்றவரும், (63), பரம கலியாண குணசீலரும், நிகரற்ற பராக்கிரம முடையவ ருமான ஸ்ரீ குஹபிரானிதோ வருகின்றார்; தேவர்களுக் கீசுவரனும், அஷ் டைசுவரியங்களும் நிறையப் பெற்றவரும், (64) எல்லாவற்றையு மறி ந்தவரும், எல்லா வுலகங்களையும் நடத்துவோரும், விஷ்ணு முதலியச கல தேவர்களாலும் வந்தனிக்கப் படுவோரும், ஸகலர்களாலும் பூஜிக்கப்

படுவோரும், ஸகல ஜகங்களுக்கும் சிருஷ்டி ஸ்திதி ஸம்கார காரணருமான மகாப்பிரபு இதோ வருகின்றார். (65) ஸ்ரீ சர்வேசுவரனுக்கு நிகரான புகழுடையோரும், ஸ்ரீ சம்புவின் நேசத்திற் கென்று முரியவரும், அணிமாதி குணங்களை யுடையவரும், சுயாதீன முடையோரும், என்றும் ஸகலங்களையும் செய்வோரும், (66) எல்லாப் பிராணிகளாலும் கேட்கத்தக்கவரும், எல்லோர்களுடைய செவிகளுக்கும் மிகுந்த சுகத்தை யளிப்பவருமான வடிவேல னிதோ வருகின்று" றென்றதுமான மிக நேர்த்தியான சத்தமானது படகம் முதலிய வாத்தியங்களின் பேரொலியை யதிக்கிரமிக்கலாயிற்று. (67) அப்போது ஸ்ரீ முருகேச னிவ்வாறு முதலிய, மூவுலகினிலும் வியாபிக்கலான பேரொலியைக் கேட்டருளிக்கொண்டே மகா பலசாலிகளான வீரர்களுட னுயுத்தகளத்துக்கு விஜயமாயினர். (68)

இருபத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் உசு—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்ரீசுப்பிரம்மணியன் பிரம்மன் விஷ்ணு முதலிய சகல தேவர்களையு மப்போது தூரத்தில் நிறுத்திவிட்டுத் தான் மிகுதியிருந்த வீரர்களோ டோரிடத்தி லிருந்துகொண்டனர். (1) . மரங்கள், மலைகள், கற்கள் இவைகளை வாரிவாரிச் சொரியலுற்ற பூதர்களுக்கப்போது மிகுந்த துராத்துமர்களான வசுரர்களோடு கொடிய சண்டை யுண்டாயிற்று. (2) அவற்றி லசுரர்கள் மகா பலசாலிகளான பூதர்களால் துன்பமடைந்து தோல்வி யுண்டார்கள். அதுகண்டு மகா பயங்கரமான சரீரத்தை யுடைய சிங்கமுகன் புறப்படுகையிற் (3) பூதர்கள் மகா கோரமான பெரியவாகிருதிகொண்ட வச்சிங்கமுகன்மீது மலைகளையும் மரங்களையும் கற்களையும் வாரியிறைத் தெதிர்த்தார்கள். கேளீர் பிரம்மணோத்தமர்களே! அப்போதவ னவ்வெல்லோர்களையு மொரேகாலத்தில் தனதிரண்டாயிரம் கைகளாலும் துரிதமாய் வாரியெடுத்துப் ($4\frac{1}{2}$) பெரும் தேகத்தையுடைய வச்சிங்கமுகன் தன் வாய்களைத் திறந்து வயிற்றுக்குள்ளெறிந்து கொண்டான். (5) அதன்மேற் சிலபூதர்க ளவனது காதுமூக்குகளின் துவாரங்களால் வெளியில் வந்து துரிதமாய்த் தூரத்திலோடி

ப் போனார்கள். (6) வயிற்றுக்குள் போன சிலபூதர்கள் கேளீர்! தர ணிதேவர்களே! வெளியில் வருவதற்காகத் தங்களாயுதங்களாலவன் வ யிற்றைத் துளைக்க விடம்தேடி யங்கோடித் திரிந்தார்கள். (7) பயங்க ரனாகிய அம்மகாபாவியானவ னிவ்வாறாக ஆயிரம் வாகினிகணக்குள்ள அ வ்வெல்லாப் பூதர்களையும் விழுங்கி விட்டு (8) மறுபடியு மங்குள்ள ம ற்ற வீரர்களையும் சேனாதிபர்களையு மெடுத் தங்ஙனமே விழுங்கிவிட் டான். அப்போது சத்துருநாசகரான முருகேசனொருவர்மட்டிலே யிவ் வெல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தனர். (9) அவையெல்லா ம் கண்டு சிலதூதர்கள் சீக்கிரமாயோடிச் சூரனிடம் சென்றிவையெல் லா முள்ளபடி யுரைத்தார்கள். (10) பிறகவ்வசுரேந்திரன் வீரபாகு மு தலிய வீரர்கள் மாயாபாசத்தாற் கட்டுண்டதையும், பூதரெல்லாம் தம் தம்பியினால் விழுங்கப்படலானதையும் கேட்டு மிகக்களிப்புற்றவனாகிய ப்போதத்தூதர்களுக்கு மிகுந்த திரவியங்களையும் நேர்த்தியான ஆடை யாபரணங்களையும் கொடுத்து (11-12) அவ்வனேகம் பேர்களைப் பெருமை தங்கிய தன்தம்பி யிருக்குமிடத்துக்கனுப்பிவிட்டுத் தான் சிங் காதனத்தினின்றிறங்கிச்சகல சத்துருக்களையும்பக்ஷிப்போனான தன்தம் பியைப் பார்ப்பதற்காகக் கோபுரத்தின் மீதேறிக்கொண்டான். ($13\frac{1}{2}$) பி றகு சூரனிவ்விதமாய்க்கோபுரத்தின்மீ திருந்துகொண்டுபோர்க்களத்தில் தனிமையாய் நின்ற ஸ்ரீ வடிவேலனையும் (14) பயங்கரமான வுருவத்தைக் கொண்டவனும் மகாபெரிதான சரீரத்தையுடையவனுமான சிங்கமுக னையும் பார்த்து மிகுந்த சந்தோஷம் கொண்டு பின்னுமங்கே யிருந்தா ன். (5) இவ்விதமா யசுரமன்ன னக்கோபுரத்தின்மீதிருந்து கொண்டி ருக்குமளவில் ஸ்ரீ கந்தபிரான் சிங்கமுகனோடியுத்தம்செய்வதற்காகச் ச டிதியிற் புறப்பட்டனர். (16) அப்போதே திரண்ட வசுரர்களும் மிகு ந்த சத்தம் செய்துகொண் டவரையெதிர்த்துக் கொண்டார்கள். பிறகு ஸ்ரீ தேவேசன் கேவலம் கொசுகுக்கு நிகரான அவ்வசுரர்களைத் திருக் கண்ணுற்று விளையாட்டாகவே (17) தமதுமேன்மை பொருந்திய வி ல்லைவளைத்து நாணோடு சேர்த்து உரகனுற்ற ஸர்ப்பம் போல் மகாப யங்கரமான வஞ்ஞாணை மீட்டினையி (18) லப்போது பிரம்மாண்டம் வெடிக்குங்கா லுண்டாகும் பெரும்சத்தம்போ லோசை யுண்டாயிற்று. அப்பேரொலியைக் கேட்டமாத்திரத்திற் சிங்கமுகன்குதிரைகளெல்லாம் பீதிகொண்டு (19) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தலைதொங்கவி ட்டுப் பூமிதனில் விழலாயின. பின்புடனே சிங்கமுகன் 'ஓ! இவன்தான் தாரகனைக் கொன்றவ' (20) னென்று நிச்சயித்துக்கொண்டு அம் ம்காபலவான் ஸ்ரீ குஹபிரானண்டைக்குவந்தப்போதவரைநோக்கி சவன

முனைந்ததாவது:—"ஓ தேவனே! நீர் யாது நிமித்தமிங்கு வரலானீர்? (21)
எங்களது சத்துருக்களை யாங்கள் கொல்வதினா லுமக்கென்ன குறைவு?
ஆகையால் நீரிப்போது வழியோடு திரும்பிச்சென்றுவிடு" (22) மெ
ன. இவ்வாறவனதுவசனத்தைக் கேட்டருளிஸ்ரீதேவஸேனாபதியானவர்
மந்தஹாஸம் கொண்டவராகி "அடா! அசுரா! யாங்கள் நல்லோர் கொ
டியோர்களால் தீங்களிக்கப்படுவதைப் பார்க்கச் சகியோமல்லவா? (23)
தவிரவும் நல்லோரை யிரக்ஷிப்பது மதுபோலவே தீயோரைக் கண்டிப்
துமேயெங்கள் கடமையாகையால் யாமிப்போதிங்கு வரலானேம். (24)
கேளாய்! மகாசுரா! வீணாய்வளர்த்துவதிலென்ன பயன்? பாவிகளான
வுங்களால்தேவரெல்லாரிம்சிக்கப்படுகின்றபடியாலுங்களைக்கொல்வதற்
கேயிங்கு வரலானேன்" மென, (25) சிங்கன் சொல்லுகிறான்:— "ஓ! தே
வனே! இப்போதும்மால்தேவர்களைவிடுவிப்பதற்கெவ்வளவும்முடியாது;
எங்களுக்கு வலிமை யில்லாவிடி லல்லவோவுமது கோரிக்கை நிறைவே
றும்; (26) ஓ! வளர்த்துவதாலென்ன? அசுரர்களைப் போர்தனில்
வெல்வதற் குமது தகப்பனாலும்முடியாது. ஆகையால் நீர்நமதுஉத்திர
வின்படி யோடிவிடும். (27)மேலும்சத்துருக்களைக்கதறவடிக்கலுற்ற யா
மோ எல்லோர்களையு மெடுத்து விழுங்கியும்,மற்றவர்களை மாயாபாசத்தி
னாற் கட்டி யுதயகிரியிற் போடுவித்தும், சகலபடைகளையும் கொன்று
ம் போட்டனம்: சிறைமீதுள்ள தேவர்களை மீட்பதற்காக நீரொருவர்தா
ன் மிஞ்சியிருக்கின்றீர். (28-29) அப்பேர்க்கொத்த வெம்மை நீர் வாலி
பனான தாரகன்போல் வீணாய் நினைக்கலாகின்றீர். நம்மாற் கொன்றுவிட
ப்பட்டவர்களு மின்னும் மற்றோடிப்போனவர்களும் கணக்கிலடங்கார்க
ள். போர்முனையில் வந்திருக்கின்ற நீரெம்மை யப்பேர்க்கொத்தவராக
வறியவில்லை. (30½) நல்லது! கட்டிலகப்பட்ட தேவர்களையு மிங்குவ
ந்துசேரலான வும்மையும் கனவிலும்விடோ" (31) மென, இவ்வாறு
ரைக்கலான பேச்சுக்காரனாகிய மகாசுரப்பாதகனைத் திருக்கண்ணுற்றுஸ்ரீ
பகவானானவர் பிரகாசம்பொருந்தியபல்வரிசைக்காந்தியால் விசப்பெற்
றவராய்க்கொஞ்சம் புன்னகைப்புற்று(32)ஸ்ரீதேவேச னோத்திரத்தினா
ற் கடினமானஅவனது மார்பைப் பிளக்கலாயினர். அப்போதிரத்தம்
தாரைதாரையாய்ப் பெருகி யோடிவரலான துவாரத்தின் வழியா யவன
து வயிற்றுக்குள்ளிருந்த சிலபூதர்கள் (33) வெளியில் வந்து மிகவே
கமா யோட்டம்பிடித்தார்கள். கேளீர்! பிராம்மனோத்தமர்களே! அப்
பாதகனப்போதே தன்கையினாலதனைப் பொத்திக்கொண்டு (34) மற்ற
வர்களைவயிற்றுக்குள்ளேதேக்கிமகாபயங்கரமானவோர்பெரிய தண்டத்
தை யெடுத்துக் கோபத்தினாற் பற்றியெரிவோனாகி யப்பார்வதி மைந்

தன் மீதேறிய, (35) அப்போது தேவேசனுமத் தண்டத்தின்மீது நான்கு சஸ்திரங்களைப் பிரயோகித்தனர். அவைகளுடனே அத்தண்டத்தைக் கண்டித்துவிட் டவனது நெற்றிதனில் விழ, (36) அதனாலவன் வலிமை குறைந்து வயிற்றுப் பொந்ததனை விட்டுக் கையை யெடுத்துக்கொண்டு மனமூர்ச்சை கொண்டான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (37) அப்போது சகலபூதர்களு மப்பொந்தின் வழியாய் வெளியில் வந்து விட்டார்கள். மேலும்முந்தியசுரர்களாலும் சிங்கமுகனாலும் கொல்லப்பட்ட பூதர்களெல்லாம் ஸ்ரீ சுப்பிரம்மண்ணியரது திருவாக்கினையின்படி யுடனே நான்குபக்கங்களிலிருந்துமெழுந்து விட்டார்கள். (38-39) தவிரவும் கேளீர்! முனிவர்களே! (39) பிறகு ஸ்ரீ பகவானானவர் கிருபை கூர்ந்து வீரபாகு முதலிய தம்பிகளை யிங்கழைப்பிப்பதற்காக பாசத்தை விடுவிக்கும்படியான வோர்சரத்தைப் பிரயோகித்த (40) வுடனது சூரியனுடையஉதயகிரிக்குச் சென்று மாயாபாசத்தைக் கண்டித்து அங்கு மூர்ச்சை கொண்டிருந்தவர்களை யெழுப்பிப் (41) புஷ்பக விமானம்போ லவ்வெல்லோர்களையும் சுமந்துகொண்டு சுகமாயவர்களை யிங்குகொண்டு சேர்த்துப் பிறகு ஸ்ரீ கந்தனுக்கினையின்படி யம்புராத்துளரியிலடங்கிவிட்டது.ஓ !முனிவர்களே!(42)பிறகப்போதுவீரபாகு முதலியவீரர்கள்மிகுந்தசந்தோஷத்தோடுஸகலவபாயங்களையும்தொம்சம்செய்யவுற்ற ஸ்ரீ முருகேசனை வந்தனித்துமிகுந்தபக்தியோடுஸ் தோத்திரம் செய்தார்கள். (43) அப்போதப்பகவானும் "ஓ! வீரர்களே! அத்துராத்துமனாற் பாசத்தினாற் கட்டுண்டுநீங்கள் மிகவும்களைப்படைந்திருக்கிறீர்களல்லவா?" வென்றது முதலான பிரியவசனங்களை யவர்களுக்குக் கூறலாகையி (44) லப்போதவர்க ளுரைத்ததாவது—"ஓ! பிரபுவே! எங்களுக்கிங்கு, தேவேசரும், சகலவசுரர்களுக்கும் விநாசகர்த்தரும், அஷ்டைசுவரிய முடையவருமான தேவரீ ரெங்களெல்லோர்களையும் மிகுந்த கிருபாகடாக்ஷத்தோடு நோக்கிய மாத்திரத்தில் தேவரீ ரருளினால் யாதொரு களைப்புமில்லை. (45½) ஸ்ரீ பகவானுடைய பயங்கரமான குணத்தொனியைக் கேட்டு மூர்ச்சைகொண்டிருந்த வசுரப்பாவிகளெல்லா மப்போது மூர்ச்சை தெளிந்தெழுந்து பெருங்கூச்சலிட் டத்தேவேசன்மீது கொடூரமான சரங்களைச் சொரிந்துகொண்டே யவனைச் சூழ்ந்துகொண்டார்கள். (47)பிறகாறுமுகனுமப்பாதகர்கள்மீ தனேகபாணங்கள், தண்டாயுதம்,பெருஞ்சக்தி,பட்டாக்கத்தி, வேல், கண்டனக்கோடாலி, முதலியவைகளை வருஷிக்கலாயினர். (48) அவைகளோ பயங்கரமான வுருவங்களோடு பத்துத்திசைகளையு மொளிப்பித்துக் கொண்டு (48½)வேதகருமங்களைப்பிரம்மன்போற் சிருஷ்டிப்பவைகளும், தேவச்சி

ரேஷ்டர்களை ஸ்ரீ நாராயணன்போல்கிலைநிறுத்தி யிரக்ஷிப்பவைகளும், அப்பாவிகளை ஸ்ரீ ருத்திரன்போற் சமுகரிப்பவைகளுமாகி(49½) வாயுவேக மனோவேகங்களையுடையமகாமேகங்கள்,சமுத்திரங்கள், வடவாமுகாக்கினி இவைகளைச் சோஷித்துக்கொண்டும்,சூரியன் முதலியவர்களினிரதங்கள், பிரம்மாண்டம், மேருகிரி,பூமி முதலியவைகளைவெடிப் பித்துக்கொண்டும் மிகுந்த பெருஞ்சத்தமுடையவைகளாகி (51) யசுரர்களுடைய தலைகள், கைகள், உடல்கள் இவைகளை மிகுதியாயறுத்தும்,அதுபோலவே யானை, குதிரை, தேர்கள்முதலியவைகளைக் கண்டங்கண்டமாய்த் துண்டித்து (52) விவ்வண்டத்தின் மத்தியெங்கும்வாரி யிறைத்துக்கொண்டும், இம்மண்ணுலகண்டத்தைப்பிளந்துகொண்டப்பாலுள்ளவகண்டமானநீர்களிற்சென் (53)றவைகளை மிகுந்தசெந்தூட்களாற் சேருக்கியும், பிறகு மற்றுமுள்ள வண்டங்களுக்குச்சென்றுகேளீர்! பிராம்மணோத்தமர்களே! அங்கங்குள்ள தேவர்கள்,முனிவர்களையும்,இன்னுமுள்ள மற்றவர்களையும் விலக்கி யங்குள்ள பல வசுரர்களையும் கொன்றுவிட்டன. (54½) ஓ! முனிவர்களே! ஓகோ! ஸ்ரீ சுப்பிரம்மணியரது மகிமை யாவரால் தானறிய முடியும்? (55) யாதெனி லவரா லம்புவிடப்பட்ட மாத்திரத்திலொன்றுகோடிமடங்காகின்றது.பிறகக்கோடிபாணங்களும் மகாவேகமுடைய வாயிரம் கோடிமடங்குகளாகின்றன. (56) பிறகவைகளோ கணக்கி லடங்காதவைகளாகிப் பலபல வண்டங்களிலும் சென்று மிக ஜாஜ்வலியமானவைகளாகி யங்கங்குள்ள பாவிகளான வ்சுரர்களையெல்லாமிவ்வாறுய்க் கொன்று விடலாயின.(57) அப்போது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவரெல்லோர்களும் பெய்நடுக்கம் கொண்டவர்களாகிப் பயத்தினு லுடனே கண்களையிறுகமூடிக் கைகளை யுச்சிமீது வைத்துக்கொண்டு (58) "ஓ! பகவானே! சுவாமீ! தேவாதிதேவா! கருணைக்கடலே! ஓ! அடியார்க்கு நெசனே! மகாபாவிகளான வசுரர்களையெல்லாம் கொன்று எங்களையிரக்ஷித்தருள்வீர். (59) ஓ! ஸுப்பிரம்மணியா! ஓ! தேவதேவோத்தமா! இத்தேவர்களைக் காத்தருள்வீர்! காத்தருள்வீர்." என்றிவ்விதமா யப்பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் அஷ்டைசுவரியமுடையவரும், பரமகலியாணகுணமூர்த்தியும், மனமதிற்கெட்டாத மகிமைகளுக்காதாரரும்,வழுவுதலற்ற விபவமுடையவருமான ஸ்ரீ குகமூர்த்தியை யப்போது துதிசெய்தார்கள். (60½) பிறகிவ்விதமா யோர் நொடிநேரத்துக்கெல்லா மவ்வுயுத்தரங்கத்திலுள்ள வசுரர்கள் மாண்டுபோகையி (61) லங்கனேகம் தலையற்ற வுடல்கள் மகாபயங்கரமாய்க் கூத்தாடின. மேலுமப்போதங்கு, செந்நாய், நரி, கழுகு முதலியவைகளெல்லாம் சேர்ந்து கூடின. (62) பிற்பாடு பெரும்தேக

த்தையுடையவனும், மாயாபாசத்தைவிட்டவனுமான சிங்கமுகனப்போது மூர்ச்சைதெளிந்து முன்போலுள்ள தேகத்தைக் கொண்டவனுகிய சுரரெல்லாம் மடியலானதையும், பூதர்கள் சேர்ந்துநிற்பதையும், வீரர்கள் வந்திருப்பதையும் பார்த்து மிகுந்த கோபத்தினுற் பற்றியெரிவோனுய் நின்றுன். (63)

இருபத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் உஎ—வது அத்தியாயத்தினர்த்தம்.

### சிங்கமுகன்வனத.

பிற்பாடசுரனுயிரம் விற்களை யெடுத்துக்கொண்டு மிகுந்த சிங்கநாதம் செய்தவனுகித் துரிதமாய் ஸ்ரீ பகவான்மீது பத்திலக்ஷமம்புகளைப் பிரயோகிக்க, (1) அவைகளை யப்பார்வதி மைந்த னுயிரங்கணைகளாற் கண்டித்துக்கேளீர்! தரணிதேவர்களே! மறுபடியும்வெகுகோபத்தோடப்பாதகன்மீ தாயிரம் சரங்களைப் பிரயோகித்தனர். (2) அதன்பிறகு அசுரமன்னன் தேவேசுவரன்மீது பத்திலக்ஷம் பாணங்களைப் பிரயோகிக்கையி லம்முருகேசன் ஜுவலிக்கலுற்ற கோபாக்கினியாற் கலங்கலான திருக்கண்களைக் கொண்டவராகி (3) யவ்வளவே கொண்டபாணங்களாலவைகளை விளையாட்டாகவே சடிதியிற் கண்டித்தனர். பிறகு பாதகனுன சிங்கமுகனும் வெகுகோபங்கொண்டு ஸ்ரீதேவேசனுடைய மகாபலவானுன ஸாரதியின் மார்பினை யாயிரம் பாணங்களாற் பிளக்கலாயினன். ($4\frac{1}{2}$) அப்போதச்சாரதிக்கு இரத்தவெள்ளம் பெருகலானதை (5) மகாபலவானுகிய வாறுமுகன் திருக்கண்ணுற்று மிகுந்தகோபத்தோடதிதீக்ஷணமான நூறம்புகளை யெய்தவ்வசுரனது தேரையுடைந்து விட்டனர். (6) அதன்மேலசுரன் மகாபர்வதப்போ டனேகமம்புகளை யெடுத்துத் தேவேசன்மீது மிகுந்த கோபத்தோடு கோடைகாலமேகங்கள்போல் வருஷித்தனன். (7) அப்போது ஸ்ரீ வடிவேலனவைகளை யெல்லாமநேகமம்புகளால் கண்டித்துவிட்டுப் பின்னுமாயிரம் கணைகளாலோர் கணத்துக்குள் ளவனதாயிரம் விற்களையும் கோபத்தோ டொரேதடவையில் முறித்தெறிந்தார். ($8\frac{1}{2}$) பிறகசுரன்விற்களையிழந்ததன்மேல் மகாகோபங்

கொண்டோர்பயங்கரமானசூலத்தையெடுத்துக்(9)கோலாஹலசத்தம்செ
ய்தவனாகி யத்தேவேசன்மீது பிரயோகித்தான். அப்போது மகாகோ
ரமா யருகினில் வரலான வச்சூலத்தைத் தேவநாதன்கண்ணுற் (10)
றதனை யவர் கொடூரமான பதினான்கம்புகளால் துரிதமாய்த் துண்டித்
துப் பின்னு மப்பாதகன் மீதாயிரம் சரங்களைப் பிரயோகித்தனர். (11)
அவ்வசுரத்தீயனுமவைகளை யோர்தண்டத்தினாற் றடுத்துவிட்டு மிகுந்த
வட்டகாஸம் செய்துகொண்டு ஸ்ரீ கந்தனை நோக்கி யெதிர்த்து வந்தான்.
(12) அப்போது ஷண்முக னவ்வாறு வரலான வசுரமன்னனை நோக்கி
யேழு கூரம்புகளா லவனது முக்கியமான சகதனைத் துண்டித்துவிட்ட
னர். (13) அப்போது மறுபடி முன்போல் முளைத்துவிடலான வதே
னையினாலசுரன்மிகவும்பயங்கரமானவத்தண்டத்தைமறுபடியுமெடுத்துக்
கோபத்தினாற்பற்றியெரிவோனாகியத்தேவேசன்மீதெறிய,(14) மகாபய
ங்கரமாய் வரலுற்ற வத்தண்டத்தை ஸ்ரீதேவநாதன் கண்டு கேளீர்! பி
ராம்மணோத்தமர்களே! மகாகோபத்தோடதனைத்துரிதமா யாயிரம்சரங்
களால் முறித்து விட்டனர். (15) அதன்பிறகசுர னத்தேவரக்ஷகன்மீது
மகாகோரமான வோர்பாசத்தைப் பிரயோகிக்கலாகையி லதனை யவராயி
ரமம்புகளாற் சின்னபின்னமாக்கிவிட்டனர். (16) பிற்பாடசுரன் மிகுந்
த வாக்கிரகம் கொண்டவனாகித் தனதிரண்டாயிரம் கைகளாலு மக்குஹ
பிரானைக் கட்டுவதற்காக மிகுந்த வட்டஹாஸத்தினால் திசைமுகங்களை
ச் சத்தத்தால் நிரப்பியவனாகி(17)யம்மகா பலவானானவசுரன் மகாவேக
த்தோ டோடிவருகையி லவன் கைகளை விரித்துக்கொண் டவ்வாறு வ
ருவதை யவர்கண்ட (18) வுடனிரண்டாயிரம் சரங்களா லவனதெல்லா
க் கைகளையும் கண்டித்து வீழ்த்தினர். அப்போதக்கைகள் மகாபெரிய
தான விருக்ஷங்கள்போல் பூமியில் விழலாயின. (19) மறுபடியு மப்பா
தகனுக்கக்கைக ளுடனே முளைத்துவிட, அம்மகாசுரனக் கைகளால் முறி
ந்து விழலான கைகளையே யெடுத்துக்கொண்டு (20) அஞ்ஞானத்தி
னாலுண்டாகிய மிகுந்த மதத்தைக்கொண்டவனாகி யதிகோபத்தினால்
மிகவட்டஹாஸம் செய்துகொண்டு விரைவா யவ்வசுரமாற்றானருகி லோ
டி வருகையி (21) லப்போது தேவனானவர் புருவங்களது நெரித்த
லால் வக்கிரமான கண்களையுடைய வப்பாதகனைக் கண்டவுடன் கூர்மை
யுள்ள வாயிரம் பாணங்களா லவனது தலைகளைச் சேதித்துப் (22) பி
ன்னும்மகாகோரங்களானவிரண்டாயிரம் கணைகளா லவனதெல்லாக்கைக
ளையும் வெட்டியெறிந்தனர். பிறகுடனே மகாகோரங்களான அவனது
தலைகளும் கைகளும் முன்போலவே யுண்டாகிவிட்டதைத்தூரமதில்நின்
ற வெல்லாத்தேவர்களும் கண்டு (23½) பயத்தினால் மிகுந்த மனவியா

கூல முற்றவர்களாகி மிகவுமாச்சரியம்கொண்டார்கள். (24) அப்போது பார்வதி மைந்தனுமிவ்வசுரர்களால் முந்தி யாலமரத்தடியில் பரமாத்துமாவாகிய ஸ்ரீ பரமேசுவரனைக் குறித்துச் செய்யப்பட்ட வீரயாகத்தைத் திருவுளத்தில் நினைத்து (25) 'அதனால்தா னிப்பாதகனுக்குக் கைகளும் மற்றவுறுப்புகளும் முளைக்கலாகின்றன'-வென்று நிதானித்துக்கொண்டிருக்கையி (26) லப்போதவ்வசுரப் பாதகனுரைத்ததாவது:—"ஓ! சிறுவனே! ஸ்ரீ பரமேசுவரனா லெமக்கருளப்பட்ட வரத்தையும், வார்த்திகமும்மரணமுமற்றதனால்மிகவுத்தமமான நமதுபலம், சௌரியம் இவைகளையும், வெட்டுண்ட கைமுதலிய வுறுப்புகள் மறுபடி முளைக்கலாகும் தன்மையையும் நீ யறியவில்லை; (27½) கேளாய்! பையலே! சிறைமீதடைக்கப்பட்ட தேவர்களை நாம் விடப்போவதில்லை. ஆனால் மிகவுமிளைஞனான வுந்தனை மட்டில் விட்டுவிடுகின்றோம். (28) ஆகையாலுனதிஷ்டத்தின்படி யெங்காகிலு மோடிப்போய்விடு" என, அவ்வாறவனது வசனங்களைக்கேட்டு ஸ்ரீ பகவான்"அடா! துராத்துமாவே! நீ யிங்கு யாதடா பிதற்றுகின்றாய்? இனியிவ்வாறு பிதற்றுதல் வேண்டாம்; இதோ! ஓர் நொடிநேரம்பாரடா! உந்தனையாதொரு பிரயத்தினமுமின்றியே கொன்றுவிடுகின்றோம். இதைச் சத்தியமாய்ச்சொன்னோமே யின்றி வேறு விதமில்லை" (30) யென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ கந்தபகவான் கம்பீரமாயுரைத்தனர். அதுகேட் டப்பாதகன் கடுஞ்சினம் கொண்டவனும் சிங்கநாதம் செய்வோனுமாகி (31) மகாபிரயத்தினத்தோடு புறப்பட்டுத் தனதிரண் டாயிரம்கைகளாலுமச் சங்கியையே கொண்ட மலைகளைப் பிடுங்கியத் தேவநாதன் மீதெறிகையி (32) லவைகளை யம்மகாவீர னப்போது நூறுகணைகளால்பொடிப் பொடியாக்கிவிட்டுப் பின்னுமாக்கிரகத்தோ டவனதுமார்பினிலாயிரமம்புகளைத்தொடுத்தனர். (33) பிறகப்பாதகன்பெருகலுற்ற மிகுந்த விரத்தவெள்ளத்தைக் கொண்டவனாயினும் கொஞ்சம் சிரித்துக்கொண்டு மகாபயங்கரமாய்ச்சிங்கநாதமிட்டு மிகப்பெரியதான பலமலைகளைப் பிடுங்கினன். கேளீர்!பிராம்மணோத்தமர்களே!அப்போதுஸ்ரீ சுப்பிரம்மணியன் கடும்சினம் கொண்டவராகிக் கேவலம் லீலாமாத்திரமா யாயிரம் கணைகளாலவன தெல்லாத்தலைகளையும் கண்டனம் செய்தனர். (35) மறுபடியு மத்துராத்துமனுக்கு முன்போ லத்தலைகளெல்லாம்முளைக்கலானவுட னப்போதவன் மிகுந்த சிங்கநாதம் செய்து கொண்டம்மலைகளை யவர்மீதெறியலாகையில் (36) ஸ்ரீ கந்தபிரா னிரண்டாயிர மம்புகளா லம்மகா கிரிகளைத் தூள்தூளாக்கி யவ்வசுரன தெல்லாக் கைகளையும் மறுபடியும் துண்டித்து விட்டனர். கேளீர்! முனிவர்களே! (37) அக்கைகள் பின்னு

ம் முளைக்கலாக, இவ்விதமாய் முளைக்கமுளைக்க வப்பாதகனுடைய வுறுப்புகளை யாயிரத்தெட்டுத்தடவை கண்டிக்கலாயினர். (38) இவ்விதமாயவ்வசுரனுடைய மகாபெரியவைகளான தலைகளும் கைகளு மெல்லாத்திசைகளிலும், பாதாளம், பூமி, ஆகாயம், சமுத்திரம் இவைகளிலும், மலைகள் முதலிய வெல்லாவிடங்களிலு மிடைவெளியன்றி மிகவடர்த்தியாய் விழலாயின. (39½) அப்போது தேவோத்தமரெல்லா மவைகளாறு பட்டுவிழலான வோசையினால் பயமடைந்தார்கள். (40) மேலுமத்தலைகளெல்லாம்வாய்களைப்பிளந்து கொண்டு விழுகையில் பறவைகள், மிருகங்கள் முதலியவை யெல்லாம் மிகுந்த பயத்தினால் குகையென்று பிரமித்து அவ்வாய்களுக்குள் புகுந்துகொண் (41) டதன்பேரில் கேளீர்! தரணிதேவர்களே! பிறகவ்வாய்கள் மூடிப்போனபடியா லவைகளிறந்து போயின. இவ்வாறாய் வெட்டுண்ட வுறுப்புகளெல்லாம் மறுபடி மறுபடி முளைக்கும்போது (42) ஸ்ரீ குஹமூர்த்தியானவ ரோர்தலையையு மிருகைகளையும்விட்டு அம்மகாசுரனதுமற்றெல்லாத்தலைகளையும்கைகளையும் துண்டித்தனர். (43) அப்பொழுதும் முன்போ லப்பாவியினுடைய அக்கைகளும், தலைகளும் முளைத்துவிட்டன. இவ்விதமாய் மறுபடிமறுபடி யவ்வசுரன துறுப்புகள் சீக்கிரம் சீக்கிரம் முளைக்கலாகையில் ஓ! கோ! கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (44) அப்போது ஸ்ரீ பார்வதீ மைந்தன் மூக்குநுனியில்தமது விரலைவைத்துக்கொண்டு 'இப்போது முளையாதே' யென்று திருவுளமதில் நினைத்துக்கொண் டதனைக் கோபத்தோடு 'ஹா'வென் றதட்ட, (45) அப்போதவ்வசுர வேந்தனது தலைகளும் கைகளும், ஸ்ரீ சுப்பிரம்மணியரது திருவாக்கினையால் ஆமைக்குள் ளதன் தலையடங்குவதுபோ லுள்ளடங்கிவிட்டன. (46) பிறகப்பகவானோர் தலையையு மிருகைகளையும்மட்டில் மிச்சமாய்க்கொள்ளலானவச்சிங்கமுகனை நோக்கி "அடா! மூடா! 'ஓ! நமது தலைகள் வெட்டுண்டபோதிலு முடனே யோர் நொடிக்குள் முளைத்துவிடு' (47) மென்றுந்தனு லுரைக்கப் பட்டதல்லவா? நல்லது! நமதிப்போர்க் கொத்த வாக்கினையின் மகிமையைக் காணடா" வென்று மந்தஹாஸமுற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகித் திருவாய் மலர்ந்தருளினர். (48) அது கேட்டு மகா பாதகனான அவ்வசுரன் மிகக் கோபாவேசம் கொண்டவனாகி "அடா! பையலே! யாமிப்போ தோர் தலையைமட்டிற் கொண்டோராயினும் நமது பராக்கிரமத்தை யிதோ! பாரடா!" (49) வென்று ஸ்ரீ சுப்பிரம்மணியரை நோக்கிக் கோபத்தினால் கர்ஜனை செய் துதைத்தோர் மலைதனைப் பிடுங்கி யத்தேவநாதன்மீ தடிக்க, (50) அதனை யவரோரோ சரத்தி

ளுற் சடிதியிற் சேதித்து விட்டனர். பிறகசுரன் கோபாவேசம் கொண் டவனுகி யோர் பயங்கரமான தண்டமதை யெடுத்து (51) "ஓ! பால கா! உந்தனுக் கெம்மோடு வேலினுலு மம்புகளாலு முயுத்தம் செய்ய த் திறமை யிருப்பதே யன்றி நம்மோடு வேறுயுதத்தினுற் போராட வு னக்கு வல்லமையில்லையே!" யென்றுரைத் ததனையெறிய, கேளீர்! மு னிவர்களே! (52) அப்போது பார்வதி மைந்தனு மனேக கோடி சூரி யர்களுக்கு நிகரான வொளியால் ஜாஜ்வல்யமானமாய் விளங்கலுற்ற பயங்கரமான பெருமை பொருந்திய வோர் வஜ்ஜிராயுதத்தைப் (53) பி ரயோகிக்க, அது மிகுந்த சத்தத்தோடு ஸகல ஜகங்களையும் பயமுறுத்தி க் கொண்டு புறப்படலாகி மகா வேகமா யவனது தண்டத்தைத் துண் டித்துவிட்டுப் பிறகவன் மார்பினிலும் விழுந்து பிளந்தோர் கணமாத்திர த்தி லத்துராத்துமனுடையவுயிர்களையுமெடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்று (55) கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! கங்கையாற்றில் ஸ்நா நம் செய்துவிட்டுப் பிறகு திரும்பி முன்போல் ஸ்ரீ கந்தனுடைய திரு க்கையை யடைந்து விட்டது. (56) அப்போ தோர் கொடிக்கெல்லா மத்துராத்துமன் தரைமீது விழுந்து வாயினுல் நான்கு பக்கங்களிலு ம் மிகுந்த விரத்தத்தைத் தாரைதாரையாய்க் கக்கிக்கொண் (57) டங் கு மிங்கும் புரண்டு துரிதமதிற் பிராணவாயுவை விட்டனன். அப் போதப்பாதக னிறந்து விட்டதைக் கண்டு தேவோத்தம ரெல்லாம் மிகக் களிப்புற்றவராகி (58) யதிவிசித்திரங்களான நல்ல பரிமள புஷ்பங்களை வாரி யிறைத்தார்கள். அப்போது பூ தர்களெல்லாம் மிகுந்த வட்டஹாஸம் செய்தார்கள். (59) பிற்பாடு ஸ்ரீ பகவானனவர் வீரர்களையும், பூதர்களையும், மற்றுமுள்ள தேவர்களையும் சேர்த்துக் கொண்டு மிகுந்த வாத்தியகோஷத்தோடும் பூதர்களின்கோ லா ஹலத்தோடும் (60) ஹேம கூடபுரம் சேர்ந்து திருமாளிகையின் வாசற்படிக்குச் சீக்கிரம்வந்து தம திரதத்தினின்றிறங்கி யெல்லா வீரர்க ளையு மவரவர் விடுதிகளுக்கனுப்பி விட்டுக் கேளீர்! பிராம்மணுேத்தமர் களே! தேவர்களுடன் சேர்த்தியான தமதந்தப் புரத்துக்கருளி சி றந்த சிங்காதனத்தின்மீ துட்கார்ந்தனர். (62) இக்கதையை யெல்லா க் காலங்களிலும் கேட்போனும், படிப்போனும் வேண்டுவதை யெல்லா ம் கைக்கொண்டு சத்துருக்கூட்டங்களில் மிகுந்த வெற்றியையு மடை யலாகின்றுன். (63) தசரதன் மைந்தரான ஸ்ரீராம னிவ்வத்தியாய க தையை ஸ்ரீ அகஸ்திய மாமுனிவர் முகமாய்க் கேட்டுத் தான் மகா பா

வங்களைச் செய்வோர்களான இராவணன் முதலிய வரக்கர்களை வெற்றி கொண்டார். (64)

இருபத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் உஅ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! பிற்பாடு கோபுரத்தினுச்சிமீ திருந்தசூரன் சிங்கமுகனிறந்ததைத் தூதர்முகமாய்க் கேட்டவுட னங்கிருந்து கீழேவிழுந் (1) தங்குமிங்கும் புறண்டு மகா துக்காக்கிராந்தனாகிப் புலம்பியதோ வென்றால்:—"ஐயோ! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவரெல்லா மவரவர் செய்துவந்த வூழியங்களை விட்டிப்போது (2) முன்போ லவரவர் தானத்தை யடைவதற்குச் சித்தப்பட்டாயிற்றே! அடா! சத்துருக்களை நாசம்செய்யவுற்ற சகோதரா! உந்தனுக்கிப்போர்க்கொத்த தசை யெவ்வாறு சம்பவித்ததடா?" (3) வென்றிவ்வாறெல்லாம் மிகுதியா யவ்வசுரேசுவரன் புலம்பித் தவித்தெழுந்துமகா துக்கமுடையவனாகித்துரிதமாய்ப்பெருமைபொருந்திய சிங்காதனத்தின்மீ (4) தேறிக்கொண்டு கோபத்தினால் கண்கள் மிகவும்துடிக்கப்பெற்றவனாகி"ஓ! கோ! நமதரசாக்ஞியிலுள்ள வண்டங்களிலெல்லாம், இறந்து போனவிச் சிங்கமுகனிலு மதிக கீர்த்திகொண்ட வசுரர்க ளேராளமாயிருக் கிறார்கள். ($5\frac{1}{2}$) இவர்களையழைப் பித்துக்கொண்டு நாமேசென் றப்பாலகனொருவனை யுயுத்தத்திற் சயித்துவிட்டுப் (6) பிறகோர் நொடிக்கெல்லாம் நமது பட்டணம் திரும்பி வருகிறோ" மென்று சொல்லிவிட் டாயிரம் கோடி தூதர்களை யனுப்பலானான். (7) பிறகத் தூதர்களு மப்படியே யெல்லா வண்டங்களுக்கும் சென் றங்குள்ள மகா பலவான்களான பலவசுரர்களுக்கும் சூரன் சொன்னதை யறிவித்துப் (8) பிறகு மகாபலவான்களானஅவ்வசுரர்களோ டிவ்வண்டத்துக்கு வந்தவிதமெப்படி யென்றால்:— முந்தி யோர் காலத்தில் ஸ்ரீ பரமேசுவரனுக்கு உலகங்களைப் படைக்க விருப்பமுண்டாகும்போது தேவர்கள், அசுரர்கள்,மானிடர்களோடுகூடியவிச்சகலபிரபஞ்சங்கள்இவைகளவரது திருவடிகளினின்றே வெளிக்கிளம்பலானதுபோலும்,($9\frac{1}{2}$) அவரது சடைமுடித்த

டத்தினின்றுகங்கையானதுபெருகிவந்ததுபோலும்மகாபயங்கரமாகி வரலுற்ற (10) அங்கங்குள்ள அசுரர்கள் அவ்வண்டங்களின் வாசற்படி மார்க்கத்தின் வழியா யவையவைகளை யிடித்து விட்டுக் கொண்டு தங்களது தேகங்களி னிருள்திரள்களால்சூரியன் முதலியவைகளி னொளியை மறைத்துக் கொண்டு மூவுலகுகளின் வெளிகளையும் நிரப்பப் பெற்றவர்களும், மகாகோரர்களுமாகிவெளிப்பட்டு வந்தார்கள். (11½) அப்போதவர்களது வேகத்தினு லக்கினிக்கும், நெருக்கத்தினுல் வாயுவுக்கும், பேரோசையால் ஸகல வுலகங்களுக்கும் மிகுந்த பயமுண்டாயிற்று.(12½) அவர்களடிவைப்பினுல் கிளம்பலான புழுதிகளால் ஸகல சமுத்திரங்களும் வற்றலாயின. (13) அப்போதவர்கள் காலடி வைத்தலின் மிகுந்த வேகத்தினுல் பிரம்மாண்டம் கூட வெடிக்கலாயிற்று. பூமி, ஆகாயம் பாதாளம் இவைகளெல்லாம் மிகவும் நெருங்க முளதாயின. (14) மேலும் பிரம்மன் முதலிய தேவரெல்லா மெங்காகிலும் நகருவதற்குக் கூடத் தங்களுக்கிடமற்றுப் போனதால் மிகவும் மனவிசாரத்தோடு பயமடைந்தார்கள். (15) அப்போது மலைகளெல்லா மாகாயத்திற் பஞ்சாய்ப் பறக்கலாயின. பிரம்மாண்டம் முழுது மசுரப்படைகளாலே நிறைக்கப்படலாயின. (16)மற்றண்டங்களி லிருந் திங்கின்னும் வரும்படியுள்ள வசுரர்களுக்குக் கொஞ்சமேனு மிடமில்லை. பிற்பாடு சூரபத்தும னவ்வசுரர்கள் வந்துவிட்டதைக் கேட்டு மிகுந்த சந்தோஷத்தோ (17) டெழுந் தந்தப்புரம் சென்று ஸ்நாநம்பண்ணி வேண்டியபடி புஜித்துத் திருநீற்று முப்பட்டைகளையும், உருத்திராக்ஷமாலைகளையும் பூண்டிருப்பதாற் சரீரம் சிறக்க வலங்கரிக்கப் பெற்றவனுகி (18) நல்ல பரிமளச் சந்தனங்களால் சரீரத்திற் பூசியும், சிறந்த மலர்மாலைகளால் வாஸிக்கலுற்ற சிரசைக் கொண்டவனும், (19) பல விசித்திரங்களான புதிய வஸ்திராபரணங்களைத் தரித்தும், மேன்மை கொண்ட வத்திரங்களுக்கெல்லா மீசுவரனுன திவ்விய பாசுபதாஸ்திரத்தையும், (20) பிரம்மாஸ்திரம் முதலிய மற்றத்திரங்களையுமெடுத்துக் கொண்டும், உறைபோடப் பட்டவைகளான ஆயிரங்கோடி இரதங்களால் பின்தொடரப் பெற்றவனுகி (21) யசுரர்க்கு வேந்தனுன சூரபத்துமன் துரிதமாய்ப் புறப்படலானதையிலப்போ தசுரர்கள் கணநோத்துக்குள் ளோர்சிம்மவாஹநத்தையும், (22) வேழாயிரம் குதிரைகள், சிங்கங்கள், பூதகணங்கள், இவைகள்கட்டப்பெற்றதும், சிங்கத்துவஜமுடையதும், மிக நேர்த்தியானதும், மனோவேகம் வாயுவேகமுடையதும், மிகவும் ஜுவலிக்கலுற்றதுமான மற்றோரிரதத்தையு மங்கு கொண்டுவந்தார்கள். (22-23½) அவ்விரத மோடிவருகையில் மலைகளெல்லாம் காகாவென்று மிகவும் சுற்றலாயின; (24) சூரி

யன் குளிர்ச்சியாயினன்; வடவாக்கினி யணையலுற்றது; இவ்வாறாகிய தும், பற்பல வாயுதங்களால் நன்கு சுமத்தப்பெற்றதும், எட்டுக் குல பருவதங்களையும் பங்கப்படுத்துவதான பெரிய சக்கிரங்களால் நேர்த்தியானதும், வீரயாகத்தினின் றுண்டானதும், பிரம்மப் பிரளயத்திற் கூட அழிவுபெறாததுமான வந்நேர்த்தியான விரதத்தின்மீ தச் சூரபத்தும (26) னுட்கார்ந்துகொண் டனேக வாத்தியகோஷங்களாலும், பெரியோர்களால்செய்யப்பட்டவாழ்த்தல்களாலும்,முன்னிலையி லிறைக்கப்படலான மிகுந்த மலர்மாரிகளாலும், களிப்புற்ற மனதையுடையவனாகி (27) யவ்விரதத்தை யோட்டுவதற்காகப் பல சாரதிகளை நியமித்துக் கொண்டு (தங்கமயமான) மேருகிரியின்நடுவி லோர் மைமலையிருந்தது பொ லவ்வசுரமன்ன னிரதத்தின்மீது வீற்றிருந்து துரிதமாய்ப் புறப்பட்டனன். (28) அப்போது சிலர் காளாஞ்சிகளைக்கைமீது கொண்டவர்களும், சிலர்பாக்குப்பைகளைப்பற்றியவர்களும்,சிலர்கெண்டிகளைக்கொண்டவர்களும்,(29)விசிரப்படுவதால் பிரகாசமாய் விளங்காநின்றவெண்சாமரத்தைவகித்தவர்களும்மற்றவர்கள் ஆலவட்டங்கள், பெரியகுடைகள் இவைகளைப்பற்றியதால் நேர்த்தியான கைகளை யுடையவர்களுமாகித் தொடர்ந்துசென்றார்கள். (30) அப்போ தனேக மசுரர்கள் மிகுந்த வட்டகாசம் செய்தார்கள். இவ்வாறு சம்பிரவங்களோ டசுர னனேக வீதிகளையும் கோபுரங்களையும் தாண்டிக்கொண் (31) டனேக மசுரப்படைகளோ டந்நகருக்கு முக்கியமான கோபுரவாசற்படி வரலாகையி லப்போதங்குள்ள வசுரரெல்லா மவ் வசுர வேந்தனைக்கண்டு (32) தங்கள் தங்கள தாயுதங்களைப் பற்றியவர்களாகிக் கிலுகிலென்று மிகுந்த சத்தம் செய்தார்கள். பிறகு சூரபத்தும னவர்களோடுகூட வெளியில் வந்து பெரிய யானைகளின் மதஜலங்களால் (33) நிரப்பப்பட்டிருக்கிற பட்டணமார்க்கத்தைக் கடந்து யுத்தகளம் சேர்ந்தனன். அப்போது மகா பாதகர்களும் மகா பலிஷ்டர்களுமான சில வசுரர்கள் சிரேஷ்டமான ஹேமகூடபுரத்தை முற்றுகைபோடலாகையி ($34\frac{1}{2}$) லப்போது பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவரெல்லாம் மூர்ச்சைகொண்டார்கள். (35) மேலுமெல்லாப் பூதர்களும் வீரர்களும் சேனாதிபர்களோடுகூடப் பயமடைந்தார்கள். பிற்பாடு பிரம்மன் முதலிய தேவர்கள் தேவாதி தேவனான ஸ்ரீ குஹமூர்த்தியை வந்தனித்து விண்ணப்பமிட்டுக்கொண்டதாவது:— (36) "ஓ! ஸ்வாமீ! துராத்துமனாகிய அசுரேசுவரனான சூரபத்துமன் சகல வண்டங்களிலுமுள்ள வெல்லா வசுரர்களையும் படைசேர்த்துக்கொண் டிப்போது தானே நேரிலுயுத்தத்துக்கு வந்திருக்கின்றான். (37) அவனது சேனைகளும் தேவரீர் பட்டணத்தை முற்றுகை

போட்டிருக்கிறார்கள். ஓ! தேவேசா! ஆகையா லவ்வசுரப்பாவியை யிப்போது சிக்கிரமாய்க் கொன்றுபோடவேண்டும்" (38) என, அவர்க ளிவ்வாறு வசனங்களைக் கேட்டு ஸர்வஜீவதயாபரரான ஸ்ரீ வடிவேலன் "ஓ! வாயுவே! சிரேஷ்டமான மனோவேகமுடைய நமதிரதத்தை யிப்போது சிக்கிரம் கொண்டுவாரு" மென்று திருவாக்கருளிச் சிங்காதனத்தினின்று துரிதமா யிறங்கலுற்றனர். (39)

இருபத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் உகூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடக்கினிபூவாகிய ஸ்ரீ கந்தபிரான் பாசு, வஜ்ஜிராயுதம், சூலம், பயங்கரமானவேலாயுதம்,கத்தி, கேடயம், பெரியதான சக்கிரம், தண்டம், முஸலம், தனுசு, மகாகோரமானபாணங்கள், சிரேஷ்டமான எறிவல்லயங்கள் இவைகளை யெடுத்துக் கொண்டு வெளியில் விஜயமாகி, வாயுவால் கொண்டுவரப்பட்ட சேர்த்தியான விரதத்தி (1-2) லேறிக்கொண்டு ஸகல வசுரர்களாலும் புஷ்பவருஷங்களாற் பூஜிக்கப்பட்டவராகி மகா பலிஷ்டர்களும் சிரேஷ்டமான துதிகளால் தோத்திரம் செய்வோர்களும், உன்னதமான விரதங்கள்மீ தேறியவர்களும், மிகுந்த புகழ்பெற்றவர்களுமான இலக்ஷத்தொன்பது வீரர்களுடனும் (3½) மகா பலவான்களும், இரண்டாயிரம்வாகினி ஸங்கியை கொண்டவர்களும், பெரியவாயுதங்களைக் கொண்டவர்களுமான பூதர்களுடனும் ஸ்வாமியானவர் சிக்கிரமாய்ப் பிரயாணப்பட்டனர். (4½) பிரம்மன் முதலிய வெல்லாத் தேவர்களும் மலர்களை வருஷித்தார்கள். (5) பிரளயகால மேகங்களின் சத்தம்போல் மிகுந்த வாத்தியகோஷம் முழங்கலாயிற்று. அப்போது சூரியனுடைய வெயிலை முற்றும் மறைக்கலான திரண்ட குடைகளும் சாமரங்களும் வரிசையாய்ப் பிடிக்கப்பட்டன. (6) மதுரமான வாக்குகளையுடைய கட்டியக்காரர்கள் தேவனுடைய குணாதிசயங்களைக் கூறினார்கள். (6½) பிற்பாடு சகல பூதர்களும் கூடிக்கொண்டு ஓ! கோ! கொர நடத்தை யுடையவர்களும், மகா பலிஷ்டர்களும், அனேகம் தலைகளையும் கைகளையு முடையவர்களும், மகா மாயாவிகளும் பாவிகளுமான வாயிரத்தெட் டண்டங்களிலுமுள்ள வசுரர்களு மிதோ வந்

துவிட்டார்களே! (8) இவர்களி லொவ்வொருவரும் சகல லோகங்க ளையும் வாரி வாய்தனிற் போட்டுக்கொள்ள வல்லவர்கள். அதேவித மாய்ச் சகல வண்டங்களையும் நடுங்கவடிக்க வல்லவர்கள். (9) இவர்க ள் நெருப்புப்பறக்கலுற்ற பெரிய கண்களை யுடையவர்கள். சமுத்திர த்தையொத்த பெரிய வாய்களைக் கொண்டவர்கள். சந்திர சூரியர்களு டையவும், நக்ஷத்திரங்களுடையவுமான மார்க்கங்களை யெட்டிமுட்டலு ற்ற தலைகளையுடைய பலவான்கள்; (10) மேலுமிவ் வெல்லோர்களும் பாவியான சிங்கமுகன், கொடியோனான பூானுகோபன், தாரகன், அ கினிமுகன், மகாசுரனையாளிமுகன், ஸுந்தன், உபசுந்தன், மது, கைட வன், பலவானான ஜலந்தரன், மஹிஷாசுரன், (12) இவர்களைப்போல வேயொத்த கொடியோர்களும் மகா பல பராக்கிரமங்களைக் கொண்டவர் களுமா யிருக்கின்றார்கள். பிரம்மன், விஷ்ணு, மகேந்திரன் முதலியவர் களதும், திக்பாலர்க ளதுமான வாயுதங்களைக் கொண்டவர்கள்! (13) ஓ! கோ! இவ்விதமா யளவற்ற கோடி சங்கியை கொண்ட பாபிகள் கூடியிருக்கின்றார்களே! ஓரண்டத்திய வசுரர்களே நம்மெல்லோர்களை யும் நதறக்கதற வடித்திருக்கின்றார்களல்லவோ! (14) ஆகையால் நம் மெல்லோர்களுக்கு முயிர்பிழைக்கும்வகை யெவ்வாறுதா னுண்டாகும்? ($14\frac{1}{2}$) தவிரவும் பிரம்மன் விஷ்ணு முதலிய சகல தேவர்களையும் யா தொரு பிரயாசையுமின்றியே ஜயிப்பதற்கில் வெல்லாவண்டத் தசுரர்க ளிலு மொருவன் போதுமானதே! ($15\frac{1}{2}$) அப்படியிருக்கையி லவர்க ளி லிருவர் சேர்ந்துவிட்டா லவர்கள் முன்னர் யாவர்தான் நிற்கலாவார்? (16) அவர்களைச் சயிப்பதற்கு வீரர்களும் சேனாதிபர்களும் திறமையு ளரல்லரோ! அங்ஙனமாயின் மரங்களாலும் கற்களாலும் சண்டைசெய் வோரான நமக்குத் திறமை யேது! (17) மேலு மப்போர்க்கொத்த வ சுரர்களி னிச் சதுரங்கபலங்களும் சண்டைக்குத் தலைப்பட்டுவிட்டா ல ப்போது வீரர்களும் சேனாதிபர்களும் பெருங்காற்றி லகப்பட்ட துரு ம்புபோ (18) லெல்லோர்களும் சுற்றிச் சுற்றிப் பறக்கலாவார்கள். ஒருக்கால் வீரபாகு சற்று நின்றபோதிலு மவரும் வலிமை குறைந்தவ ராகிச் சந்தேகமின்றி யபஜயமடைவார். (19) ஆனால் சகல வசுரர்களை யும் வதைக்கலுற்ற ஸாக்ஷாத் ஸ்ரீ சுப்பிரம்மணிய மொருவர்தா மிங்கு நி ற்கத்தகுதியாவார். நாமெங்காயினு மோடிவிடுவதற்குக்கூட இடை வெளி கிடைக்கவில்லை. (20) ஆகையால் பலமுள்ளமட்டிற் சண்டை செய்துவிட் டிங்குதானே மரணமடைவோ” மென் றப் பூதர்களெல்லா மொருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு சண்டைக்குத் தொடங்கினு

ர்கள். கேளீர்! முனிவர்களே! (21) வீரர்களும் சேனதிபர்களு ம வ்வசுரர்களைப் பார்த்து "ஓ! கோ! இப்போது நம் வலிமையெல்லாம் போனதுதா னென்றொருவருக்கொருவர் சொல்லிக்கொண் டியுத்தத்து க்குத் தொடங்கினர்கள். (22) மேலுமப்போ திந்திரன் முதலிய தேவ ர்கள் ஸ்ரீவிஷ்ணுவை நோக்கி யுரைத்ததாவது:— "ஓ! கேசவா! பாவிக ளான இவ்வெல்லா வசுரர்களையும் கொல்வதற்கே ஸ்ரீசுப்பிரம்மணியருக் கனேக நாட்கள் பிடிக்குமல்லவா! (23) ஆகையால் சூரனைக்கொல்வத ற் கெப்போதுதான் முடியலாகும்: எப்போதுதான் தேவர்களுக்குக் கதி மோக்ஷமுண்டாகி (24) நமது துக்கமுந் தொலைந்தெப்போதுதான் ப தம் கிடைக்குமோ! மேலும்நா முயிரோடிருப்பதற்குள் நமக்கிவை யெ ல்லாம் கிடையாமற் போய்விடுமோ?என்னவோ"? என, இவ்வா றவர்க ளது வசனம் கேட்டு விஷ்ணு சொல்லுகின்றார்:— "கேளீர்! தேவர்க ளே; நமக்குக கர்த்தாவும் நடத்துவோரும்சுகமளிப்பவருமான ஸாக்ஷா த்ஸ்ரீபரமசிவன்(26)தேவர்களையிரக்ஷிப்பதற்காகத்தாமேஸ்ரீசண்முகனெ ன்ற பெயரை வகித்துக்கொண் டெழுந்தருளி யிருக்கின்றார். அ ச்சண்முக மூர்த்தியானவர் லீலாவினோதத்தினால் தமது திருமேனியினு ரோமங்கள்மீது பிராணிகளோடு கூடச் சகல லோகங்களையு மண்டங்க ளையும் காக்ஷி யருளின ரல்லவோ! (27½) தவிரவும் சகல சத்துருக்களை யு ம் சமுகரிக்கலுற்ற சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரம், அனுக்கிரகம், திரோதா னமாகிய பஞ்ச கிருத்தியங்களை யருளலுற்ற வப்பரமாத்துமாவுக் கிவ்வ சுரர்களைக் கொல்வதிற் பாரம் யாது? (28½) அக்குஹ மூர்த்தியான வ ரிவ்வெல்லோர்களையு மோர் கணநேரத்துக்குள் சமுகரித்து விடுவார். (29) நீங்களெல்லோர்களு மவரவரது மகிமையை மறந்தே விட்டீர்கள். ஓ! இந்திரா! நீ, மகா பரிசுத்தரான வகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகராகிய வக்குஹ பிரான் மீதோர் குழந்தை யென்ற கொள்கையை யே விசேஷமாய்ப் பாராட்டுகின்றாய். (30½) இவர் தேவர்களதான ஏ தோ ஓர் தவத்தின்மகிமையா லிங்குவரவில்லை: இத்தேவநாத னிப்போர்க் கொத்த ஸர்வமங்கள மூர்த்தியான பாலவுருவத்தைக் கொண்டே (31½) சூரன் முதலியசிரேஷ்டர்களானவெல்லாவசுரர்களையுமோர்புன்னகைப்பு கோபம், சாபம், அல்லது உயுத்தம் இவைகளில் யாதொன்றினுலாவதோ ர் நொடிக்குள் கொன்றுவிட வல்லவராவார். (32½) அத்தேவரது மகா வற்புதமான வலிமையை யாவர்தானறிய லாவார்? (33) அவராயுதங்க ளைத் தரித்துப் பூதர்களையும் மகா பராக்கிரமசாலிகளான வீரர்களையு ம் சேர்த்துக் கொண் டிங்கு யுத்தத்துக்காக வந்திருக்கின்றா ரன்றோ!

(34) இதோ! ஓர் நொடி நேரத்துக்குள் ளிவ்வசுர ரெல்லோர்களையும் கொன்றுவிட் டசுர மன்னனான சூரனையும் சமுகரித்துவிடுவார்: ஓ! கேளீர்! சகலர்களான தேவர்களே! யான் கூறிய இவை யெல்லாம் சத்தியம்! சத்தியம்!" (35) என, இந்திரன் முதலிய வெல்லாத் தேவர்களும் விஷ்ணுவினுடைய இவ்வாறு வசனங்களைக் கேட்டதன்மேற் சந்தேகம் நீங்கி, ஸத்தியஞ் ஞாநாநந்த சுவரூபியும், ஸகல சத்துருக்களையும் தொலைப்பிப்போருமான ஸ்ரீ தேவநாதனை ஹிருதய கமலத்தில் தியானித்துக் கொண் (36½) டத்தேவர்கள் விஷ்ணு பிரம்மர்களோடு கூட ஸ்ரீ கந்தபிரானண்டைக்கு வந்து, (37) பிறகெல்லோர்களு மப்பிரபுவைப் பின்தொடர்ந் தவரோடு கூட அவ்வசுரக் கடற்குட் சென்றார்கள். அப்போது வடிவேலனு மிவற்றை யெல்லாம் மந்தஹாஸத்தோடு நோக்கிக் கொண்டே ஸகல தேவர்களுடனும், வீரபாகு முதலிய வீரர்களுடனு முயுத்தரங்கம் சேர்ந்தனர். (38½) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மரங்களையும், மலைகளையும், கற்களையும் வாரி வருஷிக்கலுற்ற பூதர்களுக் கப்போ தசுரர்களோடோரிடத்து மிகுந்த கொடிய வுயுத்த முண்டாயிற்று. அதேவிதமாய் மற்றோரிடத்து வீரர்களுக்கு மசுரப்படைத் தலைவர்களுக்கும் சண்டை நேரிடலாயிற்று. (40) அவற்றி லிவ்வெல்லோர்களு மசுரர்களால் முறியடிக்கப் பட்டார்கள். பிறகு வீரபாகு வுன்னதமான வில்லைச் சீக்கிரமா யெடுத்துக் கொண்டு (41) திரண்ட பாணங்களை வருஷிப்பதினா லனேக மசுரர்களை யோர் நொடிதனிற் கொன்றும் முடிவில் தோல்வி யடைந்தவராகி ஸ்ரீ சண்முகனண்டைக்கு வந்துவிட்டார். (42) பின்பு மகா கொடியவர்களும் பாவிகளுமான வசுரர்கள் ஸ்ரீ முருகேசனைச் சூழ்ந்து கொண்டு "ஓ! இவன் முற்றும் சிறுவன்: இப்போதிவனுக்குயுத்தத்துக்கென்னதிறமையிருக்கப்போகின்ற"(43) தென்று சொல்லிக் கொண்டே யப்பாதகர்கள் தண்டங்கள், சக்கிரங்கள், வஜ்ஜிராயுதங்கள், சூலங்கள், வேல்கள், சிறந்த வத்திரங்கள் முதலிய வைகளை யெல்லாம் (44) மிகுந்த சிங்கநாதம் செய்வோர்களாகி யொரே காலத்தில் மிகுதியாய் வருஷித்தார்கள். அதன்மேல் ஸ்ரீ சுப்பிரம்மணியருமப்பாதகர்களை நோக்கியதிற் கோபங் கொண்டு (45) கோரமான வில்லை வளைந்து ஞாணேறிட்டுப் பிரளயகால மேகம்போற் குணத்தொனி செய்தனர்.(46) ஓ!பிராம்மணோத்தமர்களே! அசுரர்களின் சதுரங்க பலங்களு மப்போதக்கோரே வோசையைக்கேட்டவுடன் மூர்ச்சைகொண்டு பூமியில் விழுந்து விட்டார்கள். (47) என்றாலு மத்தருண மூர்த்தியானவ ரனேக மந்திரங்களைத் துரிதமாய்ப் பிரயோகித்து இந்திரன் பரு

வதங்களைக் கண்டித்தது போ லவ்வசுரர்களது கால்கள், கைகள், தலைக ள், மார்புகள், புயங்கள் இவைகளை யெல்லாம் வெட்டி வெட்டிப் பூமியி ல் வீழ்த்தினர். (48½) தவிரவு மத்தேவேசன் குதிரைகளுடைய வால் கள், கால்கள், கொழுத்த கழுத்துகள் முதலியவைகளையும், அதே வித மாய்ப் பெரியதேர்களின் சக்கிரங்கள், ஆலவட்டங்கள், கம்பங்கள் இவை களையும், யானைகளுடைய கொம்புகள், துதிக்கைகள், கால்கள், வால்கள், மஸ்தகங்கள் இவைகளையும், (50) அசுரர்களுடைய துவஜங்கள், குடை கள், சாமரங்கள், ஆயுதங்கள், விசித்திரங்களான ஆபரணங்கள், பெரிய கிரீடங்கள் முதலிய வைகளையும் கண்டித்துக் கண்டித்துப் பூமியில் பாத் தி விட்டனர். (51½) கேளீர்! தாணி தேவர்களே! தவிரவும் அளவற்ற பராக்கிரமங்களை யுடைய ஸ்ரீ முருகேசனது அவ்வத்திரங்க ளப்போ தங் கு வரலான பலவசுரர்களைக் கொன்று கொண்டே சுவர்க்கலோகம், பிரம் மலோகம், விஷ்ணுலோகம், பூலோகம், பாதாளம், அண்டபித்தி, ஆகாய ம், சக்கிரவாள கிரி யிவ்விடங்களி லெல்லாம் வியாபிக்கலாயின. (53)

இருபத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௩0—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போதுகேளீர்! பிராம்மணோத்தமர்களே! தேவர்கள், மு னிவர்கள் தவிர மற்றிவ்வனேக மசுரர்களுடைய தலைகளு மிராகுவின் சிரசுபோல் வெட்டுண்டு கிளம்பலாகி (1) ஸ்தாவரஜங்கம சுவரூபமா கிய விப்பிரபஞ்சங்கள் முழுமையு மவைகளாலே நிரம்பலாயின. மே லு மசுரர்களுடைய வெட்டுண்ட கைகளிலுள்ள ஆயுதங்களெல்லாம் ஸ்ரீக ந்தனது சரங்களா லடறப்பட்டவைகளாகி விழுந்தனேக மசுரர்களைக் கொன்றன. (2½) இவ்வசுரக் கேடசொல்லா மிவ்வாறனேக விதமாய்க் கொல்லப் படலானார்கள். (3) அப்போது பிரம்மவிஷ்ணுக்கள் முதலி ய ஸகலதேவர்களும், மற்றுமுள்ள வீரர்களும் ஸேனாதிபர்களு மிவற் றைக்கண்டு மிகுந்தஸந்தோஷ மடைந்தார்கள். (4) தவிரவும் முந்திய சுரர்களையங்குவந்துநிற்கும்போதுபார்த்தவத்தேவர்கள், (இமைக்கொட் டாதவராயினும்) பிறகவர்கள் கொல்லப்பட்டு நான்கு பக்கங்களிலும்

பிணங்களாகி விழுந்து கிடப்பதைமட்டிற் கண்டார்களேயன்றி யவ்வ டிவேலனாலோர் கணமாத்திரத்திற்செய்யப்படுகிறசம்ஹாரத்தைக் காண க்கூடவேயில்லை. (5½) அப்போதவ் வீரர்களெல்லாம் தேவர்களோடுகூ டமிகுந்த நேசத்தோடு ஸ்ரீபகவானைத்தோத்திரஞ்செய்தார்கள். (6) துரா த்துமர்களான வசுரரெல்லா மிவ்விதமாய்மடிந்துவிடலாகிப் பிரம்மாண்ட த்திலிடைவெளியுண்டானவுடன், (முந்தியேயிடமில்லாத்தினால் வரக்கூ டாதிருந்த, மற்றண்டங்களிலுள்ள மகாபலிஷ்டர்களான வசுரரெல்லா (7) மிவ்வண்டத்துக் குவந்து முன்போலவே நிரம்பலாகி (7½) யவ்வா றங்குவந்த அசுரரெல்லாம் ஸகலவசுரர்க்கும் வேந்தனான பாதகனாகிய சூரபத்மனைக் கண்டு மிகுந்தகோலாஹலம் செய்துகொண்டு (8½) பூமிதனில் விஸ்தாரமாய்க் குவிந்துகிடக்கின்ற, இறந்தவசுரர்களின் தலை யற்ற முண்டங்கள்மீ (9) தடிவைத்துக்கொண்டே யிரத்தப்பிரவா கங்களைத் தாண்டலாகி "ஆ ! ஆ ! சூரராஜனுக்கு மாற்றானாகிய விச் சிறுவனை யாங்களிப் போர்க்களத்தில் கொன்றுவிடுகின்றோம்" (10) மெ ன்றுறுதி செய்தவர்களாகி யவர்கள் சத்துருநாசகரான ஸ்ரீகந்தபிரானைக் கண்டு "ஓ ! கோ ! இவனோ வோர் மிகுந்த குழந்தையா யிருக்கின்றா ன். இவனுயுத்தகளத்தின்கண் ணொருவனாயிருந்துகொண்டே மற்ற வண்டங்களிலிருந்து வரலான வசுரசேனைகளை யெல்லாம் கொன்றிருக் கிறான். (11½) இச்சிறுவனுக்கோ ! யானைகளில்லை: குதிரைகளில்லை: தேர்முதலியவைகளுமில்லை" (12) யென்றக்குகமூர்த்தியைச் சூழ்ந் துகொண்டே யப்போதவர்க ளாச்சரியமடைந்து "ஓ ! கோ ! சூரராஜன் வருவதற்கு முந்தியே யிச்சிறுவனை யாம் கொன்றுபோடவேண்டு" மெ ன் றம் மகாபலவான்களெல்லாம் வெகுகோபத்துட னனேகம் கூர்மையு ள்ள பாணங்களையும் ஆயுதங்களையும் வருஷித்தார்கள். (13½) அப்போ து பூதர்களும், வீரர்களும், ஸேனாதிபர்களும் மிகுந்த மனவியாகுலம் கொண்டார்கள். (14) பிறகு மகாபரிசுத்தரான பகவான் வாயுதேவனை நோக்கி மந்தஹாஸமுற்ற முகமலரைக்கொண்டவராகிக் கம்பீரமான திரு வாக்கினா லுரைத்ததாவது;—(15) "ஓ! வாயுவே! நம்மிரதத்தையோர்கண மாத்திரத்தில் முன்னோட்டம், பின்னோட்டம், நடுவோட்டம், பக்கங்களினோ ட்டம்ஆகியவெல்லாவிடவோட்டங்களிலும்விரைவா யோட்டல்வேண்டு" (16) மென, இவ்வாறு கந்தனாலருளப்பட்ட திருவாக்கைக் கேட்டு வாயு தேவனப்படியே பாக்கியமென்று மகா வேகமுடைய அவ்விரதத்தை த் துரிதமாய்ப் பூமி, ஆகாசம், சமுத்திரங்கள், நதிகள், சக்கிரவாளகிரி முதலிய வெல்லாவிடங்களிலும் விடலாகையி(17½) லங்கங்குள்ள ம காகோரர்களும், சத்துருக்களால் ஜயிக்கமுடியாதவர்களுமான வசுரர்களை

ஸ்ரீவடிவேலனனேக கோடி சங்கியைகொண்ட பாணங்களாற் கொன்று வருகையி(18½) லோர்நொடிநேரத்துக்குள் ளவ்வசுரர்களுடைய சதுரங்க சைனியங்களும் மடியலாயின. (19) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது மடிந்து விழுந்து கிடந்தவசுரர்களால் பூமியானது மிகுந்தபாரத்தினால் சுமத்தப்பட்டதாகியதைத் தாங்காநின்ற வாதிசேடனும் நடுக்க முற்றபடியால் கிடுகிடென் றாட்டம் கொண்டது. ஆ! இது கஷ்டம்! (20) அப்போ தங்கு கிடக்கலான வசுரப் பிணங்களை யெல்லாம் நாய்கள் தின்றன. ஆகாயமார்க்கத்தில், கேடயங்களோடு கூடிய அசுரர்களின் வெட்டுண்ட கைகளெல்லாம் சூரிய சந்திரர்களுடைய பெரிய மண்டலங்களைப் பிடித்திராநின்ற இராகுக்கள்போல் விளங்கலாயின. (21½) மேலு மப்போது தேர்களை யிழுப்பதற்காகப் பூட்டியிருந்த மகா கோரங்களான பூதப்பிரேத பிசாசங்களெல்லா மவ்வசுரர்களின் மாமிசங்களைத் தின்னத் தலைப்பட்டன. (22½) ஓ! தரணிதேவர்களே! ஸ்ரீ பகவானிடமிருந்து வெளிப்படு மத்திரங்க ளெல்லாம் சிலது சூல வுருவங்களாகியும், (23) சிலது பெரிய பரசு வுருவங்களாகியும், சிலது சக்கிர வுருவங்களாகியும், மற்றவை வஜ்ஜிராயுதம், வேல், அக்கினி, வாயு முதலிய வுருவங்களாகியும் கிளம்பி (24) அசுரர்களுடைய மாயை, சௌரியம், அவர்களால் பிரயோகிக்கப்பட்ட தேவதாத்திரங்கள் இவைகளை யெல்லாம் தொலைத்துவிட்டுச் சகல வுலகங்களிலும் வியாபித்தன. (25) அத்தேவேசனுடைய ரதமோ வென்றால் அதிசீக்கிரமா யோட்டலுற்ற வாயுதேவனால் நன்கு செலுத்தப்பட்டதாகி யங்கங்கவரால் விடப்பட்ட வத்திரங்களின் வேகத்தையு மதிகரித்தேசெல்லலாயிற்று. (26) அப்போது பிரம்ம விஷ்ணு முதலிய தேவரெல்லா மளவற்றபராக்கிரமத்தையுடைய குமரேசனது இரதவேகத்தையும், சரங்கள், வில் இவைகளுடைய வேகத்தையும், ஸாரதியின் திறமையையும் கண்டு "ஓ! கோ! இது ஸ்ரீ குஹன் மகிமையா? ஸாரதியின் மகிமையா? அல்லது அஸ்திரம்முதலியவைகளின்வேகம்தானோ?" வென்று நினைத்து மிகுந்த வாச்சரிய மடைந்தார்கள். (27-28½) இவ்விதமாய்க்கந்தபிரா னோர் கணநேரத்துக்குள் ளவ்வசுரர்களை யெல்லாம் கொன்று போட்டனர். (29) பூமிதனி லெல்லா விடங்களிலும் பிணக்காடாயின. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இரத்தங்கள் பூமியெல்லாம் நிரம்பலாகிப் பாதாளத்திலும் (30) மிகுதியா யோடலுற்றன. கேளீர் பிராம்மணோத்தமர்களே! இவ்விதமாய்ப்பாதகர்களான அவ் வெல்லாவசுரர்களும் மடிந்தெல்லா விடங்களிலு மனேக கோடி பிணங்கள் மகா பயங்கரமாய்க் கூத்தாடிக் கொண்டிருக்கும் போது (31½) மறுபடியு மின்னு

முள்ள வசுரர்கள் மற்றண்டங்களிலிருந்து மகா கோரர்களும், சகல வாயுகங்களையும் பற்றியவர்களுமாய் முன்போ லிவ் வண்டத்துக்கு வந்து நிரம்பலானார்கள். (32½) பிறகு சகலாசுர சமுகாராான குமார மூர்த்தியானவர் அவ்வெல்லோர்களையு மோர் நொடிக்குட் கொன்று (33) பின்னு மிவ்வாறே யடிக்கடி வரலானவர்களையு மவ்விதமே நொறுக்கிவிட்டு, மிகுந்த கோபத்தோ டண்டத்தின் வாசற்படியையும் பாணங்களாலடைத்துவிட்டனர்.(34) கேளீர்! தரணிதேவோத்தமர்களே! அப்போது மார்க்கமற்றுப் போனதால்மற்றவசுரர்கள் வரக்கூடவில்லை(34½) ஓ! கோ! கோ! முனிவர்களே! அப்போ துயிரிழந்த வசுரர்களால் பிரம்மாண்டச் சுவரை முட்டியதாகிப் பிணங்கள் மயமானவோர் பெரிய மலை யுண்டாகி விட்டது. (35½) மேலு மவ்வசுரர்களி. னிரத்தங்களாலோர் கடலு முண்டாயிற்று. அதன்மேல் ஸ்ரீ கந்தபிரான் புன்னகைப் புற்றவராகி யம்மலைதனைக் கோபத்தோடு தம் பனிரண்டு திருக்கண்களாலும் பார்த்துப்(37) பிரகாசிக்கலுற்ற பொறித்திரள்களா லதனை யோர் கணத்திற்குள் சாம்பலாக்கி விட்டனர். பிறகெங்கும் முன்போல் வெட்ட வெளியாகி விட்டது. (38) அப்போது நான்கு பக்கங்களிலும் துளித் துளி சாம்பல்கள் மட்டில் பறக்கலுற்றன. பிறகு விஷ்ணு முதலிய தேவர்கள் ஸ்ரீ சுப்பிரம்மணியருடைய மகிமையைப் பார்த்து மிகுந்த வானந்தம் கொண்டவர்களாகி மகா பரிசுத்தமான துதியைக் கூறினார்கள். (39½) மேலுமவ் வெல்லோர்களும் "ஓ! கோ! இச்சகதீசன் மகா பாதகர்களான இவ்வசுரர்களையெல்லாம் கொன்று இரத்தமாகிய கடலில் மிதக்கலுற்ற பிணமேடாயுள்ள வோர் பெரிய மலையையும் கோபத்தோடு கண்ணெருப்பு மாத்திரத்தினா லோர் நொடிக்குள் சாம்பலாக்கிவிட்டனரல்லவோ! (41) அப்பேர்க்கொத்த மகானுபாவனுக் கிச் சூரபத்துமனைக் கொல்வதி லென்ன பாரம்?" என்று மகா சந்தோஷத்தோ டொருவரோடொருவர் சொல்லிக்கொண்டு ஸ்ரீ வடிவேலனை வந்தனித்தார்கள். (42) பிற்பாடு சூரபத்துமனும் தேவனை நோக்கி மிகுந்த கோபாக்கினியால் ஜுவலிக்கலுற்றவனாகி யத்தேவநாதனைக் கொடிய வார்த்தைகளாலதட்டிக்கொண்டே யெதிர்த்துவருகையில் (43) ஸ்ரீ சுப்பிரம்மணியருமப்பாதகனையெதிர்த்துக்கொள்ள,அவனைநோக்கியசுரவேந்தனானவச்சூரன்வசனமுரைத்ததாவது— (44) "ஓ! கேளாய்! பாலகா! ஸ்ரீபரமேசுவரனுடைய வரத்தினா லெமக்கு மரணமில்லையென்பது நிச்சயமே! மேலும் நம்மோடெதிர்த்துச் சண்டைசெய்தவரெல்லாம் தோல்வியே அடைந்திருக்கின்றார்களல்லவா! (45) இங்கு நம்மிடத்தில் தொண்டூழியம்

செய்துகொண்டிருந்ததேவர்கள் வார்த்தையைக்கேட்டுக் கொஞ்சமேனு மாலோசனையற்றவனுகி யிங்குயுத்தாங் கத்துக்குவந்து(46) தேவர்ப க்கத்தி லிருந்துகொண்டு நமதுசைனியங்களையும் கொன்றிருக்கிருயல் லவா? ஆகையா லப்பேர்க்கொத்த வுந்தனையெங் கோடினபோதிலும் நாம்விடுவோமில்லை" (47) யென, ஸ்ரீதேவேசனுன குமாரமூர்த்தி யி வ்வாறவனது வசனத்தைக்கேட்டு "அடா !கேடுகெட்டவசுரா ! மகாபா வியாகிய வுந்தனேடு யாம் பேசத்தக்கதில்லை ! ஆகிலும் நமதஸ்திரங்க ளுந்தன் தேகத்தைப் பிளந்துஉனக்குப்பதிலுரைக்கட்டும். ($48\frac{1}{2}$) அ டா ! அசுரப்பாதகா ! கிரியாம்சை மூலமாய்நமதற்புதமான வலிமையை ப் பார்த்துக்கொள்" (49) ளென, அதுகேட் டப்பாதகன் மிகுந்த கோபத்தோடு மிகவுன்னதமான தனுசைவளைத்துநாணேற்றிட்டுச் சிரே ஷ்டமான பாணங்களை வலிமைகொண்ட வத் தேவசேனைகள்மீது வ ருஷிக்கலாகையி ($50\frac{1}{2}$) லப்போது பூதர்களும் வீரர்களும் சேனுதிப ர்களோடு கூடியவர்களாகி (51) யொரேகாலத்தி லவ்வசுரவேந்தன்மீ தனேகம் கொடிய சரங்களைப்பிரயோகிக்க, சூரன் விட்டபாணங்க ள வைகளைத் துண்டித்துவிட் டச் சைனியங்கள்மீது விழலாயின. (52)

முப்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௩௧—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! தரணிதேவர்களே! அதனுற் சில ரோடினுர்கள்; சிலர் தலையறுபட்டும்,மார்பு பிளக்கப்பட்டு மிறந்தார்கள்;சிலர் மூர்ச்சை யடை ந்தார்கள். (1) ஆனுல் வீரபாகு முதலிய சிலர் கூர்மையுள்ள சில வம் புகளை வருஷித்தபோதிலு மவை யவனது மார்பினில் விழுந்து மழுங்க லாயின. (2) பிறகு மகா பலவானுன சூரனும் வெகு கோபத்தோ ட னேகம் பாணங்களைப் பிரயோகித்துப் பின்னு மவர்களா லெய்யப்பட்ட பயங்கரமான பாணங்களைக் கண்டித்து (3) மேலுமவர்களதத்திரங்களை யும் பெரிய விற்களையும் சேதித்து அவர்களது கை, மார்பு, தலை இவைக ளில் நூற்றுக்கணக்கான பாணங்களால் நிரப்பிவிட்டுக் (4) கேளீர்! மு னிவர்களே! அம்மகாசுர னடிக்கடி மகா கோரமா யட்டகாசம் பண்ணிக்

கொண்டே யிரதத்தைக் கறகறவென்று சுழற்றவிட்டுக்கொண்டதட்ட லுற்றான். (5) அப்போது வீரர்களிரத்தங்கள் தாரைதாரையாய்ப்பெருகலுற்ற மேனியுடையவர்களும்,மெய்நடுக்கம் கொண்டவர்களும், போர்முகத்தில் வஸ்திரங்களை நழுவவிட்டவர்களுமாகி யோட்டம்பிடித்தார்கள். (6) கேளீர்! தரணிதேவர்களே! அப்போது மகா வீரரான வீரபாகு மகா கோபம்கொண்டு அவன திரதத்தண்டை யோடிவந்து தமது கைக்கத்தியா லவனதுகோரமான வில்லை வெட்டியெறிந்தனர். (7) அப்போதருகினில் வந்த அவ்வீரபாகுவை யசுரன் கையினு லறையும்போது அந்தேவநாதனு மவன் புயத்தினு லடியுண்டு மூர்ச்சையடைந்தார். (8) அப்போ தசுரன் 'ஓ! இப்போ திங்கு தூதனைக்கொல்வது சூரர்களுக்குத் தகுதியல்ல' வென்று கருதி கையினுல் வீரனைக் கால்களிற் பிடித்துத்தூக்கி ஆகாயத்தி லெறிய, (9) அப்போது தருமமூர்த்தியும் மகாபலபாராக்கிரமமுடைய வருமான அவ்வீரன் நடுவானஞ்சென்று ஓர் நொடிநேரத்துக்குள் மூர்ச்சை தெளிந்தவராகி ஸ்ரீ பகவானருகில் வந்து சேர்ந்தனர்.(10) பிற்பா டசுரன் கடுஞ்சினம் கொண்டு கிரௌஞ்சமலைக்கு நிகரும்,சத்துருக்களுக்குப் பயங்கரமுமான மற்றோர் வில்லையெடுத் (11) தவ்வில்லின் நுனியில் ஞாணைமாட்டிப் பயங்கரமான வஞ்ஞாணை மீட்டலாக்கையி லப்போது மகா பயத்தை யளிக்கலுற்ற மிகுந்த வோசை யுண்டாயிற்று. (12) பிறகு தருமஸ்வரூபியான தேவநாதனுகிய ஸ்ரீ சுப்பிரம்மணிய ஸ்வாமியானவர் விஷ்ணு பிரம்மர்கள் முதலியவர்களும் சமுகாரம் செய்யப்படலான மகாப் பிரளயகாலத்தில் அண்டச்சுவர் வரையில் வளர்ந்து விளங்கலுற்ற என்று மழிவற்ற கைலைகிரியினு மதிகச் சிரேஷ்டமு முயாமுமான விற்களுக்கெல்லாம் மிக மேன்மை பொருந்திய தனுசைக் கைதனிற் பற்றி (13.14) யதனை யாறுவித குணங்களும் நிறையப் பெற்றவரான வக்கந்தபிரான் நாணேற்றி சேர்ந்து உலகிலுள்ள வனேககோடி ஜீவராசிகளும் தனித்தனியே ஒவ்வொரு வஜ்ஜிராயுதமா யுருவங் (15) கொண் டாகாயத்தி லிடி முழக்கக்கூடிய பேரோசைபோல் மகா கோரமும் மகா பயங்கரமுமான குணத்தொனியைச் செய்தருளினர். (16) பிறகு சூரன் வெகு கோபத்தோடு வாயுவிலுமதிக வேகமுடையதும், அக்கினிபோல் மிகவும் தவிக்க வடிப்பதும்,இயமன்போல் சமுகரிப்பதும், மேரு முதலிய மலைகளைப்பிளக்கலுற்றதும், பிரம்மாண்டத்தைப் பேதிப்பதும், விஷத்தைக் கக்குகையில் கறுப்பும் மின்னல் மின்னுகையிற் சிவப்புமாயுள்ளதும், சகல ஜகங்களிலும், வியாபி

க்கலுற்றதுமானசிறந்தபாணங்களை நூறுகோடி,ஆயிரங்கோடி,பதினாயிர ம்கோடி, இலக்ஷம்கோடிக் கணக்குகளாய்ப் பிரயோகித்தனன். (17-19) இவ்விதமாய்த்தூரத்துமனாகிய அவ்வசுரவேந்தன் பிரயோகிக்கலாகையி ல் தேவரெல்லாம் மிகவும் பயங்கொண்டவர்களாகிச் சீக்கிரமாய்விஷ்ணு விடம் வந்து (20) "ஓ ! மாதவா ! நமக் கிப்பாணவருஷங்களினின்று தப் பிக் கொள்வதற்காக விருப்பிட மெங் கிருக்கின்ற" தென்றுமிகுந்தவி யாகுல சித்தத்தோ டுரைக்க, (21) அப்போது ஸ்ரீ ஹரியானவ ரத் தேவர் களை நோக்கி யுத்தர முரைப்பதற்குள் ஓ ! கோ ! ஸ்ரீ முருகேசனத்திரங்க ளவனது பாணங்களையெல்லாம் கண்டித்துவிட்டன. (22) அதுகண்டத் தேவரெல்லாம்மிகவும் களிப்படைந்தார்கள். அப்போ தவ்வசுரக்கேடன் மறுபடியும் வடிவேலன்மீ தத்திரங்களை வருஷிக்க, ஸ்ரீ தருமமூர்த்தியா னவர் மறுபடி யவன் விட்ட பாணங்களையும் சடிதியாய்க் கண்டித்துத் தூ ள் தூளாக்கி விட்டுப் பின்னு மவ்வசுரன்மீ தெழுநூறு சரங்களைப்பிர யோகிக்க, (24) அவைகளை யசுரன் பழுதாக்கிவிட் டவர்மீ திரண்டா யிர மம்புகளைத் தொடுத்தான். பிறகு ஸ்ரீ தேவநாத னதே சங்கியை கொண்ட பாணங்களா லவைகளைக் கண்டித்துப் (25) பின்னும் கோப த்தோ டிரண்டாயிர மம்புகளை யவன்பேரி லெய்தனர். பிறகசுரனு ம வைகளை யிரண்டாயிரம் மகாபாணங்களாலே கண்டித்துப் (26) பிறகு மிகுந்த வட்டஹாஸங்களா லாதிசேடன், பூமி முதலியவைகளை நடுங்கச் செய்து கொண் டளவற்ற சங்கியை கொண்ட பாணங்களை வருஷிக்க, (27) அவைகளை யெல்லா முடனே ஸ்ரீ சண்முகன் பொடிப் பொடியா க்கிவிட்டனர். இவ்விதமாயவ்விருவருமொருவர்விட்டபாணங்களை யொரு வர்கண்டித்துக் கொண்டு சண்டை செய்கையி (28) லம்போ டம் பிடித் துக் கொள்வதி னின்று நெருப்புக் கிளம்பலாகி ஓ! கோ! கேளீர்! பி ரம்மஞேத்தமர்களே! ஆகாய கெங்கையையும் சமுத்திரங்களையும் வற் றச் செய்யலாயிற்று. (29) அப்போது வீரலக்ஷுமியானவள் அவ் விருவர்களுடைய பராக்கிரமத்தையும் பார்த் தாச்சரியப்பட்டு 'இவ்விரு வர்களில் யாவனைத்தான்யாம்பெறலாகு'மென்றவர்களருகினில்காத்திருந் தனள். (30) அவ்விருவர்களுடைய திருமேனிகளும், பாணங்களா ல டர்ந்து மிகுதியாய்த் தைக்கப் பட்டிருந்தபடியால் கொஞ்சமேனும் தெ ரியவில்லை. பிற்பாடு சூரபத்துமன் ஸ்ரீ பகவானுடைய தேர்மீது விளங் கலானமிகப்பெரிதாகிய துவஜத்தைக் (31) கண்டித்தட்டஹாஸம்பண்ணி மிகுந்தசத்தத்தோடுசங்கத்துவானம்செய்துவிட்டுப்பின்னுமத்தூரத்து

மன் ஸ்ரீ கந்தன்மீ தோராளமான பாணங்களை வருஷிக்க, (32) அவைக ளை யெல்லாம் ஸ்ரீ சர்வேசுவரன் சிரேஷ்டமான பாணங்களாற் பழுதாக்கி விட்டுக் கேளீர் பிராம்மணோத்தமர்களே! பின்னு மத்தேவசேனேழம்புக ளா லவ்வசுரன் தேரின் துவஜத்தைத் துண்டித்துக் கடலில் வீழ்த்தின ர். (33½) பிறகு பூதர்களின் மத்தியிலிருந்து பானுகம்பனென்ற வோ ர் மகா பலவான் தன தாயிரம் வாய்களிலு மாயிரம் சங்கங்களை வைத்து க் கொண்டு ஸகல வோசைகளையு மவமதிக்கலுற்ற மிகுந்த பெருஞ் சத் தத்தைச் செய்தான். (35) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போ தச்சத்தமானது அண்டச்சுவரில் முட்டி யெதிரொலி கொண் டனேக யு கம்வரையிற் கேட்கப் படலாயிற்று. (36) தவிரவு மப்போது ஸ்ரீ விஷ் ணுவானவர் தமது சிரேஷ்டமான பாஞ்ச ஜன்னியமென்ற சங்கத்தை த் துவானம் செய்தனர். பிற கக்கினிதேவன், தேவர்களால் தூண்டிவி டப் பட்டதன்பேரில் கோழி யுருவ மெடுத்து (37) ஸ்ரீ குஹமூர்த்தியி னுடைய இரதத்தின்பேரில் கோழிக்கொடி யுருவத்தோ டிருந்து கொ ண்டு மகா பிரளய காலத்திய மேகம்போல் மிகுதியாய்க் கர்ஜனம் செய் தான். (38) அப்போ திவ்வெல்லாவற்றையும் விஷ்ணு பிரம்மர்கள் முதலிய தேவரெல்லாம் கண்டு மிகுந்த மனக்களிப் புற்றவர்களாகி மகா கோலா ஹல சத்தம் செய்தார்கள். (39) அப்போது பாவப் பிண்டமாகிய சூர பத்தும னம்மிகுந்த கூச்சலைக் கேட்டு "ஆ! ஆ! மிகுந்த பயத்தோடு தி னம் தோறும் நமக்குத் தொண்டூழியம் செய்து வந்த விஷ்ணு முதலிய வித்தேவர்களுக்கு (40) நம் முன்னிருந்து கொண் டட்டஹாஸம் செய் வதனு லென்ன வலிமை? ஆகையால் முந்தி யிவர்களை ஹதம் பண்ணிப் பி ற கச்சிறுவனையும் ஜயித்து விடுகின்றேன்" (41) மென் றுறுதி செய்து கொண் டவனி ரதத்தோடு கூடவே ஆகாயத்திற் சென்று மகா கோபத் தோடு தேவர்கள்மீ தனேகம் சத்திரங்களை வருஷிக்க, (42) ஸர்வப் பிர பஞ்ச ஸ்வரூபரும், பரம பாவன மூர்த்தியுமான ஸ்ரீ குஹபிரா னிங்கு பூமி யிலிருந்துகொண்டே சிரேஷ்டமான சிலபாணங்களா லவைகளையெல்லாம் பழுதாக்கி விட்டனர். (43) பிறகு கந்தபிரான் தாமுமிரதத்தைச் செலுவித் தாகாய மடைந்து அத்தேவர்களை நோக்கிப் 'பயப்படாதீர்க' ளென்று தி டப்படுத்தியவர்களைத் தூரமாயோரிடத்திலிருக்கும்படி திட்டமிட்டருள, (44) அவர்களும் மிதமற்ற சந்தோஷம் கொண்டு ஸ்ரீ கந்த னுக்கினையி ன்படி யவ்விடத்திலே யிருந்தனர்கள். பிற்பாடு மகாசுரனுகிய சூரன் த ன் முன்னிலிருந்து விளங்கியவப்பகவானைப் பார்த்து (45) "ஓ! கோ! தேவ ரெல்லோர்களும் நம தம்புகளை வஞ்சகம் செய் தோடி விட்டார்க ள்: இம்மூடப் பையலோ தானுகவே நம் முன்னர் வந்து நிற்கின்றான்

(46) ஆகையால் நமக்கிப்போ துயுத்தரங்கத்தில் வலிமை சரியாய் வாய்த்திருக்கின்ற" தென் றிவ்வாறுய் நினைத்துக் கொண்டு மிகுதியான கணைகளைச் சொரிந்தான். (47) அப்போது தேவநாதனும் பதி லத்திரங்களாற்சீக்கிரமா யவன் விட்ட கணைகளைக் கண்டித்து விட்டனர். கேளீர்! தரணி தேவர்களே! அவ்வா றுயுத்தம் செய்த அவ் விருவருடைய விரதங்களும் சுழற் காற் றுப்போலும், சக்கிரம்போலும், இராசி சக்கிரம்போலும்அல்லதுகுயவன்சக்கிரமெவ்வாறுசுற்றுமோ அதுபோலும்சுற்றலுற்றன. (48-49) பிறகோர் நொடி நொடிக்கெல்லா மவ்விரதங்கள் பாதாளம், பூமி, திசைகள், கடல்கள் இவைகளிலும்,மேகம்போல்மலைகளிலும், பிரம்மா விஷ்ணு லோகங்களிலெல்லாப் பக்கங்களிலும், (50) சக்கிரவாளகிரி, மகா ஸமுத்திரம், இருளுலகு இவ்விடங்களிலும், பிறகோர் கணத்துக்குள் அண்டகடாகத்தின் கீழ்ப்புறம் மேற்புறம் (51) யிவ்வெல்லாவிடங்களிலும் சென்று சென்று அவைகளை வீசலுற்ற தங்கள் காந்தியா லொளிக்கச் செய்து கொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்வாறு யவ்விருவர்களுடைய விரதங்களும் சுற்றிச்சுற்றி வருகையில் (52) ஸகலஜனங்களும் பயம டைந்தார்கள். பூமிநடுக்கம் கொண்டது;எழுசமுத்திரங்களும்கொந்தளித்தன; மலைகளெல்லாம் தூள்தூளாயின; பிரம்மாண்டமும் வெடிக்கலுற்றது. (53) நக்ஷத்திரங்களும், மேகங்களு மிவ்வாறுய் நடுநடுங்கி யெங்கும் விழலாயின. அப்போது சூரபத்துமன் பாணங்களை நெருப்பு மாரிபோல் மிகுதியாய்ப் பொழிந்தான். (54) மேலு மம்மகா பாதகன் நடுவில் நடுவில் கண்டனகோடாலிகள், குலிசங்கள், மிகுதியான வஜ்ஜிராயுதங்கள், சூலங்கள் இரும்புலக்கைகள், (55) கல்லுளிகள், வேலாயுதங்கள், ஈட்டிகள், பிண்டிபாலங்கள், எறிவல்லயங்கள், கலப்பை முதலிய வின்னும் மற்ற வாயுதங்கள் இவைகளையும் கணக்கில்லாதபடி வருஷிக்கலாயினன். (56) அப்போது ஸகலப் பிரபஞ்ச ஸ்வரூபியான பிரபுவானவ ரவைகளையெல்லாம் வாயவியாஸ்திரங்களாற் கண்டித்துவிட்டுப் பின்னும் பதினுன்கம்புகளா லவனது தேர்க் குதிரைகளைக் கொன்று போட்டனர். (57)

முப்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௩௨—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு சூரன் தேர்க் குதிரைகளை யிழந்ததன்மேல் பூமியில் நி
ன்று கொண்டு வில்லைப் பற்றியவனாகிக் கோபத்தோடு ஸ்ரீ சுப்பிரம்ம
ணியன்மீ தளவற்ற கணைகளைப்பிரயோகிக்க, (1) அத்தேவநாதனு மவை
களைக் கண்டித்துவிட் டவன்மீ தனேக பாணங்களைச் சந்தானித்தனர்.
பிறகப் பார்வதிமைந்தன் றன் பாணங்களை யவன் சில கணைகளாற் க
ண்டித்து விட்டது கண்டு பின்னு மவன் புயங்கள்மீ தாயிர மம்புகளைத்
தொடுக்க, (2½) அவைகள் மலைமீது விழுந்த மழைத் தாரைகள்
போல் கற்பாறையிலு் மதிகக் கெட்டியான அவன திருபுயங்களிலும் வி
ழுந்து நிஷ்பலமாயின. (3½) பிற்பாடு கேடுகெட்ட வசுரனான வச்சூ
ரன் கோபத்தோடு ஸ்ரீ சுப்பிரம்மணியன் புயங்கள்மீது தீக்ஷணமான விர
ண்டாயிர மம்புகளைத் தொடுத்துப் பிறகத் துராத்துமன் மிகுந்த கோ
லாஹல சத்தம் செய்தான். (5) அப்போ தவைக ளவரது புயங்கள்
மீது விழுந்தவுடன் சாம்பலாகி விட்டன. அது கண் டசுரப் பாதகனு
ம் மிகுந்த கோபத்தோடு பற்றி யெரிவோனாகிப் (6) பூதர்கள்மீதும், ப
டைத்தலைவர்கள்மீதும்,வீரர்கள்மீதுமளவற்றசரங்களைச் சந்தானிக்க,சரு
வப்பிரபஞ்ச ஸ்வரூபியும், அளவற்றபராக்கிரமத்தைக்கொண்டவருமான
வச் சகதீச னாயிரம் கூரம்புகளா லவைகளைச் சேதித் தவனது சிறந்த
வில்லையும் கண்டித்து விட்டனர். (7½) அப்போ தசுர னுடனே வேறு
வில்லை யெடுத்து (8) மகா வேகத்தோ டாகாயம் சென் றங்கிருந்து
கொண்டு அனேக சரங்களைச் சொரிந்தான். கேளீர்! பிராம்மணோத்தம
ர்களே! பிறகு தேவேசனு மங்கு சென் றவனோ டியுத்தம் செய்கையில்
(9) மகா பாவியும் மகா துஷ்டனுமான அவ்வசுர னங்கு யுத்தம் செய்
வோன் போலிருந்து பிறகோர் நொடிக்கெல்லா மவனை மாயையால் வ
ஞ்சகம் செய்துவிட்டுத் திரும்பவும் பூதலம் வந்துவிட்டான். (10) பி
ன்பு ஸ்ரீ தேவஸேனானியானவ ரங்கும் வந்தவனோடு யுத்தம் செய்தனர்.
பிற்பாடு மவ்வசுரப் பாதகன் பாதாளம், கடல்கள், (11) சக்கிரவாளகிரி,
மேருகிரி, மகா சமுத்திரம், திக் பாலர்களுடைய லோகங்கள், பிரம்ம
லோகம், விஷ்ணு லோகம், (12) இவ்விடங்களுக்கெல்லாம் மகா துரா
த்துமனாகி மாயையா லங்கங்கோடிச் செல்லலானையி லத்தேவேசனுமங்
கங்கெல்லா முடனுடனே சென்று சென் றவனோடு யுத்தம் செய்தனர்.
(13) பின் பசுரன் அண்டபித்திக்குச் சென் றங்கிருந் தனேகம் சரங்க
ளை வருஷிக்கையில் ஸ்ரீ தேவேச னங்கும் சென் றோர் நொடிநேரத்துக்
குள் ளனேக மம்புகளா லவனது சிரேஷ்டமான விரதத்தை யுடைத்துப்

பூதலத்தில் வீழ்த்தினர். (14½) அதன்மே லவ்வசுர னிந்திர லோக ர தத்தை மனதினில் நினைக்க, (15) அது வேகமாய் வந்தவுட னவ னத ன்பேரி லுட்கார்ந்து கணைகளா லுயுத்தம் பண்ணினன். பிறகசுர னவ் வண்டத்தின் வாசற்படியைப் பார்க்குமளவி லது ஸ்ரீசுப்பிரம்மணியா து சரங்களா (16) லடைபட்டுப்போனதை யறிந்து அவைகளைத் தன் பாணங்களாற் கண்டித்துவிட்டான். அச்சஸ்திரங்கள் பேதிக்கப்பட்ட வுட னவ்வாசற்படி முன்போலாகிவிட்டதி (17) லங்கு வந்திருந்த மி குந்த வசுரப்படைகளை யெல்லா மத்துராத்துமன் கூப்பிடலானதை ய வைகள் கண்டட்டகாசம் பண்ணிக்கொண்டு (18) கைதட்டி யொரு வரோடொருவ ரெம்பியெம்பிக் குதித்துக்கொண்டு வேகமாய் வரலா ன வச்சுராங்க பலங்களையு மப்போது விஷ்ணுமுதலிய தேவர்கள் கண் டு (19) "ஓ! கோ! இதென்ன? மகா கோரங்களான ஹாலாஹல விஷ ங்களா? அல்லது அனேக வஜ்ஜிராயுதங்களா? பிரளய காலாக்கினியின் புகைத்திரளா? அல்லது அண்டத்துக்கு வெளியிலிருந்து மிகுந்த ஜலப் பிரவாகந்தான் வெகு வேகமா யிங் கோடிவருகின்றதா?" வென்று மிக வாச்சரியம் கொண்டவர்களாகி (20½) யாலோசித்து மிகுந்த பயங் கொண்டவர்களாகித் துரிதமா யோட்டம் பிடித்தார்கள். (21) அப் போதவ் வசுரப்பாவிகளெல்லாம் ஸ்ரீ வடிவேலனைச் சூழ்ந்துகொண்டு ம கா பயங்கரர்களா யனேகம் கொடிய பாணங்களையும் பற்பல சஸ்திரங்க ளையும் வருஷித்தார்கள்.(22) ஓ! பிராம்மணோத்தமர்களே! உடனே ஸ்ரீ பரமாத்துமா கொஞ்சம் மந்தகாசம்பண்ணியோர்ஹூம்காரத்தோ ட வர்களைத்திருக்கண்ணுற்ற மாத்திரத்திலவ்வெல்லோர்களையும்கொளுத்தி ப்பறக்கலுற்றசாம்பல்தூளிகளா யாக்கிவிட்டனர்.(23) மேலும்மறுபடிம றுபடிவரலானஅசுரர்களையுமிவ்வாறேகொளுத்திவிட்டார்.தவிரவும் ஸ்ரீத ருமமூர்த்தியானவர் சக்கிராயுதம், கண்டனகோடரி, தண்டம், முஸல ம், கத்தி இவைகளைத் துரிதமா யெடுத்து (24) "எல்லா பிரம்மாண்டங் களிலு மங்கங்குள்ள மகா பலவான்களும் கொடியர்களு மாயுள்ள வசு ரர்க ளெல்லா மிங்கினி வராம லிருக்கும்படியாய் நீங்கள் நம தாக்கினை யின்படி யங்கங்கு சென் றெரித்து விடுங்க" ளென்ற கட்டளையுடன் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ் வெல்லோர்களையும் கொல்வதற் காக அவைகளைப் பிரயோகித்தனர். (25½) உடனே அவ் வைந்தாயுத ங்களும் சடிதியாய் மகா வேகத்தோடு வெளிக்கிளம்பி (26) ஸ்ரீ பக வா னருகினிலிருந்த வசுரர்களை யெல்லாம் கொன்றுவிட்டுப் பிற கோர் நொடிநேரத்துக்குள்ளண்டத்துக்குவெளியிற்சென் றளவற்ற கோடிசூ ரியப் பிரகாசங்களுடனும், மிகுந்த சத்தங்களுடனு (27) மனேக மு

றுக்களாய்ப் பிரிந்துபிரம்மாண்டங்கள்தோறும் புகுந்து கேளீர்! முனிவ
ர்களே! அங்கங்குள்ள பாதகர்களான வசுரர்களை யெல்லாம் கொன்று
விட்டன வன்றோ! (28) அதன்மேற் சூரபத்துமன் வெகு கோபங்
கொண்டு ஸகல லோகங்களையும் சமுகாரம் செய்யலுற்றதும், சக்கிராயு
தங்களுக்கெல்லாம் முக்கிய தெய்வமுமான ஸ்ரீபரமேசுவரனு லருளப்
ப்பட்ட மகா பயங்கரமான சக்கிரத்தை (29) மகா பரிசுத்த மூர்த்தி
யான ஸ்ரீதேவஸேனாதிபர்மீது பிரயோகிக்க, அப்போது ஸ்ரீவடிவேல
ப் பிரபு வதனைக் கண்டவுடன் எவ்வித பதிலஸ்திரத்தினாலு மடக்க முடி
யாத மகிமை பொருந்திய வச்சக்கிரத்தை யோர் விளையாட்டாகவே தம
து திருக் கையை விரித்துத் துரிதமாய்ப் பற்றி விடலாயினர். ($30\frac{1}{2}$)
அதை யசுரன் கண்டு தன் னுள்ளத்தில் மிகுந்த துக்க மடைந்த வனாகி
ப் (31) பிறகு மாயையினாற் பல வுருவங்களை யெடுத்துக் கொண் ட
ப் பிரபுவோ டியுத்தம் செய்தனன். பிற்பாடு ஸ்ரீதேவநாத னனேக வு
ருவங்களால் வேறுபட்டிருக்கின்ற அவ்வசுரனை நோக்கிப் புன்னகைப்
புற்றவராகி (32) மகா மோகங்களையு மபகரிக்கலுற்ற மகிமை பொரு
ந்திய கொரமான ஞானாஸ்திரத்தைச் சந்தானிக்க, அப்போ தசுரன்
மாயையை யிழந்தவனாகித் தான் மட்டில் தனிமையாய் நின்றான். (33)
கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறகு பிரம்மன் முதலிய தேவ ரொ
ல்லாம் மலர்களை வாரி யிறைத் தெல்லோர்களு மொரே காலத்தில் கோ
லாஹல சத்தம் செய்தார்கள். (34) பிற்பாடு சூரபத்தும னிப்பிரம்மா
ண்டத்தைக் கடந்து ஸ்ரீகுஹ மூர்த்தியைக் கூப்பிட லாகையிற் பிறகிரு
வரும் மற்றொ ரண்டம் சென்று மகா பயங்கரமாய்ச் சண்டை செய்தார்
கள். (35) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பின்பு மகா பராக்கிரம
சாலிகளான அவ் விருவர்களும் மற்றொ ரண்டத்துக்குப் போய் வெகு
கொரமா யுயுத்தம் பண்ணிப் பிறகதையும்விட்டு (36) அத் தேவாசுர
ரிருவரும் மற்றெல்லா வண்டங்களுக்கு மிம்மாதிரியே சென் றங்கங்கு
மகா பயங்கரமா யுயுத்தம் செய்துகொண்டிருக்கையில் கேளீர்! பிராம்ம
ணோத்தமர்களே! (37) அப்போது பிரம்மன் முதலிய தேவரொல்லா
ம் மிகுந்த பீதியினால் கலக்க முற்றவர்களாகி ஸ்ரீவிஷ்ணுவை நோக்கி
வினவியதாவது;—“ஓ! விஷ்ணுவே! இச் சூரனோ ஒருவராலும் ஜயிக்க
முடியாதவன்; மகா மாயாவி; மகா வஞ்சகன்; (38) அப்போர்க் கொ
த்த அவ்வசுரன் தேவநாதரான ஸ்ரீசுப்பிரம்மணியரை உயுத்தத்துக்காகக்
கூப்பிடுகையி லத்தேவனு மவனது வசனத்திற் கிணங்கி மற்றண்ட
த்திற்குத் தொடர்ந்தனர். (39) மகா வஞ்சகனான அப்பாதகனை யவர
ங்கு கண்டாரோ? இல்லையோ? அல்லது சண்டைதான் நேர்ந்ததோ? இ

ல்லையோ? யா மறிகிலோம். (40) மிகுந்த சந்தேக மனதையுடைய யெங்களைப் பெரும் பீதி வாதிக்கின்றதே!" யென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீ விஷ்ணுவானவர் ஸ்ரீ தேவேசனுடைய மகிமையை மனதினில் நினைத்துப் பயத்தினல் மெய் நடுக்கம் கொள்ளலான அவ்வெல்லாத் தேவர்களையும் நோக்கி வசன முரைத்ததாவது;— (41½) "ஓ! தேவரெல்லோர்களும் கேளீர்கள்! உங்களுக்குப் பயம்யாது?(42) இவ் வாறுமுகன்சாக்ஷாத்ஸ்ரீ பரமேசுவரனுனசம்புவே! இதற்குச் சந்தேகமில்லை; நிகரற்ற வில்லாளியான அப்போர்க் கொத்த பகவானுடைய மகா வற்புதமான வலிமையை (43) நீங்கள் நன்கறிந்தவராயினு முங்களை மிகுந்த சந்தேகம் வாதிக்கின்றது. அவர் சகல வண்டங்களுக்கும் சென் றதி சீக்கிரத்தி லிங்கு வரப் போகின்றார். (44) ஆகையா லுங்களுக்குச் சந்தேகம் வேண்டாம்; யாம் சொல்லியது சத்தியம்! சத்தியம்!" என, இவ்வாறு விஷ்ணு வசனத்தைக் கேட்டுத் தேவர்கள் வெகுசந்தோஷ மடைந்தார்கள். (45)கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்பொழுதே சூர னெல்லா வண்டங்களிலும் பெருஞ் சண்டை செய்துவிட்டுத் திரும்பித் தன் பட்டணத் தண்டைக்கு வந்து விட்டான். (46) உடனே அவனல் சண்டைக் கழைக்கப்பட்டவராகி மகா வலிமை கொண்ட ஸ்ரீ ஸ்கந்தபிரானு (மவ்வசுரனைத் தொடர்ந்தே) யங்கு விஜயமாயினர். அதன்பிற கவ் வீரமாகேந்திர பட்டணத்திலுள்ள மிகக் கொடியர்களான அசுர ரெல்லோர்களு மக்குஹபிரானை நோக்கி யச் சூரபத்துமனு லேவிவிடப்பட்டவர்களாகி யவரை வளைந்து கொண்டார்கள். (47½) உடனே ஸ்ரீ முருகேச னப்பாதகர்களை யோர் புன்னகைப்போடு நோக்கிய மாத்திரத்தி லெரித்து விட்டனர். ஆ! இது மிகவும் கஷ்டம்! (48) அப்போது தேவரெல்லோர்களும் புஷ்ப ஹாரங்களை வாரி இறைத்து அஷ் டைசுவரியங்களும் நிறையப் பெற்றவரும் தேவநாதனுமான ஸ்ரீ சுப்பிரம்மணியரைத் துதி செய்தார்கள். (49)

முப்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௩௩—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போ தசுர வேந்தன் தனது சைனியங்களான அசுர ரெல்லாம் சாம்பலாகி விட்டதையும், ஸ்ரீ சுப்பிரம்மணியன் சகல சைனியங்

களோடும் கூட அருகில் விளங்கி நிற்பதையும் கண்டு மிகுந்த துக்கத்தி னால் துன்ப மடைந்து (1) "ஓ! கோ! நா மிப்போ தென்ன செய்ய லாகு" மென்று மனக்கவலை கொண்டவனாகி யத் துராத்துமன் உருவ மில்லாமல் தவம் செய்துகொண்டிருந்த தன் தாயாகிய மாயையை நி னைக்க, (2) அவ ளுடனே மகா வேகத்தோ டசுர மன்னன் முன் வந் து நிற்கையி லவளை நோக்கி "ஓ! தாயே! 'இப்போ திறந்து போன வ சுரர்களை யெல்லா முயிர் பிழைப்பித்தல்வேண்டு' மென, (3) அவள் அசுரேசுவரனான சூரனை நோக்கி வசன முரைத்ததாவது;—"அடா! மைந்தா! ஸாக்ஷாத் மகா தேவஸ்வரூபியான ஸ்ரீ கந்தபிரானை நீயோ நிந் திக்க லாகின்றாய்; (4) நீ யெந்தனு லுரைக்கப்பட்ட பெற்றோர் வசனத் தைக் கேட்கவில்லை. மேலு மொருவராலும் ஜயிக்க மாளாத அம்முரு கனோடு நீ மதி மயக்கத்தினாற் சண்டை செய்ய லாகின்றாய்; (5) ஆகை யால் நீ அவரது வேலாயுதத்தினால் மரண மடையப் போகின்றாய்; அதி ற் சந்தேகமேயில்லை. நல்லது, அதெல்லா மிருக்கட்டும்; உனக் கிப்போ திறந்துபோன வசுர ரெல்லாம் பிழைக்க வேண்டுமானால் (6) மகா ச முத்திரத்தின் கோடியில் இறந்துபோன சகலர்களையு மோர் கணத்துக்கு ள் திரும்பப் பிழைப்பிக்கலுற்றதான 'ஸுதா மந்தர'மென்றோர் மலையிரு க்கின்றது. (7) அதிங்கு கொண்டு வரத் தக்கது." என் றுரைத்து விட்டு வந்ததுபோற்சென்று விட்டாள். பிற கசுரமன்ன னவளுடைய வப்பேர்க்கொத்த வசனத்தைக் களிப்புடன் கேட்டுத் தான் இந்திர லோக ரதத்தைவிட்டு ஸிம்ம வாஹனத்தி லேறிக் கொண்டு 'ஓ! இரத மே! நீ போ யச்சுதா மந்தரமென்ற மலையை யிங்கு கொண்டு வரலாவா' (9) யென் றுரைத் தப்போது இந்திரலோக ரதத்தைத் துரிதமா யனு ப்ப, அதுவுமப்படியேநல்லதென்றங்கு சென்று அவ்வற்புத மலையையெ டுத்துச் (10) சுமந்துகொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ம கா வேகத்தோடு துரிதமாய் வந்து விடுகையி லப்போதே சூரபத்துமன் பிள்ளைகளும் தம்பிகளுமான மகா பலிஷ்டர்களாகிய பானுகோபன் சிங் கமுகன்முதலியவர்களும்,இன்னும்மடிந்துபோன மற்றவர்களுமான வெ ல்லா வசுரர்களு மம்மலைக் காற்றினால்வீசப் பட்டமாத்திரத்தில் (12) கேளீர்! பூமி தேவர்களே! தூங்கினவர்கள்போல் மகா கோரர்களா யெ ழுந்து விட்டார்கள். அப்போ தசுர ரெல்லோர்களு மேக காலத்தில் மிகுந்த வட்டஹாஸம் செய்து கொண்டு (13) "ஆ! இதென்ன? உயுத் தாங்கம்போ லிருக்கின்ற" தென்றந்தப்பாவிகள் சொல்லிக் கொண்டே யங்கு நான்கு பக்கங்களிலும் விழுந்து கிடந்த வாயுதங்களை (14) யெ டுத்துக் கொண் டெல்லோர்களு முயுத்தத்துக்குச் சித்தம் பண்ணிக்

கொண்டிருந்தார்கள். பிற்பாடு சூரபத்துமன் பிழைத்தெழுந்திருக்கலான பிள்ளைகள், சகோதரர்கள் முதலிய வசுரர்களையு (15) மிந்திரலோக ரதத்தையும் கண்ணுற்று மிகவும் சந்தோஷப்பட்டுப் பாவ கருமங்களையே செய்யலுற்ற வத்துராத்துமன் தேவ ரெல்லோர்களையும் திட்டினன். (16) அப்போது தேவ ரெல்லோர்களு மிவ் வெல்லாவற்றையும் தூரத்தி லிருந்தபடியே பார்த்து மிகப் பயமடைந்து" ஓ! கோ! துஷ்டர்களான இவ் வசுரர்களால் நா மின்னு மதிகத் துன்ப மடையா திருந்தா லதுதான் நமக்கு நல்ல பக்ஷ" மென்று சொல்லிக்கொண்டு கேளீர்! முனிவர்களே! அவரவர் தங்கள் தங்க ளாயுதங்களை யெறிந்துவிட்டு அனேகர் சக்கிரவாகபக்ஷியி னுருவத்தோடும், சிலர் மயில், அன்னம், புறா, கிளி, கோட்டான், வண்டு, கொக்கு முதலியவைகளி னுருவத்தோடும் மிகவும் பயங்கொண் டுடனே யோட்டம்பிடித்தார்கள். (17-19) மேலு மப்போது சேனுதிபர்களோடு கூட வீரர்களும், பூதர்களும் மிகுந்த துக்கமடைந்தார்கள். அப்போது ஸாக்ஷாத் ஸச்சிதாநந்த பரமாத்துமமூர்த்தியாகிய ஸ்ரீ குஹபெருமா னிவ் வெல்லாவற்றையும் நோக்கி மந்தஹாஸத்தோடுகூடிய முகாரவிந்தத்தைக் கொண்டவராகி விளங்கியிருந்தனர். (20½) அப்போது சிங்கமுகன் முதலிய துஷ்டரெல்லாம் சூரனுனுத்திரவிடப்பட்டவர்களாகி (21) விளக்குவெட்டுப்பூச்சிகள் தீபத்தினிடம் செல்வதுபோல் ஸ்ரீ முருகேசனைச் சயிப்பதற்காக அவரிடம் வந்து கூர்மையுள்ள சரங்களை யவர்மீது சொரிந்தார்கள். (22) அப்போது வீரர்களவ் வசுரர்களி னட்டகாஸத்தைப் பார்த்து மிகவும் பயங்கொண்டார்கள். அதன்மேல் தருமமூர்த்தியான ஸ்ரீ ஷண்முக னுடனே யப்பாதகர்கள்மீது ஸகல சத்துருக்களையும் நாசம் செய்யலுற்ற மகா கோரமாகிய பாசுபதாத்திரத்தைச் சந்தானம்பண்ண, (23½) அது, பெரிய ஸர்ப்பங்கள், வஜ்ஜிராயுதங்கள், விஷங்கள், அளவற்ற வுருத்திரர்கள், மருத்துக்கள், பெரிய பெரிய சஸ்திரங்கள், அலைகளோடு கூடிய மகா பயங்கரமான சமுத்திரங்கள், அக்கினிகள், மற்றுமுள்ள மகா கோரங்களான வத்திரங்கள் இவைகளையெல்லாம் நான்கு திக்குகளிலும் கக்கிக்கொண் (25½) டோர் கொடிநேரத்திற்குள் மகா பயங்கரமா யவர்களத்திரங்களையெல்லாம் கண்டித்துவிட்டுப் (26) பிறகொரோநேரத்தி லவ்வெல்லா வசுரப்பாதகர்களையு மதம்பண்ணி யச்சுதாமந்தரகிரியையும் தூள்தூளாக்கிவிட் டப்போது சீக்கிரமாய் ஸ்ரீ பகவான் திருக்கைக்குத் திரும்பிவந்துவிட்டது. (27) அப்போ துயுத்தரங்கத்தில் சூரன்மட்டில் மிஞ்சி யொண்டியாய் நிற்க்லாகையில் பிரம்மன் முதலிய தேவர்கள் மிகுந்த சந்தோஷமடைந்தார்கள், (28) பிறகு துஷ்டனுன சூரன் ம

கா கோபம்கொண்டு புருவங்களின் நெரித்தலால் வக்கிரமான கண்களை யுடையவனாகி யிந்திரலோக ரதத்தை நோக்கி யப்போது வசனமுரைத்ததாவது:— "ஓ! ரதமே! நீ வீரர்களையும் பூதர்களையு மின்னுமுள்ள மற்றவர்களையும் சீக்கிரமா யண்டகோளத்திற் கொண்டுவைத்திரு" என்றவ்விரதத்தை யனுப்ப, (30) அதுவு மப்படியே நல்லதென்று மகா வேகத்தோடுபயமுறுத்திக்கொண்டேபுறப்பட்டுக் கேளீர்! தாணிதேவர்களே! வீரர்களையும் பூதர்களையு மப்போதே மூர்ச்சை கொள்வித்துப் (31) பிற கவர்களைத் தூக்கிக் கொண் டோர் நொடி நேரத்துக்குள் ளங்கு சென்று தானு மிருக்கலுற்றது. அப்போ தசுரக் கேடனாகிய வச்சூரன் மிகுந்த சந்தோஷ மடைந்தான். (32) தேவர்கள் 'ஹா ஹா' வென்று பயப்பட்டு மிகவும் துக்க மடைந்தார்கள். அப்போது பரமாத்துமாவான வடிவேல னவர்க ளெல்லா மிந்திர லோக ரதத்தி னண்ட கோளத்திற் கொண்டு வைத்துக் கொள்ளப் பட்டிருப்பதை யறிந்து மிகுந்த வத்திரங்களைப பிரயோகிக்க, (33½) கேளீர்! முனிவர்களே! அவ்வத்திரங்களு மதிவேகமாய்ச் சென் றவ் விரதத்தின் மீதிருந்தவர்களை யெல்லாம் மூர்ச்சை தெளிவித்துப் பிறகோர் நொடி நேரத்திற்குள் ளவ்விரதத்தோடுகூடவே அவர்களை யதிவேகமாய்ப் பகவானிடம்கொண்டு சேர்த்துவிட்டன. (35) பிற்பாடு வீரர் முதலியவர்க ளவ்விரதத்தை விட் டிறங்கி ஸ்ரீ வடிவேலனைத் தரிசித்து மிகுந்த பக்தியோடு தண்டனிட்டுத் தோத்திரம் செய்தார்கள். (36) அப்போது ஸ்ரீ சுப்பிரம்மணியனசுரனது ரதத்தை நோக்கி "நீ யினி யவ்வசுரனிடம் போகத்தக்கதில்லை: இங்கே யிரு" என்றவ் விந்திரலோக ரதத்தைத் தம்பனம் செய்து பிறகத் தருமமூர்த்தியானவர் தம் திருக்கண்களா லச்சூரனை நோக்கிக் கொண் டங்கு விளங்கியிருந்தனர். (38) அதுகண் டசுரனும் மகாகோபம்கொண்டு ஸ்ரீ சண்முகன்மீ தத்திரங்களை வருஷித்தான். பிறகு வடிவேல னவைகளைச் சில கணைகளாற் கண்டித்துவிட்டுப் பின்னும் பலசரங்களைத் தொடுக்க, (39) பாவத் தொழிற்காரனான அவ்வசுரனு மவரது சரங்களைப் பழுதாக்கிவிட்டு, மேலும் மகா கோபத்தோ டவர் ஸாரதிமீது திரளான பாணங்களைத் தொடுக்கலாயினன். (40) அப்போது வாயுதேவ னவ னத்திரங்களாற் பீடிக்கப்பட் டிரத்தங்கள் தாரை தாரையாய்ப் பெருகப்பெற்றவனாகித் தேரோட்டத் திறமையற்று மகா வியாகூலங்கொண் டங்கே யிருந்துவிட்டான். (41) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அது கண்டு பகவா னுடனே கூர்மையுள்ள வாயிர மம்புகளாலவனது வில்லை முறித்தெறிந்தனர். (42) அதன் பிறகு சூரன் கடுஞ்சினம்கொண்டவனாகித் துரிதமாய்ச் சிம்மவாகனத்தை விட்டிறங்கி மகா

வட்டஹாஸம் செய்துகொண்டு ஸ்ரீபகவான் சன்னிதியில் வந்தான். (43) அப்போ தவனது வாகனமாகிய சிம்மமானது சகலர்களையும் சமுகாரம் செய்யலுற்ற வோர் சூலத்தை விரைவாயெடுத்து ஸ்ரீமுருகேசனுடைய தேர்க்குதிரைகளை (44) வேகத்தோடு குத்திக் குத்தி மிகுந்த கர்ஜனம் செய்தது. தவிரவு மப்போ தசுரனும் ஸ்ரீசண்முகன்மீ தோர் சூலத்தைப் பிரயோகிக்க, (45) அது மிகுந்த அக்கினிகள், கொடிய விஷங்கள், வஜ்ஜிராயுதங்கள், பயங்கரமான பூதங்கள், பெரிய வாயுதங்கள் (46) இவை முதலிய வின்னு மனேகங்களை மகா பயங்கரமாய் வாரியிறைத்துக்கொண்டு மகா வேகத்தோடு கந்தன் சன்னிதிக்கு வரலாகையி (47) லப்போ தவர் தீக்ஷணமுடைய கோடிபாணங்களை யதன்பேரிலெய்தும் கேளீர்! தரணிதேவர்களே! அவைகளை யச்சூலம் சட்டைசெய்யாமற் சேதித்துவிட் டவர் முன்னர் வந்துவிட்டது. (48) அப்போதே யவர் மிகுந்த கோபத்தோ டதன்பேரில் மகா கோரமான வோர் குலிசாயுதத்தைச் சந்தானிக்க, ஸ்ரீ! குஹமூர்த்தியினுடைய கோரமான வக்குலிசமானது அச்சூலத்தை வாய்தனிற் கௌவிக் (49) கொண் டவரிடம் கொடுத்துத் தானு மவர் திருக்கையை யடைந்துவிட்டது. பிறகு தேவரெல்லாம் மனக்களிப்புற்றவராகி "ஓ! கருணைக்கடலாகிய பிரபுவே! பாவியான விக்கொடிய துராத்துமனைக் கொன் றெங்களை யிரக்ஷித்தருளவேண்டு" (50½) மென்று பார்வதீ மைந்தனுன வத்தேவேசனைத் தோத்திரம் செய்தார்கள். (51) பிற்பாடு பிரபுவானவர் மகா கோரங்களான விரண்டாயிரம் சரங்களை யத்துராத்துமனுடைய வாகனமான ஸிம்மத்தின்மீது துரிதமாய்ப் பிரயோகித்தவுட (52) னப்போதே யச்சிங்கம் சடிதியில் பூமிதனில் விழுந்து மரண மடைந்தது. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போ தசுரன் சீக்கிரமாய்ப் பூமிதனிற் குதித்து (53) மிக வற்புதமும், மகா கோரமுமான வோர் சக்கிரவாகப் பறவையினுருவத்தைக்கொண் டாகாயத்திலுயரக் கிளம்பலானுன். (54)

முப்பத்துமூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உயுத்தகாண்டம் ௩௪—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போது பறவை யுருவங்கொண்ட வசுரன் பூதர்கள், வீரர்கள், ஸேனுதிபர்கள் இவர்களை யிரக்கைகளா லடித்தும், பிறகு சிலர்களை மூர்ச்சை யடைவித்தும், சிலரை மூக்கினுல் கொத்தித் தின்றும், (1) சிலரைக் கோபத்தோடு மூக்கினுல் கொத்தி யாகாயத்தி லேறிந்தும், சி

ல பூதர்களைக் காலினால் கிழித் தாகாயத்தி லெறியவுமாயினன். (2) மேலு மவ்வசுர னாகாயத்திற் கற கறவென்று சுற்றிக்கொண்டே வெகு வேகமாய் வந்துஸாரதியையு மிரதத்தையு மறைந் தாகாயம் சென்று (3) பிறகு வந்து தேர்தனிற் கட்டிய குதிரைகளைக் கோபத்தோடு துரிதமாய்த் துன்பப்படுத்திப் பகவானுடைய கொடிய வத்திரங்களையும் முறித்து முறித்துத் தூள்களாக்கினன். (4) பிறகு ஸ்ரீ தேவநாதன் துராத்துமனாகிய வச்சூரனுடைய விக் கொடுமை யெல்லாம் கண் டளவற்ற கோடி சங்கியை கொண்ட சஸ்திரங்களை யவன்மீது வருஷிக்கலானையி (5) லவைகளை யெல்லா மவ்வசுர னிரக்கைகளால் மிகுதியா யடித்தும், மூக்கினால் துரிதமாய் முறித்தும், கால்களால் கிழித்தும் (6) மறுபடி வேகத்தோடு பாதாளம், சமுத்திரங்கள், சக்கிரவாளகிரி, பூமி, மலைகள், நதிகள் இவைகளையெல்லாம் சுற்றியும் (7) பிறகு வெகு வேகத்தோடு வந்து வீரர்களையும் பூதர்களையும் தின்றும், மற்றவர்களைக் கோபத்தோடு மூக்கினாற் கொத்தி யுதறியும் (8) ஸ்ரீ சண்முகனது தேருக்குமேலாய் மிகுந்த சத்தத்தோடு வட்டமிட்டனன். அப்போது ஸ்ரீ பார்வதீ மைந்த னக்கொரமான பக்ஷியைப் பார்த்து மந்தஹாஸம் செய்துகொண்டு (9) "ஓ! இப்போ திப்பறவையோ டிவ்விதமாய்ப் போராடுவது நமக்குச்சரியல்ல" வென்று சொல்லி யிரதத்தை விட்டிறங்கிப் பூமியில் நின்றுகொண் டத்தேவநாதன் (10) தம் முன்னில் நின்ற விந்திரனுடைய முகத்தைத் திருக்கண்ணுற்றமாத்திரத்தி லவனுடனே யோரற்புதமானமயி லுருவத்தைக் கொண்டவனாகி (11) வந்து அசுரர்களுக் கியமனான அப்பகவானை வணக்கத்தோடு துரிதமாய் வந்தனித்து "ஓ! சகல தேவர்களுக்கு மீசுவரனானசுவாமி! தேவரீ ரடியேன்மீ துட்கார்ந்துகொண் டித்துராத்துமனோ டியுத்தம் (12) செய்தல் வேண்டு"மென் றவ்வடிவேலனைத் தோத்திரம்பண்ணினான். பிறகவன் சொல்லிய வசனத்தைக் கேட்டு 'நல்லதப்படியே செய்வோ' மென்றப்பகவா னம்மயிலின்பேரி லேறிக்கொண் (13) டதனைக் கோபத்தோடச் சக்கிரவாகத்தின்பேரி லேவுகையிலப்போ தச்சக்கிரவாகம்வெகுகோபத்தோடு வந் தம் மயிலைத் துரிதமாய்க் காலினா லறைந்து மூக்கினாற் கடிக்க, (14½) அப்போ தம்மயில் மிகவும் பயமடைந்ததாகித் துயரமடைந்தது. (15) அது கண்டு ஸ்ரீ பார்வதீ மைந்தனு மதின் முகம், தலை, மார்பு, கால்கள் இவைகளி லனேக மம்புகளை மிகுதியா யெய்தனர். (16) அப்போ தப்பறவை யக்கணைகளால் மிகவும் துயரமடைந் திரத்தம் மிகுதியாய்ப் பெருகப் பெற்றதாகி மறுபடியு மது மகா பயங்கரமான விரக்கைகளை விரித்துவிட் டுதறிச் (17) சகல லோகங்களையும் நடுங்

கச் செய்துகொண்டே யோர் நொடிநேரத்துக்குட் சுற்றி வந்தது. அப்போது ஸ்ரீதேவநாதனு மவ்வசுரக் கேட னெங்கெங்கு (18) வெகு வேகமாய்ச் சென்றானோ அவ்வெல்லாவிடங்களிலும் பாணங்களைப் பிரயோகித்துப் பிரளயகாலத்தில் முயன்றிருக்கும் மேகம்போ லவன்மீது சொரிந்தனர். (19) பிறகு கேளீர்! தரணிதேவர்களே! அப்பறவையு மவாது வில்லை முறிக்கக் கருதி யவ்வாறுமுக னண்டைக்கு வெகு விரைவாய் வந்தது. அப்போது பகவானது சமீபத்தில் வரலானதைக் கண்டதனைக் கத்தியா லிரண்டுதுண்டமாய் வெட்டிப் பூமியில் வீழ்த்தினர். (21) அத்துராத்துமன் கீழே விழுந்தவுடன் பூமிவடிவமா யண்டம்வரையில் மிகுதியாய் வளர்ந்துகொண்டு ஸ்ரீபகவானைப் பயமுறுத்துகையி (22) லப்போது சூரியன், சந்திரன், வாயு இவர்களுடைய மார்க்கமெல்லா மத்துராத்துமனு லடைபட்டுப்போனதைத் திருக்கண்ணுற்று மகா பயங்கரமான வுருவத்தோ டிருந்த அவ்வசுரனைப் பார்த்து 'அடா! துராத்துமாவே' யென்றவனைச் சொல்லி (23) யப்பாதகன்மீது தீக்ஷணமான வேழு பாணங்களைப் பிரயோகிக்க, உடனே யப்பாணங்கள் மகா சமுத்திரவுருவத்தோடு சென்று அசுரனு லுருவம்கொள்ளப்பட்ட வப்பூமியை நாசம்செய்துவிட்டன. (24½) பிறகசுரன் வெகு கோபம்கொண்டு மறுபடியோர் பெரிய சமுத்திரத்தி னுருவத்தை (25) யெடுத்துக்கொண்டு பெரிய அலைகளுட னறுமுகனை யெதிர்த்துவருகையில் ஸ்ரீதேவேசன் துரிதமா யவன்மீது நூறம்புகளை யெய்தனர். (26) அப்பாணங்க ளுடனே யளவிறந்த அக்கினி யுருவங்களைக் கொண்டவையாகி யசுரனுல் துர்மார்க்கமாய்க்கொள்ளப்பட்ட மகாகோரமான வச்சமுத்திரத்தை வற்றச் செய்தன. (27) பிறகசுரப் பாவியானவ னோர் பெரிய அக்கினி யுருவங்கொண்டு வீசிப் பிரகாசிக்கலுற்ற நெருப்புப் பொரிகளாற் சூழப்பெற்றவனுகி ஸ்ரீதேவேசனை யெதிர்த்து வந்தான். (28) அப்போது தேவன் மந்தஹாஸம் கொண்டவர்போ லிருந்துகொண் டாயிரம் கணைகளைத் தொடுத்தார். கேளீர்! முனிவர்களே! அவைகள் சண்டமாருதங்களாய்ச் சென் றப்போதே யிப்பேர்க்கொத்த அக்கினியை யணைத்துவிட்டன. (29½) மகா வஞ்சகனும், பாவப்பிண்டமுமான அவ்வசுரக் கொடிய னப்போதே மிகவும் பயங்கரமான வோர் பெருங் காற்றி னுருவத்தைக் கொள்ளலாகையில் (30½) பிரபுவான வ ரவன்மீ திலக்ஷம் கொடிய சரங்களைச் சொரிய, (31) அவைகளனேகம் பெரிய ஸர்ப்பங்களி னுருவத்தோடு சென் றக்காற்றுதனைப் பக்ஷித்து ஸ்ரீகுஹனிடம் திரும்பி வந்துவிட்டது. (32) இவ்வாறு வந்த எல்லா வத்திரங்களும் அசுரனுடைய அந்தந்த உருவத்தை யதம் செய்துவிட்டுச் சீக்கிரமா யச்சருவேசுரனிடமே திரும்பி வந்துவிட்டன.

(33) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! உயுத்த மல்லர்களான அத்தே வேசா சுரேசர்களுடைய இவ்வாறு கொடிய உயுத்தத்தோடு நான்கு தினங்கள் கழிந்துவிட்டன. (34) பிற்பாடு மகா சூதுகாரனான அவ்வசுரன் திரிமூர்த்திகளி னுருவத்தோடும், ஓரிடத் தசுர வுருவத்தோடும், (35) மற்றோரிடத் திந்திரன் முதலிய தேவர்களி னுருவத்தோடும், பூதர்களினுருவத்தோடும் பிசாசம், பயங்கரமான அக்கினி இவைகளி னுருவத்தோடும், (36) மற்றோரிடத்து மகா கோரமான வியம னுருவமெடுத்தும் வெகு வேகமாய் வந்தான். தவிரவு மத்துர்ப்புத்திக்காரனானவன் பெருங் காற்றுருவத்தோடு நான்கு பக்கங்களிலும் வீசிவந்தான். (37) மேலு மோரிடத்துக் கடல், எருது, நஞ்சு, மேகக்கூட்டங்கள், இடி, இருள், மலை, சூரியன் இவைகளின் கூட்டம்போ லுருவமெடுத்தும், (38) திக்கஜங்கள், சிங்கம், பக்ஷி, மான் இவைகளின் கூட்டம்போ லோரிடத்தும், ஓரிடத்துத் தன் சுய உருவத்தோடும், நக்ஷத்திரங்களி னுருவத்தோடும், (39) நான்கு பக்கங்களிலும் சிங்கமுகன், அக்கினிமுகன், பானுகோபன் முதலிய தம்பிகளுடையவும், பிள்ளைகளுடையவுமான பயங்கரமாகிய உருவங்களோடும், (40) ஒவ்வோரிடத்துத் தன்மந்திரிகள்,சேனாதிபர்களி னுருவங்களோடும் புறப்பட்டுவந்து மிகுந்த கர்ஜனங்களால் பயமுறுத்தினான். (41) அப்போது தேவரெல்லாம் மிகப்பயந்து நடுக்கமுற்று நான்கு பக்கங்களிலுமோடத் தலைப்பட்டார்கள். ஸ்ரீ சுப்பிரம்மணியரு மிவற்றையெல்லாம் திருக்கண்ணுற்று மந்தஹாஸம்பண்ணி யவன்பேரி லாயிரம்கோடி ஸங்கியைகொண்ட தீக்ஷணமான பாணங்களை வருஷிக்கலாயினர். (42)

முப்பத்துநான்காவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உயுத்தகாண்டம் ௩௫—வது அத்தியாயத்தி னர்த்தம்.

### சூரபத்துமன் வதை.

ஸ்ரீ பகவானால் விடப்பட்ட அவ்வத்திரங்களெல்லா மத்துராத்துமனுடைய ஒவ்வோ ருருவத்திற்கு மெழு மடங்கதிகமாய்த் துரிதத்தில் (1) வந் துடனே யவ்வுருவங்களையெல்லா மதம்பண்ணிவிட் டவரிடமே சென்றுவிட்டன. அப்போது சூரனொருவன்மட்டிலே ஸ்ரீபிரபுவண்டையி லொண்டியாய் மிஞ்சி நிற்கலாகையில் (2) மகா மகிமை பொருந்திய வத்தேவேச னவ்வசுரனைத் திருக்கண்ணுற்று "அடா! அசுரா! உன திப்பேர்க்கொத்த வுருவங்களையெல்லாம் யாம் கண்டோம். (3) ஆகிலும் நமது திருவுருவத்தையும் நீ பார்க்கலாவா" யென்று தி

ருவாக்கருளிவிட்டு அத்தேவநாதன் நாவுக்கும் மனதிற்கு மெட்டாத தமது விசுவரூபத்தைக் கொண்டருளினர். (4) எப்படியென்றால்:— மகாமகா பருவதங்களெல்லா மவர் பாதமத்தியிலிருந்தன. ஸமுத்திரங்களெல்லா மவர் நுனிக்காலிலும், நக்ஷத்திரங்கள், மின்னல், நவக்கிரகங்கள் இவையெல்லாம் (5) கால்விரல்களுக்குள்ளுமடங்கியிருந்தன. சூரியன், சந்திரன், நிருருதி, வருண னிவரெல்லா மிருகால் கறடுகளி லிருந்தார்கள். (6) முனிவர்களும் சிந்தாமணியு மம்மகேசுவரன திருகணுக்கால்களிற் காணப்பட்டார்கள். வித்தைமுதலியவைக ளவாது முழந்தாட்களிலும், இந்திரஜயந்தர்கள் துடைகளிலு மிருந்தார்கள். (7) காலனு மியமனு மிடைச்சந்திகளிலும், அசுரர்கள் முதுகிலும், தேவர்கள் விலாப்பக்கங்களிலும், நாகர்கள் அபானத்துவாரம் முதலிய விடங்களிலு மிருந்தார்கள். (8) ஆண்குறியி லமுதமிருந்தது. ஸகல ஜகங்களுடைய வுற்பத்தியு மப்பிரபுவின் நாபிதனிற் காணப்பட்டது. ஸகல சாஸ்திரங்களு மவரது திவ்யமான மார்பின்கண் ணிருந்தன. ஞானம் திருநூற்சறடுகளாய் விளங்கிற்று. (9) அனேக கோடி பிரம்மாண்டங்களு மவாது மயிர்க்கால்களிற் காணப்பட்டன. ஸகலவிதசுகங்களு முள்ளங்கையி லிருந்தன. பிரம்மனும் விஷ்ணுவு மவாது புயங்களிலும், தேவஸ்திரீகளெல்லாம் விரல்களிலு மிருந்தார்கள். (10) ஸகலவிதத்தொனிகளு மவாது கழுத்தினிற் காணப்பட்டன. கேளீர்! தாணிதேவர்களே! எல்லா வேதங்களு மத்தேவாதி தேவனுடைய திருவாய் நடுவில் விளங்கி நின்றன. (11) அக்ஷரங்களெல்லா மவர் பற்களிலும், சிவாகமங்கள் நாவினிலும், எழுகோடி மகா மந்திரங்களு மவரது உதட்டினிலு மேற்பட்டிருந்தன. (12) அவரது மூக்கினில் வாயுவும், சூரிய சந்திரர்க ளிருகண்களிலும், திசைகளெல்லா மவரது காதுகளிலும், நெற்றிதனிற் பிரணவமு மிருக்கலுற்றன. (13) மேலும் பரமாத்துமாவாகிய ஸாக்ஷாத் ஸ்ரீ பரமசிவனே சிரசினில் தாமே விளங்கலாயினர். இவ்விதமான வற்புத வுருவத்தை ஸ்ரீ ஷண்முகன் காக்ஷியளித்தருளுகையில் (14) தேவரெல்லோர்களும் தரிசித்துப் பயத்தினால் மிகவும் நடுக்கங்கொண்டவர்களாகி யுச்சிமீ தஞ்சலிகொண்டு சிரேஷ்டமான துதியைச் செய்தனர்கள். அப்போது (15) மகா பரிசுத்தரும், கருணைக்கடலுமான ஸ்ரீ முருகேச னவர்களைத் தயவுடன் நோக்கி "ஓ! தேவர்களே! இப்போதிங்குப் பயப்படாதீர்க" ளென, (16) தேவர்க ளப்போ தச்சுப்பிரம்மணியனைத் தண்டனிட்டுத் தோத்திரம் பண்ணினார்கள். சூரனுமப்போது தெய்வவசத்தினால் ஸ்ரீகுஹனுடைய வப்பேர்க்கொத்த திருவுருவத்தைத் தரிசித்தமாத்திரத்தில் நல்ல ஞானத்தை யடைந்து மனதினி

லாலோசித்துக் கொண்டதாவது;—(17½) "ஓ! கோ! இவ ரசுர சே னைகளை மற்றெல்லோர்களுடன்கூடக் கொன்றுபோட் டெந்தனேடும் ம கா கோரமா யுயுத்தம்பண்ணிப்பிற கிந்திரலோக ரதத்தையும் தமது வச மாக்கிக்கொண்டு, எந்தனுற் செய்யப்பட்ட மாயைகளையும் நாசம்செய் துவிட்டுத் (19) தேவாசுர மானிடர்களோடு கூடியதும், அளவற்ற கோடி பிரம்மாண்டங்களுக்கு மிருப்பிடமும், வேறு நிகரற்றதுமான தி ருவுருவத்தைக் காக்ஷியருளினரன்றே! (20) அப்பேர்க்கொத்த வப்ப ரமாத்துமாவை மூட புத்தியினு லோர் வாலிப னென்றெண்ணினேமே ஓ! கோ! இவரே மகாதேவனும், பரமாத்துமாவுமான ஸாக்ஷாத் ஸ்ரீ பர மேசுவரன்! (21) முந்தியே நமது மைந்தனும் சிங்கமுகனு மிவ்வாறு ரைத்தனர்களன்றே! மதோன்மத்தரும், ஐசுவரியத்தினுல் கெர்வம்கொ ண்டிந்தவருமான யா மவர்கள் வார்த்தைகளைக் கேளாமற் போனேமே! (22) ஓ!கோ! நமது சொந்தமான வாயிரத்தெட்டங்களு மவரது பொன்னடிமீதுள்ள மயிர்களின் கண்ணே காணப்படுகின்றனவே! ஆ! நமது கண்களா லவரது திருவுருவத்தை யுச்சிமுத லுள்ளந்தாள்வரை நோக்கியதி (23) லனேக காலம் பார்த்திருந்தாலு மவரது சௌந்தரிய ம் பார்க்கப் பார்க்கப் புதிது புதிதாயே விளங்கலாகின்றதே! போதுமெ ன்ற திருப்தியுண்டாக வில்லையே! மேலுக்குமே லாசையே விருத்தியா கின்றதே! (24) ஏதோ தவத்தின் மகிமையால்தா னவர திப்பேர்க்கொ த்த திருமேனியைத் தரிசிக்கலானேம். இத்தேவநாதன் நம்மீதுள்ள த யவினுல் தானிங் குயுத்தத்துக்காக வந்தருளினர். (25) நமதந்தக்க ணத்தில் மேலுக்குமேல் பக்தி விருத்தியாகின்றது. நமது மனமும் பி ரதக்ஷிணம், நமஸ்காரம், தோத்திரம் இவைகளிலே நாடுகின்றது. (26) ஓ! கோ! நமது வலக்கண்ணும், வலக்கையும் துடிக்கின்றனவே! இவர் நமது சத்துருக்களுக் குதவியாய் வரலானதை யறிந்து, கோபத்தினு ல்மிகவும் பற்றியெரியலான வெம்மன மிப்போ துருகுகின்றதே! (27½) இத்தேவேசனே யெந்தனைக் கொல்வதற்காகப் போர்முகம் வ ந்திடி (28) லப்போதவருக் கதிலென்ன வோர் மிகுந்த பிரயாசை? அவர் செய்தவெல்லாம் திருவிளையாடலே! ஆனுல் நாம தேவர்களைச் சி றையி லடைத்ததால்தா னவர் நமக்குத் திருக்காக்ஷியருளலாயினர். (29) அஞ்ஞானத்தினுல் மதிமயக்கம்கொண்ட சிலர் 'இது சரியல்ல' வென்று கூறினர்களே! இவரோடு சண்டைசெய்தால்தான் மிகுந்த பராக்கிரமமும் கிர்த்தியு முண்டாயின. (30) தேவர்களையும் விட்டு நாமு மிவரைச் சர ணமடைந்துவிட்டால் நமக்கிவையெல்லா மேது" என்றிவ்வாறு முதலி யதா யச்சூரபத்தும னிங்கு மனதினி லாலோசித்துக்கொண்டு நிற்கும

ளவில் (31) ஸர்வப்பிரபஞ்ச சுவரூபியான பகவான் பிறகு தமது விசுவரூபத் திருமேனியைச் சுருக்கிக்கொண் டவனது நல்ல ஞானத்தையுமபகரித்துக்கொண்டு கேளீர்! முனிவர்களே! தமது முந்திய திருவுருவத்தையே கொண்டருளினர். (32) பிறகு நல்லஅறிவு அபகரிக்கப்பட்டானவுட னசுரன் கடுஞ்சினத்தாற் பீடிக்கப்பட்டவனுகித் தேவனை நோக்கி நகைத்து மகா பயங்கரமாய்க் கைகளைத் தட்டி (33) "ஓ! இப்பையல் நம்மோடு சண்டைசெய்யத் திறமை யற்றவனுகி மாயையால் மற்றோருருவத்தை யெடுக்க, அதனை நா மோர் நொடிநேரத்திற்குள் தொலைத்துவிட்டோம். (34) ஆகையால் நமக்கீடான ஸமர்த்த னுலகுகளிலேயில்லையன்றோ! இதோ! வோர்நொடிக்கெல்லா மவனைத் தூண்டிவிட்டவித்தேவர்களையெல்லாம் சந்தேகமின்றிப் பக்ஷித்துவிட்டுப் பிறகுடனேயிவனையும் ஜயித்துவிடுகின்றோ" (35½) மென் றத் துராத்துமன் விதிவசத்தினுல் தூண்டிவிடப்பட்டவனுகி மனதினி லாலோசித்துக்கொண்டு (36) மாயையா லோர் பெரும் கும்பிருட்டை யுண்டுபண்ணி யனேகம் கால்களையும் கைகளையு முடையதும், அனேக முகங்களால் மிகப்பயங்கரமுள்ளதுமான வோர் சரீரத்தை யெடுத்துக்கொண்டு (37) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இப்பேர்க்கொத்த கோரமான வுருவத்தோ டாகாயத்திற் கிளம்பி யங்கிருந்துகொண்டே யசுரன் மகா கோரத்தோடு தேவர்களையெல்லாம் நோக்கித் (38) துரிதமா யனேகங்களான தன் கைகளை விரித்துக்கொண் டவர்களைப் பக்ஷிப்பதற்குத் தலைப்படுகையி லப்போது தேவரெல்லாம் மிகவும் பயந்து நடுக்கமுற்றவர்களாகித் தேவேசனுன ஸ்ரீ சுப்பிரம்மணியரிடத்தில் (39) "ஓ! கருணைக்கடலே! அடியார்களுக் கபயமளிப்போரே! தேவர்களுக்குப் பயமளிப்பவனும், மகா கொடியோனும், மகா பாதகனும், மூவுலகையும் நடுங்கச்செய்வோனுமான வித்துராத்துமனைக் கொன்றெங்களைக் காப்பாத்திடல் வேண்டு" (40½) மென்று முறையிட்டுக்கொண்டே நான்கு வாக்குகளினு மோட்டம்பிடித்தார்கள். (41) மயிலுருவங்கொண்டிருந்த தேவேந்திரனு மவ்வாறு வேண்டிக்கொண்டான். பிறகவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீ தேவநாதன் கிருபைகூர்ந்தவராகிச் (42) சத்துருக்களைச் சமுகாரஞ் செய்யவூற்றதான நிகரற்ற வேலாயுதத்தை நோக்கி "ஓ! வேலாயுதமே! இவ்வசுரனைத் துரிதமாய்ப் பிளந்தெறிந்து விட் டிங்கு வரலாவா" யென்று கட்டளையிட் டதனைப் பிரயோகித்தனர். (43) உடனே அவ்வேலானது கோடிசூரியப் பிரகாசமுள்ளதாய் மெல்ல மெல்ல வெளிக்கிளம்பிப் பெருந்தீயைப் பொழிந்துகொண்டே யவ்வசுரனுடைய இருளையு மவனது மாயாவுருவத்தையும் போக்கடித்

துக்கொண் டானிடம் வரலாகையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே!
அப்போ (45) தவ்வசுரன் "ஓ! யோ! என்று மழிவேயில்லாத நம்மை யி
வ்வேலாயுதம் யாது செய்யத்தகு" மென் றவ்வசுரன் மிகுந்த கோபத்
தோடு நகைத்துக்கொண்டு "ஓ! ஓ! இதோ! ஓர் நொடிக்குட் சகல வுல
கங்களையும் ஹதம்செய்துவிட் டப் பையலையும் கொன்றுவிடுகின்றேன்"
மென் றதிவேகமாய் நடுக்கடலுக்குச் சென்று, எரியலுற்ற நெருப்புப்
போன்ற மிகுந்த கிளிர்களை யுடையதும், புகைத்திரள்போன்ற இலைக
ளால் நிறையப்பெற்றதும், (47) உருகலுற்ற தங்கம்போன்ற மலர்க
ளால் மிகுந்ததும், பச்சைக்கற்கள் போன்ற வடுக்களைக் கொண்டதும்,
மாணிக்கத்தை யொத்தகனிகளால்நிறைந்ததும், மேகங்கள்போன்றகிளை
களாற்சேர்ந்தியானதும்,(48)பிரம்மாண்டச்சுவர் வரையிற்கிழும் வேரோ
டி மேலும் மிக வுன்னதமானதும், இலக்ஷம்யோசனை தூர மடர்த்தியாய்
கிழவிடலுற்றதும், (49) கேளீர்! தரணிதேவர்களே! விஷ்ணுப்பிரம்
மர்களின் லோகங்களையும் திக்பாலர்கள், ஸர்ப்பங்கள், சூரியன் சந்திரன்
முதலிய தேவர்கள், ஸப்தமாதருக்கள், ஸப்த கன்னிகள், இவர்களுடை
ய லோகங்களையும, எழுகடல்களையும் நடுநடுங்கச்செய்வதும், (50$\frac{1}{2}$)
அப்போ தண்டச்சுவரை யிடித்துவிட்டுப் பூமியையும் பிளக்கலுற்றது
மான (51) விப்பேர்க்கொத்த வோர் மாமரத்தி னுருவத்தை யெடுத்
துக்கொண் டவ் வசுரன் கோபத்தோடு கிளைகளாற் சகல ஜகங்களையும்
மோதித திலக்ஷளித்தான். (52) அப்போ தவன தார்ப்பாடங்களால் பூமி
யானது நடுநடுங்கி வெடிக்கலாயிற்று. எல்லாக் கீழ்லோகங்களு மிடிந்
து விழலுற்றன. (53) ஆதிகூர்மமும் எட்டுத் திக்கஜங்களும் அநந்த
ன் முதலிய மகா நாகங்களும் நடுநடுங்கின. அப்போ தெல்லாச் சமுத்
திரங்களு மொன்றாயின. (54) ஓ! பிராம்மணோத்தமர்களே! எல்லா
மலைகளும் நக்ஷத்திரங்களும் நான்கு பக்கங்களிலும் விழலாயின. சந்தி
ர சூரிய ரிருவர்களும் மற்றெல்லாக் கிரகங்களோடு மவரவ ரிரதங்களை
விட்டுக் குதித்து (55) மிகப் பயங்கொண்டவர்களாகிப் பூமியில் நான்
கு திக்குகளிலும் சிதறுண் டோடினார்கள். சில தேவர்கள் கைலைகிரிக்
கும் சிலர் மேருவுக்கு மப்போ தோடினார்கள். (56) பிரம்மாவி னண்
டம்கூட மிகவு மிடிந்து பூமிதனில் விழுந்தது. பிறகு ஸ்ரீ குஹபிரானு
டைய சிரேஷ்டமான அவ்வேலானது தாரகநமனாகிய அவ்வசுரனுடை
ய இவ்வாறு மாயையைக் கண்டு கோபத்தினால் மிகப்பயங்கரமுள்ளது
ம் (57$\frac{1}{2}$) மகாப் பிரளயகால ருத்திரன்போற் காந்தியுடையதும், ஸக
ல ஜகங்களிலும் வியாபிக்கலுற்றதும், (58) பிரம்மதேவன் திருமாலி

கையில் விளங்கலுற்ற (அப்பிரம்மனுடைய பூஜாலிங்கமான) சோதிலிங்
கத்தின் சொரூபத்தை யுடையதும், ஸ்ரீ மகா பைரவமூர்த்தியினுடைய
சூலத்துக்கு நிகரான புகழுடையதும், மகா பயங்கரமுள்ளதும், (59)
கைலைகிரி நீங்கலாய் மற்றெல்லா லோகங்களையு மெரித்துவிடலுற்றது
மாகிக் கடல்களையும் வற்றச்செய்துகொண்டு வந்தம் மாமரவுருவத்
தோ டிருந்த வசுரனை யிரண்டாய்க் கிழித்துவிட்டது. (60) பிறகு பா
தகனான அவ்வசுரன் மாமரவுருவத்தை விட்டுத் தன் சுவய வுருவத்தை
யடைந் தோர் கத்தியை யெடுத்துக்கொண்டு வேகமா யோடிவர, (61)
கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மறுபடியு மவ் வேலானது கொடூர
னான அவ்வசுரன் மார்பினைப் பிளந்துவிட்டுத் திரும்பி யாகாயத்தை
யொளிப்பித்துக்கொண்டு (62) சகல தேவர்களாலும் துதிகூறப்பெ
ற்றதாகி யோர் கணநேரத்துக்குள் ஆகாயகங்கையில் ஸ்நானம் செய்து
விட்டுக் கேளீர்! தரணிதேவர்களே! அந்தேவாதி தேவனுடைய திருக்
கைக்கு வந்துவிட்டது. (63) பிற கிரண்டு துண்டங்களாக்கப்பட்ட அ
வ்வசுரப்பாதகனோர் துண்டத்தினால் மயிலுருவத்தையும் மற்றோர் து
ண்டத்தினால் கோழியுருவத்தையு மெடுத்துக்கொண்டு புறப்படலானா
ன். (64) அப்போ தம் மயிலும் கோழியும் மகா கோபத்தோ டெம்பி
யெம்பிக் குதித்துக்கொண்டு ஸ்ரீ பரமேசுவரனான வச் சுப்பிரம்மணிய
ரோ டியுத்தம் செய்வதற்குத் துரிதமா யோடிவருகையில் (65) ஸா
க்ஷாத் பரமானந்த மூர்த்தியான அவ்வடிவேல னம்மயிலையும் கோழியை
யும் கருணாகடாக்ஷத்தினால் நோக்கியவுட (66) னப்போ தவைகள் க
ர்வத்தை யிழந்தவைகளாகி நல்லஞ்ஞானத்தை யடைந்து அம்முருகேச
னை வந்தனித்து மிகுதியாய்த் தோத்திரம் செய்தன. (67) அப்போது
ஸ்ரீ சுப்பிரம்மணியனும் மகா பயங்கர வுருவத்தைக்கொண்ட அக்கோழி
யை நோக்கி "ஓ! கோழியே! நீ துவஜவுருவமாகி நமது இவ்விரதத்தின்
மேரி லிருக்கலாவா" யென்றதனைத் திருவாக்கருளினர். (68) அப்போ
து நற்கியாகமடைந்த அக்கோழியும் அவ்வாக்கினையைச் சிரமேற்கொண்
டவாது சிரேஷ்டமான தேர்மீதேறி யுட்கார்ந்துகொண்டு மிகப்பயங்கர
மாய் (69) ஊழிகால மேகம்போல் பெரும் சத்தமிட்டது. பிறகு
கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ பகவானானவ ரிந்திரனா லுருவம்கொள்ளப்
பட்ட தமது மயிலினின் றிறங்கி யிம்மயிலின்மீ தேறியதனைத் துரித
மாய்த் துறந்தலானார். (70½) ஓ! பூமிதேவர்களே! அப்போதம் மயி
லானது பூமி, ஆகாயம், சுவர்க்கம், (71) முதலிய சகல லோகங்களிலு
மவரைச் சுமந்துகொண் டோர் நொடிநேரத்துக்குள் ளோடலுற்றது.
அப்போ தவ்வா றோடலான அம்மயிலின் வேகத்தினால் கடல்களெல்ல

லாம் கொந்தளித்தன. (72) மேருவும் பூமிதனில் விழலாயிற்று. அப்போது பூமியும் வெடிக்கலாயிற்று. அக்கினி வாயுக்களும் பிரம்மாண்டத்தோடுகூட மிகவும் நடுநடுங்கினார்கள். (73) மேலு மம் மயில் தனதிரக்கைகளை விரித்துக்கொண் டகவுவதினால் மூவுலகங்களையும் மிகவும் பயமுறுத்திக்கொண்டும், அதனால் ஆதிசேடன், இராகு கேதுமுதலிய ஸர்பபங்களுக்கு விசேடமான பயத்தை யுண்டுபண்ணிக்கொண்டும், தேவசேனுபதியும்மகா வலிமைகொண்டவருவான ஸ்ரீ சுப்பிரம்மணியசுவாமியைச் சுமந்துகொண்டு திசைகளெங்கும் சுற்றிவருகையில் (74-75) ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் மேகவுருவத்தோடு ஸ்ரீ பரமேசுவரனைச் சுமந்ததுபோல் விளங்கலாயிற்று. பின்பளவற்ற கோடிசூரியர்களி னொளிகள் வீசப்பெற்ற ஸ்ரீ வடிவேலன் திசைகளெங்கு மிவ்விதமாயம்மயிலை யோடவிட்டுக்கொண்டே $(76\frac{1}{2})$ தேவர் முதலியோர்க ளிருக்கலான வியுந்தகளத்துக்கு விரைவாய் வந்தருளினர். (77) அப்போதக்கினியு மிந்திரனும் முருகேச னுக்கினையால் கோழியுருவத்தையும் மயிலுருவத்தையும் விட்டு நிஜவுருவத்தை யெடுத்துக்கொண் (78) டப்போது பகவானைத் தண்டம்பண்ணி மிகுந்த பக்தியோடு துதிசெய்தார்கள். மேலும் பூதர்களும் வீரர்களும் ஸகல படைத்தலைவர்களுடனும் சைனியங்களுடனும் (79) சேர்ந்து தேவனைச் சூழ்ந்துகொண்டு கோலாஹல சத்தங்களைச் செய்தார்கள். தவிரவும் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல்லா மென்று மழிவற்றவராகிய வடிவேலனை வந்தனித்து (80) எல்லோர்களும் மிகச் சந்தோஷம் கொண்டவர்களாகி யத்தேவநாதனைத் துதிசெய்தார்கள். அப்போது ஸ்ரீ குமரேசனு மவ்வெல்லோர்களையும் கருணைபால் நிரம்பப்பெற்ற திருவிழிகளால் பார்த்தருளினர். (81)

கேளீர்! பூமிதேவோத்தமர்களே! இப்படியிருக்கையில் சூரனுடைய மனையாளான பத்துமகோமளை யவனிறந்ததைக் கேள்வியுற் றப்போதே மாணமடைந்துவிட்டாள். (82) மேலுமவனது மற்றப்பெண்டீர்களும் மிக நேர்த்தியான பெருந்தீயிற் குதித்துவிட்டார்கள். தவிரவும் (முந்திச் சமுத்திரத்தின்கண் மீனுருவத்தோ டொளிந்துகொண்டிருந்த) சூரபத்துமன் மைந்தனை விரணியனென்பவன்சூரன் முதலியோர்களின் மரணத்தைக் கேள்வியுற்றதின்பேரில் (83) "ஐயோ! அப்பா! நாங்கள் சொல்லியதையெல்லாம் கேளாமற் போனீரோ! இப்போதிறக்கலாகிச் சத்துருவின் தேரின்கண் கோழியுருவத்தோடு துவஜத்திலிருக்கலானீரோ! இது மிகவும் கஷ்டம்! (84) தவிரவுமிப்போது மயிலுருவத்தை யெடுத்துக்கொண் டச் சத்துருவைச் சுமக்கலானீரல்லவோ"

வென்றிவ்விதம் முதலியதா யவன் புலம்பி "ஓ! அவருடைய சைனியங் கள் கண்டா (85) லெந்தனை மிகவும் துன்பப்படுத்துவார்க" ளென்று மனதினில் நினைத்துக்கொண்டவ்வசுரகுமாரனைவன் தங்கள் புரோகிதரான சுக்கிரனிடம் சென்று (86) தாய்தந்தையர்க் குரிய சாவுசடங்குகளை முடித்துக்கொண்டு 'ஓ! ஐசுவரியமெல்லா மோர் க்ஷணத்துக்குள் ளழியவுற்றதே'! யென்று தீர்மானித்து மோக்ஷத்தையே கருதியவனாகி ஸ்ரீ பரமேசுவரனைக் குறித்துத் தவஞ்செய்யலாயினன். (87)

யாதாமொருவன் இவ்வற்புதமான சரித்திரத்தைப் படித்தாலாவது அல்லது கேட்டாலாவது ஸ்ரீ சுப்பிரம்மணியருடைய கிருபாவசத்தினாலவனுக்குச் சத்துருபயமே யிராது. (88) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ மகாவிஷ்ணுவானவ ரிதனை முனிவர்கள் முகமாய்க் கேட்டுத்தான் சத்துருவான முராசுரனையும், மகா கோரனான காலநேமியையும் ஜயிக்கலாயினர். (89) ஜகன்நாதனான ஸ்ரீ கிருஷ்ணனு மிதனை யுபமன்னியுவென்ற மாமுனிவரிடமிருந்து கேட்டுத்தான் மகா பாவிகளான பௌமன் முதலிய வசுரர்களையெல்லா மோர் கணமாத்திரத்தி லதம்பண்ணினார். (90) மேலும் தவசிகளிற் சிறந்த ததீசமாமுனிவரும்மகா பரிசுத்தமானவிச்சரித்திரத்தைப்பாட்டனாகிய சுக்கிரனிடமிருந்துகேட்டுத்தா னச்சுதரான ஸ்ரீமகாவிஷ்ணுவை வெற்றிபெற்றனர். (91)

முப்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# தேவகாண்டம்.

## தேவகாண்டம் முதலாவது அத்தியாயத்தி னர்த்தம்.

கொஞ்சம் கடைக்கண் பார்வைமாத்திரத்தினு லடியார்களுடைய சத்துருக்களை நாசம்பண்ணி யவர்களுக்குக் கலியாணத்தை யருளுவோரும், மேருகிரியை வில்லாய்க்கொண்ட ஸ்ரீ பரமசிவனுக்கு மைந்தனும், கருணைக்கடலும், கலியாணசுந்தரமூர்த்தியும், என்றுமழிவற்றவரும், பருவதராஜபுத்திரியினன்புக்குரியவரும், மகா பரிசுத்தரும், ஸ்ரீ கணநாதனுக்கு மூத்தோனும், தேவசேனைக்குக் கணவருமான ஸ்ரீ கந்தபிரானைத் தொழுகின்றேன்.

வல்லி தேவஸேனுப்பிராட்டிகளுக்குக் கணவரும், மயில் வாகனரும், வேலாயுதனும், தாரகனைக் கொன்றவருமான ஸ்ரீ குஹபிரானை மிகுதியாய்த் தொழுகின்றேன்.

பிற்பாடு வடிவேலனுனவர் வீரபாகுவைநோக்கி "ஓ!வீரபாகுவே! அசுரர்களாற் சிறையிலடைக்கப்பட்ட ஜயந்தன் முதலிய தேவர்களை யிங்கழைத்துவா"வென, (1) அவருமப்படியே பாக்கியமென்று ஸ்ரீ கந்தனுக்கினையைச் சிரசினுல் வகித்துக்கொண்டு புறப்பட்டு ஜயந்தன் முதலியவர்க ளிருக்குமிடஞ் சென்றவர்களால் வந்தனிக்கப்பட்டவராகி யம்மகாபலவா (2) னவர்களுக்குச் சகல விருந்தாந்தங்களையும் தெரியப்படுத்திச்சீக்கிரமா யவர்களை யழைத்து வந்தனர். அப்போதவர்கள் ஸ்ரீ குஹனைத் தரிசித்து வந்தனம்பண்ணி மிகுதியாய்த் துதிசெய்தார்கள். (3) கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! அப்போது கருணைக்கடலான பகவானுனவர் "ஓ! ஜயந்தன் முதலிய தேவர்களே! நீங்கள் முன்போ லிப்போது சொர்க்கபோகங்களை யனுபவித்துச் சுகமாயிருங்க" ளென, (4) அவர்க ளிவ்விதமா யனுக்கிரகம் செய்யப்பட்டவர்களாகியிருந்த சந்தோஷத்துட னப்போதவ் வடிவேலனருகினி லி

ருந்த தேவேந்திரனுக்கு வந்தனம் செய்கையி (5) லத்தேவராஜனும்
மிகுந்த சந்தோஷம் கொண்டவராகி யச்சயந்தன் முதலான தேவ
ர்களை யன்புடன் அணைத்துக்கொண் டவர்களோடு சில வார்த்தைக
ளைப் பேசினன். (6) பிறகு ஷண்முகனனவர் "உயுத்தரங்கத்தில்
முந்தி மாண்டுபோன பூதர்களும் வீரர்களும் சீக்கிரமாய்த் திருப்பி
யெழுந்திருக்கக் கடவார்க" ளென்று திருவுளத்தில் நினைத்தமாத்திர
த்தி (7) லிறந்துபோன அவ்வெல்லோர்களு மவராதாக்கினையின்படியே அறி
வடைந்தவர்களாகி யவரை வந்தனித்தார்கள். பின்னும் சத்துருக்களைச்
சமூகரிக்கலுற்ற சரவணபவன் சமுத்திரத்தை நோக்கி(8)"ஓ! சமுத்திர
மே! அசுரர்களால் வாசம் செய்யப்பட்டுவந்த வீரமாகேந்திர நகரத்தை
நீ நம தாக்கினையின்படி சீக்கிரமாய்ச் சாப்பிட்டுவி" டென்று கட்டளை
யிட்டனர். கேளீர் !பிராம்மணோத்தமர்களே! (9) அச்சமுத்திரமுமப்பட்
டணத்தை வெகு சந்தோஷத்தோ டப்படியே செய்துவிட்டது. அத
ன்பிறகு ஸ்ரீ சண்முகன் தேவர்கள், வீரர்கள் முதலிய வின்னும் மற்ற
வர்களுடன் புறப்பட்டு (10) மிகுந்த வாத்தியகோஷங்களோடு நேர்
த்தியான திருச்செந்தூருக்கு வந்து தமது மயிலினின் றிறங்கி பெரு
மைபொருந்திய சிங்காதனத்தில் வீற்றிருந்தருளினர். அப்போது சூரிய
னு மஸ்தமனமாயினன். ($11\frac{1}{2}$) அங்கு தேவர்கள் குமரேசனை மிகுந்த
பக்தியோடு பூஜை செய்தார்கள்.(12) அப்போ தத்தேவேசனு மவர்க
ள்மீது கிருபையோடு கடாக்ஷம் வைத்தருளினர். பிறகு மறுநாள் சூ
ரியனு முதயமாகும்போது ஸ்ரீ சண்முகன் தாமும் (13) ஸகல ஜகங்க
ளுக்கும் தந்தையான ஸ்ரீ ஸர்வேசுவரனை யப்போது பூஜை செய்தனர்.
பின்பவர் திரிபுர மாற்றுனாகிய பரமசிவனைப் பூஜை செய்தபின்மேல்
வெகு சந்தோஷமுடைய மனதைக் கொண்டவராகி (14) அனேகவி
த அலங்காரத்தினுற் சிறக்கலுற்றதும், மிகவும் நேர்த்தியுமான மயிலி
ன்பேரிலேறிக் கொண் டிரதங்களின்பேரி லேறிக்கொள்ளலான வீரர்க
ளோடும், சேனுதிபர்களோடும் திருச்செந்தூரினின்று புறப்பட்டுக்(15)
கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மிகுந்த சந்தோஷத்தோடு திருப்ப
ரம்குன்றத்தைநோக்கிப் புறப்பட்டனர். மேலும் கேளீர்! முனிவர்க
ளே! அப்போது விஷ்ணு பிரம்மர்கள்முதலிய சகலதேவச் சிரேஷ்டர்க
ளும்முருகேசனுக்கினையின்பேரில்(16) தங்கள் தங்கள் வாஹனங்களி லே
றிக்கொண்டு துரிதமாய்ப் புறப்பட்டனர்கள். அனேகம் குடைகளுடை
யவும் சாமரங்க ளுடையவுமான வரிசைகள் விசிறிகளோடுகூடப்புறப்ப
டலாயின.(17) அதேவிதமாய் மகா வுன்னதங்களான பல துவஜங்க
ளு மனேகவித வாத்தியங்களும் சென்றன. தவிரவும் கேளீர்! பிராம்

மனேத்தமர்களே! அம்மயிலோவென்றால் மூக்கினால் பூமியைக் கீறிக்கொண்டும், மகா கோரமான அகவுதலின் சத்தங்களால் சர்ப்பங்களைப் பயமுறுத்திக்கொண்டும் செல்லலாயிற்று. (18) ஓ! தாணிதேவோத்தமர்களே! அக்கோழியானது மகா மேகங்களையு மிடிகளையும் தன் மூக்கினாற் (19) கொத்திக்கொண்டே மிகுந்த சத்தமிடுவதாகிச் சென்றது. அவரவர் வாகனங்களான விலங்கினங்களுடையவும், பூதர்களுடையவுமான சத்தங்களால் மற்ற மிருகங்களெல்லாம் (20) நடுக்கங்கொண்டவைகளாகிச் சுற்றிலுமுள்ள மலைகளின் பொந்துகளிற் புகுந்துகொண்டன. மயிலுடையவும் கோழியுடையவும் சத்தங்களால் பெரிய சர்ப்பங்களெல்லாம் மிகவும் பயந்து (21) மிகுந்த வாழமுள்ள பொந்துகளில் சடிதியாய் நுழையலாயின. ஓ! முனிவர்களே! அப்போது வேதகோஷங்களுமுண்டாயின. இருடிச்சிரேஷ்டர்களெல்லா (22) மஷ்டைசுவரியமுடையவரும், துதிகளிற் பிரியமுள்ளவருமான வக் கந்தபிரானைத் தோத்திரஞ்செய்தார்கள். அப்போ சுசுரர்களுக் கியமனான வடிவேலன் கின்னரச் சிரேஷ்டர்களுடைய கானத்தில் திருமனதை விருப்பமாய்ச்செலுத்திக்கொண்டே மிகுந்த பெருங் கூச்சல்களோடு திருப்பரங்குன்றம் வந்தருளினர். (23½) அப்போது முந்தி மீனுருவமடைந்திருந்த வாறு முனிவர்களும், பிரம்மன் முதலிய தேவர்களும் ஸ்ரீ வடிவேலனை (24) "ஓ! தேவேசா! மேன்மைகொண்ட விப்பருவதத்தின்மீது தங்கியருளவேண்டு" மென்றுரைத்துத் தேவநாதரான வச் சுப்பிரம்மணியரைத்துதிகளால் பிரார்த்திக்கையி (25) லவர்களை நோக்கி வடிவேலன் திருவாக்கருளியதாவது:—
"ஓ! கோ! நீங்கள்! நன்றாய்ச் சொன்னீர்கள். யாம் முந்தி யாது கட்டளையிட்டனமோ! அது இப்போது நினைப்பு மூட்டப்பட்டதல்லவா!" (26) வென்று திருவாக்கருளியத் தேவேசனம் மலைமீதேறினர். பிறகங்கு சென்றவுட னவ்வடிவேலன் முன்னிலிருந்த விசுவகருமனைநோக்கி(27)"ஓ! தேவர்களுக்குப்பிரியமுள்ளவிசுவகருமனே!இங்கு நமக்கோர் நேர்த்தியான நகரத்தை நீ யமைத்தல் வேண்டு" மென்றுகருணைமிருதமூர்த்தியான வக்கந்தன் திருவாக்கருளியவுட(28) னத்தேவத்தச்சனம்மலையினுச்சியி லோரரண்மனையை யமைத்துப் பிறகு பற்பலவிருக்ஷங்களாற் சோபிக்கலுற்றதும், பலகோபுரங்களையு மட்டாளமண்டபங்களையும் கொண்டதும், அனேகம் பிராகாரங்களாலும்கொடுங்கைகளாலும் சூழப்பெற்றதும், பற்பல விநோதங்களோடு கூடியதும், பற்பல அலங்காரங்களாற் சிறக்கலுற்றதுமான வோர் நேர்த்தியாகிய நகரத்தை யமைக்கலானகயி (29-30) லிவ்வாறாய் விசுவகருமனு லுண்டுபண்ணப்பட்டதைப்

பிரபுவானவர்கண்டு மிகுந்தசந்தோஷங்கொண்டவராகிப் பூதர்களைச்சேனு திபர்களோடுகூட வீதிகளிலுள்ள வீடுகளிலிருக்கும்படி திட்டமிட்டுத் த மதுநேர்த்தியான வாண்மனைக்கருளி மயிலினின்றிறங்கி யிருபாரிசங்களி லும்தேவர்களை யிருப்பித்துத்தாம் வீரர்களாற் பற்பல வுபசாரங்கள் செ ய்யப்பெற்றவராகிச் சிங்காதனமேறி வீற்றிருக்கையி (31-32½) லவ் வாறு முனிவர்களு மப்பார்வதீமைந்தனைப் பூஜைசெய்தார்கள். (33) கேளீர்! தாணிதேவோத்தமர்களே! அப்போதவ ரம்முனிவர்களுக்குத் தம்மை நன்கறிவதைப்பற்றிய ஞானோபதேசத்தை யருளத் திருவுளங் கொண்டவராகிப் பிரம்மன்முதலிய தேவர்களையவரவர் விடுதிகளுக்கனுப் பிவிட் (34) டவர்களுக்கு ஞானோபதேசம்செய்து விட் டங்கு வீற்றி ருந்தனர். அப்போது தேவேந்திரன் பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவச்சிரேஷ்டர்களை நோக்கி "ஓ! தேவோத்தமர்களே! எனது குமா ரியை யிங்கு (35) ஸ்ரீவடிவேலனுக்கு விவாஹநூல் முறையின்படி பாணிக்கிரஹணம் செய்து கொடுக்கின்றே" னென, அவர்க ளவ்விந்திர ன் வசனத்தைக் கேட் டப்படியே நல்லதென்று கோரிய பயனைக் கைக் கொண்டவர்கள்போல் மிகுந்த சந்தோஷத்தோ டோர் நொடிதனி ல வரவர் விடுதிகளுக்குச் சென்றார்கள். (36½) இந்திரன் தன் மாளிகை சேர்ந்தவுட னிந்திராணியையும் தன் பெண்ணாகிய கஜநாயகியையு (37) மப்போ தழைத்துவரும்படி சில தூதர்களை யனுப்ப, அவர்களு மப்ப டியே பாக்கியமென்று துரிதமாய்ச் சென்று மேருகிரியிலிருந்த இந்தி ராணியை (38) வந்தனித்துச் சூரன் முதலியவர்களின் சமுகாரத்தை யும், தேவர்களின் விடுவித்தலையும், பரமாத்துமாவாகிய ஸ்ரீ வடிவேலன் தி ருப்பரங்குன்றத்துக்கு விஜயமானதையும், (39) இந்திரனுல் நன்கு ரைத்தபடி குமாரியினுடைய கலியாணப் பிரஸ்தாபத்தையு மவளுக்கறி வித்துஅவ்வம்மையை யவள்பெண்ணுடனுமைராவதத்துடனும்கூட அ ழைத்துக்கொண்டு (40) பற்பல அலங்காரங்களால் விளங்காநின்ற விந்திரன் மாளிகைக்கு வந்தனர்கள். அப்போது சிறைமீ தடைக்கப் பட்டிருந்த தேவ கன்னிகளெல்லா மங்கு வரலான விந்திராணியை ப்பார்த்து மலர்ந்து சிலிர்த்த கன்னங்களை யுடையவர்களாகி வந்து வந் தனித்தார்கள். (41½) ஜயந்தனும் „ வந்து தன தன்னையை வந்தனித்தா ன். (42) உடனே யவளழுதுற்றவளாகி யவனையணைந்துகொண்டு மிகவு ம் துக்கப்பட்டாள். மேலு மவள் தேவஸ்திரீகளோடு சில நல்ல உப சாரவார்த்தைகளைப் பேசினுள். (43) அப்போது ஸகல ஜனங்களும் ஸ்ரீ சரவணபவனுக்குக் கலியாணம் நடக்கப் போவதைக்கேட்டு உள்ளம் கு ளிர்ந்து மிகுந்த ஸந்தோஷ மடைந்தார்கள். (44) பிற்பாடு தேவராஜ

ன் ஸகல தேவர்களோடும் கூடப் புறப்பட்டுவந்து ஸ்ரீ ஷண்முகனை நமஸ்
காரம்பண்ணி வினயத்தினால் முகம் வணங்கப் பெற்றவனாகி விண்ணப்
பம் செய்து கொண்டதாவது:— (45) "ஓ! கருணைக்கடலாகிய ஸ்வாமீ!
தேவரீர் சூரபத்துமன் முதலிய வசுரர்களைக் கொன்றெங்களைப் பதத்தி
ல்வைத்தித்தேவர்களையெல்லாமிரக்ஷித்தருளினீரோ? (46) ஓ! லீலாவினோ
தமுடைய கலியாண சுந்தர மூர்த்தியே? யாங்கள் தேவரீருக் கெதைத்
தான் கொடுக்கப்போகின்றோம்? அப்படி யிருந்தபோதிலும் ஓ! அடியார்
களின் வேண்டுதல்களை நிறைவேற்றலுற்ற தேவாதி தேவா! (47) ஓ!
ஸகல தேவேசுவரா! தேவரெல்லாம் க்ஷேமமாயிருப்பதற்காகத் தே
வரீ ரடியேனுடைய குமாரியைப் பாணிக்கிரஹணம்பெற்று ஓ! கரு
ணைக்கடலே! எங்களைக் காத்தருள்வீர் காத்தருள்வீர்". (48) என்று
ரைத்துக்கொண்டு தண்டம்போல் பூமியில் தண்டனிட்டான். அப்போ
து முருகேசனும் 'அப்படியே நல்ல' தென் றிந்திரனுக் குரைத்து (49)
"ஓ! இந்திரா! நம தாக்கினையின்படி நாளைத்தினமே கலியாணம் நடக்க
வேண்டும்; ஆகையால் நீ சீக்கிரமாய்ச்சென் றதற்காகவேண்டிய முயற்சி
யைச் செய்யலாவா" (50) யென்று திருவாக்கருளி யத்தேவமன்னனை
யனுப்பினார். பிற்பா டிந்திரன் வெகு சந்தோஷத்தோடு கூடியவனாகி
ப் புறப்பட்டுத் (51) தன் வீடு சேர்ந்து கேளீர்! பிராம்மணோத்தமர்
களே! தனது தூதர்களை நோக்கி "ஓ! தூதர்களே! முசுகுந்தசக்கிரவ
ர்த்தி முதலியபூபாலர்களையும், கந்தர்வராஜர்களையும்தேவர்களையும் 'ஸ்ரீ வடி
வேலனுக்கிங்குநாளைக்குக்கலியாண' மென்றுசீக்கிரமழைத்து வாருங்க"
ளென்றுகட்டளையிட்டனுப்பினான். ($52\frac{1}{2}$) பிறகவன்விசுவகருமனைநோக்
கி 'ஓ! விசுவகருமனே! ஓர் கலியாணமண்டபத்தையும், வாபிகள், கிணறு
கள், குளங்கள் முதலிய வின்னும் மற்றுவேண்டியவைகளையு மமைக்க
லாவா" யென் றத்தேவதச்சனைத் திட்டமிட்டனன். (54) அத்தச்ச
னு மப்படியே நல்லதென் றவற்றையெல்லாம் சீக்கிரமாய்ச் செய்துமு
டித்தனன். அப்போ திந்திர னிவ்வாறு யெல்லாவற்றையு மேற்பாடு
செய்துவிட்டுக் கலியாணோற்சவத்தை யெதிர்பார்த்துக் காத்திருந்தா
ன். (55) ஓ! பிராம்மணோத்தமர்களே! அத்தூதர்க ளிவ்விருத்தாந்த
ங்களையெல்லாம் முசுகுந்தன் முதலிய வரசர்களுக்குத் தெரியப்படுத்தி
யதின்பேரில் (56) முசுகுந்த சக்கிரவர்த்தியும் ஸ்ரீ ஷண்முகருக்குக் க
லியாணம்நடப்பதைக்கேட்டதன்பேரில் மிகுந்தசந்தோஷத்தினால்தூத
ர்களை யதிக வுபசாரத்தோடு மரியாதை செய்துவிட்டுத் (57) தம்
நகரத்திலும் தேசத்திலுமுள்ள சகல பந்துவர்க்கங்களுடனும் நகரத்
திலுள்ள விலாஸம் பொருந்திய கற்புடைய பெரிய குடும்ப மங்கை

யர்களுடனும் புறப்பட்டு (58) ஸ்ரீ கந்தபிரான் விளங்கியிருக்கின்ற நேர்த்தியான பட்டணம் வந்து சேர்ந்தார். ஓ! முனிவர்களே! மேலும் திசைக்கோடியிலான நேசாதிதேசங்களிலிருந்து மற்ற பூபாலர்களும்(59) சந்திரசூரியர்களும் மற்றத்தேவர்களும் புண்ணியசாலிகளான முனிவர்களும ஸ்ரீ சரவணபவனுக்குக் கலியாணம் நடக்கலாவதைத் தூதர்முகமாய்க் கேட்டு (60) எல்லோர்களும் களித்த மனதை யுடையவர்களாகிப் பற்பல வலங்காரங்களாற் சுமக்கமாட்டாதவர்களாய்ச் சதுரங்க சைனியங்களுடனும், வாத்தியங்களின் மிகுந்த வோசைகளுடனும் (61) பல்லக்குகளிலும் மஞ்சங்களிலு மேறிச் செல்லாநின்ற பிரபுக்களுடனும், சுற்றிலும் மிக நேர்த்தியான அழகிய மங்கையர்களுடனும் புறப்படலாகி யம்மகா பலவான்களெல்லாம் (62) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! திருப்பரங்குன்றத்தின் வெளிப்புறங்களிலுள்ள பூத்தோட்டங்களிலும், மரத்தோட்டங்களிலும், நதிகளிலும், தண்ணீர்ப்பந்தல்களிலும், மண்டபங்களிலும் வெகு சந்தோஷத்தோடு நெருக்கமாய்ச்சாகை யேற்படுத்திக்கொண்டார்கள். (63½) அப்போது முசுகுந்தன் முதலிய வரசர்களும்,தேவர்களும்ரிஷிகளும் (64) மிகுந்தவேகாயோடிந்திரன் மனைக்குச்சென் றவனைப் பார்த்ததின்மே லவர்களொருவருக்கொருவருபசாரம்பண்ணியவர்களாகி வார்த்தை பேசிக்கொண்டிருந்தார்கள். (65) மேலும் தேவஸ்திரீகளும்சிரேஷ்டர்களான ராஜஸ்திரீகளு மிந்திராணியிடம் சென்றவளைத் தண்டம்பண்ணிவிட்டு அம்மாதர்களெல்லாம்திருமணக்கோலமுடைய கஜநாயகி யென்றஅவள்பெண்ணைச்சிறந்தவுடையாபரணங்களா லலங்கரித்தார்கள். (67) ஓ! பிராம்மணோத்தமர்களே! பிறகிந்திரனுனவன் 'பிரம்மனாற் கலியாணத்துக்காகக் குறிக்கப்பட்ட சமயமிதுதா' னென்பதைக் கேட்டு விஷ்ணு முதலியவர்களுடன் கூட (68) ஸ்ரீ கந்தனாண்மனைக்குச்' சென் றத்தேவனை வந்தனித்து "ஓ! கருணைக்கடலான தேவாதிதேவா! இதுதான் கலியாணத்துக்குரிய நல்லவேளை; ஆகையால் மணம் புரிவதற்காகத் தேவரீரிப்போ தடியேன் கிரகத்துக் கெழுந்தருளி யிவ்வெல்லோர்களையும் காப்பாற்றிடல் வேண்டு" (69½) மென, பரமாத்துமாவாகிய கந்தனு மவ்வாறுரைத்த விந்திரனை நோக்கி யப்போது (70) ஸந்தோஷத்தினுற் கொஞ்சம் மந்தஹாஸம்பண்ணிக்கொண்டு சிங்காதனத்தை விட்டிறங்கிப் பற்பலவலங்காரங்களால் நிரம்பப்பெற்ற நேர்த்தியான தமது மயிலின்மீ தேறிக்கொண் (71) டிலக்ஷத்தொன்பது மகா வீரர்களுடனும் கைகளை யஞ்சலி கொண்டு தங்களைப் பரிசுத்தர்களா யாக்கலுற்ற சிறந்த துதிகளைக் கூறுநின்ற தேவர்களுடனும், (72) ஓ! பிராம்மணோத்தமர்களே! மிகு

ந்த சந்தோஷத்தோடு மலர்மாரிகளைச் சொரிந்துகொண்டு வாலுற்ற சிறந்த அடியார்களான பிரம்ம விஷ்ணுக்களுடனும் துரிதமாய்ப் புறப்படலாயினர். (73) அப்போது சந்திரனும் சூரியனும் ஜுவலிக்கலுற்ற விரு குடைகளைப் பிடித்தார்கள். வாயுவும் வருணனும் சாமரத்தாலும் விசிறியாலும் சேவித்தார்கள். (74) இயமனு மோர் பயங்கரமான கத்தியைப் பிடித்துக்கொண்டு புறப்பட்டான். செவிகளுக் கினிமையான வேதகோஷங்களும், வாத்தியங்களின் மிகுந்த கோஷங்களு மப்போதுண்டாயின. (75) இருடிகளெல்லாம் துதிகளுக் கேற்பவரும், என்று மழிவற்றவருமான வப்பகவானைத் தோத்திரங்களாற் பஜனம் செய்தார்கள். கோழியு மப்போது மகா பயங்கரமான சத்தங்களைச் செய்தது. (76) மதுரமான கண்டநாதங்களையுடைய கின்னரர்கள் நேர்த்தியான ஸங்கீதங்களைப் பாடினார்கள். ஊர்வசி, மேனகை, இரம்பை இவர்கள் சங்கீதம் பாடிக்கொண்டே நர்த்தனம் செய்தார்கள். (77) முனிவர்கள் பூர்ணகும்பங்களை யெடுத்துக்கொண்டு முந்திச் செல்லலுற்றார்கள். இவ்விதங்களாகிய பலவித வுபசாரங்களுடன் ஸ்ரீ ஷண்முகன் வீதிகளைக்கடந்து (78) ஸகல தேவர்களுடனு மிந்திரனுடைய மாளிகைவாசற்படி வீதிக்கு வந்தவுடன் ஸரஸ்வதி இலக்குமி முதலிய சிரேஷ்டர்களான தேவஸ்திரீக ளஷ்டமங்களம் பாடி யாராத்தி சுற்றி மூன்று பிரதக்ஷிணம் செய்துவிட்டு மாளிகைக்குட் சென்றார்கள். (80) பிறகு ஸ்ரீ பகவானும் மயிலினின் றிறங்கி மங்கள சத்தங்களோடு கலியாணமண்டபத்திற் கருகினில் விஜயமாயினர். (81) அப்போ திந்திரன் தேவியான விந்திராணி யம்மையானவள் மிகுந்த சந்தோஷத்தோ டப்ஸரஸ்திரீகளுடன் வந்து ஸ்ரீ கந்தனை நமஸ்காரம்பண்ணி யவர் பொன்னடிகளைப் பாலினாற் கழுவி (82) சிறந்த மலர்களாற் பூஜித்துத் தீபாராதனங்கள் செய்தும், பிரதக்ஷணநமஸ்காரங்கள் செய்துவிட்டுப் போயினள். (83) அதன்பிறகு முருகேசன் பற்பல விரத்தினங்க ளிழைக்கப்பெற்ற நேர்த்தியான பொற்பாதுகைகளைப் பூண்டு மெல்ல நடந்து கலியாணமண்டபத்திற் கருளி (84) யங்கு விளங்கிய சிறந்த சிங்காதனத்திலேறி வீற்றிருந்தனர். பின்பு விஷ்ணுமுதலிய தேவர்களும் ஸ்ரீ வடிவேலன தாக்ஞையின்பேரில் அவரவர் தங்களாசனங்களி (85) லுட்கார்ந்தார்கள். முசுகுந்த சக்கிரவர்த்தி முதலியோர்கள் தண்டம்பண்ணி யஞ்சலிகொண்டார்கள். மேலும் வீரபாகுமுதலிய வீரரெல்லாம் ஸ்ரீ பகவானுக்குரிய வுபசரணைகளைச் செய்தார்கள். இவ்விதமான பலவித வுபசாரங்களால் பூஜிக்கப்பட்டவராகி ஸ்ரீ தேவேசன் விளங்கியிருக்கையில் (86) ஸ்ரீ பரமேசுவரனுனைவ ரிக்கலியாண மகோற்சவத்தை

ப்பார்த்தருள்வதற்காகப் பருவதராஜ புத்திரி ஸகிதராய் வானமதிற்செல்லலுற்ற பல விரத்தினங்க ளிழைக்கப்பெற்ற தங்கத்தினு லதிவிசித்திரமான திவிய விமானத்தி லேறிக்கொண்டு மேகநாதத்தை யதிகரித்த வனேக வாத்திபகோஷங்களோடு மிகவும் நிர்மலமான வாகாயமார்க்கத்தி லெழுந்தருளலாயினர். (87)

முதலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தேவகாண்டம் உ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஸ்ரீமகாதேவ னங்கு வருவதை முருகேசன் முதலியோர் கண்டவுட னெழுந்து நமஸ்காரம் பண்ணி மிகுந்த பக்தியோடு கைகளைக் கட்டிக்கொண்டு துதிசெய்தார்கள். (1) பிறகு ஸ்ரீபரமசிவனும் பார்வதியம்மை ஸகிதராய்த் தமது விமானத்தினின் றிறங்கியருளுகையில் ஸ்ரீ சுப்பிரம்மணிய னவர் முன்னிலையிற் சென் றப் பார்வதீ பரமேசுவரர்களைச் (2) சிரசினுல் திருவடிகள்மீது வந்தனித்து விநயத்துடன்தோத்திரம்செய்தார். ஓ! கோ! கேளீர்! பிராம்மணேத்தமர்களே! உடனே ஸ்ரீசிவபிரான் வடிவேலனைக் கட்டியணைந் தடிக்கடி யுச்சிமுகர்ந்து மப்போது கொஞ்சமேனும் திருப்தியடையவில்லை. (3½) அப்போது விஷ்ணுபிரம்மர் முதலிய தேவரெல்லாம் முக்கண்ணுடைய வம்மகாதேவனைத் தண்டம்பண்ணி (4) யஞ்சலிகொண்டவராகிப் பற்பல துதிகளால் தோத்திரம் பண்ணினுர்கள். பின்பு ஸ்ரீஜகதீச னவர்களைத் தயவுடன் கடாக்ஷம்பண்ணித் திருக்கலியாண மண்டபத்திற் கெழுந்தருளினர். (5) அப்போது தேவரெல்லோர்களு மப்பரமேசுவரனைப் பின்தொடர்ந்து சென்றூர்கள். அப்போது சிவாக்கினையா லங்கவாது திவிய ஸிம்மாஸனம் தோன்றலாக, (6) அதனைப் பரமானந்த மங்களமூர்த்தியாகிய வம் மகாதேவன் வீற்றிருந்து சிறப்பித்தவராகி யப்போது ஸ்ரீகுமரேசனைத்தம் மடிமீதிலுட்காரவித்தனர். (7) ஸகலதேவர்களுமம்மைந்தனேடுகூடியபார்வதீநாதனைவந்தனம்செய்தார்கள். "ஓ! சுவாமீ! தேவரீராக்கினையின்படிஸ்ரீவடிவேலன்தேவசத்துருக்களானவசுரர்களை யெல்லாம்சமுகரித்துச் (8) சிறையிற்கட்டுண்டிருந்த தேவர்களையும் விடுவித்துக்கொண்டித்திருப்பரம்குன்றத்திற் கருளினர். ஓ!பிரபுவே! அவ்வாறுமுக

னுடைய சந்துஷ்டிக்காகஇவ்விந்திரன்தன்குமாரியை(9)யவனது குலவி ருத்தி நிமித்த மவருக் கிங்கு பாணிக்கிரகணம் செய்துகொடுக்கின்றா" னென்றிவ்விதமாய்ப் பிரம்மன் ஸ்ரீ பரமேசுவரனுக்கு விருத்தாந்தங்களை யுரைத்தனர். (10) அதனை ஸ்ரீபரமேசுவரன் சிரக்கம்பனத்தினா லங்கீ காரம் பண்ணிக்கொண்டு "ஓ! யாமுமிங்கு கலியாணத்தைப் பார்ப்பதற் காகத்தான் வந்தே" மென்று திருவாக்கருளினர். (11) ஓ! பிராம்ம ணோத்தமர்களே! அப்போது ஸ்ரீவிஷ்ணுவானவ ரிந்திரனை நோக்கி "ஓ! இந்திரா! கலியாணக்கோலமுடைய வுமது சிறந்த குமாரியை யிங்க ழைத்துவாரு" மென, (12) உடனே யிந்திரனும் சென்று இலக்குமிஸ ரஸ்வதிகளோடுகூடத் தனதழகிய குமாரியைத் திருக்கலியாணமண்டப த்திற் கழைத்துவந்தான். (13) அப்போது தேவரெல்லா மெழுந்து பெருமைபொருந்திய அவ்வம்மையை நமஸ்கரித்தார்கள். அவளும் மாமி மாமனார்களான ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை வந்தனிக்கையி (14) லப்போது முன்னிலையி லாறுமுகனைக் கண்டு நாணமுற்றனள். அப் போது ஸ்ரீ ஸர்வேசுவர னவளைப்பார்த்துக் கருணைகூர்ந்தனர். (15) உ டனே ஸகல ஜகங்களுக்கும் மாதாவான பார்வதிதேவியு மம்மருமகளை த் தயவுடன் நோக்கிக் கையினால் தடவிக்கொடுத்து இரு கன்னங்களிலு ம் முத்தமிட்டுக்கொண் டவளையும் (16) தன் மைந்தனையும் சிங்காத னத்தி லுட்காரவிந்துத் தான் சென்றாள். பிறகொரே யாசனத்தில் வீ ற்றிருக்கலான தேவசேனையையும் சுப்பிரம்மணியரையும் (17) கண்டு தேவரெல்லோர்களும் வந்தனித்து மிகவும் சந்தோஷம் கொண்டார்க ள். அப்போ திந்திரனானவன் பரிசுத்தமா யிருந்துகொண்டு இந்திரா ணி கைதனில் கெண்டியை வைத்துக்கொண்டு விடலான ஜலத்தினால் ஸ்ரீஷண்முகன் பொன்னடிகளைக் கழுவி (18½) சந்தனங்கள், புஷ்பங் கள், தூபதீபங்கள் முதலியவைகளாற் பூஜித்துப் பற்பல வுபசாரங்க ளைச் செய்தவனாகி மகா பரிசுத்தமான வப்பாதஜலத்தைப் பிந்தி யுப யோகப்படுத்திக்கொள்ளும்படி யோரிடத்தில் ஜாக்கிரதையாய் வைத்து விட்டுக் (20) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்விந்திரன் ஜலத் தைக் கைதனி லெடுத்துக்கொண்டு 'இவள் ஸ்ரீ முருகேசன் மனையாள்' என்றுரைத்துத் தாரைவார்த்தான். (21) அதன்பிறகு பிரம்மன் மன தினால் நினைத்தமாத்திரத்தி லோர் மாங்களிய சூத்திரத்தை யமைத்துத் தாம் கோரிய சுபகாரியத்தை நிறைவேற்றுவதற்காக வதனைக் குமரே சனது மரை மலர்போன்ற கைதனிற் கொடுக்க, (22) அவற்றை யத் தேவனாதன் தேவசேனை யம்மையின் கழுத்தினிற் கட்டிப் பி ன்னும் நல்ல பரிமளம் பொருந்திய மலர்மாலைகளா லவ்வம்மையின்

சுழுத்தையலங்கரித்தனர். (23) பிற்பாடு புத்திசாலியான விந்திரன் நல்ல இரசவர்க்கங்களில் மேன்மைகொண்ட அமுதம், கனி, இன்னும் மற்றவைகள் இவைகளாற் கலக்கப்பட்ட மதுபர்க்கத்தைப்பெண் மாப்பிள்ளைகளுக்கு நைவேத்திய மளித்தான். (24) அப்போது மேககர்ஜனம் போல் மிகுந்த வாத்தியகோஷ முண்டாயிற்று. அங்கிருந்த பெரியோர்களெல்லாமாசிர்வாதம்செய்துமிகுந்த சந்தோஷமடைந்தார்கள். (25) ஓ! பிராம்மணோத்தமர்களே! பின்பு பிரம்மதேவன் வலமாய்ச் சுற்றி யெரியனுற்ற அக்கினியில் ஸமித்து, அன்னம், ஆஜியமிவைகளை முறையின்படி யோமம் செய்தார். (26) அதன்மேற் பிரபுவாகிய கந்தபிரா னக்கினியைப் பிரதக்ஷிணம் செய்துவிட்டுத் தானே கையினால் மனையாளுடைய மலரடியைப் பிடித் தம்மியின் பேரி லேற்றிவைத்தனர். (27) அப்போ தத்தம்பதிக ளிருவரு மருந்ததியைத் தரிசித்துவிட்டுப் பிறகு ஸகல ஜகங்களுக்கும் பெற்றோர்களான ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை (28) யிங்கு மூன்று பிரதக்ஷிணங்கள் செய்து தண்டம் பண்ணினார்கள். உடனே கௌரீசங்கரர்கள் மைந்தனையும் மருமகளையும் கிருபாகடாக்ஷத்தினால் நோக்கி யருளி துரிதமாய்க் கட்டியணைத்துத் தங்களாதனத்தில் வைத்துக்கொண்டார்கள். (29½) அதன்மேல் விஷ்ணுமுதலிய தேவர்கள் மங்களகரமான சிங்காதனத்தில் விற்றிருந்த (30) கண்களுக் கானந்தகரர்களான வந்நான்குபேர்களையும் வந்தனித்து மிகுந்த பக்தியோடு தோத்திரம்பண்ணினார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதே யப்பார்வதீ பரமேசுவரர்களந்தர்த்தான மடைந்துவிட்டார்கள். (31) பிறகு தேவர்க ளாச்சரியத்தோ டப்பார்வதீ பரமேசுவரர்களைத் துதிசெய்தார்கள். அப்போது ஷண்முகர் தம் பாரியோடுகூடப் பலவித மங்களவாத்தியங்களையும் தோத்திரங்களையும் கேட்டருளிக்கொண்டே தமதரண்மனை சென்று (32½) அங்கு வாசற்படியி லிருந்தபடியே தேவரெல்லோர்களையு மவரவர் விடுதிகளுக் கனுப்பி, (33) வாசற்படிக்குச் சில துவாரபாலகர்களை நியமனம்செய்துவிட்டுப் பிறகப் பிரபுவானவர் கேளீர்! முனிவர்களே!மனையாளுடைய கையைப் பிடித்துக்கொண்டே நேர்த்தியான அந்தப்புரத்துக்குட் சென்றருளினர்., (34) அங்கு ஸ்ரீ கந்தபிரானும் தேவசேனைப்பிராட்டியும் மிகுந்த வுல்லாசத்தோடு விற்றிருந்தார்கள். பிரகத் 'தேவராஜனும் மரியாதைக் குரியவர்களான முசுகுந்தன் முதலிய வாசர்களையும், மற்றுமுள்ள தேவர்களையும், முனிவர்களையு மவரவருக்குத் தக்கபடி பூஜித்தும், கற்பகவிருக்ஷத்தினின் றுண்டான சிறந்த ஆடையாபரணங்களாலும், (36) 'திராசம்' என்ற தோஷமற்ற சிறந்த

விரத்தினங்களாலும் ஹாரகங்கணங்களாலும் கிரமப்படி சந்தோஷிப்பித் தவர்களை யனுப்பிவிட் (37) டப்போ திந்திராணியோடுகூடத்தம் மாளிகையில் மிருந்த சந்தோத்ஷதோ டிருந்தனன். கேளீர்! முனிவர்களே! சகல தேவர்களுக்கும் சிரேஷ்டரான ஸ்ரீ சுப்பிரம்மணியர் தேவியோடுகூட விங்கு சிலகாலமிருந்துவிட்டுப் பிறகிந்திரனுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதற்காகச் சொர்க்கலோகத்துக்குப் புறப்பட்டுத் துரிதமாய்த் தமதரண்மனை வாசற்படிக்கு விஜயமாகும் (38-39) போது பூதர்கள், வீரர்கள், சேனாதிபர்கள் இவரெல்லாம் பிரயாணப்பட்டுப் படஹவாத்தியங்களின் பேரோசைகளோடு மிகுந்த கோலாகல சத்தம் செய்தார்கள். (40) அதுகேட் டிந்திரன், பிரம்மன், விஷ்ணுமுதலியவர்களும் மற்றுமுள்ள தேவச்சிரேஷ்டர்களு மப்போ தங்கு ஸ்ரீ கந்தன் மாளிகைவாசலண்டையி லெல்லோர்களும் கூடினார்கள். (41) பிற்பாடு ஸ்ரீ ஷண்முகன் மனோவேகமுடைய சிறந்த விரதத்தின்மீ தேறிக்கொண்டு தோத்திர வந்தனங்களைச் செய்துநின்ற ஸகல தேவர்களையுமவரவர் வாகனங்களி லுட்காரும்படி திருவாக்கருளிவிட்டுக் கேளீர்! முனிவர்களே! தம் தேவியோடுகூட வோர் கணநேரத்துக்குட் புறப்படலாயினர். ($42\frac{1}{2}$) பிறகு ஸ்ரீ கந்தன் கட்டளையின்படி தேவர்க ளவரவர் வாகனத்தி லுட்கார்ந்துகொண்டு (43) மிகுந்த பக்தியுடையவர்களாகி யவருக்குச் சமீபமாய்முந்திச்சென்றார்கள். ஊழிகாலமேகங்கள்போலோசையுடைய வாத்தியகோஷங்கள் முழக்கப்பட்டன. (44) அனேகர் குடைகளையும், துவஜங்களையும், வெண்சாமரங்களையும் பிடித்துக்கொண்டு புறப்பட்டார்கள். ஸ்ரீ தேவேச னிவ்வாறு சம்பிரவங்களோடு புறப்பட் டமராவதிக்குச் சென் (45) றப்பட்டணம் தீயினால் முற்றும்கொளுத்தப்பட்டுப்பாழாயிருந்ததைக்கண் டப்பார்வதீமைந்தன்தேவத்தச்சனை நோக்கி "ஓ! விசுவகருமனே! இப்பட்டணத்தை யோர் கணத்துக்குள் முன்போற் செய்துவிடலாவா" (46) யென்றக் கருணாமிருதக் கடலான கடவுள் கட்டளையிட்டவுட னவனு மப்படியே ஸகல தேவர்களுக்கு மிருப்பிடமான வங்கரத்தைத் துரிதமா யமைத்துப் போட்டான். (47) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது விஷ்ணுமுதலிய தேவர்கள் சிற்பிகளிற் சிறந்த விசுவகருமனை நல்ல வுபசாரவார்த்தைகளால் மிகுதியாய்ச் சந்தோஷப்படுத்தினார்கள்.(48) பிறகு தேவர்க ளத்தச்சனோடுகூட ஸ்ரீ வடிவேலனிடம் சென் றிதனை விண்ணப்பம் செய்துகொள்ள, அவருமவர்களது வசனத்தைக் கேட்டுத் தம் வாகனத்தினின் றிறங்கி (49) யங்குள்ளதான பல விசித்திரங்களால் விளங்க

னுற்ற தமது திருமாளிகைக்குச் சென்றங்குள்ள சிறந்த சிங்காதனத்தில் தேவியோடுகூட விற்றிருந்தனர். அப்போ திந்திராணியும் விமானத்தோடு தேவஸ்திரீகள் சகிதமாய்ச் சகல விரத்தினங்களாலும் நிரம்பப்பெற்றதும், ஸகல விநோதங்களோடும் கூடியதுமான தன தாண்மனைக்கு வந்துசேர்ந்தாள். (50) உடனே ஸ்ரீ அக்கினிபூவானவர் பக்கத்தில் நின்ற பிரம்மாவை நோக்கி "ஓ! பிரம்மனே! நீ யிந்திரனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டுச் சீக்கிரம் வாலாவீ" ளென, பிரம்மனும் அத் தேவனுடைய அவ்வாறுபெருமைபொருந்திய கட்டளையைச் சிரமேற்கொண்டு வேண்டிய சாமான்களைச் சம்பாதித்துகொண்டவ் விந்திர னரண்மனைக்கு வந்து(53) அவனுக்கு நல்ல தெண்ணீரினாலபிஷேகம் செய்தப்போது பட்டமும் கட்டிவைத்துப் பிற கவ் விந்திரனாற் பூஜிக்கப் பட்டவராகித் தமது மாளிகைசேர்ந்தனர். (54) பிற்பாடிந்திரன் முனிவர்களாலாசீர்வதிக்கப்பட்டவனாகியும் ஸகல தேவர்களாலும் வந்தனிக்கப்பட்டவனாகியும், நர்த்தனம் செய்யலுற்ற அப்ஸாஸ்திரீகளின் கூட்டங்களாலும், (55) சங்கிதம் பாடலுற்ற கின்னரச்சிரேஷ்டர்களாலும் பற்பலவுபசாரங்கள் செய்யப்பெற்றவனாகியும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! கொஞ்சநேரம் சிங்காதனத்திலிருந்துவிட்டுப் (56) பிறகு ஸ்ரீ குமரேசனிடம் சென்று மிகுந்த சந்தோஷங்கொண்டவனாய் நமஸ்கரிக்க, அப்போது ஸ்ரீ சரவணபவ னிந்திரனை நோக்கி "ஓ! இந்திரா! நீ முன்போ லெதிரியற்றுச் சுகமா யரசாண்டு வருவாயாக" வென்று கருணைக்கடலான வக்கந்தபிரான் திருவாக்கருளினர். (57½) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அதன்பிறகு ஸ்ரீ குஹமூர்த்தியானவர் விஷ்ணுமுதலிய தேவர்களை யவரவர் விடுதிகளுக் கனுப்பிவிட்டுத் (58) தேவர்களான தமது வீரர்களைத் தம்மாளிகை வாசற்படியி லேற்படுத்திவிட்டு மிகுந்த சந்தோஷ முடையவராகி யந்தப்புரம் சென்றருளினர். (59) ஸ்ரீ வடிவேலனிவ்விதமாய்க் கொஞ்சகாலம் சொர்க்கலோகத்தில் வேண்டியபடி வசித்துவிட்டுப் பிறகு மனையாளோடுகூடக் கந்தகிரிக்குப் போகத் திருவுளம்கொண்டு (60) அப்போது ஸ்ரீ சுப்பிரம்மணிய சுவாமியானவர், மிகுந்த பக்தியோடு வந்தனித் தஞ்சலிகொண்டு முன்னிலையில் நின்ற பிரம்மன்விஷ்ணு முதலிய் தேவர்களைத் தயவுடன் நோக்கி யவர்களை யவரவர் லோகங்களுக் கனுப்பிவிட்டுத் தேவியோடுகூடச் சுந்தரமான இரதத்தின்மீ துட்கார்ந்து மகா பலவானாகிய வீரபாகுவைச் சாரதியாய் வைத்துக்கொண்டு புறப்பட்டு (61-62½) வீரர்களாலும் சேனுதிபர்களாலும் புடைசூழப் பெற்றவராய்க் கைலைகிரியடைந்து (63) இரதத்தைவிட்டிறங்கிமகாதேவரானஸ்ரீபரமேசுவரனையும் தமதன்னையை

யும்மிகுந்தபக்தியோடுவந்தனித்து,அப்போதவர்களாற் கொண்டாடப்ப ட்டபிற(64)கவர்களிடமுத்திரவுபெற்றுத்தம்மங்கையருடனும் மற்றுத் தமதுபரிவாரங்களுடனும்சிறந்தகந்தகிரிக்கு விஜயம்செய்து கேளீர்! பி ராம்மணோத்தமர்களே! அங்குள்ள நேர்த்தியான சிங்காதனத்தில் வீற் றிருந்தனர்.(65) ஓ! கேளீர்! மகா மகிமை பொருந்திய பிராம்மணோ த்தமர்களே! உமையம்மன் செல்வனான ஸ்ரீ கந்தபிரானுடைய தி ருக்கலியாண மங்கள சரித்திரத்தின் ஸாராம்சமானதும், செவிக்கினிமை யும், மங்களகரமும், மிகச் சுந்தரமுமான விவ்வத்தியாயத்தை மிகு ந்த பக்தியோடு படிப்போரும் கேட்போரும் பெண்டீர், பிள்ளைகள், பசு வர்க்கங்கள் முதலியவைகளுடன் தீர்க்காயுளுடையவராகி யெப்போது ம் மேலுக்குமேல் விருத்தியடைந்து வாழலாவார்களென்று சொல்லப் டுகிறது; ஸ்ரீ வடிவேலன் சாக்ஷியா யிது ஸத்தியம், ஸத்தியம். (66)

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தேவகாண்டம் ௩—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு பிரம்மன் முதலிய தேவரெல்லாம் ஸ்ரீ வடிவேலன து த்திரவின்பேரில்தங்கள் தங்களுடைய நானங்களையடைந்துதங்கள்ஹிருத யத்தினில் ஸ்ரீகந்தபிரானைத் தியானம்பண்ணிக்கொண்டே சுகமாயிருந்து வந்தார்கள். (1) இந்திரனோவென்றால் க்ஷணத்துக்குக்ஷணம் சூரனாற் செய்யப்பட்ட தீங்குகளை நினைத்துப்பார்த்து வைராக்கியததினால் சமு சாரத்தை நிந்தனைசெய்தொழித்து (2) வாய் பேசாதவனாகித் தலை தனைக் குனிந்துகொண்டே ஹிருதயத்தில் வடிவேலனைத் தியானம் பண்ணிக்கொண் டிருந்தான். இப்படி யிருக்கையில் பிரகஸ்பதிதேவ னதனை யறிந்ததன்மேற் சீக்கிரமா யவ்விந்திரனிடம்வந் (3) தவனுக்கு த்தனிமையில்காமசாஸ்திர(கொக்கோகம்)த்தையுபதேசிக்க, பின்பவன தேசரியென்றுநிச்சயித்துக்காமவிகாரத்தினால்மோஹம் கொண்டவனாகி (4) "ஓ! கோ! மாதரோடு போகிப்பதேநல்லசுகம்!அதை யொழிப்பது மிகவும் துக்கமே! மேலும் ஸ்திரீசம்போகத்தினா லடையப்படும் சுக மே ஜன்மமெடுத்ததற்குற்றபயன்; (5) தவிரவும் சந்தேகமேயின்றி ஐசுவரியம், பலம், ஞானம் இவைகளைக் கொண்டதற்கும் கலவிச்சுகம்

தான் தக்கபயன். போகங்களில் மிகுந்த போகமும் சுகங்களில் மிகுந்த சுகமுமதுவே! (6) அப்பேர்க்கொத்த விப்பரமசுகத்தை ஜனங்கள் திரவிய லோபித்தனத்தால் வீணாய் நிந்திக்கின்றார்கள்". என்று மனதினிலாலோசித்துக்கொண்டுதன்குருவையுமனுப்பிவிட்டுத்(7)தன்செங்கோலைநடத்துவதற்காகமைந்தனான ஜயந்தனையேற் படுத்திவிட்டுமிகுந்தசந்தோஷங்கொண்டவனாகியிரவும்பகலுமாயிந்திராணி யோடுரமித்துக் கொண்டிருந்தான். (8)அப்போதுஜயந்தன்சொர்க்கலோகத்தை நீதிவழுவாம லரசாண்டுவருகையிலொருநாள்சகலசாஸ்திரார்த்தங்களிலும் மிகுந்த ஸமர்த்தரான தன்குருவாகியபிரகஸ்பதியைநோக்கி (9) "ஓ! குருவே! ஓ! கோ! சூரபத்துமன்பிரம்ம விஷ்ணுக்கள்முதலியநம்மெல்லோர்களையும்மகாகோரமாய்த்தனதூழியத்துக் கேற்படுத்திக்கொண்டானே!(10) ஓ!எல்லாவற்றையுமறிந்தகுருவே! அதுயாதுவினையின் பயனென்பதை யெடுத்துக்கூறுதல்வேண்டும்; ஏனென்றால்வினையாலின்றிப் பிராணிகள் யாதொருபயனையுமனுபவிப்பதில்லையே!" (11) யென்றப்பிரகஸ்பதியை வந்தனித்துவினவுகையில்குருவுரைத்ததாவது:—"கேளாய் ஜயந்தா!முந்திதக்ஷன்வேள்வியில்விஷ்ணுமுதலியநாமெல்லோர்களு மியாகங்களுக்கதிபரானஸ்ரீ முக்கண்பிரானைவிலக்கிவிட்டுஹவிர்ப்பாகங்களைப்புஜிப்பதற்கிருந்தனமல்லவோ! ($12\frac{1}{2}$)அதற்குற்றபயனை முந்தியே யாம் ஸ்ரீவீரபத்திரமூர்த்தியா லடைந் தனுபவித்தானபோதிலும் (13) கருமசேஷவசத்தினால் சூரபத்துமனென்ற வோர் வியாஜமாய் நமக்குத் தாண்டமுடியாத விக் கொடும் துன்பமானது சம்பவிக்கலாயிற்று. ஆ! ஆ! வினையின்பயன் மிகவும் கொடுமையுள்ளதே!" (14) என, ஜயந்தன் "ஓ! சுவாமீ! பிரம்மன் புத்திரர்களில் முதன்மையான தக்ஷனானவன் வேள்விக்கு வேந்தனான ஸ்ரீ மகாதேவனை விலக்கிவிட்டு மற்றத் தேவர்களை வைத்துக்கொண்டு யாகதீக்ஷை செய்துகொண்டதற்காக (15) ஓ! ஸகல ஞானங்களிலும் தேர்ச்சிபெற்ற குருவே! தேவர்க ளதன் பயனை வீரபத்திரமூர்த்தியா லெப்போதடைந்தனர்களென்ற சந்தேகத்தை யெந்தனுக்குத் தெளிவித்தல் வேண்டு" மென் றதனைக் கிரமப்படி யவன்குருவினுடைய முகாரவிந்தத்தினின்று கேட்டறிந்து மிகுந்த மனக்களிப்புற்றவனாகி ஸ்ரீ மகாதேவனை ஹிருதயகமலத்தில் நினைத்துக்கொண்டும் (17) கேளீர்! தாணிதேவர்களே! அம்மஹாதேவனைநிந்திப்போர்களான மகா பாவிகளை 'சீ!சீ!' யென் றிகழ்ந்துகொண்டும், சுகமாயிராஜியபரிபாலனம் செய்துகொண்டு வந்தான். (18)

சௌனகாதி முனிவர்கள் சூதனை நோக்கி "ஓ! புராணங்களில் மிக வல்லவரான சூதமுனிவரே!ஸ்ரீசுப்பிரம்மண்ணியரப்போது கந்தகிரி

தனி லிருந்து வருகையில் யாதுசெய்தருளின ரென்பதை யெடுத்துரை த்தல்வேண்டு"மென,சூதர்சொல்லுகின்றார்:— ஓ!கேளீர்! மிகுந்தஆவல் கொண்டமுனிவர்களே!அப்போது பகவானாகிய ஸ்ரீஷண்முகன்ஸௌந்த ரியவல்லியென்றலவலீநாயகியை(20) லீலையாய்த்திருக்கலியாணம் செய் துகொண்டனரென, முனிவர்கள் "ஓ! சூதரே! அவளை யெவ்விடத்தில் மணம்புரிந்தார்? அவள் யாவருடைய பெண்? (21) லவலியென்ற பெய ரவளுக் கென்னகாரணத்தினு லுண்டாயிற்று? ஓ! தவசி களிற் சிறந்தோரான சூதமுனிவரே! இவற்றை யெல்லா மிப் போ தெங்களுக்குத் தெளியக்கூற வேண்டு"மென, சூதர் கூறுகி ன்றார்: ஜகங்களில் முக்கியத்தானமாகியகாஞ்சீபுரமென்றோர்பெரியதலமி ருக்கின்ற தன்றோ!அதனருகினில்மூர்த்தாஸ்பாடி(மேற்பாடி) யென்றோ ர் பட்டணமிருக்கின்றது (23) அங்குலவலி (வள்ளிக்கொடி) க்கொடி களுக்கிருப்பிடமான வோர்மலை விளங்குகின்றது-கேளீர்! முனிச்சிரேஷ் டர்களே! அதனில் மிகவுமிலக்ஷ்மீ விலாஸம் பொருந்திய வேடர்களு க்கு வேந்தனான வோர்வேடன் மக்களற்றிருந்தான். அவன் தினந்தோ றும் தனக்குப்புத்திரபாக்கிய முண்டாக வேண்டுமென்று வேண்டிக்கொ ண்டிருந்தான். ($24\frac{1}{2}$) அம்மலை மீதுள்ளவோர்பெரிய காட்டினில் மகா புண்ணிய சீலரும், சிறந்ததவசியும், ஸத்தியஸந்தருமானசிவனென்றோர் முனிவர் தவம் செய்துகொண்டிருந்தார்; ($25\frac{1}{2}$) அம்முனி வரோர் நா ள் தம்மருகினி லோரழகியமான் பேடு நின்று கொண்டிருந்ததைக் (26) கண்ணுற்றுக்காமவிகாரம்கொண்டப்போதுமிகவும் மோஹாக்ராந்தரா யினர்.அப்போதவரால்பார்க்கப்பட்டமாத்திரத்தி லம்மானனதுகர்ப்பம் கொண்டதாகி(27)யவ்வள்ளிப் புதர்நடுவினிலோர் சிரேஷ்டமானபெண் குழந்தையைப்பெற்றனவுடன் வேறுஜாதிப்பிறப்பானவக்குழந்தையை க்கண்டு மிகவும்பயந்தினாற்பரவசமுற்றோடிவிட்டது. (28)கேளீர்பிராம்ம ணோத்தமர்களே!அப்போதக்குழந்தையானது மதுரமானகுரலோடழு தது. இப்படியிருக்கையிலங்கோரிடத்தில் தினைத்தானியங்கள்பூர்ணமா ய் விளையப்பெற்றவோர் கழனியைப்பார்ப்பதற்காகவந்த அவ்வேடத்த லைவ னங்கழுதுகொண்டிருந்த வக்குழவியைக் கண்டு ($29\frac{1}{2}$) மிகுந்த சந்தோஷமகொண்டவனாகி யவ்வழகிய குழந்தையை யெடுத்துக்கொ ண்டு (30)போய்த்தன்மனையாளுடையகைகளில்மிகுந்த சந்தோஷத்தோ டதனைக் கொடுத்து அப்போது புத்திரோற்சவத்திற்குரிய சடங்குகளை ச் செய்துவிட்டுக் (31) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஓ! கோ! அவ்வேடன் தன் பெண்டீரோடு கூட நாளுக்கு நாளாய் வளர்த்து வரு கையிலக்குழந்தை நாளளவில் பனிரண்டு வயது கொண்டவளாகி (32)

வாலிபத்துக்குரிய மண்விளையாட்டு முதலியவைதைச் செய்யலானாள். பிற கவ்வேடனானவன் பருவத்துக்குரிய முதிர்ந்த புத்தியைக் கொள்ளலான அப்பெண்ணைச் (33) சிறந்த தினைத் தானியங்களைப் பறவை முதலியவைகளின் திங்குகளினின்று காப்பதற்காகக் கழனியி னோர் நேர்த்தியான விடத்தினி லிருக்கும்படி யேற்படுத்தினான். (34) அதன்பிற கப்பெண்ணு மங்கு கொஞ்சம் நிழ லேற்படுத்திக்கொண் டுபலவித வுறத்த சத்தங்களால் பறவைகளை யதட்டிக் கொண்டே யங்குள்ள வள்ளிப்பாத்தியில் விநோதமா யிருந்துவந்தாள். ஆகையினால் (வள்ளிப்புதரினிற்பிறந்துமப்பாத்திதனிலேவசித்தும்வந்த படியால்தான்) அவளுக்கு லவலீநாயகி (வள்ளியம்மை) யென்றபெயருண்டாயிற்று. அப்பேர்க்கொத்தவப்பெண்ணைக் காப்பாற்றுவதற்காக ஸ்ரீ முருகேச னப்போது கந்தகிரியைவிட்டு (36) ஸ்ரீ பரிபூர்ணமென்ற மகா மங்களகரமான பருவதத்துக்கு விஜயமாயினர். அப்போது ஸ்ரீ நாரதமுனிவரு மல்லவலீ நாயகியை யங்குகண்டதி லவளை ஸ்ரீ வடிவேலனுக்கு மனையாளென்பதா யறிந்து வந்தனித்துவிட் டெங்கு முலாவித்திரிந்து, பிறகு மகா வற்புதமான ஸ்ரீ பரிபூர்ணமென்ற கிரிக்குவந் (38) தங்கு தேவாதிதேவனான ஸ்ரீகந்தபிரானைத் தரிசித்துவந்தனம்பண்ணி யம்மாமுனிவர் "ஓ! சுவாமீ! நானிப்போதுலவலீ நாயகியைத் தரிசித்துவிட்டிங்குவரலாகின்றே" னென்றத்தேவநாதனை (39) மறுபடியும்விசேஷமாய்நமஸ்கரித்துவிட்டுத்தமதிச்சையின்படி புறப்பட்டுச் சென்றனர். அப்போது ஸ்ரீஷண்முகனும் வேடவுருவமெடுத்துக் கொண்டு புறப்பட்டு (40) வேகமாய் லவலீநாயகியிடம் வந்து "அடி குழந்தாய்! நீ யாவள்? யாவருடைய பெண்? உன்பெயரென்ன? நீ யெங்கு பிறந்தாய்? (41) ஓ! கோ! இப்பேர்க்கொத்த வதிரூபலாவணியமுடைய பெண்மணியான வுந்தனை யிவ்வேடர்க ளெவ்விதமாய்த்தான் காடுதனில் தினைக்கொல்லை காப்பதற்கு வைத்தார்களோ! (42) அடி! சிறந்த முகத்தையுடைய பெண்ணரசே! நீ நாணத்தைவிட் டுந்தன் பிறப்புவழியை யெந்தனுக் குரைத்து இவ்வெந்தனைப் புன்னகைப்போடிங்கு சற்றுத் திரும்பிப் பாரடி! (43) ஆ! அடி! அமுதத்தை நிரம்பப்பெற்ற வதரத்தையுடைய யெந்தன் பிராணநாயகி! காடுகளி லதிகமாய்ச் சுற்றிவந்தபடியா லெந்தனுக் கமுத (ஜலம், அதராமுதம்) பானம் செய்யவேண்டிய தாகம் மெத்தவிருக்கின்றது; ஆகையால் நிர்மானுஷியமான இவ்வனத்துக்குரிய விஷயத்தை நீ அறியலாவா" (44½) யென் றிவ்விதமாய்த் தேவநாத னுரைக்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவளுக்குத் தந்தையான வேடராஜன் கொடிய வுருவங் கொண்டவர்களும், நல்ல வில்லாளிகளுமான பல

வேடர்களால் சேவிக்கப் பெற்றவனாகி முன்னிலையில் மகா பயங்கரமான பல வாத்திய கோஷங்களுடன் புறப்பட்டுவருகையி (46) லப்போதே ஸ்ரீ தேவநாதன் அனந்தமான வேதங்களாகிய கிளைகளைக் கொண்ட மகா வற்புதமான வோர் வேங்கைமரத்தி னுருவத்தை யெடுத்துக் க்கொண் (47) டக்கழனிக் கருகினில் மிகவும் குளிர்ச்சியான நிழலைச் செய்துகொண்டிருந்தனர். அப்போ தவ்வேட னங்குவந்து கேளீர்! முனிவர்களே! தன் பெண்ணுக்குப் பற்பல கனிகளையும், (48) தேன் கலந்த தினைமாவையும் மெத்த வன்புடன் கொடுத்தனன். அப்போ தவன் பரிவாரங்களான மற்ற வேடர்களெல்லா மம்மரத்தைக்கண்டு (49) "ஓ!கோ! இதற்கு முந்தி யிம்மரத்தை யிங்குகண்டதில்லை" யென் றதனை வெட்ட வெத்தனித்தார்கள். அப்போ தவர்களுக்குத் தலைவனான இவ்வேட னவர்களைத் தடுத்துவிட்டுப் பெண்ணை நோக்கி(50) "ஓ! குழந்தாய்! நல்ல நிழலை யிடலுற்ற விம்மர மிங்கெங்கு வந் துந்தனுக்கு வாய்த்தது" என் றுரைக்கலான வத் தந்தையை நோக்கி "ஓ! தந்தாய்! யா னிதனை யறியேன்;(51) இதோர் மிகுந்த மாயைபோ லிருக்கின்ற" தென் றச் சுந்தர முகமுடைய பெண்ணுரைக்க, "ஓ! குழந்தாய! நல்ல குளிர்ச்சி பொருந்திய இம்மரத்தைப்பற்றி யுந்தனுக்குப் பயமே வேண்டாம்.(52) அது உனக்கிவ்வரணியத்தி லெப்போதும் மிகுந்த சுகத்தைக் கொடுக்கலுற்ற வோர் துணையாக விருக்கட்டு" மென்றுரைத்துவிட்டவ்வேடன் வேறு பற்பல வரணியங்களுக்குச் சென்றுவிட்டான். (53) அவன் பரிவாரங்களுடன் போய் விட்டவுடன் ஸ்ரீ குஹபிரான் முந்திய வுருவத்தை யெடுத்துக்கொண்டு கைதனில் வில்லைத் கொண்டவரும், மிகுந்த சௌந்திரியம் பொருந்தியவரும், யௌவனப் பருவமுடையவரும், கண்களுக் கின்பமானவரும், மிகச் சிரேஷ்டருமான வப்பகவான் (54) ஆலிங்கனம் செய்துகொள்ள மிகுந்த விருப்பம் கொண்டவராகிக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவளை யணைந்து கொள்வதற்காகச் சாதுரியமான நேசவார்த்தைகளை யுள்ளத்தினின்றுவெளிவிட்டுரைத்தனர். (55) அப்போ தவள் பயத்தினால் நடுக்கமுற்றவளாகி யவரை நோக்கித் தலை குனிந் துரைத்ததாவது:— ஓ! ராஜனே! நானோ ஈனகுலத்திற் பிறந்தவள்; நீரோ வென்றால் ராஜகுலத்தில் பிறந்தவரா யிருக்கின்றீர். மேலும் நான் தினைத் தோட்டம் காப்பவ ளாகின்றேன்; உமக்கு மெனக்கு மெவ்வளவு தூரம்? ($56\frac{1}{2}$) ஆகையா லுமக்கிங் கிப்பேர்க்கொத்த காரியம் தகுதியல்ல. வந்த வழியோடு போய்விடும், போய்விடும்; (57) உம்மை வேடர்கள் கண்டுவிட்டா லுமக்கு நிச்சியமாய் மிகுந்த கேடு நேரிடும்" மென் றவ ளுரைக்கலாகையி லப்போது

வேடராஜன் (58) மிகுந்த வட்டஹாஸங்களோடு கூடிய வனேகம் வேடர்களுடன்திரும்பவுமிங்குவந்தனன். அப்போதுடனேஸ்ரீ வடிவேலனதிரிதமாய் மூப்பினால்தேகம்முழுதும்நரைக்கலுற்றவோரற்புதமான கிழவனுருவத்தை யெடுத்துக் கைதனிலோர்தடியைப் பிடித்துக்கொண் (59½) டவ ரவ்வேடனுக் காசிர்வாதம் பண்ணித் திருநீறு கொடுக்க, (60) அதன்பேரி லவன் "ஓ! கிழவனாரே! உமக் கெங்கு போகவேண்டும்? இங்குமக்கு வேண்டுவதென்ன?" வென, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அதற்கு விருத்தர் கூறியதாவது,— (61) ஓ! வேடனே! எந்தனுக்கு யாதொரு பண்டங்களினு மிச்சையில்லை; ஆனாலுந்தன் மலைமீதுள்ள குமரிதீர்த்தத்தில்ஸ்நாநம்செய்வதற்காகவிங்குவந்தே னென் றறிந்துகொள்வா" யென, அவ்வசனத்தைக் கேட் டவ்வேடனு மப்படியே நல்லதென்று "ஓ! ஐயா! அப்படியானால் நீர் ஸ்நாநம் செய்துவிட் டிங்குதானே யெந்தன் புத்திரிக்குத் துணையா யிருந்துவாரு" (63) மென் றவருக்குரைத்துவிட்டுமுன்போலவேயப்பெண்ணுக் கனேகம்கனிவர்க்கம் முதலியவைகளைக்கொடுத்துவிட்டுக் கேளீர்! முனிவர்களே! அவ்வேடன் தன் பரிவாரமனிதர்களுடன் சென்றுவிட்டான். (64) பிறகக் கிழவனா ரக்கன்னியை "ஓ! அம்மணி! எந்தனுக்குமெத்தப் பசி வாதிக்கின்ற" தென்று சொல்லி யவள் கையிலிருந்த கனி, மா, தேன் முதலியவைகளை வாங்கிப்(65)பக்ஷித்துவிட்டுப்பிறகவளைநோக்கி 'ஓ! பெண்ணே மெத்தத்தாகமாயிருக்கின்ற' தென, அதற்கவள் "ஓ! கிழவனாரே! 'இதோ வோர் பெரியதடாக மிருக்கின்றது; நீ ரிவ்வேழு குன்றுகளையும் கடந்து சென்(66) றங்குள்ள மிக ருசிகரமான நீரைக் குடித்துவிட்டுத் திரும்பி யோர்நொடிக்குள் ளிங்கு வந்துவிடு' மென்றாள். இவ்வா றவளது வசனத்தைக் கேட்டதன்மேல் கிழவனார் 'பெண்ணே! யான் வழியையறியமாட்டேனாகையால் நீ துணையாய் வந்து பாதையைக் காட்ட வேண்டு' மென, (67½) அவளு மப்படியே நல்லதென்று புறப்பட்டத்தடாகம் வரையி லவரை யழைத்துப் போனதன்மே (68) லவ ரச்சிரேஷ்டமான குளத்திற் சென் றங்கு தொண்டையளவு நீரைக் குடித்துவிட்டுத் திரும்பி வந்தப்பெண்ணைநோக்கி "அடி! மாதே! எந்தனுக்கு நீரை விரும்பின தாகம் (69) தீர்ந்துவிட்டபோதிலு முந்தன் ஸம்போகத்தை நாடிய தாக மின்னும் வாதிக்கின்றது; அடி, சகல அவயவங்களும் சுந்தரமா யமையப் பெற்ற மாதரசே! ஆகையால் நீ யெந்தன்மீது கருணைவைத் ததனைத் தீர்க்கவேண்டும்; (70) அடி! அமுதத்தை நிரம்பப்பெற்ற மதுரமான வதரங்களைக் கொண்ட சுந்தரீ! உந்தனைத் தண்டம் பண்ணுகின்றேன். எந்தனை மன்மதன் வாதிக்கின்றபடியா

ல்நிர்மானுஷ்யமான இவ்வரணியத்திலெந்தனை நீயங்கிகரித்தல் வேண்டு'' மென, (71) இவ்வா றவரது வசனத்தைக் கேட்ட வள்ளியம்மையா னவ ளக்கிழவனுளை நோக்கி "ஓ! ஐயர், நீரோ கிழவர்; அதிலும் தவசி! இங்ஙன மிருக்கையி லிங்கெந்தனை யேதேதோ சொல்லுகின்றீர். (72) மேலும் நீர் முதிர்ந்த வயது சென்றவரா யிருந்கையி லெந்தனை வந்தன ம் பண்ணுவதா யிப்போ துரைக்கலானீர். இப்பேர்க்கொத்த நீ ரெங் களினத்தார்களாற்காணப்பட்டாலப்போது (73)நீர் மிகுதியாய்வாதிக்க ப்படுவீர்;ஆகையாலிப்போதுநான்சீக்கிரமாய் முந்திச் செல்லுகின்றேன் நீர் பிந்திவாரு''மென் றுரைத்துவிட்டு முந்திப் புறப்பட்டனள். (74) அச்சமயத்தில் ஸ்ரீ சண்முகரானவர் தம் மூத்தோராகிய யானைமுகத்தோ ளை மனதினில் தியானிக்க, அவரு மோர் மதம்கொண்ட யானை யுருவங் கொண்டவராகிவெகுவேகமாயங்குவந்தார்.(75)அப்போ தவ்வம்மையா னவள்சிரேஷ்டமானஅவ்வியானையைக்கண்டு மெத்தப் பயந்தவளாகி ய தி வேகமா யோடிவந் தக்கிழவனுளைக கட்டிக்கொண்டு 'ஓ! ஐயா! நீர்யாது சொல்லிடினும் கேட்கின்றேன். (76) ஓ! சரண மடை ந் தோ ரு க் கு நே ச மு ள் ள ஐ ய னே! எ ந் த னை ய வ் வி யா னை யினின்று காப்பாற்றும், காப்பாற்று'' மென, இவ்வா றவளது வ சனத்தைக் கேட்டவுடன் விருத்த வேஷங்கொண்ட ஷண்முகரானவர் ஸ்ரீ கணநாதனை வந்தனித்து மிகுந்த பக்தியுடன் தோத்திரம்பண்ண, கேளீர்! முனிவர்களே! அப்போது ஸ்ரீ விநாயகரு மவ்வுருவத்தை விட்டு மறைந்தருளினர். (78) அதன்பிறகோ வென்றால்ஸ்ரீ வடிவேலன் மெத் தநேர்த்தியானஅப்பெரியவாணியத்தின்கண் ணவ்வம்மையின் கூந்தலைக் கூட்டிப்பிடித்துக் கொண்டபடி யவ ளுதட்டினைப் பற்களால் கடித்துக் கொண் டவளோடு ஸம்போகித்தனர். (79) ஓ! முனிவர்களே! அவ் வா றவளோடு கலவி தொடுத்தின்பிற கவர் தம் நிஜவுருவத்தைத் தரி சனம் கொடுத்தருளுகையி லவளை யவ்வள்ளியம்மை கண்டவுடன் பய மடைந்தவளாகி மிக வன்புட னவளை (80) வந்தனித் தஞ்சலி கொண் டு "ஓ! தேவாதி தேவா! தேவரீர் முந்தியே யிப்பேர்க்கொத்த சுந்தரத் திருமேனியை யடியேனுக்குக் காக்ஷியருளாமற் (81) சும்மா இவ்வாறு வஞ்சகம் செய்யலானீரோ! ஓ! கோ! தேவரீரது திருவிளையா ட லிப்பேர்க்கொத்த மாக்ஷிமை கொண்டதோ!'' என் றிவ்வாறு வசனங் களைச் சொல்லிவிட்டு அல்லவலீநாயகியானவ ளம்முருகேசனைத் தோத் திரம்செய்தாள்.(82)பிறகத்தேவநாதனும் மந்தஹாஸமுற்ற முகாரவிந்த த்தைக் கொண்டவராகி யவ்வம்மையை நோக்கித் திருவாக்கருளி யதாவது:— "கேளாய் பெண்ணரசே! பூர்வத்தில் நீ விஷ்ணுவின் பெ

ண்ணுயிருக்கையில் மிகுந்த தவத்தைச் செய்தபடியா (83) லத்தவத்தினால் யாம் சந்தோஷமுகொண்டவராகி யுந்தன்மீது நேச ரஸத்தை யதிகமாய்க்கொண்டதினா லுனது விசுவாஸத்துக் கிணங்கியே யிவ்விதமாய்ப் புணர்ச்சி புரியலானோம். (84) ஆகையால் நீ யிப்போது நமக்கு முந்தியேதினை வயலுக்குச்சென்றுவிடு.அடி! மகா பாக்கியசாலியான கண்ணே! நாமு மங்கு பிந்தி விரைவோடு வருகின்றோ" (85) மென, இவ்வா றவரது வசனத்தைக் கேட்டு வல்லிதேவியானவ ளவ்வடிவேலனுக்குச் சிரேஷ்டமான வந்தனங்களைச் செய்துவிட்டு அவர்மீதே முற்றும் நாடிய மனதைக் கொண்டவளாகி யத்தலத்துக்குச் சீக்கிரமாய் முந்திச் சென்றனள். (86)

மூன்றாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## தேவகாண்டம் ௪—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! முனிவர்களே! அவளங்கு சென்றபிறகு தினைத்தானியம் காப்பவளான அவளுடைய வோர் ஸகியானவ ளவ்வள்ளியம்மையை 'ஓ! அம்மா! இவ்வளவுநேர மெங்கு போனு?' யென்று கேட்க, (1) அதற்கவள் 'அடி பாங்கி! இக்குளத்துக்குப் போய் நீராடித் திரும்பிவந்தே' னென்றாள். பின்னுமவள் 'உந்தனுதட்டைப் பரிசுத்தமாக்கலுற்ற வக்குள மெங்கிருக்கின்றதம்மா? (2) மேலும் ஓ! அம்மணி! வெகு நேர்த்தியான வுனது கண்களிரண்டிலு மிரத்தம் குழம்பி யிருக்கின்றது. கூந்தல்கள் சுற்றிலும் சிதறுண்டிருக்கின்றன? உந்தன் முகத்திலுமோ மிக நேர்த்தியான வியர்வைத் திவிலைகளுண்டாயிருக்கின்றன". வென்று தான் செய்திருக்கும் காரியத்தைப் பற்றிச் சந்தேகப்பட்டுக் கேட்கலானதை வள்ளியம்மை யறிந்து($3\frac{1}{2}$) 'ஆ! பாங்கி! நீ இப்போதென்ன வெந்தன்மீ தவதூறு கற்பிக்கின்றா"(4) யென, இவ்விதமா யவ்விருவரு மொருவரோ டொருவர் மேலுக்குமேல் வாக்குவாதம் செய்துகொண்டிருக்குமளவில் ஸ்ரீ சுப்பிரம்மணிய சுவாமியானவர் வில்லம்புகளைக் கைப்பற்றிக்கொண்டு வேட்டையாடி மிகவும் களைப்படைந்தவர்போ லங்கு விஜயமாகி யவர்களை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:— "ஓ! பெண்களா! எனதம்புகளால் தேகமெங்கு மடிபட்டிங்கோடிவரலான மிக வுன்னதமான வோர் சிறந்த யானையை நீங்கள் கண்டீர்களா?" ($6\frac{1}{2}$) வென்றவருரைத்த வசனத்தைக் கேட்டவளை நோக்கிச் சகிசொல்லுகின்றாள்:—(7) "ஓ! ஐயா! உமது பராக்கிரமத்தை யும்மைப்போலொத்த சூரரிடத்திற் சொல்லிக்கொள்ளும், எங்களிடம் வேண்டா" மென்று சொல்லிவிட்டுக் கேளீர்! முனிவர்களே! அவள் மனதிற்

குள் ளாலோசித்துக் கொண்டதாவது:—"ஓ! கோ! இவ்விருவர்களுடைய விழிகளே! இவன் யானை முதலியவற்றை யாச்சரியமாய்த் தேடுவதையும், அதேவிதமாயிவள் தினைந்தானியத்தைக் காப்பதையும்தெளிவாய்க் காட்டுகின்றன. (9) இவளவனைப் பார்க்கின்றாள்; அவனுமிவளை பற்றுற்றுப் பார்க்கின்றான்" னென் றச்சகியானவளில்லவலிநாயகியையும் ஷண்முகனையும் பற்றிக் கொஞ்சமேனும் சந்தேகப்படாமல் நிச்சயித்து (10) மெத்தக் கோபத்துடன் தன்னுடைய வயலுக்கு வேகமா யோடினாள். கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ தேவேசனும் கெஞ்சிக் கெஞ்சிக்கொண்டவளைத் தொடர்ந்து துரிதமாய்ச் சென்று (11) "கேளாய்! பெண்ணரசே! நீ கோபம் கொள்ளவேண்டாம்: ஓ! சிறந்த வதனமுடைய மானே! உங்களிருவர்க்கு மெதுவேண்டியதோ அதனைக் கொடுக்கின்றேன்; ஆகையால் நீ சீக்கிரமாய்த் தயவுசெய்யல்வேண்டு"(12) மென, அத்தோழியு மவரது வசனத்தைக் கேட்டு "ஓ! அய்யா! அரசர்கள் வேடக்கன்னிகளை விரும்புவதுண்டா? நீரிப்பெண்ணை யெவ்வாறிச்சிக்கின்றீர்? (13) இந்த உத்தமமான பெண்ணானவள் விஷ்ணுவின் வரத்தினாலடையப்பட்ட தேவாமுதமே; இவள் வேடனுடைய தவத்தின் மகிமையா லவனுக்குப் பெண்ணாய் வாய்த்தன" ளென, (14) அதற்கு ஸ்ரீ பகவான் "ஓ! சுந்தரீ! நீ யிவளை யெந்தனோடு சேர்த்துவைத்தால் மங்களகரம்பொருந்திய வப்பெண்ணை நாளைக்கு நான் சந்தேகமேயின்றிப் படத்திலெழுதிவைத்துப் பார்த்துக்கொண்டிருப்பே" (15) னென, அப்போது ஸகியு மவரது திருவசனத்தைக் கேட்டதன்பேரில் மொழியுரைத்ததாவது:—"ஓ! மானிகளிற் சிறந்தவரே! இப்பேர்க்கொத்த வார்த்தை யுமக்குச் சரியல்ல. (16) ஆகிலும் நானவளை மிக நேர்த்தியான வம்மரத்தோட்டத்திற் கழைத்துவருகிறேன்; நீரங்கு போயிரும்; ஆனால் நீரிப்பேர்க்கொத்தவராய் வேடர்களாற் காணப்பட்டாலப்போ (17) துமக்கு மிகுந்த கெடுதிநேரிடும்; ஆகையால் நீர் மிகவும் ஜாக்கிரதையாயிரு" மென்றுரைத்துவிட் டச்சகியானவளோர் நொடிநேரத்துக்குள் வள்ளியம்மையிடம் வந்து (18) வந்தனித்து அவர் கொண்டிருக்கும் விசேஷமான காதலை யவளுக்கெடுத்துரைத்து அவ்வழகிய பெண்ணரசை யழைத்துவந் தம்மரத்தோட்டத்தி னோர் பக்கத்தி லிருப்பித்துவிட்டுத் (19) தான் மலர் கொய்யப் போகும் வியாஜமாய் வேறிடம் சென்றுவிட்டாள். பிறகு ஸ்ரீ சுப்பிரம்மண்ணியஸ்வாமியானவ ரல்லவலிநாயகியைப் பார்த்தங்குவந்தவுட (20) னவள் தடீலென்றெழுந்து மிகக் காமவிகாரம் கொண்டவளாகி யவரை வந்தனித்தாள். 'அதன்பிறகு ஸ்ரீதேவேச னவ்வம்மையைக் கட்டியணைந்து மொட்டுக்கள் போன்ற விரு கொங்கைகளையும் பிசைந்து (21) கோடுகோடாய் நிகக்காயப் படுத்தியவராகி யுதடுதனைக் கடித்துக்கொண் டவளோடு கலவி

தொடுத்தனர். அதன்பிறகச் சகியும் மலர்களைக் கொய்துக்கொண்டோர் கணத்துக்குள்வந்து (22) அவள் கூந்தலி லனேகம் மலர்களைச் சூட்டி யவளைத் திரும்பவு மழைத்துக்கொண்டு தினைகாப்பதற்காக வக்கழனிக்கு வந்துவிட்டனள். (23) ஸ்ரீ லவலீநாயகியும் 'ஓ! கோ! நமக்கினி யெப்போதுதான் ஸ்ரீ முருகேசனுடைய சேர்க்கை நேரிடுமோ' வென்று மிகுந்த விரகதாபத்தினால் வியாகுலமுற்ற மனதையுடையவளாயினள். (24) பிற்பாடு தினைகள்முற்றிப்போனவுடன்வேடர்கள்வந்துமகாமங்களகரம்பொருந்தியலவலீநாயகியை வீட்டிற் கழைத்துப்போனார்கள். (25) அவள் தோழியும் வீடுசென்றுவிட்டாள். ஓ! கோ! கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அதன்பிறகு ஒளிபொருந்திய வள்ளியம்மையானவள் போகும்போ தங்கு செல்லலுற்ற பறவைகள், மரங்கள், மலைகள், இன்னும் மற்ற மிருகங்கள் இவைகளுக்கெல்லாம் தன் போகுதலைப்பற்றிச் சொல்லிக்கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தாள். (26½) பிறகவ் வம்மையானவள் மன்மதனால் பீடிக்கப்பட்டவளாகி ஸ்ரீ வடிவேலனை நினைத்துக்கொண்டே (27) பந்தடித்தலையும், பெண்களுக்குரிய வின்னும் மற்ற விளையாட்டுகளையு மொழித்துவிட்டுக் காமவசப்பட்டவளாகி மிகவும் மனத்துயரமுற்று மூர்ச்சையடைந்தனள். (28) அதன்மே லவள் தாய்முதலியவர்க ளவளைச் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு இவளுக் கேதோ ஆவேசம்கொண்டிருப்பதா யாலோசித் ததனை விலக்குவதற்காகக் குலதெய்வமான (29) ஸ்ரீ குமரேசனை மிக வுபசாரத்தோடு நைவேத்தியம் முதலியவைகளாற் சந்தோஷிப்பித்தார்கள். கேளீர்! முனிவர்களே! அதன்பிற கவள் வளர்ப்புத் தாயின்பேரி லாவேசம் வந்து "ஓ! கோ! அளவற்ற பராக்கிரமத்தைக்கொண்ட வடிவேலனுடைய சேர்க்கை யிவளுக் குண்டாகிவிட்ட" தென, (30½) உடனே யவ் வள்ளியம்மையானவள் ஸ்ரீ வடிவேலன் திருநாமங்களைக் கேட்டவுடன் திடுக்கிட்டு வேகமா யெழுந்தனள். (31) அவளிவ்வா றனேகவிதமாய் விரகதாபத்தினாற் பரவசமுற்றிருந்தாள். பிற்பாடு வேடர்களும் பழுக்கலான தினைத்தானியங்களை யறுத்துப்போய்விட்டார்கள். (32) இப்படியிருக்கையில் ஸ்ரீ ஷண்முகரு மக்கழனியிற் போய்ப்பார்த்ததில் தமது நாயகியைக் காணாமல் மிகவும் விரகதாபங்கொண்டவராகி யிங்குமங்கும் தேடிப்பார்த்து (33) மலைகள், மரங்கள், அரணியங்கள், மிருகங்கள், வாபிகள், கிணறுகள், குளங்கள் முதலியவைகளையெல்லாம் 'ஆ! என் பிராணநாயகி யெங்கே போயினை?" (34) ளென்று கேட்டுக் கேட்டுப் பிரயோஜனப்படாமல் மாலையிற் சூரிய னஸ்தமனமானதன்பேரி லிரவுதனில் ஸ்ரீபார்வதிபுத்திரனானவ ரவ்வள்ளியம்மையின் வீட்டுப் பின்புறத்திற் போயிருந்து (35) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! 'அவ்வழகினளெப்போ திங்கு வருவா' ளென்று காத்துக்கொண்டிருந்தார். அச்சமய

த்தி லவள் ஸகியானவ ளங்கு வரலாகி ஷண்முகனைக் கண்டு (36) "ஓ! ஐயா! நீ ரவளோ டிங்கு புணருவதற் கிடையுண்டாகமாட்டாது; ஏனென்று லப்பெண்ணோ டிவ்வீட்டில் தானே சரசஞ்செய்வது கிரமமில்லையன்றோ! (37) ஆகையா லவளை வேறெங்காவ தழைத்துப்போய்விடு" மென்றுரைத்துவிட்டுச் சகியானவள் தான் வீட்டுக்குள் ளவளிடம் வந்து அவள் தாய்தந்தைமுதலான வெல்லோர்களும் தூங்கிவிட்டதை யறிந்துகொண்டதன்பேரி லோர் கணநேரத்துக்குள் ளவளையிட்டுப்போய்க் (38½) கதவைத்திறந்துகொண்டு சரவணபவன் சன்னிதியிற் (39) சேர்ப்பித்துவிட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அச்சகியானவள் ஸ்ரீ கந்தனை நோக்கி வசனமுரைத்ததாவது:— "ஓ! அய்யனே! நீர் வேடர்களால் காணப்பட்டால் மிகவும் துன்பப்படலாவீர். (40) ஆகையால் நீரிவளை ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்துக்கொண்டு வேறிடத்துக்குப் போய்விடு" மென்றவளுடைய விருகைகளையும் பிடித்துப் பரமாத்துமாவான ஸ்ரீ முருகேசன் கைகள்மீ (41) தொப்புவித்ததன்மே லவரால் பற்பல வுபசாரங்கள் செய்யப்பெற்றவளும், உள்ளத்தில் மிகுந்த களிப்புற்றவளுமாகித் துரிதமா யவரை வந்தனித்து வள்ளியம்மையையும் (42) கட்டியணைந்துவிட்டுப் பிறகவர தனுமதிபெற்று வீடு சேர்ந்தனள். பிறகு லவலீநாயகியும் மிகுந்த துணிவுட னக் காடாந்தகாரத்தில் ஸ்ரீ வடிவேலனை வந்தனித்து (43) "ஓ! ஸ்வாமீ! கருணைவசத்தி லடியேனை யிரக்ஷிப்பதற்காகத் தேவரீரிங் கெவ்விதம் வரலானீர்" என்று மிகுந்த நேசத்தோடு மனதைத் திருடலுற்றமெத்த நேர்த்தியான மொழிகளா லுரைக்கலானதை யக் குஹபிரான் கேட்டு மிகச் சந்தோஷமடைந்துகொண்டே தலையாரிகளாற் பார்க்கப்படாமல் (44½) தூரத்திலுள்ள வோர் பெரிய தோட்டத்திற் கவளுடன் சென்று (45) கலைவிநூற்களில் மெத்தத் திறமைகொண்ட வக்கந்தபிரா னவளோடு புணர்ந்தனர். பிறகவ் விரவு கழிந்தவுடன் லவலீயம்மனுடைய தாயாரானவ (46) ளெழுந்து பக்கத்திற் பார்த்ததிற் பெண்ணைக்காணுமல் மிகுந்த பரபரப்போ டவளது தோழியிடம் சென்று 'லவலீ யெங்' கென்று வினவ, (47) அவளும் 'ஓ! அம்மா! அதிகாலையில்தானே அவளெந்தனுல் காணப்படவில்லை' யென்றனள். கேளீர்! தரணிதேவர்களே! இதனாற் பட்டணம் முழுதும் கூக்குரலுண்டானபோது (48) பிறகு வேடத்தலைவனும் மகா கோபம்கொண்டவனுகி யவளைத் தேடுவதற்காக மற்ற வேடர்களோடு வெளியிற் புறப்பட்டு 'ஓ! கோ! உயிர்வைத்துக்கொண்டிருக்கிற மானிடரில் யாவன்தான் குழந்தையாகிய நமது பெண்ணைத் திருடிப்போ யுயிர்பிழைக்கப் போகின்றுன்' (49) னென் றங்கங்குள்ள பல மார்க்கங்களில் கொடியர்களான வனேகம் வேடர்களை யனுப்பித் தானும் நேர்த்தியான வனங்க

ள், மலைகள், நதிகள், (50) இவ்விடமெல்லா மளவிலே சுற்றிப்பார்த்துக்கொண்டு (பகவான்கேளிசெய்கின்ற) அந்த மாத்தோப்புக்கு வந்தான். அப்போ தங் கவ் வேடர்களைக் கண்டவுடன் லவலீயம்மையானவள பயத்தினால் நடுக்கங்கொண்டவளாகி (51) "ஓ! தேவாதிதேவா! வேடரெல்லா மிங் காயுதபாணிகளாய் வருகின்றார்களே! எந்தனைக் காப்பாற்றவேண்டு" மென்றுரைத்துத் தண்டம்பண்ணலான வப்பெண்ணை ஸ்ரீ ஷண்முகன் திருக்கண்ணுற்றுச் சற்றுப் புன்னகைப்புடைய திருமுகத்தைக் கொண்டவராகி (52) "ஓ! நமது நாயகியான பெண்ணரசே! நாமிருக்குமளவில் நீ பயப்படல் வேண்டாம்: நமக்குச் சண்டை செய்யத் திறமையிருக்கின்றது: நீ நமது பின் பக்கத்திலே யிரு" என்றவருரைக்கலான திருவசனத்தை யவ்வம்மை கேட்டுக்கொண்டவர் பின்புறத்துக்குப் போகுமளவி லப்போதே யவர்கள் நெருங்கிவந்து 'இவன்தான் பெண்திருடி' யென்று மகா கோபத்தோடு (54) கொடிய வார்த்தைகளைப் பிதற்றிக்கொண் டவர்மீ தனேக மம்புகளைச் சொரிந்தார்கள். அப்போது லவலீதெவியும் பயத்தினால் மிகவும் நடுக்கங்கொண்டவளாகி "ஓ! பிராணநாதா! மகா பலசாலிகளான இவர்களைச் சமுகரித் திப் பயத்தினின்று விடுவித்து எந்தனைக் காப்பாற்றவேண்டு" ($55\frac{1}{2}$) மென்று ஸகல ஜீவராசிகளுக்கும் சௌக்கியத்தையே யருளமுயன்றவரான வத்தேவநாதரிட முரைத்தனள். (56) அப்போ ததுகேட்டு ஸ்ரீ பார்வதிமைந்தரானவர் தமது கோழியை நினைத்தருள, அதுடனே வெகு வேகமாய் வந்து மிகுந்த சத்தமிட்டது. (51) பிரளய கால மேக கர்ஜனைக்கு நிகரான வப்பெரும் சத்தத்தைக் கேட்டு அவ்வெல்லோர்களும் கொடிய பயத்தினாற் பீடிக்கப்பட்டவர்களாகிப் பூமிதனில் விழுந் துயிர்களை யிழந்தார்கள். (58)

நான்காவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## தேவகாண்டம் ரு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போது ஸ்ரீதேவநாதனெல்லா வேடர்களையு மதம்செய்துவிட்டு வெளியிற் புறப்படுகையில் கேளீர்! முனிவர்களே! லவலீநாயகியும் தந்தையைப்பற்றித் துக்கமடைந்தவளாகி வஸ்திரத்தினால் திருமேனிமுழுதும் போர்த்திக்கொண் டம் முருகேசனைப் பின்தொடர்ந்தாள். ($1\frac{1}{2}$) அச்சமயத்தில் தவசிகளிற் சிறந்தவராகிய பிரம்மன் மைந்தரான ஸ்ரீ நாரதமுனிவரானவர் நடுவழியில் வந்து, திருவிளையாடல் நிமித்தமாய் மானிடவுருவத்தைக் கொண்டிருந்த ($2\frac{1}{2}$) அவ்வடிவேலனைவ

ந்தனித்து வரலாறுகளையெல்லா மாதியோடந்தமாய்க் கேட்டபிற (3) கந்தேவேசனை வேண்டிக்கொண்டதாவது:— "ஓ! ஸ்வாமீ! இவ்வம்மையின் தந்தைமுதலிய இறந்துபோன இவ்வெல்லா வேடர்களையும் பிழைப்பித்தருளி, ஓ! தேவாக்ஷகா! பிறகு சகல கலியாண வைபவங்களோடும் (4) லவலீதேவியை முறைப்படிக்குத் திருமணம் செய்துகொள்வீ" ரென்றஅவரதுவசனத்தைக்கேட்டு, ஸ்ரீநாரதமுனிவரா லுலகாசாரணையின்படி நடக்தவேண்டிய விருப்பத்தோடு திருப்பிவிடப்பட்டவராகி ஸ்ரீபகவா னதிரூபலாவணியமுடைய வள்ளியம்மையை நோக்கி "வாராய்! பெண்ணரசே! இப்போது நமது திருவாக்கினையின்படி யிறக்கலான வுனது தந்தைமுதலிய வெல்லா வேடர்களையும் நீதானே (6) தயவுகொண் டுந்தன் விழிகளாற் பார்த்துப் பிழைப்பு மூட்டலாவா" யென, உடனே ஸ்ரீமுருகேச ஞசைநாயகியான அவ்வம்மையு மவ்வாறுகவே யவ்வெல்லோர்களையும் பிழைக்கச் செய்தனள். (7) ஓ! தாணிதேவர்களே! உடனே அவ்வேடரெல்லாம் தூக்கத்தினின் றெழுந்திருப்பவர்போ லெழுந்தவுடன் கேளீர்! தாணிதேவர்களே! திருவிளையாடல் நிமித்தமாய் மானிடவுருவம் கொண்டிருந்த அப்பகவான் நிஜஸ்வரூபத்தைக் காக்ஷியருளினர். (8) அப்போது தேவசேனைக்கு மணவாளரும், ஆறுமுகனும், பனிரண்டு கண்ணனும், நுகத்தடிபோல் நீண்டதும் கற்பக மலர்மாலைகளா லலங்கரிக்கப்பட்டதும் சிரேஷ்டமுமான பனிரண்டு புயங்களை யுடையவரும், (9) அகண்டமார்பையும் பருத்த கழுத்தையு முடையவரும், மாயைக் கெட்டாதவரும், தமக்கு மேலான வுத்தமரற்றவருமான அவ்வடிவேலனைக் கண்டு வேடர்கள் பயத்தினுற் பரவசம் கொண்டவர்களாகி வந்தனித்தும், (10) மிகுந்த பக்தியோடு தோத்திரம்பண்ணியும் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு "ஓ! தேவாதிதேவா! தேவரீரால் மரியாதையான திவ்வாறு கடக்கப்பட்டா (11) லெங்கள் குலத்துக்கு மிகவு மிழிவான வபகீர்த்தி யுண்டாகுமன்றோ! ஓ! ஸகல ஜகங்களையும் காத்தருளுகின்ற ஜகதீசா! ஆகையினுல் தேவரீர் முறையின்படி யிப்பெண்ணை மணம்புரியலாவீ" ரென்று விண்ணப்பமிட்டுக்கொண் டவர்கள் ஸகல ஜகங்களுக்கும பராபரகுருவான வக்குமரேசனை வந்தனித்தார்கள். பிறகு ஸ்ரீதேவேசனு மவர்கள் வசனத்தையங்கிகரித்துக்கொண்டு (13) வேடர்களாற் குடியேறப்பெற்ற அவ்வேடச் சேரிக்கு ஸ்ரீநாரதமுனிவரோடு கூடச்சென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவர்களாற் போடப்பட்ட நேர்த்தியான புலித்தோலாசனத்தில் வீற்றிருந்தனர். (14) மேலுமப்போது பாம்பானது பழைய சட்டையையுரித்ததுபோல் மானிட வுருவத்தை நீக்கிச் சிறந்த தேவ

உருவத்தோடு சிரேஷ்டமான அவ்வாசனத்தி லுட்காரலான அல்லவலி யம்மையு மவர்கள் காககுகொண்டார்கள். (15) கேளீர்! முனிவர்க ளே! அப்போது வேடத்தலைவனுனவன் கையினுல் ஜலத்தை யெடுத் துக்கொண்டு சிரேஷ்டரான மாப்பிள்ளையாகிய அவ்வடிவேலனுக்கு மு றைப்படி தாரைவார்த்தான். (16) அப்போது முனிவரிற் சிறந்த நார தரானவ ரக்கினியிற் செய்யும் சடங்குகளைச் செய்தனர். (16½) அச் சமயத்தில் ஸ்ரீ மகாதேவனும் பிரம்மன் விஷ்ணு முதலிய தேவரெல்லாம் தமது பாதாரவிந்தங்களைத் துதிகூறப்பெற்றவராகி ஸ்ரீ பார்வதியம்மை யோடுகூட வாகாயத்தி லெழுந்தருளி யங்கிருந்தபடியே திருமணக்கோ லம் கொண்டிருந்த வக்குமரேசனையும், (18) லவலீநாயகியையும் ஸ்ரீபா ர்வதியம்மையோடுகூட நோக்கியருளினர். அப்போது ஸ்ரீ வடிவேல னும் மனையாளோடுகூட விரைவாயெழுந் தவரை நமஸ்காரம் பண்ணி னுர். (19) விஷ்ணு முதலிய தேவரெல்லா மச்சரவணபவன்மீது மலர் களைச் சொரிந்துவிட்டு வல்லி சுப்பிரம்மணியர்களான வத்தம்பதியைத் தண்டம் பண்ணினுர்கள். (20) உடனே ஸ்ரீ மகாதேவ னத்தேவோத் தமர்களோடுகூட வந்தர்த்தானமாயினர். பிற்பாடு வேடத்தலைவன் ம ற்றவேடர்களோடும் பெண்டிர்களோடும்கூட ஸ்ரீ வடிவேலனை (21) வ ந்தனித் தப்போ துள்ளத்தில் மிகுந்த ஸந்தோஷமடைந்தான். வேட த்தலைவனும் ஸ்ரீ சுப்பிரம்மணியர்மீது மலர்களைச் சொரிந்தான். (22) பி ன்பு ஸ்ரீ முருகேசனிவ்வாறு பற்பல உபசாரங்களாற் பூஜிக்கப்பட்டவ ராகி மகா மங்களகரமான ஸ்ரீ பரிபூர்ணகிரிக்குப் பிரயாணப்பட்டு, (23) மங்கைமார்களுடன் கூடப் புறப்படலான வேடர்களையும் வேடத்தலைவ னையு மப்பட்டணத்துக்குத் திரும்ப வனுப்பிவிட்டுத் தாம் வல்லீ தேவி யோடுகூட வப்பருவதத்துக்கு விஜயமாகி (24) யங்கு விசுவகருமனு லமைக்கப்பட்ட பற்பல விரத்தினங்களி னெளிகளால் நிறைந்த சேர்த் தியான சிங்காதனத்தில் தேவியோடுகூட வீற்றிருந்தனர். (25) அப் போதத்தேவியானவ ளென்றுமழிவற்றவரான ஸ்ரீ குஹபிரானை நமஸ்க ரித்துவிட்டு "ஓ! ஸ்வாமீ! இம்மலையின் பெயரென்ன? இதன்மகிமை யெவ்வாறென்பதையு முரைத்தருளவேண்டு" மென, (26) அதற்கு ப் பகவான் "கேளாய்! பெண்ணே! இம்மலையானது ஸ்ரீதேவியாலென் றும் நிறைந்திருக்கின்றபடியால் ஸ்ரீ பரிபூர்ணகிரி யெனவும், இங்கு நம் மாற் சிலருயுத்தத்தில் மடிக்கப்பட்டபடியா லுயுத்தகிரி யெனவும்படு ம். (27) மேலுமிது ஸ்ரீ காஞ்சிபுரத்துக்குச் சமீபத்திலிருப்பதால்தா னக் காஞ்சியானது புண்ணிய தீர்த்தங்களில் கங்கையைப்போலும், ஸக ல மலைகளிலும் கைலைகிரியைப்போலு மெல்லாப் புண்ணியத்தலங்களி

லும் மிக்க மேன்மைகொண்டதாகின்றது. ($28\frac{1}{2}$) மேலும் யாமென்று மிம்மலையில் வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலிய வாத்தியங்களுடன் திருவிளையாடலருளுகின்றோம். (29) பூர்வத்தி விந்திர னிம்மலை தனில் நமது திருப்திக்காக மெத்தப் பரிமளம் பொருந்திய சிறந்த செங்கழுனீர் மலர்கள் நாள்தோறும் முச்சந்திகளிலும் மலரப்பெற்றதும், மிகத்தெளிவான சுத்தஜலத்தினால் நிரம்பக் கொண்டதுமான 'கல்ஹார' மென்ற வோர் தடாகத்தை வெட்டிக் காலை, உச்சி, மாலை ஆகிய மூன்று காலங்களிலு மிங்கெம்மைப் பூஜித்து (30-31) மகா மங்களகரமான விம்மலைதனிலே யவன் தனதுகோரிக்கையைக் கைக்கொள்ளலானான். தவிரவுமெந்த மானிடச் சிரேஷ்டர்க ளிம்மலைதனைத் தரிசிக்கின்றார்களோ! (32) அவர் செய்திட்ட பாவமெல்லா முடனே தொலைந்துவிடுமென்பதிற் சந்தேகமேயில்லை. யாதோர் மானிட னிச் சிறந்த தடாகத்தில் ஸ்நானம் பண்ணி நம்மைப் பூஜிக்கின்றானோ (33) அவன் நமது கிருபையைப் பரிபூர்ணமாய்க் கொண்டவனாகி நமது லோகத்தை யடைகின்றான். மேலுமிவ்விடத்தி லைம்பொறிகளையும் வென்று யாவர் நம்மை யைந்துதினம் தியானிக்கின்றார்களோ! (34) அவர் வேண்டிய பொருட்களை யெல்லாம் கைக்கொண்டவர்களாகி முடிவினில் மோக்ஷ ஸாம்பிராஜியம் பெறுகின்றார்கள். சிரேஷ்டமான விக்கிரிதனைக் கண்டுவிட்டு வந்தனம்பண்ணுதமானிடக்கேடர்களுக் (35) கவர்களால் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்கள்கூடப் பாவத்தின் பயனையே கொடுக்கலாகும். மகா பாதகர்களாயினும் யாவ ரிச் சிறந்த மலையை வந்தனிக்கின்றார்களோ (36) அவர்க ளப் பாதகங்களை யுதறிவிட்டுப் பிரம்மவிஷ்ணு முதலியவர்களால் வந்தனிக்கப்பெற்ற நமது சிறந்த பதவியை யடைகின்றார்கள். இதனில் யாதோ ராக்ஷேபணையுமில்லை. (37) மானிடர்களா லிவ்விடந்தனில் நன்றாய்ச் செய்யப்பட்ட வோர் கருமமானது அனேகம் பயன்களைக் கொடுக்கலுற்றதாகும்; இதைச் சத்தியமாய்ச் சொன்னோமேயின்றி வேறில்லை. (38) மகா மகா கோரங்களான பாவங்களு மிங்கு தொலையலாகு" மென, ஸ்ரீ பரமாத்துமாவாகிய ஸ்ரீ குஹபிரானுடைய இவ்வாறு வசனங்களைக் கேட் (39) டவ்வம்மையானவள் புன்னகைப்புற்ற முகாரவிந்தத்தையுடையவளாகி மிகவும் பிரீதிகொண்டவளானாள். பிற்பாடு ஸ்ரீ தேவநாதரங்கு சிரேஷ்டமான வோர் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைபண்ணி (40) திரிபுரமாற்றானாகிய ஸ்ரீ மகேசுவரனைப் பூஜைசெய் தவருடைய தயவினையும் கைக்கொண்டு ஓ! முனிவர்களே! இவ்வுத்தமகிரிதனில் சிலகாலம் வசித்தருளிவிட்டு (41) ஸ்ரீ தேவேசன் லவலீதேவியோடுகூடத் தமது திவி

ய விமானத்தி லேறிக்கொண்டு நேர்த்தியான கந்தகிரிக்கு விஜயமாகி விமானத்தினின் றிறங்கிக் (42) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தேவியோடுகூடத் தமது திருமாளிகையி லந்தப்புரத்துக்குச் சென்றருளினர். அப்போ தங்கு ஸ்ரீதேவசேனையம்மை யெதிர்கொண்டு வந்தத் தேவாதிதேவனை வந்தனிக்க, (43) பிறகவர் நேசத்தோ டவளை நோக்கி யிருந்த சந்தோஷத்தோடு கிருபைசெய்தனர். பிறகு மகா மங்களகரமான ஸ்ரீ லவலியம்மையு மந் தேவசேனையை நமஸ்காரம்பண்ண, (44) அப்போ தவள் மிகுந்த நேசங்கொண்டவளாகி யவளை யாலிங்கினம் பண்ணிக்கொண்டு மந்தஹாஸத்தோடு வசனமுரைத்ததாவது:—“ஓ! அம்மா! குழந்தாய்! நீ யெந்தனுக் கோர்நல்ல துணையாகவாய்த்தாயல்லவோ” என்றனள். (45) பிறகு நந்தாரானவ ரொருவரோ டொருவர் நேசங்கொண்டிருந்த அவ்விருவர்களுடனும் சிங்காதனத்தி லுட்கார்ந்தவுடன் தேவசேனையம்மை தம தென்றும் பழிவற்ற கணவரான ஸ்ரீ கந்தபிரானை நோக்கி (46) வல்லியம்மையுடைய விருத்தாந்தத்தை யாதியோடந்தமாய் விளங்கக்கூறும்படி வணக்கமாய்க் கேட்க, பகவான் சொல்லுகின்றார்:— “கேளாய் சிறந்த வதனமுடைய மாதே! முந்தி நீங்களிருவரும் உபேந்திரரான விஷ்ணுவின் பெண்களாயிருக்கையில் (47) நம்மைத் திருமணம் செய்துகொள்வதை வேண்டி மிகுந்த தவம்செய்தீர்கள். அத்தவத்தினால் யாம் களிப்புற்றவராகி யிந்தலவலியைப் பூதலத்திலும், உந்தனை யிந்திரனிடத்திலு (48) முற்பத்தியாகும்படி யாமாக்கினைசெய்ததின்பேரில் நீங்களவ்வாறே யுற்பத்தியானீர்கள். யாமுமப்படியேயிந்திரன் புதல்வியான வுந்தனை யிப்படி மணம்புரிந்துகொண்டோம். (49) முந்தி யிப் பெண்ணேவென்று லக்கினிதனி லத்தேகத்தைவிட்டுப் பிறகு சூக்ஷ்மவுருவத்தைக் கொண்டவளாகி காஞ்சிபுரத்துக்குச் சமீபத்திலுள்ள லவலியென்ற வோர் நேர்த்தியான மலைமீது, நம்மிடத்து மிகுந்த நேசத்தைக் கொண்டவளாகி (50) மெய்மையே மனதினில் தியானித்துக்கொண்டு மிகுந்த தவத்தைச் செய்துகொண்டிருந்தனள். இப்படியிருக்கையில் விஷ்ணுவானவர் கண்ணுவமுனிவரின் சாபத்தினால் ‘சிவமுனி’ யென்ற பெயர் கொண்டவராகி யங்கோர் வனத்தின்கண்ணுள்ள வோர் நதிக்கரையில் கொடூரதவத்தைச் செய்துகொண்டிருந்தனர். (51½) அப்போ திலக்குமியு மோர் மானுருவம் கொண்டவளாகி யங்கு வரலுற்றனள். (52) அப்போ தம் முனிவ ரம் மானைக் கண்டவுடன் காமாதுரராகி மோகங்கொள்ள, அப்போ திவ் வழகிய மங்கையானவ ளம் மானிடமிருந்து அங்குள்ள லவலி (வள்ளி) ப்புதரினிற் சனித்தபடியால்தா (53) னிச்சுந்தரியானவ ளப்பெயரினா லிவ்வுலகினில் வழங்கிவரப்படுகின்றாள். மேலும் உபேந்திரனும் கண்ணுவமுனிவரின் சாபத்தினால் வேடர் குலத்தினிற் சனிக்க (54) லானான். பிறகவ் வேடச்சிரேஷ்ட னப்போ தப்போக்கொத்த லவலியைப் பார்த்தவுட னவன் மக்களில்லாதவனாகையா லக்குழவியை யெடுத்துத்

தன் பெண்டீரிடம் கொடுத்தான். (55) ஓ! கேளாய்! பிரியநாயகி! அப்பேர்க்கொத்த இவ்வள்ளிநாயகியை யாம் மிக நேசத்தோடு முறைப்படி மணம்புரிந்து பிறகவளுடன் ஸ்ரீ பரிபூர்ணமென்ற கிரிதனிற் சில காலமிருந்துவிட்டு (56) ஓ! நமதன்புக்குரிய தேனே! பிறகிவளோடுகூட வுந்தனிடம் வந்துசேர்ந்தனம்" என, அதுகேட்டக் கஜநாயகியும் மிகுந்த களிப்புற்ற மனதைக் கொண்டவளாகி "ஓ!கருணாமுத மூர்த்தியான தேவாதிதேவா! அங்கங்கே யிருந்துகொண்டிருந்த இவ்வெந்தனையு மப்பெண்ணையு மோரிடத்திற் சகோதரிகளாய்ச் சேர்த்துவைக்கலானீரோ" யென்றவ ளுரைத்ததன்பேரில் (57) லவலியம்மையானவள் கஜநாயகியை நோக்கி "ஓ! அக்கா! உமது தங்கையாகிய வெந்தனை யிதுமுத லெப்போதும்நீர்பாதுகாத்திடல் வேண்டு"மென்று சொல்லிவிட்டுத் தண்டம்பண்ணுகையி (58) லப்போது தேவசேனையு மவளைக் கட்டியணைந்துகொண்டு "ஓ! குழந்தாய்! நீதா னெந்தனுக்கு மிகவு மந்தரங்கமான தோழி; மேலும் உந்தனால்தான் ஸ்ரீ சுப்பிரம்மணியருடைய கிருபையான தெந்தன்மீது பரிபூர்ணமாய்ச் செய்விக்கபபட்டது; (59) ஆகையால் யானிப்போது கிருதார்த்தையாகிவிட்டேன்" என்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்விரண்டு தேவிமார்களு மொருவரோடொருவர் பேசிக்கொண்டே ஸ்ரீ குஹபிரானுடைய பாரிசங்களிலிருந்து விளங்கிவந்தார்கள். (60) தவிரவும் ஸ்ரீ வடிவேலன் திருவாக்கினையின்படி யவாது மயில், கோழி, மனோவேகமுடைய விரதம், ஆட்டுக்கடா, வேலாயுதம், விமானம் இவையெல்லா மக் கந்தகிரிதனிலே யிருந்துவந்தன. (61) ஸ்ரீ சுப்பிரம்மணியரோவென்றால் மகாபலிஷ்டர்களான வீரர்கள், சேனாபதிகள், பூதர்கள் இவர்களாற் பற்பலவுபசாரங்கள் செய்யப்பெற்றவராகி யிருதேவிமார்களுடனும் சிரேஷ்டமான சிம்மாசனத்தில் வீற்றிருந்து விளங்கலாயினர். (62) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! உங்களாற் கேட்கப்பட்ட, ஸகல தேவச்சிரேஷ்டர்களுக்கு மீசுவரனான ஸ்ரீஷண்முகனுடைய சரித்திரம் யாவு மிவ்வா றாதியோடந்தமா யெடுத்துச் சொல்லப்பட்டது; மேலு முங்களுக் கின்னு மிங்கு கேட்க விருப்பமுள்ள ஸகல விருத்தாந்தங்களையு மெடுத்துரைக்கின்றோம். (63)

ஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தேவகாண்டம் ௬—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சௌனகாதிமுனிவர்கள்சூதனைக்கேட்கின்றதாவது:—"ஓ!சூதமுனிவரோஸ்ரீசுப்பிரம்மணியபரமாத்துமாவினுடையதிருக்கலியாணத்துக்கு முசுகுந்த சக்கிரவர்த்தியென்றவோரரசன்வந்தனனொன்று முந்தியும்மாற்

சொல்லப்பட்டதென்றே! அவர் யாவரென்பதை யெடுத்துரைக்கவேண்டு" (1) மென, சூதர் சொல்லுகின்றார்:— ஓ! பிராம்மணோத்தமர்களே! அவ்வாசனைப் பற்றி யானுரைக்கலாவதை நீங்கள் கவனமாய்க் கேட்கவேண்டும்: பூர்வத்தில் ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்கள் கைலையின் கொடுமுடிமீதுள்ள (2) சிங்காரத்தோட்டத்தைப் பார்த்தருளிக்கொண் டோர் வில்வமரத்தடி மேடையிலுட்கார்ந்திருக்குமளவி லப்போது முகத்திற் கறுப்புடைய மகா வலிமைகொண்ட வோர் குரங்கான (கொண்டைமுசுர்) (3) தம்மரத்தி லேறிக்கொண்டு மகா சந்தோஷத்தோடவ்வில்வபத்திரங்களைப் பறித்து மிகுந்த பக்தியுட னவர்கள்மீது மிகுதியாய்ப் போடலாகையிற் (4) ஸ்ரீ பார்வதியம்மையானவ ளிதென்னவென்றம் மரத்தைப் பார்க்கும்போ தம்மரத்தின்பேரி லிருந்த வக்குரங்கைக் கண்டவுடன் கோபாவேசம் கொண்டவளாகி (5) யப்போதவ்வம்மையானவ ளதின் சேஷ்டையை ஸ்ரீ மகாதேவனுக் கறிவிக்க, அப்போது ஸ்ரீ ஜகதீச னம்மையை நோக்கி "கேளாய்! பார்வதீ! இது நம்மீது மிகுந்த பக்தியுடையதாக்கு" (6) மென்று வசனமளித்துவிட்டத்தேவரக்ஷகரானவ ரச்சிரேஷ்டமான குரங்கைக் கூப்பிடலாகையி லது உடனே வந்து ஸ்ரீ மகேசுவரனைத் தண்டம் செய்தது. (7) அப்போது ஸ்ரீ பார்வதீ நாதனும் மிகுந்த கருணைகொண்டவனாகி "ஓ! குரங்கே! நீ வில்வபத்திரத்தினு லெம்மை யர்ச்சித்தபடியால் நீ சீக்கிரமாய்ப் பூமிதனில் ஸகல பூபாலர்களுடைய முடிகளு முந்தனடிதனில் விழப்பெற்ற வோர் சிறந்த சக்கிரவர்த்தியாகி ($8\frac{1}{2}$) முடிவினி லிக் கைலாசத்துக்கு வந்து, கிடைப்பதற்கு மிகவு மசாத்தியமான நமது கணத்தலைவப்பதவியை (9) யடைந்து மகா சந்தோஷத்தோடு வாழக்கடவா" யென்றதனை நோக்கித் திருவாக்கருளுகையி லப்போது குரங்காயிருந்த மகா வலிமை கொண்ட முசுகுந்தன் ஸ்ரீ மஹாதேவனை நோக்கி வசனமுரைத்ததாவது:—(10) "ஓ! தேவாதிதேவா! மகாதேவா! கருணாமிருதக்கடவுளே! ஸகல புவனங்களையும் காப்பவரோ! தேவரீரடியனுன இவ்வெந்தனுக்குப் பிறப்புண்டானு (11) லப்போது நிச்சயமா யஞ்ஞானம் மேலிட்டுவிடுமாகையா லெந்தனுக் கிதே முகத்தைக் கொண்டவோருருவமுண்டாகும்படியருள்செய்தெந்தனைமிகுந்த சந்தோஷத்தோடுகாப்பாற்றிடவேண்டு" (12)மென்றுஸ்ரீபகவானையருள் புரிவிக்கும்படி செய்துகொண்டதன்மே லரிச்சந்திரராஜனுடையவமிசத்திற் சனித்துப் பிறகுஸ்ரீவடிவேலனுடைய திருக்கலியாணகாக்ஷியைக்கண்ணுற்று ஸ்ரீசுப்பிரம்மணியன்மீது சிறந்த பக்தியைக் கொண்டவராகி(13) யென்றுமெல்லாத் தேசங்களிலும்முசுகுந்தசக்கிரவர்த்தியென்றுபுகழ்பெற்றிருந்தார். அவர் தவசிகளிற் சிறந்தவரான வசிஷ்டமா முனிவரிடமிருந்துஸ்ரீ வடிவேலனுக்குரிய சிறந்த விரதங்களையெல்லாம் (14) செவியுற் றவைக

னைக் கிரமப்படி மிக வாதரவோ டனுஷ்டித்து வந்தாரென, அப்போது சௌனகாதி முனிவர்கள் கேட்கின்றதாவது:—"ஓ! சூதமுனிவரே! முசுகுந்தனென்ற ராஜச் சிரேஷ்டன் முனிவரிற் சிறந்த வஸிஷ்டமுனிவரிடமிருந்து (15) கேட்டு மகா சந்தோஷத்தோடு விரதங்களை யனுஷ்டித்து வந்தாரென்றீரே! அவைகளி லென்னென்ன விரதங்களை யெவரெவ ரனுஷ்டித்திருக்கிறார்களென்பதை யெங்களுக் கெடுத்துக்கூறல் வேண்டு" மென, (16) சூதர் கூறுகின்றார். கேளீர்! தரணிதேவோத்தமர்களே! பூர்வத்தில் மகா தர்மிஷ்டனாகிய பகீரதனென் றோரரசனிருந்தான். அவன் கோரனென்ற வோரரக்கனாற் போர்தனில் முறியடிக்கப்பட்டு (17) அப்போதவ னதேசத்தை யிழந்தவனாகி மிகுந்த பயத்தினால் குடும்பத்தோடு காட்டுக்கோடிவிட்டான். அவனது ராஜியமான தவ்வரக்கனாற் கட்டிக்கொள்ளப்பட்டது. (18) அப்போதவ்வரசன் காடுசென்று பிருகுமா முனிவரிடமிருந்து ஸ்ரீ முருகேசனுக்குரிய திவ்விய விரதத்தைக்கேட்டு மிகுந்த பக்தியோடுகூட (19) வெள்ளிக்கிழமை தினத்தில் முறைப்படி ஸங்கல்பம் செய்துகொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மூன்றுவருடகாலம் சிரேஷ்டமான வச்சுக்கிரவார விரதத்தை யனுஷ்டித்து வந்தான். (20) பிறகு சிலகாலத்துக்கெல்லாம் தேவாதிதேவனாகிய ஸ்ரீ குஹபிரானுடைய அழிவற்ற திருவேலானது வந்தக்கோர ராக்ஷஸனைக் கொன்றுவிட்டது. (21) பிறகு பகீரதன் வெகு ஸந்தோஷத்தோடு தன தராசாக்ஷியை யடைந்து முன்போ லெதிரியற்று மகாராஜனாய்ச் சகல ராஜியங்களையும் பரிபாலனஞ்செய்து வந்தான். (22) ஆகையால் ஸ்ரீ கந்தபிரானுடைய சுக்கிரவார விரதமானது வேண்டிய பயனைக் கொடுக்கவுற்றதாகும். மேலும் முனிவரிற் சிறந்த நாரதமுனிவர் கார்த்திகை நக்ஷத்திரத்தில் சிரேஷ்டமான விரதத்தை முறைப்படி யனுஷ்டித்துத்தாம் முனிவர்க்கெல்லாம் சிரேஷ்டராயினர். (23½) தவிரவு மோர் வேதிய ரதே கார்த்திகை நக்ஷத்திரத்தில் வெகு ஸந்தோஷத்தோடு விரதத்தை யனுஷ்டித்துவந்து (24) பிறகவர் மகா லக்ஷ்மி விலாஸத்தோடுகூடிய மனு சக்கிரவர்த்தியாகி யிப்பாரதனை யாண்டுவந்தார். மேலும் மற்றோர் பிராம்மணரு மக்கார்த்திகை நக்ஷத்திரத்தி லுத்தமமான அவ்விரதத்தை முடித்துவந்து (25) பிறகு திரிசங்கு வென்ற பெயரோடு ராஜாதிராஜனாகி யுலகினை யாண்டுவந்தார். தவிரவும் மற்ற விரண்டுபிராம்மணச்சிரேஷ்டர்கள் ஸ்ரீ சுப்பிரம்மணியர்மீது மகா பக்தியுடையவர்களாகிக் கார்த்திகை நக்ஷத்திரத்தில் சாஸ்திர முறைப்படி யம்மகா விரதத்தை யனுஷ்டித்து (26½) அந்திமனென்றும் ஸந்திமனென்று மிரண்டு பெயர்போன அரசர்களாகி யிராஜியத்தைப் பரிபாலித்துவந்து (27) ஸ்ரீ கந்தபிரானது திருவருளாலே முடிவினில் மோக்ஷமடைந்தார்கள். இன்னும் கந்தஷஷ்டி விரத

மென்று மற்றோர் விரதம் மூவுலகினிலும்பிரசித்திபெற்றிருக்கின்றது.
(28) முந்தி தேவர்களும், தவத்தையே தனமாய்க்கொண்ட முனிவர்
களுமவ்விரதத்தை யனுஷ்டித்து வந்தபடியா லசுரபயத்தினின்று வி
டுபட்டு முன்போல் தங்கள் தங்கள் பதங்களை யடைந்தார்கள். (29)
பெரிய மனதையுடைய முசுகுந்தசக்கிரவர்த்தியும் ஸ்ரீ குஹபிரானிடத்தி
லே மனதை நாட்டிக்கொண்டு இவ்வாறு முதலிய விரதங்களைக் கிரமப்
படி யனுஷ்டித்து வருகையில் (30) ஸ்ரீ குஹபரமாத்துமாவானவர் தா
மே நேரி லவர்முன்னர் தோன்றலாகி "ஓ! ராஜசேகரா! உமக்கு வேண்
டியவைகளைக் கொடுக்கின்றோம்; அவைகளைச் சொல்லி" (31) லென்
று திருவாக்கருளிய வப்பகவான் திருவடிகளில் தண்டம்போல் பூமியில்
வந்தனித்துப் பற்பல துதிகளால் தோத்திரம்பண்ணி, கேளீர்! முனிவ
ர்களே! அவர் வேண்டிக்கொண்டதாவது:—(32) "ஓ! கருணைக்கடலா
கிய தேவாதிதேவா! இலக்ஷத்தொன்பது வீரர்களு மடியேனுக்குத் த
ம்பிகளாகவேண்டும்;ஓ!ஸ்வாமி! நானவர்களைத்துணையாய் வைத்துக்கொ
ண்டு(33)தேவரீர்கட்டளையின்படி, சத்துருக்களற்று இவ்விராஜியத்தை
ப் பரிபாலனம்பண்ணிவருகின்றே" னென, அதுகேட்டு ஸ்ரீ தயாநிதியு
மப்படியே ஆகட்டுமென்று திருவாக்கருளிவிட்டு (34) வீரபாகு முத
லிய வீரர்களைநோக்கி வசன முரைத்ததாவது:—"கேளீர்! வீரர்களே!
நீங்கள் நமதாக்கினையின்படி யிப்போதே சீக்கிரமா யிவ்வரசனுக்குத் த
ம்பியாகிவிடுங்க" (35) ளென்றவ ருரைத்திட்ட திருவசனத்தைக் கே
ட்டவுட னவ்வீரரெல்லாம் பயத்தினுல் நடுக்கமுற்றவர்களாகி"ஓ! ஜகங்
களுக்கெல்லாம் பிரபுவான தேவாதிதேவா! அசுரர்களைச் சமுகரிக்கலு
ற்ற வடியார்களுக்கு மிகவும் தாழ்ச்சியான, இவருக்குத் தம்பிகளாயிரு
க்கும் தன்மையி லெவ்வா றுருசியுண்டாகு" (36½) மென் றவர்க ளு
ரைத்திட்ட வசனத்தைக் கேட்டவுடன் மனதினிற் கோபாவேசங்கொ
ண்டவராகி (37) ஸ்ரீ பகவா னவர்களைநோக்கி யதட்டிக்கொண்டு மறு
படியும் திருவாக்குரைத்ததாவது:—'ஓ!கோ! வீரர்களே! நீங்கள் கர்வ
ங்கொண்டவர்களாகி நமது திருவாக்குக் கமையாதபடியால் (38) நீங்
கள் மானிட ஜன்மத்தை யடைந் தவ்வரசனுக்குந் தம்பிகளா யவரோ
டிருந்துவிட்டுப் பிறகுச் சிரேஷ்டமான தவத்தைச்செய்வதினு லிப்பா
தகத்தினின்று பரிசுத்தர்களாகிப் (39) பிறகு முடிவினில் நமதாக்கி
னையின்படி நம்மண்டைக்கு வரக்கடவீர்க" ளென் றுரைத்திட்டமாத்தி
ரத்தி லவ்வீரரெல்லாம் மானிடவுருவத்தைக் கொண்டவர்களாகி (40)
"ஓ! கருணைக்கடலான தேவாதிதேவா! எங்களது பிழையை மன்னித்
தருளவேண்டு" மென்றுரைத்துப் பயத்தினு லங்கம் பதறலுற்றவர்க

ளாகிப் பூமிதனில் தண்டம்போல் வந்தனஞ்செய்தார்கள். (41) பிறகு அவர்கள் ஸ்ரீ பகவானிடமிருந் தனுமதிபெற்றவர்களாகிக் கேளீர்! தாணிதேவோத்தமர்களே! ஸ்ரீ விஷ்ணுவாகிய உபேந்திர னிந்திரனுக்குத் தம்பியானதுபோ லவ்வரசனுக்குத் தம்பியாகி யவனைச் சூழ்ந்துகொண்டார்கள். (42) பிற்பாடு பரம பாவனமூர்த்தியாகிய ஸ்ரீ கந்தபிரானம் முசுகுந்தசக்கிரவிருத்திக் கிவ்வாறு யனுக்கிரகஞ்செய்துவிட்டு மறைந்தருளினர். (43) பிறகு மகா புத்திசாலியான முசுகுந்தனும் பெரியதான தமது சதுரங்க சைனியங்களை மிகுந்த ஸந்தோஷத்தோடு தந் தம்பிகளுக்கு வெவ்வேறுய்ப் பகிர்ந்துகொடுத்து (44) ஸ்ரீவடிவேலனை மனதினில் தியானித்துக்கொண்டே மிக வானந்தத்தோ டிராஜீயபாரஞ் செய்துவந்தார். மேலு மவர் கருப்பூரென்றக் கிராமத்தி லிராஜ கன்னிகளாய்த் தோன்றியிருந்த வப்ஸரஸ்திரிகளைத் தம் தம்பிகளுக்கு மணம்புரிவித்தனர். அதனில் மகா பலவானுகிய வீரபாகுவானவர் புஷ்பகந்தியென்பவளைக் கலியாணம்பண்ணிக் (46) கேளீர் முனிவர்களே! சித்திரவல்லியென்ற வோர் சிறந்த பெண்ணேடுகூடக் கனகன், ஆனகனென்ற பெயர்களையுடைய விரண்டு பிள்ளைகளையு மடைந்தனர். (47) அப்போது மற்ற வீரர்களு மனேகம் பிள்ளைகளைப் பெற்றூர்கள். பிறகு வீரபாகுவானவர் மிகுந்த அழகுடைய சித்திரவல்லியென்ற தம் பெண்ணை பாவனைக்குமட்டில் தமயனுகிய முசுகுந்தருக்கு விதிப்படி விவாகம் செய்துகொடுத்தார். (48½) இப்படிக்கொந்த சித்திரவல்லியின் கைதனிலிருந்த நேர்த்தியான வோர் கிளியை (49) யப்போ தியமபடர்கள் பலவந்தமாய்ப் பிடுங்கிக்கொண்டுபோ யதனைச் சந்தோஷார்த்தமாய் விரும்பி யவியமனுடையமனையாளுக்குத்துரிதமாய்க்கொடுக்க, கேளீர்! தாணிதேவர்களே! (50) வீரர்க ளச்சங்கதியைக் கேள்வியுற்று மகா கோபாவேசம் கொண்டவர்களாகி யியமனேடு யுத்தஞ்செய் ததனைத் துரிதமாய்ப் பிடுங்கி மறுபடியும் (51) சித்திரவல்லியிடம் கொடுத் தவளை மிகவும் சந்தோஷப்படுத்தினர்கள். மேலு மரசனுக்குப் பிரிய நாயகியான சித்திரவல்லி கெர்ப்பமாயிருக்கும் (52) போது மகாஇரஸவத்தான, மலையாள தேசத்திலிருந்த வோர்கனியை யவள் விரும்ப, கேளீர்!முனிவர்களே!உடனேவீரர்களதனையத்தேசவரசனிடம்தூதர்முகமாய்க் (53) கேட்டனுப்பியுமவ னதனைக் கொடாத்தினாலவர்கள்கோபாவேசம் கொண்டவர்களாகி யுடனே யங்குசென் றவ்வரசனைப் போர் முனையில் முறியடித்துவிட் டக்கனியைச் சீக்கிரமாயெடுத்துவந் (54) தச்சித்திரவல்லிக்குக் கொடுத்தனர்கள். மேலும் கேளீர்!பிரமனோத்தமர்களே! அவ்வீரர்கள் தேசங்கள்தோறு மங்கங்குள்ள கொடியரச

ளையெல்லாம் போரினில் வென்று (55) பார்முழுமையும் தங்கள் வய க்கிக்கொண்டு நீதிவழுவாம லாசுசெலுத்திவந்தார்கள். அப்போது மு சுகுந்தனுக்கு ப் பிரியநாயகியும், ஸகல அவயவங்களும் சுந்தாமா க மையப்பெற்றவளுமான வச்சித்திரவல்லியு மக்கினி வர்ணனென்றவோ ர் குமாரனைப் பெற்றாள். ($56\frac{1}{2}$)

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இப்படியிருக்குங்காலத்திலு யுத்ததில் மெத்த மதங்கொண்டவனான வலன் என்ற வோர் மகாசுர ன் துர்ப்பலனான தேவேந்திரனைப் போரினில் வென்றவனது நகரத்தை வளைந்துகொண்டான். ($57\frac{1}{2}$) அப்போது தேவராஜனுக் கவனோடு யுத் தம்செய்ய த்திறமையில்லாதபடியா (58) லவன் தன் தூதர்மூலமா யிராஜச்சிரேஷ்டனாகிய முசுகுந்தசக்கிரவிருத்தியைத்தனக்கு வந்துதவி செய்யுமபடி கேட்டுக்கொள்ள, அப்படியே மகா பராக்கிரமமுடைய அ ச்சக்கிரவிருத்தியும்வந்து மிகுந்த வலிமைகொண்ட வலாசுரன் சேனைக ளையெல்லாம் போர் முகத்தில்நின்று கொன்றுபோட்டனர். ($59\frac{1}{2}$) அ ப்போது மகாசுரனான வலன்மட்டி லொண்டியாய் மிஞ்சி நிற்கலாகையி ல் (60) கேளீர்! தரணிதேவர்களே! தேவராஜன் வஜ்ஜிராயுதத்தினா லவனை யடித்துக்கொன்றான். அதனால்தா னிந்திர னதுமுதலாய் 'வலா ரி' யென்று சொல்லப்படுகின்றான். (61) தேவராஜ னிவ்விதமாய் மகா கொரேனான வலாசுரனைக் கொன்றுபோட்டு முசுகுந்தரோடுகூட மகா ஸந்தோஷத்துடன் தனதரண்மனை சேர்ந்தான். (62)

ஆறாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## தேவகாண்டம் எ-வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பா டவ்வரசமன்னரும் தேவமன்னரும்ஸ்நாநம்செய்து மகா மங்களகரர்களாகித் திரிபுரமாற்றனாகிய ஸ்ரீ சர்வேசுவரனைப் பூஜைசெய் யும் திருமாளிகைக்குட் சென்றார்கள். (1) அப்போது ராஜமன்ன ன ங்குள்ளச் சிரேஷ்டமான வோராதனத்தில் சுகமா யுட்கார்ந்தபொழு தி ந்திரன்பூஜைசெய்யுங்காலத்தி லவனுடைய ஸ்ரீஸோமாஸ்கந்தரான மகே சுவர விக்கிரகத்தைக்கண்டவுடன்(2) அலர்ந்த செந்தாமரைமலரை யொ த்த திருமுகத்தையுடையவரும், பரமாநந்த மங்களமூர்த்தியுமான ஸ்ரீபர மேசுவரனை யம்முசுகுந்தசக்கிரவிருத்தி தரிசனம்பண்ணிக்(3) கைலாச வாசியும், பார்வதியோடு கூடியவருமான மகா பிரபுவை மனதினில் தியா னம்பண்ணிக் கொண் டாநந்தக்கண்ணீர் பெருகப் பெற்றவராகி மிகுந்

த பத்தியோடு தோத்திரஞ்செய்கையில்(4) ஸ்ரீபகவா னம்முசுகுந்தர் முன்னர் ஸான்னித்தியமாகி "ஓ! ராஜனே! முந்தி யாம் விஷ்ணுவால் பூஜைசெய்துவரப்பட் டிப்போ திவ்விந்திரனிடம் வந்திருக்கின்றோம். (5) அப்பேர்க்கொத்த வெம்மை நீ நமதடியார்களில் மெத்தச் சிறந்தவனானமையால் நீயே பூஜைசெய்துவரலாவா" யென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீபரமேசுவர னவ்வரசனுக்கு இந்திரன் செவியிற்படாதிருக்கும்படி யிரகஸியமாய்த் திருவாக்கருளினர். (6½) அதுகேட்டு முசுகுந்தசக்கிரவிர்த்தியு முள்ளம் குளிர்ந்தவராகி மற்றெங்கும் மனதை நாட்டாமலேதேவேந்திரனுடைய பூஜையைப் பார்த்துக்கொண்டிருந்தனர். பிறகிந்திரனும் பூஜையை முடித்துக்கொண் டரசனோடுகூடப்புறப்பட்டுப் (8) போஜனசாலை சென்று தனது காமதேனுவை நினைக்க, தன்னையண்டியவர்களுக்கு வேண்டியதைக் கொடுக்கலுற்ற வக்காமதேனுவும் சீக்கிரமாய் வந்தது. (9) பிறகிந்திர னக்காமதேனுவாற் கொடுக்கப்பட்டபால் முதலியவைகளோடுகூடிய நேர்த்தியான வன்னத்தா லப்போதவ்வரசனுச்குப் போஜனமளித்து மனேக வஸ்திராபரணங்களைக் கொடுப்பித்தும், (10) கேளீர்! தரணிதேவர்களே! அத்தேவராஜன் "ஓ! ராஜனே! உமக்கு வேண்டியதைச் சோல்லவேண்டு" மென்று மிகவன்புடனம்முசுகுந்தனைப் பலமுறைகேட்டனன். (11) அதுகெட் டவ்வரசனு மப்போது மிகுந்த ஸந்தோஷத்தோடு கூடியவராகி "ஓ! இந்திரா! உம்மாற் பூஜைசெய்யப்படுகிற ஸ்ரீசோமாஸ்கந்த விக்கிரகத்தை நீர் கொடுப்பீரானல் (12) நான் மிகுந்த பக்தியுட னப்பரமேசுவரனைப் பூஜை செய்து வருகின்றே" னென, அதுகேட் டிந்திரன் மிகுந்த மனக்கவலை கொண்டவனாகி (13) யவனை நோக்கி வசனமுரைத்ததாவது:— "ஓ! ராஜனே! இம்மகேசுவர மூர்த்தியானவர் ஸ்ரீ விஷ்ணுவா லாராதித்துவரப்படுவோரே யின்றி யெனக்குச் சொந்தமில்லையென்று ஸத்தியமாய்ச் சொல்லுகின்றேன். (14) அவர் பூஜைசெய்து வரலானகாரணத்தை யெடுத்துக் கூறுகின்றேன்; இதனை நீரிப்போது கவனமாய்க் கேட்கலாவீர்:—முந்தி விஷ்ணுவுக்குப் புத்திர னில்லாதபடியா லவர் ஸ்ரீ பரமேசுவரனை மனதினில் தியானம்பண்ணிக்கொண்டு (15) கேளீர்! ராஜனே! புத்திரனை வேண்டியவராகி மிகவும் கொடிய தவத்தைச் செய்தனர். அ அப்போ தவர்முன்னர் ஸ்ரீ! மகாதேவர் பிரஸன்னராகையி லவர் மிகுந்த சந்தோஷத்தோடு தண்டம்பண்ணி (16) "ஓ! தேவாதிதேவா! மகாதேவா! தேவரீரா லிம்பெருமை பொருந்திய பதவியும், முடிவற்ற வாயுளு மருளப்பட்டிருக்கையி லேலஷதனுக்கு யாதொரு குறைவுமில்லை; (17) ஆகிலும் ஓ! கருணைக்கடலே! ஓ! தேவேசா! புத்திர விணனு

ன வெனது பாவத்தை யோர் நொடிக்குள் விலக்கித் தேவரீரது திருவருளால் எந்தனுக்குப் புத்திரபாக்கிய முண்டாகவேண்டு"(18) மென்று விஷ்ணுவானவர் ஸ்ரீ பரமேசுவரனை யப்போது பிரார்த்திக்க, ஸ்ரீ பார்வதீநாதனும் 'நல்லதப்படியே ஆகக்கடவ'தென்று விஷ்ணுவுக்கு வரமளித்தனர். அப்போது (19) ஸ்ரீ பார்வதிதேவியானவ ளவ்வெல்லாவற்றையும் பார்த்து மிகுந்த கோபங்கொண்டவளாகி "ஓ! இவ்விஷ்ணுவானவன் நம்மை விலக்கி ஸ்ரீ பரமேசுவரனைமட்டிற் பூஜைசெய்து (20) வரனையும் பெற்றனனல்லவோ! ஆகையா லவனுக்குப் பிறக்கும் பிள்ளையானவன் ஸ்ரீ பரமேசுவரனுடைய நேத்திராக்கினியினுல் தகிக்கப்படலாகும்படி யிவனுக்கு நேரிடக்கடவ" தென்று சபித்துவிட்டு 'ஓ தயாநிதியாகிய பரமசிவா! (21) மகா மாயாவியும் சூதனுமான இவ்விஷ்ணுவானவன் ஸாக்ஷாத் பரப்பிரம்ம ஸ்வரூபியான தேவரீர் விழித்திருக்கையிலே தானே பிரம்ம மென்றெபபோதும் பிதற்றிக்கொண்டே ஸகல ஜீவராசிகளையும் (22) துர்மார்க்கத்தில் தள்ளிவிடுகின்றுன்; ஆகையாலவனது முகத்தில் விழிப்பதே தகுதியல்ல' வென்று ஜகன்னுதனுன ஸ்ரீதேவேச னிடத்தடிக்கடி யுரைத்துக் கேளீர்! ராஜனே! ஸ்ரீ பார்வதி தேவியானவள் பரமேசுவரனேடுகூட வந்தர்த்தானமாயினள். பிற்பாடு விஷ்ணுவானவர் துக்கத்தினுல் மிகவும் பீடிக்கப்பட்டவராகி மகா பெருமை பொருந்திய விச்சோமாஸ்கந்த விக்கிரகத்தைச் சாஸ்திரமுறைப்படி (24) பிரதிஷ்டைபண்ணி வெகுகாலம் பூஜை செய்துவந்தார். இப்படியிருக்கையி லோர்நாள் தயாநிதியான மகாதேவன் பார்வதி சுப்பிரம்மணியர் சகிதராய் விஷ்ணுவின் முன்னர் பிரத்தியக்ஷமாயினர். (25½) அதன்மேல் விஷ்ணுவானவ ரம்பிகையோடும் குமாரனேடும்கூடிய ஸ்ரீபரமேசுவரனைத் துதிக்க, (26) பிறகு பிரஸன்னரானவப்பகவான் கௌரியம்மனுடைய திருமுகத் தைநோக்குமளவி லவ்விங்கிதத்தை விஷ்ணு வறிந்துகொண்டதன்மேல் பருவதராஜபுத்திரியான உமாதேவியை நமஸ்காரம்பண்ணி (27) 'ஓ! பவானீ! எனதறியாத் தன்மையா லும்மைப் பூஜியாம லம்மகேசுவர னொருவனை மட்டிற் பூஜித்தபடியா லெந்தனுக் கபராதமுண்டாகிவிட்டது. (28) யானே வெகுகாலம் முதலாய்ப் புத்திரனைவேண்டித் தவம் செய்யலானேன். ஓ! மகேசுவரீ! ஆகையால் 'பிறந்த மைந்த னெரிந்துபோகக்கடவ' தென்ற சாபத்தைக்கொண்டவப்பேர்க்கொத்த வெந்தனைக் காப்பாற்றியருளவேண்டு' மென்று நாராயணன் ஸ்ரீமகாதேவியைத் துதிசெய்து பிரார்த்திக்க, பிறகு பார்வதியும் மிகக் களிப்புற்றவளாகி யவனை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:—
(30) 'கேளீர்! விஷ்ணுவே! எரியலாகு முமது மைந்தனுக் கம்மகே

சுவானுலே பிறகு சீக்கிரமாய்ப் பிழைப்புண்டாகக்கடவது. ஏனென்றால் நமதாக்கினை மெத்தவும் வலிமையுளதன்றோ!' (31) வென்று திருவாக்குரைத்துவிட்டுப் பார்வதியானவள் பரமேசுவரனோடுகூட மறைந்தருளினள். பிற்பாடு என்று மிருப்போரான விஷ்ணுவானவர் மிகவும் களிப்புற்ற மனதுடன் ஸ்ரீமகாதேவரது திருவாக்கினையின்படி மனதினால் நினைத்தமாத்திரத்தில் மனோபவ (மன்மத) னென்ற மைந்தனைப் பிறப்பித்தனர். ($32\frac{1}{2}$) அம்மன்மதன் வெகுகாலம் விஷ்ணுவால் வளர்க்கப்பட்டவனாகிப்(33) பிறகு தேவகாரியத்தைச் சாதிப்பதற்கெத்தினப்படும்போது ஸ்ரீதிரிபுரமாற்றானால் தகிக்கப்பட்டுப் பிறகிறக்கம் கொள்ளலான வச்சிவபிரானாலே யவன் பிழைப்பு மூட்டப்பட்டான். (34) இவ்விதமாய்விஷ்ணுவானவ ரப்பேர்க்கொத்த இவ்விக்கிரஹத்தைப் பூஜைசெய்தே அவ்வரனைப் பெற்றனர். ($34\frac{1}{2}$) பிறகொருக்காலவர் திருப்பாற்கடலின்கண் ணாதிசேடன்மீது படுத்துக்கொண்டபடி யித்தேவேச விக்கிரகத்தை மார்பினில் வைத்துக்கொண்டு யோகநித்திரை பண்ணுகையி ($35\frac{1}{2}$) லப்போது விஷ்ணுவின் நடுமார்பினில் விளங்கலான விச்சோமாஸ்கந்தமூர்த்தியான ஸர்வேசுவரன் (36) ஆதிசேடன், விஷ்ணு இவர்களுடைய வுள்மூச்சு வெளிமூச்சுக் காற்றுகளாலாட்டிவிடப்பட்டவராகிக் காற்றினாலடிபடும் விருக்ஷம்போ லங்கு மிங்கு மசையலுற்றனர்.(31) இவ்வாறாய் விஷ்ணுவானவ ரிவ்விக்கிரக மதை மார்பினில் வைத்துக்கொண்டு நித்திரைசெய்யுமளவி லப்போது வாக்காலியென்றவோர் மகாசுரன்சண்டைக்கு வந்துவிட்டான். (38) ஓ! கேளீர்! முசுகுந்த சக்கிரவர்த்தியே! பிற்பாடு யான் மிகவும் மனப்பயம் கொண்டவனாகி யப்போது கடல்மீது தூங்கலுற்ற விஷ்ணுவுக் கச்சங்கதியை யறிவிப்பதற்காக வங்கு சீக்கிரமாய்ச் சென்றவுட(39) னவர் தடீலென்று விழித்தெழுந் தென்றனைநோக்கியான் வரலான வேலையை யறிந்துகொண்டென்றனை 'நீ பயப்படாதே' யென்று (40) திடப்படுத்தித் தம்மார்பினிலிருந்த மகேசுவரனான விச்சோமாஸ்கந்த விக்கிரகத்தை யென்றனிடம் கொடுத்துவிட்டுத் தாம் வெளியிற் புறப்பட்டுப் பூலோகத்தில் விளங்கிய சிரேஷ்டமான சிதம்பரமென்ற தலத்துக்குச் (41) சென்றங்கு விளங்கிய சைதனியரூபியான ஸ்ரீமகாதேவனைத் தரிசித்து ஆநந்தக்கண்ணீர் ததும்பலுற்ற விழிகளையும் தழதழக்கலுற்ற வாக்கையும் கொண்டவராகி யந்நாராயணன்(42) நான்கு மாதமளவும் யாதொன்றையு மறியாதவராயிருந்துகொண்டு பிறகு ஸ்ரீ பரமேசுவரனுடைய வற்புதமான திருவருளைப் பெற்றதன்மே லெழுந்து (43) வெளிப்பட்டுப் போர்தனில் மிகக் கொடியவனாகிய மகாசுரனான வாக்காலியைக் கொன்றுபோட்டென்றனை யென்துநகரத்துக்கனு

ப்பிவிட்டுத் தாமும் திருப்பாற்கடல் சேர்ந்து முன்போலாதிசேடன்மீது பள்ளிகொண்டனர். (44½) கேளீர்! ராஜனே! நானுமெனது நேர்த்தியான நகரம்சென்றன்று முதலாகி அருகினில் ஸ்ரீ முருகேசனை வைத்துக்கொண்டு பார்வதியம்மையோடுகூடிய வென்று மழிவற்ற விம்மகேசுவரனை மற்றெங்கும் மனதைச் செல்லவிடாமலே பூஜைசெய்து வருகின்றேன். (46) ஆகையால் விஷ்ணுவுக்குச் சொந்தமான இவ்விக்கிரகத்தை யவரது தெளிவான அனுமதியில்லாமல் யான் கொடுப்பது சரியல்ல. ஆனல் ஓ! ராஜச்சிரேஷ்டரோ! அளவற்ற பராக்கிரமத்தைக் கொண்ட அவ்விஷ்ணுபிரானுடைய (47) அனுமதியைப்பெற்றதன்மே லிதனைச் சீக்கிரமாய் வாங்கிக்கொள்வது தகுதியாகு" மென, முசுகுந்தராஜனும் தேவேந்திரன் சொல்லிய இவ்வசனங்களைக் கேட்டவுடன்(48) விஷ்ணுவிடம் வந்திச்சங்கதிகளை யெல்லாம் சொல்லி யவரதனுமதி கொண்டதன்மே லிந்திரனிடத்துக்குத் திரும்பவும் வந்து (49) "ஓ! தேவராஜனே! யானிப்போது விஷ்ணுவி னனுமதியை வாங்கிவந்துவிட்டேன். ஆகையால் நீரிப்போ தப்பகவானை யென்னிடம் கொடுத்துவிடுவது தகுதியாகு" (50) மென, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இந்திரனிவ்வாறன அவரது வசனத்தைக் கேட்டவுடன் மிகுந்த கவலைகொண்டவனாகி மகேசுவரனான ஸோமாஸ்கந்தமூர்த்தியைக்கொடுக்க மனமற்றவனாகி(51) விசுவகருமனா லிவ்விக்கிரகத்துக் கொப்பான வேறாறு சிறந்த மூர்த்திகளைத் துரிதமா யமைப்பித்து, தேவேந்திர னவ்விக்கிரகங்களை யொவ்வொன்று யவ்வரசனுக்குக் கொடுத்துமப்போ (52) தரசனவைகளைப் பார்த்திந்திரனுடைய சூதை யறிந்துகொண்டு பின்னு மிந்திரனை நோக்கி யதே விக்கிரகத்தைக் கேட்டனர். (53) பிற்பாடிந்திர னவ்வரசனுக் கதேமூர்த்தியைக் கொடுக்க, பிறகு ராஜச்சிரேஷ்டரான முசுகுந்த னம்மகாதேவனை மிகுந்த சந்தோஷத்தோடு வாங்கிக்கொண்டு (54) உத்தமத் தலங்களுக்கெல்லாம் மிக உத்தமமான ஸ்ரீகமலாலயத்து (திருவாரூர்) க்கு வந்தங்கத் தியாகராஜஸ்வாமியைச் சாத்திரமுறைப்படி பிரதிஷ்டைபண்ணி, மேலும்வ் வரசன் மிகுந்த பக்தியுடையவராகி யச் சோமாஸ்கந்த மூர்த்திக்குப் பூஜை, உற்சவம் முதலியவைகளா லனேக உபசாரங்களை நடத்திவந்தார். (55½) தவிரவும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மகாத்துமாவான அவ்வரசன் மற்றாறுவிக்கிரகங்களையு மத்திருவாரூர்க்குச் சமீபத்திலுள்ள வெவ்வேறு பட்டணங்களில் பிரதிஷ்டைசெய்து பூஜைநடத்திவந்தார்.(56½) பிற்பாடு தேவேந்திரனும் தன்னாற் பூஜைசெய்யப்படாத வேறு சோமாஸ்கந்தமூர்த்தியைக்கொடுத்தபடியால்சண்டாளப் பிறப்பை யடைந் (57½) துடனே மகா புண்ணியத்தலமான வத்தி

ருவாரூரின்கண்ணே யிருந்துகொண்டு ஸ்ரீமகாதேவனுக்கு வாத்தியகோஷங்களைச் செய்துவந்து மகா பரிசுத்தனுகிவிட்டபடியால் ஸ்ரீமகாதேவனை யருள்புரியும்படி சந்தோஷிப்பித்து மறுபடியு மிந்திரத்தன்மையையடைந்தனன். (59) அப்போது முசுகுந்தசக்கிரவர்த்தியும் திரிபுரமாற்ருனுகிய ஸ்ரீதியாகராஜமூர்த்திக் கனேகம் பிராகாரங்கள், மண்டபங்கள், அட்டாளமண்டபங்கள், கோபுரங்கள் முதலியவைகளைக் கட்டுவித்து(60) மிகுந்த பக்தியுடையவனுகி ஸ்ரீ மகாதேவனுக்கு மிகுதியான பூஜைகளை நடப்பித்துவந்து சத்துருவேயில்லாமல் மகா பாக்கியசாலியா யிராஜியபாரம் நடத்திவந்து (61) கேளீர்! முனிவர்களே! முடிவினில் தம்மைந்தனுன அக்கினிவர்ணனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்துப் பருவதச்சிரேஷ்டமாகிய ஸ்ரீ கைலாஸத்தை யடைந்தார். (62) மேலும் வீரபாகு முதலிய வீரர்களும் தங்கள் தங்கள் புத்திரர்களை யவ்வக்கினிவர்ணனிடத்தே ஸ்தாபித்துவைத்துத் தாங்கள் செய்வதற்கு முற்று மசாத்தியமான கொடிய தவத்தைச் செய்து (63) தாங்கள் கொண்டிருந்த மானிடசரீரத்தை யிழந்து துரிதமாய்த் தங்களது திவ்விய சரீரத்தைக் கொண்டவர்களாகி நேர்த்தியான கந்தகிரியை யடைந்தென்று மழிவற்றவரான ஸ்ரீ குமரேசனை வந்தனித்து அவரது சிறந்த திருவருளைக் கொண்டவர்களாகி மிகுந்த ஸந்தோஷத்துட னங்கேயிருந்து விளங்கிவந்தார்கள்.(64)

ஆறுவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## தேவகாண்டம்



உ

சிவமயம்.

# தட்சகாண்டம்.

## தக்ஷகாண்டம் முதலாவது அத்தியாயத்தி னர்த்தம்.

ஞாணுடைய தலைமீதிருக்கு மிரதத்தையும், வில்லினுச்சி மீது சஞ்சரிக்கலுற்ற விரண்டு சக்கிரங்களையும், சக்கிரத்துக் குள்ளிருக்கும் பாணத்தையும், அப்பாணத்தின் வயிற்றிலிரு க்கும் சாரதியையும், அச்சாரதியின் வாய்தனிலிருக்கும் குதி ரைகளையும், அக்குதிரைகளி னுச்சியின்கண் குடியிருப்பையு ம் ஆகிய இப்பேர்க்கொத்த விநோதமானவைகளைச் சன்னாக ங்களாய்க்கொண்ட ஸ்ரீ பகவா னென்றும் சுபத்தைச் செய்ய ட்டும்.

இவற்றுள்:— ஸ்ரீ ஸதாசிவப்பெருமான் திரிபுரசமுகாரம் செய் யுமளவில் ஆதிசேடனை ஞாணாகவும், அவர் தலைமீதிருக்கும் பூமி யை யிரதமாகவும், மகாமேருகிரியை வில்லாகவும், அதினுச்சிமீது சஞ்சரிக்கும் சூரியசந்திரர்களைச் சக்கிரங்களாகவும், அச்சூரியமண் டலத்தின் மத்தியில் விளங்கும் ஸ்ரீ நாராயணனைப் பாணமாகவும், அவர்வயிற்றினின் றுண்டான பிரம்மனைச் சாரதியாகவும், அவர் நாவினில் விளங்கும் வேதங்களைக் குதிரைகளாகவும் கொள்ளலா யினரென்பதும், அவ்வேதவேதாந்தங்களால் மிகுதியாய்ப் புகழ் ந்து கொண்டாடப்படுகின்றவரென்பதுமே கருத்து.

—(*)—

சௌனகாதிமுனிவர்கள் சூதனை நோக்கிக்கேட்கின்றதாவது:— "ஓ! தவத்தையே தனமாய்க்கொண்ட சூதமுனிவரோ! முந்தி நீர், பிரக ஸ்பதிபகவானுனவ ரிந்திரன்மைந்தனான ஜயந்தனுக்குத் தக்ஷப்பிரஜாப தியால் செய்யப்பட்ட யாகத்தின் விருத்தாந்தத்தை யெடுத்துரைத்தன

றென்று சுருக்கமாய்க் கூறினீரன்றோ! அதனை யிப்போ தெங்களுக்கு விஸ்தாரமா யெடுத்துரைக்கலாவீ" றென,($1\frac{1}{2}$) இவ்வாறாகிய அவர்கள து வசனத்தைச் செவியிற்கொண்டு சூதர் சொல்லுகின்றார்:— (2) ஓ! பிரம்மத்தை யறிந்தவர்களில் சிரேஷ்டர்களான பிராம்மணோத்தமர்க ளே! நீங்க ளெல்லோர்களும் கவனமாய்க் கேளீர்கள். பூர்வத்தில் பிர ம்மாவானவர் ஸகல தேவர்களுடனும், புத்திரர்களாண பத்துப்பிரஜாப திகளுடனும் ஸத்தியலோகத்தில் வீற்றிருக்கையில் கேளீர்! பிராம்ம ணோத்தமர்களே! அவருக்கு முதற்புத்திரனான தக்ஷப்பிரஜாபதியென் பவன் (4) தந்தையைச் சிரசினால் வந்தனித்துச் சகமதற்கெல்லாம் பிரபுவான வப்பிரம்மனைவினவியதாவது:— "ஓ! எல்லாப் பொருட்களையு மறிந்தவரும், ஸகல வேதார்த்தங்களையும் கரைகண்டவருமான தந்தை யே!(5) மும்மூர்த்திகளுக்குள் மிகவும் சிரேஷ்டரும்,ஜகங்களுக்கெல்லா ம் பிரபுவும், எங்கும் நிறைந்தவரும், பரஞ்சோதியும், பரமாத்துமனும், பிறப்பற்றநித்தியரும்,(6) ஸகல ஜகங்களுக்கும் சிருஷ்டி,ஸ்திதி,சமுகார ங்களை நடத்துவோரும், எல்லா ஜீவராசிகளுக்குள்ளு மெங்கும் சாக்ஷி யாய் விளங்கியிருப்போருமானவர் யாவர்?" (7) என, பிறகு பிரம்ம தேவ ரவனுரைத்த இவ்வாறு வசனத்தைக் கேட்டு ஸ்ரீ பரமேசுவரனை மனதினில் தியானம்பண்ணிக்கொண் டானந்தக்கண்ணீர் பெருகப்பெற் றவரும், சந்தோஷத்தினாற் சற்றுநேரம் வார்த்தை தழதழக்கலுற்றவ ருமாகி (8) "கேளாய்! மைந்தா! மிகுந்த மதிமயக்கத்தினா லாங்கார ம்கொண் டொருவரோ டொருவர் சண்டையிட்டுக்கொள்ளலான பிரம் மவிஷ்ணுக்களாகிய வெங்களிருவர்க்கும் மத்தியில் திரண்ட வக்கினிஜு வாலைகளாற் சூழப்பெற்றவராகி யாவர் தோன்றினரோ! (9) அவ ரொருவர்தான் தகராகாயமத்தியில் விளங்கலுற்ற சம்புவான ஸர்வேசு வரன். இவரே சகல ஜகங்களுக்கு மதிலும் முக்கியமாய்ப் பிரம்மவிஷ் ணுக்களாகிய வெங்களிருவர்க்கும் கர்த்தா" (10) வென, தக்கனும் "ஓ! தந்தாய்! தரணிதனில் சிருஷ்டி, ஸ்திதி ஆகிய விரண்டு கிருத்திய ங்களையும் நடத்திவரலுற்ற ஜகதீசர்களான வுங்களிருவர்க்கும், சமு காரத் தொழிலை நடத்தலுற்ற விச்சிவபிரா னெவ்வாறு கர்த்தாவாகின் றார்?" (11) றென, பிரம்மனுரைக்கின்றார்:— "கேளாய்' தக்ஷா! இம் மகாதேவர் பிரம்மனான வெந்தனையும் ஸ்ரீ விஷ்ணுவையும் படைத்துவி ட் டெங்களுக்குத் தொழிலையு மேற்படுத்தி யெங்களது ஹிருதயகமல த்திலே குடியிருந்துகொண்டு (12) ஸகலப் பிரபஞ்சங்களையும் காப்பா ற்றலுற்ற வப்பகவா னெங்களிருவரையு மவரவர் தொழிலை நடத்திவரு

ம்படி யென்று மெங்கு மாட்டிவைக்கின்றார். மேலு மெங்களுக்குப் புத்திக்கேடு நேரிடும்போ தெங்களை யடக்கியும் காப்பாற்றிவருகின்றார். (13) அவ்விதமாயினும் முந்தி யெங்களுக்கு வேதபுராணங்களைக் கற் பித்தவும் மகாதேவ னெங்க ளிருவர்க்குள்ளு மொருவர்போலவேவிள ங்கிவருகின்றார்;(14) ஆனாலப்பரமேசுவரன் மலருக்குள்வாசனைபோலும், எள்ளுக்குள் ளெண்ணைபோலும், மணிக்குள் நாதம்போலும், அக்கினி தனிலொளியைப்போலு (15) மெல்லாவிடங்களிலு மெல்லாக் காலங் களிலு மெல்லாப் பொருட்களிலு மிருந்து விளங்கிவருகின்றார். ஓ! பு த்திரா! இப்படியிருக்கையி லப்பிரபுவானவ ரெங்களிருவர்க்குள்மட்டி லொருவரென்ப தெவ்வாறு தகு" (16) மென, தக்ஷனும் "ஓ! ஜகங் களுக்கெல்லாம் பிரபுவான தந்தாய்! 'ஸர்வம்கலு' வென்ற இவ் வேத வாக்கியமான து 'எல்லாம்பிரம்மசுவரூபம்தா'னென்று பொறுத்துச்சொ ல்வ தெவ்வாறு தகு" மென்று கேட்க, (17) பிரம்மன் சொல்லுகின் றார்:—"ஓ! மைந்தா! வேதமானது 'எல்லாப்பொருளும் பிரம்மத்தன் மையுள்ள' தென்று உபசாரார்த்தமாய்ச் சொல்லியதேயின்றி வேறில் லை; எப்படி யென்றால் பூலோகத்திலுள்ள பிராம்மணர்க ளெவ்விதமா யெந்தனைக்காட்டிலும் வித்தியாஸமுள்ளவ ரல்லவென்று சொல்லப்படு கின்றார்களோ (18) அதேவிதமாய்ச் சகல ஜகங்களும் பிரம்மத்தன் மையுள்ளனவென்பது நிச்சயமே! மேலு மென்று மழிவில்லாத அவ் வேதமானது ஸ்ரீ பரமேசுவர னெங்கும் நிறைந்து விளங்கியிருப்பதைக் கண்டே (19) யெல்லாம் ஸ்ரீமகாதேவச் சுவரூபமுள்ளதென்றுசொ ல்லியிருப்பதென்பது நிச்சயம். ஆனால் சுபாவத்தி லவ்வேதமானது மிருத்தியுவை வென்றவரும், உமாபதியும், ஸகல பிரபஞ்சங்களுக்கும் மேற்பட்டவருமான ஸ்ரீ மகாதேவனையே 'சாசுவதமான பரப்பிரம்ம' மென்று மிகுந்த பயத்தோ டுரைக்கின்றது. (20½) இச்சகல ஜீவராசி களுக்குள்ளு மந்தர்யாமியாய் விளங்கி நிற்போரான வப்பரமேசுவர (21) னொருவரோ ஸகல பிரபஞ்சங்களுக்கும் கர்த்தாவேயின்றி ஸ்ரீ பர மேசுவரனாகிய அவ்வுருத்திரனைத் தவிர வேறொருவருமில்லை. அப்பர மேசுவரன், யாதொரு குணமுமற்றவராயினு மவர் ஸகலகுணங்களும் நிறையப்பெற்றவரும், (22) அவ்வுருவமே யற்றவராயினு மனேகவி த உருவங்களைக் கொண்டவரும், ஸர்வஸ்வரூபியும், அரும்பொரு ளுக்கெல்லாம் அரும்பொருளும், பசு, பதி, பாசம், ஆகிய முப் பொருட் சுவரூபியும் ஸகல சுபங்களுக்குக் காரணரும், ஈசனும், (23) பரதத்துவமும், பரஞ்சோதியும், தத்துவங்களுக் கெட் டாதவருமாயிருக்கின்றார். முந்தி விஷ்ணு பிரம்மர்களாகிய யாங்க

ள் புத்திப்பிரமைகொண்டகாலத்தி லெங்களை யவர் காப்பாற்றலானு ர். (34) அப்பேர்க்கொத்த ஸ்ரீ மகாதேவ னவற்றி னடையாளத்துக்கா கவே யெங்கள தெலும்புகளைத் தரித்திருக்கின்றார். மானிடர்கள் தோ லை யுடுத்துவதுபோல் வானத்தை யுடையாகக் கொள்வார்களானு (25) லப்போது ஸந்தேகமின்றி ஸ்ரீ பரமேசுவரனை யறிந்து மோக்ஷம்பெறு வார்கள். கேளாய்! புத்திரா! இப்பேர்க்கொத்த வப்பரமேசுவரனுடை ய மகிமையை யெடுத்துக்கூறுவதற் கெந்தனு லெவ்வளவும் முடியாது. (26) வேதமான தெங்காகிலு மோரிடத்தி லெந்தனையும் விஷ்ணுவை யும்பற்றிச் சொல்வதெல்லா முபசாரத்துக்குமட்டிலேயின்றி யிவ்விடத் திற்கூட வுண்மையில் ஸ்ரீ பரமேசுவரனைப்பற்றியேதான். (27) மேலு ம் வேதமானது இயாகம் முதலிய கருமங்கள், விஷ்ணு முதலிய தேவர் கள் இவர்களையெல்லாம்பற்றி யோர் பாகத்தி லுரைக்கின்றது. ஆனு ல் மற்றோர் பாகத்திலோ ஸ்ரீ ஸர்வேசுவர னொருவனைப்பற்றியே மிகு ந்த பயத்தோடு கூறுகின்றது. (28) தவிரவு மவ்வேத மெங்களைப்பற் றி யுரைக்குமிடத்திற்கூட வச்சருவேசனென்ற பாவனையோ டுரைப்ப னைத்தவிர வேறில்லை. யாதாமொருவன் பிரமத்தினுல் புத்தி தட்டுக் கெடலாகி விஷ்ணு முதலிய வெங்களை ஸ்ரீ ஜகதீசனுக்கு நிகரா (29) யு ரைக்கின்றானே அம்மகா பாதகன் கொடிய நரகத்தையே அனுபவிக்க லாவான். ஆனுலெங்களை யப்பரமேசுவரனுக் கடியார்களென்றேசொ ல்லுகின்ற மற்றவரிடத்தோ யாங்கள் மிகுந்த நேசத்தையே பாராட்டு கின்றோம். (30) மகா பாதக த்தொழிற்காரர்களான துர்புத்திகொண் ட மற்றவர்களையெல்லாம் கொடியசத்துருக்களாகவே மதிக்கலாகின்றோ ம். ஸ்ரீ மகேசுவரனுன சம்புவே பதி; மற்ற யாங்களெல்லாம் பசுக்களே. (31) தவிரவும் நாங்கள் முதலியவர்களெல்லாம் ஸ்ரீ மகேசுவரனுடை ய லிங்கங்களைப் பூமிதனில் விதிப்படி பிரதிஷ்டைபண்ணிப் பூஜைசெய் து வருவதே யதற்குத் திருஷ்டாந்திரம் (32) தம்மை யண்டியவர்க்க வரே போகத்தையும் மோக்ஷத்தையு மருளுகின்றார். ஆகையால் யாவ ராலும் சரணமடையப்பெற்ற வப்பரமேசுவரனையே நீ யடைக்கலம்பெ றல்வேண்டும். (33) ஓ! மைந்தா! முந்தியே சுபாவத்தி லிவ்விதமாக வேயுந்தனுக்குரைத்திருக்கின்றேன். நீ ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய விப்பெ ருமைகளை யெல்லாம் மோகத்தினுல் மறந்துவிட்டா" யென்று பிரம்ம னு லுரைக்கப்பட்ட விச்சங்கதிகளை யெல்லாம் தக்ஷன் செவியுற்றத ன்மேல் மனதினி லைசுவரியத்தை விரும்பிக்கொண்டு தவத்துக்குரிய

விடத்தைப்பற்றியவனை வினவுகையி (35) லப்பிரம்ம னுரைத்ததாவ து:—"கேளாய்! தக்ஷா! நம்மனதினி லுண்டான 'மானஸ' மென்ற த டாகத்தின் மங்களகரமான கரைக்குச் சென்றங்கு ஸ்ரீ பரமேசுவரனைத் தவத்தினாற் (36) களிப்பித் தவரிடமிருந்து வேண்டிய வரனைக் கைக் கொள்வாயாக" வென்றுரைத்துப் பிரம்மன் தன் புத்திரனான தக்ஷனை யனுப்பினர். (37) பிறகு தக்ஷனு மப்போதே களிப்புற்ற புத்தியைக் கொண்டவனாகி யத்தலம் சென் றங்கிருந்து ஸ்ரீ பரமேசுவரனிடத்தே மனதை நாட்டிக்கொண்டு மாரிகாலத்தில் மழையிலும், பனிகாலத்திற்ப னியிலும், கோடைகாலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலு மிருந்துகொண் டே மூலாதாரத்தி னக்கினிதனை மூட்டியவனாகி யிருபத்தோராயிர வரு டமளவும் மிகுந்த கொடிய தவத்தைச்செய்தான். (38-39)

முதலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிறகு பிரம்மன் மைந்தனான வத்தக்ஷன் முன்னர் ஸ்ரீ பரமேசுவர னானவர் முனிச்சிரேஷ்டர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள் இவர்களால் துதி கூறப்பெற்றவராகிப் பிரத்தியக்ஷமாயினர். ($1\frac{1}{2}$) அப்போ தத்த க்ஷனும் மிகுந்த சந்தோஷத்தோ டம்மகேசுவரனைத் தரிசித்துப் (2) பல சிறந்த துதிகளால் துதித் தனேகம் முறை வந்தனம் செய்தான். பிறகு ஸ்ரீ பகவானு மவனைத் திருக்கண்ணுற்றுக் குளிர்ந்த திருவுளம் கொண்டவராகி (3) "ஓ! தக்ஷா! உனக்கு யாம் மிகவும் பிரஸன்னரா கிவிட்டோம்: உந்தனுக்கு வேண்டிய வரனைக் கேட்டுக்கொள்வா" யெ ன, தக்ஷனு மத்திருவசனத்தைக் கேட்டு மிகுந்த சந்தோஷங்கொண் டு ரைத்ததாவது:— (4) "ஓ! தேவாதி தேவா! மகாதேவா! அண்டியவ ரிடத்து நேசங்கொண்டவனே! ஸகல ஐசுவரியங்களும் நிறையப்பெற் றவரோ! தகராகாயமத்தியில் விளங்கியிருப்போரே! (5) பூமி, அந்தரி க்ஷம், சுவர்க்கம், பாதாளம், விசேடமாய்ப் பிரம்ம விஷ்ணுக்களின் லோகங்கள் இவைமுதலியவைகளி லுளுகைமையு மடியேனுக் கீந்தரு ளவேண்டும்; (6) மேலு மங்கங்குள்ள வெல்லோர்களு மென்தன தா

க்கினைக் குள்ளடங்கி நடக்கவேண்டும்; ஓ! ஸர்வேசுவரா! தேவரீர் திருவருளா லெந்தனுக் கெல்லாவிடத்தும் நல்ல பூஜியதை யுண்டாகவேண்டும். (7) ஸ்ரீ பகவானும், மகாதேவனுமாகிய தேவரீரைத்தவிர மற்ற யாவரையும் யான் பஜனைபண்ணுவதில்லை. ஓ! கருணைக்கடலே!ஆனவித் தேவரெல்லா மெந்தனைப் பூஜித்தல் வேண்டும். (8) ஓ! ஸகல லோகங்களுக்கும் பாட்டனரான ஸர்வேசுவரா! மேலு மெந்தனுக்கு வேதத்திற் கரைகண்டவர்களான பல புத்திரர்களு மனேகம் பெண்களு முண்டாகவேண்டும். (9) ஓ! தேவர்களைக் காக்கின்ற பரமசிவா! அடியேனுடைய கர்ப்பமதிற் பிறக்கலாகும் கௌரியம்மையை யான் தேவரீருக்குக் கொடுக்கவும், தேவரீரவளைத் திருமணம்செய் தெந்தனை யிரக்ஷிக்கவும் வேண்டு" (10) மென, ஸ்ரீ மகேசுவரனு மிவ்வாறு முதலிய அவனது விருப்பங்களை மிகுதியாய்க் கொடுத்தருளி "ஓ! தக்ஷா! நீ நீதிவழியிலே நடந்துவருவாயாகி வினையெல்லாம் நமதாக்கினையின்படி மேலுக்குமேல் விருத்தியாகக்கடவன" (11) வென்று திருவாக்கருளிவிட்டு ஸ்ரீ பரமேசுவரன் துரிதமாய் மறைந்தருளினர். பிற்பாடு தக்ஷன் ஸ்ரீ ஸர்வேசுவரனிடமிருந்து வரம்பெற்றவுடன் மகா சந்தோஷம்கொண்டவனாகி (12) லோகநாதனாகிய தன் தந்தையான பிரம்மனை நேசத்தோடு நினைக்க, அப்பிரமனு மதனை யுடனே யறிந்து மனதினில் நினைத்துக்கொண்டதாவது:— (13) "ஓ! கோ! ஸ்ரீ மகாதேவன் பிரஸன்னராகியும் நம்மைமந்தன் சிற்றின்பத்திற்காக வரன்கேட்டது மிகவும் கஷ்டம்! துன்பமேயற்ற பேரின்பமதிற் புத்தி நுழையாமற் போயிற்றே! (14) ஐயோ! அதெப்போதும் தாண்டமுடியாத துக்கத்தைத் தருவிக்கலுற்றதே! ஓ! கோ! ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய திருவருளாலின்றி யாவருக்குத்தான் மோக்ஷத்தில் விருப்பமுண்டாகு" (15) மென்றாலோசித்துக்கொண் டப் பிரம்மதேவன் துரிதமா யங்கு வந்து அத்தக்ஷனால் வந்தனிக்கப்பட்டவராகி யவனை யாசீர்வதித்தனர். (16) பிறகு தக்கனு முள்ளம் பூரிக்கப்பெற்றவனாகித் தந்தையாகிய வப்பிரம்மனை நோக்கிச் சந்தோஷத்தோ டுரைத்ததாவது:— "ஓ தந்தாய்! எந்தனுக்கு மகா பெருமைபொருந்திய நேர்த்தியான வோர் பட்டணத்தை யமைத்திடல் வேண்டு" (17) மென, பிரம்மனு மப்படியே ஆகட்டுமென்று பற்பல வாச்சரியத்தோடு கூடியதும், மூவுலகினிலும் தக்ஷபுரியென்று பிரசித்திகொண்டதுமான வோர் மிக நேர்த்தியாகிய நகரத்தைச் சீக்கிரமா யமைக்க, (18½) அவ்வா றமைக்கலானதைத் தக்கனு மப்பிரம்மன்முகமாய்க் கேட்டவுடன் மிகவும் மனக்களிப்புற்றவனாகித் (19) துரிதமாய்த் தன் நகரம் சென்று தன் வீட்டுக்குட்போய் பிரகஸ்பதி

யோடுகூடிய இந்திராதி தேவர்களாலும், சுக்கிராசாரியோடுகூடிய வசுர ர்களாலும், சூரியன்முதலிய கிரகங்களாலும், திக்பாலர்கள், லோகபாலர் கள் முதலிய வின்னும் மற்றவர்களாலும் சேவிக்கப்பெற்றவனாகிப் ப ற்பல விரத்தினங்களால் விசித்திரமு மற்புதமும் நேர்த்தியுமான சிங்கா தனத்தில் வீற்றிருந்தான். (2)-21½) பிறகவன் நாளளவிலே பிரம்மா வின் புத்திரியான மகா சுந்தரியாகிய வேதவல்லியென்ற பெண்ணை (22) மணம்புரிந்து மிகுந்த பிரதாபத்தோடு கூடியவனாகி மிகவும் ஸாத்துவிக த்தன்மையுடையவர்களான வாயிரம் புத்திரர்களைப் பிறப்பித் (23) த வர்களுக் கவன் முறைப்படி, நாமகரணம்முதலிய சடங்குகளைச் செய் துவிட் டவர்களை நோக்கி "ஓ! புத்திரர்களே! நீங்கள் ஸ்ரீ பரமேசுவர னாகிய பராபரக்கடவுளைத் தவத்தினாற் சடிதியிற் சந்தோஷிப்பித்துச் (24) சகல லோகங்களையும் சிருஷ்டிசெய்யும் தன்மையைக் கைக்கொ ண்டு சீக்கிரமாய் வாருங்க" ளென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தன்மக்களைத் தவம்செய்வதற்காக வனுப்பினான். (25) பிறகத் தக்க ன் மக்களெல்லோர்களும் மானஸமென்றச்சிரேஷ்டமான தடாகத்துக்கு ச் சென்று ஸ்நானம்பண்ணி பரிசுத்தமான சித்தநிலையுடையவர்களும் பொறிகளி னடக்கம்கொண்டவர்களுமாகி மற்றவர்களாற் செய்வதற் கசாத்தியமான கொடிய தவத்தைச் செய்தார்கள். (26½) அப்போது ஸ்ரீ நாரதமாமுனிவ ரவர்கள் தவஞ்செய்யுமிடத்திற்கு வரலாகையில் (27) தவத்தையே தனமாய்க்கொண்ட வத் தக்கன்மக்க ளம்மாமுனிவ ரைக் கண் டவரை முறைப்படி வந்தனித்து க்ஷேமத்தை விசாரித் தெல் லோர்களும் மிகுந்த வானந்தமடைந்தார்கள். (28) அப்போ தம்மு னிவரும் "ஓ! தக்ஷன்மக்களே! நீங்க ளிங் கெதற்காக மிகுந்த கொடி ய தவத்தைச் செய்கின்றீர்க" ளென்று வினவ, (29) அவர்கள் "ஓ! ஸ்வாமீ! ஸ்ரீ மகாதேவன் திருவருளா லெங்க ளெல்லோர்க்கும் ஜகங்க ளைச் சிருஷ்டிபண்ணும் திறமையுண்டாகவேண்டுமென்று தவம்செய்கி றோ" மென்று சொன்னார்கள். (30) அதுகேட்டு மாமுனிவரு மத் த க்கன்மக்களை நோக்கி யுரைத்ததாவது:— "ஓ குழந்தைகளா! ஓ! கோ! கோ! தவஞ்செய்கின்ற வுங்களுக்குக்கூட வென்ன மிகுந்தப் பிரமை? என்னப் பிராந்தி? தவத்தினால் ஸ்ரீமகாதேவனைத் திருப்திசெய்துவிட் டுப் பாவலேசமற்ற வுங்களால் மிகவும் துக்ககரமான பிரம்மாவின் சிரு ஷ்டித்தொழிலானது பிரார்த்திக்கப்படுகின்றதே! இப்பேர்க்கொத்தவு ங்களது பாட்டனாரான பிரம்மனுக் கதிக புத்திப்பிரமை நேரிட்டபடி யால் (31-32½) ஸ்ரீ பரமேசுவரனுடைய கணத்தலைவரால் தலை வெட்டு ப்படலாயிற்று. (33) மேலுமப் பிரம்மன் வெகு பெரியோர்களால் ச

பிக்கப்பட்டு மிருக்கின்றார். அவிரவு மவ னொருக்கால் மிகவும் கர்வம டைந்தபடியா லன்னபக்ஷியுருவத்தைக் கொண்டு மப்பரமேசுவரனை யெ ட்டிப்பார்க்க முடியாமல் மிகுந்த துக்கமடைந்திருக்கிறானன்றோ! (34) இன்னு மவர் பிறப்புமுதலிய மிகுந்த துக்கங்களை யடைந்து இராக்ஷஸ ர்களாலு மசுரர்களாலு மின்னு மற்றவர்களாலும் தினந்தோறும் வாதி க்கப்படுகின்றனரன்றோ! (35) சிருஷ்டித்தொழிலானது கொஞ்சமே னும் சுகமேயில்லாம லிவ்விதமாயெல்லாம் மிகுந்த துக்ககரமாயிருக்கி ன்றதல்லவோ! ஆகையால் நீங்கள் மிகவும் துக்கத்திற்கே முக்கியவிரு ப்பிடமான விச் சிருஷ்டித்தொழிலி லாசையை யொழித்துவிட்டுத் (36) தவத்தினால் ஸ்ரீ பரமேசுவரனாகிய மகேசுவரனைக் களிப்பித்துக் கொஞ் சமேனும் துன்பமேயற்ற வொப்பில்லாத பேரின்பத்தை யடையலாவீ ர்க" (37) ளென்றிவ்விதமாக ஸ்ரீ நாரதமுனிவ ரவர்களுக்குக் கேவல ம் சைவமார்க்கமான தத்துவஞானத்தை யுபதேசித்துவிட்டுக் கெளீர்! தரணிதேவர்களே! தமதிச்சையின்படி வானத்திற் சென்றனர். (38) அதுகேட்டு மகாத்துமர்களான அவ்வெல்லோர்களு மப்படியே மனதி னில் தீர்மானித்துக்கொண்டவர்களாகிப் பேரின்பத்தை நாடியே ஸ்ரீ ஸர்வேசுவரனைத் தவத்தினு லருள்புரிவித்துக்கொண்டு மறுபிறப்பற்ற மோக்ஷ ஸாம்பிராஜியத்தை யடைந்தார்கள். (39)

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௩-வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிறகு தக்கனச்சங்கதியை யறிந்து மிகவும் மனத்துயரமுற்றவ னாகி முன்போல் மறுபடியு மாயிரம் பிள்ளைகளைப் பிறப்பித் (1) தவர் களுக்கு வேண்டிய நாமகரணம்முதலிய சடங்குகளைச் செய்துமுடித்தபி றகப்புத்திசாலியானவன் ஸகலலோகங்களுக்கும் சிருஷ்டிபண்ணும் திற மையைப் பெறுவதற்காக அவர்களை மனப்பிரீதியோடு தவத்திற்கனுப் னான்.(2)அப்படியேஅவர்களும்மிகுந்தகொடிய தவத்தைச்செய்ய வெத் தனிக்கையில் ஸ்ரீ நாரதமுனிவர் துரிதமாயங்குவந்துசிருஷ்டித்தொழிலை யிகழ்ந்து (3) அவர்களுக்கு மோக்ஷத்திலே புத்தி பதியும்படி செய்

துவிட்டு முன்போ லாகாயம் சென்றுவிட்டனர். பிறகவர்களும் ஸ்ரீ பரமேசுவரனைத் தவத்தினு லருள்புரிவித்துத் (4) தாயின் வயிற்றினிற் பிறக்கும் நினைப்பிற்கே இடமில்லாத மோக்ஷபதவியை யடைந்துவிட்டார்கள். பிறகு தக்க னந்த விருத்தாந்தத்தையு மறிந்து மகா கோபங்கொண்டவனாகி (5) யினி ஆணைச் சிருஷ்டிப்பதைவிட்டு மிகுந்த சௌந்தரியமுள்ள தேகத்தை யுடையவர்களும், ஸகல இலக்ஷணங்களோடும் கூடியவர்களுமான விருபத்துமூன்று கன்னிகளைச் சிருஷ்டித் (6) தவர்களைத் தருமர், பிருகு, மரீசி, புலத்தியர், ஆங்கிரஸர், புலஹர், வஸிஷ்டர், அத்திரி இவர்கள் முதலிய தவசிகளுக்கு (7) முறைப்படிகொடுத்து விநோதமான கலியாணத்தை நடத்தினன். பிற கத்தக்கன் பெண்களு மளவிலே மிகுந்த சௌந்தரியம் பொருந்திய வனேகம் புத்திரர்களையும் மிகுந்த காந்தியுடைய வனேகம் பெண்களையும்பெற்றார்கள்.(8½) அத்தக்க னிவ்விதமாய்ப் பலதௌகித்திரர்களாலும்தௌகித்திரிகளாலும்சுற்றிலும்சூழப்பெற்றவனாகிப்(9) பின்னும்மிகுந்தவொளிபொருந்திய அசுவதி முதல் ரேவதிவரையிலான இருபத்தேழுபெண்களைச் சிருஷ்டித் தப்பெண்க ளெல்லோர்களையும் சந்தோஷத்தை யளிக்கலுற்ற சந்திரனுக்கு விவாகம் செய்துகொடுத்தான். (10) பிறகச்சந்திர னவ்வளவு பெண்களில் கிருத்திகை யென்பவள்மீது மட்டி லதிக நேசத்தைப் பாராட்டிவந்தான். அதனால் மற்றப் பெண்க ளதிகத்துக்கங்கொண் டத்தக்கனிட மறிவித்ததாவது:—(11)"ஓ! தந்தாய்! சந்திரன் கிருத்திகையிடத்தி லிரமிப்பதுபோ லெங்களிடத்திலிரமப்பதில்லை" யென, அதுகேட்டுத் தக்கனும் கோபாவேசம்கொண்டவனாகிக்(12) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது சிரேஷ்டனான வச்சந்திரனை 'க்ஷீணிக்கக்கடவ' னென்று சபிக்க, அப்படியே சந்திரனும் பதினைந்துநாட்களி னளவில் மிகவும் குறைந்துவிடலாகிப் (13) பதினாறிலொருபாகத்தைமட்டில் மிச்சமாய்க்கொண் டிந்திரனிடத்திற் சரணமாக அடைந்தான். அப்போ திந்திரனு மச் சந்திரனை நோக்கி வசனமுரைத்ததாவது:— (14) "ஓ! சந்திரா! நீ முந்தி விக்கினேசுவரனிடத்துச் சாபம்கொண்டபொழுது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களா லவ் விநாயகக் கடவுளை யருள்புரிவிக்கப்பெற்றவனாகி யச்சாபத்தினின்று விடுபட்டிருக்கின்றா யல்லவோ! (15) ஆகினு மிப்போதுகூட வருஷம்தோறும் விநாயகசதுர்த்தியாகிய வோர் தினத்தி லுந்தனைப் பார்ப்பது சரியல்லவென் றுந்தன் முகத்தை யொருவரும் பார்ப்பதில்லை யன்றோ? (16) இப்பேர்க்கொத்த தோஷமொன் றிருப்பதோடுகூட

இதுவும் நேர்ந்துவிட்டதல்லவோ! ஆகையா லிப்போது ஜநங்களுக்குப் பிரபுவான பிரம்மனிடத்து நீ யிதனை (17) யறிவித்தவரா லித்தக்கன் சாபத்தினின்று விடுவித்துக்கொள்ளலாவா" யென்று கேளீர்! முனிவர்களே! மகா புத்திசாலியான அவ்விந்திரன் சந்திரனை யனுப்பலானான். (18) அவனு மப்படியெ ஆகட்டுமென்று புறப்பட்டுந் துரிதமாய்ப் பிரம்மனிடஞ்சென்று தண்டம்பண்ணி மிகுந்த பக்தியோடு பல துதிகளால் தோத்திரம்பண்ணி (19) யச்சந்திரன் தக்ஷனுடைய சாபத்தை விலக்கும்படி வேண்டிக்கொண்டான். அப்போ தவ் வசனத்தைக் கேட்டுப் பிரம்மனுரைத்ததாவது:— (20) "ஓ! இந்திரா! மிகவும் கொடிய மனதைக்கொண்ட வத் தக்கன் நமது வார்த்தைகளைக் கேட்பதில்லை; அவன் நம்மிடத்திற்கூட கோபத்தைப் பாராட்டுகின்றான். ஆகையால் கேளாய்! புத்திசாலியான சந்திரா! (21) நீ மகேசுவரனான ஸ்ரீ ஸதாசிவனிடம் சென்றிதனை யறிவித்துக்கொள். அவரோ முந்திக்காலகூடவிஷத்தையுண்டு தேவர்களைக் காப்பாற்றியிருக்கின்றார். (22) மேலும் மகா கொடியனாகிய இயமனைக் கொன்று மார்க்கண்டேயனை யிரக்ஷித்திருக்கிறு" ரென, சந்திரனு மிவ்வாறு பிரம்மன் வசனத்தைக் கேட்டுக் கைலைகிரி (23) சென்று நந்திகேசுவரன் மூலமாய் ஸ்ரீ மகாதேவன் சன்னிதியடைந்து மிகுந்தபக்தியோடுவந்தனித்துப் பற்பலதுதிகளால் தோத்திரம்பண்ணியதின்பேரில் (24) ஜகதீசன் பிரசன்னராகும்போது சங்கதிகளைத் தெரிவிக்க, பிறகு பார்வதிபதியான பகவானும் மனமிரங்கியவராகிப் (25) பதினாறி லொருபாகத்தைமட்டில் மிச்சமாய்க் கொள்ளலான வச்சந்திரனுக் கபயமளித் தோர் கணமாத்திர மவனைத் தம் முடிதனி லலங்காரமாய்ப் பூண்டு (26) "ஓ! சந்திரா! சந்திரனை யுச்சிதனிற் பூணடவரும், ஸகல லோகங்களுக்கு மீசுவரனுமாகிய நமது திருவாக்கினையின்படி நீ சந்தோஷத்தோடு சீக்கிரமாய் முன்போல் வளர்ந்துவிடக்கடவா" (27) யென்று ஸ்ரீ சம்புவானவர் வரன்கொடுக்கையில் பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் "ஓ! சர்வேசுவரா! தேவரீர் மகிமை யுலகுதனி லறியப்படாமற்போகு (28) மாகையால் ஓ! சந்திரசேகரா! ஓ! கருணைக்கடலே! தேவரீர் லோகாரக்ஷணார்த்தமா யிச்சந்திரனுக்கு மாதந்தோறும் வளருதல் குறைதல் ஆகிய விரண்டையு மருளல்வேண்டும். (29½) பிறகிவ் வடையாளத்தை யுலகினரறிந்து தேவரீருக் கடியார்களாகி வேண்டிய பயனைக் கைக்கொள்ளலாகட்டு" (30) மென, அடியார்களுக்கு நேசனும், ஸகலப் பிரபஞ்ச சுவரூபியும், பிரபஞ்சத்தை யிரக்ஷிப்பதில் முயன்றவருமான ஸ்ரீ மகேசுவரன

வர்களது வசனத்தைக் கேட்டருளி யவ்வாறே யருள்செய்தச் சந்திர னை யனுப்ப, (31½) சந்திரனு மவரது தயவுதனைக் கைக்கொண்டவ னாகி யத்தேவாதி தேவனை வந்தனித்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்க ளே! மிகுந்த சந்தோஷங்கொண்டவனாகித் தன திருப்பிட மடைந்த னன். (32)

மூன்றாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௪-வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிறகு தக்கனு மச்சங்கதிகளை யெல்லாம் கேட்டு மகா கோபா வேசங்கொண்டவனாகி "ஓ! நம்மாற் சபிக்கப்பட்ட விச்சந்திரனைக்கூட மகாதேவனெவ்வாறு விடுவிக்கலானா" (1) னென்று ஸ்ரீஸர்வேசுவரனை மிகவும் கொடுமையா யிகழலாகையி லதனைத் தவசிகளிற் சிறந்தவரான புலஹமாமுனிவர் கேட்டு (2) "ஓ! துராத்துமாவான தக்ஷப்பிரஜாப தியே! நீ ஸர்வேசுவரனை நிந்திப்பதால் ஸகல ஐசுவரியங்களும் நாசமா கிவிடும்; மேலும் ஸகல தேவர்களாலு மிகழப்படலாவாய்; (3) அடா! அந்த மகாத்துமாவினு லுந்தன் சாபத்துக்கு மோர் வழிவிடப்பட்டிரு க்கின்றது. இன்னும் சிலகாலத்தி லம்மகாதேவ னுந்தன் பெண்ணையும் கலியாணஞ்செய்துகொள்ளப்போகின்றா" (4) னென, இவ்வாறவரது வ சனத்தைக்கேட்டபிறகு கோபத்தைவிட்டுச் சந்தோஷமாய் வாழ்ந்து வந்தான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யிப்படி யவன் சந்தோ ஷமாய் வாழ்ந்துகொண்டிருக்குமளவி (5) லவனிடத்து ஸ்ரீகௌரியம் மை பெண்ணாக அவதரித்த விநோத விருத்தாந்தத்தை யுங்களுக் கெடு த்துக் கூறுகின்றேன்.(5½)

பூர்வத்தில் ஸ்ரீபார்வதி பரமேசுவரர்கள் கைலைகிரிதனில் பிரம்ம விஷ்ணுக்களாலு மின்னும் மற்றத் தேவர்களாலும் ஜாஜ்வல்யமான மாய் வீற்றிருக்குமளவி (6½) லப்போ தப்பவானியம்மை யெழுந்து ஸ்ரீபரமேசுவரனைத் தண்டம் பண்ணி (7) "ஓ! தேவாதிதேவரான பக வானே! சருவஞ்ஞா! ஜகதீசா! பிரபஞ்சச் சுவரூபியே! பிரபஞ்சங்களை க் காப்பதில் முயன்றிருப்பவரே! ஸ்தாவரஜங்கம ரூபியான விப்பிரபஞ் சமானது தேவரீரிடமிருந் தப்போ துண்டாகலான வகையை யெந்தனு க் கெடுத்துரைத்தல் வேண்டு" (8½) மென்று தேவியா லப்போது வி னவப்பட்டபொழுது உலகங்களுக்கெல்லாம் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீசங்கரன் (9) உண்மையாய் வந்த வழியோடு ஜகங்களின் சிருஷ்டி

யைப்பற்றியு மவற்றின் செல்லுதலைப்பற்றியு மெடுத்துரைத்தான(10) வுடன் தேவியானவள் ஸ்ரீதேவேசனைப்பார்த்து மறுபடியும் குதூஹலத்தோடு கூறியதாவது:—"ஓ! ஸத்தியஞானாநந்தப் பிரபுவான பரமசிவா! (11) தேவரீருடைய அற்புதமான சரீரமு முருவமும் யானே! ஓ! அஷ்டைசுவரியங்களையும் நிரம்பப்பெற்ற பரமேசா! தேவரீருக் கெந்தனைத் தவிர வேறு சரீரமு முருவமு மில்லையன்றோ! (12) அடியாள்வசத்திலேஸகலஜகங்களுமிருந்துகொண்டவைகள்சுபாவத்தின்படியாடிவருகின்ற" தென, தேவியாற் கர்வத்தோடு சொல்லப்பட்ட இவ்வாறு வசனத்தைக் கேட்டு ஸ்ரீமகேசுவரன் (13) "ஓ! கலியாணி! நமது மகிமையை நீ யறியவில்லையல்லவா! நம்முன்னரிருந்துகொண்டே கொஞ்சமேனு மிலச்சையன்றி யுந்தனையே மேன்மையாய்ச் (14) சொல்லிக்கொண்டாயல்லவோ! நாமோவென்று முன்னிடத்திலும் மற்றெல்லாவிடத்திலு மெப்போதும் பரிபூர்ணரும், பரஞ்சோதியும், பரமாத்துமருமாய்விளங்கியிருந்துகொண்டு (15) சூத்திரதாரன் பதுமையை யாட்டிவைக்கிறதுபோற் சிருஷ்டிபண்ணி யாட்டிவைக்கலாகின்றோம். அடி! கொஞ்சமேனும் நின்தைக்கிடமற்ற மாதரசே! நமதாட்டிவைத்தலின்றிச் சகல ஜகங்களு (16) மசைவதேயில்லை; அதனை யிதோ! பார் நம்முன்னரே காண்பிக்கின்றோ" மென்று திருவாக்கருளிவிட்டு ஸச்சிதாநந்த மங்களமூர்த்தியும், ஸர்வப் பிரபஞ்ச சுவரூபியுமான ஸ்ரீஸர்வேசுவரனானவர் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப் பார்வதிதேவியின் முன்னிலே ஸகல ஜகங்களையும் நடத்திவைக்கலுற்ற தமதுசக்தியைத் தமக்குள்ளே யடக்கிக்கொண்டு ஜோதிரூபமாய் வீற்றிருந்தனர். (17-18) அப்போதிச் சகல ஜகங்களும் கேவல முருவமு மசைவுமற்றுப் போயின. இரவில்லை, பகலில்லை, சூரியனில்லை, சந்திரனில்லை, அக்கினியில்லை, தேவர்கள்தானுமில்லை. எங்கும் குருட்டிருளால் நிறையப்பட்டுக் கேவலம் பயங்கரமு முணர்வற்றதுமாகிவிட்டன. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (19) கிரிராஜபுத்திரியானவ ளிவ்வற்புதத்தைக் கண்டவுடன் மிகவும் பயங்கொண்டவளாகிப் பராபர குருவாகிய ஸ்ரீமகேசுவரனை வந்தனித்துக் கேளீர்! தானிதேவர்களே! இரண்டு கைகளையு மஞ்சலிகொண்டவளாகி மற்றெங்கும் புத்தியைச் செலுத்தாம லொப்பற்ற வாக்குகளால் துதிசெய்தனள். (20)

நான்காவது அத்தியாயம்.

முற்றிற்று.

———

பிற்பாடு ஸ்ரீ பரதேவதையானவள் மகாதேவனைப் பார்த்துப் பிரார்த்தித்துக் கொண்டதாவது:— "ஓ! தேவாதிதேவா! மகாதேவா! அடியார்க்கு நேசனே! சங்கரா! ஜயாவிஜயீபவா! (1) ஓ! சகல ஜகங்களையும் காத்தருள்வோரே! தேவரீர் மகிமையை அடியா ளறியக்கூடவில்லை; ஓ! தேவதேவா! எந்தன் பிழையைப்பொறுத் தென்றனை யிப்போ திரக்ஷித்தருளவேண்டுமிரக்ஷித்தருளவேண்டும்;(2)ஓ!மகேசுவரா! இவ்வெல்லாவற்றையும் முன்போலுயிர் பிழைப்பித்தல்வேண்டும்.ஓ!ஸர்வேசுவரா!மகாதேவா!தேவரீருக்கெது தானஸாத்திய" (3)மென் றிவ்வாறாய்க் கௌரியம்மனால் பிரார்த்தித்துக்கொள்ளப்பட்ட ஸ்ரீ பகவான் ஸந்தோஷசித்தமுடையவராகி முந்திப் பதினொருகோடி ருத்திரர்களையும் தூக்கத்தினின் றெழுப்புவதுபோ லெழுப்பிவிட்டனர். கேளீர்! வேதியர்களே! பிறகவ் வுருத்திரர்களெல்லாம் பரபரப்போடு ஸ்ரீ சிவபிரானை மனதினில் (5) தியானித்துக்கொண் டிவையெல்லாம் ஸ்ரீ சிவபிரான் திருவிளையாடலென்றே நினைத் தவர்கள் ஸகலப் பிராணிகளையுமெழுப்பிவிட மனங்கொண்டவர்களாகி (6) மிகவும் காடாந்தகாரமாயிருந்த விச் சகமதிற் பெருமைபொருந்திய க்ஷேத்திரமான திருவிடைமருதூர் சேர்ந்து மிகுந்த சந்தோஷம்கொண்ட மனதைக் கொண்டவர்களாகிச் 'சிவராத்திரி' யென்ற பாவனையோடு நான்கு சாமங்களிலும் சிவபூஜை செய்தார்கள். ($7\frac{1}{2}$) பிற்பாடு ஸ்ரீ மகேசுவரனு மவர்கள் முன்னர் பிரத்தியக்ஷமாகையி (8) லவரைக் கண்டவுட னவர்கள் கைகளைக் கட்டிக்கொண்டு கேளீர்! முனிவர்களே! தரைமீது தண்டம்போல் ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரம் பண்ணித் துதிசெய்ததாவது:— (9) "விச்வஸ்வரூபனே போற்றி, விசுவங்களைச் சிருஷ்டிப்பவனே போற்றி, பரமாத்துமனே போற்றி, அவ்விசுவங்களைச் சமுகரிப்பவனே போற்றி, சுயாதீனனே போற்றி, மகாப் பிரளயகாலத்தி லுலகங்கள் யாவையு மொரோ கபளமாய்ப் பக்ஷிப்பவனே போற்றி, சூலபாணியே போற்றி, (10) அண்டியவர்களை வீரர்களாக்கலுற்றவரோ போற்றி, மகா வீரனே போற்றி, உறுதியான வில்லைக் கொண்டவனே போற்றி, ஓ! தேவேசா! தேவரீர் திருவருளால் ஸ்தாவர ஜங்கம ரூபமான விச்சகம் (11) முன்போ லறிவுகொண் டெழுந்திருக்கவேண்டு" மென, ஸ்ரீ மகாதேவனு மவர்களது வசனத்தைக் கேட் டப்படியே ஆகக்கடவதென் றவர்களுக்குத் திருவாக்கருளிவிட்டுக் களிப்புற்ற திருவுளத்தோடு துரிதமா யந்தர்த்தானமாயினர். பிறகுடனே கேளீர்! முனிவர்களே! விஷ்ணுபிரம்மர்கள் முதலிய ஸகல தேவர்களும் சூரிய சந்திர்க

ள் முதலிய வெல்லா ஜீவராசிகளோடும் சிவாக்கினையின்படி சுய அறிவு கொண்டு துரிதமா யெழுந்துவிட்டார்கள். (13-14) அடர்ந்திருந்த வி ருள்நீங்கியவுடன் ஜகம்முழுது மொளி பரவலாயிற்று. அதன்பிறகெ ல்லாத் தேவர்களும் தேவாதி தேவனுகிய ஸ்ரீ சூலபாணியின் (15) ம கிமையை யறிந்துகொண்டு மகா பரிசுத்தமான சிவபூஜையைச் செய் தார்கள். பின்பு ஸ்ரீ தேவேச னந்தர்த்தானமாகும்போ தவ்வுருத்திரர் களைத் திருக்கண்ணுற்று (16) "ஓ! ருத்திரர்களே! உங்களுக்கு வே ண்டியதைத் துரிதமா யருளுகின்றோ" மென்று கிருபையுடன் கூறப்ப ட்ட ஸ்ரீ சிவபிரானது திருவசனத்தைக் கேட்டு (17) "ஓ! தேவதே வேசா! இரவுதனிற் சாமந்தோறு மிம்மாதிரியாய்ப் பகவானுகிய ஸ்ரீ மகேசுவரனைப் பூஜைசெய்யலுற்ற மானிடோத்தமர்களுக்குத் தேவரீர து திருவருளால் (18) ஓ! கருணைக்கடலே! மகாசிவராத்திரி புண்ணி யகாலத்திற் பூஜைசெய்த பயனுண்டாகவேண்டு" மென, ஸ்ரீ ஸர்வேசுவ ரனு மப்படியே ஆகக்கடவ தென்று மறைந்தருளியவுட னவ்வுருத்திர ர்கள் தங்களிருப்பிடம் சென்றுவிட்டார்கள். (19) பிற்பாடு விஷ்ணு முதலிய தேவர்கள் மலைகளில் மேன்மைகொண்ட கைலைகிரிக்குச் செ ன் றங்கு பினகமென்ற தனுசைக்கொண்ட ஸ்ரீ ஸர்வேசுவரனைத் தரிசி த்து (20) மிகுந்த பக்தியோடு வந்தனித் தப்போது வசனமுரைத்த தாவது:— "ஓ! பிராணிகளைப் படைக்கலுற்ற பகவானே! இவ்வளவு காலமாய் (21) நாங்களெல்லோர்களு மந்தகாரத்தினுற் சூழப்பெற்ற வர்களாகிக் கருமானுஷ்டானங்க ளற்றிருந்தோமே! இதற்காகச் சகல பாவங்களையும் தொலைப்பிக்கலுற்ற வோர் சிறந்த பிராயச்சித்தத்தைச் சொல்லியருளவேண்டு" மென, ஸ்ரீ பரமேசுவரனு மவர்களது வசனத் தைக் கேட்டு மந்தகாசமுற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி "ஓ! சகலர்களான தேவர்களே! நமதாக்கினையா லுங்களுக்கு யாதொரு பா வமுமில்லை. (23) இவையெல்லா மிக் கௌரிதேவியாலன்றோ சர்வத் தினுற் செய்யப்பட்டது. ஓ! தேவர்களே! நீங்க ளினி யின்றுமுத ல் நித்தியகருமங்களை (24) நடத்திவாருங்க"ளென்று ஸ்ரீ சங்கரன் திரு வாக்குரைத் தவர்களை யனுப்பினர். பிறகு தேவர்களு மதேவிதமாய்ப் ப் புறப்பட்டுச் சந்தோஷமாய்த் தங்களிருப்பிடஞ் சென் (25) றவர வர்கள் நித்தியக்கடன்களைச் செய்துகொண் டெப்போதும் சிவாக்கினை தவராமல் நடந்துவந்தார்கள். பிற்பாடு கௌரியம்மை பரபரப்போடெ ழுந் தஞ்சலிகொண்டவளாகி (26) ஸ்ரீ மகாதேவனை நமஸ்கா்ரம் பண் ணி விநயத்தோடு திருமுகம் வணங்கலுற்றவளாகி "ஓ! பகவானே! தேவதேவேசா! சர்வஞ்ஞா! ஜகப்பிரபோ! ஸகலப் பிரபஞ்ச (27)

ங்களுக்கும் கருணைக்கடலான பரமசிவா! 'எந்தனுக்குத்தா னப்பாவ மென்ப தெவ்வாறு தகு'மென்பதைச் சொல்லியருளவேண்டு" மென, ஸ்ரீமகாதேவன் விநோதமான சரித்திரங்களைக்கொண்ட தேவியா லவ்வாறு கேட்கப்பட்டவுடன் (28) புன்னகைப்புடைய திருமுகத்தினுற் பிரகாசிக்கலுற்ற கம்பீரமான வாக்கினால் வசனமுரைத்ததாவது:— "கேளாய்! பெண்ணே! நீ நம்முன்ன ரிருந்துகொண் டெந்தனை உயர்த்திப் புகழ்ந்துகொண்டாய்; (29) இப்போ தத் தோஷத்தினாலல்லவோ இவ்வுலக மிருளினுற் சூழ்ந்துகொள்ளப்படலாயிற்று; (29½) ஓ! கலியாணி! அப்பாவத்திற்காக நீயே பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ளவேண்டும்- (30) ஏனென்றால் நீ சகலப் பிரபஞ்சங்களுக்கும் தயவுடைய தாயாரல்லவோ!" என, இவ்வாறு ஸ்ரீ மகேசுவரனுடைய திருவசனத்தைக் கேட்டுப் பிறகு பார்வதியம்மையு (31) மப்படியே பாக்கியமென்று ஸ்ரீ ஸர்வேசுவரனைத் தவத்துக்குரிய விடத்தைப்பற்றி வினவலாகையில் "கேளாய்! பெண்ணரசே! இயமனுக்குச் சகோதரியான இயமுனையென் றுலகினிற் பிரசித்திகொண்ட மங்களகரமான வோர் புண்ணியநதியின் (32)மீதுள்ள வெண்மையான விதழ்களையுடையதாமரைவனத்தில்நீயோர் சங்கினுருவத்தையெடுத்துத்தவம்செய்துகொண்டிரு.அப்போது தக்ஷப்பிரஜாபதி யதனருகினில் (33) வந்து சிறந்த வுருவம் கொண்ட நேர்த்தியான வச் சங்கைக்கண் டதனை யெடுக்கலாவான். அப்போது நீ யோர் கன்னியுருவமாகிவிடு. (34) பிறகத் தக்கனு மப்போது சகல அவயவங்களும் சுந்தரமா யமையப்பெற்ற வுந்தனை யெடுத்துக்கொண்டு மெத்தக்களிப்புற்றமனதுடனுந்தனையோர்பெண்ணாக வளர்த்துவருவான். (35) பிறகளவிலே பதினைந்துவயது முடிந்தவுடன் நம்மிருவர்க்கும் கலியாணம் நடக்கலாகு" மென்று ஸ்ரீ பரமசிவன் பவானியம்மைக்குத் திருவாக்கருளி யனுப்ப, (36) பூஜிக்கப்படலுற்ற அவ்வம்மையு மப்படியே பாக்கியமென்று புறப்பட்டுத் துரிதமா யியமுனைக்கு வந்தற்புதமான வோர் சங்கவுருவத்தைக் கொண்டவளாகி யங்குள்ள நேர்த்தியான வோர் தாமரையிதழ்தனி லிருந்து மனமதில் ஸ்ரீ பரமேசுவரனைத் தியானம் பண்ணிக்கொண்டே யுருதியான புத்தியோடு மிகுந்த கொடிய தவத்தைச் செய்துகொண்டிருந்தனள். (37-38) இப்படியிருக்குமளவில் சூரியன் மகாராசியி லிருக்கும்போது மகா நக்ஷத்திரதினத்தி லத்தக்கன் தன் மனையாளோடுகூட விரதத்தைக் காப்பவனாகி, (39) தன தெல்லாப் பெண்களுடனும் தேவர்களுடனும், இருடிகளுடனு மங்கு வந்து நியமத்தோடு ஸ்நானம் செய்கையில் முன்னி

லையி லோர் மனைமலர்மீதச் சங்கத்தைக் கண்டான். (40) அவ்வற்புத மான சங்கத்தைக் கண்டவுடனந்த யவன் சீக்கிரமா யாதரவுட னெடுக்க, அவ்வா றெடுத்தமாத்திரத்தில் தக்ஷனு லவ் வற்புதமான சங்கம்காணப்படவில்லை. (41) ஆனு கைண்ட விழிகளைக் கொண்டதும், ஸகல அவயவங்களும் சுந்தரமா யமையப்பெற்றதுமான வோர் பெண்குழந்தை காணப்பட்டது. உடனே யிளங்குழந்தையான வப்பெண்ணை ஸ்ரீ கௌரியம்மை யென்றே கொண் டானந்தமடையலுற்ற கண்களைக்கொண்டவனுகி (42) யக்குழவியை யெடுத்து, ஸ்நானம்பண்ணி நின்ற மனையாளுடைய கைகளிற் சீக்கிரமாய்க் கொடுத்தனன். பிறகு வேதவல்லியென்ற அவனது மனையாளும் மிகுந்த சந்தோஷத்தோடு கூடியவளாகிச் (43) சீக்கிரமா யக்குழந்தைதனைக் கண்களி லொத்திக்கொண் டமுதமயமான முலைப்பாலைக் குடிப்பித்தனள். பிற்பாடு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ் வேதவல்லியானவள் சுற்றிலு மெல்லாத் தோழிகளாலும் சூழப்பெற்றவளாகித் தனது பெண்களோடுகூடத் துரிதமாய்த் தன் வீடு சென்றனள். (44)

ஐந்நாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் சு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பின்பு தக்ஷனு மக்குழந்தைக்கு நாமகரணம் முதலிய சடங்குகளை முடித்துத் தேவர்களாலும் முனிவர்களாலும் சூழப்பெற்றவனுகித் துரிதமாய் வெகு சந்தோஷத்துடன் வீடுசேர்ந்தனன். (1) கௌரியம்மையும் தாய்தந்தைகளுக்கு வெகு சந்தோஷத்தை யுண்டுபண்ணிக் கொண்டு நாளளவிலே வளர்ந்துவந்தாள். இப்படி யைந்து வயது சென்றவுடன் ஸ்ரீ பரமேசுவரனைத் திருமணம் செய்ய விரும்பிய வப்பெண்ணுக்குத் தவம்செய்வதில் மனதுண்டாயிற்று. ($2\frac{1}{2}$) பிறகு மகா மங்களகரையான வப்பெண்ணனவள் தன் புத்தியைத் தீர்மானித்துக்கொண்டவளாகித் தனக்கனுகூலர்களும், மெத்தநேசமுடையவர்களுமான பெற்றோர்களைத் தான் தவம்செய்வதற்குரிய தவச்சாலை வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, ($3\frac{1}{2}$) அப்படியே அப்பெற்றோர்களும் மிக வுத்தமமான வோர் தவச்சாலையைக் (4) கட்டுவித்து, மேலு மனேக விருத்த

ஸ்திரீகளையும் தோழிகளையு மூழியத்திற்காக நியமித்து வெகுசந்தோ ஷந்தோஷத்தோடவ் வம்மையையு மங்கிருக்கச்செய்தனர்கள். (5) பிற கக் கௌரியம்மையும் தவசிகளிற் சிறந்த வனேக முனிவரிடந் தனும தி பெற்றவளாகி யங்கு நிலையாயிருந்துகொண்டு மிகுந்த கொடிய தவ த்தைச் செய்யலானாள். (6) அப்போது வேதவல்லியென்ற தக்கன் ம னையாளானவள் "மகா பரிசுத்தமான தவவிருப்ப மிக்குழந்தைக் கெவ் வாறுண்டாயிற்" றென் (7) றப்போது வினவ, நேர்த்தியான புன்ன கைப்புடைய வம்மனையாளை நோக்கித் தக்கன் கூறியதாவது:—"ஓ! மா தரசே! இவள் பகவதியும் ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனுக்கு நாயகியுமா ன கௌரியம்மை; (8) இச்சகதம்பிகையானவள் தவத்தின் மகிமை யால் நமக்குப் பெண்ணாய் வாய்த்திருக்கின்றாள்; கேளாய்! பழிப்பற்ற மானே! அதனால் நானிப்போது மிகவும் பாக்கியசாலியாகின்றேன்; நீயு ம் மெத்தப் பாக்கியசாலியாகின்றாய்" யென, இவ்வாறவனது வசனத்தை க் கேட்டத் தக்கன் பெண்டீரானவள் 'ஓ! கோ! யாம் கிருதார்த்தையா கிவிட்டோ' மென்று நிச்சயித்துக்கொண்டவளாகி யுள்ளம் பூரித்திருந் தாள். (10) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது கௌரிய ம்மையானவள் ஸ்ரீ சிவபிரானிடத்தே மனதை நாட்டிக்கொண்டு தனக் குப் பனிரண்டு வயதாகுமளவும் தியானம் செய்வதிலும், தோத்திரம்ப ண்ணுவதிலும் முயன்றவளாகித் தவம் செய்துகொண்டிருப்பதை யப் போது (11) பரமாத்துமாவாகிய ஸ்ரீஸதாசிவனறிந்துகொண் டோர் பிராம்மணவுருவம்கொண்டவராகிக் கௌரியம்மையது தவச்சாலையின் வாசற்படிக்கு விஜயமாகி யவ்வம்மைக் கறிவித்தனர். (12) உடனே கௌரிதேவியு மெழுந்து 'மகா சிவபக்தரான வோரந்தணர் வந்திருக்கி றா' ரென்றறிந்தச் சாலையினின்று வெளிச்சென் (13) றத்தக்கன் கு மாரியானவள் பிராம்மணோத்தமனைக் கண்டு மெத்த வாதரவுடன் வந்த னித்தவனைச் சாலைக்குள்ளழைத்துவந்து அம்மகாத்துமருக்கு (13) மி கவும் பெருமைபொருந்திய வோராதனமளித்து அர்க்கியபாத்தியம் மு தலிய உபசாரங்களால் மிகுந்த பக்தியோடவனைப் பூஜைசெய்ததின் பேரில் 'ஓ! சுவாமீ! தேவரீருக்கென்ன வேண்டு' மென்று நேர்த்தியா ன புன்னகைப்போடவனை வினவ, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்வாறுரைக்கலான வக்கௌரியம்மையை நோக்கி யவர் திருவாக்கரு ளியதாவது:—(16) "ஓ! கலியாணீ! இப்போது நீ ஸந்தோஷமாய் நிற்கலாகையி லுந்தன் கைதனைத் துரிதமாய்ப் பற்றுவதற் கெந்தனுக் கு மெத்தக் காதலுண்டாயிருக்கின்றது; அதை நீ நிறைவேற்றிவைத்

தால் யான் கிருதார்த்தனாகிவிடுவே" (17) னென, இவ்வாறவாது வசனத்தைக்கேட்டவுட னப்போது கௌரியம்மை மிகவும் மனம் நொந்தவளாகிக் கைகளாற் காதுகளைப் பொத்திக்கொண்டு மகா கோபத்துடன் வசனமுரைத்ததாவது:—(8) "அடா! மூடா! பரமாத்துமாவாகியஸ்ரீ ஸதாசிவனுக்குத் தருமபத்தினியாகுதலை விரும்பிய வென்னை நோக்கிக் கொஞ்சமேனும் பயமில்லாம லிங்கெவ்விதமா யிவ்வாறுரைக்கலானாய்? (19) நான், பராபரக் கடவுளாகிய ஸ்ரீமகாதேவனைத் தவிர மற்றெந்தத் தேவனையும் விரும்பவில்லை" யென்றிவ்வாறவளது வசனத்தைக் கேட்டப் பிராம்மணோத்தமன் வெகு கோபங்கொண்டவராகி (20) 'அடி, பெண்ணே! உந்தனுக் கத்தேவ ரௌிதனிற் கிடைப்பாரில்லை' யென, "ஓ! பிராம்மணா! மிகுந்த கொடிய தவத்தைச் செய்திடினு மவர் பிரஸன்னராகாவிட்டால் ($20\frac{1}{2}$) நானெந்த னுயிர்தனைக்கூட இழந்துவிடுவேன். ஆகையால் நீ சீக்கிரமாய் வந்தவழி பார்த்துச் சென்றுவிடு" என்று ஸ்ரீ தேவியானவ ளுரைத்துவிட்டுத் தானே துரிதமாய்த் திரும்பிச் செல்லலாகையி (22) லப்போது ஸ்ரீபகவானும் மிக நேர்த்தியு மற்புதமுமான தமது நிஜவுருவத்தைத் துரிதமா யெடுத்துக்கொண் டதனை யவளுக்குக் காக்ஷி யளித்தனர். (23) அப்போது ஸ்ரீ சிவாதேவியு மப்பரமேசுவரனைக் கண்டவுடன் மிகுந்த பக்தியோடு துரிதமாய் வந்தனித்து மிகுந்த சந்தோஷமுடையவளும் பயங்கொண்டவளுமாகி யஞ்சலிகொண்டு (24) "ஓ! தேவாதிதேவா! மகாதேவா! கருணைக்கடலே! மகாபிரபுவே! யானிங்கு செய்தபிழையை மன்னித்தெந்தனைக் காப்பாற்றவேண்டு" மென, (25) "ஓ! தக்கன் பெண்ணான அழகிய மாதரசே! நீ பயப்படாதே; இக்கொடிய பெருந் தவத்தினால் யாம் மிகவும் சந்தோஷமடைந்தனம்" (26) என்றுரைக்கலான வப்பரமேசுவரனை யம்பிகை மறுபடியும் நமஸ்கரித்து விழிகளி லாநந்தக்கண்ணீர் சொரியப்பெற்றவளாகி யவர் சன்னிதியில் நின்றாள். (27) பிற்பா டம்பிகையினோர்பணிவிடைக்காரியானவள் துரிதமாயோடி தக்ஷனிடத்தி லப்போதவ்வேதியர் வரலானதை யறிவிக்க, (28) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தக்கனு மப்பிராமணரை ஸ்ரீ பரமேசுவரனென்றே கொள்ளலாகிப் பிறகம்மகேசுவரனுடைய திருக்கலியாணத்தைப்பற்றி மனமதில் நிச்சயித்துக்கொண்டு (29) திரண்ட சாமான் முதலியவைகளை மிகுதியாய்ச் சேகரித்துத் தேவர்கள், இருடிகள், ஸித்தர்கள், சாத்தியர் முதலிய கணங்கள் இவர்களையெல்லா மழைப்பித்தான். (30) மேலு மவன் கலியாணத்திற்குவேண்டிய நேர்த்தியானபலவிதக் கட்டிடங்களையுமமை

ப்பித்தங்கங்குமிகநேர்த்தியானவாழைமரங்களையு(31)மநேகம்மாவிலைத் தோரணங்களையும் கயிறுகளாற் கட்டுவித்தான். பிற்பா டவன் தன் தேவியோடு துரிதமாய்ப் புறப்பட்டுத் தவச்சாலைக்குச் சென்று (32) பிராம்மண வுருவத்தோடிருந்த வப்பரமேசுவரனைக் கண்டு தெளிந்த புத்தியுடையவனுகி வந்தனித்துத் தன் பெண்ணோடுகூடிய அவ்வந்தணனைக் கலியாணத்திற்காகப் பற்பல மலர்களா லிறைக்கப் பெற்றதும், பற்பல துவஜங்களால் சிங்காரிக்கப்பட்டதும், மற்பல மண்டபங்களோடுகூடியதும், பற்பல திட்டாணிகளால் நிறைந்ததுமான தனதரண்மனைக்கழைத்துவந் (33-34) தங்குள்ள மிக நேர்த்தியும், ஸகல விரத்தினங்களாலும் சோபிக்கப்பெற்றதுமான சிங்காதனத்தின்மீது ஸ்ரீ சதாசிவனை வீற்றிருக்கச் செய்து கேளீர்!முனிவர்களே!மேலுமம் மகாபுத்திசாலியானவன் பெண்ணை யலங்காரம் செய்விப்பதற்காக வந்தப்புரத்திற் கனுப்பினுன். (35) பிற்பாடு ஸகல ஜகங்களுக்கும் தாயாரும் தக்கனுக்குப் பெண்ணுமாகிய தேவியானவ ளெண்ணைதேய்த்து (தவம்செய்த காலத்தி லுச்சிமீதுள்ள) சடைகளைப் பிரித்துவிடப்பெற்றவளாகி ஸ்நானம்பண்ணிச் சிறந்தஆடையாபரணங்களைத் தரித்துக்கொண்டு துரிதமாய் ஸ்ரீ ஸர்வேசுவர னருகினில் வந்தாள். (36)

ஆறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் எ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு விஷ்ணுமுதலிய தேவர்கள் ஸ்ரீ பரமேசுவரனை நமஸ்காரம்பண்ணிக் கைகளைக் கட்டிக்கொண்டு தோத்திரம் செய்து மலர்மாரி சொரிந்தார்கள். (1) இலக்குமி ஸரஸ்வதி முதலியவர்களும் மங்களகரையான ஸ்ரீ தாக்ஷாயணிதேவியை மிகுந்த நேசத்தோடு வந்தனித்து புஷ்பஹாரங்களை யிறைத்துக்கொண்டிருந்தார்கள். (2) சிறந்த வேதியர்களெல்லாம் சுற்றிலுமிருந்துகொண்டுச் சிரேஷ்டமான துதிகளைச்செய்தார்கள். ஊழிகால மேகங்களின் தொனிகள் போன்ற வாத்தியமுழக்கங்க ளுண்டாயிற்று. (3) அப்போது சிறந்த கண்டநாதத்தையுடைய கின்னரச்சிரேஷ்டர்கள் மிகுதியாய்ப் பாடினுர்கள். பிரம்மன் முதலிய தேவரெல்லா மப்போது மகாதேவனைத் துதிசெய்தார்கள்.

(4) நர்த்தனத்தில் தேர்ச்சிபெற்ற இரம்பை திலோத்தமை முதலிய வர்கள் நாட்டியம் செய்தார்கள். அப்போது தக்கனும் நல்ல சுபகாலத்தில் தேவாதிதேவனும் சூலபாணியுமான அப்பிரபுவினுடைய பொன்னடிகளை யவன் பெண்டீரால் விடப்பட்ட ஜலத்தினு லபிஷேகம் பண்ணி (5½) யம்மகேசுவரனைப் பற்பல மலர்களால் முறைப்படி பூஜை செய்து (6) மகா பரிசுத்தமாய்த் தாரைவார்த்துப் பாணிக்கிரகணம் செய்விக்க, கேளீர்! சிறந்த வந்தணர்களே! ஸ்ரீ பரமேசுவரனும் தேவியுடைய கமலம்போன்ற கைதனைப் பற்றலாயினர். (7) சகல ஜகங்களையும் படைப்பவரானபிரம்மன்மகாவைபவத்தோ டவிசினலக்கினியைத் திருப்திசெய்வித்தார். (8) ஸ்ரீ நாராயணன் முதலிய தேவர்களும் மகா மங்களகரமான வேதங்களைப் படித்தார்கள். இப்படியிருக்கையில் ஸ்ரீ பரமேசுவரன் தடலென் றந்தர்த்தானமாகிவிட்டனரன்றோ! (9) அதன்பிறகு ஸ்ரீ கௌரியம்மை மகா துக்கம்கொண்டவளாகித் தனதாத்துமாவை மனதுக்குள் ளிகழ்ந்துகொண்டே இலக்குமி முதலிய தேவ ஸ்திரீகளால் சூழப்பெற்றவளாகிக் (10) கண்ணீர் சொரியவுற்ற விழிகளுடன் தன்தாயி னந்தப்புரஞ் சென்று மிகுந்த துக்கத்துடன் பலமுறை யழுதாள். (11) அப்போது வேதவல்லி, இலக்குமி, ஸரஸ்வதி யிவர்கள் துக்கபபட்டுக்கொண்டிருந்த வக் கௌரியம்மையிடம் வந்து “ஆ! அம்மா! குழந்தாய்! நம்மாற் செய்யப்பட் டிருக்கக்கூடிய வபசாரத்தினல்தான் ஸ்ரீ தேவ னந்தர்த்தானமாகி யிருக்கவேண்டும். (12) ஆகையால் நீ யிப்போதே துரிதமாய்த் துக்கமதைவிட்டு மறுபடியும் ஸ்ரீ பரமேசுவரனை யருள்புரிவிக்கும்படி கொடிய தவத்தினுற் பஜனைசெய்யலாவா” யென் றவளது துக்கத்தைச் சமாதானப்படுத்த, (13) பிறகு பரமேசுவரியு மவர்கள் வசனத்தைக் கேட்டதன்பேரில் மனதினல் வெகுப் பிராசையோடு துக்கத்தை விலக்கிக்கொண்டு தவச்சாலைசென்(14) றங்கு முன்போல் கொடியதவத்தைச் செய்தாள். மேலும் ஸ்ரீ பரமேசுவர னந்தர்த்தானமானவுடன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலியதேவர்களும் (15) தவத்தைத் தனமாய்க்கொண்டமுனிவர்களும்,மகா துக்கங்கொண்டவர்களாகி ஓ! கோ! அத்தக்கன் மகா பாதகியானதால்தான் ஸ்ரீ பரமேசுவர னிங்கு பிரஸன்னராகியும் நமக்கனுக்கிரக மருளாமல் தடலென்று மறைந்துவிட்டனரோ! (16½) அல்லது நம்மிடத்தில்தானேதாயினும் தோஷமிருந்ததனலோ” (17) வென்று பற்பலவிதமாய்த் தங்கள் தங்கள் மனதினி லாலோசித்துக்கொண் டெல்லோர்களு மொன்றும் பேசாமல் தலைதனைக்குனிந்து துக்கங்கொண்டிருந்தார்கள். (18) அப்போது தக்ஷப்பிரஜாபதியானவன் தேவர்களுடைய மிகுந்த துக்கத்

தையும், வியாகுலமுற்ற தன்பெண்ணையும், தேவஸ்திரிகளின் விசனத்தையுங்கண்டுமகாமனவருத்தமுற்றவனாகிக்(19) கலியாணமண்டபத்திலிருந்த சகல தேவர்களையும் பார்த்து வசன முரைத்ததாவது:—"ஓ! தேவர்களே! நம்மீ தேதாகிலும் குற்றம் கண்டீர்களா? சொல்லுங்கள்; சங்கரனானவன் (20) பாதிக்கலியாணம் நடக்கையி லதனை யிவ்விதமாய்க் கெடுத்துவிட்டோடிப் போயினனன்றோ! (20½) இவனை யெவர் வேண்டினர்? அஜகவத்தி னெனும்பாகிய பினாகமென்ற வில்லைக்கொண்டவனும்,பெற்றோர்களையறியப்பெறாதவனும்,என்றும் சுடுகாட்டினிற்குடியிருப்போனும்,மகாஅசுத்தமானவனுமானஅச்சிவன் நம்பெண்மீதுகாதல்கொண்டவனாகித் தானாகவே பிராம்மணவேடம்பூண் (22) டவளிடம்வந்து வஞ்சகமா யவளை வேண்டினன். அதனைக் கேட்டு யானே அக் கொடியோனைஅழைத்துவந்து (23) கேளீர்! தேவர்களே! தேவர்களான உங்கள் முன்னிலையிலேநமது பெண்ணை விதிப்படி யவனுக்குப் பாணிக்கிரகணம் செய்துகொடுத்தோமல்லவா? (24) அப்படியிருந்தும் கேடுகெட்டவர்களில் தலைவனான விக்கூத்தாடியானவன் பாதிக் கலியாணத்தில் நடுச்சபையி லிருந் திப்பேர்க்கொத்த விழிவான வபகீர்த்தியை யுண்டுபண்ணியிருக்கிறான். (25) இவ்வுலகினி லொவ்வொருவருக்குமுள்ள வியற்கையான குணமானதுஅவரவரை விடுவதில்லை. ஆகையால்தா னிவன் பிராம்மணவேடந் தரித்துக்கொண் டிப்பேர்க்கொத்த தொழிலைச் செய்தா" (26) னென்றப்போ தத் தக்க னெல்லோர் முன்னிலையிலும் சொல்லிவிட்டுத் தேவரெல்லோர்களையு மவரவரிடத்திற் கனுப்பலானான். (27) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அன்றுமுதலா யத்தக்கனுக் கவனது பாதகத்தின் வலிமையா லுலகுக்கெல்லாம் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீசங்கரன்மீது கோபம் விருத்தியாயிற்றல்லவோ! (28)

ஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் அ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

இவ்விதமாய் வெகுகாலஞ்சென்றபிறகு திருமேனி மெலியலுற்றவளாக நியமத்தோடு மிகுந்த தவத்தைச் செய்யலுற்ற தக்கன்பெ

ண்ணுன வச் சிவாதேவிக் (1) கப்போ தனுக்கிரகம் செய்வதற்காகச் சகல ஜீவாத்துமாக்களுக்குள்ளும் விளங்கி யருளாநின்ற ஸ்ரீ ஸர்வேசுவரனுனவர் வெகு குதூகலத்தோ டோர் தவசியுருவங்கொண்டு சடையைக்கொண்டவரும், திருநீறுஉருத்திராக்ஷங்களை யலங்காரமாய்ப் பூண்டவரும்,(2)அனேகப் பிரம்மகபாலங்களை (பிரம்மாவின்மண்டையோடு) யுச்சிதனிற்சூட்டியவரும்,சூலத்தையும் மண்டையோட்டையும்கைதனிற்றரித்தவரும், ஒலிக்கலுற்ற தண்டை சதங்கைகளின் நாதத்தினு லொலிப்பிக்கலுற்ற திசைமுகங்களைப் பெற்றவரும், (3) காவிவத்திர முடுத்தவருமாகி யங்கு வந்தருளினர். அப்போ தத் தாக்ஷாயணிதேவியும் சிரேஷ்டரான வத் தவசியைக்கண்டவுட னெழுந் தஞ்சலிகொண்டவளாகி யர்க்கியபாத்தியம் முதலியவற்று லுபசாரஞ்செய் (4½) தவருக்கோ ராசனமு மளித்துத் தா னவர் முன்னில் வணக்கமாய் நின்றனள். (5) கேளீர்! முனிவர்களே! அப்போதே கருணைக்கடலு மண்டியவர்களுக்குக் கற்பகவிருக்ஷமுமான ஸ்ரீ மகாதேவன் களிப்புற்ற மனதைக் கொண்டவராகி வெள்ளிமலையின் கொடுமுடிக்கு நிகரும் ஒலிக்கலுற்ற கிண்கிணிமாலைகளால் விளங்கலுற்ற பருத்த கழுத்தைக்கொண்டதுமான சிறந்த திருவெருதின்மீ தேறிக்கொண் டங் காவிர்ப்பவித்தனர். (6-7) அப்போது மேககர்ஜனையை வெல்லலுற்ற மங்களகரமான தேவதுந்துபிகள் முழங்கலாயின. சிறந்த வாசனையோடுகூட நேர்த்தியான மலர்மாரியு மங்கு பொழியலுற்றது. (8) கேளீர்! வேதியர்களே! அப்போது ஸ்ரீ பரமாத்துமாவானவர் சித்தர் சாத்தியர் முதலியவர்களோடுகூடிய பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களாலும் சுற்றிலும் சூழப்பெற்றவராயினர். (9) அப்போ தவ ளப் பரமேசுவரனை வெகு சந்தோஷத்தோடு தரிசித்து மிகுந்த பக்தியோடுகூடிய வந்தக்கரணத்தோடு பிரதக்ஷிணம் தோத்திரம் முதலியவைகளைச் செய்தவளாகி (10) "ஓ! கருணைக்குக் காரணரான தேவதேவேசா! தேவரீ ரெந்தன் பிழையை மன்னித்தருளவேண்டு" மென்று ஸ்ரீ கௌரிதேவியானவள் நேர்த்தியான மந்தகாசமுற்றவளாகி யடிக்கடி வந்தனம் செய்தாள். (11) பிறகு ஸ்ரீ பரமேசுவரன் கைக்களா லத் தேவிதனைத் தூக்கி நேர்த்தியான விருடபத்தின்மீது தம திடது பாரிசத்தில் வைத்துக்கொண்டு (12) ஸகல தேவகணங்களாலும் சூழப்பெற்றவராகி நிகரற்ற கைலைகிரி சென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அங்கு விளங்கிய சிங்காதனத்தின்மீது வீற்றிருந்தனர். (13) அதன்பிறகு தேவியுடைய பரிவார ஜனங்கள் தக்கனண்டைக்குச் சென்று கேளீர்! முனிவர்களே!

மிகுந்த பயந்தோடு ஸகல சங்கதிகளையு மாதியோடந்தமாய்ச் சொன்னார்கள். (14) அதுகேட்டுத் தக்கனு மருகினில் நிற்கலான தேவர்களைப்பார்த்து "ஓ! தேவர்களே! முந்தியவனாகவே பாதிக்கலியாணத்திலோடிவிட்டான். (15) இப்போதும் திருடர்களுக்கெல்லாம் தலைவனான வப்பேர்க்கொத்த சிவனிப்போ திங்கு வந்து நமது பெண்ணைத் திருட்டுத்தனமா யெடுத்தோடியும்விட்டானல்லவா ! (16) அவன் நமதாக்கினையை யசட்டைசெய்ததுமின்றி நமக்கோ ரபகீர்த்தியையும் கொண்டுவைத்துவிட்டான். பெற்றோர்க ளனுமதியின்றி யெவன்தா னிப்பேர்க்கொத்த காரியத்தைச் செய்வான்? (17) ஏனென்றால் கேளீர்! தேவர்களே! அப்பிச்சைக்காரனவ னிதற்கு முந்தி யெங்காகிலு மோர் கலியாணத்தைச் செய்ததுமில்லை; கேட்டதுமில்லை, பார்த்ததுமில்லையன்றோ!(18)அதனைக்கேட்டாவதுசெய்தாவதிருந்தா லெந்தப்புத்திசாலிதானிவ்வாறுசெய்யலாவா" னென்றிவ்வாறுவசனங்களை யப்போதத்தக்கனவர்கள்முன்னிலையி லுரைத்துக்(19)கேளீர்!பிராம்மணோத்தமர்களே! பிறகத் தேவர்களை யெல்லா மவரவரிடங்களுக் கனுப்பிவிட்டு, அத்துராத்துமன் பரமாத்துமாவாகிய ஸ்ரீ சதாசிவன்மீது மிகுந்த கோபத்தைப் பாராட்டிக்கொண்டிருந்தான். (20) ஓ! கோ! அவனிவ்விதமாகக்ஷணம்தோறும் சிவ நிந்தை செய்துகொண்டிருந்தது மிகவும் கஷ்டம்; அப்போதுப் பிரம்மன் விஷ்ணு முதலிய தேவரெல்லா மத்தக்கனைப் பார்த்து (21) "ஓ! கோ! தேவாதிதேவனும் சூலபாணியுமான ஸ்ரீ மகாதேவனை நிந்தைசெய்வதனால் தேவர்களான நம்முடன்கூட நாசமடையப்போகின்றான். (22) இவனை விட் டெங்காயினும் தொலைந்திருக்கவும் நம்மால் முடியவில்லை. ஆகையால் நாமெல்லோர்களு மப் பாதகனுக்கிங்கு புத்திமதிசொல்லி (23) ஐயோ! அவனிகழ்வதை நிறுத்துவித்துநிச்சயமாயவனுக்குநன்மையையேசெய்யலாவோ" மென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வெல்லோர்களும் நிச்சயித்துக்கொண்டு வசனமுரைத்ததாவது:—(24) ஓ! தக்ஷப்பிரஜாபதியே! ஜகங்களுக்குப் பிரபுவாகிய நீர் சகல கல்விகளிலும் திறமைகொண்டவராயிற்றே! நீர் ஸ்ரீமகாதேவனுக் குமது பெண்ணைக்கொடுத்தீரல்லவோ! (25) அதனா லத்தேவ னுமது மாப்பிள்ளையென்று ஸகல லோகங்களிலும் பிரசித்தியடைந்திருக்கின்றார். ஆகையா லவர் யாவரானாலு மவரை யிகழ்தல் வேண்டாம். (26) சம்மந்தம் செய்தானபிறகு குலகோத்திரம் முதலியவைகளைப்பரிசோதிப்பது தகுதியல்ல;ஓ!ஜகங்களுக்குப்பிரபுவானவரே! ஆகையால்வெகுசாமார்த்தியக்காரரான நீர் துரிதமதிற் கைலைக்

கு சென்று உமது பெண்ணையும் மாப்பிள்ளையையும் பார்த்தச் சம்புவுடன் முன்போற் சமாதானம் செய்துகொண்டு பிறகு திரும்பிவாரு" மென, (27-28) தக்கனு மவர்கள திவ்வாறு வசனத்தைக்கேட்டுத் தான் கொண்டிருந்த கோபம் தணியப் பெற்றவனுகிக் கேளீர்! தாணிதேவர்களே! 'அப்படியே நல்ல' தென்று துரிதமாய்க் கைலைக்குப் புறப்பட் (29) டவ்விடம் சேர்ந்து பரமாத்துமாவாகிய ஸ்ரீசங்கரனது திருமாளிகையின் வாசற்படிக்குச் சென்றவுட னங்குள்ள வாசற்காப்போர்களால் தடைசெய்யப்பட்டதாவது:—(30) "கேளீர்! தக்கனே! ஸ்ரீதேவனதாக்கினையின்பேரில் தானுள்ளே நுழையத்தக்கது; ஆகையாலிங்கு நில்லு மல்லது வேறெங்காயினும் போய்விடு" (31) மென, தக்ஷப்பிரஜாபதியு மிவ்வாறக் காவலாளிகளின் வசனங்களைக் கேட்டு" ஓ! நமது பெண்ணையும் மாப்பிள்ளையான சம்புவையும் பார்க்கவரலான(32) வெம்மை யேன் தடைசெய்கின்றீர்க" ளென்றவ னுரைக்கலான வார்த்தையைக் கேட்டக் கணுதிபர்கள் மறுமொழி யுரைத்ததாவது:—(33) ஓ! கெட்ட எண்ணங்கொண்ட மூடனுன தக்ஷா! எங்கள் வசனத்தைக்கேள்: அடா! நீ கொண்டிருக்கிற ஐசுவரியமெல்லாம் ஜகதீசனுன ஸ்ரீசங்கரனிடமிருந் தடையப்பட்டதல்லவா? (34) அடா! பாதகா! ஸ்தாவர ஜங்கமங்களுள்பட விச்சகமதைச் சத்துருவற்றுண்டு வருவதாலுள்ள மதத்தினுலல்லவா நீ ஸ்ரீபிரபுவை நிந்திக்கலானுய். (35) அடா! உனக்குக் கொஞ்சமேனும் புத்தியில்லை; அவ்வறிவு அசுரர்களுக்குக்கூட விருக்கின்றது. ஆகையாலுன் முகத்தைப் பார்ப்பதுகூட இவ்வெங்களுக்குத் தகுதியல்ல: (36) இப்படியிருக்கையி லிங்குந்தனேடு பேசுவதில் மிகுதியான தோடம் நேரிடுமென்பதிற் சந்தேகமென்ன? அடா! பரமாத்துமாவான ஸ்ரீசங்கரனைச் சேவிக்கவேண்டுமென்ற நிச்சயமான புத்தியிருந்தால் நீ யப்பரமேசுவரனுடைய சமயத்தை மிகுந்த பக்தியோடெதிர்பார்த் (37½) தறிந்து பிறகவர தாக்கினையின்பேரி லந்தப்புரத்திற்குச் செல்வது தகுதியாகும். (38) அடா! வீண்புத்திகொண்டவனே! இல்லையாகில் வந்தவழிபார்த்துத் தொலைந்துவிடு; அல்லதிங்குதானே நில்" லென்ற அவர்களது வசனத்தைக் கேட்டவுடன் தக்கனப்போது மனம் நொந்தவனுகித் (39) திரும்பும்கா லக் கணுதிபர்களுக்கு முன்னிலையில் மிகுந்த கோபத்தோடு வசனமுரைத்ததாவது:— "ஓ! வாசற்காப்போர்களே! உங்களெஜமானனுன சங்கரனை யான் வணங்குவதில்லை; (40) பிரம்மன் விஷ்ணு முதலிய தேவரெல்லா மெப்போதும் நமது வார்த்தையைக் கேட் டுண்மையில் நமதாக்கினைக் கமைந்தவர்க

ளாகி மிகவும் பயந்து தொண்டுழியம் செய்துவருகின்றார்கள். (41) நா மே ஸகல தேவர்களுக்கும் நடத்துவோரும், விலக்குவோரும், சமுகரிப்போரும், வகிப்போருமான ஜகப்பிரபு. (42) காரியாகாரிய மறியாத நமது பெண் மாப்பிள்ளைகளது சொல்லைக் கேட்டே நீங்களெம்மைத் தடைசெய்கின்றீர்கள். (43) ஆகையால் நாமிப்போதே ஸகல தேவர்களாலும் கொஞ்சம் கொஞ்ச மவ்வுருத்திரனுக்குச் செய்து வரப்பட்டுவருகிற வந்தனம், துதி, தியானம் முதலியவைகளின் சங்கதியைக்கூட (44) இனி நடத்திவாராமலிருக்கும்படி யவர்களை யாக்கினை செய்கின்றோ" மென்றதுமுதலிய வசனங்களை யத்தக்க னவர்கள் முன்னிலையிலுரைத்துவிட்டுத் திரும்பிப் பற்பல வலங்காரங்களாற் சிறக்கலுற்ற தனது பட்டணம் சேர்ந்தான். (45)

எட்டாவது அத்தியாயம்,

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு தக்ஷன் தன் பட்டணத்துக்கு வந்திருக்கலுற்ற பிரம்மன்முதலிய தேவர்களாற் பூஜிக்கப்பட்டவனாகி யவர்கள் முன்னிலையில் நின்றுகொண் டவர்களுக்குச் சங்கதிகளை யுரைத்ததாவது:— (1) ஓ! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களே! நா முங்கள் வார்த்தையைக் கேட்டு ருத்திரனையும் நமது பெண்ணையும் பார்ப்பதற்காகக் கைலைக்குச் சென்றதி (2) லங்குள்ள கொடியர்களான அவ்வுருத்திரனுடைய வாசற் காப்போர்களாற் கொஞ்ச மவ மரியாதை செய்யப்பட்டதாவது:—"அடா! தக்ஷா! ஸ்ரீ சங்கரனுடைய திருவாக்கினையாலின்றி நீ யுள்ளே போகக்கூடாது; நாங்க ளுன்முகத்தைப் பார்க்கவும் தகாது; ஆகையா லெங்காவது தொலைந்துபோ, அல்லது இங்குதானே நில்" லென்று ஓ! கோ! கேளீர்! தேவர்களே! நமது பெண் மாப்பிள்ளைகளுடையவார்த்தையைக்கேட்டத் துடுக்கர்களா லின்னுமனேக மிகழ்ச்சியான வார்த்தைகள் நம்மிடத் துரைக்கப்படலாயிற்று. (3-4½) நாம் சுயாபிமானத்தைவிட் டப்பெண் மாப்பிள்ளைகளைப் பார்க்கச் சென்றதா லிது விஷயத்தில் சந்தேகமேயின்றி நம்மீதுகுற்றமேயொழிய அவர்களிடத்து யா

தொரு குற்றமுமில்லை. ($5\frac{1}{2}$) இதனை வளர்த்துவதிற் பயன் யாது? ஓ! எல்லாத் தேவர்களும் சாவதானமாய்க் கேளுங்கள்; (6) இனிமேல் நீங்கள் யாவரு மக்கொரே சித்தமுடைய ருத்திரனுக்கு வந்தனம் துதிகள் செய்யக்கூடாது; அவனை நினைக்கவும் கூடாது: (7) அப்படிச் செய்வீர்களாகி லுங்களுக்கு மிகுந்த அபராதம் நேரிடும்; உங்களுடைய பதவிகளைப் பிடுங்கி மற்றவர்க்குக் கொடுத்துவிடுவோ" (8) மென்றவர்களைச் சங்கதிகளைச் சொல்லி யனுப்பிவிட்டுக் கேளீர்! முனிவர்களே! தான் ஸ்ரீ பரமேசுவரனை யிகழ்ந்துகொண்டே பலகாலம் தள்ளிவந்தான். (9)

கேளீர்! தரணிதேவர்களே! இப்படி வெகுகாலம் சென்றபிறகுப் பிரபஞ்சங்களைச் சிருஷ்டிக்கலுற்றப் பிரம்மனுக்கு வேள்விசெய்ய மனதுண்டாயிற்று; அதற்கவர் திரவியங்கள் (10) வேண்டியதையெல்லாம் சீக்கிரமாய்ச் சேகரித்துக்கொண்டு 'ஓ! முக்கண்ணரும், பிரபஞ்சங்களுக்கெல்லாம் பெருமை பொருந்தியவரும், பரஞ்சோதிச் சொரூபரும், கேவலம் பரப்பிரம்ம மூர்த்தியுமான வேள்விக்கு வேந்தனாகிய ஸ்ரீ மகாதேவனை ($11\frac{1}{2}$) யழைத்துவந் தவரை மிகுந்த பக்தியோ டவிர்ப்பாகங்களாற் பூஜிக்கலாவோம்; (12) இத்தக்ஷனவ் வீசுவரனைப் பார்த்து புத்திப் பிரமையினால் பராமுகமா யிருந்தபொதிலும் யா மம் மகாதேவனைச் சந்தேகமின்றியே பூஜைசெய்வோம்; (13) அதற்காகக் கெட்ட யெண்ணம்கொண்ட வத் தக்க னெது வேண்டுமோ அதனை யெனக்குச் செய்யட்டும்; அதுவிஷயத்தில் யாம் சந்தேகமின்றி உயிரைக்கூட விடலாவோம்; (14) உயிர்மீ தபிமான முள்ளோர்க்கல்ல வோ எங்காகிலும் பயமுண்டு. தோலையுடையாக உடுத்தவரும், பினாகமென்ற வில்லைக் கொண்டவருமான வுயிர்தனுக் கீசனான ஸ்ரீ மகாதேவ (15) ரெப்படியும் காப்பாற்றுவா" ரென் றிவ்விதமா ய்ப்புத்தியைத் தீர்மானித்துக்கொண்டவராகி யுலகுக்கே மூதாதையான வப் பிரம்மதேவரானவர் மிகுந்த சந்தோஷத்தோடு சிரேஷ்டமான கைலைகிரிக்குச் சென் (16) றங்கு விளங்கிய வாசற்காப்போர்களுக் கதிபரான பருத்த சரீரத்தையுடைய நந்திகேசுவரனைக் கண்டு வந்தனித்து, அவர்முகமாய் ஸ்ரீ பரமேசுவரனுக் கறிவித்ததன்பேரி லவரதாக்கினையைக் கொண்டவராகிக் (17) கேளீர்! தரணிதேவர்களே! அம்மகாதேவருடைய திருமாளிகைக்குட் சென்று களிப்புற்ற மனதுட னவரைத் தரிசித் (18) தடிக்கடி வந்தனம்பண்ணி யவர்தனை மிருதியாய் வேண்டிக்கொண்டதாவது:— "ஓ! தேவாதிதேவா! மகா

தேவா! சரணமடைந்தோரிடத்து நேசமுற்றவரே! (19) ஓ! கருணைக்கடலே! வேள்விக்கு வேந்தனே! ஓ! மகேசுவரா! அடியேனைக் காத்தருளி யான் செய்யப்போகானின்ற வேள்விதனில் தேவரீர் பிரசன்னராகி (20) ஓ! தேவேசா! ஓ! ஈசுவரா! முதன்மையான ஆஹுதியைத் தேவரீ ரங்கிகரித்தல் வேண்டும்; ஓ! சகல ஜகங்களுக்கும் பராபர குருவான பரமசிவா! அதனால் யான் சத்தியமாகவே கிருதார்த்தனாகின்றே" னென, (21) இவ்வாறு பிரம்மன் வசனத்தைக் கேட்டுப் பகவான் திருவாக்கருளியதாவது:— "ஓ! பிரம்மதேவனே! உமது யாகத்துக்கு நமது நந்திகேசுவரனை யனுப்பலாகின்றோ" (22) மென்று சர்வப்பிரபஞ்ச சுவரூபியான ஸ்ரீ சம்புவானவர் புன்னகைப்புற்ற முகமலரைக் கொண்டவராகி யப்பிரம்மனை மகா சந்தோஷத்தோ டனுப்ப, (23) பிரம்மனு மப்படியே பாக்கியமென்று ஜகதீசனைத் தண்டம்பண்ணிவிட்டுத் துரிதமாய் வெளியில் வந்து பினனும் மிக மனவூக்கம் கொண்டவராகித் தக்கனிடம் சென் (24) றவனுக்கும் (தாம் யாகம்செய்யப்போவதை) யறிவித் தவனிட மனுமதி பெற்றவராகி மகாமேருகிரிக்குச் சென் றங்குள்ள மங்களகரமான 'மனோவதி' யென்ற கொடுமுடிக்கு வந் (25) தங்கு மகா பரிசுத்தரா யிருந்துகொண்டு யாகம்பண்ணத் துடக்கம் செய்தனர். அப்போது விஷ்ணுமுதலிய தேவர்களும் மகா பராக்கிரமசாலிகளான பிரம்மபுத்திரர்களும் (26) சேர்ந்து சிரேஷ்டமான கைலைகிரியண்டைக்குச் சீக்கிரமாய் வரலானவுடன் ஜகங்களுக்குப் பிரபுவான பிரம்மனும் புறப்பட் டவர்களுக் கெதிர்கொண்டு சென் (27) றவர்களுக் குபசார வசனங்களைச் சொல்லி யாசனமு மளித்தனர். அப்போ ததுபோலவே பிரம்ம னங்கு வரலுற்ற தக்ஷப்பிரஜாபதிக்கு முன்னடியாய் (28) வெளியில் வந்து மிகுந்த வுபசாரங்களைச் செய் தவனுக் கோர் சிறந்த வாதனமு மளித்துவிட்டுத் தாமு மவனுத்திரவின்பேரி லுட்கார்ந்தனர். (29) அப்போது நந்திகேசுவரனும்ஸ்ரீ பகவானுடைய திருவுத்திரவின்பேரி லங்கு சீக்கிரமாய் வரலாகையில் பிரம்ம னுடனே யெழுந் தம் மகாத்துமனுக் கெதிர்கொண்டு சென் (30) றவனைப் பல வுபசாரங்களோடு பூஜித்து மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்து, அங்கு மத்திதனில் விளங்கிய மகா மேன்மைகொண்டதும், மகா சிரேஷ்டமுமான வோர் மகா சிங்காதனத்தின்மீ தவனை விற்றிருக்கச் செய்துவிட்டுப் (31) பின்னு மவருடன் தொடர்ந்துவந்

த நூறுகோடி பூதகணங்களுக்கும் சிரேஷ்டமான வாதனங்களை ய ளித்துத் தாமும் (32) கேளீர்! முனிவர்களே! மிகுந்தப் பிரயத்தினத் தோடு யாகம்செய்ய வாரம்பித்தனர். அப்போது தக்கனென்றால் கணதிபர்களோடுகூட விளங்கியிரானின்ற வந் நந்திகேசுவரனைக் கண்டு (33) "ஆ! ஆ! விஷ்ணுமுதலிய சகல தேவர்களு மிவனுக்குச் சுற் றிலு மிருக்கின்றார்கள். இலக்குமி சரஸ்வதி முதலிய தேவபத்தினிக ளு மப்படியே யிருக்கின்றார்கள். (34) இப்படியிருக்கையி லிவ் வவல க்ஷணம்கொண்டவ னெல்லாவற்றிற்கும் மிகுந்தச் சிரேஷ்டமான வாத னத்தின்மீ திருப்பது மெத்த வாச்சரியம். கொடியனும், மிகுந்த கர் வம்கொண்டவனும், மகா துஷ்டனுமாகிய இவன் யாதோ வோ ரற்ப னுடைய வாசற்காப்போன். (35) மிகுந்த கொடிய மனதையுடைய வுருத்திரனது கைலைதனி லிவன் தினம்தோறு மிருப்பவன். இவனை யாரிங்கழைத்தார்?" என்று சொல்லிக்கொண் டந்தரங்கத்தில் மிகுந்த கோபாவேசம் கொண்டவனாகிப் (36) பிரம்மனை நோக்கி வசனமுரை த்ததாவது:— "ஓ! பிரம்மாவே! நீ ரெல்லா மறிந்தவராயினு முருத்தி ரனது வாசற்காப்போனன வித்துராத்துமனை நிச்சயமாய் நீரோ அழை த்திருககிறீர். (37) மேலும் பிரபஞ்சங்களைச் சிருஷ்டிக்கலுற்ற நீ ரிப் பேர்க்கொத்தவனுக்கு மிகவும் பெருமைபொருந்திய வோராதனமு மளி த்திருக்கிறீர். ஸத்தியமாய் நா மும்மைத் தகப்பனென்றதால்தா னெ ளிதினில் விடலானேம். (38) மற்றொருவனாகி லவனது சிரசுதனைத் துரிதமதில் தறித்துவிடுவோம். ஆகையா லிவ் வேள்விதனி லுருத்தி ரனுக் கவிர்ப்பாகம் கொடுப்பது தகாது. (39) நீ ரிவ் வியாகமதில் வி ஷ்ணுமுதலிய வெல்லாத் தேவர்களையும் திருப்திசெய்யலாவீர். வேத மதிலெங்கெங்கெல்லாம்அவ்வுருத்திரனுடைய மகிமையானது புகழப்ப டுகின்றதோ (40) அப்பாகமெல்லாம் பிரமாணமில்லாதுபற்றி விலக் கப்பட்டதாகையா லவற்றை நமதாக்கினையின்படி விட்டுவிடும். அவ ன் கொரேமான சுபாவத்தை யுடையவனாகையால் மிகவும் கொடிய ம னதுடையவனும், தாமசகுணமுள்ளவனுமென்று மெனும்புகளைப் பூண் டவனுமாயிருக்கின்றான். (41) அப்பேர்க்கொத்தவனுடைய வாசற்ப டியி லிருப்பவனான இவனு மப்படியே கொடியமனதைக்கொண்டவ" னென, இவ்வாறு முதலிய வசனங்களை யத்தக்கன் பிதற்றலாகையில் கேளீர்! சிறந்த வந்தணர்களே! (42) அதனையெல்லாம் ஸ்ரீ நந்திகே சுவரன் கேட்டவுடன் காதுகடனி லிருகைகளாலும் பொத்திக்கொண்டு

'சிவசிவா' வென் றுரைத்துக் கோபத்தினல் நடுநடுங்கலுற்ற திருமன ம்தைக் கொண்டவராகி (43) மகாதேவனுகிய ஸ்ரீ சிவபிரானைத் தியான ம்பண்ணிவிட் டித் தக்கனைப்பார்த்து "ஓ! அடா! அடா! மகா பாதக னான தக்ஷா! மிருத்தியுவால் நெருங்கப்பெற்ற வுந்தனல் ஸ்ரீ சிவபரமா த்துமாவைப்பற்றி நிந்தைசெய்யப்பட்டதல்லவா? ஓ! கோ! இது கஷ் டம்! (44½) அடா! ஸ்ரீ ஸர்வேசுவரனை யோர்தடவை யிகழ்வோர்க ளைக்கூட நுனிநாவை யறுத்து முகத்தையும் குழுக்காய்த் திருப்பிவை க்கவேண்டுமென்று சொல்லப்படுகிறதன்றோ? (45½) ஓ! ஸ்ரீ பகவா னுடைய திருவுள மெப்படியிருக்குமோவென்றே ஸர்வேசுவரனுன ஸ்ரீ பரமசிவனை நிந்திக்கலுற்ற மகாபாதகனுகிய வுந்தனை யா மிப்போது ம ன்னித்தனம். (46½) அடா! மகா பாதகா! ஆகையால்தான் நீ யிந்தநி மிஷத்தி லுயிரோடிருக்கின்றாய். (47) அடா! மூடா! இனி யேதாகிலு ம்கொஞ்சம்பிதற்றுவாயாகி லதோ! இங்கிவ் வியாகசாலையின் கண்ணே யுந்தன் தலையானது நமது நுகங்களாகிய ஆயுதங்களாற் சீக்கிரம் கிள் ளப்பட்டதென்றே நீ அறி. (48) அடா! இயாகங்களுக் கதிபரான ஸ்ரீ மகாதேவனுக் கியாகமத்தியி லாகுதியே யில்லையென்று நீ பிரம்மனை த் தடை செய்யலாகின்றாய்; (49) யாவர் மிகுந்தப் பிரம்மத்தினு வி யாகமதில் முந்திய ஆகுதியை ஸ்ரீ பரமேசுவரனுக்குக் கொடாம வியாக த்தை நடத்துகின்றார்களோ அவர்களுடைய தலைகள் நமதாக்கினையின் படி வெடிக்கக் கடவன. (50) அடா! பித்துக்கொண்ட தக்கா! உந்த னது ஸகல ஐசுவரியங்களும் சிவாக்கினையின்படி தொலைந்துபோகக் க டவன. மேலு மப்பரமேசுவரனை யிகழலுற்ற வுந்தனது தலையும் பூமி தனில் விழலாகிப் (51) பிற கவ்வா றறுபட்ட தலையானது மிகவு மிக ழ்ச்சியுள்ள ஆட்டின் தலையாக மாறக்கடவது. தவிரவும் துராத்துமனு கிய வுந்த னருகினி லெந்தத் துராத்துமர்கள் நிற்கின்றார்களோ (52) அவர்களது தலைகளெல்லா முந்தன் யாககாலத்தில் வெட்டுப்படலாகி மேலுமத் துஷ்டர்களெல்லாம்குரபத்துமனு லெப்போதும் துன்ப மனி க்கப்படக்கடவார்க" (53)ளென்றிவ்வாறுகச்சாபம் கொடுத்துவிட்டு ஸ்ரீ சங்கானுக் கன்புள்ள வந்நந்திதேவ ருடனேயெழுந்து ஸகல பூதகணங் களோடுகூடச் சிரேஷ்டமான கைலைகிரிக்கு (54) வந்து சந்திரகலையை ச் சிரசினிற்கொண்ட பார்வதியோடுகூடிய ஸர்வேசுவரனைத் தரிசித்து த் தண்டம்பண்ணி யவர் சன்னதியிற் சகல சங்கதிகளையு மாதியோ டந் தமாகத் (55) தெரியப்படுத்திச் சர்வ வல்லமையுள்ள வம்மகாதேவ

னை மறுபடியும் வந்தனித்துக் கேளீர்! தாவனிதேவர்களே! பிறகவா தா ங்கினையின்பேரில் தமது வாசற்படி யடைந்தனர். (56)

ஒன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் க0—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! சிறந்த வந்தணர்களே! பிற்பாடு விஷ்ணு முதலிய தேவர்கள் நந்திகேசுவரன் சினத்தோடு வெளிச்சென்றவுடன் நந்திகேசுவரன் தக்கன் இவ்விருவரிடத்தும் மிகப் பயம்கொண்டவர்களாகி (1) யெல்லோர்களும் துக்கமாகிய பாரத்தினுல் குனியலுற்ற முகத்தைக் கொண்டவர்களாகி யொளி யிழந்தவர்களாய் நின்றூர்கள். ($1\frac{1}{2}$) பிரம் மனும்தக்கனிடத்துப்பயம்கொண்டவராகி இவ்வியாகத்தை முடிப்பதை ப்பார்க்கிலும் கலகமில்லாமற் சும்மாவிருப்பது நலமென்று மனதினுல் நிச்சயித்துக்கொண் டவ்வியாகத்தைப் பாதியில் நிறுத்தித் தனிமையி லிருந்துவிட்டார். (3) பிறகு தக்கனு மெழுந்து கோபத்தோடு தனது நகரம் சென்றுவிட்டான். அப்போது தேவர்களும் நந்திகேசுவரனுடைய சாபத்தை நினைத்து நினைத்து மிகப் பயந்தவர்களாகி யப்படியப்படியே தங்கள் தங்களிடங்களுக்குச் சென்றுவிட்டார்கள். கேளீர் தாணிதேவர்களே! ($4\frac{1}{2}$) ஓ! கோகோ! அதுமுதற்கொண்டு வெகுகாலம் வரையிலவ்விருவரிடத்தும்மிகுந்தபயத்தினு லுலகங்களில்யாதோரிடத்தும் யாகமே நடக்கவில்லை. கேளீர்! வேதியர்களே! ($5\frac{1}{2}$) பிறகப்போது தக்கன்தானே யோர் யாகம் செய்ய மனம்கொண்டவனுகிச் சகல தேவர்களையும் நோக்கி வசன முரைத்ததாவது:—"ஓ! தேவர்களே! நீங்க ளெல்லோர்களும் நந்திகேசனுடைய சாபவசத்தினுல் மிகவும் பயமடைந்தவர்களாகி (7) யாகம் செய்வதிற் பராமுகமாயிருக்கின்றீர்கள். ஆகையால் யாம் முந்தி யோர் பெரும் திரவியச்செலவுகொண்ட யாகத்தைச் செய்து முடிக்கலாகின்றோம். கேளீர்! தேவர்களே! பிறகு நீங்கள் நிர்ப்பயர்களாகி (8) யவ்வுருத்திரனை விலக்கிவிட்டுத் தங்கள் தங்கள் வலிமையை யறிந்தவர்களாகி மகாமகா யாகங்களைச் செய்யலாவீர்க" ளென் றுரைத்துவிட் டப்போது விசுவகருமனை நோக்கி யவன்

வசனம் கூறியதாவது:— (9) "ஓ! விசுவகருமனே! நீ சீக்கிரமாய் ந மக்கோர் விசாலமான யாகசாலையை யமைக்கவேண்டு" மென்ற அவன து வசனத்தைக் கேட் டத்தேவத்தச்சனனவ னோர் நொடிநேரத்திற்கு ள் (10) கங்கைக்கரையிலுள்ள 'கனகல' மென்ற வோர் நேர்த்தியும் பரிசுத்தமுமானவிடத்தி லாயிரம்யோஜனை யளவுகொண்ட பிராகாரங்க ளால் நேர்த்தியானதும், (11) கோபுரங்கள், அட்டாளமண்டபங்கள், கொடுங்கைகள், உப்பரிகைகள் முதலியவைகளாற் சிறக்கலுற்றதும், வாபிகள், கிணறுகள், தடாகங்கள், முதலியவைகளாலும், மாத்தோட்ட ங்களாலு மழகுள்ளதும், (12) சுற்றிலு மங்குமிங்கும் விசாலமான அன்னசாலைகள், வியஞ்சன (காய்கறிமுதலிய பக்குவபதார்த்தங்கள்) சாலைகள், தயிர், பால், நெய் முதலியவைகளின் சாலைகள் இவைகளாற் சூழப்பெற்றதும், (13) கஸ்தூரி, சந்தனம், மாலைகள், தங்கம், இரத் தினங்கள், நாணயங்கள், வஸ்திரங்கள் இவைமுதலிய சாலைகளால் மிகு தியா யலங்கரிக்கப்பட்டதும், (14) சுற்றிலும் யாகத்திற்குரிய கருவி களின் சாலைகளாற் சூழப்பெற்றதும், நூறுயோசனை விஸ்தீர்ணமுள்ள பல ஓமகுண்டங்கள், மேடைகள் முதலியவைகளைக் கொண்டதும்,(15) நான்குபக்கங்களிலு மனேகம் சித்திரசாலைகளா லலங்கரிக்கப்பெற்றது ம், தேவர்களுக்காக விங்குமங்கும் பற்பல வாதனங்கள் (16) முதலி ய மற்றவைகளாற் சிறப்பிக்கலுற்றதும், மிகுந்த சௌந்தரியம் பொ ருந்தியதுமான வோர் யாகசாலையை யமைத் ததனை யத்தக்கனுக் கறிவி த்தனன். (17) கேளீர்! முனிவர்களே! உலகமதிற் பிரசித்திகொண் டவனன வத்தக்கனு மச்சாலைதனை நோக்கி மிகுந்த சந்தோஷம்கொண் டவனாகிக் (18) கேளீர்! தரணிதேவர்களே! ஸ்ருக் (ஓமம்செய்வதற் குரிய ஆப்பைபோன்றதான வோர் முக்கிய பாத்திரம்) ஸ்ருவம் (மேற் கண்ட முக்கியபாத்திரத்துக்குத் துணையான மற்றோர் பாத்திரம்) முத லிய யாகத்துக்குரிய வெல்லாக்கருவிகள் வந்தவர்களுக் காடையாபரண ங்கள் முதலியவைகளைக் கொடுப்பதற்காகக் கற்பகவிருக்ஷம், காமதே னு, சங்கம்முதலிய நிதிகள், சிந்தாமணி ($19\frac{1}{2}$) ஆகிய இவைகளையெ ல்லாம் மண்டபங்கள்தோறு மேற்படுத்தலானன். (20) கேளீர்! பிரா ம்மணேசுவரர்களே! மேலுமத்தக்க னன்னம் பரிமாறுவதற்கு முப்பதி னயிரம்பெயர்களும், வியஞ்சனம் முதலியவற்றைப் பரிமாறுவதற் க றுபதினயிரம் பெயர்களுமாகப் பிராம்மணப் பரிசாரகர்களைத் திட்டம் செய்தான். ($21\frac{1}{2}$) பிறகவ னனேகம் தூதர்களை யனுப்ப, அவர்கள் பி

ரம்மன் விஷ்ணுமுதலிய தேவர்களுக்குச் சங்கதியை யறிவித் துடனே தக்கனண்டைக்கு வந்துவிட்டார்கள். (22½) பிற்பாடு விஷ்ணு, பிரம்மன், இந்திரன்முதலிய தேவர்கள், முனிச்சிரேஷ்டர்கள், (23) சூரிய சந்திரர்கள், அசுரர்கள் இவ்வெல்லோர்களு மவ்வியாகத்தைப் பார்ப்பதற்காகத் தங்கள் தங்கள் சைனியங்களோடும் பெண்டிர்களோடும்கூட வெகு சந்தோஷத்தோ டங்கு துரிதமாய் வந்தார்கள். (24) அப்போது தக்கனு மவர்களுக் கெதிர்கொண்டு சென்றுப் பிரம்மன் விஷ்ணு இருவர்களையும் ஸந்தோஷிப்பித் தவர்களுக்குத் தக்கபடியுள்ளச் சிரேஷ்டமான வாதனங்களி லவர்களை வீற்றிருக்கச்செய்து (25) பிறகு மற்றத் தேவர்களையும், இருடிச்சிரேஷ்டர்களையும் பற்பல வுபசாரங்களோடவரவர்களை யாதனங்களி லுட்காரச்செய்துவிட்டுப் பிறகு தானும்(26) கேளீர்! முனிவர்களே! எல்லாத்தேவர்களுக்கும் மத்தியி லப்போதுட்கார்ந்தான். பெயர்போன வனேகம் பிராம்மணர்களு மப்போ தங்கு வந்தார்கள். (27) மேலு மிலக்ஷுமி, ஸரஸ்வதி, இந்திராணி இன்னும் மற்ற தேவபத்தினிக ளிருடிபத்தினிகள் இவ்வெல்லோர்களும் வெகு சேர்த்தியுள்ளவர்களா யங்கு வந்து (28) வேதவல்லியினுடைய மகா மங்களகரமான மாளிகைக்குட் சென் றங்கு பற்பல வுபசாரங்கள் செய்யப்பெற்றவர்களாகி வெகு சந்தோஷத்தோ டவளுக்குச் சுற்றிலு மிருந்தார்கள். (29) பிறகு தக்கனேவென்று லங்கு வந்திருக்க லுற்ற தூ து போன சேவகர்களை நேர்முகமாய்ப் பார்த்து "ஓ! தூதர்களே! தேவர்கள், பிராம்மணர்கள், இருடிக ளிவர்களி லிங்கு யார் வரவில்லை யென்பதைக் (30) கொஞ்சமேனு மிங்கு பயப்படாமல் நம் முன்பாகச் சொல்லுங்கள்" என, தூதர்களு மப்போ திவ்வாறவனது வசனத்தைக் கேட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! எல்லோர்களும் நிர்ப்பயர்களாகி யவனை நோக்கி வசன முரைத்திட்டதாவது:—(31½) "ஓ! சுவாமீ! தவசிகளிற் சிரேஷ்டரான அகத்தியமுனிவர், பெருமைபொருந்திய நாரதர், (32) வேதவேதாங்கங்களின் கரைகடந்தவர்களான ஸனகர் முதலிய மாமுனிவர்கள், ததீசி, அத்திரி, வஸிஷ்டர், பராசரர், பிருகு, (33) தவசிகளில் முதன்மையான துர்வாசமுனிவர் இவ்வெல்லா மாமுனிவர்களும் ஜகங்களுக்குப்பிரபுவான தேவரீரையும், தேவரீர் யாகத்தையு மிகழ்ந்து பேசி யிங்கு வராதிருந்துவிட்டார்க" (34) ளென, மகா பாவியான தக்கனு மவர்களது வசனத்தைக் கேட்டு நகைத்துக்கொண்டு "ஓ! இவ்வெல்லோர்களு மவ்வுருத்திரனுக் கடியார்கள்; ஆகையால் தானவர்க ளிங்கு வரவில்லை; (35) நல்லது! அவர்களிங்குவரவே வேண்டா" மென்றவ் வெல்லோ

ர்களையும் திக்காரம்பண்ணி வசனமுரைக்கையில் கேளீர்! முனிவர்களே! அப்போது மகாத்துமாவும் ஸ்ரீசர்வேசுவரனிடத்தே பற்றுதலுள்ளவருமான ததிசிமாமுனிவர் தமது சீடர்களோடும் சீடர்களின் சீடர்களோடு மங்கு விஜயமாயினர். (36½) அப்போது தக்கன் அவரைக் கண்டவுடன் "ஓ! இவருருத்திரனுக் கடியாரல்லர். ஆகையால்தா னிவர் நம்மிடத்துப் பயங்கொண்டிங்கு வாலுற்றனரென்பது நிச்சய" மென்று மனதினில் நிச்சயித்துக்கொண்டு கேளீர்! தாணிதேவர்களே! அவருக்கும் சீடர்களுக்கு மாதனமளித்தான். (38) அப்போது ததிசிமுனிவரவனை நோக்கி "ஓ! தக்ஷப்பிரஜாபதியே! நீர் யாது நிமித்தம் நம்மை யழைக்கலானீ' ரென்று பிரகாசிக்கலுற்ற கம்பீரமான வாக்கினா லவனை வினவலாயினர்". (39)

பத்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௧௧—வது அத்தியாயத்தி னர்த்தம்.

தவசிகளிற் சிறந்த வத்ததிசிமாமுனிவரை நோக்கித் தக்கன் மறுமொழி யுரைத்ததாவது:— "கேளீர்! முனிவரே! முந்தி முக்கண்ணன் நமது பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டதி (1) லக்கலியாணத்தைப் பாதியிற் கெடுத்துவிட்டு நேர்மையற்ற தொழிலைக்கொண்டவனு யோடிப்போய்விட்டான். பிறகு கொடிய தொழிற்காரனும், கொடிய கண்ணையுடையவனும், மிருந்த சூதனுமான வச்சிவன் மறுபடியு மிங்கு வந்து நமது பெண்ணைத் திருட்டுத்தனமா யெடுத்துப்போய்விட்டான். (2½) அப்படியிருந்தும் நா மவ் விருவர்களையும் பார்ப்பதற்காக அவனுடைய கைலைகிரிக்கி யாம் (3) துரிதமாய்ச் சென்றதில் ஓ! கோ! அவனது வாசற்காப்போர்க ளவன் வார்த்தையைக் கேட்டெம்மைத் தடுத்துவிட்டார்கள். (4) பிறருக்கு வஞ்சகமளிக்கலுற்ற வச்சூத னிவ்விதமாய் நம்மண்டையிலிருந்தநமது பெண்ணை மாயத்தினால் மயங்கச் செய் தவளை நம்மிடத்துப் பாராமுகமாயிருக்கும்படி செய்துகொண்டிருக்கின்றான். (5) ஆனதுபற்றிப் பிரம்மன் செய்த யாகத்தி லவனுக் கவிர்ப்பாகம் கொடுக்கத்தகாதென்று யாம் தடுத்துவிட்டன

ம். அப்போ தவனது வாசற்காப்போனன் நந்தி யெழுந்து "யாவர் ஸ்ரீசிவபிரானுக் (6) கியாகமதில் முந்திய ஆஹூதியைக் கொடுக்காம ற் செய்கின்றார்களோ அவர்களது தலைகள்சுக்குநூறாய்வெடிக்கக்கடவன" வென்று (7) சொல்லி மிகுந்த கோபாவேசம்கொண்டவனும் நம்மிட த்துப் பயமடைந்தவனுமாகித் துரிதமா யோடிவிட்டான். அப்போ து மத்தள மடித்ததுபோன்ற அவனது வசனத்தைக் கேட் டித் தேவ ரெல்லா (8) மச்சிவனை விலக்கி யியாகம்செய்யப் பயங்கொண்டவர்க ளாகி யதுமுதலா யியாகம் செய்யவேயில்லை. பிறகவர்களுக்காக யா மே அந்நந்தி வசனத்தைச் சட்டைபண்ணும (9) லவ்வுருத்திரனை வி லக்கிவிட்டு மகா பரிசுத்தமான இவ்வியாகத்தைச் செய்யலாகின்றேன். ஓ! கேளீர்! முனிவரோ! அதற்காக யாமித் தேவர்களையெல்லா மிங்க ழைப்பித்திருக்கிறோம். மேலும் மகாத்துமாவாகிய நீருமிதனைப் பார் ப்பதற்காக விங்கு வந்தபடியா லிது யாதோ ராக்ஷேபணையுமின்றியே முடிவடைந்துவிட்டதாக நினைக்கின்றோ" மென, (11) இப்போர்க்கொ த்த அவனது வசனம்கேட்டுத் தவசிகளிற் சிறந்த ததீசிமா முனிவ ரப் போது கோபத்தினாற் கைகொட்டி நகைத்து வசன முரைத்ததாவ து:—(12) "ஓ! தக்ஷா! உமது சகல புண்ணியங்களும் பர்வமாகவே முடிந்துவிட்டதல்லவா" வென்றப்போதவ ருரைத்துவிட்டு மௌனம டைந்து சும்மாவிருந்துவிட்டார். கேளீர்! முனிவர்களே! (13) பிற் பாடு தக்கன் கோபத்தினாற் கலங்கலுற்ற கண்களைக் கொண்டவனாகி வ சனமுரைத்ததாவது:—(13½) ஓ! ததீசிமுனியே! நீ யவ்வுருத்திரனி டத்துப் பத்தியுடையோனாகையா லல்லவோ நகைத்துக்கொண்டிங்கு நம்மையு மிகழ்ந்து நம்முன்னரோ யேதேதோ பேசலானாு" யென்றப் போதுரைத்துக் கோபத்தினாற் குன்றிய முகத்தைக் கொண்டிருந்தான். (15) அதுகேட்டுத் ததீசிமாமுனிவருரைக்கின்றார்:—"ஓ! தக்ஷா! சக ல சாத்திரங்களையும் கற்றறிந்த நீர் மிகுந்த புத்திப்பிரமையினால் வேள் விகளுக்கு வேந்தனாகிய வம்மகாதேவனை விலக்கிவிட்டு யாகம்செய்ய க் கருதுகின்றீர், (16) ஸ்ரீமகேசுவரன் பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களையும் மற்றப் பிராணிகளையும் படைத்தவர்களைக் காப்பாற்றுவ தற்கும் தக்க ஏற்பாடுசெய்துவிட்டுப் பிறகு முடிவினி லுருத்திர வுருவ ம்கொண்டவராகி யவர்களைச் சமுகாரமும் செய்கின்றார். (17) சகலரு க்கும் ஜனகரான வச்சம்புவே பரமாத்துமாவென்று முறையிடப்படுகி ன்றார். தவிரவும், "அம்மகா தேவரோ அவிசுகளைப் புசிப்பவர்: அந்த அ விசுனுடைய சொரூபமு மவர்தான். அவ்வவிசுதனை யோமம் செய்யப் பெற்ற அக்கினிதேவனுக்குத் தந்தையு மவரோ! (18) ஜகதீசனான ஸ்ரீ

பரமசிவனே யாகத்துக்குக் கர்த்தாவு மதனைக் காப்பவருமே யின்றி மற்ற யாவரு மில்லை,' யென்று உபநிஷத்துக்களெல்லாம் முறையிடுகின்றன. (19) இப்போ திச் சபையில் யாவராவது வேள்விக்கு வேந்தனுயிருந்தா லவர் நம்முன்னர் வந்து நிற்கட்டும். விஷ்ணு முதலிய தேவர்களுக்கு மவரால்தா னைசுவரியம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. (20) சகலர்களையும் படைத்தவ ரம்மகாதேவர்தான். அவரைப் படைத்தவரொங்கு மில்லை. பெருமைபொருந்திய ஈசுவரனும், சுகத்தை யுண்டுசெய்வோரும், கறுத்தகழுத்தையுடையவரும், முக்கண்ணுடையவருமான ஸ்ரீ பரமசிவனே (21) சகல பிராணிகளுக்குள்ளு மந்தர்யாமியாய் விளங்கிநிற்பவரும், பரப்பிரம்மமூர்த்தியும் பராபரக்கடவுளுமாகின்றூர். அவரிவ்வெல்லாத் தேவர்களிலும் மிகுந்தச் சிரேஷ்டரானப் பிராம்மணரல்லவோ! (22) அப்பேர்க்கொத்த ஸ்ரீஜகதீசனே மும்மூர்த்திகளிலும் மிக்க மேன்மைகொண்ட மூர்த்தி. மேலும் வேதமதில் பகவானுகிய ஸ்ரீ மகாதேவன் பிராம்மணரென்றும் விஷ்ணு க்ஷத்திரியரென்று மடிக்கடி முறையிடப்படுகிறது. (23½) இப்படியிருக்கையில் ஓ! தக்ஷா! நீர் மிகுந்த புத்திப் பிரமையினுல் வேதத்தினுல் விளக்கப்பட்ட விப்பொருள்தனை யறியாமல் (24) வேள்விக்கதிபரும், வேள்விக்குக் கர்த்தாவும், துக்கங்களைத் தொலைப்பிப்போரும், என்றுமழிவற்றவருமான அம்மகாதேவரை விட்டு முள்ளிலவம்பூவுக்கு நிகரானவர்களும், அற்பப்பிரயோஜனத்தைக் கொடுக்கலுற்றவர்களுமான மற்ற இவ்வெல்லோர்களையும் (25) வீணுய்க் கூட்டிவைத்துக்கொண்டு யாகம் செய்ய முயன்றவனுகித் தொடக்கம் செய்யலாகின்றீர். ஐயோ! இதெல்லாமோர் வேசிமகன் தன் தகப்பனை யறியமாட்டாமல் மற்றவரைத் (26) தகப்பனுய்க் கொள்வதுபோலாயிற்றே! இது மிகவும் கஷ்டம்! புண்ணியத்திற்காகப் பிரயத்தினப்பட்டவருக் கிங்கு பாவமல்லவோ பயனுய் கிடைக்கலாகின்றது. (27) நீர் வேதமார்க்கத்தைவிட்டுத் துர்மார்க்கத்தில் தலைப்பட்டிருக்கின்றீர். ஆகையாலுமது இவ்வியாகத்துக்கு மிகுந்த விடையூறு சம்பவிக்கப்போகின்றது. (28) மேலு முமக்கு விநாசகாலம் நெருங்கிவிட்டதென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றோம். அம்மகாதேவருக்குப் பயந்தே வாயுதேவனெப்போதும் காற்று வீசுகின்றான்; சூரிய னுதயமாகின்றான்; (29) அக்கினிதேவனு முயரக்கிளம்பி யெரியலாகின்றான்; இந்திரன் சொர்க்கமாளுகின்றான்; ஐந்தாவதான மிருத்தியுவு மவரிடத்துப் பயத்தினுல்தா னவர தடியார்களைக் கண்டு வெகு தூரத்தில் விலகலாகின்றான். கேளீர்! தக்ஷா! காலனுக்குக் காலனும், நித்தியாநந்தச் சொரூபியுமான வம்மகாதேவரிடத்தி லித்தேவர்களி

ல் யாவர்தான் பயப்படவில்லை; அவனை நீர் சொல்லும். ($30\frac{1}{2}$) ஓ! தக்ஷா! ஆகையால் நீரம்மகாதேவனுக்கு முந்தியதான அவிசைக் கொடுத்தலேவேண்டு" (31) மென, அம் மாமுனிவருரைத்த இவ்வாறு வசனங்களைக் கேட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! துராத்துமனாகிய வத்தக்கன் பாவத்தினு லாவேசம்கொண்ட மனதையும், சுழலலுற்ற விழிகளையும் கொண்டவனாகி யவனை நோக்கி மறுபடியும் வசனமுரைக்கலாகின்றான். (32)

பதினொருவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கஉ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

☞ பெரும்பாலுமிவ்வத்தியாயத்திலும் முந்திய 11-வது அத்தியாயத்தின் சிலபாகத்திலும் ததீசி முனிவரால் ஸ்ரீசிவபிரானுக்குப் பரப்பிரம்மத்தன்மையை நிரூபணம் செய்யும் பாகங்களிலெல்லாம்உபநிஷத்தின்வாக்கியங்களையே சுலோகங்களாய் மாற்றப்பட்டிருப்பதையறிக.

"ஓ! இருடியே! நாமவ் வுருத்திரனுக்குச் சிரேஷ்டமான அவிசைக் கொடுக்கமாட்டோம்; ஆனு லதனைச் சகல பாவங்களையும் தொலைப்பிக்கலுற்றவரும், சகல ஜகங்களுக்கும் பிரபுவுமான ஸ்ரீமகாவிஷ்ணுவுக்குக் கொடுத்து யாகம் செய்கின்றோம். (1) இவ்வியாகமதில் சகலப்பிரபஞ்சச் சுவரூபியான அவ்விஷ்ணுவே நம்மாற் பூஜிக்கத் தக்கவ" னென, இவ்வாறவனது வசனத்தைக் கேட்டு மாமுனிவர் மறுபடி வசன மளித்ததாவது:—(2) "ஓ! பிரஜாபதியே! பூஜிக்கத் தகாதவனை நீர் பூஜித்தா லுடனே நிச்சயமாய் நாசம் சம்பவிக்குமென்று சாத்திரமறிந்தவர் கூறுகின்றார்கள். (3) ஸகலர்களுக்கும் பெரியோரும், மகாதேவனும், சந்திரகலையை யுச்சிதனிற் சூடியவருமான ஸ்ரீசிவபிரானே வேள்விக்கு வேந்தனான மகேசுவரனென்று உலகத்திலும் வேதத்திலும் பிரசித்திகொண்டிருக்கிறார். (4) ஆகையால் யாகங்களி லந்தப் பிரபுவுக்கல்லவோ முந்திப் பூஜைசெய்யவேண்டு" மென, இவ்வா றவரது வசனத்தைக் கேட்டுத் தக்கன் மறுபடியும் வசனம் கூறுகின்றான்:—(5) கேளீர்!

இருடியே! பூமிதனில் பிரசித்திகொண்ட வீசானனென்ற திக்பால னையும், அதேவிதமாக ஏகாதச ருத்திரர்களையும் மட்டில்தான் யாம் சந்தேகமின்றிப் பூஜைசெய்வோம். (6) ஏனென்று லவ்வுருத்திரர்களைப் போலவே அச்சிவனு மொருவன்தானுகையால் நாம் யாகமதி லவர்களை யே பூஜிக்கலாவோ" மென, ததீசி யுரைக்கின்றார்:—"ஓ! பிரஜாபதியே! இவ்வுருத்திரரெல்லாம் ஸ்ரீமகாதேவருக்குச் சரியா யெப்படியாவார்கள்? (7) ஓ! தக்ஷா! உலகமதி லெந்த மகாத்துமர்கள் பரமகாரணராகிய ஸ்ரீசிவபிரானைத் தியானிக்கின்றார்களோ! அவர்கள் ஸாரூப்பியபதவியை க்கொண்டல்லவோ உருத்திரர்களென்றுப் பிரஸித்திகொண்டிருக்கின்றா ர்கள். (8) ஆகையா லவ்வுருத்திரர்க ளப்பேர்க்கொத்த ஸாரூப்பியத் தை யடைந்திருப்பதினால் மட்டி லப்பரமேசுவரனைப்போல் யாகமதிற் பூஜிக்கத் தக்கவராகமாட்டார்கள். ஆனாலவர்கள் பிரம்ம விஷ்ணுக்கள் முதலியவர்களுக்கும் மேற்பட்டவர்க ளென்பதிற் சந்தேகமே யில்லை; (9) அச்சிவனடியார்கள் முந்தி யப்பேர்க்கொத்த பதவியை விரும்பிய படியா லதனை யடைந்திருக்கிறார்கள்; ஆயினு மவர்க ளுமதுயாகமதில் ஸ்ரீபரமேசுவரனுக்குரியதான முதன்மையாகிய அவிசைப்பெற்றுக்கொ ள்வதற்காவது அதனைப் புஜிப்பதற்காவது தகுதியல்லர். ($10\frac{1}{2}$) முந்தித் தேவேச னிவர்களது தவத்தினாற் பிரசன்னராகித் (11) தமது திருவு ருவத்தைக்கொண்ட ஈசானதேவரைத் திக்பாலர்களுக்குள் ளோர்தி சைக் கதிபராய் நியமித்து மவ்வுருத்திரர்களைத் தேவர்களோடுசேர்த்து (12) மாதியந்தமற்ற அவ்வீசுவரன் தாமே யவர்களை யென்றும் காப் பாற்றிவருகின்றார். அவர்களோடு சேர்ந்தல்லவோ தேவர்களின் சங்கி யை முப்பத்துமுக்கோடி யாகின்றது. (13) அதனா லவர்களுக்கு ஸ்ரீ மகேசுவரனுக்குரியதான அவ்வவிற்பாகத்தைப் பெறுவதற்கதிகாரமில் லை. ஆகையினால் கேளீர்! தக்ஷனே! யாகத்திற் கதிபதியும் மகாச் சி ரேஷ்டருமான வம்மகாதேவனையே பூஜிக்கலாவீர். (14) ஏனென்று ல ந்த சர்வேசுவரனான பகவானே யெல்லா வேண்டுதலையும் கொடுக்கவு ற்றவ" னென, இவ்வாறம்முனிவரது வார்த்தைகளைக் கேட்டதன்மேல் மறுபடியு மத்துராத்துமன் கூறுகின்றதாவது:—(15) "ஓ! முனிவரே! நீரேன்மிகுந்தப்பிரயாசையெடுத்துக்கொள்ளுகிறீர்?'ஆவோராஜான' மென்ற வேதமந்திரத்தினாலுருத்திரனுக்கவிர்ப்பாகம் கொடுக்கவேண்டுமெ ன்று சொல்லப்பட்டிருக்கின்றது.(16) ஆகையால்யாம்நம்முடையயாக மதிலெந்தவுருத்திரனையாகிலும்பூஜைசெய்கின்றோம். எல்லாவுருத்திரர்க ளுக்குள்ளுமொருவருக்கொருவரோற்றவித்தியாசமில்லையே!(17) ஆகை யால் நமதிச்சையின்படி யவர்களில்யாதாவதொருவர் பூஜைக்குத் தக்கவ

ரெயின்றிமற்றவரில்லை" என, இவ்வாறவன்சொல்லியதைக் கேட்டுத் தத்துவங்களையறிந்த அம்மாமுனிவருரைக்கலாகின்றார்:—(18) "ஓ! கேளீர்! தக்ஷப்பிரஜாபதியே! 'உருத்திரன்' என்ற பெயரின் பொருளானது யாகத்துக்கு மதுபோலவே ஸ்ரீஷண்முகருக்கும், சகலர்களுக்கும் தாபத்தைச் செய்விக்கலுற்ற ஜுவரத்துக்கும் பொருந்தியிருக்கிறதாய்ப் பிரசித்திகொண்டிருக்கின்றதன்றோ! (19) மேலுமது ஸாரூப்பியபதவியை யடைந்திருக்கும் பூதகணங்கள், பாதாளலோகங்களுக்குக் கீழ்ப்பாகத்திலுள்ள ஸ்ரீகாலாக்கினிருத்திரர், (20) ஹாடகேசுவரர், கூசுமாண்டருத்திரர் இவர்களுக்கும் பொருந்தியிருக்கின்றது. தவிரவும், அக்கினிதேவன் தேவர்களுக்காக அவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொண்டு செல்வதற்குள் (21) எப்போதத் தேவர்களாற் பின்தொடர்ந்து துரத்திப் பிடிக்கப்படலாகையி லவன் ரோதனம் (அழுதல்) செய்கின்றதால் 'உருத்திர' னென்ற பெயரின் பொரு ளவ் வக்கினிதேவனுக்கும்பொருந்துகின்றது. (22) மேலும் தமது நேசத்திற் கிசைந்த அடியார்களிடத்துத் தயவினு லவர்களது துக்கத்தைத் தொலைப்பிக்கின்றபடியால ஸாக்ஷாத் பரப்பிரம்மமும், ஸர்வேசுவரனும், மகாதேவனும், முக்கண்ணனும், கழுத்துதனிற் கறுத்தவரும், ஸத்தியாநந்த ஞானப்பாற்கடலும், மகா பரிசுத்தமுள்ளவருமாகிய வப்பரமசிவனிடத்தே அம்மொழியானது காரணப்பெயராகவு மிடுகுறிப்பெயராகவும் பூர்ணமாய்ப் பொருந்தி யேற்பட்டிருக்கின்றது. (23-24) ஆகையினால் கேளீர்! தக்ஷனே! நீர் வீண் பிரமையைவிட்டு மற்றெல்லோர்களையு மொழித்து இயாகங்களுக் கதிபரும், மகேசுவரனுமான ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனையே பூஜைசெய்யல் வேண்டு" மென, (25) அதுகேட்டுத் தக்க னுரைக்கின்றான்:— "ஓ! முனிவரோ! மும்மூர்த்திகளி லவ்வுருத்திரன் சமுகாரத்தொழிலை நடத்தலுற்ற ஒருவனே! பிரம்மவிஷ்ணுக்களாற் சிருஷ்டி ஸ்திதி இவ்விரண்டும் நடத்தப்படுகின்றனவல்லவோ! (26) இப்படியிருக்கையில் சமுகாரத்தொழிலைமட்டில் நடத்துவோனுக் கெல்லாவற்றையும் நடத்தும் தன்மை யெவ்வாறுண்டாகும்? நீர் நிச்சயமாய்ப் புத்திப்பிரமையால்தா னவனை யெல்லாவற்றிற்கும் கர்த்தாவென் றுரைக்கலாகின்றீ" (27) ரென, கேளீர்! 'பிராம்மணேந்திரர்களே! இவ்வாறுரைத்த வப் பாதகனை நோக்கி யத்தவசி கூறியதாவது:— "ஓ! தக்ஷனே! நீர் கொண்டிருக்கும் மிருந்த புத்திப்பிரமையைவிட்டு நல்ல புத்தியை யூன்றிக் கேட்கலாவீர்? (28) ஸ்ரீமகாதேவன் ஞானமூர்த்தியும், ஸத்தியாநந்த குணமுள்ளவருமென்று சொல்லப்படுகிறார். அவருக்கென்று மழிவற்றதான சேதனுசக்தியைத் தவிர வேறு சரீரமில்லை.

(29) அவரே ஸர்வஜகராயிருந்து பிரம்மன், விஷ்ணு முதலியவர்களை ச் சிருஷ்டித் தவர்களுக்குச் சிருஷ்டி, ஸ்திதிமுதலிய தொழில்களையுமே ற்படுத்தியிருக்கிறார். (30) ஸகலமும் நாசமடையும்பொழு தவர்களாற் கூட அவராறியப்படுவதில்லை. காலமாகிய இயந்திரத்தி லகப்பட்டலான இவ்வெல்லோர்களையு மவரெப்போது மாட்டிவைக்கலாகின்றார். (31) காலம் கிரமித்தவுடன் பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய அவ்வெல்லாத் தே வர்களையும் அவர் ஹதம்பண்ணிப் பிறகு லீலாவிநோதத்தினு லவ்வெல் லோர்களையும் சிருஷ்டித் தவரவர்களுக்குத் தொழிலையு மேற்படுத்திப் (32) பிறகவர்களுக் கம் மகேசுவரன் சிக்ஷை, வியாகரணம், சந்தம், நிருக்தம், சோதிடம் கல்பம் ஆகிய வாறங்கங்க ளோடுகூடிய வேதங் களையும் கற்பித்து விபூதி ருத்திராக்ஷங்களையும் தரிப்பித்து (33) ஸத் தியோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் ஆகிய வை ந்து பிரம்மங்களின் சொரூபத்தைக்கொண்ட ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்தி ரத்தையு முபதேசித்து என்றுமழிவற்ற வம்மகாதேவ னவர்களை யெப் போது மிரக்ஷித்துவருவதோ (34) டவர்கள் மறுபடியும் புத்திப்பிர மைகொள்ளும்போ தவர்களை யவ் வீசுவர னடக்கியும் வருகின்றார். அ ப்பரமேசுவரனைத்தவிர மற்றத்தேவர்களாற் சமுகாரத்தொழிலை நடத் தமுடியாதாகையா லதனைச் சகல ஜகங்களுக்கும் பராபர குருவான வச் சம்புவே (மும்மூர்த்திகளி லொருவரான) உருத்திரவுருவம் ‡ கொண்ட வராகி நடத்தலாகின்றார். ஆகையால் பிரபஞ்சங்களின் சிருஷ்டி, ஸ்தி தி, சமுகாரம் பிறகு சூக்ஷ்மவுருவத்தோடுப் பிரம்மத்தினிடத்து லயித் தல் முதலியவையெல்லாம் மகாப்பிரபுவும், (36) மகாதேவனும், ஸத் தியஞானாநந்த ஸ்வரூபியுமான வப் பரமேசுவரனாலே நடத்தப்பட்டு வ ருகின்றன. முந்திச் சில இருடிகளுக் கிம்மாதிரியாகவே சந்தேகமுண் டாகிக் (37) கேளீர்! பிரஜாபதியே! அவர்கள் மகாமேருகிரிக்குச்செ ன் றங்குப் பிரம்மனைக்கண்டு பற்பல துதிகளால் தோத்திரம்பண்ணி வி நயத்தோடு வணக்கமுற்றவர்களாகி யவனை வினவியதாவது:— (38) "ஓ! சகலகுணங்களும் நிரம்பப்பெற்ற பிரம்மதேவா! சந்தேகத்தினு ல் மனம் தடுமாறலுற்ற இவ்வெங்களுக்குப் பரப்பிரம்மமும் பரஞ்சோ தியுமான தேவன் யாரென்பதைத் தெளிய வுரைக்கவேண்டு" மென,

‡ இதனாலு மின்னுமிவ் வத்தியாயத்தி னனேகச் சுலோகங்களாலும் மும்மூர்த்திகளி லொருவரான 'ஸ்ரீருத்திரர்' என்பவரைத் தவிர பரப்பிரம்மமூர்த் தியான ஸ்ரீபரமசிவன் ஓர் நான்காவது மூர்த்தியாக விளங்குகின்றாரென்பதே ஸ்ரீவேதவியாச முனிவரின் கருத்தென்பதைக் காண்க.

(39) பிரம்மனு மவர்களது வசனத்தைக் கேட்டவுடன் ஹிருதயகமல மத்தியில் விளங்கியிரானின்றவரும், கறுத்த கழுத்தைக்கொண்டவரும், முக்கண்ணுடையவரும், சந்திரகலையை யலங்காரமாய்ப் பூண்டவரும், சாந்தமுள்ளவரும், ஸச்சிதாநந்தமூர்த்தியும், ஓர்பக்கத்திற் கறுப்பும் மற்றோர்பக்கத்திற் சுவப்புமான நிறத்தைக்கொண்டவருமாகிய ஸ்ரீபரமேசுவரனை யப்போது கணநேரம் தியானம்பண்ணி (40-41) யாநந்தக்கண்ணீர்த்திவிலைகளால் நனையப்பெற்றவரும், சந்தோஷத்தினுல் வார்த்தைகள் தழதழக்கப்பெற்றவருமாகி "ஓ! முனிவர்களே! அஷ்டைசுவரியங்களும் நிரம்பப்பெற்றவரும், சகல வித்தைகளுக்கு மீசுவரனும், சகல ஜகங்களுக்கும் பிரபுவும், (42) பிரம்மனுக்கும் வேதங்களுக்கு மதிபதியும், அடியார்களுக்குச் சுகத்தைக் கொடுக்கலுற்றவரும், என்றுமழிவற்றவரும், ஸதாசிவனும், பரஞ்சோதியும். பிரணவத்தினிற் குடியிருப்போரும், மிகுந்த பெருமைபொருந்தியவருமான (43) ஸ்ரீசங்கரனே பரப்பிரம்மமேயின்றி மற்றவரல்லவொன்று கைகளை யுயரத்தூக்கிக்கொண்டு சத்தியமாய்ச் சொல்லுகின்றோம்: இது சத்தியம் சத்தியம்; (44) தவிரவும் வேதங்கள், எங்கும் நிறைந்திருப்பவரும், ஸத்தியப்பொருளும், பரப்பிரம்மமூர்த்தியும், ஓர்பக்கத்திற் கறுப்பும் மற்றோர்பக்கத்திற் சிவப்புமான நிறத்தைக்கொண்ட புருடரும், மேல்நோக்கி ஜுவலிக்கலுற்ற வீரியத்தை யுடையவரும், பிரபஞ்சரூபியுமான வம்மகேசுவரனை நமஸ்காரம்பண்ணி மிகுந்த பயத்தோ டவரையே ஸர்வேசுவரனென்று முறையிடுகின்றன. ($45\frac{1}{2}$) ஆகையா லவரையே ஸர்வேசுவரனென்று யாம் நூறுமுறையாய்க் கூறுகின்றோம். (46) உலகங்களி லவருக்குச் சரியாகவாவது மேற்பட்டாவது மற்றொருவருமில்லை. மேலும் சருவப்பிரபஞ்ச ஸ்வரூபியான வப்பரமாத்துமாவானவர் பெரியதுக்கெல்லாம் பெரியவரும், அணுவுக்கெல்லா மணுவுமா யசைவற்ற கட்டைபோலாகாயத்தி லோய்ந்து விளங்கி நிற்கின்றார். அவராலே யிச்சகம்முழுதும் நிரம்பலாகின்றது. ($47\frac{1}{2}$) வேதங்கள் மனதினுற்கூட அவரையெட்டமுடியாமற் களைத்துத் திரும்பலாகின்றன. (48) அப்பரப்பிரம்மத்தினுடைய ஆநந்தத்தை யறிந்தவர்க் கோரிடத்தும் பயமில்லை. இப்போதுகூடப் பிரம்மனுகிய வெந்தனுலும் விஷ்ணுவாலு மம்மகேசுவரன் காணமுடியக்கூடவில்லை. (49) அவ்வீசுவரன் சகல பசுக் (பிராணி) களுக்கும் பதியாகின்றார். பிரம்மாவாகிய யாம் முதலிய வெல்லோரும் பசுக்களே; அவரோ கருணைமூர்த்தியும், ஒப்பற்றவரும், அடியார்களுக்கபயமளிப்பவரும், (50) சகல ஐசுவரியங்களோடும் கூடியவரும், ஆ

காயமத்தியில் விளங்கியிருப்பவருமான சர்வேசுவரன். ஓ! இருடிச்சி ரேஷ்டர்களே! வளர்த்திச்சொல்வதில் யாது பயன்? பரப்பிரம்மமென்ப தவர்தா" (51) னென, இவ்வா றப் பிரம்மனது வசனங்களைக் கேட்ட வுட னம்முனிச்சிரேஷ்டரெல்லாம் பிரமைதெளிந்தவர்களாகி ஸ்ரீமகா தேவனையே நித்திய பரப்பிரம்மமா(52) யறிந்துகொண்டதன்மே லப் பிரம்மனைப் பற்பல துதிகளால் தோத்திரம்பண்ணி வந்தனித்துத் திரு நீற்று முப்பட்டைகளையு முருத்திராக்ஷமாலைகளையு மாபரணங்களாய்ப் பூண்டவர்களும், சிரேஷ்டமான ஸ்ரீபஞ்சாக்ஷரமந்திரத்தையே ஜபம் செய்வதில் மிகுந்த மனக்கவலை கொண்டவர்களுமாகிக் கேளீர்! தக்ஷ ப்பிரஜாபதியே! அச்சிவனடியாரெல்லாம் மோக்ஷஸாம்பிராஜியத்தை ய டைந்துவிட்டார்கள். (54) ஆகையால் சகல குணங்களும் நிரம்பப்பெ ற்ற ஜகதீசனுன வப்பரமசிவனே பரமாத்துமா; அம்மகாதேவனைத்தவி ர வேறொருவருமில்லை. ஸர்வாந்தர்யாமியாய்க் கேட்பவரும் பார்ப்பவ ரு மப்பராபரக் கடவுளே! (55) யென்று உபநிடத வாக்கியங்களுக் கெல்லா மம்மகேசுவரனிடத்தே முக்கியமான பற்றுதல். மேலு மப்ப கவானே பதியென்றும் மற்றவரெல்லாம் பசுக்களென்றும் (56) முந் திப் பிரம்மதேவரால் வேதவாக்கியங்களின் முக்கிய ஆதாரங்களைக்கொ ண்டு நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. தவிரவும் நீரும் முந்திச் சிருஷ்டிகர் த்தரானப் பிரம்மதேவன் வசனத்தைக் கேட் டத்தேவேசனிடத்தே யி ப்பேர்க்கொத்த பக்தியைக்கொண் டசாத்தியமான தவத்தைச் செய்து ஓ! பிரஜாபதியே! இப்பேர்க்கொத்தச் சிரேஷ்டமான ஐசுவரியத்தை யும் பெற்றிருக்கிறீர். (58) பிரம்மன் சிருஷ்டிகர்த்தாயிருப்பதும், வி ஷ்ணு வசுரர்களைச் சமுகரிப்பதும், இந்திரன் சொர்க்கத்தை யாள்வது ம் சிவபூஜையின் மகிமையால்தா னல்லவோ; (59) நிச்சயமா யுமக்கு மரணகாலம் நெருங்கிவிட்டபடியால்தான் நீர் மாயையினுல் புத்திப்பிர மை கொண்டிருக்கிறீர். அவருடைய மாயையைக் கடப்பதற்கு விஷ் ணுப்பிரம்மர்களாலும் முடியாதே! 'பிரகிருதி' யென்பதே மாயையெ னப்படும். அம்மாயையையுடையவ ரம்மகேசுவரனே! அக்கொடியமா யையோ மகாத்துமர்களான சிவனடியார்களை வாதிப்பதில்லை. (61) ஓ கோ! ஆகையால்தான் நீர் கொஞ்சமேனு மவரை நினைக்கவில்லை. பிர ம்மவிஷ்ணுக்கள் முதலிய வித் தேவரெல்லாம் மிகுந்த மோகவசத்தி ஞ (62) லவிர்ப்பாகத்தி லாசைகொண்டவர்களாகி யும்மண்டைக்குவ ந்திருக்கிறுர்கள். ஓ! துர்நடத்தைக்கார தக்ஷனே! வளர்த்துவதிற் பய னென்ன? நீர் மேன்மையான நன்மையை விரும்புவீராகி (63) விப்

போது வேள்விதனுக் கிறைவனான ஸ்ரீமகாதேவனை யவிசினாற் பூஜை செய்யும்; அம்மகாதேவனே சகலப் பிரபஞ்சச் சுவரூபியான பரப்பிரம் மமேயின்றி மற்றொருவருமில்லை. (64) கேளீர்! தக்ஷா! நாமுமக்கு நிச்சயமாய் நன்மையை விரும்பியே யிங்ஙனமுரைத்தன" மென்றிவ்வா றெல்லாமம்மாமுனிவ ருரைத்துவிட்டு மௌனம்கொண்டு சும்மாவிருந்த னர். (65)

பனிரெண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கங—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிற்பாடு மகா பாதகனான வத்தக்கன்சிரித்துக்கொண்டுவசனமுரைத்ததாவது:—"கேளீர்! முனிவ ரே!அவ்வுருத்திரன்பரமாத்துமாவும்,பரப்பிரம்மமுமெங்ஙனமாவான்?(1) அவன் பரப்பிரம்மமாயினேனவன் நிருவாணியாயிருக்கின்றான்? ஏனவன் சூலத்தையும் மெத்த விழிவான மண்டையோட்டுக் கப்பறையையும் த ரித்திருக்கின்றான்? (2) ஏனவன் கொஞ்சமேனும் பயமிலச்சையில்லா மல் தெருத்தெருவாய்ப் பிச்சையெடுகின்றான்? மேலு மச்சிவ னேன் க டினமான புலித்தோலை யுடுத்திருக்கின்றான்? (3) ஓர் மானையும் கொடூ ரமான கோடாலியையும் கைகளிற் சுமந்திருக்கின்றானன்றோ! மகாகோ ரங்களும், கொடிய விஷத்தைக் கொண்டவையுமான பாம்புகளையு முட ம்புதனிற் சுற்றிக்கொண்டிருக்கின்றான். (4) எப்போதும் மகா பயங் கரங்களான பூதசேனைகளாற் சுற்றிலும் சூழப்பட்டிருக்கிறான். பல்லி ளிக்கலுற்ற வோர் முண்டத்தலையை யெப்போதும் தலைதனில் வைத்தி ருக்கின்றான். (5) மிகுந்த சத்தத்தினால் பயங்கரமாகிய வோருடுக்கு தனைக்கைமீது கொண்டிருக்கின்றான். இப்போதுகூடக் காலின்கீழாக வபஸ்மாரத்தை மிதித்திருக்கிறான். (6) நெருப்புதனைக் கைமீது வைத் துக்கொண்டு பயங்கரமாய்க் கூத்தாடுகின்றானன்றோ! மேலுமப்பரமாத் துமாவாகியவன் கெட்டியான யானைத்தோலை யேன் போர்த்திக்கொண்டி ருக்கிறான்? (7) அப் பிரம்மமாகியவ னேன் பன்றியின் பல்லைப்பிடுங்கி க் கைமீது தரித்திருக்கிறான்? இக்கொடியனால் மிக்வு மிழிவான வோரா

மையெலும்பும் பிடிக்கப்பட்டிருக்கிறது. முந்தியவன் கெட்டநடத்தை யால் ஹாலாஹல விஷத்தைப் புசித்திருக்கிறான். அவன் துராசையினு லுலகங்கள்தோறும் பிச்சையெடுக்கின்றான். (9) மெத்த விகழ்வான வோர் பருத்த தொந்தியுடைய கிழக்காளையின்மே லேறலாகின்றான். த விரவு மவனெப்போதும் வேறுமுண்டத் தலைகளின்மாலையை யணிந்து கொண்டிருக்கிறான்.(10) மகாஅசுத்தியானவெலும்புகளை யெப்போதும் பூமாலைபோல் மெய்தனிலணிந்திருக்கிறான். இன்னுமவ னிப்போதுகூட த் தலைமயிர்களைமுப்பிரிநூலாக வணிந்திருக்கின்றானல்லவா? (11) அ வனெப்போதும் சூலத்தினுடைய நுனியில் மகா பயங்கரமான பிணத் தைக் கோர்த்துக்கொண்டிருக்கிறான். சுடுகாட்டுச் சாம்பற்களை யுடம் புதனிற் பூசிக்கொண்டெப்போதும் முயன்றவனாகி (12) மதத்தினால் மிகுந்த வட்டகாசம்பண்ணிக்கொண்டு கூத்தாடுகிறான். மேலுமவன் ஸ கலப் பிராணிகளையும் சமுகரிப்பவன்; கொடியவன்; பற்பல வுருவங்க ளைக் கொண்டவன். (13) அவன் காமவிகாரத்தினால் கண்தெரியாதவ னாகி யோர் பெண்ணைத் (கங்கை) தலைமீதும் மற்றொருவளைப் (அம்பி கை) பாரிசத்திலு மெப்போதும் தூக்கிவைத்திருக்கிறானென்றுஉலகினி ல் பிரசித்தியடைந்திருக்கின்றது. (14) தவிரவு மவன் பெண்டீர்பிள் ளைகளோ டோர் குடும்பியாயிருந்தும் தரித்திரனாயிருக்கின்றான். அவ ன்தமோ குணமுடையவன்; கொடியன்; எல்லோர்களுக்கு மபகாரம் செய்பவன். (15) இப்படியிருக்கையில் ஓ! மாமுனிவரே! இப்பேர்க் கொத்த அவ்வுருத்திர னெவ்வாறு பரப்பிரம்மமாவான்?" என, இவ்வா றுரைக்கலான வத்தக்கனை யம்மாமுனிவர் மிகுந்த கோபத்தோடு பார் த்து (16) "ஓ! இப்பேர்க்கொத்த பாவியான தக்கனோடு வார்த்தை பேசுவது மவன் முகத்தைப் பார்ப்பதும்கூடத் தகுதியல்ல; (17) இப் பாவி மிகுந்த புத்திப்பிரமையாலே சபைதனி லிவ்வா றுரைத்தனன். இங்கவனுக்குப் பதிலுரைக்காமற் போய்விடுவதும் தகுதியல்ல" (18) வென்று மனதினில் நிச்சயித்துக்கொண் டத் தவசிச்சிரேஷ்ட ரவனை நோக்கி யுரைத்ததாவது:— "ஓ! கோ! கோ! தக்ஷா! நீ மிகுந்த மதி மயக்கவசத்தினால் ஸ்ரீ சிவபரமாத்துமாவினுடைய (19) வித்திவிய சரி த்திரங்களையெல்லா மோ ரிகழ்ச்சிபோற் பிதற்றுகின்றாய். நீ யம் மகே சுவரனுடைய விச் சரித்திரங்களையெல்லாம் நீ யெவ்வா றறியலாவாய்? (20) சகல ஸ்வரூபியான வம் மகேசுவரன் சகலப் பிராணிகளுக்குள் ளு மந்தர்யாமியா யிருப்பவர். அவருடைய அற்புதமான உருவத்தை க் காண்பதற்கு யாவராலும் முடியாது. (21) என்றாலும் சித்ஸ்வரூபி

யான ஸ்ரீ சம்புவானவர் சகல லோகங்களுக்கு முபகாரநிமித்தமா யில க்ஷுமீவிலாசம்பொருந்திய கைலைகிரிதனில் மிகுந்த சுந்தரத் திருமேனி யோடு விளங்கிக்கொண் (22) டங்கிருந்தபடியே ஸகல தேவர்களையு மனுக்கிரகித்துவருகின்றார். அவர் நிருவாணியாயிருப்பதுமுதலான ச ரித்திரங்களெல்லா மொவ்வோர் காரணார்த்தமாயேயன்றி வேறில்லை. (23) அடா! துர்நடத்தைக்கார தக்கா! நீ ஞானமாகிய கண்ணைக்கொ ண்டவனாகி யதனைக் கேட்கலாவாய்.

பூர்வத்தில் தாருகாவனத்திலுள்ள மிகுந்த மகிமைபொருந்திய சில முனிவர்கள் (24) கொடிய மனதையடைந்து ஸ்ரீ மகாதேவரிடத் தில் பக்தியில்லாதவர்களாகிக் கேவலம் ஜபம் தவம் முதலிய கருமங்க ளையே முக்கியமாய்ப் பாராட்டிக்கொண்டு தவத்தைத்தவிர யாதொரு தெய்வமு மில்லையென்றும், (25) இயாகம்தவிர மற்ற யாதொரு தெ ய்வமும் பலன்கொடுப்பதில்லையென்றும், எல்லோர்களுக்கும் சத்திய மாயவரவர்களின் கருமங்களே பலனைக் கொடுக்கலுற்றதென்றும், (26) கருமத்தினாலொழிய பலன்கொடுக்கலுற்ற மற்றத்தெய்வமே யில்லை யென்றும், பிராணிகளுக்குப் போக மோக்ஷங்கள் கிடைப்பது மக் கரு மத்தினால்தானென்று (26) மிவ்வாறெல்லாம் வீண் விதண்டாவாதம் பண்ணிக்கொண்டே யவர்கள் வெகுகாலம் தவம்செய்துவந்தார்கள். பிறகுவிஷ்ணுப்பிரம்மர்கள்முதலிய தேவோத்தமர்களவர்களிவ்வாறுபா விகளாயிருப்பதை (27) யறிந்ததன்மேல் “ஓ! கோ! பாவத்தினாற் சித் தம்கெட்டுப்போனவர்களுக்கு ஸ்ரீ சிவபிரானிடததுப் பக்திநேரிடாதா கையால் தகுந்த முயர்ச்சியாலின்றி யிவர்களுக்கு ஸ்ரீ சங்கரனிடத்துப் பக்தியுண்டாகப்போவதில்லையென்று” கருதி (28) கேளாய்! தக்ஷா! அவர்கள் சபித்துவிடுவார்களே யென்ற பயத்தினா லவர்களைச் சிக்ஷிப்ப தற்குத் திறமையற்றவர்களாகி யப்போ தத் தேவர்க ளிவற்றையெல் லாம் ஸ்ரீ மகாதேவரிட மறிவிக்க, அப்போதவ ரிவைகளைச் செவிகொ ண்டதன்மே லவர்களை யனுப்பிவிட்டு வெகுகாலம்சென்றபிறகு உலகு க்கெல்லாம் சுகமளிக்கலுற்ற ஸ்ரீ சங்கர (30) னவ்விருடிகளையெல்லா ம் மயக்குவதற்காக ஸ்ரீ மகாவிஷ்ணுவைத் திருவுளமதில் நினைக்க, அவர து திருவாக்கினையின்படியே நாராயணன் ஸ்ரீ சிவபிரான் சன்னிதிக்குத் துரிதமாய் வந்தனர். (31) பிறகம் மகேசுவரன் தமது சிங்காதனத்தி லிருந்தபடியே யவரது கைதனைப்பற்றிக்கொண் டதினின் றிறங்கியரு ளி மகா பரிசுத்தமான வக்கைலையைவிட்டுத் துரிதமாய்ப் புறப்பட்டு (32) “ஓ! விஷ்ணுவே! நமது திருவாக்கினைக் கமையலுற்ற நீர் மோ

இனியுருவ மெடுத்துக்கொண்டு விணானுஷ்டானங்களைச் செய்துவரலுற்ற அம்முனிவர்களை மோகிக்கச் செய்யலாவி" (33) என்று திருவாக்கருளிவிட் டப்போது தாமு மோர் நிருவாணியாகி யிச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி ஆகிய மூன்று சக்திகளி னுருவமாகிய வோ ரற்புதமான முச்சூலத்தையும், (34) பராசக்தியி னுருவமாகிய வோர் கப்பரையையும், திரோதான சக்தியி னுருவமாகிய விசித்திரங்களான பாதுகைகளையு (35) மமைத்துக்கொண்டு துரிதமா யவ் வீசுவரன் தாருகாவனத்திற் கேகினார். அப்போ தம் மோகினியு மம்மகேசுவரனைக் கண்டு மோகம்கொண் (36) டப்பரமாத்துமாவோடு புணர்வதற்கு வேண்டிக்கொள்ளுகையி லப்போது மேல்நோக்கும் வீரியத்தைக்கொண்ட வச் சம்புவானவர் சுழலலுற்ற கடைவிழிகளைக் கொண்டவளும், (37) நேர்த்தியான ஹாரங்களையும், பிறர் மனசுகளைத் திருடலுற்ற பல் வரிசைகளாற் சிறந்த மந்தஹாஸத்தையும் கொண்டவளும், புதிய பவழத்திற்கு நிகராய்ப் பிரகாசம்பொருந்திய தளிர்போன்ற வுதடுகளை யுடையவளும், (38) சந்திரகலைபோல் வளைந்த புருவங்களைச் சிணுக்கலுற்றவளும், கறு நெய்தல்மலர்போன்ற கண்களைக்கொண்டவளும், நன்கு வட்டமாய்ப் பருத்த கொங்கைகளின் பாரத்தினாற் கொஞ்சம் வணக்கமுற்றவளும், மெல்லிய இடையுடையவளும், (39) நீலோத்பல மலருக்கு நிகரான சோபையைக்கொண்ட உரோமவரிசையால் விளங்கலுற்றவளும், சிங்காரவசனங்களையே முக்கிய வார்த்தையாய்க் கொண்டவளுமான வம்மோகினியைக் கண்டு ஸ்ரீ பகவான் புன்னகைப்புற்ற திருமுகத்தைக் கொண்டவராகி (40) "ஓ! சகல லோகங்களையும் மோகிக்கச் செய்யலுற்ற மாதரசே! மற்றோர்காலத்தி லுந்தனோடு சுரதம்தொடக்கலாகின்றோம்; நீ யிப்போது தாருகாரணியம்சென் றங்கு நம்மீது பராமுகமாயிருக்கலுற்ற (41) தவசிகளை மோகிக்கச்செய்துவிட் டிங்கு சீக்கிரம் வரலாவா" யென்று கட்டளையிட் டப்போ தவளை யனுப்பினார். பிறகு பழுதற்ற வழகுகொண்ட மேனியுடைய வம்மோகினியும் ஸ்ரீ பரமேசுவரனுடைய வத் திருவசனங்களை நல்லதென்று கொண் டத் தவசிகளிருக்கும் தவவனம் செல்லலானாள். (43) லத் தவசிகளெல்லோரும் சிங்காரமான வொய்யாரநடையோடு நான்குபக்கங்களிலு மிங்குமங்கும் பார்த்துக்கொண்டு செல்லலுற்றவளும், புன்னகைப்புற்ற சுந்தரவதனத்தையுடையவளும், (44) மான்பேடுபோற் சுழட்டலுற்ற விழிகளைக்கொண்டு வனமத்தியி லுலாத்தலுற்றவளும், மன்மதனாகிய சம்பாவித்தை விதைப்பதற்குற்ற சிறந்த கழனியையொத்த வடிவத்தைக்

கொண்டவளும், ஒய்யாரத்தினு லடிக்கடி பின்கட்டுமீது வைக்கப்படலான தளிர்போன்ற உள்ளங்கையைக் கொண்டவளும், பாதசரங்களின் மதுரவொலியினுல் மன்மதனுக் கறிவிக்கலுற்றவளுமான வம் மோகினியைக் கண்டமாத்திரத்தில் (46) கேளீர்! பிரஜாபதியே! அம்முனிவரெல்லாம் காமன் கணைகளாற் பீடிக்கப்பட்டவர்களாகித் தங்கள் தங்கள் நியமங்களை யொழித்தும், இடுப்பாடைக ளவிழலாகிக் காமவிகாரத்தினு லவளைச் சுற்றிக்கொண் டிந்திரியங்களை யொழுகவிட்டுக்கொண்டு மவளை (47½) யுற்றுற்று நோக்கிப் பலவிதமா யம்மாதரசை வர்ணித்து (48) மவரவர்க ளிச்சைபோனபடி மோகவசத்தினுற் சரச சல்லாபம் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது ஸ்ரீமகாதேவனும் மிகுந்த யௌவனமுடையவரும், கோடி மன்மதர்களுக்கு நிகரான சுந்தரத் திருமேனியுடையவருமான வோர் பிச்சைக்கார னுருவத்தைக் கொண்டவராகி யதே வீதிதனில் வந்து (49½) சிலவிடத்தில் வேதவாக்கியங்களைச் சொல்லிக்கொண்டே பிச்சைவாங்கியும், (50) சிலவிடத்தில் வீணையை மீட்டி நல்ல ஸ்வரத்தோடு பாடிக்கொண்டும், சிலவிடத்திற் சிவாகமங்களை யோதிக்கொண்டும், சிலவிடத்தில் சிவநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டும் திருவிளையாட்டாய்ப் பிச்சைவாங்கி வந்தனர். (51)

பதின்மூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கச—வது அத்தியாயத்தினர்த்தம்.

இப்பிரகாரமாக ஸ்ரீஜகதீச னுல்லாசமார்க்கமாய்ப் பிச்சைவாங்கி வக்குகையி லிருடிபத்தினிகளெல்லாம் காண்டி நிரம்ப அன்னத்தையெடுத்துக்கொண்டு வந்து யௌவனப்பருவமுடைய சுந்தர வுருவத்தைக் கொண்ட வம் மகாதேவனைக் கண்டவுடன் காமவெறிகொண் (1½) டாபரணங்கள் கயண் டிடுப்பாடையின் முடிச்சவிழலுற்றவர்களும்,(2) அல்குலினி லூற்றம்கொள்ளப்பெற்றவர்களும், தேகத்தி னுறுப்புகள் மிகுந்த மயிர்க்கூச்சல் கொள்ளப்பெற்றவர்களும், கூந்தல் முடியவிழக் கொண்டவர்களும், சரச வுல்லாஸ வார்த்தைகளைப் பேசலுற்றவர்க

ளுமாகிப் (3) பிச்சைபோடும் வியாஜத்தோ டப் பிச்சைக்காரரிடம் வ ந்தவுட னப்போ தவர்கள் கர்ப்பம் தரிக்கப் பெற்றவர்களாகி யோர் கணத்துக்குட் சிவாக்கினையால் பிள்ளைகளையும் பெற்றார்கள். உடனே யப்பிள்ளைகளு மெழுந்து ஸ்ரீபரமேசுவரனை விநயத்தோடு வந்தனிக்க, அப்போ தப்பிச்சைக்காரரும் தமதப் பிள்ளைகளைச் சந்தோஷத்தோடு திருக்கண்ணுற்றுத் திருவாக்கருளியதாவது:—(5) "ஓ! புத்திரர்களே! நீங்களெல்லோர்களும் நமதாக்கினையின்படி யிங்கு நம்மைத் தியானம் செய்து மிகுந்த தவத்தைச்,செய்யலாவீர்க" ளென்றந்த ஞானமூர்த்தி யான ஜகதீச னவர்களையனுப்பிவிட் டவ்விருடிபத்தினிகளாற் பின்தொ டரப்பெற்றவராகி யங்கு பத்தியுலாவினர். ($6\frac{1}{2}$) மேலுமப்போது சகல அவயவங்களும் சுந்தரமா யமையப்பெற்ற வம் மோகினியும் சுற்றிலு மவ் விருடிகளாற் சூழப்பெற்றவளாகி யங்கப் பரமேசுவரனண்டைக்கு வந்தனள். ($7\frac{1}{2}$) முனிவர்களப்போ தங்கு தங்கள் பெண்டீர்கள் காம வெறிகொண்டிருப்பதைப் பார்த்து "ஓ! இப்பிச்சைக்காரன் சிவனே! இவனிங்குவந்து மந்திரவாதியானவன் மந்திரத்தினாலும் மருந்தினாலும் செய்வதுபோல் நமது மங்கையர்களை மாயத்தினால் மயக்கிவிட்டான். (9) நம்மை மயக்கலான சிறந்த மங்கையாகிய விம் மோகினிவிஷ் ணுவே! அவனே யிவ்வாறு செய்திருப்பது நிச்சய" (10) மெ ன்றிவ்விதமாய் ஞான திருஷ்டியா லறிந்துகொண் டம்முனிவர்கள் கோபாவேசம் கொண்டவர்களாகி "ஓ! கோ! நமது தவத்திற்கு நேரி ட்ட குறைவினா லேதாயினும் பாவமுண்டானா (11) லதனைத் தக்கப் பிராயச்சித்தத்தினால் தீர்த்துக்கொள்ளலா மென்பதிற் சந்தேகமில்லை. ஆனா லிஸ்திரீகளின் கற்பழிநலை ந் தீர்த்துக்கொள்ள இடமேயில்லையே! (12) ஐயோ! சகல லோகங்களிலும் பிரசித்திப் படும்படியான வபகீ ர்த்திக் கிடமாயிற்றே!" யென்றவர்கள் மனதுக்குள் ளாலோசித்துக் கொண்டு தங்கள் மனையாள்களைப் பலவிதங்களாலும் கூப்பிட்டு 'ஓ! ஸ் திரீகளா! நீங்கள் நமது வீடுகளுக்குப் போங்க" ளென்றவர்கள் பலத டவை யுரைத்ததன்மேல் கேளாய்! தக்ஷா! அப்போ (14) தம்மணத் தோடிருந்த வச்சிறந்த மங்கையரெல்லோர்களும் ஸ்ரீபரமேசுவரனைப் பி ன்றொடர்ந்தோடாம லவரதாக்கினையின்படியே யோர் கணநேரத்திற் குள் தங்கள் தங்கள் வீடு சென்றுவிட்டார்கள். ஓ! இது ஆச்சரியம்! ($15\frac{1}{2}$) ஓ! கேளாய்! தக்ஷா! பிறகு விஷ்ணுவானவர் தம் சுய உருவ த்தைக் கொண்டவராகி ஸ்ரீமகாதேவனை வந்தனித்துச் (16) சிறந்த துதிகளால் தோத்திரம்பண்ணி மிகுந்த பயபக்தியோ டஞ்சலிகொண்டு

நிற்கலாயினர். அப்போது பிரம்மன் முதலிய தேவர்களு மங்குவந்து ஸ்ரீமகேசுவரனை (17) வந்தனித்து மிகுந்த பக்தியோடு தோத்திரம் செய்தார்கள். பிறகு நிஜவுருவத்தைக் கொள்ளலான பரமகலியாண சீலரும், கறுத்த கழுத்தையுடையவரும், பராபரக்கடவுளு மொப்பற்றவருமான சிவபரமாத்துமாவை யப்போது முனிவர்கள் கண்டு மிகுந்த கோபம்கொண்டவர்களாகி (18½) "ஓ! இவன் நமக்கு மிகுந்த வபகீர்த்தியை யுண்டாக்கியபடியா லிக்கொடிய தொழிற்காரனை யாம் தவத்தின் மகிமையாற் கொன்றுபோடவேண்டு" (19½) மென்று நிச்சயித்துக்கொண் டவ்வெல்லோர்களு மாபிசாரப் பிரயோகம் (ஏவல்வைத்தல்) செய்தார்கள். (20) அப்போ தங்கிருந் தோர் கொரமான புலி, கண்டனகோடாலி, மான், ஸர்ப்பம் பயங்கரமான பல பூதங்கள், (21) பல்லிளிக்கலுற்ற வோர் முண்டத்தலை, மகா பயங்கரமான அபஸ்மாரம் இவைகளெல்லாம் மிகுந்த சத்தத்தோடு கூடிய வட்டகாசங்களுடனும் கொரவசனங்களுடனு முண்டாகலாகையிற் (22) சகல லோகங்களிலுமுள்ள வெல்லாஜனங்களும் பயந்து நடுக்கம்கொண்டார்கள். அப்போதுப் பிரம்மன் முதலிய தேவரெல்லோர்களும் மிகவும் நடுநடுங்கியவர்களாகி ஸ்ரீசிவபரமாத்துமாவினுடைய பின்பாகத்திற் பதுங்கலானார்கள். (23½) பிறகு ஸ்ரீபரமேசுவர னவைகளது கர்வத்தோடுகூடிய மிகவும் பயங்கரமான வோசைகளைக் கேட்டுத் தம் திருவுளத்தி லவைகள் வருகின்றதை யறிந்து நிற்கலாகையி லதற்குள் கொடிய முகத்தையுடைய வப்புலியானது சிவபிரானை யதட்டிக்கொண் (25) டவரைக் கொல்லக் கருதியதாகிக் கோபத்தோடோர் கைதனை யுயரவோங்கிக்கொண் டவரருகினில் வந்தது. அப்போது பகவானும் தமது கையினுலதின் கடினமான வாலைப்பற்றி யடித்ததனைக் (26) கொன்று தோலையுரித்து வத்திரம்போ லுடுத்தலாயினர். அதன்பிறகு வரலான கண்டனகோடாலியை யப்பரமேசுவர ஞோயுதமாய் வைத்துக்கொண்டு, மிகுந்த சத்தத்தோ டதிகோரமாய் வரலுற்ற மானையும் கையினுற் பிடித்து "ஓ! மானே! நீ யெப்போதும் சத்தம்செய்துகொண்டு நமது செவியண்டையி லிருக்கலாவா"யென்றதனையும் (28) வைத்துக்கொண்டார். கேளீர்! பிரஜாபதியே! பிறகு சுயாதீன முள்ளவரும், ஸகலப் பிரபஞ்சச் சுவரூபியுமான வம்மகேசுவரன் மகா பயங்கரமாய்ச் சீறிக்கொண்டு வரலுற்ற பாம்பைத் (29) தாம் சகல ஆபரணங்களாலு மலங்கரிக்கப் பெற்றவராயினு மோராபரணமாய்ப் பூட்டிக்கொண்டார். பிறகு மகா கோரங்களா யட்டகாசம் செய்துகொண்டுவரலான வெல்லாப் பூதகண

ங்களையும் சருவவல்லமைகொண்ட வப்பகவான் தமக்குச் சைனியங்க ளாக வைத்துக்கொண்டு (30½) பிற்பா டங்குவந்த, பல்லிளிக்கலுற்ற தலைமுண்டத்தையு முச்சிமீது கொண்டருளினர். (31) தவிரவு மங்கு வந்த கொடியதான அபஸ்மாரத்தைக்கூட பொன்னடியின்கீழாய் வைத் து மிதித்துக்கொண்டுவிட்டனர். இவ்விதமா யவையெல்லாம் வீணாகி விட்டபோ தம்முனிவர்கள் மிகுந்த கோபங்கொண் (32) டப்போர்க் கொத்த ஸ்ரீபரமேசுவரனைக் கொல்லவேண்டு மென் றக்கினியை யேவி விடலாகையில் பிரளயகாலாக்கினிக்கு நிகராய் ஜுவலித்துக்கொண்டு வ ந்த அவ்வக்கினியையும் கைமீ தேந்திக்கொண்டார். (33) பிற்பா டவ்வி ருடிக ளச் சிவபிரானைக் கொல்வதற்காக மகா மகா கோரங்களாகிய மந் திரங்களைத் தங்களது தவத்தின் வலிமையினு லோர் பெரிய வுடுக்காய மைத்தவுடன் (34) மகா பயங்கரமாய்ச் சத்தம் செய்துகொண்டுவந்த அவ்வுடுக்கையும் ஸ்ரீபகவான் கைமீது தரித்துக்கொள்ளலாயினர். இ வைகளும் வீணாகிவிட்டவுட னம்முனிவர்கள் மகா கோபாவேசம் கொண்டவர்களாகிக் கேளீர்! தக்ஷப்பிரஜாபதியே! அவ்வெல்லோர்க ளு மம் மகாதேவனைச் சபிக்க, அப்போ தவர்களின் சாபங்களும் எரிய லுற்ற பெருந்தீ முகத்தில் மிகுதியான பஞ்சுப்பொதிகள் படுவதுபோ லவரிடத்து நிஷ்பலமாகிவிட்டன. (36½) பிற்பாடவ் விருடிகளெல் லோரு மிவைகளையெல்லாம் கண்டு மிகுந்த பயங்கொண்டவர்களாகி (37) "ஓ! கோ! நமது தவங்களும், சகல மந்திர தந்திரங்களு மிம்ம கா புருடனிடத்துப் பயனடையவில்லையே! இவன் மானிடனா யதிக் கிரமித்தவ" (38) னென்று சிந்தைகொண் டவர்களெல்லாம் வெட்கத் தினுல் தலைகுனியலானுர்கள். அப்போது ஸ்ரீமகாதேவனும் மந்தகாஸ முற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி (39) 'ஓ! இத்தவசிக ளின் னும் நமது மகிமை யிவ்விதென் றறியவில்லை' யென்று திருவுளத்திற் கொண் டப்போது மகா தாண்டவமாடலாகையி (40) லவர்க ளந்நட னத்தைத் தரிசித்தமாத்திரத்தி லவ்வெல்லோர்களும் பயத்தினுல் நடுக் கமுற்றவர்களாகிப் பிரமித்துத் திகைத்துத் தலைகள் கவிழ்ந்து கீழேவி ழுந்தார்கள். (48) அப்போது கருணைக்கடலான ஸ்ரீபரமேசுவர னவ் வெல்லோர்களிடத்தும் கருணையளிக்க, உடனே அவர்கள் நல்லறிவு கொண் டெழுந் தவனை வந்தனித்து (42) "ஓ! ஜயாவிஜயீபவா! தே வாதிதேவனும் கருணைக்கடலுமான மகாதேவா! ஓ! இயமனுக் கியம னுன பரமசிவா! எங்களது பிழைகளை மன்னித்தெங்களைக் காத்தருள ல் வேண்டும் காத்தருளல் வேண்டு" (43) மென்று தோத்திரம் பண்

ணிக் கைகட்டி நிற்கலான வம்முனீசுவரர்களை யப்போது திருக்கண்ணு ற்று அக் கருணாமூர்த்தியானவர் திருவாய் மலர்ந்தருளியதாவது:—"ஓ! முனிவர்களே! நீங்க ளிதுபரியந்தம் ஜகதீசுவரனாகிய வெம்மை யறியா மல் புத்திப் பிரமைகொண்டு கெட்டவழியை நாடி (45) யிருந்துவிட் டீர்களல்லவா? இனிமேல் நமதாக்கினையின்படி நீங்கள் வேதமார்க்கத்தி லிருந்து திருநீ றுருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டு (46) மற்றெ ங்கும் மனதை நாட்டாம லெப்போதும் நம்மையே பூஜைசெய்து வரல் வேண்டு" மென்றம் முனீசுவரர்களை யிவ்விதமா யனுப்பிவிட்டுப் பிறக த் தயாநிதியானவர் (47) பற்பல விசித்திரங்களோடுகூடிய கைலைகிரி க்குத் துரிதமதிற் சென்றங்கு விஷ்ணு முதலிய தேவர்களையு மனுப் பிவிட்டுத் தாம் ஸ்ரீகௌரீதேவியோடுகூடக் கேளீவிலாஸமா யிருந்த னர். (48)

பதினான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

"ஓ! தக்ஷா! முனிவர்களை யிரக்ஷிக்கக் கருணைகொண்ட நிகரற் ற பரமசிவனுடைய, அம்மணத்தோ டிருப்பதுமுதல் நர்த்தனம்செய்த துவரையிலான திவ்விய சரித்திரங்களை (1) யாமிப்போது கூறினம்; இ ன்னும் மற்றுமுள்ள சரித்திரங்களையும் யா முனக்குச் சொல்லப்போவ தைச் சாக்கிரதையாய்க் கேட்டறிந்தா லுந்தன் பாவமெல்லாம் தொலை யலாகும். (2)

கேளாய்! பிரஜாபதியே! பூர்வத்தில் மிகக் கொடியனும், துஷ் டனுமான கஜாசுரனென்றவன் தவத்தினால் பிரம்மனைக் களிப்பித்து வ ரன்கேட்டதன்பேரில் (3) சகல வீரர்களையும் சமுகரிக்கலுற்ற ஸ்ரீ சி வபிரானைத்தவிர மற்றெல்லாத் தேவர்களாலும் கொல்லப்படாமையும், மிகுதியான ஆயுசு, வலிமை, சௌரியம், பராக்கிரமம் (4) இவைமுத லிய வின்னும் மற்ற வரன்களு மப் பிரம்மனா லவனுக் கருளப்பட்டன. பிற கவ்வாறு வரன்பெறலான அவ்வசுரன் பிரம்மவிஷ்ணுக்கள் முதலி ய தேவர்களைப் போர்முனையிற் சயித்தும், இன்னும் மற்ற தேவர்களை

யு மனேகம் முனிவர்களையும் கர்வத்தோடு கொன்றும், சகல லோகங்களையும் வாதிக்கலானான். (5-6) இவ்விதமாய்ச் சகல ஜகங்களையும் நாள்தோறும் பீடித்துவந்தான். பிற கொருநா ளவன், வலாசுரனைக் கொன்றவனான தேவராஜனைப் (7) போர்தனில் வென்று அப்பிரமுவுக்குக் கணவனான ஐராவதமென்ற இயானையைத் துறத்தி யதன் வால்தனைக் கையினாற் பிடித்துக் கறகறவென்று சுற்றிலும் சுழற்ற, (8) அதனால் மூர்ச்சையடையலான வக்கஜத்தை யத்துராத்துமன் வெகு தூரத்தி லெறிந்துவிட்டான். மேலும் மற்ற திக்பாலர்களையும் பலவிதமா யிமிசித்து விறட்டிவிட்டான். (9) தவிரவு மக் கொடியன் யக்ஷர்களையும் பூலோகத்தில் வசிக்கலுற்ற மற்றவர்களையும், பின்னுமுள்ள சில மாமுனிவர்களையும் கொல்வதற்காக விறட்டலாகையி (10) லத் தவசிகளெல்லோரும் பயங்கொண்டவர்களாகிக் காசிநகருக் கோடி யங்குள்ள விருடிகளுடன் கூடிக்கொண்டு பிறகு மணிகர்ணிகா கட்டமடைந்து ஸ்ரீ விசுவநாதஸ்வாமியினுடைய மிகச் சிரேஷ்டமு மற்புதமுமான திருக்கோவிலுக்குப் போ யங் கீசுவர கைங்கரியமதில் முயன்றவர்களான ஜனங்களுட (12) னவ் விசுவநாதனை வந்தனித்துவிட் டங்கு மிகவும் பயப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அப்போ தக் கயாசுரன் வெகு வேகமா யங்கு வந்து (13) வாசற்படியிலிருந்து மகா பயங்கரமா யோ ரட்டகாசம் செய்தான். அதுகேட் டத் தவசிச்சிரேஷ்டர்களெல்லாம் நடுநடுங்கியவர்களாகி யெல்லோர்களும் ஸ்வாமியைக் (14) கட்டிக்கொண் டறிவுதப்பி மூர்ச்சையடைந்துவிட்டார்கள். கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! பிறகதேக்ஷணத்தி லப் பாவி வாசற்படிகடந் (15) தவ் வெல்லோர்களையும் கொல்வதற்காக ஸ்வாமியண்டைக்கு வந்தவுட னெல்லோர்களுடைய துரிதங்களையும் நாசம்செய்யலுற்ற வப்பகவான் தாமே (16) யனேககோடி சூரியப்பிரகாசம் பொருந்திய திருமேனியைக்கொண் டாவிர்ப்பவித் தம் மகேசுவர னுரத்தத் தொனியோ டக்கொடியனை யதட்ட, (17) ஸ்ரீ ஜகதீசனுடைய வத்தொனியான தெல்லோர்களாலும் வெகுகாலம் கேட்கப்பட்டது. அப்பாவியோ அம்மகேசுவர னடியார்களுக்கு விரோதிகளான ஸகல வீரர்களையும் சமுகரிக்கலுற்ற சாசுவதனொன் றறிந்தவனாயினு (18) மக்கஜாசுரன் மிகுந்த மதிப்பிரமத்தினா லப்பரமேசுவரனோ டியுத்தம்செய்கையில் மகா வலிமையும், மகா ஸாரமும், மகா தனுசும் கொண்டவரான அம்மகேசுவர னத்துராத்துமனுடைய தலைமீது தம் பொன்னடியா லுதைக்க, உடனே அவ்வசுரக்கேட னங்கு பூமியில் விழுந்து (20) சரீரம்முழுது மிரத்தம் தாரைதாரையாய்ப் பெருகப்பெற்றவனாகி மிகுந்த சத்தத்தோடு கதறினான்.

அப்போது தேவ னுடனே யவனது முறட்டுத்தோலை யுரித்தெடுத்து க்கொண்டனர். (21) ஓ! கோ! அவன் கதறிய சத்தத்தைக் கேட்டுக் கௌரிதேவிகூடப் பயமடைந்தாள். (21½) அப்போது ஸ்ரீ பரமேசுவ ரனுடைய கோடிசூரியப் பிரகாசம்பொருந்திய வற்புதத் திருமேனியை ப் பார்க்கக் கேளீர்! தக்ஷப்பிரஜாபதியே! ஸகல தேவர்களுடைய கண் களும் மழுங்கிப்போயின. (23) பிறகு தேவன் துராத்துமனான வக் கஜாசுரனுடைய தோலினால் போர்த்திக்கொண்டவுட னப்போ தெல்லா த்தேவர்களுடைய கண்களும் பார்க்கத் திறமைகொண் (24) டெல் லோர்களும் பயமற்றவர்களாகி யானைத்தோலினாற் போர்த்திக்கொள் ளலான வம் மகேசுவரனைக் கண்ணுற்று மிகுந்த பக்தியோடு வந்தனித் தார்கள். (25) பிறகு தவசிகளும் மூர்ச்சைதெளிந் தெழுந்து ஸ்ரீ பர மேசுவரனையு மவ் வசுரனுடைய எலும்புகளை மட்டிலுமே பார்க்கலாகி (26) 'யடியார்களது துக்கங்களைத் தொலைத்துச் சுகமளிக்கலுற்ற வத் தேவாதிதேவனாலே யவ்வசுரன் கொல்லப்பட்டிருக்கவேண்டு'மென்று நிச்சயங்கொண் டவ் வெல்லோர்களும் பயமற்றவர்களாகிப் பிரம்மவிஷ் ணுக்கள்முதலிய சகல தேவர்களோடும்கூட வெகு சந்தோஷமாய்ப் ப ரமேசுவரனைத் துதிசெய்து (27½) "ஓ! ஜயாவிஜயீபவா! சம்போ, ம காதேவா, வணங்கியவர்களின் துக்கங்களைத் தொலைக்கலுற்றவரோ, (28) ஸகல ஜகங்களுக்கும் நாதனே, ஸச்சிதானந்த மூர்த்தியே! தே வரீ ரிக் கஜாசுரன் தோலை வத்திரமாகப் போர்த்திக்கொள்ளலானதை யெந்த வித்துவான்கள் வர்ணிக்கின்றார்களோ (29) அவர்க ளெப்பே ர்க்கொத்தவரிடத்தும் பயமடையாதிருப்பதோ டவர்க ளெங்கும் பூஜி க்கப்படுவோர்களும், சகல ஜனங்களாலும் வந்தனிக்கப்படுவோர்களு மாகுதல்வேண்டு" மென, (30) 'அப்படியே ஆகட்டு' மென்று மகேசு வர னுத்தமமான அவ்வரனை யளித்துவிட் டந்தர்த்தான மாயினர். அ ப்போது பிரம்மவிஷ்ணுக்கள்முதலிய வெல்லோர்களும் மிகுந்த வான ந்தமடைந்தார்கள். (31) ஓ! கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! ஸகலப் பிரபஞ்சங்களுக்கும் மேற்கொண்டவரான வப்பரமசிவன் ஸகல தேவர் களுக்கும் முனிவர்களுக்கும் வாதையளிப்போனான மகா கொடியனாகி ய வக் கஜாசுரனை யதம்பண்ணி யெல்லோர்களையும் காப்பாற்றிச் சகலர் களுக்கு மதன் ஞாபகமிருக்கும்படி யவ்வசுரனுடைய முறட்டுத்தோலை யு மவர் தரித்துக்கொள்ளலானது (32½) ஓர் தக்க பூஷணமேயின்றி தூஷணமல்லவடா." (33)

பதினைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கசு—வது அத்தியாயத்தினர்த்தம்.

"அடா! தக்ஷா! 'ஸ்ரீமகாதேவன் பன்றியின் சிங்கப்பல்லைத் தரித்திருக்கின்று' மென்று முந்தி நீ கூறினையே! அக்கதையை யாமுந் தனுக் குரைக்கின்றோம்; நீ யதனைக் கவனமாய்க் கேட்கலாவாய்:—(1) கொடிய கிருத்தியங்களைச் செய்யலுற்ற ஹிரணியாக்ஷ னென்ற வோரசுர னிப்பூமிதனைச் சுருட்டி யெடுத்துக்கொண்டு பாதாளத்திற்குச் சென்றுவிட்டான். (2) அப்போது ஸ்ரீமகாவிஷ்ணுவானவ ரவ்வசுரக்கேடனைக் கொல்லக் கருதியவராகி யோர் பன்றி யுருவத்தைக் கொண்டு ஸ்ரீபிரம்மதேவன் மூக்கினின்று வெளிப்பட்டு மிகுந்த கோபத்தோ (3) டங்கு சென்று நடுப்பாதாளத்திற் கோடலான வவ்விரணியாக்ஷனைக் கொன்று § போட்டுப் பிறகசுரர்களுக் கியமனான வந்நாராயண னப்பூமிதனை முன்போல் நிலைநிறுத்தி வைத்தார். (4) பிற்பாடு விஷ்ணுவுமப் பாதகனுடைய விரத்தத்தைப் பானம் செய்ததினால் வெறிகொண்டவராகிச் சகல லோகங்களையு மவ் வசுரனிலு மதிகமாய் வாதிக்கத்தலைப்பட்டனர். (5) அதன்மேல் தேவரெல்லாம் சகலர்களும் சரணமடையப்பெற்றவரான ஸ்ரீமகாதேவனிடம் சரணமடைந்து "ஓ! சகலர்களுடைய துக்கங்களையும் தொலைப்பிக்கலுற்றப் பிரபுவே! பன்றியுருவமடைந்திருக்கின்ற விஷ்ணுவா லிரவும் பகலுமாய் வாதிக்கப்படலுற்ற வித்தேவர்களை யிப்போதுக் காப்பாற்றிடல்வேண்டு" மென, இவ்வாறவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீசந்திரசேகரன் கருணைகூர்ந் (7) தக் கொடிய பன்றியைக் கொன் றதன் பல்லையும் பிடுங்கிக்கொண்டுச் சரணமடைந்தோரின் விபத்துகளை நாசம்செய்யலுற்ற வச்சகதீச னவ்வெல்லாத் தேவர்களையும் காப்பாற்றியருளினர். (8) பிறகப்பொழுது விஷ்ணுவும் பிரமை தெளிந்தவராகித் தேவாதிதேவரான வப்பரமசிவனை வந்தனித்துத் துதிசெய்ததாவது:—"ஓ! அடியார்களுக் கபய

---

§ இ-ள். ஸ்ரீ விஷ்ணுவினுடைய வராகம்முதலிய 6-அவதாரங்களில் நரசிங்காவதாரத்தைத் தவிர மற்ற ஐந்தவதாரங்களையும் ஸ்ரீ பரமேசுவரன் நிக்கிரகம் செய்ததெல்லாம், இப்பிரபந்தத்தி லச் சரித்திரங்கள் சுருக்கமாய்ப் பிரஸ்தாபிக்கப்படுகிறதுபற்றி யந்நிக்கிரகங்களை யவரே நேரிற் செய்திருப்பதுபோற் சொல்லப்படுகின்றதேயின்றி யச்சரித்திரங்களை விஸ்தாரமாய்க் கூறப்படுகிற மற்றோர் புராணத்தில் ஸ்ரீ பகவா னிவ் வராகாவதாரத்தை ஸ்ரீ சுப்பிரம்மணியனைக்கொண்டும், மற்றவைகளை விநாயகர், சாஸ்தா, மகாகாளர் முதலியவர்களைக்கொண்டும் நிக்கிரகம் செய்வித்திருக்கின்றனரென்றே தெளிவிக்கப்படுகின்றது. ஆகிலு மவராக்ஞையின்படி நடத்தப்பட்டதை யவரே நடத்தியதா யிங்கு சொல்லியிருக்கின்றதென்பது கருத்து.

மளிக்கலுற்ற மகேசுவரா! போற்றி போற்றி, (9) உலகங்களுக்குத் தீங்களிப்போர்களைக் காலரூபியாய்ச் சமுகரிக்கலுற்றவரே! போற்றி, சுகமளிப்பவரே! போற்றி, மங்களமூர்த்தியே! போற்றி, (10) ஓ! சருவரக்ஷகரான மகாதேவா! தேவரீ ரிரக்ஷித்தது ஞாபகத்தி லிருக்கும் படியாயு மடியே னிதனைப் பார்ப்பதினு லெந்தனுக் கினி அஞ்ஞானமுண்டாகாம லிருக்கும்படியாயும் தேவரீ ரிப்பல்லுதனைத் தரித்துக்கொள்ளல்வேண்டு" ($11\frac{1}{2}$) மென்று, விஷ்ணுவால் பிரார்த்தித்துக்கொள்ளப்பட்டதன்மேல் கருணைக்கடலும் சருவஞ்ஞருமான ஸ்ரீபரமேசுவர னப்படியே நல்லதென்றதனைத் தரித்தருளினர். ($12\frac{1}{2}$)

பூர்வத்தில் விஷ்ணுவானவ ராமையுருவமெடுத்து நேர்த்தியான குகைகளையுடைய மந்தரமலையைச் (13) சுமந்துகொண் டமுதமெடுக்கக் கருதியவராகித் தேவர்களாற் பாற்கடலைக் கடைவித்தனர். அப்போதக்கடலினின்று மகா பெருமை பொருந்திய வமுதமுண்டானவுடன் (14) 'நிச்சயமாய் நாங்கள் பாற்கடலைக் கடைந்ததால்தா னமுதமுண்டாயிற்' றென்று தேவர்களுக்கு மசுரர்களுக்கு மொருவரோடொருவர் மிகுந்த கலகம் நேரிட்டது. (15) அப்பொழு தவ்வாமையும் வெறியெடுத்ததாகி 'மகா பலவானுகிய வெந்தனு லல்லவோ கடல்கடையப்பட்ட' தென் றக் கடல்தனைக் கலக்கத்தலைப்பட்டது. (16) பிறகவ்வா றக்கடல் கலக்கப்படலாகும்போ துலகங்களுக்குமிகுந்த வாதையுண்டாகி யதனைச் சகிக்கமுடியாமல் தேவரெல்லாம் பிரம்மனை முன்னிட்டுக்கொண் (17) டொப்பற்ற கைலைகிரி சென் றதனை ஸ்ரீ மகாதேவரிடம் தெரிவித்துக்கொள்ள, அப்போ தத் தேவன் மகா வலிமைகொண்டதான வவ் வாமையையும் கொன்று, (18) மகா கோரமாகிய அவ்வாமையின் முதுகெலும்பையும் பிடுங்கிவிடலாகையில் கேளாய்! பிரஜாபதியே! அப்போது தேவர்களாற் பிரார்த்தித்துக்கொள்ளப்பட்டதன் பேரில் ஸ்ரீ மகாதேவ னவ்வெலும்பையும் தரித்துக்கொள்ளலானுர். (19) ஓ! தக்ஷா! முந்தி ஸ்ரீ பரமசிவன் சகல லோகங்களையும் காப்பாற்றுவதற்காகவே ஹாலாஹல விஷத்தை யுண்டிருக்கின்றுர்.

முந்திச் சகல தேவாசுரர்களுக்குள்ளும் பயங்கரமான கொடிய வுயுத்தமுண்டாகும்போது (20) 'எந்தவுபாயத்தினுல் நமக்கு மரணமுண்டாகாமலிருக்கு' மென் றவர்கள் பிரம்மனோ டாலோசித்துக்கொண்டு விஷ்ணுவிடம் சென்றுர்கள். (21) பிறகு விஷ்ணுவு மவர்களது வசனத்தைக் கேட்டு மனதினுல் தக்க வுபாயத்தை யாலோசித்து 'அமுதபானம்பண்ணினுற் சாவுண்டாகா' தென் றத் தேவர்களுக் குரைத்து

விட்டுப் பிறகு நாராயணன் (22) மந்தரமலையை மத்தாகவும், ஸர்ப்ப ராஜாவான வாசுகியைக் கடைகயிறாகவும் செய்து பாற்கடலை யத்தேவர்களோடுகூடக் கடையும் (23) போது மிகுந்த கூக்குறற் சத்தமுண்டானதோவென்றால்:— கடைகயிறான சர்ப்பத்தி னுள்மூச்சு வெளிமூச்சுக்காற்றுகளா லக்கடல் கலக்கப்படலாகையி (24) லச் சர்ப்பத்தின் வாயினின்று மகா கோரமாகிய விஷ மக் கடல்தனில் விழுந்தது. பிறகு அதோர் கணநேரத்திற்குள் ளனேககோடி வடவாக்கினிகளின் வேகத்தையு மிருளுருவத்தையும் கொண்டதாகி யக்கடல்முழுமையும் பரவலாயிற்று. (25½) பிற்குடனே தேவர்கள் கடைகயிறான வாசுகியை விட்டுப்போட்டுத் துரிதமா யோட்டம்பிடித்தார்கள். (26) விஷ்ணுவு மவ் விஷத்தினால் மிகவும் தகிக்கப்பட்டவராகிப் பிந்தியோடினார். இவ்வாறாக வப்போது விஷ்ணு வல்லமையிற் குறைந்தும், பிரம்மன தேவிதமாகியும், (27) வாயுதேவன் தைரியமிழந்தும், அக்கினி யாசைவிட்டும், குபேர னியத்தினமற்றும், மற்றத்தேவர்களு மிவ்விதமே யானார்கள். (28) அவ்வெல்லோர்களும் விஷாக்கினியால் மிகவும் பொசுக்கப்படலாகிக் காப்பவரற்று 'ஹாஹா' வென்று கதறிக்கொண் டோடுகையிற் சகலப் பிரபஞ்சங்களுக்கும் சரணியரான ஸ்ரீ ஸர்வேசுவரனையே சரணமென்று (29) கருதிச் சகல துக்கங்களையும் தீர்க்கலுற்ற கைலைகிரிக்கு மிகுந்த கூக்குறற் சத்தத்தோடு துரிதமா யோடினார்கள். ஓ! தக்ஷா! (30) அப்போது விஷ்ணுவானவர் தேகம் முழுமையும் பொசுக்கப்பட்டுக் கன்னம்கறேலென் றாகிவிட்டார். பிறகு தேவர்களங்கு திருமாளிகையின் வாசற்படியில் கணாதிபரான ஸ்ரீ நந்திபிரானைக் கண்டு (31) வந்தனித் தெல்லோர்களும் வெகு துக்கம்கொண்டவர்களாகி யவருக்குச் சங்கதிகளைச் சொன்னார்கள். அதுகேட்டு நந்திபகவான் மிக விறக்கம்கொண்டவராகி யவ்வெல்லாத் தேவர்களையு (32) மங்கு நிறுத்திவிட்டுப் பிறகு பிரம்மன், விஷ்ணு, இந்திரன்முதலிய திக்பாலர்கள் இவர்களோடு துரிதமா யந்தப்புரத்துக்குச் செல்லுகையி(33) லங் கைந்தாவதுபிராகாரத்தில் திக்பாலர்களைநிறுத்திப் பிறகாறுவதுபிராகாரத்திற்பிரம்மவிஷ்ணுக்களிருவரையுமிருப்பித்துவிட்டப்போது தாம்மட்டி லுள்ளேசென்று பகவானிடத்தில் தேவர்களது வரவை யறிவித்துப்,(35) பிறகப் பிரபு வுத்திரவின்பேரில் பிரம்மனையும் விஷ்ணுவையும் ஸ்ரீ பரமேசுவரனுடைய அந்தப்புரத்திற்குச் சந்தோஷமாய்ப் போகவிட்டனர். (36) பிறகப் பிரம்மவிஷ்ணுக்களிருவரும் போய் ஸ்ரீ பரமேசுவரனை வந்தனித்து மிகுந்த பக்தியோடு வேதாந்தத்தா லிசைக்க

ப்பட்ட துதிகளால் துதித்தார்கள். (37) அப்போது மகேசுவரனும் மகா மகிழ்ச்சிகொண்டவராகிப் பிரம்மவிஷ்ணுக்களை நோக்கி "ஓ! கோ! விஷ்ணுவே! சுத்தமான படிகத்துக்கு நிகராகிய சரீரத்தையுடைய நீ ரிப்போ தென்தக்காரணத்தினுற் (38) காட்டுத்தீயினு லெரியுண்ட கட்டைபோற் கறுத்துப்போய்விட்டீர்? மேலும் வெண்டாமரை மலரை யொத்த வுமது கண்க ளிரத்தம் குழம்பலாயின. (39) ஓ! விஷ்ணுவே! உமது சரீரம் மிகவும் வியாதியுண்டதாய்க் காண்கின்றது. மேலு முருகலுற்ற தங்கத்தையொத்த விப்பிரம்மன் மேனியும் விகாரநிற முள்ளதா யிருக்கின்ற" (40) தென, இவ்வாறுகிய ஸ்ரீ மகேசுவரன் வசனத்தைக் கேட் டவரை நோக்கி விஷ்ணு வுரைத்ததாவது:— "ஓ! மகாதேவா! தேவர்களெல்லாம் தேவரீருக் கறிவித்துக்கொள்ளாம லமுதமதில் விருப்பமுற்றவர்களாகிப் பாற்கடலைக் கடையலாகையி (41½) லப்போது பிரளயகாலாக்கினிக்கு நிகராகிய மகா கோரமான விஷமுண்டாயிற்று. (42) ஓ! முக்கண்ணுடையோரே! அத்தேவரெல்லா மவ்விஷத்தின் ஜுவாலையினுல் ஸகல வுறுப்புகளும் பொசுங்கப்பெற்றவர்களாகி வேறு காப்பவரில்லாமல் ஸதாசிவனுகிய தேவரீரைச் சரணமடைந்திருக்கிறுர்கள். (43) அவர்களில் முந்தியவனுயிருந்த யா னத்தேவர்களுக்குப் பிந்தி யோடிவந்தபடியால் ஓ! ஸ்வாமீ! எந்தன் தேக மதிகமாய்ப் பொசுங்கலாயிற்று. (44) ஓ! தேவாதிதேவா! மகாகோரமாகிய இவ்விஷத்தினுல் பிரபஞ்சங்கள் மிகுதியாய் வாதிக்கப் படுகின்றன. ஓ! சம்புவே! இபபோது யானும் மிகுதியாய் வாதையுண்டு க்ஷணத்துக்கு க்ஷண மதிகமாய்க்கறுத்துப்போகின்றேன்.(45) ஓ! ஸகல விசுவங்களுக்கும் மேன்மைகொண்டப் பிரபுவே! வேறு கதியற்ற வித்தேவர்களை யிரக்ஷித்தருளவேண்டு மிரக்ஷித்தருளவேண்டும். ஓ! கருணைக்கடலே! தாமதம் செய்யக்கூடாது. (46) ஓ! சருவஞ்ஞரான பரமசிவா! ஸகலப் பிராணிகளி னந்தராத்துமாவாயும், ஸகலப்பிரபஞ்ச வியாபியாயும், சாசுவதராயும் விளங்கலுற்ற பரப்பிரம்மமாகிய தேவரீர் ஸகல லோகங்களையு மிரக்ஷிப்பதற்காகவே ஸகல கலியாண குணங்களாலு மலங்கரிக்கப்பெற்ற விப்பேர்க்கொத்த திருமேனியைக் கொண்டருளி விளங்கலாகின்றீ" ரென்று ஸ்ரீ மாதவ ருரைத்துவிட்டுத் துரிதமா யடிக்கடி நமஸ்காரம் பண்ணினுர்." (47)

பதினுருவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௧௭—வது அத்தியாயத்தினர்த்தம்.

அப்போது வெளியிலிருந்த தேவரெல்லோர்களு மேககாலத்தில் "ஓ! சரணமடைந்தவரிடத்து நேசமுடைய மகாதேவா! விஷமென்ற நிபத்தோடிருக்கும் மகாக்கினியால் தகிக்கப்படலுற்றவர்களும், வேறு கதியற்றுத் தேவரீரையே சரணமடைந்தவர்களுமான வித் தேவரெல்லோர்களையும் காப்பாற்றவேண்டும் காப்பாற்றவேண்டும். (1-2) ஓ! மகாதேவா! வளர்த்துவதில் யாதுபயன்? இரக்ஷித்தருள்வீ ரிரக்ஷித்தருள்வீ" ரென்று கூக்குறலிட்டார்கள். பிறகு கருணைக்கடலும் பரிசுத்தப்படுத்துவோருமான வச்சங்கர னப்போர்க்கொத்த அவர்களது கூச்சலைக் கேட் 'டிதென்ன' வென்றுப் பிரம்மனை வினவ, "ஓ! பார்வதிநாதா! அதிகொரேமாகிய விஷாக்கினியால் தகிக்கப்படலான தேவர்கள், அசுரர்கள், தவசிகள் முதலிய வெங்களைக் காப்பாற்றல்வேண்டும். ஓ! விசுவங்களைக் காப்பாற்றலுற்ற பரமசிவா! ($4\frac{1}{2}$) தேவாசுர ரெல்லோர்களும் தவசிகளோடுகூட மகா கொரேமான விஷத்தைச் சகிக்க முற்றும் திறமையற்றவர்களாகி மிகவும் கிலேசமடைந்து தேவரீரையே சரணமாய் நாடி வெளியில்வந்து கதறுகின்றார்கள். (6) ஓ! பரமேசுவரா! ஆகையால் தேவரீ ரவர்களைச் சீக்கிரமாய்ப் பாதுகாத்தருளவேண்டு" மென, இவ்வாறுப் பிரம்மன் வசனத்தைக் கேட்டவுடன் ஸ்ரீபகவான் நந்திதேவரைத் திருக்கண்ணுற்றுத் (7) தயவுடன் புருவத்தை யசக்கலாகையில் நந்திகேசுவர னச் சாடையறிந்து மறுபடியும் சென்று தேவர்கள், அசுரர்கள், (8) இருடிகள் இவர்களையெல்லாம் ஸ்ரீஜகதீசன் முன்னிலைக் கழைத்துவந்தார். அப்போ தவ் வெல்லோர்களும், சந்திரகலையை யுச்சிதனிற் பூண்டவரான ஸ்ரீமஹாதேவரைத் தரிசித் (9) தனேகம் துதிகளாற் றுதித்துத் தண்டம்போற் பூமியில் வந்தனம் பண்ணினார்கள். அப்போது நெஞ்சிறக்கமுடைய கௌரியம்மையானவள் தேவர்களையும் மற்றவர்களையும் பார்த் (10) திறக்கமுற் 'றிவர்களைக் காப்பாற்றவேண்டு' மென்று சம்புவை நோக்கிக் கிருபை செய்தனள். அப்போது ஸ்ரீ ஸர்வேசுவர னருகினில் நின்ற மிகுந்த சௌந்தரியம் பொருந்தியவனான சுந்தரமென் றவனை நோக்கி (11) "ஓ! கணநாதா! நீ போ யவ் விஷத்தை யெடுத்துக்கொண்டு சீக்கிரம் திரும்பி வரவேண்டு" மென்று பகவானக் கணதிபதியை யனுப்ப, (12) அவன் சிவாக்கினையின்படி புறப்பட்டுச் சென் றவ் விஷமதைக் கைதனி லெடுக்க, அப்போதது அவனுடைய மிருதுவான கையாகிய மரைமலர்தனில் வண்டு உட்

கார்ந்ததுபோல் விளங்கலாயிற்று. (13) பிறகு சுந்தரன் ஸ்ரீபரமேசுவ ரனுடைய திருவாக்கினையின்பேரி லவ்விஷத்தை யவர் கைமீது கொடு க்க, கேளாய்! தக்ஷப் பிரஜாபதியே! அப்போதோர் நொடிநேரத்திற் குள் ளவ்விஷ மவரது கைதனி லோர் கஸ்தூரிப் பொட்டுப்போலாயிற் று. (14½) பிற்பாடு ஸ்ரீமகேசுவர னத் தேவர்கள் நடுநடுங்கி நிற்பதை நோக்கி (15) "ஓ! தேவர்களே! யாமிதனை நக்கிவிடலாமா? அல்ல து தூரத்திலெறிந்துவிடலாமா? வென்பதை நீங்கள்நமதாக்கினையின்படி யிங்கு பயமின்றிக் கூறுங்க" (16) ளென்று மகாப் பிரளயகாலத்தில் சகலப் பிரபஞ்சங்களையு மொரே கபளமா யுண்ணலுற்றவரும், அந்தக னைச் சயித்தவருமான ஸ்ரீமகாதேவன் திருவாக்கருள, பிரம்ம விஷ்ணு முதலியவர்க ளவரது திருவசனத்தைக் கேட்டு (17) "ஓ! பகவானே! அது தூரத்தி லெறியப்பட்டாற் பிறகோர் நொடிக்கெல்லாம் வந்துவிடு மென் றிப்போ தெங்களுக்கு மிகுந்த பீதி வாதிக்கின்றது. ஏனென் றால் ஒரு நொடிநேரத்திற்குள் நாங்களெல்லோர்களு மிக்கொடிய விஷ த்தால் பொசுக்கப்படலானோம். ஓ! அந்தகனைக்கண்டித்த மகாதேவா!இ தனைத்தேவரீருடைய இலக்ஷுமீவிலாஸம்பொருந்திய கைமீதுகாணும் போதேயாங்கள் பயப்படுகின்றோம்.(19)ஆகையால் சருவஞ்ஞரும், கரு ணைக்கடலும், எல்லாவுலகங்களையும் காப்பதிலே முயன்றவரும், இயம னைக் கண்டித்தவரும், அடியார்களை யெதிர்க்கலுற்ற வீரர்களை நாசம்செ ய்வோரும், காலனுக்குக் காலனும், மகேசுவரனுமாகிய தேவரீர் (20) கி ரமப்படி பார்த்துக்கொண் டித் தேவர்களை யிரக்ஷிக்கவேண்டு" மென்று வேண்டிக்கொண்டு "உருத்திரனே போற்றி போற்றி, சகலப் பிராணிக ளுக்கும் நன்மையைக் கோருவனே போற்றி, (21) காலனுக்குக் கால னே போற்றி, சகலர்களையு மிரக்ஷிப்பவனே போற்றி, சூலபாணியே யோற்றி," யென் றவர்கள் தோத்திரம்பண்ணி யப்பரமேசுவரனைத் த ண்டம்போல் நமஸ்காரம்செய்கையி (22) லப்போது பகவான் மந்த ஹாசத்தையுடைய முகாரவிந்தத்தைக் கொண்டவளான ஸ்ரீகௌரியம் மையை நோக்கிக்கொண்டே கருணைக்கடலும், நித்தியானந்த பரிபூர்ண க்கடவுளுமான வம் மகாதேவ ரவ்விஷமதை யுண்டுவிட்டனர். (23) உட னே மகாகோரமும், மிகவும் கறுப்புநிறமுள்ளதுமான வக் காளகூட விஷமானது தேவனுடைய தொண்டைக்குள் துரிதமாய் வந்தபோது சகல தேவர்களும் கைகளை யஞ்சலிசெய்துகொண்டு (24) "ஓ! தே வாதிதேவா! கருணைக்கடலே! அடியார்க்கு நேசனே! பிரபஞ்சங்களை

க் காப்பவனே! அநந்தங்களான மகிமைகளுக் காதாரமானவரே! சுயாதீன முள்ளவரே! நித்தியாநந்த மூர்த்தியே! (25) வேதமறிந்தவர்கள், மகாப் பிரளயகாலத்தில் சகல ஜகங்களையு மோரேகபளமாய் விழுங்கலுற்றவரும், சூலபாணியுமான தேவரீருக்குப் பிரம்ம க்ஷத்திரியர்கள் முதலியோர்களால் வழங்கிவரப்பெற்ற சகல ஜகங்களு மன்னமென்றும், மிருத்தியுவானவன் நார்த்தங்கா யூறுகாயென்றும் சொல்லுகின்றார்களே! (26) ஓ! சுயாதீனமுள்ள சக்தியுடையவரே! சுத்தமான படிகத்திற்கு நிகராகிய தேவரீரது நெஞ்சுதனிலே யதனை நிறுத்திவிட்டாலது ஓரற்புதமான சிறந்த வலங்காரமாயிருக்கும். (27) மேலும் ஓ! பகவானே! இந்த ஹாலாஹலவிஷ மெப்போது தேவரீரது திருக்கழுத்தை யலங்கரிக்கலாகுமோ! அப்போதுதான் தேவஸ்திரீகளுடைய கழுத்துகளை யவர்களுடைய மாங்களியசூத்திர மலங்கரிக்கலாகும். (28) தவிரவு மிவ் விஷத்தினால் தகிக்கப்படலான தேவர்களாகிய யெங்களுக்குத் தேவரீரா லவ்விஷத்தையுண்டு காப்பாற்றப்பட்டதானது எப்போதும் மறவாமலிருக்கு" (29) மென்று கேளாய்! பிரஜாபதியே! அப்போ தத்தேவர்க ளிவ்வாறுமுதலிய வசனங்களால் வேண்டிக்கொள்ள, ஸ்ரீ பகவானு 'மப்படியே நல்ல' தென் றதனைத் தமது தொண்டைக்குள்ளே லீலாவிநோதமாய் நிலைநிறுத்திக்கொண்டனர். (30) சுயாதீனமுள்ள சக்தியையுடைய அப்பேர்க்கொத்த பரமசிவனுடைய மகிமையானது யாவரால்தான் வர்ணிக்கத்தகும்? அதன்பிறகு தேவரெல்லாம் மிகச் சந்தோஷங்கொண்டவர்களாகி ஸ்ரீ பரமேசுவரனைத் துதிசெய்ததாவது:— (31) தேவாதிதேவனே போற்றி, கறுத்த கழுத்தையுடைய சம்புவே போற்றி, விஷ்ணுப்பிரம்மர்கள் முதலிய ஸகல பசுக்களுக்கும் பதியே நின்னடிபோற்றி, தேவர்களுக் குயிர்தனை யளித்தவரே போற்றி, (32) உயிர்களுக் கீசனான வுருத்திரனே போற்றி, யானைத்தோலை யாடையாய்ப் போர்த்தியவரே போற்றி போற்றி; ஓ! தயாநிதியே! உலகினர்க ளிப்போது முதலாய் ஸ்ரீமகேசுவரனாகிய தேவரீரை (33) நீலகண்டரென் றெப்போது மறியத்தக்க" தென, பகவானாகிய ஸர்வேசுவர னித் துதியினால் மிக மகிழ்ச்சிகொண்டவராகி (34) "ஓ! தேவர்களே! நமதாக்கினையின்படி நீங்கள் போய்ப் பாற்கடலைக் கடைந்து அவ்வாறு கடைவதா லுண்டாகு மமுதத்தை மனக்கவலையற்றே உண்ணலாவீர்கள். (35) ஓர் கணநேரத்திற்குட் சந்தேகமின்றி யமுதமுண்டாகப்போகின்ற" தென்று பகவான் தேவர்களை நோக்கித் தயவுடன்

திருவாக்கருளினார். (36) பிற்பாடு தேவர்கள் சிவாக்கினையால் தூண்டி விடப்பட்டதின்பேரில் மிகுந்த சந்தோஷம்கொண்டவர்களாகி ஸ்ரீ பார்வதிநாதனை வந்தனித்துவிட்டுச் சென்று பாற்கடலைக் கடைந்து மேன்மைகொண்ட அமுதத்தை யெடுத் தெல்லோர்களும் சாவடையாம லிருக்கும்படி யதனை யுண்டார்கள்." (37)

பதினேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கஅ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

"ஓ! தக்ஷா! ஸ்ரீபரமேசுவரன் காளகூடவிஷத்தையுண்டு சகல தேவர்களையு மிரக்ஷிக்கலான சரித்திரத்தை யாமிப்போ திங் குனக்குக் கூறினம். (1) மேலும் ஓ! பித்துக்கொண்ட தக்கா! அவ ரூரூராய்ப் பிச்சைவாங்கலான திவ்விய சரித்திரத்தை நீ விண்மயக்கத்தை விட்டுக் கவனமாய்க் கேளடா! (2)

பூர்வத்தில் விஷ்ணுப் பிரம்ம ரிருவர்களும் மேருகிரியின் பாரிசத்திலிருந்து கொண்டிருக்கு மளவில் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மனதினிற் சந்தேகமுண்டாகி (3) யவர்களிடம் வந்து வந்தனித்துச் சந்தோஷத் துடனவர்களை வினவியதாவாது: —"ஓ! விஷ்ணுபிரம்மர்களே! ஸகல தேவர்களுக்கும் சிரேஷ்டரும், வியாபகரும், பிரபுவுமாகியவரும், ஸகல பிராணிகளுக்குள்ளு மந்தர்யாமி யாயிருப்பவரும், பரஞ்சோதியும், பரமாத்துமாவும், பராபரரும், சகலப்பிராணிகளுக்கும் சிருஷ்டிஸ்திதி சமுகாரகர்த்தருமாகிய தேவர் யாவ"ரென! (5) இவ்வாறவர்களதுவசனத்தைக் கேட்டப்போதுப் பிரம்மன்கூறியதாவது:— "ஓ!தேவமுனீசுவரர்களே! யாம் தான் ஜகங்களுக்குக் கர்த்தா; நம்மால்தான் சகலமும் நடந்து வருகின்றது; (6) ஸகல ஜகங்களும் நமதாக்கினையின்படி முடிவினில் நம்மிடத்தில்தான் லயமடைகின்ற" தென் றுரைக்கலான வப் பிரம்மனைப் பார்த்து விஷ்ணு உரைக்கின்றார்;—(7) "ஓ! பிரம்மாவே! யாம் முந்தி யுந்தனைச் சிருஷ்டித்துப் பிறகிதோ காணப்படுகின்ற ஜகமதைச்சிருஷ்டித்து விடுகின்றோம்நம்மைத்தவிர மற்றொருவரும் ஜகங்களுக்குக் கர்த்தாவல்லர். ஏனென்றால் நம்மிட மிருந்தல்லவோ எல்லா முண்டாகின்றன. (8) சகலஜகங்களும் விஷ்ணு சுவரூபமேயானதால் ஜகங்க

ளுக்கு மூலம் யாம்சா" னென, இவ்வாறாக அவ்விருதேவர்களும் மிகுந்த மோகவசத்தி லகப்பட்டவர்களாகி யொருவரோடொருவர் (9) 'நாம் பரப்பிரம்மமேயின்றி நீயல்ல' வென் றப்போ தவ் விருவர்களு மடிக்கடி வெகுகாலம் வாதாடிக்கொண்டார்கள். கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! (10) அப்போ தங்கிருந்த வெல்லோர்களும் பயமடைந் தவரவரிருப்பிடங்களுக்குச் சென்றுவிட்டார்கள். பிறகு வெகுகாலம் சென்றதன்மேல் பிரணவத்தை மூலமாக வுடையதும், (11) மிகுந்த மகிமைபொருந்தியதும், தத்துவப்பொருட்களை நன்கு போதிப்பதுமான வேதமான தங்குதோன்றி யுரைத்ததாவது:— "ஓ! விஷ்ணுவே! ஓ! பிரம்மாவே! நீங்களிருவரு மேன் வீண்கலகம் செய்துகொள்ளுகின்றீர்கள்? (12) ஸ்ரீபரமேசுவரனே ஜகங்களுக்குக் கர்த்தாவும், பரமாத்துமாவும், மகேசுவரனும், ஸகலப் பிரபஞ்சங்களுக்கும் மேன்மைகொண்டவரும், சகலப்பிரபஞ்ச ஸ்வரூபியுமானவர். அவ்வுருத்திரனே மகா பெருமைபொருந்திய விருடிச்சிரேஷ்டர். (13) நடு வானத்தில் விளங்கலுற்ற வச்சம்புவே அணி மாமுதலிய சகல ஐசுவரியங்களும் நிறையப்பெற்றவர். அவ்வீசுவரனே அணுக்கெல்லாம் பரமாணுவாகியவர்; பெரிதுக்கெல்லாம் பெரியவர்; (14) ஸ்ரீபார்வதியோடுகூடிய வப்பிரபுவே சகல மதிகளுக்கும் கர்த்தா; சொர்க்கம், பூமி, இந்திரன், விஷ்ணு ஆகிய வெல்லாவற்றையு மவரே யுண்டுசெய்பவ" (15) ரென, இவ்வாறு வேதம்கூறிய வசனத்தை மிகுந்த மோகவசத்தி லகப்படலான அவ்விருவர்களும் கேட்டு மனதைச் சட்டைசெய்யாமல் மறுபடியும் முன்போலவே கலகம் செய்துகொண்டிருந்தார்கள். (16) பிற கிப்படியிருக்கையில் பரமாத்துமாவாகிய ஸ்ரீபரமேசுவரன் "ஓ! இவ்விருவர்களும் வீ ணுங்காரத்தினாலல்லவோ நிச்சயமாய்த் துன்பமடையப்போகின்றார்கள். நாமிவ் விருவர்களுடைய கர்வத்தையு மிங் கடக்கிவிடவேண்டு" மென்று ஸ்ரீமகேசுவரன் கோடிசூரியப் பிரகாசம்பொருந்திய வோர் ஜோதியுருவத்தைக்கொண்டருளி யப்போ தங் காவிர்ப்பவித்தனர். (17-18) பிறகு பார்ப்போர் கண்களையெல்லாம் பறிக்கலுற்ற பரஞ்சோதிரூபியானவப் பரமசிவனைப்பார்த்து 'இதென்ன' வென்று பயந் தவ் விருவர்களும் மிகுந்த விசாரமடைந்தார்கள். (19) அப்போது ஸ்ரீபரமேசுவரன் பிரம்மவிஷ்ணுக்களான அவ்விருவர்களுக்கும் தேவியோடுகூடத் தம தற்புதமான திவ்விய வுருவத்தைச் சீக்கிரமாய்க் காக்ஷியருளிய (20) வுடன் ஸ்ரீவிஷ்ணுவானவர் பார்வதீநாதரு மென்று மழிவற்றவருமான வம் மகாதேவனைக் கண்டவுடன் சடிதியி லெழுந் தடிக்கடி நமஸ்கரித்து அ

த்தேவரைப் பற்பல துதிகளால் தோத்திரம்பண்ணிவிட்டுத் தாம் திரு ப்பாற்கட லடைந்துவிட்டனர்." (21)

பதினெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் கக—வது அத்தியாயத்தினர்த்தம்.

"விஷ்ணுவானவர் ஸ்ரீ ஜகதீசனை நமஸ்காரம்பண்ணிவிட்டு மிகுந்த பீதியோடு பாற்கடலுக்குச் சென்றவுடன் பிரம்மன் மிகுந்த மதிமயக்கங்கொண்டதினு லம்மகேசுவரனை நமஸ்காரம்பண்ணுமலே (1) புத்திகெட்டவராகித் (தமதைந்து முகங்களில்) மேற்புற முகத்தினு லத்தேவேசனை யிகழலாயினர். அப்போது ஸ்ரீ தேவேசரும் கோபாவேசங்கொண்டவராகிப் பைரவமூர்த்தியைத் திருவுளத்தின்கண் ணினைக்க, (2) அப்போது ஸ்ரீ பைரவமூர்த்தியும் மேனியெங்கும் திருநீறைப் பூசியவரும், ஸர்ப்பத்தை யரைஞ்ஞாணுகப் பூண்டவரும், (3) ஒலிக்கலுற்ற பாதச்சதங்கைகள் ஜல் ஜல்லென்று சத்திக்கப்பெற்றவரும், மண்டையோட்டு மாலைகளைப் பூண்டவரும், சிரேஷ்டமான சூலம், பாசம், உடுக்கு இவைகளைத் தரித்தவரும், (4) வட்டமும், பயங்கரமும், பிரகாசிக்கலுற்றதுமான கண்களைக்கொண்டவரும், அதிகோரமான வேர் மண்டையோட்டுக் கப்பரையைக் கைதனிற் பற்றியவரும், விகாரமாகிய செம்பட்டைச் சடைகளா லதி பயங்கரமுள்ளவரும், (5) திருமேனியெங்கும் மிருதியாயப் பிரகாசிக்கப்பெற்றவரும், சிறந்த மந்தஹாஸத்தினுல் மெத்த சேர்த்தியானவரும், அகிலப்பிரம்மாண்டங்களையு மோர் நொடிக்குள் ளொரே கபளமாய்ப் பக்ஷித்துவிடத் திறமைகொண்டவருமாகி ஸ்ரீ சிவாக்கினையின்படி துரிதமா யங்கு தோன்றலாயினர். (6) இப்பேர்க்கொத்த வப் பைரவமூர்த்தியானவர் ஸ்ரீ மகேசுவரனை விநயத்தோடு வந்தனித்து நின்று "ஓ! சுவாமி! ஜகதீசா! எந்தனுற் செய்யப்படவேண்டிய காரியமின்னதென்று தேவரீர் தாஸனுகிய வடியேன்மீது கருணைகூர்ந்து கட்டளையிட் டருளவேண்டு" மென்று விண்ணப்பம் செய்துகொண்ட வப் பைரவனை நோக்கி ஸ்ரீ மகேசுவரன் திருவாக்கருளியதாவது:— (8) "ஓ! பைரவா! நமது மாயையினுல் புத்திப்பிரமைகொள்ளலான விப் பிரம்மனுடைய, நம்மை யிகழலான மேல்தலையை

நீ கண்டித்தும், மேலும் மிகுந்த கர்வம்கொள்ளலான விஷ்ணுமுதலிய தேவர்கள், இருடிகள் இவர்களுடைய இரத்தங்களையெல்லாம் பிச்சை யென்ற வியாஜத்தால் வாங்கிக்கொண்டவர்க ளிறந்துவிட்டபோதிலும் பிற கவர்களைத் துரிதமாய்ப் பிழைப்புமூட்டிவிட்டு (10) அதன்மேல் நமதாக்ஞையின்படி யிப்பிரம்மாண்டத்திற்கு மேற்புறத்திலுள்ள வுந்த ணிருப்பிடத்துக்குச் சென்று அங்கிருந்தபடியே தேவர்களையு மிருடிக ளையும் சோம்பலின்றிக் காப்பாற்றிக்கொண் டிருக்கலாவா" (11) யெ ன் றவனை யனுப்பிவிட்டு ஸ்ரீஸாம்பமூர்த்தி யந்தர்த்தான மடைந்தனர். அப்போ திச் சங்கதிகளை விஷ்ணு வறியலாகி மிகுந்த மனவிசாரம்கொ ண் டேங்கியிருந்தனர். (12) பிறகோவென்றால் பைரவரும் கோபத்தி னால் மிகுந்த வட்டகாசம் பண்ணிக்கொண்டு மகா பயங்கரராகி யப்பிர ம்மனுடைய ஐந்தாவது தலைதனைத் தமது நுனி நகத்தினாற் கிள்ளிப் போட்டவுட (13) னவ ரிரத்தவெள்ளம் பெருகப்பெற்றவராகிப் பூமி தனில் விழுந்தவ் வெள்ளமதிலே யோர் நொடிநேரத்திற்குள் மூர்ச்சை ய டைந்தனர். கேளீர்! பிரஜாபதியே! (14) பிறகு நெற்றிதனிற் க ண்ணுடைய வப்பைரவர் பிரம்மன திரத்தங்களை வற்றச்செய்து மறுப டி தமது கிருபாதிருஷ்டியா லவனைப் பிழைப்புமூட்டிவிட்டார். (15) அதன்மேற் பிரம்மன் துரிதமாய் மூர்ச்சைதெளிந் தெழுந்து அவர் மகி மையை யறிந்து பயத்தினால் நடுக்கமுற்றவராகி யவனை வந்தனித்துத் துதிசெய்து (16) "ஓ! தேவாதிதேவரானப் பிரபுவே! தேவரீர் மகா மூடனான வடியேன் பிழைகளை மன்னித்துத் தேவரீரது திருவாக்கினை யா லெந்தனுக் கினி அஞ்ஞான முண்டாகாமலிருக்கும் (17) படியாய் ஓ! கருணைக்கடலே! அடியேனுடைய முண்டத்தலையை யோர் பாத்தி ரமாகச்செய்து கைமீது வைத்துக்கொண்டு அம்மண்டையோட்டுப் பா த்திரத்தைப் பிச்சைக்கப்பரையாக்கி (18) ஓ! சுவாமீ! அக் கப்பரை யைக்கொண்டே பிரத்தபிக்ஷை யெடுக்கவேண்டு" மென் றவனை வே ண்டிக்கொண் டடிக்கடி நமஸ்காரம் பண்ணினர். (19) பிறகு பைரவ ரு மப்படியே நல்லதென் றதனை யெடுத்துக்கொண்டு மேருகிரியை வி ட்டுப் புறப்பட்டுத் தமதிச்சையின்படி யோர் கணநேரத்திற்குள் ளனே க பூதகணங்கள், மகா பலசாலிகளான ஹாலாஹலன், காலவேகன், அக் கினிமுகன், சோமகன் முதலிய வின்னும் மற் றனேக பூதச்சேனைத் த லைவர்கள் இவர்களையெல்லாம் சிருஷ்டித்துக்கொண்டு (20-21) ஸ்ரீகா லபைரவமூர்த்தியானவ ரனேகம் பூதசேனைகளுடனும் சேனாதிபர்களு டனும் கூடியவராகி யிரத்தபிக்ஷை யெடுக்கும் வியாஜமாய்ப் பூலோக

மெங்கும் திரிந்து (22) எல்லாப்பெரிய அரணியங்களிலும், மலைக ளிலும், பாதாளம், நாகலோகம், தேவலோகம் இவைகளிலு (23) மங் கங்குள்ள கர்வம்கொண்டவர்களான தேவர்க ளிருடிகளுடைய விரத்த ங்களையெல்லா மப்பைரவர் தமது கப்பரையில் வாங்கிக்கொண்டு (24) அதனால் மரணமடையலாகும் சிற்சிலர்களையும் லீலாவிநோதமாய்ப் பி ழைப்புமூட்டிவிட்டுக்கொண்டே யெல்லாவிடங்களிலும் பிக்ஷைவாங்கி க்கொண்டு பிறகு விஷ்ணுலோகத்திற் கேகினர். (25) அப்போ தவர து பூதசேனைகளெல்லாம் மிகுந்த கோலாஹல சத்தத்தோடு விஷ்வக் ஸேனருடைய கணங்களாற் காக்கப்படும் ஸ்ரீ விஷ்ணுவின் திருமாளிகை வாசற்படிக்குத் துரிதமாய் வந்தவுட (26) னப்போது மகா கொரே முடைய கணுதிபரான விஷ்வக்ஸேனரவர்களைத் தாக்கினர். உடனே ஸ்ரீ பைரவமூர்த்தி யவரது கன்னங்களி லறைந்து துரிதமா யவரைத் (27) தமது சூலத்தின் நுனியிற் கோர்த்துக்கொண்டு ஸ்ரீ விஷ்ணுவ ண்டைக்கு வந்தார். அப்போ தாதிசேட னுடல்மீது சயனித்திருந்த ஸ்ரீமகாவிஷ்ணுவும் மிகுந்த பீதியினாற் பரபரப்போ (28) டெழுந்து ஸ்ரீ தேவி பூமிதேவிகளுட னவரை நமஸ்காரம்பண்ணித் துதிசெய்துவி ட்டு மகா பயங்கரராகிய வப் பைரவரை நோக்கி வசனமுரைத்ததாவ து:— (29) "ஓ! அடியார்களுக் கபயமளிக்கலுற்ற ஜகத் குருவான தேவாதிதேவா! தேவரீ ரிங்கு யாதுகாரியமாய் விஜயமானது? தேவரீ ரைத் தரிசித்ததினு லடியேன் கிருதார்த்தனுகிவிட்டேன். (30) ஓ! க ருணாமூர்த்தியே! தேவரீரையே முக்கிய ஆதாரமாய் நாடிய வடியேனை க் காப்பாற்றிடல் வேண்டு" மென் றுரைக்கலான அவ்விஷ்ணுவை நோ க்கி ஸ்ரீ காலபைரவர் திருவாக்கருளியதாவது:— (31) "ஓ! விஷ்ணு வே! யாம் பிக்ஷைவாங்கும் நிபத்தினு லுமது தமனியி னிரத்தத்தை வி ரும்பி வந்திருக்கின்றனம். ஆகையால் நீ ரதனைச் சீக்கிரமா யிப்போது தந்துவிடவேண்டு" மென, (32) இவ்வா றவரது வசனத்தைக் கேட் டு ஸ்ரீ மாதவரும் 'ஓ! இதனால் யான் கிருதார்த்தனுகிவிட்டே' னென்று கூறியவராகித் தமது நகத்தினால் நெற்றிதனைப் பிளந் திரத்தத்தைப் பெருகவிட, (33) அவ்விரத்தங்களையெல்லாம் ஸ்ரீ பைரவர் தமது கப் பரையா லேந்தினர். இவ்விதமாகவே அவ்விரத்தங்கள் விஷ்ணுவருஷ த்தி லாயிரம்வருஷகாலமளவும் பெருந்தாரையாய்க் கொட்டிப் (34) பி றகு விஷ்ணு விரத்தமேயற்று மூர்ச்சைகொண்டு கீழேவிழுந்து மக் கப் பரையிற் பாதிகூட நிரம்பவில்லை. (35) இவ்விதமா யம் மகாவிஷ்ணு வானவர் மிகுந்த மூர்ச்சையினால் கீழே விழலானதை ஸ்ரீதேவி யிலக்ஷ்மி

மிதேவிகள் கண்டு மிகுந்த துக்கம்கொண்டவர்களாகித் துரிதமாய் வந்து (36) மகாத்துமாவாகிய ஸ்ரீ பைரவமூர்த்தியுடைய திருபாதங்களையும் கைகளால் பிடித்துக்கொண்டு "ஓ! கருணாசமுத்திரமாகிய பைரவேசுவரா! இவ்விஷ்ணுவை யிரக்ஷித்துத் (37) தேவரீ ரடியாள்களுக்குச் சீக்கிரமாய்த் தாவிப்பிச்சை யருளவேண்டு" மென் றவ் விருதேவிமார்களு மம் மகேசுவரனைத் தோத்திரம்செய்கையில் (38) பிறகு கருணாமிருதக்கடவுளும் பகவானுமாகிய ஸ்ரீ பைரவர் பிரஸன்னசித்தராகித் தயவினா லவ் விஷ்ணுவை நோக்கிப் பிழைப்புமூட்டியவுடன் (39) ஸ்ரீ மகாவிஷ்ணு அறிவடைந் தெழுந் தப் பிரபுவை மிகுதியாய்த் துதிசெய்தார். பிறகு ஸ்ரீ காலபைரவ ரவ்வாறு துதிசெய்யலான விஷ்ணுவைத் தயவோடு திருக்கண்ணுற்றுப் (40) பிறகு மிகுந்த வாத்தியமுழக்கங்களோடும், பூதகணங்களி னாரவாரச் சத்தங்களோடும் தமது லோகத்துக்குப் புறப்பட்டுச் செல்லுகையி (41) லவ்வாறு செல்லலாகு மப் பைரவனை விஷ்ணுவானவர் வெகுதூரமளவும் பின்தொடர்ந்துவந்து பிறகப்போ தவனை நமஸ்கரித்துத் துதிசெய்து சூலமதிற் கோர்க்கப்படலான தமது கணத்தலைவராகிய(42) விஷ்வக்ஸேனரையும் மீட்டுக்கொண்டு திருமால் தமது மாளிகைக் கருளினர். அப்போது ஸ்ரீ பைரவரும் மிகுந்த வட்டகாசத்தோடுகூடிய பூதகணங்களுடன் தமது திருமாளிகை சேர்ந்தனர். (43)

இப் பைரவமூர்த்தியானவர் கல்பத்தின் முடிவினில் பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய ஸகல தேவர்களையும், சகல ஜகங்களையும் ஸ்ரீ சிவாக்கினியின்பேரில் மகா கோலாஹல சத்தமுடையவராகிச் சமுகரிந்துத் (44) தமதிச்சையின்படி யவர்களுடைய முண்டத்தலைகளை யெல்லாம் மாலைகளாக்கித் திருமேனியை யலங்கரித்துக்கொண் டப் பிணங்களையெல்லாம் தமது நெற்றிக்கண்ணெருப்பி னிலேசமாத்திரத்தினாற் கொளுத்திவிட் (45) டச் சுடுகாடுதனிலே யச்சாம்பற்களைத் திருமேனிதனிற் பூசிக்கொண்டு, தமது சுதந்திரத்தினாற் சகல வேதங்களையும் நாய்களா யமைத் (46) தவைகள்மீ தேறிக்கொண்டு பயங்கரமான சத்தத்தோடு கூடியவரும், அப்பேர்க்கொத்த தமது கணங்களாற் சூழப்பட்டவருமாகியும், திருவுளமதில் ஸ்ரீ பராபரமூர்த்தியைத் தியானித்துச் சுமக்கமுடியாத மிகுந்த பேரானந்தம்கொண்டவராகியு (47) மிவ்வாறு நிகரற்ற திருவுருவத்தைக் கொண்டவராகி யங்கங் கலைந்து திரியலாகின்றார். ஓ! தக்ஷப்பிரஜாபதியே! ஸ்ரீ மகேசுவர னாரூர்ராய்ப் பிச்சையெடுக்கலான விக் கதையை யுந்தனுக் குரைக்கலானேம்; மேலும் ஸ்ரீ பரமேசுவர

னுடைய மற்றோர் சரித்திரத்தை யிப்போ துனக்குக் கூறுகின்றோம்; கேளடா" (48)

பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உ0—வது அத்தியாயத்தி னர்த்தம்.

"கேளாய்! தக்ஷா! கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய விந் நான்கு யுகங்களி லாயிரம்கொண்டது பிரம்மனுக்கோர் பகலெனப்படும்; அவ்வளவுகாலம்கொண்டதே ஓரிரவாகும்; இவ்விதமான இரவு பகல்களைக்கொண்ட நாட்களில் முன்னூற்றறுபது கொண்ட தவருக் கோர் வருடமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. (1½) இவ்விதமான நூறுவருடங்கள் முடிந்தவுட னப்பிரம்மனுக்கு நாசம் நேரிடுகின்றது. (2) அதுதான் விஷ்ணுவுக் கோர் பகல்; அவ ரிரவு மவ்வளவே. இப்படி யிரவும் பகலுமாகிய முன்னூற்றறுபது நாட்கள் கொண்ட தவ் விஷ்ணுவுக் கோர் வருடமெனப்படும். (3) இவ்விதமாக நூறுவருடங்கள் முடிந்தபோது விஷ்ணு நாசமடைகின்றார். இவ்வாறாக வனேகம் விஷ்ணுக்கள் சமுகரிக்கப்பட்டதன்மேல் மகாப்பிரளயம் (4) நேரிடுகின்றது. அப்போ ததுகண்டு தருமமானது மிகுந்த பயம்கொண்டதாகி யோ ரிருடப வுருவ மெடுத்துக்கொண்டு ஸ்ரீ மகேசுவரனைத் துதிசெய்ததாவது:—(5) "ஓ! ஜயஜயா! சம்போ! மகாதேவா! சரணமடையலான வடியேனைக் காப்பாற்றிடல் வேண்டும்; இதோ மகாப்பிரளயகாலமானது சீக்கிரமாய் நேரப்போகின்றபடியால் (6) ஓ! அஷ்டைசுவரியங்களும் நிரம்பப்பெற்ற பரமசிவா! அடியேனை விலக்கியே யிச் சகல ஜகங்களையும் சமுகரிக்கவேண்டு" மென்று பல துதிகளால் துதித்து ஸ்ரீ சங்கரனை வேண்டிக்கொண்டது. (7) அதன் பிறகு ஸ்ரீ பகவான் பிரஸன்னராகி யதற்கு வரனை யளித் ததனைத் தமக்கு வாகனமாகச் செய்துகொண்டதற்குத் தக்க வலிமையையும் கொடுத்தருளி (8) யென்று மழிவில்லா திருக்கும் தன்மையையு மருளி, மேலும் நான்கு கால்களையுடைய அவ்விருடபத்தைக் கிருதயுகம்முதலிய நான்கு யுகங்களிலும் யுகத்துக்கு யுகம்முறையே ஒவ்வொருகால் குறைந்ததாகிச்

சஞ்சரித்துவரும்படிக்கு மருள் செய்து (9) "ஓ! மகா பரிசுத்தமு டைய தருமமே! யாம் மிகுந்த சந்தோஷத்தோ டுந்தன் சரீரத்தின்பே ரில் வசிக்கலாகின்றோம்; நீ யெங்கும் நமது சன்னிதியிலே யிருந்துவா லாவாய். (10) ஓ! தருமமே! உலகினில் மானிடர்கள் நம்மைப் பூ ஜைசெய்யாம லெப்பேர்க்கொத்த மிகுந்த மகா புண்ணியங்களைச் செய் திடினு மவையெல்லாம் பாவங்களின் பயனையே யவர்களுக் களிக்கலாகு ம். (11) நம்மைப் பூஜிக்கலுற்ற அடியார்க ளென்னபாவங்களைச் செ ய்திடினு மவையெல்லா மவர்களுக்குப் புண்ணியங்களின் பயனையே கொடுக்கலாகின்றது. கேளாய்! மகாவலிமைகொண்ட தருமமே! யா மெந்த அடியாரிடத்திலாவது சந்தோஷமடைந் தவருக் கனுக்கிரக மளி க்க விரும்பும்போது நீ நமதாக்கினையைச் சிரமேற்கொண் டிருடப வுரு வத்தோ டிங்கு வந்துவிடலாவா" (13) யென்றதுமுதலிய திருவசன ங்களை யுரைத் ததனைத் தமக்கு வாகனமாக்கிக்கொண் டதனை யனுப்பிவி ட்டார். அதுகேட்டறிந்து ஸகல ஜகத்ஸ்வரூபியான ஸ்ரீ விஷ்ணுவும் (14) ஸ்ரீ பரமேசுவரன் திரிபுரர்களைச் சமுகாரம் செய்யுங்காலத்தி லி ருடபவுருவ மெடுத்துக்கொண்டு திரிபுராந்தகனுகிய வம் மகாதேவனைச் சுமந்தனர். அடா! தக்ஷா! ஆகையினுல்தான் ஸ்ரீ மகாதேவ ரிருடப வாகனரொன்று சொல்லப்படுகின்றூர். (15)

இருபதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உக—வது அத்தியாயத்தினர்த்தம்.

"ஓ! தக்ஷா! ஸ்ரீ மகாதேவருடைய, நிகரற்றதும், மகா பரிசுத் தமுள்ளதுமான மற்றோர் திவ்விய சரித்திரத்தை யுந்தனுக்குக் கூறுகின் றோம்: நீ யதனை மிகவும் ஜாக்கிரதையுடன் கேட்கவேண்டும். (1) மகா பலிஷ்டர்களாகிய, உருத்திரரான காலாக்கினிருத்திரபகவானும், பைரவ மூர்த்தியும் ஸ்ரீ பரமேசுவரனுடைய திருவாக்கினையின்படி சகலப் பிரப ஞ்சங்களையும் சமுகரிக்கின்றூர்கள். (2) இது அவாந்தரசமுகார மென ப்படும். கேளாய்! பிரஜாபதியே! சகலங்களையும் மோரோகபளமாய் விழுங்கலாகின்ற ஸ்ரீ மகாதேவன் சகல அண்டங்களையும், சகல ஜகங்க

ளையும், (3) சகல ஜீவராசிகளையும் சிலதைப் பார்வையாலும், சிலதை புன்னகைப்பினாலும், சிற்சிலதைக் கோபம், அட்டகாஸம், நர்த்தனம், நெற்றிக்கண்ணக்கினி, (4) ஹூம்காரம், கை, காலுதை யிவைகளாலெல்லா மனேக வுருத்திரகணங்களோடு கூடியவராகித் திருவிளையாடலாய்ச் செய்தருளும் சமுகாரமானது(5) சகலர்களுக்கும் நாசமளிக்கலுற்ற மகாப்பிரளயமெனப்படும். அப்போது சமுகாரம்செய்யும் ஸ்ரீ மகாதேவ னநந்தவண்டங்களி லுள்ளவர்களான வெண்ணிறந்த, விஷ்ணுக்கள், பிரம்மர்கள், இந்திரன்முதலிய மற்றத்தேவர்கள் (6½) இவர்களிற் சிலதை யெரித்துச் சாம்பற்களைத் தூள்நீறுய்ப் பூசும்விதிப்படிக்குத் தம் திருமேனியிற் பூசியும், அப்பிரபுவானவர் மற்றவர்களது முண்டத் தலைகளைத் தமதிச்சையின்படி மாலைகளாக வணிந்தும், (8) அவர்களுடைய வெலும்புகளை யாபரணங்களாகப் பூண்டும், மற்றவர்களுடைய தலைமயிர்களை முப்பிரிநூற்களாகத் தரிக்கவுமாகின்றார். (9) தவிரவும் சகலப்பிராணிகளையும் சமுகரிக்கலுற்றவரும், என்றுமழிவற்ற ஞானமூர்த்தியுமாகிய ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரன், அப்பிரளயகாலத்தில் மடியலாகும் சிவபக்தியினர்களுடனே பிசாசப் பிறப்படைய, தா மொருவராகவே யப்பிசாசங்களாற் சூழப்பெற்றவராகி மற்ற விஷ்ணுக்களையும் பிரம்மர்களையும் சூலமதிற் கோர்த்துக்கொண்டு மிகுந்த மனமகிழ்ச்சியோ டக் காடாந்தகாரமதி லட்டகாசத்துட னனந்தக்கூத்தாடுகின்றார். (10-12) பிறகவர் லீலாவினோதமா யப் பிசாசங்களையும் சமுகரித்துவிட் டெரிந்துகொண்டிருக்கு மப் பெருஞ் சுடுகாட்டு மத்திதனிலோரிடத் தேகாங்கியாய் நர்த்தனம் செய்யலாகின்றார். (13) பிறகவரம்மகாப் பிரளயம் கழிந்தவுடன் ஸ்ரீபரதேவதையானவள் பார்த்துக்கொண்டிருக்குமளவி லவள் முன்னிலையிலே பரமாநந்தவசத்தினால் (14) பெருங்கூத்தாடிவிட்டுப் பிறகு சிருஷ்டிசெய்வதற்குரிய இச்சாசக்தியோடு கூடியவராகி முந்தியகற்பத்திலிருந்ததுபோலவே பஞ்சமகாபூதங்கள், (15) சகலங்களான பிரம்மாண்டங்கள், அதநின் லோகங்கள், அவ்வெல்லா வண்டங்களுக்கும் வேண்டிய அனேக மனேகம் விஷ்ணுப் பிரம்மர்கள், (16) சகல ஜீவராசிகள், அசுரர்கள், அரக்கர்கள் இவற்றையெல்லாம் சிருஷ்டித் தவரவருக்குத் தக்க வதிகாரங்களையு மேற்படுத்தி யவரவருக்குத் தக்க வித்தைகளையும் கற்பிக்கின்றார். ஆகையால்தா னம்மகேசுவரன் மகாக்கிராஸ (பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய சகல சிருஷ்டிப்புகளையு மொரோ கபளமாய் விழுங்கலுற்றவர்) ரென்றுப் பிரசித்தியடைந்திருக்கின்றார்; (18) அடா! தக்ஷா! அவருடைய ஆபர

ணங்களின் மகிமையைப்பற்றி யுந்தனுக் குரைக்கின்றே மதனைக் கேள டா!

பூர்வத்தில் விஷ்ணுமுதலிய தேவர்கள் தேவாதிதேவரான ஸ்ரீ பரமேசுவரனை வந்தனித்துத் (19) தவத்தினு லாராதித்துப் பிரார்த்தித்துக்கொண்டதாவது:— "ஓ! ஹரா! சம்போ! மகாதேவா! விசுவநாதா! தேவேசா! (20) ஓ! பிரபஞ்சங்களை யிரக்ஷிக்கின்ற பரமசிவா! இதோ மகாப் பிரளயகாலம் நெருங்கி வருகின்றது. ஓ! ஜகதீசா! எங்களுக்கோ அனேக ஜன்மங்களாகிவிட்டன. (21) ஓ! பிரபுவே! சமுசாரத்தில் மிகவும் கிலேச மடைந்திருக்கின்ற வெங்களுக்கினி மறுபிறப்படையத் திறமையில்லாதபடியால் தேவரீருடைய பாதாரவிந்தத்தைத் தியானிப்பதனு லிச் சமுசாரத்தினின்று மோக்ஷமுண்டாகவேண்டும். (22) ஓ! கருணைக்கடலே! இப்பெரும் சமுசாரத்தினின் றெங்களைச் சமுகரித்தபிற கெங்களிற் சிலர்களுடைய வெலும்புகளை யாபரணமாய்ப் பூண்டும், (23) மற்றவர்களின் சாம்பற்களையெடுத்துத் தூளாய்ப்பூசியு மருளுவீராயின் யாங்க ளெளிதினில் மோக்ஷம் பெறலாவோம்; ஏனென்றால் ஓ! தயாநிதியே! (24) தேவரீரால் தரித்தருளப்படுகின்ற உலகின்கண் மிகுந்த பரிசுத்தம்பொருந்திய கங்காநதியினில் பார்மீதுள்ள யாவர்களுடைய வெலும்புகள் போடப்படுகின்றனவோ (25) ஓ! மகாதேவா! அவர்களுக்குக்கூட மோக்ஷம் கிடைக்கலாகின்றது; ஓ! தயாசமுத்திரமே! ஆகையால் சமுசாரத்திற்குள் அகப்படலான வெங்களைக் காப்பாற்றல் வேண்டு" (26) மென் றிவ்வா றவர்களால் வேண்டிக்கொள்ளப்பட்டதன்பேரில் ஸ்ரீபகவா னவ்வாறே அருள்செய்யலானூர். ஆகையினுல் தேவர்களை யிரக்ஷிப்பதற்காகவே காலனுக்குக் காலனும், சோதிரூபியும், பரமாத்துமாவும், மகேசுவரனும், மூப்புச்சாவற்றவரும், சருவ ஞானனந்தஸ்வரூபியும், மகாப்பிரபுவுமான ஸ்ரீ சிவபிரானவர்களது சாம்பல்முதலியவைகளைத் தரித்தருளலாயினர்." (27-28)

இருபத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உஉ—வது அத்தியாயத்தினர்த்தம்.

"ஓ! தக்ஷப்பிரஜாபதியே! ஸ்ரீ தேவாதிதேவன் சமுகாரம் செய்வதுமுதலிய சிறந்த சரித்திரங்களை யா மிங் குந்தனுக் குரைத்தனம்;

மேலும் மற்றோர் புண்ணியசரித்திரத்தைக் கூறுகின்றோம்; அதனைக் கேளடா. (1) பூர்வத்தில் தேவேந்திரன் ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற்காகச் சற்று கர்வமுற்றவனாகிக் கைலைகிரிக்கு வந்தான். அப்போது ஸ்ரீ பரமேசுவரனார் பிரமதகணத்தி னுருவத்தைக் கொண்டவராகி வாசற்படியில் (2) நின்றார். அப்போ திந்திரன் வாசற்படிதனில் நிற்கலான வப் பிரபுவை நோக்கி 'அடா! இப்போது ஸ்ரீ மகேசுவரனுடைய சமயமென்ன' வென்று டம்பயாய்க் கேட்க, (3) அதற் கவர் பதிலுரைக்காமல் கோபத்தோ டுற்று நோக்கினார். பிறகவனைப்பார்த்ததி லிந்திரனுக் கதிக கோபமுண்டாகித் தன் வஜ்ஜிராயுதத்தைப் பிரயோகிக்க, (4) அவ்வாயுதமானது கற்பாறைபோல் மிகவும் கெட்டியான அவரது மார்பினில் விழுந்தவுடன் நெருப்புப்பொறிகளைக் கக்கிக்கொண்டு தூள்தூளாகி விழுந்தன. (5) அதன்மேல் ஸ்ரீ மகேசுவரன் துரிதமாய்த் தமது உருத்திரவுருவத்தை யெடுத்துக்கொண்டவுட னிந்திரனவரை ஸ்ரீ பரமேசுவரன்தா னென்றறிந்து பயத்தினால் நடுக்கமுற்றவனாகி வந்தனித்து (6) 'ஓ! சகலப் பிராணிகளிடத்தும் கருணையளிக்க முயன்ற பரமசிவா! அடியேன் பிழைகளை மன்னித்தருளவேண்டு' மென்று பல துதிகளால் தோத்திரம்பண்ணி யவரை யருள்புரியும்படி செய்துகொண்டான். (7) பிறகு ஸ்ரீ பகவான் பிரசன்னராகி யவ்விந்திரனை நோக்கி 'ஓ! இந்திரா! நீ யிப்போது பயப்படல் வேண்டாம்; யா மிங்கு உந்தனுக்குப் பிரசன்னராயினோமென் றறியலாவா'(8) யென் றத் தேவேந்திரனுக் கனுக்கிரகமளித் தவன் பட்டணத்திற் கனுப்பிவிட்டுப் பிறகச் சிவபிரான் மிகுந்த கருணையால் தமது கோபாக்கினியைச் சமுத்திரத்தி லெறிந்துவிட் டப்போ துடனே தமது மாளிகைக்குட் செல்லலானார். பிற்பாடு ஸ்ரீ பரமேசுவரனுடைய வக் கோபாக்கினியோவென் றொ ரோர் குழந்தையாகி அழ, (10) அச்சத்தமானது தேவர்கள், முனிவர்கள், முதலிய மற்றெல்லோர்களாலும் கேட்கப்பட்டது. அப்போ தக்குறலைக் கேட்டவுடன் வருண னங்கு வந் தக்குழந்தையை யெடுத்துப்போய் வளர்த்துவந்தான். (11) இவ்விதமாக வக்குழந்தையானது வருணன் வீட்டில் நாளுக்கு நாள் வளர்ந்து வரலாகையி லோர்நாளவ்வருணன் வீட்டிற்குப் பிரம்மன் வந்தார். (12) அப்போது வருண னக்குழந்தையைப் பிரம்மன் கைமீது கொடுக்க, அப்பிரபுவு மக்குழந்தையைத் தன் மடிதனில் வைத்துக்கொள்ளலாகையில் (13) மிகுந்த வலிமைகொண்ட வக்குழந்தை யழுதுகொண் டப்பிரம்மனது தாடிமயிர்களைக் கையினாற் பிடித்திழுக்கலாயிற்று. (14) அப்போது பிரம்

மன் "ஓ! இவன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலியவர்களைக்கூடப் போர்த னிற் சந்தேகமின்றி முறியடித்துவிடுவான். எப்பேர்க்கொத்தபெரியோ ர்களுடைய சாபத்தினின்று மிவனுக்கோரிடத்தும் பயமிராது. (15) இ வன் மூவுலகங்களிலும் 'ஜலந்தர' னென்றுப் பிரஸித்தி பெறலாவான். தைரியம், பராக்கிரமம் முதலிய குணங்களையுடையவனும், மகாபலவா னும், மகா துஷ்டனும் (16) கோரமுள்ளவனுமான விச்சிறுவன் தே வர்களைச் சயித் தசுரர்களுக்களிக்கலாவா" னென்று சொல்லிவிட்டுப் பிரம்மன் நேர்த்தியான தமது மாளிகைக்கேகினர். (17) பிறகு ஜலந் தரன் பின்னும் சிலகால மவ் வருணனிட மிருந்துவிட்டுப் பின்பு கொடி யர்களான சில வசுரர்களைக் கூட்டிக்கொண்டு பூலோகத்துக்குவந்து(18) சகல திக்பாலர்களையும் ஜயித்துத் தேவர் மாளிகைகளையெல்லா மசுரர்க ளுக் கீந்து மயனென்றவசுரச் சிற்பியாலமைக்கப்பட்ட ஜாலந்தரமென்ற நகரத்தி (19) லிருந்துகொண்டு சகல சத்துருக்களையும் ஜயித்து மகா பராக்கிரமசாலியா யிருந்துவந்தான். பிறகவன் சிலகாலம் சென்றதன் மேல் காலநேமியென்ற வசுரன் பெண்ணாகிய (20) பிருந்தையென்ப வளை மணம்புரிந்துகொண்டு மிகுந்த சந்தோஷத்தோ டிருந்துகொண்டி ருக்கையில் வெகுகாலம் சென்றதன்மே லவன், தேவரெல்லாம் மேருகி ரியிற் பதுங்கியிருப்பதைத் (21) தெரிந்துகொண் டங்கு சென்று அ வ்வெல்லோர்களையும் போரினில் வென்று, பிறகவர்களுக் குதவியாய் வரலான விஷ்ணுவையும், (22) இருபதினாயிரம் வருடமளவு முயுத்தம் பண்ணிக் களைப்படைந்து தன்னைத் துதிசெய்யலானவுடன் சத்துருக்க ளை வதைசெய்யலுற்ற அவ்வசுரன் விட்டுவிட்டான் (23) பிறகிந்திர ன் முதலிய தேவரெல்லோர்களும் பயத்தினால் நடுக்கமுற்றவர்களாகி க் கைலைகிரிக் கோடிவிட்டார்கள். அசுரனோ வென்றால் தன்னகரம்செ ன் றங்கு வெகுகால மிருந்துவிட்டுப் பிற (24) கக்கொடிய மகாசுரன், தடைசெய்யலான தன் பனியாளாகிய பிருந்தையின் வார்த்தையைச் சட்டைசெய்யாமல் தேவர்கள் பயந்தோடியிருக்கின்ற பருவதோத்தம மான கைலைகிரிக்கு மிகுந்த பரபரப்புடன் தன் சேனைகளோடு சென ஞன். (25½) அப்போது தேவர்க ளவன் வரவை யறிந்ததன்மேல் மிகுந்த பயங்கொண்டவர்களாகி (26) வாசற்படியிலிருக்கும் ஸ்ரீ நந்தி பகவானைத் தண்டம்பண்ணி யவரதனுமதியின்பேரில் தேவாதிதேவனா கிய ஸ்ரீ மகாதேவரது மகா பரிசுத்தமான திருமாளிகைக்குட் சென்(27) றங்கு மகாதேவனைத் தரிசித்துத் தண்டம்போல் வந்தனம்பண்ணிமிகு ந்த பக்தியுடன் பல துதிகளால் தோத்திரம்பண்ணியதன்பேரில் (28)

சிவாமென்னவென்று வினவி யருளிய வச் சங்கான் முன்பாகச் சங்கதி களையெல்லாம் தெரிவித்துக்கொண்டார்கள். அப்போது ஸ்ரீ பாமேசு வா னத்தேவர்களுக் கபயமளித்துவிட்டுத் (29) தாம் பிராம்மண வுரு வம்கொண் டோர் முனிவர்போல் தண்டகமண்டலங்களைக் கைதனில் வைத்துக்கொண்டும், ஓர் குடைதனைப் பிடித்துக்கொண்டு மவ்வசுானை யெதிர்நோக்கிப் புறப்பட்டனர். (30) அப்போ தவர் பிறாறியாம லு ருவத்தை மறைத்துக்கொள்ளலான தேவர்களால் பின்தொடரப்பெ ற்றவராகி யச் சலந்தாாசுானண்டைக்கு வந் (31) தவனை நோக்கி "அடா! நீ யாவன்? எங்கிருந்து வந்தாய்? எங்கு போகலாகின்று?" யென் றம்மகேசுவா னவனை யிவ்வாறெல்லாம் வினவலாகையி (32) லவ்வசுரன் "ஓ! தவசியே! என் பெயர் ஜலந்தான்; யான் சகல தேவர் களையு முயுத்தாங்கத்திற் சயித்துவிட் டிப்போது சங்கானை வெல்வதற் காகக் கைலகிரிக்குப் போகின்றே" (33) னென, பின்பு பகவான் நகை த்து அவ் வசுானை நோக்கித் திருவாக்கருளியதாவது:— "ஓ! அசுரா! பினுகமென்ற வில்லைக்கொண்டவரும், அடியார்களைப் பகைக்கலுற் ற வீரர்களைத் தொலைப்பிப்பவருமான வச் சம்புவோ டியுத்தம்பண் ண யாவன்தான் திறமையுளனுவான்? (34) அவரோ டியுத்தம்பண் ண மனதினுல் நினைப்பவன்கூடச் சந்தேகமின்றி யவமானம் பெறு வான். இங்ஙனமாயி னப் பிரபுவைச் சயிக்க எவ்வாறு தகும்? (35) ஓ! ஜலந்தா! யானவாருகினி விருப்பவன்தான்; நீ யினி பி ழைத்திருக்க வேண்டுவாயாகில் வந்தவழியோடு திரும்பிச் சென்று வீ" (36) டென, இவ்வா றவ் வந்தணர் வசனத்தைக் கேட்டதன் மேல் ஜலந்தான் "ஓ! பிராம்மணு! ஒருவாாலு மண்டமுடியாதவெ னது வலிமையை நீ ரறியவில்லை; (37) அதனை யிதோ! ஓர் நொடி நோத்திற்குள் காட்டுகின்றே" னென, கேளீர்! சௌனகாதிமுனிவர்க ளே! கோபங்கொள்ளலான பாவியாகிய வச் சலந்தரன திவ்வாறு பட படந்த வார்த்தையைக் கேட்டுப் பிராம்மணவுருவம் கொண்டவரான வ ப் பகவான் (38½) "ஓ! அசுரா! உன்னுடைய அப்பேர்க்கொத்த வ லிமையைப் பார்க்க வெந்தனுக்குக் (39) குதூஹலமிருக்கின்றது; ஆ கையால் நீ இதோ! இந்தச் சக்கிரத்தை யிருகைகளாலும் தூக்கி யென் முன்னிலையி லுந்தன் தலைமீது வைத்துக்கொள்ளலாவா" (40) யென் று திருவாக்கருளித் தமது கால்பெருவிரலினு லங்கு பூமிதனி லெழுத, பூமியி லெழுதப்படலான வச் சக்கிரத்தை யசுரன் பார்த் தவ் வேதிய னை நோக்கி வசனமளித்ததாவது:— (41) "ஓ! பிராம்மணு! யான்

பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களையெல்லாம் போர்மீது துறத்திய டித்திருக்கின்றேன். மேலும் முந்தியோர் கணமாத்திரத்தில் வடவாக்கினியைக் கையினு லணைத்திருக்கின்றேன். (42) சமுத்திரங்களையெல்லாம் வற்றவடித்திருக்கின்றேன். பருவதங்களையெல்லா மெடுத்துப்பந்து விளையாடியிருக்கின்றேன். இப்படியிருக்கையில் ஓ! பிராம்மணு! இச் சக்கிரமதைத் தூக்க வெந்தனுக் கென்ன மெத்தப் பிரயாசை?'' யென் றுரைத் ததனைக் கைகளால் தூக்கி மார்பினில் தாங்கவைத்துக் கொண்டு மறுபடியும் வெகுப் பிரயாசையோ டதனைத் தூக்கித் தலைமீது வைத்துக்கொள்ள, உடனே யோர் நொடிக்குள் (44) ளச் சக்கிரமான தவனை யிருதுண்டங்க ளாக்கிவிட்டு வேகமாய்ப் பூமியில் விழலாயிற்று. அப்போது மகாவேகமுடைய பெரிதான வோ ரிரத்தவள்ளமுண்டாயிற்று. (45) உடனே யச் சலந்தரன் மலைபோ லிருதுண்டங்களாய்ப் பூமியில் விழுந்து, தரைதனிற் புறண்டு, சடிதியில் மடிந்தான். (46)

இருபத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உ௩—வது அத்தியாயத்தி னர்த்தம்.

"அம்மகாகொடிய னிறந்தவுடன் திரிபுரர்களுக் கந்தகரான ஸ்ரீ பரமேசுவர னவனது தளங்களையெல்லாம் கண்ணுற்று நெற்றிக்கண்ணெருப்பினு லெரித்துவிட்டனர். (1) அத்துராத்துமன் சேனைகள் தங்கள் சாம்பற்களைமாத்திரம் மிச்சமாகவைத்துப் போகலானுர்கள். பிற்பாடப் பிரபுவானவர் தமதிச்சையின்படி நிகரற்ற நிஜவுருவத்தைக் கொள்ளலானவுட (2) னப்போது பிரம்மவிஷ்ணு இந்திரர்கள் முதலிய தேவர்களெல்லா மம் மகேசுவரனைத் தரிசித் தனேகம் துதிகளால் பலிதமாய்த் தோத்திரம்பண்ணித் தண்டம்போல் நமஸ்கரித்தார்கள். (3) அப்போது அகண்டாநந்தமூர்த்தியாகிய வப்பகவானு மவர்களைக் கிருபையுடன் திருக்கண்ணுற் றருளி யவரவர் விடுதிகளுக் கனுப்பிவிட்டுத்'தாமுடனே அந்தப்புரஞ் சென்றனர். (4)

கொடிய ஜலந்தரனிறந்து சிலகாலம்சென்றதின்மேல் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் காமவசப்பட்டவராகி ஜலந்தரன் மனையாளான பிருந்தையை நினைத்துங்கொண் (5) டக் காமாதுரரானவ ரவனது மாளிகைத்

தோட்டமடைந் தோரிருடி யுருவம் கொண்டவராகித் தவஞ்செய்யும் வியாஜமா யங்கிருந்தனர். (6) அப்போது பிருந்தையும் கணவன் வரலாறுகளை யறியாம லவனது பிரிதலினால் மேனி மெலியப் பெற்றவளாகிப் பொழுதுபோக்குவதற்காகத் தன் வீட்டுத் தோட்டத்துக்குவந்தாள். (7) அப்போதங்கு மகா பலசாலிகளான விரண்டு விஷ்ணுகணங்கள் விஷ்ணுவால் தூண்டிவிடப்பட்டவர்களாகி யோர் சிங்க வுருவமெடுத்தவளைத் துறத்த, (8) அப்போ தவ ளக் கொடிய சிங்கங்களைக் கண்டவுட னவ்விருடியண்டைக்கு வந்தாள். பிறகம் முனிவரும் சிங்கங்களால் துறத்தப்பட்டு பயந்து நடுங்கிய வப் பிருந்தையைப் பார்த்து(9) "ஓ! மாதரசே! நீ பயப்படாதே? நம்மை யிரக்ஷிப்பவராக வறிந்துகொள்" ளென் றுரைத்துவிட் டவ்விஷ்ணு வச்சிங்கங்களைச் சடிதியில் விறட்டிவிட்டனர். (10) அப்போதே யவனை யவள் முக்காலங்களையு மறியலுற்ற வோரிருடியென வறிந்து "ஓ! சுவாமீ! என்கணவன் ஸ்ரீசங்கரனோடு யுத்தம் செய்வதற்காகக் கைலைகிரிக்குப் போயினர். (11) அவருயிருட னிருக்கின்றாரோ, அல்லது நாசமடைந்துவிட்டாரோ தெரிகிலேன். ஓ! தவத்தையே தனமாய்க்கொண்ட முனிவரே! தேவரீர் ஸர்வஞராகியதா லவ்வரலாறுகளை யெந்தனுக்குத் தெளிய வுரைத்தல்வேண்டு"(12) மென் றவளுரைக்கலாகையில் ஸ்ரீ விஷ்ணு தமது தூதர்களான கணுதிபர்களை நோக்கி யப்பிணத்தை யெடுத்துவரும்படி யனுப்ப, (13) அப்போது சிங்கவுருவம்கொண்டிருந்த அவ்விரு கணுதிபர்களும், குரங்குகளி னுருவத்தைக் கொண்டவர்களாகிப் பூமியி லிரு துண்டங்களாயிறந்து கிடந்த கொடிய ஜலந்தரனை (14) யெடுத்துக்கொண் டவ் விருவர்களு மப் பிருந்தையின் முன்னிலையிற் கொண்டுவந்து வைத்தார்கள். பிறகப் பிருந்தையு மிருதுண்டங்களா யிறந்து கிடக்கலான தன் கணவனை நோக்கியவுடன் (15) கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! தன் புருடன் பேரில் விழுந்து மிகுந்த துக்கத்தோடு புலம்பலாயினள். அதுகண்டு ஸ்ரீ விஷ்ணு வானவர் மிகவும் துக்கப்படலான வப்பிருந்தையை மறுபடி சமாதானப்படுத்தி (16) "ஓ! பெண்ணே! உன் புருட னிறந்தபோதிலும் திரும்பவும் பிழைத்துவிடுவா" னென வுரைத்துவிட்டுத் தாம் மறைந்துகொண் டச் சலந்தரன் தேகத்திற்குட் புகுந்தனர்.(17) உடனே அவ்விஷ்ணுவானவர் ஜலந்தரனென்ற பெயரைக் கொண்டவராகிச் சடிதியி லெழுந்தவுட னவனை யவள் கணவனென்றே எண்ணித் துக்கத்தைவிட் டவனை (18) மிகுந்த மோகத்தோடு நன்காலிங்கனம் பண்ணிக்கொண்டு மிகுந்த பரமசுகமடைநதாள். பிறகு அவள் அங்கு அத்தவசியையு மக் குரங்குகளையும் காணவில்லை. (19) பிற்பாடு விஷ்ணு

வானவரச் சலந்தரன் சரீரத்திற் புகுந்தவராகி வெகுகாலம் வரையில் கொஞ்சமேனும் சோம்பலின்றி யிச்சைகொண்டமட்டி லவளுட னிரமித்துவந்தார். (20) இப்படி வெகுகாலம் சென்றதன்மே லொருக்கால் விஷ்ணுவானவர் தமது கபடச்செய்கையைமறக்கலாகித் தம் சுபாவத்தின்படி யோகநித்திரை செய்யலாயினர். (21) அப்பொழுதே யப் பிருந்தை யவரை ஸாக்ஷாத் விஷ்ணுவென்றே அறிந்து "ஓ! விஷ்ணுவே! நீர் மாயையினாற் பிறர் கூட்டுக்குட் புகுந்துகொண்டு மிகவும் காமாதுராகிக் கொஞ்சமேனு மிலச்சையற்றுப் பிறர்மனையாளான கற்புடைய வெந்தனோடு சுகமனுபவித்து வந்தீரல்லவா! (22½) ஆகையினால் ஓ! விஷ்ணுவே! உமது பெண்டீரைச் சத்துருவானவன் வஞ்சகத்தா லெடுத்துப்போகக் கடவது. (23) மேலும் ஓ! மாதவா! உமக்குக் குரங்குகளோடுச் சினேகமிருந்தபடியா லுமக்குக் குரங்குகளோடுகூடச் சஞ்சாரமுண்டாகக்கடவ" தென்று விஷ்ணுவை யிவ்வாறுகச் சபித்துவிட்டுப் பிருந்தையானவள் மிகுந்த கோபத்தோ டக்கினிப்பிரவேசம் செய்துவிட்டனள். அதன்மேல் விஷ்ணுவானவ ரவளைக் காண்பதிலே கவலைகொண்டவராகி யச் சாம்பற்களை வாரித் தேகமெங்கும் பூசிக்கொண் (25) டச் சுடுகாட்டின்கண்ணே, மிகவும் காமவெறி கொண்டவராகித் தமது லோகயாத்திரையைக் கொஞ்சமேனும் சிந்தியாமற் பைத்தியக்காரன்போ லிருந்துவந்தனர். (26) அப்போது பிரம்மன் முதலிய தேவரெல்லோர்களும் ஸ்ரீ விஷ்ணுவின் சங்கதிகளை யறிந்ததன்பேரில் பிரபஞ்சங்களை நடத்துவோரான ஸ்ரீ மகாதேவரிடத்து விண்ணப்பம் செய்துகொண் (27) டத்தேவரெல்லோர்களும் கைலையில் வசிப்போரும் ஸச்சிதாநந்த மூர்த்தியுமான ஸ்ரீ ஸர்வேசுவரனை வேண்டிக்கொண்டதாவது:—"ஓ! பரமேசுவரா! அருள்புரியல்வேண்டும்; ஓ! ஸச்சிதாநந்த மூர்த்தியே! அருள்புரியல்வேண்டும்; ஓ! சம்போ! பிருந்தையிடத்துமோகம்கொண்டு மெத்தக் காமாதுரராயிருக்கின்ற விஷ்ணுவைக் காப்பாற்றிடல்வேண்டு" (29) மென் றத்தேவர்களால் பிராத்திக்கப்பட்டதன்பேரில் தயாநிதியாகிய ஸ்ரீ பரமசிவன் 'அப்படியே நல்ல' தென்று பாரிசத்தின்கண் ணிருந்த கௌரியம்மையைத் திருக்கண்ணருள, (30) ஓ! கோ! அவ்வம்மையும் தம்மிடக் கைச்சுண்டுவிரலின்கண் ணேதோ ஒரு வித்தை யுண்டுபண்ணி யவ்வற்புதமான வித்தைப் பிரம்மனுடைய கைமீது கொடுத்தருளி (31) "ஓ! பிரம்மாவே! இவ்வித்தைத் துரிதமாய்க் கொண்டுபோ யப் பிருந்தையின் சுடுகாட்டினில் விதைத் ததனை நாள்தோறு மமுதத்தை யூற்றிப் பயிர் செய்வீராகி (32) விதினின்று விஷ்ணுவுக்கு நேசமுடைய நேர்த்தியான துளசியென்பவ ளுண்டாவா

ள். அவளைப் பார்த்தவுடன் விஷ்ணுவு மவளிடத் தெப்போதும் மனப் பிரீதி கொண்டவ (33) ராவார். ஓ! பிரம்மாவே! பிறகத் துளசியை விஷ்ணுவுக்குப் பாணிக்கிரகணம் செய்விக்கலாவீர். பின்பவரவளோடு நாள்தோறும் தமதிச்சையின்படியே சோம்பலின்றிச் சுகமனுபவித்துக் கொண்டு (34) கேளீர்! பிரம்மாவே! நிச்சயமாய் மோகம் தெளியப் பெறலாவார். மேலுமவ் விஷ்ணுவானவர் நிகரற்ற வத் துளசிமாலை யைச் சிரசினிற் சூட்டிக்கொள்ளலாவார். (35) அவரிவ்விதமாக வத் துளசியை மாலையாகவும் பெண்டீராகவும் செய்துகொண்டு பிறகவர் சந்தேகமின்றியே அவரது சொந்தத்தொழிலைச் செய்துவரலாவா"(36) ரென்று திருவாக்குரைத் தப் பரமேசுவரியானவள் பிரம்மனை யனுப்பி யருளினள். பிற்பாடு பிரம்மன் முதலியவர்கள் ஸ்ரீ பார்வதீ பரமேசுவ ரர்களை நமஸ்கரித்துவிட்டு (37) மனச் சந்துஷ்டி கொண்டவர்களாகித் துரிதமாய்த் தங்கள் தங்கள் தானங்களுக்குச் சென்றார்கள். பிறகு பிரம்மனே வென்றால் சடிதியி லச்சுடுகாடு சென்று ஸ்ரீதேவியினுடைய திருவாக்கினையைச் சிரசினால் வகித்துக்கொண் டற்புதமாகிய அவ்வித் துதனை யங்கு விதைக்க, அப்போ ததினின்று நேர்த்தியான துளசியுண் டாயிற்று. (39) அப்போ ததனைக்கண்டவுடன் விஷ்ணுவுக்குத் துக்கம் சடிதியில் நீங்கிவிட்டது. பிற்பாடவ ரத்துளசியை மணம்புரிந்துகொண் டு (40) மிகுந்த மனக்களிப்புற்றவராகித் தமதிச்சையின்படி நாள் தோறு மவளோடு கிரீடித்துவந்து மேலும் மெத்த நேர்த்தியான வத் துளசிமாலையையு முச்சிதனிற் சூட்டிவந்தனர். (41) பிற்பாடு ஸ்ரீவிஷ் ணு பைத்தியம் தெளியப்பெற்றவராகித் தமது தானமாகிய வைகுண்ட ம் சேர்ந் தங்கிருந்துகொண்டு தமது கிருத்தியங்களைச் செய்துவந்து பிறகு சிலகாலம் சென்றதன்மே லவர் ஸ்ரீ மகாதேவரை, மரைமலரை யொத்த தமதுத் திருக்கண்ணைப் பிடுங்கி யர்ச்சித் ததனாற் சந்தோஷிப் பித்து (42) முந்தி யப்பரமேசுவரனால், ஜலந்தராசுரனைச் சமுகரிப்பத ற்காக வமைக்கப்படலான கோடிசூரியப்பிரகாசம்பொருந்தியதும், மிக வற்புதமுமான சக்கிரத்தை யவரிடத்தினின் றடைந்து மிகுந்த சந்தோ ஷமடைந்தனர். ஓ! தக்ஷா! இவ்வாறாக ஸ்ரீ பிரபுவினுடைய பற்பலவி தமான விருத்தாந்தங்களை யுந்தனுக் குரைத்திட்டனம்." (47)

## இருபத்துமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உச—வது அத்தியாயத்தி னர்த்தம்.

"ஓ! தக்ஷா! முந்தி நீ 'ஸ்ரீமகேசுவரன்பாரிசத்திலும் சிரசிலுமிரு பெண்டீர்களை வைத்திருக்கின்று' ரென் றிகழ்ச்சியாய்ப் பேசினையல்லவா! அதற்கு விடை கூறுகின்றோம்; கேளடா.(1) முந்திக்கைலைக்கொடுமுடிதனில் பார்வதிதேவியானவள் ஸ்ரீ பரமேசுவரனுடையவிருகண்களைச் சரச வுல்லாசக் கோபத்தினு லிருகைகளாலும் பொத்தலானாள். (2) அப்போ திவ்வுலகங்களெல்லாம்மிகுந்த வந்தகாரத்தினுல் மூடப்பட்டது.பிற்பாடு சகலப்பிரபஞ்சங்களையும் பிரகாசிப்பிக்கலுற்ற ஜகதீசனைவர் தமது நெற்றிக்கண்ணை விழிக்கலாகியந்தகாரத்தினுல் மறைக்கப்பட்ட ஜகங்களைப் பிரகாசிப்பித்தனர். ($2\frac{1}{2}$) அப்போது கௌரியம்மை யதனைக் கண்டுமிகவும் பயந்தவளாகி (4) ஸ்ரீமகாதேவருடைய கண்களை மூடலான தன திருகைகளை யெடுத்துவிடும்போ தவளது செந்தாமரை மலரை யொத்த அவ்விருகைகளிலிருந்தும்மிகுந்த வியர்வைப் பெருக்குண்டாயிற்று. (5) பிறகு தேவியால் விடப்பட்ட அவ்வியர்வைநீரானதுவெவ்வேறுய்ப்பத்துப்பிரவாகங்களாகி யோர்கணநேரத்திற்குட்சகலஜகங்களிலும்வியாபித்தன.(6) அப்போதுவிஷ்ணுமுதலியதேவரெல்லோர்களும்பயத்தினுல்மிகவும்நடுக்கமுற்றவர்களாகி 'ஓ! கோ! இதென்ன! அகாலத்தில் பிரளயம்நேரிடுவ' தென்று மெத்தச்சிந்தைகொண்டவர்களாகி (7) ஸ்ரீமகாதேவனைத் தரிசித்து மிகுந்த சந்தோஷத்தோடு பூஜித்து "ஓ! கருணைக்கடலானசம்போ! மகாதேவா! காலமில்லாக்காலத்தில் ஜலப்பிரளயத்தினுல்முழுகப்படலான ஸ்தாவரஜங்கம ரூபமாகிய விச்சகமதை யிரக்ஷித்தருளவேண்டு" ($8\frac{1}{2}$) மென் றெல்லாத்தேவர்களாலும் பிரார்த்திக்கப்பட்டவுட னுலகங்களையிரக்ஷிப்பதிலே முயற்சியுடையோரான (9) ஸ்ரீ ஸர்வேசுவர னவர்கள்மீது கருணைவைத்து மிகுந்த ஜலப்பிரவாகத்தை யெடுத்துத் தமது செஞ்சடையினோர் மயிர்க்காவிலோர் சிறிய நீர்த்திவிலைபோல் வைத்தருளினர். (10) அப்போது விஷ்ணு, பிரம்மன்,இந்திரன் முதலிய தேவர்க ளவ்வற்புதத்தைக் கண்டவுடன் ஸ்ரீ பகவானைத்தண்டம்போல் வந்தனித்துப் பலவிதத்துதிகளால்தோத்திரம்பண்ணி (11) "ஓ! பகவானுகிய பரமசிவா! அம்மையின் திருக்கையினின் றுண்டான மகா பரிசுத்தமாகிய விநதியானது தேவரீர் திருச்சடைத்தடத்தில் தரிக்கப்பட்டபடியா (12) லதனைப்பார்த்ததினுலும், தொட்டதினுலும், குடித்ததினுலு மதனில் நீராடியதாலு மென்றும் சகலப்பிராணிகளுக்கும் பாவவிமோசனம் செய்விக்கலுற்றதாகையால்(13) ஓ! தேவதேவேசா! அந்நதியின் ஜலத்தி லெங்களுக்

குக் கொஞ்சம் தந்தருளவேண்டு" மென்று பிரார்த்தித்துப் பிரம்மன், விஷ்ணு, இந்திரன் இவர்கள் வெகு சந்தோஷத்தோடு ஸ்ரீ சம்புவினிட மிருந் தச்சலத்தை வெவ்வேறாய் (14) வாங்கிக்கொண்டு தங்கள் தங் கள் லோகத்தில் வைத்துக் கொண்டார்கள். விஷ்ணு வாங்கிக்கொண் டுபோன ஜலமானது உலகினில் சிரேஷ்டமான விஷ்ணுநதியென்று பிர ஸித்திகொண்டது. (15) அதுபோலவே பிரம்மனும் தாம் வாங்கிப் போன ஜலத்தை யெப்போதும் தம் குண்டிகையில் வைத்திருந்தார். இந்திரன் வாங்கிப்போய்ச் சுவர்க்கலோகத்திற் கொண்டுவைக்கலான ந திதா னாகாய கங்கை யென்று சொல்லப்படுவது. (16) பிறகு வெகு காலம் சென்றதன்மேல் பகீரதனனவன் பிரம்மலோகத்தில் பிரம்மனால் கொண்டுவைக்கப்பட்ட வந்நதியை மிகுந்தப் பிரயாசையோடுபூமிக்குக் கொண்டுவந்த (17) போது மிகுந்த அலைகளால் பயங்கரமான கர்வ ங்கொண்ட வந்நதியை ஸ்ரீ பரமேசுவரன் தம் செஞ்சடையி லேந்தி வற்றச்செய்து (18) பிறகவனாற் பிரார்த்திக்கப் பட்டதன்பேரி ல தனை யவர் விட, ஸ்ரீ சம்புவால் விடப்பட்டமாத்திரத்தி லக் கங்கையா னது புறப்பட்டு மகா வேகமுடையதும், பெரிய அலைகளால் நிரம்பப் பெற்றதுமாகிப் பூமியடைந்து (19½) அபாரமாகிய சமுசாரக்கடலி னின்று ஸாகரர்களைக் கரையேற்றலாயிற்று. (20) ஆகையினால் கே ளாய்! தக்ஷப்பிரஜாபதியே! ஸ்ரீ சங்கரன துச்சியலங்கார மாலையான வ க் கங்கையா லிப்போது நீராடியவர்கள் பாவங்களைத் தொலைத்து மோ க்ஷஸாம்பிராஜியத்தை யடைகின்றார்கள். (21) அடா! தக்ஷா! ஸ்ரீ க ங்காதரன் பெண்டீரைத் தூக்கிக்கொண்டிருக்கின்றனனென் றுந்தனா லு ரைக்கப்பட்ட திவ்வாறுதானடா. மேலு மிப்போது மற்றோர் சரித்தி ரம் சொல்லுகின்றோம்; அதனைக் கேளடா. (22)

பூர்வத்தில் பிரம்மனானவர் சனகர்முதலிய நால்வர்களைச் சிருஷ் டித்தார். அவர்கள் சிருஷ்டித்தொழிலில் மிகவும் பராமுகமாகி மிகுந்த தவநிலையை நாடியவர்களும், ஞானிகளுமா (23) யிருந்தார்கள். அ துகண்டுப் பிரம்மன் விஷ்ணுவோடுகூட ஸ்ரீ பரமேசுவரனுக் கதனைத் தெரிவித்துக்கொள்வதற்காகக் கைலாசத்துக்கு வந்தார். (23) அப் போது ஸனகர்முதலிய இருடிகளு மங்கு வந்தார்கள். (24½) பிறகு விஷ்ணுபிரம்மர்கள் ஸ்ரீ பரமேசுவரனை நோக்கி "ஓ! ஸ்வாமீ! ஜகங்களை ச் சிருஷ்டிசெய்வதற்குச் சக்தியில்லை" யென்று விண்ணப்பம் செய்து கொண்டவுடன் ஸ்ரீ சங்கரன் கோபத்தோ டவ் விருவர்களையும் தமது நெற்றிக்கண்ணினா லெரித்துவிட்டுத் (26) தம திடதுபாகத்திற் கௌ

ரியம்மையைச் சிருஷ்டித்து வைத்துக்கொண்டு பிறகவ் விஷ்ணுப் பிரம்மர்களையும் லீலாவிநோதமாய்ச் சிருஷ்டித்தருளி (27) "ஓ! பிரம்மாவே! நா மெப்போது மிப் பராசக்தியோடு கூடியவராகித் திருவிளையாட லருளிக்கொண்டிருக்கின்ற காரணத்தினா லுமக் கிப்போதுமுதல் மறுபடியும் சிருஷ்டித்தொழிலில் மிகுந்த சக்தியுண்டாகும். (28) ஆகையால் நீர் விஷ்ணுவுடன் கூடப்போய் முன்போ லெல்லாவற்றையும் சரிவரச் சிருஷ்டித்துவாரா வீ" ரென்று திருவாக்கருளி ஸ்ரீ பரமேசுவர னவ் விருவர்களையு மனுப்பலாயினர். (29) பிற்பா டவ் விருவர்களும் ஸ்ரீ பரமேசுவரனையும், ஞானரூபியாகிய ஸ்ரீ கௌரியம்மையையும் நமஸ்காரம்பண்ணிவிட் டவரது திருவாக்கினையின்படி மிகுந்த மனமகிழ்ச்சியோடு தம் தம் தானங்களுக்குச் சென்றார்கள். (30) அதன்பிறகு பிரம்மதேவன் சோம்பலின்றிச் சகல ஜகங்களையும் பலவாறாய்ச் சிருஷ்டித்துவந்தார். கேளாய்! தக்ஷா! ஆகையால் ஸ்ரீ ஜகதீசன் ஜகங்களைச் சிருஷ்டிசெய்யும் நிமித்தமாகவே கௌரியம்மையோடு கூடியிருக்கின்றாரடா. (31) அவ்வம்மையோ ஸத்தியஞானானந்த ஸ்வரூபியாகிய வப் பிரபுவி னொளியே. சந்திரனையும் நிலவையும்போ லவ் விருவர்களுக்கும் பேதமேயில்லை." (32)

இருபத்தினான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

"ஓ! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவர னிரண்டுபிள்ளைகளைப் பெற்றிருக்கின்றானென் றுரைத்தாயல்லவாடா! அச் சரித்திரத்தை யிப்போது வர்ணித்துச் சொல்லுகின்றோம்; நீ யதனைக் கவனமாய்க் கேளடா. (1) பூர்வத்தி லசுரேந்திரனென்ற அசுரனானவ னிந்திரனா லுயுத்தத்தில் துறத்திவிடப்பட்டவனாகிச் சைனியங்களை யிழந் தொண்டியாகி மிகுந்த துக்கத்தோடு சுக்கிரனிடம் சென்றான். (2) உடனே யச் சுக்கிரனு மவன் வந்த காரியத்தை ஞானதிருஷ்டியா லாலோசித்து "ஓ! அசுரேந்திரா! யா மிருக்கும்போது நீ யொன்றுக்கும் துக்கப்பட வேண்டாம்; (3) வஸிஷ்டமா முனிவரின் குலத்திற் சனித்தவரான மாகதரென்ற வோர் மகா யோகீசுவரரானவர் தவத்தினிலே மனதை யுருதி

யாய் நாட்டிக்கொண்டு மகா கோரமாய்ந் தவம் செய்துகொண்டிரு க்கின்றார். (4) அவருடனெப்போ தோ ரசுரஸ்திரீ புணருகின்றா ளோ அப்போ தங்கு கஜமுகனென்ற வோர் கொடிய மகாசுர (5) னுண்டாகி ஸ்ரீஸர்வேசுவரனிட மிருந்து வரப்பிரசாதம் பெற்று மகா பல பராக்கிரமசாலியாகிச் சத்துருக்களையெல்லா மதம்பண்ணித் தானே நிச்சயமா யிராஜ்யபாரம் நடத்திவருவா" (6) னென்றுரைத்துச் சுக்கிரனவ் வசுரேந்திரனை யனுப்பினான். பிறகு புத்திசாலியாகிய அவ்வசுரேந்திரன் துரிதமாய்த் தன் வீடுசேர்ந்து விபூதியென்ற வோ ரசுரமங்கையை நோக்கிச் சந்தோஷமாய் வசனமுரைத்ததாவது:—"ஓ! மிகுந்த சுந்தரமேனியுடைய விபூதி! தவசிகளிற் சிறந்த மாகதமுனிவர் (8) மேருகிரியின் தென்பாரிசத்தில் கொடிய தவத்தைச் செய்துகொண்டிருக்கின்றார். நீ சிரேஷ்டரான வத் தவசியிடம் சேர்ந் தோர் புத்திரனைப் பெற்றுக்கொள்வாயாகி (9) லுந்தன் கர்ப்பமாகிய முத்துச்சிப்பியினின்றுண்டாகிய வப் புத்திர ரத்தினத்தா லெந்தன்குடி சத்துருக்களேயற்று வியாகுலமில்லாமல் விளங்கலாகும். (10) அப்போது நாமெல்லோர்களு மெதிரியற்றுச் சுகமாயிருக்கலாவோ" மென்று காரியத்தை வேண்டி யுரைத் தவளை யனுப்பினான். (11) பிறகவளு மப்படியே நல்லதென்று புறப்பட்டு மாகதமுனிவர் ஸ்ரீபரமாத்துமாவினிடத் தேகாக்கிரசித்தராய் மிகுந்த தவம் செய்துக்கொண்டிருக்குமிடத்துக்குச் (12) சென் றவரது பரிசுத்தமாகிய தவ நிஷ்டையைக் கண்டு மிக வாச்சரியம் கொண்டவளாகி மனதினில் நினைத்துக்கொண்டதாவது:—(13) "ஓ! கோ! திடசித்தமுடைய மகாத்துமாவாகிய விம் மாகதமுனிவர் மனதைக் கலைப்பதற் கென்ன மிகுந்த முயற்சிசெய்தபோதிலும் நம்மால் முடியாது. (14) ஆனால் யா மசுரேந்திரனிடத்திற்குத் திரும்பிச்சென்றுவிட்டா லவர் மிகவும் வியாகுலப்படலாவார். (15) ஆகையா லிங்கிருந்து தவம்செய்துகொண் டவனை வசப்படுத்தலாவோ" மென் றாலோசித்துக்கொண் டவருக்கு முன்னிலையிலே கொடிய தவத்தைச் செய்யலானாள். (16) பிறகு வெகுகாலம் சென்றதன்மே லம் முனிச்சிரேஷ்ட ரோர் யானையும் யானைப்பேடும் சுகமனுபவித்துக்கொண்டிருந்ததைக் கண் டெழுந்து மோகிக்கலாயினர். (17) அப்போ தவ் வசுரஸ்திரீயானவ ளம்முனிவரிடம் சென் றவரை வந்தனித்து "ஓ! முனிவரே! உம்முட னெந்தனுக் கெப்போது புணர்ச்சி நேரிடப்போகின்றதென்று யான் (18) வெகுகாலமா யும்மண்டையிலே தவம் செய்துகொண்டிருக்கின்றேன். ஆகையால் ஓ! ஸ்வாமீ! மிகவும் காமாதுரை

யாகிய வெந்தனைத் தேவரீ ரங்கிகரித்தல் வேண்டு” மென, (19) இவ் வா றவளது வசனத்தை முனிவர் கேட்டு மிகுந்த சந்தோஷம்கொண் டவராகி ‘யப்படியே நல்ல’ தென் றவ் வசுரியை யோர் பெண்யானையுரு வம் கொள்ளச்செய்து (20) தாமு மோ ரியானையாகி யவளுடன் புண ர்ந்தனர். அப்போ தவ்விடத்தில் மகா கோரனான கஜமுகாசுர னுண் டாயினன். (21) மேலு மப்போ தவளுடைய மயிர்க்கால்களிலிருந் த னேக மசுரர்களு முண்டானார்கள். பிறகு வலிமைகொண்ட கொரே முடைய வக் கஜமுக னவ் வசுரர்களோடுகூடக் கத்தி கேடயங்களை யெ டுத்துக்கொண்டு மிகுந்த கோலாகல சத்தம்செய்தவனாகி மலைகளைப்பி டுங்கி மலைகளின்பேரிலும், மரங்களைப்பிடுங்கி மரங்களின்பேரிலு மெறி ந்துகொண்டு வனத்துக்கு வனம் திரிந்துகொண்டிருந்தான். (22-23) அப் பெற்றோ ரிருவரு மப்பேர்க்கொத்த பிள்ளையைச் சகிக்கமுடியாம ல் பயத்தினால் நடுக்கமுற்றவர்களும், மிக வாச்சரியமடைந்தவர்களுமா கி யவ் வனத்தைவிட்டு வெகுதூர மோடி (24) யோர் குகைதனி லிரு ந்துகொண்டு முனிவ ரவ் வசுரியை நோக்கி ‘யிச் சங்கதியின் விவரமெ ன்ன’ வென்று வினவ, அவ் வசுரியு மச் சங்கதிகளை முனிவருக்கு விவர மா யுரைத்தனள். அப்போ தவளது வசனத்தைக் கேட்டவுடன் மாக தமுனிவர் மிகுந்த துக்காவேசம் கொண்டவராகி (26) “ஓ! கோ! ந ம்மா லுலகங்களுக்கும் தேவர்களுக்கும் தீங்கு தேடப்பட்டதன்றோ” வென்று சொல்லிக்கொண் டம் மாமுனிவர் மறுபடியும் தவவனத்துக்கு ச் சென்றனர். (27) அவளு மம்முனிவரை வந்தனித்துவிட்டுப் பிடித் தகாரியத்தைக் கைக்கொண்டவளாகிச் சந்தோஷத்துடன் துரிதமாய்ச் சென் றச் சங்கதிகள் முழுமையு மசுரேந்திரனுக் கறிவித்தனள். (28) உடனே யவ் வசுரேந்திரனும் துரிதமா யக் கஜமுகாசுரனோடு சேர்ந்து கொண்டு வெளிக்கிளம்பிச் சகல லோகங்களையும் தேவேந்திரன்முதலி ய தேவர்களையும் மிகவும் துன்பப்படுத்தலானான். (29) அப்போ தசுர குருவாகிய சுக்கிரனும் சடிதியி லங்கு வந்து “ஓ! கஜமுகாசுரனே! அ ஷ்டைசுவரிய சம்பன்னமூர்த்தியாகிய ஸ்ரீ பரமேசுவரனை நீ தவத்தினு லாராதித் (30) தத் தேவனிடமிருந்து வரனை யடைந்து பிறகு பயமி ல்லாம லிச்சையின்படி திரியலாம். இல்லையாகி லுந்தனுக்கு நிச்சயமா யெங்காயினும் பயம் நேரிடலாகு” (31) மென் றக் கஜமுகாசுரனுக் குரைத்துவிட்டுச் சுக்கிரன் செல்லலானான். பிறகு கஜமுகன் சுக்கிர ன் வசனத்தைக் கேட்டவுடன் நேர்த்தியான மேருவின் பாரிசத்தின்மீ (32) தாயிரம் வருடமளவும் புற்களையும், அவ்வளவுகாலம் சிருகுகளை

யும் புஜித்தும், அவ்வளவேகாலம் நீரைக்குடித்து (33) மதேவிதமாய்க் காற்றைப் புஜித்துக்கொண்டும் சகிக்கமுடியாத பஞ்சாக்கினிமத்தியிலிருந்து மூலாதாரத்தி னக்கினியை ஸுஷும்னையென்னும் நாடி வழியாய்ப் பற்றவிட்டுச் (34) சிரசின் மத்தியிலிருக்கு மமுதத்தைப் பானம் பண்ணியு மொரேகாலால் நின்றுகொண்டு மிகுந்த கொடிய தவத்தைச் செய்தான். (34½) அவ னிவ்விதமாகப் பதினாயிரம் வருடமளவும் சிரேஷ்டமான தவத்தைச் செய்துவருகையி (35) லவ் வசுரச்சிரேஷ்டனுடைய இவ்வாறு தவத்தைக் கண் டிந்திரன்முதலிய தேவரெல்லோர்களு மப்போது தங்கள் தங்கள் மனதினில் மிகுந்த பீதியைக் கொண்டவர்களாகி யோட்டம்பிடிக்கலானார்கள். (36) அப்போது கருணாமூர்த்தியாகிய ஸ்ரீ பரமசிவனுடைய திருவுளத்தில் தயவுண்டாகி யவாது திருவாக்கினையின்படி யவனது தேகமானது வஜ்ஜிரம்போல் கெட்டிப்படலாயிற்று. (37) அப்போ தசுரர்க ளவன் தலைமீது மலர்மாரி சொரிந்தார்கள். அதற்குள் ஸ்ரீ மகேசுவர னிரிடபத்தின்மீ தேறிக்கொண் டவன்முன்னர் பிரத்தியக்ஷமாக, (38) அதுகண் டசுரன் மிகுந்த வன்போ டம் மகாதேவனை நமஸ்காரம்பண்ணி யப்போ தவருக்குத் திருப்திகரமான வசனங்களா லவரைத் துதிசெய்தான். (39) அப்போது ஸ்ரீ பகவானு மவனை நோக்கி "ஓ! மங்களகரம்பொருந்திய வசுரச்சிரேஷ்டா! உந்தன் மனதிலுள்ள வரனைச் சீக்கிரமாய்க் கேட்டுக்கொள். பிரசன்னராகிய யாமுனக் கிப்போதே யருளுகின்றோ" மென, (40) அத்தேவகாதகன் ஸ்ரீ தேவாதிதேவனுடைய விப்பேர்க்கொத்த திருவசனத்தைக் கேட்டவுடன் "ஓ! பகவானே! தேவரீ ரெந்தனுக்குப் பிரசன்னராகி வரனளிப்ப துண்மையாகில் (41) லிந்திரன்முதலிய தேவரெல்லா மென் முன்னிலையி லுயுத்தத்திலிருந்து சிங்கத்தின்முன்ன ரகப்பட்ட நரிக்கூட்டங்கள்போல் தோல்வியடையவேண்டும்." (42)

இருபத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.



## தக்ஷகாண்டம் உரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

"ஓ! மகேசுவரா! அடியேனுக்குப் பற்பலவிதங்களான வனேக மாயுதங்களை யருளவேண்டும். தவிரவு மெந்தனுக்குச் சத்துருக்களு

டைய அடியாயுதங்கள், பலவித வெட்டாயுதங்கள், அறுப்பாயுதங்கள்,
மற்றுமுள்ள எறியாயுதங்கள் இப்போர்க்கொத்த பற்பல வாயுதங்களாலு
ம் மரணம் நேரிடாமலிருக்கவேண்டும்.(1-2) மேலும் தேவர்கள், மானிட
ர்கள், அசுரர்கள், அரக்கர்கள், இன்னும் மற்ற வலிமைகொண்ட மிருக
ங்கள், பக்ஷிகள், சர்ப்பங்கள் (3) இவர்களுடைய ஜயிக்கமுடியாத வயு
த்தத்திலெல்லா மெங்கெங்காயினு மடியேனுக்குப் பயமுண்டாகாமலிரு
க்கவேண்டும். ஓ! பரமேசுவரா! சகல ஜகங்களு மடியேன தாக்கி
னைக்குள் ளடங்கியேயிருக்கவேண்டும். (4) ஓ! தேவாதிதேவர! ஒரு
க்கால் தேவரீரது திருமாயையினு லடியேனுக் கெங்காகிலும் மரணம்
நேரிட்டபோதிலும் ஓ! பிரபுவே! மறுபிறப்புண்டாகாம லிருக்கவேண்
டு" (5) மென, இவையைல்லாவற்றையும் கேட்டு ஸ்ரீபரமேசு
வர 'னப்படியே நல்ல' தென்று திருவாக்கருளிவிட் டவனது முன்
னிலையிலே துரிதத்தி லந்தர்த்தான மடைந்தனர்.(6) மகா பாவியானவ
க்கஜமுகாசுரனிவ்வெல்லாவற்றையும் ஸ்ரீமகேசுவரனிடமிருந்தடைந்தவு
டன் கொடியர்களான பல வசுரர்களோடுகூட மிகுந்த மனக்களிப்போடு
(7) விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களை யெல்லாம் ஜயித்தவ ரவர்க
ளுடைய பதவிகளையசுரர்களுக்குக் கொடுத்துவிட்டுத் துரிதமாய்ப்பூலோ
கம் சென்றங்கு வெகு சந்தோஷமா யிருந்துகொண்டு மிகநேர்த்தியான
தும், பத்துயோஜனை விஸ்தீர்ணமுடைய விசாலமான பலவீதிகளைக்கொ
ண்டதுமாகிய மதங்கபுரமென்றநகரத்தி(9) லங்கசுரர்கள், அரக்கர்கள், ச
கோதர்கள் இவர்களுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் பலபலமாளிகைக
ளைக்கொடுத்துத் தானும் வெகுகுதூகலத்தோ டந்நகரின் மத்தியிலுள்ள
நேர்த்தியான வரண்மனைக்குச் சென்றான். (10½) பிறகு சிலகாலம்
சென்றதன்மே லம்மகாசுர னசுரேந்திரன் பெண்ணாகிய (11) விசித்தி
ர காமிகை யென்ற மிகுந்த சௌந்தரியம்பொருந்திய நேர்த்தியான ம
ங்கையனை மணம்புரிந்து மேலும் தேவர்கள், அசுரர்கள், அரக்கர்கள்,
(12) வித்தியாதரர்கள் இவர்களுடைய சிறந்தவர்களான வனேகம் பெ
ண்களையும் கலியாணம்செய்துகொண்டும், இந்திரன் முதலிய தேவர்க
ளையும், கல்பவிருக்ஷம், காமதேனு, நிதிகள், சிந்தாமணி இவைகளையும்
தன தூழியத்தி லேற்படுத்திக்கொண்டும், (13½) சுக்கிரனுடனும், ம
ற்றுமுள்ள வனேக மசுரர்கள் மந்திரிகளுடனும்கூட (14) மிகுந்த ப
ரிவாரத்தோடு சகல ஜகங்களையு மரசாண்டுவந்தான். இப்படியிருக்கை
யி லொருநா ளங் கிந்திராதி தேவர்கள்வந்து (15) தண்டம்போல் வந்
தனம்பண்ணிவிட் டவன் முன்னர் கைகட்டி நின்றார்கள். அப்போதத்
தேவர்களை நோக்கி யசுரன் வசனமுரைத்ததாவது:—(16) "ஓ! தே

வர்களே! இன்றைமுதல் நீங்க ளெல்லோர்களும் கொஞ்சமேனும் சோம்பலின்றி (அஷ்டாங்கம், பஞ்சாங்கம், திரியங்கம்) ஆகிய மூன்றுவிதங்களாலும் நமஸ்காரம்பண்ணிக் கைகளால் (நெற்றிதனில்) குட்டிக்கொண்டு (17) இருகைகளாலும் மாறுதலாய்க் காதுகளைப் பிடித்துக்கொண்டு தோப்புக்கரணம்போட்டுவிட்டுப் பிறகு நம துத்திரவின்பேரில் போகவேண்டு" (18) மென்றுரைத்துக் கஜமுகாசுர னத்தேவர்களை யனுப்பினன்.பிறகப்படியே யவன தாக்கினையின்படி யெல்லாத் தேவர்களும் மிகுந்த துக்கத்தோடு வெகுகாலம்வரையில் சோம்பலேயின்றி யவனைச் சேவித்துவந்தார்கள். (19½) பிற கொருநாள் தேவர்களெல்லாம் விஷ்ணு பிரம்மர்களோடுகூடப் (20) பருவதச் சிரேஷ்டமாகிய கைலைகிரிக்குச் சென்று ஸ்ரீ நந்திகேசுவரனது திருவாக்கினையின்பேரி லங்கு சமுசாரமாகிய வியாதிக்கு மருந்தையொத்தவரான ஸ்ரீமகாதேவனைத் தரிசித்து (21) மிகுந்த பக்தியோடு தண்டம்போல் நமஸ்காரம்பண்ணிப் பற்பல துதிகளால் தோத்திரம்பண்ணினார்கள். அதன்மேல் ஸ்ரீபரமேசுவரன் பிரஸன்னராகி விஷ்ணுவை நோக்கி வந்த வரலாற்றை வினவுகையில் (22) விஷ்ணுவும் சகல சங்கதிகளையும் விண்ணப்பம்செய்துவிட்டு ஸ்ரீஜகதீசனைப் பிரார்த்தித்துக் கொண்டதாவது:—"ஓ! சம்போ! சருவஞ்ஞா! விசுவேசா! அடியார்களின் பயத்தைத்தொலைப்பவரே! மகாதேவா! சர்வதேவேசுவரா! சரணமடைந்தோரிடத்து நேசமுடையோரே! கஜமுகாசுரனு லிராப்பகலாய் வாதிக்கப்படலுற்ற வித்தேவர்களை யோர் சிரேஷ்டரான புத்திரனை யுண்டுபண்ணிக் காப்பாற்றிடல் வேண்டு" மென, (23-24½) இவ்வா றவனது வசனத்தைக் கேட்'டப்படியே நல்ல'தென்று வந்தனிப்போர்களின் துக்கத்தைத் தீர்த் தருளலுற்ற ஸ்ரீபரமேசுவர னத்தேவர்களை யனுப்பலானர். பிற்பாடத்தேவர்க ளவரை நமஸ்காரம்பண்ணிவிட்டு வெகு சந்தோஷமாய்த் தங்கள் தானம்சென்றார்கள்.(26) இவ்வாறாகத் தேவரெல்லாம் தங்கள் தங்கள் தானமடைந்தவுடன் ஸ்ரீபரமேசுவரன் பார்வதியோடுகூடச் செஞ் சந்தனம், பாரிஜாதை முதலிய விருக்ஷங்களா லடரலுற்ற விசித்திரமான கேளிவிலாஸத் தோட்டத்திற்கெழுந்தருளினர்.(27)

இருபத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௨௭—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடக்கேளிவிலாஸ வனத்தில் ஸ்ரீ மகாதேவ ரங்குள்ள விநோதங்களைப் பார்த்துக்கொண்டே சித்திரமண்டபத்துக்கருளினர். பின்பு பார்வதி நேசரான (1) ஸ்ரீ பரமேசுவரன் தேவியோடுகூட இரத்தின சிங்காதனத்தில் வீற்றிருந்து சித்திரச் சுவறுமீதுள்ள சித்திரங்களை மிகுந்த சந்தோஷத்தோடு (2) பார்த்துவருகையி லளவிலே யங்குள்ள வோர் பிரணவத்தைத் திருக்கண்ணுற்றபோ தவ்வா றவர் நோக்கியமாத்திரத்தி லப்பிரணவத்தினின் றோ ராண்யானையும் பெண்யானையு (3) முண்டாகி யவ்விரண்டும் வெகுசந்தோஷத்தோ டொன்றோ டொன்று கிரீடித்தன. அதனை யவர்கள் கண்டதில் கௌரியம்மை மிகவாச்சரியம்கொண்டவளாகி (4) ஸ்ரீ மகாதேவனை 'யிதென்ன' வென்று வினவ, "ஓ! கலியாணி! இது லோகோபகாரார்த்தமான வுந்தனது கிருபையென்றே அறி" (5) யென்று ஸ்ரீ மகேசன் திருவாக்கருளியதன்மே லவ்விருவர்களு மவ் வியானைகளை நேசத்தோடு கண்ணுற்றார்கள். அப்போ தவ்விருயானைகளும் புணரலாகையி லங்கு கோடிசூரியப் பிரகாசம்பொருந்திய வியானைமுகத்தோரான ஸ்ரீ விநாயகமூர்த்தி யாவிர்ப்பவித்தனர்.($6\frac{1}{2}$) அப்போது மகா பலபராக்கிரமசாலியான விநாயகருடனே ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை மகா விநயத்துடன் தண்டம்போல் நமஸ்கரிக்க, அவ்விருவர்களு மவனை யணைந்துகொண் டுச்சிமுகர்ந் (8) தக்கண ராஜனை மடிமீதில் வைத்துக்கொண்டார்கள். பிற்பாடு ஸ்ரீ மகேசுவரன் கிருபையுடன் புத்திரனன கணேசனை நோக்கித் திருவசன மளித்ததாவது:—(9) "ஓ! குழந்தாய்! எம்மைக்காட்டிலும் வேறில்லாத நமது புத்திரனன வுந்தனை வந்தனிக்கலுற்ற புருடர்களுக் கியாதோ ரிடையூறுமின்றி யவர்களது கோரிக்கை சீக்கிரம் பயனடையக்கடவது. (10) நம தாக்கினையின்படி நீயே நமது கணங்களுக்கெல்லாம் முதன்மையான தலைவன். அவரவ ரொத்தனிக்கும் காரியத்தின் தொடக்கத்தி லுந்தனைப் பூஜிப்பவர்க ளக்காரியங்களை நிறைவேறப் பெறுவார்கள். (11) ஓ! புத்திரா! நீ அசுரர்களிற் சிரேஷ்டனும், தேவர்களுக்குத் திங்க ளிப்போனுமான கொடியனுகிய கஜமுகாசுரனை யதம்பண்ணி விஷ்ணுமுதலிய தேவர்களைச் சோம்பலின்றி யிரக்ஷிக்கலாவா" (12) யென்று திருவாக்கருளி ஸ்ரீ பரமேசுவர னக்கணேசுவரனைக் கைலையின் கோபுரவாசலில் ஸ்தாபித்துவிட்டுத் தாம் (13) மன மகிழ்ச்சிகொண்டவராகிக் கௌரியம்மையோடு துரிதமா யந்தப்புரம் சென்றனர். பிற்பாடு நந்திகேசுவரன் முதலியகணங்களும் விஷ்ணு முதலிய தேவர்களு (14)

மக் கணேசனை வந்தனித்துப் பற்பல துதிகளால் துதித்துவிட்டுப் பிற கவர தாக்கினையின்படி தங்கள் தங்கள் கிருத்தியங்களை முன்போல் நடத்திவந்தார்கள். (15)

அப்போது ஸ்ரீசிவபிரான் சிவாதேவியை நோக்கிக் குறாகலத்தினுல் வசனமுரைத்ததாவது:—"ஓ! கலியாணி! நீ நம்மோடுகூடச் சொக்கட்டான் விளையாட வருவாய்; (16) அதனில் நீ தோல்வியடைந்தாலுந்தனுபரணங்களை நமக்குத் தந்துவிடல்வேண்டும்; நாம் தோல்வி கொண்டால் நம்முடைய வாபரணங்களை யுந்தனுக்குத் தந்துவிடுகின்றோ" (17) மென்று பந்தயம் பேசிக்கொள்ளும் சமயத்தி லங்கு விஷ்ணு வரலானுர். அவரங்கு வந்து பார்வதி பரமேசுவரர்களை வந்தனித்துவிட்டுப் பயபக்தியோ டங்கு நிற்குமளவி (18) லப்போது பரமேசுவரியானவ ளவரைப் பொது சாக்ஷியாக வேற்படுத்திக்கொண்டாள். அப்போது சுந்தரன் முதலிய பரிவாரங்கள் சொக்கட்டானுடுவதற்கு வேண்டிய சாமான்களைக் கொண்டுவந்தார்கள். (19) விஷ்ணுவும் ஸ்ரீ சிவாக்கினையின்பேரி லந்தந்த விடத்தில் காய்களை வைத்துக்கொண் டவர்கள் பாச்சக்கா யாடுவதைப் பார்த்துவந்தார். (20) அப்போது நிகரற்ற செய்கையுடைய அவ்வம்மையால் ஸ்வாமி தோல்வியடைவிக்கப்பட்டார். அப்படி யிருந்தும் ஸ்ரீபகவான் 'ஓ! மாதரசே! யாமுந்தனைச் சயித்துவிட்டோம்; (21) ஆகையால் ஓ! கலியாணி! நீ சீக்கிரமா யுந்தன் பூஷணங்களை நமக்குத் தரலாவா" யென்று ஸ்ரீபரமேசுவர னப் பரதேவதையைப் பார்த்துச் சாதுரியமா யுரைத்தனர்.(22) அதற்கம்மை நகைத்துக்கொண்டு "ஓ! தேவேசா! தோல்வி பெறலான நீ ரிலச்சையற்றுயாதுரைத்திட்டீர்? (23) நல்லதிருக்கட்டும்; ஓ! பரமசிவா! பொய் வார்த்தையை விட்டுவிட்டுச் சாக்ஷிக்காரரான இவ் விஷ்ணுவைக் கேட்டுக்கொண்டிப்போ தும்முடைய பூஷணங்களை யெந்தனுக்குத் தாரும் தாரு" (24) மென, அப்போது விஷ்ணுவானவர் ஸ்ரீ மகேசுவரனுல் கண்ஜாடைமூலமா யேவப்பட்டவராகித் தலையைக் குனிந்துகொண்டு பொய்ச்சாக்ஷி சொன்னதாவது:— (25) "ஓ! மகாதேவி! சருவஞ்ஞான ஸ்ரீ பரமேசுவரராலல்லவோ இப்போது ஜயிக்கப்பட்ட" தென, இவ்வாறு விஷ்ணுவசனத்தைக் கேட்டவுடன் கௌரியம்மன் கோபாவேசம் கொண்டவளாகி (26) "ஓ! விஷ்ணுவே! நீர் மத்தியஸ்தராய்ப் பார்த்துக்கொண்டிருந்தும் பொய்யுரைத்தபடியால் நீர் சீக்கிரமா யோர் குருட்டு மலைப்பாம்பி னுருவத்தைக் கொள்ளக்கடவீ" (27) ரென் றிவ்விதமாய்ச் சிவாதேவியானவள் தலைகுனிந்து பொய்ச்சாக்ஷிசொல்லலான

அவ்விஷ்ணுவைச் சபித்தனள். கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! பிற்பாடு விஷ்ணுவானவர் ஸ்ரீ பார்வதிதேவி சாபத்தினால் மிகப்பயந்தவராகி ஸ்ரீ மகேசுவரனை (28) வந்தனித்துச் சாபவிமோசனத்தைப் பிரார்த்திக்க, அப்போது பகவான் "ஓ! மாதவா! நீர் வடத்தீவத்திற்குப் போய்க் கொடிய தவத்தைச் செய்துகொண்டிரும்; (29) சிலநாளளவில் விநாயகன் கஜமுகாசுரனை யதம்பண்ணிவிட் டங்கு வரலாவான். அப்போது நீ ரவனைக் கண்டவுடன் சாபத்தினின்று விடுபடலாவீ" (30) ரென்று திருவாக்கருளி விஷ்ணுவை யனுப்பினர். பிற்பாடு பொட்டைமலைப்பாம்பாகிய விஷ்ணுவும் சிவாக்கினையைக் கைக்கொண்டு (31) வடத்தீவம்சென் றங்குள்ள வேழுயோஜனை விஸ்தீர்ணமுள்ள மகா பயங்கரமான வோ ராலமரப் பொந்துக்குள் (32) நுழைந்துகொண்டு பார்வதிதேவியின் சாபமகிமையால் மிகவு மிகழ்ச்சியுள்ள தேகத்தை யடைந்தவரான விஷ்ணுவானவ ரப்போது நிகரற்றவரான ஸ்ரீ சிவபிரானையும் விநாயகமூர்த்தியையு மேகாக்கிர சித்தமுடையவராகி ஹிருதயகமலத்தில் தியானம்பண்ணிக்கொண் டிருந்தனர். (33)

இருபத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

தக்ஷகாண்டம் ௨அ—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பாடிந்திரன் முதலிய தேவர்களெல்லாம் கஜமுகன் கொடுமையினால் மலைகளிற்சிறந்த கைலைகிரி (1) யடைந்தங்குவிளங்கிய பராபரக்கடவுளான ஸ்ரீ மகா கணபதியைப் பற்பல விதங்களான நைவேத்தியங்களாலும் புஷ்பங்களாலும் பூஜைசெய்து (2) உபநிஷத்துக்களா லிசைக்கப்பட்ட சிறந்த துதிகளால் மிகுதியாய்த் தோத்திரம் செய்தார்கள். பிறகு ஸ்ரீ பரமேசுவர புத்திரரான ஸ்ரீ விக்கினேசுவரபகவான் (3) "ஓ! மகா பராக்கிரமசாலிகளான தேவர்களே! உங்களுக்கு வேண்டியதைச் செய்கின்றோம்; நம்மாற் செய்யப்படவேண்டியதை நீங்கள் பயமின்றித் தெரிவித்துக்கொள்ளலா" (4) மென, அதன்மேல் தேவர்கள் நிர்ப்பயர்களாகி வசனமுரைத்ததாவது:—"ஓ! அடியார்களது வேண்டுதலை யருளலுற்ற மகா வலிமைகொண்ட கணநாதா! (5) கணங்களுக்கெல்லாம் கணபதியும், சகலர்களாலும் சரணம் பெறத்தக்கவருமா

ன தேவரீரைச் சரணமடைந்தோம். ஓ! கணேசா! கஜமுகாசுரனே ய தம்பண்ணி யத்துராத்துமனு லிராப்பகலாய் வாதிக்கப்படுகின்ற வித் தேவர்களையெல்லா மிரக்ஷித்தருளவேண்டு மிரக்ஷித்தருளவேண்டு" மெ ன, (6½) இவ்வாறவர்களது வசனத்தைக்கேட் 'டப்படியேயாகல்' தெ ன்று ஸ்ரீ மகா கணபதியானவர் (7) சிங்காதனத்தை விட்டிறங்கித் து ரிதமதி லசலனென்ற வோர் மகா பூதத்தின் மிக வுன்னதமு மொப்ப ற்றதுமான கழுத்தினி லேறிக்கொண்டு மிகுந்த கோலாகல சத்தத் தோடுகூடிய பூதசேனைகளாற் சூழப்பெற்றவரும், குடைகள், சாமரங்க ள், துவஜங்கள், விசிறிகள், (9) கடலோசையை அதிகரித்த வாத்திய கோஷங்கள் இவைகளாலும், மலர்மாரிகளைச் சொரியலுற்ற தேவர்க ளாலும் சூழப்பெற்றவருமாகி (10) ஸ்ரீ விக்கினேசுவரர் மகாவேக த்தோடு மதங்கநகருக்கருகினில் வந்தனர். உடனே கஜமுகமகாசு ர னவரது வரவைக்கேட் (11) டிரதத்திலேறிக்கொண்டு சதுரங்க சைனியங்கள், சாமரங்கள், விசிறிகள், குடைகள், துவஜங்கள், அனேக வாத்தியங்கள் இவைகளோ டாயிரம் வாகினி சங்கியை கொண்ட சேனை களோடு கூடியவனாகித் துரிதமாய் (12½) மிகுந்த வாடம்பரத்துடன் பட்டணத்தைவிட்டு வெளிப்பட்டு வந்தான். (13) அப்போ தவ் விரு திறத்தார்களின் சேனைகளுக்கும் கோரமான வியுத்த முண்டாயிற்று. அப்போ ததேக்ஷணத்தி லசுரன் சேனை தோல்வியடைந்தது.(14) அது கண்டு கஜமுகன் மிகுந்த கோபாவேசமுற்ற முகத்தைக் கொண்டவனா கி வில்லினைத் தாயிரம் சத்திரங்களை வருஷித்தான். (15) மேலு மா யிரம் கூரம்புகளால் பூதர்களைத் துறத்திவிட்டுப் பின்னும் வெகு கோப த்தோடு ஸ்ரீவிநாயகரிடமா யிரதத்தை விரைவாய் விறட்டிக்கொண்(16) டவ்வசுரக்கேட னவனைநோக்கி வசனமுரைத்ததாவது:— "அடா! நீ ந மது சௌரியத்தையும், நாம் ஸ்ரீபரமேசுவரனிடமிருந் தடைந்திருக்கின் ற வரனையு மறியவில்லை. (17) நீ பிழைத்திருக்க விருப்பம்கொண்டால் வந்தவழியோடு சும்மா போய்விடு; நீ கேவலம் சிறியோனாகையால் நம் மோ டிங் குயுத்தம்செய்யத் திறமையுளனல்லன். (18) முந்திப் பல சத்துருக்கள் நம்மோ டியுத்தத்திற்கு வந்து தோல்வியடைந்துவிட் டார்கள். நமக்கு ஸ்ரீ சம்புவின் வரத்தினாற் சகல வாயுதங்களாலு மிங் கு நாசமுண்டாகமாட்டாது. (19) நீ தேவர்களுக் குதவிசெய்வதற்கா க விணுக்கிரகத்தோ டிங்கு வந்திருக்கின்றாய். உனக்கு யுத்தம்செய்ய மனதிருந்தா லிப்போது நம்முடன்கூடச் சண்டைக்கு வா. (20) முந் தி யுந்தனைச் சயித்துவிட்டுப் பிறகத் தேவர்களையும் சமுகரித்துவிடுகின் றேன்" மென, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டு ஸ்ரீ கணேசுவரன்

(21) அடா! அசுரா! யாம் ஸ்ரீ சிவாக்கினியின்பேரி லுந்தனை யதம்ப ண்ணித் தேவர்களைக் காப்பாற்றுவதற்காக விங்கு வந்திருக்கின்றோம். நீ யிந்திராதிகளுக்கு முன்போலவரவர் பதவிகளை விட்டுவிடு.(22) இல் லாவிடி லுந்தனைச் சந்தேகமின்றி யாக்கினை செய்துவிடுவோம். ஆகை யால் நீ தவறுதலை யொழித் திப்போது பாராண்டிருக்கலாவா" யென இவ்வாறு ஸ்ரீ விக்கினேசுவரன் திருவசனத்தைக் கேட்டவுட னவ்வசுர மன்ன னவர்மீது மிகுந்த சத்தத்தோடு கூடிய பல சரங்களைச் சொரிந் தான்.(24) அப்போது ஸ்ரீகணநாத ரதேகக்ஷணத்தி லோரிருப்புலக்கை யா லவைகளைத் தூள்தூளாக்கிவிட் டத்துராத்துமனுடைய மகா கோர மாகிய தனுசையும் செதல் செதலாக்கிவிட்டனர். (25) அப்போ தவ ன் மற்றோர் தனுசை யெடுத்துக்கொண் டவரருகினில்வர, மகா பலவா னுகிய ஸ்ரீ விக்கினேச ரதனையு மதே யுலக்கையால் முறித்துவிட்டார். (26) பிற்பாடவ் வசுரனோர் தண்டத்தை யெடுத்துக்கொண் டட்டகா ஸம் பண்ணிக்கொண்டு வெகு வேகத்தோடு மகா பயங்கரமா யவரருகி னில் வருகையி(27) லப்போ தவரத்தண்டத்தையும் பொடிப்பொடியா க்கிவிட் டத் துராத்துமனுடைய நடுமார்பினி லுலக்கையா லோரடியடி க்க, (28) அப்போ தசுரனடி பட்டு மிகவும் கிலேசமடைந்தான். த விரவு மிதற்கிடையில் ஸ்ரீகணநாதர் கண்டனகோடாலியா லோர் நொடி நேரத்திற்குள் ளவனது சைனியங்களை யெல்லா மொரேகாலத்தில் மடி த்துவிட்டனர். ஓ! இது கஷ்டம்; (29½) பிறகு கஜமுகாசுரன் கோ பாக்கினியால் ஜுவலிக்கப்பெற்றவனுகி (30) மகாத்துமாவாகிய அப் பிரபுவின்பேரில் மிகுதியான தேவாத்திரங்களை வருஷிக்க, ஓ! தக்ஷப் பிரஜாபதியே! அவ்வத்திரங்களெல்லா மவரை முறைப்படி பிரதக்ஷிண (31) நமஸ்காரங்கள் செய்துவிட்டு மிகுந்த பயபக்தியோடு நின்றன. (31½) அப்போ தசுர னதைப்பார்த்தவுடன் மகா வாக்கிரகத்தோடுப் பிரளயகால மேகங்கள் மகா கர்வத்தோடு பெருமாரி சொரிவதுபோ லவர்மீ தனேக பாணங்களை வருஷித்தான். (32½) பிறகு பலவானுகிய ஸ்ரீகணேசரானவரவனத்திர சத்திரங்களால் கொல்லப்படாத் தகாதவனெ ன்பதை யறிந்து (33) தமதோர் கொம்பின் நுனியை முறித் தவன் மீதெறிய, அது மகா வேகத்தோடு வந் தவனது கடினமாகிய மார்பை ப் பிளந்துவிட் (34) டோர் நொடிநேரத்திற்குள் தெண்ணீர்க் கடலு க்குச் சென்று ஸ்நானம்பண்ணி யவரது திருக்கையையடைந்தது. அப் போ தவ் வசுர னிரத்தங்களால் பூசப்படலுற்ற வத் தேகத்தை விட்டு விட்டு (35) நிகரற்றதும், மகா வுன்னதமுமான வோர் மூஞ்சூறின் தேகத்தை யெடுத்துக்கொண்டான். அதேதோவென்றால்:— நன்கு வட்

டமுள்ள சிவந்த பெரிய பயங்கரமாகிய விரு கண்களைக்கொண்டதும், (36) பருத்து நீண்டு மிக கெட்டியான முகத்தோடும் வாலோடும்கூடிய தும், சுற்றிலும் பற பற வென்று சலிக்கலுற்ற நான்கு கால்களால் மலைகளையும் மரங்களையும் (37) தூள் தூளாக்கலுற்றதும், அதிகொடூரமுள்ளதும், சகல வண்டங்களையும் விழுங்கிவிடத் திறமைகொண்டதும், மிகுந்த சத்தமுடையதும், மகா கோரமுள்ளதும், மூவுலகுகளையும் நடுங்கச்செய்யலுற்றதுமான (38) விப்பேர்க்கொத்தவம் மூஞ்சூறானது மகாவேகத்தோடு ஸ்ரீ விநாயகாருகினிற் செல்லலானவுட னவர்தன் பேரிலேறிக்கொண் டதனைத் தமது வாகனமாக்கிக்கொண்டனர். (39) ஓ! கோ! அம்மூஞ்சூறும் திவ்விய ஞானத்தைக்கொண்டதாகி ஸ்ரீ விக்கினேசுவரனைச் சுமந்தது. பிற்பாடு பிரம்மன் முதலிய தேவர்கள் மிகுந்த சந்தோஷங்கொண்டவர்களாகி யப்போது (40) மலர்மாரிசொரிந்து சுற்றிலும் நர்த்தனம் செய்துகொண்டு கட்டியக்காரர்கள்போ லவரது குணநிசயங்களை யெடுத்துப் பாடினார்கள். (41) பின்பு தயாநிதியாகிய ஸ்ரீ விக்கினேசுவர னவர்கள்மீது கிருபைசெய்தனர். துராத்துமனாகிய கஜமுகனால் கொல்லப்படலான (42) பூதர்களெல்லாம் ஸ்ரீ விக்கினேசுவரர் கிருபாவசத்தினா லெழுந்துவிட்டார்கள். எப்போதும் நல்லோர்களி னிரக்ஷகரான வக்கணராஜனுக்கெதுதா னசாத்தியம்? (43) அதன்மேல் பூதர்களெல்லாம் மிகுந்த கோலாகலம் செய்தார்கள். அப்போ தசுரேந்திரனென்பவன் பூதர்களிடத்து மிந்திரனிடத்தும் மிகவும் பயந்தவனாகி (44) யோர் பறவையுருவ மெடுத்துக்கொண்டு மேருகிரியின் குகைக் கோடிவிட்டான். அப்போது சுக்கிரனும் பயத்தினாற் பக்ஷியுருவம் கொண்டு தன்னிருப்பிடத்திற் கோடிவிட்டான். (45) துராத்துமனான கொடிய வசுரன் மிகுந்த விரத்தங்களைப் பெருகவிட்டுக்கொண் டிறந்தவிடமதில் மகா ரத்தவனமென்ற பட்டண முண்டாகி (46) யங்கு விக்கினேசுவரன் விதிப்படி யோர் சிவப்பிரதிஷ்டை பண்ணி யச் சிவலிங்கத்திற்குத் தமது திருநாமத்தால் விளங்கலுற்ற 'ஸ்ரீகணபதீசுவர' னென்று பெயரிட்டுப் பூஜைசெய்தார். (47) அதன்பேரில் ஸ்ரீ விநாயகர் மூஞ்சூறுமீ தேறிக்கொண்டு பூதர்களும் தேவர்களும் குடைகளையும் சாமரங்களையும் பிடித்துச் சேவிக்கப்பெற்றவராகி வெகு சந்தோஷத்தோடு புறப்பட் டெழுந்தருளுகையி (48) லங்கு நடுவழியில் நேரலான நேர்த்தியாகிய வடத்தீவத்திற் கருளியவுட னங்கு குருட்டுமலைப் பாம்பி னுருவத்தோடு கிடக்கலான விஷ்ணு வானவர் மகாத்துமாவாகிய ஸ்ரீ விக்கினேசுவர னெழுந்தருளி யதை யறிந்து வெளிக்கிளம்பி (49½) யங் கவரைத் தரிசித்து வந்தனம்பண்ணி யவ்வுருவத்

தை பிறந்து நிஜவுருவத்தைக் கொள்ளலாகி மிகுந்த சந்தோஷத்தோட
வனைத் துதிசெய்தார்:— (50½) "ஓ! அடியார்களுக் கபயமளிக்கலு
ற்ற கணேசா போற்றி போற்றி! (51) தேவரீருக்கு மேலான வியஜ
மா னில்லாமையைப் பெற்றவரே போற்றி! மகா மகிமை பொருந்திய
வரே போற்றி! ஸகல லோகங்களுக்கும் முக்கியமான நாதரே போற்
றி! ஓ! தேவர்களைக் காக்கின்ற கணேசா! தேவரீரைத் தரிசித்தமாத்தி
ரத்தினால் ஸ்ரீகௌரியம்மையின் சாபத்தா லடையப்பட்ட வெந்தன த
திகோரமான விந்தேகத்தைத் தொலைக்கப்பெற்றேனல்லவா!" (52½)
வென் றுரைத்து ஸ்ரீ விஷ்ணுவானவர் மிகுந்த பக்ஷியபோஜியங்கள் மு
தலிய பூஜாத்திரவியங்களைச் சேகரித்துக்கொண்டு மகா பக்தியோ டவ
னைப் பூஜைசெய்தார். (53½) அதன்மேல் ஸ்ரீ விக்கினேசுவரன் பிரச
ன்னரானவுடன் விஷ்ணு வசனமுரைத்ததாவது:— "ஓ! ஸர்வேசுவரா!
ஸகல வபீஷ்டங்களையு மருளலுற்ற தேவரீரை யெந்த மானிடச்சிரேஷ்
டர்க ளித் தனுர்மாதத்தின் ஷஷ்டிதிதியில் பூஜிக்கின்றார்களோ! ஓ! வி
சுவேசா! தேவரீ ரடியேனை யிரக்ஷித்தது ஞாபகத்தி லிருப்பதற்காக
அவர்களுடைய வேண்டுதலைக் கொடுத்தருளவேண்டு" (55½) மென,
இவ்வா றவரது வசனத்தைக் கேட் டப்படியே நல்லதென்றுவிட்டு ஸ்ரீ
கணநாதன் தமது கணங்களோடுகூட மலைகளிற் சிறந்த கைலைகிரிக்குத்
துரிதமாய்ச் சென் (56½) றங்கு தம் பெற்றோர்களாகிய பார்வதீ பர
மேசுவரர்களை வந்தனம்பண்ணி (57) யப்போ தவர்க ளாக்கினையின்
பேரில் தமது வாசற்படிமேடையி லிருந்தருளினர். பிற்பாடு விஷ்ணு
முதலிய தேவர்க ளிங்கு ஸ்ரீ விநாயகரைத் தண்டம்பண்ணித் (58) து
தித் தஞ்சலிசெய்துகொண்டு வேறுவரன் கேட்டுக்கொண்டதாவது:—
"ஓ! விக்கினேசுவரா! துராத்துமாவாகிய கஜமுகாசுரனுக்கு முன்னிலை
யில் தேவர்களான வெங்களாற் செய்யப்பட்டுவந்த குட்டிக்கொள்ளுத
ல் தோப்புக்கரணம் முதலியவைகளை (59½) பின்றுமுதல் மகாத்துமா
வான தேவரீர் முன்னிலையில் யாங்கள் செய்துவரும்படி யருள்செய்ய
வேண்டும். (60) ஏனென்றா லதனால் யாங்க ளிரக்ஷிக்கப்பட்டது மறக்
காமலிருக்கவேண்டும். மேலு மெந்த மானிடர்கள் தேவரீர்முன்னிலை
யி லிதேமாதிரியான செய்கைகளைச் செய்துவருகின்றார்களோ (61)
ஓ! பரமேசுவர புத்திரரான தேவாதிதேவா! அவர்களுக் கென்றும் சக
ல வபீஷ்டங்களையும் கொடுத்தருளவேண்டு" மென்று வேண்டிக்கொண்
டவ் வரனைக் கைக்கொண்டதின்பேரி லவ் வெல்லோர்களு மவரைக் கு
ட்டிக்கொள்ளுதல் முதலியவைகளுடன் நமஸ்கரித்துவிட் டவர தாக்கி
னையின்பேரில் வெகு சந்தோஷத்தோடு தங்கள் தங்கள் தானங்களுக்

குச் சென்றார்கள். (62) ஓ! தக்ஷப்பிரஜாபதியே! அளவற்ற மகிமை கொண்ட ஸ்ரீ விக்கிலேசுவரருடைய விச் சரித்திரத்தை யாதியோடந்த மா யுந்தனுக்கு யா மிங்கு வர்ணித் துரைத்தனம். இதனால் ஸ்ரீ ஜகதீச னுக் கென்ன விகழ்ச்சி யிருக்கின்றதடா”?

இருபத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் உகூ-வது அத்தியாயத்தினர்த்தம்.

“அடா! தக்ஷா! ‘ஸ்ரீ பரமேசுவரன் தாமசகுணமுடையவ’ னென்று நீ யுரைத்திட்டா யல்லவா! யாமிப்போ தந்தச் சரித்திரத்தையு முந்தனுக் குரைக்கின்றோம்; அதனைக் கவனமாய்க் கேளடா. (1) அடா! ஸ்ரீ மகாதேவன் முக்குணங்களையு மதிகரித்தவரும், கலியாணகுணங்களா லலங்கரிக்கப்பெற்றவரும், அளவற்ற மகிமைகளுக்கு மாதாரரும், பரஞ்சோதியுமான பராபரக்கடவுள். (2) முந்தி யவர் ஸத்துவம், இரஜசு, தமஸ் ஆகிய முக்குணங்களையும் சிருஷ்டித்துப் பிரம்மனை யிரஜோகுணத்தோடு சேர்த் தவருக் குலகங்களைச் சிருஷ்டிக்கலுற்ற புத்தியையும், (3) விஷ்ணுவைச் சத்துவகுணத்தோடு சேர்த் தவருக் கிரக்ஷணை செய்யலுற்ற புத்தியையும் கொடுத்தருளியிருக்கின்றனர். ஆனால் மற்றெந்தத் தேவச்சிரேஷ்டர்களாலும் சமுகாரத்தொழிலை நடத்தமுடியாதாகையா (4) லப்போது பிரபுவாகிய ஸ்ரீசம்புவானவ ருள்ளத்தில் கேவலம் சத்துவகுணமூர்த்தியாயினு மவரே தமோகுணத்தோடுகூடிய வுருத்திரமூர்த்தியா யிருந்துகொண் டொவ்வொரு கல்பத்திலும் சகலங்களையும் சமுகரித்துவருகின்றார். (5) இங்ஙனமின்றி யவர் தாமசகுணமுள்ளவராகவேயிருந்தால் ஸனகர்முதலிய விருடிகளுக்கும், பிரம்ம விஷ்ணுக்கள்முதலிய தேவர்களுக்கு மச் சிவபிரா னெவ்வாறு ஸகல வித்தைகளையு முபதேசிப்பவராவார்? மேலு மவ ரெவ்வாறு சுத்தநிர்ம்மலமாகிய திருமேனியைக் கொண்டவராவார்? ($6\frac{1}{2}$) தவிரவும் வேதமான தப் பரமேசுவரனைச் சத்தியஞானனந்த பரப்பிரம்மமென்று முறையிடுகின்றதே! (7) இதுமுதலியவையெல்லா மவர் தாமசகுணமுள்ளவராயி னவருக் குண்டாகமாட்டா. அன்றியும் நிர்ம்மலரும், நிற்குணரும், நிர்விகாரரும், அளவற்ற மகிமைகளுக் காதாரரும், கொஞ்சமேனும்

குறைவிலா விபவங்களைக் கொண்டவரும், மாயையா லணுகப்படாத திருமேனியைக் கொண்டவரும், இலக்ஷிய மிலக்ஷிணமற்றவருமான வம்மகாதேவனை (8-9) யவர் மிகவும் பரிசுத்தமுள்ளவர் பற்றியே வேதமானது 'சிவ' னென்று கூறுகின்றது. பிரம்மா விஷ்ணுக்கள் முதலிய தேவரெல்லாம் முக்குணங்களோடும் கூடியவராவார்கள். (10) விஷ்ணு நித்திரையும் சோம்பலுமுடையவரும், கறுத்தநிறமுள்ளவருமா யிருப்பதால் தமோகுணமுடையவர். அவருக் காங்காரம் முதலிய குணங்க ளிருக்கின்றபடியா லிரஜோகுணமுள்ளவரென்றும் சொல்லப்படுகின்றார். (11) மேலுமவர் சிவஞானமுள்ளவரும், சிவார்ச்சனம் சிவத்தியானங்களைச் செய்பவருமா யிருப்பதால் சத்துவகுணமு முடையவராவார். நான்முகனெனப் பிரம்மனு மிவ்வாறே முக்குணங்களையு முடையவர். (12) அவர் துக்கம் அக்கியானம் முதலியவைகளைக் கொண்டவராகையால் தமோகுண முடையவரென்றும், தங்கநிறமுள்ள மேனியையு மாங்காரத்தையும் கொண்டவராகையா லிரஜோகுண முடையவரென்றும், (13) சிவஞானம் முதலியவைகளைக் கொண்டவராகையால் சத்துவகுண முடையவரென்றும் சொல்லப்படுகின்றார். கேளாய்! பிரஜாபதியே! இவ்வாறாகவே சகல வுலகங்களும் முக்குணங்களாலும் நிரம்பப்பட்டவைதான். (14) ஆனால் ஸ்ரீ சிவபிரானோவெனில் குணங்களையற்றவரும், சாந்தமுடையவரும், கேவலம் ஞான வுருவத்தைக் கொண்டவருமே! என்றாலும் ஸ்ரீ மகேசுவரன் சகல ஸ்தாவரஜங்கமங்களுக்குள்ளு மந்தராத்துமாவா யிருந்துகொண்டு (15) சமுகாரமாகிய வோர் பேதமான தொழிலைச் செய்தருளுகின்றபடியால் பெயருக்குமட்டில் தமோகுணமுடையவர்போல் விளங்குகின்றாரேயின்றி வேறில்லை. ஓ! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவா னம்மணமா யிருப்பதுமுத லவர் தமோகுண முள்ளவரென்பது வரையிலான சரித்திரங்களை யெல்லாம் யாமிங் குந்தனுக் குரைத்திட்டனம். (16) அதாவது:— தாருகாரணிய வாசிகளான நாற்பத்தெண்ணுயிர மிருஷிசுவார்களையு மின்னு மப்போதுக் கப்போ தவரவர்களையு மிரக்ஷிப்பதற்காக வுள்ள வப் பரமேசுவரனுடைய அந்தந்த திவ்விய சரித்திரங்களை யெல்லா முந்தனுக் கெடுத்துரைத்தனம். ($17\frac{1}{2}$) ஆகையால் நீயு மிவ் வியாகமதில் வேள்விக்கு வேந்தனாகிய வப் பரமசிவனைப் பூஜை செய்யலாவாய். (18) அடா! தக்கா! சத்தியமா யந்தப் பகவானே யுந்தனையு மிரக்ஷிக்கின்றாரடா" வென்று முனிச்சிரேஷ்டரான ததீசிமாமுனிவ ருரைத்தவுடன் மறுபடியு மத் தக்கன் (19) "அடா! தவசியே! அவ னெப்பேர்க்கொத்தவ

ளுயினு மவனுக்கு யா மவிசு கொடுக்கப்போவதில்லை; நீ யினியி ங்கொன்றும் சொல்லவேண்டாம். உந்தன் பேச்சுக்காரத்தன்மையை விட்டு நீ வந்தவழியோடு சென்றுவிடு" என்றிவ்வாறு யத்தக்கனு ரைத்ததன்பேரில் மாமுனிவர் கோபாவேசம் கொள்ளலாயினு (21) மக் கோபத்தை முயற்சியின்பேரில் தமக்குள்ளே யடக்கிக்கொண்டு வசனமுரைத்திட்டதாவது:—"ஆ! ஆ! எந்தப் பிராம்மணக்கேடர்க ளி யாகமதில் ஸ்ரீ மகாதேவனைப் பூஜியாம லிருக்கின்றார்களோ (22) அவ ர்களுக் கவ் வியாகத்தின் பயன் கிடையாமற் போவது மின்றி யவர்கள் விபரீதமான பயனைக் கைக்கொள்ளலாவார்கள். ஆகையால் அட்டா! த க்கா! உந்த வியாகத்திற்கு நிச்சயமாய்த் தடை சம்பவித்து (23) உ டனே அவிசுகளைப் புசிக்க வாசைகொண்டு வந்திருக்கலுற்ற வித் தேவ ர்களோடுகூட வுந்தனுக்கும் சிரச்சேதமும் நேரிடப்போகின்றது. இ தற்குச் சந்தேகமே யில்லை" (24) யென் றுரைத்துவிட்டுப் பின்னு ம ங் கியாகசாலையில் வந்திருக்கலுற்ற வந்தணர்களை நோக்கி யம் மாமுனி வர் வசனமுரைத்ததாவது:—"ஓ! சகலர்களான கேடுகெட்ட வந்தண ர்களே! நீங்களெல்லோர்களும் சாத்திரங்களில் கெட்ட அர்த்தத்திலே மனப் பற்றுத லுள்ளவர்களும், (25) என்றும் சிவத்துரோக புத்தியை க் கொண்டவர்களும், சிவார்ச்சனத்தில் பராமுகமுள்ளவர்களும், முக்கி யமான வேதமார்க்கங்களில் பராமுகமுள்ளவர்களும், சிவனடியார்களை யிகழ்வோர்களும, (26) மிகுந்த துக்கம் கொண்டவர்களுமாகி யெல் லா நரகங்களிலும் விழப்பெறக்கடவீர்கள்" என் றம்மாமுனிவ ரவர்க ளைச் சபித்துவிட்டுக் கேளீர்! சௌனகாதி முனிவர்களே! ஹிருதயகம லத்தில் ஸ்ரீ பரமேசுவரனைத் தியானம்பண்ணிக்கொண்டே சீடர்களோடு கூடத் தமதாசிரமத்திற்கேகினர். (27)

இருபத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௨௰—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ததீசிமாமுனிவர் சென்றவுடன் துராத்துமனாகிய வத் தக்கன னு பலம், வீரியம், தைரியம், கீர்த்தி, ஐசுவரியம் முதலியவையெல்லாம்

போய்விட்டன. (1) பிற்பாடு தக்ஷனுடைய கொடிமா மிரண்டுதுண் டாகிப் பூமியில் விழுந்தது. மேலு மவன் பெண்டீருடையா' தாலிச்சர டவளது கழுத்தினின் றறுந்துவிழுந்தது. (2) அப்போது மகாவுன் னதமான யூபத்தம்ப (இயாகத்திற்குரிய பசுக்களைக் கட்டுவதற்கான வோர் கம்பம்) த்தின்மீது காக்கைகளும் கழுக்களு முட்கார்ந்தன. ஆ யினும் துர்ப்புத்திகொண்ட வத்தக்க னிவ்வாறுமுதலிய வபசகுனங்க ளை நேரிற் கண்டு (3) மவன் சற்றேனும் பயமற்றவனாகி முந்தி விஷ் ணுவையும் பிறகு பிரம்மனையும் பூஜித்துவிட்டுத் தேவர்களுக்கும் முனி வர்களுக்கும் பற்பல வுபசாரங்களைச் செய்தும், (4) அநேகவிதமாய்த் தன் பெண்களையும் மாப்பிள்ளைகளையும் பல வாபரணங்களாலும் வஸ்தி ரங்களாலும் ($4\frac{1}{2}$) வெகுமானித்தும், அங்கு வந்திருக்கலுற்றப் பிரா ம்மணரெல்லோர்களையும் காமதேனுவால் கொடுக்கப்பட்ட வுண்டிகளா ற் புஜிப்பித்துக் கற்பகவிருக்ஷத்தினின் றடையப்பட்ட வஸ்திரங்களா லும், சிந்தாமணியினின் றுண்டாகிய நேர்த்தியான பல பூஷணங்களா லு மிரத்தினங்களாலும் சந்தோஷிப்பித்தனன். ($6\frac{1}{2}$) அப்பிராம்மணர் க ளிவ்வெல்லாவற்றையும் போர்போராய்க் குவித்துக்கொண்டார்கள். சில (7) ரவைகளையெல்லா மெடுத் தோரிடத்திற் கொண்டுவைத்துவி ட்டுத் திரும்பவும் துரிதமாய் வந்தார்கள். விசாலமாகிய அவ்வியாகசா லைதனில் தேர்கள், குதிரைகள், இயானைகள் இவைகளுடைய சத்தங்க ள் சமுத்திரம்போ லுண்டாயின. ($8\frac{1}{2}$) மேலு மங் கனேகமனேக வி மானங்கள் மிகவு மடர்த்தியாய் நிரம்பியிருந்தன. (9) இரம்பைமுதலி யவப்ஸரஸ்திரீக ளங்கு மிக நேர்த்தியாய் நர்த்தனம்பண்ணினார்கள். த விரவும் மதுரமான கண்டநாதத்தையுடைய சில வித்தியாதரர்கள் செ விக்கினிமையா யங்கு பாடினார்கள். (10) தேவரெல்லா மவரவர் ஸ்தி ரீகளோடுகூட வங்கு வெகு சந்தோஷமாயிருந்தார்கள். பிறகு தக்க னும் பிராம்மணர்களுக்கு வேண்டியமட்டில் தானங்கள் கொடுத்துவிட் டுப் (11) பிறகு துரிதமா யக்கினியை மூட்டி யவிசைப் புஜிக்கலுற்ற தேவர்களை யுத்தேசித் தவரவருக்கு வரிஷைக்கிரமமாய் மந்திரம்சொல் லி யாகுதிகளைச் செய்தார். (12) அப்போது ஸ்ரீ நாரதமுனிவ ரதனை யறிந்து மலைகளிற் சிறந்த கைலைகிரிக்குச் சென் றங்கு பார்வதியோடு கூடிய ஸ்ரீ மகாதேவனைப் பக்தியுடன் வந்தனித்துக் (13) கைகளை ய ஞ்சலிபண்ணிக்கொண் டவருக் கிவ் விருத்தாந்தங்களை யுரைத்ததாவ து:— "ஓ! பரமேசுவரா! தக்ஷப்பிரஜாபதியானவன் பிரம்மனுக்குப் பு த்திரனாயிருந்தும் வேள்விக்கு வேந்தாகிய தேவரீருக் (14) கவிர்ப்

பாகம்கொடாமலே துர்ப்புத்திகொண்டவனாகி யியாகங்களுக்கீசுவரா
ன தேவரீர்மீது பராமுகம்கொண்டவனா யிப்போது மற்றத் தேவர்களை
யெல்லாம் வேண்டியமட்டில் பூஜிக்கின்றா" னென, (15) அப்போ தவர
து வசனத்தைக் கேட்டு ஸ்ரீ கௌரீதேவியானவள் புன்னகைப்புற்ற ம
னதைக்கொண்டவளாகி யத்தக்கனுடைய இயாகத்தைப் பார்க்க மனதி
னில் நிச்சயித்துக்கொண்டு (16) ஸ்ரீ மகேசுவரனை வந்தனித்து வசன
முரைத்திட்டதாவது:— "ஓ! தேவதேவேசா! அடியே னவ் வியாகத்
தைப் பார்த்துவிட்டுத் திரும்பி யிங்கு சீக்கிரமாய் வந்துவிடுகின்றேன்.
(17) ஓ! ஸர்வேசுவரா! அங்கு போவதற்காக விப்போ தெந்தனுக்
குத்திரவருளவேண்டு" மென, இவ்வாறு தம்மனையாளது வசனங்கேட்
டுப் புன்னகைப்புற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி (18) "ஓ! க
லியாணி! நீ யங் கெப்படி போகத்தகும்? அத்தக்க னுந்தனை யழையா
மலே மதிமயக்கத்தால் நம்மை விட்டு மற்றெல்லாத் தேவர்களையும் பூ
ஜிக்கலாகின்றானல்லவோ! (19) ஆகையால் கேளாய்! மாதரசே! நீ
யிப்போ தங்கு செல்வது தகாதல்லவா?" என, ஸ்ரீ பரமேசுவரன திவ்
வாறு வசனத்தைக் கேட்டதன்மேல் தக்ஷன்பெண்ணாகிய ஸ்ரீ சிவாதே
வி தந்தையிடத்து நேசத்தினால் லோகயாத்திரைசெய்ய விருப்பமுற்ற
வளாகி மறுபடியும் வசனமுரைத்ததாவது:— ($20\frac{1}{2}$) "ஓ! பரமேசுவ
ரா! ஒன்றுமறியாத வத் தக்கன தபராதத்தை யிப்போது மன்னித்தரு
ளவேண்டும்; (21) ஓ! தேவேசா! தேவரீ ருத்திரவின்படி அடியே ன
வன தியாகத்தைப் பார்த்துவிட்டுச் சீக்கிரமா யிங்கு வந்துவிடுகின்றே"
னென்று ஸ்ரீ உமாதேவியானவ ளப்போது வெகு விருப்பத்தோ டிவ்வி
த முரைத்து (22) மெத்த வணக்கத்துடன் ஸ்ரீ மகாதேவரைத் தண்
டம்போல் வந்தனிக்க, அவரு 'மப்படியே நல்ல' தென் றவளை யனுப்ப
லாயினர். (23) உடனே ய்வரது கணங்க ளவர தாக்கினையின்படி யோ
ர் பெரிதான விமானத்தைக் கொண்டுவந்தார்கள். பிறகு, அனேககோ
டி சூரியப் பிரகாசம் பொருந்தியதும், பற்பல ரத்தினங்களால் விசித்
திரமானதும், (24) சகல வித அலங்காரங்களோடும் கூடியதுமான அவ்
விமானத்தி லம்மை யேறிக்கொண்டு சுமாலினி, மாலினி யென்றவர்க
ளாற் சிறந்த குடைகள் பிடிக்கப்பெற்றவளும், (25) மங்களை, சுமனசு
யென்றவர்களாற் சாமரங்கள் வீசப்பெற்றவளும், நந்திகேசுவரன் மனை
யாளான சுந்தரமேனியையுடைய ஸுகேசியம்மையால் (26) பற்பல இர
த்தினங்க ளிழைக்கப்பெற்ற பாதுகைகள் தரிக்கப்பெற்றவளும், மிகச்
சௌந்தரியம் பொருந்தியவளும், அநிந்திதை, கமலினி யென்பவர்க

ளால் மலர்மாரி சொரியப்பெற்றவளும், (27) விசிரிகள், வெற்றிலைப் பெட்டிகள், கண்ணாடிகள், கோடி கோடிகளான, மாலை, சந்தனம், வஸ்திரம், ஆபரணம் இவைகளின் பெட்டிகள் இவைகளைக் கைமீது தரிக்கவுற்ற தேவஸ்திரீகளாற் சூழப்பெற்றவளும், (28½) நர்த்தனம் செய்யாநின்ற மெத்த வழகிய தடிபோன்ற தேகமுடைய வப்ஸரஸ்திரீகளாலும் (29) அனேக விமானங்களி லேறிய வனேகம் தோழிப் பெண்களாலும், சிலர் கிளிகளையும், சிலர் குயில்களையும், சில ரன்னங்களையும், (30) சிலர் நாகணவாய்ப் பறவைகளையும் கைகளிற் கொண்ட பல சுந்தரஸ்திரீகளாலும், இவ்வாறு முதலிய வின்னும் மற்ற தேவஸ்திரீகளாலும் சூழப்பெற்றவளுமாகி மிகுந்த வாத்திய கோஷங்களுடன் புறப்பட்டனள். (31½) அப்போது பனிரண்டுகோடி பூதர்க ளிருடபத் துவஜத்தை முன்னிட்டுக்கொண்டு சிலர் குடைகளையும் சில ராயுதங்களையும் கைப்பற்றியவர்களாகி யவ் வெல்லோர்களும் மிகுந்த கோலாஹல சத்தத்தோடு புறப்பட்டார்கள். (33) சோமநந்தனென்ற வோர் கணத்தலைவ னம்மையை யடிக்கடி தண்டம் பண்ணிக்கொண்டே சென்றான். இவ்விதமான மிகுந்த சம்பிரவங்களோடு ஸ்ரீபரமேசுவரி யவ் வியாகசாலை சேர்ந்து (34) தம் விமானத்தினின் றிறங்கி தக்க னருகினில் வந்தாள். அப்போது துராத்துமனாகிய வத் தக்க னிப்பேர்க்கொத்த தன் பெண்ணை மதியாமல் (35) "ஓ! பெண்ணே! உன் கணவ னமங்களம் பொருந்தியவனும், அறியப்படாத குலகோத்திரத்திற் பிறந்தவனும், என்று மனுசாரத்திலே பற்றுதலுடையவனுமானதா லவனை யாமழைக்கவில்லை. (36) ஆகையா லவன் பெண்டீராகிய வுந்தனையும் சிரெஷ்டமான இவ் வியாகத்திற்கு யா மழைக்கவில்லை யன்றோ! அங்ஙனமாயினும் நீ வீணாசைகொண் டிங்கு வந்தாயல்லவா! (37) ஆகையால் நீயுந்தன் புருடன் வீடாகிய மயானத்துக்குச் சீக்கிரமாய்ப் போய்வி" டென்று துர் நடத்தைக்காரனான தக்கன் சொல்லும்போது கௌரியம்மை கூறியதாவது:—(38) "ஓ! தந்தாய்! என தெல்லாச் சகோதரிகளுக்கு மவர்களது புருடரெல்லோர்களுக்கும் நீர் மரியாதை செய்திருக்கின்றீரல்லவா? (39) மேலும் மற்றச் சுற்றத்தா ரெல்லோர்களுக்கும் நீரவரவருக்குத் தக்கபடி மரியாதை செய்திருக்கின்றீர். ஓ! கோ! இப்படி யிருக்கையில் நீ ரிவ்வியாகமதி லெந்தனையு மெந்தன் கணவனையும் மட்டில்தான் மதிக்கவில்லை. (40) ஆ! கா! இப்படி யிருக்கையில் யான் வலிய வந்தும்கூட நீர் வெகு கோபாவேசம் கொண்டவராகி யிங்

கு வந்திரானின்ற வெந்தனைத் திரும்பி யோமென்று சொல்லலாகின்றீர். (41) யான் யாது பிழைதான் செய்யலானேனோ; அதை நீர் சொல்லும்: இது உமக்கு வாழ்வுக் கிடமாகாது" என, இவ்வாறு கௌரியம்மை கூறிய வசனத்தைக் கேட்டுத் தக்கன் பின்னு முரைத்ததாவது:— (42) "அடி! பெண்ணே! உன் கணவன் சுடுகாட்டினிற் கூத்தாடுவதிலே முயன்றவனும் தமோகுண முடையவனு மன்றோ! ஆகையா லவன் பெண்டீராகிய நீயு மிங் கெமதியாகத்தைப் பார்க்கத்தக்கவளல்லள். (43) அதோ இருக்கின்ற நம தெல்லாப் பெண்களும், அவர்களது கணவர்களாகிய நமது மாப்பிள்ளைகளும் நம்மா லழைக்கப்பட்டு வந்திருக்கின்றார்கள். (44) ஸத்தியமாய் நீ நமது பெண்ணுமல்லள்; உன் கணவனும் நமது மாப்பிள்ளையல்லான்; நமதிச்சையின்படி வேண்டியதெல்லா மவர்களுக்கே கொடுக்கலாவோம். (45) இவர்களெல்லாம் நம்மையே அண்டி யிருக்கின்றார்கள்; நீயோ அப்படியல்லள்; ஆகையால் நமது யாகத்தி லுன் கணவனுக்குச் சிறந்த அவிர்ப்பாகத்தைக் கொடுப்போமில்லை. (46) அவனுக்குக்கூட அவிர்ப்பாகம் கொடுக்கும்படி வேதவாக்கியங்களால் சொல்லபபட்டபோதிலும் நமது வலிமையா லவைகளைச் சட்டைசெய்யாமலே யிப்போது காரியத்தை முடிக்க முயன்றிருக்கின்றோம். (47) ஆகையால் நீ யடிககடி வீண்வார்த்தை பேசாம லிலச்சையைவிட்டு நம்முன்னிலிருந்து சும்மாபோய்விடு" (48) என, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டவுடன் கௌரிதேவியானவள் மிகவும் கோபங்கொண்டவளாகி நின்றாள். அப்போ தங்குள்ளவெல்லோர்களும் தேவியைப் பார்த்து மிகவும் பயங்கொள்ளலானார்கள். (49) அப்போது தேவியுடைய ஸகியாகிய விமலையென்பவ ளவ் வம்மையைத் தண்டனிட்டு "ஓ! தேவதேவேசி! நீ ரிவ் வுலகங்களுக்கெல்லாம் தாயாகியதால் கோபத்தை விலக்கியருளவேண்டும். (50) ஏனென்றா லுமது கோபத்தினாற் சகல ஜகங்களும் நிச்சயமாய் நாசமடைந்துவிடும்; ஆகையால் ஓ! கலியாணி! தாங்கமுடியாத விக் கோபத்தைத் தணித்தருளலாவீ" (51) என் றுரைத்துவிட் டவள் மறுபடியும் பூமிதனில் தண்டம்போல் தண்டனிட்டனள். அப்போது தக்கன் மகளான கௌரியம்மையும் கோபத்தைவிட்டுத் துராத்துமனாகிய வத் தக்கனை நோக்கி மறுபடியும் திருவசனமுரைத்ததாவது:— ($52\frac{1}{2}$) "அடா! துர்ப்புத்திகொண்ட தக்கா! நீ யிப்போது ஸ்ரீதேவாதிதே

வனைப்பற்றி நிந்தை செய்ததினு லிங் கெந்தன் மனம் மெத்த நொந்து பதறலாகுதடா; (53½) நீ யெந்தனை யிகழ்ந்துபேசியதா லெந்தனுக் கிவ்வாறு வருத்தமில்லை. (54) ஆனல் கலக்கமற்றவரும், நிராதாரரும், நிர்க்குணரும், திங்கற்றவரும், சருவஞ்ஞரும், சகல வித்தைகளுக்கும் மூலகர்த்தாவும், நாசமற்றவரும், (55) தத்துவங்களுக் கெட்டாதவரும், சாந்தமுள்ளவரும், சுகத்தைச் செய்வோரும், வணங்கியோரின் துக்கங்களைத் தொலைப்பிப்போருமான ஸ்ரீ பரமேசுவரனை நீ மதிமயக்கத்தினுல் தமோகுணமுடையவனென் றுரைத்திட்டாயல்லவா! ஓ! கோ! கோ! உனக்கேதடா இப்பேர்க்கொத்த பாவம் நேரிட்டது? (56) அவர் சகல ஜகங்களுக்கும் சமுகாரகர்த்தாவானதால்மட்டில்தான் தமோகுணமுடையவர்பொலாகின்றுர். அவருக் கவிர்ப்பாகம் கொடுக்கப்படவேவேண்டும். அவர் பூஜிக்கத்தக்கவரோயின்றி மற்றவரல்லர். (57) கேளாய்! தக்கா! எப்பேர்க்கொத்த மகா பாவியும் 'சிவ' என்ற விரண்டெழுத்துக்களடங்கிய சிரேஷ்டமான திருநாமத்தை யொருதடவை யுரைத்திட்டமாத்திரத்தி லவன் மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைகின்றுனடா. (58) மேலும் சமுசாரத்தினின்று கரையேற்றனுற்ற வச் சருவேசுவரனை யாதாமொருவ னிகழ்கின்றுனே அப்பாதகனுக் குடனே மிகுந்த அபாயமுண்டாகும். (59) ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய மகிமையானது இப்பிரகாரமாயெல்லாம் வேதமதில் மிகுதியாய்க் கேட்கப்படுகின்றது. ஆகையால் ஓ! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவரனை நிந்திப்பதிலே முயன்றவனுகிய மகா பாதகனுன நீயும் (60) சிவாக்கினையின்படி சந்தேகமின்றித் துரிதமா யிங்கு நாசமடையப்போகின்றுய்" யென்றம் மகாதேவியானவள் திருவாக்குரைத்துவிட்டு நேர்த்தியான திவ்விய விமானத்தி லேறிக்கொண்டு (61) திரும்பி மலைகளிற்சிறந்த கைலைகிரிக்குச் சென் றங்கு ஸ்ரீ மகாதேவனைக் கண்டு மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்துச் (62) சங்கதிகளையெல்லாம் சொல்லிவிட்டு அத்தக்கனை வதைசெய்யும்படி பிரார்த்தித்துக்கொண்டாள். அப்போது ஸ்ரீ பரமேசுவர னம்மையுடைய திருவசனத்தைச் செவிகொள்ளாதவர்போ லிருக்கையில் (63) மறுபடியும் ஸ்ரீ சங்கரியானவள் மகாதேவரைத் தண்டம்போல் பூமியில் வந்தனித்து "ஓ! சம்போ! சருவஞ்ஞா! விசுவேசா! பிரபஞ்சங்களைக் காப்பதிலே முயற்சிகொண்டவரே! (64) ஓ! கருணுமுதக்கடலே! ஆசையும் பகையுமொழிந்த தேவரீ ரத் தக்கனுடைய வேள்விதனைக் கலைத் தவனையும் சீக்கிரமாய்ச் சமுகரித்துவிடல்வேண்டும். (65) ஏனென்று லப் பாவியானவன் மிகவும் துர்நடத்தையுள்ளவ

னும், சிவநிந்தையிலே முயன்றவனுமாகியதா லப்போதுதான் ஸகல லோகங்களுக்கும் க்ஷேமமுண்டாவதோ டடியேனுடைய கோரிக்கையும் நிறைவேறலாகு" மென்றாள். (66)

முப்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

தக்ஷகாண்டம் ௩௧—வது அத்தியாயத்தினர்த்தம்.

ஸ்ரீ கௌரிதேவியினுடைய இவ்வாறு துதியைக் கேட்டதன் மேல் ஸகல அண்ட பிண்ட சராசரங்களையு மொரோ கபளமாய்ப் புசிக்கலுற்ற ஸ்ரீ மகாதேவர் வீரருக்கெல்லாம் வீரரும், அடியார்களுக்குப் பத்திர (க்ஷேம) த்தை யருளுவோரும், மிகவும் பெரியதான திருமேனியைக் கொண்டவரும், ஸகல லோகங்களுக்கும் முக்கிய நாயகருமான ஸ்ரீ வீரபத்திரரைத் திருமனதால் நினைத்தருள, ($1\frac{1}{2}$) அப்போதவர் ஜய ஜயா! விஜயீபவா! வென்றுறக்க வுரைத்துக்கொண்டு (2) ஸ்ரீ மகேசுவரனது பயங்கரமான நெற்றிக்கண்ணாகிய அக்கினிகுண்டத்தினின்று, மகா மேருகிரியினது கொடுமுடிக்கு நிகரான வாயிரம் சிரசுகளைக் கொண்டவரும், (3) மிகவும் பருத்து நீண்டு மெத்த வழகிய விரண்டாயிரம் கைகளாலும் கத்தி, கேடயம், கதை, சக்கிரம், வஜ்ஜிராயுதம், சூலம், தநுசு, சரங்கள், (4) முஸலம், பிராஸம், நாராசம் முதலிய ஆயுதத் திரள்களைக் கைக்கொண்டவரும், விஷ்ணு முதலிய தேவக்கூட்டங்களின் முண்டத்தலை மாலைகளின் வரிசைகளால் விளங்கப்பெற்ற திருமேனியைக் கொண்டவரும், (5) கைதனில் விளங்கிய பெரிய மணியின் விஜய சத்தத்தினால் மகா பயங்கர முள்ளவரும், சிவந்த காந்தியால் பிரகாசிக்கலுற்ற சடைமுடியா லலங்கரிக்கப் பெற்றவரும், (6) மிகவும் சிவந்த பெரிய வுருவத்தைக் கொண்டவரும், கோரமான சிங்கப்பற்களையும், மெத்த வகண்ட தாடைகளையு முடையவரும், பற்பல விரத்தின வரிசைகளா லிழைக்கப்பெற்ற வொலிக்கலுற்ற தண்டைகளால் விளங்கிய பாதங்களைக் கொண்டவரும், (7) குபீல் குபீலென்று நெருப்புத் தணற்களைக் கக்கலுற்ற மகா வுக்கிரங்களான மூவாயிரம் கண்களைக்

கொண்டவரும், கொம்புவாத்தியத்தை வைத்துக்கொண்டு லீலாவினோத த்தினால்மிகப்பயங்கரமாய்ச்சத்திக்கலுற்றவரும்,(8) மிகுந்தவட்டகாசத் தோடு பெருஞ்சத்தம்செய்துகொண்டு தொன்னைபோன்றமூக்குகளினி ன்றுதீதனைக்கக்கலுற்றவரும்,வராகாவதாரத்தின்சிங்கப்பல்லையும்,கூர்மா வதாரத்தின் மகா பெரியதான முதுகெலும்பையும் தரிக்கலுற்றவரும், (9) விஷ்ணு பிரம்மர்கள் முதலிய தேவர்களி னெலும்பு மாலைகளால் விளங்காநின்றவரும், கைதனிற் கத்தியைப்பற்றிச் சுழற்றிக்கொ ண் டிங்கு மங்கும் கேடயத்தை யுதாநின்றவரும், (10) ஓர் கை யினாற் சகல வண்டங்களையும் தூக்கத் திறமைகொண்டவரும், மிகுந்த கோலாகல சத்தம்செய்துகொண்டு துரிதமா யங்கு மிங்கு மோடாநி ன்றவரும், (11) பாம்புடல்போன்ற புயங்கள்மீது சர்ப்பங்களை யாபா ணமாய்ப் பூண்டவரும், பற்பல விரத்தினங்களா லிழைக்கப்பட்ட வாப ரணங்களா லலங்கரிக்கப்பெற்றவரும், (12) திருமேனி முழுதும் தி ருநீற்றினால் பூசப்பெற்றவரும், உருத்திராக்ஷங்களை யாபரணங்களாய்ப் பூண்டவரும், செஞ்சந்தணமிட்ட நெற்றி மார்புகளைக் கொண்டவருமா யங் காவிர்ப்பவித்தனர். (13) அப்போது ஸ்ரீ தாக்ஷாயணியம்மையி னுடைய கோபத்தினின்று மகா பயங்கரமுள்ள பத்திரகாளியானவ ளதேவிதமான பயங்கர வுருவத்தோடு மிகுந்த கோலாகல சத்தம் செ ய்துகொண்டு வெளிப்பட்டாள். (14) பிற கவ் வீரபத்திரரும், பத்திர காளியும் ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களைப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செ ய்துவிட் டவர்கள் முன்னிலையில் நின்றார்கள். அப்போது வீரபத்திரர் பகவானை நோக்கி மகா பயபக்தியோடு வசனமுரைத்திட்டதாவது:—

(15) "ஓ! ஐயா! விஜயீபவா! சம்போ! மகாதேவா! அடியார்களைப் ப கைத்த வீரர்களை நாசம்செய்வோரே!' பினாகபாணியே! தேவரீர் தாச னாகிய வடியேனை யெந்த வேலையினாலும் கட்டளையிட்டருளவேண்டு ம்; (16) தேவரீர் திருச்சன்னிதி முன்பாக விஷ்ணுவைக் கட்டிகொ ண்டுவரல்வேண்டுமா? அல்லது பிரம்மாவை அப்படியே கொண்டுவரல் வேண்டுமா? அல்லது தேவரீ ராக்கினையின்படி ஸகல ஜகங்கள், அல்ல திந்திரன் முதலிய தேவர்கள், கின்னரர்கள், அல்லது இன்னு மவ்வவ் வுலகங்களிலுள்ள மதம்பிடித்த மற்றவர்கள் இவர்களைக்கொண்டுவரல் வேண்டுமா? உத்திரவானால் மலைகளையானாலும் நக்கி விழுங்கி விடுகின் றேன்; அல்ல தவைகளைக் கையினால் நொறுக்கிவிடுகின்றேன். (18) ஓ! ஜகதீசா! தேவரீரது திருவுளத்தில் நினைக்கப்பட்ட யானென்னசெ ய்யல்வேண்டு" மென்றுரைத்து ஸ்ரீ பிரபு முன்னிலையில் வினயத்தோ

டஞ்சலிகொண்டு நின்றனர். (19) பிறகு பகவான் மகா பலசாலியான வீரபத்திரனை நோக்கி "ஓ! நமதாக்கினையை நிறைவேற்றலுற்ற மகா வலிமை பொருந்திய மங்களகரனாகிய வீரா! (20) தக்கனென்பவனிப்போது நம்மை விலக்கிவிட்டுச் சகல தேவர்களையும் வேண்டியமட்டில் பூஜிக்கலாகின்றான். ஆகையால் நீ யங்கு சென்று நமக்குரித்ததாகிய சிரேஷ்டமான ஹவிர்ப்பாகத்தைக் கேட்டு, (21) அதனை யவன் கொடுப்பானாகில் வாங்கிக்கொண்டு சீக்கிரமாய் நம்மிடத்திற்குவா. அவனதனைக் கொடாவிட்டா லப்போது கெட்ட எண்ணங்கொண்ட வத்தக்கனைச் சகல தேவர்களோடும்கூட வியாகமத்தியில் சிரசாக்கினை செய்து கொன்றுவிட்டு ($22\frac{1}{2}$) நீ யங்கே யிரு; அப்போது யாமு மங்கு சீக்கிரமாய் வருவோ" (23) மென்று திருவாக்கருளி யம் மகேசுவரன் வீரபத்திரனை யனுப்ப, உடனே மகா பலசாலியான அவரும் பகவானை வந்தனித்துவிட்டுத் தாங்க முடியாத மிகுந்த வாநந்தத்தோடு கோலாகல சத்தம் செய்துகொண்டு புறப்படுகையி (24) னுள்மூச்சு வெளிமூச்சுகளி னின் றனேக மொப்பற்ற வீரர்களைச் சிருஷ்டித்தார். மேலுமவ ரதேமாதிரியா (25) யெல்லா மயிர்க்கால்களிலிருந்தும், தமது தொன்னைபோன்ற மூக்கு, காதுகள், வியர்வைத்திவலைகள், கண்கள், சடைகள், இரண்டு புயங்கள், (26) மார்பு, கை, கழுத்து, முழந்தாள், கணுக்கால், பாதங்கள், நாபி, இடுப்பு முதலிய இன்னும் மற்ற வுருப்புகளினின்றும் தமக்குச் சமானமான வேறனேகம் (27) கணங்களையும் திரண்ட பூதர்களையு மோர் கணமாத்திரத்தில் லீலாவினோதமாய்ச் சிருஷ்டித்தார். ($27\frac{1}{2}$) அப்போ தக்காளியம்மையும் சிவாக்கினையின்பேரில் புறப்பட்டுக் (28) கறுப்பு, சிவப்பு, வெண்மை, மஞ்சள், சித்திரவர்ணம் முதலிய பற்பல நிறங்களோடுங்கூடிய புலி, சிங்கம், சரபம், யானை, குதிரை, இருடபம், கரடி, யாளி, கவயம் முதலிய மிருகங்களின் முகங்களைக்கொண்ட தமக்குச் சமானமான வனேகர்களைச் சிருஷ்டித்தாள். (30) பிறகவ் வெல்லோர்களும் பற்பல வாயுதங்களைக் கைப்பற்றியவர்களும், பற்பல நிறமுடையவர்களும், பற்பலவித முகங்களைக் கொண்டவர்களும், (31) பற்பலவித பூஷணங்களா லலங்கரிக்கப்பெற்ற மேனியைக் கொண்டவர்களும், அதி பயங்கரமான நெருப்புக் கண்களை யுடையவர்களும், மிகுந்த வலிமைகொண்டவர்களும், மகா வேகமுடையவர்களும், அனேகம் பிரம்மவிஷ்ணுக்களுடைய வெலும்புகளை மாலையாய்ப் பூண்டவர்களும், (32) அனேககோடி பிரம்மாண்டங்களையும் பிண்டமாய்ப் பிடிக்கத் திறமைகொண்டவர்களும், ஸகல பிரம்மாண்டங்களை

யும் வடவாக்கினையையு முண்டு ஜெரித்துக்கொள்ளத்தக்க ஜாடராக்கினியுடையவர்களுமான (33) விப்பேர்க்கொத்த பயங்கரர்களான பூதர்கள், வீரர்களும், காளிகள், மோகினிகள், சாகினிகள், டாகினிகள், யோகினிகள், (34) பைரவிகள், காளராத்திரிகள், முதலியபெண்கணங்களும் இவர்களெல்லாம் மிகுந்த கோலாகல சத்தம் செய்துகொண் டவ் விருவரையும் பின்தொடர்ந்து சென்றார்கள். (35) மேலும் பானுகம்பன் முதலிய கணங்களெல்லாம் வாத்தியங்களை முழக்கினார்கள். தவிரவும் குடைகள், சாமரங்கள், துவஜங்கள் இவைகளைப் பிடிப்பவர்களும், பற்பல வுபசாரங்களைச் செய்ய வேற்பட்டவர்களும், (36) குடை பிடிக்கலான பிருகி, தண்டி, முதலியவர்களும் புறப்பட்டு துரிதமாய்ச் சென்றார்கள். (37) இவ்வெல்லோர்களும் சென்றோர் கணநேரத்திற்குள் தக்கனுடைய யாகசாலையை முற்றுகை போட்டார்கள். அப்போது பதினான்கு லோகங்களு மவற்றிலுள்ள சகல ஜனங்களும் நடுநடுங்கினார்கள். (38) அப்போது ஸ்ரீ வீரபத்திரர் வீரர்களையும் மற்றவர்களையும் நோக்கி "ஓ! கணங்களே! நீங்களெல்லோர்களு மிப் பெரிய யாகசாலையைச் சூழ்ந்து நில்லுங்கள்; (39) இல்லாவிடில் ஊஞ்சைகொண் டிவ் வியாகசாலையில் வந்திருக்கலுற்ற மகா சூதர்களான சகல தேவர்களும் மற்றவர்களும் வெளிப்பட் டோடிப்போவார்கள். ஆகையால் நீங்களிப்போ திங்கு வெகு ஜாக்கிரதையா யிருக்கவேண்டு" மென்றார். (40)

முப்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௩உ—வது அத்தியாயத்தினர்த்தம்.

வீரபத்திர ரிவ்வா றுரைத்தபிறகு பத்திரகாளியோடுகூடச் சகல தேவக்கூட்டங்களாலும் நிரம்பப்படாநின்ற வியாகசாலைக்குட் சென்றனர். (1) வீரபத்திரர் மிக நேர்த்தியான அவ் வியாகசாலையிற் பிரவேசித்தபொழுது கணங்களெல்லா மப் பாதகனுடைய யாகசாலையைச் சூழ்ந்துகொண் (2) டதனைக் காப்பவர்களான வெல்லாச் சைனியங்களையு மதம்பண்ணிவிட்டு மிகுந்த கோலாகலம் செய்துகொண்டு ஸ்ரீ வீரபத்திரா தாக்கினையின்படி வெகு சாவதானமா யிருந்தார்கள். (3)

அப்போது விஷ்ணுப்பிரம்மர்கள்முதலிய தேவரெல்லாம் பத்திரகாளியோடுகூட வந்திருக்கலுற்ற வீரபத்திரரைக் கண்டவுடனொருவரோடொருவர் பேசிக்கொண்டதாவது:— (4) "ஓ! கோ! புருவநெரியால் வக்கிரமான நேத்திரங்களைக் கொண்ட நிகரற்ற திருமேனியுடைய இவ்விருவரும் யாவர்கள்? ஆ! கா! இவர்கள் ஸ்ரீபார்வதி பரமேசுவரர்களுடைய கோபத்தினின் றுண்டானவர்களே யென்பது நிச்சயம். (5) ஏனென்றால் மற்றவர்களுக் கிப்பேர்க்கொத்த மகா பயங்கரமான கோபமெவ்வா றுண்டாகு" மென்று சில தேவர் தலைகுனியப்பெற்றவர்களாகிச் சொல்லிக்கொண்டார்கள். (6) சிலர் "ஓ! கோ! இங்குள்ள வெல்லாத் தேவர்களுக்கும் விநாசகாலம் நெருங்கிவிட்ட" தென் றொருவருக்கொருவர் வியக்தமாய்ச் சொல்லிக்கொண்டார்கள். (7) சிலர் "ஸ்ரீசிவபிரானையும், சிவனடியார்களையும் நிந்திப்போரான மகா பாவிகளுக்கெல்லாம் தெய்வீகமான தண்டனை சம்பவித்துவிடுமென்ற வேதவாக்கியம் நிச்சயமே! (8) அது இப்போது பிரத்தியக்ஷமா யித்தக்கனிடத்தில் பார்க்கப்படலாயிற்" றென்று பேசிக்கொண்டார்கள். சிலர் "ஓ! கோ! சிவநிந்தை செய்வோர்களின் கூட்டத்தி லிருப்பவர்களும் (9) விநாசமடைவார்களென்ற வேதவாக்கியமானது நிச்சயமாய் நமக்குள்ளே பலித்துவிட்டது. ஐயோ! இத்தக்கப்பாதகனுக் கியாகம்செய்யவேண்டுமென்ற புத்தி யேன்தா னுண்டாயிற்றே! (10) ஓ! கோ! இப்புத்தி யுண்டானதாலல்லவோ எல்லாத்தேவர்களுக்கு மேககாலத்தில் நாசம் நேரிடலாயிற்று. ஆ! ஆ! இப்பாதகன் தேவர்களாகிய நம்மெல்லோர்களையும் சுயப்பிரயோஜனத்தையே நாடியவர்களென்றும், முற்றும் வலிமையற்றவர்களென்றும் துரும்புக்குச் சரியாய் நினைத்துக்கொண்டு ($11\frac{1}{2}$) தன் நோக்கத்தின்படி ஸ்ரீமகாதேவனை விலக்கி யியாகம்செய்யத் தலைப்படலானான். (12) ஆகையால்தான் ஸ்ரீபரமேசுவராக்கினையின்படி யெல்லோர்களுக்கும் விநாசம் நேரிடலாயிற்" றென்று மிகுந்த பயத்தோடு சொல்லிக்கொண்டார்கள். (13) சிலர் "ஓ! கோ! ஸர்வலோகமாதாவாகிய ஸ்ரீதாக்ஷாயணியம்மையை யவமதித்ததின்பேரி லவள் வெளிச்சென்றவுடனதின் பய னதிசீக்கிரத்திற் கைக்கு வந்துவிட்ட" (14) தென்றும் பற்பலவிதமாய்த் தேவர்கள் சொல்லிக்கொண்டிருக்கையில் ஸ்ரீவீரபத்திரர் பத்திரகாளியோடுகூட மகா கோபத்தோடு தக்க னருகினில் வந்து கோலாகலசத்தம்பண்ணி யற்புதமாகிய கொம்புவாத்தியத்தை யொலிப்பித்துச் சகல தேவச்சிரேஷ்டர்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் தக்கனெதிரில் கலகலவென்று ந

தைத்துக்கொண்டு நின்றார். (16) அப்போ தக் கொம்புச்சத்தத்தைக் கேட்டவுடன் சில தேவர்க ளோட்டம்பிடிக்கலானார்கள். உடனே மேருகிரியும் பூமியும் வெடிக்கலாயின. (17) சகல லோகங்களிலுமுள்ள வெல்லாப் பிராணிகளும் மூர்ச்சையடைந்தார்கள். அங்குள்ள தேவ ரெல்லோர்களும் பயந்து மூர்ச்சைகொண்டு பூமியில் விழுந்தார்கள். (18) இயாகசாலைக்கு வெளியி லோடலான சில தேவர்க ளங்குள்ள வீரர்களால் துறத்தப்பட்டவர்களாகித் துயரமடைந்து பிறகு யாகசாலைக்குத் திரும்பினார்கள். (19) அப்போ திவ்வாறெல்லா மத் தேவர்கள் பயமடைந்தபோது பாதகனான தக்க னதி சோகம்கொண்டு மூர்ச்சையடைந்தான். (20) பிறகவன் மூர்ச்சை தெளிந்தபொழுது மகா பயம்கொண்டவனாகி வீரபத்திரனை நோக்கி யப்போது வசனமுரைத்த தாவது:— (21) "ஓ! மகா பலவானே! நீர் யாவர்? எதற்கு வந்தீர்? எந்தத் தேசத்திலிருந்துவந்தீர்?" என்று தக்கன்கேட்டவு டன்வீரன் கம்பீரவசனந்தோ டுரைத் ததாவது:— (22) "அடா! தக்ஷா! தேவாதிதேவனும், சூலபாணியுமான ஸ்ரீ மகாதேவாது மைந்தராகிய யா முந்தன தியாகத்தி லவருக்காகவுள்ள அவிர்ப்பாகத்தை வாங்கிப்போவதற்காக வந்திருக்கின்றனமென்று நீ மனதினிற் கொள். (23) ஆகையால் நீ யிங் கியாகமதில் ஸ்ரீ பரமேசுவரனுடைய ஹவிர்ப்பாகத்தைச் சீக்கிரமாய்க் கொடு" என்று வீரபத்திரரால் திருவாக்கருளப்பட்டவுடன் தக்கன் மறுபடி யுரைத்ததாவது:— (24) "ஓ! வீரனே! இவ்வியாகமதிலச் சங்கரனுக் கவிர்ப்பாகம் கொடுக்கப்படமாட்டாது; தமோகுணமுடைய வச் சங்கரனை யாம் விலக்கிவிட்டு மற்றத் தேவர்களைமட்டிலே யவிசினால் திருப்திசெய்விப்போ" (25) மென் றத் தக்க னுரைக்கும்போது கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்போது வேதமானது பயத்தினால் நடுக்கம்கொண்டதாகிப் பிரணவத்தோடுகூட வந்து வசனமுரைத்ததாவது:— (26) "ஓ! தக்ஷா! நீ ரிப்போது வேள்விக்கு வேந்தரான ஸ்ரீ மகாதேவனை யவிசினால் திருப்திசெய்விக்கவேண்டியதே! ஏனென்றா லவரது கட்டளையின்படியே ஸகல ஜகங்களு மோர் வரையைக் குட்பட்டிருக்கின்றது. (27) கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! முந்தியதான அவிர்ப்பாகத்துக்கு அவரோ தகுதியுள்ளவரொன்றுயா மிப்போ துந்தனுக்குப் பலமுறையாய்ச் சத்தியம் சொல்லுகின்றோ" (28) மென்று வேதத்தினா லுரைக்கப்பட்ட வசனத்தைக் கேட்டும் ஓ! கோ! கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அத்தக்கன் ஸ்ரீ மகாதேவனுக்குச் சிரேஷ்டமான அவிசைக்கொடுக்க விருப்பப்படவில்

ஃ. (29) பிற கப்போ தவ் வேதமானது பிரணவந்தோடுகூட பார்வ தியோடுகூடிய ஸ்ரீ பரமேசுவரனைத் தோத்திரம்பண்ணி வீரபத்திரனையு ம் வந்தனித்துவிட் டவர தாக்கினையின்படி துரிதமாய்த் (30) தமதிரு ப்பிடம் சென்றது. வேதமிவ்வா றுரைத்துவிட்டுச் சென்றவுடன் வீ ரபத்திரர் மறுபடியும் கோபங்கொண்டு (31) துர்நடத்தைக்காரனான வத் தக்கனை நோக்கிச் சிவாக்கினையை மனதினில் நினைத்துக்கொண்டு 'அடா! தக்கா! இயாகமதி லெங்களுக்குரிய அவிர்ப்பாகத்தைக் கொ டுத்துவி' டென்று மகா வலிமையோ டுரைக்க, (32) தக்கனும் "ஓ! வீரனே! கொடிய தொழிற்காரனான அவ் வுருத்திரனுக்கு நம்மா லவி ர்ப்பாகம் கொடுக்கப்படமாட்டாது. அவ னெப்போதும் பூதப்பிரே த பிசாசங்களோ டலைந்து திரிகின்றான். (33) ஆகையா லவன் நமதி யாகத்தி லவிசைப் புஜிப்பது தகுதியல்ல" வென்றக்கெட்டநடையுள்ள தக்கன் செவிகளுக்கு நாராசம்போல் வசனமுரைத்தனன். (34) அப் போ தவ் வசனத்தைக் கேட்டவுடன் மகா பராக்கிரமசாலியான வீரப த்திரர் "ஓ! சகலர்களான தேவர்களே! இவன் வார்த்தை யுங்களுக்கு ச் சம்மதந்தானா?" (35) வென் றங்குள்ளப் பிரம்மவிஷ்ணுக்கள்முத லிய தேவர்களை நோக்கிக் கேட்கலாகையில் தேவர்கள் வீரபத்திரருடை ய அவ் வார்த்தையைக் கேளாதவர்கள்போ லெல்லோர்களும் தலைதனை க் குனிந்துகொண்டு உள்ளமதில் பிரமங்கொண் டிருந்தார்கள். (36)

முப்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.



தக்ஷகாண்டம் ௩௩—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்போ தவற்றையெல்லாம் கண்டு மகா பலவானாகிய வீரப த்திரர் பிரம்மாண்டத்தை வெடிக்கச்செய்பவர்போல் கோலாகலசத்தம் செய்துகொண் (1) டம் மகா பராக்கிரமசாலியானவர் விஷ்ணுவினு டைய நடுமார்பினில் தண்டத்தினா லோ ரடியடிக்க, அப்போ தவர் மார் பினிலிருக்கு மிலக்குமிதேவியும், கௌஸ்துபமென்ற விரத்தினமும் (2) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மிகவும் நொறுங்கிப் பூமியில் விழலாயிற்று. விஷ்ணுவும் சௌரியமிழந்தவராகி விழுந்து மூர்ச்சை

யடைந்தனர். (3) பின்பு பிரபுவானவர் பிரம்மன்தலைமீது முட்டியால் குட்ட, அதனாலவர் மூர்ச்சைகொண்டு விழுவதற்குள்ளாக (4) வீரபத்திர ரப் பிரம்மனைவிட்டுச் சிதறிவிழலான காயத்திரி, ஸாவித்திரி, ஸரஸ்வதி இவர்களின் மூக்குகளையும் முலைகளையும் கத்தியா லறுத்துவிட்டார். (5) அதன்மேல் தேவர்கள் மிகவும் பயம்கொண்டவர்களாகி நான்கு பக்கங்களாயும் வெளியி லோடலாகையில் வெளியிலிருந்த பூதர்களாலும் வீரர்களாலும் திரும்பவு முள்ளே துரத்திவிடப்பட்டார்கள். (6) பிறகு வீரபத்திர ரோட்டம் பிடிக்கலான சந்திரனைக் காலினாலுதைத்துத் துகைத்து இயமனுடைய மகா கடினமான தலையையும் வெட்டிவிட்டார். (7) மேலு மற்புதமான விக்கிரமத்தைக்கொண்ட அவ்வீரன் சூரியனுடைய தாடையி லோரறைவிட்டவுட னவன் பற்களெல்லா முடைந்து பூமியில் விழுந்தன. (8) பின்னுமவர் துராத்துமனாகிய பகனுடை விரு கண்களையும் பிடுங்கிவிட்டுக் குயிலுருவமெடுத்து வெளி யோடலான விந்திரனையும் வெட்டி (9) யவிசை யுண்போனான வக்கினிதேவன் கைகளையும் நாவையு மறுத்து, அவ்வக்கினியின் பெண்டீருடைய வற்புதமான மூக்கையும் கத்தியாற் கண்டித்துவிட்டனர். (10) மேலும் சத்துருக்களைக் கண்டிப்போரான அவ்வீரன் நிருருதியைத் தண்டத்தா லடித்துக்கொன்றுவிட்டு இருப்புலக்கையினால் வருணனை யதம்பண்ணிக் (11) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஓடிப்போகலான வாயுதேவனையும் கண்டனகோடாலியால் கொலைசெய்துவிட்டுக் குபேரனைச்சூலத்தின்நுனியில் கோர்த்துக்கொண்டு கூத்தாடினார்.(12)அப்போதேகாதச ருத்திரர்களு மீசானதேவனும் பயங்கொண்டவர்களாகி வந்தனிப்போரின் துக்கங்களைத் தொலைப்பிப்போரான அவ்வீரபத்திரரை வந்தனிக்க, (13) அவரு மவர்களை யோர்வாறதட்டி விட்டுவிட்டனர். மேலுமப்போ தசுரேந்திரனை யோ ரம்பினாற் கொன்று (14) மானுருவமெடுத் தோடு மியாகமதை யவ்வியாகசாலையின் மத்தியிலே தடுத்துக்கொண்டதின் முன்னிலையிற் சென்று மகா கோபத்தோ டோ ரத்திரத்தினாற் சேதித்துவிட்டார். (15) அப்போது தக்கனு மிவற்றையெல்லாம் கண்ணோக்கி மனமதிற் சிந்தித்ததாவது:—"ஓ! கோ! இவ்வீரன் நாம் பார்த்திருக்கும்போதே யியாகத்தையும் தேவர்களையும் கொன்றுபோட்டான். (16) முந்தியே யப்பரமேசுவரனுடைய மகிமை பிரம்மனா லுணாக்கப்பட்டதன்றோ! அப்படியே நாமு மச் சிவபிரானை யறிந்து மகா கொடிய தவத்தைச் செய்து மகேசுவரன் கிருபையினால் மிகுந்த ஐசுவரியத்தை யடைந்திருந்தும், புத்தியில்லாத நாம் வீண் சத்துரு புத்தி

ஞ லவனை நிந்திக்கலானோம். (18) மேலும் முந்தி நமது தந்தையான ப் பிரம்மனு லியாகம் செய்யப்படலாகும்போது நா மப் பரமேசுவரனு க் கவிர்ப்பாகம் கொடுக்கக்கூடாதென்று தடுத்துவிட்டோமல்லவா! (19) தவிரவும் நாமு மவனை விலக்கிவிட்டுத் தேவர்களோடுகூட வியாகம்செ ய்யத் தொடங்கலாகையில் நமது க்ஷேமத்தைக் கருதிய ததீசிமுனிவ ரா லுரைக்கப்பட்ட வசனத்தையும் மீறிவிட்டோம். (20) தவிரவும் நமது பெண்ணாகிய தாக்ஷாயணி வார்த்தையையும் நாம் கேளாமற் கடந்துவிட் டோம். மேலு மிவ்வீரன் முந்தியவிர்ப்பாகத்தைக் கேட்டதற்கும் நாம் ப ராமுகமாயிருந்துவிட்டோம். (21) வேதமே பிரணவத்தோடுகூட வந்து ரைத்த வார்த்தையையும் நா மாதரிக்கவில்லை. ஆகையால் விஷ்ணுமுத லிய தேவருக்கெல்லாம் நாம் மிகுந்த வனர்த்தத்தையே யுண்டுபண்ணி விட்டோ" (22) மென்று மகா வாங்காரம்கொண்டிருக்கிற வீரபத்தி ரரையு மதேவிதமாயுள்ள பத்திரகாளியையும் கண்டும், எங்கும் பூ தகணங்கள் சூழ்ந்துநிற்பதை யறிந்தும் வெளியிலோட முடியாமல் (23) அப்போது மிகவும் திகிலடைந்திருந்தும், வெளிக்குப் பயப்படாத வன்போல் மௌனமாயிருந்தான். உடனே வீரபத்திரர் கத்தியையெ டுத் ததிவேகமாயெழும்பிக்குதித்துக்(24) துராத்துமனாகிய வந்தக்கன் தலையைக கண்டித் தவன் சிவநிந்தை செய்ததற்குத் தக்கப் பிரயோஜன த்தைச் செய்துவிட்டார். (25) பிறகவ ரவ்வாறறுக்கபட்ட தலையை யக்கினியில் போட, அப்போது கேளீர் முனிவர்களே! அதின் சாம்பல் தான் மிஞ்சலாயிற்று. (26) பிற்பாடு தக்க னிறந்துவிட்டதை யவன் பெண்டீரான வேதவல்லியு மவன் பெண்கள், பந்துக்கள், மற்றுமுள்ள வர்களும் கண்டு சுற்றிலும் சூழ்ந்துகொண்டார்கள். (27) அப்போது பகைவீரர்களைக் கொல்வோரான் வீரபத்திர ரவ்வேதவல்லியினுடைய இருகாதுகளையு மறுத்துவிட்டனர். மகா வலிமைபொருந்திய பத்திர காளியானவள் மற்றவர்களுடையவும், தேவர்கள், முனிவர்கள், மானிட ர்கள் இவர்களது மகா சௌந்தரியமுள்ள பெண்டீர்களுடையவுமான தலைகளைக் கண்டித் தவைகளைப் பந்தாடினாள். (28-29) இவ்விருவரு மிவ்வாறாக அவ்வெல்லோர்களையும் கொன்று கண்டவுடன் மற்றுள்ள வனேக வீரர்களும் காளிகளு மப்போ தவ் வீரபத்திர பத்திரகாளிகளு டைய கட்டளையின்பேரி லியாகசாலையின் வெளிப்பக்கத்திலுள்ள வெ ளிதில் வெல்லமுடியாத பெருஞ்சேனைகளை யதம்பண்ணி, நிகரற்ற ம தில்களையு முடைத்துத்தள்ளிவிட்டு யாகசாலைக்குட் சென்று (30-31) மிக வட்டகாஸம் செய்தங்கு பாக்கியுள்ள தேவர்கள், பிராம்மணக்கூட

ர்கள், இருடிகள் இவர்களைக் கூர்மைபொருந்திய வம்புகளாலும், கத்திக ள், உலக்கைகள், எறிவல்லயங்கள் இவைகளாலும் மற்றுமுள்ள வாயுத ங்களாலும், (32) காலுதைகளாலும் கைகளாலும் பலவிதமா யடித்து க் கொலை செய்தார்கள். அப்போது பூதர்களெல்லாம் சில துராத்தும ர்களுடைய தலைகளை வெட்டியும், (33) சிலர்களின் கழுத்து கைகளை யறுத்தும், வெகு கோபத்தோ டெலும்புகளை நொறுக்கியும், தேகங்க ளைக் கசக்கியும், சிலர்களது நாவுகளை யறுத்தும், (34) கண்களைப் பிடு ங்கியும், சரீரங்களைக் கிழித்து மெறிந்தார்கள். தவிரவு மவர்கள் சிலர் தேகங்களை யாயுதங்களாற் பிளந் திரத்தங்களைக் குடித்தார்கள். (35) மேலும் சில துராத்துமர்களின் தேகங்களை ஆஜ்யஸ்தாலி (முறைப்ப டி நெய் வைக்கப்படுகிற பாத்திரம்) களிற்போட்டு நெருப்பினிற் சமை த்து மிக நேர்த்தியாய்ப் புசித்தார்கள். (36) பின்னு மப் பூதர்கள் சில ர்களது நறம்புகளை மாலைகளாய்க் கட்டிப் பூண்டுகொண்டு சங்கத்துவா னம் செய்து சிவநாமசங்கீர்த்தனம் பண்ணினார்கள். (37) ஓடத்தலைப் பட்ட மற்றத் தேவர்களைக் கால்களால் தொகைத்தார்கள். பின்னு மவர் க ளங்குள்ள தேன், பால், நெய், தயிர் முதலிய அவிசுகளை யப்போது குடித்து (38) இயாகத்திற்காக வந்திருந்த ஆடுகளையும் பிசைந்து தின் றார்கள். பின்னு மவர்கள் மிகுந்த கோபத்தின் வலிமையால் குண்டங் களிலுள்ள வெல்லா வக்கினிகளையும் மூத்திரங்களைப் பேய்ந் தணைத்து விட்டுச் (39) சில பூதர்க ளவ் வியாகசாலையை யோரிடத்திற் கொளு த்திவிட்டார்கள். அங்குள்ள வெல்லாக் குடங்களையு முடைத்துப் பசுக் களை யெல்லாம் கங்காநதியி லாழ்த்திவிட்டார்கள். (40) மிகுந்த வட்ட காசம் பண்ணிக்கொண் டங் கியாகத்திற்காகப் பருந்தி னுருவமா யமை க்கப்பட்டிருந்த மேடைகளை யிடித்துத் தேவர்களின் விமானங்கள், இர தங்கள், குதிரை முதலிய வாகனங்கள், (41) ஆயுதங்கள், ஆபரணங்க ள் இவைகளை யெல்லாம் மிகுந்த கோபத்தினு லக்கினியில் வாரி யெறி ந்தார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மேலு மிதேபிரகாரமா யவர்க ளத் தக்கப் பாதகனுடைய பெண்கள் மாப்பிள்ளைகள் முதலிய பந்துக்களை யெல்லாம் (42) நாவினு லுரைக்க முடியாதபடி யிமிசித் தார்கள். அப்போதங்கெல்லாம் காக்கைகளும் பருந்துகளும் நிரம்பி யிருந்தன. (43) இப்படிப் பலவாறு யெல்லாத் துராத்துமர்களும் கொ ல்லப்பட்டானவுட னப்போது விஷ்ணுவானவர் மூர்ச்சை தெளிந் தெழு ந்து மகா கோபாவேசம் கொண்டவராகிச் (44) சாவடைந்த தம் சை னியங்களையு மியாகத்திற்கு நேரிட்ட விடையூறையும் கண்டு கேளீர்! மு

னிவர்களே! 'இவை யெல்லாம் சிவநிந்தையின் பய' னென்றுணராம (45) லவ் வீரபத்திரரோ டியுத்தம்செய்வதற்கான தமக்கு விஞசநமுள்ள புத்தியான தவருங் குண்டாயிற்று. பிறகவர் கருடனிறந்துவிட்ட தை யறியாம லதனை வரும்படி நினைத்ததி (46) லது வாராதது கண்டவர் கோபமும் சோகமும் மேற்கொண்டவராகிப் பிறகு தம் மாயையால் மகா வலிமைகொண்ட மற்றோர் கருடனை யுண்டுபண்ணி (47) ய் தன்பேரி லேறிக்கொண் டப்போது பாஞ்சஜன்னிய மென்ற சங்கத்தை யூதிப் பூதர்கள்மீதும் காளிகள்மீதும் மிகுந்த கூரம்புகளைச் சொரியலாகையி (48) லப் பூதர்களும் காளிகளு மாயுதங்களால் விஷ்ணுவை யெதிர்த்துக்கொண்டார்கள். பிறகு மகா பராக்கிரமசாலியான வீரபத்திர ருயுத்தம்செய்யலான அவ் விஷ்ணுவைப் பார்த்து (49) மிகுந்த கோபத்தோடு நகைத்துக்கொண் டவருட னுயுத்தம் செயயத் திருவுளம்கொண்டபோது ஸ்ரீ சிவாக்கிஞையின்படி யங் கோ ரிரதம் தோன்றலாயிற்று. (50) அதோவென்றால்:—ஆயிரம் வேதங்களாகிய குதிரைகளால் பூட்டப்பெற்றதும், விநோதமான துவஜத்தோடு கூடியதும், அனேக மாயுதங்களால் நிறைந்ததும், மிக நேர்த்தியான மாலைகளா லலங்கரிக்கப்பெற்றதுமாய் விளங்கலாயிற்று. (51) அப்போ தச் சமயத்தில் பிரம்மன் மூர்ச்சை தெளிந் தெழுந்திருக்கலாகி யுத்தத்தில் மூனைந்திருக்கும் விஷ்ணுவையும், இயாகம் நாசமாய்ப் போனதையும், தேவரெல்லாம் மரணமடைந்திருப்பதையும் கண்டு வெகு பயத்தினுல் நடுங்கலாயினர். (52)

முப்பத்திமூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

தக்ஷகாண்டம் ௩௪—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிறகு பிரம்மன் 'ஓ! நம்மைக் காப்பாற்றிக்கொள்வதற் கிப்போது நல்ல சமயம் வாய்த்திருக்கின்ற' தென்று நிச்சயித்துக்கொண்டு தா மவ் விரதத்திற் சாரதியாகிச் சடிதி லேறிக்கொண் (1) டச் சிறந்த விரதத்தை வீரபத்திரருகினிற் கொண்டுவந்து தா மிரதத்தைவிட்டிறங்கி வீரபத்திரரை வந்தனித்து "ஓ! மகா பலவானே! தேவரீருக்காகச் சிவாக்கிஞையானுல் சிரேஷ்டமான இவ் விரதம் வந்திருக்கின்றது.

என்னால் ஸாரத்தியம் செய்யப்படலாகு மிவ் விரதத்தைத் தேவரீர் வீற்றிருந் தலங்கரித் தருளவேண்டும். (3) ஆகையால் ஓ! எந்தன் பிரபுவே! தேவரீ ரெந்தனை மன்னித்துப் பத்திரகாளியம்மையோடுகூட விங்கு வந்தருளாவீ" ரென் றுரைத்துவிட்டுத் தண்டம்போல் பூமியில் வந்தனம்பண்ணினர். (4) அதன்மேல் மகா பலவானாகிய ஸ்ரீ வீரபத்திருமப் பிரம்மன்மீதுள்ள கோபத்தைவிட்டுச் சகல வாயுதங்களாலும் நிரம்பப்பெற்ற அவ்விரதத்தின்மீது பத்திரகாளி சகிதரா யேறிக்கொண்டுப் (5) பிரம்மனால் ஸாரத்தியம் செய்யப்பெற்றவராகி விஷ்ணுவை யெதிர்த்துப் புறப்பட்டனர். கேளீர்! வேதியர்களே! அப்போது விஷ்ணு வீரபத்திரனை நோக்கி வசனமுரைத்ததாவது:—(6) "ஓ! வீரபத்திரரே! சிவநிந்தை செய்யலான வித் தக்கனுக்கு நீர் செய்த தண்டனை யோக்கியம்தான்; ஆனா லிங்கு கிட்டத்திலிருந்த தேவர்களெல்லாம் கொல்லப்படத் தக்கவர்களல்ல" வென, (7) இவ்வாறு விஷ்ணுவா லுரைக்கப்பட்ட வசனத்தை மகா பலிஷ்டரான வீரன் கேட்டு "கேளீர்! விஷ்ணுவே! ஸ்ரீ மகேசுவரனை நிந்தைசெய்வோர்களான மகா பாதகர்களின் (8) கூட்டத்திலிருப்பவர்களும் பாவிகளென்றே நினைக்கப்படலாவார்களாகையால் வேதமான தவ் வெல்லோர்களுக்குமே தண்டனை விதித்திருக்கின்றது. (9) ஆகையால்தான் நா மப்படிச் செய்தனம்: ஓ! மாதவா! நா மும்மையும் விடப்போவதில்லை" யென் றுரைக்கப்பட்டவுடன் விஷ்ணு கடுஞ்சினம்கொண்டு மிகுந்த நாணேசையிட்டுப் பூதர்கள்மீது கோடைகால மேகம்போ லொரேகாலத்தில் கூர்மை பொருந்திய சரங்களைச் சொரிந்தனர். ($10\frac{1}{2}$) அதுகண்டு வீரபத்திருரும் கெட்டியான வோர் வில்லைக் கைப்பற்றி (11) நாணேறிட்டுச் சடிதியா யவ் விஷ்ணுவின்மீ தத்திரங்களைச் சொரிந்தார். பிறகு விஷ்ணுவும் மகா கோபம்கொண் டதிதீக்ஷணியம்பொருந்திய வாயிரம் பாணங்களைச் (12) சகல சத்துருக்களையும் நாசம் செய்யலுற்ற அவ் வீரபத்திரர்மீது பிரயோகித்தார். மகா பராக்கிரமம் பொருந்திய வீரபத்திருமப் பாணங்களை யெல்லாம் சேதித்துவிட்டுப் (13) பிறகு மகா தீக்ஷணமான வோ ரம்புதனை விஷ்ணுவின் நெற்றிமீதெய்ய, உடனே விஷ்ணுவானவர் பெருகலுற்ற விரத்தப்பிரவாகத்தினால் நனையப்பெற்றவராகிப் (14) பூமிதனில் விழுந் தறிவுதப்பி மூர்ச்சைகொண்டு சற்றுக் கிடந்துவிட் டுடனே பரபரப்பா யெழுந்து பலசாலியான அவ் விஷ்ணுவானவர் (15) வெகு கோபத்தோடு வீரபத்திரர்மீது மகா கொரமான பல பாணங்களை வருஷித்தார். உடனே வீரனும் கலகலவென்று நகைத்துக்கொண் டப் பாணங்களை யெல்லாம் கண்டித்தெறிந்து (16)

பின்னும் சகல சத்துருக்களையு மடிக்கலுற்ற வாக்கினேயாத்திரத்தை யவ் விஷ்ணுவின்மீது சந்தானிக்க, அவ் வத்திரத்தினு லவர் மிகவும் பீடிக்கப்பட்டவராகி மூர்ச்சையடைந்தார். (17) பிற கோர் கணத்துக்குள் ளவ் விஷ்ணு மூர்ச்சைதெளிந் தெழுந்தவுடன் வீரபத்திரர் 'ஓ! விஷ்ணுவே! இன்னும் நம்முடன் சண்டைக்குவாரு' மென, (18) அவ்வா றவரது வசனத்தைக் கேட்டு விஷ்ணுவானவர் கோபத்தினுல் வியாகுலம் கொள்ளப்பெற்ற வுள்ளத்தைக் கொண்டவராகி யவ்வீரன்மீதனேக தேவாத்திரங்களை நூற்றுக்கணக்குகளாயு மாயிரக்கணக்குகளாயும் வருஷிக்கலாகையி (19) லப்போது வீரனவைகளையெல்லாம் திறமைபெற்ற தேவாத்திரங்களாலே கண்டித்துவிட்டார். பிற்பாடு விஷ்ணு சத்துருக்களைக் கண்டிக்கலுற்றப் பிரம்மாத்திரத்தைப் பிரயோகிக்க, (20) பராக்கிரமசாலியான வீர னதனையு மோர் பிரம்மாத்திரத்தாலே சேதித்துவிட்டார். மறுபடியும் மாதவன் வெகு கோபத்தோடு மகா கொரேமுள்ள பல பாணங்களை வருஷிக்க, (21) கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! வீரபத்திரன் கேவலம் லீலாமாத்திரத்தினு லொரே சரத்தைவிட் டவைகளைப் பொடிப்பொடியாக்கி யவரது சார்ங்கமென்ற சிறந்தவில்லையும் துண்டித்துவிட்டுப் (22) பின்னு மப் பலவா னிரண்டம்புகளா லவரது கருடனை யடிக்க, அதனு லக் கருடன் மரணமடைந்துவிட்டதைக் கண்டு விஷ்ணு வெகுகோபம் கொண்டவராகி யுடனே தம தனேக வுருவங்களையும் சீக்கிரமா யெடுத்துக்கொள்ள, (23½) அப்போது வீரன் மகா மாயாவியான விஷ்ணுவி னவ் வுருவங்களையெல்லா (24) மோர் கணமாத்திரத்தில் மகா பயங்கரமாகிய தமது நெற்றிக்கண்ணெருப்பினு லெரித்துவிடலாகையி லப்போ தொண்டியாய் மிஞ்சலான விஷ்ணுவானவர் வீரபத்திரர்மீது ஜ்வலிக்கலுற்ற தமது சக்கிரத்தைப் (25) பிரயோகிக்க, சகல சத்துருக்களையும் கண்டிக்கலுற்ற மிகுந்த காந்தியுடைய வச் சக்கிரம் மகா வேகமா யுயரக்கிளம்பி வெகு விரைவாய் அவரருகினில் வந்தவுட னதனை (26) யளவற்ற பராக்கிரமத்தைக்கொண்ட அவ்வீர னுல்லாஸமாகவே கைதனிற் பற்றிவிட்டனர். பிற்பாடு திருமாலும் காலதண்டத்திற்கொப்பான தமது தண்டத்தையெடுத்துச் (27) சுழற்றி மகா மகிமைபொருந்திய அவ்வீரன்மீது மகாப் பிரயத்தினத்தோ டெறிய, அதனை வீரன் தமது தண்டத்தினு லடித்துத் தூள் தூளாக்கிவிட்டனர்.(28) பிற்பாடு விஷ்ணு வெகுகோபாவேசம்கொண்ட முகத்தைக்கொண்டவராகிக் கல கலவென்று கூச்சலிட்டுக்கொண் டோர் பெரிய கத்திதனை யெடுத்ததிவேகமாய்க் கற கறவென்று சுழற்றிக்கொண்டு (29) வெகு லாகவமாய்க் காலடிவைத்துச்

சடிதியி லங்கு மிங்கு மோடிக்கொண்டே மதயானை சிங்கத்தினிடத்தெ திர்த்துவருவதுபோல் வீரபத்திர ரருகினில் வந்தனர். (30) கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அப்போது சத்துருக்களைத் தொம்சிப்போரான அவ்வீரபத்திர ரவ்வாறு மகாவேகமாய் வாலான அவ்விஷ்ணுவை யோ ரும்கார மாத்திரத்தினால் தம்பிக்கச்செய்ய, (31) விஷ்ணு வுடனே சித்திரப் பதுமைபோ லசைவற்றவராகித் தம்பித்து நின்றார். கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! அப்போது வீரபத்திரர் "ஓ! இவனைப் பிசைந்துவிடலாமா, அல்லது அடித்துப்போடலாமா அல்லது வேறென்னதான் செய்யலா மொன்றும் தோன்றவில்லையே" யென் றாலோசனை செய்கையி லப்போது சிவாக்கினையின்படி "ஓ! சகலப் பிரபஞ்சங்களையும் சமுகரிக்கலுற்ற வீரனே! கோபத்தை விட்டுவி" டென்றோ ரசரீர வாக்குண்டாயிற்று. ($33\frac{1}{2}$) பிற கப் பாராக்கிரமசாலியானவ ரதனைக் கேட்டவுடன் 'னிது சிவாக்கினை' யென்றே நிச்சயித்துக்கொண்டு (24) கோபத்தைத் தமக்குள் ளடக்கிக் கொண்டனர். பின்பு பிரம்ம னவ் விரதத்தைவிட்டுச் சடிதியி லிறங்கி (35) மெத்த வணக்கத்துட னஞ்சலி கொண்டவராகி வீரபத்திரரை நமஸ்காரம்பண்ணி "ஓ! கருணைக்கடலான தேவேசா! எந்தன் பிழைகளை மன்னித்தருளவேண்டு" (36) மென் றப்போ தவ் வீரனைத் துதிசெய் தவரை மனமிறங்கச்செய்து கொண்டனர். இதே சமயத்தில் விஷ்ணுவும் அந்தேவேசனைத் (37) தண்டம்போல் வந்தனித்துப் பக்தியுடன் பல துதிகளால் தோத்திரம் பண்ணித் தமது பிழைகளை நீக்கிக்கொள்ளும்படி பிரார்த்தித்துக்கொண்டதாவது:— (38) "ஓ! சிவாக்கினையை நிறைவேற்றலுற்ற மகா வலிமைபொருந்திய வீரபத்திரா! சிவநிந்தை செய்வதில் முயன்ற வத் தக்கப்பாதகனோடு சேர்ந்ததினால் (39) மூடபுத்தியுடைய யாங்க ளெங்களுக்குத் தக்கபடியுள்ள பயனை யடைந்துவிட்டோம். ஓ! பிரபுவே! ஸகல ஸ்தாவரஜங்கமங்கள், பூதங்கள், புவனங்கள், அகிலப் பிரம்மாண்டங்கள் இவைகளெல்லாம் தேவரீரது பார்வை, புன்னகைப்பு, அட்டகாஸம், உள்மூச் சல்லது வெளிமூச்சு இவற்றினாற் க்ஷேமமடையவும் சாம்பலாகவு மாகின்றது. (41) ஓ! தேவரக்ஷகா! ஆகையினால் கேவலம் பஞ்சுதனுக் கொப்பாகிய தேவர்களான வெங்களிடத்துத் தேவரீருல்லாசார்த்தமாய்த் திருவிளையாடல் மட்டி லருளினீரொன்பதி லாக்ஷேபணையில்லை. (42) ஸகலப் பிரபஞ்சங்களையும் சமுகரிக்கலுற்ற தேவரீரெங்கே; கொசுக்களை யொத்த வித்தேவர்களெங்கே! ஓ! புன்னகைப்பையே ஆயுதமாய்க்கொண்ட பிரபுவே! தேவரீருக்குப் படைகளாலு மாயுதங்களாலு மாவதென்ன? (43) ஓ! மகா வலிமை பொருந்திய

வீரனே! வளர்த்துச் சொல்வதில் யாது பயன்? தேவரீ ரத்தீனர்களான விந்தேவர்களைக் காத்தருளவேண்டும். யானோ ஜகதீசனாகிய ஸ்ரீபரமேசுவரனுடைய 'பிரகிருதி' என்ற சக்தியாகின்றேன். (44) தவிரவு மப்பகவானிடமிருந்துசிரேஷ்டமான சக்கிரத்தையு மடைந்திருக்கின்றேன். மேலும் யான் விஷ்ணுத்தன்மையை யடைந்திருப்பதே சிவ பூஜையின் மகிமையால்தான். (45) ஓ! மகா பல பராக்கிரமம் பொருந்திய வீர பத்திரா! இப்போ தெந்தன் பிழையை மன்னித்தருளவேண்டு" மென்றுரைத்துவிட் டவ் வீரபத்திரரை யடிக்கடி வந்தனிக்க, அப்போது வீரபத்திரர் பிரஸன்னராகி யத் திருமாலுக் கருள் புரிந்தனர். இதற்கிடையில் ஸ்ரீ மகாதேவர் கலியாண குணம்பொருந்திய பார்வதிதேவி ஸகிதரா யிருடபத்தின்மீ தேறிக்கொண்டு நந்திகேசுவரன் முதலியப் பிரமதகணங்களோடுகூட அங்கு ஆவிர்ப்பவித்தனர். (47)

முப்பத்தினான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௩௫—வது அத்தியாயத்தினர்த்தம்.

பிறகு வீரபத்திரன் ஜகத்குருவாகிய ஸ்ரீ மகாதேவரைக் கண்டு வந்தனித்துப் பல துதிகளால் மிகுந்த பக்தியுடன் தோத்திரஞ்செய்து விட் (1) டம் மகேசுவரன் சன்னிதியி லஞ்சலிகொண்டு நிற்கலாயினர். அப்போது பிரம்மவிஷ்ணுக்களும் மகா பயங்கொண்டவர்களாகிப் பிரமதகணங்களோடுகூடிய ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை வந்தனித்து நின்றூர்கள். ($2\frac{1}{2}$) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது தக்ஷன் பெண்ணாகிய கௌரியம்மையானவள் மரணமடைந்த தேவர்களையும், அஞ்சலிகொண்டு நிற்கலான அவ் விஷ்ணுப்பிரம்மர்களையும், இயாகம் தொம்சஞ்செய்யப்பட்டிருப்பதையும், தக்கன் பிணமாய்க் கிடப்பதையும் திருக்கண்ணுற்றதன்பேரிற் (4) கருணைபுரிந்தவளாகிக் கருணாமூர்த்தியாகிய ஸ்ரீமகாதேவரை நோக்கித் திருவசனமுரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ! இவ்வெல்லோர்களும் கேவல மஞ்ஞானத்தினாலடியார்களுக்குச் சுகத்தை யருளுகின்ற மகாதேவரான தேவரீரை யறியாமல் மிகுந்த கர்வங்கொண்டதினா லிப்பேர்க்கொத்த தசையை யனுபவிக்கலானூர்கள். ($5\frac{1}{2}$) ஓ! பிரபுவே! இவையெல்லா மெந்தன் நிமித்த

த்திருலேயாகையா லெல்லோர்களையும் பிழைப்புமூட்டி யருளவேண்டு" (6) மென் றுரைத்துவிட் டம் மகாதேவி ஸ்ரீ மகேசுவரனைத் தண்டம்பண்ணினுள். பிறகு கருணமூர்த்தியாகிய வப் பகவா னவளாது வசனத்தைக் கேட்டுத் திருவுளத்தில் வைத்துக்கொண்டு (7) முன்னிலையி லஞ்சலிகொண்டு நிற்கலான வீரபத்திரரை நோக்கி "ஓ! வீரபத்திரா! நமதாக்கினையின்படி யிவர்களைச் சீக்கிரம் பிழைப்புமூட்டிவைக்கலாவா" (8) யென் றத் தயாநிதி திருவாக் கருளியவுடன் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வீரபத்திரர் சிவாக்கினையைச் சிரமேற்கொண்டுத் தேவர்களையெல்லாம் (9) கருணைக்கண்களாற் பார்த்துப் பிழைக்கச்செய்தனர். உடனே மடிந்துகிடந்த தேவர்களெல்லாம் தூக்கத்தினின் றெழுந்திருப்பவர்கள்போ லெழுந்துவிட்டார்கள். (10) தக்கன் கூட்டத்திற் சேர்ந்திருந்ததெல்லா மவர்க்ளுக்குக் கனவுகண்டதுபோலிருந்தது. பிற்பா டவர்க ளம்பிகைக்கு மித்திரரும், அழிவற்றவரும், அஷ்டைசுவரிய ஸம்பன்னமூர்த்தியுமான ஸ்ரீ ஸதாசிவனைத் (11) தண்டம்போல் வந்தனித்து மிகுந்த பயபக்தியுடன் பல துதிகளால் தோத்திரம்பண்ணிக் கேளீர்! முனிவர்களே! அவர்கள் ஸ்ரீ மகாதேவனை நோக்கி வசனமுரைத்ததாவது:— (12) "ஓ! கருணைக்கடலும் பிறர் நன்மையையே முக்கியப் பிரயோஜனமாய்க் கொண்டவருமான ஸ்ரீ மகாதேவா! ஓ! பரமசிவா! இந்தேவர்களாகிய யாங்களெல்லாம் மகா பாவியான தக்கன் சேர்க்கையா லுண்டானதும், வெகுகாலமளவு மதின் பயனையனுபவிக்கத் தக்கதுமான மகா பாவத்தினின் $(13\frac{1}{2})$ றெல்லோர்களும் சீக்கிரமா யேககாலத்தில் விடுபடலானோம்; (14) ஓ! சரணமடைந்தோரின் துக்கத்தை நாசம்செய்விக்கலுற்ற பரமேசா! மகாமூடபுத்தியுடைய வித்தேவர்களுக் குலகங்களில் தேவரீரைத்தவிர யாவர்தான் கதியிருக்கிறுர்கள்? தேவரீரே சரணம். (15) முந்தி மகா பரிசுத்தம்பொருந்திய கங்கையைச் சிரசினில் தாங்கலானீர். தேவர்களையெல்லாம் காப்பாற்றுவதற்காகத் தளிர்போன்ற கைதனி (16) லக்கினியை யேந்தினதுமின்றி யாலாகலவிஷத்தையு முண்டிருக்கின்றீரன்றே! மேலு மிதுமுதலிய பல வபாயங்களிலிருந் தெல்லாம் தேவரீ ரெங்களைக் காப்பாற்றியிருக்கின்றீர். (17) ஓ! பரமேசுவரா! ஆகையால் மகா பயம்கொண்டிருக்கின்ற வெங்களுக்குத் தேவரீரே யிரக்ஷகர். மகாதேவா போற்றி போற்றி! அடியார்களின் வேண்டுதலை வருஷிப்போரே போற்றி! (18) மொட்டைத்தலையரே போற்றி! சடையரே போற்றி! நிம் பொன்னடி போற்றி! ஸகலர்களையு மிரக்ஷிக்க முயன்றவரே போற்றி போற்றி" யென் றத் தேவர்க ளப்போ திவ்வா றுரைத்துவிட் டடி

யார்களுக்கு நேசரான வம் மகாப்பிரபுவை நமஸ்கரித்தார்கள். (19) அப்போ தவர் மந்தகாசமுற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி விஷ்ணு பிரம்மர்கள்முதலிய அவ்வெல்லாத் தேவர்களையும் கிருபாதிருஷ்டியால் நோக்கியருளிக் (20) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! உலகரக்ஷார்த்தமாக அவரவர்கள் பதவிகளுக் கனுப்பலாயினர். அவ்வாறு கட்டளை யிடப்பட்டவுடன் தேவர்கள் முக்கண்ணராகிய ஸ்ரீ மகாதேவனை (21) மிகுந்த பக்திவிசுவாசத்துடன் தண்டம்போல் வந்தனித்தார்கள். பிறகு பிரம்மாவானவர் பிரணதார்த்திஹரரான ஸ்ரீ மகாதேவனை நமஸ்கரித்து (22) ஓ! சரணமடைந்தோரைக் காக்கலுற்ற மகாதேவா! சுயாதீனமுடைய் சக்தியுடையோரே! சருவஞ்ஞா! ஸகலப் பிராணிகளுக்கும் சுகத்தையருள முயன்றவரே! இத்தக்கனையு முயிர்பிழைப்பித்தல் வேண்டு" மென் றிப்பிரகாரமாக அடியார்களுக்கு வசப்பட்டவரும், கருணைக்கடலுமான ஸ்ரீ மகாதேவனைப் பிரார்த்தித்துக்கொள்ள, அவ்வாறு வசனத்தைக் கேட்டவுடன் பிநாகபாணியான பரமசிவன் (24) சமீபத்திலிருந்த வீரபத்திரனைத் திருக்கண்ணருளும்போ தவரைச் சாடையறிந்துகொண்டு சிவாக்கினையின்படி (25) பானுகோபனென்ற கணத்தலைவனை யத் தக்க னுடலைக் கொண்டுவரும்படி யனுப்ப, கேளீர்! முனிவர்களே! அப்போ தப் பலவா னதனைக்கொண்டுவந்தவுடன் (26½) சிவாக்கினையை நிறைவேற்றலுற்ற அவ்வீரன் தக்கப்பாதகனுடைய முண்டவுடலி லோ ராட்டுத்தலையைச் சேர்த் துயி ருண்டு பண்ணினர். (27½) பிறகு தக்கன் தூங்கியெழுந்திருப்பதுபோ லெழுந்து மிகுந்த பயங்கொண்டவனாகி (28) யவ் வீரபத்திரனை நமஸ்கரித்துவிட்டுத் தனது பாவத்தை நினைத்து மிகுந்த பீதியுட னவர் முன்னிலையி லஞ்சலிகொண்டு நின்றான். (29) பிற கவ னுடனே ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களைத் திருவெருதின்பேரிற் கண்டு மகா பயங்கொண்டவனாகி யஞ்சலிகொண்டு நமஸ்கரிக்க, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (30) கருணைக்கடலான வப் பகவான் நடுங்கலுற்ற வுடலைக்கொண்டவத் தக்கனை நோக்கி "ஓ! தக்ஷா! நீ பயப்படவேண்டாம்; யா முந்தனுக்குப் பிரஸன்னராகிவிட்டனமென்று மனதினிற் கொள்" (31) எனை, செவிதனுக் கின்ப மளிக்கலுற்ற இவ்வா றவரது திருவசனத்தைக் கேட்டுக் கேளீர்! முனிச் சிரேஷ்டர்களே! மிகுந்த பக்தியுட னஞ்சலிகொண்டு மறுபடியு மவரை நமஸ்காரம்பண்ணி (32) "ஓ! மகாப்பிரபுவான மகாதேவா! தேவரீரைத் தரிசித்தமாத்திரத்தி லடியேன் கிருதார்த்தனாகிவிட்டேன். ஓ! தேவதேவேசா! தேவரீர விலக்கி யித் தேவர்களைச் சேர்த்துக்கொண்டதற்காகத் (33) தேவரீ ராக்கினையா ல

திசிக்ஷத்தில் தக்கபயனையனுபவித்தேன். ஓ! கருணைக்கடலான மகாதேவா! எந்தன்பிழையை மன்னித்தருளல்வேண்டும்(34) ஓ! தேவேசா! தேவரீர் பொன்னடிமீதுவந்தனம்செய்கின்றேன்; பின்னும் பின்னும்வந்தனம்செய்கின்றேன். ஓ!சம்போ!ஸ்தாவரஜங்கமஸ்வரூபியானவிச்சகங்களெல்லாம்தேவரீராதீனத்திலுள்ளதே!(35) தேவரீராலருளப்பட்டதிருவாக்கினையை மீறுவதற்குயாவர்தான் வல்லவர்? ஓ! ஸ்வாமீ! தேவரீராக்கினையை மீறியதால் யானிப்பயனை! யடையலானே"(36) னென்றத்தக்கனஞ்சலிகொண்டுரைத்து நிற்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதுஸ்ரீகௌரியம்மையானவள் நேசரஸம்பொருந்திய திருமுகத்தைக்கொண்டவளாகி வீரபத்திரனை நோக்கி(37) மிகுந்த சந்தோஷத்தோடவரது முதுகினில் தம் திருக்கையினால் தடவிக்கொடுத்து மெத்த மனக்களிப்புட னவருக்குப் பின்னும் பின்னு மனேக வரன்களைக் கொடுத்தருளினள். (38) அப்போது ஸ்ரீ பரமேசுவரன் விஷ்ணுமுதலிய தேவர்களை நோக்கித் திருவாக்கருளியதாவது:— "ஓ! தேவர்களே! உங்களால் செய்யப்பட்ட பாவத்துக்குத் தக்கபயனை யாம் கொடுத்தன" மென, (39) இவ்வா றவரது திருவசனத்தைக் கேட் டப்போ தத்தேவரெல்லாம் ஸ்வாமி, அம்மன், மகா பலவானாகிய வீரபத்திரர் இவர்களை நமஸ்காரம் பண்ணிவிட் (40) டெல்லோர்களு மஞ்சலி கொண்டவர்களாகி 'ஜயா விஜயீபவ' வென்று கூறிக்கொண் டப் பெரியதான யாகசாலையின் மற்றோரிடத்தில் நின்றார்கள். (41) பிற்பாடு ஸ்ரீ பரமேசுவரன் பார்வதியம்மையோடுகூடப் புறப்பட்டுப் பத்திரகாளியோடு கூடிய வீரபத்திரராலும், ஸகலப் பிரமதகணங்களாலும் சூழப் பெற்றவரும் (42) பற்பலவித வாத்திய கோஷங்களாற் சகல திசைகளும் நிரம்பப் பெற்றவருமாகி மலைகளிற் சிறந்த கைலைகிரி யடைந்தனர். (43) அங்கு ஸர்வப் பிரபஞ்சச் சுவரூபியும், சர்வலோக பூஜிதருமான ஸ்ரீ பகவான் தேவியோடுகூடச் சிங்காதனத்தில் வீற்றிருந்து பத்திரகாளியோடுகூடிய வீரபத்திரனை யவரது சைனியங்களோடு கூட அவர திருப்பிடத்திற் கனுப்பியருளினர். (44½) பிறகு பலவான்களிற் சிறந்த வீரபத்திரரும்ஸ்ரீபரமேசுவரன்கட்டளையைச்சிரசினால் வகித்துக்கொண்டு (45) பார்வதி பரமேசுவரர்களைப் பத்திரகாளியோடுகூட நமஸ்கரித்து விட் டிடபமதிலேறிக்கொண்டு சகல வீரர்களாலும் சூழப்பெற்றவரும் பானுகம்பனென்ற கணத்தலைவனால் ஸாரத்தியம் செய்யப்பெற்றவருமாகிப் புறப்பட்டுக் (46½) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மிகுந்த மனச் சந்துஷ்டியுடன் தம் நகரம்சேர்ந்தனர். (47)

முப்பத்தைந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

## தக்ஷகாண்டம் ௩௬—வது அத்தியாயத்திணர்க்கம்.

பிற்பாடு பிரம்மன் மிக்வும் துக்காக்கிராந்தனுகிய தமது மைந்தனை நோக்கி யுரைத்ததேதெவென்றால்:— "அடா! தக்ஷா! நீ மிகுந்த மதிமயக்கத்தினு லென்ன காரியம் செய்யலானுய்?(1) தேவர்கள், மகாத்துமர்களாகிய முனிவர்கள், பிராம்மணர்கள் இவர்களுக்கெல்லாம் நாசத்தைக் கொண்டுவந்துவிட்டாயல்லவோ! (2) தவிரவும் நீ யடைந்திருந்த புகழும், சம்பத்தும், மற்றுமுள்ள வுந்தனைச் சார்ந்தவர்களும் நாசமாய்ப் போயினர்கள். நீ ஸ்ரீ ஸாம்பமூர்த்தியை யிகழ்ந்ததனு லிப் பயனை யனுபவிக்கலானுய். (3) அடா! மைந்தா! உந்தனுக்குமட்டில் ஸ்ரீ பரமேசுவரனிடத்து மிகுந்த மதிமயக்கமுண்டாயிற்றென்பதில்லை. ஜகதீசனுடைய மாயையால் முந்தி யெந்தனுக்குக்கூட புத்தி மிகவும் கெட்டுப்போகலாயிற்று. (4) அப்போது அப்பகவானே வந்தெந்தனைக் காப்பாற்றினுர். ஆகையால் நீ சகல க்ஷேமங்களையும் செய்தருளானுற்ற வத் தேவேசனைப் பூஜைசெய்யலாவா" யென, (5) தக்ஷன் "ஓ! தந்தாய்! தயாநிதியாகிய வப் பரமேசுவரனிடத் துமக்கெப்போது புத்திக் கேடுண்டாயிற்று? மோகம் கொள்ளலான வும்மை யவரெவ்வாறு வந்து காப்பாற்றினுர்? (6½) ஓ! பிரபுவே! இக்கதையை யெந்தனுக் குள்ளபடி யெடுத்துரைத்தல்வேண்டு" மென, (7) தக்கனுடைய இவ்வாறு வசனத்தைக் கேட்டப்போது பிரம்மனுரைத்ததாவது:—"அடா! புத்திரா! உந்தனுக் கிதனை முந்தியே யுரைத்திருக்கின்றனம்; ஆகிலும் பின்னேர்வாறு சொல்லுகின்றேம்; நீ ஜாக்கிரதையாய்க் கேள்" (8) என்றவர் சொல்லிவிட் டஞ்சலி கொண்டவராகிச் சமுசாரமாகிய நோய்க் கௌஷதமான ஸாக்ஷாத் ஸ்ரீ மகாதேவனை ஹிருதய கமலத்தடத்தில் தியானம்பண்ணிக்கொண் டுரைத்ததாவது:—(9) "ஓ! கேளாய்! எந்தன் புத்திரனே! ஆயிரம் சதுர் யுகங்கள் கொண்ட தெமக்கோர் பகல்; எனதிரவு மவ்வளவே! அவ்விரவு முழுமையும் நமக்குத் தூக்கந்தான். (10) அப்போது சூரிய சந்திரர் முதலிய கிரகங்களும், நக்ஷத்திர மண்டலங்களு மொன்றுமில்லை. இச் சகமெல்லாம் ஸத்தியலோகமளவும் ஜலத்தால் மூடப்பட்டிருக்கும்; (11) ஆனுல் முப்பத்திரண்டு தருமங்களையு மாசரிப்பவளும், அடியார்களுக்கு வேண்டிய பொருட்களை யருளலுற்றவளும், உலகினில் காமாக்ஷியென்று பிரசித்திகொண்டவளுமான ஸ்ரீ பரமேசுவரியால் விளங்கப்படானின்ற ஸ்ரீ காஞ்சிபுரம்மட்டில், (12) ஓர் குடமானது கடலினிற் கவிழ்க்கப்பட்டிருக்கும்போது ஜலமதி னுட்புறத்திற் கொள்ளாமல் வெளியில்தானே யிருப்பதுபோல், ஜலம் கொ

ள்ளப்படாமலிருக்கும். (13) அப்போது மலைகளுக் கிசனான கைலைகிரி யானது மகா வுன்னதமாய் வளராநின்ற கனிவிருக்கு மோராலவிருக்ஷத் தினின் றச் சலப் பிரவாகத்தின்கண் விழலான வோராலிலை (14) மீது விஷ்ணு ஒருவர்மட்டி லோரிளங் குழந்தை யுருவத்தோடு பள்ளிகொ ண்டவராகி மகா பயங்கரமான வச் சலாசயத்தி லவ் விரவுமுழுது முலா த்திக்கொண்டிருந்தார். (15) பிற கப்போது ஸகலப் பிரபஞ்சங்களையும் நாசமாக்கிய அவ்விரவுமுடிந்தவுட னவ் விஷ்ணுவானவர் பன்றியுருவ மெடுத்துக்கொண்டு நடு ஜலத்தில் முழுகிப் போகலான் பூமிதனை (16) யுயரக் கிளப்பிவிட் டதி சீக்கிரத்தில் முன்போல் நிலைநிறுத்தி வைக்க லானார். கேளாய்! மைந்தா! அப்போது யானும் முன்போலவே ஸக லப் பிரஜைகளையுமுண்டாக்கிவிட்டேன்.(17) ஓ! புத்திரா! அப்போதுந ம்கஷ்டகாலத்தினால்சிவாக்கினையின்படிஎனக்குமிருந்த புத்திப்பிரமமுண் டாயிற்று. பிறகு 'யானே ஜகங்களுக்குக் கர்த்தாவே யின்றி மற்றொரு வருமில்லை. (18) ஜகமெல்லாம் நான் தூங்கினால் தூங்குகின்றது, விழி த்தால் விழிக்கலாகின்றது. தேவர்கள், அசுரர்கள், யக்ஷர்கள் இவர்க ளும் ஸகல ஸ்தாவரஜங்கமங்களும் (19) நமது வசத்திலே உள்ளவர்க ள். இச் சகமதில் நமக்குக் கர்த்த ரொருவருமில்லை; யாமே யோகீசுவ ரர்களால் தியானம்செய்யத்தக்கதுற்ற நித்தியமான பரப்பிரம்ம' மென் (20) றிவ்விதமா யெல்லாம் யான் மதம்பிடித்தவனாகி நமதிருப்பிடமா கிய ஸத்தியலோகத்தினின்று வெளிக்கிளம்பி மேரு, மந்தரம், கைலாஸம், சக்கிரவாளம் முதலிய பருவதங்கள் (21) தீவுகள், சமுத்திரங்கள், ''ற் பல லோகங்கள் இவைகளிலெல்லாம் வெகுகர்வத்தோடு திரிந்துகொண் டங்கங்குள்ள விநோதங்களை யெல்லா மளவிலே பார்த்துக்கொண்டு, பி றகு யாம் (22) விஷ்ணு யோகநித்திரை செய்துகொண்டிருந்த திருப் பாற்கடலுக்குப்போ யங்கு "ஓ! இப்பூமியானது நம்மாலே உயரக் கிள ப்பிமுன்போல்ஸ்தாபிக்கப்பட்டபடியால்நாமேஜகங்களுக்கதிப'' ரென்று மனதினில்நினைத்துக்கொண்டே ஆதிசேடன்மீதுபள்ளிகொண்டு மிகுந் தமதம்கொண்டிருந்த விஷ்ணுவைக் கண்டு (23-24) கேளாய்! புத்திரா! அவரதுநடுமார்பினைத்தட்டியவரையெழுப்ப,உடனேஅவ்விஷ்ணு பரபர ப்பா யெழுந்து வெகு கோபத்தோடு பேசினார்.(25) அப்போது யாம் மெத்தவாங்காரத்தோ டவரை நோக்கி 'நீயார் சொல்' லென்றனம். அப் போதவ ரெமது வசனத்தைக் கேட்டு "அடா! நா முந்தனுக்குத் தகப்ப னென்றும், ஸகலப்பிரபஞ்சங்களுக்கும்கர்த்தாவென்றும்மனதினிற்கொ ள்" ளென் றிவ்விதமாக வெகு கோபத்தோ டுரைத்தார். (26½) அத ற்கு யாம் "அடா! இப்போதுகூட என்னதூக்கமோ சொல்? சகலலோ

கங்களுக்கும் சிருஷ்டிகர்த்தாவான நம்மைக்கூட நேர்விரோதமா யுந்த ன் புத்திரனென்கிறாய்; அடா! உந்தன் புத்திப்பிரமத்தைவிட்டு நம்மை யே பரப்பிரம்மமென் றறிந்து சீக்கிரமாய்ச் சுகத்தை யடைந்துகொள்" (28) ளென் றுரைக்கலான நம்மைப் பார்த் தவர் கோபத்தோ டு ரைத்ததாவது "ஓ! நமது புத்திரனாகிய பிரம்மாவே! நீ முந்தி நமது நாபிகமலத்தினின் றுண்டானவன். (29) ஓ! கோ! அதனை மறந்துவி ட் டிப்போது விரோதமாய்ப் பேசுகின்றாயே! நமது மைந்தனாகிய வுந் தனுக்கு நாமின்றிப் பிறப்பேது? ஈசுவரத்தன்மைதா னேது?" என, (30) இவ்வாறு விஷ்ணுவுரைத்த வார்த்தையைக் கேட்டு நாம் பின்னு முரைத்ததாவது:— "ஓ! விஷ்ணுவே! அரணி (யாகாதிகளுக்கு நெரு ப்புக் கடைந் தெடுக்கப்படுகிற வன்னிமரக்கட்டை) யினின் றக்கினி யுண்டாவதினா லதற்கிது பிள்ளையாகமாட்டாது. (31) அதேவிதமாய் நாம் நமதிச்சையா யுன்னிடமிருந் தாவிர்ப்பவித்தனம். அங்ஙனமாயி னதேமாதிரியாய் நீயும் (நரசிங்காவதாரத்தில்) கம்பத்தினின் றுண்டாயி ருக்கின்றாய். (32) ஆகையா லுந்தனை யாமிப்போது கம்பத்தின் மக னென்றே தடையின்றிச் சொல்லுகின்றோம். ஓ! கோ! துர்ப்புத்தி கொண்ட விஷ்ணுவே! முந்தி நீ பிருகுமாமுனிவரால் சபிக்கப்பட்டதி னா லுந்தனுக்குப் (33) பத்துஜன்மங்கள் நம்மா லடிக்கடி சிருஷ்டிக்க ப்பட்டுச் சிருஷ்டிக்கப்பட் டழித்து, சிருஷ்டிப்பவரான நமதுகை யிப் போதுகூட மிகவும் சிவந்திருக்கின்றது" (34) என, இவ்வா றுரைத்த நம்மை நோக்கி விஷ்ணு மறுபடியு முரைத்ததாவது:— "அடா! பிரம் மனே! நம்மைக்கூட நீ சிருஷ்டிப்பவனாகில் முந்திச் சிவனா (35) ல றுக்கப்படலான வுன தைந்தாவது தலையை நம்முன்பாக இப்போது சி ருஷ்டித்துக்கொள் பார்ப்போம். ஆகையினால் நாமே ஜகங்களுக் கதி பர். அதிலும் விசேஷமா யுந்தனுக் கதிபர். (36) இப்படியிருக்கையி ல் நீ மிகுந்த புத்திப்பிரமத்தினால் நம்முன்னிலையிலே யேதேதோ உ ரைத்தாயல்லவா!" வென் றிவ்விதமா யவ்விஷ்ணு வுரைக்கையில் நாமு மப்போ ததேவிதமா யுரைத்தனம்; (37) மிகுந்த புத்திக்கேட்டினால் நாம்முன்னே நாம்முன்னே யென்று பேசிக்கொண்ட எங்களிருவருக்கு மப்போது மிகுந்த வாக்குக்கலகமுண்டாயிற்று. (38) பிறகு 'சண் டையிட்டுக்கொள்வதில் ஜயம்பெறுவோரே பெரியவ' ரென்று சபதம் பண்ணிக்கொண்டு யாங்களிருவரும் மதங்கொண்டவர்களாகி யொருவ ரோடொருவர் வெற்றியை விரும்பிக்கொண்டு (39) பற்பல வாயுதங் களா லதிசீக்கிரத்தி லிருவரும் மகா பயங்கரமான வயுத்தம் தொடுத்து

க்கொண்டோம். பிற்பாடு விஷ்ணு வெகு கோபம் கொண்டவராகி ஜயம்பெறவேண்டி நம்மீது மகா பயங்கரமான நாராயணாக்திரத்தைப் பிரயோகித்தார். (40) பின்பு நா மதனை யதேயத்திரத்தினால் வெற்றி கொண்டு மறுபடியும் கோபம்கொண் டவர்மீது பிரம்மாத்திரத்தைத் (41) தொடுக்க, விஷ்ணுவு மதேயத்திரத்தி னாலதனைக் கண்டித்துவிட்டார். இம்மாதிரியா யொருவரோடொருவ ரத்திரத்துக்குப் பதிலாத்திரம்போட மெத்தத் திறமைபெற்றவர்களாகி யடிக்கடி முறித்து முறித்தெறிந்து (42) பிரம்மவிஷ்ணுக்களாகிய யாங்களிருவரும் மதம்பிடித்த யானைகள்போல் மகா கோரர்களும், மகா வேகமுடையவர்களும், மகா வலிமைகொண்டவர்களுமாகிப் போர்புரிந்தனம். (43) பிற்பாடொருவரோடொருவர் மகா கோபம்கொண்டவர்களாகி மற்றவரை நாசம்பண்ணித் தாம் வெற்றிபெறக் கருதி யெல்லாவற்றையும் விழுங்கிவிடவுற்ற மகா கோரமான சிவாத்திரத்தைப் பிரயோகம் பண்ணினோம். (44) எங்க ளிருவர்களாலு மேவிவிடப்பட்ட மகா கோரமான அவ்வத்திரம் வெளிப்பட்டபோ ததினால் ஸமுத்திரமெல்லாம் வற்றிப்போயின. மலைகளெல்லாம் பொடிப்பொடியாயின. (45) அப்போது பூமியானது வெடித்துஆதிசேடன்தலைமீதுநடுங்கிக்கூத்தாடிற்று.தேவர்கள், முனிவர்கள், மானிடர்கள் எல்லோரும் பயந்து ஓட்டமெடுத்தார்கள். (46) அனேகம்பெயர்கள் கிலேசைப்பட்டு இறந்தார்கள். சிலர் கால், கைகள் முறியப்பெற்றார்கள். மற்றவர்கள் மலைகளுக் கிசனான கைலைகிரிக்குச் சீக்கிரமா யோடி யொண்டினார்கள். (47) ஓ! புத்திரா! இவ்விதமாக அவ்விருசிவாத்திரங்களும்சகலவுலகங்களையும்தகிக்கும்போது நமதுபுத்திரரான நாரதமாமுனிவ ரங்கு வந்து (48) பிரம்மவிஷ்ணுக்களாகிய எங்களிருவரையும் கண்டு வசனமுரைத்ததாவது:—“ஓ! பிரம்ம விஷ்ணுக்களே! உங்களுக் குயிர் கொடுத்தவர் ஸகல பிரபஞ்சங்களுக்கும் கர்த்தாவாகிய ஸ்ரீ பரமேசுவரனென்றே யறியாமல் (49) மூடர்களாய் மகா மோகம் மேலிட்டு என் வீணாய்ச் சண்டையிட்டுக்கொள்ளுகிறீர்கள்? இப்போ துங்களுக்குஇச்சண்டை வேண்டாம்; ஸ்ரீ பரமேசுவர னிப்போ ததிசீக்கிரத்தி லுங்கள் வலிமையைப் பரிசோதிப்பதற்காகச் சோதிலிங்க ரூபியா யிங்கு ஆவிர்ப்பவிக்கப்போகின்றார்” ($50\frac{1}{2}$) என்றுரைத்துவிட்டுத் தவத்தையே தனமாய்க் கொண்ட அம் மாமுனிவர் சென்றுவிட்டார். (51) அத்தேவருஷி சென்றபிறகு யுத்தத்தில் கெட்டமதம் கொண்ட எங்க ளிருவருக்கு மாயிர மாண்டளவும் பயங்கரமான வுயுத்தம் நடந்தது. (52) பிற கதன்முடிவில் ஜகத்குருவாகிய ஸ்ரீ பகவான் லோகங்கள்தொந்திரவுப்படுவதைக்கேட்டுப் மாசிமாதகிருஷ்ணபக்ஷ சது

ர்த்தசிதினத்தின் (மகாசிவராத்திரி) பாதிராத்திரியி லொப்பற்ற வொளியைக் கொண்டவராகிச் சோதிலிங்கரூபியா யங் காவிர்ப்பவித்தனர். ($53\frac{1}{2}$) கேளாய்! புத்திரா! அப்போ தச் சைவாத்திரமானது அச்சோதிதனில் லயித்துவிடலாயிற்று. (54) நாங்களிருவரும் நிமிர்ந்து பார்த்துக்கொண்டே யவ் வற்புதத்தைக் கண்டோம். அப்போது நடுவானத்தி லோர் வாக்குத் தொனித்ததாவது:— (55) "அடாஅடா! மகா மோகத்தைப் பாராட்டிய பல வீனர்களான பிரம்ம விஷ்ணுக்களா! ஸ்ரீ மகாதேவரது சிரேஷ்டமான வலிமையைத்தவிர உங்கள் வலிமையென்ன வலிமை?(56) உங்களுக்குவலிமையேயில்லை இல்லையென்று யானிப்போது ஸத்தியமாய்ச் சொல்லுகின்றேன். ஆனால் சோதிரூபியான லிங்கத்தி னுச்சியையு மடியையு முங்களில் யார் காண்கின்றீர்களோ அவரே பலவான்களுக்கு எல்லாம் சிறந்தவர்" என, இவ்வாறு வசனத்தை யாங்கள் இருவரும் கேட்டவுடன் கெளாய்! புத்திரா! அப்போது யாங்க ளிருவரும் கோபத்தை விட்டுப்போட்டு மறுபடியு மெங்களுக்குள் மிகுந்த கர்வம்கொண்டவர்களானோம்." (58)

முப்பத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௩௭—வது அத்தியாயத்தினர்த்தம்.

"பிற்பாடு யாங்களிருவரு மவ் வாக்குதனையாலோசித்து மிகுந்த குதூகலம் கொண்டவர்களாகி யெதிரினில் விளங்கலான வொளி பொருந்திய வச் சோதிதனைக் கண்டுகூட மகா கர்வம்கொண்டவர்களாகி (1) யதனை யோகாக்கினி யென்று கருதிச் சட்டைசெய்யாம லதன் மேற்பாகத்தையும் கீழ்ப்பாகத்தையு மெளிதினிற்காண விச்சைகொண் டொருவரோடொருவர் பிரதிக்கினை செய்துகொண் டாயிரம் யோஜனை யுயாமுள்ளவைகளும், மிகுந்த வேகத்தையும் வலிமையையும் கொண்டவைகளுமான அன்னபக்ஷியுருவத்தையும் பன்றியுருவத்தையும் கொண்டவர்களாகி($2\frac{1}{2}$) யான் மேற்ப்புறத்தையும் விஷ்ணு கீழ்ப்புறத்தையும் காண்பதற்காகச் சென்றோம். (3) பிற்பாடு விஷ்ணு வெகுதூரம் சென்று மனமொடிந்தவரும், மேனிமிகவும் நொறுங்கப்பெற்றவருமாகி யப்போது மிகுந்த துக்கங்கொள்ளலாயினர். (4) மேலுமவர் திரும்பி வருவதற்கு மோரடிகூடத் தூக்கிவைக்கச் சக்தியற்றோராயினர். தவிரவு மப்போ

தவர் கேளாய்! புத்திரனே! அப்பன்றியுருவத்தை விலக்கிக்கொள்வத ற்குக்கூடத் திறமையற்றவராகி (5) யப்போது ஸாக்ஷாத் ஸ்ரீ பரம சிவனையே மேன்மைபொருந்திய ரக்ஷகனென்று நினைத்தார். அதன்மே லவருக்குச் சிவாக்கினையினால் கொஞ்சம் வலிமையுண்டாகி (6) யப் பரஞ்சோதியின் கீழ்ப்பாகத்தைக் காணுமலே மாதவன் சடிதியில் திரு ம்பிப் பூதலத்துக்கு வந்து (7) கேளாய்! புத்திரனுகிய தக்ஷா! நமஸ் காரம்பண்ணிவிட்டு மேனி நடுங்கப்பெற்றவராகி யச் சோதியின் முன் னிலையிலே நின்றுகொண்டிருந்தார்."

"அப்போது யானேவென்று லன்னபட்சி யுருவமெடுத்துக்கொ ண் டாயிரம் வருடமளவு (8) முயரவுயர பறந்து இரக்கைகள் நோய் கொள்ளப்பெற்றவராகி யுயரச்செல்லத் திறமையற்றுப்போ யச்சோதி லிங்கத்தின் முடியைக் காணுமலே யங்கு மிங்கும் தத்தளித்துக்கொண் டோர் கணநேர மங்குதானே யிருந்துவிட்டேன்: ஓ! தக்ஷா! (9) அப்போது சில சித்தர்களும் யோகீசுவரர்களு முருத்திராக்ஷங்களை யா பரணங்களாய்ப் பூண்டுகொண் டச் சோதிப்பொருளினிடது பக்கத்தி னின்று புறப்படலாகி (10) "ஓ! இப்போது மிகுந்த வஞ்ஞானத்தி னுல் மூடப்பட்ட இவ்வன்னப்பட்சியானது இனி யோ ரடியாவ துயரப் பறக்கில் செத்தேபோய்விடும். (11) விஷ்ணுகூட பராபரமான விச் சிவச்சோதியை யறியாமலே யிச்சோதிப்பொருளி னடிப்பாகத்தைக் கா ணுமல் கிலேசப்பட்டுத் (12) திரும்பிச்சென்று மிகவும் களைத்துப் போய் நமஸ்காரம்பண்ணிவிட்டு மிகவும் பயங்கொண்டவராகி யிருக்கின் ருர். ஓ! மகா பேதமைகொண்ட விப் பறவைக்கு ஸ்ரீ ஸர்வேசுவர ன ருளினு லுயி ரிருக்கின்றதேயின்றி யில்லாவிடி லிது சந்தேகமேயின்றி ச் செத்தேபோய்விடு" மென் றவர்க ளொருவரோடொருவ ரென் முன் னிலையிற் பேசிக்கொண்டே சென்றார்கள். கேளாய்! மைந்தனே! (14) பிற கவர்கள் வசனங்களைக் கேட்டதன்பேரி லெனக்கு மறிவுண் டாகி மதிமயக்கம் தெளிந்துவிட்டபடியால் யான் சீக்கிரமாய்த் திரும்பி ப் பூதலத்துக்கு (15) வந்து மிகுந்த பயத்தோடு ஸ்ரீமகாதேவனைப் பல துதிகளா லனேகவிதமாய்த் தோத்திரம்பண்ணிவிட் டங்கு மிகுந்த பயத்தோ டஞ்சலிகொண்டிருக்கும் விஷ்ணுவைக் கண்டேன். (16) பி ற கப்போ தெங்க ளிருவருக்கும் சிவாக்கினையினால் இங்கிச்சோதிதனில் சிவபூஜைசெய்யப் புத்தியுண்டாகி (17) 'ஓ! விஷ்ணுவே! வீண் மோ கவசத்தினல் நா மிங்கு புத்திகெட்டுப்போனே" மென் றப்போது நா ங்க ளொருவருக்கொருவர் பேசிக்கொண்டு பூஜைசெய்யத் தீர்மானித்த

வர்களாகி ஸ்ரீமகாதேவரை மிகுந்த பக்தியோடு பூஜைசெய்தனம். ஓ! தக்ஷா! பிற்பாடு ஸ்ரீபகவான் கௌரீதேவியொடுகூட மாயாசம்மந்தம ற்ற திவ்ய சரீரத்தைக் கொண்டவரும், இலக்ஷுமீவிலாசம்பொருந்திய வரும், சந்திரகலையை யுச்சியலங்காரமாய்ப் பூண்டவரும், சுத்தமான ப டிகத்துக்கு நிகரானவரும், முக்கண்ணுடையவரும், கறுத்த கழுத்தையு டையவரும், அபயஹஸ்தம் கொண்டவரும், மகா ஸௌந்தரியம் பொரு ந்தியவரும், பாசுவாயுதம், மான் இவைகளால் விளங்கலுற்ற திருக்கை யை யுடையவருமா யிச் சோதியினின் றுவிர்ப்பவித்தார். (19-20½) பி றகு உலகங்களுக்கெல்லாம் சுகத்தை யளிக்கலுற்ற அஷ்டைசுவரியம் பொருந்திய வம் மகாதேவரை யாங்கள் தரிசித்து (21) மிகுந்த பக்தி யோடு நமஸ்காரம்பண்ணி யனேகம் துதிகளால் பலவாறாய்த் துதித்து "ஓ! சங்கரா! எங்களுடைய விப்பேர்க்கொத்த வபராதத்தைத் தேவரீ ர் மன்னித்தருளவேண்டும். (22) தேவரீரோ சகல புவனங்களுக்கும் பராபரகுருவும், சகல லோகங்களுக்கும் நன்மையைச் செய்தலிலே மு யன்றவருமாகின்றீ" ரென்று சூலபாணியான வம் மகாதேவரை யாங்க ள் வேண்டிக்கொண்டபோது (23) கேளாய்! தக்ஷா! சந்திரசேகரரு ம், திவ்யமங்களமூர்த்தியுமான வப் பகவான் முன்போ லெங்களுக் கவ ரவர் பதவியை யருளி யப்போது ஸர்வஸ்வரூபியான பரமேசுவர னெ ங்க ளிருவரையும் சுயேச்சையா யனுப்பிவிட்டுப் (24½) பிற கவ் வப் பெருஞ்சோதிக்குள் ளந்தர்த்தான மடைந்துவிட்டனர். (25) உடனே யிப்பேர்க்கொத்த வச் சோதியானது மகா மகிமைபொருந்தியதும், இ லக்ஷுமீகரமுள்ளதுமான 'அனலகிரி' (திருவண்ணாமலை) யென்ற திரு மலையாயிற்று. பின்பு யாங்கள் சோதிலிங்கரூபியான விப்பேர்க்கொத் த அவ்வனலகிரியை நமஸ்கரித்துவிட்டு (26) ஸ்ரீபரமசிவனுடைய க ருணையின் வலிமையால் நாங்கள் மிகுந்த புத்திப்பிரமம் தெளியப்பெற் றவர்களாகி யெங்கள திருப்பிடம்சென்று முன்போல் சுகமாயிருந்தோ ம். கேளாய்! புத்திரனாகிய தக்ஷா! (27) வெகுபெயர்கள் மாசிமா தக் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசிதினத்தில் சோதிலிங்கரூபியான வற்புத மாகிய அவ் வனலகிரிக்குச் சென்றமாத்திரத்தில் சகல பாவங்களும் தொலையப்பெற்றவர்களாகிப் (28) பூஜைசெய்து ஸ்ரீமகேசுவரன் திரு வருளால் வேண்டிய பயனைக் கைக்கொண்டிருக்கிறார்கள். மேலுமப் பேர்க்கொத்த சோதிலிங்கரூபியான ஸ்ரீமகேசுவரன்மீது பரிபக்குவ மான சித்தத்தை யுடையவர்களாகி மனதை யுறுதியாய் நாட்டி யவர்க ள் ஸ்ரீதேவேசனுடைய கிருபையினால் வேதாகமங்களா லுண்டாகிய

சிவஞ்ஞானத்தை யடைகின்றார்கள்.(29½) ஓ! மைந்தா! உனக்கிப்போது சிவஞ்ஞானமுண்டா யிருக்கின்றபடியா லுந்தனுக்கு மப் பரமேசுவரனுடைய கிருபை பூர்ணமா யிருக்கின்றது. ஆகையால் நீ சகல பாவங்களும் தொலையப்பெற்றவனாகின்றாய். (30½) அந் தேவேசனைச் சரணமடைந்து தடையின்றிச் சுகமடையலாவா" (31) யென் றுரைத்துவிட்டுப் பிரம்மாவானவர் திரிபுராரியான ஸ்ரீஸர்வேசுவரனைப் பூஜைசெய்துவிட்டு ஸகல தேவர்களாலும் சூழப்பெற்றவராகித் தமதிருப்பிடம் சென்றார். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (32) பிற்பாடு தக்கனும் பிரம்மனா லேவப்பட்டவனாகிச் சகல பாவங்களையும் நாசம்செய்யலுற்ற காசி நகருக்குத் துரிதமாய்ச் சென்(33) றங்கு தன் பெயரால் விளங்கலுற்ற 'ஸ்ரீ தக்ஷேசுவர' னென்ற சிவலிங்கத்தை ஆகமமுறைப்படி பிரதிஷ்டைபண்ணி (34) யப் புத்திசாலியானவன் மிகுந்த பக்தியோ டாயிரம் வருடமளவும் பூஜை செய்தான். பிறகு ஸ்ரீ மகேசுவரன் பிரஸன்னரானவுட னத்தக்கன் மிகுந்த பக்தியோடு நமஸ்கரித்துப் பரமேசுவரன் முன்னிலையில் நின்று துதிசெய்கையில் (35½) ஸ்ரீ பகவான் "ஓ! தக்ஷா! உந்தன் பூஜையின் மகிமையால் யாம் பிரஸன்னராயினமென்றறி; ஆகையா லுந்தனுக் கென்ன வேண்டும் சொல்; யா மதனை யுனக்குக் கொடுக்கின்றோ" (36½) மென, இவ்வா றம்மகேசுவரனது திருவசனத்தைக்கேட்டுத தக்கனவரைநோக்கி யுரைத்ததாவது:—(37) "ஓ! கருணைக்கடலான தேவேசா! எந்தனுக்குக்காலஅளவி லழிந்துபோகலுற்றவிஷ்ணு, பிரம்மா, இந்திரன், அக்கினி இவர்களுடைய பதவிகளிலாவது அல்லது இன்னும் மற்றவர்களின் பதவியிலாவது விருப்பமில்லை. (38) ஆனால் ஓ! தேவதேவேசா! மலைகளிற் சிறந்த தேவரீரது கைலைகிரியிலுள்ள திருமாளிகை வாசலின்கண் ணெப்போதும் கணங்களின் தலைவனா யிருக்கும் தன்மை யெந்தனுக் குண்டாக்கும்படி யருள்புரியவேண்டு" (39) மென்று ஸ்ரீ மகாதேவனை வரன்கேட்டுவிட்டஞ்சலிகொண் டவர் முன்னிலையில் நிற்கையில் ஸ்ரீ மகாதேவ 'னப்படியே நல்ல' தென் றருளி யங்கு தானே யந்தர்த்தான மடைந்தனர். (40) பிற்பாடு தக்கனும் வரனடைந்தபிறகு பருவதோத்தமமான ஸ்ரீ கைலாஸத்துக்குச் சென்று கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! அங்கு கணநாதலைவப் பதவியை யடைந்து மெத்தச் சுத்த சித்தத்தைக்கொண்டவனாகி யங்கு மகா சந்தோஷத்தோ டிருந்தான். (41)

முப்பத்தேழாவது அத்தியாயம்
முற்றிற்று.

## தக்ஷகாண்டம் ௬௮—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! முந்தித் தக்கன் வேள்வியி லெந்தந்தத் தேவர்களிருந்தார்களோ அவர்களெல்லாம் கருமசேஷத்தினால் சூரபத்துமனால் மிகவும் வாதிக்கப்படலானார்களென, (1) முனிவர்கள் "ஓ! சூதமுனிவரோ! ஆயிரத்தெட் டண்டங்களுக் கதிபனான மகா மகிமை பொருந்திய சூரபத்தும மகாசுரனுக்குச் சுக்கிரனு லண்டத்தின் பரிமாண முரைக்கப்படலாயிற்றென்று முந்தி யும்மால் கூறப்பட்டதல்லவா! ஓ! மகா ருஷியே! (2½) அதனை யிப்போ தெங்களுக்கு விரிவா யெடுத்துரைக்கவேண்டு" (3) மென, இவ்வா றவரது வசனத்தைக்கேட்டுத் தவசிகளிற் சிறந்த சூதமுனிவர் வேதங்களிற் கரைகண்டவர்களான அவ்வெல்லாப் பிராம்மணச் சிரேஷ்டர்களையும் பார்த்துக் கூறியதாவது:—(4) ஓ! பிராம்மணர்களே! பாவமற்ற நீங்களெல்லோர்களும் கவனமாய்க் கேளீர்கள். பிரபஞ்ச தத்துவத்தி லிவ்வண்டமானது பிரம்மாவினால் சிருஷ்டிக்கப்பட்டது. (5) அது நூறு கோடி யோஜனை யுயரமுள்ளதும் மூடப்பட்ட இருண்டு சம்புடங்களினுருவத்தைக் கொண்டதும், மத்தியி லிடவெளியுள்ளதும், (6) மெத்த வாச்சரியத்துக் கிருப்பிடமுமாய்க் கேவலம் ஜலத்திலே நிலைகொண்டிருக்கின்றது. ஓ! பிராம்மணர்களே! அதின் சுவற்றின் கனதியானது கோடியோஜனைகொண்டது. (7) அதின் கீழ்ப்பாகச் சுவற்றின் கனதியும் கோடி யோஜனை கொண்டதுதான். இதற்கு மேலாகத்தான் மகானாகிய ஸ்ரீகாலாக்கினி ருத்திரரிருக்கின்றார். (8) இக்கீழ்ப்பாகச் சுவற்றிற்கு மேல் கோடியோஜனை யுயரமுள்ள திவியமான திருமாளிகை மீது ஆயிரம்யோஜனை யுயரமு மிரண்டாயிரம் யோஜனை விஸ்தீர்ணமுமுள்ளதும், அனேக விரத்தினங்களாற் சோபிக்கலுற்றதுமான வோர் திவிய ஸிம்மாஸனத்தி லக் காலாக்கினி ருத்திரபகவான் தமக்குச் சமானமாகிய பத்து ருத்திரர்களாலும், இவர்களின் பரிவாரங்களாகிய மற்றப் பத்துகோடி உருத்திரர்களாலும் சுற்றிலும் சேவிக்கப்பெற்றவராகிக் கத்தி, கேடயம், வில்லம்புகளை யெப்போதும் தரித்துக்கொண் டெந்நாளும் விளங்கியிருக்கின்றார். இம்மகா ருத்திரருடைய பயங்கரமான ஜுவாலையானது (9-11½) பத்துகோடி யோஜனை யுயரமுள்ளது. (12) அச்சுவாலைக்கு மேற்செல்லும் புகையி னுயர மைந்துகோடியோஜனை. மேலு மப் பிரபுவினுடைய திருமேனியோ பதினாயிரம் யோஜனையுயரம். (13) அத்தேவ னதிகூர்மத்தினால் துதிசெய்யப்பெற்றவரும், அநந்தங்களான மகிமைகளுக் காதாரரும், பரமாநந்தபரிதரும், ஸர்வகாரணமூர்த்தியாகிய ஸ்ரீ பரமசிவனைத் தியானம்செய்யலுற்றவருமாகி யிங்கு விள

கியிருக்கின்றார். (14½) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மேற்கூறிய புகையின் கோடியானது பிரம்மாண்டக் கீழ்ச்சுவற்றிலிருந்து பதினேழுகோடி யோஜனை யுயரத்திலுள்ளது.(15½) இப்புகைக்குமேலாகத்தான், பாவிக ளியமகிங்கரர்களால் மிகுதியாய் வாதிக்கப்படலுற்ற நரகங்களிருக்கின்றன. (16½) அவை யிருபத்தொன்பதுகோடியே பனிரண்டிலக்ஷம் யோஜனையுள்ளதாயிருக்கும்படி ஸ்ரீ பரமேசுவரனால் கட்டளையிடப்பட்டிருக்கின்றது. (17½) இவைகளின் மேற்புறத்தி லனேககோடி கணாதிபர்களாலு மநேகவிதமாயுள்ள பரிவாரங்களாலும் சேவிக்கப்பெற்றவரான மகேசுவரனாகிய ஸ்ரீ கூசுமாண்ட ருத்திரர் மகா ஸந்தோஷத்தோடு விளங்குகின்றார். (19) கேளீர்! முனிவர்களே! இவருடைய லோகமானது கோடியோஜனைக்கோரிலக்ஷம் குறைந்ததாகும். இதற்குமே லொன்பதி லக்ஷம் யோஜனையளவும் வெருமாகாயமென் றறியத்தகும். இதற்கும்மேலாக அறுபத்தின்மூன்றிலக்ஷம் யோஜனைவரைக்கு மேழு பாதாளங்களுள்ளன. (20-21) கேளீர்! வேதமறிந்தோரிற் சிறந்தவர்களே! இவைகளுக்கு மேலாக வெட்டிலக்ஷம் யோஜனைப் பிரமாணமுள்ள 'கனிஷ்ட' மென்று பெயருடைய எட்டாவது பாதாளமிருக்கின்றது. (22) இதனி லசுரர்கள், நாகர்கள், இராக்ஷதர்கள் இவர்கள் வசிக்கின்றார்கள். கேளீர்! முனிவர்களே! இதற்குமுயரத்திலொன்பதிலக்ஷம் யோஜனைவரைக்கும் ஸ்ரீ ஹாடகேசுவர தேவருடைய வாஸஸ்தானமாகிய பெரிதான லோகமிருக்கின்றது. (23½) அத்தேவரனெகம் ருத்திரகணங்களோடுகூடப் பணிவிடைசெய்ய முயன்ற மற்றனேக முருத்திரர்களாற் சுற்றிலும் சேவிக்கப்பெற்றவராகி யங்கு வசிக்கலாகின்றார். (24½) இவரோ பாதாளங்களுக்கெல்லா மதிபர்; மேற்சொல்லியவர்க்கெல்லாம் மகாப்பிரபு. (25) இல்லோகத்திற்கும் மேற்பட்டுக் கோடியே இருபதிலக்ஷம் யோஜனையளவும் வெருமாகாயமே! (26) அதற்குமேலாக வெட்டுத் திக்கஜங்கள், மகா நாகங்கள், இவைகளாலும், ஆதிசேடனாலும், சுமக்கப்படானின்றதும், எண்பதிலக்ஷம் யோஜனைப் பிரமாணமுள்ளதும், சமுத்திரங்கள், தீவங்கள், மலைகள் இவைகளோடுகூடியதுமான பூமியானது சிவாக்கினையா லிருக்கின்றது. (27) கேளீர்! வேதியர்களே! இவ்விதமாக அண்டத்தின் கீழ்ச்சுவறு முதல் பூமிவரைக்கு (28) மைம்பதுகோடி யோஜனையுள்ளதென்று நிச்சயிக்கப்படுகின்றது. கேளீர்! முனிவர்களே! இப்பூமிக்கும் மேலாகக் குஹியகர்கள், வாயுக்கள், மேகங்கள், கிம்புருடர்கள், கருடர்கள், சித்தர்கள், தேவர்கள், வித்தியாதரர்கள், இயக்ஷர்கள், ஆகாயகங்கை ஆகிய பத்துகணங்களும்முறையேமேலுக்குமேலாக இருக்கலாகின்றன.(30½) இவைக்கெல்லாம் மேற்பாகத்தில் பூமியிலிருந் திலக்ஷம் யோஜனை தூர

த்திற் சூரியன் (31) தனதொளியினு லுலகங்களைப் பிரகாசிப்பித்து க்கொண்டு சுற்றிவருகின்றான். இந்த விடத்தில்தான் முப்பத்துமுக் கோடி தேவர்களும் வாசம் செய்கின்றார்கள். (32) இதற்குமே லில க்ஷம்யோஜனை தூரத்தில் சந்திரன் சஞ்சரிக்கின்றான். சந்திரனுக்கு மில க்ஷம் யோஜனை தூரத்தில் நக்ஷத்திரங்களிருக்கின்றன. ஓ! வேதியர்க ளே! இவைகளுக்கும் (33) மேலாகப் புதன், சுக்கிரன், செவ்வாய், வியாழன், சனி, இவர்களொருவருக்குமேலொருவர் முறையே இரண்டி ரண்டிலக்ஷம் யோஜனை தூரங்களிற் சஞ்சரிக்கின்றார்கள். (34) இவை களுக்குமே லிலக்ஷம்யோஜனை தூரத்தில் ஸப்தருஷிகளிருக்கின்றார்கள். ஓ! முனிவர்களே! இதற்கு மிலக்ஷம் யோஜனை தூரத்தில் துருவநக்ஷ த்திரமிருக்கின்றது. (35) பூமிக்கு மேற்பட்டுத் துருவநக்ஷத்திரம் வ ரைக்குமுள்ளது 'புவர்லோக' மெனப்படும். இதில்தான் ஸப்தமருத் துக்கள் வசிக்கின்றார்கள். (36) இதற் கெண்பத்தைந்திலக்ஷம் யோஜ னை தூரத்துக்குமேல் ஸுவர்லோகம்; இங்குதான் தேவேந்திரன் ஸகல தேவர்களுடனும் விளங்கலாகின்றான். (37) இதற்கிரண்டுகோடி யோ ஜனை தூரத்தில் மகர்லோக மிருக்கின்றது. கேளீர்! முனிவர்களே! இங்கு மார்க்கண்டன் முதலியருஷிகள் வசிக்கலாகின்றார்கள்.(38) இதற் கெட்டுகோடி யோஜனை தூரத்துக்கு மேல் ஜனோலோக மென்றறியத் தகும். இங்கு சிவாக்கினையின்படி பிதுருக்கள் வசிக்கின்றார்கள். (39) இதற்குமேல் பனிரண்டுகோடியோஜனை தூரத்திலிருப்பது தபோலோக மெனத்தகும். அங்குதான் பிரம்ம நிஷ்டர்களான ஸனகர் முதலிய மகா ருஷிகளிருக்கின்றார்கள். (40) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இதற்கும் மேலாகப் பதினறுகோடி யோஜனை யளவினில் ஸத்திய லோக மெனப்படும். (41) இதில் சிருஷ்டிகர்த்த ரெப்போதும் சிரு ஷ்டிசெய்துகொண்டிருக்கின்றார். இதற்கு மூன்றுகோடி யோஜனைக்கு மேலாகத் தான் பிரம்மலோக மெனத்தகும். (42) இவ்விடத்தில் நான் முகத்தேவரான பிரம்ம னென்றும் ஸந்தோஷமாய் வசிக்கலாகின்றார். இதற்கு மூன்றுகோடி யோஜனை தூரமளவில் விஷ்ணுலோக மிருக்கி ன்றது. (43) அங்கு ஸ்ரீ விஷ்ணுவானவ ரெப்போது மிலக்ஷுமீ தேவி யோடுகூட இரமித்துக்கொண்டு விளங்கலாகின்றார். ஓ! கேளீர்! சௌ னகாதி முனிவர்களே! இவ்வெல்லாவற்றிற்கும் மேலாக நான்குகோடி யோஜனைதூரத்தில்சிவலோகமிருக்கின்றது.(44½) இந்தவிடத்தில்ஸர்வே சுவரனும்,பரமாத்துமாவும்,பராபரருமானஸ்ரீபரமேசுவரன் ஸ்ரீகௌரிதே வியோடும்பிரமதகணுதிபர்களோடும்கூடச்சுயஞ்சோதியாய்ப் பிரகாசித் துக்கொண்டுவிளங்கலாகின்றார்.(45½)இதற்கு மேலண்டச்சுவருவரைக்

குமுள்ள அளவு கோடியோஜனை. (46) கேளீர்! பிராம்மணோத்தமர்க
ளே! இவ்வாறாகப் பூமிக்கு மேலண்டைச்சுவறுவரைக்கு முள்ள விஸ்தீ
ர்ணமைம்பதுகோடி யோஜனையாகின்றது. (47)

முப்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௩௯—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! பிராம்மணச்சிரேஷ்டர்களே! இப்போது தீவங்கள், சமுத்தி
ரங்கள், மலைகள், இன்னும் மற்றவைகள் இவைகளையெல்லாம்பற்றி யு
ரைக்கின்றேன்; நீங்களெல்லோர்களும் சோம்பலின்றிக் கேளுங்கள்.
(1) பூமிக்கு மத்தியி லிலக்ஷம்யோஜனைப் பரப்பளவுகொண்டவிப்பாகம்
'ஜம்பூத்தீவ' மெனப்படும். இதற்கு மத்தியில் மிகவும் பெரிதும் நேர்
த்தியுமாயுள்ள மகாமேருகிரியானது (2) பூமிக்குள் பதினாறாயிரம்யோஜ
னை யாழ்ந்தியு முயரத்தில் முன்னூற்றிருபதினாயிரம் யோஜனை யுயர்ந்து
மிருக்கின்றது. (3) மேலு மக்கிரிராஜனானது கேளீர்! பிராம்மணோத்
தமர்களே! பதினாறாயிரம்யோஜனைவிஸ்தீர்ணமுள்ளதும்,முப்பத்திராயிர
ம் முப்பத்திராயிரம் யோஜனை யுயரத்திலுள்ள மூன்று தாழ்வரைகளைக்
கொண்டதுமாய் விளங்குகின்றது. ($4\frac{1}{2}$) இவற்றுள் மேற்பாகத்திலுள்
ள தாழ்வரையி லனேகம் கொடுமுடிகளுள்ளன. அவைகளில் மிகவும்
நேர்த்தியான நடுக்கொடுமுடிதனில்($5\frac{1}{2}$) மிகவும் சிரேஷ்டமானதும்,
அனேக கோபுரங்களாலு மட்டாலங்களாலும் சோபிக்கப்பெற்றதும்
தங்கத்துவஜத்தை யுடையதுமான 'மனோவதி'யென்று பெயர்போனப்
பிரம்மனுடைய நகர மிருக்கின்றது. ($6\frac{1}{2}$) கேளீர்! முனிவர்களே! இ
வ்வாறாகவே இதின் கிழக்கிலுள்ள கொடுமுடியின் கண் ணனேகம் விசி
த்திரங்களால் நிறைந்ததான வைகுண்டமென்ற விஷ்ணுவினுடைய நே
ர்த்தியான பட்டணமிருக்கின்றது. ($7\frac{1}{2}$) மேலும் வடகிழக்கிலுள்ள
கொடுமுடிமீ தனேகம் கோபுரங்கள், அட்டாளங்கள், கொடிங்கைகள்,
பிராகாரங்கள் இவைகளா லலங்கரிக்கப் பெற்ற 'அஜோவதி' யென்று
பெயர்போன, பரமாத்துமாவாகியஸ்ரீபரமேசுவரனுடையநேர்த்தியானப
ட்டணமிருக்கின்றது. (9) கேளீர்! முனிவர்களே! இவைகளுக்குச் சு
ற்றிலுமுள்ள வெட்டுக் கொடுமுடிகளில் திக்பாலர்களுடைய விசித்திர
ங்களான பட்டணங்களிருக்கின்றன. (10) இம்மகா மேருவின் கிழக்
திசையில் மந்தரகிரியிருக்கின்றது. இதி லாயிரம் யோஜனை யுயரமுள்

ள வோர் கதம்ப விருக்ஷம் விளங்குகின்றது. (11) மேலும் மேருகிரியின் கிழ்த்திசையில்'அருண' மென்ற வோர் பெரிய தடாகமும் 'சைத்திராத'மென்ற வோ ருத்தியான வனமு மிருக்கின்றது. (12) அம்மந்தாகிரிக்கும் கிழ்த்திசையில் 'மால்லியவா'னென்ற வோர் சிறந்த மலையானது மேருவிலிருந்து வடசமுத்திரத்திற்குள் பிரவேசித்ததாகி விளங்குகின்றது.(13)ஓ! தாணிதேவர்களே! மேருவின் தென்பாரிசத்தில்மிகவும் பெரியதும்தங்க நிறமுள்ளதுமான 'கந்தமாதனகிரி' யென்றோர்மலைவிளங்குகின்றது.(14)இதனிலிரண்டாயிரம் யோஜனை யளவுள்ளவோர் ஜம்பூ (நாவல்)விருக்ஷமிருக்கின்றது. ஆகையால்தானிதற்கு'ஜம்பூத்தீவ' மென்றுபெயருண்டாயிற்று.(15) ஓ!முனிவர்களே! தவிரவும் மேருவின்தென்பாரிசத்தில் 'மானஸ'மென்றோர் தடாகமுண்டு. அதில் 'மகாவன'மென்று பெயர்போன வோர் சிங்காரவன மிருக்கின்றது. (16) இதற்குத் தெற்கினில் சிவப்பு நிறமுடைய 'நிஷத' மென்றோர் பெரிய மலையும், அதற்கும் தென்பாரிசத்தில் தங்க நிறத்தையுடைய 'ஏமகூட'மென்ற மலையும் அதன்தெற்கினி லிமய மலையு முள்ளன. ($17\frac{1}{2}$) ஓ! பிராம்மணோத்தமர்களே! நிஷதகிரி, ஏமகூடகிரி, இமயகிரி, ஆகிய விம்மூன்றுமலைகளும் கிழ்ச் சமுத்திரத்தினுட் பிரவேசித்திருக்கின்றன. ($18\frac{1}{2}$) மேருவுக்கு மேல்பாரிசமாய் 'விபுல' மென்ற மலை யிருக்கிறது; (19) அதினிலாயிரம் யோஜனை யளவுகொண்ட மகா வுன்னதமான வோ ரசமர மிருக்கிறது. கேளீர்! முனிவர்களே! அம்மேருவின் மேல்பாரிசத்திலே 'அஸிதோத' (கறுத்த நீரையுடையது) மென்ற வோர் பெரிய தடாகமுள்ளது. (20)மேலுமங்கு'மகத்வப்பிர'மென்றவோர்சிறந்தவுத்தியானவன மிருக்கிறது. இம்மலைக்கு மேற்காக உறுக்கிவிட்ட தங்கத்திற்கு நிகரான மற்றோர் பெரிய 'கந்தமாதன' மலை விளங்குகின்றது. ($21\frac{1}{2}$) இம்மலை தெற்கு ஸமுத்திரத்துக்குள் நன்றாய்ப் பிரவேசித்திருக்கின்றது. (22) ஓ! பிராம்மணோத்தமர்களே! மேருவின் வடக்கில் அலர்ந்தமாதுளை மலருக்கு நிகரான 'சுபாசுப' மென்ற மற்றோர் மலை விளங்குகின்றது. இதினி லாயிரம் யோஜனை யுயரமுடைய வோர் ஆலமாமிருக்கிறது. தவிரவும் மேருவின் வடக்கிலும் மற்றோர் சிறந்த பெரிய தடாகமுள்ளது. (24) இன்னு மிங்கு 'கிருத்திமை' யென்று பேருடைய மற்றோர் சிங்காரத் தோட்டமும் விளங்குகின்றது. மேற்கூறிய சுபாசுபமலைக்கு வடக்கில் நீலகிரி, (25) அதற்கு வடக்கினில் சிரேஷ்டமான சுவேதகிரி (வெள்ளமலை), அதற்கும் வடக்கில் சந்திர னொளிபோன்றதான சிருங்ககிரி(26) ஆகிய இம்மூன்று மலைகளும் மேலச்சமுத்திரத்தி

ற்குள் நன்ருய் வியாபித்திருக்கின்றன. மகாமேருகிரியானது இவ்வா றெல்லாம் சுற்றிலும் மிகுந்த மலைகளாற் சூழப்பட்டு விளங்குகின்றது. (27) மேருவுக்கு மத்தியில் தென் வடலாய் மிகவும் சிறியதான வோர் வெடிப்பிருக்கின்றது. மந்தரகிரி முதலான நான்குமலைகளும் மேருவினிற் பாதி யளவுகொண்டதென்றும், (28) மால்லியவான்மலை பதினுயிரம் யோஜனைக் கனதியுள்ளதென்று மறியத்தகும். மேருவுக்குத் தெற்கிலுள்ள நிஷதகிரிமுதலியமூன்றுமலைகளுமிரண்டிரண்டாயிரம்யோஜனைப் பருமன் கொண்டதென்றும், மேற்கிலுள்ள கந்தமாதனகிரி (29½) பதினுயிரம் யோஜனைப் பரும னுள்ளதென்று மறியப்படுகிறது. கேளீர்! முனிவர்களே! (30) வடக்கிலுள்ள நீலகிரி முதலிய ஒவ்வொன்று மிரண்டாயிரம் யோஜனைப் பருமனுள்ளதாகும். சிருங்ககிரிக்கும் கடலுக்கும் மத்தியிலுள்ள பாகமானது 'குரு வருஷ' மெனவும், (31) சிருங்ககிரிக்கும் சுவேதகிரிக்கும் மத்தியிலுள்ள பாகம் 'இரணியவருஷ' மெனவும், சுவேதகிரிக்கும் நீலகிரிக்கு மிடையிலுள்ளது இரம்மியக வருஷமெனவும், (32) மால்லியவான்கிரிக்கும் கடலுக்கு மிடையிலுள்ளது'பத்திராசுவவருஷ'மெனவும், இமயகிரிக்கும்கடலுக்குமிடையிலுள்ளது 'பாரதவருஷ' மெனவும், (33) இமயகிரிக்கு மேமகூடகிரிக்கு மிடையிலுள்ளது 'கிம்புருட' வருஷ மெனவும், ஏமகூடகிரிக்கும் நிஷதகிரிக்கு மிடையிலுள்ளது (34) 'ஹரிவருஷ' மெனவும், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மேற்கிலுள்ள கந்தமாதனகிரிக்கும் கடலுக்கு மிடையிலுள்ளது 'கேதுமாலகவருஷ' மெனவும், (35) மேருகிரியைச் சுற்றிலுமுள்ள பாகமானது 'இளாவிருதவருஷ' மெனவும் படும். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! குருவருஷத்தில் வசிப்பவர்கள் கறுத்த நிறமுடையவர்களும், பிணியற்றவர்களும் (36) எல்லோரும் கற்பகவிருக்ஷத்தின் கனி முதலியவைகளையே புசித்துச் சீவிப்பவர்களுமாய்க் கூடப்பிறந்தவ ரெல்லோர்களும் மணம்புரிந்துகொண்டு குடும்பிகளாயிருப்பார்கள். (37) மேலு மவர்கள் பதின்மூவாயிர வருடமளவும் ஜீவித்திருப்பார்கள். தவிரவு மிங்கு மிகுந்த மகிமைபொருந்திய படிகத்தின்நிறத்தைக் கொண்டவர்களான சில சித்தர்க (38) ளவ்வளவு வருடகாலமே ஜீவித்துக்கொண்டு மிகவும் சுகமாய் வசித்துவருகிருர்கள். இரணியவருஷத்தில் வசிப்பவர்களோ எல்லோர்களு மாலங்கனிகளையே ஆகாரமாய்ப்புசித்துக்கொண்டு செங்கழிநீர் மலரையொத்த நிறத்தோடு மெத்த வொளிபொருந்தியவர்களாகிப் பன்னீராயிர வருடமளவும் ஜீவித்திருக்கின்ருர்கள். (39½) இரம்மியவருஷத்திலுள்ள ஜனங்களெல்லாம் சந்திரகாந்தக் கல்லையொத்த நிறத்தைக் கொண்டவர்களாகிப் (40) ப

திஞேராயிர வருடகாலமளவும் ஜீவித்திருக்கின்றார்கள். பத்திராசுவவருஷத்திலுள்ள ஜனங்களெல்லாம் பதின்மூவாயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களும், (41) சிவப்புநிறமுடையவர்களும், தடிபோன்றமெத்த வழகிய மேனியைக் கொண்டவர்களுமாயிருப்பார்கள். இந்தப் பாரதவருடத்திலுள்ள ஜனங்களோ வென்றால் பற்பல தொழில்களை யுடையவர்களும், பற்பல ஆகாரங்களைப்புஜிப்பவர்களும்,உயுகத்துக்குத் தக்கபடியுள்ள அறிவைக் கொண்டவர்களும், அப்படியே யுகத்துக்குத் தக்க ஆயுசைக்கொண்டவர்களுமாயிருப்பார்கள். (43) கிம்புருட வருஷத்திலுள்ளவர்களெல்லாம் மதூரமான கனிவர்க்கங்களைப் புசிப்பவர்களும், உருக்கிய தங்கத்திற்கு நிகரானவர்களும், பதிஞயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களுமாவார்கள். (44) ஹரிவருஷத்திலுள்ளவரெல்லாம் கனிவர்க்கங்களைப் புசிப்பவர்களும், சந்திரகாந்தக் கற்கு நிகரான வொளியுடையவர்களும், பதிஞயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களுமாவார்கள். (45) கேதுமால வருஷத்திலுள்ளவர்களோ செங்கழிநீர் மலரையொத்த வொளியைக் கொண்டவர்களும், பதிஞயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களும், (46) தாழங்கனிகளைப் புசிப்பவர்களுமாயிருப்பார்கள். கேளீர்! முனிவர்களே! இளாவிருத வருஷத்திலுள்ளவர்கள் சுத்தமான படிகத்துக்கு நிகரானவர்களும், (47) கருப்பஞ்சாற்றையே ஆகாரமாய்க் குடிப்பவர்களும் துக்கமற்றவர்களுமாய்ப் பன்னீராயிர வருடமளவும் ஜீவித்திருப்பார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (48) மற்ற எட்டுவருஷங்களிலுள்ள வெல்லோர்களும் மூப்பும் பிணியுமற்றிருப்பார்கள். ஆனால் ஓ! தாணிதேவர்களே! இப்பாரத வருஷத்திலுள்ள ஜனங்கள் மூப்புப் பிணிகளை யுடையவராவார்கள். (49) இந்தப் பாரதவருஷத்தில் நல்வினை தீவினைகளைச் செய்வோர்கள்முறையே மற்றெட்டு வருஷங்களையும், நரகங்களையு மடைவார்கள். (50) ஆகையா லிது கருமபூமி யெனவும் மற்றதெல்லாம் போக பூமி யெனவும் படும். இமயகிரிக்கு மேமகூடகிரிக்கும் மத்தியில் கைலைகிரியானது பற்பல விரத்தினங்களால் விநோதமா யிருக்கலுற்ற வனேகம் வெள்ளிக் கொடிமுடிகளுடன் விளங்கலாகின்றது. (51½) இதனில் ஸ்ரீமகாதேவர் தேவர்களாலும் முனிவர்களாலும் துதி செய்யப் பெற்றவரும், பரமானந்த பரிதருமாய் ஸ்ரீ பார்வதிதேவியோடுகூட விளங்கலாகின்றார். (52½) அக்கிரிராஜனோ வென்றால் விஷ்ணு முதலிய ஸகலப்பிராணிகளுடையவுமானப் பிரளயகாலத்தில் (53) ஸ்ரீ சிவாக்கினையால் சடுதியில் வளரலாகிப் பிரம்மாண்டத்தைப் பிளந்துகொண்டிருக்கின்றதென, முனிவர்கள் "ஓ! சூதமுனிவரோ! இச் சம்பூத்தீவத்துக்கு யாவ

ரதிபனொன்பதை யெங்களுக்கு எடுத்துரைத்தல் வேண்டு” மென்றுர்கள். (53)

மூப்பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் சய—வது அத்தியாயத்தினர்த்தம்.

சூதமுனிவ ரிவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டபிறகத் தவசிச்சிரேஷ்டர்களை நோக்கிச் சொல்லுகின்றார்:— கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! பிரம்மாவின் புத்திரனை சுவாயம்புவனென்பவர் ஸகல லக்ஷணங்களோடும் கூடியவனும், மகா சிரேஷ்டனுமான பிரியவிருதனென்ற வோர் புத்திரனையடைந்தார். ($1\frac{1}{2}$) பிறகப் புத்திரனு மேழு தீவங்களடங்கிய பூமியை யாண்டுவருகையி (2) லவனுக் கேழுலகுகளிலும் பெயர்போனவர்களான வேழு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களி லாக்கினீத்திரனென்ற பிள்ளைக்கு விச் சம்பூத்தீவத்தையும் (3) மற்றப் பிள்ளைகளுக்கு மற்றத் தீவங்களையுமாகப் பங்கிட்டுக்கொடுத்தான். பிறகவ் வாக்கினீத்திரனுக்கு மெங்கும் பெயர்போனவர்களான வொன்பது பிள்ளைகளுண்டானார்கள். (4) பிறகிச் சம்பூத்தீவமானது அவர்களுக் கொன்பது பங்காய்ப்பிரித்துக் கொடுக்கப்பட்டன. அவ் வொன்பது பாகங்களும் முறையே அவரவர்களின் பெயரைக் கொண்ட வருஷங்களாக வழங்குகின்றன. (5) அப்பிள்ளைகளாவென்றால்:— குரு, ஹிரணியகன், இரம்மியன், பத்திராசுவன், பாரதன், கிம்புருஷன், நிகரற்றவனான ஹரி, (6) கேதுமாலன், இளன் ஆகிய வொன்பதுபெயர்கள். இப்பாகமானது பாரதனுடையதாகையால் பாரதவருஷமெனப்படும். (7) இப்பாரதனுக் கெட்டுப் பிள்ளைகளு மோர் பெண்ணும் பிறந்தார்கள். பிறகு சத்துருக்களைக் கொல்லலுற்ற மகா புத்திசாலியான வப்பாரதனும் தனது பாரதவருஷத்தை யொன்பது பங்குகளாய்ப் பிரித்துக் கிரமப்படிக்குத் தன் மக்கள்களுக்குக் கொடுத்தான். ($8\frac{1}{2}$) இவற்றுள் ளப்பிள்ளைகளுக்குக் கொடுக்கப்பட்ட தேசமெல்லாம் மிலேச்சர்களாற் குடியேறப்பெற்ற பூமியே!(9) ஆனாலவன் குமாரிக்குக் கொடுக்கப்பட்ட ஆயிரம் யோஜனை விஸ்தீர்ணமுள்ள வித்தேசத்திற்கு

க் குமாரிகண்டமென்று பெயர்; இதனில் நற்கருமங்களைச் செய்யலுற்ற பெரியோர்கள்வசிக்கின்றார்கள்.(10)மேலுமிதனில்மகாபரிசுத்தம்பொருந்திய கங்கை,கௌதமீ,யமுனை,ஸரஸ்வதீ,கௌசிகி,காவேரி,நிர்மதை,(11) கம்பை, பம்பை, துங்கபத்திரை, குசை, பாலாறு, பாஞ்சாலி, கோமதீ, சூரி, சிகி, பாபவிநாசினி,(12) பாவங்களைத் தொலைக்கலுற்ற சங்கவாஹி, பாரத்துவாஜி, சிதை, சார்வரீ, சந்திரபாகை, ஸரயூ, வேணுபிங்களை,(13) சுவர்ணமுகரீ, தாம்ரபர்ணீ, குண்டலை, பெண்ணை, வைகை, மங்களகரம் பொருந்திய கந்தநதீ (14) இவை முதலிய புண்ணியநதிக ளெல்லா மோடுகின்றன. தவிரவும் கேளீர்! தரணிதேவர்களே! இதனில் மகேந்திரம், மலயம், மானுஷம், பாரியாத்திரம், சக்தி, விந்தியம், ஸஹியகம், ஆகிய வேழு பெயர்போன மலைகளுள்ளன. (15½) மேலுமிங்கு காசி, காஞ்சி முதலிய வேழு புண்ணியத்தலங்களு (16) மாயிரத்தெட்டு சிவத்தலங்களு முள்ளன. ஓ! முனிவர்களே! அனேக மக்கிரகாரங்களும், வைதிகப் (வேதமுறையில் நடக்கலுற்ற) பிராம்மணர்கள் வசிக்கும் வீடுகளு மிங்கிருக்கின்றன. (17) அவர்கள் வேதத்திற் கூறியபடியுள்ளஔபாஸனம்,அக்கினிஹோத்திரம்முதலியநித்தியநைமித்திககருமங்களை யனுஷ்டித்துவருகிறார்கள். மேற்கண்ட வொன்பது வருஷங்களுமாகிய விச் சம்பூத்தீவமானது இலக்ஷயோஜனை விஸ்தீர்ணமுள்ளதெனப்படும். (18) இலக்ஷயோஜனையளவுள்ள உப்புக்கடலானது இதனைச் சூழ்ந்திருக்கின்றது. ஓ! முனிவர்களே! இவ்வுப்புக்கடலுக்குச் சுற்றிலு மிரண்டிலக்ஷம் யோஜனைகொண்டதும், பற்பல வாச்சரியங்களோடு கூடியதுமான சாகத்தீவமிருக்கின்றது. (19½) பிரியவிருதராஜனுக்குப் புத்திரனானகோமேதகனென்றவ னிதற்கரசன்.(20) அவனேழு பிள்ளைகளைப்பெற்று அவர்களுக் கச் சாகத்தீவத்தை யேழுபங்காய்ப் பகிர்ந்து கொடுத்தான். இதனில் ஸோமம், சுமனசு, சந்திரம், துந்துபி, மகாகிரி, பிரவிராஜனம், நாரதீயம், கோமேதம், ஆகிய வேழு மலைகளுள்ளன.(22) மேலுமங்கு சிவை, விபாபை, அமிருதை,சுகிருதை, மனுதத்தகை, சித்தி, கிரமை ஆகிய வேண்டியபயன்களையெல்லா மளிக்கலுற்றவையும், மகாபரிசுத்தமுள்ளவையுமான வேழு நதிகளோடுகின்றன. (23½) இத்தீவமதை யிரண்டிலக்ஷயோஜனை விஸ்தீர்ணமுள்ள க்ஷீராப்தி (பாற்கடல்) யானது சூழ்ந்திருக்கின்றது. (24) ஓ! பிராம்மணோத்தமர்களே! அக்கடலைச் சூழ்ந்திருக்கும் பூமியானது குசத்தீவமெனப்படும். அது நா

ன்கிலக்ஷம் யோஜனை விஸ்தீர்ணமுள்ளது. (25) இத்தீவத்தில் பிரிய விருதராஜன் புத்திரனான வபுஷ்மா (நல்ல மேனியைக்கொண்டவன்) னென்றவ வரசாண்டுவந்தான். பிறகு சகல சாத்திரப்பொருட்களையும் கற்றறிந்த அவ்வரச னேழு பிள்ளைகளைப்பெற்று அவர்களுக் கித்தீவத்தைக் கிரமப்படி யேழு பாகங்களாகப் பகிர்ந்துகொடுத்தான். (26½) அங்குஜோனை,ருபியை, மதி, தும்ரை, நேத்திரை, பாவவிமோசனை,(27) விருத்தி ஆகிய மகா பரிசுத்தமும் சிரேஷ்டமும் பொருந்திய வேழாறுகளும், உன்னதம், குமுதம், குமாரம், மேகம், சங்ககம், (28) மஹிமை, துரோணகம் ஆகிய வேழு மலைகளுள்ளன. கேளீர்! தரணிதேவர்களே! இத்தீவமதை நான்கிலக்ஷயோஜனை விஸ்தீர்ணமுடைய ததிசமுத்திரம் (தயிர்க்கடல்) சூழ்ந்திருக்கின்றது. (29) இதைச் சுற்றிலுமுள்ளது கிரௌஞ்சத்தீவமெனப்படும்; அத்தீவத்திற்குப் பிரியவிருதன் மைந்தனான ஜியோதிஷ்மானென்பவ னரசன்; பிறகவனுக் கேழுபிள்ளைகள் பிறந்தார்கள். (30) பின்பவன் நதிகளோடும், மலைகளோடும் கூடிய வத்தீவத்தை யவர்களுக் கேழுபங்காய்ப் பாகித்துக்கொடுத்தான். அத்தீவத்திலோ குசேசயம், ஹரி, புஷ்பாவர்த்தம், வித்துருமம்,(31) ஹிமாத்திரி, துதிமான், மந்தரம் ஆகிய வேழுமலைகளும், சிவை, விதூதபாபை, ஹிமை, பூர்ணை, புனீதகை, (32) கிலபாபை, தம்பை ஆகிய வேழு சிறந்த நதிகளுமுள்ளன. ஓ! முனிவர்களே! யெட்டிலக்ஷயோஜனை விஸ்தீர்ணமுள்ள வித்தீவத்தை (33) யவ்வளவு விஸ்தீர்ணமேகொண்ட கிருதாப்தி (நெய்க்கடல்) சூழ்ந்திருக்கின்றது. இக்கடலைச் சுற்றிலும் பதினாறிலக்ஷம் யோஜனைகொண்ட சால்மலீத் தீவமிருக்கின்றது.(34) அதற்கரசனாகிய பிரியவிருதன்சுதனான த்யுதியென்பவ னேழுமக்களையடையலாகி யவர்களுக் கத்தீவத்தைக் கிரமப்படி யேழு பங்குகளாகப் பிரித்துக்கொடுத்தான். (35) இதிலோவென்றால் திமிரம், சுரபி, வாமனம், விருத்தகம், ஸம்மியக்தடம், துந்துபி, புண்டரீகம் ஆகிய இவ்வேழு மலைகளும், (36) குமுதை, கபரீ, தாத்திரி, யாமை, பௌண்டரீகை, மனோபமை, ஸந்தியை ஆகிய மகா பரிசுத்தமான வேழுநதிகளு மிருக்கின்றன. (37) இத்தீவத்தைப் பதினாறிலக்ஷம் யோஜனைகொண்ட இக்ஷுவப்தி (கருப்பஞ்சாற்றுக்கடல்) சூழ்ந்திருக்கின்றது. ஓ! முனிவர்களே! இக்கடலுக்குச் சுற்றிலுமுள்ள கோமேதகத் தீவமானது முப்பத்திரண்டிலக்ஷம் யோஜனைகொண்டது.(38) இதனைப் பிரியவிரதன் மைந்தனான ஹவ்வியனென்பவன் நீதிமுறை வழுவாம லரசாண்டுவந்தான். பிறக

வனு மேழு பிள்ளைகளைப் பெற்றவர்களுக் கத்தீவத்தை யேழு பாகங்களாகப் பகிர்ந்து கொடுத்தான். இதனிலு மேழு மலைகளுள்ளன. (39)

நாற்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## தக்ஷகாண்டம் ௪௧—வது அத்தியாயத்தினர்த்தம்.

அக் கோமேதகத் தீவத்தில் ஸிம்மகம், கிரௌஞ்சம், சலகம், அஸ்தகிரி, உதயகிரி, ஆம்பிகேயம், மகாகிரியான ரம்மியகம் ஆகிய வேழுமலைகளும்,(1) அயாதி, தேனுகை, புண்ணியை, கபர்த்தீ, சுகுமாரை, குமாரப்பிரளயை,இக்ஷுரஸை ஆகியவேழுசிறந்த நதிகளுமுள்ளன. (2) இத்தீவத்திற்குச் சுற்றிலும் முப்பத்திரண்டிலக்ஷ யோஜனைகொண்ட மத்துவப்தி (கள்கடல்) யிருக்கின்றது. ஓ! பிராம்மணோத்தமர்களே! இதற்குச் சுற்றிலுமுள்ளது புஷ்கரத்தீவம். (3) இது அறுபத்திநான்கிலக்ஷம் யோஜனை விஸ்தீர்ணமுள்ளது. பிரியவிரதன் புத்திரனைச் சியவனனென்பவ னதற்கரசன்.(4) இவனுக்கோவென்றால் மகாபலசாலிகளான விரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். பிரம்மஞ்ஞானியான அவ்வரச னத்தீவத்தை யிரண்டுபாகமாய்ப் பிரித் தவர்களுக்கீந்தனன். (5) இத்தீவத்திலோ விருஷபம், மகேந்திரம், வருணம், நீலபருவதம், வராகம், இந்திரம், மாகேந்திரம் ஆகிய வேழு சிறந்த மலைகளும், (6) குடிலை, சிவை, உமை, தரணீ, சுமனை, சிம்மிகை, குமாரி ஆகிய மகா பரிசுத்தமுள்ள வேழுநதிகளுமுள்ளன. (7) மேலு மித்தீவத்தி லைம்பதிலக்ஷம் யோஜனையளவுகொண்ட மற்றோர் மலையுண்டு; இத்தீவத்தில்தான் பெயர்போனவர்களான விந்திரன் முதலிய திக்பாலர்கள் வசிக்கின்றார்கள். (8) இத்தீவமான தறுபத்திநான்கிலக்ஷம் யோஜனை கொண்ட சுத்தநீர்க்கடலால் சூழப்பட்டிருக்கின்றது. (9) இவ்வேழு தீவங்களினு மேழு வேறுமலைகள் சமுத்திரங்களுக்குச் சுற்றிலும் பிராகாரம் (மதிள்) போல் வளைந்துகொண்டு விளங்கலாகின்றன. (10) மகாமேருவின்நடுமெய்யத்திலிருந்துமேற்கூறிய வேழுதீவங்களுமேழு கடல்களுமாக விரண்டுகோடியே யைம்பத்துமூன்றிலக்ஷத்தைம்பதி

ணுயிரம் யோஜனையளவுகொண்டதென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. (11½) ஓ! முனிவர்களே! இவைகளுக்கப்பால் பத்துகோடியோஜனை விஸ்தீர்ணமுள்ள தங்கமயமான பூமியிருக்கின்றது. (12) அதைச் சுற்றிலும் சக்கிரவாளகிரி யிருக்கின்றது. மிகவும் பிரசித்திகொண்ட வம்மலையானது பதிஞுயிரம் யோஜனைக் கனதியுள்ளது. (13) அதற்குமப்பால் நூற்றிருபத்தேழிலக்ஷம் யோஜனையுள்ள மகாசமுத்திரமானது ஒட்டியாணம் பூட்டியதுபோல் விளங்கியிருக்கின்றது. (14) அதன் பிறகு முப்பத்தைந்துகோடியே பத்தொன்பதிலக்ஷத்து நாற்பதிஞுயிரம் யோஜனைகொண்ட வெரு மிருளுலகே! (15) முற்கூறிய அண்டச்சுவற்றின் கனதி கோடியோஜனை யென்பது தெரிந்த விஷயமே! கேளீர்! முனிவர்களே! மகாமேருவின் நடுமெய்யத்திலிருந்து அதன் தென்புறமா யண்டச்சுவறுவரையிலுள்ள விஸ்தீர்ண மைம்பதுகோடியோஜனையாகின்றது. அக்கிரியின் மற்றப் பாரிசங்களிலு மதே அளவுள்ளதென் றறியத்தக்கது. (16½) மேலும் மேருவுக்கு வடபாரிசமாயண்டச்சுவற்றிற்கருகினி லிலக்ஷயோஜனைவிலாஸம்பொருந்திய மற்ருேர் மகா கைலாஸபருவதமும் விளங்குகின்றது. (17½) அங்கு ஸ்ரீபரமேசுவரன் ஸகல கணங்களாலு மடியார்களாலும் துதிசெய்யப்பெற்ற பாதாரவிந்தத்தைக் கொண்டவரும், என்றும் சந்தோஷமுற்ற திருமனதைக் கொண்டவருமாகி ஸ்ரீ மகாதேவியோடுகூட விளங்கலாகின்ருர். (18½) தவிரவு மிவ் வண்டத்தின் வெளிப்புறத்தி லிதனைக் காப்பவர்களான வுருத்திரர்க ளிருக்கின்ருர்கள். (19) கேளீர்! தாணிதேவர்களே! இவ்வண்டத்திற் குறைக்கப்பட்ட இலக்ஷணங்களேயும், அளவுகளையும் கொண்டதாகவேஅனேக அண்டங்களுள்ளன. (20)

நாற்பத்தோராவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

தக்ஷகாண்டம்



உ

சிவமயம்.

# உபதேச காண்டம்.

## உபதேசகாண்டம் முதலாவது அத்தியாயத்தி னர்த்தம்.

வெள்ளைவத்திர முடுத்தியவரும், சகல லோகங்களிலும் வியாபிக்கலுற்றவரும், சந்திரனையொத்த நிறத்தையுடையவரும், நான்கு புயங்களை யுடையவருமான வியானைமுகக் கடவுளை, யான் தொடங்கும் காரியத்தில் தடைநேரிடாம லிருப்பதற்காகத் தியானம்செய்கின்றேன். சகலப் பிரபஞ்சங்களாலும் வந்தனம்செய்யப் பெறுனின்றவரும், நிர்மலமான ஞானத்தை யருளலுற்றவரும், பார்வதிபுத்திரனுமான ஸ்ரீ விக்கினேசுவரனை யிவ் வுபதேசகாண்டம் முடிவுபெறுவதற்காக வந்தனம் செய்கின்றேன்.

சிருஷ்டி, ஸ்திதி, சம்மகாரம்முதலிய தொழில்களுக்குக் காரணபூதர்களாகியப் பிரம்ம விஷ்ணு ருத்திரர்களான மும்மூர்த்திகளுக்கும் மூலகாரணப்பொருளான பரப்பிரம்ம சுவரூபியாகிய ஸ்ரீ ஐயாறப்பக்கடவுளை நமஸ்காரம் செய்கின்றேன்.

சௌனகாதிமுனிவர்கள் சூதரைக் கேட்கின்றதாவது:— "ஓ! சூதமுனிவரே! மேருவின் வடபாரிசமா யண்டபித்திக்குச் சமீபத்தில் மகாகைலாஸபருவத மிருக்கின்றதென் றும்மா லுரைக்கப்பட்டதல்லவா? அதனுருவம், பிரமாணம், உயரம் இவைகளையெல்லாம் விவரமாயெடுத்துரைத்தல் வேண்டு" மென, (1-2) சூதர் கூறுகின்றார்:— ஓ! சகலர்களானப் பிராம்மணர்களே! இரகஸியத்துக்கெல்லாம் பரமரகஸியமான அவ் விவரங்களை யெடுத்துக் கூறுகின்றேன்; நீங்கள் ஜாக்கிரதையாய்க் கேளுங்கள்! மகாகைலாஸ பருவதமானது மேருவின் வடபாகத்தி லிருக்கின்றது. (3) அது கணங்களோடு மடியார்களோடும்கூடிய சந்திரசேகரரான ஸ்ரீ ஸாம்பமூர்த்திக்கு வாஸஸ்தானம். ஓ! பிராம்மணோத்தமர்களே! அது இருபதுகோடிநீளமு (4) மத னிருமடங்கு

யாமுமுள்ளதென் றறியத்தக்கது. அதன் மத்தியில் மகாச்சிரேஷ்டமும், நவரத்தினமயமுமான வேரர் சிகரமிருக்கின்றது. (5) அங்குள்ள ஸ்ரீ மகேசுவரனுடைய திருமாளிகையானது பற்பல இரத்தினங்களால் விநோதமுள்ளதாகிப் பிராகாரங்கள், கோபுரங்கள், அட்டாலங்கள், கொடுங்கைகள் இவைகளோடு விளங்குகின்றன. (6) அங்குள்ள சிறந்த வோ ரிரத்தினஸிம்மாஸனத்தில் சம்புவாகிய ஸ்ரீ மகாஸதாசிவப்பெருமான் விளங்கலாகின்றார். அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற வுல்லாஸமான இருபத்தைந்து திருமுகங்களால் விளங்கியவரும், (7) பற்பல வாயுதங்களைத் தரிக்கலுற்றவரும், பிரகாசியாநின்ற வைம்பது திருக்கைகளா லலங்கரிக்கப்பெற்றவரும், அலர்ந்த செந்தாமரைமலர்நுனியின் சோபையை யபகரிக்கலுற்ற விரு திருவடிகளால் விளங்கியவரும், (8) விசித்திரங்களான விரத்தினங்களா லிழைக்கப்பெற்ற பல வாபரணங்களா லலங்கரிக்கப்பெற்றவரும், அனேககோடி சூரியப்பிரகாசம் பொருந்தியவரும், பரமாநந்த மங்களமூர்த்தியும், (9) மாயையா லணுகப்படாத திருமேனியைக் கொண்டவரும், இலக்ஷுமீவிலாஸம்பொருந்தியவரும், இலக்ஷியமிலக்ஷண மற்றவரும், வாக்குக்கும் மனதுக்கு மெட்டாதவருமான (10) அப்பேர்க்கொத்த ஸ்ரீ மகாஸதாசிவமூர்த்தியானவ ரந்த மகாகைலாஸ பருவதத்தி லைந்து சக்திகள், அனேக ருத்திரர்கள், (11) ஸித்தர்கள், ஸகல இருடீசுவரர்கள் இவர்களாற் சுற்றிலும் சேவிக்கப்பெற்றவரும், ஸகல ஐசுவரியங்களோடும் கூடியவரும், சருவவியாபியும், ஆதியந்தமற்றவரும், (12) தங்கள்தங்க ளூழியங்களில் முயன்று நின்ற பரிவாரகணங்களாற் சேவிக்கப்பெற்றவருமாய் விளங்கலாகின்றார். கேளீர்! முனிவர்களே! ஓ! கோ! அவ்விரத்தின சிகரத்துக்குச் சுற்றிலும் சூரியகாந்தக் கல்மயமான மெத்த நேர்த்தியாகிய வேறு பதினொரு சிகரங்க ளிருக்கின்றன. (13½) அச் சிகரங்களில் ஸ்ரீ பரமேசுவரனுடைய பதினொரு மூர்த்திகளும் முறையே வசிக்கின்றார்கள். (14½) ஓ! தாணிதேவர்களே! இச் சிகரங்களுக்குச் சுற்றிலும் சந்திரகாந்தக் கல்மயமான (15) நூற்றோருசிகரங்க ளிருக்கின்றன. அவைகளி லெட்டு வித்தியேசுவர மூர்த்திகள், ஸ்ரீ மகேசுவரனுடைய மற்றெட்டு மூர்த்திகள், (16) ஒன்பது சக்திகள், சம்புவி னமிசங்களான மெத்த கோர்த்தியாகிய விருபத்தைந்து மூர்த்திகள், (17) ஐம்பத்தோரு

மாதுருகைகள் இவர்கள் வசிக்கின்றார்கள். ஓ! முனிவர்களே! இவை களைச் சுற்றி அக்கினிகாந்தக் கல்மயமான ஆயிரத்தெட்டு சிகரங்க ளிரு க்கின்றன. அவைகளில் ஸ்ரீமகேசுவரனுடைய நூற்றெட்டு தாண்ட வேச மூர்த்திகள், (19) ஈசுவரஸ்வரூபங்களைக் கொண்ட வேழுகோடி மகாமந்திரங்கள், இவர்களெல்லாம் ஸ்ரீமகாதேவனை ஹிருதயகமலத்தில் தியானம் பண்ணிக்கொண்டு வசிக்கின்றார்கள். (20) ஓ! வேதியர்க ளே! இவைகளுக்குச் சுற்றிலு மாயிரத்தோரு பெரியசிகரங்கள் படிக காந்தியைக் கொண்டவைகளாகி ஸ்ரீசிவாக்கினையால் விளங்கலாகின்ற ன. (21½) இவைகளிலோ விக்கினேசுவரர், சுப்பிரம்மணியர், மகா சா ஸ்தா, பைரவர் (22) ஆகிய ஸ்ரீதேவாதிதேவருடைய குமாரர்களும், நந்தி, பிருங்கி, மகாகாளர் முதலிய கணாதிபர்களும், (23) தருமத்தானு ருவம்கொள்ளப்பெற்ற விருஷபராஜன், சகல வேண்டுதல்களையும் கொ டுக்கலுற்ற காமதேனு, துர்க்கைமுதலிய மற்ற சக்திகள், சண்டேசுவர ர் முதலிய பக்தர்கள், (24) என்றும் சிவநாமஸங்கிர்த்தனம் செய்யலு ற்ற ஐந்தஸ்திரதேவமூர்த்திகள் இவர்களும் மெத்தச் சந்தோஷமாய் வ சிக்கின்றார்கள். கேளீர்! முனிவர்களே! இச் சிகரங்களுக்கும் சுற்றி லு மெப்போது மிரத்தினகாந்திகளைக் கொண்ட நேர்த்தியாகிய விலக்ஷ த்தோரு சிகரங்களுள்ளன. (25½) இவற்றுள் மேற்றிசையி லுள்ள வைகளி லனேகம் விஷ்ணுக்கள் தங்கள் பதவிகளி லாசையி லொழிவு பெற்றவர்களாகி மோக்ஷமடையவேண்டியதற்காகச் சோதிலிங்கஸ்வ ரூபியாகிய பரந்தத்துவமான ஸ்ரீபரமேசுவரனைப் பூஜித்துக்கொண் டிரு க்கிறார்கள். (27) வடபாகச் சிகரங்களி லனேகம் பிரம்மர்க ளிதேபிர காரமாய்ப் பதவியி லாசையி லொழிவுகொண்டு மோக்ஷம்பெறுவதற்கா க ஸ்ரீமகேசுவரனைத் தொழுகின்றார்கள். (28) கீழ்ப்பாகச் சிகரங்களி லிந்திரன்முதலிய லோகபாலர்க ளிருடபாரூடரான ஸ்ரீமகாதேவனைத் தியானம்பண்ணிக்கொண்டு வசிக்கலாகின்றார்கள். (29) பிறகு தென் பாரிசச் சிகரங்களிலோ கொடிய தவங்களைச் செய்யலுற்ற இருடீசுவர ர்கள் தத்துவஞானம்பெற விருப்பமுற்றவர்களாகித் தென்றிசையை நோக்கி வீற்றிருப்பவரு மென்று மழிவற்றவருமான ஸ்ரீதக்ஷிணாமூர்த் தியை யேகாக்கிர மனசுடன் தியானம் செய்கின்றார்கள். (30½) ஓ! மு னிவர்களே! இச் சிகரங்களுக்குச் சுற்றிலுமாகப் பொன்னொளிகொண் டவைகளான பத்திலக்ஷத்தோரு சிகரங்கள் விளங்கலாகின்றன. (31½)

ஓ! பிராம்மணோத்திரர்களே! இச் சிகரங்களில் இலக்ஷம் பூதசேனாதிப ர்கள், உருத்திரர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், (32½) கருடர்கள், கந்தர்வர்கள், காமதேனு, (33) சிந்தாமணி, கற்பகவிருக்ஷம், சங்கநிதி, பதுமநிதி, மெத்தச் சௌந்தரியம்பொருந்திய உருத்திராதாசிகள் இவர்க ளெல்லா மிருப்பதோடுகூட வின்னும் பற்பலவித ஆச்சரியங்களுமிருக் கின்றன. ஓ! வேதியர்களே! (34) மேலுமிங்கு ஸாமீப்பியமென்ற மோக்ஷபதவியை அடைந்திருப்பவர்களெல்லா மிருக்கலாகின்றார்கள். இவைகளுக்குச் சுற்றிலும் வேறு வெள்ளிமயமான சில சிகரங்களு ண்டு: அவைளின் சங்கியை கோடியே ஒன்று; (35½) தவிரவு மிச் சிக ரங்களில் ஸாக்ஷாத் ஸ்ரீ சிவபரமாத்துமாவினாலே சிருஷ்டிக்கப்பட்டலான பிரணவச் சுவரூபிகளாகிய விரண்டாயிரம் வெள்ளையானைகள், அதேவித மாய் வேதசுவரூபிகளாகிய, குதிரைகள், விமானங்கள், இரதங்கள் இவை களெல்லாம் சிவாக்கினையினால் வசிக்கலாகின்றன. (37) கேளீர்! சௌ னகாதிமுனிவர்களே! மேலு மச் சிகரங்களி லொன்று, இரண்டு மூன் றுகளான கால்களை யுடையவர்களும், அனேகம் கால்களை யுடையவர்க ளும், காலேயற்றவர்களும், சில ரொன்று, இரண்டு, மூன்று முதலிய முகங்களைக் கொண்டவர்களும், (38) முகமே யற்றவர்களும், சில ரொன்று, இரண்டு, மூன்றுகளான கைகளை யுடையவர்களும், கையே யற்றவர்களும், சில ரொன்று, இரண்டு, மூன்று முதலிய கண்களைக் கொண்டவர்களும், (39) அனேகம் கண்களைக் கொண்டவர்களும், கண் ணே யற்றவர்களும், சிலர் மானிட முகங்களைக் கொண்டவர்களும் சிலர் பக்ஷிகள், (40) யானை, குதிரை, சிங்கம், புலி, நரி, குரங்கு, காடி, சிவிங்கி இவைகளின் முகங்களைக் கொண்டவர்களுமான (41) பற்பல வுருவங்களைக் கொண்ட பூதகணங்களெல்லாம் ஸ்ரீ பரமேசுவரனால் கட் டளை யிடப்பட்டவர்களாகி யவராதாக்கினையின்படி வாசம்செய்கின்றார் கள். (42) தவிரவு மனேகமாயிரம் சிறந்த சிங்காரத்தோட்டங்கள், அனேகம் திவ்விய தீர்த்தங்கள், பற்பல வாணியங்கள், மற்றும் பற்பல வாச்சரியங்கள் இவைகளும், (43) சிற்சில முனிவர்களும் தேவர்க ளு மங்கு வசிக்கலாகின்றார்கள். சிவ்பூஜையின் மகிமையால் ஸாலோ க்கியமென்ற மோக்ஷபதவியை யடைந்திருக்கின்றவர்களெல்லாம் (44) மிகுந்த போகங்களை யனுபவித்துக்கொண்டு மெத்தச் சந்தோஷத்துட னங்கு வாசம் செய்கின்றார்கள். (44½) ஓ! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ மகா கைலாசத்திலுள்ள இவ்வெல்லாச் சிகரங்களும் சேர்ந்து கோடி யே பதினோரிலக்ஷத்துப் பதினோராயிரத்து நூற்றுப்பதினெட்டு சங்

கியை கொண்டதென்று நிச்சயிக்கப்படுகின்றது. ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய மகா கைலாஸபர்வதமான திவ்வாறு விளங்கலாகின்றது. (46)

முதலாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் உ—வது அத்தியாயத்தினர்த்தம்.

மேலும், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அம் மகா கைலாஸத்தி னடிவாரத்தில் கோடியோஜனை விஸ்தீர்ணமுள்ள பொன்மயமான பூமியான ததனைச் சுற்றிலு மிருக்கின்றது. (1) இங் கனேகமாயிர முருத்திரர்களும், தபோதனர்களான முனிவர்களும், அனேகம் பூதர்களும் வேண்டிய போகங்களை யனுபவித்துக்கொண்டு (2) மகா சிவ பக்தர்களாய் ஸ்ரீ பரமேசுவரனையே தியானிப்பதில் முயன்றிருக்கின்றார்கள். தவிரவு மப் பொன்னிலத்தைச் சுற்றிலு மோர் பொன் மதிள் விளங்குகின்றது. (3) அது கோடியோஜனை விஸ்தீர்ணமு மிருகோடி கோடி யோஜனை யுயரமுமுள்ளது. அதற் கெட்டு வாசற்படிகளுண்டு. (4) அவைகளின்பேரில் பற்பலவித இரத்தினமயங்களான கோடி உப்பரிகைகளைக் கொண்ட வெட்டுச் சிறந்த கோபுரங்கள் விளங்குகின்றன. (5) ஓ! வேதியர்களே! அதன் கீழ்த்திசையில் விளங்கும் கோபுரவாசலில் ஸ்ரீ விக்கினேசுவரர் தமது கணங்களோடுகூட வீற்றிருக்கின்றார். (6) அக்கினிதிக்கினிலுள்ள கோபுரவாசலில் மகா பராக்கிரமசாலியான வீரபத்திரர் தமது கணங்களோடுகூட விருக்கின்றார். (7) தென்றிசைக் கோபுரவாசலில் கணாதிபரான ஸ்ரீ நந்திகேசுவரன் கைதனிற் பொம்பைப் பிடித்துக்கொண்டு தமது கணங்களுட னிருக்கின்றார். (8) தென்மேற்குக் கோபுரவாசலில் ஸ்ரீ பரமசிவாக்கினையை நிறைவேற்றலுற்ற மகாபராக்கிரமசாலியான பைரவமூர்த்தியானவர் தமது கணங்களோ டிருக்கின்றார். (9) மேலக்கோபுரவாசலில் ஸ்ரீ பரமேசுவரர் புத்திரரான சுப்பிரம்மண்ணியப்பெருமான் ஸ்ரீ ஜகதம்பிகையைத் திருவுளமதில் நினைத்துக்கொண்டு தமது சைனியங்களுடன் விளங்கியிருக்கின்றார். (10) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வடமேற்குக் கோபுரவாசலில் மகா பலபராக்கிரமங்களைக்கொண்ட துர்கையம்மனவள் ஸ்ரீ சிவபிரானை மனதினில் தியானம் செய்துகொண்டு தமது கணங்க

ளோ டிருக்கின்றாள். (11) வடகோபுரவாசலில் மகா மகிமைபொருந்திய மகா காளர் ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை மனதினில் தியானம்செய்துகொண்டு தமது கணங்களுட னிருக்கின்றார். (12) கேளீர்! வேதியர்களே! வடகிழக்குக் கோபுரவாசலிலோ ஸ்ரீமகாதேவர் மைந்தரான மகா சாஸ்தாவானவர் மகேசுவர ராக்கினையைச் சிரசினால் வகித்துக்கொண் டெப்போதும் காத்துவருகின்றார். (13) மகா மகிமைபொருந்திய இவ்வெல்லோர்களு மிவ்வா றிருந்துகொண்டு ஸகல ஜகங்களையு மிரக்ஷித்து வருகின்றார்கள். ஸ்ரீ மகா கைலாஸபருவதமானது பற்பலவித விரத்தினமயங்களான வனேகம் சிறந்த சிகரங்களோடு விளங்குவதுடனிவ்வாறாகிய வோர் சிறந்த மதிளாலும் சூழப்பட்டிருக்கின்றது. (14½) பாவிகளான அரக்கர்களு மசுரர்களும், இன்னும் மற்றவர்களு மதனைப் பார்க்கமுடியாது. (15) கேளீர்! முனிவர்களே! இம்மகா கைலாஸமானது (மகாப்பிரளயத்துக்குட்பட்ட) அவாந்தரப் பிரளயகாலங்களி லண்டத்துக்குமேல் வளர்ந்துவிடலாகின்றது. ஸகலர்களுக்கு மனுக்கிரக மளிக்கலுற்ற ஸ்ரீ மகாதேவ னிம்மகா கைலாஸத்தி லிருந்துகொண்டு (16) ஸகலப் பிராணிகளுக்கு மனுக்கிரக மருளலாகின்றார். ஆனால் ஜம்பூத்தீவமதிலுள்ள கைலாஸத்திலோவென்றால் ஸ்ரீ பரமேசுவரனதனி லிருந்துகொண்டு தமதிச்சையின்படி யெப்போதும் நிக்கிரகம் அனுக்கிரகம் இவ் விரண்டையும் செய்தருளுகின்றார். (17) கேளீர்! தரணிதேவர்களே! இவ்விருகைலாஸங்களும் கேவலம் ஞாநஸ்வரூபமானவை. (18) இவ்விருகைலாஸங்களையும் நினைப்பவர்களின் பாவங்கள் நினைத்தமாத்திரத்தில் தொலையலாகின்றன. ஓ! முனிவர்களே! இவ்விரண்டும் சிவாக்கினையால் தாங்கப் பட்டிருக்கின்றனவே யின்றிப் பூமியிலில்லை. (19) புராணப்பொருட்களைத் தெளியவறிந்த பெரியோர்க ளிவ்விரண்டும் சோதிரூபமானவை யென்றறிகின்றார்கள். தவிரவும், கேளீர்! தரணிதேவர்களே! ஸகலப்பிரபஞ்சங்களுக்கும் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீ மகாஸதாசிவமூர்த்தியானவர் அநந்தர்களான வுருத்திரர்கள், விஷ்ணு முதலிய தேவர்கள், பிரமதகணங்கள், தவநிலையிலிருக்கலுற்ற மகாத்துமர்களான அடியார்கள் இவர்களாலெல்லாம் நாள்தோறும் பூஜிக்கப்பெற்றவரும், ஸகலவைசுவரியங்களோடும் கூடியவருமாகி யம் மகா கைலாஸபருவதத்தில் விளங்கியிருக்கின்றார். (21½) ஆனால் ஜம்பூத்தீவத்திலுள்ள கைலாஸத்திலோ 'ஸ்ரீகண்ட' (கழுத்தினில் விஷத்தையுடையவ) னென்ற மகாதேவர் தமதிச்சையின்படி ஸகல ஜீவராசிகளுக்கும் நிக்கிரகம், அனுக்கிரக மிவ்விரண்டையு மளித்துக்கொண்டங்கு விளங்கியிருக்

கின்றார். (23) மேலும் வாக்குக்கு மனதுக்கு மெட்டாத மகேசுவராரா ன ஸ்ரீ மகாதேவர் சர்வலோகரக்ஷகரா யவ் விரு மலைகளிலும் விளங்கியி ருப்பதா (24) லவரதாக்கினையால்தான் வாயு வீசுகின்றான்; சூரியன் பயத்துட னுதயமாகின்றான்; அக்கினி உயரக்கிளம்பி யெரிகின்றான்; இந்திரன் சொர்க்கத்தை யாளுகின்றான்; (25) பிருதிவி முதலிய வை ம்பூதங்களு மோர் நிபந்தனையி லிருக்கின்றன. கேளீர்! தரணிதேவர் களே! யாதாமொருவ ரிவ்வத்தியாயத்தைப் படிக்கின்றார்களோ, கவன மாய்க் கேட்கின்றார்களோ, (26) அல்லது சிவனடியார்களுக் குரைக்கி ன்றார்களோ அவருக்கு ஸ்ரீ ஜகதீச னருள்செய்கின்றார். அம்மானிட னாயுசு, ஆரோக்கியம், ஐசுவரியம் இவைகளை யடைகின்றான். (27) மெ த்த வுத்தமமான இவ்வத்தியாயத்தைத் திறமையும் பக்தியுமுடைய தக்க சீடருக்குக் காட்டத்தக்கதே யின்றி கண்டபேர் கேட்டபேர்களுக் கிதனைக் கொடுக்கத் தகாது, காட்டவும் தகாது. (28) ஓ! முனிவர்க ளே! வளர்த்தியுரைப்பதிற் பயனென்ன? இது இரகசியங்களுக்கெல் லாம் பரமரகஸியமே! உபமன்னியுமுனிவர் வியாக்கிரபாதமாமுனிவரிட மிருந் திதனைக் கேட்டதனால் (29) வேண்டிய போகாதிகளை யனுபவி த்துவிட்டு நிகரற்ற கைலாஸத்தையடைந்தார். மேலும் கிருஷ்ணபி ரானதனை யுபமன்னியு மாமுனிவரிடமிருந்து கேட்டதனால் கைலாஸ மடையலானார். (30) தவிரவும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! குந்தியின் சுதனான மகா புத்திசாலியாகிய அர்ஜுன னிதனை யக்கிருஷ் ணனிடமிருந்து கேட்டதினால் போர்முகத்தில் நேர்ந்த சத்துருக்களை யதம்பண்ணிவிட்டுப் பிறகு கைலாஸத்தையடைந்தான். (31)

இரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩—வது அத்தியாயத்தி னர்த்தம்.

முனிவர்கள் சூதனைக் கேட்கின்றதாவது:—"ஓ! மகா புத்திசா லியான சூதமுனிவரே! மகா கொடியோனாகிய சூரபத்தும னிரு தம்பி களோடுகூட முந்தி யுண்டாயிருந்தானல்லவா! மகா பலசாலிகளான அவனது தம்பிகளாகிய சிங்கமுகன் தாரக னிவ் விருவர்களு மெங்கு போனார்களென்று தெரிகிலோம்; ($1\frac{1}{2}$) மேலு மச்சூரனோர் மயிலுரு

வத்தையும் கோழியுருவத்தையு மெடுத்துக்கொண்டு வெளிப்பட்ட (2)
தாக வும்மாலுரைக்கப்பட்டதே! அதென்ன காரணத்தினாலென்பதை
யெடுத்துரைத்தல்வேண்டு" மென, சூதர் சொல்லுகின்றார்:—ஓ! ஸகல
ர்களான முனிவர்களே! வெகு ஜாக்கிரதையாய்க் கேளீர்கள்; (3) மு
ந்தி யோர் கற்பத்தில் ஸ்ரீ சுப்பிரம்மணியஸ்வாமியானவர் மெத்த நேர்த்
தியான பூஷணங்களையுடைய மயிலின்மீதேறிப் புறப்பட்டு உல்லாஸ
மாய் ஜகங்களி லுலாத்துமளவில் (4) பருவதராஜனான நிகரற்ற கை
லைக்குச் சென்று வாகனராஜனான தமது மயிலைவிட் டிறங்கி (5) யம்
மலையி னடிவாரத்தி லம் மயிலையும், துவஜவுருவமாயிருந்த கோழியையு
ம் நிறுத்திவிட்டுத் தம் பெற்றோரிடம் சென்றார். (6) அப்போ தவ்
விரண்டு மம் மலையின் ஸ்திதியைப் பார்த்துக்கொண்டே யிருந்தன. பி
றகுப் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல்லாம் ஸ்ரீ பரமேசு
வரனைச் சேவிப்பதற்காக (7) வப்போ தங்குவந் தவரவர்கள் வாகன
ங்களை யங்கு நிறுத்திவிட் டெல்லோர்களும் பரமேசுவரரிடம் சென்றா
ர்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போ தவர்களுடையவா
கனங்களெல்லா மங்குள்ள சிறந்த மயிலையும் கோழியையும் வந்தனிக்
காம லுள்ளமதிற் கர்வம்கொண்டவைகளாகி நிற்கலாயின. (9) ஓ! மு
னிவர்களே! அப்போ தங்கிருந்த நான்குபூதங்க ளவைகளின் கர்வத்
தை யறிந் ததனை மகா பராக்கிரமமுடைய வம் மயிலுக்கும் கோழிக்கு
மறிவித்துப்போட்டுப் (10) பிற கப் பூதங்க ளொன்றுசேர்ந்து மகா
கோபம்கொண்டவைகளாகி ஓ! கோ! அவ்வாகனங்களையெல்லாம் சக
ல லோகங்களிலும் துறத்திக்கொண்டு (11) விஷ்ணு, பிரம்மன், இந்
திரன் இவர்களுடைய லோகங்களையெல்லா மிடித் ததம்பண்ணி மெத்
த வாங்காரத்தோ டவ் வெல்லா வாகனங்களையும், பின்னு மங்கங்குள்
ள தேவர்களையும், வழியில் நேர்ந்த மற்றவர்களையும் கொன்றுபோட்ட
ன. ($12\frac{1}{2}$) கேளீர்! தரணிதேவர்களே! அப்போ தெங்கும் மகா பய
ங்கரமான ஹாஹாகார முண்டாயிற்று. (13) இவ்வாறாக வந் நான்குபூ
தங்களு மந்தந்த லோகங்களையெல்லா மோர் நொடிநேரத்திற்குள் கொ
ளுத்தி நாசம்பண்ணிவிட்டுப் பிறகு துரிதமா யொன்றுகூடி முன்போ
லங்கு வந்திருந்தன. (14) பிற்பாடு கந்தபிரானும் ஸ்ரீ சம்புவால் வி
டைகொடுக்கப்பட்டவராகித் திரும்பி வெளியில் வந்து அளவற்ற கோ
டிபூதங்களும் மயில் கோழிகளோடு உல்லாசமா யிருந்துகொண்டிருக்
கு மவ் விடத்திற்கு விஜயமாயினர். ($15\frac{1}{2}$) பின்பு விஷ்ணுமுதலியதே
வர்களும் ஸ்ரீ பரமேசுவரனை வந்தனித்துவிட்டுத் துரிதமாய் (16) வி

டைகொண்டனர்களாகி யவரவர் வாகனத்தின்மீ தேறிக்கொள்ள விருப் பம்கொண்டு திரும்பிவருகையி லங்கு தங்களது வாகனங்க ளில்லாதுக ண் டாச்சரியப்படும்போ (17) தங்குள்ள அவரவர்களின் லோகத்தா ர்களால் பூதங்களுடைய நடவடிக்கைகளையும், வாகனங்கள் மாண்டதை யும், அவரவர் லோகமெல்லா மிடித்து நாசம்பண்ணப்பட்டதையு மறிந் து மிகுந்த துக்கமடைந்தார்கள். (18½) பிறகவர்க ளெல்லா முடனே ஸ்ரீவடிவேலனண்டைக்கு வந்து வந்தனித்து விநயத்தினால் வணக்கமு ற்றவர்களாகி (19) யவரிடத்திற் சங்கதிகளை யாதியோடந்தமாய்த் தெளிய அறிவித்துக்கொண்டார்கள். அப்போது "ஓ! தேவர்களே! யாவ ரிப்போர்க்கொத்த கொடிய காரியத்தைச் செய்தது? அதனை நீங்க ள் நம தாக்கினையின்படி நம்முன்பாக யோஜனையின்றிச் சொல்லுங்க" (20) ளென் றம் முருகேசனால் வினவப்பட்டலாகையி லவ் விஷ்ணுமு தலிய தேவர்கள் (21) "ஓ! தேவரக்ஷகரான பிரபுவே! சூரன், பத் துமன், சிங்கமுகன், தாரகன்ஆகிய நான்குபூதங்களும் தேவரீரது மயி ல் கோழிகளோடுகூட மிகுந்த கோபம்கொண்டவைகளாகி (22½) யெ ங்களது வாகனங்களையெல்லா மதம்பண்ணிப் பிறகு முன்போல் தேவ ரீர் வாகனமாகிய மயில், கோழி யிவைகளி னருகிலுள்ள பூதங்களோடு சேர்ந்திருக்கின்றன. ஓ! கருணைக்கடலான தேவஸேனேசா! தேவரீ ரிரக்ஷிக்கவேண்டு மிரக்ஷிக்கவேண்டு" (24) மென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீஷண்முக ரப் பூதங்களைக் கூப்பிட்டு "ஓ! பூதங்களே! நீங்க ளிக் கெடுதிசெய்தபடியா லிப்போது நம தாக் கினையின்படி யசுரகுலத்திற் பிறப்படையக் கடவீர்க" ளென் றந் நான் கு பூதங்களையும் சபிக்க, (26) பிற கப் பூதங்கள் மகா பயங்கொண்ட வைகளாகி யென்று மழிவற்றவரான வக் கந்தபிரானை வந்தனித்து "ஓ! தேவதேவேசா! எங்களுக் கிப் பாவம் தொலைவதற்காக (27) ஓ! க ருணைக்கடலே! அதற்குத் தக்க திருவாக்கினையை அருளி யிரக்ஷிக்கவே ண்டும். ஓ! பிரபுவே! எங்களுக் கசுரஜன்மம் வந்துவிட்டால் யாங்க ள் தேவரீரை நினைப்பதற் கிடமிராதே" யென் றவைக ளுரைத்துவிட் டு அழிவற்றவரு மடியார்க்கு நேசனுமான வப் பகவானைத் தண்டம்ப ண்ணின. (29) பிற கத் தேவேசன் மிகுந்த தயவினா லப் பூதங்களை நோக்கித் திருவாக்கருளியதாவது:— "ஓ! பூதங்களே! நல்லது! இப் போ துங்களுக்கு நமதாக்கினையின்படி யசுரப்பிரப் புண்டாகிவிடட்டும். (30) நாம் கருணைவசத்தினா லந்த ஜன்மத்தி லுங்களை வதைசெய்துபி றகுங்களுக்கு முந்திய வுருவத்தைச் சந்தேகமின்றி யருள்செய்கின்

ரே" (31) மென் றத் தேவேசரா லுரைக்கப்பட்டமாத்திரத்தி லப்போது சூரன், பத்துமன் என்ற விருபூதங்களும் ஸ்வாமியை நமஸ்காரம்பண்ணிவிட்டு (32) "ஓ! கருணைக்கடலான தேவதேவேசா! மிகுந்த சந்தோஷத்தோ டெங்க ளிருவரையும் காப்பாற்றவேண்டும். ஓ! பிரபுவே! யாங்களிருவரும் மயில் கோழி யுருவங்களோடு மிகுந்த கொடியதான தவத்தைச் செய்தோமே! (33) ஓ! பகவானே! யாங்களெப்போதுதான் தேவரீர் கருணைக்குப் பாத்திரர்களாவோமோ! இப்படியிருக்கையில் பிரஸன்னரான தேவரீரா லெங்களுக்கு மகா பயங்கரமான வசுரஜன்ம (34) மருளப்படலாயிற்றே! ஓ! ஸகல லோகாதிபரோ! அதினின் றெங்களுக் கெப்போது விடுதலையுண்டாகு" மென, இவ்வாறச் சூரன், பத்தும னிவர்களுடைய வசனத்தைக் கேட்டருளி யென்று மழிவற்ற ஸ்ரீ குகபிரான் புன்னகைப்புற்ற திருமுகத்தைக் கொண்டவராகித் தெளியவெடுத்துக் கூறியதாவது:— ($35\frac{1}{2}$) "கேளீர்! சூரபத்துமர்களே! நீங்க ளிருவரும் மகா கொடியோனும், தேவர்களுக் கிம்மனுமான சூரபத்துமனென் றுலகினிற் பெயர்போகலாகு மொரோ அசுரனு யுண்டாகலாவீர்கள். ($36\frac{1}{2}$) பிற கச் சன்மத்தி லசுரத்தன்மையிலிருந்து விடுபட்டவுட (37) னுங்களுக்கு நம தாக்கினையால் மயில் கோழிஇவைகளுடைய உருவம் கிடைக்கலாகு" மென்று திருவாக்கருளி யப் பூதங்களை யனுப்பிவிட்டுப் பிற கத் தேவேசன் (38) பயத்தினால் தமது பாரிசத்திற் பதுங்கியிருக்கலான வெல்லாத் தேவர்களையும் திருக்கண்ணுற்று "ஓ! தேவர்களே! இவைகளால் கொல்லப்படலான சேனைகளும் வாகனங்களு (39) மிப்போது நம தாக்கினையின்படி முன் போலாகிவிடக்கடவன" வென் றவர்களுக் கருள்செய தவர்களைத் தங்கள்தங்கள் பட்டணத்துக் கனுப்பிவிட்டுத் (40) தாமும் மெத்த நேர்த்தியும் பற்பல பூஷணங்களா லலங்கரிக்கப்பட் டிருப்பதுமான மயிலின்மீ தேறிக்கொண்டு கேளீர்! தாணிதேவர்களே! அத் தேவேச னேர் கணநேரத்துக்குள் தமது நகரமடைந்தனர். (41) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிற கப்போது அந்நான்குபூதங்களும் மகாத்துமாகிய காசிபமாமுனிவருக்கு மூன்று பிள்ளைகளாகப் பிறக்கலானார்கள். (42) பிற்பாடு தாரகனும் சிங்கமுகனும் ஸ்ரீ வடிவேலனாற் கொல்லப்பட்டவுடன் முன்போல் பூதர்களி னுருவம்கொண்டவர்களாகிக் கைலாஸமடைந்தார்கள். கேளீர்! வேதியர்களே! (43) சூரபத்துமனோவென்று லத் தேவரா லதம்செய்யப்பட்டமாத்திரத்தில் சடிதியில் சிரேஷ்டமான மயில், கோழி இவைகளி னுருவத்தை யெடுத்துக்கொண் (44)

டப்போ தத் தேவேசனுக்கு மிருந்த சந்தோஷத்தைப் பண்ணிவைக்க
லானான். ஓ! சௌனகாதிமுனிவர்களே! சூரன் முதலியவர்களின்
பிறப்புவிஷயமின்னதென்பதை யுங்களுக்குத் தெளிய வெடுத்துரை
த்தாயிற்று. இன்னு முங்களுக்கு மற்றப்படி என்ன கேட்கவேண்டி
யதோ அதனைச் சொல்லுகிறேன். (45)

மூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ச—வது அத்தியாயத்தி னர்த்தம்.

முனிவர்கள் சூதரை நோக்கிக் கேட்கின்றதாவது:—"ஓ! தவ
த்தையே தனமாய்க்கொண்ட சூதமுனிவரே! அஜாமுகி யென்று பெ
யர்போன சூரபத்துமனது தங்கையும், மாயை யென்ற அவன் தாயும்
பிறகெங்கு போனார்கள்? அவ் விருவர்களுடைய விருத்தாந்தத்தையு
மெங்களுக் கெடுத்துரைத்தல்வேண்டு" மென, (1½) சூதர் சொல்லு
கின்றார்:—கேளீர்! முனிவர்களே! தாயாகிய மாயையென்பவ ளுயுத்த
காலத்தில் சூரனிடம்வந் (2) தவனுக்குச் சில வுபாயங்களைச் சொல்
லிவிட்டுப் பயங்கொண்டவளாகி மந்தரமலைக்குச் சென்றவுட னஜாமுகி
யிடம் சென்று "ஓ! பெண்ணரசே! சூரன் முதலியவர்க ளிறந்துபோ
னவுடன் (3) நீ மலைகளிற் சிறந்த ஸ்ரீ பருவதத்திற்குச் சீக்கிரமாய்
வந்துவி" டென்று தனது பெண்ணாகிய வஜாமுகிக் குரைத்துச்சென்று
விட்டாள். (4) பிறகு சிலகாலம் சென்றதன்மேல் சூரபத்துமன் முத
லிய வசுரர்களெல்லா மிறக்கலாகி யசுரேந்திரனு மிரணியனு மோடிப்
போனவுட (5) னப்போ தஜாமுகி ஸ்ரீ பருவதத்திற்கு வந்து தன் தா
யாகிய மாயையைக்கண்டு கட்டிக்கொண்டு பலவாறாய்ப் புலம்பலாகை
யில் (6) மாயை தன் பெண்ணுக்கறிவித்ததாவது:— "ஓ! பெண்ணே!
நீ துக்கப்படாதே! உனது சகோதரனான சூரபத்துமன் ஸ்ரீ சுப்பிரம்ம
ணியருக்கு வாகனமாயும் துவஜமாயு மிருப்பதற்காகவே நிகரற்ற மயி
லுருவத்தையும் கோழியுருவத்தையும் கொண்டவனாகிப் பிரம்மவிஷ்ணு
க்களால் வந்தனிக்கப்படலுற்ற பதவியை யடைந்திருக்கிறான். (7-8)
மேலும் சிங்கமுகனும் தாரகனுமோ பூதவுருவத்தோடு மிகுந்த ஐசுவரி
யமுடையவர்களாகிக் கைலாஸகிரியில் சந்தோஷமாய் விளங்கலாகின்

ளூர்க" (9) ளென, இவ்வாறு மாயையா லுரைக்கப்பட்டபோது மகள் வினவியதாவது:— "ஓ! அம்மா! இவர்கள் மகா பாதகர்களாயிற்றே! இவர்களுக் கிப்பேர்க்கொத்த நல்ல கதி யெவ்வாறு கிடைக்கலாயிற்றெ ன்பதை (10) வினவிய வெந்தனுக் கிப்போ துள்ளபடி யாதரவோ டெடுத்துரைத்தல்வேண்டு" மென, மாயை கூறுகின்றாள்:—"கேளாய்! மகளே! முந்தி யோர் கற்பத்தில் சாகத்தீவத்தில் மிகுந்த தருமாத்தும னும், ஸத்தியவாக்குடையவனும், பொறுமையற்றவனுமானப் 'பிரபாக ர' னென்றோ ரிராஜச்சிரேஷ்ட னிருந்தான். ($11\frac{1}{2}$) அவ்வரசன் மிகுந்த சௌந்தரியம் பொருந்திய வோர் மனையாளைக் கலியாணம் பண்ணிக் கொண் (12) டவளிடமா யோரிரட்டைப் பிள்ளைகளைப்பெற்றான். மேலு மவனுக்கு வெவ்வேறாய் மற்றிரண்டு பிள்ளைகள் பிறந்து ஆக நான்கு பிள்ளைகளுண்டானார்கள். (13) பிறகவ் வரச னப்பிள்ளைகளு க்கு முறையே தன் தந்தை தாய்களின் தந்தை சகோதரர்களுடைய மிகவும் பிரஸித்திகொண்டவைகளான பெயர்களையிட்டான். (14) முந் திப் பிறந்த இரட்டைப் பிள்ளைகள் சூரனென்றும் பத்துமனென்றும் பார்தனில் வழங்கலானார்கள். பிந்திய மற்றிரு பிள்ளைகளும் சிங்கனெ ன்றும் தாரகனென்றும் பெயரடைந்தார்கள். (15) பிற்பா டப்பிரபா கராஜ னிராஜியத்தில் பிள்ளைகளை யேற்படுத்திவிட்டுத் தவஞ்செய்வத ற்காகத் தன் மனையாளோடுகூட வோர் சிறந்த தவவனத்திற்குச் செ ன்றுவிட்டான். (16) அதன்மேற் சூரன் முதலிய பிள்ளைக ளரசாக்ஷி யைச் சோம்பலின்றி நீதியாய்ச் செலுத்திவந்தார்கள். அந்தகாலத்தில் ஸ்ரீ அகஸ்தியமாமுனிவர் சூரன் பத்துமன் இவ்விருவரிடத்தும் வந்து (17) சகல பாவங்களையும் தொலைக்கலுற்ற ஸ்ரீ கந்தபிரானது மகிமை யை யெடுத்துரைத்தனர். இதேமாதிரியாகச் சிங்கன், தாரகன் இவர் களிடத்திற்குத் தவங்களுக்கு நிலையாகிய திரிணபிந்துமுனிவர், (18) யோகிகளில் தலைவரான விருஷபயோகிமுனிவர் ஆகிய ஸகலலோகங்க ளுக்கு முபகாரம் செய்வோர்களும், தத்துவங்களை யறிந்தவர்களுமான இவ்விருவர்களும் வந்து முறையே மகா பரிசுத்தம்பொருந்தியவர்களா ன துர்க்கையம்மன், மகா சாஸ்தா இவர்களுடைய மகிமைகளையெல்லா ம் விருப்பத்திற் கிசைந்தபடி நன்றாயெடுத்துரைத்தனர்கள். அப்போ து கேளாய்! குழந்தாய்! (20) இந்த ராஜகுமாரர்களெல்லா மவ் விரு டீசுவரர்களுடைய பெருமைபொருந்திய திருவசனத்தைக்கேட்டவுட னேதோ முதிர்ந்த புண்ணியவசத்தினால் மெத்தப் பக்தியுடையோராகி விட்டார்கள். (21) சூரன், பத்தும னிவ்விருவருக்கும் ஸ்ரீ ஷண்முகரி டத்தும், சிங்கன், தாரகன் இவர்களுக்குத் துர்க்கையம்மன், மகா சாஸ்

த்ரா இவர்களிடத்தும் மிகுந்த பக்தியுண்டாகிவிட்டது.(22) சூரன் மயி லுருவம்கொண் டச்சுப்பிரம்மணியனைச் சுமப்பதற்கும், மகாபலவானுன பத்துமன் கோழியுருவம்கொண்டுத் துவஜமாயிருந்தப் பிரபுவைச் சந் தோஷிப்பதற்கு மிச்சைகொண்டார்கள். (23½) சிங்கன் தாரகனென் பவர்களு மதேபிரகாரமாய்ச் சிங்கம், இயானைகளி னுருவங்களைக் கொ ண்டவர்களாகித் துர்க்கையம்மன், மகாசாஸ்தா இவர்களுக்கு வாகனங் களா யிருத்தலை யிச்சைகொண்டார்கள். (24½) இவ்வரசர்க ளிவ்வி தமா யவரவருக்கு வாகனமாகும் தன்மையை வேண்டிக்கொண் (25) டப்பேர்க்கொத்த பதவிகளை யடைவதற்காக வெப்போதும் பக்தியு டையவர்களாகித் தங்கள் பிள்ளைகளிடத் திராஜியத்தை யொப்புவித்து ப்போட்டுத் தவம்புரிவதற்காகச் சென்று (26) நாற்பதினுயிரம் வரு டமளவு மதிகோரமான தவத்தைச் செய்தார்கள். அச்சமயத்தி லெல் லாத் தேவர்களும் கைலைகிரிக்குச் சென்று தங்கள் தங்கள் வாகனங்க ளை யம் மலையி னடிவாரத்தில் நிறுத்திவிட்டு ஸ்ரீ பரமேசுவரனைச் சேவி ப்பதற்காகச் சந்தோஷமா யவரண்டைக்குச் சென்றுர்கள். (27-28) அப்போது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய வெல்லாத் தேவர்களின் வாக னங்களும் ஸ்ரீ கந்தபரமாத்துமாவினது மயில், கோழி, துர்க்கையின் வாகனமான சிங்கம், மகா சாஸ்தாவின் வாகனமான வியானை யிவைகள ண்டைக்கு வந்து (29½) கேளாய்! குழந்தாய்! கருடன் முதலிய அவ் வாகனங்களெல்லா மவைகளை நோக்கி வசனமுரைத்ததாவது:—(30) "ஓ! மயில் முதலியவைகளே! பிரபாகரராஜன் புத்திரர்க ளுங்கள் பத விகளை யடைவதற்காகப் பஞ்சாக்கினி மத்தியி லிருந்துகொண் டதிகோ ரமான மிகுந்த தவத்தைச் செய்கின்றுர்க"(31) ளென, இவ்வா றவை களின் வசனத்தைக் கேட்டவுடன் மயில் முதலியவைக ளதிகோபம் கொண்டவைகளாகி 'ஓ! நமது பதவி யிவர்களுக் கெவ்வாறு கிடைக்க த்தகு' மென் (32) றத் தவத் தலத்துக்குச் சென் றங்கு மிகுந்த ஜுவாலைகளோ டெரிந்துகொண்டிருந்த வக்கினிகளை யணைத்து 'நீங்க ளெதற்காக வித் தவம் செய்கின்றீர்க' (33) ளென் றவ் வரசர்களை வினவ, உடனே அந் நான்கு பெயர்களும் மெய் நடுக்கம் கொண்டவர்க ளாகித் தங்களுடைய வேண்டுதலை யம் மயில் முதலியவைகளுக்குச் சொன்னுர்கள். (34) அப்போ தவைகள் "ஓ! ராஜர்களே! நீங்கள் மயில் முதலிய வெங்களது பதவிகளை யிச்சித்தபடியா லிப்போது துரி தத்தி லெங்கள் முகங்களைக்கொண்ட பூதங்களாகக்கடவீர்க"(35) ளெ ன் றிவ்வாறுகச் சபித்துவிட் டம் மயில் முதலியவைகள் துரிதமாய்த் தங்களிடம் சென்றுவிட்டன. அப்போ தவ் வேந்தர்களும் மிகுந்த

துக்கத்தோ டந்தந்த முகத்தை யடைந்தவர்களாகி யவர்களைப் பின் தொடர்ந்தே யவர்களிடத்திற்குச் சென் றம்மயில் முதலியவைகளைத் துதிக்க, (36½) அப்போது மயில் முதலியவைக ளப்பூதங்களைப்பார்த் (37) திறக்கம் கொண்டவைகளாகி வசனமுரைத்ததாவது:—'ஓ! பூத ங்களே! நீங்க ளிப்போ திங்குதானே வசியுங்கள்; ஸத்தியமாய்ச் சில காலம் சென்றதன்மே லுங்களது கோரிக்கை கைக்கூடு.'' (38) மென, கேளாய்! பெண்ணே! இவ்வா றவைகளது வசனத்தைக் கேட் டப் பூதங்கள் அண்டாவரணப் பூதங்களோடு சேர்ந்து சந்தோஷமாய் வசித் துவந்தன. (39) ஓ! பெண்ணே! பிற்பாடு பிரம்ம விஷ்ணுக்கள் முத லிய தேவர்கள் ஸ்ரீ பரமேசுவரனை நமஸ்காரம் பண்ணிவிட்டு வெகு சந் தோஷமாய்த் திரும்பிவந்து தங்கள் தங்கள் வாகனங்களி லேறிக்கொ ண் டவரவர்க ளிடங்களுக்குச் சென்றுவிட்டார்கள். (40)

நான்காவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ரு—வது அத்தியாயத்தினர்த்தம்.

இவ்விதமாக மகா பலசாலிகளான விந் நான்கு பூதங்களு மனே சுகோடி யண்டாவரணப் பூதங்களோடு சேர்ந்துகொண் டிருக்குமளவி (1) லப்போது தேவர்களெல்லாம் போர்முகத்தி லசுரர்களால் விறட் டிவிடப்பட்டவர்களாகிச் சகல பூதங்களும் வசிக்கலுற்ற கைலைகிரிக்கு வந் (2) தங்கு மிகுதியா யழுதுகொண் டப் பூதங்களையே அடைக்க லமாய் வேண்டிக்கொண்டார்கள். (3) பிற கவ்வா றழலுற்றவர்களான தேவர்களின் வசனத்தைக் கேட்டவுட னந்நான்கு பூதங்களும் பூலோ கத்துக்கு வந்தங்கு துணையாய்வந்த சில பூதங்களுட (4) னனேக ம சுரர்களைக் கட்டைகள் கட்டிகள் முதலிய வாயுதங்களா லடித்துக் கொ ன்றார்கள். ஓ! குழந்தாய்! அசுரர்கள் தோல்வியடைவிக்கப்பட்டவுட னிப்பூதங்கள் (5) பூலோகத்திலுள்ள பூதங்களை யவைகளின் விடுதிக ளுக் கனுப்பிவிட்டுச் சடிதியி லண்டாவரணப்பூதங்களிடஞ் சென்றங்கு சுகமாய் வசித்துவந்தன. (6) பிறகத் தேவர்களெல்லாம் மிகவும் சந் தோஷம்கொண்டவர்களாகித் தங்களிருப்பிடம் சென்றார்கள். அப்போ தசுரர்களுக்குத் தலைவனான அசுரேந்திரனென்பவ னொரிடத்தில் மறை

ந்திருந்து (7) பூதகணங்களுக்குத் தலைவனான அண்டாவரணனை வந்தனித்துப் பூதங்களா லளிக்கப்பட்ட தீங்குகளை யறிவித்தான். (8) அதுகேட்டக் கணபதியன் கோபங்கொண் டப் பூதங்களை நோக்கி "ஓ! பூதங்களே! நீங்கள் நமதுத்திரவின்றிச் சரணமடையலான தேவர்களுக் (9) குதவிசெய்வதற்காகப் போரினி லனேக மசுரர்களைக் கொன்று மோட்டபடியால் நீங்கள் நமது வாக்கின் வலிமையா லதிகொரேமான வசுரத்தன்மையை யடைந்து நாள்தோறும் தேவர்களுக்குக் கெடுதிசெய்துகொண்டிருக்கக்கடவீர்க" (10½) ளென் றிவ்வாறுக வப்பூதத்தலைவன் வெகு கோபத்தோடு சபித்துவிட் (11) டவ் வசுரேந்திரனை வெகு சந்தோஷத்தோ டவன் பட்டணத்துக் கனுப்பினான். பிற்பாடதுமுதலாய்த் தேவர்களிடத்துப் பகை பாராட்டலான வந்நான்கு பூதங்களு (12) மிறக்கமற்றவைகளாகி நான்கு பக்கங்களிலு மவர்களுக்கு வலிமையுடன் கொடிய துன்பங்களைச் செய்துவந்தன. பின்பு கேளாய்! குழந்தாய்! ஒரு சமயத்தி லப் பூதங்கள் ஸ்ரீ கந்தபிரானுடைய மயில் கோழிகளோடு சேர்ந்து முந்திய வைரத்தை நினைத்து மகா கோபாவேசங்கொண்டவைகளாகித் தேவர்களையு மவர்களது வாகனங்களையும் தங்களிச்சையின்படி அடித்துக்கொன்றன. (13-14) ஆதுகேட்டுத் தேவர்களைக் காக்கின்ற ஸ்ரீ ஷண்முகரும் வெகு கோபம் கொண்டவராகித் துரிதமதி லதி பயங்கரமான வசுர ஜன்ம முண்டாகக்கடவதென்றுப் பூதங்களைச் சபிக்கலானார். (15) பிறகுடனே அந் நான்கு பூதங்களு மசுரத்தன்மையை யடைந்தன. ஓ! பெண்ணே! கொடியவைகளான சூரன், பத்துமன் இவ்விரண்டு பூதங்களும் மகா கொடிய உருவத்தோடு சூரபத்துமனென்ற வோர் மகாசுரனுகிவிட்டன. (16½) அப்பேர்க்கொத்த வெனது புத்திரனாகிய சூரபத்துமன் ஸ்ரீ முருகேசனாலடிக்கப்பட்டு (17) அக்கந்தபமாத்துமாவினுடைய மயில், கோழியுருவங்களோ டிப்போதுப் பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களால் வந்தனிக்கப்படுவோனாகி விளங்குகின்றான். (18) ஆனால் ஸ்ரீ தேவாதிதேவனுடைய முந்திய மயிலும் கோழியுமோவென்று லிவைகள் முந்திய ஜன்மத்திற் செய்த தவத்திற்குக் கெடுதிசெயததும், (19) பூதங்களின் வார்த்தையைக்கேட்டுத் தேவர்களுடைய கருடன் முதலிய வாகனங்களைக் கொல்ல வுடந்தையா யிருந்ததுமான குற்றத்தை யவ்விரண்டும் மனதினி லாலோசித்துக் (20) காஞ்சீபுரம் சென் றங்கு மயில் கோழி யுருவங்களுடன் ஸ்ரீ குஹபிரானையே அந்தக்காணத்தில் தியானம் பண்ணிக்கொண்டே வெகுகாலம் வாசம்செய்து (21) ஆ! அடி! மகளே! பிறகு முடிவினில் ஸ்ரீ முருகேச னுக்கிணையின்படி யவாது ஸாயுஜ்

ஜிய பதவியை யடைந்துவிட்டன. மேலும் சிங்கமுகன் தாரகனென்று பெயர்போன விரு சகோதரர்களும் (22) ஸ்ரீ சுப்பிரம்மணியரா லடிக்கப்பட்டவர்களாகி யவ்விருவரு முத்தமமான கைலைகிரியடைந் தங்கு பூதங்களி னுருவத்தோடு ஸ்ரீநந்திகேசுவரனாற் சந்தோஷிப்பிக்கப்பட்டவர்களாகி விளங்குகின்றார்கள். (23) தவிரவு மிவ்விருவரு மிக் கற்பத்தின் முடிவினில் துர்க்கையம்மனுக்கும் மகா சாஸ்தாவுக்கும் முறையே சிங்கவாகனமும் யானைவாகனமுமாகப் போகின்றார்கள்.(24) அனுவிக் கற்பமதி லவர்களுக்கு வாகனங்களான முந்திய சிங்கமு மியானையு மொரோகாலத்தில் ஸ்ரீ விருஷபராஜனுடைய ஸாரூப்பிய பதவியை யடைந்துவிடலாகு" மென, (25) அப்போ தஜாமுகி கேட்கின்றதாவது:—"ஓ! அம்மா! துர்க்கையம்மனுக்கும் மகா சாஸ்தாவுக்கும் சிறந்த வாகனங்களான சிங்கம், இயானை யிவ்விரண்டிற்கும் ஸ்ரீ விருஷபராஜனுடைய ஸாரூப்பிய பதவியெவ்வாறு கிடைக்லாயிற்றென்பதை யிப்போதெந்தனுக்குத் தெளிய வுரைக்கவேண்டு" மென, (26) மாயை கூறுகின்றாள்:—"கேளாய்! மகளே! பூர்வத்தில் ஸ்ரீ மகாதேவர் துர்க்கை சாஸ்தா இவ்விருவர்களையும் முறையே! ஸ்ரீ கௌரியம்மையிடமாயும், விஷ்ணுவிடமாயும் சிருஷ்டித்தார். (27) பிறகு வாகனங்களுக்கெல்லா மீசுவரனான மெத்தச் சௌந்தரியம் பொருந்திய விருடபராஜனை நோக்கி "ஓ! விருஷபராஜனே! நீ யிப்போ திவ் விருவர்களுக்கும் சீக்கிரமாய்த் தக்க வாகனங்களைக் கொண்டுவரல்வேண்டு" (28) மென்று ஸ்ரீ பகவான் தருமத்தின துருவம்கொள்ளப்பெற்ற அவ்விருடபராஜனைக் கட்டளையிட்டவுட னதுகேட் டிலக்ஷுமீவிவாஸம்பொருந்திய அவ்விருடபராஜன் மனமதி லாலோசித்துக் (29) கைலைதனி லிருக்கும் மிருகங்களில் மகா பலபராக்கிரமம்பொருந்தியவைகளான வோர்சிங்கத்தையு மியானையையு மழைத்துத் திருவாக்குரைத்ததாவது:—(30) "ஓ! சிங்கவியானைகளே! நீங்க ளித் துர்க்கையம்மனுக்கும் சாஸ்தாவுக்கும் சிரேஷ்டமான வாகனங்களாயிருக்கும்தன்மையை யடையுங்க" ளென, இவ்வாறவ்விருடபத்தின் வசனத்தைக் கேட்டுச் சிரேஷ்டங்களான வச் சிங்கமு மியானையும் (31) "ஓ! சுவாமி! யாங்க ளிருவரும் தேவரீருடைய ஸாரூப்பியத்தை யடைவதற் கிங்கிச்சைகொண்டிருக்கையி லிப்போதெங்களுக் கிப்பேர்க்கொத்த தொழிலை யேற்படுத்தலாயிற்றே!" (32) யென, இவ்வாறுரைக்கலான அவைகளை நோக்கி விருஷபேசுவரன் பின்னுமுரைத்ததாவது:—"நீங்கள் நமதாக்கினையின்படி நம்மைத் தியானித்துக்கொண்டே யிவர்களுக்கு வாகனங்களாயிருந்துவந்து பிறகு வெகுகாலம் சென்றதன்மேல் நமது ஸாரூப்பியத்தை யடையக்க

டவீர்க" ($33\frac{1}{2}$) ளென்று வாகனேசுவரனென அவ்விருடபராஜ னே ற்பாடு செய்தனர். (34) பிற கச் சிங்கமு மியானையு மவ்வாறே வாகனங்களாகி யென்றுமழிவற்ற விருடபராஜனையே வெகுகாலம் தி யானித்துவந்ததன்மே (35) லத்துர்க்கையையும் சாஸ்தாவையும் விட் டு விருடபராஜனுடைய ஸாமீப்பியத்தை யடைந்து பிற கதின் ஸாரூப் பியத்தைக்கொண்டு மெத்தச் சுகத்தோடு களித்திருக்கின்றன. (36) கேளாய்! மகளே! அப்போது துர்க்கையும் சாஸ்தாவுமோ வாகனமிழ ந்தவர்களாகிக் கணாதிபராகிய ஸ்ரீ நந்திகேசுவரரிடம் சென்று சிறந்தவா கனங்களை வேண்டினபோ (37) தவர் மனதினி லாலோசித்துக் கே ளாய்! பெண்ணரசே! சிவாக்கினையின்படி மகாபல பராக்கிரமசாலிக ளான சிங்கமுகன் தாரகனென்ற விருபூதங்களையு மத் துர்க்கையம்மனு க்கும் மகாசாஸ்தாவுக்கும் வாகனங்களா யேற்படுத்திவிட்டனர். ($38\frac{1}{2}$) ஓ! பெண்ணே! முந்தி வாகனங்களாயிருந்த சிங்கம் இயானை யிரண்டிற் கு மிருடபராஜனது ஸாரூப்பியம் கிடைக்கலான விவரத்தை யானிப் போ துந்தனுக் குரைத்திட்டே" னென்றாள். (39)

ஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௬—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிற்பா டவ்வஜாமுகி மெத்தக் களிப்புற்றவளாகி மாயையைநோக்கித் தனது வரலாற்றைப்பற்றிப் ப யத்தோடு வினவுகையில் (1) மாயை கூறுகின்றாள்:— "கேளாய்! பெண்ணே! கோமேதகமென்ற வோர் பெரிய தீவத்தில் விசிஷ்டனெ ன்ற வோர் சிறந்தப் பிராம்மணனிருந்தான். அவனுக்குச் சுபதையென் று மிகுந்த தருமபுத்தியுடைய வோர் மனையாளிருந்தாள். (2) அவ்வி சிஷ்ட னவளிடமாய் மிகுந்த சௌந்தரியம்பொருந்திய குழந்தையாகி ய வுந்தனைப் பெற்றான். நீ யப்போது பூதலத்தில் சித்திரரேகையெ ன்று பெயர்கொண்டிருந்தாய். (3) மேலும் பூசக்கிரமென்ற பட்டண த்தில் ஹரிஜன்மனென்றோ ரந்தணனிருந்தான். அவனுக்குப் புண்டரீ கனென்று மகா புத்திசாலியான வோர் சிறந்த பிள்ளையுண்டானான். (4) அப்புண்டரீகன் மிகவும் நேர்த்தியான சிறுவளாகிய வுந்தனை மு றைப்படி மணம்புரிந்து தனது நேர்த்தியான பட்டணத்தில் விஷ்ணுப

க்தி பண்ணிக்கொண்டிருந்தான். (5) பிறகு நாளளவினி லவ் வந்தண னுக்கு விஷ்ணு பிரத்தியக்ஷமாகும்போ தவ னவரிடமிருந்து, நாளொ ன்றுக்கு நூறு மோகருக்களைக் கொடுக்கலுற்றதும், மெத்த நேர்த்தி யான வொளியைக் கொண்டதுமான வோர் சிறந்த விரத்தினத்தைப் பெற்றுக்கொள்ள, அவ னதின் மகிமையால் (6½) சாத்திரமறிந்தவர் களான பல சீடர்களாற் சூழப்பெற்றவனும், வேதங்களிற் கரைகண்ட வனும், (7) நாள்தோறும் வேதமோதுவோனும், கோபமற்றவனும், என்றும் தருமத்தையே பாராட்டியவனும், அன்னதானம் சுவர்ணதான ங்களை யென்றும் மிகுதியாய்ச் செய்வோனுமா யிருந்துவந்தான். (8) அப்பிராம்மணனுக்குப் பெண்டீராகிய நீயோவென்றால் மிகுந்த ரூப யௌவனங்களால் கர்வங்கொண்டவளும், காமவசப்பட்டவளுமாகி மி குந்த பாவத்தொழிற்களைச் செய்யத்தலைப்பட்டு (9) நீ யங்கங்கே பா ர்த்துபார்த்துப் பரபுருடர்களிடத்துக் காதல்கொண்டு வந்து பிறகு நா ளளவி லிலச்சைகெட்டவளாகி யுன் புருடனுக்குச் சீடர்களான சிற ந்தப் பிராம்மணர்கள், (10) மற்றும்வரலான பந்துக்கள், அதிதிகள், தவசிகள், தானம்வாங்க வரலான மற்றவர்கள், தற்செயலாய்த் தங்குவ தற்காக வந்தவர்கள் (11) இவர்களையெல்லா முன்வசப்படும்படி மோ கிப்பித்துப் பலவந்தமாய்க் கலவிகொள்ளலானாய். மேலு மிதை வளர் த்துவதில் யாதுபயன்? நீ கேவலம் காமவிகாரம்கொண்டவளாகி விலக் கன்றி கண்டவர் கேட்டவர்களை யெல்லாம் கைவைக்கத் தலைப்பட்டுவிட் டாய்; (12) ஆனா லுந்தன் கணவனான வச் சிறந்த வந்தணனோ உந்த ன்மீதுள்ள மிகுந்த நேசவசத்தினால் ரூபலாவணியங்களுக்கு நிதியாகி ய வுந்தனைக் கைவிடவேயில்லை. (13) அடி! மகளே! அவனுன் சங்க திகளை யறிந்தும் தெரியாதவன்போற் சும்மாவிருந்துவிட்டான். இப் படியிருக்கையில் தவசிகளிற் சிரேஷ்டரான துர்வாஸமாமுனிவர் தமது சீடர்களோடுகூட அங்கு வந்தார். (14) அப்போ துன் கணவ னவ்வா று வரலான அம்மாமுனிவரைத் தன் சீடர்களோடுகூட வெதிர்கொண் டுசென்று மெத்த வெகுமானத்துடன் நேர்த்தியான தன் வீட்டிற் க ழைத்துவந்து (15) அங்கோர் மண்டபத்தி லவருக்குச் சாதையேற்ப டுத்திவிட்டுப் பிற கந்தப்புறத்திற்குள் வந்து "ஓ! பெண்ணே! நீயே வெகு நேர்த்தியான பிக்ஷான்னத்தை யெடுத்துக்கொண்டுபோ யம்மா முனிவருக் கிட்டுவிட்டுத் துரிதமாய் நம்மிடத்திற்கு வரலாவா" யென் றுரைத்து உந்தனையே அனுப்பலானான். (17) பிறகு நீயு மப்படியே நல்லதென்று வெகு நேர்த்தியான பிக்ஷான்னத்தைச் சீக்கிர மெடுத்து க்கொண் டம் மாமுனிவரிடஞ் சென்று 'ஓ! ஸ்வாமீ! பிக்ஷைகொண்டு

வந்திருக்கின்றே' னென் றறிவித்ததற் (18) கவர் முந்தியே பிக்ஷைப ண்ணியாகிவிட்டபடியா லதனை யங்கிகரிக்கவில்லை. (19) அப்போது நீ யத் தவசிச்சிரேஷ்டரைக் கண்டு காமமோகம்கொண்டவளாகித் திரும்பி ப்போ யோர் மூலையி லிருந்துகொண்டு பிற கம் மாமுனிவர் தூங்கிவிட லானதைக் கண் (20) டறிந்ததன்மே லவராருகினிற் சென் றவரை ய ப்போ தணைந்துகொண்டதி லவர் விழித்துக்கொண்டவுட னோட்டம்பி டித்தாய். (21) அப்போ தங்கு கடைத்தெருவீதியில் மெத்த வுன்ன தமும், பல விழுதுகளைக் கொண்டதுமான வோ ராலமர மிருந்தது. அ தனடியி லனேக மாடுகள் படுத்திருந்தன. (22) ஓ! குழந்தாய்! நீ ய ப்போது வெகு பயம்கொண்டவளாகி யவ் வாடுகளின் நடுவில் பதுங்கி க்கொள்ளலானாய். பிற கம் மாமுனிவ ரெழுந்தவுடன் தமது சீடனு ன தருமகுப்தனை யழைத் (23) தவனிடத்துச் சங்கதிகளைச் சொல்லி 'ஓ! சீடா! சீக்கிரமா யப் பாதகியைப் பிடித்துக்கொண்டு நம்மிடத்திற் கு வா' வென் றுரககினைபண்ணித் தவங்களுக்கெல்லாம் நிதியான வத்து ர்வாஸமுனிவ ரவனை யனுப்ப, (24) அத் தர்மகுப்த னப்படியே புற ப்பட் டவ் வீட்டிற்கு வெளியே சென்று பார்த்ததி லவளைக் காணாமல் திரும்பி யம் முனிவரிடம் வந்து 'ஓ! சுவாமீ! அவ ளெந்தனுக் ககப்ப டவில்லை' யென்றான். (25) கேளாய்! மகளே! பிற்பா டம் மாமுனி வரோ ஞானதிருஷ்டியா லறிந்துகொண்டு "ஓ! தருமகுப்தா! நீ சீக்கிர மாய்ப் போ யங்கு கடைத்தெருவினி லாலமரததடியிலுள்ள ஆட்டுமந் தைக்குமத்தியில்பதுங்கியிருக்கு மிப்பேர்க்கொத்தவப்பாதகியை நோக் கி நமதாக்கினையின்படி 'அடி! துர்நடத்தைக்காரி! நீ யிங் கொளிந்து கொண்டிருக்கிறாயா? நீ சீக்கிரமா யாகாயத்தி லளாவிய விம் மரத்துநு னியிற் போயிருக்கக்கடவா' யென்று சபித்துவிட்டுச் சடிதியி லிங்குவந் துவி' டென் றவனை யனுப்பினர். (28) பிற கவனு மப்படியே புறப் பட் டாட்டுமந்தையின் மத்தியிலிருந்த வுந்தனைப் பார்த்து அதேக்ஷண த்தி லுந்தனை யவ் வாலமரத்தின் நுனியி லிருக்கும்படி சபித்துவிட்டா ன். (29) பிற்பா டவ் விரவுகடந்தவுட னம் முனிவர் காலையில் சகலவ னுஷ்டானங்களையும் முடித்துக்கொண் டங்கு வந்து மரத்தின் நுனியிலி ருந்த வுந்தனைக் கண்டார். (30) மேலு மப்போது ஜனங்களெல்லாம் "ஓ! கோ! புண்டரீகனுடைய பெண்டீ ரிதோ ஆலமரத்தின்பேரி லிரு க்கின்றாள்; இதென்ன வற்புத" மென் றொருவரோடொருவர் சந்தேகத் தோடு சொல்லிக்கொண்டே ஆச்சரியத்தினால் மனக்களிப்புற்றவர்க ளாகி யவளைப் பார்த்தார்கள். $(31\frac{1}{2})$ கேளீர்! பிராம்மணோத்தமர்க ளே! பிறகு புண்டரீகனும் தன்சீடர்களோடுகூட அம் மாமுனிவரிடம்

வந்து வந்தனிதது விநயத்தினுல் வணக்கமுற்றவனுகி வசனமுரைத்த தாவது:—"ஓ! தவசிச்சிரேஷ்டரான சுவாமீ! தேவரீருக்குப் பிக்ஷையி டுவதற்காக எந்தன் மனையாளான இவளை யா னனுப்பினேனே! அவள் மறுபடி திரும்பி வாராம(33½) லெல்லோர்க்கு மோ ராச்சரியத்திற்கே துவா யிந்த ஆலமரத்துநுனியி லிருக்கின்றுளே! (34) ஓ! இருடீசுவ ரா! இதெந்தப்பாவத்தின் பயனென்று சொல்லியருளவேண்டு" மென, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டவுடன் மாமுனிவ ரவனுக் கிப்பே ர்க்கொத்த விருத்தாந்தங்களை.(35) யுரைத்துவிட்டு -இப்போ தப் பா தகி நம்மா லங்கு தம்பனம் செய்யப்பட்டிருக்கிறு' ளென்று கூறினர். பிற்பாடு புண்டரீகன் வெகு கோபத்தோடு "ஓ! முனிவரே! ஸ்திரீக ளென்ன மகாபாவிகளானபோதிலு மவர்களிடத்து நீ ரிப்போ திப்பேர் க்கொத்த செய்கை நடத்தியிருப்பது தகுதியா? மேலும் பிறர் பாவத் தைப் பகிரங்கப்படுத்துவதி லப்பாவ மப்படிச் செய்வோனையே அடை யுமல்லவா? (36-37)

ஆறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் எ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

அப்புண்டரீகன் வசனத்தைக் கேட்டவுடன் மாமுனிவர் கோப த்தோ டவனுக் குத்தரமுரைத்ததாவது:—"அடா! புத்திகெட்டவனே! இவளோர் மனையாளென் றுந்தனுக் கென்னடா வீணபிமானம்?(1) இக் கொடிய நடைக்காரியா லனேகம் பிராம்மணர்கள் கொல்லவும்பட்டிருக் கிறுர்கள். இத் துராத்துமியானவள் வெகுபெயர்களுடைய விரதங்க ளைக் கெடுத்திருக்கிறுள். (2) இப்பாவ புத்திக்காரியால் மற்றனேகம் பிராம்மணர்கள் பாவிகளாகிவிட்டார்கள். அடா! இப்பாதகி யுந்தன் பெண்டீரோயென்ப துண்மையானு லப்போது நீ(3) யவளை மறத்தினின் றிறங்கச்செய்து மெத்தச் சீமானு யழைத்துக்கொண்டு போகலா" மெ ன, இவ்வா றவரது வசனத்தைக் கேட்டவுட னவ்வந்தண னுந்தனைக் கூப்பிடலாகையில் ஓ! மகளே! நீ கொஞ்சம்மட்டில்தா னிறங்கிவா லானுய். (4½) அப்போ தவ் விருடிச்சிரேஷ்ட ரங்குள்ளப் பிராம்மண ர்களைப் பார்த்து "ஓ! பிராம்மணர்களே! இவளோடு மைதுனம் பண் ணியிருக்கலுற்ற மற்ற எல்லாப் புருடர்களு மிவளைக்கூப்பிட் டிம்மரத்

தினின்று சீக்கிர மிறங்கச்செய்யுங்க" ளென்று திருவாக்கருளினர். (6) அப்போது மெத்தக் காமாதுரனான வப் புண்டரீகனென்ற பார்ப்பானு மவள்மீதுள்ள மோகவசத்தினு லங்குள்ள பார்ப்பாரெல்லோர்களையு மவளைக் கூப்பிடும்படி யனுமதிகொடுத்தான். (7) அதன்மே லங்கு கூடியிருந்தவர்களான அவனது சீடர்களும் மற்றப்படியுள்ளப் பிராம்மணரெல்லோர்களும் தலையை நிமிர்த்திக்கொண் டப் பாதகியைக் கூப்பிட்டார்கள். (8) அவ்வாறவர்கள் கூப்பிட்டமாத்திரத்தி லவள் பாதிமரத்தில் வந்து தங்கலானுள். பிறகு புண்டரீகன் கொரேமான கோபாக்கினியால் சூழப்பெற்றவனுகி (9) "ஓ! தவசியே! இப் பிராம்மணரெல்லோர்களாலும் கூப்பிடப்பட்டு மே னிவளின்னும் பாதி மரத்தினில் தங்கியிருக்கின்றுள்? அதன் காரணத்தை யிப்போ தெனக்குச் சொல்லு" மென, (10) இவ்வா றுரைத்த வப் பார்ப்பானை நோக்கி மாமுனிவர் பின்னு முரைத்ததாவது:—"அடா! உன் மனைவிக்குக் கணவர்களான பார்ப்பார்க ளிவர்களைத் தவிர வின்னு மனேகமனேகம்பெயர்களிருக்கின்றுர்கள். (11) அங்கங்கே வசிக்கலுற்ற வப்பேர்க்கொத்ததுர்நடைக்காரர்களெல்லா மிங்கு வந்திருக்கவில்லை" யென் றுரைத்து விட்டு நடுமரத்திலிருக்கலுற்ற வப் பாதகியை நோக்கி (12) "அடி! பாதகி! நீ மற்ற யாவரோடெல்லாம் வியபிசாரம் செய்திருக்கின்றுயோ அவர்களுடைய பெயர்களை யுறக்க வுரைத்துவிட்டிம்மரத்தினின்றிறங்கி வீட்டிற் கோடிப்போ" வென, (13) பிறகவ் வியபிசாரியு மவரது வார்த்தையைக் கேட் டப்படியே நல்லதென்று கொஞ்சமேனும் பயமற்றவளாகிய வப்பேர்க்கொத்த பார்ப்பார்களுடைய பெயர்களைச் சொல்லிவிட் டம்மரத்தி னடிக்கவை வந்து தங்கலாயினள். (14) அதன்மேலக்கெட்டநடைக்காரி யம் மாமுனிவரை நோக்கி யுரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ! என்னேடு சம்மந்தப்பட்டவர்களி லெனது ஞாபகத்தி லில்லாதவர்களா யனேகருண்டு. மற்றின்னுமனேகம் பிரம்மசாரிகள், கலியாணம்செய்தவர்கள், சனியாசிகள், தவசிகள், இவர்களெல்லாம் தங்கள் விரதம் பங்கமாயிற்றே யென் றுயிரை யிழந்துவிட்டார்கள். மேலுமனேகம் சிறந்தப்பிராம்மணர்கள் நான் பலவந்தமாய்ப் புணர்ந்தமாத்திரத்தில் மடிந்துவிட்டார்க" ளென்றுள். (16½) இதைக் கேட்டவுடனத் தவசிச்சிரேஷ்டர் பின்னும் மகா கோபாவேசம்கொண்டவராகி (17) "ஆ! கா! பிராம்மணனுகிய விப் புண்டரீகன் தன் மனைவியோர் கெட்ட நடை யுள்ளவளும் கெட்ட வியபிசாரியாயுமா யிருப்பதை யறிந்தும் நல்ல நடையுள்ள மற்றெருருவளை மனையாளாகக் கொள்ளாமலே (18) யதனைக் கொஞ்சமேனும் பாராட்டாம லுந்தனைக் கைவிடாமலே யிருக்

கின்றபடியால் அடி! துஷ்டே! உந்தனாற் செய்யப்பட்ட வெல்லாக் கொடிய பாவங்களு (19) மவனுக்கே பயன் கொடுக்கலாகு மென்பதி லாக்ஷேபனையேயில்லை" யென்று கேளாய்! மகளே! அம்மாமுனிவர் பூர்வஜன்மத்தி லுந்தனை நோக்கித் திருவாக்குரைத்தனர். (20) பிற கப்பேர்க்கொத்த வசனத்தைப் புண்டரீகன் தன் சீடர்களோடுகூடக் கேட்டு வசனமுரைத்ததாவது:— "ஓ! தவசியே! நீர் சைவராகையா லெங்களை வைணவர்களென்று நினைத்து மெத்தத் துவேஷத்தினா லெங்கள்மீ தேதோ கொஞ்சம் பாவத்தைக் கற்பித் திவ்வாறு செய்திருக்கின்றீ" ரென, ($21\frac{1}{2}$) இப்படி யுரைத்த அவ் வந்தணனைப்பார்த்து முனிவர் மெத்தக் கோபாவேசம் கொண்டவராகிச் சொல்லியதாவது:— அடா! மூடா! கேவலம் யோனியின் நிமித்தமாகவே மிகவும் பாவத்தில் முயன்றவளான விம்மாதர்மீது நீ மெத்த வாசைகொண் டிருக்கிறபடியால் நீ துராத்துமர்களான விச் சீடர்களோடுகூடத் துரிதத்தில் யோனிக்குறியைக் கொள்ளலாவதோடு (23) மகா பாவிகளான விப் பார்ப்பார்களுடன் வேதமுறை மார்க்கங்களை யிகழ்ந்து கெட்ட சாஸ்திரங்களிலே மனப்பற்றுத லுள்ளவனாகி ஸ்ரீ ஸதாசிவபரமாத்துமாமீது பராமுகமா யிருக்கக்கடவாய்." மேலும் "ஓ! துராத்துமர்களான பிராம்மணக்கேடர்களே! நீங்கள் குருவின் மனைவியோடு புணர்ந்ததினா லுங்கள் பெண்டீர்களெல்லாம் கெட்டநடையுள்ளவர்களும் வியபிசாரிகளுமாகக் கடவார்க" (25) ளென் றவர்களைச் சபித்துவிட் டவ் விருடிச்சிரேஷ்டராலமரத்தின்மீதிருந்த இவ் வுந்தனைப்பார்த்து "ஆ! அடி! துர்மார்க்கி! நீ நம்மைப் பலவந்தமாய்த் தொட்டபடியால் (26) நமது திருவாக்கின் கௌரவத்தின்படி துரிதமதி லோர சுரப்பெண்ணாகக்கடவாய். தவிரவும் நீ ஆட்டுமந்தைக்குள் ளொளிந்திருந்தபடியா லாட்டு முகத்தைக் கொள்ளக்கடவாய். (27) அடி! பாதகி! நீ யிப்போதிம் மரத்தைவிட் டிறங்கி யுனதிச்சையின்படி சென்றுவிடு" என் றம் மாமுனிவர் சபித்த மாத்திரத்தில் நீ மெத்தப் பயந்தவளாகி யவ் வாலமரத்தினின் (28) றிறங்கி யோர் கணத்துக்குள் ளம்முனிவரை விநயத்தோடு வந்தனித்துத் தனதழகிய மேனி நடுங்கப்பெற்றவளாகி வசனமுரைத்ததாவது:— (29) "ஓ! தவசிச்சிரேஷ்டரான சுவாமீ! தேவரீர் மெத்த கோபத்துட னெந்தன் பர்த்தாவையு மவரது சீடரையு மெந்தனையும் சபித்துக் கொடூரமா யிப்பேர்க்கொத்த காரியங்களை நடத்தலான (30) போதிலு மிருடீசுவரரான தேவரீர்மீ தடியேனுக்குக் கோப லேசம்கூட ஜனிக்காம லொப்பற்ற மெத்த நேசமே மேலிட்டிருக்கின்றது. ஆகையால் ஓ! சரணமடைந்தோரிடத்து நேசமுள்ளடைய மாமுனிவரே! இப்பேர்க்

கொத்த வெந்தனை யெவ்விதத்தாலாவதுகாப்பாற்றிடல்வேண்டு" (31½) மென்றுரைத்துவிட்டுக் கேளாய்! மகளே! மிகுந்த பயத்தோடு பலமுறை வந்தனித்தாள். (32) பிறகம்முனிவர் மிகுந்த சந்தோஷங்கொண்டவராகி யவளைத் தயவோடு நோக்கி "ஓ! பெண்ணே! உந்தனாற் செய்யப்பட்ட கெட்டநடையாகிய சேறுகளெல்லா மவைகளைப் பகிரங்கப்படுத்தும் வியாஜத்தினாற் கழுவப்படலாயினவேயின்றி நம்மால் மற்றொன்றும் செய்யப்படவில்லை. (33½) ஆகிலும் நீ யுனது கருமசேஷத்தினு லிகழ்வான வசுராஜன்மத்தில் ஜனிக்கலாகி (34) மிகுந்த காமமோகங்கொண்டு வியபிசாரியாய்க் கண்ட புருடர்களோடெல்லாம் வேண்டியபடி புணர்ந்து வந்து பிறகு சிலநாளளவில் மோகங்கொண்டவளாகி நம்மையடைந் (35) தொப்பற்ற சம்போகம்பண்ணி யிரு பிள்ளைகளைப்பெற்று பிறகு மகாசாஸ்தாவினுடைய கணுதிபான மகா காளரால் தொடப்பட்டமாத்திரத்தில் சகல பாவங்களும் முற்றும் தொலையப்பெற்றவளாகிப் (36) பிறகு மலைகளிற் சிறந்த ஸ்ரீ பருவதத்திற்குச் சென்று சிறந்த வைராக்கியத்தைப் (இல்லறவாசையொழித்தல்) பெற்று பின்பு நாளளவினில் மெத்த மங்களகரம்பொருந்திய கைலைகிரியடைந் (37) தங்கு ஸ்ரீ கௌரிதேவியைப் பூஜைசெய்து மெத்த வுத்தமமான மோக்ஷஸாம்பிராஜியத்தை யடையலாவாய்" என்று கேளாய்! எனதருமைமகளே! சிவனடியார்களிற் சிறந்த வத் துர்வாசமாமுனிவ ரிவ்விதமா யுந்தனை யுரைக்க, (38) அப்படியே நீயு மசுரகுலத்தி லெந்தனுக்கு மகளாய்ப் பிறந்து மிகுந்த காமமோகம் கொண்டவளாகி வேண்டியபடியெல்லா மிப்பேர்க்கொத்த போக சுகங்களை யனுபவித்துவிட்டு (39) மலைகளிற் சிறந்த மெத்த வுத்தமமான ஸ்ரீ பருவதத்திற்கு வந்துவிட்டாய். ஓ! என்பெண்ணே! இவ்விதமான வுந்தன் வரலாற்றை யானிப்போ துந்தனுக் கெடுத்துரைத்துவிட்டேன். (40) இனி நீ கைலாஸமடைந்து அங்கு ஸ்ரீ கௌரீதேவியைப் பூஜைசெய்வதனுல் மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைந்துவிடுவா யென்பதிற் சந்தேகமே யில்லை" யென்றுள். (41)

ஏழாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் அ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற கஜாமுகி கேட்கின்றுள்:—"ஓ! அம்மா! உந்தனுல் தெளிய வுரைக்கப்பட்ட வெந்தன் விருத்தாந்தத்தை யான் கேட்டாயிற்று.

இப்போ துந்தன் விருந்தாந்தத்தைக் கேட்கப் பிரியமிருக்கின்றபடியா லதனை யெடுத்துரைத்தல்வேண்டு" மென, (1) மகளா லிவ்வாறுரைக் கப்பட்ட வார்த்தையைக்கேட்டு மாயை பின்னும் கூறுகின்றாள்:—"ஓ! கேளாய் குழந்தாய்! யான் முந்திக் காசியபமாமுனிவருக்குத் திதியென் று பெயருடைய வோர் மனைவியா யிருந்தேன். அப்போ தெந்தனுக் கனேக மசுரர்கள் பிள்ளைகளாய்ப் பிறந்தார்கள். (2½) அவ்வெல்லோர் களையும் தேவர்க ளுயுத்தத்தில் மிகுதியாய்க் கொன்றுபோட்டார்கள். (3) பிற்பாடு நான் புத்திரசோகத்தினால் துக்கப்பட் டங்கம் மெலிய லுற்றவளாகி வெகு கோபத்தோடு மலைகளிற் சிறந்த விந்த ஸ்ரீ பருவத த்திற்குவந்து (4) "ஓ! யான் மெத்தச் சிரேஷ்டர்களான பிள்ளைகளை ப்பெற் றிவ்வெல்லாத் தேவர்களையும் கொன்றுபோடுகின்றே" னென் று சித்தமதி லுறுதிபண்ணிக்கொண் டிம்மலையிலிருந்து பூமியில்விழுந் (5) துயிரை யிழந்து பிறகசுரகுலத்தினிற் பிறந்து ஓ! பெண்ணே! மறுபடியு மக் காசியபமாமுனிவரைக்கொண்டே சூரபத்துமன் முதலிய வசுரர்களைப் (4) பெற்று அப்பிள்ளைகளால் தேவரெல்லோர்களும் கொடிய துன்ப மனுபவிக்கலானதைப் பார்த்து வேண்டிய பயனை முற் றும் கைக்கொண்டவளானதோடு பூர்வஜன்மத்தில் மெத்த வழகியாயிரு ந்த வுந்தனை யான் (7) பார்த் தாசைப்பட்டபடி ஓ! கோ! பெண்ணே! உந்தனையும் மகளாய்ப் பெற்றுவிட்டேன். இனி யான் பிள்ளைகளைப் பெற வாசைகொண் டம் முனிவரிடம் போவதில்லை. (8) ஆனால் சி ரேஷ்டமான விந்த ஸ்ரீ சைலத்தில் ஸ்ரீ சிவபெருமானுக் கூழியம்செய்து கொண்டிருந்து முடிவினில் மெத்தச் சந்தோஷம் கொண்டவளாகி யுத் தமமான கைலாஸமடைந்து (9) ஸ்ரீ பார்வதீதேவிக் கூழியம்பண்ணி மோக்ஷஸாம்பிராஜிய மடையலாவே னென்பதிற் சந்தேகமே யில்லை. மேலும் கேளாய்! பெண்ணே! யானெப்போ திந்த ஸ்ரீ சைலத்தினின் று விழுந் துயிரை யிழந்தேனோ அப்போ துன் தந்தையான காசியப முனிவர் மெத்தத் துக்கமடைந்தவராகிப் புலஸ்தியப் பிரஜாபதியின் பெண்ணான மற்றோர் திதியென்பவளைக் (11) கலியாணம்செய்து பிற கு மோகம் தெளிந்தவராகி யிருக்கின்றார். கேளாய்! மகளே! தவிர வும் சுக்கிராசாரியாருடைய திருவருளா லெந்தனுக்கு முக்காலங்களின் நல்ல அறிவு (12) மிருக்கின்றது. இப்போ தெந்தன் விருத்தாந்தத் தையு முனக் காதியோ டந்தமா யுரைத்துப்போட்டே" னென்றாள். பிற்பா டவ் வஜாமுகியானவள் தாயின் வசனங்களைக் கிரமப்படி (13) கேட்டதன்மேல் மெத்தச் சந்தோஷத்துடன் தன்தாயை வந்தனித் தப் போது சிரேஷ்டமான அந்த ஸ்ரீ சைலத்தில் தன் தாயோடுகூட ஸ்ரீ சிவ

பெருமானுக் (14) கூழியம் செய்துவந்து முடிவினில் மலைகளுக்கெல்லா முத்தமமான ஸ்ரீ கைலாஸகிரி யடைந் தங்கு ஸ்ரீ பார்வதிதேவிக் கூழியம் பண்ணிப் பிறகு தன் தாயோடுகூட மறுபிறப்பிற் கசாத்தியமான மோக்ஷஸாம்பிராஜிய பதவியை யடைந்துவிட்டாள். (15)

எட்டாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௯—வது அத்தியாயத்தினர்த்தம்.

சௌனகாதி முனிவர்கள் சூதனை நோக்கிக் கேட்கின்றதாவது:—"ஓ! புராணப்பொருட்களை யெடுத்துரைப்பதில் திறமைகொண்ட சூதமுனிவரோ! நீர் முந்தி ஸ்ரீ சுப்பிரம்மணியசுவாமியால் அகஸ்திய மாமுனிவருக் குபதேச மளிக்கப்பட்டதென்று கூறினீரல்லவா! (1) அப்பார்வதிபுத்திரன் மிகுந்த தயவுட னவருக் கென்ன வுபதேசம் பண்ணினுனென்பதை யாங்கள் கேட்க வேண்டுகின்றபடியா லதனை யெடுத்துரைக்கவேண்டு" (2) மென, சூதர் கூறுகின்றார்:— ஓ! புண்ணியவான்களிற் சிறந்த முனிவர்களே! மகா புண்ணியமான பஸ்மமகிமை, ஸகல பாவங்களையும் நாசம் செய்யலுற்ற வுருத்திராக்ஷத்தின் மகிமை, (3) சிவநாமத்தை யுச்சரித்தல், சிவ விரதம், சிவ புண்ணியம் இவைகளின் மகிமை, சிவ துரோகத்தின் பாதகம்,(4) ஸகல வேதங்களாலும் முறையிடப்படுகிற சிவபிரானுடைய வாயிரம் திருநாமங்கள், சிவபூஜை, சிவயோகம், (5) சிவஞானம் இவைகளின் மகிமை இவைகளெல்லாமே ஸ்ரீ முருகேசனு லகஸ்தியமா முனிவருக் குபதேசம் செய்யப்பட்டது. (6) அதனை யக்கந்தன் கிருபையின் வலிமையால் யானுங்களுக்குள்ளபடி யெடுத்துரைக்கின்றேன். பஸ்மமானது (திருநீறு) கல்பம், அனுகல்பம், உபகல்பமென மூவகைப்படும். (7) பஜனம் (தரித்தல்) செய்வதால் ஸகல பாவங்களையும் தொலைக்கலுற்றதும, ஸ்மரணம் செய்வதால் ஸகல சுகங்களையு மளிக்கலுற்றது மாகையா லதற்கு 'பஸ்ம' மென்று பெயர். அது போகம் மோக்ஷ மிரண்டையும் பயனுய்க் கொடுக்கும். (8) முறைப்படி மந்திரத்தோ டுண்டாக்கப்பட்ட வத் திருநீற்றைத் தரிக்கலுற்ற மானிடருக்குச் சகல பீடைகளும் தொலைந்துவிடுவதோடு வேண்டிய பொருட்களெல்லாம் கைகூடலாகும். (9) ஸ்ரீ பார்வதிநாதனுடைய மகிமை யெவ்வா றறிவதற் கஸாத்தியமோ திருநீற்றி

ன் மகிமையு மதேவிதமானதென்று வேதவேதாந்தங்களின் சுனாகண்ட பெரியோர்களாற் சொல்லப்படுகின்றது. (10) ஓ! பிராம்மணோத்தம ர்களே! ஸத்தியம், ஞானம், தயவு, சிரத்தை, அக்கினி, வாயு, ஜலம், தலம், வானம் முதலியவைகளெல்லாம் பஸ்மங்களே. * (11) ஸ்ரீ சிவ பிரானுக்கு மிகவும் பிரியமுள்ள வித் திருநீறானது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்கள், இருடிகள், தவசிகள், பிராம்மணர்கள், க்ஷத்திரியர் கள், வைசியர்கள், சூத்திரர்கள், மற்றுமுள்ள ஸங்கரஜாதியார்கள், ஸ்தி ரீகள் இவர்களாலெல்லாம் தரிக்கத்தக்கதாகும். ($12\frac{1}{2}$) இதனை மந்திரத் தோடு தரிப்பதனால் அஷ்டைசுவரியங்கள், அஷ்ட (எட்டு) ஸித்திகள், பரமகாரணாரண ஸ்ரீ சம்புவினிடத்துப் பக்தி இவைகள் கைகூடும்.($13\frac{1}{2}$) இது ஸகல வசியங்களையும் சௌபாக்கியங்களையு மளிக்கலுற்றதும் மகா மேன்மைபொருந்தியதுமாகின்றது. (14) திருநீற்றைக் கண்டமாத்தி ரத்தால் சகல பூதப்பிரேத பிசாசங்களும், இராக்ஷஸர்களும் மற்றுமுள் ள துஷ்டர்களும் பயந்து தூரத்தி லோடிவிடலாகும். (15) அதேவித மாய் அபஸ்மாரம் குஷ்டம் முதலிய வியாதிகளெல்லா மோர் கணநேர த்திற்குள் நசித்துவிடுகின்றன. திருநீறானது பெரியோர்களால் உத்தூ ளன (உதிராய்ப்பூசல்) மாகவும், திரிபுண்டிர (முப்பட்டை) மாகவும் தரிக்கத்தக்கது. (16) உத்தூளனமும் திரிபுண்டிரமும் மனதினற்கூட அசட்டைசெய்யத் தகாதது. இவ்விரண்டும் வேதங்களால் விதிக்கப்ப டுகின்றபடியா லதனை விலக்குவோர் பதிதராவார்கள். (17) உத்தூளன த்திலும், திரிபுண்டிரத்திலும், அவைகளின் மகிமையைப் பிரஸ்தாபிப்ப திலும் யாவருக்குச் சிரத்தையுண்டாகவில்லையோ! அவர்கள் மகா பாவி களாவார்கள். (18) கேளீர்! தாரணிதேவர்களே! திருநீற்றில் ஜலத் தைவிட்டுக் குழைத்துச் சிரசு, நெற்றி, கழுத்து, மார்பு, வயிறு, இரு பாரிசங்கள், இருபுயங்கள், கைகளின் மத்தி, இருமணிக்கட்டுகள், முது கு, பிடரி (19-20) ஆகிய பதினைந்திடங்களிலும் திரிபுண்டிரம் யாவரா ல் தரிக்கப்பட்டபோதிலு மவரெப்பேர்க்கொத்த மகா பாவியாயினு ம வரோ சிவன்; அவரோ விஷ்ணு; அவரோ பிரம்மா; அவரெல்லோர்களாலு ம் வந்தனிக்கத் தக்கவரே. (21) எல்லாச் சாதிகளுக்கு மெல்லா ஆசிர மங்களுக்கும் உத்தூளனமும் திரிபுண்டிரமு மெடுத்தவையென்று ஜா பாலோபநிடத்தை நன்கறிந்த பெரியோர்களால் மெத்த வாதரவுடன் சொல்லப்படுகின்றது. (22) மேலு மவ் விரண்டும் ஞானத்திற்கு முக்

* இவ்வாக்கியமானது திருநீற்றை யுத்தூளனம் செய்துகொள்வதற்கான வேதமந்திரத்தின் மொழிகளையே கொண்டிருப்பதை யறிக.

கிய ஆதாரமுள்ளவை யென்பதே 'சுவேதாசுவதர' மென்ற உபநிடத்தை யறிந்த மாமுனிவர்களி னுதாரவுள்ளகொள்கை. (23) தவிரவும் அதர்வசிகோபநிடத்தை நன்கறிந்த மாமுனிவர்க ளவ்விரண்டு மஞ்ஞானங்களை முற்றும் தொலைக்கலுற்றவை யென்று தெளிவிக்கின்றாகள். (24) என்றாலும் கேவலம் ஞானத்தினால்தா னஞ்ஞானத்திற்கு நாசமுண்டாகும்; ஏனென்றா லவ் வஞ்ஞானமானது நல்ல ஞானத்தினால் விலக்கத்தக்கதேயின்றி மற்றொன்றாலுமில்லை.(25) யாவரால் சிவ விரதங்களெடுத்து நன்கனுஷ்டித்து வரப்படுகின்றனவோ அவருக்குத்தா னடர்ந்த அஞ்ஞானங்களைத் தொலைக்கலுற்ற நல்ல ஞானமுண்டாகும்.(26) ஆகையினால் மோக்ஷத்தை யபேக்ஷிப்பவர்க ளுத்தூளனத் திரிபுண்டிரங்களை நன்றா யாசரித்துவரல்வேண்டும்.

முந்தி யோர் பிரளயம் நேர்ந்தபோது விஷ்ணுவானவர் (27) சமுத்திரஜல மத்தியிலுள்ள ஆலிலைமீது பள்ளிகொண்டிருந்தார். அப்போது பகவானாகிய ஸ்ரீ ஸதாசிவ னங்கு வந்து விஜயமாயினர். (28) சமுத்திரமானது மகா ஆரவாரத்தோடு கொந்தளித்தபோதிலு மவருக்குப் பருவிரல்மட்டுத்தா னிருந்தது. அப்பேர்க்கொத்த மகாபுருடரான ஸ்ரீ மகேசுவரனைக் கண்டவுடன் விஷ்ணு (29) புத்திப்பிரமங்கொண்ட வுள்ளத்தைக் கொண்டவராகி 'நீர்யா' ரென்று கேட்க, கேளீர்! முனிவர்களே! அப்போ தம் மகாபுருட னவருக்குக் கொஞ்சம் திருநீறு கொடுத்தனர். அப்போ தவ் விஷ்ணு வதனை வாங்கி நெற்றியி லிட்டுக்கொண்டு கொஞ்சம் புஜித்தவுட னப்போ தவருக்கு நல்ல ஞானமுண்டாகித் தம்மைத் தாம் நிதானித்துக்கொண்டு (31) மகாதேவரும், சந்திரகலையை யுச்சியலங்காரமாய்ப் பூண்டவரும், யௌவனப்பருவமுடைய புருடச் சிரேஷ்டரும், முக்கண்ணரும், கறுத்த கழுத்தையுடையவரும், (32) அஷ்டைசுவரிய சம்பன்னருமான வப் பரமேசுவரனைக் கண்டு துரிதமா யெழுந்தம் மாதவன் பக்தியுடன் தண்டம்போல் வந்தனித்து அப்பிரபு விங்கு விஜயம்செய்த காரணத்தை வினவ, (33) ஸ்ரீ ஜகதீசன் சொல்லுகின்றார்:— "கேளீர்! விஷ்ணுவே! சகல லோகங்களையும சிருஷ்டிப்போரான பிரம்மாவை யுண்டுபண்ணுவதற்காக யா மிங்கு வந்தோம்; ஆகையால் நீர் நமதாக்கினையின்படி யிப்போது துரிதமாய் நமது மனைவியாகவேண்டும். (34) ஏனென்றால் ஓ! விஷ்ணுவே நீரோ நம்து சக்தியாகியபடியா லும்மிடமிருந்தே யவருக்குப் பிறப்புண்டாகவேண்டு" மென்று திருவாக்கருளிச் சகலப் பிரபஞ்சச் சுவரூபியும், சகலப் பிரபஞ்சங்களையு மிரக்ஷிக்க முயன்றவருமான வச்சருவேசுவரா னப்போ தவரைப் பெண்டீராகப் பண்ணிக்கொண்டு சம்போகம் செய்கை

யி (35½) லப்போ தப் பரமசிவனுடைய தங்கத்தையொத்த வீரிய மானது விழ, (36) கேளீர்! தாணிதேவர்களே! அவ் விஷ்ணுவின் நாபிகமலத்தினின் றைந்து முகங்களைக்கொண்ட பிரம்மனுண்டானர். உடனே பிரபுவாகிய வப் பிரம்மனும் ஸ்ரீ பரமசிவாக்கினையின்படி ஸகல ப் பிரஜைகளையும் படைக்கலானுர். (37) பிந்தி யோர் சமயத்தி லப் பிரம்மனுக் காங்காரம் ஜனிக்கலாகி ஸ்ரீ பைரவமூர்த்தியா லோர் தலை யறுக்கப்படலானபடியா லவர் நான்முகனென்ற பெயரையடைந்தார். (38) ஓ! தாணிதேவர்களே! திருநீறு தரித்தமாத்திரத்திஞல் ஸ்ரீவிஷ்ணுவுக்குக்கூடத் திரண்ட வஞ்ஞானம் நாசமாகி நான்முகனும் பிள்ளையாய்ப் பிறந்தனரல்லவா! (39) ஓ! முனிவர்களே! பூர்வத்தில் மகா பலவானுகிய வீரபத்திரஸ்வாமியானவர், கொடிய நடைக்காரர்களான ஸர்ப்பாசுரன், பஞ்சமேட்டிராசுரன், (அகண்டவாண்குறியைக்கொண்டவன்)பாவியானவக்கினியசுரன்இவர்களால்கொல்லப்படலானஸகல தேவர்களையும் திருநீறுபோட்டுப் பிழைப்பூட்டிவிட்டனர். (40) தவிரவும் வாமதேவனென்ற மாமுனிவருடைய திருநீறணிந்த திருமேனிதனிற் பட்டமாத்திரத்திஞ லனேக ஜன்மங்களாய்ச் சம்பாதித்த மகா பாதகங்களை யெல்லாம் கவசமாயணிந்தவனுன வோர் துஷ்க ராஜன் தானடைந்திருந்தப் பிரம்மராக்ஷஸ ஜன்மத்தை யிழந்து மோக்ஷஸாம்பிராஜியமடையலானுன். (41)

கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! தமிழ் நாட்டில் மிகுந்த கெட்ட வெண்ணம் கொண்டவனும், சகல ஸ்திரீகளோடும் புணருவோனும், மகா பாவியும், கண்டவிடங்களி லுண்போனும் மெத்தத்துராத்துமனுமாய்ப் பெயர்போன வோர் பார்ப்பா (42) னவனது வினையினுலோர் பிராம்மணக் கிராமத்தி லிறந்துபோகலானுன். அப்போது ஜனங்க ளவனைக் கால்தனிற் கயிற்றைக்கட்டி யூருக்கு வெளியி லிழுத்தெறிந்தார்கள். (43) அப்போ தியமதூதர்களு மப் பாதகனைத் துரிதமாய் நாகத்திற்கொண்டுபோட்டார்கள். இப்படி யிருக்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சாம்பற்பற்றலுற்ற கால்களைக் கொண்டதானவோர் நா யப் பிராம்மணப் பிணத்தைத் தின்பதற்காக வந் தவனது நெற்றி, இரு புயங்கள், மார்பு இந்த விடங்களிலெல்லாம் மிதித்துத் திரிந்தமாத்திரத்தி லம் மறையவன் நற்கதி யடைந்து விட்டானன்றோ? (44-45)

ஒன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௰-வது அத்தியாயத்தினர்த்தம்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! திருநீற்றின் மகிமையைப்பற்றி மற்றோர் கதை சொல்லுகின்றேன்; நீங்களெல்லோர்களு மதனைச் சாக்கிரதையாய்க் கேட்பீர்களாக. (1) வங்கதேசத்திற் சுதிபனான புஜபலனென்ற வோ ரரசன் கொடை கொடுப்பதில் வல்லவனும், நல்லோர்களுக்கு மித்திரனும், குடிகளைக் காப்பாற்றுவதில் முயன்றவனுமா யிருந்தான். (2) மகா புத்திசாலியான அவ்வரசன் மாதப்பிறப்பான வோர் புண்ணியதினத்தில் பிராம்மணர்களுக்குமிகுந்த தானங்கள்கொடுத்தான். (3) அப்போது பற்பல தேசங்களிலுள்ளப் பிராம்மணர்களெல்லா மதற்காக வங்கு வந்தார்கள். விதர்ப்பதேசத்திலிருந்து ஸுசீலனென்ற வோர் சிறந்தப் பிராம்மண (4) னவ் வரசன் தானம் செய்வதைக் கேட்டுவந்தார். அப்போதெல்லாப் பார்ப்பார்களு மப் பிராம்மணச் சிரேஷ்டரைக் கண்டு வந்தனித்துப் போட் (5) டரசனிடம் சென்று "ஓ! ராஜனே! ஸுசீலனென்ற விப் பிராம்மணன் நல்லொழுக்கமுடையோரும், வேதமோதுவதில் முயன்றவரும், சகல சாஸ்திரப் பொருட்களின் தத்துவங்களை யறிந்தவரும், எப்போதும் ஸ்ரீ பரமேசுவரனிடத்தே மனதை நாட்டியவருமாகையா (6) லிவருக்கே முந்திய தானத்தைக் கொடுத்தல்வேண்டும். ஏனென்றாலிவருக்குச் சுவர்ப்பதனத்தைக் கொடுத்தபோதி லும தழிவற்ற பயனைக் கொடுக்கு" (7) மென்றெல்லாப் பிராம்மணர்களு மவ் வரசனை நோக்கிச் சொல்லுகையி லப்போது பெருமைபொருந்திய வப் புஜபலராஜனு மவர்களது வசனத்தைக் கேட் டப்படியே நல்லதென் றப் பிராம்மணச் சிரேஷ்டரைக் கூப்பிட்டு தானம் கொடுக்க வெத்தனப்படுகையி லப் பிராம்மணன் சொல்லியதாவது:—($8\frac{1}{2}$) "ஓ! ராஜனே! நீர் திரிபுண்டிரோத் தூளனங்களாகத் திருநீறணிதல்வேண்டும்; (9) இல்லாவிடில் நீ சொன்ன மகா மகா தானங்கள் செய்தபோதிலு மதற்குப் பயனே யில்லை. கேளீர்! பூபதியே! விபூதி யணியாம லேதாகிலும் சில கருமங்களைச்செய்தா (10) லது நிஷ்பலமே யென்பதிற் சந்தேகமே யில்லை" யென, இவ்வா றவ் வந்தணரது வசனத்தைக்கேட் டரசன் தனக் கொழுப்பினால் (11) கேளீர்! முனிவர்களே! அம் மறையவனைநோக்கிக் கர்வத்தோடு வசனமுரைத்ததாவது:—"ஓ! பார்ப்பான்! உம் நிமித்தமாய் நா மெந்த காரணத்துக்காகத் திருநீறணியவேண்டும்? (12) தானம் செய்கையில் திருநீறிடாத்தினால் நமக்கென்ன சக்தியில்லாமற்போயிற்று? திருநீறிட்டுக் கொண்டுதான் தானம்பண்ணவேண்டுமென்பதென்னவிதி?" (13) என்

றுரைக்கலான அவ் வரசனை நோக்கி வேதியர் பின்னு முரைத்ததாவது:—"கேளீர்! ராஜனே! பஸ்மத்திலாவது அதனைத் தரிப்பதிலாவது யாவருக்குப்புத்தி (14) யுண்டாகவில்லையோ அப்பேர்க்கொத்த பாதகனுக்குச் சம்பத்து விருத்தி யாகாதது மின்றி யோர்கணத்துக்குள் ளேள்ளதும் நசித்துப்போய் மிகுந்த தரித்திர முண்டாகி வியாதிமேலிட் (15) டவயவங்களும் குறைந்து போய்விடு மென்பதிற் சந்தேகமேயில்லை. மேலுமப்பாதகனுக்குப் பிள்ளை முதலியவர்கள் சாகலாகிக் கொடிய நரகவாதையும் நேரிடும். (16) ஓ! ராஜசேகரா! ஆகையால் ஒவ்வொருகருமத்தின் தொடக்கத்திலும் பரிசுத்தம் பொருந்திய திருநீற்றைத் தரித்துக்கொள்ள வேண்டும். ஓ! ராஜனே அவ்வாறு கொடுக்கும் திரவியம் தான் வாங்குவோருக்கும் விருத்தியாகுமேயின்றி மற்ற தாகா" தென, (17) கேளீர்! தரணிதேவர்களே! இவ்வா றம் மறையவரது வசனத்தைக் கேட்டு ராஜன் பரிகாஸத்தோடு சிரித்துக்கொண்டு வார்த்தை யுரைத்ததாவது:— (18) "ஓ! ஐயரே! நல்லபுண்ணியவானாகிய வெமக்குக்கூட எவ்வாறு தரித்திர முண்டாகும்? பிள்ளை முதலியோ ரெவ்வாறு நசிப்பார்கள்? அங்கங்க ளெப்படி யீனமாகும்? (19) வியாதிகளெல்லாம் தூரத்திலோடியே போய்விடும்; நீர் வீணு யேதோ பிதற்றுகின்றீர்; ஒருக்கா லவ் வியாதிகள் நமக்கு நேர்ந்துவிடில் ஓ! பார்ப்பான்! அப்போ தும்மிடம் வந்து திருநீறுவாங்கி யிட்டுக்கொண்டு நமது துன்பங்களை விலக்கிக்கொள்வோம்; ஓ! அய்யரே! நல்லது! நீரிப்போது சீக்கிரமாய் நம் கையிலிருந்து தானத்தை வாங்கிக்கொள்ளு" மென, (21) இவ்வா றவனது வசனத்தைக் கேட்டுப் பிராம்மணன் நகைத்துக்கொண்டெழுந்து "ஓ! ராஜனே! நமக்கிப்போ தும்மது தானம் வேண்டா" மென்றுவிட்டுக் கேளீர்! முனிவர்களே! அவ் வேதியர் தமது தேசத்திற்குப் புறப்பட்டனர். அப்போ தரசன் மனையாளானவள் பொய்யாய்த் தும்மினுள்; ஓ! இது மிகவும் கஷ்டம்! (23) பிற கிப்படிச் சிலகாலம் சென்றதன்மே லவ்வரசன் மிகுந்த நோய் கொண்டவனுகி வீட்டுக்குள்ளே கிடந்துவிடலானுன். (24) ஓ! கோ! மேலுமப்போது மிகுந்த அம்மையின் கொடுமையினுல் சைனியங்கள் மடிந்துவிட்டன. ஆகையினுல் துராத்துமனுகிய அவ்வரசன் சத்துருவினுல் நகரத்தைவிட்டுத் துறத்திவிடப்பட்டவனுகி (25) யப்போது பயங்கொண்டு பெண்டீரோடுகூடப் பயங்கரமான காட்டுக் கோடிப்போனுன். அங்கு கொடியோனுகிய வோர் வேட னரசன்பெண்டீரைப் பிடித்துக்கொண்டு போய்விட்டான். (26) அப்போ தப் பாவியானவன் பெண்டீரிழந்தவனுகி மனத்துன்பப்பட்டுக்கொண்டு மெத்தப்பசிதாகங்களோடங்கு திரி

கையில் (27) பிச்சையிரறந்து மப் பாதகனுக்கொருவரும் கொடாத படியா லப்போதுக்கப்போ தவன் திருட்டினுல் வயிறு வளர்த்துவந்தான். (28) இவ்விதமா யவன் சிலகாலம் போக்கியதன்மேல் கேளீர்! முனிவர்களே! ஒருக்கா லவன் திருடும்போ தப் பாதகனை (29) யந் நகரத் தலையாரிகள் கண் டவனை யுடனே கயிற்றிறுற் கட்டி யப் பட்டணத்துக்குவெளியிற்கொண்டுபோய்க் கைகால்களைவெட்டிவிட்டார்கள். (30) அப்போ தவன் மெத்தப் பசிதாகங்களால் வருத்தமடைந்துபிற கேதோ நல்வினையின்வசத்தினுல் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! விதர்ப்பதேசத் தாசனுடைய குண்டினமென்ற நகரம்போய்ச் சேர்ந்து (31) மெத்தத் தீனனும் பறப்புள்ளவனுமாய்ப் பிச்சையெடுத்து ஜீவித்துவந்தான்.

கேளீர்! முனிவர்களே! இச் சமயத்தி லத் தூரத்துமனுடைய மனையாளோ வென்று (32) லவளைப் பிடித்துப்போன வேட ஞேர் புலியினு லடிக்கப்பட்டுச் சாகலாகி யம் மகா பாவியும் திருடியதால் மூக்கறுக்கப்பட்டவளாகி மிகுந்த பசியால்வாதையடைந் தேதோநல்வினையின் வசத்தினு லதேபட்டணத்திற்கு வந்து சேர்ந்தாள். (33½) பிற்பாடப் புருடன் பெண்டி ரிருவர்களு மொருவரையொருவ ரறியாம லொருவரோடொருவ ராங்காரப்பட்டவர்களும், உள்ளத்திலும் வெளியிலும் மெத்த வியாதியால் பீடிக்கப்பட்டவர்களும், பூச்சிவைத் தூனீர் வடிய வுற்ற விரணங்களைக் கொண்டவர்களு மாய்ப் பிச்சைபோடு பிச்சை போடென் றுறக்கக்கூவிக்கொண் டங்கு திரிந்துவருகையில் (35) கேளீர்! வேதியர்களே! ஒரு சமயத்தில் ஸுசீலனென் றப் பிராம்மணன் வீட்டு வாசலில் வந்தார்கள். அப்போது ஸுசீலரு மவ்வாறு கூவுவோர்களைக் கண்டு மிகவும் மனதிரக்கம் கொண்டவராகி (36) "ஓ! கோ! நீங்களிருவரும் யாவர்? என்னபாவத்திற்காக விப்பேர்க்கொத்த பயனை யனுபவிக்கிறீர்கள்? என் றப் பிராம்மணோத்தம ரப் பாதகர்களை நோக்கி வினவுகையி (37) லவ் வாசன் சொல்லியதாவது:—"ஓ! சுவாமீ! யான் புஜபலனென்று பெயர்போன வங்கதேசத் தாசன். ஏதோவோர் கொடிய பாவத்தினு லிப்பேர்க்கொத்த நிலைமையை யடைந்தே" னென, இவ்வா றவனது வசனத்தைக் கேட் டவ் வேதியர் மெத்த வாச்சரியம் கொண்டவராகி மூக்கினில் விரலை வைத்துக்கொண் டவனைநன் ரு யுற்றுப்பார்த்து "அடா! முந்தி யெந்தனைப் பார்த்திருக்கிற ஞாபக முனக் கிருக்கின்றதா" வென்று கேளீர்! பிராம்மணச் சிரேஷ்டர்களே! அந்த சுசீலர் கேட்கையி (40) லாசன் "ஓ! ஸ்வாமீ! முந்தி யும்மைப்

பார்த்ததாக வெனக்குக் கொஞ்சமேனும் தோன்றவில்லை; ஏனென்று லெனக்கு க்ஷணத்துக்கு க்ஷணம் புத்திப் பிரமம் விருத்தியாகின்ற" தென, (41) பிராம்மணனும் "அடா! முந்தி நீ மிகுதியாய்த் தானம்பண் ணும்போது யான் திருநீறணிந்துகொள்ளவேண்டு மென் றதற்கு நீ திரவியம், யௌவனம் இவைகளின் கர்வத்தினு லதனை மறுத்துவிட் டபடியால் (42) யானுந்தனுல் கேட்டுக்கொள்ளப்பட்டும் தானம் வேண்டாமென்று திரும்பி வந்துவிட்டேனல்லவா? ஆகையால் திருநீற்றை யவமதித்ததால்தா னிப்போர்க்கொத்த கதி யுந்தனுக்கு நேரிட்டதென்பது நிச்சய"(43) மென, இவ்வா றச் சுசிலன் வசனத்தைக் கேட்டவுட னச்சங்கதியைக் கனவுகண்டதுபோல் நினைத்துக்கொண் டாசன் தண் டம்போல் பூமியில் வந்தனம்பண்ணிக் கைகளை கட்டிக்கொண்டு (44) வசனமுரைத்ததாவது:—"ஓ! பிராம்மணேந்திரா! ஆம், ஆம், நீர் வந்திருந்து மும்மால் தான மங்கிகரிக்கப்படவில்லை. (45) யானும் திருநீறணிந்துகொள்ளாம லும தாக்கினையைக் கடந்துவிட்டேன்; ஆகையா லித் தோடத்தினுல்கா னிப்போர்க்கொத்த கதி யெனக்கு நேரலானது நிச்சயம். (46) ஆகையால் ஓ! சுவாமீ! இப்போ தெந்தனுக்குத் திருநீறு கொடுத் தெந்தனை யிப்போர்க்கொத்த மிகுந்த ஆபத்திலிருந்து காப்பாற்றல் வேண்டு" மென் றப் பிராம்மணனை யரசன் நமஸ்கரித்தான். (47) பிற்பாடு மகா புண்ணியாத்துமாவாகிய சுசிலரும் மெத்தப் பரிசுத்தம் பொருந்திய திருநீற்றையெடுத்து "இதனைத் தரித்தமாத்திரத்தில் சகல பாவங்களிலிருந்தும் விடுபடுவதிற் சந்தேகமேயில்லை. (48) மேலு மெல்லா ஐசுவரியங்களையு மடைந்து பெண்டீரோடுசேர்ந்து வியாதிகள் தொலைந்து சத்துருக்களையும் வெற்றிபெறலாகும்." (49)

பத்தாவது அத்தியாயம்.

முற்றிற்று.



உபதேசகாண்டம் கக—வது அத்தியாயத்தினர்த்தம்.

அப் பிராம்மணோத்தம ரிவ்விதமுரைத்தத் திருநீற்றை யாசனுக்குக்கொடுக்க, அவன் மகா பரிசுத்தமான வத் திருநீற்றை வாங்கித் தன் தேகமதிற் பூசிக்கொண்டவுட (1) னதேக்ஷணத்தி லவனது வெட்டுண்ட கை கால்களு முண்டாகிச் சகல பிணிகளும் தறிபட்டு முன்

போலவே ஆகிவிட்டான். (2) பிறகாசன் தன்னுருவத்தைப்பார்த்து மெத்த வாச்சரியம்கொண்டவனாகித் தண்டம்போல் வந்தனித்துவிட்டவர் முன்னிலையில் மிகுந்த பக்தியோ டஞ்சலிகொண்டு நின்றான். (3) பிறகு மூக்கறுபட்ட அவனது மனைவி யவனைப்பார்த்து மிக வாச்சரியம் கொண்டவளாகிக் கேளீர்! முனிவர்களே! அவனைத் தன் கணவனை வாசனென்றே யறிந்து (4) ஓ! ராஜனே! பிணிகளால் பீடிக்கப்பட்ட சரீரத்தையுடைய விந்த நானுமது மனைவியே! ஆகையா லம்மாமுனிவரிடமிருந்து மகா பரிசுத்தம்பொருந்திய கொஞ்சம் திருநீற்றை வாங்கி யெந்தனுக்குக் கொடுக்கவேண்டும். (5) அதனைத் தரிப்பதினால் யானு மிப்போது துக்கங்கள் தொலையப்பெறுவேனென்பதிற் சந்தேகமில்லை" யென, இவ்வா றவளது வசனத்தைக் கேட் டாச னவளுந் குத்தாமுரைத்ததாவது:—(6) "ஓ! பெண்ணே! எந்தத் தோஷத்தினா லுந்தனுக்கு மூக்கறுபடலாயிற்றென்பதை நீ யெந்தனுக் குரைக்கவேண்டு" மென, ($6\frac{1}{2}$) மனைவி கூறுகின்றாள்:—"ஓ! ராஜேந்திரா! இப் பிராம்மணோத்தமர் தானம் வேண்டாமென்றுவிட்டு வெளிச்செல்லும்போது யான் திரவியம், யௌவனம் இவைகளின் கர்வத்தினால் துஷ்டத்தன்மையாய்த் தும்மிவிட்டு 'ஓ! அய்யா! இதோ சகுனத்தடையாகின்றது; ஆகையா லித்தானத்தைப் பெற்றுக்கொண்டுபோ' மென்று, பரிகாஸமாய் வசனமுரைத்தேன்.($8\frac{1}{2}$) ஆகையா லித்தோடத்தினால்தா னென் மூக் கறுபடலாயிற்றென்று நான் சத்தியமாய்ச் சொல்லுகின்றே" னென்றாள். (9) அதுகேட் டாசனு மது சரியென்றே நிச்சயித்துக்கொண்டுப் பிராம்மணரைத் தண்டம்போல் வந்தனிதது "ஓ! பிராம்மணேந்திரா! எனது பாரியாகிய விஸ்திரீயும் சத்தியமா யதே தோடத்தினால் மூக்கறுபட்டிருக்கின்றாள். ஆகையால் ஓ! கருணைக்கடலே! இவளைச் சீக்கிரமா யிரக்ஷித்தருளவேண்டு" (11) மென்றுரைக்கலான வாசனைப் பிராம்மணன் பயப்படவேண்டாமென்று கூறிக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! கொஞ்சம் திருநீற்றையெடுத் 'திதனை யுந்தன் மனைவிக்குக் கொ' டென்று கொடுக்க, (12) இராஜேந்திரன் மகா பரிசுத்தமான வதனை வாங்கி மனைவியிடம் கொடுத்தான். பிற கவளு மதனைப் பக்தியாய் வாங்கித் தேகம் முழுதும் பூசிக்கொள்ள, (13) உடனே யம் மூக்கானது திருநீற்றின் பெருமையால் முன்போல் வளர்ந்துவிடலாகி, வியாதிகளெல்லாம் நீங்கி யவ ளதிசீக்கிரத்தில் முந்திய வடிவத்தைக்கொண்டுவிடலானாள். (14) பிற்பா டப் புருடன் பெண்டீ ரிருவர்களும் மனக்களிப்புற்றவர்களாகி யஞ்சலிகொண்டு தண்டம்போல் வந்தனித்

சுவனைத் துதித்துக்கொண்டு நின்றார்கள். (15) கேளீர்! முனிவர்க ளே! இந்தச் சமயத்தி லவ் விதர்ப்பதேசாதிபனான விசித்திரத னென் ற வரச னிதனைக் கேள்வியுற்று மெத்த மனக்களிப்புற்றனாகித் (16) துரிதமாயங்குவந் தப் பிராம்மணனைத் தண்டம்போல் பூமியில்வந்தனித் து "ஓ! சுவாமீ! தேவரீரா லிரக்ஷிக்கப்பட்ட இவ்வரச னெந்தனுக் கம் மான்மகன்; (17) அவனெங்குகான் போய்விட்டானோ வென்று யான் மெத்த விசாரமுற்றிருந்தேன். தேவரீரது கருணைவசத்தினா லவனை யிப்போது பார்க்கலாயிற்" றென்று சொல்லிவிட் டவ் வரசன் (18) புஜ பலனைத் தழுவி யவனுக்கு மெத்த நேர்த்தியான ஆடையாபரணங்களைக் கொடுத்துவிட் டவன் மனைவிக்கும் நல்ல வஸ்திரத்தைக் கொடுத்து (19) அனேக வுபசார வசனங்களைச் சொல்லித் தன தரண்மனைக் கழைத்துப் போ யவ் விருவர்களுக்கும் பக்ஷியபோஜியங்களுட னுண்டியளித்துப் (20) பிற கொருவரோடொருவ ருபசாரமாய்ப் பலவாறு பேசிக்கொ ண்டபிற கவ் வரசன் புஜபலனுக் கனேகம் குதிரைகள், சேவகர்கள், ப டைகள் இவைகளைக்கொடுத்தவனையவன துபட்டணத்துக் கனுப்பினான். ($21\frac{1}{2}$) அப்போ தவ னேகாக்கிரசித்தனாய் ஸ்ரீ சிவபிரானை மனதி னில் தியானித்துக்கொண்டே யிருந்த சைனியங்களோடு புறப்பட்டு ஸுசீலர் வீட்டுக்கு வந்து மனைவியோடுகூட மெத்தப் பக்தியுடன்தண்ட ம்போலவரை வந்தனித்து (23) "ஓ! சுவாமீ! நாங்க ளிங்கு தேவரீ ராலல்லவோ சுகமா யிரக்ஷிக்கப்படலானோம். இப்போது யான் தேவரீ ருடைய கருணைவசத்தினாற் சுயதேசத்திற்குப் புறப்படலாகின்றேன். (24) ஆகையால் யான் சத்துருவை விஜயம்பெறும்படியாய்க் கொஞ்ச மெந்தனுக்குத் திருநீறு கொடுத்தருளவேண்டு" மென்றுரைத்துப்போ ட்டு விநயத்தோடு வணக்கமாய் நிற்கலான அவ் வரசனை நோக்கி யப் பி ராம்மணோத்தமன் (25) "ஓ! ராஜனே! மகா மகிமைபொருந்திய விப் பஸ்மத்தினா லுமக்குச் சத்துருபய முண்டாகவேமாட்டா" தென்று சொல்லிவிட்டுத் திருநீற்றை நன்றாய் மந்திரித் தவனுக்குக் கொடுக்க, (26) மகா பரிசுத்தம்பொருந்திய வத் திருநீறுதனை வாங்கி நெற்றிமீ திட்டுக்கொண் டஞ்சலியுட னவரை வந்தனித் தாத்திரவுபெற்று (27) யிருந்த சைனியங்களோடு கூடியவனாகி மெத்தச் சந்தோஷத்துடன் புறப்பட்டான். அப்போ திப் புஜபலனுடைய சத்துருக்களை யதம்ப ண்ணிவிட் டவனது தேசத்தையும் தன் கைவசப்படுத்திக்கொண்டு நா ள்தோறும் குடிகளை மிகுதியா யிமிசித்துவரலான மெத்தத் துராத்தும னும் பாவியுமாகிய வோ ரிராக்ஷத னவன் புறப்பட்டு வருவதைக் கேட்

(28-29) டவனைக் கொன்றுவிட விருப்பமுற்றவனாகி மகா கோபத்தோடு புறப்பட்டுவந்ததன்மேல் திருநீ றிடப்பட்ட அவ் வாசனது முகத்தைப் பார்த்தவுட (30) னவன் மகா கோரமாகிய தன திராக்ஷத தேகத்தைவிட்டுச் சிறந்த தேவசரீரத்தை யடைந்துவிடலானான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது புஜபலனு மத் தேவனைப் பார்த்து மெத்த வாச்சரியம்கொண்டவனாகி யவனது வரலாற்றைக் கேட்க விருப்பமுற்று 'நீர்யார்' ரென் றவனை வினவ, அதற் கத் தேவன் "ஓ! ராஜச்சிரேஷ்டனே! எனது விருத்தாந்தங்களை யாதியோடந்தமாய்ப் பிறகுரைக்கின்றேற" (32) னென்று சொல்லிவிட் டவனை யவனது நேர்த்தியான பட்டணத்திலுள்ள மெத்தச் சிறந்ததும், பற்பல விசித்திரங்களால் விசித்திரமுள்ளதுமான வரண்மனைக்(33) கழைத்துவந் தவனை மகாச் சிரேஷ்டமான சிங்காதனத்தி லுட்கார்த்தி நல்ல இலக்கினமான சுபவேளையில் நேர்த்தியும் மங்களகரமுமான நாதங்களைக்கொண்ட கீதவாத்தியங்களோடு சுற்றிலும் நகரத்திலுள்ள ஜனங்களால் சூழ்ப்பெற்றவனாகி மிகுந்த சந்தோஷத்துட னவனுக்குத் திருநீற்றினால் பட்டங்கட்டிவைத்து (34-35) "ஓ! ராஜனே! எந்தன் விருத்தாந்தத்தைச் சொல்லுகின்றேன்; நீர் ஜாக்கிரதையாய்க் கேட்பீராக."

"ஓ! ராஜனே! பூர்வத்தில் யான் மேற்றிசைக்கதிபனான வருணன்; (36) நான் சமுத்திர மத்தியிலுள்ள பாதகர்களான அசுரர்களாலு மரக்கர்களாலும் மிகுதியாய்ப் பீடிக்கபபட்டபடியால் மெத்தப் பயங்கொண்டவனாகித் தேவேந்திரனிடம் சென்றேன். (37) அப்போ தவரால் சங்கதி யென்னவென்று கேட்கப்பட்டபோது யான் சொல்லியதாவது:—"ஓ! தேவேந்திரா! ஸமுத்திரத்திலுள்ள பாதகர்களான விராக்ஷதர்களு மசுரர்களும் ஜகமத்தை வாதிக்கின்றார்கள். (38) மேலுமெந்தனிருப்பிட மவர்களாற் சூழப்பட்டிருக்கின்றபடியா லங்கு யான் போக முடியவில்லை" யென் றுரைத்துவிட்டுக் கேளீர்! ராஜனே! அவ் விந்திரனண்டையி லதற்காகக் காத்திருந்தேன். (39) அச் சமயத்திலங்கு தவங்களுக்கு நிலையாகிய வகஸ்தியமாமுனிவர் வந்தார். அப்போது தேவராஜ னவரைக் கண்டவுடன் வந்தனித்து அர்க்கியபாத்தியம் முதலிய வுபசாரங்களா லவரைப் (40) பூஜித்து நேர்த்தியான வாசனத்தி லுட்காரச்செய்து தானு மவர தாக்கினையின்படி யங் குட்கார்ந்தான். அந்தச் சந்தர்ப்பத்தில் நாரதமுனிவரு மங்கு வந்தார். (41) பின்பவரு மிந்திரனால் பூஜிக்கப்பட் டங்கு வீற்றிருந்து "ஓ! அகஸ்திய முனிவரோ! ஓ! தேவராஜனே! யான் பூலோகத்தில் சில வற்புதத்தைப்

பார்த்துவிட்டுச் சீக்கிரமா யுங்களிடத்திற்கு வந்திருக்கின்றேன். அதனை நீங்கள் கேட்கவேண்டும். (42½)

காச்மீர தேசத் ததிபனுன, அயலரசர்களை வெற்றிபெற்ற, வஜ்ஜிரதேகியென்று பிரஸித்திகொண்ட வோரரசன் ஸுதர்மனென்ற தனது புரோகிதன் (43½) கல்வி கற்காதிருந்ததைக்கண் டப்போது வசனமுரைத்ததாவது:—(44) "ஓ! ஐயா! பிராம்மணர்களுக் கலங்காரமான வித்தையை நீரேன் கற்கவில்லை? கல்வியற்ற வுமது முகமானது சுடுகாடுபோ லிருக்கின்ற" (45) தென, இவ்வா றரசன் வசனத்தைக்கேட்டுப் புரோகிதன் சொன்னதாவது:—"ஓ! ராஜனே! எந்தத் தோடத்தினுலோ யா னென்ன படித்தபோதிலு மெனக்கு வித்தையே (46) வருவதில்லை. ஆகையால் நான் ஜகத்பிரபுவான மகாவிஷ்ணுவை யாராதித்து நிச்சயமாய் வித்தையைப் பெற்றுக்கொள்ளுகின்றே" னென்று சொல்லிப்போட் டப் பார்ப்பான் (47) ஸ்ரீ மகாவிஷ்ணுவை வேதமந்திரங்களாற் பலவாறு யாராதித்தான். அதன்மேல் விஷ்ணு பிரசன்னராகி யவனுக்கு வித்தையைச் சந்தோஷமா யருள்செய்துவிட்டுச் சடிதியி லந்தர்த்தான மடைந்தார். (48½) பிறகச் சுதர்மன் கல்வியடைந்தவுடன் மெத்தச் சந்தோஷமுற்றவனுகி யப்பொழுதே (49) யெல்லாப் புலவர்களுக்கு மிருப்பிடமான வரசனண்டைக்குச் சென்று தான் வரனடைந்ததை யவ் வரசனுக்கு மெத்த வாதரவுட னறிவித்தான்.(50) அதன்மே லவ் வஜ்ஜிரதேகி ராஜன் மிகுந்த சந்தோஷமடைந்துப் பிராம்மணர்களைக் கூட்டிவைத்து மெத்த மங்களகரமான வோ ரியாகம்செய்கையி (51) லவன் மிகுந்த சந்தோஷத்தோடு புலவர்களுக் கனேக தானங்கள் செய்தான். அப்போது சுதர்மனும் தன் தர்க்கவாதத்தினுல் பண்டிதர்களையெல்லாம் கண்டனம் செய்யலானுன்.(52) இவன் முன்னிலையி லுத்தரம் சொல்வதற்குற்ற வல்லவ னொருவருமில்லை. ஆகையா லவன் பண்டிதர்களையெல்லாம் கொடிய வார்த்தையா லவமானம் செய்யலாகையி (53) லப்போது சகல லோகங்களுக்கும் பாட்டனுரான நான்முகத்தேவ னோர் கிழப் பார்ப்பா னுருவத்தோ டங்கு தோன்றி யெழுந்துநின்று வசனமுரைத்ததாவது:—(54) "ஆ! கா! கல்வியானது வினயத்தோடகூடி லது மூவுலகினிலும் புகழப்படலாகும்: அது வினயத்தோடு சேராவிடிற் சகல ஜனங்களாலு மிகழவேபடலாகும். (55) ஆகையால் பண்டிதராகிய நீரு மிப் பண்டிதர்களையெல்லா மவமானம் செய்யலாகாதன்றே! ஏனென்றுல் பிறப்பு முதற்கொண்டு புலவரா யிருக்கலுற்ற புருடன் பார்மீ தொருவருமில்லை" யென, (56) இவ்வாறவாது

வசனத்தைக்கேட் டச் சுதர்மன் வெகு கோபத்தோடு வசனமுரைத்த
தாவது:— "அடா! கிழவா! நீ யுந்தன் பண்டிதத்தன்மையை யிங் கொ
ன்றும் காட்டவேண்டாம்; சும்மாவிரு: (57) மேலு மிச் சபையிலுள்ள
வெல்லோர்களும் கல்வி லேச மில்லாதவர்களா லவர்கள் வெறும் புத்தி
மூடர்களே! ஆகையால் நீயுமோர் மூடபுத்திக்கார னென்பதிற் சந்தே
கமேயில்லை. விஞ்ஞங்காரம் கொண்ட வெறும் கிழவனாகிய வுந்தனுக்
கென்ன தெரியு" மென, இவ்வா றிகழ்ச்சியான வசனங்களைக் கேட்டவு
ட னவர் பிராம்மணவேடத்தைவிட் (59) டங்கு நான்கு முகங்களோடு
காணப்பட்டு மெத்தக் கோபாவேசம் கொண்டவராகி "அடா! மூடா!
தன்னைத் தானே பண்டிதனாகப் பாராட்டலுற்ற வுந்தனுக்கு யாம் புத்தி
யுரைத்தும் (60) நீ வீண் கொழுப்பினால் கொஞ்சமேனும் வித்தையி
னிலேசத்தைக்கூட அறியவில்லை. மேலு மடக்கத்தைவிட்டு புத்தி
மௌட்டியத்தினால் நம்மைக்கூட நிந்திக்கலாகின்றாய். (61) ஆகையா
ல் மகா பாவியான வுந்தன் நாவானது அசைவற்றுப் போகக்கடவ" தெ
ன் றிவ்விதமா யவனைச் சபித்துவிட்டுப் பிரம்ம னவ்விடத்திலே அந்தர்
த்தானமடைந்துவிட்டனர். (62)

பதினோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் கஉ-வது அத்தியாயத்தி னர்த்தம்.

"அப்போதேயப்பாவியின்நாவான துதம்பித் தசையவேயில்லை.
அவ னச்சபாமண்டபத்தின் கண்ணே கேவல மோ ரூமையன்போலிரு
ந்துவிட்டான். (1) பிற காச னிவ்வற்புதத்தைப் பார்த் திதென்னவெ
ன் றாலோசித்துக் கேளீர்! அகத்திய தேவேந்திரர்களே! அப்போ தவ
ன் மிகுந்த கவலையடைந்தான். (2) பிற்பா டாசன் சுதர்மன் தம்பியா
ன விசுத்தனை நோக்கி "ஓ! விசுத்தா! நீர் மெத்தப் புத்திசாலியல்ல
வோ! இனி செய்யத்தகுவதென்ன" வென, (3) இவ்வா றவ் வாசன்
வசனத்தைக் கேட் டவ் வந்தணன் வசனமுரைத்ததாவது:— நா னிப்
போது கமலக்கண்ணனான விஷ்ணுவை யாதரவுட னாராதித்து (4) ஓ
ரிடத்தும் பழுதுபெறாத முன்போலுள்ள வாக்கை யென தண்ணனுக்

கடைகின்றே" னென்று கூறிவிட் டத் தம்பியானவன் புத்தியை மற்றெங்கும் செலுத்தாமல் விஷ்ணுவைப் பூஜைசெய்தான். (5) அப்போ தவனுக்கும் திருமால் மெத்தப் பிரியத்தோடு துரிதத்தி லாவிர்ப்பவிக்கையி லவன் "ஓ! அடியார்களுக் கபயமளிக்கலுற்ற பகவானான மகாவிஷ்ணுவே! தேவரீரடியனான வென தண்ணனைப் பிரம்மன் சாபத்தினின்று துரிதமாய் விலக்கி யருள்புரியவேண்டு" மென, (6½) அதுகேட்டு ஜகத்ஸ்வரூபியாகிய விஷ்ணுவுரைத்ததாவது:— (7) "இவன் முந்தி நமது வரப்பிரஸாதத்தினால் வித்தையையடைந்து நல்லோர்களான புலவர்களைக் கொடியவார்த்தைகளா லிகழ்ந்தது சரியா? (8) விநயத்தோடுகூடிய வித்தைக்கே யெங்கும் மரியாதையுண்டாகும். அவன் புலவர்களை யவமானம் செய்தபடியா லப் பிரம்மன் மிகுந்த கோபத்தோடு சபித்துவிட்டார். (9) ஆகையாலிவனை யிச் சாபத்தினின்று விலக்குவதற்கு நம்மால் முடியா" தென, இவ்வாறு விஷ்ணுவின் வசனத்தைக்கேட் டவன் பின்னும் சொல்லியதாவது:—(10) ஓ! ஸ்வாமீ! லோக குருவாகிய தேவரீருக்கு யாங்கள் தாஸர்களல்லவோ! ஆகையால் தேவரீ ரிப்பிழைதனை மன்னித்துச் சீக்கிரமா யிவனைச் சாபத்தினின்று விலக்கியருளவேண்டு" மென, (11) இவ்வாறவனது வசனத்தைக் கேட்டுச் சகல ஜகத்ஸ்வரூபியான ஸ்ரீ விஷ்ணுவானவர் மறுபடியு மிவனுக்குக் கல்வியைக் கொடுத்தா லிவன் புலவர்களை யின்னு மிகழ்வா" னென்று (12) மனதினி லாலோசித்துக்கொண் டப்போது திருவாக்கருளியதாவது:— "அடா! இன்று முடியாத காரியத்தி லேன் நீ வீணாய்ப் பிரயத்தினப்படுகின்றாய். (13) இப்பொழுது பிரம்மன் சாபத்தினின்று விடுவிப்பதற் கெந்தனுக்கு வல்லமையில்லை" என, இவ்வாறு திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீ கோவிந்தனைப் பார்த்தவன், மெத்தக் கோபத்துடன் வசனமுரைத்ததாவது:—(14) "ஓ! புருஷோத்தமா! பூர்வத்தில் தவசியாகிய விசுவாமித்திரர்கூடத் தம் தவத்தின் பெருமையினால் தன்னையடுத்த திரிசங்குராஜனைச் சொர்க்கத்திற் கனுப்பியிருக்கிறார். (15) இப்படியிருக்கையி லந்தியவனிடத் திவ்வளவு தயவுகூடத் தேவரீருக் கில்லாமற் போயிற்றே!" என, இவ்வா றவனது கொடிய வசனத்தைக் கேட்டு ஸ்ரீ விஷ்ணு கோபாவேசங் கொண்டவராகி (16) "அடா! நீ புத்திப்பிரமத்தினால் நம்மை யிகழ்ந்தபடியால் நீ யோர் மாதகாலத்திற்குள் ளுனது சரீரம் குறைவுபெறக்கடவா" யென் றவனைச் சபித்துவிட் டந்தர்த்தானமடைந்தார். (17) பிற்பாடு விசுத்தன் விஷ்ணுவால் சபிக்கப்படலானதை யாசனறிந்து 'ஆ! கோ! இதென்ன' வென் றுன்ன

த்தில் மிகுந்த விசாரமடைந்தான். (18) அப்போது விசுத்தனும் கால் கைகளிற் குறைவு கண்டு பிறகு நாளளவிலே தலைதனிற் குறைவுபடும் காலத்தி லவ் வரச னோர் மகோற்சவகாலத்தில் ஸ்ரீ கேதாரேசுவரசுவாமி யைச் சேவிப்பதற்காக மிகுந்த சைனியங்களோடுகூட வச் சுதர்மனையும் விசுத்தனையு மழைத்துக்கொண்டு மெத்தப் பக்தியுடன் சென்று (20) அம் மகேசுவரனைத் தரிசித்து நமஸ்காரம்பண்ணி மிகுந்த பக்தியுடன் பலவாறு யனேகம் துதிகளால் தோத்திரம் செய்துவிட் டவ் விரு பார்ப்பார்களுடன்கூடக் கோபுரவாசலில் வந்திருந்தான். (21) அப்போ து சில இருடீசுவரர்களும் கேதாரேசுவரனாகிய வப் பரமேசுவரனை வந்த னித்துவிட்டு மிகுந்தச் சந்தோஷத்தோடு திரும்பி யக் கோபுரவாசலுக் கு வந்தபோது (22) அவ்வரச னவர்களை நமஸ்காரம் பண்ணிவிட் டவ் விரு பாவிகளையு மவர்களுக்குக் காட்டி "ஓ! முனிவர்களே! இவர்களைச் சாபத்தினின்று விடுவித்தல்வேண்டு" மென, அவர்க ளிவ் விருவரும் பிரம்ம விஷ்ணுக்களுடைய சாபத்தை யடைந்தவர்களென்பதை யறிந் ததன்மே லவர்களை யச் சாபத்தினின்று விடுவிக்க வல்லமையற்றவர்க ளாகி யரசனை (24) வாழ்த்திவிட்டுத் துரிதமாய்த் தங்கள் தங்க ளிடங் களுக்குப் போய்விட்டார்கள். பிற்பா டரசன் 'ஆ! கா! இவர்களை விடு விக்கவுற்றவர் யாவராயினு மிருப்பாரா" வென் றங்கிருந்துகொண்டே (25) மனத்துயரம் கொண்டவனாகி விசாரமுற்றிருக்கையி லப்போ தங் கு ஸ்ரீ ததீசிமாமுனிவர் தமது சீடர்களோடுகூட ஸ்ரீ கேதாரேசுவரஸ்வா மியைப் பக்தியுடன் நமஸ்காரம்பண்ணித் திரும்பிவந்தார். (26½) அப் போ தரச னத் தவசிச்சிரேஷ்டரைக்கண்டு மெத்தச் சந்தோஷம்கொ ண்டு (27) வந்தனித்து விநயத்தினால் வணக்கமுற்றவனாகிப் பக்தியு டன் பிரார்த்தித்துக்கொண்டதாவது:— "ஓ! மகா விருஷியே! அவர்க ள் தோடத்தினால் பிரம்ம விஷ்ணுக்களிடமிருந்து சாபமடைந்திருக்கிற வெமது புரோகிதர்களாகிய இவ்விருபிராம்மணர்களையு மிரக்ஷிக்கவேண்டு மிரக்ஷிக்கவேண்டு" மென, (28½) இவ்வா றவனது வசனத்தைக்கேட் டு முனிவர் மெத்தச் சந்தோஷம் கொண்டவராகி மகா பரிசுத்தமும், பாவத்திறள்களைத் துறத்தி யடிக்கவுற்றதுமான கொஞ்சம் திருநீற் றை யெடுத்துக்கொடுக்க, (29½) ராஜேந்திரனு மதனை வாங்கி யவ்விரு பார்ப்பார்களுக்கும் பூசினான். (30) அப்போதே விசுத்தன் தேகம் முன்போல் வளர்ந்தும், சுதர்மன் நாவு சரிப்பட்டும்போயின.(31) அப் பேர்க்கொத்த விந்த வற்புதத்தைப் பார்த் தெல்லோர்களும் "ஆ! கா! திருநீற்றைப் பூசியமாத்திரத்தி லிவ் விருவர்களும் பிரம்ம விஷ்ணுக்களு

மையுடைய சாபத்தினின்று விடுபட்டனர்களே! ஆகையா லித் திருநீற்றின் மகிமை யாவரால்தான் கணக்கிடத்தகு" மென்று மிகவுமாச்சரியம் கொண்டார்கள். (32½) அப்போ தவ் வஜ்ஜிரதேகிராஜனு மாச்சரியங்கொண்டவனாகி (33) தவசிகளிற் சிறந்தவரான வத்ததீசிமுனிவனைப் பூமியில் வந்தனித்தான். அவ் விரு பிராம்மணச் சகோதரர்களு மம் மாமுனிவனைத் தண்டம்பண்ணி(34) 'ஓ! சுவாமீ! நாங்களிருவரும் தேவரீரால் பஸ்மத்தின் மகிமையைக்கொண்டு காப்பாற்றப்படலானோம். பஸ்மத்தின் மகிமை தேவரீரல்லது ஸ்ரீ பரமேசுவரனல்தா னறியமுடியும்" (35) என்றுரைத்துத் தண்டம்போல் பூமிதனில் வந்தனிக்கலான அவ்விருவர்களையு மரசனையு மாசீர்வாதம்பண்ணிவிட் டம்முனிவர் சந்தோடமாய்த் தமதாசிரமத்திற் கேகினர். (36) ஓ! அகத்தியதேவேந்திரர்களே! அதுமுதலா யவ்விரு பார்ப்பார்களும் பஸ்மத்தின லுத்தூளனம் செய்யப்பெற்ற மேனிகளைக் கொண்டவர்களாகி மிகுந்தமேன்மையைக் கொண்டிருந்தார்க" ளென, (37) இவ்வாறு ஸ்ரீ நாரதமுனிவரின் வசனத்தைக் கேட் டகத்தியமாமுனிவர், இந்திர னிவ்விருவர்களும் மெத்த வாச்சரியமுற்ற மனதைக் கொண்டவர்களாகி யற்புதமான பஸ்மத்தின் மகிமையைப்பற்றி (38) யொருவரோ டொருவர் பிரஸ்தாபித்து மெத்த மனமகிழ்ச்சியோ டிருந்துகொண்டிருக்குமளவில் கேளீர்! புஜபலராஜனே! அப்போது நான் மனத்துன்பத்துடனெதையோ மனதினல் நினைத்துக்கொண்டு (39) "ஓ! தேவராஜனே! இக்கதையின்பிரஸ்தாப மிருக்கட்டும்; இராக்ஷதர்க ளசுரர்களோடுகூடச்சமுத்திரத்தின் மத்தியி லிருந்துகொண்டு துன்பப்படுத்துகின்றார்களே! ஆகையால் நீ ரவர்களைக் கொல்வதற்காக விப்போது பிரயத்தினம் செய்யல் வேண்டு" மென்று யா னுரைக்கையி லப்போ தகத்தியமாமுனிவர் மெத்தக் கோபாவேசங்கொண்ட மனதைக் கொண்டவராகி (41) "ஆ! அடா! மூடா! எங்களது வார்த்தையை அடக்கி நீ யென்னவுரைத்திட்டாயடா? பாவங்களைத் தொலைக்கலுற்ற திருநீற்றின் மகிமையைப் பற்றி வர்ணித்துக் கொண்டிருக்குமளவில் (42) 'இக்கதையின் பிரஸ்தாப மிருக்கட்டு' மென் றசட்டையாய்ச் சொன்னயல்லவா! ஆகையினல் அடா! துராத்துமாவே! நீ யித்தோஷத்தினல் சீக்கிரத்தி லிராக்ஷதனகக் கடவாய்' யென்று சபித் தவ்வகஸ்தியமாமுனிவ ரிந்திரனைக் கூப்பிட்டு 'ஓ! இந்திரா! பாவங்களை யதட்டித் துறத்தலுற்ற பஸ்மமாகாத்துமியத்தை நீ யிப்போ திங்கு கேட்டபடியா லசுரர்களைக் கொல்வதில் யாதொரு பிரயாஸையுமில்லை' யென்றுரைத்துவிட்டுக் கடற்கரைக்குச் சென்று மந்தி

ரிக்கப்பட்ட கொஞ்சந்திருநீற்றை யெடுத்து(45) கைதனிற்குழைத்து நெற்றியி லிட்டுக்கொண் டம்மாமுனிவர் தமது திருக்கையை நீட்டிச் சமுத்திரத்தை யழைக்க, (46) அப்போதச் சமுத்திரமானது பனித் திவலைக்கு நிகரா யவரது கைமீது வந்துசேர்ந்தவுட னவர் ஸ்ரீமகாதேவனைத் தியானம்பண்ணி யதனைக் குடித்துவிட்டு, (47) "ஓ! இந்திரா! இப்போது பாவிகளும் துஷ்டர்களுமான விராக்ஷதர்களையு மசுரர்களையும் கொன்றுவி" டென்று திருவாக்கருளி யவ் விந்திரனுக்குக் கொஞ்சம் திருநீறு கொடுத்தார். (48) பிறகிந்திரனு மதனை வாங்கிச் சரீரமுழுதும் பூசிக்கொண்டு கேளீர்! புஜபலராஜனே! சகல ராக்ஷதர்களையு மசுரர்களையும் கொன்றுபோட்டான். (49) பிற்பாடம் மாமுனிவர் சமுத்திரத்தைவிட்டுவிட்டுத் தமதாசிரமத்துக்குப் பிரயாணப்படுகையில் கேளீர்! ராஜனே! அப்போ திந்திரன் துரிதமா யெந்தனை யழைத்துக்கொண் (50) டம்மாமுனிவரிடம் சென் றவரைச் சமாதானம்பண்ணி வசன முரைத்ததாவது:— "ஓ! தவசிச்சிரேஷ்டரே! ஓ! சுவாமீ! இவன் மூடனாகிய கா லொன்றையு மறியமாட்டான். ஆகையால் தேவரீர் தயவுட னிவனைக் காப்பாற்றிடல்வேண்டு" மென்று சொல்லிவிட் டவரை வந்தனிக்க, (51½) பிறகவ் வகத்தியரும் பிரசன்னராகி யெந்தனைநோக்கித் திருவாக்கருளியதாவது:—(52) "ஓ! வருணே! புஜபலனென்றோரசுரனுண்டாகப்போகின்றான். நீ யவனது நெற்றிதனில் திருநீற்றைக் கண்டமாத்திரத்தி லிவ் விராக்ஷத தேக முடனே (53) நீங்கலாகிமுன் போ லுந்தன் சொந்தத் தேகத்தையடைந்து மேற்றிசை சேர்ந்தரசாளலாவாய்; இது நிச்சய" மென் றருளிவிட் டத் தவசியானவர் சடிதியில் தமதாசிரமம் சென்றுவிட்டார். பிறகு யானு மதன்படியே மெத்த விகழ்ச்சியும் கோரமுமான இராக்ஷதசரீரத்தை யடையலாகி யுமது பட்டணத்தில் வசித்துவந்து (55½) பிற்பா டுமது நெற்றிமீது திருநீற்றைக் கண்டதன்மே லெனது சொந்தச் சரீரத்தைப் பெற்றே"(56) னென்று கூறிப் பிறகவ் வருணனப்போது துரிதத்தில் தன் படைகளை நினைக்க, அப்போதே மகா பலசாலிகளான அவனது படைகளெல்லா மங்குவந்து (57) பிறகவனும் மெத்த மனமகிழ்ச்சிகொண்டவனாகி யவர்களுடன் மேற்றிசை சென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவனிவ்வாறு திருநீற்றைக்கண்டமாத்திரத்தினால் தன் பதவியை யடையலானான். (58) அப்போ தப் புஜபலராஜ னவனது சரித்திரத்தைக்கேட்டு மெத்த வாச்சரியம்கொண்டவனாகித் திருநீற்றின்மீ ததிக மனப்பற்றுதல்கொண் (59) டெப்போதும் தேகமெல்லாம் திருநீற்றைப் பூசி

கொள்வதிலும், திருநீற்றையே படுக்கையாய்ப் போட்டுக்கொள்வதி லும் முயன்றவனாகிப் பெண்டீர் பிள்ளை யிஷ்டபந்துக்களோடுகூட வே ண்டிய சுகங்களை யனுபவித்துவந்து (60) கேளீர்! பிராம்மணோத்தம ர்களே! பிறகு தேகத்தின் முடிவில் மிகுந்த சந்தோஷத்தோடு கைலா ஸபதவியடைந்தான். யாதாமொருவ னிப் பஸ்ம மாகாத்மியத்தை ச் சாக்கிரதையுடன் கேட்கின்றானோ, (61) கேட்பிக்கின்றானோ, அல் லது படிக்கின்றானோ அவன் மேன்மையுள்ள பதவியை யடையலாவா ன். மேலும் பிள்ளையை வேண்டுவோன் பிள்ளைகளையும், தனத்தைவே ண்டுவோன் மிகுந்த தனத்தையும் (62) கல்வியை வேண்டுவோன் சிறந்த கல்வியையும், மோக்ஷம்வேண்டுவோன் மோக்ஷத்தையு மடைய லாகும். தவிரவும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இதனை நியமமா ய்க் கேட்டமாத்திரத்தில் பொன் திருட்டு, மத்தியபானம், பிரம்மகத்தி முதலிய சகல மகா பாதகங்களினின்றும் விடுபடலாகின்றா னென்பதிற் சந்தேகமேயில்லை. (63½) ஓ! சௌனகாதி முனிவர்களே! வளர்த்தி யுரைப்பதில் பயன்யாது? இதனை மெத்த வந்தக்கரணபக்தியுடன் கேளு ங்கள். (64) இது பிரம்மகத்தி முதலிய பாதகங்களுக்கெல்லாம் பிரா யச்சித்தமானதென்றும், ஸகல உபநிடதங்களுடையவுமான முக்கிய ஸா ரமென்றும், ஸாக்ஷாத் ஸ்ரீ ஸர்வேசுவர ஸ்வரூபமென்றும் மதிக்கப்படுகி றபடியால் வேதவேதாங்கங்களில் மெத்தத்தேறிபொருந்திய நீங்களெ ல்லோர்களு மிப்போது கிருதார்த்தராகிவிட்டீர்கள். (65)

பனிரெண்டாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் கங—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! படிப்பவர் கேட்பவர்களுடை ய ஸகல பாவத்திரட்களையும் தொலைக்கலுற்றதும், மெத்தப் புண்ணிய முமானவுருத்திராக்ஷமாகாத்மியத்தை யிப்போதெடுத்துரைக்கின்றே ன்.(1) பக்தியே யற்றவனாயினும், பக்தியுள்ளவனாயினும்,மூடனாயினும் மகா மூடனாயினும், யாதாமொருவ னுருத்திராக்ஷத்தைத் தரிக்கின்றா னோஅவன்ஸகலபாதகங்களினின்றும் விடுபடுகின்றான்.(2) தத்துவங்களை

விளக்கலுற்ற பெரியோர்க ளிதனை மகா விரதமென்று சொல்லுகின்றார்கள். மகா புண்ணியமான வுருத்திராக்ஷம் தரித்தலா லுண்டாகும் புண்ணிய மெதோடுதா னொப்பிடத்தகும். (3) யாதாமொருவ ரதேவிரதமா யாயிர முத்திராக்ஷங்களைத் தரிக்கின்றாரோ அவரைத் தேவரெல்லாம் வந்தனிக்கின்றார்கள். அவர் ஸ்ரீ ருத்திரமூர்த்திக்கொப்பானவரோ! (4) ஆயிரமில்லாவிட்டாலும் புயங்களிற் பதினாறு பதினாறு,சிகையிலொன்று, கைகளிற் பனிரண்டு, பனிரண்டு(5) கழுத்தினில் முப்பத்திரண்டு, காதுகளி லவ்வாறு இவ்விதமாகயாதாமொருவருருத்திராக்ஷங்களைத் தரிக்கின்றாரோ அவருருத்திரர்போலவே பூஜிக்கப்படுகின்றார். (6) மேலும் யாதாமொருவ ருருத்திராக்ஷங்களை முத்து, பவழம், படிகம், வெள்ளி, வைடூரியம், தங்கம் இவைகளோடு சேர்த்துத் தரிக்கின்றாரோ அவருருத்திரரோ வென்பதிற் சந்தேகமேயில்லை. (7) அல்லது ருத்திர முத்திரையாகிய வெரு முருத்திராக்ஷங்களை மட்டிலாவது தரிப்பவரிடத்து, சூரியனிடத் திருள்போல் பாவங்க ளணுகுவதே யில்லை. (8) மேலும் மானிடர்களுக்கு உருத்திராக்ஷமாலையால் செய்யப்படுகின்ற ஜபமானது அளவற்ற பயனைக்கொடுக்கலாகும். ஆனா லம் மாலையன்றியில் செய்யப்படுகின்ற ஜபமோஜபத்துக்குத் தக்கபடியுள்ளபயனைமட்டிலேகொடுக்கலாகும். (9) அனேக புண்ணியங்களையளிக்கலுற்ற வுருத்திராக்ஷங்களி லொன்றையாயினும் யாவன் தரிக்கவில்லையோ அவனது ஜன்மமானது திரிபுண்டிரமிடாதவனுடைய ஜன்மம்போலவே பிரயோஜனமற்றதேயாகும். (10) யாதாமொரு புத்திசாலியான மானிட ருருத்திராக்ஷத்தைச் சிரசினில் வைத்துக்கொண்டு ஸ்நாநம் செய்கின்றாரோ அவருக்குக் கங்காஸ்நாநபலன் கிடைக்கலாகு மென்பதிற் சந்தேகமேயில்லை. (11) மேலு முருத்திரமுத்திரையாகிய வுருத்திராக்ஷங்களி லொன்றையாயினும் தரிப்பவரிடத்தனேக ஜன்மங்களில் செய்யப்பட்ட பாவங்கள் கூடவணுகாமல் நீங்கிவிடும். (12) உருத்திராக்ஷத்தில் ஜலத்தை யபிஷேகம் செய்கின்றவர் சிவலிங்கத்தி லபிஷேகம் செய்த பயனை யடைகின்றார்களென்பது நிச்சயம். (13) ஸகல வுலகங்களாலும் பூஜிக்கப்படலுற்ற ஒன்று, ஐந்து, பதினொன்று, பதினான்கு இந்த முகங்களைக்கொண்ட வுருத்திராக்ஷங்களைப் (14) பக்தியுடன் பூஜைசெய்கின்ற மானிடர் மெத்தத்தரித்திரராயினும் மிகுந்த சம்பத்தை யடைவார்கள். ஓ! பிராம்மணோத்தமர்களே! சில புண்ணிய கதைகளைச் சொல்லுகின்றேன்; அதைச் சாக்கிரதையாய்க் கேட்பீர்களாக. (15)

பூர்வத்தில் நந்திக்கிராமத்தில் சகல அவயவங்களும் சுந்தரமா யமையப்பெற்ற மகாநந்தை யென்றோர் தாசியிருந்தாள். (16) அவள் பூர்ண சந்திரனுக்கு நிகரான குடை, சுவர்ணாபரணங்களால் விளங்கப்பெற்ற வாகனங்கள், சிறந்த பிடிகளையுடைய சாமரங்கள், தங்கமயமான பாதுகைகள், (17) விசித்திரங்களான வஸ்திரங்கள், சந்திரனொளியையொத்த படுக்கைகள், அனேகமனேகம் பசுக்கள், எருமைகள், சேவகர்கள், (18) கந்தம், குங்குமம், கர்ப்பூரம், கஸ்தூரி முதலிய பூச்சுத்திரவியங்கள், மிகுந்த விலைமதிப்புள்ள ஆபரணங்கள், கோடிசங்கியைக் கதிகப்பட்ட தனங்கள் இவைகளைக்கொண்டிருந்தாள்.(19) மேலுமவளென்றும் சிவபூஜையிலே முயன்றவளும், சத்தியம், தருமம் இவைகளையே பாராட்டியவளும், எப்போதும் ஸ்ரீ சிவபிரானுடைய சரித்திரங்களிலே ஆவல்கொண்டவளும், சிவநாமத்தைச் சபிப்பதிலே விருப்பமுற்றவளுமா யிருந்தாள். (20) தவிரவு மவள் சிவனடியார்களான பிராமணர்களைக் கண்டபோதெல்லாம் சந்தோஷத்தோடு தண்டம்பண்ணுவாள். அத் தாசியானவ ளோர் குரங்குக்கும், கோழிக்கு முருத்திராக்ஷங்களை யாபரணங்களாய்ப் பூட்டி நாட்டியமண்டபத்தில் விநோதார்த்தமா (21½) யெப்போது மவைகளைக் கைத்தாளங்களாலும் கீதங்களாலும் தானே நாட்டியமாடும்படி செய்து,(22) பிறகு சகிகளாற் சூழப்பட்டவளாகி யுறக்கச் சிரிப்பாள். அக்குரங்கானது ருத்திராக்ஷங்களாற் செய்யப்பட்ட தோள்வளை, குண்டலம், கழுத்தாபரணங்கள் இவைகளைக்கொண்டதாகி யவளது சிக்ஷையினால் குழந்தைபோல் நேர்த்தியாய் நர்த்தனம்பண்ணும். (23½) கோழியோவென்றால் சிகைதனிலுருத்திராக்ஷத்தைக் கட்டப்பெற்றதாகிநாட்டியமுறையையறிந்து பார்ப்பவர்களுக்கு விநோதமா யக்குரங்கோடுகூட நர்த்தனம்பண்ணும். (24½) இப்படி வெகுகாலம் சென்றதன்மே லக்குரங்கு கோழிகளிரண்டும் சாகலாகி (25) யக் குரங்கானது காச்மீரதேசத் தாசனான பத்திரசேன ராஜனுக்குச் சுதர்மனென்ற பிள்ளையாகவும், (26) கோழியான தவ் வரசன் மந்திரிக் குத்தாரகனென்ற பிள்ளையாகவும் பிறந்தன. (26½) பிறகவ் விருபிள்ளைகளும் மெத்த நேசமுள்ளவர்களும், ரூபலாவண்ணியம் பொருந்தியவர்களும், (27) கல்விகற்பதில் முயன்றவர்களும், சிறு குழந்தைகளுமாகிச் சேர்ந்து விளையாடி வருவார்கள். அவ்விருவர்களுமெல்லா அவயவங்களிலு முருத்திராக்ஷங்களா லலங்கரித்துக்கொண்டு (28) தங்கமயங்களு மிரத்தினமயங்களுமான ஹாரகேயூர மகுடகுண்டலங்கள் முதலிய வாபரணங்களை யொழித்து ருத்திராக்ஷங்களையே தரித்துக்கொண்டார்கள். (29) அவர்க ளுருத்திராக்ஷங்களை யெப்போ

தும் மாலைகளாகவும்,சிறந்தகங்கணங்களாகவும்,கழுத்தாபரணங்களாகவும், குண்டலங்களாகவும் தரித்துக்கொண்டார்கள். (30) அவர்க ளிவ்விதமாய்ப் பெருமைபொருந்திய வமிசத்திற்சனித்து வேண்டிய ஸுகங்களை யனுபவித்து முந்தியஜன்மத்தின்வழக்கத்தினா லுருத்திராக்ஷத்தின் மீது பக்திச் சிரத்தைகொண்டவர்களா யிருந்து வெகுகாலம் சென்றதன்மேல் மெத்த மங்களகரம் பொருந்திய சிவபதத்தை யடையலானார்கள். (31)

பதின்மூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் கச—வது அத்தியாயத்தினர்த்தம்.

பூர்வத்தில், எப்போதும் துர்மார்க்கத்திலே முயன்றவனும், நாள்தோறும் வேசிகளிடத்துப் புணருவதிலே காதல்கொண்டவனுமான புஷ்கரதேசத்துக் கதிபனாகிய ஸௌமியனென்றோ ரிராஜனிருந்தான். (1) நல்ல ரூபயௌவனங்களோடுகூடிய அவனது மனைவியான வஸுமதியென்பவ ளரசன் வேசிமார்க்கத்தி லிருந்துகொண்டு தன்னோடு கலவாதிருப்பதைக்கண் டவள் (2) மெத்த வியாகுலமுற்ற மனதைக்கொண்டவளாகி யோய்வற்ற கவலையையடைந்து தங்கள் புரோகிதன் பாரியாகிய ஸத்தியவிரதையென்றவளிடத்துத் (3) தன் துக்கத்துக்குக் காரணமான அரசன் கெட்டநடையையறிவித் தவனுக் கெந்த வுபாயத்தினால் தன்மீது காதலுண்டாகு (4) மென்று வினவ, அவள் பதிலுரைத்ததாவது:—"ஓ! அம்மணீ! உருத்திராக்ஷம் தரித்தலானது ஸகல வசியங்களையு மளிக்கவுற்றதும், மெத்த மேன்மைபொருந்தியதும், (5) மானிடர்களுடைய வெல்லாப் பாவங்களையும் வியாதிகளையும் தீர்க்கவுற்றதுமாகின்றது. அதனைத் தரிக்கும் மானிடரைப் பூதப்பிரேத பிசாசங்கள் முதலியவைகளெல்லா மிமிசிப்பதில்லை. (6) அதனை யாவரொவ்விதமாய்த் தரித்தபோதிலு மவரைச் சர்ப்பங்கள் தீண்டா" வென்றுரைத்தவளுக்கு மகா பரிசுத்தமான வோருருத்திராக்ஷத்தைக் கொடுத்தனள். (7) அரசன் மனைவி யதனை மெத்த விருப்பத்தோடு வாங்கிக்கொண்டு கழுத்தினிற் கட்டிக்கொண்டாள். பிறகவ் வரச னவள்மீது மிகவும் விருப்பமுற்றவனாகி யன்றிரவினிலே (8) யவள்தான்மனைக்குச்சென்று மெத்த மோகத்துட னவளோடு கலந்தான். மேலுமவ னிதேமாதிரி

யாக விரவும் பகலுமா யவளோடு புணர்ந்துகொண்டு வருகையி(9) லப்போது விசாரிப்போ ரில்லாம லவனது சைனியங்களெல்லாம் மிகவும் காமாதுரனான அவ்வரசனைவிட் டங்கு மிங்கு மோடிப்போயின. (10) இப்படியிருக்கையி லோர் பகையரசன் சதுரங்க சைனியங்களோடுகூட மிகுந்த கோலாகலசத்தம் செய்துகொண்டுவந் தவன் நகரத்தை முற்றுகைபோட்டான். (11) அதுகேட் டிவ்வரசன் மிஞ்சியிருந்த சிலசைனியங்களோ டட்டகாசம் செய்துகொண் டவனை யெதிர்த்துக்கொள்ள, (12) உடனே யவன் சைனியமெல்லா மங்கு மிங்கும் சிதறியோட் டோட்டம்பிடித்தன. பிற்பாடரச னொண்டியா யதிவேகத்தோடு நகரத்துக்குத்திரும்பி யோடிவந்து (13) தன தரண்மனைக்குட் சென்று மனைவிக்கெல்லாவற்றையு மறிவித்துப்போட்டுத்தனதாசாக்ஷிமீ தாசையொழித்தவனுமி மெத்த வியாகுலமுற்ற மனசுடனிருந்தான். (14) அப்போதவன் மனைவியானவள் மிகவும் துக்கமுற்றிருந்த வரசனைநோக்கி வசனமுரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ! உருத்திராக்ஷாபரணங்களைத் தரித்துக்கொண்டா லுடனே ஜயமுண்டாகும். (15) இது விஷயத்திற் சந்தேகமேயில்லை. ஆகையால் தேவரீ ரதனைத் தரித்துக்கொள்ளவேண்டும். அதன் மகிமைகளைப்பற்றிப் புராணங்கள் மூலமாய்க் கேட்டறிவதற்குத் தேவரீருடைய புரோகிதர் தக்க வல்லவராயிருக்கின்று"(16) னென, இவ்வா றவளது வசனத்தைக் கேட்டரசன் தன்புரோகிதனை யழைத்துச் சகல துக்கங்களையும் தீர்க்கவுற்ற ஸ்ரீ ருத்திராக்ஷ மகிமையைக் கேட்டவுட (17) னத் தரணிவேந்த னுயிர முருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டான். அவன் மனைவியான வஸுமதியும் மகா பரிசுத்தம் பொருந்திய அவ்வளவு ருத்திராக்ஷங்களைத் தரித்துகொண்டாள். (18) பிற்பா டவ் வரசன் தனக்குச் சேனையேயில்லாது பற்றித் தன் பெண்டனைச் சாரதியாக வைத்துக்கொண்டு யுத்தத்துக்குப் புறப்பட்டுச் (19) சென்று அச் சத்துருக்களை யெல்லா மதம்பண்ணி யவனது தேசத்தையும் தன் வசப்படுத்திக்கொண்டு தன் நகரமடைந் (20) தங்கு மனைவியோடுகூட அவ்வரசன் தனதரண்மனைக்கு வந்து மிகுந்த சந்தோஷத்துட னவ்வுருத்திராக்ஷத்தின் மகிமையை மிகக் கொண்டாடித்(21) தன் தேசத்து ஜனங்களையெல்லா முருத்திராக்ஷம் தரித்துக்கொள்ளும்படி செய்தான். அவனுக்குச் சகல இலக்ஷணங்களும் பொருந்தப்பெற்ற மிக வழகினர்களான விரண்டு பிள்ளைகளிருந்தார்கள். (22) அவர்களிலொருவ னதிரதனென்றும் மற்றவ னவிரதனென்றும் பெயர் கொண்டவர்கள். மேலு மவனுக்கெல்லா இலக்ஷணங்களும் பொருந்தப் பெற்ற விரு பெண்களுமுண்டு. (23) அவர்களில் மூத்தோள் சருவகலா

ஞ்ஞை (எல்லா வித்தைகளையுமறிந்தவள்) யெனவும் மற்றவள் சித்திரா ங்கனை யெனவும் படுவார்கள். அவ்வரச னிவர்களுக்குக்கூட வுருத்தி ராக்ஷத்தைக் கட்டிவிட்டான். (24) இப்படி யிருக்கையில் கோளநேச வாஸியும், பிரம்மனுதனுக்கு புத்திரனும் நல்ல யௌவனப் பருவமுடை யவனுமான கமலாக்ஷனென்ற வோரிராஜகுமார னம் மூத்தகுமாரியான சருவகலாஞ்ஞை யென்பவளை முறைப்படி மணம்புரிந்துகொண் டவ்விர வினிலே புருடன் பெண்டீர்களான அவ் விருவரும் சேர்ந்திருக்கையி (25½) லப்போ தக் கமலாக்ஷ னப் பெண்ணுடைய ஆபரணங்களையெ ல்லாம் வாங்கிப் பெட்டியில்வைத்துத் தனதாபரணங்களை யவள் கையி ற்கொடுத்து (27) மெத்தக் காமாதுரனுகி யவளைக் கலவிக்கழைக்கை யி லப்பெண்ணனவள் "ஓ! சுவாமீ! மகா பரிசுத்தமும் சிறந்த பூஷண முமான வுருத்திராக்ஷத்தை நீர் தரித்துக்கொள்ளாத (28) படியால் நீரொந்தனோடு புணருவதற் கெப்போதும் தகுதியல்லரன்றோ" வென, இவ்வாறு தன்மனைவியின் வசனத்தைக்கேட்டுக் கமலாக்ஷன் சொல்லிய தாவது:—(29) "ஓ! சிறந்த வதனத்தையுடைய மாதே! பற்பல விர த்தினங்களாற் சிறந்தவைகளான பல சிறந்த வாபரணங்களை யான் தரி த்திருக்கையி லவ் வுருத்திராக்ஷத்துக் கென்ன அதிகப் பெருமை யிருக் கின்ற" தென, (30) அது கேட்டு மனைவி கூறியதாவது:—"ஓ! ஐயா! நீர் மிகுந்த மதிப்பிரமத்தினுல் சிறந்த வாபரணமான வுருத்திராக்ஷத்தை த் தரிக்காதபடியால (31) நீர் மகா பாதகங்களாகிய ஸர்ப்பத்தினு ல் தீண்டப்பட்டிருக்கிறீ ரென்பதிற் சந்தேகமில்லை. ஆகையா லும் மோடு புணருவதாவது சகவாசம் செய்வதாவது சரியல்ல. (32) இந்த விஷயத்தைப்பற்றிச் சந்தேகமின்றிப் புராணங்களே நல்ல ஆதாரங்களா யிருக்கின்றன. அல்லது உமக்கு நம்பிக்கையுள்ள சகல சாத்திரங்களை யும் கற்றறிந்த வெந்தச் சிறந்த மானிடரையாவ தென் முன்னிலையிற் கேட்கவேண்டு" மென, (33½) இவ்வாறு மனைவியின் வசனத்தைக் கேட் டரசன் பின்னும் சொல்லியதாவது:—(34) "ஓ! பெண்ணே! யாம் சம்மதிப்பட்ட பண்டித ரிவ்விஷயத்தைச் சொல்வாராகி லப்போ து யாம் புருடரா யிருந்தபோதிலு முந்தனுக்கு மனைவியாகிவிடுகின்றே ம்; (35) நீயு மெந்தனுக்குக் கணவனாகிவிடென்பதைச் சத்தியமாய்ச் சொல்லுகின்றே" மென் றவ் வரசன் முன்னிலையிலிருந்த பெண்டீரை ப்பார்த்து விளையாட்டாய்ச் சொன்னுன். (36) அவளு மவ் வசனத் தைக்கேட் டப்படியே சம்மதித்தாள். பிறகவ் விரவு கடந்ததன்மே லப்புருடன் பெண்டீர்க ளிருவரு மெழுந்து (37) சகல வாபரணங்க ளாலு மலங்கரிக்கப்பெற்றவர்களாகிக் கலியாண மண்டபத்திற்கு வந்

தார்கள். அப்போ தவர்களின் கலியாணத்தைப் பார்ப்பதற்காக வனேகம் சிறந்த வந்தணர்களு மரசர்களு மங்கு வந்திருந்தார்கள். (38½) அப்போது மகா புத்திசாலியான வப் பெண்ணானவ ளங்கு வந்திருக்கின்ற பேர்களை யெல்லாம் கண்டு தன்புருடனை நோக்கிச் சொல்லியதாவது:— (39) "ஓ! ராஜேந்திரா! உருத்திராக்ஷத்தினுடையது மதனைத் தரிப்பவர்னுடையதுமான மேன்மையை விசாரிப்பதற்காக விப் பிராம்மணர்களி லுமக்கு யார் சம்மதி?" (40) என, இவ்வா றவளது வசனத்தைக்கேட் டரசன் புன்னகைப்புடன் வார்த்தை யுரைத்ததாவது:— "ஓ! பெண்ணே! இக்கலியாண மண்டபத்தி னிதோ விருக்கின்ற சித்திரச் சுவற்றின்கண் சித்திரரூபியா யாதிசேடன்மீது பள்ளிகொண்டிருக்கலுற்ற ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் துரிதமா யெழுந் தஞ்சலிகொண்டு சொல்லிடில் நீ சொல்வது சரியே" (42) யென, பிறகு சருவகலாஞ்ஞையு மிவ்வாறு கணவனது வசனத்தைக்கேட் டப்படியே நல்லதென்று சொல்லிவிட் (43) டஞ்சலி கொண்டவளாகிச் சித்திரரூபியான திருமாலை நோக்கி யுரைத்ததாவது:— "ஓ! விஷ்ணுவே! பாவங்களைத் தொலைக்கலுற்ற வுருத்திராக்ஷத்திற்கு மகிமை யிருப்பதானு லதுவும், (44) உருத்திராக்ஷம் தரிப்பவர்கள் பாவம் செய்திடினு மது புண்ணியத்தின் பயனையே கொடுக்குமென்பதும், உருத்திராக்ஷம் தரியாதவர்க ளென்ன புண்ணியங்களைச் செய்திடினு மவை பாவங்களின் பயனையே கொடுக்கலாகு மென்பதும் (45) ஆகிய விப் பொருட்களெல்லாம் சத்தியமும், வேதாந்தங்களுக் குரித்ததும், எல்லாவற்றிற்கும் விரோதமற்றதும், எங்கும் புகழப்பட்டதுமேயென்ப துமக்குச் சம்மதியானு (46) லிப்போது நீர் சீக்கிரத்தி லிவ் வாதிசேடனைவிட் டெழுந்து ஓ! ஸ்வாமீ! சுகமாய் நின்றுகொண்டு சிவாக்கினையின்படி யதனை யுண்மையாய்ச் சொல்லவேண்டு" (47) மென் றவளா லுரைக்கப்பட்ட மாத்திரத்தில் சித்திரரூபியாயிருந்த ஸ்ரீ விஷ்ணுவானவர் மிகுந்த பயபக்தியோடு "ஓ! பெண்ணே! நீ யுரைத்தது சகல வுபநிடதங்களுக்கும் சம்மதியுள்ள தென்பது ஸத்தியம் ஸத்தியம்: (48) அதன் மாகாத்துமியத்தை ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனே அறிந்தவராவர்; ஓ! மங்களகரம் பொருந்திய மாதே! எப்பேர்க்கொத்த ஜாதிதனிற் பிறந்த மானிடராலாயினும் (49) மகா பரிசுத்தமும் சிறந்த வாபரணமுமாகிய ஸ்ரீ ருத்திராக்ஷம் தரிக்கப்படி லவரோ தனவான்; அவரோ சகலர்களாலும் பூஜிக்கலுற்றவர்; ஸத்தியமா யவருக்கு யானு மஞ்சுகின்றேன். (50) ஓ! கற்புடைய மங்கையரே! வளர்த்துவதிற் பயன் யாது? அது சகலர்களாலும் தரிக்கப்படத்தக்கதென்பது நிச்சயமே" யென்று திருவாக்கருளி யவ் விஷ்ணு

வானவர் முன்போல் பள்ளிகொண்டுவிட்டார். (51) பிறகங்கிருந்த ஜனங்க ளெல்லா மவ் வாச்சரியத்தைக் கண்டதன்மே லவள்மீது மிகுந்த விசுவாச மடைந்தனர்கள். கமலாக்ஷனென்ற அவ் வரசனும் மெத்த வாச்சரியம்கொண்டவனாகித் தானுரைத்த வார்த்தையை மனதினில் நினைத்து மிகவும் கவலையடைந்தான். (53) அப்போ தவளது வேலைக்காரிக ளவனைச் சூழ்ந்துகொண்டு "ஓ! ராஜனே! நீருரைத்த வார்த்தையை மனதில் நினைத்துக்கொண் டிப்போதே சீக்கிரத்தில் புருட இலக்ஷணங்களை விலக்கிவிட்டுப் பெண்களுக்குரிய ஆடையாபரணங்களைத் தரித்துக்கொள்ளவேண்டும்" மென, இவ்வாறு பரிகாச வார்த்தையைக் கேட்டதன்மே லவ் வரசன் வெட்கத்தினால் முகம் வணங்கப்பெற்றவனாகித (55) தா னவ் வேலைக்காரிகளை நோக்கி "ஓ! பெண்களா! இவள் புருடனாகிவிட்டா லப்போது யானிவளுக்கு நேசமுடைய மனைவியாகிவிடுகின்றேன்" (56) னென்றவன் சொன்னமாத்திரத்தி லப்போ தப்பெண் புருடனாகிவிட்டாள். உடனே கமலாக்ஷனும் சிவாக்கினையால் பெண்ணாகிவிட்டான். (57) அதுமுதலா யிப்பெண் கமலாக்ஷியென்று மப்புருடன் சருவகலாவல்லபனென்று முலகினில் பிரஸித்தியடைந்தார்கள். (58) பின் பக் கமலாக்ஷியானவள் தன் கணவனை நோக்கி வசனமுரைத்ததாவது:— "ஓ! பர்த்தாவே! சகல பாவத்திரள்களையும் நாசம் செய்யனுற்றதும், ஸகல வுபநிடதங்களாலும் ஸ்தாபிக்கப்பட்டதும், ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரஸ்வரூபியும், மெத்தச் சிரேஷ்டமுமான வோருருத்திராக்ஷத்தை யடியேனுக்குத் தந்தருளவேண்டும. (59½) ஓ! நேசனே! மகா பரிசுத்தமான விதன் மகிமை யாவராலு மறியத்தகாததே." (60) என, அப்படியே அவன் கொடுத்தவுட னதனை யவன் மிகுந்த பக்தியோடு வாங்கி மெத்தச் சந்தோஷத்துடன் தன துடம்பினில தரித்துக்கொண்டான். பிற்பாடு புருடன் பெண்டீர்களான அவ்விருவர்களும் நன்றாய்ச் சுகங்களை யனுபவித்துக்கொண்டிருந்தார்கள். (61) இப்படியிருக்கையில் கமலாக்ஷனுக்குத் தந்தையாகிய கேரளதேசாதிபனான பிரம்மனாதனென்ற அரசன் ஸௌம்மியவானென்ற ராஜனைநோக்கி (62) "ஓ! ராஜேந்திரா! என்புத்திரனான கமலாக்ஷனே பெண்தன்மையை யடைந்துவிட்டான். உமது குமாரியும் மகா மங்களகரமான புருடத்தன்மையை யடைந்துவிட்டாள். (63) கேளீர்! ராஜனே! இவ்விருவர்களுடைய விருத்தாந்தமும் மெத்த வாச்சரியமாகக் காண்கின்றது. என்றாலு மென்றனுக்கு மகா புத்திசாலியான விபுதனென்று மற்றோர்பிள்ளை யிருக்கின்றான். (64) அவனுக்கோர் சகல இலக்ஷணங்களும் பொருந்தப்பெற்ற சித்திராங்கனென்ற வுமது மற்றோர் கன்னி

கையை முறைப்படி கலியாணம்செய்து கொடுக்கவேண்டு" (65) மென, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டுச் சௌம்மியவானென்ற அரசனு மப்படியே நல்லதென்று மெத்த மேன்மைபொருந்திய தன் பெண்ணை விபுதனுக்குக் கொடுக்க, (66) அவ்விபுதனு முருத்திராக்ஷங்களை யாபரணமாய்த் தரித்தவனாகி யவளை மணம்புரிந்துகொண்டு பிறகு கலியாணக்கோலத்தோ டவளைத் தன் தேசத்திற் கழைத்துக்கொண்டுபோ (67) யங்கிருந் தகண்டபோகங்களையு மனுபவித்துவந்தான். மேலும் ஸௌம்மியவான் பிரம்மனுத னிருவர்களு முருத்திராக்ஷங்களை யாபரணங்களாகப் பூண்டவர்களாகிப் (68) புராணங்களில் பிரஸித்திகொண்டதான வுருத்திராக்ஷமகிமையைப் பிரஸ்தாபித்துக்கொண்டே யகண்ட சுகங்களை யனுபவித்து மங்களகரம்பொருந்திய பார்க்கத்தகாத காக்ஷிகளையும் பார்த்துவந்து (69) முடிவினில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! புத்திர பௌத்திர களத்திரங்களோடுகூட மிகுந்த சந்தோஷத்துடன் நிகரற்றது மிலக்ஷுமீவிலாசம் பொருந்தியதுமான கைலாஸ பதவியை யடைந்தார்கள். (70)

பதினைன்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் கரு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! உருத்திராக்ஷ மகிமையைப்பற்றிய மற்றோர் சரித்திரத்தை யெடுத்துரைக்கின்றேன். ஸிந்துதேசத்தில் பூசக்கிரமென்று மகா மங்களகரம்பொருந்திய வோர் பட்டணமிருக்கின்றது. (1) அதில் மகா மகிமைபொருந்தியவரும், உருத்திராக்ஷமாலைகளை யாபரணமாய்ப் பூண்டவரும், ஸ்ரீ ருத்திரிடத்தே மனப்பற்றுத லுள்ளவருமான ஸுப்பிரதீபனென் றோர் பிராம்மணச்சிரேஷ்டரிருந்தார். (2) அவரது புத்திர பௌத்திரர்களும், மற்றுமுள்ள அவரைச்சேர்ந்தவர்களு முருத்திராக்ஷபூஷணங்களைக் கொண்டவர்களாயிருந்தார்கள். இவ்விதமாகச் சுப்பிரதீபர் வசித்துவருகையில் 'நாமுருத்திராக்ஷம் தரிப்பவர்களுக்கே நல்ல உத்தமமான அன்னத்தைக் கொடுப்போமேயின்றி மகா பாவங்களாற் கலக்கமுற்ற மனதைக்கொண்ட மற்றவர்க்கெல்லாம் கொடுப்பதேயில்லை" யென்றோ ருறுதிபண்ணிக்கொண்டா

ர். (3-4) இவ்வுருதியைக் கேள்விப்பட்டு யோகமார்க்கத்தையே முக்கியமாய் நாடியவனும், சகல சாத்திரப்பொருட்களிலும் மெத்தத் தேர்ச்சிபெற்றவனுமான யோகாங்கனென்ற வோர் சிறந்த சன்னியாசியானவன் (5) பட்டணத்திலுள்ள மற்றெல்லா ஜனங்களாலும் மிருதியாய் வெகுமதிசெய்யப்பெற்றவனாகிச் சீக்கிரமா யப்பட்டணத்துக்கு வந்தான். இவனோ சிறந்த பூஷணமான வுருத்திராக்ஷத்தைத் தரிப்பதேயில்லை. (6) ஆகையால் மகா புத்திசாலியான சுப்பிரதீப் ரந்த யோகிசுவரனை யாதரிக்கவுமில்லை; அவனுக்குப் பிக்ஷைசொல்லவுமில்லை. (7) இப்படி வெகுநாள் சென்றதன்மேல் அந்த யோகிசுவரன் மெத்தக் கோபம்கொண்டவனாகி வீடுதோறும் பிக்ஷைவாங்கும் வியாஜத்தோ டவர்வீட்டு வாசற்படிக்கு வந்தான். (8) அவ்வீட்டி லிருப்பவர்களெல்லா மவன்வந்திருப்பதை யறிந்தும் தெரியாதவர்கள்போ லவனை யாதரியாமல் சும்மா வுள்ளே யிருந்துவிட்டார்கள். (9) பிறகு சுப்பிரதீபர் தாமே வீட்டிற்கு வெளியே வந்து 'அடா! நீயே னிங்கு வந்தாய்? உனக்கு நமவீட்டில் பிக்ஷையில்லை; ஓடிப்போ; (10) மற்றவீடுகளிலெல்லா முனதிச்சையின்படி பிக்ஷைவாங்கு; அடா! பிராம்மணா! நம்வீட்டி லுருத்திராக்ஷம்தரிப்பவர்க் கன்னமிடுவதேயின்றி மற்றவர்க்கில்லை. (11) உந்தனுலோ சகல பாவங்களையும் கொல்லலுற்ற வுருத்திராக்ஷம் தரிக்கப்பட்டிருக்கவில்லை" யென, அதுகேட் டவன் 'நம்முன் நில்லாதே போ போ' வென்றான். (12) அதற் கவ் வேதிய ருனக்குப் பிக்ஷைபோடுவதேயில்லையென்றார். அறிவிற் சிறந்தவரான வச் சுப்பிரதீபருடைய இவ்வாறுவசனத்தைக் கேட் (13) டவன் மெத்தக்கோபத்துடன் சில கொரேவசனங்களை யுரைக்க, அந்த யோகிசுவரனுடைய வக் கொடிய வசனங்களைக் கேட்டவுட னப்போது (14) சுப்பிரதீபருடைய பிள்ளைகள் வெகு கோபம்கொண்டவர்களாகிக் கெட்டமனதைக்கொண்ட வச்சனியாசியோ டொன்றும் பேசாமலே கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவனுடைய தடியாலே அவனைத் தூரத்தில் தள்ளிப்போட்டார்கள். (15) பிற கச் சன்னியாசி மெத்தக் கோபம்கொண்டவனாகிப் பரபரப்போ டப் பட்டணத்தரசனான ஸாலங்கராஜனிடம்சென் றவனிடமாய்ச் சகலத்தையு மறிவித்தான். (16) பிறகு ராஜேந்திரனான வச்சாலங்க னதனை யாதியோடந்தமாய்க்கேட் டப்போது தன் தூதர்களைக் கொண்டு சுப்பிரதீபனா யழைப்பித்து (17) "ஓ! ஐயா! உம்வீட்டிற்குப் பிக்ஷைக்காகவந்த விச் சன்னியாசியை யவருக்குப் பிக்ஷையிடாமல் பலவந்தமாய்த் தள்ளிவிட்டது நியாயமா? ஆ! கா! மேலு முமது பிள்ளைக ளவனைக் கொடுமையாய்த் திட்டியிருக்கிறார்க" ளென, இவ்வா

றவ் வரசனது வசனத்தைக் கேட்டுச் சுப்பிரதீபர் வசனமுரைத்ததாவது:— (19) "ஓ! ராஜேந்திரா! உருத்திராக்ஷதாரணமின்றிச் சனியாசாசிரமமேயில்லை; ஏனென்று லெல்லா வாசிரமங்களுக்கு முருத்திராக்ஷதாரணமே முக்கிய அங்கமாகின்றது. (20) மேலு முருத்திராக்ஷதாரணத்தாலின்றி வெறும் ஞானத்தால்மட்டில் மோக்ஷமில்லையென்று நான்குவேதங்களும் மெத்த ஆதரவுடன் முறையிடுகின்றன. (21) அன்றியும் ஓ! அரசனே! எந்தனுக்கோ ருருதியுண்டு; அதனைச் சொல்லுகின்றேன் கேளீர்:— பாவமற்றவர்களான வுருத்திராக்ஷம் பூண்டவர்களுக்கே யா னன்னம்போடுவேன். (22) ஏனென்றால் ஓ! ராஜேந்திரா! அம்மானிட ரெப்பேர்க்கொத்த யாவராயினு மவர் வந்தனிக்கத் தக்கவரோ! ஸ்ரீ மகாதேவனைப்போலவே மிகுந்த தருமாத்துமாவும், எல்லோர்களாலும் பூஜிக்கத் தக்கவருமாவார். (23) ஆனால் வெறும் டம்பர்களான மற்றவர்களுக்கு மேன்மையுள்ள வன்னத்தை யான் கொடுப்பதேயில்லை. அவனாசிரமங்களி லென்ன சிறந்தவனாயினு மப்பாவி பூஜிக்கத்தக்கவனல்ல" (24) வென, இவ்வா றச் சுப்பிரதீபரது வசனத்தைக் கேட்டுச் சனியாசி மிகுந்த கோபத்துட னவ்வரசன்முன்பாகப் பின்னும் வசனமுரைத்ததாவது:— (25) "ஓ! பிராம்மணா! நமக்கு ருத்திராக்ஷம் தரிப்பதனா லாகவேண்டியதென்ன? நீ யவ் வுருத்திராக்ஷத்தைத் தரிப்பதனா லென்ன சாதிக்கின்றாய்? (26) நாமோவென்றால் நமது யோகத்தின் மகிமையா லிப்போதே மெத்த வுத்தமமான தேவலோகத்துக்குத் துரிதமாய்ச் சென்று கற்பகவிருக்ஷத்தின் மலர்களைக் கொண்டுவருவோம். (27) உருத்திராக்ஷம் கட்டியதா லுந்தனுக் கிவ்வாறு திறமையுண்டானா லப்போது நீ யுரைத்ததெல்லாம் ஸத்தியமே"(28) என, இவ்வா றந்த யோகியுடைய வசனத்தைக்கேட்டடத்தாணிதேவர் வசனமுரைத்ததாவது:— "கேளாய்! சனியாசியே! நீ யுனது யோகாப்பியாஸத்தினால் தேவலோகம்போய் வெறும் கற்பகவிருக்ஷ மலரைத் துரிதமாய்க் கொண்டுவருவாயாகில் ($29\frac{1}{2}$) லப்போது நம் வீட்டிலிருக்கும் நேர்த்தியான வோர் பூனைக்குட்டியான (30) துருத்திராக்ஷம் கட்டப்பெற்றதாகித் தேவலோகம் சென்று ஸகல தேவர்களாலும் பூஜிக்கப்பட்ட டதிசீக்கிரத்தில் மெத்த மங்களகரம்பொருந்திய வக் கற்பகவிருக்ஷத்தையே (31) ஸத்தியமா யவ் வுருத்திராக்ஷம் கட்டிய மகிமையினால் கொண்டுவராலாகு" மென, இவ்வா றவரது வசனம்கேட்டுச் சனியாசி யப்போது மெத்தக் கோபாவேசம் கொண்டவனாகி (32) "ஓ! பிராம்மணா! இப்போது நீ சொல்லுகின்றபடி நடத்திவிட்டா லது முதலாய் நீ யெந்தனால் வந்தனிக்கும்படி யாகின்று யென்பதிற் சந்தேகமேயில்

ல. (33) மேலு மப்போது ஸகல கருமங்களிலு முருத்திராக்ஷம் தரித்தலே மெத்த வுத்தமமாகு" மென்றுரைத்துவிட் டவன் ஸகல ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கையிலே யோகமார்க்கத்திலிருந்துகொண்டு முறைப்படி. சுவாசத்தை யடக்கி ஜுவலிக்கலுற்றவனாகி யாகாயத்திற் கிளம்பித் தேவநகர் சென்று சடிதியில் கற்பக விருக்ஷமலரைக்(35) கொண்டுவந் திராஜனிருக்கும் சபாமத்தியடைந் தத் தேவவிருக்ஷத்தின் மலரை யரசன் கைதனிற்கொடுத்தான். (31) அப்போ தங்கிருந்த வெல்லோர்களு மவ் வற்புதத்தைக் கண்டு மெத்த வாச்சரியம் கொண்டவரானார்கள். மேலுமரசன் முதலிய சபையினர்களெல்லா மவனைத் துதிசெய்தார்கள். (37) இவ்வாறாக அந்த யோகீசுவரன் கற்பகமலர் கொண்டுவந்ததைப் பார்த்ததன்மேல் மகா புத்திசாலியான ஸுப்பிரதீபனென்றப் பிராம்மணன் (38) தன் வீட்டிலிருக்கு முருத்திராக்ஷம் கட்டிய பூனைக்குட்டியைக் கொண்டுவரும்படி தன் புத்திரனை வீட்டிற்கனுப்ப, (39) அவன் வீட்டிற்குப்போய்ச் சடிதியி லதனைச் சபைநடுவிற் கொண்டுவந்தான். உடனே சுப்பிரதீப ரப்பூனைக்குட்டியைத் தம் கைதனி லெடுத்துக்கொண்டு வசனமுரைத்ததாவது:—(40) "ஓ! ராஜேந்திரா! உருத்திராக்ஷத்தின் மகிமையினா லிப்பூனைக்குட்டியானது தேவலோகத்திற்குப் போய்த் தேவவிருக்ஷத்தையே யிதோ சடிதியிற் கொண்டுவரப்போகின்ற" (41) தென்றுரைத்துவிட் டதனை யாகாய மார்க்கத்தி லெறிய, அப்போ தங்கு மகா மங்களகரம்பொருந்திய வோர் சிறந்த விமானம் வரலாகி, (42) அங்கிருந்த வெல்லா ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கையிலே பூனைக்குட்டியவ்விமானத்தி லேறிக்கொண்டு சடிதியில் சொர்க்கலோகமடைந்தது. ஓ! பிராம்மணோத்தமர்களே! (43) அப்போது மகா பல்வானான தேவராஜனு மது வருவதையறிந்து துரிதமாய்த் தனது சிறந்த யானைமீதேறிக்கொண்டு தன் சேனைகளோடுகூட வதனை யெதிர்கொண்டு சென் (44) றதனண்டையிற் போனவுடன் சீக்கிரமா யியானையை விட்டிறங்கிப் பக்தியினால் வணக்க முற்றவனாகி யப் பூனைக்குட்டியை யியானையின் கழுத்தில் வைத்துக் கொண் டதன்மேல் மகா புத்திசாலியான அவ்விந்திர னாது வந்தகாரியத்தை மனதினா லறிந்துகொண் டதனை யெடுத்து முத்தமிட்டுத் தன் தலைமேல் வைத்துக் கண்களி லொத்திக்கொண் (46) டப் புத்திசாலியானவன் தன தாபரணங்களா லதனை யலங்கரித்து மிகுதியாய்ப் பூஜையும் பண்ணி பிறகு கற்பகவிருக்ஷத்தை நோக்கி (47) "ஓ! கற்பகமே! நீ மகாத்துமாவான சுப்பிரதீபர் சொல்வதைக் கேட்டுக்கொண் டவரருகினிலே யிருக்கவேண்டு" மென் றுரைத்து நிகரற்றதான அவ்விருக்ஷத்

தையு மனுப்பி (48) யதனோடுகூட வேதசித்தனென்ற தேவனையு மனுப்பிவிட் டப் பூனைக்குட்டியை முன்போல் விமானத்தின்பேரி லேற்றிவைத்து (49) வந்தனித்துவிட்டு மெத்தச் சந்தோஷமா யனுப்பினான். பிற கப் பூனைக்குட்டியு மிவ்விதமாக விந்திரனா லனுப்பப்பட்டதன்மே (50) லவ் விமானத்தி லேறிக்கொண்டு சீக்கிரத்தில் வானமார்க்கமாய்ச் சென்று வேதசித்தன் கற்பகவிருக்ஷங்களாற் சிறக்கப்பெற்றதாகி யோர் கணநேரத்துக்குள் ளச் சபையின் மத்தியடைந்து (51) சுப்பிரதீப ரருகினில் வந்து தன்விமானத்தை விட்டிறங்கி யவரை மூன்று பிரதக்ஷணங்கள் பண்ணி வணக்கமாய் வந்தனித்துவிட் (52) டச் சபையின்கண் ணவர் முன்னிலையில் நின்றது. பிறகு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வேதசித்தனென்ற தேவனும் சுப்பிரதீபரைப் பக்தியுடன் பிரதக்ஷிணநமஸ்காரங்கள் பண்ணி யப்போ திந்திரனாற் சொல்லப்பட்ட வசனங்களைக் கூறியதாவது:— (53½) "ஓ! ஸ்வாமி! கேவலம் தேவரீருடைய தயவினாலே ஸ்ரீசிவபிரானுக்கு நேசரான தேவரீரை யெப்போதும் மனதினில் நினைத்துக்கொண்டே யான் சொர்க்கலோகத்தைப் பகைஞர்களற் றாண்டுவருகின்றே" னென்ற தேவேந்திரனா லுரைக்கப்பட்ட வசனங்களைச் சொல்லிவிட் டவரால் மரியாதை செய்யப்பெற்றவனாகி (55) யத்தேவன் சுப்பிரதீபருடைய அனுமதியின்பேரில் விமானத்தி லேறிக்கொண்டு துரிதமாய்ச் சொர்க்கலோகமடைந்தான். கேளீர்! வேதியர்களே! அப்போது கற்பகவிருக்ஷமும் மிகுந்த பக்தியோ டவ் வந்தணரை மூன்றுப் பிரதக்ஷிணங்கள் பண்ணி வந்தனித் தவர் முன்னிலையில் நின்றது. (56)

பதினைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௧௬—வது அத்தியாயத்தி னர்த்தம்.

இதெல்லாவற்றையு மரசன் கண்டு மெத்த வாச்சரியமுற்ற மனதைக் கொண்டவனாகிச் சடிதியா யெழுந் தவ் வந்தணரை வந்தனித்துப்போட்டு மெத்த வணக்கத்தோடும் (1) பயத்தோடும் கூடியவனாகியப்போதப்பூனைக்குட்டியைநோக்கி"ஓ!பூனையே!நீயெவ்விதமாய்ச்சொர்க்கத்துக்குப்போனாய்? அங் கிந்திரனால் உனக் கென்ன செய்யப்பட்ட

து? (2) மேலு மவனு லென்னவார்த்தை யுரைக்கப்பட்டது? இவற்றை நீ யுண்மையா யுரைத்திடல் வேண்டு" மென, இவ்வா றரசன் வசனத்தைக் கேட்டவுடன் சுப்பிரதீபர் ஸ்ரீ சிவபிரானை மனதினில் நினைத்துக்கொண்டு (3) "ஓ! பூனைக்குட்டியே! நீ சொர்க்கலோகம் போனதையும், தேவேந்திரனைப் பார்த்ததையும், நீ யவனுல் பூஜிக்கப்பட்டதையும் ஆகிய வெல்லா விவரங்களையும் சிவாக்கினையால் நீ யுண்மையி லெடுத்துரைக்கக்கடவா" யென்ற வசனத்தினு லதற்குப் பேசும் வல்லமையை யருள்செய்தனர். ($4\frac{1}{2}$) உருத்திராக்ஷங்களை யாபரணமாய்ப் பூண்டவரான வப் பிராம்மணேந்திர ரிவ்வாறுரைத்தவுட (5) னப்பூனைக்குட்டி யெழுந் தஞ்சலிகொண் டுரைத்திட்டதாவது:— "ஓ! ராஜேந்திரா! யான் மெத்தச் சுந்தரமான ஜுவலிக்கலுற்ற தேவவிமானத்தி லேறிக்கொண்டு (6) சொர்க்கலோகம் சென்றவுடன் தேவராஜ னெந்தனைப்பார்ப்பதற்காகச் சந்தோஷத்துட னெதிர்கொண்டுவந்து கண்டவுடன் பரபரப்போடு துரிதமா யியானையைவிட்டிறங்கி (7) யெந்தனைப் பக்தியோடு கைகளால் தழுவி முத்தமிட் டியானையின் கழுத்தினிற் றூக்கிவைத்துக்கொண்டு தனதாபரணங்களா லெந்தனை யலங்கரித்து (8) மேன்மையாய்ப் பூஜை செய்ததின்மே லெனது சங்கதிகளை யெல்லா மறிந்துகொண் டம் மகா புத்திசாலியானவன் மிகுந்த பக்தியோடுகூடக் கற்பகவிக்ஷத்தையு மோர் தேவனையு மெந்தனுேடு சேர்த்தனுப்பினுன். ($9\frac{1}{2}$) டப்போ தவன து மனையாளான விந்திராணி யத் தேவராஜனை நோக்கி வினவியதாவது:—(10) "ஓ! தேவேந்திரா! இப்பூனையெவ்வாறு பூஜிக்கப்படத் தகுதியாகும்? ஆகையால் ஓ! ஸ்வாமீ! இது யாரென்பதையும், எந்தத்தேசத்தினின்று வந்திருக்கின்றதென்பதையும் பற்றி யெந்தனுக் கெடுத்துரைக்கவேண்டு" (12) மென, இவ்வா றவளது வசனத்தைக் கேட்டதன்மே லவளை நோக்கி யிந்திர னுரைத்ததாவது:— "ஓ! கேளாய்! இந்திராணி! இப் பூனையானது ஸ்ரீ ருத்திரருக்குப் பூஷணமும் மெத்த மேன்மை தங்கியதும் புண்ணியமுமான வுருத்திராக்ஷத்தைக் கட்டிக்கொண்டிருக்கின்றது. (13) ஓ! என தன்பிற்குரிய மானே! பிராணிகளில் யாதாமொருவர் மகா பரிசுத்தம்பொருந்திய வுருத்திராக்ஷத்தைத் தரிக்கின்றுரோ அவரே மகா பாக்கியவானும், சகல தேவர்களாலும் மானிடர்களாலும் பூஜிக்கத்தக்கவரு மாகின்றுர்.(14) அடி! பெண்ணே! நீ ஸ்ரீ ருத்திராக்ஷத்தின் மகிமையை யறியமாட்டாயா? அதனைப்பற்றி யாமிங் கோர் புண்ணிய கதை யுரைக்கின்றேம்; நீ ஜாக்கிரதையாய்க் கேள். (15)

கேளாய்! இந்திராணி! நேற்றுதினம் நேர்த்தியான குகைகளை க்கொண்ட மந்தரபர்வதத்தின்கண் ஸ்ரீ பரமேசுவரனிடத்திற் கியமதரு மாராஜன் தன் தூதர்களோடுகூட வந்து மிகுந்த பக்தியோ டவரை வந் தனித்துப் (16) பிற கவ னங்கு வந்த வரலாற்றைப்பற்றி யத்தேவ ரால் வினவியருளப்பட்டதன்பேரி லவ னுரைத்ததாவது:— "ஓ! ஜ யா! விஜயீபவா! சம்போ! மகாதேவா! அடியாரிடத்து நேசமுள்ள வரே! பிரபஞ்சங்களைக் காப்பவரே! (17) ஓ! மகேசுவரா! அடியே னுக்குத் தேவரீரால்தான் முந்தி யிந்தப் பதவிகொடுக்கப்பட்டது. தே வரீர தடியார்களுக்கெல்லாம் யான் பரிசுத்தமான பூஜையைச் செய்து வருகின்றேன். (18) ஓ! சமுசாரமாகிய சமுத்திரத்திற்குத் தெப்ப மாகிய பகவானே! தேவரீரிடத்துப் பராமுகமாயிருக்கின்ற ஜனங்களெ ல்லாம் துக்கக்கடலான நரகமதில் வாதிக்கப்பட்டுவருகின்றார்கள். (19) தேவரீரா லருளப்பட்டிருக்கிற வறையறையை யெங்குதான் மீறிநடக்க த்தகும்? ஓ! பிரபுவே! தேவரீரால் தருமமென்று மதருமமென்று மிர ண்டுமார்க்கங்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. (20) ஓ! சங்கரா! தே வாதிதேவரான தேவரீரால் தருமத்துக்குச் சுகமும், அதர்மத்துக்குத் துக்கமும் பயன்களாக வேறபடுத்தப்பட்டிருக்கின்றன. (21) மேலு மதற்கேதுவாகச் சொர்க்கமும் நரகமும் தேவரீராலே யுண்டாக்கப்பட் டிருக்கின்றன. ஆகையா லெனது தூதர்களால் நரகத்தில் மிகுதியா யிமிசிக்கப்படலான (22) வோர் மகா பாவியை, ஓ! பிரபுவே! தேவ ரீரது கணங்கள் வந்து பற்பல விரத்தினங்களால் விசித்திரமான வோர் விமானத்தி லேற்றிக்கொண் (23) டெனது தூதர்களையு மடித்துப் போட் டவனைக் கைலாசத்துக்குக் கொண்டுபோய்விட்டார்கள். ஓ! இ துகஷ்டம்!" என்றியமன் பயத்தினால் வியாகுலமுற்ற மனதைக்கொ ண்டவனுகி யுரைத்தவுடன் (24) பைரவமூர்த்தியானவர் ஸ்ரீ பரமேசுர ன் முன்னிலையி லவ் வியமனை நோக்கிக் கம்பீரவாக்குடன் வசனமுரை த்ததாவது:— "ஆ! அடா! மகா புத்திசாலியான இயமா! என்ன இவ னுக்கிந்த ஜன்மத்தில் மங்களகரமான புண்ணிய மில்லாமற்போயிற்று? அதனை நீ யிப்போது ஸ்ரீ மகேசுவரசன்னிதானத்தி லுண்மையாய்ச்சொ ல்" ($25\frac{1}{2}$) லென, இவ்வா றப் பைரவரது வசனத்தைக் கேட்டவுடன் தருமராஜன் (26) தன்னருகினில் நின்ற சித்திரகுப்தனைக் கண்ஜாடை காட்ட, பிறகு சித்திரகுப்தனும் ஸ்ரீ பைரவதேவரை வந்தனித்துக் கை களை யஞ்சலிபண்ணிக்கொண் டவரை நோக்கி யவர் முன்னிலையில் விந யத்தினால் வணக்கமுற்றவனுகிக் கூறியதாவது:— ($27\frac{1}{2}$) "ஓ! தேவ தேவேசனும், கருணைக்கடலுமான பைரவமூர்த்தியே! அடியேன்மீ த

ருள்புரியவேண்டும். (28) கலிங்கமென்ற தேசத்திலுள்ள வியாக்கிரபு ரமென்ற வோர் பெரிய பட்டணத்தில் மகா கொடியனாகிய ஜாமித்திர னென்ற விம் மகாபாவி யிருந்துவந்தான். (29) கள்ளப்புருடனுக்குப் பிறந்தவனான விப் பாதகனுடைய தாயானவ ளோர் பெரிய அவிசாரி; கேளீர்! தேவரக்ஷகரே! இப்பாதகியானவள் கள்ளப்புருடனால் மருந்தி டப்பட்டு மாண்டாள். (30) பிறகு கொடிய புத்தியுடைய விப் பாதக ன் கள்ளப்புருடனான வத் தகப்பனாற் போஷிக்கப்பட்டுவந்தான். பி றகு நாளளவிலே யிவனுக்கு மிகுந்த புத்திப்பிரமத்தை யுண்டுபண்ணி வைக்கலுற்ற யௌவனப்பருவம் வந்தபோ (31) தத் துராத்துமன் காமன்கணையால் பீடிக்கப்பட்டவனாகிச் சமவயது கொண்டவர்களான தன்னைப்போன்ற பல தோழர்களுடன் நாள்தோறும் தாசிகளோடு பு ணர்வதிலே முயன்றுவந்தான். (32) பிறகோர்நாளி லவனுக்குப் பண மில்லாமற்போனபோது ஓ! கோ! மகா பாதகனான வித் துராத்துமன் மோசடியாய்த் தகப்பனைக் கொன்றுபோட்டான். (33) மேலு மவ னெப்போதும் மத்தியபானம் செய்வோனு மிறைச்சிகளைத் தின்போனு ம் மெத்த வஞ்சகனுமாகியவன். இப்படியிருக்கையி லவ னொருநாள் திருடியதைக் கிராமத் தலையாரிகள் கண் டவனைப் (34) பிடித்தடித்து நாள்தோறு மிமிசித்துவந்து பிறகு கொன்று சுடுகாட்டினி லெறிந்துவி ட்டார்கள். ஓ! ஸ்வாமீ! அப்பாதகனுக் கிச் சன்மமதில் யாதொரு பு ண்ணியமும் காணப்படவில்லை. (35) ஓ! ஜகதீசா! அவனிறந்து நா ன்குதினங்களாகிவிட்டன. அவனெனது தூதர்களால் மிகவும் வாதிக் கப்பட்டுக்கொண்டிருக்கையில் (36) ஓ! மகேசுவரா! தேவரீரது தூ தர்கள் வந் தத் தூதர்களையெல்லாம் மிகுதியா யடித்துப்போட் டத் து ராத்துமனை விடுவித்துக் கைலாசத்துக்குக் கொண்டுபோய்விட்டார்கள். (37) இத்துராத்துமனுக்குக் கொஞ்சமேனும் புண்ணியமிருப்பதாயெ னக்குத் தெரியவில்லை" யென்று விண்ணப்பம் செய்துகொண் டச் சித் திரகுப்த னவர் முன்னிலையி லஞ்சலிகொண்டு நின்றான். (38) அப் போது பைரவரு மவனைப் பார்த்து மந்தகாஸம்பண்ணிக்கொண் டியம னை நோக்கித் திருவாக்கருளியதாவது:— "கேளாய்! இயமா! சகல அ வயவங்களும் சுந்தரமா யமையப்பெற்ற சக்கிரவாகராஜன் பெண்ணான வள் (39) நடுவினி லுருத்திராக்ஷம் கோர்க்கப்பெற்ற நேர்த்தியான விரத்தினமாலையை மல்லிகைக் கொடியின்பேரில் வைத்துவிட்டுத் தன தரண்மனையில் ஸ்நாநம்செய்துகொண் டிருக்கையி (40) லோர் காக்கை யான ததனைத் தூக்கிக்கொண் டுயரப் பறந் தாகாயமார்க்கமாய்ச் செல் லும்போது நேர்த்தியான அம்மாலை யறுகலாகி (41) அப்போ ததின்

மத்தியிலிருந்த மகா பரிசுத்தம்பொருந்திய வுருத்திராக்ஷமானது ஏதோ வோர் புண்ணியவசத்தினுல் வெட்டுண்டு கிடக்கலான இவனது தலைமீது விழுந்து (42) அதி னிரத்தத்தில் பற்றலாகி யின்னும்கூட அதிலொட்டிக்கொண் டிருக்கின்றதடா. அடா! இயமா! அந்தப்புண்ணியத்தினுல்தா னிவன் கைலாஸபதவி யடைந்திருக்கின்றனடா. (43) ஓ!கோ! உருத்திராக்ஷத்தின் மகிமையான தெந்தனு லுரைக்கப்பட முடியாது. அடியார்களின் துக்கங்களைத் தொலைக்கலுற்ற வுருத்திரபகவான்தா னறிவாரோ இல்லையோ" (44) வென, இவற்றையெல்லாம் கேட்டதன்மே லங்கிருந்த நந்திகேசுவரன் திருவசனமுரைத்ததாவது:— "ஓ! இயமா! யாதாமொருப் பிராணியின் தேகத்தில் ஸ்ரீ பரமேசுவரனுக்குப் பிரியமும், மெத்த வுத்தமமுமான வுருத்திராக்ஷ மிருக்கின்றதோ அவன் கைலாஸத்தை யடைகின்றதி லென்ன வாச்சரியமடா? ($45\frac{1}{2}$) ஓ! கேளடா! இயமா! இறந்தவர்களுடைய வெலும்பு, மயிர் முதலியவைகள் வெகுகாலம் சென்றதன்மேலாவது கங்கையில் (46) விழுந்திடிலவர்க ளுடனே கைலாசத்தை யடைவார்களே! ஆகையா லிவனுக்குக் கைலாசப்பிராப்தி யுண்டானதில் யாதோ ராச்சரியமு மில்லையன்றோ" (47) வென, இவ்வாறு நந்திகேசுவரனுடைய வசனத்தைக் கேட்டதன்மேல் சித்திரகுப்தன் இயமன் இவ்விருவர்களும் பயத்தினுல் நடுக்கமுற்றவர்களாகித் தேவாதிதேவரான ஸ்ரீ முக்கண்ணரை வந்தனித்துவிட் (48) டவரது திருவாக்கினையின்பேரில் சகலபாவங்களையு மபகரிக்கலுற்ற ஸ்ரீ ருத்திராக்ஷத்தின் மகிமையை மனதினில் நினைத்துக்கொண்டே தங்கள் தானத்திற்குப் புறப்பட்டார்கள். (49) அவ்வாறு புறப்படுகையில் ஸ்ரீ மகேசுவர னவ் வியமனைக் கூப்பிட்டு "ஓ! இயமா! இப் இப்போதுமுதலாய் நீ நம தன்பினர்களான வுருத்திராக்ஷதாரிகளைக் (50) கண்டால் பயத்தோடு தூரத்தில்நின்றபடியே யவர்களை மனப்பூர்த்தியாய் நமஸ்காரம் பண்ணிவிட் டோடிப்போகவேண்டும். மேலும் நீ யிச் சிக்ஷையைத் தவறுதலின்றி யுந்தன் தூதர்களுக்குக்கூடக் கற்பித்துவைக்கவேண்டும். (51) நமதுயிரினு மதிகர்களான பஸ்ம ருத்திராக்ஷதாரிகளாகிய வெம தடியார்களிடத் துந்த னதிகாரம் செல்லத்தகாததே! இதை யிங் குனக்குச் சத்தியமாய்ச் சொன்னேம், சத்தியமாய்ச் சொன்னேம்" (52) மென, இவ்வாறு ஸ்ரீ சம்புவின் திருவசனத்தைக் கேட்டவுட னவ னப்படியே மனதினி லுறுதிசெய்துகொண்டு மெத்தப் பக்தியுட னவரைத் தண்டம்பண்ணிவிட்டுத் தன் தானத்திற்குச் சென்றுவிட்டான். (53) ஓ! கேளாய்! இந்திராணி! நேற்றுதினம் ஸ்ரீ பரமேசுவரன் சன்னிதானத்தில் நா மிவ் வெல்லாவற்றையும் பார்த்ததின்

மேலெமக் குருத்திராக்ஷம் தரிப்பவரிடத்து மிகுந்த பக்தி விசுவாஸ முண்டாகிவிட்டது. (54) கேளாய்! எம் பிரிய நாயகி! ஆகையால்தா ன் யா மிப் பூனைக்கு மிகுதியாய்ப் பூஜைசெய்தன" மெனை, இவ்வாறு தேவேந்திரனது வசனங்களைக் கேட் டிந்திராணியும் மெத்த வாச்சரியம் கொண்டவளாகி (55) கேளீர்! அரசனே! அவள் கைகளா லெந்தனை த் தழுவியெடுத் துச்சிமுகர்ந்து மிகுந்த பக்தியோடு கண்களிலொத்திக் கொண் டதன்மே லெந்தனை யனுப்பலாளு" (56) னென்று பூனைக்கு ட்டியால் சொர்க்கத்தில் நடந்த சங்கதிக ளுண்மையா யங் குரைக்கப்ப டலானதைக் கேட்டு, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வரசன் மனதினில் மெத்த வாச்சரியம்கொண்டவனாகி யச் சுப்பிரதீபரிடத் ததி க பக்தியைப் பாராட்டலானான். (57)

பதினாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௧௭—வது அத்தியாயத்தின்அர்த்தம்.

பிற்பா டவ்வரசனுத்தமஞ்ஞானம் கொண்டவனாகிச் சுப்பிரதீப னென்ற வப் பிராமணச் சிரேஷ்டரை வந்தனித்துவிட்டுப் பக்தியுடன் தரித்துக்கொள்வதற்காகத் தனக்கு மோருருத்திராக்ஷம் கொடுத்தருளு ம்படி வேண்டிக்கொண்டு (1) "ஓ! பிராம்மணோத்தமா! சரணமடை ந்தவனான குற்றம்செய்த வெந்தனை மன்னித்தருளவேண்டும். தேவரீ ரைத் தரிசித்துச் சம்பாஷித்ததனால் யான் கிருதார்த்தனாகிவிட்டே" (2) னென் றவ் வரசமன்னன் சொல்லுகையி லச் சனியாசியானவன் சடிதியி லெழுந் தப் பிராம்மணச்சிரேஷ்டரை மெத்தப் பக்தி விசுவாச த்தோடு வந்தனித்துவிட் டுரைத்ததாவது:—(3) "ஓ! பாவலேசமற்ற வரும் எப்போதும் தயவினால் நனையப்பெற்ற திருமனதைக் கொண்ட வருமான ஸ்வாமீ! தேவரீர் கேவல முருத்திராக்ஷதாரணத்தினா லுருத் திரரோயாகின்றீர். ஆகையால் நான் செய்த பிழையை மன்னித்தருள வேண்டும். (4) ஏனென்றால் பிராணிகள் குற்றம் செய்திடினு மவர்களி டத்து மகாத்துமர்கள் கோபிப்பதில்லை" யென்று துதித்துப் பிறகவ் விருவர்களு மஞ்சலிகொண்டு நிற்கையில் (5) சுப்பிரதீப ரவர்களைத் தமதருகினி லுட்காரச்செய் தோர் கதை சொன்னதாவது:—

"கேளீர்! யோகீசுவரரே! மகரமென்ற தேசத்தில் மகாபுரமெ ன்றோர் பட்டணமிருக்கின்றது (6) அங்கு சுகுப்தனென்று மகா புத்திசாலியான வோர் பிராம்மண னிருந்தான். அவனுக்கு நல்ல புத்தியையுடைய வைந்து பிள்ளைகளிருந்தார்கள். (7) அவர்களிற் கடைப் பிள்ளையாகிய மகா புண்ணியவானான சாந்திக னென்பவன் மண் விளையாட் டாடிக்கொண்டிருக்கையி லோருருத்திராக்ஷத்தைக் கண்டெடுத்துக்(8) கேளீர்! சன்னியாசியே! அதனை யெப்போதும் கழுத்தினிற் கட்டிக்கொண்டிருந்தான். கூர்மையான புத்தியுடைய வச்சிறுவ னோர் பைத்தியக்காரன்போ லவனது பெற்றோர் சகோதரர்களுடைய வார்த்தைகளைக் கேட்பதில்லை. (9) அவன் மெத்த வேழையாயினு மெறக்கப் போகாமல் தனதிச்சையின்படி யிருந்தான். ஓ! சன்னியாசியே! அவனது நான்கு சகோதரர்களும் பெற்றோர்களோடுகூடப் (10) பிச்சையெடுத்துவந்து தன் தன் வயிற்றைவளர்த்துவந்தார்கள். அச்சிறுவேனே அவர்களேதாயினும் கொஞ்சம் கஞ்சியூற்றின லதனைமட்டிற் குடித்துக்கொண்டு வீட்டைவிட் டெங்கும் போகாமலே யிருந்தான். ($11\frac{1}{2}$) அவனிவ்வாறாக வுருத்திராக்ஷத்தை யாபரணமாய்க் கட்டிக்கொண்டு சிலகாலமிருந்துவந்தான். (12) சகோதரர்களுமவ்வாறே சொன்னசொற்கேளாத வச் சிறுவனைக் கண்டு பகைத்துவந்தார்கள். இப்படி யிருக்கையி லப்போது தவசியாகிய வோர் கோளதேசந்தரசன் (13) பத்திரகாளியம்மைக்கு வருடந்தோறு மோர் நரபலிகொடுத்துவந்தான். அப்பலிக்காக வத் தேசத்தில் வெகு பாடுபட்டு மங்கு கிரயத்துக்கு வாங்க வோர் மனிதனும் கிடைக்கவில்லை. (14) பிற்பா டவ் வரசனோர் பழுதற்ற நல்ல மனிதனை விலைக்குவாங்குவதற்காகத் திரண்ட திரவியத்தைக்கொடுத்துச் சில தூதர்களை மகரதேசத்திற் கனுப்பினான். (15) பின்பத் தூதர்களு மங்கக்குள்ளப் பிராம்மணர் வீடுகளிலெல்லாம் விசாரித்துக் கொண்டுளவினிலே யிச்சிறுவன் வீட்டிற்குவந்து சங்கதிகளைச் சொன்னார்கள். (16) அதனைக்கேட்டவன் பெற்றோரும் சகோதரர்களு மத் திரவியத்தை வாங்கிக்கொண் டப்போது சாந்தமான மனதையுடைய சாந்திகனை யவர்களுக்குக் கொடுத்துவிட்டார்கள். (17) பிறகவனு மவர்கள தனுமதியின்பேரி லத்தூதர்களுடன் சென்று கோளதேசத்தரசன் பட்டணத்தில் புரோகிதன் வீட்டில் மிருந்த சந்தோஷமுற்ற மனத்தக்கொண்டவனா யிருந்துவந்தான். (18) பிற்பாடு பலிகொடுக்குந்தினத்தி லச் சாந்திகன் புரோகிதன் சொற்படி ஸ்நாநம் பண்ணி யாடையாபரணம் தரித்துத் தேகம் முழுதும் சந்தனம் பூசிக்கொண்டு (19) மி

குந்த மனச்சந்துஷ்டியுடன் புரோகிதனோடுகூட வரச னரண்மனைக்குச் சென்றான். அப்போ தரச னவனைக் கண்டவுடன் பலிகொடுப்பதற்காக வுள்ளமதில் நிச்சயித்துக்கொண்டவனாகி (20) யச் சிறுவனோடும் புரோகிதனோடும்கூடத் துரிதமாய்க் காளிகோவிலுக்குப்போ யவ் வம்மையைச் சிறந்த தூபதீபங்கள், புஷ்பங்கள், பற்பலவித பக்ஷியபோஜியங்கள், மாமிசங்கள், இரத்தங்கள் இவைகளா லெல்லாம் மிகுதியாய்ப் பூஜித்துவிட் (21½) டப் பத்திரகாளியின் சன்னிதியி லச் சாந்திகனை நிற்கவைத்துத் தானும் நின்றுகொண்டிருந்தான். (22) பிறகக் காளியம்மையு முருத்திராக்ஷாபரணத்தைத் தரிக்கலுற்ற வச் சாந்திகனைக் கண்டு பயந்தவளாகி மனதினாலவனை வந்தனித்துவிட்டுச் சடிதியிலெழுந்து பிறகவள் (23) மிகுந்த கோபத்தினா லங்கிருந்த புரோகிதனைக் கொன்றுவிட் டத் தூராத்துமனுடைய விரத்தத்தைக் குடித்ததன்மே லப்போதவளச் சாந்திகனைப் பார்த்துத் திருவாக்குரைத்ததாவது:—(24) "ஓ! பிராம்மணர்களிற் சிறந்த மெத்தப் புண்ணியசாலியான வுத்தமனே! நீ யுனது கழுத்தினில் மகா பரிசுத்தம்பொருந்திய வுருத்திராக்ஷத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றபடியா லிச்சகமதி லுந்தனுக்கு நிகரொருவருமில்லை. (25) ஓ! மிகுந்த சாத்துவீககுணம் பொருந்தியவனும், அசைவற்ற சித்தநிலையைக்கொண்டவனும், உறுதியான விரதத்தைக்கொண்டவனுமான சிறுவனே! இப்பேர்க்கொத்த நீ ஸாக்ஷாத் உருத்திரனும், தேவச்சிரேஷ்டர்களா லெல்லாம் பூஜிக்கலுற்றவனுமே யென்பதிற் சந்தேகமேயில்லை. (26) ஓ! புண்ணியாத்துமனே! உனக்கு வேண்டிய வரனைக் கேட்டுக்கொள்; அதனை யுந்தனுக்குக் கொடுக்கின்றேன்" மென, இவ்வாறு பத்திரகாளியின் வசனத்தைக் கேட்டதன்மேல் சாந்திக னவளை நோக்கி யப்போ துரைத்ததாவது:—(27) "ஓ! ஜகதீசுவரீ! என்மீ துமக்கன்பிருந் தெந்தனுக்கு நீர் வரனும் கொடுப்பீரானா லுமக்கு வருடந்தோறு மிந்த நரபலிகொள்ளுதல்வேண்டாம். (28) மேலும் நீரிவ்வரசனுக்கு மெத்தச் சந்தோஷமுற்ற திருவுளத்துடன் வேண்டியவரனை யளித்தருளவேண்டு" மென, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டதன்மே லவனுக் கப்படியே வரனையளித்துவிட்டுப் (29) பின்னுமீசுவரி யவ் வரசனை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:— "ஓ! அரசனே! சிரேஷ்டமான வுருத்திராக்ஷ பூஷணத்தைக் கொண்ட விச் சிறுவனை நீ யென்றும் பூஜித்துவரவேண்டும். (30) மேலும் நீ யவனது வார்த்தையை ஸ்ரீ ருத்திரனதுபோல் கேட்டு நடப்பது தகுதியாகும். தவிரவும் நீ யுனது பெண்ணை யவனுக்குப் பாணிக்கிரகண முறைப்படி கலியாணம் செய்துகொடு. (31) இப்படி நீ செய்வாயாகி லுந்தனுக்குச் சக

வேண்டுமெனு முண்டாகும். ஓ! ராஜனே! உன் புரோகித னிவனைப் பலிக்காகக்கொண்டுவந்த (32) தோடத்தினுல் தா னுண்மையி லுன் முன்பாகவே அவன் கொல்லப்பட்டான். மேலு மவனது பிள்ளையும் பழிப்பற்ற பெண்டிரும் மாணமடைந்துவிட்டார்கள்.(33) ஓ! தாணி வேந்தனே! மேலுமவனது வீடும் தீப்பற்றலாயிற்று. இவனைப் பகைத்த மகா பாவிகளான இவனது பெற்றோர்களும் சகோதரர்களும் (34) திரவியங்களெல்லாம் திருடர்களால் கொள்ளையிடப் பெற்றவர்களும், குஷ்டம் முதலிய வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்களும், நாள்தோறும் பசிதாகத்தினுல் துன்பப்பட் டாகார மிருப்பிடமற்றவர்களுமாகித் (35) துக்கக்கடலி லாழ்ந்தித் தேசத்துக்குத் தேச மலைந்துகொண்டிருக்கின்றார்கள். உருத்திராக்ஷம் கட்டிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீமகேசுவரனையொத்த விம் மறையவனை யாவர் பூஜிக்கின்றார்களோ (36) அவர்கள் பாவங்கள் தொலையப்பெற்றவர்களாகிப் பார்மீது தேவன்போ லானந்தமடைகின்றார்க" ளென, இவ்வாறு ஸ்ரீ காளியம்மையின் வசனத்தைக் கேட் டரசன் மிகவும் பக்தி விசுவாசம்கொண்டவனுகி (37) யவனுக்கு நேர்த்தியான தன் பெண்ணை முறைப்படி கலியாணம் செய்துகொடுத்து பற்பல விரத்தினங்களா லலங்கரிக்கப்பெற்ற வோரரண்மனையுங் கட்டிவைத்து (38) நாள்தோறு மவனை ஸ்ரீ மகேசுவரனைப்போல் தரிசித்துப் பூஜைசெய்துவந்தான். பிற்பா டச் சாந்திகனு மோருருத்திராக்ஷம் கட்டியதற்குப் பய னிவ்வாறிருப்பதை (39) யாலோசித்துப் பிறகு கழுத்து, கைகள், புயங்கள், மணிக்கட்டுகள், தலை இவ்விடங்களிலெல்லா மாயிரம் சங்கியைக் கதிகமாக வுருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டு (40) தனதரண்மனையில் மனையாளோடுகூடச் சந்தோஷமாய்ச் சுகித்திருந்தான். இவ்வா றவனது விருத்தாந்தங்களை யெல்லா மிவன் பெற்றோர், சகோதரர்கள் கேள்வியுற்றதன்மே (41) லவர்க ளவனைத் தங்கள் பிள்ளையென்றே நிச்சயித்துக்கொண்டுப் பிராம்மணுசரணைகளை யிழந்தவர்களும், இரணத்தினு லூனீர் வடியலுற்ற தேகத்தைக் கொண்டவர்களுமாய்ச் சடிதியி லத்தேசத்துக்கு வந்தார்கள். (42) பிறகு சாந்திக னவர்களைக் காணலானதின்மே லவர்களைச் சந்தோஷத்துடன் நேர்த்தியான தனதரண்மனைக் கழைத்துவந் தவர்களுக் கெண்ணெயிட்டு ஸ்நாநம்செய்துவித்துச் சிறந்த வஸ்திரங்களையும் கொடுத்துக் (43) கேளீர்! தவசியே! அவ்வெல்லோர்களுக்கு முருத்திராக்ஷங்களா லலங்காரம் செய்வித்தான். பிறகவர்களு முருத்திராக்ஷத்தின் மகிமையால் குஷ்டம் முதலிய வியாதிகள் நீங்கப்பெற்றவர்களாகி (44) நாள்தோறும் திவ்விய வஸ்திரங்களை யுடுப்பவர்களும், திவ்யாபரணங்களா லலங்க

ரிக்கப்பெற்றவர்களுமாகி விச் சாந்திகனோடுகூட் மிருந்த் போகங்களை
யனுபவித்துவந்து (45) முடிவினில் மிருந்த வானந்தங்கொண்டவர்க
ளாகி யொப்பற்ற கைலாஸபதவியடைந்தார்கள். கேளீர்! மஹா புத்தி
சாலியான தவசியே! இச்சாந்திக னுருத்திராக்ஷமென்றே அறியாமலோ
ர் மணியென்ற பிரமத்தோ டதனைத் தரித்து மதனாலுள்ள பயனை நன்
றாய்க் கேட்டீர்களல்லவா! (46) இப்படி யிருக்கையி லுருத்திராக்ஷத்
தை ஸ்ரீ பரமேசுவரனுடைய மெத்தச் சிறந்த வாபரணமென்றும், சொ
ர்க்கமோக்ஷ பதவிகளைக் கொடுக்கலுற்றதென்றும் நன்கறிந்தவனாகி
யாவர் தமது சரீரங்களி லெப்போதும் நன்றாய்த் தரிக்கின்றார்களோ
அதனால் தங்கள் பாவங்களைத் தகிக்கப்பெற்ற வப்பேர்க்கொத்த மகா
னுபாவர்களுடைய பயனை ஸ்ரீ பரமேசுவரன், பார்வதி, விக்கினேசுவரர்
இவர்களைத் தவிர வெந்தப் புத்திசாலிகள் தானறியத்தகுமென்று யான்
சத்தியமாய்ச் சொல்லுகின்றே னென்றார். (47)

பதினேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் கஅ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடந்த யோகீசுவரரும் சுப்பிரதீபரது வசனத்தைக் கேட்டு
மெத்த வாச்சரிய முற்றவராகி யப்போது முதலாய் ஸ்ரீ ருத்திரருக்குப்
பூஷணமான வுருத்திராக்ஷத்தைத் தரித்துக் கொண்டு பாவத்திரள்களை
யெரித்துவிடப் பெற்றவராகித் தமது கருமயோகத்தைவிட்டுத் தொலை
த்து (1½) சிவபெருமானருளினாலே சீக்கிரத்தில் சிவயோகித் தன்
மையை யடைந்து (2) சிவஞானம் பெற்றதனால் மறுபிறப்பிற்கசா
த்தியமான மோக்ஷஸாம்பிராஜ்ய மடைந்தார். அப்போது முதலவ்வாச
னு முத்திராக்ஷாபரணங்களால் விளங்கலுற்றவனாகி (3) வெகுகாலம
ளவு மெதிரியற்றவனாய்ச் சகல விராஜ்ஜியங்களையுமாண்டு ஸகல போக
ங்களையுமனுபவித்து மானிடருக்கரிய சகல வாநந்தங்களையும் கொண்டவ
னாகிக் (4) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறகாசாக்ஷியைப்பிள்ளை
களிடத் தொப்புவித்துப்போட்டுச்சிவலோகமடைந்தான். பிறகச்சுப்பிர
தீபரு முருத்திராக்ஷத்தின் மகிமையைப் புகழ்ந்துரைத்துவிட்டு(5) மெ
த்தச் சந்தோஷத்துடன் தமதகத்திற்குச் சென்று புத்திர பௌத்திரர்
களுடனும், சீடர்கள், சீடர்களின் சீடர்கள், பந்துவர்க்கங்கள், மனைவியி

வர்களுடனும் கூடப்பலவருடங்களளவும் மிகவும் ஜுவலிக்கலுற்றவரா யனேக விதபோகங்களை யனுபவித்துவிட்டுப் ($6\frac{1}{2}$) பிறகு தேவஸ்தி ரீகளாலலங்கரிக்கப் பெற்றதேவ விமானத்திலேறிக்கொண்டு தேவதுந் துபி முழக்கங்களுடனும் மேன்மைபொருந்திய மலர்மாரிகளுடனும் முந் திச் செல்லலுற்ற தேவருடிகளாற் சூழப்பெற்றவராகி (8) முந்தி யி ந்திரனு லனுப்பப்பட்ட கற்பகவிருக்ஷத்தையு மாபரணத்தையு முஜ்ஜயி னீ பட்டணத்தில் விளங்கும் ஸ்ரீ மகாகாளேசுவரஸ்வாமிக்குக் காணிக் கை கொடுத்துப் போட் (9) டந்தப் பூனையுடன்கூடச் சந்தோஷமாய்ச் சிவலோகமடைந்து பிறகளவிலே ஸ்ரீ பரமேசுவரனுடைய ஸாயுஜ்ய பதவியை யடைந்தானென, (10) சௌனகாதி முனிவர்கள் கேட்கின் றதாவது:—"ஓ! சூதமுனிவரே! முந்தித் திருநீற்றின் மகிமையும், பிறகு சகல வேதசாஸ்திரங்களுக்கும் சம்மதமான வுருத்திராக்ஷமகிமையு மும் மா லெடுத்துரைக்கப்பட்டதன்றோ! (11) ஓ! தவசிச்சிரேஷ்டரே! திருநீற்றைத்தரித்தமாத்திரத்தினாலே சகல அபீஷ்டங்களும் வேண்டிய மட்டி லுண்டாகிவிடும்போது ருத்திராக்ஷத்தை யெதற்காகத் தரிக்க வேண்டும். (12) ஓ! புராணப்பொருளில் தேர்ச்சிகொண்ட சூதமுனி வரே! இப்பேர்க்கொத்த வெங்களது சந்தேகத்தைத் தெளிவிக்கவேண் டும். ஏனெனி லிச் சந்தேகத்தைத் தீர்க்கத்தக்க பண்டிதரும்மைத் த விர மற்றொருவருமில்லை. (13) ஓ! தவசியே! உம்மைப்போன்ற பெ ரியோர்களுக்குச் சாதுக்களான கேட்போர்களிடத்தி லென்ன பரிசுத்த மும் மகா ரகசியமுமானபோதிலும் சொல்லத்தகாத தொன்றுமில்லை" (14) யென, இவ்வா றவர்களது வசனம்கேட்டுச் சிறந்த புராணிகரா ன சூதர் மந்தகாசமுற்ற முகமலரைக்கொண்டவராகிக் கம்பீரமான வாக் குடன் சொல்லியதாவது:—(15) ஓ!, முனிவர்களே! பாவலேசமற்ற வர்களான நீங்களெல்லோர்களும் கேளீர்கள். 'வெறும் திருநீற்றைத் தரித்துக்கொள்ளல்மாத்திரமானு லது ஜலம், வியர்வைத்திவலை, (16) மழை, ஸ்நாநம் செய்தல், ஜனக்கூட்டத்தின் நெருக்கம் இவை முதலிய வைகளாலெல்லா மழிக்கப்பட்டுப்போனுல் பிராணிகளுக்குப் பயமுண் டாகலாகும். (17) மேலும் பூதப்பிரேத பிசாசப் பிரம்மராக்ஷஸங்கள், பாம்பு, திருடர்கள், மர்மஸ்தலங்களைப் பிளக்கலுற்ற புலிகள், சிங்கங்க ள், சத்துருக்கள் முதலிய வெல்லாம் கேளீர்! தரணிதேவர்களே! விபூ தி ருத்திராக்ஷங்க ளற்றிருப்பவர்களை யெப்போதும் வாதிக்கலாகும். ($18\frac{1}{2}$) ஆகையால் தமக்கு நன்மையைக்கோருவோர் விபூதி யிட்டுக் கொள்வதோடுகூட வுருத்திராக்ஷத்தையும் கழுத்து, காதுகள், கைகள் முதலியவிடங்களி லெப்போதும் தரித்துக்கொள்ளல்வேண்டும். ($19\frac{1}{2}$)

ஓ! வேதியர்களே! இதுவிபூதியைப்போல் ஜலம் முதலியவைகளாலெல் லா மபாயமடைவதற் கிடமிராது. (20) திருநீறு ருத்திராக்ஷங்களைத் தரித்திருப்போனைப் பூதப்பிரேத பிசாசங்களு மிராக்ஷதர்களும் வாதிப்பதில்லை. ஸர்ப்பங்களுந்தீண்டா. (21) இவ்வுருத்திராக்ஷத்தைக் கயிற்றிலாவது அல்லது பொன், வெள்ளி, செம்பு இவைகளிலாவது கோர்த்துக்கழுத்து முதலிய விடங்களில் தரித்துக்கொள்ளவேண்டும், (22) இல்லாவிடில் கேளீர்! மறையவர்களே! எல்லா விதத்திலும் விபூதி யிட்டுக் கொள்வதோடுகூடப் பூறாற் சாட்டிலாவதோ ருருத்திராக்ஷத்தைத் தரித்துக்கொள்ளல்வேண்டும். ஆகையால் சகல முயற்சியாலும் விபூதி ருத்திராக்ஷங்களைப் பூஷணமாய்க் கொள்வோர் (23) சத்துருக்களிடத்துப் பயமடையாமல் நிர்ப்பயர்களாகவே யிருப்பார். ஓ! தரணிதேவர்களே! இது விஷயததைப்பற்றி முந்தி நடந்த வோர் சிறந்த கதையைச் சொல்லுகின்றேன்:—(24)

சவிதா வென்ற தேசத்திலுள்ள விலக்ஷ்மீவிலாஸம் பொருந்திய நேர்த்தியான சூரியபுரமென்ற பட்டணத்தில் ஸிந்துஸேனனென்றோர் பெருமைதங்கிய வரசனிருந்தான். (25) மகா பலசாலியான இவ்வரசன் தன் மாற்றானன, காகளபுரமென்ற பட்டணத்தில் வாழும் விந்த்ய தேசத்திற் கதிபனான ஸிம்மனென்ற வரசனைத் தன் சைனியங்களோடுகூட வுயுத்தத்திற் சயித்துக் காட்டிற்குத் துறத்திவிட்டான். (26½) பிறகவ் வரசனும் சிலகால மக்காட்டினில் வசித்துக்கொண்டே (27) சகல சத்துருக்களையும் தொம்சம் செய்விக்கலுற்ற ஸ்ரீ விஷ்ணுவைத் தவத்தினு லாராதித்துச் சத்துருக்களைச் சமுகரிக்கலுற்றதும், மகா மகிமைபொருந்தியதுமான சக்கிரத்தைப் பெற்றான். (28) ஆனு லப்போது பிரத்தியக்ஷமான திருமா லச் சக்கிரத்தை யருளும்போது ஓ! ராஜனே! நிகரற்ற விச் சக்கிராயுதமான துனக் கைந்துதடவை மட்டில்தான் சத்துருக்களைக் கொல்லத்தக்கதாகும். (29) அதன்பிறகது நம்மிடம் வந்து சேர்ந்துவிடக்கடவ" தென்று திருவாய்மலர்ந்தருளி யற்புதமான வச்சக்கிரத்தைக் கொடுத்துவிட் டடனே அந்தர்த்தானமடைந்தனர். (30) பிறகு பலவானான அவ்வரச னதனைப் பெற்றுக்கொண் டோர் நொடிநேரத்திற்குள் ளாணியத்தை விட்டுப் புறப்பட்டுத் துரிதமதி லச் சிந்துசேனனையு மவனது சைனியங்களையும் வளைந்துகொண் (31) டியுத்தம்செய்கையில் மகா பயங்கரமான வச் சக்கிரத்தைப் பிரயோகிக்க, அச் சக்கிரமான தவ் வரசனை மட்டில் விலக்கி மற்றெல்லாச் சேனைகளையு மதம்பண்ணிவிட்டுத் (32) திரும்பி மகா பயங்கரமா யவனது கையையடைந்தது. பின்பு ஸிந்துசேனன்மட்டி லொண்டியாய் மகா பயங்

காமான வாணியத்திற்குச் சென்று (33) கேளீர்! தாணிதேவர்களே! அங்கலைந்துகொண்டிருக்கையில் ஸ்ரீ வஸிஷ்டமாமுனிவரி னுசிரமத்திற் குப்போ யங்கு மகாத்துமாவான வஸிஷ்டர், சிரேஷ்டரான கௌதமர், (34) கௌசிகர், நாரதர் முதலிய மாமுனிவர்களை யெல்லாம் கண்டு வ ந்தனித்து "ஓ! ஓ! நல்ல ஞானத்தினுல் நிரம்பப்பெற்ற கொடிய தவ ங்களைச் செய்யும் மாமுனிவர்களே! (35) மகா புத்திசாலியான நீங்க ளடியேனைச் சகல தேசங்களுக்கு மதிபனுன வேந்தனென்றறியவேண் டும். நானெனக்கு நிகரான சத்துருவோடு யுத்தத்தில் தோல்வியடை ந் (36) தேபோ மிகுந்த புண்ணியவசத்தினு லிப்போ துங்களைச் சா ணமடைந்தேன். ஆகையா லெந்தனுக் கெந்த வுபாயத்தினுல் வேண் டியமட்டிலுள்ள வெற்றி கிடைக்குமோ (37) அப்போர்க்கொத்த வுபா யத்தைச் சகல குணங்களும் நிரம்பப்பெற்ற நீங்கள் சொல்லியரு ளவேண்டு" மென, இவ்வா றவனது வசனத்தைக்கேட் டவ்வெல்லா இருடிசுவரர்களு (38) மவன் வெற்றிபெறக்கூடிய மெத்த வுத்த மமான வுபாயத்தை யாலோசித்துச் சொன்னதாவது :— "கேளா ய்! ராஜனே! நீயுனது சேனைகளோடுகூட ஜயத்தைக் கொடுக்கலுற் ற விபூதியையு முருத்திராக்ஷத்தையும் தரித்துக்கொண் (39) டியுத்த ம் செய்தால் வெற்றியுண்டாவதி லாக்ஷேபணையில்லை. ஆனதினுல் தான் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரியாதிருந்த வுனதெல்லாச் சே னைகளும் (40) சத்துருவால் கொல்லப்படலாகி நீ யொருவன் மட்டில் மிஞ்சலானு" யென, இவ்வா றவர்களது திருவசனங்களைக் கே ட்டதன்மே லரசன் சந்தேகத்தினுல் குழப்பமுற்ற வுள்ளத்தைக்கொ ண்டவனுகி விநயத்தினுல் வணக்கமுற் றவ் விருடிகளை நோக்கி வசனமு ரைத்ததாவது:— ($41\frac{1}{2}$) "ஓ! தவங்களையே தனமாய்க்கொண்ட மா முனிவர்களே! இப்போது சத்துருவால் விடப்பட்ட சக்கிரமான (42) தென்னகாரணத்தினுல் விபூதிருத்திராக்ஷம் தரியாமலேயிருந்த வெந்த னைமட்டில் விலக்கிச் சகல சைனியங்களையும் கொன்றுபோட்டுத் திரும் பிப்போய்விட்டது? (43) ஏனென்றுல் விபூதிருத்திராக்ஷங்களைத் தரி யாத சைனியங்களெல்லாம் மடியலாயினவென் றுங்களால் திருவாக்கரு ளப்பட்டபடியா லெந்தனை மெத்தச் சந்தேகம் வாதிக்கின்ற" தென, (44) இவ்வா றவனது வசனத்தை மனதி லெண்ணி யோர் மாமுனிவ ர் வசனமுரைத்ததாவது:— "ஓ! ராஜனே! உந்தனுல் ஜயத்தைக்கொ டுக்கலுற்ற விபூதியு முருத்திராக்ஷமும் தரிக்கப்பட்டேயிருந்தது. (45) அந்த காரணத்தினுல்தா னச் சக்கிர முந்தனை விட்டுப்போயிற்றென்ப து நிச்சய" மென, பிறகாசன் "ஓ! தவசிச்சிரேஷ்டர்களே! யானும்வி

பூதிருத்திராக்ஷங்களைத் தரியாமல்தா னுயுத்தம்செய்தேன். (46) கஸ்தூரிசந்தனங்களைப் பூசிக்கொண்டும், முத்துமாலை யணிந்துகொண்டும், மேலும் நீலம், இரத்தினம், முத்துக்கள் முதலியவைகளா லலங்காரம் செய்துகொண்டுமே யா னுயுத்தத்துக்குச் சென்றேன். இவ்வளவுமாத்திரம்தா னெனக்குத்தெரியும்; (47½) அப்படியிருந்து மச் சக்கிர மெந்தனைவிட்டு மற்றெல்லாச் சைனியங்களையும் கொன்றுபோட்டுச் சென்றுவிட்ட" தென, இவ்வா றவ் வரசனது வசனத்தைக் கேட் டம் முனிவர்க ளுள்ளமதிற் சந்தேகம்கொண்டவர்களாகி 'ஓ! ராஜனே! நீ யிப்போ திங்கு முத்துமாலையையு மிரத்தினமாலையையும் பரிசோதித்தல் வேண்டு' (49) மென்றுசொல்லி யவர்க ளவனது முத்துமாலையைச் சடிதியாய்ச் சோதித்துப்பார்த்ததி லதனி லோ ருருத்திராக்ஷத்தைக் கண்டெடுத் தவனுக்குக் காட்டினார்கள். (50) பிற கரச னதைக் கண்டவுடன் மெத்த வாச்சரியமுற்றவனாகிப் பயத்தினால் நடுக்கமுற்று நின்றான். அப்போது முனிவர்கள் 'ஓ! அரசனே! இது யாவரால் கொடுக்கப்பட்டது? எப்போதும்த விதனைத் தரிக்கின்றாய்? (51) இதனை யிப்போ தாலோசித் தெங்கள்முன்பாக வுண்மையாய்ச் சொல்" லென, அப்போ தரசன் சொல்லியதாவது:— "ஓ! இருடிசுவரர்களே! யா னெப்போது யுத்தத்துக்காகச் சன்னத்தப்பட்டுத் தொரையாய் வீட்டைவிட்டுப் புறப்பட்டேனோ (52) அப்போ தோர் வணிகன் வந் திதனைக் காணிக்கையாகக் கொடுக்க, யானு மிதை யுத்தத்துக்குப்போகிற வேகத்தோடு தரித்துக்கொண்டு போர்க்களத்திற் பிரவேசித்தேன். (53) அப்போது யுத்த அவசரத்தினா லிம் முத்துமாலையானது பரிசோதிக்கப்படவில்லை" யென, இவ்வா றவனது வசனத்தைக் கேட் டவ் விருடிகளெல்லோர்களும் மெத்த வாச்சரியம் கொண்டவர்களாகி (54) "ஓ! ராஜனே! இதன் மகிமையால்தான் சக்கிரமான துந்தனைக் கொல்வதற்காக வந்தபோது சைனியங்கள் மடியலாகித் தோல்வியடைந்து நீ யுயிர்பிழைக்கலானா யென்பதிற் சந்தேகமில்லை. (55) நீ யிதற்குமேலும் மெத்த வுத்தமமான விபூதிருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டு விபூதிருத்திராக்ஷங்களைத் தரிக்கப்பெற்றவைகளான சைனியங்களாற் சூழப்பெற்றவனாகி (56) யயுத்தத்திற்குப் புறப்பட்டால் நிச்சயமாகவே வெற்றி கிடைக்கும். விபூதி ருத்திராக்ஷங்களைத் தவிர வெற்றிபெறுவதற்கு வேறுபாயமில்லை" (57) யென, இவ்வா றவர்களது திருவசனத்தைக்கேட் டவனு மப்படியே நிச்சயித்துக்கொண்டு விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டு யுத்தத்திற்குப்போக நிச்சயம் கொண்டவனாகிச்(58) சிறந்த வில்லையெடுத்துக்கொண்டு தானே ஒண்டியாகப்

புறப்பட்டான். அப்போ தவனுக்குச் சில படைகளு மாயுதங்களோடு
கூட வந்து சேர்ந்துகொண்டன. (59) பிற்பாடாசு னவர்களுக்கும் வி
பூதி ருத்திராக்ஷங்களைக்கொடுத்து மெத்தச் சன்னத்தப்பட்டவனாகித்
தனது சைனியங்களோடுகூடச் சிம்மனுடைய நகரத்தை முற்றுகை
போட்டான். (60) உடனே ஸிம்மனும் தன் தளங்களோடுகூடத் துரி
தமாய்ப் புறப்பட் டட்டகாசம் பண்ணியவனுக்ச் சகல சத்துருக்களையு
ம் கண்டிக்கலுற்ற வப்போர்க்கொக்க சக்கிரத்தைப் பிரயோகித்தான்.
(61) உடனே அச்சக்கிரமும் மிகுந்த சத்தத்தோடுகூட வெதிரியின்
தளங்களிற்சென் றவைகள் விபூதிருத்திராக்ஷதாரிகளாயும், ருத்திர தேஜஸ்
ஸைக் கொண்டவர்களுமாயிருப்பதைக் கண்டவுடன் மிகப் பயந் தவைக
ளைப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவிட்டுக் கேளீர்! தரணிதேவர்க
ளே! திரும்பியவன் கைபோய்ச் சேர்ந்துவிட்டது. (63) பிறகச் சிம்
ம னதைக்கண்டு மிகவும் பயந்தவனாகித் தோல்விகொண்டு வனத்திற்கு
ப்போ யங்கு நாளளவிலே யவனது விருத்தாந்தங்களைக் கேள்விப்பட்
டதன்மேல் புத்திசாலியான வச் சிம்மன் (64) கேளீர்! மறையவர்க
ளே! வருணனைக்குறித்துத் தவம் செய்தான். பிறகு வருணன் பிரத்
தியக்ஷமாகும்போ தவன் வரன் கேட்டதாவது:—(65) "ஓ! பிரபுவா
கிய வருணதேவனே! நீ யெனக்குப் பிரஸன்னரான துண்மையானா லெ
ப்போதும் யான் மழையை வேண்டும்போதெல்லா முடனே சீக்கிரமாய்
மழை சொரியல்வேண்டு" மென, (66) வருண னப்படியே நல்லதென்
று சொல்லிவிட்டுத் தமதிடம் சென்றுவிட்டான். பிறகிவ்வாறு வரன்
பெற்ற சிம்மன் மறுநாள் ஸிந்துசேனராஜனிடம்சென் (67) றட்டகா
ஸம பண்ணி யவனைச் சண்டைக்கழைக்க, உடனே அச்சிந்துசேனனு
முயுத்தமதிற் கர்வம்கொண்ட வச் சிம்மராஜனை யெதிர்த்துக்கொண்டா
ன். (68) அப்போது ஸிம்மன் வருணனை நினைக்க, உடனே வெயிலெ
ரிக்கலுற்ற வப் பகல்நேரத்திலே வருணன் சடிதியில் ஜலவுருவமாகவே
அங்கு வந்துவிட்டான். (69) அப்போ தவ் விருதிறத்துச் சேனைகளு
ம் மழையினால் மிகவும் நனையப்பெற்றார்கள். அப்போது சிந்துசேன
ன் சேனைகளில் வெரும் விபூதியைமாத்திரம் தரித்திருந்தவர்களான (70)
வீரர்களெல்லா மப் பெரும் மாரியால் தங்கள் விபூதி யழிந்துபோகப்
பெற்றார்கள். அப்போது நிகரற்ற விக்கிரமத்தைக்கொண்ட ஸிம்ம
னத் பயங்கரமான சக்கிரத்தை யெடுத்துச் சிந்துசேனன் சேனைகளின்மீ
து பிரயோகிக்க, (71½) உடனே அச் சக்கிரமானது அவனுடைய பெ
ரிய சேனைகள்மீது பிரவேசித்து (72) உருத்திராக்ஷம் தரியாதவர்களா
ய் விபூதி யழியப்பெற்றிருந்த சேனைகளைமட்டில் துரிதத்தி லதம்பண்

ணியும், உருத்திராக்ஷம் பூண்டிருந்தவர்களான சேனைகளையு மவ்வாசனை யும் விட்டுவிட்டும் (73) மகா பராக்கிரமசாலியான வச் சிம்மன் கையைத் துரிதத்திலடைந்துவிட்டனு. அப்போது சிந்துசேனனுக்குச் சொற்பச்சேனைமட்டில்மிஞ்சலானபடியாலுருத்திராக்ஷபூஷணங்களைக்கொண்டவர்களான (74) சில வீரர்களோடுகூட அவன் மகா துக்கமுற்றவனுகிச் சடிதியில் காட்டிற்கோடிப்போ யங்கு முந்திக் கண்டவர்களான வஸிஷ்டர் முதலிய மாமுனிவர்களைக் கண்டு வந்தனித்து (75) "ஓ! பெரியோர்களே! யானுங்கள் பேச்சைக்கேட்டு விபூதி ருத்திராக்ஷங்களை யானும் தரித் தெனது சைனியங்களையும் தரிக்கச்செய்துகொண்டு யுத்தகளத்திற்குச் சென்றேன். (76) கேளீர்! தவசிச்சிரோஷ்டர்களே! அப்போதவ னெனது சைனியங்கள்மீது சக்கிரத்தைப் பிரயோகிக்க, அதுடனே எனது சைனியங்களிற் பிரவேசித் தெந்தனையும் மூன்று நான்கு வீரர்களையும் மட்டில் விலக்கி மற்றெல்லோர்களையு மதம் பண்ணிப்போட்டுச் சென்றுவிட்ட" ($77\frac{1}{2}$) தென் றவ் வரச னம் மாமுனிவர்களை நோக்கிமிகுந்தபயத்தோடுரைத்தான். (78) இவ்வா றவ்வாசனு லுரைக்கப்பட்ட வார்த்தைகளை யவர்க ளதேக்ஷணத்தில் தங்கள் திருவுளத்திலாலோசித்து "ஓ! ராஜனே! யாவனிவ் விபூதி ருத்திராக்ஷங்களை யெப்போதும் மெய்தனில் தரிக்கின்றனே அவனொருக்காலும் சத்துருக்களினாயுதங்களால் மாணமடையமாட்டா" னென்றார்கள். (79)

பதினெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௧௯—வது அத்தியாயத்தி னர்த்தம்.

இவ்வா றவர்களது வசனத்தைக்கேட் டாசன் பின்னு மவர்களை நோக்கிச் சொன்னதாவது:— "ஓ! பெரியோர்களே! சில வீரர்மட்டில் விபூதி ருத்திராக்ஷ மிரண்டையும், மற்றவரெல்லாம் விபூதிமட்டினும் தரித்துக்கொண்டு யுத்தத்திற்கு வந்தார்கள். பிறகு மிகுந்த மழை பெய்யலாகி ($1\frac{1}{2}$) யப்போ திருதிறத்துச் சேனைகளும் நனையலானுர்கள்.(2) அதன்பிற கச் சிம்மன் சத்துருக்களைக் கண்டிக்கலுற்ற வச் சக்கிரத்தைப் பிரயோகிக்க, அக்கொடிய சக்கிரத்தினு லெனது சைனியமெல்லாம் மடிந்துபோயின" (3) வென, இவ்வா றவ்வாசனது வசனத்தைக்கேட்டுக் கேளீர்! தாணிதேவர்களே! அப்போ தம்மாமுனிவர்க ளதுவிஷ

யத்தில் காரணத்தை மனதினு லாலோசித் தவ் வாசனை நோக்கித் திருவாக்கருளியதாவது:—(4) "கேளாய்! ராஜேந்திரா! மழையினல் மகா பரிசுத்தமாகிய திருநீ றழிந்துபோகப் பெற்றவர்களி லுருத்திராக்ஷம் தரியாதிருந்தவர்கள் மாத்திர முயுத்தத்தில் மடிந்திருக்கிறார்கள். (5) பிழைத்திருப்பவரெல்லா முன்னோடுகூட விபூதி ருத்திராக்ஷ மிரண்டையும் தரிக்கலானவர்கள்தான். முந்தி விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்தவர்களானத் திரிபுராசுரர்களுக்குக் (6) கேளாய்! பூபதியே! மகா மகிமைபொருந்தியவர்களான தேவர்களிடத்துக்கூடப் பயம் ஜனிக்கவில்லை. அப்போது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவரெல்லோர்களு மாபிசாரப் பிரயோகம்பண்ணியதனுல் (7) மகா பயங்கரங்களான பல பூதங்களை யுண்டுபண்ணிச் சடிதியி லவர்கள்பேரி லேவிவிட, அவையெல்லாம் விபூதி ருத்திராக்ஷங்கள் தரித்தவர்களானஅவர்களைக் கண்டமாத்திரத்தில் (8) கேளாய்! அரசனே! மெத்தப் பயந்தவைகளாகித் துரிதமாய்த் திரும்பி யோடிவிட்டன. அதன்பேரில் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்க ளவர்களை விபூதி ருத்திராக்ஷங்களி லசட்டைகொள்ளும்படி செய்வித்து, பிறகவர்களை ஸ்ரீ சிவபிரானைக்கொண்டே கொல்வித்தார்கள். ($9\frac{1}{2}$) ஆகையால் கேளாய்! ராஜேந்திரா! நீயும் விபூதி ருத்திராக்ஷங்களைப் பூஷணங்களாய்க் கொண்ட (10) வுனது படைகளோடுகூட வுயுத்தத்திற் பயமற்றவனு யிருந்துகொண்டு சத்துருக்களைத் துறத்திவிடலாவாய். விபூதியோடுகூடச் சிறந்த பூஷணமான வுருத்திராக்ஷமும் தரிக்கத்தக்கது. (11) ஏனென்றால் வெறும் விபூதியானது நிச்சயமாய் மழை முதலியவைகளா லழிந்துபோய்விடும். ஓ! ராஜனே! உருத்திராக்ஷத்துக்கோ மழை முதலியவற்று லழிவில்லை. (12) வெறும் விபூதியைமட்டில் தரித்தவர்களான வுனது வீரர்களெல்லா மவர்களது விபூதி கனத்தமழையினு லழிந்துபோனதால்தான் மடிந்துவிட்டார்களென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றோ" (13) மென, இவ்வா றவர்களது வசனத்தைக்கேட் டரச னவ்வாறே மன நிச்சயம்கொண்டவனுகி யவர்களைத் துரிதமாய் வந்தனித்துவிட்டுத் தான் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்துக்கொண்டு சைனியங்களுக்கும் விபூதியோடுகூட வுருத்திராக்ஷங்களையும் கொடுத் ($14\frac{1}{2}$) துருத்திராக்ஷ பூஷணங்களோடுகூடத் தேகம் முழுதும் விபூதியா லலங்கரிக்கப்பெற்றவர்களான (15) வெல்லாப் படைகளோடும்கூட நிகரற்ற பராக்கிரமத்தைக் கொண்டவனுகிப் புறப்பட்டுக் கேளீர்! முனிவர்களே! சிங்கத்தைச் சரபமழைப்பதுபோலச் சிம்மராஜனைத் துரிதமா யழைத்தான். (16) பிற்பாடு மகிமைபொருந்தியவனும் சக்கிராயுதத்தைக் கொண்டவனுமான ஸிம்ம னுயுத்தத்தி

ற்குச் சென்றான். உடனே அவ் விருவர்களுக்கும் பயங்கரமான வுயுத்தமுண்டாயிற்று. (17) அப்போது ஸிம்மன் கலகலவென்று சத்தமிட்டுக்கொண்டு சக்கிராயுதத்தைப் பிரயோகிக்க, அச் சக்கிர மவ்வெல்லொர்களும் விபூதிருத்திராக்ஷங்களைப் பூஷணமாய்க் கொண்டிருப்பதைக்கண்டவுடன்(18) னவர்களை மூன்று பிரதக்ஷணம்பண்ணிவந்தனித்துவிட்டுத்துரிதமாய்ச் சென்றுவிட்டது. பிற்பாடு சிம்மன்மிகுந்த கோபத்தோடு தன் தாபத்தைத் தீர்க்கலுற்ற வருணதேவனை நினைக்க,(19) அப்போதுடனே கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்விருதிறத்துச் சேனைகளின்பேரிலும் கனத்த மழைபொழியலாகையிற் சிந்து சேனனைத்தொடர்ந்து வந்தசேனைகளின் திருநீறெல்லா மழிந்துபோயின. (20) அதுகண்டு ஸிம்மன்மறுபடியு மச்சக்கிரத்தைப் பிரயோகிக்க, உடனே அச்சக்கிரமு மவ்வெல்லோர்களும் திருநீறழியப் பெற்றவர்களானபோதிலும் சிறந்த வுருத்திராக்ஷ பூஷணங்களைக் கொண்டிருப்பது (21) கண்டு மிகுந்த பயத்தோடப் படைகளை வந்தனித்துச் சென்றுவிட்டன. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது ஸிம்மனைக் கண்டவுடன் மிகுந்த பயத்தோடு தன் சைனியங்களோடுகூடத் துரிதமாய்க் காட்டிற் கோட்டம் பிடித்தான்.($22\frac{1}{2}$) உடனே தீரனான சிந்துசேனனும் மிகுந்த வட்டகாசம் பண்ணி யவனது நகரத்தைப்பிடித்துத் தன் தேசத்தோடுசேர்த்துக்கொண்($23\frac{1}{2}$) டம் மகா புத்திசாலியானவன் தன் தேசத்திலுள்ள குடிகளுக் கெல்லாம் விபூதிருத்திராக்ஷங்களைக்(24) கொடுத்தவர்களையும் திருநீறுருத்திராக்ஷங்களைத் தரிக்கும்படிசெய்து தானுமவ் விபூதி ருத்திராக்ஷங்களின் மகிமையையே நினைத்துக்கொண்டு வசித்து வந்தான்.(25) இப்படி யவ்வரசன் வெகுகாலம் வரையில் தன் தேசக்குடிகள், பந்துக்கள், இஷ்டர்களின் பந்துக்கள் இவ்வெல்லோர்களோடும் கூட வேராளமான போகங்களை யனுபவித்துக்கொண் டிருந்துவிட்டுப் (26) பிறகவன் விமானத்தி லேறிக்கொண்டு நிகரற்ற கைலாஸமடைந்து கேளீர்! பிராம்மணச் சிரேஷ்டர்களே! பிறகளவிலே மோக்ஷத்தையு மடைந்தான்.(27) பிற்பாடு ஸிம்மராஜனோ வைராக்கியத்தினலிராகத்துவேஷ (ஆசை, பகை) ங்களை யொழித்து விபூதிருத்திராக்ஷங்களைத் தரித்துகொண்டில்வாழ்க்கையி னுசாபாசங்களைமுற்றும்விலக்கியவனுகிச் (28) சிலகாலமிருந்துவிட்டுத் தேகத்தின் முடிவில் மெத்தவசாத்தியமான மோக்ஷ ஸாம்பிராஜியத்தை யடைந்தான். கேளீர்! வேதியர்களே! ஆகையால் விபூதியோடுகூட வுருத்திராக்ஷத்தையும் தரித்துக்கொள்ளவே வேண்டும். (29) ஸ்ரீ ருத்திரனுக்குக் கண்ணாயிருப்பதால் தா னுருத்திராக்ஷமென்றுசொல்லப் படுகின்றது. ஸ்ரீ சம்புவானவ ருருத்

திராக்ஷம் தரிப்பவரிடத்துப் பரிபூர்ணமான கடாக்ஷங்களை யருளுகின்றார். (30) உருத்திராக்ஷம் தரிப்பவரெல்லோர்களும் ஸ்ரீ ருத்திரஸ்வரூபிகளென்றே சொல்லப்படுவார்கள். எந்தமானிடர்க ளிவ் வுருத்திராக்ஷமாகாத்துமியத்தைக் கேட்கின்றார்களோ, படிக்கின்றார்களோ, அல்லது (31) பிறர்களைக் கேட்பிக்கின்றார்களோ, அவர்கள் ஸாக்ஷாத் ருத்திரஸ்வரூபிகளே! மேலு மவர்கள் மிருந்த ஆயுசு, ஆரோக்கியம், ஐசுவரியம் இவைகளையும் புத்திர பௌத்திரர்களையு மடைந் திங் கிருந்துவிட்டு முடிவினில் ஸாயுஜியபதவியை யடைகின்றார்களென்பதிற் சந்தேகமேயில்லை. (32)

பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் உ0—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சூதர் சொல்லுகின்றார்:— கேளீர்! வேதியர்களே! விபூதிருத்திராக்ஷங்களுடைய மகிமையைச் சொன்னேனல்லவா! இப்போது ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தினுடைய மகிமையைச் சாக்கிரதையாய்க் கேட்பீர்களாக. (1) மேலு மெந்தமானிடர் பஞ்சமகாபாதகங்களை நாசஞ் செய்யலுற்றதும், ஸ்ரீ பரப்பிரம்மத்தை யுணர்த்துகின்றதுமான ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை நல்ல குருவினிடமிருந்துபதேசம்பெற்றுச் சுத்தமாயிருந்துகொண்டு நாள்தோறும் நியமமாய் ஜபிக்கின்றாரோ அவரே மகா பாக்கியசாலியும், உலகங்களுக்கெல்லாம் மகா பரிசுத்தம்பொருந்தியவரு மாகின்றார். ($2\frac{1}{2}$) தம்மைத் தரிசித்தமாத்திரத்தில் பிறர்பாவங்களைத் தீர்க்கலுற்ற அப்பேர்க்கொத்தவருக்குப் பாவலேசம்கூட இல்லை. (3) அப்பேர்க்கொத்த மகானுபாவருக்கும் பரப்பிரம்மத்திற்கும் வித்தியாசமேயில்லை. இம்மகாமந்திரத்தைச் சபித்ததினால் வெகுபெயர்கள் பாவத்தினின்று விடுபட்டு மோக்ஷமடைந்திருக்கிறார்கள். கேளீர்! தாணிதேவர்களே! இதைப்பற்றி யுங்களுக் கோர் சரித்திரம் சொல்லுகின்றேன். ($4\frac{1}{2}$)

காசிநகருக் கதிபனான வஜ்ஜிரபாகுவென்றோ ராசனிருந்தான். (5) இவனுக்குக் கல்வியிற் சிறந்தவளும், கற்புடையவளும், மகா புண்ணியசாலியுமான கலாவதி யென்றோர் பெண்ணிருந்தாள். (6) இப்ப

டியிருக்கையி லொருநாளளவில் ஸ்ரீ துர்வாஸமாமுனிவ ரக் காசிராஜ னர
ண்மனைக்கு வந்தார். அப்போ தவ ரப் பெண் மகா புண்ணியவதியெ
ன்று கண் டவளிடத்துக் கருணையா லவளுக்கு (7) ஸ்ரீ சிவபஞ்சாக்ஷர
மகாமந்திரத்தை யுபதேசம் பண்ணினார். அதுமுதலா யவள் ஸ்ரீ சிவபி
ரானிடத்து மிகுந்த பக்தியோ டெப்போது மப் பஞ்சாக்ஷரத்தைச் ச
பம்செய்வதிலே முயன்றுவந்தாள். (8) பிற்பாடு வஜ்ஜிரபாகுராஜன்
வெகு புண்ணியசாலியான வப் பெண்ணைப் பாண்டியதேசத் ததிபனான
தாசாதனென்ற வரசனுக்குக் கொடுக்க, (9) அவ னவளை முறைப்படி
கலியாணம்செய்துகொண்டு தன்தேசத்திற் கழைத்துப்போனான். அ
ன்றிரவினில் தனதரண்மனையி லவன் காமன்சரத்தால் வாதையுண் டாலி
ங்கனத்தில் விருப்பம்கொண்டவனாகி ஸ்ரீ பஞ்சாக்ஷரஜபத்தில் முயன்ற
வளும், பராபரப்பொருளிடத்து நிச்சயபுத்தியைக் கொண்டவளுமான
வப பெண்ணைப்பார்த்து வேடிக்கையாய்ப் பேசினான். (11) அப்போ
தவள், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவன திங்கிதத்தை யறிந்
துகொண் டவனை நோக்கி வசனமுரைத்ததாவது:— "ஓ! நாதனே!
உமக்குச் சகல பாவங்களையும் நாசம்பண்ணலுற்ற பஞ்சாக்ஷரஜபமில்
லை. (12) மேலும் மதுமாமிசங்களைப் புஜிக்கலான வுமக்குத் தகாத ப
தார்த்தங்கள் தள்ளுபடியுமில்லை. வெறும்போகத்தையே பாராட்டலா
ன வுமக்கயல்பெண்டீரிடத்துக் காதலின்மையுமில்லை. (13) ஆகையா
ல் ஓ! ராஜனே! ஆசையொழிவுள்ள வெந்தனை நீ ரிப்போது தொடுத
லே கூடா" தென, இவ்வா றவளது வசனத்தைக் கேட்டதன்மே லரச
ன் மன்மதனால் பீடிக்கப்பட்டவனாகி (14) "ஓ! யென்பிரியநாயகி!
உந்தன தாலிங்கனம் கிடைக்குமென்று மெத்த வாசைகொண்ட வெந்
தனுக் கிப்போ துந்தனாலிங்கன மில்லாமற் பிராணன் நில்லாது. (15)
ஆகையா லுந்தனுடைய, ஆலிங்கனத்தை யெனக்குச் சீக்கிரமாய்த் தந்
தென துயிரைக் கொடுக்கவேண்டு" மென்றுசொல்லியு மவள் பராமுக
மாயிருப்பதை யறிந்தக் காமாதுரனானவ (16) னவளது சரீரத்தோடு
சரீரமா யொட்டிக்கொண்டவன்போ லவளைப் பலவந்தமாய்க் கட்டிக்
கொண்டான். அப்போ தவளது தேகமானது நெருப்புப்போல் தகிக்
கலானகையி லத் தரணிவேந்தன் (17) மிகுந்த துயரத்துடன் ஹாஹா
வென்று கதறிக்கொண்டு தூரத்தில் விழுந்து பிற கவ்வரசன் மனைவி
யைநோக்கி யிதென்னவென்று வினவ, (18) அப்போது கலாவதி யு
ரைத்ததாவது:— ஓ! ராஜனே! பாவங்களை நாசம்செய்யலுற்ற பஞ்சா
க்ஷரமகாமந்திர முமக்கில்லாதபடியா லதனை நல்ல குருவினிடமிருந் து
பதேசம்பெற்றபிறகே யெந்தனைத் தொடலாவீர். (19) இல்லாவிடில்

ஸ்ரீ பஞ்சாக்ஷரமந்திரத்தில் முயன்றவளான வெந்தன்தேகம் போசுக்கி விடு” மென, இவ்வா றவளது வசனம்கேட்டவுட னரச னுள்ளமதில் நிச்சயம்கொண்டவனுகி (20) மறுநாள் தவங்களுக் கிருப்பிடமும், தவசிச்சிரேஷ்டருமான கர்க்கமாமுனிவனை யடைந்து ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை யுபதேசம்பெற்ருன். (21) ஒளியானது ஓர் தீபத்தினின்று மற்றோர் தீபத்தை யடைவதுபோ லம்மந்திரம் முனிவரிடமிருந் தவனை யடைந்தவுடன் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவனுடைய மகா பாதகத்திரள்களெல்லாம் காக்கையுருவமாய் வெளிப்பட்டுத் தொலையலாகி (22) யச்சுத்ததேஹிராஜனுக்கு நல்ல சித்தசுத்தி வந்துவிட்டது. பிறகவன் தன்குருவி னனுமதியின்பேரில் பிரியமும் நேர்த்தியுமான வரண்மனைக்குச் சென்று (23) கேளீர்! முனிவர்களே! அன்றிரவுமுதலாய் நாள்தோறும் தன்பெண்டீரோடுகூடலீலைசெய்துவேண்டியமட்டில் பேராநந்தமாய்ப் போகசுகத்தை யனுபவித்துவந்து(24) பெருமைபொருந்திய பல பிள்ளைகளையும் பெற்று வெகுகாலம் சுகமாய் வசித்துவந்து முடிவினில் தன் மனைவியோடுகூட மகா பரிசுத்தமான கைலாஸமடைந்தங்கு சிலகால மிருந்துவிட்டுப் பிறகு மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைந்தான். (25)

இருபதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் உக—வது அத்தியாயத்தினர்த்தம்.

சூதர் சொல்லுகின்ருர்:— ஓ! முனிவர்களே! பாடபமென்ற தேசத்தில் மால்வியபுரமென் றோர் பெரியபட்டண மிருக்கின்றது. அங்கு மகா புத்திசாலியான சுபுத்தனென் றோர் பிராம்மண னிருந்தான். (1) அவனுக்கு மற்றோர் தருமமேயெனத்தக்க தருமனென் றோர் பிள்ளையுண்டு. மேலு மதே ஊரில் விபுலனென்று மற்றோர் பெருமைபொருந்திய வந்தணரிருந்தார். (2) அவருக்குப் பெற்றோர்சொற் கடவாத விரண்டுபிள்ளைக ளிருந்தார்கள். அவர்களில் மற்றோர் சந்திரனேயெனத்தக்க மூத்தோனுடைய பெயர் சந்திரசேனன். (3) தருமன், சந்திரசேனன் ஆகிய ஒரேவயதுள்ள சினேகிதர்களான அவ் விருபிராம்மண குமாரர்களும் தகுந்தகாலத்தி லுபநயனம் செய்யப்பெற்றவர்களா

கிப் பிரம்மசாரி விரதத்தை யனுஷ்டித்துவந்தார்கள். (4) அவ்விருவர்களும் மகா புத்திசாலிகளாய்க் கல்விகற்பதிலே முயன்றவர்களாகி வித்தியாநந்தரென்ற வோர் சனியாசியிடம் சென் (5) றம் மகாத்துமருடைய சொற்படி மிகவும் பக்திவிசுவாச முள்ளவர்களா யவருக்குப் பணிவிடைகள் செய்துகொண்டு நல்ல ஆசாரங்களை யனுஷ்டித்துவந்தார்கள். (6) அச் சனியாசியு மப் பக்தர்களைக் கண்டு மனதினில் மெத்தத் தயவுகொண்டவராகி "ஓ! சீடர்களே! பிரம்மசாரிகளான நீங்க ளிருவர்களும் மோக்ஷத்துக்கு ஸாக்ஷாத் முக்கிய சாதகமான சனியாஸாசிரமத்தை யெடுத்துக்கொள்ளவேண்டு" ($7\frac{1}{2}$) மென் றவ ருரைக்கலாகையில் விநயத்தினால் வணக்கமுற்ற அவ்விருவர்களு (8) மவரது திருவசனத்தைக் கேட்டதன்மே லப்போது தங்கள் பெற்றோரிடம் சென்று சங்கதிகளைத் தெளிய வுரைத்தார்கள். (9) அப்போது விபுலனென்பவர் தன் புத்திரனது வசனத்தைக் கேட் டப்படியே நல்லதென்றார். பிறகு மகா புத்திசாலியான வச் சந்திரஸேனனு மவர தனுமதியைக் கொண்டவனாகி யச் சனியாசியிடம் சென் றவரை வந்தனித்துத் தன் தந்தை யனுமதியின்படி வித்தியாநந்தரென்ற வச் சிறந்த சனியாசியிடமிருந்து நான்காவ தாசிரமத்தை யடைந்து (10-11) தன தாசிரமத்துக்குத் தக்க வாசாரணைகளை யனுஷ்டிப்பவனும், காமக்குரோதாதிகளைத் தொலைத்தவனும், குதிரைகளையொத்த விந்திரியங்களைச் சுவாதீனத்தி லடக்கியவனும், கிழங்கு, காய், கனிமுதலியவைகளையே யாகாரமாய்க் கொண்டவனுமாகிச் (12) செல்வதற் கசாத்தியமான வாணியத்திற்குச் சென் றங்கு வேறு துணையற்றிருந்துவந்தான். தருமனென்றவனோ தன் தந்தையிடம் சென்று "ஓ! தந்தாய்! சகல சாத்திரப்பொருட்களின் தத்துவங்களையு மறிந்தவரான வித்தியாநந்தரென்ற இயதீசுவாரிடமிருந்து யான் சன்னியாசாசிரமத்தை யெடுத்துக்கொள்ளவே வேண்டு" மென, ($13\frac{1}{2}$) இவ்வா றவனது வசனத்தைக் கேட் டவன் தந்தையாகிய சுபுத்தன் துக்கத்தினால் வியாகுலமுற்ற மனதைக்கொண்டவனாகி யப்போது தர்மனை நோக்கி வசனமுரைத்ததாவது:— ($14\frac{1}{2}$) "கேளாய்! புத்திசாலியான புத்திரனே! பெருமைபொருந்திய வெந்தனது வமிசத்திற்கு நீ யொருபிள்ளைமட்டி லிருக்கின்றாயேயின்றி வேறொருவருமில்லை; ஆகையால் நீ சன்னியாசாசிரம மெடுத்துக்கொள்வது நியாயமில்லை. ($15\frac{1}{2}$) பிராம்மணர் தேகமெல்லாம் நரையினால் வெளுக்கலானதின்பேரில் மனைவியைப்பிள்ளைகளிட மொப்புவித்துப்போட்டுத்தான்தாம் சன்னியாசம் வாங்கிக்கொள்ளவேண்டியது. இல்லாவிடி லவன் பதித

ருகின்றானென்பதிற் சந்தேகமேயில்லை. (16½) ஆகையால் ஓ! புத்திரனே! நீ யிப்போது சன்னியாச மெடுத்துக்கொள்வது தகுதியல்ல" (17) வென, இவ்வாறு தந்தையா லுரைக்கப்பட்ட வசனத்தைக் கேட்டதன்பேரில் தருமன் மிகவும் துக்கமுற்றவனாகி மனதினிற் கவலையடைந்திருந்தான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (18) அப்போதன்று வருணனுக்குப் புத்திரனும், சிறந்த சன்னியாசியும் மிகவும் பெருமைபொருந்தியவருமானப் பிருகுமாமுனிவர் சகல சீடர்களோடுங்கூட வக்கிராமத்திற்கு வந்தார். (19) அத் தவசிச்சிரேஷ்டரைப் பார்த்து மகா புத்திசாலியான சுபுத்திரன் வசனமுரைத்ததாவது:— "ஓ! சுவாமீ! என் புத்திரனான வித் தருமனென்பவன் பிரம்மசாரி யாசிரமத்தி லிருந்தபடியே (20) ஸன்னியாசாசிரமமெடுத்துக்கொள்ள முயன்றதை யான் தடுத்திருக்கின்றேன். ஓ! தவத்தையே தனமாய்க்கொண்ட மாமுனிவரே! என் குலத்தில் இவனைத்தவிர வேறு புத்திரனில்லை. (21) எனக்கு வெகுகாலத்திற்குமேல் புத்திசாலியான இவனொருவன்தான் பிறந்தான். ஓ! சன்னியசிரேஷ்டா! ஸ்வாமீ! இவனுக்கு நல்ல புத்திவரும்படி செய்தருளவேண்டும்" (22) மென, இவ்வாறவனது வசனத்தைக்கேட்டதன்மேல் கேளீர்! முனிவர்களே! தவசிகளிற் சிறந்த பிருகுமுனிவர் தம்மருகினில் நின்ற தருமனை நோக்கி வசனமுரைத்ததாவது:—(23) "ஓ! தருமா! நீ மெத்த வுத்தமமான கிரஹஸ்தாசிரமத்தைத் தானடையத்தக்கது. மற்றெல்லா மவ் வாசிரமத்தைக்கொண்டே ஜீவிக்கின்றபடியா லதற்கு நிகரானதொன்றுமில்லை (24) ஆகையால் சுவர்ணாபரணங்களோடு கூடியவளும், தனதுப் பிரவரமும் கோத்திரமுமில்லாத வமிசத்திற் பிறந்தவளுமான யோர் கன்னிகையை யுனக்குரிய வாசாரத்தின்படி நீ கலியாணம் செய்துகொண் டிருக்கவேண்டும். (25) மேலுமெல்லா மேன்மையையும் செய்விக்கவுற்ற தந்தை சொற்களைக் கடவாதிருத்தல்வேண்டும்" மென, இவ்வாறு பிருகுமாமுனிவரின் வசனத்தைக் கேட்டுததருமன் மறுபடியு முரைத்ததாவது:—(26) "ஓ! ஸ்வாமீ! எனதொத்த வயதுடைய சினேகிதனாகிய மகா புத்திசாலியான சந்திரசேனனென்பவன் மிகுந்த பயனுடைய வுத்தமமான நான்காவ தாசிரமத்தை யடைந்திருக்கிறான். (27) ஆகையா லெல்லாவிதத்திலு மெனக்கும் சன்னியாசாசிரமத்தி லாசை யிருக்கின்றது" தென, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டவுட னப்போ தம்மாமுனிவ ரவனை யோர்வா றதட்டிவிட்டு (28) "ஓ! தருமா! நீ மெத்த வுத்தமமான கிரகஸ்தாசிரமத்திலிருந்துகொண்டு நியமத்துடன் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை யுபதேசம்பெற்று (29) ஜபம் பண்ணிக்கொண்டு நாடோறு முன்னுக்

குரிய தருமங்களைக் காப்பாற்றிவந்தால் கேளாய்! பாவமற்ற தருமா! வெறும் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்வதனு லுனக்குச் சந்திரசே னனிலும் மெத்த வதிகமான பயனுண்டாகு" (30½) மென்று சொல் லி யவனுக்கு ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தை யுபதேசம் செய்து (31) பா ணிக்கிரகண முறைப்படி யவனுக்கு விவாகத்தையும் முடித்துவைத்துப் பிறகத் தவசியானவர் தனதாசிரமத்திற்குத் துரிதமாய்ப் போய்விட்டா ர். (32) பிறகு புத்திசாலியான தருமனும் மணம் புரிந்துகொண்டு ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தில் மிகவும் முயன்றவனுகி யம் மனைவியுடன்கூடி வாழ்ந்து நாளளவி லனேகம் பிள்ளைகளையும் பெற்று (33) வெகு காலம் வரையில் கிரகஸ்தாசிரமத்தைக் கொண்டவனுகியே வெகு சந்தோஷமா ய் வசித்துவந்தான். இப்படியிருக்கையி லோர் நாள் சிறந்த சன்னியா சியான சந்திரசேன னக்கிராமத்திற்கு (34) வந்து தருமனைக் கண்டதன் மே லவனை நோக்கி வாலிப நேசத்தின் வசத்தினுல் "ஓ! தருமா! சகல துக்கங்களுமற் றிருக்கலுற்ற சன்னியாஸாசிரமத்தை (35) நீ யெடுத்துக்கொள்ளாம லிக்கிரஹஸ்தாசிரமத்தி லிருப்பதானு லென்ன பயனை யடைந்துவிட்டாய்? ஆ! கா! ஓ! புத்திசாலியே! இப்போது கிரஹஸ்தாசிரமத்தி லிருக்கலுற்ற வுனது ஜன்மம் வியர்த்தம்தான். (36) சகல பந்தங்களுமற்றதாகையால் சன்னியாசாசிரமத்திற் கொப்பான தொன்றுமில்லை. நாமோ வச் சிறந்த வாசிரமத்தை யடைந்து துக்கக் கடலைக்கடந்து (37) வேண்டிய பயனைக் கைக்கொண்டுவிட்டோம். ஆ கையா லிந்த வாசிரமமே மெத்த மேன்மைபொருந்தியது. நமது தவ த்தின் மகிமையா லிந்திரன் முதலிய தேவர்களெல்லா மெனக்கு வசப் பட்டிருக்கிறுர்கள். (38) நாமிந்திரன் முதலிய சகல தேவர்களையு மிப் போதிங்கு வருவிக்கத்தகு" மென, இவ்வா றவனது வசனத்தைக்கேட் டுக் கிரகஸ்தாசிரமத்தை யுடையவனுன வத்தரும னவனை நோக்கி யுரை த்ததாவது:—(39) "ஓ! மித்திரா! கிரஹஸ்தாசிரமத்தைக் கொண்ட வனுன வெந்தனுக்கும் யாதொரு துக்கமுமில்லை. எனக்கு மிந்திரன் முதலிய தேவரெல்லாம் வசப்பட்டிருக்கிறுர்கள். இதிற் சந்தேகமே யில்லை" (40) யென, இவ்வா றுரைத்த வத தருமனை நோக்கிச் சந்திர ஸேனன் வசனமுரைத்ததாவது:— "ஓ! தருமா! நாமிப்போது தவத் தின் வலிமையா லிந்திரனை யிங்கு வருவிப்போ" (41) மென்று சொ ல்லிப்போட்டுச் சொர்க்கலோகத்தில் வசிக்கலுற்ற விந்திரனை மனதினுல் நினைக்க, கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! உடனே இந்திர னவனரு கில் வந்துவிட்டான். (42) பிறகு இயதீசுவரனுன சந்திரசேன னவனை க் கண்டவுடன் துரிதமா யெழுந்தவனை வந்தனித்துப் பூஜைசெய்துவி

ட்டுப் பிறகவ் விந்திரனைச் சொர்க்கத்திற் கனுப்பிவிட்டான். (43) பிற்பாடு புத்திசாலியான தருமனும் ஸ்ரீ பஞ்சாக்ஷரமந்திரத்தைச் சபம்பண்ணி யிந்திரனை நினைக்க, அப் பஞ்சாக்ஷர மந்திரத்தின் வலிமையால் (44) பெருமைபொருந்திய தேவராஜன் சடிதியி லப்போதே யங்கு தோன்றிக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அத்தருமனைப் பிரதக்ஷிணம்செய்து நமஸ்காரமும் பண்ணினான். (45) பிறகத் தரும னவ் விந்திரனோடு ஸம்பாஷித் தவனை யனுப்பினான். அதுகண்டு சந்திரஸேனன் மெத்த வாச்சரியமுற்ற மனதைக்கொண்டவனாகி (46) "ஓ! நேசனே! நீ யிப்போது சகல வுலகங்களுக்கும் பாட்டனாரானப் பிரம்மனை யிங்கு தருவிக்கலாவா" லென்று மறுபடியு மத் தருமனை நோக்கி யிருந்த பயமுற்றவனாகிச் சொன்னவுட (47) னவனு மப்படியே ஆகட்டு மென்று சகலர்களுக்கு மதிபரானப் பிரம்மனை நினைக்க, அப்படி நினைத்தமாத்திரத்தி லுடனே பிரம்ம னங்கு தோன்றிக் கேளீர்! முனிவர்களே! (48) அத் தருமனைப் பிரதக்ஷிணம் பண்ணி யவனுடன் ஸம்பாஷித்துவிட்டுத் தனிநமாய்த் தமதிருப்பிடம் போய்விட்டார். பிற்பாடு மகா புத்திசாலியான வத் தருமன் சந்திரசேனனை நோக்கி யுரைத்ததாவது:—(49) "ஓ! சன்னியாசியே! நீரு மிப்போ தும து யோகத்தின் வலிமையால் பிரம்மனை யிங்கு வருவித்தல்வேண்டு" மென, இவ்வா றவனது வசனத்தைக்கேட்டுக் கேளீர்! தவத்தையே தனமாய்க்கொண்ட முனிவர்களே! அச் சந்திரசேனன் பிரம்மனை நினைத்தான். (50) அவனவ்வாறு நினைத்தும் பிரம்ம னெப்போது வரவில்லையோ அப்போதே யெல்லோர்களு மத் தருமனை ஸாக்ஷாத் ஸ்ரீ சிவபிரானாகவே பாவித்துப் பூஜைசெய்தார்கள். (51) அதுகண்டு சந்திரசேனன் பயத்திறல் வியாகுலமுற்ற மனதைக்கொண்டவனாகி யத் தருமனை வந்தனித்து "ஓ! புண்ணியவான்களிற் சிறந்தவரான நேசனே! தேவரீருக்கிந்த மகிமை யெவ்வாறுண்டாயிற்றென்பதைப் பாவிய சினேகத்தின் வசத்தினா லெந்தனுக்குச் சொல்லியருளவேண்டு" ($52\frac{1}{2}$) மென, இவ்வா றவனது வசனத்தைக்கேட்டுத் தரும னவன் முன்னிலையில் ஸத்தியமா யுரைத்ததாவது:—(53) "ஓ! தவத்தையே தனமாய்க்கொண்ட சன்னியாசியே! இதெல்லாம் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தின் மகிமையே! கேளீர்! பாவமற்றவரே! எல்லா விதத்திலும் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்திற்கு நிகரான தோர் மந்திரமுமில்லை. (54) இதன் மகிமையை முக்கண்ணுடைய ஸ்ரீ பரமேசுவரனைத் தவிர யார்தானறிவா" ரென, இவ்வா றவனது வசனத்தைக்கேட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யோகிசுவரனான வச் சந்திரசேன னத் தருமனிடமி

ருந்தே பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை யுபதேசம்பெற் றதன் பாலஸியமின்றி பிராப்பகலாய் ஜபம்பண்ணி (56) மிகுந்த புண்ணியாத்துமனாகி ய வந் தருமனோடுகூட விப் பார்மீதில் வெகுகாலம் வரையி லில்லறவாசையை யொழித்தவனா யிருந்துவிட்டுப் பிறகு மெத்த வுத்தமமான சிவலோகத்தை (57) யடைந் தங்கு மெத்தச் சந்தோஷத்துட னகண்ட போகங்களையு மனுபவித்துவந்து நாளாவிலே யந் தருமனோடு கூட ஸ்ரீ சிவபிரானுடைய ஸாயுஜ்ய பதவியை யடைந்தான். (58)

இருபத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௨௨—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தைப் பற்றிய மற்றோர் சரித்திரத்தைச் சொல்லுகின்றேன்; அதனைச் சாக்கிரதையாய்க் கேளுங்கள். (1) கோஸலமென்ற பெரியதேசத்தில் விக்கிரமபுரமென் றோர் பட்டணமிருக்கின்றது. அங் கெல்லோர்களையும் மோசஞ்செய்வோனான மானதனென் றோர் பார்ப்பானிருந்தான். (2) அவன் மெத்தச் சிறந்தவரான சூரியசருமனென்ற வோர் பிராம்மணச்சிரேஷ்டர்மீது பகை பாராட்டியவனாகி யவரை வஞ்சனைமார்க்கத்தாலொழிய வேறு ருஜுமார்க்கத்தால் வெல்லமுடியாதென்று (3) மனதினாலாலோசித்துக்கொண் டம்மானத னவரிடம் போய் வந்தனித்து "ஓ! ஸ்வாமீ! அடியே னிப்போதுமுதலாய்த் தேவரீருக் கூழியஞ்செய்வதிலே முயன்றவனாகி யோர் வேலைக்காரனா யிருந்துவருகின்றேன். (4) ஆகையால் தேவரீ ரிப்போ தென்தனைக் கேவல மோர் சீடனாகவே யங்கீகரிக்கவேண்டு" மென, இவ்வா றவனது வசனத்தைக் கேட் டவ ரவனை யப்படியே ஆகட்டுமென்றுசொல்லி (5) கேளீர்! தரணிதேவர்களே! அன்றுமுதலா யவன்மீது நம்பிக்கைபாராட்டிவந்தார். சூதனான மானதனும் தக்க இடுக்குவேளையை யெதிர்பார்த்துக்கொண்டே வந்தான். (6) பிற்பாடொருநா ளப்பாதகன் ஓ! தரணிதேவர்களே! அது காட்டையடுத்த கிராமமாகையா லவ் வூருக்குள் புலிவருகிறதென்று சூரியசருமனுக்குப் பயத்தைக் காட்டி "ஓ! ஸ்வாமீ! யா னின் றிரவினில் வீட்டுக்கு வெளியே ஜாக்கிரதையா யிருக்கின்றேன்; தேவரீர் வீட்டிற்

குள்ளாகத் தூங்காம லிருக்கவேண்டு" மென்று சொல்லிப்போட்டுப் (7-8½) பின் பப் பாதகனோர் பசுமாட்டை வீட்டுக்கு வெளியே (9) கொண்டுவந் ததனுடம்பை யோர் புலித்தோலினால் மூடிவிட்டு 'ஆ! ஓர் கொடியபுலி வந்துவிட்ட' தென் றப்போது சொல்லிக்கொண்டே வீட்டிற்குள் (10) ளோடி யவருக் கறிவித்துத் துரிதமா யோர் நல்ல கெட்டியான வில்லையெடுத் தவர் கைதனிற் கொடுத் தவரோடுகூட வீட்டிற்குவெளியே சென் றவருக் கதனைக் காட்ட, (11) அச்சூரியசருமனு மதனைக்கண்டு புலியென்றே நிச்சயித்துக்கொண் டதன்பேரி லோர் கூர்மையான வம்பை மிகுந்த வலிமைகொண் டெய்தனர். (12) ஆ! ஆ! கேளீர்! தாணிதேவர்களே! உடனே அப்பசுமா டவ் வம்பினா லடிபட் டிரத்தம் வடியப்பெற்றதாகிப் பூமியில் விழுந்து சடிதியில் மாண்டது. (13) பின்பு பிறருக்கு வஞ்சகமளிப்போனான வம்மானத னவனை யங்குதானே யிருத்திவிட்டுத் தானேதோ வோர் வியாஜமாய் வீட்டுக்குள்வந்து (14) அச்சூரியசருமன் மனைவி படுத்திருக்கு மறைக்குச் சென் றச் சூதனோர் மெத்த வாய்தன்போ லவளுக் குரைத்ததாவது:— (15) "ஓ! அம்மா! இப்போது மிகுந்த திருடர்பயம் நேர்ந்திருக்கின்றது; ஆகையால் நீரு மிங் கிருக்கத்தகாது; உம்முடைய பிள்ளையின் படுக்கையறைக்குட் போய் நீர் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். (16) மேலு முமது பிள்ளையோ அவன் மனைவியோடுகூட வும தறைக்குட் சாக்கிரதையா யிருக்கட்டு" (17) மென்று சொல்லி யவளைப் பிள்ளையினறைக்குள்ளும், பிள்ளையை யவன் மனைவியோடுகூடச் சூரியசருமனறைக்குள்ளு மடைவித்தான். (18) தவிரவு மப் பாவஞ்சக னப் பிள்ளைக்குப் புத்திகூறியதாவது:— "ஓ! புலவரோ! யார் கூப்பிட்டபோதிலும் நீரு முமது மனைவியு மிவ் வறைக்குள்ளே யொன்றும் பேசாமலே யிருக்கவேண்டு" மென்று சொல்லிவிட்டத் துராத்துமனாகிய (19½) வம்மகாகொடியன் சூரியசருமனிருக்கு மிடத்திற்குவந்து (20) "ஓ! ஸ்வாமீ! தேவரீர் வீட்டிற்குள் துராத்துமனாகிய வோர் கள்ளப்புருடன் வந்திருக்கின்றான். அவனுடன்கூடத் தேவரீர் மனைவியானவள் கிரீடை செய்துகொண் டிருக்கின்றாள். (21) ஓ! நேசரோ! யானிப்போ ததனைப் பார்த்துவிட்டுத்தா னிங்கு சீக்கிரமாய் வந்தேன். ஆகையால் மகாமானியாகிய நீ ரதற்குத் தகுந்த சிக்ஷையைச் செய்யவேண்டு" (22) மென்று சொல்லிவிட் டோர் மெத்தத் திடமான கத்தியை யவர் கைதனில் கொடுத் தவரை யுள்ளழைத்துப்போனான். அவரு மங்ஙனமே சரியென்ற நம்பிக்கையால் தம் மனைவியைக் கூப்பிட்டார். (23) அவர் பிள்ளை தன் பெண்டிரோடுகூட வப்போ தவர் கூப்பிட்டதைக் கேட்

டும் கேளீர்! வேதியர்களே! அவனுக்கு மரணகாலம் நெருங்கிவிட்டப
டியால் மானதன் போதனையின்படி யொன்றும் பேசாமற் சும்மாவிருந்
துவிட்டான். (24) அப்போது சூரியசருமன் வீட்டினுச்சிமேட்டைப்
பிளந் துட்புகுந் தவன் கள்ளப்புருடன்றானென்ற நிச்சயத்துடன் கத்
தியை யெடுத்துக்கொண்டு (25) கேளீர்! தரணிதேவர்களே! தம்மக
னையும் மருமகளையும் கொன்றுபோட்டார். பிறகவ் விரவுகடந்தவுட
னவர் வெளியில்வந்த (26) போது காலையில் தமது பாரியானவள் பி
ள்ளையி னறையிலிருந்து வருவதைக் கண்டவுட னவர் மெத்த மனவிசா
ரத்துடன் தொரையாய்த் தம் வீட்டிற்குட் சென் (27) றங்கு தம் பு
த்திரன் மருமகளோடுகூடக் கத்திவெட்டினால் மாண்டிருப்பதைக் கண்
டு ஆ! கா! அவர் சோகமும் மூர்ச்சையும்கொண்டவராகிப் பூமியில் வி
ழுந்து(28)மகாதுக்கத்துடன் மெத்தவுத்தமமான ஸ்ரீபஞ்சாக்ஷரமகாமந்
திரத்தை யுறக்கச்சொல்லிவிட்டுமறுபடியுமூக்கத்தைக்கைக்கொண்டு வீ
ட்டினின்று வெளியில்வந்தவுடன் (29) பசுமாடான தம்பினலடிபட்டிர
த்தம்பெருகப்பெற்றிருப்பதைக்காண்கையில்துக்கத்தினால்வியாகுலமு
ற்ற மனதைக்கொண்டவராகி (30) யப்போது * * * * * என்று மகாச்
சிரேஷ்டமான ஸ்ரீபஞ்சாக்ஷர மகாமந்திரத்தை ஜபம்பண்ணினார். பிற்
பாடு மானதன் துரிதமாய் மற்றப்பிராம்மணர்களிடம் சென்று (31)
"ஓ! பிராம்மணர்களே! நேற்றிரவில் ஸூரியசருமன் தன் மகனையும், ம
றுமகளையும், ஓர் பசுவையும் மிகுந்த கோபத்தினால் கொன்றுபோட்டா
ன். (32) ஆகையால் ஓ! வித்துவான்களே! மகா பாவியான கெட்ட
எண்ணங்கொண்ட விப் பிராம்மணக்கேடனைச் சாதியைவிட்டுத் தள்ளி
யிவ்வூரினின்று துறத்திவிடல் வேண்டு" (33) மென, இவ்வா றம் மா
னதனுடைய வசனத்தைக் கேட்டதன்மே லவ்வூரா ரெல்லோர்களு மத
னைக் கண்டு மிகுந்த பாவத்தின் பயத்தினால் மெத்தக் கோபங்கொண்ட
வர்களாகி (34) "ஓ! சூரியசருமனே! மகா பாதகனான வுந்தனு லெ
ன்னகாரியம் செய்யப்பட்டது? நீ பதிகபாவத்தைச் செய்துவிட்டபடி
யா லிப்போ தெங்க ளூரைவிட்டுக் காட்டிற் கோடிப்போகவேண்டும்.
(35) இல்லாவிடில் ஓ! கேடுகெட்டப் பிராம்மணா! உந்தனுக் கிப்போ
து நிச்சயமாய்த் தக்க வாக்கினை நேரிடு" மென, இவ்வா றவர்களது வ
சனத்தைக் கேட்டதன்மேல் சூரியசருமன் வசனமுரைத்ததாவது:—
(36) ஓ! பிராம்மணர்களே! இரவினி லிச் செய்கையான தெந்தனறி
விவோடு செய்யப்பட்டதல்ல. இது அஞ்ஞானத்தினால் செய்யப்பட்
ட பாவமேயென்று ஸத்தியமாய்ச் சொல்லுகின்றேன். (37) மேலும்

யான் காலையி லிவர்கள் மரணமடைந்திருப்பதைக் கண்டு ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை ஜபம்செய்துவிட்டேன். ஆகையால் கேளீர்! பிராம்மணர்களே! பாவத்தின் நாற்றம்கூட விப்போ தெந்தனுக் கில்லை" (38) யென, இவ்வா றவரது வசனத்தைக் கேட்டப் பார்ப்பார்கள் மறுபடியு மவரை நோக்கி-யுரைத்ததாவது:— "ஓ! சூரியசருமனே! உமக்குப் பாவமேயில்லாவிட்டா லப்போது அதோ நிற்கின்ற விருடபமானது, அது ஸாக்ஷாத் தருமஸ்வரூபமென்றே சொல்லப்படுகின்றபடியா லிங்கு சீக்கிரமா யோடிவந் துந்தனால் போடப்படும் புல்லைத்தின்னட்டு" மென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டுச் சூரியசருமன் வசனமுரைத்ததாவது:— (40) "ஓ! பிராம்மணர்களே! அறிவுள்ளதான இவ்விருடபம் புல்லைத்தின்பதினால் பாவசோதனை யாகமாட்டாது. ஆனால் ஸ்ரீகேதாரேசுவரஸ்வாமி கோவிலின் மதிள்மீதுள்ள, மணிதால் செய்யப்பட்டதாகிய அவ்விருடபங்கள் வந் தெந்தனால் போடப்பட்ட புல்லைத்தின்பதானா லப்போதுதானெந்தன் பாவத்திற்குத் தக்க சோதனையாகு" மென, (41-42) இவ்வா றவரது வசனத்தைக் கேட்டப்போ தப் பிராம்மணர்க ளப்படியே நல்லதென் றிப் பாவசோதனையை மெத்தப் பிரீதியுடன் பார்த்துக்கொண்டேயிருந்தார்கள். (43) கேளீர்! தாணிதேவர்களே! அப்போ தச் சூரியசருமனும் தம் தம்பிகளையனுப்பிப் புற்களைத் தருவித்துக்கொண் டவைகளை ஸ்ரீ கேதாரநாதேசுவரஸ்வாமி ஸன்னிதியிற் போட்டுவிட் (44) டஞ்சலிகொண்டவராகி ஸ்ரீ சிவபிரானுடைய மகாமந்திரத்தை மனதினில் நினைத்துக்கொண்டே "ஸ்ரீ சம்புவினுடைய கோபுரத்திலும், மதிளிலும, சித்திரங்களிலுமுள்ள ஸ்ரீ சிவபிரானையே தியானம்செய்வதிலும்,தினம்தோறும் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை ஜபிப்பதிலும் முயன்றவைகளும், ஸ்ரீ பராபரப் பொருள்மீதே முக்கியமாய் மனதை நாட்டியவைகளுமான சகல விருடபங்களுமாகிய (45-46) வப்பேர்க்கொத்த நீங்களெல்லாம்ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தைஜபம்செய்ததினாலெந்தனுக்குக் கொலைசெய்ததோடமேயில்லாதிருக்குமாயினிப்போதேமகாபாக்கியசாலிகளாகி யிங்குவந்திப் புற்களைத்தின்னவேண்டு"($47\frac{1}{2}$)மென்றுசொல்லிவிட்டுமெத்தவுத்தமமான பஞ்சாக்ஷர மகா மந்திரத்தைத் துரிதமாய் ஜபம் செய்தார். (48) கேளீர்! தாணிதேவர்களே! அப்போ தங்கங்கெல்லாமுள்ள சகல விருடபங்களு மதனைக் கேட்டவுடன் கீழிறங்கிவந் தப்புற்களைத் தின்றுவிட் (49) டங்கு சாணமும் போட்டு ஓ! பிராம்மணோத்தமர்களே! அப் பிராம்மணர்களைக் கண்டு உறக்க முக்காரம் போட்டுவிட் டச் சூரியசர்மனை வலம்சுற்றி முகர்ந்து பார்த்துத் (50) திரும்பி யோர் கணத்துக்கு

ள் ளவைகளின் தானங்களிற் போயிருந்துவிட்டன. அதுகண்டப் பி ராம்மணர்களெல்லாம் பயத்தினால் வியாகுலமுற்ற மனதைக்கொண்டவ ர்களாகி (51) யிம் மகா பாவத்தினின்று பரிசுத்தமா யிருக்கின்ற விம் மகாத்துமனை வந்தனித்து ஓ! மகாத்துமாவானப் பிராம்மணோத்தமா! தேவரீ ரெங்கள தபராதத்தை மன்னித்தருளவேண்டும். (52) தேவரீ ர் மகிமையையும், பெருமைபொருந்திய விம்மந்திரத்தின் மகிமையை யும் யார்தானறிவார்" என் றம் மகாத்துமனைத் துதிபண்ணி யஞ்சலி கொண்டு நின்றார்கள். (53) அப்போ தவாது கற்புடை பாரியானவள் மெத்த வுத்தமமான வசனத்தைச் சொன்னதாவது:— "ஓ! ஸ்வாமீ! ஸ்ரீ பஞ்சாக்ஷர ஜபத்தினா லிப்போ திவ் விருடபங்கள் புற்களைத் தின்ற தல்லவா! ஆகையால் அஞ்ஞானத்தா லடிபட்ட தேவரீர் பிள்ளையையும் மறுமகளையு மிப்பசுவையும ஓ! பிரபுவே! சீக்கிரமாய்ப் பிழைப்புமூட்ட வேண்டு" மென, (55) இவ்வா றவளது வசனத்தைக் கேட்டதன்மே லப் பிராம்மண ரெல்லோர்களு மங்ஙனமே யவனை வேண்டிக்கொண்டு "ஓ! பிராம்மணோத்தமா! இவர்களைத் திரும்பப் பிழைப்புமூட்டுவதில் தேவரீருக் கென்னபாரம்? (56) ஓ! பாவலேசமற்ற மறையோரே! தேவரீர் மந்திரத்தின் மகிமையினா லிவர்களைத் திரும்பவும் பிழைப்பு மூட்டல்வேண்டு" மென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன் மேல்மறுபடியு மத் தரணிதேவர் (57) "ஓ! ஓ! ஸ்ரீபஞ்சாக்ஷர மகா மந்திரமானது பஞ்சமகாபாதகங்களை * நாசஞ்செய்யலுற்றதென்பதும், அதனை ஜபிப்போர்க்கு மறுபிறப்பில்லையென்பதும் நிச்சயமேயானா(58) லிப்போது நீங்கள் தூக்கத்தினின் றெழுந்திருப்பதுபோல் சீக்கிரமா யெழுந்துவிடக்கடவீர்க" ளென்றுரைத்துக் கைகளை யஞ்சலிகொண்டு சிரேஷ்டமான வம் மகா மந்திரத்தை ஜபம்பண்ணினார். (59) கேளீர்! முனிவர்களே! அப்போ துடனே மகனும், மறுமகளு மப் பசுமாடு மெழுந்துவிடலாகையி லெல்லாப் பிராம்மணர்களு மவ் வற்புதத்தைக்

---

* பொன்திருட்டு,மத்தியபானம் செய்தல்,குருவின் மனையாளோடு புணருதல், பிரம்மஹத்தி,இந்நான்குபாதகங்களைச் செய்தவர்களோடு சேருதல் இவ்வைந்தும் பஞ்சமகா பாதகங்களெனப்படும். ஆனால் மேல்கண்டவைகளில் ஐந்தாவது பாவத்திற்குப் பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது. மற்ற நான்கு மகா பாதகங்களுக்கும் பிராயச்சித்தம் விதிக்கப்படவேயில்லை. 'ஹேமாத்திரி' யென்ற தருமசாத்திரக்கிரந்தத்தில்பாவங்களுக்குப் பிராயச்சித்தம்சொல்லப் படுவதற்கு முந்தி 'நான்கு மகா பாதகங்களையும் தவிரமற்றப் பாவங்களுக் கெல்லாம் மட்டில் பிராயச்சித்தம் விதிக்கப்படுகின்ற' தென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இப் பேர்க்கொத்த மகா பாதகங்கள்கூட ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திர ஜபத்தினால் தொலையலாகின்றதென்பது கருத்து.

கண்டதன்மேலத் தாணிதேவனை (60) ஸாக்ஷாத் ஸ்ரீ சிவபிரானென்றே நிச்சயித்துக்கொண்டு மனப்பூர்ணமாய் நமஸ்காரம்பண்ணி யவர தாக்கினையின்பேரி லப் பிராம்மணரெல்லாம் தங்கள் தங்கள் விடுதிகளுக்குச் சென்றுவிட்டார்கள். (61) பிற்பாடு சூரியசருமன் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை ஜபம் பண்ணிக்கொண்டே வெகுகாலமளவும் பேரானந்தத்துடன் வேண்டியபடி போகங்களை யனுபவித்துவிட்டுப் (62) பிறகு பெண்டீர், பிள்ளை, பந்துவர்க்கங்கள், உற்றார்கள் இவர்களோடு கூடத் தேவ ருஷிகணங்களால் விளங்கப்பெற்ற மகா மங்களகரமான வோர் விமானத்தில் (63) மெத்த விருப்பத்துட னேறிக்கொண்டு கேளீர்! முனிவர்களே! தேவதுந்துபி வாத்தியங்களுடனும், வருஷிக்கலுற்ற மலர்மாரிகளுடனும் சிவலோகமடைந் (64) தங்கு ருத்திரகணங்களோடுகூடச் சந்தோஷமாய் வெகுகால மிருந்துவிட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ சம்புவாகிய பரப்பிரம்மத்தின் ஸாயுஜ்யபதவியை யடையலானார். (65)

இவருக்கு விரோதியான, பிறருக்கு வஞ்சகமளிக்கலுற்ற வம்மானதனோ மெத்தப் பயத்தினாற் சடிதியி லத்தேசத்தைவிட்டு மறுதேசத்திற் கோடிப்போ (66) யங் கென்று மாகாரமற்றவனும், பெண்டீரில்லாதவனுமாய் மிகுந்த தாபத்தோடுகூடியவனாகி வெகுகாலமளவும் மெத்த வியாதியினா லடிபட்டவனும், பூச்சிவைத் தூனீர்வடியப்பெற்ற தேகத்தைக்கொண்டவனுமா யிருந்துவந்து பிறகு மடிந்தான். அப்பாவியானவ னிப்போதுகூட நரகத்தில் வாதையளிக்கப்படுகின்றான். ($67\frac{1}{2}$) ஆகையா லெந்தமானிடர்கள் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை ஜபஞ்செய்யும் மானிடரைப் பகைக்கின்றார்களோ (68) அவர்கள் மகா பாதகங்களோடுகூடியவர்களாகி நிச்சயமாய் நரகத்தை யடைவார்களே! ஆனாலெவர்கள் ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபிப்போர்களுக்கு மித்திரராயிருக்கின்றார்களோ அவர்கள் மிகுந்தபுண்ணியவசத்தினா லதிக ஸந்தோஷத்துடன் மெத்த வுத்தமமான சிவலோகத்தை யடைவார்களே! ($69\frac{1}{2}$) ஆகையால் கேளீர்! முனிவர்களே! எல்லோர்களும் பஞ்சமகாபாதகங்களை நாசம்செய்யலுற்ற ஸ்ரீபஞ்சாக்ஷர மகா மந்திரத்தை நாள்தோறும் மகா முயற்சியோடும் ஜபம் பண்ணவேண்டும். (70)

இருபத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் உ௬—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! தாணிதேவர்களே! ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் மகிமையை யெடுத்துரைத்தேனல்லவா! இப்போது ஸ்ரீ சிவபிரானுடைய திருநாமங்களின் மகிமையைக் கவனமாய்க் கேளுங்கள். (1) சிவன், பசுபதி, சம்பு, சங்கரன், சந்திரசேகரன், மிருத்தியுஞ்சயன், விரூபாக்ஷன், நீலகண்டன், மகேசுவரன், (2) பவன், பர்க்கன், மகாதேவன், ஹரன், உருத்திரன், உமாபதி யிவ்வாறுமுதலிய சிறந்த திருநாமங்கள் ஸ்ரீ ஸதாசிவனுக்கிருக்கின்றன. (3) இவற்றிலொன் றல்ல தனேகம் திருநாமங்களை எந்தமனித னெப்போதும் ஜபிக்கின்றானோ அவனே பாக்கியவானும், புண்ணியாத்துமாவும், சகலதேவர்களாலும் வந்தனிக்கப்படுவோனுமாகிச் (4) சகல போகங்களையு மனுபவித்து முடிவினில் கைலாசமடைந்து கேளீர்! தாணிதேவர்களே! அங்கு சிலகாலமிருந்துவிட்டுப் பிறகு சிறந்த பரப்பிரமத்தின் ஸாயுஜியத்தை (5) யடைகின்றானென்பதை யுங்களுக்குச் சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். மேலும் ஸ்ரீசிவபிரானது திருநாமங்கள் மகா பரிசுத்தமுள்ளவைகளென்பதை யறிந்து எவர்கள் உச்சரிக்கின்றார்களோ (6) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவர்கள் சிவலோகமடைந்து மேன்மை பொருந்திய ஸ்ரீசிவபிரானது ஸாயுஜிய பதவியைப் பெறுகின்றார்களென்பதி லாச்சரியமேயில்லை யென்பது நிச்சயமே! (7) எனென்றா லனேகம் பெயர்கள் ஸ்ரீசம்புவின் திருநாமங்களைக்கேவல மஞ்ஞானத்தினா லுச்சரித்த மாத்திரத்திற் சிவலோக மடைந்திருக்கிறார்கள். அவர்களிற் சிலரை யிப்போ துங்களுக் கெடுத்துக் கூறுகின்றேன். (8)

கௌதம மென்ற தேசத்தில் கந்துகபுரமென் றோர் பெரிய பட்டண மிருக்கின்றது. அங்கு பாவமற்றவனான வியாள னென்றோர் பிராம்மண னிருந்தான். (9) அவனுக்குச் சௌரியமுடையவனும், பாவத்தொழில்களைச் செய்யலுற்றவனும், மத்தியபானஞ் செய்வோனும், மகா மாயாவியும், இறைச்சிகளைத் தின்போனும், பணத்தின் துராசையால் கள், இறைச்சி முதலியவைகளை வியாபாரஞ் செய்வோனும், மகாபாதகமான கெட்ட நினைப்புடையவனுமான வோர் பிள்ளை யிருந்தான். ($10\frac{1}{2}$) அவன் பிராம்மணர்களுக் குரிய வொழுக்கங்களை யொழித்துக் கெட்ட நடைகளை நாடியே வசித்து வந்தான். (11) அத் துராத்துமனிவ்வாறே வெகுகால மளவு மிருந்து வருகையில் கேளீர்! முனிவர்களே! அவனுக்குச் சடிதியா யந்தியகாலம் நேரிட்டு விட்டது. (12) அப்போ தவன் பிள்ளைகள் அவன் படுத்திருக்கு மறைக்கு வந்து அவனை வினவியதாவ

ண:— "ஓ! அப்பா! நமக்கு யாரென்ன கொடுக்க வேண்டும்? அல்லது நாம் யாவருக் கென்ன கொடுக்க வேண்டும்? (13) மேலும் நீர் யாவருக்குக் கடன் கொடுத் திருக்கிறீர்? யாவரிடத்திலிருந்து கடன் வாங்கியிருக்கிறீர்" என, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் அவன் மாமிச வியாபாரத்தி னுதாயஞ் சிலவைச் சொல்லிப்போட்டுப் பிறகு கள்ளைக் கடன் கொடுத்திருக்கும் விவரத்தைச் சொல்லுகையில் ஓர் பறையனுக்குச் சிவம் (குருணி) கள் கடன் கொடுத்திருப்பதாய்ச் சொன்னவுடன் (15) பிராணவாயுவை விடலாகையி லப்போது கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மகாபயங்கரர்களான யமதூதர்க ளவனைக்கட்டிக்கொண்டு போவதற்காகத் துரிதமாய் வந்தபோது (16) சிவகணங்கள் வந்து தங்க ளாயுதங்களா லவர்களை யடித்துத் துறத்திப் போட்டார்கள். பிறகு அத் தூதர்க ளெல்லாந் துரிதமாய்க் காலனிடஞ்சென்று சங்கதிகளை யுரைத்தவுடன் (17) அவன் சேனைகளாற் சூழப் பெற்றவனுகிச் சடிதியிற் புறப்பட்டு மகா பயங்கரனுகிய வக்காலன் சிவகணங்க ளண்டைக்கு வந்தான். (18) அப்போது சிவதூதர்க ளவ்வாறு வாலுற்ற மகா கொரேனுன காலனைக் கண்டவுட னவனது சேனைகளை யடித்துத் துறத்திவிட் டவனையு மவன் கைப் பாசத்தைக் கொண்டே பலவந்தமாய்க் கட்டி, அம்மகாபலவான்க ளிவ னியமனுடைய முதன்மையான வேலைக்காரனென்பதை யறிந் (19-20) தவனை ஸ்ரீ கைலாசபருவதத்தின் கீழாகவுள்ள வோர் குகைக்குத் துரிதமாய்க்கொண்டு போய்விட்டார்கள். அப்போ தியமனே அவர்களால் காணப்பட்டிருந்தா லவன் கொல்லப்பட்டேயிருப்பானென்பதிற் சந்தேகமேயில்லை. (21) கேளீர்! முனிவர்களே! ஆனு லவர்க ளக் காலனை யோர் பிரதான வேலைக்காரனே யென்றறிந்ததால்தா னவனுடைய வுயிரை வைத்தார்கள். அவர்க ளவனைத் துரிதமா யோர் மரத்தில் கட்டிவைத் தவனுக்கோர் காவலனையு மேற்படுத்திவிடடுப் (22) பிற கம் மகாபலவான்கள் பராக்கிரமசாலியான வப் பிராம்மணோத்தமனைச் சிவலோகத்திற்குக் கொண்டுபோ யங்கு ஸ்ரீ மகாதேவன் சன்னிதியில் (23) வைத்துப் போட்டு ஸ்ரீ மகேசுவர னுக்கினையின்பேரில் தங்களிருப்பிடத்திற்குச் சென்றூர்கள். பிற கப் பிராம்மணனும் ஸ்ரீ மகாதேவனைச் சேவித்ததன்மேல் ஸாரூப்பியபதவியை யடைந் தங் கிருந்தான். (24) அப்போ தியமன் மேருகிரியின்கண் ணஜோவதியென்று பெயர்போன நகரத்தில் விளங்கிய ஸ்ரீ மகாதேவனைச் சேவித்துப்போட்டு வந்ததின்மேல் தூதர்களின்முகமாய்க் காலனுடைய சங்கதிகளைக் கேட்டு (25-26) மிகுந்த துக்கத்தினுல் மனக்கவலைகொண்டவனுகிச் சடிதியில் கைலாசத்திற்

குப்போய்ச் சங்கதிகளை ஸ்ரீ நந்திகேசுவரனிடமறிவித்தான். அப்போ தவர் மிகுந்த பீதியடைந்திருக்கலான அவ்வியமனை நோக்கித் திருவாக் குறைத்ததாவது:— (27) "ஓ! இயமா! அப்புண்ணியாத்தும னுயிர் பிரியுங்காலத்தில் மகா பரிசுத்தமான ஸ்ரீ மகேசுவரனது திருநாமத்தை யுச்சரித்தபடியா லம்மகா புண்ணியத்தினால்தான் சிவஸாரூப்பியத்தை (28) யடைந்திருக்கிறானென்பதில் நீ சந்தேகிக்க வேண்டியதில்லை. கேளாய்! இயமா! எந்த மகாத்துமர்கள் ஞானத்துடனோ அல்லது அஞ் ஞானத்துடனோ பிராணனை விடும்சமயத்தில் பாவங்களை யபகரிக்கலுற் ற ஸ்ரீ சிவபிரானது திருநாமங்களை யுச்சரிக்கின்றார்களோ (29½) அவ ர்களைக்குறித் துந்தனுக்கினை செல்லத்தகாதென்றே ஸ்ரீஸர்வேசுவரனு டைய திருவாக்கினையல்லவா! (30) அடா! யமா! அனுபோகப்படா தவிஷயத்திற் பிராணிகளுக்குச் சந்தேகம் ஜனிப்பது சரியே! திருநாம ங்களை யுச்சரிப்பதின் மகிமையைப்பற்றி நீ முந்தியே அனுபோகப்பட் டிருக்கிறாயல்லவா? (31) அதனை யிப்போது நீ மறந்துவிட்டாயோ? அதை மறுபடியும் நினைத்துப்பார்த்துக்கொள். என்னவென்றால்:—

முந்தி மகாபாவியான வோர் வேடத்தலைவன் மரணமடைந்த போது(32) எப்போதும் தருமமார்க்கத்திலே யிருக்கலுற்ற நீ சித்திர குப்தனை யழைத் தவன் செய்த தருமாதருமங்களை விசாரித்தாயல்லவா? (33) அதற்குச் சித்திரகுப்தன் மனதினில் நன்றா யாலோசித்துப்பா ர்த் துரைத்ததாவது:— "ஓ! தருமராஜனே! பிராணிகளைக் கொலைசெ ய்வோனான விப்பாதகனுக்குத் தருமத்தி னிலேசம்கூடவில்லை. (34) கெட்டவொழுக்கமுடைய இவ்வேடன் பணத்தின் பேராசையால் நாள் தோறும் காலையிலெழுந்தவுடன் காட்டிற்குச் சென்று சிலர்களைக் கொ ன்றும், (35) சிலர்களைக் கட்டியும், மற்றவர்களை யடித்து மப்பாதகன் நாள்தோறும் பறித்துக்கொண்டுபோவான். மேலு மவன் பல வேடர் களாற் சூழப்பட்டு மெத்தக்கோபம்கொண்டவனாகி (36) 'ஆ! அடா! அவனைக்கட்டிக்கொண்டுவந்து கசைகளால் மிகவு மடித்துக் கத்தியால வனை யிங்கு கொன்றுபோ' டென்று கொடுமையா யுரைப்பான். (37) தவிரவு மிப் பாதகன் மத்தியபானம்செய்வோனு மிறைச்சிகளைத் தின் போனுமாகி மதத்தினால் மிகவும் கர்வம்கொண்டிருந்தான். இங்கு வ ளர்த்திச்சொல்வதிற் பயனென்ன? இத்துராத்துமனுக்குப் புண்ணிய மே கிடையாது. (38) ஆகையால் தேவரீர் தூதர்களைக்கொண்டு சீக்கி ரத்தி லிவனுக்குச் சிக்ஷைசெய்யவேண்டும். தவிரவும் ஓ! தருமராஜ னே! எப்போது மெல்லோர்களையும் கொல்வோனான விப்பாதகன் உ யிர் வெளிப்படும்போதுகூட பிழைக்கும்வழியைக் கேட்டுக்கொண்ட

தன் பிள்ளைகளுக்குப் பிரஹாரா (அடித்து) ஆஹாரா (பறித்து) ஸம்ஹாரா (கொன்றுவிடு) என்று புத்திசொல்லிவிட்டுத் தான் மரணமடைந்தா" (40) னென்று சித்திரகுப்தனுரைத்த வசனத்தைக் கேட்டதன்மேல் கேளாய்! இயமா! நீ மனதினி லாலோசித்துக்கொண்டு "ஓ! மசாபுத்தி சாலியான சித்திரகுப்தா! புண்ணியவிசேஷத்தினால் ஸ்ரீ சம்புவினுடைய ஸாரூப்பியபதவிக்குப் பாத்திரனாகிய விம் மானிடனைப்பற்றி நமக்கதிகாரமில்லையே!" யென்று சொல்லிப்போட்டு ($41\frac{1}{2}$) "அடா! அடா! துராத்துமர்களான தூதர்களே! இப்போ திவனை விட்டுப்போட் டோடிப்போங்கள். (42) இப்புண்ணியாத்தும னெப்போதும் 'ஸ்ரீ சம்பு' வென்ற பாவனையுடனே யெந்தனால் வந்தனிக்கத்தக்கவன். ஏனென்றா லிவன் பிராணனை விடும்காலத்தில் 'பிரஹாரா, ஆஹாரா, ஸம்ஹாரா' (43) வென்று சொன்னதில் ஸ்ரீ மகேசுவரனுடைய திருநாமமாகிய 'ஹரா' வென்றமொழி மூன்றுதடவை யவனா லுச்சரிக்கப்பட்டவுட னவன் மரணமடைந்திருக்கிறா" னென்று சொல்லிவிட்டுக் கேளாய்! இயமா! நீ மிகுந்த பயங்கொண்டவனாகி யப்போ தவனை வந்தனம்செய்தாய். (44) ஆகையால் நீ யிங்கு திருநாமங்களை நினைத்தலின் மகிமையை நினைத்துப் பார்த்துத் தவறுதலின்றியில் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். (45) பிற்பாடு சிவகணங்கள் வந் தவ் வேடனைச் சிறந்த விமானத்தி லேற்றி வைத்து ஸ்ரீ கைலகிரிக்குக் கொண்டுபோய் ஸ்ரீ மகாதேவன் சன்னிதியிலவனைக் (46) கொண்டுவிட்டார்கள். ஓ! இயமா! உன்தூதர்களோ முந்தியே ஓடிவிட்டார்க" ளென, இவ்வா றந் நந்திகேசுவரனுடைய வசனத்தைக் கேட்டதனமே லத் தருமராஜன் (47) "ஓ! ஸ்வாமீ! யானப்போ தங் கிருக்கவில்லை. ஈசுவரனைச் சேவிப்பதற்காகப் போயிருந்தேன். ஓ! பிரபுவே! புதிதா யதிகாரத்தில் நியமிக்கப்பட்டவனான விக்காலன் பரமாத்துமாவாகிய ஸ்ரீ சங்கரனுடைய திருநாமங்களை யுச்சரித்தலின் மகிமை யிப்பேர்க்கொத்ததென்பதை யறியவில்லை. ($48\frac{1}{2}$) ஆகையால் ஓ! பகவானே! தேவரீர்! கணங்களால் வாதிக்கப்படலாகின்ற காலனை யிரக்ஷித்தருளவேண்டு" மென, (49) இவ்வா றவ் வியமனது வசனத்தைக் கெட்டு ஸ்ரீ நந்திதேவ ரவனை நோக்கிப் பின்னுமுரைத்ததாவது:— "கேளாய்! இயமா! இப்போது மகாகாளருடைய கணங்கள் காலனைக் கட்டிக்கொண்டு போயிருக்கிறார்கள். (50) ஆகையால் நீ யவரிடத்திற்குப்போ யவரை வந்தனித்து நம துத்திரவையு மவருக்குத் தெரியப்படுத்தி நீ காலனைச் சீக்கிரமாய் மீட்டுக்கொள்" ளென்று திருவாக்கருளி இயமனை அனுப்பினார். பிற கவனு மப்படியே பாக்கியமென்று புறப்பட்டுக் கணாதிபராகிய மகாகாளரிடம் (52) சென்று மிகுந்

த பயத்தோ டவனை யஷ்டாங்கத்தோடு * நமஸ்காரம்பண்ணிவிட்டுக் காலனை விடுவித்துக்கொள்வதற்காகச் சகல சங்கதிகளையும் சொல்லிவி ட்டுப் (53) பிறகு கணங்களுக்குத் தலைவரான ஸ்ரீ நந்திகேசுவரனுடை ய வசனத்தையும் சொன்னான். அதுகேட்டு மகாகாள ரவ் வியமனைக் கோபித்துக்கொண்டு (54) "அடா! கெட்டநினைப்புடைய வியமா! நீ யிப்போது முந்திய சங்கதியை மறந்துவிட்டாயா?" வென, இவ்வளவு மட்டிலுள்ள அவரது திருவசனத்தைக்கேட் டியம னுரைத்ததாவது:— (55) "ஓ! பிரபுவாகிய கணத்தலைவரான மகாகாளரே! அடியேன் மு ந்திய விருத்தாந்தத்தை மறக்கவேயில்லை; அதனை யிப்போதுகூட மன தினில் நினைத்துக்கொண்டேயிருக்கிறே" னென்று கேளீர்! பிராம்ம ணோத்தமர்களே! அவ்வியமன் மகா பயத்தோடு தெரிவித்துக்கொண் டான். (56)

இருபத்திமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் உச—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சௌனகாதிமுனிவர்கள் கேட்கின்றதாவது:— "ஓ! தவத்தை யே தனமாய்க்கொண்ட சூதமுனிவரே! மகாகாளரால் வினவப்பட்டத ற் கியமன் தா னதனை மறக்கவில்லை யென்று சொன்ன பூர்வ விருத்தா ந்த மின்னதென்பதை யெங்களுக் கெடுத்துக் கூறவேண்டு" (1) மெ ன, சூதர் சொல்லுகின்றார்:— கேளீர்! முனிவர்களே! ஸௌராஷ்டிர மென்ற தேசத்தில் தீவ்விரதனென் றோர் மெத்தப் பணக்காரனான பிராம்மணனிருந்தான். அவனுக்குக் கௌசிகனென்றோர் மிகுந்த துஷ் டனான பிள்ளை யிருந்தான். (2) அவன் களவுசெய்வோனும், கெட்ட

---

* நமஸ்காரம் 4 வகைப்படும்; அஷ்டாங்கம், பஞ்சாங்கம், திரியங்கம், ஏகாங்கம் என்பவையாம். இவற்றுள் அஷ்டாங்கத்திற்குரிய 8 அங்கங்களோ வென்றால்:— சிரசு, மார்பு, கண், வாக்கு, மனசு, கைகள், புயங்கள், பாதங்கள் இவைகளே. அல்லது சிரசு, இரு கைகள், இரு காதுகள், மோவாய், இரு புயங்க ள் இவவெட் டங்கங்களும் பூமியிற்பட வந்தனித்தல். பஞ்சாங்கமோவென்றா ல்:— சிரசு, இரு கைகள், இரு புயங்கள் இவ்வைந்தங்கங்களும் பூமியிற்பட வந்த னித்தல். திரியங்கமோவென்றால்:— இரு கைகளையும் கூட்டிக்குவித்துச் சிரசு மேல் வைத்துக்கொள்ளல். ஏகாங்கமோவென்றால்:— சிரசினால்மட்டிற் செய்த லேயாம்.

நினைப்புக்காரனும், நாள்தோறும் மது மாமிசாதிகளைப் புஜிப்பவனும், தன்னையொத்த வப்பேர்க்கொத்தவர்களேயான சூத்திரச் சிநேகிதர்களுட னெப்போதும் சாவாசம் செய்வோனுமா யிருந்தான். (3) அவன் மகா பாவங்களைச் செய்யலுற்ற மற்றொருவனோடு சிநேகம் செய்து கொண்டு மிகவு மிலச்சைகெட்டவனுகிப் பறையர்களுக்குரிய வாகாரங்களைச் சாப்பிட்டுவந்தான். (4) இப்படி யிருக்கையி லொருநா ளவன் மெத்தச் சௌந்தரியம்பொருந்திய வோர் சண்டாளஸ்திரீயை யனுசரித்துக்கொண் டவளுடன்கூடக் கள்ளவழியாய்ப் புறப்பட்டுப் போகையி (5) லவளுடைய புருடனுன பறைய னவனைக்கண்டு கோபாவேசம் கொண்டவனுகி யவனைத் தன் பெண்டீரோடுகூடச் சேர்த்துக் கட்டி யடித்துப் (6) பிற கவன் தீக்ஷணமான வோர் கத்தியா லப் பாதகனுடைய வாண்குறியை யறுத்தெறிந்துபோட்டான். அதன்பிறகக் கௌசிக னந்தத் துக்கத்தோடு வெகுகால மிருந்துவிட்டுப் பின்பு மரணமடைந்தான். (7) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போ தியமதூதர்கள் வந் தவனை யிறுக்கிக் கட்டுகையிற் சிவகணங்கள் சீக்கிரமாய் வந் தத்தூதர்களையடித்துவிட்டுக் கௌசிகனைச் சிறந்த விமானத்தி லேற்றிக் கைலாஸத்தில் ஸ்ரீ சிவபிரானுடைய சன்னிதியில் கொண்டுவிட்டுச் சென்றூர்கள். (8-9) பிறகத் தூதர்கள் மகா துக்கம்கொண்டவர்களாகி யப்போதே யியமனிடம் சென்று கௌசிகனுடைய விருத்தாந்தங்களையும் தாங்க ளடிபட்டதையும் சொல்லித் (10) தேகமெல்லா மிரத்தம் பெருகப்பெற்றவர்களும், தழதழத்த குரலைக்கொண்டவர்களுமாகி யழுதார்கள். பிற கியமனு மவர்களது வசனத்தைக் கேட்டவுடன் கைலைகிரியில் விளங்கும் ஸ்ரீ சிவபிரானண்டைக்குப் போவதா யுத்தேசித்துத் துரிதமாய்ப் புறப்பட்டுச் சென்றவுட (11½) னக் கைலையி னடிவாரத்திற் சிறந்த சிங்காதனத்தின்மீது வீற்றிருந்த கணத்தலைவரான ஸ்ரீமகாகாளரைக் கண்டு (12½) கேளீர்! முனிவர்களே! அவரிடத்துக் கௌசிகனுடைய சங்கதிகளையும், தன் தூதர்களுக்கு நேரிட்ட வாதையையும் சொல்லிக்கொண்டான். (13½) அம் மகாகாளரு மதனைக் கேட்டவுடன் மிகக் கோபம்கொண்டவராகி (14) "அடா! இயமா! மகாத்துமாவாகிய விக் கௌசிகனுக்குப் பாவத்தி னிலேசம்கூடவில்லை. ஏனென்று விப் பிராம்மணோத்தமன் வாலிபப் பருவத்தில் சம்பு வென்றவோர் பார்ப்பாரப் பிள்ளையோடு விளையாடலாகையில் (15) மகாத்துமனுகிய வச் சம்புவானவ னிக் கௌசிகனுக்குத் 'திரியம்பக' (முக்கண்ணன்) னென்ற பெருமைபொருந்திய பெயரைவைக்க, ஸ்ரீ மகேசுவரனுடையதான வந்தத் திருநாமத்தை யிவனோர் சாமகோமளவும் வகித்திரு

ந்தான். (16) மேலும் மகா புத்திசாலியான வச் சம்புவானவன் தனது தோழர்களுக்கெல்லா மிம்மாதிரியாகவே மகா பரிசுத்தங்களான ஸ்ரீ பரமேசுவரன் திருநாமங்களையே குறிப்பாய் வைத்திருந்தான். (17) ஆகையா லிக் கௌசிகன் மகா புண்ணியமானத் திரியம்பகனென்ற பெயரைக்கொண்டிருந்தபடியாலே யிவனுக்குக் கைலாஸபதவி கிடைத்ததென்று யாம் ஸத்தியமாய்ச் சொல்லுகின்றோ" மென, (18) மகா மூடனான இயமன் ஸ்ரீ மகாகாளரா லுரைக்கப்பட்ட விப்பேர்க்கொத்த திருவசனத்தைக் கேட்டும் பின்னுமவன் "ஓ! சுவாமீ! என்றாலு மிப்பேர்க்கொத்த மகாபாவிக்கு ஸ்ரீ கைலாஸபருவதத்தில் மகேசுவரனுடைய சன்னிதியில் வாஸம்கிடைப்பது தகாதன்றோ" ($19\frac{1}{2}$) வென் றியமதருமராஜன் ஸ்ரீ மகாகாளருடைய திருவசனத்தை மறுத்துரைத்துப்போட் (20) டவரைவிட்டு ஸ்ரீ மகாதேவனுடைய சன்னிதிக்குப் போவதற்காகத் துரிதமாய்ப் புறப்பட்டான். கேளீர்! தாணிதேவர்களே! அப்போது மகாகாளர் மெத்தக் கோபத்துட னவனைக் கூப்பிட்டு (21) "அடா! துராத்துமாவாகிய யமா! நமது திருவாக்குக் கெதிர்வாக் குரைத்திட்டாயல்லவா?" வென்று சொல்லித் தம்தண்டத்தி லவனது மார்பினிலோரடியடிக்க, (22) அப்போ தவ னவ் வடியுண்டதனால் தேகம் முழுதுமிரத்தம் பெருகப்பெற்றவனாகி யோர் பெரிய மலைக்கு நிகராய் மூர்ச்சைகொண்டு சாய்ந்தான். (23) பிறகவ் வியமனோர் கணநேரத்திற்குள்ளம் மூர்ச்சைதெளியப்பெற்றவனாகி யெழுந்திருக்கலாகையி லப்போதுப் பிரம்மதேவன் ஸ்ரீ மகேசுவரனைத் தரிசித்துவிட் டங்கு வந் (24) தச்சங்கதியைக் கேட்டதன்மே லவரம் மகாகாளரை வந்தனித்து "ஓ! கணாதிபரோ! இயமனாற் செய்யப்பட்ட விப் பிழையை மன்னித்தருளவேண்டு" (25) மென்று சொல்லிக் கேளீர்! வேதியர்களே! பலமுறையா யவரை வேண்டிக்கொண்டு "ஓ! தருமராஜனே! பெருமைபொருந்திய வக் கௌசிக னிப்போது ஸ்ரீ தேவாதிதேவனுடைய சன்னிதியிலிருக்கின்றான். (26) ஸ்ரீ மகாதேவனுடைய திருநாமங்களி னுத்தமமான மகிமையைத் தேவேசனும், நீலகண்டனும், உமாபதியுமான வப் பரமசிவனைத் தவிர யார்தா னறிவார். (27) ஆகையால் கேளாய்! இயமா! நீ யிப்போது முதலாய்த் தவறிப்போகாதே" யென் றவனுக்கும் புத்தி சொல்லி யவனை விடுவித்துப்போட் டப் பிரம்மதேவன் போய்விட்டார். (28) அவ்வாறு விடுபட்ட வியம னவரது வசனத்தைக் கேட்டதன்மேல் கேளீர்! தாணிதேவர்களே அப்போ தம் மகாகாளரை வந்தனித்துவிட்டுத் துரிதமாய்த் தன்னிருப்பிடமடைந்தான். (29) ஓ! பிராம்மணோத்தமர்களே! இக்கதைதா னியமனால், தான் மறக்கவில்லையென்று சொல்லப்பட்டது.

பிற கிப்ம னிவ்வாறுகச் சொல்லி யம் மகாகாளனை வந்தனித்து விட்டு (30) "ஓ! ஸ்வாமீ! இக் காலன் புதிதா யதிகாரத்திற்கு வந்தவனுகையா லொன்றுமறியவில்லை. ஆகையால் தேவரீர் கணங்களா லவன் கட்டுண்டிருப்பதைத் தேவரீர் தயவினுல் முந்தி யடியேனை விடுவித்தது போலவே விடுவித்தருளவேண்டு" மென, ($31\frac{1}{2}$) மகா பலவானுகிய மகாகாள ரிவ்வா றவ் வந்தகனது வசனத்தைக் கேட்டதன்மே (32) லோர் கணத்தை யனுப்பி யக் காலனை விடுவித்தருளினர். பிற்பாடு காலனும் மகாகாளருடைய கணங்களால் விடப்பட்டதன்மே லவ் வியமனண்டைக்கு வந்து, (33) பிறகவ் விருவரும் பயத்தினுல் நடுக்கமுற்றவர்களாகி யப்போ தம் மகாகாளரை வந்தனித் தவர துத்திரவைக் கொண்டதன்மேல் தங்கள் தானத்திற்குத் துரிதமாய்ப் புறப்பட்டார்கள். (34) அப்போ தவர்கள் நடுமார்க்கத்திற் செல்லுகையில் படைத்தலைவனுன காலனியமனை நோக்கிச் சொல்லியதாவது:— "ஓ! ஐயா! தருமாராஜனே! இனி யும்மிடத்தி லெனக் கிவ்வதிகாரம்வேண்டாம்; (35) இதோ என் தேகம்முழுது மிரணப்பட்டதாகி யிரத்தம் பெருகப்பெற்றிருப்பதைப் பாரும். இப்போது நான் விடுதலையடையாவிட்டா லிந்த நிமிஷத்தி லென துயிர் போயேயிருக்கு" மென, (36) இவ்வா றக் காலனது வசனத்தைக்கேட் டியமன் பிறகுசொல்லியதாவது:—"அடா! மூடபுத்திகொண்ட காலா! நீ சிவக்கணங்களைக் கண்டவுடனேன் (37) கௌசிகனை விடவில்லை? அடா! அவன் புண்ணியவானுய்த் தானிருக்கட்டு மல்லது பாவியாய்த்தா னிருக்கட்டும்; சிவகணங்களைக் கண்டவுடன் ஸ்ரீ சிவபிரானுக்கு நேசமுள்ள அவனை விட்டுப்போட் டவர்களையும் வந்தனித்துவிட்டுப் (38) பிறகு சங்கதிகளை நம்மிடம் வந்து தெரிவித்தா லதற்குத் தக்க காரியத்தை நாம் செய்யமாட்டோமா? அதனுல் தான் நீ தக்க பயனை யனுபவித்தாய். (39) கேளாய்! காலனே! நாம் முந்தி யிவ் வதிகாரத்துக்குப் புதிதாய் வந்தபோது திருநாமங்களின் மகிமையை யறியவில்லை.

கந்துகமென்ற பெரியதேசத்திலுள்ள வற்புதமான கதளீபுரமென்றபட்டணத்தி (40) லத்தேசத்துக் கதிபனுன நந்தகனென்றோர் பெருமைபொருந்திய வரசனிருந்தான். அவனுக்குப் பார்த்தமாத்திரத்தில் மானிடர்களுக்கு மோகத்தை யுண்டுபண்ணுமூற்ற வதிரூபலாவண்ணியம்பொருந்தியவளும், மெத்த மதம்கொண்டவளும், காமதையென்று பெயர்கொண்டவளுமான மிகவும் கெட்டநடையுள்ள வோர் மனைவியிருந்தாள். ($41\frac{1}{2}$) அக்கெட்டநடைக்காரியானவள் நாள்தோறும் வியபிசாரம்செய்வதிலே மிகுதியாய் முயன்றுவந்தாள். (42) மேலும் ம

காபாவியான வக் காமதையானவள் மிகவும் மானம்கெட்டவளாகி யாச னைவிட்டுப்போட்டுப் பறையர்களாயிருந்தபோதிலு மழகுளனாகிய மற் ற எவனையாயினும் பார்த் தவனைத்தானே வலியக்கூப்பிட்டுக்கொண் ட வனோடு சம்போகிப்பாள். (43½) இப்படியிருக்கையி லவள் துர்ப்புத் தியென்ற வோர் சூத்திரனை யடைந் தவனோடுகூடப் புணர்ந்துவந்ததில் (44) கர்ப்பம்தரிக்கலாகிப் பிறகவனையும் விட்டுப்போட்டுப் பாவசே ஷத்தினல் வசுவேதியென்ற மற்றோர் பார்ப்பானை யடைந் (45) தவ னுடனும் கிரீடித்துவருகையி லப்பாதகி பூர்ணகர்ப்ப முடையவளாகி யோர் பிள்ளையைப் பெற்றாள். கேளீர்! தாணிதேவர்களே! பிறகு சி லநாட் சென்றதன்மேல் பாதகனன அவ்வசுவேதி மரணமடைந்தான். (46) பிற்பா டத் துர்ப்புத்திக்காரியானவள் தன் குழந்தையை யங்கே போட்டுவிட்டு வெளிப்பட்டுப்போய் மறுபடியும் துர்ப்புத்தியென்ற மூ ந்திய சூத்திரனிடமே போய்ச்சேர்ந் (47) தத்துராத்துமனுடன் வெ குகாலமளவும் கிரீடித்துவந்து அக்காமதையானவள் மகா கொடிய பா வங்களைச் செய்துவந்தாள். (48) பின்பவ ளத் துராத்துமனோடுகூட த் தீவாந்தரத்திற்குப் போவதற்காகக் கப்பலேறி நடுக்கடலிற் செல்லு கையி (49) லக் கப்பல் காற்றடிபட் டுடையலாகி யப்போதப் பாதகி யவனோடுகூட வக்கடலில் மாண்டாள். (50) அப்போ தியமதூதர்க ள தேகநுணத்தி லவனையு மவளையும் கட்டி நரகக்கடலில் தள்ளிக் கொரே ங்களான வாள்களால் வாதித்தார்கள். (51) ஓ! காலனே! உடனே மகாபலசாலிகளான சிவகணங்கள் வந்து மகா கோரங்களான தங்களா யுதங்களா லத் தூதர்களை யடித் தவனையு மவளையும் மீட்டுத் துரிதமாய்த் (52) திவ்யவிமானத்தி லேற்றிக்கொண்டு சிவபதமடைந்தார்கள். அ ப்போது யாம் சிவகணங்களைக் கண்டு மகாகோபம்கொண்டவராகி (53) ஓ! கணங்களே! இப்பாவிகளை யேன் திவ்யவிமானத்தில் வைத்துக்கொ ண் டிப்போ தெங்கே கொண்டுபோகின்றீர்" (54) ளென்று யாமப் போது புதிதா யதிகாரத்திற்குவந்தபடியா லவர்களைக் கொடுமையாய்ப் பேசினேம். அவர்களெல்லா மெம்பேச்சைக்கேட்டுக் கோபாவேசம் கொண்டவர்களாகி (55) மிருந்த விறுமாப்போடு நம்மை யோர் திட மானபாசத்தினற் கட்டிச் சக்கிரவாளகிரியி னடிவாரத்திலுள்ள குகை க்குள் ளோரிடத்தில் (56) தலைகிழாகத் தள்ளிவிட்டு ஆ! கா! அடா! காலா! மிகவும் பலவீனமுள்ள வோர் பூதத்தை யழைத் ததனிடத்தி லவர்க ளெந்த னதிகாரத்தையு மொப்புவித்துப்போட் (57) டச் சூத் திரனையு மிப்பாதகியையும் ஸ்ரீ சிவபிரானுடைய சந்நிதியிற் கொண்டு சேர்த்தார்கள். பிற கவ் விருவர்களும் ஸ்ரீ கைலைகிரியின் கண்ணே யிரு

ந்துவந்தார்கள்! (58) பிற்பாடு விஷ்ணுவும் பிரம்மனும் ஸ்ரீ சந்திரசேக ரனுடைய தரிசனத்திற்குப் போவதற்காக வொன்றுசேர்ந் திருக்கும்சமயத்தில் சித்திரகுப்த னவர்களிடம்சென்று ஸ்ரீ விஷ்ணுவிடத்திற் சங்கதிகளை யறிவிக்க, (59) அப்போ தவ் விஷ்ணுவு மதனைக் கேட்டவுடன் மிகுந்த துக்கத்தோடு தாமு மப் பிரம்மனுடன்கூட ஸ்ரீ பரமேசுவரனிடத்தில் தெரியப்படுத்துவதற்காகப் புறப்பட்டுத் துரிதமாய்ச் சிவலோகஞ்சென் (60) றங் கவ் விருதேவேசர்களுமாய் ஸ்ரீ விக்கினேசுவரரைக் கண் டவரை வந்தனித்துப்போட்டுத் துரிதமா யவரிடத்தில் சங்கதிகளை மெல்ல வுரைத்தார்கள். (61) அப்போ தவ் விக்கினேசுவரரு மிவ் வெமது விருத்தாந்தத்தைக் கேட்டதன்மேல் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மிகுந்த கோபத்தோடுகூடியவராகித் திருவாக்குரைத்ததாவது:— (62) "ஓ! விஷ்ணுப்பிரம்மர்களே! அவ்வியமன் சிவகணங்களோடுகூடச் சண்டைக்குத் தலைப்பட்டானல்லவா! ஆகையா லப்புத்திகெட்டவனுக் கவர்களால் தக்க சிக்ஷை செய்யப்பட்ட" தென, (63) இவ்வா றவரது வசனத்தைக் கேட் டவ் விருவர்களும் பயங்கொண்டவர்களாகி "ஓ! சகல விக்கினங்களுக்கு மதிபானப் பிரபுவே! தேவரீ ரிவ் வபராதத்தை மன்னித்தருளவேண்டும். மகா மூடனும் கெட்டவெண்ணம் கொண்டவனுமான இவ்வியமன் புதிதாகையா லொன்றுமறியவில்லை" யென்றுரைத் தவ் விருவர்களு மக் கணதிபனைப் பூமியில் தண்டம்போல் வந்தனித்தார்கள். (65) கேளாய்! காலனே! பிற்பா டவ் விக்கினேசுவரபகவான் பிரசன்னராகி அசலனென்ற வோர் பூதத்தைநோக்கித் திருவாக்கருளியதாவது:— "ஓ! அசலா! இவ்வியமன் மகா பலசாலிகளான வீரபத்திரர் கணங்களால் கொண்டுபோகப்பட்டிப்போது சக்கிரவாளகிரிதனி லிருக்கின்றான். ஆகையால் நீ யிப்போது சீக்கிரமா யங்கு சென்று மிகவும் கிலேசமடைந்திருக்கிற அவ்வியமனை யிங் கழைத்துவா" வென்றுரைத்து மிகுந்த தயவினாலே யப்பூதத்தை யனுப்பினர். (66-68) இவ்வா றவரது திருவசனத்தைக் கேட்டவுட னப்பூதம் துரிதமாய்ப் புறப்பட் டெம்மைச் சீக்கிரத்தில் ஸ்ரீ கணேசர்முன்பாக அழைத்துவந்தது. (69) பிறகு நா மவ் விக்கினேசுவரரை வந்தனித்துவிட்டுக் கைகட்டிக்கொண் டவ ரருகினில் நின்றோம்., அப்போ தப் பகவா னெம்மை நோக்கி மந்தகாசத்துடன் திருவாக்கருளியதாவது:— (70) "அடா! இயமா! நீ பாவபுத்தியினா லவ் விருவர்களையும் தொந்திரவுசெய்தாயேயின்றி வேறில்லை. புண்ணியவான்களான இவர்களுடைய சுகிருதத்தை நீ யறியவில்லை. (71) இஸ்திரீயானவள் துர்ப்புத்தியென்ற வச் சூத்திரனிடமிருந்து கர்ப்பம்தரித்தபிறகு மகா

விட்ணுகிய வசுவேதியென்றப் பிராம்மணனை யடைந்து (72) காலமா னதின்மே லவன் வீட்டி லவள் பிரசவித்தாள். பிறகப் பார்ப்பான் செத் தவுட னவள் தன தக் குழவியை (73) யப்பார்ப்பான் வீட்டிலே விட் டுப்போட்டுக் கேளாய்! அந்தகா! பிற கத் தூர்ப்புத்தியிடமே சென்று விட்டாள். பின்பவள் மகனுகிய வக் குழந்தை யப் பிராம்மணன்வீட் டிலே வளர்ந்துவந் (74) தப் பார்ப்பான் வீட்டின்கண்ணே சூத்திரன் போ லூழியம்செய்துகொண்டு வந்தான். கேளாய்! இயமா! அப்போ து வசுவேதியின் கற்புடைய மனைவியானவ (75) ளப்பிள்ளை தனது ச க்களத்திமகனு மிருசாதிப்பிள்ளையுமானதா லவள் சத்தியவாக்குடையவ ளாகி யதன்பொருள் விளங்கும்படி யச் சூத்திரன் மகனுக்கு 'ஸங்கர' னென்று பெயரிட்டாள். (76) அதுகொண்டு உலகினர்கள் தங்கள்பா ஷைவழக்கத்தினு லவனைச் 'சங்கர' னென் றழைத்தார்கள். இவ்வித மா யிவர்களுடைய வப் பிள்ளையானவ னிப்போது சங்கரனென்ற திரு நாமத்தைக் கொண்டிருக்கின்றபடியா (77) லம் மகா புண்ணியத்தினு ல்தா னிவர்களுக்குக் கைலாசப்பிராப்தி கிடைக்கலாயிற்று. அடா! இ யமா! தேவாதிதேவனுகிய ஸ்ரீ சிவபிரானுடைய, சகல பாவங்களையும் தொலைப்பிக்கலுற்ற திருநாமங்களின் மங்களகாம்பொருந்திய மகிமை யை யுண்மையில் யார்தா னறிவார். (78½) மேலு மெவர்கள் ஸ்ரீ மகா தேவரது திருநாமங்களி னுத்தமமான மகிமையை யறிந்து (79) தாங் கள் பெற்ற பிள்ளைகளுக்கு ஸ்ரீ மகேசுவரனுடைய வத் திருநாமங்களை யிடுகின்றார்களோ அவர்களின் பயனைக் கோடிவருஷங்களானபோதிலு ம் நம்மாற் சொல்லமுடியா" (80) தென, அளவற்ற பராக்கிரமத்தை க்கொண்ட ஸ்ரீ விக்கினராஜனுண்டய இவ்வாறு திருவசனங்களைக் கேட் டதின்மேல் கேளாய்! காலனே! தேகம்முழுதும் பயத்தினுல் நடுக்க ம்கொள்ளப்பெற்றவராகி யப்போது நம திருப்பிடத்திற்கு வர நினைத் து (81) மிகுந்த பக்தியால் பயத்தோடு தண்டம்போல் பூமியில் வந்த னித்துவிட்டு "ஓ! தேவேசரான ஸ்ரீ கணநாதா! எந்தன திப் பிழையை மன்னித்தருளவேண்டு" (82) மென்று அடியாரிடத்து நேசமுற்றவ ரான வக் கருணையுடையோரைப் பக்தியுடன் வேண்டிக்கொண்டோம். பிறகு விஷ்ணுப்பிரம்மர்களு மவரை யிவ்விதமே வந்தனித்து வேண்டி க்கொண்டதன்மே லவர் (83) நாதரற்றவர்போல் பயந்து துக்கமடை ந்திருந்த நம்மைக் கிருபையுடன் நோக்கி யருளி "ஓ! யமா! நீ யினி மேல் புத்தியுடையவனுகி ஜகதீசனுன ஸ்ரீ மகேசுவரனுடைய திருநாமங்

களின் வைபவத்தைக் கண்டறிந்து நடக்குதல் வேண்டுமென் றுந்தனுக் கெச்சரிக்கின்றோ” மென்றனர். (84)

இருபத்திநான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் உரு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

“கேளாய்! காலனே! கணநிதியான ஸ்ரீ விக்கினராஜ னிவ்வாறு திருவாக்கருளிவிட்டு (முந்தி நமததிகாரத்தில் நியமிக்கப்பட்டிருந்த) பூதத்தைவருவித்துக்கொண்டு முன்போல் நமக்குள்ள பதவியை யீந்தருளி நம்மையனுப்பினர். (1) பிறகு நாமும் பிரம்ம விஷ்ணுக்களோடுகூட அவரை வந்தனித்துவிட்டு நம்மிருப்பிடம் வந்தெப்போதும் தவருதலன்றியிலே நடந்துவருகின்றோம். (2) ஆகையால் கேளாய்! காலா! நீயுமினி தவருதலின்றியே நடந்துவரவேண்டும். மேலு மெந்த மானிடர்கள் மகா பரிசுத்தமான சிவபிரானது திருநாமங்களை ஞானத்தினலாவது அஞ்ஞானத்தினலாவ துச்சரிக்கின்றார்களோ அவர்களுக்கு நிச்சயமாய்ப் பாவமேயில்லை. ($3\frac{1}{2}$) ஓ! காலனே! இதெல்லாம் நாமனுபவித்ததைக்கொண்டே ஸத்தியம், ஸத்தியம், ஸத்தியமென் றுறுதியாய்ச் சொல்லுகின்றோம். (4) இல்லாவிடில் நமக்குமுனக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் ஸ்ரீ பரமேசுவரனுடைய திருவாக்கினை நேரிடலாகும். ஆகையால் நாம் பிரம்ம விஷ்ணுக்களோடுகூட வப்பேர்க்கொத்தப் பிரபுவின் சமயத்தை யெதிர்பார்த்துக்கொண்டு நாள்தோறு மவரைச் சேவைபண்ணிவரவேண்டும். ஆகையால் நமக் கவகாசமில்லை. நீ யதிகாரத்தை யெப்போதும் மெத்த ஜாக்கிரதையுடன் நடத்திவரவேண்டும். (5-6) ஆகையால் நீ நம் வார்த்தையைக் கேட்டுக்கொண்டு தவருதலன்றியில் நடந்துவரவேண்டும். தவிரவு மெவர்கள் சகல பாவங்களையும் நாசம் செய்யவுற்ற ஸ்ரீ மகாதேவன் திருநாமங்களைத் தரிக்கின்றார்களோ (7) அப்பேர்க்கொத்தவர்களின் தாய்தந்தையரைக் கண்டால் நீ தூரத்தி லோடிப்போகவேண்டும்: ஆகையால் நீ ஸகல முயற்சியோடும் தவருதலின்றியிருக்கவேண்டு” (8) மென, இவ்வா றவ் வியமனுடைய வசனத்தைக் கேட்டுக் காலன் பயங்கொண்டவனுகி “ஓ! ஐயா! உமதிப்பெரிய அதிகாரத்தை நடத்திவா வெந்தனுல் முடியாது. ஏனென்று லடிக்கடி யெ

ந்தனுக்கு மெத்தப் பயஞ்சனிக்கின்ற" (9½) தென, இவ்வா றக் கால ன் வசனத்தைக்கேட் டியமன் பின்னு முரைத்ததாவது:—(10) "கே ளாய்! காலனே! எல்லோர்களும் நமது வசத்தி லகப்பட்டவர்களே யாகையால் நீ யேன் பயப்படல்வேண்டும்; எல்லாப் பிராணிகளும் நம் மைக் கண்டமாத்திரத்தில் பயப்படுகின்றார்களென்பது நிச்சயமே! (11)

கேளாய்! காலனே! பூர்வத்தில் ஸாந்தீபினிமாமுனிவருடைய, நல்ல வொழுக்கமுடையவனும், மிகுந்த புத்திசாலியுமான புத்திரனானவன் அச்சுதா, கோவிந்தா, முகுந்தா வென்றது முதலிய ஸ்ரீ விஷ்ணுவின் திருநாமங்களைக் கீர்த்தனம் பண்ணிக்கொண்டே பாவங்களைத் தீர்க்கவுற்ற மகா பரிசுத்தமான வோர் தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்கையி(12½) லோர் வலிமைபொருந்திய முதலையானது நடு ஜலத்திலிருந்த வப் பிள்ளையைப் பிடித்துத் (13) ஆரத்தி விழுத்துப்போய் மிகுந்த பசியுடையதாகி யவனை யுடனே தின்றுவிட்டது. அப்போது மரணமடைந்த வச் சிறுவனை, மகா பலசாலிகளான நமது தூதர்க (14) ளவன் ஸ்ரீ விஷ்ணுவுக்கு மிகவும் பிரியமுள்ளவனாயினும் கொஞ்சமேனும் கவலையின்றியில் நமது லோகத்திற்குக் கொண்டுவந்து விட்டார்கள். அப்போதச் சாந்தீபினிமுனிவரும் தம் புத்திரன் பெரிய மடுவினில் மரணமடைந்ததைக்கேட்டுச்(15) சோகமும் மூர்ச்சையும் கொண்டவராகி மூடன் போற் புலம்பினர். பிற்பாடவர் தம் சீடர்களாகிய மகாபலசாலிகளான ஸ்ரீ கிருஷ்ணனையும் பலராமனையும் (16) பார்த்து மகா புத்திசாலியான வக் குருவானவர் தமக்குரிய குருதக்ஷிணையைக் கேட்டதாவது:— "ஓ! சீடர்களே! நீங்கள் முதலையால் பிடித்துப்போகப்பட்ட நமது புத்திரனைக் கொண்டுவருவீர்களாகி (17) லிப்போததுஎல்லாவற்றிலும் மெத்தச் சிறந்த தக்ஷிணையாகு" மென, இவ்வா றக் குருவின் வசனத்தைக் கேட் டம் மகா பலசாலிக ளிருவரு (18) முடனே யப் பெரிய தடாகத்திற் றுரிதமாய்க் குதித்து அம் முதலையைக் கொன்று மப்போது குருபுத்திரனைக் காணுமல் துக்கத்தினுல் வியாகுலமுற்ற மனதைக்கொண்டவர்களாகி (19) யியமலோகத்துக்குப் போவதாய் நிச்சயித்துக்கொண்டு சீக்கிரமாய்ப் புறப்பட்டு நமது லோகத்துக்கு வந் தப்போ தவ் விருவர்களும் மிகவும் வணக்கமுற்றவர்களாகி (20) நம்மைத் துதிசெய்தக் குருபுத்திரனை மீட்டுக்கொண்டு பிறகவ் விருவர்களும் தங்கள் குருவாகிய ஸாந்தீபினிமாமுனிவரண்டையி லவனைக்கொண்டு சேர்த்தார்கள். (21) பிறகு மகா புத்திசாலியான அவ் விருடி புத்திரன் பயத்தினுல் வியாகுலமுற்றவனுகி "ஓ! கோ! நாமோ எப்போதும் ஸ்ரீவிஷ்ணுவின் திருநாமங்களைக் கீர்த்தனம் செய்துகொண்டிருந்தோம். (22) அப்படி

யிருந்து மியமதூதர்கள் வந்து நம்மை யியமலோகத்திற்குக் கொண்டு போகும்படி யாயிற்றல்லவோ!" வென்று மனதினா லாலோசித்துக் கொண்டு பிறகியமனுக் கியமனும், சூலபாணியும், (23) பயங்கரரும், பரப்பிரம்மமும், பரமாத்துமாவுமான ஸ்ரீ மகாதேவருக் கெந்தச் சிறந்த திருநாமங்கள் மூவுலகுகளிலும் பிரஸித்திகொண்டிருக்கின்றனவோ (24) அவைகளைக் கீர்த்தனம் பண்ணிக்கொண்டே மகா புண்ணியாத்துமாவாய் வெகுகால மியமனிடத்துப் பயமற்றவனா யிருந்துவிட்டு முடிவினில் சிவதூதர்களாற் சூழப்பட்டவனாகி ஸ்ரீ கைலாஸமடைந் தங்கும் வெகுகால மிருந்துவிட்டுப் பிறகு மகா துர்ப்பலமான மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைந்தான்." (25)

இருபத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௨௬—வது அத்தியாயத்தி னர்த்தம்.

"மேலும் கேளாய்! காலனே! முந்தி நமது தூதர்கள் நல்ல விஷ்ணுபக்தனும் மகா புத்திசாலியுமான புஷ்கரனென்றப் பிராம்மணனிடம் சென் றவனை நம் லோகத்துக்குக் கொண்டுவந்தார்கள்.(1) அப்போதப்புலவனைப்பார்த்துவிட்டு நாமத்தூதர்களைநோக்கிவசனமுரைத்ததாவது:— 'ஓ! தூதர்களே! அதேகிராமத்தில் மகா பாவியும் கெட்ட நினைப்புடையவனுமான மற்றோர் புஷ்கரனிருக்கின்றான். (2) ஆகையால் பாவமற்றவனான விப் பார்ப்பானைக்கொண்டு விட்டுப்போட்டவனையல்லவோ இங்கு பிடித்துவரவேண்டு' மென, இவ்வாறு நமது வார்த்தையைக் கேட்டதன்மேல் நம் தூதர்க ளச் சிறந்த பார்ப்பானைக்கொண்டு விட்டுப்போட்டு புஷ்கரனென்ற மற்றோர் பார்ப்பானை யிங்கு கொண்டுவந்தார்கள். (3½) அன்றுமுதலாய்ப் புத்திசாலியான வப் புண்ணியவான் மனதினா லாலோசித்துக்கொண்டு (4) 'ஓ! கோ! நாமெப்போதும் ஸ்ரீ ஹரியினுடைய வெல்லாத் திருநாமங்களையும் ஜபித்துக்கொண்டு வந்தோமல்லவா! அப்படி யிருந்து மியமதூதர்கள் வந்து நம்மை யவர்கள் பட்டணத்துக்குப் பிடித்துப்போனார்களன்றோ!' வென்று நன்று யாலோசித்துக்கொண்டு ஸகல பாவங்களையு மபகரிக்கவுற்ற, ஸ்ரீ சிவபரமாத்துமாவின் திருநாமங்களை மிகுந்த பக்தியோடு நொடிதோறும் ஜபித்துவந்து (6) அப் புண்ணியாத்துமன் சிவநாமத்தின் மகிமையினா லில்லற வாசாபாசங்களி னொழிவுபெற்றவனாகிச் சொந்

சமேனும் மனக்கவலை யற்றவனுய்ச் சுயேச்சையாகப் பர்தனில் வசித்துவந்து (7) முடிவினில் சிவலோகமடைந் தங்கு ஸகல வைசுவரியங்களோடும் கூடியவனுகி யெல்லாப் போகங்களையு மனுபவித்துப்போட்டுப் பிறகு மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைந்தானன்றே. (8) கேளாய்! காலா! வளர்த்துவதா லென்னபயன்? பூர்வத்தில் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்களைச் செய்தலிலே மிகவும் முயன்றவரும், ஸ்ரீவிஷ்ணுவி னுத்தமமான அவதாரமுமான, தசரதராஜன் புத்திரனுகிய ஸ்ரீராமனே நாமே கொண்டுவந் திருக்கின்றனமன்றே! (9½) ஆகையால் நீயேன் வீணுய்ப் பயப்படல்வேண்டும்? (10) ஓ! காலனே! முக்கண்ணரும், சுகத்தைச்செய்வோரும், மிருத்தியுவைச் சயித்தவரும், உமைக்கு மித்திரரும், காலத்தை யதிக்கிரமித்தவரும், நீலகண்டரும், கபாலியுமான ஸ்ரீ மகாதேவரையும், சகல சாத்திரங்களையு மறிந்தவர்களும், நல்லொழுக்கங்களில் முயன்றவர்களுமான அவரதடியார்களையும், விக்கினேசுவரர், அவரதடியார்கள் இவர்களையும் தவிர அப்பேர்க்கொத்த விஷ்ணு முதலிய தேவர்களிடத் தெல்லாம் நமதுள்ளத்திற் பயமுண்டா? அவ்வெல்லோர்களும் நமதாக்கினைக்குட்பட்டவர்கள்தா னென்று நமதனுபோகத்திற் கொள்ளப்பட்டிருப்பது ஸத்தியம், ஸத்தியம், ஸத்தியமே! (11-13) ஆகையால் கேளாய்! காலனே! நி யெப்போதும் கொஞ்சமேனும் பயமற்றவனுகி முன்போல் நமததிகாரத்தைச் செலுத்திவரவேண்டும். (14) மேலு மிப்போது மற்றோர் வார்த்தை சொல்லுகின்றோம்; அதனைச் சாக்கிரதையுள்ள மனதுடன் கேட்பாயாக. (14½) என்னவென்றால்:— ஸ்ரீ பார்வதிதேவி, விக்கினேசுவரர், மகாத்துமாவாகிய ஸ்ரீ கந்தபிரான், பைரவர், வீரபத்திரர், மகாசாஸ்தா, கணுதிபரான நந்திகேசுவரர், மகாகாளர் முதலியவர்கள், அஸ்திராயுதர், இருடபராஜன், சிவனடியார்கள் இவர்களுடைய திவியத் திருநாமங்களை யெந்த மகாத்துமர்க ளெப்போதும் ஜபிக்கின்றுர்களோ, அல்லது இடைவிடாமல் தங்களுக்குப் பெயராய் வைத்துக்கொள்ளுகின்றுர்களோ(15-18) அப்பேர்க்கொத்த, பாவத்தின் தொடுதலேயற்றவர்களிடத்து நமக்கதிகாரம் செல்லவே செல்லாது. அந்தச் சிவநேசர்களைக் கண்டவுடன் நாம் மெத்தப் பயந்து தூரத்தி லோடிவிடுகின்றேம். (19) ஆகையால் நீயு மப்படியே அப்புண்ணியவான்களைக் கண்டமாத்திரத்தில் மிகுந்த பயத்துடன வர்களை நமஸ்கரித்துவிட்டுச் சடிதியாய்த் தூரத்திலோடிப்போகலாவாய்; இனி மறுபடியு மிவ் விஷயத்தில் தவரியேபோகாதே. (20) இதைப்பற்றி யோர் பழைய சரித்திரமிருக்கின்றது: அதனை நீ ஜாக்கிரதையாய்க் கேள்.

"பூர்வத்தில் மாகததேசத்தில் சூரியன்போன்ற தேஜஸ்ஸைக் கொண்டவனான பாரவியென்றோர் பிராம்மணனிருந்தான். அவனோர் மகாவித்துவானாயினு மேதோ பாவவசத்தினால் (21½) நாள்தோறும் தாசிகளோடு புணருவதிற் காதல்கொண்டவனும், திருடுவோனும், மத்தியபானம்செய்வோனும், கெட்ட நினைப்புடையவனுமாயிருந்தான். (22) அவன் பகல்முழுதும் பெரியகாட்டினிற் பதுங்கியிருந் திரவுநேரத்திற் பட்டணத்துக்குள்வந்து தலையாரிகள் பார்வையி லகப்படாமலே திருடிக்கொண்டுவந்தான். (23) இப்படியிருக்கையி லொருநா ளவ்வாறு திருடியவனைத் தலையாரிகள்கண் டவனைக் கொல்வதற்காக வப்போ தவனைத் துறத்திக்கொண்டே மகா வேகத்தோ டோடினார்கள். (24) பிற கவ னவர்களைக் கண்டவுடன் பயம்கொண்டு தன்னுயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக மகா வேகத்தோடு பெரிய காடுதனில் வெகுதூரமோடினான். (25) மகா பலசாலியான வோர் தலையாரியானவன் 'எப்போதும் திருடுவோனான வப் பார்ப்பானை அடி, கொல்' லென்று சொல்லிக்கொண்டே அவனைத் தொடர்ந்தோடினான். (26) அப்போது மகா பலபராக்கிரமமுடைய வோர் புலியானது அவ்வா றிறைந்துகொண்டே களைப்படைந் தோடலான வத் தலையாரியைக் கண்டு குகைக்குள்ளிருந்து (27) வெளியில்வந்து மகா கோபத்துட னவனை யறைந்து கொன்றுபோட்டது. மகா பலவானான வக் கொடிய தலையாரி புலியினாற் கொல்லப்பட்டதன்பேரி (28) லவன் பயம் தெளியப்பெற்றவனாகி ஆ! கா! கேளாய்! காலனே! அவன் கோளதேசம் போய்ச் சேர்ந் தப்போ தங் கப் புத்திசாலியானவன் தன் பெயரை மாற்றிப் புதிதாய் வைத்துக்கொண்டான். (29) எப்படியென்றால்:— 'ஓ! நாம், வியாக்கிரபாத (புலிக்கால்) த்தினால், நம்மைக்கொல்ல முயன்ற தலையாரியைக் கொன் றிரக்ஷிக்கப்பட்டபடியால் நமக்கினி வியாக்கிரபாதனென்ற பெயரிருக்கட்டு' மென்றவன் (30) தனக்கப் பெயரை வைத்துக் கொண் டவ் வன்னியதேசத்தில் வசித்துவந்தான். அப்போது முதலா யத்தேசத்து ஜனங்க ளவனை யப்படியே கூப்பிடடுவந்தார்கள். (31) தானும் வியாக்கிரபாதனென்று சொல்லிக்கொண்டே திரிந்துவந்தான். ஓ! தாணிதேவர்களே! பிற்பாடவன் காலவசத்தினால் மரணமடைந்த (32) போது நமது தூதர்க ளவனைக் கட்டிக்கொண்டு போவதற்கு வந்தனர்களன்றோ! அப்போது மகா வலிமைகொண்டவர்களான சிவதூதர்களும் சீக்கிரமாய்வந்து நமது தூதர்களைத் (33) தங்களாயுதங்களா லடித்துப்போட்டுப் பிறகவனைத் தேவகணங்களாலு மிருடிகணங்களாலும் சுற்றிலும் சூழப்பெற்று விளங்காநின்ற வோர் சிறந்த விமா

னத்திலேற்றிவைத்துக்கொண்டு (34) தேவதுந்துபி முழக்கங்கள், மலர்மாரிகள் முதலிய பற்பல வுபசாரங்களோடுகூட அவனை ஸ்ரீ சம்புவின் திருச்சன்னிதியிற் கொண்டுசேர்த்தார்கள். (35) பிறகடியார்க்கு நேசரான ஸ்ரீ மகேசுவரன் கருணையுடன் திருக்கண்ணுற்றுத் திருவாக்கருளியதாவது:— 'ஓ! நமதடியாரான வியாக்கிரபாதமுனிவருடைய சிறந்த திருநாமத்தை நீ (36) யஞ்ஞானத்தாலாவ துந்தனுக் கிட்டுக்கொண்டபடியால் கேளாய்! மங்களகரம்பொருந்தியவனே! அப்புண்ணியத்தினுற் சகலர்களாலும் மெச்சப்பட்ட விக் கைலாஸத்தில் வெகுகாலம் வசித்துவிட்டு (37) முடிவினில் நீ நமது ஸாயுஜ்ய பதவியை யடையலாவா யென்பதிற் சந்தேகமேயில்லை.' யென்று திருவாக்கருளிவிட்டு ஸ்ரீ சகதீச னவனைத் தம தருகினிலே வைத்துக்கொண்டார். (38) அந்தச் சமயத்தில் நாம் ஸ்ரீ நந்திகேசுவரனுடைய திருவுத்திரவின்பேரில் ஸ்ரீ பகவானுடைய சன்னிதிக்குச்சென்று வந்தனித் தஞ்சலிகொண் டவர் முன்னிலையில் நின்றோம். (39) பிறகு கருணைபொருந்திய வப் பிரபுவினுல் வினவப்பட்டதன்மேல் நாம் சங்கதிகளைத் தெரிவிக்க, அப்போதவ ரெம்மை நோக்கித் திருவாய் மலர்ந்தருளியதாவது:—(40) "ஓ! அந்தகா! நம்முடைய திருநாமங்களை யெந்த மானிடர்கள் வகிக்கின்றார்களோ அவர்களைப்பற்றி நாமுனக் கதிகாரம் கொடுக்கவேயில்லை. (41) அப்படி யிருக்கையி லிப்போ துனது தூதர்க ளொனிவனைக் கட்ட முயன்றார்கள்? இனியிதனை யறிந்தபிற கிவ்வாறு செய்திடி லுடனே ஆக்கினை நேரிடு" (42) மென, இவ்வாறு ஸ்ரீசம்புவின் திருவசனத்தைக் கேட்டதன்மேல் நாம் பயத்தினுல் வியாகுலமுற்ற மனதைக்கொண்டவராகி யப்போ தப் பகவானை வந்தனித்துவிட்டு நாம் பயத்தோடு வவசனமுரைத்ததாவது:—(43) "ஓ! சுகத்தை யளிக்கானின்ற கருணைக்கடலான பிரபுவே! தூதர்களாலறியாத்தன்மையாய்ச் செய்யப்படலான விப் பிழையை மன்னித் தெந்தன்மீது முன்போல் பிரீதிவைத்தருளவேண்டு" (44) மென்று வேண்டிக்கொண் டப்போது பயத்தினுல் தண்டம்போ லவரை நமஸ்காரம்பண்ணினோம். பிறகு வந்தனிக்கலான வெந்தனைப்பார்த்துச் சங்கரன் திருமகனான வாறுமுகக்கடவு ளப்போது (45) ஸ்ரீ பரமேசுவரன் திருச்சன்னிதியி லிருந்துகொண்டு கம்பீரமாய்த் திருவாக்கருளியதாவது:— "ஓ! கேளாய்! இயமா! முந்தி, சிவபிரானுக்கு நேசமுள்ளவரான மகா யோகியாகிய ஸநாதநந்தமாமுனிவர் தம இச்சையின்படி யுலாத்திவருகையில் (46) நரகத்தி லுள்ளவர்களெல்லா மியமதூதர்களால் கொடுமையாய் வாதிக்கப்படலானதை யெதிரிற் கண்டதன்மே லவரிறக்கமுற்றவராகி யவர்களைக் கண்ணுற்று 'ஹாஹா'

வென்றறக்கக் கூவினர். (47) அப்போ தந் நரகவாசிகளுக்கு 'ஹர' வென் றத் தொனி கேட்டமாத்திரத்தி லங்கு பற்பல விரத்தினங்களால் விசித்திரமாய் விளங்கிய பல விமானங்க ளங்கு வந்துவிட்டன. (48) உடனே யவ் வெல்லோர்களு மவைகளின்மீ தேறிக்கொண்டு துக்கத் தைத் தொலைத்துச் சந்தோஷமடைந்தவர்களாகி ஸ்ரீ மகாதேவரால் விள ங்கியருளப்பட்ட கைலாஸத்தையடைந்தார்கள். (49) அப்போது நரக ம் பாழாகிவிட்டதன்மேல் நீ ஸ்ரீ பரமேசுவரன் சன்னிதிக்கு வந்தவரை வந்தனித்துவிட்டு மெத்தப் பயத்தினல் நடுக்கமுற்றவனுகி (50) 'ஹர' வென்றத் தொனியால் நேரிடலான அவ் விருத்தாந்தத்தைத் தெரிவித் துக்கொண்டாய். அப்போது கருணைக்கடலான தேவேச னுந்தனை நோக்கி (51) "ஓ! கேளாய்! இயமா! நாம், நமது தேவி, விக்கினேசு வான், அல்லது கந்தன் இவர்களுடைய சிறந்த திருநாமங்களையாவது நமது கணங்கள், அடியார்களுடைய நாமங்களையாவது ஞானத்தினு லோ, அல்லது தற்செயலாலோ பேராசையினுலோ எந்தமானிடர்கள் செவியால் கேட்கின்றூர்களோ அல்லது தங்கள் பெயராய்த் தரிக்கின்று ர்களோ, அல்லது நாவினு லுச்சரிக்கின்றூர்களோ அவர்களுக்குப் பாவ முமில்லை; மகா மகா நரகங்களிற்கூட யாதனையு மில்லையென்பது நிச்ச மே! (52-54) மேலு மப்பேர்க்கொத்தவர்களின் பிதுருக்களுக்கும் சுற்றத்தார்களுக்கும்கூட நரகத்தின் பயமில்லையென்பது நிச்சயமே!" யென்று சந்திரசேகரரான ஸ்ரீ சங்கரன் திருவாய்மலர்ந்தருளினரன்றே! (55) இப்படியிருக்கையில் அடா! நீ யேன் மூடன்போல் ஸ்ரீதேவாதி தேவனுடை திருச்சன்னிதிக்கு வரலானுய்? அடா! துராத்துமாவே! போ, போ." (56) வென, இவ்வா றக் கந்தனது திருவசனத்தைக் கே ட்டதன்மேல் யாம் பயத்தினுல் வியாகுலமுற்றவராகி யவ் வாறுமுகனை ப் பக்தியுடன் தண்டம்போல் வந்தனித் தவரைச் சந்தோஷிப்பித் (57) தப்போ தவர தாக்கினையின்பேரில் நாம் நமது லோகத்திற்குவந்தோம். ஓ! காலனே! நீ யிப்போ திப் புண்ணியகதையைக் கேட்டாயல்லவா! ஆகையால் நீ யினியாகிலும் ஸ்ரீ சம்புவின் திருநாமத்தினுடையதும், அ வர தடியார்களுடையதுமாகிய வுத்தமமான மகாத்துமியத்தை யெப் போதும் கொஞ்சமேனும் தவருதலின்றியே மனதில் நினைப்புவைத்து க்கொண்டுபின்னுமிங்கு நமது வேலையைப்பார்த்துவரலாவாய்.(58-59½) தவிரவும் கேளாய்! காலனே! எவர்கள் ஸ்ரீ சிவனடியார்களின் திருநாம ங்களைச் செவியால் கேட்கின்றூர்களோ, அல்லது நாவினுலுரைக்கின்றூர் ளோ அவர்களைக் கண்டமாத்திரத்தில் நீ நமதாக்கினையின்படி தூரத்தி

லோடிப்போய்விடு" என, இவ்வா றவ் வியமனுடைய வசனத்தைக் கே ட்டதன்மே லக் கால னப்போது முதலாய் (61) ஸ்ரீ சிவபிரானுடைய தும், அவ ரதடியார்களுடையதுமான திருநாமங்களின் மாகாத்துமியத் தைக் கொஞ்சமேனும் தவருதலின்றியே யெப்போதும் மனதினில் நி னைத்துக்கொண் (62) டப்பேர்க்கொத்த சிவனடியார்களைக் கண்டவு டன் வெகுதூரத்தி லோடிப்போகின்றான். ஆகையால் கேளீர்! பிராம் மணோத்தமர்களே! திருநாமங்களுடைய மகிமையை யுண்மையில் யார் தானறிவார்? என்றாலு மெந்தனுக் கேதோ கொஞ்சம் தெரியவந்ததை யுங்களுக் கெடுத்துரைத்திட்டேன். (63½) மேலு மனேகம்பேர்கள் ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய திருநாமங்களை ஜபித்துவந்து மெத்த வைசுவ ரியத்தை யடைந்திருக்கிறார்கள். (64) சிலர் பூர்ணமான ஆயுசுகளையும், சிலர் புத்திரபாக்கியங்களையும், நீண்டகாலமாய்ப் பிணிகொண்டிருந்த சில ராரோக்கியங்களையு மடைந்திருக்கிறார்கள். (65) சிலர் மூப்பேயற் றவர்களாகி யென்றும் யௌவனப்பருவமுள்ளவர்களாயே யிருந்திருக்கி றார்கள். மேலும் சில மானிடர்கள் ஸ்ரீ சிவநாமத்தின் மகிமையால் பூத ப்பிரேத பிசாசங்கள், விஷம், துஷ்டமிருகங்கள் இவைகளுக்குப் பயப் படுவதேயில்லை. (66½) ஓ! முனிவர்களே! சிலருயுத்தத்திற் சத்துரு க்களை வென்றிருக்கிறார்கள். சிலர் வாக்குஸித்தியடைந்திருக்கிறார்கள். (67) சில புண்ணியவான்கள் ஸ்ரீ மகேசுவரனது திருநாமங்களை யுச்சரி த்ததனால் வேண்டிய பயன்களை யெல்லாம் கைக்கொண்டிருக்கிறார்கள். ஆகையினால் ஓ! கேளீர்! பிராம்மணேசுவரர்களே! (68) எவர்கள் திரு நீ றுருத்திராக்ஷங்களையும் தரித்துக்கொண்டு ஸ்ரீ ஜகதீசன் திருநாமங்க ளையும் ஜபித்துவருகின்றார்களோ அப்பேர்க்கொத்த ஸாக்ஷா தீசுவரஸ் வரூபிகளான அவர்களுடைய மகிமையை யெடுத்துரைக்க வெந்தனால் முடியவேமுடியாது. (69) தவிரவு மெந்த மகானுபாவர்கள் ஸ்ரீஸர்வே சுவரனது திருநாமங்களுடைய விம் மாகாத்துமியத்தைப் படிக்கின்றார்க ளோ, கேட்கின்றார்களோ, அல்லது பிறர்களைக் கேட்பிக்கின்றார்களோ அவர்கள் ஆயுசு, ஆரோக்கியம், ஐசுவரியம், ஸந்தானம், கல்வி இவைகளை யடைந்தவர்களாகி யளவற்ற போகங்களையு மனுபவித்துப் பிறகு கே ளீர்! பிராம்மணோத்தமர்களே! முடிவினில் ஸ்ரீ சிவபிரானுடைய ஸாயு ஜிய பதவியை யடைவார்களே! (70-71)

இருபத்தாறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் உஎ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! சௌனகாதிமுனிவர்களே! அநுஷ்டித்தமாத்திரத்தில் பிராணிகளுக்குச் சகல வேண்டுதல்களும் கைகூடப்பெற்ற ஸ்ரீசிவபிரானுக்குரிய விரதங்களைச் சொல்லுகின்றேன்; நீங்களெல்லோர்களும் கேட்கவேண்டும். (1) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! உத்தமமான ஸோமாவாரவிரதம், மெத்த வுத்தமமான திருவாதிரைவிரதம், உமாமகேசுவரவிரதம், சிவராத்திரிவிரதம், (2) கேதாரவிரதம், கலியாணவிரதம், மகா புண்ணியமான சூலவிரதம், விருஷபவிரதம் (3) ஆகிய இவ்வெட்டுவிரதங்களும் ஸ்ரீமகாதேவனுக்கு மிகவும் பிரியமுள்ளவையென்றுப் பிரசித்தியுள்ளவை. கேளீர்! தாணிதேவர்களே! ஸ்ரீஉமாதேவிக்குரிய விரதங்களோவென்றால்:— சகல லோகங்களிலும் பெயர்போனதானசுக்கிரவாரவிரதம், (4) அவ் வம்மைக்கு வெகுப் பிரியமுள்ளதான வைப்பிசிமாதம் பூரநக்ஷத்திரத்தி லனுஷ்டிக்கத்தக்க மற்றோர்விரதம், ஐப்பிசிமாதம் சுக்கிலபக்ஷத்தின் நவமிதிதியி லனுஷ்டிக்கத்தக்க மற்றோர் புண்ணியமான விரதம் ஆகிய விம்மூன்றும் ஸ்ரீபார்வதிதேவிக்குரிய புண்ணியவிரதங்களாகும். ($5\frac{1}{2}$) ஸ்ரீவிக்கினேசுவாருக்குரிய விரதங்களோவென்றால்:— சுக்கிரவாரத்தி லாசரிக்கத்தக்க மகா பரிசுத்தமானவிரதம், (6) புறட்டாசிமாதம் சுக்கிலபக்ஷத்திலான புண்ணியமாகிய சதுர்த்திவிரதம், அதேவிதமாய் மார்கழிமாதம் சுக்கிலபக்ஷத்திலான மகாபரிசுத்தம்பொருந்திய ஷஷ்டிவிரதம் (7) ஆகிய விம்மூன்றும் சகலபாவங்களையும் தீர்க்கவுற்ற, ஸ்ரீகணேசருக்குரிய விரதங்களே. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீஷண்முகருக்குரிய விரதங்களோவென்றால்:— சுக்கிரவாரத்தி லனுஷ்டிக்கத்தக்க புண்ணியவிரதம், (8) கார்த்திகைநக்ஷத்திரங்களிற் கொண்டாடத்தக்க மகாபரிசுத்தமான விரதம், ஸகல லோகங்களிலும் பிரசித்திகொண்ட கந்தஷஷ்டிவிரதம், (9) ஓ! பூமிதேவர்களே! இம்மூன்றுவிரதங்களும் சகல வேண்டுதல்களையும் கொடுக்கவுற்றவைகளே. ஸ்ரீபைரவருக் குரியவைகளோவென்றால்:— மகா மகிமைபொருந்திய ஞாயிற்றுக்கிழமைவிரதம், (10) சூரியன் துலாராசியிலும், மேடராசியிலு மிருக்கும்போதான (ஐப்பிசி, சித்திரைமாதங்களின்) பரணிநக்ஷத்திரத்தி லாசரிக்கத்தக்க ஸகல பாவங்களையும் நாசம்செய்யவுற்ற விரதங்க ளிரண்டு, (11) கேளீர்! தாணிதேவர்களே! இம்மூன்றுவிரதங்களும் மகாத்துமாவான ஸ்ரீபைரவருக் குரியவைகள். மேலும் செவ்வாய்க்கிழமையி லாசரிக்கத்தக்க வற்புதமான

விரதமானது ஸ்ரீ வீரபத்திரருக் குரியதாகும். (12) முறைப்படியேயா யினு மில்லாவிடினு மிவ்வெல்லாவிரதங்களேயு மாசரிக்கும் மானிடர்க ளெல்லாம் மகா பராக்கிரமசாலிகளாகி யிங்கு வெகுகாலமளவும் வேண் டிய போகங்களே யனுபவித்துப்போட்டுப் (13) பிறகு சிவலோகம டைந் தங்கும் வெகுகாலமிருந்துவிட்டு முடிவினில் மோக்ஷமடைகின் றூர்களென்று பரமசத்தியமாய்ச் சொல்லுகின்றேன். (14) கேளீர்! த ரணிதேவர்களே! இவைகளின் முறையையும் மகிமையையும் யான் கூ றுகின்றேன்:— முந்திச் சோமவார விரதத்தின் * சிரேஷ்டமான வனு ஷ்டானவிதியைக் (15) கிரமமாய்ச் சொல்லுகின்றேன். நீங்க ளதனே ச் சாக்கிரதையாய்க் கேட்கவேண்டும். கேளீர்! பூமிதேவர்களே! முத லில் கார்த்திகைமாதத்தின் சோமவாரதினத்தி (16) லருணேதயவே ளேயி லெழுந்து ஸ்ரீ மகாதேவனேத் தியானம்பண்ணிவிட்டுப் பரிசுத்தமா ன ஜலத்தில் ஸ்நாநம்செய்து சந்தி யனுஷ்டானங்களே முறைப்படி முடி த்துவிட்டுச் (17) சகல கலியாணங்களுக்கும் காரணராயிராநின்ற ஸ்ரீ மகாதேவரைப் பூஜைசெய் ததின்மேல் சிவனடியார்களேயும், கற்புடைய ஸ்திரீகளேயும் பார்வதீபரமேசுவரர்களாகப் பாவித்துப் பூஜைபண்ணி ய வர்களுக்குப் போஜனமுமளித்துப்போட்டுப் பிறகு தானுேதடவை புசிக்கவேண்டும். (18½) ஆனல் சிவபூஜையில்லாதவனுயி னவன் பரி சுத்தமான ஜலத்தில் ஸ்நாநம்செய்து (19) நித்திய கருமங்களே முடித் துக்கொண்டு பிறகு மங்களகரமாகிய சிவாலயத்துக்குச்சென் றங்கு ஸ்ரீ தேவேசனுக்கு மகா பரிசுத்தமான பஞ்சாமிருதம் முதலியவைகளா லபிஷேகமும், பழுதற்ற வில்வதளங்களா லர்ச்சனேயும், பணச்செட்டி ல்லாமல் நேர்த்தியான பக்ஷியபோஜியங்களால் நைவேத்தியமும் செய் வித்துப்போட்டுப் (20-21) பிறகு பொறியடக்கமுற்றவர்களான சிற ந்தப் பிராம்மணர்களுச்குப் போஜனமளித்துவிட்டுத் தா னவ் விரதத்தி ற்குக் குறைவுநேரிடாதமட்டில் போஜனம் செய்யவாவது அல்லது உப வாசமிருக்கவாவதுவேண்டும்.(22) இவ்விதமாகச் சிரேஷ்டமான ஸ்ரீசோ மவாரவிரதத்தை யாகமமுறையின்படி யெந்த புத்திசாலி யனுஷ்டிக்கி

---

* சோமவாரம்முதலிய வெல்லாவிரதங்களேயும் பற்றியதான முறைகள், இதிகாஸங்கள் முதலியவையெல்லாம் மற்றப் புராணங்களி லொவ்வொன்றி லொவ்வொன்ருய் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன. பெரும்பாலும் சிவவிரதங்க ளெல்லாம் ஸ்ரீஸ்காந்தத்தின் பிரம்மோத்தரகண்டமென்ற பாகத்தில் விசேஷமா ய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையா லிதில் பிரஸ்தாபிக்கப்படுகிற ஒவ் வொருவிரதத்தி னனுஷ்டானவிதியையும், சரித்திரங்களின் விரிவையும்பற்றி யி ங்கு விஸ்தரிப்ப தஸாத்தியமானதுபற்றி விலக்கப்பட்டது.

ன்றுனே அவன் சகல பாவங்களினின்றும் மீண் (23) டிங்கு வெகுகாலமளவு மனேகபோகங்களை யனுபவித்துப்போட்டு முடிவினில் கைலாஸமடைகின்றுன். (23½)

பூர்வத்தில் மிகவும் கற்புடையவளான ஸீமந்தினியென்ற வோர் இராஜகுமாரியானவள் ஸ்ரீ ஸோமவார விரதத்தை யனுஷ்டானம்செய்கையி லிரண்டுப் பிரம்மசாரிகள் கபடமாய்ப் புருடன்பெண்டீர்களி னுருவத்தை யெடுத்துக்கொண் டங்கு வந்தார்கள். (25) அப்போ தவ ளவர்களைத் தம் பதியென்றே நிச்சயம்கொண்டவளாகிப் பூஜைசெய்ய, அவ்வாறு பாவிககப்படலான அவ்விருவர்களும் புருடனும் பெண்டீருமாயே ஆகிவிட்டார்கள். (26) அச் சீமந்தினியானவள் ஸ்ரீ சோமவாரவிரதத்தின்மகிமையா லிப்பேர்க்கொத்த வாச்சரியத்தைச் செய்திருக்கிறுள். மேலும் கேளீர்! முனிவர்களே! இருடிகளிற் சிறந்தவரான ஸ்ரீ வஸிஷ்டமாமுனிவரு மிவ்விரதத்தை யிம்மாதிரியாயெல்லா மாசரித்துவந்தே அருந்ததியம்மாளை மனைவியாகவடைந்தார். (27½) பூர்வத்தில் 'விபு' வென்ற வோ ரரச னிவ் விரதத்தை யனுஷ்டித்துவந்தே (28) அவனுக்குப் பிள்ளையே யில்லாதிருந்து மிவ்விரதத்தின் மகிமையால் சிறந்த மைந்தனை யடைந்தான். ஸோமசருமனென்ற வோர் பிராம்மணனுமுத்தமமான விச் சோமவாரத்தை யனுஷ்டித்துத்தா (29) னீசனருளினுல் மிகுந்த வைசுவரியத்தைப் பெற்றுன். அனேக சத்துருக்களால் வாதையளிக்கப்பெற்ற வஜ்ஜிரபாகுவென்ற வோர் பெரிய அரசனு (30) மிவ் விரதத்தை யனுஷ்டித்துவந்துதான் சத்துருவாதை நீங்கப்பெற்றுன். முந்திக் கிசகனென்ற வோர் வேதிய னியமனைக்கூட ஜயம்கொண்டான். (31) பெருமைபொருந்திய ஸிமமனென்ற வோ ரரசனஷ்டைசுவரியங்களையும் பெற்றிருக்கிறுன். மகா புத்திசாலியான வேதாங்கனென்றவ னிச் சிறந்த விரதத்தை யாசரித்துவந்தே (32) தன் மனைவியோடுகூட விச் சரீரத்துடனே சிவலோகமடைந்தான். ஓ! தாணிதேவர்களே! தருமவீரியனென்பவ னிதை யனுஷ்டிப்பதினுல் மோக்ஷமடைந்திருக்கிறுன். (33) கர்க்கசீல னென்பவனு மிதை யனுஷ்டித்தே மோக்ஷமடைந்திருக்கிறுன். மேலு மவன் புத்திர மித்திர களத்திரங்களோ டிவ் விரதத்தை யனுஷ்டித்ததினு லிங்கு நிகாற்ற போகங்களை யனுபவித்துப் பிறகவர்களோடுகூடக் கைலாசமடைந் தங்கும் வெகுகாலமிருந்துவிட்டு முடிவில் மோக்ஷம்பெற்றுன். (34-35) மேலும் மகாபாவியும், திருடனும், தாசிவிடனும், ஸத்தியஸந்தனுக்குப் புத்திரனுமான விராடனென்ற வோர் துராத்தும னிவ் விரதத்தின் மகிமையை

யறியாம லோர் தாசியோடு புணருவதற்காக அவள் வீட்டுக்குப் போனான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (36-37) அப்போது சில தலையாரிகள் சன்னத்தர்களாகி யங்கு வந்தார்கள். பிறகவ் விராடனவ்வா றவர்கள் வருவதை யறிந்து பயம்கொண்டவனாகித் துரிதமாய்க் காட்டிற் கோடிவிட்டான். (38) அன்றைதினத்தில் மழைபெய்ததோடன்றைக்குச் சோமவாரமாயு மிருந்தது. காட்டிற்குப்போன அவ்விராடனுக் கன்றைதினத்தி லங் கன்னம் கிடைக்காதபடியால் (39) கேளீர்! வேதியர்களே! அவன் கிழங்கு காய் கனிகளைத் தின்றுகொண்டக் காட்டினில் திரிந்துவிட்டு மறுநா ளவ னோர் பெரிய சர்ப்பத்தினால் தீண்டப்பட்டுமாண்டான். (40) பிறகவனைக்கட்டிக்கொண்டுபோவதற்காக வியமதூதர்கள் சீக்கிரமாய் வந்துவிட்டார்கள். அப்போது மகாபலசாலிகளான சிவதூதர்க ளங்குவந் தியமதூதர்களை யடித்துத் துறத்திவிட் டவனை யோர் திவ்யவிமானத்தி லேற்றிக்கொண்டு சிவலோகத்திற்குப் புறப்பட்டுவிட்டார்கள். கேளீர்! பிராம்மணேசுவரர்களே! (42) சிவதூதர்களால் வாதை யளிக்கப்பட்ட அவ்வியமதூதர்களு மப்போதே யியமனிடம்போ யவனுக்கிச் சங்கதிகளையெல்லாம் சீக்கிரமாய்த்தெரியப்படுத்தினார்கள். (43) அப்போ தியமனும் தூதர்களின் முகமாயதனைக் கேட்டவுடன் சீக்கிரமாய்ச் சென் றச்சிவகணங்களை வழிதனிற்கண்டு மிகுந்த வணக்கத்துட னவர்களை வந்தனித்துவிட்டு (44) "ஓ! சிவகணங்களே! எப்போது மகிருத்தியங்களைச் செய்தவனான விம்மனிதனு லென்னபுண்ணியம் செய்யப்பட்டிருக்கின்றது? அவனை யேன் திவியவிமானத்தி லேற்றிவைத்துக்கொண்டு போகின்றீர்கள்? (45) யோஜிக்குமளவி லிவனுக் கியாதொரு புண்ணியமு மிருப்பதா யெந்தனுக்குத் தெரியவில்லை. சிவலோகமானது நல்ல மகாத்துமர்களுக் கல்லவோ அனேகம் புண்ணியங்களால் கிடைக்கத்தக்கது" என, (46) இவ்வாறவ் வியமனது வசனத்தைக் கேட்டதன்மேல் சிவகணங்கள் "கேளாய்! இயமா! இவன் சோமவாரதினத்தில் மழைபெய்ததினால் ஸ்நானம் செய்யப்பெற்றவனாகியாகாரமன்றியில் (47) கிழங்குகாய்கனிகளைத்தின்றுகொண் டவன் நடுக்காட்டினிற்சஞ்சரித்துக்கொண்டிருந்தான். ஏதோ மிகுந்த புண்ணியவசத்தினா லொன்று மறியப்படாதிருந்தும் தற்செயலா யிவனுக்கு விரதங்களிற் சிரேஷ்டமான ஸோமவாரவிரதம் கிடைத்துவிட்டது. (48½) பிறகு மறுநா ளக் காட்டினி லிவன் பாம்புகடித்து மடிந்தான். (49) அப்பேர்க்கொத்த புண்ணியத்தின் மகிமையால்தானிவன் சிவலோகத்திற்குப் போகின்றான். மேலு மிவ னங்கு வெகு

காலமிருந்துவிட்டு நிச்சயமாய் மோக்ஷத்தையு மடையப்போகின்றான். (50) நாங்கள் தேவாதிதேவரான ஸ்ரீ மகாதேவன் திருவாக்கினையின் பேரிலே யிதற்கு வந்தோம். ஆகையால் நீ வீண்வருத்தப்படாமற் போய்ச் சேரலாவா" யென, (51) இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன்மே லவ் வியமன் பயத்தினால் நடுக்கமுற்றவனாகிச் சிவ தூத ர்களையு மப் புண்ணியவானையும் வந்தனித்துவிட்டுத் தன்னிருப்பிடம் சேர்ந்துவிட்டான். பிறகு கேளீர்! தாணிதேவர்களே! (52) ஸ்ரீசிவ பிரானுக்கு நேசமுள்ளவனான அவ்விராடனே சிவலோகத்தையடைந்து மிகவும் ஜுவலிக்கலுற்றவனாகி ஸ்ரீ தேவாதிதேவன் திருச்சன்னிதியி லனேகமாண்டளவு மிருந்துவிட்டு(53) முடிவினில் மோக்ஷமடைந்தான். மேலும் கேளீர்! பிராம்மணேசுவரர்களே! ஸோம (சந்திர)னு மிவ்விரத த்தை யாசரித்துவந்து தான் ஸ்ரீசங்கரனிடமிருந்து சந்திரத்தன்மையை யடைந்தான். (54) தவிரவு மவன், ஸ்ரீ மகாதேவ ரவன்முன்னர் பிரஸ ன்னரானவுட னவனை மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்துவிட்டு "ஓ! எந்தன் பிரபுவே! இதற்குச் சோமவார விரதமென்றே பெயருண் டாகவேண்டும். (55) மேலும் ஓ! பகவானே! இச் சோமவார மகா விரதத்தை யாவரனுஷ்டிக்கின்றார்களோ அப்பேர்க்கொத்த புண்ணிய வான்களுக்குத் தேவரீர் திருவருளால்(56) வேண்டிய பொருட்களெல் லாம் கைகூடிவந்து முடிவினி லவர்கள் மோக்ஷத்தையு மடையவேண்டு" மென்று கேளீர்! வேதியர்களே! சந்திர னப்போ திப்பேர்க்கொத்த வ ரனையும் கேட்டுக்கொண்டான். (57) பிறகு ஸ்ரீ மகேசுவரனு மவனுக் கிவ்வரனை யருளிவிட் டுடனே யந்தர்த்தானமடைந்தனர். ஆகையால் ஸோமவார தினத்தில் ஸ்ரீ மகேசுவரனுக்குப் பிரியமுள்ள விம்மகா புண் ணிய விரதத்தை (58) யெவர்க ளாசரிக்கின்றார்களோ அவர்களுக்குப் பார்வதிதேவியின் தோழரான ஸ்ரீ பரமசிவன் தேவியோடுகூடப் பிரஸ ன்னராகிச் சகல வபீஷ்டங்களையு மருளுகின்றாரென்பதை யுங்களுக்குச் சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். (59) கேளீர்! பிராம்மணோத்தமர்க ளே! ஸ்ரீ சிவபிரானுக்கு முற்றும் பிரியமான விச் சோமவார விரத மா ன்மியத்தை யாவர் படிக்கின்றார்களோ, கேட்கின்றார்களோ, அல்லது கேட்பிக்கின்றார்களோ அவர்க ளிங்கு மனேக போகங்களையெல்லா மனு பவித்துப்போட்டு முடிவினிலும் மோக்ஷத்தை யடைவார்களே! (60)

இருபத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் உஅ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! முனிவர்களே! சகல சுபங்களுக்கும் காரணமாகிய திருவாதிரை விரதத்தை யான் சொல்லுகின்றேன். சூரியன் தனுரிராசியிலிருக்கும் (மார்கழிமாதம்) பொழுதான, உருத்திரதெய்வத்துக்குரியதாகிய (திருவாதிரை) தென் றுலகினில் பிரஸித்தியாயிருக்கிற (1) திருநாளில் காலையிலெழுந்து சுத்தமா யிருந்துகொண்டு சகல வாபத்துகளையும் நாசம்செய்யவுற்ற ஸ்ரீ நடராஜமூர்த்தியை யிருதயத்தி லேகாக்கிரசித்தனாய்த் தியானம் செய்துவிட்டு (2) வீட்டினின்று வெளிச்சென்று பரிசுத்தம்பொருந்திய வுத்தமமான ஜலத்தில் ஸ்நாநம்பண்ணி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீ பரமேசுவரனுடைய சிறந்த வாலயத்திற்குச் சீக்கிரமாய்ப் போ (3) யங்கு ஸ்ரீ பகவானுக்கு முறையின்படியபிஷேகத்தையும், பற்பலவித நைவேத்தியங்களையும் மகா வைபவத்தோடு செய்வித்தும், (4) சன்னிதியில் நெய்களால் பெரும் ஜுவாலையுடைய தீபங்களைப் போட்டும் மிகுந்த மனக்களிப்புடன் ஸ்ரீ தேவாதிதேவருடைய மகா லிங்கத்தை நமஸ்காரம் பண்ணிவிட்டுப் (5) பிறகு ஸ்ரீ நடராஜமூர்த்திக்கும் மிகுந்த வைபவங்களுட னபிஷேக நைவேத்தியங்களைச் செய்வித்து நெய்யினால் தீபங்களேற்றி (6) ஸ்ரீ மகாதேவனைத் தரிசனம் பண்ணிவிட்டு மகா பரிசுத்தனாய்த் தன் வீடுசேர்ந் தப்புலவனத்தினத்தி லுபவாசமா யிருந்துவிட்டு மறுநா ளருணோதயகாலத்தி (7) லெழுந்து சுத்தம் செய்துகொண்டு ஸ்ரீ முக்கண்பிரானைத் தியானம்பண்ணிவிட்டு நித்திய கருமங்களை முடித்துக்கொண்டதின்மேல் பொறியடக்கமுற்ற சிவனடியார்களுக்குப் (8) போஜன மளித்துவிட்டுப் பிற்பாடு ஸ்ரீ சிவாக்கினையின்படித் தாம் புசிக்கவேண்டும். (8½) எந்த மகானுபாவர்கள் திருவாதிரை நக்ஷத்திரத்தி லிவ்வாறாய் ஸ்ரீ மகேசுவரனை யாராதித்து ஸ்ரீ சிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ள விம் மகா விரதத்தை யாசரிக்கின்றார்களோ (9½) அவர்களுக்குப் போக மோக்ஷங்கள் கைக்குள்ளிருக்கின்றன வென்பதிற் சந்தேகமேயில்லை. (10) கேளீர்! வேதியர்களே! முஞ்சகேசனென்ற வோர் மாமுனிவ ரிவ்விரதத்தை யனுஷ்டித்து மகாத்துமாவான ஸ்ரீ நடராஜன் திருக்கூத்தைக் காக்ஷிகொண்டு (11) பாவங்களை யுதறப்பெற்றவராகிச் சிவதசையிலே மோக்ஷமடைந்திருந்தார். மகா யோகியான ஸ்ரீ பதஞ்சலிபகவானும், கார்க்கோடகனென்ற மகா ஸர்ப்பமும் (12) மகா சந்தோஷத்துடன் திருவாதிரை விரதத்தை விதிப்படி யனுஷ்டித்துத் தேவாதிதேவரான ஸ்ரீ நடராஜனுடைய திருக்கூத்தைக் காக்ஷி கொண்டதினா லவ் விருவர்களு

ம் (13) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறப்பிறப்பற்ற நித்திய த்தன்மையை யடைந்தார்கள். மேலும் பெருமைபொருந்திய யோகி யான ஸ்ரீ வியாக்கிரபாதமுனிவரு மிவ் விரதத்தின் மகிமையினால் (14) கேளீர்! வேதியர்களே! சிறந்த மாமுனிவரான வுபமன்னியுபகவானை ப் புத்திரனுபடைந்தும், ஸ்ரீ தேவாதிதேவருடைய திருக்கூத்தைக் காக்ஷிகொண்டதினால் ஜீவன்முக்தராகிவிட்டார். தவிரவும் விபுலரென் ற வோர் சிறந்தப் பிராம்மண னிவ் விரதத்தை யனுஷ்டித்ததினால் (15) சிவபிரானுக்கு மகா நேசமுள்ளவராகி யிச் சரீரத்துடனே சிறந்த விமா னத்தி லேறிக்கொண்டு கைலாஸத்துக்குச் சென் றங்கு ஸ்ரீ மகாதேவ ரைத் தரிசித்து (16) மிகுந்த பக்தியுடன் வந்தனித்துவிட்டுப் பிறகு திரும்பித் தம் வீட்டிற்கு வந் தங்கு மனைவியோடுகூட விருந்துகொண் டனேக போகங்களை யனுபவித்துவிட்டுப் (17) பிறகு விமானத்தின் மீ தேறிக்கொண்டு தேவருடி கணங்களோடுகூடச் சிவலோகமடைந்தங் கு ஸகல வைசுவரியங்களோடும் கூடியவராகி யிருந் (18) தளவற்ற போகங்களை யனுபவித்துப்போட்டு முடிவினில் ஸாயுஜ்யபதவியை ய டைந்தார். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இன்னும் மற்றனேகம் பெயர்க ளிம்மாதிரியாகவே யிப் புண்ணிய விரதத்தை யனுஷ்டித்து(19) வேண்டியபடி யளவற்ற போகங்களை யனுபவித்துவிட்டு முடிவினில் மோக்ஷமடைந்திருக்கிறார்கள். கேளீர்! முனிவர்களே! இத் திருவாதி ரை தினத்தில் ஸ்ரீ பரமேசுவரன் பரமாநந்தத்தோடு கூடியவராகிச் (20) சகலர்களுக்கு மிரக்ஷை யருளுவதற்காக வாநந்தத் திருநடனமாடுகின் றார். ஆகையினால்தா னிப் புண்ணியவிரதம் மற்றெல்லா விரதங்களினு ம் மேன்மைகொண்டதாகும். (21)

இருபத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் உகூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! உமாமகேசுவர விரதத்தை யெடுத்துரைக்கின்றேன். இவ்விரதமானது சூரியன் விருச்சிகராசியிலி ருக்கும்போ (கார்த்திகைமாதம்) துள்ள பூர்ணிமையி லனுஷ்டிக்கத்தக் கது. (1) இந்தத்தினத்தில் காலையிலெழுந்து சுத்திசெய்துகொண்டு

பரிசுத்தமான நீரில் ஸ்நாநம்செய்து நித்தியகருமங்களையெல்லாம் முடித்துக்கொண்டு (2) பணப்பேராசையில்லாமல் வெள்ளியாலாவதுபொன்னாலாவது ஸ்ரீ தேவாதிதேவருடைய பதுமையைச்செய்து பிற கனேகம் பூஜாத்திரவியங்களோடுகூட மிகுந்த பக்தியுடன் ஸ்ரீ பார்வதியோடு கூடிய மகேசுவரனைப் பூஜைசெய்து ($3\frac{1}{2}$) தனது திரவியத்திறமைக்குத் தக்கபடி பற்பல நைவேத்தியங்களை யளித்து (4) வந்தனித்துப் பிரார்த்தனை செய்துகொண்டதன்பேரி லவ் விரதக்காரன் தேவாலயத்திற்குச் சென் றங்கு மகா புத்திசாலித்தன்மையாய் ஸ்ரீ பகவானுக்கும் பஞ்சாமிருதம்முதலிய த்திரவியங்களா லபிஷேகமும், நைவேத்தியமும்செய்வித்துத தாம்பூலமளித்துப் பற்பல வுபசாரங்களையும் செய்வித்தபிறகு (6) வந்தனித்துப் பிரார்த்தனை செய்துகொண்டதன்மேல் நல்ல புத்தியுடையவனுகித் தன் விடுதிசேர்ந்து தன் திறமைக்குத் தக்கபடி சிவபக்தர்களானப் பிராம்மணர்களுக்குத் தானங்கள் கொடுத்துவிட்டுப் (7) பிற கடியார்களுடன்கூட வொரேதடவை போஜனம்செய்யவாவது கேளீர்! முனிவர்களே! உருசியுள்ள கனிவர்க்கங்கள், அல்லது அரிசிமா, அல்லது அப்பம் இவைகளைச் சிவனடியார்களோடுகூட மகா புத்திசாலித்தன்மையாய் விரதத்திற்குக் கெடுதி சம்பவியாமலிருக்குமளவு புசித்தல் வேண்டும். ($8\frac{1}{2}$) அதற்குமே லிவ் விரதத்தின் மாகாத்துமியத்தைநியமமாய்க்கேட்டுவிட்டப் பதுமையைச்சிவயோகியாகிய வோரடியாருக்குத் தானம்செய்துவிடவேண்டும். ($9\frac{1}{2}$) இம்மகாவிரதத்தையிவ்விதமாக வாகமமுறைப்படி யெவர்க ளாசரிக்கின்றார்களோ (10) அவர்களுக் கிகத்தில் மகா துர்லபமான சம்பத்துகள் கூடிவருவதோடு பரத்திலும் மோக்ஷம் பெறுவார்கள். கண்களில்லாதத் திரிணபிந்துவென்ற வோர் மாமுனிவ ரிவ் விரதத்தை யனுஷ்டித்ததனு லலர்ந்தசெந்தாமரை மலரையொத்த சிறந்த கண்களை யடைந்தார். ($11\frac{1}{2}$) மேலு மோர் ஸ்திரீயானவ ளிவ் விரதத்தின் மகிமையினு லிறந்துபோன கணவன் பிழைக்கலாகிப் பிற கோர் பிள்ளையைப் பெற்று முடிவினில் சிவலோகமடைந்தாள். ($12\frac{1}{2}$) ஸ்ரீ விஷ்ணுவும் கிருஷ்ணுவதாரத்தில் ஸ்ரீ சிவபிரானுக்கு முற்றும் பிரியமுவ்ளதான இவ் விரதத்தைத் தம் மனைவியோடுகூட மெத்தச் சந்தோஷத்துட னுசரித்துவந்ததினு லனேகம் பிள்ளைகளை யடைந்தார். ($13\frac{1}{2}$) பூர்வத்தில் பிரம்மனும் மிகுந்த சந்தோஷத்துட னிவ் விரதத்தை யாசரித்துவந்த மகிமையினுல் காயத்திரியையும், ஸாவித்திரியையும் கைக்கொண்டார். ($14\frac{1}{2}$) இந்திரனு மிவ் விரதத்தின் மகிமையால்தான் ஜயந்தனைப் பிள்ளையா யடைந்தான். (15) இதனுல்தான் ஸ்ரீ வசிஷ்டமாமுனிவ ரக்கினிஹோத்திரம் செய்வதற்காக

க் காமதேனுவைக் கைக்கொண்டார். கௌதம மாமுனிவரு மிவ் வற்புத விரதத்தை யனுஷ்டித்ததனு லிருடிகளிற் சிறந்த சதாநந்தமுனிவரைப் புத்திரனுக வடைந்தார். (16½) மேலும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஜநகராஜனு மிவ் விரதத்தை யனுஷ்டித்து ஸாக்ஷா திலக்ஷ்மியாகிய ஸீதையென்ற ஜானகியைப் பெண்ணு யடைந்தார். (17½) சித்திராங்கனென்ற ராஜனு மிவ் விரதத்தை யனுஷ்டித்துவந்து (18) சொர்க்கலோகத்திற்குப்போ யங்கு தேவேந்திரனுல் பூஜிக்கப்பட்டவனுகிச் சகல அவயவங்களும் சுந்தரமா யமையப்பெற்ற ஊர்வசியோடு கிரீடைசெய்துவிட்டுக் (19) கற்பகவிருக்ஷத்தைப் பெற்றுக்கொண்டிருப்பவும் பூலோகத்திற்கு வந் தங்கு புலவர்களான பல பிள்ளைகளைப் பெற்று வெகுகாலமிருந்துவிட்டுப் (20) பிற கோர் நல்ல முகூர்த்தத்தி லனேகம் வேதியர்களோடுகூடத் தன் பிள்ளைக்குப் பட்டம்கட்டி யதன்மே லனேக மிரத்தினங்களி னுெளிகளால் நிறையப்பெற்றவோர் தங்கவிமானத்தி லேறிக்கொண்டு கேளீர்! முனிவர்களே! (21) ஸ்ரீ கைலைகிரிக்குச் சென் றங்கு வெகுகால மிருந்துவிட்டுப் பிறகு பாப்பிரம்மத்தின் மோக்ஷபதவியை யடைந்தான். (22)

பூர்வத்தில் சுதர்மனென்ற வோர் பிராம்மணன் சாத்திரப்பொருள்களி னிலேசம்கூடத் தெரியாதவனுயிருந்தான். இம் மந்தப்புத்திக்காரனுக் கென்ன படித்தபோதிலும் சாத்திரம் வருவதேயில்லை. (23) வெகுபெயர்க ளவனை வெறுப்பினுல்மந்தப்புத்திக்காரனென்றுநகைத்தார்கள். அப்போ தப் பார்ப்பான் மிகுந்த பக்தியுள்ள மனஸோடுச் சிரேஷ்டமான இவ் வுமாமகேசுவா விரதத்தை முறைப்படி யாசரித்துவருகையி (24½) லப்போது ஸகல வித்தைகளி னுருவத்தைக் கொண்டவளான பரிசுத்தம்பொருந்திய ஸரஸ்வதியானவள் (25) ஸ்ரீ பார்வதிதேவியின் கிருபாவசத்தினு லென்று மவனது நடுநாவினி லிருந்துகொண்டருள்செய்துவந்தாள். கேளீர்! முனிவர்களே! அப்போதே அவனுக்குச் சகல சாத்திரார்த்தங்களும் தெளிய விளங்கலாயின. (26) சாத்திரங்க ளவனுக்கு விளங்குவதுபோல் மற்றொருவருக்கும் விளங்குவதில்லை. அப்போ தாச னவனை யழைப்பித் தவனுக்கு வெகு தனங்களைத் தானம்கொடுத்தான். (27) அப்போ தவனது கல்வியின் மகிமையா லெல்லா ஜனங்களு மவனை வந்தனிக்கலானுர்கள். பிறகவன் வெகுப் பிராம்மணர்களுக்குக் கல்விகளைக் கற்பித்தான். (28) மேலு மவன் சகல சாத்திரார்த்தங்களிலும் திறமைகொண்டவர்களும், நல்ல விக

யமுள்ளவர்களுமான பல பிள்ளைகளை யடைந்து முடிவினில் மெத்த நேர்த்தியான வோர் விமானத்தி லேறிக்கொண்டு சிவலோகத்திற்குப்போ (29) யங்கு ஸ்ரீ சிவாக்கினையின்பேரி லோர் கணத்தலைவத்தன்மையை யடைந்தான்.

மேலும் ஸிந்துசேனனென்ற வோ ரரசன் போர்தனில் சத்துருவால் துறத்திவிடப்பட்டவனாகித் (30) தனது நகரத்தைவிட்டு மனைவியோடுகூடக் காட்டிற் கோடிப்போ யங்கு கிழங்கு காய் கனிகளைத் தின்றுகொண்டு வெகுகாலமளவும் வசித்துவந்தபோ (31) தங்கு முனிவர்களிற் சிறந்த வகஸ்தியமாமுனிவர் வருவதைக் கண் டவரை வந்தனித்துவிட்டு மெத்த வணக்கமுற்றவனாகித் தன் விருத்தாந்தத்தை யவருக்குச் சொன்னான். (32) அப்போ தம் மாமுனிவ ரிவனுக் கிம் மகாவிரதத்தைச் சொல்ல, பிறகவன் தன் மனைவியோடுகூட விச் சிறந்த விரதத்தை யாசரித்தான். (33) கேளீர்! முனிவர்களே! அவ்வா றனுஷ்டித்த விரதம் முடிந்தபோது குஹியர்களுக் கரசனான குபேரன் ஸ்ரீ சிவாக்கினையின்பேரி லங்கு வந்து "ஓ! இராஜனே! யா னிப்போதும்முடைய சத்துருக்களையெல்லா மதம்பண்ணிப்போட் டும்மையு முமதிராஜியத்தில் நிலைநிறுத்திப் பட்டம்கட்டிப்போட்டுத் திரும்பி யென்னிடம்போவதாய் ஸ்ரீ சிவபிரானது திருவாக்கினையின்பேரி லிங்கு வந்தே" னென் றுரைத்துவிட் டவனைக் கூப்பிட் டவன் பட்டஸ்திரீயோடுகூட வியானையின் கழுத்தின்பேரி லுட்கார்த்திக்கொண்டு சதுரங்கசைனியங்களோடும் சென்று சத்துருக்களை யவனுக்குப் பிரியமுள்ள நகரத்தைவிட்டுத் துரிதமாய்த் துறத்திவிட் (37) டவனுக்குப் பட்டம்கட்டி யனேகம் தனங்களையும் கொடுத் தொருவரோடொருவர் ஸம்பாஷித்துக்கொண்டதன்பேரி (38) லவ் வரசனால் வெகுமானிக்கப்பட்டவனாகி மெத்தச் சந்தோஷத்துடன் தன் பதவிசேர்ந்தான். பிறகு கேளீர்! முனிவர்களே! அவ் வரசன் வெகுகாலமளவும் வேண்டியபடியெல்லாம் போகங்களை யனுபவித்துப்போட்டுப் (39) பிறகு கைலாஸமடைந்து வெகு சந்தோஷத்துடன் மோக்ஷமும் பெற்றான். ஓ! பிராம்மணோத்தமர்களே! இன்னு மனேகமானிடர்க ளிவ் விரதத்தை யனுஷ்டித்து (40) வேண்டிய விருப்பங்களை யடைந்து முடிவினில் மோக்ஷம்பெற் றிருக்கிறார்கள். மேலும் கேளீர்! முனிவர்களே! எவர்களிவ் விரதத்தின் மாகாத்துமியத்தைக் கேட்கின்றார்களோ, அல்லது ப

டிக்கின்றார்களோ அவர்கள் வேண்டியபடியெல்லாம் போகங்களை யனுபவித்துப் பரமகதியை யடைவார்களே! (41)

இருபத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௦—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! வேதியர்களே! சகல கலியாணங்களுக்கும் காரணமாகிய சிவராத்திரி விரதத்தைச் சொல்லுகிறேன். அது நித்திய சிவராத்திரி, மாதசிவராத்திரி யென்றது முதலாய் நான்குவகைப்படும். (1) தினந்தோறு மிராத்திரியில் நான்கு ஜாமங்களிலு மெப்போதும் ஸ்ரீ பரமசிவனைப் பூஜித்தலானது நித்தியசிவராத்திரி யெனப்படும். (2) இவற்றுள் சிலமாதங்களில் சோமவாரத்தோ டமாவாசையும் சேர்ந்திடி லது மகா மங்களகரமான 'யோகஜ சிவராத்திரி' யெனப்படும். (3) மாதந்தோறுமுள்ள கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியி லனுஷ்டிக்கத்தக்க விரண்டாம்வகுப்பானது பிரத்தியக்ஷத்தில் மோக்ஷத்தைக் கொடுக்கலுற்ற மாதசிவராத்திரி யெனப்படும். (4) மூன்றாவது வகுப்பெதென்றால்:— மாகமாதத்திய சுக்கிலபக்ஷப் பிரதமைமுதல் கிருஷ்ணபக்ஷத் திரயோதசிவரைக்கும் ஸங்கல்பம் பண்ணிக்கொண்டு நாள்தோறு மொரேதடவை புஜித்துப் பொறியடக்கமுள்ளவனாய் நியமத்தோ டிருந்துவந்து ($5\frac{1}{2}$) மறுநாளாகிய சதுர்த்தசி தினத்திற் காலையி லெழுந்து (6) அநந்தங்களான கலியாணகுணங்களையு மளவிடத்தகாத விபவங்களையும் கொண்டவரும், அனேகமாயிரம் ஜுவாலாமாலைகளால் நிறையப்பெற்றவருமானமகாலிங்காகிருதியையுடைய ஸ்ரீசிவபிரானை(7) யிருதயகமலமத்தியில் விளங்கி நிற்பவராய்த் தியானம்பண்ணியதன்மேல் பரிசுத்தமான ஜலத்தில் ஸ்நானம்செய்து பிற கிராத்திரி நான்கு ஜாமங்களிலும் ஸ்ரீ மகேசுவரலிங்கத்தைப் பூஜைசெய்தலானது ஓ! தரணிதேவர்களே! (8) 'மாகப்பிரதமாதி சிவராத்திரி' யெனப்படும. ஓ! முனிவர்களே! நான்காவது வகுப்பாகிய சிவராத்திரியையு மெடுத்துக் கூறுகின்றேன். (9) மாகமாதத்திய கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி தினத்தில் காலையி லெழுந் திருதயகமலத்தடத்தில் ஸ்ரீமகாதேவனைத் தியானம்பண்ணிவிட்டுப் பரிசுத்தம்பொருந்தி

ய ஜலத்தில் ஸ்நாநம்பண்ணி வெகு சுத்தனாயிருந்துகொண்டு (10) நித்திய கருமங்களை முடித்துப்போட்டுப் பிறகிராவினில் நித்திரையை யொழித்து நான்கு ஜாமங்களிலும் லிங்கமத்தியில் விளங்கலுற்ற ஸ்ரீ மகேசுவரனை விதிப்படி பூஜித்தலேயாம். (11) இவ்விதமாக, ஸ்ரீ சிவபிரானுக்குப பிரியமுள்ள சிவராத்திரியானது நான்குவிதமுள்ளதாகச் சொல்லப்படுகின்றது. இவ்விரவுகளில் நித்திரையை யொழித்தவனாகிச் சுத்தாத்துமனாயிருந்துகொண்டு ஸ்ரீ சிவபிரானைப் பூஜைசெய்து (12) மறுநாள் ஸ்நாநம்பண்ணி ஸகல நித்தியகருமங்களையும் முடித்துவிட்டுச் சிவபக்தர்களோடுகூட அசனம் புசித்தல்வேண்டும். (13) கேளீர்! பிராம்மணோத்திரர்களே! மேற்கண்ட நான்குவகைகளிலும் ஒன்று, அல்லது இரண்டு, மூன்று, அல்லது நான்குகளையு மவரவர் வலிமைக்குத் தக்கபடி யெவரனுஷ்டிக்கின்றாரோ (14) அவருடைய புண்ணியத்தை யளவிட்டுச் சொல்வதற்குக் கல்பகோடி காலங்களானபோதிலு மென்னால் முடியாது. அவர் தமதிச்சையின்படியுள்ள சகல போகங்களையு மனேககால மிங்கிருந் தனுபவித்துப்போட்டு (15) முடிவினில், ஓ! முனிவர்களே! அவர் மோக்ஷமடைகின்றாரென்பதி லென்ன வாச்சரியம்? முந்தி ஸ்ரீ விஷ்ணுவானவ ரிம் மகா விரதத்தை விதிப்படி யனுஷ்டித்துத்தான் (16) ஸ்ரீ மகேசுவரனருளினால் விஷ்ணுத்தன்மையை யடைந்திருக்கிறார்; அப்படியேபிரம்மனுமவரருளால்தான்ஸகலவுலகங்களையும்சிருஷ்டிக்கும்தன்மையைக்கொண்டிருக்கிறார்.(17) இந்திரனும்முந்தியிவ்விரதத்தையனுஷ்டித்துத்தா னிந்திரத்தன்மையை யடைந்திருக்கிறான். மேலுமனேகதேவர்க ளிதனை யனுஷ்டித்ததால் கணத்தலைவத்தன்மையைக் கொண்டிருக்கிறார்கள். (18) அனேகமிருடிகள் முந்தி யிவ் வுத்தமமான விரதத்தை யனுஷ்டித்ததினால் மறுபிறப்பற்ற மோக்ஷத்தை யடைந்திருக்கிறார்கள். ஓ! முனிவர்களே! (19) குபேர னிதின் மகிமையால்தான் தனாதிபத்தியமடைந்தான். வாயுவருணர்க ளெல்லாவற்றிற்கும் மேற்கொண்டதான சக்தியைப் பெற்றிருக்கிறார்கள். (20) தவிரவும் கல்மாஷபாதனென்ற அரசன் ஸ்ரீ கௌதமமுனிவரிடமிருந் திவ் விருதத்தைக்கேட் டதனை விதிப்படி யாசரித்ததினால் தான் கொண்டிருந்த சாபத்தினின்று விடுபட்டுப் பிரம்மஹத்தியைத் தொலைத்தவனாகி யிதின் வைபவத்தினால் திரும்பவும் தன் தேசத்தைக் கைப்பற்றிப் (21½) பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு மெத்த வசாத்தியமான போகங்களையு மனுபவித்துவிட்டு (22) ஸ்ரீசிவபிரானருளால் முடிவில் மோக்ஷமுமடைந்தான். (22½) பின்னும் கேளீர்! தரணிதேவர்களே! ஒரு பெரிய

காட்டினி லொருநா ளோர் வேடன் புலியின் பயத்தி லன்றைக்குச் சிவராத்திரியென் றறியாமலே யோர் வில்வமரத்தின்மீ தேறிக்கொண் டிராவுமுழுது மாகாரம் நித்திரையில்லாதவனாய் வில்வத்தழைகளைப் பறித்துப்பறித் தம் மரத்தடியில் போட்டுக்கொண்டிருந்தான். (23-24½) அன்றைக் கவனுக் காரமே யில்லாதிருந்தபடியால் மறுநாள் தெய்வத்தின் வலிமையா லிறக்கலாகிச் (25) சிவராத்திரிவிரதத்தின் மகிமையா லவன் சிவலோகத்தை யடைந்தான். மேலும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! முந்தி யோர் வயதுசென்ற நீசஸ்திரீயானவள் மிகுந்த வியாதியால் பீடிக்கப்பட்டவளாகிச் (26) சிவராத்திரிதினத்தி லன்னம் கிடைக்காததினாற் பட்டினியாயிருந் தன்றிரவுமுழுதும் விழித்திருந்து விடியற்காலத்தி லிறந்துபோய்க் (27) கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ சிவபிரா னருளினால் திவ்யசரீரத்தைக் கொண்டவளாகி யோர் திவ்யவிமானத்தி லேறிக்கொண்டு சிவலோகமடைந்தனள் (28).

இப்போது சிவராத்திரியின் வரலாற்றைச் சொல்லுகின்றேன், அதனைக் கவனமாய்க் கேளுங்கள். பூர்வத்தில் பகலுமில்லாம லிரவுமில்லாமல், இருக்கின்றதென்பது மில்லாம லில்லையென்பதுமில்லாமல் கேவலம் (29) ஸ்ரீ சிவபிரானட்டில் மகா சமுகாரகாலத்திலுள்ள வந்தகாரத்தில் விளங்கி நிற்குமளவில் கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ பார்வதி தேவி யொருத்திமட்டி லதற்குச் சாக்ஷியா யறுபத்திநான்கு கலைகளோடும் கூடியவளாகி யிருதயகமலத்தடத்தில் ஸ்ரீ பரமேசுவரனைப் பூஜை செய்துகொண்டிருந்துவந்தாள். (30½) பிறகு முன்போ லுலகசிருஷ்டியுண்டாகுமளவி (31) லப்போது தேவியானவள் கருணைக்கு நிதியான ஸ்ரீ மகாதேவனை வந்தனித்து (31½) “ஓ! சுவாமீ! யானிரவுதனில் தேவரீரை யிருதயகமலத்தில் பூஜைசெய்துகொண்டிருந்தபடியா (32) லிவ்விரவுகளில் நான்குஜாமங்களிலும் பகவானும், ஜகத்குருவுமாகிய தேவரீரை யெவர் பூஜிக்கின்றார்களோ (33) அவர்களுக்குத் தேவரீ ரருளினா லிகத்தில் வேண்டிய பயன்களெல்லாம் கைகூடுவதுமின்றி ஓ! ஜகதீசா! பரத்திலு மவர்கள் மோக்ஷம்பெறவேண்டும். (34) மேலு மதற்குச் சிவராத்திரிவிரதமென்று பெயர் பிரஸித்திப்படவேண்டும். ஓ! பிரபுவே! எந்தப் புண்ணியவான் சிவராத்திரிகளில் ஸ்ரீ சம்புவினுடைய மகாவிரதத்தை யாசரிக்கின்றானோ அவன் வேண்டிய வபீஷ்டங்களைக் கைக்கொள்வதுட னக்ஷயமான மோக்ஷத்தையு மடைதல்வேண்டு” (35½) மென்று தேவியானவள் பிரஸன்னரான பரமேசுவரனிடமிருந்து வரன்பெற்றுக் (36) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! முந்தி யவளே யிம் மகாவிரதத்தை யாசரித்துக்கொண்டு பரமாநந்தத்தி

னுல் நிரம்பப்பெற்றவளாகி யச் சங்கரனண்டையிலிருந்து விளங்கிவந்தாள். (37) மேலும் ஸ்ரீ பரமேசுவர புத்திரர்களான ஸ்ரீ விநாயகர் கந்தர்முதலியவர்களும், நந்தி, பிருங்கி, மகாகாளர்முதலிய கணுதிபர்களுமிம் மகாவிரதத்தை (38) யாசரித்தார்கள். தவிரவும் கேளீர்! முனிவர்களே! முந்திப் பிரம்மவிஷ்ணுக்க ளிருவரு மொருவரோடொருவர் மதம்கொண்டவர்களாகி ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய சோதிமகாலிங்கத் திருவுருவத்தி னற்புதமான வடிமுடிகளைக் காணமுடியாத்தினு (39) லவ்விருவர்களும் சிவராத்திரிதினத்தில் ஸ்ரீ மகேசுவரனை யிரவினில் பூஜை செய்தார்கள். அதன்மேல் ஸ்ரீபகவா னவர்கள்முன்னர் பிரசன்னராகையி (40) லவ் விருவர்களு மஷ்டைசுவரியங்களால் நிரம்பப்பெற்றவம் மகாதேவனைக் கண்டு சிறந்த துதிகளால் தோத்திரம்பண்ணி வந்தனித்து மிகுந்த பக்தியோடு வணக்கமுற்றவர்களாகி நின்றார்கள். (41) அப்போ தகண்டாநந்த மங்களமூர்த்தியான பகவா னவர்களின் பிழையை மன்னித் தவர்களுக்கு வேண்டிய வரனையு மளித்துவிட் டந்தர்த்தானமடைந்தனர். (42) ஆகையா லிவ் விரதத்தின் மகிமையை யெந்தனுற் சொல்லமுடியாதே! ஓ! பிராம்மணோத்தமர்களே! எந்தன் குருவாகிய ஸ்ரீ வேதவியாஸராலும் சொல்லமுடியாதுதான். (43) ஒருக்கால் மகா யோகிந்திரரான ஸ்ரீ ஸனத்குமாரர்தா னதனைச்சொல்ல அறிவாரோ மாட்டாரோ! முந்தி யிம்மகா விரதத்தின் மகிமையை நந்திகேசுவரன் ஸ்ரீ மகேசுவரனிடமிருந்து கேட்டுப் (44) பரமாநந்தமாகிய வலைகளுக்குக் கடலாகிவிட்டார். ஸ்ரீ மகேசுவரனது மகிமை யெவ்வாறு வாக்குகளுக்கும் மனதுகளுக்கு மெட்டாததோ (45) அதேவிதமா யிவ் விரதத்தின் மகிமையும் வாக்கு மனதுகளுக் கெட்டாததே! ஸ்ரீ சிவபிரானுக்குச் சம்மதியான இவ் வத்தியாயத்தைப் படிப்பவரும் கேட்பவரும் (46) தெய்வநம்பிக்கையுள்ள பிள்ளைகளைப் பெற் றளவற்ற போகங்களையு மனுபவித்துப்போட்டுக் கேளீர்! முனிவர்களே! முடிவினில் கைலாஸமடைந்து மோக்ஷமடைவார்களே! (47)

முப்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௧—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! முனிவர்களே! சகல கலியாணங்களுக்கும் காரணமாகிய கேதாரவிரதத்தின் மகிமையை யெடுத்துரைக்கின்றேன். அதனைக் க

வனமாய்க் கேட்குதல் வேண்டும். (1) இவ்விரதமானது புரட்டாசிமா தத்தின் சுக்கிலபக்ஷ அஷ்டமியில் தொடங்கி யிருபத்தோருநாள் வரை க்கும் முறைப்படி (2) யனுஷ்டிக்கத்தக்கது. மேலும் மேற்கூறிய தினத்திலும் முடிவுதினத்திலும் விதிப்படி யனுஷ்டித்து நியமத்துடன் பூஜித்தல் வேண்டும். (3) எந்த மானிடர் ஸகல வபீஷ்டங்களையும் கொடுக்கவுற்ற இவ்விரதத்தை யாசரிக்கின்றாரோ அவர் சகல போகங்களை யு மனுபவித்துப்போட்டு முடிவில் மோக்ஷமடைகின்றார். (4) ஓ! தரணிதேவர்களே! பூர்வத்தி லிம் மகா விரதத்தைக் கௌரிதேவி யாசரித்ததினு லளவற்ற தேஜஸ்ஸைக்கொண்ட ஸ்ரீ மகேசுவரன் திருமேனியின் பாதிபாகத்தை யடைந்தாள். (5) மேலும் விஷ்ணு இதனை யாசரித்ததனுல் வைகுண்டாதிபத்தியத்தையும், பிரம்ம னன்னத்தை வாகனமாய்க்கொள்ளலையு மடைந்தார்கள். (6) ஓ! வேதியர்களே! முந்தி அஷ்டதிக்பாலர்களு மிவ்விரதத்தை யாசரித்ததனுல்தான் ஸ்ரீ சிவபிரானருளினுற் சத்துருக்களாகிய வசுரர்களைக் கொன்றார்கள். (7) ஸப்தருஷிகள் மெத்த மங்களகரமான இவ்விரதத்தை யனுஷ்டித்ததினு லப்போதே, பிரம்மனுடைய சாபத்தினின்று விடுபட்டதாகச் சொல்லப்படுகின்றார்கள். (8) முந்திப் பாக்கியவதியென்ற வொருத்தியும், புண்ணியவதியென்ற மற்றொருத்தியு மிவ்விரதத்தை யாசரித்து மிகுந்த வைசுவரியத்தை யடைந்திருக்கிறார்கள். (9) மகா பரிசுத்தாத்துமாவாகிய வோரந்தணர் சிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ளதான விம் மகா விரதத்தை யனுஷ்டித்து நிகரற்றவர்களான நூறுபிள்ளைகளை யடைந்தார். (10) பிறகம் மகானுபாவ ரிவ் விரதத்தை யப் புத்திரர்களுக்கு மனுஷ்டிப்பித்தவர்களோடுகூட வனேகம் போகங்களை யனுபவித்துவிட்டுப் (11) பிறகு சிவலோகமடைந்து முடிவினில் மகா துர்லபமான மோக்ஷத்தை யடைந்தார். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இன்னும் ஸ்ரீ சிவபிரானுக்குப் பிரியமுள்ள விம் மகா விரதத்தை நியமத்துட னுசரித்து மோக்ஷமடைந்தவ ரனேகம்பெயர்க ளிருக்கின்றார்கள். (12½) ஆகையாலெவர்க ளிவ் வுத்தமமான வத்தியாயத்தைப் படிக்கின்றார்களோ, அல்லது கேட்கின்றார்களோ அவர்கள் பல போகங்களை யனுபவித்துப்போட்டு ஸ்ரீ சிவாக்கினையால் முடிவினில் நிகரற்ற மோக்ஷத்தை யடைகின்றார்களே. (13)

முப்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் ௩௨-வது அத்தியாயத்தின் ஸாராம்சம்.

ஓ! வேதமறிந்தோர்களிற் சிறந்த வந்தணர்களே! சகல கலியாணங்களுக்கும் காரணமான கலியாணமென்ற புண்ணிய விரதத்தை யெடுத்துக் கூறுகின்றேன். அதில் மொத்தச் சுருக்கமுண்டானமையால் நீங்கள் கவனமாய்க் கேட்கவேண்டும். (1) சூரியன் மீனராசியிலிருக்கும் (பங்குனிமாதம்) போதுள்ள சுக்கிலபக்ஷத்திலான மங்களகரம்பொருந்திய உத்திரநக்ஷத்திரதினத்திற் காலையிலெழுந்து கலியாணக்கோலத் திருமேனியுடையவர்களான ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை நியமத்துடன் தியானம்பண்ணிவிட்டு (2½) வெளிச்சென்று பரிசுத்தமான தீர்த்தத்தில் நியமமாய் ஸ்நானம்பண்ணி (3) நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு சிவபூஜையில் முயன்றவனுக்கு சகல ஜீவராசிகளுக்கு மதிபரும், மகாதேவருமான ஸ்ரீ பரமேசுவரனைப் பூஜைசெய்யவேண்டும். (4) சிவபூஜையில்லாதவனுமோவென்றால் நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு தங்கத்தினால் ஸ்ரீ பார்வதிபரமேசுவரர்களுடைய திருவுருவங்களாக விரண்டு பதுமைகளை யமைத்து (5) அவைகளை விதிப்படி நல்ல ஜலத்தினால் நிரப்பப்பட்ட வேர்க் கும்பத்தில் வைத்து அபிஷேகவிதிப்படி ஸ்ரீ ஜகத்குருவுக் கபிஷேகம் செய்யவேண்டும். (6) கேளீர்! முனிவர்களே! பிறகப் புத்திசாலியானவன் விவாகமுறைப்படிச் சகல வுலகங்களுக்கும் மாதாவான ஸ்ரீ பார்வதியம்மையோடுகூட தேவேசரான ஸ்ரீ மகாதேவருக்குத் திருக்கலியாணஞ்செய்து (7) பற்பல வியஞ்சனங்களோடுகூடிய நைவேத்தியங்களையு மளித்துவிட்டுப் பிறகு வேதமறிந்தவர்களும், சிவபக்தர்களும், பொறியடக்கமுள்ளவர்களும், அவரவர்களின் மனைவிகளோடு கூடியவர்களுமானப்பிராம்மணர்களை யனேகம் தானங்களாற் களிப்பித்தவர்களுக்குப் பாயசங்களுடனும் பக்ஷியபோஜ்யங்களுடனு முணவளித்தல் வேண்டும். (8-9) பிறகவன் சிவாலயத்திற்குப் போய் ஸ்வாமியையு மம்மனையும் நமஸ்காரம்பண்ணிவிட்டுத் தன் திறமைக்குத் தக்கபடியுள்ள பண்டங்களையு மளித்து (10) மூன்றுப் பிரதக்ஷிணங்கள்செய் தந்தரங்கத்துடன் வந்தனம்பண்ணிவிட்டுத் துரிதமாய்த் தன் வீடுசேர்ந்து இரவுதனிற் சிவனடியார்களான சிறந்த வந்தணர்களோடுகூடக் கனிவர்க்கங்களையும் பாயஸத்தையும் ஸ்ரீசிவபிரானைத் தியானித்துக்கொண்டே புஜித்துவிட்டுத் (11½) கேளீர்! முனிவர்களே! அவ்விரவினில் தர்ப்பங்கள்மீது படுக்கவேண்டும். (12) பிற்பாடு காலையிலெழுந்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு பிறகு ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களது நேர்த்தியான அவ்விரு பதுமைகளையும்

நல்லொழுக்கமுடையவர்களும், சிவபக்தர்களுமான விருப் பிராம்மணர்களுக்குத் தானம்செய்துவிட்டுக் (13½) கேளீர்! வேதியர்களே! அன்றைத்தினத்தி லொருதடவை தான் போஜனம்பண்ணவேண்டும்.(14) யாதாமொருவர் சகல பாவங்களையும் நாசம்செய்யலுற்ற விம் மகா விரதத்தை யிவ்விதமா யனுஷ்டிக்கின்றனரோ அவர் ஸ்ரீ சங்கரனுக்கு மெத்தப் பிரியமுள்ளவராகித் தம் விருப்பத்தின்படி வேண்டிய போகங்களை யனுபவித்துப்போட்டு (15) முடிவினில் மலைகளிற் சிறந்ததும், ஸ்ரீ சிவபிரானுக் காலயமுமான கைலைகிரியடைந் தங்கு வெகுகாலமிருந்து போகங்களை யனுபவித்துப் பிறகு சிவாக்கினையின்படி மோக்ஷம் பெறலாகின்றார். (16) கேளீர்! முனிவர்களே! பூர்வத்தில் ஜகத்ஸ்வரூபியாகிய விஷ்ணுவானவ ரிவ் விரதத்தை யனுஷ்டித்ததினால் சிறந்த மகாலக்ஷுமியையும், பிரம்மன் ஸரஸ்வதியையும், இந்திர னிந்திராணியையும் மனைவியாகக்கொண்டார்கள். (17½) அதனால்தான் முந்திச் சந்திரனசுவதி முதலிய விருபத்தேழு நக்ஷத்திரங்களையும் பெண்டீர்களாகக் கொண்டான். (18½) ஒளிகளின் திரள்களான சூரியனும் மெத்தச் சிறந்தவளான உஷாதேவியை நாயகியாகப்பெற்றான். (19) ஓ! பிராம்மணேந்திரர்களே! பூர்வத்தில் முனிவர்களிற் சிறந்தவரான ஸ்ரீ அகஸ்திய முனிவரு மிம் மகா விரதத்தை யனுஷ்டித்ததனாலு லோபாமுத்திரையை மனையாளாக வடைந்தார். (20) மேலும் முந்தி விஷ்ணுவின் பெண்களான அமிருதவல்லி சௌந்தரியவல்லியென்ற இருவர்களு மிப்புண்ணியவிரதத்தை யனுஷ்டித்ததின் மகிமையால் (21) ஸ்ரீ குமரேசனருளைப் பெற்று மறுபடியு மவர்கள் தங்களிச்சையின்படி முறையே தேவசேனை, இலவலி யென்ற பெயர்களோடு வேறு பிறப்பை யடைந்து (22) தேவசைனியங்களின் பாரத்தை நிர்வகிப்போரான வக் கந்தபிரானையே கணவராய்க்கொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவரோடு மிகுந்த நேசத்துட னிரமித்துவருகின்றார்கள். (23) மேலும் வேதாங்கமுனிவரின் குமாரியும், இலாவண்ணியக்கடலுமான ஸுகேசியென்பவ ளிவ்விரதத்தை யாசரித்ததினால் கைலையில் வசிப்பவரும், ஸ்ரீ பரமேசுவரனது கணங்களுக்குத், தலைவரும் மிகவும் சிரேஷ்டருமான நந்திகேசுவரனைக் (24½) கணவராயடைந்து தேவஸ்திரீ கணங்களாற் சேவிக்கப்பெறுகின்றாள்.(25) ஸத்தியபூர்ணனென்ற மாமுனிவரி னிருகண்களினின்று முண்டான பூர்ணாம்பாள், புஷ்களாம்பாளென்ற விருபெண்களும் முந்தி யிப்புண்ணிய விரதத்தை யாசரித்ததினால் ஸ்ரீ மகாசாஸ்தாவுக்கு மனைவிகளாயினார்கள். (26½) இவ்விரதத்தின் மகிமையால்தான் மன்மத னிரதிதேவியை நாயகியாக வடைந்தான். (27) மு

ந்தி ஜனகன் பெண்ணுன சீதையம்மையும் ஸ்ரீ ராமனைக் கணவராய்க் கொண்டனள். கேளீர்! முனிவர்களே! முந்தி ஜாம்பவதியு மதனுல் தான் ஸ்ரீ கிருஷ்ணனை நாயகராய்க் கொண்டனள். (28) தவசிகளிற் சிறந்தவரான ஸௌபரிமுனிவ ரிவ் வற்புதமான விரதத்தை யாசரித்த தனுல் நல்ல சுப இலக்ஷணங்களோடுகூடிய பல ஸ்திரீகளையடைந்தனர். (29) இன்னும் மற்றனேகம்பெயர்கள் ஸகல பாவங்களையும் தொலைக் கவுற்ற விவ் விரதத்தைத் தங்கள் மனைவிகளோடுகூட வாசரித்ததனுல் வேண்டியபடி யெல்லாம் போகங்களை யனுபவித்துச் (30) சிறந்த பல பிள்ளைகளைப்பெற்று முடிவினிற் கைலாஸமடைந்து கேளீர்! பிராம்ம ணுேத்தமர்களே! பிறகு மறுபிறப்பற்ற மோக்ஷத்தையடைந்திருக்கி ரூர்கள். (31) ஓ! தரணிதேவர்களே! இவ்விரதத்தைச் சுவற்பகால மனுஷ்டித்தமாத்திரத்திற் பெண்டீரை வேண்டியவன் சகல லக்ஷணங்க ளோடும்கூடிய பெண்டீரையும், (32) கன்னிகையானவள் மன்மதனை யொத்த பழிப்பற்ற கணவனையு மடைவார்களே! மேலும் புருடனும் பெண்டீருமாக இவ்விரதத்தை யாசரிப்பதின் மகிமையினுல் பல பிள்ளை களைப்பெற்று வேண்டிய சகல போகங்களையு மடைவார்களே! ($33\frac{1}{2}$) ஓ! வேதியர்களே! இவ் விரதத்தின் மகிமையைக் கொஞ்சம்மட்டில்தா னெடுத்துரைத்தேன். (34) இதின் மகிமையை முற்றுமுரைக்க வெந் தனுல் முடியவேமுடியாது. எவர்கள் மிகுந்த நியமத்தோடு மகா பு ண்ணியமான இவ்வத்தியாயத்தைப் படிக்கின்ருர்களோ, அல்லது கேட் கின்ருர்களோ அப்பேர்க்கொத்த மகானுபாவர்களுக்கு வேண்டிய பய ன்களெல்லாம் கைகூடலாகி யவர்கள் முடிவினில் ஸ்ரீ சிவபிரானுடைய ஸாயுஜியபதவியை யடைகின்றதிற் சந்தேகமேயில்லை. (36)

முப்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௩—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! முனிவர்களே! வேண்டிய சகல பயன்களையும் கொடுக்கவு ற்ற சூல விருதத்தை எடுத்துக்கூறுகின்றேன்:—மகர இராசியில் சூரிய னிருக்கும் (தைமாதம்) போதான அமாவாசை தினத்தில் புத்திமானுகி யவன் காலையிலெழுந்து (1) சூலபாணியும், உமைக்கு மித்திரரும், சகல

கலியாணங்களுக்கு மிருப்பிடமும், சந்திரசேகரருமான ஸ்ரீஜகதீசனை யிரு தயகமலத்தடத்தில் தியானம் பண்ணிவிட்டு (2) வெளியிற் சென்று மங்களகரம் பொருந்திய தீர்த்தத்தில் ஸ்ரீசிவபிரானைத்தியானித்துக்கொண்டே ஸ்நானம்பண்ணித் தம் கிருஹிய ஸூத்திரத்தின்முறைப்படிக்குச்சந்தியனுஷ்டானங்களைமுடித்துப் பிறகு(3) ஸ்ரீ சம்புவின் பதுமையைப்பார்வதியோடுகூடியதும், சகல அவயவங்களுஞ் சுந்தரமாயமையப்பெற்றதுமாகப்பொன்னாலாவது வெள்ளியாலாவது தமைத்துக்கொண் (4) டதற் கபிஷேகத்திற்குரிய விதிப்படி ஸ்நானம்செய்வித்துப் பாயசத்தோடுகூடப் பற்பலவித அன்னங்களைச்செய்து (5) மிகுந்த பக்தியுடன் ஸ்ரீ சர்வேசுவரனுக்கு நைவேத்தியம்பண்ணிவிட்டுமெத்தியான்னவேளையிலுருத்திராக்ஷமாலைகளைப் பூண்டிராநின்ற சிவனடியாரானப் பிராம்மணருக்குத் தன் திறமைக்குத் தக்கபடி தானங்கள் செய்யவேண்டும்.($6\frac{1}{2}$) பிறகு சிவாலயத்திற்குப்போய் முறைப்படிப் பிரதக்ஷிணங்கள்பண்ணி (7) ஸ்ரீ பரமேசுவரனுக் கேதாகிலும் கொஞ்சம் காணிக்கையளித் தவனை நமஸ்காரம்செய்துபோட்டுச் சிவனடியார்களானப் பிராம்மணர்களோடு கூட ஒரே தடவை போஜனம்பண்ணி (8) யன்றிரவினி லாகாரம்செய்யாமலிருந்துவிட்டு மறுநாள் காலையிலெழுந்து கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தினம்தோறும் செய்வதுபோல் நித்தியகருமங்களை முடித்துக்கொண்டபிறகு (9) ஓ! வேதியர்களே! அச்சம்புவின் பதுமையைத் தன் குருவுக்குத் தானம்செய்தபிறகு நியமத்தோ டடியார்களுடன்கூடப் போசனம்பண்ணவேண்டும். (1 6) ஓ! பிராம்மணோத்தமர்களே! இவ்விரதத்தை யிப்பிரகாரமாகவே யனுஷ்டித்தல்வேண்டும். எந்த மானிடோத்தமர்க ளிவ் விரதத்தை யிம்மாதிரியா யனுஷ்டிக்கின்றார்களோ (11) அவர்கள் சகல சத்துருக்களையும் மிகுந்த பெரும் வியாதிகளையும் வென்று பரிபூர்ணமானவாயுசுகளையும், வமிசத்தை விருத்திசெய்யலுற்ற பல பிள்ளைகளையும் பெற்று (12) வேண்டிய பொருட்களையெல்லாம் கைக்கொண் டனேக போகங்களையு மனுபவித்து முடிவினில் ஸ்ரீ சிவபிரானுடைய ஸாயுஜ்ய பதவியை யடைகின்றார்களென்று ஸத்தியமாய்ச் சொல்லுகின்றேன். (13)

கேளீர்! தரணிதேவர்களே! முந்தி விஷ்ணுவானவ ரிவ் விரதத்தை யனுஷ்டித்ததினாலசுரக்கேடனாகிய கொடிய காலநேமியென்றவனைக் கொன்றார். (14) பூர்வத்தில் ஜமதக்கினிமாமுனிவரின் புத்திரரான மகா வலிமைபொருந்திய பரசுராம ரிவ் விரதத்தின் மகிமையினால் சத்துருவாகிய கார்த்தவீரியார்ஜுனனைக் கொன்றனர். (15) இதன் மகிமையால்தான் முந்தி விஷ்ணுவுக்குத் தலைவலி தணிபலாயிற்று. மே

னும் பிரம்மனு மிதன் மகிமையால்தான் வயிற்றுநோய் தீரப்பெற்றார். (16) ஓ! முனிவர்களே! ஸூதர்மனு மிதின் மகிமையாலே மிருத்தியுவைக்கூட ஜயிக்கலானான். மேலும் மேகாங்கனென்ற வோரரச னிப்புண்ணியவிரதத்தை யனுஷ்டித்ததின்மேல் (17) மகா பண்டிதர்களான வாயிரம்புத்திர பௌத்திரர்களையடைந்துகேளீர்! தரணிதேவர்களே! அநேக போகங்களை யனுபவித்துவிட்டு முடிவினில் கைலாஸபதவியையடைந்தான். (18) ஓ! முனிவர்களே! இன்னும் மற்றனேகம்பெயாக ளிவ் விரதத்தை யனுஷ்டித்ததினால் தங்கள் தங்களபீஷ்டங்களையடைந்து ஸ்ரீ சங்கரனுக்குச் சிறந்த வாலயமாகிய நிகரற்ற கைலாஸத்தையடைந்திருக்கிறார்கள். (19) ஓ! வேதியர்களே! ஆகையா லிவ் விரதத்தை யெவர்கள் விதிப்படி யாசரிக்கின்றார்களோ அவர்களுடைய துரிதமெல்லாம் தூரத்திலோட்டம்பிடிக்கலாகி ஸ்ரீ ஜகதீசனருளினா லளவற்ற ஐசுவரியங்களை யடைவார்களென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். ($20\frac{1}{2}$) கேளீர்! தரணிதேவர்களே! மகா வலிமைபொருந்திய ஸ்ரீ வீரபத்திரர் பெருமைபொருந்திய கணாதிபனாகிய பானுகம்பனுக் கிவ்விரதத்தின் மகிமையை யெடுத்துக் கூறினரென்று ஸ்ரீ வியாஸமுனிவரோ ஷேநரி லெந்தனுக்குச் சொல்லியிருக்கின்றார். (22) ஓ! வேதியர்களே! ஸகல பாவங்களுக்கும் முக்கிய நாசகரமாகிய இவ் வத்தியாயத்தை யெவர் படிக்கின்றார்களோ அல்லது கேட்கின்றார்களோ அவர்களுக்கு மிருத்தியுவின் பயமேயில்லை. (23)

முப்பத்திமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௪—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! முனிவர்களே! நீங்களெல்லோர்களு முத்தமமான விருடபவிரதத்தைக் கேட்கவேண்டும். சூரிய னிருடபராசியிலிருக்கும் (வைகாசிமாதம்) போதான சுக்கிலபக்ஷத்தி னஷ்டமிதிதியி (1) லதிகாலையிலேயெழுந்து சுத்தம்பண்ணிக்கொண்டு ஸ்ரீ மகாதேவனைச் சித்ரூபியாகிய வம்பிகையோடுகூட விருடபத்தின்மீது வீற்றிருப்பவராகத் தியானம் பண்ணிவிட்டு (2) நல்ல தீர்த்தத்தில் ஸ்நாநம்பண்ணி நியமத்துடன் சந்தி யனுஷ்டானங்களை முடித்துக்கொண்டதின்மேல் தங்கத்தினாலாவது வெள்ளியாலாவது ஸ்ரீ மகேசுவரனுடைய பதுமையைப் பார்வதிதேவியோடுகூட விருடபத்தின்மீது வீற்றிருக்கும்படி நிகரற்றதாய

மைத்துக்கொண் (3½) டதற்கு முறைப்படி சிறந்த பஞ்சாமிருதம் முத லிய திரவியங்களா லபிஷேகம்பண்ணி (4) விசேஷங்களான பாயஸம் முதலியவைகளுடன் சுத்தான்னத்தை நைவேத்தியம்செய் திவ்வாறாக விதிப்படி பூஜைபண்ணிவிட்டுத் திறமைக்குத் தக்கபடியுள்ள திரவியத் தை நல்லொழுக்கமுடைய சிவபக்தரானப் பிராமமணருக்குக் கொடுத்து விட்டுப் (5½) பிறகுசிவாலயத்திற்குப் போய்ப் பிரதக்ஷிண நமஸ்கார ங்கள்பண்ணி ஸ்வாமிக்கேதாகிலும் கொஞ்சம் காணிக்கை யளித் ததின் மேற் சந்தோஷமாய்த்தன் வீடுசேர்ந் தப்புத்திசாலியானவன் சிவபக்தர் களானப் பிராம்மணோத்தமர்களோடுகூடக் (7) கேளீர்! முனிவர்க ளே! சுத்தான்னம், சர்க்கரைப் பொங்கல் இவைகளை யப்பம் முதலிய ப ணிகாரங்கள் கனிவர்க்கங்களுடன்கூட விரதத்திற்குக்குறைவுநேரிடாத அளவு புசித்துவிட்டுப் (8) பிறகு சாயங்காலத்தில் சந்தியாவந்தனம் * மு தலிய நித்தியகருமங்களைமுடித்தானபிறகிரவினிலோர் ஜாமம் வரையில்சி வ புராணங்களை க்கேட்டுவிட்டுக்கேளீர்! முனிவர்களே! பிறகு வெறும் தரைதனிலே சுகமாய் நித்திரைபண்ணவேண்டும். பிற்பாடு மறுநாட் காலையிலெழுந்து நியமமாய் (10) நித்தியகருமங்களை முடித்துக் கொண்டு முற்கூறிய சங்கரபிரானுடைய பதுமையை நல்லசிவபக்தரும் வித்துவா னுமான பார்ப்பாருக்குப் பக்தியுடன் தானம்செய்து விடவேண்டும். (11)

ஓ! பிராம்மணேசுவரர்களே! எந்தமானிடோத்தமர்களிவ் விரதத் தை யிவ்விதமாயாசரிக்கின்றார்களோ அவர்களுக்காயுசு, தனம், கல்வி, ஆ ரோக்கியம், அஷ்டைசுவரியங்கள் இவைகளெல்லாம் பூர்ணமாயுண்டாவ திலென்ன வாச்சரியம்? (12½) பூர்வத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு இவ்விரதத் தை யாசரித்ததின் பேரில் (13) ஸ்ரீபரமேசுவரனருளினால் மிகுந்த ஐசு வரியத்தைபு மடைந்து பக்ஷிராஜனான கருடனையும் வாகனமாய்க்கொண் டார். (14) ஓ! பிராம்மணோத்தமர்களே! மேலுமிவ்விரதத்தை யாசரி த்ததினாலிந்திரன் மெத்த வுந்தமமான ஐராவதத்தையும், அக்கினிதேவ

---

* 'ஸந்தியாவந்தனஜபம்' என்றதில்பெரும்பாலுமுலகினில்காலைமா லைகளில் ஸந்தியையும்ஜபத்தையும்மட்டிற்செய்துவருகின்றார்களேயின்றி ஜபம்பண்ணத்தொடங்குவதற்கு முந்தி முக்கியமாய்ச் சந்திதோறும் செய்யவேண்டிய 'வந்தனம்' என்ற மகாமந்திரத்தை ஜபம் பண்ணி வரு வதாய்க் காணப்படவில்லை. ஆகையால் பேர்க் கொத்தப் பிராம்மணர் களெல்லா மம்மந்திரத்தை யறிந்து ஜபம்செய்து வருவோரான தக்க பெ ரியோரிட மிருந்தவ் வந்தன மகாமந்திரத்தை யுபதேசம் பெற்றதனையும் கிரமப்படி ஜபம்செய்து வருவதுதான் காலை மாலை நித்தியகருமங்களைப்பூ ர்ணமாய் முடித்ததாகும்.

ஞட்டுக்கடாவையும்,(15) இயமன் மகாபெரியதான வெருமைக்கடாவையும், நிருருதி நேர்த்தியான மானிடர்களாற் சுமக்கப்படும் தண்டிகையையும், (16) வருணன்சிறந்த முதலையையும், வாயுதேவன் கிருஷ்ணஸாரமென்ற மானையும், (17) குபேரன் திவியமான புஷ்பகவிமானத்தையும், ஈசானதேவன் தருமத்தினுலுருவம் கொள்ளப்பெற்ற வெருதையும்(18) சூரியன் ஸப்தாசுவத்தையுமொரேசக்கிரத்தைக்கொண்ட இரதத்தையும், சந்திரன் பற்பலவிரத்தினங்களால் விசித்திரமான விமானத்தையும்வாகனங்களாய்க் கொண்டிருக்கிறுர்கள்.(19)

மகாராஷ்டிர தேசத்தரசனுன விசுவசேனனென்ற வோரரசன் தவசிகளிற் சிறந்த வசிஷ்டமா முனிவரிடம் சென்று முந்நிகழ்ந்ததுமினி நடக்கப்போவதுமான சிலவற்புதங்களை வணக்கமாய்வினவி யதின்பேரில் ($20\frac{1}{2}$) முக்காலங்களையு மறிந்தவர்களிற் சிரேஷ்டரான அம்மா முனிவ ரங்ஙனமேயுரைக்க, (21) அப்போதவ் வரசன் மெத்தச் சந்தோஷமுற்றவனுகி யவ்விருடீசுவரரை வந்தனித்துவிட்டு "ஓ! ஸ்வாமீ! ஜகத்குருவாகிய தேவரீரை வந்தனிக்கின்றேன்; எந்தவித்தையினுல் தேவரீரா லிவ்வாறுரைக்கப்பட்டதோ அதனைத்தேவரீர் தாஸனுகிய வடியேனுக்கருள் செய்யவேண்டு" ($22\frac{1}{2}$) மென, இவ்வா றவ் வரசன் வசனத்தைக் கேட்டடம் மாமுனிவர் (23) "ஓ! அரசனே! மெத்த வுத்தமமும் புண்ணியமுமான விருடபவிருதத்தை யாமனுஷ்டித்தனம்; அதன் மகிமையால்தான் முக்காலங்களிலு முள்ள பொருட்களெல்லாம் நமக்குவிளங்கலாகின்றன. (24) மேலுமிவ்விரதத் தின்மகிமையினுற் சகலவபீஷ்டங்களும் கைகூடு" மென, இவ்வா றப்பிரம்மருடியின் வசனத்தைக்கேட்ட வ்வரசன் (25) மெத்தவாச்சரியம் கொண்டவனுகித் தானு மவ்விரதத்தை யாசரித்தான். பிற்பாடவ்வரசன் மிகவற்புதமாய் முக்காலங்களினறிவையும் கொண்டவனுகிச் (26) சகலபோகங்களையு மனுபவித்துவிட்டு முடிவினிற் கைலாஸ மடைந்தான். பிரம்மனு மிவ்விரதத்தையனுஷ்டித்ததினுல்முக்கால அறிவைக்கொண்டனர்.(27) ஸந்துஷ்டனென்ற வோர் தாணி தேவ னிவ்விரதத்தை யாசரித் ததினுல் மிகநேர்த்தியான வெட்டு ஸித்திகளையும் கைக்கொண்டு பிறகுநல்லகதியை யடைந்தான். (28) முந்திவிதிருத னென்ற வோர் பார்வேந்த னிவ்வற்புதமான விரதத்தையனுஷ்டித்ததினுற் சரீரத்துடனே யேழு பாதாள லோகங்கள், (29) பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலிய வர்களின் லோகங்கள் இவ்விடங்களிலெல்லா மெப்போதும் சஞ்சரித்துக் கொண்டே யங்கங்குள்ள சகல

வற்புதங்களையும் பார்த்து வந்தான். (30) இவ்விதமாயவன் வெகுகாலமளவு மிவ்விரதத்தை யாசரித்து வந்ததின்மேல் தன்பிள்ளைகளுக்குமி தனைச் சொல்லி விட்டுப்பிறகு காயஸித்தியடைந்து முடிவினிற் சிவயோகித் தன்மையை யடைந்தான். (31) சிலரிவ்விதமாகவே யிவ் விரதத்தை யாசரித்துவந்து, அம்மிகுந்த புண்ணியத்தினாற் சகல வேண்டுதல்களையும் கைக்கொண்டு முடிவில் மோக்ஷ மடைந்திருக் கிறார்கள். (32) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்வத்தியாயத்தையெவர்படிக்கின்றார்களோ, கேட்கின்றார்களோ, அல்லதுபிறரைக்கேட்பிக்கின்றார்களோ, அவர்களந்தத்திற் சிரேஷ்டமான கைலாஸத்தை யடைவார்க ளென்பது நிச்சயமே! (33) ஓ! முனிவர்களே! இப்போது ஸ்ரீசிவ பிரானுடைய வெட்டு விரதங்களையும் முறையே யிவ்விதமா யெடுத்துரைத்திட்டேன். மற்றுமுள் ளவைகளையு மெடுத்துக் கூறுகின்றேன்; நீங்களதனைக் கவனமாய்க் கேட்கவேண்டும்.(34)

முப்பத்திநான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௫—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சகலபாவங்களையு மபகரிக்கலுற்ற ஸ்ரீ மகாதேவியின் சுக்கிரவார விரதத்தைச்சொல்லுகின்றேன். சூரியன்மேடராசியிலிருக்கும்போ (சித்திரைமாதம்) துள்ள சுக்கிலபக்ஷம் சுக்கிரவாரத்தில் (1) காலையிலெழுந்து மகாசௌந்தரியம் பொருந்திய ஸ்ரீகௌரி யம்மனைத் தியானம் பண்ணிவிட்டுப் பரிசுத்தம்பொருந்திய நீரில் ஸ்நானம் பண்ணிப் பரிசுத்தனாகி நித்தியகருமங்களை முடித்துக் கொண் (2) டதின் மேல் தனதாத்துமாவை ஜுவலிக்க லுற்ற காந்தியுடைய வோர் பெண்ணுருவமாய்ப் பாவனை செய்து கொண்டு பிறகோர் நேர்த்தியான கும்பத்தைச் சுத்தஜலத்தினால் நிரப்பி (3) யதனில் ஸ்ரீமகாதேவியை யாவாகனம் பண்ணிச் சந்தனம் புஷ்பங்கள் முதலிய வைகளால் பூஜை பண்ணி யன்னத்தினாலுண்டாக்கப்பட்ட பாயஸம் முதலியவைகளை நைவேத்தியம் பண்ணி விட்டு (4) சகல அவயவங்களினும் பஸ்மருத்திராக்ஷங்களாலலங்கரிக்கப் பெற்றவளும், மிகநேர்த்தியான வர்களுமானவெட்டுச்சுமங்கலிக ளல்லது கன்னிகளைச் சந்தனம் புஷ்பங்களால் பூஜித்து(5) ஓ! வேதியர்களே! உள்ளமதிற் கலக்கமற்றவனாகித் தன்திறமைக்குத்தக்கபடி யவர்களுக்குத்

தானம் செய்துவிட்டுச் சிவாலயத்திற்குப்போ யங்கு ஸ்ரீதேவியையும் முக்கண்பிரானையும் (6) விதிப்படிப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் பண்ணிவிட்டு மிகுந்த பக்தியுடன் தன்திறமைக்குத் தக்கபடியேதாகிலும் கொஞ்சம் காணிக் கையளித்து விட்டதின்மேல்(7) நியமத்துடன் விரதத்தைமுடித்து ப்போட்டு மகாபரிசுத்தம் பொருந்தியபக்தர்களோடுகூடப் பகலிலாவது இரவிலாவ தசனம் புஜிக்கவேண்டும். (8) அல்லதுசுந்தமானகனிவர்க்கங்கள்அப்பங்களையாவதுவிரதத்திற்குக்கெடுதிசம்ப வியாத மட்டிலுண்ணவேண்டும். இவ்விதமாகவெந்த மானிடர் மகிமை பொருந்திய சுக்கிரவார விருதத்தையாசரிக்கின்றாரோ (9) அவருக்கு ஸ்ரீகௌரீ தேவி பிரஸன்னமாகி நிச்சயமாய் ச்சகல வபீஷ்டங்களையும் கொடுக்கின்றாள். கேளீர்! தாணிதேவர்களே! சுக்கிரனிவ்விரதத்தை யாசரித்ததினாற்பல சுபங்களையடைந்து (10) மேலுமிவ்விரதம்தன்பெயரால் விளங்கி வரவேண்டுமென்ற பெரிதான வரத்தையு மடைந்தான். பிறகீசுவரியுமவனு க்கிவ்வாறு வரமளித்து விட்டந்தர்த்தான மடைந்தனள்.(11) மகாலக்ஷ்மியு மிவ்விரதத்தை யாசரித்ததினால் தா னிலக்ஷ்மித்தன்மையை யடைந்தாள். ஸரஸ்வதியு மிதன் மகிமையால்தான்சகலவித்தைகளுக்கு மதிபதித்தன்மையை ப்பெற்றாள்.(12) சிலவரசர்களிதனை யாசரித்ததினா விராஜியத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள். இதினால் வெகுப்பிராம்மணர்களும் சீக்கிரத்தில்கல்வி, சம்பத்து, பிள்ளைகள் இவைகளையடைந்திருக்கிறார்கள். (13) மேலும் சில வைசியர்களும் சூத்திரர்களும் ஸ்ரீமகாதேவிக்கு ப்பிரியமுள்ள இவ்விரதத்தை யாசரித்துச் சகல வேண்டுதல்களையும் கைக்கொண்டிருக்கிறார்கள். (14) வெகுபெயர்களிவ்விரதத்தை யனுஷ்டித்ததினா லளவற்ற போகங்களையு மனுபவித்து முடிவினில் ஸாலோக ஸாமீப ஸாரூப்பிய பதவிகளை யடைந்து (15) பிறகு மறு பிறப்பற்ற நிகரில்லாதஸாயுஜ்ய பதவியை யுமடைந்திருக்கிறார்கள். ஓ! முனிவர்களே! ஸகலபாவங்களையும் தொலைப்பிக்கலுற்ற ஈசுவரியினிரண்டாவது விரதத்தை ச்சொல்லுகிறேன். (16)

ஐப்பிசிமாதம் சுக்கிலபக்ஷத்திலான வியமதேவனுக்குரிய தாகிய (பரணி) நக்ஷத்திரத்தில், ஸ்ரீ கௌரீதேவிக்கு மிகவும் பிரியமுள்ளதும், மகாச் சிரேஷ்ட முமான இவ்விரத த்தை யாசரித்தல் வேண்டும். (17) இத்தினமதிற் காலையி லெழுந்து நித்திய கருமங்களை முடித்துக் கொண்டதின்மேல் ஸ்ரீமகா தேவியை (முற்கூறிய) சுக்கிரவார விரதமுறைப்படி பூஜை பண்ணிவிட்டு (18) தன்திறமைக்குத் தக்கபடி யடியார்களுக்கு த்தானம் கொடுத்தல் வேண்டும். பிறகுதேவாலயத்திற்

குப்போய் ஸ்வாமியையு மம்மனையும் நமஸ்காரம் பண்ணித் (19) திற மைக்குத்தக்கபடி யுள்ளசில தனத்தையும் காணிக்கை யளித்து விட்டு த்தன் விடுதி சேர்ந்து சர்க்கரையால் கலக்கப் பட்ட சுபகரமான புளைப் பயறை த்தானம் கொடுத்து ப்போட்டு (20) மறுநாள் பரிசுத்தனுகி ச்சிவனடி யார்களுட னசனம்புஜித்தல் வேண்டும். பூர்வத்தில் அழகு பொருந்திய விந்திராணி யானவளிவ்வி ரதத்தை யாசரித்த தினால்(21) கேளீர்! தாணிதேவர்களே! தேவராஜனுக்குப்பிராணனுயகியாயிருக்கும் தன்மையை ப்பெற்றாள். உஷா தேவியு முமாதேவிக்கு மிகவும் பிரிய முள்ளதான இவ்விரதத்தை யனுஷ்டித்த தினுற்(22) சூரியனுக்குப்பி ரிய நாயகியாகி யவன்சரீரத்தில்வியாதியாலுண்டாயிருந்தகாடினியத்தை த்தீர்த்து வைத்தாள். (23) ஓ! முனிவர்களே! இன்னுமனேகம் பெயர் களிவ்விர தத்தை யாசரித்து நல்லகதி யடைந்திருக்கி றார்கள்.

இப்போது சகல வேண்டுதல்களையு மளிக்கவுற்றதான, நவ மிதிதியிலாசரிக்க த்தக்க விரதத்தை யெடுத்துக் கூறுகின்றேன். (24) பிரதமைதிதி முதற்கொண்டோர் கும்பத்தில் ஸ்ரீமகேசுவரியைஸ்தாபித் துவைத்து (முற்கூறிய) சுக்கிரவார விரதமுறை ப்படியே யவ்வம்மனை நாள்தேறும் பூஜைபண்ணி வந்து (25) பிறகுநவமி தினத்திற் காலையி லெழுந்து பொறியடக்கமுற்றவனும் மகா பரிசுத்தமுள்ளவனுமாகி நல் ல தீர்த்தத்தில் ஸ்நாநம்பண்ணி முறைப்படி சந்தியனுஷ்டானங்களை மு டித்துக்கொண் (26) டடியார்களுக்கு வேண்டிய பயன்களை யளிக்கவு ற்ற வம் மகாதேவியைப் பூஜைசெய்துவிட்டுச் சகல வாபரணங்களாலு மலங்கரிக்கப்பெற்றவர்களும், பரிசுத்தம் பொருந்தியவர்களுமான மங் கையர்களைப் பூஜித்ததின்மே (27) லப்பேர்க்கொத்தவர்களி லொன்ப துபெயர்களுக்கு நல்ல மெல்லிய வஸ்திரங்களைக் கொடுத்துவிட் டம் மானிட னவர்களுக்குப் பாயஸம், அன்னம், அப்பம், வியஞ்சனம் முத லியவைகளாற் போஜனமளித்துப் (28) பிற கப் புத்திசாலியானவ ன டியார்களோடுகூடத் தான் புஜிக்கவேண்டும். பிற்பாடு தசமியாகிய ம றுநாளில் காலையிலெழுந்து நியமத்தோடு (29) நித்தியகருமங்களை மு டித்துக்கொண்டு பிறகு சிவாலயம்போய்த் தரிசித்துக் கேளீர்! முனிவ ர்களே! அந்த ஸ்ரீமானுனவன் சிவனடியார்களோடுகூடப் போஜனம்ப ண்ணவேண்டும். (30) பூர்வத்தில் விஷ்ணு இவ்விரதத்தை யாசரித்ததி னுல் தமது பல சத்துருக்களைச் சயித்திருக்கிறார். அப்படியே மற்ற னேகம்பேர்களும் விஜயசக்தி, வீரசக்தி, (31) வித்தியாசக்தி, பாக்கிய சக்தி, சிறந்தநான பல சக்தி யிவைகளை யடைந் திகத்திலும் மகா வசா

த்தியமான சிறந்த போகங்களை யனுபவித்துப் (32) பிறகு சிவலோக மடைந்து சிவ ஸாயுஜ்யத்தைக் கொண்டிருக்கிறார்கள். ஆகையா லெந்த மானிடோத்தமர்க ளிப் புண்ணிய விரதத்தை யாசரிக்கின்றார்களோ (33) அவர்கள் சகல சத்திகளையும் கைக்கொண்டு பரமகதியை யடைகின்றார்கள். எவர்க ளற்புதமான இவ்விரத மாகாத்துமியத்தைப் பற்றிய இவ்வத்தியாயத்தைப் படிக்கின்றார்களோ, அல்லது கேட்கின்றார்களோ கேளீர்! தாணிதேவர்களே! அவ்வெல்லோர்களும் நல்லகதியை யடைவார்களே. (34)

முப்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௬—வது அத்தியாயத்தி னர்த்தம்.

மகா பரிசுத்தமான விக்கினேசுவர விரதத்தை யெடுத்துச்சொல்லுகின்றேன். சூரிய னிருடபராசியி லிருக்கும் (வைகாசிமாதம்)போதுள்ள சுக்கிலபக்ஷத்திலான வெள்ளிக்கிழமைதினத்திற் (1) காலையிலே யெழுந்துப் பொறியடக்கமுற்றவனும், மகா பரிசுத்தமுள்ளவனுமாகி நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு தங்கம், வெள்ளி அல்லது (2) செம்பினு லமைக்கப்பட்ட வோர் விக்கினேசுவர மூர்த்தியைச் சம்பாதித்துக்கொண் டாவாகனம் பண்ணி மகா பரிசுத்தம்பொருந்திய பற்பலவித புஷ்பங்களாலும் நேர்த்தியான பத்திரங்களாலும் பூஜைசெய் (3) தத் தேவாதிதேவருக்கு நேர்த்தியான குழக்கடைமுதலியவைகளை நைவேத்தியம்செய்துவிட்டுப் பிறகு சிவாலயத்திற்குச் சென்றங்கு ஸ்ரீசிவபிரானையும் விக்கினேசுவரரையும் (4) பிரதக்ஷிணம்பண்ணிச் சந்தோஷத்தோடு திறமைக்குத் தக்கபடியுள்ள சில தனத்தைக் காணிக்கைகொடுத்து முறைப்படி நமஸ்காரம்பண்ணிவிட்டுத் தன் வீடுதிசேர்ந்துப் (5) பிராம்மணர்களுக்குத் தன் நிர்வாகத்துக்குத் தக்கபடி சில தானங்களைக் கொடுத்துப்போட்டுக் கேளீர்! வேதியர்களே! கனிவர்க்கம் அல்லது பழங்களையாவது சுத்தான்னத்தையாவது போசனம்பண்ணவேண்டும். (6) பிறகு மறுநாள்காலையில் ஸ்நானம்பண்ணி முறைப்படி நித்தியகருமங்களை முடித்துக்கொண்டதின்மே லவ் விக்கினேசுவர விக்கிரகத்தை மகா புத்திசாலியான வோர் சிவனடியாருக்குத் தானம்செய்துவிட்டுப் (7) பிறகவ் விரதக்காரன் சிவபக்தர்களோடுகூட

ப் போஜனம்பண்ணவேண்டும். பூர்வத்தி லத்திரிமாமுனிவ ரிப் புண்ணியவிரதத்தை யனுஷ்டித்ததினல் சிரேஷ்டர்களான சூரியசந்திரர்களிருவரையும் பிள்ளைகளா யடைந்தார். (8½) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இதன் மகிமையால்தான் பிரம்மன் பிரம்மத்தன்மையை யடைந்தார். (9) குபேரனு மிதன்மகிமையால் சங்கநிதி பதுமநிதிகளை யடைந்தான். மேலும் சில தேவர்கள், மானிடர்கள், இருடிகள் இவர்களெல்லாம் முந்தி யிவ் வுத்தமமான விரதத்தை (10) யனுஷ்டித்ததினு லளவற்ற பராக்கிரமங்களையுடைய ஸ்ரீ விக்கினேசுவரருக்குப் பிரியமுள்ளவர்களாகிச் சிவலோகமடைந்து மோக்ஷம்பெற் றிருக்கிறார்கள். (11) மேலும் யாதாமொருவர் விநாயகசதுர்த்திதினத்திலும், ஸ்ரீவிக்கினேசுவரருக்கு மிகவும் பிரியமுள்ளதும், சகல பாவங்களையும் தொலைக்கவுற்றதுமான சிறந்த விரதத்தை முறைப்படி யாசரிக்கின்றாரோ (12) அவர் ஸ்ரீ விக்கினேசுவர ரருளினற் சகல போகங்களையு மனுபவித்துப் பிறகு விக்கினேசுவரலோகத்தை யடைவதிற் சந்தேகமேயில்லை. (13) பூர்வத்தில் ஸ்ரீ விஷ்ணுவானவ ரற்புதமான விச் சதுர்த்திவிரதத்தை யாசரித்ததினுல் ஸ்ரீ விநாயகக்கடவுளுக்குப் பிரியமுள்ளவராகி ஸ்ரீகௌரீதேவியின் சாபத்தினின்று விடுபட்டவராகித் தான் கொண்டிருந்த பாம்புத்தன்மையை யொழித்து மரைமலருக்கு நிகரான கண்களை யடைந்து கேளீர்! பிராம்மணோத்தமர்களே! துரிதமாய் மறுபடியும் விஷ்ணுத்தன்மையை யடைந்தார். (14-15) முந்திப் பிரம்மன்முதலிய தேவர்க ளிவ் விரதத்தின் மகிமையால் ஸ்ரீ விக்கினேசுவரரை மெத்தப் பக்தியுடன் தரிசித்து நமஸ்காரம்பண்ணலானைகயி (16) லப்போது கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ விநாயகமூர்த்தியானவர் மிகவும் மெதுவாய் நர்த்தனம்பண்ண, அவ்விநோதத்தைக் கண்டு சந்திரன் நகைத்துத் தானு மப்படியே நர்த்தனம்செய்யலானைகயில் (17) ஸ்ரீ கணேச ரவ்வாறு தம்மைப் பரிகாசம் செய்யலான வச் சந்திரனைச் சபித்தனர். ஆகையால் தா னவ் விநாயகசதுர்த்தி தினத்தில் சந்திரனை யொருவரும் பார்ப்பது கூடாது. (18) எந்த மனிதன் பார்க்கின்றானோ அவன் மிகுந்த பாவியாகிவிடுவது நிச்சயமே! கேளீர்! தாணிதேவர்களே! பூர்வத்தில் ஸ்ரீ கிருஷ்ணபிரா னவ் விநாயகசதுர்த்தி தினத்தில் சந்திரனைப் பார்த்ததினால் (19) சகல ஜனங்களாலு மிகழப்பட்ட வோர் பெரும் சாபத்தை யடைந்தார். ஆகையால் யாதாமொருவர் மகா புண்ணியமும், சகல பாவங்களையும் நாசம்செய்யவுற்றதுமான இவ்விரதத்தை யாசரிக்கின்றாரோ அவர் ஸ்ரீ விக்கினேசுவரருக்கு மிகவும் பிரியமுள்ளவராகிச் சகல

போகங்களையு (20½) மனுபவித்து முடிவினில் சிவஸாயுஜ்யத்தை ய டைகின்றானென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். (21) மேலு மனேகம்பெயர்கள் ஷஷ்டிதிதியிலாசரிக்கத்தக்க ஸ்ரீ விக்கினராஜனுடைய வற்புதமான மற்றோர் விரதத்தை முறைப்படி யாசரித்துக் கணேச னருளினால் நல்ல கதியையடைந்திருக்கிறார்கள். பூர்வத்தில் வித்தியுன்மாலியென்ற வோரரசன் ஸ்ரீ கணராஜனுடைய ஷஷ்டிவிரதத்தை யனுஷ்டித்ததினாற் பிணிகள் தீரப்பெற்றவனாகி வஜ்ஜிரத்தையொத்த தேகத்தை யடைந்து (23) திலோத்தமையென்ற மாதரைக்கொண் டவளுடனிரமித்துச் சிறந்த பல பிள்ளைகளையும் பெற்று வேண்டியமட்டிலுள்ள போகங்களையு மனுபவித்துவிட்டு (24) சரீரத்துடன் நேர்த்தியும் சிரேஷ்டமுமான கைலைகிரியை யடைந்து கேளீர்! முனிவர்களே! விக்கினேசுவரருக்கு மிகவும் பிரியமுள்ளவனாகிப் பிறகு மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைந்தான். (25) மேலு மிவ்வாறாக இவ்விரதத்தை யனுஷ்டித்தின்னு மனேகம்பெயர்கள் மோக்ஷமடைந்திருக்கிறார்கள். ஓ! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ விக்கினேசுவரருடைய விரதங்க ளிவ்விதமென்பதை யெடுத்துரைத்தேன். (26) எவர்க ளிவ் வத்தியாயத்தைப் படிக்கின்றார்களோ, கேட்கின்றார்களோ, அல்லது கேட்பிக்கின்றார்களோ அவர்கள் நிகரற்ற போகங்களை யனுபவித்துவிட்டுப் பிறகு மோக்ஷத்தை யடைவார்களே! (27)

முப்பத்தாறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௭—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மற்றதான ஸ்ரீஸுப்பிரம்மணிய ஸ்வாமியினுடைய விரதத்தைச் சொல்லுகின்றேன். சூரியன் துலாராசியிலிருக்கும் (ஐப்பிசிமாதப்) போதுள்ள முதல்வெள்ளிக்கிழமை தினத்தில் (1) காலையிலெழுந்து சுத்தம்பண்ணிக்கொண் டாறுமுகக் கடவுளை யிருதயகமலத்தடத்தில் தியானம்பண்ணிவிட்டு நித்தியகருமங்களை முடித்துக்கொண்டதன்மேற் (2) சகல பாவங்களையும் தொலைக்கவுற்ற வப்பேர்க்கொத்த சிறந்த விரதத்தை முறைப்படி முடித்தல் வேண்டும். மேலும் மற்றவைகளான கார்த்திகை, கந்தஷஷ்டி ஆகிய

மூன்று சிறந்த விரதங்களையு மாகமமுறையின்படி யெந்த மானிடர்களாசரிக்கின்றார்களோ (3½) அவர்கள் சகல போகங்களையு மனுபவித்து ஸ்ரீமுருகேச னாக்கினையின்படி முடிவில் மோக்ஷ மடைகின்றார்கள். (4) ஓ! தாணிதேவர்களே! பிரமவிஷ்ணுக்கண் முதலிய தேவர்க ளிவ்விரதங்களை யாசரித்ததினால் முந்திப் போர்முகத்தில் நேரலான மிகக் கொடிய வசுரர்களையெல்லாம் கொன்றுபோட்டார்கள். (5) மேலும் திக்பாலர்கள் திசைகளுக் கதிபரானார்கள். பூர்வத்தில் முசுகுந்தசக்ரவிருத்தி யிவ் விரதங்களை யனுஷ்டித்ததினா லியுத்தத்திற் சகல சத்துருக்களையும் ஜயித்துவிட்டுக் கணாதிபத்தன்மையை யடைந்தான். (6½) முந்தித் தவசிகளிற் சிறந்தவர்களான நாரதர் முதலியவர்கள் (7) மறுபிறப்பிற் கசாத்தியமான நிகரற்ற நித்தியத்தன்மையை யடைந்தார்கள். ஓ! முனிவர்களே! பூர்வத்தில் சிலர் பிள்ளையில்லாதவர்களாயிருந் தனேகம்பிள்ளைகளைப் பெற்றிருக்கிறார்கள். (8) மேலும் மற்ற சிலர்களைசுவரியத்தையும் ஞானயோகத்தையு மடைந்து மோக்ஷம்பெற்றிருக்கிறார்கள். இம்மூன்றுகளி லொன்றையாயினும் ஸ்ரீ குகபிரானுக்குத் திருப்தியாகும்படி யெவ ராசரிக்கின்றாரோ (9) அவர் வேண்டிய பயன்களையெல்லாம் பெற்று மெத்த வுத்தமமான சிவலோகத்தை யடைந்து ஸ்ரீ கந்தனாருளினால் முடிவில் மோக்ஷம்பெறுகின்றார்கள். (10) இப்படியிருக்கையி லிம்மூன்று விரதங்களையும் ஸ்ரீ முருகேசனுக்குத் திருப்தியாகும்படி யெந்த மானிட ராசரிக்கின்றாரோ ஓ! தாணிதேவர்களே! ஸ்ரீ குகனுக்கு நிகரான வப்பேர்க்கொத்தவரின் மகிமையை யார்தானறிவார்கள். (11) யாதாமொருவர் ஸ்ரீ கந்தபிரானுக்குப் பிரியமுள்ளதான இவ்வத்தியாயத்தைப் படிக்கின்றாரோ அல்லது கேட்கின்றாரோ அவர் சகல போகங்களையு மனுபவித்துப்போட்டு முடிவினில் மோக்ஷமடைகின்றார். (12)

முப்பத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௮—வது அத்தியாயத்தினர்த்தம்.

மகாத்துமாவாகிய ஸ்ரீ பைரவமூர்த்தியினுடைய மூன்று விரதங்களையும் சொல்லுகின்றேன். சூரியன் மகர இராசியிலிருக்கும் (தைமாதம்) போதுள்ள முந்தியதான ஞாயிற்றுக்கிழமையிலும், (1) சித்திரை, ஐப்பிசி மாதங்களி னிருபரணி நக்ஷத்திரங்களிலு மதிகாலையிலெழு

ந்து ஸ்ரீ பைரவமூர்த்தியை மனதினால் தியானித்துவிட்டு (2) நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு தங்கம், வெள்ளி அல்லது செம்பினாலு ள்ள மகாத்துமாவாகிய ஸ்ரீ பைரவவிக்கிரகத்தை (3) யமைத் ததனைப் பற்பல புஷ்பங்களாற் பூஜைசெய் தன்னத்தினாற் செய்யப்பட்ட பாயச ம் முதலியவைகளை நைவேத்தியம்பண்ணித் (4) துதிசெய்துகொண் டே பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவிட்டுத் திறமைக்குத் தக்கபடி சிவனடியார்களுக்குத் தானம் செய்யவேண்டும். (5) பிற்பாடு சிவால யத்திற்குப் போயங்கு ஸ்ரீ முக்கண்தேவரையும், தேவேசரான பைரவ மூர்த்தியையும் விதிப்படி பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவிட்டுத் தி றமைக்குத்தக்கபடி பக்தியுட னேயாகிலும் காணிக்கை கொடுக்கவேண் டும். ($6\frac{1}{2}$) பின்பு தன் வீடுசேர்ந்து மத்தியான்னகாலத்திற் சிவனடி யார்களோடுகூடம் (7) கனிவர்க்க மல்ல தப்பங்களையாவது அன்னத் தையாவது ஒருதடவை புசித்துவிட்டு மறுநா ளப் பைரவ விக்கிரகத் தைப் பக்தியுட னடியார்க்குத் தானம் செய்யவேண்டும். (8) ஓ! பிரா ம்மணோத்தமர்களே! ஸ்ரீ பைரவமூர்த்தியினுடைய விம் மூன்று விரத ங்களையு மெந்தமானிட ரனுஷ்டிக்கின்றாரோ அவர் தமதிச்சையின்படி வேண்டிய போகங்களை யனுபவித்துவிட்டுப் (9) பிறகு ஸ்ரீ பைரவரி ன் கிருபாவசத்தினாற் சிவலோகமடைந்து முடிவினில் மோக்ஷமடைவதி லாச்சரியமேயில்லை.(10) பூர்வத்தில் மிகுந்த காந்தியுடைய சூரியனிவ் விரதத்தை யனுஷ்டித்ததினால் கோடிசூரியப் பிரகாசம்பொருந்தியபைர வகவசத்தைப்பெற்றார். (11) ஆகையால் கேளீர்! தாணிதேவர்களே! எந்த மானிட ரிம்மூன்று விரதங்களையு மனுஷ்டிக்கின்றாரோ அவரகண் டபோகங்களையு மனுபவித்துப்போட்டு முடிவினில் மோக்ஷமடைகின் றார். (12)

மகா புத்திசாலியாகிய ஸ்ரீவீரபத்திரருடையதான மற்றோர்விர தத்தை யெடுத்துக் கூறுகின்றேன். பிராம்மணர் ஞாயிற்றுக்கிழமையி ற்காலையிலெழுந்து சுத்திசெய்துகொண்டு(13) சகலநித்தியகருமங்களை யும்முறைப்படி முடித்துவிட்டு தங்கத்தினாலாவது வெள்ளியாலாவது ம காவலிமைபொருந்திய வீரபத்திரஸ்வாமியை(14) யமைத்துக்கொண் ட ப்பதுமையை யபிஷேகம் முதலியவைகளால் விதிப்படி பூஜைபண்ணிப் பற்பலவித பக்ஷியங்களோடுகூட நைவேத்தியஞ் செய்துவிட்டுத்(15) தி றமைக்குத் தக்கபடி சிவபக்தராகிய புலவருக்குத் தானம்கொடுத்து, பி றகு தேவாலயத்திற்குப்போய் ஸ்ரீ பரமேசுவரனையும் வீரபத்திரரையு மப் புத்திசாலியானவன் முறைப்படி பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்

தேகாகிலும் காணிக்கையு மளித்துவிட்டுப் பின்பு தன்வீடுசேர்ந்து(17) கேளீர்! தாணிதேவர்களே! சிவனடியார்களோடுகூடப் போஜனம் செய்யவேண்டும். பிறகு மறுநா ளப் புத்திசாலியானவ னவ் விக்கிரகத்தை யோர் சிவபக்தருக்குத் தானம்செய்துவிடல்வேண்டும். (18) எந்த மானிட ரிவ்விதமாக வீரபத்திரருடைய மகா பரிசுத்தமான விரதத்தை யாசரிக்கின்றாரோ அப்புண்ணியவானுக்கு வீரியம், தேஜசு, சம்பத்து இவைகளுண்டாகும். (19) இவ் விரதத்தை யனுஷ்டித்ததினல் பிரம்மன் ஸ்ரீபரமேசுவரனுக்குச் சாரதியாகும் தன்மையை யடைந்தார். ஓ! தாணிதேவர்களே! தேவேந்திர னிந்திராணியையும் கற்பகவிருக்ஷத்தையுமடைந்தான். (20) முந்தி வெகுப் பிராம்மணர்கள் சிவஞானமடைந்திருக்கிறார்கள். அனேகமரசர்கள் மிகுந்த ஐசுவரியத்தையும், சிறந்த வெற்றியையும் பெற்றிருக்கிறார்கள். (21) மேலுமனேக வைசியர்களும் சூத்திரர்களு மிம் மகா விரதத்தை யனுஷ்டித்ததினல் சிரேஷ்டர்களான பல பிள்ளைகளைப்பெற்று வேண்டிய போகங்களையு மனுபவித்துவிட்டு மோக்ஷம்பெற்றிருக்கிறார்கள். (22) ஆகையா லெந்தமானிடோத்தமர்க ளிவ் விரதத்தை யாசரிக்கின்றார்களோ அவர்கள் ஸ்ரீ வீரபத்திரருளினல் விஜயத்தையும் புத்திரர்களையுமடைந்து (23) முடிவிற் சிவலோகமடைவார்களென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். இவ் வத்தியாயத்தை யெவர் படிக்கின்றாரோ, கேட்கின்றார்களோ, அல்லது கேட்பிக்கின்றார்களோ அவர்கள் நிகரற்ற போகங்களை யனுபவித்துவிட்டு ஸ்ரீ பரமேசுவரனுடைய பரமபதத்தை யடைவார்களே! (24)

முப்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௩௯—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! முனிவர்களே! சகல விரதங்களு மிப்பிரகாரமாக வுரைக்கப்பட்டாயிற்று. இப்போது சிவபுண்ணியங்களை ஜாக்கிரதையாய்க் கேளுங்கள். (1) கேளீர்! தாணிதேவர்களே! ஸ்ரீ பரமேசுவர னிச்சையின்படி ஸாலோகம் முதலிய பதவிகளை யடைவதற்காக, ஸ்ரீ சிவபிரானுடைய லிங்கம் விக்கிரகங்கள், உமையம்மன், ஷண்முகன், விநாயகர், பக்தர்கள், கணம் முதலியவர்கள் இவர்களுக் கனேகமனேகம் பிராகாரங்கள் அட்டாலங்கள், கொடுங்கைகள், நேர்த்தியான வாலயங்கள் இவைகளைப்

பணப்போசைகொள்ளாமற் கட்டிவைத்துக் (2-4) கூடுமானால் செம்பு, பொன், கல் முதலியவைகளா லவர்களி னுருவங்களையும் பக்தியுடனமைத்து முறைப்படி பிரதிஷ்டையும்பண்ணி (5) யபிஷேகம் செய்து பலவித மாலைகளா லலங்காரம்பண்ணி வஸ்திரங்கள், சந்தனம், நைவேத்தியம் முதலியவைகளையு மவர்களுக் களித்துவிட்டுப் (6) பெரும் ஜுவாலையுடைய பல தீபங்களேற்றி மற்ற வுபசாரங்களையும் பண்ணவேண்டும். மேலும் பசுமாடுகள் வாங்கிவிட்டுத் தாசிகளைத் திட்டம்செய்துவைத்துத் (7) தன் திறமைக்குத்தக்கபடி நிலங்களும் தோட்டங்களும் விடவேண்டும்." மேலும் சுவாமிக்காக வாபிகள், கிணறுகள், தடாகங்கள், விருக்ஷங்கள் இவைகளை யுண்டுசெய்துவைத்து (8) வாகனம் தேர் முதலியவைகளையும் செய்து அப்புலவனுனைவன் ஸ்ரீபரமேசுவரனுக்கு மிகுந்த முழக்கத்துட னுற்சவங்கள் செய்துவைக்கவேண்டும். (9) மேலும் ஜீர்ணமாய்ப்போன வாலயங்களைப் பழுதுபார்த்துவைத்துத் தினந்தோறு மாலயமிஸ்திப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவரவேண்டும். (10) கேளீர்! தரணிதேவோத்தமர்களே! மேன்மையடைவதற்காக ஸ்ரீ சிவபரமாத்துமாவுக் கிவ்வாருகிய புண்ணியங்களை யென்றுஞ் சகல முயற்சியுடனும் செய்துவரவேண்டும். (11) மேலும் ஸ்ரீசிவபிரானைப் பூஜைசெய்யுங் குருக்கள்மாருக்கு வீடுகட்டிவைத்துந் தன் திறமைக்குத் தக்கபடி வீட்டுக்கு வேண்டிய தான்னியம் முதலிய சாமான்களையும் கொடுத்துவரவேண்டும். (12) தன் குருவைச் சந்தித்தவிடத்தில் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்யவேண்டும். மேலு மிவ்விதமாய்த் தன் குருவுக்குச் செய்யவேண்டிய கடமைகளை யென்றும் முயற்சியுடன் செய்துவரல்வேண்டும். (13) ஓ! தரணிதேவர்களே! மேலும் மிகவும் பக்தியுடையவனுகிச் சிவனடியார்களுக்கு வீடுகளைக்கட்டிக்கொடுத்து வீட்டிக்குவேண்டிய சாமான் முதலியவைகளையும் வஸ்திரங்களையு மவர்களுக்குக் கொடுக்கவேண்டும். (14) இதேவிதமாய்ச் சிவபுராணங்கள், விபூதி ருத்திராக்ஷங்கள், மகா புண்ணியமான சிவலிங்கங்கள், ஆபரணங்கள் (15) அன்னம் இவைகளை யடியார்களுக்கு மெத்தப் பக்தியுடன் கொடுக்கவேண்டும். மேலு மடியார்களை யெதிரிற் சந்தித்தாலுடனே யெழுந் தவர்களைத் தரிசித்துப் பக்தியுடன் (16) வந்தனித்து மகா புத்திசாலித்தன்மையா யவர்களோடு வெகுமானத்துடன் சம்பாஷித்து, இவ்வாறு முதலிய, அடியார்களுக்குரிய காரியங்களை நிர்வகித்துவரவேண்டும் (17) குருக்கள்மார்களாகிய வடியார்களிடத்தும் சிறந்த பக்தியைப் பாராட்டிவரவேண்டியதோ டிவர்களுடைய காரியங்களுக்கும் மனதினுல்கூட விரோதம் நினைக்கக்கூடாது. (18) சிவபக்தர்க

ளுக்கும், சிவபுண்ணியங்களிற் சிறந்தவரும், சிவச்சுவரூபியுமான குரு வர்க்கும் வாக்கு, மனது, சரீரம், தனம் முதலியவைகளாலெல்லா மெப்போதும் மிகுந்த சந்தோஷத்துட னுதவிசெய்துவரவேண்டும். (19½) ஓ! முனிவர்களே! இவைகள்தான் சிவபுண்ணியங்களென்று சிறந்த முனிவர்களால் மதிக்கப்படுகின்றன. (20) எந்த மானிடோத்தமர்களிச் சிவபுண்ணியங்களைச் செய்கின்றார்களோ அவர்கள் மெத்தப் புண்ணியாத்துமர்களாகிப் பார்மீதனேகம் போகங்களை யனுபவித்து (21) மிகுந்த புத்திரபௌத்திரர்களால் நிரம்பப்பெற்றவர்களாகி யளவற்ற சுகங்களையு மனுபவித்துப்போட்டவர்கள் தங்க விமானத்தோடு சிவலோகமடைந்தங்கு (22) ஸ்ரீ சிவபிரானுக்கு நேசமுள்ளவர்களாகி யனேகமாயிரம் கற்பகோடிகாலமளவு மானந்தப்பட்டிருந்து முடிவினில் சிவசாயுஜ்யத்தை யடையலாவதிற் சந்தேகமேயில்லை. (23) யென, இவ்வாறு குருவுடைய வசனத்தைக் கேட்டதன்மேல் முனிச்சிரேஷ்டர்கள் மிகுந்த சந்தேகமுற்றவர்களாகிச் சிவனடியார்களி னிலக்ஷணத்தையும் குருவினி லக்ஷணத்தையும் சந்தோஷத்துடன் முந்தி வினவிக்கொள்ளலானபின் (24½) லவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டுச் சிறந்த புராணிகரான குருமுனிவர் (25) ஸ்ரீ பரமேசுவரனுடைய பக்தர்களின் லக்ஷணத்தை யெடுத்துக் கூறியதாவது:— ஓ! வேதியர்களே! தேவர்கள், அசுரர்கள், அரக்கர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், முனிவர்கள், மானிடர்கள், பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் இவர்களிலும் சங்கரஜாதியார் முதலிய வெல்லோர்களிலும் மகாத்துமர்களான சிற்சில சிவபக்தர்களிருக்கின்றார்கள். (26-27½) ஓ! முனிவர்களே! இவர்களுக்கெல்லாம வர்ணாசிரமங்களின் கட்டுப்பாடுமில்லை. (28) அவ்வெல்லாச் சிவபக்தர்களும் கேவலம் மகேசுவரனைச் சேர்ந்தவர்களென்றே நினைக்கப்படுகின்றார்கள். அவர்களெல்லாம் சகல வேதங்களாலும் சம்மதிக்கப்பட்டவர்களான அதிவர்ணாசிரமிகளென்று கூறப்படுகின்றார்கள். (29) ஓ! வேதியர்களே! அம் மகாத்துமர்களுக்கு வெளிக்குறிகள் பத்தும், உள்குறிகள் மூன்றும், வெளிக்கு முள்ளுக்கும் பொதுவானவை பத்து மூன்றானவென்று கூறப்படுகின்றன. (30) அவைகளோவென்றால்:— விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்தலொன்று; குருவைச் சேவித்தலிரண்டு; ஸ்ரீ சிவபிரானைத் துதித்தல் மூன்று; (31) ஸ்ரீ ஜகதீசனுடைய திருநாமங்களை யுச்சரித்தல் நான்கு; அம் மகாதேவனைப் பூஜித்தலைந்து; (32) மகா புண்ணியமான சிவாலயத்தைத் தரிசித்தலாறு; சிவபுராணங்களைக் கேட்குதலேழு; (33) அடியார்களை வந்தனித்தலெட்டு; சிவனடியார்களின் வீட்டிற் போஜனம்

செய்தலொன்பது;(34) சிவபக்தான குருவுக்குக் கொடைகொடுத்தல் பத்து; ஆகிய விப்பத்தும் வெளிக்குறிகளெனப்படும். (35) மனதினுல் ஜபித்தலொன்று; ஸ்ரீ மகேசுவரனை மனதினுல் பூஜித்தலிரண்டு; கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பரப்பிரம்மத்தைப் பிரத்தியக்ஷமாய்ப் பாவித்தல் மூன்று; ஆகிய விம்மூன்று முட்குறிகளென்று புராணங்களை யறிந்த மாமுனிவர்களாற் சொல்லப்படுகின்றன. (36-37) ஓ! வேதியர்களே! மேற்கூறிய வுள்வெளிக்குறிகள் பதின்மூன்று மெப்போ தெவர்களுக் கிருக்கின்றனவோ அப்போ தப்போர்க்கொத்த மகாத்துமர்களுக்குப் பக்தர்களுக்குரிய மற்றப் பத்துக்குறிகளு முண்டாகிவிடும். (38) அவைகளோவென்றால்:— தழதழக்கலுற்ற கண்டத்தொனியின் மாறுதலொன்று, நாவின்புறட்டலிரண்டு; உதடுகளின்துடித்தல்மூன்று, (39) மெய்நடுக்கல் நான்கு; மயிர்களின்சிலிர்த்தலைந்து; வியர்வையாறு, (40) இடறிநடக்குதலேழு; கண்ணீர்சொரிதலெட்டு: அழுதலொன்பது, பரவசமடைதல்பத்து; (41) ஆகிய விப்பத்தும் பக்தர்களுக்குரிய குறிகளென்று ஸ்ரீ சிவபிரானுற் சொல்லப்பட்டதே! எந்த மகானுபாவர்களுக் கிம்மூன்றுவித சின்னங்களு மிருக்கின்றனவோ (42) அவர்கள் சகல லோகங்களுக்கும் முக்கிய பரிசுத்தர்களான சிவபக்தர்களென்று நினைக்கப்படுகின்றார்கள். என்றாலும் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்திருக்கும் சில சிவபக்தர்க (43) ளிடத்தில் மேற்கூறிய சின்னங்களிருப்ப தறியப்படாதிருக்கினும் சிவநேசனுகியவ னப்போர்க்கொத்த சிவபக்தர்களைக் கண்டமாத்திரத்தில் பக்தியுடன் வந்தனம் பண்ணவேண்டும். (44) ஸ்ரீ சிவபிரான், குரு, பக்தர்கள், இவர்களை வந்தனித்துத் துதிப்பவர்கள் மிகுந்த சந்தோஷத்தோடு சகல வேண்டுதல்களையும் கைக்கொண்டு (45) புத்திரபௌத்திரர்களோடுகூட மிகுந்த போகங்களை யனுபவித்துக்கொண்டு நோயுற்றவர்களாயும் திடசரீரமுள்ளவர்களாயு மிங்கு வெகுகாலம் வாழ்ந்துவிட்டு (46) முடிவினில் பற்பல விரத்தினங்களால் விநோதமான விமானத்திலேறிக்கொண்டு சூரியலோகம், சந்திரலோகம், இன்னும் மற்றத் தேவர்களின் லோகம் இவ்விடங்களிலுள்ள தேவர்கள், ஜகங்களுக் கதிபர்களான திக்பாலர்கள்,(47½) பிரம்மன், விஷ்ணு, இருடீசுவரர்கள் இவர்களுடனும், வெகு சந்தோஷத்தோடு முந்திச் செல்லாநின்ற வின்னும் மற்றெல்லோர்களுடனும், தேவதுந்துபி முழக்கங்களுடனும், நான்குபக்கங்களினு மிறைக்கப்பெற்ற மலர்மாரிகளுடனும், (49) நர்த்தனம்செய்யாநின்ற வப்ஸரஸ்திரீகளாலும், கானம்செய்யலுற்ற கின்னரர்களாலும் சூழப்பெற்றவனுகித் திவியசரீரத்தை யடைந்து ஸ்ரீசிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ள சிவலோகஞ் (50) சென்ற

ங்கு ஸாரூப்பியபதவியடைந்து ஸ்ரீ பரமேசுவரன் திருச்சன்னிதியி லிரு ந்துவிட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! முடிவினில் சிவஸாயுஜ்ஜி யத்தை யடைவார்களே! (51) ஆகையால் மகாத்துமாவாகிய ஸ்ரீசங்க ரனுடைய மகிமை யெவ்விதமோ அதேவிதமாய்ச் சிவபுண்ணியங்களுக் குள்ள மகிமையையு மெந்தனு லெடுத்துரைக்க வசாத்தியமே! (52) பூ ர்வத்தி லம்மையானவள் ஸ்ரீ மகேசுவரனிடமிருந்து மிகவு முத்தமமான விச் சிவபுண்ணியத்தை மெத்தச் சந்தோஷத்துட னிவ்விதமேகேட்டு (53) மிக வாச்சரியம் கொண்டவளாகித் துரிதமாய்த்தமதாசனத்தினி ன்றெழுந்து ஸ்ரீமகேசுவரனை மூன்றுப் பிரதக்ஷிணங்கள்செய்து வந்தனி த்துவிட்டுப்(54) பிரஸன்னராகிய ஸ்ரீஸர்வேசுவரனை நோக்கி மந்தகாஸத் துடன் திருவசனமுரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ! இப்பேர்க்கொத்த சிவபுண்ணியத்தினுல் பிராணிகள்(55) தேவரீரை யறிந்தவர்களாகித் தே வரீருடைய ஸாயுஜ்யபதவியை யடையவேண்டு" மென, கருணாமூர்த்தி யான ஸ்ரீ சிவையம்மனு லெதிரிலிவ்வா றுரைக்கப்பட்டதன்மேல் (56) "ஓ! கேளாய்! பெண்ணே! பிராணிகளா லிமது மெத்த வுத்தமமான புண்ணியத்தை யறியத்தகுவ தெளிதல்ல; ஆனுல் சகல பசு புண்ணிய ங்களையும் * செய்து முதிர்ந்தவர்களான, மகா பரிசுத்தமுடைய வந்தக் காரணத்தை யுடையவர்களால்மட்டில்தான் சிவபுண்ணிய மெளிதினிலறி யத்தகும்;(57) மிகவும் கேவலர்களான மற்றவர்களுக்குச் சிவபுண்ணி ய மெவ்விதமாய்க் கிடைக்கும்? (58) ஆகையால் ஸகல முயற்சிகளா லும் பசு புண்ணியங்கள் மிகுதியாய்ச் செய்யப்பட்டதின்பேரில்தான் சிவபுண்ணியங்களில் மனப்பிரவிருத்தி நேரிடுமேயின்றி வேறுவிதத்தா லில்லை" (59) யென்று பூர்வததில் ஸ்ரீ தேவாதிதேவரால் பார்வதியம் மைக்குத் திருவாக்குரைக்கப்பட்டது. கேளீர்! முனிவர்களே! இதற் குமே லுங்களுக்கு மெத்த நேர்த்தியான புண்ணிய கதைகளை யெடுத் துக் கூறுகின்றேன். (60)

முப்பத்தொன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

* இ-ள் ஸ்ரீபரமேசுவரன் பசுபதி யானதால் அவரே 'பதி' யெனவும் மற்ற விஷ்ணு முதலிய தேவர்களும், இன்னும் பிரபஞ்சங்களி லுள்ளவெல்லாப் பொரு ள் களும் 'பசு' வெனவும்படும். ஆகையாலப் பேர்க்கொதத சிவபிரானுக்குரிய பு ண்ணியமே'பதிபுண்ணிய'மென்றும், மற்றத்தெய்வங்களுக்குரிய,பற்பலகருமங்க ளாற் செய்யப்படக்கூடிய புண்ணியங்களெல்லாம் 'பசுபுண்ணிய' மென்றும்சொ ல்லப்படும்: அனேக ஜன்மங்களில் மற்றத்தெய்வங்களுக்குரிய பக்தி, யாகாதி கருமங்கள், பற்பல விதமான தருமங்கள், இயாத்திரைகள் முதலிய பசுபுண்ணி யங்களைச் செய்து முதிர்ந்தவர் களாயிருப் பவருக்கே சிவ பக்தியில் மனப்பற்றுத லுண்டாகு மென்பது கருத்து.

## உபதேசகாண்டம் ௪0-வது அத்தியாயத்தின் சாரம்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! மறுபடியும் சிவபுண்ணியத்தின்ம
கிமையை யுங்களுக் கெடுத்து விளக்குகின்றேன்; அதனைக் கவனமாய்க்
கேட்பீர்களாக. (1) கோசலதேசத்திற் கதிபனான அஜனென்கிற ரா
சனிருந்தான். அவனுக்கு மிகவும் ரூபலாவண்யம் பொருந்தியவர்களு
ம், மெத்த மிருதுவான மேனியைக் கொண்டவர்களுமான நான்கு பெ
ண்கள் பிறந்தார்கள். (2) மகா புத்திசாலியான அவ்வரச னவர்களுக்
காக ஸ்வயம்வரமண்டபம ஜோடித்து (3) கீர்த்தியான பல ராஜகுமா
ரர்களைத் தருவித்தான். அந்த ராஜபுத்திரர்களெல்லா மக்கலியாணம
ண்டபத்தில் வந்திருந்தார்கள். (4) பிற்பாடவ் வரசன் கன்னிமார்களு
மங்கு வந்தவர்களைப் பார்த்தவளவ ளவர்களில் தங்களுக்குப் பிரியப்ப
ட்ட ராஜகுமாரனுடைய கையைப் பிடித்துக்கொண்டார்கள். (5) மூத்
தபெண்ணானவள் நிஷததேசத்திற் கதிபனான மகேந்திரனையும், இரண்
டாம்பெண் கம்புதேசாதிபனான ஸாரங்கனையும், (6) மூன்றாம்பெண்
காம்போஜதேசாதிபனான ஸோமாசியென்பவனையும், நான்காம்பெண் கொ
ங்கணதேசாதிபனான விசாலாக்ஷனையும் கணவர்களாய்க் கொண்டார்கள்.
(7) இப்பிரகாரமா யிப்பெண்களெல்லாம் கழுத்துகளில் மாலையைப்
போட்டவர்களைப் புருஷர்களாய்க் கொண்டதன்மேல் மிகுந்த வைபவத்
தோடு கலியாணம் முடிக்கப்பட்டது. (8) பிறகு சுற்றத்தார்களைக் கன
ப்படுத்துவதில் விருப்பமுற்றவனான அவ்வரச னம்மாப்பிள்ளைகளுக் க
னேகம் திரவியங்களையும், தன் பெண்களுக் கனேக மாடையாபரணங்க
ளையும் கடகங்களையும் வெகுமதிகளாய்க் கொடுத்து (9-10) மிகுந்த பு
த்திசாலியான வப் புண்ணியவா னவர்களுக்குச் சதுரங்கசைனியங்களை
யும், கொடுத்துத் தன் பெண்களோடுகூட அவர்களை மெத்தச் சந்தோ
ஷத்துட னவரவர்கள் தேசத்திற் கனுப்பினான் (11½) பிற்பாடந்த ரா
ஜகுமாரர்களெல்லாம் சேர்ந்து புறப்பட்டுப் (12) பட்டணத்துக்கு வெ
ளியிற் சென்று தங்கள் தங்கள் தேசத்திற்குப் போவதற்காக வெல்
லோரு மொன்றுகூடிப் பேசிக்கொண்டிருக்குமளவில் கேளீர்! தரணி
தேவர்களே! (13) அப்போதங்கு மகா இருடீசுவரரான விசுவாமித்
திரர் வரலாகி யந்த ராஜகுமாரர்களை யவரவரின் பெயரைச்சொல்லிக்
கூப்பிடுகையி (14) லவர்கள் வாத்தியங்களின் சத்தத்தினாலும் வார்த்
தைபேசுவதின் மும்முரத்தினாலும் வேறு கவனம் கொண்டவர்களாகிக்
கேளீர்! தரணிதேவர்களே! அத் தவசிச்சிரேஷ்டரின் கூப்பிடுதலைக்
கேட்கவில்லை. (15) பிறகவ் விசுவாமித்திரர் மெத்தக் கோபங்கொண்

டவராகி யந்த ராஜகுமாரர்களையும், நான்குபெண்களையும்தவிர (16) மற்றுள்ள சகல சைனியங்களையும், சிறந்த திரவியங்களையுமுடனே சாம்பலாகிவிடும்படி சபிக்க; (17) அப்போதே யவைகளெல்லாம் சாம்பலாகிவிட்டன. பிற்பா டவ் விராஜகுமாரர்களு மவர்களது பெண்டிர்களும் பயத்தினால் நடுக்கமுற்றவரானார்கள். (18) அப்போ தம் மாமுனிவ ரவர்களைநோக்கி வசனமுரைத்ததாவது:— "ஓ! ராஜகுமாரர்களே! நீங்கள் நம்மைப் பாராமலும் நாமுரைத்தவார்த்தையைக் கேளாமலு மிருந்துவிட்ட (19) படியால் பாவிகளாகிய நீங்கள் குருடர்களும் செவிடர்களுமாகி யிக்கொடிய காட்டினி லலைந்துகொண் டிருந்தக்கடவீர்களே (20) யின்றி நீங்கள் கிராமங்களிலாவது பட்டணங்களிலாவது வசிக்கத்தக்கதில்லை; மேலும் நீங்கள் பெண்டிர்களோடு புணரில் (21) னுங்கள் தலைகள் வெடித்துப்போகக்கடவன" வென் றம் மாமுனிவர் சபித்துப்போட்டுத் தம தாசிரமத்திற்குச் சென்றுவிட்டனர். கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! (22) பிற கப்படியே யச் சாபவசத்தினா லந்த ராஜகுமாரர்களெல்லாம் குருடர்களும் செவிடர்களுமாகி யக் காடுதனிலே கிழங்கு, காய், கனிகளைத் தின்றுகொண்டு பெண்டிர்களால் வழிகாண்பிக்கப்பட்டவர்களாகி மிகுந்த துக்கத்தோ டலைந்துவந்தார்கள். (23½) இவ்வா றவ் வரசர்க ளக் காடுகளில் திரிந்துகொண்டிருக்கையில் (24) தவசிகளிற் சிறந்தவரான ஸ்ரீ அகஸ்தியபகவா னங்கு விஜயமாக, அப்போ தம் மாமுனிவரை யந்த ராஜகுமாரிகள் தங்கள் கணவர்களோடுகூடப் பார்த்து (25) வந்தனம்பண்ணி மிகுந்த துக்கத்தினாற் பீடிக்கப்பட்டவர்களாகித் தங்கள் வரலாற்றை யறிவித்துக்கொண்டதாவது:— "ஓ! கருணைக்கடலாகிய ஸ்வாமீ! இனி எங்களுக்கெப்போ தெந்தவுபாயத்தினால் சாபத்தினின்று விடுதலையுண்டாகுமென் றுண்மையாய்ச் சொல்லியருளவேண்டும்; (26½) ஓ! இருடீசுவரரே! தேவரீரைச் சரணமடையலான வெங்களை யிரக்ஷித்தருளவேண்டு" (27) மென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன்மே லவ் வகஸ்தியமாமுனிவர் மிகவும் கிருபைகூர்ந்தவராகி யதற்குபாயம் சொல்லியருளியதாவது:—(28) "ஓ! கேளீர்! ராஜகுமாரர்களே! நீங்கள் சகல பாவங்களையும் தொலைக்கவுற்ற சிவபுண்ணியத்தைச் செய்வீர்களாகி னுங்களுக்குச் சாபம் தீர்ந்து சகல வைசுவரிசங்களும் கைகூடலாகுமென்பது நிச்சயம். (29) மேலு முங்க ளிஷ்டத்தின்படி யிராஜியமும் கைகூடலாகி முடிவினில் ஸாயுஜியபதவியை யடைவீர்களென்பதிற் சந்தேகத்திற் கிடமேயில்லை. (30) பிராணிகளுக்குச் சிவபுண்ணியத்தைத்தவிர நல்ல கதிக்கு வேறு வழியில்லை. அதனைப்பற்றி யிப்போ துங்களுக்கோர் பழைய கதை சொல்லுகின்றோம்; அதனைக் கேளுங்கள். (31)

முந்திக் கேசபுரமென்ற வோர் நேர்த்தியான பட்டணத்தில் ஸாதாரணனென்ற வோரரச னெப்போது மந்தப்புரத்தில் மனைவியோடு கூட இரமித்துக்கொண் டிருப்பதிலே முயன்றவனா யிருந்தான். (32) அப்போ தோர்நாள் தவசிகளிற் சிரேஷ்டரான மகிமைபொருந்திய வஸிஷ்டமாமுனிவ ரவனுடைய அரண்மனைக்குள்வந்து சில நாழிகையளவு காத்துக்கொண்டிருந்ததின்பேரி (33) லவ் வரசன் தன் மனைவியோடு கூட வெளியில்வந் தம் மாமுனிவரை வந்தனித்து விநயத்தினால் வணக்கமுற்றவனாகி யெதிரி லஞ்சலிகொண்டு நின்றான். (34) அப்போ தம்முனிவ ரவ் வரசனை நோக்கி மெத்தக்கோபத்துட னுரைத்ததாவது:—"அடா! மூடராஜனே! நாமிங்குவந் திரண்டு, மூன்று, நான்கு நாழிகைகளாயின; நாமிவ்வளவுகால முன்வீட்டுவாசலில்வந்து காத்திருந்தும் நீ கர்வத்தினால் வெளியில் வாராதிருந்தபடியால் (35-36) பெண்டீரோடு கூட வுந்தனுக்குக் காட்டினிலே சஞ்சரிக்கும்படியான வேடத்தன்மை வாக்கடவது. மேலு மிப் பட்டணத்தில் வசிக்கும் ஜநங்களெல்லாம் மிருகங்களும், பக்ஷிகளுமா யாகக்கடவார்கள். (37) இப்பட்டணமும் மகா பயங்கரமான காடாகக்கடவ" தென்று சபித்துவிட் டம்மாமுனிவர் துரிதமாய்த் தமதாசிரமத்திற்குச் சென்றுவிட்டார்.(38) பிறகெல்லாம் வஸிஷ்டமுனிவரின் தவமகிமையா லவ்வாறே யாகிவிட்டன. அவ்வரசன் பெண்டீரோடுகூட விக் காடுதனில் வேடவுருவத்தோடு சஞ்சரித்து வந்தான். (39) இப்படியிருக்கையி லோர்நா ளங்கு திரிணபிந்துமாமுனிவர் தோன்றலாயினர். அப்போ தவ்வரச னவருடைய நல்வரத்தை விசாரித்துவிட்டுத் தன் சங்கதிகளையெல்லா மவருக்கறிவித்தான். (40) அப்போ தம்முனிவர் கிருபாவசத்தினா லவ் விருவர்களையும் பார்த்துச் சகல துக்கங்களையும் விலக்கிவைக்கலுற்ற சிவபுண்ணியத்தைச் சடிதியாய் மனதி லாலோசித்துக்கொண்டு (41) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவரவ் வேடனைப்பார்த்து 'அடா! இக்காட்டினில் ஸ்ரீ சிவபிரானுக்குப் பிரியமுள்ளதான சிவாலயமிருக்கின்றதா?' வென்று வினவ, (42) அதற்கரசன் 'ஓ! சுவாமீ! இதோ இட்டத்தில் மெத்த வுத்தமமானப் பிரம்மேசுவரமென்றோ ராலயமிருக்கின்ற' தென்றான். அதுகேட் டம்மாமுனிவர் மறுபடியு மவ் விருவர்களையும் நோக்கித் திருவாக்குரைத்ததாவது:—(43) "நீங்க ளிருவர்களு மிச் சிவாலயத்திலுள்ள புல், சருகு, கொடி யிவைகளையெல்லா மெடுத்துத் தூரத்திலெறிந்துவிட் டெப்போதும் ஸ்வாமிக்கு மம்மனுக்கும் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் பண்ணிக்கொண் டச் சிவாலயத்தில்தானே வசியுங்கள். (44½) அப்பகவானே யுங்களைக் காலதாமசமன்றியி விரக்ஷிக்கலாவா" (45) னென்

றுரைத்துத் தம்மாசிரமத்துக்குச் சென்றுவிட்டார். பிறகவ் விருவர்களு மவரது வசனத்தைக்கேட் டவ்வாறே நடந்துவருகையிற் (46) பதினொருநாட் சென்றபின்மே லக்காடானது துரிதத்தில் திரும்பவும் பட்டணமாகிவிட்டது. (47) ஜனங்களெல்லாம் மிருக பக்ஷிகளின்தன்மையைவிட்டு முன்போலாகிவிட்டார்கள். அவ்வரசனும் தன் மனைவியோடுகூட அரசத்தன்மையையடைந்து (48) மகா சந்தோஷத்தோடு முயற்சியுடன் முன்போ லரசுசெலுத்திவந்தான். பிற்பாடவன் 'ஓ! கோ! சிவபுண்ணியத்தின் மகிமையாலல்லவோ நமக்கு முந்திய உருவம் வரலாயிற்' (49) றென் றாலோசித்துக்கொண்டு சிவபுண்ணியத்தை மிகுதியாய்ச் செய்துவந் தவ் வரசன் தன் மனைவியோடுகூடத் தேகத்தின் முடிவில் நல்ல கதியை யடைந்தான். (50) ஆகையால் ஓ! ராஜகுமாரர்களே! நீங்களும் பரமாத்துமாவாகிய ஸ்ரீ சிவபிரானுடைய புண்ணியங்களைச்செய்து சிவாக்கினையா லிராஜியம், ஸம்பத்து, ரூபம் இவைகளையடையக்கடவீர்க" (51) ளென, இவ்வா றுரைக்கலான வம் மாமுனிவரைத் திரும்பவு மவர்கள் மனைவிகளோடுகூட வந்தனித்து "ஓ! ஸ்வாமீ! சிரேஷ்டமான வப் புண்ணிய மெவ்வாறு செய்யத்தக்க" (52) தென்றுரைத் தவர் திருவடிகளில் தண்டம்போல் வந்தனித்தார்கள். அச்சமயத்தில் ஸ்ரீ சிவபிரானிடத்துமிகவும் பிரியமுள்ளவரான வோர் சிவப்பார்ப்பானங்கு வந்தனர். (53) இவரங்குள்ள அமிருதேசுவரரென்ற வோர் சிவலிங்கத்தை மிகுதியாய்ப் பூஜைசெய்கின்றவர். பிறகு ஸத்குருவாகிய வப் பிராம்மணரைப் பார்த்துத் தவசிகளிற் சிறந்த அவ் வகஸ்தியமாமுனிவர் திருவாக்குரைத்ததாவது:—(54) "ஓ! சிவப்பிராம்மணரே! நீர் புஷ்பகிரி வமிசத்திற் பிறந்தவரான மகிமைபொருந்திய லோககுருவல்லவோ? மிகவும் துக்கமடைந்தவர்களான இவர்களையும் நீர் சீடர்களாய்க் கொண் (55) டும்மா லாராதிக்கப்படுவோரான ஸகல பாவத்திரள்களையும் தொலைப்பிக்கவுற்ற ஸ்ரீ அமிருதேசுவரசுவாமியை யிவர்களுக்குச் சேவைபண்ணிவைத் தவர் சன்னிதியிலிருந்துகொண் டிவர்களையவருக் கூழியம்செய்யும்படி வைத்து (56) ஓ! புலவரே! நீர் லோககுருவாகியதால் தயவுட னிவர்களைத் துக்கக்கடலினின்று கரையேற்றிச் சுகமடையும்படி செய்யலாவீர்" (57) ரென் றவருக்குச் சொல்லியருளியவரை யவர்களோடு சேர்த்துவிட்டுத் தாம் கைலாஸத்திற்குச் சென்றுவிட்டார். அம்மாமுனிவர் போனவுட னவர்க ளச் சிவப்பார்ப்பானைத் தண்டனிட்டுத் (58) தெய்வ நம்பிக்கையுள்ளவர்களாகி 'ஓ! ஸ்வாமீ! தேவரீ ரெங்களை யிரக்ஷித்தருளவேண்டு' மென் றவரைப் பிரார்த்தித்துக்கொண்டார்கள். பிறகவ் வேதியரு மவர்களது வசனத்தைக் கேட்ட

தன்மேல் மிகவும் துக்காதுரராகி (59) "ஓ! மகா பாக்கியசாலிகளான ராஜகுமாரர்களே! என்று மடியார்களைக் காப்பதில் முயன்றவரும், பக்தியா லறியத்தக்கவரும், ஆதியந்தமற்றவருமான ஸ்ரீ ஜகதீசனிருக்கும்போது நீங்களொன்றுக்கும் வியசனப்படவேண்டாம். (60)

பூர்வத்தில் மகாத்துமாவான காசியபமுனிவரின் சீடனான முக்கலனென்ற வோர் பார்ப்பா னவாருகினிலிருந்து சாஸ்திரம் படித்துக்கொண்டிருந்தான். (61) இவ்வா றவன் படித்துக்கொண்டிருக்கையிலோர்நா ளம்முனிவர்மீ தவன தெச்சில்நீர் விழுந்தது. உடனே தவசிச்சிரேஷ்டரான வக் காசியபமுனிவர் கோபத்தோ டவனைச் சபித்திட்டதாவது:—(62) "அடா! மூடா! இப்போர்க்கொத்த வுந்தவெச்சில் நம்மீது விழுந்தபடியால் மிகவும் கர்விஷ்டனாகிய நீ சீக்கிரமதி லெருமைக்கடாவாகக்கடவா" யென, (63) அவ்வா றவர் சபித்தமாத்திரத்தி லவனுடனே யெருமைக்கடா உருவத்தைக் கொண்டவனாகிப் பட்டணத்துக்கு வெளியில் புற்களை மேய்ந்து திரிந்துகொண்டே (64) யங்கிருந்த ஸ்ரீ சக்தீசுவரசுவாமியின் பிராகாரத்திற்குப்போ யங்கு சுற்றிலுமுள்ள புற் குப்பல்களை மேய்ந்துகொண்டே மூன்றுதடவை சுற்றிவந்(65) தப்பிராகாரத்தின் மதிளின்பேரிலிருந்த புற்களையும் மேய்ந்துவிட்டுக் கொடிமரத்தினண்டைக்கு வந்து சன்னிதியைப்பார்த்தமாத்திரத்தி (66) லப்போதே சாபத்தினின்று விடுபட்டதாகிச் சுந்தரமான தனது நிஜவுருவத்தைக் கொள்ளலாயிற்று. உடனே யம் முக்கலன் ஸ்வாமியைப் பிரதக்ஷிணம்செய் தடிக்கடி நமஸகாரம்பண்ணினன். (67) அதனையெல்லாமவனைச்சேர்ந்த மனிதர்கள் கண்டாச்சரியமடைந்து சிவபுண்ணியத்தின் மகிமையை யவர்களெப்போதும் புகழ்ந்ததாவது:—(68) "ஓ! கோ! ஓரெருமைக்கடாவானது வெருமஞ்ஞானத்தினல் புற் குப்பல்களை மேய்ந்து திரிந்துகொண்டிருந்தமாத்திரத்தில் பயங்கரமான தன தெருமையுருவத்தைவிட்டுத் தன் நிஜவுருவத்தைக் கொள்ளலாயிற் றல்லவோ! (69) ஆகையால் ஸ்ரீ பரமேசுவரனுடைய புண்ணியத்தின் மகிமையை யார்கா னறியத்தகு" மென் றம் மனிதச்சிரேஷ்டர்களெல்லா மொருவரோடொருவ ரெப்போதும் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.(70) ஆகையால் கேளீர்! ராஜகுமாரர்களே! நீங்களு மிங்கு ஸ்ரீ மகேசுவரனுடைய புண்ணியத்தைச்செய்யுங்க" ளென, பிற்பாடு ராஜகுமாரர்கள் "ஓ! கருணைக்கடலாகிய ஸ்வாமீ! எந்தச் சிவபுண்ணியங்களையாங்க ளனுஷ்டிக்கத்தக்கதென்பதைப் பாவிகளாகிய வெங்களுக் கெடுத்துரைக்கவேண்டு" (71½) மென, இவ்வா றவர்களது வசனத்தைக்கேட் டம் மாமுனிவர் திருவாக்கருளியதாவது:—(72) "ஓ! ராஜகுமாரர்களே! நீங்கள் நான்

குபுருடர்களுமாய்ப்பராபரக் கடவுளாகிய ஸ்ரீஅமிருதேசுவரசுவாமியைச் சோம்பலின்றியி லெப்போதும் பிரதக்ஷிணம் செய்துவந்து திருப்திசெய்யவேண்டும். (73) இப்பெண்களி லொருத்தி ஸ்வாமியண்டையில் பெருக்கி மெழுகிவரல்வேண்டும்; மற்றொருத்தி ஸ்ரீ பிரபுவுக்கு அபிஷேகதீர்த்தம் கொண்டுவரட்டும்; (74) மற்றோர்த்தி ஸ்வாமிக்காகக் காட்டிலுள்ள மலர்களைக் கொய்துவரட்டும்; மற்றவள் நைவேத்தியத்திற்காகக் கிழங்கு, காய், கனிகளை யிங்குக் கொண்டுவரட்டு" (75) மென்றவர்களுக்குப் பணிவிடைகள் சொல்லிக்கொண்டே அவர்களை அழைத்துவந்து கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அச் சிவப்பிராம்மணரன்றைக்கு ஸ்ரீ மகாதேவரைப் பக்தியுடன் பூஜைசெய்துபோட்டு (76) மறுநா ளவரவர்களுக்குப் பணிவிடைகளுக்கு வேண்டிய பண்டங்களைத் தருவித்துக் கொடுத்துவிட்டு நாள்தோறு மவர்களோடுகூட ஸ்வாமியைப் பூஜைபண்ணிவந்தார்.(77) அவர்களு மிவ்விதமாய் ஸ்வாமிக்குக் கிழங்கு காய்களை நைவேத்தியம்செய்துகொண்டு வருமளவி லிருபத்தோரு தினங்கள் சென்றதின்மேற் (78) பிற கிருபத்திரண்டாம் நாளில் ஸ்ரீ சிவாக்கினையா லவர்களுக்குக் கண்களும் காதுகளும் முன்போலாகிவிட்டன. (79) அதன்பிற கவர்கள் மெத்த வாச்சரியமுற்றவர்களாகி ஸ்ரீ மகேசுவரரைத் தண்டனிட்டுப் பின்னுமெட்டுத்தினங்கள்வரையில் பக்தியுடன் பிரதக்ஷிணம் செய்துவருகையில் (80) சிவாக்கினையால் ஸகலப்பிராணிகளும், சதுரங்கசைனியங்களும்,பொருட்களும்முன்போலுண்டாகிவிட்டன. (81) அந்நான்கு பெண்கள், புருடர்களும் முன்போலவே யௌவனப்பருவத்தையடைந் தப்போ தச் சிவப்பார்ப்பாரைப் பக்தியுடன் வந்தனித்துப்போட்டு (82) 'ஓ! பிராம்மணேந்திரரே! தேவரீ ரருளினால் நாங்களெல்லோர்களும் சாபத்தினின்று விடுபட்டவர்களாயினோ" மென, இவ்வா றவர்கள துபசாரவார்த்தையைக் கேட் டப் பிராம்மணரவர்களைப் பார்த்துச் சொல்லியதாவது:—(83) "ஓ! ராஜகுமாரர்களே! நீங்கள் பாவங்கள் தொலையப்பெற்றவர்களாகிச் சிவபுண்ணியத்தைச் செய்துவந்த மகிமையினாலே யுங்களுக்குக் கண் காதுகளுமுண்டாகி (84) யுங்கள துபொருட்களும் கைக்கு வரலாயிற்றென்பது நிச்சயமே! ($84\frac{1}{2}$) இப்போது நீங்கள் மாமுனிவரின் சாபத்தினின்று விடுபடலானீர்க ளென்பதி லாக்ஷேபணையேயில்லை. (85) இனி நீங்களெப்போதும் தவறுதலின்றியிற் சிவபுண்ணியம் செய்துகொண்டு கவலையின்றி யரசுசெலுத்திவாருங்க" (86) ளென, இவ்வா றக் குருவின் வசனத்தைக்கேட் டவ் விராஜகுமாரர்க ளக் குருவை வந்தனித்துவிட்டுப் பிறகு பராபரக் கடவுளாகிய ஸ்ரீ அமிருதேசுவரசுவாமியை (87) யவர்கள் மு

றைப்படி யபிஷேகம் பண்ணியும், மிகுந்த பக்ஷிபபோஜியங்களால் நைவேத்தியம்செய்தும் திருப்திசெய்வித்துப் (88) பிறகவ் வாலயத்திற்குச் சுற்றிலுமுள்ள காடுகளை யழித்துக் குருவின்பெயரால் விளங்கும் லோக தருமிபுரமென்று பெயர்போன வோர் பட்டணத்தைக்(89) கட்டியப்புத்திசாலிகள் ஸ்வாமிக்கு மண்டப கோபுரங்களைக்கட்டிவைத்துடனே தேர், உற்சவம் முதலியவைகளையும் செய்வித்தார்கள்.(90) பிற்பாடந்த ராஜகுமாரர்கள் தங்கள் குருவுக்கு மிகுந்த தனங்களைக்கொடுத்துவிட் டவராதாக்கினையின்பேரில் தங்க ளரசாக்ஷியை யடைந்து ஸ்ரீ பரமேசுவரனுடைய கிருபாபலத்தினால் மிகுந்த வலிமைபொருந்தியவர்களும், சத்துருவற்றவர்களுமாகி மெத்தச் சந்தோஷத்துட னரசுசெலுத்திவந்து ($91\frac{1}{2}$) தங்க ளிராஜியத்தி லனேக சிவபுண்ணியங்களையும் நடத்திவந்தார்கள். (92) பிறகவர்கள் நாளளவிற் பல சாத்திரங்களிற் சிறந்தவர்களும், மெத்த விநயமுள்ளவர்களுமானவனேகம் பிள்ளைகளைப்பெற்றுத் தங்கள் மனைவிகளோடுகூட மிகுந்த புகழுட னிருந்துவந்தார்கள். (93) இப்படி யிருக்கையி லவர்க ளொருநா ளோரிடத்தி லேகாந்தமா யிருக்கும்போது தவசிகளிற் சிறந்தவரான ஸ்ரீ துர்வாஸபகவா னங்கு விஜயமாயினர். (94) அவரை யிவர்கள் கண்டு மிகுந்த பக்தியோடு வந்தனித்து "ஓ! ஸ்வாமீ! தேவரீ ரெல்லா மறிந்தவராகையா லெங்களுக் கென்ன பாவத்தினால் குருட்டுத்தன்மையும் செவிடுத்தன்மையும் கிடைக்கலாயிற்றென்பதை யெடுத்துக் கூறவேண்டு" (95-96) மென, இவ்வாறவர்களது வசனத்தைக் கேட்டதன்மே லம் மாமுனிவர் சற்றுத் தியானம்பண்ணிவிட்டு ஸ்ரீ பரமேசுவரன்மீது பக்திகொண்டவராகி விநயத்தினால் வணக்கமுற்றிருந்த ராஜகுமாரர்களை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:—(97)

"கேளீர்! ராஜகுமாரர்களே! இயவன தேசத்தி லாதித்தியபுரமென்றோர் பெரிய பட்டணமிருக்கின்றது. அங்கு மிகவும் பணக்காரனான மகிமைபொருந்திய விசுவாவசுவென்றோர் வணிகனிருந்தான்.(98) நீங்கள் நான்குபெயர்களு மவனுக்குப் பிள்ளைகளாயிருந்தீர்கள். அப்போது நீங்கள் வணிகமுறை வழியின்படிச் சொந்த வியாபாரத்திலே கவலைகொண்டிருந்தீர்கள். (99) 'அப்பட்டணத்தி லாதித்தியேசுவரஸ்வாமிகோவிலென்றோர் சிவாலயமிருக்கின்றது. அங் காலயத்திருப்பணி நடத்துவோனான வோர் மனிதனிருந்தான். (100) அப்புண்ணியவான் சிவாலயம் கட்ட முயன்றவனாகி யுங்களிடம் வந்து சிலத் திரவியத்தைக் கேட்க, (101) அப்போது நீங்கள் சந்தோஷத்தினால் 'தருகின்றோ' மென்றும் 'நாளைக்கர்கட்டும், நாளைக்காகட்டு' மென்று மப் பக்தனை யெ

ப்போது மலைக்கழித்துவந்தீர்கள். (102) அவ்வாறு வந்த பக்தனை நீங்கள் வியாபாரகர்வத்தினால் பார்க்கவுமில்லை. அவனுங்களைக் கூப்பிட்டுப்பேசியும் கர்வத்தினாலவன் சொல்லைக் கேட்கவுமில்லை. (103) பிற்பாடவனுங்களை யொழித்துச் சிவாலயந்தனிலே சுகமாயிருந்துவிட்டான். பிறகு நீங்கள் கப்பலேறித் தீவாந்தரத்துக்குப் போனபொழு (104) தங்கு நீங்க ளிறக்கலாகிக் காலபாசத்தினாற் கட்டுண்டு, முந்தி 'நீங்கள் சிவபுண்ணியத்திற்காகத் தனத்தைக் கொடுக்கின்றோ' மென்று சொல்லிவந்த (105) படியால் கேளீர்! ராஜபுத்திரர்களே! நீங்கள் பூபதியாயிருக்கும் தன்மையை யடைந்திருக்கின்றீர்கள். நீங்களவனுக்குத் தனத்தைக் கொடாமலு மவனைப் பாராமலு மவன் வசனத்தைக் கேளாமலுமிருந்துவிட்ட (106) படியா லுங்கள் தனங்களெல்லாம் நாசமாகி நீங்கள் குருடர்களும் செவிடர்களுமாகிவிட்டீர்கள். கேளீர்! அரசர்களே! நீங்கள் ஸ்ரீ பரமேசுவரனுக்குத் திருப்திசெய்தபடியா (107) லுங்களுக்குக் கண்களும் காதுகளும் முன்போலாகிவிட்டன. மேலு முங்களரசாக்ஷியும் முன்போ லுங்கள் வசத்தில் வரலாயிற்" (108) றென, இவ்வா றம் மாமுனிவரின் வசனத்தைக்கேட்ட நன்மே லந்த ராஜகுமாரர்க ளெல்லாம் சரியென்றே நிச்சயித்துக்கொண் டத்துர்வாசபகவானை (109) மிகுந்த பக்தியோடு வந்தனித் தவரை யாசிரமத்துக் கனுப்பிவிட் டவ் வரசர்கள் தங்க ளிராஜியங்களை நீதிவழுவாம லாண்டுவந்(110) தங்கங்கனேகம் சிவபுண்ணியங்களையும் நடத்திவந்து வெகுகாலமளவும் சத்துருவன்றியிற் சந்தோஷமா யனேகபோகங்களை யனுபவித்துவிட்டு முடிவினிற் சிறந்த விமானத்தி லேறிக்கொண்டு கைலாஸபதவியடைந்தார்கள். (111)

நாற்பத்தொராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் சக—வது அத்தியாயத்தின் ரர்த்தம்.

சம்புதேசத்தி லதிசுந்தரமான மாயாபுரமென்றோர் பட்டணமிருக்கின்றது. அதில் ஸற்புத்தியென்று பெயர்போன வோரரசனிருந்தான். (1) அவனுக்குப் பெயர்போன பராக்கிரமங்களைக்கொண்ட பீமன் முதலிய வெட்டுப் பிள்ளைகளும், சகல இலக்ஷணங்களோடுங்கூடியவோர் பெண்ணும் பிறந்தார்கள். (2) அவ்வரசன் தனதரசாக்ஷியை யொன்பது பாகங்களாய்ப் பிரித்துத் தன் பிள்ளைகளுக்கும் பெண்ணுக்குமாய்க்

கொடுத்துவிட்டுத் தான் காட்டுக்குப்போய்ச் செய்வதற்கசாத்தியமான தவத்தைச்செய்து(3) கேளீர்! மாமுனிவர்களே! ஸ்ரீமகாதேவருடைய பிரஸாதத்தினால் மோக்ஷத்தையடைந்தான். பிறகவனது பிள்ளைகளும் பெண்ணும் சத்ருக்களைக் கண்டிக்கலுற்றவர்களாகியிராஜியபரிபாலனம் செய்துவந்தார்கள். (4) ஆனாலப் பெண்ணானவ ளதிக விசேஷமா யெப்போதும் ஸகல தருமங்களையும் நடத்திவந்தாள். தருமங்களில் மிகவும் முயன்றவளான வப்பேர்க்கொத்த ராஜகுமாரியைப் பார்ப்பதற்காக மகா தவசிகளான ஸப்த இருடிகள் (5) மகா மங்களகரம்பொருந்திய அவளுடைய அரண்மனைக்குவந் தெப்போதும் தருமமார்க்கத்திலுள்ள வச்சிறந்த குமாரியை யங்கு கண்டு (6) சந்தோஷித்துக் கேளீர்! முனிவர்களே! பெருமைபொருந்திய அவர்களது திருவாக்குகளாலவளை க்ஷேமம் விசாரித்து "ஓ! நல்ல நோன்பினையுடைய சுந்தரீ! அடியாராகிய வுந்தனுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது: ஏனென்றால் சிவபுண்ணியம் முதலிய ஸகல தருமங்களு முந்தனால் மிகுதியாய் நடத்திவரப்படுகின்றனவல்லவோ! ($7\frac{1}{2}$) இவ்வுலகத்திலுள்ள வெல்லாப் பெண்களிலு மொருவிதத்திலு முனக்கிடானவர்களே யில்லை" (8) யென, இவ்வாறவர்களது திருவசனங்களைக் கேட்டப் பெண் ணவர்களுக்கு மறுமொழி யுரைத்திட்டதாவது:— "ஓ! இருடீசுவரர்களே! யான் புண்ணியங்களை யறியவே அறியேன்.(9) பதிபுண்ணியமே (சிவபுண்ணியம்) மெத்தச் சிரேஷ்டமானதென்று தேவரீர்களால் திருவாக்கருளப்பட்டதன்றோ! இப்பேர்க்கொத்த பதிபுண்ணியத்தை யெந்தயுந்தமர்கள் செய்து நல்லகதி யடைந்திருக்கிறார்க (10) ளென்பதைக்கேட்க மெத்த ஆவலுள்ளவளா யிருக்கின்றேன்" னென, இவ்வா றவளது வசனத்தைக் கேட்டதன்மே லவர்களில் மகா தவசியும், (11) புண்ணியாத்துமாவுமான கௌதமமாமுனிவர் மகிா பரிசுத்தம்பொருந்திய வோர் கதை சொல்லியதாவது:—

"ஓ! கேளாய்! பெண்ணே! பாஞ்சாலதேசத்தில் சோபனபுரமென்றோர் கீர்த்தியான பட்டணமிருக்கின்றது.(12) கேளீர்! தரணிதேவர்களே! அங்கு மாதவனென்றோர் மகிமைபொருந்திய வந்தணரிருந்தார். அவருக்கு ஸுந்தரியென்றோர் கீர்த்தியான பெண்ணிருந்தாள். (13) அவள் கரிபுரமென்ற பட்டணத்திலுள்ள புஷ்கரனென்ற வோர் பார்ப்பானுக்கு மனைவியாகி யவனோடுகூடச் சந்தோஷமா யிருந்துவருகையி (14) லஸ்திரீயானவள் வியபிசாரியாகித் தன் வீட்டிற் கயல்வீட்டிலுள்ள தங்கம்போன்ற மேனியுடைய வோர் பார்ப்பானோடு கலந்துவந்தாள். (15) ஓ! தரணிதேவர்களே! பிறகு நாளளவினி லதனையவளது

து புருட னறியவந்ததன்மே லவளைக் கட்டிக் கொடுமையாய்க் கைவா
ளினாலடித்தான். (16) பின்பு சிலகாலம் சென்றபிறகவளவனை விஷம்
கொடுத்துக் கொன்றுவிட்டுத் தான் கைம்பெண்ணானதின்பேரில் மிகவு
ம் காமவிகாரம் கொண்டவளாகிச் சோரபுருடர்களோ டிரமித்துக்கொ
ண்டு (17) கர்ப்பத்திற்கொண்ட பிள்ளைகளையெல்லாம் கொன்றுகொ
ண்டேவருகையி லோர் கர்ப்பமானது மிகுந்த மருந்தினாற்கூட விழாதி
ருந்தபொழு (18) தவளது சுற்றத்தார்களெல்லா மதனை யறிந்ததன்
மே லத்துர்நடைக்காரியை யூரைவிட்டுத் துறத்திவிட்டார்கள். பிறகவள
வர்களால் துறத்திவிடப்பட்டதன்மேல்பயம்கொண்டவளாகித்தேசம்தே
சமாயலைந்து (19) பத்தாவதுமாதத்தி லோரிடத்திற் பிள்ளையைப்பெ
ற்று மிகவு மிறக்கமற்றவளாகி யக் குழவியை விஷமிட்டுக் கொன்று
போட்டு(20) மறுபடியு மவ் வவிசாரியானவள் கள்ளப்புருடர்மீது காத
லுற்றவளாகிக் கிரீடித்துவருகையி லவரவர்களை நஞ்சிட்டுக் கொன்று
விட் டவரிடமிருந்த தனங்களைப் பறித்துக்கொண்டு (21) பிற்பாடு
தற்செயலாய்க் கிடைத்த வோர் பார்ப்பானோடு வஞ்சக புத்தியுட னிர
மித்துவருகையி லவனுக்கும் விஷமிட்டாள். (22) இவ்வா றவளவனு
க்குக் கொடுத்த விஷமெல்லாம் வீணாகிவிட்டபோ தவனை யொருநா
ளவள் காட்டுக்கழைத்துக்கொண்டுபோ யவனுடன் (23) கலந்துவிட்டு
ப் பிறகவன் தூங்கும்போ தவன்பேரி லோர் கல்லைத்தூக்கிப்போட்டுக்
கொன்றுவிட் டவன் வசமிருந்த தனத்தையெல்லா மப் பாதகி பறித்து
க்கொண்டுவிட்டாள். பிறகு தற்செயலா(24) யப்போ தரசன் வேவு
காரர்கள் மூலமா யவளது கொடிய நடையை யறிந்தவனாகி யவளது
முலைகளையும் மூக்கையுமறுத் தவளைத் தூரத் துறத்திவிட்டான். (25)
பிற்பா டவள் மூக்கறுபட்டவளாகியும் பாட்டைசாரிகளான புருடர்க
ளோடெல்லாம் புணர்ந்துகொண்டு மெத்தச் சாகஸத்துட னனேகம்
கெட்டகாரியங்களைச் செய்துவருகையி(26) லொருநா ளோர் மனிதன
ப்பேர்க்கொத்த விசுவாசப் பாதகியைத் தன் முண்டக் கையினாலடிக்க,
அவளதேக்ஷணத்தில் மடியலாகி யியமதூதர்கள்வந் தவளை யியமனண்
டைக் கிழுத்துப்போ யாக்கினையின்படி மகா கொடியதான நரகத்தில்
வீழ்த்தினார்கள்.(27½) உடனே மகா பலசாலிகளான சிவதூதர்களங்கு
வந்து கொடியர்களான வியமதூதர்களைத் துறத்திவிட் டவ்வாறு பீடிக்
கப்பட்ட வஸ்திரீயை மிகுந்த ஒளிபொருந்திய வோர் விமானத்தி லேற்
றிவைத்துக்கொண்டு சிவாக்கினையின்படி ஸ்ரீ சிவபிரானால் விளங்கப்பெ
ற்ற கைலைகிரிக்குக் கொண்டுபோ (29½) யங்கவளைத் தேவாதிதேவரு
டைய திருச்சன்னிதியில் சுகமாய்க்கொண்டுவிட்டார்கள்.(30) அப்போது

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவள் ஸ்ரீ உமாதேவியினுடைய ஸகிக்கூட்டங்களால் பூஜிக்கப்பெற்றவளாகி யச் சகிமார்களுடன்கூடத் தேவியருகினிற் சந்தோஷமாயிருந்துவந்தாள். (31) பிறகவ் வியமதூதர்க ளியமனிடஞ்சென் றவற்றையெல்லாம் சொன்னதின்மேல் தருமராஜ னவர்கள் சிவகணங்களினுயுதங்களால் பட்ட கொடும் துன்பத்தைக் கேட்டுக் கணுதிபதியாகிய சித்திரகுப்தனை நோக்கி ($32\frac{1}{2}$) "ஓ! புத்திசாலியே! இவளுக் கென்ன புண்ணிய மிருக்கின்றதென்பதை நன்றுயாலோசித் திங்கு சொல்லவேண்டு" மென,(33) இவவா றவனது வசனத்தைக்கேட்டுச் சித்திரகுப்தன் வசனமுரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ! இவளுக்குப் புண்ணியத்தினி லேசம்கூடவில்லை. இவள் மகா பாவபுத்திக்காரி"(34) யென்றப் புண்ணியவான் தருமராஜனை நோக்கியுரைக்கலாகையி லப்போது தவசிகளிற் சிறந்தவரான நாரதபகவா னங்கு வந்தார். (35) அப்போது தருமராஜ னம் மாமுனிவரைக் கண்டவுடன் துரிதமாய் வந்தனித்து வினவியதாவது:— "ஓ! தவசிகளிற் சிரேஷ்டரான ஸ்வாமீ! இப்போது தேவரீ ரெந்தத்தேசத்தினின் றிங்கு விஜயமானது? (36) தேவரீர் கண்டிருப்பதும் கேட்டிருப்பதுமான விசித்திரங்களையெல்லா மடியேனுக்குச் சொல்லியருளவேண்டு" மென, இவ்வி றவனது வசனத்தைக் கேட் டம்முனிவர் (37) "கேளாய்! தருமராஜனே! நா மிப்போதுஸ்ரீ பரமேசுவரனுங் காலயமான மலைகளிற் சிறந்த கைலைகிரியினின்று வருகின்றோம். அங்கு சிவதூதர்களுனது தூதர்களால் மிகவும் துன்பப்படுத்தப்பட்ட ஒருவார் ஸ்திரீயை விடுவித்துக்கொண்டு பராத்துமாவான ஸ்ரீ பகவான் சன்னிதியி லவளை விட்டதின்மேலவர்க ளோர் மண்டபத்தி லிருந்துகொண் டொருவரோடொருவர் பேசிக்கொண்டதாவது:—(39) "ஓ! கோ! இவளால் ஜன்மாந்தரத்திற் செய்யப்பட்ட புண்ணியத்தின் வலிமையால் கள்ளப்புருடன்பேரிலிவள் தூக்கிப்போட் டவனைக் கொல்லலான வக் கல்லை யங்குள்ளவர்க ளெடுத்தோர் சிறந்த சிவாலயம் கட்டுவதி லுபயோகித்தார்கள். அந்தப் புண்ணியத்தினு லெப்போதும் பாவங்களையே செய்துவந்த இப்பேர்க்கொத்த ஸ்திரீகூடச் சகல பாவங்களையு முதறிப்போட்டு மிகுந்த சந்தோஷத்தோடு கூடியவளாகி ஜுவலிக்கின்ற ஸ்ரீ மகேசுவரன் திருச்சன்னிதியையடைந்தாளன்றோ!" ($40$-$41\frac{1}{2}$) வென், இவ்வாறவர்களது வசனத்தைக்கேட் டதன்மேல் யாமுந்தனண்டைக்கு வரலானோ(42) மென, இவ்வா றந்நாரதமுனிவரது வசனத்தைக் கேட்டதன்மேல் தருமராஜன் 'ஓ! கோ! அப்படியா!' வென்று சொல்லிக்கொண்டு சித்திரகுப்தனை நோக்கிச் சொல்லியதாவது:—(43) "ஓ! கோ! கேளாய்! சித்திரகுப்

தா! அவள் மிகுந்த வோர் கெட்டநடைக்காரியானபோதிலு மக்கியான த்திலுற் புண்ணியஞ்செய்யப்பெற்றவளாகி யிப்பேர்க்கொத்த நல்ல கதியை யடையலாயினளன்றோ! இங்ஙனமாயின மெத்த வுத்தமமான விப்பேர்க்கொத்த ஸ்ரீசிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ளதாகிய சிவபுண்ணியத்தைத் தெரிந்தவர்களாகி யதனைச் செய்து நடக்கின்றவர்களின் மகா, மேன்மைபொருந்திய புண்ணியத்தின் மகிமையைப் பரமகாரணரான வம் மகேசுவரனைத் தவிர யாவர்தா னுண்மையி லறியப்போகின்றா" ரென்றா" ரென்று கௌதமமுனிவர் சொல்லிமுடித்தார். (45)

நாற்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௪௨-வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பா டவ் விராஜகுமாரியைப் பார்த் தங்கிரமாமுனிவர் கூறுகின்றதாவது:— "ஓ! கேளாய்! பெண்ணே! வங்கதேசத்தில் மகாசுத்தனென்றோர் மகிமைபொருந்திய வரசனிருந்தான். (1) மகா பராக்கிரமசாலியான அவ்வரசன் காட்டிற்குப் போய் வேட்டையாடுகையில் மிகுந்த வலிமைபொருந்திய வோர் பெரிய புலி யவனைக் கொன்றுபோட்டது. (2) பிற்பா டவனது மந்திரியும் சில திருடர்களோடு சண்டைபோட்டு மடிந்தான். அப்போது பூர்ணகர்ப்பவதியாயிருந்த அவ்வரசன் மனைவி பிள்ளைப்பெறலாகிக் (3) கேளீர்! முனிவர்களே! பிறகு தன் தந்தைவீடு சென் றங்கு வசித்துக்கொண்டிருந்தாள். பிறகு நாளளவிலே யவள் தன் புத்திரனோடுகூட வோர் சிவாலயம்(4) கட்டி யதனில் தன்பேரால் சிவப்பிரதிஷ்டையும் பண்ணிவைத்து நாள்தோறும் பூஜைசெய்தாலதின்மேல் ஸ்ரீ தேவாதிதேவனைப் பக்தியுடன் வணங்கிப் பணிந்துவிட்டு மிகுந்த சந்தோஷத்துடன் தன் வீட்டுக்கு வந்துகொண்டிருந்தாள். ($5\frac{1}{2}$) இப்படியிருக்கையி லொருநாள் ஸ்ரீ மகாதேவரைப் பணியவுற்ற அவளது பிள்ளையானவன் ஸ்வாமிதரிசனம் செய்தானபிறகு அவளை நோக்கி 'ஓ! அம்மா! என் தந்தை யெங்கே?' யென்று வினவலாகையி ($6\frac{1}{2}$) லப்போதே தேவேந்திரன் சதுரங்கசைனியங்களோடுகூட அவனது தந்தையை யழைத்துக்கொண்டு தானும் மிகுந்த சந்தோஷத்துட னங்கு வந் ($7\frac{1}{2}$) தவளை யவன் பெண்டீர்பிள்ளைகளோடு மெத்தச் சந்தோஷத்துடன் சேர்த்துவைத் (8) தவர்களது தேசத்தையும்

முன்போல் கட்டிக்கொடுத் தவர்களை யனுப்பிவிட்டுப் பிறகு கேளாய்! பெண்ணே! அவ்விந்திரன் சிவாக்ஞையின்படி தன்னிருப்பிடம் சென்றான். (9) பிற காசன் பெண்டீர்பிள்ளைகளோடுகூடத் தன் தேசத்திற்குப் போ யனேகம் திருடர்களைக் கொன்றுபோட் டிராஜியத்தைத் தன் வசப்படுத்திக்கொண் (10) டச் சோரர்களில் தலைவனானவனைக் கட்டிச் சிறைச்சாலையி லடைத்துவிட்டு மிகுந்த கோபத்துட னவனது வீட்டைக் கொள்ளைவிட் (11) டவனை நாள்தோறும் கொடிய தூதர்களைக் கொண் டிமிசித்துவந்தான். பிற்பா டங்குள்ளவர்களெல்லா மரசனண்டைக்கு வந்து கொடியனான வத் திருடத்தலைவனைக் கொன்றுவிடும்படி கேட்டுக்கொள்ள, அவ்வசனம்கேட் டரசனு மப்படியே சரியென்று செய்துவிட்டான். (12½) உடனே பரமாத்துமாவாகிய ஸ்ரீ சிவபிரானுடைய தூதர்கள் வந் தவ்வாறு தலைவெட்டுண்ட திருடத்தலைவனை (13) யோர் சிறந்த விமானத்தி லேற்றிக்கொண்டு கைலாஸத்திற்குக் கொண்டுபோனார்கள். அப்போ தரச னவனைக்கண் டுயரப்பார்த்துக்கொண்டே மெத்த வாச்சரியப்பட்டுக்கொண்டிருக்கையி (14) லப்போது புண்ணியவான்களிற் சிறந்தவரான கர்க்கமுனிவ ரங்கு தோன்றினர். உடனே அரச னம் முனிவரை வந்தனித்துவிட்டுச் சங்கதிகளையெல்லா மவருக் கறிவிக்க, (15) முக்காலங்களையு மறிந்த வம்மாமுனிவர் சற்றுநேரம் தியானம்பண்ணிவிட் டவனுக்குள்ள புண்ணியத்தை யெடுத்துக்கூறியதாவது:— "கேளாய்! அரசனே! நீ யவனது கைதனிலிருந்த வோர் பெரியதான தண்டத்தை யெடுத் (16) ததனை மரத்தோடுமரமாய்ச்சேர்த்துச் சிவாலயம்கட்டிவிட்டாய். அதேபுண்ணியத்தினா லவன் சகல பாவங்களையு முதறிப்போட்டுத் (17) திவ்யவிமானத்தி லேறிக்கொண்டுத்தமமான கைலாசமடைந்து பிறகு முடிவினில் சிவஸாயுஜ்ய மடையப்போகின்றான். (18) அதுமுதலா யவ் வரசன் ஸ்ரீ சிவபிரானுக்கு மகாப்பிரியமுள்ளதான சிவபுண்ணியத்தைச் செய்துவந்து சிவபிரானருளால் நற்கதியை யடைந்தான். (19) ஓ! கேளாய்! இராஜகுமாரீ! பெருமையமைந்த இவ்வரசன் சிவபுண்ணியங்களைச் செய்துவந்த மகிமையினா லிந்திரன் தேவசங்கசைனியங்களோடு மிங்கு வந்து மிகுந்த சைனியங்களோடும், சத்துருபலங்களைத்தொம்சம்செய்யலுற்றவோர் கத்தியையு மிவனுக்குக் கொடுத்துவிட்டுப் பிறகு தேவர்களோடுகூடச்சொர்க்கலோகம் சென்றான் (20-21) அதன்பிற கிவ் வரசச்சிரேஷ்டன் தனது மற்ற இராஜியங்களையெல்லாம் தன்வசப்படுத்திக்கொண்டு மிகுந்த மகிழ்வுடன் ஸ்ரீ சிவபிரானுக்குப் பிரியமாயிருக்கும்படி செங்கோல்நடத்திச் (22) சகல சிவபுண்ணியங்களையும் செய்துவந்து பிறகு முடிவில்

மோக்ஷத்தை யடைந்தான். ஓ! பெண்ணே! கொடியனும் பாவியு மான வத் திருடத்தலைவனது தண்டமானது சிவாலயமதட்டுவெதி லுபயோகிக்கப்பட்டபடியா (23) லவன்கூட வம் மகா புண்ணியத்தினுற் சிவபதமடையலானு” னென் றக் கதையை யங்கிரமாமுனிவ ரவ் விராஜகுமாரிக்குச் சொல்லிமுடித்தார். (24)

பிற்பாடு தவசிகளிற் சிரேஷ்டரான வஸிஷ்டமாமுனிவ ரப் பெண்ணை நோக்கித் திருவாக்ருளாத்ததாவது:— “ஓ! கேளாய்! ராஜகுமாரீ! குஞ்சாபுரமென்ற பட்டணத்தில் சித்திராத்தியனென் றோர் மகிமைபொருந்திய பிராம்மணனிருந்தார். (25) அவருக்கு விபுதனென்று பாவகருமங்களைச் செய்யலுற்ற வோர் பிள்ளையிருந்தான். அத்துர்ப்புத்திக்காரனை யரசன் முந்தியே கோபத்தினு லூரைவிட்டுத் துறத்திவிட்டான். (26) பிற கவன் வெளிப்பட்டுக் காட்டுக்குப்போய்ப் பாவபுத்தியைக் கொண்டவனுகிக் கேளாய்! பெண்ணே! வழிப்பிரயாணிகளை யடித் தவர்களது திரவியங்களைப் பறித்துவந்தான். (27) அத்துராத்துமன் சிலநாள்வரையி லிவ்விதமாய்ச் செய்துவருகையி லொருநா ளரசன் சில தூதர்களை யனுப்பி யவனைக் (28) கட்டிக்கொண்டுவந்து கோபத்தோ டவனை யியானையின்முன் நிறுத்த, அவ்வியானை யேவிவிடப்பட்டு மவனது தலையைப் பூமியி லிடறித்தள்ளாம (29) லவனைப் பிரதக்ஷிணம்பண்ணிவிட்டுத் தன் கழுத்தினில் தூக்கிவைத்துக்கொள்ள, அதுகண் டரச னுச்சரியத்தினுல் வியாகுலமுற்ற மனதைக்கொண்டவனுகி (30) ‘ஓ! கோ! இலக்ஷுமீவிலாசம்பொருந்திய இவ்வியானை யிப்பேர்க்கொத்த பாவியைக்கூடக் கொன்றுவிடாமல் கழுத்தினில் தூக்கிவைத்துக்கொள்ளுகின்றதே! இதென்ன வாச்சரிய’ மென் றுயரப்பார்த்துக் கொண்டு நின்றான். அப்போ (31) தவ்வியானையானது ஆச்சரியமுற்ற மனதைக்கொண்டவனுன அவ்வரசனை நோக்கிச் சொல்லியதாவது:— “ஓ! ராஜனே! இவன் குழந்தையாயிருக்கையில் தோழர்களோடுகூடச் செங்கல்களால் ஸ்ரீ பரமேசுவரனுக்கோ ராலயம்கட்டி விளையாடினன்: (32½) அப்பேர்க்கொத்த மகா புண்ணியத்தினு லிவனொருவராலும் நெருங்கமுடியாத மகாத்துமாவாகின்றான். (33) அவனைக் கொல்வதற் கெந்தனுலும் முடியாது: பிரம்மாவால்கூட முடியாது. சிவபுண்ணியத்தின் மகிமையினு லிவ னெல்லோர்களாலும் பூஜிக்கத்தக்கவனே!” (34) யென, இவ்வா றவ் வியானையின் வசனத்தைக்கேட்டு மறுபடியு மாச்சரியமுற்றவனுகி யவ்வரசன் மிகுந்த பக்தியோடுகூடியவனுகி யவனை விட்டுவிட்டான். (35) பிறகவன் தேசாந்தரம்போய் வெகுகாலம் சஞ்சரித்துவிட்டுப் பாதையாய் நேர்ந்து மறுபடியு மித்தேசத்

திற்கு வாலாகையி (36) லவனை யவ்வரசன்கண்டு மெத்தச் சந்தோஷ முற்றவனாகிச் சிவபுண்ணியத்தின் மகிமையா லவனுக்குத் திறண்ட தனங்களைக் கொடுத்துக் (37) கேளாய்! பெண்ணே! அப்புத்திசாலி யானவ னவனை யவனது சுயேச்சையின்படி யனுப்பிவிட்டான். அன்றுமுதலா யவ னெல்லோர்களுக்கு மிகழ்வான திருட்டுத்தன்மையை யொழித்துவிட்டு (38) விருப்பத்தின்படியுள்ள போகங்களை யனுபவித்துப்போட்டு முடிவினில் திவியவிமானத்தி லேறிக்கொண்டு மெத்தச் சந்தோஷத்துடன் சிவலோகமடைந்தா” னென்று வஸிஷ்டமாமுனிவர் சொல்லிமுடித்தார். (39)

நாற்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் சங-வது அத்தியாயத்தினர்த்தம்.

பிற்பா டவ் விராஜகுமாரியை நோக்கி ஸ்ரீ காசியபமாமுனிவர் சகல பாவங்களையும் தொலைப்பிக்கலுற்ற வோர் கதைசொன்னதாவது’— “ஓ! கேளாய்! பெண்ணே! வேதாரண்ணியமென்ற நகரத்தில் போகாங்னென்ற, மகாபாவியும், பிறர்களை யிமிசிப்போனுமான வோராச னிறந்துபோகலாகையி (1½) லியமதூதர்கள் வந் தவனைக் காலபாசத்தினாற் கட்டிக்கொண்டுபோ (2) யவனைக் கொடிய நரகத்தில் வீழ்த்தி மிகுந்த கோபத்துட னடித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது சிவாக்கினையின்பேரில் சிவதூதர்க ளங்குவந்து கொடியநரகத்தில் வாதை யளிக்கப்படலுற்ற வப்பாதகனை மெத்தச் சுந்தரமான வோ ரிரதத்தி (3½) லேற்றிவைத்துக்கொண்டு சீக்கிரமாய் ஸ்ரீ சிவபிரானுடைய பரமபதத்திற் கொண்டுசேர்த்தார்கள். (4) அபபோ தியமதூதர்கள் மெத்தத் கோபையுட னச் சிவகணங்களண்டையில் வந்து மிகுந்த பயத்தினால் நடுக்கமுற்றவர்களாகி யவனுடைய புண்ணியத்தை வினவ, (5) சிவகணங்கள் சொன்னதாவது:— “ஓ! இயமதூதர்களே! இவருடைய பிள்ளையான கனகனென்பவன் சிறுபிள்ளைத்தன்மையால் மணற்களா லோர் சிவலிங்கம்பண்ணி விளையாடினான். (6) அப்புண்ணியத்தின் மகிமையால்தா னவனுக்குத் தந்தையாகிய இப்பேர்க்கொத்த மனிதர்கூடகொடியநரகத்தினின்று கரையேறிச்சிவலோக மடையலாகின்று” (7) னென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட் டவ் வியமதூதர்கள் பயங்கொண்டவர்களாகி யப்படியே நிச்சயமாய்க்கொண்டு திரும்பித்

தங்களிருப்பிடமடைந்தார்கள். (8) ஓ! பெண்ணே! ஸகல பாவத்தி றள்களையும் நாசம்செய்யலுற்ற சிவபுண்ணியமானது பிள்ளையினு லறியாத்தன்மையின்பேரிற் செய்யப்பட்டமாத்திரத்தி லவன் தந்தையானவன் மகா கோரமான நரகத்தினின்று மீண்டிருக்கையில் (9) சிவபுண்ணியத்தின் மகிமையை யறிந்து செய்வோர்களின் பிதுருக்களுடைய கதியை யெந்தமானிடர்தா னுண்மையி லறியலாவா?" (10) றென் றக் காசியபமாமுனிவர் சொல்லியோய்ந்தவுட னப்போது ஜமதக்கினிமாமுனிவர் பாவங்களை நாசம்செய்யலுற்ற வோர் கதை சொல்லியதாவது:— (11) கேளாய்! ராஜகுமாரீ! சந்திரபுரமென்ற பட்டணத்தில் விசுத்தனென்று மகா புத்திசாலியான வோர் மந்திரியிருந்தான். அவனுக்கு மகா பலசாலிகளாய் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். (12) அவர்களில் துராசாரன், துர்க்குணனென்ற விரண்டு பிள்ளைகள் மிகுந்த பாவிகளும் கெட்ட நடையுள்ளவர்களுமே! (13) ஆகையினுல் புத்திசாலியான அம் மந்திரியானவன் சந்தோஷத்துடன் தன் வீட்டுக்கு வெளியி லோர் வீடுகட்டி யதனி லவர்களை யிருக்கச்செய்தான். (14) அதனு லவர்கள் துய்ரமுற்ற மனதைக்கொண்டவர்களாகிச் சிலநாட் சென்றதின்மேல் நேர்த்தியான அப்பட்டணத்தை விட்டுத் தங்களிச்சையின்படி யங்குள்ளக் கிராமவழிகளில் திருடப்போனுர்கள். (15) அப்போ தவ் விருவர்களும்மத்தியானவேளையில் வெயிலினுல் தகிக்கப்பெற்றவர்களாகியங்கு வரலான வோர் பார்ப்பானைக் கட்டுச்சோறு வைத்திருப்பதாய்க் கண்டவுட (16) னவனைக் கையினு லோரறைவிட் டதனைப்பிடுங்கித் தூரத்திற்கொண்டுபோ யவர்கள் மிகுந்த தாபம்கொண்டிருந்தபடியால் கட்டுசோறென் றப்பிரமையினு லேமாந் தம்மூட்டையைச் சோதிக்குமளவி (17) லதனி லோர் சுண்ணும்புக்கல்லு மோர் நேர்த்தியான அப்பமுமிருக்கலானதைக் கண்டதின்மே லச் சுண்ணும்புகல்லை யெறிந்து மற்றதைத் தின்றுவிட்டுப் (18) பிறகப் பார்ப்பானை யோர் மரதோடுவைத்துக் கட்டிப்போட்டுத் தங்களிச்சையின்படிசென்றுவிட்டார்கள். பிற்பாடு நாளளவிலே மகா புத்திசாலியும் பிரபுவுமான வரச னவர்கள் திருட்டுவழியில் முயன்றிருப்பதைக் கண்டவுடன் கோபத்தோ டவர்களைச் சிரசாக்கினைபண்ணிவிட்டான். (19½) பிறகு மகாபயங்கரர்களான விய மதூதர்கள் வந் (20) தப்போ தவர்களைக் கட்டித் தங்க ளியஜமானனண்டைக்குக் கொண்டுபோனதி லவன் சித்திரகுப்தனைப் பார்த்தவர்களுடைய புண்ணியத்தைவிசாரிக்க, (21) உடனே சித்திரகுப்தனவர்களுடைய புண்ணியத்தை நன்காராய்ந் துரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ!

இப்பாவத் தொழிற்காரர்களுக்குக் கொஞ்சமேனும்புண்ணியமேயில்லை. (22) ஆனு லவர்களால் காடுதனி லெறியப்பட்ட சுண்ணும்புக்கல்லா னது ஏதோ புண்ணியத்தின் வலிமையா லங்குள்ள ஸ்ரீ விசுவநாதசுவா மியி னாலயத்திற்காக வுபயோகப்படலாயிற்று. (23) ஓ! பிரபுவே! "அம் மகா புண்ணியத்தினுல்தா னிவர்கள் பாவம்தீரப்பெற்றிருக்கிறார்க" ளென்று சித்திரகுப்தனிவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கையிலப்போது சிவாக்கினையின்படி (24) ஸ்ரீசிவபரமாத்துமாவினுடைய தூதர்கள் நூ று கம்பங்களா லலங்கரிக்கப்பெற்றதான வோர் பொன் விமானத்தோடு கூட வங்கு வந்தார்கள்.(25) அப்போது தருமராஜ னவர்களைப்பார்த்து மெத்தப் பயம்கொண்டவர்களாகி யவர்களை வந்தனித்துவிட்டு "ஓ! கண ங்களே! அறியாமையாற் செய்யப்பட்ட பிழைகளையெல்லாம் நீங்கள் மன்னித்தருளவேண்டும். (26) ஏனென்ற லிவ் வெனது தூதர்க ளிவ ர்களுடைய புண்ணியத்தை யறியவில்லை" யென்று சொல்லிவிட் டவன் பின்னு மடிக்கடி தண்டம்போல் வந்தனம்செய்தான். (27) பிறகு சிவ கணங்க ளியமனுடைய பிழையை மன்னித் தம் மந்திரிகுமாரர்களைத் திவ்ய விமானத்திலேற்றிக்கொண்டு ஸ்ரீ சிவபிரானண்டையிற் கொண்டு சேர்த்தார்கள். (28) பிற கவர்க ளங்கு ஸ்ரீ ஸர்வேசுவரன் திருச்சன்னி தியில் மெத்தச் சந்தோஷத்துட னிருந்துவந்தார்கள். ஆகையால் ஓ! கேளாய்! பெண்ணே! சிவபுண்ணியத்தினுடைய மகிமையை ஸ்ரீ மகே சுவரன்தா னறிவாரே யின்றி மற்றவரில்லை" யென்று ஜமதக்கினிமுனி வர் சொல்லிமுடித்ததின் (29) மேல் விசுவாமித்திரமுனிவ ரோர் புண் ணியகதை யுரைத்ததாவது:— "கேளாய்! ராஜகுமாரீ! முந்தி நாம் ஏம கூடகிரியில் வீற்றிருந்த, ஜகங்களுக்குக் குருவும், சகலலோகங்களுக்கும் சிருஷ்டிகர்த்தருமானப் பிரம்மதேவனைச் சேவிப்பதற்காகப் புறப்பட்டு ப்போ யவனை நமஸ்கரித்துவிட்டு மற்ற முனிவர்களுடன் வீற்றிருக்கு ம் (30-31) போதங்கு, கணதிபரான ஸுதாபிந்துவென்பவர் சில கண ங்களாற் சூழப்பெற்றவராகி ஸ்ரீ பரமாத்துமாவைத் தியானம்செய்து கொண்டே யங்கு வரலாயினர். (32) அப்போ துடனே பிரம்மன் சடி தியிலெழுந்து ஸகலதேவருடிகணங்களோடும்கூடக் கைகளையஞ்சலிகொ ண்டவராகி மிகுந்த பக்தியுடன் நிற்க, (33) அக்கணதிப ரவரைசகொ ஞ்சமேனும் சட்டைபண்ணுமலே ஸ்ரீ சம்புவின் சிறந்த வாலயமாகிய மேருகிரிக்குச் சென்றுவிட்டார். பிற்பாடு நாங்களெல்லோர்களு முட் கார்ந்துகொண்டதின்(34) மேல் யாம் பிரம்மனை நோக்கி "ஓ! ஸ்வாமீ! எழுந்து நிற்கலான வும்மையவர் பார்த்தும மகா கர்வத்தோடு சட்டை

செய்யவில்லையே! இப்பேர்க்கொத்தவர் யாவ" ரென்று நாம் வினவ, (35) பிரம்மனுரைத்ததாவது:— "ஓ! விசுவாமித்திரமுனிவரே! மகிமைபொருந்திய விச் சதாபிந்துவென்பவர் ஸாமந்தபுரமென்ற பட்டணத்திலுள்ள, மகா தரித்திரனும், எப்போதும் துயரமுற்ற மனதைக்கொண்டவனுமான வோர் பயிர்த்தொழிற்காரனாயிருந்தார். (36) கேளாய்; ராஜகுமாரீ! அவனொருநாள் தனதெருமையை விற்பதற்காக வெளியிற்சென்றபோ தவன் மகா கிருபணனாகையா லதனை யொருவரும் வாங்கவில்லை. (37) பிற்பாடவன் மிகுந்த துக்கத்துடன் திரும்பி யவ் வெருமையைக் கட்டிப்போட்டுவருகையி லங் கவனை யோர் தேள்கொட்டலாகிக் (38) கேளாய்! பெண்ணே! மூன்று தினங்கள் சென்றதின் மே லவன் செத்தான். பிறகவனது கொழுத்த எருமையு மன் றிரவில் காப்பவ ரில்லாததினால் (39) தும்பை யறுத்துக்கொண்டவனது வீட்டைவிட்டு வெளியி லோடிப்போய் ஸ்ரீ சக்கிரேசுவரஸ்வாமி கோவிலின் வண்டி யிழுக்கலுற்ற வெருமைக்கடாக்களுட (40) னம் முதல்நாளிரவிற் படுத்திருந்தது. பிறகக் கோவிலைச் சேர்ந்த மனிதர்கள் கற்களைக் கொண்டு வருவதற்காக அவ் வெருமைகளோ டிதனையும் வண்டியிற் பூட்டித் தூரத்திலோட்டிபோய்க் கற்களை யியந்திரத்தில் வைத்துக்கொண் (41-42) டவ்வெருமைகளைத் திருப்பி ஸ்வாமி சன்னிதிக் கோட்டிவந்ததின்பேரி லவர்க ளவ் வெருமையைப் பிறருடையதென்று கண் (43) டதனை யச் சக்கிரயந்திரத்தைவிட்டுத் தூரத் துறத்திவிட்டார்கள். அவர்க ளவனுடைய எருமையென் றறியாவிடினு மதனை யியந்திரத்திற் பூட்டி ஸ்ரீ சிவபிரானுடைய திவியாலயத்திற்காகக் கற்களைக் கொண்டு வந்த புண்ணியத்தின் மகிமையால் கேளீர்! முனிவரே! அவன் மகா பாவியாயினும் (45) பாவங்களைத் தொலைக்கப்பெற்றவனாகி நம்மாலெப்போதும் வந்தனிக்கப்படுவோனும், பூஜிக்கப் படுவோனுமாகின்றான். சிவபுண்ணியம் செய்யப்பெற்ற விம் மகாத்தும னெம்மொருவருங்குமட்டிற் பூஜிக்கத்தகுவோனில்லை. (46) பின்னேவெனி லவன் ஸ்ரீஜகதீசனருளினால் விஷ்ணுவுக்குக்கூட பூஜிக்கத்தக்கவனாகின்றான்" னென்று பிரம்மதேவ ரெந்தனை நோக்கி ஸ்ரீ மகேசுவரனுக்குரிய புண்ணியத்தை யுரைக்கலாயினர். (47) ஆகையால் மெத்த வுத்தமமான சிவபுண்ணியத்தின் மகிமையை யுரைக்க வெந்தனால் முடியாதே" யென்று விசுவாமித்திர ரிராஜகுமாரிக்குச் சொல்லிமுடித்தார். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (48) பிற்பாடப் பெண்ணைநோக்கிப் பரத்துவாஜமாமுனிவ ரோர் மேன்மைபொருந்திய கதையை யுரைத்திட்டதாவது:—

"கேளாய்! ராஜகுமாரீ! பூர்வத்தி லோரிடையனிவன திளமைப்பருவத்தில் விளையாடிக்கொண்டிருக்கையில் லிங்க வுருவத்தைக் கொண்டதான வோர் கல்லைச் சிவலிங்கமாய்ப் பாவித்து மிக நேர்த்தியான சேற்றைச் சந்தனமாகவும், சகலவித மண்களையும் கனிகளாகவு மிவ்விதமாய்ப் பூஜாத்திரவியங்களை யமைத்துக்கொண்டு சகல மலர்களையும் கொண்டுவந் தெப்போது மச் சிவலிங்கத்திற்குச் சந்தோஷமாய்ப் பூஜைசெய்துவந்தான். (49-51) இப்படியிருக்கையி லிவ்விதமாய் விளையாடிவருமவ் விடையனது பக்திச் சிரத்தைகளை ஸ்ரீமகேசுவரன்கண்டு மிகுந்த சந்துஷ்டியுடன் கருணைபொருந்திய திருவுளத்தைக் கொண்டவராகிக் (52) குபேரனுடைய தனத்தை யவனுக்கு மிகுதியாய்க்கொடுத் தவன் லிங்கபாவனையுடன் வைத்துக்கொண்டிருந்த கல்லை யோரிரத்தினலிங்கமாக்கியுமருளினர். (53) மேலு மவனுடைய வீடான திரத்தினமயமானதாய்ப் பிரஸித்திகொண்டு விளங்கலாயிற்று. ஸ்ரீ தேவாதிதேவ னிவ்விதமாயெல்லாஞ் செய்துவிட் டவன் முன்னர் பிரத்தியக்ஷமுமாகையி (54) லப்பேர்க்கொத்த ஸ்ரீ சாம்பமூர்த்தியை யவன் தரிசித்தடிக்கடி வந்தனித்தான். இவற்றையெல்லா மரசர்கள் கண்டு மெத்தவாச்சரியம்கொண்டவர்களாகி (55) யவர்க ளஞ்சலி செய்துகொண்டு ஸ்ரீ மகாதேவனை வந்தனித்தார்கள். மேலு மெல்லா முனிவர்களும் தேவர்களும் சந்துஷ்டி கொண்டவர்களாகி மிகுந்த நேசத்தோ டவ்விடைப்பய்யலை யாலிங்கனம் செய்துகொண்டார்கள். (56½) பிற்பாடு ஸ்ரீ ஸர்வேசுவரன் "ஓ! சிறுவனே! நீ, உனது புண்ணியத்தினு லினி ஸ்ரீகரனென்ற பெயரை யடையக்கடவாய். (57) மேலு முனது வமிசத்தில் நந்தகோபனென்றோர் மகிமைபொருந்திய பிள்ளை பிறக்கலாகி யவனுக்கு விஷ்ணுவும் பிள்ளையாகப்போகின்றா னென்பதிற் சந்தேகமேயில்லை" (58) யென்று திருவாக்கருளிவிட் டங்குதானே அந்தர்த்தானமடைந்தனர். பிற்பாடவன் மகா சந்தோஷத்துடன் வேண்டிய போகங்களை யனுபவித்துவிட்டு (59) முடிவில் சிரேஷ்டமான கைலாஸபருவதத்தை யடைந்தான். கேளாய்! ராஜகுமாரீ! ஆகையினால் ஸகல பாவங்களையும் தொலைக்கவுற்ற சிவபுண்ணியத்தின் மகிமையை (60) யறிந் தவனைச் செய்யானின்ற புலவர்களின் புண்ணிய வைபவத்தை ஸ்ரீ பரமசிவனே அறிவாரென்று ஸத்தியமாய்ச் சொல்லுகின்றேன்" (61) மென் றிவ்விதமாக ஸப்தருடிகளாலும் சொல்லியருளப்பட்ட மெத்த வுத்தமமான சிவபுண்ணியத்தைக் கேட் டப் பெண்ணானவள் மிகுந்த சந்தோஷத்துட னம் மாமுனிவர்களை வந்தனித்துவிட்டுக் (62) கைக

லை யஞ்சலிசெய்து கொண்டவர்கள் முன்னிலையில் நிற்கலாயினள். அப்போ தம் மாமுனிவர்களெல்லோரு மவளுக்குப் பல ஆசீர்வாதங்களைச் செய் துவிட்டு (63) "ஓ! பெண்ணே! பாவமற்றவளாகிய நீ யெப்போதும் சிவபுண்ணியத்தைச் செய்துவந்தால் மகாத்துமாவாகிய ஸ்ரீ ஸர்வேசுவர னுடைய தயவு உனக்குண்டாகுமே" (64) யென்று திருவாக்கரு ளிவிட்டு அம் மாமுனிவர்கள் தங்களாசிரமத்திற்குப் போய்விட்டார்கள். பிறகப் பெண் தனது தேசத்தைச் சிவபூஜைக்காக வேற்படுத்திவிட் (65) டங்கனேக சிவாலயங்களையும், மண்டபம், கோபுரம், உப்பரி கை, வாபி, கிணறு, தடாகம் முதலியவைகளையு (66) முண்டுபண்ணி வைத் தந்தந்த ஸ்தலங்களில் ஸ்ரீபரமேசுவரனுக்குநேர்த்தியான பற்பல வுற்சவங்களையும் பக்தியுடன் நடத்திவந்து (67) சமுசாரதுக்கத்தை வேருடன் பிடுங்கலுற்றதும், மகாச் சிரேஷ்டமுமான சிவஞ்ஞானத் தை யடைந்து மிகுந்த பற்பல போகங்களையு மனுபவித்துப்போட்டு முடிவினில் தேவகணங்களாலு மிருஷிகணங்களாலும் சூழப்பெற்றவளு ம் அதுபோலவே வாத்தியகோஷங்களாலும் புஷ்பவருஷங்களாலும் வி ளங்கப்பெற் றவளுமாகி மகா சந்தோஷத்துடன் மெத்தவுத்தமமான சி வலோகத்தை யடைந் (68-69) தங்கு ஸ்ரீ மகேசுவரன் திருச்சன்னிதி யில் பேரானந்தத் துடனனேக காலமிருந்துவிட்டாள் கேளீர்! பிராம்ம ணோத்தமர்களே! பிறகு மோக்ஷஸாம்பிராஜியத்தைய டைந்தாள். (70)

நாற்பத்திமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.



## உபதேசகாண்டம் ௪௪—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! உங்களுக் கின்னும் சிவபுண்ணி யத்தின் மகிமையை யெடுத்துக் கூறுகின்றேன். அதனைக் கேட்டமா த்திரத்தி லிங்குப் பிராணிகளின் பாவங்களெல்லாம் தொலைந்துவிடலா கும். (1) விராடதேசத்தில் ஸீமந்தபுரமென் றோ ரிகுந்த பெரிய பட் டணமிருக்கின்றது. அப்பட்டணத்தில் ஸகல சாஸ்திரங்களிலும் தேர்ச் சிபெற்றவனான அகருவென் றோர் பிராம்மணனிருந்தான். (2) அவ னுக்கு மகா கொடியனும், வேசிகளோடு பழக முயன்றவனுமான ஸோ மகனென் றோர் பிள்ளையிருந்தான். அத்துராத்துமன் வாழைத்தோட்

டங்களால் நிரம்பப்பெற்ற புஷ்கரதேசத்திற்குப் போய் வாழைப்பழங் களைத் திருடித் (3½) தலைமீது வைத்துக்கொண்டு குருக்குவழியாயோ டுகையி (4) லப்போ தவனை யத் தோட்டத்தின் காவலர்கள் கண் டப் பாவத்தொழிற்காரனைக் கட்டி யனேக மாசர்களால் நிரம்பப்பெற்ற ரா ஜசபைக்குக் கொண்டுபோனூர்கள். (5) பிற கவ் வரச னவனைப் பார் த் தவனது கெட்டநடையைக் கேட்டதன்பேரில் திருடர்களுக்குக்கொ டிய வாக்கினையை விதிப்போனூன வத் தண்டிப்போ னப் பாதகனை நன் ரு யடித்தோர் கையையும் வெட்டித் தூரத் துறத்திவிட்டான். (6½) பின்னு மிரவும்பகலுமாய்த் திருட்டுப்புத்தியையே கொண்ட வப்பாவி யானவ னேதோ கருமவசத்தினு (7) லரச னரண்மனைக்கு வெளியிலு ள்ள சிங்காரத் தோட்டத்திற்குப் போ யங் கத் துர்ப்புத்திக்காரன் நா ள்தோறும் வாழைப்பழங்களைத் திருடிவருகையி லொருநா ளவனைத் த லையாரிகள் கண் டிறுக்கிக் கட்டி யப் பாவியை யரசனண்டைக்குக் கொ ண்டுபோனூர்கள். (9) பிறகு பராக்கிரமசாலியான அவ் வரசன் திரு டர்களுக்கெல்லாம் திருடனூன அவனை யடித்துத் தண்டனைக்குத் தக்க படி யவன் கால்களை முழந்தாள்வரையிலும், கையை மணிக்கட்டுவரை யிலும் கோபத்தினுற் சேதித்துவிட்டுவிட்டான். (10½) பிற கவ னத் துன்பத்தினுல் மிகவும் தொந்திரவடைந்து மறுநாளிறந்தபோ (11) தி யமதூதர்கள் வந்து துரிதமா யவனை யியமனண்டைக் கிழுத்துப்போ னூர்கள். அப்போது கருணைக்கடலான தருமராஜ னவனுக்குள்ள பாவ த்தை நன்றாய் விசாரித்துப் பார்த்துத் (12) தன் தூதர்களை நோக்கிவ சனமுரைத்ததாவது:— ஓ! தூதர்களே! இக் கொடிய னெப்போதும் புத்திபூர்வமாய்ப் பாவங்களைச் செய்துவருகையி (13) லவ னொருநா ளரசனது வாழைத்தோட்டத்திற்குட் சென்று தாறுகளை வெட்டி வா ழைப்பட்டையில் வைத்துக் கட்டிக்கொண்டு (14) திருட்டுத்தன்மை யாய் வெளிப்பட்டு வழியோடு செல்லும்போது தலையாரிக ளவனைக்க ண்டு கோபத்துட னவனைத் தூரத் துறத்தினூர்கள். (15) அப்போ த ம் மகா துஷ்டன், முந்திய ஜன்மாந்தரத்திற் செய்யப்பட்ட புண்ணியவ சத்தினு லளவற்ற தேஜஸ்ஸையுடைய ஸ்ரீ ஹாடகேசுவரஸ்வாமியின்மே ன்மைபொருந்திய வாலயத்தி லத் தாறுகளைப் போட்டுவிட்டு மிகுந்தப யத்துட னோட்டம்பிடித்தான். (16½) பிற்பாடு காலையி லெல்லோர்க ளு மவ் வாழைப்பழக் குப்பலைக் கண் (17) டரசனிடத் தறிவிக்க, அ ப் புண்ணியவானு மதனைப் பராபரக்கடவுளான ஸ்ரீமகாதேவருடைய அபிஷேகத்திற்காகக் கொடுத்துவிட்டான். (18) அப்போ தவர்க ளக்

கனிகளை ஸ்வாமிக் கபிஷேகம் செய்துவிட்டார்கள். கேளீர்! தூதர்களே! அதனு லவனது சகல பாவங்களும் நாசமாகிவிட்டன. (19) ஆகையால் ஓ! மகிமைபொருந்திய தூதர்களே! 'இவன் ஸ்ரீ தேவாதிதேவருடைய பரமபதத்திற்கே போகலாவா" னென்று சொல்லி யெல்லாத் தூதர்களையு மனுப்பிவிட்டான். (20) உடனே யத் தூதர்க ளவனது சட்டலையைத் தலையால் வகித் தவனைவிட்டுவிடலாகையி லப்போ தவ னறிவுகொண்டவனாகித் தூங்கியெழுந்தவன்போ லெழுந்திருக்கலாகி(21) யவ னச் சகல சங்கதிகளையும் துரிதமாய் வெளியிட்டான். அதுகேட் டங்குள்ள முக்கிய அரசர்களும்ஜனங்களு மாச்சரியப்பட்டார்கள். (22) பிற கப்போதே சிவாக்கினையின்படி சிவதூதர்க ளிவர்களெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கையிலே யோர் திவ்ய விமானத்துட னங்கு துரிதமாய் வந் (23) தவனை யதி லேற்றிவைத்துக்கொண்டு ஸ்ரீ சிவபிரானுடைய பரமபதத்திற் கொண்டுசேர்த்தார்கள். பின்பவன் ஸ்ரீ ஜகதீசனுடைய சன்னிதியில் வெகுகாலமிருந்துவிட்டு முடிவினில் மறுபிறப்பிற் கசாத்தியமான ஸாயுஜ்யபதவியை யடைந்தான். (24)

நாற்பத்திநான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௪௫—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பின்னுமுள்ள மற்றோர் கதையை யாலசியமின்றிக் கேளுங்கள். பூர்வத்தில் விரதங்களை யுறுதியாய்க் காப்பவர்களும், மகாத்துமர்களுமான சில முனிவர்கள் (1) கந்தமாதனகிரியில் கொரோமாய்த் தவமளித்துக்கொண்டிருக்கையில் கண்ணுவமாமுனிவ ரங்கு வந்தார். (2) அப்போ தங்கிருந்த விருடிச்சிரேஷ்டர்களெல்லா மவரைக்கண்டு மெத்தக் களிப்புடன் வந்தனித்துக் கிரமப்படி யவரை யோர் சேர்த்தியான வாசனத்தி லிருத்தி (3) "ஓ! கண்ணுவமாமுனிவரே! தேவரீ ரிப்போ தெங்கிருந் திங் கருளலானீர்? என்ன வாச்சரியத்தைக் கண்டிருக்கிறீர்? இவற்றையெங்களுக்குச் சொல்லியருளவேண்டு" (4) மென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டம் மாமுனிவர் கூறியதாவது:— "ஓ! முனிவர்களே! யா னிப்போதுப் பிரம்மலோகத்தினின் றிங்கு வரலானேன். (5) அங்கு நான் காண

லான ஆச்சரியத்தைச் சொல்லுகின்றேன். நீங்களதனைச் சோம்பலி ன்றிக் கேளுங்கள். மாளவமென்ற மகாதேசத்தில் கலியாணபுரமென் றோர் பெரியபட்டண மிருக்கின்றது. (6) அங்கு கார்க்கவனென்றும் வைணவனென்றும் பெயர்போன பராக்கிரமத்தைக்கொண்ட விரு வணி கரிருந்தார்கள். அவர்கள் மகா துஷ்டர்களும், மகா பாவிகளும், எப் போதும் பிறருக்கு வஞ்சனையளிப்பதிலே முயன்றவருமே. (7) அவர் கள் பகற்காலங்களில் வர்த்தகர்களோடு சேர்ந்து வியாபாரஞ்செய்து கொண் டிராக்காலங்களில் வர்த்தகத்திற்காக வந்த புஷ்டிவந்தர்களான வர்த்தகர்களைத் தன்தன் வீட்டுக்குள்ளழைக் துவந் (8) தவர்களுக்கி டமும் கொடுத்துப் பிறகவர்களை வஞ்சனையாற் கொன்று போட்டு மகா சந்தேஷத் துடனவர்களது திரவியங்களைப் பறித்துவந்தார்கள். (9) மேலுமவர்கள் காட்டுமார்க்கத்தில் குடியிருந்தபடியா லங்குவந்துசேர்ந் த வழிப்பிரயாணிகளை யிரவினில் கொன்றுவிட் டவர்கள் திரவியத்தை யுமபகரித்து வந்தார்கள். (10) பிறகுகாலையிலோ அவர்களொன்றை யுமறியாதவர்கள் போல் பட்டணத்திலுள்ள வர்த்தகர்களோடு சேர்ந்தி ருப்பார்கள். இப்படியவர்களால் செய்யப்பட்ட பாவங்களைக் கணக்கி டமுடியாது. (11) பிறகொருநாளளவிலப் பாதகர்கள் தங்களுக்குள் ஜாடைபண்ணிக் தொண்டு பணக்காரர்களான சிலவர்த்தகர்களோ ரிடை ச்சி வீட்டில் வந்திருப்பதைக் கண்டுத் திரவியப் பேராசை கொண்டவர் களாகி யிரவுதனி லவர்கள் தூங்குவதைப் பரிசோதித்துக் கொண் டதன்மேல் வஞ்சகத் தன்மையா (12½) யவர்கள்பேரில் மயக்கமருந் தைப் போட்டுவிட்டுத்துரிதமா (13) யப்பாதகர்க ளவ்விடைச்சி வீட் டிலிருந்தத் திரவியங்களை யெல்லாம் வாரிக்கொண்டு வெகுதூரத்திலுள் ள வோர் நிர்மானுஷியமான காட்டிலிருக்குமோர் சிறந்தசிவாலயத்திற் குச்சென்றார்கள். (14) பிறகத்துர்ப்புத்திக்காரர்க ளவ் விடைச்சி வீ ட்டிலிருந்து திருடிக் கொண்டுவந்த நெய்யைத்திரியோடு சேர்த்துக் கா ட்டுத் தீயினாலதனில் தீபமேற்றி (15) யவ்வெல்லாத் திரவியத்தையு மவரவர் வீதத்தின்படி பங்கிட்டுக்கொண்டு பட்டணத்தைநோக்கித்திரு ம்பி வழியோடு செல்லுகையி (16) லப்போதே யிரவு கழிந்து சூரிய னுதித்துவிட்டது. அப்போதிடையர்கள் காலையில் மயக்கம் தெளிந் தெழுந்து கூக்குறலிடும்போது (17) கிராமத்தலையாரிக ளச் சத்தத் தைக் கேட்டவுடன் கச்சையை யிறுக்கிக்கட்டிப் பற்பல வாயுதங்களை யெடுத்துக்கொண்டு துரிதமாய்ப் புறப்பட்டு (18) வழியைநோக்கிச் செல்லுகையி லவ்வணிகர்களைக் கண்டவுடன் சடிதியிலவர்களைக் கயிறு

களால் கட்டி யரசனிடத்துக் கொண்டுவந்து (19) விட்டுச்சகல சங்க திகளையுஞ் சொன்னார்கள். அதுகேட்டரசன் துரிதமா யவர்களைச் சிர சாக்கினை செய்துவிட்டான். (20) அப்போதே சிவதூதர்களோர் தி வ்விய விமானத்தை யங்குகொண்டுவந் தவர்களை யேற்றிக் கொண்டு ச ந்தோஷத்துடன் சிவலோகமடைந்தவுட (21) னங்கவ்விருவர்களும் ஸ்ரீ தேவாதி தேவன் சன்னிதியிற் சந்தோஷமாயிருந்து வந்தார்கள். திரு ட்டினாற்கிடைத்த நெய்யைக்கொண்டு ஸ்ரீ பரமசிவனுடைய சன்னிதான த்தி லவர்களாற் சகலபாவங்களையும் நாம்சம் செய்யவுற்றதான வோ ர் சிறந்ததீப மேற்றப்பட்ட படியால் (22½) கேளீர்! பிராம்மணோத்த ர்களே! அப்புண்ணியத் தினாலவர்கள் சகலபாவங்களையு மகற்றிவிட்டுக் (23) கிடைப்பதற்கு மெத்தவ சாத்தியமான ஸ்ரீ தேவாதி தேவரது ச ன்னிதானத்தைய டையலானார்களென, அதுகேட்டம் மகாத்துமர்களா ன தவசிச்சிரேஷ்டர்களெல்லாம் (24) சிவபுண்ணியத்தின் மகிமையை நினைத்து மிகுந்த வாச்சரிய மடைந்தார்க" ளென்று கண்ணுவமாமுனி வரானுரைத்தருளப்பட்ட விந்தக் கதையைக் (25) கேட்டதின்மேலச் சபையிலிருந்த வாமதேவ மாமுனிவரு மோர்நற்கதையுரைத்ததாவது:-

கேளீர்! முனிவர்களே! குண்டலமென்ற தேசத்தில் கபித்தபுரமெ ன்றோர் பெரியபட்டண மிருக்கின்றது. (26) அங்கு கண்டகனென்று மகா துஷ்டனான வோர் சூத்திரனிருந்தான். அவன்கிராமங்களிலும் பட் டணங்களிலும் நாள்தோறும் திருடுவதிலே முயன்றுவந்தான். (27) இ ப்படி யிருக்கையிலொருநாளத் துர்ப்புத்திக்காரன் திருட்டினிலகப்பட்ட லான சிலதிரண்ட திரவியத்தை, ஸ்ரீபச்சேசுவரஸ்வாமி சன்னிதியிலு ள்ள, நீர் வற்றப்பெற்ற வோர்தடாகத்தின் (28) நடுச்சேற்றினில் தோண்டி யொளித்துவைத்துப் போட்டுத் தனதிச்சையின்படி திருட்டு வழியா யோடிப்போய்விட் டப்பாதகன் மறுநாளங்கு வந்தபோ (29) தந்தவிட மறியப்படாததினால் மிகுந்ததுக்கங் கொண்டவனாகி யந்தக் குள்ள சேறுகளை வாரிக்கரையின்பேரில் தூரப்படுத்தி விட்டடிக்கடி சோதித்துப்பார்த்து வந்ததில் (30) பிறகங்கோரிடத்திற் சேற்றிற் குள் ளத்திரவியம் நன்றாய்ப்புதைக்கப் பட்டிருந்ததைக் கண்டெடுத்தத னைக் கொண் டவன் வெகுகாலமளவும் மகா பாக்கியசாலியாகி மிகுந்த போகங்களை யனுபவித்துவிட்டுப் (31) பிறகு மரணமடைந்தான். அ ப்போது ஸ்ரீசிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ளவம் மகாத்துமனைச் சிவதூதர்க ளோர் திவ்யவிமானத்தி லேற்றிக்கொண் டவனைச் சிவலோ கம் கொண்டுசேர்த்தார்கள். (32) யமனச் சிவதூதர்களைக் கண்டிச்

சிறந்த புண்ணியவான் யாரென்று கேட்டேன். அதற்கு ஸ்ரீ சிவபரமா த்துமாவினுடைய வத்தூதர்க ளுத்தரமுரைத்ததாவது:— (33) "இவ ன் ஸ்ரீ சிவபிரானுடைய தடாகத்திலுள்ள சேறுகளை வாரித் தூரப்படுத் தினான். அப்புண்ணியமகிமையால்தா னிவன் சிவலோகமடையலாகி ன்றான். (34) மேலு மதற்காகவே யிந்தலோகம்கூடக் கொடிமரம்மு தலியவைகளா லலங்கரிக்கப்பட்டிருக்கின்றது" என, இவ்வா றவர்கள து வசனத்தைக் கேட்டதின்மேல் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யா ன் சிவபுண்ணியத்தின் மகிமையை மனதினால் நினைத்துக்கொண்டே யி ங்கு வந்துசேர்ந்தேன்" (35½) னென, வாமதேவ முனிவராலிவ்வா று ரைக்கப்பட்ட கதையை கேட்டதின்மேல் (36) ஸதாநந்தமுனிவர் பாவ ங்களை நாசம்செய்யவுற்ற வோர்கதை சொன்னதாவது:—

"ஓ! முனிவர்களே! காம்பீலதேசத்தில் கருதபுரமென்றோர் நேர்த் தியான பட்டணமிருக்கின்றது. (37) அதில்சோபன னென்றோர் ம காதரித்திரனனப் பிராம்மணனிருந்தான். அவன் நாள்தோறும் பிச் சைவாங்கும் தொழிலாலே ஜீவித்துவந்தான். (38) மற்றநேரமெல் லாமவனவ்வூர் தண்ணீர்ப்பந்தலி லிருந்துகொண்டே வந்தான். அதுபா தையிலுள்ள விடமாகையால், ஆமர்த்தகிரி, கோளகிரி, புஷ்பகிரி, ஸந் தானகிரி யிந்தவமிசத்தை சேர்ந்தவர்களும், ஸ்ரீ முகுந்தேசுவர ஸ்வாமி க்குப் பூஜைசெய்வோர்களுமான சிலபிராம்மணர்கள் மிகுந்தசத்தத்தோ டிடை வெளியின்றிப் பெருமாரி சொரியலாகையி லத் தண்ணீர்ப்பந்த லுக்கு வந்தார்கள். (39-40) அப்போது சோபன னவர்களைக் கண்ட வுடன் சடிதியா யெழுந்து "ஓ! கோ! இம்மழை சொரிவதுபோல் மிக வு மேழையாகிய வெந்தனுக் கெப்போது மைசுவரியம் சொரியக்கூடா து" வென, (41) இவ்வா றவனது வசனத்தைக் கேட்டதன்மே லவர் களி லோர் சிவப்பார்ப்பான் வசன முரைத்ததாவது:—"கேளாய்! புல வனே! ஸ்ரீ சிவபிரானைப் பூஜிப்போரானயாமெல்லோருக்கும் குருவென் று பிரஸித்தி; இங்குள்ள வெல்லோர்களும் நம்மைச் சிவதர்மி யென்று சொல்லுவார்கள். ஆகையால் நீ நாம் சொல்வதைக் கேட்டு நாடிய பய னைக் கைக்கொண்டவனுகிவி" டென, (42-43) இவ்வா றவரது வசன த்தைக்கேட்டவுட னவ னஞ்சலிகொண் டெழுந்து "ஓ! பிராம்மணோ த்தமரே! யான் தேவரீரது கிருபையினால் கிருதார்த்தனாகிவிட்டதிற் சந்தேகமேயில்லை. (44) தேவரீர் வசனத்தைக் கேட்டமாத்திரத்தி லிகத்திலும் பரத்திலும் சுகமுண்டாகுமென்று சொல்லிவிட்டு வந்தனி க்கலான வப் பிராம்மணனை நோக்கி யச் சிவப்பார்ப்பான் பின்னுமுரை த்திட்டதாவது:— (45) "ஓ! பிராம்மணா! எந்தனு லெப்போதும்

பூஜிக்கப்படலான ஸ்ரீமகேசுவரனுக்காக வென்சொற்படி யின்றுமுதலா யோர் பூத்தோட்டமுண்டுபண்ணி மகா பரிசுத்தனுகி யதினின்று புஷ்ப ங்களை யெடுத்துக்கொண் டந்த ஸ்வாமிக்குப் பூஜைசெய்வதற்காக நீர் கொண்டுவந்தா (46½) லப்போதே ஸ்ரீ சம்புவின் கிருபாபலத்தினு லுமக்குச் சுகமுண்டாகிவிடு" மென, (47) பிறகவனு மப்படியே நல்ல தென்று வெளிக்கிளம்பி யோர் நந்தனவன முண்டுபண்ணினதின்மே லதனில் மலர்களுண்டாகி யவைகளை யவன் கொய்ய வெத்தனிக்கையில் கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! (48) அப்போதே தேவர்களுக்கா சனுன விந்திரனே நேரிலங்கு வந்து மெத்தச் சந்தோஷத்துட னப் பிராம்மணனுக் கமுதத்தைக் கொடுத்துவிட்(49) டவனை நோக்கி "ஓ! பிராம்மணு! நீரிங்கு வெகுகாலமளவு மனேக போகங்களை யனுபவித்து விட்டுப் பிறகு மிகுந்த சந்தோஷத்துடன் தேவர்களுக் காலயமான நமது லோகத்திற்குவாலாவீ" ரென்று நேர்த்தியாய் வசனமுரைத்ததை யப் பிராம்மண னங்கிகரித்துக்கொண் டவனைப்பூஜித்ததின்மே லிந்திரன் சீக்கிரமாய்ச் சொர்க்கத்திற்குத் திரும்பிப் போய்விட்டான். (50-51) பிற்பா டப் பிராம்மணன் பரிசுத்தனுகிப் புஷ்பங்களைப் பறித்துச் சிவப் பார்ப்பானிடம் கொடுக்க, அப்புண்ணியவா னவைகளை வாங்கி ஸ்வாமிக் கர்ச்சனை செய்தார். (52) அப்புஷ்பங்கள் மகா பரிசுத்தம்பொருந்திய ஸ்வாமியின் சிரசினில் விழலாகையி லப்போதே ஸ்ரீ பகவான் பிரத்திய க்ஷமாகி யப் பார்ப்பானை நோக்கித் திருவாக்கருளியதாவது:—(53) "ஓ! பிராம்மணு! நீயே சுயமாய் மெத்தச் சந்தோஷத்துட ஞேர் நேர்த்தி யான தோட்டம்போட் டதனின்று நீயே புஷ்பங்களையுமெடுத்து நமக் காகக் கொடுத்தபடியால் (54) நாமவைகளை மெத்தச் சந்துஷ்டியுடன் நமது சிரசினுலே யங்கிகரிக்கலானேம். ஆகையால் நீ யப் புண்ணிய த்தின் மகிமையா லிங்கு நிகரற்ற வனேகம் போகங்களை யனுபவித்து விட்டு (55) முடிவினில் மெத்த வாநந்தத்துட னிந்திரத்தன்மையை யடைந் தங்குள்ள ஸகல தேவர்களாலும் நாள்தோறும் சந்தோஷத்து டன் பூஜிக்கப்பட்டதன்பேரிற் (56) சகல வைசுவரியங்களோடும் கூ டியதான சிவலோகமடைந்தங்கும் பற்பல போகங்களை யனுபவித்துப் போட்டுப் பிறகு நிச்சயமாய் மோக்ஷமடையலாவா" (57) யென்றரு ளியதன்மேற் கிட்டத்திலிருந்த குபேரனை நோக்கி "ஓ! குபேரா! இவ ன் கேட்டபடியெல்லா மிவனுக்கு மிகுந்த தனத்தைக் கொடுத் (58) தெப்போது மிவன் சொற்படியெல்லாம் நடந்துகொண் டிங்குதானே யிருக்கலாவா" யென்று திருவாய்மலர்ந்தருளிவிட்டு ஸ்ரீமகேசுவரன் சகல கணுதிபர்களுடனும் சீக்கிரமா யந்தர்த்தானமடைந்தார். (59) பிற்பாடு

மகா புண்ணியவானான வச்சோபனனைச் சிவநாமியண்ணுடக்குவந்துமெத்தப் பக்தியுடன் வந்தனித்துச் சந்தோஷத்துடன் வசனமுரைத்ததாவது:—(60) "ஓ! குருவே! தேவரீரைத் தரிசித்தமாத்திரத்திலேதானடியேனுக் கிப்பாக்கியங்களெல்லா முண்டாயிற்றென்பதிற் சந்தேகமேயில்லை. ஓ! சுவாமீ! அடியேன் கிருதார்த்தனுகிவிட்டே னென்று தேவரீ ரறியல்வேண்டும். (61) இப்பூக்கோட்டத்தின் மகிமையினால் ஸ்ரீ மகேசுவரா னடியேனுக்குப் பிரஸன்னராயின" ரென்று சொல்லி யவரதனுமதியின்பேரி லகண்டபோகங்களை யனுபவித்துப் (62) பிறகு தேவேந்திரத்தன்மையை யடைந் தங்கும் வெகுகாலமளவு மளவற்ற சுகங்களை யனுபவித்து முடிவினில் சிவஸாலோக்கியமடைந் தங்கும் வெகுகாலம் வசித்துவிட்டுப் பிறகு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ பரப்பிரம்மத்தினுடைய ஸாயுஜியபதவியை யடைந்தான். (63)

நாற்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உபதேசகாண்டம் ௪௬—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஸுதாநந்த முனிவர் பாவங்களை நாசம் செய்யவுற்ற இவ்வாறு கதையைச் சொல்லி முடித்ததின்மேல் தவசிச் சிரேஷ்டராகிய அத்திரிமாமுனிவர் கூறியதாவது:—(1) "பூர்வத்தில் சோதிட தேசத்தில் ஸர்வஜித் தென்றோர் புகழ்பெற்ற அரசனிருந்தான். அவனுக்கு மகா பாவிகளான நூற்றோரு பிள்ளைக ளிருந்தார்கள். (2) அவர்களி லொருவன் சகல தருமங்களையு மாசரிக்கவுற்ற மெத்தப் புண்ணியவான். மற்ற நூறு பிள்ளைகளும் பெரியோர்களுக்குத் துன்ப மளிப்பவர்களும், கொடிய கருமங்களைச் செய்வோர்களுமா யளவற்றப் பிரம்மஹத்தி திருட்டு முதலியவைகளைச் செய்துகொண்டிருந்தார்கள். (3½) மேலு மவர்கள் நாள்தோறும் மத்தியபானம் செய்வோர்களும், இறைச்சி யுண்பதில் முயன்றவர்களும், (4) அயல்மாதரோடு சேருவதில் காதல்கொண்டவர்களும், எப்போதும் பிறர்களுக்கு வஞ்சக மளிப்போர்களுமா யிருந்தார்கள். (4½) ஆனது பற்றி யரச னவர்கள் தன் பிள்ளைகளாயினும் மகா ராக்ஷஸனென்ற வோ ரரக்கனை யழைத்து 'ஓ! ராக்ஷதா! இத்துர்நடைக்காரர்களைத் தின்றுவி' டென்று சொல்ல, (5½) அதற் கவ்வாக்கனப்பாதகர்களைத் தின்பதற் குள்ளம்பிடியாம (6) லவர்களது கால்க

ளையும் கைகளையும் பிடித்து வாரித் தென்சமுத்திரத்தை நோக்கி யெறிந்துபோட்டான். அப்போ தவர்கள் ஸ்ரீ காசி, மகாபரிசுத்தமான கேதாரம், (7) தரிசித்தமாத்திரத்தில் முக்தி யளிக்கலுற்ற ஸ்ரீ சைலமென்ற மகாகிரி, மகாமங்களகரமான சிவலோகத்தை யளிக்கலுற்ற தக்ஷிணகைலாஸ மென்ற காளஹஸ்தி, (8) என்றும் நேர்த்தியானதும், கலிதோஷங்களற்றதும், ஸ்ரீ ஏகாம்பரேசுவர ஸ்வாமியின் கிருபாபலத்தினால் மானிடர்களுக்கு நினைத்தமாத்திரத்தில் மோக்ஷத்தை யளிக்கலுற்றதுமான காஞ்சீபுரம், (9) மகா புண்ணியமான திருவண்ணாமலை, மங்களகரமான விருத்தாசலம், ஸ்ரீ ஸர்வேசுவரன் தம தாத்துமரூபியாகிய வானந்தாமுதத்தைப் பானம் செய்வதாலுண்டாகிய பரமாநந்தத்தினால் நிரம்பப் பெற்றவராகி யாநந்தத் திருக்கூத்தாடப் பெற்ற சிதம்பரசபை, (10½) மகா புண்ணியமான திருவிடமருதூர், ஸ்ரீ சிவபிரானுக்கு, மிகவும் பிரியமுள்ளதான கும்பகோணம் இவ்விடங்களிலும், (11) இவ்வாறிருக்க திருவையாறு, மதுரைமுதலிய புண்ணியக்ஷேத்திரங்களிலும்விழலாகிக் கேளீர்! தாணிதேவர்களே! அவ்வாறு விழுந்தமாத்திரத்தி லங்கங்கே யவர்க ளிறந்துபோனார்கள். (12) அவர்கள் மகா பாவிகளாயினும் ஸ்ரீ மகா பிரபுவினுடைய க்ஷேத்திரங்களில் மாணமடைந்த புண்ணியத்தின் மகிமையா லவர்கள் ஸ்ரீ சிவபிரானிச்சையின்படி விமானங்களி (13) லேறிக்கொண்டு மகா சந்தோஷத்துடன் மெத்த நேர்த்தியாய்ப் போகின்றார்களென்று மகாத்துமர்களும் மகா பலபராக்கிரமசாலிகளுமான சிவகணங்க ளனேக மிருடிகளோடுகூடச் சத்தியலோகத்தி லிருந்த வேந்தனுக்குச் சொன்னார்க" ளென, (14½) பின்னு மங்கிருந்த மகாத்துமர்களான மற்ற முனிவர்களு (15) மொருவரோ டொருவர் சிவ புண்ணியவான்களுடைய புண்ணிய கதைகளைப் பிரஸ்தாபித்துக் கொண்டார்களென்று சிறந்த புராணீகரான சூதமுனிவர் சௌனகாதி முனிவர்களுக்குச் சொல்லிவிட்டுப் (16) பின்னும் தானாகவே மிகுந்த ஜாக்கிரதையுடன் கேட்கலான அவ்விருடிச் சிரேஷ்டர்களுக்கு நிகரற்ற தேஜஸ்ஸைக் கொண்டவரான ஸ்ரீ சம்புவின் புண்ணிய கதையைச் சொல்லியதாவது:—(17)

ஸௌராஷ்டிரதேசத்தில் கனகபுரமென் றோர் நேர்த்தியான பட்டணமிருக்கின்றது. அங்கு மகா துஷ்டனும் கொடியனுமான வோர் திருடனிருந்தான். (18) பிறருக்கு வஞ்சகமளிப்போனான வக் கொடிய னொருநா ளரசனுடைய புரோகிதன் வீட்டிற்குப் போ யனேகம் திரவியங்களைக் கொள்ளையிட்டுக்கொண்டு புறப்படுகையி (19) லப்போ தவனை யோர் பார்ப்பான் கண்டு கூக்குறலிட அவனை யத் துராத்தும

ன் மகா கோபத்துட ஞயுதத்தின லடித்துக் கொன்றுபோட்டான். (20) ஆயினு மக் கூக்குறலைக் கேட்டவுட னரசனக்கு துரிதமாய் வருகையி லப்போதே மகா பலவான்களான தலையாரிக ளத் திருடனைப் பிடித்துக் (21) கட்டி யரசன்முன்னர் கொண்டுவிட்டவுடன் மகா புத்திசாலியான அவ்வரசன் மகா வஞ்சகனும் துரெண்ணம்கொண்டவனுமான வத் திருடனுக்குத் தண்டனை விதித்ததாவது:— (22) "ஓ! காவலாளிகளே! பட்டணத்துக்கு வெளியிலுள்ள பெரிய தடாகத்தில் தினம்தோறும் மனிதர்களைப் பிடித்துத் தின்றுகொண்டிருக்கின்ற மகா ஆகிருதிகொண்ட முதலையிடத்தி லிவனைத் துரிதமாய்க் கொண்டுபோட்டுவிடுங்க" (22) ளென, இவ்வா றவ் வரசனது வசனத்தைக் கேட்டத் தூதர்க ளங்ஙனமே செய்துவிட்டார்கள். உடனே அப்பெரிய முதலை யவனைத் தலையாலே சுமந்துகொண் (24) டங்குள்ள ஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கையிலே யவனைச் சடிதியாய்க் கரையின்பேரில் கொண்டுவந்துவிட்டது. ஓ! கோ! அப்போதந்த ஜனங்களெல்லாம் மிகவு மாச்சரியமடைந்தார்கள். (25) அதன்பேரி லரசன் மகா பலசாலிகளான வக் கொடிய தூதர்களை நோக்கி யவனைக் கத்திகளாலும் மற்ற வாயுதங்களாலும் கொன்றுவிடும்படி சொன்னவுட (26) னவர்க ளப்படியே செய்து மவர்கள் பட்ட பிரயாசையெல்லாம் வீணாகிவிட்டதை யிராஜன்கண்டு மெத்த வாச்சரியமுற்றவனாகி யவனிடத்தி லேதாயினும் மருந்திருக்குமோவென்று மனதுக்குள் ளாலோசித்துக்கொண் (27) டவனை யங்குதானே தூதர்களைக்கொண்டு பரிசோதித்தத லவனிடத்தில் யாதொரு மருந்தையும் காணாததின்பேரில் (28) மனதின லாலோசித்துக்கொண் டத் திருடனோடுகூடத் தன் சுந்தர வரண்மனையிலுள்ள வாஸ்தான மண்டபத்திற்குப்போ (29) யங்கு விரதங்களைக் காப்பவளான தன் மனையாளின் கைமீதிருக்கும் முக்காலங்களையு மறியலுற்றவோர் கிளியின் முன்னிலையி லிருந்துகொண் (30) டப் புண்ணியவான் விநயத்தோடு கூடியவனாகி யக் நங்கடத்தையுள்ள கிளியை நோக்கி வினவியதாவது:— ஓ! தேவச்சிரேஷ்டர்களுக்கெல்லாம் மிகவும் பிரியமுள்ள கிளியே! நீ பூர்வத்தி லிந்திராணியால் மகா சந்துஷ்டியுடன் சுசீலையென்ற நமது மனைவிக்குக் கொடுக்கப்பட்டவனன்றோ! (31½) ஆகையாலுந்தனைக் கேட்கலாகின்ற நமக்கு நீ சத்தியமாய்க் கொஞ்ச மெடுத்துரைத்தல் வேண்டும். (32) என்னவெனி லிப் பாதகன் மிகுதியாய்த் திருடியவனானதா லவனை நாம் பலவிதமாய்த் தண்டித்திடினு மத்தண்டனையெல்லா மவனிடத்தில் வீணாகியேவிட்டது. (33) அகப்பட்டவர்களையெல்லாம் பிடித்துத்தின்னுகின்ற வோர் முதலையிடத்திற் போட்டு ம

து விட்டுவிட்டது: மேலு மதுபோலவே ஆயு நம்பிடித்த தூதர்களைக் கொண் டாக்கினைசெய்து மதற்கவ னஞ்சவில்லை. (34) ஆகையால் ஓ! நல்ல புலவனான கிளியே! இதற்கென்ன காரணமென்று நீ யுண்மையாய்ச் சொல்லவேண்டு" மென, இவ்வா றரசனால் வினவப்படலான கிளியானது சத்தியமாய்ச் சொல்லியதாவது:— (35) "ஓ! அரசர்களுக்கெல்லாம் பெருமைபொருந்திய ராஜசேகரா! நீர் ஜாக்கிரதையாய்க் கேட்கலாவீர். இவன் குசபுரமென்ற நேர்த்தியான பட்டணத்திலுள்ள விஷ்கம்பனென்ற வணிகனுக்கு, என்றும் வேசிகளோடு புணருவதிலே முயன்றவனும், சித்திரபானுவென்றுபெயர்போனவனுமானபிள்ளையாயிருந்தான். (36½) அவ னிவ்விதமா யிருந்துவருகையி லவனுடைய தனங்களெல்லாம் நாசமாயின. (37) அவ னிவ்வாறு மகா தரித்திரனாகிய தன்பேரி லாலோசித்துக்கொண்டு திருட்டுத்தன்மையில் மனப்பற்றுதல் கொண்டவனானான். ஆகையா லவ னங்கங்கிருக்கு மக்கிரகாரங்களிலுள்ள வனேக வீடுகளை மிகுதியாய்க் கொளுத்திவிட்டுப் (38) பிறர்களுக்கு வஞ்சகமளிக்கலுற்ற வப் பாதக னப்போ திடுக்குப் பார்த்துப் பண்டங்களைத் திருடிக்கொண்டுபோ யவைகளைப் பட்டணங்களில் விற்றுத் திறண்ட பொருளை யடைந் (39) தெப்போதும் மன்மதனால் மிகவும் பீடிக்கப்பட்டவனாகி யதனை வேசிகளுக்குக் கொடுத்துப் போகித்து வந்தான். இவ்வா றிப் பாவியா லனேக வீடுகள் தீயிடப்பட்டதில் கேளீர்! ராஜனே! அனேகம் பசுக்கள், ஸ்திரீகள், பிராம்மணர்கள் இவர்களு மின்னும்மற் றனேகம் பெயர்களு மெரிக்கப்பட்டார்கள். (40½) பிற கொருநா ளப் பாதகன் புஜங்கபுரமென்ற வோர் பெரிய பட்டணத்தைக் (41) கொளுத்திவிட் டங்குள்ள வனேகம் பசுக்களையு மோட்டிக்கொண்டு வழியோடு செல்லுகையி லங்கு வழியிலுள்ள பள்ளத்திலோர் மாடானது கால்தனி லாணி யேறப்பெற்றுக் காயம்கொண்டதாகிக் கேளீர்! அரசனே! அங்குள்ள அசலேசுவர ஸ்வாமி யென்ற வோர் சிவன் கோவி லருகினி லது சடிதியாய் விழலுற்றது. (42-43) அப்போ ததனை யவ னெழுப்பிவிட முடியாதபடியா 'லது அந்த ஸ்வாமிக்காக இருக்கட்டு' மென்று சந்தோஷமாய்ச் சொல்லிவிட்டுப் போ (44) யின்னும் மற்றனேகம் பசுக்களையும் திருடியவைகளையெல்லாம் வியாபாரம் செய்துகொண்டே யிப்பட்டணத்தில் வசித்து வருகையி லிப்போதவ னுமது புரோகிதர் வீட்டில் திருடும்போது (45) தலையாரிகளால் கட்டுண்டவனாகி யும் கைதனி லகப்பட்டுக் கொண்டான். முந்தி யிப்புண்ணியவானால் ஸ்ரீ சிவபிரானுக் கென்று விடப்பட்ட (46) கால்தனி லாணி தைக்கப் பெற்ற வப்பசுவை யங் குள்ளோர்கள் காப்பாற்றிக்

கேளீர்! ராஜனே! அதற்குச் சூலமுத்திரையும்போட் டிதனை ஸ்வாமிக்காக விட்டுவிட்டார்கள். (47) இப்போ தப்பசுவின் பாலானது ஸ்வாமியி னபிஷேகத்திற்காக வுபயோகப்பட்டு வருகின்றது. அப்புண்ணியத்தின் மகிமையால்தா னுமது தண்டனையெல்லா மிவரிடத்தில் வீணாகிவிட்டன. ஓ!கோ! சிவபுண்ணியம் மெத்த வுத்தமமே! (48½) இனியிம்மகானுபாவர் நிச்சியமா யும்மால்கூட பூஜிக்கத் தக்கவரோ! (49) மேலு மிவருக்குச் சர்ப்பங்கள், இராக்ஷதர்கள், பிசாசங்கள் முதலியவைகளும் தீங்களிக்கமாட்டா. இவரோ வென்றால் முடிவினில் பிணியற்ற சிவலோகத்தில், பசுமாட்டி னுரோமங்களி லொவ்வொன்றுக்கு மொவ்வோராயிரம் பிரம்மகல்ப மளவும் மிருந்த போகங்களை யனுபவித்துக் கொண் (50½) டிருந்துவிட்டுப் பிறகு பரமாத்துமாவினுடைய ஸாயுஜிய பதவியை யடையலாவா" (51) ரென, இவ்வா றக்கிளியின் வசனத்தைக் கேட் டரச னாச்சரியமுற்ற மனதைக் கொண்டவனாகி யத்திருடனைத் தனது சிங்காதனத்தி லுட்கார்த்திவைத் தவனுக் கனேகீ தனங்களையும் கொடுத்து (52) மனைவியை யரண்மனைக் கனுப்பிவிட் டத்திருடனுக்குப் பல வுபசாரங்களைச் செய்ததின்பேரி லவ்வரசன் பின்னு மக்கிளியைப் பார்த்துக் கொண்டே யிருந்தான். (53) பிற்பா டிவ்வாறு தன்னைப் பார்க்கலான அவ்வரசனை நோக்கிக் கிளி பின்னும் கதைசொன்னதாவது:—"கேளீர்! அரசனே! முந்தி நான் திருமாலினால் நன்க லங்கரிக்கப் பெற்ற வென்றும் நேர்த்தியான விஷ்ணு லோகத்தி லிலக்குமியின் கைதனி லிருந்துகொண்டிருந்தேன். (54½) அப்போ திந்திராணியானவ ளவ் விலக்குமியைப் பூஜையினாற் களிப்பிக்கலாகையி (55) லப்போது கேளீர்! ராஜனே! இந்திரனுக்குப் பிரியமுள்ள அவ்விந்திராணி மகா ஸந்தோஷத்தோ டெந்தகோ யடைந்தாள். அச்சமயத்தில் ஸ்ரீ விஷ்ணுவானவர் தம் தூதர்களை நோக்கித் திருவாக்கருளியதாவது:—(56) 'ஓ! தூதர்களே! இப்போது நீங்கள் நமது லோகத்தை நன்று யலங்கரிக்கவேண்டு' மென, இவ்வா றவரது வசனத்தைக் கேட்டதன்மே லிலக்குமி யம்மா தவரை வினவியதாவது:—(57) "ஓ! பிரபுவே! விசேடமான வலங்காரத்திற் கிப்போ தென்ன காரண' மென, இவ்வாறு தம்மைக் கெட்கலான நாயகியை நோக்கி ஸ்ரீ ஹரி திருவாக் குரைத்ததாவது:—(58)

"ஓ! கேளாய்! நாயகி! ஸுபார்சுவமென்ற தேசத்திலுள்ள சருவரியென்ற பட்டணத்தில் கபிலனென்றோர் பார்ப்பாரக்கேட னெப்போதும் திருட்டினால் ஜீவனம் பண்ணிக்கொண்டுவந்தான். (59) மகா

கெட்ட நினைப்புடைய வப் பிராம்மணனோர்நா ளோர் கிரஹஸ்தனுடைய பசுமாட்டைத் திருடிவந் ததின் பாலைக்கறந்து குடித்துவிட்டுத் தன் வீட்டிலிருந்தான். (60) அச் சங்கதியை யம் மாட்டுக்கார னறிந்துவரு ம்போ தவன் வருவதை யத்துராத்துமன் கேட்டதின்மே லம் மாட்டை (61) மற்றோருருக் கோட்டிப்போ யதனை யோர் கிரஹஸ்தன் வீட்டிற் கட்டிவிட்டுக் கேளாய்! பிரியநாயகி! தானு மப்போ தங்குதானே மா றுவேடத்தோ (62) டவ் விரவி லங்கு தங்கிவிட்டுக் காலையி லம் மாட் டை யோட்டிக்கொண்டு வழியோடு செல்லுகையி லப்போது சொந்தக் கார னவனைக்கண்டு (63) மாட்டைப்பிடித்துக்கொண் டத் துராத்தும னை திருடனை யரசனிடத்திற் கொண்டுவிட்டுச் சங்கதிகளைச் சொல்ல, அப்போ தரச னவனதிரு கண்களையும் பிடுங்கிவிட்டான். (64) பிற கெல்லோர்களுக்கும் வஞ்சகமளிக்கலுற்ற வத் துராத்தும னத் துயரத் தினல் மடியலாகையி லப்போது சிவகணங்க ளங்குவந் தவனை யோர் நேர்த்தியான விமானத்தி லேற்றி வைத்துக்கொண்டு (65) மெத்தச் சிரேஷ்டமான வப்பேர்க்கொத்த விமானத்தை யிப்போது சிவலோகத் திற்குக் கொண்டுபோகிறபடியா லதின் மார்க்கத்தில் நேரலான நமது லோகமான திப்போது சிங்காரிக்கப்படத்தக்கதன்றோ! (66) ஓ! பெ ண்ணே! அவனென்றும் பாவம்செய்வதில் முயன்றவனாயினு மவனது புண்ணியத்தைக் கேள். என்னவென்றால் அவன் மாட்டுக்காரன்மீது பயத்தின விரவினி லயலூருக்குப்போ (67) யப் பசுவை யோர் கிரக ஸ்தன்வீட்டிற் கட்டிவைத்துத் தானு மங்கிருந்துகொண்டிருக்கையில் மகாத்துமாவும் சகல பாவங்களையும் தொலைக்கலுற்றவருமாகிய சிவ னடியாரான வக் கிரகஸ்த னவனதனுமதியின்பேரி லம் மாட்டின் பாலை க் கறந்து குடித்தார். (68½) கேளாய்! மாதரசே! இப்பேர்க்கொத்த புண்ணியமாகிய வக்கினியா லவனது பாவங்களெல்லா மிப்போ தெரி க்கப்பட்டதாயின. (69) ஆனதால்தா னிவனுக்குப் பரமாத்துமாவாகி ய ஸ்ரீ சிவபிரானுடைய லோகம்கூடக்கிடைக்கலாகின்ற" தென, இவ்வா று விஷ்ணுவின் வசனத்தைக் கேட்டதன்மே லவ் விலக்குமி யப்போது (70) கேளீர்! ராஜனே! 'சிவபுண்ணியமே யெல்லாவற்றினும் மேன் மையுடைய'தென்று நிச்சயம்கொண்டா" ளென, இவ்வா றக்கிளியின் வார்த்தையை யாநந்தமாய்க் கேட் டவ்வரசன் (71) கேளீர்! பிராம்ம ணோத்தமர்களே! சிவபுண்ணியத்தின் மகிமையை நன்றாய்த் தெரிந்த வனுகிக் கிளியையு மந்தப்புரத்திற் கனுப்பிவிட்டுத் தானும் மிகுந்த ப க்தியுட (72) னனேக சிவபுண்ணியங்களைச் செய்து முடிவினிற் சிவ லோகமடைந்தான்.

ஓ! பிராம்மேணோத்தமர்களே! பின்னும் மற்றோர் கதைசொல்லுகின்றேன், அதனைக் கேளுங்கள். (73) மச்சதேசத் தரசனான ஸுமதியென்பவனுக்கு அதிரதனென்று பெயர்போன, ஐந்துவயதுடையவனும், இலக்ஷுமீவிலாசம் பொருந்தியவனுமான வோர் பெருமைபொருந்திய புத்திரனிருந்தான். (74) அவன் கேகயதேசத்தரசன் பெண்ணாகிய மேனகையை முறைப்படி கலியாணம் செய்துகொண்டு தோழக்கூட்டங்கள்போல் வீட்டில்தானே யவளுடன் புழுதிவிளையாட்டாடி விளங்கிக்கொண்டிருக்கையில் கேளீர்! முனிவர்களே! (75½) அவனுக்கென்னகாரணத்தினாலோ அப்போது பூர்வ ஜன்மத்தின் வாசனையுண்டாகி (76) யப்பொழு தவனுக்கு ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிக்கும்படி புத்தி தோன்றலாயிற்று. அதற்குமே லவ னீசுவரனைச் சேவிக்கப்போவதற்காகத் தந்தையிடம் சொல்லிக்கொண் (77) டவ னனுமதியின் பேரில் மனைவியோடுகூடப் புறப்பட் டப் பட்டணத்திலுள்ள மகா மங்களகரமான ஸ்ரீ ஹரீசுவரசுவாமி கோவிலுக்குப்போ (78) யங்கு மிகுந்த மனோபக்தியுட னீசுவரனை வணங்கி யதின்பேரி லவ் வாலயத்தற்கதிபதியாகிய, வேதமறிந்தோர்களிற் சிறந்தவரான வேததருமியென்ற வேதியரிடம்போ யவரை வந்தனித்துவிட்டுப் புன்னகைப்புடன் வசனமுரைந்ததாவது:— "ஓ! மகாத்துமாவே! தேவரீர் முன்பாக விங்கு வந்திராநின்ற அடியேனை நீ ரறிவீரா?" (80) வென, கேளீர்! தரணிதேவர்களே! இவ்வா றவனது வசனத்தைக்கேட் டவ் வேதிய ருத்தரமுரைத்ததாவது:—"ஓ! ராஜனே! தேவரீர் மன்மதனைப் போன்ற வொளி பொருந்திய மகா ராஜகுமார னென்பதை யான் நன்று யறிவேனே! (81) ஓ! ராஜகுமாரனே! ராஜகுமாரனாகிய வும்மை யெவர்தா னறியமாட்டார்?" ரென, அது கேட் டிராஜகுமார னவ்வந்தணரை நோக்கிப் பின்னு முரைத்ததாவது:—(82) "ஓ! ஸ்வாமீ! அடியேனை யிந்த ஜன்மத்திலோர் ஸாதாரண மனிதன்கூட அறியலாவானே! ஓ! பண்டிதரே! யான் பூர்வ ஜன்மத்தி லின்னாரென்பதைத் தேவரீ ரறிந்திருந்தா லதனை நீ ரிப்போது சொல்லியருளவேண்டு" மென,(83) இவ்வா றவன்சொல்லியதைக் கேட்டுப் பின்னு மந் தரணிதேவ னுரைத்ததாவது:—"ஓ! ராஜனே! ஈசுவரன்போல் பூர்வ ஜன்ம விருத்தாந்தத்தை யெவர்தா னறிவார்" (84) ரென, இவ்வா றுரைத்த அவ்வந்தணரை நோக்கி யிராஜகுமாரன் பின்னு முரைத்ததாவது:—"ஓ! ஸ்வாமீ! யா னடியேனுடைய பூர்வ ஜன்ம விருத்தாந்தத்தை யிப்போ தெடுத்துக் கூறுகின்றேன். அதனைத் தேவரீர் கவனமாய்க் கேட்கவேண்டும். (85)

ஓ! ஸ்வாமீ! கௌடதேசத்திலுள்ள விக்கிரமபுர மென்ற வோர் மெத்த மங்களகரமான பட்டணத்தில் யா ேனார் பிராம்மணனாயிருந்தேன். யா னிளமைப் பருவத்தி லிருக்கும்பொழுதே யென் பெற்றோர்க ளிறந்துவிட்டார்கள். (86) அப்போ தெந்தனை வளர்ப்போ ரில்லாத்தினு லோர் சூத்திரச்சியால் போஷிக்கப்பட்டு வந்தேன். ஓ! தரணி தேவரே! பிற கென் பாவவசத்தினு லவளு மிறந்துவிட்டாள். (87) அப்போது நான் வலிமையுடன் நாள்தோறும் வலையினால் மீன்களையும், வேட்டையாடுவதால் மிருகங்களையும் பிடித்து விற்று ஜீவித்துவந்தேன். (88) கேளீர்! தரணிதேவரே! மேலும் பறையர்களோடுகூடிக் கள்ளிறைச்சி முதலியவைகளை வியாபாரம் பண்ணிக்கொண் டிப்பட்டணத்தி லிவ்வா றீனவிருத்தியாய் வசித்துவந்தேன். (89) அப்போது நீர் ஸ்வாமிக்கு வெற்றிலை வாங்குவதற்காகக் கடைத்தெருவுக்கு வாலாகையி லப்போ தோர் யானையானது சங்கலியை யறுத்துக்கொண் டங் கோடி வர, (90) அதைக் கண்டவுட னங்கிருந்த வெல்லோர்களு மங்கு மிங்கு மோட்டம் பிடித்தார்கள். அப்போது நீரும் மிகுந்த பயத்தோடு தூர வோடுகையி (91) லந்தப் பரபரப்பினாலும் கைதனிலிருந்த காசு கீழே விழலுற்றது. பிறகு நீ ரதனைப் பலவிதமாய்த் தேடியு மது காணப்படவில்லை. (92) அதன்மேல் நீர் வெற்றிலை வாங்கக் காசில்லாத்தினால் மிகவிம் துயாமுற் றிருந்தீர். அச்சமயத்தில் நான் கள் விற்றுவிட்டும் மெதிரில் வருகையில் (93) நீ ரெந்தனை யப்பெரிய கடைத்தெருவினிற் கண்டு 'உனக்குச் சீக்கிரமாய் க்ஷேம முண்டாகு' மென்று வாழ்த்திவிட் டெந்தனைக் காசு கேட்டீர். ஓ! தரணிதேவரே! (94) அப்போது நா னும்மைப் பார்த்து 'ஓ! ஐயா! யா னொ ரரசனாகிவிடி லப்போ துமக்குக் காசு கொடுப்பதாய்ச் சத்தியமாய்ச் சொல்லுகின்றே' (95) னென்று வெரும் பரிகாசமாய்ச் சொன்ன வெந்தனைப் பார்த்து நீர் 'ஓ! உமக் கரசத் தன்மை கிடைப்பதி லென்ன தடை யிருக்கின்ற' தென்றீர். (96) அப்போ தருகினில் நின்ற வென் மனைவி சொன்னதாவது:—'ஓ! ஐயா! என்னுடைய விக்கணவ னரசனாகி (97) லப்போது நா னிவருக்குப் பெண்டாவேனோ மாட்டேனோ' வென் றிவ்வாறு முதலிய வார்த்தைகளை யவ ளுரைத்ததின்பேரில் நா னென் திறமைக்குத் தக்கக் காசையும் கொடுத்துவிட் (98) டப்போது பறைச் சேரிக்குப் போய்விட்டே னன்றோ! பிற்பாடு யானு மென் பெண்டுரு மோர் பிசாசு நரி (கொள்ளிவாய்ப் பிசாசு) யா லறையப் பெற்றவர்களாகி (99) யவளுக்கு முந்தி யானும் பிற கவளுமாய் மாண மடைந்தோம். கேளீர்! தரணிதேவரே! அப்போது சிவ புண்ணியத்திற்காக வுமக்குக்

காசு கொடுத்த மகிமையினால் யான் மச்சதேசத்திற் காசனாகி (100½) யப்பேர்க்கொத்த வென்பெண்டீரும் கேகயதேசத் தாசனுக்குப் பெண்ணாகிப் பிற (101) கெந்தனுக்கே யெந்தன் வார்த்தைக் கமைந்து நடக்கலுற்ற மனைவியாகிவிட்டாள். மேலும் கேளீர்! பிராம்மணோத்தமரே! உம்முடன் சம்பாஷணை செய்த புண்ணியத்தினால் (102) முந்திய "பிறப்பின் நினை வெந்தனுக் குண்டாகலாயிற்று. ஓ! ஸ்வாமீ; ஆகையால்தான் யா னெனது பூர்வ ஜன்ம விருத்தாந்தத்தைத் தேவரீருக் கிப்போ தெடுத் துரைத்திட்டேன். (103) ஓ! மகாத்துமாவே! இப்போது ஸ்வாமிக்குப் பூஜை செய்வதற்காக வே றெந்தப் பண்டங்கள் வேண்டுமோ அவைகளைத் தேவரீ ரடியே னிடமிருந்து பெற்றுக்கொண்டெந்தனை யிப்போது கிருதார்த்தனாக்கவேண்டு" (104) மென் றிவ்விதமா யந்த ராஜகுமாரன் சொல்லிவிட்டு மனைவியோடுகூட அவரை வந்தனித்துப் பிறகு சிவஸ்வரூபியான அந்தப் பிராம்மணருக் கனேக திரவியங்களையுங் கொடுத்துவிட்டுச் (105) சடிதியாய்த் தன தாண்மனைசேர்ந்து பெற்றோர்களிடத்துத் தன் விருத்தாந்தங்களை யுள்ளபடி யுரைத்திட்டான். அது கேட் டவனது பெற்றோர்களும் மெத்த வாச்சரியம் கொண்டார்கள். (106) பின் பவ் விராஜகுமாரன் நாளளவினில் மிகுந்த புகழ்கொண்டவனாகி யனேகம் பிள்ளைகளை யடைந்து நாள்தோறும் சோம்பலின்றி யனேகம் சிவபுண்ணியங்களைச் செய்துகொண்டே (107) சத்துருக்களைக் கொல்வோனாகி மிகுந்த வைசுவரியங்களை யடைந்து மகா பெருமைபொருந்தியவனாய்ச் சத்துருவற் றனேக தேசங்களை யாண்டு வருகையி (108) லங்கு தேவேந்திரன் வந் தவ்வரசனைக் கண்டவனுக் கோர் சுவர்ணமாலையையும் சிந்தாமணி ரத்தினத்தையும் கொடுத்துவிட் (109) டம் மகானுபாவனோடு மதுரமான வாக்கினால் ஸம்பாஷித்துவிட்டுப் பிற கவனால் மரியாதை செய்யப்பட் டதன்பேரி லவ்விந்திரன் சொர்க்கலோகத்திற்குச் சென்றான். (110) இவ்விதமா யவ்வரசன் பண்டிதர்களான பல பிள்ளைகளைப் பெற்று வெகுகாலமளவு மனேக போகங்களை யனுபவித்துவிட்டுப் பிற காசாக்ஷியை யப்புத்திரர்களிடமொப்புவித்துப்போட்டுப் பின் பவ் வரசன் தன் மனைவியோடுகூட (111) விரத்திணகாந்திகளால் நிரம்பப் பெற்றதும் மெத்தச் சுந்திரமுமான வொர் விமானத்தி லேறிக்கொண்டு சிவலோக மடைந்து கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறகு ஸ்ரீ சிவபிரா னருளினாலே யப்பாப்பிரம்மத்தின் மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைந்தான். (112)

நாற்பத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் சஎ—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! பிரம்மஞேத்தமர்களே! பிற்பாடு சகல பாவங்களையும் நாசம்செய்யவுற்ற மற்றோர் கதையைச் சொல்லுகின்றேன். அக்கதையைக் கெட்டமாத்திரத்தினுற் சில மானிடோத்தமர்க ளனேக போகங்களை யனுபவித்துப் பிறகு மோக்ஷஸாம்பிராஜியத்தையு மடைந்திருக்கிறார்கள். (1) பூர்வத்தில் மகா யோகீசுவரரான விருடபமாமுனிவர் சொர்க்கலோகத்திற்குப் போகலாகையி லப்போ திந்திரன் மைந்தனுன ஜயந்த னம் மகாத்துமனைக் கண்டவுட (2) னெழுந்து வந்தனித்துத் துரிதமா யர்க்கியபாத்தியாதிகளா லவரைக் களிப்பித்துப் பிறகு நேர்த்தியான வோ ராசனத்தி லிருத்தித் தா னவர் முன்னிலையி லஞ்சலிகொண்டு நின்றான். (3) பிற்பா டந்த யோகீந்திர ரவனைப் பார்த்து 'ஓ! ஜயந்தா! உந்தன் தந்தை யெங்குபோனு' னென்று திருவாக்கருள, அதுகேட்டு ஜயந்த னத் தவசிக்குத்தர முரைத்ததாவது:— (4) "ஓ! சுவாமீ! பரமாத்துமாவாகிய ஸ்ரீசம்புவின் தூதர்கள் விகர்த்தனன், பார்த்திவனென்ற விருவர்களையும் மெத்தச் சுந்தரமான வோர் பெரியவிமானத்தி லேற்றிக்கொண்டு (5) பிரஸித்திகொண்ட பராக்கிரமத்தை யுடையவர்களாகி யிப்போது சிவலோகத்திற்குப் போகின்றார்கள். ஆகையா லிந்திர னவர்களைத் தரிசிப்பதற்காக விப்போ தவர்கள் முன்பாகப் போயிருக்கின்று" (6) னென்று மகேந்திரன் புத்திரனுன ஜயந்த னுரைத்துக்கொண்டிருக்கையி லப்போது மிகுந்த புகழுடைய தேவேந்திர னங்கு வந்துவிட்டான். (7) அவன் வந்தவுடன் மாமுனிவ ரவனை நோக்கி 'ஓ! இந்திரா! இப்போ தெங்குபோயிருந்தா' யென்று வினவ, இந்திரனு மவ்விருடப யோகிமுனிவரை வந்தனித் துரைத்ததாவது:— (8) "ஓ! ஸ்வாமீ! சிவநேசர்களான சிவதூதர்கள் விகர்த்தனையும் பார்த்திவனையு மிப்போது சிவலோகத்திற்குக் கொண்டுபோகின்றபடியா லப்போர்க்கொத்த காக்ஷியாகிய மகோற்சவ (9) மிப்போது நேரலாயிற்று, ஓ! தவசிச்சிரேஷ்டரே! அதற்காகவே இப்போ தடியேன் போயிருந்தேன். இல்லாவிடில் ஸாக்ஷா தீசுவரஸ்வரூபியாகிய யோகீசுவரரான தேவரீ (10) ரிங்கு விஜயமாகியிருக்கையிற்கூட வடியே னசட்டைசெய்திருக்கமாட்டே" னென் றுரைக்கலான வத் தேவராஜனை நோக்கி யோகீசுவரர் பின்னும் திருவாக்கருளியதாவது:— (11) "ஓ! தேவேந்திரா! அவ்விருவர்களாலு மென்னபுண்ணியம் செய்யப்பட்டிருப்பதா யச் சிவதூதர்களால் நீ கேள்விப்படலானபடி யிப்போது கூறலாவா" (12) யென, இவ்வா றவரது திருவசனத்தைக் கேட் டிந்திர னம் மாமுனிவருக் குரைத்ததாவது:—

"ஓ! ஸ்வாமீ! கர்ணகுஞ்சரதேசத்தில் வீரட்டபுரமென் றோர் சிறந்த பட்டணமிருக்கின்றது. (13) அப்பட்டணத் தரசன்மகனான விகர்த்தனும் மந்திரிகுமாரனான மற்றவனும் பெற்றோர்களின் வார்த்தையைக் கடந்துகொண்டு நாள்தோறும் சொக்கட்டா னாடுவதிலே முயன்றுவந்தார்கள். (14) ஆகையா லவ் விருவர்களு மப்பட்டணத்தை விட்டு வேறுதேசத்திற்குப்போ யங்கும் துஷ்டர்களோடு கூடிக்கொண்டு சூதாடுவதிலே முயன்றவர்களும், (15) நாள்தோறும் தகாதகாரியங்களைச் செய்வோர்களும், சகல ஜனங்களுக்கும் வஞ்சக மளிப்பவர்களுமா யனேகம் திருடர்களோடுகூடித் திருடிக்கொண்டுவந்தார்கள். (16) அப்போ தொருநா ளவ் விருபாவிகளு மனேகம் திருடர்களோடு சேர்ந்துகொண்டு திறண்டப ணக்காரர்களாற் குடியேறப்பெற்ற நேர்த்தியான காமபுரத்தைக் கொள்ளையிட் (17) டப்போது பண்டங்களைத் துரிதமாய் வாரி யெடுத்துக்கொண் டத் திருடரெல்லோர்களும் பட்டணத்துக்குவெளியி லோடும்போது மிகுந்த பாரத்தினால் துயரமுற்றவரானார்கள். (18) அப்போ தவ் விருவர்களி லொருவ னரிசிமூட்டையையும் மற்றொருவ னோர் பெட்டியையும் சுமந்துகொண்டு பட்டணத்துக்குவெளியே வெகுதூர மோடுகையி (19) லவர்கள் மிகவும் களைப்படைந்தவர்களாகி யப்பாரமதை யங்கோரிடத் திறக்கிவைத்துச் சற்றிளைப்பாறிவிட்டுப் பிற கவ் விருவர்களு மப் பாரத்தைத் தூக்கிவைத்துக்கொள்ள விரும்பியவர்களாகி (20) யதனை யெடுக்கமுடியாதபொழு தவர்க ளோர் வழிப்பிரயாணியானப் பிராம்மணனை யங்கு கண்டு 'ஓ! பிராம்மணா! நீ ரிதனை யெங்களுக்குத் தூக்கிவிடு' மென்று சொல்லிவிட் (21) டப் பெட்டியைத் திறந்து சோதித்துப்பார்க்கையி லதனி லெழுதப்படாத வோர் புத்தகத்தைக் கண்டார்கள். (22) பிற கவர்க ளப் புத்தகத்தை யெடுத் தசட்டையா யெறிந்துபோட்டு முன்போ லப் பெட்டியை மூடிவிட்டார்கள். அப்போ தப் பிராம்மண னதனைத் தலைமீது தூக்கிவிடும்போது சில வார்த்தை சொன்னதாவது:— (23) "ஓ! ஐயா! யானுருத்திராக்ஷம் தரிப்பவனும், நாள்தோறும் சிவலிங்கத்தைப் பூஜைசெய்வதில் முயன்றவனும், தேகமெங்கும் திருநீறு பூசலுற்றவனும், நல்லொழுக்கத்தை நாடியவனும், மகா சிவபக்தனுமான வோர் பிராம்மணன்; நா னாகாரமில்லாத்தினால் மிகவும் வருத்தப்படுகின்றேன். (24½) எனக்குக் கொஞ்ச மரிசிகொடுத்தா லுமக் கழிவற்ற பயனுண்டாகு" (25) மென, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டுப் பார்த்திவ னவனை நோக்கிப் பிற குரைத்ததாவது:— "ஓ! பிராம்மணா! பூமியில் சிந்திக்கிடக் கலுற்ற இவ் வரிசிகளைப் பொறுக்கிக்கொண்டுபோம்; (26) பிறகு ம

ற்றவரிசிகளி லொன்றும் கொடுக்கமாட்டேன். ஆகையால் சீக்கிரமாய்ப் போ" என்றான். அப்போது விகர்த்தனும் பெட்டியைத் தலைமீதேற்றி வைத்துககொண்டதின்மே லவனை நோக்கி யுரைத்ததாவது:— (27) ஓ! பிராம்மண! புண்ணியவானாகிய நீ ரொழுதப்பட்டிராத விப்புத்தகத்தை யெடுத்துக்கொள்ளு" மென்று சொல்லிப்போட்டுக் கெட்ட எண்ணத்தைக்கொண்ட அவ்விருவர்களும் வேறுதேசம் போய்ச்சேர்ந்தார்கள். (28) அப்போ தம்மகாபாவிகள் நாள்தோறும் சூதாடிக்கொண் டவ் விருவர்களுமா யோர் மெத்த வழகுபொருந்திய மாதரோடு புணர்ந்துவந்த (29) படியா லவ் விருவர்களுக்கு மொருவரோடொருவர் பகை நேரிடலாகி யாயுதத்தினால் வெட்டுண் டவ் விருவரும் மாணமடைந்தார்கள். (30) அப்போ தச் சிவபக்தப் பிராம்மணனேவென்று லவ் வரிசிகளையும் புஸ்தகத்தையு மெடுத்துக்கொண்டு தன் வீட்டிற்குப்போயவ் வரிசிகளைச் சமைத்துச் (31) சாப்பிட்டு அப்புஸ்தகத்தில் சிவபுராணங்களை யெழுதி யனேக மடியார்களைக் கூட்டிவைத்துக்கொண்டு நாள்தோறும் படித்துவந்தான். (32) அப்புண்ணியத்தின் மகிமையால் ஸ்ரீசிவாக்கினையின்படி சிவதூதர்க ளங்கு வந்து மகா விசித்திரமும், மெத்தச் சுந்தரமுமான வோர் விமானத்தி லவர்களை யேற்றிக்கொண்டு (33) நர்த்தனம் செய்யலுற்ற வப்ஸாஸ்திரீகளுடனும், கானம்செயயலுற்ற கின்னரர்களுடலும், தேவதுந்துபி முழக்கங்களுடனும் சிவலோகத்திற்குக் கொண்டுபோ (34) யங்கு தேவாதிதேவன் சன்னிதியிற் சந்தோஷமாய் நின்றார்கள். பிறகு நா னவர்களைக் கண்டதின்மே லுலகங்களுக்குச் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீ பாமேசுவானை (35) வந்தனித்துவிட்டுப் பிற கவ் விருபக்தர்களிடமிருந்தும் நானிப்போ திங்கு வாலானேன். அங் கவர்கள் ஸ்ரீ சிவபிரானுடைய, ஸாரூப்பியபதவியை யடைந்து பிரம்மன்முதலிய தேவர்களால் (36) துதிசெய்யப் பெற்றவர்களாகி ஸ்ரீ சிவாக்கினையின்படி யங்கு சுகமாயிருக்கின்றார்கள். கேளாய்! இந்திரா! சிவபக்தியினுடைய மகிமையை யுண்மையில் யார்தான் அறிவார்களென்று சொல்லிவிட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ் வாமதேவமுனிவர் பின்னு மோர் கதை, சொல்லியதாவது:— (37-38) "ஓ! இந்திரா! முந்தி யொரு காலத்தில் நாம் ஆகாயமத்தியில் விளங்கலுற்றச் சிரேஷ்டமான சிவலோகத்திற்குப் போ யங் கழிவற்றவரான ஸ்ரீ சாம்பமூர்த்தி சகல கணங்களோடும்விளங்கிநிற்பதைத்தரிசித்துவிட்டு (39) ஞானஸ்வரூபியாகிய வப் பாப்பிரம்மத்தோடு பேரானந்தத்தை யனுபவித்ததின்மேல் அவரது திருவாக்கினையின்பேரி லாநந்தமாகிய வன்னத்தைப் புசித்துக்கொண்டு மாநந்தரூபியாய்ச் சஞ்சரித்துக்கொ

ண்டும் (40) 'யானே அன்னம்; அன்னத்தைப் புசிப்பவனும் யானே' யென்றதுமுதலிய பொருளை விளக்கலுற்ற ஸாமகானங்களைச் செய்து கொண்டே புறப்பட்டுக் கீழ்க்கீழாயுள்ள லோகங்களையெல்லாம் முறையே கடந் திறங்கிப் (41) பூமிக்குவந்து குடகுயென்ற தேசத்திலுள்ள சொர்க்கலோகத்தை யதிகரித்த மெத்தச்சௌந்தரியம்பொருந்திய சௌபாக்கியபுரமென்று அப்பெயரின் பொருளுக்கிசைந்ததான ஓர் பட்டணத்தைக் கண்டனம். (42) கேளீர்! முனிவர்களே! அப்பட்டணத்திலவனது கண்டத்தொனியா லதிகண்ட (மணியை அதிகரித்தவ) னென்று பெயரைக்கொண்ட வொருவ னிருந்தான். அவ னிளமைப்பருவத்தி லனேகம் சினேகிதர்களோடுகூட ராஜவீதியி லெப்போதும் விளையாடிக்கொண்டிருக்கையி (43) லொருநா ளவன் வெகுபுண்ணியத்தைக் கொடுக்கலுற்ற வோ ருருத்திராக்ஷத்தைக் கண்டெடுத் ததனைத் தனது நேசனாகிய வோர் சிவனடியாரின் மகனுக்குக் கொடுத்தான். (44) பிற கப் பிள்ளையு மவ் வுருத்திராக்ஷத்தை வாங்கிக்கொண்டு சடிதியில் தன் வீட்டுக்குப்போ யுருத்திராக்ஷமாலைகளா லலங்கரிக்கப்பெற்ற தனது தந்தையிடத்துக் (45) காட்டியதின்மே லவரது கட்டளையின்படி யதனைத் தனது கழுத்தினில் தரித்துக்கொண்டான். பிற கவ் வதிகண்டனென்றப் பிராம்மணன் காலம்சென்று கிழவனாகியதின்மேல் (46) மரணமடைய, அப்போது ஸ்ரீசிவபிரானுக்குச் சம்மதியுள்ளவர்களான கணங்க ளுலகத்தில் ஜனங்களால் பெறுவதற்கு மெத்த வசாத்தியமான வோர் சிறந்த விமானத்தி லவனை யேற்றிக்கொண்டு (47) ஓ! கோ! இம்மானிட னிளமைப்பருவத்தி லோ ருருத்திராக்ஷத்தைச் சிவனடியாருக்குக் கொடுக்கலான வப்பேர்க்கொத்த மகா புண்ணியத்தினால் ஸ்ரீ சிவபிரானுடைய லோகத்தை யடைந்தனனன்றோ" (48) வென் றவனைக் கொண்டாடிக்கொண்டே பிணியற்றதான சிவலோகத்திற்குக் கொண்டுபோனார்கள். அப்போ ததிகண்டனும் வழியி லங்கங்குள்ள பிரம்மவிஷ்ணுக்கள்முதலிய தேவச்சிரேஷ்டர்களால் (49) வெகுமானிக்கப்பட்டவனாகி யவ் விமானத்தோடுகூடப் பத்துத்திசைகளையு மொளிப்பித்துக்கொண்டே யதிவேகமாய்ச் சிவலோகமடைந்தா" (50) னென்று மகா யோகீசுவரரான வாமதேவமுனிவர் தேவேந்திரனுக் குரைத்தனர். கேளீர்! முனிவர்களே! அவனோர் நொடிநேரத்துக்குள் பொறிகளை வசத்திற் கொண்டவனாகித் தன் சுயேச்சையின்படி கைலைகிரியை யடைந்தனனன்றோ. ஓ! கோ! சிவபுண்ணியத்தின் மகிமையைக் கண்டீர்களோ: வென்று சூதமுனிவர் புன்னகைப்போ டுரைத்துவிட்டு (51½)

ஓ! முனிவர்களே! நீங்க ளிப்போது சோம்பலின்றிச் சிவபுண்ணியத்தின் மகிமையைக் கேட்டாயிற்று. பாக்கியவான்களில் சிரேஷ்டரான நீங்கள் பின்னு மென்ன கேட்க விரும்புகின்றீர்கள். (52)

நாற்பத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௪அ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சௌனகாதிமுனிவர்கள் கேட்கின்றதாவது:— "ஓ! மகா புத்திசாலியான சூதமுனிவரே! ஸ்ரீ சிவபிரானிடத்திலிருந்தே பிரத்தியக்ஷமாய்க் கேட்டதுபோ லும்மிடமிருந்து சிவபுண்ணியங்களைக் கேட்டபடியால் நாங்கள் கிருதார்த்தர்களாகிவிட்டோம். (1) மேலு மிப்போது ஸ்ரீ சிவபரமாத்துமாவினுடைய, அந்தந்த ச்சரித்திரங்களோடுகூடிய வாச்சரியங்களையும் புராணங்களையும் வேதமறிந்தவர்களான வெந்த மானிடச்சிரேஷ்டர் சிரத்தையாய்க் கேட்கின்றார்களோ (2½) அல்லது ஆதரவாய்ப் படிக்கின்றார்களோ அவர்களுக்குக் கிடைப்பதாய்ச் சொல்லப்பட்டிருக்கிற சகல பயன்களையு மவைகளுக்குரிய, மிகுந்த புண்ணியத்தை யளிக்கலுற்றதான விதிகாஸங்களுட னெங்களுக்கு ஸவிஸ்தாரமாய்ச்சொல்லியருளவேண்டு" மென்று முனிவர்களால் கேட்கப்பட்டபோது சூதர் களிப்புற்ற மனதைக்கொண்டவராகி யுரைத்ததாவது:—(4) ஓ! மிகவும் கற்றவர்களும் கோடிய தவத்தைச் செய்யலுற்றவர்களுமான முனிவர்களே! இது மிகவும் யோக்கியம். இப்பேர் துங்களால் கேட்கப்பட்டதானது பிராணிகளுக்கு மிகவும் நன்மை யளிக்கலுற்றது. (5) மங்களத்தை யருளலுற்ற ஸ்ரீ சிவபிரானுடைய புராணங்களைக் கேட்பவர்களின் புண்ணியத்தை யின்னதென் றளவிடுதற்குக் கேளீர்! தாணிதேவர்களே! ஸ்ரீ ஜகதீசனுல்கூட முடியாதே! (6) கேளீர்! முனிவர்களே! முந்தி ஸ்ரீ பரமேசுவரனால் பார்வதிதேவிக்கு 'ஓ! மாதரசே! நம்முடைய சரித்திரங்களைக் கேட்பதில் பக்தியும், தொனிகள் சரீரம் இவைகளிலோர் விகாரத்தைக் கொள்ளுதலும் ஸ்ரீ ஜகதீசனுகிய நம்மிடத்துப் பக்தியுடையவர்களினோங்கமாகு' மென்று திருவாக்கருளப்பட்டிருக்கின்றது. (7½) ஆகையால் ஸ்ரீ பரமேசுவரனைப்பற்றி எப்போதும் கேட்கவும், அவரது குணுதிசயங்களோடு நினைக்கவும், (8) அவரை உபநிடத

ங்கள்மூலமா யறிந் தெப்போதும் தியானிக்கவும் வேண்டும். அச்சிவ பிரானைத் தொழுவதற்குப் புராணங்களைக் கேட்பதாலின்றி மற்றொன்றானு முடியாதே! (9) ஆகையினால் வேதங்களிலும் ஸ்மிருதிகளிலும் அதற்கொப்பான புண்ணியமில்லை இல்லையே. கேளீர்! முனிவர்களே! எந்தப் பிராம்மணர்கள் சிவபுராணங்களை மெத்தச் சந்தோஷத்துடன் படிக்கின்றார்களோ அல்லது பக்தியுடன்கேட்கின்றார்களோ அப்பேர்க்கொத்த சுத்தாத்துமர்களுக்கு ஸ்ரீ சிவபிரானுடைய பதவியே நிச்சயிக்கப்பட்டிருக்கின்றதிற் சந்தேகமேயில்லை. (10-11) ஆகையா லெப்போதும் சிவபுராணங்களைக் கேட்கவேண்டும். மேலும் ஸாமர்த்தியமுள்ளவர்கள் மற்றெல்லா வேலைகளையும் விட்டுப்போட் (12) டெப்போதும் சிவபுராணங்களைப் படிக்கவும் கேட்கவும்வேண்டும். இதுவிஷயத்தைப்பற்றிப் பிரம்மத்தை யறிந்த சில முனிவர்களா லோ ரிதிகாஸம் விளக்கப்பட்டிருப்பதை (13) நான் முந்தி ஸ்ரீ வேதவியாஸமுனிவரால் கேட்கப்பட்டிருக்கின்றபடியா லதனை நா னிப்போ துங்களுக் கெடுத்துரைக்கின்றேன்:—

பூமியினோர் பாகமாகிய ஸௌளவதேசத்தில் சொர்க்கலோகத்தின் மற்றோர்பாகம் போன்றதான காமகண்டமென்று பெயர்போன வோர் பெரியபட்டண மிருக்கின்றது. (14½) அப்பட்டணமானது வேதமறிந்தவர்களான வனேகம் பிராம்மணர்களாலும், க்ஷத்திரியர்களாலு மவைசியர்களாலும், தந்தள் தங்கள தாசிரமதருமங்களில் முயன்றவர்களும், மகா பாக்கியசாலிகளுமான சூத்திரர்களாலும், அனுலோமம் பிரதிலோமமென்ற ஸங்கர ஜாதியர்களாலும்,* இன்னும் மற்றவர்களாலும் நிறைந்திருக்கின்றது. (15-16) மேலு மங்கு கொடிய தவங்களைச் செய்யலுற்ற வனேக சன்னியாசிகளும், கல்வி கற்பவர்களான பிரம்மசாரிகளும், நூறு, ஆயிரம் கணக்குகளாயுள்ள வேழைகள், குருடர்கள், கிருபணர்களும், நாதரற்றவர்கள் இவர்கள் வசிக்கின்றார்கள். (17½) சகல ஜீவராசிகளும் தாயையே நாடி ஜீவிப்பதுபோ (18) லங்கனேகம் சன்னியாசிகள் கிரகஸ்தர்களை நாடி ஜீவித்துவந்தார்கள். அவர்களில் பொறியடக்கமுற்றவரும் மெத்தமகாத்துமாவுமான வோர்சன்னியாசியிருந்தார். (19)

---

* ஸங்கரஜாதியானது அனுலோம மென்றும் பிரதிலோம மென்று மிருவகைப்படும்; பிரதிலோம மென்றால் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்க ளென்ற நான்குவர்ணங்களி லா ணுயர்ந்த வர்ணத்திலும், பெண் தாழ்ந்த வர்ணத்திலுமாய்க் கலப்பதினா லுண்டாகும் ஜாதி அனுலோம ஸங்கர மென்றும், பெண் ணுயர்ந்த வர்ணத்திலு மாண் தாழ்ந்த வர்ணத்திலுமாய்க் கலந்துண்டாவது பிரதிலோம ஸங்கரஜாதியென்றும் சொல்லப்படும்.

(19) அப்பேர்க்கொத்த மகாத்துமாவான சன்னியாசியா லிந்திரியங்க ள் ஜயிக்கப்பட்டிருந்தபடியா லவருக்கு ஜிதேந்திரிய னென்று பெயர். (20) பிரம்மத்தை யறிந்தவரும், சிவபக்தரும், திடமுற்ற தவத்தைக் கொண்டவரும், சகல சாத்திரங்களையும் கற்றவரும், எங்கும் சமமாய்ப் பாராட்டியவருமான வச் சிதேந்திரியரிடத்(21) தங்குள்ளப் பிராம்மண ர்களெல்லாம் கூடிவந்து வேண்டிய இதாகிதங்களைக் கேட் டவரா லுரை க்கப்பட்ட புத்தியைக்கொண்டு மிகுந்த வாழ்வை யடைந் தெப்போது (22) மப் பிராம்மணர் முதலியவர்களெல்லா மவரைப் பூஜித்துவந்தா ர்கள். இப்படி யிருக்கையி லப்பட்டணத்தில் சுருதி ஸ்மிருதி புராண ங்களை யறிந்தவரும், நல்லொழுக்கத்தை நாடியவரும், பரிசுத்தம்பொரு ந்தியவருமான ஸ்ரீ முகனென்றோர் சிறந்த வந்தணரிருந்தார்.(23½) அவரு க்கு மிகுந்த புண்ணியவசத்தினால் மகாத்துமர்களான வெட்டுப்பிள்ளைக ளிருந்தார்கள். (24) அவர்களின் பெயரோ வென்றால்:— சாந்தன், அ னுசாந்தன், ஜாமன், விஜாமன், ஸித்தன், பிரஸித்தன், காரணன்,(25) அ காரணன் என்பவைகளே. அவ்வெல்லோர்களும் வேதசாத்திரங்களி ன் பொருட்களிற் கரைகடந்தவர்கள். அவ்வெல்லோர்களும் தந்தையோ டுகூட முட்டிவாங்கிச் சீவித்துவந்தார்கள்.(26) இப்படியிருக்கையி லொ ருநா ளப் பிராம்மணருடைய பிள்ளைகளெல்லாம் தங்க ளிதாகிதத்தை கேட்பதற்காக மகாத்துமராகிய ஜிதேந்திரியரிடம் வந் (27) தவரை வந்தனித்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ் வெல்லோர்களு மஞ்சலிகொண்டவர்களாகித் தனிமையா யவர் சன்னிதியிற் சூழ்ந்து நி ற்கலாகையில் (28) வார்த்தை பேசுவதில் மெத்தச் சிறந்தவரான வச் சன்னியாசி யவர்களை நோக்கி வசன முரைத்ததாவது:—"ஓ! பிராம்ம ணர்களே! மகாத்துமாவின் புத்திரர்களும் பிரம்மசரிய விரதத்தை யா சரித்துவருவோர்களுமான நீங்கள் (29) சுகமா? நீங்க ளிங்கு வந்த கா ரண மென்ன?" வென, பிற கவர்களு மம்மாமுனிவரின் முன்னிலையில் வணக்கமாய் நின்றுகொண் (30) டஞ்சலி கொண்டவர்களாகி யெ ல்லோர்களு மத் தவசியை நோக்கி வணக்கமா யுரைத்ததாவது:— "ஓ! மகிமைபொருந்திய மாமுனிவரே! கருணாமுதச் சொரூபியாகிய தேவரீரால் நாங்கள் நோக்கியருளப்பட்டபடியா லெங்களது ஜன்மமிப் போது பயன்பெறலாயிற்று. ஓ! சுவாமீ! நாங்கள் தரித்திருடைய பிள்ளைகளாகையால் வறுமையால் நொந்திருக்கின்றோம்.(32) அவரவரி ன் கருமத்துக்குத் தக்கபடி யெங்கள் விருப்பங்கள் வேறுபட்டிருக்கின் றன. ஓ! பிரபுவே! எதினால் நாங்க ளவ் விருப்பங்களை யடையலா

வோம்? (33) தேவரீர் சீடர்களாகிய வெங்களுக் கிப்போ ததற் குபா
யத்தை யிங்கு சொல்லியருளவேண்டு" மென் றவர்க ளிவ்விதமாய் வி
னவலாகையி லச் சன்னியாசி யவர்களை யொவ்வொருவராய்க் கேட்க,(34)
அப்போ தவர் முன்னிலையில் மூத்தவ னுரைத்ததாவது:—"ஓ! சுவாமீ!
அடியேன் மூத்தவனாகின்றேன். நாங்க ளெட்டுப்பெயர்களும் வேத
த்தில் கரைகடந்திருக்கின்றோம். (35) யானெப்போதுதா னோர் பெ
ண்ணைக் கலியாணம் செய்துகொண்டு சுகித்திருப்பேனோ வென்பதென
தாசை. மற்றொருவன்தா னனேகம் பிள்ளைகளுக்குத் தந்தையாக வி
ரும்புகின்றான். (36) மிகவும் நோயினால் துன்பப்படுகின்ற மற்றொரு
வன் தனக் காரோக்கியத்தை வேண்டுகின்றான். ஒருவன் மிகுந்த கல
வியையும் மற்றொருவன் சம்பத்தையுங் கோருகின்றார். (37) ஒருவன்
மகா யோகீசுவரரான தேவரீருடைய கிருபாபலத்தினால் யோகியாவத
ற்கும் மற்றொருவன் தன்சரீரத்தோடு சிவலோகம் போவதற்கும் நோ
க்குகின்றார்கள். (38) மற்றவன் பார்மீது நித்தியத்தன்மையை வேண்
டுகின்றான். ஓ! முனிச்சிரேஷ்டரே! எங்களுக் கிப்பேர்க்கொத்த கவ
லைகள் மனதிலிருக்கின்றன. (39) எங்க ளொவ்வொருவருடைய விரு
ப்பத்தையு மடைவதற்கு யாங்கள் திறமையற்றிருக்கின்றோம். ஆகை
யால் நாங்க ளெந்த வுபாயத்தினா லெங்கள் விருப்பங்களைப் பெறுவோ
மென்பதைத் தேவரீ ரிப்போது சொல்லியருளவேண்டு" மென, (40)
இவ்வா றவர்களது வேண்டுதல்களையெல்லா மந்த யதீசுவரர் கேட்டு ம
னதினா லாலோசித்துக்கொண் டஞ்சலிகொண்டு நிற்கலான வப் பிராம்
மணர்களை நோக்கிப் பின்னும் வசனமுரைத்ததாவது:—(41) "ஓ! பி
ராம்மணர்களே! வேதத்தில் கரைகடந்த சிறந்தப் பிராம்மணரின் புத்
திரர்களான நீங்க ளெட்டுப்பேர்களும் சிவாலயத் தோட்டங்கள் முத
லான சிவபுண்ணியங்களைச் செய்வீர்களாயி (42) னந்தப் புண்ணியத்
தினால் நீங்கள் சீக்கிரமாய் வேண்டிய பயனைக் கைக்கொள்வீர்க" ளென,
அதுகேட் டவர்கள் "ஓ! சுவாமீ! நாங்கள் மெத்தச் சோம்பேறிகள்.
(43) ஆகையால்தான் நாங்க ளிப்போது முட்டிவாங்கிப் பிழைக்கலா
கின்றோம்; துரும்பைக் கிள்வதற்குக்கூடத் திறமையற்ற யாங்கள் மிக
வும் பொருளீனர்களா யிருக்கையி லெவ்விதமாய் மற்றப் புண்ணிய கரு
மங்களைச் செய்யப்போகின்றோம். ஆகையால் ஓ! பிரபுவே! தேவரீ
ரெங்கள்மீது கருணைவைத்ததற்குத் தக்க வுபாயத்தைச் சொல்லியருள
வேண்டு" மென, (45) இவ்வா றவர்களது வசனத்தைக்கேட்டு ஜிதே
ந்திரியர் மறுபடி கூறியதாவது:— "ஓ! பிராம்மண குமாரர்களே! நீங்

ளாதரவுடன் சிவபுராணங்களைக் கேட்டா லதினாற் சகல புண்ணியங்களும் செய்யப்பட்டவையாகுமென்பதிற் சந்தேகமேயில்லை. (46½) அதனைக் கேட்டறிகின்றவ னுலகினிற் சகல வேண்டுதல்களையும் கைக்கொள்ளுகின்றான்" (47) னென, அதுகேட் டவர்கள் மிகவும் சந்தோஷம் கொண்டவர்களாகிப் பின்னும் வணக்கத்துட னுரைத்ததாவது:— "ஓ! மாமுனிவரே! மெத்த நன்றா யுரைத்திட்டீர். இப்போ திதைச் செய்வதற்கல்லவோ நாங்கள் தகுதி; (48) ஆனால் படிப்பவர்க்கோ ரணுக்கொடுப்பதற்குக்கூட வெங்களுக்குத் திறமையில்லையே! இப்பேர்க்கொத்த வெங்களுக் கெவர்தான் புராணங்களை யுரைக்கலாவார்? அப்பேர்க்கொத்தவர் யாவர்? (49) ஓ! மகா மகிமைபொருந்திய ஸ்வாமீ! நாங்களிப்போ தென்ன செய்வோம்? இதெங்களுக் கெப்படிக்கிடைக்கு" மென, அதுகேட்டு ஜிதேந்திரியருரைத்ததாவது:— "கேளீர்! பிள்ளைகளே! இதோ இப்பட்டணத்திற் கருகினி விருடிபுரமென்றோ ரக்கிரகாரமிருக்கின்றது. அங்கெல்லா வேதங்களிலும் கரைகடந்தவரும், சிவனடியார்களிற்சிறந்தவருமானகலிஜித்தென்றோர்பிராம்மணரிருக்கின்றார். (51) அங்குள்ள மற்றப்பிராம்மணர்களு மப்படிக்கொத்தவர்கள்தான். வேதமறிந்தவர்களும் மகாத்துமர்களுமான வப் பிராம்மணர்கள் முன்பாக வக் கலிஜித்தென்பவ ரெப்போதும் சிவபுராணங்களைப் படித்துவருகின்றார். (52½) சிவாசிரமத்தை யாசரிக்கலுற்ற வப் பிராம்மணர் மிகவும் பணக்காரரு மனேக பாக்கியங்களை யுடையவரும், என்றும் சிவபூஜைசெய்வதிலே முயன்றவருமாகையா லதற்காக வோர் காசுகூட வாங்கிக்கொள்ளாமல் (53) மெத்தச் சந்தோஷத்துடன் சிவனடியார்களுக்குப் போஜனமளித்துவருகின்றார். (54) ஆகையால் நீங்க ளவர் முகமாய்ச் சிவபுராணங்களைச் சுகமாய்க் கேட்கலா" மென, இவ்வா றவரது வசனத்தைக் கேட் டப் பிரம்மசாரிகளெல்லா (55) மவரை வந்தனித் தவரால் விடைகொடுக்கப்பட்டதன்மேல் மெத்தச் சந்தோஷத்துடன் சடிதியி லவ் விருடிபுரத்திற்குப்போய்க் கலிஜித்தென்றப் பிராம்மணரை வந்தனித்துவிட் (56) டவருக்குச் சீடர்களாகி யங்குதானே சுகமாய் வசித்துக்கொண்டே சிவபுராணங்களைப் படித்துவருகிற கலிஜித்தென்ற வப் பிராம்மணோத்தமரிடமா யங்கிருந்து கேட்பவர்களான மற்றெல்லாப் பிராம்மணர்களுடன்கூட நாள்தோறும் சிரத்தையாய் (57-58) மெத்தச் சந்தோஷத்துடன் கேட்டுவந்தார்கள். அப் பிராம்மண புத்திரர்கள் ஸ்ரீ சிவபிரானையே மனதினி லுறுதியாய்த் தியானிக்கலுற்றவர்களாகி நியமத்துடன் ஸங்கல்பம்செய்துகொண் டிராப்பகலா யக்கலிஜித்தை யாலசியமின்றிப் பூஜைசெய்துகொண்டே ஸந்தோஷத்தி

னுல் தழதழக்கலுற்ற நெஞ்சத்தைக்கொண்டவர்களாகி ஸ்ரீ சிவபிரானு டைய திவிய சரித்திரங்களை யோர் மாதமளவும் கேட்டுவந்ததினு லவா வர்களின் விருப்பங்களைச் சித்திக்கப்பெற்ருர்கள். (59-60½) மேலு ம வர்களால் முந்திய நூறு ஜன்மாந்திரங்களி லடைந்திருக்கக்கூடிய சகல பாவங்களும் (61) கிருஷ்ணபக்ஷச் சந்திரன்போல் குறைந்து சடிதியில் நாசமாகியும், புண்ணியத்திரள்கள் பூர்வபக்ஷ சந்திரன்போல் பூர்ணமாய் விருத்தியாகியும்விட்டன. (62) இவ்விதமாய்ப் பாவங்களின் நாசத்தா லும் புண்ணியங்களின் விருத்தியாலு மவரவர்களின் வேண்டுதலைக் கை க்கொண்டார்கள். அதாவது, நோய்கொண்டவன் நோயினின்று விடுப ட்டோர்நொடிக்குள் பொன்னெளிகொண்டவனுனன்.(63) பெண்டீரை வேண்டியவனைப் பற்றியோவென்ருல்:— அவ்விருடிபுரத்தில் மிகவும் தனிகனும் புலவனுமான வோர் கிராமாதிப னிருந்தான். அவனுக்கு மகா மங்களகரம்பொருந்திய நான்கு பெண்க ளிருந்தார்கள். (64) அ வர்கள் தங்கள் தந்தை யனுமதியின்படி யவனை மணம்புரிந்துகொண்டா ர்கள். அத்தந்தையா லவனுங் கனேகம் தனங்களும் ஸ்ரீதனமாய்க் கொடுக்கப்பட்டன. (65) பிறகவன் கோரிய பயனைக் கைப்பற்றியவ னுய் நிச்சயித்துத் தனங்களை யெடுத்துக்கொண் டப் பெண்டீர்களோடு கூடச் சிவபுராணங்களைக் கேட்பதாலுண்டான மேன்மைபொருந்திய பயனைக் கொண்டாடிக்கொண்டே (66) தன் பட்டணத்துக்குச் சுகமாய் ச் சென் றங்கு வெகுகாலமளவும் மிக வற்புதமா யாநந்தித்திருந்தான். பிள்ளைகளையடைய விரும்பிய மற்றொருவனுங் கத்தேசத்தரசன் வெகு தனங்களைக் கொடுக்க, (67) ஓ! கோ! புராணம்கேட்ட மகிமையால் அவனதனைக்கொண்டோர் பெண்ணை மணம்புரிந்து ஓ! கோ! சிவபுரா ணம் கேட்டதினுல் சீக்கிரத்தி லவளிடமா யனேகம் சுபகுமாரர்களைப் பெற்ருன். (68) கல்வியை விரும்பியவனும் ஸ்ரீ ஜகதீச னருளா லவ் வெல்லாப் பிராம்மணர்களுக்கு மிடையிலெல்லா வித்தைகளிலும் தேர் ச்சியடைந்தான். (69) கல்விக்குத் தெய்வமான ஸரஸ்வதிதேவியும் நேரிலவனுக் கனுக்கிரகமருளினள். ராஜியசம்பத்தைக் கோரியவனுன பிராம்மண புத்திரர்களில் மற்றொருவனுக்கோவென்ருல்:—(70) மகா பெருமைபொருந்திய பார்வேந்தனுன வோரரசன்மரணமடையலாகையி லவனுக்குப் பிள்ளையே யில்லாததினு லவனது தேசம் தத்தளிக்கலாயி ற்று. (71) அதற்கிடையி லவன் மந்திரிகளால் கண்களைக்கட்டிவிடப்ப ட்ட வோர் பெரிய வியானையான தப் பிராம்மணப்பிள்ளையைச் சிங்காத னத்தின்மீ தூட்கார்த்திவிட்டது.(72) பிறகவனு மதினு லிராஜியத்தை யடையப்பெற்றவனுகி யளவற்ற வைசுவரியத்தை யனுபவித்துவந்தா

ன். யோகசித்தியி லாவல்கொண்டவனுக்கும் சுபத்ரையளிக்கனுற்ற யோகம் சித்தித்துவிட்டது. (73) அதினாலவன் காயசித்தியடைந்தவனாகித் தனக்கு வேண்டிய விடங்களிலெல்லாம் சஞ்சரிக்க வல்லவனான். அவன் விரல்நுனியை யூனியமாத்திரத்தில் பூமியெங்கும் நடுநடுங்கலாயிற்று. (74) கூடுவிட்டுக் கூடுபாயும் முதலிய வித்தைகளில் திறமையு மவனுக் குண்டாகிவிட்டது. சரீரத்தோடு சிவலோகமேகக் கருதியவனு (75) மப் புராணம் கேட்ட புண்ணியத்தினால் தன் சரீரத்துடனே துக்கலேசமற்ற சிவலோகத்தைச் சுகமா யடைந்து பிறகங்கு மோக்ஷமடைந்தான். (76) இவ்விதமா யிப் பிராம்மணப் புத்திரர்களெல்லாம் சிவபுராணங்களைக் கேட் டம் மகிமையா லவரவரின் வேண்டுதலைப்பெற்றுப் பிறகு பரப்பிரம்ம சாயுஜியத்தை யடைந்தார்கள். (77) ஆகையால் மோக்ஷமடையக் கருதியவர்கள் முக்கியமாய்ச் சிவபுராணங்களைக் கேட்குதல்வேண்டும். இவ்வாறாகவே யுலகினிலுள்ள மற்றனேகம் பெயர்கள் சிவபுராணங்களைக் (78) கேட்டமாத்திரத்தினால் முயற்சியின்றிச் சுகமாய்ச் சிறந்த சித்தியைக் கைப்பற்றி யிருக்கிறார்கள். மேலு மளவிறந்த மகாத்துமர்க ளுத்தமமான கதியை யடைந்திருக்கிறார்கள். (79) பசுக்கள், பறவைகள், மிருகங்கள்கூடச் சிவபுராணங்களைக் கேட்டுச் சடிதியாய்த் துக்கமற்ற சிவலோகத்தை யடைந்திருக்கின்றன. (80) ஓ! பிராம்மணோத்தமர்களே! அதர்வணவேத மிவ்வாறே முறையிடலாவதை நீங்கள்கூட வெங்கும் கேட்டிருக்கலாமென்பதி லாக்ஷேபணையில்லை. (81) 'எந்தத் தேசத்தில் பிராம்மணர்களால் சிவபுராணங்கள் படிக்கப்படுகின்றனவோ அத் தேசத்திலுள்ள புல் பூண்டு முதலியவைகூடச் சிவலோகமடையலாகின்றன' (82) வென்று தம்மை யாதரவுடன் வினவலான பார்வதிதேவிக்கு ஸ்ரீ ஜகதீசனால் திருவாக்கருளப்பட்டது. ஆகையா லெவர் சிவபுராணங்களைக் கேட்டுமே படித்தும் வருகின்றார்களோ (83) அவர்களுக்கு மேன்மையான கதி கிடைக்குமென்பதி லென்னசொல்லவேண்டும்? மேலு மெங்கெங்கெல்லாம் மானிடர்கள் நல்ல பத்தியோடுகூடிய மனதுட னெப்போதும் சிவபுராணங்களைப் படித்தும் கேட்டும் வருகின்றார்களோ அங்கங்கெல்லாம் ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனே பார்வதியோடுகூட ஸான்னித்திய மருளுகின்றார். (84-85) சிவபுராணங்களைக் கேட்பவர்களின் செவிதனில் ஸ்ரீ பரமேசுவரன் பார்வதிதேவியோடுகூட விளங்கிநிற்கின்றாரென்பதி லாக்ஷேபணையில்லை. (86) மேலும் மூன்று ஜகங்களையும் வாஸஸ்தானமாய்ப் பெற்ற ஸ்ரீ பார்வதிநாதன் பிரஸன்னமான திருவுளத்தைக் கொண்டவராகிச் சிவபுராணங்களைப் படிக்கின்றவர்களின் நுனி நாவினி லெப்போ

தும் வசித்தருளுகின்றார். (87) சிவபுராணங்களை யோர்நடவையாவது கேட்டிருப்பவர்களையும், படித்திருப்பவர்களையும் பூஜித்தா லவர்கள் தங்கள் தங்க ளபீஷ்டங்களைப் பெறுவார்கள். (88) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சிவபுராணங்களைப் படிப்பவர்களையும் கேட்பவர்களையு முனிவர்களை லெந்தப் புண்ணியவா னன்னம் முதலியவற்றால் பத்தியுடன் திருப்தி செய்விக்கின்றானோ (89) அவனால் சகலதேவர்களும்முனிவர்களும் திருப்திசெய்யப்பட்டவராவார்க ளென்பதிற் சந்தேகமில்லை. எந்தமானிடர்கள் சிவபுராணங்களைப் படிப்பவர்க்காவது கேட்பவர்க்காவது (90) கன்னியாதானம், பூமிதானம், கோதானம், பொன்தானம், வஸ்திரதானம், ஆபரணதானம் இவைகளையும், இன்னும்மற்றவைகளையும் சந்தோஷத்துடன் கொடுக்கின்றார்களோ (91) அவர்களப்புண்ணியத்தின் மகிமையால் சீக்கிரமாய்ச் சிவபதமடைகின்றார்கள். அவர்களுக்குப் பூதலத்திற்சந்தோஷத்துடனென்னென்னகொடுக்கப்படுகின்றனவோ (92) அவையெல்லாம்ஸ்ரீ சிவபிரானுக்கே கொடுக்கப்பட்டவையாகுமென்பதிற் சந்தேகமேயில்லை. ஸ்ரீசிவபரமாத்துமாவினுடையபுராணங்களைப்பனையேட்டிலாவது அல்லது கடுதாசிலாவது பக்திசிரத்தையுட னெழுதுகின்றவர்கள் ($93\frac{1}{2}$) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஏடுகள்தோறுமுள்ள வெழுத்துகளுக்கெல்லா (94) மோரவ்வொன்றுக்கு மோவ்வொரு கற்பம்வீதமாய்ச் சிவலோகத்தில் வசிக்கலாகின்றார்கள். புராணங்களை யெழுதியதனைப் படிக்கலுற்ற சிவனடியாரான வந்தணர்க்குக் கொடுப்பதினாற் கோடி வமிசங்களைக் கரையேற்றிவிட் ($95\frac{1}{2}$) டவர் புத்திரபௌத்திரர்களோடுகூட விங்கு மனேக போகங்களை யனுபவித்து (96) முடிவினில் தங்கவிமானத்தோடு சிவலோகத்திற் கேகலாவார். ($96\frac{1}{2}$) சிவபுராணங்களைப் பக்தியுடன் தானம் வாங்குகின்றப் பிராம்மணர்கள் (97) சகல பாவங்களையு முதறிவிடப்பெற்றவர்களாகி முயற்சியன்றியிலே யனேக போகங்களை யனுபவித்துப்போட்டுப் பத்திலக்ஷ மியானைகள் கட்டப்பட்ட வோர் திவ்விய விமானத்தோடு (98) சிவலோகமடைந்து ஸ்ரீ சிவபிரானுடைய திருச்சன்னிதியில் பேரானந்தத்தை யனுபவிக்கின்றார்கள். எந்தப் பிராம்மணர்கள் சிவபுராணங்களுக்காகச் சிவாலயமதில் மிகுந்த சிரத்தையுடன் மங்களகரமான வோர் புஸ்தகசாலை யேற்படுத்தி ($99\frac{1}{2}$) யதற்குச் சுண்ணாம்படித் தசுமானகிரிமுதலியவைகளா லலங்கரித் (100) தச்சாலையி லப் புஸ்தகங்களை வைத்து மங்களவாத்தியங்களுடனும் கானங்களுடனும் நாள்தோறும் தூபதீபநைவேத்தியங்களால் பூஜிக்கின்றார்களோ அவர்கள் (101) கோடி சிவலிங்கங்களைப் பி

ரதிஷ்டை செய்த வுத்தம பயனையடைந்து பூலோகத்தில் தேவாசுரர்க ளுக்கும் அஸாத்தியமான பலபோகங்களை யனுபவித்துப்போட்டு (102) முடிவினி லனேக கிண்கிணிமாலைகள் கட்டப்பெற்ற தங்கவிமானத்தோ டு முறையே ஸித்தர், வித்தியாதரர் முதலியவர்களின் லோகங்களை ய டைந் (103) தங்கங்கு வெகு போகங்களை யனுபவித் தவரவர்களால் பூஜிக்கப்பெற்றவர்களாகிப் பிற கிந்திரன்முதலிய திக்பாலர்களாலும், பிரஜாபதிகளாலும் முறையே (104) பூஜிக்கப்பெற்றவர்களாகி யதற் குமேல் பிரம்மலோக மடைந் தங்கு மோர் பரார்த்த (ஓர் சங்கியை) கா லமளவு மவரால் பூஜிக்கப்பட்டானதன் (105) மேல் கேளீர்! பிராம் மணோத்தமர்களே! வைகுண்டத் திருமாளிகையில் ஸ்ரீ மகாவிஷ்ணுக்கு ச் சரியா யனேககாலம் வசித் தவ் விஷ்ணுக்குரிய போகங்களையும் வெ குகாலமளவு மனுபவித்துவிட்டுப் (106) பிற கவ் விஷ்ணுவுக் காயுசு முடிந்ததின்பேரில் முறையே கந்தலோகம், உமாலோகம், கோலோகம் இவைகளில் தங்கிவிட்டுப் பிறகு நாளளவிலே (107) சிவலோகமடை ந்து ஸ்ரீ சிவபிரான் சன்னிதியில் பேரானந்த மனுபவிக்கின்றார்கள். ஆ கையால் கேளீர்! முனிவர்களே! சிவபுராணங்களைக் கேட்கவேண்டும். (108) அவைகளைப் புத்தகங்களி லெழுதிக்கொண்டு நாள்தோறும் ப டிக்கவேண்டும். அவைகளை யாதரவுடன் சிவனடியாரான சிறந்த வந்த ணர்க்குத் தானஞ்செய்யவேண்டும். (109) அவைகளை யவர்களிடமிரு ந்தே வாங்கி யெப்போதும் படித்துவரவேண்டும். சிவபுராணங்களை யசட் டையாய்ப் படித்தாலும் படியாவிட்டாலும், (110) கேட்டாலும் கேட் காவிட்டாலு மவர்கள் நரகமடைவார்களே! ஆகையால் சந்தோஷமுள் ளவர்களான சிவனடியார்களுட னெப்போதும் சிவபுராணங்களைப்(111) பக்தியுடன் படிக்கவும், அடிக்கடி கேட்கவும் வேண்டும். சிவனடியார் கள் மற்றச் சாத்திரங்களொன்றையும் பார்க்கவேவேண்டாம். (112) ஏனென்றால் போகாதவூருக்கு வழிகேட்டுப் பயனென்ன? கேளீர்! மு னிவர்களே! எவர் சிவபுராணங்களைப் படிக்கவும் கேட்கவுமில்லையோ (113) அவர் சிவனடியாரானபோதிலும் சிவத்துரோகிகளுக்குச் சரி யாகவே மதிக்கப்படுகின்றார்கள். இவ்வத்தியாயத்தின் கதையைச் சிர த்தையுடன் படிக்கின்றவர்களுக்கும் கேட்கின்றவர்களுக்கும் (114) ஸ கல சிவபுராணங்களையும் படித்தவர்களுக்குள்ள பயனே யுண்டென்று சொல்லப்பட் டிருக்கின்றது. மேலும் கேளீர்! பிராம்மணோத்தமர்க ளே! இச்சரித்திரத்தின் மட்டினுடைய வர்த்தத்தை யறிந்தவர்(115) சி வபக்தராயினும் அல்லது மற்றவராயினு மவர் சகல லோகங்களுக்கும்

பரிசுத்த முள்ளவராகின்றார். அவரே சகல புண்ணிய தீர்த்தங்களிலு ம் ஸ்நாநம் செய்தவர். அவரே ஸகல யாகங்களிலும் தீக்ஷிதராகின்றார். (116) மேலு மவர் சகல தெய்வங்களுக்கும், சகல லோகங்களுக்கும் ஸ்ரீ சிவபிரான், விஷ்ணு, பிரம்மன் முதலிய தேவர்களுக்கும் பிரியமுள் ளவராகின்றார். (117) ஆகையால்தான் கேளீர்! இருடீசுவரர்களே! அ டியார்களான மானிடோத்தமர்கள் மோக்ஷ மடைவதற்காக மிகுந்தமே ன்மையைப் பெறுவதற்குற்ற நன்மார்க்கமாகிய சிவபுராணங்களைச் செ விகளால் கேட்டிடில் ஓ! கோ! அவர்கள் யாதொரு முயற்சியுமின்றி ஸ்ரீ சிவபிரானுேடுகூட ஸாயுஜிய முக்தியை யடையலாகின்றார். வேறி ன்பங்களைப் பெறுவதற்காக வப் புராணங்களைக் கேட்கு மற்றவர்களோ அளவற்ற சம்பத்தை யடைவார்கள்.(118)

நாற்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் சக—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சௌனகாதிமுனிவர்கள் சொல்லுகின்றார்கள்:—"ஓ! சூதமுனி வரே! உம்மாற் சகலமும் நன்று யுரைக்கப்பட்டது. நாங்களு மவற்றை க் கேட்டும்மால் கிருதார்த்தர்களாகிவிட்டோ மென்பதிற் சந்தேகமில் லை. (1) ஆனல் கேளீர்! சூதமுனிவரே! முந்திப் பேச்சு வாக்கில் 'சிவ த் துரோக' மென்று சொன்னீ ரல்லவா? சிவத் துரோக மென்ப தென் ன வென்பதை யுள்ளபடி யெடுத் துரைக்க வேண்டு" மென் றனேகமா யிரம் பிராயச்சித்தங்களாலும் தொலைக்கமுடியாத சிவத் துரோக மெ ன்பதைப் பற்றி மா முனிவர்களால் வினவப்பட்டபோது சகல சாத்தி ரப் பொருட்களிலும் தேர்ச்சிபெற்றவரான சூத முனிவ ரவ்வெல்லோ ர்களையும் நோக்கிக் கூறுகின்றார்:—($3\frac{1}{2}$)

கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! ஸ்ரீ சிவபிரான், அம்பிகை, சு ப்பிரம்மணியர், இயானைமுகத்தோன், குருமார்கள், பக்த கணங்கள் ஆ கிய இவ்வாறு பெயர்களுடைய ($4\frac{1}{2}$) பொருட்களையும், உபேக்ஷை, பிரஞ்ஞாசனம், பக்ஷணம் முதலியவிதங்களா (5) லெந்த மூடாத்தும ன் நஷ்டப்படுத்துகின்றானே அவன் சிவத்துரோகியென்று சொல்லப்ப டுவான். உபேக்ஷை யென்றால்:—அவ்வாறு பெயர்களுடைய தனத்தை

யொருவரபகரித்துப்போகையி (6) லதனைப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பவனே உபேக்ஷைக்காரனென்று பெரியோர்கள் சொல்லுகின்றார்கள். அப்பொருளைப் பிறரபகரித்துப் போவதை (7) நன்றாய் விசாரியாதிருக்கும் பாவியான மூடனுக்குப் பிரஞ்ஞாயீன முள்ளவனென்று பெயர். அவர்களுடைய கைங்கிரியத்தி லெற்பட்டவர்களவற்றிலசட்டைகொண்டபோதிலு மங்ஙனமே சொல்லப்படுவார். (8) அவர்களுடைய பொருளை நேரி லபகரிப்பவனுக்குப் பக்ஷணம் செய்வோனென்றுபெயர். இவ்விதமா யவர்களது தனதானியங்கள், வஸ்திரம், ஆபரணம், (9) ஆலயம், மாளிகை, பூமி, மரங்கள், தோட்டங்கள், வாபி, கிணறு, குளம் இவை முதலியவைகளை, (10) கஷ்டப்படுத்தும் கிரமத்துடனே அல்லது வேறுவிதத்தாலோ தானே நேரில் நாசம்செய்தலும், அவ்வாறு நாசம்செய்வோனண்டையில் வசித்தலும், பார்த்தலும், (11) அதனைப்பற்றிக் கேட்குதலும், அப்பேர்க்கொத்த பாவியைத் தொடுதலும், அவன் சொல்லை நிறைவேற்றலும் சிவத்துரோகங்களெனப்படும். (12) மேலும் கேளீர்! முனிவர்களே! முற்கூறிய சம்பு முதலிய வாறுபெயர்கள், சிவஸ்தலங்கள், வேதங்கள், விபூதி, உருத்திராக்ஷம், சிவாகமங்கள், (13) சிவபுராணங்கள், ஸ்ரீசிவபிரானுக்குச் சம்மந்தமுள்ளதான வின்னும் மற்றவைகள் இவைகளை நிந்திக்கலுற்ற மூடாத்துமனும் சிவத்துரோகியெனப்படுவான். (14) இவ்வாறு நிந்திப்பவனண்டையி லிருத்தல், அவனைப்பற்றிக்கேட்குதல், அவனைப்பார்த்தல், தொடல், அவனோடுபேசுதல், (15) அவன் சொல்லைக்கேட்குதல் இவைகளும் சிவத்துரோகமெனப்படும். அவ் வாறு பெயர்களுடையதானங்கள், தீர்த்தங்கள், பூத்தோட்டங்கள், (16) ஸ்ரீசிவபிரானுக்குச்சம்மந்தமுள்ள, பாவங்களுக்குவிரோதிகளானமற்றஸ்தலங்கள் இவைகளையெச்சிலாக்குவோனும் சிவத்துரோகியெனப்படுவான். (17) அவ்வாறெச்சிலாக்குவோனைப்பார்த்தல், தொடல், அவனோடுபேசுதல் இவைகளும் சிவத்துரோகங்களெனப்படும். (18) இவ்வாறுமுதலிய சிவத்துரோகங்களைச் செய்ததினாற் சில பாவிக ளிகத்திலு மனேக சமுசார துக்கங்களை யனுபவித்துப் பரத்திலு மின்னும்கூடக் கொடிய நரகங்களி லியமதூதர்களால் வாதையளிக்கப்படுகின்றார்கள். ஓ! தரணிதேவர்களே! அவர்களிற் சிலரை யிப்போது சொல்லுகின்றேன். (19½)

வங்கதேசத்திற்கதிபனான கிலகனென்றோரரச (20) னிராஜகிரியென்ற பட்டணத்தி லரசாண்டுவந்தான். ஓ! வேதியர்களே! அவனுக்குப் பாவஜித்து, சூரஜித்து, விரஜித்து, கோரஜித்து என்று மகா சூரர்களான (21½) நான்குபிள்ளைகளிருந்தார்கள். அவர்கள் சகலவித

ஆயுதப்பயிற்சிகளிலுந்தேற்சிபெற்றவர்களென்று மதிக்கப்பட்டிருந்தார்கள். (22) அவர்கள் சத்துருக்களைக் கொல்விக்கலுற்ற ஸ்ரீ ருத்திரமூர்த்தியைத் தவத்தினாற் களிப்பித்துச் சகல சத்துருக்களையும் சமுகரிக்கத் தகுதியுள்ள சிறந்த வலிமையைப்பெற் (23) றெல்லாத்திக்குகளையும் வென்று மகா வலிமைகொண்டவர்களாகி யிராஜஸூயமென்ற வோர் பெரிய வேள்வியை வெகு சம்பிரவங்களோடு செய்து முடித்தார்கள். (24) மேலுமப் புலவர்க ளென்றும் தந்தைசொல்லைக் கடவாதிருந்தார்கள். அப்போ தவர்கள் தந்தையாகிய கிலகராஜனும் மகா சிவராத்திரியில் மகாதேவராகிய ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற்காக ஸ்ரீ கோகர்ண க்ஷேத்திரத்துக்குப்போய் ($25\frac{1}{2}$) யங்கு சிவராத்திரி விரதத்தை முடித்துவிட்டு மகா புத்திசாலித்தன்மையராய் முக்கண்பிரானாகிய ஸ்ரீ ஸாம்பமூர்த்தியை நியமத்துடன் தியானம்பண்ணிக்கொண்டே ஆறுமாதமளவு மிருந்துவிட்டுப் ($26\frac{1}{2}$) பிறகவன் மகா வலிமைபொருந்திய சைனியங்களோடுகூடத் தன் தேசத்திற்கு வந்தான். (27) அப்போ தவன் தனது நான்கு பிள்ளைகளாலு மெதிர்கொண் டழைக்கப்பெற்ற வனாகி யவர்களோடுகூட வனேக மங்கள வாத்தியங்களுடன் நேர்த்தியான தனதாண்மனைக்குச்சென் (28) றங்கு சிங்காதனத்தி லிருந்துகொண்டே தன் சைனியங்களையும் பிள்ளைகளையு மவரவர் விடுதிகளுக் கனுப்பியதின்மே லப் புத்திசாலியானவன் (29) தானும் தனதந்தப்புரதற்குப் போக வெத்தனித்தான். அப்போ தப் பட்டணத்தின் மத்தியில் விளங்கும் ஸ்ரீ சிவராஜகிரீசுவரசுவாமியைப் (30) பூஜைசெய்யலுற்ற ஸ்ரீ சிவபிரானைத் தியானிப்பவர்களும், சிவனடியார்களுமான சிலபிராம்மணச்சிரேஷ்டர்கள் சிவபூஜையில் முயன்றவனான அவ்வரசனைக் காண்பதற்காக வங்கு வந்தார்கள். (31) அப்போ தரச னங்கு வந்தவச் சிவப்பிராம்மணர்களை வினவியதாவது:— "ஓ! பிராம்மணர்களே! சிவபூஜையில் கவலைகொண்ட மனதையுடைய நீங்கள் சுகமா? (32) ஸ்வாமிக்கு முன்போல் குறைவின்றிப் பூஜை நடந்து வருகின்றதா?" வென, இவ்வா றரசனால் வினவப்பட்டபொழு தப் பிராம்மணர்க ளுத்தர முரைத்ததாவது:— "ஓ! ராஜேந்திரா! பூஜை முன்போலவே குறைவின்றி நடந்து விளங்கிவருகின்றது. (34) ஆனால் தேவரீருடைய பிள்ளைகளால் சில சிவத்துரோகம் செய்யப்பட்டதன்றோ!" வென, இவ்வா றவர்களதுவசனங்கேட்டரசன்பின்னுமுரைத்ததாவது:—(35)"ஓ! கோ! ஸ்ரீசிவபரமாத்துமாவுக் கவர்களா லென்ன துரோகமளிக்கப்பட்டதென்பதை ஸ்ரீ பரமேசுவர பக்தர்களாகிய நீங்க ளிப்போ தச்சமின்றிச் சொல்லவேண்டு" (36) மென, இவ்வா றரசன் வசனத்தைக்கேட் டப்போ

தவர்கள் வசனமுரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ! வீரஜித்தென்ற தேவரீர் புத்திரன் சிவாலயத்தினின் றிருநூறு செங்கற்களைக் (37) கொண்டுபோய்த் தன் வீட்டு ஸ்வாமிக்காக வற்புதமான வோராலயம் கட்டிவிட்டான். அப்போது நாங்கள் 'சிவத்துரோகம் ஸம்பவிக்குமே' யென்று தடுத்து மதற்கேற்பட்ட வதிகாரியான துராத்தும னவ் வசனத்தை மீறிக்கொண்டு போய்விட்டான். அவ்வேலைக்காரர்க ளவைகளைக் கொண்டுபோக முயன்றபோதிலும் நாங்கள் சொன்னதை யாலோசித்து 'ஓ! ஓ! இதெல்லா மரசனுடைய பொருளே! அவற்றை யவ்வரசனே கொண்டுபோனு லப்போ தென்ன தோஷமுண்டாகு' மென்றத் துர்புத்திக்காரர்கள் சொன்னார்கள். (40) பிறகப்பாவிக ளிங்ஙனமுரைத்துவிட்டுச் செங்கற்களைக்கொண்டு போய்விட்டார்களன்றோ! ஆகையால் ஓ! ராஜனே! பிறகு நாங்களவர்கள் கூறியதற் குள்பட்டுத் திரும்பிப்போ (41) யப்போ தச் சங்கதிகளையெல்லாம் வீரஜித்துக்குச்சொல்ல, அவனே யவர்களை யேவினவனுகையா லப்பேர்க்கொத்த வுமது புத்திர னதை யசட்டைசெய்துவிட்டான். (42) அப்போது யாங்கள் மிகுந்த துக்கம்கொண்டவர்களாகி யுள்ளபடி யாகட்டுமென்று வெளியில் வந்துவிட்டோம். பிற கவற்றை நேரில் பார்த்த வெங்களுக் கிப்போ தந்தப் பாவத்தினின் றெவ்வாறு விடுதலை யுண்டாகுமென்று மிகுந்த கவலையுண்டாயிற்று. (43½) மேலும் கேளீர்! ராஜனே! கோரஜித்தென்பவனும் துர்ப்புத்திகொண்டவனாகி ஸ்ரீ சிவபிரானுக்குச் சொந்தமான மெத்த வுன்னதமாகிய வோர் மாமரத்தை (44) வெட்டி நேர்த்தியான வோரியாகசாலை கட்டிவிட்டான். அப்போ தவனிடத்தில் நாங்கள் வீணில் மன்றாடிச் சொன்னதாவது:—(45) "ஓ! ஐயா! சிவாலயத்தின் மத்தியிலிருக்கின்ற விம்மரத்தை வெட்டிடி லிப்போதிதனிற் சம்மந்தப்பட்ட வெல்லோர்களுக்கும் நிச்சயமாய் மிகுந்த தோடம் நேரிடு" மென, இவ்வா றெங்களது வசனத்தைக்கேட் டக் கோரஜித்து பின்னும் சொல்லியதாவது:— 'ஓ! அதைக்கொண்டு யாகசாலை யமைக்கப்படுகின்றபடியா லதனுலென்ன தோடமுண்டாகு' (47) மென் றெங்கள் வார்த்தைகளைக் கடந்து சொல்லி யெங்களை யனுப்பிவிட்டான். மேலும் ஓ! ராஜனே! நேற்றுதினத்தில் சூரஜித்தென்பவனுல் தேவரீர் தூதனுன கிருஷ்ணனென்பவ னேவப்பட்டவனுகிச் சிவாலயத் தோட்டத்திலுள்ள மலர்களை யெடுத் தவனிடம் கொண்டுவந்து கொடுக்க,(48½) அப்பாவாத்துமனு மவைகளை வாங்கித் தானும் தன் மனைவியும் சூட்டிக்கொண்டதை (49) யாங்கள் தடுத்து மதனை யவன் கேட்கவில்லை. அவனின்றைக்குக்கூட மலர்களை வீட்டிற் கெடுத்துப்போனுன். (50)

இம்மூவர்களாலும் ஸ்ரீ சிவபரமாத்துமாவுக் களிக்கப்பட்ட துரோகத்தை மகா புண்ணியவானாகிய சிவாலயத்திற் கதிகாரியான (51) வீரவிரதனென்பவர் கேளீர்! அரசனே! ஆசையை யொழித்துப் பிராணனைவிட்டுவிட்டார். சிவாலயத்தின் விருக்ஷங்களை வளர்ப்பவனான மார்த்தாண்டனும் மரணமடைந்தான். (52) மேலு மதேவிதமாய் நந்தவனத்தைக் காப்பவனான சிறந்த சிவபக்தனாகிய விக்கிரமகேசரியு முயிரையிழந்தான். (53) இவ்விதமாய் மகாத்துமர்களும் ஜுவலிக்கலுற்றவர்களுமான விம் மூவர்களும் மரணமடைந்துவிட்டார்கள். ஆனால் ஐயோ! கேளீர்! பூபதியே! யாங்களு மிச் சிவத்துரோகத்திற்காக வுயிரை யிழக்கத் (54) "திறமையற்றவர்களாகி யும்மிடம்வந்து முறையிட்டுக்கொண்டோ" மென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டரசனிருகைகளாலும் தன் காதுகளைப் பொத்திக்கொண்டு (55) பாவஜித்தென்ற புத்திரனைக் கூப்பிட் டவனைக்கொண்டே யப்பேர்க்கொத்த மூன்றுபிள்ளைகளையும் மூன்றதிகாரிகளையும் அவர்க ளூழியக்காரர்களான பாவிகளாகிய தூதர்களையு மழைப்பித்துத் தம்முன்பாகவே யவர்களைச் சிரசாக்கினை செய்தான். (56½) பிற கரச னவர்களுக் கிவ்வா றாக்கினை செய்ததன்மேற் சிவாலயத்திற்குப் போய் (57) (தன் புத்திரர்களால் கட்டப்பட்ட) பூஜாக்கிரகத்தையு மியாகசாலையையு மிடித்து அதிலுள்ள மரங்களையும் செங்கற்களையும் கொண்டு சிவாலயத்தை மிகவும் பெரிதாய்ப் புதுப்பித்துவிட்டான். (58) மேலு மவன் தன் பொக்கிஷஅறையைத் திறந்ததிலுள்ள வெல்லாத் திரவியங்களையும் சீக்கிரமாய்க்கொண்டுவந்து ஸ்வாமிக்கு மிக நேர்த்தியான வோர் முண்டத்தலைமாலை, (54) கிரீடம் மற்றுமுள்ள ஆபரணங்கள் இவைகளை யமைப்பித்து ஸ்ரீ பகவானுக்கு மகா ஸம்பிரவத்தோ டபிஷேக நைவேத்தியங்களைச் செய் (60) தவருக் கவ் வாபரணங்களா லலங்காரம் செய்வித்தான். இவ்விதமா யரசன் சிவத்துரோகத்திற்கு வேண்டிய பரிகாரத்தைச் செய்தானபிறகு (61) கொஞ்சமேனும் பாவமற்ற சிலர்கள் சிவகாரியநிமித்தமா யுயிரை யிழந்துவிட்டதற்குற்ற பரிகாரத்தை யாலோசித்ததி (62) 'லிதற்காக வுயிரை யிழப்பதைத்தவிர வேறு பிராயச்சித்தமில்லை' யென்று மனதினில் நிச்சயித்துக்கொண் டோ ரக்கினிகுண்டத்தில் மிகுதியாய்த் தீயை வளர்த்துப் பாவஜித்தென்ற புத்திரனுடைய கையையும், இரத்தினவல்லியென்ற மனைவியின் கையையும் பிடித்துக்கொண்டு பராபரக்கடவுளான ஸ்ரீ சிவபிரானையே மனதினில் தியானித்து மெத்தத் தைரியம் கொண்டவனாகி யக்கிதனிற் குதித்துவிட்டான். (63-64½) அப்போ தவனது மனோ நிச்சயத்தினா லவ் வக்கினி ஜலம்போல் குளிர்ச்சி

யுளதாயிற்று. (65) சிவத்துரோகத்தைப் பார்த்ததற்காக வுயிரை யிழந்த மிகுந்த கீர்த்திபொருந்திய வீரவிரதன், மார்த்தாண்டன், விக்கிரமகேஸரி இவர்கள் (66) சிவாக்கினையின்படி யப்போது பிழைத்தெழுந்திருக்கலானதை யரச னெதிரில்கண்டான். அப்போது தேவர்களால் மலர்மாரிசொரியப்பட்டு விழலுற்றன. (67) தேவதுந்துபிகள் கடலோசையை யதிகரித்த பேரொலிகொண்டதாகி முழங்கலுற்றன. அப்போது பார்வதிநாதரான மகேசுவரன் வெள்ளிமலைக்கு நிகரான விருடபத்தின்மீ தேறிக்கொண்டு பற்பலவித கணங்களாற் சூழப்பெற்றவரா யங்கு தோன்றலாகி (68½) யரசனை நோக்கிக் கம்பீரமான வாக்குடன் திருவாய்மலர்ந்தருளியதாவது:— (69) ஓ! கோ! கேளாய்! அரசனே! உன் மதியானது மகா புண்ணியமானதும் சகல லோகங்களுக்கும் மேற்கொண்டதுமே. உனக்கு நிகரானவ ரிவ்வுலகினி லில்லையே! நம்மீதுள்ள வுனது பக்தியு மொப்பற்றதே! (70) ஆகையால் நீ வெகுகாலமளவு மெதிரியற் றரசாண்டு நல்லொழுக்கமுடைய பல புத்திரர்களைப் பெற்று நமது புண்ணியங்களையும் மிகுதியாய்ச் செய்துகொண் (71) டளவற்ற போகங்களை யனுபவித்துவிட்டு முடிவினில் நமது பதவியை யடையக்கடவா" யென் றருளிவிட்டு ஸ்ரீ மகாதேவ ரங் கந்தர்த்தானமடைந்தனர். (72) ஸ்ரீ பரமேசுவரன் பிரசன்னரானபிறகு ஸ்ரீ மகாவிஷ்ணு வங்கு விஜயமாகி மகாத்துமனும் பரிரியோடுகூடியவனுமான அவ் வரசனுக் கோர் சிறந்த விமானத்தைக் கொடுத்தார். (73) பிற்பா டங்கு தேவேந்திரனும் தோன்றலாகி யவன் புத்திரனாகிய பாவஜித்துக் கோ ருத்தமமான வியானையைக் கொடுத் தவனைப் பல வசனங்களாலும் புகழ்ந் (74) தனேக மாசீர்வாதங்களையு மளித்துவிட் டிந்திரன் துரிதமாய்ச் சொர்க்கலோகமடைந்தனன். இவ்விதமாய்த் தேவர்களால் வெகுமானிக்கப்பட்டதன்மே லரசன் வெகு சந்தோஷத்தோ டரண்மனை சேர்ந்து (75) பெண்டீர் பிள்ளையோ டனேக போகங்களை யனுபவித்துப் பின்னும் மகா வணக்கமுள்ளவர்களும் சாத்திரப்பொருட்களை நன்கறிந்தவர்களுமான பல புத்திரர்களைப் பெற்று வெகு சிவபுண்ணியங்களையும் செய்துவிட்டு முடிவினில் மொக்ஷஸாம்பிராஜியத்தை யடைந்தான். (76)

நாற்பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் ௫0—வது அத்தியாயத்தி னார்த்தம்.

சிவாலயத்திருப்பணிக்காகச் சேகரிக்கப்பட்டிருந்த செங்கற்க ளையும் சுண்ணும்புகளையும் கொண்டுவரும்படி கட்டளையிட்ட சிவத்து ரோகியும் பிராயச்சித்த மொழியப்பெற்றவனுமான வீரஜித்தென்ற வி ராஜகுமாரனும், (1-2) அவைகளைக் கொண்டுவருவித்த, அவனது தூ தனுகிய ஹாரியென்பவனும், அவைகளைக் கோண்டுவரலான மற்றச்சே வகர்களு முடனே யிங்கு பார்மீது தண்டிக்கப்பட்டவர்களாகி, அவர்கள் கொடிய பாவத்தைச் செய்தபடியால் மறுமையிலு மியமதூதர்களால் கொண்டுபோய்க் கொடிய நரகத்தில் துரிதமாய் வீழ்த்தப்பட்டார்கள். (3-4) மேலு மவர்க ளிப்போதுகூட மகா கொரேமான அந்தந்த யாத னைகளை யனுபவிக்கின்றார்கள். சிவால்யத் தோட்டத்தின் மரங்களை வெட்டும்படி கட்டளையிட்ட கோரஜித்தென்ற ராஜகுமாரனும், அவ்வதி காரத்தைப்பெற்ற விக்கிரமனென்றவனும், அவைகளை வெட்டலான ச சன்முதலிய வேலைக்காரர்களு மப்பேர்க்கொத்த பெரும் சிவத்துரோக த்திற்காக (5-6) விம்மையிலும் தண்டிக்கப்பட்டவர்களாகி மறுமையி லும் மகா கொடியவர்களான வியமதூதர்களால் மகா மகா கொரேநர்கங் களி லாழ்த்தப்பட்டவர்களாகி (7) யின்னும்கூட வத்தூதர்களாற் பற் பல யாதனைகளாற் பீடிக்கப்படலாகின்றார்கள். ($7\frac{1}{2}$) சூரஜித்தென்ற ராஜகுமாரனு மவன் மனைவியும் நந்தவனத்தின் மலர்களைத் தூதர்களால் தருவித்துக்கொண் டவ் விருவர்களுமா யிரவுதனி லவைகளைச் சூட்டிக் கொண்டார்கள். அப்பேர்க்கொத்த மகா சிவத்துரோகத்திற்காக (9) அவர்களும், தீக்ஷ்ணனென்ற அவர்களது சேவகனும், அவனுடைய தூ தர்களும் இங்கும் நன்றாய்ப் பீடிக்கப்பட்டவர்களாகி மறுமையிலு மிய மதூதர்களால் (10) கொடிய நரகங்களில் தள்ளப்பட்டுப் பலவாறு யி மிசிக்கப்படுகின்றார்கள். ஓ! கோ! ஐயோ! அவர்களின்னும்கூட மகா இகழ்ச்சியான விந் நரகங்களில் கொடிய யாதனைகளை யனுபவிக்கின்றார்க ளே! (11) இத்துராத்துமர்களெல்லாம் நூறுகோடி கல்பமாயினும் நரகக்கடலினின் றொருக்காலும் கரையேறப்போவதில்லையே! (12) ச கலமான பாவங்களுக்கும் வேதத்தினின்று பிராயச்சித்தங்கள் கண்டெ டுக்கப்பட்டு புராணங்களை யறிந்த மகாமகிமைபொருந்திய முனிவர்களா ல் ஸ்மிருதிகளில் விளக்கப்பட் டிருக்கின்றனவன்றோ! (13) ஆனல் சி வத்துரோகமாகிய வோர் மகா பாதகத்திற்கோவென்றால் மகிமைபொரு ந்திய மாமுனிவர்களால் வேதசாஸ்திரங்களி லோரிடத்தாவது பிராயச் சித்தம் கண்டெடுக்கப்படவேயில்லை. (14) சிவத்துரோகிகளெல்லா மி

க்கொடிய நரகங்களி லனேககோடி கல்பமளவு மோய்வின்றிக் கொடிய யாதனைகளை யனுபவித் (15) தங்குதானே கஷ்டப்பட்டுச் சமையலா கின்றார்கள். ஓ! கோ! கோ! சிவத்துரோகத்தின் வைபவம் மகா கஷ்டம்! கேளீர்! முனிவர்களே! இங்கு சிவாலயத்தைச்சேர்ந்த வாழைம ரக்கனிகளை யபகரித்துப்போன (16) வர்களின் கதையைக் கூறுகின்றேன். நீங்களெல்லோர்களும் ஜாக்கிரதையாய்க் கேளுங்கள். (16½)

அங்கதேசத்தில் ஸத்தியஸந்தனும், மகாதீரனும், சகல ஆயுதப் பயிற்சிகளிலும் தேர்ச்சிபெற்றவனுமான விதாதாவென்றோ ராசனிருந்தான். (17½) தேவேந்திரன் சபைக்குப் பிரகஸ்பதிவந்ததுபோ லோர் நாள் நீதியாய்ப் பாராண்டுவந்த வப்பேர்க்கொத்த பார்வேந்தன் சபைக்கு நாரதமுனிவர் வந்தார். (18½) அரசனவ்வாறு வரலுற்ற மாமுனிவரைக் கண்டவுடன் துரிதமா யெழுந்து (19) மிகுந்த பக்தியுட னவரை வந்தனித்துவிட் டவருக்கோ ராசனமளித்தான். பிறகவ னவரதி லுட்கார்ந்ததின்மே லஞ்சலிகொண்டு வினயத்துட னுரைத்ததாவது:—(20) "ஓ! மகா மகிமைபொருந்திய பிரம்மபுத்திரரான ஸ்வாமீ! தேவரீர் சௌக்கியமாய் வந்தீரா? ஓ! பிரபுவாகிய பகவானே! யாங்களிப்போது தேவரீரைத் தரிசித்தமாத்திரத்தில் கிருதார்த்தர்களாகிவிட்டோம். (21) ஆயினும் ஓ! மகா யோகீசுவரரே! தேவரீரது முகாரவிந்தத்தினின்றோர் திருவாக்கை மெத்த ஆதரவுடன் கேட்க ஆவல்கொண்டிருக்கின்ற யா னென்னவூழியம் செய்யத்தக்கதென் றடியேனுக்குத் தயவுசெய்து கட்டளையருளவேண்டும்.(22) மேலும் தேவரீ ரிப்போ தெங்கினின் றிவ்விடம் விஜயமானது? அதின் காரியமென்ன?" என, இவ்வாறுரைத்த அவ்வரசனை நோக்கி நாரத ருத்தர முரைத்ததாவது:—(23) "ஓ! அரசனே! உங்களோடு சம்பாஷிப்பதைத்தவிர நமக்கு மற்றோர்காரியமுமில்லை. உன் தந்தைசொன்ன செய்தியை யுனக்குச் சொல்வதற்காக யா மிப்போ துன்னிடத்திற்கு வந்தோம். (24) உன் தந்தையானவர் ஸுதர்மாவென்ற தேவேந்திரசபையி லிருக்கின்றார். அவர்நம்முகமாயுந்தனுக் குரைத்ததாவது:—"ஓ! ராஜனே! நீ மகாபுண்ணியவானும் பாக்கியசாலியுமாகின்றாய். (25) மானிடர்களுக்குப்புண்ணியம் செய்வதினால் சொர்க்கபதவி கிடைக்கலாகின்றபடியால் நீயிரவும்பகலுமாய்ப் புண்ணியம்செய்யவேண்டுமே!" யென்று நாரதமுனிவ ரரசனுக் குரைத்துவிட்டுப் பிற கருகினிலிருந்த அவ்வரசனதுபுரோகிதனை நோக்கி நகைப்புட னுரைத்ததாவது:—"கேளாய்! அரசனுடைய புரோகிதனே! உந்தன் தந்தையாலுரைக்கப்பட்டதை நீ கேட்கலாவாய்.(27)

ஸம்யமினியென்ற யமபட்டணத்தி லியமபடர்களால் வாதையளிக்கப்ப ட்டவான வுன் தந்தையானவன் பூலோகத்தைக் குறித்து வரலான வெம் மை நோக்கி யஞ்சலியுடன் வந்தனித்து வசனமுரைத்ததாவது:—(28) 'ஓ! முனிவரோ! தேவரீர் விதாதாவென்ற அரசனது சபைக்குப் போ வீராயி னவ் வரசனுக்குப் புரோகிதனும், வணக்கமுள்ள வொழுக்கமு டையவனுமான அஜிதனென்று பெயருடைய வெனது புத்திர ன வ்வரசனுல் வெகுமானிக்கப்பட்டவனுகி யங்கிருக்கின்றான். ($29\frac{1}{2}$) ஓ! முனிச்சிரேஷ்டரே! நானுரைக்கும் செய்தியை யவனுக்குச் சொல் லியருளவேண்டு' (30) மென, ஓ! பிள்ளாய்! இவ்வாறுரைத்த வுன் தந்தையை நோக்கி யாம் வேறு கவனமின்றி யுரைத்ததாவது:—'ஓ! உன் புத்திரனுக்குச் சொல்லவேண்டியதை நாம் தடையின்றிச் சொல் லுகின்றோம். (31) நாம் விதாதாவென்ற அரசன் சபைக்குப் போவோ மாகையாலங்குள்ள வுன்புத்திரனையுங்கண்டு நீ யுரைப்பதைச்சொல்வோ மே!'(32) யென, இவ்வாறுகூறிய வெம்மைநோக்கி யுன்தந்தை மிகுந்த துக்கத்தோ டுரைத்திட்டதாவது:—'ஓ! ஸ்வாமீ! யான்பறவையாய்ப் ப றந்து பறந்து கத்திக் கத்தித் தானங்கள் வாங்கித் தனங்களைத் (33) தேடிவைத்தேனேயின்றி வெரும் பேராசையால் புண்ணியத்தி னோரி லேசத்தைக்கூட சம்பாதிக்கவில்லை. ஆகினு மென்புத்திர னென்மன திற் கொத்திராதபடியா லவனைப்பற்றி யப்போதென்மனம் நினைக்கவே யில்லை. ஆகையா (34) லவ் வெல்லாத் திறண்ட திரவியங்களையும் வீ ட்டுக்குள்ளுள்ள தூணடியில் யான் புதைத்துவிட்டு மற்றொருவருக்கும் சொல்லாம (35) லின்னதைச் செய்தாயிற்று; இன்னதைச் செய்ய வேண்டுமென்று மனக்கலக்கமுற்றிருக்கையி லியமதூதர்கள் வந்தெந்த னைப் பிடித்துக்கொண் டியமனண்டைக்குத் துரிதமாயிழுத்துவந்து(36) மகா பயங்கரர்களான அவ்வியமபட்டர்க ளிரவும்பகலுமா யென்றனை வாதி க்கின்றார்கள். ஆகையால் ஓ! சுவாமீ! தேவரீரை யானிப்போது வந் தனிக்கின்றேன்; 'ஓ! புத்திரா! அத் திறண்ட திரவியங்களை நீ யெடுத் துக்கொண்டு தாமதமின்றிப் புண்ணியம் செய்யலாவா' யென்று தேவ ரீ ரவனுக்குத் துரிதமாய்க் கூறவேண்டும்; ($37\frac{1}{2}$) மேலும் ஓ! சுவாமீ! பூதானம், கன்னிகாதானம், கோதானங்கள், எள், நெல் முதலிய மற்ற னேக தானங்கள் இவைகளைச் செய்யலாவா' யென் றவனுக்குச் சொல் லவேண்டும். கேளீர்! பிரபுவே! ($38\frac{1}{2}$) தவிரவும் 'ஓ! மைந்தனே! கங்கை முதலிய புண்ணிய நதிக்கரைகளில் மிகுந்த சந்தோஷத்துடன் மிகுதியான நெய், அதிரஸம், பருப்பு, வியஞ்சனம் முதலியவைகளோடு ஸஹஸ்ரப் பிராம்மண போஜனமும் (ஆயிரம் பிராம்மணர்களுக் கன்னமி

டுதல்) நீ செய்திடில்(40) யானெவ்விதத்தினாலாவது யாதனைகளைவிட்டு நீங்கிச் சொர்க்கபதவியடைந்திடும்படி தேவரீ ரவனுக்குச் சொல்லியருளவேண்டும்; ஓ! நாரதமுனிவரே! தேவரீரை வந்தனிக்கின்றேன்'(41) னென் றுந்தன் தந்தையாலுரைக்கப்பட்டதை யாமுனக்குச் சொல்லிவிட்டோம். ஆகையால் நீ யுன் மனதின்படி செய்யக்கடவாய்" யென்று நாரதமுனிவ ரவ் வாசனுக்கும் புரோகித புத்திரனுக்கும் (42) திருவாக்கருளிவிட் டப்போது தமது திருமனதி னிச்சையின்படி செல்லலுற்றவராகி யுடனே சொர்க்கலோகமடைந்தனர். பிற்பாடு விதாதாவென்ற அரசமன்னனு மவனது புரோகிதனும் (43) முனிவர் வசனத்தைநினைத் தடிக்கடி ஆச்சரியமுற்றவர்களாகி யவ் விருவர்களும் தங்கள் தந்தை சொல்விற் பாராட்டிய பெருமையினால் புண்ணியங்களைச் செய்யத் தீர்மானித்தார்கள். (44) பிற்பா டஜிதன் தன்வீட்டுத் தூணடியினின்று தோண்டி யெடுத்த தனத்தையும், புண்ணியம் செய்வதற்காக வாசனால் கொடுக்கப்பட்ட திறண்ட திரவியத்தையு (45) மாகிய வெல்லாத் தனங்களையு மெடுத்துக்கொண்டு மிகுந்த தொரையுடன் கூடியவனாகிக் கங்கைமுதலிய நதிகளின் தீரங்களிலும் பட்டணங்களிலும்,(46) காசி காஞ்சி முதலிய வெல்லாப் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் நாள்தோறு மாயிரம் பிராம்மணர்களுக்குப் போஜனமிட்டுவந்தான். (47) மேலும மவனனேக நோயாளிகள், குருடர்கள், கிருபணர்கள், நாதாற்றவர்கள், தரித்திரர்கள் இவர்களுக் கனேகம் பூதானங்களையும் பதினாயிரம் கோதானங்களையும் சந்தோஷமாய்க் கொடுத்தான். (48) மேலு மப் புண்ணியவான் பிராம்மணர்களுக்குக் கோடி கன்னிகாதானங்களும் செய்து மார்க்கங்கள்தோறு மனேக தண்ணீர்ப்பந்தல்க ளேர்ப்படுத்தி ஜலதானம் பண்ணினான். (49) தவிரவு மத் தனங்களைக்கொண் டனேகம் பூத்தோட்டங்களைப் பயிர்செய்து மார்க்கங்கள்தோறு மனேகம் குளங்களையும் (50) வெட்டி வெட்டி யவைகள் கனேக மரங்களையும் வைத்து விருத்திசெய்தான். இவ்விதமா யஜிதனோர் புண்ணியதீர்த்தக்கரையி லோர் தினத்திற் (51) செய்த வோர் புண்ணியத்தினாலேயே அவனது தந்தை நரகத்தினின் றனேக மாயிரம் தேவஸ்திரீகளால் நிரம்பப்பெற்றவோர் சிறந்த விமானத்திலேறிக்கொண்டு சொர்க்கலோகமடைந் தங்குமெத்த வுத்தமமான சொர்க்கபோகத்தை வெகுகால மனுபவித்தான். (52-53) மற்றத்தினங்களி லவனாற் செய்யப்பட்ட புண்ணியங்களா லவன் தந்தை சொர்க்கமதில் மேலுச்குமேலாயுள்ள சுகங்களை யனுபவித்து வந்தான். (54) அவனிவ்விதமாய் நதிக்கரைகளில் வெகுகாலமளவும் புண்ணியங்களைச் செய்துவிட்டு நாளளவில் மகா மகிமைபொருந்திய நிர்

மதாநதிக்குச் சென்று விந்தியகிரியைச்சார்ந்த குன்றினருகினில் (55) ஸ்நாந ஸந்தியாவந்தனம், தேவருஷி தர்ப்பணம் முதலியவைகளை முடித்துக்கொண்டு கேளீர்! வேதியர்களே! பிராம்மணர்களுக்குப் போஜனமும் பலவித தானங்களும் கொடுத்துவந்தான். (56) அஜித னிவ்வாறொருநா ளங்குப் பிராம்மணர்களுக்கு நெய், பருப்பு, கனிகள் முதலியவைகளுட னுண்டி பரிமாறுவிசகையிற் (57) சில பிராம்மணர்களுக்கு வாழைப்பழம் போதாமற் போயிற்று. பிறகு சாப்பிடுவ றெல்லோரு மொன்றும் பேசாமலிருக்கையி லப்போ (58) தஜிதன் மிகவும் துக்கம்கொண்டவனுகித் தனது புரோகிதனை யழைத்து 'ஓ! பிராம்மணச்சிரேஷ்டரே! நீ ரிப்போ ததிசீக்கிரத்தில் வாழைப்பழம் கொண்டுவரவேண்டும். (59) இன்னும் நூறுபழங்கள் தற்காலத்துக்குத் தேவையாயிருக்கின்றன. இப்போது தாமதமின்றி யெங்கிருந்தாலும் கொண்டுவாலாவீ'' றென, இவ்வாறுரைத்ததைக்கேட் டப்புரோகிதனும் 'ஓ! ஐயா! இது இவ்விடத்தில் மிகவும் அரிது. (60) அயலூர்களினின் றுகொண்டுவரப்படில் நாளை மறுநாளைக்குத்தா னுதவும். ஆகையால் பிராம்மணர்க ளிப்போது போஜனம்பண்ணட்டும். உமதுருதி யிவ் விந்தியகிரிக்காட்டி லெப்படி நிறைவேறும்? விசேஷமாய்ப் பழம் போதாமலிருப்பவர்களுக்கு நாளை மறுநாள் தடையின்றி யிருமடங்கு கொடுக்கலாவீ'' (61-62) றென்று புரோகித னுரைக்கும்போ தஜித னவனது தோளின் பேரிற் கையைப்போட்டுக்கொண்டு பின்னுங் கூறியதாவது:—'கேளீர்! புரோகிதரே! உம்மை வந்தனிக்கின்றேன்: எவ்விதத்தாலாவ தெந்தன் விரதத்திற்குப் பங்கம் நேரிடாதபடி யென் கோரிக்கையை நீரவசியம் நிறைவேற்றிவைக்கவேண்டு'' (64) மென்றவன் சொன்னவுடன் மிகுந்த மனோவியாதியோடுகூடிய மகா பெரிதான கவலையைக் கொள்ளலான வப்புரோகிதனை நோக்கி யவனருகிலிருந்த வோர் பிராம்மணன் கூறியதாவது:—(65½) 'ஓ! ஐயா! இதோ மேல்பக்கத்தில் மாச்சோலைகளால் நிறைந்திருக்கின்றது பாரும்! (66) அந்தவிடத்துக்குப் பீமேசுவரபுரமென்றுபெயர். அவ் வூரானது திரண்ட வாழைமரச்சோலைகளா லலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. (67) அங்கு நூறுவாழகன்களுக்குக்கூட வாழைப்பழம் கிடைக்கு'' மென்று சுதீர்த்தனென்றப் பிராம்மண னிவ்வாறுரைக்கையி லப் புரோகிதன் மெத்தத் தொரையுடன் (68) வெகுபணங்களைக் கொடுத்துத் தன் வேலைக்காரர்களை வெகு சந்தோஷமா யனுப்பினான். அப்போ தவனது வேலைக்காரர்களு முடனே யங்குள்ள சிவாலயத்திற்குச்சென்று (69) பூஜைக்காரர்களைப் பணத்துக்கு வாழைப்பழம் கேட்க, அவர்கள் "ஓ! கோ! ஸ்வாமிக்கு மம்மனுக்கு

மே யெங்களுக்கிப்போது போதவில்லையே! (70) நாங்கள் பழம்கொ டுக்கமாட்டோம் போங்க" ளென்று கோபமாய்ச் சொன்னார்கள். பிற கு பழம் வாங்கவந்தவர்கள் துரிதமாய்த் திரும்பிவந் தாசனுடைய வோ ரதிகாரியிடத்தி லப்பணத்தைக் கொடுத் (71½) தவனோடுகூடப்போ யப் பூசைக்காரர்களிடம் சொன்னதாவது:—(72) 'ஓ! கோ! உங்களி ட்டத்தில் வாழைப்பழங்கள் மிகுதியா யிருக்கின்றனவே' யென்றுரை த்து அவ்வரசன் வேலைக்காரர்க ளவர்கள்பேரி லப் பணங்களை விட்டெ றிந்துபோட் (73) டோர் வாழைமரத்தில் பழுத்திருந்த வெல்லாப்ப ழங்களையும் வெட்டி யெடுத்துக்கொண்டுபோய் முந்திப் போடப்படாம லிருந்தப் பிராம்மணர்களுக்குக் கொஞ்சமேனு மாலோசனையின்றிப் ப ரிமாறிவிட்டார்கள். (74½) பிற்பா டப் புரோகிதனும் நிருத்தனென்ற அவ் வதிகாரியு மந்த அர்ச்சகர்கள் பரபரப்பா யரசனிடத்தி லச் சங்கதி யை யறிவித்துக்கொள்வதற்கு முந்தியே யவ் விருவர்களு மதி துரித மாய்ச் சென் றஜிதனுடைய விருத்தாந்தத்தையு மவன் செய்யு மன்ன தானத்தின் மகிமையையு முரைத்ததாவது:—(76½) "ஓ! ராஜேந்திரா! அன்னதானம் சொர்ணதானங்களைச் செய்வதையே தொழிலாய்க்கொ ண்ட மகா புண்ணியசாலியான வஜிதனென்ற விப் பிராம்மணன் புண் ணியதீர்த்தங்கள்தோறு மெப்போதும் மறையவர்களுக்கு மகா சந் தோஷத்துடன் வெகு திருப்தியா யன்னமிட்டு வருகின்றார். (78) இப் போ ததற்காக நேற்றுதினம் ஸ்ரீ பீமேசுவரசுவாமி யாலயத்தில் நூறுப ணம் கொடுத்து வாழைப்பழம் வாங்கப்பட்டு (79) நேற்று நிர்மதை க்கரையில் பிராம்மணர்கள் நன்றாய்ப் போசனம் செய்தார்க" ளென, அ துகேட்டரசன் மிகுந்த சந்தோஷமுற்றவனாகி யஜிதனுக்காக விரும்ப த்தக்க சில வெகுமதிகளைக் கொடுத் தப் புரோகிதனையு மதிகாரியையும் களிப்புடன் சுபாவமா யனுப்பினான். (81) பிறகவ் விருவர்களு மரச னால் கொடுக்கப்பட்ட வெகுமதிகளைப் பெற்றுக்கொண்டு போனவுடன் பீமேசுவரஸ்வாமிகோவில் பூஜைக்காரர்க (82) ளரசனிடம்வந்து மகா து க்கத்தோ டச் சங்கதியைச் சொன்னதாவது:— "ஓ! ராஜனே! ஸ்வாமி யினுடைய வாழைப்பழத்தை யொருகாலத்திலாவது (83) அபிஷேக நைவேத்தியங்களுக்குக் குறைவுநேரிடுமென்று நாங்க ளிதுவரையில் விற்றதேயில்லை. ஆகையால் ஓ! ஸ்வாமீ! அபிஷேக நைவேத்தியங்க ளி லினி குறைவுநேரிடாதபடி தேவரீர் செய்தருளவேண்டும். (84½) ஏனென்று லிப்போ தஜிதனுடைய புரோகிதனோ ரதிகாரியோடுகூட வ ந்துவந் தெங்களையெல்லாம் மீறிப் பலவந்தமாய்ப் பத்துப் பணங்களை

யெறிந்துவிட்டுத் தம் கைகளா லோர் வாழைக்குலையை வெட்டிக்கொண்டு போய்விட்டார்கள். (86) இப்பேர்க்கொத்த காரிய மிதுவரையில் காணப்பட்டதேயில்லை. அவர்க ளது சிவத்துரோகமென்று கொஞ்சமேனு மெண்ணுமல் வாழைப்பழத்தைக் கொண்டுபோய்விட்டார்க" (87) ளென, அரச னவ் வசனத்தைக்கேட்டும் சிரித்துக்கொண்டு சும்மா இருந்துவிட்டுப் பிறகவன் சொன்னதாவது:— 'ஓ! பார்ப்பார்களே! ஸ்வாமிக் கதின் கிரயப்படிக்குள்ள பணத்தை யவர் கொடுத்துவிட்டாரல்லவா? (88) ஆகிலு மினியிப்பேர்க்கொத்த காரியம் நடக்கமாட்டாது போங்க" ளென்று சொல்லி யவர்களை யனுப்பிவிட்டான். பிறகப் பூஜகர்க ளிவ்வாறுரைக்கலான் வரசனை 'ஆ! கா! இவனே சிவத்துரோகியே யின்றி யவ் விருவருமல்ல' மென்று மகா துக்கத்தோடு மனாதிஞல் நிந்தித்துக்கொண்டே (89½) ஸ்ரீ பீமேசுவரசுவாமி யாலயத்திற்குப் போய்விட்டார்கள். பிறகரசனு மரண்மனைக்குட் போய்விட்டான். (90) அவ்வரசன் சிவசொத்தை யபகரித்தவர்களை யெல்லாம் கொஞ்சமேனு மாலோசனை யின்றி விட்டுவிட்டபடியா லம் மகா பாவத்தினு லவனது தந்தையையு (91) மிந்திரலோகத்தினின்று மகா பயங்கரமான நரகத்தில் தள்ளிவிட்டார்கள். அவ்வரசனுமோவென்ரு லன்றுமுதலாய் க்ஷயரோகத்திஞல் பீடிக்கப்பட்டவனுகி (92) யெட்டுத் தினங்களுக்குள் மரணமடைந்து மகா பயங்கரர்களான வியமதூதர்களால் நரகத்திற் போடப்பட்டான். (93) அப்போ தோ ரயலரச னவனது ராஜியத்தையும் பட்டணத்தையும் கட்டிக்கொண்டு மகா கோபத்தோ டஜிதனென்ற வப்புரோகிதனைக் கூர்தமா யிருகண்களையும் பிடுங்கி யவனை (94) யத்தேசத்தைவிட்டுத் துரத்திவிட்டான். பிறகவனும் பூமியெல்லா மலைந்து திரிந் தக் கண்ணிரணத்திஞலே யோர் நிர்மானுஷியமான காட்டினில் மடிந்துபோஞன். (95) உடனே யியமபடர்க ளவனைக் கொடிய நரகத்திற் போட்டுவிட்டார்கள். அவன் தந்தையோவென்ருல் ஸ்வாமியினுபயோகத்திற்காகவுள்ள வாழைப்பழ மெப்போது சிவாலயத்தினின்று கொண்டுவரப்பட்டதோ அப்போதே மறுபடியும் நரகத்தில் தள்ளப்பட்டான். (96½) அஜிதனுடைய புரோகிதனு மளவிலே சாகலாகி யவனையு மவனது தந்தையையும் கோரமான நரகத்தில் தள்ளிவிட்டார்கள். (97½) முந்திப் பீமேசுவரஸ்வாமிகோவிலில் வாழைப்பழ மிருக்கின்றதென் றெந்தப்பிராம்மணஞ லுரைக்கப்பட்டதோ அவனும் சாகலாகி (98½) யவனது வமிசத்தோடு மகா பயங்கரமான ரௌரவநரகத்தில் விழலுற்ருன். (99) அரசனுடைய அதிகாரியான நிருத்தனென்பவனு

ம் பாம்புகடித்திறந் தியமன்கட்டளையின்படி நரகத்தில் போடப்பட்டான்.(100) அக்கனிகளைப் புசிக்கலான மகாத்துமர்களாகிய வந்தணர்களுக்கெல்லாம் ஐயோ! மகோதரவியாதிவந் (101) தம் மகா வியாதியாலே யவர்க ளிறக்கலாகியோர் நொடிநேரத்திற்குள் ளவர்களது வமிசங்களோடுகூட நரகத்தில் விழுந்துவிட்டார்கள். (102) வாழைக்குலையைக் கையினால் வெட்டலான கேஸரியென் றப் பிராம்மணனும் நுனிக்கையிற் பிளவைபுறப்பட்டுக் கையொடிந்து மடியலாகி (103) யவனது கூட்டத்தாரோ டியமதூதர்களால் கோரமான நரகத்தில் தள்ளப்பட்டான். கேளீர்! முனிவர்களே! இவ்விதமாக அரசன், புரோகிதன், அவனது புரோகிதன் (104) அரசனுடைய அதிகாரி, அவன் சேவகர்கள், சொன்னவன், உண்டவர்கள், வெட்டினவன் இவ்வெல்லோர்களு மவரவரின் கூட்டத்தார்களோ டனேககோடி யுகங்களாய்க் கொடியநரகங்களி லின்னும் யாதனைகளை யனுபவிக்கின்றார்களே! ஓ! கோ அவர்களுக் கென்றும் பரிகாரமேயில்லை! (105)

ஐம்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௫௧—வது அத்தியாயத்தி னர்த்தம்.

மேலும் கேளீர்! மாமுனிவர்களே! ஸ்ரீ சிவபிரானுடைய நிலத்தை யபகரித்த சில மானிடர்க ளடைந்திருக்கும் துர்க்கதியைச் சொல்லுகின்றேன். (1) அப்பேர்க்கொத்த துர்க்கதி நேரிடாமல் காத்துக்கொள்வதற்காக வதனைக் கவனமாய்க் கேளுங்கள். பூமியினோர் பாகமாகிய சிருங்கலதேசத்தில் பூசக்கிரபுரமென் றோர் பெரியபட்டணமிருக்கின்றது. (2) அப்பட்டணத்தில் வேதத்திற் கரைகடந்தவனான நல்ல அடக்கமுடையவனும் திரண்ட பணக்காரனும் வித்துவானுமான ஸவிதாவென் றோர் பிராம்மணனிருந்தான். அவனுக்கு மூன்றுபிள்ளைகளிருந்தார்கள். (3) அவர்களில் மூத்தவனானவன் மகா மகிமைகொண்டவனும், தருமிஷ்டனும், மிகவும் வணக்கமுள்ளவனுமா யிருந்தான். அப்பட்டணத்தில் ஹரீசுவராலயமென் றோர் சிறந்த சிவக்ஷேத்திரமிருக்கிறது. (4) அப்புத்திசாலியானவன் தானாகவே அந்தஸ்வாமிக்குநைவேத்தியத்திற்காகத் தன்னுடையசொத்தி லோர்பாகத்தைவிட்டுப் பிற

கவ னெட்டுநாட்களுக்கெல்லாம் மிகவு மொழிவுகொண்டவனுகித் (5) தனது மற்றெல்லாத்தனங்களையுங்கூட அந்தஸ்வாமிக்காக விட்டுப்போட்டுப் பதரிகாசிரமத்திற்குச் சென் றங்கு ஸ்ரீ ஸர்வேசுவரனுடைய பாதாரவிந்தத்தை மனதினில் தியானித்துக்கொண்டே நேர்த்தியான தவத்தைச் செய்தான். (6) உடனே சிவாலயத்தின் நிலவிசாரணைக்காரர் களவனுல் விடப்பட்ட நிலத்தை யுழலாகும்போ தவனது தந்தைவந் தாங்காரத்தோடு கதறிக்கொண்டு மறுத்ததாவது:— (7) ஓ! கோ! என்பிள்ளை பைத்தியம்கொண்டவனுகியேதோ செய்துவிட்டான். மேலு மவன் வீட்டைவிட்டுக் காட்டிற் கோடிப்போய்விட்டான். (8) இது எங்கள் சம்மதியின்பேரில் விடப்பட்டதா? நீங்களே இப்போதுசொல்லுங்கள். அல்லது அப்பைத்தியக்காரனுல் தருமசாஸனபத்திரமாவதெழுதிக்கொடுக்கப்பட்டிருக்கின்றதா? (9) நீங்களிவ்வா றுழுந்தொழிலானதென்னபரிகாஸம்? மேலும்பைத்தியம்பிடித்துச்சொதந்தரமிழந்தவனுல்கொடுபட்டதானதுசட்டப்படிக்குச்செல்லமாட்டாது.(10)ஓ!வெரும்மூடர்களே! இப்படிக்கெல்லாம்கண்டதில்லை; நீங்களோடிப்போங்க" ளென்று வெகுகோபமாய்ச்சொல்லி யவனுல் கொடுக்கப்பட்டதானது செல்லுபடி யாகமாட்டாதென்றே பலவாறுய்த்தடுத்தான். (11) அப்போதவர்களுக்குமவனுக்குமொருவரோடொருவர்மிகுந்தகலகம் நேரிடலாகியாலோசனையின்றியொருவர்மேலொருவரரசனிடத்தில் முறையிட்டுக்கொள்ள, (12) அப்போ தரச னப் பிராம்மணனை மறுதளித்து "ஓ! துஷ்ட்ப்பார்ப்பான்! ஒருவருக்குக் கொடுபட்ட விஷமும் கன்னிகையுமெவ்வாறு திரும்பக் கிடைக்காவோ அதுபோலவே ஸ்வாமிக்காகக்கொடுக்கப்பட்டது சந்தேகமின்றித் திரும்பக் கிடைக்கமாட்டாதுதான். ஆனையால் பாக்கியுள்ள"சொத்தைவைத்துக்கொண்டு புசித்திருபோ" வென்றதட்டினுன். ($13\frac{1}{2}$) பிறகதுமுதலா யந்த நிலம் ஸ்வாமியினுடையதாயிற்று. (14) அவ் வேந்த னிறந்துபோன பிறகு மறுபடியும் கலகமுண்டாகி மற்றோர் சண்டையி லந்நிலத்தை யப் பிராம்மணன் பறித்துக்கொண்டான். (15) அப்போது மகா பலவானுகிய வோரயலரச னவ் விராஜ்ஜியத்தைக் கைப்பற்றிக்கொண்டான். மகா நீதியுடையவனுன அவ்வரசன் தருமமார்க்கமா யரசாண்டுவருகையில் (16) மறுபடியு மவ்வாலயத்தி னதிகாரிக ளந்த வரசனிடத்தும் முறையிட்டுக்கொண்டார்கள். அவ்வரசனு மப் பிராம்மணனை யழைப்பித்துப் பின்னு மந்நிலத்தை விளைந்திருந்த தானியத்துடன் கொடுப்பித்ததோடு (17) முந்திய போகங்களி லவனறுத்துப்போன தானியங்களையும் கொடுப்பித்தான்.

மேலு மவனது மற்றெல்லாச் சொத்துக்களையு மதற்கபராதமாய்க் கொடுப்பித்துப்போட்டுப் (18) பின்னு மவனைத் தன் தேசத்தைவிட்டுச் சடிதியாய்த் துறத்திவிட்டான். பிற கவ் வந்தணன் மகா துக்கம்கொண்டவனாகித் தேசம்தேசமா யலைந்துகொண்டே (19) மகததேசத்துக்குச் சென் றதினரசனைக்கண் டவனிடத்தில் தன் விருத்தாந்தங்களை வேறுவிதமா யறிவிக்க, (20) அவ்வரசனு மவனைப 'பயப்படாதீர் பயப்படாதி' ரென்று தைரியப்படுத்தி 'ஓ! பிராம்மணச்சிரேஷ்டரே! நீரின்றுமுதலாய் நாள்தோறும் நமது சபைக்கு (21) வந்து நம்மை வாழ்த்திக்கொண்டு நம் பட்டணத்தில் தானே சுகமா யிருக்கலாமி' ரென, அப்படியே அவனப்பட்டணத்தி லிருந்துகொண்டிருக்கையி லவ் வரசனது புரோகிதரான (22) விசாந்தரென்பவ ரப் பிராம்மணனைப்பார்த்து சொன்னதாவது:— "அடா! பிராம்மணக்கேடனே! நீ யோர் மிகுந்த சிவத்துரோகியல்லவா? அரசன் கொஞ்சமேனு முபபாதக மென் றுணராம லெவ்வாறடா வுந்தனை யங்கீகரித்தான்? (23) சிவத்துரோகியைக் கண்டவுடன் சிந்தியாமற் கொல்லவே வேண்டும். ஏனெனில் சிவத்துரோகிகள் சிந்தியாமலே கொல்லப்படவேண்டுமென்று பெரியோர்களால் முறையிடப்படுகின்றது. (24) அடா! கேடுகெட்டப்பிராம்மணா! உன்னாற் செய்யப்பட்ட சிவத்துரோகமாகிய மகா பாதகத்திற்காக வுந்தனை யிப்போது கொன்றுபோடுகின்றேன். இல்லாவிடி லுந்தனாற் செய்யப்பட்ட மகா பாதகத்திற்காக (25) விப்போ தெனதுயிரை விட்டுவிடவேண்டுமென்று சொல்லிப்போட் டங்கு நின்றவோரரசன் படைவீரனுடைய கைமீதிருந்த கத்தியைப் பிடுங்கி யவன் தலையைக் கண்டித்துவிட்டார். (26) அச் சங்கதியை யரசன் கேட்டவுடன் மூடத்தன்மையா லப் புரோகிதரைக் கோபித்துக்கொள்ள, புரோகிதரும் கோபத்தினால் விழிகள் சிவக்கப்பெற்றவராகி யவ் வரசன் தலையையும் வெட்டிவிட்டார். (27) சிவத்துரோகியாகிய வப் பார்ப்பானு மரசனுமோர் நொடிநேரத்திற்குள் புரோகிதராற் கொல்லப்பட்டவுட னங்கு சன்னத்தர்களாயிருந்த வரயன் சேவகர்க ளிதென்னவென்று திகைத்து (28) மகா வாக்கிரகம் கொண்டவர்களாகி யொருவரோடொருவர் வெட்டியடித்துத் துகைத்துக் கொள்வதில் தலைப்பட்டவர்களாகி யெல்லோர்களும் தெய்வவசத்தினால் புத்தி தடுமாறப்பெற்றவர்களா யொருவரையொருவரடித்து வெட்டிக்கொண்டார்கள். (29½) இவ்வெல்லாவற்றையு மவ் வரசன் குமாரனான ஸுமித்திரன் பார்த்தவுட (30) னந்தப் புரோகிதரிடம்வந்து வந்தனித் தஞ்சலிகொண்டவனாகி "ஓ! ஓ! சகலகு

ணங்களும் நிரம்பப்பெற்ற விசாந்தரே! தேவரீராலே யிவ்வாறு செய்யப்பட்டது? (31) தேசாந்தரத்திலிருந்துவந்த விப்பிராம்மணரு மரசனும் பிராம்மணராகிய தேவரீராலே யிப்போது துரிதமாய்ச் சமுகரிக்கப்பட்டார்கள்? (32) ஓ! பிராம்மணோத்தமா! இதற்கென்ன காரணமென்று வினவலாகிய வெந்தனுக் குரைத்தருளவேண்டும். மேலும் ஓ! ஸ்வாமீ! இப்படைவீரர்களெல்லா மே யொருவரோடொருவ ரடித்துக்கொண்டு மாண்டார்கள்? (33) ஓ! ஸ்வாமீ! நீரே ஸாக்ஷாத் ஜகதீசனென் றெனது நிச்சயமான கொள்கையாயிருக்கின்றபடியால் தேவரீ ரடியேனுக் குண்மையை யுரைத்தருளவேண்டும். ஏனென்றால் பெரியோர்கள் சத்தியத்தையே முக்கியமாய்ப் பாராட்டுகின்றவர்களன்றோ!' (34) வென, பிற்பாடு விசாந்தர் சமனஞ்சொண்டவராகி யவ் விராஜகுமாரனை நோக்கி யுரைத்திட்டதாவது:—'ஓ! இராஜகுமாரனே தேசாந்தரத்தினின்று வந்த விப் பிராம்மணன் ஸ்ரீ சிவபிரானுடைய நிலத்தை யபகரித்துக்கொண்டவன்; (35) ஆனதுபற்றி ஜனங்களால் ஸம்பாஷிக்கத்தகாதவிக்கொடியனவ்வரசனால் வெகுமதிக்கப்பட்டானன்றோ! ஆகையால்தான் கொலைசெய்ய வஞ்சாத வப் பிராம்மண னக்கணமே யாலோசனையின்றி யிவ்விதமாய்க் கொல்லப்பட்டதோ (36) டவனுக்குதவிசெய்யமுயன்றவரசனும் நாட்டின்க்ஷேமத்திற்காக வெந்தனாற் சமுகரிக்கப்பட்டான். இப்படைவீரர்களோ அடக்குவோரில்லாதுபற்றி யொருவரோடொருவ ரடித்துக்கொண்டு மாண்டார்க". (37) ளென, இவற்றையெல்லா மவ் விராஜகுமாரன் கேட்டவுடன் பயந்து நடுநடுங்கியவனாகி யவரை வந்தனித் தஞ்சலிகொண் டாச்சரியத்துட னவரை நோக்கி யுரைத்ததாவது:— (38) "ஓ! ஸ்வாமீ! சந்தேகமின்றி யுலகினிற் கொலைசெய்ய வஞ்சாதவனாகிய ஸ்ரீ பரமேசுவரனது நிலத்தை யபகரித்தவனான விப் பார்ப்பானு மவனுக் குதவிசெய்ய முயன்ற வரசனும் தேவரீரால் கொல்லப்பட்டதும், அரசனுடைய படைவீரர்கள் தாங்களே யடித்துக்கொண்டு மாண்டதும் மிகவும் யோக்கியம் மிகவும் யோக்கியமே! (39½) ஆகினு மெந்தனாற் செய்யப்படு மோர் விண்ணப்பத்தைச்செவிதனிற் கொண்டோர் முடிவுசெய்தருளவேண்டும். (40) என்னவெனில் ஓ! பிராம்மணச்சிரேஷ்டரே! பாவஞ்செய்தவர்களான இவர்கள் நம்முடைய க்ஷேமத்தின் விருத்திக்காகவே யிப்போது சடிதியில் கொல்லப்படலானார்களென்பதிற் சந்தேகமேயில்லையென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். என்றாலும் ஓ! ஸ்வாமீ! இப்போ தடியேனுடைய சிரசைக் கண்டித்துப்போட் டிப்படைவீரர்களை யுயிர்பிழைக்கச்செய்

யும்படி யான் வேண்டிக்கொள்ளுமபராதத்தை யிப்போது தயவுசெய்து மன்னிக்கவேண்டு" மென, (41-42) அதுகேட்டவ் வேதிய ரிராஜகுமாரனை நோக்கி நகைத்துக்கொண்டு பின்னுமுரைத்ததாவது:— "ஓ! ராஜகுமாரனே! நீர் கூர்மையுள்ள புத்தியுடையவரொன்பதிற் சந்தேகமே யில்லை. (43) ஏனெனில் அபராதியான தந்தையைப் பிழைப்பித்தலானது சரியல்லவென்பதை யறிந்து மற்ற ஜனங்களை யுயிர்பிழைப்பிக்கும்படி நீர் வேண்டிக்கொண்டது மிகவும் யோக்கியமே!" (44) யென்று சொல்லியப்போட்டப்பிராம்மணன் ஸ்ரீ சிவபிரானுடைய மகிமையா லப் படைவீரர்களை யுயிர்பிழைப்பித்துவிட்டார். பின்னுமொருவரோடொருவ ரடித்துக்கொண்டிருந்த மற்றவர்களு மதேக்ஷணத்தில் தடுக்கப்பட்டார்கள். (45) இவற்றையெல்லா மிராஜகுமாரன் பார்த்தவுடனப்போ தாச்சரியமுற்றவனாகித் தங்கள் புரோகிதரை யடிக்கடி வந்தனித்தான். (46) அப்பொழுதே வானரதினின் றங்கு மலர்மாரி சொரியலுற்றது. தேவதுந்துபிக ளாகாயத்தில் மிகுந்தத் தொனியோடு முழங்கலாயின. (47) மேலும் சிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ளவர்களான சிலகணுதிபர்கள் வானமார்க்கத்தினின் றோர் விமானத்தோடுகூட வந்கு தோன்றியப் புரோகிதரை நோக்கி வசனமுரைத்ததாவது:— (48) "ஓ! உறுதியுள்ள விரதத்தைக்கொண்டவரும் மகா புத்திசாலியுமான தரணிதேவரே! நீர் மிகவும் கிருதார்த்தராகிவிட்டீர். நீ ருத்தமமான விவ் விமானத்தி லேறிக்கொண்டு ஸ்ரீ நந்திகேசுவரன் திருவாக்கினையின்படி ஸ்ரீ சிவபிரானது திருமாளிகையாகிய கைலைகிரிக்கு வரலாவீ" (49½) ரென்று சொல்லி யவர்களவனைப் புத்திர பௌத்திர பந்துமித்திரர்கள் சகிதரும் தமது திருமேனியால் விளங்கப்பெற்றவருமா யெங்கும் செல்லத்தக்கதான அவ் விமானத்தி லேற்றிக்கொண்டு மெத்த வுத்தமமான கைலைகிரியிற் கொண்டுசேர்த்தார்கள். (51) தன் புத்திரனால் கொடுக்கப்பட்ட சிவாலயநிலத்தைக் கட்டிக்கொண்ட கேடுகெட்ட பார்ப்பானான சவிதாவென்றவ னிங்குதானே தரித்திரனாகிவிட்டான். (52) அவனது பிள்ளைகள், பெண்டீர், பெண்கள், மறுமகட்கள் இவர்களெல்லாம் நாசமாகித் தானும் மகா தரித்திரனாய்த் தேசம்தேசமா யலைந்ததி (53) லங்கோர் பிராம்மணனால் கத்தியால் வெட்டப்பட்டு மகா கொரோர்களான வியமதூதர்களா லனேக கல்பம்வரையில் நரகங்களிற் போடப்பட்டவனாகி (54) யின்னும்கூட மீளவில்லை. (54½) அவனுக் குதவிசெய்ய முயன்றவனான வாசனும் கொஞ்சமேனு மெதிர்பார்த்தலின்றித் தடீலென்று வெட்டப்பட்டவனாகி (55) நரகங்களில் விழலுற்றான். ஆகையால் ஆ! கா! சகலப்பிராணிகளுக்கும் தீயரோ

டிணங்கல் கெடுதிக்கே யேதுவாகுமென்பது நிச்சயமே! கேளீர் தரணி தேவர்களே! அவ்வரச னின்னும்கூட நரகத்தினின்று கரையேற வில்லை. (56)

ஐம்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

உபதேசகாண்டம் ௫௨—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! பிராம்மணச்சிரேஷ்டர்களான முனிவர்களே! இதின் பிறகு உலகத்தில் ஸ்ரீ சிவபிரானுடைய பசுமாடுகளைத் திருடலான மாணிடர்களாகிய சில மூடர்களின் கதையைச் சொல்லுகின்றேன். ($1\frac{1}{2}$) பாண்டுராஜன் புத்திரனும், ஸத்தியசந்தரும், மகா பாக்கியசாலியும், பராக்கிரமமுடையவருமான யுதிஷ்டிரரென்ற தருமபுத்திரமகாராஜன் ($2\frac{1}{2}$) தம் தம்பிகளோடுகூடச்சத்துருக்களாகிய துரியோதனன் முதலியவர்களை வென் (3) றளவற்ற மகிமைகளுக் கிருப்பிடமானவராய்ப் பூபாரத்தைத் தீர்த்துப்போட்டு முடிவினில் மகாப் பிரதாபத்துடன் தமது சரீரத்தோடுக்கூடச் சொர்க்கத்துக்குச் செல்லுகையில் (4) நடுவழியில் தம் தந்தையாகிய யமதருமராஜனிடம் போயவனை வந்தனித்துவிட்டுப் பிறகவனால் மரியாதை செய்யப்பட்டவராகி யங்கிருந்தார். (5) கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போ தங்குள்ள, தருமாதருமங்களை விசாரிப்பவர்களான சித்திரகுப்தன் முதலியவர்களைச் சபையின் மத்தியி லியமனை நோக்கி யஞ்சலிகொண் டுரைத்ததாவது:—(6) "ஓ! ஸ்வாமீ! சத்துருக்களொழியப்பெற்ற மகா பாக்கியசாலியான விப்புண்ணியவான் தமது சுகிருதங்களால் புண்ணியமற்றவர்களா லடையப்பெறுகதான சொர்க்கத்திற்குப் போகலாகின்றார். (7) முந்தியிவ் விராஜேந்திரனால் உயுத்தகளத்தில் சத்துருக்கள் சமுகாரம் செய்யப்படும்போது மிகுந்த நிர்ப்பந்தத்தின்பேரி லோர் பொய் யுரைக்கப்பட்டதன்றோ! (8) ஓ! தேவனே! ஆகையா லிவரப்பேர்க்கொத்த பாவத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக நரகங்களைக் கண்ணுற் பார்க்கவேண்டு" மென, அது கேட்டப்படியே சரியென் றியம னந்த மகாராஜனோடு (9) கூடப்பாதாளத்திற்கு வந்து முறையே யெல்லா நரகங்களையு மங்குள்ள துராத்துமர்க ளனுபவிக்கு மெல்லாக்கொடிய யாதனைகளையு மவருக்குக் காண்பித்தான். (10) அப்போது தருமபுத்திர 'ரனலாஸிய' (வாய்தனி லக்கி

னியைக்கொண்டது) மென்ற வோர் நரகத்தி லனேகம் கொடிய யாத னைகளை யனுபவிப்போர்களைப் பார்த்துச் சடிதியிற் பயம்கொண்டவராகி யியமனை நோக்கி (11) யஞ்சலியோடிருந்து வின்வியதாவது:— 'ஓ! ஸ்வாமீ! இவர்களா லென்னபாவம் செய்யப்பட்டதென்று வினவலாகு மடியேனுக் கதனை விளங்கச்செய்யவேண்டு' (12) மென் றியமன் வின வப்படலாகையி லவன் தன் புத்திரனை நோக்கிக் கைதனைக்குறித்துக்கா ட்டிச் சொல்லியதாவது:—"ஓ! தருமபுத்திரா! இவர்கள் மிகுந்த சிவத் துரோகிகளாகின்றார்கள். அதன் விவரத்தைச் சாக்கிரதையாய்க் கேட் கலாவீர். (13) பூமியி னோர் பாகமாகிய குஞ்சரதேசத்தில் வஸுதாபுர மென் றோர் பட்டணமிருக்கின்றது. அப்பட்டணத்தில் மிகுந்த புண் ணியவானும், நிந்தைக்கிடமற்றவனுமான விப்பிரமணியென் றோர் சிற ந்த வந்தணனிருந்தான். அவனை யிந்திரன் சொர்க்கத்துக் கழைத்துப் போய் ($14\frac{1}{2}$) மிகுந்த நேசமுற்ற மனதைக்கொண்டவனாகி யவனுக் கோர் சிறந்த வாபரணத்தைக் கொடுத்து (15) 'ஓ! புலவரோ! இவ் வாபரணமானது நாளொன்றுக் காயிரம்பொன் கொடுக்கத்தக்கது. இ தனை யெடுத்துக்கொண்டு சோம்பலின்றிப் பூலோகத்தில் தொளையுட ன் புண்ணியம் செய்யலாவீ' ரென்று சொல்லிவிட் டவனைச் சடிதியாய்ப் பூலோகத்திற் கொண்டுவிட்டான். ($16\frac{1}{2}$) பிறகவனும் பூமிக்கு வந் தவுட னப்படியே புண்ணியம் செய்துவந்தான். (17) ஒருநா ளப் பிரா ம்மணன் சகல தருமங்களையு மாசரிக்கையில் மிகுந்த நேசமுற்ற மன துட னாயிரம் கோதானங்கள் செய்தான்.(18) அங் கந்த வாயிரம் பசுக்க ளுடன் ஸ்ரீவசந்தேசுவரஸ்வாமியினுடைய வோர்பசுவும் வந்து கலந்திரு ந்தபடியா லவைகளோ டதனையும் சேர்த்து 'ஆயிரத்திற் காயிரத்தொன் றாயிருக்கட்டு' மென்ற நினைப்போடு மகா சந்தோஷமாய்த் தானம்செ ய்துவிட்டான் ($19\frac{1}{2}$) பிற கச் சிவாலயத்தி னர்ச்சகர்க ளங்கு வந் தவ னைக் கோபித்துக்கொண்டு (20) 'ஓ! பிராம்மணா! ஸ்ரீ வஸந்தேசுவர ஸ்வாமியின் பசுவை நீர் விட்டுவிடவேண்டு' மென்று திட்டித் தடுத்து மப் பிராம்மணன் சொன்னதாவது:—(21) 'ஓ! அர்ச்சகர்களே! நம து தானத்திற் குதவியாக, ஆபரணத்தி னின் றுண்டாகலுற்ற தனமான து நமக்குத் தேவேந்திரனால் கொடுக்கப்பட்டதுபோ லிப் பசுவான்து ஸ்ரீ வஸந்தேசுவரரால் நமக்குக் கொடுபட்டதே (22) ஆகையால் நீங்க ள் போகக்கடவீர்க" ளென் றவர்களைச் சொல்லிப்போட் டப்போ தவ னப் பசுவை விடவில்லை. பிற கவ் வர்ச்சகர்கள் மனவேக்கம் கொண் டவர்களாகி யவ் வெல்லாச் சங்கதிகளையு மரசனிட மறிவிக்க, (23) அ வ்வரசன் பராமுகமா யதனை விசாரிக்கவில்லை, அப்போ தருகினில் நி

ன்ற மந்திரியானவ னரசனை நோக்கிச் சொல்லியதாவது!— (24) "ஓ! ராஜனே! இதென்ன காரியம்? ஸ்வாமியின் பசுவைப்பற்றி யிவ்வா றசட்டைசெய்வது கூடாது. இச்சிவத்துரோகியை யவசியம் சிந்தியாமல் தண்டிக்கத்தக்கதன்றோ" (25) வென, அதற் கரசன் மந்திரியை நோக்கி யுரைத்ததோவென்றால்:— 'கேளாய்! மந்திரீ! இப்பிராம்மணோத்தமன் தேவேந்திரனுக்குப் பிரியமுள்ளவனானையா லவனைத் தண்டிக்கத்தகாது. அவ ரெப்படியாவது போகட்டு" (26) மென, அப்போதம் மந்திரிச் சிரேஷ்டனும் "ஓ! கோ! இவ் வரச னிப்போது சிவத்துரோகிக் கிடங்கொடுப்பதால் நா மினி யிங்கிருப்பது தகா" தென் றிவ்விதமாய்ச் சொல்லிப்போட் டுடனே காட்டுக்குப் போய்விட்டான். (27) அப்போது கோவி லதிகாரிகளெல்லா மரசனை 'ஓ! கோ! இவனே மகா சிவத்துரோகி' யென் றிகழ்ந்துகொண் டவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். (28) இப்படி வெகுநாட்சென்றபிறகு விசாலனென்ற அவ் வரசன் கோபத்தினால் வனத்துக்குப் போகலான ஸுவீரனென்ற மந்திரியைக் கூப்பிடுவித்து மவன் வனத்தினின்று வரவில்லை. (29½) பிற கச் சுகிருதன் நாளளவில் தனங்களற்றவனாகி (30) யேக்கங்கொண்டு தன் குடும்பச்செலவுக்காக மெத்த மனக்கவலை கொள்ளலாகையி லவ்வாறு ஸுவீரன் மனத்துயரப்படுவதைத் தேவேந்திர னறிந் (31) தசுரர்களைக் கொல்லலுற்ற வத் தேவேந்திரன் காமதேனுவை நோக்கி 'ஓ! யெல்லா வேண்டுதல்களையும் கொடுக்கலுற்ற புகழ் பொருந்திய காமதேனுவே! மகா புண்ணியவானாகிய ஸுவீரன் தனங்களை யிழந்தவனாகி யிப்போது காட்டினில் வசிக்கின்றான். ஆகையால் நீ போ யவன் குடும்பத்தை யிரக்ஷிக்கலாவா" யென் றுரைத் ததனை யனுப்பலானான். (32½) அப்போது காமதேனுவு மவன தாக்கினையைச் சிரசினால் வகித்துக்கொண்டு தொரையுடன் (33) வனத்துக்குத் துரிதமாய்ச் சென்று வேண்டியதைக் கொடுக்கலுற்ற வச் சிறந்த தேனுவானது நாள்தோறு மக் காடுதனி லன்னம்முதலியவைகளா லவனது குடும்பத்தைத் தாங்கலாயிற்று. (34) சுவீர னிவ்விதமாய் நடுக்காட்டினிற் குடும்பத்தோடு சுகமாய் வசித்துவருகையில் விசாலன் மெத்தக் கோபங்கொண்டவனாகிக் காட்டில் வசிக்கின்ற வச் சுவீரனை யுடனே பலவந்தமாய்க் கட்டிக்கொண்டு வருவதற்காகச் சைனியங்களோடுகூடக் காட்டுக்குப் போகும்போது (35½) மறுநாள் பாதிவழியி லோர் யானையானது மதத்தினாற் சங்கிலியை யறுத்துக்கொண்டு துரிதமாய்க் காட்டிற்கு வந் தவ் வரசனைக் கொன்றுபோட்டது. (36½) அரச னங்கு

கொல்லப்பட்டவுட னவனது சைனியங்களெல்லாம் ஐயோ! ஐயோ!
வென்று கதறிக்கொண் டதேக்ஷணத்தில் பட்டணத்துக்குத் திரும்பிப்
போய்விட்டார்கள். (37½) பிறகுடனே யவன் புத்திரனான சித்திரசே
ன னிராஜியத்திற் பட்டாபிஷேகம் செய்யப்பட்டான். (38) பிறகவன்
மிகவும் வணக்கத்தோடு சுவீரனென்ற மந்திரியை யரணியத்தினின் ற
ழைக்க, அச் சுவீரன் தூதர்முகமா யவ் வரசனுக்குச் சொல்லியனுப்பி
னதாவது:— (39) "ஓ! சத்துருக்களைக் கொல்லலுற்ற சித்திரஸேன
ராஜனே! அப்போர்க்கொத்த சிவத்துரோகியாகிய விப்பிரமணியானவ
ன் தண்டிக்கப்படில் நான் வருவே" னென்று தன் தூதர்மூலமாய்ச்சொ
ல்லியனுப்ப, (40) அப்போதே யவ் விராஜகுமாரன் நாட்டின் க்ஷேம
த்திற்காக வந்த விப்பிரமணியைக் கோரவசனத்தினு லழைத்து (41)
'அடா! துஷ்டப் பார்ப்பானே! நீ திருடனே! நீ ஸ்வாமியினுடைய ப
சுவை யபகரித்துப் பார்ப்பாருக்குத் தானம்கொடுத்தபடியால் நீ திருட
ன்தான். (42) திருடன் கண்டிக்கப்படி லதினு லவ னிப்போர்க்கொத்த
பாவத்தினின்று நீங்குகின்றான். அல்லது திருடன் கண்டிக்கப்படாவி
ட்டா லவன்பாவத்தை யரச னடையலாகு" மென்று சொல்லிவிட்டு ம
கா புத்திசாலியான விராஜகுமார னப் பிராம்மணனைக் கண்டித்துவிட்டா
ன். (43) பிற்பாடு தேவேந்திரன் மகா சந்தோஷம் கொண்டவனுகி ய
ப்போதே யங்கு தோன்றி முந்தித்தான் விப்பிரமணிக்குக் கொடுத்திரு
ந்த வாபரணத்தைப் பிடுங்கி மகா சந்துஷ்டியோடு சுவீரனுக்குக் கொடு
த்துவிட்டான். (44) இந்திரன் துரிதமாய் முன்போல் தேவலோகம்
சேர்ந்தவுடன் மலர்மாரியானது தேவர்களாற் சொரியப்பட்டதாகி யங்
கு விழலுற்றது. (45) பிற்பாடு கச்சதேசத்திற் குடியிருக்கும் பசுவை
த் தானம்கொண்ட வஸுவென்றப் பிராம்மணனைப்பற்றி யோ வென்றா
ல் மகா பராக்கிரமசாலியான அவ் விராஜகுமாரன் (46) 'ஓ! கோ!
அத்துர்ப்புத்திக்கார னது சிவாலயத்தின் பசுமாடென்பதை யறிந்தவனு
யினு மதனைத் தானம்வாங்கிக்கொண் டித் தேசத்தைவிட்டு மறுதேசத்
திற்குப் போய்விட்டானே' யென் (47) றத் தேசத் தரசனுக்குத் தன்
தூதர்மூலமா யப் பிராம்மணன் செய்திருக்கும் பாவத்தை யறிவிக்க, பி
றகவ் வரச னவனையு மப் பசுவையும் தன் சேவகர்மூலமாய் (48) வ
ருவித்துத் தான் பரிசுத்தம் பெறவேண்டியதற்காகத் தன் தூதர்மூலமா
ய்ச் சடிதியி லப் பசுவை யந்த ஸ்வாமிக்குத் திரும்ப வனுப்பிவிட் டப்
பிராம்மணனுடைய கண்களைப் (49) பிடுங்கி யவனை யுடனே தன் தே
சத்தைவிட்டுத் துரத்திவிட்டான். பிறகு கண்ணிழந்த வப் பிராம்ம
ணனும் நாளளவில் மடிந்தான். (50) பிறகு தானம்கொடுத்தவன், வாங்

கினவன், அவ் விருவர்களையும்பற்றி யசட்டையாயிருந்த வரசன் இம்மூன்றுபெயர்களும் மகா பயங்கரர்களான வியமபடர்களா லிழுத்துவரப்பட்டு மிகவும் கொடியதான வனலாசியமென்ற நாகத்தி லளவற்றகாலமாய் வீழ்த்தப்பட்டிருக்கிறார்கள். 'மேலும் கேளீர்! யுதிட்டிரரே! அவர்களது வமிசத்தார்களு மவ்வாறே தள்ளப்பட்டார்க" (51-52) ளென, இவ்வாறு தந்தை யுரைத்திட்ட வசனத்தைக் கேட்டதன்மேல் தருமபுத்திரர் மெத்தவாச்சரியமுற்றவராகித் தந்தையி னனுமதியின்பேரில் விமானத்தோடு சொர்க்கம்போய்ச் சேர்ந்தார். (53) சூதர் சொல்லுகின்றார்:— ஓ! முனிவர்களே! ஸ்ரீ சிவபிரானுடைய பசுவை யபகரித்ததனால் கொடுத்தவன், வாங்கினவன், அவர்களை யசட்டையாய்விட்ட மத்தியஸ்தன் இவர்களா லடையப்பட்ட கதியைப்பற்றிய சரித்திரத்தை யிப்போது சொல்லிமுடித்தேன். பின்னும் நீங்க ளெதைக் கேட்க விரும்புகின்றீர்கள்? (54)

ஐம்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ருங—வது அத்தியாயத்தி னர்த்தம்.

'பிற்பாடு ஓ! பிராம்மணோத்தமர்களே! விருஷப முத்திரைபோடப்பெற்ற ஸ்ரீ பரமேசுவரனுடைய தாஸியான விருடபி என்றவளை யபகரித்துக்கொண்டவரின் கதையைச் சொல்லுகின்றேன். அதனை யிப்போது கேளுங்கள். (1)' பூர்வத்தில் நான்முகத்தேவன் சகல ஜகங்களையும் சுற்றிப்பார்க்க விருப்பமுற்றவராகி மிகவும் வெண்மைபொருந்திய வன்னத்தின்மீ தேறிக்கொண்டு மிகுந்த சந்தோஷத்துடன் சுற்றிவருகையில் (2) சமியமினிபட்டணத்துக்கு வந்து கொடியவைகளான நரகங்களைப் பார்க்கும்போ தவைகளின் மத்தியிலுள்ள சில நரகங்களைப் பார்க்க மனம் பிடியாதவராகி யப் பிரம்மன் (3) தம் வாகனத்தை நோக்கி 'ஓ! அன்னமே! இவைகளெல்லாம் மிகவும் துராத்துமர்க ளிருக்குமிடங்களானகையா லவைகளை நாம் பார்க்கத்தகாது. ஆகையா லிதற்கப்பால் போகவேண்டா' மென, பிற கன்னமு மவரை நோக்கி 'ஓ! பிரபுவே! இவை யென்ன நரகங்கள்? அவைகளைத் தேவரீர் பார்க்கத் தகாதென்பதற் கென்னகாரண' மென,(5) பிரம்ம னவ் வன்னத்தை நோக்கி

'ஓ! அன்னமே! இவ்விடமெல்லாம் சிவத்துரோகத்தில் முயன்றவர்களால் வாசம் செய்யப்பட்ட விடமாகையால் பார்க்கத்தகா' தென்று சொன்னதின்பேரி லவ்விருவர்களும் திரும்பலாகும்போ(6) தந் நரகங்களின் மத்தியில் தகதகாயமானமாய்த் தீப்பற்றி யெரியலாகு மோர் வயிரக்கம்பத்தில் கட்டிவைக்கப்பட்டிருக்கு மோர் மனிதனுற் கூவப்படும் கூறலான (7) தவ் வன்னசதிற்குக் கேட்க, அப்போ ததுபிரம்மனை நோக்கி 'ஓ! ஸ்வாமீ! இவனு லென்ன பாவம் செய்யப்பட்ட' தென, பிரம்மனும் 'ஓ! அன்னமே! நான் சொல்வதைக் கே' ளென் றவன் வரலாற்றை யுரைத்தருளுகின்றூர். (8)

கேளாய்! அன்னமே! ஸௌராஷ்டிரமென்ற தேசத்தில் ஸௌரபுரமென்றோர் மங்களகரமான பட்டணமிருக்கின்றது. அப்பட்டணத்தில் சுதத்தனென்று தருமிஷ்டனும், பணக்காரனும், பாக்கியசாலியுமானவோர் வணிக (9) னெப்போதும் சூதின்றிப் பற்பல வர்த்தகங்களைச் செய்துவந்தான். அவன் நாள்தோறும் பத்ரகாளியம்மனுடைய பாதகமலங்களைப் பூஜைசெய்வதில் முயன்றவன். (10) மேலுமவன் சகலப்பிராணிகளிடத்து மிறக்கமுற்றவனு மெல்லாத் தேசங்களிலும் பெயர்போனவனுமாயிருந்தான். அவன் கப்பல் வியாபாரி யாகையா லோர் தடவை கப்பல் மூலமாய்க் கடல்கடந்து (11) தீவாந்தரத்தில வியாபாரம் செய்துவிட்டு வெகுகாலமாய்ச் சோம்பலின்றி யாத்திரை செய்து நடுக்கடலில் திரும்பிவருகையில் புயலினுல் கப்பல் கவிட்கப்படலாகும போ (12) தச் சுதத்தன் வேறு நினைப்பின்றி பத்திரகாளியம்மையை மனதினுல் தியானிக்க, அவனுடைய பக்தியினு லுடனே யவ் வம்மையப் பெருங்கடலினின் (13) றவனை யவனது சைனியங்களுடனும் சொத்துக்களுடனு மவன் வீடுகொண்டு' சேர்த்துவிட்டாள். அச் சகலத்தையும் கண் டங்குள்ள வெல்லோர்களு மச்சுதத்தனை வெகுசாய்க் கொண்டாடினுர்கள். (14) இப்படி யிருக்கையிலொருநா ளவனுக்குக கலியாணம் நடந்தபோ தப் பட்டணத்து ஜனங்களெல்லா மவன் வீட்டிற்கு வந் துண்டு வெகு தனங்களாற் சம்மானிககப்பட்டவர்களாகிச் சந்தோஷிக்கலானுர்கள். (15) மேலும் நட்டுவர்கள், விடர்கள், தாசிகள், நாட்டியக்காரர்கள், கட்டியக்காரர்கள் இவர்களும், ஸ்ரீஸௌரேசுவரசுவாமி யாலயத்தைச்சேர்ந்த மனிதர்களும் ஸ்திரீகளு மவ் வணிகனுல் வெகுமதி செய்யப்பட்டவர்களாகி (16) யெல்லோர்களு மவனுல் மரியாதையா யனுப்பப்பட்டார்கள். இவர்களுக்குள் ஸ்ரீ ஸௌரேசுவரஸ்வாமி யாலயத்தைச் சேர்ந்தவளான விருடபமுத்திரை போடப்பெற்ற

வோரழகிய தாசியிருந்தாள். (17) மிகவும் காமாதுரனான அவ்வணிக னவளைக்கண்டதி லவளது சௌந்தரியத்தினால் மோகிக்கப்பெற்றவனாகி யச் சிற்றிடையாளைத் தன் வீட்டில் வைத்துக்கொண் டன் றிரவுதனி லவளோடு புணர்ந்தான். (18) பிறகு மறுநாட்காலையில் சிவாலயப் ப ணிவிடைகளைச் செய்வதற்காக அவள் போக விரும்பும்போ தவன் கூ ட்டத்திறமையுள்ள மற்றோர் வேலைக்காரியை யனுப்ப வாலோசித்துக் (19) கூட்டுவதில் மிகவுந் தேற்சிபொருந்திய தன் வீட்டு வேலைக்கா ரியை யனுப்பினான். பிறகு கோவி லதிகாரிக ளவ் விருடபியின்றி வே றவ் வணிகன் வேலைக்காரி வரலானதைக் கண்டவுட (20) னவ் வணி கனை யழைப்பித்து வினவியதாவது:— 'ஓ! செட்டியாரே! இவ் வேலை க்காரியா லிங்கென்ன செய்யத்தகும்? இவள் சிவாலயத்திற்குத் தகுதி யல்லள். ஆகையா விருடப முத்திரைபைக் கொண்ட வத் தாசியை விட்டுவிடு' மென் றவர்களா லிவ்வாறு கேட்டுக்கொள்ளப்பட்டு மவன் தன கர்வத்தினா லவளை விடவில்லை. அதன்பேரில் பின்னுமவர்கள் 'ஓ! வணிகரே! உமது சொந்த மனைவியானவ ளெப்படியும் பக்கத்தை விட் டு மற்றவாண்டைக்குப் போகமாட்டாளோ அத் தாசியு மப்படியல்ல லவா? ஆகையா லவ ளும் வீட்டிலிருப்பது தகுதியல்ல; இருடபி யன்ற வத் தாசியை விட்டுவிடு" மென் றவர்க ளிவ்விதமா யுரைத்து (23) மவ னவளைவிட விரும்பவில்லை. பிற்பாடு கோவிலைச் சேர்ந்தவர்க ளதனை யரசனிட மறிவிக்க, உடனே அரசன் மந்திரியை யழைத் தவளை விடுவி த்துக்கொடுக்கும்படி சொன்னான். (24) அதற்கு மந்திரியும் "ஓ! ராஜசே கரா! அவ் வணிகன் மிகுந்த பணக்காரனும் பத்திரகாளியம்மனுக்குப் பிரியமுள்ளவனு மாகையா லவனைத் தண்டிக்கத்தகாதன்றோ! ஆகையா விருடபியை யெவ்வா றவனிடமிருந்து விடுவிக்கத்தகு?" மென, (25) அப்போது அரசன் மிகுந்த கோபத்துட னவனை நோக்கி யுரைத்ததாவ வது:— 'ஆ! அடா! மந்திரி! சிவத்துரோகம் செய்தவனுக்குக் காளியா ரடா? சீ! போ!' வென் றுரைத்து மம்மந்திரி பயத்தினா லப்படிச் செ ய்ய விரும்பவில்லை. அப்போ தரச (26) னுடனே தான் நேரி லரண் மனையை விட்டுப் புறப்பட்டுச் சில சைனியங்களோடுகூட அவ்வணிகன் வீட்டுவாசலில நின்றுகொண் டவனைச் சிக்ஷிபபதற்குச் சித்தம் கொண் டவனைய் 'அடா! செட்டி! அத்தாசியை விட்டுவி' டென, (27) அப் போது வணிகன் மகா கோபத்தோடு தன் னிஷ்டதெய்வமாகிய காளிய ம்மனைச் சடுதியில் நினைக்க, உடனே யவ்வம்மை யங்கு தோன்றலாகி 'அடா! நீ ஸ்ரீ பரமேசுவரனுக்குத் துரோகியாகிவிட்டா' (28) யென்றவ் வணிகனை நோக்கி யுரைத்துவிட்டுப் பிற கவ் வரசனை நோக்கி யவ் வம்

மை திருவாய் மலர்ந்தருளியதாவது:— 'ஓ! ராஜனே! இவ் வணிகன் சிவத்துரோகியாகிவிட்டபடியா லவனுன் தண்டனைக்குப் பாத்திரனாகிவிட்டானன்றோ! (29) ஆகையால் நீ யவனை யுனதிஷ்டத்தின்படி தண்டிக்கலாவா' யென்று திருவாக்குரைத்துவிட் டந்தர்த்தானமடைந்தாள். பிற காரசனு மவனது சகல சொத்துக்களையும் பிடுங்கிக்கொண் டவ் விருடபியைத் திரும்பிச் (30) சிவாலய வூழியங்களைச் செய்வதற்காகச் சடிதியி லனுப்பினன். உடனே அவள் ஸ்நாநம்செய்துபோட்டு வழக்கம்போல் சிவாலயம்கூட்டுவதில் தொரைகொண்டுவிட்டாள். (31) பின் பாரச னவ் வணிகனைக் கொன்றுபோட் டவன் மனைவிக்கு விருடபமுத்திரைபோட் டவளையு மப் பாவம் தீருவதற்காக ஸ்ரீ ஸளரோசுவரஸ்வாமி யாலயத்தில் துடைப்பமெடுத்துக் கூட்டிக்கொண்டிருக்கும்படி செய்துவிட்டான். ($32\frac{1}{2}$) மேலு மவ னச் சிவத்துரோகிக் குதவியாயிருந்த மந்திரியையும் கண்டித்துவிட்டான். (33) கேளாய்! அன்னமே! அப்பேர்க்கொத்த வைசியன்தா னிங்கு நடுவில் தீப்பற்றி யெரியப்பெற்ற வயிரக்கம்பத்தில் கட்டிவைக்கப்பட்டவனாகி யவ் வியாதனைகளைச் சகிக்கமாட்டாதவனாய் மிகவும் கிலேசித் தழுகின்றான். (34) இப்போது நம்மால் கேட்கப்பட்ட கோரமான பெரும் குறலவனுடையதுதான். இதோ மற்றோரிடத்தில் கேட்கப்படுகிற குறல்தா னவ் வாசன் மந்திரியினுடையது.(35) அப்பேர்க்கொத்த பாதகனுக் குதவியாயிருந்ததினால் மட்டி லிவ னிப் புகையற்றுத் தகத்தகாயமானமாகிய தணலின்மத்தியில்கிடந் தியாதனைப்படும்படி யாயிற்று. ஓ! அன்னபக்ஷியே! ஆகையால் தான் மகா கோரமான விந் நரகங்களை நாம் பார்க்கவில்லை" (36) யென்று சொல்லிக்கொண்டே பிரம்ம னவ் வன்னத்தோடுகூடத் தம்லோகமடைந்தனரென்று சூதமுனிவரா லுரைக்கப்பட்ட வசனங்களைக் கேட்டு முனிவர்கள் மனதினிற் பீதிகொண்டவர்களாகி ஸாம்பமூர்த்தியாகிய ஸ்ரீ பகவானையே மனதினாற் சரணமடைந்தார்கள். (37)

ஐம்பத்திமூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.



## உபதேசகாண்டம் ருச—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! இதன்பிறகு ஸ்ரீ பரமேசுவரனுடைய எண்ணெயையு மெலுமிச்சம்பழத்தையு மபகரித்தவன் கதையை

யான் சொல்லியதைக் கேட்கலாவீர்கள். ஓ! முனிவர்களே! மகாயோகீசுவரரும் சிவபக்தருமான ஸ்ரீ சதாநந்தமாமுனிவர் நாள்தோறும் மூவுலகங்களையுஞ்சுற்றித்திரிந்து (2) ஸ்ரீ கைலையில்வாழும்மகாதேவரிடஞ்சென்றுலகங்களின் வர்த்தமானங்களையும் விருத்தாந்தங்களையும் சொல்லிக்கொண்டே காலங்கடந்துவருகையில் (3) லொருநா ளியமலோகத்தினந்தத்திலுள்ள சமியமினீ பட்டணத்திற்குப்போ யங்கியமதேவனால் மிகுதியாய்ப் பூஜிக்கப்பட்டவராகிப் பிற கவனோடுகூடப்போய் நரகங்களைப் பார்க்கலுற்றனர். ($4\frac{1}{2}$) அவர் நரகங்களையெல்லா மங்கு பார்க்கலாகையி லவைகளின் மத்தியிலுள்ள சில நரகங்களில் (5) தகிக்கப்படுகின்றவர்களைக் கண்டு ஓ! தருமராஜனே! இவர்களா லென்னபாவஞ் செய்யப்பட்டதென்பதை நமக்கு நீர் சொல்லவேண்டு' மென, அவனை நோக்கி யியமனுரைத்ததாவது:— 'ஓ! முனிச்சிரேஷ்டரோ! அதனை யானறிகிலேனே! (6) யெனக்கு முந்தி யிருந்த வியமன்களால்கூட அவர்களது மகா பாதகத்திற்காக வாதையளிக்கப்பட்டு வந்திருக்கின்றார்கள். ஆனா லவர்கள் சிவத்துரோகிகளென்றுமாத்திரம் யான் கேள்விப்பட்டிருக்கிறே" (7) னென, 'ஓ! கோ! இப்படியா!' வென் றவனுக்குச் சொல்லிவிட்டுப் பிறகு பிரம்மனுடைய சபைக்குச் சென் றங்கு மனைமனையாசனமாய்க்கொண்ட வப் பிரம்மனை வந்தனித் ததனை வினவும்போ தவர் (8) முந்தியே நரகங்களி லாழ்ந்திக்கிடக்கின்றவனேக சிவத்துரோகிகளிற் சிலர்களைமாத்திர முரைத்துவிட்டு "ஓ! முனிவரோ! மற்றவர்களைப் பற்றி யா னொன்று மறியேன். (9) எனக்கு முந்தியுள்ள பிரம்மர்கள் [illegible] யறிவார்களோ மாட்டார்களோ வென்பதையும் யா னறியே" னென, [illegible]ன்னு மவனை நோக்கி யம் முனிவர் 'ஓ! பிரம்மனுக்குக்கூட விது தெரியாத?' தென்றார். (10) மறுபடியும் பிரம்ம னவனை நோக்கி யுரைத்ததாவென்றால்:— "கேளீர்! முனிவரோ! எந்தனால் சிருஷ்டிக்கப்பட்டவைகளை யெல்லாம் மட்டில் யானறிவேன்: ஆனா லிவர்க ளெனக்கும் முந்தியகாலம் முதலாயே யிருக்கின்றார்கள். (11) மேலு மெந்தனால் செய்யப்படும் சிருஷ்டியும் விஷ்ணுவால் நடத்தப்படு மிரக்ஷணமு மெங்கும் நிறைந்த வரும் பொருளாகிய ஸ்ரீ பரமேசுவரனாலேயின்றி யெங்களா லொன்றுமில்லையே! (12) ஆனால் கேளீர்! மாமுனிவரே! யாங்களோவென்றால் அவரா லதிகாரித்தன்மையில் நியமிக்கப்பட்டவர்களும், அவரா லருளப்பட்ட மகா மகிமையைக் கொண்டவர்களுமான அவரது பிள்ளைகளாகின்றோ" மென்றார். (13) பிற்பா டச் சதாநந்த முனிவர் வைகுண்டத்திற்குப் போ யங்கு ஸ்ரீ விஷ்ணுவை வினவ, விஷ்ணுவு மம் மாமுனிவருக்கு வேண்டிய மரியாதைகளைச் செய்ததின்பே

ரில் தமக்குத் தெரிந்தவர்களைப்பற்றி மட்டிற் சொல்லிவிட்டு (14) 'ஓ! முனிவரே! எமக்கும் முந்தியகாலம் முதலாயுள்ள விம் மற்றவர்களை யா மறிகிலோமே! எல்லாவற்றையு மறியவுற்ற ஸ்ரீ ஜகதீச னொருவர் தா மிவ் வெல்லாவற்றையும் பாக்கியின்றி யறிவா' (15) ரென்றவரா லு மிவ்வா றுரைக்கப்பட்டதன்மே லம் முனிவர் கைலைக்குச் சென் றங்கு ஸ்ரீ ஸர்வேசுவரனை வந்தனித்து வினவியதாவது:— (16) "ஓ! ஸ்வாமீ! நரகத்தில் பிரம்மவிஷ்ணுக்களுக்கும் முந்தியகாலம்முதலாய்ச் சில சிவத்துரோகிகள் தகிக்கப்படுகின்றார்களென் றவர்களாலே யெந்த னுக் குரைக்கப்பட்டது. (17) ஓ! மகேசுவரா! அவர்களால் தேவரீ ருக் கென்னத் துரோகம் செய்யப்பட்டதென்பதை யடியேனுக்குச் சொல்லியருளவேண்டு" மென, அதன்மேல் பிரமதகணங்களுக் கதிபரா ன ஸ்ரீ பகவான் நந்திகேசுவரனைக் கூப்பிட்டுக் (18) 'கேளாய்! நந்தீ! இம்முனிவரா லெது வினவப்படுகின்றதோ அதனை நீ யங்குபோ யவருக் குச் சொல். அதெல்லாம் நமதருளினா லுனக்குத் தெரியக்கடவ' தெ ன்று திருவாக்கருளிவிட் டவர்களை யனுப்ப, (19) பிறகு நந்திகேசுவர னு மம் முனிவரைத் தம் மிருப்பிடத்திற் காதரவுட னழைத்துவந்து "ஓ! பிராம்மணச்சிரேஷ்டரான மாமுனிவரே! உமக்கெது கேட்கவேண் டுமோ அதனை நீர் நம்மைக் கேட்டுக்கொள்ளலாம். யா மச் சங்கதிக ளையெல்லா முமக்குத் தெளியவுரைக்கின்றோ" மென, பிறகு சதாநந்தர் கூறியதாவது:— "ஓ! சிலாதபுத்திரரான நந்திகேசுவரா! நான் மெத்த வாச்சரியத்தோடு நரகங்களைப் பார்த்துவந்தி (21) லங்கங்குள்ள வ திகோரமான சில நரகங்களிற் சமையலாகு மனேக துராத்துமர்களைக் கண் டியமன், பிரம்மன், விஷ்ணு இவர்களை யான் வினவியதி லவர்க ளுக்கும் (22) தெரியாத காலம்முதலாய் மகா பாதகர்களான விச் சிவ த்துரோகிகள் வாதையளிக்கப்படுகின்றார்களாம்.' ஓ! சிலாதமுனிவரி ன் செல்வரே! தேவரீர் ஜகங்களுக்குப் பிரபுவும் சர்வஞ்ஞருமாகின்றப டியா லவர்களைப்பற்றி யடியேனுக் கிப்போ துரைத்தருளவேண்டும். (23) ஓ! கோ! அக்கினியின் மத்தியில் மகா கோரமாய்ப் பற்றியெரி யலுற்ற நிறைந்த வெண்ணெய்க்கொப்பரையில் தலைகீழாய்க் கிடத்தி வறு த்தப்படுகின்றார்களே! மேலு மவர்கள் தேகம்முழுது மாணி யேற்ற ப்பெற்றவர்களும், (24) கண், காது, மூக்கு, நாவு, உச்சி இவைகளில் தகதகவென்று நெருப்பில் காய்ச்சப்பட்ட விரும்பூசிகளையும் செம்பூசி களையும், அதேவிதமாய் (25) மயிர்க்கால்களில் பழுக்கப்பழுக்க நெரு ப்பில் காய்ச்சப்பெற்ற விரும்பூசிகளையு மேற்றப் பெற்றவர்களாகி ய கோரமான நரகத்தி லெப்போதும் வாதிக்கப்படுகின்றார்களே! அவர்க

ளிலொருவரின் வரலாற்றை யிப்போ தடியேனுக்குச் சொல்லியருள வேண்டு" (26) மென் றவ் விருவர்களு மிவ்வாறு பேசிக்கொண்டிருக்குமளவில் பிரம்மவிஷ்ணுக்களிருவரும் ஸ்ரீ ஜகதீசனைச் சேவிக்கக்கருதியவர்களாகி யவ்விடத்திற்குவந் தவ் விருவர்களையும் கண்டு (27) சதாநந்தமுனிவர் ஸ்ரீ நந்திகேசுவரரிடமிருந்து நரகங்களில் வாதிக்கப்படுகின்ற வப் பாதகர்களின் விருத்தாந்தத்தைக் கேட்கச் சித்தமாயிருக்கும் சமயத்தி லவ் விருவர்களும் நந்திதேவனை நோக்கி 'ஓ! ஸ்வாமீ! எங்களுக்கு மிவ் வற்புதத்தைக் கேட்க ($28\frac{1}{2}$) மெத்த விருப்பமிருக்கின்ற' தென் றவரிடமாய் விண்ணப்பம் செய்துகொண்டதின்பேரி லவர தனுமதியைப் பெற்றவர்களாகி யங்கு நின்றார்கள். (29) பிறகு ஸ்ரீ சங்கர னன்புக் குரித்தவரான நந்திபகவான் கூறுகின்றார்:—

விதர்ப்பதேசத்தில் மகா நீதியுள்ளவனும், சகல சாஸ்திரப்பொருட்களிலும் தேர்ச்சிபெற்றவனும், வில்வித்தையிற் கரைகண்டவனுமான விசுவசேனனென்றோ ரரசனிருந்தான். ($30\frac{1}{2}$) அவனோர் சமயத்திற் காடுகளில் வேட்டையாடிக் களைப்படைந்தவனாகிச் (31) சடிதியாய் ஸ்ரீ ஸித்தேசுவரசுவாமி யாலயத்தி னோர் மண்டபம் சேர்ந் தங்கு தானே ஸ்வாமி சன்னிதியில் படுக்கைபோட்டுக்கொண் டதிற் படுத்துத் தூங்கினான். (32) அப்போ தவ் வரசனுக் கெப்போது முடம்பையும் கால்களையும் பிடிக்கலுற்றவனான வோர் திறமை பொருந்தியவேலைக்கார னவ் வரசன் களைப்புக்கொண்டிருந்ததைப் பார்த்தவுட (33) னெண்ணை வாங்குவதற்காகப் பணத்தை யெடுத்துக்கொண்டு பட்டணத்துக்குப்போ யெங்கும் சுற்றிப்பார்த்ததி லக்கப்பட்டணத்தி லெலுமிச்சம்பழம்கூட வப்போது கிடைக்கவில்லை. (34) பிறகவ னச் சிவாலயத்திற்கு வந்தங்கு தீபத்திற்காக வந்திருந்த வெண்ணையி லிரண்டுழக்கும் அபிஷேகத்திற்காகத் திட்டமாயிருந்த வெலுமிச்சம்பழங்களில் நான்கு பழங்களும் ($35\frac{1}{2}$) தக்ஷனென்ற அவ் வேலைக்காரன் பலவந்தமாய் வாங்கிக் களைப்படைந்திருந்த அவ் வரசனுக் குடம்பு பிடித்து ஸ்நானம் செய்வித்துப் பிறகு தானதருமங்களையும் செய்வித்தான். ($36\frac{1}{2}$) அப்போதே யவ் வாலய விசாரணைக்காரர்கள் பயத்தினால் நடுக்கமுற்றவர்களாகி யவ் வரசனிடம் வந் தச் சங்கதியைச் சொல்ல,($37\frac{1}{2}$) அரச னதனைக் கேட்டும் கேளாதவனுமா யொன்றும் பேசாமல் தன் பட்டணத்துக்குப் போய்விட்டான். அவ்வாலய வதிகாரிகளு மரசனை நிந்தித்துக் கொண்டு திரும்பிப் போய்விட்டார்கள். பிறகவ்வரசன் நாளளவிற் சாகலாகி (39) யப் பாதகனை யக்காலத்திலிருந்த இயமன் தன் தூதர்க

ளாற் சடிதியிற் கொண்டுவருவித்து வெகுகாலம்வரையி லெல்லா நரக ங்களிலும் வீழ்த்தி யிமிசிக்கப்பட்டு வந்ததன்பேரி லிக்காலத்திலுள்ள வியமனு மவனை யிப்போது மிருந்த தீதனில் வைத்தெரிக்கப்பட்ட வெ ண்ணெக்கொப்பரையில் போட் டெப்போதும் (40-41) வாதிக்கலாகி ன்றான். ஓ! கோ! இது கொடுந் துன்பமே! இவனைப்பற்றி யிவ்வாறி ருக்கையில் தக்ஷனென்ற மற்றவனேவென்றால் வெகு வருடகாலங்க ளா யக்கினிகுண்டங்களிற் போட் டெரிக்கப்பட்டு வருகின்றான். (42) இவர்களுக்கிடையி லனேகம் பிரம்ம விஷ்ணுக்க ளாகிவிட்டார்கள். இ ப்படி யிருக்கையி லிந்திரர்களைப்பற்றி யாதுரைத்திடல்வேண்டும்? ஏ னெனில் பிரம்மனுடைய வோர் பகலுக்கே பதினான் கிந்திரர்களாகின் றார்கள். (43) மேலு மிவ் விருவரின் வமிசங்களிற் பிறந்தவர்களு மிந் நரகங்களில்தானே யாதனைகளை யனுபவிக்கின்றார்கள். தவிரவு மிவர்க ளா லின்னும் முடிவற்ற காலங்க ளிவ்வாறே செல்லத்தக்கவேண்டு' (44) மென, இவ்வாறு ஸ்ரீ நந்திபிரானது வசனம் கேட்டுச் சதாநந்தர் மெத்த வாநந்தமுற்ற மனதைக் கொண்டவராகிப் பின்னு மவரை நோ க்கி 'ஓ! பகவானே! ஸ்ரீ சிவபிரானது பொன்னை யபகரித்தவ ரடைய லாகும் கதியைப்பற்றிய வோர் கதையைச் சொல்லியருளவேண்டு' மெ ன்று கேட்கின்றதாவது:— (45)

ஐம்பத்திநான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் ருரு—வது, அத்தியாயத்தி னர்த்தம்.

"ஓ! ஸ்வாமீ! ஸ்ரீ சிவபிரானுடைய வெண்ணெயை யபகரித்தவ ரின் கதையைத் தேவரீரிடமிருந்து கேட்டாயிற்று. பின்னு மிந் நரக ங்களைத் தவிர மற்றுமுள்ள நரகங்களிற் சில பாதகர்கள் யாதனைகளை ய னுபவிக்கின்றார்களே! இயமதூதர்களால் நவத்துவாரங்களிலும் பொ ன்னை யுருக்கி நிரம்ப வூற்றப்பெற்றவர்களும், கண்டம் கண்டங்களா யுடற்களைத் துண்டிக்கப்பெற்றவர்களுமான வத் துராத்துமர்களாற் க ரும பூமியி லென்ன பாவங்கள் செய்யப்பட்டன?" வென, (1-2$\frac{1}{2}$) நந் திகேசுவரன் திருவாக்கருளியதாவது:—

"கேளீர்! முனிவரே! கலிங்கதேசத்தில் சந்திராங்கனென்றோர் பாராக்கிரமசாலியான வரசனிருந்தான். (3) அவனுக்கு வீரக்கிராகனெ

ன்று மகாரத * னாகிய வோர் புத்திரனிருந்தான். அரசன் தனதரசாக்ஷியைப் பிள்ளையிடத்தி லொப்புவித்துப்போட்டுத் (4) துரிதத்தில் தவத்தினால் பிரம்மனைக் களிப்பித்து மறுபிறப்பிற் கசாத்தியமானப் பிரம்மலோகத்தைச் சடிதியா யடைந்துவிட்டான். (5) பிறகவ் விராஜகுமாரன் தானதருமங்களில் முயன்றவனாகிப் பாராண்டுவருகையி லொருநாளியக்ஞேசுவரனென்ற வேதமதிற் கரைகடந்த வோ ரந்தணன் (6) தானம் வாங்குவதற்காக வரசனண்டைக்குப் போகலாகையில் ஸ்ரீஸோமேசுவரஸ்வாமி யாலயத்தி னின்று வெகு நேர்த்தியான வோர் மலர்மாலையைக் காக்ஷிப்பண்டமாய்க் கொண்டுபோ (7½) யந் நிர்மாலியமாலையை யவ் வரசன் கழுத்தினில் வாழ்த்திப் போட்டுவிட்டுப்(8) பிற கிய க்ஞேசுவர னென்ற வப் பிராம்மண னவ் வரசனிடமிருந்து தானம் வாங்கிக்கொண்டு திரும்பிப் போய்விட்டான். அப்போ தம் மாலையோடு கூட அந்த ஸ்வாமியின் தங்கத்திருநூற் சரடானது (9) பூஜகர்களாலறியாமையாய்க் கலக்கப்பட்டுப் போகலாகி யதுவு மம்மாலையோடுகூடக் கொண்டுபோ யரசன் கழுத்துதனிற் போடப்படலாயிற்று. பிறகப் பூஜகர்க ளத் தங்கச்சரட்டை யாராய்ந்து பார்க்கும்போ ததனைப்பற்றி யியக்கியேசுவரனைக் கேட்க, அவன் 'ஓ! யானதனைக் கண்டேன். ஆனாலதுவு மம்மாலையோடுகூட வரசன் கழுத்தினிற் போட்டுவிடப்பட்டது. ஆகையால் நீங்க ளரசனைக் கேளுங்க' ளென்றான். (11) அப்போ தவர்க ளவனை 'நீரே கேட்கவேண்டு' மென்றதற் கவன் 'நீங்களேதான் கேட்கவேண்டு' மென்று சொல்லிப்போட்டுத்தன்மீ தாசனுக்குள்ள நேசத்தின் வலிமையா லொன்றும் பேசாமல் தன் வீட்டிற்குப் போய்விட்டான். (12) பிற கச் சிவாலய வதிகாரிக ளரசனிடம் வந்து 'ஓ! இராஜசிங்கமே! அந்தணராற் றேவரீரிடத்தில் மாலையோடுகூட வோர் தங்கத்திருநூற் சரடும் கொண்டுவந்து கொடுக்கப்பட்டுப்போயிற்று. ஆகையால் ஓ! ஸ்வாமீ! ஸ்ரீ ஸோமேசுவரஸ்வாமியினுடைய நேர்த்தியான வச் சரடுதனைக் கொடுத்தருளவேண்டு' மென்(13½) றவ் வரசனைக்கேட்டு மவன் வெரும் மூடபுத்தியா லொன்றும் பேசாம லிருந்துவிட்டான். (14) அப்போ தவனுக் காசிரியரும், ஆமர்த்தனகிரி யென்ற குருமாரின் குடியைச் சேர்ந்தவரும், சிவப்பார்ப்பான் ஜாதியிற் பிறந்தவருமான காரண னென்றவர் பின்னு முரைத்ததாவது:—(15) "ஓ! ராஜனே! ஸ்வாமியி

---

* தேர்வீரர்கள் அர்த்தரதன், சமரதன், அதிரதன், மகாரதன் என்று நான்குவகைப்படுவோர்கள். இவர்களில் மகாரதனென்றால்:— தன்னையும் தன் சாரதி குதிரைமுதலியவைகளையு மிரக்ஷித்துக்கொண்டு யுத்தம்செய்வோனே மகாரதனெனப்படுவோன்.

ன் தங்கநூற் சாடைத் தந்துவிடும்; ஏனென்றால் சிவ சொத்தானது மகா மகா தோடங்களுக்கெல்லாம் காரணமென் றறியப்படுகிறது. (16) எப்படியென்றால்:—

பூர்வத்தில் காமரூப தேசத்தரசன் குமாரனான வஸுவென்றவோர் சிறிய வாலிப னிளமையி லோர் சிவாலயமதில் விளையாடிக்கொண்டிருக்கையி லோர் பணத்தைக் கண்டெடுக்கலாகிச் (17) சடிதியாயாண்மனைக்குள் வந் ததனைத் தன் தந்தையிடத்திற் கொடுத்து "ஓ! அப்பா! நான் சிவாலயத்தில் விளையாடிக்கொண்டிருக்கும்போ தங்கோரிடத்தி லிருந் தெந்தனுக் கோர் பணமகப்பட்டது. நான் சம்பாதித்து வந்த விப்பணத்தை நீர் பத்திரமாய் வைத்திருக்கவேண்டு" மென்று சொன்னான். ($18\frac{1}{2}$) அப்போ தவ் வாலயத்தைச் சேர்ந்தவர்க ளவ் வரசனிடம் வந்து (19) ஓ! ராஜனே! சிவாலயத்திலிருந்து கண்டெடுக்கப்பட்ட பண்டத்தை ஸ்வாமிக்கே கொடுத்துவிடல்வேண்டு' மென்று கேட்டு மரசன் தன் புத்திரன் சம்பாதித்து வந்ததைக் கொடுக்க விஷ்டப்படாமல் (20) 'ஓ! ஐயமார்களே! பரிபூர்ணக் கடவுளான ஸ்ரீ சிவபிரானுக் கிதனா லாவதென்ன' வென் றவ் வெல்லோர்களையும் நோக்கிச் சொல்லிப்போட் டப் பணத்தைப் பொக்கிஷத்தில் வைத்துவிட்டான். (21) உடனே அதே யிராத்திரியி லவ் வரசனது பெரிய மாளிகையில் தீப்பற்றலாகித் திரவியங்களும் திருடர்களால் கொள்ளையிடப்பட் டிடையி லரசனும் பயத்தினால் மடிந்தான். அய லரசன் வந் தவனது புத்திரனையும் வெட்டிப்போட்டான். ($22\frac{1}{2}$) ஓ! வேந்தனே! சிவசொத்தை யபகரித்ததினா லரசனு மவன் புத்திரனு மங்குதானே (23) மடியலாகி யிப்போதுகூட வின்னும் நரகத்தில் வாதையளிக்கப் படுகிறார்களென்று புராணம் கேட்கும் காலத்தில் புராணங்களை யறிந்தவரால் சொல்லப்படுவதைக் கேட்டிருக்கிறேன். (24) ஆகையால் ஓ! ராஜனே! ஸ்வாமியினுடைய தங்கப் பூநூலைக் கொடுத்துவிடு" மென்று குருவினால் சொல்லப்படினு மரசன் கொஞ்சமேனும சங்கை யின்றிச் சும்மா விருந்துவிட்டான்.(25) அப்போ துடனே ஆலய வதிகாரிக ளதனைப்பற்றி யரசனது புரோகிதனிடத்தும் மந்திரியிடத்து முரைத்து மப்போ தவர்களும் தங்கள் விதியின் வலிமையா லசட்டையா யிருந்துவிட்டார்கள். (26) பிறகவர்கள் திரும்பித் திரும்பிப் பலமுறை கேட்டும் கோபத்தினால் நிராகரிக்கப்பட்டவர்களாகி யேங்கிப்போய் வேறு தங்கத் திருநூலமைப்பித்து ஸ்வாமிக்குப் போட்டுவிட்டுக் (27) குருக்கள்மார்களும் வழக்கம்போற் பூஜைசெய்துவந்தார்கள். பிற்பா டியக்கியேசுவரனென்ற

ப் பிராம்மணன் மிகவும் நஷ்டமடைந்து தரித்திரனுகிவிட்டான். (28) புரோகிதனும் மந்திரியும் நாளளவி லோர்நொடிக்குள் மடியலாகிக்கடைசியி லவ் வாசனுக்கும் மேகரோகம் வந் தது மூலமாயே யத் துராத்துமன் தேகமெல்லாம் புழுப்புழுத்துக் கழிந்தான்.($29\frac{1}{2}$) இப்பேர்க்கொத்த நான்கு பெயர்களையு மியம்படர்கள் (30) பலவிதக் கொடுமையாய் வாதித்துப் பிறகு நாளளவிலே கேளீர்! சதாநந்தமுனிவரே! இப்போ தந் நரகங்களுக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். மேலு மவர்களின் வமிசத்திற் பிறந்த வெல்லோர்களும்கூட நரகங்களிற் போட்டுவாப்படுகின்றார்கள். (31) ஓ! முனிவரே! இவர்க ளொருக்காலும் நரகங்களிலிருந்து கரையேறப்போவதில்லையே! மேலும் தனது புண்ணியங்களால் முந்திப் பிரம்மலோகமடைந்திருந்த, இவ் வாசன் தந்தை(32) யும் தன் புத்திரன் செய்த பாவத்தினால நரகங்களில் விழ்த்தப்பட்டா" னென, இவற்றை யெல்லாம் கேட்டதன்மேல் யோகீசுவரரான சதாநந்தமாமுனிவர் (33) மிகவும் நடுநடுங்கியவராகி ஸ்ரீ ஸாம்பமூர்த்தியை மனதினில் தியானித்துவிட்டுப் பின்னும் கேட்கலாகும்போது கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ சங்கரனுக்கு நேசரான நந்திசன் பின்னு மவரை நோக்கிச் சொல்லியதாவது:— "ஓ! முனிவரே! இவர்களுடைய நரகங்களின் பக்கத்தில் வாதையளிக்கப்படுகின்ற மற்றப் பாவிகளின் சரித்திரத்தைச்சொல்லுகின்றோம்; அதனைச்சாக்கிரதையுள்ள மனதுடன் நீர் கேட்கலாவீ" ரென்றார். (34-35)

ஐம்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ருசு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஸூதர் கூறுகின்றார்:— கேளீர்! முனிவர்களே! குருமாருடைய சொத்தை யபகரித்தவர்க ளடைந்திருக்கின்ற கதியைப்பற்றியவோர் கதையை யிப்போ தெடுத்துரைக்கின்றேன். (1) அப்போது நந்திகேசுவரர் சதாநந்தமுனிவருக்கு மங்கு கேட்டுக்கொண்டு நிற்கலான பிரம்மவிஷ்ணுக்களுக்கும் பின்னு முரைத்ததாவது:—(2) "ஓ! மகா பிராக்ஞரான சதாநந்தமுனிவரே! குருமார்களின் சொத்தை யபகரித்தவர்க ளிவர்களின் நரகங்களுக்குப் பக்கத்தி லெண்ணிறந்த காலமாய்த் துன்பமளிக்கப்பட்டு வருகின்றார்கள்.

பூமியி னோர் பாகமாகிய கௌடதேசத்தில் கௌடபுரமென்றோர் பட்டணமிருக்கின்றது. அப்பட்டணத்தில் வஜ்ஜிரபாலனென்று மகா புண்ணியவானும், பணக்காரனும், சூரியனைப் பூஜிப்பதில் முயன்றவனுமாகிய வணிகர்களுக் கதிபனான வோர் வர்த்தகனிருந்தான். ($4\frac{1}{2}$) அவன் வெகு மங்களகரமாய் மண்ணினா லோர் மேடைசெய்துகொண்டு நாள்தோறும் பூஜைபண்ணி (5) மலர்களா லர்ச்சித்துவிட்டுச் சூரியனுக்கு நமஸ்காரம் பண்ணிவந்தான். இப்படியிருக்கையி லவ் வணிகன் முன்னிருந்த மண்மேடையை யிடித்துப்போட்டுப் பிற (6) காதரவுடன் செங்கற்களா லதனைப் புதிப்பிக்க விருப்பமுற்றவனாகி யப்பட்டணம் முழுதும் செங்கலைப்பற்றி விசாரித்ததி லோரிடத்திலு மது கிடைக்கவில்லை. இப்படிச் சிலநாட் சென்றதின்மே லவ் ($7\frac{1}{2}$) வணிகன், அக்கௌடதேசத்திய ஸந்தாநகிரி வமிசத்தைச் சேர்ந்தவரும், ஸ்ரீ கௌடேசுவரஸ்வாமியின் பூஜகரும், மகாத்துமாவான சிவப் பிராம்மணருமாகிய தத்புருஷனென்ற வோர் குருமாரின்மடத்தில்(9) சிவபூஜைக் கோ ராலயம் கட்டுவதற்காக அவரால் சில செங்கற்கள் தேடிவைக்கப் பட்டிருந்ததைப் பேச்சுவாக்கிற் கேள்வியுற்றதன்பேரி லவ னோர் மனிதன்மூலமாய்ச் செங்கற்களைக் கேட்டான். (10) அதற்கக் குரு மறுதளித்துவிட்டதின்பேரில் மறுபடியும் பணங்களை யனுப்பிக் கேட்கப் பட்டன. அதற்கு மவர் சம்மதிக்காததின்மேல் வணிக னவரிடத்தில் நேரிற்போய்க் கேட்டான். (11) பிறகவனும் நிராகரிக்கப்பட்டதன் மேல் அவன் துக்கித்துத் தன் வீடுசேர்ந்து 'ஓ! கோ! நாமே நேரிற் போய்க் கேட்டு மவன் மறுதளித்துவிட்டானல்லவா' வென்று சிந்தித்துக் (12) கொண்டிருக்கும் சமயத்தி லரசனுடைய வைத்தியனான சௌபரியென்ற ஒருவன் சுதத்தனென்பவனுடைய காரியார்த்தமாய்ப் பணம் கேட்பதற்காக அவ் வணிகனண்டைக்கு வந்தான். அப்போது வணிகன் மிகவும் துக்கப்பட்டுக்கொண் டவனோ டுரைத்ததாவது:— ($13\frac{1}{2}$) "ஓ! புலவரான வைத்தியச்சிரேஷ்டரே! தத்புருடனென்ற குருவிடத்தி லெந்தனாற் கொஞ்சம் செங்கற்கள் பிரார்த்தித்துக் கேட்கப் பட்டு மவை (14) கிடைக்காததினா லெனக்கு மானபங்கம் நேரிட்டுவிட்டது; இதனா லெனக்கு மிகவும் கிலேசமா யிருக்கின்றது. எனக்கோரிடத்து மிவ்வாறு நேரிட்டதேயில்லை. (15) பிற கவ் வைத்திய னவனைச் சமாதானப்படுத்திவிட்டுத் தானே நேரி லக் குருவண்டைக்குப்போய் வணிகனுக்காக அவரைக் கொஞ்சம் செங்கல் கேட்டான். (16) அப்போ தவனு மவரால் மறுதளிக்கப்பட்டதன்பேரி லவரிடத்து மனதில் மாச்சரியமுற்றவனாகி வணிகனிடம் வந் தவனை

ச் சமாதானப்படுத்தி "ஓ! செட்டியாரே! நாளை மறுநாளைக்குள் ளென து வலிமையைப் பாரும். (17) குருவின் வீட்டிலிருந் தச் செங்கற்க ளெல்லாவற்றையும் வீணாய் நாசம்பண்ணிப் போடுகின்றே" னென்று சபதம் செய்துகொண்டு திரும்பிப் போய்விட்டான். பிறகு மறுநா ள ரண்மனையி (18) லரசனுக்கு மிக்வும் பிரியமுள்ளதான வோ ரியானைக் கோர் பெரிய நோய் நேரிட்டது. அப்போ தவ் வைத்தியன் யானைப் பாகனை யழைத்து 'ஓ! யானைக்காரா! இவ் வியானை மிகுந்த நோயினால் வருத்தப்படுகின்றது. (19) இப்போ ததற்கு வைத்தியம் செய்யாவி ட்டா லது சந்தேகமின்றிச் செத்துப்போய்விடும். ஆகையால் நீ நம் சொல்லின்படி யிப்போதே கொஞ்சம் செங்கற்களைத் தருவிக்கவேண் டும். (20) ஏனென்றால் செங்கற் பொடிகளோடு வேறு சில மருந்துக ளையும் கலந்து பொட்டணம் கட்டி யதனா லொத்தல் கொடுத்தால்மட்டி லியானைக்குப் பிணி தீருமேயின்றி யில்லாவிடி லில்லை. (21) செங்கற் கள் தத்புருடனென்ற குருவின் வீட்டில் மிகுதியா யிருக்கின்றன. நீ யிப்போ தவைகளை யிவ் விரவில்தானே தருவித்தா லுடனே யியானைக் குச் சௌக்கியமாகிவிடு" (22) மென, இவ்வா றவனது வசனத்தைக் கேட்டவுடனப் பாகன் சிலமனிதர்களோடுகூடப் போய் குருவின்வீட் டி லிருந் தச் செங்கற்களைக் கொண்டுவந்து பொடி செய்வித்தான். (23) பிறகு வைத்தியனு மதே க்ஷணத்தி லச் செங்கற் பொடிகளோடு வே றெவையெவைகளையோ கலந்துவைத்தியம்செய்ய, உடனே அதேயிரா த்திரியி லவ் வியானை யிறந்துபோயிற்று.(24) பிறகு மறுகாலையி லியா னைப்பாக னரசனிடம் போய் 'ஓ! ஸ்வாமி! இயானை நோய்கொள்ளலாகி யிரவினிற் சௌபரி யென்ற வைத்தியரால் பலவிதமாய் வைத்தியம் செய்யப்பட்டு மது இறந்துவிட்ட' தென, (25) அதனை யரசன் கேட் டு மிகுந்த துக்கத்தோடு வருத்தமடைந்தான். தத்புருடனென்ற சிவப் பிராம்மணனு மரசனண்டைக்கு வந்து செங்கற்க ளபகரிக்கப்பட்டுப் போனதைப் பற்றி முறையிட்டதாவது:—(26) 'ஓ! ராஜசேகரா! பூ ஜாகிரகம் கட்டுவதற்காக வென்னாற் சேகரித்து வைக்கப்பட்ட செங்க ற்களை வணிகனும் பிறகு சௌபரியும் வந்து கேட்டதற்கு நான் (27) கொடுக்காதபடியா லந்த மாச்சரியத்தினா லவையெல்லாம் நாசமாக்கப்ப ட்டன' வென, இவ்வாறு சங்கதியைக் கேட்டதன்மே லதனைப்பற்றி நன்காலோசித்ததி (28) லது சிவத்துரோகத்தின் காரணத்தினால்தா னிறந்துபோயிற்றென் றறிந்து மகா கோபத்தோ டவ் வியானைப்பாக னையு மவனைச்சேர்ந்த மனிதர்களையு மப்பாவம் தீருவதற்காகச் சிரசாக்கி னை செய்துவிட்டான். (29½) மேலு மப்போ தவ் வரசச் சிரேஷ்ட

னவ் வணிகனேயு மழைப்பித் தவன தெல்லாச் சொத்துக்களேயும் பிடுங்கிக்கொண் டுடனே கோபத்துட னவன் தலையையும்சேதித்துவிட்டான். (30½) பிற்பா டவன் சௌபரியென்ற வைத்தியனை யழைப்பித்து 'நீ யென்னசெய்தா யென்று வினவியதற் கவன் 'ஓ! ஸ்வாமீ! நான் மிகுந்தப் பிரயத்தினத்தோடு தக்க சிகிச்சை செய்து மியானைக்கு நோய் தீராம லுடனே யிறந்துவிட்ட' தென,(32) பிற காசமன்னனும் 'அடா! வைத்தியா! நீ செங்கற்களை யபகரித்துவந்து குருத்துரோகம் செய்த படியால்தான் நமதியானை சாகலாயிற்று.(33) இதோ இப்போதே யுந்தனையு மாக்கினை செய்துவிடுகின்றே' மென் றரசன் சொன்னவுட னப்போ தவனை நோக்கி யவனது மந்திரி யுரைத்ததாவது:— "ஓ! ஸ்வாமீ! முந்தித் தேவரீர் வியாதிகொண்டிருக்கையி (34) லப்போ தசுவினி தேவர்கள் வந்து தேவரீருக்கு வைத்தியம்செய்துவிட் டவர்கள் சொர்க்கத்துக்குப் போக வெத்தனிக்கையி லவர்களிச் சௌபரியைப் பார்த்துத் தேவரீரை நோக்கிச் சொல்லியதாவது:— 'ஓ! ராஜனே! உன் தேசத்தில் (35½) வியாதிவந்தவர்களுக்கெல்லாம் நா மிவரிடத்தி லாட்கொண்டிருந்து வைத்தியம் செய்துவரலாமோ' மென்று சொல்லிப்போட்டுச் சொர்க்கத்துக்குப் போனார்களன்றே! இந்தக்காரணத்தினு லிவ் வைத்தியச் சிரேஷ்டனை யாக்கினைசெய்வது தகுதியல்ல. (37) மேலும் கேளீர்! அரசனே! இவர் நோயாளிகளுக்கு வைத்தியம் செய்தவிடங்களிலெல்லா மிவ் வியானையைத்தவிர மற்றொருவரும் செத்ததேயில்லை. (38) இவரைக் கண்டித்துவிட்டா லப்போது வைத்தியம்செய்வோர் யாவ' ரென, இவ்வாறு மந்திரியின் வசனத்தைக் கேட் டரச னவனுக்குப் பதிலுரைத்ததாவது:— (39) "ஓ! மந்திரீ! இவன் கண்டிக்கப்பட்டுப்போனால் வைத்தியம் செய்வதற்கு ஸ்ரீ பரமேசுவர னிருக்கின்றார். ஏனென்று லவரோ தேவர்களுக்கெல்லாம் முதன்மையான வைத்திய' ரென்று (ஸ்ரீ ருத்திர பிரசினத்தில்) வேதத்தாற் சொல்லப்படுகின்றது. (40) ஆகையால் ஓ! மந்திரீ! நீ ரித் துராத்துமனைத் தாமசமின்றியே சிக்ஷிக்கவேண்டு' மென, உடனே சிவத்துரோகியான அவ் வைத்தியன் மந்திரியாற் சிந்தியாமல் தண்டிக்கப்பட்டான். (41) பிற காசன் தங் கத்தினுற் செங்கற்க ளமைப்பித்தவைகளால் குருவின் திருவடிகளிற் பூஜைபண்ணி 'ஓ! ஸ்வாமீ! என தபராதத்தை யிப்போது மன்னித்தருளவேண்டு' மென்று பிரார்த்தித் (42) தக்குருவைப் பக்தியுடன் வந்தனிக்கையி லப்போது குருவும் மெத்தச் சந்தோஷம்கொண்டவராகி 'ஓ! ராஜனே! எழுந்திரு மெழுந்திரு' மென்று சொல்லும்போ (43) தங்கு தேவதுந்துபி முழக்கங்களோடுகூட மலர்மாரிசொரியலுற்றது.

மேலு மப்போது பிரம்மனும் விஷ்ணுவு மங்கு தோன்றி யவ் வரசமன்னனை நோக்கி யுரைத்ததாவது:— (44) 'ஓ! ராஜனே! மகா நீதிமானுகிய நீ வேண்டிய வரனை யெங்களிடம் கேட்டுக்கொள்ளலாவா' யென, அதன்மே லவ னவர்களை நோக்கிப் பிரார்த்தித்துக்கொண்டதாவது:— 'ஓ! பிரபுக்களே! அடியேனுக்கு மற்றோர் வரனும் தேவையில்லை. (45) ஆனு லென் தேசத்திலுள்ள ஜனங்களுக் கொருக்காலும் வியாதிவாராமலே யிருக்கவேண்டும்; இதுதா னடியேனுக்குத் தேவையான வர' மென, அவர்க ளவ்வாறே யாகக்கடவதென்று திருவாக்கருளிப் போட் (46) டவ் விருதேவர்களு மந்தர்த்தானமடைந்துவிட்டார்கள். பிற்பா டரசன் குருவுக் கனுமதிகொடுத் தனுப்பிவிட்டு வெகுகாலம்வரையிற் சோம்பலின்றி நீதியா யரசாக்ஷிசெலுத்திவந்தான். (47) அவன் தேசம்முழுதும் சுபிக்ஷமாகிவிட்டது.

செங்கற்களைக் கொண்டுவந்த பாதகர்களெல்லாம் நரகங்களையடைந் (48) தவ் வெல்லோர்களு மின்னும்கூட வாதையளிக்கப்பட்டு வருகின்றார்கள். மேலு மவர்களுக் கொருநாளும் கரையேற்றமில்லை. முற்கூறிய நாகங்களுக் கருகினிற் சத்தம்கேட்கப்படுகின்றதல்லவா! (49) இது அவர்களுடையதுதா" னென்று சதாநந்தமுனிவரை நோக்கி நந்திகேசுவரன் சொன்னதின்மே லம் முனிவர் சகலத்தையு மவரிடமிருந்து கேட்டுப் பயத்தினல் நடுக்கமுற்றவராகி யப்போதொன்றும் பேசாமல் ஸ்ரீ சிவபிரானைத் தியானம்பண்ணினர். (50)

ஐம்பத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௫எ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! சிவனடியார்களின் பணத்தைப் பறித்துக்கொண்டு பிற கவர்களை நிந்தித்ததாலுமான தோடத்தினல் கோரமான நாகத்தில் வீழ்ந்துகிடக்கலான சில துராத்துமர்களின் கதையைச் சொல்லுகின்றேன். நீங்கள் ஜாக்கிரதையாய்க் கேட்கவேண்டும். ($1\frac{1}{2}$) ஸிந்துதேசத்திற் கதிபனுன கானென்ற வோ ரசன் (2) சகல விரத்தினங்களாலும் விசித்திரமா யமைக்கப்பெற்ற ஸாலாநந்தபுரமென்ற வோர் பட்டணத்தி லரசாண்டுவந்தான். அம்மகாராஜன் விருத்தி

ராசுரனைக் கொன்றவனான தேவேந்திரனைப் பூஜையாற் களிப்பித்துச் (3) சகல சத்துருக்களையும் கொல்லப்பெற்றதான நிகரற்ற வஜ்ஜிராயுதத்தை யடைந்து பிறகு சகல சத்துருக்களையும் வென்றுப் பயமின்றி யரசாண்டுவந்தான். (4) அப்போது சகல சத்துருக்களும் ஜயிக்கப்பட்டானதின்பேரில் மதுவென்ற வோ ரசுரன் மகா வலிமைபொருந்திய் வசுரேந்திரனை வெகுகாலமா யுபாசித்துவந்து (5) மகாபல பராக்கிரமமுடைய வனேக மசுரப்படைகளைச் சேர்த்துக்கொண்டு மிகவும் பெரிதான மதிட்களையு மளவற்ற திரவியங்களையும் கொண்டதான அவனது பட்டணத்தை முற்றுகைபோட்டான். (6) அதனால் காராஜன் மிகுந்த மனவிசாரம்கொள்ளலாகையி லப்போ தருகினில் நின்ற விஜயனென்ற வோர் படைத்தலைவ (7) னவ் வரசனிடம் வந் தப்போது வசனமுரைத்ததாவது:— 'ஓ! மகாராஜாவே! விஜயனென்ற யானொருவ னிருக்குமளவில் தேவரீ ரொன்றுக்கு மஞ்சவேவேண்டாம். (8) ஏனெனில் சகல சத்துருக்களையும் நாசம்செய்பவனுற்ற நாஸிம்மஸ்வாமியை யான் நாள்தோறு முபாசித்துவருகின்றேன். அவரது திருவருளினா லடியேன்முன்னி லெந்தமானிடன்தான் நிற்கத்திறமையுளனாவான்?' (9) என்று சொல்லிப்போட்டு மகா பலவானான மதுராஜனோடு போர்புரிவதற்காகத் துரிதமாய்ச் சென்று சகல சத்துருக்களையும் தொலைக்கலுற்ற நாசிங்கக்கடவுளை மனதினால் நினைக்க, (10) உடனே அந்தப் ப்கவான் மிகுந்த கர்ஜனையுட னங்கு தோன்றி யருளி யோர்நொடிக்குள் ளவ் வெல்லா அசுரர்களையும் மேகம்போன்ற கர்ஜனையோடுபுஜித்துவிட்டுப் (11) பிற கச் சிங்கரூபியான விஷ்ணுவானவர் மகா வலிமைபொருந்திய வம் மதுராஜனையு மப்போது விழுங்கிவிட் டிவ்விதமாய்ச் சகல சத்துருக்களையு மோர் நொடிக்குள் ளதம்செய்துபோட் டந்தர்த்தானமடைந்தனர். (12) பிற்பாடு காராஜ னிவ் வற்புதத்தைப் பார்த்துவிட்டு விஜயனென்ற படைவீரனை யன்றுமுதலாய்த் தேவனென்ற புத்தியுடனே மிகுதியாய்ப் பூஜித்துவந்தான். (13) அப்போ தப் படைவீரனுடைய புத்திரனான சூரனென்பவன் மிகுந்த தௌஷ்டியங்களைச் செய்துவந்தான். அவன் வேசிகளோடு கலப்பதில் மெத்த வாசைகொண்டவனாகையாலொருநா (14) ளவ்வூர்தனி லெப்போதும் திருநீறுருத்திராக்ஷங்களைத் தரித்திருக்கலுற்ற தருமனென்ற வோர் சூத்திரன் வைத்திருக்குமோர் வேசியிடத்தி லவனும் புணர்ந்துவிட்டுப்போகையில் ஓ! கோ! (15) தருமனா லவ் வேசியிடமாய் வைக்கப்பட்டிருந்த வோர் வஸ்திரத்தை யவனுடையதென்றே அச் சூர னறிந்தவனாயினு மவன் மிகுந்த துஷ்ட

னபடியா லதனை யெடுத்துக்கொண்டு போய்விட்டார். (16) பிற்பாடு தருமனவனிடம்போய்ப் பலவிதமாய்க் கேட்டு மத்துராத்துமன் கொடுக்கவில்லை. பிறகவன் சூரன்செய்த காரியத்தை யவனது தந்தையான விஜயனிடத்திற் சொல்ல, (17) மகா மூடபுத்திக்காரனான அவ்விஜயனு மசட்டை செய்துவிட்டான். அப்போது தருமன் கோபாவேசங்கொண்டவனாகி விபூதி ருத்திராக்ஷதாரியாய்க் (18) காராஜனிடம் சென் றிதனைச் சொல்லிவிட்டு (18½) "ஓ! மகா புண்ணியசாலியான வரசனே! யான் நாள்தோறும் சகல பாவங்களையும் நாசம் செய்யலுற்ற திருநீறுதனை யிட்டுவருகின்றேன். மேலு மெந்தனு விரவும் பகலுமாயனேக ருத்திராக்ஷங்கள் தரித்துவரப்படுகின்றன. ஆகையால் சூரனு லபகரிக்கப்பட்டுப்போன வெனது வத்திரத்தைத் தேவரீர் (20) மகா சிவபக்தரானபடியால் வாங்கித்தருவது தகுதியாகும். மேலு மெவரால்தான் சிவனடியார்சொத்தபகரிக்கத்தகு" மென, (21) இவ்வா றவன்து வசனத்தைக் கேட்டதன்மே லரசனப்படியே நல்லதென்று சொல்லிப்போட்டப்போதுடனே யவன் விஜயனையழைப்பித்துக் கொடுமையாய் வசனமுரைத்ததாவது:— (22) "அடா! மகா மூடா! உந்தன்மகனுலபகரிதது்க்கொள்ளப்பட்ட விச்சிவனடியாரின் வத்திரத்தைக்கொடுத்துவிடும்படிசெய்பலாவாய். அதிற்கொஞ்சமேனுமசட்டைசெய்வதுதகுதியல்ல"(23) வென,இவ்வா றரசனதுவசனத்தைக்கேட்டுவிஜயனவனுக்குரைத்ததாவது:—"ஓ! ராஜனே!இவன்சிவபக்தனேயல்லன். இடைவிடாமலிவன் தாசிவீட்டுக்குப்போகின்றவன். (24) இவனுக்குச் சகலப்பிராணிகளுக்கும் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீமகேசுவரனிடத்திற் பக்தியெங்குண்டாகப்போகின்றது? வெறும்திருநீ றுருத்திராக்ஷங்களைத்தரிப்பதினுல்மட்டிலெவ்வாறுசிவநேசனுவா"னென,(25) இவ்வசனத்தைக் கேட் டரசன் பின்னு முரைத்ததோவென்றால்:— 'அடா! மூடா! லிங்கமென்ற பாவனையோ டமைக்கப்பட்ட வோர் வெறும் கல்லானது சகல புலவர்களாலும் தேவர்களாலும் பூஜித்து வந்தனிக்கப்படவில்லையா? (26½) அதுபோலவே யெப்பேர்க்கொத்த மானிடராயினும் வெறும் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரிப்பதால்மட்டிலே சகல மனிதர்களாலும் மெய், நாவு, மனதுகளாலெல்லாம் பூஜிக்கத்தக்கவரோ. ஆகையால் நீயிவ்வாறு பிதற்றலை விட்டுப்போட் (28) டிப்போதே யுன் மகன் கையிலிருந்து வத்திரத்தைப் பிடுங்கி யிவரிடம் கொடுத்துவிடலாவா' யென் றரசன் கோபாவேசம் கொண்டவனாகி யவனை நோக்கிக் கொடூரமாயுரைத்துவிட்டுப் (29) பின்னு மப் புத்திக்கேடனை நிராகரித்து வசனமுரைக்கின்றான்:— 'அடா! மூடாத்துமனே! நமக்குத் தெரிந்தபிறகு

கூட நீயே யுன் துஷ்டப்பிள்ளையைக் கொடிய வார்த்தைகளா லதட்டி யவ் வத்திரத்தைக் கொடுப்பிக்கவில்லையல்லவா? (30½) ஆகையால் நீ நம்முன்னிலிருந் தோடிப்போகலாவா' (31) 'யென் றிவ்வாறு வசனங் களா லதட்டிச்சொல்லி யவனை யனுப்பிவிட்டுப் பிறகு கோபாவேசத் தோ டவன் மகனான சூரனை யழைப்பித்து (32) 'அடா! துராத்தும் னே! நீ யோர் சிவனடியாரின் வத்திரத்தைத் திருடிவிட்டாய். அதனு ல் நீ சிவத்துரோகியாகின்றபடியால் நீ சிந்தியாமலே கொல்லப்படவே ண்டும். (33) ஏனென்றால் சிவத்துரோகியைச் சிந்தியாமலே கொல்ல வேண்டுமென்று பெரியோர்களாற் சொல்லப்படுகின்றது." என்றுசொ ல்லி யரச னில்லாவிடிற் சிவத்துரோகம் தனக்கும் நேரிடுமென்று கரு தித் தன் முன்னிலையிலே யவனை யாக்கினை செய்துவிட்டான்.(34½) அ துகண் டவன் தந்தையான விஜயன் மிகுந்த துக்கத்தினு லுள்ளத்திற் கோபங்கொண்டவனுகி (35) யத் துராத்தும னரசனருகிலிருந்த வத் தருமனை யவமதித்துக் கொடிய வசனங்களால் திட்டிக்கொண்டே தன் வீட்டுக்குப் போய்விட்டான். (36) அதுகேட் டவ் வரசன் மனமதிற் கோபாவேசம் கொண்டவனுகி 'ஓ! கோ! துர்ப்புத்திக்காரனுன விம் மகா பாவியானவன் தன் மகன் சிவத்துரோகம் செய்யத்துணிந்த வோர் துர்ப்புத்திக்காரனென்பதை யறிந்தும் நம் முன்னிலையிலே யிச் சிவனடி யாரைக் கொஞ்சமேனு மச்சமின்றி யிப்போது வாக்கினுல் திட்டினுன ல்லவா? (37-38) ஆகையா லிந்தப் பாவிஷ்டனையும கொஞ்சமேனும் சிந்தியாமல் கொன்றுபோடவேவேண்டு' மென்று மனதினி லாலோசித் துக்கொண்டு மிகுந்தவிலைபெற்றதும் மெத்த வுத்தமமான அவன் வீ ட்டிற்குக் காவலிட் டவனை யங்குநின்று தருவிக்க, (39½) விஜயனும் மிகுந்த கோபத்தோடு புறப்பட் (40) டரசனிடம் வந்து நரசிங்கஸ் வாமியை மனதினுல் நினைத்தான். அப்போ துடனே யப் பகவான் ம கா கோபாவேசம் கொண்டவரும், மிகவுக்கிரமான கர்ஜன சத்தங்களால் திசைமுகங்களைச் செவிடாக்கலுற்றவருமா யங்கு விஜயமாகிக் (41½) கொடிய மனதைக்கொண்ட பாதகனுன அவ்விஜயனையே யதட்டிக்கொ ண்டு (42) 'ஆ! அடா! பாதகா! நீ ஸ்ரீ சிவபிரானுக்கு நேசரான சிவ னடியாரை நிந்தித்திட்டாயல்லவா! ஆகையால் யாமுந்தனை யிப்போ தே சந்தேகமின்றிக் கொன்றுபோடுகின்றோ' (43) மென்று திருவாக் கருளி யவ் விஷ்ணுவானவ ரவனை யப்போது தம் கைகளால் பிடித்தர யன்முன்னில் நிறுத்திக்கொண் டோ ரறையறைந் தவனைக் கொன்று போட்டனர். (44) பிற்பாடு மகா வலிமைபொருந்திய வந் நரசிம்மஸ்

வாமியானவ ரவ் வரயனை நோக்கித் திருவாய் மலர்ந்தருளியதாவது:—"ஓ! சத்துருக்களைக் கொல்வோனான ராஜனே! நீ சிவத்துரோகமின்றிச் சிவத்துரோகிகளைக் கண்டித்துக்கொண்டு நீதிமார்க்கமா யெதிரியற்றரசாண்டு வரலாவாய். (45½) மேலும் நீ யெப்போது நம்மை நினைக்கின்றாயோ அப்போ துடனே யா முன்னண்டைக்கு வந் (46) துனது சத்துருக்களைச் சமுகரித்துவிட்டுப் பின்னு முனக்கு வேண்டியதைக் கொடுத்தருளுகின்றோம். இவன் நமது சொந்த பக்தனாயினும் சிவத்துரோகியாகிவிட்டபடியால் நம்மாலே கொல்லப்படலானான் பார்த்தாயா? (47) ஆகையால் கேளாய்! பூபதியே! நீ சிவபக்தர்களை யிரக்ஷித்துக்கொண்டு சுகமாய் வாழ்ந்திருக்கலாவா" யென்று திருவாக்கருளிவிட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்பகவான் சீக்கிரத்தி லந்தர்த்தானமடைந்துவிட்டார்.(48) பிற்பா டரசன் மெத்த மனக்களிப்புட னரண்மனைக்குப்போ யத் தருமனை யனேக வத்திரங்களாலும் திரவியங்களாலும் திருப்திசெய்வித்து (49) மேலு மப் புண்ணியவானவனுடைய சொந்த வத்திரத்தையும் கொடுத் தவனை யனுப்பினான். ஓ! கோ! கோ! கேளீர்! முனிவர்களே! அந் தோடத்திற்காக விஜயனையு மவன் மகனான சூரனையு (50) மியமபடர்க ளிந் நரகத்தில் பேர்ட்டிப்போது வதைக்கலாகின்றார்க" ளென, இவ்வா றவனது கோரமான சரித்திரத்தைக் கேட்டதன்மேற் சதாநந்தமுனிவர் (51) பின்னு மிம்மகா கோரமான நரகத்திற் பீடிக்கப்படுகின்ற மற்றப் பாதகர்களைப் பற்றிக் கருணைக்கடலும் சருவஞ்ஞருமான சாக்ஷாத் ஸ்ரீ நந்திபகவானை வினவலானார். (52)

ஐம்பத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ருஅ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு கேளீர்! விரதங்களை யுறுதியாய்க் காப்பவர்களானசௌனகாதி முனிவர்களே! ஸ்ரீ சிவபிரான் குருமார்கள் இவர்களையும், திருநீறுருத்திராக்ஷங்களையும் நிந்திப்பவர்களும், சிவனடியார்களுக்குத் தீங்களிப்பவர்களும் கோரமான நரகங்களி லனுபவிக்கும் கொடும் துன்பத்தைச் சொல்லுகின்றேன். அப்பேர்க்கொத்த பாவங்களை விலக்கிக் கொள்வதற்காக நீங்க ளிதனைக் கேளுங்கள். (1-2½)

ஜோனகமென்ற வோர் பெரிய தேசத்தி லதேபெயர்கொண்டதான ஜோனகபுரமென் றோர் பட்டணமிருக்கின்றது. அப்பட்டணத்தில் வெகு தருமிஷ்டனான மற்றோர் கலாதர (சந்திர)னைப்போன்ற கலாதரனென்றோ ராசனிருந்தான். (4) அவ்வரசன் மிகுந்த புலவர்களான வனேக வந்தணர்களோடுகூடக் காலங்களைப் போக்கிக்கொண்டு நீதியா யரசாண்டுவந்தான். (5) இப்படியிருக்கையி லொருநா ளவன் மகாத்துமர்களான கவிராயர்கள், பண்டிதர்கள், சித்தர்கள், யோகீசுவரர்கள், சன்னியாசிகள் இவர்களோடுகூடச் சபாமண்டபத்தில் வீற்றிருக்கும்போது (6) பிராம்மணர்களுக்கு ளொருவரோடொருவர் சில வாக்குவாதம் நேரிட்டது. அப்போ தவர்களில் பாசுபதபாரதியென்ற வோர் சிறந்த சன்னியாசியானவர் (7) கலாதரராஜனை நோக்கி மிகுந்த சந்தோடத்தோ டுரைத்ததாவது:— "கேளீர்! மகாராஜனே! மோக்ஷம்பெறுவதற்காகச் சகலப் பிராணிகளுக்கும் மேன்மைகளுக்கெல்லா மதிக மேன்மையை யளிக்கலுற்ற (8) ஸ்ரீ சிவபிரானையே யென்றும் பூஜிக்கவு மறியவும் தியானிக்கவும் வேண்டும். ஏனென்றால் ஓ! ராஜனே! அவரோ பரப்பிரம்மமும், பரதத்துவமும், (9) பரஞ்சோதியும், பரந்தாமமும், முக்கியகதியும், காரணங்களுக்கெல்லாம் காரணமும், தெய்வங்களுக்கெல்லாம் பெருந்தெய்வமுமான வரும்பொருளாகின்றார். (10) ஆகையா லப்பேர்க்கொத்த மகாதேவனை யிங்கெவர் தொழுகின்றார்களோ அவர்கள் கிருதார்த்தராவார்களேயின்றி மற்றவரல்லர்- அப்பேர்க்கொத்த மகாத்துமர்களுக்கே மெத்த மேன்மைபொருந்திய மூக்தி, போகம், (12) அஷ்டைசுவரிய சித்தி, மிக வற்புதமாகிய வோர் குடையின்கீழான வரசாக்ஷி, சொர்க்காதிபத்தியம், பிரம்மத்தன்மை, விஷ்ணுத்தன்மை இவைகள் கிடைக்கலாகும்" மென, (13) மற்றோர் வாசுதேவபாரதியென்பவன் ஸ்ரீ சிவபிரானைப்பற்றி யுரைக்கப்பட்ட மேன்மையைச் சகிக்கமாட்டாதவனாகி யரசனை நோக்கிச் சொல்லியதாவது:— (14) "ஓ! மகாராஜாவே! இச்சிவன் தாமஸகுணமுடையவனும், தோல், எலும்பு, சுடுகாட்டுச் சாம்பல் இவைகளைத் தரிப்பவனும், பூதகணங்களாலும் பிரமதகணங்களாலும் சூழப்பெற்றவனாகி மயானத்தின்கண்ணேமிகுதியாய் வசிப்பவனும், (15) உலகினி லெப்போதும் போகமதில் முயன்றவனுமாகையி லவ னெவ்வாறுப் பிரம்மமாவான். மேலுமவன் கேவலம் பாம்புகளையே ஆபரணமாய்க் கொண்டிருக்கையில் போகமோக்ஷ (பாம்புகளைவிடுதல்) ங்களை யெவ்வாறு கொடுக்கத்தகுவான்.?" (16) என்று வாசுதேவபாரதியென்ற சன்னியாசி நிந்திக்கலாகும்போ

து பாசுபதபாரதியென்ற யோகீசுவரர் காதுகளைப் பொத்திக்கொண்டு (17) 'ஓ! கோ! இச்சன்னியாசியால் ஸ்ரீசிவபிரானுடைய மகிமையை யறியாமலல்லவோ இவ்வாறு பிதற்றப்பட்டது. சந்திரகலையை யுச்சியலங்காரமாய்ப்பூண்ட ஸ்ரீமகேசுவரநந்தந்தச்சமுகாரகாலங்களிலிறக்கலான வனேகம் விஷ்ணுப் பிரம்மர்களுடைய(18) வெலும்பு, சாம்பல், மண்டையோடு இவைகளை, இப்போ திருக்கின்றவர்களு மினி வரப்போகின்றவர்களுமானப் பிரம்மவிஷ்ணுக்களுக்குத் தாமென்று மழிவற்றவரென்பதையும், அவர்க ளழியத்தக்கவர்களே யென்பதையும் தெளிய வறிவிப்பதற்கல்லவோ தரித்தருளுகின்றார். ($19\frac{1}{2}$) மேலும் பிணங்கள் கிடப்பிக்கப்படுகின்ற இடமே கற்றோர்களால் மயான மெனப்படுகின்றது. (20) ஆகையா லெல்லோர்களு மழியலாகின்றப் பிரளயகாலத்தி லெல்லாவிடங்களுமே மயானமெனத்தகும். (21) அதனால்தா னப்போர்க்கொத்த மகா சமுகாரத்தை நடத்தலுற்ற மகாப் பிரபுவானவர் மயானத்திற் குடியிருப்போரென்று சொல்லப்படுகின்றார். உலகமான தவருடைய மகிமையை யறியாமலே வீணுய்ப்பங்கமடைகின்ற (22) தென்று சொல்லிப்போட்டுப் பின்னும் மகா சிவபக்தரான வந்த யதீசுவரவனுக்குரைத்ததாவது:— "அடா! மூடா! நீ முந்திப் பிரம்மனுல் விஷ்ணுவுக் கிடப்பட்ட சாபத்தி லகப்பட்டவனென்பதிற் சந்தேகமேயில்லை. (23) எப்படியென்றால் முந்திப் பிரம்மன் 'ஓ! விஷ்ணுவே! ஒரு தண்டத்தையும் மூன்றுதண்டங்களையுமுடைய சன்னியாசிகளாகிய வுன் பக்தர்களெல்லா மவர்களைக் கண்டமாத்திரத்தில் பார்ப்பவர்களை நரகங்களிற் சேர்ப்பிக்கலுற்ற பாஷண்டிக ளாகக்கடவார்க' ளென்று விஷ்ணுவைச் சபித்திருக்கிறானன்றோ! (24) அச்சாபத்திற்கு நீ முதன்மையான பாத்திரனுகின்றாய். அதனுல்தான் நீ புத்திப்பிரமம்கொண்டவனுகித் திருநீறுருத்திராக்ஷங்களைத் தரியாம லிவ்வாறு பிதற்றுகின்றாய். (25) ஆகையா லுந்தனேடு சம்பாஷிப்பதில் மிகுந்த தோஷமுண்டென்பதிற் சந்தேகமில்லை. ஏனென்றால் பூர்வத்தில் சகல தேவர்களு மிருடிகளும் தக்ஷப்பிரஜாபதியோடு சம்பாஷித்ததினுற் (26) சிவத்துரோகிகளாகி யுடனே யம்மகாபாதகத்திற்காகத் தண்டிக்கப்பட்டிருக்கின்றார்களன்றோ! எவனுடைய நெற்றிதனில் திருநீறு முடல்தனி லுருத்திராக்ஷமும் காணப்படவில்லையோ (27) அவன் சிறந்த வந்தணனுயினும் கற்றோ ரவனைச் சண்டாளனென்றே விலக்கவேண்டும். ஆகையா லுன்னைப்பார்ப்பதாலு முந்தனேடு பேசுவதாலும் மிகுந்த தோடமே!" (28) யென, அப்போ தச் சபைதனிலிருந்தப் பிரம்மகேஸரியென்ற மற்றோர் பிராம்மணனும் புத்திப்பிரமம்கொண்டவனுகி யப்பா

சுபதபாரதியை நோக்கி யுரைத்ததாவது:— (29) ஓ! சன்னியாசியே! சாம்பலைப் பூசுவதாலு முருத்திராக்ஷமரத்தினின் றுண்டான விதைகளைத் தரிப்பதாலு மென்ன முக்தி யுண்டாகும்? ஞானமில்லாவிடி லவையெல்லாம் வீணென்றே சொல்லப்படுகின்றது. (30) ஆகையால் சாம்பலைப் பூசுவதாலு மோர் மரத்தின் விதைகளைத் தரிப்பதாலு மென்ன? இப்பேர்க்கொத்த வார்த்தைகளையெல்லா மிராஜசபையி லெவ்வா றுரைக்கத்தகு' மென, (31) பிறகு பாசுபதபாரதியென்ற யதீசுவரா வனுக்கு முரைத்ததாவது:—"ஆ! மூடா! மிகவும் கேடுகெட்ட வுந்தனுல் வேதாகமபுராணங்கள் கேட்கப்படவுமில்லை; படிக்கப்படவுமில்லை. 'விபூதிருத்திராக்ஷங்களைத் தரிப்பவர்கள் ஞானிகளாயினு மஞ்ஞானிகளாயினும் பாவிகளாயினு மவர்களுக்கு முக்தியே' (33) யென்று சகல வேதபுராணாகமங்களினும் பலவிடங்களில் முறையிடப்படுவதின்படியே யுலகிலுள்ள வெல்லா மகாத்துமர்களாலும் (34) தவசிகளாலும் திருநீ றுருத்திராக்ஷமாலைகள் தரிக்கப்பட்டுவருகின்றன. திருநீ றுருத்திராக்ஷங்களைத் தரிப்பவர்கள் ஸ்ரீசிவபிரானுக்குச் சரியாகின்றார்கள். (35) அவர்கள் மகா பாவிகளாயினும் பரிசுத்தர்களே! அவைகளைத் தரியாத மற்றவர்களெல்லாம் மகா பாவிகளென்றே நினைக்கப்படுகின்றார்க" ளென்றவரா லுரைக்கப்பட்டும் பிராம்மணர்களிற் கேடுகெட்டவப் பிரம்மகேஸரியானவன் சபைதனில் பின்னு மதேமாதிரியான குதர்க்கங்களைப் பேசினான். பிற்பாடு வாசுதேவபாரதி யப்போ தரசனை நோக்கி (37) 'ஓ! பூபதியே! எங்களால் சாத்திரப்பிரசங்கம் செய்யப்படுகையி லிவ் விருவர்களு மும் முன்பாக வீண் குதர்க்கவாதங்களைப் பேசுகின்றார்களே!' யென்று சொல்ல, அப்போ தவாது சீட னவனை நோக்கி 'ஓ! குருவே! நீரோ சன்னியாசி; இப்போ திங்கு சண்டை போடுவதா லுமக் கென்ன பயன்? நா மிப்போ திவ்விடம் விட்டுப் போவோம் வாரீ' (39) ரென, அதற் கவர் சீடனுக் குரைத்ததாவது:— 'அடா! சீடா! இவர்கள் மகாசிவத்துரோகிகளானதா லவர்களின் பகையினால் நமக் (40) கென்ன கெடுதி' யென, அப்போது சீடனும் 'ஓ! பிரபுவே! அவர்கள் நரகத்துக்குத்தான் போகட்டு மல்லது சொர்க்கத்துக்குத்தான் போகட்டும்; அதனா லிங்கு நமக்காவதென்ன? நாமிப்போது போய்விடுவோ' (41) மென் றுரைக்கலான வச் சீடனைநோக்கி ஸ்ரீசிவபிரானுக்கு நேசரும் குருடருமான வச் சனியாசியும் 'ஓ! சீடா! இவர்க ளிப்போ திராஜசபையி லிவ்வாறுரைக்கும்போது நாம் போவது சரியல்ல; பதிலுக்குப் பதில் சொல்லவே சொல்லுவோ' மென்று சொல்லும்போது மகா கோபக்காரனும் துராத்துமனுமான வச் சீடன் (43)

'ஓ! ஸ்வாமீ! ஆனால் நீ ரிங்கிரும்; நான் போகின்றே' னென்று சொல்லிப்போட்டுப் போய்விட்டான். பிற கவனை நோக்கிப் பிரம்மகேசரியானவன் 'ஓ! யதீசுவரரே! உமக்குக் கண்தான்போயிற்றென்றால் புத்தியும்கூடப்போயிற்றே! உமது சீடனே யுமக்குத் தக்க பதிற்சொல்லிப்போட்டுச் சென்றுவிட்டானே; இனி யுமக்கு வழிகாட்டி யழைத்துப் போவோன் யா' ரென, (45) அப்போ தங்கிருந்த பரமசாந்தனென்ற வோர் பிராம்மணோத்தமன் 'ஓ! ஐயா! நா னவருக்குச் சீடனாயிருந்து வழிகாட்டி யழைத்துப்போகின்றேன். அத்துராத்துமன் போனால் போகட்டும்; அவன் சிவத்துரோகியாகியதா லிவருக்குச் சீடனல்ல' 'ஓ! ஸ்வாமீ! தேவரீர் ஸாக்ஷாத் ஸ்ரீ பரமசிவனென்றே தோன்றலாகின்றபடியா லடியேன் ஞானக்கண்களையுடைய தேவரீருக்குச் சீடனாயிருந்துகொண்டு (47) நாள்தோறு மூழியம்செய்துவருகின்றேன்; நான் வேதசாஸ்திரங்களைக் கற்றவனும் திருநீறுருத்திராக்ஷங்களைத் தரிக்கின்றவனுமாகையால் (48) தேவரீருக்குச் சீடனாயிருக்கத் தகுதியாயிருக்கின்றேன். ஆகையால் தேவரீ ரடியேனை யங்கிகரித்தருளவேண்டு' மென, இவ்வா றுரைத்த வப் பிராம்மணனைப் பாசுபத பாரதியானவ (49) ரவ னுடம்பைக் கையினால்த் தடவி யப்போ தவன் கைதனைப் பிடித்துக்கொண்டு 'ஓ! பிராம்மணா! நீ யோர் சிவபக்தருடைய குமாரனாயிருப்பதோடு நீயும் சிவபக்தனாயிருப்பது மிகவும் விசேஷ'(50) மென் றவரங்கவனைக்கொண்டாடுகையில்கேளீர்!பிராம்மணோத்தமர்களே!அதற்கிடையி லங்கிருந்த பத்திரனென்றவோர் சன்னியாசியானவன் 'கேளீர்! இயதீசுவரரே! இவன் சங்கதி யுமக்குத்தெரியாது;(51) இவனோர் மிருந்த தாஸிவிடன்; நீரோ வாலிபப்பருவ முள்ளவராயிருக்கின்றீ' ரென்று சொல்லும்போ தவர் பின்னு முரைத்ததாவது:—'ஓ! பிராம்மணா! திருநீறு ருத்திராக்ஷங்களைத் தரிப்பவர்க (52) ளெப்போது மெல்லாவிடத்திலும் பாவமற்றவர்களும் மகா பரிசுத்தம்பொருந்தியவர்களுமே! அவர்களுக்குத் தோடமேயில்லை. அடா! இப்போது நீயோர் சிவனடியாரை நிந்தித்திட்டா யல்லவா?' வென்று சொல்லிப்போட் (53) டவ ரப்போ தரசனை நோக்கி யுரைத்ததாவது:—"ஓ! ராஜேந்திரா! நீர் மெத்தத் திறமைபொருந்தியவராகையால், சிவநிந்தை செய்யத் துணிந்த வாசுதேவபாரதி, விபூதி ருத்திராக்ஷங்களை நிந்திக்கலானப் பிரம்மகேசரி, குருத் துரோகம் செய்யத் துணிந்த வஸுவென்ற நம் சீடன், சிவனடியாரை நிந்திக்கலான பத்திர னென்பவன் இவர்களை யிப்போது சடிதியில் தண்டிக்கலாவீர்; இல்லாவிடில் நாம் (54-56) தண்டித்துப்போடுகின்றோம்; இதற் கிப்போ தென்ன சொல்லுகின்றீ" ரென் றந்த யோகி

சுவர் சொல்லும்போது ஞானக் கண்களையுடைய அவரை வந்தனித்து ப்போட் டரசன் சொன்னதாவது:—(57) 'ஓ! ஸ்வாமீ! தேவரீரது திருமகிமையா லிப்போ தோர் கணநேரத்திற்குள்ளுமது கண்களைத்த ருவித்துக்கொண்டு நீரே யிவர்களைத் துரிதமாய்த் தண்டிக்கலாவீர்; நாங்க ளெல்லோரு மதனைப் பார்க்கலாகின்றோ' (58) மென, சிவநேசரா ன பாசுபதபாரதியு மோர் கணநேரத்திற்குள் தமது மகிமையால் கண்க ளை யடையப்பெற்று மகா கோபாக்கிராந்தராகி (59) 'ஆ! ஆ! இப் போ தோர் நொடிநேரத்திற்குள் ளிந் நான்கு பெயர்களுடைய தலைகள் மீது மிவ் வரசன் பார்த்துக்கொண்டிருக்கையிலே யவன் முன்பாக விடி கள் விழக்கடவன' வென் றவர் சபிக்க, (60) அந்நான்குபெயர்களு மோர் நொடிதனி விடிவிழுந்து மடிந்தார்கள். பிற்பா டச் சன்னியாசி யானவர் பயந்தேங்கி நின்ற அவ்வரசனை நோக்கி யுரைத்ததோவென்று ல்:— (61) 'ஓ! அரயனே! நீ சிவத்துரோகத்தில் முயன்றவர்களான ஜனங்களை யாதரித்தபடியாலும், மகா பாதகிகளான அவர்களை நம்சொ ல்லின்படி தண்டியாதபடியாலும் (62) நமது சாபத்தினால் நீ யிப்போ தோர் கழுதையாகிவிடக்கடவா' யென, பிற காசன் பயந்து நடுநடுங்கிய வனாகி யவ்வியதிசுவரரை வந்தனித்துத்(63) தலைமீ தஞ்சலிகொண் டவ ரிடம் விண்ணப்பம் செய்துகொண்டதாவது:— 'ஓ! ஸ்வாமீ! அறி யாமையாற் செய்யப்பட்ட வென' திப்பேர்க்கொத்த வபராதத்தை மன்னித் தருளவேண்டும். (64) ஏனென்றால் பெரியோர்களின்கோ பம் தண்டனிடும்மட்டில்தா னுள்ளதென்று வேதம் கூறுகின்றதன் றோ!' வென, அச் சன்னியாசி பின்னும் கோபத்தினால் கண்கள் சிவக்க ப்பெற்றவராகி யவனை நோக்கி யுரைத்ததோவென்றால்:—(65) 'கே ளாய்! அரயனே! சுருதியிலும் ஸ்மிருதியிலும் மகா பாதகங்களுக்கெ ல்லாம் பிராயச்சித்தம் காணப்படுகின்றது. ஆனால் சிவத்துரோகத்தோ டு சம்மந்தப்பட்ட பாவத்திற் கோரிடத்தும் பரிகாரம் காணப்படவேயி ல்லை. (66) உன் விதி யிவ்வா றேற்பட்டிருக்கையில் நம்மாற் செய்ய த்தக்க திங் கென்ன விருக்கின்றது? ஓ! ராஜனே! உனக்கு ஜன்ம ஜன் மங்களானபோதிலும் கரையேற்றமில்லை." (67) யென்று சொல்லிப் போட் டப் பாசுபதபாரதி சீக்கிரமாய்ப் போய்விட்டார். அங்ஙனமே யவரது சாபத்தின்படி யரச னப்பேர்க்கொத்த மகா பாவத்தினால் (68) கழுதைப்பிறப்பை யடைந்து மந்நான்கு பெயர்களு மிடிவிழுந்து மடி ந்தும் விட்டார்கள். ஆகையால் மகாத்துமர்களான பெரியோரிடமாய் ச் செய்யப்பட்ட பாவ மோரிடத்தும் வீணாய்ப்போகாதே!(69) மேலு மிடிவிழுந்து செத்த வந் நான்குபெயர்களும் கைதனில் தடிகளைக்கொ

ண்ட வியமபடர்களா லிருபத்தெண்கோடி நரகங்களிலும் தலைகீழும் கால்கள் மேலுமா யாழ்ந்தி வாதையளிக்கப்படுகின்றார்கள்.(70½) மே லு மவர்கள் காது, கண், மூக்கு, வாய் முதலிய விடங்களில் திறண்ட புழுக்களா (71) லெப்போதும் துளைக்கப்பெற்றவர்களாகி மூச்சுவிட இடையில்லாமல் வருத்தப்படுகின்றார்கள். இன்னும் நூறுகோடி கல்பங்களானபோதிலு மவர்களால் கரைகாணப்படப்போவதில்லையே. (72)

ஐம்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ருகூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடுகேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! பின்னும்மற்றோர்கதை சொல்லுகின்றேன்; நீங்க ளதனை யென் முகத்தினின்று ஜாக்கிதையாய்க்கேட்பீர்களாக:—(1) பூமியி னோர் பாகமாகிய கலிங்கதேசத்தில் கடகபுரமென்றோர் பெரியபட்டணமிருக்கின்றது. அதிலுள்ள வரசனுக்குவிராகனென் றோர்பராக்கிரமசாலியான புத்திரனிருந்தான்.(2) இவன்,சுமந்திரனென்ற மந்திரிகுமாரன், ஸுநந்தனென்ற புரோகிதகுமாரன், சுகுந்தனென்ற வாசற்காப்போன் மகன் இந்நான்குபெயர்களு மொருவரோடொருவர் நேசர்களாயிருந்தார்கள்.(3) அவ் வெல்லோர்களுமொரோகாலத்தி லெல்லாக் கல்விகளையும் கற்பிக்கப்பட்டார்கள். அவர்கள் நாள்தோறும் தங்கள் தங்கள் கடமைகளில் முயன்றவர்களும், தானதருமங்கள் செய்வதில் தொரைகொண்டவர்களுமா யிருந்தார்கள். (4) கேளீர்! பிராம்மமனோத்தமர்களே! இப்படி யிருக்கையி லொருநா ளவர்களுக்குத் தீர்த்தயாத்திரை செய்ய விருப்பமுண்டானபடியால் பெற்றோரிடமிருந் தனுமதி பெற்று வேண்டிய தனங்களை யெடுத்துக்கொண்டு (5) கடகபுரத்துக்குச் சமீபமாயுள்ள ஸுபுரமென்றக் கிராமத்தைச் சேர்ந்தங்குள்ள ஸ்ரீ ஸுரேசுவரஸ்வாமி கோவிலி (6) லன்றிரவில் வசிக்கக் கருதியவர்களாகி யவர்க ளொருவரோடொருவ ராலோசித்துக்கொண்டதின்பேரி லவ் வெல்லோர்களும் பிராம்மணர்கள்வீட்டில் புசித்துவிட்டவ் வாலயத்தி லிராஜகுமாரனும், சிவயோகியாகிய பிக்ஷாகிரியின்மடத்தில் மந்திரிகுமாரனும், விபுதனென்ற வோர் சிவபக்தருடையகிரகத்தில் மகா சந்தோஷமுடைய ஸுநந்தனென்ற புரோகிதகுமாரனும், அங்குள்ள வோர் நந்தவனத்தில் வாசற்காப்பான்மகனுமாயவ்விரவுதனிலங்கங்கு

தங்கியிருந்தார்கள். பிறகு (8-9½) மறுநா ளவர்க ளதிகாலையில் மற்றோர் கிராமத்துக்குப் பிராயணப்பட்டுப் (10) பாதிவழியிற் போகையிலங்கு முனிவரிற் சிறந்தவரான கௌதமமுனிவரைக் காணலாகி யந்நான்குபேர்களு மவரைப்பார்த்து வணக்கமாய் வந்தனித்துத் (11) தாங்கள் யாத்திரை நிமித்தமாய்ப் போகின்ற சங்கதியை யப்போதவருக்குச் சொல்ல, அவர்களை நோக்கி யம் முனிவர் திருவாக்குரைத்ததாவது:— "ஓ! கோ! கேளீர்! வாலிபர்களே! கர்விஷ்டர்களான வுங்களா லறியாமல் சிவத்துரோகம் செய்யப்பட்டபடியால் நீங்க ளிப்போது மிகவு மாயுள் குறையப்பெற்றிருக்கிறீர்கள். ஆகையா லுங்களுக்குத் தீர்த்தயாத்திரை கிடைக்கமாட்டாதே! (12-13) உங்களுக் கின்றைச் சாயங்காலமே நிச்சயமாய் மரணம் நேரப்போகின்ற" தென, அதற் கவர்கள் 'ஓ! குருவாகிய கௌதமமுனிவரே! எங்களா லிங்கென்ன சிவத்துரோகம் செய்யப்பட்டதென்பதையும், எங்க ளாயுளெதனுல் குறைந்துபோயிற்றென்பதையும் தெளிய வுரைக்கவேண்டு' மென்று வினவ, (14½) கௌதமர் கூறியதாவது:— "கேளாய்! ராஜகுமாரனே! நேற்றுதின மிங்கு தேவாலயத்தி(15) லுந்தனுல் மயிராற்றிக் கழிக்கப்பட்டதிலம்மயிர்களாற் சன்னிதி யாபாசமாக்கப்பட்டன. மந்திரிகுமாரனுல் மடத்தில் வெற்றிலைத்தம்பல முமிழப்பட்டது.(16) புரோகிதபுத்திரனுலு மோர்சிவனடியார் வீட்டில் வாய் கொப்புளிக்கப்பட்டு அந்த விடமான தச் சிவயோகியால் மிதிக்கப்படலாயிற்று. (17) மேலும் வாசற்காப்பான் மகனுலோவென்றால் மதிப்பிரமத்தினுல் சிவாலயத்தின் நந்தவனத்தில் மூக்குச்சளி சிந்தி அதனு லத்தோட்டத்தை யசுத்தமாக்கிப் பாவம்செய்யப்பட்ட" (18) தென் றம்முனிவரால் சொல்லப்பட்டபடியே தாங்கள் நேற்றுதினம் செய்திருப்பதை யவர்கள் நினைவிற்கொண்டு மவர்க ளிதற்றெ லென்னவென்று நினைத்துக்கொண் டம் மாமுனிவரை வந்தனித்துவிட்டுப் போகலாகையி (19) லதேகணத்தி லவ் விராஜகுமாரனுக்கு மிகுந்த தலைநோய் வந்துவிட்டது. மந்திரிகுமாரனுக்கும் மிருத்யுபோன்ற வோர் நோயினுல் தொண்டை யடைக்கப்பட்டது. (20) மேலு மப் புரோகித புத்திரனுக்கு நாவு வெளியில் தொங்கவிட்டுப்போயிற்று. வாசற்காப்பான் மகனுடைய நுனி மூக்கினு லிரத்தம் மிகுதியாய்ப் பெருகி வடிந்தது. (21) உடனே யோர் கணநேரத்திற்குள் ளவர்க ளிறந்துபோய் நரகத்தில் வீழ்த்தப்பட்டார்கள். இயமபடர்க ளவ் விராஜகுமாரன் தலையி லீயத்தை யுருக்கி யூற்றிப் (22) பிறகத் தலையைக் கண்டம் கண்டமாய்க் கொத்தி மிகுந்த நெருப்புகளை வாரி நிரப்பி

ப் பின்னும் மற்றனேக தண்டனைகளா லவனை வாதைப்படுத்தினார்கள். (23) மந்திரிகுமாரன் நாவினில் தளதளவென் றுருகிய செம்பை யூற்றினார்கள். வாய் கொப்புளித்தவனான புரோகிதபுத்திரனுடைய பற்களைப் பிடுங்கி (24) மற்றவனுடைய மூக்கினில் நாராசங்களை நாட்டிப் பின்னு மிவ்வாறு முதலிய மற்றனேகம் கொடிய யாதனைகளா லவரவருக்குத் தக்கபடி (25) யெக்காலத்திலு மவர்களை வாதிக்கின்றார்களே! ஓ! கோ! கெட்டகாரியம் மிகவும் கஷ்டமே! தவிரவு மிவர்களின் முன்னோர்களான தந்தை, தாய், பாட்டன் முதலியவர்களு மவ்வாறே நரகங்களில் யாதனைப்படுகின்றார்கள்.(26) இவ்வெல்லோர்களுக்கு மின்னும் கூட நரகங்களினின்று கரையேற்றமில்லை. மேலும் சந்தேகமேயின்றிப் பாவிகளோ டிணங்கியமாத்திரத்தால்கூட விதேமாதரியா யனேகம் பெயர்க ளிப்பேர்க்கொத்த நிலைமையை யடைந்திருக்கிறார்க" ளென, $(27\frac{1}{2})$ சதாநந்தமுனிவர் ஸ்ரீ நந்திபகவானிடமிருந் திதனைக் கேட்டதன்மே (28) லவரை வந்தனித்து 'ஓ! நந்திகேசுவரா! இக்கதையைக் கேட்டமாத்திரத்தி லடியே னுடம்பும் மிகுதியாய் நடுக்கமுற்று மனமுமுருகலாகின்றதே' யென்றார். பிற்பாடு (29) விஷ்ணு முதலிய தேவர்களு மிவ்வாறே கூறினார்கள். அப்போது நந்திதேவரு மவர்களை நோக்கி 'ஓ! கோ! எமக்கே யிவ்வா றிருக்கையி லுங்களுக் கிருப்பதி லென்ன வாச்சரிய' மென்றார். (30) பிற கவ ரிப்பேர்க்கொத்த பாவிகளின் கதைகளைப் பிரஸ்தாபித்ததா லுண்டாகும் பாவத்திற்கு ஸ்ரீ சிவபிரானைத் தரிசிப்பதுதான் பிராயச்சித்தமென்று கருதி யப்போ தவ்வெல்லோர்களுடனும்கூட ஸ்ரீ மகேசுவரன் சன்னிதிக்குச் சென் (31) றங்கு ஸ்வாமியையு மம்மனையும் மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்துப்போட் டக் நந்திகேசுவரன் துதிசெய்தார். பிறகு பிரம்ம விஷ்ணு முதலியவர்களு மங்ஙனமே செய்தார்கள். (32) சதாநந்தரும் ஸ்வாமியையு மம்மனையும் தண்டம்பண்ணினார். அப்போது சந்திரனைப் பூஷணமாய்க் கொண்ட பகவான் சதாநந்தரை நோக்கி 'ஓ! முனிச்சிரேஷ்டரே! உமக்குக் கேட்கவேண்டியதெல்லாம் பிரமதகணாதிபனாகிய நந்தியின் முகத்தினின்று கேட்டாயிற்றா?' (34) வென் றிவ்வாறு திருவாக்குரைத்த மகாதேவரை நோக்கி யம் மாமுனிவர் 'ஓ! பிரபுவே! தேவரீர் திருமுகத்தினின்று கேட்பதுபோலவே நந்திகேசுவரரிடமிருந் ததெல்லாம் கேட்டாயிற்" (35) றென்று சொன்னதின்பேரில விடையருளப்பெற்றவராகி ஸ்ரீ சிவபிரான் திருச்சன்னிதியி னின்று திரும்பிப்போய்விட்டார். பிறகு பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களும் பகவா

னால் விடையருளப் பெற்றவர்களாகிச் சென்றுவிட்டார்கள். (36) நந்தியு மவ்வாறே திருவாக்கினை யருளப்பட்டு வாசற்படி யடைந்தார். பிரம்மவிஷ்ணு முதலியவர்களும் (37) சதாநந்த பகவானு மங் ஙவாறாலும் திருவாக்கினை யருளப் பெற்றவர்களாகித் தங்கள் தங்க ளிருப்பிட மடைந்தார்கள். பிறகிவ்விசுமான வற்புதக் கதையைச் சௌனகாதிமுனீசுவரர்கள் சூதமா முனிவரிடமிருந்து கேட்டதன்மே லப்போ தவளை யடிக்கடி மிகுதியாய் மெச்சிக்கொண்டாடினார்கள். (38)

ஐம்பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௬0—வது அத்தியாயத்தி னர்த்தம்.

முனிவர்கள் கேட்கின்றதாவது:— "ஓ! சூதமுனிவரே! இப்போது மதாந்தர்களான அவ் விராஜகுமாரன் முதலியவர்களா லஞ்ஞானத்தினாலல்லவா செய்யப்பட்டது? அதற்காக அவர்க ளிப்பேர்க்கொத்த வினோதமான நரகங்களி லதின் பயனை யனுபவிக்கலாயிற்று. ஓ! விரதங்களை யுறுதியாய்க் காப்பவரும் சருவக்ஞருமான சூதமுனிவரே! சிவபக்தர்களும் வித்துவான்களுமான மகாத்துமர்களா லஞ்ஞானத்தினாலேதாயினும் சொற்ப வபாரதமான காரியம் செய்யப்படி (2) லதற்காக அவர்கள்கூட நரகங்களி லெங்காயினும் துன்ப மனுபவித்திருப்பதைத் தேவரீர் கண்டதாவது கேட்டதாவ துண்டாயி னதனை யெங்களுக் கெடுத்துரைக்கவேண்டு" மென, (3) சூதர் கூறுகின்றார்:— கேளீர்! முனிவர்களே! ஞானத்தினாலோ அஞ்ஞானத்தினாலோ பக்தர்களான மகாத்துமர்களால் ஸ்ரீ சிவபிரானுக் கென்ன வபசாரமான காரியம் செய்யப்படுவதோ (4) அதற்குமட்டில் நரகானுபவம் காணப்பட்டிருக்கின்றதே யின்றி மற்றக் கருமங்களி லவர்களுக்கென்ன வபசாரம் நேரிட்டபோதினு மதற் கொன்றுமில்லையே!

கேளீர்! தாணிதேவர்களே! பூர்வத்தில் ஸோமசருமனென்றும் சிவசருமனென்றும் நல்ல மகாத்துமர்களும், சருவக்ஞர்களும், விரதங்களை யுறுதியாய்க் காக்கலுற்றவர்களுமானவிரண்டு பிராம்மணர்க ளிருந்தார்கள். ($5\frac{1}{2}$) ஒரு சமயத்தி லவ் விருவர்களும் ஸ்வாமி தரிசனைக்காகச் சிவாலயத்திற்குப்போ (6) யங்கு மகாலிங்க மூர்த்தியாகிய தேவேசு

ரான ஸ்ரீ சிவபிரானைத் தரிசித்துவிட் டவ் விருவர்களு மப்போது பிரத க்ஷிணம் பண்ணுகையிலொருவன் நடக்கும்போ தவனதுதேகக்காற்றினு லங்கிருந்த வோர் தீப மணைக்கப்படலானதை யவன் பார்க்கவுமில்லை; அது மற்றவனுல் பார்க்கப்பட்டு மதை யவன்வனுக்குச் சொல்லவுமில்லை. (8) அல்லது அவனேயாவ தத்தீபத்தை மறுபடி யேற்றவுமில்லை. பிற கவர்கள் வழக்கம்போல் வீட்டுக்குப்போய் நாளளவிற் சாகலாகிப் பிற (9) கவர்களா லதற்காக வனுபவிக்கப்பட்ட யாதனைகளை யெடுத்துச்சொல்லச் சாத்தியமில்லை. தவிரவும் புண்ணியசருமனென்ற மற்றொரு சிவபக்த னோர் சிவாலயத்தி (10) லணைந்துபோகும்படியான நிலைமையிலுள்ள வோர்தீபத்தைத் தன் விரலால் தூண்டிவிட்டு முன்போல் நன்று யெரிவித்தான். அப்போ தவனது நுனி நகத்திற் கொஞ்ச மெண்ணெய் யொட்டிக்கொள்ளலாகி (11) யதற்காக அவனும் வெகுகாலமளவும் கொடியநரகத்தில் யாதனைகளை யனுபவித்துப்போட்டுப்பிறகு வெகுகாலமளவும் நாய் ஜன்மத்தை யடைந்திருந்தான். (12) மேலும் சுமதியென்ற பொறியடக்கமுற்ற வோர் சிவயோகியானவன் ஸ்ரீ சிவபிரானுக்காகப் பிறர்களிடமிருந் தனேக தனங்களை யிரந்து வாங்கி (13) யவ் வெல்லாத் தனங்களையும் சிவபூஜை முதலிய விஷயங்களிற் செலவிட்டுவருகையில் சில தேங்காய்களை வாங்கி யவைகளின் நீரினுல் ஸ்வாமிக் (14) கபிஷேகஞ் செய்வித்துப்போட் டுள்ளிருந்த சத்தை யவன் தின்றதனு லவனுக்குங் கோரமான நரகத்தில் மிருந்த யாதனைகளை யனுபவிக்கும்படியாயிற்று. (15) பின்னு மோர் வணிகன் தினந்தோறும் மிகுந்த பக்தியுட னோர் ஸுப்பிரம்மணியஸ்வாமி யாலயத்தில் செய்யினு லனேகம் தீபங்கள் போட்டுவிட்டு ஸ்வாமியைப் பிரதக்ஷிணம் செய்துவருகையி (16) லங்கு விழுந்துகிடக்கு மனேகம் புளியங்காய்களை நாள் தோறும் பொறுக்கிக்கொண்டுபோனுன். அப் பாவத்திற்காக அவனும் கோரமான நரகத்தி லனேகம் கொடிய துன்பங்களை யனுபவித்தான். (17) வஜ்ஜிரதந்தனென்றசெவிடானவோர்யோகீசுவர ரவரருகினி லோர் பாதகனுல் மகா புண்ணியமான வோர் சிவாலயமானது நிந்திக்கப்படுகையி லவர் (18) செவிடாயிருந்து மங்கிருந்த தோடத்திற்காகக் கேளீர்! விரதங்களை யுறுதியாய்க் காக்கலுற்ற முனிவர்களே! அவ் வஜ்ஜிரதந்தர் சகிக்கக்கூடாத யாதனைகளை யனுபவித்தார். (19) மேலும் கேளீர் வேதியர்களே! பாரதியென்ற குருடரான வோர் சன்னியாசியானவர் சிவசன்னிதியில் தூக்கமுற்றிருந்த வோர் பாவியைக் காலினு லிடறித் தாண்டிக்கொண்டு ஸ்வாமியைச் சேவிக்கலானதி லப்போர்க்கொத்த சிவத்துரோகிமீ தவர்கால் படலான தோடத்திற்காக அவரும் மகா கொடிய

யாதனைகளை யனுபவித்தார். (20-21) ஆகையால் பொறியடக்கமுற்ற மகாத்துமர்களான யோகீசுவரர்களாலும், ஞானிகளாலும்கூட வொருக்காலும் சிவாபசாரம் செய்யப்படவேகூடாது. (22) அப்படி யொருக்கால் சிவாலயத்தி லேதாயினும் கொஞ்ச மபசாரம் நேர்ந்திடில் முந்திய தற்குத் தக்க பயனை யனுபவித்துப்போட்டுப் பிறகுதா னப்பேர்க்கொத்தவர்களுக்கு முக்தி கிடைக்கும். (23) ஆகையால் கேளீர்! முனிவர்களே! தெரிந்தவர்கள் சிவத்துரோக சங்கதியைக் காதினுல்கூடக் கேட்கத்தகாது. சிவத்துரோகம் செய்வோர்களி னருகிற் போவதுகூடத் தகாததே! (24) என, இவ்வாறு சூதமுனிவரால் கேட்டு விரதங்களை யுறுதியாய்க் காக்கலுற்ற வம் முனிவர்கள் மெத்த வாச்சரியமடைந்து பயத்தினுல் நடுக்கமுற்றவர்களாகி (25) 'ஓ! கோ! இப்பேர்க்கொத்த பாவிகளின் கதைகளை நாம் கேட்டதினு லிச் சிவத்துரோகப் பாதகத்தைத் தொலைத்து நமது தவங்கள் பயன்பெறுவதற்காக (26) விதற்கு ஸ்ரீ சிவபஞ்சாக்ஷர மகா மந்திரத்தை நினைப்பதுதான் தக்க பரிகார' மென்று கருதித் தங்கள திருதயகமலத்தில் தேவியோடுகூடிய ஸ்ரீமகேசுவரனை மனதினுல் தியானித்தார்கள். (27) இக்கதைகளை நாவினுலுரைத்த சூதமுனிவரு மிப் பாவம் தீருவதற்காக மகா சந்தோஷத்தோடு ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை நாவினு லுச்சரித்து ஸ்ரீஸாம்பமூர்த்தியைத் தியானம்பண்ணிக் (28) கொண் டம்முனிவர்கள் முன்னிலையில் மிருந்த மனக்களிப்போ டிருக்கையி லவரை யவர்கள் பின்னும் சிவபூஜையின் மகிமையை யெடுத்துரைக்கும்படி கேட்டார்கள். (29)

அறுபதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௬௧—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சூதர் கூறுகின்றார்:— ஓ! முனிவர்களே! இதற்குமேலதனைக் கேட்டமாத்திரத்தில் மனிதருடனேமோக்ஷஸாம்பிராஜியத்தை யடையலுற்ற சிவபூஜாமகிமையை யெடுத்துக் கூறுகின்றேன். (1) முந்திய கற்பமதில் ஜகதீசனுகிய ஸ்ரீ மகாதேவர் தமது பகற்காலம் முடிந்தவுடனுலகங்களுக்குத் தம்மைக்காட்டிலும் வேறுபோல் தோன்றலுற்ற சகல ஜகங்களையும் சமுகாரம் செய்துவிட்டுத்(2) தமது மகாராத்திரிதனி

லொண்டியாய் ஸ்ரீ பராசக்தியோடுகூட நர்த்தனம் செய்தருளினர். பிற கவ் விரவு கடந்தவுட னப் பிரபுவுக்கு மறுபடி சகல வுலகங்களையும் மு ன்போல் சிருஷ்டிக்கவேண்டுமென் றென்று மனுதியாயுள்ள வோர் தோற்றமுண்டாகலாகிக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! (3½) அ வர் முன்போலவே, மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலை ஆகிய வாறு அத்துவாக் (மார்க்கம்) களையும், சகல வண்டங்களையும், தம் மிடத்தினின்றே, சிருஷ்டி ஸ்திதி சமுகாரங்களை நடத்துவதற்காகமு ம்மூர்த்திகளையும் நினைத்தமாத்திரத்தில் கேவலம் லீலாவினோதமாயே யச் சகலத்தையும் சிருஷ்டித்தருளினர். (5) பிறகு மாயையின் சம்பந் தமற்ற திருமேனியைக்கொண்ட ஸ்ரீபகவான் உருத்திரர்கள், கணங்கள், தேவர்கள், இருடிகள், பிதுருக்கள், மானிடர்கள், (6) மற்றுமுள்ள ஸ் தாவரஜங்கமங்கள், உருத்திரர்கள், மாதுருகணங்கள், பிரமதகணங்கள், பிரமதகணாதிபர்கள், (7) பூதகணங்கள், பூதகணாதிபர்கள், தேவர்கள், அசுரர்கள், மஹோரகர்கள், இருடிகள், பிதுருகணங்கள் முதலிய சகல ஜ கங்களையும் பற்பலவிதப் பிராணிகளையும் லீலாவினோதமா யம் மாயாசக் தியைக்கொண்டு சிருஷ்டித்தருளினர். (8½) பிறகப் பராபரகுருவானவ ர் தக்கபாத்திரர்களான விஷ்ணு முதலிய தேவர்களுக்கும், சிற்சில மகா ருடிகளுக்கும் தம்மிடமிருக்கும் பற்பலவித வேதங்கள், ஆகமங்கள், பு ராணங்கள், சாத்திரங்கள் இவைகளை லீலாவினோதமாய்க் கற்பித்தருளி விட்டுப் (10) பிற கத் தேவேச னவ் விஷ்ணு முதலியோர்களுக்குக் காக்கினை யருளியதாவது:— "ஓ! தேவர்களே! சிரத்தைக்குத் தக்க பய னையே நாம் கொடுத்தருளுவதாய்த் தீர்மானித்திருக்கின்றபடியால் நீங்க ள் மனதினில் பக்திச் சிரத்தையோடுகூட நம்மைப் பூஜைசெய்திடில் (11½) பிறகு நாம் கேளீர்! விஷ்ணுவே! பிரம்மாவே! உங்களுக்கதி காரங்களைக் கற்பிக்கலாவோ" மென, (12) பிற்பா டவர்க ளஞ்சலி கொண்டவர்களாகி யவனை வந்தனித்துக் கேட்டுக்கொண்டதாவது:— "ஓ! அனேகவிதங்களாய்க் கூப்பிடவும் துதிசெய்யவும்படலாகின்ற பக வானுகியபரமேசா! வேதாகமங்களில்தேவரீரெங்கும் பரிபூர்ணரென்றும் சகலப் பிரபஞ்சச்சொரூபியென்றும் சொல்லப்படுகின்றதே! ஆகையால் ஓ! பிரபுவே! அவைகளி லெந்த்வுருவத்தைதை யெவ்விதமாய்ப் பூஜித்து (13-15) யாங்கள் தேவரீருடைய வனுக்கிரகத்திற்குப் பாத்திரர்களா வோ" மென, ஸ்வாமி மொழிந்தருளுகின்றார்:—"ஓ! தேவர்களே! எவ்வு ருவத்திலாயினும்யாவராலாயினும்யாமாதரவுடன் பூஜிக்கப்படில்(16) யா ம்பிரஸன்னராகிவேண்டியபயனைக்கொடுக்கலாவோம். ஆனால்லிங்கத்தில் பூஜைசெய்வோர்களுக்கு யாமதிசீக்கிரத்திலெல்லாவபீஷ்டங்களையும்கொ

ச்துவிடலாவோம்;(17) ஏனென்றால்:-பக்திமான்களுக்குமோக்ஷத்தை யருளுவதற்காக லிங்கவுருவத்தில் மந்திரங்களால்பிராணப்பிரதிஷ்டைமு தலியவைகளைச் செய்ய வேண்டாமலே யெப்போதும் யாம் பிரசன்ன ராய் வசிக்கின்றோமே" யென, (18) தேவர்கள் கேட்கின்றதாவது:— "ஓ! பிரபுவே! தேவரீரால் திருவாக்கருளப்பட்ட லிங்கமென்பதென் ன? என்று மழிவற்ற நீ ரெவ்விதமாய் லிங்கியாகின்றீர்? அதற்கு லிங்க மென்றபெய ரெப்படியுண்டாயிற்று? இவைகளை விவரமா யெடுத்துரை த்தருளவேண்டு" மென, (19) ஸ்வாமிகூறுகின்றார்:— "ஓ! தேவர்க ளே! அளவற்ற சக்தியுடையதும், மூப்பற்றதும், அநாதியும், சத்துவ ரஜத்தமோகுணங்களை யுடையதுமான மூலப்பிரகிருதியென்ற மாயை யே லிங்கமெனப்படும். மேலு மதுதான் யாம்; அதுவே சிருஷ்டிக்கி ன்றது; இரக்ஷிக்கின்றது; சம்ஹாரமும் செய்கின்றது. (20) அதுதான் ந மது லிங்க (குறி) மெனப்படும்; அதினுருவம் பரபிந்து, பரநாதம், அப ரபிந்து, அபரநாதம் என்று நான்குவகையுள்ளது. (21) கேளீர்! தே வேசர்களே! இந்நான்குவிதங்களும் முறையே மேலிருந்து கீழாயுள்ள ன. லிங்கத்தி னடிப்பாக மபரபிந்துவென்றும், அதற்குமேலாக அபர நாதமென்றும், (22) அதற்கும்மேலாகப் பரபிந்துவென்றும், இம்மூ ன்றுக்கும் மேலாகப் பரநாதமென்றும் சொல்லப்படும். (23) மேலும் கேளீர்! தேவர்களே! (மூன்றுமாத்திரைகளையுடைய) பிரணவமே யில் லிங்கத்திற்குப் பீடமாகும்; அப்பிரணவம் லயமடையலுற்ற (அரைமா த்திரையுடைய) நாதம்தான் லிங்கத்தி னுருவமாகின்றது. (23) பிந்து நாதங்களின் சொரூபமான வப்பேர்க்கொத்த லிங்கத்தில்தான் யா மெ ப்போதும் ஸான்னித்தியம் கொண்டிருக்கிறோம். ஆகையால் லிங்கத் தைப் பூஜிப்பவரிடத்து நா முடனே சந்துஷ்டிகொண்டவராகி நாமவர் களுக்கு வேண்டிய பயன்களை யருளலாகின்றோம். (24) ஓ! தேவர்க ளே! யா மல் லிங்கமதி லெப்போதும் பரிபூர்ணகலையுடனு மிருந்தரு ளுகின்றோம். சகல ஜகங்களு மதனி லெள்ளுக்குள்ளெண்ணெய்போலி ருந்துவந்துப் (25) பிரளயகாலத்தி லதில்தானே லயமடைந்து பிறகு சிருஷ்டிகாலத்தில் அல்லிங்கத்தாலே சிருஷ்டிக்கப்படலாகின்றன. பிற் பா டதன் சொரூபத்தைத்தா னுலகில் பீடத்தோடுகூடிய லிங்கவுருவத் தைக்கொண்டதாய்ச் சொல்லுகிறார்கள். (26) ஆகையால் பீடத்தோடு கூடிய அவ்விலிங்கத்தின்கண் யா மெப்போது மிருந்தருளுகின்றோம். ஆகையால் ஓ! தேவர்களே! இரத்தினங்கள், பொன், வெள்ளி, கல், ம ரம், மண், சந்தனம், இரசம் முதலியவைகளால் பீடத்தோடுகூட அவ் விலிங்கத்தை யிலக்ஷணத்தோ டமைத்து நீங்கள் சோர்வின்றிப் பூஜை

செய்யலாவீர்கள். (27-28) ஏனென்றால் தினந்தோறு மெல்லாக்கால ங்களிலும் வேதாகமங்களின் முறைப்படி சோர்வின்றிப் பூஜைசெய் வோர்கள் மோக்ஷஸாம்பிராஜியத்தை யடைவார்களே! (29) மேலும் பலவிததானங்கள், இயாகங்கள், தவங்கள், பொறியடக்கம் இவைகளெ ல்லா மிலிங்கபூஜையின் கோடியி லோ ரமிசத்திற்குக்கூட நிகரற்றவை களே! (30) ஆகையா லிலிங்கத்தைப் பூஜைசெய்வோர்களுக்கு மறு பிறப்பே யில்லாதபடியா லப்பேர்க்கொத்த லிலிங்கவுருவத்தி லென்று ம் மங்களகரமான திருமேனியைக்கொண்ட வெம்மை (31) மூவுலகு களிலும் பரிசுத்தமான தோற்றத்தோடுகூடிய மனதுடன் பூஜைசெய்ய ட்டும். மேலும் கேளீர்! தேவர்களே! எல்லாப்பிரம்மாண்டங்களிலு மங்கங்கு நா (32) மிலிங்கவுருவத்தைக் கொண்டவராகி வேதத்திற் கூறிய நெறியின்படி பூஜிக்கத்தகுவோமே! கேதாரம், காசி, சகல சித் திகளையும் கொடுக்கலுற்ற ஸ்ரீசைலம், (33) ஸ்ரீகாளஹஸ்தி, மகா மகி மைபொருந்திய திருவாலங்காடு, காஞ்சீபுரம், திருவண்ணாமலை, ஸ்ரீ விரு த்தாசலம், (34) சிதம்பரம, கும்பகோணம், மகாத்தலமாகிய திருவி டைமருதூர், நம் திருவுளத்திற்கு மெத்த விருப்பமுள்ள வசதியான தி ருவாரூர், (35) மகாத்தலமான மதுரை, இராமேசுவரமென்ற மகாஸே து இவைமுதலியவிடங்களி லண்டம்தோறும் யா மிலிங்கவுருவத்தோ டு (36) பார்வதியோடுகூட வெப்போதும் வசித்தருளுகின்றோம். ஆ கையால் கேளீர்! தேவர்களே! இலிங்கவுருவத்தோடுகூடிய வெம்மை நீங்களும் சகல லோகங்களும் பூஜைசெய்யலாவீர்க" ளென்று திருவாய் மலர்ந்தருளிவிட்டு ஸ்ரீ ஜகதீச னந்தர்த்தானமடைந் (37½) தனேகவித் ங்களாய்க் கூப்பிடவும் துதிக்கவும் பெற்றவரும், எப்போது மெல்லோ ர்களாலும் பூஜிக்கப்பெற்றவரும், என்றும் சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரம், அனுக்கிரகம், திரோதானம்ஆகிய வைந்து கிருத்தியங்களையும் செய்ய லுற்றவருமாகி யங்கங்குள்ள வண்டங்களின் தானங்களிலும், (38½) கைலாசம், மகாகைலாசம், மந்தரம், மகாமேரு, சக்கிரவாளம் இப்பருவ தங்களிலும், சிவலோகத்திலு மங்கங்குள்ள சகலப்பிராணிகளுக்கு ம னுக்கிரக மருளிக்கொண் டஞ்சவற்ற நிலைபெற்றவரும் சகலப் பிரபஞ் சச் சொரூபியுமான ஜகதீசன் ஸ்ரீ பார்வதீ, சுப்பிரம்மணியர், விநாயகர் இவர்களுடனும், சகல கணாதிபர்களுடனும், பூர்ணசான்னித்தியமாய்த் திருவிளையாட் டருளலானார். (39-41) பிற்பாடு விஷ்ணுமுதலிய தே வர்களும், தவத்தைத் தனமாய்க்கொண்ட முனிவர்களும் தங்கள் தங்க ள் வேண்டுதற்களைக் கைக்கொள்வதற்காக நதிக்கரைகளிலுள்ள விடங்

களிலும், மலைகளினுச்சிகளிலும் மெத்த வாதரவுடன் பீடத்தோடுகூட லிங்கந்தை யமைத்துக்கொண்டு (42½) ஸ்ரீஸாம்பமூர்த்தியைச் சோடசோபசாரங்களால் நன்றாய்ப் பூஜித்துப் (43), பிறகு பிரசன்னரான விசுவரேசுவரனிடமிருந் தவரவர்களுக்குத் தக்க பதவியை யடைந்தார்கள். (44)

அறுபத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் சுஉ-வது அத்தியாயத்தி னர்த்தம்.

முனிவர்கள் கேட்கின்றதாவது:— 'ஓ! சூதமுனிவரோ! தேவர்களும் முனிவர்களும் ஸ்ரீதேவேசனை யெந்தவிடங்களிற் பூஜைசெய்தார்களென்பதையெல்லாம் முறையே ஒவ்வொன்றாய் விவரித்து விஸ்தாரமா யெங்களுக் கெடுத்துக் கூறவேண்டு' மென, (1) சூதர் சொல்லுகின்றார்:— ஓ! முனிவர்களே! முறையே ஒவ்வொன்றாய்ச் சொல்லுகின்றேன்; நீங்களெல்லோர்களும் கேட்பீர்களாக. பிற கப்போ தளவிடத்தகாத மகிமையைக் கொண்டவரும், ஸ்ரீசங்கரனுக்குப் பிரியமுள்ள வேலைக்காரருமான விஷ்ணுவானவ (2) ரவிமுக்தையென்ற காசிநகருக்குச் சென் றங் கனேகம் பதினாயிரம் வருடங்களளவு மதிகோரமாய்த் தவம்செய்து லிங்கமூர்த்தியாகிய ஸ்ரீ ஸதாசிவனைப் (3) பக்தியுடன் பூஜைசெய்து, பிறகு பிரசன்னரான பார்வதீநாதரிடமிருந்து விஷ்ணுத்தன்மைக்குரிய வுத்தமமான பதவியை யடைந்து (4) சகலவுலகங்களையு மிரக்ஷிக்கும்படியான வதிகாரித்தன்மையில் முறைப்படி பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டார். மேலு மப்போது ஸ்ரீஸதாசிவன் சங்கு, சக்கிரம், கதை, கத்தி, சார்ங்கம்முதலிய வாயுதங்கள், மகாலக்ஷ்மிக்குக் கணவாயிருக்கும் தன்மை, அற்புதமான பீதாம்பரம், கருடனாகிய ரதம் இவைகளையெல்லா மவருக்குக் கொடுத்தருளிவிட்டு (5-6)'ஓ! விஷ்ணுவே! இனி ஜகங்களைச் சரிவா ரக்ஷித்துவாலாவீ' ரென்று ஸ்ரீதேவாதிதேவரால் கட்டளையிடப்பட்டவராகி யப்போது முதலாய் விஷ்ணுவானவர் சிவலோகத்திற்குக் கீழாயுள்ள லோகத்திலிருந்துகொண்டு மூவுலகங்களையு மவ்வாறே சோம்பலின்றி யிரக்ஷித்துவருகின்றார். (7½)

தேவஸ்திரீகளா லிரத்தினமயமான குடைகளையு மிரத்தினப்பிடிகளையு டைய விரு சாமரங்களையும் பிடித்துக்கொண்டு பாரிசங்களிற் சேவிக்கப் பெற்றவராகி ($8\frac{1}{2}$). ஸ்ரீ மகாவிஷ்ணுவால் வசித்தருளப்பட்ட அந்த லோகம்தான் விஷ்ணுலோகமெனப்படும்.(9) அங் கிலக்ஷுமீபதியான விஷ்ணுவானவர் பிரம்மன் முதலியவர்களாலும் தேவருடிகளாலும் சேவிக்கப்பெற்றவராகித் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்களைச் செய்து கொண் டளவற்ற வைசுவரியங்களோடு வாழ்ந்துவருகின்றார். ($10\frac{1}{2}$) அப்போது பிரம்மனும் காஞ்சிபுரத்துக்குப்போ யங்கு சூலபாணியான ஸ்ரீ மகேசுவரனைச் சிலாலிங்கத்தி லபிஷேகித்துப் பூஜைசெய்து பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டதோடு கிடைப்பதற் கசாத்தியமான வரனுகிய சிருஷ்டி யதிகாரத்தையும்,(12) ஸரஸ்வதிக்குக் கணவராயிருக்கும் தன்மை, அன்னவாகனம், சந்திரமண்டலத்தையொத்த குடை, இருவெட்சாமரங்கள் இவைகளையு மடைந்தார்.(13) கேளீர் விரதங்களைக் காக்கவுற்ற முனிவர்களே! விஷ்ணுலோகத்திற்குக் கீழ்ப்பாகத்தில் தேவருடிகணங்களாற் பூஜிக்கப்பெற்றவராகி மிகுந்த வைபவத்தோ டிப் பிரம்மனெந்தலோகத்தில் வசிக்கின்றாரோ, அதுதா னவாது பெயரையேகொண்டதானப் பிரம்மலோக மெனப்படும். ($14\frac{1}{2}$) பிரம்மனும் லிங்கத்தைப் பூஜைசெய்த வலிமையால் ஸ்ரீசம்புவிடமிருந் திப்பேர்க்கொத்த வரனை யடைந்தார். (15)

இந்திரன் ஸ்ரீ சைலத்திற்குப் போய்ப் பார்வதீசகிதரான ஸ்ரீ பரமேசுவரனைப் பக்தியுடன் பூஜைபண்ணி யருள்புரிவித் தனேக வரன்களை யடைந்ததாவது:—(16) பட்டாபிஷேகம் செய்விக்கப் பட்டதோடு சொர்க்கத்தினுடையதும் தேவர்களுடையதுமான வாதிபத்தியத்தையும், இந்திராணிக்குக் கணவனு யிருக்கும்தன்மை, ஐராவதமென்ற இயானை, (17) உச்சைசிரவசென்ற சிறந்த குதிரை, அற்புதமான வஜ்ஜிராயுதம் அனேக கற்பகவிருக்ஷங்கள், வேண்டியதைக் கொடுக்கவுற்ற காமதேனுக்கள், சிந்தாமணி யென்ற விரத்தினம், உருவசி முதலிய வப்ஸரஸ்திரீகள், கீழ்த்திசையி னுதிபத்தியம் இவைகளை யெல்லாம் பிரஸன்னரான ஸ்ரீ சங்கரபிரானிடமிருந் தப் புகழுடையோன் கைப்பற்றி (19) யதுபோலவே சொர்க்கலோகத்திலிருந் தடிக்கடி யமுதங்களை யுண்டு திவிய சுகங்களை யனுபவித்துக்கொண் டிப்போதுகூட அவ் விந்திர னங்கு வசித்திருக்கின்றான்.(20) அதேவிதமா யக்கினிதேவனும் திருவண்ணுமலையில் ஸ்ரீ சதாசிவனை யபிஷேகித் தனேக வைபவங்களோடுகூடப் பூஜைசெய்து வரனை யடைந்ததாவது:—(21) ஸ்ரீ மகாதேவரால் முடி-

சூட்டப்பெற்றவனுகிச் சகல அக்கினிகளுடையதும் தென்கிழக்குத்திசை யினுடையதுமான வாதிபத்தியம், சிறந்தவாகனமான வாட்டுக்கடா, (22) சக்திமுதலிய வாயுதங்கள், இவைகளையும், ஸ்வாகாதேவியென்ற நேர்த்தியான மனைவியையு மடைந் தவ் வக்கினியானவ னதேவிதமாய்த் தென்கிழத்திசைக்கும் (23) சகல வக்கினிக்ளுக்கு மதிபனுகி மிக வற்புதமாய் வாழ்ந்துவருகின்றான். பொறியடக்கமுற்றவர்களிற் சிறந்த வியமனும் கேதாரமென்ற மகா க்ஷேத்திரத்தில் (24) ஸ்ரீ தேவாதிதேவனைப் பூஜித் தனேக வரன்களைக் கொண்டதோவென்றால்:— தென்றிசையி னுதிபத்தியம், உத்தமமான வெருமைக்கடாவாகனம், (25) காலதண்டம்முதலிய வாயுதங்கள் யிவைகளை யவ னடைந்ததோடு மிகவும் பிரசித்திகொண்ட மகிமையைப் பெற்ற ஸ்ரீ ஜகதீசன் தாமாகவே யவனுக்கு மகா மகிமைபொருந்திய சபையினர்களான சில மத்தியஸ்தர்களையும் சித்திரகுப்தனென்ற கணக்கனையு மவனுக் கீந்தருளினர். அதுமுதலாயத் தருமராஜன் சகலப் பிராணிகளுடைய புண்ணியபாவங்களையும் பாதபக்ஷமின்றி விசாரித்து நடத்திப் புண்ணியம்செய்தவர்களைச் சொர்க்கத்திற் சேர்த்தும் பாவம்செய்தவர்களை நரகங்களிற் கிடத்தி யவரவர்களின் பாவத்துக்குத் தக்கபடி யவர்களை யாதனைப்படுத்தியும் சிவாக்கினையின்படி சமியமினிபட்டணத்தி லனேகபோகசுகங்களையு மளவற்றவைசுவரியங்களையு மனுபவித்துக்கொண் டிப்போதுகூட மகா பராக்கிரமசாலியாய் வாழ்ந்துவருகின்றான். (26-29) நிருருதியும் கோகர்ணமென்ற சிவக்ஷேத்திரத்தில் ஸ்ரீ பரமேசுவரனைப் பூஜித்துப் பிறகு பிரசன்னரான ஜகதீசனிடமிருந்து தென்மேற்றிசையி னுதிபத்தியத்தையும், இயாகம் செய்தவர்களுக்கு முறைப்படிக்குள்ள பயனைக்கொடுக்கும் தன்மையையும், சிறந்த வாயுதமான வோர் கத்தியையு மடைந்து (30-31) சகல இராக்ஷதர்களுக்கு மதிபதியாய் முடிசூட்டப்பெற்றவனுகி ஈசனுலருளப்பட்ட பாக்கியங்களை யிப்போதுகூட அனுபவித்துக்கொண்டிருக்கின்றான். (32) வருணனுமோ ஜம்புகேசுவரத்தில் ஸ்ரீ மகேசுவரனைப் பூஜைபண்ணிச் சமுத்திரம், ஜலஜந்துக்கள், ஜலம் இவைகளி னுதிபத்தியம், முதலைவாகனம், பாசம்முதலிய வாயுதங்கள் இவைகளையும், பட்டாபிஷேகத்தோடு மேற்றிசையினுதிபத்தியத்தையும் கைக்கொண்டான். (33-34) அதேவிதமா யவ் வருணனு மிவைகளையெல்லா மடைந் திப்போதுகூட மெத்தச் சந்துஷ்டிகொண்டவனும் மிகுந்த வொளிபொருந்தியவனும், மகா பராக்கிரமசாலியுமாய் மிகுந்த வைபவங்களோடு வாழ்ந்துவருகின்றான். (35) பிறகு வாயுதேவனே தக்ஷிணகைலாஸமென்ற ஸ்ரீகாளஹஸ்திமாநகரில் ஸ்ரீ மகாதேவனை வேறு கவனமற்றவனுகிச் சகல வுபசார

ங்களாலும் பூஜித்துப் பிறகு (36) பிரசன்னரான வீரவரோசுவரனால் வடமேற்றிசைக் கதிபனாய் முடிசூட்டப்பெற்றவனாகி யப் பிரதாபசாலி யானவன் (37) சகல வாயுக்களி னாதிபத்தியம், துவஜம்முதலிய வாயு தங்கள், மான்வாகனம் இவைகளை யடைந் திப்போதுகூடப் பார்மீது நி காற்றவனாய் வாழ்ந்துவருகின்றான். (38) குபேரனும் ஸித்தேசுவர மென்ற சித்தவடக்ஷேத்திரத்தில் மிகுந்த பக்தியோடு ஸ்ரீ சங்கரனைப் பூஜைசெய் தவரிடமிருந்து வரன்பெற்றதாவது;— (39) வடதிசைக் கதிபனாய் முடிசூட்டப்பட்டு நவநிதிகளி னாதிபத்தியம், புஷ்பகமென்ற (40) விமானம், இயக்ஷர்களி னாதிபத்தியம், நரவாகனம் இவைகளையெ ல்லா மத் தேவேசரிடமிருந் தடைந்து மகாப் பிரதாபசாலியு மவருக்கே தோழனுமாகி யிப்போதுகூட விளங்கியிருக்கின்றான். (41) பிற கீசா னதேவனேவென்றால் திருவாரூரின்கண் விளங்கியருளிய ஸ்ரீ மகாதேவ னைப் பத்திரபுஷ்பங்களால் சகல வுபசாரங்களாலும் பலமுறை பூஜித் தார். (42) அப்போது பகவான் பிரசன்னராகி யவரை 'யென்னவேண் டு' மென்று கேட்க, அப்போ தவ ரவரை வந்தனிதது வேறு கவனமற் றவராகி யனேக வரன்களை வேண்டி யடைந்ததாவது:— (43) ஸ்ரீ கேசுவரனுக்குச் சரியான திருநாமங்கள், திருமேனி, ஆயுதங்கள், மற்று முள்ள அவரது சின்னங்கள், (44) இடபவாகனம், வடகீழ்த்திசையினா திபத்தியம் இவைகளையெல்லா மவர் பொறியடக்கமுற்றவராகி ஸ்ரீ ஜக தீசனிடமிருந்து பிரார்த்தித் தடைந்தார். (45) பிறகு ஸ்ரீ பரமேசுவர னவ் வீசானருக் கதிகாரம் முடிந்ததின்மேல் தமது ஸாயுஜ்யபதவியை யருள்வதாயும் வரன்கொடுத் துப்போட் டந்தர்த்தானமடைந்தனர். அ வ்வீசானரு மிப்போதுகூட மகாப் பிரதாபமுடையவராய் விளங்கியிருக் கின்றார். (46)

முந்திச் சூரியனும் காஞ்சீபுரத்தின்கண்ணே ஸ்வாமியை நிகரற் ற பக்தியோடு கமலமலர்களா லர்ச்சித்துப் பிறகு பிரசன்னரான பக வானிடமிருந்து வரனடைந்ததாவது:— (47) தன்மண்டலத்தி லெப் போதும் உருக்கு இயஜுஸ் ஸாமவேதங்களின் வசதி,அதற்குத் தகுதி யான ஸப்தாசுவங்களா லலங்கரிக்கப்பெற்ற வோ ரிரதம், நவக்கிரகங்க ளினாதிபத்தியம், தனக்குச் சுற்றிலும் சோதிமண்டலம் இவைகளை ய டைந்து ($48\frac{1}{2}$) ஸ்ரீ பகவானால் முடிசூட்டப்பெற்றவனாகித் தினங்களு க் கதிபனானான். (49) ஸ்ரீ சங்கரனுக்குப் பிரியமுள்ள சந்திரனேவெ ன்றால் கும்பகோணத்திற்குப்போ யங்கு மகாதேவரை மிகுந்த பக்தி யோடு நேர்த்தியான வனேகம் முத்துக்களா லர்ச்சனைபண்ணி யதின் மேற் (50) சந்தோஷம்கொண்ட சிவபிரானிடமிருந்து நக்ஷத்திரங்க

ளினுதிபத்தியம், பணிக்கிரணங்களை யுடைதல், பிராம்மணர்களுடையது ம், ஓஷதிகளுடையதுமான வாதிபத்தியங்கள், கிடைப்பதற்கு மெத்த வசாத்தியமான விசனுக்குப் பூஷணமாகும் தன்மை இவைகளை வரன்க ளா யடைந்தான். (51½) மேலும் சூரியசந்திரர்களான இவ் விருவர்க ளும் ஸ்ரீசிவபிரானுடைய வாஸஸ்தானமாகிய மேருகிரியை யவருக்குப் பிரியமுள்ளவைகளான மற்றக் கிரகங்களோடுகூட நாள்தோறும் மகாச ந்தோஷத்தோடு பிரதக்ஷிணம் செய்துவரலானார்கள். (52½) தவிரவும் அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி இவ்வைந்துபேர்களும் (53) முறையே திருவிடைமருதூர், மதுரை ஸேது, திருவெண்காடு, வேதார ணியம் இவ் வைந்து க்ஷேத்திரங்களிலும் ஸ்ரீ பகவானைச் சந்தோஷமா ய் (54) மிகுந்த பக்தியோடு பூஜைபண்ணி யருள்புரிவித்துப் பிற கவ ர் பிரஸன்னரானதின்மேல் சந்திர சூரியமண்டலங்களுக்கும் மேற்பாகத் தில் தங்களுக் கிருப்பிடம், ஸகலப் பிரபஞ்சங்களுடைய சுகதுக்கங்களி னுதிபத்தியம், எல்லாத் துன்பங்களும் தீரப்பெறுவதற்காக வெல்லோ ர்களாலும் பூஜிக்கப்படும் தன்மை, இவைகளை வரன்களா யடைந்தார்க ள். (55-56) கேளீர்! முனிவர்களே! வியாழன் வெள்ளி யிருவர்களு ம் பிரசன்னரான ஸ்ரீ ஜகதீசனால் தேவர்களுக்கு மசுரர்களுக்கு மாசிரியர் களா யப்போதுதான் செய்யப்பட்டார்கள். (57) முந்திச் சப்தருடிக ளும் ஸ்ரீ சிதம்பரமதில் விளங்கும் திருச்சிற்றம்பல நாயகரும் தேவாதி தேவருமான ஸ்ரீ சபாபதியைப் பூஜைசெய் (58) தச் சகதீசனிடமிருந் தெல்லாக் கிரகங்களுக்கும் மேற்பாகத்தில் தங்க ளிருப்பிடத்தையும் த ங்களது தேகத்தின் முடிவில் மோக்ஷஸாம்பிராஜியம் பெறும்படியான திருவருளையு மவர்கள் வரனுய்க்கொண் டாநந்தித்தார்கள். (59) பிறகு வசிஷ்டர்முதலிய வம் மகாத்துமர்க ளவரது திருவாக்கினையின்படி சகல சாத்திரப் பொருட்களிலும் தேர்ச்சிபெற்றவர்களாகி யிப்போதுகூடப் பிரசித்திகொண்ட பராக்கிரமங்களை யுடையவர்களாய் விளங்கியிருக்கின் றார்கள். (60)

அறுபத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் சுரு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சூதர் மொழிகின்றார்:— கேளீர்! முனிவர்களே! உத்தானபாத ராஜன் குமாரனுன துருவனென்பவரும் காசியில் வாழும் ஸ்ரீ விசுவநாத

ஸ்வாமியைப் பூஜைசெய்து, பிறகு பிரசன்னரான வப்பரமேசுவரனி டமிருந்து வரம்பெற்றதாவது:—(1) நவக்கிரகமண்டலம் நக்ஷத்திரம ண்டலம் ஸப்தருடிமண்டலம் இவைகளுக்கெல்லா முயரத்திலுள்ள நேர் த்தியான நிலையைப்பெற்று அவைகளின் சக்கிரத்தை (காற்றாகிய கயிற் றினு) லிழுத்துக் கட்டப்பெற்ற மொளியை யொத்தவராகியவைகளைக் களிப்புடன் சுற்றுவித்துக்கொண் (2) டிப்போதுகூட வெல்லாவற்றி ற்கு முயரத்தி லவர் வசிக்கலாகின்றார். மேலும் பூர்வத்தில் சகல சர்ப் பங்களுக்கும் சிரேஷ்டரான வாதிசேடன் கும்பகோணத்தின்கண் (3) ஸ்ரீ பரமேசுவனை யருள்புரிவித்துக்கொண் டதன்பேரில் பூமியின் பாரத் தைத் தாங்கலாகி யவ் ரிப்போதுகூட மிகுந்த பராக்கிரமத்துடன் பூமி யைச் சுமக்கின்றார். (4) இதேபிரகாரமாய்ப் பூமி, மலைகளினுச்சிகள், நதிக்கரைகள் முதலிய வெல்லா விடங்களிலும் தேவர்கள், இருடிகள், அசுரர்கள், (5) சித்தர்கள், கருடர்கள், யக்ஷர்கள், வித்தியாதரர்கள், ம கோரகர்கள், கின்னரர்கள், மாமுனிவர்கள், கிம்புருடர்கள், (6) மானி டர்கள் இவர்களி லவரவ ரங்கங்கே ஸ்ரீ பரமேசுவரனைப் பக்தியாய்ப் பூ ஜைசெய்ததினு லவரவரின் பதவியை யடைந்து சந்தோஷமாய்ச் சுகம டைந்து (7) ஸ்ரீசம்புவின் வரத்தினு லவரவர்கள் நாகர்கள், கருடர்கள், கந்தர்வர்கள், உரகர்கள், இரக்ஷர்கள், கின்னரர்கள், மானிடர்கள் இவர்க ளி னழிவற்ற வாதிபத்தியத்தை யடைந்திருக்கிறார்கள். (8½) தவிரவு ம் சிலர் மேகங்களுக் கதிபர்களும், சிலர் திக்கயங்களும், சில ரெட்டு மகா நாகங்களும், சில ரேழுகுல பருவதங்களுமா யாகிவிட்டார்கள்.(9½) ஓ! முனிவர்களே! எவரெவர்களுக் கெவரெவ ரதிபதிகளா யிருக்கின் றார்களோ அவரவர்களெல்லாம் ஸ்ரீ சங்கரன் திருவருளினுல்தா னவ் வா திபத்தியங்களைப் பெற்றிருப்பதா யறியத்தக்கதேயின்றி வேறில்லையே! (10½) ஆகையால் தமக்கு மேன்மையைக் கோரிய வெல்லா மானி டோத்தமர்களும் (11) போகமோக்ஷங்களைப் பயனுய்க் கொடுக்கவு ற்ற சிவபூஜையைச் செய்தலையே யெப்போதும் கடமையாய்க் கொள் ளவேண்டும். சிவபூஜையின் மகிமையாற் சிலர் சித்தர்களானார்கள்.(12) அவர்கள்தா னென்பது சித்தர்களான கபிலர் முதலிய சிறந்த யோகீசு வரர்க ளெனப்படுகின்றார்கள். அனேக ருலககர்த்தர்களு மனேகர் நித் தியத்தன்மையைப் பெற்றவர்களுமாகி யிருக்கின்றார்கள். (13) புலவர் களான சில ஜனங்கள் சிவலோகத்தையும், சிலர் ஸ்ரீ சிவபிரானுடைய ஸாலோக்கியத்தையும், சிலர் ஸாமீப்பிய ஸாரூப்பிய ஸாயுஜிய பதவிகளை யு மடைந்திருக்கிறார்கள். (14) மூவுலகங்களிலுமுள்ள தேவாசுர மா னிடர்களில் மெத்த வைசுவரியங்களைக் கொண்டிருப்பவர்களெல்லாம்

சிவபூஜையின் மகிமையால்தா னென்று நினைக்கப்படவேண்டும். (15) (ஸாயுஜ்ய மொழிந்த) மற்ற முக்திகளை யடைந்த சிலர் மிகுந்த வைசுவரிய லாபத்தினால் புத்திப் பிரமம்கொண்டு கெட்டு, மறுபிறப்படைந்து பின்னும் சமுசாரத்தினின்று முன்போல் ஸ்ரீ சிவபிரானை யடைந்திருக்கிறார்கள். (16) வெற்றியை வேண்டின வெகுபெயர்கள் ஸ்ரீ ஜகதீசனைப் பூஜித்துப் போர்தனி லெதிரிகளை வென்றுபோட்டுத் திரும்பவும் பாராண்டிருக்கிறார்கள். (17) வலிமையை விரும்பிய பலர்க ளளவற்ற வலிமையை யடைந்திருக்கிறார்கள். புத்திரனைக் கருதியவர்க ளனேகம் புத்திரர்களையும், பெண்டீரைவேண்டினமற்றவர்கள் நேர்த்தியான பலபெண்டீர்களையும், (18) பசுவை யிச்சித்தவர் பசுக்களையும், குதிரையைக் கருதியவர் குதிரைகளையு மடைந்திருக்கிறார்கள். மேலும் பலபெயர்கள் சௌந்தரியம், சிறந்த காந்தியுடைய வுருவம், கொடை, சத்தியம், பராக்கிரமம், (19) இச்சகமதிற் பிரசித்தி யிவை முதலிய சகல விஷ்டங்களையு மடைந்திருக்கிறார்கள். ஓ! முனிவர்களே! இதிகாசங்களோடுகூடிய இவ்வனேக விஷயங்களில் சில கதைகளின் வரலாறுகளைச் சுருக்கமா யிப்போதுயானெடுத்துக் கூறுகின்றேன்; அவைகளைக்கேட்பீர்களாக.(20)

அறுபத்துமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௬௪—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சூதர் கூறுகின்றார்:— பூர்வத்தில் விஷ்ணுவானவர் பரமபுருடரான ஸ்ரீ மகாதேவனை யாராதித்ததினாற் சில இருடிகளின் சாபத்தினாலுண்டான தீங்குகளை யனேகமாய்ப் (1) போக்கடித்துவிட்டுத் தம் கோரிக்கைக்குற்ற பெண்டீர் பிள்ளை யிராஜியங்களை யடைந்தார். அவற்றுள் மகா புண்ணியமான சில விதிகாசங்களை யுங்களுக்குச் சொல்லுகின்றேன். (2) ஒரு சமயத்தில் பிரம்ம விஷ்ணுக்க ளிருவரு மொருவரோடொருவர் 'யானே ஜகங்களுக்குக் கர்த்தாவே யின்றி நீயல்ல; ஓ! கோ! நீயல்ல நான்தா' னென்று மகா கோபத்தோடு சண்டையிட்டுக்கொள்ளுகையில் (3) ஸ்ரீ சர்வேசுவர னவர்களுடைய வஹங்கார (நானென்ற கர்வ) த்தை யடக்கிச் சூரியமண்டலத்தில் விளங்கும் தமதமிசத்தைப் பைரவராயுண்டுபண்ணி யவரைக்கொண் (4) டப் பிரம்மனுடைய வைந்து சிரசுகளி லுயரநோக்கிய சிரசை வெள்ளரிப்பழத்தைக் கிள்வது

போ லவ் வீசுவர னோர் விளையாட்டாகவே மிக விலேசாய்க்(5) கிள்ளி த்துப் பிறகப் பைரவமூர்த்தியால் தரிக்கப்பட்ட வப்பிரம்மன் மண்டை யோட்டைக்கொண்டே யிரத்தப்பிச்சை வாங்கும்வியாஜத்தினுல் விநோ தமாய் விஷ்ணுவின்கர்வத்தையடக்குவதற்காக வப்பைரவனைப் பிக்ஷை வாங்க அனுப்ப, (6½) விஷ்ணுவும் நரம்பை யறுத்துக்கொண்டு நெற் றிவழியாய்த் தமதிரத்தங்களைக் கொடுத்துவிட்டபொழு (7) திரத்த மெல்லாம் வடிந்துபோய்விட்டபடியால் விஷ்ணு மூர்ச்சையடையலாகிப் பிறகப் பைரவமூர்த்தி கையினுல் தொட்டமாத்திரத்தில் துன்பம் தீர்ந் து (8) மூர்ச்சைதெளிந்து சடிதியி லறிவுகொண்டவராகிப் பிறகவர் ‘ஓ! கோ! யாங்க ளகங்காரம் கொண்டபடியால் ஸ்ரீ பகவானுல் தண்டிக் கப்பட்டனம்; (9) மேலு மப்பாவம் தொலைவதற்காகச் சிவபூஜை ப ண்ணலாவோ’ மென்று கருதியவராகித் திருவிடைமருதூர் சென் றங்கு ஸ்ரீ ஜகத்குருவைப் பூஜைசெய்ததின்மேல் (10) ஸ்ரீ ஸர்வேசுவரனைப் பூஜித்தபடியால் பிரசன்னரான வத் தேவாதிதேவன் திருவருளால் தாம் கிருதார்த்தராகிவிட்டதாய் நினைத்துக்கொண் (11) டவர் கருடனோடு கூடமுன்போல் விஷ்ணுலோகமடைந்துவிட்டனர். பிற கவர் பின்னு மோர் தருணத்தி லஹங்காரத்தினுல் மதம் தலைமேற் கொண்டவராகிப் (12) பிரம்மனோடுகூடத் தாமே யீசுவரனென்று கோபத்தோடு சண் டையிட்டுக்கொள்ளுகையில் பிரணவம், வேதங்கள் இவைகளின் சொற் களையும் கடந்து பிறகு ஸ்ரீ மகாலிங்கத் திருவுருவத்தி னடியைக்காண முடியாததின்மேல் திரும்ப வுயரக்கிளம்பிவந் (13½) தப்பாவம் தொ லையப்பெறுவதற்காகத் திருவண்ணமலையடைந் (14) தங்கு ஸ்ரீ ஜகதீ சனை நன்றாய்ப் பூஜித்துப் பிறகப் பிரபுவின் திருவருளினுல் தமது குற் றம் நீங்கப்பெற்றவராகித் தம் மாளிகை சேர்ந்தனர். (15) பிற்பா டோர் தடவையில் ஸ்ரீ விஷ்ணுவானவர், தேவர்களுக்கு மசுரர்களுக்கு ம் நடந்த வோர் பெரிய வுயுத்தத்தில் தேவர் தோல்விகொண்டதுகண் டவ் வசுரர்களைக் கொல்வதற்காக (16) வப்போது மகா பயங்கரமா யுயுத்தம்செய்கையி லசுரர்கள் விஷ்ணுவால் மிகுதியாய்க் கண்டிக்கப்பட லானபோ தவர்கள் விஷ்ணுவால் தோல்வியடையப் பெற்றவர்களாகிப் பிருகுமுனிவரி னுசிரமத்திற்கோடி மகா தவசியாகிய அம் முனிவரின் மனைவியானக் கியாதியம்மையைச் சரணமடைந்தார்கள். (17½) அப் போது விஷ்ணுவானவர் சக்கிரத்தை யெடுத்துக்கொண்டு தாமு மவ்வா சிரமத்திற்கு வந் (18) தங் கவ் வசுரர்களைக் கொல்ல வெத்தனித்த போ தப் பிருகுபத்தினியானவள் ‘ஓ! விஷ்ணுவே! முனிவரில்லாத சம யத்தில் நீராசிரமத்திற்குட் பிரவேசிக்கத் தகாது; மேலு மெந்தனை யண்

டின வசுரர்களை நீர் கொல்லவும் தகாது. அவ் வெல்லோர்களுக்கும் நா னபயம்கொடுத் திருக்கின்றபடியால் நீரவர்களைக் கொல்லாதீர் கொல் லாதீ" ரென்று தடுக்க, (20) அப்போது விஷ்ணுவும் 'ஆ! கா! துஷ் டர்களுக் கபயம்கொடுத்தா லுலகங்களுக்குப் பீடையல்லவா' வென் றவர்களுக் கபயம்கொடுத்த வப் பிருகுபத்தினியின் தலையை வெட்டிப் போட்டுப் பிற கவ் வசுரர்களையும் சமுகரித்துவிட்டு (21½) விஷ்ணு அவ் வாசிரமத்தை விட்டுப் போனதின்பேரில் (22) பிருகுமாமுனிவ ரங்கு வரலாகி யசுரர்களோடுகூடத் தம் மனைவியும் தலை வெட்டுண்டு கிடக்கலானதைக் கண் டிதனைச் செய்தது விஷ்ணுதானென்று ஞான திருஷ்டியா லறிந் (23) தசுரர்களோடுகூடத் தம் மனைவியையும் கொ ன்றவரான அவ் விஷ்ணுவின்மீது மிகுதியாய்ச் சினம்கொண்டவராகி யவரைச் சபித்ததாவது:— "ஓ! கோ! கோ! இவ் விஷ்ணுவுக்குப் பூ லோகத்தில் கோடி கோடிகளான ஜன்மங்களுண்டாகி (24) யவ் வொ வ்வொரு ஜன்மத்திலும் மகா துக்கத்தை யளிக்கலுற்ற பெண்டீரிழத்த ல் நேரக்கடவது; மேலு முலகினி லிவ் விஷ்ணுவைமட்டி லாராதிப்பவ ர்களான பக்தர்களெல்லாம் பாஷண்டிக ளாகக்கடவார்க" (25) ளென் றிவ்விதமாய்ச் சபித்துப்போட்டு ஸ்ரீ பரமேசுவரனிடமிருந்து தாம் ஸி த்திபெற்ற 'மிருதஸஞ்சீவினி' யென்றவித்தையால் பிரயோகித்துத் தம் மனைவியைப் பிழைப்பித்துவிட்டனர். (26) அதன்பிற கசுரர்களைக் க ண்டிப்பவரான விஷ்ணுவு மதனைக்கேட்டு நடுநடுங்கியவராகி யப் பாவம் தொலைவதற்காக வேண்டியதை யளிக்கலுற்ற காஞ்சீபுரத்திற்குச் செ ன் (27) றங்கு ஸ்ரீதேவாதிதேவரைப் பூஜித்ததின்மே லிடபாரூடராய் ச் சான்னித்தியமான வப் பகவானைக் கண்டு வந்தனித்து மனதினில் மி குந்த பயத்தோடு சாபத்தின் தீருதலை வேண்ட, (28) அப்போது வி ஷ்ணுப் பிரம்மர்களுக் கீசனான ஜகதீசன் "ஓ! விஷ்ணுவே! நமது பக் தர்களாற் செய்யப்பட்ட சாபத்திற் கவர்களாலே பிரதிசாபம் கொடுக்க த்தக்கதே யின்றி நாமந்த வழியிற் போவதே யில்லையென்று நம்மாற் சபதம் செய்யப்பட்டிருக்கிற" தென் றவ் விஷ்ணுவுக்கு மந்தகாஸத் தோடு மொழிந்தருளிவிட்டுச் (29½) சிந்தித்தமாத்திரத்தி லங்கு வந்து தோன்றலானப் பிருகுமாமுனிவரை நோக்கி யம் மகாதேவர் திருவாக் குரைத்ததாவது:—(30) "ஓ! பிருகுமாமுனிவரே! இவ் விஷ்ணுவை யனேககோடி ஜன்மங்களைக் கொடுக்கலுற்ற வுமது சாபத்தினின்று நீர் விடுதலை செய்விக்கவேண்டும்; ஏனென்றால் இவரும் நம்மைப் பூஜிப்பதி ல் தொரைகொண்ட நம தோர் பக்தரென்றே அறியும். (31) ஆகிலு

மிவருக்குப் பத்து ஜன்மங்களே யுண்டாகி யவைகளி லோர் ஜன்மத்தில் மாத்திர மிவர் பெண்டீரை விட்டுப் பிரிந்து வெகுகாலமளவும் துக்கம டைந் திருக்கலாகட்டுமே யின்றி யதற்குமேல் வேண்டாம். (32) நீர் நமதடியார்களுக்கெல்லாம் முந்தினவராகையால் நமதாக்ஞையின்படி யி வ்வாறே செய்யலாவீ" ரென, முனிவரு முடனே யவரை வந்தனித் தப் படியே பாக்கியமென்றார்.(33) அப்போ துடனே யிலக்குமிவேந்தனும் ஸ்ரீ பார்வதிநாதனைத் தண்டனிட்டு வேண்டிக்கொண்டதாவது:— "ஓ! கருணைக்கடலு மடியார்க்கு நேசருமான தேவதேவேசா! பத்து ஜன்மங் களிலு மடியேனுடைய வக்ஞானம் தொலைவதற்காகத் தேவரீரோ நிக்கிர கானுக்கிரகங்களைச் செய்தருளவேண்டு" மென, (35) அது கேட்டு ஸ்ரீ பகவானு மப்படியே நல்லதென்றருளி யந்தர்த்தானமடைந்துவிட் டார். பகவானான ஸ்ரீ நாராயணனும் தமதிருப்பிடமடைந்தனர். (36)

பிற்பா டோர் சமயத்தில் வேதங்களைப் பிடுங்கிக்கொண்டு வரு வதற்காக ஸ்ரீ விஷ்ணுவானவர் மச்சயோனியிற் சனித்து வேதங்களைத் திருடிக்கொண்டுபோன சோமகனென்ற வசுரனை லீலாவிநோதமாய்க் கொன்றுபோட்டு வேதங்களைக் கொண்டுவந்து முன்போல் பிரம்மனிட த்திற் கொடுத்துவிட்டுப் பிற கவ் விஷ்ணு (37-38) வதினால் கர்வம் கொண்டவராகிச் சமுத்திரங்களையெல்லா மல்லோலகல்லோலமாய்க் கல க்கி யெல்லோர்களையு மெடுத்துப் பக்ஷிக்கத் தலைப்பட்டனர். (39) அ தன்மேல் பிரம்மன் முதலிய தேவர்களெல்லாம் பயங்கொண்டவர்களா கி யுலகங்களுக்குச் சுகத்தை யளிக்கலுற்ற கைலாசவாசியான தேவே சனைக் களிப்பித்து விண்ணப்பம் செய்துகொண்டார்கள். (40) அப் போது பகவான் மகா சாஸ்தாவை யதற்காகத் திட்டமிட் டருள, பிறக ந்த யோகிசுவரரு மவரது திருவாக்கினையின்படி யோர் செம்படவனாகி மச்சவுருவத்தைக்கொண்ட மாதவனைக் (41) கண்டித்துத் தம் நு னி நகத்தினாற் பத்மராகமணிபோன்ற காந்தியுடைய விருவிழிகளையு ம் பிடுங்கிக்கொண்டுவந்து ஸ்ரீ சிவபிரானுக் கறிவித் ததனை யவர் சன்னி தியில் வைத்துவிட்டுத் தண்டனிட் டஞ்சலிகொண்டு நின்றார். (42½) அப்போது பிரம்மன் முதலிய தேவர்களெல்லாம் ஸ்ரீ மகாதேவரிடம் போய்ப் பிரார்த்தித்துக்கொண்டதாவது:— (43) "ஓ! தேவேசான ஜகதீசா! மச்சரூபியான விஷ்ணுவால் நாங்கள் மிகவும் தீங்களிக்கப்பட் டனம். அப்பேர்க்கொத்த மச்சமானது ஜகங்களின் க்ஷேமநிமித்தமா ய்க் கண்டிக்கப்பட்டபடியா (44) லதனுடைய இவ்விருவிழிகளையும் தே வரீராபரணத்தில் மணிகளா யங்கீகரித்துக் கொள்ளவேண்டு" மென,

இவ்வாறு தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டதன்பேரில் தயாநிதியான ஸ்ரீ பார்வதிநாதனைவ் விரு விழிகளையும் தம் முண்ட மாலைதனில் மணிகளாய்த் தரித்துக்கொண்டனர். (45½) பிற்பாடு ஸ்ரீவிஷ்ணுவாவனர் மோகம் தெளியப்பெற்றவராகி ஸ்ரீ மகாதேவனைத் தியானம்பண்ணிவிட்டு (46) 'ஓ! கோ! நாம் முந்திச்சிவபூஜையின் மகிமையாலல்லவோசோமகாசுரனைக் கொன்றனம்! இப்படியிருக்கையில் பிறகு புத்திகேட்டினு லக்ஞானத்தினுல்மூடப்பெற்றவராகிச்சகங்களைநாசம்செய்தபடியால்ஜகத்கர்த்தரால்தண்டித்துக்(47)கிருதார்த்தராக்கப்பட்டோம். ஆயினும் நாமிப்பாவத்தைத் தொலைப்பதற்காக ஸ்ரீ சங்கரனைப் பூஜைசெய்யவேண்டு' (48) மென்று கருதியவராகிக் காஞ்சிபுரத்திற்குப்போ யங்கு ஜகதீசனைப் பூஜிக்க, அப் பினுகபாணியும் மச்சரூபியான அவ் விஷ்ணுவுக்குப் பிரசன்னராகி (49) யவருக்கு வேண்டிய வரனை யருள்வதாய்த் திடப்படுத்த, பிறகவ் விஷ்ணு வரன்கேட்டுக்கொண்டதாவது:— 'ஓ! தேவேசா! அடியேனுக்கருளப்பட்ட வித் தண்டனையானது தேவரீரது கிருபையினு லனுக்கிரகமாகவேண்டும். என்னவென்றால் இவ்வுலகினில் மச்சரூபியான வடியேனைப் பூஜிக்கலாகும் ஜனங்களுக்குத் தேவரீர் வேண்டியதைக் கொடுத்தருளவேண்டும். (51) மேலும் ஓ! தேவேசா! தேவரீர் கிருபையினுல் யானு மவர்களுக்கு வேண்டிய வரனைக் கொடுக்கத்தக்கவனுகவேண்டும்;மேலுமடியேனுற்செய்யப்பட்டபிழையைத்தேவரீர்மன்னித்தருளவேண்டு" (52) மென்றுமச்சரூபியானவிஷ்ணுவால்முந்திப் பிரார்த்தித்துக் கொள்ளப்பட்டபோது ஸ்ரீ ஜகதீச னுலகத்தின் க்ஷேமார்த்தமா யவ்வாறே அருள்செய்துவிட் டந்தர்த்தானமடைந்தனர். (53) பிறகு விஷ்ணுவும் தம் லோகத்திற்குச் சென்று தம் கடமையை நடத்திவந்தார். பிறகு மற்றோர் யுகத்தில் விஷ்ணுவானவ ராமையின் தன்மையையடைந்து (54) மந்தரகிரியை மத்தாகவும், வாசுகியைக் கடைகயிறுகவும் செய்துகொண்டு தேவாசுர கணங்களோடுகூடப் பாற்கடலைக் கடைந்ததி (55) லமுதம் கிடைக்கலானபோ தக் கர்வத்தினு லவர் புத்தி தடுமாறப்பெற்றவராகிச் சமுத்திரங்களைக் கலக்கித் தேவர்களையும் நடுநடுங்கச்செய்தார்.(56) பிற்பாடு தேவாசுரசெல்லோர்களும் ஸ்ரீ மகாதேவரிடம்போய் விண்ணப்பம்செய்ய, அப்போ தவ ரவ்வாமையைக் கண்டித்துத் தேவர்களுக்கு க்ஷேமமுண்டுபண்ணுவதற்காகச் சத்துருக்களைக் கண்டிக்கலுற்ற ஸ்ரீ விக்கினராஜனை யனுப்பியருளினர். (57½) அப்பபோ தக் கணுதிபரும் தம் துதிக்கையினு லவ் வாமையைப் பிடித்து (58) நன்றுய் மல்லாத்திப்போட்டுத் துகைத்துப் பிறகதின் முதுகோட்டை யெடுத்துக்கொண்டு தேவர்களெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கையி லதனை ஸ்ரீ சிவபிரான் முன்னிலையிற் கொண்டு வைத்தார். (59) அப்போ தீசுவரன் தேவர்களை நோக்கி 'ஓ! தேவர்களே!

நாமினி யிவ் வாமையோட்டை யென்னசெய்யட்டு மென்பதை நீங்களிப்போது சொல்லுங்க' ளென, (60) பிறகுப் பிரம்மன் முதலிய தேவர்களெல்லா மீசுவனை வந்தனித்து 'ஓ! ஜகதீசா! தேவரீ ரிப்பேர்க்கொத்த பராக்கிரமத்தினுலே யெங்களை யிரக்ஷித்தபடியா (61) லதன் ஞாபக மிருக்கும்படி தேவரீர் திருமேனிக் கலங்காரமா யிவ் வாமையோட்டை முண்டத்தலைமாலையின் நடுநாயகமா யங்கீகரித்தருளவேண்டும்.(62) இதைப் பார்ப்பதினுல் விஷ்ணுவுக்குக்கூட வினி யகங்காரமுண்டாகமாட்டா' தென்று தேவர்களா லிவ்வாறு கேட்டுக்கொள்ளப்பட்டதின்பேரிலவ ரதனை யப்படியே தரித்துக்கொண்டார். (63) அப்போது தேவேந்திரனுல் வந்தனிக்கப்படலுற்ற விஷ்ணுவும் புத்தி தெளியப்பெற்றவராகிப் பிறகு ஸ்ரீ விசுவேசனைப் பூஜைசெய்ததின் வலிமையா லப் பாவம் நீங்கப்பெற்றூர். (64) பிற கோர் தருணத்தில் தேவர்க ளிரணியாக்ஷனென்ற சத்துருவால் பீடிக்கப்படலானபோ தவர்கள் விஷ்ணுவைச்சரணமடைந் தவர்களுக்கு நேரிட்ட பயத்தைச் சொன்னுர்கள். (65) அப்போது தேவர்களுக்குத் தலைவரு மசுரர்களைக் கண்டிப்பவருமான விஷ்ணு அவர்களுக் கபயமளித்துவிட்டுப் பன்றியுருவமெடுத்துக் கொண்டுப் பிரம்மன் நுனிமூக்கிலிருந்து புறப்பட்டு வந் (66) திரணியாக்ஷனை யதம்செய்துபோட்டு முழுகிக்கிடந்த பூமியை யுயரத்தூக்கிவிட்டார். பிறகு விஷ்ணுவானவ ரக் கர்வத்தினுல் மிகவும் பெரும் திருமேனியைக் கொண்டவராகி யேழு கடற்களையும் கலக்கி மலைகளையு முடைத்தனர். (67½) அப்போது விஷ்ணு அவ்வாறு செய்பலானதைக் கண்டு பிரம்மன் முதலிய தேவர்களெல்லாம் (68) ஸ்ரீ மகேசுவரன் சன்னிதியிற் சென்று பன்றியால் நேர்ந்த பயத்தை யறிவிக்க, பிற கத் தேவாதிதேவரு மப் பன்றியைக் கண்டிப்பதற்காகத் தமது செல்வக் குழந்தையான ஸ்ரீ முருகேசனைக் கட்டளையிட, அவ ராக்கினையின்படி யவ் வடிவேலனும் மலைபோன்ற உருவத்தைக்கொண்ட வப் பன்றியைத் (70) தம திரு கைகளா லதன் சிங்கத்தைப் பிடித்து விளையாட்டாய்க் கறகறவென்று சுற்றி யடித்துவிட் டதினுடைய வோர் சிங்கத்தைப் பிடுங்கிக்கொண்டு போய் ஸ்ரீ பிரபுவின் சன்னிதியிற் கொண்டுவைக்க, (71) ஸ்ரீ சங்கரன் தேவரெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கையில் தம் சடைமுடியில் விளங்கலுற்ற சந்திரகலையையொத்த மற்றோர் கலையோ வென்த்தக்க வச் சிங்கத்தை யாபரணமாய்த் தரித்துக்கொண்டு பிற (72) கப்பேர்க்கொத்த தம் மைந்தனை மடியில் வைத்துக்கொண்டு சந்தோஷமாய்க் கொஞ்சி விளையாடினுர். பிரம்மன் முதலிய தேவர்களுமவரைக் கிரமப்படி நமஸ்காரம் செய்து (73) போய்விட்டார்கள். அப்போது விஷ்ணுவும் மூர்ச்சைதெளிந் தெழுந்து மறுபடி முன்

போலவே ஸ்வாமியைப் பூஜைபண்ணி சுகத்தையடைந்தார்.(74) பிற்பா டோர் சமயத்தில் விஷ்ணுவானவ ரிரணியகசிபுவென்ற வோ ரசுரமன் னனைக் கொல்வதற்காக ஸ்ரீபரமேசுவரனைப் பூஜித்து,வரனடைந்து மகா வலிமைகொண்டவராகி (75) நரசிங்க வுருவமெடுத்து நகங்களா லவ னது மார்பினைப் பிளந் தவன திரத்தத்தைக் குடித்துவிட்டு மிகுந்த கோபத்தோடு மற்றுமுள்ள வசுர சைனியங்களையும் நாசஞ்செய்து (76) பிற கப்பேர்க்கொத்த மதத்தினு லெல்லா வுலகங்களையும் நாசம்பண்ண த்தலைப்பட்டார். பின்பு தேவர்கள் பயங்கொண்டவர்களாகி ஸ்ரீ ஜகதீச னைச் சரணமடைந்தார்கள். (87) அப்போது பகவா னச்சிங்கத்தைக் கண்டிப்பதற்காக வீரபத்திரரை யனுப்ப, மகா பராக்கிரமசாலியான அவ் வீரபத்திரரும் சரபவுருவமெடுத்துக்கொண் (78) டந் நரசிங்கத் தை யோர் விளையாட்டாய்ப் பிடித் திரண்டாய்க் கிழித்துப் பிறகு மெத் த நேர்த்தியான வதின் தோலை யுரித்தெடுத்துக்கொண் டதனை ஸ்ரீ பிரபு வின்சன்னிதானத்திலோர் காக்ஷிப்பண்டமாய்க் கொண்டுவைத்தார்.(79) அதுமுதலாய்த்தான் ஸ்ரீ மகாதேவன் நரசிங்கத்தின் தோலை யுடையாய் த்தரிப்பவரானுர். பிற கவ் விஷ்ணு பின்னும் சுவாமியைத் தொழுது பாவமிழந்தவரானுர். (80) இன்னுமோர்தடவையி லவர் மகாபலிசக்கி ரவிருத்தியைக் கண்டிப்பதற்காகக் காசியபமுனிவருக்கு வாமனனென்ற பிள்ளையாய்ப் பிறந்து (81) சங்கரனிடத்தில் வானடைந் தவனதியாக சாலைக்கு வந்து தாமிருப்பதற்காக மூவடி யளவு தரையை யிரந் (82) தடைந்து பிறகத் திரிவிக்கிரமனெங்கும் பரவிய திருவுருவத்தைக்கொண் டவராகி யோரடியால் பூமியையும் மற்றொன்றால் சொர்க்கத்தையுமளந் துகொண்டு மற்றோரடிக் கிடமில்லாத்தினு லப் பலிசக்கிரவிருத்தியை ச் சிறைதனிலடைத்துவிட் டரசாக்ஷியைத் திரும்பவு மிந்திரனிட மொ ப்புவித்ததின்மே லண்டம் வெடிக்கும்படி யின்னும் பருத்து வளரலாயி னர். (83-84) பிற்பாடு தேவ னவர் சங்கதியைத் தேவர்களாற் கேள்வி யுற்றதன்மே லவரைக் கண்டிப்பதற்காகவே பயங்கரமான திருவுருவத் தைக் கொண்ட ஸ்ரீ பைரவமூர்த்தியை யனுப்ப, (85) பிறகவரு மண் டம் முழுதும் வளர்ந்திருந்த வப்பேர்க்கொத்த விஷ்ணுவிடம் சென்று கையினு லவர் மார்பின்கண் ஞோரறை யறைந்து வீழ்த்தி மிகவும் கறு ப்பும் மெதுவுமான அவரது தோலை யுறித்துத் தமக்குக் கவசமாய்த் தரித்துக்கொண்டு ($86\frac{1}{2}$) வெகு நீளமான கங்காளமென்ற அவரதெ லும்பையும் பிடுங்கித் தமது கைமீது தரித்துக்கொண்டார். பிறகு தே வரெல்லோர்களு மப்போது கலக்கமற்றவர்களாகிச் சொர்க்கமடைந்தா ர்கள். மகாவிஷ்ணுவும் ஸ்ரீ மகாதேவனைப் பின்னும் முன்போற் பூஜித்

துப் (88) பாவம் தொலையப்பெற்றவராகி வந்தது போல் போய்ச்சேர்ந்தார். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இப்பிரகாரமாக நாராயணன் ஸ்ரீ பரமேசுவரனாலைந்தவதாரங்களில் நிக்கிரகிக்கப்பட்டுப் பின்னுமைந்தவதாரங்களி லனுக்கிரகிக்கப்படலான கதையையும் சொல்லுகின்றேன்; அதனைக் கேட்பீர்களாக.(89)

அறுபத்தினான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் ௬௫—வது அத்தியாயத்தி னர்த்தம்.

சூதர் சொல்லுகின்றார்:— கேளீர்! முனிவர்களே! பிற்பாடு பகவானாகிய ஸ்ரீ விஷ்ணுவானவர் பிருகுமாமுனிவரினச் சாபத்தினால் ஜமதக்கினி முனிவரின் மனையாளான ரேணுகையம்மையிடத்தில் பரசுராமனாய்ப் பிறந்தார்; (1) பிறகு தந்தையான ஜமதக்கினியும் சத்துருக்களைக் கொல்வோனான, வடிவத்தினால் ராம (நேசிக்கத்தக்கவ)னாயிருக்கு மப் பிள்ளைக்கு ராமனென்று பெயரிட்டார். பிறகப் பரசுராமன் தகுந்த காலத்தில் தந்தையாகிய வம் மாமுனிவரா லுபநயனம் செய்யப்பெற்றவராகித் (2) தினந்தோறும் மற்றொன்றையும் கவனியாமல் மிகவும் சிரத்தையோடு தந்தைக்குப் பணிவிடைசெய்துவருகையி லொருநாளேதோ காரணத்துக்காகத் தந்தையால் கட்டளையிடப்பட்டவராகி (3) யப் பரசுராமன் தன் மாதாவாகிய ரேணுகையம்மையின் தலையை வெட்டிப்போட்டார். அதன்மே லம்முனிவர் மகா மனச்சந்துஷ்டி கொண்டவராகிப் பரசுராமனை நோக்கி யுரைத்ததாவது:—(4) 'ஓ! மைந்தா! யா முன் பணிவிடையால் மிகவும் களிப்புற்றனமென் றறி; ஆகையால் யா மிப்போ துனக்கு வேண்டிய வரன்களையெல்லாம் கொடுக்கின்றோம்; நீ கேட்டுக்கொள்' ளென, (5) இவ்வாறு தந்தையின் வசனத்தைக்கேட் டிராமன் வரன்கள் கேட்டுக்கொண்ட தென்னவென்றால்:— அவர் முதலில் தம் தாய் முன்போ லெழுந்திருக்க வேண்டுமென்ற வரனைக் கேட்டுக்கொண்டு (6) பிறகு தம் தந்தையாகிய மகா கோபிஷ்டரான அம் முனிவரின் கோபத்தைவிட்டுத் தொலைக்கும்படிக்கும், தமக்கெப்போதும் சிவபூஜையில் மிகுந்த சிரத்தை யிருக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொண் (7) டப்படியே யப் பரசுராம னம் மூன்று வரன்களையும் தம் தந்தையிடமிருந் தடைந்து பிறகு சிவபூஜையிலே முயன்றவராகித் தவம்புரிவதற்காக வாணியத்திற்குச் சென்றார். (8) அவ்வா றவர் சென்றுவிட்டதின்மேல் கிருதவீரியராஜன் குமாரனான கார்த்தவீரியார்ஜுனன் கோபத்தைவிட்டுத் தொலைத்தவரான ஜமதக்கி

னிமுனிவரனுடைக்குவந் தவர்வசமிருந்த காமதேனுவைக் கேட்டதி(9) லம் முனிவரால் மறுதளிக்கப்பட்டதன்பேரி லவ் வர்ஜுனன் மகா கோபத்தினு லவர் தலையை வெட்டிப்போட்டுத் தனது,மாகிஷ்மதி பட்டணம் சென்றுவிட்டான். (10) உடனே ஜமதக்கினிமுனிவரின் மனைவியான வப்பேர்க்கொத்த ரேணுகையம்மையு மக்கினிப்பிரவேசம் செய்துவிட்டாள். அப்போது மிகுந்த பெருமாரி சொரிந் தச்சிதையி னக்கினி தணிந்துவிட்டதன் (11) மே லவ் விருடிபத்தினியானவ ளுடையெரிந்துபோய்விட்டபடியால் மிகுந்த துக்கமு மிலஜ்ஜையும் கொண்டவளாகி முண்டமாயிருந்த அவ் வம்மணியானவள் தன் துடைகளையும் முன்தட்டு பின்தட்டுகளையும் வேப்பிலைகளால் மறைத்துக்கொண்$(12\frac{1}{2})$ டோர் பறைச்சேரியிற்போய்க் கொஞ்சகாலம் வசித்திருந்தாள். (13) அங்கிருந்தபோ.த்தனென்றவனும்மாதங்கியென்னு மோர் பெண்பிள்ளையும் நெருப்புச்சுட்டு மிகவும் துன்பமடைந்திருந்த அவ்வம்மைக்கு மா முதலியவைகளைக் கொடுத் திரக்ஷித்துவந்தார்கள். (14) இப்படியிருக்கையில் காட்டுக்குப் போயிருந்த பரசுராம னிச் சங்கதிகளையெல்லாம் விவரமாய்க் கேள்விப்பட்டதன்மேல் பூஜையினுற் சந்துஷ்டிகொண்ட ஸ்ரீ ஜகதிசனிடமிருந் தோர் கண்டனகோடாலியை யடைந்து(15) பிறகு க்ஷத்திரியர்களான கடலுக்குப் படவாக்கினிபோல் ஜுவலிக்கலுற்றவராகி யக் கார்த்தவீரியார்ச்சுனனையும் மற்றுமுள்ள க்ஷத்திரியர்களையு மதம் செய்து (15) பிந்துஸரஸென்ற குளத்தில் நிரப்பப்பட்ட அவர் க ளதிரத்தத்தினுல தம் தந்தைக்கு மிகுந்த சிரத்தையோடு தர்ப்பணம் செய்தனர். (17) பிறகவர் பறைச்சேரியிலிருந்த தம் தாயிடம் சென்றவளை வந்தனித்தபின் னவளோடுகூட வூருக்குவெளியிற்போய்க் கொஞ்சகாலமிருந் (18) தப்பேர்க்கொத்த தம் தாயைப்பணிவிடைகளாற் களிப்பித்துப்போட்டுப் பிறகவர் தமது வீரகத்திதோடம் நீங்குவதற்காகத் தமதடியார்களைப் பசைத்த வீரர்களை நாசம்செய்யலுற்ற ஸ்ரீமகேசுவரனை யாராதித்ததின்மேல் (19) தம் பராக்கிரமத்தினுற் சம்பாதித்த விச் சகல பூமியையும் காசியப முனிவருக்குக் கொடுத்துப்போட்டுப் பிறகு கோளதேசம் சென்று பிறகங்கிருந்து மிக வற்புதமான வைகுண்ட மடைந்தனர். (20)

மேலும் பூர்வத்தில் தசரதராஜன் புத்திரனை வேண்டியவராகி வசிஷ்டர்முதலிய தவசிகளோடுகூடப் புத்திரகாமேஷ்டியென்ற வேள்வியால் ஸ்ரீ மகேசுவரனைப் பூஜித்தனர். (21) பிற்பாடு ஸ்ரீ சிவாக்கினையின் வசத்தினுல் ஸ்ரீ விஷ்ணுவானவ ரவ் வரசன் மனைவியான கௌசலையம்மையிடத்தி லிராமனுய்ச் சனித்துத் (22) தந்தையின் சொற்படி சீதா

ப்பிராட்டியுட னு மிலக்ஷுமண னுடனும் காட்டுக்குச் சென்றார். பிற கி ராவணனென்ற வோ ரிராக்ஷதராஜ னவ் விராமனையு மிலக்ஷுமணனையு ம் மோசம்செய்து ஜனகன்பெண்ணான வச் சீதையை யெடுத்துப்போ ய்விட்டான். (23½) அதன்மே லிராம னவ் வம்மையின் பிரிதலான வ க்கினியால் தகிக்கப்பட்டவராகி யிலக்ஷுமணனோடுகூட, (24) ஸ்ரீ அக ஸ்தியபகவானைச் சந்தித் தவர் முன்னிலையில் மிகவும் துக்கித் தழும்போ தரக்கர்களின் நாசநிமித்தமா யம் மாமுனிவரா லுபதேசம் செய்யப்பெ ற்றவராகி (25) ஸ்ரீ சிவபிரானைப் பூஜித்துப் பாசுபதாத்திரத்தை ய டைந்து வானரர்களி னுதவியாற் சேதுபந்தனம் செய்து வானரப்படை வீரர்களோடுகூடி இராவணனை யவனது சகல சைனியங்களோடு முயுத் தமதிற் சயித்து, (26) பிற கக்கினிப்பிரவேசம் பண்ணியதால் மகா பரிசுத்தமானவச்சீதாப்பிராட்டியை யயோத்திக்கழைத்துப்போயக்குமு டிசூட்டப் பெற்றவராகி யெதிரியற் றரசாண்டு வந்தார். (27) அப்போது லவதூரின் பயத்தினுல் சீதையம்மையை மறுபடியும் காட்டிற் கனு ப்பிப் பிற்பாடவள்பூமிக் குள்மறைந் துவிட்டதன்மேலவ் விராமன் மிகு ந்த துன்பத்தோடு துக்கப்பட்டிருந்தார். மேலும் ஸ்ரீ ராமசந்திர னசுவ மேதயாகத்தினுல் தேவாதிதேவரான ஸ்ரீ மகேசுவரனைப் பூஜித்துப் பிற கு தம்பிகளோடுகூடச் சரீரத்தைச் சரயூநதியி லிழந்துவிட் (29) டவ் வச்சுதன் முன்போல் தமது தானமாகிய திருப்பாற்கடலைச் சேரலானுர். ஓ! முனிவர்களே! முந்தி இவ் வவதாரத்தில்தான் விஷ்ணுவானவர் பெ ண்டீரின் துக்கத்தை யனுபவித்தனரென்று சொல்லப்படுகிறது. (30) ஏனென்று லப்போ தவர் கேவலம் மாயையால் மூடப்பட்டவராகித் த ம்மைத் தா மறியவில்லை.

பிற்பாடு மற்றோர் துவாபரயுகத்தி லவ் விஷ்ணுவானவ (31) ரு ரோகிணியம்மையிடத்தில் வசுதேவருக்குப் பிள்ளையாய்ச் சனித்துப் பல ராமனென்ற பெயரைக் கொண்டவராகி யங் கனேக மிராக்ஷதகணங்க ளை யதம்பண்ணிப் பின்னும் பல பெரியகாரியங்களைச் செய்துபோட்டுப் (32) பிற கப் பலராமன் பார்வதியோடுகூடிய மகாப் பிரபுவான ஸ்ரீ ப ரமேசுவரனைப் பூஜைபண்ணி யோகமார்க்கத்தைக் கொண்டவராகி வை குண்ட மடைந்தார். (33) பின்னு மளவிடத்தகாத மகிமையைக்கொ ண்ட ஸ்ரீ விஷ்ணுவானவர் பிருகுமுனிவரின் சாபத்துக்குக் கட்டுப்பட்ட வராகி தேவகியம்மையிடத்தில் வசுதேவருக்குப் பிள்ளையான கிருஷ்ண ணுய்ச் சனித் (34) தங்கு தேவேசரான ஸ்ரீ சிவபிரானைப் பூஜித் தனே கம் சத்துருக்களைச் சயித்துப் பிறகு உபமன்னியு மாமுனிவரை யடை ந் தவரால் முறைப்படி தீக்ஷை செய்விக்கப்பட்டதன்மேல் (35) மிக

வும் சிறந்த வோர் சைவராகி மிகுந்த பக்தியோடு ஸ்ரீ சங்கரனைப் பூஜித்துப் பூபாரத்தைக் குறைத்துவிட்டுப் பிறகு விஷ்ணுலோக மடைந்தார். (36) தவிரவு மவ் விஷ்ணுவானவர் கலியுகத்தின்முடிவி லக் கலியிலுண்டான துஷ்டப் பிரஜைகளைச் சமுகரிப்பதற்காக ஹயக்கிரீவராய்ச் ச னித் (37) தங்கு ஸ்ரீ பரமேசுவரனை யிலிங்கவுருவத்தில் பூஜைபண்ணியவரது கிருபாபலத்தினு லக் கலியுக துஷ்டர்களையெல்லா மதம்செய்துபோட்டுப் (38) பிறகு முன்போல் விஷ்ணுவுருவத்தைக்கொண்டு தம திருப்பிடம் சேர்ந்தனர். இப்பிரகாரமாய் விஷ்ணுவானவர் பத்தவதாரங்களில், ஸ்ரீ சிவபிரானு லைந்தவதாரங்களில் தண்டிக்கப்பட்டும் மற்றைந்தி லருள்புரியப்பட்டுமாகிப் பிருகுமாமுனிவரின் சாபத்தினின்று விடுபட்டானுர்- (39½) இவ் வவதாரங்களெல்லாம் பெரியோர்களால் கற்பங்கள்தோறும் பலவாருய் வர்ணிக்கப்படுகின்றன. (40) கேளீர்! முனிவர்களே! சிவபிரானுல் விஷ்ணு கண்டிக்கப்பட்டதானது விஷ்ணுபுராணங்களில் சொல்லப்படவில்லை. என்றுலு மக் கண்டனையான தவர் தேகத்தைவிட்ட மாதிரியைக்கொண் டூகிக்கத்தக்கதா யிருக்கின்றது. (41) யெப்படியென்றுல் ஸ்ரீ குமரேசனுலும் வீரபத்திரர்முதலிய கணுதிபர்களாலும் தண்டிக்கப்பட்டதானது, வேதபுராணங்களால் வெளிவிக்கப்படுகின்றவைகளும் ஸ்ரீ சிவபிரான் திருமேனிதனில் விளங்கிய திருவாபரணங்களின் மத்தியில் விளங்கிநிற்பவைகளுமான மச்சத்தின் விழிகள், ஆமையோடு, பன்றியின் சிங்கம், சிங்கத்தோல், முண்டத்தலை, திரிவிக்கிரமத்தின் பெரிய வெலும்பு இவைகளால் தெளிவா யூகிக்கப்படுகின்றது. (42-43) அதன் பிறகு விஷ்ணுப்பிரம்மர் முதலிய தேவர்களெல்லாம் ஸ்ரீ பரமேசுவரனைக் கண்டு மனதினில் மிகுந்த பயத்தோடு தங்களது கர்வத்தை விட்டவர்களாகி (44) யவரவர் தொழிலைச் சரிவரப் பார்த்துவருகின்றுர்களென்று வேதமறிந்தவர் சொல்லுகின்றுர்கள்.

ஒருசமயத்தி லுபேந்திரர் விஷ்ணுவின் திருமாளிகைக்கு வந்தார். (45) அப்போது விஷ்ணுவானவர், பிரத்தியும்னர் முதலிய மூர்த்திகளைப்போல் தம தோர் மூர்த்தியான அவ்வுபேந்திரருட னொருவருக்கொருவர் கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருந்தார். (46) இப்பேர்க்கொத்த சமயத்தில் காசியபமுனிவரின் புத்திரரான மகிமைபொருந்திய கண்வமாமுனிவர் விஷ்ணுவோடு பேச விரும்பியவராகி வைகுண்டத் திருமாளிகைக்கு வந்தார். (47) அப்போ தவ் விருவர்களும், மகா சிவபக்தரும், விருதங்களை யுருதியாய்க் காக்கலுற்றவருமான வப்பேர்க்கொத்த மாமுனிவர் வருவதைக கண்டு மவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கவுமில்லை; அவருக் காசனம் கொடுக்கவுமில்லை. (48) அவரோடு பேசவு

மில்லாமல் மௌனமாயிருந்தார்கள். அப்போ தம் மாமுனிவ ரவர்க ள வ்வா றிருந்ததைக் கண்டு கோபம்கொண் டவர்களைச் (49) சபித்த தா வது:— "ஓ! கோ! யாம் ஸ்ரீ சிவபிரானுக்குப் பிரியமுள்ளவனென்பதை நீங்க ளறிந்தும் சும்மா விருந்துவிட்டீர்களல்லவா? ஆகையால் ஓ! விஷ் ணுவே! நீ நமது திருவாக்கின்படி யனேக ஜன்மங்களை யெடுத் (50) தவ் வெல்லா ஜன்மங்களிலு மூமையா யிருக்கக்கடவாயென்று நம்மா லுனக்குச் சாபம்கொடுக்கப்பட்டது. மேலு மிதோ உன் பக்கத்தி ல் மிருகம்போ லுட்கார்ந்திருக்கின்ற இவ் விலக்குமியும் (51) நமது சாபத்தினால் மான்பேடாகக்கடவள். தவிரவு மிப்பேர்க்கொத்த இவ் வுபேந்திரனும் வேடயோனியிற் சனித்து வெகுகாலம் காடுதனிலே கு டியிருக்கக்கடவான். (52) இன்னு மிவ் வுலகின்மீதுள்ள வுனது பக்தர் களெல்லாம் மதிமயங்கியவர்களாகி ஸ்ரீ சிவபிரானை நிந்திப்பவர்களும், தி ருநீ றுருத்திராக்ஷங்களை யிகழ்வோர்களு மாகக் கடவார்க" (53) ளென் று சபித்துப்போட் டக் கண்வமாமுனிவர் தம தாசிரமத்திற்குச் சென் றுவிட்டதன்பேரில் விஷ்ணு அவரது சாபத்தின் பயத்தினால் திருவாரு ர் சேர்ந் (54) தங்கு வேறு கவனமில்லாமல் ஸ்ரீ மகாதேவனைப் பூஜை பண்ண, பிற கப் பகவானும் களிப்புற்றவராகிக் கண்வமுனிவனை ய ழைத் (55) தச் சாபத்தின்படி விஷ்ணுவையு மிலக்குமியையு மொரு ஜன்மமட்டி லெடுத் தனுபவிக்கும்படி செய்வித் (56) தவ் வுபேந்தி ரனுக்கு மோர் வேடப்பிறப்புமட்டி லுண்டாகும்படி செய்வித்தருளின ர். பிற்பாடு விஷ்ணு வப்பேர்க்கொத்த கண்வசாபத்தின்படி சிவமுனி யாய்ப் பிறக்கலாகி (57) யிலக்குமியம்மையு மம் முனிவரின் சாபத்தி னு லோர் காடுதனில் மான்பேடாய்ப் பிறந்து, உபேந்திரன் முதலியவ ர்களு மப்போது வேடயோனிகளிற் சனிக்கலானார்கள். பின்பம் மா ன்பேடானது ஊமையான வச் சிவமுனிவனைக் கண்டமாத்திரத்திற் கர் ப்பம்கொண்டதாகி யது பொன்னிறம்பொருந்திய மெத்த நேர்த்தியான வோர் பெண்ணைப்பெற்றுவிட்டோடிப்போயிற்று. (59) அப்போதக் கா ட்டினிலுள்ள அவ்வேட னக் குழவியை யெடுத்துத் தன் சேரிக்குக்கொ ண்டுபோய் வல்லிதேவியென்ற வப்பெண்ணை ஸ்ரீகுமரேசனுக்குக்கலியா ணம் செய்துகொடுத்தான்.(60) அதன்மே லவ வெல்லோர்களுமச் சா பத்தினின்று நீங்கியவர்களாகி வந்ததுபோல் போய்ச்சேர்ந்தார்கள்.

பிறகோர் சமயத்தில் க்ஷுபனென்பவனும் ததீசமுனிவரும் சே ரலாகி யொருவருக்கொருவர் வாக்குவாதம் நேரிட்டபோது (61) விஷ் ணுவானவர் க்ஷுபனுக் குதவிசெய்யக் கருதியவராகி யோர் பிராம்மண னுய்க் கபடவேடம்பூண்டு ததீசமுனிவரி னுசிரமத்திற்குச் சென் (62)

ளூர் பிச்சை கேட்டதாவது:— "ஓ! முனீந்திரரே! அடியேன் வேண்டு கோளின்படி 'க்ஷத்திரியன் பிராம்மணனிலு முயர்ந்தவனென்றே தேவ ரீரி னபிப்பிராய' மென் றோர்தடவை சொல்லியருளவேண்டு" (63) மென, இவ்வாறு விஷ்ணுவால் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளப்பட்டதைக் கேட் டத் ததீசமுனிவரும் 'ஓ! விஷ்ணுவே! யா மவ்வாறு பொய்யுரைப் போ ரல்லர்; (64) ஆ! அச்சுதா! நமக்கு க்ஷத்திரியனிடத்திற் கொஞ்ச மேனும் பயமில்லை" யென, அதுகேட் டம் மரையொளிக்கண்ண ருட னே கோபமுற்றவராகி யம் முனிவர்மீ தனேக மந்திரங்களைப் பிரயோ கிக்க, (65) அவைகளையெல்லா மம் முனிவரின், தர்ப்பங்களா லமைத்து வைக்கப்பட்ட வோர் முச்சூலமான து பக்ஷித்துவிட்டது. பிற்பாடு விஷ் ணுவானவர் அதிக வாக்கிரகம் கொண்டவராகி விசுவரூபத்தைக் காட்ட, (66) அதனை யம் மாமுனிவ ரடக்கிப்போட் டவ் விசுவரூபத்தைத் தம மிடமாய்க் காண்பித்தார். உடனே விஷ்ணு பொறாமையினா லவர்மீது த ம் சக்கிரத்தைப் பிரயோகிக்க, (67) அச் சக்கிரமும், விஷ்ணுவுக் குதவி யாய் வந்த மற் றெல்லாத் தேவர்களாலு மவர்மீது பிரயோகிக்கப்பட்ட வெல்லா அத்திர சத்திரங்களு மம் மாமுனிவர்மீது விழுந்தமாத்திரத்தி லவ ரதெலும்பிற் பட்டு முனைமுறிந்து விழலாயின. ($68\frac{1}{2}$) இத்ற் கிடை யில் பிரம்ம னங்கு வந்து ஆயுதபாணிகளாயிருந்த அவ் விஷ்ணுவையும் மற்றத் தேவர்களையு (69) மிது சரியல்லவென்று சொல்லி யவ் வயுத்த த்தினின்று தடுத்துவிட்டார். பிற கவ் வயுத்த மோய்ந்ததன்மேல் முனி வர் விஷ்ணுவையும் மற்றெல்லாத் தேவர்களையும் சபித்ததாவது:— 'ஓ! தேவர்களே! இப்போர்க்கொத்த நீங்க ளெல்லோர்களும் விஷ்ணுவோடு கூட வதிசீக்கிரத்தில் ஸ்ரீசிவபிரானது கோபாக்கினியினின் றுண்டாகும் வீரபத்திரரா லடிபடக்கடவீர்கள். (71) மேலும் பார்மீதுள்ள விஷ்ணுப க்தர்களாகிய, சன்னியாசிகளும் மற் றெறிந்துபோட்ட மானிடர்களும் வெறும் பாஷண்டிகளும், என்றும் சிவநிந்தை செய்யத்தலைப்பட்டவர் களு மாகக்கடவார்க' ளென்று சபித்தனர். (72)

அறுபத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் கூசா—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! முனிவர்களே! பிற்பாடு விஷ்ணு மகா பயங்கொண்ட வராகித் தம்மை மனதினால் நிந்தித்துக்கொண்டு 'ஐயோ! எனிவரோடு வீணான கலகம் நேரிட்டதோ?(1) இதனா லென்ன பயனைத்தான் யாம

டைந்தோம்? தீர்க்க முடியாத சாபம் கைக்கு வந்ததைத்தவிர வேறொன்றுமில்லையே! ஆகையா லப்பேர்க்கொத்த தோடம் தீருவதற்காக ஸ்ரீ சங்கரனைச் சரணமடைவோ'(2) மென்று மனதினு லாலோசித்துக்கொண்டு சிதம்பரத்திற்குப் போ யங்கு திருச்சிற்றம்பலத்தில் ஸ்ரீ மகாதேவனைப் பூஜைபண்ணி(3) யவரது திருவருளா லுடனே பாவங்கள் நீங்கலையப்பெற்றுர். பிறகோர் சமயத்தில் விஷ்ணு கந்தமாதனகிரிக்குச் சென்றங் கழிவற்றவரான(4) ஸ்ரீமகாதேவனைப் பூஜைபண்ணி யிரண்டு வரன்களைக் கேட்டுக்கொண்டதாவது:—'ஓ! தேவாதிதேவா! தேவரீ ரடியேனை வாகனமாகவும் பாணமாகவு மங்கீகரித்தருளவேண்டு' மென,(5) அப்போது பகவா னப்படியே நல்லதென்று சொல்லிப்போட்டுப் பிறகு திரிபுரசமுகாரகால்த்தி லம் மாதவனை வாகனமாயும் பாணமாயு மாதரித்தருளினர்.(6) அதுமுதற்கொண்டுதான் பகவானுகிய விஷ்ணு ஸ்ரீ ஸர்வேசுவரனுக்கு வாகனமான விடபராஜனும் சிறந்த பாணமுமானுர். பின்னும் விஷ்ணுவானவர் முந்தி மைனுகபருவதத்தில் ஸ்ரீ சங்கரனைப் பூஜைசெய்து(7) பிறகு பிரசன்னரான பகவானை நோக்கி யாயிரம் வரன்களைக் கொடுக்கலுற்றதான வோர் வரனை வேண்டிக்கொள்வதற்காக மெத்த வணக்கமுற்றவராகி வந்தனித் தஞ்சலிகொண் (8) டுரைத்ததாவது:—"ஓ! ஸ்வாமீ! நரகனென்னு மோர் மகாசுரன் தவத்தினுற் பிரம்மனை யாராதித்து வரன்கேட் டடைந்ததாவது:—(9) 'ஓ! ஸ்வாமீ! நாவுக்கும் மனதிற்கு மெட்டாத சிவனென்னு மரும்பொருளான தெப்போது சக்திச்சொரூபியான தேவனுகிய விஷ்ணுவோ டொன்றுய் லயித்துப் போர்முன்ன(10) ரெந்தனோடு கொரேமாய்ச் சண்டைதொடுக்கலாகுமோ அப்போதுதா னடியேனுக்கு வதையுண்டாகவேண்டும்; மேலும் ஓ! ஜகத்பதியே! நான் தேவரெல்லோர்களையும் வென்று சகல லோகங்களுக்கு மதிபனு(11) யாகவேண்டு' மென்று பூமி புத்திரனுன நரகாசுர னிவ்விதமான வரனை யடைந்து சகல தேவர்களையும் ஜயித்துவிட் டிப்போது மூவுலகுகளையு மாண்டுவருகின்றுன். (12) ஓ! பிரபுவே! மகா பலசாலியான அவ் வசுரனோடு நான் பன்னிருமுறை யுயுத்தம்பண்ணித் தோல்வியடைந்துவிட்டேன்.(13) ஆகையா லவனிடத்திற் பயங்கொண்டு பெற்ற ருற்றுர் முதலியவர்களோடு மதுராபுரியைவிட் டிப்போது நான் கடல் மத்தியிலுள்ள துவாரகா பட்டணத்திற் குடியிருந்துவருகின்றேன். (14) அவ னெப்போது மலைச் சுறங்கங்களிலெல்லா மெந்தனைத் தேடி வருகின்றுன். ஆகையால் ஓ! தேவாதிதேவா! சகலர்களுக்கும் நாவாலும் மனதாலு மெட்ட முடியாத தேவரீ (15) ரடியேன்மீ தொன்றுய் லயித்திருந்துகொண்டு பூமிபுத்திரனுன வந் நரகனைச் சமுகரித்தருளவேண்

டு" மென்று விஷ்ணு தேவேசனை வந்தனித் தஞ்சலிகொண்டு முன்னில் நின்று(16) வேண்டிக்கொள்ளுகையி லவ் வஷ்டைசுவரிய சம்பன்னமூர்த்தியானவ ரச் சனார்த்தனனை நோக்கிப் பின்னும் மொழிந்தருளியதாவது:—'ஓ! பரிசுத்தம்பொருந்திய விஷ்ணுவே! யாம் தேவர்களுக் குபகார நிமித்தமா யுமது வலதுபாரிசத்திலிருந்துகொண் டுமக்கு மிகுந்த பராக்கிரமத்தை யருளுவோமாக' வென,(17½) இவ்வா றச்சம்புவின் வரனைக் கைக்கொண் டதன்மேல் கிருஷ்ணரூபியான அவ் விஷ்ணுவானவர் (18) திரண்ட சைனியங்களோடுகூடியவராகிப் பூமி மைந்தனான வந் நரகமகாசுரனைச் சண்டைக்கழைத்தார்.(19) பிற கவ் விருவர்களுடைய சைனியங்களுக்கும் கோரமான வுயுத்தமுண்டாயிற்று. பிறகு ஸ்ரீ ஸர்வேசுவரனு மவ் வசுரனை நாசம்செய்வதற்காக அவ் விஷ்ணுவுக்குள் பிரவேசித் (20) தவரது வலதுபாரிசத்தி லிருந்தருளினர். அப்போ துடனே விஷ்ணுவானவர் சக்கிரத்தினு லவ் வசுரனது சிரசைக் கண்டித்துவிட்டனர். (21) அவ் வசுரனு மப்போது விஷ்ணுவுக்குள்ளிருக்கும் ஸ்ரீமகாதேவரால் சமுகரிக்கப்பட்டபடியா லவ னவரது திருமேனியின்கண்ணே லயித்து (ஸாலோக்கிய) முக்தியடைந்து (22) பிறகு கணாதிபத்தன்மையைப் பெற் றெப்போதும் ஸ்ரீசிவபிரானையே வந்தக்கரணத்தில் தியானம் பண்ணிக்கொண்டிருந்தான். அவ் வுயுத்தத்தைப்பார்த்த வெல்லோர்களும் மிகவு மாச்சரியம்கொண்டவரானார்கள். (23) பிற்பாடு ஸ்ரீ பகவானும் விஷ்ணுவைவிட்டுக் கைலைமலைக்கருளினர். கிருஷ்ணனும் ஸ்ரீ ஜகதீசனை வந்தனித்துப்போட்டு மெத்த மனச்சந்துஷ்டியுடன் துவாரகைக்கேகினர்.(24) தேவர்களெல்லாம் பயமற்றவர்களாகி மகா சந்தோஷத்தோடு தேவலோகம் சேர்ந்தார்கள்.

பிறகோர் சமயததில் திருமாலானவர் திருவாலங்காட்டில் ஸ்ரீ பகவானை(25) யாராதித்ததினால் பிரசன்னரான பார்வதீவேந்தரிடமிருந்து வரன்கேட்டடைந்ததாவது:—'ஓ! சகலர்களுக்கும் சுகத்தை யளிக்கலுற்ற ஜகதீசா! தேவரீ ரடியேன்மீது பிரசன்னராயின் யானோர் பெண்ணாகித் தேவரீரோடு புணரவேண்டுமென்ற விருப்ப மெனக் கிப்போ திருக்கின்றபடியா லப்பேர்க்கொத்த வரனை யெனக்குத் தந்தருளவேண்டு'மென,(26½) அவ்வாறே யீசனவருக்கு வரனளித்துவிட் டந்தர்த்தானமடைந்தனர்.(27) அதேகாரணத்தால்தான், பாற்கடலினின்றமுதமுண்டாகி யதனையசுரர்கள் கைப்பற்றிவிட்டபோது விஷ்ணு மோகினியுருவம்கொண்டவராகி(28) யதனு லவ் வசுரர்களை மோகிப்பித் தவ் வமுதத்தைத்தேவர்களைப் புசிப்பித்துப்போட்டுப் பிற கிந்திரியங்களை வசத்திற் கொண்ட ஸ்ரீ பரமேசுவரனையும் மோகிக்கச்செய் (29) தம்மோகினியுருவத்துடன்

காமனைச் சபித்த வப்பேர்க்கொத்த ஸ்ரீஜகதீசனோடுகூடப் புணர்ந்து சாஸ்தாவென்னும் பிள்ளையையடைந்தனர்.(30) தவிரவும் மற்றோர் கல்பத்தில் ஸ்ரீபரப்பிரம்மு மொய்வடைந்திருக்கும் பிரளயகால மகாராத்திரியின் முடிவில் விஷ்ணு வோர் பெண்ணுருவங்கொண்டவராகி ஸ்ரீஜகதீசனை வசப்படுத்திக்கொண் டவரோ(31) டிரமிக்க, அப்போது விஷ்ணுவிடமா யப் பிரம்மனுண்டானார். ஆகையால் விஷ்ணுவானவர், சிவபூஜை செய்ததின் மகிமையாலல்லவோ ஸ்ரீஸர்வேசுவரனுக்குப்(32) பெண்டீராகும் பெருமையைப் பெற்றனரொன் றுலகினில் பிரஸித்திகொண் டிருக்கின்றார். ஓ! கோ! சிவபூஜையானது சகலருக்கும் வேண்டியதைக்கொடுக்கவுற்றதே!

ஒரு சமயத்தில் முனிச்சிரேஷ்டராகிய ஸ்ரீ துர்வாஸபகவான் கேதாரக்ஷேத்திரத்துக்குப்போ(33) யங்கு சிவபூஜைசெய்துகொண்டு வசித்திருக்குமளவி லப்போது ஸ்ரீகேதாரேசுவரசுவாமியைத் தரிசிப்பதற்காக(34) விஷ்ணு வைகுண்டத்தினின்று கருடாரூடரா யங்கு வந்து ஸ்ரீமகாதேவனைப் பூஜித்துக் கொஞ்சம் நிர்மாலியதீர்த்தத்தையு முட்கொண்டுவிட்டுப்(35) பிறகு தமது லோகத்திற்குப் போவதற்காகக் கருடனேறிப் புறப்படுகையி லங்கு சற்றுதூரத்தில் பூஜைசெய்துகொண்டிருந்த ஸ்ரீ துர்வாஸபகவானைக்கண் (36) டவருகிற்சென் றவர் பூஜைசெய்வதையும் பார்த்துவிட் டப்போ தவரால் பூஜைசெய்யப்படும் ஸ்வாமியை வந்தனிக்காம லம் முனிவரைமட்டில் நமஸ்கரித்துவிட்டுப் புறப்பட்டு விஷ்ணு தம் லோகத்திற்குப் போ யங்கிருந்துகொண் டிருக்குமளவில் (37-38) துர்வாஸமுனிவர் பூஜையை முடித்ததின்மேல் விஷ்ணு வருகிற்சென்று மகா கோபத்தோ டவரைச் சபித்திட்டதாவது:—(39) 'ஓ! ஜநார்த்தனா! நம்மால் கேதாரத்தில் பூஜை செய்யப்பட்ட லிங்கமூர்த்தியான ஸ்ரீஸதாசிவனை நீர் வந்தனிக்காமல் கர்வத்தோடசட்டையாய்ப் போய்விட்டபடியா(40) லப்பேர்க்கொத்த பாவத்திற்காக வுமது வாகனமாகிய கருட னிப்போதே யிறந்துபோவதோடுமே திலக்ஷுமியும் கடலில் விழலாகி(41) யுமது தேகத்தி னிரத்தங்களெல்லாம் ஸ்ரீபைரவமூர்த்தியால்சூலத்தின் நுனியால் பொற்றுவிடப்பட்ட வுமது நெற்றியின்வழியா யபகரிக்கப்படக்கடவது.(42) மேலு முமது பக்தர்களெல்லா மிராப்பகலாய்ச் சிவத்துரோகம் செய்தலையே தொழிலாய்க் கொள்ளக்கடவார்க' ளென்றத் துர்வாஸமுனிவர் சபித்துவிட்டுப்போனவுடன் கேளீர்! முனீசுவரர்களே!(43) அக் கேசவர் ஸ்ரீகாளஹஸ்திக்குச் சென்று ஸாம்பமூர்த்தியைப் பூஜைசெய்ய, பிறகு ஸ்ரீ பகவான் பார்வதீசகிதராய்ப் பிரசன்னராகி (44) யச் சாபத்திற்குப் பரிகாரம் மொழிந்தருளியதாவது:— 'ஓ! விஷ

ணுவே! பௌஷரூ சிரத்தங்களை வாங்கிவிட்டதன்மே லும்மை மறுப டியும் பிழைப்பித்துவிடலாவார்.(45) உம திலக்குமியும் கடல் கடையப் படும்போது பின்னு முண்டாகக்கடவாள். கருடனும் மறுபடி பிறக்கலா கியமுதத்தைக்கொண்டுவருகையி(46) லும்முடன் வெகுகால முயுத்தம் பண்ணிவிட்டுப் பிற குமக்கு வாகனமாவா' னென் றருள்செய்தனர். பிற்பாடதேவிதமாய் ஸ்ரீபைரவர் தம் சூலத்தினால் விஷ்ணுவி னிரத்தங்க ளை வாங்கிவிட்டுப்(47) பிறகடியார்களின் துயரங்களைத் தொலைக்கலுற்ற வப் பைரவனைப் பிழைப்பித்து விட்டார். இலக்குமியும் பிறகு கடலினி ன்றுண்டாகித் திரும்பவும் விஷ்ணுவை யடைந்தாள். கருடனும் காசியப ரிடமிருந் துண்டாகி விஷ்ணுவோடு யுத்தம்பண்ணிப் பின்னு மவருக்கு வாகனமாயினன். $(48\frac{1}{2})$ விஷ்ணுவானவர் சாபத்தினின்று மீண்டதெல் லாம் சிவபூஜையின் வலிமையால்தானே யின்றி வேறில்லை. (49) ஆகை யா லுலகினில் போகமோக்ஷங்களைக் கொடுப்பதற்குச் சிவபூஜைக் கி டான தொன்றுமில்லை.

மேலுமோர் சமயத்தில் தேவரெல்லோர்களு மசுரர்களால் தொ ந்திரவு செய்யப்பட்டபோ(50) தவர்கள் மிகவும் நடுநடுங்கியவர்களாகி விஷ்ணுவைச் சரணமடைந்து விண்ணப்ப மிட்டுக்கொண்டதாவது:— 'ஓ! பகவானே! தேவர்களி னதிபத்தியமெல்லா மசுரர்களாற் கட்டிக் கொள்ளப்படலாயிற்று.(51) தேவரீர்தா னெங்களை யிரக்ஷிப்பதற்கும், விசேடமாய்த் துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்வதற்கும் ஸ்ரீசக தீசனால் நியமிக்கப்பட்டிருக்கிறீர்.(52) ஆகையால் தேவர்களைக் காப்பா ற்றுவதற்காகத் தேவரீ ரவ் வசுரக்கேடர்களைக் கண்டிக்கவேண்டு' மென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் விஷ்ணு அவர்களை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:—'ஓ! தேவர்களே! இப்போ தசுர ர்களை வெல்ல வெம்மால் முடியாது. ஏனென்றால் நமது சக்கிராயுதமான து ததீசிமுனிவரின் வஜ்ஜிரத்தை பொத்த வெலும்பினிற்பட்டு முனை முறிந்துபோயிற்(54) றென, அதுகேட்டுத் தேவர்கள் பின்னு முரைத் ததாவது;—'ஓ! ஸ்வாமீ! ஜலந்தராசுரனைக் கொல்வதற்காக வீசனா லோர் சக்கிர மமைக்கப்பட்டிருக்கின்றதன்றோ! அதனை யடைவதற்குற்ற மு யற்சியைத் தேவரீ ரிப்போது செய்யவேண்டு' மென, (55) விஷ்ணுவு மதே சரியென்று நினைத்துக் கோரியதை யடையக் கருதியவராகிக் கா ஞ்சீபுரத்திற்குச் சென் றங்கு ஸ்ரீசிவபிரானை நாள்தோறு மாயிரம் தாம ரைமலர்களா லர்ச்சித்து வருகையி லொருநா ளோர் மலர் குறையலான போ தவர் தமதோர் நேத்திரத்தைப் பிடுங்கி$(56\frac{1}{2})$ யம் மலருக்கிடாய்ச்

சரிக்கட்ட, உடனே ஸ்ரீசங்கரனவர்மீது களிப்புற்றவராகி யாயிரம் சூரியர்களை யொத்ததான சுதரிசனமென்னும் சக்கிரத்தை யவ்விஷ்ணுவுக் கீந்தருளிவிட்டுப்(57½) பின்னுமவர் வெகு சந்தோஷத்தோடு விஷ்ணுவை யின்னுமோர் வரன்கேட்டுக்கொள்ளும்படி திடப்படுத்த,(58) அதன்மேல் விஷ்ணுவும் தமக்குத் தாமரை மலரையொத்த நேத்திரத்தை வரனுய்க் கேட்டுக்கொண்டு 'ஓ! பரமேசுவரா! யான் கமலக்கண்ணனென்றே யுலகினிற் பிறஸித்தி பெறவேண்டும். மேலு மவ்விதமா யடியேனைத் துதிப்பவர்களுக்கும் தேவரீரே சகல வேண்டுதல்களையும் கொடுத்தருளவேண்டு' (59½) மென்று ஸ்ரீஸர்வேசுவரனிடமிருந்து வேண்டியவைகளை யடைந்ததன்பேரில் விஷ்ணுவானவர்(60) சக்கிரத்தினுற் சகல வசுரர்களையும் சமுகரித்துப்போட் டவ் வசுரர்களா லடிக்கடி பீடிக்கப்பட்டு வந்த சகல தேவர்களையும் காப்பாற்றிவிட்டனர்.(61) அதுமுதலாய்ச் சகல விருஷசுவரர்களும் விஷ்ணுவைக் கமலக்கண்ணனென்று சொல்லத்தலைப்பட்டார்கள்.

பூர்வத்தி லோர் சமயத்தில் விஷ்ணு புத்திரனை யடையவேண்டு மென்னும் விருப்பத்தோடு ஸ்ரீவாஞ்சியத்திற்குப்போ(62) யங்கு புத்தியை மற்றெங்கும் செலுத்தாமல் மிகுந்த பக்தியோடு ஸ்ரீபகவானை யாராதித்ததின்பேரில் ஸ்வாமியா லவருக்குப் புத்திர னருளப்படலாகையி லப்போ தவ் விஷ்ணுவால் பூஜிக்கப்படாத ஸ்ரீபார்வதிதேவி கோபமுற்றவளாகி(63) 'ஓ! விஷ்ணுவே! நீ ரெம்மை விலக்கி ஸ்வாமியைமட்டிற் பூஜித்துப் புத்திரனை யடைந்தபடியா லுமது புத்திர னுருத்திரனது கோபாக்கினியா லோர் கணநேரத்திற்கு ளெரிக்கப்படலாவா" (64) னென்று தேவியாற் சபிக்கப்பட்டதன்பேரில் விஷ்ணு மறுபடியும் ஸ்வாமியை யம்மனேடும் கந்தனேடும்கூடப் பக்தியோடு பூஜித்துக் களிப்பிக்க,(65) அப்போது தேவி ஸ்ரீபகவானுல் திருக்கண்ஜாடை காட்டப்பட்டதன்பேரில் பிரசன்னையாகித் திருவாய்மலர்ந்தருளியதாவது:— 'ஓ! விஷ்ணுவே! நீர் வரனு லடைந்த புத்திரன், நமது சாபத்தின்படி நஷ்டமானபிறகு சிவாக்கினையால் மறுபடியும் வேறு தேகத்தைக் கொள்ளக்கடவானென்று வரனளித்துப்போட் டவ் வெம்மை ஸ்வாமியோடுகூட வந்தர்த்தானமடைந்தனள்.(67) பிறகதேவிதமாய் விஷ்ணுவானவ ரிரதிக்கு நேசனுன மன்மதனைப் புத்திரனு யடைந்து பிற்பா டவன் ஸ்ரீசிவபிரானது நெற்றிக்கண் ணக்கினியால் தகிக்கப்பட்டதின்மேல்(68) தேவர்களின் வேண்டுகோளின்படி யம் மகா தேவராலே பிழைப்பிக்கப்படலானுன். ஆகையால் கேளீர்! முனிவர்களே! சிவபூஜையானது புத்திரனை ய

டைவதற்கும், முக்கிய வேதுவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றபடியாலது சகல வபீஷ்டங்களையும் கொடுக்கலுற்றதே யென்று சந்தேகமின்றிச் சத்தியமாய்ச் சொல்லுகின்றேன்.(69)

அறுபத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் சுஎ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! முனிவர்களே! பின்னு மோர் தருணத்தில் கமலக்கண்ணன், மாயையில் மகா தேர்ச்சிபெற்றவர்களான வசுரர்களால் ஜயிக்கப்பட்டதன்பேரில் மாயாபுரியில் ஸ்ரீ மகேசுவரனைப் பூஜைசெய்கையி (1) லங்கு பிரசன்னரான பரமேசுவரனை நோக்கி வசனமுரைத்ததாவது:—'ஓ! ஸ்வாமீ! காலநேமிமுதலிய வசுரர்களெல்லாம் மெத்த மாயாவிகளாயிருக்கின்றார்கள்.(2) அம் மகா மாயாவிகளை யுயுத்தத்தில் வெல்வதற்கு நான் திறமையற்றவனு யிருக்கின்றேன். ஓ! அஷ்டைசுவரிய சம்பன்ன மூர்த்தியே! எனது மாயையான தவர்கள் மாயையால் வெல்லப்படலாயிற்று. (3) ஓ! ஆயிரம் வரன்களை வேண்டினும் கொடுக்கலுற்ற மகாபிரபுவே! அதற்குத் தக்கதான வோர் வரனைத் தந்தருளவேண்டு' மென்று வேண்டிக்கொண்டபடியே அப்பேர்க்கொத்த வரனை யடைந்து, அதுமுதற்கொண்டுதான் விஷ்ணு வோர் மகா மாயாவியானது.(4) மேலும் தமக்கு, அசுரர்களின் கர்வத்தைப் பங்கப்படுத்தத் தக்க வோர் மிகுந்த வலிமையையும் கொண்டனர். அதற்குமேல் அசுரர்களைக் கண்டிக்கலுற்ற அவ் விஷ்ணு வுயுத்தமதில் சகல வசுரர்களையும் சமுகரித்துப்போட்டார்.(5) முந்தி யோர் தருணத்தி லிலக்குமீ வேந்தன் ஸ்ரீ காசிதனில் மிகுந்த பூஜையினு லீசுவரனைச் சந்தோஷிப்பித்து மெத்த வுத்தமமான வரனைக் கேட் டடைந்ததாவது:—(6) "ஓ! ஜகதீசா! அடியேனுடையதும், பிரம்மன்முதலியவர்க ளுடையதுமான வகங்காரத்தை யடக்குவதற்காகவே தேவரீர் திருமேனிதனி லெனது தேகத்தின் சம்பந்தமானவைகளைத் தரித்தருளினு(7) மடியேனுடைய மனதானது அதிகாரமதத்தினுற் சில சமயத்தி லகங்காரமும் கர்வமும் கொண்டாகின்றதே!(8) ஆகையால் ஓ! பிரபுவே! இனி தேவரீர் யாவர் முன்னிலையிற் பிரசன்னராயினு மெப்போது மடியேனது தேகத்தி னெலும்புமுதலியவைகளை, எல்லோர்களுடைய கர்வமு மடங்கும்படியாய்த் தேவரீர் திருமேனிதனிற் பூஷணமாய்ப் பூண்டுகொண்டே பிரசன்னராகவேண்டும். மேலும் ஓ! ஜகத்குருவே!($9\frac{1}{2}$) தேவரீருக்கு விஷ்ணுவின் சிரசை விழ்த்தினவ

ஒன்றும், மச்சவிழிகளை யாபரணமாய்த் தரிப்பவனொன்றும், ஆமையோ
ட்டினு லலங்கரிக்கப்பெற்ற திருமேனியைக் கொண்டவனொன்றும், பன்
றியின் சிங்கத்தைத் தரிப்பவனொன்றும், நரசிங்கத்தின் தோலை யாடை
யாய்க் கொண்டவனொன்றும், திரிவிக்கிரம னெலும்பைத் தண்டமாய்ப் பி
டிப்பவ னொன்றுமாகிய வித் திருநாமங்களெல்லா மிப்பேர் றுண்டாகவே
ண்டும்.(11½) தவிரவும் ஓ! பரமேசா! எந்த மானிடோத்தமர்கள் தேவ
ரீரை இத் திருநாமங்களால் துதிக்கின்றார்களோ,(12) அவர்களுக்கெல்
லாம், "தேவரீ ரடியேன்மீதுள்ள கருணையினால் வேண்டிய வபீஷ்டங்க
ளை யெப்போதும் கொடுத்தருளவேண்டு" மென்று வேண்டிக்கொண்ட
படியே அவருக்கு வரனைக் கொடுத்தருளிவிட்டு ஸ்ரீ சம்பு பார்வதியோடு
கூட வந்தர்த்தான மடைந்தனர்.(13) ஆகையா லதுமுதலாய் ஸ்ரீ மகாதே
வனை இத் திருநாமங்களால் துதிப்பவர்களெல்லாம் சகல வபீஷ்டங்களை
யும் கைக்கொண்டு முடிவில் மோக்ஷஸாம்பிராஜியம் பெற்றுவருகின்றார்
கள்.(14) மேலு மவர்கள் விஷ்ணுவுக்கும் வெகுப்பிரியமுள்ளவர்க ளா
வதோடு சகல தேவர்களுக்கும் நேசர்களாகின்றார்கள். தவிரவும் பார்மீ
துள்ள வப்பேர்க்கொத்த சிவனடியார்கள்மீது, விஷ்ணுவானவ ரகங்கார
த்தைவிட்டு, மிகுந்த பக்திகொண்டவராகிப் பேராநந்தம் கொள்ளலாகி
ன்றார். (15½)

பின்னு மோர் சமயத்தில் கேளீர்! தரணிதேவர்களே! விஷ்ணு
வானவர் ஹரீசுவரமென்ற க்ஷேத்திரத்தில் பகவானை யாராதித்துப் (16)
பிரசன்னரான வம் மகேசுவரனிட மிருந்து வரனடைந்தவராது திருநடன
ததிற்குப் படக வாத்தியத்தையும் மத்தள வாத்தியத்தையும் நன்று
யொலிப்பித்துச் சுகமடைந்தார்.(17) பின்னுமொருக்கா லவ் விஷ்ணு தி
ருவெண்காட்டில் ஸ்ரீ ஸாம்பமூர்த்தியைப் பூஜைசெய்து மிகுந்த சந்தோ
ஷத்தோடு வந்தனித்து வரன்கேட்டடைந்ததாவது:—(18) 'ஓ! பரமே
சுவரா! தேவரீரால் விநோதார்த்தமா யிச் சகல ஜகங்களும் படைக்கப்ப
ட்டு வருவதி லடியேனுக்கு வெகு ஜன்மங்களாகிவிட்டனவே! (19) ஓ!
எனதிறைவனே! இனிமே லடியேனுக்குத் தேவரீரிடத்திற் சிரேஷ்டமா
ன முத்தியுண்டாகவேண்டு' மென, பிறகு பிரசன்னரான ஸ்ரீபரமேசுவர
னவ் விஷ்ணுவை நோக்கி மொழிந்தருளியதாவது:—(20) "கேளீர்! வி
ஷ்ணுவே! இனி மகா பிரளயகாலம் நேரிடும்போது நாம் சகலப் பிராணி
களையும் சமுகரித்ததின்மே லும்மையும் லீலாவிநோதமாய்ச் சமுகரித்
துவிட்(21) டெம தெலும்பு சாம்பல் தோல் முதலியவைகளால் யா ம
லங்கரிக்கப் பெற்றவராகி யுமக்காக மெத்தச் சந்தோஷத்துடன் பேரா
நந்தத் திருநடனம் செய்துபோட்டுச் சாலோக்கிய முத்தியை யருளுகி

ன்றோம்.(22) பிறகு மறு சிருஷ்டிகாலம் வந்தபிறகும்தெல்லா அபரா தங்களையும் மன்னித் துமக்குச் சாரூப்பியத்தை யளித்துப் பிந்திய கல்பத்தில் மெத்த வுத்தமமான ஸாயுஜியத்தையு மருளலாவோம்"(23) மென் றீசன் பிரசன்னராகி யவருக்கு வரஜை யளித் துவிட் டந்தர்த்தானமடைந்தனர். பிற கவ்வாறே ஸ்ரீ சிவபிரா னவர தெலும்பு சாம்பல்முதலியவைகளால் தம் திருமேனியை யலங்கரித்துக்கொண்டு(24) விஷ்ணுவுக்கும் ஸாயுஜிய பதவியைக் கொடுத்து மற்றெல்லோர்களையு மனுக்கிரகித் தருளுகின்றார். ஆகையால் புருடோத்தமரான ஸ்ரீஹரியானவர் சிவபூஜையின் மகிமையினுல்தா னுலகுக் கிரக்ஷணகர்த்தரும், அளவற்ற பாக்கியத்தைக் கொன்டவரும், மாயாவியும், புத்திர னடைந்தவரும்,(25½) சகல தேவர்களிலும் மகா பலசாலியும், எல்லோரிலும் மேன்மைபொருந்தியவருமாயினர்.(26) மேலு மவர் ஸ்ரீ பரமேசுவரனைப் பூஜித்ததினுல் தான் தாம் கொண்ட பல சாபங்களினின்றும் மீளலானுர். கேளீர்! முனிவர்களே! இப்போ துரைக்கப்பட்டதெல்லாம் ஸ்ரீ விஷ்ணுவாற் செய்யப்பட்ட வனேகம் சிவபூஜைகளில் சிற்சிலவிடத்திற் சிற்சில பாகம் மட்டிலேயின்றி வேறில்லை. அவரா லெல்லாவிடங்களிலும் செய்யப்பட்டிருக்கிற பூஜைகளைப்பற்றி யெடுத்துரைக்கப் பார்தனில் யாவரால்தான் சாத்தியம்?(27½) இவைகளைக் கேட்பவர்க்குக்கூடச் சகல வபீஷ்டங்களும் சடிதியிற் கைகூடலாகுமே.(28) மேலு மிப்போது பிரம்மனுற் செய்யப்பட்ட வனேகம் சிவபூஜைகளிற் சிலவற்றை யெடுத்துரைக்கின்றேன். அவற்றைச் சகலமுனிவர்களும் வெகுஜாக்கிரதையுள்ள மனதோடு கேட்பீர்களாக; (29) என்று சூதமுனிவர் வெகு சந்தோட சித்தமுடையவராகி மாமுனிவர்களை நோக்கிக் கூறலாயினர். (30)

அறுபத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் சுஅ—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பூர்வத்தில் பிரம்மன் முக்கண் தேவரான ஸ்ரீ பரமேசுவரனைச் சீர்காழியில் கொடிய தவத்தினுற் களிப்பிக்க,(1) அப்போ தவர் செய்த பூஜையினுல் சந்திரசேகரனுன ஸ்ரீ சங்கரன் பிரசன்னராகி 'ஓ! பிரம்மாவே! உமக்கு மங்களமுண்டாகக்கடவது; நீ ருமக்குவேண்டிய வரனைக் கேட்கலாவீர்; நா மதனைத் தந்தருளுகின்றோ' மென,(2) இவ்வாறு ஸ்ரீ சம்புவின் வசனத்தைக் கேட்டதன் மேல் பிரம்மன் விநயமுற்றவராகி "ஓ! ஸ்வாமீ! முந்தி யகங்காரததினுல்

புத்திகெடப்பெற்ற வடியேனது சிரசானது மகாத்துமாாகிய ஸ்ரீ பைரவ மூர்த்தியால் நகத்தினுற் கிள்ளப்பட்டுப்(3½) போனதால் ஓ! பிரபுவே! இப்போதுகூட வெப்போதும் மிகுந்த பீதியான தடியேனை வருத்தலாகின்றது.(4) என் மனதும் மெத்தச் சஞ்சலம்கொண் டெங்கும் சுற்றலாகின்றது. சகல ஜகங்களையும் முன்போல் சிருஷ்டிக்க வெனக்குத் திறமையில்லாதபடியால்(5) ஓ! ஜகத் பிரபுவே! அடியேனுக்குச் சிருஷ்டிசெய்வதில் திறமை யருளவேண்டு" மென, இவ்வாறு பிரம்மனது வசனத்தைக் கேட்டதன்மே லங்ஙனமே யருள்செய்துவிட்டுப் பிரபுவாகிய(6) ஸ்ரீ மகாதேவ ரம்பிகையோடுகூட வங்குதானே அந்தர்த்தானமடைந்தனர். பிரம்மனு மிப்பேர்க்கொத்த வரனை யடைந்ததன்மேல் மிகவும் தாண்டமுடியாத பெரும் பீதியை விட்டுத்(7) தைரியம் கொண்டு மனதினுல் ஸ்ரீ மகாதேவரைத் தியானித்துக்கொண்டே யப்போதுமுதலாய்ச் சகல புவனங்களையும் மிகுந்த சந்தோடம் கொண்டவராகி முன்போ லிடைவெளியின்றிப் படைத்துவந்தனர்.(8) பிற கிப்படி யிருக்குமளவில் பிரம்ம னப்ஸரஸ்திரீ கணங்களைச் சிருஷ்டிக்கலாகும்போ தவரகண்டவிழிகளைக் கொண்டவளும், சகல அவயவங்களும் சுந்தரமா யமையப்பெற்றவளுமான திலோத்தமையைச் (9) சிருஷ்டித்தவுட னக்கியானத்தினுல் மோகிக்கலுற்றவராகி யவள்மீது மிகுந்த காதல்கொண் டவளை யவளிடத்துச் சுரதலீலை செய்யும்படிப் பலமுறையாய்ப் பிரார்த்தித்தனர்.(10) அப்போ தவளும் 'ஓ! பிரம்மாவே! தேவரீர் சகல ஜகங்களுக்கும், அதிலும் விசேடமா யென்தனுக்கும் தந்தையாகின்றபடியால் ஓ! ஜகத்பிரபுவாகிய ஸ்வாமீ! தேவரீ ரடியேனேடு புணருவது சரியல்ல" வென்று மிகுந்த பயம்கொண்டவளாகி யுறக்கச் சொல்லிக்கொண்டே தூரமா யோடினுள். அப்போது பிரம்மனு மவளைத் துறத்திக்கொண்டோடலாகையி லவரைச் சில சிவகணுதிபர்கள் கண்டவுட(12) னவர்களும் தூரத்திலோடிய வப் பிரம்மனை யோடித் துறத்தினுர்கள். அப்போது பிரம்மனும் சுபாரிசமென் றவோர் நெர்த்தியான மலைக்குப்போ(13) யங் கொளிந்துகொண்டு வெகு நேர்த்தியாய்ச் சிவபூஜை செய்தார். அப் பூஜையினுல் ஸ்ரீ மகேசுவர னங்கு சான்னித்தியமாகையில்(14) பிரம்ம னவ் வீசுவரனைக் கண் டடிக்கடி வந்தனம் செய்ய, அப்போ தப் பிரபுவும் 'ஓ! பிரம்மனே! உம் மனதிலிருக்கும் கோரிக்கையைச் சொல்லலாவீ" ரென்று மொழிந்தருளியதைக் கேட்டதன்மேல் பிரம்மன் சொல்லியதாவது:—(15½) 'ஓ! ஜகதீசா! அடியேன் தேவரீரது திருமாயையினுல் மோகிக்கப்பெற்றவனுகிக் காமன்கணைகளால் பீடிக்கப்பட்டபடியால்(16) திலோத்தமையைக் கண்டவுட னவளோடு சம்போகம்பண்ண

மிகுந்த காதல்கொண்டவனாகி யானவளைத் துறத்திக்கொண் டோடும் போது மகா பராக்கிரமசாலிகளான சிவதூதர்களைத் தூரத்தில் கண்டவுடன்(17) துரிதமா யிக் குகைக்கி வந்துசேர்ந்தேன். ஓ! சங்கரா! அதனு லுண்டான பய மென்தனை யின்னும் வாதிக்கலாகின்றது.(18) ஆகையினால் ஓ! தந்தையாகிய பகவானே! தேவரீ ரிப்போது பிரசன்னரானதும், பக்தனான வடியேனுக்கு வரனருளுவது முண்மையாயி னிப்பேர்க்கொத்த பெண்மாயையான தென்தனைவிட்டு முற்றும் நீங்கிவிடவேண்டும்.(19) தேவரீரோ சகலப் பிரபஞ்சங்களையு மதிகரித்தவரொன்றும், இந்திரியங்களைச் சயிக்கலுற்றவரொன்றும் வேதங்களா லறியப்படுகின்றபடியா விந்திரிய நிக்கிரகமுள்ளவரும் நெற்றிதனிற் கண்ணுடையவரும், சகலகுண சம்பூர்ணரும், மங்களைக்கு மணவாளருமான(20) தேவரீரை யெந்த மகாத்துமர்கள் தொழுகின்றார்களோ அவர்களைக் காமன் வாதிப்பதில்லையன்றோ! ஆகையால் ஓ! சம்போ! இனி யிம்மாயை யடியேனைவிட்டு முற்றும் நீங்கிவிடவேண்டும்;(21) ஸாவித்திரி, காயத்திரி, ஸரஸ்வதி ஆகிய விம் மூவர்களே எனக்குப் பெண்டீர்களாயிருந்து, நாள் தோறு மவர்களோடுமட்டிலே அடியேனுக்குப் புணர்ச்சி யுண்டாகட்டுமேயின்றி(22) ஓ! பிரபுவே! தேவரீர் கிருபாபலத்தினு லம் மூவர்களைத்தவிர மற்ற மங்கையர்களிடத்தி லடியேனுக்கு நேசமுண்டாகவே வேண்டாம். மேலும் யான் திலோத்தமையைத் தொடர்ந்தோடியதா லுண்டாகும் பாவமும் தொலைந்துபோகவேண்டு' மென,(23) இவ்வாறு பிரம்ம னுரைத்ததைக் கேட்டு ஸ்ரீ மகேசுவர னங்ஙனமே நல்லதென் றருளிவிட்டுத் தேவியோடுகூட வங்கே யந்தர்த்தான மடைந்தனர்.(24) பிறகுப் பிரம்மனும் ஸ்வாமியிடமிருந் திவ்வாறு வரனை யடைந்ததன்மேல் தம் மிருப்பிடம் சேர்ந்து அயல் மங்கையர் மாயை விலகப்பெற்றவராகித் தமது மூன்று மனைவிகளுடனும் வேண்டியமட்டில் கிரீடைசெய்துகொண்டும், ஸ்ரீ சிவபிரானை யெப்போதும் மனதினில் தியானித்துக்கொண்டே ஜகங்களைச் சிருஷ்டிசெய்துகொண்டும், ஸ்ரீ பரமசிவனை யவ்வாறு தியானித்துவந்த மகிமையினாற் சகல பாவத்திரட்களும நீங்கப்பெற்றவராகி யங்கு வசித்துவநதார்.(25-26) பிற கப் பிரம்ம னோர் சமயத்தில் வெகுநேரமளவும் ஸரஸ்வதியோடு கிரீடித்துவிட்டு மகா பாவிஷ்டர்களும் ஜகங்களுக்குத் தீங்களிக்க முயன்றவர்களுமான வனேகம் கொடிய வசுரர்களைச் சிருஷ்டித்துப்(27) பிறகு கோபத்தினு லவர்கள் தம்மிடத்தினின் றுண்டானவர்களாயினு மப்பிரபு அவர்களைத் தாமே கொன்றுபோட்டுப் பின் பத் தோடம் தீருவதற்காகச் சகல பாவங்களையும் நாசம் செய்பவுற்ற ஸ்ரீ காளஹஸ்தி மாநகரினில் ஸ்வாமியைப் பூஜை செய்

(28½) ததினால் தம் தோடத்தை விலக்கிக்கொண்டு மகா பரிசுத்தராகி மகா சந்தோடத்தோடுகூட ஸரஸ்வதி தேவியுடன் புராதனமானப் பிரம்மலோக மடைந்தனர்.(29½)

பிற கவ ரோர் தருணத்தில் கைலைகிரியில் ஸ்ரீ சம்புவை நமஸ்கரித்(30) தஞ்சலிகொண்டு பிரம்மலோகத்திற்குத் திரும்பிப்போகையில் மணமாலைசூடிய ஸ்ரீ குமாரக்கடவு ளெதிரில் விளையாடிக்கொண்டிருந்தைப் பிரம்ம(31) னறிந்தும் கர்வத்தினு லறியாதவர்போ லசட்டையாய்ச் சென்றனர். அப்போ தம் முருகேச னவ்வாறு செல்லலான வப்பிரம்மனைக் கண்டு கூப்பிட்டுத் (32) தம் விளையாட்டோடு விளையாட்டாயவரைப் 'பிரணவத்தி னர்த்தமென்ன' வென்று கேட்டருளியதற் கவ ரவ் வர்த்தத்தை மாறுபாடாய்ச் சொல்ல, அப்போது கந்தன் மகா கோபத்தோ டப் பிரம்மனைத்(33) தலைமீது முட்டியாற் குட்டிச் சிறைதனி லடைப்பித்துப் பிறகு சகல ஜகங்களையும் முன்போல் தாமே சிருஷ்டித்து வந்தனர்.(34) பிற்பா டப் பிரமமன் சங்கதியைச் சிவபிரான் கேட்டதன்மேல் புன்னகைப்புற்றவராகிப் பின்பு கந்தனைக் களிப்பித்துப் பிரம்மனை விடுவித்தனர்.(35) அதன் பிறகு பிரம்மன் சிவபிரானுக்கு நேசமுள்ள ஸாக்ஷாத் ஸ்ரீ முருகேசனை நமஸ்கரித் தவரால் விடையருளப்பட்டதன்மேல் மகா சந்தோடத்தோடு மங்களகரம்பொருந்திய காஞ்சிபுரிக்குச்(36) சென் றங்கு கருணைக்கடலான ஸாக்ஷாத் ஸ்ரீ ஏகாம்பரநாதேசுவரஸ்வாமியைப் பூஜைசெய்து மகா பக்தியோ டங்கு தம் பேரா லோர் சிவலிங்கத்தையும் பிரதிஷ்டைசெய்து(37) பிற கம் மகிமையினுல் பிரம்மன் தாம் செய்த பாவத்தைத் தொலைத்துப்போட்டுத் தம திருப்பிடத்திலிருந்துகொண்டு முன்போல் தம் மதிகாரத்தை நடத்திவந்தார்.(38) மறுபடியும் பிரம்மன மனதினிற் சிலதை நினைத்துக்கொண்டு நீலகிரிக்குப் போ யங்கு மிகுந்த பக்தியோடு ஸ்ரீ சங்கரனைப் பூஜைசெய்ய,(39) அப்போது பகவா னவர்மீது மிகுந்த மகிழ்ச்சிகொண்டவராகி யங்கு சான்னித்திய மருளி 'ஓ! பிரம்மாவே! உமக்குச் சுபமுண்டாகட்டும்; மேலு மும் மனதினிற் கருதிய வரனைக் கேட்கலாவி' ரென,(40) இவ்வாறு சம்புவின் திருவசனத்தைக் கேட்டதன்மேல் பிரம்ம னவர்முன்னி லஞ்சலிகொண்டு நின்று "ஓ! பிரபுவே! தேவரீரது திருநடனத்தைப் பார்ப்பதற்காக முந்தி விஷ்ணுவா லாராதிக்கப்பட்டபோது தேவரீர்(41) சான்னித்தியமாகித் தேவரீ ரருகினி லிருந்துகொண்டு படகவாத்தியம் முழக்கும் தொழிலை யருளினீரன்றே. ஆகையால் ஓ! பகவானே! தேவரீரது திருநடனத்தைப் பார்க்க மெத்த வாசைகொண்ட வடியேனு மந் நடன

த்தைக் காகூழ்கொள்ளும்படி யெந்தனைத் தாளம்போடும் தொழிலி லே ற்படுத்தி யிப்போது காத்தருளவேண்டும்.(42½) இல்லாவிடில் தேவரீர் திருநடனத்தைப் பார்க்க யான் வல்லவனில்லையே!(43) ஏனென்றால் கை தனிற் பெரம்புகொண்ட தேவரீர் கணங்களிடத்தி லடியேனுக்கு மிகுந் த பீதி யுண்டாகின்ற" தென, இவ்வாறு பிரம்மன் வசனத்தைக் கேட்டு ஸ்ரீ ஜகதீச னப்படியே நல்லதென்(44) றவருக் கங்குதானே யோர் மிக வும் பெரிதான தாளத்தை யருளிவிட் டந்தர்த்தான மடைந்தனர். அது முதற்கொண்டுப் பிரம்மனும் தாளம்போட்டுக்கொண்டே(45) ஸ்ரீநடரா ஜன் திருநடனத்தைப் பார்த் தானந்தித்துவந்தார். பிற கதேவிதமாய்ப் பிரம்மன் பிரம்மலோகத்தில் ஸ்ரீ சஙகரனைப் பூஜிக்கலாகையில்(46) பக வா னவர் முன்னில் ஸான்னித்தியமாகி மந்தகாசத்துடன் மொழிந்தரு ளியதாவது:— 'ஓ! பிரம்மாவே! உமககு வேண்டியதை யிப்போ திங்கு தந்தருளுகின்றோம்; அதனைச் சொல்வீராக' வென, (47) அதுகேட்டுப் பிரம்மன் 'ஓ! ஸ்வாமீ! உமைக்கு மித்திரனும் தேவேசனும் பகவானுமா கிய தேவரீர் தேர்மீது வீற்றிருக்கையில் சேவிக்க வெந்தனுக்கு மெத்த விருப்பமிருக்கின்றது.(48) ஓ! மகேசுவரா! திரண்ட கூட்டமதில் தேவ ரீரைச் சேவிக்க வெந்தனால் முடியவில்லை. மேலும் நந்திகேச்வரன் மு தலியவர்கள் கைதனிற் பெரம்புகொண் டடிக்கலாகின்றார்கள்.(49) ஆ கையால் ஓ! தேவேசா! தேவரீ ரிரதத்திற் கடியேனைச் சாரதியா யேற் படுத்தி யருளவேண்டு' மென, இவ்வாறு பிரம்மன் வசனத்தைக் கேட்டு ஸ்ரீ மகேசுவர னங்ஙனமே வர னருளிவிட்(50)டோர் கணநேரத்திற்கு ள் ளங்கே யந்தர்த்தான மடைந்தனர். பிற கதுமுதற்கொண்டு பிரமம னிரதஸாரதித்தன்மையை யடைந்து(51) ஸ்ரீ பிரபு பிரயாணப்படும் வே ளைதனில வேதங்களாகிய குதிரைகளை யோட்டினார். பின்னு மோர் சம யத்தில் முந்திப் பிரம்மன் கைலைக்கொடுமுடிதனில் ஸ்ரீ மகேசுவரனைப் பூ ஜைசெய்(52) தம் மகாதேவர் பிரசன்னமானபோது பிரம்மன் வேண்டி க்கொண்டதாவது:— 'ஓ! மகேசுவரா! தேவரீர் திருவருளால் விஷ்ணு வையும் * சகல லோகங்களையும்(53) யான் வாய்தனிற் போட்டுக்கொள் ளவும், வயிற்றினில் வைத்திருக்கவும், பிற கெந்த னபானத்துவாரத்தி ன் வழியாய் வெளிப்படுத்தவும்படியான திறமை யடியேனுக் குண்டாக வேண்டு'(54) மென்று ஸ்ரீ மகாதேவனைப் பிரார்த்தித்துக்கொண்டபடி யே யப்பேர்க்கொத்த வுத்தமமான வரனை யடைந்து பிரம்மன் முந்திவி

---

* முந்தி பிரம்மனுக்கும் விஷ்ணுவுக்கும் வாக்குவாதம் நேரிட்டபோது வி ஷ்ணுவானவர் பிரம்மனைத் தமது நாபிகமலத்தினின்று பிறந்தவனென் றிகழ்ந்த படியால் அதற்காக விப்பேர்ப்பட்ட வரனைக் கேட்டனனென்பது கருத்து.

ஷ்ணுவைச் சகல லோகங்களோடுமொன்ருய்ச் சேர்த்துச் சடிதியில் விழுங்கிவிட,(55) பிற்பாடு சகல லோகங்களாலும் பிரார்த்திக்கப்பட்டதன்பேரில் தம தபானமார்க்கத்தின் வழியாய் வெளிப்படுத்திப்போட்டுப் பிறகு ஸ்ரீஜகதீச னுக்கினையினு லவ் விஷ்ணுவையும் லோகங்களையும் முன்போல் சிருஷ்டித்துவிட்டனர்.(56) மேலும் பிரம்மன், மகாலிங்கத் திருவுருவம்கொண்ட ஸ்ரீமகேசுவரன் திருமுடியைக்கண்டேனென்று பொய்சொல்லிய (57) வப்போக்கொத்த தோடத்தைத் தொலைப்பதற்காகத் திருவண்ணுமலையென்ற புண்ணியக்ஷேத்திரத்தில் முந்தி ஸ்ரீ ஜகதீசனைப் பக்தியுடன் பூஜைசெய்து(58) பிறகச் சிவபூசையினுல் மகாபயங்கரமான வப்போக்கொத்த பாவத்தினின்று பரிசுத்தராகிச் சகலபுவனங்களையும் முன்போற் சோர்வின்றிச் சிருஷ்டித்துவரலானுர். (59) பின்னும் முந்தி யோர் தருணத்தில் பிரம்மன் ஸ்ரீசைலத்திற் சிவபூஜை பண்ணியப்போது பிரசன்னரான பரமகாரணராகிய ஸ்ரீ தேவேசனைப் (60) பூமிதனில் தண்டம்போல் தண்டனிட்டு வேண்டிக்கொண்டதாவது:— "ஓ! சுவாமி! பூர்வம் தக்ஷப்பிரஜாபதியின் யாகத்தில் தேவரீர் கணங்களெல்லாம் விஷ்ணுவின் கருடனுேடுகூட வடியேனுடைய பத்தும மகாசனத்தையு மன்னவாகனத்தையும் பெரும் தீதனிற் சுட்டுத் தீன்றுவிட்டார்கள்.(61-62) ஆகையால் ஓ! விசுவேசா! அடியேனுக்குப் பத்துமாசனத்தையு மன்னவாகனத்தையு மேற்படுத்தித் தந்தருளவேண்டும்; ஓ! ஜகதீசா! தேவரீருக் கிப்போது வந்தனம்செய்கின்றே" னென, (63) அப்படியே நல்லதென்று பகவான் பிரம்மனுக் கவ் வரனையருளிவிட்டுத் துரிதமா யந்தர்த்தான மடைந்தனர். பாட்டனுரான பிரம்மதேவரும் பிரம்மலோகத்திற்குப் போய்த் தேவர்களோடுகூடச் சுகமாய் வசித்துவந்தார். ($64\frac{1}{2}$) மேலும் பிரம்மன் வேதபுரிதனில் ஸ்ரீ அத்தியாப (வேதம் கற்றுவிப்போர்) கேசுவர சுவாமியைப் பூஜைபண்ணிப் பிற கம் மகேசுவரனிடமிருந்து சகல வேதங்களையு மவைகளி னங்கங்களையு மடைந்து அவைகளிற் கூறிய கருமங்களை யனுஷ்டித்துச் சகல ஸ்தாவர ஜங்கமங்களையும் சிருஷ்டித்துவரலானுர். (66) பிறகோர் சமயத்தில் பிரம்மன் முந்தி யேமகூடகிரிக்குச் சென் றங்குள்ள மகா லிங்கத்தி லழிவற்றவரும், பார்வதீபதியுமான ஸ்ரீமகேசுவரனைப் பூஜைசெய்ததின்மே லப்போது பிரசன்னரானப் பிராம்மணுதிபதியாகிய ஸ்ரீ லோகபிதாவை நோக்கிப்(68) பிரம்மன் பிறப்பிறப்புகளின் பயத்தினுல் பீடிக்கப்படலுற்றவராகி வான்கேட் டடைந்ததாவது:— "ஓ! பகவானே! மகாப் பிரளயகாலத்தி லிச் சராசரப் பிரபஞ்சங்களை யெல்லாம் விஷ்ணுவோடுகூடச் சமுகரித்தான தின்மேல் தேவரீருக்கு விஷ்ணு

விடத்தி லதிக தயவிருப்பதாய்க் காண்கின்றதே!(69½) எப்படியென்று லவாது தேகத்தி னெலும்பு, சாம்பல், மண்டையோடு, மயிர் இவைகளை (70) யாபரணமாய்த் தரித்துக்கொண்டு திருநடனம் செய்தருளிகின்றீ ரன்றோ! அதுபோலவே ஓ! ஜகதீசா! இப் பிரளயகால மதில் கடைசியா யடியேனது தேகத்தையும் தேவரீர் பெரும் லீலையால் சமுகரித்துவிட்டுப் பிற கெனது தேகத்தி னெலும்பு, சாம்பல், மண்டையோடு, மயிர் இவைகளையும்(72) திருவாபரணங்களாய்ப் பூண்டுகொண்டு நர்த்தனம் செய்தருளவேண்டும். ஓ! கருணைக்கடலே! அதனால் பிற கடியேன் மறு பிறப்பற்றுக் கிருதார்த்தனாகிவிடுவேன்.(73) ஓ! பரமேசா! தேவரீர்திரு க்கண்ணக்கினியாலுண்டாகும் மகா மயானத்தையடைந்து தன் சாம்ப பலைத் தேவரீர் திருமேனிக் கலங்காரமாய்க் கொள்ளப்பெற்றவரி லெவ ருக்குத்தான் மறுபிறப்புண்டு;(74) ஏனென்று லெப்பேர்க்கொத்தவனு க்காயினும், அவனது சாம்பலு மெலும்பும் தேவரீர் சடையில் விழுந்து வந்த கங்காநதிதனிற் போடப்பட்ட மாத்திரத்தில் மோக்ஷஸாம்பிராஜி யம் கிடைக்கலாகையி லவ் வெலும்பும் சாம்பலும் தேவரீர் திருமேனி தனிலே பற்றலாகப்பெற் றவரைப்பற்றி யாதுரைக்கவேண்டு" மென, (75) இவ்வறு விண்ணப்பத்தைக் கேட் டப்படியே நல்லதென் றருளி விட்டு ஸ்வாமி யந்தர்த்தானமடைந்தனர். பிறகு பிரம்மனும் மிகுந்த களிப்புற்றவராகி யக் காலத்தை யெதிர்பார்த்துக்கொண் டிருக்கையில் (76) மகாப்பிரளயகாலம் வந்தவுடன் ஸ்ரீசம்புவானவர் விஷ்ணுவோடுகூ டப் பிரம்மனையும் சமுகரித்துப் பிற கவர தெலும்புகளை மாலையா யலங் கரித்துக்கொண்டு(77) தமது சுயாதீனத்தையு மரும்பொருள் தன்மை யையும் திருவுளத்தில் நினைத்தருளிக்கொண்டேதி ருத்தாண்டவமாடினர். ஸ்ரீபகவானிவ்விதமாய்ப் பிரம்மனுக் கனுக்கிரகமருளி யவனை மோக்ஷ ஸாம்பிராஜிய மடைவித்தனர்.(78) ஓ! பிராம்மணோத்தமர்களே! பிரம்ம னிவ்வாறாய் ஸ்ரீபரமேசுவரனைப் பூஜைபண்ணி யவரிடமிருந் தடைந்த வரன்கள் யாவரால்தான் கணக்கிடத்தகும்? யான் சொன்னதெல்லா ம வைகளி னோ ரிலேசலேசமே. (79)

அறுபத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று

———

## உபதேசகாண்டம் சுகூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

இதன்பிறகு கேளீர் முனிவர்களே! தேவேந்திரனால் தனதபீஷ் டத்தைக்குறித் தெப்போதெல்லாம் சிவபூஜை செய்யப்பட்டதோ அ

வைகளி லேதாயினும் கொஞ்ச மெடுத்துச் சொல்லுகின்றேன்.(1) பூர்வத்தில் பிரதாபசாலியான விந்திரன் வலாசுரனைக் கொல்லக் கருதியவனாகி ஸ்ரீகாளஹஸ்தீசுவரசுவாமியைப் பூஜித்து உத்தமமான வரமையடைந்து(2) வலாசுரனை யுயுத்தமதில் வதைசெய்துபோட்டுப் பிற கிந்திராணியின் கணவனான அவ் விந்திர னத்தோடம் தீருவதற்காகப் பகவானை மறுபடி யங்கு பூஜைபண்ணிக் கிருதார்த்தனானன்.(3) பிறகோர் சமயத்தில் ஸ்ரீதுர்வாஸமாமுனிவரின் சாபத்தினா லவ் விந்திரனுடைய ஐராவதம், உச்சைச்சிரவசென்ற சிறந்த குதிரை, நினைத்த பொருள்களைத் தரவுற்ற சிந்தாமணி இவைகளும், சகல கற்பக விருக்ஷங்களும், காம்தேனுவும் சொர்க்கத்தினின்று நடுக்கடலில் விழுந்துவிட்டபோ திந்திரன் மிகவும் பயந்து நடுங்கியவனும்,(5) வறுமையின் துக்கத்தினால் தவிக்கவுற்றவனுமாகி ஸ்ரீவிருத்தாசலேசுவரசுவாமியை நன்றாய்ப் பூஜித்துப் பிற கவரது கிருபையினால் முன்போல் மறுபடியும் (6) கடலினின்று ஐராவதம், உச்சைச்சிரவசு, கற்பகவிருக்ஷங்கள், காமதேனு, சிந்தாமணி இவைகளையும் மற்றுமுள்ள சகல தேவசம்பத்துகளையும் முன்போ லவன் கைக்கொண்டான்.($7\frac{1}{2}$) பிற்பாடோர் சமயத்தில் கௌதமமுனிவரின் சாபத்தினா லிந்திரன் தேகம் முழுது மாயிரம் யோனிக ளுண்டாகிவிட்டபோ தவன் வெட்கமுற்றவனாகிக் காசிக்குப்போய் ஸ்ரீ விசுவேசுவரனைப் பூஜித்ததினா லாயிரம் கண்களைக்கொண்டவனாகிவிட்டான்.(9) ஒரு சமயத்தி லிந்திரன் பாதம் சில மாமுனிவர்களின்பேரிற் படலானபோ தவர்க ளவனை வேறு தேகத்தைக் கொள்ளும்படி சபிக்க,(10) அச் சாபத்தினா லவ னுடனே வேறு தேகத்தைக் கொண்டவனாகி மிகுந்த துக்கத்தோடு வெகுகாலம் போக்கிவிட்டுப் பிறகு கேதாரக்ஷேத்திரத்தில் ஸ்ரீபரமேசுவரனைப்(11) பூஜைபண்ணிப் பின்பு தன் முந்திய தேகத்தைக் கொண்டவனாகி ஸ்ரீசங்கரன் திருவருளா லிழந்துவிட்ட சொர்க்கலோகாதிபத்தியத்தையும் கைக்கொண்டான். (12) பிறகு விருத்திராசுரனைக் கொன்ற அவ்விந்திரன் புத்திரனை யடைவதற்காக முந்தி காஞ்சிபுரத்தில் ஸ்ரீசம்புவைப் பூஜித்து ஜயந்தனை மைந்தனாயடைந்து புத்திரவானாகி மிகுந்த மனக்களிப்புற்றவனானன்.(13) பிறகொருக்கா லிந்திரன் திருவாரூர் சென்று ஸ்ரீதேவேசனைப் பூஜித்து மேகத்தை வாகனமா யடைந்து(14) மேலும் ஸ்ரீபரமேசுவரன் கிருபையினா லுச்சைச்சிரவசென்ற குதிரையையு மடைந்தான். மேலுமவன் பூர்வத்தில் மகாபுண்ணியமான சிதம்பரத்தில் மகேசுவரனைப் பூஜித்து முடிவினில் கைலாசமடைந்து ஸ்ரீசங்கரனுக்குப் பிரியமுள்ளவனாகி யுத்தமமான கணாதிபதித்தன்மையை யடைந்தான்.(15-16) அதேவிதமாய் மற்றோரிந்திரனும் மகா புண்

ணியமான திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் ஸ்ரீ மகேசுவரனைப் பூஜை செய்து சிறந்த விந்திராணியை நாயகியாய்க்கொண்டு(17) பின்னும் தேவதாசிகளான இரம்பைமுதலியவர்களோடு சேர்ந்தியான கிரீடைகளை யனுபவித்தலையும் கைக்கொண்டான். இவ்விதமா யிந்திரன் ஸ்ரீதேவேசரைப் பூஜைசெய் தனேகம் பயன்களைப்(18) பெற்றிருக்கின்றான். அவைகளிற் சிற்சிலவற்றைமட்டிற் சொன்னேனேயன்றி யெல்லாவற்றையுமுரைக்க வெந்தனால் முடியாதே. பின்னு மிதேவிதமாய் மற்றத்தேவரகளாலும் சிவபூஜை செய்யப்பட்டிருப்பதைக் கூறுகின்றேன்.(19) ஓ! முனிவர்களே! பூர்வத்தி லோ ராதித்திய னனேக சிவக்ஷேத்திரங்களில் ஸ்வாமியைப் பூஜைபண்ணித் தன் தேகத்தின் மெலிதலையும் தன் முகத்தின் மிகுந்த விகாரத்தன்மையையும்(20) விட்டுச் சிவநேசனாகி மிகுந்த சுந்தர வடிவத்தை யடைந்தான். மற்றோ ராதித்தியனும் முந்தித் தக்கன்வேள்விதனில் வீரபத்திரரால் பிடுங்கப்பட்டுப்போன விருகண்களையும், பலவிதமாய்த் துதிசெய்யப்பெற்ற ஸ்ரீமகாதேவரைப் பூஜித்து மறுபடி யடைந்தான்.(21½) மற்றோ ராதித்திய னவ் வேள்விதனி லுடைக்கப்பட்டுப்போன பற்களைத் திரும்ப வடைந்தான்.(22) மற்றுமொருவன் சிவபூஜை செய்ததினாலே முந்தி விபசாரத்தன்மையா லோ ரிருடிபத்தினியோடு புணர்ந்த தோடத்தை விலக்கிக்கொண்டான்.(23) பின்னு மோ ராதித்தியனும் சிவபூஜையால்தான் சாயாதேவியோடு சம்போகித்த தோடத்தினின்று நீங்கினான். மேலு மிதேவிதமாய் மற்றுள்ளவாதித்தியர்களு மவரவரின் பாவங்களைப் போக்கடித்துப்போட்டு(24) நல்லவுருவம் சரீரம்முதலிய தம்தம் வேண்டுதல்களைப் பெற்றிருக்கிறார்கள்.

சந்திரனும் புராதனரான ஸ்ரீஜகதீசனைப் பூஜைசெய்ததினால்(25) தக்ஷப்பிரஜாபதியின் சாபத்தினின்று விடுபட்டுப் பின்னும் வீரபத்திரர் திருவடியா லுதையுண்ட மெய்யின் நோயினின்று மீண்டான்.(26) இவ்விதமாய்ச் சந்திரனும் சிவபூஜையின் மகிமையா லனேக துரிதங்களைத் தொலைத்துவெகு சந்தோடத்துட னெல்லாச் சுகங்களையு மடைந்திருந்து வருகின்றான்.(27) மேலு மெல்லாத் திக்பாலர்களும் ஸ்ரீசர்வேசுவரனைப் பூஜைசெய் தவரது கிருபாபலத்தினால் சகல துரிதங்களையும் போக்கடித்துச் சந்தானம் சம்பத்துமுதலிய வெல்லா அபீஷ்டங்களையும் கைக்கொண்டார்கள்.(28½) அதேவிதமா யஷ்டவசுக்களும் ஸ்ரீதேவாதிதேவனைப் பூஜை(29) செய்து பாவங்களைத் தொலைத்துத் தம் தம் வேண்டுதல்களை யடைந்திருக்கிறார்கள். அப்படியே அசுவினிதேவர்களும் சிவபூஜை செய்ததால்(30) சகல பாவங்களினின்றும பரிசுத்தர்களாகி வேண்டிய வபீஷ்டங்களைக் கொண்டிருக்கிறார்கள். மேலும் மகாத்துமர்

களான வேகாதச ருத்திரர்களும் ஸ்ரீ மகேசுவரனைப்(31) பூஜைசெய்து சகல பாவங்களையு மிழந்து வேண்டிய பயனைக் கொண்டிருக்கிறார்கள். தவிரவும் சப்தருடிமார்களும் ஸ்ரீ ஜகதீசனைப் பூஜைசெய்து துரிதங்களைத் தொலைத் தெல்லா வபீஷ்டங்களையும் கைப்பற்றியிருக்கிறார்கள். (32)

அறுபத்தொன்பதாவது அத்தியாயம

முற்றிற்று.

---

உபதேசகாண்டம் எ௰—வது அத்தியாயத்தினர்த்தம்.

மேலும் கேளீர்! தாணிதேவர்களே! உத்தானபாதரின் புத்திரனைத் துருவனென்னு மிராஜகுமாரனும், சூரியன் முதலிய வொன்பது கிரகங்கள், இருபத்தேழு நக்ஷத்திரங்கள், மேடம் முதலிய ராசிகள், விஷ்கம்பம்முதலிய யோகங்கள்,($1\frac{1}{2}$) காணங்கள், சகுனம்முதலிய வேழு ஸ்திரங்கள்,(2) வித்தியாதரர், கந்தர்வர், கருடர், உரகர், இரக்ஷர், இயக்ஷர், சித்தர் குஹியகர், கிம்புருடர்,(3) கின்னரர், பிசாசர், பிரகலாதன் முதலிய வசுரர்கள், மனிதர்கள், பசுக்கள், பறவைகள், மரங்கள்முதலிய (4) ஸ்தாவரஜங்கமங்களும், மற்றுமுள்ள ஜீவஜந்துக்களும், மலைகள், கடற்கள், கங்கைமுதலிய நதிகள் இவைகளும்,(5) வஸிஷ்டர்முதலிய பிரம்மருடிகளும், நாரதர்முதலிய தேவருடிகளும், அதநின் சகல ஆவரணங்களோடுகூட வெல்லாப் பிரம்மாண்டங்களும்(6) என்று மழிவற்றவரு மிலிங்கமூர்த்தியுமான ஸ்ரீ தேவாத்தேவனைப் பூஜித்துத் தம் தம் பதவிகளையும் மற்றுமுள்ள வபீஷ்டங்களையு மடைந்து(7) சகல துரிதங்களையு முதறிவிட்டுப் பரமசுகத்தை யடைந்திருக்கிறார்கள். ஓ! முனிவர்களே! அவரவர் தனித்தனியாய்ப் பூஜைசெய்து வேண்டிய வபீஷ்டங்களை யடைந்திருப்போரைப்பற்றிச் சொல்லலாயிற்று.(8) இதற்குமேல் பலராய்ச் சேர்ந்து ஸ்வாமியைப் பூஜித்ததினுற் சகல வனிஷ்டங்களையும் தொலைத்துத் தங்கள் தங்க ளபீஷ்டங்களை யடைந்திருப்பவர்களைப்பற்றி யா னிப்போது கூறுகின்றேன். அதனைச் சாக்கிரதையாய்க் கேட்பீர்களாக.($9\frac{1}{2}$) பூர்வத்தில் முறையே இரும்பு, வெள்ளி, பொன் இவைகளா லமைக்கப்பட்ட மூன்று பட்டணங்க ளிருந்தன.(10) அவைகள் பூமியிலொன்றும், நவோனத்தி லொன்றும், சொர்க்கத்தி லொன்றுமா யிருந்தன. அவைகளில் தாரகாசுரன் பிள்ளைகளான வித்தியுன்மாலி, தாரகாக்ஷன், பராக்கிரமசாலியான கமலாக்ஷன் என்றவர்களாகிய பெருமை பொருந்திய மூன்று மகா அசுரர்களு($11\frac{1}{2}$) மறுபத்தாறுகோடி யசுரர்களோடுகூட விளையாட்டாய்த் தேவர்களையெல்லாம் வென்றுபோட்டு மூ

வுலகங்களுக்கும் வாதை யளித்துக்கொண்டு வசித்துவந்தார்கள்.(12½) எப்படியென்றால் பூர்வத்தி லவர்கள் தங்களுக்கு நித்தியத்தன்மை வேண்டுமென்ற கருத்தோடு நான்முகத்தேவனைக் குறித்துக் கொடிய நியமத்துடன் தவம்செய்தார்கள்.(13½) அவர்களது தவத்தினால் சராசரங்களோடுகூடிய மூவுலகுகளும் தகிக்கப்பட்டன.(14) பிறகு புராதனரான பிரம்மன் தேவேந்திரன் முதலியவர்களாற் சூழப்பெற்ற சன்னிதியைக் கொண்டவராகி யன்னவாகனத்தி லேறிக்கொண் டவர்கள் முன்னிலையிற் சான்னித்தியமாகையி(15) லசுரர்களத் தேவனைப் பூஜித்து வரன் கேட்டதாவது:— 'ஓ! தேவாதிதேவரான நான்முகக்கடவுளே! தேவரீரை வந்தனிக்கின்றோம். கருணைகொண் டெங்களுக்கு நித்தியத்தன்மையைச் சடிதியா யருளவேண்டு'மென,(16½) பிற கதுகேட்டுப் பிரம்மனவர்களை நோக்கி யுரைத்ததாவது:— 'ஓ! அசுரராஜன் புத்திரர்களான வசுரோத்தமர்களே! நித்தியத்தன்மை நமக்கிருந்திட்டாலல்லவோ அதனையுங்களுக்கு நாம் கொடுக்கமுடியும்; ஓ! அசுரர்களே! நா முங்களுக்கு வேண்டியதைக் கொடுக்கச் சித்தமாயிருக்கினு மில்லாததைக் கொடுக்க யாம் வல்லவரில்லை.(18) ஓ! சிரேஷ்டர்களே! நாமும் நித்தியரில்லை. விஷ்ணுவுமில்லை. மற்றொருவருமில்லை; மேலும் ஸ்ரீ சிவபிரானையொழிய மற்றெல்லாத் தேவர்களு மனித்தியர்களே! (19) ஆனா லிவ்வுலகில் மிருத்தியுவை வென்றவரான அவ ரொருவர்தாம் நித்தியரென்று சொல்லப்படும். ஆகையால் ஓ! நமது பிரியமுள்ள அசுரர்களே! நீங்கள் மற்றோர் வரனைததான் கேட்டுக்கொள்ளவேண்டு' மென,(20) இவ்வாறு பிரம்மனது வசனத்தைக் கேட் டவர்க ளொருவரோடொருவராலோசித்துக்கொண்டதின்பேரி லவனை வந்தனித்து நித்தியத்தன்மைக்குச் சரியான மற்றோர் வரனைக் கேட் டடைந்ததாவது:— (21) 'ஓ! தேவேசா! மூன்றுசகோதரர்களாகிய வெங்களுக்கு முறையே பூமி, அந்தரிக்ஷம், சொர்க்கம் இவைகளில் பொன்னாலொன்று, வெள்ளியா லொன்று, இரும்பினாலொன்றுமாய் மூன்றுபட்டணங்க ளுண்டாகி(22) யவைக ளாயிரம்வருடங்களுக்குப்பின் பொன்றோடொன்று சேரவேண்டும். அப்போது யாவர், தம்மைத்தவிர வேறொன்று மிருக்கப்பெறாத வொரே யரும்பொருளென்று வேதங்களி லறியப்படுகின்றாரோ அப்பேர்க்கொத்தவரா லொரே கணத்தி லொரே பாணத்தினா லிம்முப்புரங்களும் சமுகரிக்கப்படில் (23½) ஓ! பிறப்பற்ற பிரம்மதேவா! அப்போதுதா னெங்களுக்கு நாசமுண்டாகவேண்டுமென்று தேவரீ ரிப்போ தெங்களுக்கு வரனளிக்க வேண்டும்.(24) தவிரவு மெங்களுக் களவற்ற வைசுவரியமும், நிகரற்ற பராக்கிரமமும், அப்பட்டணங்களிற் சகல வசுரர்களுக்கும் வசதிகளுமு

ண்டாகவேண்டும்.(25) ஓ! பிரபுவே! மேலும் எங்களது மூன்றுபட்டணங்களுக்கும் வேண்டியபடியெல்லாம் சஞ்சரிக்கும்படியான தன்மையுண்டாகவேண்டு" மென்றவர்கள் கேட்டுக்கொண்டபடியே யவற்றையெல்லாம் கொடுத்துவிட்டுப் பிரம்மன் தம் லோகம் சேர்ந்தவுடன்(26) தேவர்களின் பயத்தினால் மெலிந்துபோ யெங்கெங்கெல்லாமோ பதுங்கிக்கிடந்த வசுரர்களெல்லா மிச் சங்கதியைக் கேட் டோர் நொடிநேரத்திற்குள் வந்து தாரகன் மைந்தர்களான வம் மூன் றசுரர்களையும் புகழ்ந்து கொண்டாடி(27) யனேகம் வெகுமதிகளோடு தங்கள் பெண்களையு மவர்களுக்குக் கொடுத்துத் தங்கள் துக்கங்களையு மவர்களிடத்தி லறிவித்துப்போட்டுப் பிற கவ் வசுரர்கள் சுகமடைந்திருந்தார்கள். (28) பிற்பா டவர்கள் மாயையில் தேர்ச்சிகொண்டவனான மயனை நினைக்க, அவனுடனே மிகுந்த சந்தோடத்துட னங்கு வந் தவர்களோடு சேர்ந் தாலோசித்துப்(29) பிற கவர்களுக்காக விரும்பு, வெள்ளி, பொன் இவைகளால் மூன்று நகரங்களையும், அவைகளில் நவரத்தினங்களால் நிரம்பப்பெற்ற வனேகம் வீடுகள், பெரிய கோபுரங்கள், இரத்தினத்தோரணங்களா லலங்கரிக்கப்பெற்ற பற்பல் வீதிகள் இவைகளையு முண்டாக்கினன்.($30\frac{1}{2}$) அப்போ தம் மூவர்களும் மற்ற வசுரர்களோடுகூட வப் பட்டணங்களைப்பார்த்து(31) மயனைப் பலமுறை மெச்சிக்கொண்டாடி மிகுந்த சந்தோஷமடைந்தார்கள். பிற்பா டவர்க ளம் மயனையே தங்களுக்கு வேண்டிய விராகிதங்களைக் கேட்க,(32) அப்போது மயன் வித்யுன்மாலி முதலிய வம் மூவர்களையும் நோக்கி யுரைத்திட்டதாவது!—($32\frac{1}{2}$) "ஓ! அசுரேந்திரர்களே! ஆயிரமாண்டுகளுக்குப் பிறகு ஸ்ரீ தேவாதிதேவ ரொருவராலேயே ஓரேபாணத்தினால் நாசமடையும்படி நீங்கள் நித்தியத்தன்மைக்கொப்பான வரனையடைந்தது மிகுந்த புத்திதிறமைதான்.(34) என்றாலும் ஓ! அசுரர்களே! இதுவிஷயத்தைப்பற்றியா னொன்றுரைப்பதை நீங் கேட்கவேண்டும். என்னவென்றால் தேவர்களுக்கெல்லாம் முதன்மையான ஸ்ரீ பரமேசுவரன் துரிதமாய்ச் செல்லலுற்ற வம்புகளையும் உறுதியுள்ள வில்லையும் கொண்டவரென்றும், சகல வான்மாக்களுக்கும் நிதியானவரென்றும், ஜகதீசனென்றும், பொறுமையற்றவரென்றும், பக்தஜனங்களுக்கு மிகுந்த பக்தரும் பொறுமையுள்ளவருமானவரென்றும், மெத்தக் கூர்மைபொருந்திய வாயுதங்களைக் கொண்டவரென்றும் வேதங்களி லெங்கும் முறையிடப்படுவதா யுலகினி லறியப்படுகிறது.($35$-$36\frac{1}{2}$) ஆகையால் சகலப் பிராணிகளுக்கு மவைவரா நியமத்துட னெப்போதும் பூஜைசெய்வதே கடமை. (37) அவ்வா றம் மகேசுவரன் பூஜிக்கப்படில் சகலமான உபத்திரவங்கள், சத்துருக்கள் வி

யாதிகள் துஷ்டக்கிரகங்கள் இவைகள் நசிக்கலாகி மனதும் சந்துஷ்டிய டைகின்றது.(38) ஆகையால் நீங்கள் சகல பந்து ஜனங்களுடனும்கூட வப்பேர்க்கொத்த, முக்கண்ணரும் செழிப்பை விருத்திசெய்வோருமா ன ஸ்ரீஸர்வேசுவரனை யென்னேரத்திலு மிலிங்கவுருவத்தில் பூஜைசெய் யவேண்டும்.(39) உலகங்களுக்குச் சுகத்தையளிக்கலுற்ற ஸ்ரீசங்கர னவ் வாறு பூஜிக்கப்படி லுங்களுக் கிமிசையளிப்பவமல்லா மவராலே யி மிசிக்கப்படலாவார்கள். (40) அச் சிவபிரானே சகல ஜீவகோடிகளுக்கு ம் போகமோக்ஷங்களைப் பயனு யளிப்பவர். ஆகையால் நீங்கள் மெத்த வுருத்கொண்டவர்களாகிப் பக்தியுடன் ஸ்ரீசகதீசனைத் தினம்தோறும் லி ங்கமூர்த்தியில் பூஜைசெய்தால்($41\frac{1}{2}$) கேளீர்! அசுரர்களே! நீங்கள் மிகு ந்த ஐசுவரியங்களை யடைவதோ (42) டெக்காலத்திலும் வெற்றி யுங்க ள் கைவசம்தனிலே யிருக்கலாகு" மென, இவ்வா றவனது வசனத்தை க் கேட்டவர்க ளப்படியே நல்லதென்(43) றவ் வசுரர்க ளம் மயனைச் சிவலிங்கங்கள் கொடுக்கும்படி யிரந்து கேட்க, அப்படியே அம்மயனு மோர் கணநேரத்திற்குள் ளொவ்வொருவருக்கு மிலிங்கங்களை வெவ்வே று யமைத்துக்கொடுத்தான்.(44) பிற கசுரர்களெல்லாம் விபூதி ருத்திரா க்ஷங்களா லலங்கரிக்கப்பெற்றவர்களும், புறவிந்திரிய வுள்ளிந்திரியங் களி னடக்கமுற்றவர்களும், கோபத்தைச் சயித்தவர்களுமாகியவன் சொல்லியபடியே வீடுகள்தோறும் சிவார்ச்சனம் பண்ணிவந்தார்கள். ($45\frac{1}{2}$) மேலும் வித்தியுன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் இம்மூவர்களு ம் (46) வெகு சந்தோஷத்தோ டவனிடமிருந்து தங்களுக்குத் தகுதி யான லிங்கங்களைப் பெற்றுக்கொண்டு மகா சம்பிரமங்களுடன் தனித் தனியாய்ப் பூஜைசெய்துவந்தார்கள்.(47) எல்லோர்களும் வேதமோது வதில் முயன்றவர்களும், தவத்தினுற் பாவங்களை யெரிக்கலுற்றவர்களு ம், திருநீறு ருத்திராக்ஷங்களால் விளங்கலுற்ற மேனிதனைக் கொண்ட வர்களுமாகி(48) யிவ்விதமாய்ப் பூஜைசெய்துவந்த அவ் வசுரர்களுக்கு மெம்மேலு மைசுவரியங்கள் விருத்தியடைந்தன. சிவபூஜை செய்தலை யே கடையையாய்க்கொண்ட அவ் வசுரர்களுக்கு வேதமதிற் பிரசித்தி யாயிருப்பவையெல்லா முலகவின்பங்களும்,(49) கற்பகவிருக்ஷங்களே யவர்கள் வீட்டுக் கொல்லைகளி லிருக்கும் மரங்களும், காமதேனுக்க ளே யவர்கள் கொட்டிற்களிலுள்ள பசுக்களும்,(50) சிந்தாமணி ரத்தின ங்களே யவர்கள் வீட்டி னங்கணங்களிற் பதித்த கற்களுமாயின. சத்து ருக்களான தேவர்களுடைய விப் பண்டங்களெல்லா மிவ்விதமாய், சிவா ர்ச்சனம்செய்யு மசுரர்களின் வசத்தில் வந்துவிட்டன.(51) சங்கம் முத லிய நிதிகளே யங்கு சான்னித்தியமா யிருந்தன. அவ் வசுரோத்தமர்க

ளெல்லாம் பாடுவோர்களும், எக்களிப்போர்களும், கூத்தாடுவோர்களு மாகி(52) யவர்களுக்கு நித்தியோற்சவங்களும், நித்தியசம்பத்துகளும், நித்தியமங்களங்களு முண்டாயின. அவ் வசுரேசுவரர்களெல்லாம் தேர் இயானை குதிரைகளின் பேரி லேறிக்கொண்டு கோலாகலமாய் விளையா டிக்கொண்டும்,(53) விசித்திரங்களான நந்தவனங்கள், வாபிகள், தடாகங் கள், நதிகள், நதங்கள் இவைகளிலெல்லாம் கிரீடை செய்துகொண்டும் காலங்களைப் போக்கிவந்தார்கள்.(54) மேலு மவர்க ளமுதத்தை யன்ன மாய்க்கொண்ட தேவர்களாலும் சிறைபிடித்த தேவமங்கையர்களாலு மெப்போதும் தங்க ளூழியங்கள் செய்யப்பெற்றவர்களாகித் தங்கள் மனைவிகளோடு கிரீடித்துவந்தார்கள். (55) அவர்கள், சூரியமண்டலம், சந்திரமண்டலம், நக்ஷத்திரமண்டலம், பிரம்மலோகம், விஷ்ணுலோகம், பூலோகம், ஆகாயம், இந்திரலோகம், திக்பாலலோகம் இவைகளி லிச்சை ப்பட்ட விடங்களுக்கெல்லா மப் பட்டணங்களோடுகூடப் போய் வரு வார்கள்.(56-57) அப்போ திவ்வாறு சஞ்சரிக்கலாகும் பட்டணங்களுக் குக் கீழா யொவ்வொரு மார்க்கங்களிலு மகப்படலான ஜனங்களெல்லா ம் பயத்தினாற் பீடிக்கப்பட்டு மடியலானார்கள்.(58) அந்தக்காலத்தில் வி ஷ்ணு பிரம்மர் முதலிய தேவச்சிரேஷ்டர்களெல்லாம் தங்கள் தங்கள் லோகத்தைவிட்டு மகாமேருகிரிக்குச் சென் றொருவரோ டொருவர் 'ஓ! கோ! வரத்தினால் கர்வங்கொண்டிருக்கிற இவ் வசுரர்கள் நம்மா லெவ்வா று கொல்லப்படுவார்களோ' வென் றாலோசிக்கையி(59½) லப்போது வி ஷ்ணு வுரைத்ததாவது:— 'ஓ! தேவர்களே! அவ் வசுரர்கள் சிவார்ச்சன ம் பண்ணுகின்றார்கள். (60) லிங்கார்ச்சனம் செய்வோர்களை யாவரும் வெல்ல முடியாதன்றோ! மேலு மவர்களின் பெண்டிர்களோ மகா கற்பு டையவர்களும், கணவரையே தெய்வமாய்ப் பாராட்டியவர்களுமா யிருக் கின்றார்கள்.(61) ஆகையால்தான் மிகுந்த பலபராக்கிரமங்களைக் கொண் ட அவ் வசுரர்க ளொருவராலும் வெல்லப்படாத்தன்மையைக் கொண் டிருக்கிறார்க'ளென, அவரை நோக்கித் தேவர்கள் சொல்லியதாவது:— 'ஓ! கோ! அவ் வசுரர்கள் மிகவும் பக்தியற்றவர்கள். (62) மயனென்ற வோர் தச்சன் சொல்லைக் கேட் டவர்கள், சிவபூசை செய்கின்றார்களே யின்றி வேறில்லை. பக்தியின்றிப் பூஜித்தலானது சிவனுக் கதிகப் பிரீதியு ளதல்லவன்றோ!(63) ஆகையால் நாமெல்லோர்களு மிப்போது ஸ்ரீசதா சிவனை யியாகத்தினு லாராதித் ததினின்று சிவாக்கினியா லுண்டாகும் பூதங்களைக்கொண் டப் பட்டணங்களைச் சயித்துவிடுவோ' மென, (64) பிற கவர்களை நோக்கி விஷ்ணுவும் 'ஓ! தேவர்களே! அவர்க ளடைந்திரு க்கும் வரன்களை நீங்க ளறியவில்லை. ஒரே பாணத்தினு லவர்களுக்கு நாச

மே யின்றி மற்றப்படி யாகத்தினின் றுண்டாகும் பூதம் முதலியவைக ளா லொன்றும் முடியாது. (65) இப்படியிருக்கையில் ஓ! தேவர்களே! உபசத் (சாதாரணமா யெல்லாவித யாகங்களிலு மசுரர்களி னிடையூறு முதலியவைகளை விலக்குவதற்காகச் செய்யு மோர் கருமம்) தினுலுண் டாகும் பூதங்களைக் கொண் டவர்களை வெல்லலாகு மென்றேன் வீணய்ப் பிதற்றுகின்றீர்க ளென, அப்போ தவனை நோக்கித் தேவர்கள் 'ஓ! ஸ்வாமீ! யாகத்தினின் றுண்டாகும் பூதங்களால் யா மவர்களைக் கொல் ல முடியாவிடினு மப் பூதங்களா (66) லப் பட்டணங்களை முற்றுகை போட்டுச் சத்துருக்களை யிமிசித்துவந்தா லப்போது யா மவரவர் லோ கங்களில் சுகமா யிருக்கலா'(67) மென்று விஷ்ணு முதலிய வெல்லாத் தேவர்களு மாலோசித்துக்கொண்டதின்மேல் தேவர்களோடுகூட விஷ் ணுவானவர் சகல வேதங்களையும் கூவி(68) யப்போது உபசத்துக்களா ல் ஜயத்தை யருளலுற்ற ஜகதீசனைத் துதிக்க, அப்போது மகா பலசா லிகளான வனேகம் பெரும் பூதங்களுண்டாயின. (69) பிறகு தேவர்க ளப் பூதங்களைப் பார்த்து 'ஓ! பூதங்களே! நீங்கள போ யப் பட்டணங் களை யங்குள்ள வசுரர்களோடுகூட விழுங்கிவிடுங்க' ளென்று சந்தோ ஷத்துடன் கட்டளையிட்டார்கள்.(70) அஙஙனமே யப் பூதங்க,ளப் பட் டணங்களுக்குச் சென் றங்குள்ள வசுரர்களெல்லாம் திருநீறு ருத்திரா க்ஷங்களால் விளங்கலுற்ற திருமேனியைக கொண்டவர்களும், சிவார்ச் சனம் செய்தலையே தொழிலாய்க் கொண்டவர்களுமா யிருப்பதைக் கண்டு ஓ! கோ! கோ! அவர்களைச் சயிக்கக் கொஞ்சமேனும் திறமையில் லாமல் வெறும் குரங்குக்கூட்டங்கள்போல் தோப்புக்குச் சென்(72) ற ங்குள்ள பிலாப்பழங்களையும் மாம்பழங்களையும் பறித்துத் தின்னலாயி ன. அசுரர்க ளவைகளைக் கண்டவுடன் மண்ணுங்கட்டிகளாலும் தடிக ளாலு மடிக்க,(73) பிற கப் பூதங்களுக்கு மசுரர்களுக்கு முயுத்தம் நே ரிடலாகி யப் பூதங்கள் மகா பெரியவைகளாயினும் சிவாக்கினையால் நா சமடைந்தன.(74) பிற்பா டசுரர்க ளிது தேவர்கள்செய்த காரியம்தா னென் றறிந்து தேவலோகங்களுக்குப் போய் மிகவும் பெருங்கொள் ளையடித்(75) தங்கங்கிருந்த தேவர்களையெல்லாம் மிகுந்த வலிமைகொ ண்டடித்தார்கள். பிற கங்கிருந்த தேவர்களெல்லா மசுரர்களால் மிகவு ம டிபட்டவர்களாகிச்(76) சீக்கிரமாய் மேருகிரிக்கோடி யங்குள்ள தேவச் சிரேஷ்டர்கள் முன்பாக வச் சங்கதிகளைச் சொன்னார்கள். அதன்பிறகு தேவரெல்லாம் மிகவும் துக்கத்தினல் பீடிக்கப்பட்டவர்களாகி மேருகிரி யின் குகைக்குள்(77) ளிருந்துவந்தார்கள். அப்போது மற்றுள்ள வசுர ர்களோவென்றால் மிகுந்த சந்தோடத்தோ டப் பட்டணங்களில வசித்

துவந்தார்கள். பின்பு பிரம்மவிஷ்ணுக்கள்முதலிய தேவர்களெல்லா(78) மிச் சங்கதிகளை ஸ்ரீ மகேசுவரனிட மறிவிப்பதற்காகக் கைலாசத்திற்குப் போய்ச்சேர்ந்தார்கள். பிறகு விஷ்ணுவானவர் மற்றத் தேவர்களோடு கூட ஸ்ரீமகாதேவன் வாசற்காப்போர்களை வந்தனித்து மிக வாஞ்சையுடன் ஸ்ரீதேவேசனுடைய சமயத்தை வினவ,(79½) அதற்கவர்கள் ஓ! தேவர்களே! இப்போ துங்களுக்குச் சமயமில்லை; போய்விடுங்க' ளென, (80) அதுகேட்டுத் தேவர்கள் 'ஓ! ஓ! நமக்கு வேறு கதியில்லாதபடியால் தக்க சமயம் நேரும்வரையி லிங்கு சன்னிதியில்தானே காத்திருப்போ' (81) மென் றொருவரோடொருவ ராலோசித்துக்கொண்டு 'ஓ! ஹரஹரா, பிரபோ, சங்கரா, மகேசானு, சிவா, பரமேசுவரா' வென்(82) றிருகைகளையு முயரத் தூக்கிக்கொண்டு பரிதாபப்படத்தக்க குரலோடு மெழுந்தோடு முரக்க முறையிட்டார்கள். அப்போது துவாரபாலகத் தலைவர்களான கணுதிபர்க ளவ்வாறு கூவலுற்றப் பிரம்மவிஷ்ணுக்கள்முதலியவர்களை யெக்களிப்புடன் தடிகளால் மிகுதியா யடித்தார்கள்.(83½) அவ்வா றடிபட்டவர்களிற் சிலதேவர்கள் நான்குபக்கங்களிலும் பதுங்கியவர்களாகி (84) மெல்ல மெல்ல மிகவும் தெளிவுபொருந்திய மானஸமென்ற தடாகத்திற்குப் போய்ச்சேர்ந்தார்கள். அங்குதானேயிருந்த தேவர்களப்போது விஷ்ணுவை நோக்கிச் சொல்லியதாவது:—'ஓ! ஸ்வாமீ! இனிகாரிய மெப்படி நடக்கும்?(85) ஸ்ரீதேவேசன் சன்னிதியில் விண்ணப்பம் செய்ய நமக் கெப்படித் திறமையுண்டாகும்? நா மிங்கு நிற்பதை மகா பராக்கிரமசாலிகளான வாசற்காப்போர்கள் பொறுக்கவில்லையே!' யென, (86) அப்போது மிகவும் வியாகுலமுற்றவர்களான பிரம்மன்முதலிய தேவர்களை நோக்கி விஷ்ணு வுரைத்ததாவது:—'ஓ! தேவர்களே! நா மிங்கு சும்மாவிருந்தா லவர்க ளடிக்கவேமாட்டார்கள்.(87) அவர்கள் நா முரக்கக் கூவினதைக்கண்டே நம்மை யடிக்கின்றார்கள். பிரபுவின் வாசலில் நா மிரைந்தா லதனை யவர்கள் பொறுக்கவேமாட்டார்க' ளென, (88) இவ்வாறு விஷ்ணுவா லுரைக்கப்பட்ட வார்த்தை சரிதானென்று கொண் டப்போ தொருவரையொருவர் (இரையாதே யிரையாதே) யென் றதட்டிக்கொண்டு விஷ்ணுவை நோக்கி 'ஓ! ஸ்வாமீ! இனி நம் காரிய மெப்படி யாகிறதென்பதைப்பற்றி நீர்தான் புத்திசொல்லவேண்டு' மென்று வினவ,(89½) அதற்கு விஷ்ணு அவர்களை நோக்கி 'நீங்களெல்லோர்களும் மகா சமர்த்தர்களானதால் நீங்களே(90) புத்திசொல்வீர்கள்; எந்தனுக் கிப்போ தொன்றும் தோன்றவில்லை' யென, பிறகவர்கள் வெகுநேரம்வரையி லொருவரோடொருவர் தம் தம் அபிப்பிராயத்தைத் தனித்தனியாய்ப் பேசி(91) நிச்சயித்துக்கொண்டதன்மேற் சபைதனி

லச்சுதனை நோக்கித் துரிதமா யுரைத்ததாவது:— 'ஓ! விஷ்ணுவே! அவ் வசுரர்களெல்லாம் சிவபூஜையில் முயன்றவர்களும், திருநீற்றினு லலங்கரிக்கப் பெற்றவர்களும், (92) உருத்திராக்ஷ மாலைகளை யாபர ணங்களாய்ப் பூண்டவர்களும், லிங்கார்ச்சனத்தையே தொழிலாய்க்கொ ண்டவர்களும், வேதமோதுவதில் முயன்றவர்களும், யாகம்செய்வோ ர்களுமா யிருக்கின்றார்கள். (93) ஓ! சுவாமீ! இதிலும் விசேஷமா யவர்களுடைய ஸ்திரீகளெல்லாம் மிகவும் கற்புடையவர்கள். உலகினி லெவர்களுக்கு ஸ்திரீகள் கற்புடையவர்களா யிருக்கின்றார்களோ, எவர் விபூதி ருத்திராக்ஷங்களை யாபரணங்களாய்ப் பூண்டு சிவபக்தர்களா யிருக்கின்றார்களோ அவர்க ளொருவராலும் வெல்ல முடியார்கள்.(94½) ஆனால் கேளீர்! விஷ்ணுவே! நீருமது மாயையின் திறமையா லவ் வசுரர்களைச்(95) சிவலிங்கார்ச்சனத்தை விட்டுவிடும்படி செய்வீரா யி னவர்களை ஸ்ரீ சிவபிரானே சமூகரித்துவிடுவார். இல்லாவிடில் நாம் வசிப்பதற்கு மேருகிரியின் குகை யிருக்கவே யிருக்கின்றதென்பது நிச்சயமாய்த் தீர்ந்திருக்கின்ற'(96) தென்று தேவர்கள்சொல்லலாகையி லவர்களுக்கு விஷ்ணு பதிற் சொல்லியதாவது:— 'ஓ! தேவர்களே! இது எனக்கு மிகவும் யோக்கியமென்றே தோன்றுகின்றபடியால் யானங்ஙனமே பிரயத்தினப்படுகின்றேன்.(97) ஆகிலும் நீங்க ளென் சொற்படி யச் சகதீசனைத் தவத்தினு லாராதித்தா லவர் நிச்சயமா யவர்களைச் சமூகரித்துப்போடுவா'(98)ரென் றவர்களுக்குச் சொல்லிப்போட்டம் மாயாவியானவர் நாரதனை யழைத்துக்கொண்டு திரிபுரத்துக்குப் போ யங்கு தா மோர் புத்தனும், நாரத ரவருக்குச் சீடராயுமாகி (99) யவ் விருவர்களும் கேவலம் மாயாமயமான நூற்களாலும், இனிமையான வார்த்தைகளாலும், விசித்திரமான வேஷத்தினாலும், அநேகவிதமான போஜனம் முதலியவைகளாலு மவ் வசுரக்குடிகளை யோர் கணநேரத்திற்குள் புத்தி கலங்கச் செய்துவிட்டார்கள்.(100½) மேலுமவர்கள் பற்பல மாயைகளின் திறமையா லங்குள்ள கற்புடைய ஸ்திரீகளுக்(101) கனேக விரத்தினங்களையும், நேர்த்தியான வாபரணங்களையும் காட்டி வார்த்தைகளாலவர்களின் கற்பையும் நாசம் பண்ணிவிட்டார்கள். (102)

எழுபதாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் எக—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அசுரர்க ளப்பேர்க்கொத்த விஷ்ணு நாரதர்களைக் கண்டு மாயையினுல் மோகிக்கப்பெற்றவர்களாகி

ப் புத்தி கெட்டுப்போ யவர்கள்மீது மிகவும் நேசம்கொண்டவரானார்க ள். (1) பிற கசுரர்கள் விஷ்ணுவுக்குச் சீடரா யிருந்த நாரதனை யிரகசிய மா யழைத்து 'ஓ! ஐயா! இவர் யார்? எங்கிருந் திங்கு வந்திருக்கின்றார்? (2) எங்கள் பாக்கிய வசத்தினு லிவ ரிப்போ திங்கு வந்ததற் கென்ன காரணம்?' என, அதற்கவர் மெத்தக்களிப்புற்றவராகி யவர்களுக் குத்தர முரைத்ததாவது:— 'ஓ! அசுரர்களே! இவர் வசிக்குமிடம் சக்கிரவாளகி ரி,(3) இவ ரோர் தடவை யுலகங்களைச் சுற்றிப்பார்க்க விருப்பம்கொண் டு புறப்பட்டு வந்திருக்கிறார். பொறியடக்கமுற்ற விப் புத்தர் தமக்கெ ங்கு மனம் பிடிக்கின்றதோ அங்கிருந்துகொண்டு தம் வித்தையின் மகி மையை யெல்லோர்களுக்கும் தெரிவிப்பார்.($4\frac{1}{2}$) இவரிடத்தி லுபதே சம்பெற்றவரெல்லாம் தங்க ளபீஷ்டங்கள் கைகூடபெறுவார்க' ளென, (5) இதனைக் கேட்டவுடன் சில ரப் புத்தரின் பக்கமதிற் சூழ்ந்து நிற்க, அம் மாயாவியு மவர்களுக்கு வேண்டிய பல வபீஷ்டங்களைக் கொடுத்து மோகிப்பித்தார்.(6) உடனே யவர்க ளவரது மகிமையா லுண்டான வி சித்திரங்களாகிய பற்பல வஸ்திரங்கள், ஆபரணங்கள், தனங்கள், தானி யங்கள், அழகிய பெண்கள், இரத்தினங்கள் இவைகளை வாரியெடுத்துக் கொண்டு போகையி(7) லந்த ஜனங்களை மற்றவர்கள் பார்த்துப் பார்த் தவர்களும்போயவரைச் சூழ்ந்துநின்றார்கள். அப்போ தப் புத்தாசிரிய ர் வெகு சந்தோஷத்துட னவர்களுடைய மனோபீஷ்டங்களையும் கொடு த்தார்.(8) பிற்பா டசுரர்கள் நாரதனை மறுபடியு மாதரவுட னிரகசியமா யழைத்து 'ஓ! ஐயா! இவருக்குச் சீடரா யிருப்பவர்களுக்கு மிப்படிப்ப ட்ட வற்புதமான சித்திக(9) ளுண்டாகுமோ, இல்லையோ' வென்றவர்க ள் கேட்கும்போ தந் நாரத ரவர்களுக்குப் பதிலுரைத்ததாவது:– 'கே ளீர்! அசுரர்களே! அவருடைய சீடர்களுக்குள் யான்தான் புத்தியில்லா மூடன்.(10) எனக்குக்கூடஸித்திகளுண்டா யிருக்கின்றன. அவைகளை யி தோ ஒரு நொடிக்குள் காட்டுகின்றேன்; பாருங்க' ளென்று சொல்லிப் போட்டுத் தம் குண்டிகையினின்று கொஞ்சம் சலமெடுத்துக்கொண்டு பொறிகளை வசத்திற்கொண்ட வந் நாரதர் மனதினுல் நினைத்தமாத்திர த்தி(11) லங்கு பிரம்மவிஷ்ணுக்களும் மற்றுள்ள சகல தேவர்களும் தோன்றி நிற்க, அப்போ தவர்க ளவ் வாசிரியனை யாதரவுடன் தண்ட னிட்டார்கள்.(12) பிற்பாடு சீடரான நாரதர் பிரம்மன் முதலிய வத் தே வர்களை யோர் கணமாத்திரத்தில் மறைத்துப்போட்டுத் தம் மகிமையா ல் வருவிக்கப்பட்ட வமுதத்தை யசுரர்களுக்கு மிகுதியாய்க் கொடுத்து ப் பின்னு மவரவர் விரும்பியவைகளையும் கொடுத்து($13\frac{1}{2}$)மெம்மேலு ம வ் வசுரர்களுடைய புத்தியை மாயையால் மோகிப்பித்தார்.(14) அப்

போ தசுரர்களெல்லாம் தாங்களு மவருக்குச் சீடராகவேண்டுமென்ப தைப் பிரார்த்திக்க, நாரத ரச் சங்கதிகளையெல்லா மாசிரியரிடத்திற் சந்தோடமா யறிவித்(15) தவரைப் பலமுறை வேண்டிக்கொண் டவ் வசுரர்களையெல்லாம் சீடர்க ளாக்குவித்தார். பிற காசிரியரு மவர்களுக்குத் தீக்ஷைசெய்வித் துடனே சிவபூஜைகளை விட்டுத் தொலைக்கும்படி செய் (16) தவர்களுக் கவ ருபதேச மருளினதாவது:— "ஓ! அசுரர்களே! நீங்கள் நம்மையே ஆராதிக்கவேண்டும். நமது திருநாமம் 'புத்த' னெனப் படும்; நம் திருநாமத்தின் ஜபத்தையே நீங்கள் செய்யவேண்டும்.(17) நம்மைப் பூஜித்தல்தா னுங்களுக்கு வேண்டிய பயனைக் கொடுக்கத்தக்க தாகும்; ஓ! சீடர்களே! இம்மையி லெது பிரத்தியக்ஷத்தில் காணப்படுகின்றதோ அதுதா னுண்மையேயின்றி மறுமையிலுள்ள தென்பதெல்லாம் வெறும் பொய்யே!(18) சிவபூஜைசெய்யவேகூடாது: திருநீ றுருத்திராக்ஷங்களைத் தரிக்கவே தகாது. வேதத்திற் கூறியதெல்லாம் வெறும் பொய்யே! (19) இவைகளையெல்லா மெவர் விட்டுத்தொலைக்கின்றீர்களோ அவர்களே நம் சீடர்களாகலாமேயின்றி ம்ற்றவர் தகார். அப்பேர்க்கொத்தவர்களுக் கெவ்விதத்திலும் இம்மையினின்பங்கள்கிடைக்கவே மாட்டா"வென, இவ்வா றவரது திருவாக்கினு லவ்வெல்லோர்களும்சைவசமயத்திற்குரிய சிவபூஜை, உருத்திராக்ஷம், திருநீறு இவைகளையெல்லாம் விட்டுவிட்டார்கள்.(21) தவிரவு மங்குள்ள கற்புடைய மங்கைமார்களெல்லாம் நாரதரால் புத்திகலங்கப் பெற்றவர்களாகி மோகத்தினு லெப்போதும் தங்கள் சுகத்திற் கிசைந்தபடி பரபுருடர்களைத் தேடத்தலைப்பட்டுவிட்டார்கள்.(22) மேலு மவர்களும் சைவசமயாசாரங்களை விட்டுப்போட் டங் நாரதரின் மாயையினு லுண்டான வஸ்திராபரணங்களாலலங்கரித்துக்கொண்டு வீட்டுச் சுவர்களையும் வாருகோல்களையும் பூஜைசெய்துகொண் டிரவும் பகலுமாய் விபசிசாரம்பண்ணி வரலானுர்கள். பிறகு புத்தவேடம்கொண்ட விஷ்ணு நாரதரை நோக்கி வினவியதாவது:—(24)'ஓ! முனிவரே! இப்போதசுரர்கள் முழுதும்நமது மாயையிலகப்பட்டுவிட்டார்களா! மேலுமவர்கள் பெண்டீர்களும் நமதுமாயையால்மோகிக்கப்பெற்றவர்களாகி யவிசாரியடத் தலைப்பட்டுவிட்டார்களா'வென,(25) இவ்வாறவரால் வினவப்பட்டபொழுது நாரதரவரை வந்தனித்துத்தாமுரைத்ததாவது:— 'ஓ! ஸ்வாமீ! மூன்றுபட்டணங்களிலும் பட்டணத்துக்கொவ்வொருவர் நீங்கலாக வெறிந்துபோட்டவர்களானமற்றவசுரர்களெல்லாம் நமது மாயையால் மிகவும் மோகிக்கப்பெற்றவராகிவிட்டார்கள். $26\frac{1}{2}$)அம்மூவர்களாகியபரமயோகி,சீலபார்,விரக்தயோகிஇவர்கள்மகாசிவ

பக்தோத்தமர்கள்.(27½) ஸ்ரீபரமேசுவர னருளுக்குப் பங்காளிகளான, சி
வபக்தி செய்தலையே தொழிலாய்க்கொண்ட விம் மூன்றும காத்துமர்க
ளும் உபமன்னியு, பிருகு, ததீசர், அகஸ்தியர் இவர்களினு மதிகப் பெ
ருமைபொருந்தியவர்கள்.(29) தாமரைத்தண்டு நூல் யானையைக் கட்ட
மாட்டாததுபோல் நமது மாயை யவர்கள்மீது செல்லமாட்டா" தென,
இவ்வாறு நாரதரா லுரைக்கப்பட்ட வசனத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீ
ஹரி மனதினு லவர்களுக்கு வந்தனம் செய்துபோட்டு மற் றசுரர்களை
நோக்கித் திருவாக்குரைத்ததாவது:— 'கேளீர்! அசுரர்களே! நம் பிரிய
முள்ள சீடர்களும், ஐசுவரியத்தை யிச்சிப்பவர்களுமான நீங்கள் நமது
சொற்படி யம் மூன்றுபெயர்களுடனும் பேசக்கூடாது.(30-31) மேலு
ம் சிவபூஜைசெய்வதில் முயன்றவர்களான வம் மூவர்களுடனும் நீங்கள்
கலகம் செய்யாதீர்க' ளென்று ஸ்ரீமகாவிஷ்ணு தம் மாயையா லெல்லோ
ர்களையும் மோகிப்பித்துவிட்டுத்(32) தமது மற்றோ ரமிசத்தைப் புக்தி
யை மோகிப்பிக்கலுற்ற வோர் புத்தனு யங் கேற்படுத்திப்போட்டு நார
தனை யழைத்துக்கொண்டு திரிபுரத்தினின்று புறப்பட்டுச் சென்றனர்.
(33) பிற்பாடு விஷ்ணுவானவர் தேவருடியான நாரதரோடுகூடக் கைலை
கிரியி லேறக் கருதியவராகி யதனருகிற் போகையி லவர் பாவம் சேர்ப்
பெற்றபடியால், பாவம் செய்தவர்களால் கிட்டப் போகக்கூட வசாத்தி
யமான வக் கிரிராஜன்மீ தேறுவதற்கு முடியவில்லை.(34½) பிறகு விஷ்
ணு ஓ! கோ! சிவனேசர்களான இவ் வசுரர்கள் நம்மால் தேவகாரியார்த்
தமாய் விபூதி ருத்திராக்ஷம் சிவபூஜை முதலியவைகளை விட்டுவிடும்படி
செய்யப்பட்டார்களல்லவா. (35½) அதனுல்தா னிப்போர்க்கொத்த மகா
தோடம் நமக்கு நேரிட்டுவிட்டதென்பதிற் சந்தேகமில்லை. (36) ஏனெ
ன்றால் ஸ்ரீகைலாஸமானது பாவமுள்ளவர்களால் நினைக்கப்படக்கூடமுடி
யாதன்றோ' வென்று ஸ்ரீகேசவ னத் தோடம் தீருவதற்காக ஸ்ரீஜகதீச
னைக்குறித்து(37) நாரதரோடுகூட அவ் வீசனை மனதினில் தியானித்து
க்கொண்டு கொரமான தவத்தைச்செய்தனர்.(37½) பிற்பா டுலகங்களு
க்குச் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீசங்கரன் பிரசன்னராகி(38) நாரதரோ
டுகூடிய விஷ்ணுவை நோக்கி மேககர்ஜனம்போன்ற கம்பீர வாக்கினுல்
மொழிந்தருளியதாவது:— "ஓ! கோ! மூடர்களே! சீ! சீ! தேவர்களின்
காரியார்த்தமாயாயினும் நீங்கள் கொஞ்சமேனும்(39) சங்கையின்றி நம
தடியார்களைச் சைவசமய மார்க்கத்தை விட்டுவிடும்படி செய்துவிட்டீர்க
ளல்லவா? ஆகையால்தா னுங்களால் கைலைமீதேற முடியவில்லை.(40) எ
ன்றாலும் ஓ! விஷ்ணுவே! நீர் மானசமென்ற தடாகத்திற்குச் சென்று
தேவர்களோடுகூடத் தேவச்சிரேஷ்டர்களின் காரியத்தை நிறைவேற்ற

லாவீ'' ரென்று திருவாக்குரைத்துவிட் டந்தர்த்தானமடைந்தனர்.(41)பி றகப்படியே அவர்க ளத் தடாகஞ் சேர்ந் தங்குள்ள தேவர்களால் மிகு தியா யுபசரிக்கப்பட்டதன்பேரி லசுரர்களின் திரிபுரத்தில் நடந்த சகல விருத்தாந்தங்களையும் சொன்னதாவது:—(42) “ஓ! தேவர்களே! அசுர ர்கள் நமது மாயையினால் சைவசமயாசாரங்களை விட்டுவிட்டார்கள். ஏ னென்றால் நமது நல்ல அதிருஷ்டத்தினால் மயனும் சுக்கிரனும் சிவாக்கி னியா லொருவரோடொருவர் சண்டைபோட்டுச் சாபமிட்டுக்கொண் ட ச் சாபந்தீருவதற்காக ஸ்ரீபரமேசுவரனைக்குறித்து மிகுந்த தவஞ்செய்ய க் கருதியவர்களாகி(43-44) கேளீர்! தேவச்சிரேஷ்டர்களே! இமயகிரிக்கு த் தவஞ்செய்யப் போய்விட்டார்கள். அவ்வா றவ் விருவரு மம் முப்பட் டணத்திலிருக்கச் சந்தர்ப்பமில்லாத்தினால்தா னவ் வசுரர்கள் நமது மகா மாயையாகிய வலைக்குள் ளகப்படலானார்கள்.(45) ஆகையால் நா மெல் லோர்களும் சிரத்தையுட னிப்போ திங் கொன்றாய்ச் சேர்ந்து என்றும அழிவற்றவரான ஸ்ரீசாம்பமூர்த்தியை யருள்புரிவிப்போ'' மென்று ஸ்ரீநா ராயணன் பிரம்மன் முதலிய வெல்லோர்களுக்கும் திட்டஞ்சொல்லிவிட் டுத் தா மத் தடாகத்தின் ஜலத்தில் முழுகிக்கொண்டு(47) ஜலத்துக்குள் ளிருந்தபடியே ஸ்ரீ ருத்திர மகா மந்திரங்களை ஜபம்பண்ணினர். பிர ம்மன் முதலிய தேவர்களு மவ் விஷ்ணுவைச் சூழ்ந்து நின்று (48) கைகளைத் தூக்கிக்கொண்டு நடு ஜலத்திலிருந்து மிகுந்த கொடிய தவ த்தைச் செய்தார்கள். பிற்பாடு சந்திரகலையை யுச்சியிரத்தினமாய்ப்பூண் ட ஸ்ரீ பகவான்(49) தேவியுடனும் கணதிபர்களுடனு மத்தேவர்களின் முன்னிலையில் ஸான்னித்திய மருளினர். அப்போ தெல்லோர்களும் சந்தோடத்தினால் மயிர்கள் சிலிர்க்கப்பெற்றவர்களாகி ஸ்ரீ மகாதேவரை த் தோத்திரஞ் செய்ய,(50) ஸ்ரீசந்திரசேகர னத் தேவச்சிரேஷ்டர்களை நோக்கி மொழிந்தருளியதாவது:— “ஓ! தேவர்களே! நீங்கள் பொறிய டக்கமுற்றவர்களாகித் தவத்தினால் நம்மை மகிழச்செய்துவிட்டீர்கள். (51) இனி நீங்கள் தாமதமின்றிப் பாசுபத (விரஜாகம முறைப்படி வி பூதியுண்டுபண்ணி தரித்துக்கொண்டு சிவாராதனம் செய்தல்) மென்னு ம் விரதத்தைச் செய்யுங்கள். சந்தேகமின்றி யதிசீக்கிரத்தி லுங்கள் ம னவிருப்பம் நிறைவேறிவிடு'' (52) மென்று சந்திரசேகரனான தேவேச ன் திருவாக்குரைக்கும்போது தடாலென்று மடிமீதிருந்த வடிவேலன் தி ருக்கூத்தாடினார்.(53) அப்போது லோகமாதாவானவள் முக்கண்ணரா ன ஸ்ரீ தேவேசனை யோர் நீலோற்பல மலரினால் புன்னகைப்புடன் புய த்தினில் தட்டி(54) 'ஓ! புத்திரவான்களில் மெத்தச் சிறந்த மகாதேவா! நம் குமரேசன் நர்த்தனம் செய்வதைப் பார்க்கலாவீ' ரென, இவ்வாறு

தேவி யுரைத்த வார்த்தையினால் ஸ்ரீசம்பு நர்த்தனம்செய்ய மப் புத்திர னைத் தமது திருமார்பினில் தூக்கிவைத்துக் கைகளால் தாளம்போட்டு க்கொண்டு 'ஓ! பாலகா! இப்போது நர்த்தனம் செய்' யென,(55½) பிற கு விளையாட்டுகளுக் கிருப்பிடமான வப் பாலகரும் ஸ்ரீஜகதீசனது மார் பின்மீது திருக்கூத்தாடினர்.(56) சருவலோகாதிபதியால் 'நர்த்தனம்செ ய்' யென்று திருவாக்கருளப்பட்டபடியா லப்போது சகல ஜகங்களும் கூத்தாடத் தலைப்பட்டன. ஓ! கோ! ஸ்ரீஜகதீசனுடைய வாக்கினை மூவு லகுகளிலும் யாவரால் மீறத்தகும்.(57) விஷ்ணுப்பிரம்மர் முதலிய தே வர்களெல்லா முள்ளம் பரவசம்கொண்டு கூத்தாடினர்கள். பிற்பா டத் தாய்தந்தைய ரிருவரும் மிக மகிழ்ச்சிகொண்டவர்களாகிக் குழந்தையை யொருவரோடொருவர் கட்டியணைத்(58) துச்சிமீது முத்தமிட்டுக்கொ ண்டதன்மேல் ஸ்ரீபரமசிவன் தம திருகைகளாலும் செல்வக் குழந்தை யைத் திருமார்பின்மீ தணைத்துக்கொண்டபடியே தேவியோடுகூட வந் தர்த்தானமாகி மெத்தச் சந்தோடத்துடன் தம் மந்தப்புர மடைந்தனர். (59) பிற்பாடு பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் துக்கமுற்றவர் களாகி யொருவருக்கொருவர் பேசிக்கொண்டதாவது:— 'ஓ! கோ! இப் போ தக்ஷர்களெல்லாம் மகா பாக்கியசாலிகளே!(60) ஏனென்றால் நாம் ஸர்வலோகேசுவரனைக் கண்களால் கண்டும் நமது காரியம் முடியவில்லை யே! ஆகையால் நா மெல்லோர்களும் ஸ்ரீதேவேசனு லாக்கினை யருளப் பட்டபடி பாசுபதவிரதத்தை முடிக்கலாவோ"(61) மென்று சொல்லிமி குந்த சிரத்தையோடு விரஜாஹோமத் திருநீற்றினு லலங்கரித்துக்கொண்டு சிவாராதனம் செய்து மங்களகரமான பாசுபதவிரதத்தை முடித்தார்க ள்.(62) பிற்பாடு ஸ்ரீபரமாத்துமாவு மிதனைத் திருவுளத்தில் நினைத் தவ ர்கள் செய்த பாசுபத விரதத்தினால் மகிழ்ச்சிகொண்டவராகிக் கணாதிப ரான நந்திகேசுவரனுக் கச் சகதீச னுக்கினை யருளியதாவது:— (63) 'ஓ! நந்தி! முப்புரங்களைச் சமுகரிப்பதற்காக வேண்டிய கருவிக ளொன்று மில்லாதபடியால் நீ போய்த் தேவர்களிடத்தில், இரதம், பாணம், தனு சு, இவைகளையும், பின்னு முயுத்தத்திற்காக வேண்டிய மற்றுமுள்ள க ருவிகளையும் சீக்கிரமாய்ச் சித்தப்படுத்தும்படி சொல்லி வரலாவா' யெ ன, (64½) அப்படியே பாக்கியமென்று நந்தி யுடனே புறப்பட்டுப்போ ய் ஸ்ரீசம்பு மொழிந்த திருவசனங்களை யுரைத்துத் தம் வார்த்தையால் தேவர்களைக் களிப்பித்துப்போட்டுத் திரும்பி யந்தப்புரத்திற்கு வந்து விட்டார். நந்திகேசன் சென்றவுடன் தேவர்கள் ஸ்ரீசம்புவுக்கு வேண் டிய வியுத்தக் கருவிகளான(66) தேர், பாகன், குதிரைகள் அம்பு, பெரி தான தனுசு இவைகளைப்பற்றி நினைத்து வெகுநேரமளவு மொருவரோ

டொருவர் ஆலோசித்துப் பார்த்ததில்(67) ஸ்ரீ ஜகதீசனுக்குத் தகுதியான பெரியவில் தங்கமயமான மேருகிரிதானென்றும், அதற்குத் தக்க ஞாணு திசேடனே யென்றும் தீர்மானித்துவிட்டு வாயுதேவனைச் சாத்தி னிரக்கையும், அக்கினியைக் காம்பும், சந்திரனை யுடலும், விஷ்ணுவைக் கணையின்முனையுமா யிப்பேர்க்கொத்த மகா மகிமைபொருந்திய நான்கு தேவர்களையு மோர் பாணமாயும், (68½) விந்தியகிரியை யப்பேர்க்கொத்த மகானுபாவரின் மகா பெருமைபொருந்திய தேரினச்சும், கேஸரகிரியை யவ் வச்சுக்கு மேற்பாகத்திலான விட்டமும், பூலோகத்தை யவ் விட்டத்திற்கு மேற்பாகமான வாசனமுமா யேற்படுத்தினார்கள். (69½) பேராகாயமே அவ் விரதத்தி னிடைவெளியாயிற்று. சந்திர சூரிய ரதின் சக்கிரங்களானார்கள்.(70) பரிசுத்தம்பொருந்திய உருக்கு, இயஜுசு, ஸாமம் அதர்வணம் முதலிய வேதங்களே யதின் குதிரைகளாயின. மேலும் வஸிஷ்டர் முதலிய முனிச்சிரேஷ்டர்களெல்லாம் சொத்திவாசனம் (மங்களவாக்குகளையுடைய வேதங்களை யோதல்) செய்வோர்களும்,(71) கின்னரர், இயக்ஷர், ஸித்தர், கிம்புருடர் இவரெல்லாம் கட்டியக்காரர்களும், மற்றுள்ள கந்தர்வர், கருடர், சாரணர் முதலியவர்கள் கவிராயர்களும்,(72) எட்டுக்குல பருவதங்கள், மகாநாகங்கள், சமுத்திரங்கள், மேகத்திரள்கள் இவையெல்லா மவ் விரதத்தின் மேல்விமானம், இரத்தினம், ஆபரணம் இவைகளுமா யாயினர்கள்.(73) மந்திரங்கள், அறுபத்தினன்கு கலைகள், காமதேனுக்கள், நிதிகள், இவைக ளவ் விரதத்தின் மற்றுள்ள சிறப்புப்பண்டங்களும், இயாகங்கள், தருமங்கள், கருமங்கள், காலங்கள், கல்பங்கள் இவை சிறிய ஆணிகளாயும்,(74) தினங்கள், மாதங்கள், ருதுக்கள், அயனங்கள், யோகங்கள், கரணங்கள், க்ஷணங்கள், முகூர்த்தங்கள், காஷ்டைகள் இவைக ளிரதத்தின் பெரிய ஆணிகளாயு மாயின.(75) இவ்விதமா யிரத மேற்படுத்தப்பட்டபோது பிரம்மனதற்குச் சாரதியாயினர். பிரணவமானது தேரிற்பூட்டிய வேதங்களாகிய குதிரைகளை யோட்டலுற்ற வோர் கசையாக்கப்பட்டது.(76) பாற்கடலை வசதியாய்க்கொண்ட விஷ்ணு பாணத்தின் முனையும், வைகுண்டத்தை வசதியாய்க்கொண்ட மகிமைபொருந்திய விஷ்ணு ஸ்ரீ சிவபிரானுக்கு வேவுகாரரும், (77) மேருகிரியின் கண்ணுள்ள மனோவதியிலிருக்கும் பிரம்மன் சாரதியும், பிரணவம் கசையும், ஸத்தியலோகாதிபரான பிரம்மன் ஸ்ரீ ஜகதீசனுக்குப் பரிசாரகரும்,(78) தேவர்களெல்லாம் சைனியங்களும், இந்திரன்முதலிய தேவத்தலைவர்கள் சேனாதிபதிகளும், தவசிகளும் யோகீசுவரர்களும் சொத்திவாசனக்காரர்களு மானார்கள்.(79) பிறகு விஷ்ணுவானவர் கைலையில் விளங்கும் ஸ்ரீ நந்திகேசுவரனிடம்சொ

ன் றவனை வந்தனித்தச் சங்கதியை யறிவிக்க,(80) அப்போது நந்தியும் சமயம்பார்த்துப் பகவானிடம் சென்று வந்தனித் தஞ்சலிகொண்டு சங்கதிகளை யறிவிக்க, பிறகு தயாநிதியான ஜகதீச னவ் விண்ணப்பத்தைக் கேட்டவுடன் பார்வதியோடுகூட(81) மெத்த வெண்மைபொருந்திய விருடபத்தின்மீ தேறிக்கொண்டு தேரருகினில் விஜயமாயினர். அப்போது விஷ்ணுமுதலிய தேவர்க ளச் சாம்பமூர்த்தியைக் கண்டு துதிசெய்தார்கள்.(82) மகாதேவ னத் துதியால் களிப்புற்றவராகிப் பார்வதியோடுகூட விடபத்தினின் றிறங்கி யம்பையும் வில்லையும் கைமீதெடுத்துக் கொண் டிரதத்தின்பேரில் திருவடியைத் தூக்கிவைத்தார்.(83) ஸ்ரீதேவேச னவ்வாறு திருவடியைத் தூக்கிவைத் தருளியவுட னவ் விரதம் பாரம் தாங்கப்படாம லதோலோகத்தி லாழ்ந்திவிடத் தலைப்பட்டபோது படபடவென் றோர் சத்தமுண்டாயிற்று.(84) அப்போது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல்லாம் கதிகலங்கலானார்கள். உடனே மகா யோகியான ஸ்ரீ நாராயணனே ரிருடபமாகி யவ் விரதத்தைச் சுமந்து தாங்க,(85) அவரு மம் மகாபாரத்தைத் தாங்கமுடியாமல் விழிகள்பிதுங்கி வாயினு லிரத்தங்களைக் கக்கிக்கொண்டு விழலாகி மிகுந்த பயத்துடன் ஸ்ரீ பகவானைத் துதித்தார்.(86) அப்போது பிரம்மன் முதலிய தேவர்களும் கைகளை யுயரத் தூக்கிக்கொண் டாண்டவனைத் துதித்திட்டார்கள். அதன் பிற கக் கருணைக்கடலான சம்புவானவர் விஷ்ணுவுக்குக் காற்றினு மதிக வலிமையைக் கொடுத்தருளினர்.(87) பிற கம் மகிமை பொருந்திய வெருதானது கணநேரத்திற்குள் ஸ்ரீ தேவேசன் தேரைத் திமிலினல் தூக்கியெடுக்க, உடனே அத் தேர் சிவாக்ஞையால் முன்போல் நிலைநின்றது.(88) அப்போது ஸ்ரீ மகாதேவ னுலகங்களின் க்ஷேமார்த்தமாய்த் தேவியோடுகூட அவ் விரதத்தின்கண் வீற்றிருந்தருளினர். பிறகு நாராயணனு மற்றத் தேவர்களோடுகூட வெதிரில் நின்று தோத்திரம் செய்தார்.(89) அப்போது ஸ்ரீ சந்திரசேகரன் நேசம்கொண்டவராகித் திருவாய் மலர்ந்தருளியதாவது:— "ஓ! மகாவிஷ்ணுவே! பிரசன்னரான நம்மிடமிருந்து மனதிலுள்ள வபீஷ்டங்களை நீர் தடையின்றிக் கேட்டுக்கொள்ளும்: நா மவைகளை யிப்போ ததிசீக்கிரத்தில் கொடுத்தருளுகின்றோம்; ஏனென்றால் நம தாக்ஞையின்படி நம் நிமித்தமாய் மிகுந்த பிரயாசை யெடுத்துக்கொண்டீரல்லவா" வென,(90-91) இவ்வாறு திருவாக்குரைத்த பகவானை விஷ்ணு வான்கேட்டதாவது:— 'ஓ! ஸ்வாமீ! தேவரீருக் கோர் சக்தியிருக்கினும் யா னெவ்வாறு மூலசக்தியா யிருக்கின்றேனே(92) அதுபோலவே ஓ! தேவேசா! ஓரிடப மிருக்கினும் அடியேனும் தேவரீருக்கோ ரிடபமா யிருந்துவரல்வேண்டும். ஓ! ஜகத்

குருவே! அடியேனுக் கிவ் வரன்தான் மெத்த வுத்தமமேதவிர மற்றுதில்லை.(93) ஆனால் ஓ! அடியார்க்கு நேசனே! அடியேனுக் கெப்போதும் தேவரீரிடத்து மாறாத பக்தியிருக்கவேண்டு” மென, அப்போ தப் பிரபு விஷ்ணுவுக் கங்ஙனமே விருடபமாயிருத்தலையும் மாறாத பக்தியையு மருள்செய்தனர்.(94) அதுகண்டு தேவரெல்லோர்களும் நிகரற்ற சந்தோடம் கொண்டார்கள். பிறகு தேவர்கள் விக்கினம்செய்ய வெத்தனித்த ஸ்ரீ யானைமுகக்கடவுளை மிகுந்த பக்ஷியபோஜியங்கள், கனிவர்க்கங்களுடனும், மற்றுமுள்ளவைகளுடனும் பூஜைசெய்தார்கள். ஸ்ரீ ஜகதீசன் கூட அவர் தமது செல்வகுமாரராயினு மவரை யப்போ தங்ஙனமே பூஜை செய்தனர்.($95\frac{1}{2}$) பிற்பாடு ஸ்ரீ பகவான் சாரதியான பிரம்மனை நோக்கிக் குதிரைகளை யோட்டும்படி கட்டளையருள, பிரம்மனு மவரது திருவாக்கினையின்படி குதிரைகளை யோட்டினர்.(96) அப்போது கணாதிபர்களெல்லாம் பேரீ, படகம், டிண்டிமம், கோமுகம்,சங்கம், கொம்பு, திமிலம், மத்தளம்,(97) காகளம் முதலிய வாத்தியங்களை முழக்கினார்கள்; சிலர் நேர்த்தியான பற்பலவித வெடிபிடிகளைப் பிடித்தார்கள். கடலோசையையதிகரித்த, பிரயாணத்துக்குரிய மங்களவாத்தியங்களின் பேரொலியானது(98) திசைகளைச் செவிடாக்கிக்கொண்டு மிக வின்பமா யுண்டாகி மேலுக்குமேல் விருத்தியாயிற்று. பின்பு தேவேசன் கால்நடையாய் வந்த தேவர்கள், கணாதிபர்கள், பிரமதகணங்கள் இவர்களையெல்லா (99) மவரவரின் வாகனத்தி லேறிக்கொள்ளும்படி கட்டளையிட்டனர். அவ்வா றுக்கினையின்படியே விஷ்ணு பிரம்மர் முதலியவர்களெல்லா மவரவரின் வாகனத்தி லேறிக்கொண்டார்கள்.(100) விஷ்ணு கருடன்மீதேறிக்கொண்டு தம்மைச் சேர்ந்தவர்களோடுகூடச் சேவித்தனர். பிரம்ம னன்னத்தின்மீது மிந்திரன் யானையின்மீதும், மற்ற திக்பாலர்களெல்லா மவரவரின் வாகனத்தின்மீது மேறிக்கொண்டு சேவிக்கலானார்கள். ($101\frac{1}{2}$) விக்கினேசர் மூஞ்சூறுமீ தேறிக்கொண்டு வலதுபாரிசத்திலும், முருகேசர் மயிலின்மீதேறிக்கொண் டிடதுபாரிசத்திலும் பற்பல கணாதிபர்களோடுகூடச் செல்லலானார்கள்.($102\frac{1}{2}$) இலக்ஷுமீவிலாசம்பொருந்திய நந்திகேசுவரனே வென்றால் முன்னிலையில் தங்கப்பிரம்புதனைக் கைதனிற் பிடித்துக்கொண்டு(103) சன்னிதியில் மார்க்கத்தை மறைக்கலான வெல்லோர்களையும் விலக்கிவிட்டுக்கொண்டே போனார். அப்போது ஸ்ரீ சங்கர னசுரர்களுடைய முப்பட்டணங்களையும் நாசம்செய்ய வுத்தேசித்துச் சந்தோஷமுற்ற திருவுளத்தைக் கொண்டவராகிப் பார்வதியோடுகூட வத் தேர்மீ தேறிவந்துசேர்ந்தார்.($104\frac{1}{2}$) அப்போது தேவ

ர், முனிவர், சித்தர், வித்தியாதரர் முதலியவர்களும் மற்றுமுள்ளவர்களும் தேர்மீதிருப்பதற்குரிய வலங்காரங்களோடு பார்வதியுடன்கூட விரதத்தில் வீற்றிருக்கு மம் மகாப்பிரபுவைப்பார்த் தவர்கள் ஜன்மமெடுத்ததற்கும், கண்களைக் கொண்டதற்கும் தக்க பெரும்பயனை யடைந்தார்கள்.(106) அவ் வெல்லோர்களும் "ஓ! ஓ! நாம் கிருதார்த்தர்களாகிவிட்டோம்: ஸ்ரீ பார்வதிதேவியோடுகூடப் பரமேசுவரன்பூமியா லமைந்த விம் மகா ரதத்தில் விளங்கியருள்வதைக் காக்ஷிகொள்ளும்படி யாம் முந்தியென்ன புண்ணியம்தான் செய்தோமோ" வென்று சொல்லிக்கொண்டார்கள்.(107) ஸ்ரீ பிரபுவானவ ரிவ்வா றுரைக்கப்படும்,செவிதனுக் கினிமையான வார்த்தைகளைக் கேட்டருளிக்கொண்டே தேவசத்துருக்களின் முப்புரங்களை யதம்செய்வதற்காக வந்துசேர்ந்தார்.(108) அப்போது தேவர்கள், முனிவர்கள், யோகிகள், கணுதிபர்கள், தும்புரு,நாரதர்முதலியவர்கள் இவர்களெல்லாம் ஸ்ரீ தேவேசனுக்குச் சேவைசெய்யக் கருதியவர்களாகிச் சொஸ்திவாசனம் பண்ணினார்கள். அவர்களுடைய பெண்டீர்களெல்லாம் மங்களம் பாடினார்கள். (109)

எழுபத்தொன்றாவது அத்தியாயம்

முற்றிற்று

---

## உபதேசகாண்டம் எஉ-வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு ஸ்ரீவிஷ்ணுவின் மாயையால் மோகிக்கப்பெற்றவர்களான அவ்வசுரர்கள்,விபூதி,ருத்திராக்ஷம்,சிவபூஜை,வேதம்,சாத்திரம் இவைகளையெல்லாமொழித்துப்போட்டு(1) நேருக்கு நேரானவிம்மையின்பயனையேயுண்மையென்றுகொண்டவர்களாகிநாள்தோறும் புத்தசமயத்தை யனுசரிக்கத் தலைப்பட்டுவிட்டார்கள். அவர்களின் ஸ்திரீகளும் நாரதர் வார்த்தையால்கண்கண்டபலனையேவேண்டியவிசாரியாகிவிட்டார்கள்.(2) இவ்வெல்லோர்களும் ஸ்திரீகளோடுகூட இவ்விதமாகிவிட்டபோ தவர்களுடைய வீட்டுக்குவீடு கெட்ட சகுனங்கள் நேரலாயின. (3) காமதேனுக்கள், சிந்தாமணிகள், கற்பகவிருக்ஷங்கள் இவைகளெல்லாம் நாசமடைந்தன. ஆயிரம் வருடங்களின் கடையி லுண்டாகவேண்டிய வம் முப்பட்டணங்களின் சேரும் காலமும் நேர்ந்துவிட்டது.(4) மேலு மிச்சமயத்தில் ஸ்ரீசர்வேசுவரனுக்கும் பிரீதியுண்டாகிவிட்டபிறகு இனி யிவ் விஷயத்தி லாகவேண்டிய தென்னவிருக்கின்றது? அம் மூன்று பட்டணங்களும் சேர்ந்துவிட்டதைக்கண்டு விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் (5) மிகுந்த சந்துஷ்டிகொண்டவர்களாகி யப்போது ஸ்ரீபகவானைச் சீக்கிரமாய்ச் சரத்தைப் பிரயோகிக்கும்படி மன்றாடினார்கள். இவ்வா றவர்கள் சந்தோஷமும் மனக்கவலையும் படுவதைக்கண்டு சூலபாணியானவர்

(6) மேருகிரிவில்லின் நுனியை யனுபாசமா யிடதுகையாற் பிடித்து ம காவிஷ்ணு முதலிய தேவர்களா லமைந்த வப் பாணத்தையு மசைத்து க்கொண்டு சடிதியாய்த் தேவியின் திருமுகத்தை நோக்கிக் கொஞ்சம் பு ன்னகைப்பருளி $(7\frac{1}{2})$ யப்போது தமது மூன்று கடைவிழிகளாலு மம் முப்புரத்தை யோர்வாறு நோக்க,(8) உடனே திருக்கண் ணக்கினியில் மன்மதனுகிவிட்டதுபோ லம் மூன்று பட்டணங்களு மப் புன்னகைப் பினின் றுண்டான நெருப்புப்பொரியி னொளிதனில் விளக்குவெட்டுப் பூச்சிகளாய்விட்டன. (9) அப்போது தேவன் திருக்கையா லசைத்ததி னூற் காத்தருளப்பட்ட, மனதினி லசுரனோடு யுத்தம்செய்ய வெதிர்பார் த்திருந்த வாயு, அக்கினி, சந்திரன், கோவிந்தன் ஆகிய விந் நான்கு தே வோத்தமர்களு (10) மப் பட்டணங்கள் புன்னகைப்பினுல் பொசுக்கப் படலாவதைக் கண்டவுடன் ஸ்வாமியைத் தங்களாலமைந்த வப் பாணத் தைச் சந்தானிக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். பின்பு பிரபுவு மப்ப டியே நல்லதென்று மேருவில்லி லசாதாரணமாய் நாணைப்பூட்டி(11) யே றிட்டு நுனிவிரலா லாதிசேடனுகிய வஞ் ஞாணைமீட்டிக் குணத்தொனி செய்து விஷ்ணு முதலிய நான்கு தேவர்களா லமைந்த வச் சரத்தைப் பிரயோகிக்க,(12) அச் சராக்கினியும் மந்தகாஸாக்கினியுமா யம் முப்பு த்தை யோர் கணநேரத்திற்குள் ளெரித்துவிட்டன. பிற்பாடு, புன்ன கைப்பின் நெருப்புப்பொரியினுல் தேகமெரிக்கப்பெற்ற அவ் வசுரர்க ள்(13) புத்தாசிரியர் சொல்லைக்கேட்பதற்கு முந்திச் சிவபூஜையில் முய ன்றிருந்தபடியா லவ் வேல்லோர்களும் கணுதிப யோகித்தன்மையை யடைந்(14) தப்போது பிரமதகணங்களால் கொண்டாடப்பட்டவர்களா கி ஸ்ரீசம்புவின் பாரிசத்திலிருந்து வருகின்றூர்கள். முந்தி யச் சித்தர் மா யையால் மோகமடையப்பெருத மற்ற மூன் றசுரச் சிரேஷ்டர்களும் (15) விபூதி ருத்திராக்ஷ சிவபூஜைகளை விடாதிருந்தபடியா லவர்கள் தங் கள் வீடுகளோடுகூட வம் முப் பட்டணங்களு மெரியலாகும்போ தவ் வக்கினி மத்தியில், நடுக்கடலில் வசிப்பதுபோலவே ஸ்ரீஜகதீசனைத் தியா னித்துக்கொண்டு$(16\frac{1}{2})$ 'ஓ! கோ! நாமிப்போதேதோ பாக்கியவசத்தினு லல்லவோ புத்தாசிரியர் மாயையால் மோகிக்கவில்லை.(17) நா மவ்வாறு மோகித்திருந்தா லிவர்க ளடைந்த கதியையே சந்தேகமின்றி யடைந்தி ருக்கவேண்டு' மென்று சம்போ, சிவாவென்று சொல்லிக்கொண்டே அ க் காலத்தைப் போக்கினுர்கள்.(18) பிற்பா டம் மூன்றுபேர்களும் சரு வேசுவரனுன ஸ்ரீசிவபிரானண்டைக்குவந் தஞ்சலிகொண்டு துதித்து வ ந்தனித்துச் சந்தோஷத்தினு லுரோமம் சிலிர்க்கப்பெற்றவர்களாகி நிற் கையி (19) லப்போ திரதமதில் வீற்றிருந்த சங்கரன் மந்தகாஸத்துட

ணவ் வடியார்களை நோக்கி வசனமருளியதாவது:—'ஓ! தீர்க்காயுசுள்ளவ
ர்களும், புகழ்பெற்றவர்களுமான வசுரர்களே! நீங்கள் நமது மெத்தவும்
சிறந்த பக்தர்களாகியதா லுங்களுக்கு வேண்டிய வபீஷ்டத்தைச் சொ
ல்லுங்கள்; நா மதனைத் தந்தருளுகின்றோ' மென,(20½) இவ்வா றீசனு
ல் திருவாக்கருளப்பட்டதன்மே லவர்க ளுத்தமமான வரனைக்கேட் ட
டைந்ததாவது:—(21) "ஓ! ஆதிநாயகரான தயாநிதியே! கைலைக் கொடு
முடியிலுள்ள தேவரீ ரந்தப்புரத்தின் வாசற்படிமீது நாங்கள் துவாரபா
லர்களா யிருக்கவேண்டு"(22) மென்று பிரார்த்தித்துக் கொண்டபடியே
யவர்களை யீசன் துவாரபாலர்களாக்கிவிட்டனர். ஓ! கோ! உலகினில் சக
லப் பிராணிகளுக்கு மிப்பேர்க்கொத்த வரன் மெத்தத் துர்லபமன்றோ!
(23) பிற்பாடு பகவான் தேவர்களுக்கும் வேண்டியதைக் கொடுத்துவிட்
டந்தர்த்தானமடைந்தபிறகு விஷ்ணு முதலிய தேவர்க ளப்போது சப
தம் செய்ததாவது:—(24) "இப்போது முதலா யிவ் வுலகினில், தேவா
சுர மானிடர்க ளெல்லோர்களிலு மெப்பேர்க்கொத்த தேவரானாலும்,
முனிவரானாலும், மானிடரானாலும், சித்தரானாலும், கந்தர்வரானாலு ம
வர்கள் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரியாமல் பாசண்டமார்க்கத்தை யனு
சரிப்பவர்களும், சிவலிங்கத்தைப் பூஜியாமலு மிருந்திடில், அவ் வெறிந்
துபோட்டவர்க ளெப்பேர்க்கொத்த மிகுந்த புண்ணியசாலிகளாயினு
மவர்களோடு நாம் பேசவேதகாது.(25-26½) மேலு மிப்பேர்க்கொத்த
வர்களோடுகூடச் சம்பாஷணை, சம்பந்தம், சுருதி ஸ்மிருதி முதலியவை
களின் முறைப்படிக்குள்ள சடங்குகள் இவைகளைச் சேர்ந்து செய்வோ
ர்களுக்குக் கதி மோக்ஷமே யில்லாமற் போகக்கடவது.(27½) இதெல்
லாம் மிகவும் சத்தியமேயின்றிப் பொய்யில்லை" யென்று சபதம் செய்
துவிட்டுப் பிற கத் தேவர்க ளப்போ (28) தங்குதானே வெகுகால
மள விருந்து மேன்மைபொருந்திய லிங்கார்ச்சனத்தைச் செய்து பின்
னும் சபித்துப்போட் டவ் வெல்லோர்களும் வந்தவழியோடு செ
ன்று (29) தம் தம் லோகத்திற்குப் போய் ஸ்ரீ ஜகதீசனைப் பூஜை
செய்துவந்தார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! முந்தி யசுரா
ர்க ளறிவின்மையாலாயினும் ஸ்ரீ சிவபிரானைப் பூஜித்துவந்தவரையில்
(30) வெகுகாலமளவு மவர்க ளொருவராலும் கொல்ல முடியவில்லை. பி
றகோ வென்று லவர்க ளச் சிவார்ச்சனத்தை விட்டதன்பேரி லச் சிவபி
ரானாலே வதைசெய்யப்பட்டு முடிவில் கனுதிபத்தன்மையை யடைந்
தார்கள்.(31) சைவமார்க்கத்தை விடாதிருந்தவர்களோ கைலைகிரிதனில்
ஸாக்ஷாத் ஸ்ரீசங்கரன் திருமாளிகையில் துவாரபாலர்களாகிவிட்டார்கள்.
ஓ! முனிவர்களே! (32) விஷ்ணு முதலிய தேவர்களெல்லா மசுரர்களை
வெல்வதற்காக இவ்விதமா யெல்லோர்களு மொன்றுகூடிப் பகவானைப்

பூஜித்துச் சத்துருக்களை வென்றிருக்கிறார்களன்றோ! ஆகையால் சகலமு யற்சிகளோடு மெல்லோர்களும் சிவபூஜை செய்யவேண்டும்.(33) இவ்வி தமா யெல்லோர்களு மேகோபித்துப் பரமசிவன் திருவடியைப் பூஜித்த தினற் சௌக்கியம்பெற்ற தேவர்களால் பராக்கிரமம், இன்பம், வெற் றி, சம்பத்து முதலிய பற்பல வித வான்களும் போகமோக்ஷங்களு ம டையப்பட்டிருக்கின்றன. ஆகையால் மானிடர், தேவர், அசுரர், முனிக ணங்கள், சித்தர், கந்தர்வர் முதலிய வெல்லோர்களும், மிகவும் சிரத்தை யோடு பக்தியாய்த் தினந்தோறும் முறைப்படி யிலிங்கமதிற் சிவபூஜை செய்யவேவேண்டும்.(34)

எழுபத்திரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் எஙு-வது அத்தியாயத்தி னர்த்தம்.

பின்னும் கேளீர்! முனிவர்களே! தேவர்களொன்றிகூடிச் சிவார் ச்சனை செய்ததினு லென்னென்ன வபீஷ்டங்களைப் பெற்றிருக்கின்றார்க ளோ அதனை யுங்களுக்குச் சொல்லுகின்றேன்.(1) பூர்வத்தி லந்தகனெ ன்றோ ரசுரன் மிகுந்த தவத்தினுல் வீரிய பல பராக்கிரமங்களை யடைந் து மகா லோககண்டகனு யிருந்தான்.(2) அவனுல் தேவர்களெல்லா மு யுக்தத்தில் முறியடிக்கப்பட்டு மூன்று ஜகங்களும் பீடிக்கப்பட்டுவந்தன. விஷ்ணுப் பிரம்மர் முதலியவர்களெல்லா மவனுற் போர்முகத்தில் வெ ல்லப்படலாகிப்(3) புருடவுருவத்தோடிராமல் பெண்வேடம் கொண்டவ ர்களாகி யத் தேவரெல்லாம் பெண்வேஷத்தோடு பெண்களின் பாஷை களையே பேசிக்கொண்டுபத்துத் திசைகளினும்திரிந்துவந்தார்கள்.(4) ஏ னென்று லவ் வந்தகாசுர னுணுருவத்தோடிருந்த தேவர்களையெல்லாம் சிறைக்குள்ளடைத்துவந்தான். பிற்பாடவன் பெண்ணுருவத்தோ டிரு ப்பவர்களையும் விடவில்லை.(5) அவர்கள் பெண்வேடத்தைக்கொண்டு ம சுரனு லெப்போதும் பீடிக்கப்பட்டபடியால் மகாதேவருக்குப் பிரியமு ள்ள மந்தரகிரிக்குச் சென்(6) றங்கு பிரபுவை நமஸ்கரித்ததின்பேரி லவ ரது திருவாக்கினையின்படி விஷ்ணுப் பிரம்மர் முதலிய தேவர்களெல்லா ம் தேவியின் சகிகளுக்குப்பணிவிடைக்காரர்களாயிருந்துவந்தார்கள்.(7) அப்போ தவ் வந்தகன் தேவர்களைத் தொடர்ந்துகொண் டம் மந்தரகிரி க்கும் வரலானபோது பெண்வேடம்கொண்ட தேவர்க ளவன் மலைக்கு வந்திருப்பதையு(8) மவனது கொடிய நடைகளையும் ஸ்ரீமகேசுவரன்முன் பாக வாதியோடந்தமா யறிவித்தார்கள். பிற்பாடு கருணுமுதக் கடலான ஸ்ரீமகாதேவன்(9) தேவர்களை யிரக்ஷிக்கச் சன்னத்தம் கொண்டவராகிப்

பைரவமூர்த்தியைக் கட்டளையிட்டருளினர். பைரவரு முன்னே யசுரர்க ளைக் கண்டிப்பதற்காகக் கணங்களோடுகூட வெளிக்கிளம்பும்போ(10) தங்கு ருத்திரசேனிகளுக்கு மகாசேனைகளுக்கும் சண்டை நேரிட்டுப் பைரவர்சேனையா லசுரன்சேனை நாசமடைந்தது.(11) அப்போது ருத்தி ரசேனையால் மடியலான வசுரர்களையெல்லாம் சுக்கிராசிரியன் ஸ்ரீமிருத்தி யுஞ்சய மந்திரத்தை யடிக்கடிஜபம்பண்ணித்(12) திரும்ப பிழைப்புமூட் டிவந்ததானது மெத்த வாச்சரியம்போலாயிற்று. அதுகண் டடனே ஸ்ரீ பைரவர் சுக்கிரனை யிழுத்து வாய்க்குள் விழுங்கிவிட்டார்.(13) அதற்கு மேல் மகா பயங்கரர்களான கணுதிபர்களா லசுரசேனையெல்லா மோர் நொடிக்குள் நாசம்செய்யப்பட்டது. பிறகு பைரவர் மகா கோபம்கொ ண்டவராகி மகாசுரனுன அவ் வந்தகனைத்(14) துரிதமாய்ச் சூலத்தினுல் குத்தி யெடுத்துக்கொண்டு ஸ்ரீசிவபிரான் சன்னிதிக்குச் சென்றூர். அப் போ தசுரன் சூலத்தில் கோர்க்கப்பட்டிருந்தபோதிலும் ஸ்ரீ பகவானுல் பார்த்தருளப்பட்டமாத்திரத்தி(15) லசுரர்க்குரிய கருமவசத்தினுலுண் டான சகலபாவங்களும் தொலைந்துவிடலாகிச் சூலத்தின் நுனியில்தொ ங்கியபடியே மிகுந்த மனக்களிப்போடு மகாதேவரைத் துதிசெய்தான். (16) அத் துதியினுல் பகவான் மகிழ்ச்சிகொண்டவராகி யவனை வரன் கேட்டுக்கொள்ளும்படி கருணையருளுகையி லசுரன் மெத்தவுத்தமமான கணுதிபத்தன்மையைத் தனக்கு வரனுய்க் கேட்க,(17) பிறகு தேவனு ம் மனமகிழ்ச்சிகொண் டவ்வசுரனுக்குக் கணுதிபத்தன்மையைக் கொடு த்தருளினர். ஸ்ரீபைரவரும் தா முன் விழுங்கியிருந்த சுக்கிரனை வயிற்று க்குள்ளிருந்து வெளியில் கக்கியருள,(18) அப்போது சுக்கிரனும் ஸ்ரீபக வானைப்பூஜைசெய்துவிட்டுத் தன் மண்டலமடைந்தான். பிறகு விஷ்ணு முதலிய தேவர்களும் ஸ்ரீ ஸாம்பமூர்த்தியைப் பூஜைசெய்துபோட்டுப் (19) பெண்ணுருவத்தைவிட் டப்போது தம் தம் மிருப்பிடம் சென்றூர் கள். மகா பாவியான வந்தகாசுரனுமோ முடிவினில் ஸ்ரீ சூலபாணியைச் சேவித்ததினுல் தேவர்களுக்கும் கிட்ட வசாத்தியமான கணுதிபத்தன் மையை யடைந்தான்.(20)

எழுபத்துமூன்றுவது அத்தியாயம்
முற்றிற்று.

---

உபதேசகாண்டம் எச—வது அத்தியாயத்தி னர்த்தம்.

மேலும் கேளீர்! முனிவர்களே! ஒரு சமயத்தில் ஸ்ரீ ஜகதீசன் த மதன்பிறங்கிசைந்த பார்வதியம்மையோடுகூட வந்தரங்கமுள்ள சில கணு திபர்களுடன் சிங்காரவனத்திற் கருளினபோ(1) தங் கவ் வனத்தில் தே

வியின் கைதனைப் பிடித்துக்கொண் டவ் வம்மையோடுகூட அவளது தி ருக்கண் பார்வையால் காண்பிக்கப்பட்டவைகளான, அலர்ந்த தளிர்களா ல் விளங்கப்பெற்ற பூண்டுகள், கொடிகள், மரங்கள் இவைகளையும் மற் றுமுள்ளவைகளையும் பார்த்துக்கொண்டே மெல்ல வுலாத்துகையி ($2\frac{1}{2}$) லங்கு மத்தியில் பெரும் வாதுகளைக்கொண்ட வற்புதமான வோ ராலம ரத்தைக் கண்டு(3) தேவியோடுகூட வதி னடியிலுள்ள திட்டாணியின் மத்திக்கருளி யங்கிருந்த வோர் சிறந்த விரத்தினகம்பளம் விரிக்கப்பெ ற்ற வாசனத்தி லவ் விருவரும் விற்றிருந்தனர்கள்.(4) அப்போ தம்மை யவ் வாலமரத்தைக்கண்டு புன்னகைப் புற்றவளாகி ஸ்ரீதேவேசனை நோ க்கி 'ஓ! நாதனே! இம் மரம் மெத்தப் பெரிதாயிருக்கின்றது. இம்மாதிரி மற்றெங்கும் காணப்பட்டதில்லையே!' என, (5) இவ்வா றுரைத்த வம் மையை நோக்கி 'ஓ! பெண்ணே! யுகத்தின் கடைசியில் பிரம்மப்பிரளய ம் நேரும்போ திம்மா மின்னும் நூறுமடங் கதிகமாய்ப் பெரிதாகும்.(6) அப்பே திதினின்றோ ரிலை கடல்நீரில் விழும். அவ்விலைதனில் மகா விஷ்ணு வோர் குழந்தையுருவமாகிப் பள்ளிகொண்டு(7) பிறகு பிரம்ம னுடைய வுற்பத்திக்காக நம்மைத் தியானம்பண்ணுவார். அதனால் நாம வர்மூலமாய்ப் பிரம்மனை யுண்டுபண்ணுவோ'மென்றார்.(8) கேளீர்! முனி வர்களே! விஷ்ணுவினுடைய நாபிதனி லோர் கமல மருளப்பட்டிருக்கி ன்றதுமுதலியதாய் வேதத்திற் கூறப்பட்டிருக்கின்றதன்றோ! பின்னும் ஸ்ரீமகேசுவரன் 'கேளாய்! பார்வதி! அதன்பிறகு முன்போல் ஜகத்சிரு ஷ்டி யுண்டாகலாகும்' என்றனர்.(9) பிற்பாடு உமைக்கு நேசரான ஸ்ரீச ந்திரசேகர னவரவர் பெண்டிர்களோடுகூடக் கிட்டத்திலிருந்த தோட்ட க்காரர்களை யழைத் தங்கோர் வாபிகையின் மத்தியிலிருந்த பக்ஷிகளிலே தாகிலு மிரண்டு பக்ஷிகளைக் கொண்டுவரும்படி கட்டளையிட,($10\frac{1}{2}$) அப் படியே அவர்கள் சடிதியா யோ ரன்னத்தையும் கிளியையும் கொண்டுவ ந்தார்கள்.(11) அவ் விரு பறவைகளு மீசுவரனைத் தெண்டனிட்டு முன்னி லையில் நிற்கும்போது சகல ஜகச்சொரூபியான பகவான் பார்வதியோடு கூட அவைகளைத் திருக்கண்ணுற்று(12) 'ஓ! பறவைகளே! நீங்க ளெங்கி ருட்பவைகள்? என்னசெய்துகொண்டு காலம்போக்கிவருகின்றீர்க' ளெ ன்று ஸ்ரீஸாம்பமூர்த்தி யிவ்வாறுவினவும்போதுமிருந்தசந்தோடத்துட ன் கிளி யுரைத்திட்டதாவது:—(13) 'ஓ! ஸ்வாமீ! அடியேன் தேவரீரு டைய இவ் வுத்தியானவனத்தில்தானே மகா பாக்கியசாலியாய்க் கொன் றைமரத்தைச் சேவைபண்ணிக்கொண்டிருந்துவருகின்றே' னென்றது. (14) பிற கன்னப்பக்ஷியு மீசனை வந்தனித் தஞ்சலிகொண்டுரைத்ததாவ து:— 'ஓ! ஜகதீசா! யான் பிரம்ம விஷ்ணுக்களின் லோகங்களிலும் திக் பாலர்களின் லோகங்களிலும் சஞ்சரித்துவிட்டுப் (15) பிறகு மிகுந்த பு

ண்ணியவசத்தினுல் தேவரீருடைய விச் சிங்காரவனத்திற்கு வந் திவ் வாபிகையின் மத்தியிலுள்ள வமுதத்தையொத்த வுதகத்தைக் குடித்து க்கொண்டு (16) திருச்சடைத்தடத்தில் விளங்கிய தேவரீர் மனைவியான கங்கையின் ஜலத்தினுண்டயமகிமையையெப்போதும்கொண்டாடிக்கொ ண்டே வசித்து வருகின்றே' னென,(17) இவ்வா றுரைக்கலான வன்ன த்தையும் கிளியையும் ஜகங்களுக்குத் தந்தையான பகவான் புன்னகை ப்போடு 'நீங்கள் போகலா' மென்று சொல்லி யவைகளைப் போகவிட்ட னர்.(18) பிற்பாடு தேவியானவள் மெத்தக்கோபம்கொண்டவளாகி யப் போ தாசனத்தைவிட் டெழுந்து ஸ்வாமியை நோக்கி 'ஆ! ஆ! கங்கை யை யுமது மனைவியென் றுரைத்த வன்னத்தின் வார்த்தையினு லுமக் கோர் பிரீதியும் முகத்தினி லோர் புன்சிரிப்பு மெவ்வா றுண்டாகலாம்; நன்றாயிருக்கின்றது நன்றாயிருக்கின்ற' தென்று சொல்லிப்போட்டுத் (19½) தூரப்போ யோரிடத்தி லொளிந்துகொண்டு பூமிதனில் புழுதி யைக் குவித் (20) தோர் பொம்மை யாயமைக்க,பிந்தியது உயிர்கொண் டெழுந்திருக்கலாயிற்று. இதற்கிடையில் ஸ்ரீ மகாதேவன் கோபம்கொ ண்டிருந்த ஜகதம்பிகையைச் (21) சமாதானப்படுத்தி யழைத்துக் கொண் டந்தப்புரம் சென்றுவிட்டார். உமாதேவியா லப்போ தெந்தப் புழுதிகளால் பொம்மை செய்யப்பட்டதோ(22) அவை முந்தி யெரிபட் ட மன்மதனுடைய சாம்பற்களாகையா லப் பதுமை யோர் துர்க்குண முடைய புருடவுருவமாகிக் கைலைகிரியண்டைக்கு வரத் தலைப்பட்டது. (23) அப் புருடனை யங்குள்ள கணுதிபர்கள் கண்டு 'ஆ! அடா! துஷ்டா நீ பண்டாசுரனென்னும் பெயரைக்கொண்டவனுகி யோடிப்போய்விடு; ஏனென்றால் தேவர்களுக்குப் பகைவனுன நீ யிங்கிருக்கத் தகா' (24) தென்று சொல்லி யவனைக் கோபத்தோடு துறத்திவிட்டார்கள். பிறகப் பண்டாசுரன் வெளியிற்போய் நூறுகோடி வருடமளவும் மிக வைராக் கியமாய்க் கொடிய தவத்தைச் செய்து ஸ்ரீ மகேசுவரனை மகிழப்பண்ணி (25½) 'ஓ, ஸ்வாமீ, தேவேந்திரன், விஷ்ணு, பிரம்மன் முதலிய தேவர்க ளெல்லா மென் சத்துருக்களாகின்ற(26) படியா லவர்களுடைய விந்தி ரியங்களை யெல்லாம் ஸ்ரீஜகதீசனுகிய தேவரீரது கருணையால் யா னபக ரித்துவிடல் வேண்டும். மேலு மவ்வா றவர்கள திருதயத்திற்குள்ளிருந் து இந்திரியங்களைப் புஜிக்கலிருகு மடியேனை யவர்கள் கண்டுபிடியாமலி ருக்கவேண்டு' (27) மென்று தேவாதிதேவரான முக்கண்பிரானை வர னி ரக்க, அப்போ தத் தேவ னவனது தவத்தினுற் களிப்புற்றவராகியவ னுக் கவ்வாறே யெல்லா வரனையு மீந்தருளினர்.(28) உடனே அவ்வாறு வரன்பெற்ற பண்டாசுரன், பிரம்மன் விஷ்ணு இந்திரன் முதலிய சகல தேவர்களுடைய விந்திரியங்களையும் முழுதும் புசித்துக்கொண்டு வரலா

கையி(29) லிந்திரன் முதலிய தேவரெல்லாம் வீரியமிழந்தவர்களாகித் தம் தம் பெண்டிரிடத்திற் காதலற்றுப்போய் இது அவ் வசுரனால் வந்த கெடுதியென்பதை யறியாமலே யிதற்கென்ன காரணமென்று தூக்கித்(30) ததற்குத் தக்கபரிகாரத்தைத் தேட விருப்பமுற்றுப்பிரம்மன், விஷ்ணு, இந்திரன் இவர்களும், மற்றுமுள்ள திக்பாலர்களும் சிவபூஜை செய்வதில் மிகவும் முயன்றவர்களாகிச்(31) சிவலிங்கத்தில் ஸ்ரீமகாதேவனைச் சோடசோபசாரங்களுடனும் பூஜை செய்துபோட்டுப் பிறகு கைலேகிரிக்குப்போய் 'ஓ! தேவாதிதேவா! நாங்களெல்லோர்களு மிந்திரியமற்றவர்களாகிவிட்டோம்; இதற்குக் காரணமே தெரியவில்லை' யென்று பகவானைப் பிரார்த்திக்க,(32½) இவ்வா றுரைத்த விஷ்ணுப்பிரம்மர் முதலியவர்களை நோக்கி யப் பிரபு மொழிந்தருளியதாவது:—(33)"ஓ! தேவர்களே! பண்டாசுரனென்பவ னுங்களது சரீரத்துக்குள்ளிருந்து கொண்டே யுங்க ளிந்திரியங்களைப்புசித்துவருகின்றான்; அதற்காகத் தேவர்களுக்கெல்லாம் சம்மதியாயின் யாம் சருவசம்காரயாகம் செய்யவேண்டும்; இல்லாவிடி லது முடியவேமுடியாது.(34½) அதெப்படியென்றால் நம்மாற் செய்தருளப்படும் வேள்வியி னக்கினிதனிற் சகலப் பிராணிகளு மோமம் செய்யப்பட்டான (35) தன்பேரில் கேளீர்! தேவர்களே! நமதாக்கினையின்படி யோர் சக்தியுண்டாகி யவ ளப் பண்டாசுரனைச் சமுகரித்துப் பிற குங்களையு மோர் நொடிக்குள் முன்போல் சிருஷ்டித்துவிடுவாளென்று நாம் சத்தியமாய்ச் சொல்லுகின்றோ" மென, (36½) அப்போது பகவான் மொழிந்தருளிய திருவசனத்தைக்கேட்டுத் தேவர்களங்ஙனமே பாக்கியமென்று சொல்லி(37) 'ஓ! ஸ்வாமீ! நாங்கள் கொஞ்சமேனும் கால்கைகளில் வலிமையற்றவர்களும், மாதர்மீது மிகவும் பராமுகம்கொண்டவர்களுமா யாகிவிட்டோமே' யென்று முறையிட்டார்கள். பிற்பா டவர்கள் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டதன்பேரில் ஸ்ரீஜகதீசன்(38)தேவர்கள், முனிவர்கள், பிதுருகணங்கள், கந்தர்வர், உரகர், அறக்கர், மானிடர், பறவைகள், பசுக்கள், மற்றுமுள்ள ஸ்தாவரஜங்கமங்கள் இவைகளாகிய சமித்துக்களைத் தாமாகிய மகாக்கினியி லோமம் செய்து(39½) பிறகு பார்வதிதேவியோடுகூடத் தீக்ஷித (யாகம்செய்வோர்) ரான வம் மகாக்கிராஸ (ஒரேகவளமாய் விழுங்கலுற்றவ) ரானவர் தாமே தம் மக்கினியி லவ் வெல்லாவற்றையும் ஜீர்ணமாக்கிவிட்டார்.(40) இவ்விதமா யெல்லா ஸ்தாவரஜங்கமங்களும் பாக்கியின்றியோமம் செய்யப்பட்டானதன்பேரி லவ் வக்கினியினின்று, சக்தியானவள், புஷ்பபாணங்கள், காமக்கரும்புவில், அங்குசம், பாசம் இவைகளைத் தரித்துக்கொண்டு மூன்றண்டங்களோடுங்கூடப் புறப்பட்டு ஸ்ரீ மகாதேவரா

ண்டைக்குவந்து திருவடிகளில் தண்டனிட்டு (42) 'ஓ! சகலப் பிராணிக ளையு மிரக்ஷிக்கும்பகவானே! அடியாளுக் கெந்தவேலையைக் கட்டளையி ட்டருளுகின்றீ' ரென் றவள் விண்ணப்பம்செய்துகொள்ள, இவ்வா று ரைத்த வச் சக்தியை நோக்கிச் சக்தியுடையவரான பார்வதிநாதன் மொ ழிந்தருளியதாவது:—(43) "ஓ, கேளாய், மகா சக்தியே, பிராணிகளு டைய சுக்கிலத்தைப் பக்ஷித்துவிடுவோனான மெத்தக் கொடியனாகிய ப ண்டாசுரனைச்சகலப்பிராணிகளி னிரக்ஷணார்த்தமாய்ச் சடிதியிற் சமுகரி க்கலாவா"(44) யென, அப்போ தவளுடனே யவன்மீ தோரம்பை யுண் டுபண்ணி யெய்து சிவாக்கினையினா லவன துயிரை வாங்கிவிட்டாள். (45) அவளோ ரம்பினால் பண்டாசுரனைத் துரிதத்தி லதம்செய்தவுடன் ஸ்ரீதயாநிதி யச் சக்திக்குக் கட்டளையருளியதாவது:— (46) "ஓ! சக்தி யே! உன்தனாற் படைக்கப்பட்ட மூன்றண்டங்களிலும் பிரம்ம விஷ்ணு ருத்திரர்களையும், வாக்தேவியான ஸரஸ்வதி, மகாலக்ஷுமி, அம்பிகை இ வர்களையும் படைத்(47) தவர்களோ டிவர்களைப் பெண்டீர்களாய்ச் சேர் த்து முறையே சிருஷ்டி ஸ்திதி சமுகாரங்களை நடப்பிக்கலாவா" யென, பிற கவ் வீசுவரி யச் சிவாக்கினையைச் சிரசினால் வகித்துக்கொண் (48) டவ்வாறே யம் மூவர்களையும் சிருஷ்டித் தப்பேர்ப்பட்ட வல்லமைகளை யு மவர்களுக்குக் கற்பித்துச் சிருஷ்டி ஸ்திதி சமுகாரங்களை யம் மூவர்க ளாலும் நடப்பித்தனள். (49) பிற கம் மூவர்களும் ஸ்ரீதேவாதிதேவனை ப் பூஜைசெய்துவிட்டுத் தாம் தாமென்ற வகங்காரத்தைக் கொண்டவர் களாகித் தம் தம் மிச்சையின்படியே சிருஷ்டி முதலிய வெல்லாத் தொ ழிற்களையும் நடத்திவருகின்றார்கள். (50) ஸ்ரீசதாசிவனுக்குரிய திருநாம ம், சின்னம், செய்கை இவைகளே உருத்திரமூர்த்திக் கேற்பட்டிருக்கி ன்றன. அவ் விருவர்களுக்கும் பேதமேயில்லை. (51) ஆனால் ஸ்ரீசிவபிரா ன் மற்றவர்களைக்காட்டிலும் வேறுபாடுள்ளவரா யிருந்துகொண்டு தாம வரவர்களுக்கு வேண்டி வபீஷ்டங்களைக் கொடுத்துவருகின்றார். ஸ்ரீஜகதீ சன் விஷ்ணுமுதலிய அவ் வெல்லோர்களையும் நோக்கித் திருவாக்கினைய ருளியதாவது:—(52) 'நாமே உருத்திரன்; உருத்திரனேநாம்; எங்க ளிரு வருக்கும் பேதமேயில்லை' யென் றவர்களுக்கு மொழிந்தருளிவிட் டந்த ர்த்தானமடைந்தனர். (53) பிற்பாடு பிரம்ம விஷ்ணு ருத்திரர்களான வம் மூன்று தேவர்களு மம் மகேசுவரனைப் பூஜித்தனேக போகங்களை யனு பவித்துக்கொண்டு வேவ்வேறாய்ச் சிருஷ்டி ஸ்திதி சமுகாரங்களைச் செ ய்துவருகின்றார்கள். (54) அதுமுதலா யம் மூன்றுபெயர்களும் சிவபூ ஜையின்மகிமையினா லைசுவரியங்கள் நிறையப்பெற்றவர்களாகி ஸ்ரீஜகதீ சன் திருவாக்கினையா லுண்டான, பிரம்ம விஷ்ணு ருத்திரபதவிகளுக்கு

ரிய சகல போகங்களையு மனுபவித்து வருகின்றார்கள்.(55-56) பண்டாசு ரனும் ஸ்ரீசிவபிரான் முன்னிலையில் சக்தியால் கொல்லப்பட்டபடியால் தேவர்களாலு மடையத்தகாததான உருந்திரகணாதிபத்தன்மையை யடைந்(57) திப்போதுகூட ஸ்ரீபார்வதி பரமேசுவரர்களின் சன்னிதானத்தில் கணங்களோடுகூட இருந்துவருகின்றான். மேலு மக்கினிகுண்டத்தினின்று ஸ்ரீபார்வதிதேவியி னமிசத்தினாலுண்டான, புஷ்பபாணங்களையும் கரும்பு வில்லையும்கொண்ட வச் சக்திக்குத் திரிபுரையென்று பெயர். அவள் ஸ்ரீ ஜகதீசனைப் பூஜைபண்ணிப் பார்வதிதேவியோ டைக்கியமடைந்துவிட்டாள்.(59) இப்பிரகாரமாய் ஸ்ரீசிவபிரான், பிரம்மன் விஷ்ணு இந்திரன் முதலிய விச் சகல ஜகங்களையு முருத்திரயாகமதில் தம தமிசமாகிய வக்கினியிற் சமித்துக்களைப்போ லோமம் செய்துவிட்டுப் பிறகு பெருமைபொருந்திய சக்தியான திரிபுரையம்மையால் பண்டாசுரேந்திரனை யதம் செய்வித்து மறுபடியு மவ் வம்மையைக்கொண்டே சகல புவனங்களையும் மற்றுமுள்ள சகல தேவர்களையும் படைப்பித்தனர்.(60)

எழுபத்தினன்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் எரு-வது அத்தியாயத்தி னார்த்தம்.

கேளீர்! முனிவர்களே! பூர்வத்தில் விஷ்ணு பிரம்மர் முதலியதேவர்களும், திக்பாலர்களும்மகிஷாசுரனாலும் வியாக்கிராசுரனாலும்(1) துறத்திவிடப்பட்டவர்களாகி வெகுகாலமளவும் தம் தம் லோகங்களை யிழந்திருந்துவிட்டுப் பிறகு கேதாரக்ஷேத்திரத்திற்குப்போய் ஸ்ரீ ஜகதீசனைப் பூஜைசெய்ய, அதன்மேல் பகவான் சீக்கிரமா யவர்களுக்குப் பிரசன்னராகி யங்கு தோன்றியருளினர்.(2½) அப்போது விஷ்ணு அவரை வந்தனித்துத்(3) தலைமீ தஞ்சலிகொண்டு வினயத்தோ டுரைத்ததாவது:— "ஓ! தேவாதிதேவா! இரஜோகுணத்தினால் மோகம்கொண்டு முந்தி யடியேனுக்கும் பிரம்மனுக்கும் (4) நேரிட்ட சச்சரவினால் மயிர் சிலிர்ப்பிக்கலுற்ற வோர் மிகுந்த வயுத்தமுண்டாயிற்று. அப்போது பிரம்மன் கோபத்தி னடியேன்மீது மகிஷாசுரனைச் சிருஷ்டித்துவிட்டார்.(5) பிறகு யானும் கோபாவேசம்கொண்டவனாகி யவர்மீது வியாக்கிராசுரனைச் சிருஷ்டித் தேவிவிட்டேன். தேவரீர் திருவருளுக் காதாரமா யெங்களாற் செய்யப்பட்ட மிகுந்த தவத்தின்(6) மகா புண்ணியத்தின லவ் விருவர்களும் மகா வலிமையுள்ளவர்களாய்ச் சிருஷ்டிக்கப்பட்டார்கள். பிற கவ் விருவர்களும் வெகுகால முயுத்தம்செய்து மொருவனையொருவர் வெல்ல முடியாமல்(7) ஓ! மகேசுவரா! வியாக்கிரன் பிரமமனையும், மகி

ஷ னடியேனையும் துறத்தத் தலைப்பட்டதோடு பிற கவ்விரண் டசுரர்க ளும் சகல தேவர்களையுமே துறத்திப்போட்டார்கள்.(8) ஆகையா லிப் போ தவர்களால் மூவுலகும் மிகுதியாய் வாதைபளிக்கப்படுகின்றது. ஓ! மகாதேவா! நாங்க ளவர்களின் முன்னிலையில் நிற்க முற்றும் திற மையற்றவர்களா யிருக்கின்றோம்.(9) ஆகையால் ஓ! தயாநிதியே! தேவ ரீ ரவ் விரு கொடியர்களையு மடக்கி யெங்களைக் காப்பாற்றவேண்டும் கா ப்பாற்றவேண்டு" மென, இவ்வாறு விஷ்ணுவால் விண்ணப்பம்செய்து கொள்ளப்பட்டபோது ஸ்ரீமகேசுவரன்(10) புன்னகைப்புடன் பார்வதீ தேவியின் திருமுகத்தைநோக்கித் தமது திருவாக்கினையாற் சடிதியாய்த் துர்க்கையம்மனைச் சிருஷ்டித்துப்(11) பிற கவளுக்கு மகா பயங்கரமும் பராக்கிரமும் பொருந்திய வோர் சிங்கத்தை வாகனமாயும், அதிதீக்ஷணி யம்பொருந்திய பதினெட் டாயுதங்களையும் களிப்புடன் கொடுத்(12) த வளைப் பரிபூர்ண கிருபாகடாக்ஷத்தினு லனுக்கிரகித் தவ் விரண் டசுரர்க ளையும் கண்டிக்கும்படி யனுப்பியருளினர்.(13) பிற்பா டத் துர்க்கையம் மையும் நிகரற்றதான வச் சிங்கத்தின்மீ தேறிக்கொண்டு சகல ஆயுதப் பயிர்ச்சிகளிலும் தேர்ச்சி பொருந்தியவளாகிச் சகல ஜகங்களின் க்ஷே மார்த்தமாய்த் துரிதத்தில் வியாக்கிராசுரனைச் சமுகரித்துவிட்டுப் (14) பிறகு கணைகளால் மகிஷாசுரன் தலையையும் வெட்டிப்போட்டாள். பிற கத் தலையு மவள் முன்னிலையி லிருந் தடிக்கடி யுயுத்தம செய்யலாகையி (15)லவ ளோர் திருவடியா லத்தலையைமிதித்துக்கொண்டு சூலத்தின்நு னியால் குத்த, அப்போ தவளது திருவடி பட்டமாத்திரத்தி லம் மகி ஷாசுரன் நல்ல ஞானம்கொண்டவனுகி(16) மகா மாயையாகிய வம் மகி ஷாசுரமர்த்தனியைத் துதிசெய்தான். பிற்பாடவ ளவன்மீது பிரீதிகொ ண் டம் மகிஷாசுரனுக்குக் கணுதிபத்தன்மையையும் கொடுத்து ஸ்ரீ பர மேசுவரன் சன்னிதியில் வசிக்கும்படியு மருள்செய்தனள்.(17½) பிற்பா டம் மகிஷாசுரமர்த்தனியும் ஸ்ரீபார்வதீ பரமேசுவரர்களின்சன்னிதிக்குச் சென்(18) றப்போது சிவலிங்கத்தி லவர்களைப் பூஜைசெய்துகொண் ட வர்களது திருச்சன்னிதியிலேயே சந்தோஷமாய் வசித்துவருகின்றுள். பிறகு தேவர்கள் பயமற்றவர்களாகி ஸ்ரீபார்வதீ பரமேசுவரர்களையும் து ர்க்கையம்மனையும் வந்தனித்துப்போட் டெல்லோர்களும் தம் தம் மிரு ப்பிடத்திற்குத் துரிதமாய்ச் சென்றூர்கள்.(19)

எழுபத்தைந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் எசு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தேவேந்திரன் சொர்க்கத்தில் போகங்களை யனுபவித்துக் கொண்டு வசித்திருக்கு மளவிலோர் சமயத்

தில் விருதங்களை யுநதிபாயக் காக்கலுற்ற ஸப்த ருடிமார்க ளவனைப் பார்க்க வந்தார்கள்(1) அப்போது மகேந்திர னவ்வாறு வறலுற்ற முனிசிரேஷ்டர்களுக்கு மரியாதை செய்துவிட்டு "ஓ! மாமுனிவர்களே! நீங்கள் இங்கு வந்தபயாலடியேன் மகாபாக்கியசாலி யானதுமின்றிச்(2)சகலாபீஷ்டங்களும் விசேடமாய்க் கைகூடப் பெற்றேன். ஆகிலுமுங்களை யோர் வரனைப் பிரார்த்திக்கின்றேன். என்னவென்றால் தேவர்கள், மானிடர்கள், பிதுருக்கள், ஆகிய யாங்களெல் லோர்களும் சிநேகமாயிருக் கின்றேம்.(3) ஓ! தவத்தையே தனமாய்கொண்ட மாமுனிவர்களே! அசுரர்கள், அறக்கர்கள், பிசாசர்கள் இவர்களு மொருவரோ டொருவர் நேசர்களாயிருக்கின்றார்கள். ஆகையா லசுரர்க ளெங்களுக்குச் சத்துருக்களாகி (4) நாள்தோறு மெங்களுக்கு வாதையளித்து வருகின்றார்கள். அப்பேர்ப்பட்ட வாதையைத் தொலைப்பதற்காகவே நீங்க ளேற்பட்டிருக்கின்றபடியா லடியேனுடைய திருப்திக்காக மகாகனம்பொருந்திய மாமுனிவர்களான நீங்க ளேழுபெயர்களுமா யமராவதி பட்டணத்தில வெவ்வேறு திசைகளி லிருந்துகொண்டு குண்டங்களி லக்கினியை வளர்த் திராக்ஷிஸர்களைக் கண்டிக்கலுற்ற வியாகத்தினால் நாள்தோறு மிடைவிடாமல் ஸ்ரீமகாதேவனை நியமத்துட னாராதிக்கவேண்டு" மென, (5-6½) இவ்வாறுரைத்த வத் தேவேந்திரனை நோக்கி யவ் வேழிருடிமார்களும் பதிலுரைத்ததாவது:— 'ஓ! இந்திரா! எங்களுடைய கருமானுஷ்டானங்களை விட்டு நாங்க ளிடைவிடாம லிங் கெவ்வா றிருக்கத்தகு' மென, (8) இவ்வாறு கூறிய வம் முனிவர்களை யிந்திரன் வந்தனித் தஞ்சலிகொண்டு 'ஓ! முனிச்சிரேஷ்டர்களே! அடியேன் நிமித்தமாய் நீங்க ளிங்கு தானே யிருந்து பகவானை யாராதிக்கவேண்டும்; ஓ! உத்தமர்களே! மகா ஞானிகளாகிய வுங்களுக் கனுஷ்டான மென்ன விருக்கின்றது! சொல்வீர்க' ளென்று மன்றாடி வேண்டிக்கொண்ட விந்திரனது வார்த்தையை மறுதளிக் கமாட்டாதவர்களாகி (10) யவ்விதமே யவர்கள் திசைகள் தோறும் முறைப்படி யக்கினிவளர்த்து அதிக மனத்திருப்தியின்றி வெளிக்குமட்டிற் சந்தோடமாய்ச் செய்வோர்போல் தேவேந்திரன் பிரீதியை விரும்பியவர்களாகி மகா பரிசுத்தர்களாயிருந் தறக்கர்களைக் கண்டிக்கலுற்ற வேள்வியைச் செய்தார்கள்.(11½) இவ்விதமா யவ் வேழுயோகீசுவரர்களு மறக்கர்களுக்கு நாசமளிக்கலுற்ற அவ்வியாகத்தைச் செய்கையி(12) லவ்வே ழியாககுண்டங்களினின்று மிரத்தாசுரன், இரத்தபீஜாக்ஷகனென்ற இருவர்களும், பஞ்சாவணர்களென்ற வைந்துபேர்களுமாய் மகாகொடியர்களான வே ழசுரர்க ளுண்டானார்கள்.(13½) இவ்வேழு மகாசுரர்களும் குண்டங்களினின்று வெளிக்கிளம்பியவுடன் தங்களை

க் கண் டோட்டம்பிடிக்கலான மாமுனிவர்களைத் துறக்கலானுர்கள். (14½) பிறகவ் வே முசுரர்களு மோட்டம்பிடித்த அவ்வேழு முனிவர்களையும் விட்(15) டிந்திரலோகம் சென்றோட்டம்பிடித்த விந்திரன் முதலியவர்களைப் பலவந்தமாய்ப் பிடித்துத் தலைமீதறைந்து பட்டணத்தையுங்கொள்ளையடித்துப்போட்டுப்(16) பிறகு பிரம்மவிஷ்ணுக்களின்லோகங்களுக்குச் சென் றவரவர்களை யடித் தவர்களின் பட்டணங்களையும் துரிதமாய்க்கொள்ளையடித்துப்(17) பின்னுமுள்ள சகலப்பிராணிகளையு மிம்சிக்கத்தலைப்பட்டுவிட்டார்கள். பிற்பாடு ஸப்தருடிகள், பிரம்மன், விஷ்ணு, இந்திரன்முதலிய திக்பாலர்கள் இவர்களெல்லா(18) மவர்களை வெல்லக் கருதியவர்களாகி ஸ்ரீமகாதேவரைப் பூஜைசெய்துவிட்டுப் பிறகு கைலைக் கொடுமுடிக்குச் சென்று ஜகதீசனை வந்தனித் தசுரர்களின் தீங்கை விண்ணப்பம்செய்ய,(19½) அப்போது தயாநிதியான மகாதேவன் புன்னகைப்புட னவர்களுக்குத் திருவாக்குரைத்ததாவது:—(20)"ஓ! தேவர்களே! இந்திரன் தனது சௌக்கியார்த்தமாய் நம்மைத் தொழுகின்றவர்களான மாமுனிவர்களைப் பலாத்காரத்தினுல் அறக்கர்களைக்கண்டிக்கலுற்ற வியாகத்தைச் செய்யும்படி திட்டமிட்டனனல்லவா? (21) ஆகையா லவ் வேள்வி விபரீதமாகிப் பிரம்மன், விஷ்ணு, இந்திரன்முதலியவர்களுக்குக் கெடுதியாய்த்தேவர்களையே கண்டிக்கும்படி முடியலாயிற்"(22) றென்று மொழிந்து கைதட்டி நகைத்தருளினர். பிறகு சகல ஜகங்களுக்கும் தந்தையான வப் பிரபுவானவர் தம் மருகில் நின்ற, மகிஷ வியாக்கிராசுரர்களைக் கொன்றவளான துர்க்காதேவியைநோக்கி(23½) "ஓ! துர்க்காய்! இரத்தாசுரன், இரத்தபீஜாக்ஷன், பஞ்சாரவணர்கள் இவர்களை நமதாக்கினையால் நீ துரிதமா யுயுத்தத்திற் சயித்துவாலாவா" வென்று கட்டளையிட்டுப் பஞ்சாரவணர்களைக் கண்டிப்பதற்காகக் குண்டோதரனையும்(25) திட்டமிட் டனுப்பினர். பிற்பாடு துர்க்கை குண்டோதரனிவ் விருவரும் புறப்பட்டுப்போய்த் துர்க்கையம்மையானவ ளிரத்தாசுரனையு மிரத்தபீஜாக்ஷனையு முயுத்தத்தி லடிக்துப்(26) பிறகோர் காளியைச் சிருஷ்டித் தவளது நாவாகிய வுயுத்தாங்கத்தில் தாமிருந்துகொண்டிரத்தாசுரனையு மிரத்தபீஜாக்ஷனையும் சமுகரித்துவிட்டாள்.(27) அப்போ தவர்கள் திரத்தங்களால் நினைக்த புழுதிகளெல்லாம் பெரிய பெரிய வசுரர்களா யெழுந்துவிடுவார்களென்ற காரணத்திற்காகக் காளியின் நாவினு(28) லவ் விரத்தங்க ளேந்தி யுறுஞ்சிவிடப்பட்டன. இவ்விதமாயவ் விரண்டசுரர்களும் சமுகரிக்கப்பட்டதன்மே லக்காளியம்மை யிரத்தபானம் செய்ததிறு லதிக மதம்கொண்டவளாகி(29) யெல்லா ஜகங்களையும் சமுகரிக்கத் தலைப்பட்டுவிட்டாள். அப்போது சகலப் பிராணிக

ளும் சதிகலங்கினார்கள். பிற்பாடு பிராணிகளி னுபகாரார்த்தமாய்க் காளியின் கர்வத்தை யடக்குவதற்காக(30) ஸ்ரீதேவேச னவளோடுகூடத் திருக்கூத்தாடத் தலைப்பட்டதோ ராச்சரியமாயிருந்தது. அப்போ தக் கூத்துதனில் காளி தேவனால் வெல்லப்பட்டவளாகிக கர்வமிழந்தாள். (31) பிற கவ்வாறு தோல் வியெய்திக்கொண்ட காளியம்மைசருவ மங்களம் பொருந்தியவளாகித் துர்க்கையம்மையோடுகூடச் சேர்ந்திருந்தனள். அப்போது குண்டோதரனென்றால் மகாசுரர்களான பஞ்சாரவணர்களை (32) யென் றவர்களைப் பக்ஷித்துவிட்டு ஸ்ரீசாம்பமூர்த்தியிடம் வந்துவிட்டான். பிறகு பிரம்மன், விஷ்ணு, இந்திரன்முதலிய தேவர்களும், ஸப்தருஷிமார்களும்(33) ஸ்ரீதேவாதிதேவன் திருவாக்கினையின்பேரில் தம் தம் லோகமடைந்து சந்தோஷமா யிருந்தார்கள். இவ்வாறுகவேதேவர்களுக் கசுரவாதை நேரிட்டபோ(34) தெல்லா மெல்லோரும் சேர்ந்து பகவானைப் பூஜித்துச்சுகமடைந்திருக்கிறார்கள். ஓ! முனிவர்களே! அவர்கள் வெவ்வேறாய்ப் பூஜைபண்ணி யவரவரின் பதவியை யடைந்திருப்பதைப்பற்றி முந்தியே சொல்லியாயிற்று. (35) எல்லோரும் சேர்ந்து பகவானைப்பூஜைசெய்துச்சித்தியடைந்திருப்பதைப்பற்றியு மிப்போது கூறப்பட்டது. உத்தமமான சிவபூஜையின் மகிமையைப்பற்றி இவ்விதமாயெல்லாம் சொல்லப்பட்டிருக்கின்றது.(36) இம் மகிமையையெவர் நாள்தோறும் கேட்கின்றார்களோ, கேட்பிக்கின்றார்களோ, படிக்கின்றார்களோ, அல்லது புத்தகத்தி லெழுதிவைத்து நாள்தோறு மாதரவுடன் பூஜிக்கின்றார்களோ(37) அவர்கள் மிகவும் மனவியாதியற்றவர்களாகிப் புத்திரர், பௌத்திரர், மறுமகட்கள், சகோதரர், தந்தை, தாய், மித்திரகணங்கள், மாப்பிள்ளைகள், தௌகித்திரர்கள், பந்துவர்க்கங்கள் இவர்களோடுகூடவிகத்தில் வேண்டிய வபீஷ்டங்களையெல்லா மடைந்தும், எப்போதும்(38½) காணவேண்டிய காக்ஷிகளைக் கண்டும் செய்யவேண்டியகருமங் களைச் செய்தும் முடிவினில் மோக்ஷமடைவார்களே! (39) கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! ஸ்ரீபரமேசுவரானுடைய பாதாரவிந்தங்களைத்தொழுவதினால் விஷ்ணு, பிரம்மன், இந்திரன்இவர்களுடைய பதவிகள், திரண்ட வைசுவரியங்கள் முதலிய விப்பேர்ப்பட்டவைகளெல்லா முண்டாகின்றன. (40)

எழுபத்தாறுவது அத்தியாயம்
முற்றிற்று

---

## உபதேசகாண்டம் எஎ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பூர்வத்தில் பிரம்மபுத்திரர்களான மகா புண்ணியசாலிகளாகிய ஸனகர், ஸனந்தனர், ஸனாதனர் பகவானாகிய ஸனத்குமாரர் (1) இந் நா

ன் கிருடசுவரர்களும் மகா புண்ணியமான சிவபூஜையைச் செய்து பிறகு பிரசன்னரான ஸ்ரீபரமேசுவரனால் வேதாகமபுராணேதிகாஸங்கள் கற்பிக்கப்பட்டவர்களாகி(2½) விரதங்களை நன்றாய்க் காக்கலுற்றவர்களும், என்றும் சிவபூஜையில் முயன்றவர்களும், சிவயோகத்தினால் பரிசுத்தம்பொருந்தியவர்களும், சிவஞ்ஞானமாகிய வக்கினியால் சகல மகா பாதகத்திறட்களையு மெரிக்கப்பெற்றவர்களுமாகிச் சிவதசையிலேயேமோக்ஷம்பெற்றுப் பரமாநந்த மடைந்திருக்கிறார்கள். (4) மேலும் கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! முந்தி வியாஸமுனிவர் சகல புவனங்களையும்காத்தருள்வோரான மேன்மைபொருந்திய ஸ்ரீமகாதேவனைப் பூஜித்துப்பிறகு வேதபுராணங்களை(5) நன்று யறிந்தவைகளைத் தவசிகளான சீடர்களுக்குக் கற்பித்தப் புலவர் பரதத்துவப் பொருளான ஸ்ரீமகாதேவனை யுண்மையி லறிந்தவரானார். (6) பிற்பாடவ ரைசுவரியக் கொழுப்பின் மோகத்தினாலும், கல்வியின் கர்வத்தினாலும், சம்புவின் மாயையாலு மப்போது தம் சீடர்களையும் மற்றுள்ள முனிவர்களையும் நோக்கி(7) யவர் ஸ்ரீபரமேசுவரன் மாயையால் மோகிக்கப்பட்டவராகி ஸ்ரீநாராயணனையே பரதத்துவமும் நித்தியமுமான பரப்பிரம்மமென்று சொன்னார்.(8) அப்போ தவச தெல்லாச் சீடர்களும் நன்காராய்ந்து பார்த்து வசனமுரைத்ததாவது:— "ஓ! முனிச்சிரேஷ்டரே! இதுபரியந்தம் தேவரீர் ஸ்ரீஸதாசிவன்தான் நித்தியமான பரப்பிரம்மப்பொருளென்று சொல்லிவந்திருக்கையி லிப்போ ததற்கு விரோதமாய்ச் சொல்லுகின்றீரே!(9½) உபனிடதங்களுக்கும் புராணங்களுக்கு மிப்போது மாறுதலான பொருளைக்கூறுவ தென்னகாரண"(10) மென் றவர்களால் வினவப்பட்டு மவ்வந்தணர்களை நோக்கி வியாஸர் பின்னு முரைத்ததாவது:— "கேளீர்! பிராம்மணர்களே! ஸ்ரீவிஷ்ணுவே பரப்பிரம்மமேயின்றி மற்றொருவரு மல்லர். முந்தி நாமேதோ சும்மாகூறினோம். (11½) ஆகையால் ஸ்ரீமாதவனே பரப்பிரம்மமென் றிப்போது நீங்களறியவேண்டு"(12) மென, இவ்வாறு வாது விரோதார்த்தமான வசனத்தைக் கேட்டப் பிராம்மணோத்தமர்கள் மனமதிற் சந்தேகம்கொண்டவர்களாகி யம் முனிவனை நோக்கிப் பின்னு முரைத்திட்டதாவது:(13)'ஓ! ஸ்வாமீ! வேதங்களாலும் புராணங்களாலும் விசுவநாதரான ஸ்ரீமகேசுவர னொருவரே சத்தியப்பொருளென்று சொல்லப்படுவதாய்க் கொஞ்சமேனும் மனப்பிரமையில்லாமல் முந்தித் தேவரீர் பலமுறை யுரைத்திருக்கிறீர்.(14) அப்படியிருக்கையி லிப்போ தீசன்மாயையால் மோகிக்கப்பெற்றவராகி யதற்கு விரோதமாய்ச் சொல்லுகின்றீர். ஆகையா லிப்பேர்ப்பட்ட வுமதுவசனம் சத்தியமாய்ப் பிரமாணமேயில்லை' யென, (15) இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்

டுப் பின்னும் வியாஸ ருரைத்ததாவது:— 'கேளீர்! பிராம்மணச்சிரேஷ்டர்களே! ஸ்ரீவிஷ்ணுவே பரதத்துவமும் நித்தியமுமான பரப்பிரம்மமென் றுங்கள் முன்னிலையிற் சத்தியமாய்ச் சொல்லுகின்றேன்' மென,(16½) இவ்வா றவரது வார்த்தையைக் கேட்டதன்மேல் சீடர்களும் மற்ற முனிவர்களும்(17) 'ஓ! ஸ்வாமீ! தேவரீ ரிப்போ துரைப்பது சத்தியமாயின் பெருமைபொருந்திய காசிபட்டணம்போ யங்கு கையை யுயரத் தூக்கிக்கொண்டு நீர் ஸத்தியமாய்ச்சொன்னு(18) லப்போ துமது வார்த்தை மிகவும் பிரமாணமேயென்பதிற் சந்தேகமேயில்லை' யென, அவ் வசனம் கேட்டு முனிவரு மங்ஙனமே நல்லதென்று(19) மகா பாதகங்களை யெல்லாம் தொலைப்பதில் திறமைபொருந்திய காசிநகருக்குச் சென் றங்கு ஸ்ரீவிசுவநாதசுவாமி சன்னிதியில் கொஞ்சமேனு மச்சமின்றிக் கைகளை யுயரத் தூக்கினின்றுகொண்டு (20) "ஸ்ரீநாராயணனே பரப்பிரம்மமும் பரமாத்துமமும், பராபரமும், பரதத்துவமும், பரஞ்சோதியுமான பொருளென்று யாம்கையைத்தூக்கிகொண்டு சொல்லுகின்றேம்;(21) இதே சத்தியம் சத்தியம் சத்தியமென் றிப்போ திங் குறுதியாய்ச் சொல்லுகின்றேன்' மென்றுவியாஸர்மதி மோகத்தினால் ஸ்ரீசிவபிரான் சன்னிதியில்நின்று சொன்னவுட(22) னப்போ தவர திருகைகளு மாகாயத்தில் தம்பித் தவரது நாவு மசைவற்றதாகி யம் முனிவர் கொஞ்சமேனு மசைவின்றி வெறும் கட்டைபோல் நிற்கலானார்.(23) அதுகண் டவரது சீடர்களும் மற்றெல்லா முனிவர்களும் மகா பயம்கொண்டவர்களாகி "ஓ! கோ! கோ! புத்திமோகத்தின் மகிமையைப்பற்றி யாதுரைப்போம்? இவரோ வாசாலகர்களில் மெத்தச் சிறந்தவர்;(24) மேலு மிவர் சகல வேதபுராணங்களையும் பிரித்திருக்கிறார். அப்படி யிருந்து மிவர் கொஞ்சமேனு மச்சமின்றி விபரீதமான பொருளை யிங்குரைக்கத் துணிந்தனரன்றே!(25) ஆகையால்தா னிவரது கைகள் தம்பிக்கலாகி வாயுங் கட்டப்படலாயிற் று) ஓ! கோ! இப்பேர்ப்பட்ட வியாஸமாமுனிவர்கூட சிவமாயையால் மோகிக்கப்பெற்றவராகி யஸத்திய முரைக்கலாயினரன்றே! (26) ஆகையால்தா னிவருக்கு ஸ்ரீமகாதேவரால், தீராத தண்டனை விதிக்கப்படலாயிற்' றென் றவரது சீடர்களும் சகல முனிவர்களும் பயத்தினால் நடுநடுங்கலாகிக்(27) கைகளை யஞ்சலிசெய்துகொண்டு ஸ்ரீமகேசுவரனைத் துதி செய்தார்கள். அப்போ தங்குதானே பகவானாகிய ஸ்ரீவிஷ்ணு தோன்றிக் (28) கைகள் தம்பிக்கப்பெற்ற வியாசனைக்கண் டுள்ளத்தி லாச்சரிய முற்றவராகி "ஓ! கோ! வியாசமுனிவரே! உமது புத்தி யெங்குதான் போயிற்றோ!(29) ஓ! முனிவரே! விசுவங்களை யதிகரித்தவரும், சாந்தரும், ஸச்சிதாநந்தச் சொரூபியும், யோகிகளால் தியானிக்கலுற்றவரும்,

உமாகாந்தரும், அடியேன் கர்த்தரும், என்று மழிவற்றவரும், சகல வுப நிடதங்களுக் குரிய வரும்பொருளும், எல்லோர்களையு மதிகரித்தவரும்' உத்தமர்களுக்கெல்லா முத்தமரு'மான ஸ்ரீசிவபிரானை($30\frac{1}{2}$) விட்டவரது திருமாயையா லெந்தனை யதிகமாய் நீ ருனைத்திட்டீரோ; இது மிகவும் கஷ்டமே! (31) ஏனென்றா லிதனாற் சிவத்துரோக முமக்குமட்டி லில்லை. பின்னேயென்று லெந்தனுக்குமுண்டாகிவிட்டது. ஆ! கா! ஸ்ரீசிவபிரானே பாதத்துவமும், ஸகல விசுவங்களிலு மதிக மேன்மைபொருந்தியவரு மென்பது ஸத்தியம், ஸத்தியம், பின்னும் ஸத்தியமேயென்று கைகளைத் தூக்கிக்கொண்டு முறையிடுகின்றேன்.($32\frac{1}{2}$) யான் சகல ஜகங்களுக்கும் கர்த்தன். அடியேனுக்குக் கர்த்தர் ஸ்ரீமகேசுவரரோ!(33) அப்பேர்ப்பட்டத் தேவாதிதேவருக்கோ கர்த்த மொருவருமில்லை. சருவேசுவரேசுவரரான வம் மகாப்பிரபுவே சகலப் பிரபஞ்சங்களையு மாண்டருளுகின்ருர்.(34) அவரது திருவருளால்தா னெல்லோர்களுக்கும் சமுசாரத்தினின்று கரையேற்றமென்பது நிச்சயமே!' யென்று சொல்லிவிட் டங்கிருந்த மற்ற முனிவர்களோடுகூட ஸ்ரீபரமேசுவரனைத் துதிசெய்ததாவது:—(35) "ஓ! ஜயாவிஜயீபவா! சம்போ! மகாதேவா! ஸச்சிதாநந்தத் திருமேனியே! ஓ! மகாதேவா! தேவரீர் திருவடிக்கு வந்தனம் செய்கின்றேன். பராபரக்கடவுளும்,(36) விசுவங்களுக் கதிபரும், இயஞ்ஞங்களுக் கிசருமான தேவரீருக்கு வந்தனம் செய்கின்றேன். சகலப் பிரபஞ்ச கர்த்தரான தேவரீருக்குவந்தனம், வந்தனம்,பின்னும் வந்தன"(37) மென்று விஷ்ணு மற்ற முனிவர்களோடு ஸ்ரீதேவேசனைத் தோத்திரம்செய்கையி லப்போது வியாஸமுனிவர் மோகம் தெளிந்து மனதினில் மிகுந்த பயம்கொண்டவராகி(38) "ஓ! ஓ! ஸ்ரீமகாதேவரோ சகல விசுவங்களுக்கு மதிக மேன்மைகொண்டவரும், பரதத்துவமும், பராபரரும், கேவலம் நினைத்தமாத்திரத்திற் சகல லோகங்களையு மாண்டருளுகின்றவருமே! (39) அவரது திருவாக்கினையால்தான் பிரம்மன் சகல ஜகங்களையும் மறுபடி முன்போற் சிருஷ்டிக்கின்ருர். பகவானுகிய ஸ்ரீநாராயணனு மவரதாக்கினையாலே பாலனம்செய்கின்ருர்.(40) யாவரைப் பூஜைசெய்த மகிமையால் பிரம்மன் பிரம்மத்தன்மையையும், விஷ்ணு தம் விஷ்ணுப்பதவியையும் மடைந்திருக்கின்ருர்களோ(41) அப்பேர்ப்பட்ட மாயைக் ககப்படாதவரும். சுகத்தை யளிப்பவருமான ஸ்ரீமகேசுவரனை வந்தனிக்கின்றே" னென்று வியாஸமுனிவர் ஸ்ரீதேவேசனைத் துதிசெய்தனர்.(42) அப்போ தவர் முன்னிலையில் ஸ்ரீஸாம்பமூர்த்தி சகல கணங்களோடும் கூட சான்னித்தியமருளியவுடன் ஸ்ரீசிவபிரானுக்கு நேசரான நந்திகேசு

வரன் வியாசனை நோக்கி(43) 'ஓ! புத்திகெட்டவியாஸமுனியே! பரப்பிரம்மமூர்த்தியும், சுகமளிப்பவரும், நீலகண்டரும், முக்கண்ணரும், ஸச்சிதாநந்தமூர்த்தியும், விசுவாதிகரும், விசுவரூபியும், சகலப் பிரபஞ்சங்களையு மொரே கபளமாய் விழுங்குவோருமான ஸ்ரீமகாத்துமர் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய சகல தேவர்களாலும் தம் திருவடியில் வந்தனிக்கப்பெற்றவராயிருக்கையில் விஷ்ணுதான் பிரம்மமென்று சொல்லி நீ வீணாய்ச் சத்தியம் பண்ணினையல்லவா!(44-45½) நீ கைகளை யுயரத் தூக்கினபடியா லவைகளை வெட்டிப்போடவேவேண்டும்;(46) ஓ, வியாஸா, இதோ உன் முன்னிலையில் பிரசன்னராகி யிருக்கின்ற, சுகமளிப்பவரும், முக்கண்ணரும், அனேகப் பிரம்ம விஷ்ணுக்கள் முதலியவர்களின் மண்டையோடுகளா லலங்கரிக்கப்பெற்ற திருமேனியைக்கொண்டவரும், ஊகிக்கவுங் குறிப்பிடவும் முடியாதவரும், அளவற்ற மகிமைகளுக் கிருப்பிடமுமான மகாப்பிரபுவைப்பா" ரென, (47½) அப்போது வியாஸர் ஸ்ரீபரமசிவனைப் பிரத்தியக்ஷத்திற் கண்டு கண்ணைக்கொண்டதற்கு தக்க பயனைக் கைக்கொண்டு(48) தண்டம்போல் பூமியில் தண்டனிட் டஞ்சலிகொண்டு நின்று "ஓ! கருணைக்கடலான மகாதேவா! மகாதேவா! மகாதேவா! அஞ்ஞானத்தினாற் செய்யப்படலான இவ்வபராதத்தை மன்னித்தருளவேண்டும்.(49½) அடியேனுக்குத் தேவரீரேகதி; தேவரீரேகதி; தேவரீரேகதி" யென் றவ் வியாஸ ரஞ்சலிகொண்டு துதிசெய்கையில் ஸ்ரீபகவா னங்குதானே சகல கணதிபர்களுடனு மந்தர்த்தானமடைந்தனர்.(51) பிற்பாடு விஷ்ணுவும், சகல முனிவர்களும், வியாஸரி னெல்லாச் சீடர்களும் ஸ்ரீமகாதேவனைக் கண்டதன்மேற் களிப்பினா லுரோமங்கள் சிலிர்க்கப்பெற்றவர்களாகிப்(52) பயத்தினால் தேகம் மிகவும் நடுங்கப்பெற்றவரான வியாஸமுனிவனை நோக்கி "ஓ! பாவமற்ற மாமுனிவரே! இனி நீ ரிப்பேர்ப்பட்ட வார்த்தை சொல்லத்தகாது;(53) நீ ரென்றும் ஸ்ரீசிவபிரானே பரப்பிரம்மமென்று மதத்தைவிட்டுச் சொல்லவேண்டு" மென்று வியாஸருக்குப் புத்தி சொல்லிப்போட்டுக் கேளீர்! தரணிதேவர்களே! விஷ்ணு வந்தர்த்தானமடைந்தனர். (54) பிறகெல்லா முனிவர்களும் தங்கள் தங்க ளாசிரமத்திற்குப் போய்விட்டார்கள். அதன் பிறகு வியாஸமுனிவ ரிதற்குத் தக்க பரிகாரத்தை மனதினா லாலோசித்துக்கொண்டு(55) தமது சீடர்களோடுகூடக் கலிதோடமற்றதான காஞ்சிபுரத்திற்குச்சென் றங்கு ஸ்ரீமகேசுவரனை முறைப்படி பிரதிஷ்டைசெய்து பூஜித்து(56) ஸ்ரீசம்புவின் கிருபாபலத்தினால் பாக்கியுள்ள

பாவத்தையும் மோகத்தையும் தொலைத்துவிட்டுச் சிவஞானத்தின் மகிமையால் நிர்மலமான சந்தோஷத்தையடைந்தார்.(57)

எழுபத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் எஅ—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர், பிராம்மணோத்தமர்களே, பூர்வத்தில் புண்ணியாத்துமராகிய வசிஷ்டமாமுனிவர் ஸ்ரீதிரிபுரமாற்றனைப் பூஜைசெய்ததினா லருந்ததியம்மையை மனைவியாயடைந்து வேண்டியதைத் தாலுற்ற காமதேனுவையும்,(1) சகலவிதக் கல்விகளிலும் நல்ல தேர்ச்சியையும் பெற்று நிகரற்ற மகா புத்திசாலியாகி மேலும் ஸ்ரீ பிரபுவைப் பூஜித்த மகிமையால் ஸப்தருடிகளி லொருவராயிருக்கும் பெருமையையும் கைக்கொண்டனர்.(2) அவ் வசிஷ்டருக்குப் பௌத்திரரும் சக்திமாமுனிவருக்குப் புத்திரருமான பராசரமுனிவரும் நாள்தோறும் சிவபூஜையிலே முயன்றவராகி யொருநாள் கைம்பெண்ணான தன் தாயை நோக்கி மிகுந்த துக்கத்துடன் 'ஓ அம்மா, என் தந்தை யெங்கே போனா' ரென் றிரகசியமாய் வினவ,(3-4) அவர் வசனத்தைக் கேட்டவாது தாயானவ ளுள்ளமதில் துக்கங்கொண்டவளாகி 'ஓ புத்திரா, உன் தந்தை துராத்துமனாகிய வோ ரறக்கனாற் கொல்லப்பட்டார். அதனால்தா னிப்போ தெனக்கு வைதவியம் வரலாயிற்று. ஆகையால் ஓ பாலகா, நீ யிப்போது தடையின்றி யதற்குத் தக்க பரிகாரத்தைச் செய்யவேண்டு(6) மென்ற அவளது வசனத்தைக் கேட்டவர் மனதினில் துக்கத்தினால் வியாகுலமுற்றவராகி யவ் வறக்கனைக் கொல்லவேண்டிச் சிவபூஜை செய்தார்.(7) பிறகு பகவா னப் பூஜையினால் மனக்களிப்புற்றுப் பிரசன்னராகி யவருக்குச் சடிதியாய் வரனருளிவிட் டங்கேயே யந்தர்த்தான மடைந்தார்.(8) பிற்பாடம் முனிவர் தம் தந்தை யிறந்துபோனபோதிலு மவரைச் சிவாக்கினையால் காணலாகிப் பிற கறக்கர்கள் நாசமடைவதற்காகவோர் வேள்வி வளர்க்க, (9) அப்போ தறக்கர்களெல்லாம் சிவமந்திரத்தின் மகிமையால் சிவாக்கினையின்படி யக்கினிகுண்டத்தில் வந்து விழுந்து சிலர் மடிந்தும் சிலர் பொசுங்கியும் போனார்கள்.(10) அதுகண்டு மகா புத்திசாலியான வசிஷ்டமாமுனிவரும் மற்றுமுள்ள சகல இருடிகளும் பராசரமுனிவரின் கோபம் தணியும்படி சக்திமாமுனிவரைக் களிப்பிக்க, கேளீர்,

முனிவர்களே, (11) பிற கவர் கோபத்தைவிட்டுச் சகல வேதாகம புரா ணங்களையு முண்மையாய்க் கற்றுச்(12) சில சாத்திரங்களையு மியற்றிச் சந்தோட மடைந்து கேளீர், தாணிதேவர்களே, பிறகு ஸ்ரீசம்புவின் கிருபையால் நித்தியத்தன்மையைக் கைக்கொண்டார்.(13) தவிரவும் விசுவாமித்திரனென்னு மோர் தவசியும் முந்தி ஸ்ரீமகேசுவரனைப் பூஜித்ததினால் மகா புத்திசாலியாகி (மற்றோர் சொர்க்கத்தைச்) சிருஷ்டித்துத் திரிசங்குராஜனை யிரக்ஷித்தனரன்றோ!(14) மேலு மவர் ஸ்ரீமகாதேவரிடமிருந் தனேக வரன்களையும் பெற்றுச் சப்தருடிகளி லொருவராயிருக்கும் தன்மையையும் கைக்கொண்டனர். பின்னும் மகா புண்ணியாத்துமரான வியாக்கிரபாத மாமுனிவரும் ஸ்ரீஜகதீசனைப்(15) பூஜித் தவர தருளினால் சிரேஷ்டரான உபமன்னியுவென்னும் பிள்ளையை யடைந்து ஸ்ரீதேவாதிதேவரது மகிமைபொருந்திய திருநடனத்தையும் காக்ஷிகொண்டு(16) மேலு மவரது கிருபையினால் நித்தியத்தன்மையையும் கைக்கொண்டார். பூர்வத்தி லவ் வியாக்கிரபாதமுனிவரின் புத்திரரான மகா புத்திசாலியாகிய வுபமன்னியுபகவா(7) னிளமையில் தம் வீட்டிலிருந்த தாயை நோக்கிப் பால் கேட்டதற் கவ் வம்மணி மாவை நீரிற் கரைத்துப் பொய்ப் பாலாய்க்கொடுக்க,(18) அதனை யவர் குடித்ததி லது உருசியாயில்லாதுபற்றி மிகவும் துக்கப்பட் டழுது 'ஓ அம்மா, இது நீரோயின்றிப் பாலன்' றென்று சொல்லி யவளை யடிக்கடி வாதைப்படுத்தினர்.(19) பிற்பா டவள் மிகவும் துக்கப்பட்டவளாகி விம்மி யழலான தன் சிறுவனை நோக்கி 'ஓ பாலகா, சுவையுள்ள நேர்த்தியான பால் நம் வீட்டிலில்லையே!(20) ஆனா லுன தம்மானுகிய மகா புண்ணியாத்துமரும், சிவபிரானுக்கு நேசரும், நாள்தோறும் சிவபூஜையில் முயன்றவரும், வேதவேதாந்தங்களிற் கரைகண்டவருமான வசிஷ்டமாமுனிவர்(21) சிவபூஜையின் மகிமையால் மிகுதியாய்ப் பால்கறக்கவுற்ற காமதேனுவை யடைந்திருக்கிறார். நீ யவர் வீட்டிற் காமதேனுவினின்று கறக்கப்படும் பாலைக்குடித்துவிட்டு(22) அடா செல்வனே, நீ குழந்தைத்தன்மையா லிங்கும் வீணாய்ப் பால் கேட்கலாகின்றாய். முக்கண்ணரி னருளில்லாவிடில் பாலோடுகூட வுண்புசிப்ப தேது?(23) அன்றியும் மகா தரித்திரனான வுந்தனுக்குப் பா லெவ்வாறு கிடைக்கும்? ஆகையால் பாலைவிரும்புகின்ற நீ சிவபூஜை பண்ணவேண்டும்.(24) ஏனென்றால் சகலப்பிரபஞ்சங்களினு மதிகப் பெருமைபொருந்தியவரும், யோகிகளா லெப்போதும் தியானிக்கப்பட்டவரும், சூலபாணியுமான மகாப்பிரபுவைப் பூஜிப்பதினால் மனிதரால் சகல வபீஷ்டங்களும் கைக்கொள்ளப்படுகின்றது'(25) என

ன்னும் தாயின் வசனத்தைக் கேட்டபடியே நல்லதென்று சொல்லி யவ்விருடிபாலகர் கொஞ்சதூரம் போய் நேர்த்தியான வோ ரேகாந்தஸ் தலத்தை யடைந்து (26) தேகம் முழுதும் திருநீற்றினு லலங்கரிக்கப் பெற்றவரும், சிறந்த வுருத்திராக்ஷங்களை யாபரணமாய்ப் பூண்டவருமா கிக் காரியத்தி லுறுதியுள்ள மனதைக்கொண்டவராகித் தேவேசனும், ஆதிபுருடருமான மகாப்பிரபுவைத் தியானித்துப் பூஜைசெய்கையி($27\frac{1}{2}$) லப்போது பகவா னவர் முன்னிலையி லிந்திரனுருவத்தோடு பிரசன்னம ருள, (28) அப்பேர்ப்பட்ட விந்திரனை யம் முனிவர் கண்டு மனதினிற் கோபாவேசம் கொண்டவராகி 'அடா இந்திரா, நீ யிப்போது நம் முன் னிலையைவிட் டெங்காயினும் போய்விடு. (29) பூஜையில் முயன்றிருக்கு ம் யா மிப்போ துந்தனை நினைக்கவில்லை; சிவபூஜைக்கு விக்கினம்நேரி டி (30) லுந்தனைச் சபித்துவிடுவோ' மென் றப்போதே யத் தே வேசனைச் சபிப்போராய்க் கோபித்துக்கொண்டார். அப்போது ஜகதீச னவ்வா றவரது மனவுருதியையும் திறமையையும் கண்டு (31) கணநேச த்திற்குள் பார்வதியம்மையோடுகூட விடபத்தின்பேரிற் பிரசன்னரானு ர். அப்பேர்ப்பட்ட ஸ்ரீஸாம்பமூர்த்தியைக்கண்டவுடன் பூமிதனில் தண் டம்போல் வந்தனித்(32) தெழுந் தானந்தத்தினல் பரவசம்கொண்டவ ராகிப் பக்தியுடன் துரிதமாய் நர்த்தனம்பண்ணி 'ஓ மகேசுவரா, யானிப் போது பெருமையடைந்தவனு மனுக்கிரகிக்கப்பட்டவனு மாகிவிட்டே ன். (33) ஓ தேவேசா, தேவரீரைத் தரிசித்தமாத்திரத்தி லென் விருப்ப மெல்லாம் கைகூடிவிட்ட' தென், இவ் வசனம் கேட்டுத் தவசிகளுக்கு நேசரான ஸ்ரீமகேசுவரன் (34) பாலை விரும்பிய அம் முனிவருக்குப் பா ற்கடலைக் கொடுத்தருளிவிட்டு 'ஓ இருடிபாலகா, உனக்குச் சகல வேத வேதாந்தங்களின் ஞானமும், சகல புராணசாத்திரங்களின் தத்துவங்க ளும் தெளிய விளங்கக்கடவதோ டுந்தனுக் கென்று மழிவில்லாமையு முண்டாகக்கடவ' (36) தென்று பின்னும் சில வரன்களையு மருளிவிட் டோர் நொடிக்குள் ளந்தர்த்தானமடைந்தனர். பிறகு சிவநேசரான வுப மன்னியுபகவானும் ஸ்ரீசம்புவிடமிருந் தவ்வாறு வரன்களையடைந்து வா ழ்ந்துவருகின்றனர். (37) சிவநேசரான கௌதமமாமுனிவரும் சகல

சிவவிரதங்களையு மனுஷ்டித்து ஸ்ரீ மகாதேவனைப் பூஜைபண்ணிச் (38) சகலக் கல்விகளிலும் நன்றாய்த் தேர்ச்சியடைந்து பிரபுவாகிய மகேசுவ ரனுக்கு வசப்பட்டவராகி நித்தியத்தன்மையையடைந்து மெத்த மகிழ்ச்சியோடு வாழ்ந்திருக்கின்றார்.(39) ஸுதாநந்தரென்ற யோகீசுவரரும் ஸச்சிதாநந்தமூர்த்தியான ஸாக்ஷாத் ஸ்ரீஸாம்பமூர்த்தியை மிகுந்த பக்தியோடு பூஜைபண்ணி(40) யென்றும் சகல புவனங்களிலும் சுற்றிவந் தங்கங்குள்ள சங்கதிகளை நன்றாய்த் தெரிந்துகொண்டு (41) நாள்தோறு மவைகளையெல்லாம் கைலாஸவாசியான ஸ்ரீ மகேசுவரனுக்கு வெகு சந்தோஷமா யறிவித்து முறைப்படி வந்தனித்துவந்து(42) பரமானந்தமாகிய அலைகளைக்கொண்ட கடலாய் விளங்கிவருகின்றார். மிருகண்டுமாமுனிவரும் ஸ்ரீமகாதேவனைப் பூஜைசெய்ததாற் (43) சகல கல்விகளிலும் தேற்சிகொண்ட மார்க்கண்டேயனைப் பிள்ளையாயடைந் தவரா லெல்லா வுலகங்களிலும் மிகுந்தப் பிரசித்தியடைந்து(44) ஸத்தியலோகமதி லெப்போதும் மகா சந்தோஷத்தோடு வசித்திருக்கின்றார். அம் மிருகண்டு முனிவரின் புத்திரனை மகா புத்திசாலியாகிய மார்க்கண்டேயமாமுனிவர்,(45) மிருகண்டுமுனிவரால் ஸ்ரீதேவேசனிடமிருந்து வரனடைந்தகாலத்தில் பதினாறுவயதுள்ளவனாய்த் தான் ஸ்ரீ சம்புவா லருள்செய்யப்பட்டனர்.(46) பிறகு நாளளவி லப் பதினாறு வருடங்களும் முடிவதற் கிரண்டுநாள் பாக்கியிருக்கும்போது கேளீர் தரணிதேவர்களே, அவரது (47) பெற்றோர்கள் மிருத்தியு வருவதைக் கண் டப்போது மிகுதியா யழுதார்கள். மார்க்கண்டேய ரவர்கள் தன்னிமித்தமாய்ச் சொல்லி யழுவதைக் கேட்டதன்மேல்(48) மிருத்தியுவைக் கொன்றவரும், முக்கண்ணரும், அடியார்களைப் பகைக்கும் வீரர்களைக் கொல்வோருமான ஸ்ரீமகாதேவனை யப் புண்ணியாத்துமர் மிகவு மேகாக்கிரசித்தராய்ப் பூஜைசெய்தார்.(49) கேளீர் தரணிதேவர்களே, அப்போ தந்தகன் சீக்கிரமா யங்கு வந்து மார்க்கண்டேயனை நல்ல வார்த்தைகளால் தன் லோகத்திற் கழைக்கையி(50) லவ ரவ் வியமனை யெவ்வளவும் சட்டைசெய்யாமலே சிவபூஜையில் முயன்றிருக்க, அப்போ தவன் மகா பயங்கரமான வுருவத்தைக் கொண்டவனாகி மிகுந்த வட்டகாஸத்தோ டதட்டிப் பயங்காட்

டினன்.(51) அதற் கம் முனிவர் மகா பயத்தோ டிலிங்கரூபியான ஸ்ரீ தேவாதிதேவனைக் கட்டிக்கொள்ளலாகையி லியமன் பாசத்தினு லவனை க் கட்டியிழுக்கத் தலைப்பட்டான்.(52) அப்போது பகவானாகிய ஸ்ரீமகே சுவர னந்த லிங்கத்தினின்று வெளிக்கிளம்பும்போது மார்க்கண்டேயமு னிவர் காலகாலரும், பினாகபாணியும், நீலகண்டரும், முக்கண்ணரும், ச டைமுடியால் விளங்கப்பெற்றவருமான ஸ்ரீமகாதேவனைக் கண்டு மிகு ந்த மனக்களிப்புடன் தோத்திரம் செய்ததோவென்றால்:—(54) 'கால காலனே போற்றி, விரூபாக்ஷனே போற்றி, சூலபாணியே போற்றி, விசுவாதிகனே போற்றி, விசுவனே போற்றி, பராத்பரதரனே போற் றி,(55) கபர்த்தியே போற்றி, காளனே போற்றி, காளிநாட்டியப் பிரி யனே போற்றி, உக்கிரனே போற்றி, சருவபக்ஷகனே போற்றி, பீம னே போற்றி, மகிமைகொண்டவனே போற்றி,(56) க்ஷிப்பிரோஷ்ணவே போற்றி, க்ஷயத்வீரனே போற்றி போற்றி' யென, இவ்வா றம் மகாத் துமர் செய்த துதியைக் கேட்டருளியதன்மேல் பிரசன்னரான விசுவா த்துமாவாகிய ஸ்ரீமகாதேவ ரம் மார்க்கண்டேய முனிவரை நோக்கித் தி ருவாக்கருளியதாவது:—(57½) 'கேளாய் மார்க்கண்டேய முனியே, உ ன் பூஜையினுல் யாம் பிரசன்னராகிவிட்டோம்;(58) நீ யென்றும் பதினு றுவயதுள்ளவனுயே யிருக்கக்கடவாய்; மேலு முனக்கு வேண்டிய சகல வபீஷ்டங்களு மதிசீக்கிரத்திற் கைகூடக்கடவ'(59) தென்னும் வரனை யவருக்குக் கொடுத்தருளிவிட் டங்கேயே அந்தர்த்தான மடைந்தனர். பிறகு மார்க்கண்டேயரும் நித்தியத்தன்மையை யடைந்து பிறகு(60) தம் வீடுசேர்ந்து பெற்றோர்களோடுகூட வென்றும் சந்தோடமாய் வசி த்துக்கொண் டுலகினில் வேறு நிகரற்றவராகிச் சைவசமய நூற்களில் தேற்சிபெற்றவரும், சிவாகமப்பொருட்களைத் தெளிய வறிந்தவருமா யிப்போதுகூட விளங்கியிருக்கின்றார். (61)

எழுபத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று

---

## உபதேசகாண்டம் எகூ—வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர் தவசிச்ரேஷ்டர்களே! அகஸ்திய மாமுனிவரும் சிவ பூஜையின் மகிமையால் விந்திய மா கிரியின் கீர்வத்தை யடக்கியும்(1) பருந்த பெரு மலைகளோடுகூடிய கடலைக் குடித்தும், துராத்துமர்க ளான வில்வல வாதாபிகளைக் கண்டித்து மிருக்கின்றார். (2) மேலும் அவ ரவ்வாறே ஸ்ரீபிரபுவின் கிருபையினால் தமிழென்னும் பாஷை யை யுண்டுபண்ணிச் சகல சாத்திரப் பயிர்ச்சிகளிலும் நன்றாய்த் தே ர்ச்சியடைந்தனர். (3) பின்னும் கேளீர் பிராம்மணோத்தமர்களே! அவர் ஸ்ரீ தேவாதிதேவன் திருநடனத்தையும், பார்வதியோடுகூட ஸ்ரீபரமேசுவரனது பரிசுத்தம் பொருந்திய திருக்கலியாணத்தையும் சாக்ஷிகொண்டு, கிடைப்பதற்கசாத்தியமான, தம திச்சையின்படி எல்லா லோகங்களுக்கும் செல்லுந் தன்மையையு மடைந் தப்போது ஸ்ரீகந்தபிரானிட மிருந்து சிவயோகத்தையு முபதேசம் பெற்றுச்(5) சகல லோகங்களாலும் பூஜிக்கப்படுந் தன்மையையும், ஜகமெங்கும் ப ரவிய கீர்த்தியையு மடையலாயினர். தவிரவும் கேளீர் முனிவர்களே! மகா புண்ணியாத்துமரான ததீசிமா முனிவரும் வாலிபம் முதலாய் க்ஷுபனென்னு மரசனோடு நேசமா யிருந்து வந்தார். (6½) இப்படி யிருக்கையி லொருநாள் அம்முனிவ ரரச ரிருவர்களுக்குங் கலகமுண் டாயிற்று. (7) என்னவென்று லவ்வரசன் க்ஷத்திரியரின் பலம் பெரி தென்றும் அவ்வேதியர் தமது பலம் பெரிதென்றுஞ் சொல்லிக்கொள் ளுகையி லவ்விருவர்களுக்கும் பலவாற யிவ்வாறு வாக்குவாதம் நேரி ட்டபோது கேளீர் முனிவர்களே! (8) முனிவர் கோபத்தினால் தன் னையுயர்த்திச் சொல்லலான அவ்வரசனை யடித்தார். பிறகு துராத்து மனான அவ்வரசன் கோபத்தினால் துர்ப்புத்திகொண்டவனாகி மகாபய ங்கரமான வஜ்ஜிராயுதத்தினால் அம்முனிவரை யடிக்க, அப்போது அம்முனிவர் அவ் வஜ்ஜிராயுதத்தா லடிபட்டதினால் உயிரை விட்டவு டன் (10) அங்குள்ளவர்க்குள் பயங்கரமான மிகுந்த ஹாஹாகார முண்டாயிற்று. அப்போதுடனே அம்முனிவரின் பிதாமகனான சுக் கிரன் சடிதியில் வந்து (11) அங்கிருதுண்டாய்க் கிடந்த அவரது சரீ ரத்தை யொன்றாய்ச் சேர்த்துவைத்துக், கேளீர் தரணிதேவர்களே! பிறகு புத்திசாலியான வச்சுக்கிரன் தனது ஸஞ்சீவினி வித்தையால் அவரைப் பிழைப்பித்து விட்டனன். (12) பிற்பாடு சுக்கிர னவ்வாறு பிழைத்தெழுந்த பௌத்திரனை நோக்கி நன்மையான வசனத்தைக் கூறியதாவது:—“ஓ முனிவரே! இன்றுமுதலாய் நீர் சிவபூஜை செ ய்யவேண்டும். (13) ஸ்ரீ தேவாதிதேவனைப் பூஜிப்பதினா லுமக்குச் சகலமு முண்டாகும். ஏனென்று லப்பிரபுவைப் பூஜித்தலானது புண்

ணியத்தையும் மோக்ஷத்தையுங் கொடுக்கவுற்றதே! அப்பூஜையால் தான் பிரம்மன், விஷ்ணு, இந்திரன், இயமன், ஈசானன், குபேரன் முதலிய தேவச்சிரேஷ்டர் இவரெல்லா மவரவரின் பதவியை யடைந்திருக்கிறார்கள். (15) ஆகையால் ஓ, ததிசிமுனிவரே! மிருத்யுவைக் கொன்றவரும், உமைக்கு நேசருமான ஸ்ரீ மகேசுவரனைப் பூஜித்திடில் சத்துருக்கள், வியாதிகள், துஷ்டக் கிரகங்கள், மற்றுமுள்ள வுபத்திரவங்கள் இவை யெல்லாம் நாசமடையும். (16) மேலும் ஸ்ரீ மகேசுவரன் பூஜிக்கப்பட்ட மாத்திரத்தில் மனம் தெளிவு பெறலாகு' மென்று சொல்லிச் சுக்கிரன் அவருக்கு வெகு மந்திரங்களையு முபதேசம் பண்ணிவிட்டுக் (17) கேளீர், பிராம்மணோத்தமர்களே! துரிதமாய்த் தன திச்சையின்படி போய்ச் சேர்ந்துவிட்டான். அதன் பிறகு புண்ணியாத்துமரான ததிசி முனிவர் ஸ்ரீசிவபெருமானைப் பூஜைசெய்ததினால் (18) வஜ்ஜிர எலும்பைக் கொள்ளுந் தன்மையையும், ஒன்றாலும் அடிக்கப்படாத் தன்மையையும், ஔதாரியம், பயமில்லாமை இவைகளையும் பிரசன்னரான பரமசிவனிட மிருந்தடைந்தனர். பின்னும் மாமுனிவர் (19) மற்றுமுள்ள வனேக வரங்களையும் பெற்ற தன்மேல் க்ஷுபராஜ னிடஞ்சென்று அப்படிப்பட்ட துர்ப்புத்திக்கார அரசனைத் தமது திருவடியா லுதைக்க,(20) அப்போது மகாவலிமை பொருந்திய அரசன் கோபாவேசங் கொண்டவனாகிப் பயங்கரமான வஜ்ஜிராயுதத்தை யெடுத்து முனிவரின் நடுமார்பினில் பிரயோகித்தவுடன் கேளீர், முனிவர்களே! அவ்வாயுத மங்கேயே விழுந்து சடிதியில் தூள்தூளாகி விட்டது. பிறகு மகா தவசியான ததிசி முனிவர் நகைத்துக்கொண் டக்ஷுபனை நோக்கி வசன முரைத்ததாவது:— (22) 'ஓ, ராஜனே! உன் வஜ்ஜிராயுதத்திற்கும் யாம் பயப்படமாட்டோம், உன்னைப் படைத்த தெய்வத்தையும் யாம் சட்டைசெய்யோ' (23) மென, இவ்வாறு முனிவரின் வசனத்தைக் கேட்டவுட னவன் பின்னும் மிகுந்த கோபாவேசங் கொண்டவனாகி விஷ்ணுவைக் குறித்துச் செய்ய முடியாத மகாதவத்தைச் செய்கையி லிவ்வாறு கொடிய தவத்தைச் செய்யலான வரசன் முன்னிலையில் விஷ்ணு சான்னித்தியமாயினர். அப்போ தரச னவரைத் துரிதமாய் வந்தனித்துச் சங்கதிகளைச் சொல்ல,(25) அதுகேட்டு விஷ்ணுவு மவனோடுகூடத் ததீசிமுனிவரி னாசிரமத்திற்குச்சென் றங்கு அம்மாமுனிவரைக்கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் வசன முரைத்ததாவது:—(26) "ஓ, தவசிச்சிரேஷ்டரே! தேவரீ ரடியேன் நிமித்தமாய் 'அரசர்களின் பலமே மெத்த மேன்மை பொருந்திய' தென்று சொல்ல வேண்டும்; இவ்வா றுரைப்பதிலுண்டாகிய தோஷமெனக்கே யிருக்கட்டும்'' (27) மென, இவ்வாறு

விஷ்ணுவின் வசனத்தை யவ ரங்கீகாரஞ் செய்யாதபோது விஷ்ணு கோபாவேசங்கொண் டவர்மீது பயங்கரமான சக்கிரத்தைப் பிரயோகிக்க, (28) அச்சக்கிர மவர்மீது பட்டமாத்திரத்தில் தூள்தூளாகி விட்டது. பிறகு மகா மாயாவியான நாராயணன் மாயாவிகளுக் குரிய மாயையை யவர்மீ தநேகவிதமாய்ச் செய்யும்போது (29) கேளீர், தரணிதேவர்களே! முனிவர் தமது மாயையால் அவற்றை யெல்லாம் பறக்கச் செய்தனர். பின்னும் விஷ்ணு அம்முனிவர்மீது மாயையைச் செய்யும்போது (30) முனிவர் ஓர் தர்ப்பையை யெடுத் தவர்மீது பிரயோகிக்க, அநேககணத்தி லவரது சேனைகள் மடியலாகி (31) ஓ, கோ! அப்போது விஷ்ணுவட்டி லொண்டியா நிற்கலாயினர். அப்போது பரப்பிரம்மத்தை யறிந்தவர்களிற் சிறந்தவரானப் பிரம்ம னங்குதோன்றலாகித் (32) ததீசிமாமுனிவரை மிகுந்த சந்துட்டியுடன் தோத்திரஞ்செய்தனர். அப்போது ததீசிமுனிவர் மகா கோபத்தோடு முன்னிலையில் நின்ற விஷ்ணுவை நோக்கி (33) 'ஓ, விஷ்ணுவே! உன் சிரசானது மகா வலிமை பொருந்திய ஸ்ரீ வீரபத்திரரால் வெட்டுப்படக் கடவது; மேலு முனதடியார்களெல்லாம் மிகுந்த மூடத்தன்மையால் பாஞ்சராத்திர சமயத்தை யனுசரிப்பவர்களாகி ஸ்ரீ பரமேசுவரனைத் தூஷித்துக் கொடிய நரகத்தில் விழக்கடவார்க' (34½) ளென்று அம்முனிவர் விஷ்ணுவைச் சபிக்கும்போதுப் பிரம்மன் கோபங்கொண்டு உரைத்ததாவது:—(35) 'ஓ, விஷ்ணுவே! சிவபக்தர்களோடு செய்யுஞ் சண்டையானது தன் தலையிலதான் வந்துவிழும்; நீர் மிகுந்த அபராதியானீரோயின்றி யுமக்கு ஜயமுண்டாக மாட்டா' (36) தென்று சொல்லி விஷ்ணுவைச் சீக்கிரமா யழைத்துக்கொண்டு சியவன முனிவரின் புத்திரனன ததீசிமுனிவரை வந்தனித்துச் சமாதானப்படுத்தி விட்டுப் பிரம்மதேவன சென்றனர். (37) இவ்விதமாய்ப் பிரம்மன் விஷ்ணுவோடுகூடச் சென்றுவிட்டதன்மேல் க்ஷுபனு மப்போது ததீசிமுனிவரின் அப்படிப்பட்ட மகிமையைக் கண்டு மெத்த வாச்சரியமுற்றவனாகி (38) யவரையே அடிக்கடி மன்னிக்கவேண்டுமென்று சரணமா யடைந்து 'ஓ, பிராம்மணோத்தமரே! தேவரீர் முந்தி யடியேனுக்கு மித்திரராய் இருந்திர். இப்போ தெனது தந்தையும் நீர் தான். (39) தாய், பெருமை பொருந்திய சகோதரர் ஆகிய வெல்லோரும் நீர்தான். ஆகையாலென் பிழையை மன்னித்தருள வேண்டு' மென் றிரந்து கெஞ்சிக்கேட்டுக்கொண்ட அவ்வரசனை நோக்கி முனிவர் திருவாக் குரைத்ததாவது:—(40) 'ஓ, ராஜனே! யாம் இப்போ துந்தனை மன்னித்து விட்டோம்; ஏனென்றால் பெரியோர்கள் பொறுமையையே முக்கியமாய்ப் பாராட்டியவர்களன்றோ! மேலும்

நம்மையொத்தவர்களின் கோபத்திற்குத்தண்டனிடலே பரிகாரம்!(41) கேளாய், ராஜனே ! எங்கள்குலப் பிரபுவான ஸ்ரீஜகதீசன் மகாப்பிராம்மணராகையால் பிராம்மணர்களே சிரேஷ்டமானவர்கள். விஷ்ணு க்ஷத்திரியர்க் கதிபரொன்றும், பிரம்மன் வைசியர்க் கதிபரொன்றும் சொல்லப்படுகின்றது. ஆகையால் பிராம்மணர் முதலிய மூன்று வர்ணத்தார்களில் வரை கடந்து நடக்கின்றவர் மகாபாபிகளாகி யதோகதியில் விழுகின்றார்கள். ஆகையால் நீ விஷ்ணுவைத் தொழுதுகொண்டு பிராம்மணரிடத்தில் பக்தி விசுவாஸ முள்ளவனா யிருக்கவேண்டும். பிராம்மணர்களின் மகிமை பெரிதே யின்றி க்ஷத்திரிய வைசியர்களுடைய தில்லை. (44) பிராம்மணராகிய ஸ்ரீ சிவபெருமானே யெல்லோர்களிலும் மேன்மை பொருந்தியவ ராகையா லந்தப் பிரபுவையே தெய்வமாய்க்கொண்டப் பிராம்மணரும் மெத்த மேன்மை பொருந்தியவர்கள். (45) ஆகையா லெப்போதும் பிராம்மணர்களை நாள்தோறும் வந்தனிக்கவே வேண்டும். மேலும் நீ புத்திசாலியாயின் பிராம்மணர்களின் நிந்தனையை யெப்போதும் நினையாதே ! (46) ஓ, ராஜச்சிரேஷ்டனே ! நீ நீதியாய்ப் பாராண்டு வாழலாவா' யென்று ததீசிமுனிவ ரவ்வரசனுக் கிவ்வாறு மொழிந்தருளிவிட்டுப் (47) பிறகு சிவபூஜையில் முயன்று ஆனந்தங்கொண்டவராகி ஸ்ரீ மகாதேவனையே தியானம் பண்ணிக்கொண்டே வெகுநாட்களைக் கழித்தருளினர். (48)

எழுபத்தொன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் அய-வது அத்தியாயத்தினாத்தம்.

கேளீர், முனிவர்களே! பூர்வத்தில் ஸுதர்சனரென்னும் பிராம்மணன் சிவபூஜையின் மகிமையாலும், அடியார்களுக்கு விருந்திட்டதினாலும் மிருத்தியுவைவென்று நித்தியத்தன்மையையு மடைந்திருக்கின்றார். (1) மேலு மம்முனிவர் கைலாசத்துக்கும் மற்ற லோகங்களுக்கும் தம் சுயேச்சையின்படி போக்குவரத்தாயிருந்தார். தவிரவும் முந்திப் பிருகு, தர்வாச முனிவர், கண்ணுவர், (2) ஆபஸ்தம்பர், ஜைமினி, தவசிச்சிரேஷ்டரான சௌபரி, திருணபிந்து, வாமதேவர், இருடபயோகீசுவரர், (3) சுக்கிரன், அத்திரி, புலஸ்தியர், முதலிய வின்னுமனேகம் தவசிக ளென்று மழிவற்ற, லிங்கமூர்த்தியான ஸ்ரீ ஸதாசிவனை மிகுந்த பக்தியோ டாராதித்துக் காலவசத்தால் நேரும் மிருத்தியுவையும் வென்று ($4\frac{1}{2}$) நித்தியத் தன்மையுமடைந்து தங்களிச்சையின்படி திரிந்துகொண் (5) டந்தந்த லோகங்களி லததினதி

பர்களால் மரியாதை செய்யப்பட் டவர்களோடுகூட வனேகபோகங் களையு மனுபவித்துச் சாவில்லாத் தன்மையையும் பெற்றிருக்கிறார் கள். (6) மேலு மவர்கள் தங்களிச்சையின்படி வேண்டிய வபீஷ்டங் களை யடைந்து தேவாசுரர்களால் வந்தனிக்கப் பெற்றவர்களாகிப் பிரம்மன் முதலியவர்களின் தானங்களி லிச்சையின்படி சஞ்சரித்து வருகின்றார்கள். (7) கேளீர், முனிவர்களே! மானிடர்களிலு மனேக ம்பெயர்கள் சிவபூஜையில் முயன்றவர்களாகி மிகுந்த வைசுவரியத் தையும் பற்பல சித்திகளையும் பெற்று (8) வேண்டிய சகல வபீஷ்டங் களையு மடைந்து மூன்று ஜகங்களிலும் வேண்டியபடி சஞ்சரிக்க லுற் றவர்களும், பிரசித்திகொண்ட பராக்கிரமத்தை யுடையவர்களுமாகிப் பிறகு மோக்ஷமு மடைந்திருக்கிறார்கள். (9) மேலும் முந்தி யெறும் புமுத லியானைவரைக்கு முள்ள விலங்கினங்களிற்கூட வனேகங்கள் ஸ்ரீ சாம்பமூர்த்தியைப் பூஜைசெய்து நற்கதி யடைந்திருக்கின்றன வென்றெங்கு மறிபப்படுகின்றது. (10½) இப்படியிருக்கையில் பகுத்தறிவுள்ள அரசர்கள், பிராம்மணர்கள், கலியுகத்தோர்கள் ஆகிய இவ ர்கள் சிவபூஜைசெய்து நற்கதி யடைந்திருப்பதைப்பற்றி யாது விசே டமா யுரைக்கவேண்டும். (11½) கேளீர், பிராம்மணோத்தமர்களே! இவ்விதமாய் ஸ்ரீ பரமேசுவரனைப் பக்தியுடன் பூஜித்துக் காரியங்கள் ஸித்திக்கப்பெற் றிருப்பவர்களைப்பற்றி யெல்லாம் விவரித்துச் சொல் லியாயிற்று. ஆனால் செய்யவேண்டுமென்ற அறிவின்றி ஸ்ரீ தேவாதி தேவரைப் பூஜித்ததினாற் (13) பயனடைந்திருப்பவர்களி லிப்போது சிலரையெடுத்துக் கூறுகின்றேன்:—

ஓ, பிராம்மணோத்தமர்களே! மகததேசத்தில் மாதவபுரமெ ன்றோர் பெரிய பட்டணமிருக்கின்றது. (14) அதில் சக்கிராங்கித னென்று வெரும் சிற்றின்பத்தில் முயன்றவனான வோர் பிராம்மணனி ருந்தான். அவனுக்குத் திருதராஷ்டிரனென்னு மோர் வினயமற்ற பிள்ளையிருந்தான். (15) அவ்வெறிந்துபோட்டவன் நாள்தோறு மிர வும் பகலுமாய் வேசிகளுடன் கலந்துவந்தான். இப்படியிருக்கையி லத்துர்மார்க்க னொருசமயத்தி லோர் கள்விற்பவள்மீ தாசைகொண் டவனாகிக் (16) குடிகாரர்களுக்கின்பமுள்ளவளான வப்பெண்ணோடு கூட இரவும் பகலுமாய்ப் புணர்ந்துவருகையி லொருநா ளவளோடுகூ ட வ்ரசனுடைய சிங்காரத் தோட்டத்திற்குப் போய் (17) நல்ல மல ர்களைப் பறித்தவளும் தானு மாயுச்சிமீது சூட்டிக்கொண் டிவ்விதமா யே அம்முடன் நாள்தோறும் நேர்த்தியானமலர்களைத் திருடிவருகை யி (18) லொருநாள் தோட்டங்காப்பவர்களால் கண்டவனு மவளு

மா யடிக்கப்பட்டதில் ' இனி பறித்துப்போவதில்லை ' யென்று சொன்னதின்பேரி லவர்களால் துறத்திவிடப்பட்டான்.(19) பிற்பாடோரிராத்திரியி லவன்தோட்டத்திற்குப்போ யங்கவளோடு கலந்துவிட்டு மலர்களைப்பறித்துக் கள்குடத்தில் வைத்து (20) ஸ்திரிபோகத்தில் மகா விருப்பமுடைய வப்பிராம்மணகேடன் பின்னு மவ்விரவினி லவளோடு தோட்டத்திலேயே புணர்ந்து பிறகவளோடுகூடத் தூங்கிவிட்டான்.(21) அவ்விருவரும் சுரதக்களைப்பின் வசத்தினால் நடுத்தோட்டத்தி லயர்ந்து பரவசர்களாகி விட்டபடியால் சூரியனுதித்தும் பொழுது விடிந்ததவர்களுக்குத் தெரியவில்லை. (22) அப்போ தரசனும் தோட்டம்பார்க்க விருப்பத்தோ டங்குவந்தான். அதற்கும் முந்தியே அங்குவரலான தோட்டக்காரர்கள் (23) கள் விற்பவளோடுகூடப் பரவசமாய்த் தூங்கலான வத்துர்மார்க்கப்பார்ப்பானையும், கள்குடத்திலிருந்த நல்ல வாசனைபொருந்திய மலர்களையும் கண்டதன்பேரி (24) லவர்க ளரசன்வரவை யறிந்து பயத்தினால், தூங்கிக்கொண்டிருந்த அவ்விருவர்களின் கால்களையும் கைகளையும் கட்டி யவர்களையும், மலர்த் திரள்களையு மெடுத்துத்தோட்டத்திற்கு வெளியிற் (25) போட்டுவிட் டத்தோட்டக்காரர்க ளரசனண்டைக்கு வந்தார்கள். அப்போ தரசன் தனது சிங்காரத்தோட்டம் முழுதும் நன்றாய்ப்பார்த்ததி (26) லங்கோர் மண்லிங்கமானது மலர்களால் மூடப்பட்டிருந்ததைக் கண்டவர்களை நோக்கி வினவியதாவது:— ' ஓ, தோட்டக் காரர்களே ! இதென்ன ? யாவரால் இவ்வாறு மலர்கள்பறித்துப் போடப்பட்டது? (27) இத்தோட்டமெங்கும் மலர்களெல்லாம பறிக்கப்பட்டிருப்பதாய்க்காண்கின்றதே ! இப்போ திம்மலர்களெல்லாம் யாவராலிங்கு தானே போடப்பட்ட ' (28) தென்று கோபத்துட னரசனால் கேட்கப்பட்டபோது தோட்டக்காரர்க ளவனைநோக்கி யுத்தரமுரைத்ததாவது:—'ஓ, ஸ்வாமீ! எங்களைத்தவிர மற்றொருமனிதரு மித்தோட்டத்தில் வந்ததில்லை ; ஆனால் நடுநிசியில் யாவரால் செய்யப்பட்டதோ நாங்களறியோம். (29½) ஒருக்கால் தேவாமிசமாய் யாராகிலு மிங்குவந்து பூக்களைப்பறித் (30) திவ்விலிங்கத்தில் ஸ்ரீ சிவபிரானைப் பூஜை செய்திருக்கக்கூடுமோ, என்னவோ, யாங்களறியோ ' மென, அது கேட்டரச னவர்களைநோக்கிச் சொல்லியதாவது:—' ஓ, தோட்டக்காரர்களே ! தினந்தோறு மிப்படித்தானா? இன்றைக்குமட்டிலா ? (31) என்பதைச் சத்தியமாய் சொல்லுங்கள். இல்லாவிடி லுங்கள் கால்களையும் கைகளையும் வெட்டிப்போடுவோ ' மென, அதற்கவர்கள் ' ஓ, ஸ்வாமீ! இப்போதுதா னிப்படிக்கண்டோமேயின்றி யிதுவரையி லிவ்வாறு காணப்பட்டதே யில்லையென் றுங்கள் திருவடிமீ தாணையிடுகி

ன்றேம். இது மிகவு மாச்சரியமா யிருக்கின்ற' தென, (32½) அப்போதரசன் பக்கத்தில்நின்ற மகா கனம்பொருந்திய சில மனிதர்கள் சொல்லியதாவது:—'ஓ, ஸ்வாமீ! திருவுளத்தின்படி யாத்திரை செய்யலுற்ற யோகீசுவரர்கள் பூதலத்திலெங்கு நல்லபுஷ்பங்கள் காணப்படுகின்றனவோ அங்குவந்து சிவபூஜை செய்வார்கள். (34) ஆகையாலிப்பேர்ப்பட்ட மகிமைபொருந்திய லிங்கபூஜையால் நமக்கு மிகவும் க்ஷேமமே!' யென, இவ்வா றவர்களது வசனத்தைக் கேட்டதன்மேலரசன் போய்விட்டான். (35) பிறகு தோட்டக்காரர்களு மிப்போது மறுபிறப்படைந்தோமென்று நினைத்து தோட்டத்திற்குப் போய்விட்டார்கள். அப்போதே யவ்விரு துர்மார்க்கர்களு மொருவருக்கொருவர் கட்டவிழ்த்துக்கொண்டு (36) தங்கள் வீடுசென்று பின்னும் தொண்டைமட்டிற் கள்ளைக் குடித்துவிட்டு மயக்கத்தினு லம்மூடர்களின்னு மாலோசனையின்றி யத்தோட்டத்திற்குப்போய் (37) மலர்களைப்பறிக்க, அவர்களைத் தோட்டக்காரர்கள் கண்டு கோபத்தோ டவர்களை யிறுக்கிக்கட்டி யரசன் முன்னிலையிற் கொண்டுபோனார்கள். (38) அப்போ தரசன் வெகு கோபத்தினு லத் துர்மார்க்கர்களில் புருடன் கைகால்களையும், ஸ்திரீயின் மூக்கு முலைகளையு (39) மாலோசனையின்றிச் சேதிப்பித் தனுப்பிவிட்டான். பிற்பாடவர்கள் சிலகாலம் திரிந்துவந்து நாளளவில் மரணமடைந்தார்கள். (40) மூந்தி யிவர்கள், கள்குடத்தில் வைத்திருந்தவையாயினு மந்த நல்லமலர்களை யெடுத்து மண் சிவலிங்கத்தின்மீ தர்ச்சித்தபடியா (41) லதனு லவ்விருவரும் பாவமற்றவர்களாகி யவன் பாணசுரனு மவளவனுக்கே மனைவியான வழகுபொருந்திய ஸுப்பிரதீகையுமாய்ப் பிறக்கலானார்கள். (42) பிறகவ்வசுரன் பூர்வஜன்ம வாசனையால் நாள்தோறும் சிவலிங்கங்களைச் செய்து சிவபூஜை செய்துவருகையி (43) லுடனே ஸ்ரீ சந்திரசேகர னவன்முன்னிலையிற் பிரசன்னராகி யப்போ தவனுக்கு மிகுந்த ஐசுவரியத்தையும் பலத்தையு மசுரவரசாக்ஷியையும் கொடுத்தருளினர். (44) அதன்பிற கவன் கைலைதனில் விளங்கும் சிவாலயத்திற்கு நாள்தோறும்சென் றங்கு ஸ்ரீ மகாதேவரைப் பூஜித்து வீட்டுக்குப் போவான். (45) இப்படியிருக்கையி லொருநா ளப்பாணசுரன் ஸ்ரீ பிரபுவின் சமயத்தைப்பாராமல் மாளிகைக்குள் பிரவேசிக்கும்போது துவாரபாலகனுகிய வோர் பூதகணதிபன் மிகவும் கோபங்கொண்டு துரிதமாயெழுந்தவனை யுயரத்தூக்கி விளையாட்டா (46½) யெறிய, அப்போதம்மகாசுரன் சக்கிரவாளகிரிக்கப்பால் போய் விழலாகிப் (47) பிறகு மூர்ச்சைதெளிந் தெழுந் தாச்சரியத்துடன் வீடுபோய்ச்சேர்ந்து சகலவபீஷ்டங்களையும் கொடுக்கலுற்ற ஸ்ரீ பகவானை முறைப்படி பூஜித்து

வேண்டிக்கொள்ளுகையில் (48) ஸ்வாமி பிரத்தியக்ஷமாகி யவனை நோக்கி 'ஓ! அசுரா! நீ யென்ன வேண்டுகின்றாய்? வேண்டியவரனைக் கேட்டுக்கொள். அதனையெல்லாம் கொடுக்கின்றேன்' னென, (49) அப்போதசுரன் வரன் கேட்டுக்கொண்டதாவது:—'ஓ விஷ்ணுவுக்கீசரான ஸ்வாமி! தமது குடும்பத்தோடுகூடத் தேவரீரை யடியேனுக்கெப்போதும் சேவிக்கவேண்டும். (50) அதற்காக யான் மைமாளிகைக்குள் பிரவேசிப்பதை மகா பலிஷ்டர்களான துவாரபாலர்கள் பொறுக்காதபடியால் ஓ, மகாதேவா! பார்வதியம்மை, குமாரர்கள், கணங்கள் ஆகிய இவர்களோடுகூடத் தேவரீ ரடியேனது மாளிகை வாசலில் வசித்தருளவேண்டும். இங்ஙனமாயின் யான் சேவிக்கக்கூடும். ஓ, சகல ஜகங்களுக்கும் தந்தையான தேவாதிதேவா! யான்வேண்டிய வரனிதுதா' னென, (52) அப்போது பகவான் புன்னகைப்புற்றவராகி யப்பேர்ப்பட்ட வரனைக்கூடக் கொடுத்தருளினர். பிறகவனு மவ்வரனைக் கொண்டவுடன் தனதரண்மனை வாசலில் ஸ்வாமி, அம்மன், இரு குமாரர்கள் இவர்களுக்காக வோர் பெரிய வாலயம்கட்டி (53½) யந்த குமாரர்களோடுகூட ஸ்வாமியையு மம்மனையும் ஸ்தாபித்துச் சிரத்தையுட (54) னவ்வசுரோத்தமன் நாள்தோறும் பூஜை செய்துவந்து விஷ்ணு, பிரம்மன், இந்திரன் முதலிய சகலதேவர்களையும் வென்று (55) வேறு நிகரற்ற மகா பலசாலியாய் மூவுலகையும் தன்வசப்படுத்திக் கொண்டான். இப்படியிருக்கையி லப்பலவானுக்கிருபுயங்களு முயுத்தத் தினவுகொள்ளலாதம்போ தவன் (56) ஸ்வாமியை வந்தனித்து வசனமுரைத்ததாவது:—'ஓ, பகவானே! இப்போ தென்னோ டியுத்தம்செய்யத்தக்க பலவா னொருவருமில்லை. விஷ்ணு முப்பது தடவைகளிலும், தேவேந்திர னறுபது தடவைகளிலுந் தோல்வி யடைந்து விட்டார்கள். ஓ, திரிபுராந்தகா! எனக்கீடானவர் ஒருவருமில்லாத்தினு லென் கைகள் தினவுகொள்ள லாகின்றன. (58) ஆகையால் ஓ, தேவேசா! தேவரீர் முந்தி அர்ஜுனனோடு யுத்தம் செய்ததுபோ லடியேனுடன் செய்தருளவேண்டும். இதி லெனக்குத் திருப்தி யிருப்பதுபோல் மற்றொன்றிலு மில்லை' (59) யென்னு மவனது விண்ணப்பத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீஜகதீசன் நகைத்துக்கொண் டோர் வசன மருளியதாவது:—'கேளாய் அசுரா! விஷ்ணு விப்போது யாதவகுலத்தி லவதரித்து நம்மீது மிகுந்த பக்தி செய்து கொண்டிருக்கின்றார். (60) அவருனது கர்வத்தை யதி சீக்கிரத்தில் அடக்கிவிடுவதிற் சந்தேகமே யில்லை' யென்று ஸ்ரீபகவா னிவ்விதமாய் மொழிந் தருளுகையில் மதங்கொண்ட வப்பாணசுரனும் (61) 'ஓ, ஜகதீசா! அப்பேர்ப்பட்ட யாதவ வீரன்கூட எந்தனுல் பதினெட்டுத்

தடவைகளாய்த் தோல்வி யடைவிக்கப்பட் டிருக்கிறான். அவனென அடம்பின் காற்றைக்கூடச் சகிக்கமுடியா' (62) னென, அது கேட்டு ஸ்ரீபகவான் 'ஓ, அசுரா! அவ னிப்போது முன்போலில்லை. உந்தனை வெல்லத் தகுவோனே! ஏனென்றால் இப்போ தவன் நமது சிறந்த வடியாரான, சிவாகமங்களில் தேற்றி கொண்டவரும் மகாத்துமருமாகிய உபமன்னியு மாமுனிவரால் சிவதீக்ஷை செய்துவைக்கப் பெற்றவனாகி (63½) யெப்போதும் திருநீறு ருத்திராக்ஷங்களைத் தரித்துக் கொண்டு மகா பராக்கிரமசாலியா யிருக்கின்றார். (64) ஆகையா லவ ரதிசீக்கிரத்தி லுனது கர்வத்தை யபகரித்து விடுவா ரென்பதிற் சந்தேகமேயில்லை' யென, இப்பேர்ப்பட்ட ஸ்ரீஜகதீசன் திருவசனத்தைக் கெட் டம்மகாசுரன் சும்மா இருந்துவிட்டான். (65)

பிற்பா டொரு நாள் பாணாசுரன் பெண்ணான வுஷை யென்பவள் கிருஷ்ணபிரான் பௌத்திரனான வனிருத்தனைக் கனவிற் காணலாகி யவனைத் தன் மாளிகைக்குத் தருவித்துவிட்டாள். (66) பிறகு கிருஷ்ண னவனைத் தேடிக்கொண்டே அக்கினிக்கோட்டையால் சூழப்பட்ட, மனதினாலு மெட்டமுடியாத மங்களகரம் பொருந்திய பாணபுரிக்கு வந்து (67) அவ்வசுர ராஜன் பட்டணத்தை முற்றுகை போட்டபோ தயுத்தத்திற்குச் சன்னத்தமாய் வந்த விக்கினேசுவரன், ஸுப்பிரம்மணியர், பார்வதிதேவி இவர்களை, இலேசாய்க் காரியத்தை முடிப்போரான கிருஷ்ணன் பக்ஷிய போஜியம் முதலியவைகளால் நன்றாய்ப் பூஜிக்க, (68½) அப்போ தவர்கள் துரிதமா யுயுத்த சன்னாகத்தைவிட்டுச் சும்மா விருந்துவிட்டார்கள். பிறகு ஸ்ரீஜகதீசன் உயுத்தத்திற்காகச் சன்னத்தப்படுகையி லவரையும் கிருஷ்ணன் பூஜிக்கத் தலைப்பட்டார். அவ்வாறு பூஜிக்க வெத்தனித்த அக் கிருஷ்ணனை நோக்கிப் பாணாசுரன் வாசலில் விளங்கி யிருந்த ஸ்ரீ சிவபிரான் (70) 'ஓ, யதுகுல வீரனே! நீ யிப்போது பாணாசுரன் துவார பாலகரான எம்முட னுயுத்தம் பண்ணவேண்டு' மென்று திருவாக் கருளலான ஸ்ரீமகேசுவரனுக்குக் கிருஷ்ணன் உத்தர முரைத்ததாவது:— (71) 'ஓ, என்று மழிவற்ற ஜகதீசா! அடியேன் ஜகச் சொரூபி யாகின்றேன்; தேவரீரோ வச் சகங்களுக்குப் பதியாகின்றீர்; அடியேன் விசுவமாகின்றேன்; தேவரீர் விசுவங்களை யதிகரித்தவ ராகின்றீர்; அடியேனியஜ்ஞம்; தேவரீர் எஜ்ஞங்களுக் கரசர்; அடியேன் மாயை; தேவரீர் மாயைக் கதிபர்; தேவரீ ரடியார்களைப் பகைக்கும் வீரர்களை நாசஞ் செய்கின்றவர். நானோ வோர் வில்லையு மம்பையுந் தரிக்கிறேன். தேவரீரோ வென்றால் சகல ஜகங்களையுந் தரிக்கலாகின்றீர். (73½)

ஆகையா லடியேன் தேவரீரோ டியுத்தஞ் செய்திடில் மன்மதன் போற் சாம்பலாகி விடுவேன். (74) ஓ, பிரமதகணாதிபரே! தேவரீருக் கடியேன்மீது கருணையிருந்திடி லெந்தனை யிவ்வா றுரைக்கலாகுமோ' வென, பின்னு மவரை நோக்கி ஸ்வாமி யுரைத்ததாவது:—'ஓ, கிருஷ்ண! நீ நம தாக்கினையின்படியே (75) கொஞ்சமேனு மாலோசனையின்றி நீ நம்முட னுயுத்தஞ் செய்து அர்ஜுன னெவ்வாறு நம்முட னுயுத்தஞ்செய்து நம் சந்தோஷத்தினால் பாசுபதாஸ்திரத்தைப் பெற்றுக்கொண்டு சென்றனோ, (76) அதுபோல் ஓ, மாதவா! நீயும் நம துற்சாகத்திற்காகப் போர்தனில் நம்முடன் விளையாடலாவா' யென்று திருவாக்கருளிவிட்டு மகா தீரரான ஸ்ரீபிரமதாதிபர் பினாக மென்னுந் தனுசை நாணேறிட்டுக் குணத்தொனி செய்து கூர்மையுள்ள வம்புகளா லடிக்க, (77½) யதுராஜனும் தமது சார்ங்கமென்னுந் தனுசை (78) நாணேறிட் டியுத்தமதில் அம்புகளாற் சம்புவின்மீது வருஷிக்கலாயினர். ஆனா லவரது வில்லினின்று விடப்பட்ட கூரம்புகளெல்லாம் புஷ்பிக்கப்பெற்ற நுனியைக் கொண்டவைகளாகி (79) யதே கணத்தில் ஸ்ரீபரமேசுவரன் பாதாரவிந்தங்களில் விழலாயின. மகிமைபொருந்தியவர்களான விசுவமூர்த்தியும் விசுவேசுவரமூர்த்தியு மொருவரோ டொருவ ரிவ்வா றுயுத்தம் பண்ணலாகையிற் (80) பாணாசுரன் தன் சேனைகளோடுகூடச் சடிதிதனில் யதுசைனியங்களைக் கொன்றான். அப்போது கிருஷ்ணனு முடனே ஸ்ரீ ஜகதீசனை வந்தனித்துப்போட்டுப் பாணாசுரனோ டியுத்தஞ் செய்தார். (81) அவ்விருவர்களுக்கும் மகா பயங்கரமும் மயிர்சிலிர்ப்பிக்க லுற்றதுமான வுயுத்தமுண்டாயிற்று. பிறகு யதுகுல வீரனான கிருஷ்ணன் பாணனை வென்று (82) தம் சக்கிராயுதத்தினா லவ னாயிரங் கைகளையும் வாழைத் தண்டை வீசுவதுபோல் லாகவமாய் வீசின தாச்சரியம் போலாயிற்று. (83) அதற்கிடையில் ஸ்ரீ மகாதேவர் பார்வதியோடுகூட விடபத்திலேறிக்கொண் டவர்களது சண்டையை யடக்குவதற்காக நடு வானத்திற் பிரசன்னராகி (84) அக்கண்ணனை நோக்கி 'ஓ, கிருஷ்ண! நான்கு கைகளை விட்டுவிடு; ஏனென்றால் உன்னைப்போ லவனும் நாள்தோறும் நம்மைப் பூஜிப்பதில் முயன்றவன். (85) ஆகையால் ஓ, கிருஷ்ண ராஜனே! உனக் கிவனிடத்திற் சினேக மிருக்கட்டு' மென்று மொழிந் தருளிவிட்டுப் பின்னும் ஸ்ரீ மகேசுவரன் நகைத்துக் கொண்டு பாணனை நோக்கித் திருவாக் கருளியதாவது:—(86) 'ஓ, அசுரா! இப்போ துனது கைத்தினவு தீர்ந்த தல்லவா? உனதாயிரம் கைகளையு மடியோடு கண்டித்துவிடலான (87) கண்ணன் நமதாக்கினையின்படி நான்குகைகளை மிஞ்சவிட்டா' னென, பிற்பாடு பாணனும்

ஸ்ரீஜடிதிசன் திருவாக்கின்படி தன் பெண்ணைக் கிருஷ்ணன் பௌத்திரனுக்கு மிகுந்த வெகுமதியுடன் கொடுத்து மகா சம்பிரவத்துடன் ஓர் நொடிக்குள் கலியாணம் செய்து முடித்தான். (88½) கண்ணனும் பாணாசுரன் குமாரியைத் தன் பௌத்திரனுக்கு விவாகஞ் செய்து கொண்ட தன்மேற் சைனியங்களுடனும் (89) பௌத்திரனுடனும் வெகு சந்தோஷமாய்ப் புறப்பட்டுத் துவாரகை சேர்ந்தனர். அப்போது பாணாசுர னப்பேர்ப்பட்ட மகா அவமானத்தை யடைந்தபோதிலும் (90) தான் செய்த அபராதத்தின் பயத்தை யறிந்து வெட்கத்தினல் தலைகுனியப் பெற்றவனுகி மறுபடியும் நிர்மதா நதிக்குச் சென்று ஸ்ரீ மகேசுவரனைப் பூஜை செய்தான். (91) அவ்வா றவனது பூஜையினுல் ஸ்ரீசந்திரசேகரன் சந்துஷ்டி கொண்டவராகி யவனை வரன் கேட்டுக்கொள்ளும்படி இடப்படுத்த, அவன் மகிமை பொருந்திய வரனைக் கேட்டுக் கொண்டதாவது:—(92) 'ஓ, மகாப்பிரபுவே! தேவரீரது கணதிபர்களின் மத்தியி லடியேனு மோர் கணமா யிருந்து கொண்டு ஓ, ஜகந்நாதா! தேவரீர் திருநடன மாடத் தொடங்கும் போ தடியேன் மட்டுவாத்தியம் வாசித்துக்கொண்டே யந்நடனத்தைப் (93) பார்க்க விரும்புகின்றேன். ஓ, தேவேசா! இப்பேர்ப்பட்ட உத்தமமான வரனை யடியேனுக் கருள்வதோடு நிர்மதா நதியிலுள்ள அடியேனுற் பூஜை செய்யப்பட்ட லிங்கங்க ளெல்லா (94) முலகினில் 'பாணலிங்கங்கள்' என் றெனது பெயரால் விளங்கிவர வேண்டும். மேலும் ஓ, பிரபுவே! அப்பேர்ப்பட்ட பாணலிங்கங்களைப் பூஜிப்பவர்களுக்கு மறுபிறப் புண்டாகவே கூடாது. (95) தவிரவும் தேவரீ ரவர்களுக் குடனே சகல வபீஷ்டங்களையும் கொடுத் தருளவேண்டு' மென, ஸ்வாமியு மங்ஙனமே நல்லதென்று திருவாக் கருளிவிட் டங்கு தானே அந்தர்த்தான மடைந்தனர். (96) பிறகு பாணாசுரனும் சரீரத்தோடு கணதிபதித் தன்மையை யடைந்து ஸ்ரீஜடிதிசன் திருநடனத்திற்குக் கடவாத்தியம் வாசித்துக்கொண் டானந்தித்து வந்தான். (97)

எண்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் அக-வது அத்தியாயத்தி னர்த்தம்.

பூர்வத்தில் பர்ப்பர தேசத்தின் கண்ணுள்ள பகவதிபுரத்தில் சுபர்ன னென்றோர் பிராம்மண னிருந்தான். அவனுக் கசித்தனென்னு மொரு பிள்ளை யிருந்தான். (1) அவன் மகா துர்மார்க்கனும், ஸகல ஸ்திரீகளுடனும் போகிக்க விச்சை கொண்டவனுமா யிருந்தான். எக்குலத்திற் பிறந்தவளாயினு மெவளவள் அழகாயும் குணமுள்

ளவளாயு மிருந்தாளோ (2) அவ ளவளோ டெல்லாம் வேண்டிய பண த்தைக் கொடுத்துப் புணர்ந்து வந்தான். அத் துராத்துமன் பணம் சம்பாதிப்ப தெல்லாம் திருட்டினுல்தான். (3) இப்படி யிருக்கையில் ஒருநாளிரவி லவன் தார்க்கிகபுர மென்னும் பட்டணத்திலுள்ள ஸங் கர்ஷண னென்பவனுடைய வீட்டில் பணத்தைத் திருடும்போ தச்ச ங்கர்ஷண னென்னும் பிராம்மணன் (4) அவனைப் பிடித்துக்கொண் 'டேனடா இப்படிச் செய்கின்று' யென்று கேட்க, அவ்வாறு வினவிய சங்கர்ஷணனை நோக்கி யவ் வசித்தக னுரைத்ததாவது:— 'ஓ, ஐயா! நானிம்மாதிரியாய்ப் பணத்தைச் சம்பாதித் துலகின் மீதுள்ள சிறந்த மாதர்களுக் கிவ்வெல்லாப் பணங்களையும் கொடுத் தவர்களோ டெப் போதும் புணர்ந்து வருகின்றே' (6) னென, அவ னுரைத்த வண் மையான வசனத்தைக் கேட்டதன்மேற் சங்கர்ஷண னுரைத்ததாவ து:— 'அடா, மகா துர்ப்புத்திக்காரா! நீ யோர் பிராம்மணனு யிருந் தேனடா இவ்வாறு மகா பாவியும் பதிதனுமாகிக் கெட்டுப் போகின் றாய்? (7½) அடா! இப்பேர்ப்பட்ட மகா பாவியான வுனக் கினிப் பிராம்மணத் தன்மை யெவ்வா றிருக்கப் போகின்றது? (8) ஆகை யால் சகல பாபங்களும் தொலைவதற்காக நீ யினி ஸ்ரீ மகாதேவனை யாராதிக்கலாவாய்; அவ்வாறு நீ யவரைப் பூஜித்திடில் உனது காமம், குரோதம், மோகம், இப்பேர்ப்பட்ட புணர்ச்சியிலுள்ள வாசை இவை களெல்லா மோர் க்ஷணநேரத்துக்குள் நாசமாகி விடுமடா' வென, (9½) இவ்வா றப்பிராம்மணனுற் புத்தி சொல்லப்பட்டதன்பேரி லவன் 'ஓ, ஐயா! சிவனெங்கே! இப்பேர்ப்பட்ட நானெங்கே! (10) எந்தனுக்கு மைதுனந்தான் சிவபூஜை; எனக்குப் பிறப்புப் பிறப்பாய் அதுதான் வேண்டும். ஓ, பிராம்மணா! நீ ரதைச் சொன்னுல் நான் கேட்கின் றேன். ஆகையால் நீ ரங்ஙனமே யுபதேசஞ் செய்யவேண்டு' மென, (11) இவ்வா றப்பசர்ப்பான் வார்த்தையைக் கேட்டுச் சங்கர்ஷண னுரைத்ததாவது:—'கேளாய், அசித்தா! நீ யப்படியே செய்; ஆனுல் நீ யப்பேர்ப்பட்ட சமயத்தி லம்மாதர்களின் இரு கொங்கைகளையும் விட்டுப்போட் டச்சமயத்தில் மனதினு லதனை யிலிங்கமாய்ப் பாவித்து ஸ்ரீசிவபிரானைத் தியானித்துக்கொண்டே அதனைப் பூஜை செய்யலா வா' யென்று சொல்லி யவனை விட்டுவிட்டான். (12-3) அவ்வெறிந்து போட்ட பார்ப்பானு மப்படியே நல்லதென்று சொல்லி யவனுல் விட ப்பட்டதன்பேரி லதே யிரவினில் மகா வியபிசாரியானவோர் பிராம் மண ஸ்திரீயிடம்போ யவளோடு (14) கிரீடை செய்யும்போ தவளது பருத்த கொங்கைகளைப் பார்த்து மெத்த மனக் களிப்புற்றவனுகிச் சங்கர்ஷணன் வசனத்தை நினைத்துக்கொண் டதன்பேரி (15) லச்ச

மயத்தி லவளோ டிரமித்துக்கொண்டே யவ்விரு முலைகளையு மிலிங்கமாய்ப் பாவித்துச் சுரதலீலைக்காகச் சேகரிக்கப்பட்டிருந்த சந்தனத்தை யவைகளிற் பூசி (16) மலர்களை யெல்லா மவைகள்மீது விளையாட்டா யெறிந்து பற்பல பக்ஷிய போஜியங்களையும் கனிவர்க்கங்களையு (17) மிலிங்க ரூபிகளானகொங்கைகளுக்கு நைவேத்தியம் பண்ணிவிட்டச்சம்போக சமயத்திற் சந்தோடமாய்த் தலைமீ தஞ்சலிகொண் (18) டப்பதிதன் பிரார்த்தித்துக்கொண்டதாவது:—'ஓ, ஸ்தனேசுவரரான மகாதேவா! நாள்தோறு மடியேனுக்கு வெகு நேர்த்தியு மதிரூபலாவணிய சுந்தரியுமான மாதர் (19) கிடைத்திடி லவளது கொங்கைகளாகிய வும்மைத் தினந்தோறும் பூஜைசெய்பலாவே' னென்று பிரார்த்தித்துக்கொண்டு பிற கவளுடன்கூட மைதுனம் பண்ணிக்கொண்டே யப்பிராம்மணக் கேட னப்பக்ஷியங்களையும் கனிவர்க்கங்களையும் தின்று தாம்பூலம் போட்டுக் கொண்டான். அப்போ தவ் வியபிசாரி நகைத்துக்கொண் டவனைக் கேட்டதாவது:— (21) 'அடா, அடா, கேடுகெட்ட துர்மார்க்கா! என்ன காரியமிது? எனது கொங்கைகளை யிலிங்கமாக்கி யென்ன விப்போது மெத்த ஆதரவுடன் பூஜித்துப்(22) பிரார்த்திக்கின்றாய்? அடா, தினந்தோறு மிப்படித்தானோ அல்லது இன்றைக்கு மட்டிற் செய்கின்றாயோ, சொல்' என, இவ்வா றுரைத்த வம்மாதனை நோக்கி யப்பதித னுரைத்ததாவது:— 'ஓ, கேளாய், மாதரசே! (23) உன திவ்விரு கொங்கைகளும் மெத்தப் பருத்தும், வட்டமுள்ளதும், மிக வுன்னதமாயு மிருக்கின்றன. ஆகையால் தினந்தோறு மிப்பேர்ப்பட்ட முலைகளாயே யெனக்குக் கிடைக்கவேண்டுமென்ற விருப்பத்தினால் (24) போக மோக்ஷ பலன்களை யருளவல்ல ஸ்ரீ சிவபிரானைப் பூஜைசெய்தே' னென் றவ்விருவரு மொருவரோடொருவர் பேசிக்கொண்டு சுரதம்செய்கையில் ஓர் கணநேரத்திற்குள் ளவ்விரவு (25) முடியலாகிச் சூரியனு முதித்த பிறகு அவ்விருவர்களு மவரவர் சௌகரியத்தின்படி போய்விட்டார்கள். பிற்பாடவன் வழிப்பிரயாணிகளின் தனத்தைப் பறித்துக்கொண்டு காட்டுக்குப் போனதில் (26) அங்கு காட்டுத் தியினால் பற்றப்பட்டு நடுக்காட்டினில் மடிந்தான். அவ்வந்தணன் தனலிங்கத்தைப் பூஜித்ததினா லவனது சகல பாபங்களும் தொலைந்து (27) புண்ணியராசிக ளதிகப்படலாகி யப்புண்ணியத்தினால் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் சித்தத்தினின்று பிறந்து, அதனால் 'சித்தஜ' னென்று பிரசித்தி யடைந்தான். (28) பிறகவன் விஷ்ணுவாற் கட்டளையிடப்பட்டதோ டவனுக்கு முந்திய பிறப்பின் வாசனையுமிருந்தபடியா லவன் சிவபூஜை செய்வதற்காகச் சடிதியிற் காசி நகர் சென் (29) றங் கச்சித்தஜன் தன் பெயரா லோர் பெரிய லிங்க

த்தை ஸ்தாபித்துச் சிரத்தையுடன் பூஜித்து ஸ்ரீதேவேசனைப் பிரார்த்திக்க, (30) பிறகு கருணைக் கடலான பசவா னங்கு பிரசன்னராகி யவனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணி மதன ராஜனென்ற பெயரையு மருள்செய்தனர். (31) மேலு மப்பிரபு அம்மன்மதனுக்குக் கிளியைக் குதிரையாகவும், தென்னற் காற்றை யிரதமாகவும், சந்திரனை யோர் சிறந்த குடையாகவு மின்னுமெல்லா ராஜஸம்பிரவங்களையு மீந்தருளி விட்டுப் (32) பின்னும் சிறந்த காந்தியையும், நிகரற்ற வுருவத்தையும், அற்புதமான விடையால் விளங்கிய ரதிதேவியையும், பின்னும் மெத்த நேர்த்தியான மேனியையுடைய பல பெண்களையும், கரும்புவில் (33) ஐந்துமல ரம்புகள் இவைகளையும் கொடுத்தருளிவிட் டப்பிரபு வந்தர்த்தான மடைந்தனர். ஓ, பிராமணோத்தமர்களே! இவ்வற்புதத்தைப் பார்த்தீர்களா? (34) அக்காமராஜ னிவ்வாறு வரனைக்கொண்டபிற கிரதியோடுகூட வெகு லீலாவினோதத்துடன் பூமி, அந்தரிக்ஷம், சொர்க்கம் இவைகளிற் சஞ்சரித்துக்கொண்டே (35) சகல லோகங்களுடைய மனதையு மபகரிப்போனாகிச் சகலப் பிராணிகளையும் மோகிப்பிக்க லானான். அவனுடைய வைந்து மல ரம்புகளைக் கொண்டு மூவுலகங்களு மவனால் ஜயிக்கப்பட்டது. (36) ஓ, கோ! கேளீர், பிராம்மணோந்திரர்களே! சிவபூஜையின் மிகுந்த பயனைப் பார்த்தீர்களோ! அவ்ன் கேவல மாதரவற்ற முறையோ டிவ்வாறு பூஜைசெய்திடினும் காமராஜ பதவியை யடைந்திட்டா னன்றோ! இப்படி யிருக்கையி லுலகினில் தக்க முறைப்படி சிவபூஜை செய்வோர்களைப்பற்றி யாதுதா னுரைத்திட வேண்டும்? (37½) ஆனால் பிற கக்காமராஜன் தேவக்கூட்டங்களா லேவப்பட்டவனாகி ஸ்ரீதேவேசனை (38) யோர சுரனுக்குச் சரியாய் மதித்துச் சூலபாணியான வம்முக்கண்பிரானோடு, தான் இரதியுடன்கூட விருந்துகொண்டு மலரம்புகளா லுயுத்தஞ் செய்தபடியா (39) லவ் மகாதேவரால் பார்த்தருளப்பட்ட மாத்திரத்திலோர் கணநேரத்திற்குட் சாம்பலாகி விட்டான். பிறகு இரதிதேவி பலவாறாய்ப் புலம்பிப் பிறகு ஸ்ரீசங்கரனைப் பூஜித்ததின்பேரில் (40) கேளீர், முனிவர்களே! அவனையே முன்போல் கணவனா யடைந்தாள். ஆ, கா! கேளீர், பிராம்மணோத்தமர்களே! இப்போதுகூட வுலகினிலெந்த மானிடர்கள் தேவாதிதேவரான ஸ்ரீ முக்கண்பிரானை (41) மனதினு லோர் தடவையாவது மற்றத் தேவர்களுக் கொப்பாய் நினைக்கின்றார்களோ, அவர்களு மிரதியின் கணவன் மாண்டது போலவே சீக்கிரத்தில் மடியலாவார்கள் (42).

என்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் அஉ-வது அத்தியாயத்தினர்த்தம்.

கேளீர், முனிவர்களே! மாளவமென்னும் தேசத்திலுள்ள வைணவபுரமென்றபட்டணத்தில் கிருதரூபனென்றோர் கெட்டநடையுள்ள பார்ப்பானிருந்தான். (1) அத்துராத்துமன் கண்ட விடங்களிற் கண்டவைகளை யெல்லாம் புசிப்பவனும், கண்டமாதரோடெல்லாம் புணர விரும்பியவனுமா யிருந்தான். அவனோர் சண்டாளஸ்திரியோ டிரவும் பகலுமா யிடைவிடாமல் கிரீடித்துக் கொண்டும் தினந்தோறும் திருடிக் கிடைத்த பணத்தினால் ஜீவித்துக் கொண்டும் பயமின்றி யப் பறைச்சியோடுகூடப் பறைச்சேரிகளில் வசித்து வந்தான். (2-3) ஒருநா ளவன் அரசனுக்காக வோர் மனிதனோலோர் குடலையில் வைத்துக்கொண்டு போகப்பட்ட பூவை யக்குடலையோடுகூடப் பிடுங்கிக் கொண்டதோடு (4) பலசாலியான வக்கேடுகெட்டவனவ்வரசன் வேலைக்காரனையு மடித்துப்போட் டப்பூவை யெடுத்துக்கொண்டு பறைச்சியோடுகூடத் துரிதமாய்த் தன் வீட்டுக் கோடுகையில் (5) நடுவழியிற் குடலையி லிருந்தோர் மலர் பூமியிலோரிடத்தில் தவறி விழுந்ததைக் கண்டதின்பேரி 'லிது சிவார்ப்பண' மென்று நாவினாலுரைத்துப் போட்டு வீடு சேர்ந்து (6) மலர்களா லலங்கரிக்கப்பெற்ற கொண்டையைக் கொண்ட வம்மாதரோடு கலவிதொடுத்தான். பிற்பா டரசன் அச்சங்கதியை யம்மனிதனாற் கேட்டு வெகு கோபங்கொண்டவனாகிப் (7) பிராம்மணக் கேடனான வப்பதிதனைத் தூதர்களா லழைப்பித்துக் கட்டி யடித்துக் கால்களில் விலங்கிட்டுச் சிறையிலடைத்துவிட்டான். (8) பிற கப்பார்ப்பாரக் கேடன் சில்காலஞ் சென்றதின்மே லச்சிறையின்கண்ணே மடிந்தான். அப்போது மகா கொடியர்களான வியம தூதர்கள் அவனை யியமனண்டைக் கிழுத்துப் போகையி (9) லதற்கிடையில் சிவகணாதிபர்க ளங்குவந் தத்தூதர்களை யடித்துப்போட் டவனை விமானத்தி லேற்றிக்கொண்டு மகிமை பொருந்திய சிவலோகத்திற்குக் கொண்டுபோய் விட்டார்கள். (10) பின்பவ்வியமதூதர்க ளியமனிடம்வந் தவனது சங்கதியை யறிவிக்க, உடனே இயமன் மகா கோபத்தோடு (11) சபையின் மத்தியில் சித்திரகுப்தனை நோக்கி யதன் காரணத்தை வினவலாகும்போது சித்திரகுப்தனும் நன்காராய்ந்து சபை நடுவிற் சொன்னதாவது:— (12) 'ஓ, சுவாமீ! இவனாற் செய்யப்பட்ட பாவங்க ளெந்தனாலாயினும் பிரம்மவிஷ்ணுக்களாலாயினும் நூறுகோடி வருடங்களாய்க்கூடச் சொல்லமுடியாது. (13) ஆனா லிவனோர் தருணத்தி லோர் அரசன் வேலைக்காரனிடமிருந்த புஷ்பத்தைக் குடலையோடுகூடப் பிடுங்கிக்கொண்டு

ஓடும்போ தங்கோர் மலர் தவறி விழுந்து மண்ணோடு கலந்தபூக்கான தை (14) யவன் 'சிவார்ப்பண' மென்று சொல்லிப்போட்டுத் துரித மா யோடிப்போனான். ஆகையால் ஓ; பிரபுவே! இம்மூடனுக் கிப்பே ர்ப்பட்ட மகாமகிமை பொருந்திய புண்ணிய மொன் றேற்பட்டிருக்கி னறது. (15) அச்சுகிருதத்தினால்தா னிவனது பாவத் திரட்க ளெல் லாம் நாசமாகி யவன் கணநிபர்களால் நோயற்ற சிவலோகத்திற் கிவ் விதமாய்க் கொண்டுபோகப்பட் (16) டங் கெல்லோர்களாலும் பூஜி க்கப்படுவோனாகித் துக்கமற் றிருக்கின்றா' னென, அது கேட்டுத் தரும ராஜனும் மெத்த மனக் களிப்புற்றவனாகி யச்சபை நடுவிற் சித்திரகுப் தனை நோக்கி வெகு சந்தோஷத்தோ டடிக்கடி மெச்சிக் கொண்டாடி யதாவது:— 'ஓ, கோ! சித்திரகுப்தா! சிவபூஜையான திவ்வுலகினில் யாவருடைய துக்கத்தைத்தான் தீர்க்கமாட்டாது. (17-8) மேலும் இம்மூவுலகினிலு மெந்த மானிடர்கள் சிவபூஜை செய்கின்றார்களோ அம்மகாத்துமர்களுடைய மகிமை யாவரால்தான் வர்ணிக்கமுடியு' (19) மென் றிவ்வாறு பலவிதமாய்க் கொண்டாடிவிட்டுப் பின்னும் தன் தூதர்களை நோக்கி வசன முரைத்ததாவது:—'ஓ, தூதர்களே! நீங்கள் நமது நன்மையைக் கோறுவீர்களாயின் சிவபூஜை செய்வோர் களைக் கண்டாலும், அல்லது அவர்களின் தோழர்களையும் அவர்களுக் குப் பணிவிடை செய்தவர்களையும் கண்டாலு மவர்களைத் தூரத்திலி ருந்தபடியே வந்தனித்துப்போட் டோடிப்போய்விடுங்க' ளென்றான். (20-1) ஆகையால் கேளீர், பிராம்மணோத்தமர்களே! சகலப் பிராணி களுக்கும் போக மோக்ஷங்களைப் பயனாய்க் கொடுக்கலுற்றதும், அறம் பொரு ளின்பங்களென்னும் நான்கு புருஷார்த்தங்களாகிய வமுதத் துக்கு நிதியும், எல்லாத்துக்கங்களையும் நாசஞ்செய்யலுற்றதுமான, ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களுடைய பூஜையை யெப்போதும் செய்ய வேண்டும். ($22\frac{1}{2}$) ஆவுடையோடுகூடிய லிங்கத்தைப் பூஜை செய்வ தினா லவ்விருவருமே நன்றாய்ப் பூஜிக்கப் படுகின்றார்கள். (23) அப் பேர்ப்பட்ட தேவிகூட வெப்போதும் சிவபூஜை செய்துவருகின்றாள். மேலு மவரது அருமைக் குமாரர்களான சுப்பிரம்மணிய விக்கினேசு வரர்களு மெப்போதும் சிவபூஜையில் முயன்றிருக்கின்றார்கள். (24) மேலுமவரது மற்றக் குமாரர்களான பைரவர், மகாசாஸ்தா, மகாகாளர் இவர்களு மெப்போதும் சோர்வின்றிச் சிவபூஜைசெய்வதில் முயன்றி ருக்கின்றார்கள். (25) ஸ்ரீ சிவபிரானுக்கு மகா நேசமுள்ளவர்களான நந்திகேசுவரன், சோமநந்தி இவர்களும் மற்றுமுள்ள சகல கணநிபர் களும் சிவபூஜை செய்வதிலேயே கவலைகொண்டிருக்கின்றார்கள்.(26) மேலும் மகாபராக்கிரமசாலியான வீரபத்திரரும் சகல வுருத்திரகண

ங்களு மாதியந்தமற்ற லிங்கமூர்த்தியை யெப்போதும் பூஜை செய்ய லாகின்றார்கள். (27) ஆகையால் சகல வபீஷ்டங்களையும் கொடுக்கலு ற்ற சிவபூஜையான தெல்லோர்களாலு மாசரிக்கத் தக்கதே! சிவபூ ஜை சகல பாவங்களுக்கும் பரிகாரமான தென்பது சருவசம்மதியா னதே! (28) ஆயிரம் பிராம்மண ஹத்தியாயினும், பதினாயிரம் கர்ப் பஹத்தியாயினும் மற்றுள்ள வேராளமான சகல பாபங்களுமாயினு மதினால் நாசமாகின்றன. (29) சகல வபீஷ்டங்களையும் பெறுவதற்குச் சிவபூஜையே மகா பெரிதான முக்கிய காரணமாகையா லெந்த மானி டர்கள் சற்புத்திரர்கள், பெண்டீர், மாடுகள், பணங்கள் இவைகளை யிச்சிக்கின்றார்களோ (30) அவர்க ளெக்காலத்திலும் லிங்கமூர்த்தி யான ஸ்ரீ மகேசுவரனைப் பூஜை செய்ய வேண்டும். அப்பூஜையினால் போகம், மோக்ஷம், யோக ஸித்தி முதலிய சகலங்களு மடையத் தக் கவைகளே! ஓ, பிராமணோத்தமர்களே! ($31\frac{1}{2}$) ஞானத்தைக் கொடு ப்பதும் சிவபூஜைதான். சிவபூஜையே யெல்லாவற்றையும் கொடுக்க லுற்றதென்று சொல்லப்படுகின்றது. (32) ஆகையால் சிவபூஜையின் மகிமையானது நம்பாலெல்லா மெடுத்துச் சொல்ல முற்று மசாத்திய மேயென்று சூதமுனிவ ருரைத்தபின்பேரில் சௌனகாதி முனிவர்க (33) ளச் சூதனை நோக்கி மெத்த வணக்கமா யாதரவுடன் வினவிய தாவது:—'ஓ, மகா பாக்கியசாலியான சூதமுனிவரே! தேவரீ ரெங்க ளுக்குச் சம்மதியானவரும் சருவஜ்ஞரு மாகையால் ஸ்ரீபகவானை யெத னாற் பூஜை செய்தா லவர் சீக்கிரமா யருள்புரிவா ரென்பதை யிப்போ தெங்களுக் கெடுத்துக் கூறவேண்டு' மென, ($34\frac{1}{2}$) இவ்வாறு வினவ ப்பட்டதன் பேரில் சூதர் வெகு நேரம் தியானஞ் செய்துவிட்டு மெ த்த மனக்களிப்புடன் வசன முரைத்ததாவது:— (35) கேளீர், முனீ சுவரர்களே! ஸ்ரீ சிவபிரானை யாயிரந் திருநாமங்களால் பூஜை செய் திடி லவர் மகா சந்துஷ்டி கொண்டவராகி யதிசீக்கிரத்தில் வேண்டிய பயனைக் கொடுக்கலாவா ரென, (36) அதுகேட் டவர்கள் 'ஓ, சூதமு னிவரே! யாதொரு ஸஹஸ்ர நாமங்களைக்கொண்டு ஸ்ரீமகாதேவனைப் பூஜைசெய்தா லவர் சீக்கிரத்தி லருள்புரிவாரோ அப்பேர்ப்பட்ட திரு நாமங்களை யெங்களுக் கெடுத்துக் கூறவேண்டு' மென்றார்கள். (37) இவ்விதமாய் வினவப்பட்டதன் பேரில் சூத ரம்முனிக் கூட்டங்களின் மத்தியிலிருந்து ஸ்ரீதிரிபுராரியின் பாதாரவிந்தத்தை யாதரவுடன் பூஜை செய்து வந்தனித்துப்போட்டுப் பிறகு தம தாசிரியரும், சத்தியவதி யம்மையின் திருமகனுமான வியாஸமுனிவனையும், ஸ்ரீசிவபிரானையும் தியானித்துக்கொண்டு ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லத் தொடங் கினர் (38).

எண்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

☞ 83-வது அத்தியாயம் முழுதும் ஸ்ரீசிவபிரானுடைய வாயிரத்தெட்டுத் திருநாமங்களே யாகையா லவைகளை மொழிபெயர்ப்பதாவது வடமொழியின்படியே தமிழிலெழுதுவதாவது சிறக்காதுபற்றி யது விலக்கப்பட்டது.

---

## உபதேசகாண்டம் அச—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர், பிராம்மணோத்தமர்களே! பார்வதிபதியான, ஸ்ரீமகேசுவரனை ஸஹஸ்ர நாமங்களாற் பூஜித் துடனே பயனடைந் திருப்பவர்களிற் சிலரை யுங்களுக் கெடுத்துக்கூறுகின்றேன். (1) பூர்வத்தி லிலக்கும்தேவி பூமிதேவிகளின் கணவரான ஸ்ரீநாராயணன் காமன்கணைகளாற் பீடிக்கப்பட்டவராகிச் சலந்தராசுரன் மனைவியானப் பிருந்தையிடத்தில் மிகுந்த போகங்கொண் டவளோடு திருட்டு மார்க்கமாய் வெகுகாலம் ($2\frac{1}{2}$) கிரீடித்துவந்தார். அக்காலத்தி லவ்வசுரன் சூலபாணியான ஸ்ரீ மகாதேவனாற் (3) சமுகரிக்கப்பட்டுப்போ யப்போதவளு மக்கினிப்பிரவேசம் செய்து விடலானபோது விஷ்ணு மிகுந்த துக்கத்தோ டவளது சாம்பற்களை யுடம்பினில் மிகுதியாய் வாரிப் பூசிக்கொண்டு வெகுகாலம் மனப்பைத்தியம் கொண்டிருக்குமளவி ($4\frac{1}{2}$) லங்கு துளசியம்மை யோர் பெண்ணுருவத்தோ டுற்பத்தியாக (5) அப்போது அதோக்ஷஜ (பிரம்மனது கீழிந்திரியமான வபானத் துவாரத்தினின்றுண்டானவ) ரான விஷ்ணு அவளைப் பிருந்தையென்றே நினைத்துக் கொண்டவளுடன் கிரீடித்துவந்தார். அப்போது விஷ்ணுலோகத்தில் மங்களகரம் பொருந்திய வந்தப்புரத்தின் கண்ணுள்ள, (6) அவரது பெண்டீர்களான விலக்கும்தேவியும் பூமிதேவியும் சடிதியிற் கோபம் கொண்டு ஜகத்திற்குக் காரண பூதரான மகாவிஷ்ணுவைச் சொன்னதாவது:— 'ஆ, ஆ! இவர்பரம புருடராயிருக்கையில் மனைவிகளாகிய நம்மைவிட் டெவ்வாறுதா னிவருக்கயல் மாதருடன் புணர மனமுண்டாயிற்றே! ($7\frac{1}{2}$) ஓ! இதென்ன புதுமை! எப்போதுமே புணர்ச்சியில் சாபலியம் கொண்டிருப்பது இவருக்கு வழக்கந்தான். (8) துவாபரயுகத்தின் கடைசியிலான கிருஷ்ணவதாரத்தி லிவர் பதினாறாயிரம் பெண்டீர்களை யுடைத்தாயிருந்து மனேக மிடைச்சிகளோடும் புணர்ந்தன ரன்றோ! (9) பின்னும் இப்போது துளஸி யென்ற மற்றோர் பெண்ணினுடனும் கிரிடிக்கலானது மின்றி யிவளோடுகூடவே இவர் இப்போது நம் சமீபத்திற்கு வந்துவிட்டாரன்றோ!' (10) வென்று சொல்லி யந்தப்புரத்தை விட்டுத் திருவாரூருக்குப்போ யங் கவ்விருவரும் ஸ்ரீபரமேசுவரனுக் காயிரமாயிரம் தாமரை மலர்களால் ஸஹஸ்ர நாமத்தினாற் பலமுறையர்ச்சனை செய்ய, அதனாற் சந்துஷ்டி யடைந்த வப்பிரபுவை யவர்கள் பிரார்த்தித்துக் கொண்டார்கள். ($11\frac{1}{2}$) பிற்பாடு பகவா னவர்கள் முன்னிலையிற் சான்னித்தியமாகி (12) 'ஓ, பூமி யிலக்குமிகளா! உங்களுக்கு மங்கள முண்டாகக் கடவது. நம்மை நீங்கள் வேண்டிய வரன்

கேட்டுக்கொள்ளலா'மென, இவ்வா றீசன் திருவசனத்தைக் கேட்ட தன்மேல் பூமியு மிலக்குமியும் வரன் கேட்டுக்கொண்டதாவது:--(13) 'ஓ, சுவாமீ! அசுரர்களைக் கண்டிக்கலுற்ற விஷ்ணுவானவர் பிருந்தை மீதுயிரை வைத்துக்கொண்டே துளஸியோ டிரமித்துக்கொண் டிருக்கின்றபடியா லவ ரெங்களிடத்திலேயே வந்திருக்க வேண்டு' (14) மென்று சொல்லி வந்தனித்துத் தோத்திரம்பண்ணி யவ்விரு தேவிகளும் முன்னிலையில் நின்றார்கள். ஸ்ரீஸாம்பமூர்த்தியு மப்படியே நல்லதென்று அவர்களைத் திடப்படுத்தி யந்தர்த்தான மடைந்தார். (15) பிறகவர்களி லொருத்தி பாற்கடலுக்கும், மற்றவள் மேருகிரிக்கும் சென்றார்கள். அதாவது இலக்குமி தன் தந்தையான பாற்கடலுக்குப் போயங்கேயே அந்தப்புரத்தில் வசித்தாள். (16) பூமியும் மேரு கிரியின் மத்தியிலுள்ள திருமாளிகையி லந்தப்புரத்தில் வசித்து வந்தாள். விஷ்ணுவின் தேவிமார்களான அவ்விருவரு மனேக பரிஜனங்களாற் சேவிக்கப்பட் டிவ்வா றிருக்கையில் (17) அப்போது திருமால் அவர்களைத் தம் மந்தப்புரத்தில் காணமற் சகலங்களையும் சடிதியில் அறிந்து அவர்களிடத்திற்குப் போய் அவ்விரு தேவிகளையும் திறமை பொருந்திய வின்ப வார்த்தைகளாற் பலவிதமாய்ச் சமாதானப்படுத்தித் தம் லோகத்திற் கழைத்தும் (18½) அவர்கள் நேசக் கலகத்தினால் அவருக்கு வசப்படாமல் (19) அவ்வாறு பிரார்த்தித்த விஷ்ணுவை மீறிவிட்டார்கள். அதற்கு விஷ்ணுவும் 'ஓ, பெருமை தங்கிய தேவிமார்களே! நீங்க ளிவ்வாறு தீர்மானங்கொண் டிருக்கின்ற படியால் யானுங்க ளண்டையைவிட்டுப் போவதே யில்லையென் றெவ்வொருத்திக்கு முரைத்துப்போட்டுக் காசிநகர் சென் (20½) றங்கு அந்த ஸஹஸ்ர நாமத்தாலேயே ஸ்ரீமகாதேவரைப் பூஜைபண்ணி (21) யவ்வாறு பூஜித்ததினால் திருப்தி யடைந்த வப்பகவா னிடமிருந்து மேருகிரியின்மத்தி, பாற்கடலின் மத்தி ஆகிய இவ்விரண் டிடங்களிலும் தாம் வசிப்பதற்காக விரு பட்டணங்களை யருளவேண்டு மென்றும், இலக்குமி பூமி ஆகிய யிருதேவிமார்களுக்கும் தம்மீது மிகுந்த நேசமுண்டாக வேண்டுமென்றும் (23) வரனை யடைந்து பிறகு இலக்குமியண்டைக்குப்போ யங்கோர் பட்டணத்தைக் கட்டிக்கொண்டு கோபத்தைவிட்டவ்விலக்குமியோடுகூட வப்பாற்கடல்மீது வெகுகாலம் வசித்து விட்டுப் (24) பிறகு விஷ்ணுவானவர் மேருகிரியின் கொடுமுடியில் வைகுண்டமென்னும் பட்டணத்தை யுண்டுபண்ணி யங்கு பூமிதேவியுடனும்கூட மிகுந்த சுகத்தை யனுபவித்தார். (25) இவ்விதமாயிலக்குமிதேவி, பூமிதேவி, விஷ்ணு இவர்களுக்கு ஸஹஸ்ர நாமார்ச்சனையின் வலிமையினால்தான் பாற்கடலிலும் மேருகிரியிலு மிரண்டு பெரிய பட்டணங்க ளுண்டாயின. (26) ஆகையால் ஸ்ரீ விஷ்ணுவானவர் தம்மை மூன்று பங்காய்ப் பகிர்ந்துகொண்டு வைகுண்ட மென்ற மேருவின் கொடுமுடி, மகாமகிமை பொருந்திய விஷ்ணுலோகம், பாற்க

டல்மீதுள்ள சுவேதத் திவு ஆகிய விம்ஹன் றிடங்களிலும் இலக்குமி பூமிதேவிகளுடன் கூட மிகுந்த சந்தோடத்துடன் வசித்து வருகின்றார். (27½) பிற கோர் சமயத்தி லவர் சக்கிராயுதத்தை விரும்பியவராகி வைகுண்டமதில் ஸ்ரீசந்திரசேகரனை (28) ஸஹஸ்ரநாமத்தினால் மரைமலர்களாற் பூஜித்ததினு லாயிரம் சூரியனை யொத்ததும், கிடைப்பதற்கு மெத்த வசாத்தியமுமான சக்கிரத்தை யடைந்து (29) முந்தித் தமது செவித் துவாரத்தினின் றுண்டான தம்மிடத்திற் பிறந்தவர்களாகிய மதுகைட பாசுரர்களோடு கபடமா யுயுத்தஞ்செய் தவர்களைக் கொன்றார். (30) பிற்பா டவர் அத்தோஷந் தீருவதற்காகக் காஞ்சிபுரத்திற் கருகினில் ஸ்ரீ மகேசுவரனை ஸஹஸ்ரநாமங்களாற் பூஜை செய்து உடனே சகல பாவத்திறட்சகளையுந் தொலைத்துக்கொண்டு பிற கங்கோர் தீர்த்தத்தை யுண்டுபண்ணி யதின் கரைதனில் சேடன்மீது பள்ளிகொண்டிருக்கின்றார் (31).

எண்பத்து நான்காவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் அடு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர், பிராம்மணோத்தமர்களே! பூர்வத்தில் பிரம்மன் கடற்கருகிலுள்ள கோகர்ண க்ஷேத்திரத்தில் ஸஹஸ்ரநாமத்தாற் பூஜை செய்ததினால் ஸ்ரீசிவபிரானுடைய ஸாரூப்பியத்தை யடைந்தார். (1) இந்திராணியின் கணவனான விந்திரன் மூந்தி ஸ்ரீ சந்திரசேகரனை ஸஹஸ்ரநாமத்தினு லாயிரம் தாமரை மலர்களாற் பூஜை செய்ததினு (2) லிந்திரனுக்குரிய சகல சம்பத்துகளையும் தன்பதவியையு மடைந்தான். மேலு மிவ்விதமா யின்னும் மற்றவர்களும் ஸ்ரீ சிவபிரானை ஸஹஸ்ரநாமத்தினுற் பூஜைசெய்து (3) சீக்கிரமதில் வேண்டிய வபீஷ்டங்களை யடைந் தெப்போதும் மிகுந்த சுகத்தை யனுபவித்து வருகின்றார்கள். ஆகையால் மானிடர்கள் ஸ்ரீ பரமேசுவரனை ஆயிரத்தெட்டுத் திருநாமங்களாலாவது அல்லது நூற்றெட்டு, இருபத்து நான்கு, பன்னிரண்டு, இந்தத் திருநாமங்களாலாவது பத்திரங்கள், புஷ்பங்கள், அல்லது அக்ஷதைகள் இவைகளால் நாள்தோறும் பக்திச்சிரத்தையுடன் பூஜித்தா (5½) லத்தயாநிதியானவ ரெல்லோர்களுக்கும் சகல வபீஷ்டங்களையும் கொடுத்தருளுகின்றார். (6) மனிதர்கள் மனதினுலாவது மகா மகிமை பொருந்திய பூஜையைச் செய்யவேண்டும்; ஆனு லறம் பொருளின்பங்களைத் தடையின்றி யடைவதற்காகப் பாஹ்ய பூஜையை யவசியமாய்ப் பண்ணவேண்டும். (7) ஸ்வாமிக்குப் பாஹ்யபூஜைக்கு வேண்டிய பூஜாத்திரவியங்களைச் சேகரித்து வைத்துக்கொள்வதுபோலவே மானஸிக பூஜையிலும் சகல பூஜாத்திரவியங்களையும் மனதினுல் பாவித்துக்கொள்ள வேண்டும். (8) தன திச்சைக் கிசைந்த நை

வேத்தியத்தாலு மிச்சைக் கிசைந்த மற்ற பூஜாத் திரவியங்களாலும் தன திச்சையாற் கற்பிக்கப்பட்ட ஓர் இலிங்கத்தில் பூஜை செய்திடில் ஸ்ரீபகவான் சகல வபீஷ்டங்களையும் கொடுத் தருளுகின்றார். (9) சகல பூஜைகளிலு மிப்பேர்ப்பட்ட மானசிக பூஜையான்து நல்ல பயனைக் கொடுக்கலுற்றதாகும். இதற்குக் காலநியம மில்லை; தேசநியமமில்லை; தல நியமமுமில்லை. (10) தன் சித்த மொரோ நிலையா யெங்கு நாடுகின் றதோ அங்ஙனமே யிப்பேர்ப்பட்ட மானசிகபூஜையைச் செய்யலாம். இப்பிரகாரமாய்த் தேவேசரான ஸ்ரீஸாம்பமூர்த்தியை யந்தக்கரண த்தில் பூஜைபண்ணி (11) வெகு பெயர்கள் சகல ஸித்திகளையு மடை ந்து சமுசாரக சட்டினின்று விடுபட்டிருக்கின்றார்கள். பூஜைசெய்த லானது இவ்விதமா யிருவகைப் படுகின்றது. இவ்வுலகின் மீதுள்ள சகலப் பிராணிகளாலும் பூஜை செய்யப்பட்ட, (12) ஜகத்குருவான ஸ்ரீ மகேசுவரனுடைய லிங்கங்கள் பலவாறு யிருக்கின்றன. (12½) மலைகளினுச்சி, நதிக்கரை, அரணியங்கள், நதிகள், கடற்கரை இவை முதலிய விடங்களில் சுயம்புவான சிவலிங்கங்களும், தேவர்கள், மு னிவர்கள், சிரேஷ்டரான மானிடர்கள், மகாபாக்கியசாலிகளான வசுர ர்கள், கந்தர்வர், உரகர், அரக்கர் ஆகிய இவர்களாற் பிரதிஷ்டை செய் யப்பட்ட வனேகம் சிவலிங்கங்களு மிருக்கின்றன. (13-5) ஸ்ரீஜகதீச னுடைய ஸான்னித்திய மிவ்வெல்லா லிங்கங்களிலும் விசேடமா யிரு க்கின்றன. சுயமா யுண்டானது சுயம்புலிங்க மெனவும், (16) விஷ் ணுப் பிரம்மர் முதலிய தேவகணங்களாற் பூஜை செய்யப்பட்டவை திவியலிங்க மெனவும், வஸிஷ்டர் முதலிய பிரம்ம ருடிகளாலும், நாரதர் முதலிய தேவருடிகளாலும், (17) பெருமைபொருந்திய யோ கீசுவரர்களாலும் பூஜிக்கப்பட்டவை ஆர்ஷ லிங்கங்க ளெனவும், மனி தர்களால் ஸ்தாபிக்கப்பட்டவை மானிடலிங்கங்களெனவும்படும். இந் நான்கு லிங்கங்களிலும் (18) ஸ்ரீ மகாதேவர் தேவியுடன்கூட வெப் போதும் சான்னித்திய மருளியிருக்கின்றார். ஸ்ரீஜகதீசனோர் கட்டை யைப்போல் வானமதி லசைவின்றி நிலைபெற் றிருக்கினு(19) மிச்சகல ஜீவங்களு மம் மகாத்துமரான புருடரால் நிறைந் திருக்கின்றது. என் றாலு மிவ் விலிங்கங்கள் தோறு மவரது ஸான்னித்திய மொன்றுக்கொ ன்று வித்தியாசமா யேற்பட்டிருக்கின்றது. (20) எப்படி யென்றால் மானிட லிங்கங்களில் ஸ்ரீ பிரபுவானவ ருல்லாசமா யுலாத்தி யருளுகி ன்றவர்போலும், ஆர்ஷ லிங்கங்களி லவர் திருவடிகளால் லீலையாய் நின்றருளுவோர் போலும், (21) தேவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட திவி யலிங்கங்களி லவர் வீற்றருளி யிருப்பவர் போலும், சுயம்புவான லிங் கங்களிலோ வென்றால் ஸ்ரீசங்கரன் சயனித் தருளுவோர்போலு மிரு க்கின்றார் (22) மேலு மசுர கந்தர்வர்கள் முதலியவர்களால் ஸ்தாபி க்கப்பட்ட மற்ற லிங்கங்களி லப்பிரபுவானவர் தம் திருவுளத்தின்படி திருவிளையாட் டருளுகின்றார். சுயம்பு முதலிய நான்கு லிங்கங்களி

னும் ஸ்ரீபகவான் (23) முற்கூறியபடி லீலைசெய் தருள்வதா யுபசரிக்க ப்படலாகின்றார். ஓ, முனிவர்களே! ஸ்ரீபகவான் சயனித்து முட்கார்ந்தும் நின்று முலாத்தியும் திருவிளையாட் டருளுகின்ற (24) தென்று சொல்லப்பட்டதைப்பற்றி யிப்போ துங்களுக்குத் திருஷ்டாந்த மெடுத் துரைக்கின்றேன். எப்படி யென்று லோரரசன் தன் மாளிகையி னேரிடத்தி லுலாத்திக்கொண் டிருக்கையில் சில ஜனங்களுக்கு வெகுமதியும் சிலருக்குத் தண்டனையும் செய்கின்றான். (25½) பிறகவனே மற்றோர் மாளிகையில் நின்றுகொண்டே (26) சிலருக்கு மரியாதையும் சிலருக்குத் தண்டனையும் செய்கின்றான். பின் பவ்வரசனே யோரிடத்தி லுட்கார்ந்துகொண்டே சிலருக்கு வேண்டிய வேண்டாவைகளைச் செய்யவும் செய்கின்றான், செய்யாமலு மிருக்கின்றான். (27½) மேலு மவனேரிடத்தில் படுத்திருக்கையிலு மங்ஙனமே நடத்துகின்றான். தவிரவு மவ்வரசன் உலாத்திச் செல்லலாகும் மார்க்கங்கள் (28) சிறப்பா யலங்கரித்து விளங்கலாகும்; அவன் காலினால் நிற்கு மிடமதிலதிலும் மிகுதியா யலங்கரிக்கப்பட் டிருக்கும்; அவ னுட்காரு மிடம் (29) மதிலதிலும் நேர்த்தியாய்ச் சிங்காரித்து விளங்கும்; அவன் சயனிக்கு மிடமோ அதிலும் மெத்தநேர்த்தியாய் விளங்கலாகுமே! இதே பிரகாரமாய் ஸ்ரீசர்வேசுவரனது சுயம்பு முதலிய லிங்கங்களில் (30) அலங்கார பேத விசேடமும் ஸான்னித்திய பேதமு மேற்படலாகின்றன. சுயம்பு லிங்கத்தில் பிராணிகளுக்குச் சகல வனுக்கிரகமு முடனே சித்திக்கலாகும். (31) ஓ, பிராமணோத்தமர்களே! சகல லிங்கங்களிலுமுள்ள வோர் தாரதமியக் கிரமத்துடன் ஸ்ரீஜகதீசனுக் குவமையா யோர் தரணிசனை யெடுத் துரைக்கலாயினேன். (32) மேலு மிலிங்க வித்தியாஸத்திற்குத் தக்கபடியே ஸ்ரீ நந்திகேசுவரனுடைய சயனித்தல், நிற்குதல், உட்காருதல், நடத்தல் இவைகளைப் பாவிக்கவேண்டும். (33) ஆகையால் சுயம்பு, திவியம், ஆர்ஷம், மானிடம் இவைகளில் வேண்டிய வபீஷ்டம் கைகூடுவதற்காக வெப்பேர்ப்பட்ட சிவலிங்கத்தில் ஸ்ரீமகாதேவனைப் புஷ்பங்களாலாவது பத்திரங்களாலாவது பக்தியுடன் பூஜை செய்திடினு (34½) மவ்வாறு பக்தி சிரத்தையுடன் ஸ்ரீசுவரோசுவரனைப் பூஜிப்பவர்களுக் கவர் (35) சகல வபீஷ்டங்களையும் கொடுத் தருளுகின்றார். இதனை யுங்களுக்கு நன்றா யெடுத் துரைத்தாயிற்று. ஆகையால் தமக்கு நன்மையைக் கோறுவோர்கள் வேதாகமங்களிற் கூறிய முறையின்படி குருவினிடமா யனுக்கிரகத்துட னுபதேசம்பெற்று ஸ்ரீசிவபிரானை யிலிங்கமதிற் பூஜைசெய்யவேண்டு (36½) மென, இவ்வா றுரைத்த வச்சூதமுனிவரை நோக்கி முனிவர்கள் துரிதமாய் வினவியதாவது:--'ஓ, சூதமுனிவரே! குருவே விஷ்ணுவென்றும், குருவே பிரம்மன், உருத்திரன், தந்தை, தாய், சகோதரனென்றும், குருவே ஸ்ரீஜகதீசன் (38) என்று மெல்லோரும் சொல்லுகின்றார்கள்; ஓ! கோ! நீரு மிப்போது குருவின் திருவாக்கினையின்

பேரில்தான் ஆகமங்களா லாதரிக்கப்பட்ட சிவபூஜையைச் செய்யவேண்டுமென்று கூறுகின்றீர். (39) ஓ, சுவாமீ! குருவென்று சொல்லப்படுவோர் யாவர்? மேலு மிப்போது சிலருக்குக் குருக்க ளிருக்கின்றர்களே, அவர்கள் குருவமிசத்தி லுண்டானவர்களா? இப்பேர்ப்பட்ட நல்ல குருக்களைத் தேவரீ ரெடுத்துக் கூறவேண்டு' மென்றார்கள்.(40)

எண்பத்தைந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் அசு—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ, கோ! கேளீர், முனிவர்களே! புவனங்களுக் கெல்லாம் பரிசுத்தர்களான குருமார்களைப் பற்றி யிப்போ தெடுத்துக் கூறுகின்றேன். தேவர்களுக்குக் குருக்க ளிருக்கின்றார்கள். கந்தர்வர், உரகர், அரக்கர், (1) மகாத்துமர்களும் வீரர்களுமான கணேந்திரர்கள், யோகிகள், மனிதர்கள், மகாத்துமரான முனிவர்கள், (2) பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் இவர்களுக்கும், சகல சங்கர ஜாதியார்களுக்கும் குருமார்க ளிருக்கின்றார்கள். (3) ஆகையால் குருவி னுக்கினையைக் கொண்டுதான் ஸ்ரீஸாம்பமூர்த்தியைப் பூஜைசெய்யவேண்டும். பூர்வத்தில் மலைகளி லுத்தமமான கைலைகிரிதனில் ஸ்ரீ பகவான் வீற்றிருக்கும்போது (4) பார்வதியம்மை, நந்திதேவன், பிரம்மன், பகவானாகிய விஷ்ணு, ஸத்தியத்தையே விருதமாய்க் காக்கலுற்ற முனிவர்கள் ஆகிய இவர்கள் மிகுந்த பக்தியுடன் வந்தனித் தாதரவோடு வேண்டிக் கொண்டதாவது:—(5) 'ஓ, ஜகதீசா! சிருஷ்டிதோறு முண்டாகலுற்ற காலவரம்பிற் குட்பட்டவர்களான பிரம்மர்களுக் கெல்லாம் தேவரீரே அகண்டங்களான சாத்திரங்களை யுபதேசிப்பவராகையால் (6) காலவரைக்குள் ளடங்கிய சகல குருக்களுக்கும் பரமகுருவான தேவரீ ரிங்கெங்களுக் காகமப் பொருட்களை யுபதேச மருளிடில் (7) ஓ, மகாதேவா! தேவரீர் திருவருளால் யாங்கள் கிருதார்த்தராகி விடுவோ' மென்று பார்வதிதேவி, நந்திகேசுவரன் முதலியவர்களால் பிரார்த்திக்கப்பட்டதன் பேரில் (8) ஸ்ரீசம்பு வப்போது தமதாசனத்தினின் றெழுந் தங்கு அம்மலைமீதிருக்கும் புஷ்பகிரி யென்ற கொடுமுடிதனில் விளங்கலுற்ற மெத்த சேர்த்தியான திருமாளிகைக் கருளி (9) யங்கு மகா சௌந்தரியம் பொருந்திய வோர் ஆசிரியரின் உருவத்தைக் கொண்டவராகிப் பார்வதிதேவி, விநாயகர், கந்தர், சாஸ்தா, பைரவர், மற்றுமுள்ள பூதகணாதிபர்கள் இவர்களுக்கும் (10) வீரபத்திரர் முதலிய கணாதிபர்களுக்கும் தாமே பரமாசிரிய மூர்த்தியைக் கொண்டவராகி வேதாகம மோபநிடதங்களைக் கற்பித்தருளினார். (11) மேலு மப் பிரபுவானவர் மிகவும் பெரிதான ஆமர்த்தனகிரி யென்னும் மற்றோர் கொடுமுடிமீ தோராசிரிய வுருவத்தைக் கொண்டவரா

தி நந்திகேசுவரன் முதலியவர்களுக்கும், (12) மகாகாளர், சோமநந்தி, மற்றுள்ளப் பிரமதகணங்கள் இவர்களுக்கும் தாமே பரமாசாரிய மூர்த்தியாகிச் சகல வேதாகமப் பொருட்களையு முபதேசித்தருளினர். (13) பின்னும் மகிமை பொருந்திய கோளகிரியென்னும் கொடுமுடி தனிலோர் பரமாசிரிய மூர்த்தியைக் கொண்டவராகி விஷ்ணுப் பிரம்மன் முதலிய தேவச்சிரேஷ்டர்களுக்குச் (14) சகல ஆகமப் பொருட்களையும் கற்பித்தார். தவிரவு மவர் பிக்ஷாசாரியகிரி யென்ற கொடுமுடி தனி லோராசிரியத் திருவுருவத்தைக் கொண்டவராகி (15) ஸனகர் முதலிய முனீந்திரர்களுக்கு வேதாந்தப் பொருட்களையு மாகமப் பொருட்களையு முபதேசமருளினர். கேளீர், முனிவர்களே! முற்கூறிய நான்கு கொடுமுடிகளிலும் நான்கு குருமூர்த்திக ளிருந்தார்கள். பிற்பா டப்பேர்ப்பட்ட குருமூர்த்திகளால் வெகுபெயர்கள் சீடர்களா யனுக்கிரகிக்கப் பட்டார்கள். (16½) அதன்பிறகு வெகு காலம் சென்றதன்மேல் துவாபர யுகத்தின் கடைசியி லெங்கும் (17) வேதாகமங்களின் பொருட்களெல்லாம் முற்று மலோபித்துப் போகலாகையில் புஷ்பகிரி, ஆமர்த்தனகிரி, கோளகிரி, பிக்ஷாசாரியகிரி ஆகிய விந்நான்கு கிரிகளிலு முள்ள வாசாரியர்களும் ஸ்ரீ வாக்கினையின்படி யவரவர்களின் சீடர்களோடுகூட (19½) அந்தந்தக் கிரியின் சந்தானம் (வம்சஸ்தர்கள்) என்ற பெயரோடு பார்மீ தவதரித்துப் (20) புண்ணியாத்துமரானவர்களுக் கெல்லாம் வேதாகமங்களிற் கூறப்பட்ட சைவ தீக்ஷையாலும், சரியை, கிரியை, யோகம், ஞானம் இவைகளாலு மப்பேர்ப்பட்ட வெல்லாப் பிராணிகளையு மனுக்கிரகித்துவிட்டுப் (21½) பிறகு தங்கள தம்சங்களைக் கொண்டே யந்தந்த கிரியின் சந்தான குருமார்க ளனேகர்களை யுண்டுபண்ணி வைத் (22) தவர்களைத் தங்களுக்குச் சரியாய் வேதாகமங்களி னர்த்தங்களை யறியும்படி செய்தும், அந்தந்த வம்சத்தின் பெயரோ டவர்களுக்குப் பட்டாபிஷேகம் செய்தும் விட்டுப் (23) பிறகவ்வாசிரியர்கள் கைலாஸத்திற் கேகிவிட்டார்கள். அதன் பிறகு தலைமுறை தலைமுறையா யவ்வம்சத்திலுண்டான குருமார்க ளெல்லா (24) மிவ் வுலகின் மீதுள்ள, நல்ல ஞானத்தின் முதிர்ந்த சகல புண்ணியாத்துமர்களையு மனுக்கிரகிக்க லாகின்றார்கள். ஆகையால் கேளீர், முனிவர்களே! ஸ்ரீசிவபிரானே ஆகமார்த்தங்களை யறிந்த குருமாராய்த் திருவுருவம் கொண்டிருப்பதாயே கொள்ளவேண்டும். (25) சிவபூஜையானது குருவி னனுக்கிரகத்தினால்தானுடனே பயனைக் கொடுக்கலுற்றதாகும்; சகல வித்தைகளு மவரது திருவருளால் மட்டில் சித்திக்குமேயின்றி வேறில்லை. (26) குருவின் திருவருளில்லாதவர்களுக்குச் சகல வித்தைகளும் பயன்பெறா. சகல வித்தைகளையும் முழுதும் குருவினிட மிருந்துதான் கற்கவேண்டும். (27) ஏனென்றால்:—

பூர்வத்தி லாதிசேடன் குருவின்றியே சகல வித்தைகளிலும் தேர்ச்சியடைந்து மகா சாமர்த்திய முடையவராகி வெகு உர்ச்சாகத்தோடு விஷ்ணுவுடன் வாதாடினர். (28) அப்போ தங்கிருந்த முனிவர்களும் தேவர்களு மாதிசேடனுகிய வச்சர்ப்பராஜனை மெச்சிக் கொண்டாடினர்கள். இப்படி யிருக்கையி லப்போ தகஸ்திய ரங்குவந்து அச்சபை நடுவினில் விஷ்ணுவை நோக்கி யுரைத்ததாவது:-(29) 'ஓ, ஸ்வாமீ! இச்சர்ப்ப ராஜன் குருமுகமாயின்றி யெல்லா வித்தைகளையும் கற்றிருக்கின்றான். ஆகையா லிப்பேர்ப்பட்ட கல்வித் திருடனோடு மகாத்துமர்கள் பேசலாகா' தென்று சொல்லிவிட்டுப் (30) பிறகம் மாமுனிவ ரச்சேடனை நோக்கித் திருவாக் குரைத்ததாவது:— 'ஓ, சிரேஷ்டனே! நீ குருவினிட மிருந்து கற்காதபடியால் நீயோர் கல்வித் திருடனன்றோ! (31) லும் புலவர்களுக்குக் குருவை விலக்கிய மனிதரோடுபேசுவது தகுதியல்லவன்றோ! ஆசிரிய னில்லாதவனுடையகல்வியானது பயனைபே கொடுக்கமாட்டா' தென்றிவ்வா றுரைத்து விட்டுப் பின்னு மம் மகிமை பொருந்திய முனிவ ரச்சேடனை நோக்கிக் கூறியதாவது:— 'ஓ, சேடனே! மூவுலகுகளுக்கும் குருவான மகிமைபொருந்திய இவ்விஷ்ணு வுனக்குக் குருவா யிருக்கட்டும்.(33) ஆகையால் நீ யிவரிடமிருந் துபதேசம் பெற்றுப் பிறகு நீ கிருதார்த்தனுகிவிடு. அதன் பிறகு நீ யிப்பேர்ப்பட்ட குருவுடன் பிரசங்கஞ் செய்யலாகுமே யின்றி வேறுவிதமாய்க் கூடா' தென, (34) இவ்வா றம்முனிவரது வசனத்தைக் கேட் டாதிசேட னவருக்குச் சொல்லியதாதாவது:—'ஓ, முனிவரே! நான் யாவருடன் பிரசங்கிக்க வந்தேனே அப்பேர்ப்பட்டவருக்கு நா னெவ்வாறு சீடனுகக்கூடும்? (35) மாமுனிவரான தேவரீருடைய விப்பேர்ப்பட்ட வார்த்தையானது வெறும் பரிகாசமே யென்பதிற் சந்தேகமில்லை. ஓ, இருடிச் சிரேஷ்டரே! ஜன்மாந்தர வாசனையால் நானே சுயமாய்ச் சகல வித்தைகளையும் கற்றுக்கொண்டு விட்டபடியால் வித்தையின் நிமித்தமா யடியேனுக்குலகினில் குருவே வேண்டா'(36½) மென, இவ்வா றுரைத்த சேடனுகிய வச்சர்ப்பத்தை நோக்கி மாமுனிவர் பின்னு முரைத்ததாவது:-- (37) 'ஓ, மகா புத்திசாலியான சேடனே! நீ சாத்திரத்துக்கு விரோதமான விப்பேர்ப்பட்ட வசனத்தைச் சொன்னபடியால் நீ யிவ்விஷ்ணுவுக்குச் சயனத்தலமாகக் கடவது. (38) மேலு முந்தனுல் கற்கப்பட்ட வித்தை யெல்லா முந்தனுக்குத் தோன்றுமற் போகக்கடவ' தென, அது கேட்டுச் சேடன் பயந்து நடுங்கியவராகி யவ்வா றுரைத்த முனிவரை வந்தனித் (39) தஞ்சலிகொண்டு வணக்கத்துட னவரை மிகுதியாய் வேண்டிக்கொண்டதாவது:— 'ஓ, ஸ்வாமீ! அஜ்ஞானத்தினுல் செய்யப்பட்ட வெனது பிழைகளை யெல்லாம் தேவரீர் மன்னித்தருளவேண்டும். (40) தேவரீரது கோபத்தினு லுண்டான விப்பேர்ப்பட்ட சாப மடியேனைப் பாதிக்காம லெப்போ தச்சாபந் தீரலாகுமே

ன்பதை யடியேனுக்கு இப்போது துரிதமா யுரைத்தருள வேண்டு' மென, அங்ஙன முரைத்த வச்சேடனை நோக்கி மாமுனிவர் பின்னும் உரைத்ததாவது:—(41½) 'கேளாய், சேட சர்ப்பமே! நீ வெகு கால மளவு மிரவும் பகலுமாய்த் தியானிக்கலுற்றவனாகி யுன்மீது பள்ளி கொள்ளலாகும இம்மகாவிஷ்ணுவின் திருக்கண் பார்வையைக் கொள் ளலானதன்பேரி லுனக்குப் பிரசன்னராகு மிப்பேர்ப்பட்ட கருடத் துவஜரிடமிருந்து நீ யுபதேசம் பெறலாகிப் (43) பிறகு ஸ்ரீ மகாதே வனைப் பூஜைசெய் தவனை யருள்புரியும்படி செய்வித்துக்கொண்ட தன்மேற் சகல வித்தைகளு முனக்குத் தெரியலாகு' மென்றார். (44) ஆகையால் கேளீர், பிராம்மணோத்தமர்களே! சகலப் பிராணிகளுக் கும் குருகடாக்ஷத்தின் பேரிற் சிவபூஜை செய்வதினால்தான் சகல மேன்மைகளும் கைகூடுமேயின்றி வேறுவிதத்தினா லில்லையென்பது நிச்சயமே. (45) இச் சிவபூஜையின் மகிமையைப் பற்றி என தாசிரிய ரான வியாஸமுனிவரா லெனக்குக் கூறியபடி யேதோ எந்தனால் கூ டியமட்டிற் கொஞ்சமுங்களுக் கெடுத் துரைத்திட்டேன். (46) அதை யுள்ளபடி முழுமையு மிவ்வளவென் றளவிட் டுரைப்பதற்குப் பிரம்ம னாலும் முடியாதே! ஓ, முனிவர்களே! இதற்குமேல் யோகம், ஞானம் இவைகளின் விவரத்தைப்பற்றி நன்றா யுங்களுக் கெடுத் துரைக்கின் றேன்; அதனை நீங்கள் சிரத்தையுடன் கேட்கவேண்டும். இவ்விித மான சிவபூஜையின் மான்மியத்தை யெந்த மனிதன் பக்தியுடன் கே ட்கின்றானோ (48) அவன் பல விதங்களான மகாபாதகங்கள், உபபா தகங்கள் இவைகளா லெல்லாம் வாதிக்கப்படமாட்டான். மேலும் பிரம்மகத்தி, குருகத்தி இவைகளைச் செய்தவன், பொன் திருடின வன், குருவின் மனையாளோடு புணர்ந்தவன், (49) தந்தை தாய்களைக் கொன்றவன் இப்பேர்ப்பட்ட மகாபாதகர்களான கொடியர்களு மிச் சிவபூஜை மான்மியத்தைக் கேட்டமாத்திரத்தி லப்பேர்ப்பட்ட மகா பாதகங்களினின்றும் விடுபடுகின்றார்க ளென்பதிற் சந்தேகமில்லை.(50) தவிரவும் வித்தையை வேண்டியவன் வித்தைகளையும், பணத்தை வே ண்டியவன் மிகுந்த பணங்களையும், பிள்ளையை வேண்டியவ னனேகம் பிள்ளைகளையும், பசுவை வேண்டியவன திரண்ட பசுக்களையும், (51) பெண்டீரை வேண்டியவ னழகிய பெண்டீரையும், பூமியை வேண்டிய வன் மிகுந்த செழிப்புள்ள பூமிகளையு மடையலாவார்களே. ஆகை யால் இச்சிவபூஜை மான்மியத்தைச் சகலமுயற்சிகளுடனு மாதரவா ய்க்கேட்க வேண்டும். (52) ஓ, குறைவற்ற பாக்கியமுடைய முனிவர் களே! இவ்விதமாய் ஸ்ரீபரமேசுவரனுடைய லிங்கங்கள், பூஜை, குரு தக்ஷிணை, வித்தை யிவைகளின் விவரமானது உங்களால் பக்தியுடன் கேட்கப்படலாயிற்று. (53)

எண்பத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் அஎ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

கேளீர், முனிவர்களே! இதற்குமேல் சரியை, கிரியை இவைகளை முறைப்படி யனுஷ்டித்ததின்மே லாசரிக்க வேண்டிய மேத்த மேன்மை பொருந்திய சிவயோகம் இவைகளைப்பற்றி யுங்களுக் கெடுத்துக் கூறுகின்றேன். (1) இவற்றுள் சரியை யென்றால்:—காலையிலெழுந்து சௌசம், ஆசமனீயம் இவைகளைச் செய்துவிட்டு ஸ்நானம்பண்ணி விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்தபின் தேவருஷி பிதுரு (2) தர்ப்பணங்களை முடித்து பிறகு மகாபரிசுத்தனாகி நந்தவனத்தினின்று மலர்களை யெடுத்துவந் ததுபோலவே அபிஷேக ஜலத்தையும், சந்தனம், கஸ்தூரி முதலிய பூச்சுப் பண்டங்களையும் (3) கொண்டுவந்து பிறகு முறைப்படி செய்யவேண்டிய அந்தந்தக் கிருத்தியங்களை முடித்தானதின்மேல் பூஜாலயம் முழுதும் தீபங்களா லலங்கரித்துச் சிவனடியார்களின் சொற்படி நடந்து ஸ்ரீ சிவபிரானைச் சேவிப்பதில் முயன்றவனாகிச் சகல பாபங்களையும் நாசஞ்செய்யவுற்ற சரியையை யெப்போதும் புத்திமான்க ளிவ்விதமா யனுஷ்டித்துவர வேண்டும். (5) இதுதான் சரியை யெனப்படும். இதற்குப் பிறகு செய்யவேண்டிய கிரியையோ வென்றால்:—முந்திப் பஞ்சசுத்தி (இரு கால்களையு மிரு கைகளையும் கழுவிக்கொண் டாசமனீயம் செய்தல்) செய்துகொண்டு பிறகு முந்தி மானசிகமாய்ப் பூஜைசெய்துவிட்டு (6) ஸ்ரீசிவபிரானைப் பூஜைபண்ணிப் பிறகு (சிவபூஜையி னங்கமாகிய) ஓமத்தை யக்கினியிற் பண்ணி யிவ்விதமாய்ச் சகலக் கிரியைகளையும் முறைப்படி முடித்துவிட்டுப் (7) பிறகு சகல பாபங்களையும் நாசஞ் செய்யவுற்ற சிவயோகத்தில் மனதை நாட்டவேண்டும். இப்பேர்ப்பட்ட யோக மெட்டங்கங்களை யுடையனவென்று மகாத்துமர்களாற் சொல்லப்படுகின்றது. (8) அவையோ வென்றால் யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், (9) பிரத்தியாஹாரம், தாரணம், தியானம், ஸமாதி யெனபவைகளே. இவற்றுள் யமமென்றால் தீங்கு செய்யாமை, ஸத்தியம், திருடாமை, பிறர் பொருளை யிச்சியாமை, எட்டுவித மைதுன மின்மை, பகையாமை ஆகிய இவைகளேயென்று புலவர் கூறுகின்றார்கள். நியமமாவது கோபமில்லாமை, திருப்தியுடைதல், ஸ்நானம், தர்ப்பணம், ஆசிரியர் சிவனடியார்கள் இவர்களுடைய வார்த்தைகளை யாதரவுடன் கேட்குதல், சிவபூஜை, பொருமை, தயவு இவைகளேயாம். (11-2) ஆசனமாவது, மான்தோல் அல்லது புலித்தோலின்மீ துட்கார்ந்து பத்மாசனத்தையாவது அல்லது தன் தேக சௌகரியத்திற் கொத்தபடி யவரவ ரிச்சைக் கிசைந்த வேறாசனத்தையாவது செய்து கொண்டு கிழக்கு அல்லது வடக்கு முகமா யிருந்து புத்திசாலித் தன்மையுடன் யோகசித்தியைச் சிந்தித் திருத்தலேயாம். (13-4) ஓ, முனிவர்களே! பிராணாயாமமாவது, இடது நாசியால் பதினாறு மாத்திரையளவு சுவாசத்தை யுட்கொண்டு அறுபத்து நான்கு மாத்திரை நேரம்

ஸ்தம்பிக்க வைத்துப் (15) பிறகு வலது நாசித் துவாரத்தால் முப்பத்திரண்டு மாத்திரை யளவு சுவாசத்தை வெளியில் விடவேண்டும். மறுபடியு மிதே விதமாய் வலது நாசியால் நிரப்பித் தம்பிக்கவைத்துப் (16) பிறகு முறைப்படி யிடது நாசியின் வழியாய் மூச்சை வெளிச் செல்விப்பதே பிராணாயாம மென்று குறிக்கப்படுகின்றது. மேலும் கேளீர், பிராம்மணோத்தமர்களே! இப்பிராணாயாமம் ஸகர்ப்பம், அகர்ப்பமென இருவகைப்படும்; (17½) ஜபத்தியானங்களோடுகூடச் செய்யப்படுவது ஸகர்ப்பமெனவும், வெறும் பிராணாயாமத்தை மட்டிற் செய்வது அகர்ப்ப மெனவுமேயாம். (18½) ஸ்ரீபஞ்சாக்ஷர மகாமந்திரத்தைப் பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் இவர்கள் பிரணவத்தோடு சேர்த்தும், (19) சூத்திரர்கள் பிரணவ மில்லாமலும் ஜபம் பண்ண வேண்டும்; கசப்பு, புளிப்பு, தித்திப்பு இவைகளைக்கொண்ட பதார்த்தங்களையும், சுரைக்காயையும், விலக்கி (20) விதிப்படி யன்னத்தைப் பாலின்றி மிதமாய்ப் புசிக்கவேண்டும். தாகம் நேரிடில் சுகத்திற் கிசைந்தபடி யுஷ்ணமான கொஞ்ச ஜலத்தைக் குடிக்கவேண்டும். (21) ஐம்பொறிகளையும் வெல்வது பிரத்தியாகார மெனப்படும் தாரணை யென்றால் ஸ்ரீசிவபிரானுடைய விரு திருவடிக் கமலத்தின்கண் சித்தத்தை வைப்பதேயாம். (22) கேளீர், முனிவர்களே! தியானமாவது, ஸ்ரீசிவபெருமானொருவனையே யெப்போது மிருதயகமலத்திற் கொள்ளல். சமாதியோவென்றால்:— மற்றெல்லா விஷயங்களையும் மறந்தவனாகி சத்தியானந்தச் சொரூபியான ஸ்ரீசங்கரனிடத்தி லவர் தன்னைக் காட்டிலும் வேறல்லவென்ற பாவனையைக் கொள்ளலேயாம். (23½) இவ்விதமான வெட்டங்கங்களையுடைய யோகத்தை யெந்தப் பண்டித னப்பியாஸஞ் செய்கின்றானோ (24) அப்படிப்பட்ட மகாத்துமனுக் கஷ்டஸித்திகளும் கைகூடலாகும். மேலு மவன், ஸ்ரீஜகதீசன் கேவல மரூபியாயினு மவனைக் கோடி சூரியர்களையொத்த வொளியைக் கொண்டவரும், (25) சகல வலங்காரங்களோடும் கூடியவருமா யதிசீக்கிரத்தில் தனது இருதயகமல மத்தியில் காணலாவான். மேலும் கேளீர், தரணி தேவர்களே! நிற்கையிலும், படுக்கையிலும், நடக்கையிலும், உட்காருகையிலும் எப்போது மெல்லாக் காரியங்களிலும் ஸ்ரீசிவபிரானையே மனதினில் தியானிக்கலாகி ஸ்ரீமகேசுவரனுடைய விருபத்தைந்து மூர்த்திகளையும், ஸச்சிதானந்தச் சொரூபியான ஸ்ரீ ஸதாசிவனையும் பிரத்தியக்ஷமாய்த் தனது இருதய கமலத்தில் காணலாவான். (26-7½) யாதா மொருவர் ஸ்ரீசிவபரமாத்துமாவினுடைய யோகத்தை யிவ்வா றாசரிக்கின்றாரோ (28) அவர் சகல பாவத்திரட்களு மெரிந்து போகப் பெற்றவர்களும், ஸ்ரீசங்கரனுக்குப் பிரியமுள்ளவர்களுமாகிச் சகல வபீஷ்டங்களையும் கைக்கொண்டு சிவாக்கினையால் தேகத்தின் முடிவில் (29) பரமானந்த பரிதமான ஸ்ரீதேவாதி தேவரது ஸாரூப்பிய பதவியை யடையலாகின்றார். ஓ, முனிவர்களே! யானுங்களுக்

கிவ்விதமாய் யோக மார்க்கத்தை நன்றாய்ச் சொல்லிவிட்டேன். (30)

எண்பத்தேழாவது அத்தியாயம்
முற்றிற்று.

## உபதேசகாண்டம் அஅ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

பிற்பாடு கேளீர், பிராம்மணோத்தமரே! யாதொன்றைக் கேட்டமாத்திரத்தில் மானிடர் சமுசாரத்தினு லுண்டாகும் பாவங்களினின்று விடுபடுகின்றனோ அப்பேர்ப்பட்ட மகாவுத்தமமான சிவஞானத்தைப்பற்றி யுங்களுக் கெடுத்து உரைக்கின்றே (1) னென, முனிவர்கள் கேட்டதாவது:— 'ஓ, மகாபுத்திசாலியான சூதமுனிவரே! அப்பேர்ப்பட்ட ஞானமென்பதென்ன? அந்த ஞானத்தினு லறியத்தக்க பொருளென்ன? அப்பொருளை யறிந்ததினு லென்ன பயனுண்டாகு மென்பவைகளை யெங்களுக் கெடுத்துக் கூறவேண்டு' மென்று வினவ, (2) சூதர் கூறுகின்றார்:— ஓ, முனிவர்களே! பசு, பாசம், பதி யென்பவைகளின் பகுத்தறிவே ஞான மெனப்படும். இதையே சிற்சில முனிச்சிரேஷ்டர்கள் வெவ்வேறு பெயர்களாற் கூறுகின்றார்கள். (3) அஜ்ஞானத்தினு லுண்டாகும் துக்கம் ஞானத்தினுல்தான் விலக்கப்படும். ஞானமென்றால் அறியத்தகும் பொருளைக் குறிப்பிடும் தன்மையே. அந்தஞேயமானது (அறியத்தகும் பொருள்) அஜடம், ஜடம் இவ்விரண்டிற்கும் நியந்தா (ஆட்டிவைப்போன்) என்று மூன்று விதப்படும். (4½) பிரம்மஞானிகள் பசு, பாசம், பதி இவைகளையே இவ்விதமாய்க் கூறுகின்றார்கள். (5) மேலும் அஜட மென்று சொல்லப்பட்ட பசு அக்ஷரமென்றும், ஜடமென்னும் பாசம் க்ஷரமென்றும், நியந்தாவென்னும் பதியாகிய ஸ்ரீசம்பு க்ஷரம் அக்ஷரம் இவ்விரண்டிற்கும் மேலானவனென்றும் சொல்லப்படுகின்றது; இம்மூன்றுக்கு மாதியில்லை. (6½) மேலும் அக்ஷரமெனப்பட்ட பசுவே புருடனென்றும், (7) க்ஷர மெனப்பட்ட பாசம் பிரகிருதி யென்றும் சொல்லப்படும். க்ஷரம், அக்ஷரம் இவ்விரண்டினும் வேறாகியதோவென்றா லவ்விரண்டிற்கும் பிரேரக (ஆட்டிவைப்போர்) ரான ஈசுவரனெனப்படு (8) மென, அப்போது முனிவர்கள் சூதனை வினவியதாவது:— 'ஓ, மகா புத்திசாலியான சூதமுனிவரே! இவை யெங்களுக் கொன்றும் தெரியவில்லை. ஆகையா லெங்களுக்கு நன்றாய்த் தெரியும்படி வெவ்வேறாய்ப் பிரித்துத் தெளிவாய்ச் சொல்ல வேண்டும். (9) பின்னும் அவைகளுடைய சொரூபம் காரியம் இவைகளை யுண்மையி லெடுத்துரைக்க வேண்டு' மென, சூதர் கூறுகின்றார்:— கேளீர், முனிவர்களே! ஸ்ரீமகேசுவரனது சக்தியாகிய மாயையானது பிரகிருதி யெனவும், ஜடமெனவும் படும். (10) அது சேதன மன்று; பின்னேவெனில் ஸ்ரீசிவபிரானை யண்டிப் பரமாகாயத்தில் விளங்கி யிருக்கின்றது. புருடனென்னும் ஜீவனோவென்றால் ஜடரூபமான மாயையா லாவரணமா

யச் சூழப்பட்டிருக்கின்றது. (11) ஜீவனுடைய அப்பேர்ப்பட்ட ஆவரணத்தைப் புலவர்கள் மலமென்று சொல்லுகின்றார்கள். இச்சீவனானது அவ்வாறு மலத்தினாற் சூழப்பட்டதாகித் தன் கருமத்துக்குத் தக்க பயனை யனுபவிக்க லாகின்றது. (12) போகத்திற்குக் காரணம் கருமமே. மலம் தொலைந்தால்தான் போகம் தொலையும். புண்ணிய பாப ரூபமான கருமத்திற்குச் (நல்வினை தீவினைகளுக்கு) சுக துக்கங்கள் பயனாகின்றன.(13) அச்சுக துக்கங்களினனுபவம் போகமே. போகத்திற்குச் சாதனம் சரீரம்; உள்ளிந்திரியம் புறவிந்திரியங்களின் மூலமாய்ப் பசுவானது போகங்களை யனுபவிப்பதாய்ச் சொல்லப்படுகின்றது. (14) பசுவுக்கு மற்றதினா லாவதொன்று மில்லை ; இதனாலும்மற்றதற் கொன்று மாவதில்லை. இப்பசுவுக்குப் பெண்டீர் பிள்ளைகளோடும் மற்றவர்களோடும் நேரும் சேர்க்கை யெல்லாம் நடுமார்க்கத்தில் நேர்ந்ததேயாம். (15) மேகத் திறட்கள் சஞ்சரிக்கும்போ தாகாயத்தின் கண்ணுள்ள சந்திர பிம்பம் மூடி மூடித் திறக்கப்படுவதுபோல் அப்பசுவெறுஞ் சரீரத்தினால்மட்டில் மூடப்பட்டதாயும், பிரிக்கப்பட்டதாயும் தோற்றுகின்றது. (16) இப்பசுவுக்குச் சென்ற சரீரங்களு மனேகம், வரப்போகின்றவைகளு மனேகம். மேலும் ஜனங்கள் கிழிந்த வஸ்திரங்களை யெரிந்து போட்டுப் புதியவைகளைத் தரித்துக் கொள்வதுபோல் (17) ஜீவனானது உள்ளசரீரங்களை விட்டு மறுபடி மறுபடி புதிய சரீரத்தை யடைந்துகொண்டே மோக்ஷம்பெறும் மட்டில், மச்சங்கள் அக்கரைக் கிக்கரை போய் வருவதுபோற் சமுசாரத்தில் திரிந்து வருகின்றது. (18) மேலும் ஜீவனாகிய விப்பசுவானது பதியாகி வீசனுடைய லீலாவினோதார்த்தமாய்த் தன் கரும வசத்தினால் மாயையாகிய பாசங்களாற் கட்டுப்பட்டதாகிச் சொர்க்கம், பாதாளம், பூலோகம் இவைகளிற் கிடந்து சுக துக்கங்களை யனுபவிக்கலாகின்ற தென்பது சாஸ்திரத்தின் நிர்ணயம். ($19\frac{1}{2}$) பிரம்மன் முதலாய் எறும்பு வரையிலுள்ளவை 'யெல்லாம் பசுக்களெனப்படும். (20) ஓ, முனிவர்களே! இவ்வெல்லாப் பசுக்களுக்குந் திருஷ்டாந்தமா யிது கூறப்பட்டதென, முனிவர்கள் 'ஓ, மகாபுத்திசாலியான சூதமுனிவரே! எதைப் பிரகிருதி யென்று சொன்னீரோ, அதனை யிப்போது மாயையென்றும் கூறுகின்றீர். ஆகையா லதின் சொரூபத்தையும் காரியத்தையு மெங்களுக் கெடுத்துக் கூறவேண்டு' மென, ($21\frac{1}{2}$) சூதர் கூறுகின்றார். ஓ, முனிவர்களே! யாதொன்றானது ஸ்ரீ மகேசுவரனை யண்டி யிருக்கலுற்ற பிரகிருதி யென்று சொல்லப்படுவதோ, (22) அது சகல பசுக்களுக்கும் மாயை யென்று சொல்லப்படும். மேலு மது அவியக்தம், பிரகிருதி, மாயை, பிரதானம் இப்பெயர்களாற் கூறப்படுகின்றது. (23) அது சகலப் பிரபஞ்சங்களுக்கும் 'பரிணாமி யுபாதானகாரணம்' என்றும் சொல்லப்படும். பிரளயகாலத்தில் வியக்தமின்றி ஸூக்ஷ்மரூபமா யிருக்கும் அப்பிரகிருதியானது சிருஷ்டி காலம் தொடங்கி

வியக்த (பிரகாச) ரூபமானப் பிரபஞ்சங்களா யாகின்றன. (24) சுகம், துக்கம், மோகம் இவைகளின் சொரூபமான குணமானது ஸத்துவம், இரஜசு, தமசு என மூவகைப்படும். அக்குணங்கள் பிரகிருதியினின் றுண்டானவைகளே. (25) ஓ, முனிவர்களே!, முற்கூறிய பிரகிருதியே ஐந்து தன்மாத்திரைகள், ஐந்து பூதங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கருமேந்திரியங்கள், மனசு புத்தி அஹங்காரம் சித்தமென்னு மிந்நான்கு இவைகளா யாகின்றன. அவியக்தமான திவ்வாறு விகார (மாறுருவம்) ங்களுட னுங்களுக்குச் சுருக்கமாய்க் கூறப்படலாயிற்று. (26-7) அது காரணவஸ்தையி லிருக்கும்போ தவியக்தமென்றும், சரீரம், குடம் முதலிய காரியாவத்தையிலிருக்கும்போது வியக்தமென்றும், சொல்லப்படும். (28) என்றாலு மிவ்வாறு வியக்தமாகிய சரீரம் முதலியவைக ளவியக்தத்தைக் காட்டிலும் வேறல்ல. ஆகையா லவியக்த மொன்றுதான் பரிணாமி யுபாதானகாரண மாகின்றது. மேலு மிந்திரியங்கள், (29) சரீரம், அனுபவத்துக் குரிய பதார்த்தங்கள் இவைகளு மதுவேயின்றி வேறில்லை. (29½) ஜீவனானது இப்படிப்பட்டவைகளால் மூடப்பட் டிருக்கையில் புலவர்கள் மாயையால் மோகிக்கப்பட்டவர்களாகி யிச்சட வர்க்கங்களைத்தானே 'நான் பிரமன், நான் பிராம்மணன், நா னொருகண்ணில்லாதவன், நான் செவிடன், நான் கவிராயன், நான் கறுத்தவன், நான் சிவந்தவன், நான் மெல்லியவன், நான் ஊமைய' னென்று பிரம்மன் முதலிய பசுக்களாய் விவகரிக்கின்றார்கள். (30-1½) ஆனால் ஜீவனோவென்றா லிவைகளைக் காட்டிலும் வேறாகி யிவைகளைத் தன் லீலையால் சரீரம் நம்முடையதே யின்றி நாம் சரீரம் அல்லவென்று பார்த்துவருகின்றதே யின்றி யிந்த ஜடங்க ளெல்லாம் ஜீவனைப் பார்ப்பதில்லை; (33) ஆனால் ஜீவனையு மச்சடங்களையும் பதியாகிய ஸ்ரீதேவேசன் பார்த்தருளுகின்றார். ஸ்ரீ ஜகதீச னெங்கும் பரிபூரணராய் விளங்கிடினு (34) மிவ்விரண்டுமவரைப் பார்ப்பதில்லை. சருவலோக நியாமகரும் பரஞ்சோதிப் பொருளுமான வப்படிப்பட்ட ஸ்ரீ தேவேசனை ஜீவ னெப்போது ஞானக்கண்ணாற் பார்க்கின்றதோ அப்போதே யது சகல புண்ணிய பாவங்களையும் உதறிப்போட் டவருடன் ஐக்கியம் அடையலாகின்றது. (35)

எண்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## உபதேசகாண்டம் அகூ—வது அத்தியாயத்தி னர்த்தம்.

ஓ, முனிவர்களே! ஜீவனென்பதே சுயாதீனமற்ற பசுவெனப்படும். அச்சீவனே சரீரத்துக்குள் ளிருந்துகொண்டு ஸ்ரீசிவபிரானாலாளப்பட்டு வருகின்றது. (1) வேத மறிந்தோ ரதற் கைந்தவத்தைகளுண்டென்று சொல்லுகிறார்கள். அச்சீவன்களோ அனந்தங்கள்

அவைசமுசாரத்தின் வசத்திலிருந்து வருகின்றன. (2) அவைகளிற் சில ஜீவன்கள் கேவலமென்றும், சிலவை ஸகளமென்றும், சிலவை சுத்தமென்றும் சொல்லப்படும். அவைகளி லெந்தச்சீவனை, ஸ்ரீ பரமேசுவரன் கிருபாவசத்தினால் கைதூக்கிவிட விருப்ப மருளுகின்றாரோ (3) அவன் நல்ல கிருத்தியங்களையே செய்வான்; அவனிடத்து மாயையு மணுகுவதில்லை. அதனால்லவன் சைவநூற்களிற் கூறிய நெறிகள்தனில் நிலைகொண்டவனாகி (4) யெப்போது மச்சிவபிரானிடத்து நிஷ்டையுள்ளவனும், அவரிடத்தே பற்றுதலுடையவனும், அவ்விடத்தே ஆழ்ந்தலுற்ற மனதை கொண்டவனு மாகின்றான். மேலும் அவனுக் கெப்போதெப்போது ஸ்ரீ சிவபிரானிடமிருந்து மனம் வேறுபடுகின்றதோ, அப்போதெல்லா (5) மந்நிட்டை யுடையோன் சிவாலய தரிசனத்திற்குப் போய்ச் சிவ கைங்கரியம் முதலியவைகளைச் செய்து (6) சிவலிங்கத்தை விஸ்தாரமாய்ப் பூஜை பண்ணிப் பிறகு மனவசத்துடன் சிவனடியார்களை மிகுதியாய்த் திருப்தி செய்வித்துக்கொண்டு (7) மெப்போதும் விபூதி ருத்திராக்ஷங்களால் தேகத்தை யலங்கரித்துக் கொண்டும், ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை ஜபிக்க முயன்றவனும், சகலப் பிராணிகளுக்கு மபயமளிப்பவனுயு மிருப்பான். (8) எந்நிட்டையுடை யோனிவ்வாறு நடக்கின்றானோ அவனே 'ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறது. இப்படிப்பட்டவனே ஞானி; இவனே வைராக்கிய முடையோன்; இவனே புத்திமான்; இவனே உலகங்களால் பூஜிக்கலுற்றவன்; (9) மூவுலகங்களிலு மிவனுக்கு நிகரொருவருமில்லை. இவனைப் பூஜித்தமாத்திரத்தில் ஸ்ரீ பரமேசுவரனே பூஜிக்கப்பட்டவராகின்றார். (10) இவனையவமதித்தமாத்திரத்தில் ஸ்ரீ சிவபிரானே அவமதிக்கப்பட்டவராகின்றாரென்பதிற் சந்தேகமேயில்லை இவனது நுனிநாவினிலிருந்துங்கொண்டு ஸ்ரீ சிவபிரான் தாமே நேரில் புஜிக்கலாகின்றார். (11) இவன் கண்பார்வை யிலக்கப்பட்டவரெல்லாம் தங்கள் பாவம் தொலையப்பெற்றவர்களே. ஆகையால் கேளீர், முனீசுவரர்களே! ஞானத்தினால்தான் முக்தியுண்டாகுமென்பது சத்தியம் சத்தியமே. (12) ஞானநிஷ்டனுக் கிம் மூவுலகினிலும் அசாத்தியமான தொன்றுமில்லை யென, முனிவர்கள் 'ஓ, புலவரான சூதமுனிவரே! பசுவைப்பற்றியும் பாசத்தைப்பற்றியும் கேட்டாயிற்று இப்போது யாதொன்றையறிந்த மாத்திரத்தில் பார்தனில மானிடர் மறுபிறப்படையார்களோ அப்படிப்பட்ட பதியைப் பற்றி யெங்களுக்கு 'உரைத்திடவேண்டு' (13½) மென, சூதர் கூறுகின்றார்:—'ஓ! கோ! முனிவர்களே! யாதொரு மகாதேவரின் மகிமையைக் கேட்டமாத்திரத்தில் மானிடர் கிருதார்த்தமடைகின்றாரோ அவரைப்பற்றி யுங்களுக் குரைக்கின்றேன். (14½) கேளீர், முனிச்சிரேஷ்டர்களே! அளவற்ற மகிமைகளுக் காதாரரும், கலியாணகுணக்கடலுமான விசுவங்களை யதிகரித்த ஸ்ரீசிவபிரா

னென்றொருவரிருக்கின்றார். (15½) அவ ராதியில் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துக் காப்பாற்றிப் பிறகு தமக்குள்ளே அடக்கஞ் செய்து கொள்ளுகின்றார். (16) அவரனேகங்களான கண்கள், முகங்கள், கைகள், கால்கள் இவைகளை யுடையவர். (17) மேலுமவர் சருவஜ்ஞரும், சருவ கர்த்தரும், ஸச்சிதாநந்த விக்கிரகரும், பரிபூரணரும், பரஞ்சோதியும், பசுபாசங்களைத் தீர்ப்பவரும், (18) அனாதியாகிய மாயையால் பற்றப்படாதவரும், பிரபுவும், எங்கும் வியாபிக்கலுற்றவரும், நித்தியரு மானவர். மேலு மப்பிரபு வுபாதிபேதத்தினால் ஸகளமென்றும், நிஷ்கள மென்றும், நிஷ்களங்க மென்றும், ஸக்கிரியமென்றும் பற்பல பேதமாய்ச் சொல்லப்படுகின்றார். (19½) பின்னும் சிவம், அமூர்த்தி, மூர்த்தி, கர்த்தா, கர்மா (20) ஆகிய விப் பஞ்சஸாதாக்கிய மூர்த்திகளு மப்பரமேசுவரனுடைய அமிசமூர்த்திகளே. தவிரவு மவர் ஸத்தியோஜாதம், வாமதேவம், தத்புருஷம், அகோரம், ஈசானம் ஆகிய பஞ்சப்பிரம்ம மூர்த்தியும், ஸர்வஜ்ஞசக்தி, நித்தியதிருப்தசக்தி, அநாதிபோதசக்தி, சருவச்சுதந்திர சக்தி, அலுப்தசக்தி, அநந்தசக்தி ஆகிய ஷடங்கசக்தி மூர்த்தியும், ஸதாசிவ மூர்த்தியும், மகாஸதாசிவமூர்த்தியுமாய் வேறுபட்டிருக்கின்றார். இன்னு மவருக் கிருபத்தைந்து மூர்த்திகளுண்டென்றும் சொல்லப்படுகின்றது.(22) அம்மகேசுவர ரெப்போதும் பஞ்சகிருத்தியங்களைச் செய்தருளுகின்றார். அதாவது சிருஷ்டி, ஸ்திதி, (23) சமுகாரம், திரோபாவம், அனுக்கிரகம் ஆகிய இவ்வைந்தும் ஸ்ரீ பரமேசுவரனது பஞ்சகிருத்தியங்களெனப்படும். (24) அவ ரொருவரே பரப்பிரம்ம மென்றும், மற்றவ ரெல்லாம் பசுக்களென்றும் சொல்லப்படுகின்றது. சருவஜ்ஞத்துவம் முதலிய சக்திகளையுடைய சம்புவானவர் சரீரம், இந்திரியங்கள் முதலியபாசங்களா லவ்வெல்லாப்பசுக்களையும் கட்டி யெப்போதும் திருவிளையாட் டருளுகின்றார். (25½) பிரம்மன் முதலிய பசுக்க ளெல்லாம் ஸ்ரீபிரபுவினுடைய அவ்வாறு திருவிளையாடலுக்குக் கருவிகளாகின்றார்கள். (26) அவர் சருவஜ்ஞராகியதால் சிருஷ்டி ஸ்திதி சமுகாரங்களைச் செய்தருளுவோரும் நித்திய திருப்தராகியதால் சகல வனுக்கிரகங்களையு மருள்வோரும், அநாதிபோதராகியதால் சகலப் பிராணிகளையும் மோகிப்பிப்பவரும், சருவச்சுதந்தர ருள்ளவராகியதால் பக்குவர் (ஞானத்தில் முதிர்ந்தவர்) களுக்கு மோக்ஷமளிப்பவரும், (28) அலுப்தசக்தி யுடையவராகியதா லென்றும் பஞ்சகிருத்தியங்களைச் செய்வோரும், அநந்த சக்தியை யுடையவராகியதால் சகலப் பிரபஞ்சங்களுக்கும் காரணருமா யிருக்கின்றார். (29) ஆகையா லிவ்விதமாய் ஆறங்க சக்திகளை யுடையவரும், பஞ்சப்பிரம்ம சொரூபியுமான ஸ்ரீஸதாசிவன் பசு பாசங்களினின்று வேறான பசுபதியென்றே யெல்லோர்களாலு மறியத்தக்கவர். (30) இப்படிப்பட்ட பரமசிவனை யிவ்வாறு யறிவதினால் மட்டில் எலலோர்களுக்கும் மோக்ஷ ஸாம்பிராஜிய முண்டாகுமேயின்றி

வேறு விதத்தாலில்லை. இச்சிவபிரானை யறிவதினால் துக்கங்களைக் கடந்து க்ஷேமத்தை யடைகின்றான். (31) பிராணிகள் சமுசாரத்தினின்று மோக்ஷ மடைவதற்காக ஸ்ரீசிவபிரானால் சரியை, கிரியை, யோகம், ஞான மென்று நான்கு பாதங்கள் கற்பிக்கப்பட் டிருக்கின்றன. (32) மானிடர் சரியை யென்னும் பாதத்தை யனுஷ்டிப்பதினால் சிவபிரானுடைய சாலோக்கிய பதவியை யடைந்து பிறகு நாளடைவில் ஸாயுஜியத்தை யடைகின்றான். ஆகையால் சரியை யென்பதும் முக்தியைக் கொடுக்கவுற்றதுதான். (33) கிரியாபாதத்தை யனுஷ்டிப்பதினால் சிவபிரானுடைய ஸாமீப்பியத்தை யடைந்து பிறகு ஞானத்தினாலேயே மோக்ஷமடைகின்றான். (34) யோக பாதத்திற் கூறிய முறைப்படி யோகத்தை யனுஷ்டிப்பவன் ஸாரூப்பியத்தை யடைந்து பிறகு ஸாயுஜியத்தை யடைகின்றான். (35) ஞானபாதத்திற் கூறிய நெறியின்படி ஞானத்தை யாசரிப்பவனே யென்றா லதன் மகிமையால் கொஞ்ச மேனும் தாமசமின்றி ஸாயுஜிய மடைகின்றான். (36) ஆகையால் மோக்ஷம் பெறுவது ஞானத்தினால்தான். மூவுலகினர்களுக்கும் ஞானம் வெகுதுர்லபம். விஞ்ஞான (சிற்பங்கள் சாத்திரங்கள் இவைகளின் ஞானம்) த்தினா லொருவருக்கும் சமுசாரத்தினின்று மோக்ஷம் கிடைப்பதில்லை. (37) உலகினில் ஞான மடைந்தவன் சமுசாரத்தினின்று ஜீவதசையிலேயே மோக்ஷம் பெற்றவ னென்பதிற் சந்தேகமில்லை. ஞானமுள்ளவ னெதை யெதை விரும்புகின்றானோ அதனை யெல்லா மடைவா னென்பதிற் சந்தேகமில்லை. (38) ஆகையால் சகல லோகங்களிலும் ஞானிகளுக்கொன்றுந் துர்லபமில்லை. யாதாமொருவன் ஷடங்கங்கள், பதம், கிரமம் இவைகளோடுகூட நான்கு வேதங்களையும், பிராணம், தர்க்கம், மீமாம்சை, தருமசாத்திரம் முதலிய சாத்திரங்களையும் கற்றுச் சகல வாகமப் பொருட்களின் தத்துவங்களையும், மதாந்தரங்களின் தத்துவங்களையு மறிந்தவனாகிப் (40) பசு, பாசம், பதி இவைகளை யதந் னிலக்ஷணங்களாற் குறிக்கப்பட்டபடி யறிந் தப்படிப்பட்ட ஞானத்தினால் 'ஞாதா (அறிகிறவன்) நானே யென்றும், ஞேயர் (அறிபத்தக்கவர்) ஸ்ரீ ஜகதீசனே யென்றும், (41) ஞானமோவென்றால் ஸ்ரீ சிவபிரானைவிட் டகலாமல் தனக்குள் ளிருக்கு மறிவே யென்று' மிம்மூன்றையும் நன்கறிந்து பொறி யடக்கமுற்றவனாகி யதே நிட்டையி லிருக்கின்றானோ (42) அப்படிப்பட்டவன் சமுசாரத்தினின்று விடுபட்டவனும், ஸ்ரீ சிவபிரானுக்குச் சம்மதியானவனும் ஜீவ தசையிலேயே மோக்ஷம் பெற்றவனு மாகின்றான். ஸ்ரீசிவபிரான் பரிபூரணராகிய சுபாவத்தைக் கொண்டவராகையால் பதியும், (43) பஞ்ச ஸாதாக்கியத் திருவுருவங்களைக் கொண்டவராகையால் பஞ்சப்பிரம்மச் சொரூபத்தையும், ஷடங்கசக்திகளையும் கொண்டவரும், ஸதாசிவச் சொரூபியுமானதால் ஸ்ரீ மகாஸதாசிவனும், (44) பரம், அபரமென்னும் பிரிவினையைக் கொண்டிருப்பதா லிருபத்தைந்து

திருமூர்த்திகளைக் கொண்டவருமாகின்றார். அநாதியும், எல்லோர்களு க்கு மனுக்கிரகங்களை யளிக்கவுற்றவருமான வத்தேவாதிதேவர்தான் (45) பிராணிகளுக்குச் சகல புருடார்த்தங்களும் சித்திப்பதற்காக என்றும் பஞ்ச கிருத்தியங்களைச் செய்தருளுகின்றார். இவ்விதமாய் ஸ்ரீபிரபுவானவ ரெல்லாவற்றையும் சக்தியினால் செய்தருளுகின்றார். (46) கேளீர், முனிவர்களே! இவ்வாறு யெவ னுண்மையி லறிகின்றானோ அவனே ஞானி யெனப்படுவோனென, அப்போது சௌனகாதி முனிவரெல்லாம் சிவச்சொரூப ஞானத்தை யிவ்விதமாய்ச் சூதமுனிவரால் கேட்டதன்பேரில் மனதிற் சந்தேகம்கொண்டவர்களாகிப் பரிசுத்தம் பொருந்திய சூதமுனிவரை வினவலாகின்றார்கள். (47)

எண்பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

## உபதேசகாண்டம் கூ0—வது அத்தியாயத்தி னர்த்தம்.

'ஓ, சூதமுனிவரோ! ஸ்ரீபரப்பிரும்மத்தி னிருபத்தைந்து மூர்த்திகளும் கைலாயம், சிவலோகம் முதலிய விடங்களில் காரியார்த்தமா யநாதியாயுள்ளன வென்று கேள்விப்பட்டிருப்பதா யெங்களுக்கும்மா லிப்பேர துரைக்கப்பட்டதன்றோ. ($1\frac{1}{2}$) உம்மைக்காட்டிலும் தத்துவ மறிந்தவர் மற்றொருவரு மில்லாதபடியா லதிலெங்களுக்கு நேரிடும் சந்தேகத்தைத் தீர்க்கவேண்டு' (2) மென, சூதர் கூறியதாவது:—கேளீர், முனிச்சிரேஷ்டர்களே! இருபத்தைந்து திருமூர்த்திகளுக்குள்ள வநாதித் தன்மையைக் கூடியமட்டில் தெளிவாய் நான் கூறலாவதை நீங்க ளறிந்துகொள்ளுங்கள். (3) என்றும் திருப்தியுள்ளவரான ஸ்ரீமகாதேவருடைய விருபத்தைந்து மூர்த்திகளு மநாதியும் நித்தியமுமாயே உள்ளன. (4) அம்மூர்த்திகளெல்லாம் ஸ்ரீபிரபுவினால் தமது சுத்த தத்துவத்தின் கண்ணே காரியார்த்தமாய்த் தரிக்கப்பட்டிருக்கின்றன. ஓ, முனிவர்களே! அது எதற்காக வென்றால் நான் சொல்வதைக் கேளுங்கள். (5) இலிங்கோத்பவமூர்த்தியானது பிராணிகளி னுற்பத்திக்காக வேற்பட்டிருப்பதாய்ச் சொல்லப்படுகிறது. ஸ்ரீ மகேசுவரனால் பூரண அமிசத்துடனு மெங்ஙன மம்மூர்த்தியானது தரிக்கப்பட்டதோ (6) அங்ஙனமே சகலப் பிராணிகளு மாகின்றார்கள். இரண்டாவதான நிர்விகாரமாகிய ஸுகாஸன மூர்த்தியினா (7) லவ்வெல்லாப் பிராணிகளும் வாலிபத்தில் விகார மற்றிருக்கின்றார்கள். பிரபுவானவர் உமையம்மனாகிய தமது சக்தியை மணம்புரிய விச்சித்தபடியா (8) லவ்வெல்லாப் பிராணிகளும் மணம்புரிய விச்சை கொள்ளுகின்றார்கள். மூன்றாவதாகிய உமாஸக னென்னும் மூர்த்தியால் (9) பிராணிகள் கலியாணஞ் செய்துகொள்ளுகின்றார்கள். திருமணம் புரிந்துகொண்ட கலியாணசுந்தர மூர்த்தியா லவர்கள் நாள்தோறும் பெண்டிர்களோடு புணருகின்றார்கள். பிராணிகளுக்கு மோக மளிக்க

லுற்ற அர்த்தநாரீசுவர மூர்த்தியா லவர்கள் மோகத்தோடு கூடியவர்க ளும், சாஸ்திரங்களைக் கற்பதில் பிரயாசைப்படுவோர்களு மாகின்றார் கள். (10-1) ஸ்வாமியானவர் ஸோமாஸ்கந்த ரென்னும் மூர்த்தியைக் கொண்டிருக்கின்றபடியால்தான் பிராணிகள் பிள்ளைகளைப் பெருகி ன்றார்களேயின்றி வேறில்லை. (12) ஸ்ரீ பரமேசுவரன் பிரபஞ்சங்களு க்குக் காரணபூதரான விஷ்ணுவுக்குச் சக்கிரத்தை யருள்செய்த சக்கி ரப்பிரதான மூர்த்தியைக் கொண்டபடியால்தான் பிராணிகள் போக ங்களைப் பெறுகின்றார்களேயின்றி வேறில்லை. (13) ஸ்ரீஜகதீசன் திரு மூர்த்தி யென்னும் மூர்த்தியைக்கொண்டபடியா லான்மாக்கள் பிரய த்தனமின்றி ஜாக்கிரத், சொப்னம், ஸுஷுப்தி என்னும் மூன்றவஸ் தைகளிலும் மூன்றுருவங்களை யடையலாகின்றார்கள். (14) ஸ்ரீபரமசி வன் அர்த்தாங்க விஷ்ணுவென்னும் திருவுருவத்தைக்கொண்டதினா லான்மாக்களுடைய புண்ணிய பாவங்களைச் சமப்படுத்தியவர்களுக்கு தமது சக்தியை யீந்தருளுகின்றார். (15) கருணைக்கடலும், பராபர ப்பிரவுமான ஸ்ரீ பரமேசுவரனடியார்களுக் குபதேச மருள் வதற்காக தக்ஷிணாமூர்த்தியென்னும் திருவுருவத்தைக் கொண்டபடியால் (16) பிறப்பினில் பயமுள்ளவர்களான வான்மாக்க ளவரொருவரையே பிற ப்பற்ற பராபரவஸ்து வென்றறிந்து மோக்ஷம் பெறுவதற்காக வத்தே வாதி தேவருடைய தக்ஷிணாமூர்த்தித் திருவுருவத்தைச் சரணமடை கின்றார்கள். (17) ஆகையால் தக்ஷிணாமூர்த்தியைச் சேவிப்பதினால் சகலப் பிராணிகளுக்கும் முக்தியே. மற்றத்தேவர்களை யண்டுவதினால் மானிடர்களுககுச் சமுசாரத்தினின்று மோக்ஷமே கிடைக்காது (18) ஸ்ரீ சம்புவினுடைய மகா மங்களகரம் பொருந்திய பிக்ஷாடன மூர்த் தியானது ஞானத்தில் முதிர்ந்தவர்களுடைய சுக துக்கம் முதலிய போகங்களை யொடுக்கலாகின்றது. (19) ஆகையால் தான் அவரைப்பெ வர் தமது இருதயகுகையின் மீதுள்ள பர மாகாயத்தில், ஸச்சிதாந ந்தச் சொரூபியும் வேறு பொருளற்ற வருமாய் நிலைநிறுத்தியறிகின் றானே (20) அவனப்படிப்பட்ட மகா புலவரான பரப்பிரம்மத்தோ டுகூட நித்திய திருப்தியை யடையலாகின்றான். ஸ்ரீமகாதேவரால் கொண்டருளப்பட்ட கங்காள மூர்த்தி (21) யால் ஜகதீசன் பக்குவா த்துமர் (ஞானத்தில் முதிர்ந்தவான்மாக்) களுக்கு வைராக்கியத்தை யீ ந்தருளுகின்றார். ஆகையாலவர்கள் சகல சிற்றின்பங்களினின்று மொ ழிவடைகின்றார்கள். (22) அவர் நெற்றிக் கண்ணெருப்பினாற் காம னைச் சமுகரிக்கலான மூர்த்தியினால் காமனாலுண்டாகும் துன்பங்க ளைத் தொலைத்துப் பக்குவர்களுக்குச் சுகத்தையருளுகின்றார். (23) அப் [illegible]ப்பட்ட மூர்த்திக்குக் காமசமுகார மூர்த்தியென்று பெயர். கா லனு[illegible] காலரான ஸ்ரீ முக்கண்பிரான் காலனைச் சமுகரிக்கலான மூர்த்தியால் (24) பக்குவர்களுக்கு காலனிடத்திருக்கும் பயத்தைத் தயவினால் தொலைத்துவிடுகின்றார். மாமுனிவ ரப்படிப்பட்ட மூர்த்

திரைச் காலசமுகார மூர்த்தியென்று சொல்லுகின்றார்கள். (25) ஸ்ரீ ஜகத் குருவானவர் ஜலந்தராசுரனைக் கொல்வதற்காகக் கொள்ளலான ஜலந்தர சமுகாரமூர்த்தியினால் பரிசுத்தம் பொருந்திய சித்தத்தைக் கொண்ட யோகீசுவரர்களின் கோபமானது தொலைக்கப்படுகின்றது. (26) ஸ்ரீ சம்புவானவர் திரிபுரங்களைச் சமுகரிக்கலான திரிபுர சமுகார மூர்த்தியினால் பரிசுத்தம்பொருந்திய வான்மாக்களின் சத்துவம், இராஜசு, தமசு, ஆகிய மூக்குணங்களையும் விலக்கிவிடுகின்றார். (27) நரசிங்கஸ்வாமியைக் கண்டிக்கலான மேன்மைபொருந்திய சரபமூர்த்தியால் பக்குவாத்துமர்களின் கருமம், மாயையென்னு மிருமலங்களும் நாசம் செய்யப்படுகின்றன. (28) காளகூடவிஷத்தை யுண்ணலான மகாசிரேஷ்டமாகிய நீலகண்டமூர்த்தியா லுண்டாயிருக்கலுற்ற கொடியதான மற்றோராணவமென்னும் மலமானது தொலைக்கப்படுகின்றது. (29) நான்கு கொம்புகளையு மிரண்டு கழுத்துகளையு மேழுகைகளையும் கொண்ட திரிபாதமூர்த்தியால் பக்குவாத்துமர்களுக்குச் சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்றுபாதங்களு மருளப்படுகின்றன. (30) அளவற்ற மகிமைகளுக் கிருப்பிடமான ஏகபாத மூர்த்தியினால் பக்குவாத்துமர்களுக்கு ஞானமென்னும் பாதத்தை யனுஷ்டிக்கும்படியான வொழுக்க மருளப்படுகின்றது. (31) சகல பந்தங்களினின்றும் விடுபட்டதான பைரவமூர்த்தியால் பக்குவாத்துமர்கள் சருவஸங்கங்களினின்றும் விடுபடலாகின்றார்கள். (32) வெள்ளிமலையி னுகிருதியைக்கொண்டதும், தருமத்தி னுருவம் கொள்ளப்பெற்றதுமான மேன்மைபொருந்திய திருவெருதின்மீ தேற்றலுற்ற விருஷபாரூட மூர்த்தியானது சகல பக்குவர்களுக்கும் பிரஸாதமருளச் சித்தமாயிருக்கின்றது. (33) சந்திரகலையை யுச்சி யிரத்தினமாய்ப்பூண்ட வப்பிரபுவினுடைய சந்திரசேகர மூர்த்தியினால் பிராணிகள் மகா வலிமைபொருந்தியவைகளான ஜன்மம், மிருத்தியு இவ்விரண்டையும் கடக்கலாகின்றார்கள். (34) மெத்த வானந்தத்துடன் திருவிளையாட்டா யொருகாலினால் திருநடனஞ்செய் தருளலுற்ற, பார்வதிதேவி யொருத்தியையே சாக்ஷியாய்கொண்டதும், பரமானந்த பரிதமான ஸ்ரீ நடராஜமூர்த்தி (35) யா லெல்லாப்பக்குவர்களு மானந்தமடைகின்றார்கள். இரஸச்சொரூபியானப் பிரம்மத்தை யறிந்தல்லவோ ஆநந்தமடைகின்றா னென்பது வேதவாக்கியம். கருணைக்கடலான் ஸ்ரீ பார்வதி நாதருடைய கங்காதரமூர்த்தியானது (36) புண்ணியாத்துமர்களைப் பேரானந்தக்கடலில் மிகுதியா யாழ்த்தலாகின்றது * ஆகையால் கேளீர் முனிவர்களே! ஸ்ரீ மகேசுவரனுடைய வப்படிப்பட்ட விருபத்தைந்து திருமூர்த்திகளு (37) மப்பிரபுவினு லந்தந்தக்காலத்திற்குத் தக்கபடி பிராணிகளை யிரக்ஷிப்பதற்காக வாதி

* இருபத்தைந்து திருமூர்த்திகளின் விவரத்தைப்பற்றி யிதேவிதமாய்ச் சில வாகமங்களிற் கூறப்பட்டிருந்தபோதிலும் வாதுலாகமம், சிவரகஸியம் முதலியவைகளில் இதிற்கண்ட அர்த்தநாரீஸ்வர விஷ்ணுமூர்த்தி, திரிமூர்த்தி மூர்த்தி, சரபமூர்த்தி, திரிபாதமூர்த்தி, பைரவமூர்த்தி இவ்வைந்துக்கும் பதிலாய் கஜாரிமூர்த்தி, வீரபத்திரமூர்த்தி, கிராதமூர்த்தி, சண்டேசானுக்கிரகமூர்த்தி, விக்கினேசானுக்கிரகமூர்த்தி இவை காணப்படுகின்றன.

யிலேயே தயவுடன் தரிக்கப்படலாயின வென்பது நிச்சயம். (38) அவா ஸ்திர(நித்திய)ராகையா லவரது இப்படிப்பட்ட மூர்த்திகளும் ஸ்திரமுள்ளவையே யென்பது வேதவாக்கியம். இப்படிப்பட்ட சுதந்திர சக்தியுடைய ஸ்ரீ சிவபிரானிடத்து, அவரோர் காலவரைக்குள்ளடங்கியவரென் றாகிக்கும் தர்க்கமானது (39) முக்கியமா யனுமானத்திற்கு நிலையில்லாதுபற்றி, நிற்கமாட்டாது. இல்லாவிடி லுபநிடதங்களாலவர் சருவ வல்லமையுள்ளவரென்றும், அவ் வுருவமில்லாப் பொருளுக்குப் பரிசுத்தத்தன்மை முதலிய எட்டுதருமங்களு முள்ளனவென்றும் சொல்லப்படுவதற் கிடமேது?. (40½) மேலு மிவ்விருபத்தைந்து திருமூர்த்திகளு மம்மகேசுவரனுலென்றும் நித்தியமா யங்கீகரிக்கப்பட்டிருக்கின்ற (41) படியால் புலவர்க ளப்படிப்பட்ட ஜகதீசனுலாதரிக்கப்பட்ட விம்மூர்த்திகள்மீது மவ்வாறு தர்க்கம் வாதிப்பது கூடாது. ஓ, பிராம்மணோத்தமர்களே! அங்ஙனம் செய்திடி லவன் நாசமடைவான். (42) ஆனு லிவ்விருபத்தைந்து திருமூர்த்திகள்மீதும் பக்திச் சிரத்தை யுள்ளவர்க்கோவென்றல் நித்திய கலியாணங்களும், க்ஷேமங்களும், அளவற்ற பாக்கியங்களுமுண்டாகும். (43) ஓ, முனீசுவரர்களே! இப்போதுங்களுக் கிவ்வுபதேசகாண்டம் சொல்லிமுடித்தாகிவிட்டது. ஆகையால் மகா பாக்கியசாலிகளாகிய நீங்களேழு காண்டங்க ளடங்கிய சிவரகசியகண்டம் முழுதும் கேட்டுவிட்டீர்கள். (44)

தொண்ணூறுவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## உபதேச காண்டம் கூக—வது அத்தியாயத்தி னர்த்தம்.

முனிவர்கள் சொல்லுகின்றார்கள்:—'ஓ, சூதமுனிவரே! தேவரீரெங்களுக் கின்றுமுதலா யாசிரியரும் தந்தையு மாகின்றீர். சகலப்பிராணிகளுக்குமுள்ள தாய் தந்தையர்களும் சரீரத்தை மட்டிற் பெற்றவ ராகின்றார்கள். (1) நீரோ பிரம்மத்தையும் ஞானத்தையு மளித்தவ ராகின்றீர். உம்மால் நாங்கள் கரையேறி விட்டோம். ஆறுவகைத் தந்தைகளில் பிரம்மத்தைத யருளிய தந்தையே பெரியவர். (2) முனென்று லவரால் குறையற்றதான சம்சாரக்கடலானது ஓர் மாட்டின குளப்படியாய்ச் செய்துவிடப்படுகின்றது. நல்ல ஆசிரியர்களுக்குச் சரீரம், பொருள், உயிர் இவைகளை யர்ப்பணம் செய்யவேண்டு (3) மென்றுலகினில் வேத மறிந்த பிராமணச் சிரேஷ்டர்களாற் கூறப்படுகின்றதன்றே! ஆகையால் ஓ, ஜகத்குருவான மகா புத்திசாலியாகிய சூதமுனிவரே! எங்களுக் கும்மால் ஸ்ரீஜகதீசனைப்பற்றி யுரைக்கப்படலாகி யாங்க ளுமதுதவியினுல் கிருதார்த்தர்களாகி விட்டபடியால் நாங்க ளெங்களது தனங்கள், சரீரம், உயிர் இவைகளை யெல்லாமுமக் கர்ப்பணம் செய்து விட்டோம். (4-5) மேலு மாசிரியர்களுக்கு எல்லாப் பொருட்களையும் தத்தஞ்செய்துவிட வேண்டு மென்பது வேதவாக்கியமுமன்றே!' வென்று சொல்லி யவர்க ளவ்வாறுத் தண்டனிட, அவரு மம்மாமுனிவர்களைத் தண்டனிட்டார். (6) பிற்பாடு சூதரவர்களை நோக்கி ஓ, முனிவர்களே! நீங்களே னெங்களை யிங்ஙன

முழக்கலாகின்றீர்கள்? நாமெல்லார்களும் சருவ ஜகனனுதராகிய
ஸ்ரீஸாம்பமூர்த்தியைக் களிப்பிப்போமே! அதல்லவோ வாக்குகளு
க்குப் பயன்!' (7) என, இவ்வாறு சூதர் மொழிந்ததைக் கேட்டதன்
மேல் வில்லோர்களும் சகலதேவர்களாலும் திய்யானிக்கலுற்றவரும்,
உபநிடதங்களால் துதிக்கப் பெற்றவருமான ஸ்ரீஜகதீசனைத் தியானி
க்கலானார்கள். (8) இச்சமயத்தில் கருணாநிதியாகிய ஸ்ரீமகாதேவர்
பார்வதி தேவியோடுகூட கைலாசகிரிக்கு நிகரானதும் மெத்த வெண்மை
பொருந்தியதுமான விடபத்தின்மீதேறிக்கொண்டு ஸ்கந்தவிக்கினேசு
வரர்களோடுகூட விந்திரன்முதலிய விசேஷ தேவகணங்களாலும்
சூழப்பெற்றவராகி யப்போதவர்களது மத்தியி லாவிர்ப்பவித்தனர்.
(9-10) அப்போது தேவர்களெல்லாம் கந்தர்வர், யக்ஷர், உரகர், அர
க்கர் இவர்களோடுகூட ஸ்ரீதேவேச னருளியிருக்கு மிடத்தில் மலர்
மாரி சொரிந்தார்கள். (11) தேவதுந்துபிகள் கடலுக்கு நிகராய் முழ
ங்கலுற்றன. மேலும் தேவர்முதலியவர்க ளாகாயத்தி லிருந்துகொ
ண்டே ஆயிரமாயிரங்களாய் நிஸ்ஸாணம், டிண்டிமம் முதலிய வாத்
தியங்களையும் (12) கோடிகோடிகளாய் திமிலம், கோமுகம் இவ்வா
த்தியங்களையும், சங்கம்சங்கமாய்ச் சங்க வாத்தியங்களையும் பத்தும
ம் அர்ப்புதமென்னும் சங்கியைகளாய்க் கொம்பு வாத்தியங்களையும்
(13) மகாபத்தும சங்கியைகொண்டதாய்க் காஹளிவாத்திய, சின்
னவாத்தியங்களையும், கோடிகோடிகளாய் மிருதங்க தாள படக வாத்
தியங்களையும் முழக்கினார்கள். (14) ஆனு லிப்படிப்பட்ட சத்தங்க
ளையெல்லாம் கணதிவர்களின் கைகளாலடிக்கப்பட்ட கடலைச் சயிக்
கலுற்ற பேரொலியைக் கொண்டதான அதிமுழக்க முள்ள துந்துபி
வாத்தியங்களின் தொனியானது மேற்கொள்ளலாயிற்று. (15) முனி
வர்களெல்லாம் தடிகளை யுயரவெறிந்து பிடித்து நான்கு பக்கங்களி
லும் கூத்தாடினார்கள். ஸாமகானத்தில் தேற்சியுள்ள சில முனிவர்
ஸாமங்களால் கானம்செய்தார்கள். (16) காந்தர்வவேத (சங்கீத)த்தி
ல் கரைகடந்தவர்களாகிய ஹாஹா, ஹூஹூ, சித்திரசேனன், மகா
சித்திரரதன், தும்புரு, நாரதா, இவர்களும், (17) அவரவர் பெண்டி
ர்களோடுகூடிய கின்னரர்கள், சிறந்த கிம்புருடர்கள் இவர்களும் மகா
மேருவைத் தனுசாய்க்கொண்ட ஸ்ரீ மகேசுவரன் திருச்சன்னிதிக்கு
வீணை வாசிப்பதற்காக வந்தார்கள். (18) ஸ்ரீ மகாவிஷ்ணுவும் சந்த
ஸ்ஸ்ருபமான பக்ஷிராஜன் தோள்மீது விளங்கலுற்றவராகித் தமது நா
ன்குமூர்த்திகளாலும் சூழப்பட்டங்கு திருச் சன்னிதிக்குவந் (19)
திடதுபாரிசத்தில் நின்று ஸ்ரீ ருத்திரமந்திரங்களை யொரேசித்த நிலை
யுடன் ஜபம்பண்ணிக்கொண்டே யுலகினிலுள்ள நல்லோர்களை யிர
க்ஷிப்பவரான ஸ்ரீ மகாதேவரைச் சேவைசெய்தார். (20) பத்மினி
யாகிய இலக்குமியு மனேகம் பரிவாரஸ்திரீகளால் சூழப்பட்டவளாகி
த் தனக்களவற்ற பாக்கியமும், நிகரற்ற வடிவமும், அழிவற்ற மாங்க
ளியமு முண்டாகவேண்டுமென்று பசுபதியான ஸ்ரீ பரமசிவனையு மவ
ரதிடது மடிமீது விளங்கலுற்ற கிரிராஜ குமாரியையும் வாக்கினால்
வேண்டிக்கொண்டாள். (21-22) விஷ்ணுவின் குறிகளான சங்குசக்கி
ரம் கௌஸ்துபம் முதலியவைகளால் விளங்கலுற்ற விஷ்ணுகணங்க

ளு மவரதுபாரிசத்தில் நின்றுகொண்டு ஸாம்பமூர்த்தியைச் சேவித்தார்கள். (23) மகிமைபொருந்திய பிரம்மதேவனும் ஸரஸ்வதியோடுகூட வன்னத்தின்மீதேறி யங்குவந்து பகவானாகிய பார்வதிநாதனை மெத்த மனவுருக்கத்துடன்(24) தியானம் பண்ணிக்கொண்டும், ஸ்ரீருத்திரஸூக்த மந்திரங்களை யொரிரேகித்த நிலையுடன் பாராயணம் பண்ணிக்கொண்டும் தமக்கவரது திருவடிக் கமலங்களின்மீ தசைவற்ற பக்தி யுண்டாகவேண்டுமென்றே தேவேசனைப் பிரார்த்தித்தார்.(25) பிரம்மனுடைய கணங்களும், ஒன்பது பிரஜாபதிகளும் ஸநகாதி யோகீசுவரர்களோடுகூட ஜகதீசனை யங்ஙனமே பிரார்த்தித்துக்கொண்டார்கள். (26) மகா மகிமைபொருந்தியவர்களான பிரம்மருடிகள், பரிசுத்தர்களான தேவருடிகள், கபிலர் முதலிய யோகீசுவரர்கள் இவர்களெல்லாம் ஸ்ரீ மகாதேவரை யானந்தமாய்த் துதிசெய்தார்கள். (27) பிற்பாடங் கச்சபைதனில், மெத்தநேர்த்தியும், பற்பல விரத்திஙங்களால் விளங்கப்பெற்றதும், பொன்மலைக்கு நிகரும், ஆயிரத்தெட்டுமாற்றுத் தங்கத்தினு லமைக்கப்பட்டதும், மெத்த வற்புதமும், ஸ்ரீ ஜகதீசனுக்கே தகுதியுமான வோர் திவ்விய சிம்மாசனமுண்டாயிற்று. (28½) அப்போது ஸ்ரீ மகாதேவன் பார்வதி, வடிவேலன், விக்கினேசுவரன் இவர்களோடுகூட வதனை யங்கீகரித்தனர். (29) விசித்திரங்களும், மெத்தத் தகுதியுள்ளவைகளுமான கோடிகோடிகளாகிய சாமரங்களும் விசிரிகளு முருத்திரகன்னிகளால் மிக வாதரவுடன் விசிரப்பட்டன. (30) கணுதிபர்கள் கறுப்பகிற்கட்டைத் தூள்களால் தூபம்போட் டத்தூபங்களால் ஸ்ரீதேவேசன் விளங்கியிருக்கு மந்தவிடத்தை வெகுநேர்த்தியாய் நிரம்பச்செய்தார்கள். (31) இப்படிப்பட்டதான ஸ்ரீ சம்புவி னுஸ்தானத்தையும், உத்தமமான திவ்விய ஸிம்மாசனத்தில் தேவியோடுகூட வீற்றருளியிருக்கும் ஸ்ரீ மகேசுவரனையும் சௌனகாதிமுனிவர்கள் பார்த்தவுட னளவிடத்தகாத பரமானந்த பாரத்தினு லாக்கிரமிக்கப்பெற்ற மனதைக் கொண்டவர்களாகித் தம்மையுமறியவில்லை; பிறர்களையுமறியவில்லை; இம்மை மறுமைகளையுமறியவில்லை. (33) சிலர் கூத்தாடினுர்கள். சிலர் மிகவும் பரவசம் கொண்டழுதார்கள். சிலர் பூமிதனிற் புறண்டார்கள். சிலர் சிரித்தார்கள். அப்பிராமண சிரேஷ்டர்களில் (34) சிலருள்ளம் பரவசம்கொண்டதினுல் பாட்டுப்பாடிக் கத்தினுர்கள். சிலர் கண்களிலானந்தக்கண்ணீர் நிரம்பிப் பெருகப்பெற்றுர்கள். (35) சிலர் பரவசர்களாகி உள்மூச்சு வெளிமூச்சுகளை மிகுதியாய்க் கொண்டார்கள். சிலர் களிப்பினுல் மெய்சிலிர்க்கப்பெற்றவர்களாகி 'ஜயாவிஜயீபவா'வென்று சத்தமிட்டார்கள். (36) இவ்விதமாய் ஸ்ரீ தேவேசனது திருச்சபையின் மத்திதனிற் பரவசம் பெறலான வம்மாமுனிவர்களைக் கண்டு வஸிஷ்டர்முதலிய பிரம்மருடிகள், நாரதர் முதலிய தேவருடிகள், (37)

வைசிஷ்டர், காசியபர், கண்ணுவர், விசுவாமித்திரர், பாராசரர், ஹரிதர், அத்திரி, பிருகு, குத்ஸர், திரஸதஸியு அவரது புத்திரர்,(38) பௌருகுத்ஸர், என்னும் தவத்தையே முக்கியமாய்க் கொண்டவரும், மகா தவசியுமான பௌருசிஷ்டி ஸத்தியவாக்குடைய இராதீதரர், நாகர், மௌத்கலியர், (39) வாஜசிரவசு, யோகியாகிய உசன், அவரது புத்திரரான நாசிகேதர், ஆட்நாரர், சக்ஷீவான், மகா தவசியான ஔசிஜர்,(40) வீதஹவியர், சத்தியசந்தரும் மகா தவசியுமாகிய சிராயஸர்,(41) அங்கிரசு, சங்கர், லிகிதர், தக்ஷர், கிரது, முனிச்சிரேஷ்டரான தேவலர், சுகர், கண்ணுவர், பராசரர், (42) மரீசி, காசியபர், உரோமசர், தால்பியர் இவர்களும், ஜன்லோகவாசிகளான மற்றுமுள்ள முனிவர்களும்(43) நைமிசாரணியவாசிகளான சௌனகாதி முனிவர்களைச்சந்தோடத்தினுலொருவரோடொருவர் கட்டிக்கொண்டு மெத்த வாதரவோடு வாக்கினுல் கொண்டாடி(44) "ஓ, மகா பாக்கியசாலிகளான முனிவர்களே! நீங்கள் புண்ணியவான்களில் மெத்தச் சிறந்தவர்களன்றோ! ஏனென்றுல் நீங்கள் பிரம்மன் திருவாக்கின்படி யிங்கு நைமிசாரணியத்திலேயே யிருந்துகொண்டு மிகுந்த சுகிருதங்களின் வசத்தினுல் நேர்த்தியான வானப்பிரஸ்தாசிரமத்தை யாசரித்து வந்து($45\frac{1}{2}$) பிற கதின்மூலமாயே நீங்கள் சூதமுனிவரின் முகமாகிய சந்திரனிடத்திருந்து(46) மகா சரித்திரமாகிய, மகா உருசியுள்ளதும், குடிப்பதற்கு மிகவும் தகுதியானதுமான பரமாமுதத்தை நீங்களிங்கு பானஞ்செய்யலாகி யிப்பேர்ப்பட்ட மகா புண்ணியத்தினு லிப்போது ஸ்ரீ சங்கரன் சகல தேவர்களுடனும், கணுதிபர்கள், பார்வதிதேவி, கந்தபிரான், இபானைமுகத்தேவன் இவர்களுடனும்கூட வுங்களுக்குப் பிரசன்னராகி யுங்களைக் கிருதார்த்தர்களாக்கிவிட்டனரன்றே!(48) உங்கள் மூலமாய் நாங்களும் ஜகத்குருவாகிய ஜகதீசனைக்கண்டு கிருதார்த்தர்களாகிவிட்டோ" மென்றத் தேவமுனிவர்களெல்லாம் வானப்பிரஸ்தாசிரமிகளான வம் முனிச்சிரேஷ்டர்களைத் துதிசெய்தார்கள்.(49) பிற்பாடவ்வெல்லா முனிவர்களும் மனதை யடக்கிக்கொண்டு சிங்காதனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீபார்வதீநாதனைத் துதிசெய்ததாவது:—(50) 'ஓ! ஜயாவிஜயீபவா! மகாதேவனே போற்றி, பரமானந்தனே போற்றி, ஜகத்குருவேபோற்றி, சம்புவே போற்றி, அர்த்தநாரீசுவரனே போற்றி,(51) கலியாணநிலயனே போற்றி, பிரகிருதி சுந்தரனே போற்றி, ஸத்தியஞானநந்தனே போற்றி, சருவஞ்ஞனே போற்றி, வாசாமகோசரா போற்றி, (52) வித்தியாமயேசனே போற்றி, வித்தையை யருள்வோனே போற்றி, நிர்மலனே போற்றி, தாண்டமுடியாத சமுசாரத்தினின்று கரையேற்றுவோனே போற்றி, துக்கத்தைத் தீர்ப்போனே போற்றி, பிரபு

வே போற்றி,(53) அமோகனே போற்றி, மகாஸத்துவனே போற்றி, சுத்தனே போற்றி, மிகுந்த மேதையுடையோரே போற்றி போற்றி; ஓ, ஸ்வாமீ, தேவரீர் சருவமங்களைக்கு மணவாளரும், பொன்னிறமுடையவரும், சுமங்களமூர்த்தியுமான(54) தால் தேவரீரை யிங்கு யாவர் வந்தனிக்கின்றார்களோ அவர்கள் மங்களத்தை யடைந்தவர்களே' யென்று முனிவர்கள் ஜகதீசனைத் துதிசெய்துவிட் டடிக்கடி தண்டனிட்டார்கள். (55) பிறகு ஸ்ரீசம்பு வுள்ளமதிற் களிப்புற்றவராகி யவர்களை நோக்கி மொழிந்தருளியதாவது:—"ஓ, பிரம்மதையறிந்த ஆஸ்திகர்களான மாமுனிவர்களே, உங்களுடைய விப்பேர்க்கொத்த துதியினால் யாம் திருப்தியடைந்துவிட்டோம். ஆகையா லுலகினில் நமக்கு நீங்கள் மிகவும் பிரியமுள்ளவர்கள்.(56½) மேலு மிச் சிவரகசியகண்ட முங்களா லாதரவுடன்(57) கேட்கப்பட்டபடியால் யாம் பிரசன்னராகிப் பார்வதியோடுகூடவிங் காவிர்ப்பவித்தனம். ஓ, முனிச்சிரேஷ்டர்களே, விசேடமா யித் துதியினால் யாம் மிகவும் திருப்தியடைந்துவிட்டோம்.(58) மிக வுக்கிரமான தவத்தினாலாவது மிகுந்த தக்ஷிணைகளைக்கொண்ட வேள்விகளாலாவது அல்லது அனேக மகாதானங்களாலாவது நாமொருவரிடத்து மிவ்வாறு திருப்தியடையமாட்டோம்.(59) ஆகையால் ஓ, முக்தர்களும், மகா பாக்கியசாலிகளுமான முனிவர்களே, நீங்க ளுத்தமமான வரனைக் கேட்டுக்கொள்ளுங்க" ளென்று ஸர்வேசுவரரான ஸ்ரீஸாம்பமூர்த்தி திருவாய்மலர்ந்தருளியவுடன்(60) முனிவர்கள் மிகுந்த சந்துஷ்டியுடன் வந்தனித்து மெத்த வுத்தமமான வரனைக் கேட்டுக்கொண்டதாவது:—"ஓ, ஸ்வாமீ, எந்தமானிடர்களிச் சிவரகசியகண்டத்தைக் கேட்கின்றார்களோ (61)அவர்களுக்குத்தேவரீர்பிரசன்னராகித்தயவுடன்வேண்டியவைகளைக் கொடுத்தருளவேண்டும். புத்திரனை வேண்டுவோர்க்குப் புத்திரனையும், தனத்தைவேண்டுவோர்க்கு மிகுந்த தனங்களையும்,(62) வித்தையைவேண்டுவோர்க்கு வித்தைகளையும், ஜயத்தை வேண்டுவோர்க்கு விஜயத்தையும், பூமியை வேண்டுவோர்க்குப் பூமியையும், கிராமத்தை வேண்டுவோர்க்குக் கிராமங்களையும், கொடுத்தருளவேண்டும்.(63) ஓ, பிரபுவே, எவரெவரெந்தெந்த வபீஷ்டங்களைக் கருதியவர்களாகி யிவ் வுத்தமமான பிரபந்தத்தைக் கேட்கின்றார்களோ அவரவர்களுக் கந்தந்த வபீஷ்டங்களையெல்லாம் தேவரீர் தாமதமின்றியே கொடுத்தருளவேண்டும். (64) மேலும் ஓ, சகல வரன்களையும் தந்தருளலுற்ற சங்கரா, அம்பிகையோடுகூடிய தேவரீர் திருவடிக்கமலத்தின்மீ தெங்களுக்கு நீங்காதபக்தி யுண்டாகவேண்டு" மென,(65) அம் முனிச்சிரேஷ்டர்களா லிவ்வாறு வரன்கேட்கப்பட்டவுட னங்ஙனமே கேட்கப்பட்ட வரன்களையெல்லாம் கொடுத்தருளிவிட்டுப் பார்வதியோடுகூடப் பிரபு வந்தர்த்தான மடைந்தனர். (66) பிறகு சௌனகா திருடிச்சிரேஷ்டர்கள் சூதமுனிவரோடுகூடக் கைலைக்கொடுமுடியை நோக்கி ஸ்ரீ மகாதேவருக்கு வந்தனஞ்செய்துபோட்டுப்(67) பிறகு மிகுந்த வாநந்தத்தினால் தழதழக்கலுற்ற வார்

த்தைகளா லொருவரோ டொருவர் பேசிக்கொண்டதாவது:— "ஓ!
கோ! நாமெல்லோர்களும் 'பிரம்மன் திருவசனத்தின்படி வானப்பிரஸ்
தாசிரமத்தை யாசரித்துவருகையி லிச் சூதமுனிவரைத் தரிசித்தமாத்
திரத்தில் கிருதார்த்தர்களாகிவிட்டோ" (68½) மென், இவ்வா றுரைத்து
க்கொண்ட முனிவர்களை நோக்கிச் சூதர் கூறியதாவது:— (69) ஓ, மு
னிவர்களே, பெரியோர்களாகிய வுங்களது சேர்க்கையினால் நானு மிப்
போது கிருதார்த்தனாகிவிட்டேன். ஏனென்று லுலகினில் தருமாதரும
ங்களைக் கேட்பவ ரிருந்தாலன்றோ சொல்லுவோ ருண்டாவார்கள். (70)
ஸத்தியா யிப்போ துங்களுக்காகத்தானே கேட்பவர்க்கு மங்களங்களுக்
கிருப்பிடமாகியவிப்படிப்பட்டகந் தன்சரித்திரத்தை நான்சந்தோடமாய்
ப் படிக்க நேரிட்டது.(71) ஓ, பிராம்மணோத்தமர்களே, எங்கெங்கெல்
லா மிச் சரித்திரம் படிக்கப்படுகின்றதோ அங்கங்கெல்லாம் ஸ்ரீமகாதே
வன் பார்வதியுடனும் சகல கணங்களுடனுங்கூடச் சான்னித்திய மரு
ளுகின்றார்.(72) பெருமைபொருந்தியவர்களான கேட்போர்க ளிப் புரா
ணத்தைப் படிப்பவரைச் சரஸ்வதீபீடத்தி லுட்கார்த்தி வத்திரம், புஷ்
பம் அக்ஷதை முதலியவைகளால்பூஜிக்கவும்,(73)புராணம்படிக்கும் மண்
டபமெங்கும்அசுமானகிரிகள்,சாமரங்கள்,விசித்திரமானகண்ணாடிகள், ம
ங்களகரம் பொருந்தியபற்பல மலர்கள் இவைகளால் நன்கலங்கரிக்கவும்,
(74)புராணமண்டபம்முழுதும்பசுவின்சாணத்தினால் மெழுகவும்,ஸ்ரீதே
வேசனுக்குக் கறுப்பகிற்கட்டைத் தூட்களால் தூபம்போடவும் வேண்
டும்.(75) கேட்பவர்களிற் பிரதானமாகிய பிரபு அல்லது அரசனானவன்
பிராம்மணர்களுடனும், மற்றுமுள்ள மந்திரி சேனாதிபதிகள் முதலியவ
னேகர்களுடனுங்கூட வெகு நியமத்தோ டிருந்துகொண்டு (76½) சந்த
னம்முதலியவைகளாலும், பச்சைக் கற்பூரம், அதிகோமளமான தாம்பூ
லம்சுண்ணாம்பு இவைகளாலும் சபையினர்களை முறைப்படி பூஜித்து,
(77) பிற கவ்வாறு திருப்தியடையலாகும் சபையோர்களால் களிப்புற்
ற மனதுட னனுமதிகொடுக்கப்பட்டதன்பேரில்(78) நன்றாய்ப் போஜ
னம் பண்ணிவிட்டாவது பண்ணாமலாவது மிகுந்த சிரத்தையுடன் புரா
ணம் கேட்கவேண்டும். மேலும் புலவர்க ளளவற்ற பராக்கிரமத்தைக்
கொண்ட ஸ்ரீகுஹபிரானைக் கனிவர்க்கங்களாலும் மலர்களாலும் பூஜித்து
விட்டு(79) ஒழுக்கமுள்ளவரும், புலன்களையும் கோபத்தையும் வென்ற
வரும், குஹபிரான், பரமேசுவரன், பார்வதி இவர்களைத் தொழுவோரு
ம், வேதவேதாந்தங்களிற் றேற்சிபெற்றவரும், வேதாந்தபொருட்க
ளை யாராய்வோரும், குடும்பியும், நற்குடியோரும், புத்திர பௌத்திர க
ளத்திரங்களை யுடையோருமாகிய விப்பேர்ப்பட்ட புராணத்தை யுரைக்
கும் புலவரையும் பூஜித்துவிட்டுப் பிற கிப்பேர்ப்பட்டப் பிரம்மவித்தை
யைப் பொருந்திய சந்திரவலிமை நக்ஷத்திர வலிமைகளைக் கொண்ட சு
பகாலத்தில் கிரமமாய்க் கைகளைப பிரம்மாஞ்சலிகொண்டு தொடங்கி
(80-82) நாள்தோறும் பத் தத்தியாயங்களைப் பக்தியுடன் கேட்குதல்

வேண்டும். இல்லாவிடில் நாளொன்றுக்கு எட்டு, ஏழு, ஐந்து, நான்கு, இரண்டு அல்லது ஒரே அத்தியாயத்தையாவது (83) பத்து, ஒன்று, அல்லது அரை சுலோகத்தையாவது தன தபீஷ்டமான பயனைக் கொடுத்தருளலுற்ற ஸ்ரீகந்தபிரானுடைய திருவருளை நாடியவனாகி யாதரவுடன் கேட்கவேண்டும்.(84) ஒவ்வோரு காண்டத்தின் முடிவுதினத்திலும் நல்ல சிவபக்தர்களாகிய, ஆயிரத்தெட்டு, அல்லது நூற்றெட்டு, ஐம்பது, இருபத்தினான்கு, அல்லது பனிரண்டுப் பிராம்மணர்களுக்காவது ஸ்ரீமகேசுவரனுடைய, திருப்திக்காகப் போசனமளித்தல்வேண்டும்.(85-6) மேலும் ஸ்ரீசிவபிரானுடைய திருக்கலியாண சமயத்திலும, ஸ்ரீகந்தபிரானுடைய பட்டாபிஷேகம், இருதேவிமார்களின் திருக்கலியாணம் இச்சமயங்களிலும்,(87) ஒவ்வொரு காண்டத்தின் முடிவுகாலத்திலும் புராண முறைப்போரை வத்திரங்களாலும், மோதிரம்முதலிய பூஷணங்களாலும், கேயூரம் முதலியவைகளாலும் தக்ஷிணைகளோடு பூஜிக்கவேண்டும்.(88) தவிரவும் நல்லபுத்தியை யுடையோன் புராணம் முற்றும் முடிவாகும் சமயத்தி லிவ்வாறுப் பூஜித்துவிட்டுத் தான் கோரிய பயன் கைகூடுவதற்காக ஸ்ரீவடிவேலன் திருவருளை யடையும்படி மகா ஸம்பிரவங்களோடு விஸ்தாரமாய்ப் பிராம்மணர்களுக்குப் போஜனமளித்தல் வேண்டும்.(89½) மேலும் புராணமுரைக்கும் வித்துவானையும் வேண்டியவைகளால் மிருதியாய்ச்சம்மானித்துவிட்டுப் பின்னும் ஸ்ரீஜகதீசனது திருப்திக்காக வப் புராணிகருக்கு மிகுந்த தனங்களாலும், பசுக்கள், குதிரை, யானை, ரதம்முதலிய வாகனங்களாலும், கிராமம், பூமி, வீடுமுதலிய மற்றவைகளாலும் திருப்திசெய்யவேண்டும்.(91) ஓ, முனிவர்களே, லோபத்தினாலாவது மோகத்தினாலாவது பயத்தினாலாவது இவைகளையெல்லாம் செய்யாவிடில் ஸ்ரீஸ்வாமிநாதரு மவனுக் கெல்லாப் பயன்களையும் கொடுத்தருளமாட்டார்.(92) பிற்பாடு நல்ல புத்திசாலியானவன் புராணிகரை வாகனத்தின்மீ தேற்றி மங்களவாத்தியங்களுடனும் சங்கீதங்களுடனு மூர்கோலஞ்செய் தவரை யவர் விடுதியிற் சேர்ப்பித்தல் வேண்டும்.(93) இங்ஙனம் செய்திடில் வடிவேலனும் சகலபயன்களையும் கொடுக்கலாவார். இவ்விதமா யிப் புராணத்தி னொருசுலோகத்தையாவது அல்லது அரைசுலோகத்தையாவது கேட்டிடினும்(94) நான்கு வேதங்களையு மாறங்கங்களுடனும் பதக்கிரமங்களுடனு முலகினில் சிரத்தையுடன் கோடிமுறை ஜபித்தா லென்ன பயனோ(95) அதின் கோடிமடங்கானபயனை யச்சிரத்தையுடையோன் பெறலாகின்றான். மேலு மவனுக்கு நூறசுவமேத யாகங்களுக்கும் (96) ஷோடச மகாதானங்களுக்குமுள்ள பயனிலும் கோடிமடங்கு சித்திக்கலாகுமே! பின்னு மவ னிகத்தில் புத்திர மித்திர களத்திரம் முதலியவர்களுட னனேக போகங்களை யனுபவித்துப்போட்டுப் பரத்திலும் ஸ்ரீகந்தபிரானுடைய ஸாயுஜ்யபதவியை யடையலாவான்.(97½) புத்திரனை வேண்டுவோன் புத்திரர்களையும், தனத்தை வேண்டுவோன் மிகுந்த வைசுவரியங்களையு ம

டைந்து(98) முடிவினில் மானிடர்கள் ஸ்ரீசிவபிரானுடைய ஸாயுஜ்யபதவியாகிய மோக்ஷஸாம்பிராஜ்யத்தை யடையலாகின்றார்கள். ஆகையால் நன்மையின் விருத்திக்காக வென்றும் நாள்தோறுமிச் சரித்திரத்தைக் கேட்கவேண்டு மென்றார்.(99) பிறகு சூதமுனிவரி னிவ்வாறு வசனங்களால் மாமுனிவர்கள் சந்தோஷக்கடலின் மிகுந்த அலைகளி லாழ்ந்தனுற்ற சித்தத்தைக் கொண்டவர்களாகிச் சூதனை யப்போது பூஜித்துப் பிற கவனைவிட்டுத தம் தம்முடைய வாசிரமத்திற்கு வெகு சந்தோடத்துடன் சென்றார்கள்.

உபதேசகாண்டம் தொண்ணூற்றேராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

சிவரகசிக்ண்டம்.



# அட்டவணை.

## தேவகாண்டம்.



## தக்ஷகாண்டம்.

# அறிவிப்பு.

இப்புத்தகத்தின் 159-160-வது பக்கங்களை விலக்கியும், 277-வது பக்கத்தி னடக்கத்தை 278-லும் 278-ம் பக்கத்தி னடக்கத்தை 277-லுமாய் மாற்றியும் படிக்கவேண்டும்.

